      

உ

திருச்சிற்றம்பலம்.

சிதம்பரம் - ஸ்ரீ உலகமூர்த்தி தேசிகர் மடாலயம்;

# அதிகாரவுடையவர் சிதம்பரேசுவர சுவாமியின் ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன பிரதிஷ்டா பத்திரிகை.

| சுந்தரப்பிள்ளையார் துதி. | ஸ்ரீ சிதம்பரேசர் துதி. |
| --- | --- |
| ... பலியூர்க்கிறைவன் சந்நிதியிற் | சேணுருஞ் சோலைச் சிதம்பரத்திறைவன் சந்நிதியால் |

ஏவுபருஞ்

உ

சிவமயம்.

ஸ்ரீ அருணந்தி சிவாசாரியர் அருளிச்செய்த

# சிவஞானசித்தியார் சுபக்கம்

## மூலமும்,

இதற்கு

திருக்கைலாயபரம்பரைதிருவாவடுதுறைஆதீனத்துத்

திராவிட மாபாடியகர்த்தராகிய

மாதவச் சிவஞானயோகிகள் அருளிய

உரையைத் தழுவி

திருவாவடுதுறை ஆதீன சைவப் பிரசாரகரும்

தேவகோட்டைசிவாகமசித்தாந்தபரிபாலனசங்கத்துச்

சித்தாந்தசாத்திர போதகருமாகிய

தூத்துக்குடி

பொ. முத்தையபிள்ளை எழுதிய

## பொழிப்புரை முதலியனவும்.

---

இவை

தேவகோட்டை திருவாளர்களாகிய மெ. வகைச்

சீரஞோத்தாரண நிதியின் பொருளுதவி கொண்டு

ஷை பொ. முத்தையபிள்ளையால்

காரைக்குடி ஊழியன் அச்சுக்கூடத்தில்,

பதிப்பிக்கப்பெற்றன.

இரண்டாம் பதிப்பு.

 1926. [விலை ரூ [redacted].

Rs 30-00

# பொருளடக்கம்.







உ
சிவமயம்.

# இரண்டாம் பதிப்பு.



## முகவுரை.

சிவபெருமான் றிருவருளால் முதற் பதிப்பை அன்பர்கள் ஏற்று என்னை ஊக்குவித்தமையால் இரண்டாம் பதிப்பு வெளிவர நேர்ந்தது. பண்டிதமணியாகிய திருவாளர் மு. கதிரேசச் செட்டியாரவர்கள் மிக அழகாக எழுதியுள்ள முதற்பதிப்பு முகவுரையே இதற்கும் முகவுரையாகுமாதலின், இப்பதிப்புச் சம்பந்தமான சில விஷயங்களை மாத்திரம் இங்கே முகவுரையாகத் தெரிவிக்கின்றேன்.

முதற் பதிப்பில் பொழிப்புரைமாத்திர மெழுதிச் சிற்சில இடங்களில் விசேடக்குறிப்பு எழுதியுள்ளேன். இப்பதிப்பில் ஒவ்வொருசெய்யுளுக்கும் மாதவச்சிவஞான யோகிகளருளிச்செய்துள்ள குறிப்புக்களனைத்தும் விளக்கப்பெற்றிருக்கின்றன.

அளவையிலக்கணத்து இறுதிச்செய்யுளில் கூறப்பட்ட அநுமானக்குற்றம் அறுபத்தைந்தும் உதாரணத்துடன் விளக்கப் பெற்றிருக்கின்றன.

பாதிவிருத்தமென்று பாராட்டப்பெற்ற ஸ்ரீ தாயுமான சுவாமிகளுக்கு இச்சிவஞான சித்தியே உபதேசிக்கப் பெற்றதென்பதும் பாதிவிருத்தமிதுவென்பதும் எட்டாஞ் சூத்திரத்து ௩௦-வது செய்யுளிற் காட்டப்பெற்றிருக்கின்றன.

பன்னிரண்டாஞ் சூத்திரத்துள்ள திருக்கோயிலுள்ளிருக்குமென்றற்றொடக்கத்துச் செய்யுளின் கருத்தைக் காட்டக்கூடிய திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத்தை யெடுத்துக்காட்டிச் சித்தியாருக்குந் தேவாரத்திற்குமுள்ள சம்பந்தம் விளக்கப் பெற்றிருக்கின்றது.

மாயாகாரியப்படம், தாத்துவிகப்படம், அத்துவப்படம், விஷய அகராதி, அருஞ்சொற் பொருளகராதி, மத அகராதி மேற்கோளகராதி யென்னுமிவைகள் சேர்க்கப்பெற்றிருக்கின்றன.

பிழை திருத்தத்திற்கண்ட சில முக்கிய விஷயங்களையேனும் முன்னரே திருத்திக்கொண்டு ஆராயும் வண்ணமும், எழுதப் பெற்ற விஷயங்களில் பிழை காணப்படின் அதனைத்தயவுசெய்து எனக்குத் தெரிவிக்கும்படிக்கும் அன்பர்களைப் பன்முறையும் வேண்டுகிறேன்.

## நன்றிகூறல்.

அநுமானக் குற்றம் அறுபத்தைந்தும் விளக்குதற்கான ஆராய்ச்சியில் துணையாயிருந்து உதவிபுரிந்த எனது ஆப்தரும் சிவாகம சங்கத்துச் சமஸ்கிருததருக்க பண்டிதருமாகிய பிரம்ம ஸ்ரீ நா. கிருஷ்ண சாஸ்திரிகளவர்கட்கும், இப்பதிப்பு அச்சிடு தற்குப் பொருளுதவிபுரிந்த தேவகோட்டை திருவாளர் மெ. அரு. நா. இராமநாதன் செட்டியாரவர்கள், திருவாளர் அரு. அரு. சோம. அருணசலஞ்செட்டியாரவர்கள், திருவாளர் ராம. மெ. சித. வயிரவன் செட்டியாரவர்கள், திருவாளர் மெ. லெ. மெ. இராமநாதன் செட்டியாரவர்கள், திருவாளர் மெ. அரு. அரு. அருணசலஞ் செட்டியாரவர்களாகிய இப்பெரியாரனைவருக்கும் எனது மனமார்ந்த வந்தனத்தைச் சமர்ப்பிக்கின்றேன்.

இங்ஙனம்,

பொ. முத்தையா.

உ

கணபதி துணை.

# முதற் பதிப்பு

## முகவுரை.

இந்நிலவுலகத்திலுள்ள மக்கள் யாவரும் அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப்பொருள்கள் நான்கனுள் ஒவ்வொன்றையேனும் அன்றி ஒருங்கேனும் எய்தப்பெற்று இன்புறுதலில் மிக்க விருப்பத்தினையும் முயற்சியினையும் உடையாரென்பது, அவரவர் அநுபவவாயிலாக உணரத்தக்க தொன்றும். இவ்வுறுதிப்பொருள்க ணான்கனுள் முதலிறுதியொழித்து இடைப்பட்ட இரண்டனைப் பெற அவாவுவார் இவ்வுலகின் மிகப் பலராவர். முதற்கண் உள்ளதனைப்பெற விரும்புவார் சிலராவர். இம்மூன்றனையும் ஒருவி, யிறுதிக் கண்ணுள்ள வீட்டினை விழையும் உண்மையறிஞர் சிலரினுமிகச் சிலரேயாவர். இந்நால்வகைப் பொருள்களானும் பெறப்படும் பயன்களையாராயுங்கால், பொருளு மின்பமு முறையே இம்மை மறுமையினும், இம்மையினும் நின்றொழிதலானும், அறம் இருமையு முதவி வீட்டுக்குச் சாதனமாக நிற்றலானும், வீடு தன்னை யெய்தப் பெற்றாரைப் பிறப்பிறப்புத் துன்பம் இரித்துப் பேரின்புறுத்தவல்லதாகலானும்இறுதியதாகிய வீட்டினையே உண்மையறிவுடையார் ஒரு தலையானெய்தவிரும்புவரென்பதும், அதற்குரிய சாதனங்களைப் பெறுதற்குத் தக்க முயற்சிகளையே மேற்கொள்ளுவரென்பதும் போதரும். அச்சாதனங்களுண் முக்கியமானவை, தத்தஞ் சமய நூலுணர்ச்சியும், அந்நூனெறி யுணர்ந்தாங் கொழுகுதலுமேயாம். அங்ஙனமாயின், நமக்குரிய சமயம் யாது ? அதன் கட்கூறப்படும் பொருள்களெவை? அவற்றை விளக்கும் நூல்களெவை? என்றின்னோரன்ன ஆராய்ச்சியை மேற்கொள்ளுவேமாயின், உயர்ந்த மகாஞானிகளாற் றெளிந்து நிச்சயிக்கப்பட்ட பரம்பொருளாகிய சிவபிரானை வழிபாடுசெய்யும் நம்மனோர்க்கு உரிய சமயம் சைவ சமயம் என்

பதும், அதன் கட்டெளியப்பட்ட பொருள்கள் அநாதியாகவுள்ள எண்ணிறந்த ஆன்மாக்களை அநாதியேபற்றி நிற்கு மூலமலமாகிய ஆணவ அழுக்கைக் கழீஇச் சிவப்பேறுதவிப் பேரின்புறுத்துங் கருணையே காரணமாக, அவ்வவற்றின் கன்மங்களுக்கு ஈடாகத் தநுகரணபுவன போகங்களை அளித்து இயங்கி யியக்கியும், அறிவித்தறிந்தும் விளங்குகின்ற சிவ பரம்பொருளாகிய பதியும், அப்பதியா லறிவிக்க அறிந்தும், கன்மப்பயனை நுகர்ந்தும், சார்ந்ததன் வண்ணமாந் தன்மை யெய்தப் பெற்றுள்ள எண்ணிறந்த ஆன்மாக்களாகிய பசுக்களும், அவை, தம் உண்மை நிலையுணர்ந்து தலைவனாகிய சிவபிரானைத் தரிசித்து இன்புறுதற்குத் தடையாக அநாதியே பற்றி நிற்கின்ற ஆணவமும், அதனை யொழித்தற்குப் போந்த கன்மமாயைகளும் ஆகிய பாசங்களும் என்னும் இம் முத்திறத்தனவாமென்பதும், இவ்வுண்மைகளைப் பொதுவகை யானுஞ் சிறப்புவகையானும் ஐயந்திரிபறச் செவ்வனே விளக்கி நிலைப்படுத்து நூல்கள் வேத சிவாகமங்களும், அவற்றின் வழிப் போந்த வடமொழி தென்மொழிக்கண் உள்ள பிறநூல்களுமா மென்பதும் பெரியோர்களால் நன்கு தெளியப்பட்டனவாம்.

ஆயின், வேதத்தின்கண், பற்பல தேவர்களுக்குத் தலைமை கேட்கப்படுதலானும், பலபல சமயக் கொள்கைகளுங் கூறப்படு கின்றமையானும் தலைவர் யாவர்? எக்கொள்கை உண்மையாகச் சிறந்தது? என்னும் ஐயப்பாடு எய்துமாலோவெனின்; அஃ தொழித்தற்கே வேதம் பொதுநூலாயதென்க. உலகத்துள்ள மக்கள் பலதிறப்பட்ட அறிவினையும், கொள்கையினையுமுடையா ராகலின், அவ்வெல்லாரையுங் காக்கவேண்டுமென்னுங் கருணை வள்ளலாகிய சிவபெருமான், அவ்வவர் தகுதிக் கேற்பப் பற்பல கருத்துக்கள் தோன்ற வேதங்களை யருளிச்செய்தார். அவ்வேத ஆராய்ச்சியுடையார் பலரும், கீழ்க்கண்ட தத்துவங்களையே பரம் பொருளென முன்னர்க்கண்டு பின்னர் அவையனைத்தும் அழிதன் மாலையவென்றுருவி மேற்சென்று சென்று முடிவில், தனக் கொப்பாரு மிக்காரு மில்லாத சிவபிரானையே பரம்பொருளெனத் தெளிதற்குரிய சிவாகம நெறிநின்று அப்பெருமான்றிருவடிநீழல் எய்தியின்புறுவராதலின், பக்குவமிக்க ஆன்மாக்களின்பொருட்டு

அருளப்பட்டனவாகிய சிவாகமங்கள், சிறப்புநூல்களாகும். இதனால் வேதங்களிற் பிறதேவர்களுக்குக் கூறப்படுந்தலைமை உபசாரமென்பதும், சிவபிரானுக்குக் கூறப்படுந்தலைமை யுண்மையென்பதும் வெளியாம். இவ்வுண்மை, வேதங்களில் உபசாரமாகக் கூறப்பட்ட சமயங்களுக்கெல்லாம் வழிநூலாசிரியர்கள் பிறதேவர்கள் இருடிகளாகவிருப்ப, அவ்வேதங்களை யருளிச்செய்த முதலாசிரியராகிய சிவபிரானே உண்மையாகக்கூறப்பட்ட சைவசமயத்தைப் போதிக்குஞ் சிவாகமங்களுக்கு ஆசிரியராக உள்ளமையின், சிறிதும் ஐயமின்றித் தெளியலாம். இவ்விஷயமெல்லாம் தத்துவ ஞானிகளாகிய சைவாசிரியர்கள் இருமொழிக்கண்ணும் தருக்க நெறி பிறழாமல் அருளிச்செய்த சைவநூல்களின் மிக விளக்கமாக வுணரலாம்.

இனி, சைவவுண்மைகளை யறிவுறுத்துந் தமிழ்நூல்கள், சமயகுரவர்க ளருளிச்செய்தனவும், சிவபரத்துவமொன்றனையே கூறுவனவுமாகிய தேவாரமுதலிய வேதங்களும், சந்தானகுரவர்களருளிச்செய்த சிவஞானபோத முதலிய பதினான்கு சாத்திரங்களும் பிறவுமாகிய ஆகமங்களுமாம். இப்பதினான்கனுள் ஒன்றும், நம்மனோர் தவப்பேற்றால், தமிழ்நாட்டில், திருவெண்ணெய்நல்லூரில், சைவவேளாண்மரபில் அவதரித்தருளிய ஸ்ரீ மெய்கண்டதேவர் அருளிச் செய்ததுமாகிய சிவஞானபோதமே முப்பொருள்களைத் தெளிவுறுத்துஞ் சித்தாந்த சைவநூல்களுட் சிறந்த முதனூலாகும். அது, சூத்திரங்களாகவும், வாத்திகப் பொழிப்பாகவும் அருளிச் செய்யப்பட்டிருத்தலான், அந்நூண்பொருள்களை விரிவாக விளக்கி யாவருக்குந் தெளிவுறப் போதிக்கவேண்டுமென்னுங் கருணையே காரணமாக, அம்முதனூலாசிரியராகிய ஸ்ரீ பெய்கண்ட தேவர் மாணாக்கரும், அந்தணர் குலத்திலவதரித்தவருமாகிய ஸ்ரீ அருணந்தி சிவாசாரியார் சிவஞானசித்தியார் என்னும் வழிநூலையருளிச்செய்தார்கள். அந்நூல், பரபக்கம், சுபக்கம் என விருபகுதித்தாக. பரபக்கத்தில், புறப்புறமுத்லிய சமயங்களை, அவ்வச் சமயப் பார்வையாற் கண்டித்தும், சுபக்கத்திற் சித்தாந்தப் பார்வையால் ஏனைச் சமயவாதிகள் ஆசங்கைகளை மறுத்துச் சித்தாந்த சைவவுண்மைகளைப்

புலப்படுத்தி நிரூபணஞ் செய்தும் அமிழ்தினுமினிய மதுரம் பழுத்தொழுகுஞ் செய்யுள் வடிவினதாக யாக்கப்பட்டுள்ளது. சுபக்கப்பகுதி 'கடவுள் வாழ்த்துள்பட ௩௨அ செய்யுட்களை யுடையதாகும். இது, முதனூன் முறைப்படி பன்னிரு சூத்திரப் பிரிவாகவுள்ளது. ஒவ்வொரு சூத்திரக் கருத்துக்களையும் சிலபல செய்யுட்களால் இவ்வாசிரியர் விளக்கியிருக்கின்றனர்.

இந்நூலிலுள்ள முன்னூறு சூத்திரங்கள் பொதுவதிகாரம் எனவும், பின்னூறு சூத்திரங்கள் சிறப்பதிகாரமெனவும் பெயர் பெறும். அவை மும்மூன்று சூத்திரங்களையுடைய இயல்களாகப் பகுக்கப்பட்டு முறையே, பிரமாணவியல், இலக்கணவியல் எனவும், சாதனவியல், பயனியல் எனவும் பெயர் பெறும். பிரமாணவியலிலுள்ள மூன்று சூத்திரங்கள் முறையே பதியுண்மை, பாசவுண்மை, பசுவுண்மைகளையும், இலக்கணவியலிலுள்ள மூன்று சூத்திரங்கள் பசுவிலக்கணம், பாசவிலக்கணம், பதியிலக்கணங்களையும், சாதனவியலிலுள்ள மூன்று சூத்திரங்கள், சாதிக்கும் பொருளதியல்பும், சாதிக்கப்படும் பொருளதியல்பும், சாதிக்குமுறையும், பயனியலிலுள்ள மூன்று சூத்திரங்கள், பாசக்ஷயமும், சிவப்பேறும், அப்பேற்றையுடைய சீவன் முத்தர் செயலுங்கூறுவனவாம். இம்முறைகள் முதனூற்குள்ளவாறே இந்நூற்கும் அமைந்துள்ளன. இந்நூலிலுள்ள செய்யுட்களெல்லாம் அழகிய செவ்விய சுருங்கிய சொற்களாற் றொடுக்கப்பட்டனவாய் விழுமிய இனிய ஓசையுடையனவாய், ஆயுந்தோறும், ஆயுந்தோறும் மேன்மேற் கிளைக்கும் நுண்பொருட் பெருக்கத்தை யுடையனவாயுள்ளன.

இப்பெருமை நோக்கியன்றே! பெரியாரும்,

"பாரிலுள்ள நூல்களெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே
யோர்விருத்தப் பாதிபோதும்" எனவும்,

"பாதிவிருத் தத்தாலிப் பார்விருத்த மாகவுண்மை
சாதித்தார் பொன்னடியைச் சாருநா ளெந்நாளோ" எனவும் பாராட்டிப் போற்றுவாராயினர்.

இத்தகைய மாட்சிமிக்க சிவஞான சித்தியார் சுபக்கத்துக்கு ஸ்ரீ மறைஞான தேசிகர், ஸ்ரீ சிவாக்கிரயோகியார், ஸ்ரீ ஞானப்பிர

காசர், ஸ்ரீ சிவஞான யோகியார், ஸ்ரீ நிரம்பவழகியார், ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் ஆகிய இவ்வறுவர்களாலும் சிற்சில கருத்து வேறுபாடுகளுடன் தனித்தனி செய்யப்பட்டவுரைகள் வெளிப்பட்டிருக்கின்றன. இன்னும் வெளிப்படாத வேறுரைகளிருப்பினுமிருக்கலாம். வெளிவந்த இவ்வுரைகளுள் ஸ்ரீ சிவாக்கிரயோகியாருரையும், ஸ்ரீ சிவஞான யோகியாருரையும், அதனைப்பதப்பொருளோடு வைத்தாராய்தற் குபகாரமாக ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் செய்தவுரையும் மிகஉபயோகங்களாகவுள்ளன. ஏனைய உரைகளிலும் ஆங்காங்குச் சிற்சில நயங்களைக் காணலாம். பல செய்யுட்களில், ஸ்ரீ சிவஞான யோகிகள் கொண்டு கூட்டு வேறுபட்டிருக்கும். அது பொருணயங்கருதியதாகும். ஸ்ரீ ஞானப்பிரகாசர் உரை சித்தாந்த சைவத்துக்கு முரணாகச் சிவசமவாதம் போதிப்பதாகலின், அது பொருந்தாதென நியாயவாயிலாக எடுத்து ஸ்ரீ சிவஞான யோகிகளாற் கண்டிக்கப்பட்டுள்ளது. ஏனையவை பெரும்பாலுந் தம்முண் மாறுபாடுடையனவாகா.

இவ்வுரைகள், பெரும்பாலும் வடசொற்களாலும் உயர்ந்த செந்தமிழ்ச் சொற்களானும் எழுதப்பட்டிருத்தலானும், சிற்சில் விஷயங்கள் வேறு சைவ நூல்களிற் றெளிந்துகொள்ளுமாறு சுருங்கக்கூறுதலானும், வடமொழிப் பயிற்சியும் தமிழிற் பேரிலக்கிய இலக்கணவாராய்ச்சியுமின்றிச் சிற்றிலக்கிய இலக்கணந் தெரிந்த ஏனையோரும் எளிதில் விஷயங்களை யுணர்ந்துகொள்ளும் வண்ணம் முன்னோர் கருத்துக்கு மாறுபாடின்றி, திருவாவடுதுறையாதீன சைவப்ரசாரகராகிய தூத்துக்குடி ஸ்ரீ பொ. முத்தையபிள்ளையவர்கள் புதியதாக ஒருரை யெழுதி முடித்திருக்கின்றனர். இவ்வுரைப் பிரதியொன்று என்பார்வைக்கு அனுப்பினார்கள். ஆங்காங்குச் சிற்சில செய்யுட்களுக்கு விசேடமாக எழுதப்பட்டவுரைக்குறிப்புக்களைப் பார்த்தேன். ஒவ்வொரு செய்யுட்களின் தலைப்பில் அச்செயுளின் கருத்துறுபொருளைத் தெரித்துக்காட்டும் வாக்கியங்களுள்ளன. செய்யுளின்பின் ஸ்ரீ சிவஞான சுவாமிகள் கருத்துப்படி கொண்டுகூட்டுத் தனித்தனியே எழுதப்பட்டுள்ளது; இது, கற்பார்க்கு, செய்யுள் இவ்வாறு அந்நுவயஞ் செய்யப்பட்டதென்று இலகுவிலுணர்தற் குபயோகமாம். இவ்வுரை

ஸ்ரீ சிவஞான சுவாமிகள் பொழிப்புரையையும், ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் பதவுரையையும் சிறிதும் பிறழாமல் எடுத்து விளக்கமான எளிய சொற்றொடைகளால் எழுதப்பட்டுள்ளது. ஸ்ரீ சிவஞான சுவாமிகள் மிகச்சுருக்கமாக வரைந்த சில விஷயங்கள் இதன்கண் விளக்கப்பட்டிருக்கின்றன. சிவஞானபோத மாபாடியம் சிற்றுரை களின் ஆராய்ச்சியிற்கண்ட சில விஷயங்களும் ஆங்காங்கு இதன் கட்காணலாம். இவ்வுரை, பெரும்பான்மை முன்னுரை யாசிரியர் கள் கருத்தைத்தழுவிச் சிறுபான்மை விளக்க விசேடங்களை யுடையதாயினும் அரிய விஷயங்கள் எளிய நடையில் விளக்கப் படுதல், கற்பார்க்கு மிக உபயோகமாதலின், இதுவுந் தமிழ்நாட் டார்க்குப் பயன்படுமென்பது என் கருத்து.

இவ்வுரையாசிரியராகிய ஸ்ரீ பொ. முத்தைய பிள்ளையவர்கள், தம் பாலப்பருவமுதல் சிவஞானபோத முதலிய சைவசாத்திரங் களை இடைவிடாது ஆராய்ந்து தமிழ் நாட்டிலுள்ள சபைகளி லும், பிறவிடங்களிலும் சைவசித்தாந்த சம்பந்தமான பல அரிய உபந்யாஸங்கள் செய்து வருகின்றனர். உபந்யாசஞ் செய்யுங் கால், எடுத்துக் கொண்ட விஷயத்துக்கு இயைபில்லாத வற்றிற் பிரவேசியாமல் மேற்கொண்ட விஷயத்தைத் தொகை வகை விரிகளால் விளக்கி நூற்பிரமாணங்களை இன்றி யமையாத விடங் களிற் காட்டி விளக்கமான செஞ் சொற் சிறப்புடன் இறுதியிற் றொகையுரை யுரைத்து முடித்துக்காட்டுவதில் மிக்க திறமை வாய்ந்தவர்.

திருவாவடுதுறையாதீனத்தில் இப்பொழுது மஹா சந்நிதான மாக எழுந்தருளியிருப்பவர்களும், வரையாது கொடுக்கும் வள் ளன்மையும், கூர்ந்த அறிவும், தேவார முதலிய தமிழ் மறை களில் நுணுகிய ஆராய்ச்சியும் உடையவர்களும் ஆகிய ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகரவர்கள், இவ்வுரையாளராகிய பிள்ளையவர் களின் சைவசித்தாந்த நூலாராய்ச்சியையும், உபந்யாஸ ஆற்றலை யுங் கண்டு மகிழ்ந்து தம் ஆதீனத்துச் சைவப்பிரசாரகராக விருந்து பற்பல நகரங்களினும் சைவசித்தாந்த உபந்யாசங்கள் புரிந்து வரும்படி கட்டளையிட்டருளினார்கள். பிள்ளையவர்களும்

அக்கட்டளையை மிக்க சிரத்தையுடன் ஏற்று நடாத்தி வருகின்றன ர். இவர்களுக்கு மேன் மேலும் ஓங்கும் வண்ணம் சிவ ஞானச் செல்வத்தையும், இன்னோரன்ன ஞானசாத்திர வாராய்ச்சியிலும், உரை யெழுதுவதிலும், உபந்யாசஞ் செய்வதிலும், மிகுந்த விருப் பத்தையும் முயற்சியையும், நீண்ட வாணாளையும் பிற நலன்களை யும் பரமகருணா நிலயமாகிய சிவபிரான் அருளிக்காப்பாராக.

இவ்வுரையை திராவிட மாபாடிய கர்த்தராகிய ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் திருவடித்தாமரை மலர்கட்கு உரிமைப்படுத் தியிருப்பதால் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீ னத்தின் மீதும் ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் மீதும் இப்பிள் ளையவர்கள் கொண்டுள்ள மெய்யன்பு தெற்றெனவிளங்கும். இந்நூலாசிரியர் சரித்திரமும், அவதாரிகையின் அகராதியும், விசேடவுரையிற் கண்ட விஷய அகராதியும், செய்யுண் முதற் குறிப்பு அகராதியும் ஆகிய இவைகள் கற்பவர்க்குப் பெரிதும் உபகாரமா மென்பதொருதலை.

**சிவ தருமமும், சைவசித்தாந்தமும், தமிழ் மொழியும் நீடு வாழ்க.**

மகிபாலன் பட்டி,
5—7—14

இங்ஙனம்,
**மு. கதிரேசன்.**



சிவமயம்.

# உரிமையுரை.



தென்மொழியும் வடமொழியுந் தேர்ந்துபரம்
பொருள்சிவமென் றதனைச்சாரு
நன்மையெனும் வீடருளுந் துறைசைநமச்
சிவாயகுரு நற்றாள் பேணி
வன்மலவே ரைக்கெடுத்துச் சிவஞான
பாடியஞ்செய் தருளும் வள்ளல்
சின்மயமாஞ் சிவஞான முனிவரிரு
திருவடிகள் சிந்தை செய்வாம்.

சைவசித்தாந்த சாத்திரங்கள் பலவற்றுள்ளும் பல அரிய விஷயங்களைத் தன்னுட் கொண்டு விளங்குவது சிவஞான சித்தியாரென்னும் நூலேயாம். இதற்கு முதனூலாகிய சிவஞான போதத்தில் குறிப்பால் உணரக்கிடந்த பல விஷயங்கள் இச்சிவ ஞான சித்தியாரில் தெளிவாய் விளக்கப்பட்டிருக்கின்றன. இந்நூலுக்கு ஆறு ஆசிரியர்கள் உரையருளிச்செய்திருக்கின்றனர். அவ்வுரைகளுள் தருக்க முறை இலக்கண முறைகளோடு சொல் நயம் பொருள் நயம் தோன்ற விளங்குவது ஸ்ரீ மாதவச் சிவ ஞான யோகிகள் உரையேயாம். இவ்வுரை பொழிப்பாயிருந்தமையால் அதனை அநுசரித்து ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரவர்கள் பதவுரை யருளிச் செய்தார்கள். திருவருட்டோன்றலாகிய இச்சிவஞான யோகிகள் திரு அவதாரஞ் செய்திலரேல் சித்தாந்த சைவச் செந்நெறி இதுவெனத் திகைப்பின்றித்துணிந்து கூற எவர்க்கும் இயலாதென்பது என் அபிப்பிராயம். இவர்கள் பல அரிய பெரிய விஷயங்களைச் சிவஞானமா பாடியத்தில் விரிவாக அருளிச் செய்திருக்கின்றமையால் சிவஞான சித்தியாருக்குச் சுருக்கமான பொழிப்புரை அருளிச்செய்தார்கள் போலும். சித்

தியாரில் சுருக்கமாகக் கூறியுள்ள பலவிஷயங்கள் பாஷியத்தில் தெளிவாகக் காணலாம். ஸ்ரீ சிவாக்கிர யோகிகளும் அநேக விஷயங்கள் சித்தியார் உரையில் அருளிச் செய்திருக்கின்றார்கள்.

ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் திருவடியைச் சிரமேற் கொண்டு அவ்வுரைகளையும் பிறநூல்களையும் என் சிற்றறிவிற் கெட்டியவாறு ஆய்ந்த பொழுது தோன்றிய கருத்துக்களைத் திரட்டிப்பலருக்கும் உபயோகமாகும் வண்ணம் இவ்வுரை எழுதி அச்சிற்பதிப்பித்தேன். இதில் தவறு காணப்படின் அது என் சிற்றறிவின்பால் நிகழ்ந்ததாகும். அதனைப் பொறுத்தருளும்படி பெரியோர்களைப் பிரார்த்திக்கின்றேன். நயம் காணப்படின் அது ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள் திருவருட் பெருக்கால் விளங்கியதாகும். அல்லால் இவ்வுரையை ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் திருவடித்தாமரைகட்குச் சமர்ப்பிக்கின்றேன்.

இங்ஙனம்,

போ. முத்தையா.

---

சிவமயம்.

# நூலாசிரியர் வரலாறு.



## அருணந்தி சிவாசாரியர்.



பொன்னுலகதனினும் சிறந்த தென்னுலகதனுள் நடுநாட்டில் திருத்துறையூர் என்னும் திவ்யதலத்தில் ஆதி சைவப்பிராமணர் குலத்தில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளின் மாமனாராகிய ஸ்ரீ சடங்கவி சிவாசாரியருடைய இருபத்தொன்றாவது பரம்பரையில் சாலிவாகன சகாப்தம் ககஎ௫-ல் அதாவது இற்றைக்கு ௬௭௪ வருடங்கட்குமுன் சிவாகமப்பொருள் இனிது விளங்குதற்பொருட்டு ஒருவர் அவதாரஞ் செய்தார். இவர் ஆதி சைவ மரபிற் கேற்றவாறு வேதாகமங்களில் வல்ல பெரியோரால் சாதகன்மம், நாமகரணம் முதலிய செய்யப்பெற்று காயத்திரி மந்திரமும் உபதேசிக்கப்பெற்றனர். பின்னர் பொதுநூலாகிய வேதத்தின் கன்மகாண்டம், பக்திகாண்டம், ஞானகாண்டங்களையும் வேதாங்கமாகிய கற்பம், சிக்ஷை முதலியவற்றையுங் கற்று அதன்பின்னர்ச் சிறப்புநூலாகிய காமிக முதலிய இருபத்தெட்டுச் சிவாகமங்களின் சரியை, கிரியை, யோகம், ஞானமென்னும் நான்கு பாதப்பொருள்களையும் நன்கு கற்றனர். அம்மட்டோ! தமிழினும் மிக வல்லுநராய்த் தமிழ்நூல்களுங் கற்றனர். இவ்வாறு சகல ஆகமங்களினும் வல்லுநராய் இருக்குஞ் சிறப்புநோக்கி இவருக்குச் சகலாகம பண்டிதரென்னுந் திருநாமம் பெரியோரால் இட்டுவழங்கப்பெற்றது.

இவ்வாறு சகலகலையினும் வல்லுநராய் விளங்கும் நாளில் பொய்ச்சமயமாகிய புறச்சமய இருள் நீங்கவும் மெய்ச்சமயமாகிய சைவ சமய ஒளி மேலிடவுங்கருதி சகல ஆகமங்களையும் சகடத்

தின்மேல் ஏற்றிககொண்டு சிதம்பரம், திருவண்ணுமலை, காசி, நேபாளம் முதலிய பல இடங்களினுஞ்சென்று தருக்கமுறையில் எவரும் தன் கீழ் அடங்க சைவஸ்தாபனஞ் செய்வாராயினர். செய்யுங்கால் தம்முடைய அருளுபதேசத்தைக் கடைப்பிடித்துச் சைவநெறியில் ஒழுக விருப்பமுடையராய் வரும் பக்குவருக்குச் சிவாகம விதிப்படி தீக்ஷைபுரிந்து அவருடைய மும்மல அழுக்கைப் போககுவர்.

இவருடைய மாணுக்கர் பலருள் திருப் பெண்ணுகடத்தில் வசிக்கும் பரம்பரைச் சைவ வேளாள குலதிலகராகிய அச்சுத களப்பாளரும் ஒருவர். இவருக்குப் பிள்ளைப்பேறின்மையால் தம் ஆசிரியரை யடைந்து அக்குறையை விண்ணப்பஞ்செய்தனர். அதனைக்கேட்ட சகலாகம பண்டிதர் தமிழ்வேதமாகிய தேவாரத் திருமுறையைத் திவ்ய ஆசனத்தில் எழுந்தருளச் செய்து அர்ச்சனை தூபதீப ஆராதனைகள் சமர்ப்பித்து அத்திருமுறையில் கயிறு சாத்துமபடி கட்டளையிட்டனர். உத்தரவின்படி அச்சுதகளப்பாளர் திருமுறையை நமஸ்கரித்துக் கயிறு சாத்தினர். திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய திருவெண் காட்டுப் பதிகத்துள்,

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினே டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே.

என்னும் திருப்பாசுரம் உதயமாயிற்று. அப்பாசுரத்தின் பொருளைச் சகலாகமபண்டிதர் உற்றுநோக்கி மிகமகிழ்வெய்தி அச்சுத களப்பாளரைத் திருவெண்காட்டில் வசிக்கும்படி உத்தரவுசெய்தனர். அவர் அவ்வாறே வசித்து அங்குள்ள சோமசூரிய அக்கினி தீர்த்தங்களில் முழுகிச் சுவேதவனப் பெருமானை வணங்கி ஓர் பிள்ளையைப் பெற்றனர்.

அப்பிள்ளையார் இரண்டு வயதில் பரஞ்சோதி முனிவரால் சிவஞான போதம் உபதேசிக்கப் பெற்று மெய்கண்டதேவர்

என்னும் தீக்ஷாநாமத்தையும் ஆசாரியாராற் பெற்றுப் பலருக்கும் சிவஞான போத உபதேசஞ் செய்வாராயினர். செய்து வரும் நாளில் சகலாகமபண்டிதர் அவ்வரலாற்றைக் கேள்வியுற்று தம் முடைய மாணாக்கராகிய இவர் நம்மை வந்து பார்க்கவில்லையே யென்றெண்ணி, ஆயினும் நாம் அவரைப் பார்ப்போமென்று அவ ரிருக்கு மிடஞ் செல்ல விரும்பி அக்கருத்தைத் திருவெண்ணெய் நல்லூர் வாசிகளாகிய தம் மாணாக்கர்கட்குத் தெரிவித்தனர்.

அதனைக் கேட்ட திருவெண்ணெய் நல்லூரார் தம் குல குருவின் வரவுக்காக மிக மகிழ் வெய்தி நகர மெங்கும் அலங்கரித் தனர். ஆகமங்கள் ஏற்றிய சகடையுடனும், விருதுகளுடனும் சகலாகமபண்டிதர் திரு வெண்ணெய் நல்லூரை நோக்கிச் சென் றனர். நகரை அடுத்து வரும் பொழுது அங்குள்ளாரனைவரும் எதிர் வந்து வணங்கிச் சிவாகமப் பொருளை உபதேசிப்பதற்காகத் திருவவதாரஞ் செய்தருளிய எம் குருநாத! தேவரீரது நல்வர வால் நாங்கள் உய்ந்தோம் உய்ந்தோம் என்று பலவாறு துதித் துத் திருவெண்ணெய் நல்லூருக்கு அழைத்துச் சென்றனர். சென்றதும் வீதி வலம் வந்து திருக்கோயிலை யடைந்து சுவாமி தரிசனஞ் செய்து திருமடம் போய்ச் சேர்ந்தனர். சேர்ந்த பின் னர் மாணாக்கர்கள் அனைவரும் வணங்கித் திருவமுது செய்வித் தனர். சிவபெருமான் றிருவடிக் கமலத்திற் பதிந்த சிந்தையை யுடைய மெய்கண்டதேவர் தம் குல குருவாகிய சகலாகம பண் டிதரைப் பார்க்கவில்லை.

சகலாகமபண்டிதர் மெய்கண்டதேவர் வாராமையை உணர் ந்து நாமே போய்ப் பார்ப்போமென்றெண்ணி அவரிருக்குமிடஞ் சென்று உலாவிக்கொண்டு நின்றார். நிற்குங்கால் மெய்கண்ட தேவர் தம் மாணாக்கருக்குச் சிவஞானபோதம் பாடஞ் சொல் லிக் கொண்டிருக்கின்றார். பாடத்தில் ஆணவமலத்தின் தன்மை யைப்பற்றி ஆராயத் தொடங்குஞ் சமயமாயிருந்தது. உலாவிக் கொண்டிருந்த சகலாகமபண்டிதர் மெய்கண்டதேவரை நோக்கி

ஆணவமலத்தின் இலக்கணம் என்னையென்று வினவினர். மெய்கண்டதேவர் தம்முடைய சுட்டுவிரலால் சகலாகம பண்டிதரைச் சுட்டிக்காட்டினர். உடனே சகலாகம பண்டிதர் நானென்னு முனைப்போடு வணங்காதிருக்கும்படி செய்ததே ஆணவமலத்தின் இலக்கணமென வுணர்ந்து மெய்கண்ட தேவரை வணங்கினூர். வணங்கவே தங்குருமரபிற்கு முதற்குருவாகிய நந்திதேவர் திருநாமத்தையே இச் சகலாகம பண்டிதருக்குச் சூட்டவெண்ணி அருணந்தி எனத் தீக்ஷாநாமஞ் சூட்டிச் சிவஞான போதத்தையும் உபதேசித்து மனவாசகங்கடந்தார் சிற்றம்பல நாடிகள் முதலான நாற்பத்தொன்பது மாணுக்கருள் முதல் மாணுக்கராக ஏற்றருளப் பெற்றனர்.

இவ்வாறு மெய்கண்ட தேவருடைய அருளுபதேசம்பெற்ற அருணந்தி சிவாசாரியார் திருப்பெண்ணாகடத்தில் வேதியர் குலத்தில் அவதரித்த மறைஞானசம்பந்த சிவாசாரியாருக்குச் சிவஞானபோதப் பொருளையுபதேசித்து, அந்நூற்பொருள் பிற்காலத்துள்ளார்க்கு இனிது விளங்குதற்பொருட்டு உபதேசமுறையிற் சொல்லப்பட்டுவந்த பொருள்களனைத்தையும் நன்கு விளக்கித், தொகுத்தல் முதலிய நால்வகையாப்பினுள், விரித்தல் யாப்பால் சிவஞான போதத்திற்கு ஒரு விருத்தியுரையாக இனிய தமிழ்ச்செய்யுளால் பரபக்கம் சுபக்கமென இருபகுதிப்படத் தனித்தனி பாயிரத்துடன் சிவஞானசித்தியாரென்னு நூலும், பாசலட்சணங்களைப் பகுத்து வினுவிடையாக இருபா இருபஃது என்னும் நூலும் அருளிச்செய்தனர்.

இவ்வாறு உபகோபகாரமாக இருபெரும் நூல்களை அருளிச்செய்து நெடுங்காலம் சிவானந்த நிட்டையில் வீற்றிருந்து திருத்துறையூரென்னும் பதியில் புரட்டாசி மாதத்துப் பூரநட்சத்திரத்தில் சின்மயானந்த சிவசொரூபத்தில் இரண்டறக்கலந்தனர்.

நூலாசிரியர் வரலாறு முற்றுப்பெற்றது.

---

# இயல்கராதி.



# சூத்திர அகராதி.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அருணந்தி சிவாசாரியர் அருளிச்செய்த
சிவஞான சித்தியார் *சுபக்கம் மூலமும்

இதற்கு

மாதவச்சிவஞான யோகிகள் அருளிய உரையைத் தழுவி
பொ. முத்தையபிள்ளையியற்றிய பொழிப்புரையும்.



உரையாசிரியராகிய மாதவச்சிவஞானயோகிக ளருளிச்செய்த

# உரைப்பாயிரம்.

## குரு வணக்கம்.

பண்ணிசைவெம் பரிதிமதி திலதயிலத்
தீயிரும்பு பாணி யுப்பு
விண்ணநில முடலுயிர்நீர் நிழலுச்சிப்
பளிங்குபகல் விளக்குப் பானீர்
கண்ணிரவி யுணர்வொளிபோற் பிரிவரிய
வத்துவிதக் கலவி காட்டித்
தண்ணளிவைத் தெனையாண்ட துறைசைநமச்
சிவாயகுரு சரணம் போற்றி.

* சுபக்கம்—தன் பக்கம்.

[பொழிப்புரை] பண்ணும் (இராகமும்) ஓசையும் போலவும், சூரிய னொளியும் பகற்காலத்துக் காணப்படுஞ் சந்திர னொளியும் போலவும், எள்ளும் அதனுள்ளிருக்கும் நெய்யும் போலவும், தீயும் அதனாற் காய்ச்சப்பட்ட இரும்பும் போலவும், தண்ணீரும் அதனோடு சேர்ந்த உப்பும் போலவும், ஆகாயமும் காற்றும் போலவும், உடலும் உயிரும் போலவும், ○நீரும் அதனிழலும் போலவும், மத்தியான வேளையிலுள்ள சூரியனொளியும் பளிங்கின் ஒளியும் போலவும், சூரியனொளியும் பகற்காலத்து விளக்கொளியும் போலவும், பாலும் அதனுடன் சேர்ந்த நீரும் போலவும், கண்ணொளியும் அதற்குப் பொருளைக் காட்டியும் கண்டும் உடனாய் நிற்கும் சூரியனொளியும் போலவும், ஆன்மாவின் அறிவும் அவ்வறிவாற் பொருளையறியும் கண்ணொளியும் போலவும் பிரிக்கமுடியாத சிவ சீவர்களின் அத்துவிதமாகிய கலப்பைக் கிருபையினால் அநுபவமாய் அறியும்படி செய்து அடியேனை ஆட்கொண்டருளிய திருவாவடுதுறையின்கண் எழுந்தருளியிருக்கும் நமச்சிவாய தேசிக குரு மூர்த்திகளின் திருவடிகளைத் துதிப்பாம் என்றவாறு.

சிவனும் சீவனும் பொருட்டன்மையில் இரண்டாயினும் பிரிக்க முடியாவாம். இவ்வாறு பிரிக்க முடியாத கலப்பின் சம்பந்தத்தையே அத்துவிதமென நூல்கள் கூறும். இவ் வத்துவித சம்பந்தம் எதுபோலுமென்பதறிவித்தற்குப் பதின்மூன்று உவமை கூறினார். அப்பதின்மூன்றுவமைகட்கும் பதின்மூன்று பேதங்களுளவாகலின் மிகைபடக் கூறலென்னுங் குற்றமின்றாம். அப்பேதங்கள் வருமாறு:—

அத்துவிதமாகிய கலப்பை ஒன்றாய் நிற்றலென்பேமா? வேறாய் நிற்றலென்பேமா? ஒருவாற்றால் ஒன்றும் ஒருவாற்றால் வேறுமான உடனாய் நிற்றலென்பேமா? எனின், இம்மூன்றுமாய் நிற்றலே அத்துவிதமாமென்க. மூன்றுமாய் நிற்றற்குப் பயன் யாதெனின், உயிர்கள் நிலைத்தற்கு இறைவன் ஒன்றாய் நிற்றலும், பொருள்களை உயிர்கள்

---

○ நீருக்கு நிழலுண்டென்பது சிவஞானபோதம் எட்டாஞ் சூத்திரம், இரண்டாம் அதிகரணத்தில் "நீர் நிழல்போல் இல்லா அருவாகி நின்றானை" என்னும் வெண்பாவானும் உரையானும் அறிக.

அறியும்படி அறிவித்தற்கு இறைவன் வேறாய் நிற்றலும், அறியினும் அறிந்தவாறே அநுபவிக்கும் சுதந்திரமின்மையின் அநுபவிக்கும் வண்ணம் செலுத்துதற்கு இறைவன் உடனாய் நிற்றலும் வேண்டப்படுதலின் நிலைத்தல், அறிதல், அநுபவித்தல் என்னும் மூன்றும் பயனாம். இம்மூன்றனுள் எப்பயனும் அடங்கும். இவ்வாறு நிற்கும் முத்திறத்துள் ஒன்றாய் நிற்றற்கு மூன்றுவமையும், வேறாய் நிற்றற்கு மூன்றுவமையும், உடனாய் நிற்றற்கு எழுவமையும் முறையே கூறினார். அவற்றுள்,

1 பண் என்பது ஒலியின் பேதம். ஒலியைவிடப் பண் வேறன்று. ஆயினும், ஒலி எல்லாம் பண்ணாகாமையின் ஒலியுமன்று. இவ்வாறு ஒலியுமன்றாய் ஒலியின் பேதமேயாகிய பண் ஒலியைவிட்டுத் தனித்து நில்லாதவாறுபோலச் சித்தின் பேதமாகிய சீவன், சிவனாகிய சித்தன்றாய் சிவனையின்றித் தனித்து நில்லாமையை உணர்த்த "பண் இசை" என்றார். இதனையே "யானெனுந்தன்மை நினையின்றி இல்லாத் தன்மையால் வேறலேன்" எனத் தாயுமான சுவாமிகள் அருளிச் செய்வாராயினர்.

2 ஒலியின் பேதமே பண்ணென்றாற்போலச் சிவபேதமே சீவனென்னலாமோ என்பார்க்கு, சூரியன் ஒளியையின்றிச் சந்திரனுக்கு ஒளியில்லையாயினும், பொருளால் வேறு காணப்படுமாறுபோல, சிவனையின்றிச் சீவன் தனித்து நிற்றலில்லையாயினும் பொருளால் வேறுண்டென்பதுணர்த்த "வெம்பரிதிமதி" என்றார்.

3 சூரியனும் சந்திரனும் வேறு வேறு பிரித்தறியப்படுமாறு போலச் சிவனும் சீவனும் வேறு வேறு பிரித்தறியப்படுமோ என்பார்க்கு, நெய்யைவிட்டு வேறு பிரித்தறிய முடியாத எள்ளுப்போல, சிவனைவிட்டுச் சீவனை வேறு பிரித்தறிய முடியாதென்பதுணர்த்துதற்கு "திலதயிலம்" என்றார். எள்ளினின்றும் நெய் வேறு பிரிக்கவும் படுகின்றதே எனின், நெய் உள்ளளவுந்தான் எள்ளெனப் படுவதேயன்றி நெய் பிரிந்த பின்னர் எள்ளென்பதின்றாதலின் அதன் கண் ஆசங்கையின்மையறிக. இம்மூன்றுவமைகளும் ஒன்றாய் நிற்றலை விளக்கியவாறாம்.

4 இனி நெய்யைவிட்டு எள்ளுத் தனித்து நில்லாதவாறு போலச் சிவனைவிட்டு உயிர் தனித்து நிற்றலில்லை எனப்பட்டு அவ்வாறு தனித்து நில்லாத பொருளுக்கு அறிவிக்கமுடியாதாகுமே என்பார்க்கு, தீயினாற் காய்ச்சப்பட்ட இரும்பு தீயேயாயினும் தீயின்வேறாய் இரும்பு நிற்றல்

காணப்படுதல் போல, சிவனின் வேறாய்ச் சீவன் நிற்பன் என்பது உணர்த்துதற்கு "தீ இரும்பு" என்றார்.

தீயின் வேறாய் இரும்பு தனித்து நிற்பினும், இரும்போடியைந்ததீ, தனித்துக் காணப்படாதவாறுபோல, இறைவன் வேறு காணப்படானோ என்பார்க்கு, நீரோடு கூடிய உப்பு நீரேயாயினும், நீரில் நின்றும் உப்புத் தனித்து நிற்கவும் படுமாறுபோல, இறைவனும் தனித்து நிற்பனென்ப துணர்த்துதற்கு "பாணி உப்பு" என்றார்.

நீரும் உப்பும் ஒரு காலத்துப் பிரிந்திருப்பது போல, உயிரும் இறைவனும் ஒரு காலத்துப் பிரிந்திருக்குமோ என்பார்க்குக், காற்று ஆகாயத்தையின்றி எக்காலத்தும் பிரிந்திராதவாறுபோல உயிர் எக்காலத்தும் இறைவனைவிட்டுப் பிரிந்திராதென்ப துணர்த்துதற்கு "விண்ணநிலம்" என்றார். இம்மூன்றுவகைகளும் வேறாய் நிற்றலை விளக்கியவாறாம்.

காற்றுக்கு ஆகாயம் இடங்கொடுத்தலேயன்றிக் காற்றை அசையும்படி செய்வதில்லை; அதுபோல உயிர்க்கு இறைவன் ஆதாரமாய் நிற்றலேயன்றி உயிரைச் செலுத்துதல் இல்லையோ என்பார்க்கு, உடலிருத்தற்காதாரமாகிய உயிர், உடலை உடனின்று செலுத்துவதுபோல இறைவனும் உயிருடனின்று செலுத்துவ னென்பதுணர்த்துதற்கு "உடலுயிர்" என்றார்.

உடலை உயிர் இயக்கும் முறையில் சாக்கிரத்தில் தூல உடலையும், சொப்பனத்தில் தூல உடலைவிட்டுச் சூக்கும உடலையும், சுழுத்தியில் தூல சூக்குமம் இரண்டையும் விட்டுக் காரண உடலையும் இயக்குவது போல, இறைவன் உயிரை இயக்கும் முறையில் கூடியும் பிரிந்தும் நிற்பானோ என்பார்க்கு நீரினிடத்து நிழல் எக்காலத்தும் பிரிப்பின்றி விரவி நிற்றல் போல உயிரினிடத்து இறைவன் எக்காலத்தும் பிரிப்பின்றி விரவி நிற்பனென்பதுணர்த்துதற்கு "நீர்நிழல்" என்றார்.

நிழலின் உபகாரமின்றியே நீர் எக்காலத்தும் உவர்ப்பு, கைப்பு முதலிய ரசங்களைப்பற்றி அதுவதுவாய் நிற்பதுபோல, இறைவன் உபகாரமின்றியே உயிர் எக்காலத்தும் விடயங்களைப்பற்றி அதுவதுவாய் நிற்குமோ என்பார்க்கு, சூரியனொளி பக்கத்திலிருக்கும்பொழுது அவ்வொளியைக்கொண்டே பளிங்கினொளி பஞ்ச வன்னங்களைப் பற்றுதலும், சூரியனொளி உச்சியிலிருக்கும்பொழுது பளிங்கினொளி அச்சூரியனொளியோடு கலந்து ஒரு வன்னங்களையும் பற்றாமலும் இருத்தல்போல,

பெத்தகாலத்து இறைவன் மறைந்து நிற்க அவ்விறைவன் துணையைக் கொண்டே உயிர்கள் விடயங்களை அறிதலும், முத்திக்காலத்து இறைவ னோடு உயிர் கலந்து ஒரு விடயங்களையும் அறியாதிருத்தலும் கூடு மென்பதுணர்த்துதற்கு "உச்சிப்பளிங்கு" என்றார்.

உச்சிக்காலத்து எதிர்ப்பட்ட பளிங்கு தன் ஒளி மழுங்காதவாறு போல, முத்திக்காலத்து உயிர்க்குத் தற்போதங் கெடுதலில்லையோ என் பார்க்கு, பகற்காலத்து விளக்கின் ஒளி சூரியன் ஒளியில் அடங்கி நிற் பதுபோல முத்திக்காலத்து உயிர் தற்போதங்கெட்டு நிற்குமென்ப துணர்த்துதற்கு "பகல் விளக்கு" என்றார்.

பகற்காலத்து விளக்குச் செயலற்றிருத்தல்போல முத்திக் காலத்து உயிர்க்கு இன்பானுபவம் இல்லையோ என்பார்க்குப், பால் தன் சுவை முழுதும் தன்னோடு கலந்த நீருக்காக்கி நீரைத்தன்னுள் அடங்கி நிற்கச் செய்யுமாறுபோல, இறைவனும் முத்திக்காலத்து தன் இன்பம் முழு தும் உயிர்க்காக்கித் தன்னுள் அடங்கி நிற்கச்செய்வ னென்பதுணர்த்து தற்கு "பால் நீர்" என்றார்.

நீர் பாலோடு கூடியவழி பாலின் சுவையாயும், பாலோடு கூடாத வழி தன்சுவையாயும் நிற்குமாறுபோல உயிர் இறைவனோடு கூடியவழி இறைவனுக்குரிய இன்பமயமாயும், இறைவனோடு கூடாதவழி தனக் குரிய இன்பமயமாயும் நிற்குமோ என்பார்க்கு, கண் ஒளியுடைப் பொரு ளாயினும், அக்கண்ணொளி, சூரியன் முதலிய பிற ஒளியின் துணை யின்றி எக்காலத்தும் பிரகாசிக்கமாட்டாதவாறுபோல, உயிர் அறிவுடைப் பொருளாயினும் இறைவனையின்றி எக்காலத்து மறியமாட்டா தென்ப துணர்த்துதற்கு "கண்ணிரவி" என்றார்.

கண்ணொளியும் சூரியனொளியும் கலந்து நிற்பினும் கண்ணும் சூரி யனும் வேறு வேறு இடத்திருத்தல்போல, உயிரின் அறிவும் இறைவன் அறிவும் கலந்து நிற்பினும் உயிரும் இறைவனும் வேறு வேறு இடத் தில் இருத்தல் கூடுமோ என்பார்க்கு, கண்ணொளியின் உள்ளீடாய் விரவி நிற்கும் உயிரையினறிக் கண்ணொளி விடயத்தை அறியாதவாறு போல உயிரின் உள்ளீடாய் உயிர்க்குயிராய் நிற்கும் இறைவனையின்றி உயிர் ஒன்றனையும் உணராதாகலின் உயிரும் இறைவனும் வேறு வேறி டத்திலிருப்பதில்லை எனவும், ஒரிடத்தில் கலந்து நிற்கும் எனவும் உணர்த்துதற்கு "உணர்வொளி" என்றார்.

இவ் வேழுவமைகளும் உடனாய் நிற்றலை விளக்கியவாறும்.

உரைப்பாயிரம் முடிந்தது.

நூல்.

# பாயிரம்

காப்பு.

ஒருகோட்ட னிருசெவியன் மும்மதத்த
னல்வாயைங் கரத்த னாறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான்
றருமொருவா ரணத்தின் றாள்க
ளுருகோட்டன் பொடும்வணங்கி யோவாதே
யிரவுபக லுணர்வோர் சிந்தைத்
திருகோட்டு மயன்றிருமால் செல்வமுமொன்
றோவென்னச் செய்யுந் தேவே.

(கொண்டுகூட்டு) ஆறுதருகோட்டு அம்பிறை யிதழித்தாழ்சடையான்றரும் ஒருகோட்டன் இருசெவியன் மும்மதத்தன் நால்வாய் ஐங்கரத்தன் ஒருவாரணத்தின் தாள்கள் உருகு ஓடும் அன்பொடும் ஓவாதே வணங்கி இரவுபகல் உணர்வோர் சிந்தைத்திருகு ஓட்டும் அயன்திருமால் செல்வமும் ஒன்றோ என்னத் தேவேசெய்யும்.

(பொ-ரை) கங்கையையும், இயல்பாலுண்டாகிய வளைவால் அழகுபெற்ற பிறையையும், கொன்றை மாலையையும் அணிந்த தாழ்ந்த சடையையுடைய சிவபெருமான் தநதருளிய ஒற்றைக் கொமபையுடையனும், முறம்போலும்இரண்டுசெவிகளையுடையனும், ○மூன்று மதங்களையுடையனும், தொங்கிய வாயையுடையனும், ஐந்து கரங்களையுடையனுமாகிய ஒப்பற்ற யானை முகத்தானுடைய திருவடிகள், உருகுதலுடன் ஓடப்பெற்ற பேரன்பால் இடையறாது தம்மை வழிபட்டு இரவும பகலும் தியானிப்போரறிவின் கண்ணதாகிய மலசசேட்டையை ஓட்டும். அதுவேயுமன்றி அயனரிமுதலியோர்வாழ்வும் ஒருபொருளன்றென வெறுப்பச் சிவமாந்தன்மைப் பெரு வாழ்வையுந் தரும். (எ-று)

---

○ மூன்று மதம்—கன்னமதம், கபோலமதம், கோசமதம்.

இத்தகைய திருவடிகளுக்கு இடையூற்றை ஒட்டி இந்நூல் முடிவு பெறச் செய்தல் அருமையன் றென்பது கருத்து. மலக்கோளணையை நீக்கி உயிருக்குச் சிவமாந்தன்மைப் பெருவாழ்வைச் செய்விக்கு மென்பதற்கேற்பக் கங்கையின் செருக்கடக்கிப் பிறையை வாழ்வித்த பெருமான் மகனென் றுணர்த்தவேண்டி "ஆறுதருகோட்டம் பிறை யிதழித் தாழ்சடையான்றருமொரு வாரண" மென்றார்.

அங்ஙனமாயின், இதழியைக் கூறுவானே னெனின், திருவடையாளமாலையாதலின் உடன் கூறினார்.

அல்லது, உவமைத் தொகையாகக்கொண்டு இதழிக் கொத்துப் போலத் தாழ்ந்த சடையான் என உரைப்பினு மமையும்.

தருகோட்டம்பிறை என்றது இயல்பாகவே வளைந்திருக்கின்ற அழகிய பிறை என்பதாம்.

ஒரு கோடு முதலியன விநாயகப்பிரானுக்கே விசேடணமாதல் போல, இருசெவியனென்பதும் ஆமோ வெனின், இசை யெச்சத்தால் இரண்டு முறம்போலுஞ் செவியனெனப் பொருடந்து நிற்றலின் ஆமென்க.

யானையுறுப்புக் கழுத்துக்கு மேலேயுள்ளதால், மும்மதத்தனெனல் எவ்வாறு கூடுமெனின், மும்மதம் யானைக்கு அடையென்பர். ஒரு கோடு முதலிய ஏனையவெல்லாம் விநாயகப் பிரானுக்கே அடையாயிருக்க இது மாத்திரம் யானைக் கடையாதல் செல்லாதென மறுக்க, மும்மதங்களும் இச்சாஞானக் கிரியைகளைக் குறித்த உருவகமென்பர். அங்ஙனமாயின், கந்தன் முதலியோரையும் மும்மதத்தனென வழங்க வேண்டும். அங்ஙனம் வழங்குவதின்மையானும், ஒருகோடு முதலிய ஏனையவெல்லாம் உறுப்பினையே விசேடித்து நிற்க, இதுமாத்திரம் உருவக மாதல் செல்லாமையானும் அதுவும் பொருந்தாது. மற்றென்னையோவெனின், ஐந்தெழுத்தின் பேதமாகிய நாலெழுத்து மூன்றெழுத்து முதலியனவும் ஐந்தெழுத்தெனவே வழங்கப்படுமாறுபோல, மும்மதத்தின் பேதமாகிய ஒருமதம், இருமதமும் மும்மதமெனப் படுமென்க.

வாரண மென்பது யானை முகத்தையுடைய விநாயகப்பிரானையும் சிந்தை என்பது அறிவையுங் குறித்தலின் ஆகுபெயர்.

திருகு என்பது திருகுதல் என்னும் பொருள்பட தல் விகுதி குறைந்து நின்றது. ஒன்றோ என்பதில் ஓகாரம் ஒன்றன்று என்னும்

பொருளில் வந்த எதிர்மறை. ஒன்றுமுதல் ஆறுவரை எண்ணுப்பெயர் வருதலின் இச்செய்யுள் எண்ணலங்கார மெனப்படும்.

## மங்கலவாழ்த்து.

மங்கலமென்பது ஈண்டு நூலின் மாட்சியாம். அதனைக் கடவுள் வாழ்த்தில் அடக்கிக் கூறுதலின் மங்கல வாழ்த்தெனப் பட்டது.

## சிவபெருமான் வணக்கம்.

அறுவகைச் சமயத் தோர்க்கு மவ்வவர் பொருளாய் வேறுங்
குறியது வுடைத்தாய் வேதா கமங்களின் குறியி றந்தங்
கறிவினி லருளான் மன்னி யம்மையோ டப்ப னாகிச்
செறிவொழி யாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம்.

(கொ-டு) அறுவகைச் சமயத்து ஓர்க்கும் எனவும், அங்கு அம்மை யோடப்பனாகி எனவுங் கூட்டுக.

(பொ-ரை) புறப்புறம், புறம், அகப்புறம், அகம் என்னும் சமயம் நான்கனுள் அகச்சமயம் ஒழித்து ஒழிந்த மூக்கூற்றுப் புறச் சமயங்களிலே நின்றுகொண்டு, அவற்றுள்ளும் பலவேறு வகைப்பட ஆராய்ந்தறிகின்ற அவரவர்கொண்ட முதற் பொருளாய், அவரின் வேறாகிய அகச்சமயத்தார்க்கு இலயம், போகம், அதிகாரம் என்னும் மூன்றவத்தையின், முறையே சத்தியும், உத்தியோகமும், பிரவிர்த்தியும் என்னும் தொழில் வேறுபாடுபற்றிச் சிவன், சதாசிவன், மகேசன் என்னும் பெயருடைய அருவம், அருவுருவம், உருவம் என்னும் ${}^{o}$தடத்தகுறியே குறியாக வுடைத்தாய்ச், சித்தாந்த சைவர்க்கு அத்தடத்தக்குறியே யன்றி வேதாகமங்களின் கருத்துக்கதீதமாய், உயிர்க்குயிராய், உயிர்கட்கெல்லாம் அறிவைப் பிறப்பிக்கும் அம்மையப்பனுமாகி, எங்கணும் எக்காலமும் கலந்து வியாபகமாய் நின்ற சிவபெருமான் திருவடியைச் சிரமேற் கொள்வாம். (எ-று)

---

${}^{o}$தடத்தம்—தூலம்.

ஞானக் கண்ணால் இறைவனுடைய சொரூபத் திருமேனியையும், ஊனக்கண் சிவகரணமாய் நின்று தடத்தத் திருமேனியையுங் காணப் பெறுது, தத்தங்கருத்திற் கேற்றவாறு பொருளின் முதன்மை கொள்கின்றுராதலின், ஓர்க்குமெனப் பிரிக்கப்பட்டது. விசேடியம் "அடி" யாகலின் உடைத்தாயென அஃறிணை முடிபாகக் கூறினர்.

சிவனருளைச் சிவனடி என்றது உபசாரம்.

இதனுள், அறுவகைச் சமயத்தோர்க்கு மவ்வவர் பொருளாய் எனவே, மேற்கூறிப்போந்த பரபக்கத்துப் பொருளும், வேறுங் குறியதுவுடைத்தாயெனவே, சுபக்கத்து முதற் சூத்திர முதலிய ஐந்து சூத்திரத்திற் பெறப்படுந் தடத்தப் பொருளும், வேதாகமங்களின் குறியிறந்தெனவே, பரபக்கத்துப் பொருளும் தடத்தப் பொருளுமன்றி ஏனைச் சொரூப லக்கணங் கூறும் ஆறுஞ் சூத்திரப் பொருளும், அறிவினிலெனவே, அறிவு வடிவாயுள்ள ஆன்ம சொரூபங்கூறும் ஏழாஞ் சூத்திரப் பொருளும், அருளான் மன்னியெனவே, இறைவன் குருவாய் வந்தனுக்கிரகஞ் செய்த லென்னும் ஞானதரிசனங் கூறும் எட்டாஞ் சூத்திரப் பொருளும், அம்மையோடப்பனுகி எனவே, சாதனஞ் செய்யுங் காலத்து ஞானமு ஞேயமு ஞாதிருவுமாகக் காணப்படும் ஒன்பதாஞ் சூத்திரப் பொருளும், செறிவொழியாது நின்ற எனவே, ஏகனுகி நிற்றல் கூறும் பத்தாஞ் சூத்திரப் பொருளும், சிவனடி சென்னிவைப்பாமெனவே, அரன் மலரடிக் கீழிருத்தல் கூறும் பதினொராஞ் சூத்திரப் பொருளும், சென்னி வைப்பாம் என்னுஞ் சொல்லியல்பான், வைத்தவராகிய அணைந்தோர் தன்மை கூறும் பன்னிரண்டாஞ் சூத்திரப் பொருளுங் குறிப்பானறியக் கிடந்தன. இங்ஙனந் தொகுத்துக் காட்டுதல் மங்கல வாழ்த்துக்கு இலக்கணமென உணர்க.

இனி, இச்செய்யுளிற் கூறப்படும் அறுவகை வினையெச்சங்களாலும் முதல்வனுடைய அறுவகைக் குணங்களும் கூறப்பட்டன வென்றுரைத்தலு மொன்று. அவவினையெச்சம் வருமாறு. அவ்வவர் பொருளாய், வேறுங்குறியதுவுடைத்தாய், வேதாகமங்களின் குறியிறந்து, அறிவினி லருளான் மன்னி, அம்மையோடப்பனுகி, செறிவொழியாது என்பன.

இவ்வினை யெச்சங்கள் ஆறும், தனித்தனி நின்ற என்னும் பெயரெச்சவினைகொண்டு முடிந்தவாறு காண்க.

இவ்வெச்சங்களுள், அவ்வவர் பொருளாய் என்றதனால், அவ்வாறு பல வேறு வகைப்பட நிற்கும் அநந்த சத்தியாகிய அளவிலாற்றலுடைமை கூறப்பட்டது.

வேருங்குறியது வுடைத்தாய் என்றதனுல், அக்குறியனைத்தும் சத்தியினிடத்து நினைந்த மாத்திரத்திற் கொள்ளுதலால் நினைந்தவாறு செய்யவொட்டாது தடுக்கும் மலமில்லாமையாகிய அநாதிபோதம் அநாதி முத்தத் தன்மை யெனப்படும் இயல்பாகவே பாசங்களினீங்குதல் கூறப் பட்டது. இதனுள் நிராமயான்மா எனப்படும் இயற்கையுணர் வினனுதலு மடங்கும்.

வேதாகமங்களின் குறியிறந்து என்றதனுல், அவற்றின் கருத்திற்க தீதமாய் நிற்கும் சுதந்திர மெனப்படுந் தன்வயத்தனுதல் கூறப்பட்டது.

அறிவினி லருளான்மன்னி என்றதனுல், அனைத்துயிர்களிடத்தும் பிரிப்பின்றிநின்று அவரவர் பக்குவ அபக்குவங்களை யறியும் சர்வஞ்ஞத் துவம் எனப்படும் முற்றுமுணர்தல் கூறப்பட்டது.

அம்மையோ டப்பனுகி என்றதனுல், அலுப்த சத்தி எனப்படும் பேரருளுடைமை கூறப்பட்டது. இதனுள், விசுத்ததேக மெனப்படுந் தூயவுடம்பின னுதலுமடங்கும்.

செறிவொழியாது என்றதனுல், பூர்த்தி எனப்படும் வரம்பிலின்ப முடைமை கூறப்பட்டது.

இவ்வாறு எண்குணங்களும் ஆறுகுணங்களி லடக்கிக் கூறப்பட் டமை காண்க. (க)

## இந்நூற்குவழியாகிய சிவஞானபோதமென்னும் முன்னூற் சிறப்பு

என்னையிப் பவத்திற் சேரா வகையெடுத் தென்சித் தத்தே
தன்னைவைத் தருளி னுலே தாளிணை தலைமேற் சூட்டி [வ்
மின்னமர்பொழில்சூழ்வெண்ணெய்மேவிவாழ்மெய்கண்டானு
சென்னியிற் கொண்டு சைவத் திறத்தினைத் தெரிக்க லுற்றும்.

(கொ-டு) என்னையிப்பவத்திற் சேராவகை அருளினுலெடுத்து என்சித்தத்தே தன்னைவைத்து தாள்இணை தலைமேற்சூட்டும்.

(பொ-ரை) பிறப்பு இறப்பாகிய கடலில் அமிழ்ந்துகின்ற என்னை அதன்கண் அழுந்தாத வண்ணம் கருணைக்கையா லெடுத்து, என் அறிவின் கண்ணே தற்சொரூபத்தை விளக்குதற்கெழுந்தருளிவந்து, திருவடிகளைச் சிரமேற் சூட்டித் தீக்ஷை செய்தருளிய, மின்னலையுடைய மேகந்தங்குதற் கிடமாகிய சோலைகள் சூழ்ந்த திருவெண்ணெய்நல்லூர் என்னுந் திருப்பதியில் விருப்பமுற்று வாழ்கின்ற மெய்கண்டதேவன் மொழி பெயர்த்துரைத் தருளிச்செய்த சிவஞான போதநூலை, ஏனை ஆசிரியன்மார் செய்த பிரமாண நூல்கட்கெல்லாஞ் சிரத்தான மாகக்கொண்டு, அதனிற் கூறப்படும் சைவாகமப் பொருட் கூற்றை விளக்குவாம். (எ-று)

எடுத்து என்றது பவத்தைக் கடலாகவும், கருணையைக் கையாகவும் குறிப்பாக உருவகஞ் செய்ய நின்றமையின் குறிப்புருவகம்.

தான் என்றும் பிரிப்பின்றி நிற்கவும், விளங்கித் தோன்றுதலை உபசாரத்தால் வைத்தென்றார். ○ அன்போடியைந்த வழக் கென்றற் போல, சென்னியின் என்றவிடத்து இன் உவம உருபு. (உ)

## இந்நூலில் சொல்லப்படும் பொருளும், அதிகாரியும், பயனும்.

பண்டைநற் றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்தி பண்ணுந்
தொண்டரைத் தானே தூய கதியினிற் றொகுப்பன் மார்க்கர்
கண்டநூ லோதி வீடு காதலிப் பவர்கட் கீசன்
புண்டரி கத்தாள் சேரும் பரிசினைப் புகல லுற்றும்.

(பொ-ரை) முற்சென்மத்தில் சாதனம் முற்றுப் பெற்றவ ராகிய சாமுசித்தரும், நித்த அநித்த வேறுபாடுணர்ந்து அநித்தத்தை வெறுத்து நித்தத்தை நாடும வினையராகிய வைநைகரும், காணப்படும் பிரபஞ்சத்தைத் தவிர வேறு பொருளுண்டென்றறியாத மூடராகிய பிராகிருதரும் என மனித வர்க்கத்திற் பிறந்தார் மூத்திறப்படுவர். அவருள், முற்செய்தவ விசேடத்தால்

---

○ திருக்குறள் அன்புடைமை செ- ௩

சாமு சித்தராய்ப் பிறந்து வீடு காதலித்து முதல்வனிடத்தே பத்தி பண்ணுகின்ற சிவபத்தரை, விஞ்ஞானகலர் பிரளயாகலரைப்போல நூல் வழியாலன்றித் தானே சிவகதியிற் சேர்ப்பன். ஆகலின், அவர்க்கு நூல் வேண்டாம். முத்திபெற விரும்பும் வைநைகராயினார் ஞானிகளெல்லாம் பிரமாண மென்றறிந்து கைக்கொண்ட நூலை ஓதி அதன் வழியான் வீடடைய வேண்டுவது முறைமையாகலின், அவ்வைநைகராயினார்க்குச் சிவபெருமானுடைய செந்தாமரை மலர்போன்ற திருவடி கூடும் முறைமையினை இந்நூலில் வகுத்துக் கூறுகின்றாம. (எ-று)

சன்மார்க்கரை மார்க்கரென்றது தலைக்குறை. சன்மார்க்கர் ஞானிகள். இதனால், பிராகிருதராகிய மூடருக்கு இந்நூல் பயன்படாதென்பதறிக. சொல்லப்படும் பொருள் திருவடி கூடும் முறைமை. அதிகாரி வைநைகர். பயன் திருவடி கூடுதல். (௩)

அவையடக்கம்.

5

மறையினா னயனான் மாலான் மனத்தினான் வாக்கான் மற்றுங்
குறைவிலா வளவி னானுங் கூறொணா தாகி நின்ற
விறைவனார் கமல பாத மின்றியா னியம்பு மாசை
நிறையினார் குணத்தோர்க் கெல்லா நகையினை நிறுத்துமன்றே.

(பொ-ரை) வேதங்களினாலும், பிரமாவினாலும், விட்டுணுவினாலும், மனத்தினாலும், வாக்கினாலும், வேறுங் குறைவில்லாத அநுமானப் பிரமாணத்தினாலும் அறிதற்கரிதாய் நின்ற முதல்வனது செந்தாமரை மலர்போலும் திருவடியென்றுபசரித்துக் கூறப்படுமியல்பை, இன்று யான் சொல்வதென்றெழுந்த எனது புல்லிய ஆசையானது, நிறைந்த குணத்தினையுடையாரெல்லாருக்கும் இவனறிவு இவ்வளவுதானோ என்று எள்ளி நகையாடுதற் கேதுவாம். (எ-று)

இச்செய்யுளுக்கு இவவாறன்றி வேதங்களாலும், அவ்வேதத்திற்கங்கமாய் பிரமாவினாற் செய்யப்பட்ட பதினெண் புராணங்களாலும், மாயோனவதாரமாகிய வியாசனாற் செய்யப்பட்ட இதிகாசங்களாலும்,

மநு முதலியோரால் மனத்தால் நினைந்து செய்யப்பட்ட மிருதிகளாலும், வேதத்தின் கருமகாண்டம் ஞானகாண்ட மென்னும் பூருவமீமாஞ்சை, உத்தரமீமாஞ்சைகளாலும், வேறுங் குறைவில்லாத தருக்க சாஸ்திரங்களாலும் சொல்லுதற்கரிதாய் நின்ற சிவபிரான் கமலபாதத்தை யான் சொல்லுவேனென்றெழுந்த எனது ஆசை அறிவுடையார் நகையாடுதற்கேதுவாம் என்றலுமொன்று.

அயனால் மாலால் என்றவிடத்து ஆல் உருபு கருத்தாப் பொருளினும், மனத்தினால் வாக்கால் என்றவிடத்து ஆல் உருபு கருவிப்பொருளிலும் வந்தன. "சாத்தனாற் கண்ணனோக்கப்பட்டது" என்றாற்போல.

கூறொணு தென்றது வரையறுத்துக் கூறமுடியாதென்பதாம். (ச)

## ஒன்றனும் அறியக்கூடாதோ என்னும் ஆசங்கையை நீக்கல்.

**அருளினா லாக மத்தே யறியலா மளவி னாலுந்**
**தெருளலாஞ் சிவனை ஞானச் செய்தியாற் சிந்தை யுள்ளே**
**மருளெலா நீங்கக் கண்டு வாழலாம் பிறவி மாயா**
**விருளெலா மிரிக்க லாகு மடியரோ டிருக்க லாமே..**

(கொ-டு) சிவனை ஆகமத்தே அருளினாலறியலாம். அளவினாலுந் தெருளலாம். சிந்தையுள்ளே ஞானச்செய்தியால் மருளெலாம் நீங்கக்கண்டும்வாழலாம். பிறவிமாயா இருளெலாம் இரிக்கலாகும், அடியரோடிருக்கலாமே.

(பொ-ரை) இறைவனியல்பு மேற்கூறியவாறு ஒன்றனுமறியப்படாதாயினும், அவ்விறைவனை அவனருளிய வேதசாரமாகிய சிவாகமத்தின் வழிநின்ற அநுபவமுடைய தேசிகாருளிச்செய்யும் உபதேசத்தால் கேட்டுமறியலாம். உபதேசப் பொருளைப் பிரமாணத்தாற் சிந்தித்து மறியலாம். சிந்தித்ததனைச் சிவஞானத்தால் தன் அறிவின் கண்ணே மாசறத் தெளிந்து மறியலாம். அத்தெளிதலினால் பிறவிமாயாமைக்கேதுவாகிய பாசத்தையுங் கெடுக்கலாம். அப்பாசக்கேட்டால் அச்சிவனடியாரோடு கலந்து நிட்டை கூடிச் சிவானந்த அநுபூதியும் பெற்றிருக்கலாம். (எ-று)

அளவினாலும் கண்டும் என்ற உம்மை எண்ணின்கண் வந்தது.

“ஆறுவகைச் சமயத்து” என்னுஞ் செய்யுளில் கடவுள் வணக்கங் கூறு முறையில் சுபக்கமாகிய தன் பக்கத்திற்குரிய இறைவன் சிவன் என்பதும், “மறையினால்” “அருளினால்” என்னும் இரண்டு செய்யுளினும் அவ்விறைவனாலியம்பப்படும் நூல் வேதாகமமென்பதும், அவற்றுள் வேதம் பொது நூலும், ஆகமம் சிறப்பு நூலுமாமென்பதும் கூறப்பட்டன. வேதாகம மிரண்டும் பொதுநூலும் சிறப்புநூலு மாதல் எட்டாஞ்சூத்திரத்து க௫-வது செய்யுளிற் காண்க. (௫)

பாயிரம் முடிந்தது.

ஆகத் திருவிருத்தம் சு.

---

# அளவை இலக்கணம்.

அளவை எனினும் பிரமாணமெனினும் ஒக்கும். அஃதாவது, பொருள்களை அளக்குங் கருவியாம். பொருள் கண்ணாற் காணப்படும் உலகப் பொருளும், அங்ஙனங் காணப்படாத பதி, பசு, பாசப்பொருளும் என இருவகைப்படும். அவற்றுள், கண்ணாற் காணப்படும் பொருளை எண்ணல், நிறுத்தல், ‡ நீட்டல் ○ முகத்தல் என்னும் நான்கு கருவிகளான் அளக்கலாம். கண்ணாற் காணப்படாத பதி, பசு, பாசப்பொருள்களை அக்கருவிகளான் அளக்கமுடியாது. அதனை, ஆகமம், அநுமானம் என்னுங் கருவியைக் கொண்டு ஆன்ம சிற்சத்தியால் அளத்தல் கூடும். ஆகலின், அளவை இலக்கணம் முதற்கட் கூறுகின்றார். இதனால், ஆன்மசிற் சத்தியே பிரமாணமென்பதும், கருவிகளும் உபசாரத்தாற் பிரமாணம் எனப்படும் என்பதும் அறிக.

---

○ நீட்டல்-கோலாலளத்தல். ○ முகத்தல்-படியாலளத்தல்.

## எல்லாப் பிரமாணங்களும் மூன்றில் அடங்கும் என்பது.

*அளவைகாண் டல்கருத லுரையபாவம்பொருளொப்பாறென்ப*
*ரளவைமேலு மொழிபுண்மை யைதி கத்தோ டியல்பெனநான்*
*களவை காண்ப ரவையிற்றின் மேலு மறைவ ரவையெல்லா*
*மளவை காண்டல் கருதலுரை யென்றிம் மூன்றினடங்கிடுமே.*

(பொ-ரை) பிரமாணமாவது காட்சி, அநுமானம், ஆகமம், இன்மை, அருத்தாபத்தி, உவமை என ஆறுவகைப்படும் என்பாரும், அவ்வறுவகைப் பிரமாணங்கட்கு மேலும் பாரிசேடம், சம்பவம், உலகவாதம், சகசம் என நான்கு பிரமாணமுளவென்பாரும், அப்பத்துக்குமேலும் பிரமாணங்களுள வென்பாருமுளர். அவை யெல்லாம் பிரமாணமேயாயினும் காட்சி, அநுமானம், ஆகமம் என்ற இம்மூன்றில் அடங்குவனவாம். (எ-று)

இன்மை என்பது:—என்றுமின்மை, ஒன்றி னொன்றின்மை, இல்லதினின்மை, உள்ளதினின்மை, அழிவுபாட்டின்மைஎனஐவகைப் படும். அவை, முறையே முயற்குக்கோடில்லை, கடத்திற்படமும் படத்திற்கடமுமில்லை, பெரியோர்வாயிற் பொய்யில்லை, யானையைப்0 பந்தியிற் கண்டிலம், கடம் உடைந்தால் அஃதில்லை என்பனவாம்.

அருத்தாபத்தி:—இவ்வூரிற் கொடுப்பவனிவனெனின், கொடாதாருமுண்டு என்பது.

உவமை:—கண்ணன் கருமுகில் போலென்பது.

பாரிசேடம்:—மூவரிலிருவர் கள்வரல்லரெனின், மற்றவன் கள்வனென்பது.

சம்பவம்:—நூற்றிலே தொண்ணூறுண்டென்பது.

ஐதிகம்:—இம்மரத்திற் பேயுண்டென்பது.

சகஜம்:—மாப்பூத்ததெனில் மரம்பூத்ததென்பது.

காட்சி, அநுமானம், ஆகமம் என்னும் இம்மூன்றனுள் யாவும் அடங்கும் முறை வருமாறு:—

---

0 பந்தி-யானை கட்டுமிடம்.

அபாவம், பொருள், ஒப்பு, ஒழிபு, உண்மை, இயல்பு அநுமானத்தி லும், ஐதிகம் ஆகமத்திலும் அடங்கும் என்க. அபாவம் காட்சியி லடங்குமென்பாருமுளர்.

ஏனைய வெல்லாம் மூன்றனுளடங்குமென்னும் இம்முறைபற்றி ஆகமமும் அநுமானத்திலடங்குமெனப் புத்தர் முதலாயினோர் கூறுவர். அஃததனுளடங்காதென்பது ௦ "நூலுரைத்தா னொருவனுளன்" என் னும் பரபக்கத்துச் செய்யுளிற் காட்டப்பட்டுள்ளது. அஃதாவது, காட்சி அநுமானங்களிலடங்காத பரலோக பாதாள லோகமுதலியவற்றை உணர்த்துவது ஆகமம். அவற்றை அநுமானத்தால் உணர்த்த முடியா தாகலான், ஆகமம் அநுமானத்துள் அடங்காதென்பதாம்.

காட்சியநுமானங்களா லளக்கப்படாத பரலோக பாதாளலோகங் களை அளத்தற்கு ஆகமும், காட்சியால் அளக்கப்படாத பதி, பசு, பாசப் பொருள்களை யளத்தற்கநுமானமும், அநுமிதி யுணர்விற்குக் காரணமா கிய அநுமான மெனப்படும் ஏது காட்சிப்பொருளா யிருக்கவேண்டுத லின் காட்சியும் இன்றியமையாது வேண்டப்படுவன வென்றறிந்து கொள்க. காட்சி, அநுமானம், ஆகமம் மூன்றும் முன்னர்க் கூறப் படும். (க)

## காட்சி முதலிய மூன்றின் இலக்கணம்.

மாசறு காட்சி யையந் திரிபின்றி விகற்ப முன்னு
வாசற வறிவதாகு மனுமான மவினாபாவம்
பேசுறு மேதுக்கொண்டு மறைபொருள் பெறுவதாகுங்
காசறுமுறையிம்மானத் தடங்கிடாப் பொருளைக்காட்டும்.

(கொ-டு) விகற்பமுன்னு ஐயந்திரிபு இன்றி ஆசு அறஅறிவது மாசு அறு காட்சியாகும். மறைபொருள் அவினாபாவம் பேசுறு மேதுக்கொண்டு பெறுவது அனுமானமாகும். இம்மானத்து அடங்கி டாப் பொருளைக் காட்டும் காசு அறும் உரை.

(பொ-ரை) காட்சி, அநுமானம், ஆகமம் என்னும் அம் மூன்றனுள், பெயர், சாதி முதலிய விகற்பமின்றி, நிருவிகற்ப வுணர்வைத் தனக்கு முன்னாகக்கொண்டு, ஐயவுணர்வும், விட

---

௦ இந்நூற்பரபக்கம், சௌத்திராந்திகன் மறுதலை, செ-கஉ.

ரீத உணர்வுமின்றி, விடயங்களை நேரே யறிவதாகிய ஆன்மாவி னது ஞானசத்தி குற்றமற்ற காட்சியளவை யெனப்படும். அவ் வாறு நேரே யறியப்படுவதன்றி, மறைந்து நின்ற பொருளை அதனை விட்டு நீங்காது எக்காலத்தும் உடனாய் நிகழும் ஏது வைக்கொண்டு நிருவிகற்ப உணர்வை முன்னாகக்கொண்டு ஐய விபரீதக் குற்றமின்றி அறிவதாகிய ஆன்மாவினது ஞானசத்தி அநுமான அளவையெனப்படும். இவ்விரண்டு பிரமாணங்க ளாலும் அறியப்படாத பரலோக பாதாளலோக முதலிய பொருள்களை அறிவுடையோர் வாக்கியங்கொண்டு நிருவிகற்ப உணர்வை முன்னாகக்கொண்டு ஐய விபரீதக் குற்றமின்றி அறி வதாகிய ஆன்மாவினது ஞானசத்தி குற்றமற்ற ஆகம அளவை யெனப்படும். (எ-று)

நிருவிகற்பம் என்பது விகற்பம் எனத்தலைக்குறைந்துநின் றது. விகற்பமுன்னா ஐயந்திரிபின்றி என்பதனை அனுமானத் தோடும் உரையோடுங் கூட்டிஉரைக்க.

காட்சி அநுமானங்களில் அடங்கிடும் பொருளையும் ஆத்தவாக்கி யங் கொண்டறியின், அது, உரையளவை யாகாது பொருளை விளக்கும் வாக்கியம் எனப்படும். (உ)

காட்சி முதலிய மூன்றினுஞ் சேரக்கூடிய

நிருவிகற்பம் முதலிய நான்கின் இலக்கணம்.

கண்டபொருளை யிரட்டுறவே கருதலையந் திரியவே
கொண்டறிதிரிபாம்பெயர்சாதிகுணமேகன்மம்பொருளெனவைந்
துண்டவிகற்பவுணர்வினுக்குப் பொருளினுண்மைமாத்திரத்தின்
விண்டலில்லா வறிவாகும் விகற்ப மில்லாக் காட்சியே.

(கொ-டு) விண்டல் இல்லா பொருளின் உண்மை மாத்திரத்தின் அறிவு விகற்பமில்லாக் காட்சியே ஆகும். கண்டபொருளை இரட்டுறவே கருதல் ஐயம். திரியவே கொண்டல் திரிபாம். பெயர் சாதி குணமே கன்மம் பொருள் என ஐந்து அவிகற்ப வுணர்வினுக்கு உண்டு.

(பொ-ரை) மேற்கூறிப்போந்த நிருவிகற்பம், ஐயம், விப ரீதம், உள்ளவாறு அறிவதாய சவிகற்பமென்னும் காட்சி நான் கனுள்,பெயர் முதலியவற்றால் பகுத்தறிதலின்றி, இஃதொன்று தோன்றுகின்றதெனப் பொருளுண்மை மாத்திரையே யறியும் ஞானசத்தி நிருவிகற்பக் காட்சி எனப்படும். அங்ஙனம் நிருவி கற்பமா யறிந்தபொருளை இஃது யாதோவென ஒன்றிற் றுணிவு பிறவாது ஆராயும் ஞானசத்தி ஐயக்காட்சி எனப்படும். அப்பொருளை அதனோடொப்புமையுடைய வேறு பொருளாக மயங்கி நிச்சயிக்கும் ஞானசத்தி திரிபுக்காட்சி யெனப் படும். ○ பெயர், சாதி, குணம், கன்மம், பொருள், என்னும் ஐந்தும் அப்பொருட்கணுள்ளவாறு இனிது விளங்க உணரும் ஞானசத்தி சவிகற்பக்காட்சி யெனப்படும். (எ-று)

சவிகற்பம் என்பது விகற்பத்தோடு கூடியது எனப் பொருள்பட்டு மனக்காட்சி எனப்படும். ஆயின், முன்கண்ட வாதனைபற்றித் தோற் றுவதாகிய நினைவுணர்வும் மனக்காட்சியே யாதலின், அதுவும் சவிகற் பம் எனப்படுமோ வெனின், அந்நினைவுணர்வு இவ்விடத்து இந்திரியத் தாற் கண்ட பொருளின்கண் நிகழ்வதில்லை யாகலின், அது சவிகற்பக் காட்சியாகாது. ஆதலின், அதனை இவ்விடத்தெடுத்தோதி விலக்க வில்லை.

நிருவிகற்பம் முதலிய நான்கும் காட்சி முதலிய மூன்றினுஞ் சேரும். அவற்றுள், காட்சியிற் சேருமாறு "மாசறுகாட்சியையந்திரி பின்றி விகற்பமுன்னு ஆசற வறிவதாகும்" என்றதனால் பெறப்பட் டது. அநுமானத்தில், இம்மலை நெருப்புடைத்து எனப் பிண்டமாக அறிதல் நிருவிகற்பம். நெருப்புடைத்தோ, அன்றோ என்பது ஐயம். நெருப்புடைத்தன்று என்பது விபரீதம். புகையாகிய ஏதுவி னும், அடுக்களையாகிய எடுத்துக் காட்டாலும் நெருப்புடைத்து என்று துணிதல் சவிகற்பம்.

ஆகமத்தில், இந்நூல் முப்பொருள்களை உணர்த்தும் எனப் பிண்ட மாக அறிதல் நிருவிகற்பம். உணர்த்துமோ, உணர்த்தாதோ என்பது

---

○ பெயர்-மாவென்பது. சாதி—மாவினதுதன்மை, குணம்-வண்ணம் வடிவு முதலாயின, கன்மம்-அசைதல் நிற்றல் முதலியன, பொருள்-மரம்.

ஐயம். உணர்த்தாது என்பது விபரீதம். பூருவபக்க சித்தாந்தங்களினால் உணர்த்துமென்று துணிதல் சவிகற்பம். (ந)

## காட்சி, அநுமானம், ஆகமம் என்னும் மூன்றின் பாகுபாடும், அவற்றனளக்கப்படும் பொருளின் பாகுபாடும்.

காண்டல் வாயின் மனந்தன்வே தனையோ டியோகக் காட்சியென
வீண்டு நான்கா மனுமானந் தனக்கும் பிறர்க்குமென் றிரண்டா
மாண்ட வுரைதந் திரமந்திரத் தோ டுபதேசச்சொல் லெனமூன்றும்
பூண்டவளவைக் கெதிர்புலன்றன் னியல்பு பொதுவென் றிரண்டாமே

(பொ-ரை) காட்சி, அநுமானம், ஆகமம் என்னும் அம்மூன்றனுள், காட்சிப் பிரமாணமாவது இந்திரியக்காட்சி, மானதக்காட்சி, தன்வேதனைக்காட்சி, யோகக்காட்சி என இங்ஙனம் நான்கு வகைப்படும். அநுமானப் பிரமாணமாவது தானறிதற் பொருட்டநு மானமும், பிறர்க்கறிவித்தற் பொருட்டநு மானமும் என்றிரு வகைப்படும். மாட்சிமைப்பட்ட ஆகமப் பிரமாணமாவது தந்திரகலை, மந்திரகலை, உபதேசகலை என மூன்று வகைப்படும். பொருந்திய இப்பிரமாணங்களான் அறியப்படும் பொருள்களது இயல்பு சிறப்பியல்பு, பொதுவியல்பு என இரண்டு வகைப்படும். (எ-று.)

மேல், நிருவிகற்பமுன்னாக என்றதனால் இந்திரியக் காட்சியும், ஆசற அறிவது என்றதனால் மானதக் காட்சியும் பெறப்பட்டிருப்பவும் அவ்விரு காட்சிகளை ஈண்டுங் கூறியதெற்றுக்கெனின், காட்சி யிலக்கணங் கூறுமுறையில் நிருவிகற்பக் காட்சியை முன்னாகக்கொண்டு சவிகற்பம் நிகழும் என மேற்கூறினர். காட்சியின் வகை கூறுமுறையில இங்கே கூறினர் என்க.

எனவே, நிருவிகற்ப முதலிய நான்கும் தொகையால் காட்சியெனப்படும் ஒன்றற்கே உரியனவன்றி, வகையாற் காட்சி யெனப்படும் நான்கிற்கு முரியனவல்ல வென்பதறிந்து கொள்க. (ச)

## சிறப்பியல்பு பொதுவியல்பின் இலக்கணம்.

***அன்னியசாதி யுந்தன் சாதியுமகன்று நிற்ற***
***றன்னியல் பன்னி யத்தைத் தவிர்ந்துதன் சாதிக் கொத்த***
***றுன்னிய பொதுவி யற்கை சொன்னவிவ் விரண்டினுள்ளே***
***மன்னிய பொருள்க ளியாவு மடங்கிடு மானமுற்றூல்.***

(கொ-டு) அன்னியசாதியுந்தன் சாதியுமகன்று நிற்றல் தன்னியல்பு. அன்னியத்தைத் தவிர்ந்து தன்சாதிக்கொத்தல் துன்னிய பொது வியற்கை. மானம் மன்னிய பொருள்கன் உற்றூல் யாவும் சொன்ன இவ்விரண்டினுள்ளே அடங்கிடும்.

(பொ-ரை) சிறப்பியல்பு, பொதுவியல்பு என்ற இரண்டனுள் ஒரு பொருட்கு வேற்றுச் சாதிப் பொருளினும், தன் சாதிப் பொருளினும் அஃதாவது, தேமா என்றவிடத்துப் பலா முதலிய வேற்றுச்சாதிப் பொருளினும், புளி மா முதலிய தன் சாதியினுஞ் செல்லாது, தனக்கு மாத்திரையே நிலைபெறுந் தன்மை சிறப்பியல்பு. வேற்றுச்சாதிப் பொருண்மாத்திரையிற் செல்லாது, தன் சாதிப் பொருட்கெல்லாம் அஃதாவது, மா வென்ற பொழுது பலா முதலியவற்றை நீக்கி, தே மா முதலிய தன் சாதிக்கெல்லாம் ஒப்ப நிலை பெறுந்தன்மை பொருந்தியது பொதுவியல்பு. காட்சி முதலிய பிரமாணங்களால் பொருந்திய பிரமேயப் பொருள்களை அறியுமிடத்து, அப்பொருள்க ளெல்லாம் சிறப்பியல்பு, பொதுவியல்பு என்னும் இவ்விடத்துக்கூறிய இவ்விரண்டியல்பினுள் ஒன்றுபற்றியறியப்படும். (எ-று)

எனவே, பொதுவியல்பு, சிறப்பியல்பென்னும் இவ்விரண்டின் வேறாகிய வேற்றியல்பு பற்றி ஒரு பொருள் அறியப்படுமாயின், அங்ஙனம் அறியும் அறிவு பிராமாணியமாகாது. அஃதாவது, ஒரு மாமரம், மா வென்னும் பொதுவியல்பு பற்றியாவது, தேமா வென்னும் சிறப்பியல்பு பற்றியாவது அறியப்படுமாயின், அங்ஙனம் அறியும் அறிவு பிராமாணியமாகும். அவ்வாறின்றி, வேம்பு முதலிய வேறு மரங்களாக அறியப்படுமாயின், அங்ஙனம் அறியும் அறிவு பிராமாணியமாகாது. பிராமாணியம் என்பது, பிரமாணத் தன்மையுடையது. அல்லது, பிரமாணம் என அங்கீகரிக்கப்படுவது.

இவ்வாறு, பொருளினியல்பை யுள்ளவாறு அறியும் அறிவு பிராமாணியம் என அறிவதும் அவ்வறிவேயாகும். பிராமாணியம் இல்லாத அறிவை, இல்லாதது என அவ்வறிவு அறிதல் கூடாது. அது, பிறிதொன்றினாலேயே அறியப்படும். இவ்வாறன்றித் தனது பிராமாணியமும் பிறிதொன்றானறியப்படும் என்பர் தார்க்கிகர் முதலாயினோர். அவர், காண்டல் முதலியவற்றையே பிரமாணமெனக் கொண்டாராதலின் அவை பிராமாணியமாதலை உயிரினறிவு அறியுமென்பர். உண்மையில் உயிரினறிவே பிரமாணமாதலின் அவர் கருத்துப் பொருந்தாது.

தன்னாலறியப்படுவதைச் சுதத்துவம் எனவும், பிறிதொன்றானறியப்படுவதைப் பரதத்துவமெனவும் வடநூலார் கூறுவர்.

சாதி என்பது அந்தணர் முதலிய வருணத்தாரைக் குறித்த தன்று. ஒன்று போலுள்ள பல பொருட்குப் பொதுவாயதோர் தன்மையைக் குறித்தது. அஃதாவது பலவேறு வகைப்பட விளங்கும் மனிதர்களிடத்து மனிதத் தன்மைச் சாதி பொதுவாயிருப்பது போலாம். இது சூசி கடாகநயம். அதாவது, ஊசியும் கடாரமும் செய்யப் பொருள்கொடுப்பின், வாங்கியவன் கடாரத்திற்கு முன்னும், ஊசிக்குப் பின்னும் பொருள் வாங்கிய பொழுதினும், ஊசி சிறுவேலையாதலின், முன்னர்க் கொடுப்பதுபோல, பிரமாணங்களி னிலக்கணம் பொருள்களி னிலக்கணம் என்னுமிரண்டினுள், பின்னையது சுருங்கியதாகலின், முன்னர்க் கூறப்பட்டது. (ரு)

## இந்திரியக்காட்சி, மானதக்காட்சிகளின் இலக்கணம்.

உயிரினோ டுணர்வு வாயி லொளியுரு வாதி பற்றிச்
செயிருறு விகற்ப மின்றித் தெரிவதிந் திரியக்காட்சி
யயர்விலிந் திரிய ஞான மைம்புலன் சார்ந்து யிர்க்கண்
மயர்வற வந்த ஞான மானதக் காண்ட லாமே.

(கொ-டு) ஐம்புலன் சார்ந்து அயர்வி லிந்திரிய ஞானம் மயர்வற உயிர்க்கண் வந்த ஞானம் மானதக்காண்டலாமே.

(பொ-ரை) மேற்கூறிய இந்திரியக்காட்சி முதலிய நான்கனுள், ஆன்மாவினின்றும் விடயங்களை நோக்கி ஓடும் அறிவாகிய சிற் சத்தி, கண் முதலிய பொறிகளையும், அப்பொறிகட்குத் துணைசெய்து உடனிற்கும் தேயு முதலிய பூதங்களையும்,

அப்பூதங்கட்கு முதற்காரணமாய் அவற்றை விட்டு நீங்காத உருவம் முதலிய தன்மாத்திரைகளோடும் ஆதாரமாகக் கொண்டு, ஐயவிபரீதக் குற்றங்களும், பொருந்திய பெயர் சாதி முதலிய விகற்பமுமின்றி, உருவம் முதலிய விடயங்களை நிருவிகற்பமாய் அறியும் அறிவு இந்திரியக்காட்சி யெனப்படும். அவ்வாறு ஐம்புலன்களைச் சார்ந்து அறிந்த பின்னர், அக்காட்சியை மீள மறத்தலின்றி, சித்தத்தாற் சிந்திக்கப்பட்டு நிலைபெறும் அவ்விந்திரியக்காட்சியறிவு பெயர், சாதி முதலியவற்றால் விபரீதமாதலின்றி உள்ளவாறு நிச்சயமாப் புத்தி தத்துவத்தின்கண் வருதலாகிய சவிகற்பவுணர்வு மானதக்காட்சி யெனப்படும். (எ-று)

ஓடுணர்வு என்பது ஓடும் உணர்வு என்னும் பொருள் குறித்தலின் வினைத்தொகை. ஒளி என்பது ஒளியையுடைய தேயுவைக் குறித்தலின் ஆகுபெயர். ஆதி என்பதனை ஒளியோடுங் கூட்டுக.

சார்ந்தபின் என்றிருக்கவேண்டியது சார்ந்து எனத்திரிந்து, சார்தல் காரணமாக உண்டாகும் அறிதல் என்னுங்காரியத்தின் மேனின்றது. உயிர் என்பது புத்திதத்துவத்தைக் குறித்தது.

வந்தஞானம் என்பது, "ஆறுசென்றவெயர்" என்றவிடத்து, வழிச்சேறலால் உண்டாகிய வெயர்வை யென்பது போல, வருதலானாகிய ஞானம் என்னும் பொருள்பட நின்றது.

புத்தியையின்றி இந்திரியம் தொழிற்படாதாயினும் புத்தி துணையாக உள்நிற்ப, இந்திரியம் முற்பட்டுத் தொழிற்படுதல்பற்றி இந்திரியக்காட்சி எனவும், மனம் தொழிற்படுங்கால் இந்திரியமும் தொழிற்படினும், மனத்தின் தொழிலாகிய பகுத்தறிவு முற்பட்டும், இந்திரியத்தின் தொழிலாகிய பொருள் மாத்திரையான அறிவு உட்பட்டும் நிற்றலின் மானதக்காட்சி யெனவும் வகுத்தவாறு உய்த்துணர்க. (௬)

## தன்வேதனைக்காட்சி, யோகக்காட்சிகளின் இலக்கணம்.

13
அருந்தின்பத் துன்ப முள்ளத் தறிவினுக் காரகமாதி
தருந்தன்வே தனையாங் காட்சி சமாதியான் மலங்கள்வாட்டிப்
பொருந்திய தேசகால வியல்பகல் பொருள்க ளெல்லா
மிருந்துணர் கின்ற ஞான மியோகக்காட் சியதாமே.

(கொ-டு) தன் வேதனைக்காட்சியாம். மலங்கள் சமாதியால்வாட்டி இருந்து பொருந்திய தேசகால இயல்பு அகல் பொருள்களெல்லாம் உணர்கின்ற ஞானம் நல்யோகக் காண்டலாமே.

(பொ-ரை) அம்மானதக் காட்சியால் பகுத்தறியப்பட்ட பொருளில, மனத்தின் குணமாகிய சத்துவ குண விளக்கத்தால் நுகரப்படும் இன்பமும், இராசதகுணவிளக்கத்தால் நுகரப்படுந் துன்பமும், தமோகுண விளக்கத்தால் நுகரப்படும் மோகமும், புருடனது அறிவிற்கு விடயமாகும்படி காலம், நியதி, கலை, வித்தை, அராகம் முதலிட ஐந்து தத்துவங்களானும் சேர்க்கப் படும். அவ்வினைபத் துன்பங்களை யறியும் ஞானசத்தி தன் வேதனைக்காட்சி எனப்படும். தானாகிய ஆன்மா சுகதுக்கமாகிய வேதனையுள் ளழுந்துதலால் தன்வேதனைக்காட்சி எனப்பட்டது. இவ்வாறு, சகதுக்க வசப்படாது அங்ஙனம் வசப்படுதற் கேது வாய்த் தடைசெய்து நின்ற மலசத்திகளை, இயமம், நியமம் முதலியயோக சமாதியாற் கெடுத்து, ஓரிடத்து ஒருகாலத்து இருந்த படி இருந்து, பொருந்தப்பட்ட மூவிடத்து முக்காலத்து மியல பாக விரிந்த பொருள்களெல்லாவற்றையும் காண்கின்ற காட்சி யாகிய ஞானசத்தி நன்மையாகிய யோகக்காட்சி எனப்படும். (எ-று) (எ)

## இருவகை அநுமானங்களின் இலக்கணம்.

**பக்கமூன்றின் மூன்றேது வுடைய பொருளைப் பார்த்துணரத்**
**தக்கஞானந்தனபொருட்டாம்பிறர்தம்பொருட்டாமநுமானந்**
**தொக்கவிவற்றாற் பிறர் தெளியச் சொல்லலாகு மச்சொல்லு**
**மிக்க வந்நுவயத்தினொடு வெதிரேகச்சொல் லெனவிரண்டாம்**

(கொ-டு) மூன்று ஏதுவுடைய பொருளை பக்கமூன்றின் பார்த் துணரத் தக்கஞானம் தன் பொருட்டாம். தொக்க இவற்றால் பிறர் தெளியச் சொல்லல் பிறர் தம் பொருட்டநுமானமாம். ஆகும் அச்சொல் லும் மிக்க அந்நுவயத்தினொடு வெதிரேகச் சொல்லென இரண்டாம்.

(பொ-ரை) இபக்கு முதலிய மூன்றேதுவினுள், ஒரு ஏதுவுடைய பொருளை டக்கம் முதலிய மூன்றின் வைத்துப்

பொருளைவிட்டு நீங்காத ஏதுவாகிய அவினாபாவம்பற்றி ஆராய்தற்குரிய ஞானசத்தி தன் பொருட்டநுமானம். பொருந்திய அவ்வேதுக்களானே தானறிந்ததனைப் பிறர் அறியப்போதிப்பதாகிய ஞானசத்தி பிறர் பொருட்டநுமானம். அங்ஙனம், பிறரறியப் போதிப்பதாகிய அநுமானச்சொல் மேலாகிய உடம்பாட்டுச் சொல்லும், எதிர்மறைச் சொல்லும் என இரண்டு வகைப்படும். (எ-று) (அ)

## பக்க மூன்றின் பெயரு மிலக்கணமும்.

(ரு

மூன்று பக்கம் பக்கநிகர் பக்க நிகரில் பக்கமெனத்
தோன்றும் பக்கந்துணிபொருளுக் கிடமா மூவமை நிகர்பக்க
மான்ற பொருள்சென் றடையாத விடமா நிகரில் பக்க முத
லென்ற விரண்டும் பொருளுண்மைக் கிடமா மென்று மொழிகின்றும்

(பொ-ரை) பக்கமூன்றுவன:—பக்கமும், சபக்கமும், விபக்கமும் என்பனவாம். சபக்கம் என்பது சமானமானபக்கம். விபக்கம் என்பது சமானமில்லாத பக்கம். அவற்றுள் ஐயுற்றுத் துணிபற் பாலதாய பொருளிருக்குமிடம் பக்கமெனப்படும். அப்பொருளுக்குவமையாய் எடுத்துக் காட்டப்படுவதாய்த் துணிபப்பட்ட பொருளிருக்கு மிடம் சபக்கமெனப்படும். மாட்சிமையாகிய அப்பொருளில்லாதவிடம் விபக்கமெனப்படும். இம்மூன்றனுள் முதற்கட் பொருந்திய பக்கம், சபக்கம் இரண்டும் பொருள் உண்டென அறிதற்கிடமாம். ஏனை விபக்கம் பொருளில்லை யென்றறிதற்கிடமாம். (எ-று)

துணிபொருள் என்பது துணியும் பொருள் என எதிர்காலவினைத்தொகையாயிற்று. இம்மலை நெருப்புடைத்து, விட்டு நீங்காத புகையுடைமையால் என்னுமிடத்து, நெருப்புக்கும் புகைக்கும் விட்டு நீங்காமை உண்டோ என்னும் ஐயத்தை நீக்குதற்பொருட்டு, சபக்கம், விபக்கம் இரண்டும் வேண்டப்படுமென்று கூறவேண்டி, பக்கமும் சபக்கமும் பொருளுண்மைக் கிடமென்றும், விபக்கம் பொருளின்மைக்கிடமென்றுங்கூறினார், கூறவே, பக்கத்தில் காணப்படும் விட்டு நீங்காமைக்கு, சபக்கம் உடன்பாட்டு முகத்தாலும், விபக்கம் எதிர் மறை முகத்தாலும் எடுத்துக்காட்டாகி ஐயம் நீக்கியவாறும்.

புகை காணப்படுகின்ற மலையில் அக்கினி உண்டென்றறிதலால் மலை பக்கமும், புகையிருக்கும் அடுக்களையில் அக்கினியிருத்தல்போல வென்றறிதலால், அடுக்களை சபக்கமும், அக்கினியில்லாத தடாகத்தில் புகையில்லை யென்றறிதலால், தடாகம் விபக்கமுமாகும். (௬)

## ஏது மூன்றின் பெயரு மிலக்கணமும்.

ஏது மூன்றுமியல்புகா ரியத்தோட நுபலத்தி யிவை
யோதி னியல்பு மாமரத்தைக் காட்ட லுறுகா ரியம்புகைதன்
றூதி யாய வனல் காட்ட லாகு மநுப லத்தியது
சீத மின்மை பனியின்மை காட்டல் போலுஞ் செப்பிடினே.

(பொ-ரை) மேல் எடுத்துக்கொண்ட மூன்றேதுவாவன இயல்பும், காரியமும், அநுபலத்தியுமாம். இவற்றிற்கு இலக்கணங் கூறுமிடத்து, மா முதலிய சொற்கள், மா முதலிய பொருளை யுணர்த்துமிடத்து, அச் சொற்களில் இயல்பால் உளதாகிய ஆற்றல் இயல்பு ஏதுவெனப்படும். புகை முதலிய காரியங்கள், நெருப்பு முதலிய தத்தம் காரணங்களை யுணர்த்துமிடத்து, அக்காரியங்கள் பொருந்திய காரிய ஏதுவெனப்படும். சொல்லுமிடத்து, குளிரில்லாமை முதலிய காரியத்தின் இன்மைகள், பனியில்லாமை முதலிய காரணத்தின் இன்மைகளை யுணர்த்துமிடத்தும், பனியில்லாமை முதலிய காரணத்தின் இன்மைகள், குளிர் வாராமை முதலிய காரியத்தின் இன்மைகளை யுணர்த்துமிடத்தும், அவ் வின்மைகள் அநுபலத்தி ஏதுவெனப்படும். (எ-று)

சொற்களினிடத்துப் பொருள்களை யுணர்த்துஞ் சத்தியுண்டு. அந்தச் சத்தி இயல்பேது வெனப்படும். சொற்கள், ஒரு பொருளை யுணர்த்தும் ஒரு சொல், பல பொருளை யுணர்த்தும் ஒரு சொல் முதலியனவாய்ப் பல திறப்படும். படவே, பல பொருளை யுணர்த்தும் ஒரு சொல், தன்னிடத்துள்ள சத்தியால் பொருளை யுணர்த்துதல் கூடாது அச்சொல்லுடன் இணைந்து நிற்கும் வினையே அச் சொற்பொருளை யுணர்த்தும். எதுபோலுமெனின், மா வென்னுஞ் சொல், மாம், வண்டு, குதிரை, இலக்குமி முதலிய பல பொருளை யுணர்த்துமேனும், மாப் பூத்தது என்றவிடத்து, பூத்தல் வினை மாத்திற்கியல்பே யன்றி, ஏனையவற்

றிற் கியல் பன்மையின், மரம் பூத்த தென்றுணர்த்துதல் போலாம். இதனை, "வினை சார்பினமிடமேவி விளங்காப் பல பொருளொரு சொல்" என்னும் நன்னூலானுமுணர்க. எனவே, சொற்கள், வினையைக்கொண்டு வினை முதலை யுணர்த்துங்கால், அவ்வினையும் இயல்பேது வெனப்படும். இவ்வுண்மையுணர்த்துதற் பொருட்டே "மா மரத்தைக் காட்டல் இயல்பு" என்றார் ஆசிரியர். ஆகவே, வினையைக்கொண்டு வினை முதலை யறிதலும், காரிய உண்மையைக்கொண்டு காரண உண்மையை யறிதலும், காரிய இன்மையைக்கொண்டு காரண இன்மையை யறிதலும் என அநுமான உணர்ச்சி மூவகைப்படும். இவற்றிற்கு, முறையே இயல்பு, காரியம், அநுபலத்தி என்னும் மூன்றும் ஏதுவாயின. காரியம் எனினும் உபலத்தி எனினும் ஒக்கும். உள்ளதென்னும் உணர்வு உபலத்தி; இல்லதென்னும் உணர்வு அநுபலத்தி; இவை முறையே புகை உள்ளதால் அக்கினி உண்டு, சீதமின்மையால் பனியில்லை என்றறிவது போல்வன.

காரிய ஏதுக் கூறவே, ஒற்றுமைபற்றிக் காரண ஏதுவுங் கொள்ளப்படும். அதாவது, இடித்து மின்னி இருண்டெழுந்த மேகம் மழை பெய்தலைக் காட்டுதல் போல்வது.

சீதமின்மை பனியின்மை காட்டலென்பது, புகையுண்மை தன்னின் வேறாகிய நெருப்புண்மையைக் காட்டுவது போல, பனியின்மையை வேறு பிரித்துக் காட்டுவதன்று. ०வாளைமீன் நினைத்தலே கூடுதலாகும். அதுபோலச் சீதமின்மையே பனியின்மையைக் காட்டுமென்பதாம். போலும் என்பது அசை. (௧௦)

## உடம்பாட்டுச்சொல், எதிர்மறைச் சொற்களின் இலக்கணம்.

புகையா லனலுண் டெனக்களைபோ லென்னப்புகற லந்நுவயம்
வகையா மனலி லவிடத்துப் புகையின் றுகு மலரினொடு
முகையார் நீரிற் போலென்று மொழிதல்வெதிரேகச்சொலிவை
தொகையா ருறுப்பைந் தொடுங்கூடச் சொல்லுவாருமுளர் துணிந்தே.

---

० வாளை மீனுள்ள றலைப்படலு மாளல்லான்
செல் வக்குடியிற் பிறத்தலும்— பல்லவையு
ளஞ்சுவான் கற்றவுரைநூலு மிம் மூன்றுந்
துஞ்சுமன் கண்டகனு (திரிகடுகம் செ—எ.)

(பொ-ரை) மேல் எட்டாவது செய்யுளில் கூறிய உடம்பாடு, எதிர்மறை யென்னும் சொல்லிரண்டினுள், புகையுள்ள விடத்தே நெருப்புண்டென்பதும், அதற்குப் புகையிருக்கும் அடுக்களையை உவமை கூறுவதும் உடன்பாட்டுச் சொல்லாம். விளக்கமாகிய நெருப்பில்லாவிடத்துப புகையில்லை யென்பதற்கு மலரும் அரும்பும் நிறைந்த தாமரை ஓடையை உவமை கூறுஞ் சொல் மறுதலைச் சொல்லாம். இவ்விருவகைச் சொற்களையும் தனித்தனி மேற்கோளும், ஏதுவும், உவமானமும், உபநயமும், நிகமனமும் என்னும் தொகை பொருந்திய ஐவகை உறுப்புக்களால் இணங்க வைத்துத் தெளியக் கூறுவாருமுளர். (எ-று)

அது காட்டுதும் ; உடம்பாடு:—

மேற்கோள் :—இம்மலை தீயுடைத்து. ஏது :—புகையிருத்தலினால். உவமானம் :—புகையிருக்கும் அடுக்களைபோல். உபநயம்:—இம்மலையும் புகையுடைத்து. நிகமனம் :— ஆதலால் தீயுடைத்து.

எதிர்மறை:—மேற்கோள் :— இம்மலையிற் புகையில்லை. ஏது :—நெருப்பில்லாமையால். உவமானம் :—நெருப்பில்லாத தடாகம்போல் உபநயம் :— இம்மலையினும் நெருப்பில்லை. நிகமனம் :—ஆதலால் புகையில்லை என்பதாம். இங்ஙனங் கூறுவோர் தார்க்கிகர். (கக)

## அநுமானத்தின் அடங்கும் பிற அளவைகளின் இலக்கணம்

போது நாற்றத் தாலறிதல் பூர்வக் காட்சி யனுமான
மோது முரையா லறிவினள வுணர்தல் கருத லனுமான
நீதியான் முற் கன்மபல நிகழ்வதிபபோ திச்செய்தி
யாதியாக வரும் பயனென் றறிதலுரையா லனுமானம்.

(கொ-டு) நீதியான் இச்செய்தி முன் கன்மபலம். இப்போது நிகழ்வது ஆதியாகவரும் பயன் என்று அறிதல் உரையாலனுமானம்.

(பொ-ரை) முதலாவது செய்யுளில் மேலும் பிரமாணங்களுள வென்பாருமுளர் என்றமையால், அப்பிரமாணங்கள் எவையோ வென்னும் சந்தேகத்தை நீக்குதற்கு இவ்விடத்துச்

சில பிரமாணங்களின் இலக்கணங் கூறுகின்றார். அவை வருமாறு:—வாசனை முதலிய ஏதுவைக்கொண்டு காட்சிக்குவிஷயமாகும் வாசனையுடைய புட்பத்தை முன் கண்ட வுணர்ச்சியினால், இவ்விடத்துப் புட்பமுண் டென்றறிதல் பூர்வக்காட்சி யநுமானம். சொல்லப்பட்ட வார்த்தை முதலிய ஏதுவைக் கொண்டு கருத்திற்கு விஷயமாகும், சொல்லிய அவனறிவின் அளவு முதலியவற்றை யறிவது கருதலநுமான மெனப்படும். இவ்விரண்டினும் வேறாய், முறைமையினால் முன்வினையெனப் படும் இதமகிதங்களாவன, முற் பிறவியிற் செய்யப்பட்ட முயற்சியே யானால், இப்பொழுதும் அம்முயற்சிகளைச்செய்தால் மேலைக்கு வினையாகுமெனுமாற்போல், நூல்களுள் சொல்லியது கொண்டு சொல்லாத பொருளையும் ஒப்புமைபற்றி யூகித்துத் துணிதல் உரையநுமான மெனப்படும். (எ-று)

பதிமுதலிய பொருள்களை அளத்தற்கு ஆகமத்திற் கூறப்படும் ஆநுமானம், அவ்வாகமத்தா லறியப்படுதலின், அதனையும் உரையநுமானமென்பாருமுளர்.

இதனானே, அவையிற்றின் மேலுமறைவர் எனப்பட்ட அளவைகள, பூர்வங்கண்ட காட்சிபற்றி அநுமானத்தில் வைத்தறியப்படுங்காட்சி யநுமானம்போல, ஏனைய விரண்டும் முன்கண்டதுபற்றி யறியப்படுதலின், அந்தப் பூர்வக்காட்சி யநுமானத்தோடொப்பவைத்து அநுமானத்து ளடக்கிக் காட்டப்பட்டன. (கஉ)

## ஆகமப் பிரமாணம் மூன்றின் இலக்கணம்.

14

அநாதியே யமலனாய வறிவனூ லாக மந்தான்
பினாதிமா றின்றிப் பேணா றந்திர மந்தி ரங்கண்
மனாதிக ளடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மை யாகுந்
தனாதியி றிலாதான் றன்மை யுணர்த்துத லுபதேசந்தான்.

(பொ-ரை) அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வனருளிச் செய்த நூல்களெனப்படும் வேதாகமங்கள் கருமகாண்டம், உபாசனா காண்டம், ஞானகாண்டம் என மூவகைப்படும். அவற்றுள், கரும காண்டப்பற்றிப் பின்னைய உபாசனாகாண்டம்

ஞானகாண்டங்கட்கு மாறுபாடின்றி யநுட்டித்தலையறிவது தந்திரகலையாகிய உரையளவை யெனப்படும். உபாசனா காண்டம் பற்றி மன முதலிய கருவிகளை யடக்கித் தெய்வத்தை வழிபடும் உண்மையை யறிவது மந்திரகலையாகிய உரையளவை யெனப்படும். ஞானகாண்டம்பற்றித் தனக்கு முதலு முடிவுமில்லாத இறைவன் தன்மைகளைத் தானுணருமாறும், பிறர்க் குணர்த்துமாறும் அறிதல் உபதேச கலையாகிய உரையளவை யெனப்படும். (எ-று)

வேதமும் ஆகமமெனப்படுமாதலின் ஆகமம் என்பதற்கு வேதாகமங்கள் என உரை கூறப்பட்டது.

உண்மை யுணர்த்துதற்குரியவன் என்பதுணர்த்துதற்கு அநாதியே யமலனாய அறிவனென்றார். மல சகிதனாயுள்ளவன் உண்மை யுணரானாதலின், அவன் வாக்கியம் ஆப்த வாக்கியமாகாது. அறிவனால் என்றவிடத்து அறிவனது நூல் என்னும் பொருள்பட ஆறும் வேற்றுமையுருபு தொக்கு நின்றது. அவவுருபு செய்தலுரிமைக்கண் வந்தது. எனவே, அறிவன் அருளிச் செய்த நூல் என விரியுமாறு காண்க.

இறைவன் றன்மை :—எவ்வாற்றானுந் தன்னின் வேறல்லாத எண் குணமுடையனாதல், பொருட்டன்மைபற்றித் தன்னின் வேறாகிய பசு, பாசங்களை அடிமையும், உடைமையுமாக உடையனாதல் முதலியன.

இனி, ஞானகாண்டத்துள்ள பிரமாணவியலும், இலக்கணவியலும், தந்திரகலை யெனவும், சாதனவியல் மந்திரகலை யெனவும், பயனியல் உபதேச கலையெனவும், இவ்வாறு ஞானகாண்ட மொன்றனையே மூவகைப்படுத்துக் கூறுவாருமுளர். அவர்க்கு ஏனை உபாசனா காண்டம் கன்மகாண்டங்கள் பிரமாணத்துளகப்படாமையின் அது பொருந்தாது. சரியை முதலிய நான்கு பாதத்துள்ளும், தனித்தனி நான்கு பாதமுளவாமாறுபோல, தந்திரகலை முதலிய மூன்றனுள்ளும், தனித்தனி மூன்று கலையுளவெனக் கொள்ளுதலே யமையும். அவ்வாறு கொள்ளுமுறையில், ஞானகாண்டத்தை மூவகையாகக் கூறுதலும் பொருந்தும்.

இனி, தார்க்கிகர் முதலியோர் சொற்களைக் கொண்டு பொருளை புணர்தலால், அச் சொற்களும் உரையளவை யென்பர். அவை, பா

லோக பாதாள லோகங்களைக் காட்டுதல் கூடாமையின், சொற்களினிடத்துள்ள ஆற்றலாகிய இயல்பேதுப்பற்றி யறிவதாகிய அநுமான விசேடமாவனவன்றி உரையளவை யாகாமை யறிக.

சொல்லாலறிந்தேன் என்றநுபவம் நிகழ்தலின், அச்சொல் அநுமானத்தின் வேறான வேறளவையாவதன்றி அநுமானத்துளடங்காதென்பரேல், குளிரின்மை பனியின்மை முதலியன, அநுபலத்தியாலறிந்தேன் என்றநுபவம் நிகழ்தலின் இவ்வநுபலத்தியைக் காட்சி முதலியவற்று ளடக்குதல் அவர்க்குக் கூடாது. எனவே, அநுபலத்தியைக் காட்சி முதலியவற்று ளவரடக்குமாறு போல, சொல்லாற் பொருளை புணர்தலும் அநுமானத்துளடங்கு மென்றறிந்துகொள்க (௧௫)

## அநுமான அளவையை உபயோகிக்குமிடத்து உண்டாம் குற்றங்களின் பாகுபாடு.

### வேறு.

௨௦
ஈண்டு பக்கப் போலிநான் கேதுப் போலி யொருமூன்றாய்
வேண்டுமெழுமூன் றாகும்விளங்குவமைப்போலியீரொன்பான்
காண்டிந்தோல்வித்தானமிரண்டிருபத்திரண்டாங்கருதிலிவை
யாண்டு மொழிவ ரவையெல்லா மளக்கி லறுபத்தைந்தாகும்.

(பொ-ரை) மேற் கூறிப்போந்த அநுமானத்திற்குரிய பக்க முதலிய துணைகளுள், துணிபொருட் கிடனாதலாகிய பக்க இலக்கணத்திற் குறைபாடுடைத்தாயும், ஒருபக்க மொத்துப் பக்கம் போலத் தோன்றுவதாகிய பக்கப்போலி, துணியும் பொருட்கு இடனாகாததூஉம், அதற்கு ஒரு பக்கம் இடனாகாததூஉம், துணிந்த பொருட்கு இடனாவதூஉம், அதற்கு ஒரு பக்கம் இடனாவதூஉம் என நான்குவகைப்படும். ஏது விலக்கணத்திற் குறைபாடுடைத்தாயும், ஒரு பக்கம் ஒத்து ஏதுப்போலத் தோன்றுவதாகியஏதுப்போலி, துணியப்படாததூஉம், மறுதலைக்கட்படுவதூஉம், ஒருதலைப்படாததூஉமென மூவகைப்பட்டு, விரியான் இருபத்தொன்றும். உவமை இலக்கண மின்றியும் உவமைபோலத் தோன்றுவதாகிய உவமைப் போலி, உடம்பாடு பற்றியும், எதிர்மறைபற்றியும் இருவகைப்

பட்டு, விரியால் பதினெட்டுவகைப்படும். இனி, தர்க்க வாதத்தின் கண் பேசத்தெரியாமையாகிய தோல்வித்தானம், மயங்கப்பேசுதலும், சும்மாவிருத்தலும் என இருவகைப்பட்டு, விரியான் இருபத்திரண்டாம். அவையெல்லாம் அளக்குமிடத்து அறுபத்தைந்தாம். இவைகளை விசாரிக்கில் அநுமான அளவைக்கு எவ்விடத்திலும் குற்றங்களாமென்று விடுப்பர். (எ-று)

இவ்வறுபத்தைந்தும் குற்றமாதலின் ஆகம அளவைக்கு முன்னாக அநுமானத்தின் தொகையாது இறுதிக்கண் வைத்தார்.

பக்கப்போலி நான்கிற்கும் உதாரணம்:—

(1) துணியும்பொருட்கு இடனாகாதது. "ஆகாயத்தாமரை மணமுடைத்து தாமரைத்தன்மையுடைமையால், தடாகத்தாமரைபோலும்" என்பது. இங்கே மணமுடைத்து என்னும் துணிபொருட்கு இவ்பொருளாகிய ஆகாயத்தாமரை இடமாகாமை காண்க.

(2) துணியும் பொருட்கு ஒரு பக்கம் இடனாகாதது. "சத்தம் அநித்தியம், கண்ணாற் காணப்படுதலால், குடம்போலும்" என்பது. இங்கே அநித்தியமாகிய துணிபொருளுக்குச் சத்தமாகிய பக்கம் இடமாகிக் கண்ணாற் காணப்படுதலென்னும் ஏதுவிற்கு இடமாகாமை காண்க.

(3) துணிந்தபொருட்கு இடனாவது. "அடுக்களையில் அக்கினி உண்டு, புகையுடைமையால், புகைகாணப்படும் இடங்கள்போல" என்பது. இங்கே அடுக்களையில் அக்கினியுண்டென்பது துணிந்தபொருள். ஐயுற்றுத்துணியும் பொருட்கிடமாவது பக்கமேயன்றித் துணிந்த பொருட்கிடமாவது பக்கமாகாமையின் அடுக்களை பக்கப்போலியாயிற்று

(4) துணிந்த பொருட்கு ஒருபக்கம் இடனாவது, "இம்மது சாத்தனாற் பானம்பண்ணப்பட்டது, திரவகத்திரவியமாகலான், பால்போலும்" என்பது. இங்கே பானம் பண்ணப்பட்டமது இதுவெனச் சுட்டியறியவாராமையின் பானம் பண்ணப்பட்டது என்னும் துணிந்த பொருட்கு மது இடமாகாமல் திரவகத்திரவியம் என்னும் ஏதுவிற்கு இடமாதல் காண்க.

ஏதுப்போலி இருபத்தொன்றவன:—

(1) சார்பில்லது.
(2) சார்புண்மை யறியப்படாதது எனச்சார்பு பற்றிய குற்றம் இரண்டு.
(3) சொரூப மில்லது,
(4) சொரூபமுண்மை யறியப்படாதது,
(5) சொரூபத்தின் விசேடணமில்லது,
(6) சொரூபத்தின் விசேடண முண்மை யறியப்படாதது,
(7) சொரூபத்தின் விசேடியமில்லது,
(8) சொரூபத்தின் விசேடியமுண்மை யறியப்படாதது,
(9) சொரூபம் ஒருபக்க மில்லது,
(10) சொரூபம் ஒருபக்க முண்மையறியப்படாதது,
(11) சொரூபம் பாலுக்குடன்பாடில்லது எனச் சொரூபம் பற்றிய குற்றம் ஒன்பது.
(12) சாத்தியத்தோடு வியாத்தியுண்மை யறியப்படாதது,
(13) செயற்கைபற்றி வியாத்தி யுடையது என வியாத்தி பற்றிய குற்றம் இரண்டு.

இவ்வாறு பக்கவிருத்தி துணியப்படாத ஏதுப்போலி பதின்மூன்று.

(14) மறுதலைப்பொருள் சாதிப்பது,
(15) மறுதலைப்பொருள் சாதிப்பதாய்ப் பிறிதோரேதுவை உடன்கொண்டு வருவது,
(16) காட்சியளவையால் மறுக்கப்பட்டுக் கொண்டுவருவது,
(17) கருதலளவையால் மறுக்கப்பட்டுக்கொண்டுவருவது,
(18) உரையளவையால் மறுக்கப்பட்டுக்கொண்டு வருவது என மறுதலைத்தலையுடைய ஏதுப்போலி விரி ஐந்து.
(19) பக்க சபக்க மாத்திரையினன்றி விபக்கத்துஞ் சேறலுடையது,
(20) சபக்கத்திற் சேறலின்றிப் பக்க மாத்திரையிலுள்ளது,
(21) சபக்க விபக்கங்கள் கிடைக்கப்பெறாதது என ஒருதலைப்படாத ஏதுப்போலி விரி மூன்று.

அவை இருபத்தொன்றிற்கும் உதாரணம்:—

1) சார்பில்லது, "ஆகாயத்தாமரை மணமுடைத்து, தாமரைத் தன்மையுடைமையால், பொய்கைத்தாமரைபோலும்" என்பது. இங்கே

தாமரைத்தன்மை யென்னும் ஏதுவிற்கு இல்பொருளாகிய ஆகாயத் தாமரை சார்பில்லாமை காண்க.

(2) சார்புண்மையறியப்படாதது. "கடமுதலியன பரமாணு ரூபம், நித்தியமாகையால், பாஞ்சராத்திர மதத்தில் ஆன்மாவைப்போல" என்பது. இங்கே நித்தியம் என்னும் ஏது கடமுதலியவற்றில் அறியப்படாமை காண்க.

(3) சொரூபமில்லது. "சத்தம் அநித்தியம், காணப்படுகையால்" என்பது. இங்கே காணப்படுகை என்னும் ஏதுவின் சொரூபம் சத்தத்திலில்லாமை காண்க.

(4) சொரூபமுண்மையறியப்படாதது. "புகையோ பனியோ வென்னும் சந்தேகமுள்ளவிடத்தில் புகையென்றெண்ணி இம்மலை நெருப்புடையது, புகையுடைமையால்" என்பது. இங்கே புகையுடைமை என்னும் ஏதுவின் சொரூபம் நிச்சயிக்கப்படாமை காண்க.

(5) சொரூபத்தின் விசேடணமில்லது. "சத்தம் அநித்தியம், கண்ணுக்குத் தெரியுங் குணமாகையால்" என்பது. இங்கே குணத்திற்கு விசேடணமான கண்ணுக்குத் தெரிடம் என்பது சத்தத்தினிடத்து இல்லாமை காண்க.

(6) சொரூபத்தின் விசேடணமுண்மை யறியப்படாதது. "கபிலர் இப்பொழுது விருப்பு வெறுப்புடன் கூடினவர், தத்துவ ஞானமில்லாத புருடராகையால்" என்பது. இங்கே தத்துவஞானமில்லாமை என்னும் விசேடணம் ஐயத்திற்கிடமாதலின் விசேடணத்தின் உண்மை யறியப்படாதாயிற்று.

(7) சொரூபத்தின் விசேடியமில்லது. "சத்தம் அநித்தியம், அறிவிற்கு விடயமான திரவியமாகலின், கடம்போல" என்பது. இங்கே விசேடியமான திரவியத்தன்மை சத்தத்தினிடத்தில்லாமை காண்க.

(8) சொரூபத்தின் விசேடியமுண்மை யறியப்படாதது. "கபிலர் இப்பொழுது விருப்பு வெறுப்புடன் கூடியவர், புருடத்தன்மையோடு கூடிய தத்துவ ஞானமில்லாதவராகையால்" என்பது. இங்கே தத்துவஞானமில்லாமை என்னும் விசேடியம் ஐயத்திற் கிடமாதலின் விசேடிய உண்மை யறியப்படாமை காண்க.

(9) சொரூபம் ஒருபக்கமில்லது. "சீவனும் தேகமும் அநித்தியம் காரியமாகலின், கடம்போலும்" என்பது. இங்கே சீவன் என்னும ஒருபக்கத்தில் காரியமாகலின் என்னும் ஏது இல்லாமை காண்க.

(10) சொரூபம் ஒருபக்கமுண்மையறியப்படாதது. "சீவனும் தேகமும் நித்தியம், காரியமாகாமையின்" என்பது. இங்கே தேகத்

தினிடத்து காரியமாகாமை ஐயத்திற் கிடனாதலின் ஒருபக்கம் உண்மை அறியப்படாமை காண்க.

(11) சொரூபம் பரனுக்குடன்பாடில்லது. "சத்தம் அநித்தியம், செய்யப்படுதலின், கடம்போலும்" என்பது. இங்கே சத்தம் செய்யப்படுவதென்பது மீமாஞ்சகமதத்தில் உடன்பாடின்மை காண்க.

(12) சாத்தியத்தோடு வியாத்தி புண்மையறியப்படாதது. "எல்லாம் க்ஷணிகம், அசத்தாகையால், நீர்க்குமிழி போல" என்பது. இங்கே அசத்திற்கும் க்ஷணிகத்திற்கும் உடனிகழ்ச்சி யறிவிக்கும் பிரமாணமின்மை காண்க. க்ஷணிகம் என்பது தோன்றின மறுக்ஷணத்தில் அழிவது. அசத்தெல்லாம் அவ்வாறழிவதில்லை. ஆதலின், உடனிகழ்ச்சி யறிவிக்கும் பிரமாணமில்லையென்ப தறிந்துகொள்க.

(13) செயற்கைபற்றி வியாத்தியுடையது. மாம்பழம் ருசியுடையது, மிருதுவாயிருத்தலால், வாழைப்பழம் போலும்" என்பது. இங்கே மிருதுத் தன்மைக்கும் ருசித்தன்மைக்கு முள்ள உடனிகழ்ச்சி பாகத்தின் செயற்கையால் நிகழ்ந்தமை காண்க. பாகம் – பக்குவப்படுத்தலாலுண்டாவது.

(14) மறுதலைப் பொருள் சாதிப்பது. "சத்தம் நித்தியம், காரியமாதலின்" என்பது. இங்கே காரியமென்னும் ஏது நித்தத்தின் மறுதலையாகிய அநித்தத்தைச் சாதித்தல் காண்க.

(15) மறுதலைப் பொருள் சாதிப்பதாய்ப் பிறிதோரேதுவைஉடன் கொண்டுவருவது. "சத்தம் நித்தியம், செவிக்குப் புலனாதலின்" என்பதும், "சத்தம் அநித்தியம், காரியமாதலின்" என்பதுமாம். இங்கே முன்னர்ச் சாதித்த நித்தியத்திற்கு மறுதலையான அநித்தியத்தைச்சாதிப்பதற்குக் காரியமென்னும் பிறிதோரேதுவை சத்தம் உடன்கொண்டு வந்தமை காண்க.

(16) காட்சியளவையால் மறுக்கப்பட்டுக்கொண்டு வருவது. "நெருப்புச்சுடில்லாதது, பதார்த்தமாகையால், ஜலத்தைப்போல" என்பது. இங்கே சூடுண்மை காட்சியளவையால் அறியப்படுதலின் பதார்த்தமென்னும் ஏது சூடின்மையைச் சாதிக்கமாட்டாததாய்க் காட்சியளவையால் மறுக்கப்பட்டவாறு காண்க.

(17) கருதலளவையால் மறுக்கப்பட்டுக் கொண்டு வருவது. "கன்மம் நித்தியம், அநாதியாதலால், ஆன்மாவைப்போலும்" என்பது. இங்கே கன்மம் அநித்தியம், மனோவாக்குக்காயங்களாற் செய்

யப்படுதலின், கடம்போலும் என்று பிறிதொரு அநுமானத்தால் அநாதியாதல் என்னும் ஏது மறுக்கப்படுமாறு காண்க.

(18) உரையளவையால் மறுக்கப்பட்டுக்கொண்டுவருவது. "காரியமெல்லாம் முதற்காரணமற்றது, இடையே தோன்றியதாகையால்" என்பது. இங்கே காரியங்களுக்கு முதற்காரணமுண்டென்பது நூல்களிற் கேட்கப்படுதலால் இடையே தோன்றியது என்னும் ஏது முதற்காரணமற்றது என்னும் சாத்தியத்தைச் சாதிக்கமாட்டாததாய் மறுக்கப்பட்டவாறு காண்க.

(19) பக்க சபக்க மாத்திரையினன்றி விபக்கத்துஞ் சேரலுடையது. "இம்மலை தீயுடைத்து, அளவையானளக்கற்பாலதாகலின்" என்பது. இங்கே அளவையானளக்கற்பாலதாந் தன்மை தீயுடைய பக்க சபக்கங்களேயன்றித் தீயில்லாத நீர்த்தடாகமாகிய விபக்கத்தும் சேரல் காண்க.

(20) சபக்கத்திற் சேரலின்றிப் பக்க மாத்திரையினுள்ளது. "சத்தம் நித்தியம், சத்தத் தன்மையுடைமையால்" என்பது. இங்கே சத்தத்தன்மை என்னும் ஏது நித்தப்பொருளாகிய சபக்கத்திற் சேரலின்றிச் சத்தமாகிய பக்கத்தில் மட்டுமிருத்தல் காண்க.

(21) சபக்க விபக்கங்கள் கிடைக்கப்பெறாதது. "எல்லாப் பொருளும் அநித்தம், அளவையானளக்கற்பாலதாகலின்" என்பது. இங்கே முழுவதும் பக்கமாயிருத்தலின் சபக்க விபக்கங்கள் கிடைக்கப் பெறாமை காண்க.

### உவமைப் போலி.

ஏது சாத்தியங்களுக்கு உடனிகழ்ச்சி நிச்சயித்தற் கிடனாவது உவமை. உவமையிலக்கணமின்றியும் உவமைபோலத் தோன்றுமாயின் அங்ஙனந் தோன்றுவது உவமைப்போலி யெனப்படும். அந்த உவமைப் போலி உடன்பாடு, எதிர்மறையென இருதிறப்பட்டு விரியால் ஒவ்வொன்றும் ஒன்பதாய்ப் பதினெட்டு வகைப்படும். அவற்றுள்,

உடன்பாடு பற்றிய ஒன்பதுமாவன :—

(1) சாத்தியமுடைத்தாகாதது,
(2) சாத்தியமுடைமை நிச்சயிக்கப் படாதது,
(3) ஏதுவுடைத்தாகாதது,
(4) ஏதுவுடைமை நிச்சயிக்கப்படாதது,
(5) சாத்தியமும் ஏதுவும் உடைத்தாகாதது,

(6) சாத்தியமுடைமையும் ஏதுவுடைமையும் நிச்சயிக்கப்படாதது,
(7) சொரூபமில்லது,
(8) சொரூபமுண்மை பரனுக்குடன்பாடாகாதது,
(9) செயற்கையான வியாத்தியுடையது என்னுமிவை.

எதிர்மறை பற்றிய ஒன்பதாவன :—

(1) சாத்தியமின்மை யுடைத்தாகாதது,
(2) சாத்தியமின்மை யுடைத்தென்பது நிச்சயிக்கப்படாதது,
(3) ஏதுவின்மையுடைத்தாகாதது,
(4) ஏதுவின்மை யுடைத்தென்பது நிச்சயிக்கப்படாதது,
(5) சாத்தியமின்மை ஏதுவின்மை யென்னும் இரண்டின்மையும் உடைத்தாகாதது,
(6) இரண்டின்மையும் உடைத்தென்பது நிச்சயிக்கப்படாதது,
(7) சொரூபமில்லது,
(8) சொரூபமுண்மை பரனுக்குடன்பாடாகாதது,
(9) வெதிரேக வியாத்தி செயற்கையானுடையது என்னுமிவை.

உடம்பாடு பற்றிய உவமைப்போலி ஒன்பதிற்குதாரணம்:—

(1) சாத்தியமுடைத்தாகாதது. "மனம் அநித்தியம், மூர்த்தமுடைமையால், பரமாணுப்போல" என்பது. இங்கே பரமாணு உவமையில் சாத்தியமாகிய அநித்தியமில்லாமை காண்க. தார்க்கிக மதத்தில் பரமாணு நித்தியம்.

(2) சாத்தியமுடைமை நிச்சயிக்கப்படாதது. "இவன் அரசனாய் வருவான், சந்திரகுலத்துதித்தவனாதலின், அரசியற்குரிய அரசகுமாரன்போல" என்பது. இங்கே அரசகுமாரனிடத்தில் அரசனாய் வருதலென்னுஞ் சாத்தியம் ஐயத்திற் கிடமாதலின் நிச்சயிக்கப்படாமை காண்க.

(3) ஏதுவுடைத்தாகாதது. "மனம் அநித்தியம், உருவமுடைமையால், கன்மம் போல" என்பது. இங்கே கன்மமென்னுமுவமையில் உருவமுடைமையென்னும் ஏதுவில்லாமை காண்க.

(4) ஏதுவுடைமை நிச்சயிக்கப்படாதது. "தேவதத்தன் முற்றுமறியாதவன், விருப்பு வெறுப்புடைமையால், தெருவிற் செல்லும் புருடன் போல" என்பது. இங்கே தெருவிற் செல்லும் புருடனிடத்தில் விருப்பு வெறுப்புண்டா? இல்லையா? என்பது ஐயத்திற்கிடமாய் நிச்சயிக்கப்படாமை காண்க.

(5) சாத்தியமும், ஏதுவும் உடைத்தாகாதது. "மனம் அநித்தியம், உருவமுடைமையால், ஆகாயம் போல" என்பது. இங்கே ஆகாயமென்னு முவமையில் சாத்தியமாகிய அநித்தியமும், ஏதுவாகிய உருவுடைமையும் இல்லாமைகாண்க; தார்க்கிகமதத்தில் ஆகாயம் நித்தம்.

(6) சாத்தியமுடைமையும், ஏதுவுடைமையும் நிச்சயிக்கப்படாதது. "இவன் தேவ உலகம் புகுவான், பூர்வ புண்ணியமுடையவனாதலால், தேவதத்தன் போல" என்பது. இங்கே தேவதத்தனென்னு முவமையில் தேவ உலகம் புகுதலென்னுஞ் சாத்தியமும், பூர்வ புண்ணியமுடைமை என்னும் ஏதுவும் ஐயத்திற்கிடமாய் நிச்சயிக்கப்படாமை காண்க.

(7) சொரூபமில்லது. "மனம் அநித்தியம், உருவுடைமையால், ஆகாயப்பூப்போல" என்பது. இங்கே ஆகாயப்பூ இல்பொருளாதலின் உவமையின் சொரூபமின்மை காண்க.

(8) சொரூபமுண்மை பானுக்குடன்பாடாகாதது. "இவன் முற்றறிவில்லாதவன், முற்றுணர்வுடைமையில் ஐயமிருத்தலால், வரப்போகிற தேவதத்தனைப் போல" என்பது. இங்கே தேவதத்தன் வருதலும், அவனிடத்தில் முற்றுணர்வுடைமையில் ஐயமாதலும் துணியப்படாமையின் பானுக்குடன்பாடாகாமை காண்க.

(9) செயற்கையானுகிய வியாத்தியுடையது. "இந்தப் பழம் ருசியுடையது, மிருதுவாயிருத்தலால், வாழைப்பழம்போல" என்பது. இங்கே வாழைப்பழத்தில் ருசியுடைமையும், மிருதுவாயிருத்தலும் பாகமென்னுஞ் செயற்கையாலுண்டாயினமை காண்க.

எதிர்மறை பற்றிய உவமைப்போலி ஒன்பதற்குதாரணம் :—

(1) சாத்தியமின்மையுடைத்தாகாதது. "ஆன்மா நித்தியம், விபுவாகையால், யாது நித்தியமன்று அது விபுவுமன்று, ஆகாயம்போல" என்பது. இங்கே ஆகாயம் நித்தியமாயுள்ளதென்பது தார்க்கிகர்மதமாதலின் நித்தியமென்னும் சாத்தியமின்மையில்லாமை காண்க. விபு - வியாபகம்.

(2) சாத்தியமின்மை யுடைத்தென்பது நிச்சயிக்கப்படாதது. "இவன் பெரிய அரசாட்சி செய்வான், சந்திரகுலத்துதித்தவனாதலின், எவன் பெரிய அரசாட்சி செய்யவில்லையோ அவன் சந்திரகுலத்துதியாதவன், வேறொரு அரசகுமாரன் போல" என்பது. இங்கே வேறொரு அரசகுமாரன் பெரிய அரசாட்சி செய்யவில்லை யென்பது நிச்சயிக்கப்படாமை காண்க.

(3) ஏதுவின்மை யுடைத்தாகாதது. "மனம் அநித்தியம், உருவுடைமையால், யாது அநித்தமன்று அது உருவுடையதுமன்று, பரமாணுப்போல" என்பது. இங்கே பரமாணு உருவுடையதாகலின் உருவுடையதன்று என்னும் ஏதுவின்மை யுடைத்தாகாமை காண்க.

(4) ஏதுவின்மை யுடைத்தென்பது நிச்சயிக்கப்படாதது. "இவன் முற்றறிவில்லாதவன், விருப்பு வெறுப்புடையவனாதலின், எவன் முற்றறிவுடையவன் அவன் விருப்பு வெறுப்பில்லாதவன், சகல சாஸ்திர பண்டிதன் போல" என்பது. இங்கே சகல சாஸ்திர பண்டிதனிடத்தில் விருப்பு வெறுப்பின்மை நிச்சயிக்கப்படாமை காண்க.

(5) சாத்தியமின்மை ஏதுவின்மையென்னும் இரண்டின்மையு முடைத்தாகாதது. "மனம் அநித்தியம், உருவுடைமையால், யாது அநித்தியமன்று அது உருவுடையதுமன்று, குடம்போல" என்பது. இங்கே குடம் என்னு முவமையில் அநித்தியமும் உருவுடைமையும் காணப்படுதலால் அநித்தியமன்று என்னும் சாத்தியமின்மையும், உருவுடையதன்று என்னும் ஏதுவின்மையும் இல்லாமை காண்க.

(6) இரண்டின்மையு முடைத்தென்பது நிச்சயிக்கப்படாதது. "மனம் நித்தியம், உருவமின்மையால், எது நித்தியமன்று அது உருவமில்லாததுமன்று, ஆகாயம்போல" என்பது. இங்கே ஆகாயமென்னு முவமையில் நித்தமன்று என்னுஞ் சாத்தியமும், உருவமில்லாதது மன்று என்னும் ஏதுவும் இல்லாமை காண்க. தார்க்கிக மதத்தில் ஆகாயம் நித்தப்பொருள்.

(7) சொரூபமில்லது. "மனம் அநித்தியம், உருவுடைமையால், யாது அநித்தமன்று அது உருவுடையதுமன்று, ஆகாயப்பூப்போல" என்பது. இங்கே ஆகாயப்பூ இல்பொருளாதலின் உவமையின் சொரூபமின்மை காண்க.

(8) சொரூபமுண்மை யாவருக்குடன்படாதது. "இவன் முற்றுணர்வுடையவன், விருப்பு வெறுப்பின்மையால், எவன் முற்றுணர்வில்லாதவன் அவன் விருப்பு வெறுப்பில்லாதவனல்லன், பிறக்கப்போகிற தேவதத்தனைப் போல" என்பது. இங்கே தேவதத்தன் பிறத்தல் முதலியன ஐயத்திற்கிடமாதலின் யாவருக்குடன்படாமை காண்க.

(9) வெதிரேக வியாத்தி செயற்கையானுடையது. "தண்ணீர் ருசி மாறுதலில்லாதது, பாகமின்மையால், எது ருசி மாறுதலையுடையது அது பாகமுடையது, பழம்போல" என்பது. இங்கே பழத்திற்கு ருசி மாறுதலுடைமையும் பாகமுடைமையுமாகிய வியாத்தி கூட்டின் செயற்கையாலாயினமை காண்க.

தர்க்கவாதத்தின்கட் பேசத்தெரியாமையாகிய தோல்வித்தானம் மயங்கப்பேசுதலும், வாளாவிருத்தலும் என இருதிறப்பட்டு விரியால் இருபத்திரண்டாம். அவையாவன.

(1) தானெடுத்துக்கொண்ட மேற்கோளைச் சாதிக்கமாட்டாது அதற்குக் கேடுவரப் பேசுதல்.
(2) பிறிதொரு மேற்கோளைக் கூறுதல்.
(3) மேற்கோளுக்கு மறுதலைப்படப் பேசுதல்.
(4) மேற்கோளை விட்டுவிடுதல்.
(5) தான் கூறிய ஏதுவிற்குக் குற்றம் வந்துழி வேறோராற்றானேதுக் கூறுதல்.
(6) தனக்கு வருந்தோல்வியைப் பிறிதொன்று பேசி மறைத்தல்.
(7) பயனொடு படாதன பேசுதல்.
(8) பொருளினிது விளங்காத சொற்களை யெடுத்துக்கொண்டு பேசுதல்.
(9) அவாய்நிலை தகுதி அண்மை இல்லனவாய்ப் பேசுதல்.
(10) மேற்கோள் முதலிய ஐந்தினையும் முறை பிறழப் பேசுதல்.
(11) அவற்றுட் சில குறையப் பேசுதல்.
(12) ஒன்றற்குப் பல கூறுதல்.
(13) சொல்லை இரட்டித்துச் சொல்லுதல்.
(14) பொருளை இரட்டித்துச் சொல்லுதல்.
(15) பிறன் கூறிய பொருளை அநுவதிக்கமாட்டாமை.
(16) பிறன் கூறிய பொருளை அறிந்தும் அறியான்போன்று வினுதல்.
(17) விடை சொல்லத் தெரியாது வேறொரு கருத்துடையான் போன்றிருத்தல்.
(18) வாதத்தை விட்டுப் பிறிதொன்றனைச் சொல்லிப் பொழுது போக்கல்.
(19) சுபக்கத்துக்குச் சொல்லிய குற்றத்தைப் பரிகரியாதுடம்பட்டுப் பரபக்கத்துக்குக் குற்றம் பேசுதல்.
(20) தோல்வித்தான மெய்தினேனைத் தோல்வித்தான மெய்தினு யென்றறிந்து கூறாதிருத்தல்.
(21) தோல்வித்தான மெய்தாதானை எய்தினுயென்று கூறுதல்.
(22) தன் சித்தாந்தத்திற் கிணங்காதவற்றைச் சொல்லிச் சித்தாந் தஞ் சாதித்தல் என்பன.

இவற்றிற்கு உதாரணம் :—

(1) தானெடுத்துக்கொண்ட மேற்கோளைச் சாதிக்கமாட்டாது அதற்குக் கேடுவரப் பேசுதல். "சத்தம் அநித்தியம், இந்திரியத்தாலறியப்படுதலின், குடம்போலும்" என்றவிடத்துக் குடம் இந்திரியத்தாலறியப்படுதல்போலவே குடத்தன்மைச் சாதியும் இந்திரியத்தா லறியப்படுகின்றது. அந்தச்சாதி அநித்தியமில்லை என்று வாதி குற்றங்கூற, அதன்மேல் குடமும் இந்திரியத்தாலறியப்படுதலின் நித்தியமாகுமென்றல். இதனால், அநித்தியமென்னுந் தனது மேற்கோளைச் சாதிக்கமாட்டாமல் அதற்குக் கேடுவரப் பேசினமை காண்க.

(2) பிறிதொரு மேற்கோளைக் கூறுதல். "சத்தம் அநித்தியம், செவிக்குப் புலப்படுதலால்" என்றவிடத்துச் சங்கின் சத்தமுதலியனவும் செவிக்குப் புலனாதலின் அவை அநித்தியமென்பது நிச்சயமாகையால் சாதிக்கவேண்டாமென்று வாதி கூற, எழுத்து ரூபமான சத்தம் அநித்தியமென்று பிறிதொரு மேற்கோள் கூறுதல்.

(3) மேற்கோள்களுக்கு மறுதலைப்படப் பேசுதல். "திரவியம் குணத்தை விட வேறாயுள்ளது, உருவமுதலியவற்றின் வேறாயறியப்படாமையால்" என்பது திரவியம் குணத்தினும் வேறாயுள்ளது என்னும் மேற்கோளுக்கு விரோதமாய் வேறாயறியப்படாமையை ஏதுவாகக் காட்டினமை குற்றமாதல் காண்க.

(4) மேற்கோளை விட்டுவிடுதல். "சத்தம் அநித்தியம், இந்திரியத்திற்குப் புலப்படுவதால்" என்றவிடத்துச் சத்தத்தன்மையும் இந்திரியத்திற்குப் புலப்படுகின்றது. அது அநித்தியமில்லையே என்று வாதி குற்றங் கூற நான் சத்தம் அநித்தியமென்று கூறவில்லையென்றல்.

(5) தான் கூறிய ஏதுவிற்குக் குற்றம் வந்துழி வேறோராற்றானேதுக்கூறல். "சத்தம் அநித்தியம், இந்திரியத்திற்கு விஷயமாதலின்" என்றவிடத்து நித்தியமாகிய சத்தத்தன்மையும் இந்திரியத்திற்கு விஷயமாதலின்" இந்த ஏது குற்றமுடையதென்று வாதி கூற, பொருள்தோறுமுள்ள பொதுவான சாதியோடு கூடியு இந்திரியத்திற்கு விஷயமாதலின் என்று விசேடண வழியாய் வேறேதுக் கூறல்.

(6) தனக்கு வருந்தோல்வியைப் பிறிதொன்று பேசி மறைத்தல். "சத்தம் அநித்தியம்,இந்திரியத்திற்கு விஷயமாதலின்,கடம்போலும்" என்றவிடத்துக் கடத்தன்மைச் சாதியும் இந்திரியத்திற்கு விஷயமாதலின் இந்த ஏது குற்றமுடைத்தென்று வாதி கூற, அதன்மேல் சத்தம்

ஆகாயத்தின் குணம், ஆகாயத்தில் சமவாய சம்பந்தமாயிருத்தலின், அந்தச் சம்பந்தம் அநித்தியமாதலின் சத்தம் அநித்தியமெனப் பிறிதொன்று பேசி முன் சொன்னதை மறைத்தல்.

(7) பயனொடு படாதன பேசுதல். "சத்தம் அநித்தியம், எழுத்து ரூபமாயிருத்தலால்" என்பது எழுத்து ரூபமே சத்தமாகையால் அதனை ஏதுவாகக்கூறியது பயனொடு படாமையாயினமை காண்க.

(8) பொருள் இனிது விளங்காத சொற்களை எடுத்துக்கொண்டு பேசுதல். எழுவாய் பயனிலைகளைச் சிரமப்பட்டுக் கொண்டுகூட்டக் கூடியதாயும், விரைவாயும், பெருவழக்கில்லாத மொழிகளைச் சேர்த்தும் பேசுதல்.

(9) அவாய்நிலை தகுதி அண்மை இல்லனவாய்ப் பேசுதல். "ஆ குதிரை, ஆண்மகன் யானை" எனபன முன்மொழி பின்மொழியை அவாவிநில்லாமை காண்க. "நெருப்பால் நனை" என்றவிடத்து நனைக்குந்தகுதி நெருப்பிற்கில்லாமை காண்க. "ஆவைக்கொணு" என்று ஒரு தொடராகக் கூறாது, ஒவ்வொரு எழுத்தாக இடைவிட்டுக் கூறின் பொருள்படாமை காண்க.

(10) மேற்கோள் முதலிய ஐந்தினையும் முறை பிறழப் பேசுதல். "காரியமாகையால், சத்தம் அநித்தியம், அவ்வாறே இதுவும், கடம் போல், ஆதலால் அநித்தியம்" என்று கூறுதல்.

(11) மேற்கோள் முதலியவற்றுள் சில குறையப் பேசுதல். "இம்மலை நெருப்புடையது, புகையுடைமையால், அடுக்களை போல" என்பது. இங்கே யாண்டுப்புகை ஆண்டு நெருப்பு அடுக்களை போல என்று சொல்லாததும், இம்மலையும் புகையுடைத்து, ஆதலின் நெருப்புடைத்து, என்று கூறாததும் குறையாதல் காண்க.

(12) ஒன்றற்குப் பல கூறுதல். "இம்மலை நெருப்புடைத்து, புகையினையும் பிரகாசத்தையுமுடைத்தாகலான், அடுக்களையும் கொல்லனுலையும் போல" என்பது. இங்கே பல ஏதுவும் பல உவமையும் வேண்டாது கூறியவாறு காண்க.

(13) சொல்லை இரட்டித்துச் சொல்லுதல். "சத்தமநித்தியம் சத்தமநித்தியம்" என்று கூறுதல்.

(14) பொருளை இரட்டித்துச் சொல்லுதல். "சத்தமநித்தியம் நாசமுடையது" என்பது. அநித்தியமும் நாசமுடையதும் ஒரு பொருட் சொற்களாயினமை காண்க.

(15) பிறன்கூறிய பொருளை அநுவதிக்கமாட்டாமை. வாதியாலே சொல்லப்பட்டுச் சபையாரால் அறியப்பட்டிருப்பதை பிரதிவாதி மறுக்குங் காலத்துத் தானெடுத்துக்கூறி அநுவாதஞ் செய்யத் தெரி

யாமை. வாதி கூற்றைத்தானெடுத்துக்கூறி அது பொருந்தாதென மறுப்பது முறைமை.

(16) பிறன் கூறிய பொருளை அறிந்தும் அறியான்போன்று வினாதல். வாதியால் மூன்றுமுறை சொல்லப்பட்டுச் சபையார் அறிந்திருப்பவும் வாதியினுடைய வெளிப்படையான பொருள் நிச்சயமாய்த் தெரியவில்லை; அப்பொருளென்னை ! என்று கேட்டல்.

(17) விடை சொல்லத் தெரியாது வேறொரு கருத்துடையான் போன்றிருத்தல். வாதி மூன்றுமுறை சொல்லியும் சபையாரறிந்திருப்பவும் தெய்வோபாசனை செய்வான்போன்றிருத்தல்.

(18) வாதத்தை விட்டுப் பிறிதொன்றனைச் சொல்லிப் பொழுது போக்கல். வாதம் ஆரம்பித்த பின்னர்க் காலத்தை நீட்டித்துக் கழிக்கக் கருதி மத்தியஸ்தராயுள்ள வித்துவான்கள் சிலர் வரவில்லை யென்றும் சபைக்கு நாயகராயிருத்தற்குரிய அரசர் வரவில்லையென்றும் சொல்லிக் காலங்கழித்தல்.

(19) சுபக்கத்துக்குச் சொல்லிய குற்றத்தைப் பரிகரியாதுடம்பட்டுப் பரபக்கத்துக்குக் குற்றம் பேசுதல். தன் பக்கத்துக்குக் குற்றங் கூறியவிடத்து அக்குற்றத்தைப் பரிகரித்துவிட்டு எதிர் பக்கத்திற கேள்வி கேட்டு அக்கேள்விக்குக் கூறும் விடையிற் குற்றங் கூறல் வேண்டும். தன் பக்கத்துக்குக் கூறிய குற்றத்தைப் பரிகரியாமல் என் பக்கம் குற்றமுடையதாகவே இருக்கட்டும்; உன் பக்கமுங் குற்றமுடையது தானென்றல்.

(20) தோல்வித்தானம் எய்தினோனைத் தோல்வித்தானமெய்தினு னென்று அறிந்து கூறாதிருத்தல். இது வெளிப்படை.

(21) தோல்வித்தானம் எய்தாதானை எய்தினு னென்று கூறுதல் இதுவும் வெளிப்படை.

(22) தன் சித்தாந்தத்திற் கிணங்காதவற்றைச் சொல்லிச் சித்தாந்தத்தைச் சாதித்தல். ஒரு சித்தாந்தத்தைப்பற்றி வாதம் நடந்து கொண்டிருக்கும் பொழுது அதற்கு மாறான சித்தாந்தத்தை மேற்கொள்ளுதல். இது அவசித்தாந்த மெனப்படும். உதாரணம் :— "வெளிப்பட்ட பொருள்களெல்லாம் ஒரு பொருளை முதற்காரணமாகவுடையது; வேற்றுமைப்பட்ட பொருள்களாதலின், ஒரே மண்ணை முதற் காரணமாகவுடைய குடம் பானை முதலிய வேற்றுமைப்பட்ட பொருள்கள் போலும்; எனச் சாங்கியர் மதத்தை மேற்கொண்டு நடக்கும் வாதத்தில் முதற் காரணமென்பது எது? வேற்றுமை என்பது எது? என்று பிரதிவாதி கேட்க, தோன்றுதலழிதலில்லாதது முதற்காரணம். அது பிரகிருதி. தோன்றுத லழிதலை யுடையது வேற்றுமை, என வாதி

விடை கூற, மீண்டும் பிரதிவாதி உள்ளது போகாது, இல்லது தோன்றாது ஆதலின் உள்ள பொருள் காரண ரூபமாய் ஒடுங்குதலே அழிதல். காரிய ரூபமாய் வெளிப்படுதலே தோன்றுதல், எனச் சற்காரிய வாதம் பற்றி வாதியை மறுத்தல் அவசித்தாந்தமாகும்.

ஆக அறுபத்தைந்திற்கும் இவ்வாறு உதாரணங் கூறிக் கண்டு கொள்க.

இந்தப் பக்கப்போலி, ஏதுப்போலி, உவமைப்போலிகள், சொல்லுமிடத்து உண்டாம் சொற் குற்றமாதலின் தோல்வித்தானத்துளடங்கும். இவ்வாறன்றிப் பக்கப் போலி, உவமைப் போலிகள் ஏதுப்போலியுளடங்குமெனத் தார்க்கீகர் கூறுவர். பக்க இலக்கணம் உவமை யிலக்கணத்தை நோக்கிக் காணுமிடத்து அவை பக்கப்போலி உவமைப்போலி எனப்படுவனவன்றி ஏதுப்போலி எனப்படாமையின் ஏதுப் போலியுள் அவ்விரண்டு மடங்கு மென்றல் பொருந்தாமை காண்க. (௧௭)

அளவை இலக்கணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௨௦.

---

# பிரமாணவியல்.

பிரமாணத்தால், பதி, பசு, பாசமென்னு மூப்பொருள்கள் உண்டென்று சாதித்தலில், முதல்மூன்று சூத்திரமும் பிரமாண வியலென்னும் பெயராயிற்று. பலசூத்திரங்களின் தொகுதி இயல்.

## முதற்சூத்திரம்.

### பதி உண்மை.

காட்சி, அநுமானம், ஆகமம் என்னும் பிரமாணம் மூன்றனுள், காட்சி கண்ணுற்காணப்படும் பொருளையும், அநுமானம் ஆகமம் இரண்டும் கண்ணுற் காணப்படாத பொருளையும் அளத்தற்குக் கருவியாகலின், கண்ணுற் காணப்படாத பதி,பசு,பாசங்கள் உண்டென்பதை ஆகமத்தை ஒப்புக்கொள்ளாதாரும் ஏற்குமாறு அநுமானப் பிரமாணத்தா லறிவிக்கத் தொடங்கி, இயல்பு, காரியம், அநுபலத்தி யென்னும் மூன்றேதுக் கொண்டு, மறைந்து நின்ற பொருளை யுணர்த்துவது அநுமானமாதலின், அவற்றுள், குடத்தைக் கண்டபொழுது செய்வோனாகிய குயவனுண்டெனக் கொள்ளும் இயல்புபோலத், தோன்றிநின்றழியும் பிரபஞ்சத்தைக் கண்டமாத்திரத்தே, அத்தொழிலைச் செய்யுங் கடவுள் உண்டென நாட்டுகின்ற இயல்பு ஏதுவெனப்படும் அநுமானப் பிரமாணம் முதற் சூத்திரத்தாற் கூறுகின்றார்.

உலகம், தோன்றி நின்றொடுங்குதலின் ஒரு கருத்தாவை உடையதெனச் சூத்திரப்பொருளைத் தொகுத்துக் கூறுகின்றது.

௨௰

ஒருவனோ டொருத்தி யொன்றென் றுரைத்திடு முலகமெல்லாம்
வருமுறை வந்து நின்று போவது மாத லாலே
தருபவ னொருவன் வேண்டுந் | தான்முத | லீறுமாகி
மருவிடு மநாதி முத்த சித்துரு மன்னி நின்றே.

(கோ - ௫) ஆதலால் தருபவனொருவன் வேண்டும். ஈறுமாகியே அநாதிமுத்த சித்துருமன்னி நின்றே மருவிடும், தான் முதல்,

(போ - ரை.) அவனென்றும், அவளென்றும், அது வென்றுந் தனித்தனி வேறுபாடுடைத்தாய்க் கூறப்படும் பிர பஞ்சக் கூட்டம், உள்ளதாகிய காரணத்தினின்று, தோன்று தற்குரிய சற்காரிய முறைபால் தோன்றி நின்று அழிதலையுடை பது. ஆதலால், அப்பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பதற்கு ஒரு கருத்தா வேண்டப்படும். அக் கருத்தா முன்னொடுங்குதற் கேதுவாய் நின்ற சங்கார காரணனேயாகும். அக்காரணன், பிரபஞ்சம் ஒடுங்கிய பின்னும் அநாதி முத்த சித்துருவாய் நிலை பெற்று நின்று, அநாதிபெத்த சித்துருவின் பொருட்டு, மீள வும் அப்பிரபஞ்சத்தை முன்போலவே தோற்றுவிப்பன். இவ் வாறு, ஒடுக்கியும் தோற்றுவித்தும் செய்வதனால் அச்சங்கார காரணனே உலகிற்கு முதற்கடவுள். (எ-று.)

போவது என்னு மொருமை போதல் என்னுந் தொழில்மேல் நின் றது. 0 "கொள்ளப்படாது மறப்பதறிவிலேன் கூற்றுக்களே" என்ப தனுள் கொள்ளப்படாது என்பது போல. போவதும் என்னும் உம்மை வந்து நிற்றலே யன்றி என இறந்தது தழுவிற்று. ஒருவன் என்ற விடத்து ஒருவனே என்னும்பொருள்பட ஐ உருபும்,தான் என்றவிடத்து பிறிதொன்று முதலாகாது எனப் பிரிக்கும் பிரிநிலை ஏகாரமுந் தொக்கு நின்றன.

ஈறு :—சங்காரம். அது, சங்கார காரணனைக் குறித்தலின் ஆகு பெயர். ஈறும் என்ற உம்மை, சங்கார காரணனும் என்ற உயர்வு சிறப்பு. ஈறுமாகி என்பது சங்கார காரணன் என்னும் பொருள் குறித்து வந்த பெயர். ஆகி - ஆனவன்.

மருவிடும் என்றவிடத்து மருவு வித்திடும் என்னும் பொருள்பட வீவ்விகுதி தொக்கு நின்றது. * "குடிபொன்றிக் குற்றமுமாங்கே தரும்." என்றாற்போல. அநாதிமுத்த சித்துரு என்றவிடத்து ஆய் என்னும் ஆக்கச்சொல் வருவித்துரைக்க. அநாதிபெத்த சித்துருவென் பதும் அதன்பொருட்டு மீள மருவு வித்திடுமென்பதும் அநாதிமுத்த சித்துருவென்பது பற்றி வருவிக்கப்பட்டன. அநாதி பெத்த சித்துரு வின் பொருட்டு மீளத்தோற்றுவிப்பன் என்னுமிக் கருத்துப்பற்றியே ? "மலத்துளதாம்" என்றார் முதனூலாசிரியரும்.

---

0 திருச்சிற்றம்பலக்கோவையார், செ - அஎ.

* திருக்குறள். வெஃகாமை, செ — க.

? சிவஞானபோதம், சூ - க.

உலகம் வந்து நின்று போவதால், தருபவன் ஒருவனை வேண்டும் எனச் சாதிக்கப்பட்டது. வந்து நின்று போவதில் ஐயம் நீக்குதற்கு, ஒருவனோடொருத்தி யொன்று என்னும் அடைமொழியை உலகம் என்பதனோடு சேர்த்துக் கூறினார். கூறவே அவ்வடைமொழி குறிப்பேதுவாய் நின்று, ஒருவனோடொருத்தி யொன்று என்னும் அவயவப் பகுப்புண்மையால், தோன்றிநின்றழியும் எனச்சாதித்து, அதனாற் கருத்தா வுண்மை சாதித்தவாறும்.

இச்செய்யுள், உலகம், ஈறுமாகி, தான் என்ற மூன்று எழுவாயும், இவற்றிற்கு முறையே, வேண்டும், மருவிடும், முதல் என்ற மூன்று பயனிலை முடையது. அநாதி முத்த சித்துரு வென்பது, அநாதியே அதாவது இயல்பாகவே பாசங்களினின்றும் விடுபட்ட ஞானவடிவினன். அநாதிபெத்த சித்துருவென்பது இயல்பாகவே பாசத்தோடுகூடிய ஞானவடிவினன். முன்னையது கடவுள். பின்னையது உயிர்.

இச் செய்யுள் முதனூற் சிவஞானபோதம் முதற் சூத்திரம் போல மூன்று கூற்றையுடையது. அவற்றுள்,

முதற்கூறு :—(1) ஒருவனோ டொருத்தி..........தருபவ னொருவன் வேண்டும். இரண்டாங்கூறு :—(2) ஈறுமாகி அநாதிமுத்த சித்துரு(வாய்) மன்னி நின்று மருவு வித்திடும். மூன்றாங்கூறு :—(3) தானே முதல். (க)

---

## 1· முத 0 லதிகரணம்.

"ஒருவனோடொருத்தி..................தருபவ னொருவன் வேண்டும்" என்பது. இம் முதலதிகரணம், வருமுறை என்பது ஒரு கூறும், வந்து நின்று போவது என்பது ஒரு கூறும், தருபவனொருவன் வேண்டும் என்பது ஒரு கூறுமாக முக் கூற்றையுடையது.

உலகாயதர் மதம்பற்றி உலகந்தோன்றி யழிதலில்லை யென்பதை மறுத்து, வந்துநின்று போவதை வலியுறுத்துகின்றது.

உ

**உதிப்பது மீறுமுண்டென் றுரைப்பதிங் கென்னை முன்னோர்**
**மதித்துல கநாதி யாக மன்னிய தென்ப ரென்னி**
**னிதற்கியா னநுமா ரைதி யெடேனிப் பூதாதி யெல்லாம்** பேரா
**விதிப்படி தோற்றி மாயக் காணலான் மேதினிக்கே.**

(கோ-டு) முன்னோர் மதித்து உலகு அநாதியாக மன்னியது என்பர். உதிப்பதும் ஈறும் உண்டு என்று உரைப்பது என்னை என்னின்,

---

0 அதிகரணம் - கூறு.

இங்கு விதிப்படி இம் மேதினிக்கே பூதாதி எல்லாம் தோற்றி மாயக் காணலான் யான் இதற்கு அநுமானாதி எடேன்.

(பொ-ரை.) உலகாயத நூலுணர்ந்தோர் காட்சிப் பிரமாணத்திற் கெய்தாதன பிரமாணமாகா வென மதித்து உலகம் நித்தமாக நிலைபெறுதலேயன்றித் தோற்றமும் நாசமும் உண்டெனக் கூறுவது பொருந்தா தென்பர். இவ்விடத்து அவர் கூறிய நிலைத்தொழில் போலவே, இவ்வுலகின் கண்ணே பஞ்சபூதமாகிய முதற் காரணத்தின்கண் தோன்றிய எல்லாவற்றிற்கும் தோற்ற நாசங்களாகிய ஏனை இரண்டு தொழிலும் உடனிகழ்ச்சியாய்க் காண்டல் கூடும். அதாவது, ஒரு பொருளும் என்றும் நிலைத்திருப்பதில்லை. ஒரு காலத்தில் தோன்றவும், மற்றொரு காலத்தில் நிற்கவும், பிறிதொரு காலத்தில் அழியவுங் காண்டல் பிரத்தியட்சம். ஆதலின் இவ்வுலகம் முத்தொழிற்படும் என்பதைச் சாதித்தற்கு அவர் கொண்ட காட்சியளவை ஒன்றே அமையுமாதலின், அநுமானம் முதலிய வேறு பிரமாணங்கள் எடுத்துக்காட்டுவே னல்லேன். (எ - று.)

முன்னோர் என்பது தாழ்ந்தாரின் முதன்மை பற்றியும், முன்னிலையான உலகமே பொருளென உணர்தல் பற்றியும் உலகாயதரைக் குறித்தது. விதிப்படி என்பதில் படி என்பதுபோல் என்னும் பொருளில் நின்றது. ◯ "தோற்றமு மீறும் உள்ளதன்பாலே கிடத்தலின்" என்றார் முதனூலாசிரியரும். மேதினிக்கு என்பது மேதினிக்கண் என்னும் பொருள் குறித்தது. பரபக்க மறுப்பு, இந்நூல் பரபக்கம் சுபக்கம் இரண்டிலும் உள்ளனவாதலின் அது கூறியது கூறலாகாது. என்னை? சித்தாந்தப் பார்வையால் பரபக்கத்துள் அவரை மறுத்தார். சித்தாந்தத்தை நாட்டுதற் பொருட்டு பரபக்கப் பார்வையால் சுபக்கத்தில் அவரை மறுத்தாராகலினென்க. எனவே, பரபக்கத்தை மறுத்தலும், சித்தாந்தத்தை நாட்டுதலும் வேற்றுமையாதல் காண்க.✕ (உ)

உலகாயதர் மதம் பற்றித்தோன்றியழித வியல்பென்பாரை மறுத்துத் தருபவன் ஒருவன் வேண்டும் எனக் கூறுகின்றது.

இயல்புகாண் டோற்றி மாய்கை யென்றிடி னியல்பினுக்குச்
செயலதின் றியல்பு செய்திசெய்தியே லியல்ப தின்று
மியல்பதாம் பூதந் தானே யியற்றிடுஞ் செய்தி யென்னிற்
செயல்செய்வா னொருவன் வேண்டுஞ்செயற்படு மசேதனத்தால்.

(கோ - டு.) தோற்றிமாய்கை இயல்புகாண் என்றிடின் செயலது இயல்பினுக்கு இன்று. செய்தி இயல்பேல், செய்தி இயல்பு தினரும. பூதந்தானே இயல்பதாம் செய்தி இயற்றிடும் என்னின் செயற்படும் அசேதனத்தால் செயல் செய்வா ெனுருவன் வேண்டும்.

(போ - ரை) உலகம் தோன்றி அழியினும் அத்தோற்றக் கேடுகள் உலகிற் கியல்பாகலின், அதனெழில் கொண்டு ஒரு கருத்தா வேண்டப்படுவதன்று என்பர் உலகாயதரில் ஒரு சாரார். தோன்றலுங் கெடுதலும் வேற்றுமையாதலின், இயல்பிற்கு வேற்றுமையாதல் கூடாது. அவ்வாறு வேற்றுமையாதலே உலகிற்கு இயல்பு என்று சொல்லில், அவ்வாறு சொல்லுவாருக்கு வேற்றுமையின் வேருய் இயல்பு என்பது ஒன்றில்லை என ஒப்புக்கொள்ள வரும். வரவே, தோற்றிமாய்கை இயல்பென்று முன்சொன்னது விட்டுப்போய்த் தோல்வித்தானமாய் முடியும். இனி, இயல்பும் வேற்றுமையும் வேறெனவே கொண்டு, பூதநான்கும் இயல்பாய் உள்ளனவாம்; அவை தோற்றி மாய்தலாகிய விகாரத்தைச் செய்யுமென்று சொல்லில், நன்று சொன்னுய்! அப்பூதங்கள் அவ்வாறு தோன்றியழிதலாகிய தொழிலைப் பொருந்தி நிற்கின்ற காரியப்பொருளாகலின், அக்காரியப் பொருளாகிய செயப்படு பொருட்குத் தோன்றியழிதலென்னுந் தொழிலைத் தானே செய்தல் கூடாமையின், அத்தொழிலைச் செய்வதற்கு அப்பூதத்தின் வேருய் ஒரு கருத்தா வேண்டப்படும். (எ - று.)

செயற்படும் என்பதில் படும் என்பது முற்றன்று; பெயரெச்சம். அது, அசேதனம் என்னும் பெயர்கொண்டு முடிந்தது. அசேதனம் என்பது செயப்படுபொருள் என்னும் பொருளில் நின்றது.

இதனால்,செயப்படுபொருளும், வினைமுதலும் எவ்விடத்தும் ஒன்ருமாறில்லை யென்பதறிக. தன்னைக் குத்தினு னென்றவிடத்துக், குத்திய வினைமுதல் கையும், குத்தப்பட்ட செயப்படுபொருள் பிறிதோருறுப்பும் எனவும், தன்னைத்தானறிந்தான் என்றவிடத்து, அறிந்தது தன்னறிவும், அறியப்பட்டது தன் வடிவம் எனவுங் கண்டு கொள்க. (டு)

உலகாயதர் மதம்பற்றிப் பூதங்களே செயப்படுபொருளுங் கருத்தாவுமா மெனபாரை மறுத்துரைக்கின்றது.

நிலம்புன லனல்கால் காண நிறுத்திடு மழிக்கு மாக்கும்
பலந்தரு மொருவ னிங்குப் பண்ணிட வேண்டா வென்னி
னிலங்கிய தோற்ற நிற்ற லீறிவை யிசைத லாலே
நலங்கிளர் தோற்ற நாசந் தனக்கிலா நாதன் வேண்டும்.

(கோ - டு) கால் காணநிறுத்திடும். அனல் அழிக்கும். புனல் ஆக்கும். நிலம் பலந்தரும். ஒருவன் இங்குப் பண்ணிட வேண்டா என்னின், இலங்கிய இவை தோற்றம் நிற்றல் ஈறு இசைதலாலே, தோற்றம (நிற்றல்) நாசம் தனக்கு இலா நலம் கொள்நாதன வேண்டும்.

(பொ-ரை.) நான்கு பூதங்களுள் வாயு, ஏனைய மூன்று பூதங்களையும் காணும்படி நிலைக்கச்செய்து தான் அவற்றது சமூகத்தில் நிலைபெறும். அக்கினி ஏனைய மூன்று பூதங்களை அழித்துத்தான் அவற்றது சமூகத்தில் அழியும். அப்பு ஏனைய மூன்று பூதங்களைத் தோற்றுவித்துத்தான் அவற்றது சமூகத்தில் தோன்றும். பூமி ஏனைய மூன்று பூதங்களினின்று நுகரப்படும் பயனைப் பயப்பித்துத் தான் அவற்றது சமூகத்தில் பயன்படும். இவ்வாறு செயப்படுபொருளும், கருத்தாவும் பூதங்களுக்குள்ளே அமைந்து கிடக்கின்றமையின், வேறு இறைவன் வேண்டாமென்று நீ சொல்லில், விளங்கிய இப்பூதங்கள் ஒவ்வொன்றும் உன் கூற்றுனே தனித்தனி முத்தொழிற்படுதலின், அத்தொழிலைச் செய்விக்க முத்தொழிற்படாத மேம்பாடுடைய இறைவன் வேறு வேண்டப்படும். (எ-று)

இச்செய்யுளுக்கு இவ்வாறன்றி நான்கு பூதங்களும் வினைமுதலாய் தோன்றுதல் முதலிய காரியங்களைச் செய்யுமென மேலைச் செய்யுளின் பொருளே பொருளாகக்கொண்டு கூறியது கூறலென்னுங் குற்றம் படவுரைப்பர்.

இச்செய்யுளாற் கூறப்பட்டது என்னையோவெனின், தண்ணீரில்லாதபோது ஒன்றுந் தோற்றாதாதலின், அது ஏனையவற்றைத் தோற்றுவிக்குமெனவும், காற்றில்லாதபோது ஒன்றும் நிலையாதாதலின், அது நிலைப்படுத்து மெனவும், அக்கினி எவற்றையும் அழிக்குமாதலின், அது சங்கரிக்குமெனவும், இவ்வாறு முத்தொழிலையும் மூன்று பூதங்களே செய்யுமெனவும், கன்மமின்றிப் பிருதிவியே பயன்றருமெனவுங் கூறியதை, தண்ணீர் ஏனையவற்றைத் தோற்றிவிக்கு முகத்தால் தான் தோன்றி, வாயுவினால் நிலைத்து, அக்கினியால் அழிக்கப்படுதல் போல ஒவ்வொன்றும் முத்தொழிற்படும் என்று மறுத்தவாறும். (ரு)

சௌத்திராந்திகர் மதம்பற்றி ஒன்றன்கேட்டில் ஒன்று தோன்று மென்பதை மறுத்து வருமுறையில் தருபவனொருவன் வேண்டுமெனக் கூறுகின்றது.

சார்பினிற் றோன்று மெல்லாந் தருபவ னில்லை யென்னிற்
றேரினில் லதற்கோ தோற்ற முள்ளதற் கோநீ செப்பா
யோரினில் லதுவுந் தோன்றா துள்ளதே யுதிக்க வேண்டா
சோர்விலா திரண்டு மின்றி நிற்பது தோன்று மன்றே.

(கொ-டு.) எல்லாம் சார்பினிற் றோன்றும். தேரின் தருபவன் இல்லையென்னின், தோற்றம் இல்லதற்கோ உள்ளதற்கோ நீ செப்பாய். ஓரின் இல்லதுவுந் தோன்றாது. உள்ளது உதிக்கவேண்டாவேல் இரண்டுமின்றிச் சோர்விலாது நிற்பது தோன்றும் அன்றே.

(பொ-ரை.) கணந்தோறும் மாறுதலையுடைய எல்லாப் பொருள்களுள்ளும் முற்கணத்திற் றோன்றிய பொருள் பிற் கணத்திற் றோன்றும் பொருட்குச் சார்பாய் மேம்படுதலின், வித்தின் கேட்டின் முளைபோல, எல்லாப் பொருள்களும் அவ் வச் சார்பிலே தோன்றுமெனச் சௌத்திராந்திகர் முதலியோர் மதம் பற்றிக் கூற அமையுமாதலில், ஆராயுமிடத்து, இப்பிர பஞ்சத்திற்குத் தோற்ற நாசமில்லாத மேம்பாடுடைய ஒரு கருத்தா வேண்டுமென்றல் கூடாதெனின், அப்படியன்று; ஒன் றன் சார்பில் ஒன்று தோன்றுமென்று நீ கூறியது இல்பொ ருட்கோ உள்பொருட்கோ கூறுவாயாக. உணருமிடத்து இல்பொ ருட்கென்பையாயின், அது முயற்கோடு போல ஒரு காலத்தும் தோன்றுமாறில்லை. உள்பொருட்கெனின், உதிக்க வேண்டுவ தில்லையென மறுத்தவிடத்து, மாத்துமிகர் மதம்பற்றி, இல்லது மன்றி உள்ளதுமன்றி அநிர் வசனமாகிய சூனியமாய் மெலி வின்றி நிற்கும் பொருள் தோன்றுமெனக் கொள்வேன். (எ-று)

இல்லதும் என்பது வகர உடம்படுமெய் பெற்று இல்லதுவும் என நின்றது. உம்மை இழிவு சிறப்பு. (௫)

மாத்துமிகர் முதலியோர் மதம்பற்றி இல்லதும் உள்ளது மல்லாதது தோன்றுமென்பாரை மறுத்து வருமுறையில் தரு பவனொருவன் வேண்டுமெனக் கூறுகின்றது.

உள்ளது மிலது மின்றி நின்றதொன் றுளதே லுண்டா
மில்லதே லில்லை யாருந் தோற்றமு மிசையா தாகு
முள்ளகா ரணத்தி லுண்டாங் காரிய முதிக்கு மண்ணி
லில்லதாம் படங்கடாதி யெழிறரு மியற்று வானால்.

(பதஉ-டு) இயற்றவானல் மண்ணில் படம் இல்லதாம். கடாதி யெழில்தரும். உள்ள காரணத்தில் உண்டாங்காரியம் உதிக்கும்.

(பொ - ரை) அவ்வாறு உள்ளது மன்றி, இல்லதுமன்றி அநிர்வசனமாய்க் கூறபபடும் பொருள்தான் உண்டோ இல்லையோ என வினவினார்க்கு, உண்டென்று கூறில் உள் பொருளேயாம். இல்லை என்று கூறில் இஃபொருளேயாம். இவ்வாறாகவே, முன்னர் அநிர்வசனம் என்றது போலியாயொழியும். அதுவன்றியும், அநிர்வசனப் பொருள் சூனியமாதலின் அதற்குத் தோற்றமுங்கூடாது. இவ்வாறு, சௌத்திராந்திகர்முதலியோர் கூறும் சார்பிற்றோற்றமாகிய இல்பொருட்கும், மாத்துமிகர் முதலியோர் கூறும அநிர்வசனபபொருட்கும் தோற்றம் கூடாமையால், பாரிசேட அளவையால், திகிரிமுதலிய துணைக்காரணங்களை மண்ணாகிய முதற்காரணத்தின் கண் செலுத்தும் குயவனால் அம் மண்ணினின்றும் ஆடை முதலிய காரியந் தோன்றாது; குடம், பானை, கலசம் முதலிய காரியமே வெளிப்பட்டுத் தோனறுவதுபோல, அவ்வெதிர்மறை முகத்தானும், உடனபாட்டு முகத்தானும், உள்பொருளாகிய காரணததினின்றும், உள்பொருளாகிய காரியம் ஒரு கருத்தாவால் வெளிப்பட்டுத் தோன்றும். (எ - று)

"சோர்விலாதிரண்டுமின்றி நிற்பது," என்று மேலைச் செய்யுளிற் கூறியதை, அங்ஙனம் நிற்பதொரு பொருள் உண்டோ, இல்லையோ என்பார்க்கு உண்டென்று கூறில் உள் பொருளேயாம்; இல்லையென்று கூறில் இல்பொருளேயாம் என்பது கூறுதற்பொருட்டு, ஈண்டு "உள்ளது மிலது மின்றி நின்றதொன்றுளதேல்" என 0 அநுவாதமாக எடுத்துக்கொண்டு கூறினர். [சு]

சமணர் மதம் பற்றி உள்ளதும் இல்லதுமானது தோன்றுமென்பாரை மறுத்து வருமுறையில் தருபவனொருவன் வேண்டுமெனக் கூறுகின்றது.

ஒருபொருளொருவ னின்றி யுளதில தாகு மென்னிற்
றருபொருளுண்டே லின்றாந் தன்மையின் றின்றேலுண்டாய்
வருதலின் றிஃது காரிய முதலுள தாகு மென்னிற்
கருது காரியமு முண்டாய்த் தோற்றமுங் கருத்தா வாலாம்

---

0 அநுவாதமாவது:–முன்னர்ப் பெறப்பட்ட தொன்றனைப் பிறிதொன்று கூறுதற் பொருட்டுப் பின்னரு மெடுத்தோததல்.

(கோ - ௬) ஒரு பொருள் உளது இலது ஒருவன் இன்றி ஆகும் என்னின், தருபொருள் உண்டேல் இன்றாந்தன்மையின்று. இன்றேல் உண்டாய்வருதல் இன்று. முதல் உளதாகும் காரியம்இலது என்னின், கருது காரியமும் உண்டாய் தோற்றமுங் கருத்தாவால் ஆம்.

(பொ - ரை) இஃபொருட்கும், அதிர் வசனப் பொருட்கும் தோற்றம் உண்டென்றல் கூடாமையின், சமணர்மதம் பற்றிக் காரியப்படுவதொரு பொருள் உண்டுமாய் இல்லையுமாய் நிற்கும் ஈரியல்புடையதாகலின், இதற்கொரு கருத்தா வேண்டப்படுவதின்றியே உண்டாமெனக் கொள்வேமெனின், பொருந்தியபொருள் உள்ளதாயின் இல்லையாந் தன்மையின்றி உள்ளதேயாம்; இல்லையாயின் உண்டாய் வருதலின்மையான் இல்லதேயாம்; ஆதலின், உண்டுமாம் இல்லையுமாம் என மாறுபட்ட இரண்டு தன்மை ஒரு பொருளுக்கிசைதல் கூடாது; என மறுக்கச், சித்தாந்தக் கொள்கைப்படி காரணரூபமாயுண்டு, காரியரூபமாயில்லை என்பதே உண்டு மில்லையு மென்றதற்குப் பொருளென்று கூறின், நன்று கூறினாய்! காரணகாரியங்கட்குத் தம்முண் வேற்றுமையின்மையான் காரணம் உள்பொருளாயின், கருதுகின்ற காரியமும் அதன்கட் சூக்கும ரூபமாய் உள்ளதேயாகும். அது பின்னர்த் தூலரூபமாய் விளங்கித் தோன்றுதல் ஒரு கருத்தாவினாலாம் என்பது தானே விளங்கும். ✕ (எ - று)

இது கொண்டு, வந்து நின்று போவது என்றதும், வருமுறை என்றதும், அதாவது உள்ளது தோன்றுமென்னுஞ் சற்காரியமுறையும், தருபவனொருவன் வேண்டும் என்றதும்வைதிகப்புறத்தாராகிய உலகாயதர், சௌத்திராந்திகர், மாத்துமிகர், சமணர் முதலியோர் மதம் பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து[†]இகந்து படாமைக்காத்தார். இனி, வைதிகத் துட்பட்ட மீமாஞ்சகர், தார்க்கிகர், சாங்கியர் முதலியோர் மதத்தானும் முறையே அம்மூன்றும் இகந்து படாமைக் காக்கின்றார். (எ)

மீமாம்சகர் மதம்பற்றி உடலழியுமன்றி உலகமழியாதென்பாரை மறுத்து உலகமும் அழியும் எனக் கூறுகின்றது.

காயத்தி னழிவு தோற்றங் கண்டன முலகிற் காணும்
நீயித்தை யுரைத்த வாறிங் கென்னெனி னிகழ்த்து முண்மை
மாயத்த வுலகம் பூ நீர் தீ வளி வானமாகி
யாயித்தா னென்றி னென்று தோன்றி நின் றழித லாலே.

(கொ - டு.) தோற்றம் அழிவு காயத்திற் கண்டனம். உலகிற் காணும் இங்கு நீ இத்தை உரைத்தவாறு என்னெனின் மாயத்த உலகம் பூநீர் தீவளிவானம் ஆதி ஆய இத்தான் உண்மை ஒன்று ஒன்றின் தோன்றி நின்றழிதல் ஆலே நிகழ்த்தும்.

(பொ - ரை.) உடலும், உலகும் என்னும் இரு கூற்றுப் பிரபஞ்சத்துள் ஆண், பெண், அலி என மேற்கூறிய அவயவப் பகுப்பு உடலுக்கேயன்றி ஏனை யுலகத்திற் கின்மையால், தோற்றமும் அழிவும் காயத்திற் கண்டனம்; அன்றி, உலகத்திற் காணுமெனபது நிச்சயமாயிருக்க, இவ்விடத்து இரண்டற்கும் ஒப்பத் தோற்றக் கேடுகள் கூறுதல் அமையாதென்று சொல்லில், இவ்வாறு மயக்கத்தைச் செய்வதாகிய உலகமும் நிரவயவம் (அவயவமின்மை) இன்றி மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்றது முதலான அவயவப் பகுப்புடைத்தாகிய இதனான், அவ்வவயவப் பகுப்புண்மையே இரு கூற்றுப் பிரபஞ்சத்தி லொன்றாகிய உலகமும், ஏனைக் காயம் போலத் தோன்றி நின்றழிதலை உணர்த்தும். (எ - று.)

ஆயித்தானென்பதில் ஆய இதனான் என்னும் பொருள்பட அகரமும், அன்சாரியையும் தொக்குநின்றன. * "பெற்றத்தாற் பெற்ற பயன்" என்றாற்போல. இனி, ஆயிற்றானென்று பாடமோதில், ஆய இத்தன்மையாலென் றுரைத்துக் கொள்க. ஒன்றின் என்றவிடத்து இன் ஒன்றுபோல என்னும் பொருள்பட வந்த உவமவுருபு.

அழிதல் என்றவிடத்து இறுதிக்கண் ஐ யுருபு தொக்கு நின்றது. "இரண்டாம் வேற்றுமைப் பொருளும், ஏழாம் வேற்றுமைப் பொருளும் அல்லாத பிற பொருளின் மேல் நின்ற உருபு மொழியிறுதியிற் றொக்குநில்லா" என்னுந் தொல்காப்பியச் சூத்திரவிதியால் இரண்டாம் வேற்றுமையுருபும், ஏழாம் வேற்றுமையுருபும் மொழியிறுதியில் தொக்குநிற்கும் என்பது பெறப்படுதல் காண்க. அழிதலாலே என்றவிடத்து ஆல், ஏ இரண்டும் அசை. ஒன்றினொன்று தோன்றி நின்றழிதலால் என்பதற்கு வானம் முதலியவைந்தும் முறையே ஒன்றினொன்று தோன்றிநின்றழியு மென்னுஞ் சுருதி உனக்குப் பிரமாணமாதலாலென் றுரைப்பாருமுளர்; வேதத்துள் விதிவாக்கிய மொழித்தொழிந்தன வெல்லாம் உபசார வகையானன்றிப் பிரமாணமாகாவெனக் கொண்ட மீமாஞ்சக மதத்தார்க்கு அவ்வுபநிடதச் சுருதி பிரமாணமன்று

* திருக்குறள் சுற்றந்தழால் செ. ௬.

சலானும் ஈண்டுக் கூறுவனவெல்லாம் யுத்திபற்றியன்றி ஆகம அளவை பற்றியன்றாகலானும் அவ்வுரை போலிபாதலறிக. (அ)

மீமாம்சகர் மதம்பற்றி உலகம் ஒருசேர அழியாதென் பாரை மறுத்து உலகம் ஒருசேர அழியுமெனக் கூறுகின்றது.

௨௫

ஓரிடமழியப் பின்னு மோரிட னிற்குமொக்கப்
பாரிட மழிவ தின்று மென்றிடிற் பயில்வித்தெல்லாங்
காரிட மதனிற் காட்டுமங்குரங் கழியும் வேனிற்
சீருடைத் துலகு காலஞ் சேர்ந்திடப் பெயர்ந்து செல்லும.

(கொ - ௫) பாரிடம் ஒக்க அழிவது இன்றும். ஓரிடம் அழியப் பின்னும் ஓரிடம் நிற்கும் என்றிடின், பயில்வித்து எல்லாம் காரிடமதனில் அங்குரங் காட்டும்; வேனிற் கழியும். சீருடைத்து உலகு காலஞ் சேர்ந்திடப் பெயர்ந்து செல்லும.

(பொ - ரை.) நிலம், மலை, கடல் முதலிய வடிவிற்றாகிய உலகமும் காயம்போல அவயவப் பகுப்புடைமையால், அது போலத் தோன்றிநின்றழிதல் பெறப்படுமென்ற தொக்கும். அங்ஙனமாயினும், பார்த்தறியப்படும் உலகமெலலாம் ஒருசேர அழியுமென்று கூறின், உலகம் அநாதி என்னுஞ் சுருதியோடு முரணுமாதலானும், அழிந்தது மீளத் தோன்றுதற்கோர் சம் பந்தமின்றாய் முடியுமாகலானும், அவ்வாறன்றி உலகத்தில ஒரு பக்கம் அழியினும் பிறிதொரு பக்கம் நிற்கும் என்றமேல பொருத்த முடையதெனின், அப்படியன்று. ஒருசாதிப் பலபொரு ளாகிப் பழகி வருகின்ற வித்து முதலிய சடங்கள், கார்காலமாகிய ஓர் காலவிசேடத்தில் ஒருசேர முளைதோன்றும்; வேனிற் காலமாகிய ஓர் காலவிசேடத்தில் ஒருசேர அழியும்; ஆதலில், அவ்வாறு சடத்தன்மையுடைய உலகமும் அவ்வக்காலம் வந்துவிடத்து முழுவதும் ஒருசேரத் தோன்றி ஒருசேர அழியும். (எ - று)

பாரிடம் என்பது பார்த்தறியப்படுமிடம் என்னும் பொருளில் நின் றமையின் வினைத்தொகை. உலகம் சூக்கும ரூபமா யொடுங்கியுந் தூலரூபமாய் வெளிப்பட்டும் என்றும் உள்ளதாதலின் அநாதியாமாறு காண்க. சீர் உவம உருபு. அச்சீரொன்றற்போல. (௯)

மீமாம்சகர் மதம்பற்றிக் காலமே கடவுள என்பாரை மறுத்துக் காலம் துணைக்காரணமெனக் கூறுகின்றது.

காலமே கடவுளாகக் கண்டனந் தொழிலுக் கென்னிற்
காலமோ வறிவின்றாகு மாயினுங் காரியங்கள்
காலமே தரவே காண்டுங் காரணன் விதியினுக்குக்
காலமுங் கடவுளேவ லாற்றுணைக் காரணங்காண்.

(கே - டு) தொழிலுக்குக் காலமே கடவுளாகக் கண்டனம் என்னின், ஆயினும் காலமோ அறிவு இன்றாகும். காரியங்கள் காலமே தரவே காண்டும். கடவுள் ஏவலால் காரணன் விதியினுக்கு காலமும் துணைக்காரணங்காண்.

(போ - ரை.) மேற்கூறியவாறு காலம் வந்தவிடத்துத் தோன்றியழிதலால், அத்தோற்றக் கேடுகட்குக் காலமே கருத்தாவாய் முடியுமென்று (காலேசுவர வாதிகள்) கூறுவர். அஃதொக்குமாயினும், அக்காலம் அறிவில்லாத சடமாதலால், கருத்தாவாகாது. ஆனால், தோற்றக் கேடுகளைக் காலமே தரல் காண்டலின், அறிவுடைய கருத்தாவினது ஏவலால அக்கருத்தா செய்யும் தோற்றக் கேடுகட்குக் காலமும் துணைக்காரணமாமென்றறிவாயாக. (எ - று.)

இச்செய்யுளில் முன்சொன்ன சொல்லும், பொருளும் பின்னும் வருதலால், இது சொற்பொருட் பின்வருநிலை யென்னும் அலங்காரம். காலமோ என்பதில் ஓகாரம் இழிவு சிறப்பு. காலமே என்பதிலுள்ள ஏகாரம் காலமின்றி மற்றவை தருதல் கூடாதென ஏனையவற்றைப் பிரித்துப் பிரிநிலைக் கண்ணும், தரவே என்பதிலுள்ள ஏகாரம் நிச்சயமாய்த் தரக்காண்டலான் எனத் தேற்றத்தின் கண்ணும் வந்தன. (௧௦)

தார்க்கிகர் மதம்பற்றி அணுக்கள் தாமே உலகமாய்த் தோன்றிநின்றழியுமென்பாரை மறுத்துரைக்கின்றது.

அழிந்தபி னணுக்கடாமே யகிலமாய் வந்து நின்று
கழிந்திடுங் கன்மத் தென்னிற் கன்மமு மணுவுங் கூட
மொழிந்திடுஞ் சடமேயாகி முடிதலான் முடியா செய்தி
யொழிந்திடு மணுவுருபங்க ளுலகெலா மொடுங்கு மன்றே.

(கோ - டு.) அழிந்தபின் அணுக்கள்தாமே கன்மத்து அலமாய் வந்து நின்று கழிந்திடும் என்னின், மெழிந்திடுங் கன்மமும் அணுவும் சடமாகியே முடிதலான் செய்தி முடியா. உலகு எல்லாம் ஒடுங்கும் அன்றே அணு ரூபங்கள் கூட ஒழிந்திடும்.

(பொ - ரை) உலகம் அழிந்தபின்னர் அணுக்களாய் ஒடுங்கி, மீள அப்பரமாணுக்கள் தாமே உயிரின் கன்மமேதுவாகப் பிரபஞ்சமாய்த் தோன்றிநின்றழியும். கன்மமும், காலமும் போல (இறைவனிச்சையும்) ஒரு துணைக்காரணமாம்; அத்தனையேயன்றிப் பிறிதில்லையெனின், அவ்வாறன்று. சொல்லப்பட்ட கன்மமும், அணுவும் சடமாகவே முடிதலின், அவை தம்முட் கூடித் தொழிற்படுதல், அதாவது பிரபஞ்சமாகத் தோன்றிநின்றழிதல் அறிவுடைய முதல்வன் தொழிலையின்றிக் கூடாது அஃதன்றியும், உலக முழுதும் ஒடுங்கும்போது அணுவுங் கூடவே ஒடுங்குமாகலான், அவ்வணு பின் உலகமாய் வந்துநின்றழியு மென்பது யாங்ஙனம் கூடும். (எ - று.)

இவ் வணுகாரண வாதம் சௌத்திராந்திகர், வைபாடிகர், ஆசீவகர் மதங்கட்கும் ஒக்கும். (கக)

அணுவே காரணமென்று கூறுந் தார்க்கிகரை மறுத்து, அணு, காரியமாதலால் காரணமாகாதெனக் கூறுகின்றது.

52
காரண வணுக்கள் கெட்டாற் காரிய வுலகின்றென்னிற்
காரண மாயையாகக் காரியங் காணலாகும்
காரண மாயை யென்னை காண்பதிங் கணுவே யென்னிற்
காரண மாயை யேகாண் காரிய மணுவிற் கண்டால்.

(கோ - டு.) காரண வணுக்கள் கெட்டாற் காரிய உலகு இன்று என்னின், மாயை காரணமாகக் காரியங் காணலாகும். அணுவே இங்குக் காண்பது மாயை காரணம் என்னை என்னின், அணுவிற் காரியங் கண்டால் மாயையே காரணங்காண்.

(பொ - ரை.) அணுக்களும் ஒடுங்குமாயின், காரணமாகிய அணுக்கள் அழிந்தால் காரியமாகிய பிரபஞ்சம் இல்லையாகுமே எனின். பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் சத்திவடிவக் கட்டமாய் நிலைபெறறிருக்கும் மாயையே யாகும். ஆதலால், அணுக்

கள் அழிந்தமை பற்றி உலகம் மீளத் தோன்றுதற் கிழுக்கில்லை. ஆனால், அணுவே இவ்விடத்திற்கு முதற்காரணமாய்க் காணப்படுவதன்றி மாயை முதற்காரணமென்று கூறுதல்பெறப் படாதெனின், அணுக்களிடத்துத் தோன்றி யழிதற்றன்மை காணப்படுதலான், அவ்வணுக்கள் உலகிற்கு முதற்காரணமாதல் செல்லாதாகலின், தோன்றியழிதலில்லாத மாயையே உலகிற்கு முதற்காரணமாமென உணர்க. (எ - று.)

இச்செய்யுள் சொற்பொருட் பின்வருநிலை. காண்டலால் என்றிருக்க வேண்டுவது கண்டு எனத் திரிந்து நின்றது. * "மயலாகு மற்றும் பெயர்த்து" என்றாற் போல. கண்டால் என்பதில் ஆல் அசை. (௧௨)

அணு காரியமாகாதெனக் கூறும் தார்க்கிகரை மறுத்து அவயவமுடைமையால் காரியமாகுமெனக் கூறுகின்றது.

**காரிய மென்ப தென்னை காரண வணுவை யென்னிற்**
**காரிய மவய வத்தாற் கண்டனங் கடாதி போலக்**
**காரிய வுருவ மெல்லா மழிதருங் கார ணத்தாற்**
**காரிய வுறுப்பின் மாயை தருமெனக் கருதிடாயே.**

(கோ - டு.) காரண அணுவை காரியம் என்பது என்னை என்னின், காரியம் கடாதிபோல அவயவத்தாற் கண்டனம்.

(போ - ரை) காரணமாகிய அணுவைக் காரியமென்றல் எவ்வாறு பொருந்தும் எனின், மண்ணாகிய காரணத்தினின்று தோன்றும் காரியமாகிய குடம் முதலியன போலப் பலவேறு வகைத்தாகிய அவயவத் தன்மையுடைமையால் அணுக்கள் காரியமாகும. அங்ஙனம் பலவேறு வகைத்தாகிய காரியமெல்லாம் அழிதற்றன்மைய வாகலின், காரியப் பொருளெனப் படுதற்குரிய பலவேறு வகைத்தாய் அவயவத் தன்மையில்லாத மாயையே முதற்காரணமென அறிவாயாக. (எ - று)

இதுவும் சொற்பொருட் பின்வருநிலை. அணுக்களுக்கு அவயவத் தன்மையுண்டென்பது, பரமாணு இரண்டுகூடித் துவியணுகந்தோன்றும். துவியணுகம் மூன்று கூடித் திரியணுகந் தோன்றும் என்பது முதலியவற்றாற் பெறப்படும்.

இதனால், காரணம் ஒன்றாய்த் தோன்றியழிதலின்றி நிலைபெற்றிருக்குமென்றும், காரியம் பலவாய்த் தோன்றியழிதலையுடையதாயிருக்கு

* திருக்குறள். துறவு. செ ௪.

மென்றும் அறிக. ஆயின், பலவாகிய ஆன்மா, காரியமெனப்பட்டுத் தோன்றியழியும் என்னலாகுமே எனின், அன்று. பலவாயும், சடமாயும் இருப்பது தோன்றியழியும். அதுவே காரியமெனப்படும். பலவாயும் சித்தாயுமிருப்பது தோன்றியழியமாட்டாது. ஆதலின், அது காரிய காரணங்கட்குட்பட்டதன்றென்க. (கரு)

மாயையே முதற்காரணமென்பதை வேதமொழி உலகமொழிகளால் வற்புறுத்துகின்றது.

54

தோற்றமு நிலையு மீறு மாயையின் றொழிலதென்றே
சாற்றிடு முலகம் வித்துச் சாகாதி யணுக்க ளாக
வேற்றதே லீண்டு நிற்கு மில்லதே லியைவ தின்று
மாற்றநீ மறந்தா யித்தான் மாயையை மதித்திடாயே.

(போ - ரை.) அன்றியும் தோற்றம், நிலை, இறுதி என்னும் முத்தொழிலும் மாயை தருமென்பதற்கு மாயையே பிரகிருதி என்றறிக வென்று கூறுகின்ற வேதமொழியும், வித்தின் கண்ணே சாகை முதலியன சூக்கும ரூபமாய் அடங்கி நின்றனவாயின் அவை தூலரூபமாக வெளிப்படும் என்று கூறும் உடம்பாட்டானும், வறுத்த வித்தின்கண் சூக்கும ரூபமாய் அடங்கி நிற்றலில்லையாயின், அவை தூலரூபமாக வெளிப்படுதலுமின்றாமென்று கூறும் எதிர்மறையானும் வழங்குகின்ற உலக மொழியுஞ் சான்றாதலின், அதனை நீ மறந்தாய். அவயவமாகிய உறுப்பில்லாமை மாத்திரையே யன்றி, வேதமொழி, உலகமொழி சான்றாதலாகிய இதனானும் அணுகாரண வாதத்தை விட்டு மாயையே முதற்காரணமென்றறிவாயாக. (எ - று)

மாயை முதற்காரணமென்பது வேதமொழி, உலகமொழிகளாகிய பிரமாணங் கூறி வலியுறுத்தப்பட்டது. மாற்றம் என்பது உலகம் என்பதனோடுங் கூடி, உலகமாற்றமென்றாகி, உலகம் என்பது உயர்ந்தோர் என்னும் பொருள் குறித்து, வேதத்தின்றொழிலாகிய மொழி, அதனையுணர்ந்த உயர்ந்தோர்மேலேற்றிக் கூறப்பட்டது. அதாவது, உயர்ந்தோர மொழி, வேதமொழியெனப்பட்டது. மாற்றம் என்றவிடத்து உலகம் என்பது வருவித்து உலகமொழி என உரைக்கப்பட்டது. "மாயையின் றொழிலதென்றே" என்றவிடத்து எகாரம் ஏனையவற்றைப் பிரித்தமையின் பிரிநிலைக்கண் வந்தது. இத்தால் என்றவிடத்து அன் சாரி

யையும் உம்மையும் தொக்குநின்றன. அவ்வும்மை காரியவுருப்பின்மை மாத்திரையேயன்றி என இறந்தது தழீஇற்று. பிரகிருதி என்பதன் பொருள் முதற்காரணம். (௧௪)

காரணத்திற் சூக்கும ரூபமாயொடுங்கியிருந்த காரியமே தூலரூபமாய்த் தோன்றுமெனச் சற்காரிய வாதத்தியல்பு கூறுகின்றது.

மாயையி னுள்ள வஞ்சம் வருவது போவ தாகு
மீயதின் இல்லை யென்னி னிகழ்ந்திடு முயலிற் கோடு
போயுகு மிலைக ளெல்லா மரங்களிற் புக்குப் போதி
னாயிடு மதுவு மென்னிற் காரணங் கிடக்க வாமே

(கோ - டு.) நீ அது இங்கு இல்லை என்னின் முயலிற்கோடு நிகழ்ந்திடும். உள்ள வஞ்சம்மாயையின் போவது வருவதாகும். மரங்களின் உகும் இலைகளெல்லாம் போய்ப்புக்குப் போதின் ஆயிடும் என்னின் காரணங் கிடக்க அதுவும் ஆமே.

போ - ரை ) அது வன்றியும் உள்ளதாகிய காரணத்தில் உள்ளதாகிய காரியந் தோன்றுமென்று கொள்ளாது, இல்லது உற்பத்தியாம் என்பையாயின், முயலின் கண்ணும் கோடுளதாதல் வேண்டும் அவ்வாறுயின், உள்ள பிரபஞ்சமே மாயையில் ஒடுங்கி மீளத்தோன்று மென்பார்க்கும், அவ்வாறே மரத்தினின்றும் உதிர்ந்த இலைகளெல்லாம் தானே மரத்தில் ஒடுங்கி அதற்குரிய காலத்தில் மீளத் தோன்றுதல் வேண்டுமென்று அவர் கூற. அஃதொக்கும். அங்ஙனம் உதிர்ந்த இலைகளெல்லாம் சத்திரூப காரணமாய் (நிலைபெற்றிருக்கு மாதலின்) அச்சத்தி, மீளத்தோன்றுதற்குரிய கன்மம், காலம் முதலிய பிற காரணங்களெல்லாம் அதனோடு ஒருங்கு கூடிய விடத்து அவ்வாறே தோன்றும். கூடாதவிடத்துத் தோன்றாது. ஆதலின், அதுபற்றி என்ன ஆசங்கை?. (எ - று.)

இல்லது தோன்றுமாயின், முயலின் கண்ணும் கோடு உளதாதல் வேண்டும் என்னுந் தருக்கங் கூறி, மாயை முதற்காரணம் என்பது வலியுறுத்தப்பட்டது.

பிரவஞ்சம் வஞ்சம்எனக் குறைந்துநின்றது. அதுவும் என்பதில் உம்மை அசை. பிற காரணங்களாவன:—கன்மம், காலம் முதலியன. கிடத்

தல் என்பது முதற்காரணத்தோடு பிரிப்பின்றி நிற்றல். கிடக்க ஆம் என்பது கிடத்தலால் ஆம் என்னும் பொருள் தோன்ற நின்றது. "மழை பெய்யக் குளம் நிறையும்" என்றாற் போல.

மரத்தில் நின்று உதிர்ந்த இலை முதலியன சத்திரூபமாய் மரத்தில் ஒடுங்குதல் எவ்வாறெனின், அவ்விலை முதலியன தன் தன்மைகெட்டு உரமாக மரத்தின் கண்ணடங்கி மீளத் தோன்றுமென்க. அவ்வா றொடுங்குதற்கு முன் வேறு இலை முதலியன தோன்றுதற்கு மரத்தின் கண் அவ்வாறு பல சத்திகள் உளவென்பதும், உதிர்ந்த இலை முதலியன வும் மரத்தின் கண்ணன்றி ஏனைய பயிருக்கு உரமாக உபகாரப்படின், அப்பயிருக்குரிய இலை முதலியனவாய்த் தோன்றுமாதலின், அதுபற்றி இழுக்கில்லை என்பதுமறிக. (௧௫)

உள்ளது தோன்றுமென்றதனால் உலகம் அழிபொருளென் றல் கூடாதென்பார்க்குச் சமாதானங் கூறுகின்றது.

36

கருதுகா ரணமுண் டாகக் காரிய முள்ளதாகி
வருதலா லநாதி வைய மற்றொரு கடவு ளித்தைத்
தருதலா லாதி யாகச் சாற்றலுமாகு மாயைக்
கொருவனா ரென்னிங் கென்னி னுள்ளவா றுரைப்பக்கேணீ.

(பொ - ரை.) மேற்கூறியவாறு சற்காரிய வாதம், அதாவது உள்ளது காரியப்படும் என்று சொல்லுதலுடையார்க்கு, உலகம் அழிபொருளென்று கூறுதல் பொருந்தாதாய் முடியுமெனின், அவ்வாறன்று. கருதுகின்ற காரணம் உள்பொருளாக, அதன்கட் டோன்றுங்காரியமும் உள்பொருளே என்பது மேற்கூறியவாற்றான் இனிது விளங்குதலின், காரியமாகிய பிரபஞ்சமும் நித்தப்பொருளேயாம். இப்பிரபஞ்சம் ஒரு கருத்தாவால் ஒரு காலத்து விளங்குதலும் ஒருகாலத்து மறைதலு மாகிய அவத்தை வேறுபாடுபற்றி அழிபொருளென்றுஞ் சொல்லப்படும். அழிபொருளென்னும் என்றதிலுள்ள உம்மையால் அவத்தை வேறுபாடு கருதாதவிடத்து நித்தப்பொருளென்பதே துணிவு. (எ - று.)

மாயை என்பது முதல் கேணீ என்பதுவரை அடுத்துவருஞ் செய்யுளிற் சேர்த்துப் பொருளுரைக்கப்படும். "அழிந்தபி னணுக்கடாமே" என்னுஞ் செய்யுள் முதல் இச்செய்யுளில் "சாற்றலுமாகும்" என்பது

வரை தார்க்கிகர் மதம்பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து வருமுறை என்பதனாற் பெறப்பட்டசற்காரியவாததினியல்புவலியுறுத்தப்பட்டது. ௧௬

சாங்கியர் மதம்பற்றி மாயையே தன் காரியத்தைத் தோற்றுவிக்கும் என்பாரை மறுத்துத் தருபவனொருவன் வேண்டுமெனக் கூறுகின்றது.

பத்திமற் காரி யத்தாற் பூகாதி புருடன் றானு
மத்தனு கரணம் பெற்றா லறிதலா லவற்றை மாயை
புய்த்திடு மதனான் மாயைக் குணர்வொன் றுமில்லையென்றே
வைத்திடு மதனா லெல்லாம் வருவிப்பா னொருவன் வேண்டும்.

(கோ - டு.) இங்கு மாயைக்கு ஒருவன் ஆர் என் என்னின், உள்ளவாறு உரைப்ப நீ கேள். பூதாதி புத்தி மற் காரியத்தால் புருடன் றானும் அத்தனு கரணம் பெற்றால் அறிதலால் மாயை அவற்றை உய்த்திடுமதனால் மாயைக் குணர்வொன்றமில்லையென்றே வைத்திடுமதனால் எல்லாம் வருவிப்பா னொருவன் வேண்டும்.

(பொ - ரை.) இவ்விடத்துக் கூறியவற்றுள் ஏனையவெல்லாம் ஒக்கும். மாயையே தன் காரியத்தைத் தருமாகலின், மற்றொரு கடவுள் மாயையினின்றுந் தருமென்றல் பொருந்தாதென்னின், அறியாது கூறினாய். அதனை உள்ளவாறு கூற நீ கேட்பாயாக. குடம் முதலியன மண்ணினின்றுங் குயவனாற் செய்யப்படுங் காரியமானாற்போல, பூதம் முதலிய பிரபஞ்சமெல்லாம் ஒரு சேதனப் பொருளால் மாயையினின்றுஞ் செய்யப்படுங் காரியமேயாம். ஆன்மா சேதனப்பொருளாதலால் அதுவே தோற்றுவிக்குமென்னலாகாதோ வெனின், அவ்வான்மா அப்பூதாதியாலாகிய தனுகரணாதிகளைப் பெற்ற பின்னரே அறிதற்றொழிலைச் செய்தலானும், மாயை, தனு கரணாதிகளுக்கு முதற்காரணமாய் நின்று அவற்றைத் தோற்றுவித்தலினால், அம்மாயைக்கு உணர்ச்சி சிறிதும் இல்லையென்றே கூறியிருத்தலானும், இவ்வாறு ஆன்மாவிற்கும் மாயைக்கும் பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பதில் அதிகாரமில்லாமை பெறப்படவே, பாரிசேட அளவையால், இவ்விரண்டினும் வேறாய், மாயையினின்றும் பூதம் முதலிய பிரபஞ்சம் எல்லாவற்றையும் தோற்றுவிப்பதற்கு ஒரு கடவுள் வேண்டப்படும். (எ - று.)

புத்திமற்காரியம்—புத்திமானது காரியம். அவ்விடத்துத் தொக்கு நின்ற அது என்னும் ஆறும் வேற்றுமை உருபு செய்கின்றதொனும் பொருளில் வந்தது. புத்திமத்காரியமென்பது வடநூல் முடிப்புப்படி புத்திமற் காரிய மென்றாயிற்று. தமிழ் முடிபாயின் புத்திமான் காரிய மென்றிருத்தல் வேண்டும். புத்திமான், சேதனன் என்பன ஒரு பொருட் சொற்கள். உய்த்திடுமென்பது, உண்டு பண்ணுமென்றும் பொருளில் வந்தது. உணர்வு ஒன்றும் என்பதில் ஒன்றும் என்பது சிறிதும் என்னும் பொருள்பட நின்றது. உணர்வில்லாத அணுக்களாதிகளை முதற் காரணமாய் நின்று தோற்றுவித்தலால் மாயைக்கு உணர்ச்சியில்லை யென்பது பெறப்பட்டது. இல்லை யென்றே என்பதில் ஏகாரந் தேற்றம். (கஎ)

ஒரு காரியத்திற்கு மூன்று காரணம் இன்றியமையாது வேண்டப்படு மெனக் கூறுகின்றது.

**காரிய காரணங்கள் முதற்றுணை நிமித்தங் கண்டாம்**
**பாரின் மண்டிரிகை பண்ணு மவன் முதற்றுணை நிமித்தந்**
**தேரின் மண் மாயையாகத் திரிகைதன் சத்தியாக**
**வாரியன் குலாலனாய் நின் றாக்குவ னகில மெல்லாம்.**

(கோ - டு.) காரிய காரணங்கள் முதல்துணை நிமித்தம். பாரின் மண் திரிகை பண்ணுமவன் முதல்துணை நிமித்தங் கண்டாம். தேரின் அகிலம் எல்லாம் மாயை மண்ணாக, தன் சத்தி திரிகையாக, ஆரியன் குலாலனாய் நின்று ஆக்குவன்.

(பொ - ரை.) அன்றியும், ஒரு காரிய நிகழ்ச்சிக்கு வேண்டுங்காரணங்கள் முதற்காரணம், துணைக்காரணம், நிமித்த காரணம் என மூவகைப்படும். அக்காரணங்கள் தம்முள் ஒன்றேனு மின்றிக் காரியம் தோன்றாதென்பதும், அக்காரணங்கள் தம்முள் வேறாம் என்பதும், இவ்வுலகில் குடம் முதலிய காரியத்தில் மண் முதற்காரணமாகவும், திரிகை துணைக்காரணமாகவும், குலாலன் நிமித்தகாரணமாகவும் கண்டலால் அறிந்தாம். ஆராயுங்கால், பிரபஞ்சக் கூட்டமாகிய காரியத்திற்கும் அவ்வாறே மண்போல மாயை முதற்காரணமாகவும், திரிகைபோல இறைவன் சத்தி துணைக்காரணமாகவும், குலாலன்போல அவ்விரு காரணங்களின் வேறாய் சிவபிரான் நிமித்த காரணமாகவும் நின்று அப்பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பன். (எ - று.)

காரிய காரணங்கள் என்பது காரியத்தினது காரணங்கள் என்னும் பொருளில் வந்த ஆறும் வேற்றுமைத் தொகைச் சொல். அது, தமிழ் நூல் முடிபுப்படி மரக்கோடு என்பது போல, காரியக்காரணம் என்றிருத்தல் வேண்டும். இருமொழியும் வடமொழியாதலின், அவ்வாறின்றி வடநூல் முடிபுப்படி காரிய காரணம் என நின்றது. இருகாரணங்களின் வேறாய் இறைவன் நிற்பன் என்றது, அக்காரணங்களின் தன்மையின் வேறாய் என்பதேயாம். இவ்வாறன்றி, திருட்டாந்தம் போல வேறு வேறாய் நிற்குமென்றல் வியாபகப் பொருட்குப் பொருந்தாது. இதனை, வருகின்ற உஎ-வது செய்யுளில், "ஒருவனே யெல்லாமாகி யல்லவா யுடனுமாவன்" என்பதனானுங் காண்க.

மாயைக்கொருவனு ளென்பதுளப்பட இவை இரண்டு செய்யுளானும், சாங்கியர் மதம் பரிகரித்துத் தருபவனொருவன் வேண்டுமென்பது சாதிக்கப்பட்டது. இவ்வாறு உதிப்பது மீறும் என்பதுமுதல் இது வரையும், வேதத்தை ஒப்புக்கொள்ளாத உலகாயதர், புத்தர், சமணர் முதலியோர் மதம்பற்றியும்; வேதத்தை ஒப்புக்கொள்ளுகின்ற மீமாஞ்சகர், தார்க்கிகர், சாங்கியர் முதலியோர் மதம்பற்றியும் ஆசங்கை நிகழாத வண்ணம், வருமுறை வந்து நின்று போவதுமாதலாலே தருபவனொருவன் வேண்டும, என்பதை வலியுறுத்திக் காத்துக் கொண்டு, இனி, அக்காரணத்தினின்றுங் காரியங்கள் தருபவனொருவனாற் றரப்படுமாறும், அக்காரண காரியங்களினியல்பும் எவ்வாறு என்பார்க்கு ஆசிரியன் குலாலனாய் நின்றாக்குமாறு ஒன்பது செய்யுளாற் கூறுகின்றார். (கஅ)

தருபவன் தருமுறையைத் தொகுத்துக் கூறுகின்றது.

விந்துவின் மாயையாகி மாயையி னவ்வி யத்தம்
வந்திடும் விந்துத் தன்பால் வைகரி யாதி மாயை
முந்திடு மராகமாதி முக்குண மாதிமூலந்
தந்திடுஞ் சிவனவன்றன் சந்நிதி தனினின்றே.

(கோ - டு.) விந்துத் தன்பால் வைகரியாதி முந்திடும் மாயை அராகமாதி (முந்திடும்). மூலம் முக்குணம் ஆதி (முந்திடும்). சிவனவன்றன் சந்நிதி தன்னின் நின்றே தந்திடும்.

(பொ - ரை.) சுத்தப் பிரபஞ்சம் சுத்தாசுத்தப் பிரபஞ்சம், அசுத்தப் பிரபஞ்சம் எனக் காரியப் பிரபஞ்சம் முத்திறப்படுதலின், அவற்றிற்கு முதற்காரணங்களுந் தம்முள் வேறாதல் வேண்டும். அவற்றுள், மலகன்மங்களோடு விரவாத

முதற்காரணமாய் நிற்பது சுத்தமாயை. அஃது ஏனை அசுத்த மாயை, பிரகிருதி மாயை இரண்டனையும் வியாபித்து மேலாய் நின்று சுத்தப் பிரபஞ்சத்திற்குக் காரணமாம். அச் சுத்த மாயையின் கீழாயடங்கி மலகன்மங்களோடு விரவி முதற்காரணமாய் நிற்கின்ற அசுத்த மாயை, சுத்தா சுத்தப் பிரபஞ்சத்திற்குக் காரணமாம். அவ்வசுத்த மாயையினது தூல பரிணாமமாய்த் தோன்றி நிற்கின்ற பிரகிருதி மாயை, அசுத்தப் பிரபஞ்சத்திற்குக் காரணமாம். அக்காரணம் மூன்றனுள், சுத்த மாயையினின்றும் ஒடுக்க முறைபற்றி வைகரி முதல் வைத்தெண்ணப்படும் சுத்தப் பிரபஞ்சமாகிய நாலுவாக்குந் தோன்றும். அசுத்தமாயையினின்றும் ஒடுக்க முறைபற்றி அராகம் முதல்வைத்தெண்ணப்படும் சுத்தாசுத்தப் பிரபஞ்சமாகிய ஐந்து தத்துவங்களுந் தோன்றும். பிரகிருதி மாயையினின்றும் தோற்றும் முறைபற்றிக் குணதத்துவம் முதல்வைத்தெண்ணப்படும் அசுத்தப் பிரபஞ்சமாகிய இருபத்துநான்கு தத்துவங்களுந் தோன்றும். இவ்வாறு சடரூபமான சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை என்ற மூன்றும் தத்தம் காரியங்களைச் சிவசத்தியின் சங்கற்ப ரூபமாகிய சந்நிதியினின்றும் தோற்றுவிக்கும். (எ - று.)

சுத்தமாயை மலகன்மங்களோடு விராவாமையாவது, மலத்தின் காரியமாகிய மோகாதிகளுக்கும், கன்மத்தின் காரியமாகிய விருப்பு, வெறுப்புக்கும் முன்னிலையாகிய காரியப் பொருளைத் தோற்றுவிக்காமை. சுத்தமாயா புவனத்தில் வசிக்கும் விஞ்ஞானகலர்கட்கு ஆணவமலமிருப்பது அதிகாரமாத்திரைக்கேயெனவும், மோகாதிகளைத் தோற்றுவிக்காதெனவும் அறிந்துகொள்க. விந்துவின் மாயையாகி என்றவிடத்து இன் சாரியை. அவ்விடத்துக் கீழ் என்னும் பொருள்தரும் கண்ணுருபு விரித்து, விந்துக்கீழ் மாயையென உரைக்க. அதோ மாயை என்றதும் கீழ் என்னும் இப்பொருள்பற்றியேயாம். இவ்வாறன்றி, [1] இன் உவமருபு எனக்கொண்டு விந்துவைப் போல மாயையாகி எனவும், இன் ஐந்தாம் வேற்றுமை உருபெனக் கொண்டு விந்துவினின்று மாயையாகி எனவும் உரைப்பர். அவ்விரண்டினையும், இரத்தினத் திரயம் என்னும் நூலில் பிறர் கருத்தாகக் கூறுதலின் அவை பொருந்தாமை காண்க. [1] [illegible]

அசுத்த மாயைக்கு அனந்தரும், பிரகிருதி மாயைக்கு சீகண்டரும் கருத்தாவாயினும், அவர்கள் செய்யுந் தொழிலும், சிவசந்நிதியையின்றி அமையாமையின், சுத்தம், அசுத்தம், பிரகிருதி என்னும் மூன்றும் சிவ சந்நிதியிற்றந்திடும் என்றார். சிவனவன் என்றவிடத்து அவன் என்பதற்குச் சிவனேயின்றி வேறு பொருளின்மையின், அவன் என்பது பகுதிப்பொருள் விகுதி.

இச் செய்யுளால் சுத்தமாயை, அசுத்தமாயை; பிரகிருதிமாயை என முதற் காரணங்கள் மூன்று எனவும், அவை, தத்தங் காரியங்களைச் சிவ சத்தியினால் தோற்றுவிக்கு மெனவும், அச்சத்தி சிவனையின்றி அமையாதெனவுந் தொகுத்துக் கூறியவாறும்.

பிரபஞ்சமென்பது தத்துவத்துளடங்குதலின், தத்துவம் முப்பத்தாறுக்கும் முதற்காரணமாகிய சுத்தம், அசுத்தம், பிரகிருதி என்னும் மாயை மூன்றின் வைத்து, முறையே சுத்தம், சுத்தாசுத்தம், அசுத்தம் எனப் பிரபஞ்சம் முத்திறப்படுமென்று கூறியவாறும். பரிணமம் ஒன்று பிறிதொன்றாதல். அது தூலம், சூக்குமம் என இருவகைப் படும். தூலம், முற்றும் பரிணமம், ஏகதேச பரிணமம் என இரு வகைப்படும். பால் தயிராதல் முற்றும் பரிணமம்; நெய்யிற் புழுவுண்டாதல் ஏகதேசபரிணமம். ஆடை கூடாரமாதல் சூக்கும பரிணமம். இவற்றுள், சூக்குமபரிணமம் சுத்தமாயைக்கும், தூலத்தில் ஏகதேசம் அசுத்தமாயைக்கும், முற்றும் பிரகிருதிமாயைக்குங் கொள்ளப்படும். உரையில், அசுத்தமாயை என்றது சுத்தாசுத்தமாயை யெனவும், பிரகிருதி மாயை என்றது அசுத்தமாயை யெனவுங் கொள்க. ஒடுக்கமுறை - கடைசியிலிருந்து எண்ணுதல். தோற்றமுறை - ஆரம்பத்திலிருந்து எண்ணுதல். (கக)

தருபவன் தருமுறையை வகுத்துக் கூறத் தொடங்கிச் சுத்தமாயா காரியமாகிய வைகரி வாக்கின் இலக்கணங் கூறுகின்றது.

வைகரிசெவியிற் கேட்பதாயத்த வசனமாகி
மெய்தருமுதான வாயுமேவிட விளைந்தவன்னம்
பொய்யறவடைவுடைத்தாய்ப் புந்திகாரணமதாகி
யையமில்பிராண வாயுவடைச்செழுந் தடைவுடைத்தாம்.

(கொ - ௫) வைகரி செவியிற்கேட்பதாய் அத்தவசனமாகி புந்திகாரணமதாகி மெய்தரும் உதானவாயு மேவிடவிளைந்த வன்னம் ஐயம்

இல் பிராணவாயு அடைந்து எழுந்து பொய்அற அடைவு உடைத்தாய் அடைவு உடைத்தாம்.

(பொ - ரை.) மேற்கூறிய வைகரியாதி வாக்கு நான்கனுள் வைகரிவாக்காவது, தன்செவிக்கும் பிறர் செவிக்கும் கேட்கப் படுவதாய், நினைந்த பொருளைச் சொல்லுஞ் சொல்லாய், அச் சொல்லு வானுக்கும் கேட்பானுக்கும் பகுத்துணர் வுண்டாதற் கேதுவாயும், உடம்பின் கண் எழும் உதானன் என்னுங் காற்றால் தள்ளப்பட்டு மத்திமைத் தானத்துச் சூக்கும ரூபமாய்ப் பிரிந்து தோன்றிய அக்கரங்கள் அகங்காரத்தாற் செலுத்தப்படும் பிராண னென்னுங் காற்றால் தள்ளப்பட் டெழுந்து மனத்தின் றொழிற்பாடாகிய ஐயமின்றாதற் கேதுவாய் விபரீதம் அறப் புறத்தே அடைத லுடைத்தாகியும், சொல்லா நின்ற இவ்விரு வகை இலக்கணத்தையுடையதாம். (எ - று.)

தனக்கும் பிறர்க்கும் பகுத்துணர்வைத்தரும் வண்ணங் கேட்கப்படு வதாயும், வாயின் வழியாய் வெளியே வருவதாயும் உள்ள ஒலிவைகரிவாக்கு என்பதாம். மெய்தரு முதான வாயுமேவிட விளைந்தவன்னம் என்றது அநுவாதம். இங்கே வைகரி வாக்குத்தான் முதலாவதாகக் கூறப்படுகிறது. ஆயினும், தோற்றுமுறையில் சூக்குமை பைசந்தி, மத்திமை, வைகரி எனக் கூறப்படுமாதலின், வைகரிக்கு முற் பட்ட மத்திமையினிலக்கணமாகிய மெய்தரு முதானவாயு மேவிட விளைந்தவன்னம் என்றது அநுவாதமாயிற்று. விளைந்தவன்னம் என்ற விடத்து, விளைதல் அக்கரங்களின் வடிவமனைத்தும் பிரிந்து தோன்றல்.

மெய் - உடம்பு. பொய் - விபரீதம். ஐயமில் பிராணவாயு என்றது ஐயமில்லாத பிராணவாயுவென்ற படியாம். அது மனத்தின் றொழிற்பாடாகிய ஐயமில்லை யாதற்கேதுவாய், அகங்காரத்தாற் செலுத்தப்படும் பிராணவாயு என்னும் பொருள் குறித்தது. அவ் விடத்து, இல்லாத என்னும் குறிப்புவினைப்பெயரெச்ச அகர விகுதி தொக்கு நின்றமையானும், இல்லாத என்றது இல்லையாதற்கு ஏதுவாகிய பிராணவாயுவைக் கொண்டு முடிதலானும், இல் பிராணவாயு என்பது ஏதுப்பெயர் கொண்ட குறிப்பு வினைத்தொகை.

எழுந்து என்பதை பொய்யறவடை வுடைத்தாய் என்பதன் மேலே கூட்டி, எழுந்து பொய்யறவடை வுடைத்தாய் என உரைத்துக் கொள்க. அடைவு இரண்டனுள், முன்னையது அடைதல் என்னும் பொருளிலும் பின்னையது இலக்கணம் என்னும் பொருளிலும் நின்றன. புதிர், என்

பத ஏற்புழிக் கோடல் என்னும் உத்தியால் பிறர்க்குரிய சவிகற்பவுணர்வின் மேல் நின்றது. தனக்குரிய சவிகற்ப வுணர்வு மத்திமை வாக்கினாலேயே உண்டாகின்றமை காண்க. (௨௦)

மத்திமை வாக்கின் இலக்கணங் கூறுகின்றது.

உள்ளுணர் வோசையாகிச் செவியினிலுறுதல் செய்யா
தொள்ளிய பிராண வாயு விருத்தியை யுடையதன்றித்
தெள்ளிய வக்கரங்கள் சிந்திடுஞ் செயலதின்றி
மெள்ளவே யெழுவதாகு மத்திமை வேறதாயே.

(கொ - ௫) மத்திமை வேறதாயே உள் உணர் ஓசையாகி செவியினில் உறுதல் செய்யாது மெள்ளவே எழுவது. (உள்ளுணர் ஓசையாகி) ஒள்ளிய பிராணவாயு விருத்தியை உடையது அன்றி சிந்திடுஞ் செயலது இன்றி தெள்ளிய அக்கரங்கள ஆகும்.

(பொ - ரை.) மத்திமை வாக்காவது பைசந்திக்கும், வைகரிக்கும் வேறாய், அதாவது நடுவாய் சொல்லுவான் தன்னுள்ளே உணரும் சவிகற்ப உணர்விற கேதுவாய், செவியிற் கேட்கப்படாததாய் மெல்லோசையாய்க் கண்டத்திலே விளங்குவதால் உள்ளே உணரப்படும் ஓசையாகியும், விளங்கிய பிராணவாயுவின் றொழிற்பாடின்றி உதானவாயுவின் றொழிற்பாடு மாத்திரையால், பல் இதழ், நா, அண்ணங்களிற்பட்டு வெளியே சிதறிப்போதலின்றி உள்ளே சூக்கும ரூபமாய் அக்கரங்களின் வடிவுபிரிந்து தோன்றி:விளங்குதலுமாகிய இவ்விருவகை இலக்கணத்தை உடையது. (எ - று.)

தன்னுள்ளே உணரும் ஓசையாயும், உள்ளே அக்கரங்களின் வடிவு பிரிந்து தோன்றுவதாயுமுள்ள ஒலி மத்திமை வாக்கென்பதாம். இரட்டுற மொழிதல் என்னும் உத்தியால் உள்ளுணரோசையாகி என்பது இரட்டித்தது. உணரோசை என்பது உணரும் ஓசைஎன விரிந்து முன்னையது உணர்தற்கேதுவான ஓசையென எதுவினும், பின்னையது உணரப்படு மோசையெனச் செயப்படுபொருளினும் நின்றது. தெள்ளிய வக்கரங்கள் என்ற விடத்து தெள்ளுதல்-வடிவு விளங்குதல். செயலது, வேறது என்ற ஈரிடத்துமுள்ள அது இரண்டும் பகுதிப்பொருள்விகுதி. அஃதாவது விகுதிக்கு வேறு பொருள் இல்லை. (௨௧)

பைசந்தி வாக்கின் இலக்கணங் கூறுகின்றது.

வேற்றுமைப்பட்ட வன்னம் வெவ்வேறு விபாகமாகித்
தோற்றுத லடைவொடுக்கிச் சொயம் பிரகாசமாகிச்
சாற்றிய மயிலினண்டந் தரித்திடுஞ் சலமேபோன்றங்
காற்றவே யுடையதாகிப் பைசந்தி யமர்ந்து நிற்கும்.

(கோ - டு.) பைசந்தி சாற்றியமயிலின் அண்டந் தரித்திடுஞ் சலமேபோன்று வேற்றுமைப்பட்டவன்னம் வெவ்வேறு விபாக மாகி தோற்றுதல் அடைவு ஒடுக்கி அங்கு ஆற்றவே சொயம் பிரகாசமாகி உடையதாகி அமர்ந்து நிற்கும்.

(பொ - ரை.) பைசந்தி வாக்காவது, பின்னர் விளங்கித் தோன்றுவன வாய பஞ்சவன்னங்களையும் சூக்கும ரூபமாக ஒடுக்கி நிற்பதாய்க் கூறுகின்ற மயில் முட்டையில் தரித்திடும் நீர்போல, பலவகைப்பட்ட எழுத்துக்கள் மத்திமைத்தானத்து வேறு வேறாகப் பிரிவுபட விளங்கித் தோன்று முறைமையினை அடக்கி அங்கே மிகவும் சூக்கும ரூபமாய்க்கொண்டு சிந்தையின் அமர்ந்து நிற்றலும், நிருவிகற்ப உணர்விற்கு ஏதுவாதலு மாகிய இரண்டிலக்கணத்தை உடையது (எ - று)

மயிலின் முட்டைக்குள்ளிருக்கும் சலத்திலே மயிலின் பஞ்சவன்னம் ஒடுங்கிநிற்குமாறு போல அக்கரங்கள் சூக்கும ரூபமாய்ச் சித்தத்தில் நிற்றலும், நிருவிகற்ப உணர்விற் கேதுவாதலும் ஆகிய ஒலி, பைசந்தி வாக்கென்பதாம். விபாகம் என்பது பிரிவு. சொயம் பிரகாசம்—சூக்குமம். சிந்தைஎன்பது வருவிக்கப்பட்டது. (உஉ)

சூக்குமவாக்கின இலக்கணங் கூறுகின்றது.

சூக்கும வாக்கதுள்ளோர் சோதியா யழிவதின்றி
யாக்கிடு மதிகாரத்திற் கழிவினை தன்னைக்கண்டா
னீக்கமிலறிவானந்த முதன்மைநித் தியமுடைத்தாய்ப்
போக்கொடு வரவிளைப்பும் விகாரமும் புருடனின்றாம்.

(கோ - டு.) சூக்கும வாக்கது உள்ஓர் சோதியாய் அதிகாரத்திற்கு அழிவினை ஆக்கிடும். அழிவது இன்றி தனனைக்கண்டால் புருடன் நீக்கம் இல் அறிவு ஆனந்தம் முதன்மை நித்தியம் உடைத்தாய் ஆம். போக்கொடு வரவு இளைப்பும் விகாரமும் இன்று.

(போ - ரை.) சூக்குமவாக்காவது, காரண சரீரத்தின் உள்ளாக நாதமாத்திரையாய் விளங்குதலும், ஞான மாத்திரைக் கேதுவாதலும் ஆகிய இலக்கணத்தை உடையது. அது, பைசந்தி, மத்திமை, வைகரியாய் விருத்திப்படுவதாகிய தன்னதிகார மாத்திரைக்கே அழிவை யுண்டுபண்ணித் தான் சுத்தமாயாரூபமாய்க் கேடின்றி நிலைபெறுவதாம். தவவிசேடத்தால் அதனை உள்ளபடி காணப்பெற்றால், அப்புருடன் நீங்காத பேரறிவும், ஆனந்தமும், சுதந்தரமும், நித்தியத்துவமும் உடையதாய் அவனுக்குச் சுத்தமாயாபுவனத்தின் கண்ணதாகிய அபரமுத்திப் பெரும்போகம் உண்டாம். நாசோற்பத்தியான் வரும் இளைப்பும், விகாரமுறுதலும் இல்லையாம். (எ - று.)

சோதியாய் அழிவதின்றி அதிகாரத்திற் கழிவினையாக்கிடும் எனவும், தன்னைக்கண்டால் நித்திய முடைத்தாய் விகாரமு மின்றாம் எனவும் வேறு வேறு வினைமுடிபு செய்க. அழிவினை என்பது அழிகின்ற தொழிலை எனப் பொருள் தரும் நிகழ்கால வினைத்தொகை. புருடன் என்பது * "காலமுலகம்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரவிதியால் அஃறிணைச் சொல்லாய் நின்று, உடைத்தாய் என்னும் அஃறிணை முடிபுகொண்டது. "நீக்கமிலறிவானந்த முதன்மை நித்தியமுடைத்தாய்" என்றதால், சுத்த மாயாபுவனத்திலுள்ள அபரமுத்திப் பெரும் போகத்தினியல்பு இதுவெனக்காட்டி அதன் பெருமை கூறியவாறு.

சூக்குமை வாக்கு தானழிவதின்றி, பைசந்தி முதலிய தன்னதிகார மாத்திரைக்கே அழியுந் தொழிலைச் செய்யு மென்றதனால், அந்தச் சூக்குமைவாக்கு, சிவதத்துவம் போலச் சுத்தமாயையின் வேறன்றென்பது பெறப்பட்டது. அச் சூக்குமவாக்கை உள்ளபடி காண்டலாவது, அதனை வைகரி முதலிய துணையோசைபற்றித் தூலமாகக் காணும் நம்மனோர் போலன்றி நம்மனோர்க்குக் குடம் பட முதலியன காட்சிப் படுமாறு போல அதனியல்பால் இனிது விளங்கக் காண்டல். கண்டால் என்றதனால் அவ்வாறு காண்டல் அரிதென்பது பெறப்படும்.

---

* காலமுலக முயிரே யுடம்பே, பால்வரை தெய்வம் வினையே பூத, ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉ, மாயீரைந்தொடு பிறவுமன்ன, ஆவயின்வரூஉங் கிளவியெல்லாம், பால்பிரிந்திசையா வுயர்திணமேன.

(தொல்காப்பியம், கிளவியாக்கம், ரூ-௫௭)

இவ்வாறன்றி, "ஓவிட விந்து ஞானமுதிப்பதோர் ஞானமுண்டேற் சேவுயர் கொடியினுன்றன் சேவடி சேரலாம்" என்பதே இச் செய்யுளுக்கும் பொருளாகக்கொண்டு, கண்டால் ஆக்கிடும் எனக் கூட்டிப் பொருள் கூறுவர். தன்னைக்கண்டால் தானழிவதின்றித் தன்னதிகாரத்திற் கழிவினையாக்கிடு மென்பது பொருட் பொருத்தமின்மையின் அவ்வுரை பொருந்தாது. அன்றியும், பின்னர்க் கூறப்படும் பொருளை முன்னர்க் கூறுவது கூறியது கூறலாகும். சேவுயர் கொடியினுன் றன்சேவடி சேரல் உண்மை யதிகாரத்திற் கூறப்படும் பரமுத்தி யிலக்கணமாதலின், அதனைப் பொது வதிகாரமாகிய இவ்விடத்து நீக்கமிலறிவானந்த முதலியனவாக வகுத்துக்கூற இயைபுமில்லை. ஆயின், உசுவது செய்யுளில் அவ்வாறு கூறிய கருத்தென்னையெனின், ஒருவனுக்குப் பேரறிவு விளங்குமாயின் பரமுத்தி கூடும், இவ்வாக்குக்களால் உண்டாகும் அறிவு பேரறிவாகாதெனக் காட்டுதற்கு ப்பரமுத்தி தொகுத்துக் கூறப்பட்டதேயன்றிப் பிறிதில்லையென்க. இச் செய்யுளிற் கூறப்படும் நீக்கமில் அறிவானந்தம் என்பது முதலியன, அபரமுத்திப் பெரும் போகத்தினியல்பேயன்றிப் பரமுத்தியினியல்பன்று.

காரண சரீரமாவது, கேவலமாகிய அறியாமையினின்று நீங்கியும், தத்துவங்களோடு கூடிப் பகுத்தறிதலின்றியும், தத்துவத்தோற்றத்திற்குக் காரணமான மாயையோடு கூடிநிற்கும் நிலை. (உசு.)

வாக்குநான்கும் நிவிர்த்தி முதலிய பஞ்சகலைகளைப்பற்றுக்கோடாகச் சார்ந்து சிவதத்துவம் ஐந்தில் இருக்குமெனக் கூறுகின்றது.

43
நிகழ்ந்திடும் வாக்குநான்கு நிவிர்த்தாதி கலையைப்பற்றித்
திகழ்ந்திடு மஞ்சதாகச் செயல்பரி ணாமமன்று
புகழ்ந்திடும் விருத்தியாகும் படங்குடிலானூற்போல ச-௧-ச௪.
மகிழ்ந்திடும் பிரமமன்று மாமாயை யென்பர் நல்லோர்.

(கொ. டு.) நிகழ்ந்திடும் நான்கு வாக்கும் நிவிர்த்தி ஆதிகலையைப்பற்றி அஞ்சதாகத்திகழ்ந்திடும். படம் குடிலானூற்போல புகழ்ந்திடும் விருத்தியாகும் செயல் பரிணாமமன்று. மகிழ்ந்திடும் பிரமம் (என்பர்) நல்லோர் (பிரமம்) அன்று மாமாயை (ஆகும்) என்பர்.

(போ-ரை.) மேற்கூறிப் போந்தவைகரி முதலிய நான்கு வாக்குக்களும் நிவிர்த்தி, பிதிஷ்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்னும் பஞ்சகலைகளைப் பற்றுக்கோடாகச் சார்ந்து ஐவ

கைப்பட்டுச் சிவம், சத்தி, சாதாக்கியம், மகேசுவரம், சுத்த வித்தை என்னும் பஞ்சதத்துவங்களிலிருக்கும். இவ்வாக்குக்கள் சுத்தமாயையினின்றும் படமேகுடிலாயினாற்போலப்புகழத் தக்க விருத்தியாய்க் காரியப்படுவனவாம். அசுத்தமாயாகாரியம்போலப் பரிணாமமாய்க் காரியப்படுவனவல்ல. இவ் வாக்குக்களைச் சத்தப்பிரமவாதிகள் மகிழத்தக்க பிரமம் என்பர் சைவ சித்தாந்திகள் பிரமமாதலின்றிப் பிரமத்திற்கு நேரே பரிக்கிரக சத்தியெனப்படும் சுத்தமாயாரூபமாகுமென்று கூறுவர். எ-று.

உலகமாகிய காரியம் தோன்று முறையைப்பற்றி, * எள்ளானாய குப்பைபோல, அணுக்களின் கூட்டமே உலகம் என்று சமுதாய வாதங் கூறுவர் புத்தர் சமணர். நூலானாகிய ஆடைபோல, அணுக்களின் கூட்டங்களால் இடையே தோன்றுவது உலகம் என ஆரம்பவாதங் கூறுவர் தார்க்கிகர். கானலினாலாகிய நீர்த்தோற்றம்போல, பிரமத்தினிடத்தில் உலகந்தோன்றும் என விவர்த்தன வாதங் கூறுவர் மாயாவாதிகள். இவை அனைத்தும் சித்தாந்தத்திற் கேலாமையின், அவற்றை யொழித்தனர். சித்தாந்தத்திற் கொள்ளப்படுவன, பரிணாமவாதம், விருத்திவாதம் என்றுமிரண்டுமேயாம். சுத்த மாயையினின்றுங் காரியந்தோன்றுதல் இவ்விரண்டனுள் யாதோ வென்னும் ஐயநீக்குதற் பொருட்டுப் பரிணாமமன்று, விருத்தியாகுமென்றும், விருத்தியாயின், இவ்வாக்குக்கள் பிரமமெனக் கூறும் சத்தப் பிரமவாதிகளை மறுத்துப் பிரமமன்று மாமாயை யாகும் என்றுங் கூறினார்.

பிரமமன்றி என்றிருக்கவேண்டிய வினையெச்சம் அன்று எனத் திரிந்து நின்றது. விருத்தியாகும் என்ற விடத்துள்ள ஆகும் என்றது, மாமாயை என்ற விடத்துங்கூடி மாமாயையாகுமென நின்றது. பரிணாமம் இருவகைப்படு மென்பதும், அவை அசுத்தமாயைக்கும், பிரகிருதி மாயைக்தும் உரியனவென்பதும்,மேலே ௬௯வதுசெய்யுளுரையிற் கூறியிருத்தலின் ஆண்டுக் காண்க. விருத்தி ஆடை கூடாரமாதல். விருத்தி எனினும் சூக்தும பரிணாமம் எனினும் ஒக்கும். பரிக்கிரக சத்தி என்பது வைப்புச்சத்தி. அதாவது, வேண்டும்பொழுது உபகாரப் படுவதாய்த் தன்னுள் அடங்கிநிற்பது.

வாக்கு நான்கும் பஞ்சகலைகளைச் சார்ந்து ஐவகைப்பட்டு நிற்றலாவது :—சாந்தியதீத கலையைச்சார்ந்து சூக்குமையும், சாந்திகலையைச் சார்ந்து பைசந்தியும், வித்தியாகலையைச் சார்ந்து மத்திமையும், பிரதிட்டாகலையைச் சார்ந்து தன் செவிக்குக் கேட்கப்படுவதான சூக்கும வைகரியும், நிவிர்த்தி கலையைச்சார்ந்து தன் செவிக்கும் பிறர் செவிக்கும்

* எள்—சிறுதவள். குப்பை என்பது அதன் கூட்டம்.

கேட்கப்படுவதான தூலவைகரியுந் தோன்றி ஐவகைப்பட்டு நிற்கும். இவ்வாறு, பஞ்சகலையைச் சார்ந்துநிற்கும் வாக்கினுள், சூக்குமை சிவ தத்துவத்தினும், பைசந்தி சத்திதத்துவத்தினும், மத்திமை சாதாக்கிய தத்துவத்தினும், சூக்குமவைகரி மகேசுவர தத்துவத்தினும், தூலவை கரி சுத்தவித்தை என்னுந் தத்துவத்தினும் நின்று தொழிற்படு மாத லால், நான்கு வாக்கும் பஞ்சகலைகளைப்பற்றுக் கோடாகச் சார்ந்து ஐந்து தத்துவங்களிலிருக்குமெனக் கூறப்பட்டது. இனி இவ்வா றின்றி நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்னும் பஞ்சகலைகளிலுள்ள புவன வாசிகளுக்கு முறையே தூலதமமாயும், தூலதரமாயும், தூலமாயும், சூக்குமமாயும், சூக்குமதரமாயும் இவ்வாறு நால்வகைவாக்கும் ஐவகைப்பட்டு விளங்கும் என்றுரைத்தலு மொன்று. (௨௪.)

சுத்த மாயாகாரியமே மந்திரேசுவரர் முதலிய அபரமுத்தர்களின் தநுகரணாதிகளெனக் கூறுகின்றது.

௫௪
வித்தைகள் வித்தையீசர் சதாசிவ ரென்றிவர்க்கு
வைத்துறும் பதங்கள் வன்னம் புவனங்கண் மந்திரங்க
டத்துவஞ் சரீரம்போகங் கரணங்க டாமெலாமு
முய்த்திடும் வயிந்தவந்தா னுபாதான மாகிநின்றே.

(கோ-டு.) உபாதானமாகி நின்றே உய்த்திடும் வயிந்தவந்தான்.

(பொ-ரை) மேற்கூறிப்போந்த வாக்கு மாத்திரைக்கே யன்றி, மந்திரேசுவரர், மந்திரமகேசுவரர், அணுசதாசிவர் முதலிய அபர முத்தர்களுக்கு வேண்டப்படும் பதங்களும், அக்கரங்களும், புவனங்களும், மந்திரங்களும், தத்துவங்களும் சரீரங்களும, போகங்களும், கரணங்களுமாகிய சுத்தாத்துவாக்கள் எவற்றினுக்கும் முதற்காரணமாய் நின்று அவற்றைத் தோற்றுவிப்பது சுத்தமாயையாகும். (எ-று)

தத்துவம் என்றது கால முதலிய வித்தியா தத்துவத்தை; கரணம் என்றது அந்த கரணம் முதலிய ஆன்ம தத்துவத்தையென வறிக. வைந்தவம் என்றது விந்து என்னும் பகுதியடியாகப் பிறந்து விந்துவையே குறித்து நின்றது. (௨௫.)

சுத்தமாயா காரியமாகிய வாக்கை இன்றி எவர்க்கும் அறிவு விளங்காதென்று கூறுகின்றது.

௫௫
மூவகை யணுக்களுக்கு முறைமையின் விந்துஞான
மேவின் றில்லையாகி விளங்கிய ஞானமின்று
மோவிட விந்துஞான முதிப்பதோர் ஞானமுண்டேற்
சேவுயர் கொடியினுன்றன் சேவடி சேரலாமே."

(சொ-டு) விந்துஞானம் மூவகை யணுக்களுக்கும் முறைமையின் மேவினது இல்லையாகில் விளங்கிய ஞானமின்றாம். விந்துஞானம் ஒவிட ஓர்ஞானம் உதிப்பது உண்டேல், சேவுயர் கொடியினான்றன் சேவடி சேரலாமே

(பொ-ரை) மேற்கூறிப்போந்த வாக்குக்கள் பகுத்துணர்வதாகிய சவிகற்ப ஞானத்திற் கேதுவாதலால், இவவிடத்துக் கூறிய மந்திரேசுவரர் முதலிய அபர முத்தர்க்கும், விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர்க்கும் இன்றியமையாது வேண்டப்படும். துணையாகிய சரீர வேறுபாடுபற்றி விஞ்ஞானகலருக்குத் தூலமாயும், பிரளயாகலருக்குத் தூலதரமாயும், சகலருக்குத் தூலதமமாயும் பொருந்தி நிற்கும். இவ்வாக்கு இல்லையாயின், விளங்கிய ஞானமில்லையாம். இதனானுண்டாம் ஞானம் உலகப்பொருளை அறியும் ஞானமாம். ஆதலின், சவிகற்பவுணர்விற் கேதுவாகிய இவ்வாக்குக்கள் மேலான பந்தமாம். ஆதலின், இவ்வாக்குக்களைத் தன்னின் வேறாகக் கண்டு நீக்கி அவற்றிற்கு மேலாகிய பேரறிவு ஒருவனுக்கு விளங்குமாயின் அப்பொழுதே இடபக்கொடியை உயர்த்திய சிவபெருமான் திருவடியாகிய பரமுத்தியை அவன் தலைப்படுவன். (எ-று)

விந்துஞானம் என்றவிடத்து விந்து என்றது வாக்குக்களைக் குறித்தது. குறிக்கவே, வாக்குக்களே ஞானம் என எண்ணும்படி நின்றது. வாக்குக்கள் ஞானத்திற் கேதுவாகும். அவற்றை அவ்வாறு கூறியது உபசாரம். இரண்டனுள் ஒன்றைக் குறிப்பது தரம். பலவற்றுள் ஒன்றைக் குறிப்பது தமம்.

இதனானே நான்கு வாக்குக்களும் விஞ்ஞானகலர்க்குத் தூலமாய்ப் பொருந்தி நிற்குமெனவும், பிரளயாகலர்க்கு அதனினுந் தூலமாய்ப் பொருந்தி நிற்குமெனவும், சகலருக்குப் பிரளயாகலரினும் தூலமாய்ப் பொருந்தி நிற்குமெனவும் அறிக. மந்திரேசுவரர் முதலியோர் விஞ்ஞானகலரேயாயினும், பதித்தன்மை யடைந்துளாராதலின் அவருக்குச் சூக்குமமாய்ப் பொருந்தும். பிரளயாகலர், விஞ்ஞானகலருக்குச் சரீரமில்லையென்று கூறுவாருமுளர். அஃது ஆகம வசனங்களோடு முரணுதலாற் பொருந்ாது.

விந்துவின் மாயையாகி என்பதுமுதல் இவ்வேழு செய்யுளானும் சுத்தமாயையிற் றோன்றும் காரியங்களாகிய வாக்குக்களும், சுத்தாத்துவாக்களும், அவற்றினியல்பும் வகுத்துக் கூறப்பட்டன. (உசு)

சுத்தமாயா காரியங்கூறி நிறுத்தமுறையானே தருபவன் தருமுறை வகையில் அசுத்தமாயா காரியத்தைத் தொகுத்துக் கூறுகின்றது.

டுகூ
அருவினி லுருவந் தோன்றி யங்காங்கி பாவமாகி
யுருவினி லுருவமாயே யுதித்திடு முலக மெல்லாம்
பெருகிடுஞ் சுருங்கும் பேதா பேதமோடபேத மாகு
மொருவனே யெல்லாமாகி யல்லவா யுடனு மாவன். எ௧

(கோ-டு.) அருவினில் உருவம் தோன்றி உருவினில் உருவமாயே உதித்திடும். உலகமெல்லாம் அங்காங்கி பாவமாகி பெருகிடுஞ் சுருங்கும் பேதா பேதமோடு அபேதமாம். ஒருவனே எல்லாமாகி அல்லவாய் உடனுமாவன்.

(பொ-ரை.) சூக்குமமாகிய மாயையினின்றும் தூலமாகிய கலை முதலிய தத்துவங்களும், அவற்றினும் தூலமாகிய மூலப்பகுதியும், அதனினுந் தூலமாகிய குணதத்துவ முதலாயினவுந் தோன்றும். அத்தூலங்களினின்றுந் தோன்றுங் காரியம் அவற்றினுந் தூலமேயாம். இவ்வாறே காரியப் பிரபஞ்ச மெல்லாந் தோன்றி நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், ஆண், பெண், அலி என்றது முதலான அவயவப் பகுப்புடையனவாய் வளர்ந்தும், தேய்ந்தும் பரிணமித்துவரும். இத்தன்மையவாகிய காரிய காரணங்கட்குத் தம்முட் பெரும்பாலும் வேற்றுமை கூறுவர் நையாயிகர் முதலியோர். அவர் மதம் அடாது. வேறு என்னெனின், ஒன்று பிறிதொன்றுதலை நோக்கிற் பேதா பேதமாம். அதாவது, ஒன்றே பிறிதொன்றுவதில் அபேதமும், முன்னையதிற் பின்னையது வேறுதலிற் பேதமுமாம். உள்ளது காரியப்படுதலை நோக்கி அபேதமாம். இவ்வாறு, அபேதமாயும், பேதாபேதமாயும் விளங்கும் காரியங்களை அநந்தர், சீகண்டர் வாயிலாக முதற்காரணமாகிய மாயையில் நின்றுந் தோற்றுவிக்குங்கால், நிமித்தகாரணனாகிய முதல்வனே, அக்காரணத்தோடு கலப்பினால் ஒன்றாயும், பொருட்டன்மையால் வேறாயும், செலுத்துதலால் உடனாயும் நிற்பன். (எ-று.)

நையாயிகர் காரணம் நித்தம், காரியம் அநித்தம் என்பர். சற்காரிய வாதத்தில் காரண காரியங்களிரண்டும் சூக்குமம், தூலம் என்னும் வேறு

பாடுடையனவன்றி, நித்தம் அநித்தம் என்னும் வேறுபாடுடையனவல்ல. உலகமெல்லாம் என்றமையால், சுத்தமாயா காரியமாகிய விருத்தியினும் இறைவன் எல்லாமாயல்லவாயுடனுமாவன் என்பது பெறப்படும். உரு வினிலுருவமாயே என்றவிடத்து ஏகாரம் அருவாய்த் தோன்றுதெனப் பிரித்தமையின் பிரிநிலைக்கண் வந்தது. ஒருவனே என்றவிடத்து ஏகாரம் தேற்றம்.

அருவினிலுருவந் தோன்றி என்றதனால் மாயை அநிர்வசனமெனவும் அதனினின்றும் உலகந் தோன்றும் எனவும் கூறும் மாயாவாத மதம் மறுக்கப்பட்டது.

அங்காங்கி பாவமாகி என்றதனால், அணுக்களே பொருளாய்த் தோன்றுவதன்றி அவற்றின் வேறாய் அங்கி எனபதொன்றில்லை எனக் கூறும் சமுதாயவாத மதம் மறுக்கப்பட்டது. அங்கம—நிலம், நீர் முதலியன. அணுக்களும் அங்கமே. அங்கி–பிரகிருதிமாயை அசுத்தமாயை.

உருவினிலுருவமாயே யுதித்திடும் என்றதனால். நிலம் முதலிய உருவப் பொருளினின்றும், கந்தகுண முதலிய அருவப்பொருள்தோன்றும் எனக்கூறும் ஆரம்பவாத மதம் மறுக்கப்பட்டது. இந்த ஆரம்பவாதங் கூறுபவர் தார்க்கிகர். இவர், குணி தோன்றிய அடுத்த கணத்தில் குணந்தோன்றுமென்பர். குணி தோன்றும்பொழுதே குணமும் உடன்றோன்றுமாகலின், அவர் கூற்றுப் பொருந்தாது. ஆகவே, நிலம் முதலிய உருவமாகிய தூலப்பொருளினின்றும அவற்றினுந் தூலமாகிய தூலசரீரதத்துவம் தோன்றும என்பதறிக. பெருக்கஞ் சுருக்கம் பற்றி அணுக்களுக்கே பெரும்பாலும் வேற்றுமை கூறும் நையாயிகர் மதத்தை மறுத்தற்பொருட்டுப் பெருகிடுஞ் சுருங்கும் என்றார். பெருகுதல்—நிலம், நீர் முதலிய காரியமாய் விரிதல். சுருங்குதல்—காரணரூபமாய் ஒடுங்கி நிற்றல், பேதாபேதமோடபேதமாகும் என்றதும் நையாயிகர் மதத்தை மறுத்தற்பொருட்டேயாம்.

இச்செய்யுளால் அசுத்த மாயையினின்றுந் தோன்றுங் காரியங்களினியல்பு தொகுத்துக் கூறப்பட்டது. (உ௭)

அருவமாகிய மாயையினின்று உருவந் தோன்றுமென்னும் மாயாவாதியை மறுத்துரைக்கின்றது.

அருவுரு வீறதாகும் விகாரமு மவிகாரத்தின்
வருவது மில்லையென்னின் வான்வளியாதி பூதந்
தருவது தன்னின்மேக சாலசத் தங்களோடு
முருவமின் னுருமே றெல்லா முதித்திடு முணர்ந்து கொள்ளே.

(கோ-டு.) அருவுரு வீனுதாகும், அவிகாரத்தின் விகாரமும் வருவதும் இல்லை என்னின்.

(பொ-ரை.) அருவமாகிய மாயை உருவமாகிய பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்காது. அருவம் என்றதனுலேயே அவிகாரமென்பதும் பெறப்படும். ஆதலால், அவிகாரமாகிய (விகாரமில்லாத) அமமாயையினின்றும் விகாரமாகிய பிரபஞ்சந் தோன்றுவதுமில்லை என்று மாயாவாதி கூற, அறியாது கூறினுய்; உன் மதத்தில அருவமும், அவிகாரியுமாகிய ஆகாயத்தினின்றும் உருவமும், விகாரியுமாகிய வாயு முதலிய பூதங்கள் முறையே தோன்றும். அதுவேயுமன்றி, அவ்வாகாயத்தினின்று பல மேகங்களும், மேகத்தினகண் பல விகாரங்களும, பல ஓசைகளும், பல மினனல்களும், பல இடிகளும் இன்னும் இவைபோல்வன பலவும் தோனறுமாதலான், அதனை மறந்து அருவத்தில் உருவம் தோன்றாதென்று கூறுதல் உனக்கே வழுவாய் முடியுமென்பதனை அறிவாயாக (எ-று.)

அருவினின்று உருவந் தோன்றாதென்றல் உனக்கு வழுவாம் என்றதனுல், சற்காரிய வாதங்கொண்ட எமக்காயின் அது வழுவாகாதென்பது கருத்து. அதாவது, ஒன்றிலிருந்து மாறுபட்ட பிறிதொன்று தோன்றாதென்பது சற்காரியவாதம். (உதாரணம்) நெல்லிலிருந்து கமுகு தோன்றாதவாறுபோல. ஆயின், காரண ரூபமாக நிற்கும்பொழுது அருவமாயிருந்து, அதினின்று காரிய ரூபமான உருவம் தோனறுதலில்லையோவெனின், காரிய ரூபமாகிய உருவம் காரணத்தில் சூக்குமமாயிருந்து, பின்னர்த்தூலமாய் வருமென்பதேயன்றி, அருவமாய் இருந்து உருவமாய் வருமென்பதில்லை. மேலைச் செய்யுளில் அருவென்றதும் சூக்குமமென்னும் பொருள் குறித்ததேயாம்.

இச் செய்யுளால், அருவமாகிய மாயை உருவமாகிய பிரபஞ்சத்தைத்தோற்றுவிகாதென்னும் மாயாவாதி மதத்தை மறுத்து, சூக்குமமாகியமாயையினின்றும் தூலமாகிய காரியம் தோன்றுமென்ற மேலைச் செய்யுளின் கருத்து வலியுறுத்தப்பட்டது.

இவ்வாறு, உதிப்பது மீறு மென்பது முதல் இச்செய்யுள்வரை இருபத்தேழு செய்யுளானும், ஒருவனே டொருத்தி யொன்றென்றுரைத்திடு முலகமெல்லாம் வருமுறை வந்து நின்று போவது மாதலாலே தருபவனொருவன் வேண்டும் என்ற முதற்கூற்றை முறையே அவ்வவர் மதம்பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து வலியுறுத்தி, இனி இரண்டாங்கூற்றை அவ்வாறு வலியுறுத்தத் தொடங்குகின்றார். (உஅ)

முதலதிகாரணம் முடிந்தது.

---

## 2 - இரண்டாமதிகரணம்.

## ஈறுமாகி அநாதி முத்த சித்துரு(வாய்)மன்னி நின்று மருவுவித்திடும் என்பது.

இவ்வதிகரணம் ஈறுமாகி மருவுவித்திடும் எனவும், மன்னி நின்றே மருவுவித்திடும் எனவும், அநாதி முத்த சித்துரு எனவும் முக்கூற்றையுடையது. அவற்றுள், மேல் தருபவன் தருமுறை கூறிய இயைபுபற்றி மன்னி நின்றே மருவுவித்திடும் என்னும் நடுக்கூறு முன்னர் மூன்று செய்யுளாற் கூறப்படுகின்றது. மன்னுதல்—நிலைபெறுதல்.

தருபவன் எதில் நின்றுகொண்டு தருவன் என வினவுகின்றது.

**மண்ணினிற் கடாதி யெல்லாம் வருவது குலாலனாலே**
**யெண்ணிய வுருவமெல்லா மியற்றுவ னீசன் றானுங்**
**கண்ணுகா ரியங்க ளெல்லாங் காரண மதனிற் காண்பன்**
**பண்ணுவ தெங்கே நின்றிங் கென்றிடிற் பகரக்கேணீ.**

(கோ-டு-) குலாலனாலே மண்ணினிற்கடாதியெல்லாம் வருவது. ஈசன்றானும் எண்ணிய உருவம் எல்லாம் இயற்றுவன் (ஆயின்) இங்கு கண்ணு காரியங்கள் எல்லாம் காரணமதனின் (நின்று) காண்பன். எங்கே நின்று பண்ணுவது என்றிடில் பகர நீ கேள்.

(பொ-ரை.) குயவனால் மண்ணில் நின்றும் குட முதலிய காரியமனைத்தும் வருதல்போல, இறைவனும் கருதிய உலக மெல்லாவற்றையும் மாயையினின்று ஆக்குவனாபின், குயவன், இவ்விடத்துக் கருதுகின்ற கடாதி காரியங்களை எல்லாம் ஆக்குங்கால், அவற்றிற்குக் காரணமாகிய அந்நிலத்தினின்று செய்வனெனக் கண்டோமே; அதுபோல, இறைவன் எவ்விடத்து நின்று செய்வனென்று கேட்பையாயின் யாமதற்கு விடை கூற நீ கேட்பாயாக. ([illegible].)

"மண்ணினிற் கடாதியெல்லாம் வருவது குலாலனாலே யெண்ணிய வுருவமெல்லா மியற்றுவ னீசன்றானும்" என்றதுமேல் கஅ-வது செய்யுளிற் கூறிய பொருளாதலின், ஈசன் எதில் நின்றுகொண்டு தருவன் என வினவுதற்பொருட்டு அநுவாதமாக எடுத்துக் கொள்ளப்பட்டது. இயற்றுவன் என்றவிடத்து இயற்றுவனாயின் என்னும் பொருள்பட ஆயின் என்பது சொல்லெச்சமாய் நின்றது. காரணம் என்றது நிலம் என்னும் பொருளில் நின்றது. காண்டல்—செய்தல். நின்று என்பது காரணமதனின் என்பதனோடுங் கூடி காரணமதனின் நின்று காண்பன் என இயையும். இச் செய்யுள் வினாவாகும். இதற்குப் பிறரெல்லாம் மேல் கஅ-வது செய்யுளிற் பொருளை பொருளாகக் கொண்டு கூறியது கூறலென்னுங் குற்றமுண்டாக உரைப்பர். (உகூ)

தருபவன் நிராதாரமாய் நின்று தருவனெனக்கூறுகின்றது.

49

**சீலமோ வுலகம் போலத் தெரிப்பரிததனா னிற்குங்**
**கோலமு மறிவாரில்லை யாயினுங் கூறக் கேணீ**
**ஞாலமே நினையுந்தந்து நிறுத்திப்பின் னாசம்பண்ணுங்**
**காலமே போலக்கொண்ணீ நிலைசெயல் கடவுட்கண்ணே.**

(**கோ - டு.**) காலமேபோல கடவுட்கண்ணே நிலைசெயல் நீ கொள்.

(**பொ - ரை.**) **இறைவன் தன்மையோ உலகம்போலன்றி வாக்கு மனாதீதகோசரமாகலான், அவ்விறைவன் நிற்கும் நிலையும் வாக்குமனாதீத கோசரமேயாம். அங்ஙனமாயினும், ஒருவாற்றான் உவமையில் வைத்து உனக்குக் காட்டுதும். நீ அறிவாயாக. உலகமெல்லாவற்றையும் தோற்றுவித்து, நிறுத்திப் பின்னர் அழித்துக் காரியப்படுத்துங்காலம், அவற்றைக் காரியப்படுத்துங்கால், எல்லாப்பொருட்கும் தான் ஆதாரமாய்த் தனக்கு ஓர் ஆதாரமின்றி நிற்றல்போல, சிவசத்தியும் நிராதாரமாய் நின்றே உலகத்தைக் காரியப்படுத்து முறைமையை நீ உணர்ந்து கொள்வாயாக.** (எ-று.)

சீலம்—**தன்மை.** சீலமோ என்றவிடத்து ஓகாரம் உயர்வு சிறப்பின்கண் வந்தது. கோலமும் என்றவிடத்துள்ள உம்மை சீலமேயன்றி என இறந்ததுதழீஇ நின்றது. ஞாலமே நினையும் என்றது, ... சரா சரங்களையுங் குறித்த உலகங்களை. கடவுட்கண்ணே என்றவிடத்து

கண் என்பது அறிவு. அது சத்தியைக்குறித்தது. சிவன் எங்கு நின்று செய்வானென்னும் வினாவிற்குச் சிவனோடு ஒற்றுமையாய் நிற்றல்பற்றிச் சிவசத்தியின்மேல் வைத்து விடை கூறினார்.

கடவுள் கண் என்பது, ளகரம் டகரமாக உயர்திணையில் சிறுபான்மை திரியுமாகலின், கடவுட்கண் என நின்றது. இது, மக்கட்பண்பு முதலியனபோல * இலேசாற் கொள்க. நிலை செயல் என்பது நிற்றல் என்னும் பொருட்டாய் ஐ உருபு தொக்குநின்று நிற்றலை என்னும் பொருள்குறித்து நின்றது.

வாக்கு மனோதீதகோசரம் என்றசொல்லில், அதீதம் என்பது எட்டாமையையும், கோசரமென்பது எட்டுதலையும் குறித்து ஒன்றோடொன்று முரணாதோ? எனின், முரணாது. என்னை? வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாதென்பது தோன்ற வாக்கு மனோதீதமென்றும், எட்டாத தொன்று உண்டென்று கூறுதலால் யாது பயன் என்னும் ஐய நிகழாமைப் பொருட்டு அறிவிற்கெட்டு மென்பது தோன்றக் கோசரமென்றுங் கூறியதனுலென்க.

அவ்வாறாயின், காலம், தொழில் வேறுபாடுபற்றிச் செல்காலம், நிகழ்காலம், முதலியனவாய்ப் பலவகை யவத்தைப்படுமென்பது சித்தாந்த நூற்றுணிபாதலின், அதுபோல முதல்வனும் தொழில் வேறுபாடுபற்றிப் பலவகை யவத்தைப்படுவன் போலுமெனின், அங்ஙனம் படானென் றுணர்த்துதற் கெழுந்தது வருஞ் செய்யுள். (௩௦.)

தருங்கால் தருபவன் இலய போக அதிகாரத்துட்பட்டுத் துடக்குற்றும் துடக்குறுவானல்லன் எனக் கூறுகின்றது.

கற்றநூற்பொருளுஞ்சொல்லுங்கருத்தினிலடங்கித்தோன்றும்
பெற்றியுஞ் சாக்கிராதி யுயிரினிற் பிறந்தொடுக்க
முற்றதும் போலவெல்லா வுலகமு முதித்தொடுங்கப்
பற்றொடு பற்றதின்றி நின்றனன் பரனுமன்றே.

(கோ - டு.) உயிரினில் சாக்கிராதி ஒடுக்கம் உற்று பிறந்ததும் போல பரனும் எல்லாவுலகமும் உதித்து ஒடுங்க பற்றொடு (நின்றனன்) கற்றநூற் பொருளுஞ் சொல்லும் கருத்தினில் அடங்கித் தோன்றும் பெற்றியும் (போல) பற்றது இன்றி நின்றனன் அன்றே.

(பொ - ரை.) ஆன்மாவினிடத்துச் சாக்கிர முதலிய அவத்தைகள் கரணங்களால் ஒடுங்கித் தோன்றும் வழி ஆன்

* இலேசு—சிறுபான்மையாயுள்ள விதி.

மாவும் அவத்தைப்பட்டுத் துடக்குறுதல் போல, முதல்வனுந் தன்பால் எல்லா உலகும் ஒடுங்கி உதிப்பத் தானும் அதுபற்றி, இலயம், போகம், அதிகாரமென்னும் அவத்தைப்பட்டுத் துடக்குறுவோனாயினும், ஒருவன் கற்றநூற்பொருளும், சொல்லும் அதாவது சொர்க்கம், நரகம், நன்மை, தீமை முதலியனவும் அவற்றைக் குறிக்குஞ் சொல்லும் வாதனை ரூபமாய்ப் புத்தி தத்துவத்தை ஒட்டிநின்று ஆன்ம போதத்தின்கண் ஒடுங்கி மீளத் தோன்றுமிடத்து, அவ்வான்ம போதம் அதுபற்றித் தொடக்குறாதவாறு போல இறைவனும் தொடக்குறுதலின்றியே நின்றனன். (ர - று.)

இச்செய்யுள் எதிர்நிரனிறைப் பொருள்கோள். அதுகொண்டு கூட்டில் காட்டப்பட்டுள்ளது. இவ்விடத்துக் கருத்து என்றது உயிருணர்வை. பற்று என்பது பற்றுதல் என்னும் பொருள் குறித்த முதனிலைத் தொழிற்பெயர். மண்ணினிற் கடாதி என்றது முதல் இம்மூன்று செய்யுளானும், மன்னி நின்றே மருவுவித்திடும் என்ற நடுக்கூறு வினாவிடைகளால் விளக்கிக் காட்டப்பட்டது. இதனை, முன் வைத்ததற்குக் காரணம் இவ்வதிகரண ஆரம்பத்தில் காட்டப்பட்டுள்ளது. இனி, ஆறு செய்யுளான் ஈறுமாகி மருவிடும் என்ற முதற்கூற்றை வலியுறுத்துகின்றார். [௩க.]

புத்தர் மதம்பற்றி உலகம் தோன்றுதற்கும் ஒடுங்குதற்கும் காரணம் என்னையென்பார்க்கு விடை கூறுகின்றது.

௫௧

உயிரவை யொடுங்கிப் பின்னு முதிப்பதெ னரன்பாலென்னிற்
செயிருறு மலத்தினாகுஞ் சிதைந்ததே தென்னிற் சித்தத்
தயர்வொழி காரியங்க ளழியுங்கா ரணங்கி டக்கும்
பயிறரு காரியம்பின் பண்டுபோற் பண்ணுமீசன்.

[கொ - டு.] ஈசன் ஒடுக்கி [ய] உயிர் அவை பின்னும் அரன்பால் உதிப்பது என் என்னில், செயிருறு மலத்தின் ஆகும். சிதைந்தது எது என்னில், சித்தத்து அயர்வு ஒழி[ய] காரியங்கள் அழியும். பயில்தரு காரணம் கிடக்கும். காரியம் பின் பண்டுபோற் பண்ணும்.

(பொ - ரை.) சங்கார காரணனாகிய இறைவனால் சங்கார மெய்திய உயிரோடும் கூடிய உலகம் சங்காரமெய்தியவாறே ஒழியாது மீளவும் அவ்விறைவன்பால் நின்று தோன்றுதல் எற்றுக்

கெனின், குற்றம் பொருந்திய மலத்தின் பரிபாகம் ஆன்மாவிற்கு வருதற்பொருட்டுத் தோன்றும். அவ்வாறாயின், மீளவும் தோன்றற்பாலதாகிய உலகம் முன் அழியாது நிலைபெறவே அமையும். அவ்வாறன்றி அழிதல் எற்றுக்கெனின், உயிரின் இளைப்பொழித்தற் பொருட்டு, முன் இளைப்பினைச் செய்துநின்ற காரியங்கள் அழியும். அழிந்தவிடத்தும் காரணங்களிற் கன்மத்தோடு பயின்று கிடக்கின்ற அவ்வுலகங்களை முன்னை வினைத்தொடர்ச்சிக்குரியனவாய்த் தத்தங் காரணங்களினின்றும் ஒடுங்கியவாறே பின்னர் உதிக்கும்படி செய்வன். (எ - று.)

ஆக்கம் அவ்வவர் கன்மமெல்லாங் கழித்திடல் என முன்னர் ௬எவது செய்யுளிற் கூறுகின்றாராதலின், கன்மங் கழிதற்குரிய இயைபு இவ்விடத்திலேயே உணர்த்துவாராய், "காரணங் கிடக்கும் பயில்தரு காரியம் பின் பண்டுபோற் பண்ணு மீசன்" என்றார். எனவே, காரணத்தில் கன்மத்தோடு பயின்று கிடக்கின்ற காரியங்களைப் பின்னர் ஒடுங்கியவாறே கன்மாநுபவத்தின் பொருட்டுத் தோற்றுவிப்பன் என்றாகிக் கன்மங் கழியுமாறு காண்க. உயிரவை என்றது உயிரோடுங் கூடிய உலகங்களை.

சிதைந்ததேது என்றவிடத்து ஏது என்பது எதற்கு என்னும் பொருள் குறித்து நின்றது. சித்தத்தயர்வு—உயிரின் அறிவின் கண்ணதாகிய இளைப்பு. அயர்வொழி காரியங்கள் என்றவிடத்து ஒழிய என்னும் வினையெச்சத்து அகரம் தொக்கு நின்றது. அவ்வெச்சம் அழியும் என்னும் வினைகொண்டு முடிந்தது. கிடக்கும் என்பது பெயரெச்சம். அது,காரியம் என்னும் பெயர்கொண்டு முடிந்தது. இச்செய்யுளுக்கு, மேல் எ-வது செய்யுளுக்குரிய சற்காரியவாதத்தியல்பில் வைத்துக் கூறியது கூறலென்னுங் குற்றமுண்டாகக் கூறுவர். அது பொருந்தாமை காண்க. கன்மத்தோடு பயின்று காரணங்களிற் கிடக்குங் காரியங்களைக் கன்மங் கழியுமாறு தோற்றுவிப்பன் என்க. [௩௨.]

முத்தொழில் செய்தலால் இறைவன் விகாரமுறுமெனனக் கூறுகின்றது.

தோற்றுவித் தளித்துப் பின்னுந் துடைத்தரு டொழில்கண் மூன்றும்
போற்றவே யுடைய னீசன் புகுந்தது விகார மென்னிற்
சாற்றிய கதிரோ னிற்கத் தாமரை யலருங் காந்தங்
காற்றிடுங் கனலை நீருங் காந்திடுங் காசினிக்கே.

[கோ - டு.] ஈசன் தோற்றுவித்து அளித்து பின்னும் துடைத்தருள் மூன்று தொழில்களும் போற்றவே உடையன். புகுந்தது விகாரம் என்னின், சாற்றிய கதிரோன் நிற்க காந்தம் கனலைக் காற்றிடும். தாமரை அலரும். காசினிக்கே நீரும் கரந்திடும்.

(போ - ரை.) ஒரு கடவுள் தோன்றச் செய்து நிலைப்பித்துப் பின்னர்ச் சங்காரத்தைச் செய்விக்கின்ற முறைமையில் இம் முத்தொழில்களும் இடையறாது செய்வனாயின், பாரமெய்தி விகாரியாகானோ வெனின், ஆகான். எதுபோலவெனின், யாவராலும் புகழப்பட்ட சூரியன் தன் சன்னிதியில் சூரிய காந்தக் கல்லில் நெருப்பைத் தோன்றச் செய்தும், தாமரையை அலரும்படி செய்தும், பூமியில் நீரைச் சுவறும்படி செய்தும், ஆகிய முத்தொழில் பற்றி அச்சூரியன் விகாரமெய்தாதது போலென்க.

காசினிக்கண் என்றிருக்க வேண்டியது காசினிக்கு என நின்றது வேற்றுமை மயக்கம்.

இவ்விரண்டு செய்யுளானும் ஈறுமாகி மருவுவித்திடும் என்றதனை புத்தர்மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து வலியுறுத்தியவாறு. [௩௩.]

பௌராணிகர்மதம் பாஞ்சராத்திரிமதம் இரணியகருப்பமதம்பற்றி ஈறுமாகி மருவுவித்திடு மென்றதனை வலியுறுத்தத் தொடங்கி முத்தொழிற்குஞ் சுதந்திரம் சிவபெருமானுக்கே யெனக் கூறுகின்றது.

53
உரைத்தவித் தொழில்கண் மூன்று மூவருக் குலக மோத
வரைத்தொருவனுக்கேயாக்கிவைத்ததிங்கென்னையென்னின்
விரைக்கம லத்தோன் மாலு மேவலான் மேவினோர்கள்
புரைத்ததி காரசத்தி புண்ணிய நண்ண லாலே.

(கோ - டு.) உரைத்த இம்மூன்று தொழில்களும் மூவருக்கு உலகம் ஓத இங்கு ஒருவனுக்கே ஆக்கிவைத்து வரைத்தது என்னை யென்னின் விரைக்கமலத்தோன் மாலும் புண்ணியம் நண்ணலாலே புரைத்த அதிகார சத்தி ஏவலான் மேவினோர்கள்.

(போ - ரை.) இங்ஙனம் கூறிப்போந்த சிருட்டி, திதி, சங்காரமென்னும் முத்தொழில்களும் பிரமா, விட்டுணு, உருத்திரனென்னும் மூன்று கடவுளருக்கு முரியவென உலகத்தொல்

நிற்பவும், இவ்விடத்து ஒரு கடவுளுக்கே முத்தொழிலுஞ் செய்யும் சுதந்திரம் உண்டென்று வரையறுத்தது என்னையெனின், வாசனை பொருந்திய தாமரை மலரின்கண் உறைகின்ற பிரமா, விட்டுணு, இருவரும் புண்ணிய விசேடம்பொருந்தியதால் முதல்வனுடைய உயர்ந்த அதிகார சத்தியை அம்முதல்வனது ஏவலால் பெற்றுடையர். அவ்வாறன்றி, அத்தொழிற்கு அவ்விருவரும் சுதந்திரரல்லர் ஆகலான், முத்தொழிலும் செய்தற்குரிய சுதந்திரம் சங்காரகாரணனாகிய ஒருவனுக்கே உண்டு. (எ - று.)

பிரம விட்டுணுக்கள் புண்ணிய விசேடத்தால் உயர்ந்த அதிகார சத்தியைப் பெற்றுள்ளார் என்பதனை, "நல்வினைக்கண் வாணாளின் மாலாயயனாகி" என்ற போற்றிப் பஃறொடையானுந் தெளிக. வேதம் புராணம் இதிகாசம் முதலியவற்றிற்கும், முத்தொழிற்கும் சிவபெருமானே சுதந்திரர்; ஏனையோர் சுதந்திரரல்லர் என்பதே கருத்து என்பது சதுர்வேத தாற்பரிய சங்கிரகம் முதலியவற்றுட் காண்க. வரைந்து என்பது வரைத்து என வலித்தல் விகாரமாயிற்று. புரைத்ததிகாரசத்தி என்றவிடத்து, புரைத்த அதிகார சத்தி என்று பொருள்பட பெயரெச்சத்து அகரம் தொக்கு நின்றது. அவ்வெச்சம் அதிகாரசத்தி என்னும் பெயர் கொண்டு முடிந்தது. புரைத்தல்—உயர்தல்.

விட்டுணுவுக்குக் காத்தற்றொழில் சுதந்திரமாயின், தன் மகனாகிய மன்மதனைச் சிவபெருமான் நீறாக்கிய காலத்து நீறுபடாது காத்திருக்கலாம். பிரமனுக்கு படைத்தற்றொழில் சுதந்திரமாயின் சிவபிரானாற் கொய்யப்பட்ட தனது தலையை மீளப் படைத்திருக்கலாம். அங்ஙனம் செய்யாமையானே அவர்க்கு அத்தொழில்கள் சுதந்திரம் அல்லவாதல் அறிக. (௩௪)

சங்கார காலத்தில் பிரம விட்டுணுக்களுஞ் சங்கரிக்கப்படுவர் ஆதலின் முத்தொழிற்குஞ்சிவனே முதல்வன் எனக் கூறுகின்றது.

இறுதியாங் காலந் தன்னி லொருவனே யிருவருந் தம்
உறுதியி னின்றா ரென்னி னிறுதிதா னுண்டா காதாம்
அறுதியி லரனே யெல்லா மழித்தலா லவனா லின்னும்
பெறுதுநா மாக்க மோக்கம் பேரதி காரத் தாலே.

[கோ - ௫.] இறுதியாங் காலந்தன்னில் இருவரும் தம் உறுதியில் நின்றார் என்னின், இறுதிதான் உண்டாகாதாம்: அறுதியில் அரனே எல்

லாம் அழித்தலால், ஒருவனே பேரதிகரணத்தாலே இன்னும் ஆக்கம் நோக்கும் அவனால் நாம் பெறுதும்.

(போ - ரை.) அன்றியும், சங்கார காலத்தில் பிரம விட்டுணு இருவரும் தத்தம் ஆற்றலோடு நிலைபெறுவாராயின், உலகம் சங்காரமாதலின்று. ஆதலின், சங்கார காலத்தில் அவ்விருவரும் சங்கரிக்கப்பட்டு உளரல்லர் என்பது பெற்றாம். அதுவன்றியும் வேறொருவராலும் சங்கரிக்கப்படாத சங்காரக் கடவுள் சிலவற்றை ஒழித்துச் சங்கரிக்கமாட்டானாகலானும், முழுதும் சங்கரித்தவிடத்துச சங்காரக் கடவுளாகிய அவ்வொருவனே எஞ்சி நிற்றல் பெறப்படுதலானும், ஒடுங்கிய உலகங்கட்குப் பெரியதோர் ஆதாரம் எஞ்சி நின்ற சங்காரக் கடவுளேயாதலானும், ஒடுங்கிய உலகத்தை மீளத்தோற்றுதலும் நிறுத்துதலும் செய்தலை அவனாலே நாம் பெற்றுக்கொள்ளுதும். (எ - று.)

அறுதியில் அரன் என்றவிடதது அரன் என்னும் பெயருக்கு அறுதியில் என்பது அடையாய் நின்றது. நிற்கவே, அதனாலும் இறைவன் முதல் என்பதற்கு, வேறொருவராலும் சங்கரிக்கப்படாமையால் என்னும் ஒரேதுக கூறியவாறு. ஆகவே, எல்லாவற்றையுஞ் சங்கரித்தலானும், தான் எஞ்சி நிற்றலானும், ஒடுங்கிய உலகங்கட்கு ஆதாரமாகலானும், வேறொருவராலும் சங்கரிக்கப்படாது நிற்றலானும சங்காரக் கடவுளே முதல் என்றுரைத்துக் கொள்க.

இன்னும்—மீளவும். ஆதாரம், அதிகரணம் என்பன ஒருபொருட்சொற்கள். உலகத்திற்கு முதற்காரணமும் அதிகரணமாதலின், இறைவன் அதிகரணமாய்நிற்றல் அதுபோலன்று என்பதுணர்தததற்குப்பேரதிகரணம் என விசேடித்தார். விசேடிக்கவே, முதற்காரணம் சடரூபமான அதிகரணம் எனவும், இறைவன் ஞான ரூபமான அதிகரணம் எனவும் பெறப்பட்டமை காண்க.

மேலைச் செய்யுளால் ஆகம அளவைபற்றியும், இச்செய்யுளால் யுத்திபற்றியும் பௌராணிகர் மதம்பற்றி நிகழும் ஆசங்கையைப் பரிகரித்து "ஈறாகி மருவுவித்திடும்" என்பது வலியுறுத்தப்பட்டது. இவ்வாறு வலியுறுத்தப்பட்ட இதனால், பாஞ்சராத்திரி, இரணியகருப்ப மதங்களும் பரிகரிக்கப்பட்டவாறு காண்க. [க௦.]

இறைவன் றொழில் மறம், வீண், தன்னயம் என்னுங் குற்றங்களுட்படாது அருளே எனக் கூறுகின்றது.

சொன்னவித் தொழில்க ளென்ன காரணந் தோற்ற வென்னின்
முன்னவன் விளையாட் டென்று மொழிதலு மாமு யிர்க்கு
மன்னிய புத்தி முத்தி வழங்கவு மருளான் முன்னே
துன்னிய மலங்க ளெல்லாந் துடைப்பதுஞ் சொல்ல லாமே.

[கோ - ௫.] முன்னவன் சொன்ன இத்தொழில்கள் தோற்றக் காரணம் என்ன என்னில், விளையாட்டு என்று மொழிதலுமாம். உயிர்க்கு முன்னே மன்னிய புத்தி முததி துன்னிய மலங்களெல்லாம் அருளால் துடைப்பதும் வழங்கவும் [அருளாற்] சொல்லலாமே.

(போ - ரை.) சங்காரக்கடவுள் இங்ஙனங் கூறிப்போந்த சிருட்டி, முதலிய தொழில்களைச் செய்தற்குக் காரணம் என்னை யென்னின், * "காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி" என்பது முதலிய திருவாக்குக்கள்பற்றி அத்தொழிற்குக் காரணம் விளையாட்டென்றலுமாம். விளையாட்டென்றதனால் சிறுமகார் விளையாட்டுப் போலப் பயனற்ற வீண் விளையாட்டோ வெனின், அன்று. விளையாட்டென்றதின் கருத்தென்னையோ வெனின், "† ஐயா நீ யாட்கொண்டருளும் விளையாட்டினுய்வார்களுய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்" என்பது முதலிய திருவாக்குக்கள் பற்றி உய்தற் பயனுடைத்தாகலின், பெரும்பாரஞ் சுமத்தல் சாத்தனுக்கு விளையாட்டு என்பது போல எளிதிற் செய்யப்படுதலே நோக்கியேயாம். அங்ஙனஞ் செய்வதும் தன்பயன் கருதியோ வெனின், அன்று. ஆன்மாக்களுக்குப் பெத்த காலத்துச் சுவர்க்காதி போகமும், பதமுத்திகளும், முத்திக் காலத்துப் பொருந்திய மும்மலங்களும் அருளால் நீக்குதலாகிய வீடுபேறும் பயத்தற் பொருட்டேயாம். அவ்வாறு செய்வதற்குத் தான் காரணம் யாதெனின், புத்தி முத்தி வழங்குதலும், மலந்துடைத்தலுமாகிய இரண்டும் பக்குவம் நோக்கிச் செய்யப்படுவன வாத-

---

* திருவாசகம்-திருவெம்பாவை-செ. கஉ.

† திருவாசகம் திருவெம்பாவை-செ. கக.

யின், தம்முண் முரணாமையின், உயிர்கண்மேற் சென்ற கருணையேயாம். (எ - று.)

மொழிதலும் என்றவிடத்துள்ள உம்மை விளையாட்டே யன்றி புத்தி முத்தி வழங்கவும் துன்னிய மலங்களெல்லாம் துடைப்பதுமாம் என எதிரது தழீஇற்று. வழங்கவும், துடைப்பதும் என்றவிடத்து உமமை எண்ணும்மை. வழங்கவும் என்னும் உம்மையோடு பொருந்துதற் கேற்பத் துடைப்பதும் என்றவிடத்து ஆக்கச் சொல் வருவித்துத் துடைப்பதுமாம் என உரைக்க. அருளால் என்பதைச் சொல்லலாமே என்பதனோடுங் கூட்டி அருளாற் சொல்லலாமே என உரைக்க.

தொழில்களைச் செய்தற்குக் காரணம என்னை என வினாயினார்க்குப் புத்தி முத்தி வழங்குதலும், மலங்களெல்லாந் துடைப்பதும் எனப் பயன் கூறி விடுத்தல் விடை வழுவாகாதோவெனின், ஆகாது. எதனாலெனின், அருளால் புத்தி முத்தி வழங்கவும் மலங்களெல்லாந் துடைப்பதுமாம என்றதனால் அருள்காரணமென்பது தாற்பரியமாதலா லென்க. அவ்வாறாயினும், அநுக்கிரகம் நீங்கிய ஏனைய தொழில்களெல்லாம் பிறப்பிறப்புக்களிற் சேர்த்துத் துன்பமடையும்படி செய்வனவாதலின், அவற்றைச்செய்தலும் அருளாதல் எவ்வாறு கூடுமெனின், அதற்கு விடை கூறுதற்காகவே வருஞ் செய்யுளெழுந்தது. [நக.]

அநுக்கிரகமாகிய தொழில் மட்டுமன்று சிருட்டி முதலிய ஏனைய தொழில்களும் அருளே எனக கூறுகின்றது.

56
**அழிப்பிளைப் பாற்ற லாக்க மவ்வவர் கன்ம மெல்லாங்**
**கழித்திட னுகரச் செய்தல் காப்பது கன்ம வொப்பிற்**
**றெழித்திடன் மலங்க ளெல்லா மறைப்பருள் செய்திதானும்**
**பழிப்பொழி பந்தம் வீடு பார்த்திடி னருளே யெல்லாம்.**

**[கொ - டு.]** அழிப்பு இளைப்பாற்றல். ஆக்கம் அவ்வவர் கன்மம் எல்லாம் கழித்திடல். காப்பது நுகாச் செய்தல். மறைப்பு கன்மவொப்பில் மலங்களெல்லாம் தெழிததிடல். அருள் பந்தம் வீடு. பார்த்திடின் எல்லாச் செய்திதானும் அருளே. பழிப்பு ஒழி.

**(போ - ரை.)** மேற்கூறிய முத்தொழில்களையும் ஐந்து தொழில்களாக விரித்துக் கூறவும்படும். அவற்றுள் சங்காரமாவது இளைப்பாற்றலாம. சிருட்டியாவது அவரவர் கன்ம முழுதுங் கழியுமுகத்தால் மலபாகம் வரச் செய்தலாம். திதியாவது

கன்மங் கழியுமாறு அதனை நுகர்வித்தலாம். திரோபவமாகிய மறைப்பாவது இருவினை யொப்புவரச் செய்து மலங்களைத் தெளித்தலாம். அதாவது அனுபவிக்க வேண்டிய வினையின் பயனை அனுபவிக்கும் முறையில் அதினுள்ள குணங்குற்றந்தோன் ருதிருக்கும்படி மறைத்து அனுபவிக்கச் செய்து மலத்தைத் தேய்த்தல். அருளாகிய அனுக்கிரகமாவது பந்தம் விடுவித்த லாம். இவ்வாறு ஒவ்வொரு தொழிலும் ஒவ்வொரு பயன் தரு தலால் ஆராயுமிடத்து ஐந்தொழிலும் அருட்செயலேயாம். இவற்றுள் சங்காரமும், மறைத்தலும் மறத்தொழிலே போலு மெனப் பழித்தலைச் செய்யற்க. (எ - று.)

சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்னும் ஐந்து தொழில்களை சிருட்டி, திதி, சங்காரம் என்னும் முத்தொழிலாகக் கூறு மிடத்து திரோபவத்தைத் திதியினுள்ளும், அநுக்கிரகததைச் சங்காரததி னுள்ளும் அடக்கிக் கூறப்படும்.

இருவினை ஒப்பு:—மிகுந்த புண்ணியத்தின் பயனும், மிகுந்த பாவத் தின் பயனும் ஒருகாலத்து அனுபவிக்க வருங்கால் அவ்விரண்டும் ஒன்றோ டொன்று முரணுதலின், திருவருட்சத்தி அவ்விரண்டையும் அநுபவிக்க வொட்டாது தள்ளிவிடுமாதலின் அதுவே இருவினையொப்பு என்பர் ஒரு சாரார். அங்ஙனமாயினும், எஞ்சிய வினையின்பயன் அனுபவித்துத் தீர வேண்டுதலின் அது இருவினையொப்பாகாது. எல்லா நல்வினைப்பயனும், தீவினைப்பயனும் அநுபவித்தொழிதலே இருவினையொப்பென்பர் மற் றொரு சாரார். அங்ஙனமாயினும், அது மல சத்தியைக் கெடுக்காது ஆணவமலமுடைய விஞ்ஞானகலராக்குதலே யாதலின் அதுவும் இருவினை யொப்பாகாது. இனி, இருவினையொப்புத்தான் யாதெனின், ஆன்ம அறிவின்கண் நல்வினை தீவினைகளும், அவற்றின் பயனாகிய இன்பத் துன் பங்களும் விருப்பு வெறுப்பின்றி ஒபபத்தோன்றுதலேயாம். இதனால், நான் என்னும ஜீவபோதமாகிய மலச்சேட்டை தேயும். ஆதலின், மல பரிபாகத்திற்குரிய இருவினையொப்பு இறுதியிற் கூறியதேயாம்.

மேலைச் செய்யுளால் இறைவன் செய்யுந்தொழில் மறமாய் முடியும் என்னும் நாத்திகர் மதமும், வீணாய் முடியுமென்னும் மாயாவாதிகள் மத முமு, தன்னயங்கருதியதாய் முடியுமெனனும் பரிணாமவாதிகள் மதமும் பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து, இச்செய்யுளால், அத்தொழில்கட்குக் காரணம் உயிர்கண்மேற் சென்ற கருணையே எனக்கூறி ஈறுமாகி மருவுவித திடு மென்பது சிறப்பிக்கப்பட்டது.

"உயிரவை யொடுங்கி" என்றது முதல் இவ் வாறுசெய்யுளானும், "ஈறுமாகி மருவுவித்திடும்" என்ற முதற்கூற்றை வலியுறுத்தி, இனி இருபத்திரண்டு செய்யுளால் "அநாதிமுத்த சித்துரு" என்ற மூன்றாங்கூற்றை வலியுறுத்துகின்றார். [கூஎ.]

அநாதிமுத்த சித்துருவின் தடத்த வடிவம் அருவம், அருவுருவம், உருவம் எனக்கூறுகின்றது.

57
அருவமோ வுருவாரூப மானதோ வன்றி நின்ற
வுருவமோவுரைக்குங்கர்த்தாவடிவெனக்குணர்த்திங்கென்னி
னருவமு முருவா ரூப மானது மன்றி நின்ற
வுருவமு மூன்றுஞ் சொன்ன வொருவனுக் குள்ளவாமே.

[**கொ - ே.**] உரைக்கும் கர்த்தா வடிவு அருவமோ உருவா ரூபமானதோ அன்றி நின்ற உருவமோ இங்கு எனக்கு உணர்த்து என்னின், சொன்ன ஒருவனுக்கு அருவமும் உருவாரூபமும் ஆனதும் அன்றி உருவமும் நின்ற மூன்றும உள்ளவாமே.

(**போ - ரை.**) இங்ஙனம கூறிப்போந்த ஐந்தொழில் செய்யும இறைவனுக்கு வடிவம இன்றி முடியாமையின், அவ் வடிவம அருவமோ அருவுருவமோ அவ்விரண்டுமின்றி நின்ற உருவமோ, இம்மூன்றனுள் அவனுக்குரிய வடிவம் இதுவென இவ் விடத்து எனக்குணர்த்த வேண்டுமென்று வினவில், அநாதிமுத்த சித்துருவென மேற்கூறப்பட்ட ஒருவனுக்கு அருவும அருவுருவும அவ்விரண்டுமின்றி உருவும என நின்ற மூன்று வடிவமும் உள்ளனவாம. (எ - று.)

இச்செய்யுள் சொற்பொருட்பின்வருநிலை யென்னும் அலங்காரம். உள்ளன என்றிருக்கவேண்டிய அகரவீற்றுப் பலவறிசொல் அன்சாரியை பெறாது உள்ள என நின்றது. சொன்ன ஒருவன் என்றது அநாதி முத்த சித்துரு என மேற்கூறப்பட்ட ஒருவன்.

இனி, இத்தடத்த வடிவம் மூன்றற்கும பிறர் கூறுங் குற்றங்களைப் பரிகரிக்க எண்ணி, உருவத்தின்கட் கூறுங் குற்றம் பரிகரிக்கவே, ஏனையவும் பரிகரிக்கப்பட்டனவா மென்னுங் கருத்தால், உருவமுண்டெனிற் குற்றமுண்டாமெனக் கூறும் பிறர் கூற்றைப் பரிகரிக்கத் தொடங்குகின்றார். [கூஅ.]

இனி, இரண்டு செய்யுளால் இறைவனுக்குத்தடத்த வடிவ மாகிய உருவத் திருமேனியுண்டேல் நம்மில் ஒருவனுமே என வினவுகின்றது.

நண்ணிடு முருவமென்னி னமக்குள வுருவம்போலப்
பண்ணிட வொருவன் வேண்டு மிச்சையேற் பலருமிச்சை
கண்ணிய வுருவங் கொள்ளேம் யாம்பெருங் கடவுடானு
மெண்ணிய யோகசித்தர் போலுரு விசைப்பன் காணே.

வித்தக யோகசித்தர் வேண்டுருக் கொள்ளு மாபோ
லுத்தமன் கொள்வ னென்னி னவர்களி லொருவனுவ
னத்தகை யவர்களெல்லா மாக்குவ தருளா லாங்கு
வைத்தது மாயை யென்னின் வடிவெலா மாயையாமே.

[கோ - ட.] உருவம் நண்ணிடும் என்னில் உருவம் நமக்கு உள் போல பண்ணிட ஒருவன் வேண்டும். இச்சையேல் பலரும் இச்சையாம் கண்ணிய உருவங் கொள்ளேம். யோகசித்தர்போல் எண்ணிய உரு பெருங் கடவுள்தானும் இசைப்பன்காணே. வித்தக யோகசித்தர் வேண்டு உரு கொள்ளுமா போல் உத்தமன் கொள்வன் என்னின் அவர்களில் ஒரு வன் ஆவன். அத்தகை அவர்கள் எல்லாம் ஆக்குவது அருளால். ஆங்கு வைத்தது மாயை என்னின் வடிவெலா மாயையாமே.

(போ - ரை.) இறைவனுக்கு உருவம் உண்டென்னில் உருவமெல்லாம் ஒருதன்மையவாகலின் உருவமுடைய நம்ம னோர்க்கு உளதாகிய சுய இச்சை இன்றிய பாதந்திரம் போல, முதல்வனுக்கும் உருவம் உண்டாதற்கு ஒரு கருத்தா உண்டெனப்பட்டுப் பாதந்திரமுளதாதல் வேண்டும். அஃதன்றி, முதல் வன் நினைந்த வடிவங் கொள்ளுதலால் சுதந்திரமுடையன் எனில், முதல்வனுக்கு உளதாகிய சுதந்திரம் நம்மனோர் பலர்க்கும் உருவ முடைய ஒற்றுமை பற்றி உளதாதல் வேண்டும். இனி, நம்ம னோர்க்குக் கருதிய வடிவங்கள் எடுக்கமுடியாமையும், யோக சித் தர் தான் கருதியதொரு வடிவத்தை எடுத்துக்கொள்ளுதலும் உண்மையின், அவ்வியோக சித்தர்போல, தான் கருதியதொரு வடிவத்தை இறைவன் எடுத்துக் கொள்வனெனின், அங்ஙனமாயி

னும் சதுரப்பாடுடைய அவ்வியோக சித்தரில் ஒருவராய் முடியும். அன்றியும், அவ்வியோக சித்தர் தான் நினைந்ததொரு வடிவத்தைக் கொள்ளுதல் முதல்வன் அருளாலன்றி முடியாமையானும், யோகசித்தர்களுக்குண்டாகிய உருவம் மாயா காரியமாதலானும் யோகிகள் முதலிய நம்மனோர்க்கும் முதல்வனுக்கு முளதாய வேறுபாடு பெரிதாகலின் யோகசித்தரோடு ஒப்புமை கூறுதல் பொருந்தாது. அங்ஙனமாயினும், உருவமெல்லாம் ஒருதன்மையவாகிய மாயாகாரியமே யாகலான் உருவத்தின் வேற்றுமையில்லாத விடத்து வேறுபாட்டாற்போந்த பயன் என்னை. (எ-று)

"வித்தக யோக சித்தர் வேண்டுருக் கொள்ளுமாபோ லுத்தமன் கொள்வனென்னின்" என்றது, மேலைச் செய்யுளிற் கூறப்பட்டதை அநுவாதஞ் செய்து கொண்டது. [௧ கூ,௪௦.]

இறைவனுக்கு உருவத்திருமேனி உண்டு. அதுகொண்டு நம்மில் ஒருவனுதலில்லை எனக் கூறுகின்றது.

௪௦

**மாயைதான் மலத்தைப்பற்றி வருவதோர் வடிவ மாகு**
**மாயவா ணவம கன்ற வறிவொடு தொழிலை யார்க்கு**
**நாயக னெல்லா ஞானத் தொழின்முத னண்ண லாலே**
**காயமோ மாயை யன்று காண்பது சத்தி தன்னால்.**

[**கொ - டு.**] ஆய ஆணவம் அகன்ற அறிவொடு தொழிலை ஆர்க்கும் நாயகன் எல்லா ஞானத தொழில் முதல் நண்ணலாலே மலத்தைப் பற்றி வருவதோர் மாயைதான் வடிவமாகும். காயமோ மாயை அன்று. சத்தி தன்னால் காண்பது [ஆகும்.)

(**பொ - ரை.**) நீ அங்ஙனங் கூறுதல் பொருந்தாது. வடிவத்தை உடையவர்களது ஏற்றத்தாழ்வால் வடிவங்களும் ஏற்றத்தாழ்வுடையனவே யன்றித் தம்முள் ஒப்பனவாகா. அவ் வேற்றத் தாழ்வுகள் என்னையோ எனின், கூறுதும். யோகிகள் முதலிய நம்மனோர் எல்லாரும் மலத்தைப் பற்றிக் கிடக்கும் பசுக்கள். அதுவன்றியும், ஒன்றே யறிதலும், ஒன்றே செய்தலும், ஒன்றிலே முதன்மையாதலுமாகிய அற்ப ஞானத்தொழில் உடையராம். முதல்வன், பந்திப்பதாய அவ்வாணவமல நீங்கிய ஆன்ம அறிவிலே தங்கி நின்றுணர்த்தும் தொழிலுடையோனு

கிய பசுபதி. அதுவுமன்றி, எல்லா அறிவும், எல்லாத் தொழி லும், எல்லா முதன்மையும் உடையன். இங்ஙனம் வடிவத்தையு டைய அங்கிகட்குத் தமமுள் ஏற்றத் தாழ்வுகள் உண்மையின், அதற்கேற்ப மலத்தைப் பற்றிய பசுக்களுக்கு அம்மலத்தோ டியையபுடைத்தாய் ஏகதேச அறிவைச் செய்யும் மாயையே வடி வமாம். அநாதி முத்த சித்துருவாகிய பசுபதிக்கு ஏகதேசத் தைச் செய்யும மலத்தோடியையபுடைய மாயைய வடிவமன்று. அவனுக்கு மலநீங்கிய உயிர்க்கு வியாபக அறிவைச் செய்யும் சத்தியினாலேயே வடிவமாம். ஆதலின், அங்கங்களினும் தம் முள் ஏற்றத்தாழ்வுகள் உண்டென்பது இனிது விளங்குதலால் அதனை அறியாது கூறுதல் அடாது. (௧ - ௬.)

மாயைதான் என்றவிடத்துத் தான் என்பது மேலைச் செய்யுளிற் கூறிய மாயையை அநுவதித்து நிற்றலை உணர்த்தி நின்றது. மலத்தைப் பற்றி என்பது, மலத்தைப்பற்றிய பசுக்கள் எனப்பொருள் குறித்தலின் பெயர். அவ்விடத்து குவ்வுருபு விரித்துரைக்க. * "ஐந்தவித்தா னாற் றல்" என்புழிப்போல. நாயகன் எல்லா ஞானத்தொழில்முதனண்ணலால் எனவே, உயிர்கள் ஏகதேச ஞானத்தொழில்முதலை நண்ணுவன என் பது பெறப்பட்டது. ஆணவமகன்ற என்றவிடத்து அகறல் நீங்குதல். அறிவொடு தொழிலை ஆர்க்கும் என்றவிடத்து ஆர்க்கும என்பது பொருந் தும் என்றாகி, அஃது உபசாரத்தால் விளங்கித் தோன்றுதலைக் குறித்தது, விளங்கித் தோன்றுங் காரணத்தாலுண்டாம் உணர்த்துதல் என்னுங் காரி யத்தின் மேல் நின்றது. என்றும் உள்ளாராயினும், இதுவரையும் வெளிப்படாது நின்று, இதுபொழுது விளங்கித் தோன்றுதலைப்பொருந் துதல் என்றது உபசாரம். காயமோ என்றவிடத்து ஓகாரம் இறைவன் றிருமேனியின் சிறப்பைக் குறித்தது.

ஏகதேச அறிவை யுண்டுபண்ணுதல் ஏகதேசப்படுதற்குரிய பொருட் கேயன்றி மற்றதற் குரித்தன்று; வியாபக அறிவை யுண்டுபண்ணுதல் வியாபகப் பொருட்கேயன்றி ஏகதேசப்படும் பொருட் குரித்தன்றாகலான், ஏகதேசமாக அறியும் உயிர்களுக்கு ஏகதேசத்தை யுண்டுபண்ணும் மாயை யே உருவமாயிற்று. வியாபகமாயறியும் பசுபதிக்கு, அதுபோல ஏக தேசப்படுந் தகுதியில்லாத சத்தியே உருவமாயிற்று என அறிந்துகொள்க.

இனி, இச்செய்யுளில் "ஆணவமகன்ற அறிவொடு தொழிலை ஆர்க் கும்" என்பதற்கு. ஆணவமானது வியாபக ஞானத்தொழில்களைத் தடுக்

---

* திருக்குறள்-நீத்தார் பெருமை. செ. ௬.

கும் என்றுரைப்பாருமுளர். அப்பொருள், அம்மட்டில் நின்று, பின் வரும் வாக்கியங்களோடியைந்து பொருள்தராது நின்று வற்றுமாகலின் பொருந்தாது. அன்றியும், மாயாகாரியமான உருவத்தைப்பற்றி ஆராயு மிவ்விடத்தில், ஆணவத்தின் காரியத்தைப்பற்றி ஆராய்தற்கு யாதொரு இயைபுமில்லை யாகலானும் அவ்வுரை பொருந்தாமை காண்க. [சக.]

இறைவனுக்கு உருவங்கொள்ளுதல் பொருந்தாது அருவங் கொள்ளுதலே பொருந்தும் எனின் அத்துவாக்களி லொருவனு மெனக் கூறுகின்றது.

௬

சத்தியே வடிவென்றாலுந் தான்பரி ணாமமாகு
நித்தமோ வழியுமத்தா னின்மல னருவே யென்னி
லத்துவா மார்க்கத் துள்ளா னலனிவ னருமை தன்னைப்
புத்திதா னுடையை போல விருந்தனை புகலக் கேணீ.

(போ - ரை.) அங்ஙனம் சத்தியே வடிவாயினும், உருவ மெல்லாம் கண்டிதப் பொருளாதலின் மாறுதலை யடைந்து அழி வெய்தும். அவ்வாறழிவெய்தல் சிவசத்திக்குத் தகாமையால், அநாதி முத்த சித்தருவாகிய முதல்வன் அருவப்பொருளாதலே அமையுமாயின், அருவப் பொருளாகிய ஆறத்துவாவை யுங் கடந்த கடவுட் பொருளை அவ்வத்துவாக்களோடு ஒப்ப அருவமெனக் கூறுதல் பொருந்தாது. ஆயினும், இவ்விறைவன் தன்மையைப் புத்தியுடையாய் போலிருந்தனை கூறுவாம். நீ கேட்பாயாக. (எ - று.)

அத்துவா எனினும், வழி எனினும் ஒக்கும். அது கலை, மந்திரம், பதம், வன்னம, தத்துவம், புவனம் என அறுவகைப்படும். பிரபஞ்சந் தோன்றுதலும, ஒடுங்குதலும், ஆன்மாக்கள் வினைகளை ஈட்டுதலும் இவற் றின் வழியேயாதலின், அத்துவா வழியெனப்பட்டது. இதன் விபரம் எட்டாஞ் சூத்திரததிற் கூறப்படும். புத்திதானுடையைபோல இருந்த னை என்பது இழித்தற்கண் வந்த குறிப்புமொழி.

அத்துவா மார்க்கத்துள்ளான் அலன் என்பதை அத்துவா மார்க்கத் துள்ளானன்று என்று பாடபேதங் கொள்ளின், அத்துவா மார்க்கத்து உள்ளான் எனப் பிரித்து, அத்துவா மார்க்கத்துள் ஒருவனுய்க் கருதப் படான் என்று பொருள்கூறி, அனறிவன் என்பதற்கு அவ்வத்துவாக்கள திபல்போடு மாறுபட்ட இவன் என உரைத்துக் கொள்க. அன்றிவன்

என்றது அன்றிய இவன் என விரிதலின் வினைத்தொகை. அன்றுதல்— மாறுபடுதல். இது * "அன்றினர் புரமெரித்தார்" என்ற பெரிய புராணத்தானு மறிக.

அவ்வாறாயின், முதல்வனுக்கு வடிவம் அருவமாயின், அத்துவாக்களிலொருவனுய் முடியுமென்றல் எவ்வாறு என்பார்க்கு விடை வருஞ் செய்யுளிற் கூறப்படும். [௬௨.]

இறைவனுக்கு அருவங் கொள்ளுதலும் அருவுருவங் கொள்ளுதலும் பொருந்தாதெனக் கூறுகின்றது.

உலகினிற் பதார்த்த மெல்லா முருவமோ டருவமாகி
நிலவிடு மொன்றொன் றாகா நின்றவந் நிலையே போல
வலகிலா வறிவன் றானு மருவமே யென்னி லாய்ந்து
குலவிய பதார்த்தத் தொன்றாய்க் கூடுவன் குறித்திடாயே.

[கோ - டு.] உலகினிற் பதார்த்தமெல்லாம் உருவமோடுஅருவமாகி நிலவிடும். ஒன்று ஒன்று ஆகா. அலகு இலா அறிவன் அருவமே என்னின், நின்றதானும் அந்நிலையே போல குலவிய பதார்த்தத்து ஒன்றாய்க் கூடுவன். ஆய்ந்து குறித்திடாயே.

(பொ - ரை.) உலகத்திற் காணப்பட்ட பொருள்கள் எல்லாம் உருவமும், அருவமும், அருவுருவமுமாய்க் காணப்படும். அவற்றுள், ஆகாயம் முதலிய அருவப்பொருள் உருவத்தினியல்புடையதாகாது. சந்திரன் முதலிய அருவுருவப்பொருள் அருவுமாகாது, உருவுமாகாது. நிலம் முதலிய வுருவப் பொருள் அருவத்தினியல்புடைய தாகாது. இங்ஙனம் ஆறத்துவாவுட்பட்ட பொருள்களெல்லாம் ஒன்று பிறிதொன்றி னியல்புடையதாக மாட்டாது. ஆகலான், அநாதி முத்த சித்துருவாகிய முதல்வன் அருவப் பொருளே எனின், நிலைபெற்ற அவனும் அப்பொருள் போல் பிறிதொன்றினியல்புடையனாக மாட்டாமையை உடையனெனப் பட்டு, பொருந்திய அவற்றுள் ஒருவனுய் முடியும். ஆகலான், நீ இதனை ஆராய்ந்தறிவாயாக. (எ - று.)

சந்திரனுக்கு ஒருகலை என்றுமிருக்கவும், அமாவாசையில் அறியமுடியாமையின் அருவம்; மற்றைக் கலைகள் அறியப்படுதலின் உருவம்; ஆதலின் சந்திரன் அருவுருவமாம். "சந்திரன் பகுதி" சூ. 4-12.

* பூசலார் நாயனார் புராணம், செ. க

உருவமோடருவம் என்பதனை இரட்டுற மொழிந்து, உருவம்' அருவம், அருவுருவம் என உரைத்துக் கொள்க. ஒன்றினியல்பு ஒன்றுடைத்தாகாது எனக் கூறவேண்டி ஒன்றென்றாகா என உபசரித்தார். இவ்வாறு கொள்ளாது ஒன்று ஒன்றாகா எனவே பொருள் கொள்ளின், சூக்குமம் தூலமாகும் என்னும் சற்காரிய வாதத்தோடு முரணுமாறு காண்க. "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி" என்பது முதலிய திருவாக்குக்களால் இறைவன் எல்லாமாதல் கூடுமாதலின் பிறிதொன்ற னியல்புடையனாகா னென்றல் பொருந்தாது. இச்செய்யுளில், நின்மலன் அருவே யென்பார் மதம் மறுக்கப்பட்டது. இதனானே, அருவுருவமென்பார் மதமும் மறுக்கப்பட்டவாறாயிற்று. இறைவனுக்கு அருவங் கூறுதலும், அருவுருவங் கூறுதலும் பொருந்தாதிருக்கட்டும். சத்தியே வடிவமாயின், சத்திக்குப் பரிணாமம் உண்டெனப்பட்டு, அநித்தமுமாய் விடுமே எனக் கூறிய குற்றத்திற்குப் பரிகாரங் கூறவில்லையே யெனின், அதற்குப் பரிகாரம் வருஞ் செய்யுளிற் பெறப்படும். [சஉ.]

இறைவனுக்கு உருவங் கொள்ளுதலால் மாறுதலையடைந்து அழிவெய்துதலாகிய குற்றமின்றெனக் கூறுகின்றது.

**பந்தமும் வீடு மாய பதபதார்த் தங்க ளல்லா**
**னந்தமு மாதி யில்லா னளப்பில னாத லாலே**
**யெந்தைதா னின்ன னென்று மின்னதா மின்னதாகி**
**வந்திடா னென்றுஞ் சொல்ல வழக்கொடு மாற்ற மின்றே.**

[**கோ - டு.**] எந்தைதான் பந்தமும் வீடும் ஆய பதபதார்த்தங்கள் அல்லான். ஆதி அந்தமும் இல்லான். அளப்பிலன் ஆதலாலே, இன்னன் என்றும் இன்னது ஆம் இன்னது ஆகி வந்திடான் என்றும் சொல்ல வழக்கொடு மாற்றம் இன்றே.

(**போ - ரை.**) அநாதி முத்த சித்துருவாகிய இறைவன் கட்டு வீடென்னும் பதங்களையுடைய பசு பாச பதார்த்தங்களது இயல்புடையனல்லனாகலானும், ஆதியும் அந்தமும் இலனாகலானும், அவை இலனாகவே அளவைகட் கெட்டாதவனாகலானும் அருவம், உருவம், அருவுருவம் என்னும் முக்கூற்றுள் இன்னனென்றாவது, அம்முக்கூறும்படும் விருத்தி, பரிணாமம், விவர்த்தனம் என்பவற்றுள் ஒன்றிற்படுவன் படானென்றாவது கூறுதற்கு ஓர் ஆசங்கையுமில்லை. ஆசங்கையின்மையின் அதற்கு மறுமொழியாகிய பரிகாரமும் இல்லை. (எ - று,)

அருவமெல்லாம் உருவமாய்த் தோன்றுதலும், உருவமெல்லாம் அருவமாய் அழிதலும் துணிபு. இது, வித்தின்கண் மரம் அருவமாயிருந்து பின் உருவமாய்த் தோன்றுதலும், அங்ஙனந் தோன்றிய உருவம் பின்னர் அருவமாய் அழிதலும் ஆகிய இவற்றானறியப்படும். அங்ஙனந் தோன்றுதலும் அழிதலுமுடைமைபற்றி அருவமும், உருவமும் ஆகிய அவை அளவைகளான் அளக்கப்படுவனவுமாகும். அநாதி முத்த சித்துருவாகிய முதல்வனுக்குத் தோற்றக் கேடுகளின்மையானும், அவையின்மையின் அளவைகளான் அளக்கப்படாமையானும், அவன், விருத்தி, பரிணமம், விவர்த்தனம் என்னும் முக்கூற்றில் ஒரு கூற்றினும் வைத்து மொழியப்படான் என்று கூறவேண்டி "அந்தமு மாதியில்லா னளப்பில னாதலாலே எந்தைதா னின்னனென்று சொல்ல வழக்கொடு மாற்றமின்றே" எனவும், பந்தமும், வீடும் இலனாகலின், எவ்வாறுமாமென்று கூறவேண்டி "பந்தமும் வீடுமாய பதபதார்த்தங்க ளல்லான் இன்னதா மின்னதாகி வந்திடானென்றுஞ் சொல்ல வழக்கொடு மாற்றமின்றே" எனவும் கூறினார். விருத்தி, பரிணமம் மேற்கூறப்பட்டிருக்கின்றன. விவர்த்தனம்—ஒன்று பிறிதொன்றாய்த் தோன்றல்; அதாவது, கட்டை கள்வனாய்த்தோன்றல் போல்வன.

இச்செய்யுளை, அந்தமும் ஆதியில்லா னளப்பிலனாதலாலே எந்தைதானின்னனென்றும் எனவும், பந்தமும் வீடுமாய பதபதார்த்தங்களல்லான் இன்னதாமின்னதாகி வந்திடானென்றும் எனவும், எதிர் நிரனிறைப் பொருள்கோளாகக்கொண்டு, சொல்ல வழக்கொடு மாற்றமின்றே என்றதனை ஈரிடத்தும் கூட்டி உரைத்துக்கொள்க.

இன்னதாமின்னதாகி வந்திடான் என்னும் இக்கருத்துப்பற்றியே, * "எந்தையா ரவரெவ்வகையார் கொலோ" என்றருளிச் செய்தனர் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளும். பதபதார்த்தம் என்றது, குழைக்காதுபோல பதத்தையுடைய பதார்த்தம் என்று பொருள்பட நின்ற இரண்டாம் வேற்றுமைத்தொகை. பதம்—அவ்வவ்வியல்பு. பசு பாச மிரண்டும் கட்டு வீடென்னும் இயல்புடையன. அஃதாவது, பாசம் உயிரைக்கட்டுதலும் நீங்குதலுமுடையது. உயிர் பாசத்தோடு கட்டுற்று நிற்றலும் விட்டுநிற்றலு முடையது. இறைவன் ஒன்றைப்பற்றி நிற்றலும் விட்டு நிற்றலும் இல்லை; ஆதலான், பந்தமும் வீடுமாய பதபதார்த்தங்களல்லான் என்றார். அந்தமும் ஆதியில்லான் என்றவிடத்து ஆதியும் என்னும் பொருள்பட உம்மை தொக்கு நின்றது.

---

* திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம், திருப்பாசுரம், செ. ௩.

அவ்வாறாயின், உருவமுடையாரெல்லாம் வேற்றுமைப்படுதலும், ஏகதேசமாதலும், கட்டுப்படுதலும் உடையராதல் காணப்பட்டமையின், முதல்வனுக்கு உருவமுண்டாயின் அம்மூன்றுமுளவெனப்பட்டுக் குற்றமாமே என்னும் ஆசங்கையை நீக்குதற்கெழுந்தது வருஞ்செய்யுள். [சச.]

இறைவன் உயிர்கள் மாட்டு வைத்த அருளினால் தான் நினைந்த வடிவங் கொள்ளுதலால் கன்மத்தால் உருவங் கொள்வார்க்குப்போலக் குற்றமின்றெனக் கூறுகின்றது.

௬௪

குறித்ததொன் றாக மாட்டாக் குறைவில னாத லானு
நெறிப்பட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமை யானும்
வெறுப்பொடு விருப்புத் தன்பான் மேவுத லிலாமை யானு
நிறுத்திடு நினைந்த மேனி நின்மல னருளி னாலே.

[கொ - டு.] நின்மலன் அருளினாலே நினைந்த மேனி நிறுத்திடும்.

(பொ - ரை.) இறைவன் விகாரப்படுதற்குக் காரணமாகிய நினைந்ததொரு வடிவத்தை எடுத்துக் கொள்ளமாட்டாத பரதந்திரமிலனாதலானும், முறைமைப்பட ஏகதேசமாதற்குக் காரணமாகிய சிற்றுணர்வு சிறுசெயல்களின்றிய நிறைந்த தொழிலுடைய ஞானநிலைமையனாதலானும், துடக்குறுதற்குக் காரணமாகிய விருப்பு வெறுப்புக்கள் தன் மாட்டுப் பொருந்துதல் இல்லாதவனாகலானும், அவ்வுபாதிகள் இலனாகவே, அக்குற்றங்களுக்குத் தூரனாய், அநாதி முத்த சித்துருவாகிய முதல்வன், மலநீங்கிய உயிர்களின் அறிவிலே தங்கிநின்று உணர்த்தும் அருளுடையனாய் நிற்றலின், தான் நினைந்ததொரு திருமேனியைத் தனதாகக் கொண்டருளுவன். (எ - று.)

குறித்ததொன்றாகமாட்டாக் குறைவே பரதந்திரமாகலான், அதற்குப் பரதந்திரம் என உரை செய்யப்பட்டது. பரதந்திரம்—பிறர் வயப்படுதல்.

அவ்வாறாயின், விகாரப்படுதல் முதலிய குற்றங்கள் இல்லாதவனாகிய முதல்வன் உருவங்கொள்ளாமலே எத்தொழிலுஞ் செய்யக்கூடுமாதலின், உருவங் கொள்ளுதலால் உண்டாம் பயனென்னையெனின், அப்பயனுணர்த்துதற்கன்றே எழுந்தது வருஞ்செய்யுள். [சரு.]

இறைவன் உருவங் கொள்ளுதலாற் போந்தபயன் கூறுகின்றது.

*ஆரண மாக மங்க ளருளினு லுருவு கொண்டு*
*காரண னருளா ஞகிற் கதிப்பவ ரில்லை யாகு*
*நாரணன் முதலா யுள்ள சுரர்நரர் நாகர்க் கெல்லாஞ்*
*சீரணி குருசந் தானச் செய்தியுஞ் சென்றி டாவே.*

[**கோ - டு.**] காரணன் அருளினுல் உருவுகொண்டு ஆரணம் ஆகமங்கள் அருளானுகில் கதிப்பவர் இல்லையாகும்.

(**போ - ரை.**) உயிர்க்குத் தன்னுடம்பைத் தொழிற்படுத்துதற்கு வேறொரு வடிவம் வேண்டாதவாறுபோல, அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வனுக்குத் தன் வடிவமாகிய உலகத்தைத் தொழிற்படுத்துதற்பொருட்டு வேறொரு வடிவம் வேண்டப்படுவதன்று. ஆயினும், அம்முதல்வன் கருணையினுல் திருவுருக்கொண்டு வேதாகமங்களை முறைப்பட அருளிச்செய்யவில்லையாயின், நேராகவும் பிறிதொரு வடிவத்தில் மறைந்து நின்றும் அறிவித்தால் அறியுந் தன்மையுடைய பிரளயாகலர், சகலர் என்னும் உயிர் வர்க்கங்கள் பொருளியல் புணர்ந்து வீடுபேறடைதல் இல்லையாகும். அதுவன்றி, திருமால் முதலிய தேவர்க்கும் மானுடர்க்கும் நரகர் முதலியோர்க்கும் மிக்க சிறப்புடைய குருபரம்பரையின் வைத்து அருளுதலும் செல்லாவாம். ஆதலின், திருமேனி உறுதியாக வேண்டப்படும். (எ - று.)

இச்செய்யுளால் பிரளயாகலர்க்கு மான், மழு, சதுர்ப்புஜம் முதலிய தடத்தத் திருமேனிகொண்டு முன்னின்றுணர்த்தலும், சகலர்க்கு அவர் வடிவம்போலும் வடிவில் மறைந்து நின்று உணர்த்த வேண்டுதலால் அங்ஙன முணர்த்து முறையில் நூல் இன்றியமையாது வேண்டப்படுமாதலால் அந்நூல் செய்தலும் ஆகிய இவற்றிற்கும், குருபரம்பரை வருதற்குந் திருமேனி உறுதியாக வேண்டப்படும் என உணர்த்தியவாறும். கதிப்பவர்—கதியடைபவர். விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்று ஆன்ம வர்க்கம் மூன்று வகைப்படும். அவை, முன்னர் எட்டாஞ் சூத்திரத்திற் கூறுகின்றார். சுசு.]

இறைவனுக்குத் தனு உண்டாகவே வாக்கு மனாதீதனென்றல் பொருந்தாது என்பாரை மறுத்து, ஆன்மாக்கள் மலத்தினால் கொள்ளும் நியதியான உருவை நூல்வழியாகக் கண்டு வாக்காற் சொல்லவும், மனத்தாற் சிந்திக்கவும் கூடுதல்போல இறைவன் அருளாற் கொள்ளும் நினைந்ததொரு திருமேனிக்குக் கூடாதாகலின், சிந்திதனாயினும் வாக்குமனாதீதனென்றல் பொருந்தும் எனக் கூறுகின்றது.

௬௬

உருவருள் குணங்க ளோடு முணர்வரு ளுருவிற் றோன்றுங்
கருமமு மருளரன்றன் கரசர ணாதி சாங்கந்
தருமரு ளுபாங்க மெல்லாந் தானரு டனக்கொன் றின்றி
யருளுரு வுயிருக் கென்றே யாக்கினா னசிந்த னன்றே.

[கொ - டு.] அரன்றன் உரு அருள். தரும் கரசரணாதி சாங்கம் அருள். உணர்வு அருள். உருவில் தோன்றும் கருமமோடும் குணங்களும் அருள். உபாங்கம் எல்லாம் தான் அருள். அருளுரு உயிருக்கென்றே தனக்கு ஒன்று இன்றி ஆக்கினன் அசிந்தன் அன்றே.

(பொ - ரை.) அரன்றன் திருவடிவம் அருளாதலின் தரப்பட்ட திருக்கை திருவடி முதலிய பிரத்தியங்கங்களும் அருள் வடிவேயாம். உயிர்கட்கு அறிவைக் கொடுப்பதாகிய அத்திருவுருவிற் றோன்றுகின்ற தொழில்களும், வாய்மை முதலியகுணங்களும் ஆகிய சாங்கங்களும் அருள்வடிவேயாம். உபாங்கமாகிய புவனபோகங்களும் அருள்வடிவேயாம். இவ்வருளாகிய வடிவெல்லாம் உயிர்களின் பொருட்டன்றிச் சிறிதுந் தன் பொருட்டுக் கொள்வோனல்லனாதலின் இவ்வடிவம்பற்றிச் சிந்திதனாயினும் அசிந்திதனே. (எ - று.)

உணர்வருளுரு என்றவிடத்து அருளுரு என்றது அருளும் உரு எனப் பொருள்தந்து நிற்றலின், எதிர்கால வினைத்தொகை. ஈற்றடியிலுள்ள அருளுரு என்றது அருளாகிய உரு எனப் பொருள்தந்து நிற்றலின் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. வாய்மை முதலிய குணங்கள் சூலம் முதலிய ஆயுதமாகலின், அவை சாங்கமாகிய காரணம் எனப்பட்டன. கரசரணாதி சாங்கம் தருமருள் என்பது, உருவருள் என்றதன் பின்னாக வைக்கவேண்டியதாயினும் செய்யுளாகலின் முறை பிறழ வைத்தார். கரசரணாதி என்றவிடத்து ஆதி என்றதனால், வினை அங்கமும், பிரத்தியங்கத்

துள் காசரணம் நீங்கிய ஏனையவுங் கொள்ளப்படும். காசரணுதி பிரத்தி யங்கமாதலின், அவற்றைச் சாங்கம் என்றது உபசாரம். அசிந்தன் என்பது சிந்தனைக்கெட்டாத இறைவனைக் குறித்தலின் அன்மொழித்தொகை. அசிந்தனன்றே என்பதில் அன்றே என்பது அசை.

அங்கம்—சிரசு, முகம், இருதயம் என்னும் மூன்றுமாம்.

பிரத்தியங்கம்—நேத்திரம், நாசி, கண்டம், மார்பு, தோள், நாபி, கை, கால், விரல் முதலிய உறுப்புக்களாம்.

சாங்கம்—அங்கத்துடன் கூடியது. அதாவது, சூலம் முதலிய பத்து. அவற்றுள், சூலம் - ஆரணி, செனனி, ரோதயத்திரி ஆகிய முத்தொழிற்குரிய மூன்று சத்திகளையும், பரசு - சத்தியத்தையும், வாள் - பிரதாபத்தையும், வச்சிரம் - தன்னையாவது தன் செயலையாவது பிறராற் பேதிக்கப்படாமையையும், அபய முத்திரை - அனுக்கிரகத்தையும், நாகம்- சுத்தமாயையையும், பாசம் - அதோமாயையையும், அங்குசம் - விரிவையும், கண்டை - சத்தநாதத்தையும், அக்கினி - பாசசங்காரத்தையுங் குறிக்கும்

உபாங்கம்—அங்கத்தின் சார்பிலிருப்பது. அதாவது, வஸ்திரம், மாலை, ஆபரணம், ஆசனம் முதலியன. அவை, இவ்விடத்து புவன போகங்களைக் குறித்து நின்றன.

நண்ணிடுமுருவம் என்பது முதல் இவ்வொன்பது செய்யுளானும் முதல்வனுக்கு உருவத்திருமேனி யுண்டென்பதுபற்றிப் பிறர் கூறுங் குற்றங்களைப் பரிகரித்து அது வலியுறுத்தப்பட்டது. [௬௭.]

இறைவன் உருவத்திருமேனி யுடையனாயினும், அசிந்திதன் என்பதனைச் சுருதி வாக்கியங்களால் வலியுறுத்துகின்றது.

உலகினை யிறந்து நின்ற தரனுரு வென்ப தோரா
ருலகவ னுருவிற் றோன்றி யொடுங்கிடு மென்று மோரா
ருலகினுக் குயிரு மாகி யுலகுமாய் நின்ற தோரா
ருலகினி லொருவ னென்ப ருருவினை யுணரா ரெல்லாம்.

[கோ - 6.] அரன் உரு உலகினையிறந்து நின்றது என்பது ஓரார். அவன் உருவில் உலகு தோன்றி ஒடுங்கிடும் என்றும் ஓரார். உலகினுக்கு உயிருமாகி (நின்றதும்) ஓரார். உலகும் ஆய் நின்றது ஓரார். உருவினை யுணரார் எல்லாம் உலகினில் ஒருவன் என்பர்.

(போ - ரை.) இறைவன் வடிவமுடையனுயினும், வாக்கு மனுதீதன் என்பதற்கு உருத்திரன் வடிவம் உலகினைக் கடந்து நிற்றலால், வேதத்துள் உருத்திரன் உலகாதீதனென்று கூறுஞ் சுருதியினையும் உணரார். அவ்விறைவன் திருவுருவில் உலகந் தோன்றி ஒடுங்குமாதலால், உலக காரணனென்று கூறுஞ் சுருதியினையும் உணரார். உலகிற்கு உயிராய் நிற்றலால் உலகத்திற்கு அந்தரியாமி யென்றுகூறுஞ் சுருதியினையும் உணரார். உலகமாய் நிற்றலால் உலகரூபி என்று கூறுஞ் சுருதியினையும் உணரார். இங்ஙனங் கூறுஞ் சுருதிகள் சான்ருகவும் திருமேனியின் இயல் புணராதவர்கள் அச்சிவபிரானை உலகத்திலுள்ளார் கூறுங் கடவுளரில் ஒருவன் என்பர். (எ - று.)

மாயையிற்ருேன்றி யொடுங்கு முலகம், அம்மாயைக்கு ஆதாரமாய் நின்ற முதல்வனுருவிற் ருேன்றி யொடுங்கும் என்ருர். இது, கிழங்கி னின்றும் தோன்றிய தாமரையை அக்கிழங்கிற் காதாரமாய் நின்ற சேற்றி னின்றும் தோன்றியதெனப் பொருள்படும்படி பங்கயம் என்று கூறுவதனுலும் அறியப்படும். பங்கஜம் என்பது பங்கயம் என மருவிற்று. பங்கம்— சேறு. ஜம்—தோன்றுதல்.

இவ்வுண்மை யறியாது உலகவனுருவிற் ருேன்றி ஒடுங்கிடும் என்றது கொண்டு முதல்வன் உலகிற்கு முதற்காரணமென மயங்கிக் கூறுவர். இதுபற்றிய சங்கை உத்தரங்கள் சிவஞானபோதச் சிற்றுரை விளக்கத்தில் விரித்துக் காட்டினும். அவற்றை அவ்விடத்துக் காண்க, [சஅ.]

சுருதி வாக்கியங்களை வலியுறுத்தும் புராண சரித்திரங்கள் கூறி அசிந்திதனென்பதனை வலியுறுத்துகின்றது.

தேவரி ளொருவ னென்பர் திருவுருச் சிவனைத் தேவர்
மூவராய் நின்ற தோரார் முதலுருப் பாதி மாத
ராவது முணரா ராதி யரியயற் கறிய வொண்ணு
மேவுரு நிலையு மோரா ரவனுரு விளைவு மோரார்.

[கோ-டு] அரி அயற்கு அறிய வொண்ணு ஆதிமேவு உரு நிலையும் ஓரார். தேவர் மூவர் ஆய் திருவுரு நின்றது ஓரார். அவன் உரு விளைவு ஓரார். முதல் உருப் பாதி மாதராவதும் உணரார். சிவனைத்தேவரின் ஒருவன் என்பர்.

**(போ-ரை.)** மேற்கூறிய நான்கு சுருதிகளையும் முறையே உறுதிப்படுத்துவனவாய் உலகாதீதனென்பதற்கு அரியும் அயனும் அடிமுடி தேடி அறியாவண்ணம் உயர்ந்த முதல்வன் திருவுருவின் நிலைகூறும் புராண வசனத்தினையும் உணரார். உலககாரணனென்பதற்கு மும்மூர்த்திகளுந் தன்னுறுப்பிற் றோன்றி நின்ற திருவுருவின் இயல்பு கூறும் புராண வசனத்தினையும் உணரார். உலகத்திற் கந்தரியாமி யென்பதற்கு அவ்விறைவன் வடிவிலே விளைந்த வண்ணமே உலகிற்கு விளைவு கூறும் புராண வசனத்தினையும் உணரார். உலக ரூபியென்பதற்குப் பாதி உரு உமையோடு கூடிய அர்த்தநாரீசுவர வடிவு கூறும் புராண வசனத்தினையும் உணரார். இங்ஙனங் கூறும் புராண வசனங்கள் சான்றாகவும் இவ்வுண்மை யறியாதவர் அச் சிவபிரானை ஏனைக் கடவுளரின் ஒருவன் என்பர். (எ - று.)

வடிவத்திற் பாதி சத்திபாகமாயிருப்பது சிவபிரான் ஒருவனுக்கேயன்றி ஏனைய கடவுளருக்கில்லை. உண்டென்பதற்குப் பிரமாணமுமில்லை.

உருவத் திருமேனிகளின் தொழில்களின் பயனிவை எனக் கூறி அசிந்திதனென்பதனை வலியுறுத்துகின்றது.

**போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரித லோரார்**
**யோகியா யோக முத்தி யுதவுத லதுவு மோரார்**
**வேகியா னற்போற் செய்த வினையினை வீட்ட லோரா**
**ரூகியா மூட ரெல்லா மும்பரி னொருவ னென்பர்.**

**(கோ - ௫.)** வேகி ஆனைற்போல் செய்த வினையினை வீட்டல் ஓரார். யோகியாய் யோகமுத்தி யுதவுதலதுவு மோரார்.

**(போ - ரை.)** முதல்வன் கொண்ட திருமேனிகள் போக வடிவம், கோரவடிவம், யோக வடிவம் என முத்திறப்படும். அவற்றுள், போக வடிவம் உயிர்கட்குப் போகம் புரிதற்பொருட்டென்பதனையு முணரார். கோரவடிவம் உயிர்கள் செய்த வினையினைக் கெடுத்தற் பொருட்டென்பதனையு முணரார். யோக வடிவம் உயிர்கட்கு யோகமுத்தி உதவுதற் பொருட்டென்பதனையு முணரார். இவ்வாறு திருமேனி கொள்ளும் முறைமையை ஆராய்ந்

தறியும் வலியில்லாரனைவரும் அம்முதல்வனைத் தேவரின் ஒருவன் என்பர். (எ - று.) (௭௦)

அங்ஙனம் மாறுபட்ட திருமேனி கொள்ளுதல் உயிர்களின் பொருட்டு ஆதலால் அசிந்திதனே என வலியுறுத்துகின்றது.

70

**ஒன்றொடொன் றொவ்வாவேட மொருவனே தரித்துக்கொண்டு**
**நின்றலா னுலக நீங்கி நின்றன னென்று மோரா**
**ரன்றியவ் வேட மெல்லா மருள்புரி தொழிலென்றோரார்**
**கொன்றது வினையைக் கொன்று நின்றவக் குணமென்றோரார்**

[**கோ - டு.**] ஒன்றொடு ஒன்று ஒவ்வா வேடம் ஒருவனே தரித்துக் கொண்டு நின்றலால் அன்றி[ய] அவ்வேட மெல்லாம் அருள்புரி தொழில் என்று ஓரார். கொன்றது வினையைக் கொன்று நின்ற அக் குணம் என்று ஓரார். உலகம் நீங்கி நின்றனன் என்றும் ஓரார்.

(**பொ - ரை.**) அவ்வாறு போக வடிவும், கோரவடிவும், யோக வடிவுமாய்த் தம்முள் மாறுபட்ட பல வடிவம் ஒருவனே தரித்துக்கொண்டு நிற்றலால், மாறுபட்ட அப்பல வடிவங்களும் மேற்கூறியவாறு போகமும், வீடும், யோகமும் உதவுவதாகிய அநுக்கிரகம் ஒன்றற்கே ஏதுவாகுமென்பதையு முணரார். கொல்லுதலாகிய தீமை செய்வது வினையைக் கெடுத்து நன்மை பயத்தலாகிய நிலைபெற்ற குணமென்பதனையு முணரார். இங்ஙனம் உலகத்தில் வைத்து அறியப் படாத அதிசய நிலையன் என்பதனையு முணரார். ஆதலின், இவ்வதிசய நிலையும் அசிந்தித னென்பதற்குச் சான்று. (எ - று.)

மேல் சஅ-வது செய்யுளில் "உலகினை யிறந்துநின்ற தானுரு" எனக் கூறியதனை, இச் செய்யுளில் தம்முண் மாறுபட்ட பல வடிவம் ஒருவனே தரித்துக் கொண்டு நிற்றலால் என ஏதுக்காட்டி இனிது விளக்கியவாறுமாயிற்று. நிற்றல் என்றிருக்க வேண்டியது நின்றல்என மெலித்தல் விகாரமாயிற்று. அன்றியவ் வேடம என்றவிடத்து, அன்றிய அவ்வேடம் என்னும் பொருள்படப் பெயரெச்ச அகரவீறு தொக்கு நின்றது. அவ்வெச்சம் அவ்வேடம் என்னும் சுட்டுப் பெயர்கொண்டு முடிந்தது.

இவ்விரண்டு செய்யுளானும் அசிந்திதன் என்பதற்கு ஏதுக்காட்டியவாறு. மாறுபட்ட வடிவந் தரித்தல் ஏது. மாறுபட்ட தொழில்களை

ஒருவன் மேற்கொள்ளுதல் கூடும். மாறுபட்ட வடிவத்தைக் கொள்ளுதல் கூடாது. அங்ஙனங் கொள்ளுதலால் அசிந்திதன் ஆவன். [௫௧.]

இறைவன் திருமேனிகளும் அவற்றின் றொழில்களும் உயிர்களின் பொருட்டே என்பதை அநுபவத்தில் வைத்துக் காட்டி அசிந்தித னென்பதை வலியுறுத்துகின்றது.

நாயகன் கண்ண யப்பா லாயகி புதைப்ப வெங்கும்
பாயிரு ளாகி மூடப் பரிந்துல கினுக்கு நெற்றித்
தூயநேத் திரத்தினாலே சுடரொளி கொடுத்த பண்பிற்
றேயமா ரொளிக ளெல்லாஞ் சிவனுருத் தேச தென்னுர்.

[கொ - ௫.] நாயகி நயப்பால் நாயகன் கண்புதைப்ப, எங்கும் பாயிருள் ஆகி மூட, பரிந்து உலகினிற்கு தூய நெற்றி நேத்திரத்தினாலே சுடர் ஒளி கொடுத்த பண்பின், தேயம் ஆர் ஒளிகளெல்லாம் சிவன் உருத்தேசது என்னுர்.

(பொ - ரை.) முதல்வி திருவுள மகிழ்ச்சியால் முதல்வனது திருக்கண் புதைத்த திருவிளையாட்டின்கண் எவ்விடத்தும் பரவிய இருளாகி மூடவும், கிருபையினால் உலகத்தினுள்ளார்க்குப் பரிசுத்தமாகிய நெற்றிக் கண்ணால் மிகுந்த பிரகாசத்தினைத் தந்தருளிய தன்மையினானே, உலகின்கணுள்ள ஒளிகளெல்லாம் அச்சிவபெருமான் திருமேனிப் பிரகாசமே என்பதனை உணரார். ஆதலின், இறைவன் கொள்ளும் அவ்வேடமெல்லாம் அருளைத் தருகின்ற தொழிலென்பதற்கு இந்நிகழ்ச்சியே சான்று. (எ-று.)

நயப்பு—மகிழ்ச்சி. பாய்தல்—பரத்தல். தேயம்—உலகம். (௫௨.)

தொழிலுக்கு வேடம் உறுதியாய் வேண்டப்படுமெனக் கூறுகின்றது.

கண்ணுதல் யோகி ருப்பக் காமனின் றிடவேட் கைக்கு
விண்ணுறு தேவராதி மெலிந்தமை யோரார் மாறு
னெண்ணிவேண் மதனை யேவ வெரிவிழித் திமவான் பெற்ற
பெண்ணினைப் புணர்ந்து யிர்க்குப் பேரின்ப மளித்த தோரார்

[கோ - ௫.] கண்ணுதல் யோகு இருப்ப வேட்கைக்குக் காமன் நின்றிட.

(போ - ரை.) நெற்றிக் கண்ணுடைய சிவபெருமான் யோகநிலையிலிருந்த விடத்துக் காமத்திற்குக் காரணனாகிய மன் மதனிருக்கவும், மேலிடத்திலுள்ள தேவர்கள் முதலியோர் காம வேட்கையின்றி மெலிவுற்றதும் அறியார். விட்டுணு அம்மெலிவு கெடும்படி கருதி, இறைவனிடத்து மன்மதனை ஏவுதல் செய்ய அம்மன்மதனை நெற்றிக் கண்ணை விழித் தெரித்து இமயமலை அரையன் பெற்ற உமாதேவியை மணந்து அவ்வுயிர்கட்குப் பே ரின்பத்தினை அருளிச் செய்ததது முணரார். ஆகலின், பலவேறு வகைப்பட்ட அருள்புரி தொழிலும் அவ்வேடத்தை இன்றி யமையாமைக்கு இந்நிகழ்ச்சியே சான்று. (எ - று.)

மேல் ௬௮-வது செய்யுளில் உலகினுக்குயிருமாகி நிற்பன் என்றதை சிவபெருமான் யோகத்திருக்கும் பொழுது மன்மதனிருக்கவும் தேவர் முதலியோர் மெலிந்ததிருவிளையாடலாலும், மன்மதனை எரித்து உமாதேவி யாரை மணந்து உயிர்கட்குப் பேரின்ப மளித்த திருவிளையாடலாலும் இனிது விளக்கியவாறும். அஃதாவது, இறைவன் உயிர்க்குயிராய் நிற்றலை அவன் தொழிற்படாதிருக்கும் பொழுது உயிர்கள் தொழிற்படாமை யினும், அவன் தொழிற்படும் பொழுது உயிர்கள் தொழிற்படுதலினும் வைத்து விளக்கிய வாறும்.

மேல் ௫௩-வது செய்யுளில், ஒன்றொடொன்றொவ்வா வேடம் ஒரு வனே தரித்துக் கொண்டு எனக் கூறி, யோக வடிவம், கோரவடிவம், போக வடிவம் ஒருவனே தரித்துக் கொண்டான் எனக்கூறிய இச்செய்யுளால் அதனை விளக்கியவாறு காண்க. இவையிரண்டு செய்யுளும், அசிந்திதன் என்பதனைக் காட்சியளவையின் வைத்து வலியுறுத்திய வாறும். சீகண்ட ருத்திரர்க்குரிய வடிவங்களும், தொழில்களும், பெயர்களும் முதல்வனுக் கும் ஒப்ப உளவென்பது வாயு சங்கிதையுட் கூறப்படுதலின், இவ்விடத் துக் கூறியனவெல்லாம் மகாருத்திரனாகிய முதல்வனுக் குரியனவேயாமெ னக் கொள்க. ஆகலின்றன், இவ்விடத்துக் கூறிய வடிவங்களெல்லாம் மகேசுவர மூர்த்தம் இருபத்தைந்தனுள் வைத்தெண்ணப்பட்டன. [௫௯.]

இறைவன் உருவத்திருமேனி கொள்ளாமலே இத்தொழி லனைத்தும் செய்யக்கூடாதோ வென்னும் ஐயத்தை நீக்கி இறை

வனுக்கு உருவத் திருமேனி இன்றியமையாது வேண்டப்படு மென்று கூறுகின்றது.

**படைப்பாதித் தொழிலும் பத்தர்க் கருளும்பா வனையு நூலு**
**மிடப்பாக மாத ராளோ டியைந்துயிர்க் கின்ப மென்று**
**மடைப்பானு மதுவு முத்தி யளித்திடும்; யோகும் பாசந்**
**துடைப்பானுந்தொழிலுமேனிதொடக்கானேற்சொல்லொணுதே**

[கோ - ௫] படைப்பு ஆதித்தொழிலும், பத்தர்க்கு அருளும் பாவனையும், உயிர்க்கு என்றும் இன்பம் அடைப்பானும் அதுவும், நூலும் மாதராளோடு இடப்பாகம் இயைந்து முத்தி அளித்திடும் யோகும், பாசம் துடைப்பானும் தொழிலும், மேனி தொடக்கானேல் சொல்ல வொணுதே.

(போ - ரை.) "ஆரணமாகமங்கள்" என்னுஞ் செய்யுளிற் கூறிப் போந்தபடி உபதேச மாத்திரைக்கே யன்றி, படைப்பாகிய முதற்றொழிலுக்கு, வாதுளாகமத்திலோதியவாறே அசையும் பொருளும் அசையாத பொருளும் ஆகிய உலகங்கள் முதல்வனது திருமேனியில் ஒவ்வோருறுப்புக்களினின்று தோன்றுமாறு செய்யவேண்டுமாதலானும், பக்தர்களுக்கு இருவினை ஒப்பு வந்தவிடத்து அநுக்கிரகத்தின் பொருட்டுச் செய்யும் பாவனையாகிய மறைத்தற்றொழிற்கு நடனமியற்ற வேண்டுமாதலானும், உயிர்களுக்கு எக்காலத்தும் இன்பத்தைச் செய்வதாகிய திரிக்கு வேதாகமங்களை அருளிச் செய்யும் அருளாகிய உமாதேவியாரோடு இடப்பாகத்தே பொருந்த வேண்டுமாதலானும், முத்தியளிப்பதாகிய அநுக்கிரகத்திற்கு நிட்டையிருந்து காட்டவேண்டுமாதலானும், பாசநீக்கும் சங்காரத் தொழிற்குத் தோன்றின முறையே அவ்வவ் வுறுப்புக்களின் ஒடுக்க வேண்டுமாதலானும், இவற்றிற்கும் அவ்வுருவத்திருமேனி முதல்வனுக்கு இன்றியமையாது வேண்டப்படும். (எ - று.)

நடனம்—ஊன நடனம், ஞானநடனம் என்றிருவகைப்படும். அவற்றுள் சிருட்டி, திதி, சங்காரம், அநுக்கிரம் என்னும் நான்கும் அறிவித்தற்றொழிலாயிருத்தலின் ஞானநடனம் எனவும், திரோபவம் மறைத்தற்றொழிலாயிருத்தலின் ஊன நடனம் எனவும் அறிந்து கொள்க.

திதி முதலிய வினைத் தொழில்களை வெளிப்படையாகக் கூறுதலால் படைப்பாதி என்பதற்குப் படைப்பு முதலியன வென்று கொள்ளாது, படைப்பாகிய ஆதித்தொழிலென்று கொள்க. பத்தர்க் கருளும் பாவனை என்பது, பத்தர்க்கு இருவினையொப்பு வந்தவிடத்து அருளுதற் பொருட்டுச் செய்யும் பாவனை எனத் திரோதானத் தொழிலை உணர்த்திற்று. அஃதாவது, இருவினையொப்பு வருதற் பொருட்டு அவ்வினைப் பயன்களில் அழுந்தி அநுபவிக்கச் செய்தல். இவ்வாறு செய்தல் அவனுக்கு இயல்பன்று. ஆகலின், பாவனையென்றார். அவனுக் கியல்பு கருணை செய்தலே யாம். இந்த மறைப்பும் கருணைக் கேதுவாதலின், கருணை யெனப்படும்.

நூலும் என்பது, நூலைச் செய்யும் எனப் பொருள்படும்படி, நூல் என்னும் பெயரடியாகப் பிறந்த பெயரெச்ச வினையாகி, இடப்பாக மாதராளுக்கு அடையாயிற்று. உம்—பெயரெச்ச விகுதி. அவ்வெச்சம் இடப்பாகமாதராள் என்னும் பெயர்கொண்டு முடிந்தது. நூல்—வேதாகமம். அவற்றைச் செய்தற்குக் காரணம் அருள். ஆகலின், நூலைச் செய்யும் இடப்பாக மாதராள் என்றார். இவ்வாறன்றி, நூலும் என்றதை எண்ணும்மை யேற்ற சொல்லாகவே வைத்துத் தொழிலும், பாவனையும், நூலும். அதுவும், யோகும், தொழிலும் என்றெண்ணி உரைப்பினு மமையும், அவ்வாறுரைக்குங்கால் ஆரணமாகமங்களென மேல் சகூ-வது செய்யுளில் நூல் கூறப்பட்டமையின், அதனை ஈண்டுங் கூறுதல் குற்றமாகாதோவெனின், ஆகாது. எதனாலெனின்.அவ்விடத்துக் குருசந்தானத்தோடு வைத்துக் கூறப்பட்டது. பிரித்துக் கூட்டலென்னு முத்தியினால், குருசந்தானத்தினின்றும் வேறு பிரித்துத் தொழில்களாகிய இவற்றோடு கூட்டினாராதலின் என்க.

பாசந்துடைப்பானுந் தொழில் என்றது, இவ்விடத்துத் தனு முதலியவற்றை ஒடுக்குதலாகிய சங்காரத்தின் மேல் நின்றது. அது, மேல் கூக-வது செய்யுளில், "கொன்றது வினையைக் கொன்று நின்ற வக்குணம்" என்பதனாலறியப்படும். அடைப்பான் துடைப்பான் என்பன, பான். ஈற்று வினையெச்சமாய் நின்று, அடைப்பதற்கு, துடைப்பதற்கு என்னும் பொருள் கொண்டன. வினைமுற்றன்று. சிருட்டி, திதி, சங்காரம் திரோபவம், அநுக்கிரகம் என முறையே வையாது, செய்யுளாகலின், சிருட்டி, திரோபவம், திதி, அநுக்கிரகம், சங்காரம் என முறை பிறழ வைத்தார்.

இவ்வைந்தொழிற்குச் சிவனே கருத்தாவாகக் கூறுதலால், இவை யனைத்துஞ் சுத்த மாயையிற் றோன்றுங் காரியங்களை நோக்கிக் கூறிய-

தென்றுணர்ந்து கொள்க. அசுத்தமாயை பிரகிருதிமாயைகளில் அநந் தர், சீகண்டர் வாயிலாகவும், சுத்த மாயையில் தான் நேராகவும் சிவன் கருத்தாவாவர். உலகினை என்பது முதல் இவ்வேழு செய்யுளானும், சஎ-வது செய்யுளிற் கூறப்பட்ட 'அசிந்தன்'றே என்றதனை வலியுறுக் கும் வாயிலாய், அவ்வருட்டிருமேனியின் பேதங்களும், அத்திருமேனி களாலாய தொழில்களும், அத்தொழில்களாலாய பயனும், அத்திருமேனி கள் இன்றியமையாச் சிறப்பினவாமாறுந் தொகுத்துக் கூறப்பட்டன. (௫௪)

இறைவனுக்கு உருவத் திருமேனி உண்டாகவே அவ்வியைபு பற்றி அருவத் திருமேனியும் அருவுருவத் திருமேனியும் உண் டென்றும் அவையும் கருணையே யென்றும் கூறுகின்றது.

உருமேனி தரித்துக் கொண்ட தென்றலு முருவி றந்த
வருமேனி யதுவுங் கண்டோ மருவுரு வான போது
திருமேனி யுபயம் பெற்றோஞ் செப்பிய மூன்று நந்தங்
கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு காணே.

(போ - ரை.) மேற்கூறியவாறு உருவத் திருமேனி தரித் துக் கொண்டதென்ற மாத்திரையால், உருவமெனப்படுந் தூலப் பொருட் கெல்லாம் அருவமெனப்படுஞ் சூக்கும அவத்தை உண் டென்பது துணிபாதலின், அச்சற்காரிய வாதத்தின் இயல்புபற்றி உருவமொடுங்குதற்குக் காரணமாகிய அருவத் திருமேனியது உண்மையுங் கண்டாம். அவ்வருவமெனப்படும் சூக்குமப் பொ ருள் பின் உருவமெனப்படும் தூல வவத்தை யெய்தும்பொழுது அவ்விரண்டிற்கும் பொதுவாகியதொரு அவத்தையும் உண்டாம் ஆதலின், அதுபற்றி அருவுருவத் திருமேனியது உண்மையும் பெற்றாம். திருமேனி யெல்லாம் ஒரு தன்மைய வாகலின், இங் ஙனங் கூறிய மூன்று திருமேனியும் நமது பிறவிக்கேதுவாகிய மாயையின் உருவை ஒழித்தற்கு முதல்வன் கருணையினாற்கொண்ட வடிவே. (எ - று.)

மரம் எனப்படும் உருவம் வித்தின்கண் அருவமாயிருத்தலும், பின் னர் அருவத்தன்மை நீங்கி உருவமாய் வெளிப்படுதற்கிடையே உரு அரு இரண்டற்கும் பொதுவாக அங்குரமாதலும் காண்க. இதனானே, வினை

அருவம், அருவுருவம் ஆகிய இருதிருமேனிகளும் உண்டென்பதும், அவற்றியல்பும், உருவத் திருமேனியோடு உளதாகிய சம்பந்தம் பற்றிச் சாதிக்கப்பட்டன. [ருரு.]

இறைவனுக்குக் கருணையாற் கொள்ளும் நினைந்ததொரு வடிவமேயன்றி எவற்றுடனும் கலந்து உடனாய் நிற்குமேதுவால் அத்துவாக்களும் வடிவமென்று உபசரித்து உரைக்கப்படும் எனக் கூறுகின்றது.

**அத்துவா மூர்த்தியாக வறைகுவ தென்னை யென்னி**
**னித்தனாய் நிறைந்தவற்றி னீங்கிடா நிலைமை யானுஞ்**
**சித்துட னசித்திற் கெல்லாஞ் சேட்டித னாதலானும்**
**வைத்ததா மத்துவாவும் வடிவென மறைக ளெல்லாம்.**

[கோ - ரு.] மறைகள் எல்லாம் அத்துவா மூர்த்தியாக அறைகுவது என்னையென்னின், நிறைந்து அவற்றின் நீங்கிடா நிலைமையானும் நித்தனாய் சித்துடன் அசித்திற்கு எல்லாம் சேட்டிதன் ஆதலானும் அத்துவாவும் வடிவு என வைத்தது ஆம்.

**(போ - ரை.)** இவ்விடத்துக் கூறியவாற்றால் முதல்வனுக்குக் கருணையினால் கொள்ளும் வடிவமேயன்றி மாயா வடிவம் இல்லையாயின், ஆகமங்களிலெல்லாம் அத்துவாக்களாறும் முதல்வனுக்கு வடிவமென்று கூறுதலெதுபற்றியெனின், முதல்வன் அவ்வத்துவாக்கள் முழுதினும் நிறைவுற்றுக் கலந்து எல்லாமாகி நிற்றலானும், பொருட்டன்மைபற்றி அவ்வத்துவாக்கள்போல் அழியாது அல்லனாய் நிற்றலானும், சடசித்துக்களை யெல்லாம் இயக்கி உடனுமாய் நிற்றலானும், அம்மூவகை இயல்புடைய முதல்வனுக்கு, அம்முதல்வனது திரோதான சத்தியின் சம்பந்தத்தால், அத்துவாவும் வடிவமென உபசரித்துக்கூறப்படும்.

அத்துவாவும் என்னும் உம்மை உபசார வடிவம் என்பது உணர்த்தி நின்றது. [ருசு.]

இரண்டு செய்யுளால் இறைவனுக்கு அத்துவாக்களுள்ளுட மந்திர வடிவம் சிறந்ததென்பதற்கு ஏதுக் கூறப்படுகின்றது.

மந்திர மத்து வாவின் மிகுத்தொரு வடிவ மாகத்
தந்ததெ னரனுக் கென்னிற் சகத்தினுக் குபாதா னங்கள்
விந்துமோ கினிமான் மூன்று மிவற்றின்மே லாகி விந்துச்
சிந்தையா ரதீதமான சிவசத்தி சேர்ந்து நிற்கும்.
சுத்தமாம் விந்துத் தன்னிற் றோன்றிய வாத லானுஞ்
சத்திதான் பிரேரித் துப்பின் றானதிட் டித்துக் கொண்டே
யத்தினாற் புத்தி முத்தி யளித்தலா லரனுக் கென்றே
வைத்தவா மந்திரங்கள் வடிவென மறைக ளெல்லாம்.

[கொ - ு.] அரனுக்கு அத்துவாவின் மந்திரம் ஒரு வடிவமாக மிகுத்துத் தந்தது என் என்னின், சகததினுக்கு உபாதானங்கள் விந்து மோகினி மான் மூன்றும். இவற்றின் மேலாகி விந்து சிந்தை ஆர் அதீதம் ஆன சிவசத்தி சேர்ந்து நிற்கும். சுத்தம் ஆம் விந்துத் தன்னில் தோன்றிய ஆதலானும், சத்திதான் பிரேரித்துப் பின் தான் அதிட்டித்துக் கொண்டே அத்தினால் புத்தி முத்தி அளித்தலால் மறைகள் எல்லாம் அரனுக்கு மந்திரங்கள் வடிவு என வைத்த என்றே ஆம்.

(போ - ரை.) முதல்வனுக்கு அத்துவாக்களுள்ளும் மந்திர வடிவத்தை ஒப்பற்ற வடிவமாகச் சிறந்தெடுத்தோதிய தென்னையெனின், உலகிற்கு முதற் காரணங்கள் சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை என மூன்றுகும். இம்மூன்றனுள், மேலாகிய சுத்தமாயையின்கண் மனத்தால் நினைப்பதற்கு அருமையாகிய அதீதமெனப்படும் சிவசத்தி சேரப்பட்டு நிற்றலானும், சுத்தமாயையாகிய அவ்விந்துவில் மந்திரங்கள் முதலாவதாய்த் தோன்றிய தலைமையுடையன வாதலானும், அம்மந்திரங்களைச் சாதகராவார் கணிக்குமாறு அச்சிவசத்தி செலுத்திக் கணித்தபின் பயன் கொடுத்தற்பொருட்டு அம்மந்திரங்களை வாயிலாகக் கொண்டு கணித்த அதனால் போகம் வீடுபேறுகளாகிய பயன் கொடுத்தலானும், அவைபற்றி ஆகமங்களிலெல்லாம் முதல்வனுக்கு மந்திர வடிவம் விசேட உரிமையாகக் கூறியனவேயாம். (எ - று.)

சகத்தினுக் குபாதானங்கள் விந்து மோகினி மான் என்றது, மேல் கக-வது செய்யுளிற் கூறிய பொருளாயிருப்பவும், விந்துவினிடத்துச்

சிவசத்தி சேர்ந்து நிற்றலால் எனக் கூறவேண்டுவதற்காக அநுவாதமாக எடுத்துக் கொள்ளப்பட்டது. சிந்தை ஆரதீதம் என்றவிடத்து ஆரதீதம் என்பது அருமையாகிய அதீதம் என்னும் பொருள் குறித்த பண்புத் தொகை. சேர்ந்து என்பது சேரப்பட்டு என்னும் பொருள் குறித்தது. மந்திரங்கள் விந்துத் தன்னிற் றோன்றின வென்பது,மேல் ககூ-வது செய்யுளில் "விந்துத் தன்பால் வைகரியாதி மூந்திடும்" எனக் கூறியவாற்றானறிக. வாக்குக்களும் மந்திரங்களும் ஒலிவடிவாகலின், வாக்குக்கள் சுத்த மாயையின் காரியமாதல்போல, மந்திரங்களும் சுத்த மாயையின் காரிய மாதல் காண்க.

பிரேரித்தலாவது, மந்திரத்தைக் கணிக்கும் சாதகராவார் கணிக்குமாறு செலுத்துதல். அதிட்டித்தலாவது, அவ்வாறுகணித்தபின் கணிதத வர்க்குப் பயன் கொடுத்தற் பொருட்டு மந்திரங்களை வாயிலாகக் கொள்ளுதல். எனவே, மந்திரங்களைக் கணிப்பவர்க்கு அவற்றை வாயிலாகக் கொண்டு சிவசத்தி பயன்றருமென்றவாறாயிற்று. மந்திரங்களோடு ஏனைத் தேவர்கட்கும் உரிமையிருப்பினும், சிவனுக்கு விசேட உரிமையாதல்பற்றி "அரனுக்கன்றே வைத்த" என்றார். விசேட உரிமையாதல் எதுபோலுமெனின், உத்தியோக சத்திகளோடு அவ்வுத்தியோகங்களைச் செய்பவரனை வர்க்கும் உரிமையிருப்பினும், அவ்வுரிமை சுதந்திரமாயின்மையின், அவற்றோடு அரசனுக்குள்ள சுதந்திர வுரிமைபோலும் என்க. [கு ஏ,கு அ.]

இறைவனுக்கு மந்திரவடிவுள்ளும் பஞ்சப்பிரமமந்திரவடிவம் சிறந்ததென்பதற்கு ஏதுக் கூறுகின்றது.

ஏ

**மந்திர மதனிற் பஞ்ச மந்திரம் வடிவ மாகத்**
**தந்திரஞ் சொன்ன வாறிங் கென்னெனிற் சாற்றக் கேணீ**
**முந்திய தோற்றத் தாலு மந்திர மூலத் தாலு**
**மந்தமில் சத்தியாதிக் கிசைத்தலு மாகு மன்றே.**

**[கோ - டு.]** தந்திரம் மந்திரம் அதனில் பஞ்ச மந்திரம் வடிவமாக இங்கு சொன்னவாறு என் எனின், சாற்ற நீ கேள். முந்திய தோற்றத்தாலும் மந்திர மூலத்தாலும் அந்தம் இல் ஆதிசத்திக்கு இசைத்தலும் ஆகும் அன்றே.

**(போ - ரை.)** ஆகமங்களில் இறைவனுக்கு மந்திர வடிவுள்ளும் பஞ்சப் பிரம மந்திர வடிவத்தை ஒப்பற்ற வடிவமாகச் சிறந்தெடுத் தோதியதென்னையெனின், கூறுதும். நீ கேட்பா

யாக. அப்பஞ்சப் பிரம மந்திரம் ஏனைய மந்திரங்கட் கெல்லாம் முற்படத் தோன்றியதானும், மூலமாதலானும், அம்மந்திரங்களைச் செலுத்தி நிற்கும் அழிவில்லாத ஆதியாகிய திரோதான சத்திக்கு முற்படப் பொருந்துவதாகிய உபசார வடிவாதலானும் அங்ஙனம் கூறியது என்க. (எ - று.)

தந்திரம் என்பது ஆகமம். இவ்வாறு கூறிய அத்துவாமூர்த்தி, மந்திர மூர்த்தி, பஞ்சப் பிரம மூர்த்திகளெல்லாம், அத்துவா, மந்திரம், பஞ்சப் பிரமமாகிய அவற்றைச் செலுத்தி நிற்கும் திரோதான சத்திக்குப் பொருந்தச்செய்த வுபசார வடிவென்று கூறவேண்டி,இம்மூன்றனையுங் கூறிமுடித்த இச்செய்யுளினிறுதியில் "சத்தியாதிக் கிசைத்தலுமாகும்" எனக் கூறினார்.

ஆதிசத்தி என்பது சத்தி ஆதி என நின்றது. அவ்விடத்து இரு பெயரொட்டுப் பண்புருபு தொக்கு நின்று, ஆதியாகிய சத்தி என்னும் பொருள் தந்தது. ஆதி சத்தி எனினும் திரோதான சத்தி எனினும் ஒக்கும். இசைத்தலும் என்றவிடத்து உம்மை சிறப்பு.

அத்துவாமூர்த்தி என்பது முதலாக இவை நான்கு செய்யுளானும் முதல்வனுக்கு அத்துவாக்களும், மந்திரங்களும், பஞ்சப்பிரம மந்திரங்களும் உபசாரத் திருமேனி என்பது கூறப்பட்டது. அருவமோ என்னுஞ் செய்யுள் முதல் இதுவரையும் திருமேனியினியல்பு கூறும் முறையில், அத்திருமேனிக ளெல்லாம் கருணை காரணமாகவும், உபசாரமாகவும் ஆயினவாகலின், அநாதி முத்த சித்துருவாதலை விளக்கிக் காட்டியவாறு.

அவ்வாறாயின், பிரமன் முதலியோரையும் அத்துவாமூர்த்திகளாக வைத்து அவரவர் எல்லையளவும் அவரவர் வடிவில் அத்துவநியாசஞ் செய்யுமாறும் ஆகமங்களின்விதித்தலின், அயன் முதலியோருருவும் அரனுருவோடொக்குமோ என்னும் ஆசங்கைக்குச் சமாதானம் வருஞ் செய்யுளிற் பெறப்படும்.

இவ்வாறு "மண்ணினிற்கடாதி" என்பதுமுதல் மந்திரமதனில் என்பது வரை நக-செய்யுளானும், முதற் செய்யுளில் "ஈறுமாகி மருவிடுமநாதி முத்த சித்துருமன்னி நின்றோ" என்ற இரண்டாங்கூற்றை அவ்வவர் மதம்பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து வலியுறுத்தி, இனி மூன்றாங் கூற்றை அவ்வாறு வலியுறுத்தத் தொடங்குகின்றார். [௫க.]

இரண்டாம் அதிகரணம் முடிந்தது.

---

# மூன்று மதிகரணம்.

## 3. தான் முதல் என்பது.

அரனுடைய சத்தி ஒவ்வொன்றே பிரமனாதியோரிடத்து நிற்றலால் அரனே முதலெனவும், அவ்வரனுக்குப் பிரமனாதியோர் வேண்டப்படுவரெனவும் கூறுகின்றது.

௭௯

அயன்றனை யாதி யாக வரனுரு வென்ப தென்னை
பயந்திடுஞ் சத்தியாதி பதிதலாற் படைப்பு மூல
முயன்றன ரிவரே யாயின் முன்னவ னென்னை முற்று
நயந்திடு மவனி வர்க்கு நண்ணுவ தொரோ வொன்றாமே.

(கோ - டு.) இவரே முயன்றனர் எனவும், ஒரோ ஒன்று நண்ணுவது ஆமே எனவுங் கூட்டுக.

(போ - ரை.) பிரமனுடைய அழகிய உருவம் விட்டுணுவினுடைய உருவம் முதலியவற்றையும் அரனுருவோடொத்த வுருவாக வைத்து, வேதாகமங்களில் அவரவர் எல்லையளவும் † அத்துவநியாசம் ‡ மந்திரநியாசம் முதலாயின விதித்தலின், அரனாகிய சங்காரக் கடவுளோடொப்ப அவரும் முதல்வராவார்போலுமென மலையவேண்டாம். படைப்பாதி தொழில் செய்யும் செனனி முதலிய சிவ சத்திகள் ஒரோவொன்று பிரமனாதியோர் மாட்டுப் பதிந்து நின்று செலுத்துதலால், அச்சத்தி பதிந்திருக்குமியைபு பற்றி வேதாகமங்களில் அரனோடொப்ப வுபசரித்து ஓதப்பட்டன. சத்தி பதிந்திருக்குமதனால், படைப்பாதி தொழிலை அயன், அரி முதலாயினாரே முதல்வனருளின்றியும், தாம் தாம் நினைந்தவாறு செய்வரென்று கூறின், முதல்வன் எதற்காக வேண்டும்? வேண்டுவதின்றாம். ஆகலின், அமைச்சர் முதலாயினார்க்கு அரசனையின்றிச் செல்லாமைபோல, அயனரி முதலாயினார்க்கு அரனருளை யின்றிச் செல்லாது. ஆயின், ஐந்தொழிலும்

† அத்துவநியாசம் - அத்துவசோதனை. ‡ மந்திரநியாசம் - மந்திர வைப்பு.

செய்யும் அம்முதல்வன் அத்தொழிலனைத்துந் தான் செய்யாது, அயனரி முதலாயினார்க்கு ஒவ்வொரு தொழிலியற்றச்செய்தலின், அரசனுக்கு அமைச்சர் முதலாயினர் போல முதல்வனுக்கு அயனரி முதலாயினரும் வேண்டப்படுவர். (எ - று.)

அவ்வாறாயின், படைப்பு முதலிய ஒவ்வொரு தொழிற்கும் பிரமன் முதலியோரும், சிவபெருமானும் வேண்டுமென்றாகுமே. ஆகுங்கால், ஒரு தொழிற்கு இருவர் எதற்காக வேண்டுமென ஆசங்கை நிகழும். அவ்வாறு ஆசங்கிப்பாரை நோக்கி, அமைச்சர் முதலாயினர்க்கு அரசனாணையின்றித் தத்தம் அதிகாரம் செல்லாதவாறுபோல, அயனரி முதலாயினர்க்கு அரனருளையின்றிச் செல்லாதெனத் தருக்க முகத்தால் விளக்கவேண்டி "படைப்புமூல முயன்றனரிவரேயாயின் முன்னவனென்னை" என்றும் அரசனுக்குத் தன்னாணைவழி நின்று காரியத்தை நடத்துதற்பொருட்டு அமைச்சர் முதலாயினர் வேண்டப்படுமாறுபோல, அரனுக்குத் தன் னாணைவழி நின்று சிருட்டி முதலியவற்றை நடத்தும் அயனரி முதலாயினரும் வேண்டப்படுவரென்பது ஏது முகத்தால் விளக்கவேண்டி "மூற்று நயந்திடு மவனிவர்க்கு நண்ணுவதொரோவொன்றாமே" என்றுங் கூறினார். முன்னவனென்னை என்பது தருக்கம். நண்ணுவதொரோவொன்று என்பது ஏது.

அரசு அமைச்சு உவமை இச் செய்யுளிலில்லை. அடுத்துவரும் செய்யுளில் பெறப்படுதலின், வருவித்துரைக்கப்பட்டது. அரசனுக்கு அமைச்சர் முதலாயினோரும், அமைச்சர் முதலாயினோர்க்கு அரசனும வேண்டப்படுவரென்னுமிது ஒன்றையொன்று பற்றுதலென்னுங் குற்றமாகாதோவெனின், ஆகாது. என்னை? அரசனுக்கு அமைச்சர் முதலாயினோர் கருவியாக வேண்டப்படுவர். அமைச்சர் முதலாயினோர்க்கு அரசன் கருத்தாவாக வேண்டப்படுவனாதலினென்க. இவ்வாறே பொருளினுங் கண்டுகொள்க. (உவமேயம்)

ஐ அழகு. அவ்வழகு ஆகுபெயரால் அழகுடையுருவத்தின் மேல் நின்றது. இரண்டாம் வேற்றுமையுருபாக வைத்துரைப்பின், முடிக்குஞ் சொல்லாகிய அரனுருவென்பதனோடு பொருந்தாமை காண்க. ஆகவரனுருவென்பது அரனுருவோடொத்த ஆகம் எனப்பொருள் குறித்த உவமைத்தொகை. இது, அரவின்பைபோலும் அல்குல் எனற்பாலது, 'பையரவல்குல்' என வருதல் போலும். ஆகம் - உடம்பு. பயத்தல் - படைத்தல். படைப்பு மூலம் - படைப்பாதி. பயந்திடுஞ் சத்தியாதிபதிதலை, திதலெனப் பிரித்துவைத்துக்கூறுகின்றமையின், இவரே என்றும் ஏகா

ரம் அச் சத்திகளையுடைய சிவனைப் பிரித்துக்காட்டிற்று. எனவே, சத்திபதிதலினால் அயன் முதலியோருக்குச் சிருட்டி முதலிய தொழிலும், சத்தியே வடிவாய் நிற்றலால் சிவனுக்குச் சிருட்டி முதலிய தொழிலும் உளவென்பதறிக.

மேல் நஅ-வது செய்யுளிலும் இதே விஷயம் கூறப்பட்டுள்ளது. ஆயினும் கூறியது கூறலாகாது. எதனாலெனின், அச்செய்யுள், சிருட்டி முதலிய தொழில்கள் அயன் முதலியோருக்குச் சுதந்திரமாயுளவெனக்கூறும் பௌராணிகரை நோக்கி, அத்தொழில்கட்கும் சிவனுக்கும் சம்பந்தம் இல்லை யென்பது மாத்திரம் நீக்கிச் சங்காரக் கடவுளே தோற்றுவிப்பன் என்பதை வலியுறுத்தியது. இச்செய்யுள், அயன் முதலிய கடவுளர் பலருளராதல்பற்றி அநேகேசுரவாதங் கூறுவாரை நோக்கி, அயன் முதலியோர்க்குச் சிருட்டி முதலியவற்றில் சம்பந்தம் இல்லையெனக் காட்டிச் சிவனொருவனே முதலென்றதனை வலியுறுத்தியதாகலினென்க.

அவ்வாறாயின், அநேகேசுரவாதத்தை மறுத்தற் பொருட்டு அயன் முதலியோரிடத்து ஒவ்வொரு சத்திபதியும், சிவன் எல்லாச் சத்திகளுமுடையன் எனச் சத்திக்குப் பன்மை கூறவே, சத்திமான் ஒருவனாதல் செல்லாதாகலின், இது தேளுக்கஞ்சிப் பாம்பின்வாயில் விழுந்தாலொப்ப மீண்டும் அநேகசுரவாதமாய் முடியுமே என்னும் ஆசங்கைக்குச் சமாதானங் கூறுதற்கெழுந்ததுவருஞ் செய்யுள். (௬0.)

சிருட்டியாதி பல சத்திகள் உளவெனவே அச் சத்திகளையுடைய சத்தன் பலவாமெனப்பட்டு அநேகேசுர வாதமாகாதா என்பாரை மறுத்து உவமை முகத்தால் சிவசத்தி ஒன்றின் தடத்தமே பல சத்திகளாதலின், அரன் ஒருவனே எனக் கூறுகின்றது.

**சத்திதான் பலவோ வென்னிற் றானொன்றே யநேக மாக**
**வைத்திடுங் காரி யத்தான் மந்திரி யாதிக் கெல்லா**
**முய்த்திடு மொருவன் சத்தி போலர னுடைய தாகிப்**
**புத்திமுத் திகளை யெல்லாம் புரிந்தவ னினைந்த வாறும்.**

(கோ - 6.) சத்திதான் பலவோ என்னின், ஒருவன் சத்தி மந்திரியாதிக்கு எல்லாம் உய்த்திடும்போல் அரனுடையதாகி தான் ஒன்றே காரியத்தால் அநேகமாக வைத்திடும். புத்தி முத்திகளை யெல்லாம் புரிந்து அவன் நினைந்தவாறு ஆம்.

(போ - ரை.) மேற்கூறியவாறு இறைவனுக்குச் சத்திகள் அநேகமோ என்றிடின், அன்று. அரசன் சத்தி ஒன்றே அமைச்சர், படைத்தலைவர், தண்டக்காரர் முதலாயினோர் மாட்டு நின்று செய்யுங் காரிய வேறுபாட்டால் பல வேறு வகைப்பட்டாற் போல, சிவசத்தி ஒன்றே பிரமன் முதலாயினோர் மாட்டு நின்று செய்யுங் காரிய வேறுபாட்டால் செநநி முதலியவாய்ப் பல வேறு வகைப்படும். ஆயினும் சிவசத்தியொன்றே யென்பதும், அதுவே பல கடவுளர் மாட்டு நின்று நடாத்துமென்பதும், அமைச்சர் முதலாயினோர் எவை எவை செய்யினும் அரசன் நினைந்தவாறன்றி ஆகாமைபோல, போக மோக்ஷங்களெல்லாம்கருணையினால் அவ்வரன் நினைந்தவாறன்றி ஆகாமையின் வைத்தறியப் படும். (எ-று.)

அரன் நினைந்தவாறன்றி அயன் முதலியோருக்கு ஒன்றும் ஆகாமை, சிவபெருமானுடைய திருவுள்ளத்துக்கு மாறாகச் செய்த தக்கன் வேள்வி முற்றுப்பெறாமையினும், சிவபெருமானது திருவுள்ளத்தோடு ஒன்றுபட்டு நின்ற மார்க்கண்டரது வாழ்நாளினும், சிவபெருமானை வணங்காது சென்று கடைந்ததினால் உண்டான விடத்தோற்றத்தினும், இவை போன்ற பிறவற்றினும் இனிது விளங்கக்கிடத்தலின் வகுத்துக் கூறாராயினார். (௬௧.)

மேல் சிவ சத்தியின் தடத்தங் கூறினமையால் இது அச் சிவசத்தியின் சொரூபம் கூறுகின்றது.

**சத்திதன் வடிவே தென்னிற் றடையிலா ஞான மாகு**
**முய்த்திடு மிச்சை செய்தி யிவை ஞானத் துளவோ வென்னி**
**னெத்திற ஞான முள்ள தத்திற மிச்சை செய்தி**
**வைத்தலான் மறைப்பின் ஞானன் மருவிடுங் கிரியையெல்லாம்**

(கோ - டு.) சத்திதன் வடிவு ஏது என்னின், தடையிலா ஞானமாகும். [தடை செய்யும் ஞானம்] உய்த்திடும். இச்சை செய்தி இவை ஞானத்து உளவோ என்னின், ஞானம் எத்திறம் உள்ளது அத்திறம் இச்சை செய்தி வைத்தலால், கிரியை யெல்லாம் மறைப்பு இல் ஞானால் மருவிடும்.

(போ-ரை.) ஒன்றாகிய சிவசத்தியின் சொரூபம் யாதெனின். உயிர்கட்கு அனுக்கிரகம் மாத்திரங் குறித்து, அதற்கு வேண்டுவனவற்றைச் சிறப்பு வகையால் தானறியாமலும், உயிர்ச்

அறிவிக்காமலும், பொது வகையால் தான் அறிந்தும், உயிர்க்கு அறிவித்தும் நிற்பதாகிய ஞானம் ஒன்றேயாம். அந்த ஞானமே பராசத்தி எனப்படும். அந்த ஞானம் உயிர்கட்கு மல பரிபாகம் வருதற்பொருட்டு ஐந்தொழில் செய்தலைக் குறித்துச் சிறப்பு வகையான் வியாபரிக்குங்கால் ஒரு கூற்றானே திரோதான சத்தி என நின்று இச்சா ஞானக்கிரியை என முத்திறப் பட்டுத் தொழிற்படும். அவ்வாறாயின், இச்சை, கிரியை என்கின்ற இவைகள் ஞானத்தினின்றுந் தோன்றுவனவோ எனின், ஞானம் எவ்வாறுளதோ அவ்வாறே இச்சை கிரியைகளும் நடத்தலின், அவ்விரண்டும் ஞானத்தின் வியாபார விசேடங்களே யன்றி வேறு தோன்றுவனவல்ல. ஆதலால், காரியத்தால் அநேகமாகிய செந்நி முதலிய வியாபார சத்திகளெல்லாம் முற் கூறப்பட்ட பராசத்தி ரூபமாகிய தடை செயா ஞானம் ஒன்றால் உளவாவனவேயாம். (எ-று.)

தடை-தடுத்தல். அதாவது மறைப்பு. மறைத்தற்குச் செயப்படுபொருள் அநுக்கிரகம். எனவே, தடுக்கப்படாத அநுக்கிரகமென்றவாறாம். தடையிலா ஞானம் என்றதனால், தடை செய்யும் ஞானமும் உண்டென்பது பெறப்படுதலின், அதுவே திரோதான சத்தி எனப்படும். ஞானத்துளவோ என்றவிடத்து, ஞானத்தினின்றும் உளவோ என்னும் பொருள்பட இன் உருபு விரித்துரைக்க. உள-என்பது தோன்றுதல் என்னும் பொருள் குறித்தது.

செந்நி முதலியனபோலத் தோன்றினவல்ல எனக்கூறவேண்டி, எத்திற ஞானமுள்ள தத்திறமிச்சை செய்தி என்றார். எனவே, ஞானத்தின் வியாபார விசேடங்களே இச்சை கிரியை என்பதாம். "‡ நீடு பராசத்தி நிகழிச்சா ஞானநிறை கிரியைதர" என்றதும். "¶ கிரியையறிவிச்சை விளைந்த சத்தி யேதோ - பெரிய பராசத்தி யெனப் பேசாய்" என்றதும் ஞானத்தின் வியாபார விசேடங்களே இச்சை கிரியை என்னும் கருத்துப்பற்றி யென்க. ஞானம் என்பது அம் கெட்டு ஆல் உரு பேற்று ஞானால் என நின்றது. அம் கெடுதல் "† பெற்றானுயர்த்த பெருமான்" "கோணைகணையான்" என்பனவற்றுள்ளுங் காண்க. இவற்றுள், பெற்றம் என்றதும், கோணகம் என்றதும் அம் கெட்டு நின்றன.

---

¶ சிவப்பிரகாசம், பொதுவதிகாரம். செ-உ. ‡ துகளறுபோதம்- செ-சஉ.

† திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தேவாரம். திருப்பாசுரம். செ-கக.

ஞானல் என்பதற்கு இவ்வாறு கூறுதலேயன்றி, ஞானத்தால் என்னும் பொருள்பட அத்துச் சாரியை தொக்கு நின்றது எனினும் அமையும். கிரியை என்பது வியாபாரம்.

இதனுல், பராசத்தி, திரோதான சத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியா சத்தி என ஐந்து சத்திகள் இறைவனுக்கு உண்டென்றும், அவற்றுள் பராசத்தி ஒன்றே சொரூபமென்றும், ஏனைய நான்கும் அவற்றின் வியாபார பேதமாகிய செநநி முதலிய சத்திகளும் தடத்தமென்றும் அறிக. பொது வகையால் அறிதல் - அநுக்கிரக மாத்திரங் குறித்து நிற்றல். சிறப்பு வகையால் அறிதல் - சிருட்டி முதலிய நான்கு தொழிலேயுங் குறித்து நிற்றல். இவை, முறையே உபகாரஞ் செய்யவேண்டுமென்றெண்ணுதலும், இன்னவிதஞ் செய்யவேண்டுமென்றெண்ணுதலும் போலவாம்.

பராசத்தி ஒன்றென்பதும், அதுவே வியாபார பேதத்தால் இச்சா ஞானக்கிரியை என முத்திறப்படுமென்பதும், வியாபார பேதத்தால் உயிர்கட்குண்டாம் பயனிவை யென்பதும் இச் செய்யுளாற் கூறப்பட்ட பொருளென்பது வருஞ் செய்யுளிற் பெறப்படும். (சுஉ.)

சிவசத்தி ஒன்றே சிறப்பு வகையாய்த் தொழிற்படுதலால் உயிர்கட்கு உண்டாம் பயன் கூறுகின்றது.

ஒன்றதா யிச்சா ஞானக் கிரியையென் றொருமூன்றாகி
நின்றிடுஞ் சத்தி யிச்சை யுயிர்க் கருணேசமாகு
நன்றெலா ஞான சத்தி யானயந் தறிவனாத
னன்றருட் கிரியை தன்னு லாக்குவ னகில மெல்லாம்.

(கோ - ௫.) சத்தி ஒன்றதாய் இச்சா ஞானக் கிரியை என்று ஒரு மூன்ருகி நின்றிடும். இச்சை உயிர்க்கு அருள் (நாதன்) நேசம் ஆகும். ஞானசத்தியால் நன்று எலாம் (நாதன்) நயந்து அறிவன். அருட்கிரியை தன்னல் அன்று அகிலமெல்லாம் நாதன் ஆக்குவன்.

(பொ - ரை) பராசத்தியாவது தடையிலா ஞானமெனப் பொதுமையால் ஒன்ருய், இச்சா ஞானக் கிரியை என வியாபார பேதத்தால் மூன்ருய், அவையே மற்றும் அவ்வக் காரிய பேதத்தால் பலதிறப்படும். அம்மூன்றனுள் இச்சாசத்தியாவது, உயிர்கட்கு மலத்தை நீக்கிச் சிவாநுபவத்தைத் தருதற்பொருட்

பனிடத்து உளதாகிய கருணையாம். ஞானசத்தியால் பெருகிய அதற்குச் செய்யக் கடவதான உபாயங்களையெல் முதல்வன் விரும்பி அறிவன். அருளின் வேறல்லாத கிரி தியால் அறிந்த அவற்றை அறிந்தவாறே முதல்வன் சங் பித்துச் செய்வன். (எ - று.)

நன்று என்பது ஒருமை. எலாம் என்பது பன்மை. நன்றெலாம் என்பது ஒருமைப் பன்மை மயக்கம். இது $ "உள்ளிய தெல்லாம்" என்றாற்போல. நன்மை—உபாயம். அன்று—அறிந்தபோதே.

அயன்றனையாதியாக என்பது முதல் இவை நான்கு செய்யுளானும் அயன் முதலியோருருவத்தை அரனுருவோடொப்ப வைத்து நியாசம் செய்தல் பற்றியும், சத்தி பலவாதல்பற்றியும், சிவனொருவனே முதற்கட வுள் என்றல் செல்லாதென்னும் அநேகேசுரவாதி மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து சிவன் முதலென்றது வலியுறுத்தப்பட்டது. (சுரு.)

இச்சை ஞானம் கிரியை என்னும் மூன்று சத்திகளும் சீவ னுக்கும் உளவாதல் பற்றிச் சீவன் சிவனை ஒப்பாகான் எனக் கூறு கின்றது.

சீவனு மிச்சா ஞானக் கிரியையாற் சிவனை யொப்ப
னுவனென் றிடின நாதி மலமிவற் றினை மறைக்குங்
காவல னிவன்செய் கன்மத் தளவினிற் கொடுப்பக் காண்பன்
பாவியாம் புத்தி முத்திப் பயன்கொளும் பண்பிற்றாகும்.

(கொ - ்டு.) இச்சா ஞானக் கிரியையால் சீவனும் சிவனை ஒப்பன் ஆவன் என்றிடின், இவற்றினை அநாதி மலம் மறைக்கும்.

(பொ-ரை.) இச்சா ஞானக் கிரியையாகிய மூன்று சத்தி களும் முதல்வனோடொப்ப உயிர்க்கும் உளவாம். அதுகொண்டு உயிர்களும் முதல்வனோடொக்குமோ எனின், அன்று. உயிர்க ளின் இச்சாஞானக் கிரியைகளைக் கேவலாவத்தையில் அநாதியா கிய ஆணவ மலம் மறைக்கும். பின்னர்ச் சகலாவத்தையில் உயிர் கள் தாம் செய்கின்ற கன்மத்தளவிற் கேற்ற பயனை முதல்வன் கொடுக்கப்பெற்று ஒன்று அனுபவிக்குங்கால் பிறிதொன்றை அனுபவிக்கமாட்டாமல் ஏகதேசப்பட்டு அனுபவிக்கும். சுத்தா

$ திருக்குறள்-வெகுளாமை. செ. கூ.

வத்தையில் முத்திப்பயனும், சகலாவத்தையில் கன்மத்தா கடவதாய போகப்பயன் போல் முதல்வன் கொடுப்பவே ளும் உரிமையுடையனவாம். ஆதலால், இத்தன்மைகள் முதல்வனுடைய இச்சாஞானக் கிரியா சத்திகளுக்கும், மைகளையுடைய சீவனுடைய இச்சாஞானக் கிரியாசத்திகளுக வேற்றுமை பெரிதாகலின் ஒப்புமையாகாவாம். (எ - று.

பாவி என்பது வரக்கடவதென்னும் பொருள் குறித்த வடசொல்.

புத்தி முத்தி என்றவிடத்து, புத்தி போல் என்னும் உவம வுருபு தொக்கு நின்றது. இவ்வாறு புத்திபோல் முத்திப்பயன் என்றுரையாமல் புத்தி முத்திப்பயன் என உரைக்கின், கன்மத்தளவினிற் கொடுப்பக் காண் டலும் புத்திப்பயனுதலின், கூறியது கூறலாய் முடியும்.

இச்செய்யுளால், இச்சாஞானக் கிரியை யுடைமைபற்றிச் சீவனும் சிவ னோடு சமமாகும் என்னும் சிவசமவாதியை மறுத்துத் தான்முதல் என்றது வலியுறுத்தப்பட்டது.

அவ்வாறாயினும், ஆகமங்களில் இலயசிவன், போக சிவன், அதிகார சிவன் எனச் சிவப்பன்மை கூறுதலின், தான் முதல் என்று ஒரு பொருள் மேல் வைத்தோதுதல் பொருந்தாது என்பார்க்குச் சமாதானங் கூறுதற் கெழுந்தன வருஞ் செய்யுட்கள். (சு௯.)

சிவசத்தியின் தடத்தம் பலவாயினும் சொரூபம் ஒன்றாயி னாற் போலத் தடத்தசிவமும் இலய சிவம், போகசிவம், அதிகார சிவம் என மூன்றாயினும், சொரூபசிவம் ஒன்றேயெனவும், அது வே தடத்த சிவமாயும் தடத்த சிவத்தின் அவத்தைக்கு ஏது வான ஆதாரத்தின் பெயரைப் பெற்றும் நிற்குமெனவும் கூறு கின்றது.

ஞானமே யானபோது சிவன்றொழின் ஞான மொக்கி
னீனமில் சதாசி வன்பே ரீசனுந் தொழில தேறி
ஞானமேற் கிரியை வித்தை யுருத்திர னிலய போக
மானபே ரதிகா ரத்தோ டதிகர ணத்தனுமே.

[கே - டு.] ஞானமே ஆனபோது சிவன். தொழி (லே ஆன போது) ஞானம். ஒக்கின் ஈனமில் சதாசிவன். தொழில் அது ஏறின்

பேரீசன் ஆம். கிரியை ஊனமேல் வித்தை. இலயம் போகம பேர் ஆண
அதிகாரத்தோடு அதிகாரணத்தன் உருத்திரன் ஆமே.

(பொ - ரை.) மேற்கூறிப்போந்த சிவசத்தி மூன்றனுள் எப்பொழுதும் ஒரு தன்மையாய்த் தொழிற்படுவது இச்சா சத்தி. அவ்விச்சை யொழிந்த ஞானங்கிரியை யென்னும் இரண்டனுள் முதல்வன் ஞானசத்தியேயாய் நின்று தொழிற்பட்ட போது சிவமெனவும், கிரியா சத்தியேயாய் நின்று தொழிற் பட்டபோது சத்தியெனவும், ஞானமும் கிரியையுமாய் ஒத்து நின்று தொழிற்பட்டபோது மேம்பட்ட சதாசிவமெனவும், ஞானம் குறைந்து கிரியை ஏறி நின்று தொழிற்பட்ட போது மகேசுவரம் எனவும், கிரியை குறைந்து ஞானம் ஏறி நின்று தொழிற்பட்டபோது சுத்தவித்தை எனவும் ஐவகைப்பட்டு அந்த இலயம், போகம், பெரிதாகிய அதிகாரம் என்னும் மூன்று அவத்தைகளையும் அவ்வவத்தைக் கேதுவாய் அங்ஙனம் வேறு பட்ட சிவமுதலிய ஆதாரங்களையும் உடையனாய் மகாருத்திர னொருவனே அவத்தைக்கு ஆதாரமாகிய அவற்றின் பெயரைப் பெற்று நிற்பன். (எ - று.)

இவ்விடத்து உருத்திரன் என்பது மகாசங்காரக் கடவுளாகிய பரம சிவனே. இலய போகம் என்றவிடத்து ஆகமங்களிற் கூறப்பட்ட இலய போகம் என்னும்படி அகரச் சுட்டு வருவித்துரைக்க. தொழில் ஞானம் என்றவிடத்து ஞானம் சத்திக்குப் பரியாயப் பெயராய் நின்றது. ஒக்கில் என்பதற்கு ஞானந் தொழில் என்னும் இவ்விரண்டும் என எழுவாய் வருவித்து ஞானந் தொழில் ஒக்கில் என உரைக்க. ஆதாரம் அதிகாரணம் என்பன ஒருபொருட் சொற்கள். இது, மேல் நடு-வது செய்யுளிலும் உரைக்கப்பட்டது.

சிவம் சத்தி என்ற இரண்டும் எல்லாம் ஒடுங்குதற் கிடமாய் நிற்றலால் இலயமெனவும், சதாசிவம் ஏனைய மூர்த்தங்களைத் தோற்றுவித்தலால் போகமெனவும், மகேசுவரத்தில் இருபததைந்து மூர்த்தமும், சுத்தவித்தையில் பிரமவிட்டுணுவும் தோன்றித் தொழிற்செய்வதால் மகேசுவரம் சுத்தவித்தை என்ற இரண்டும் அதிகாரமெனவு மறிக. (சுடு.)

இலய போக அதிகார அவத்தைகளுக்கு ஏதுவாய் நின்ற

ஆதாரங்கள் சிவதத்துவங்களெனவும் அவற்றின் இயல்பும் கூறுகின்றது.

வித்தையோ டீசர் சாதாக் கியஞ்சத்தி சிவங்களைந்துஞ்
சுத்ததத் துவஞ்சி வன்றன் சுதந்திர வடிவ மாகு
நித்தமென் றுரைப்பர் கால நீங்கிய நிலைமை யாலே
வைத்திலர் முற்பிற் பாடு வருவித்தார் கருமத்தாலே.

[கொ - டு.] வித்தையோடு ஈசர் சாதாக்கியம் சத்தி சிவங்கள் சுத்த தத்துவம் ஐந்தும் சிவன்றன் சுதந்திர வடிவம் ஆகும். கருமத்தாலே [முற்பிற்பாடு] வருவித்தார். கால நீங்கிய நிலைமையாலே முற்பிற்பாடு வைத்திலர். நித்தமென்றுரைப்பர்.

(பா - ரை.) சுத்த மாயாகாரியமாகிய சுத்தவித்தை, ஈசுவரம், சாதாக்கியம், சத்தி, சிவம் என்னும் சுத்த தத்துவங்களைந்தும், முதல்வனுடைய ஞானக்கிரியா வியாபாரங்களுக்கிடமாய், அவ்வியாபாரங்களால் ஐவகைப்பட்டு மேற்கூறிப் போந்த சுத்தவித்தை முதலிய இறைவன் பெயரே பெயராக அவ்விறைவனுக்குச் சுதந்திரமாகிய அதிட்டானமுமாம். முன்பின்னாக நிகழும ஞானசத்தி கிரியா சத்திகளின் வியாபார பேதம் பற்றி இச் சிவதத்துவங்களுக்கு ஒன்றன்பின் ஒன்றாக முற்பிற்பாடு கூறினார். ஆயினும, முற்பிற்பாடு கூறினமையால் காலம் ஏதுவாகக் கூறப்பட்ட தென்னலாமோ வெனின், சுத்தமாயையில் இவ்வைந்து தத்துவங்களும் தோன்றிய பின்னர்த் தோன்றுவதாகிய காலதத்துவம் இவ்வைந்தின் தோற்றத்திற்கு ஏதுவாகாதாம். ஆதலின், காலம்பற்றி முற்பிற்பாடு கூறிற்றிலர். காலவரையறை கடந்து நிற்றலால், அதுபற்றி இச்சிவதத்துவ மைந்தும் சிவபிரானுக்கு நிலைத்த அதிட்டான மென்றுரைப்பர். (எ று.)

அனந்த தேவர் முதலியோர் வாயிலாக நின்றதிட்டிக்கப்படும் அசுத்த மாயாகாரியம், பிரகிருதி மாயாகாரியங்கள் போலன்றி, இச் சுத்த மாயா காரியங்கள் தன்னால் நேரே யதிட்டிக்கபபடுதலின், இவை சுதந்திர வடிவ மெனப்பட்டன. அதிட்டிக்கப்படும் அதிட்டானத்தை வடிவம் என்றது

உபசாரம். உயிராலதிட்டிக்கப்படும் உடம்பு உயிருக்கு உபசாரமாய் வடிவமாதல் போல. அதிட்டானம்—நிலைக்களம்.

தோற்றக் கேடுகளுடையனவாய தத்துவங்கள் இறைவனுக்குச் சுதந்திர வடிவமாதல் எவ்வாறு கூடும் என்னும் ஆசங்கையை நீக்குதற்கு "நித்தமென்றுரைப்பர்" என்றும், இச்சுத்த தத்துவங்கள் நித்தமாதற்கு ஏதுக் கூற வேண்டி "கால நீங்கிய நிலைமையால்" என்றும், அவ்வாறாயின், காலமில்லாத விடத்து இத்தத்துவங்களின் தோற்றத்திற்கு முற்பிறபாடு கூறுதல் எவ்வாறு கூடும் என்பாரை நோக்கி இவ்விடத்து முற்பிற்பாடு கூறியது காலம் பற்றியன்று எனக்கூற வேண்டி "வருவித்தார் கருமத்தால்" என்றுங் கூறினர்.

கருமம் என்றது மேலைச் செய்யுளிற் கூறிய ஞானசத்தி கிரியாசத்திகளின் வியாபார பேதங்களை. அந்த வியாபாரங்கட்குக் காரணம் கலையித்திரி எனப்பெயர் பெற்றுக் காலத்தானமாய் நிற்கும் சிவசத்தியே யாகலின், அவ்விடத்துக் காலமின்மை பற்றி முற்பிற்பாடுண்மைக்கு இழுக்கின்மை யுணர்க.

இதனால் சிவதத்துவம் இறைவனுடைய வியாபாரத்திற்கு இடமாதலும், இறைவனுக்கு உபசாரத்தால் வடிவமாதலும் அறிக.

வடிவமென்றது இவ்விடத்து அதிட்டானமாகிய நிலைக்களத்தை. உயிருக்கு வடிவு உணர்வேயாயினும், நிலைக்களமாகிய உடம்பும் வடிவமென உபசரித்துக் கூறப்படுவது போல, இறைவனுக்கு வடிவம் சித்தேயாயினும் சிவதத்துவமும் வடிவமென்று உபசரித்துக் கூறப்படும். உயிருக்கு உடம்பு மாறி மாறி வருதல் போல, இறைவனுக்கு வருதலில்லையென்பதும் சிவதத்துவம் என்றும் அதிட்டானமாம் என்பதும் தோன்ற "நித்தம்" என்றார். அதிட்டான மென்பது நிலைக்களமாகிய வாயிலாமென்பதனை இச்சூத்திரம் ௫அ-வது செய்யுளில் "அதிட்டித்துக்கொண்டே" என்பதற்குக் கூறிய உரையானறிக.

மேல் ௭௧-வது செய்யுளில் சத்தியினாலேயே வடிவமென்றதனோடு இக்கருத்து முரணாதோ எனின் முரணாது. என்னை? வருகின்ற செய்யுளில், வடிவமெல்லாம் சத்தியிற் காணப்படுவனவென்றும், அதற்கடுத்த செய்யுளில் சத்தியிற் காணப்படும் வடிவமெல்லாம் தானாகத் தோன்றி நிற்பன்; சத்தியினிடமாக வன்றி இறைவன் தானாகத் தோன்றான் என்றும், இரண்டாஞ் சூத்திரம் ௬௯-வது செய்யுளில் சிவதத்துவம் ஐந்தும் சடமாயினும், சிற்சத்திக்குச் சுதந்திர வடிவமென்றும் உரையாசிரியர் கூறியவாற்றால், இறைவனுக்கு வடிவம் சிற்சத்தியே என்பதும், சிற்சத்திக்குச்

சிவதத்துவம் வடிவமாமென்பதும், ஒற்றுமை பற்றிச் சத்திக்குரிய வடிவத்தை இறைவனுக்குரிய வடிவமாகக் கூறியதால் முரணில்லை என்பதும் அறிக.

சிவபெருமானுக்கு எங்கும் இடமாகவும் சிவதத்துவத்தை இடமென்று வேறெடுத்துக் கூறியதென்னை யெனின், எல்லா விடத்திலும் தான் வெளிப்படாது மறைந்தும் சிவதத்துவத்தில் வெளிப்பட்டும் நிற்றல் பற்றி யென்க. அன்றியும், இச் சிவதத்துவம் அனந்தர் முதலிய ஏனைய தேவர்க் கிடமாகாமையின் சுதந்திரம் எனப்பட்டது. (சுசு.)

சொரூபசிவம் சுத்த தத்துவங்களைப்பற்றிய வியாபார பேதத்தால் இலயம், போகம், அதிகாரமென்னும் அவத்தை எய்தினும், அவை சத்தியிற் காணப்படலால் விகாரியாகான் என உவமை முகத்தாற் கூறுகின்றது.

ஒருவனே யிராவ ணாதி பாவக முற்றுற் போலத்
தருவனிவ் வுருவ மெல்லாந் தன்மையுந் திரியா னாகும்
வரும்வடிவெல்லாஞ் சத்தி சத்திதான் மரமுங் காழ்ப்பு
மிருமையும் போல மன்னிச் சிவத்தினோ டியைந்து நிற்கும்.

[**கோ - ௬.**] ஒருவனே இராவணன் ஆதி பாவகம் உற்றாற்போல தருவன் இவ்வுருவமெல்லாம். வரும் வடிவு எல்லாம் சத்திதான் மரமுங் காழ்ப்பும் இருமையும் போல மன்னிச் சிவத்தினோடியைந்து நிற்குஞ் சத்தி. தன்மையுந் திரியானாகும்.

(**போ - ரை.**) ஒருவன் கூத்திற்குரிய இராவணாதி பல வேடங் கட்டி நடித்தானாயினும், தன் தன்மையிற் சிறிதும் மாறுபடாதது போல, முதல்வன் ஐந்தொழிற்குரியனவாய் மேற்கூறிப்போந்த சுத்த வித்தை முதலிய பேத வடிவெல்லாம் எய்தியும், பொருந்தப்பட்ட அவ்வடிவு வேறுபாடெல்லாஞ் சத்தியுந் தானும் மரமும் வயிரமும் போல நிலைபெற்று, பிரிப்பின்றி நிற்கும் தனது சத்தியிற் காணப்படுவனவாம். ஆகலின், அவ்வடிவத்தின் வேறுபாடுபற்றித் தன் தன்மை வேறுபட்டு விகாரியாவானல்லன். (எ - று.)

ஒருவனே என்றவிடத்து ஏகாரம் தேற்றம்: தன்மையும் என்றவிடத்து உம்மை சிறப்பு. இருமை என்றது இவ்விடத்து இரண்டு என்னும்

எண்ணின்மேல் நின்றது. வரும் வடிவெல்லாம் சத்தியிற் காணப்படுவன என்று கூற வேண்டியதை வரும் வடிவெல்லாம் சத்தி என்றது உபசாரம்.

சத்தியிற் காணப்படுதல் தனக்காமாறு உவமை முகத்தாற் கூறுகின்றது

பொன்மைநீ லாதி வன்னம் பொருந்திடப் பளிங்க வற்றின்
றன்மையாய் நிற்கு மாபோற் சத்திதன் பேத மெல்லா
நின்மலன் ரூனுத் தோன்றி நிலைமையொன் ருயே நிற்பன்
முன்னருட் சத்திதன்பான் முகிழ்க்குந் தான் முளையானன்றே

[கோ - ௫.] முன் அருட்சத்திதன்பால் முகிழ்க்கும். தா ன்[ஆக] முளையானன்றே. பொன்மை நீலம் ஆதி வன்னம் பொருந்திட பளிங்கு அவற்றின் தன்மையாய் நிற்குமாபோல், நின்மலன் சத்திதன் பேதமெல்லாம் தான் ஆத் தோன்றி நிலைமை ஒன்ருயே நிற்பன்.

(பொ - ரை.) அவ்விறைவன் எவ்விடத்தும் கருதப்பட்ட அருட்சத்தியின் இடமாகவே தோன்றுவானன்றித் தானுகவேறு தோன்றுனுகலான், பொன்றன்மையையும் நீலம் முதலிய பொருள்களையும் பளிங்கினது நிறமே பற்றவும், அப்பளிங்கும் அப்பொருள்களின் தன்மை அனைத்துமாய்த் தோன்றி வேற்றுமையின்றி நிற்குமாறு போல, முதல்வனும் தனது சத்தியிற் காணப்படும் வடிவபேதமெல்லாம் தானுகத் தோன்றி வேற்றுமையின்றியே நிற்பன். (எ - று.)

வன்னம்—படிக நிறம். ஒன்ருயே என்றவிடத்து ஏகாரம் தேற்றம். சத்திதன்பால் என்றவிடத்து தன் இடைச்சொல். மேல் கூ௩-வது செய்யுளில் "கிரியை தன்னுலாக்குவன்" என்ருற்போல. பால்—இடம். தான் என்றவிடத்து ஆக என ஒருசொல் வருவித்து தானுக என உரைக்க. (௬) ஞானமேயானபோது என்பது முதல் இவை நான்கு செய்யுளானும் இலயபோக அதிகாரம்பற்றிச் சிவபேதங் கொள்ளும் சிவபேத வாதிகள் கூறும் ஆசங்கையைப் பரிகரித்துத் தான் முதல் என்றது சாதிக்கப்பட்டது.

இவ்வாறு அநேகேசுரவாதம், சிவசமவாதம், சிவபேதவாதம் என்னும் முத்திறம் பற்றிக் கூறப்பட்ட ஒன்பது செய்யுளும் தான் முதல் என்றதனை வலியுறுத்தியவாறு காண்க. (கூஅ)

சத்தியும் சிவமுமாகிய தான் முதலென்றதனை காட்சி அநுபவத்தில் வைத்து விளக்கி முதல்வனுக்குரிய பொதுவிலக்கணத்தைத் தொகுத்துக் கூறுகின்றது.

சத்தியுஞ் சிவமு மாய தன்மையிவ் வுலக மெல்லா
மொத்தொவ்வா வாணும் பெண்ணு முணர்குண குணியு மாகி
வைத்தன னவளால் வந்த வாக்கமிவ் வாழ்க்கை யெல்லா
மித்தையு மறியார் பீட லிங்கத்தி னியல்பு மோரார்.

(கோ - ௬.) இவ்வாழ்க்கை யெல்லாம் அவளால் வந்த ஆக்கம்.

(பொ - ரை.) இறைவன் இவ்வாறு சத்தியுஞ் சிவமுமெனத் தன்னுள்ளே இருவேறு வகைப்பட்ட தன்மைகள் உடையனு யிருத்தலானன்றே, தன் வியாபகத்துட்பட்ட பல வேறு வகைப்பட்ட இவ்வுயிர் வடிவங்களனைத்தும் மனுடர், மிருகம் முதலிய அவ்வப் பிறப்பிற்கியைய வடிவங்களொத்தும், குறியும், குணங்களும் ஒவ்வாது இரு வேறுவகைப்பட்ட ஆணும் பெண்ணுமாகிய குறிகளையும், உணரப்படும் ஆண்மையும் அமைதியுமாகிய குணங்களையும் உடையனவாய்த் தம்முட் கூடிக் களித்து வாழும்படி செய்தனன். ஆகலான், இப்படியே தனு காண புவன போகமாகக் கூறிப்போந்த வாழ்வுகளெல்லாம் சிவமுஞ் சத்தியும் மணந்ததனலாகிய வாழ்வு என்பது அறியப்படும். இவ்வாறு எல்லா வடிவங்களும் ஆண் தன்மையும் பெண் தன்மையுமாம்படி சிவமுஞ் சத்தியும் நின்ற முறைமையும் உணரார். சத்தியும் சிவமுமாக இறைவன் இருவேறு வகைப்பட நிற்பன் என்பதற்குப் பீடமும், இலிங்கமும் ஆக அமைந்திருத்தலே பிரத்தியட்சமான சான்றாகவும் அதனையு முணரார். (எ - று.)

ஒத்தொவ்வாமையாவது, மனுடப்பிறப்புக்கியைய வடிவங்களெல்லாம் ஒத்தும் ஆண்குறி, பெண்குறி, ஆண்மைக்குணம், அமைதிக்குணம் என்னும் இவைகளொவ்வாது ஆண் பெண் என இருவேறு வகைப்படுதல் போல்வன. ஆண் பெண் என்பன வடிவத்தை யுணர்த்தாது, குறிகளை யுணர்த்தி நின்றன. உணர் குண குணியுமாகி என்பது, ஆண்குறி பெண்குறி என்னும் அவ்வக்குறிகட்கேற்ப உணரப்படும் ஆண்

மைக்குணம், அமைதிக்குணம் என்னும் இருவகைக் குணங்களையுடைய குணியுமாகி என்பதாம். ஈண்டுக் குணி என்றது குணத்தையுடையது என்னும் பொருள் குறியாது ஆண் பெண் என்னும் பெயரைக் குறித்து நின்றது. இது கரிகரம், பணிபணம் என்றவிடத்துக் கரியும், பணியும் கரத்தையுடையது, பணத்தையுடையது என்னும் பொருள் குறியாது யானையையும், பாம்பையும் குறித்தவாறு போலாம். பணம்-படம்.

இவ்விடத்துக கூறிப்போந்த வாழ்க்கையாவன, உலகமெல்லாம் அவன், அவள், அதுவென்னும் அவயவப் பகுப்புடையனவாதலும், தோன்றி நின்று ஒடுங்கும் முத்தொழிலுடையனவாதலும், அத்தொழிற்கு ஒரு கருத்தாவையுடையனவாதலும், ஒடுங்கியவாறே ஒழியாது மீளவும் சங்காரக் கடவுளினின்றுந் தோன்றுவனவாதலும், அச்சங்காரக் கடவுளையே முதற்கடவுளாக உடையனவாதலும் என்னும் இவை.

பீடம் என்பது ஆவுடையாள். அதுவே சத்தி. இலிங்கம்—சிவம். பொதுவிலக்கணம் உலகமாய் நிற்றல். (சுக.)

முதல்வன் இவ்வாறு தடத்தமாய் நிற்பினும் அதனைப் பொருந்தாது சொரூபமாய் நிற்பன் என அவ்விலக்கணத்தைத் தொகுத்துக் கூறுகின்றது.

சிவனரு வுருவு மல்லன் சித்தினோ டசித்து மல்லன்
பவமுதற் றொழில்க ளொன்றும் பண்ணிடு வானு மல்லன்
றவமுத லியோக போகந் தரிப்பவ னல்லன் றானே
யிவைபெற வியைந்து மொன்று மியைந்திடா வியல்பினானே

(போ-ரை.) சிவபிரான் அருவும், உருவுமல்லாதவன். சித்தும், அசித்துமல்லாதவன். சிருட்டி முதலிய ஐந்தொழில்களில் ஒன்றும் செய்வானுமல்லாதவன். தவமுதலியவற்றிற்குரிய யோகவடிவம், போகவடிவம் கொள்வானுமல்லாதவன். ஆதலால், அம்முதல்வன் தடத்த இலக்கணமாகிய இவற்றைப் பொருந்தி நின்றானாயினும், அவற்றைச் சிறிதும் பொருந்தாத சொரூப இலக்கணத்தையுடையான். அச் சொரூப இலக்கணம் (ஆறுவது சூத்திரத்தில்) கூறப்படும். (எ - று.)

தோற்றமதிகாரணம் முடிந்தது.

முதற் சூத்திரம் முடிந்தது.

ஆகத்திருவிருத்தம் கூ௦.

# இரண்டாம் சூத்திரம்,

## பாச உண்மை.

---

மேலைச் சூத்திரத்தில் "ஈறுமாகி மருவிடு மென்றதனுனே" எவ்வாறு நின்று மருவுவிப்பன்? என்னும் ஆசங்கை நிகழுமன்றே. அந்நிகழ்ச்சி பற்றி புதுச் சிருட்டியுண்டாமாறுணர்த்துதற்கு இரண்டாஞ் சூத்திரமெழுந்தது.

குடமாகிய செயப்படுபொருளைக்கொண்டு செய்பவனுகிய குயவன் உண்டென்று கொள்ளுவதுமன்றி, முதற் காரணமாகிய மண்ணும், துணைக் காரணமாகிய திகிரியு முண்டென்றறியப்படு மாகலின், அதுபோலத் தோன்றி யழியுங் காரியப் பிரபஞ்சத்தைக்கொண்டு நிமித்த காரணனுகிய கருத்தா வுண்டென்று மேலைச்சூத்திரத்தால் விளக்கி அக்கருத்தா உயிர்களோடு அத்துவிதமாய் நின்று பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பன் எனக்கூறு முறையில் அப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாகிய மாயையும், சிற்சத்திவழித்தாய துணைக் காரணமாகிய கன்மமும் என்னும் பாசவுண்மையை நாட்டுகின்ற காரிய ஏதுவெனப்படும் அநுமானப் பிரமாணம் இச்சூத்திரத்தாற் கூறுகின்றார்.

இறைவன் உயிர்களோடு அத்துவிதமாய் நின்று கன்மத்திற் கேற்ப மாயையினின்றும் பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பன் எனச் சூத்திரப் பொருளைத் தொகுத்துக் கூறுகின்றது.

**உலகெலா மாகி வேறா யுடனுமா யொளியா யோங்கி**
**யலகிலா வுயிர்கள் கன்மத் தாணையி னமர்ந்து செல்லத்**
**தலைவனு யிவற்றின் றன்மை தனக்கெய்த லின்றித் தானே**
**நிலவுசீ ரமல னுகி நின்றன னீங்கா தெங்கும்.**

(**கோ - ௫.**) உலகு எலாம் ஆகி, வேறு ஆய், உடனும் ஆய், ஓங்கி ஒளியாய், ஆணையின் கன்மத்து அலகிலா உயிர்கள் அமர்ந்து செல்லத் தலைவனுய், இவற்றின் தன்மை தனக்கு எய்தல் இன்றி நீங்காது எங்கும் தானே நிலவு சீர் அமலனுகி நின்றனன்.

**(போ - ரை.)** மேற் கூறிப்போந்த சிவபெருமான், பூதிதாகப் பிரபஞ்சத்தைத் தோன்றச்செய்யுங்கால், உயிர்களிடத்தே கலப்பினால் உடலும் உயிரும் போல ஒன்றாய், பொருளின் தன்மையால் கண்ணும் சூரியனும் போல அவ்வுயிர்களின் வேறுமாய், உயிர்க்குயிராதற்றன்மையால் கண்ணொளியும் ஆன்ம போதமும் போல அவ்வுயிர்களோடு உடனுமாய், அவ்வவ்வுயிர்களினிடத்து மேலாய் நிற்பதாகிய சத்தி ரூபமாகியும், அச்சத்தியினால் கூட்டுவிக்கின்ற இருவினைகளுக்கேற்ப எண்ணிறந்த அவ்வுயிர்கள் ஐந்தொழிலிற்பட்டுச் செல்லுங்கால் அவ்வைந்தொழில் நடாத்துவதாகிய பதி ரூபமாகியும், சத்தி ரூபம், பதிரூபம் ஆகிய அத்தன்மைகளின் வேறாயும், அத்தன்மைகளோடு பிரிப்பின்றியும் எவ்விடத்தும் தானே சுயம்பிரகாசமாம் இயல்புடையனாய் நிற்பன்.()

அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வன் ஒன்றினுந்தோய்வின்றித் தானே சுயம்பிரகாசமாய் நிற்குந் தன்னுண்மையில் சிவம் எனவும், உலகெலாமாகி வேறாயுடனுமாய் இவ்வாறு உயிர்களோடு ஒன்றாயும், வேறாயும், உடனாயும் நிற்கும் தன்மையில் சத்தி யெனவும், பிரிக்கமுடியாத தாதான்மியத்தால் சிவம் சத்தி என இருதிறப்பட்டு, பின், உயிர்களின் பொருட்டு ஐந்தொழில் செய்யும் தன்மையில் பதி எனப் பெயர்பெற்று நிற்பன் என்பது சிவாகம நூற்றுணிபு. இத்துணிபு உணர்த்தவேண்டி இச்செய்யுளில் இவ்வாறு பகுத்து ஓதினார். எவ்வாறெனின், இவற்றின்றன்மை தனக்கெய்தலின்றித் தானே நிலவு சீரமலனாகி நின்றனனீங்காதெங்கும் என்றதனால் சிவமாய் நிற்றலையும், உலகெலாமாகி வேறாயுடனுமா யொளியாயோங்கி என்றதனால் சத்தியாய் நிற்றலையும், அலகிலா வுயிர்கள் கன்மத்தாணையினமர்ந்து செல்லத் தலைவனாய் என்றதனால் பதியாய் நிற்றலையும உணர்த்தியவாறும்.

உலகம் என்றது இவ்விடத்து உயிர்களை. ஒளி என்றது சத்தியை. தலைவன் எனினும் பதி எனினும் ஒக்கும். நீங்காமை - தாதான்மியம். அதாவது, பிரிக்கமுடியாத சம்பந்தம்.

இச்செய்யுள் முதனூல் இரண்டாஞ் சூத்திரம் போல நாற்கூற்றையுடையது. அவற்றுள், (1) முதற்கூறு:— "உலகெலாமாகி வேறாயுடனுமாய் ஒளியாயோங்கி", (2) இரண்டாங்கூறு:— "அலகிலா வுயிர்கள் கன்மத்தாணையினமர்ந்து செல்ல" (3) மூன்றாங்கூறு:— "தலைவனாய்" (4) நாலாங்கூறு:— "இவற்றின்றன்மை தனக்கெய்தலின்றி தானே நிலவுசீரமலனாகி நின்றனன் நீங்காதெங்கும்". (க)

# முதலதிகரணம்.

" உலகெலாமாகி வேறாயுடனுமாய் ஒளியா
யோங்கி என்பது."

பலவுயிர்களோடும் ஒரு இறைவன் கலந்து உடனாய் நிற்பன் என உவமை முகத்தாற் கூறுகின்றது.

ஒன்றென மறைக ளெல்லா முரைத்திட வுயிர்களொன்றி
நின்றன னென்று பன்மை நிகழ்த்துவ தென்னை யென்னி
னன்றவை பதிதா னொன்றென் றறையுமக் கரங்கடோறுஞ்
சென்றிடு மகரம் போல நின்றனன் சிவனுஞ் சேர்ந்தே.

(கோ - டு.)) மறைகள் எல்லாம் ஒன்று என உரைத்திட உயிர்கள் ஒன்றி நின்றனன் என்று பன்மை நிகழ்த்துவது என்னை என்னின் அவை பதிதான் ஒன்று என்று அறையும். அன்று. அக்கரங்கள் தோறும் சென்றிடும். அகரம் போல, சிவனும் சேர்ந்தே நின்றனன்.

(போ - ரை.) வேதங்களில் எல்லாம் ஆன்மா ஒன்றே என்று உரைக்கவும், உயிர்களோடு கலந்து உடனாய் நிற்பன் என்று இவ்விடத்து உயிர் பலவென்று கூறுவது முரணாகா தோவெனின், அவ்வேதங்களில் ஆன்மா ஒன்று என்பது ஜீவான்மாவையன்று. அச்சீவனுக்குப் பதியாகிய பரமான்மா ஒன்றே என்பது தாற்பரியமாதலால் முரணாகாதென்க. சீவான் மாக்கள் பலவாகவும், பரமான்மாவாகிய இறைவன் ஒன்றாகவும் இருத்தலால், மேலைச் செய்யுளில் சீவான்மாக்களின் இறைவன் வேறு என்றதும் பொருந்தும். வேறாயும், ஒருவனாயும் நிற்கும் இறைவன் பல உயிர்களுடன் கலந்து நின்றனன் என்பது எவ் வாறு பொருந்துமெனின், ஒன்றாகிய அகர அக்கரமானது அத னின் வேறாகிய பல அக்கரங்களோடும் கலந்து நிற்றல்போல, இறைவனும் உயிர்களோடு கலந்து நிற்றல் கூடும். அவ்வாறு கலந்து நிற்றலால் மேலைச் செய்யுளில் உடனுமாய் என்றதும் அமைவுடைத்து. (௭-று.)

சிவனும் என்றவிடத்து உம்மை சிறப்பு.

அகரமாவது, அக்கரங்களுள் முதலாவதாய் நிற்கும் அக்கரம் என்பர் ஒரு சாரார். அவ்வக்கரம் ஏனை அக்கரங்களோடு கலந்து நிற்றல் பெறப்படாமையின் அவர் கருத்துப் பொருந்தாது. இனி, அங்காத்தல் எல்லா அக்கரங்களோடும் பொருந்துதலின் அவ்வங்காத்தலே அகரமென்பர் மற்றொரு சாரார். அங்காப்பின்றியே வாக்கு மௌனமாயிருந்து ஒருவன் ஒரு பொருளைச் சிந்திக்கும்பொழுது அப்பொருளுக்குரிய சொல்லும், எழுத்தும் அகத்திற்றோன்றுமாதலின், அங்ஙனந் தோன்றுமெழுத்துடன் அங்காத்தல் பொருந்தாமையின் அவர் கருத்தும் பொருந்தாது. இவ்வாறாகவே அகரமென்பதுதான் யாதோவெனின் அகத்தின்கண் எப்பொழுதும் இயங்கிக்கொண்டிருக்கும் நாதமாகிய ஒலியே அகரமாம். அவ்வொலி அகரம்போல் ஒலித்தலால் அகரமெனப்பட்டது. அவ்வொலி பலவேறு வகைப்பட்ட அக்கரங்களாகிய ஒலிகளுக்கெல்லாம் முதலாயும், அவ்வொலிகளோடு கலந்தும் நிற்றலால் அகரம் போல் என உவமை கூறப்பட்டது. இதனையே ஆசிரியர் திருவள்ளுவரும் "அகர முதல வெழுத்தெல்லாம்" என்றார். உரையாசிரியர் பரிமேலழகரும் "நாத மாத்திரையாகிய இயல்பாற் பிறத்தல்," என அகரத்திற்கு இலக்கணங் கூறினார். (உ)

இறைவன் உயிர்களோடுகலந்து உடனாய் நிற்பினும் வேறாவனென உவமை முகத்தாற் கூறுகின்றது.

உருவொடு கருவி யெல்லா முயிர்கொடு நின்று வேறாய்
வருவது போல வீச னுயிர்களின் மருவி வாழ்வன்
றருமுயி ரவனை யாகா வுயிரவை தானு மாகான்
வருபவ னிவைதா னுயும் வேறுமாய் மன்னி நின்றே. 15

(கொ-டு.) உயிர் உருவொடு கருவி எல்லாம் கொடு நின்று வேறாய் வருவது போல ஈசன் உயிர்களின் மருவி வாழ்வன். தானும் உயிரவை யாகான். தரும் உயிர் அவனை ஆகா. இவைதான் ஆயும் வேறும் ஆய் மன்னி நின்றே வருபவன்.

(பொ-ரை.) உயிரானது நரம்பு முதலியவற்றால் கட்டப்படும் உடம்பையும், செவி கண் முதலிய கருவிகளையும் பற்றிக்கொண்டு அவ்வுடம்போடு உடனாய் நிற்கும். நிற்குங்கால், உடம்பிற்கிட்ட பெயரால் பிறன் அழைத்தவிடத்து உயிர் என்னை என்று

கேட்கும். கேட்கினும் உயிர் உயிரே; உடம்பு உடம்பே? உயிரானது உடம்பாகமாட்டாது; உடம்பு உயிராகமாட்டாது; அவ்வாறாயினும், உயிர் அவ்வுடம்பின் வேறாகியும், அவ்வுடம்பாகியும் நிற்றல், முறையே, என் செவி கேட்டது என்பதனாலும் நான் கேட்டேன் என்பதனாலும் காணப்படும். அதுபோல, முதல்வன் உயிர்களோடு அபேதமாய்க் கலந்து நிற்பன். அவ்வாறு நின்றவிடத்தும் முதல்வன் முதல்வனே. உயிர் உயிரே. முதல்வன் உயிராக மாட்டான். உயிர் முதல்வனாகமாட்டாது. அவ்வாறாயினும், முதல்வன் அறிவித்தலால் உயிரின் வேறாகியும் உடனின்று செலுத்துதலால் உயிர்கள் எல்லாமாகியும் நிற்பன். (எ-று.)

தருமுயிரவனையாகா என்றவிடத்து ஐ சாரியை. உயிரவை என்றவிடத்து அவை பகுதிப்பொருள் விகுதி.

இவ்விரண்டு செய்யுளுள், முதற் செய்யுளால் உயிரும் சிவமும் ஒன்றே என்று அபேதங் கூறுவார் மதமும், ஒன்றும் வேறுமாம் என்பேதா பேதங் கூறுவார் மதமும், இச் செய்யுளால் வேறே எனப்பேதங் கூறுவார் மதமும் மறுக்கப்பட்டு, அம்மூன்றும் உடைமையைக் கூறும் உலகெலாமாகி வேறாயுடனுமாய் என்ற முதற் கூறு சாதிக்கப்பட்டது.

உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் இறைவன் நிற்றலின்கணுண்டாம் பயன் என்னையென்பது முதலிய சங்கையுத்தரங்களனைத்தும் இரண்டாமதிகரண முதல் விரித்துக் கூறப்படுகின்றமையின் இவ்விடத்து விரித்திலர்.

இனி ஒளியா யோங்குதலாகிய சத்தியின் கட்படும் சங்கையுத்தரங்கள் மேலைச் சூத்திரத்தில முதல்வனைப்பற்றிக் கூறுமிடத்து இயைபுபற்றிக் கூறினமையின் இவ்விடத்து விரித்திலர்.

அஃதவ்வாறாகட்டும். முதனூற்பொருளை முதனூலிற் கிடந்தவாறே கூறாது, தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழி பெயர்ப்பு என்னும் நால்வகையாப்பினுள் ஒன்றுபற்றிச் செய்வது வழிநூலாகும். அவ்வாறன்றி, முதநூலாகிய சிவஞானபோதத்தில் "ஒன்றென்ற தொன்றே காணொன்றே பதி" என்னும் வெண்பாவின் பொருளை "அன்றவை பதிதானொன்றென் றறைடம்" எனவும் "கட்டுமுறுப்பும் காணமுங் கொண்டு" என்னும் வெண்பாவின் பொருளை "உருவொடு கருவியெல்லா முயிர் கொடு" எனவும், வேறு சிலவற்றைடம் முதனூலிற் கிடந்தவாறே கூறுதல் வழிநூற்குமா

பாமோவெனின், ‡ முன்னோர் மொழி பொருளேயன்றி யவர்மொழியும், பொன்னேபோற் போற்றுவமென்பதற்கும்—முன்னோரின், வேறுநூல் செய்துமெனு மேற்கோளிலென்பதற்கும், கூறு பழஞ் சூத்திரத்தின் கோள். என்பவாகலின், பொன்னேபோற் போற்றும் பயன்பறறி ஒரோவிடத்து அவ்வாறு கூறுதலும் வழிநூற்கு மரபென அமையுமென்க. இதனுனே, கூறியது கூறல் என்னும் குற்றமின்மையுங் கண்டுகொள்க. (ரு)

முதலதிகாரணம் முடிந்தது.

---

# இரண்டாம் அதிகரணம்.

## "அலகிலா உயிர்கள் கன்மத்து ஆணையின் அமர்ந்து செல்ல" என்பது.

---

இறைவன் அவ்வாறு நிற்றல் தனது சத்தியால் வினையின் பயனுகிய இன்பத் துன்பங்களை உயிர்கட்கு ஊட்டுதற் பொருட்டென்பதைத் தொகுத்துக் கூறுகின்றது.

இருவினை யின்பத் துன்பத் திவ்வுயிர் பிறந்தி றந்து
வருவது போவதாகு மன்னிய வினைப்ப லன்க
டருமரன் றரணியோடு தராபதி போலத் தாமே
மருவிடா வடிவுங் கன்ம பலன்களு மறுமைக் கண்ணே. ௬

**(கொ-டு.)** இவ்வுயிர் இருவினை இன்பத் துன்பத்து பிறந்திறந்து போவது வருவது ஆகும். வடிவும் கன்ம பலன்களும் தாமே மறுமைக் கண்ணே மருவிடா. மன்னிய வினைப் பலன்கள் தரணியொடு தராபதி போல அரன் தரும்.

**(போ-ரை.)** மேற் கூறிப்போந்த உயிர்க்கு முற் பிறவியிற் செய்யப்பட்டுக் கிடந்த இருவினையின் பயனுக இப்பிறவியில் இன்

---

‡ நன்னூல் பொதுப்பாயிரம். வெ-கூ

பத் துன்ப அனுபவமுண்டாம். அவ்வனுபவத்தால் மேலும் வினையேறும். அதனால், மீட்டு மீட்டும் பிறந் திறத்தலும், சுவர்க்க நரகங்களிற் சென்று மீளுதலுங் கூடும். உடம்பும் வினைப் பயனும் அறிவில்லாத சடமாதலால், உடம்பு வினைப்பயனை எடுத்துக்கொள்ளவாவது, வினைப்பயன் உடம்பைப் பொருந்தவாவது முடியாவாம். ஆதலால் உடம்பினையும் அவ்வுடம்பொடு நிலைபெறும் வினைப்பயன்களையும் வைத்தியனும், அரசனும் போல, முதல்வனே தனது சத்தியால் அவ்வுயிருக்குக் கூட்டுவன் (எ-று)

தாரணம் என்னும் வடமொழி கடத்தல் என்னும் பொருளைத் தருவது. ஆதலின், நோயைக் கடக்கும்படி செய்தலின் மருத்துவனுக்குத் தாரணி யெனக் காரணக் குறியாயிற்று. இச் செய்யுளிற் கூறப்பட்ட தாரணி என்பதற்கு மருத்துவன் என்பதே பொருள் என்பது "மருத்துவனுரைத்த நூலின்" எனப் பின்னர் வகுத்துக் கூறுமாற்றால் காண்க.

வைத்தியன் அரசன் என்ற உவமையைப் பின்னர் முப்பதாவது செய்யுள் முதல் முப்பத்தைந்தாவது செய்யுள்வரை விரித்துக் கூறப்படுமாதலின் ஆண்டுக்காண்க. இச்செய்யுளில் கூறப்படும் இருவினை என்பதை உலகாயதர் கூற்றாகவும், தாமே மருவிடா என்பதை மீமாஞ்சகர் கூற்றாகவும், தாரணியோடு தராபதி என்பதை உவமைக்கூற்றாகவும், இன்பத்துன்பத்திவ்வுயிர் பிறந்திறந்து வருவது போவதாகும் என்பதை உயிர் அருந்துங் கூற்றாகவும் முறையே பின்னர் விரித்துக் கூறுகின்றார். (௪)

இன்பத்துன்பங்கள் இயல்பேயன்றி வினையின்பயன் அன்றெனக் கூறும் உலகாயதரை மறுத்துரைக்கின்றன.

**இருவினை யென்னை யின்பத் துன்பங்க ளியல்பதென்னி**
**னொருதன்மை யியல்புக் குள்ள தொருவனுக் கிரண்டுசெய்தி**
**வருவதென் மலருந் தீயு மருவலின் வாசம் வெம்மை**
**தருவதே னீரென் செய்து தாணியல் பாகு மன்றே.**

**தன்னியல் பொழியப் பூவுந் தழலும்வந் தணைய நீரின்**
**மன்னிய திரண்டு செய்தி வருமிரு வினையி னானு**
**முன்னிய வின்பத் துன்ப முறுமுயி ருணர்வில் லாத**
**துன்னிய வசித்தை யின்பத் துன்பங்கள் சூழ்ந்திடாவே.**

(கோ - 6) நீர் என் செய்து தருவதுதான் இயல்புஆகும் என் அன்றே- நீரின் தன்னியல்பு ஒழிய பூவுந்தீயும் வந்தணைய இரண்டு செய்தி மன்னியது. உன்னிய இன்பத்துன்பம் உயிர்உறும். துன்னிய இன்பத்துன்பங்கள் இருவினையினானும் வரும். உணர்வுஇல்லாத அசித்தைச் சூழ்ந்திடாவே.

(பொ - ரை) இருவினை என்பதே இல்லை. இன்பத்துன்பங்களெல்லாம் இயல்பேயாகும் என்று உலகாயதர் கூறுவர். இயல்பென்பது எப்பொழுதும் ஒருதன்மையாயிருப்பதன்றி, ஒரு பொருளில் தம்முள் மாறுபட்ட இன்பத்துன்பங்களாகிய இரண்டு தன்மையாக இருக்குமென்றல் எவ்வாறு பொருந்தும்? அவ்வின்பத்துன்பம் காரணத்தாலன்றிப் பொருந்தாவாம். அக்காரணம் இரு வினையேயாம். தண்ணீரில் பூவும் அக்கினியும் பொருந்துதலால், மணமும் சூடும் உண்டாவனவாம். அவ்வாறன்றித் தண்ணீரில் மணமும் சூடுங் கிடையா. மணமும் சூடும் இயல்பு எனின், அன்று. எப்பொழுதும் ஒரு தன்மையான தட்பமாயிருத்தலே தண்ணீருக்கு இயல்பு. வாசமும் வெப்பமும் தண்ணீருக்கு மலர்தீக்களின் செயற்கையான் உளவாயின. இவைபோல, எப்பொழுதும் ஒரு தன்மையான அறிவே உயிருக்கு இயல்பு. அவ்வியல்புடைய உயிரே கருதப்படும் இன்பத்துன்பங்களை யநுபவிக்கும். அவ்வுயிருக்கு நெருங்கிய இன்பத்துன்ப அநுபவம் இருவினையாகிய செயற்கையாலுண்டாம். அவ்வனுபவம் உடம்புக்கே எனின், உடம்பு சடமாகையால் அதற்கு அநுபவித்தல் கூடாது. (எ-று)

இருவினை யென்னை என்ற விடத்து என்னை என்றது இன்மை குறித்து நின்றது. இயல்பது என்றவிடத்து அது பகுதிப் பொருள் விகுதி. அவ்விகுதி இயல்பு என்னும் அப்பண்பையே உணர்த்தி நின்றது. உணர்வில்லாத அசித்து என்ற விடத்து அசித்து என்றது வாளாபெயராய் நின்று சடத்தைக் குறித்தது. † "அடியளந்தான்றாஅயது" என்ற விடத்து அடியளந்தான் என்றது வாளா பெயராய் நின்று விட்டுணுவைக் குறித்தாற்போல. அசித்தை என்பது அசித்துக்கு என்னும் பொருள்பட வந்த வேற்றுமை மயக்கம். (௫, ௬.)

---

† திருக்குறள், மடியின்மை. செ-ம.

இன்பத்துன்பங்கட்குக் காரணம் முயற்சியே என்பாரை மறுத்துரைக்கின்றன.

இம்மையின் முயற்சி யாலே யிருநிதி யீட்டி யின்ப
மிம்மையே நுகர்வர் செய்தி யிலாதவர் பொருளு மின்றி
யிம்மையே யிடரு ழப்பர் வேறிரு வினைய துண்டே
லிம்மையின் முயற்சியின்றி யெய்திட வேண்டு மிங்கே.

இருவினைச் செயல்கா ணிம்மையிரும்பொரு ளின்பம்வேண்டி
வருவினை செய்யுங் காலே மடிவரு மடியு மின்றித்
தருவினை யதனி லத்தந் தானறுந் துயருந் தங்கு
மொருவினை செய்யாதோரு முடையரிவ் வுலகத் துள்ளே.

(கொ-டு.) முயற்சியாலே இம்மையின் இருநிதி ஈட்டி இன்பம் இம்மையே நுகர்வர். செய்தி இலாதவர் பொருளும் இன்றி இம்மையே இடருழப்பர். இருவினையது வேறு உண்டேல், இம்மையின் முயற்சி இன்றி இங்கே எய்திட வேண்டும். இம்மை இரும் பொருள் இன்பம் வேண்டி வருவினை செய்யும் காலே மடிவரும். மடியும் இன்றி தருவினை அதனில் அத்தந்தான் அறும். துயருந் தங்கும். இவ்வுலகத்துள்ளே ஒருவினை செய்யாதோரும் உடையர். இருவினைச் செயல்காண்.

(போ-ரை.) இன்பத் துன்பங்களுக்குக் காரணம் முயற்சியேயாம். வினை என்பது பொருந்தாது. எதனாலெனின், முயற்சியால் இவ்வுலகின்கண் மிகுந்த பொருள்களைச் சேர்த்து இன்பத்தையும் இப்பிறப்பின்கண் அனுபவிப்பர். முயற்சியில்லாதவர் பொருளீட்டுதலுமின்றி இப்பிறப்பின்கண்ணே துன்பத்தை அநுபவிப்பர். இவ்வநுபவத்தில் வைத்து முயற்சியே இன்பத் துன்பத்திற்குக் காரணம் எனப் பிரத்தியட்சமாக அறியக்கிடத்தலின் அதுவே அமையும். அதுவன்றி, இருவினை யென்பது ஒன்றுண்டு என வேறுமோர் காரணங் கொள்ளில், அவ்வினையானது இப்பிறப்பின்கண் யாதொரு முயற்சியின்றியும் இவ்விடத்துப் பொருள் கைகூடச் செய்யவேண்டும். அவ்வாறின்மையால்,

முயற்சியைவிட வேறு காரணங் கொள்ளுதல் மிகை யென்னுங் குற்றமாகாதோவெனின், ஆகாது. இம்மைக்கண்ணே மிக்க பொருளின்பங்கள் கருதி வருகின்ற முயற்சியைச் செய்யுமிடத்து அம்முயற்சி முற்றுப்பெறாது தளர்வுண்டாகலானும், தளர்வுமின்றிப் பொருந்திய முயற்சியில் பயனின்றிப் போதலானும், முயற்சியினாலே துன்பம் எய்துதலினாலும், இவ்வுலகின்கண் யாதொரு முயற்சிசெய்யாதாரும்செல்வராய்த்தங்குதலினாலும், அம்முயற்சி பிறழ்தல் காணக்கிடத்தலின், இவ்வாறு பிறழ்தற்குரிய காரணம் வேறுண்டென்பது பெறப்படுதலால், அக்காரணமே வெளிப்பட அறியமுடியாத சஞ்சிதமாகிய இருவினையென்றறியப்படும். ()

ஒருவினை செய்யாதோரும் செல்வராதல் கிழியீடு நேர்படப் பெற்றார் மாட்டுக் காணப்படும். கிழியீடு—நிலத்திற் புதைந்திருக்கும் நிதி. உடையர் என்றது இவ்விடத்துச் செல்வரை. அது, † "உடையார் முனில்லார் போல்," என்பதனானும் அறிக.

இவை நான்கு செய்யுளானும் உலகாயதர் மதம்பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து, சஞ்சிதமெனப்படும் இருவினையுண்டென்பது இன்பதுன்பமாகிய காரிய ஏதுவின் வைத்துச் சாதிக்கப்பட்டது.

அவ்வாறாயின், இன்பத்துன்பத்திற்கு இருவினையே அமையுமாகலின், ¶ முயற்சி திருவினையாக்கு முயற் றின்மை—இன்மை புகுத்திவிடும். என்பதுபற்றிச் செல்லும் மனவெழுச்சிக்குப் பயனில்லையே யெனின், அம் மனவெழுச்சிக்குப் பயன் முன்வினைப்பயனை யனுபவித்தற்குத் துணையாதலும், பின் வினைக்கு ஏதுவாதலுமாம் என அடுத்துவரும் செய்யுட்களாற் கூறப்படும். (எ.) (அ.)

முயற்சியின் பயன் மேல் வினையும் முன்வினைப்பயனை யநுபவிக்கச் செய்யுந் துணையுமென இருதிறப்படும் எனக் கூறுகின்றது.

**பேறிழ வின்ப மோடு பிணிமூப்புச் சாக்கா டென்னு**
**மாறுமுன் கருவுட் பட்ட தவ்விதி யனுபவத்தா**
**லேறிடு முன்பு செய்த கன்மமிங் கிவற்றிற் கேது**
**தேறுநீ யினிச்செய் கன்ம மேலுடற் சேரு மென்றே. ௯௨**

† திருக்குறள், கல்வி. செ-ஞ.

(**கோ - ௬.**) பேறு இழவு மூப்புச் சாக்காடு இன்பமோடு பிணி என்னும் ஆறும் முன் கருவுட்பட்டது. அவ்விதி ஏறிடும் அனுபவத்தால். இனிச் செய் கன்மம் மேலுடற் சேரும். முன்பு செய்தகன்ம மிங்கு இவற்றிற்கு ஏது என்றே நீ தேறு.

(**போ - ரை.**) எடுத்த உடம்பில் வரக்கடவனவாகிய இன்பத் துன்பங்கட் கேதுவான செல்வ வறுமைகளும், அவற்றால் வரும் உயர்வு இழிவுகளும், அவற்றாலாய இன்பத் துன்பங்களுமாகிய ஆறும் உடம்பு எடுப்பதற்கு முன்னே சூக்குமமாய்க் கருவினுள் அமைந்து கிடந்தனவாம். அன்றி, அப்போதப்போது உளவாவனவல்ல. முன் கருவுட் கிடந்த அவை பின்னர் அவற்றை அநுபவித்தற்குத் துணையாகிய முயற்சியால் தூலமாய் வந்து கூடும். அவ்வாறநுபவித்தற்குத் துணையாக உண்டான முயற்சி அநுபவிக்கச் செய்தலோ டொழியாது மற்றோருடம்பிற் பொருந்துவதான அவ்வறுவகைக்கும் வித்தாய் நிலைபெறும். முற்பிறவியிற் செய்த முயற்சி இப்பிறவியில் வரும் இவ்வாறற்கும் ஏதுவாயினாற் போல, இப்பிறவியிற் செய்யும் முயற்சி மேல் வினைக்கு வித்தாதலே யன்றி, இப்பொழுது பயன்றருவதில்லை யென்பதனை நீ தெளிவாயாக. (எ - று.)

பிணி என்றது இவ்விடத்துத் துன்பத்தை யுணர்த்தி நின்றது. பிணி துன்பத்தை யுணர்த்துமென்னும் இக்கருத்துப் பற்றியே "நோயு மின்பமும்" என்றார் தொல்காப்பியனாரும்.

இவ்விடத்து மூப்பு என்றது உயர்ச்சியை. அது, "விண்ணோர்க் கெல்லா மூப்பாய்" என்பதனாலும், ¶மூத்த திருப்பதிகம் என்பனானு மறிக. இழிவு, சாக்காட்டை யொத்தலின், அதனைச் சாக்காடு என்றுபசரித்தார். மூப்புச் சாக்காடு என்பதற்கு உயர்வு இழிவு எனக்கூறாது, முதுமை, இறத்தல் எனப் பொருள் கூறின், பேறிழவு இன்பம் பிணிபோல இம் மூப்புச் சாக்காடுகள் தம்முள் மறுதலையாகாமையானும், அவற்றின் மறுதலைப் பொருள்களை வேறு கூறாமையானும், துன்பத்துள் முதுமை இறத்தல்கள் அடங்குதலின் வேறு கூற வேண்டாமையானும், காலம்பற்றி ஒருதலையான் வரும் மூப்புக்குக் கன்மங் காரணம் எனக் கூறவேண்டாமையானும், அம் முதுமையிறத்தல்களை உடன்வைத்தெண்ணி உரைசெய்தல் பொருந்தாது.

¶ திருக்குறள் ஆள்வினையுடைமை. செ-சு.

இன்பமோடு என்றவிடத்து ஓடு எண்ணின்கண் வந்தது. உடனி கழ்ச்சிப் பொருளின்கண் வந்ததன்று. கருவினுள் ஆறும் அமைந்து கிடக்கும் சூக்கும அவத்தையிற் பாகுபாடின்மை பற்றி, ஆறும் பட்டன என்று கூருது, பட்டது என்று ஒருமைப்பாலாற் கூறினர். சூக்குமமாய்ப் பட்டது என்று கூறவே, ஏறிடும் என்பது தூலமாய் விளங்குமென்பதா யிற்று. சூக்குமமாய்ப் பாகுபாடின்றிக் கிடந்து பின் தூலமாய் விளங்கும் என்ற இது சற்காரிய வாதம். அனுபவத்தால் ஏறிடும் என்றவிடத்து, அநு பவம் என்பது அதற்குக் காரணமாகிய முயற்சியைக் குறித்தது. முன்பு செய்த முயற்சி இங்கு இவற்றிற்கு ஏது என்றது, இப்பொழுது செய்யும் முயற்சி இனிவரும் அவ்வறு வகைக்கும் ஏதுவாகும் என்பதற் குவமையாக எடுத்துக்காட்டுதலின், எடுத்துக் காட்டுவமை. இச்செய்யுளில் கன்மம் என்றது முயற்சியை. (மேலைச செய்யுளில் வருவினை, தருவினை, ஒரு வினை என்றவிடங்களில் வினை என்றதும் முயற்சியை.) (௩௮)

வினையால் உடலும, உடலால் வினையும் வித்தும் மரமும் போலாமெனக் கூறுகின்றது.

உடற்செயல் கன்ம மிந்த வுடல் வந்த வாறே தென்னின்
விடப்படு முன்னு டம்பின் வினையிந்த வுடல்வி ளைக்குந்
தொடர்ச்சியா லொன்றுக் கொன்று தொன்றுதொட் டநாதிவித்தி
னிடத்தினின் மரம ரத்தின் வித்தும்வந் தியைய மாபோல்.

(கோ - ௯.) வித்தின் இடத்தினின் மரம், மரத்தின் விதலும் வந்து இயையும் ஆபோல் ஒன்றுக்கொன்று தொடர்ச்சியால் தொன்று தொட்டு அநாதி.

(போ - ரை.) உடலின் முயற்சியால் வினை உண்டாம். அவ்வாருயின் இவ்வுடல் உண்டாதற்குக் காரணம் யாதெனின், விடப்பட்ட முன் உடம்பின் வினையாம். அவ்வினையே இவ்வு டம்பை உண்டுபண்ணும். இவ்வாறு உடம்பால் வினையும், வினை யால் உடம்பும் வருதல், வித்தின் கண் மரமும், மரத்தின்கண் வித்தும் வந்து பொருந்துமாறு போலவாம். வினை, உடல் என் னும் இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று காரண காரியமாய்த்தொன் று தொட்டு ஒன்றன்பின் ஒன்ருக வருதலால், அவற்றிற்கு முற் பாடு கூறமுடியாது. (எ - று.)

வித்தும், மரமும் ஒன்றுக் கொன்று காரண காரியமாயிருப்பினும், இறைவன் முதலாவதாக இரண்டிலொன்றைத் தான் உற்பத்தி செய்திருக்க வேண்டும். அது மரமாகவே யிருக்க வேண்டும். இக்கருத்துப்பற்றியே "விச்சதின்றியே விளைவு செய்குவாய்" என, மணிவாசகப் பெருமான் அருளிச் செய்தனர். இதுபோல, கேவலத்தில் அறிவு தொழிற்பாடின்றிக் கிடந்த ஆன்மாவிற்குக் குருடனுக்குக் கோல் கொடுப்பது போல் இறைவன் சூக்கும தேகத்தைக் கருணையினாற் கொடுப்பன். அச்சூக்கும தேகத்தை இறைவன் தருதல் வினைகாரணமாக அன்று. அறியாமையுட்பட்டு வருந்துங் காரணத்தால் தரப்பட்டதாம். அச்சூக்கும தேகம் முத்தியடையும் வரை எத்துணைப் பிறவிகளை யெடுப்பினும் ஒன்றாகவே யிருந்து முத்தியடையினீங்கும். அச்சூக்கும தேகம் எல்லா வுயிர்க்கும் ஒரு தன்மையாகவே யிருக்கும். இருப்பினும், முன்பொருந்தி நின்ற அறியாமை பலவேறு வகைப்படுமாதலின், அவ்வறியாமைக்கேற்ப அச்சூக்கும தேகத்தினின்று தூலவுடம்பும், அவ்வுடம்பால் வினையும் மாறி மாறி வரும். ஆதலால், வினை உடல் என்னும் இரண்டிற்கும் மூலமாகிய சூக்கும தேகம் ஒன்றுண்டென்பதால் முற்பிற்பாடு கூறமுடியாத குற்றத்திற் குட்படாமையறிக. (கO.)

முயற்சியின்றி வினைப்பயன் அநுபவித்தல் கூடாதென்றும் முன்வினைப்பயன் அநுபவிப்பதற்கான அம்முயற்சி மேல் வினைக்கு வித்தாம் என்றும் கூறுகின்றது.

**முற்செயல் விதியை யிந்த முயற்சியோ டனுப வித்தா**
**லிச்செயல் பலிக்கு மாறென் னி தமகி. தங்கண் முன்ன**
**ரச்செய லானு லிங்கு மவைசெயின் மேலைக் காகும்**
**பிற்செயா தனுப விப்ப தின்றுபின் றொடருஞ் செய்தி.**

(கோ - ௫.) செய்தி பின் தொடரும்.

(போ - ரை.) இத்துணையுங் கூறியவாற்றால், முற்பிறவியில் செய்த முயற்சி யிப் பிறவியில் வரும் செல்வ முதலிய மேற்கூறிய ஆறற்கும் ஏதுவென்பதும், அச்செல்வ முதலியவற்றை இப்பிறவியில் முயற்சியாகிய துணையால் அநுபவித்தல்கூடுமென்பதும் பெற்றாம். அங்ஙனமாயின், அவ்வாறு முன் வினைப்பயனுக்கீடாக இப்பொழுது வருகின்ற முயற்சி மேல் உடலெடுத்

தற்குரிய வினையாமாறு யாங்ஙனமெனின், முன் வினையெனப் படும் இதம் அகிதங்களாவன முற்பிறவியில் அவ்வாறு நிகழும் முயற்சியே யன்றி வேறின்மையானால், இப்பொழுதும் அம் முயற்சி நிகழ்ந்தால் அது மேலைக்கு வினையாமென்பது தானே விளங்கும். அவ்வாறாயின், சிலவிடத்து முயற்சியின்றி இருப் பார்க்கு மேல் வினையேறுமாறு இல்லையென்று கொள்ளவருமே யெனின், அநுபவமாவது பின்னர் முயற்சியை ஒட்டியே நிகழு மாதலின், பிராரத்தவினையின் அநுபவமுள்ள அளவும் முயற்சியும் உறுதியாய் உண்டென்பது பெறப்படும். ஆதலின், அநுபவ முள்ளவிடத்து மேல்வினை ஏறுமாறில்லை என்றல் பொருந்தாது. ()

மேல், முயற்சி செய்யாதாரும் செல்வராய்த் தங்குதல் என்றது, வருந் திச் செய்யவேண்டாது எளிதிற் பெறுவது நோக்கியே ஆதலின், அத னோடு முரணமை அறிக.

மரங்கள் முதலியவற்றிற்கும் தண்ணீர் முதலியவற்றை ஏற்றுக்கோடற் குரிய சூக்கும முயற்சி யுண்மையின், முயற்சியை ஒட்டியே அநுபவம் நிக ழும் என்பது அவற்றினுங் கண்டுகொள்க. இம் முறைமை எவ்விடத்தும் பிறழாமை உணர்த்துதற்காகவே, பிற்செயா தனுபவிப்பதின்று என, எதிர்மறை முகத்தால் வரையறுத்துக் கூறினார். முற்செயலானால் என்ற விடத்து ஆனால் என்றது அச்செயலே எனத் தெளிவின்கண் வந்தது. மேல், உஎ-வது செய்யுளில் "காண்பவன் சிவனேயானால்" என்றாற்போல.

முயற்சியாகிய துணையைக் கொண்டே அநுபவம் நிகழும் என்றத னால், பிராரத்த அநுபவத்திற்கு முயற்சி இன்றியமையாதென்பது பெறப் படும். படவே, முயற்சியெல்லாம் பயனொடு கூடியதாக வேண்டும். சில முயற்சி பயனொடு கூடியதாகவும், சில முயற்சி பயனொடு கூடாததாகவும் காணப்படுகின்றதே யெனின், கூறுதும். பிராரத்த அநுபவத்திற்குத் துணையான முயற்சியென்றும், சஞ்சித கன்மம் பக்குவமாதற்குத் துணை யான முயற்சியென்றும் முயற்சி இருவகைப்படும். முன்னையது பய னொடு கூடியது. பின்னையது பயனொடு கூடாதது. அஃதாவது, சஞ் சித கன்மம் புத்தி தத்துவமும் மாயையும் பற்றுக்கோடாக இருக்குமாத லின், புத்தியினிடத்து வாசனா ரூபமாயிருக்கும் அந்தச் சஞ்சிதம் மேலு மேலும் முயற்சிக்கப்பட்டு இனி முயற்சிக்கவேண்டாமென்ற நிலையில் பிராரத்தமாய்ப் பலனுக்கு வரும். வாசனைபற்றி மேலுமேலும் முயற்சித் தலே பக்குவமாதல். பக்குவமாவதற்கான அம்முயற்சி அப்பொழுது

பலன்றருவதில்லை யென அறிந்து கொள்க. அவ்வாருயின், ஒன்றன்பொருட்டு வந்தது மற்ருென்றன் பொருட்டாதல் கண்டிலமாதலின், முற்பிறவியில் வினைப்பயனுக் கீடாக வந்த முயற்சி இப்பிறவிக்கு வித்தானவாறுதான் எவ்வாறெனின், அஃதுணர்த்துதற் கெழுந்தது வருஞ் செய்யுள். ()

முயற்சியானது செயல்வகையால் அநுபவமாயும் யான் செய்தே னென்னும் கருத்து வகையால் மேல் வினைக்கு வித்தாயும் இருதிறப்படும் எனக் கூறுகின்றது.

மேலைக்கு வித்து மாகி விளைந்தவை யுணவு மாகி
ஞாலத்து வருமா போல நாஞ்செயும் வினைக ளெல்லா
மேலத்தான் பலமாச் செய்யு மிதமகி தங்கட் கெல்லா
மூலத்த தாகி யென்றும் வந்திடு முறைமை யோடே.

(கோ - ௫.) ஞாலத்து விளைந்தவை உணவும் ஆகி மேலைக்கு வித்தும் ஆகி வரும் ஆ போல, நாம் செயும் வினைகளெல்லாம் என்றும் முறைமையோடே ஏலத்தான் பலம் ஆ (வந்திடும்) செய்யும் இதம் அகிதங்கட்கெல்லாம் மூலத்தது ஆகி வந்திடும்.

(போ - ரை.) உலகத்தின்கண் உணவின் பொருட்டு விளைந்த கனி முதலாயின உணவுமாய், மேலைக்கு வித்துமாய் வருமாறு போல, நாம் செய்தேம் என்னும் முனைப்பால் செய்யப்படுவதாகிய முயற்சியும், எக்காலத்தும் முறையாற் பொருந்தச் செயல்வகையால் வினைக்கீடாய் வரும் அநுபவத்தைப் பயக்கும். நான் செய்தேனென்னும் கருத்து வகையால், செய்யாநின்ற இதம், அகிதம் எனப்படும் ஆகாமிய வினையைப் பயக்கும்.(எ-று)

எச்செயலுஞ் சிவன்செயலெனக் காணுவார்க்கு மேல் வினையேறுமாறின்றிப் பிறவியறுமென்பது கருத்து. இக்கருத்துப் பற்றியே "சிவன் செயலாலே யாதும் வருமெனத் தேறே—ஞெ மவந்தருநினைவை யெல்லா மகற்றிலே—ஞைசைவெள்ளங் கவர்ந்துகொண் டிழுப்ப வந்தக் கட்டிலே யகப்பட் டையோ—பவந்தனை யீட்டி யீட்டிப் பதைக்கின்றேன் பாவியேனே." என்றனர் ஸ்ரீதாயுமான சுவாமிகளும்.

வினை ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என மூவகைப்படும். அவற்றுள் ஆகாமியமாவது, நல்வினை தீவினை என்னும் முயற்சி. சஞ்சிதமா

வது, அம்முயற்சி பலனுக்கு வாாமல் புண்ணிய பாவமாய்க் கட்டுப்பட்டிருப்பது. கட்டுப்பட்டிருக்குமிடம் செய்தவன் புத்திதத்துவமும் மாயையுமாம். பிராரத்தமாவது, அம்முயற்சியின் பயனாகிய இன்பத்துன்ப அநுபவம். இம்மூன்றற்கும் திருட்டாந்தம் வருமாறு:—வித்தை நிலத்திலிடுதல் ஆகாமியம்; அவ்வித்து இட்டவன் புத்தி'தத்துவம் பற்றுக்கோடாகப் பலன் தரும்வரை பூமியிற் றங்கியிருப்பது சஞ்சிதம்; பலன் அநுபவத்திற்கு வருதல் பிராரத்தமாம்.

முயற்சியால் வினையும், வினைப்பயனை அநுபவித்தலால் முயற்சியுமாகிய இவ்வியல்பு கேவலத்தினின்று நீங்கியது முதல் முத்தியடையும் வரையும் இடையீடின்றித் தொடர்ச்சியாய் வருமாதலின், "என்றும்" என்றார். மூலத்தது என்னும் ஒருமை மூலமாகிய ஆகாமிய வினையின்மேல் நின்றது.

அடுத்த செய்யுளில் இதமகிதங்களென்பது என்றதும் மூலமாகிய ஆகாமிய வினையை. சஞ்சித பிராரத்தங்களுக்கு முதலாதலின், ஆகாமியம் மூலம் எனப்பட்டது. முறைமையோடே என்றவிடத்து ஒடு, முறைமையால் எனப் பொருள் குறித்தலின், ஆனுருபாயிற்று. இது, $ "ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்" என்றாற்போல.

பேறிழவின்பமோடு என்பது முதல் இவை நான்கு செய்யுளானும் முயற்சிக்குப் பயன் முன் வினைப்பயனை'யநுபவித்தற்குத் துணையாதலும் மேல் வினைக்கு வித்தாதலுமாம் எனக் கூறு முறையில், முன்வினைப் பயனை இப்பொழு தனுபவித்தொழித்தால் மேல்வினை வருதற்கு வழியின்மையான் வினையுண்மை பெறப்படா தென்பார் மதம்பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து, வினைப்பயனை யநுபவிக்குங்காலத்து இது இறைவன் ஆணையால் வந்ததென எண்ணாது தன் செயலால் வந்ததென்றெண்ணுங் கருத்து வகையால் மேல்வினை ஏறும் எனக்கூறி, இரு வினையுண்டென்பது வலியுறுத்தப்பட்டது. (கஉ.)

கன்மமே யன்றி இறைவனில்லை என்னும் மீமாஞ்சகர் மதத்தை மறுத்து, இதம் அகிதம் என்னும் முயற்சி இறைவனால் என்றுகொள்ளப்பட்டு இன்பத் துன்பப் பலனை அவ்விறைவன் தருவனெனக் கூறுகின்றது.

**இதமகி தங்களென்ப திகன்மன வாக்குக் காயத்**
**திதமுயிர்க் குறுதி செய்த லகிதமற் றதுசெய் யாமை**
**யிதமகி தங்களெல்லா மிறைவனே யேற்றுக் கொண்டிங்**
**கிதமகி தத்தா லின்பத் துன்பங்க ளீவ னன்றே.**

---

$ தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமையியல், சூ-ம், சஉ

(கொ-டு) உயிர்க் குறுதி செய்தல் இதம். மற்றது செய்யாமை அகிதம். இறைவனே இதம் அகிதங்களெல்லாம் ஏற்றுக்கொண்டு இங்கு இதம் அகிதத்தால் இன்பத்துன்பங்கள் ஈவன் அன்றே.

(போ - ரை) இதம் அகிதங்களாகிய வினைகளது இயல்பு யாதெனின், நினைத்தலும் சொல்லுதலும் செய்தலுமாகிய மாறுபட்ட மன வாக்குக் காயங்களால் வேதாகமங்களில் உயிர்க் குறுதி என விதிக்கப்பட்டவற்றைச் செய்தலே இதம். அவ்வேதாகமங்களில் விலக்கியவற்றைச் செய்தலே அகிதம். இதம் செய்பவன் தன் மனதில் இதம் என்று கருதிச் செய்யுங்காலத்து அவனை யறியாது அகிதம் வருதலுங்கூடும். அகிதம் செய்பவனிடத்து இவ்வாறு இதம் வருதலுங்கூடும். அன்றியும், அகிதம் செய்பவன் அதனை அகிதம் என எண்ணான். ஆதலால், இதம் அகிதமாகிய அவ்விரண்டினையும் அறிபவன் அம்முதல்வனேயாம். அம்முதல்வனே அந்த இதம் அகிதங்களை ஏற்றுக்கொண்டு இவ்விடத்து, அவற்றிற்கேற்ப இன்பத்துன்பமாகிய பயனைத்தருவன்.()

இதம் அகிதங்களை இறைவன் ஏற்றுக்கொள்வதற்கு ஏது கருணையே எனக் கூறுகின்றது.

இறைவனிங் கேற்ப தென்னை யிதமகி தங்களென்னி
னிறைபர னுயிர்க்கு வைத்த நேசத்தி னிலைமையாகு
மறமலி யிதஞ்செய் வோருக் கநுக்கிர கத்தைச்செய்வன்
மறமலியகிதஞ் செய்யி னிக்கிரகத்தை வைப்பன்.

(கொ - டு) இறைவன் இதம் அகிதங்கள் இங்கு ஏற்பது என்னை என்னின்.

(போ - ரை) ஆன்மாக்கள் செய்த இதம் அகிதமாகிய வினையை முதல்வன் இவ்விடத்து ஏற்றுக்கொள்ளுதற்குக் காரணம் யாதெனின், எவ்விடத்தும் நிறைந்த அம்முதல்வன் உயிர்கள் முத்தியின்பம் அடைதற்பொருட்டு வைத்த கருணையேயாம். கருணையாயினும், வினையாகிய காரணம் இதம், அகிதம் என இருவேறுவகைப்பட நிகழ்ந்தமையின், அவற்றிற்கேற்ப அறமிகுந்த நல்வினைசெய்வோர்க்கு இன்பத்தையும், மறமிகுந்த தீவினை செய்வோர்க்குத் துன்பத்தையும் செய்வன். (எ-று) (கச)

இறைவனால் செய்யப்படும் அநுக்கிரகம், நிக்கிரகம் ஆகிய இரண்டும் கருணையே எனக் கூறுகின்றது.

நிக்கிர கங்க டானு நேசத்தா லீசன் செய்வ
தக்கிர மத்தாற் குற்ற மடித்துத்தீர்த் தச்சம் பண்ணி
யிக்கிர மத்தி னாலே யீண்டற மியற்றி டென்ப
னெக்கிர மத்தி னாலு மிறைசெய லருளே யென்றும்.

(கோ - ள்) ஈசன் நிக்கிரகங்கள் செய்வதுதானும் நேசத்தால்.

(போ - ரை) முதல்வன் நல்வினை செய்தாருக்கு அநுக்கிரகம் செய்தல் போல, தீவினை செய்தாரைத் தண்டித்தலும் நல்வழிப்படுத்தற் பொருட்டுச் செய்யும் கருணையேயாம். தண்டித்தல் கருணையாவது எவ்வாறெனின், அக்கிரமத்தாற் செய்யப்பட்ட குற்றங்களைத் தண்டித்து நீக்குதலால், அச்சமுண்டாகச் செய்து இம்முறைமையால் இவ்வாறு குற்றஞ் செய்யாது, இனி அறத்தினைச் செய்திடல் வேண்டும் என உணர்த்துவனாதலின் கருணையேயாம். வினையின் பயனை யனுபவிக்கும் முறைமையிற் செய்யும் திரோபவ கிருத்தியமும், உடம்பினை நீக்குதலாகிய சங்கார கிருத்தியமும் உளப்பட அம்முதல்வன் செய்யும் எச்செயலும் எக்காலத்தும் கருணையே என்பதற்குஇழுக்கில்லை.()

நிக்கிரகங்கடானும் என்ற விடத்து, தான் அசை. உம்மை, அநுக்கிரகஞ்செய்தலேயன்றி என இறந்ததுதழுவிற்று. நிக்கிரகத்தின் கொடுமையைக்குறித்த இழிவு சிறப்புமாம்.

திரோபவித்தல், சங்கரித்தல்களுள்பட்ட செயல்களும் அருளேயாதலின், "எக்கிரமத்தினாலு மிறை செயலருளே" என்றார். அவ்விடத்து ஏகாரம், அருள் என்பதன்கண் ஐயமறுத்தலின் தேற்றம்.     (கரு.)

தண்டித்தலும் கருணையே என்பதை உவமை முகத்தாற் கூறுகின்றது.

தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்க டஞ்சொ லாற்றின்
வந்திடா விடினு றுக்கி வளாரினா லடித்துத் தீய
பந்தமு மிடுவ ரெல்லாம் பார்த்திடிற் பரிவே யாகும்
இந்தநீர் முறைமை யன்றோ வீசனார் முனிவு மென்றும்.

கo.

**(போ-ரை.)** உலகத்தில் தந்தை தாயர்களாவார் பெறப்பட்ட தம்முடைய புதல்வர்கள் தம்முடைய சொல்வழி நடவார்களாயின், அப்புதல்வர்களை அச்சமுறுத்தி வளாரினாலே அடித்துக் கொடிய விலங்குமிடுவர். பார்க்குமிடத்து இச் செயல்கள் செயல் வகையால் துன்பஞ் செய்தல் போலத் தோன்றினும், நல்வழிப்படுத்தவேண்டும் என்னுங் கருத்து வகையால் அருளேயாம் என்பது, பின்னர் நல்வழிப்படுதலா லறியப்படும். இதுபோல், முதல்வன் செய்யும் தண்டமும் எக்காலத்தும் கருணையேயாம். (எ-று.)

நீர் முறைமை என்பது நீர்மை போலும் முறைமை என்னும் பொருள் குறித்த உவமைத்தொகை. நீர்மை—இயல்பு.

இதமகிதங்களென்பது முதல் இவை நான்கு செய்யுளானும் கன்மமேயன்றி இறைவன் வேண்டாவென்னும் மீமாஞ்சகர்மதம்பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து மேல் ௪-வது செய்யுளில், மன்னிய வினைப்பலன்க டருமரன் என்றது பொருந்துமாறும், அங்ஙனந் தருதல்பற்றி அவனுக்கிழுக்கின்மையுங் கூறப்பட்டன. (கசு.)

வினையே பலன்றரு மென்பாரை மறுத்து வினையானது செய்தபொழுதே கெட்டொழிதலால் இன்பத் துன்பப் பலனை அவ்வினை தராதென்றும், இறைவனே தரவேண்டுமென்றும், கெட்டுப் பலன் தருதல் எவ்விடத்துஞ் செல்லாதென்றும் கூறுகின்றன.

செயல்களே பலத்தைச் செய்யுந் தெய்வம்வேண் டாவிங்கென்னின்
முயலுமிச் செயல்களிங்கே முழுவது மழியு மெங்கே
பயனளிப் பனவழிந்தே பலன்களைப் பண்ணுங் கெட்டே
வயலிடுந் தழையுந் தின்னு மருந்தும்பின் பலிக்கு மாபோல்.

செய்க்கிடுந் தழையுந் தின்னுந் திரவிய மதுவும் போல
வுய்த்திடுஞ் செய்தி கெட்டே யுறுவிக்கும்பலத்தை யென்னின்
வைத்திடுஞ்சோறும்பாக்குமருந்தினர்வயிற்றின்மாய்ந்தான்
மெய்த்திடும் பலமு னக்கு மலமலான் வேறு முண்டோ.

(கோ-ட.) செயல்களே பலத்தைச் செய்யும். இங்குத் தெய்வம் வேண்டா என்னின், முயலும் இச் செயல்கள் இங்கே முழுவதும் அழியும். எங்கே பயனளிப்பன. வயலிடும் தழையும் தின்னும் மருந்தும் கெட்டே பின் பலிக்கும் ஆ போல், அழிந்தே பலன்களைப் பண்ணும். பலத்தை உறுவிக்கும். உனக்கு மெய்த்திடும் பலம்.

(போ-ரை.) மேற் கூறியவாறு தண்டித்தலுங் கருணையே யாயினும், வினைகளே தம் பயனைத் தருதல் கூடும். ஆதலின், வினைப்பயனைத் தருதற்கு இறைவன் வேண்டாவென்னின், செய்த அவ்வினைகள் செய்தபொழுதே இவ்விடத்து முழுவதுங் கெட்டொழிவனவாம். அவ்வினைகள் பின்னின்று பயன்றருதல் செல்லாதென மறுக்க. வயலின் கண் இட்ட தழைகளும், உண்ணப்பட்ட மருந்துகளுங் கெட்டுப் பின்னர்ப் பலிக்குமாறுபோல, வினையுங் கெட்டுப் பலத்தைப் பொருந்தச் செய்யுமென்பது பொருத்தமாதலின், வயலின்கணிட்ட தழையும் தின்னப்பட்ட மருந்தும் போல முயற்சியாலாகிய வினை கெட்டே பலத்தைப் பொருந்தச் செய்யுமெனின், உண்ணப்பட்ட சோறு முதலிய உணவுகளும் பாக்கு முதலியனவும் உண்டார் வயற்றின்கண் கெடப்பெற்றால், உனக்கு மெய்யின் கண் வரும் பலன் மலமன்றி வேறில்லையாதலின், கெட்டவை பயன்றருமென்பது, தழை மருந்து முதலிய சிலவற்றினன்றி எல்லாவற்றினுஞ் செல்லாது ஆதலின், வினை கெட்டுப் பலன்தருமென்றல் பொருந்ாது. (எ-று.)

செய்க்கிடுந் தழையுந் தின்னும் திரவிய மதுவும் போல, உய்த்திடுஞ் செய்தி கெட்டேயுறுவிக்கும் பலத்தை யென்னின் என்று மேலைச் செய்யுளிற் கூறியதைக் கெட்டுப் பலன்றருதல் எவ்விடத்துஞ் செல்லாதென்று கூறுதற்காக, அநுவாதஞ் செய்துகொண்டது.

மெய்த்திடும் பலம் என்றது மெய்யின் கண்ணதாய் வரும் பலத்தை வயிற்றிலிடப்பட்ட சோறு முதலியன கெட்டுப் பலன் றருதல் இல்லையாயினும், வயலிலிடப்பட்ட தழை முதலியன கெட்டுப் பலன்றருதலால், சிலவற்றிலாயினுங் கெட்டுப் பலன்றருதல் காணப்படுதல்பற்றி வினையுமவ்வாறு கெட்டுப் பலன்றருமென்பது பொருந்துமென்பாரை நோக்கி, அக்கூற்றை மறுத்தற் கெழுந்தது வருஞ் செய்யுள். (கஎ.) (கஅ.)

கெட்ட இடத்தில் பலன்தரும் தழை முதலியன பிறிதோ ரிடத்தில் பலன் தரும் வினைக்கு உவமையாகாது எனவும், அக் கினியில் காய்ச்சிய இரும்பில் சுவறிக் கெட்ட நீர் பிறிதோரிடத் தில் பலன் தராததுபோல், கெட்ட பொருள் பிறிதோரிடத்திற் பலன் தராதெனவுங் கூறுகின்றது.

திரவிய முவமை யன்று செய்திக்கட் டிரவியங்கள்
விரவிய விடத்தே வீந்து பலந்தரு மிம்மை யம்மை
பரவிநீ பார்நீ ரங்கி பாத்திரத் திட்ட வெல்லாங்
கரவிடு மிங்கே யெங்கே பலன் கொளக் கருதி னாயே.

(கோ-டு.) திரவியங்கள் விரவிய இடத்தே வீந்து பலந்தரும். இம்மை அம்மை செய்திக்கண் திரவியம் உவமை அன்று. அங்கி பாத்தி ரத்து இட்ட நீர் எல்லாம் இங்கே கரவிடும். எங்கே பலன்கொளக் கருதி னாயே. நீ பரவிப்பார்.

(போ-ரை.) மேல் எடுத்துக்காட்டிய தழை முதலிய பொருள்களும், தாம் கிடந்த விடத்தே கெட்டு, கெட்ட அவ் விடத்தே பலன் தருவனவாம். அவ்வாறின்றி, இவ்வுடம்பிற் செய்தவினை இவ்விடத்தே கெட்டு, மற்றோருடம்பிற் பலன் தரு மாதலின், வினைக்குத் தழை முதலிய பொருள்கள் உவமையாகா வாம். தானமாகத் தண்ணீரிலும், யாகமாக அக்கினியிலுஞ் சேர்க்கப்பட்ட பொருள்கள் அவ்விடத்துக்கெட்டு மற்றோரிடத் தில் பலிக்குமெனக்கொள்வதுபோல், வினையுங் கெட்டுப் பலன் தருமெனக் கூறுவோமெனின், தீயொழுகக் காய்ந்த பாத்திரத் தில் இட்ட நீர் முதலியன இவ்விடத்துக் கெட்டுப்போதலே யன்றி வேறிடத்துப் பலன் தருதல் காணப்படாமையால், தான மாகவும் யாகமாகவுங் கொடுத்துக் கெட்ட பொருள் பிறிதோ ரிடத்திற் பலன் தராது. அப்பொருளாற் செய்யும் தானம் என்ற வினையே பிறிதோரிடத்தில் பலன் தரல் வேண்டும். அவ் வினை சடமாதலின், தானே பயனுகிவருமென்றல் கூடாது. இவ் வண்மையை நன்கு விசாரித்து ஆராய்வாயாக. (எ-று.)

செய்திக்கு என நிற்கவேண்டுவது செய்திக்கண் என நின்றது உருபு மயக்கம். பரவிப் பார்த்தலாவது, புடைபட ஒற்றி ஆராய்தல். அஃதாவது, ஏதுக்களைக்கொண்டு இனிது ஆராய்தல்.

அவ்வாறாயின், இம்மை அம்மையாதல்பற்றி இடம் வேறெனக் கொள்ளல் வேண்டாம். இருமையினும் வினை செய்தவர் ஒருவரேயாகலின், அவ்வினை செய்தவரறிவின் கண்ணே அடங்கி வயலிலிட்ட தழை முதலியனபோல அவ்வறிவினிடத்தே பயனைத்தோற்றுவிக்கும் என்றல் கூடுமாதலின், திரவிய முவமையன்றென மறுத்தல் பொருந்தாது என்பாரை நோக்கி மறுத்தற்கெழுந்தது வருஞ் செய்யுள். (கக.)

செய்தவர் மனத்தில் வினை கிடந்து வேறிடத்திற் பலன் தருதலால் இட வேற்றுமை கொண்டு தழை உவமை பொருந்தாதென்றல் கூடாது என்பாரை மறுத்துரைக்கின்றது.

செய்தவர் மனத்தே யெல்லாச் செய்தியுங் கிடந்து பின்ன
ரெய்தவே பலன்களீனு மென்றிடி னிருஞ்சு வர்க்கம்
பொய்யர்வாழ் நரகம் பூமி புந்தியிற் கிடந்து போந்த
தையனே யழகிதுன்சொ லிந்திர சால மாய்த்தே.

(**கோ-ரு.**) ஐயனே உன் சொல் அழகிது. இந்திரசாலம் ஆய்த்தே.

(**பொ-ரை.**) வினை செய்தவர் மனத்தின் கண்ணே எல்லா வினைகளுந்தங்கிப் பின்னர்ப் பொருந்தும்படி பலன் தருமாதலின், வயலின்கண் தழை கெட்டுப் பலன் தருதலாகிய உவமை கூடாதென்றது பொருந்தாதென்று கூற, வினைக்குப்பயனுவன பெரிய சுவர்க்கம், பொய்யர் வாழ்கின்ற நரகம், பூமி என்னும் இவற்றுட்பட்ட பல்வேறுவகைப் புவன போகங்களேயாம். அவையனைத்தும் வயலின்கண் விளைவுபோல, ஆன்மபோதத்தின்கண் கிடந்து உளவாக வேண்டுமே. அவ்வாறுளவாமென்றல் ஐயனே உனதழகிதாய சொல் மாத்திரையேயன்றிப் பொருள்படாத இந்திர சாலம் போலுமாம். (எ-று.)

ஐயனே என்றது இழித்தற்கண் வந்த குறிப்பு மொழி. செய்தவர் மனத்தைக் கூறவே, ஏற்றனு முயற்சியாதலின், இனம்பற்றி ஏற்பவர் மனமும் கொள்ளப்படும். இவ்வாறு இருவர் மனமும் கொள்ளப்படும் என்னும் இக்கருத்துப்பற்றியே மறுக்குமிடத்து, செய்தவர் புந்தியில் என

வெளிப்படக் கூருது, இருவருக்கும் பொதுவாகப் புந்தியிற் கிடந்து போந்தது எனக் கூறினர். (உo.)

செயல் யாவுஞ் செய்யப்படுகின்ற பொருளிற் கிடந்துபலன் றருமென்பாரையு மறுத்து வினையின் பலனைத் தருதற்கு இறைவன் வேண்டுமெனவும், தருதல் அவன் கடமை யெனவும் கூறுகின்றது.

**தானஞ்செய் பொருட ரித்தோர் செய்தவர் தக்க செய்தி**
**யூனம்பின் னுறவே காண்டும் பலமுறு விப்பான் வேண்டு**
**மீனமில் செய்தி யீச னிடும்பணி யிவைநாஞ் செய்தா**
**னானங்க ளதிக நோக்கி நுகர்விப்பன் வினை நோய் தீர.**

(**கொ-டு.**) பின் ஊனம் உறவே காண்டும் எனவும், வினைநோய் தீர நுகர்விப்பன் எனவுங் கூட்டுக.

(**பொ-ரை.**) வினையானது செய்தவர் மனத்தின்கட் கிடந்து பலன்றருமென்றல் பொருந்தாதாயினுஞ் செய்யப்படும் பொருளிற் கிடந்து பின்னர்ப் பலன்றருமெனக் கொள்வோமெனின், தானஞ் செய்யப்பட்ட பொருளும், தானத்தை ஏற்ருரும், தானஞ்செய்தோரும், தானமாகியசெயலும், ஆகிய அனைத்தும் நிலையின்றிக் கெட்டொழிவனவேயாம். ஆதலால் நிலைபேறுடைய முதற் கடவுளே அவற்றையறிந்து பலன் தரல் வேண்டும். அம்முதற்கடவுள் பலன்தருதற்குச் சம்பந்தமென்னையெனின், குறைவில்லாத முயற்சி யெல்லாம் முன் வினைப்பயனையநுபவித்தற்பொருட்டு முதல்வனுற்றரப்படுகின்றஏவல்வினையாதலால், அவ்வேவல் வினையாகிய முயற்சியை நாம் செய்தோமென்னும் முனைப்பாற் செய்தால் அம்முனைப்புத் தீருதற் பொருட்டு அம்முயற்சியினுலாகிய பாவ புண்ணியங்களையறிந்து அப்பாவ புண்ணியமாகிய வினை நோய் தீருதற் பொருட்டுப் பலன் தருதல் முயற்சியைக் கூட்டுவித்த அவ்விறைவனுக்குக் கடப்பாடாம். (எ-று.)

தானஞ்செய்பொருள் என்றது உபலக்கணமாதலின், அப்பொருளோடு கூட இடம் காலம் முதலியனவுங் கொள்ளப்படும். முயற்சி இறைவன்கட்டளை யென்பது வருஞ் செய்யுளிற் பெறப்படும். (உக.)

வினை செய்வதாகிய உயிர் ஒன்றும், அவ்வினை நிகழ்தற்குரிய துணைகள் ஏழும், ஆக எட்டு முதல் நிலைகளும் சிற்றறிவுடையதும் சடமுமாதலின் முற்றறிவுடைய முதல்வனுக்கு வினைப் பயனைக் கூட்டுவித்தல் கடமையாயிற்றெனக் கூறுகின்றது.

உலகுடல் கரணங் கால முறுபல நியதி செய்தி
பலவிவை கொண்டு கன்மம் பண்ணுவ துண்ப தானு
மிலவிடா திவைதாஞ்சென்று நினைந்துயிர்நிறுத்திக்கொள்ளா
தலகிலா வறிவ னாணை யணைத்திடு மருளி னாலே.

(கோ - ௫.) இவை தாஞ் சென்று நிலவிடாது.

(பொ-ரை.) முயற்சிக்கு முதற்கருத்தாவாகியஉயிரானது, அவ்வுயிர் தங்குதற்கிடமாகிய உடலும், உடலிற் பொருந்திய கருவிகளாகிய காணமும், வினை செய்தற்குரிய காலமும், வினையின் பயனாகப் பொருந்தும் செயப்படு பொருளும், இதற்காக, இது பயனாக என்னும் நியதியும், செயலும் ஆகிய ஏழு முதல் நிலைகளையும் துணையாகக்கொண்டு வினைகளைச் செய்தலும் அநுபவித்தலும் கூடும் என்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்ததாம். அவ்வேழு முதல் நிலைகளும் உயிரையின்றித் தாமே தொழிற்படமாட்டாத சடமாதலால், அவை தாமே உயிரை வந்து கூடமாட்டா. அம்முதல்நிலைகளையின்றி அறிவு தொழிற்படமாட்டாத அவ்வுயிர் அம்முதல்நிலைகளைத்தானே கருதி நிறுத்திக் கொள்ளாது. உயிரும், ஏனையமுதல்நிலைகளும் இவ்வாறுகலின்பாரிசேட அளவையானே அளவிட்டறிதற்கரிய சுதந்திர அறிவினனாகிய முதல்வனே தனது ஆணையாகிய திருவருளால் உயிருக்கு அவ்வேழு முதல்நிலைகளைக் கூட்டுவன். ஆதலால், அம்முதல் நிலைகளோடு கூடிச் செய்யும் செயல்களெல்லாம் இறைவன் கட்டளையேயாம். (எ-று.)

ஆதலால், அச்செயல்களெல்லாம் இறைவன் கட்டளையேயாம் என்பது குறிப்பெச்சம். இவ்விடத்து உலகு என்றது உயிர்களை. நியதி என்பதனால் இன்னதற்காக, இது பயனாக என்னும் இரண்டு காரகங்களையும் தழுவினர். இன்னதற்காக என்பது, செயப்படு பொருளைப் பிறி

தொரு பொருள் பெற்றுக் கொள்ளுவதற்கு உபகாரமாக என்னும்பொருள் குறித்தது. இது பயனுக என்பது, அந்தப் பிறிதொரு பொருள் அந்தச் செயப்படு பொருளை ஏற்றுக்கொண்டதனால் அவ்வினை முதலுக்குத் தரும் பயன் குறித்தது. பண்ணுவது, உண்பது என்னும் ஒருமைகள் பண்ணுதல் உண்ணுதல் என்னுந் தொழில்கள்மேல் நின்றன. இச்செய்யுளிற் கூறப்பட்ட உயிர் முதலிய எட்டினையும் வடநூலார் காரகம் என்பர். அது, முதல்நிலை என்னும் பொருள் குறித்ததென்பது, *'வினையே' என்றற் றொடக்கத்துத் தொல்காப்பியச் சூத்திரத்தாலறிக. (உஉ.)

வினைப்பயனை யநுபவித்தற்காக இறைவனாற் கூட்டும் முயற்சியாகிய அக்கட்டளை நல்லனவாயின் அறமாயும், தீயனவாயின் பாவமாயும் இருதிறப்படும் எனக் கூறுகின்றது.

**ஒழுக்கமன் பருளா சார முபசார முறவு சீலம்**
**வழுக்கிலாத் தவந்தா னங்கள் வந்தித்தல் வணங்கல்வாய்மை**
**யழுக்கிலாத் துறவ டக்க மறிவொடர்ச் சித்த லாதி**
**யிழுக்கிலா வறங்க ளானு லிறங்குவான் பணிய றங்கள்.**

**(போ - ரை.)** வினைப்பயனை அநுபவிப்பதற்காக இறைவனாற்றரப்படும் கட்டளையாகிய செயலானது உலகத்தோடொட்ட ஒழுகுதலுடைமை, யாவர்மாட்டும் அன்புடைமை, அருளுடைமை, வேதாகமங்களில் விதித்தவாறு அநுட்டித்தலுடைமை, தக்கோர் மாட்டுச் செய்யும் உபசரிப்புடைமை, யாவர்மாட்டும் கலப்புடைமை, நற்குணமுடைமை, ஐம்பொறியடக்கல் விரதங் காத்தல் முதலிய குற்றமில்லாத தவமுடைமை, தக்கோர்மாட்டு உவகையோடு செய்யும் தானங்களுடைமை, தன்னின் மூத்தார் மாட்டுத் தோத்திரஞ் செய்தலுடைமை, நமஸ்காரஞ் செய்தலுடைமை, சத்தியமுடைமை, பிறர் மனை விழையாமை வரைவின்

* "வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலங் கருவி யென்றா
வின்னதற் கிது பய னாக வென்னு
மன்ன மரபி னிரண் டொடுந் தொகைஇ
யாயெட் டென்ப தொழின்முத னிலையே."
(சொல்லதிகாரம், வேற்றுமை மயங்கியல் சூ-உகூ.)

மகளிர் விழையாமை முதலிய குற்றமில்லாத ஆண் தகைமை யுடைமை, தீ நெறிக்கட் செல்லாது அடங்குதலுடைமை, தக்கன இவை தகாதன இவை எனப் பகுத்தறிதலுடைமை, தன்னின் மூத்தார்மாட்டு அர்ச்சித்தலுடைமை ஆகிய பதினாறும் மற்றும் அவை போல்வனவுமாகிய குற்றமில்லாத நல்வினைகளாயின், கருணையினாற் றரப்பட்ட அக்கட்டளை அறமாய் முடியும். இவற்றின் மறுதலையான தீவினைகளாயின் பாவமாய் முடியும், (எ-று.)

ஒழுக்கம் என்றது இவ்விடத்து "உலகத்தோடொட்ட ஒழுகுதலை."

இவ்விடத்துத் துறவு என்றது, பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்னும் நான்கு நிலையினும் சேரற்குரிய பிறர்மனை விழையாமை, வரைவின் மகளிர் விழையாமை முதலிய ஆண்டகைமையே என்றுணர்த்த வேண்டி 'அழுக்கிலா' என விசேடணங் கொடுத்துக் கூறினார். அறிவாவது தக்கன இவை, தகாதன இவை எனப் பகுத்தறிதல். வந்தித்தல், வணங்கல், அர்ச்சித்தல் என்பன தன்னின் மூத்தார் மாட்டுச் செய்வனவற்றை. இறைவன்மாட்டுச் செய்வனவன்று. அது, "இனமலர் கையிற் கொண்டங் கிச்சித்த தெய்வம் போற்றி" என், அடுத்து வருஞ் செய்யுளிற் பெறப்படும். அறிவொடு என்பதில் ஒடு ஒவ்வொன்றையும் எண்ணின எண்ணின்கண் வந்தது. இவ்வொழுக்கம் முதலிய வனைத்தும் இயமம், நியமம், என்னும் இருவகையுளடங்கி அறஞ்செய்யும் சமயத்தார்க் கெல்லாம் பொதுவகையான் வேண்டப்படும் அங்கமாகலின், தெய்வத்தை வணங்கும் ஒழுக்கத்தின் வேறாக இவற்றைத் தனித்தெடுத்துக் கூறினார். (உரு.)

நல்வினையினுள்ளும் சிறந்ததாகிய கடவுள் வழிபாடு தத்தம் மதத்திற் கேற்றவாறு செய்யினும் மேல் சிவன் முதலென்றதனோடு முரணாது அவ்வழிபாட்டிற்குப் பயன் சிவபெருமானே தருவன் எனக் கூறுகின்றது.

**மனமது நினைய வாக்கு வழுத்தமந் திரங்கள் சொல்ல**
**வினமலர் கையிற் கொண்டங் கிச்சித்த தெய்வம் போற்றிச்**
**சினமுத லகற்றி வாழுஞ் செயலற மானால் யார்க்கு**
**முனமொரு தெய்வ மெங்குஞ் செயற்குமுன் னிலையா மன்றே.**

(**கோ - ௬.**) சினம் முதல் அகற்றி அங்கு இச்சித்த தெய்வம் மனமது நினைய வாக்கு வழுத்த மந்திரங்கள் சொல்ல கையில் இன மலர்

கொண்டு போற்றி வாழும் செயல் அறமானல் யார்க்கும் முனம் ஒரு தெய்வம் எங்குஞ் செயற்கு முன்னிலையாம் அன்றே.

(போ - ரை.) மேற்கூறிய ஒழுக்கம் முதலிய நன்மைகளை உடையனய், அவற்றின் மறுதலையாகிய தீமைகளை நீக்கி ஒழுகுவானெருவனுக்கு தன் கருத்துக்குப் பொருந்தியதொரு கடவுளை மனத்தால் நினைந்து, வாக்கால் துதித்து, அக்கடவுளுக்குரிய மந்திரங்களை உச்சரித்து, கைகளால் பல மலர்களைக் கொண்டு அர்ச்சித்து வழிபட்டு வாழுஞ் செயலாகிய அறமுளதாயின், அவனுக்கு, முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளாகிய சிவபெருமானே, அவன் வழிபடும் தெய்வத்தினிடமாக நின்று அச்செயலை ஏற்றுக்கொண்டு பயன் கொடுப்பன். (எ-று.)

சினமுதலகற்றி என்பது, சின முதலிய தீமைகளை நீக்கி யொழுகுவானுககு என்னும் பொருள் குறித்தலின், பெயராய் நின்று நான்கனுருபு தொக்கது. சின முதலகற்றுதல் கூறவே, ஒழுக்க முதலிய வுடைமை பெறப்பட்டது.

மேலைச் செய்யுளிற் கூறிய ஒழுக்க முதலிய அங்கங்கட்கு இச்செய்யுளிற் கூறிய தெய்வ வணக்கமாகிய அறம் அங்கியாகலின், சின முதலகற்றுதலையும் இச்செய்யுளில் உடனெடுத் தோதினர். (உச.)

வழிபட்டார்க்கு வழிபடப்பட்ட அவ்வத் தெய்வமே பலன் கொடுக்கும் என்பாரை மறுத்துரைக்கின்றது.

யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாக னார்தாம் வருவர்மற் றத்தெய் வங்கள்
வேதனைப் படுமி றக்கும் பிறக்குமேல் வினையுஞ் செய்யு
மாதலா னிவையிலாதா னறிந்தருள் செய்வ னன்றே.

(கோ - டு.) மற்று அத்தெய்வங்கள் வேதனைப்படும் இறக்கும் பிறக்கும் மேல் வினையுஞ் செய்யும். ஆதலான், இவை இலாதான் மாது ஒரு பாகனர்தாம். யாதொரு தெய்வம் கொண்டீர் ஆங்கே அத்தெய்வமாகி வருவர். அறிந்து அருள் செய்வன் அன்றே.

(போ - ரை.) அவ்வாறு வழிபட்டார்க்கு வழிபடப்பட்ட அவ்வத்தெய்வமே பலன் கொடுக்குமெனில், அதனல் உண்டாம் குறை என்னை என்பார்க்கு, நால்வகை யோகியுள் ஒரு

யோநிவாய்ப்பட்டுப் பிறப்பனவெல்லாம் சீவ வர்க்கம். அவ்வாறு யோநிவாய்ப்பட்டுப் பிறத்தலில்லாதது பதிப்பொருள். பதிக்கும், சீவனுக்கும் தம்முள் வேற்றுமை இதுவேயாம். ஆதலின், ஏனைத் தெய்வமெல்லாம் யோநிவாய்ப்பட்டுப் பிறந்திறத்தலே யன்றி, மேல்வினையுஞ் செய்தல் கேட்கப்படுதலால் சுதந்திர அறிவில்லாதனவேயாம். அவை ஒன்றும் இல்லாத சுதந்திர அறிவுடையன் சிவபெருமானேயாம். அச்சிவபிரான் ஒருவனே நீர் எவ்விடத்து யாதொரு தெய்வத்தைப் பொருளாகக் கொண்டீராயினும் அவ்விடத்து அத்தெய்வத்தினிடமாக நின்று அவ்வழிபாட்டை யறிந்து உயிர்கட்குப் பலனைக் கூட்டுவன். ஏனைத் தெய்வம் சுதந்திர அறிவின்மையாற் றானே பலன் கொடுக்கமாட்டாது. (எ - று.)

மற்று என்பது மாதொரு பாகனார்தாம் அத்தெய்வமாகி வருவர் என்னும் வினையை மாற்றி அத்தெய்வங்கள் வேதனைப்படும் இறக்கும் பிறக்கும் எனக்கூறுதற்கு இடையே நிற்றலால் வினைமாற்று. மாதொரு பாகனார்தாம் வருவர் எனப் பலர்பாலாக மேலே கூறி, இவையிலாதா னறிந்தருள் செய்வன் என ஒருமைப் பாலாகப் பின்னர்க் கூறியது பால்வழுவாகாதோவெனின், ஆகாது. என்னை? மாதொரு பாகனார் எனப் பொதுவகையானெடுத்துக் காட்டி, வேதனைப்படுதல் முதலியன இலாதான் எனச் சிறப்பு வகையாற் கூறினாராதலினென்க. (உரு.)

ஒருவரை வழிபட மற்றொருவர் பலன்றருதல் கூடுமென்று உவமை முகத்தாற் கூறுகின்றது.

**இங்குநாஞ் சிலர்க்குப் பூசை யியற்றினா லிவர்க ளோவக்**
**தங்குவான் றருவா ரன்றே லத்தெய்வ மத்த னைக்கா**
**ணெங்கும்வாழ் தெய்வ மெல்லா மிறைவனா ணையினானிற்ப**
**தங்குநாஞ் செய்யுஞ் செய்திக் காணைவைப் பாலளிப்பன்.**

(கோ - ௬.) சிலர்க்கு இங்கு நாம் பூசைஇயற்றினால் எனவும், இறைவன் ஆணையினால் எங்கும் வாழ் தெய்வம் எல்லாம் நிற்பது எனவுங்கூட்டுக.

(பொ - ரை.) மேற்கூறியவாற்றால் ஒருவரை வழிபட மற்றொருவர் பலன் கொடுப்பரென்பது பெறப்படும். அவ்வாறு

பலன் றருதல் உலகத்துக் கண்டிலமென்பாரை நோக்கி, பசு, பார்ப்பார், தந்தை, தாய் முதலாயினரை இவ்விடத்து நாம் வழிபட்டால் சுவர்க்க முதலிய உலகங்களில் அவர்களா வந்து பலன் றருகின்றார்கள்? நம் வழிபாட்டைக் கடவுள் அறிந்து அதற்கேற்ற பலன்களைத் தரும் என்பது எல்லார்க்கும் சம்மதமான முடிவாம். அதுபோல எத்தெய்வத்தை வழிபடினும், அவ்வழிபாட்டிற்குச் சிவபெருமானே பலன்றருவன் என்றல் பொருந்தும். அவ்வாறாயின், பிற தெய்வத்தை வழிபட்டார்க்கு அவ்வத்தெய்வமே எதிர்தோன்றி நின்று பலன் கொடுத்ததென நூல்களிற் கூறப்படுதலின், அத்தெய்வங்களும் பலன் கொடுக்கும் வல்லமையுடையன வென எண்ண வருமே யெனின், அரசனாணையே மந்திரி முதலாயினரிடத்து நின்று பிறர்க்குப் பலன் கொடுக்குமாறு போல, சிவபெருமானே தன் ஆணையைத் தன் ஏவல் வழிநிற்கும் அவ்வத் தேவரிடம் வைத்து அத்தேவரிடத்து நாம் செய்யும் வழிபாட்டிற்கு அத்தேவரிடமாக நின்று பலன் றருவன் ஆதலால், ஏனைத் தேவர்கள் சுதந்திரமாய்ப் பிறருக்குப் பலன் கொடுக்குமாறில்லை. (எ - று.)

இதனால் பசுவர்க்கமாகிய பிற தெய்வங்களின் வழிபாட்டிற்குச் சிவபெருமானே பலன்றருவனென்பது பெறப்பட்டமையால், பசு புண்ணியமும் சிவபுண்ணியமாகுமென்று கொள்ள வருமெனின், பசுக்களை நோக்கிச் செய்யும் புண்ணியம் பசு புண்ணியம். பதியை நோக்கிச் செய்யும் புண்ணியம் பதி புண்ணியம். ஆயினும், இகபர போகத்தை விரும்பிப் பதியை நோக்கிச் செய்யும் புண்ணியம் பசு புண்ணியமே. முத்தி இன்பம் வேண்டிப் பதியை நோக்கிச் செய்யும் புண்ணியம் பதி புண்ணியமே. இனிப் பசுக்களிடத்துச் சிவபாவனையோடு செய்யும் புண்ணியம் பதி புண்ணியமாம். பதியினிடத்து நம்மிலொருவனென்னும் பசு பாவனையோடு செய்யும் புண்ணியம் பசு புண்ணியமாம் எனக் கூறுதலும் உளவாம். ஆதலால், புண்ணியச் செயல் செய்பவன் கருதது வகையால் வேறுபடுதலே யன்றிக் கொள்வோர் கருத்து வகையால் வேறுபடுதலில்லையாதலின், ஏனைத் தெய்வங்களையே முழுமுதற் கடவுளென எண்ணிச் செய்யும் பசு புண்ணியம் சிவபுண்ணியமாகா தென்றறிந்து கொள்க.

நிற்பது என்னும் ஒருமை நிற்றல் என்னுந் தொழில் மேல் நின்று வைத்து என்னும் பொருள் குறித்தது."

ஒழுக்கமன்பருள் என்பது முதல் இவை நான்கு செய்யுளானும் ஈச னிடும் பணியாகிய முயற்சியை நான் செய்தேன் என்னுந் தற்போத முனைப்பாற் செய்தலால் பாவ புண்ணியங்களாமாறும், அப்பாவ புண்ணி யங்களை நோக்கி இன்பத் துன்பங்களை யநுபவிக்கச் செய்யுமாறும், பொது வகையானுஞ் சிறப்பு வகையானுங் கூறப்பட்டன. ஒழுக்கம் முதலியன பொதுவகை. தத்தம் மதத்திற்கேற்ற கடவுள் வழிபாடு சிறப்பு வகை.

இனி, அம்முயற்சிகளாலாய பாவபுண்ணியங்களுள் சிவபெருமானைக் குறித்துச் செய்யும் புண்ணியமாயின் விசேட புண்ணிய மென்றும், சிவ பெருமானைக் குறித்துச் செய்யும் பாவமாயின் அது மிகுந்த பாவமென்றும் பின்னர்க் கூறுகின்றார். (உசு.)

பலன்றருபவன் சிவபெருமானே யாதலின், அச்சிவபெரு மானை வழிபடுதலே சிறப்பான அறம் எனக் கூறுகின்றது.

**காண்பவன் சிவனே யானு லவனடிக் கன்பு செய்கை**
**மாண்பற மரன்றன் பாத மறந்துசெ யறங்க ளெல்லாம்**
**வீண்செயலிறைவன்சொன்னவிதியறம்விருப்பொன்றில்லான்**
**பூண்டனன் வேண்டல் செய்யும் பூசனை புரிந்து கொள்ளே.**

(**கோ - டு.**) அறம் இறைவன் சொன்ன விதி.

(**போ-ரை.**) இதுவரையுங் கூறியவாற்றால் ஏனைத் தெய் வங்கள் மாட்டுச் செய்யும் வழிபாடுகளையும் சிவபெருமானே ஏற்றுக்கொண்டு பலன்றருவன் என்பது பெறப்பட்டது. ஆத லான், அச்சிவபிரான் றிருவடியை வழிபடுதலே நல்ல அறமாம். அவன் றிருவடியை மறந்து செய்கின்ற அறங்களெல்லாம் வீண் செயல்களாம். அன்றியும் புண்ணியமாவது அச்சிவபெருமானால் வேதாகமங்களின் விதிக்கப்படும் விதியாதலான் அவ்வாறு விதித் தற்குச் சிவபிரான் ஒரு பொருளிலும் பற்றிலனாய் உயிர்க ளிடத்து வைத்த கருணையே காரணமாதலின், அந்நன்றி செய்த அச்சிவபிரான் றிருவடிப் பூசனையே உறுதியாகச் செய்யக் கடவது. (எ - று.)

இல்லான், பூண்டனன் என்பன இல்லானாகியும் எனவும், பூண்டு எனவும் பொருள் தந்து நிற்றலின் முற்றெச்சங்கள். சொல்லால் முற்று டம, பொருளால் எச்சமாயும் நிற்பது முற்றெச்சம். விருப்பொன்றில்

லான் என்றவிடத்து விருப்பு ஒன்றும் இல்லான் என்னும் பொருள்படச் சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. (உஎ.)

சிவபெருமானை வழிபடுதற் குரிய இடங்களிவை எனக் கூறுகின்றது.

தாபர சங்க மங்க ளென்றிரண் டுருவி னின்று
மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க் கருளை வைப்ப
னீபரன் றன்னை நெஞ்சி னினைவையே னிறைந்த பூசை
யாய்பரம் பொருளை நாளு மர்ச்சிநீ யன்பு செய்தே.

[**கொ - டு.**] பூசை மாபரன் தாபரசங்கமங்கள் என்ற இரண்டு உருவில் நின்று நீ பரன்றன்னை நெஞ்சில் நினைவையேல், நிறைந்த பூசை கொண்டு மன் உயிர்க்கு அருளை வைப்பன். நீ ஆய் பரம்பொருளை நாளும் அன்பு செய்தே அர்ச்சி.

(**பொ - ரை.**) மேற்கூறியவாறு சிவபெருமானை வழிபடுதற்கு வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாத அச்சிவபெருமான் திருமேனி கொண்டவிடத்தும் அத்திருமேனி சுத்த மாயா தத்துவ புவனத்தில் தோன்றி விளங்குவதன்றி இவ்வுலகத்தில் தோன்றி விளங்குவதின்மையால், இவ்விடத்திலுள்ளார் வழிபடுதற்கு சதாசிவதத்துவத்தின்கண் வைகும் மாட்சிமை பெற்ற இறைவன் புறத்தே திருக்கோயிலுள்ளிருக்குந் திருமேனியும், விபூதி உருத்திராக்கமாகிய திருவேடமும் ஆகிய இரண்டையும் ஆதாரமாகக் கொண்டு நின்றும், நீ அப்பரனை மனத்தால் வழிபட விரும்புவையாயின் அகத்தே உயிரிடமாகக் கொண்டு நின்றும், இங்குள்ளார் செய்யும் நிறைந்த பூசையை ஏற்று அவர்க்கு அருள் செய்வன். ஆதலான், நீ இவ்வுண்மையை யறிந்து பரம்பொருளைத் தினந்தோறும் மேற்குறித்த இடங்களில் பத்தி செய்து வழிபடுக. (எ - று.) (உஅ.)

அறமுஞ் சிவபிரானிடத்து அன்பிலாது செய்யின் பாவமாகு மெனவும், பாவமும் அச்சிவபிரானிடத்து அன்போடு செய்யின் அறமாகு மெனவும் கூறுகின்றது.

*அரனடிக் கன்பர் செய்யும் பாவமு மறம தாகும்*
*பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்*
*வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி*
*கரரிணிற் பாலன் செய்த பாதக நன்மை யாய்த்தே.*

**(பொ- - ரை.)** அறம் பாவங்கள் பலன் றருவது, அவ்வறம் பாவங்களைக் கொள்வோர் உயர்வு தாழ்வு பற்றியேயாம். அவ்வாறன்றி, செய்வாரது உயர்வு தாழ்வு பற்றியாவது, செய்யப்படும் வினைகளின் உயர்வு தாழ்வு பற்றியாவது பலன் றருதலன்று. ஆதலால், சிவபெருமான் றிருவடிக்கு அன்புடையார் பாவஞ் செய்யினும் அப்பாவமானது புண்ணியமாய் முடியும். அவன் றிருவடிக்கு அன்பிலார் செய்யும் புண்ணியமானது பாவமாய் முடியும். இவற்றிற்குத், தேவரில் வரங்கள் பெற்ற தக்கன் செய்த பெரிய யாகமானது புண்ணியமே யாயினும், இறைவனிடத்து அன்பில்லாமையால் பாதகமாய் முடிந்ததும், மாநுடரில் பாலப்பருவத்தையுடைய சண்டீச நாயனர் தமது பிதாவுக்குச் செய்த கொலைப் பாதகமானது இறைவனிடத்து அன்புடைமையால் புண்ணியமாய் முடிந்ததும் சான்றும். ஆதலால், சிவபெருமானையே அர்ச்சித்தல் வேண்டும். (எ - று.)

காண்பவன் சிவனேயாஞல் என்பது முதல் இவை மூன்று செய்யுளானும் முயற்சியாலுண்டாம் பாவ புண்ணியங்களை நோக்கி அநுபவிக்கச் செய்தலின்கணுண்டாம் விசேடங் கூறப்பட்டது. சிவபெருமானிடத்து அன்பு வைத்துச் செய்யும் புண்ணியமும் பாவமும் விசேட புண்ணியமென்பதும், சிவபெருமானிடத்து அன்பில்லாது செய்யும் புண்ணியம் விசேட பாவமென்பதும் அறிவித்தவாறு காண்க.

இதமகிதங்களென்பது முதல் இச்செய்யுள் வரையும் மீமாஞ்சகர் மதம் பற்றி யாசங்கித்துப் பரிகரித்து இருவினைகள் செய்த பொழுதே அழியும் என அதனியல்பு கூறுமுகத்தானும், அழிந்த அவற்றை அறிந்து கூட்டுதலின் அவை இறை பணியாமாறு கூறுமுகத்தானும், அவற்றை இறைபணி எனக்கருதாது நான் செய்தேனென்னு முனைப்பாற் செய்யுமாறு கூறுமுகத்தானும், அவ்விருவினைகள் புண்ணிய பாவ ரூபமாய்ப் பயன்படுமாறு கூறுமுகத்தானும், தாமே மருவிடா வடிவுங் கன்ம பலன்

களு மறுமைக் கண்ணே என்றதனை வலியுறுத்தி வினைப்பயனைக் கூட்டு தற்கு இறைவன் வேண்டுமெனச் சாதித்தவாறும்.

இனி, வைத்தியனும் அரசனும் போல் என்ற உவமைப் பொருளைக் கூறத் தொடங்குகின்றார். (உக.)

அரச உவமை கூறத் தொடங்கி உயிர்கட்கு வினைப்பயன் களைத் தருதலேயன்றி பாவ புண்ணியங்களைப் பகுத்தறிவதற்கு வேதாகமங்களையும் நரக சுவர்க்கங்களையும் சிவபெருமானே தந் தருளுவனெனக் கூறுகின்றது.

**மறைகளீ சன்சொ லச்சொல் வழிவாரா வுயிரை வைக்குஞ்**
**சிறைகண்மா நிரய மிட்ட பணிசெய்வோர் செல்வத் தோடு**
**முறையுமா பதிக ளும்ப ருலகங்கள் யோகிக் கெல்லா**
**மிறைவனு ணையினு லின்பத் துன்பங்க ளியைவதாகும்.**

(**கொ-டு.**) மறைகள் ஈசன் சொல். மாநிரயம் அச்சொல் வழிவாரா உயிரை வைக்கும் சிறைகள். உம்பர் உலகங்கள் இட்ட பணிசெய்வோர் செல்வத்தோடும் உறையும் மாபதிகள். யோகிக்கெல்லாம் இன்பத் துன் பங்கள் இறைவன் ஆணையினுல் இயைவதாகும்.

(**பொ-ரை.**) மேற்கூறியவாற்றுல் இருவினை முதலாயின அழிவெய்துவனவாதலின், அவ் விருவினைகளைச் சிவபிரானே பொருந்தி அறிந்து இன்பத்துன்பங்கள் தருவனென்பது பெறப் பட்டது. அதுவன்றியும், வேதாகமங்கள் என்பன சிவபிரான் கற்பித்தருளிய வாய்மொழியே. பெரிய நரகமாவது, அவ்வேதாகம வழி நடவாதாரைத் தண்டித்தற் பொருட்டு அவ னுல் அமைக்கப்பட்ட சிறைக்களமே. சுவர்க்க உலகமாவது, அவ்வேதாகம வழி நடப்போரை வாழ்வித்தற் பொருட்டு அவ னுல் அமைக்கப்பட்ட பெரிய நகரமே. ஆதலால், உயிர்கட்கு இன்பத் துன்பங்கள் அச்சிவபெருமான் ஆணையால் ஆகற்பாலன வேயாம். (எ-று.)

இயைவது என்னும் ஒருமை இயைதல் என்னுந் தொழில்மேல் நின்றது. (உo.)

வேதாகமங்களின் விதியில் தவறினாரைத் தண்டித்தற்கும் அவ்விதியில் ஒழுகினாரை வாழ்வித்தற்கும் அரசனை உவமை யாகக் கூறுகின்றது.

ஆணையா லவனி மன்ன னருமறை முறைசெய் யாரை
யாணையிற் றண்டஞ் செய்து மருஞ்சிறை யிட்டும் வைப்ப
னாணையின் வழிசெல் வோருக் கரும்பதி செல்வ நல்கி
யாணையும் வைப்ப னெங்கு மாணையே யாணை யேகாண்.

(கோ - டு) அவனிமன்னன் ஆணையால் அருமறைமுறைசெய்யாரை.

(பொ - ரை) உலகத்து அரசர் தமது ஆணையால் நிகழ்ந்த அரிய கட்டளையின்படி நடவாதாரைத் தமது ஆணையினால் தண்டித்துப் பொறுத்தற்கரிய சிறைக்களத்தில் வைப்பர். அக்கட்டளையின்படி நடப்போருக்கு உயர்ந்த பட்டமும் செல்வமுங் கொடுத்து வாழ்வித்து அவரைத் தங்கீழ் அதிகாரமுஞ் செய்ய வைப்பர். அவ்வாறு அதிகாரம் பெற்றிருக்கும் மந்திரி முதலாயினாரிடத்துக் காணப்படும் ஆணையும் அவ்வரசனது ஆணையேயாம். இதுபோல முதல்வனிடத்துங் கண்டுகொள்க. (எ-று.)

இவ்விடத்து மறை என்றது அரசன் மொழியை யுணர்த்தி நின்றது. ஆணையே ஆணையே என்னும் ஏகாரம் இரண்டனுள், முன்னையது அரசன் ஆணை யென்பதில் ஐயமறுத்தலின் தேற்றம். பின்னையது அசைநிலை. இச்செய்யுள் ஒட்டென்னுமலங்காரம். அஃதாவது, அரசனைக்கூறவே அவ்வுவமையோடு ஒட்டி முதல்வனைக் கொள்ளுதல்.

அவ்வாறாயின், அரசனாணை வேறாக இருக்க இறைவனாணையே எவ்விடத்து மென்றல் எவ்வாறு கூடும் என்பார்க்கு விடை கூறுதற் கெழுந்தது வருஞ் செயயுள். (கூக)

அரசன் செயலும் வேதாகமங்களின் வழியேயாதலின், அச்செயல் இறைவன் அருள்வழியே யென்றும், இறைவன் செயலைக் குறிப்பிப்பதென்றும் கூறுகின்றது.

அரச னுஞ் செய்வ தீச னருள்வழி யரும்பா வங்க
டரையுளோர் செய்யிற் றீய தண்டலின் வைத்துத் தண்டத்
துரைசெய்து தீர்ப்பன் பின்பு சொல்வழி நடப்பர் தூயோர்
நிரயமுஞ் சேரா ரந்த நிரயமுன் னீர்மை யீதாம்.

**(கோ - ு)** தரையுளோர் அரும்பாவங்கள் செய்யின், தீயதண்டலின் வைத்து தண்டத்து உரைசெய்து தீர்ப்பன். தூயோர் பின்பு சொல்வழி நடப்பர். நிரயமுஞ்சேரார். அந்த நிரயம் ஈது முன்னீர்மையாம். அரச னும் செய்வது ஈசன் அருள்வழி.

**(பொ - ரை)** இவ்வுலகத்துள்ளார் பெரும் பாதகங்கள் செய்தால், செய்த அவர்க்கு அரசனானவன் கொடிய தண்டஞ் செய்து, மேலும் பாவஞ்செய்யின் இவ்வளவினன்றி இன்னும் கொடிதாகச் செய்வனெனச் செய்யப்படும் தண்டத்தை எடுத் துச்சொல்லி, அச்சமுறுத்தி அவன் பாதகத்தைத் தீர்ப்பன். அறி வுடையார் அவ்வாறு செய்வித்தபின்பு, விதிவழி நடந்து பாவத் தின் பயனாகிய நரகத்திலழுந்தார். அந்த நரக தண்டம் இவ்வரச தண்டம்போல உண்டென்று கருதுவதற்கு அரச தண்டம் ஏது வாகின்ற தன்மையுடையதாம். இவ்வாறு அரச தண்டம் வைத் தது நரக தண்டம் வாராமல் பாவத்தைத் தொலைத்துக் காத்தற் பொருட்டும், அரசர் தண்டிக்கும்படியான நிலையில் வெளிப்படா மல் மறைந்து பாவஞ்செய்யின், நரக தண்டத்தை உயிர்க்குயி ராகிய இறைவன் அறிந்து தருவனென்று அறிவுறுத்தற்பொருட் டுமாம். ஆதலால், அவ்வரசன் ஆணையும் முதல்வன் ஆணையின் வழியாய் நிகழ்வதன்றிச் சுதந்திரமாய் நிகழ்வதன்று. (எ-று.)

பாவஞ்செய்யின் தண்டஞ்செய்து மேலுஞ்செய்யின்அத்தண்டத்தை எடுத்துச்சொல்லி யொழிப்பன்; அந்த நரக தணடமும் இதுபோல உண் டென்று நினைத்தற்கேதுவாம் என்றதனால், புண்ணியஞ்செய்யின் அதற் குரிய வரிசையின்வைத்துத் தீர்ப்பன். அந்தத்துறக்கம் இதுபோல உண்டென்று நினைத்தற்கேதுவாம் என்பதுங் கொள்ளப்படும். நிரயமும என்றவிடத்து உம்மை இழிவு சிறப்பு.

தண்டத்து உரை செய்தலாவது, மேலும் பாவஞ்செய்யின் இவ் வளவினன்றி இன்னுங் கொடிதான தண்டஞ்செய்வேனென அக்கொடுந் தண்டத்தை எடுத்துச்சொல்லி அச்சமுண்டாகச்செய்தல். தண்டத்து உரை செய்தல் என்பது தண்டத்தை உரை செய்தல் என்னும் பொருள் குறித்தது. அவ்விடத்துத் தண்டம் என்பதில் ஈறுகெட்டு, *அத்துச் சாரியை வந்ததனால் ஐயுருபு நிலையாமை ஏகதேச விதியாற் கொள்க "மஃகான்புள்ளிமுன் அத்தேசாரியை" என்றார் தொல்காப்பியனாரும

* தொல்காப்பியம், எழுத்ததிகாரம், உருபியல். சூ-கஎ.

தண்டத்துறைசெய்து என்பதற்கு தண்டத்தை உரைசெய்து எனப் பொருள் கொள்ளாது, சொல்வழி நடப்பர் தூயோர் என்னும் மோனை யெழுத்திற்கேற்ப துறைசெய்தெனவே கொண்டு தண்டமாகிய துறை யைச்செய்து எனினும் அமையும். துறை—மிகுதிப்பாடு. அது, † "துறை மாண்டவாபாடி" என்பதனுனுமறிக. முன்னீர்மை என்பது முன்னுதற் கேதுவாகிய நீர்மை என்னும் பொருள் குறித்தலின், ஏதுப்பெயரோடு முடிந்த வினைத்தொகை. நீர்மையுடைய நரக தண்டத்தை நீர்மை என் றுபசரித்தார்.

மறைகளீசன் என்பது முதல் இவை மூன்று செய்யுளாலும் அரசன் போல் வினைப்பலன் றருமாறு விளக்கிக் கூறப்பட்டது. [௬௨]

வைத்தியன் உவமை கூறத்தொடங்கிப் பாவத்தின் பலனைப் புசிப்பித்துத் தீர்ப்பது புண்ணியஞ்செய்வதின் பொருட்டுப்போல் புண்ணியத்தின் பலனைப் புசிப்பித்துத் தீர்ப்பது மலநிவர்த்தியின் பொருட்டெனக் கூறுகின்றது.

**அருளினு லுரைத்த நூலின் வழிவாரா ததன்மஞ் செய்யி**
**னிருளுலா நிரயத் துன்பத் திட்டிரும் பாவந் தீர்ப்பன்**
**பொருளுலாஞ் சுவர்க்கமாதி போகத்தாற் புணியந் தீர்ப்பன்**
**மருளுலா மலங்க ளர்க்கு மருந்திவை வயித்திய நாதன்.**

(**கோ - ௫**) மருள் உலாம் மலங்கள் வைத்தியநாதன் இவை தீர்க்கும் மருந்து.

(**போ - ரை**) இறைவன் கருணையினால் உரைத்தருளிய வேதாகம வழி நில்லாது பாவஞ்செய்யின், இருள் நிறைந்த நரகத்திற் செலுத்தித் துன்பத்தினை அநுபவிக்கச்செய்து அப் பெரிய பாவத்தினைத் தீர்ப்பன். அவ்வேதாகமவழி நடப்போரை அதிசயப்பொருள்கள் தங்கிய சுவர்க்கம் முதலியவற்றில் வைத்து இன்பத்தினை அநுபவிக்கச்செய்து அப்புண்ணியத்தைத் தீர்ப் பன். புண்ணியம் நூல்வழி நிற்றலேயாயினும், நான் செய்தே னென்னும் ஆணவமலம் அறுதலாகிய அருள்வழி நில்லாமை யால், அதுவும் பந்தமேயாம். பந்தமுறுதற்கேதுவாகிய பாச

† திருவாசகம், திருத்தோணோக்கம், செ-கச.

புண்ணிய மிரண்டும் உயிர்க்கு நோயாகலான், சிவபிரானாகிய வைத்தியனுக்கு இன்பத்துன்பங்கள் அந்நோய் தீர்த்தற்குரிய மருந்தாம். (எ-று.)

மலங்களை நோய் என உருவகஞ்செய்யாது, இன்பத்துன்பங்களை மருந்து என உருவகஞ்செய்தலின் இஃது ஏகதேச உருவகம். [கக]

வைத்தியன் மருந்தாலும் பிராயச்சித்தத்தாலும் நோயைத் தீர்ப்பதுபோல, இறைவனும் நரக சுவர்க்க முதலிய பலவாற்றானும் வினை நோயைத் தீர்ப்பன் எனக் கூறுகின்றது.

மருத்துவ னுரைத்த நூலின் வழிவரிற் பிணிகள் வாரா
வருத்திடும் பிணிக டப்பிற் றப்பிய வழியுஞ் செய்யத்
திருத்தினன் மருந்து செய்யா துறும்பிணி சென்றுந் தீர்ப்ப
னுரைத்தநூற் சிவனு மின்னேயுறுங்கன்மமூட்டித்தீர்ப்பன்.

[கோ - ய] நூலின் உரைத்தவழிவரின் பிணிகள் வாரா. தப்பின் வருத்திடும் பிணிகள் செய்ய மருந்துந் திருத்தினன். தப்பிய வழியுஞ் செய்யாது உறும்பிணி சென்றும் மருத்துவன் தீர்ப்பன். இன்னே உரைத்த நூற் சிவனும் உறும் கன்மம் ஊட்டித் தீர்ப்பன்.

(**பொ - ரை.**) வைத்திய நூலின் உரைத்தவழி நடப்போருக்கு நோய்கள் வந்தணுகா. அந்நூல்வழியிற் றப்பியவர்க்குத் தன் செயலாலும், செயலுக்கு முன்னிலையான பொருள்களாலும் நோய்கள்வரும். இந்நோய் அபத்தியத்தால் உண்டானதாமாதலால், அதற்குத்தக்க மருந்துகளை வைத்தியன் கொடுத்துத் தீர்ப்பன். வைத்திய நூல் வழியில் தப்பாதிருக்கவும், கன்மங் காரணமாகத் தெய்வத்தால் பிணிகள் வரவுங்கூடும். அப்பிணிகளை அவற்றிற்குத் தக்க பிராயச்சித்தங்களாகிய தானம், பூசை, ஓமம் முதலிய புண்ணியச் செயல்களை நோயாளியைச் செய்யச்செய்து மருந்துங் கொடுத்துத் தீர்ப்பன். இவ்வாறே வேதாகமங்கள் உணர்த்திய வண்ணம் சிவபெருமானும் உயிர்கட்கு வரும் இருவினையாகிய நோயைப் பலதிறத்தானும் இன்பத்துன்பங்களை ஊட்டித்தீர்ப்பன். (எ - று.)

மேலைச் செய்யுளில் மலத்தை நோயாகவும் இன்பத் துன்பங்களை மருந்தாகவும், சிவபெருமானை வைத்தியனாகவும் உருவகஞ் செய்ததனை இச் செய்யுளில் வைத்தியன் நோயைத் தீர்க்கும் முறையில் வைத்து விளக்கிக் காட்டியவாறும். தப்பியவழியும் என்றவிடத்து உம்மை இழிவு சிறப்பு. திருத்தினன் என்பது திருத்தியும் என்னும் பொருள் குறித்தவின் முற்றெச்சம். திருத்தியும் சென்றும் தீர்ப்பன் என முடித்துக் கொள்க. திருத்தினன் என்ற பாடத்தை திருத்தி நன்மருந்து எனப் பாடபேதங் கொள்ளுதலுமுண்டு. சென்றும் என்றவிடத்து உம்மை திருத்துதலேயன்றி என இறந்ததுதழுவிற்று. சென்றும் என்றவிடத்து செல்வித்தும் என்னும் பொருள்பட வ்வ் விகுதி தொக்கு நின்றது. *"குடிபொன்றி" என்றவிடத்து வ்வ் விகுதி தொக்கு நின்றாற்போல. செலுத்தியும் என்றதன்கணுள்ள அவாய் நிலையான் அவற்றிற்குத் தக்க உபாயங்களிலே என்பது வருவிக்கப்பட்டது. அவ்வுபாயங்களாவன— தானம், பூசை, ஓமம் முதலாயின. செய்யாது என்னும் எதிர்மறை செயவெனெச்சத் திரிபு. [௩௬]

துன்பமேயன்றி இன்பமும் மருந்தென உவமை முகத்தால் விளக்குகின்றது.

**மண்ணுளே சிலவி யாதி மருத்துவ னருத்தி யோடுந்**
**திண்ணமா யறுத்துக் கீறித் தீர்த்திடுஞ் சிலநோ யெல்லாங்**
**கண்ணிய கட்டி பாலுங் கலந்துடன் கொடுத்துத் தீர்ப்ப**
**னண்ணலு மின்பத் துன்ப மருத்தியே வினைய றுப்பன்**

[கொ - டு.] மருத்துவன் மண்ணுளே சில வியாதி அருத்தியோடும் எனவும், கண்ணிய கட்டி பாலும் உடன் கலந்து கொடுத்துத் தீர்ப்பன் எனவும் கூட்டுக.

(பொ - ரை.) இவ்வுலகத்துள்ளார்க்கு உண்டாகிய சில வியாதிகளை வைத்தியனானவன் நோயாளியிடத்து அன்பும் உறுதியும் உடையவனாய் அறுத்துக் கீறித் தீர்த்திடுவன். வேறு சில வியாதிகளை கருதப்படுஞ் சர்க்கரையும் பாலும் மருந்தோடுகலந்து கொடுத்துத் தீர்த்திடுவன். இவ்வாறு வைத்தியன் செய்யும் துன்பமும் இன்பமும் மருந்தாமாறுபோல, முதல்வனும் இன்பத்

* திருக்குறள், வெஃகாமை. ௩-க.

துன்பங்களாகிய மருந்தை அநுபவிக்கும்படி செய்து இருவினை யாகிய நோயைத் தீர்ப்பன். (எ - று.)

அருளினுலுரைத்த நூலின் என்பது முதல் இவை மூன்று செய்யுளா னும், வைத்தியன்போல இறைவன் இன்பத் துன்பங்களைத் தருமாறு விளக்கிக் கூறப்பட்டது. [ருரு.]

உயிர் இன்பத் துன்பம் அருந்தும் முறை கூறத்தொடங்கி பூமி, நரக சுவர்க்கங்களில் போகமநுபவித்தற்குரிய சரீர இயல்பு கூறுகின்றது.

பூதனு சரீரம் போனற் புரியட்ட ரூபந் தானே
யாதனு சரீர மாகி யின்பத்துன் பங்க ளெல்லா
நாதனு ராணை யுய்க்க நரகொடு சுவர்க்கந் துய்த்துத்
தீதிலா வணுவா யோநி சேர்ந்திடுஞ் சீவ னெல்லாம்.

[கோ - டு.] பூதனு சரீரம் போனல் புரியட்ட ரூபந்தானே யாதனு சரீரம் ஆகி சீவன் எல்லாம் நாதனுர் ஆணை உய்க்க சுவர்க்கமொடு நரகு இன்பத் துன்பங்க ளெல்லாந் துய்த்து தீது இலா அணுவாய் யோநி சேர்ந்திடும்.

(போ - ரை.) சிவபிரானுகிய வைத்தியன் ஊட்டும் மருந் தாகிய இன்பத் துன்பங்களை உயிர் அருந்தும் முறைமை எவ்வா றென்பார்க்கு, இத்தூலவுடம்பு நீங்கியவிடத்து அதனோடு உடன் போகாது நிலைபெற்றுள்ளதாகிய சூக்குமவுடம்பினின்றும் வினைப் பயனை அநுபவித்தற்குரிய வெவ்வேறுடம்புகள் உளவாம். ஆத லால், உயிர்கள் எல்லாம் வினைப்பயனை யநுபவித்தற்குரிய அவ் வுடம்போடு இறைவன் ஆணை செலுத்தச் சென்று சுவர்க்க நர கத்து இன்பத் துன்பங்களை அநுபவித்துப் பின்பு எஞ்சிய சஞ்சித வினைப்பயனை யநுபவித்தற் பொருட்டுக் குற்றமில்லாத சூக்கும வுடம்போடு மண்ணுலகத்தில் கருப்பாசயத்தில் பொருந்தும். ()

யாதனு சரீரமாகி என்றவிடத்து ஆகி என்பது, காரிய காரணப் பொருள்பற்றிவருஞ் செயவெனெச்சத்திரிபு. யாதனுசரீரம் சூக்குமவுடம் பின் காரியம். அது, வினைப்பயன்களை அநுபவித்தற்குக் காரண மாத லின், காரிய காரணப் பொருள்பற்றியதென்பதும், ஆகி யென்பது உள

'வென்னும் பொருள் குறித்தலின் செயவெனெச்சத் திரிபாமாறுங் காண்க. யாதனா சரீரம் என்றது துன்பத்தை அநுபவித்தற்குரியது. நரகத் துன்பம் இருப்பு விலங்கும், துறக்கவின்பம் பொன் விலங்கும் போல்வன வாதலின், அவ்விரண்டற்கும் உரிய உடம்பை யாதனா சரீரம் என்றார். பூதவுடம்பு, பூதசாரவுடம்பு, யாதனாவுடம்பு என உடம்பு மூன்று. இவை முறையே பூமி, சுவர்க்கம், நரகமாகிய உலகங்களுக்குரியன. நிலவுலகத்து வரும்போது அணுவாய் யோனி சேர்ந்திடுமென்றதனால், துறக்கநிரயங்களிற் செல்லும்போது யாதனா சரீரத்தைப்பற்றியே செல்லுமென்பது பெற்றாம். அணு—சூக்கும உடம்பு. [௩௯.]

ஒரு உடலை விட்டவுடன் பிறிதோருடலை யெடுக்கினு மெடுக்கும். எடுக்காது கற்போற் கிடக்கினும் கிடக்குமெனக் கூறுகின்றது.

உடல்விடா யோனி பற்றி யுதிப்பினு முதிக்கு மொன்றிற்
படர்வுறா தறும்பா வத்தாற் பாடாணம் போற் கிடந்து
கடனதாங் காலஞ் சென்றாற் கடுநர கதனில் வீழ்ந்தங்
கிடருறா முருவங் கன்மத் தளவினி லெடுக்கு மன்றே. ௪௰

[செ - ு.] கன்மத்து அளவினில் உருவம எடுக்கும் அன்றே என்பதை முன்னர் வைத்து உடல்விடா யோனிபற்றி என்பதை அதன் பின்னாக வைத்துரைக்க.

(பொ - ரை.) அந்த அந்த வினைகளின் வன்மை மென்மைகட் கேற்ப பூதசரீரமாகிய இவ்வுடல் போயபொழுது யாதனா சரீரத்தை எடாது மற்றுமோர் பூத சரீரத்தை எடுத்தலும், யாதனா சரீரம் போயவாறே பூத சரீரம் எடாது மற்றுமோர் யாதனாசரீரத்தையெடுத்தலுமுளவாம். ஆகலான், இவ்வுடம்பினை விட்டுப் பிறிதோருடம்பை எடுத்தல் இடைவிடாது நிகழ்தலுமுண்டு. ஒரு உடம்பிலும் தங்காது மிகுந்த பாவத்தால் கற்போல் சூக்கும தேகத்துடன் பிரகிருதியில் சிறிது காலங்கிடந்து முறைமையான அக்காலஞ் செல்லுங்கால் கொடிய நரகத்தில் வீழ்ந்து அவ்விடத்துத் துன்புற்று இவ்வுலகத்து வந்து பிறத்தலாகிய இடைவிட்டு நிகழ்தலுமுண்டு. (எ - று.)

உதிப்பினும் என்றவிடத்து உம்மை இடைவிட்டு நிகழ்தலுமுண்டு என எதிரது தழுவிற்று. பாவப்பயன் அநுபவித்தற்குரிய யாதனா சரீர வியல்பு கூறியதனால், இனம்பற்றிப் புண்ணியப் பயனை யநுபவித்தற்குரிய பூதசார சரீர வியல்பும் அவ்வாறாதல் பெறப்படும்.

அவ்வாறு, இறந்த வுயிரே மீளப் பிறக்குமாயின், இறந்த உடம்பு முதலியனவும் மீளத் தோன்றுதல் வேண்டும். அவ்வாறு காணப்படாமையின், இறந்த உயிரும் மீளப் பிறப்பதில்லை எனக் கிரீடாப் பிரமவாதி முதலாயினோர் கூறுவர். அவர் கூற்றைப் பரிகரித்தற் கெழுந்தது வருஞ் செய்யுள். [௩எ.]

உயிர் மீளப் பிறக்கும். பிறக்குங்கால் உடல், இடம், குறி, உணர்வு மாறினும் உயிர் மாறாது என உவமை முகத்தால் விளக்குகின்றது.

**பன்னக மண்ட சங்கள் பரகாயந் தன்னிற் பாய்வோர்**
**துன்னுதோன் முட்டை யாக்கை துறந்துசெல் வதுவேபோல**
**வுன்னிய வுயிர்க ளேல வுடல் விட்டு வானி னூடு**
**மன்னிடு நனவு மாறிக் கனவினை மருவு மாபோல்.**

**[கோ - டு.]** பன்னகம் துன்னுதோல்(துறந்து செல்வதுவேபோல) அண்டசங்கள் முட்டை (துறந்து செல்வதுவேபோல) பரகாயந் தன்னிற் பாய்வோர் யாக்கை துறந்து செல்வதுவேபோல, நனவு மாறிக் கனவினை மருவும் ஆபோல், உன்னிய உயிர்கள் தூலவுடல்விட்டு வானினூடு (சென்று) மன்னிடும்.

**(பொ - ரை.)** நெருங்கிய முன்னைத் தோலாகிய வுடலை விட்டுச் சென்று வேறொரு தோலாகிய வுடலினைப்பற்றும் பாம்பு போலவும், முன்னை முட்டையாகிய இடத்தினை விட்டுச் சென்று மற்றோரிடத்தினைப்பற்றும் பறவைகள் போலவும், முன்னைச் சரீரத்தினை விட்டு மற்றோர் சரீரத்தினைப் பற்றும் பரகாயப் பிரவேசிகள் போலவும், நனவுணர்வு மாறிக் கனவுணர்வைத் தலைப்படுமாறு போலவும், கருதப்படும் உயிர்கள் முறையே தாம் வேறாகாது, தூலவுடலாகிய முன்னை உடம்பினைவிட்டு வானேறிச் சென்று மற்றோருடம்பில் அறிவு வேறுபட்டு நிலைபெறும். ()

வானினூடு என்றவிடத்து சென்று என்பது சொல்லெச்சம். நனவு மாறிக் கனவினை மருவுமாபோல் என்றது முற்றுப்பெருமையின், அறிவு வேறுபட்டு என்பது அவாய் நிலையால் வந்தது. நனவு, கனவு என்பன நனவுணர்வு, கனவுணர்வு என்னும் பொருள் குறித்தலின் ஆகுபெயர். பன்னக முதலிய நான்கும் தான் வேறாதலின்றியும் தன் உடலும், இடமும். அச்சும், அறிவும் வேறாதற்கு முறையே உவமையாயின. அச்சு—குறி.

பூதனு சரீரம் என்பது முதல் இவை மூன்று செய்யுளானும் இவ்வுயிர் பிறந்திறந்து வருவது போவதாமாறு வகுத்துக் கூறப்பட்டது.

இவ்வாறு, இருவினை யென்னை என்பதுமுதல் பன்னகமண்டசங்கள் என்பதுவரையுள்ள முப்பத்து நான்கு செய்யுளும், இருவினை யின்பத் துன்பத்து என்னும் நான்காவது செய்யுளிற் கூறிய பொருள்பற்றி இருவினை இல்லை எனவும், உண்டெனினும் அதுவே யமையும், இறைவன் வேண்டாமெனவும் கூறும் அவரவர் மதம்பற்றி யாசங்கித்துப்பரிகரித்து இருவினை உண்டெனவும், இறைவன் வேண்டுமெனவும் வலியுறுத்தி வகுத்துக் கூறியவாறு. [ஙஅ.]

முற்கூறிய இருவினையாவது முயற்சி யென்றும் அதுவே காமிய மலமென்றும் அதற்குமூலம் உண்டென்றும் கூறுகின்றது.

தன்மமோ டதன்ம மாகித் தானிரு பயனுந் தந்து
நன்மைதீ மையினு மின்பத் துன்பினு நாடிக் காண
முன்னமே யான்மா வின்றன் மும்மலத் தொன்ற தாகிக்
கன்மமு மூலங் காட்டிக் காமிய மலமாய் நிற்கும்.

[கொ - பு.] முன்னமே ஆன்மாவின்றன் கன்மமுந்தான், தன்மமோடு அதன்மமாகி இருபயனுந் தந்து மூலங்காட்டிக் காமிய மலமாய் மும்மலத்தொன்றதாகி நன்மை தீமையினும் இன்பத் துன்பினும் நாடிக் காண நிற்கும்.

(போ - ரை.) இதுகாறுங் கூறியவாற்றால், கன்மமாவது முற்பிறவியில் ஆன்மாவினால் செய்யப்படும் இதம்அகிதமென்னும் முயற்சியாமென்பது பெறப்பட்டது. இதுவே ஆகாமியம். அம்முயற்சி பலனுக்கு வருங்காறும் கட்டுப்பட்டு அறம், பாவம் என்னும் இருவகைத்தாம். இதுவே சஞ்சிதம். அவ்வறம், பாவம் பலனுக்கு வருங்கால் இன்பத்துன்பமென்னும் இரு

வகைத்தாம். இதுவே பிராரத்தம். இவ்வாறு ஆகாமியத்தால் சஞ்சிதமும் பிராரத்தமும், அப்பிராரத்தத்தை அநுபவிக்குமுறையில் மேல் ஆகாமியமும் உண்டாமாயின் முன்னர்ப் பிராரத்தமுண்டாயிற்று, ஆகாமியமுண்டாயிற்று? என்னுஞ்சங்கைநிகழுமன்றே. பிராரத்தமென்பது ஆகாமியத்தின் பலனேயன்றிப் பிறிதில்லையாதலின், ஆகாமியமே முன்னர் உண்டாயிற்றென்று சொல்லல் வேண்டும். அவ்வாகாமியமாகிய இதமகிதத்தை முன்னர்ச்செய்வதற்கும் ஒரு காரணம் வேண்டும்; இன்றேல் அச்செயல் நிகழாது. அக்காரணம் விருப்பு வெறுப்பேயாம். அக்காரணமாகிய மூல கன்மம் உண்டென்று காட்டுவதான அவ்வாகாமிய கன்மம் பிறப்பிறப்பிற் கட்டுப்படுத்தலின், ஆணவமலம் மாயாமலங்களோடொத்தலால் இதுவும் மலமெனப்பட்டுக் காமிய மலமாய் மும்மலத்துள் ஒன்றாய் வைத்தெண்ணப்படும். காமிய மலமாகிய இருவினை யென்பது இப்பொழுது செய்யப்படாமையால் உண்டென்று பிரத்தியட்சமாய் அறியப்படாவிடினும், இன்பத்துன்பமாகிய காரியத்தாலும், புண்ணிய பாவமாகிய காரணத்தாலும் உண்டென்றறியப்படும். இவ்வாறறிவது அநுமான அறிவு ()

விருப்பு வெறுப்பென்னும் மூலகன்மம் தொழிற்பட்டன்றிப் பயன்றராமையின் வினை ஆகாமிய சஞ்சித பிராரத்தங்களோடொப்ப நான்கென வேறுவைத் தெண்ணப்படாதாயிற்று. மூலகன்மம் விருப்பு வெறுப்பென்பதனை "வேண்டுதல் வேண்டாமையிலான்" என்னுந் திருக்குறளும் வலியுறுத்தும். எவ்வாறெனில், இறைவனுக்கு விருப்பு வெறுப்பு இல்லாமை கூறவே, அவ்விருப்பு வெறுப்பு ஆன்மாவிற்குண்டென்பது குறிப்பாலுணரப்படுமாதலாலென்க. இவ்விருப்பு வெறுப்பையேதிருவானைக்காப் புராணத்தில் கச்சியப்ப முனிவர் "இரண்டெனும் பழைய வினையும்" எனவும், பட்டினத்தடிகள் "இருவாதனை யற்றிறந்தான் பெருமை" என்பதில் "இருவாதனை" எனவும் அருளியவாறும். கன்ம மலத்திற்குமுன் விருப்பு வெறுப்பு உளவென்பதை "செம்புறு களிம்பென வநாதிமலமூழ்கி யிருள் சேருமலர் விழியென்னவே, தெளிவற்ற கேவலத் தசைவற்றிருந்து மல சேட்டையாற் குழவிகுருடர், தம்பிணியினாலுற்ற பால்கோலை நோக்கவவை தமையளிப்பா ரென்னநான், சார் கன்ம மாயையை விரும்பநீ தந்திடச் சகலனாய்" என மாதவச் சிவஞான யோகிகள் அருளிய வாற்றானு மறிக.

கன்மமும் என்றவிடத்து உம்மை சிறப்பு. மூலகன்மத்தின் சம்பந்தமான கான்மியம் காமியமென மருவிற்று. செயப்படு பொருளெல்லாம் முதற்காரணத்தை யுடைத்தாயிருக்கு மாதலின் ஆகாமியமாகிய செயப்படு பொருளும் மூலகன்மத்தை முதற்காரணமாக வுடைத்தாமாறு காண்க. []

அவ்வினையானது தொடர்ச்சியாய் இறைவனுணையால் உயிர்க்குப் பல வேறு வகைப்பட்ட உடல்களைத் தோற்றுவிக்குமெனக் கூறுகின்றது.

**இருவினை யநாதி யாதி யியற்றலா னுகர்வா லந்தம்**
**வருமலஞ் சார்ந்து மாயா வுருவுகண் மருவி யார்த்துத்**
**தருசெயன் முறைமை யாலே தான்பல பேதங் காட்டி**
**யருவதாய் நின்ற ரன்ற னுணையி னமர்ந்து செல்லும்.**

[கொ - ரு] இருவினை நுகர்வால் இயற்றலால் வரும் ஆதி அந்தம். அநாதி மலம் சார்ந்து மாயாவுருவுகள் மருவி ஆர்த்துத் தருசெயல் முறைமையாலேதான் பல பேதம் அரன்றன் ஆணையின் அருவதாய் நின்று காட்டி அமர்ந்து செல்லும்.

(பொ - ரை) அவ் வாகாமிய வினையானது அழியப்பட்டுஞ் செய்யப்பட்டும் பரம்பரையாய் வருதலால் ஆதியும் அந்தமுமுடையதாம். ஆயினும், இடையறாதோடும் நீர்ப்பெருக்குப் போலத் தொடர்ச்சியாய்த் தொன்றுதொட்டுவருதலால் பிரவாக அநாதியாம். அது ஏனை ஆணவமல காரியமாகிய மோகம் முதலிய குணங்களோடும், மாயாமல காரியமாகிய தநு கரண புவன போகங்களோடும் கூடி உயிரைப் பிறப்பிறப்பிற் கட்டுப் படுத்தித் தனது காரியமாகிய இன்பத்துன்பங்களின் வேறுபாட்டிற்கேற்பப் பல வேறு வகைப்பட்ட உடல்களை இறைவனுணையால் அவ்வுயிர்க்கு வெளிப்படாது சூக்குமமாய் நின்று தோற்றுவித்து நடக்கும். (எ-று)

இச்செய்யுளில் அரன்றனுணையினமர்ந்து செல்லும் என்றது, முதலாவது செய்யுளில் "ஆணையினமர்ந்து செல்ல" என்றதை முடித்துக்காட்டுதலின் முடிந்தது முடித்தல்.

மேலைச் செய்யுளானும் இச்செய்யுளானும் மேலே கூறிய சஞ்சிதமாகிய இருவினையின் சொரூபம் புண்ணிய பாவமாகிய அருவமென்பது கூறப்பட்டது. [சo.]

மநுடர் மநுடராகவும் மிருகம் மிருகமாகவும் இவ்வாறே பிறவும் பிறப்பதன்றி ஒரு பிறவியிலிருந்து மற்றொரு பிறவி வாரா தென்பாரை மறுத்துரைக்கின்றது.

**சங்கமந் தாப ரங்க டத்தங்கன் மத்துக் கீடா**
**வங்குரு யோநி மாறு மச்சுமா றுதிங் கென்னி.**
**னிங்குமா நுடரியற்றும் புண்ணியத் தின்ப வீட்ட**
**மங்குவான் சுரர்க ளாயோ நரர்களா யருந்துவாரோ.**

(கோ - ட) தத்தம் கன்மத்துக்கு ஈடா சங்கமம் தாபரங்கள் அங்கு உருயோநிமாறும். இங்கு அச்சுமாறுது என்னின்.

(போ- ரை) அவரவர் வினைக்கீடாகச் சங்கமம் தாபரமாகிய அவ்வவ் வுயிர்கள் உடலைப் பிரியுங்கால் மீட்டும் அவ்வப்பிறவியிற் பிறத்தலேயன்றி இவ்விடத்துவேறுபிறவியில்மாறிப்பிறத்தலில்லை என்னில், இவ்வுலகத்தில் மாநுடர் செய்யும் புண்ணியத்தின் பயனாகிய இன்ப மிகுதியை மேலுலகத்தில் வாழ்கின்ற தேவர்களாய் அநுபவித்தலேயன்றி மாநுடர்களா யநுபவிப்பதுண்டோ. (எ-று.) (சஈ)

தேவபோகத்தை மாநுடனாகவும் மாநுட போகத்தைத் தேவனாகவும் அநுபவித்தல் கூடாதாகலின் உடல் மாறும் என வலியுறுத்துகின்றது.

**நரர்களாய்த் துய்ப்பரென்னி னரர்பதி சுரரு லோகஞ்**
**சுரர்களாய்த் துய்ப்ப ரென்னிற் சொன்னவச் சஃநீயு மாகுஞ்**
**சுரர்களாய்ப் பலன்க டெய்த்துத்தாமிங்குத்தோன்றும்போது**
**நரர்களாய்ப் பிறப்பர் ஞாலத் தமரராய் நண்ணி டாரே.**

(கோ - ட) சுரர் உலோகம் நரர்களாய்த் துய்ப்பர் என்னின் நரர்பதி எனவும், அமரராய் ஞாலத்து நண்ணிடாரே எனவும் கூட்டுக.

(போ - ரை) இன்பமாகிய தேவபோகத்தை மேலுலகத்தில் மானுட வடிவு கொண்டே அனுபவிப்பரெனின், அவ்வாறனுபவிக்கில் அது தேவ உலகமாகாது மண்ணுலகமேயாம்.

-தேவர்களாயே அனுபவிப்பரென்பதை ஒத்துக்கொள்ளின் மேற் சொல்லியவாறு உடல் மாறுதலுண்டென்பது இனிது விளங்கும் ஆதலால் தேவர்களாய் இன்பப்பயனை யநுபவித்துத் தொலைந்த விடத்துத் தாம் மீண்டு இவ்வுலகிலுதிக்கும்போது மானுட வடிவாய்ப் பிறப்பதன்றித் தேவராய் இவ்வுலகத்திற் பிறவார். (எ - று.) (சஉ.)

தேவருக்கும் மனிதருக்கும் அவரவர்க்குரிய வடிவமாறினும் உறுப்புக்களும் அங்கங்களும் மாறுவாதலின் உடல் மாறுமென்றல் பொருந்தாதென்பார்க்கு மயிர்க்குட்டி முதலியன வண்டு முதலியனவாய் மாறும் பிரத்தியட்சங்காட்டி உடல் மாறும் என வலியுறுத்துகின்றது.

**வண்டுக ளாகி மாறு மயிர்க்குட்டி மற்றோர் செந்துப்**
**பண்டைய வுருவந் தானே வேட்டுவ னாய்ப்பி றக்குங்**
**கண்டுகொள் யோனி யெல்லாங் கன்மத்தான் மாறு மென்றே**
**கொண்டன சமய மெல்லா மிச்சொனீ கொண்ட தெங்கே.**

(**கோ - டு**) மயிர்க்குட்டி வண்டுகளாகி மாறும் மற்றோர் செந்து பண்டைய உருவந்தானே வேட்டுவனாய்ப் பிறக்கும். கண்டுகொள். கன்மத்தான் யோனியெல்லாம் மாறும் என்றே சமயம் எல்லாம் கொண்டன. இச்சொல் நீ எங்கே கொண்டது.

(**போ - ரை**) அவ்வாறாயினும், மனுட வுடல் தேவ உடலாய் மாறுபட்டவிடத்தும் செவி முதலிய உறுப்புக்கள் மனுடருக்குந் தேவருக்கும் வேறுபடுதலில்லையாதலால், முற்றும் மாறுமென்றல் பொருந்தாதெனின், இவ்விடத்திலும் மயிர்க்குட்டி வண்டாகவும், புழு குழவியாகிய வேட்டுவனாகவும் உடல் மாறுமென்பதும், அவ்வாறு மாறுவதில் அதுவதற்குரிய உறுப்புக்கள் வேறு வேறுமென்பதும் பிரத்தியட்சம் ஆதலால், கன்மத்திற்கேற்ப உடல்கள் மாறுதல் உண்டென்பது எல்லாச் சமய நூல்களுக்கும் ஒப்ப முடிந்ததாம். பிரத்தியட்சப் பிரமாணத்தோடும் நூற் பிரமாணத்தோடும் மாறுபட்டு முற்றும் மாறுதலில்லை என்று நீ கூறும் இப்போலிக்கூற்று எங்கே கொண்டாய்.() (சங.)

ஓர் உடம்பு கெடாது பிறிதோருடம்பாய் மாறும் மயிர்க்குட்டி முதலிய உவமை, கெட்டுத் தோன்றுமென்பதோடு பொருந்தாதென்பார்க்கு அகலியை முதலியஉவமை கூறி உடல் மாறுமென்பதை வலியுறுத்துகின்றது.

**அகலியை கல்ல தாளு ளரிபல பிறவி யானான்**
**பகலவன் குலத்திற் றோன்றிப் பாரெலா முழுதுமாண்டு**
**நிகரிலா வரச னாகுஞ் சிலந்திநீ டுலகம் போற்றச்**
**சகமதி லெலிதா னன்றோ மாவலி யாய்த்துத் தானே.**

**[கோ - டு.]** சிலந்தி பகலவன் குலத்திற்றோன்றி எனவும், எலி தான் அன்றோ நீடு உலகம் போற்ற சகமதில் மாவலி ஆயதுத்தானே எனவுங் கூட்டுக.

**(போ - ரை.)** மேற்கூறியவாறு வண்டு முதலியவற்றின் உடல்களே மயிர்க்குட்டி முதலிய உடல்களாய் மாறுபட்டன வன்றி, முன்னுடல் அழிந்து வேறுடம்பு தோன்றுவதன்றாத லால், முன்னுடல் கெட்டுப் பிறிதோருடல் தோன்றுமென்பத னோடு பொருந்தாதென்னின், அகலியை யானவள் கௌதம முனிவனிட்ட சாப வயத்தால் கல்லாக முன்னுடல் அழிந்தே மாறினாள் என்பதும், விட்டுணுவானவன் பிருகு முனிவனிட்ட சாப வசத்தால் மச்ச முதலிய பத்துவிதத் தோற்றத்தினும் உட லழிந்தே மாறினானென்பதும், சிலந்திப் பூச்சியானது திருவானைக் காவில் சிவபெருமானை அர்ச்சித்த பலத்தால் முதல்வனருளால் சூரிய வம்சத்தில் ஒப்பில்லாத அரசனாய் உதித்து பூமி முழுவதும் ஆண்ட முறைமையில், முன்னுடலழிந்தே மாறியதென்பதும், எலியானது சிவாலயத்துள்ள திருவிளக்கைத் தீண்டப்பெறலால், தேவ உலகத்துள்ளாரும் துதிக்கும்படி இம்மண்ணுலகத்தின்கண் ணே முதல்வனருளால் மகாபலிச் சக்கரவர்த்தியாக முன்னுட லழிந்தே மாறியதென்பதும் நூல்களிற் கேட்கப்படுதலால் எவ் விடத்தும் அவ்வாறே தெளியப்படும். (எ - று.). (சச)

அகலியை முதலிய பிரமாணமெல்லாம் சாபமும் அருளுமே யன்றி வினைப்பயன் அன்று என்பார்க்கு வினைப்பயனைத் தருத லும் இறைவனது சாப அருள்களேயாமெனக் கூறுகின்றது.

செப்பினுய் மாற வேறு சிலர்விதி யாலே கன்மால்
வைப்புறும் யோநி யெல்லா மாறிவந் திடாவிங் கென்னி
னெப்படி யானுஞ் செய்திக் கிறைகரி யாவ னென்றே
முற்பட மொழிந்தே னெல்லா முதல்வன்றன் விதியே யாகும்.

(கோ - டு.) சிலர் விதியாலே வேறுமாறச் செப்பினுய்.

(பொ - ரை.) மேற்கூறியவாறு அகலியைமுதலியோர்க்கு உடல் மாறியது சாப அருள்களாலன்றிக் கன்மத்தாலன்றாதலின், அதுபற்றி எவ்விடத்தும் அவ்வாறு உடல் மாறுமென்றல் பொருந்தாதென்னின், அவரவர் செயலுக்கேற்ப சாப அருள் நிகழ்ந்தவாறுபோல், எவ்வகையானும் உயிர்கள் செய்யுங் கன்மங் கட்கு முதல்வன் சான்றுவனென்று மேற்கூறிப்போந்தா மாத லின், வினைப்பய னெனப்பட்டனவெல்லாம் முதல்வனுடைய சாப அருள்களேயாம். ஆதலால், எவ்விடத்தும் உடல் மாறு மென்றது பொருந்தும். (எ - று.)

விதி என்றது இவ்விடத்து சாப அருள்களைக் குறித்தது.

சங்கமம் என்பது முதல் இவை யைந்து செய்யுளானும் மீமாஞ்சகரி லொருசாரார் மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து மேல் ௪௦-வது செய்யு ளில் "தான் பல பேதங்காட்டி" எனக் கூறியது சாதிக்கப்பட்டது.[௪ரு.]

ஒன்றைப்பற்றி அதுவாய் நிற்கும் உயிர் முன்பற்றியதை விட்டுப் பிறிதொன்றை இறைவனுணையாற்பற்றி அதுவாய் நிற்கு மெனக் கூறுகின்றது.

அவ்வவ யோநி தோறு மவ்வவ வுலகந் தோறுஞ்
செவ்விதி னறிந்து கன்மஞ் சேர்ந்திடா சீவன் சேரா
விவ்வகை தம்மிற் சேர்வு மிறைசெய லாலுற் செய்த
வெவ்வுரு வுந்தங் கன்மான் மாற்றுவ னிறைவன் றுனே.

(கோ - டு.) கன்மம் அவ்வவ யோநிதோறும் எனவும், இறைவன் றுனே செய்த எவ்வுருவும் தங்கன்மால் மாற்றுவனெனவுங் கூட்டுக.

(பொ - ரை.) உயிர் ஒன்றனைப்பற்றி அதுவாய் நிற்பதே யன்றிப் பிறிதொன்றனை அவ்வாறு பற்றுமெனின், வினைகள் சட

மாதலால் அவ்வினைகட் கீடாய தனுக்களையும் புவனங்களையும் நேராக அறிந்து சென்று அணையமாட்டா. உயிர்கள் அறிவுடைப் பொருளாயினும் தமக்கென அறிவின்மையால் வினையின் பயனைத் தாமே அறிந்தெடுத்துக்கொண்டு அநுபவிக்கமாட்டா. இவ்வாறாதலின், மாயையினையும் வினைகளையும் காரியப்படுத்தி உயிர்கட்குச் சேர்த்தல் இறைவன் செயலே என்பது மேற் பாரிசேட அளவையாற் பெறப்பட்டது. ஆதலால், இறைவன் செய்த எவ்வகை உடலையும் உயிர்கள் வினைக்கேற்ப அவ்விறைவன் மாற்றிப் பிறிதோருடலைப் பற்றச் செய்வன். (எ - று.)

இவ்வகை என்றவிடத்து இவ் என்பது உயிரையும் மாயை வினைகளையுஞ் சுட்டிய வகரவீற்றுப் பலவறி சொல்.

இச்செய்யுளால் மேலே சாதிக்கப்பப்பட்ட தான் பல பேதங்காட்டி என்பது வலியுறுத்தப்பட்டது. [சசு.]

இறைவனாற்றலால் ஒரு சூக்கும உடம்பே பல தூல உடலாய் மாறுதலில் சற்காரிய வாதத்திற்கு இழுக்கில்லை என உவமை முகத்தால் விளக்குகின்றது.

**மாறியிவ் வுருவ மெல்லாம் வருவதெங் கேநின் றென்னின்**
**கூறிய சூக்கு மத்தா முருவெனிற் குறியொன் றென்னின்**
**வேறொரு குறியா மாரம் வீரசங் கிலியு மாகுந்**
**தேறுநீ யொருவ னலிச் செயலெலாஞ் சிவனா லாகும்.**

(**கோ - டு.**) இவ்வுருவமெல்லாம் மாறிவருவது எனின், எங்கே நின்று என்னின், உருக் கூறிய சூக்குமத்து ஆம். குறி ஒன்று என்னின், ஒரு குறி ஒருவனால் வேறும் ஆரம் வீரசங்கிலியுமாகும். சிவனால் இச் செயலெல்லாம் ஆகும். நீ தேறு.

(**பொ - ரை.**) அவ்வாறு உடல்மாறித் தோன்றுவதாயின், உள்ளது காரியப்படும் என்னும் சற்காரிய வாதத்திற் கிழுக்காகாதா? ஆகாதெனின் வேறு வேறு உடல் எங்கிருந்து தோன்றுமெனின், மூலமாகிய சூக்கும உடம்பினின்றும் பல தூல உடம்புகளுண்டாம். காரணம் ஒன்றாகவும் காரியம் பலவாதல் எவ்வாறமையுமெனின், காரணமாகிய ஒருபொன் செய்வானது வல்ல

மையால் ஆரம், வீரசங்கிலி முதலிய வெவ்வேறு ஆபரணங்களாய் மாறுபடுமாறுபோல, ஒரு சூக்கும உடம்பாகிய காரணம் இறைவனது ஆற்றலால் வெவ்வேறு உடல்களாய்த் தோன்றும். ஆதலால் சற்காரிய வாதத்திற் கிழுக்கில்லை என்பதை நீ தெளிவாயாக. (எ - று.) (சஎ.)

ஒரு சூக்கும உடம்பினின்று பல தூல உடம்பு தோன்றி யழிவதற்கு உவமை கூறுகின்றது.

**சூக்குமங் கெட்டுத் தூலந் தோன்றிடா சூக்கு மத்தி**
**ஞுக்கியோ ருடல்கி டப்ப தின்றுட லாக்குந் தன்மைக்**
**கோக்கிய சத்தி யுண்டா யுடறருங் கால முற்று**
**நீக்கிட மரம்பின் வேரோர் நீண்மர நிகழ்த்து மாபோல்.**

[**கோ - டு.**] மரம் காலம் உற்று நீக்கிட பின் வேர் ஓர் நீள்மரம் நிகழ்த்தும் ஆபோல் ஒக்கிய சத்தியுண்டாய் உடல் தரும்.

(**பொ - ரை.**) அவ்வாறு ஒரு சூக்கும உடம்பினின்றும் பல தூல உடம்பு வருவது பொன்னனது ஆரம், வீரசங்கிலியாறுற்போல ஒன்று பிறிதொன்றுவதுமன்று. வித்து மரமானாற்போல ஒன்று கெட்டு ஒன்று தோன்றுவதுமன்று. சந்திரனிடத்து எழுகின்ற கலைகள்போல் ஒன்றின்கண் ஒன்று அடங்கிக் கிடந்து தோன்றுவதுமன்று. இவ்வாறாயின், சூக்கும உடம்பினின்றும் தூல உடம்புகள் உண்டாவதற்கு மற்றென்னையோ திருட்டாந்தமெனின், மரமானது கெடுகின்ற காலம் பொருந்துதலால் அழியவும், பின்பு அம்மர வேரின் மற்றொரு நீண்ட மரம் உண்டாதல்போலும். ஆதலால், சூக்கும உடம்பில் தூலவுடம்புகள் தோன்றுதற்கு யோக்கியமான சத்தி அடங்கியிருந்து தோன்றுவனவாம். (எ - று.)

சூக்கும வுடம்பினின்றும் தூலவுடம்பு தோன்றுவதாகிய சற்காரியத்தின் விசேடங் கூறியவாறும். விசேடம்—தூலவுடம்புகள் சூக்கும வுடம்பில் யோக்கியமான சத்தி ரூபமாயிருந்து தோன்றுதல். யோக்கியம் என்பது ஒக்கியம் என மருவிற்று.

மேலைச் செய்யுளில் பொன் ஒன்றே பல ஆபரணமானாற்போல் என்றது செய்வானது ஆற்றலால் பலவாறு காரியப்படுமென்பதற்கு. இச்செய்யுளில் ஒன்றினிருந்து வேறு பல தோன்றுமென்றதற்கு வேறுவமை கூறி அவ்வுவமையை மறுத்தலால் முரணின்மை யறிக. ஆயின், இவ்வுவமையினையே முன்னர்க் கூறியிருக்கலாமே யெனின், பொன்னணி வுவமையில் செய்வானது ஆற்றலும், பல வேறு காரியங்களு முள்ளன. வேர் மரவுவமையில் அவ்விரண்டுங் கிடையா. ஆதலின், செய்வானது ஆற்றலையும் பல வேறு காரியங்களையும் காட்டுதற்குப் பொன்னணி வுவமையும், ஒன்று என்று மொருதன்மையாயிருக்க அதினின்றுங் காரியந் தோன்றுமென்றற்கு மரவேருவமையும் வேண்டப்படு மென்க. (சஅ.)

பல தூலவுடம்பு தோன்றி ஒடுங்குவதற்கு ஒரு சூக்கும வுடம்பு வேண்டப்படுமென உவமை முகத்தால் விளக்குகின்றது.

**விதிப்படி சூக்கு மத்தே யுருவரும் வினையா லிங்கே**
**யுதித்திடா வுருவ மாக வுருவரு மரங்கள் வித்திற்**
**கதித்தெழு மரமும் வித்துங் கழியும்பின் னழியுஞ் சூக்க**
**மதிக்கெழு கலைகள் போல வருவது போவ தாமே.**

[**கோ - டு.**] உருவரும் மரங்கள் வித்தின் கதித்து எழும். விதிப்படி வினையால் சூக்குமத்தே உருவரும். மரமும் வித்தும் கழியும். பின் சூக்கம் அழியும் (என்னின்) வருவது போவது மதிக்கெழு கலைகள் போல ஆமே. இங்கே உருவமாக உதித்திடா.

(**பொ-ரை.**) உருவமாய் விளங்குகின்ற மரங்கள் அவைக்கு முதலாகிய வித்தினின்று தோன்றி விளங்கும். அதுபோல, இறைவன் ஆணையால் வினைக்கேற்ப சூக்கும உடம்பினின்றும் தூல வுடம்புகள் தோன்றும். மரம் அழிந்தவிடத்து அதற்கு மூலமாகிய வித்தும் உடனழிதல் போல, தூல வுடம்பு கெட்டவிடத்து அதற்கு முதலாகிய சூக்குமவுடம்பும் கெடுமோவெனின், மேற் கூறிய உவமை சூக்குமத்தினின்றும் தூலம் தோன்றுவதற்கு மட்டுமே யன்றி முற்றுவமையன்றாதலால், தூல வுடம்பு கெட்டவிடத்துச் சூக்கும வுடம்பு கெடாது. அவ்வாறு கெடாதிருக்கவும் தூலவுடம்பு தோன்றி யொடுங்குதல் எதுபோலவெனின், சந்திரனுக்கு உளவாகிய கலைபதினாறிற் காரணமாகிய

ஒரு கலை யழியாது நிற்க, மற்றக் கலைகள் தோன்றுதலும் ஒடுங்குதலும் போலவாம். ஒரு கலையில்லாதிருப்பின் மற்றக்கலைகள் தோன்றுதலும் இல்லாதுபோமாறுபோல, சூக்கும வுடம்பாகிய ஒரு முதல் இல்லாதவிடத்துத் தூலவுடம்புகள் உருவமாகத் தோன்றிடாவாம். (எ-று.)

இச் செய்யுளால்ஒரு சூக்கும வுடம்பு நிலைபெற்றிருந்தாலன்றிப் பல தூல வுடம்புகள் தோன்றி யழிதல் கூடாதாதலால் பல தூல வுடமபுகள் தோன்றியழிதல் காணப்படுதல்பற்றி அவற்றிற்குக் காரணமான சூக்கும வுடம்பு ஒன்று உண்டு என்பதற்கு அருத்தாபத்திப் பிரமாணங் கூறிய வாறும்.

இவ்வாறு சூக்கும வுடம்பினின்றும் தூலவுடம்புகள் தோன்றி அத் தூலங் கெடுங் காலத்து, வித்தில் அருவமாய் நின்ற மரம் உருவமாய்த் தோன்றி மரங் கெடுங் காலத்து, வித்துங் கெடுமாறு போல, சூக்குமங் கெடுமோ என்னும் ஆசங்கையை நீக்குதற்கு, மதிக்கெழுகலைகள் போல வருவது போவதாமென்பதும் உடன் கூறினார்.

அவ்வாறாயின், தூலவடிவுக்குக் காரணம் ஐம்பெரும் பூதமேயமையும், சூக்கும வடிவு எதற்காக வேண்டும் எனின், சற்காரியவாதத்தில் தூலப் பொருட்குக் காரணம் சூக்கும பூதமாவதே யன்றிப் பிறிதில்லை யெனவும், அச் சூக்கும வுடம்பாவது சூக்கும பூதமெனப்படுந் தன் மாத்திரையாலான வடிவாகலின், ஐம்பெரும் பூதமெனப்படுந் தூல பூதம் அத் தன்மாத்திரையின் காரியமாதல்பற்றியே தூல வுடம்மை ஐம்பெரும் பூத வடிவென்பதெனவும் நன்கறிந்துகொள்க. அதாவது, தூல வுடம்பு ஐம்பெரும் பூதத்தின் காரியம் எனக்கூறுமிடங்களுக்கு, ஐம்பெரும் பூதத்திற்குக் காரணமான ஐந்து தன்மாத்திரையாலான சூக்கும தேகத்தின் காரியமென்பது கருத்து. வித்தில் சூக்குமமாய் நின்ற மரம் தூலமாய் வரும் என்றது, சூக்கும வுடம்பினின்று தூல வுடல் வருதற்கு எடுத்துக் காட்டுவமை. மரமும் வித்துங் கழியும் என்பதும் எடுத்துக் காட்டுவமை. சூக்குமம் என்பது சூக்கம் எனச் சிதைந்து நின்றது. இது பிராகிருதச் சிதைவு.

மாறி யிவ்வுருவமெல்லாம் என்பது முதல் இவை மூன்று செய்யுளானும், சூக்குமவுடம்பு தூல வுடம்புக்கு முதற் காரணமென்பதுணர்த்தி தான் பல பேதங் காட்டுதல்பற்றிச் சற்காரிய வாதத்திற்கிழுக் கின்மை கூறப்பட்டது.

மேலைச் செய்யுளில், ஒரு கலையில் ஏனைய கலைகள் அடங்கிக் கிடந்து தோன்றுமென்பதை எடுத்துக் காட்டி மறுத்து, இச் செய்யுளில் ஒரு கலை

யிருத்தலினால் ஏனைய கலைகள் தோன்றி யொடுங்குமெனா அவ்வுவமையை ஒப்புக்கொண்டதுபற்றி முரணின்மை யறிக. அடங்கிக் கிடந்து தோன்று மென்பதும் இருத்தலாற் றோன்றுமென்பதும் வேற்றுமை. (சக.)

சூக்கும வுடம்பிற்கு மூலம் அசுத்த மாயை என்றும் தூல சூக்கும வுடல்கள் சிவத்தைச் சார்தற் பொருட்டு அஞ்ஞான காலத்தில் உளவாமென்றும் கூறுகின்றது.

தூலமா முருவி னுக்குச் சூக்கும முதல தற்கு
மூலமா னதற்கு மூல மோகினி யதன்மு தற்றான்
மேலதாம் விந்து சத்தி சிவமிவை மிசையா மெல்லாஞ்
சாலவின் றாகு மான்மாச் சிவத்தினைச் சார்ந்த போது.

(கொ - டு.) முதல் சூக்குமம் எனவும், ஆன்மா சிவத்தினைச் சார்ந்த போது சால இன்று ஆகும் எனவுங் கூட்டுக.

(பொ-ரை.) தூலவுடம்பிற்கு முதற் காரணம் சூக்கும வுடம்பு என்பது பெறப்பட்டது. அச் சூக்கும வுடம்பிற்கு முதற் காரணம் உண்டோவெனின், உண்டு. அது மூலப் பிர கிருதியாம். அம் மூலப் பிரகிருதிக்கு முதற் காரணம் அசுத்த மாயை. அப்பிரகிருதிக்கு முதலாகிய அவ்வசுத்த மாயையே இப் பிரபஞ்சத்திற்கு மேலாகிய முதற் காரணமாம். மேலாகிய முதற் காரணமென்றதனால், மூலப் பிரகிருதி அதன் கீழாகிய முதற் காரணமாகுமென்பதறிக. ஏனைச் சுத்த மாயையாகிய குண்டலினி சத்தி சுத்தமாய் இவ்விரு மாயைக்கும் வியாபகமாய் நிற்கும். பிரகிருதிமாயை அசுத்த மாயையாகிய இரு மாயை களாலுண்டாகும் தூல சூக்குமங்களாகிய இருவகைப் பிரபஞ்ச மும் ஆன்மா சிவத்தினையடைவதற்கு ஏதுவாகிய பக்குவ காலம் பொருந்துதற் பொருட்டு இப் பெத்த காலத்து இறைவனால் உளவாவனவேயாம். (எ-று.)

அதன் முதற்றான் என்பது அந்த மூலப் பகுதிக்கு முதலாகிய தான் என இரு பெயரொட்டுப் பண்புத் தொகையாய் அசுத்த மாயையின்மேல் நின்றது. அது, அதற்கு மூல மோகினி என்பதனால் பெறப்பட்டிருக்க வும், அந்த மோகினியாகிய அசுத்த மாயை மேலான முதற் காரணமென்ப

துணர்த்த வேண்டி அதன் முதற்றூன் என்று அநுவதித்தார். இவ்வாறு முதற்றூன் என்பதற்கு முதலாகிய தான் எனப் பொருள் கொள்ளாது முதல் என்றதனை எழுவாயாகவைத்துரைப்பர். அவ்வாறுரைக்குமிடத்து, முதறூன் என இருக்கவேண்டுமேயன்றி முதற்றூன் என றகரமிரட்டித்தல் கூடாது. அன்றியும், அதன் முதல் மேலதாம் விந்து என முடித்தல் சித் தாந்தத்திற்கும் ஏலாது. சித்தாந்தத்தில் சுத்த மாயை அசுத்த மாயை இரண்டும் நித்தமெனப்படும். இதனை "ஏகனனேக னிருள் கரும மாயை இரண்டு ஆக இவை யாறு ஆதியில்" என்னுந் திருவருட் பயனானுமுணர்க.

விந்து சத்தி சிவம் என்பதை விந்து சத்தி சுத்தமெனவும், சார்ந்த போது என்பதை சார்தற் கேதுவாகிய காலமெனவும், சால என்பதை அமைதற் பொருட்டு எனவும், இன்று என்பதை இப் பெத்த காலத்து எனவும் உரைக்க. இவ்வாறன்றி, சிவத்தினைச் சார்ந்தபோது எல்லாம் இல்லையெனக் கூறின் சால என்னும் சொல்லுக்குப் பொருளின்று. கூறி னும் சிறப்பின்று. அன்றியும், எல்லாம் இல்லையாதலுமில்லை. ஆதலால், அவ்வுரை பொருந்தாது. சார்ந்த என்னும் பெயரெச்சம் போது என்னும் பெயர்கொண்டது. போதென்பது, சார்தற் கேதுவாகிய பக்குவ காலத் தைக் குறித்தலின் ஏதுப் பெயர்.

இச் செய்யுளால், மேலைச் செய்யுளிற் கூறப்பட்ட சூக்கும வுடம்பிற்கு முதல் உண்டோ? இல்லையோ என்னும் ஆசங்கையை நீக்கி வருஞ் செய் யுட்குத் தோற்றுவாயுஞ் செய்யப்பட்டது. வருஞ் செய்யுளில் "அநாதி மலங்களிம் மருந்தாற் றீர்த்துப் பாகதி யதுவுந் தந்து பாத பங்கயமுஞ் சூட்டும்." என்று கூறுகின்றூர். அதற்கு இச்செய்யுளிற் கூறப்படும் "சிவத் தினைச் சார்ந்தபோது சால இன்றாகும்" என்பது தோற்றுவாயாயினமை காண்க.

"இருவினையின்ப" என்னும் ௫-வது செய்யுள் முதல் இச் செய்யுள் வரை முதற் செய்யுளில் "அலகிலா வுயிர்கள் கன்மத்தாணையி னமர்ந்து செல்ல" என்ற இரண்டாங் கூறு வலியுறுத்தப்பட்டது.

அசுத்த மாயை பிரகிருதி மாயை யென்னும் இரு மாயையினின் றுண்டாகும் இருவகைப் பிரபஞ்சம் இவையென முன்னர் விரித்துக் கூறப்படும். (௩௦.)

**இரண்டாமதிகரணம் முடிந்தது.**

---

# மூன்றுமதிகரணம்.

## "தலைவனாய்" என்பது.

ஆணவமலம் கன்ம மலம் என்னும் நோயைத் தீர்த்துச் சிவத்தை அடைவித்தற்குத் தூல சூக்கும வுடம்புகள் மருந்தாக இறைவனாற்றரப்படும் எனக் கூறுகின்றது.

**அரன்விதி யருள தென்றே யறைந்தன னதுவு முன்னே**
**தரைநர கருந்து றக்கந் தநுகர ணாதி யெல்லாம்**
**வருவதுஞ் செய்த நாதி மலங்களிம் மருந்தாற் றீர்த்துப்**
**பரகதி யதுவுந் தந்து பாதபங் கயமுஞ் சூட்டும்.**

(**கோ-டு.**) அதுவும் அரன் விதி (என்று) அருளதே என்று முன்னே அறைந்தனன் எனவும், இம் மருந்தால் அநாதி மலங்கள் தீர்த்து எனவுங் கூட்டுக.

(**போ-ரை.**) மேற் கூறிய அவ்விருவகைப் பிரபஞ்சங்களும் ஆன்மா சிவத்தினை யடைவதற்கு ஏதுவாகிய பக்குவ காலம் பொருந்துதற்கு இப் பெத்த காலத்து உளவாதல் எவ்வாறெனின், இறைவன் இலயம் போகம் அதிகாரம் என்னும் அவத்தைகளினின்று செய்யுஞ் செய்தியால் உளவாம். அவ்வாறு செய்தலும் உயிர்களிடத்து வைத்த கருணையேயாகும் என்பதைத் தொகுத்தும் வகுத்தும் மேலே கூறியிருக்கின்றோம். ஆதலால், பூமி நரக சுவர்க்க முதலியவற்றிற் சென்று அவற்றிற்குரிய பயனை அநுபவித்தற் கேதுவாகிய தநுகாணாதிகளை உளவாகச் செய்து, அத்தநுகரணாதிகளாகிய மருந்துகளினால் அநாதியாகிய மல கன்மங்களென்னும் நோய்களைத் தீர்த்துப் பரஞானத்தை விளக்கிச் சிவானந்தப் பெரும்பேறு அவ்விறைவனாற் றரப்படும். (எ-று.)

கதி என்பது ஞானத்தினை யுணர்த்தல் வடமொழி மதம். முன்னே யறைந்தனன் என்றதனால் இருவினைக்கேற்ப ஐந்தொழிலிற்பட்டுச் செல்லுதற்குத் தலைவனாதற் கட்பட்டு மியல்பெல்லாம் இவ்வதிகரணத்தின் கண்ணே கூறற்பாலனவாயினும், ஒவ்வோரியையுபற்றி இருவினையைக்

கூறும் இரண்டாமதிகரணத்தில் ஆண்டாண்டு ஒருங்குவைத் தோதப்பட்டன. அவையெல்லாம் இவ்வதிகரணத்துக் கொண்டுவந்துரைத்துக் கொள்க என்பதூஉமாயிற்று. இயைபாவது:—கன்மம் சடமாதலானும், அதனைச் செய்த வுயிர்கள் சிற்றறிவுடையன வாதலானும், தாமே கூட மாட்டா வாதலின், கூட்டுவித்தற்கு அவ்விரண்டின் வேறாய தலைவன் வேண்டப்படுமென்பது.

மாயாகாரியங்களெல்லாஞ் சிவத்தினைச் சார்தற்பொருட்டாம் என மேலைச்செய்யுளிற் கூறியது எவ்வாறு பொருந்துமென்னும் ஆசங்கையை நீக்குதற்பொருட்டு, இச்செய்யுளில் அநாதிமலங்களைத் தநுகரணாதிகளாகிய இம்மருந்தாற் றீர்த்துப் பரகதியதுவுந்தந்து பாத பங்கயமுஞ் சூட்டும் என்றார். இதனால், மலங்களை நீக்கு முகத்தால் தநுகரணாதிகள் சிவத்தினைச் சார்தற்பொருட்டாம் என்றவாறாயிற்று. அறைந்தனன் என்றவிடத்து அன் ஈறு அறைந்தேன் என்னும் பொருள்படத் தன்மைக்கண் வந்தது. ‡ "இலனென்று தீயவை செய்யற்க" என்றாற்போல. தநுகரணாதிகளை மருந்தாக வுருவகஞ்செய்து மலங்களை நோயாக வுருவகஞ் செய்யாமையின், இது ஏகதேச வுருவகம்.

மேல் ௩௰வது செய்யுளில் இன்பத்துன்பங்களை மருந்தெனக்கூறி இவ்விடத்துத் தநுகரணாதிகள் மருந்தென்றல் மலைவாகாதோவெனின், ஆகாது. என்னை? நோய் தீர்தற்கு ஏதுவாயினவெல்லாம் மருந்தெனப் படுமாகலினென்க. இதனை "உற்றவன் றீர்ப்பான் மருந்துஉழைச்செல்வானென்று அப்பால் நாற்கூற்றே மருந்து" என்னுந் திருக்குறளாலறிக.

இச்செய்யுளால் மருத்துவனுக்கு மருந்துபோல, மேற்கூறி முடித்த தூலவுடல், சூக்குமவுடல், பிரகிருதிமாயை, அசுத்தமாயை, சுத்தமாயையெல்லாம் மலவைத்தியனாகிய அரனுக்குப் பரிக்கிரகப் பொருளாதல் கூறப்பட்டது. (௩௧)

மலமாகிய ஆணவகன்மங்களைப் பிறிதொரு மலமாகியமாயையினால் நீக்குதற்கு உவமை கூறுகின்றது.

எழுமுடல் கரண மாதி யிவைமல மலம லத்தாற்
கழுவுவ னென்று சொன்ன காரண மென்னை யென்னிற்
செழுநவை யறுவை சாணி யுவர்செறி வித்த ழுக்கை
முழுவதுங் கழிப்பன் மாயைகொடுமல மொழிப்பன் முன்னோன்.

---

* திருக்குறள், தீவினையச்சம். செ-௫.

(கொ - ு) செழுநவை அறுவை அழுக்கை சாணி உவர் செறிவித்து எனவும், முன்னோன் ஒழிப்பன் எனவுங் கூட்டுக.

**(பொ - ரை)** உண்டாகின்ற தநுகரண முதலியன யாவும் மாயாமல காரியமாகவும், ஆணவ கன்மமலங்களை இம்மாயாமலத் தால் நீக்குவனென்று கூறிய காரணம் என்னையோவெனின், அழுக்குடைய மெல்லியஆடையின் அழுக்கைச் சாணி உவர்மண் முதலிய பிறிதோர் அழுக்கைக்கொண்டு வண்ணான் முழுவதும் நீக்குதல்போல, மாயாகாரியமாகிய உடல் முதலியவற்றை மருந் தாகக்கொண்டு ஏனை ஆணவகன்ம மலங்களாகிய நோயை முதல் வன் தீர்ப்பன். (எ-று)

மலம், அழுக்கு என்பன ஒரு பொருட் சொற்கள். தநு என்பது உடல். கரணம் என்பது செவி முதலிய இந்திரியங்களும், மனம் முதலிய அந்தக்கரணங்களுமாம். புவனம் என்பது உலகம். போகம் என்பது உல கத்திலுள்ள பொருள்கள்.

இச்செய்யுளால், தநுகரணாதிகளால் மலங்களை நீக்குவனென்று மேலைச்செய்யுளிற் கூறியது வலியுறுத்தப்பட்டது.

இனி, அந்த மாயை மாயாகாரியங்களின் இயல்பாவது என்னை என் பார்க்கு அதனை வகுத்துக்கூறத் தொடங்குகின்றார். (ருஉ)

மாயையின் இலக்கணங் கூறுகின்றது.

**நித்தமா யருவா யேக நிலையதா யுலகத் திற்கோர்**
**வித்துமா யசித்தா யெங்கும் வியாபியாய் விமல னுக்கோர்**
**சத்தியாய்ப் புவன போகந் தநுகர ணமுமு யிர்க்காய்**
**வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமுஞ் செய்யு மன்றே.**

**(கொ - ு)** மாயை நித்தமாய் எனக்கூட்டுக.

**(பொ - ரை.)** உலகிற்கு முதற்காரணமெனப்படும் அசுத்த மாயையின் இலக்கணம் யாதெனின், உற்பத்தியில்லாததால் நித்தமாகியும், கண்ணுக்குத் தோற்றாமையால் அருவமாகியும், அழிதலில்லாமையால் ஒன்றாகியும், உலகம் உண்டாவதற்கு ஒரு காரணமாதலால் வித்தாகியும், அறிவில்லாததால் சடமாகியும், எவ்விடத்தும் ஆன்மாக்களுக்குத் தநுகரண புவன போகங்களைக்

கொடுத்தலால் வியாபகமாகியும், முதல்வன் வியாபகத்துள் அடங்குதலால் அவனுக்கு ஓர் வைப்புச் சத்தியாகியும், புவனமும் போகமும் தநுவும் கரணமுமாக உயிர்களின் பொருட்டு விரிதலால் ஒருமலமாகியும், விபரீத வுணர்வினைச்செய்தலால் மயக்கஞ் செய்வதாகியும் உள்ள இலக்கணங்களை யுடையதாம். (எ-று)

புவன போகந் தநுகரணமு முயிர்க்காய் என்றதனால் மாயையின் சொரூபம் புவனாதிகளென்பது கூறப்பட்டது. (1) மாத்துமிகர் மாயையைச் சூனியமென்பர். அதனை மறுத்தற்கு உலகத்துக்கோர் வித்துமாய் என்றார். (2) க்ஷணிகவாதிகள் ஒன்றன் சார்பில் ஒன்று தோன்றுமென்பர். எனவே ஒன்று தோன்றுங்கால் அது தோன்றுதற்கு முன்னுள்ளது கெடும் என்பது அவர் கொள்கை. அதனை மறுத்தற்கு "நித்தமாய்" எனரூர். (3) உலகாயதர் உலகத்தோற்றத்திற்குப் பூதங்களே காரணமென்பர். அவராற் கொள்ளப்படுவன நான்கு பூதங்களேயாம். அவை உருவமாதலின், அதனை மறுத்தற்கு "அருவாய்" என்றார். (4) வைசேடிகர் முதலியோர் உலகத்திற்குக் காரணம் பரமாணுக்களென்பர். அணுக்கள் என்றதனாலேயே வியாபகமில்லாததென்பது பெறப்படும். அதனை மறுத்தற்கு "எங்கும் வியாபியாய்" என்றார். (5) சாங்கியர் உலகத்திற்குக் காரணம் முக்குணமயமாகிய பிரகிருதி என்பர். அதனை மறுத்தற்கு "ஏகநிலையதாய்" என்றார். (6) பாற்கரியர் உலகத்திற்குக்காரணம் பிரமம் என்பர்; அதனை மறுத்தற்கு "விமலனுக்கோர் சத்தியாய்" என்றார். (7) சிவாத்துவிதர் உலகத்திற்குக்காரணம் சிற்சத்தி என்பர். அதனை மறுத்தற்கு "அசித்தாய்" என்றார். (8) மாயாவாதிகள் உலகத்திற்குக்காரணமாகிய மாயை அநிர்வசனம் என்பர். அதனை மறுத்தற்கு " வைத்ததோர் மலமாய்" என்றார். இத்தன்மைத்தாகிய மாயை ஆணவமலம்போல மயக்கமே செய்யுமென்பர் (9) சைவருளொருசாரார். அதனை மறுத்தற்கு மயக்கமுஞ் செய்யும் என்றார்.

செய்யுளாகலின் முறை பிறழ வைக்கப்பட்டன. மயக்கமே என்ற பிரிநிலை ஏகாரம் தநுகரணாதிகளைச் செய்யாதென விலக்கும். மயக்கமும் என்ற வும்மை தநுகரணாதிகளால் அறிவை விளக்குவித்து மயக்கமுஞ்செய்யும் என்பது குறித்தது. இங்கு மயக்கம் என்றது விபரீதவுணர்வை. அவ்விபரீதவுணர்வைச் செய்தல் மாயைக்குத் தன்னியல்பன்று என்பதை மயக்கமும் என்ற வும்மை உணர்த்திநின்றது. மாயைக்குத் தன்னியல்பு ஏகதேச அறிவைச்செய்தல்.

ஒன்றாயுள்ளது அழியாது என்ற இதனால் பலவாகிய ஆன்மா அழியுமோவெனின், பலவாயும் சித்தாயிருத்தலால் அழியாதென்க. ஆகவே

பலவாயும் சடமாயும் உள்ளன அழியுமென்றும், ஒன்றாயும் சடமாயுமுள்ளது அழியாது என்றும், சித்து ஒன்றாயினும் பலவாயினும் அழியாதென்றும் அறிக. [ருரு]

மாயையிலிருந்து காலதத்துவம் தோன்றும் எனவும் அதனியல்பும் கூறுகின்றது.

**மாயையிற் கால மோடு நியதிபின் கலாதி தோன்று**
**மாயவக் கால மூன்றா யாக்கியு மளித்தும் போக்கிக்**
**காயமோ டுலகுக் கெல்லாங் காலசங் கையினைப் பண்ணி**
**நாயக னாணையாலே நடத்திடுஞ் சகத்தை யெல்லாம்.**

(**கொ-டு.**) ஆய அக்காலம் நாயகன் ஆணையாலே மூன்றாய் ஆக்கியும் அளித்தும் போக்கி (யும்) காயமோடு உலகுக் கெல்லாம் காலசங்கையினைப் பண்ணி சகத்தை யெல்லாம் நடத்திடும்.

(**பொ-ரை,**) அத்தன்மைத்தாகிய அசுத்த மாயையினின்றுங் கால தத்துவமும், நியதி தத்துவமும் பின்னர்க் கலாதத்துவம் முதலியனவும் முறையே தோன்றுவனவாம். அவற்றுள் ஒன்றாகிய கால தத்துவமாவது, முதல்வன் ஆணையால் செல்காலம், நிகழ் காலம், வருங்காலம் என முத்திறப்படும். அக்காலம் சிருட்டி திதி சங்காரம் என்னும் முத் தொழிலை அடைவதாகிய உடலும் உலகமுமாகிய காலத்திற்குக் கீழுள்ள காரியப் பிரபஞ்சமனைத்தையும் காலவரையறைக்குட்படுத்தி உலகத்தை யெல்லாம் கன்மத்தளவில் நடத்தி நிற்கும். (எ-று.)

ஆக்கியும் அளித்தும் என்றவிடத்துள்ள எண்ணும்மை போக்கி என்றவிடத்தும் சென்றியையும், நாயகனாணையாலே என்பதனை ஒவ்வொரு தத்துவத் தோற்றத்தினும் சேர்த்துரைக்க. (ருசு.)

அவ்வசுத்த மாயையினின்று கால தத்துவத்தின் பின்னர் நியதி தத்துவமும், கலா தத்துவமும் தோன்றும் எனவும், அக்கலையில் வித்தையென்னுந் தத்துவம் தோன்றும் எனவும் அவற்றின் இயல்பும் கூறுகின்றது.

**நியதிபின் றோன்றிக் கன்ம நிச்சயம் பண்ணி நிற்கு**
**மயர்விலாக் கலைபின் றோன்றி யாணவ மொதுக்கிச் சித்தின்**
**செயல்புரி கிரியா சத்தி தெரிவிக்குஞ் சிறிதே வித்தை**
**யுயர்கலை யதனிற் றோன்றி யறிவினை யுதிக்கப் பண்ணும்.**

(கொ-டு.) பின் நியதி தோன்றி கன்ம நிச்சயம் பண்ணி நிற்கும். பின்அயர்வு இலாக்கலை தோன்றி ஆணவம் சிறிதே ஒதுக்கி சித்தின் செயல் புரி கிரியா சத்தி தெரிவிக்கும். உயர்கலை யதனில் வித்தை தோன்றி அறிவினை (ச்சிறிதே) உதிக்கப் பண்ணும்.

(போ-ரை,) அக் கால தத்துவத்தின் பின்னர் அம் மாயை யினின்றும் நியதி தத்துவம் தோன்றும். அந் நியதி அவரவர் செய்த கன்மம் அவரவரே அநுபவிக்குமாறு முதல்வன் ஆணை யால் நியமிக்கும். அதன் பின் அம் மாயையினின்றே அயர்ச்சி யில்லாத கலா தத்துவம் தோன்றி ஆணவத்தின் மறைப்பைச் சிறிது நீக்கி ஆன்மாவின் தொழில் செய்யுங் கிரியா சத்தியைச் சிறிது விளக்கி முதல்வன் ஆணையால் வினைக்கீடாகவரும் போகத் தில் செலுத்தி நிற்கும். உயர்ந்த அக் கலா தத்துவத்தினின்றும் வித்தியா தத்துவந் தோன்றி அவ்வான்மாவினது அறிவைச் சிறிது விளக்கி முதல்வன் ஆணையால் அப் போகத்தின் கட் செலுத்தி நிற்கும். (எ-று.) (ருரு.)

வித்தையினின்று அராக தத்துவந் தோன்றும் எனவும், அதனியல்பும், காலம் நியதி கலை வித்தை அராகமென்னும் ஐந்தோடுங் கூடிய உயிரின் நிச்சயம் புருட தத்துவ மெனவுங் கூறு கின்றது.

**விச்சையி னராகந் தோன்றி வினைவழி போகத் தின்க**
**ணிச்சையைப் பண்ணி நிற்குந் தொழிலறி விச்சை மூன்றும்**
**வைச்சபோ திச்சா ஞானக் கிரியைமுன் மருவி யான்மா**
**நிச்சயம் புருடனாகிப் பொதுமையி னிற்ப னன்றே.**

(கொ-டு.) விச்சையின் அராகந் தோன்றி இச்சையை வினைவழி போகத்தின் கண் பண்ணி நிற்கும். தொழில் அறிவு இச்சை மூன்றும் வைச்சபோது ஆன்மா இச்சா ஞானக்கிரியை முன் பொதுமையின் மருவி நிச்சயம் புருடனாகி நிற்பன் அன்றே.

(போ-ரை.) அவ் வித்தையினின்றும் அராகதத்துவந் தோன்றி ஆன்மாவினது இச்சா சத்தியை விளக்கி வினைக்கீடாக வரும் அப் போகத்தில் முதல்வன் ஆணையால் ஆன்மாவைச்

செலுத்தி நிற்கும். இவ்வாறு கலை வித்தை அராகம் மூன்றும் தொழில் அறிவு இச்சை மூன்றனையும் விளக்கியவிடத்துக் கன்மத்தை வரையறுத்தல் செய்யுங் காலமும், நியமித்தல் செய்யும் நியதியும் உளப்பட ஐந்து தத்துவங்களாகிய சட்டையோடுங் கூடிய உயிர் இச்சா ஞானக்கிரியை மூன்றனையும் ஏக தேசத்தில் பொருந்தி நிற்கும். அவ்வுயிரே பொது வகையால் நிச்சயமாகிய புருட தத்துவமெனப் பெயர்பெற்று அப்போகத்தில் முதல்வன் ஆணையால் பற்றுச்செய்து நிற்கும், (எ-று.)

சிறப்பு வகையாற் புருட தத்துவமென நிற்றல் மூலப் பகுதியிற் றோன்றும் அஞ்ஞானம், அகங்காரம், அவா, ஆசை, கோபம் என்னும் பஞ்ச கிலேசத்தையுடையதாயிருக்கும் பொழுதேயாதலின், இவ்விடத்து "பொதுமையில் நிற்பன்" என்றார். உயிர் சித்துப்பொருள். தத்துவம் சடப்பொருள். ஆதலின், புருட தத்துவமென்பது உயிரன்று. உயிர் போகத்தில் பற்றுச் செய்யுங்கால் அப்பற்று புருட தத்துவமென நிற்ப தன்றி வேறில்லையென்ப தறிவித்தற்கு "நிச்சயமபுருடனாகி" என்றார். [நிகு]

மேற்கூறிய கலா தத்துவத்தினின்று மூலப் பிரகிருதியும், அதினின்று குண தத்துவமும் தோன்றும் எனவும், குணதத்துவத்தின் இயல்பும் கூறுகின்றது.

**வருங்குண வடிவாய் மூலப் பிரகிருதி கலையிற் றோன்றித்**
**தருங்குண மூன்று மொன்றிற் றான் மூன்றாய் மும்மூன் றாகு**
**மிருங்குண ரூப மாகி யியைந்திடு மெங்கு மான்மாப்**
**பெருங்குண வடிவாய்ப் போக சாதனம் பெந்தமாமே.**

[கொ-டு.] கலையின் மூலப் பிரகிருதி வரும் குண வடிவாய்த் தோன்றி, தருங்குணம் மூன்றாய், ஒன்றின் தான் மூன்றாய மும் மூன்றாகும். போக சாதனம் பெருங் குணவடிவாய்ப் பெந்தமாமே. எங்கும் ஆன்மா இருங்குண ரூபமாகி இயைந்திடும்.

(பொ-ரை.) அசுத்த மாயையினின்றும் மேற் கூறியவாறு கால முதலிய தத்துவங்கள் தோன்றிய பின்னர், அத் தத்துவங்களுள் ஒன்றாகிய கலா தத்துவத்தினின்றும் குணங்கள் அடங்கியிருக்கின்ற மூலப் பிரகிருதி முதல்வன் ஆணையாற் றோன்றும்.

அம் மூலப் பிரகிருதியினின்றும் சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் மூவகையான குண தத்துவந் தோன்றும். அக் குணம் ஒவ்வொன்றும் முத்திறப்பட்டு ஒன்பது வகையாம். அக் குணதத்துவத்தில் போகத்துக்குச் சாதகமாகிய புத்தி முதலிய தத்துவங்கள் தோன்றி அத் தத்துவங்களெல்லாம் குண வடிவமாகவே முதல்வன் ஆணையால் உயிரைப் பந்திக்கும். அதனால், போகம் அநுபவிக்கும் இடம் எல்லாம் உயிரும் பெரிய அக்குணரூபமாக நிற்கும். (எ-று.)

சாத்துவிக குணமானது, பொறுமையையும், மன உறுதியையும், மனதின் சூட்சுமத்தையும், துன்பத்திலும் சந்தோஷமாயிருக்குந் தன்மையையும், மனம் வாக்குக் காயம் மூன்றும் கபடமின்றி ஒத்திருக்குந் தன்மையையும், நல்ல உத்தியோகத்தையும், பெற்றது கொண்டே மகிழுந் தன்மையையும், மோட்ச இச்சையையும், இந்திரிய அந்தக் கரணங்களின் அடக்கத்தையும், சகல சீவர்களிடத்தும் இரக்கத்தையும், மிருதுவான உணவை யுண்ணுதலையும் உண்டுபண்ணும்.

இராசத குணமானது, இலெளகீகப் பிரவிருத்தியையும், கோப முதலிய குரூரத் தன்மையையும், யானென தென்னும் அபிமானத்தையும், வஞ்சனையையும், இரக்கமில்லாமையையும். போகத்தின் கண் இச்சையையும், டம்ப நடையையும், துக்கத்தையும் உண்டுபண்ணும்.

தாமத குணமானது, ஒன்றிலும் திருப்தி இல்லாமையையும், உற்சாகம் இன்மையையும், ஈனப் பிரவிருத்தியையும், கோட் சொல்லுகையையும், அசுத்த உணவை உண்பதையும், அதிக நித்திரையையும், கர்வத்தையும், சோம்பலையும், பிறருடைய மதிப்பைக் குறைக்க எண்ணுதலையும், அறிவில்லாமையையும், மோகத்தையும் உண்டுபண்ணும்.

ஒவ்வொன்றும் முத்திறப்படுதலாவது, ஒரு குணம் மேற்பட்டிருக்குங்கால் ஏனைய இரண்டு குணங்கள் அடங்கித் தோன்றுதல். தோன்றுங்கால் சாத்துவிகத்தில் சாத்துவிகம் இராசதம் தாமதம், இராசதத்தில் இராசதம் தாமதம் சாத்துவிகம், தாமசத்தில் தாமதம் சாத்துவிகம் இராசதம் என ஒன்பது வகைப்படும். (௫எ.)

மூலப் பிரகிருதியினின்று குண தத்துவமேயன்றி அஞ்ஞானமும் தோன்றுமெனவும், குண தத்துவத்தினின்று புத்தி தத்துவந் தோன்றும் எனவும், அவற்றினியல்பும் கூறுகின்றது.

சித்தமா மவ்விய த்தஞ் சிந்தனை யதுவுஞ் செய்யும்
புத்தியவ் வியத்திற் றோன்றிப் புண்ணிய பாவஞ் சார்ந்து
வத்துநிச் சயமும் பண்ணி வருஞ்சுக துக்க மோகப்
பித்தினின் மயங்கி ஞானக் கிரியையும் பேணி நிற்கும்.

[கோ - ரு] வரும் வத்து நிச்சயமும் பண்ணி.

(போ - ரை) குண தத்துவத்திற்குக் காரணமெனச் சித்திக்கப்பட்டதாகிய மூலப்பிரகிருதியானது அக்குணதத்துவத்தைத் தோற்றுவித்தலேயன்றி, ஒன்றைப் பிறிதொன்றாக உணரும் அவிச்சையாகிய அஞ்ஞானத்தையுந் தோற்றுவிக்கும். அதன்பின் அந்தக்குண தத்துவத்தினின்றும் புத்தி தத்துவந் தோன்றும். அபபுத்தி தத்துவம் உயிர்கள் செய்த புண்ணிய பாவங்களைப் பொருந்தி அப்புண்ணிய பாவத்திற்கீடாகவந்த பொருளை இன்னதென நிச்சயித்து, நிச்சயித்தபின்னர் அப்பொருளைச் சுக துக்க மோக வடிவாய் வேறு படுத்தி, வேறுபடுத்தியவிடத்து அறிவு தொழில்கட்கு விடயமாய் நிற்கும். (எ-று.)

சித்தமாமவ்வியத்தஞ் சிந்தனையதுவுஞ் செய்யும் என்பதனைச் சித்தத்தின்மேல் வைத்துரைப்பாருமுளர். † "சிந்தைநினைவையம்-வந்துதருமன மொழிய வகுப்பொணாதே" எனப் புடை நூலாசிரிய ரோதுதலின், மனத்தின் பின்னதாய் அதன் கணடங்குஞ் சித்தத்தை இவ்விடத்துக் கூறுதற் கோரியையின்மையானும், புடை நூலாசிரியர் அவ்வாறோதாமையானும், சிவாகமங்களோடு முரணுதலானும் அவ்வுரை பொருந்தாது. புடை நூலாகிய சிவப்பிரகாசத்தின் கருத்து வருமாறு:—சித்தமானது நினைவு மாத்திரமே. சந்தேகததை வந்துண்டாக்குகின்ற மனத்தை யொழிய வேறாக வகுத்துக் கூறவொண்ணாது என்பதாம். இச்செய்யுளிற் சிந்தனை யென்றது சித்தத்தின் றொழிலையன்று. ஏற்புழிக்கோடலால் ஒன்றைப்பிறிதொன்றாகவுணரும் விபரீத வுணர்வைக் குறித்தது. ஏற்புழிக்கோடலாவது, அவ்வியத்தத்திற்கு ஏற்ற தொழிலைக்கொள்ளுதல். சிந்தனையதுவும் என்ற விடத்துள்ள வும்மை குணதத்துவத்தைத் தோற்றுவித்தலே யன்றி என இறந்தது தழுவிற்று. மேல் சடு, சசுவது செய்யுட்களில் 'கன்மால்' என்றாற்போல வியத்தம் என்றது அம்முக்கெட்டு இல் உரு

† சிவப்பிரகாசம், பொதுவதிகாரம். உ-ம் சூ-ம் செ-உ௪.

பேற்று வியத்தில் என நின்றது. புத்தி அவ்வியத்தில் என்றதிலுள்ள அகரம் அந்தவியத்தில் என்னும் பொருள் குறித்த சுட்டு. சார்ந்து என்பது சாரப்பட்டு என்னும் பொருள் குறித்தது. பேணி என்பது பேணப்பட்டு என்னும் பொருள் குறித்தது. சுக துக்க மோகங்கள் பித்துப் போல உயிரை மயக்குதலால், அவற்றைப் பித்தென்றார். மயக்குதல் இவ்விடத்துப் பரிணமித்தல்.

* "சிந்தித்தாய்ச் சித்தந் தெளியுந்தாய் ஆங்காரம் புந்தியா யாய்ந்துமனமாகி" என்னுஞ் சிவஞானபோதத் திருவெண்பாவால் சித்தம் மனம் அகங்காரம் புத்தியாகிய இவை முறையே ஒன்றன்பின் ஒன்றாய்த் தொழிற்படுமென்று கூறியிருக்கவும், இவ்விடத்துப் புத்தியை முன்னதாகக்கூறி வருஞ் செய்யுட்களில் அகங்காரம் மனம் சித்தம் முறையே ஒன்றன்பின்ஒன்றாய்த் தோன்றுமெனக்கூறுதல் முரணாதோவெனின், முரணாது. என்னை? இவ்விடத்துத் தோற்றுமுறையுஞ் சிவஞானபோதத்திற் றொழிற்படுமுறையுங் கூறியதனாலென்க. இது எதுபோலவெனின், ஓர் அரசன் மாளிகையைக் கூறுமிடத்து அகத்துக் கொலுவீற்றிருக்கும் மண்டபமுதல் வெளிவாயில் வரை ஒவ்வொன்றும் உள்ளனவாகக் கூறுதலும், அம்மாளிகைக்குச் செல்லுங்கால் வெளிவாயில் முதலாக ஒவ்வொன்றாய்க் கடந்து செல்லுதலும் போலவாம். (௫௮)

புத்தி தத்துவத்தினின்று அகங்காரதத்துவம் தோன்றுமெனவும், அதனியல்பும், அது முத்திறப்படுமெனவும் கூறுகின்றது.

ஆங்கார‌ம் புத்தி யின்க ணுதித்தகந் தைக்கு வித்தா
யீங்கார்தா னென்னோ டொப்பாரென் றியானென்னதென்றே
நீங்காதே நிற்குந் தானு மூன்றதாய் நிகழு மென்பர்
பாங்கார்பூ தாதி வைகா ரிகந்தைச தந்தா னென்றே.

[கொ - ६] புத்தியின்கண் ஆங்காரம் உதித்து ஈங்கு ஆர்தான் என்னோடு ஒப்பார் என்று அகந்தைக்கு வித்தாய் யான் என்னது என்றே நீங்காதே நிற்கும். தானும் பாங்கு ஆர் பூதாதி வைகாரிகம் தைசதம் தான் என்றே மூன்றதாய் நிகழும் என்பர்.

---

* சிவஞானபோதம் சூ-ம் ச-ம். க-ம் அதி.

(போ - ௫௰) அப்புத்தி தத்துவத்தினின்றும் அகங்கார தத்துவம் தோன்றும். அவ்வகங்காரம் இவ்விடத்து என்னோடொப்பவர் ஒருவரும் இல்லை என அகந்தைப் படுதற்குக் காரணமாய் உடலை யானென்றும் மற்றப்பொருள்களை எனதென்றும் அபிமானித்து உயிரோடு வேற்றுமை இன்றி நிற்கும். அவ்வாறு நிற்கும் அகங்காரம் தனக்கு மூலமாகிய குண தத்துவத்தின் வேற்றுமைபற்றி தாமத குணத்தின் தோற்றமான பூதாதி அகங்காரம், இராசத குணத்தின் தோற்றமான வைகரி அகங்காரம், சத்துவகுணத்தின் தோற்றமான தைசத அகங்காரம் என மூத்திறப்படும் என்பர். (எ-று.)

அகங்காரம் ஆங்காரம் என மருவிற்று. நீங்காது நிற்கும் என்றதனால் அந்த அகங்காரங் கிரியாசத்தியைத் தொழிற்படுத்துங் கலைபோல வினைமுதற்காரகமென்று உபசரிக்கப்படுமென்பதாயிற்று. கருவியைக் கருத்தாவென்றது உபசாரம். வினை முதற்காரகம்—கருத்தாவாய் நின்று செய்விப்பது. [ருக]

தைசத அகங்காரத்தினின்று மனந்தோன்றி அம்மனம் சித்தரூபமாய் நிற்கும் எனவும், அவற்றின் இயல்பும், அவ்வகங்காரத்தில் மனத்தின் பின்னாக ஞானேந்திரியமும் வைகரி அகங்காரத்தில் கன்மேந்திரியமுந் தோன்றுமெனவும் கூறுகின்றது.

**மனமது தைசதத்தின் வந்தொரு பொருளை முந்தி**
**நினைவதுஞ் செய்தங் கைய நிலைமையி னிற்கு மாங்கே**
**யினமலி சோத்திராதி கன்மவிந் திரிய மெல்லா**
**முனமுரை செய்த வைகா ரிகந்தரு மென்பர் முன்னோர்.**

(கோ - ௫.) தைசதத்தின் மனமது வந்து முந்தி ஒரு பொருளை நினைவது செய்தும் அங்கு ஐய நிலைமையில் நிற்கும். இனம் மலி சோத்திராதி ஆங்கே (தோன்றும்) முனம் உரைசெய்த வைகாரிகம் கன்ம இந்திரியம் எல்லாம் தரும் என்பர் முன்னோர்.

(போ - ரை.) அவ்வகங்கார மூன்றனுள்ளே தைசத அகங்காரத்தினின்று மனமானது தோன்றும். அம்மனம் எதிர்ப்பட்டதொருபொருளைச் சித்தரூபமாய் நின்று அப்பொருளின்உண்மையை அறியாமல் பிண்டமாக அறிந்து சிந்திக்கும். அதுவன்றி,

அம்மனமே அவ்வாறு சிந்தித்த பின்னர் அப்பொருளின்கண் அதுவோ இதுவோ என்று சந்தேகித்து நிற்கும். இவ்வாறு சந்தேகித்து நிற்றலால் மனமென்றும், சிந்தித்து நிற்றலால் சித்தமென்றும் மனம் இருவகைப்படுமாறு அறிக. மனந்தோன்றிய பின்னர் உணரும் வகையில் அம்மனத்திற் கினமாகிய ஞானேந்திரியங்கள் அத்தைசத அகங்காரத்தினின்று முதல்வன் ஆணையாற் றோன்றும். முற்கூறிய ஏனை வைகாரி யகங்காரத்தினின்று கன்மேந்திரிய மைந்தும் முதல்வன் ஆணையாற்றோன்றும் என்பர் முன்னோர். (எ - று.)

இனமலி சோத்திராதி என்றவிடத்து, தோன்றும் என்பது சொல்லெச்சமாக வருவித்துரைக்க. [௬௦.]

ஞானேந்திரியங்களாவன இவை என்றும் அவற்றின் விடயங்கள் இவை என்றும் கூறுகின்றது.

**நற்செவி துவக்குக் கண்ணு நாசியைந் திணையு நல்லோர்**
**புத்தியிந் திரிய மென்று புகன்றன ரிவைத மக்குச்**
**சத்தநற் பரிச ரூப விரதகந் தங்க ளைந்தும்**
**வைத்தனர் விடய மாக வடைவினின் மருவு மென்றே.**

[கோ - ௬.] நற்செவி துவக்குக் கண் நா நாசி ஐந்தினையும் புத்தியிந்திரியம் என்று நல்லோர் புகன்றனர். இவை தமக்கு விடயமாக அடைவினில் சத்தம் நன்பரிச ரூப விரத கந்தங்கள் ஐந்தும் மருவும் என்றே வைத்தனர்.

(போ - ரை.) அவ்விருவகை இந்திரியங்களுள் நன்மையாகிய செவியும் உடலும் கண்ணும் நாக்கும் நாசியும் ஆகிய ஐந்தினையும் ஞானேந்திரியங்க ளென்று நல்லோர் மொழிந்தனர். அறியுந் தன்மையால் ஞானேந்திரியமெனப் பெயராயிற்று. அவ்விந்திரியங்கள் ஐந்திற்கும் முறையே சப்தமும் பரிசமும் ரூபமும் இரதமும் கந்தமும் என்னும் பூத குணமைந்தும் விடயமாகப் பொருந்துமென்று வைத்தனர். (எ - று.) (௬௧.)

கன்மேந்திரியங்களிவை யென்றும் அவற்றின் றொழில்களிவை யென்றும் கூறுகின்றது.

*வாக்கொடு பாதம் பாணி பாயுவோ டுபத்த மைந்து*
*நீக்கினர் முன்னே கன்மேந் திரியங்க ளெனநி னைந்தே*
*யாக்கிய வசன கமன தானமும் விசர்க்கா னந்த*
*மூக்கமா ரைந்து மைந்தின் றொழிலென வோதி னாரே.*

[கோ - டு.] வாக்கொடு பாதம் பாணி பாயுவோடு உபத்த மைந்தும் கன்மேந்திரியங்களென முன்னே நினைந்தே நீக்கினர். ஐந்தின் தொழில் ஆக்கிய வசன கமன தானமும் விசர்க்கம் ஆனந்தம் ஊக்கம் ஆர் ஐந்தும் என ஓதினாரே.

(பொ - ரை.) கன்மேந்திரியங்களாவன, வாக்கும் பாதமும் கையும் மல விசர்க்கஞ் செய்யும் பாயுவும் சலவிசர்க்கஞ் செய்யும் உபத்தமுமென ஐந்தாம். இவ்வைந்துந் தொழில் செய்யுங் கருவியாதலால், ஞானேந்திரியங்களின் வேறாகக் கன்மேந்திரியங்களென முன்பே கருதிவைத்தனர். இவ்வைந்தின்றொழில்கள் முறையே வசனமும் நடையும் கொடையும் மல விசர்க்கமும் ஆனந்தமுமாகிய வலிமைபெற்ற ஐந்துமாமென மொழிந்தனர். ()

அவ்வாறாயின், ஆன்மாவின் ஞானக் கிரியைகளை விளக்குதற்கு இந்திரியம் அந்தக்கரணம் கலாதி என்னும் மூவகையினுள், ஒன்றேயமையுமாகலின், ஏனைய மிகையா மென்பார்க்குச் சமாதானங் கூறுதற்கெழுந்தது வருஞ் செய்யுள். [௬௨.]

உயிர்க்கு ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் புறக்கருவியும், மன முதலிய நான்கும் அகப்புறக் கருவியும், கலை முதலியன அகக்கருவியுமாம் முறைமை கூறுகின்றது.

*வாயாதி சோத்தி ராதி புறத்துவாழ் கருவி யாகு*
*மோயாத மனாதி காயத் துணருமுட் கருவி யாகு*
*மாய்வார்கட் கராக மாதி யவற்றினுட் கருவி யென்பர்*
*மாயாடன் வயிற்றி வற்றாற் றுடக்குண்டு வாழு மான்மா.*

[கோ - டு.] அராகம் ஆதி ஆய்வார்கட்கு எனவும், ஆன்மா துடக்குண்டு வாழும் எனவும் கூட்டுக.

(பொ - ரை.) ஆன்மாவின் அறிவு தொழில்களை விளக்குவதற்கு இந்திரியம் அந்தக்கரணம் கலாதி என்னும் முத்திறத்துள்

ஒன்று போதாதோவெனின், போதாது. எதனாலெனின், ஒரு பொருளை அறிய வேண்டுவோர்க்குக் கன்மேந்திரிய ஞானேந்திரியங்களாகிய அவ்விருவகை இந்திரியங்களும் புறத்துத் தோன்றி அறிந்து தொழிற்படும் புறக்கருவிகளாம். ஒழிவில்லாத மன முதலிய காரணங்கள் அவ்விந்திரியங்களால் அறியப்பட்ட பொருள்களை உடம்பின் அகத்தே நின்று பகுத்தறியும் உட்கருவிகளாம். ஏனைக் கலாதிகளாவன, ஆய்வார்க்கு அவ்வந்தக் காரணங்களால் அறியப்பட்ட பொருள்களில் விருப்பு வெறுப்புற்று ஆன்மாவின் இச்சா ஞானக் கிரியாசத்தி பொருந்தச் செய்தலின்உள்ளந்தக்காரணங்களாகிய கருவிகளாம்என்பர். இவ்வுள்ளந்தக் காரணங்களை நோக்க மன முதலிய அந்தக்கரணம் புறமாகவும் இந்திரியங்களை நோக்க அகமாகவும் இருத்தலால் அம்மன முதலியவற்றை அகப்புறக் கருவி என்றும் கலை முதலியவற்றை அகக்கருவி யென்றுங் கூறுவர். இவ்வாறு இவை தம்முள் வேற்றுமை யாதலால், மாயையின் கலக்குண்ட பாகத்தில் உண்டாகிய இம் முத்திறக் கருவிகளாலும் உயிர் கட்டுப்பட்டு நிற்கும். ()

மாயாளெனப் பெண்பாலாகக்கூறியது வடமொழி மதம்பற்றி; தத்துவங்கள் தோன்றுதற் கிடமாதல்பற்றி உருவகஞ் செய்தற்பொருட்டு மாயாளெனக்கூறியதெனினும் அமையும். ஒயாத என்னும் அடை மன முதலிய அனைத்திற்கு மன்று. மனதிற்கு மாத்திரமேயாம். [௬௬]

பூதாதி அகங்காரத்தினின்று சப்தாதி தன்மாத்திரை ஐந்தும் தோன்றும் எனவும், அவற்றின் இயல்பும், இத்தன்மாத்திரை ஐந்தும், மனம், புத்தி, அகங்காரம் மூன்றும் ஆக எட்டும் புரியட்டக சரீரம் எனவும் கூறுகின்றது.

**ஓசைநற் பரிச ரூப விரதகந் தங்க ளென்று**
**பேசுமாத் திரைக ளைந்தும் பிறக்கும்பூ தாதி கத்தி**
**னேசவிந் திரியங்கட்கு நிகழுறி விதனுற் காண்டு**
**மாசைசேர் மனுதி தன்மாத் திரைபுரி யட்ட கந்தான்**

[கோ - ௫] பூதாதிகத்தின் ஓசை நற்பரிசமெனவும், தன்மாத்திரை ஆசைசேர் மனுதி புரியட்டகந்தான் எனவுங் கூட்டுக.

(போ - ரை) அவ்விருவகை இந்திரியங்களுந் தோன்றிய பின்னர் வினைப்பூதாதி யகங்காரத்தினின்று சப்தமும் பரிசமும் உருவமும் இரதமும் கந்தமும் எனக் கூறப்படும் தன்மாத்திரைக ளைந்துந் தோன்றும். மேற்கூறிய விரும்பப்பெற்ற இந்திரியங் கள் தத்தம் விடயங்களை விடயிக்குமாறு முதல்வன் ஆணையால் அத்தன்மாத்திரைகள் ஊக்கஞ்செய்வித்து நிற்கும். இத்தன்மாத் திரைகளைந்தும் இச்சாரூபமாகிய மனம், புத்தி, அகங்காரம் மூன் றும் ஆக எட்டும் புரியட்டக வுடம்பாம். (எ-று.)

பேசுதன்மாத்திரை என இருக்கவேண்டுவது பேசு மாத்திரை என நின்றது தலைக்குறை.

மேல் சுக-வது செய்யுளில் ஞானேந்திரியங்களின் விடயங்களாகக் கூறிய சத்தாதி வேறு. ஈண்டுக்கூறிய சத்தாதி வேறு. அதுபோக ரூப மாய்ப் புறத்தே யிருக்கும். இது தேக ரூபமாய் அகத்தேயிருக்கும். அவ்வாறிருத்தல் எவ்வாறெனின், சப்தம் அகத்தில் கேட்குந் தன்மை யான அறிவாயும், புறத்தில் கேட்கப்படுந் தன்மையான ஒலியாயுமிருக்கும். இவ்வாறே ஏனையவுமுய்த் துணர்ந்துகொள்க. கேட்பது குணமாகிய தன்னளவிற்றாயும், கேட்கப்படுவது பொருளளவிற்றாயுமிருக்குமாதலின் கேட்பதற்குத் தன் மாத்திரை என்றும், கேட்கப்படுவதற்கு விடயம் என்றும் பெயராயிற்று.

தத்துவங்களைப்பற்றிக் கூறிக்கொண்டுவரு மிவ்விடத்தில் "மனாதி தன்மாத்திரைபுரியட்டகம்" என உடன் கூறியது தன்மாத்திரை அகத்தி லிருக்குமென்ப துணர்த்துதற்பொருட்டு. (சுச)

தன் மாத்திரையினின்று ஆகாய முதலிய ஐந்து பூதங்கள் தோன்றுமெனவும், அவற்றின் குணங்கள் ஒன்றற்கொன்று ஏற்ற மாயிருக்குமெனவும், இப்பூதங்களின் காரியங்கள் தாத்துவிகங்க ளாகிய அங்கமாகவும், இப்பூதங்கள் அங்கியாகவு மிருக்குமென வும் கூறுகின்றது.

சாற்றிய பஞ்ச தன்மாத் திரைகளிற் சத்த முன்னாத்
தோற்றும்வான் வளிதீநீர்மண் டொக்கியே யொன்றுக் கொன்றங்
கேற்றமா மோசை யாதி யிருங்குண மியைந்து நிற்கு
மாற்றவே விடய பூத மங்காங்கி பாவத் தாமே.

[செய் - ௫] சத்தம் முன்னுச்சாற்றிய பஞ்ச தன்மாத்திரைகளின் வான் வளி தீ நீர் மண்தோற்றும். தொடக்கியே ஒன்றுக்கொன்று அங்கு ஏற்றமாம் ஓசை ஆதி யிருங்குணம் இயைந்துநிற்கும். பூதம் ஆற்றவே விடயம் அங்காங்கி பாவத்தாமே.

(பொ - ரை) மேற்சத்த முதலியவாகக் கூறிய தன்மாத்திரைகள் ஐந்தனுள் சப்தத்தில் ஆகாயமும், பரிசத்தில் வாயுவும், ரூபத்தில் அக்கினியும், இரதத்தில் அப்புவும், கந்தத்தில் பிருதி வியுமாகிய தூலபூதம் ஐந்துந் தோன்றும். அப்பூதங்களுள் ஆகாயம் சப்த குணத்தையும், வாயு சப்த பரிச குணங்களையும், அக்கினி சப்த பரிசரூப குணங்களையும், அப்பு சப்த பரிசரூப இரத குணங்களையும், பிருதிவி சப்த பரிசரூப இரதகந்த குணங் களையும் விளங்கித் தோன்றுதலையுடைத்தாய், சப்த முதலிய தன் மாத்திரைகளுடன் பிரிப்பின்றி நிற்கும். இவ்வைம்பெரும் பூதங்களும் தன் மாத்திரையோடு கூடிநின்று இந்திரியங்களைத் தொழிற்படுத்துவதற்கு இப்பூதங்களில் நின்று காரிய பூதங்க ளாகிய அறுபது தாத்துவிகங்களுந் தோன்றும். அத்தாத்து விகம் அங்கமாகவும், இத்தூலபூதங்கள் அங்கியாகவும் நிற்கும். (எ-று)

ஆற்றுதல்-ஊக்குதல். விடயம் என்பது இவ்விடத்துக் காரியம் என் னுமளவில் நின்றது. எனவே, காரியபூதம் என்பதாம்.

காரியபூதம் என்பது தூலபூதத்தினின்றுங் காரியப்படுகின்ற பஞ்சீ கரண பூதங்களாம். பஞ்சீகரணமாவது, ஒரு பூதத்தை இரண்டு பங் காக்கி ஒரு பாதி நிற்க மற்றப்பாதி ஒவ்வொன்றையும் நான்கு கூறாகச் செய்து ஒவ்வொரு நான்கு கூறையும் தன்பாதி நீங்கிய ஏனைய பாதியோடு கூட்டலாம். கூட்டவே பிருதிவியில் எலும்பு தசை மயிர் தோல் நரம்பு முதலானவையும், அப்புவில் மூத்திரம் இரத்தம் சிலேட்டுமம் வியர்வை சுக்கிலம் முதலானவையும், அக்கினியில் இருதய உஷ்ணம் அன்ன பானாதி களைச் சீரணிக்கச்செய்கை நயனத்தில் சூடு தேகத்தில் சூடு பயித்தியம் முதலானவையும், வாயுவில் தச வாயுக்களும், ஆகாசத்தில் தச நாடிகளும் உண்டாம். தூல சரீரதத்துவங்களாகிய தாத்துவிகங்கள் சூக்கும சரீர தத்துவங்கள்போல, ஆன்மாவுக்கு நிலைத்திருப்பதின்றி அழியுந்தன்மை யுடையனவாதலால், தாத்துவிகம் எனப்பட்டது.

தூல சரீர தத்துவம் அறுபது வருமாறு:—மேற்கூறியவாறு பிருதிவியில் உண்டான எலும்பு முதலிய ஐந்தும், அப்புவிலுண்டான மூத்திர முதலிய ஐந்தும், அக்கினியிலுண்டான இருதய உஷ்ண முதலிய ஐந்தும், வாயுவிலுண்டான பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்னும் பத்து வாயுக்களும், கிடத்தல், ஓடல், இருத்தல், நடத்தல், நிறுத்தல் என்னும் அவ்வாயுவின்கூறு ஐந்தும், ஆகாயத்தினுண்டான அத்தி, அலம்புடை, இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, குகுதை, சங்கினி, சிகுவை, புருடன் என்னும் பத்து நாடிகளும், காமம், குரோதம், மதம், லோபம், மோகம் என்னும் அவ்வாகாயத்தின்கூறு ஐந்தும், வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் என்னும் கன்மேந்திரியத்தின் தொழில் ஐந்தும், சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் வாக்கு நான்கும், சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் குணம் மூன்றும், தைசதம், பூதாதி, வைகாரிகம் என்னும் அகங்காரம் மூன்றும் ஆக அறுபதுமாம், வாக்கு நான்கும் சுத்த மாயாகாரியமாயினும், புறமாய்த் தொழிற்படு முறைமைபற்றித் தூலபூத காரியமாய்க் கூறப்பட்டது. இவ்வாறே பிறவுமாம். ஞானேந்திரியங்களின் விடயமாகிய சத்தாதி ஐந்தும், வசனாதி போன்று புறத்து நிகழாமையின், புறக்கருவியினுள்வைத் தெண்ணப்படாதவாறு காண்க.

"எழுமுடல் கரணமாதி" என்னுஞ்செய்யுள்முதல் இதுவரையுள்ள பதினொன்கு செய்யுளானும், தத்துவங்கள் ஒன்றினொன்று தோன்று முறைமையும், அவற்றின் றொழிற்பாடும், அதனால் உயிருக்குண்டாம் பயனும், தாத்துவிகங்கள் பஞ்ச பூதங்களின் காரியம் என அவற்றதியல்பும் கூறப்பட்டன.

இத் தத்துவங்களெல்லாம் அகமும், அகப்புறமும், புறமும் என மூவகைப்படும். வித்தியாதத்துவங்களாகிய கலாதிகள் அகம். மன முதலிய அந்தக்கரணங்கள் அகப்புறம். இந்திரியம், தன்மாத்திரை, பூதங்கள் புறம். புறத்திலுள்ள விடயங்களோடு நேராகக் கூடுமியைபுபற்றி இந்திரிய முதலியன புறம் எனவும், இந்தப்புறத்தைநோக்க அகமாயும், கலாதிகளைநோக்கப் புறமாயும் இருத்தல்பற்றி மனம் முதலியன அகப்புறமெனவும், அவற்றினும் அகத்திருத்தல்பற்றிக் கலாதிகள் அகமெனவும் வகுத்தவாறு காண்க. அவற்றுள், புறமாகிய பூதங்கள் சரீர ரூபமாயிருத்தல் பற்றி அகப்பூதமெனவும், உலக ரூபமாயிருத்தல்பற்றிப் புறப்பூதமெனவும் இருவகைப்படும். அவ்விரண்டனுள் உலக ரூபமாகிய புறப்பூதங்களினுண்டாம் விசேடங் கூறத் தொடங்குகின்றார். (௬௫

ஐந்து பூதங்களின் குணமும் தொழிலும் இவை எனக் கூறுகின்றது.

இரந்தர மாகி வான்ற னிடங்கொடுத் திடுஞ்ச லித்துப்
பரந்தவை திரட்டுங் காறீச் சுட்டொன்று வித்தல் பண்ணு
நிரந்தரங் குளிர்ந்து நின்று பதஞ்செயு நீர்மண் டானு
முரந்தருங் கடின மாகித் தரித்திடு முணர்ந்து கொள்ளே.

(கோ - டு) வான்தான் இரந்தரமாகி இடங்கொடுத்திடும். கால் சலித்துப் பரந்தவைதிரட்டும். தீ சுட்டு ஒன்றுவித்தல் பண்ணும். நீர் நிரந்தரம் குளிர்ந்து நின்று பதஞ்செய்யும்.

(போ - ரை.) மேற்கூறிய ஐம்பெரும்பூதங்களுள் ஆகாயமானது வெளியாகிய குணத்தையும், இடங்கொடுத்தலாகிய தொழிலையும் உடையதாம். வாயுவானது சலிக்குங் குணத்தையும், பரந்தவற்றைத் திரட்டுதலாகிய தொழிலையும் உடையதாம். அக்கினியானது சூடாகிய குணத்தையும், எவற்றையும் சுட்டு நீறுக்கும் தொழிலையும் உடையதாம். நீரானது இடைவிடாது குளிருங் குணத்தையும், நனைத்தலாகிய தொழிலையும் உடையதாம். மண்ணானது வலிமை தருதற் கேதுவாகிய கடினமான குணத்தையும், எவற்றையுந் தாங்குதலாகிய தொழிலையும் உடையதாம். இவற்றினை யறிவாயாக. (எ - று.) (௬௬.)

ஐந்து பூதங்களின் வடிவும் நிறமும் பீசாக்கரமும் இவை எனக் கூறுகின்றது,

மண்புன லனல்கால் வான்பால் வடிவுநாற் கோண மாகுந்
தண்பிறை மூன்று கோணந் தருமறு கோணம் வட்டம்
வண்பொன்மை வெண்மை செம்மை கறுப்பொடு தூம வன்ன
மெண்டரு மெழுத்துத் தானும் லவரய வவ்வு மாமே. ௬௭

[கோ - டு.] மண் புனல் அனல் கால் வான் நாற்கோணம். தண் பிறை மூன்றுகோணம். தரும் அறுகோணம் வட்டம் ஆகும் பால் வடிவு வண் பொன்மை வெண்மை செம்மை கறுப்பொடு தூமம் (பால்) வன்னம் லவரய அவ்வுமாம் எண் தரும் எழுத்துத் தானுமே.

(பொ - ரை.) நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் அப்பூதங்கள் முறையே நாற்கோணமும், குளிர்ந்த பிறைபோலும் இருகோணமும், முக்கோணமும், தக்க அறுகோணமும், வட்டமும் ஆகிய ஐவகை வடிவுகளையும், முறையே வளப்பமாகிய பொன்மையும், வெண்மையும், செம்மையும், கருமையும், புகைமையும் ஆகிய ஐவகை நிறங்களையும், அவ்வாறு முறையே லகாரமும், வகாரமும், ரகாரமும், யகாரமும், ஹகாரமும் ஆகிய ஐவகைப் பீசாக்கரங்களையும் உடையனவாம். (எ - று.) (சஎ.)

ஐந்து பூதங்களின் அடையாளங்களும் அதிதெய்வங்களும் இவையெனக்கூறி, அவை நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகட்கும் உளவெனக் கூறுகின்றது.

குறிகள்வச் சிரத்தி னோடு கோகந தஞ்சு வத்தி
யறுபுள்ளி யமுத விந்து வதிதெய்வ மயன்மா லாதி
செறிபுக ழீசனோடு சதாசிவம் பூத தெய்வ
நெறிதரு கலையைந் திற்கு நிகழ்த்துவ ரிந்த நீர்மை.

(கொ - ு) பூதம் வச்சிரத்தினோடு அயன் கோகநதம் மால்சுவத்தி ஆதி அறுபுள்ளி செறிபுகழ் ஈசன் அமுதவிந்து சதாசிவம் குறிகள் அதி தெய்வம் நெறிதருகலை ஐந்துக்கும் இந்த நீர்மை நிகழ்த்துவர்.

(பொ - ரை) முற் கூறிய ஐந்து பூதங்களுள், பிருதிவியானது வச்சிராயுதத்தை அடையாளமாகவும், பிரமாவை அதிதேவதையாகவு முடைத்தாயிருக்கும். அப்புவானது தாமரையை அடையாளமாகவும், விட்டுணுவை அதிதேவதையாகவு முடைத்தாயிருக்கும். அக்கினியானது இருதலை மேழியை அடையாளமாகவும், உருத்திரனை அதிதேவதையாகவு முடைத்தாயிருக்கும். வாயுவானது அறுபுள்ளியை அடையாளமாகவும், மிக்க புகழினையுடைய மகேசுவரனை அதிதேவதையாகவு முடைத்தாயிருக்கும். ஆகாசமானது அமிர்த விந்துவாகிய வட்டத்தை அடையாளமாகவும், சதாசிவனை அதிதேவதையாகவு முடைத்தாயிருக்கும். மந்திர முதலிய அத்துவாக்களை யடக்கி

நிற்பதாகிய நிவர்த்தி முதலிய ஐந்து கலைகட்கும் இவ்வுடையா ளங்களும், அதிதெய்வங்களும் உளவாமென்று பெரியோர் கூறு வர். (எ-று.)

ஐந்து கலைகளாவன—நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந் தியதீதை என்பனவாம். இவற்றை முன்னர் எட்டாஞ்சூத்திரத்தில் விரித் துக்கூறப்படுமாதலின் அவ்விடத்துக்காண்க.

"இரந்தரமாகி" என்பது முதல் இவை மூன்று செய்யுளானும் புறப் பூதங்களி னியல்பு வேறெடுத்துக்கொண்டு வகுத்துக் கூறப்பட்டது.

அகம் அகப்புறம் புறமென்னு மூன்றனுள், சூக்கும சரீர ரூபமாயிருக் குந் தன்மாத்திரை அகப்பூதமெனவும், தூல சரீர ரூபமாயிருக்கும் ஆகாய முதலிய பூதங்கள் அகப்புறப்பூதமெனவும், உலகரூபமாகிய பூதங்கள் புறப் பூதமெனவும் வழங்கப்படும். தூல சரீரத்திலிருக்கும் பூதங்கள் தன்மாத் திரையை நோக்கப் புறமாயும், வெளிப் பூதங்களை நோக்க அகமாயு மிருத் தல்பற்றி அகப்புறப் பூதமெனப்பட்டன. அவற்றுள், அகப்பூதங்களி னியல்பு மேல் ௬௪-வது செய்யுளில் "நேசவிந்திரியங்கட்கு நிகழறிவினைத் தோற் காண்டும்" எனவும், அகப்புறப்பூதங்களினியல்பு அச்செய்யுளில் "ஆசைசேர் மனுதி தன்மாத்திரை புரியட்டகந்தான்" எனவும் சூக்கும பூதமாகிய தன்மாத்திரைக் கோதியவாறுபற்றி அறியக்கிடந்தன. இந்திரியங்களுக்கு விடயங்களை அறியுமாறு ஊக்கஞ் செய்விப்பது அகப்பூதங்களாகிய தன் மாத்திரையினியல்பு. இந்திரியங்களுக்கு விடயங்களில் செல்லுமாறு செய்விப்பது அகப்புறப் பூதங்களாகிய பூதங்களினியல்பு. ஆசை—விட யங்களிற் செல்லுதல். [௬௮.]

மேல் முதற் சூத்திரம் அறுபத்தாறுவது செய்யுளிற் கூறிய தத்துவம் ஐந்தும், இச்சூத்திரத்திற் கூறிய தத்துவம் முப் பத்தொன்றும், ஆகத் தத்துவம் முப்பத்தாறும் மூவகை இயல் பை உடையன எனக் கூறுகின்றது.

**சுத்ததத் துவங்க ளென்று முன்னமே சொன்ன வைந்து**
**மித்தகை மையினி யம்பு மிவைமுப்பத் தொன்று மாகத்**
**தத்துவ முப்பத் தாறுஞ் சைதன்னி யங்க ளைந்து**
**சித்தசித் தான்மா வொன்று முப்பது மசித்தே செப்பில்.**

[**கோ - ௯.**] முன்னமே சொன்ன சுத்த தத்துவங்களென்று ஐந் தும், இத்தகைமையி னியம்பும் இவை முப்பத்தொன்றும் ஆக முப்பத்

தாறு தத்துவமாம். செப்பில் ஐந்து சைதன்னியங்கள். ஆன்மா ஒன்று சித்து அசித்து. முப்பதும் அசித்தே.

(பொ - ரை.) மேலைச் சூத்திரத்துட் கூறிய சுத்த தத்துவங்கள் ஐந்தும், இச்சூத்திரத்துட் கூறிய தத்துவம் முப்பத்தொன்றும் ஆகத் தத்துவம் முப்பத்தாறும். சொல்லுமிடத்து இவற்றுள், சுத்த தத்துவமாகிய முன்னைய வைந்தும் சடமாயினும் சிற்சத்திக்குச் சுதந்திர வடிவாகலின், உபசாரமாய்ச் சைதன்னியம் என்று சொல்லப்படும். ஏனை முப்பத்தொன்றனுள், புருட தத்துவமாகிய ஒன்று சித்தையும் அசித்தையுஞ் சார்ந்து அதனதன் வண்ணமாய் நிற்கும் உரிமையுடைமையால் சித்த சித்தெனப்படும். அஃது ஒழிந்த ஏனைய முப்பது தத்துவங்களும் சடமாதலால் அசித்தெனவேபடும். (எ - று.)

சித்தசித் தென்றது தமிழ் நூலின் முடிப்பு. வடநூலின் முடிபாயின் சிதசித்தென இருத்தல் வேண்டும்.

இச் செய்யுளால் மேலேகூறி முடித்த தத்துவங்களின் தொகை முப்பத் தாறெனவும், அவற்றுள் ஐந்து சைதன்னியம், ஒன்று சித்தசித்து; முப்பது அசித்து என அவற்றது இயல்புங் கூறப்பட்டன. [சுகூ.]

அம்முப்பத்தாறு தத்துவங்களும் சுத்தம், சுத்தாசுத்தம், அசுத்தம் என மூவகையாகவும், பிரேரக காண்டம், போக காண்டம், போக்கிய காண்டம் என மூன்று காண்டமாகவும் விளங்குமெனக் கூறுகின்றது.

ஐந்துசுத் தத்தின் கீழே ழ் சுத்தாசுத் தம்ம சுத்தந்
தந்திடும் புமான்கீ ழெண்மூன் றுபதத் துவஞ்சீ வர்க்கு
வந்திடும் பிரேர காண்டம் மருவுபோ கசயித் திரத்தோ
டந்தமி லணுக்க ளுக்குப் போக்கிய காண்ட மாமே.

[கோ - டு.] ஐந்து (சுத்தம்) சுத்ததகின் கீழ் எழ் (தத்துவம்) சுத்தா சுத்தம். தந்திடும் புமான் கீழ் எண் மூன்றுய தத்துவம் அசுத்தம். சீவர்க்கு வந்திடும் பிரேர காண்டம மருவு போக சயித்திரத்தோடு அந்தம் இல் அணுக்களுக்குப் போக்கிய காண்டம் ஆமே.

(பொ - ரை.) இத்தத்துவம் முப்பத்தாறனுள், முற் கூறிய ஐந்து தத்துவமும் சுத்த தத்துவமாம். அதன் கீழான

கால முதலிய ஏழு தத்துவமும் சுத்தா சுத்த தத்துவமாம். பொருந்திய புருட தத்துவத்தின் கீழான ஏனைய இருபத்து நாலு தத்துவமும் அசுத்த தத்துவமாம். இவை முறையே சுத்த மாயையில் உண்டானதினாலும், அசுத்த மாயையிலுண்டானதினாலும், பிரகிருதி மாயையிலுண்டானதினாலும் இவ்வாறு வகுக்கப்பட்டனவாம். அசுத்த மாயையானது சுத்த மாயைக்கும் பிரகிருதி மாயைக்கும் நடுவாய் நின்றமையால் சுத்தா சுத்தமெனப்பட்டது. பிரகிருதி மாயை தூல சூக்குமவுடல்களுக்கு ஆதாரமாய் நின்றமையால் அசுத்தமெனப்பட்டது. சுத்த தத்துவம் ஐந்தும் கலாதி தத்துவங்களைப் போகத்தில் செலுத்துவதற்கு ஏதுவாய் நிற்குமாதலால், பிரேரக காண்டமாம். பிரேரகம்—செலுத்துதல். சுத்தா சுத்த தத்துவங்கள் ஏழும் உயிர்களுக்குப் போகங்களைத் தோற்றுவிக்குமாதலால், போதசயித்திரு காண்டமாம். சயித்திரு—உண்டுபண்ணுதல். அசுத்த தத்துவம் இருபத்து நாலும் அளவில்லாத உயிர்கள் போகங்களை அநுபவிப்பதற்கு ஏதுவாயிருக்குமாதலால் போக்கிய காண்டமாம். (எ - று.)

வித்தியா தத்துவம் ஏழையும் சுத்த தத்துவம் ஐந்தும் செலுத்துமுறை வருமாறு:—காலம், நியதி, கலை என்னும் மூன்றனையும் சத்தி தத்துவமும், வித்தையைச் சுத்தவித்தையும், அராகத்தை ஈசுவர தத்துவமும், மாயையைச் சிவதத்துவமும், புருடனைச் சதாசிவ தத்துவமுஞ் செலுத்தும்.

கிரியையேயானபோது தோன்றுவது சத்தி தத்துவமாதலால், அது, கிரியையை யெழுப்புங் கலை கால நியதிகளைச் செலுத்துதலும், ஞானமேறிக் கிரியை குறைந்தபோது தோன்றுவது சுத்த வித்தை யாதலால், அது, அறிவை யெழுப்பும் வித்தியா தத்துவத்தைச் செலுத்துதலும், கிரியையேறி ஞானங் குறைந்தபோது தோன்றுவது ஈசுவர தத்துவமாதலால், அது ஞானங் குறைந்த இச்சையை யெழுப்பும் அராக தத்துவத்தைச் செலுத்துதலும், ஞானமேயானபோது தோன்றுவது சிவ தத்துவமாதலால், அது, உலகந்தோன்றி ஒடுங்குதற்குரிய கலக்குண்ட பாகமாகிய மாயையினை யறிந்து செலுத்துதலும், ஞானமுங் கிரியையுமொத்தவிடத்துத் தோன்றுவது சதாசிவ தத்துவ மாதலால், அது, இச்சா

ஞானக் கிரியைகளின் கூட்டத்தாலுண்டான புருட தத்துவத்தைச் செலுத்துதலும் முறைமையாமாறு கண்டுகொள்க. இது தத்துவப் பிரகாச மென்னுந் தமிழ் நூலிற் கண்டது.

சிவதத்துவமைந்தும் சுத்தமென்பது மேலைச்செய்யுளிற் கூறி முடித்தமையின் இச்செய்யுளில் அதன்கீழ் எழு என்று கூறுவதற்காக அநுவதித்தார். போக்சயித்திர என்றவிடத்து சயித்திரு என்னும் பொருள்பட உகரமும், அத்தோடு என்றவிடத்து அதனோடு என்னும் பொருள்பட அன்சாரியையுந் தொக்கு நின்றன. போக் சயித்திரத்தோடு என்றவிடத்து அது என்பது போக்சயித்திரு என்னும் பொருளையேதரும் பகுதிப் பொருள் விகுதி. இத்தத்துவங்கள் பிரேரககாண்டம், போககாண்டம், போக்கியகாண்டம் எனக் காரணக்குறியாமாறு செலுத்துதலினாலும், போகத்தைத் தோற்றுவித்தலினாலும், போகாநுபவத்திற்குத் துணையாயிருத்தலினாலும் கண்டுகொள்க.

இச்செய்யுளால் அம்முப்பத்தாறு தத்துவமும் பிரேரகம், போகம், போக்கியமென மூவினமாதல் கூறப்பட்டது. [எ0]

பிரபஞ்சம் அனைத்தும் தத்துவவடிவாய் தூலம் சூக்குமம் அதிசூக்குமமெனமுத்திறப்படுமெனவும், இத்தத்துவங்களைப்பொருந்தும் அணுபக்க சம்பு பக்கத்து அதிதெய்வங்கள் அவ்வத்தத்துவப்பெயரைப் பெறுமெனவும், யாவையுந் தத்துவத்தில் வைத்துக் காணவேண்டுமெனவும் கூறுகின்றது.

**தத்துவ ரூப மாகுந் தருமரு வுருவ மெல்லாந்**
**தத்துவந் தூல சூக்க பரங்களு மாகி நிற்குந்**
**தத்துவந் தன்னிற் சாரு மணுக்கள்சா தாக்கி யத்திற்**
**றத்துவ சத்தஞ் சாருஞ் சகலமுந் தத்து வங்காண்.**

[கோ - டு] தரும் எல்லாம் அருஉருவம் தத்துவரூபமாகும்.

(போ - ரை) மாயையினாலே தரப்பட்ட பிரபஞ்சம் அனைத்தும் அருவும், உருவும், அருவுருவும் என முத்திறப்படும். எவ்வாறெனில், பிரபஞ்சமெல்லாம் பஞ்சபூதத்திலடங்கும், அப்பஞ்சபூதத்துள் ஆகாயம் கண்ணுக்குப்புலப்படாமையால் அருவமாம். வாயு கண்ணுக்குப் புலப்படாமையாலும் பரிசிக்கப்படுதலாலும் அருவுருவமாம். அக்கினி, அப்பு, பிருதிவிமூன்றும் கண்ணுக்குப்

புலப்படுதலால் உருவமாம். இப்பூதங்களின் காரியமாகிய பிரபஞ்சமனைத்தையும் இவ்வாறே யறிக. இத்தன்மைத்தாகிய பிரபஞ்சமனைத்தும் தத்துவங்களுள் அடங்குதலால் தத்துவ வடிவேயாம். தத்துவம் முப்பத்தாறும் தூலதத்துவம், சூக்கும தத்துவம், அதிசூக்கும தத்துவம் என முத்திறப்படும். எவ்வாறெனில், தத்துவங்களுக்குக் காரணமாகிய பிரகிருதி மாயை தூலம். அசுத்தமாயை சூக்குமம். சுத்தமாயை அதி சூக்குமம். இவற்றிற் றோன்றுந் தத்துவங்களும் அவ்வாறாகுமென்றறிக. இனி ஒவ்வொரு மாயையிற்றோன்றிய தத்துவங்களும் தூலம், சூக்குமம் அதி சூக்குமம் என முத்திறப்படும். அவற்றையெல்லாம் இவ்விடத்தில் விரிப்பிற் பெருகும். விரிந்த நூலிற் காண்க. இத்தன்மையவாய தத்துவங்களைப் பொருந்திச் செலுத்துகின்ற அணுபக்க சம்புபக்கத்து அதிதெய்வங்களும் அவ்வத் தத்துவப் பெயரைப் பெறும். ஆதலின், எல்லாப்பொருளையுந் தத்துவங்களின் வைத்துக்காண்க. (எ-று)

எல்லாப்பொருளையுந் தத்துவங்களின் வைத்துக்காண்க என்று சொன்னமையால், இத்தத்துவ முப்பத்தாறு முணர்ந்தானுக்கு எல்லாப்பொருளும் இனிது விளங்குமென்பதாயிற்று. தத்துவங்களைப் பொருந்திய அதிதெய்வங்கள் அத்தத்துவப்பெயரைப் பெறுதல் எதுபோலவெனின், அரச சத்தியாகிய உத்தியோகத்தைப்பெற்ற ஒவ்வொருவரும் அவ்வப் பெயரைப் பெறுதல்போலவாம். அணுபக்கமென்பது ஜீவவர்க்கம். சம்புபக்கமென்பது பதிவர்க்கம்.

இம்முப்பத்தாறு தத்துவங்களுள் உலக வடிவான தத்துவங்கள் போகநுகர்ச்சிக்கண் எல்லாவுயிர்க்கும் பொதுவாய்ப் போகம் பயத்தலின் பொதுவெனப்படும். சூக்குமதேக வடிவாகிய தத்துவங்கள் உயிர்தோறும் வேறு வேறாய் நின்று போகம் பயத்தலின் சிறப்பெனப்படும். தூலதேக வடிவாகிய தத்துவங்கள் அவரவர் போகநுகர்ச்சிக்குச் சிறப்பு வகையாலிடமாதலும், மனைவி முதலியோருக்குப் பொதுமையால் போக்கியமாதலுமாகிய இருவகையுமுடைமையின் பொதுச்சிறப்பெனப்படும்.

இச்செய்யுளால் தத்துவங்களின் உணர்ச்சி இன்றியமையாததென்பது கூறப்பட்டது. [எக.]

தத்துவங்கள் ஒடுங்குமுறை இவ்வாறெனவும், ஒடுக்குங் கடவுளர் இவரெனவும் கூறுகின்றது

**தத்துவ மெண்மூன் றுஞ்சென் றான்மதத் துவத்தொ டுங்கும்**
**வித்தையி னொடுங்கு மாறுஞ் சிவத்தினி னொடுங்கு மூன்று**
**நித்ததத் துவமிம் மூன்று மென்பர்க ளிரண்டு நின்ற**
**சுத்தமாஞ் சிவத்தொ டுங்குந் தோற்றமு மிதுபோ லாகும்.**

[கோ - ரு] ஆறும் வித்தையில் ஒடுங்கும், மூன்றும் சிவத்தினில் ஒடுங்கும். நின்ற இரண்டும் சுத்தமாம் சிவத்தினில் ஒடுங்கும. தோற்றமும் இதுபோலாகும். இம்மூன்றும் நித்ததத்துவம் என்பர்கள்.

(போ - ரை) இம்முப்பத்தாறு தத்துவங்களும் சங்காரகாலத்துத் தத்தங் காரணங்களில் ஒடுங்கும். ஒடுங்குமிடத்து நிலம் முதல் மூலப்பிரகிருதி ஈறுகிய இருபத்துநான்கு தத்துவங்களும் சென்று சகல வர்க்கத்து ஆன்மாக்கட்கு அதிதெய்வமாகிய சீகண்ட ருத்திரனல் ஒடுங்கும். மூலப்பிரகிருதிக்கு மேல் உள்ள ஆறு தத்துவங்களும் வித்தை யீசராகிய அனந்த தேவரால் ஒடுங்கும். சுத்த வித்தை, ஈசுவரம், சாதாக்கியம் ஆகிய மூன்று தத்துவங்களும் இலயசிவனல் ஒடுங்கும். ஏனைச் சத்தி தத்துவம் சிவதத்துவ மிரண்டும் சுத்த சிவனல் ஒடுங்கும். புனர் உற்பவம் ஆங்காலும் அவ்வத் தத்துவங்கள் அவ்வவராற் றோன்றும்- சுத்த சிவனொருவனே தோற்றம் ஒடுக்கம் இல்லாத நித்தியன். இலயசிவன், போகசிவனுகிய அனந்த தேவர், அதிகார சிவமாகிய சீகண்ட ருத்திரன் என்னும் மூவரையும் அவ்வாறு நித்தியரென்பாருமுளர். அஃது உபசாரமே. (எ - று.)

மூலப் பகுதிக்குங் குணதத்துவத்திற்குந் தம்முள் வேற்றுமை குணங்கள் அடங்கி நிற்றலும், வெளிப்பட்டுத் தோன்றுதலு மாத்திரமே யன்றி ஏனைய தத்துவங்கள்போலத் தோன்றுதல் விசேடமின்மையான் அவையிரண்டனையும் ஒன்ருக வைத்துத் தத்துவ மெண்மூன்று என வெண்ணினர். சிவத்தினின் என்றவிடத்து இன்னுருபு எதுப்பொருட்கண் வந்தது. அவ்வுருபு ஆன்ம தத்துவத்து என்றவிடத்தும், சிவத்து என்றவிடத்தும் விரித்துரைக்க. ஆன்ம தத்துவம் என்றது சகல வர்க்கத்து ஆன்மாக்கட் கதிதெய்வமாகிய சீகண்ட ருத்திரர்க்குப் பெயராயிற்று.

தத்துவம் என்பது கருவிகளையுங் கருவிகளை யதிட்டித்து நிற்கும் உயிர்ப் பொருள், கடவுட்பொருட்களையு முணர்த்தும் பொதுச்சொல். ஆதலின், இம்மூன்றும் நித்த தத்துவமென்பர் என்றார். சீகண்டர், அனந்தர், இலய முதலிய அவத்தைகளினிற்குஞ் சிவன் என்னும் இவர் முறையே ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம், சிவதத்துவங்களைத் தோற்றுவிக்குங் கடவுளாதலின், அவ்வாறு தோற்றுவிக்குங் காரணத்தின் சம்பந்தம்பற்றி அவர் பெயர்கள் அவ்வத் தத்துவங்களுக்குமாயின என்பதுணர்த்தவேண்டி சீகண்ட ருத்திரரை ஆன்ம தத்துவமென்றும், அநந்தரை வித்தியா தத்துவமென்றும், சிவனைச் சிவ தத்துவமென்றுங் கூறினார். வித்தை, சிவம் என்ற ஈரிடத்தும் ஆன்ம தத்துவம் என்றதற்கேற்பத் தத்துவச் சொல் வருவித் துரைக்க.

இனி நான்கா மதிகரணத்தில் "சிவஞ் சத்தி" என்னுஞ் செய்யுளால் நவந்தரு பேதங் கூறத்தொடங்கிய வாசிரியர் அதற்குத் தோற்றுவாயாக சீகண்ட ருத்திரர் முதலியோரைக் கூறும் இச்செய்யுளை இவ்விடத்து வைத்தாராயினும், தத்துவந் தோற்றுமுறை கூறிய பின்னர் ஒடுங்குமுறை கூறவேண்டுதல் முறைமையாகலின், அவ்வியைபுபற்றி "ஐந்து சுத்தத்தின்" எனத் தத்துவங்களை மூவகைப்படுத் தோதிய செய்யுளின் பின்னாக வைத்துக் கண்டுகொள்க.

இச்செய்யுளால் ஆன்ம தத்துவங்களைத்தோற்றி யொடுக்குங் காரணக கடவுளர் ஸ்ரீகண்ட ரென்பதும், வித்தியா தத்துவங்களைத் தோற்றி யொடுக்குபவர் அனந்தரென்பதும், சுத்த வித்தை முதலிய மூன்றற்கும் இலய சிவனென்பதும், சத்தி சிவ மிரண்டற்கும் சுத்த சிவனென்பதுங் கூறப்பட்டன. இதுவரையும் மூன்றாங் கூற்றின்க ணுண்டாம் முறைமை யெல்லாந் தொகுத்துக் கூறப்பட்டது. இனி, எழு செய்யுளான் நான்காங் கூற்றை விளக்குகின்றார். [எஉ.]

**மூன்றும் அதிகரணம் முடிந்தது.**

---

# நான்காம் அதிகரணம்.

---

" இவற்றின்றன்மை தனக்கெய்தலின்றித் தானே
நிலவு சீர் அமலனாகி நின்றனன் நீங்காதெங்கும் "
என்பது.

இவ்வதிகரணம் முக்கூற்றை உடையது. அவற்றுள், முதற்கூறு " நிலவு சீர் அமலனாகி " என்பது. இரண்டாங்கூறு " நின்றன னீங்காதெங்கும் " என்பது. மூன்றாங்கூறு " இவற்றின்றன்மை தனக்கெய்தலின்று " என்பது. இவை முறையே முன்னர் விரித்துக் கூறப்படுகின்றன.

முக்கூற்றுப் புறச்சமயத் தெய்வங்கள் பிரகிருதி மாயா தத்துவம், அசுத்த மாயா தத்துவம், ஆகிய இவைகளில் நிலைபெறு மெனவும், அகச்சமயத் தெய்வமாகிய இலய, போக, அதிகார சிவ பேதங்கள் சுத்த மாயா தத்துவத்தில் நிலைபெறுமெனவும், சுத்த சிவம் இம்முப்பத்தாறையுங் கடந்து நிற்குமெனவும், அமல னாதலை விளக்கிக் கூறுகின்றது.

**மொய்தரு பூத மாதி மோகினி யந்த மாகப்**
**பொய்தரு சமய மெல்லாம் புக்குநின் றிடும்பு கன்று**
**மெய்தரு சைவ மாதி யிருமூன்றும் வித்தை யாதி**
**யெய்து தத் துவங்க ளேயு மொன்றுமின் றெம்மி றைக்கே.**

**[கோ - 6.]** பொய்தரு சமயமெல்லாம் மொய்தரு பூதமாதி எனவும், எம்மிறைக்கு ஒன்று மின்றே எனவுங் கூட்டுக.

**(போ - ரை.)** பொய்மை பெற்ற சாருவாக முதல் ஐக்கிய வாத சைவமீறாகியபுறப்புறச்சமயமும், புறச்சமயமும், அகப்புறச் சமயமுமென்னும் முக்கூற்றுச்சமயத்தெய்வங்களெல்லாம்நெருங்கிய பூதமுதல் அசுத்தமாயாதத்துவமீறாக ஒவ்வொருதத்துவங்களில் நிலைபெறும். சிவாகமங்களுட் கூறப்படும் ஏகன், அநேகன், இருள், கருமம், மாயை இரண்டு என்னும் ஆறு பொருளின் உண்மைத் தன்மையை விளக்குகின்ற சைவமெனப்படுந் தலையாகிய அறுவகைச் சமயத் தெய்வமாய் நின்ற அதிகார சிவம்,

போக சிவம், இலய சிவம் என்னும் சிவபேதங்கள் சுத்தவித்தை முதலிய சுத்த தத்துவம் ஐந்தனுள் ஒவ்வொன்றில் நிலைபெறும். சித்தாந்த சைவத் தெய்வமாகிய எம்முடைய சுத்த சிவம் இம் முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்து நிற்கும். (எ - று.)

ஒடுக்கமுறையில் அவ்வத் தெய்வங்கள் நிலைபெறுந் தத்துவமே அவ்வச் சமயத்தார்க்கு முத்தித்தானம் என்பதும் பெறப்படும். அவரவர் கொள்ளுந் தத்துவங்களின் மேலுள்ள தத்துவங்களி னுணர்ச்சி அவ்வச் சமயத்தார்க்குச் செல்லாமையின், அவ்வத்தத்துவத்தினளவினன்றி அதற்கு மேற் செல்லுதல் அவருக்குக்கூடாமை யறிக. சமயத் தெய்வங்க ளெல் லாம் என்று கூறவேண்டுவதை சமயமெல்லாம் என்றுபசரித்தார். இரு மூன்று மென்றது அறுவகைச் சமயத் தெய்வமாய் நின்ற அதிகார, போக, இலய சிவபேதங்களை. ஆணவமலமுண்டென்று கொள்ளமாட்டாத ஐக் கிய வாத சைவரை அகச்சமயத்தினின்றும் நீக்குதற்கு மெய்தரு சைவம் என்றும், ஆதி இருமூன்று என்றும் விசேடித்தார். மெட்தரு என்பது சைவத்தை விசேடித்து நின்றது.

ஆதி என்பது இருமூன்றை விசேடித்து நின்றது. விசேடிக்கவே, மெய்தருதல்—உண்மைத் தன்மையை விளக்குதல். ஆதி—தலைமை. எனவே, உண்மைத் தன்மையை விளக்குகின்ற தலையாகிய சைவமென் ருகி ஆணவமலத்துண்மை கொள்ளாத ஐக்கியவாத சைவரை விலக்கிய வாறு காண்க. ஐக்கியவாத சைவம் நீங்கிய ஏனைச் சைவம் ஏழு. அவை யாவன, பாடாணவாதம், பேதவாதம், சிவசமவாதம், சிவசங்கிராந்தவாதம், ஈசுவர அவிகாரவாதம், சிவாத்துவிதம், சுத்தசைவம் என்பனவாம். இவ் வேழனுள் பாடாணவாததிற்கும் பேதவாதத்திற்குந் தம்முள் வேற்றுமை சிறிதாதல்பற்றி அவ்விரண்டனையும் ஒன்ருக வைத்து இருமூன்று எனத் தொகை கூறியவாறு காண்க. பாடாணவாதம்—முத்திநிலையில் ஆன்மாக் கற்போல் சுக துக்காநுபவமின்றி யிருக்கும் என்பது. பேதவாதம்— முத்திநிலையில் ஆன்மா பெறுவானும், சிவம் பேறுமாய் இருக்கும் என்பது. சிவனைச் சார்ந்து சிவனய் நிற்றலில்லை யென்பதில் இவ்விரண்டும் ஒற்று மையா யிருப்பினும், கற்போலிருத்தலும் பெறுவானயிருத்தலுமாகிய சிறிது வேற்றுமையுடையனவாத லறிக. [எ௯.]

நீங்காது நிற்றலை மூன்று செய்யுளாற் கூறத்தொடங்கிச் சுத்த சிவனே சுத்த மாயா தத்துவங்களில் ஒன்பது பேதமாய் நின்று தொழிற் செய்வானெனக் கூறுகின்றது.

**சிவஞ்சத்தி நாதம் விந்து சதாசிவன் றிகழு மீச**
**னுவந்தரு ளுருத்தி ரன்றான் மாலய னொன்றி னொன்றாய்ப்**
**பவந்தரு மருவ நாலிங் குருவநா லுபய மொன்றா**
**நவந்தரு பேத மேக நாதனே நடிப்ப னென்பர்.**

[கோ - டு.] ஏகநாதனே சிவம் சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன் உவந்தருள் உருத்திரன்றான் மால் அயன் ஒன்றினொன்றா பவந்தரும். இங்கு நாலு அருவம். நாலு உருவம். ஒன்று உபயமாம். நவந்தரு பேதம் நடிப்பன் என்பர்.

(போ - ரை.) அங்ஙனம் ஒன்றுமின்றி நிற்கும் எம்மிறைவனே ஒவ்வொரு தத்துவங்களில் நின்றுகொண்டு தத்தம் தொழில்களைச் செய்யும் முறைமையில் சிவமெனவும், சத்தியெனவும், நாதமெனவும், விந்துவெனவும், சதாசிவனெனவும், மகேசனெனவும், உருத்திரனெனவும், விட்டுணுவெனவும், பிரமனெனவும் ஒன்றினொன்றாகத் தோன்றி ஒன்பது பேதமாவன். அப்பேதங்களுள் சிவம், சத்தி, நாதம், விந்துவாகிய நான்கும் இறைவனுக்கு அருவத் திருமேனியாம். மகேசன், உருத்திரன், விட்டுணு, பிரமனாகிய நான்கும் உருவத் திருமேனியாம். சதாசிவம் அருவுருவத் திருமேனியாம். அருவம், உருவம், அருவுருவம் என்னும் இம் முத்திறத்து ஒன்பதுபேதத்தினும் இறைவன் வேற்றுமையின்றி நின்று அவ்வத் தொழில்களைச் செய்வனென்பர். (எ - று.)

நாதனே என்றவிடத்து ஏகாரம் தேற்றம். மேல் முதற் சூத்திரம் கூஎ-வது செய்யுளில் 'ஒருவனே இராவணாதி பாவக முற்றாற்போல்' என்றதனை ஒருவனே ஒன்பது பேதமாவன் என இவ்விடத்தும் அறிவிக்க வேண்டி "நடிப்பன்" என்றார். சிவ முதலாக எண்ணப்படும் ஒன்பது என்னுஞ் செவ்வெண்டொகை தொக்கு நின்றது.

இவ்வொன்பது பேதத்துள் சத்தி விந்து என்னும் இரண்டும் சத்தி பேதமாயினும், சிவன் முதல் பிரமன் ஈறாகிய சிவபேதம் எழும் தோன்றும் முறையில் ஒன்றுக்கொன்று காரணமாய் இடைநிற்றல்பற்றிச் சிவபேதத்துடன் வைத்தெண்ணியவாறாம்.

தோன்றுமுறையாவது:—சிற்சத்தியோடு பிரிப்பின்றி நிற்குஞ் சிவ பெருமான் ஆன்மாக்களின் மல நோயைத் தீர்த்தற் பொருட்டுச் சுத்த மாயையில் தொழிற் செய்யத் திருவுளங்கொண்ட அவதாரம் சிவம். துன்பத்தை நீக்க உன்னிய அவதாரமாகலின், இதனைப் பரநாத மென்பர். அவ்வுன்னுதலின் பின் எவ்வாறு தொழிற் செய்ய வேண்டும் என்றெண்ணிய அவதாரம் சத்தி. சத்தி யென்பது அடங்கி நிற்கும் ஆற்றலைக் குறிப்பது. அது இவ்விடத்தில் இவ்வாறு செய்யலாமெனத் தோன்றாது நிற்றலைக் குறித்தது. இந்த அவதாரத்தில் ஒரு குறிப்பு நிகழ்தலினால் இச்சத்தியைப் பரவிந்து என்பர். நாதம் என்பது ஒலியையும், விந்து என்பது குறியையும் உணர்த்தும். அதன் பின் எண்ணியவாறே செய்தற்கு முதற் காரணமாய்த் தன்னுள் அடங்கியிருந்த சுத்த மாயையோடு கூடிய அவதாரம் நாதம். அச்சுத்த மாயையோடு கூடிச் செய்யவேண்டுவனவற்றைச் செய்ய எண்ணிய அவதாரம் விந்து. முன்னர்க் கூறிய நாதம் விந்து சுத்த மாயையிற் கூடாத அவதாரத்தில் உண்டானமையால் பரநாதம் பரவிந்து எனவும், பின்னர்க் கூறிய நாதம் விந்து சுத்த மாயையோடுகூடிய அவதாரத்தில் உண்டானமையால் அபரநாதம் அபரவிந்து எனவுங் கூறப்படும். அபரநாதம் அபரவிந்துவையும் சிவம் சத்தி எனக் கூறுதலும் உண்டு. மேல் முதற் சூத்திரத்தில் இலய சிவமெனக் கூறிய சிவம் சத்தி இவ்வபரநாத அபரவிந்துக்களேயாம். அதன் பின் இன்னின்னவாறு செய்ய வேண்டுமென்றெண்ணிய அவதாரம் சதாசிவம். சத்தியோடுகூடிய சிவம் சதாசிவம். எண்ணும் முதன்மை சிவத்தையும், எண்ணுதற்குரியஆற்றல் சத்தியையுங் குறித்துச் சதாசிவமெனப்பட்டது. எண்ணியவாறு செய்யுங்கால் அவரவர் கன்ம பலத்தை யநுபவிக்கச் செய்யுமுறைமையில் அநுபவிக்க வேண்டாத கன்ம பலன்களையும் அநுபவிக்கவேண்டிய கன்ம பலன்களில் உள்ள குண தோடங்களையும் மறைத்தலாகிய அவதாரம் மகேசுவரம். மகதைசுவரியத்தை யுடையது மகேசுவரம். அநுபவிக்கவேண்டிய ஐசுவரியங்களைக் கொடுத்தும், அநுபவிக்க வேண்டாத ஐசுவரியங்களை மறைத்தும் வைத்தலின் மகேசுவரம் எனப்பட்டது. அவ்வாறு அநுபவிக்குங் காலத்து இளைப்பொழித்தற் பொருட்டும் வேறு உலகத்தில் இன்பத்துன்பம் அநுபவித்தற் பொருட்டும் இவ்வுலகத்தில் வேறு சரீரவாயிலாக இன்பத்துன்பம் அநுபவித்தற் பொருட்டும் சங்கரித்தலாகிய அவதாரம் உருத்திரன். அநுபவிப்பதற்காக நிலைக்கச் செய்யும அவதாரம் விட்டுணு. அநுபவித்தற்குரிய உடல், கருவி, உலகம், பொருள் முதலியவற்றைத் தோற்றுவிக்கும் அவதாரம் பிரமன். இதன் மேல் செய்ய

வேண்டுவ தொன்றுமில்லாமையால் ஒன்பது பேதமென வரையறுக்கப் பட்டவா றறிக.

இவ்வொன்பது பேதத்திற்கும் உதாரணம் வருமாறு:—அரசன்போல் சுத்த சிவம். அவ்வரசன் உலகத்தைத் தொழிற்படுத்த வேண்டுமென் றெண்ணிய அவதரம் சிவம். எவ்வாறு தொழிற்படுத்தலாமென் றெண்ணிய அவதரம் சத்தி. தன்னுளடங்கியுள்ள தொழிற் செய்யும் அதிகாரிகளைத் தெரிந்தெடுக்க எண்ணுதல் நாதம். அவ்வதிகாரிகளைத் தெரிந் தெடுத்தல் விந்து. இன்னின்னர் இன்னின்ன காரியத்தை இவ்வாறு செய்யவேண்டுமென்று நியமித்தல் சதாசிவம். செய்யுங்காலத்து முறை பிறழாதிருக்கச் செய்தல் மகேசுவரம். முறை பிறழ்ந்தாரைத் தண்டித்த லும், அவசியமானபோது அப்புறப்படுத்த வேண்டியவர்களை அப்புறப் படுததலும் உருத்திரன். முறை பிறழாதாரைக் காத்தல் விட்டுணு. காப் பதற்காகக் கைத்தொழில் கிருஷி முதலியவற்றை உண்டுபண்ணுதல் பிர மன். இவ்வாறு உவமையில் வைத்தறிக. இவ்வுவமைக்கண் ஆதி அநாதி என்னும் வியவகாரத்தை யிட்டு மலையற்க. இது ஒருபுடை யுவமை யல் லது முற்றுவமை யன்றாதலின்.

சிவம், சத்தி, நாதம், விந்து என்னும் நான்கும் வெளிப்படாது தன் மாட்டு நிகழ்தலால் அருவத் திருமேனியெனவும், நிட்களத் திருமேனி யெனவும் பெயர்பெறும். தன்மாட்டு நிகழும் இத்திருமேனியோடு கூடிய சிவபெருமான் சத்தரெனப்படுவர். சதாசிவம் சத்தியோடு கூடிப் பிற பொருளோடு கலந்தும் கலவாமலும் நிற்றலால் அருவுருவத் திருமேனி யெனவும், சகள நிட்களத் திருமேனி யெனவும் பெயர்பெறும். ஆலோ சனை வடிவாயிருக்கும் இத்திருமேனியோடு கூடிய சிவபெருமான் உத்தி யுத்த ரெனப்படுவர். மகேசுவரம் முதலிய நான்கும் உருவமாய்க் காணப் படலால் உருவத் திருமேனியெனவும், சகளத் திருமேனி எனவும் பெயர் பெறும். தொழிற் செய்வதாகிய இத்திருமேனியோடு கூடிய சிவபெரு மான் பிரவிருத்தரெனப்படுவர். களம் என்பது வடிவத்தைக் குறிக்கும். சகளம் என்பது வடிவத்தோடு கூடியது. இதுவே நடராஜா முதலிய மூர்த்தங்கள். சகள நிட்களம்—மகாலிங்கம்.

நவந்தரு பேதமேக நாதனே நடிப்பன் என்றது சத்தி சிவத்திற்குரிய ஒற்றுமை நயம்பற்றிப் பொதுவகையாற் கூறினர். சத்தி விந்து என்னும் அவை, முறையே சிவத்துக்கும், நாதத்துக்குமுரிய சத்திபேதமேயா மென்பது வருஞ் செய்யுளிற் காண்க. [எச.]

பிரமன் முதல் சிவம் ஈறுகிய சிவபேதம் ஏழற்கும் பராசத்தி யாகிய ஒருத்தியே சரஸ்வதி முதலிய சத்திபேத மேழாய் நிற்ப ளெனக் கூறுகின்றது.

**சத்தியாய் விந்து சத்தி யாய்மனோன் மணிதா னாகி**
**யொத்துறு மகேசை யாகி யுமைதிரு வாணி யாகி**
**வைத்துறுஞ் சிவாதிக் கிங்ஙன் வருஞ்சத்தி யொருத்தியாகு**
**மெத்திற நின்றா னீச னத்திற வமனு நிற்பள்.**

[கோ - ௬.] சிவாதிக்கு வருஞ் சத்தி சத்தியாய், விந்து சத்தியாய், மனோன்மனிதானாகி, ஒத்துறு மகேசையாகி, உமை திரு வாணியாகி வைத்துறும். ஈசன் எத்திறம் நின்றான். ஒருத்தியாகும் அவளும் இங் ஙன் அத்திறம் நிற்பள்.

(போ - ரை.) மேற்கூறிய ஒன்பதனுள் சத்தி, விந்து இரண்டும் சத்திபேத மாதலால், ஏனைய சிவபேதம் ஏழற்கும் உரிய சத்தி பேதமும் ஏழாம். அவையாவன:—சிவத்திற்குச் சத்தியும், நாதத்திற்கு விந்துவும், சதாசிவத்துக்கு மனோன்மனி யும், மகேசனுக்கு மகேசையும், உருத்திரனுக்கு உமையும், விட் டுணுவிற்கு இலக்குமியும், பிரமனுக்குச் சரஸ்வதியுமாம். எம் மிறைவனாகிய பரமசிவன் சிவபேதம் ஏழினும் நின்று நடாத்தும் போதெல்லாம் அவனோடு பிரிப்பின்றி நிற்கும் ஒருத்தியாகிய பராசத்தியும் இச்சத்திபேதம் ஏழினும் அவனுக்குத் துணையாய் நின்று நடாத்தும். (எ - று.)

சுத்த சிவனாகிய பரமசிவனிடதது்ப் பிரிப்பின்றி நிற்குஞ் சத்தி பரா சத்தி. இச்செய்யுளில் சிவத்திற்குச் சத்தி என்றது சிவதத்துவந் தோன் றிய பின்னர்த் தோன்றுஞ் சத்திதத்துவமாம்.

அவ்வாறாயின், மேல் முதற் சூத்திரம் ௬௭-வது செய்யுளில் வரும் வடிவெல்லாஞ் சத்தியிற் காணப்படும் எனக்கூறி, இவ்விடத்துச் சிவ பேதம் சத்திபேதம் என வேறு வைத்து ஈசனெத்திறம் நின்றான் அவளும் அத்திறம் நிற்பள் என்றல் மலைவாகாதோவென்பார்க்கு அகாதென்றுணர்த்து தற் கெழுந்தது வருஞ் செய்யுள். [எ௫.]

சிவமுஞ் சத்தியுமெனப் பிரித்தெண்ணப்படினும் அவ் விரண்டும் பிரிப்பின்றி நாயகன் நாயகி பாவமாய் நிற்குமெனக் கூறுகின்றது.

சத்திதா னாத மாதி தானாகுஞ் சிவமு மந்தச்
சத்திதா னாதி யாகுந் தரும்வடி வான வெல்லாஞ்
சத்தியுஞ் சிவமு மாகுஞ் சத்திதான் சத்த னுக்கோர்
சத்தியாஞ் சத்தன் வேண்டிற் றெல்லாமாஞ் சத்தி தானே.

[கோ - ரை:] சத்திதான் நாதம் ஆதி தானாகும். சிவமும் அந்தச் சத்திதான் ஆதியாகும். சத்திதான் தரும் வடிவான எல்லாம் சத்தியும் சிவமும் ஆகும். சத்தன் வேண்டிற்றெல்லாம் ஆம் சத்திதானே சத்தனுக்கு ஓர் சத்தியாம்.

(பொ - ரை.) பராசத்தியானது நாத முதலிய சிவபேதம் எழினுங் கூடியிருக்கும். அவ்வாறே சுத்த சிவமானது சத்தி முதலிய சத்தி பேதம் எழினையும் வாயிலாகக்கொண்டு நிற்கும். இவ்வாறு சத்தியுஞ் சிவமும் மரமும் வயிரமும்போல ஒப்பக்கூடி நிற்றலால் சத்தியாற் றரப்படும் எல்லாத் திருமேனியும் சத்தி சிவம் இரண்டிற்கும் பொதுவடிவேயாம். அவ்வாறுகூடிப் பிரிப்பின்றி நிற்பினுந் தான் வேண்டியவா றெல்லாம் ஆவதாகிய சத்தியே சத்தனுக்கு ஒப்பற்ற தேவியுமாம். ஆகலான், சத்தி சிவத்திற்குரிய வடிவு விசேடம் குண விசேடம்பற்றிச் சத்திபேதம் சிவபேத மென்றாயின. (எ - று.)

ஆகலான் அதற்குரிய வடிவு விசேடங் குண விசேடம்பற்றிச் சிவ பேதஞ் சத்திபேத மென்றாயின வென்பது குறிப்பெச்சம். அக்கினி பொருளால் ஒன்றாயினும் வடிவால் செம்மையென்றும் குணத்தால் சூடு என்றும் பிரித்தெண்ணப்படுமாறுபோல பரம்பொருளொன்றேயாயினும், எவற்றையுங் கடந்து நிற்கும் வெளியாகிய வடிவால் சிவமெனவும், எவற்றுடனுங் கலந்து எவற்றையுந் தன்பால் இழுக்கும் வலிமையாகிய குணத்தால் சத்தியெனவும் பிரித்துக் கூறியவாறும்.

சத்தனுக்கோர் சத்தியாம் என்றது வல்லவனுக்கு வல்லமையாய் நிற்கும் எனச் சிவனுக்கு நாயக பாவமும், சத்திக்கு நாயகி பாவமும் கூறியவாறும். நாயகன் விரும்பியவாறே செய்தல் நாயகி கடமையாதலை வலியுறுத்த வேண்டி, சத்தன் வேண்டிற்றெல்லாமாஞ் சத்தி எனச் சத்தியின் பெருமை கூறியவாறு. பெருமையாவது:—சத்தன் வேண்டிற் றெல்லாமாதல். வேண்டிற்று என்பது ஒருமை. எல்லாம் என்பது பன்மை. வேண்டிற்றெல்லாம் என்பது ஒருமைப் பன்மை மயக்கம்.

"சிவஞ் சத்தி" என்பது முதல் இவை மூன்று செய்யுளும் சிவமுஞ் சத்தியும் பிரிக்க முடியாததாய் நீங்காது நிற்றலை விளக்கிக் கூறியவாறும்.

அவ்வாறாயின், சிவஞ் சத்தி என்ற செய்யுளில் ஒன்றினிடமாக ஒன்று தோன்றும் எனப்பட்ட சத்தி சிவங்களை மகளுந் தந்தையும் எனக்கூறாது, இச்செய்யுளில் தலைவனுந் தலைவியுமாய்த் தம்முட் கூடுமென்பது முறை யன்றென்பாரை நோக்கிச் சமாதானங் கூறுதற்கெழுந்தது வருஞ்செய்யுள். (எசு.)

சிவனும் சத்தியும் நாயகனும் நாயகியுமாய் நிற்பினும் சிவன் பிரமசாரியும் சத்தி கன்னிகையுமாமென "இவற்றின் றன்மை தனக்கெய்த லின்றாதலை" விளக்கிக் கூறுகின்றது.

**சிவஞ்சத்தி தன்னை யீன்றுஞ் சத்திதான் சிவத்தை யீன்று**
**முவந்திரு வரும்பு ணர்ந்திங் குலகுயி ரெல்லா மீன்றும்**
**பவன்பிரம சாரி யாகும் பான்மொழி கன்னி யாகுந்**
**தவந்தரு ஞானத் தோர்க்கித் தன்மைதான் றெரியு மன்றே.**

[கோ - டு.] இத்தன்மைதான் தவந்தரு ஞானத் தோர்க்கு தெரியு மன்றே.

(பொ - ரை.) சிவ தத்துவத்தினின்று சத்தி தத்துவந் தோன்றும். சத்தி தத்துவத்தினின்று சதாசிவதத்துவந் தோன்றும். சதாசிவ தத்துவமாவது சத்தியுஞ் சிவமும் கூடிய நிலையாம். சத்தி சிவமாகிய இருவருங் கூடிய அதனாலேயே இவ்விடத்துச் சடமுஞ் சேதனமுமாய பிரபஞ்சமெல்லாந்தோன்றும். இவ்வாறு தோன்றினும் எல்லாந் தோன்றுவதற்குக் காரணமாய்ச் சத்தியோடுகூடி நின்ற சிவபிரான் பிரமசாரியாவன். எல்லாவற்றையும் தோற்றுவித்த சிவசத்தி கன்னிகையாவள். சத்தியுஞ் சிவமுமாய் நின்று செய்யுஞ் செயல்களெல்லாம் நம்மனோர் பொருட்டாக நடித்துக்காட்டும் நாடகமாத்திரையே யன்றிப் பிறிதில்லை யென்பது முற்றவ விசேடத்தால் முதல்வன் அருள் பெற்ற ஞானிகட்கு விளங்கும். (எ - று.)

சிவசத்திகளின் கூட்டமே எல்லாந் தோன்றுதற்குக் காரணமாதல் பற்றி நாயகன் நாயகிகளாகக் கூறப்பட்டது.

உம்மை மூன்றும் சிறப்பு. பிரமசாரியும், கன்னிகையும் போகத்தில் விருப்பமில்லாதிருப்பதுபோல, தனக்கென விருப்பின்றி ஆன்மாக்களின் பொருட்டு எல்லாஞ் செய்தலால் சிவன் பிரமசாரியெனவுஞ் சத்தி கன்னிகையெனவுங் கூறப்பட்டமை காண்க. சதாசிவ தத்துவத்தினின்று உயிரும் உலகமும் தோன்றுமென்றது, உயிரும், உலகத்திற்கு முதற்காரணமான மாயையும் அநாதி என்றதனோடு முரணாதோ வெனின், முரணாது. எவ்வாறெனின், இவ்விடத்துக் கூறுவனவெல்லாம் ஒடுக்கி வைத்திருந்த உயிரையும் மாயையினையும் மீளததோற்றுவிப்பதாகிய புதுச் சிருட்டியேயாதலின் என்க. அநாதியில் எவ்வாறெனின், கேவலத்துள் அடங்கிக் கிடந்த ஆன்மாவையும், இறைவன் தன்னுள் அடங்கிக் கிடந்த மாயையினையும் சதாசிவ தேவர் வெளிப்படுத்துவரென்க.

முதற் சூத்திரத்தில் "பந்தமும் வீடுமாய பதபதார்த்தங்க ளல்லான்" என்னும சச-வது செய்யுள் முதலாக விரித்துக் கூறியவற்றை இச்செய்யுளில் பிரமசாரி, கன்னிகை என உருவகஞ் செய்யுமுகத்தால் தொகுத்துணர்த்தி இவற்றின்றன்மை தனக்கெய்த லின்றாதலே விளக்கிக்கூறியவாறும். மேலேச் சூத்திரத்தில் விரித்துக்கூறிய பொருள்களாவன:— மல முதலிய குற்றமில்லாமையின், நினைந்ததொரு திருமேனியைத் தனது சத்தியினிடமாகக் கொள்வன் ஆதலால், தனக்கென விருப்பு வெறுப்பில்லாதவன் என்பது முதலியன. இவ்விடத்து உருவகஞ் செய்த பிரமசாரி கன்னிகை என்பனவும் விருப்பு வெறுப்பில்லாமையை உணர்த்தியவாறு காண்க. (எஎ.)

தத்துவங்களெல்லாம் உயிர்களோடு பொருந்துவன என்றறிந்து நீக்கித் தத்துவாதீதனாகிய பரமசிவனை அறிபவன் தத்துவ ஞானியாவன் எனக் கூறுகின்றது.

**தனுகரண புவன போகந் தற்பரம் பந்தம் வீடென்**
**றணுவினோ டெல்லா மாகி யடைந்திடுந் தத்து வங்க**
**ளினிதறிந் திவைநி விர்த்தி முதற்கலை யிடத்தே நீக்கி**
**நனிபர முணர்ந்தோ னந்தத் தத்துவ ஞானி யாவன்.**

(கோ - டு.) தநுகரண புவன போகம் தற்பரம் பந்தம் வீடு எல்லாம் தத்துவங்கள் ஆகி அடைந்திடும் என்று இவை அணுவினோடு(என்று இனிது அறிந்து நிவிர்த்தி கலை முதல் இடத்தே நீக்கி பரம் நனி உணர்ந்தோன் அந்தத் தத்துவஞானியாவன்,

**(போ - ரை.)** தநு கரண புவன போகங்களும் அவை மூலமாயுள்ள பந்த முத்திகளும் அப்பந்த முத்திகளுள் உண்டாம் பேதங்கள் அனைத்தும் மேற்கூறிப் போந்த தத்துவங்களால் ஆயினவென்றும், அத்தத்துவங்கள் உயிர்களோடு பொருந்துவனவன்றி முதல்வனோடு பொருந்துவனவல்லவென்றும், நூல்களானும் யுத்தியானும் தெளிய வுணர்ந்து, அத்தத்துவங்களை அவற்றிற்கு ஆதாரமாகிய நிவிர்த்தி கலை முதலிய பஞ்ச கலைகளின் வைத்துக் கழித்து, அத்தத்துவங்களைக் கடந்து மேலாய் நிற்கும் ஒன்றாகிய பரமசிவனை ஐய விபரீதக் குற்றமின்றி யுணரப் பெற்றவன் யாவனோ, அவனே மேலைச் செய்யுளில் பவன் பிரமசாரியும் பான்மொழி கன்னியுமா மென்பதை அறிந்த தத்துவ ஞானியாகிய உண்மை யறிவுடையவன். (எ - று)

மேலைச்செய்யுளில் தவந்தரு ஞானத்தோர்க்கித் தன்மைதான் தெரியுமன்றே என்றதனுள், இத்தன்மை தெரியும் என்றதனை, இச்செய்யுளில் தவ விசேடத்தால் ஞானத்தைப் பெற்றவர் தத்துவங்களனைத்தும் உயிர்களோடு பொருந்துவனவன்றி இறைவனோடு பொருந்துவனவல்ல என வுணர்ந்து, அவற்றை நீக்கி மேலான பொருளை யுணர்தலென, விளக்கிக் காட்டி, இவற்றின் றன்மை தனக்கெய்தலின்றாதலை வலியுறுத்தியவாறும். தற்பரம என்னும் வடசொல் மூலம் என்னும் பொருளுடைத்தாதல் தாற்பரியம் என்பதனாலு மறிக.

மேல் எ0-வது செய்யுளில் தத்துவங்களை யதிட்டிக்கும் அனுபக்க சம்புபக்கத்து அதிதெய்வங்கள் அவ்வத் தத்துவப் பெயரைப் பொருந்துமெனவும், எச-வது செய்யுளில் சுத்த சிவனே சுத்த மாயா தத்துவங்களைப் பொருந்தித் தொழிற் செய்வனெனவுங் கூறியதனால், தத்துவங்கள் சிவத்தோடும் மற்றத தெய்வங்களோடும் பொருந்துவனவாமெனப் பெறப்படுமன்றே; அவ்வாறாகவும் இவ்விடத்துத் தத்துவங்களெல்லாம் உயிர்களோடு பொருந்துவன வெனக்கூறியது முரணாகாதோவெனின், ஆகாது. என்னை? சுத்தசிவனும் மற்றத் தெய்வங்களும் தத்துவங்களைக் கூடியது உயிர்களின் பொருட்டே யாதலானும், அத்தததுவங்களையும் அவற்றினிற்குஞ் சிவபேதங்களையும் கடந்து செல்லுதற்குரிய நிலைமையில் அவற்றிற் கட்டுப்பட்டிருப்பது உயிரே யாதலானுமென்க. (எஅ.)

தத்துவங்கள் உயிரைப் பொருந்துதல் உயிர்கட்கு வினைப் பயனை யநுபவிக்கச்செய்து அதனால் கன்மமலம், ஆணவ மலங்களைப் போக்குதற்பொருட்டெனக் கூறுகின்றது.

எல்லாமாய்த் தத்துவங்களியைந்ததென்னணுவுக்கென்னிற்
றொல்லாய கன்மமெல்லாந் துய்ப்பித்துத் துடைத்தற்கும்பி
னில்லாமை முற்று வித்து நீக்கவுங் கூடி நின்ற
பொல்லாத வாணவத்தைப் போக்கவும் புகுந்த தன்றே.

(கொ - டு) தத்துவங்கள் அணுவுக்கு எல்லாமாய் இயைந்தது என் என்னின், துய்ப்பித்து தொல்லாய கன்மமெல்லாந் துடைத்தற்கும் முற்று வித்துப் பின் நில்லாமை நீக்கவும் கூடிநின்ற பொல்லாத ஆணவத்தைப் போக்கவும் புகுந்தது அன்றே.

(பொ - ரை) அவ்வாறு தத்துவங்கள் பலவேறு வகைப் பட உயிரோடு பொருந்தியது எதன்பொருட்டெனின், இன்பத் துன்பமென்னும் பலன்களை அனுபவிக்கும்படிசெய்து பழைமை யாய பிராரத்தமென்னும் இருவினைகளை நீக்குதற் பொருட்டும், அவ்வாறு நீக்குதலால் பருவமுண்டான விடத்துத் தீக்கையால் எஞ்சிய சஞ்சிதமாய இருவினைகளை மேலைக்குவித்தாகாதவாறு பக்குவம் வரச்செய்து கழித்தற்பொருட்டும், அவ்வாறு கழிவத னால் எல்லா அநர்த்தங்கட்கும் மூலமாய் உயிரோடு கலந்து நின்ற ஆணவ மலத்தைப் போக்குதற்பொருட்டும் உயிரோடு தத்துவம் அடைந்ததாம். (எ-று.)

எனவே, தத்துவங்களால் நீக்கப்படும் ஆணவ கன்மங்கள் அணுவுக்கே யன்றிச் சிவத்துக்கின்மையால் அத்தததுவங்கள் அணுவினோடன்றிச் சிவத்தோடு பொருந்தாவாயின என ஆசங்கை நீக்கியவாறும். ஆசங்கை யாவது, "மேலைச்செய்யுளில் அணுவினோடெல்லாமாகி யடைந்திடும்" என் றதனால் தத்துவங்கள் அணுவையடைதற்கும், சிவத்தையடையாமைக்கும் காரண மென்னை? என்பது. அணுவுக்கு என்றவிடத்துச் சிவனைப்பிரித் தற்குரிய பிரிநிலை ஏகாரமும், தொல்லாய என்ற விடத்துத் தொன்மை யாய என்னும் பொருள்படமை விகுதியும் தொக்கு நின்றன.

௫ - ௧௧ "மொய்தரு பூதமாதி" என்பது முதல் இவை ஏழு செய்யுளாலும் நாலாங்கூற்றினுள்ள முத்திறப்பொருளும் வகுத்துக் கூறப்பட்டன.

அவ்வாறாயின், இச்செய்யுளி லெடுத்துக்கொண்ட ஆணவமலம் யாது? அதனால் வரும் பொல்லாமை யாது? அதனைப் போக்குமாறு யாங்ஙனம்? என்பாரை நோக்கிப் பதினேழு செய்யுளால் நாலாங்கூற்றின் ஒழிபு கூறுகின்றார். (எக.)

---

# நான்காம் அதிகரணத்தின் ஒழிபு.

ஒழிபு என்பது ஒன்றன் சேடம். முதற் செய்யுளின் பகுப்பின்படி நான்காம் அதிகரணம்கூறி முடித்து அவ்வதிகரணத்தின் சேடமாய்க் கூறவேண்டுவதான ஆணவமல முதலியவற்றின் இலக்கணங் கூறுத லின் ஒழிவு எனப்பட்டது.

ஆணவ மலத்தின் இலக்கணங் கூறுகின்றது.

**ஒன்றதா யநேக சத்தி யுடையதா யுடனா யாதி**
**யன்றதா யான்மா வின்ற னறிவொடு தொழிலை யார்த்து**
**நின்றுபோத்திருத்துவத்தைநிகழ்த்திச்செம்பினிற்களிம்பேய்ந்**
**தென்றுமஞ் ஞானங் காட்டு மாணவ மியைந்து நின்றே.**

(கோ - டு) அநேக சத்தி உடையதாய் ஆன்மாவின் உடனாய் ஆண வம் செம்பிற் களிம்பேய்ந்து ஆதி அன்றதாய் இயைந்துநின்றே ஒன்றதாய் தன் அறிவொடு தொழிலை ஆர்த்து நின்று போத்திருத்துவத்தை நிகழ்த்தி என்றும் அஞ்ஞானம் காட்டும்.

(போ - ரை) மேற்கூறிய ஆணவமலமாவது யாது? அத னிலக்கணம் யாது? எனின், அளவில்லாத சத்திகளையுடையதாய் அளவில்லாத உயிர்களுடன் சேர்ந்து நிற்பது ஆணவமலம். எப் பொழுது சேர்ந்ததெனின், ஆன்மாவுள்ள அன்றே ஆணவமல மும் உண்டாய் அன்றே ஆன்மாவுடன் சேர்ந்து நிற்றலால் செம் பிற் களிம்புபோல அனாதியாய்க்கலந்து நிற்பதாம். மறைக்கப் படும் உயிர்கள் பலவாதல்போல பலவன்று ஒன்றேயாம். அவ் வாணவமலம உயிர்கள் கேவலாவத்தையில் நிற்குங்கால் அறிவு தொழில்களை யவ்வுயிர்கட்கு நிகழவொட்டாது தனது மறைப்புச் சத்தியால் மறைத்து நிற்கும். கேவலத்தினின்றும் நீங்கித் தநு கரணபுவன போகங்களுடன்கூடிச் சகலத்தில் உயிர்கள் நிற்குங் கால் அவ்வாணவமானது மோகஞ்செய்தலாகிய கீழ்ச்செலுத்துஞ் சத்தியால் போகானுபவத்திற்கேற்ற கர்த்தாத்தன்மையை நிக ழ்த்திநிற்கும். இவ்வாறு கேவலத்திலுஞ் சகலத்திலும் அவ் வாணவமலமே காரணமாய் நின்று உயிர்க்கு அஞ்ஞானத்தை உண்டுபண்ணும். (௳-று)

இச்செய்யுளால் ஒன்றதாய் என்பது முதலாயின ஆணவமலத்தின் சொரூபம் என்பது கூறப்பட்டது.

ஆணவமலம் ஒன்றாயிருந்து பல வுயிர்களுடன்கூடி மறைப்பது எது போலுமெனின், இருள் ஒன்றாயிருந்து பலகண்களுடன்கூடி மறைப்பது போலாம். பல வுயிர்களுடன் கலந்துநிற்குந்தன்மையால் வியாபகம் எனப்படும். அவ்வாறு கலந்து நிற்கும் முதல்வன் வியாபகத்திற்கும் இதற்கும் வேற்றுமை என்னையோவெனின், முதல்வன் வியாபகம் உயிரின் வியாபகத்திற்கு மேம்பட்டதாய் அதனால் அஞ்ஞான காலத்தில் விளங்கித்தோன்றாமையும் முத்திக்காலத்தில் விளங்கித் தோன்றுதலுமாகிய வேற்றுமையுடன் நீங்காததாயிருக்கும். ஆணவமல வியாபகம் உயிரின் வியாபகத்திற்கு மேம்படாமலும் குறையாமலும் சம வியாபகமாய் அதனால் குருவருளால் முத்திக்காலத்தில் நீங்கப்பெறுவதாயிருக்கும்.

இம்மலத்தின் காரியம்:—மோகம், மதம், இராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என ஏழுவகைப்படும். அவற்றுள், மோகம்—குருவினாலும், நூலினாலும் தீயனவென்றறிந்தவற்றில் நீங்காமல்நிற்கும் மயக்கம். மதம்—தன்னைப்போல ஒருவருமில்லையென மதித்தல். இராகம்—கிடையாத பொருளினிடத்தில் ஆசைப்படுதல். கவலை—கிட்டிய பொருள் பிரிந்தபொழுது வருந்துதல். தாபம்—சுற்றத்தைவிட்டுப் பிரிவதற்கும், பிரிந்ததற்கும் ஆற்றாமை. வாட்டம்—அவ்வாற்றாமையால் முக மலர்ச்சியின்றி வாடுதல். விசித்திரம்—எச்செயலும் வினையின்வழியாய் நிகழ்வது என்று எண்ணாது தான் செய்ததாகவும், பிறர் செய்ததாகவும் எண்ணுதல். (அ௦.)

மாயையே ஆணவமல மென்பாரை மறுத்துரைக்கின்றது.

**மலமென வேறொன் றில்லை மாயாகா ரியம தென்னி**
**னிலகுயிர்க் கிச்சா ஞானக் கிரியைக ளெழுப்பு மாயை**
**விலகிடு மலமி வற்றை வேறுமன் றதுவே றாகி**
**யுலகுடல் கரணமாகி யுதித்திடு முணர்ந்து கொள்ளே.**

(கோ - ௫) மாயா காரியம் அது. மலமென ஒன்று வேறு இல்லை என்னின், மாயை இலகுயிர்க்கு இச்சா ஞானக் கிரியைகளெழுப்பும். மலம் வேறும் அன்று. இவற்றை விலகிடும். உலகுடல் கரணமாகி அது வேறாகி உதித்திடும் உணர்ந்துகொள்ளே.

(போ - ரை.) மாயாகாரியமே உயிர்க்கு மறைத்தற் ருெழிலைச் செய்யுமாகலின், அம்மாயையின் வேருக மலமென்று ஒரு பொருள் இல்லையெனின், அது பொருந்தாது. எவ்வாறெனின், மாயையானது விளங்காநின்ற உயிர்கட்கு வேருய் நின்று அறிவிச்சை செயல்களை விளக்கும். ஆணவ மலம் உயிர்களோடு கலந்து நின்று அறிவிச்சை செயல்களை மறைக்கும். விளக்குவதாகிய மாயைக்கும், மறைப்பதாகிய ஆணவ மலத்திற்குந் தம்முள் வேற்றுமை பெரிதாகலின், அவ்வேற்றுமை யறியாது தநுகரண புவனபோகமாயும், உயிர்க்கு வேருயும் உதிக்கும் மாயையினையே உயிரோடு கலந்து நிற்கும் மலமென்பார் மதம்போலியென்பதனை அறிவாயாக. (எ-று.) (அக)

மாயா மலத்தைத்தவிர ஆணவ மலம் வேறில்லை யென்பதற்கு உவமைகூற அவ்வுவமை பொருந்தாதெனக் கூறுகின்றன.

மாயையே யான்ம ஞானக் கிரியையை மறைத்து நிற்குந்
தூயவப் பரிதிதன்னைச் சுடர்முகின் மறைத்தாற் போலப்
போய்முகி லகலச் சோதி புரிந்திடு மதுவே போலக்
காயமு மகல ஞானத் தொழில்பிர காச மாமே.

பரிதியை முகின் மறைப்பப் பாயொளி பதுங்கி னுற்போ
லுருவுயிர் மறைக்கின் ஞானக் கிரியைக ளொழிக்கு மாகுங்
கருதிடு மிச்சா ஞான காரியங் காயம் பெற்ருன்
மருவிடு முயிர்க்குக் காயம் வந்திடா விடின்ம றைப்பே.

(கோ - டு.) தூயபரிதிச் சுடர்தன்னை முகில் மறைத்தாற்போல மாயையே ஆன்ம (இச்சா) ஞானக்கிரியையை மறைத்து நிற்கும். அம்முகில் போய் அகலச்சோதி புரிந்திடும் அதுவேபோல, காயமும் அகல (இச்சா) ஞானத்தொழில் பிரகாசமாமே. பரிதியை முகின் மறைப்பப் பாயொளி பதுங்கினுற்போல், உருமறைக்கின் உயிர் (இச்சா) ஞானக் கிரியைகள் ஒழிக்குமாகும்.

(போ - ரை.) மேகமானது சூரியனின் வேருய் நின்று சூரியனுடைய பரிசுத்த ஒளியை மறைத்தாற்போல, மாயையானது தநுகரண புவன போகமாய் ஆன்மாவின் வேருய் நின்று

அறிவிச்சை தொழில்களை மறைத்தல் கூடும். அம்மேகம் நீங்கினவிடத்துச சூரியனொளி வெளிப்பட்டுத் தோன்றுமாறுபோல, சரீர முதலாகிய மாயை நீங்கியவிடத்து ஆன்மாவின் அறிவிச்சை தொழில்கள் பிரகாசித்தல்கூடும். இவ்வாறு உடம்பாட்டானும், எதிர்மறையானும் மாயையே ஆணவமலமென்பது இவ்வுவமையில் வைத்து அறியப்படுமெனின், அது பொருந்தாது, எவ்வாறெனின், மேகம்போல மாயை மறைக்குமாயின், மேகத்தால் சூரியன் ஒளி மறைபடுதல்போல, மாயா காரியத்தால் உயிரின்கண் அறிவிச்சை தொழில் நிகழாதிருத்தல் வேண்டும். அவ்வாறின்றி, மாயா காரியமாகிய உடம்பைப் பெற்றால், விளங்குகின்ற உயிர்க்கு அறிவிச்சை செயல்கள் நிகழவும், அவ்வுடம்பைப் பெறுவிடில் அறிவிச்சை தொழில்கள் நிகழாது மறையவுங் காணப்படுதலால், அவ்வுவமை இவ்விடத்துப் பொருந்தாது. (எ - று.)

(அ௨.) (அ௩.)

ஆணவமல மாயா மலங்களின் வேற்றுமையை விளக்கி ஆணவமலத்தின் தன்மை உயிரினுணர்வைத் தடுத்தலாமெனக் கூறுகின்றது.

**போதகா ரியம றைத்து நின்றது புகன்ம லங்கா**
**ளோதலாங் குணமு மாக வுயிரினுள் விரவ லாலே**
**காதலா லவித்தை சிந்தத் தருங்கலை யாதி மாயை**
**யாதலா லிரண்டுஞ் சோதி யிருளென வேறு மன்றே.**

(**கோ - டு.**) உயிரினுள் விரவலாலே குணமுமாக ஓதலாம். அவித்தை சிந்தக் கலை ஆதி மாயை காதலால் தரும். இரண்டும் சோதி இருளென வேறும அன்றே. ஆதலால், புகல் மலம் போத காரியம் மறைத்து நின்றது காண்.

(**பொ - ரை.**) அவ்வாறன்றியும் ஆணவ மலத்தானாகிய மறைப்பு, சூரியனின் வேறாய்நிற்கும் மேகத்தாலாகிய மறைப்புப் போலன்று. அம்மறைப்புத்தான் எவ்வாறு நிகழுமெனின், உயிரோடு வியாபகமாய்க் கலந்து உயிரின் குணம்போலத் தோன்றி நின்று மறைப்பதாம். அவ்வாறு மறைக்கும் ஆணவமாகிய

இருள் கெடுவதற்குக் கலை முதலிய தத்துவங்களாகிய விளக்கை மாயையானது விருப்பத்தோடு தரும். இவ்வாறு மாயையும், ஆணவமும் ஒளியும் இருளும்போலச் செயலின்கண் மாறுபட்டு நிற்பனவாகலான், இருள்போலக் கூறுந் தன்மைத்தாகிய ஆணவ மலமே உயிர் உணர்வைத் தடுக்கும் வல்லமையுடையதெனை உறுதியா யறிக. (எ - று.)

குணமும் என்னும் உம்மை குணமன்று என எதிர்மறைக்கண்வந்தது.

"மலமென" என்பது முதல் இவை நான்கு செய்யுளானும் ஐக்கிய வாதி பாசுபதி முதலியோர் மதம்பற்றி ஆணவமலமில்லை யென்னும் ஆசங்கையைப் பரிகரித்து அதனுண்மை சாதிக்கப்பட்டது. (அச.)

ஆணவமலம் உயிர்க்குக் குணமென்பாரை மறுத்துரைக்கின்றது.

**புருடன்றன் குணம வித்தை யெனிற்சடம் புருடனாகுங்**
**குருடன்றன்கண்ணின்குற்றங்கண்ணின்றன்குணமோகூறாய்**
**மருடன்றன் குணமதாகி மலமசித் தாகி நிற்குந்**
**தெருடன்றன் குணமதாகிச் சித்தென நிற்குஞ் சீவன்.**

[கோ - டு.] அவித்தை புருடன்றன் குணம் எனின், புருடன் சடமாகும். குருடன்றன் கண்ணின் குற்றம் கண்ணின்றன் குணமோ. மலம் மருள்தன்றன் குணமதாகி அசித்தாகி நிற்கும். சீவன் தெருள்தன்றன் குணமதாகிச் சித்தென நிற்கும் கூறாய்.

(பொ - ரை.) மேற்கூறியவாறு உயிரோடு கலந்து நிற்பதாகிய ஆணவ மலத்தினை உயிரின் வேறாய் ஒரு பொருளென்னாது கலந்து நிற்றலால் உயிரின் குண விசேட மென்றலே பொருத்தமாமெனின், அவ்வாறு அறியாமை வடிவாகிய மலங் குணமாயின் அறிவு வடிவாகிய ஆன்மா அறிவில்லாத சடமெனப் பட்டுப் பொருந்தாதாய் முடியும். ஒரு பொருளின்கண் குணம் போலக் குற்றமும் உடனாய்க் கலந்து நிற்றல் கூடுமென்பது, குருட்டுக் கண்ணிற் காணப்படும். கண்ணுக்குக் குணம் ஒளியே யாதலால், குருடனது கண்ணில் ஒளிக்குணத்தை மறைத்துக் கண்ணுடன் கலந்து நிற்கும் படலமாகிய குற்றம் கண்ணின்

குணமாதல் செல்லாது. அன்றியும். அறியாமையைத் தனது குணமாகக்கொண்டு நிற்கும் மலம் அறிவில்லாத சடமாய் நிற்ப தன்றி அறிவுடைய பொருளாகாது. ஆதலானும், உயிர் அறிதற் றொழிலையுடைய சித்தேயாய் நிற்கும் ஆதலானும், உயிரின்கண் குற்றமாகக் காணப்படும் அறியாமைக் குணத்திற்குக் குணிப் பொருள் உயிரின் வேறாய் உயிரோடு கலந்துநிற்கும் ஆணவமலம் என்று அறிவாயாக. (எ - று.)

இச்செய்யுளால், அறியாமை உயிர்க்குக் குணமென்னும் பாடாண வாதிகள் மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து அது மலத்தின் குணம் என மலத்தினுண்மை சாதிக்கப்பட்டது. (அ௫.)

மும்மலங்களும் உயிரைப் பந்தப்படுத்துதல் நெல்லுக்கு முளை தவிடு உமிபோலெனவும் வேறும் இருமலமுண்டெனவும் கூறுகின்றது.

**மும்மல நெல்லி னுக்கு முளையொடு தவிடு மிப்போன்**
**மம்மர்செய் தணுவி னுண்மை வடிவினை மறைத்து நின்று**
**பொய்ம்மைசெய்போகபந்தபோத்திருத்துவங்கள்பண்ணு**
**மிம்மல மூன்றி னோடு மிருமல மிசைப்ப னின்னும்.**

[**கோ - டு.**] அணுவின் உண்மை வடிவினை மம்மர் செய்து மறைத்து நின்று எனவும் இன்னும் இருமலம் இசைப்பன் எனவுங்கூட்டுக.

(**போ - ரை.**) மேல் இச்சூத்திரத்து ௩௬-வது செய்யுளில் "தன்மமோ டதன்மமாகி" எனக் கூறப்பட்ட கன்மமலமும், அதன் பின்னாக, ௫௩-வது செய்யுளில் "நித்தமாயருவா" எனக் கூறப்பட்ட மாயாமலமும், இவ்விடத்துக் கூறப்பட்ட ஆணவ மலமுமாகிய இம்மூன்று மலங்களும் உயிரினது உண்மைவடிவினை மறைத்து மயக்கத்துக் கேதுவாகக் கூடி நிற்றல் எதுபோல வெனின், நெல்லுக்கு முளைத்தற் சத்தியும், தவிடும், உமியும் போலவாம். எவ்வாறெனின், முளைத்தற் சத்தி முளையைத் தோற்றுவிக்குமாறுபோலக் கன்மமலம் பொய்ம்மை செய்கின்ற சுக துக்கங்களைத் தோற்றுவிக்கும். தவிடு முளைத்தற்கு அனு கூலஞ் செய்து நிற்பதுபோல மாயாமலம் அச்சுக துக்கங்கள்

தோன்றுதற்கு அனுகூலமாகத் தனு கரண முதலியவற்றைத் தோற்றுவிக்கும். உமி அம்முளை தோன்றுதற்கு நிமித்தமாய்ப் பற்றி நிற்பதுபோல ஆணவமலம் அச்சுக துக்கங்களை உயிர் அனுபவிக்குமாறு கருத்தாத் தன்மையைச் செய்து நிற்கும். இவ்வாறு பந்தப்படுத்தும் இம்மலங்கள் மூன்றனோடும் வேறும் இரு மலங்கள் உளவாம். (எ - று.)

கன்மத்தை முளைபோல் போகஞ் செய்யும் என்றும், மாயையைத் தவிடுபோல் பந்தஞ் செய்யும் என்றும், ஆணவமலத்தை உமிபோல் போத்திருத்துவங்கள் பண்ணும் என்றும் கூறினமையின் இச் செய்யுள் கிரனிறைப் பொருள்கோள்.

நெல் என்பது அரிசியைக் குறிக்கும். அவ்வரிசிக்கு முளை தவிடுமிப் போல் என்பது மும்மலங்கள் உயிரைப் பந்தப்படுத்தற்கும் பந்தத்திற்குக் காரணமாதற்கும் உவமையாயின. அன்றி, உயிரும் அம்மும்மலங்களுங் கூடி நிற்கும் சம்பந்தத்திற்கு உவமையாகாது. எவ்வாறெனின், முளைத் தற் சத்தி அரிசியினுள் அடங்கி நின்று பந்தப்படுத்துவதுபோலக் கன்மமலம் ஆன்மாவினுள் அடங்கி நிற்பதின்றி ஆன்மாவினாற் செய்யப்படுவதாயிருத்தலானும், தவிடு அரிசியைத் தொடர்ந்து நின்று பந்தப்படுத்துவது போல, மாயை தொடர்ந்து நின்று பந்தப்படுத்துவதின்றிக் கூடி நின்று பந்தப்படுத்துவதாலும், உமி அரிசியின் வேறாய் நின்று பந்தப்படுத்துவது போல, ஆணவமலம் வேறாய் நிற்பதின்றிக் கலந்து நின்று பந்தப்படுத்துவதாலும் சம்பந்தத்திற்கு உவமையாகாமை யறிக. இம் மும்மலங்களுள் சுக துக்கமாகிய காரியத்திற்கு கன்மமலம் முதற்காரணமும், மாயாமலம் துணைக் காரணமும், ஆணவமலம் நிமித்தகாரணமுமாம். எவ்வாறெனின், முளைத்தற்சத்தி முளையைத் தோற்றுவிக்குமாறுபோல, கன்மமலம் சுக துக்கங்களைத் தோற்றுவித்தலின், அது முதற்காரணம். முளைத்தற்கு அனுகூலஞ் செய்து அரிசியுடனிற்குந் தவிடுபோல, உயிரினிடத்துச் சுக துக்கங்கள் தோன்றுதற்குத் துணையாய் அவ்வுயிரினோடு மாயாகாரியமாகிய தநு கரணாதிகள் கூடி நிற்றலின் மாயை துணைக்காரணம். முளை அரிசியினிடத்துத் தோன்றுதற்கு நிமித்தமாய் நிற்கும் உமிபோல, சுகதுக்கங்கள் உயிரினிடத்துத் தோன்றுதற்கு அச்சுக துக்கங்களை முனைத்து நிற்கச் செய்து அவற்றை உயிர் அநுபவிக்குமாறு செய்வது ஆணவமாதலின், அது நிமித்த காரணமென அறிந்துகொள்க.

பந்தப்படுத்தும் முறைமையின் வேற்றுமைக்கேற்ப மும்மலங்களும் வேற்றுமைப்படும். அதாவது, ஆணவமலம் உயிரோடு கலந்துநின்று

அறிவு, இச்சை, செயல்களைத் தடுத்தலால் பிரதிபந்தம். கன்மமலம் உயிர் செல்லுமிடமெல்லாம் தொடர்ந்துசென்று சுக துக்கங்களைக் கூட்டுதலால் அநுபந்தம். அனு என்பது தொடர்ச்சி. மாயாமலம் உயிரோடுகூடித் தநுகரண முதலியனவாய் நிற்றலால் சம்பந்தம் என வறிக.

"பந்தம் போகம் போக நிறுத்தலும் வந்தது மாயை வினைமலத்து" என்றார் ஞானமிர்த நூலுடையாரும்.

மூளை என்பது மூளைத்தற் சத்தியைக்குறித்தலின் ஆகுபெயர். (அசு)

இருமலமென்பது மாயாகாரியமும், திரோதான சத்தியுமாம் எனவும், ஐந்து மலங்களும் உயிர்க்குப் பந்தஞ்செய்யுமெனவும் கூறுகின்றது.

மாயையின் காரி யத்தை.மாயேய மலம தென்று
மேயுமும் மலங்க டத்தந் தொழிலினை யியற்ற வேவுந்
தூயவன் றனதோர் சத்தி திரோதான கரியதென்று
மாய்வரிம் மலங்களைந்து மணுக்களை யணைந்து நிற்கும்.

(போ - ரை-) அச்சுகதுக்க விளைவுகட்கெல்லாம் இடமாய் நின்று ஆன்மாவின் அறிவிச்சை செயல்களை, ஏகதேசப்படுத்துவ தென மேற்கூறிப்போந்த மாயாகாரியமாகிய தநுகரணாதிகளை மாயேயமலம் என்றும், பொருந்திய மும்மலங்களையுந் தத்தம் தொழில்களைச்செய்ய ஏவும் சிவசத்தியை மறைத்தலைச் செய்வதாகிய திரோதானமலம் என்றும், வேறு இருமலம் உண்டென்று ஆராய்ந்து கூறுவர். அவ்விரு மலங்களுள், மாயாகாரியம் மாயையிலடங்குமாயினும் பந்தப்படுத்தும் வேற்றுமைபற்றி வேறுவைத்தெண்ணப்படும். வேற்றுமையாவது, மாயை உயிரின் அறிவோடுகூடி அவ்வறிவை மயக்கும். மாயாகாரியம் மயக்கத்திற்கு முன்னிலைப் பொருளாயிருக்கும். இவையே வேற்றுமையாம். இனி மலங்களைத் தொழிற்படுத்துஞ் சிவசத்தியும் பராசத்தியின் அடங்குமாயினும் தொழில் வேற்றுமைபற்றி வேறுவைத்தெண்ணப்படும். அவ்வேற்றுமையாவது, பராசத்தி கருணை ஒன்றே செய்துநிற்கும். திரோதான சத்தி கருணை காரணமாகக் கன்மத்திற்கேற்றவாறு உயிரின் அறிவை மறைத்து

நிற்கும். இவையே வேற்றுமையாம். இவ்வாறு இவ்வைந்து மலமும் உயிர்தோறும் நின்று செய்யும் பந்தவேறுபாடு கண்டு கொள்க. (எ- று.)

திரோதானகரி என்பது திரோதானத்தைச் செய்வது என்னும் பொருள் குறித்த வடசொல்.

ஐந்து மலங்களையும் மும்மலங்களுள் அடக்கிக்கூறுங்கால் மாயேய மலத்தை மாயாமலத்தினும், திரோதான சத்தியை மறைக்குந் தொழி லொப்புமையால் ஆணவமலத்தினுமடக்கிக்கூறுவர். (அஎ.)

உயிர்மேற்கூறிய ஐந்து மலங்களால் பிறந்திறந் துழலு மெனக் கூறுகின்றது.

**மலமாயை கன்ம மாயே யந்திரோ தாயி மன்னிச்**
**சலமாரும் பிறப்பி றப்பி றங்கியித் தரைகீழ் மேலு**
**நிலையாத கொள்ளி வட்டங் கறங்கென நிமிடத் தின்க**
**ணலமாரு மிறைவனாணை யாலுயிர் நடக்கு மன்றே.**

(கோ - டு) உயிர் மலம், மாயை, கன்மம், மாயேயம், திரோதாயி மன்னி இறைவன் ஆணையால் நிலையாத கொள்ளிவட்டம் கறங்கு என நிமி டத்தின்கண் அலமாரும். பிறப்பு இறப்பில் தங்கி இத்தரை கீழ்மேலும் சலமாரும் நடக்கும் அன்றே.

**(பொ - ரை.)** ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோ தாயி ஆகிய இவ்வைவகை மலங்களும் உயிருடன் பொருந்துத லால், அம்மலங்களுக்கேற்ப முதல்வன் ஆணையால் நிலையில்லாத கொள்ளிவட்டமும் காற்றூடியும்போல் கணப்போதில் பலமுறை சுழற்சியுற்றுப் பிறப்பிறப்பைப் பொருந்திப் பூமி, நரகம், சுவர்க் கங்களிலே போகுவரவுடையதாய் அவ்வுயிர் திரியும். (எ-று.)

மன்னியலமாரும் என்பது மன்னுதலால் அலமாரும் எனக் காரண காரியபொருளாய் நின்றது. "மழைபெய்யக் குளநிறைந்த"தென்றாற் போல. அலமரும் என்பது அலமாரும் என ஓசை நிரப்புதற்பொருட்டு நீண்டது. சலம்-போக்குவரவு.

இச்சூத்திரம் முதற்செய்யுளில் "ஆணையினமர்ந்துசெல்ல" எனவும் ௯௲வது செய்யுளில் "நாதனாராணையுய்க்க நரகொடு சுவர்க்கந்துய்த்து" எனவும் கூறியிருப்பவும் இவ்விடத்தும் "இறைவனாணையாலுயிர் நடக்கும்"

எனக்கூறியது பிறப்பிற்பட்டுச் சுழலுதலை நீக்குவதற்கு இறைவனருளே வாயிலாகும் என்ப துணர்த்துதற்பொருட்டு. அவனருள் வாயிலாகும் என்பது வருஞ்செய்யுள்முதல் வகுத்துக்கூறப்படும்.

"மும்மல நெல்லினுக்கு" என்ற செய்யுள்முதல் இவை மூன்று செய்யுளானும் மலங்கள் ஐந்தென்பதும், அவை பந்திக்கு முறையுங் கூறுமுகத்தால் ஆணவமலத்தானாகிய பொல்லாமை கூறப்பட்டது. ஆணவமல மல்லாத ஏனைய மலங்களெல்லாம் ஆணவமல நீக்கத்தின்பொருட்டே யாதலின், இவையனைத்துங்கூடி நீக்கத்தக்க கருத்தாத்தன்மையே ஆணவமலத்தானாகிய பொல்லாமையாம். (அஅ.)

பிறந்திறந் துழலுதற்குரிய பிறவிகளுள் மானுடப்பிறவியே அரிதெனக் கூறுகின்றது.

**அண்டசஞ் சுவேத சங்க ளுற்பிச்சஞ் சராயு சத்தோ**
**டெண்டரு நாலெண் பத்து நான்குநா றுயி ரத்தா**
**யுண்டுபல் யோநி யெல்லா மொழித்துமா நுடத்து தித்தல்**
**கண்டிடிற் கடலைக் கையா னீந்தினன் காரி யங்காண்.**

(போ - ரை.) உயிர்கள் பிறத்தற்குரிய முட்டையும், வேர்வையும், வித்தும் கருப்பையுமாக எண்ணப்படும் நால்வகைத் தோற்றத்தினின்று உண்டாம் பிறவிகள், தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என எழுவகைப்படும். அவ்வெழுவகைப் பிறப்பினின்று உண்டாகும் உறுப்புப் பேதம் எண்பத்துநான்கு நூறாயிரமாகும். அப்பேதங்களினின்றும் விரிந்த பேதங்கள் அளவின்றி உள்ளன. அவற்றுள் மற்றைப் பிறவிகளெல்லாம் ஒழிந்து ஒரு உயிர் மாநுடப்பிறவியைப் பொருந்தக் காணப்பெற்றிடின், அப்பேறு சமுத்திரத்தைக் கையால் நீந்திக் கரையேறினவன் காரியத்தோடொக்கும். இம் மாநுடப்பிறவியே பிறப்பிறப்பிற்பட்டுழலும் சுழற்சியை நீக்குதற்கு வாயிலாம்.( எ-று.) (அகூ)

மாநுடப்பிறவியுள்ளும் உத்தமநாட்டில், உத்தம ஜாதியில், உத்தம சமயத்தில் பிறத்தலரிதெனக் கூறுகின்றது.

நரர்பயி றேயந் தன்னி னுன்மறை பயிலா நாட்டில்
விரவுத லொழிந்து தோன்றன் மிக்கபுண் ணியத்தா லாகுந்
தரையினிற் கீழை விட்டுத் தவஞ்செய்சா தியினில் வந்து
பரசம யங்கட் செல்லாப் பாக்கியம் பண்ணுே ணுதே.

(போ - ரை.) அம்மாநுடப் பிறவியினுள்ளும் மாநுடர் வாழ்கின்ற இவ்வுலகத்துள் வேதாகம வழக்கம் இல்லாத நாட்டிலே பிறவாது அவ்வேதாகம வழக்க மிகுந்துள்ள உத்தம நாட்டிலே பிறத்தலரிது. அவ்வாறு பிறத்தல் மிகுந்த புண்ணியத்தாலுண்டாம். அவ்வுத்தமநாட்டினுள்ளுங் கீழ்ச்சாதியிலே தோன்றாது தவஞ்செய்தற்குரிய உத்தம சாதியிலே தோன்றல் அதனினும் அரிது. அவ்வாறு தோன்றினும் புறச்சமயங்களிற் செல்லாது அப்பிறப்பிறப்பை ஒழித்தற்கு வாயிலாகிய உத்தம சமயத்திற்குரிய நன்மை ஒருவனுக்குண்டாதலரிது. (எ-று.)(௯0)

உத்தம சாதியிற் பிறக்கினும் வாழ்வினுலாகிய செருக்கும் வறுமையினுலாகிய சிறுமையும் நீங்கிச் சைவசமயத்திற்சாரல் மிக அரிதெனவும், அதனினும் சித்தாந்த நெறியினுல் சிவனை வழிபடுபவரே வீடு பெறுவர் எனவும் கூறுகின்றது.

வாழ்வெனு மையல் விட்டு வறுமையாஞ் சிறுமை தப்பித்
தாழ்வெனுந் தன்மை யோடுஞ் சைவமாஞ் சமயஞ் சாரு
மூழ்பெற லரிது சால வுயர்சிவ ஞானத் தாலே
போழிள மதியினுனைப் போற்றுவா ரருள்பெற் றூரே.

(போ - ரை) மேற்கூறியவாறு உத்தமசாதியிற் பிறக்கினும் பொருளுடையார், குலம், இளமை, கல்வி, செல்வம், அதிகாரம் என்னும் இவைகளாலுள்ளதாகிய அகங்காரமொழிந்தும், பொருளில்லார் வறுமையால் அச்செல்வமுடையார் பின்சென்று தாழ்ந்துநிற்குஞ் சிறுமையினீங்கியும் இருப்பது அரிது. அவ்வாறிருத்தல் உயர்ந்த சாதியினும் உயர்ந்தகுடிப் பிறப்பிற்றான் உண்டாகும். அவ்வுயர் குடிப்பிறப்பே பிறப்பிறப்பை நீக்குதற்கு வாயிலாம். ஆகலான், அவ்வுயர்ந்த குடியிற் பிறந்து சிவபிரானுக்கு

நாம் என்றும் அடிமையாவோமென்று கருதி அச்சிவபிரானிடத்து மெய்யன்போடும் சைவசமயத்தைப் பொருந்தும் புண்ணியப்பேறு பெரிதும் அரிதாம். அச்சைவசமயத்தினுள்ளும் உயர்ந்த சித்தாந்த நெறி யுணர்ச்சியைப் பொருந்தி அவ்வுணர்ச்சியால் பிளவுபட்ட இளம்பிறையணிந்த சிவபெருமானை வழிபடப் பெறுவாருளராயின், அவரே மலத்தாலுண்டாந் துன்பங்களினின்றும் நீங்கிப் பிறவாநெறியாகிய முத்திப் பேறடைவார். (எ-று)

வாழ்வினலாகிய மையலை வாழ்வெனு மையல் எனவும், வறுமையாலாகிய சிறுமையை வறுமையாஞ் சிறுமை எனவும் காரியத்தைக் காரணமாக வுபசரித்தார். மையலும், சிறுமையும் காரியம். வாழ்வும், வறுமையும் காரணம். மையல்-அகங்காரம்.

"அண்டசம்" என்னுஞ் செய்யுள் முதல் இவை மூன்று செய்யுளானும் அவ்வாணவமல பந்தத்தைப் போக்குதற்குரியவாயில், மாநுடப்பிறவியும், வேதாகம வழக்குடைய நாட்டிற்றோன்றுதலும், உத்தமசாதியிற்றோன்றுதலும், உத்தம சமயத்திற் றோன்றுதலும், அவ்வுத்தமசமயத்துள்ளும் சைவசமயத்திற்றோன்றுதலும், அதனினும் சித்தாந்த நெறியுணர்தலும் என்னும் இவையென்பது வகுத்துக்கூறப்பட்டது. (கூக.)

உத்தம நாட்டில் உத்தம சாதியில் மாநுடராய்ப் பிறத்தல் வேண்டப்படுமெனவும், வேண்டப்படுதற்குக் காரணம் உணர்ச்சி விசேடம் எனவும் கூறுகின்றது,

**மானுடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காய**
**மானிடத் தைந்து மாடு மரன்பணிக் காக வன்றோ**
**வானிடத் தவரு மண்மேல் வந்தரன் றனையர்ச் சிப்ப**
**ரூனெடுத் துழலு மூம ரொன்றையு முணரா ரந்தோ.**

(**கோ - ௫.**) ஆனிடத்து ஐந்தும் ஆடும் அரன், மனம் வாக் காயம் பணிக்காக அன்றோ மானுடப் பிறவிதானும் வகுத்தது எனவும், அந்தோ ஊன் எடுத்து உழலும் ஊமர் ஒன்றையும் உணரார் எனவுங் கூட்டுக.

(**போ - ரை.**) அப்பிறப்பிறப்பை நீக்குதற் பொருட்டுப் பசுவினிடத் துண்டாம் பால், தயிர், நெய், கோமயம், கோசலம் என்னும் பஞ்சகவ்வியத்தினை அபிஷேகமாகக் கொண்டருளும்

சிவபெருமானை மனத்தால் நினைந்தும், வாக்கால் புகழைத் துதித்தும் மந்திரங்களைச் செபித்தும், காயததால் பணிந்தும் வழிபாடு செய்யவேண்டும். இவ்வழிபாடு ஏனைப் பிறவிகளிற் செய்தல் கூடாமையின், அவ்வழிபாட்டின் பொருட்டாகவன்றே பிறவி விசேடமாகிய மானுடப் பிறவியை முன் செய்த தவத்தால் வேண்டப்பட்டு வகுத்ததாம். மேலுலகத்திலுள்ள விட்டுணு முதலிய தேவர்களும அவ்விறைவனை வழிபடுதல் ஏனை உலகங்களிற் கூடாமையால் தேச விசேடமாகிய இம்மண்ணுலகத்தில் வந்து அச்சிவபிரானை அருச்சிப்பர். அவ்வாறு அருச்சிப்பதற் குரிய இவ்வுலகத்து அருச்சிப்பதற்குரிய மாநுடசரீரம் பெற்றும் அருச்சிக்க வேண்டுமென்னு முண்மையை ஐயோ பிறவியிற்பட்டுழலும் ஊமராகிய ஏனையோர் சிறிதும் அறியமாட்டார். ஆதலால் உண்மை அறிதற்குரிய சாதி விசேடமும், குடிப்பிறப்பு விசேடமும் வேண்டப்படும். (எ - று.)

இச்செய்யுளால், மேற்கூறிய வினைத்தும் சிவபிரானை வழிபடும் உணர்ச்சி விசேடத்திற்குக் காரணமாதலால், ஆணவமலத்தைப் போக்கும் வாயிலாதற்கு உரிமையுடையனவாதல் கூறப்பட்டது. உரிமையாவது, சிவபிரானை வழிபடும் உணர்ச்சி விசேடம்.

வாக் காயம் என்பது வடநூன் முடிபு. தமிழ் நூல் முடிபாயின் வாக்குக் காயம் என்றிருத்தல் வேண்டும். அவ்விடத்து வாக்கால் என்னும் பொருள்பட ஆலுருபு தொக்கு நின்றது. (௧௨.)

வாழ்விலாகிய மையலை நீக்குதற்குச் சரீர நிலையாமையை நோக்குதல் உபாயமெனக் கூறுகின்றது.

**கருவினு ளழிவ தாயுங் கழிந்திடா தழிவ தாயும்**
**பரிணமித் தழிவ தாயும் பாலனு யழிவ தாயுந்**
**தருணனு யழிவ தாயுந் தானரைத் தழிவ தாயு**
**முருவமே யழிவே யானு லுள்ளபோ தேபா ருய்ய. ௧௩**

(கோ - டு.) நரைத்துத் தானழிவதாயும் எனவும், உள்ளபோதே உய்யப்பார் எனவுங் கூட்டுக.

(பொ - ரை.) மாநுட யாக்கை அவ்வளவு பெருமை புடையதாயினும் மாதாவினுடைய கருப்பத்திற்றனே யழியினு

மழியும். பிறந்த உடனே அழியினுமழியும். பிறந்து சிறிது காலமிருந்து அழியினு மழியும். பாலப் பருவருத்தி லழியினு மழியும். யௌவனப் பருவத்தி லழியினு மழியும். நரையுண் டாகிய விருத்தப் பருவத்தி லழியினு மழியும். இவ்வளவு நாள் நிற்கும் என்று அறிய முடியாமல் நீரினிடத்துண்டாங் குமிழி நிலைபெறாது அழிதல்போல் எப்பொழுதும் சரீரம் அழியுந் தன் மையதாம். ஆதலால், நிலைத்திருக்கும் பொழுதே உய்யும் வண் ணம் அந்நிலையாமைகளை உற்றுநோக்குவாய். அவ்வாறு நோக்கு வார்க்குச் சரீர முதலியவற்றாலுண்டாம் மையலை விடுதல்கூடும்.()

உருவமே யென்பதில் ஏகாரம் அசை. உருவவேயென்று பாடங் கொள்வாருமுண்டு. பொருட் பொருத்தமின்மையில் அது பொருந் தாது. (கரு.)

விடயங்களை அறியும் அறிவும் வாழ்க்கையும் நிலையுடையன வல்ல என்றறிதலும் அம்மையலை நீக்குதற்கு உபாயம் எனக் கூறுகின்றது.

**ஒருபுல னுகரும் போதங் கொன்றிலை யொன்றின் பாலும்**
**வருபயன் மாறி மாறி வந்திடு மெல்லா மாறு**
**மொருபொழு துணரி னுண்டா மல்லதிவ் வல்லல் வாழ்க்கை**
**மருள்கன வதுவும் போல மாயும்பின் மாயு மன்றே.**

(கோ - ௬.) அங்கு ஒரு புலனுகரும்போது ஒன்று இலை. ஒன்றின் பாலும் வருபயன் மாறி மாறி வந்திடும். ஒரு பொழுது எல்லாமாறும். அல்லது இவ்வல்லல் வாழ்க்கை கனவும் மருளதுவும்போல பின் மாயும் அன்றே மாயும். உணரின் உண்டாம்.

(பொ - ரை.) மாறுட சரீரத்தைப்பெற்று அதில் நின்று கொண்டு, ஒரு பொருளை அநுபவிக்குங்கால் மற்றொரு பொருளை அநுபவிக்க முடியாமையால் பொருளை அறியுமறிவும் எல்லாப் பொருளையும் ஒரு சேர அறியமாட்டாது. ஒன்றை அறியு மிடத்தும் விட்டு விட்டு அறிவதின்றித் தடையின்றி அறியமாட் டாது. அவ்வாறறிதலும் உறக்கம் மூர்ச்சை முதலியவற்றில் இறிதுமில்லையாய்விடும். அதுவன்றி இவ்வாக்கையின் பொருட்

டுளதாகிய செல்வமென்னும் அல்லலும் கனாப்பொருள்போலவும், மயக்கப் பொருள்போலவும் மாயுந்தன்மையுடையதாம். எவ்வாறெனின், கனா முடிவு போகாது இடையே மாய்வதுபோலவும், மயக்கந் தோன்றிய பொழுதே மாய்வதுபோலவும் செல்வமும் மாயும் என்றறிக. ஆதலால், இவ்வறிவு நிலையாமை செல்வம் நிலையாமைகளை உணர வல்லார்க்கு அவற்றாலாகிய மையலை விடுதல்கூடும். (எ - று.)

பயன்—அறிதலாகிய பயன். அல்லது என்பது அன்றி என்னும் வாய்பாட்டு வினையெச்சக் குறிப்பு. அன்றி என்னும் வினையெச்சம் மாயும் என்ற வினைகொண்டது. அன்றி என்பது காலத்தை வெளிப்படக் காட்டாமையின் குறிப்பு. மருள்போல அன்றே மாயும், கனவுபோலப் பின்னு மாயும் என்றுரைத்துக் கொள்க. மருளும், கனவும் மயக்கப் பொருளையும், கனாப் பொருளையும் குறித்தலின் ஆகுபெயர். வாழ்க்கை என்றவிடத்து அவ்வறிவேயுமன்றி எனவும், பின் என்றவிடத்து அப்பொழுதேயுமன்றி எனவும் இறந்தது தழுவிய எச்சவும்மைகள் தொக்கு நின்றன.(கச.)

அதிகாரஞ் செய்வோர் தாம் சும்மாயிருத்தலை நோக்கித் தம்மைப் பிணமெனக் கருதலும் அம்மையலை நீக்குதற்கு உபாயம் எனக் கூறுகின்றது,

**அரிசனம் பூசி மாலை யணிந்துபொன் னுடை சாத்திப்**
**பரிசனம் பின்பு செல்லப் பாரகர் பரிக்கக் கொட்ட**
**வரிசின்ன மூதத் தொங்கல் வந்திட வுணர்வு மாண்டு**
**பெரியவர்பேச்சுமின்றிக்கிடத்தலாற்பிணத்தோடொப்பர்.**

(பொ - ரை.) அதிகாரஞ்செய்வோர் சந்தன முதலிய வாசனை திரவியங்கள் பூசியும் வாசத்தோடுகூடிய பூமாலைகள் அணிந்தும், பீதாம்பரம் போர்த்தும், தம் பரிவாரங்கள் பின்னே வரவும், சுமப்பவர் சிவிகை சுமப்பவும், வாத்தியங்கள் முழக்கவும், வரி பொருந்திய சின்னங்கள் ஊதவும், குடை சாமரங்கள் சூழ வரவும், அறிவற்றுப் பெரியாரைப் பேச்சின்றி அகங்காரத்தைப் பொருந்திக் கிடத்தலால் அவர் செத்தவரோ டொப்பரென்பதை அவ்விடத்தில் நிகழும் நிகழ்ச்சிபற்றி அறியவல்லாராயின் அவ்வாறறிபவர்க்கு வாழ்வினாலாகிய மையலை விடுதல்கூடும். (எ-று.)

மேலைச்செய்யுளில் உள்ள "உணரின்உண்டாம்" என்பதனை இச் செய்யுளின் இறுதியினும் வைத்துரைக்க. பெரியவர் என்பது இழித்தற் கண்வந்த குறிப்பு மொழி. பெருமை அதிகாரத்தானுயது.

"கருவினுள்" என்னுஞ் செய்யுள் முதல் இவை மூன்று செய்யுளா னும் வாழ்விலாகிய மையலை நீக்குதற்குச் செல்வத்தின் நிலையாமையினை யும், அதனால் இறுமாந்திருப்பவர் பிணததோடொப்ப ரென்பதனையும் உணர்தல் உபாயம் என்பது கூறப்பட்டது. (௬௫)

சிவபிரானை வழிபடுதலாலுண்டாம் அருட்செல்வத்தை நோக்கப் பொருட்செல்வம் நிலையன்றெனக் கருதிச் செல்வரைப் பின்பற்றிவாழ்தல் பயனிலை யென்றெண்ணுதல் வறுமையாலுண் டாஞ் சிறுமை நீங்குதற்கு உபாயம் எனக் கூறுகின்றது.

**பிணத்தினையொத்துவாழ்வோர்பின்னடைப்பிணங்கள்போல்**
**வுணக்கியே யுழல்வீ ருங்க ளுடலுயி ருணர்வு மெல்லாங்**
**கணத்திடைத் தோன்றி மாயுங்காயமென்றறிந்தொருக்கால்**
**வணக்குறீ ரரனை யென்றும் வானவர் வணங்க வைப்பன்.**

(கோ - ௫) அரனை ஒருக்கால் வணக்குறீர் என்றும் வானவர் வணங்கவைப்பன் காயம் கணத்திடைத் தோன்றிமாயும். உங்கள் உடல், உயிர், உணர்வும் எல்லாம் உணக்கியே உழல்வீர் என்று அறிந்து பிணத் தினை ஒத்துவாழ்வோர் பின் நடைப் பிணங்கள்போல் (ஆம்)

(**போ - ரை.**) மேற் கூறியவாறு செல்வ முதலியன நிலையா வென்பதனை யுணர்ந்து சிவபிரானை ஒருகாலேனும் வழிபாடு செய்கின்றிலீர். செய்யப்பெறின், எக்காலத்துந் தேவர்களும் வணங்கும் வண்ணம் அழியாச் செல்வத்தை அச்சிவபிரான் தரு வன். அச்செல்வத்தை நோக்க உடம்பு கணத்திற்றோன்றி அழி யுந் தன்மையுடையதாம். அவ்வுடம்பின் பொருட்டு உம்மு டைய உடல், உயிர், உணர்வு முதலியவெல்லாம் வருத்தமுறும் படி வருந்தி நீர் சேர்க்குஞ் செல்வம் செல்வமன்று. இவ்வாறு உடலின் றன்மையினையுஞ் செல்வத்தின் றன்மையினையும் உணர் வீராயின், இச்சிறு செல்வத்தை வேண்டிப் பிணத்தினையொத்து வாழும் அவ்வதிகாரச் செருக்குடையார் பின்சென்று நடைப்

பிணங்கள்போல் நின்று தாழ்தலாகிய சிறுமையினீங்குதல் உமக்குக் கூடும். (எ-று.)

இச்செய்யுள் வறுமையாஞ் சிறுமை தப்புதற்கு உபாயங் கூறியது. உபாயமாவது, இச்செய்யுளின் அவதாரிகையிற் காட்டப்பட்டுள்ளது.

சிவபிரானை வழிபடுதலாலுண்டாம் அருட்செல்வமே செல்வமென்னு மிக்கருத்துப்பற்றியே, "செல்வர் வாழ்தில்லைச் சிற்றம்பலமேய, செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே." என்றருளிச்செய்தனர் திருஞானசம்பந்த சுவாமிகளும். ஏனைச்செல்வங்களைநோக்கி வருந்தாது, சிவபிரானை வழிபடின், அச்சிவபிரான் அருட்செல்வத்தைத் தருதலேயன்றி ஏனைய செல்வங்களையுந் தந்தருளுவரென்னும் உண்மையினை, "மாட்டைத்தேடி மகிழ்ந்துநீர் நும்முளே, நாட்டுப்பொய்யெலாம் பேசிடு நாணிலீர். கூட்டைவிட்டுயிர் போவதன் முன்னமே, காட்டுப்பள்ளியுளான் கழல்சேர்மினே" என்றும், "ஐயனேயரனேயென் றரற்றினு, லுய்யலா முலகத்தவர் பேணுவர், செய்யபாத மிரண்டு நினையவே, வையமாளவும் வைப்பர்மாற் பேறரே" என்றும் அருளிச்செய்த திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாக்குக்கள் வலியுறுத்தும்.

ஒன்றதா யென்ற செய்யுள்முதலிதுவரையில் நான்காம் அதிகரணத்தின் ஒழிபு கூறியவாறும். (கூசு)

**நான்காம் அதிகரணம் முடிந்தது:**

**இரண்டாஞ்சூத்திரம் முடிந்தது.**

**ஆகத் திருவிருத்தம் கஅகூ.**

---

# மூன்றாஞ் சூத்திரம்.

## பசு உண்மை.

குடத்தைக்குயவன் செய்தலினாலேயே கொள்வோன் உண்டென்று கருதப்படுமாறு போலப் பிரபஞ்சத்தை இறைவன் தோற்றுவித்தலினாலேயே அப்பிரபஞ்சத்தில் பற்றுச்செய்து நிற்கும் உயிர் உண்டென்று பெறப்படுமென்பதை இச்சூத்திரத்திற் கூறவேண்டுவதாயினும், இயைபு பற்றி மேலைச் சூத்திரத்தில் அலகிலாவுயிர்களின் பொருட்டு என்றார். என்றதனால், அவ்வுயிரென்பதுதான் உண்டோ, இல்லையோ? இல்லையாயின், உயிர்களின் பொருட்டு என்றது பொருந்தாது, உண்டாயின் அது யாது? எங்கிருக்கும்? என்னும் ஆசங்கைகள் நிகழுமன்றே. அவ்வாசங்கை நீக்குதற் பொருட்டு மூன்றாஞ்சூத்திரம் எழுந்தது. இயைபு—கன்மத்தை ஊட்டுதல்.

சீதமின்மையால் பனியின்மை காணப்படுதல் போல, உடலியக்கமின்மையால் உயிரின்மை காணப்படுமன்றே. இவ்வெதிர்மறை கொண்டு உடன்பாட்டு முகத்தால் உடலியக்க முண்மையால் உயிருண்டென்று நாட்டுகின்ற அநுபலத்தி எதுவென்னும் அநுமானப் பிரமாணம் இச்சூத்திரத்தாற் கூறுகின்றார்.

சூனியம், தூலவுடம்பு, ஐம்பொறி, சூக்குமவுடம்பு, பிராணவாயு, பிரமம், சமுதாயம் என்னும் ஏழும் உயிரன்று என்றும் இவற்றின் வேறாய், காணப்படும் உடலின்கண் உயிர் உண்டென்றுங் கூறுகின்றது.

உயிரெனப் படுவ திந்த வுடலின்வே றுளதா யுற்றுச்
செயிருறு மிச்சா ஞானச் செய்திக ளுடைய தாகிப்
பயில்வுறு மின்பத் துன்பப் பலன்களு நுகரும் பார்க்கிற்
றுயிலொடு மஞ்ச வத்தைப் படுமுண்மை துரியா தீதம்.

(**கோ - பொ.**) உளதாய் உற்றுச் செயிருறும், இச்சாஞானச் செய்திகளுடையதாகி, துயிலொடும் பயில்வுறும், இன்பத்துன்பப் பலன்களும் பார்க்கில்நுகரும், அஞ்சு அவத்தைப்படும், துரியாதீதம் உண்மை, உயிரெனப்படுவது இந்த வுடலின் வேறு.

(**பொ - ரை.**) உயிர் அறியப்படாமையால் சூனியம் என்பர். சூனியம் என்றுணர்வது வேறுண்டாதலின், அவ்வாறுணர்

வதுவே உயிரெனமறுக்க, உயிர் உடம்பே என்பர். உடம்பினை யானெனதென்று அபிமானித்து நிற்பதொன்றுண்டாதலின், அவ்வாறு நிற்பதே உயிரெனமறுக்க, ஐம்பொறியே உயிரென்பர். அவ்வைம்பொறிகட்கு அறிதல் மாத்திரையேயன்றி இச்சையுந் தொழிலுமில்லாமையின், அம்மூன்றனையு முடையதாய் அவ் வைம்பொறியின் வேறாயுள்ளதே உயிரெனமறுக்க, சூக்கும உடம்பே உயிரென்பர். அவ்வுடம்பு என்றும் ஒரு தன்மைத் தாய் அகத்தேயிருந்துஞ் சொப்பனத்தில் ஒன்றைத் தெளிவாய் அறியவும் சாக்கிரத்தில் அதனையே மயங்கியறியவுங் காண்ட லால், அச்சூக்கும தேகத்தின் வேறாகநின்றும் அதனோடு கூடி அகத்துச் சென்றவிடத்துத் தெளிவாயறிவதும் தூலதேகத் தோடு கூடிப் புறத்துச்சென்றவிடத்து மயங்கி யறிவதுமாகிய தொன்றுண்டாதலின் அவ்வாறறிவதே உயிரெனமறுக்க, பிராண வாயுவே உயிரென்பர். சுழுத்தியில் பிராணவாயு இயங்கிக் கொண்டிருக்கவும் இன்பத்துன்பம் அநுபவிக்கப்படாமையின் அப்பிராணவாயுவின் வேறாய் இன்பத்துன்பம் அநுபவிப்பதொன் றுண்டாதலின் அதுவே உயிரெனமறுக்க, பிரமமே உயிரென்பர். அது அறிந்தபடியே அறிவதன்றி மயங்கி ஐந்தவத்தைப் படா மையின், அவ்வாறு மயங்கி ஐந்தவத்தைப் படுவதொன்றுண்டா தலின் அதுவே உயிரெனமறுக்க, அனைத்துங்கூடிய சமுதாயமே உயிரென்பர். அவ்வனைத்திற்குந் தனித்தனி பெயரிருப்பதினா லும், அவற்றிற்கு உயிரெனப் பெயரின்மையாலும், அவ்வனைத் தும் நீங்கிய அதீதத்தின் கண் நிற்பதொன்றுண்டாகலானும் அதுவே உயிரெனமறுக்கவும், அவ்வுயிரெவ்விடத்துளதென்று வினவ, காணப்படும் உடலின் கண் இவற்றின் வேறாய் உள தாம். (எ-று)

உயிர்களை உயிரெனப்படுவது என்றது சாதியொருமை. துயில் என்பது இவ்விடத்துக் கனவைக் குறித்தது. பயில்வுறும் என்றவிடத்து இரண்டாவது வேற்றுமையுருபு விரித்துப் பயில்வையுறும் என உரைக்க. பயில்வு என்பது பயின்றதனைக் குறித்தலின் ஆகுபெயர். பார்க்கில் என்பது விழித்தவிடத் தென்பதாம். * "ஐயுங்கண்ணுமல்லாப் பொருள்

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமைமயங்கியல், சூ—உஉ.

வயின்—மெய்யுருபு தொகாதுவிறுதியான'' என்பதோத்தாகலின், ஏழா வது கண் உருபு உடலின் என்றவிடத்துத் தொக்குநின்றது. கருவிக ளனைத்தும் நீங்கிய துரியாதீதத்திலுயிர் உண்டெனபது, அந்நிலையினின் றும் துரியத்துக்குவந்து அதனினின்றும் சுழுத்திக்குவந்து சுகமனுப வித்ததை விழித்தபின்னர்ச் சுகமாகத்துயின்றே னென்று உணர்வு நிகழ் தல்பற்றித் தெளியப்படும்.

உளதாய் என்றதனால் உயிர் சூனியமெனவும், உற்றுச் செயிருறும் என்றதனால் உடம்பே உயிர் எனவும், இச்சா ஞானச் செய்திகளுடைய தாகி யென்றதனால் ஐம்பொறியே உயிரெனவும், துயிலொடும் பயில்வுறு மென்றதனால் சூக்குமவுடம்பே உயிரெனவும், இன்பத்துன்பப் பலன் களும் பார்க்கில் நுகருமென்றதனால் பிராணவாயுவே உயிரெனவும், அநு சவத்தைப் படுமென்றதனால் பிரமமே உயிரெனவும், துரியாதீதம் உண் மையென்றதனால் சமுதாயமே உயிரெனவும் கொள்வோர் மறுக்கப்பட்டன ராதலின் குறிப்பேது எழும் விரிந்தவாறுகாண்க. அவ்வாறு விரிந்ததால் சிவஞானபோதம் மூன்றாஞ் சூத்திரம்போல, இச்செய்யுளும் ஏழு கூற்றை யுடையது. அவற்றுள் சூனியம் உயிர் என்னும் முதற்கூறு உளதாய் என்றதனால் இம்முதற் செய்யுளிற் சாதிக்கப்பட்டது. அதன்கண் வேறு ஆசங்கையின்மையின் விரித்திலர். ஏனைய ஆறு கூற்றுள் இரண்டாவதும், மூன்றாவதும், ஐந்தாவதும் இச்சூத்திரத்துள் கூறுகின்றார். நான்காவதும், ஆறாவதும், ஏழாவதுமாகிய கூற்றுக்கள் நான்காஞ் சூத்திரத்துள் கூறப் படும்.

அவ்வாறாயின், சூனிய முதலியவற்றுள் உடம்பு, ஐம்பொறி, பிரா ணவாயு என்னும் மூன்றும் நீங்கிய ஏனையவெல்லாம் அறியுமென்பது காட்சியளவைக் கெய்தாமையின் உயிர் அவற்றின் வேறெனக் கொள்ளி னும், உடம்பாவது, உடம்பின்கணுளவாகிய ஐம்பொறிகளாவது, அவ் வைம்பொறிகளை ஊக்கி இயங்குவதாகிய பிராணவாயுவாவது அறியும் என் பது காட்சியளவையான் அறியக்கிடத்தலின், உயிர் அம்மூன்றனுளொன் றாகும் என்பதே பொருத்தம் என்பாரை நோக்கி அம்மூன்றனையும் வேறாக எடுத்தோதி மறுததற்கெழுந்தன வருஞ் செய்யுட்கள். (க.)

இரண்டாங்கூறாகிய உடம்பு உயிரன்றென்பதைப் பிணமாய்க் கிடத்தலினும், உறக்கத்தினும் உணரப்படாமையின் வைத்து விளக்குகின்றது.

உடலின்வே றுயிரே னிந்த வுடலன்றோ வுணர்வ தென்னி
னுடல்சவ மான போது முடலினுக் குணர்வுண் டோதா
னுடலினின் வாயுப் போநு லுணர்ச்சியின் றுடலுக் கென்னி
னுடலினின் வாயுப் போகா துறக்கத்து முணர்வ தின்றே.

(கோ - ௫.) உடலுக்கு உணர்ச்சி இன்றெனின்.

(பொ - ரை.) எழுவகை ஏதுக்களாலும் உடம்பு முதலிய வற்றின் வேறாய் உயிருண்டெனச் சாதித்த பின்னரும், அறியுந் தன்மை உடம்பிற் காணப்படுதலால், அவ்வுடம்பே உயிராம்; அதனின் வேறாய் உயிருண்டென்றல் பொருந்தாதென்பர். அவ் வாறு உடம்பே அறியும் எனின், உடம்பு பிணமாய்க் கிடந்த விடத்தும் உணர்வு நிகழவேண்டும். நிகழப் பெறுமையினால் உடம்பு உயிரென்றல் எவ்வாறு பொருந்தும் என மறுத்தவிடத் துப் பிணமாய்க் கிடந்தபொழுது பிராணவாயு நீங்கினமையால் உணர்வு நிகழவில்லை; பிராணவாயு நீங்காதிருப்பின் உணர்வு நிக ழும்; ஆதலால், உடம்பின் வேறாய் உயிருண்டென்றல் பொருந் தாதெனின், அவ்வாறாயின் சுழுத்தியில் பிராணவாயும் உடம்பும் இருத்தலால் உணர்வு நிகழவேண்டும். அவ்விடத்து உணர்வு நிகழாமையின் உடம்பு அறியுமென்றதும், அதுவே உயிரென்ற தும் எவ்வாறு பொருந்தும். (எ - று.)

போகாதுறக்கத்து என்றவிடத்து போகாத என்னும் பெயரெச்சத்து அகரம் விகாரத்தால் தொக்கு நின்றது. (உ.)

மூன்றாஞ் சூறுகிய ஐம்பொறிகள் உயிரன்றென்பதை, ஒவ் வொன்றையே அறிதலினும், ஒன்றையொன்றறியாமையினும், தாமே அறியாமையினும் வைத்து விளக்குகின்றது.

அறிவதைம் பொறியே யென்னி னுறக்கத்தி னறியா வாகு
மறிவது மொன்றொன் றாக வொன்றொன்று யறியு மென்னி
னறிவுகளொன்றையொன் றங்கறிந்திடாவைந்தையுங்கொண்
டறிவதொன் றுண்ட தான்மா வைம்பொறி யறிந்தி டாவே.

(கோ - ௬.) ஐம்பொறியே அறிவது உறக்கத்தின் அறியாவாகும் என்னின் எனவும், அறிவுகள் ஒன்றை அங்கு ஒன்று அறிந்திடா எனவும் கூட்டுக.

(போ - ரை.) மேல் அறியுந்தன்மை உடம்புக்கின்மையால் அது உயிரன்றெனச் சாதித்தவிடத்து ஐம்பொறிகளே அறியுந் தன்மையுடையனவாம். அப்பொறிகள் உடம்பு பிணமாம்போது கெட்டொழியும். நனவின்கண் அவ்வைம்பொறிகளே உடம்பி னின்று அறிந்தும், உறக்கத்தின்கண் அறியாதும் நிற்குமாதலின் அவ்வைம்பொறியே உயிரெனின், அவ்வாருயின் நனவின்கண் ணும் அவ்விந்திரியங்கள் ஒவ்வொரு பொருளாக அறிவதன்றி எல்லாப்பொருளையும் ஒருசேர அரியமாட்டாது. ஒன்ருென்ருக அறிவதுவே அவற்றின் இயல்பாமென்னின், அவ்வாறறி வதிலும் ஒரு இந்திரியம் ஒரு விடயத்தை அறியும்போது மற்ருரிந்திரியம் மற்ருெரு விடயத்தை அறியாது. அவ்வா றறிதலினும், ஒரு இந்திரியம் தனக்குரிய ஒரு விடயத்தை அறி யுமேயன்றிப் பிற இந்திரியங்களாலறியப்படும் விடயங்களை அறி யாது. அதாவது, கண் ஒவ்வொரு உருவப்பொருளாய் அறி யுமேயன்றி எல்லா உருவப்பொருளையும் அறியமாட்டாது. அக் கண் உருவத்தை அறியும்போது செவி ஓசையைக் கேளாது. கண் உருவத்தை அறியுமேயன்றி ஒலியை அறியாது. இவ் வாறே பிறவுங் காண்க. ஆதலால், அவ்வைந்து இந்திரியங்களையுங் கொண்டு ஐந்து விடயங்களையும் அறியும் பொருளொன்றுண்டு. அதுவே உயிராவதன்றி ஐம்பொறிகள் தாமே அறியாமையால் உயிராகமாட்டாவாம். (எ - று.)

அறிவதைம்பொறியே என்றவிடத்து அறிவது என்பது அறியும் என னுந் தொழில்மேல் நின்றது.

அறிவதும் என்றவிடத்து உம்மை சிறப்பு. அறிவுகள் என்பது அறி யும் இந்திரியங்களைக் குறித்தலின் ஆகுபெயர். அது ஆன்மா என்ற விடத்து அஃது ஆன்மா என ஆய்தம் தொக்கு நின்றது.

இச்செய்யுளுக்கு இவ்வாறின்றி, "அறிவதைம் பொறியே யென்னி னுறக்கத்தினறியாவாகு மறிவதுமொன் ருென்ருக வொன்ருென்ரு யறியு மென்னின்" என்பதற்கு, என்னுடம்பகத்து நின்று அறிவது ஐம்பொறி ளேயாம். அவை உறக்கத்தினறியாத அழகும், நனவின்கண் ஒவ்வொரு விடயமாக அறிவதும் இருவர் மதத்தினும் ஒக்கும். அதுபற்றி என்னை

ஆசங்கித்தல் கூடாமையின், அவ்வைம் பொறிகளே ஒருதலையாக அறியும் வேறுமோருயிர் கோடல் மிகையாமென்பையாயின் என்றுரைத்தலு மொன்று.

இப்பொருட்கு அறியாவாகும் என்றவிடத்து வாகு என்பது அழகைக் குறித்தது. உறக்கத்தினறியாமை இழுக்கன்றாதலின் அழகெனப்பட்டது. ஏனைய இரண்டடியு மறுப்பாதலின் அவற்றின் பொருளில் வேற்றுமையின்று. (ரு.)

ஐந்தாங் கூறாகிய பிராணவாயு உயிரன்றென்பதை அப்பிராணவாயு நிற்கும்போதும் கருவிகள் நில்லாமையில் வைத்து விளக்குகின்றது.

**அறிந்திடும் பிராண வாயு வடங்குதல் விடுதல் செய்தா**
**லறிந்திடா துடலு றக்கத் தறிவின்மை கரண மின்மை**
**யறிந்திடு முதலி யாகி னதுநிற்கக் கரணம் போகா**
**வறிந்திடும் பிராணன் றன்னை யடக்கியும் விட்டு மான்மா.**

(கோ-டு.) பிராணவாயு அடங்குதல் விடுதல் செய்தால் அறிந்திடும். உடல் உறக்கத்துக் கரணம் இன்மை அறிவின்மை அறிநதிடாது. அறிந்திடும் முதலியாகின் அது நிற்கக் கரணம் போகா. அடக்கியும் விட்டும் பிராணன்றன்னை அறிந்திடும் ஆன்மா.

(பொ - ரை.) ஐம்பொறிகள் உயிரல்லவெனச் சாதித்துவிடத்துப் பிராணவாயு இயங்குதலினாலேயே அறிவு நிகழக் காண்டலின் அப்பிராணவாயுவே அவ்வைம்பொறிகளையுங் கொண்டு அறிவதாகிய உயிரென்றல் பொருந்தும். உறக்கத்தில் உடம்பின்கண் அப்பிராணவாயு இயங்கினும் ஐம்பொறிகளாகிய கருவியின்மையால் அறிவின்மையாய் அறியாதாயிற்று; ஆதலின் பிராணவாயுவின் வேறாய் உயிருண்டென்றல் பொருந்தாதெனின், பிராண வாயுவே அறியுந் தன்மையுடைய கருத்தாவாயின் உறக்கத்தில் அப்பிராணவாயு இருக்கவும் கருவிகள் போதல் கூடாவாம. ஆதலால், கருவிகளை அடக்கியும் விட்டும் பிராணவாயுவையுங் கொண்டு அறிவதாகிய உயிர் வேறு உண்டென்று கூற, சுழுத்தியில் உயிரிருக்கவுங் கருவிகள், ஒடுங்கி இருக்குமென்று

கூறுவதுபோல,பிராணவாயுவே கருவிகளை ஒடுக்கியும்விட்டும் அறியுமென்றல் ஏன் கூடாதெனின், பிராணவாயு சுழுத்தியிலும் நனவிலும் ஒரு தன்மையான போக்கு வரவுடையதாய் இயங்கக் காண்கின்றும். அவ்வாறு அறிவும் ஒரு தன்மையாய் இன்றி நனவில் அறிந்தும் சுழுத்தியில் அறியாதும் நிற்றலாகிய வேறுபாடுடையதாய்க் காணப்படுதலால், பிராணவாயுவின் வேறாய் அவ்வேறுபாடுடையது வேறொன்றுண்டென்பது அறியப்படும். அதுவே இந்திரியங்களை அடக்கியும் விட்டும் பிராணவாயுவைத் துணையாகக் கொண்டும் அறிவதாகிய உயிரெனப்படும். (எ - று.)

"உடலின் வேறுயிரேன்" என்ற செய்யுள் முதல் இவை மூன்று செய்யுளானும் முறையே உடல், ஐம்பொறி, பிராணவாயு என்னும் மூன்றனையுங் காட்சியளவையா னறியக்கிடந்த விசேடம்பற்றி வேறெடுத்து ஆசங்கித்துப் பரிகரித்து இந்தவுடலின் உயிரெனப்படுவது வேறு என்பது சாதிக்கப்பட்டது. (௪.)

**மூன்றஞ் சூத்திரம் முடிந்தது.**

**ஆகத் திருவிருத்தம் ௧௬௦.**

---

# இலக்கணவியல்.

## நான்காஞ் சூத்திரம்.

### "பசு இலக்கணம்."

மேல் மூன்று சூத்திரத்தாலும் பதி, பசு, பாசமென்னும் முப்பொருள் உண்டென்பதற்குப் பிரமாணங் கூறவே, அம் முப்பொருள்களின் இலக்கணம் யாதோவென்னும் வினு நிகழுமன்றே? அந்நிகழ்ச்சி பற்றிப் பசு இலக்கணம், பாச இலக்கணம், பதி இலக்கணம் என்னும் மூன்றனையும் முறையே மூன்று சூத்திரங்களாற் கூறத்தொடங்கி, எதிர் நிரனிறையாக முதற்கண் மேல் அடுத்து நின்ற பசுவினது இலக்கணம் இச் சூத்திரத்தாற் கூறுகின்றார்.

அந்தக்கரணங்கள் ஆன்மா அன்றெனவும் ஆணவமலத்தின் சேர்க்கையால் ஆன்மா அந்தக்கரணங்களைக் கூடி ஐந்தவத்தைப் படுமெனவும் கூறுகின்றது.

**உணர்வன கரண மென்னி லொன்றையொன் றுணரா வெவ்வே
றணைதருஞ் செயல்க ணன்கு மறிந்தவை யடக்கி யாக்கிப்
புணருமுட் கருவி யாக்கிப் புறக்கரு வியினும் போக்கி
யிணைதரு மிவற்றின் வேறா யானென தென்ப தான்மா. ||4||**

(**கொ - டு.**) கரணம் உணர்வன என்னில், ஒன்றைஒன்று உணரா. ஆன்மா இவற்றின் வேறாய் யான் எனது என்பது இணைதரும். நான்கு செயல்களும் அறிந்து அவை அடக்கிப் புணரும் உட்கருவியாக்கி, ஆக்கிப் புறக்கருவியினும் போக்கி வெவ்வேறு அணைதரும்.

(போ - ரை) இனி, மன முதலிய அந்தக்கரணமே அறியுமாதலின் அவையே உயிரெனின், இவ்வந்தக்கரணமும் ஐம்பொறி போல் ஒன்றனையொன் றுணராவாம். அதாவது, மனம் சங்கற்பிக்குமேயன்றிச் சிந்தித்தல், நிச்சயித்தல், அகங்கரித்தல்களைச் செய்யாது. இவ்வாறே புத்தி, சித்தம், அகங்காரம் மூன்றி

னிடத்துங் கண்டுகொள்க. ஆதலால், அந்தக்கரணம் நான்கினை யுங் கொண்டறியும் உயிர் அவற்றின் வேறாம். வேறாகியும் யான் எனதென்னும் செருக்குறுதற் கேதுவாகிய ஆணவமலம் உயிரோடு அநாதியே பொருந்தி நிற்றலால், உயிருக்குத் தனக்கென அறிவின்றி இவ்வந்தக்கரணங்களாலாய நான்கு தொழிலையும் இவற்றோடு கூடி யறியும். அவ்வாறறிகின்ற ஆன்மா சொப்பனாவத்தையில் இவ்வந்தக் கரணங்களை யடக்கி உட்கருவிகளாக்கி அகத்து நிகழ்வதை யறியும். சாக்கிராவத்தையில் இவ்வந்தக் கரணங்களைப் புறக்கருவிகளோடு சேர்த்துப் புறக்கருவிகளாக்கிப் புறத்து நிகழ்வதை யறியும். இவ்வாறு அகத்தும் புறத்துஞ் சேரலால் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் ஐந்தவத்தைகளை ஆன்மாப் பொருந்தும். (எ - று.)

எனவே, ஆணவமலத்திற் கட்டுண்டு ஐந்தவத்தையுறுதல் ஆன்மாவிற்கு இலக்கணமென்றவாறாயிற்று. இது தடத்த இலக்கணமெனப் படும் பொதுவியல்பு.

ஒன்றையொன் றுணரா வாகலான் இவற்றின் வேறாயிருந்தும், ஆணவமலத்தோடு கூடுதலால் இவ்வந்தக்கரணங்களோடு கூடி யறிந்து, அடக்கியாக்கி ஆக்கிப்போக்கி வெவ்வேறணைதரும் என வினை முடிபு செய்க. அடக்குதல்—சொப்பனாவத்தையிற் செலுத்துதல். ஆக்குதல்—சாக்கிராவத்தையிற் செலுத்துதல். சொப்பனம் கூறவே, இனம்பற்றி சுழுத்தி, துரியம், துரியாதீதாவத்தைகளுங் கொள்ளப்படும். அடக்கி உட்கருவியாக்கி, ஆக்கி புறக்கருவியினும் போக்கி என நிரனிறைப் பொருளாகக் கொள்க. இவற்றின் வேறாய் என்றவிடத்து வேறாயும் எனச் சிறப்பும்மை விரித்துரைக்க. யானெனதென்பது ஆணவமலத்தின் காரியம். ஆணவமலம் காரணம். காரணத்தைக் காரியமாக வுபசரித்தார். என்பது என்னும் பெயருக்கு அடையாகிய யான் எனது, மலத்தினுண்மை சாதித்தற்குக் குறிப்பேதுவாய் நின்றது. யான் எனது என்றலைக்கொண்டு யானெனதென்பதாகிய மலம் உண்டென்றறியப்படும் என்பதாம்.

இச்செய்யுள் சிவஞானபோதம் நான்காஞ் சூத்திரம்போல முக்கூறதாகும். அவற்றுள்,

முதற்கூறு:—உணர்வன கரணமென்னின் ஒன்றையொன் றுணரா வாதலான் ஆன்மா இவற்றின் வேறாம்.

இரண்டாங் கூறு:—யானெனதென்ப திணைதரும்.

மூன்ருங் கூறு:—செயல்கணுன்கு மறிந்தவையடக்கி யாக்கிப் புணரு முட் கருவியாக்கிப் புறக்கருவியினும் போக்கி வெவ்வேறணதரும். (க.)

---

# முதலதிகரணம்.

---

## "உணர்வன கரணமென்னின் ஒன்றை ஒன்று உணரா வாகலான் ஆன்மா இவற்றின் வேரும்" என்பது.

அந்தக் கரணங்கள் கருவி எனவும், ஆன்மா இவற்றின் வேறெனவும், இவ்வான்மாவை இவ்வாறு அறியும் ஞானம் பசு ஞானமெனவும், சிவஞானம் அதனினும் வேறு எனவும் கூறுகின்றது.

**கருவியா மனமும் புத்தி யகங்கார ஞ் சித்த நான்கு**
**மருவியான் மாவே யென்ன வருந்தீப மெனத்தெ ரிந்தங்**
**கொருவியான்மாவி னுண்மை யுணர்ந்தவர் தமையுணர்ந்தோர்**
**தருமிது பசுஞா னம்பின் சிவஞானந் தனக்கு மேலாம்.**

(**கோ-டு.**) மனமும், புத்தி, அகங்காரஞ், சித்த நான்கும் கருவியா மருவி எனவும், பின் பசு ஞானம் இது தரும் சிவஞானந் தனக்கு மேலாம் எனவுங் கூட்டுக.

(**பொ-ரை.**) மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்கின்ற நான்கும் ஒரு விடயத்தை அறிதற்குக் கருவியாக ஆன்மாவோடு ஒற்றித்து நிற்கும். நிற்குங்கால் அக் கருவியே கருத்தாவென்னும்படி விளங்கும். அவற்றைக் கருவியாகக்கொண்டு விடயங்களை ஆன்மா அறிவது எதுபோலவெனின், விளக்கைக் கருவியாகக்கொண்டு பொருளை யறியும் கண் போலாம். ஆதலால், இவ்வந்தக்கரணங்கள் உயிர்க்குக் கருவியாய் வேறு நிற்பனவென்றறிந்து நீங்கி நின்று இக்கருவியைக் கொண்டறியும் கருத்தாவினுண்மை யாதென்ருராய்ந்தோரே தாமாகிய ஆன்ம சொரூ

பத்தை இனிதுணர்ந்தோராவர். அவ்வாறு அறியும் அறிவும் பசு ஞானமேயாகும். ஆகலான் அப்பசுஞானம் வந்த பின்பு, அந்த ஞானம் நம்மிடத்தில் முன்னிகழாமையால் நாமாக அறிந்தோமென்றல் பொருந்தாது. அறிவிக்கும் பொருள் வேறிருந்து இப்பருவத்தில் அவ்வறிவினைத் தந்திருக்க வேண்டுமென உணர்ந்து அவ்வறிவினைத் தரும் பொருள் யாதெனத் தேறின், அங்ஙனந் தேறுவார்க்கு அப் பசு ஞானத்தின் மேலாகிய சிவஞானம் விளங்கும். (எ-று)

இச் செய்யுளில் ஆன்மாவென்றது, தமை யுணர்ந்தோர் என அடுத்து வருதலால் தம்மின் வேறன்று; தானாகிய கருத்தா என்னும் பொருள் குறித்து நின்றது.

இச் செய்யுளால் அந்தக் கரணங்கள் கருத்தாவல்ல என்பது, தம்மையும் தலைவனையும் அறியும் முறையில் வைத்துக் கூறப்பட்டது. அந்தக் கரணங்கள் கருவி என அறிதல் தம்மை யறியும் முறை. அங்ஙனம் அறியும் அறிவு பசு ஞானம் என அறிதல் தலைவனை அறியும் முறை யென அறிக. (உ.)

அந்தக் கரணங்களை உடனின்று செலுத்தும் அக்கரங்கள் இவை எனவும், அவ்வக்கரங்களைச் சேர்த்து நோக்கிற் பிரணவமாமெனவும், இப்பிரணவத்தின் உண்மை நால்வகை வாக்குக்களை உற்றுநோக்க வல்லார்க்கு விளங்குமெனவும் கூறுகின்றது.

**அவ்வுடனுவ்வு மவ்வு மனம்புத்தி யகங்காரங்கள்**
**செவ்விய விந்து நாதஞ் சித்தமோ டுள்ள மாகு**
**மொவ்வெனு மெழுத்தாமைந்துமுணர்வுதித்தொடுங்குமாறும்**
**பவ்வமுந் திரையும்போலும் பார்க்கிலிப் பண்புந்தோன்றும்.**

(கோ-டு.) அகங்காரம் புத்தி மனம் சித்தமோடு உள்ளங்கள் அவ்வுடன் உவ்வும் மவ்வும் செவ்விய விந்து நாதம் ஆகும்.

(பொ-ரை.) அகங்காரம், புத்தி, மனம், சித்தம், உள்ளமென்கின்ற ஐந்துஞ் சடமாதலால், அவை கருவியாக நின்று எவ்வாறு அறிதலைச் செய்யுமெனின், அக் கருவிகளுள், அகங்காரத்திற்கு அகாரமும், புத்திக்கு உகாரமும், மனத்திற்கு மகார

மும், சித்தத்திற்கு விந்துவும், உள்ளத்திற்கு நாதமும் என்கின்ற எழுத்துக்கள் உடனின்று செலுத்துவதால் அறிதலைச் செய்யும். அவ் வெழுத்துக்கள் ஐந்தும் பிரிப்பின்றி நோக்குங்கால் பிரணவ ரூபமாம். இவ்வைந்தெழுத்தானும் உயிரின் கண் உணர்வு மாறி மாறித் தோன்று முறை எதுபோலவெனின், கடலின் கண்ணே அலை புதிது புதிதாகத் தோன்றியும், ஒடுங்கியும் வருமாறு போலாம். இவ்வைந்தெழுத்தானும் கருவிகள் தொழிற்படுவதான விகற்பத்தோடு கூடிய இயல்பு, நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகளைப் பற்றுக் கோடாகச் சார்ந்து தோன்றும் சூக்குமை முதலிய நால்வகை வாக்குக்களை உற்று நோக்குவார்க்கு இனிது விளங்கும். (எ-று.)

எழுத்துக்களுங் கருவியும் உடனிற்கும் ஒற்றுமைபற்றி எழுத்துக்களை கருவிகளாக உபசரித்தார். அந்தக்கரணங்களைப்பற்றி ஆராயும் இவ்விடத்தில் அந்தக் கரணங்களோடு ஒத்திருத்தல்பற்றிப் புருட தத்துவமும், அதனைச் செலுத்தும் அக்கரமும் உடன் கூறப்பட்டன. உள்ளம் என்பது புருடதத்துவமாந்தன்மை. புருட தத்துவத்தைச் செலுத்துதலாவது, புருட தத்துவமாந் தன்மையை நிகழ்வித்தல். ‡ "அகார வுகார மகங்காரம் புத்தி—மகாரம் மனம்" என முதனூலுட்கூறுதலானும், துகளறு போதத்தும் அவ்வாறே கூறுதலானும், ஈண்டு அவ்வுட னுவ்வு மவ்வு மனம் புத்தி யகங்காரங்கள் என்றது எதிர்நிரனிறையெனக் கொள்க. பிரணவமாகலின் உள்ளவாறே வெளிப்படக் கூறாது, ஒவ்வெனக் கடைக் குறைத்துக் குறுக்கல் விகாரமாக்கிச் கூறினார். ஐந்தும் என்றவிடத்து ஐந்தானும் என்னும் பொருள்பட ஆன் உருபு தொக்கு நின்றது. (ந.)

அந்தக் கரணங்களைச் செலுத்தும் அக்கரங்களின் அதிதெய்வங்களிவை எனவும், இப்பதினைந்துங் கூடியவிடத்து ஆன்மா அறிதலைச் செய்யுமெனவும், யோகப்பயிற்சி யுடையார்க்கு இப் பதினைந்தின் உண்மை விளங்கும் எனவும் கூறுகின்றது.

அயனரி யரனு மீசர் சதாசிவ மதிதெய் வங்க
ளுயவரு மவ்வோ டுவ்வு மவ்விந்து நாதங்கட்குப்
பயனுறு மஞ்சி லான்மாப் பரவிடி லசித்தாம் பார்க்கிற்
சயமுறு வளியி ரண்டுந் தவிர்த்துறிற் றானுந் தோன்றும். 174

‡ சிவஞானபோதம், நான்காஞ் சூத்திரம் சே--க.

(**கோ-டு.**) அவ்வோடு உவ்வும் மவ்விந்து நாதங்கட்கு அயன், அரி, அரனும், ஈசர், சதாசிவம் அதி தெய்வங்கள் உயவரும். அஞ்சில் ஆன்மா பரவிடில் பார்க்கின் பயன் உறும். (பரவாவிடில்) அசித்தாம்.

(**போ-ரை.**) அகார, உகார, மகார, விந்து, நாதங்களாகிய அவ்வெழுத்துக்களும் சடமாதலின், அவ்வெழுத்துக்களை முறையே பிரமாவும், விட்டுணுவும், உருத்திரனும், மகேசரும், சதாசிவரும் ஆகிய ஐவரும் அதி தெய்வங்களாய் நின்று செலுத்துவர். ஆகலான், இவ்வாறு கரணமும், அக்கரமும், அதி தெய்வமும் என்னும் இம் முத்திறத்துப் பதினைந்தோடும் ஆன்மாப் பொருந்திய விடத்துப் பார்க்குங்கால் அறிதற்றொழிலைச் செய்யும். இப் பதினைந்தோடும் பொருந்தாதவிடத்துச் சடம்போல அறிவின்றிக் கிடக்கும். வலி பொருந்திய பிராணன் அபானன் என்னும் இருவகை வாயுவையும் அடக்கிச் செய்யும் யோகிகளுக்கு அந்த யோகப் பயிற்சியில் இவ்வியல்பு இனிது விளங்கும். ()

அதி தெய்வம் அதிட்டித்து நிற்குந் தெய்வம். அதாவது, அக்கரங்களை வாயிலாகக் கொண்டு நிற்குந் தெய்வம்.

அசித்தோ டொக்கும் என்று கூறவேண்டுவதை அசித்தாம் என்றுபசரித்தார். பரவாவிடில் என்பதைச் சொல்லெச்சமாக வருவித்துப் பரவாவிடில் அசித்தாம் என்றுரைத்துக்கொள்க.

மேலைச் செய்யுளானும், இச் செய்யுளானும் அந்தக்கரணங்கள் அக்கரங்களாலும் அதி தெய்வங்களாலும் அதிட்டிக்கப்பட்டுக் கருவியாகும் என்னும் முறைமையும், அங்ஙனங் கருவியாதலை யறிதற்குபாயமுங் கூறப்பட்டன.

உபாயம்—யோகப் பயிற்சி.

அவ்வாறாயின், கரணம், அக்கரம், அதி தெய்வம் என்னும் இப் பதினைந்தன் கூட்டமே அறிவுக்கு முதலாதலையும், இடையே உயிரென ஒன்று கோடலெற்றுக் கென்பாரை நோக்கி எழுந்தது வருஞ்செய்யுள்.(ச)

அப்பதினைந்தும் சுட்டியறியப்படுதலின் அவை ஆன்மாவின் வேறெனக் கூறுகின்றது.

**ஆன்மாவின் வடிவுதானே யநேகார்த்தக் கூட்டமென்னிற்**
**பார்ப்பார்கட் கான்மா வின்றாய்ப் பலபொருளுண்மையாகுஞ்**
**சேர்ப்பாய பலவே யுண்மை யென்றிடிற் சென்றிவற்றை**
**யோர்ப்பான்வே றுணர் வோர்க்கெல்லா முணர்பொருள் வேறதாமே.**

[illegible]

(கோ-ே.) அநேகார்த்தக்கூட்டம் ஆன்மாவின் வடிவுதானே எனின், பார்ப்பார்கட்கு இன்றாய்ப் பல பொருளுண்மையாகும். சேர்ப்பாய பலவே உண்மை ஆன்மா என்றிடில், சென்றிவற்றை ஓர்ப்பான் வேறு உணர் பொருள் வேறதாமே உணர்வோர்க்கெல்லாம்.

(பொ-ரை.) கரணம், அக்கரம், அதிதெய்வங்களாகிய இம் முத்திறத்தோடும் கூடியவிடத்தே ஆன்மா அறிதலைச் செய்யும் என்றதனால், அப் பலபொருட் கூட்டமே ஆன்ம சொரூபம் என்று சொல்லில், அதனை ஆராயுங்கால், கூட்டம் என்பதற்கு ஒரு பொருளின்றாய்ப் பல பொருளே உண்டென விளங்கும்; அதுபோல, ஆன்மா என்பது தனித்த ஒரு பொருளன்றாய்ப் பலபொருள் எனமுடியும். ஆதலால், அது பொருந்தாது. கூடுவனவாகிய அப்பதினைந்துமே உண்மையான ஆன்மாவெனின், அப் பதினைந்தும் சுட்டியறியப்படுவதனால் அறியும் ஆன்மா வேறு. அப்பதினைந்து வேறு. உணர்வோர்க்கெல்லாம் அறிவதும் அறியப்படுவது மொன்றாகாவென்னும் இவ்வுண்மை ஒப்பமுடிந்தது. (எ-று.)

இச்செய்யுளால் அப்பதினைந்தும் உயிரின் வேறாதல் வலியுறுத்தப்பட்டது.

மேல் மூன்றாஞ் சூத்திரத்தில் சமுதாயமே ஆன்மா என்பாரை மறுத்தற்குக் கூறிய "உண்மை துரியாதீதம்" என்ற இறுதிக் கூற்றைச் சவுத்திராந்திகர் மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து வலியுறுக்குமாறும் இதனானே பெறப்பட்டது.

இவை நான்கு செய்யுளும், அந்தக்கரணங்கள் கருத்தாவல்லவாமாறும், அக்கரங்களும் அதிதெய்வங்களும் அதிட்டிக்கக் கருவியாமாறும், அப்பதினைந்தும் உயிரின் வேறாமாறும் உணர்த்தி முதற் கூற்றை வலியுறுத்தியவாறும். (ரு.)

**முதலதிகாரணம் முடிந்தது.**

---

# இரண்டாம் அதிகரணம்.

———

## "யானெனதென்ப திணைதரும்" என்பது.

கருவி முதலிய பதினைந்தோடும் கூடியவிடத்தன்றி அறிவு விளங்காமையால், ஆன்மாவானது இயல்பாகவே அறியும் பிரம மாகாது எனக் கூறுகின்றது.

**அறிவிச்சைசெயல்களெல்லாமடைந்தனல்வெம்மையும்போற்**
**குறியுற்றங் கேகா நேக குணகுணி பாவமாகி**
**நெறியுற்று நிற்கு மென்னி னிகழ் புலன் கரணமெல்லாஞ்**
**செறிவுற்றங் கறிவு கொள்ள வேண்டுமோ சீவ னுர்க்கே.**

(**கோ - டு.**) எல்லாம் அங்குக் குறி உற்று அறிவு இச்சை செயல்கள் அடைந்து அனல் வெம்மையும்போல் ஏகாநேக குண குணி பாவமாகி நெறியுற்று நிற்கும் என்னின், சீவனுர்க்கே நிகழ் புலன் கரணம் எல்லாம் செறிவுற்று அங்கு அறிவு கொள்ளவேண்டுமோ.

(**பொ - ரை.**) ஆன்மாக்களெல்லாம் கருவி முதலிய பதினைந்தின் வேறுமெனமேற் சாதித்தபின்னர், பரிணாம வாதிகள் பிரமப்பொருளே வேறுபட்டுச் சீவனெனத்தோன்றி அறிவிச்சை செயல்களையடைந்து தீயும் சூடும் போலப் பிரமமுஞ் சீவனும் பேதாபேதமாகிய குண குணித்தன்மையுற்று, குணமாகிய சீவனும் குண குணித்தன்மையாய்ப் பல வேறு வகைப்பட்டு நிற்குமென்பர். அவ்வாறு, பிரமப்பொருளே சீவனுயின், அச்சீவனுர்க்கு நிகழ்கின்ற பொறிகரண முதலிய கூட்டுறவு இல்லாதபோது அறிவு நிகழாமைக்குக் காரணம் யாது? பிரமப் பொருளாயின், பொறிகரணங்களின் துணையின்றி யறியவேண்டும். அவற்றைத் துணையாகக்கொண்டு அறிவு நிகழ்தலின் சீவன் பிரமமாகமாட்டாது. (எ-று)

ஏகாநேகம் என்பது பேதாபேதம். பேதாபேதமாவது, தீயாகிய ஒரு பொருளில் செம்மையுஞ் சூடும் பிரிக்க முடியாமையால் **அபேதம்;** ஆயினும் செம்மைத்தன்மை வேறு சூட்டுத்தன்மை வேருதலின் **பேதம்;** ஆதலின் இது பேதாபேதமாம். இவற்றுள், செம்மையாயிருப்பது **குணி.**

சூடு குணம் இதுபோல, பிரமமும் சீவனும் பேதாபேதமாய், பிரமம்குணி யும், சீவன் குணமுமாய் நிற்குமென்பர். அது, பொருந்தாதென மறுத்த வாறும். குணி யென்பது குணத்தையுடைய பொருளைக் குறிக்கும். சீவ ஞர் என்பதில் ஆர் விகுதி இழித்தற் குறிப்பின் வந்தது.

இச்செய்யுளால், மேல் மூன்ருஞ் சூத்திரத்தில் பிரமமே ஆன்மா என்பாரை மறுத்த ஆருங்கூருகிய "அஞ்சவத்தைப்படும்" என்பது வலி புறுத்தப்பட்டது மாயிற்று. (சு.)

அறிவிச்சை செயல்களாகிய குணம் ஆன்மாவுக்கின்றெனவும், ஆன்ம சந்நிதியில் கரணங்கட்கே உண்டெனவும் கூறுஞ் சாங்கியரை மறுத்து ஆன்மாவுக்குண்டெனக் கூறுகின்றது.

குணங்களை யின்றி யொன்ருங் குறியுடைத் தான்மா வென்னி
னிணங்கிடா விச்சா ஞானக் கிரியைக ளிவையு டற்கட்
பிணங்கிடுஞ் சந்நிதிக்கண் ணெனிற்பிணத் துறக்கத் தின்ரு
முணங்கிடுங் கரண மென்னிற் சந்நிதி யொழிந்த தன்றே. ௪௭

(கோ - டு) குணங்களை இன்றி ஒன்ருங் குறிஉடைத்து ஆன்மா என்னின், உடற்கண் இச்சா ஞானக் கிரியைகளிவை இணங்கிடா. சந்நிதிக்கண் (கரணம்) பிணங்கிடும் எனின், பிணத்து உறக்கத்து இன்ரும். கரணம் உணங்கிடும் என்னின், சந்நிதி ஒழிந்தது அன்றே.

(போ - ரை.) இனிச் சாங்கியர் அறிவிச்சை செயல்கள் குணமாகவும், ஆன்மா குணியாகவும் இருத்தலின்றி அறிவு மாத்திரையாகவே ஆன்மா இருக்குமென்பர். அவ்வாருயின், உடலின்கண் அறிவு மட்டும் நிகழல் வேண்டும். அங்ஙனமின்றி அறிவிச்சை செயல்கள் மூன்றும் நிகழக்காண்டலின், ஆன்மா அறிவு மாத்திரம் என்றல் கூடாது. அதன்மேல் உயிரின் சந்நிதியில் கரணங்கள் தொழிற் படுதல்பற்றி உடலின்கண் அறிவிச்சை செயல்கள் நிகழுமாதலால், அந்நிகழ்ச்சிபற்றி ஆன்மாவுக்கு அறிவிச்சை செயல்கள் உண்டெனக் கூறவேண்டாமென்பர். அவ்வாருயின், வியாபகமான சந்நிதியில் உடம்பு பிணமான காலத்தும் உறக்கத்தும் அறிவிச்சை செயல்கள் உயிரின்கண் நிகழ்தல்வேண்டும். அங்ஙனம் நிகழ்தலின்மையால் அதற்குக் காரணம் என்னை

யென்று வினவ, கரணங்கள் ஒடுங்கினமையால் என்பர். கரணம ஒடுங்கியவிடத்தும் வியாபகமான உயிரின் சந்நிதிக்குக் கேடில்லை யாதலால், சந்நிதி மாத்திரையால் நிகழ்தலென்றது ஒழிந்தது. ஆதலான், ஆன்மாவின் குணமாகிய அறிவிச்சை செயல்களின் றொழிற்பாட்டால் கரணங்கள் தொழிற்படுமன்றிச் சந்நிதிமாத் திரையால் கரணங்கள் தாமேதொழிற் படாவாம். (௭-று.)

உறக்கத்து இன்றென்னும் ஒருமை இவை யென்னும் எழுவாயைக் கொண்டு முடியாது ஆதலின் இன்மைப் பண்பின்மேல் நின்றது. (௭)

காந்தத்தின்முன் இரும்பு தொழிற்படுதல் போல ஆன்மா வின்முன் கரணம் தொழிற்படுமென்னுஞ் சாங்கியரை மறுத்து நினைத்தல் மறத்தல் முதலிய மாறுபட்ட தொழில்கள் கரணத் தில் நிகழக் காண்டலின் இழுத்தலொன்றே நிகழும் அவ் வுவமை பொருந்தாதெனக் கூறுகின்றது.

**சந்நிதி குணம தாகுந் தானென்போ லென்னிற் காந்த**
**முன்னிரும் பென்று மீர்க்கு முறைமையுண் டகற்ற லின்று**
**முன்னினை தலொடுங்க லோட லிருத்தலே கிடத்த னிற்ற**
**லென்னுமித் தொழில்கண் மற்றுமியற்றுவ தான்மாவென்னே.**

(கோ - ௫.) சந்நிதிதான் என்போலென்னின், காந்தமுன் இரும்புக் குணமதாகுமென்றாய். ஈர்க்கும் முறைமையுண்டு. அகற்றல் இன்றாம்.

(பொ - ரை.) சந்நிதி என்பது வியாபகமாய் நிற்கப்பெறு தல் என்று கொண்டு சந்நிதி மாத்திரையில் கரணங்கள் தொழிற் படுமென்பதை மறுத்தது பொருந்ாது. சந்நிதியாவது எது போலெனின், காந்தத்தின்முன் எதிர்ப்பட்ட இரும்பு தொழிற் படுதல்போல உயிரின்முன் எதிர்ப்பட்ட உடம்பு தொழிற்படுதற் கேதுவாகிய தொரு குண விசேடம் என்பர். அவ்வாறாயினும், ஒரு குணமுடைய காந்தம் இரும்பை இழுத்தலாகிய ஒரு தொ ழிலைச் செய்வதன்றி அகற்றலாகிய மாறுபட்ட தொழிலைச் செய்தலின்று. அதுபோல, ஆன்ம சந்நிதியில் கரணங்கள் ஒரு தொழிலைச் செய்யாமல் நினைத்தல், மறத்தல், ஓடல், இருத்தல், கிடத்தல், நிற்றல் முதலிய மாறுபட்ட தொழில்களைச் செய்வ

தற்கு என்ன காரணம்? அக்காரணத்தை ஆராயுமிடத்து அத்தொழில்களைச் செய்வதற்கு ஏதுவாகிய அறிவு, இச்சை, செயல்கள் ஆன்மாவினிடத்துக் குணமாக இருந்து அக்குணங்கள் தொழிற்படுதலால் உடம்பு தொழிற்பட்டதேயன்றி ஆன்மா சும்மாவிருக்க அதன் சந்நிதியில் உடம்பு தொழிற்பட்டதென்றல் பொருந்தாதென்பது நன்கு விளங்கும். (எ.று,) (அ.)

ஆன்மா உருவப்பொருள் என்னும் பவுராணிகரை மறுத்துரைக்கின்றது.

உருவுயி ரென்னி னிந்த வுடலினுட் காண வேண்டும்
வருவது பரிணா மத்தா யநித்தமாம் பூதமாகும்
கருவினு ளுழையு மாறுங் காட்டிட வேண்டுங் கண்ணின்
மருவிடா தென்னி னுன்றன் வாயினா லுருவன் றென்னே. ௰௯

(கோ - ௫.) உயிர் உருவென்னின்.

(பொ - ரை.) இவ்வாறு கூறப்பட்ட ஆன்மா அருவமோ, உருவமோ, அருவுருவமோ என்னும் சந்தேகத்தின்கண், பவுராணிகர் ஆன்மா உருவமே என்பர். அவ்வாறாயின், இவ்வுடம்பினுள்ளாகவே வேறொரு வடிவங் காணவேண்டும். அன்றியும் காணப்படும் உருவப்பொருள், மாறுபட்டு அழிவினை யடைவதாகிய காணப்படும் பூதத்தோ டொப்பாகும். அதுவன்றியும் உருவமாயிருக்கின்ற உயிர் மாதாவின் கருப்பத்தினுள் நுழைவது எவ்வாறென்றும் தெரிவிக்கவேண்டும். ஆதலால், ஆன்மா உருவப்பொருளென்று கூறல் பொருந்ாது என்று மறுத்தவிடத்துக் கண்ணிறாற் காணப்படாத உருவையுடையது ஆன்மாவென மீண்டுங் கூறுவர். அவ்வாறாயின் உருவத்தை யறிவது கண்ணாதலால், அக்கண்ணிற் கெட்டாததென்ற உன் சொல்லாலேயே உருவமன்று என நீயே ஒப்புக்கொண்டாய் என்பது இனிது தெளிக. (எ-று.) (௯)

ஆன்மா அருவமாகிய சூக்கும உருவமென்பாரையும் அதிசூக்கும உருவமென்பாரையும் மறுத்துரைக்கின்றது.

சூக்கும வுருவ தென்னிற் றூலகா ரணம தாகு
மாக்கிய மனதி தன்மாத் திரைவடி வசேத னம்பி
னீக்கிய சூக்கு மத்தே நிற்பதோ ருருவுண் டென்னி
னாக்கிடு முருவ மெல்லா மசித்துமா யநித்த மாமே.

(கோ - ரு.) சூக்கும உருவதென்னின், தூலகாரணமதாகும் அசேதனம் மனதி தன் மாத்திரை ஆக்கியவடிவு. பின் நீக்கிய சூக்குமத்தே ஓர் உரு நிற்பது உண்டென்னின்.

(பொ - ரை.) உயிர் உருவமன்று என மறுத்தவிடத்து அம் மறுப்பு தூல உருவத்தையே குறிக்குமெனக் கொண்டு அருவமாகிய சூக்கும உருவே உயிர் என்பர். அச்சூக்கும வடிவம் தூல உருவத்தைத் தோற்றுவிக்கின்ற சடமாகிய மனதி கரணங்கள் தன் மாத்திரைகளால் ஆக்கப்பட்ட புரியட்டக உடம்பாம். ஆதலால், அதுவும் ஆன்மாவன்று. அதன்மேல் அப்புரியட்டக தேகத்துள் அதிசூக்கும உருவாய் நிற்பதே உயிர் என்பர். அவ்வாறு நிற்பது கலை முதலிய தத்துவங்களைத் தோற்றுவிக்கின்ற அசுத்த மாயையின் ஏகதேச பாகமாகிய பர சரீரமாம். ஆதலால், அதுவும் உயிரன்று. இச்சூக்கும சரீரம், அதிசூக்கும சரீரம் ஆகிய அனைத்தும் அறிவில்லாததும், அழிவெய்தக்கூடியதும் ஆதலால் அவ்வியல்புகளில்லாத உயிர் அவ்வியல்புகளையுடைய உருவப்பொருளென்றல் அவ்வாறு பொருந்தும்? (எ-று.) (௧௦.)

ஆன்மா அருவுருவம் என்னுங் கவுளரை மறுத்துரைக்கின்றது.

அருவுரு வென்னி லான்மா வருவுரு வாவ தின்று
முருவரு வாகா தாகு மொருபொருட் கிரண்டு தன்மை
வருவது மில்லை காட்ட வன்னிபோன் மருவு மென்னி
னுருவமுங் காணவேண்டு முண்மையு மொழிந்து போமே.

(கோ - ௬.) அருவுரு ஆன்மா என்னில், அருவுருவாவது இன்றும். உரு அருவாகாதாகும். இரண்டு தன்மை ஒரு பொருட்கு வருவதும் இல்லை. காட்டவன்னிபோல் மருவுமென்னின்.

(போ - ரை.) மேல் ஆன்மா தூல உருவுமன்று, சூக்கும வுருவுமன்று என மறுத்தவிடத்து கவுளர் என்னும் ஒரு சாரார் ஆன்மாவானது அருவுருவப் பொருள் என்பர். அவ்வாறாயின் அருவானது உருவாவதில்லை; உருவானது அருவாவதில்லை. எது போலவெனின், அருவான ஆகாயம் உருவாகாததுபோலும், உருவான மண் அருவாகாததுபோலுமாம். ஒன்று பிறிதொன்றாகா தென்பது ஒக்கும். ஒரு பொருளினிடத்தில் இரண்டு தன்மைகள் இருக்குமென்றல் என் கூடாதெனின், மாறுபட்ட இரண்டு தன்மைகள் ஒரு பொருளினிடத்தில் என்றும் இராவாம் என்று கூற, காட்டத்தன்மை, அக்கினித்தன்மை ஆகிய இரண்டு மாறுபட்ட தன்மைகள் காட்டத்தினிடத்தில் காணப்படுகின்றபடியால், மாறுபட்ட இரண்டு தன்மைகள் ஒரு பொருளினிடத்து இராது என்றல் பொருந்தாதென்பர். இவ்வுவமையை ஆராயுமிடத்துக் காட்டமும் வன்னியும் இருபொருள்களாய்க் காட்டந் தோன்றியபொழுது அக்கினி தோன்றுவதில்லை. அக்கினி தோன்றியபொழுது காட்டங்கெட்டொழிதலோடு அக்கினியும் கெட்டொழியும். இவ்வாறு ஒன்று தோன்றுங்கால் பிறிதொன்று தோன்றாமையால் அவ்விரண்டுந் தம்முள் வேறாகி ஒவ்வொன்றுங் காணப்பட்டு உருவாகி அழிவினை யெய்துமாதலின், இவ்விடத்து உருவமில்லாதாய், அழியப்படாததாயிருக்கின்ற ஒரு பொருளாகிய ஆன்மாவிற்கு உவமையாதல் செல்லாது. (ஏ-று.)

கவுளர்—சத்தியை வழிபடுபவர்.

இறைவனுக்கு அருவுருவத் திருமேனி யுண்டென்று நூல்களிற் கூறப்படுகின்றதே? அருவமும், உருவமுமாகிய மாறுபட்ட இரண்டு தன்மைகள் ஒன்றாயிருத்தல் எவ்வாறு கூடுமெனின், தன்னுண்மையைநோக்கி அருவமென்றும், உருவப்பொருள்களோடு கலந்து அதுவாய் நிற்றல்பற்றி உருவமென்றுங் கூறினதேயன்றி அருவம் உருவம் ஆகிய இரண்டன் கூட்டம் அருவுருவமெனக் கூறியதன்று. (கக)

மீளவும் சந்திரன் போல் ஆன்மா அருவுருவம் என்பாரை மறுத்துரைக்கின்றது.

*சந்திரன் வடிவுபோலத் தானரு வுருவமென்னின்*
*வந்துநங் கண்ணிற் றோன்றும் வடிவுள தாமு யிர்க்கு*
*மிந்தவூ னுருவந் தானா யெழுவது முயிரே யென்னிற்*
*பந்தமா யசித்தா யான்மாப் பவுதிக மாகு மன்றே.*

(கோ-டு.) சந்திரன் வடிவு போல உயிர்க்கும் தான் அருவுருவம் என்னின், வந்து நம் கண்ணில் தோன்றும் வடிவு உளதாம். உயிரும் இந்த ஊன் உருவந் தானாய் எழுவதே யென்னின், ஆன்மா அசித்தாய்ப் பவுதிகமாய்ப் பந்தமாகும் அன்றே.

(பொ-ரை.) சந்திரன் அமாவாசை தினத்தில் ஒரு கலையுடன் அருவமாய் நின்று பின் ஒவ்வொருகலையாய் வெளிப்பட்டு உருவமாய்த் தோன்றுவது போல, ஆன்மாவும் அருவுருவமாகுமென்று மீண்டுங் கூறுவர். அவ்வாறாயின், சந்திரனுடைய உருவநிலை நம் கண்ணிற்கு வெளிப்பட்டுக் காணப்படுதல் போல, ஆன்மாவின் உருவநிலையும் அவ்வாறு காணப்படல் வேண்டுமே எனின், ஆன்மாவும் அருவமாய் நின்றே கருவுட் பதிந்து இவ்வுடம்புருவமாய் வளர்ந்து காணப்படுமாதலால், ஆன்மாவின் வடிவம் அருவுருவமென்றல் பொருந்துமென்பர். அவ்வாறாயின், சித்தாய் அதாவது அறிவுடையதாய், அழியாததாய், பந்தத்திற் பட்டு நீங்குவதே ஆன்மாவென்றதனோடு முரணாக அறிவில்லாததாய், அழிவதாகிய பூத காரியமாய், பந்தமாயுள்ள உடம்பு ஆன்மாவின் வடிவமென்றல் எவ்வாறு பொருந்தும்? (எ-று.) ()

ஆகாசம்போல் ஆன்மா அருவமாம் என்னும் பாதஞ்சலரை மறுத்துரைக்கின்றது,

*அருவவி காரி யான்மா வாகாயம் போல வென்னி*
*னுருவினைக் கட்டி யாட்டி யோட்டிமீட் டுலாவப் பண்ணி*
*மருவிநிற் பித்தி ருத்திக் கிடத்திமண் புரட்டி மற்றும்*
*பெருவிகா ரங்க ளெல்லாந் தருவதென் பேசி டாயே.*

(கோ-டு.) ஆன்மா ஆகாயம்போல அரு அவிகாரி என்னின்.

(பொ-ரை.) இனி, பாதஞ்சலரென்னும் ஒரு சாரார் ஆன்மாவானது ஆகாயம்போல் அருவாய் அவிகாரியாய் நிற்கும்

என்பர். மேல் அருவமென வாதித்தது சூக்கும வடிவையும், அதிசூக்கும வடிவையும் ஆதலின், இவ்விடத்து அருவமென்றது அதனின் வேறாய் வடிவமில்லாமையைக் குறித்ததாம். ஆன்மா ஆகாயம்போல் அருவமாயின் உடலோடுகூடி உடலை ஆட்டியும் அவ்வுடலை நிற்கும்படி செய்தல், நடக்கும்படி செய்தல், மண்ணிற் புரளும்படி செய்தல் முதலிய இப்பெரிய விகாரங்களெல்லாம் செய்தல் எவ்வாறுகூடும் சொல்வாயாக. ஆகாயம் அருவாயும், சடமாதலால் விகாரமில்லாமை கூடும். ஆன்மா அருவாயும், அறிவுடைப் பொருளாதலால் விகாரமில்லாமை கூடாது. ஆதலால், ஆகாயம்போல் அருவமென்றல் பொருந்தாது. (எ - று.)

அறிவுடைப் பொருளாயிருக்கின்ற இறைவனை விகாரமில்லாதவனென்று கூறுங் கருத்தென்னை? எனின், விகாரமில்லாதவனென்பது ஒன்றுஞ் செய்யாதவனென்பதன்று. எல்லாஞ் செய்தும் பற்றில்லாதவனென்பதாம். ஆதலால், முரணின்மை யறிக. (கஈ.)

ஆன்மா அசித்தென்பாரையும், சித்தசித் தென்பாரையும் சுத்த சித்தென்பாரையும் மறுத்துரைக்கின்றது.

அசித்தெனி லுணரா தான்மா வசித்துச்சித் தாகு மென்னி
னசித்துச்சித் தாகா தாகுஞ் சித்தசித் தாவதில்லை
யசித்தொரு புறமா யொன்றிற் சித்தொரு புறமாய் நில்லா
தசித்துருச் சித்தே யென்னி னசித்தடைந் தறிவதின்றாம்.

(கொ - டு.) ஆன்மா உணராத அசித்தெனின், அசித்துச் சித்தாகும் என்னின், சித்து அசித்தாவதில்லை. அசித்துச் சித்தாகாதாகும். ஒன்றில் அசித்து ஒருபுறமாய் சித்து ஒருபுறமாய்நில்லாது. அசித்து உருச் சித்தே என்னின், அசித்து அடைந்து அறிவது இன்றாம்.

(பொ - ரை.) இனி, வைசேடிகர் என்னும் ஒரு சாரார் ஆன்மா அறிவில்லாத சடப்பொருள் என்பர். சடப்பொருளாயின் அறியமாட்டாது. அறியுந்தன்மை காணப்படுதலால், ஆன்மா சடமாகாதென்று கூற ஆன்மா சடமென்றாலும் பின் மனத்தோடுகூடி அறியுமென்பர். அது பொருந்தாது. எவ்வாறெனின், அறிவுடையது அறியாமையுடையதாகாது. அறியா

மையுடையது அறிவுடையதாகாது என்றுகூற, அதன்மேல் சைவரிலொரு சாரார் ஆன்மா அறிவாயும், அறிவின்மையாயும் அதாவது சித்த சித்தாயிருக்குமென்பர். ஒரு பொருளில் மாறுபட்ட இரண்டு தன்மை இருத்தல் கூடாமையினால் அதுவும் பொருந்தாது என்றுகூற, அதன்மேல் பட்டாசாரியரென்னும் ஒரு சாரார் கருவிகளைப் பொருந்தாத சித்தே ஆன்மாவென்பர். அவ்வாறாயின், கருவிகளின் துணையின்றியே அறியவேண்டும். கருவிகளின் துணையையின்றி அறிதல்கூடாமையால் அதுவும் பொருந்தாது. (எ - று.)

அசித்துருச் சித்தே என்றவிடத்து உருத என்னும் பெயரெச்ச அகரஈறும், தகர எழுத்துப் பெயரும் தொக்கு நின்றன.

சித்த சித்தென மாறுபட்ட இரண்டு தன்மைகள் ஆன்மாவினிடத்திலிருக்குமென்றல் பொருந்தாதாயின், பின்னர் ஏழாஞ் சூத்திரத்தில் ஆன்மா "நித்தனாய் சத சத்தாகி" என்று மாறுபட்ட இரண்டு தன்மைகளையுடையது என்றதனோடுமுரணாதோவெனின், முரணாது. எவ்வாறெனின், சத்தும் அசத்துமாகிய இரண்டு தன்மைகள் ஒன்றாயிருக்குமென்று கூறவில்லை. சத்தோடு கூடிச் சத்தாயும், அசத்தோடு கூடி அசத்தாயும் நிற்றற்கு உரிமையுடையதெனக்கூறியதாம். ஆதலால்முரணின்மையறிக.(௧௬)

ஆன்மா பரமாணு வென்பாரை மறுத்துரைக்கின்றது.

**உயிரினை யணுவ தென்னி னுடல் பல துவார மோடும்**
**பயில்வுறக் கட்டுணாது பாரமுந் தரித்துச் செல்லா**
**தயர்வுறு மசித்தாய்ப் பூத வணுக்களி னொன்ற தாகு**
**மியல்புறு மவய வத்தா லணுவுரு விறக்கு மன்றே.**

(கோ - ரு.) உடல் உயிரினை அணுவதென்னின், அணு உருப் பல துவாரமோடும். பயில்வு உறக்கட்டுணாது. பாரமுந் தரித்துச் செல்லாது. பூத அணுக்களின் ஒன்றதாகும் அயர்வுறும அசித்தாய் இயல்பு உறும்அவயவத்தால் இறக்கும் அன்றே.

**(போ - ரை.)** இனி, பாஞ்ச ராத்திரிகள் ஆன்மா அணுமாத்திரமென்று வேதங்களிற் கூறுவதால், இவ்வுடம்பகத்து ஆன்மாவானது பரமாணு வளவாக நிற்கும் என்பர். அணுவடிவாகில் இத்தேகத்துள்ளிருக்கும் பல துவாரங்களில் ஒரு துவார

த்தின் வழியாய் ஓடிப்போய்விடும். அன்றியும் அவ்வுடம்பு பிறி தொரு பொருளோடு பயில்வதற்கும், கட்டுண்டற்கும் வியாபித்திருந்தாலன்றி முடியாவாம். அணுவாய் ஒரு பக்கத் திலிருந்தால் மேற் கூறிய செயல் கூடாது. பெரும் பாரங்களை உடம்பு தாங்கிச் செல்லுதற்கும் அணுவாயிருந்தால் உடன் படாது. அம்மட்டோ? பூத பரமாணுக்களோடு ஒன்றாய், அழிவெய்துஞ் சடமாய், வேறுவேறாய் நிற்கும் இயல்பினைப் பொருந்திய பகுப்பினையுடையதெனப்பட்டு, அழிவினைப்பொருந் தும். ஆதலால், ஆன்மா அணுவென்றல் பொருந்தாது. (எ-று.)

வேதங்களில் ஆன்மாவை அணுவென்றதனோடு இவ்விடத்துக் கூறி யது முரணாதோவெனின், முரணாது. எவ்வாறெனின், ஆன்மா அந்தக்கா ணத்துடன்கூடி இருதயத்தில் நின்றுகொண்டு கண் முதலியபொறிகளின் வழியாய விடயங்களைக் கிரகிக்கும் பொழுது கிரகிக்கின்ற ஆன்மா அந்த அவத்தையில் மனம், இந்திரியம், விடயம் என்பவைகளில் அதி சூக்கும மாய் நிற்றல்பற்றி அணுவெனக் கூறியதாம். இவ்வாறன்றி ஆன்மாவின் வடிவம் அணுவளவென்பதன்று. ஆதலால், முரணின்மையறிக. ஆன்மா வின் வடிவம் ஞானமே. இது, முதற் சூத்திரத்து முதற் செய்யுளில் "அநாதிமுத்த சித்துருவென்னும் இனம்பற்றி அடையடுத்தலான் அநாதி பெத்த சித்துருவும் உண்டென்பது பற்றி அறியப்படும். (௧௫)

மீளவும் ஆன்மா உடம்பகத்து ஏகதேசமாய் நிற்குமென் பாரை மறுத்துரைக்கின்றது.

உடலினி னேகதேசி யுயிரெனி னுருவாய் மாயும்
படர்வுறு மறிவின் றெங்குஞ் சுடரொளிப் பண்ப தென்னிற்
சுடர்தொடிற் சுடுவதெங்குந் தொட்டிட மறிவுண் டாகு
மடர்புல னிடத்து மொக்க வறிவெழ வேண்டு மன்றே.

(கோ - ரை) உயிர் உடலின் ஏகதேசி (சுடர் ஒளிப்பண்பது) எனின், உருவாய் மாயும். எங்கும் படர்வுறும் அறிவு இன்று. சுடர் ஒளிப்பண் பது என்னின், சுடர்தொடின் சுடுவது. தொட்ட இடம் எங்கும் அறிவுண் டாகும். அறிவு அடர்புல னிடத்தும் ஒக்க எழவேண்டும் அன்றே.

(போ - ரை.) இனி, மிருதி நூலார் புல்லின் நுனியி லிருக்கும் நீர்த்துளிபோல, ஆன்மாவானது உடம்பகத்து இத

யத்தானத்தில் மிகச் சிறிதாய் நிற்ப அவ்வான்மாவின் அறிவு எவ்விடத்தும் வியாபிக்கும். எதுபோலவெனின், ஒரு வீட்டினுள் ஓரிடத்தில் ஒரு விளக்கிருப்ப அவ்விளக்கின் ஒளி வீடு முழுதும் பிரகாசித்தல் போல என்பர். அவ்வாறு ஓரிடத்திருப்பதாயின், உருவமுடையதெனப்பட்டு, மேல் உருவ மென்றதற் கோதிய குற்ற மனைத்துமுண்டாம். அன்றியும், குணமானது அக்குணத்தையுடைய பொருளளவில் நிற்பதன்றி, அப்பொருளின்வேறாய் வியாபித்துநிற்றல் செல்லாமையால்ஓரிடத்திருக்கும் ஆன்மா எங்கும் வியாபித்தறியுமென்றல் கூடாது. விளக்கின் ஒளி அவ்விளக்கின் சூக்கும வடிவேயன்றி விளக்கின் குணமன்று. குணம் சூடேயாம். ஆதலால், விளக்குவமை இவ்விடத்துப் பொருந்தாது. பொருந்துமெனக் கொள்ளினும், விளக்கின் சுடரைத் தொட்டாற் சுடுவதுபோல், ஆன்மாவும் இருந்த விடத்தைத் தொட்டா லறிவதேயன்றி உடம்பில் எந்த இடத்தைத் தொட்டாலும் அறிதல் கூடாது. அவ்வாறன்றித் தொட்ட இடமெல்லாம் உணரக் காண்கின்றோம். அதுவன்றியும், அவ்வுவமையைக் கொள்ளுமிடத்து விளக்கு ஓரிடத்திருந்து ஏககாலத்தில் மற்றுள்ள இடங்களை விளக்குதல் போல, ஆன்ம அறிவும் ஐம்பொறி வழியாக ஐந்து விடயங்களையும் ஏககாலத்தில் அறிய வேண்டும். அவ்வாறில்லாமையால் விளக்குவமை எவ்வாற்றானும் பொருந்தாது. (எ-று.)

இம்மறுப்பு உயிரினை அணுவென்பார்க்கும் ஒக்கும். (கஃ)

ஆன்மாவானது உடம்பளவாக நிறைந்து நிற்கு மென்பாரை மறுத்துரைக்கின்றது.

உருவினி னிறைந்து நின்றங் குணர்ந்திடு முயிரதென்னின்
மருவிடா துறக்கம் வாயி லறிவொக்க வழங்கவேண்டும்
பெருகிடுஞ் சுருங்கும் போதம் பேருடற் சிற்று டற்கண்
வருமுடற் குறைக்க வொக்கக் குறைந்துபின் மாயு மன்றே.

(கோ - டு.) உறக்கம் மருவிடாது வாயில் ஒக்க அறிவு வழங்கவேண்டும். பேருடற் சிற்றுடற்கண் பெருகிடுஞ் சுருங்கும் போதம்,

(போ - ரை) இனி, சமணர் உடம்பளவாக உயிர் நிறைந்து நின்று அவ்வுடம்பால் விடயங்களை அறியும் என்பர். அவ்வா றாயின், தூலவுடம்பு நீங்கிய சொப்பனவத்தையும், தூல சூக்கும வுடம்பு இரண்டும் நீங்கிய சுழுத்தியவத்தையும் பொருந்தாதிரு க்கவேண்டும். அன்றியும், எல்லா வுடம்போடும்கூடி நிற்கின்ற சாக்கிராவத்தையினும் ஐம்பொறியினும் ஏககாலத்தில் அறிவு நிகழ் தல் வேண்டும். அதுவுமன்றி பெரிய தேகத்திற்குப் பெரிய அறிவும், சிறிய தேகத்திற்குச் சிறிய அறிவுமாதல்வேண்டும். உடம்பில் ஓர் அங்கங் குறைய உயிரும் ஒரு பாகங் குறைந்து உடமபு அழியுஙகால் உயிரும் அழியவேண்டும். ஆதலால், அவர் மதமும் பொருந்தாது. (எ-று.) (௧௭)

முதல்வன்போல ஆன்மாவும் வியாபகப் பொருளா மென் பாரை மறுத்துரைக்கின்றது.

எங்குந்தான் வியாபி யாய்நின் றுணருமிவ் வான்மாவென்னிற்
றங்கிடு மவத்தை போக்கு வரவுகள் சாற்றல் வேண்டும்
பங்கமார் புலனொன் றொன்றாய்ப் பார்த்திடல் பகரல் வேண்டு
மிங்கெலா மொழிந்தா னிற்ப தெங்ஙன மியம்பல்வேண்டும்.

(கோ - ரு.) அவத்தை தங்கிடும் எனக்கூட்டுக.

(போ - ரை.) இனி, அயிக்கியவாதிகள் முதல்வன்போல் எவ்விடத்தும் வியாபியாய் நின்று அறிவது உயிர் என்பர். அவ் வாறாயின், சாக்கிரம் முதலிய ஒவ்வோரவத்தைகளில் தங்குத லும், பிறப்பு இறப்பாகிய வரவு போக்குகளைப் பொருந்துதலும், ஐம்பொறி வழியாய் ஐந்துவிடயங்களையும் ஒன்றொன்றாயறிவ தின்றி ஏககாலத்தில் எல்லாவிடயங்களையும் அறியாமையுங் கூடா வாம். இவ்வாறு அநுபவத்தில் காணப்படுதலால் முதல்வன் போல வியாபகமென்றல் பொருந்தாது. அன்றியும், எல்லாமாய் வியாபித்து நிற்கும் முதல்வன் அவ்வாறு நிற்றலை யொழித்து உடம்பினுள் ஏகதேசமாய் நிற்றல் எவ்வாறு கூடும்? (எ - று.)

ஒழிந்தான் என்பது ஒழிந்தானாகி என்னும் பொருள் குறித்தலின் முற்றெச்சம். எலாம் என்றவிடத்து ஆக்கச்சொல் வருவித்து எல்லாமாய் என்றுரைக்க. எல்லாம் என்றது வியாபகமுணர நின்றது.

உருவப் பொருளனைத்திலுங் கூடுதலே வியாபகம் எனவும், அவை யனைத்தினையும் அறிதலே முற்றுணர்வு எனவும் கொள்வதே எங்கணும் வியாபி என்பதன் பொருள் என்பாரை மறுத்தற் பொருட்டு, ஒழிந்தா னிற்ப தெங்ஙனமென்பதை, ஒழிந்தால் நிற்பதெங்ஙனமெனப்பாடமோதி, சங்கார காலத்தில் எல்லாப் பொருளும் அழிந்தபொழுது உயிரும் அழிந்து போகவேண்டும். அழியுமாயின் பின்னர்ப் புனருற்பவமின்றாம். அவ்வா றின்றிச் சங்காரத்தின் பின் புனருற்பவமுண்டென்று கேட்கப்படுதலின், எல்லாம் ஒழிந்த சங்காரத்தும் உயிரிருக்கவேண்டும். இருந்தும் ஏனைய பொருளில்லை யாதலால், உருவப்பொருளைக் கூடுதல் வியாபகமென்றதும் பொருந்தாது என்றுரைப்பினுமமையும். (கஅ.)

மாயா காரியத்தால் ஆன்மாவினறிவு ஏகதேசப் படுவதாயிற் றென்பாரை மறுத்துரைக்கின்றது.

**சுத்தமா மான்ம சித்து தத்துகளுடன் மறைத்த தென்னின்**
**வைத்துறு துடற்கண் வாயில் கரணங்கள் வழியான் ஞான**
**மொத்துறு மலமற் றூலு முறுமலம் வீடு மின்றாம்**
**பெத்தமு மடையான் முத்த னாய்ப்பிர காச னாமே.**

(கோ - டு.) உடற்கண் வாயில் கரணங்கள் வழியால் ஞானம் வைத் துறுது எனவும் மலம் உறும் எனவுங் கூட்டுக.

**(பொ - ரை.)** மீண்டும் ஆன்மா முதல்வன்போல் எங்க ணும் வியாபகமாய் நின்று அறியுந் தன்மையுடையதாயினும், சுத்தமாகிய அவ்வான்மாவி னறிவைக் குற்றம் பொருந்திய மாயா காரியமாகிய தநு கரணாதிகள் தடைசெய்தலால் சாக்கிர முதலிய அவத்தை யுறுதலும், பிறப்பு இறப்புக்களிற் போக்கு வரவு உறு தலும், ஐம்புலன்களை ஒவ்வொன்றா யறிதலும், இவைபோல்வன பிறவும் பொருந்தி ஏகதேசப்படுவதாயிற் றென்பர். அவ்வாறா யின், மாயா காரியமாகிய இந்திரிய அந்தக்கரணங்களால் ஆன்மா வுக்கு அறிவு விளங்குவதாயிருக்கவும், அதனோடு மாறாக அறி வைத் தடை செய்யுமென்றது பொருந்தாது. அன்றியும், சுத்த மாயுள்ள ஆன்மா மாயா காரியத்தால் தடைப்பட்டது என்னின், மேல் மாயாகாரியத்தை விடுபட்ட முத்திக்காலத்தும், முன் சுத்தமாயிருந்து பற்றியதுபோல் பின்னும் பற்றுமெனப்பட்டு

முத்தி என்பது இன்றாய் முடியும். வீடு பெற்றபின் மாயா காரியத்தைப் பற்றுமெனின் முன்னரும் பற்றுதிருக்க வேண்டும். முன்னர்ச் சுத்தமாயிருந்து பற்றியதெனின், பின்னரும் சுத்தமெய்தினும் பற்றுமென்பதனை ஒத்துக்கொள்ள வேண்டுமாதலால் மாயா காரியத்தால் ஆன்மாவின் அறிவு தடைப்பட்டதென்று கூறுதல் பொருந்தாது. (எ - று.)

"அறிவிச்சை செயல்கள்" என்னுஞ் செய்யுள் முதல் இத்துணையும் உயிருண்மைகொண்டு ஆணவமலத்துண்மை கொள்ளாத சமயிகள் தத்த மதத்திற்கேற்பக் கூறும் உயிரிலக்கணங்களும் அவை பொருந்தாமையுங் காட்டப்பட்டன. இன்னும் அவ்வமதத்தார் வேறுபடக் கூறும் உயிரிலக்கணங்க ளெல்லாம் இங்ஙனங்கூறியவற்றுள் வைத்துக் கண்டுகொள்க.(கக)

சித்தாந்த நெறிப்படி ஆன்ம இலக்கணம் இதுவெனக் கூறுகின்றது.

அசித்தரு வியாப கம்போல் வியாபக மருவ மின்றாய்
வசித்திட வரும்வி யாபி யெனும்வழக் குடைய னாகி
நசித்திடா ஞானச் செய்தி யநாதியே மறைத்து நிற்கும்
பசுத்துவ முடைய னாகிப் பசுவென நிற்கு மான்மா.

(கோ - டு.) ஆன்மா அசித்து அரு வியாபகம் போல் வியாபகம் அருவம் இன்றாய் எனக் கூட்டுக.

(பொ - ரை.) இதுகாறும் ஆணவமலம் உண்டென்று ஒப்புக் கொள்ளாது ஆன்ம இலக்கணங் கூறிய சமயிகளை மறுத்த விடத்து ஆன்ம இலக்கணந்தான் யாதோ என வினவ, சித்தாந்த நெறிப்படி ஆன்மாவானது, எவ்வாற்றானும் அசித்தாதலில்லாத வியாபகப் பொருளாகிய இறைவன்போல பூரண வியாபகமும், அதிசூக்கும சித்தாதலும் இன்றிச் சார்ந்த பொருளினிடத்து அப்பொருளளவாக வசிப்புண்டு வியாபித்திருக்கும் ஏகதேச வியாபியாய் இச்சா ஞானக் கிரியை யென்னுங் குணங்களையுடையதாம். உடையதாயினும் அவ்விச்சா ஞானக் கிரியைகள், அநாதியேபற்றி நிற்கும் ஆணவ மலத்தினால் தொழிற்படாமல் மறைப்புண்டுகிடக்கும். அதனால் தூல சித்தாய் நிற்கும். இவ்வாறு கட்டுப்பட்டு நிற்குங்கால் பசுவெனப்படும். (எ - று.)

அசித்தரு என்றவிடத்து அருமை இன்மை குறித்து நின்றது * "உறற்பால—தீண்டா விடுத லரிது" என்றாற்போல. அருவம் என்றது § "இல்லா—வருவாகி நின்றானை" என்றாற்போல, அதிசூக்குமமாதலை யுணர்த்தி, ஆகுபெயராய் அதிசூக்கும சித்தாதலை யுணர்த்தி நின்றது. தூலசித்து—பசு. சூக்குமசித்து—ஆன்மா. அதிசூக்குமசித்து—சிவம். தூலசித்து என்பது பிறிதொன்றின் உபகாரத்தால் அறிவது. அதிசூக்குமசித்து என்பது தானே அறிவது. தூலசித்துக்குக் கண்ணொளியும், அதிசூக்கும சித்துக்குக் சூரியனொளியும் உவமைகளாம். உயிரின் பெத்த நிலை பசுவும், முத்திநிலை ஆன்மாவுமாம். முத்தியில் அருளின் உபகாரமிருப்பினும், வேறு நில்லாமையால் உயிர் சூக்குமமாயிற்று. இது உயிருணர்வோடுகூடிய கண்ணொளி போலாம்.

இச்செய்யுளால் உயிருக்கு அநாதி நிலையாகிய மலத்தோடு கூடிப் பசுத்துவ மாத்திரையாயிருக்கும் தன்னுண்மை கூறப்பட்டது. (உ௦.)

காரணசரீரம், கஞ்சுகசரீரம், குணசரீரம் என்னும் மூன்றனையும் ஆன்மாப் பொருந்தும் முறைமை கூறுகின்றது.

**மாயையின் வயிற்றுண் மன்னி வருஞ்செயன் ஞான மிச்சை**
**யேயுமக் கலாதி மூன்று லேகதே சத்தி னேய்ந்திங்**
**காயுமுக் குணங்க ளந்தக் கரணங்க ளாதி யெல்லாங்**
**காயபெத் தங்க ளாகிக் கலந்துட னிற்கு மான்மா**

(கோ - ௰.) ஆன்மா மாயையின் வயிற்றுள் மன்னிஞானம் இச்சை செயல்வரும். அக்கலாதி மூன்றால் ஏகதேசத்தின் ஏய்ந்து இங்கு ஏயும். அந்தக் கரணங்கள் ஆதி எல்லாம் பெத்தங்கள் முக்குணங்களாயும் காயமாகிக் கலந்து உடனிற்கும்.

(போ - ரை.) மேற்கூறியவாறு அநாதியே ஆணவமலத்தால் மறைப்புண்டு பசுவென நின்ற ஆன்மாவுக்கு அந்நிலை கேவலமெனப்படும். அதன்பின் அவ்வான்மா, அறியாமையினால் துன்பம் அடைந்து வருந்துவதற்கிரங்கி அநந்த தேவரருளால் தரப்பட்ட அசுத்தமாயையிற் கலக்குண்ட பாகமாகிய காரண சரீரத்தைப் பொருந்தும். எல்லாச் சரீரங்களுந் தோற்றுதற்குக் காரணமாதலால், மாயை காரண சரீரமெனப்பட்டது. அதனைப்

---

* நாலடியார், பழவினை செ--கூ.

§ சிவஞானபோதம், எட்டாஞ்சூத்திரம். செ--௫

பொருந்தியபொழுது மறைக்கப்பட்ட அறிவிச்சை செயல்கள் பொதுவகையால் சமட்டிரூபமாய் விளங்கப்பெறும். அதாவது உணர்வும், விருப்பமும், செய்யுந் திறமுந்தோன்றி, நல்லது தீயது என்ற உணர்வின் பகுப்பும், வேண்டும் வேண்டாமென்ற விருப் பின் பகுப்பும், செய்யுமுறை இவ்வாறு என்ற தொழிலின் பகுப் பும் விளங்காத நிலையாம். இது மூர்ச்சையாய்க் கிடந்த ஒரு உயிருக்குத் தெளிவுபெற்ற முதல்நிலை போலாம். அதன்பின் அவ்வசுத்த மாயையினின்றுந் தோன்றும் கலை முதலிய சட்டை யாகிய கஞ்சுக சரீரத்தைப் பொருந்தும். பொருந்தவே முன் பொதுவகையால் விளங்கிய அறிவிச்சை செயல்கள் வியட்டி ரூபமாய்ப் பிரிந்துதோன்றிச் சிறப்புவகையால் விளங்கப்பெறும். அதாவது, முன் பொதுவகை என்றதற்கு எதிர்மறை. அதன் பின் சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் முக்குணங்களா கிய குணசரீரத்தைப் பொருந்தி, அக்குணங்களுள் அடங்கி நின்று, பின் வெளிப்படுவனவாகிய மனமுதலிய சூக்குமசரீரம், எலும்பு நரம்பு முதலிய தூல சரீரமாகிய இரு சரீரங்களிடமாக வரும் விடயங்களைப்பற்றித் தொழிற்செய்யப்பெறும். முக் குணங்களுள் யாதானும் ஓர் குணத்துடன் கூடாமல் தொழிற் செய்ய முடியாதாதலால், அந்தக் குணத்துடன் கூடுதலே குண சரீரத்தைப் பொருந்துதலாம். (எ-று)

இவ்வாறு காரணசரீரம், கஞ்சுக சரீரம். குணசரீரம் எனப் பரசரீரம் மூவகைப்படுமெனக் கொள்க.

மாயையிற் கலக்குண்ட பாகத்தை வயிறாக உருவகஞ்செய்தார். மேல் உம் சூத்திரம் சுஙு-வது செய்யுளில், "மாயாள்தன் வயிற்றிவற்றால்" என் றதும் கலக்குண்ட பாகத்தின் உருவகமே. அக்கலக்குண்ட பாகமே, அசுத்தமாயா தத்துவமென வித்தியாதத்துவம் ஏழனுள் வைத்தெண்ணப் படுவதென்க. மன்னிவரும் என்னும் வினையெச்சமுடிபு மன்னுதலால் வரும் என்னும் பொருள்படக்காரண காரியப் பொருட்டாய் நின்றது. ஏகதேசத்தினேய்ந்து எனப் பின்னர் வருதலின் இவ்விடத்து வரும் என் பதற்கு பொதுவகையால் சமட்டிரூபமாய் விளங்கும் என்பது பொரு ளாதலறிக. அந்தக் கரணங்களாதியெல்லாம் என்றவிடத்து எல்லாவற் றுனும் என்னும் பொருள்பட அற்றுச் சாரியையும், ஆன் உருபும் தொக்குநின்றன * "அன்பிலாரெல்லாந் தமக்குரியர்" என்றாற்போல.

* திருக்குறள், அன்புடைமை. சே-உ.

காயம் என்பது காயத்தினிடமாக வரும் விடயங்களைக் குறித்தலின் ஆகுபெயர். ஆகிக்கலந்து நிற்கும் என்பது அறிவிச்சை செயல்களின்வினை. ஒற்றுமைபற்றி அக்குணவினை ஆன்மாவாகியகுணிமேலேற்றப்பட்டது (உக)

சூக்குமசரீரம் தூல சரீரங்களை ஆன்மாப்பொருந்தி ஐந்தவத்தைப் படும் முறைமை கூறுகின்றது.

**சூக்கும தேகி யாகித் தூலரூ பத்தின் மன்னிச்**
**சாக்கிர முதலா யுள்ள வவத்தையுட் டங்கி யெங்கும்**
**போக்கொடு வரவு மெல்லாம் புரிந்துபுண் ணியங்கள் பாவ**
**மாக்கியும் பலன்க ளெல்லா மருந்தியும் நிற்கு மான்மா.**

(**கோ - டு.**) ஆன்மா சூக்கும தேகியாகி எங்கும் போக்கொடு வரவுமெல்லாம் புரிந்து புண்ணியம் பாவங்கள் பலன்களெல்லாம் ஆக்கியும், அருந்தியும் தூலரூபத்தின மன்னி (எங்கும் போக்கொடு வரவுமெல்லாம் புரிந்து புண்ணியம் பாவங்கள் பலன்களெல்லாம் ஆக்கியும், அருந்தியும்) சாக்கிர முதலாயுள்ள அவத்தையுள் தங்கிநிற்கும்.

(**போ - ரை.**) மேற்கூறிய காரணம், கஞ்சுகம், குணம்என்னும் மூன்று சரீரங்களும் பரசரீரமெனப்படும். அவ்வாறு பரசரீரம் மூன்றையும் முறையாமெய்திய ஆன்மா அதன்பின் சூக்கும தேகத்தைப் பொருந்தி எவ்விடத்தும் போக்குவரவுகள் செய்து சூக்குமமாகிய இருவினைகளைச்செய்து அவ்வினைகளின் பலனாகிய இன்பத்துன்பங்களை அநுபவிக்கும். அதன்பின் தூலசரீரத்தைப் பொருந்தி எவ்விடத்தும் போக்குவரவுகள்செய்து தூலரூபமாகிய இருவினைகளைச் செய்து அவ்வினைப் பலன்களை அநுபவிக்கும். இவ்வாறு தூலம், சூக்குமம், குணம், கஞ்சுகம், காரணம் என்னும் ஐந்துசரீரங்களைப் பொருந்திநிற்கு முறைமையில் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் ஆகிய ஐந்தவத்தைப்பட்டு நிற்கும். (எ - று.)

சாக்கிரமுதல் என்றது ஒடுங்கு முறைபற்றிக் கூறியதெனவுணர்க. சூக்குமவினையும், பலனும் மனோவியாபாரமாம். அதாவது, சொப்பனத்தில் செய்யும் வினையும், அநுபவமுமாம். சாக்கிரம்:—எல்லாக் கருவிகளோடுங் கூடிநிற்கும் அவத்தை. சொப்பனம்:—சில கருவிகள் தொழிற்படாமல், அதாவது, தூலதேகந் தொழிற்படாமல் கனவொடுநிற்கும்

அவத்தை. சுழுத்தி:—கனவுமின்றி உறங்கி விழித்தபின் "ஒன்றுந்தெரிய வில்லை; சுகமாய்த் தூங்கினேன்" என்று சொல்லப்படும் அவத்தை. துரியம்:—பிராணவாயு இயக்கத்துடன் மூர்ச்சையாய்க்கிடந்து தெளிந்த பின் "ஒன்றுந்தெரியவில்லை" என்று சொல்லப்படும் அவத்தை. துரியாதீதம்:—பிராணவாயுஇயக்கமின்றி மூர்ச்சையாய்க்கிடக்கும் அவத்தை.(௨௨)

ஐந்து சரீரங்களும் ஐந்து கோசங்களெனப் பெயர்பெறும் எனவும், அவற்றில் ஆன்மா கட்டுப்பட்டுப் போக்குவரவு செய்து நிற்கும் எனவுங் கூறுகின்றது.

மருவா னந்தம் விஞ்ஞான மனோபி ராண னன்னமய
முருவாந் தன்மையுண்டாய் முன்னொன் றுக்கொன் று சூக்குமமாய்
வருமா மன்ன மயம்பற்றி மாயை முதற்கா ரணமாகு
மருவா யான்மா வைங்கோசத் தார்ப்புண் டவற்றி னகம்புறமாம்.

(கோ - ரு.) அருவாய் ஆன்மா முதற்காரணமாகும் மாயை உருவாந்தன்மை உண்டாய் மருவு ஆனந்தம் விஞ்ஞானம் மனோபிராணன் அன்னமயம் அன்னமயம் முன்பற்றி ஒன்றுக்கொன்று சூக்குமமாய் வருமாம். ஐங்கோசத்து ஆர்ப்புண்டு அவற்றின் அகம்புறமாம்.

போ - ரை.) கேவலத்தில் ஒரு சரீரமுமின்றி ஆணவ மலத்தோடு கூடி அவ்வாணவமல மாத்திரையாய்நின்ற ஆன்மாவிற்கு, முதற்காரணமாகிய மாயையினின்றுந் தோன்றிய மேற்கூறிய காரணசரீர முதலாகிய ஐந்து சரீரங்களும் வடிவமாம். வடிவாய் நிற்குங்கால் காரணசரீரம் ஆனந்தமய கோசமெனவும், கஞ்சுகசரீரம் விஞ்ஞானமய கோசமெனவும், குணசரீரம் மனோமய கோசமெனவும், சூக்குமசரீரம் பிராணமய கோசமெனவும், தூலசரீரம் அன்னமயகோசமெனவும் பெயர்பெறும். இவ்வைங் கோசங்களும் அன்னமயம் முதல் ஒன்றுக்கொன்று சூக்குமமாய் நிற்கும். ஆன்மா இவ்வைங்கோசங்களிற் கட்டுப்பட்டு நிற்குங்கால் அதுவதுவாய் வசிப்புண்டு ஏகதேசியாய் அவற்றிற் போக்குவரவு செய்யும். (எ-று.)

கேவலத்தில் அறிவிச்சை செயல்கள் விளங்கப்பெறாது நின்ற ஆன்மா, மாயையிற் கலக்குண்ட பாகத்தைப் பொருந்தியபொழுது அவ்

வறிவிச்சை செயல்கள் பொது வகையால் விளங்கப்பெற்ற மாத்திரையே ஓரானந்தமுண்டாகப்பெற்று அம்மயமாய் நிற்றலின், காரண சரீரம் ஆனந்தமய கோச மெனப்பட்டது.

அதன்பின் கலை முதலிய ஐந்து தத்துவங்களாகிய கஞ்சுக சரீரத்தைப் பொருந்தி அறிவிச்சை செயல்கள் சிறப்பு வகையால் விளங்கப் பெற்று அம்மயமாய் நிற்றலின் கஞ்சுக சரீரம் விஞ்ஞானமய கோசமெனப் பட்டது. விஞ்ஞானம் என்பது விசேட ஞானமாம். அது சிறப்பு வகையால் அறிவு முதலியன விளங்குதலை யுணர்த்தி நின்றது.

அதன்பின் குண சரீரத்தைப்பொருந்தி அந்தக்கரணத்தின் தன்மை விளங்கப்பெற்று அம்மயமாய் நிற்றலால், குண சரீரம் மனோமயகோச மெனப்பட்டது.

அதன்பின் சூக்கும சரீரத்தைப்பொருந்திப் பிராணவாயுவின் சம்பந்தம்பெற்று அதன் மயமாய் நிற்றலால் சூக்கும சரீரம் பிராணமய கோச மெனப்பட்டது.

அதன்பின் தூல சரீரத்தைப் பொருந்தி அச்சரீரத்தை வளர்ப்பதற்கான அன்னமயமாய் நிற்றலால் தூல சரீரம் அன்னமய கோசமெனப்பட்டது.

இவ்வைங்கோசங்கட்குச் சீவான்மா வெனவும், பரமான்மா வெனவும் வேறு வேறு பொருள் கூறுவார் மதங்களையெல்லா மறுத்தற்பொருட்டு, ஆன்மா இவ்வைங்கோசங்களிற் கட்டுப்பட்டுப் போக்குவரவு புரியும் என எடுத்தோதி, மாயை இவற்றிற்கு முதற்காரணமாகுமென்றுங் கூறினார். ஆனமா இம்மண்ணுலகத்தும், பாதல வுலகத்தும், மேலுலகத்தும் கொள்ளிவட்டமும் காற்றாடியும்போல நிமிடத்தின்கண் சுழலும்படி கொண்டு திரிதல்பற்றி இவ்வைங்கோசங்களை ஐந்து பறவையாகவும், அவற்றுளொரோவொன்றை ஐவகைப்படுத்து முகமுதலிய வுறுப்புக்களாகவும் வேதத்துளுருவகஞ்செய் துணர்த்தியவாறும்.

ஆன்மாவினுண்மை யுணர்தற்கு இவ்வைங்கோசங்களைத் தூல முதலிய வுடம்புகளாகப் பகுத்தறிதலும் ஒரு சாதனமெனக்கொள்க.

"மாயையின் வயிற்றுணமன்னி" என்பதுமுதல் இவைமூன்றுசெய்யுளானும் ஆணவ மலத்தின் உபாதியால் மறைப்புண்டு நின்ற ஆன்மாவினறிவு இச்சை செயல்கள், பின் ஏகதேசமாய் விளங்கி ஐந்தவத்தை, போக்கு வரவு முதலியவற்றைப் பொருந்துதற்குரிய ஐங்கோசத்தின் உபாதி கூறுமுகத்தால், உ0வது செய்யுளில் கூறியவாறு வசித்திட வருமாறு விளக்கிக் காட்டப்பட்டது.

இன்னும் ஆன்மா சார்ந்ததன் வண்ணமாய் வசிப்புண்டு நிற்கும் என்பதற்குச் சருவஞானோத்தரத்தில் அவ்வச்சார்பு விசேடம்பற்றிப் பூதான்மா அந்தரான்மா, தத்துவான்மா, சீவான்மா, மந்திரான்மா, பரமான்மா என அறுவகைப்படுத்துத தொகுததும் விரித்து மோதியதும் இவ்விடத்து உய்த்துரைத்துணர்ந்துகொள்க. (உரு)

பஞ்ச கோசங்களினும் ஆன்மா நிற்கு முறைமை கூறுகின்றது.

**தோற்பாவைக்கூத்துந்தொல்லைமரப்பாவையியக்கமுஞ்சீர்த்**
**தேர்ப்பாரிற்செலவும்வேறாய்ச்செலுத்துவோர்செய்திதானும்**
**பார்ப்பாய வேடங் கட்டி யாடுவோர் பரிசு போலு**
**மார்ப்பாய காயந்தன்னை யான்மாநின் றாட்டு மாறே.**

(பதா - ஙு.) ஆர்ப்பாய காயந்தன்னை ஆன்மா நின்று ஆட்டுமாறு, சீர்த்தேர்ப்பாரின் செலவும், தொல்லை மரப்பாவை இயக்கமும், தோற்பாவைக் கூத்தும், வேறாய்ச் செலுத்துவோர் செய்திதானும், பார்ப்பாய வேடங்கட்டி ஆடுவோர் பரிசுபோலும்.

(பொ - ரை.) மேற்கூறியவாறு கட்டுப்படுத்துவதாகிய ஐந்து கோசங்களினும் 'ஆன்மா வேற்றுமையின்றி நின்று அக்கோசங்களைச் செலுத்தும் விதம் எவ்வாறெனின், தேரைச் செலுத்துவோர் தன்மைபோல அன்னமய கோசத்தையும், மரப்பாவையை இயக்குவோர் தன்மைபோலப் பிராணமய கோசத்தையும், தோற்பாவையினை யாட்டுவோர் தன்மைபோல மனோமய கோசத்தையும், பரகாயப் பிரவேசம் செய்பவர் தன்மைபோல விஞ்ஞானமய கோசத்தையும், வேதியர் வேட முதலிய பல வேடங்கட்டி ஆடுவோர் தன்மைபோல ஆனந்தமய கோசத்தையும் ஆன்மா நின்று செலுத்தும். (எ - று.)

வேறாய்ச் செலுத்துவோர் செய்தி என்றது பரகாயப் பிரவேசத்தை.

தேரைச் செலுத்துங்கால், குதிரை, இயந்திரம், அறிவு, உற்சாகங்களால் பாகன் செலுத்தி அத்தேரின் வேறின்றி நிற்பதுபோல, அன்னமய கோசமாகிய தூலதேகத்தை, பிராணன், மனம், கலாதி, மாயைகளால் ஆன்மாச் செலுத்தி அத்தூல தேகத்தில் வேற்றுமையின்றி நிற்கும்.

மரப்பாவையை இயக்குங்கால், கயிற்றால் இயக்கி இயக்குவோன் அக்கயிற்றின் வேறின்றி நிற்பதுபோல, பிராணமய கோசமாகிய சூக்கும

தேகத்தைச் செலுத்துங்கால், பிராணனொலியக்கி ஆன்மா அப்பிராண வாயுவின் வேறின்றி நிற்கும்.

தோற்பாவையை ஆட்டுங்கால், ஆட்டுவோன் தன்னுறுப்பினுள் ஒன்றாகிய கரத்தால் ஆட்டி அதனின வேறின்றி நிற்பதுபோல, மனோமய கோசமாகிய குணசரீரத்தை ஆடடுங்கால் மனத்தால் ஆட்டி ஆன்மா அம்மனத்தின் வேறின்றி நிற்கும்.

பரகாயப் பிரவேசஞ் செய்யுங்கால் உயிர் நீங்கிய பரகாயத்தில் விருப்பால் பிறிதோருயிர் பிரவேசித்து அவ்வயிராய் நிற்பதுபோல, விஞ்ஞான மய கோசமாகிய கஞ்சுக சரீரத்தைச் செலுத்துங்கால் அறிவு முதலியன இல்லாத கலாதிகளில் ஆநந்தத்தால் ஆன்மாப் பிரவேசித்து அக்கலாதிகளில் வேறின்றி நிற்கும.

வேடங்கட்டி ஆடுவோர் கட்டிய வேடத்திற்குரியவனாய் நின்று நடிதது அதனின் வேறின்றி நிற்பதுபோல், ஆநந்தமய கோசமாகிய காரண சரீரத்தைச் செலுத்துங்கால் ஆன்மா அவ்வாநந்த மயமாய் அதனின்வேறின்றி நிற்கும்.

இவற்றுள், தேரைச்செலுத்துங்கால் செலுத்துவோன், கரம்கால் கண் முதலிய வுறுப்புக்களையும், அறிவையுங்கொணடு செலுத்துவன். மரப்பாவையை இயக்குஙகால் கரமும், கயிறும், அறிவும் கொண்டு இயக்குவனாதலால் தேரைச் செலுத்துவதிலும் மரப்பாவையை இயக்குவது சூக்குமமாயிற்று. தோற்பாவையை ஆட்டுங்கால் கரமும், அறிவுங்கொண்டுஆட்டுவன். இதிற் கயிறில்லாமையால் மரப்பாவையினின்றும் சூக்குமமாயிற்று. பரகாயப் பிரவேசஞ் செய்யுங்கால் அறிவு ஒன்றுடன் புறத்துச் செல்வன். இதில் வேறு கருவிகள் இல்லாமையால் முன்னையதினின்றும் சூக்குமமாயிற்று. வேடங்கட்டி ஆடுங்கால் அறிவுடன் அகததிற்றங்குவன். புறத்திற் றங்குதலாகிய முன்னையதற்கு அகத்திற்றங்குதலாகிய இது சூக்குமமாயிற்று. இவ்வாறே தூலதேக முதல் காரணதேக மீறாக தத்துவங்களின் குறைவிற்கேற்ப ஒன்றுக்கொன்று சூக்குமமாய்ஆன்மா நிற்கு முறைமையினை அறிந்து கொள்க.

செய்யுளாகலின் முறை பிறழ வைத்தார். காயம் என்பது ஐந்து சரீரங்களையுங் குறித்தலின் சாதி யொருமை.

இச்செய்யுளால் ஆன்மா அவ்வாறு ஐங்கோசங்களில் வசித்திட வரினும் அவ்வேகதேசப் பொருள்கட்கு வேறாய் மேல் உ0-வது செய்யுளிற் கூறியவாறு வியாபியெனும் வழக்குடையனாதல், அக்கோசங்களைச்செலுத்து முறையில் வைத்துணர்த்தப்பட்டது. ஒவ்வொன்றையும் செலுத்துதல்

பற்றி வேறாய் என்பதும், அவ்வாறே எல்லாவற்றையுஞ் செலுத்துதல் பற்றி வியாபி என்பதும் பெறப்பட்டமை காண்க. (உச)

ஆன்மா பஞ்ச கோசங்களினும் வேறென்பதை உவமை முகத்தால் விளக்குகின்றது.

**என்னுடல் பொறிபி ராணன்கரணமென் னுணர்வென் றக்காற்**
**றன்னின்வே றாகு நீயேன் றன்மனை யென்ற வெல்லா**
**நின்னின்வே றாகு மென்னி னீங்கிடா விவையிங் கென்னி**
**னுன்னின வாகு நீயா முகிர்மயி ருகவுங் காண்டி.**

(கோ - டு.) என்றன் மனை என்ற வெல்லாம் நின்னின் வேறாகும். என் உடல் பொறி பிராணன் கரணம் என் உணர்வு என்றக்கால் நீ தன்னின் வேறாகும். இவை இங்கு என்னின் நீங்கிடாவென்னின், உன்னின வாகும் நீயாம் உகிர் மயிர் உகவுங் காண்டி.

(போ - ரை.) மேற்கூறியவாறு பஞ்ச கோசங்களினும் ஆன்மா அபேதமாய் நின்று செலுத்தினும், என் மனைவி என்பதி என்று, அபேதமாய் வழங்கி வந்தனவெல்லாம் தன்னின் வேறாதல் போல, என்னுடல், என் பொறி, என் பிராணன், என் கரணம், என் அறிவு எனத் தனித்தனி எனதென்று வழங்கப்படுமாதலால் அவை யனைத்தும் உன்னின்வேறாம். நீ அவைகளின் வேறுவாய் என்று கூற, மனைவி முதலிய புறப்பொருள்கள் என்னின் வேறாதல்கூடும். உடல், பொறி முதலியவை என்னைவிட்டு நீங்கமாட்டாவாதலின், அவை எவ்வாறு வேறாகும் எனின், உன்னுடையனவாகி அபேதமாய் எனதென்று வழங்கப்படும் நகம், மயிர் முதலியன நீங்குதல் காணப்படுதல்போல, உடல் முதலியனவும் அதற்குரிய காலம் வந்தவிடத்து நீங்குமாதலின் நீ அவற்றின் வேறென்பது துணிவாயறியப்படும். (எ - று.)

உன்னின வென்பது இன் சாரியை பெற்ற அகர ஈற்றுப் பலவறி சொல். எனவே, உன்ன என நின்று உன்னுடையன என்னும் பொருள் தந்தது.

மனைவி வீடு முதலியவற்றைத் தானாக வெண்ணுபவர் உலகாயதரி லொரு சாரார்.

அவ்வாறாயின், உடல் முதலியவற்றை எனதென்பது வீடு முதலியவற்றை எனதென்பது போலன்றி இராகுவினது தலை என்றாற்போல, அபேதம்பற்றிக் கூறுங் கருத்தே யாகலின், உரைப்போர் குறிப்பொடு ஒட்டி நோக்குங்கால் பேதம்பற்றியும் அபேதம்பற்றியும் எனதெனக் கூறும் அவ்விருவகை வழக்கிற்குந் தம்முள் வேறுபாடு காணப்படுதலின், அவைதம்முளொக்குமாறு யாங்ஙனமென்பாரை நோக்கி எனது என்றதனால் வேறு என்பதற்கு வேறுவமை யெடுத்துக்காட்டி யுணர்த்துதற் கெழுந்தது வருஞ் செய்யுள். (உ௫.)

அபேதம் பற்றிப் பஞ்சகோசங்களை எனதென்று வழங்கப் படுதலால் ஆன்மா அவற்றின் வேறென்றல் கூடாதென்பாரை மறுத்துரைக்கின்றது.

**பொன்னணி யாடை மாலை போதுமே லான போதிங்**
**கென்னணி யாளென் றுன்னி யிருந்தனை பிரிந்த போது**
**நின்னணி நீயு மல்ல வாயினை காய நின்னி**
**னன்னிய மாகு முன்னை யறிந்துநீ பிரிந்து பாரே.**

(கோ - ரு.) நின் அணிபிரிந்தபோது நீயும் அல்ல வாயினை.

(பொ - ரை.) இராகுவினது தலை யென்ற விடத்துத் தலையின் வேறாய் இராகு காணப்படாதவாறுபோல, கருவி காரணங்களை எனதென்றதனால் அக்கருவி காரணங்களின் வேறாய் ஆன்மா உண்டென்றல் பொருந்தாதென்னின், அபேதம்பற்றி நிகழும் அவ்வுவமை மிகுதியாக வழங்குதலின்றி ஏகதேசமாய் வழங்கப் படுமாதலால், அவ்வுவமை பொருந்தாது. பொன்னாலாகிய ஆபரணம், நூலாலாகிய ஆடை, மலராலாகிய மாலை முதலிய புறப் பொருள்களை யணிந்திருக்கின்றபொழுது அபேதம்பற்றி அப் பொருள்களெல்லாம் நீயாகவேயிருந்தும் என்னுடையதென்று வழங்கப்படுதல் மிகுதியுங் காணப்படும். அப்புறப்பொருள்கள் நீங்கியபோது அப்பொருள்கள் உனக்கு அன்னியமாய் நீ அப் பொருளன்றாயினாற்போல, உடல், பொறி முதலிய வனைத்தும் அபேதம்பற்றித் தானாயிருப்பினும் உன்னின் வேறாகுமாதலால், உடல் பொறி முதலியவற்றி னீங்கிநின்று உன்னுடைய உண்மை யான ஆன்ம சொரூபத்தை அறிவாயாக. (எ - று) (உ௬.)

விஞ்ஞானமய கோசம் ஆனந்தமய கோசங்களே ஆன்மா வென்பாரை மறுத்துரைக்கின்றது.

உடலியா னல்லே னிந்த வுணர்வுயா னல்ல வான
கடனியா தென்னின் வேறு கண்டுணர் வென்ன தென்கை
யிடரிலா வென்ற னான்மா வென்றபோ தான்மா வேறே
திடனதா வுயிரை வேறு கண்டிடார் செப்ப லேகாண்.

(கோ - ௫.) இடரிலா என்றன் ஆன்மா என்றபோது ஆன்மா வேறே. திடனதா உயிரை வேறு கண்டிடார் செப்பலே காண். இந்த உணர்வு யான் அல்ல வான கடன் யாதெனின், உணர்வு என்னது என்கை வேறு கண்டு உடல் யான் அல்லேன்.

(பொ - ரை.) அன்னமயகோசம், பிராணமய கோசம், மனோமயகோசமாகிய உடல், பொறி முதலியனயானல்லவென்பதொக்கும். குற்றமில்லாத ஆன்மாவை என்னுடைய ஆன்மா என்றவிடத்து ஆன்மாவின் வேறாய் என் என்பதற்குப் பொருளில்லாதவாறுபோல், அறிவு தொழிற்படுதற்குத் துணையாயிருக்கின்ற விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசங்களின் வேறாய் ஆன்மா உண்டென்றல் பொருந்தாதெனின், ஆன்மாவை உறுதியாக வேறாகக் காணும் அறிவில்லாதவர் இராகுவினது தலையென்றாற்போல என்னான்மாவென்று கூறுவர். அவ்வாறு கூறுதல் பெரும்பான்மையாய் வழங்கப்படுதலின்றிச் சிறுபான்மையாக வழங்கப்படும். அதுவும், என்னென்பதும் ஆன்மாவென்பதும் வேறு பொருளாயில்லாத அபேதம்பற்றிய வழக்காகும். விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசங்கள் அவ்வாறன்று. வேறு எவ்வாறெனின், என் அறிவு என் ஆனந்தம் என ஏனைக் கோசங்கள்போல எல்லாராலும் வேறாகக் காணப்படும் பெருவழக்காதலின், அபேதம்பற்றிய வழக்கென்று கூற அமையாது. அமையுமெனின், என் என்பதின் வேறாக ஆன்மா இல்லாதது போல் அறிவும் ஆனந்தமும் நீங்காதிருக்க வேண்டும். நீங்கக் காண்கின்றோமாதலால், ஏனைய உடல் முதலியனபோல விஞ்ஞானமய ஆனந்தமயகோசங்களும் உன்னின் வேறேயாம். (எ-று)

செய்யுளில் விஞ்ஞானமய கோசம் உயிரின் வேறுதல் கூறவே, இனம்பற்றி ஆனந்தமய கோசம் உயிரின் வேறுதலுங் கொள்ளப்படும். கண்டிடார் என்பது கண்டிடாராகி என்னும் பொருள் குறித்தலின் முற்றெச்சம். (உஎ.)

என்னுடைய ஆன்மா வென்பதற்குப் பொருள் கூறி உடல் முதலியவற்றின் ஆன்மா வேறு என்பதனை வலியுறுத்துகின்றது.

**புந்தியை மனம தென்று மனமது புந்தி யென்றுஞ்**
**சிந்தையைச் சீவ னென்றுஞ் சீவனைச் சிந்தை யென்று**
**முந்தனை யான்மா வென்று மான்மாவை முந்த னென்றும்**
**வந்திடு மென்ற னான்மா வென்றது மற்றொன் றைக்காண்.**

(கோ - ௬.) என்றன் ஆன்மா என்றது மற்றொன்றைக் காண் என்பதை முன்னாகவைத்து, அதன் பின்னாக புந்தியை என்பது முதலாக உரைக்க.

(பொ - ரை.) அன்றியும், என்னுடைய ஆன்மா என்று கூறப்படும் வழக்கில் ஆன்மாவென்பது ஆகுபெயரால் பிராண வாயுவை உணர்த்தும். அது எதுபோலவெனின், புத்தியை மனமென்றும், மனதைப் புத்தியென்றும், சிந்தையைச் சீவனென்றும், சீவனைச் சிந்தையென்றும், சிவபிரானை ஆன்மாவென்றும், ஆன்மாவைச் சிவபிரானென்றும் ஆகுபெயரால் கூறும் வழக்குப் போலாம். ஆகுபெயராவது, ஒன்றிற்குரிய பெயரை அதனோடு சம்பந்தமுள்ள பிறிதொன்றிற்கிட்டு வழங்குவது. ஆதலின், என்னுடைய ஆன்மா என்ற அம்மொழிகொண்டும் விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசங்களின் வேறாக ஆன்மா இல்லை யென்ற நின்கருத்து நிரம்புமாறில்லை. (எ - று.)

ஆதலின் என்னுடைய ஆன்மா வென்ற அம்மொழிகொண்டும் விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசங்களின் வேறாக ஆன்மா இல்லை யென்ற நின் கருத்து நிரம்புமாறில்லை என்பது குறிப்பெச்சம்.

ஒன்றன் பெயரை அதனோடு சம்பந்தமுள்ள பிறிதொன்றற்கிட்டு வழங்கி வருதலை விளக்கவேண்டி புந்தியை மனமதென்றும் என்பது முதலாக எடுத்துக் கூறினர்.

ஐந்துகோசங்களுக்கும் ஆன்மாவேறு என மேலே பொதுவாகக் கூறி, விஞ்ஞானமயகோசம் சீவான்மாவும், ஆனந்தமயகோசம் பரமான் மாவுமா மென்பார் மதத்தை மறுத்தற்பொருட்டு, அவ்விரண்டு கோசங் கள் ஆகுபெயரினால் அவ்வாறு கூறப்படுமென வேறெடுத்தோதி ஆன்மா வேறென்பது வலியுறுத்தப்பட்டது.

"என்னுடல் பொறி" என்பது முதல் இவை நான்கு செய்யுளானும் உலக வழக்கின் வைத்தறிவித்து உடல் முதலியவற்றின் ஆன்மா வேறென் பது வலியுறுத்தப்பட்டது. (௨௮.)

ஐந்துகோசங்களை ஆன்மா வென வேதத்துட் கூறியதும் ஆகுபெயராலெனக் கூறுகின்றது.

**அறிவுடல் சிந்தை யான்மா வணைதலா லான்மா வென்ப**
**ரெறிசுடர் விளக்கி ருக்கு மிடத்தையும் விளக்கென் றுற்போற்**
**பொறிபுலன் கரண மெல்லாம் புலப்படு மபேத மாகிப்**
**பிறிதரா தறிவ தான்மா வறிபொருள் பின்ன மாமே.**

(கோ - டு.) புலப்படும் பொறி புலன் கரண மெல்லாம்.

(போ - ரை.) உபநிடதங்களில் ஆன்மாவின் வேறாகிய விஞ்ஞானமயகோச முதலிய அப்பஞ்ச கோசங்களை ஆன்மாப் பொருந்தி நிற்கும் சம்பந்தம்பற்றி அக்கோசங்களை ஆன்மா வெனக் கூறும் என்பர். அவ்வாறு கூறுதல் ஒளியை வீசும விளக்கிருக்கின்ற தகளியை விளக்கென்றாற் போலன்றிப் பிறி தில்லை. ஆதலால், அறியப்படும் பொறி புலன் கரண முதலிய எல்லாவற்றின் கண்ணும் அபேதமாய்ப் பிரிப்பின்றி நின்றறிவ தாகிய ஆன்மா அறியப்படும் அப்பொருள்களுக்கு வேறு.(எ-று.)

அறிவுடல் சிந்தை என்றது முறையே விஞ்ஞானமயகோசம், அன்ன மயகோசம் மனோமயகோசத்தைக் குறித்து உபலக்கணத்தால் ஐந்கோசங் களையும், பொறிபுலன் கரணமென்றது உபலக்கணத்தால் தநுபுவனங்களை யுங் குறித்தன. எல்லாம் என்றவிடத்து எல்லாவற்றின்கண் என்னும் ஏழாம் வேற்றுமை யுருபும், அறிபொருள் என்றவிடத்து அறிபொருட்கு என்னும் நான்காம் வேற்றுமை யுருபும் தொக்கு நின்றன.

அபேதமாகிப் பிறிதராதென்றது முறையே வடமொழியும், அதன் பொருளை விளக்குந் தமிழ்மொழியு மாதலின், கூறியது கூறலின்மை

புணர்க. இது, † "ஞான திரோதகமாய் மறைத்துக் கொடு நிற்றல்" என்றாற்போல.

இச்செய்யுளால் ஐங்கோசங்களை ஆன்மா வென்னும் உபநிடதத்திற் குத் தாற்பரியம் ஆகுபெயர்ப் பொருளெனக்கூறி ஆன்மா அவற்றின் வேறென்பது சாதிக்கப்பட்டது. (உக)

ஐந்து கோசங்களினும் ஆன்மா வேறென்பதை அநுபவத் தால் வலியுறுத்துகின்றது.

**கண்டுணர் புருடன் வேறு கனவுகண் டொடுங்கிக் காய**
**முண்டியும் வினையு மின்றிக் கிடந்துயிர்த் திடவு ணர்ந்து**
**கண்டிடுங் கனவுஞ் சொல்லி யொடுக்கமுங் கருதி வேறா**
**யுண்டியும் வினையு முற்றிங் குணர்த்திட வுணரா நிற்கும்.**

(கோ - ரு.) கனவுகண்டு ஒடுங்கி உண்டியும் காயம் வினையும் இன் றிக்கிடந்து உயிர்த்திட உணர்ந்து இங்கு உணர்த்திட கண்டிடும் கனவு சொல்லியும் ஒடுக்கம் கருதியும் வேறாய் உண்டியும் வினையும் உற்று உணரா நிற்கும். கண்டு உணர்புருடன் வேறு.

(பொ - ரை.) ஐந்து கோசங்களும் ஆன்மா வென்றால் அன்னமய கோசத்தைவிட்டுப் பிராணமய கோசத்திலும், பிராண மய கோசத்தைவிட்டு மனோமய கோசத்திலும், மனோமய கோ சத்தைவிட்டு விஞ்ஞானமய கோசத்திலும், விஞ்ஞானமய கோசத் தைவிட்டு ஆனந்தமய கோசத்திலும் நிற்குங்கால், முறையே சாக் கிர முதலாக ஐந்தவத்தைப்பட்டு, விழித்தபின் சாக்கிரத்தில் அவ் வைங்கோசங்களையுங் கூடிநின்று அக்கோசங்களாகிய கருவிகளாற் காணப்பட்ட கனவைச்சொல்லும். சுழுத்தியில் ஒன்றுந்தெரி யாது சுகமாயிருந்ததைக்கருதும். சுகாநுபவமும், பிராணவாயுவி னியக்கமுமின்றி மூர்ச்சையாய்க்கிடந்த துரிய, துரியாதீதங்களை மறுதலையாகிய சுகாநுபவத்தினும், பிராணவாயுவினியக்கத்தினும் வைத்து அறியும். இவ்வாறு சாக்கிரத்தில் வந்தபோது அறிவ தின்றி அந்தந்த அவத்தையினின்று அறிதலில்லை. அக்கோசங் கள் ஆன்மாவாயின், ஒவ்வொரு அவத்தையினையும் அவ்விடத்தே

† சிவஞானபோதம், நான்காஞ் சூத்திரம். அதிகரணம் உ.

அறிதல்வேண்டும். ஆதலால் அந்த அவத்தைகளைக் கண்டறியும் உயிர் அவற்றின் வேறெனத் தெளிவாயாக. (எ - று.)

ஐங்கோசங்களுங்கூடிய பின்னன்றி அறிவு நிகழாமையால் அறிதற்கு அவ்வைங்கோசங்கள் ஏது வாதல் பெறப்பட்டது. ஒடுக்கம் என்றது ஈண்டு விடத்துச் சுழுத்தியை. அது, கனவுபோல் சொல்லவாராமையால் கருதி யுணருந் தன்மையதாயிற்று. சித்தமுஞ் செல்லாத துரியம், துரியாதீதங் கள் கருதவும் வாராமையின் மறுதலையின் வைத்துணருந் தன்மையவாயின. உணர்ந்தபின் என இருக்கவேண்டுவது உணர்ந்து எனத்திரிந்து நின்றது. உணர்தல் இவ்விடத்து நித்திரைவிட்டெழுதலாகிய சாக்கிரத்தைக் குறித் தது.

இச்செய்யுளால் கனவு முதலிய அவத்தைகளை அவ்விடத்து அறியாது சாக்கிரத்திற்கு வந்தபின் அறிதலின் வைத்துணர்த்தி ஐங்கோசங்களினும் ஆன்மா வேறென்பது வலியுறுத்தப்பட்டது.

"தோற்பாவை" என்னுஞ் செய்யுள்முதல் இச்செய்யுள் வரையுங் கூறியவாற்றால், மேல் ௩-ஞ்சூத்திரம் முதற்செய்யுளில் "உற்றுச்செயிரு றும்" என்பது முதலிய, அஃதாவது, தூலவுடல், இந்திரியம், சூக்கும வுடல், பிராணவாயு, ஆன்மா என்பாரை மறுத்த நாற்கூற்றுப் பொருளையும் வலியுறுத்தியவாறுமாயிற்று. (௩௦.)

ஆன்மாவானது முதல்வனின் வேறாய் அநாதியே ஆணவ மலத்தில் மறைந்து நிற்குமெனக் கூறுகின்றது.

**புருடனே யறிவ னாகிற் பொறிபுல னாதி போதந்**
**தருவதெ னறிவு மாயா தனுகர ணாதி பற்றி**
**வருவதிங் கநாதி யாக மலத்தினின் மறைந்து நிற்ப**
**னருவனா யிவற்றோ டாளு மமைச்சரு மரசும் போல்வன்.**

(கொ - ு.) புருடன் அறிவனேயாகில் பொறிபுலன் ஆதி இவற் றோடு அமைச்சரும் ஆளும் அரசம் போல்வன் போதம் தருவது என். மாயாதனுகரணாதிபற்றி இங்கு அறிவு வருவது, அநாதியாக மலத்தினின் மறைந்து அருவனாய் நிற்பன்.

(போ - ரை,) ஆன்மா சித்துப்பொருளாதலால், முதல் வன்போலக் கருவிகளின் துணையின்றி அறியாதோவெனின், அறி யாது. ஏதனாலெனின், முதல்வன்போலச் சுத்தசித்தன்று. அதா வது, அநாதியே மலத்தைப்பற்றாத சித்தன்று. அவ்வாறு சுத்த

சித்தாயின் தநுகரணாதிகளுடன் அமைச்சரும் அரசும்போல உட னின்று அத்தநுகரணாதிகளை யறிதல்வேண்டாம். அவ்வாறறிதல் காணப்படுகின்றமையால், அநாதியே ஆணவமலத்தால் மறைக்கப் பட்டு அறிவிச்சை செயல்கள் விளங்கப்பெறாது, பின் மாயா கரு விகளோடு கூடித்தத்துவரூபமாய் நின்றறியுமென்பது பெறப் படும். (எ - று.)

தருவதென் என்றவிடத்து என் என்றது வேண்டா என்னும் பொ ருள் குறித்துநின்றது. போல்வன் என்பது போலநின்று என்னும் பொருள் குறித்தலின் முற்றெச்சம். தநுகரணாதிபற்றி அறிவு வருதலால், தநுகர ணாதிகளில்லாத அநாதி நிலையில் மலத்தினின் மறைந்துநிற்கும் என்னும் அநுமானத்தை வலியுறுத்தற் பொருட்டு "புருடனேயறிவனாகிற் பொறி புலனாதி போதந்தருவது என்" எனத் தருக்கமெடுத்தோதினார். தருவது என் என்பது தருக்கம். இதனால் தருதல் காரணமாக மலத்தினில் மறைந்து நிற்குமென்பது வலியுறுத்தப்பட்டமை காண்க.

இச்செய்யுளால், மேல் உ௦-வது செய்யுளிற் கூறியவாறு, உயிர்கள், ஞானச்செய்தியநாதியே மறைத்துநிற்கும் பசுத்துவமுடையனவாதல், கரு விகளைக்கூடிநின்று தொழிற்படுதலாகிய காரியாநுமானத்தின் வைத்து ணர்த்தி வலியுறுத்தப்பட்டது.

"அறிவிச்சை செயல்கள்" என்பது முதல் இதுவரையும் பரமதங் களைப் பரிகரித்து ஆன்மாவிற்கு இலக்கணங்கூறு முகத்தால் இரண்டாங் கூறு வலியுறுத்தப்பட்டது. (௯க.)

இரண்டாம் அதிகரணம் முடிந்தது.

---

# மூன்றும் அதிகரணம்.

---

## செயல்களுனன்கும் அறிந்தவையடக்கி யாக்கிப் புணரு முட் கருவியாக்கிப்புறக் கருவியினும்போக்கி வெவ்வேறணை தரும் என்பது.

ஆன்மாவானது ஐந்தவத்தையிற் போக்குவரவு புரிதலை அரச உவமையில் வைத்து விளக்குகின்றது.

**படைகொடு பவனி போதும் பார்மன்னன் புகும்போதில்லிற்**
**கடைதொறும் விட்டு விட்டுக் காவலு மிட்டுப் பின்ன**
**ரடைதருந் தனியே யந்தப் புரத்தினி லதுபோ லான்மா**
**வுடலினி லஞ்ச வத்தை யுறுமுயிர் காவ லாக.**

(கோ - டு.) ஆன்மா படைகொடு பவனிபோதும் பார்மன்னன் இல்லிற் புகும்போது கடைதொறும் விட்டுவிட்டுக் காவலும் இட்டு பின்னர் அந்தப்புரத்தினில் தனியே அடைதரும். அதுபோல், உடலினில் உயிர் காவலாக அஞ்சு அவத்தை உறும்.

(போ - ரை.) உடல் பொறி முதலியவற்றோடு ஆன்மா கூடிநிற்றல் எதுபோலவெனின், அமைச்சர் முதலாயினோரும் அரசனும் போலாம். அமைச்சர், படைத்தலைவர் முதலிய பரிசனங்களோடு உலாப்போந்த அரசன், மீள அரண்மனையுட் புகுங்கால் அமைச்சர் முதலாயினோரை எந்தெந்த வாயிலில் எவரெவரை நிறுத்தவேண்டுமோ அந்தந்தவாயிலில் அவரவரை நிறுத்திப் பிறர் பிரவேசியாவண்ணம் காவலும் வைத்துப்பின்னர் அந்தப்புரத்துக்குத் தனியே செல்வன். அதுபோல, ஆன்மாவும் மனத்தைத் தேராகவும், பிராணவாயுவைக் குதிரையாகவும், புத்தியை மந்திரியாகவும், அகங்காரத்தைச் சாரதியாகவும், ஞானேந்திரிய கன்மேந்திரியங்களைக் காலாட்களாகவுங்கொண்டு புறத்து விடயங்களில் உலாப்போந்து அகத்து மீளுங்கால் புருவநடு, கண்டம், இருதயம், நாபியென்னுந் தானங்கள்தோறும் நீக்கவேண்டிய தத்துவங்களை நீக்கி உடலைப் பிறர் மோசஞ்செய்துவிடாமல் பிராணவ

வைக் காவலாக வைத்துவிட்டு மூலாதாரத்திற்கு மேலும் நாபிக்குக் கீழுமாகிய சுவாதிட்டானமாகிய அந்தப்புரத்திற்குத் தனியே சென்று, மாயையோடுகூடி ஆனந்தமய கோசனுய் நிற்கும். துரியாதீதத்தில் புருடதத்துவம் ஒன்றென்று கூறியதும் இக் கருத்துப்பற்றியேயாம். இவ்வாறு ஐந்தவத்தையினை ஆன்மாப் பொருந்துமாறறிக. (எ - று.)

மாயையோடு கூடிநிற்கும் நிலை தனிமையாவது எவ்வாறெனின், தொழிற் பாட்டிற்குரிய தத்துவங்களில்லாமல், தத்துவமில்லாமையால் அநாதி கேவலமின்றிச் சகலனுய் நிற்றற்குமட்டுந் துணையாய் மாயை நின்றமையால் தனிமையெனப்பட்டது.

துரியா தீதாவத்தையில் பிராணவாயு இயக்கமில்லாதிருக்கவும் காவலாகப் பிராணவாயுவை வைத்துவிட்டு என்றது எவ்வாறு பொருந்துமெனின், காவலாயுள்ளவன் அரசன் நித்திரையின்றி யிருக்குங்கால் வாயிலைத் திறந்துவைத்து யாவருக்குந்தெரியும்படியாக நிற்பன். அரசன் நித்திரை செய்யுங்கால் வாயிலைப்பூட்டிக்கொண்டு உட்புறமாகப் பிறருக்குத் தெரியாமல் நிற்பன். அதுபோல, துரியாதீதத்தில் பிராணவாயு அடங்கிக் காவலாயிருக்கும். இன்றேல் பின் உயிர்த்தெழ முடியாது. ஆதலால், பிராணவாயுவைக் காவலாக வைத்தென்றது துரியாதீதாவத்தையினும் பொருந்தும்.

இச்செய்யுளால், முதற்செய்யுளிற் கூறியவாறு வெவ்வேறவத்தையினைதருமுறைமை, மேலைச்செய்யுளிற் கூறிய அமைச்சு அரசு உவமையோடு பொருத்தி வகுத்துக் கூறப்பட்டது. (௩உ.)

ஐந்தவத்தையுள் ஒவ்வோரவத்தைக்குரிய தத்துவங்களும் தானங்களும் இவையெனக்கூறுகின்றது.

**சாக்கிர முப்பத் தைந்து நுதலினிற் கனவு தன்னி**
**லாக்கிய விருபத் தைந்து களத்தினிற் சுழுனை மூன்று**
**நீக்கிய விதயந் தன்னிற் றுரியத்தி லிரண்டு நாபி**
**நோக்கிய துரியா தீத நுவலின்மூ லத்தி னொன்றே.**

(கோ - ௫.) நுதலினில் சாக்கிரம் முப்பத்தைந்து. களத்தினில் கனவு தன்னில் ஆக்கிய இருபத்தைந்து. நீக்கிய இதயந்தன்னில் சுழுனை மூன்று. நாபி துரியத்தில் இரண்டு. நுவலின் மூலத்தின் நோக்கிய துரியாதீதம் ஒன்றே.

(போ - ரை.) அரசன்போல ஆன்மாவும் விட்டுவிட்டுச் சேருமிடத்து எங்கெந்த இடத்தில் எங்கெந்தத் தத்துவங்களை விட்டுச் சேருமெனின், புறத்து விடயங்களையறிதலினின்று நீங்கி உறக்கத்திற்குச்சென்று உறங்குமுன் புருவ மத்தியாகிய இலாடத்தில் சாக்கிராவத்தையைப்பொருந்தி ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, சத்தாதி ஐந்து, வசனாதி ஐந்து, பிராணாதி வாயுப் பத்து, அந்தக்கரணம் நான்கு, புருடன் ஒன்று ஆக முப்பத்தைந்து தத்துவங்களுடன் கூடி நிற்கும். இதனைவிட்டுக் கண்டத்தானத்தில் சொப்பனாவத்தையையடையும். அடையுங்கால் வாயுப்பத்து, சத்தாதி ஐந்து, வசனாதி ஐந்து, அந்தக்கரணம் நான்கு, புருடன் ஒன்று என்னும் ஆக்கப்பட்ட இருபத்தைந்து தத்துவங்களுடன் கூடிநிற்கும். இதனைவிட்டு இருதயத்தானத்தில் சுழுத்தியவத்தையை யடையும். அடையுங்கால், பிராணன், சித்தம், புருடன் என்னும் மூன்று தத்துவங்களுடன் கூடிநிற்கும். இதனைவிட்டு நாபித்தானத்தில் துரிய அவத்தையை யடையும். அடையுங்கால் பிராணன், புருடன் என்னும் இரண்டுடன் கூடிநிற்கும். இதனைவிட்டுச் சொல்லுமிடத்து மூலமாகிய சுவாதிட்டானத் தானத்தில் ஆராயப்படும் துரியாதீத அவத்தையை யடையும். அடையுங்கால் புருடதத்துவம் ஒன்றினைக் கூடிநிற்கும். (எ - று.)

அசிந்திய விசுவ சாதாக்கியத்தில் அவத்தைக்கு நிற்குங் கருவிகளிற் கலாதிகளையும் உடன்கூட்டி எண்ணி நாற்பத்தொன்று முதலியனவாகத் தொகை கூறுதலானும், கலாதிகளுளவாகவே சுத்த தத்துவங்களின் றொழிற்பாடும் ஆண்டுளவென்பது பெறப்படுதலானும், கலாதிகளில் வழிப் புருட தத்துவ மொன்றென வைத்தெண்ணப்படுதல் செல்லாமை யானும், ஈண்டு முப்பத்தைந்து முதலியனவாகத் தொகை கூறியது மலை வாகாதோ வெனின், ஆகாது. கடைதொறும் விட்டுவிட்டு என்ற உவமைக் கேற்ப விடப்படுதல் மாலையவாய் நிற்குங்கருவிகள் மாத்திரைக்கே ஈண்டுத் தொகை கூறப்புகுந்தாராகலானும், அதுபற்றிக் கலாதிகளின் ஐயஞ் செல்லாமைப் பொருட்டு அவற்றைப் புருட தத்துவத்துளடக்கி அதனையுமுடன்வைத் தெண்ணினு ராகலானு மென்க.

கலாதி தத்துவங்களும் சுத்த தத்துவங்களும் விட்டு நீங்காமல் சாக்கிரம் முதல் துரியம் வரை உடனாக வெளிப்பட்டு நின்று துரியாதீதத்தில்

அடங்கி நிற்குமாதலால், விட்டு நீங்குந் தத்துவங்களோடு வைத்தெண்ணுதவாறறிக. கலாதிகளும் சுத்த தத்துவமும் இல்லையாயின் புருட தத்துவந் தோன்றாதாதலின், அதீதத்தில் அவை அடங்கி நிற்றல் காண்க.

துரியாதீதத்தில் காரண சரீர மாத்திரையேயன்றிக் கஞ்சுக சரீரம் இல்லாமையால் அவ்விடத்துக் கலாதிகளில்லை யென்பது பெறப்படும். படவே, கலாதிகள் விட்டு நீங்குந் தத்துவங்களல்ல என்றது எவ்வாறு பொருந்துமெனின், அவ்விடத்துக் கஞ்சுக சரீரமில்லை யென்றது கலாதிகள் வேறு நில்லாது புருடனோடு ஒற்றித்து நிற்குங் கருத்துப்பற்றியேயாதலாற் பொருந்துமென்க. (கூகூ.)

ஐந்தவத்தைகளும் சகலத்திற் கீழாலவத்தை, மத்தியாலவத்தை மேலாலவத்தை, யென முத்திறப்படுமெனக் கூறுகின்றது.

**இருவகை சாக்கிராதி யவத்தைக ளியல்பு தானு**
**மொருவகை கீழே நூக்கி யுற்பவங் காட்டு மொன்று**
**பெருகமே னோக்கித் தீய பிறப்பறுத் திடுமி யோகிற்**
**றருவதோர் சமாதி தானுந் தாழ்ந்துபின் சனனஞ் சாரும்.**

(கோ - ௯.) சாக்கிராதி அவத்தைகள் இயல்பு தானும் இருவகை.

(போ - ரை.) மேற்கூறிப்போந்த சாக்கிரம் முதலாகிய ஐந்தவத்தைகளும் கீழாலவத்தை, மத்தியாலவத்தை, மேலாலவத்தை என முத்திறப்படும். அவற்றுள் கீழாலவத்தை கீழ்நோக்கிச் சென்று ஒடுங்கு முறையும், மேல் நோக்கித் தோன்றுமுறையும் என இருதிறப்படும். அவற்றுள் ஒடுங்குமுறை மேற்கூறியவாறு புருவ நடு முதல் கீழ்நோக்கி ஒவ்வொரு தானமாய் விட்டுச் செல்லுதலாம். அவ்வாறு செல்வது வினை செய்தலினுலுண்டான இளைப்பு நீக்கத்தின் பொருட்டாம். இளைப்பு நீங்கவே மேல் வினை செய்தற்குரிய வலிமையுண்டாம். அதனால் அவ்வொடுங்கு முறை கன்மம் சம்பாதித்தற்கேதுவாய்ப் பிறவிக்கு வித்தாம். பிறிதொன்றாகிய தோன்றுமுறையாவது துரியாதீதத்தையடைந்த வுயிர் ஒடுங்கியவாறேமீள மேல்நோக்கி ஒவ்வொரு தானத்தில் ஒவ்வொரு அவத்தையாய்ப் பற்றிப் புருவ நடுவில் சாக்கிரத்துக்கு வருதல். இவ்வாறு வருதலால் கன்மத்தின்

யலனை யநுபவித்தல் கூடும். கன்மாநுபவம் பிறவி யறுதற்குக் காரணமாகும். இனி மேலாலவத்தையும் இருதயம், கண்டம், நாக்கின் அடி, புருவநடு, பிரமரந்திரம் என்னும் ஐந்து தானங்களில் முறையே (சாக்கிர முதலாக ஐந்தவத்தைப்பட்டு) மேற்சென்று ஒடுங்குதலும், கீழ்நோக்கித் தோன்றுதலும் என இருவகைப்படும். மேல் நோக்கிச் செல்வதாகிய இவ்வைந்தவத்தையும் யோக சமாதிகளாலுண்டாம். இச்சமாதியால் பிரபஞ்ச நாட்டங் குறைந்து அக்குறைதல் பிறவி யறுதற்குக் காரணமாகும். பிறிதொன்றாகிய கீழ் நோக்கித் தோன்றுதலாவது, பிரமரந்திரத்தினின்றும் வெளியே வருதல். அது பிரபஞ்ச நாட்டத்தைத் தோற்றுவித்துப் பிறவிக்குக் காரணமாகும். (எ - று.)

மேலாலவத்தை யைந்தும் பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சவிகற்ப சமாதி, நிருவிகற்ப சமாதி என ஐவகைப்படும். யோகிற்றருவதோர் சமாதிதானுந் தாழ்ந்து பின் சனனஞ்சாரும் என்ற அநுவாதத்தால் அச்சமாதியுண்டென்பதும் பெறப்பட்டது. தாழ்தல்—ஒடுங்குதல். சனனஞ் சார்தல்—தோன்றுதல். இந்த யோகாவத்தையினையே கருவி கரணங்களின் மீளுதலில்லாத ஞானவத்தை யெனக்கொண்டு மயங்குவாருமுளர். அங்ஙன மயங்காமைப் பொருட்டு இதனை ஏனையவத்தைகளோ டொப்ப வைத்து இவ்விடத்துக்கூறினார்.

கீழாலவத்தையில் கீழ்நோக்கி ஒடுங்குதல் சகலத்திற் கேவலமெனவும், அதில் மேல் நோக்கித் தோன்றுதலும் மேலாலவத்தையில் கீழ்நோக்கித் தோன்றுதலும் சகலத்திற் சகலமெனவும், மேலாலவத்தையில் மேல்நோக்கி யொடுங்குதல் சகலத்திற் சுத்தமெனவும் அறிக. மேலாலவத்தையில் கீழ்நோக்கித் தோன்றுதல் பிரபஞ்சத் தோற்றத்திற்குக் காரணமாதலால், கீழாலவத்தையில் மேல்நோக்கித் தோன்றுதலோடொக்கும். அவ்வாறாயின், கீழாலவத்தையில் மேல்நோக்குதல் பிறவி யறுதற்குக் காரணமென்றும், மேலாலவத்தையில் கீழ்நோக்குதல் பிறவிக்குக் காரணமென்றும் மேற்கூறியது எவ்வாறு பொருந்துமெனின், வினைப்பயனை அநுபவித்தலால் பல பிறவிகளைப்பெற்று இருவினை யொப்பு முதலிய பக்குவமெய்திப் பரம்பரையில் பிறவி யறுமன்றி வினைப்பயனை யநுபவித்தது கொண்டு பிறவியறாது. அதனாலும் பிரபஞ்சத் தோற்றத்தி லொத்தலானும் பொருந்துமாறறிக.

இச்செய்யுளில் கீழ்ச்சென்று ஒடுங்குமென்றதும் மேற்சென்று தோன்றுமென்றதும், மேற்சென்று பிறப்பறுத்திடும் என்றதும் நடுநின்று

பொருள்தரும் தாப்பிசையாய் வருகின்ற செய்யுளோடுஞ் சென்றியைந்து பொருள்தருமாகலான் அச்செய்யுட்கும் இவ்வாறுரைத்துக் கொள்க. (௬௪.)

சகலத்து மத்தியாலவத்தையில் ஐந்தவத்தை யுண்டெனவும் சுத்தத்திலும் ஐந்தவத்தை யுண்டெனவும் கூறுகின்றது.

**அறிதரு முதல வத்தை யடைதரு மிடத்தே யைந்துஞ்**
**செறிதருங் கரணந் தன்னிற் செயலுறுங் கண்டு கொண்ணீ**
**பிறிவிலா ஞானத் தோரும் பிறப்பற வருளா லங்கே**
**குறியொடு மஞ்ச வத்தை கூடுவர் வீடு கூட.**

(கோ-டு.) நீ கண்டு கொள் எனவும், ஆங்கே வீடு கூட எனவுங் கூட்டுக.

(பொ-ரை) மேற் கூறிய ஐந்தவத்தையினுள் எல்லாவிடயங்களையும் அறிகின்ற முதலவத்தையாகிய சாக்கிரத்தையடையும் இலாடத்தானத்தின் கண்ணும் சாக்கிரம் முதல் ஐந்தவத்தையுளவாம். அவ்வவத்தைகள் விடயங்களை யறியுஞ் செய்கையில் அதி நுணுக்கமாய் இடைவிடாது நிகழும். அவ்வாறு நிகழ்வதை நுண்ணுணர்வால் நீ கண்டு கொள்வாயாக. இனி, இச்சகலத்தில் நிகழும் இவ்வவத்தைகளேயன்றி, பிறிவிலா ஞானத்தையறிந்தவரும், பிறப்பு நீங்கி அவ்வருள் ஞானத்தால் வீடு அடைதற்குரிய சுத்தாவத்தையினும் அவ்வாறே சாக்கிர முதலாக ஐந்தவத்தையினைப் பொருந்துவர். அவை உண்மை யதிகாரத்துட் கூறப்படும். (எ-று.)

சாக்கிரத்தில் நிகழும் ஐந்தவத்தைகளாவன:—

சாக்கிரத்திற் சாக்கிரம்—விடயங்களை நேரே யநுபவித்தல்

சாக்கிரத்தில் சொப்பனம—துக்க சுகங்கள் வந்த வரலாற்றை நாடி மனோவியாபாரஞ் செய்து நிற்றல்.

சாக்கிரத்திற் சுழுத்தி—சுக துக்கத்தில் மூழ்கி நிற்றல்,

சாக்கிரத்திற் றுரியம்—சுகதுக்கந் தோன்றாது பெரு மூச் செறிந்து நிற்றல்.

சாக்கிரத்தில் அதீதம்—சுகதுக்கங்களைக் கேட்ட மாத்திரையால் திடுக்கிட்டுப் பிராணவாயு சீவியாமல் மூர்ச்சித்து மயங்கி நிற்றல்.

அறிதருமென்பது இடத்தே யென்பது கொண்டு முடியும். சுத்தாவத்தையினியல்பு ஈண்டுக் கூறுதற்கோரியையில்லையாயினும், அவத்தையெனப் படுவன இவ்வளவே போலுமென மலையாதிருத்தற் பொருட்டு இவ்வாறு கூறினார். (௬௫.)

சாக்கிர முதலிய ஐந்தவத்தையினும் சிவதத்துவ மைந்தும் நின்று செலுத்து முறைமை இவ்வாறெனக் கூறுகின்றது.

**ஐந்துசாக் கிரத்தி னான்கு கனவினிற் சுழுனை மூன்று**
**வந்திடுந் துரியந் தன்னி னிரண்டொன்று துரியா தீதந்**
**தந்திடுஞ் சாக்கி ராதி யவத்தைத டானந் தோறு**
**முந்திடுங் கரணந் தன்னிற் செயறொறு முணர்ந்து கொள்ளே.**

(கொ—டு) சாக்கிராதி அவத்தைகள் சாக்கிரத்தின் ஐந்து. கனவினின் நான்கு. சுழுனை மூன்று. வந்திடுந் துரியந் தன்னின் இரண்டு. தந்திடுந் துரியாதீதம் ஒன்று. தானந் தோறும் காணந்தன்னிற் செயல் தொறும் உந்திடும் உணர்ந்து கொள்ளே.

(**போ—ரை**) மேற் கூறிப் போந்த சாக்கிராதி அவத்தைகள் ஐந்தினும் கலாதிகளைச் செலுத்தி நிற்கும் சிவதத்துவம் எவ்வாறு நிற்கு மெனின், சாக்கிரத்தில் சுத்த வித்தை, மகேசுவரம், சாதாக்கியம், சத்தி, சிவம் என்னும் ஐந்து தத்துவங்களும், சொப்பனத்தில் மகேசுவரம், சாதாக்கியம், சத்தி, சிவம் என்னும் நான்கு தத்துவங்களும், சுழுத்தியில் சாதாக்கியம், சத்தி, சிவம், என்னும் மூன்று தத்துவங்களும், துரியத்தில் சத்தி, சிவம் என்னும் இரண்டு தத்துவங்களும், துரியாதீதத்தில் சிவதத்துவம் ஒன்றும், தொழிற்படுவதான அவ்வத்தானங்கள் தோறும் கருவியால் அவ்வத்தானங்களில் விடயங்களை யறியும் செய்கை தோறும் அச்செயல் நிகழ்வதற்குக் கலாதி தத்துவங்களைச் செலுத்தி நிற்கும். இதனை நீ நுண்ணுணர்வால் உணர்ந்து கொள்வாயாக. (எ—று.)

இச் செய்யுள் சுத்ததத்துவமைந்துஞ் செலுத்து முறையில் சாக்கிர முதல் அதீதம் வரையுள்ள சகலத்தில் கீழாலவத்தைக் கோதியதெனவும், நின்மல சாக்கிரமுதல் அதீதம் வரையுள்ள சுத்தாவத்தைக் கோதியதெனவும் மலையாது, சகலத்திற் சகலமாகிய மத்தியாலவத்தைக் கோதியதென

வுணர்ந்து கொள்ளுதற் பொருட்டு அவ்வவத்தையைக் கூறிய ௯௪-வது செய்யுளில் உள்ள "காரணந்தன்னிற் செயறொறுங் கண்டு கொள்" என்பதனை இவ்விடத்தும்கூறினர். இஃதறியாதார்தத்தமக்கு வேண்டியவாறே உரைப்பர்.

ஐந்து நான்கு மூன்று இரண்டு ஒன்று என்றது செலுத்துகின்ற சிவதத்துவங்களை யென்பது, உந்திடு மென்றதனானும், * "சுத்தக் கருவிகளைந்துங்கொண்டே சொல்லவத்தையைந்துரு—சித்திக்கும் போதத்திலொன்றொன்று சென்றிடும்" என்பதனானுமறிக.

இனி, இச்செய்யுளுக்கு இவ்வாறன்றி சாக்கிரத்தில் சாக்கிரமுதலிய ஐந்தவத்தையும், சொப்பனத்தில் சொப்பன முதலிய நான்கவத்தையும், சுழுத்தியில் சுழுத்திமுதலிய மூன்றவத்தையும், துரியத்தில் துரியமுதலிய இரண்டவத்தையும், துரியாதீதத்தில் துரியாதீதமாகிய ஓரவததையும் பொருந்துமென உரைத்தலு மொன்று. இப்பொருட்கு சாக்கிரத்தின் சாக்கிராதியவத்தைகள் ஐந்தெனக்கூட்டுக. தானம்—புருவநடு, கண்டம், இருதயம், நாபி, மூலாதாரம். உந்துதல்—பொருந்துதல்.

"சாக்கிர முப்பத்தைந்து" என்பதுமுதல் இவை நான்கு செய்யுளானும் மேல் ஐந்தவத்தை என்றவற்றின் பெயரும், வகையும், இடமும், அவற்றியல்பும் இவை என்பது கூறப்பட்டது. பெயர்—சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம். வகை—சகலத்திற்கேவலம், சகலத்திற்சகலம், சகலத்திற் சுத்தம். இடம்—புருவநடு, கண்டம், இருதயம், நாபி, மூலாதாரம். இருதயம், கண்டம், நாக்கினடி, புருவநடு, பிரமரந்திரம்.

இயல்பு—கீழ் நோக்கிச் செல்லு முறையினும் மேல் நோக்கித் தோன்று முறையினும் அறியு முறைமையும், சகல சகலத்தில் விடயங்களை நேரே யறியு முறைமையும், சுத்தத்தில் விடயங்களை விட்டு யோகாவத்தையில் காட்சி முதலியவற்றையும், ஞானவத்தையில் உண்மைப் பொருளையும் உணரு முறைமையுமாம். (௯௬.)

காரிய அவத்தையாகிய கேவல, சகல, சுத்தம் என்னும் மூன்றற்கும் காரணமாக கேவல, சகல, சுத்தம் என மூன்று அவத்தையுண்டெனவும், அவற்றின் பொது வியல்பு இவையெனவும் கூறுகின்றது.

---

* சிற்றம்பல நாடிகள், கவித்துறை செ-௯எ.

**கேவல சகல சுத்த மென்றுமூன் றவத்தை யான்மா**
**மேவுவன் கேவ லந்தன் னுண்மைமெய் பொறிக ளெல்லாங்**
**காவலன் கொடுத்த போது சகலனு மலங்க ளெல்லா**
**மோவின போது சுத்த முடைய னுற் பவந் துடைத்தே.**

(கோ—டு) ஆன்மா கேவல சகல சுத்த மென்று மூன்றவத்தை மேவுவன் எனவும், சுத்தம் உடையன் மலங்களெல்லாம் ஓவினபோது உற்பவந்துடைத்தே எனவுங் கூட்டுக.

**(பொ—ரை)** மேற்கூறியவாறு நிகழும் காரிய அவத்தைகளாகிய கேவல, சகல, சுத்த மென்னும் மூன்றவத்தைகளை ஆன்மாப் பொருந்துவதற்கு, கேவலம், சகலம், சுத்தமென மூன்று காரண அவத்தையைப்பொருந்தும். அவற்றுள், கேவலமாவது, இச்சா ஞானக்கிரியைகள் சிறிதுந் தொழிற்படாது தான் மாத்திரையாய் ஆணவமலத்தோடு கூடிநிற்றல். சகலமாவது, அவ்வாறு ஆணவமலத்தோடு கூடிநின்ற ஆன்மா பின்பு தநுகாணுதிகளோடு முதல்வன் கூட்டக்கூடி இச்சா ஞானக்கிரியைகள் ஒருவாறு விளங்கி நிற்றல். சுத்தமாவது, அவ்வாறு தநுகரணுதியோடு கூடி நின்ற ஆன்மா ஆணவமுதலிய பஞ்சமலங்களையும் நீங்கும்படி செய்து அம்மலங்கள் நீங்கினமையால் பிறவியொழிந்து சிவத்தோடு கூடி இச்சா ஞானக்கிரியைகளெங்குமாய் வியாபித்து விளங்குமவதரத்தில் சுத்தமுடையனாய் நிற்றல்.

(எ-று.)

சாக்கிர முதலிய ஐந்தவத்தைகளும் சகலத்திற் சகலம், சகலத்திற் கேவலம், சகலத்திற் சுத்தம் என்னும் மூன்றவத்தையினும் தனித்தனி காரியப்படுதலால், காரிய கேவல முதலிய அம்மூன்றற்குங் காரணமாக வேறு கேவல முதலியனவுண்டெனவும் அவற்றினியல்பும் இச்செய்யுளாற் கூறப்பட்டன. காரணசகலத்தும், காரணசுத்தத்தும் ஐந்தவத்தையுண்டென்பதுபற்றிக் காரண கேவலத்தும் ஐந்தவத்தை யுண்டென்பது துணியப்படும். அன்றியும், காரண கேவலத்தில் பஞ்சகிருத்தியம் உண்டென்று கேட்கப்படுதலானும் அவ்விடத்து ஐந்தவத்தை யுண்டென்பது துணியப்படும்.

எவ்வாறெனின், மலத்தால் மறைக்கப்பட்டு அறிவு முதலியன தொழிற்பாடின்றிக் கிடக்கும் நிலை அதீதம். அந்நிலையினின்று சிறிது

எழுச்சி உண்டாதல் துரியம். எழுச்சியுண்டாகியுந் துன்பந் தோன்றா திருத்தல் சுழுத்தி. துன்பந் தோன்றுதல் சொப்பனம். துன்பத்துக்கு வருந்துதல் சாக்கிரம். இவ்வாறு கேவலத்தில் ஐந்தவத்தையுங் காண்க. கருவிகளில்லாத நிலையில் துன்பந்தோன்றுதலும், துன்பத்துக்கு வருந்து தலும் எவ்வாறு கூடுமெனின், இச்சா ஞானக் கிரியா சத்திகள் இருத்த லாற் கூடுமென்க. கருவிகளோடு கூடின நிலையில் உண்டாகின்ற வருத் தத்திற்கும் கருவிகளோடு கூடாத நிலையில் உண்டாம் வருத்தத்திற்கும் வேறுபாடு என்னையோ வெனின், கருவிகளோடு கூடின நிலையில் காரணந் தெரிந்து வருந்துதலும், கருவிகளோடு கூடாத நிலையில் காரணந் தெரி யாது வருந்துதலும் வேறுபாடாமென்க. இது எதுபோலவெனின், சிசுப் பருவத்தில் பசியினால் வருந்தும் வருத்தமும், முதிர்ந்த பருவத்தில் பசியினால் வருந்தும் வருத்தமும் போலாம். சிசு துன்பத்திற் காற்றாது வருந்துமேயன்றி அத்துன்பம் பசியினால் வந்ததென்றறியாது. பருவம் வந்தபின் துன்பமும் துன்பத்திற்குக் காரணமும் அறியப்படும். இவ் வாறே கருவிகளோடு கூடாத நிலையினையும், கூடின நிலையினையுங் கண்டு கொள்க. காரண சகலத்தில் ஐந்தவத்தை கேவல, சகல, சுத்தம் என மூன்று பிரிவாய் மேலே விரிவாய்க் கூறப்பட்டது. சுத்தத்தில் ஐந்த வத்தை முன்னர் ஏழாஞ் சூத்திர முதல் விரித்துக் கூறப்படுமாயினும், இவ்விடத்துச் சுருக்கிக் காட்டுதும். இருவினை யொப்பு மலபரி பாகம் சத்திநிபாதம் நிரம்பிய நிலை நின்மல சாக்கிரம். குரு தரிசனமாகி அவர் அருளுபதேசம் பெறல் நின்மல சொப்பனம். உபதேசத்தில் உறைத்து நின்று சாதித்தல் நின்மல சுழுத்தி. பாச நீக்கம் நின்மல துரியம். சிவப் பேறு நின்மல துரியாதீதம். இவ்வாறு ஐந்துங் காண்க.

ஆன்மா இவ்வாறு நிற்றற்கு ஏது வென்னையெனின், சார்ந்த பொரு ளின் வண்ணமாய் ஆன்மா நிற்றலாமென்க. ஆதலின், அறியாமையைச் செய்யும் மலத்தைச் சார்ந்து அறியாமையாகவும், ஏகதேசத்தைச் செய்யும் கருவியைச் சார்ந்து ஏகதேசமாகவும், வியாபகத்தைச் செய்யும் சிவத்தைச் சார்ந்து வியாபகமாகவும் நிற்குமென்க.

கேவலம் ஒன்றுமில்லாமையையும், சகலம் எல்லாமுடைமையையும், சுத்தம் அழுக்கு நீக்கத்தையும் குறிக்குமாதலால், அறிவு முதலியன பிண்ட மாய்த் தொழிற்படுதலேயன்றிப் பகுத்துத் தொழிற்படுவதற்கான கருவி கள் இல்லாத நிலையைக் கேவலமென்றும், கருவிகளுடன் கூடிய நிலை யைச் சகலமென்றும், கருவிகளும் மலமுமாகிய அழுக்கு நீங்கிய நிலையைச் சுத்தமென்றும் காரணக் குறியாய் வகுத்தவாறு அறிக.

முத்தியைக் கேவலமென்பதும் தத்துவமாகிய கருவிகளின் நீக்கம் பற்றியேயாம். முன்னைய கேவலம் அறியாமையோடு கூடிக் கருவிகளின் நீங்குதல். பின்னைய கேவலம் அறிவோடுகூடிக் கருவிகளின்நீங்குதல். ()

கேவலத்தின் சிறப்பியல்பு இதுவெனக் கூறுகின்றது.

அறிவில னமூர்த்த னித்த னராகாதி குணங்க ளோடுஞ்
செறிவில னலாதி யோடுஞ் சேர்விலன் செயல்க ளில்லான்
குறியிலன் கருத்தா வல்லன் போகத்திற் கொள்கை யில்லான்
பிறிவிலன் மலத்தி னோடும் வியாபிகே வலத்தி லான்மா.

(கொ - டு.) ஆன்மா அமூர்த்தன். கலாதியோடும் சேர்வு இலன். அராகாதி குணங்களோடும் செறிவு இலன். குறி இலன். அறிவு இலன். செயல்களில்லான். கருத்தா அல்லன். போகத்திற் கொள்கை இல்லான். நித்தன். வியாபி. கேவலத்தில் மலத்தினோடும் பிறிவு இலன்.

(பொ - ரை.) மேற்கூறிப்போந்த காரண அவத்தை மூன்றனுள் கேவல அவத்தையில் ஆன்மா எவ்வாறு நிற்குமெனின், உடம்பின்றியும், கலை முதலிய தத்துவங்களோடுகூடி அறிதலின்றியும், புத்தியின் குணமாகிய தருமம், ஞானம், வைராக்கியம், ஐஸ்வர்யம், அதர்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அனைஸ்வர்யம் ஆகிய எட்டுமின்றியும், மனமுதலியகருவிகளின்றியும், இச்சையின்றியும், அறிவின்றியும், ஒரு தொழிலுமின்றியும், தனக்கென ஒரு சுதந்திரமின்றியும், போகத்திற் கொள்கையின்றியும், சரீரத்தோற்றக் கேடுகளின்றியும், சரீரமில்லாமையால் ஏகதேசியாயின்றியும், ஆணவமலத்தோடு அம்மல மாத்திரையாய் வியாபித்து நிற்கும்.()

இச்செய்யுளில் அமூர்த்தம் என்றது உடம்பின் முன்னின்மையை. நித்தம் என்றது தோற்றக்கேடுகளின் முன்னின்மையை. வியாபகம் என்றது ஏகதேசத்தின் முன்னின்மையை. ஏனையின்மைகளும் அந்த அந்த முன்னின்மைகளைக்குறித்து நின்றனவாதலின், இவ்விலக்கணங்கள் சகலம் சுத்தம் என்னும் ஏனையவத்தைகளிற் செல்லாமையால் இவற்றுளொன்றே கூற அமையுமாயினும், மேலைச்செய்யுளில் கேவலந்தன்னுண்மை என்றதனால் இன்மை இவையென விளங்குதற்பொருட்டு இவையனைத்தும் வகுத்துக் கூறினார். பிறிவிலன் மலத்தினோடும் என்றதும் தன்னுண்மை ஆணவ

மலத்தோடு கூடி நிற்றலென்பது விளங்குதற்பொருட்டு. குறி என்பது குறித்தலென்னும் பொருள் குறித்த முதனிலைத் தொழிற்பெயராய் இச்சையை யுணர்த்தி நின்றது. அது, செயல்களில்லான் என்றதனைச் சார வைத்தலானறியப்படும். அராகாதி குணம் என்றது புத்தி குணமெட்டினையும் குறித்தது. அராகாதி குணங்களென்ற உபலக்கணத்தால் ஏனைப் போக்கிய காண்டக்கருவிகளுங் கொள்ளப்படும்.

இச்செய்யுளால் ஆன்மா ஆணவமலத்தோடு கூடிநிற்கும் தன்னுண்மை கேவலமென்பது கூறப்பட்டது. (௩௮.)

சகலத்தின் சிறப்பியல்பு இதுவெனக் கூறுகின்றது.

**உருவினைக் கொண்டு போக போக்கியத் துன்னல் செப்பல்**
**வருசெயன் மருவிச் சத்த மாதியாம் விடயந் தன்னிற்**
**புரிவதுஞ் செய்திங் கெல்லா யோனியும் புக்கு ழன்று**
**திரிதருஞ் சகல மான வவத்தையிற் சீவன் சென்றே.**

(கோ - டு.) சீவன் உருவினைக்கொண்டு போக (த்து) மருவி போக்கியத்து (மருவி) உன்னல் (மருவி) செப்பல் (மருவி) வருசெயல் மருவி சத்தம் ஆதியாம் விடயந்தன்னிற் புரிவதும் செய்து இங்கு எல்லா யோனியும் புக்கு உழன்று சகலமான அவத்தையில் சென்றே திரிதரும்.

(போ - ரை.) சகல அவத்தையில் ஆன்மா எவ்வாறு நிற்குமெனின், மேற்கூறிப்போந்த கேவல அவத்தையைப்பொருந்தி நின்ற ஆன்மா உடம்பின்மைக்கு மறுதலையாகிய உடம்பினைப்பெற்றும், போக காண்டமாகிய கலாதிதத்துவங்களோடு கூடியும், போக்கிய காண்டமாகிய தரும முதலிய புத்தி குணங்களைப் பொருந்தியும், மனமுதலிய கருவிகளைக்கூடியும், இச்சையுற்றும், வாக்குக்களால் நிகழும் அறிவுற்றும், செயல்களைப்பொருந்தியும், சத்தாதி விடயத்தில் விருப்பஞ்செய்தும், போகத்தை யநுபவித்தும், பிறப்பு இறப்புக்களில் புகுந்துதிரிந்தும், ஏகதேசியாகியும், சகலாவத்தையில் இப்பத்துக்காரியமுமுடையனாய்ச் சீவித்துநிற்கும்.()

போககாண்டமாகிய கலாதியைப்போகமென்றும், போக்கிய காண்டமாகிய புத்தியாதியைப் போக்கியமென்றுங் கூறினார். உன்னல் என்பது இவ்விடத்து விரும்புதலை யுணர்த்திநின்றது. செப்பல் என்பது செப்பப்

படுவனவாய நால்வகை வாக்குக்களையுமுணர்த்தி ஆகுபெயராய் அவ்வாக்குக்கள் காரணமாய் நிகழும் அறிவின்மேல் நின்றது. புரிவதும் என்ற உம்மையால் நுகர்வதும் என்பது வருவிக்கப்பட்டது.

சகலத்திற்கூறிய இப்பத்தும் கேவலத்தில் இல்லை என்றதற்கு மறுதலையாயவாறு கண்டுகொள்க.

இச்செய்யுளால் மேல் ௬௭-வது செய்யுளில் மெய் பொறிகளெல்லாங் காவலன் கொடுத்தபோது சகலனும் என்றது வகுத்துக் கூறப்பட்டது. ()

சுத்தத்தின் சிறப்பியல்பு இதுவெனக் கூறுகின்றது.

**இருவினைச் செயல்க ளொப்பி னீசன்றன் சத்தி தோயக்**
**குருவருள் பெற்று ஞான யோகத்தைக் குறுகி முன்னைத்**
**திரிமல மறுத்துப் பண்டைச் சிற்றறி வொழிந்து ஞானம்**
**பெருகிநா யகன்றன் பாதம் பெறுவது சுத்த மாமே.**

(கோ—டு) சுத்தம் என்பதை இருவினை என்பதன் முன்னாக வைத்து பெறுவது ஆமே எனக் கூட்டுக.

**(பொ—ரை.)** சுத்த அவத்தையில் ஆன்மா எவ்வாறு நிற்குமெனின், மேற்கூறிய சகல அவத்தையினின்ற ஆன்மா அந்நிலையை விட்டு இருவினை ஒப்பு வந்து சிவ சத்தி பதியப் பெறுதலால் குருவருள் பெற்று, ஞான யோகத்தைப் பொருந்தி, மும்மலங்களையும் நீக்கி, விடய அனுபவத்திற்கேதுவாகிய விருப்பு வெறுப்பு என்னும் பழைய வாதனையும் நீங்கி, சிவ ஞானத்தைப் பெருக்கிச் சிவபெருமான் திருவருளை யடைந்து நிற்கும். (எ - று.)

இருவினை யொப்பால் சத்தாதி விடயத்தைப் பற்றிய செயல் நீக்கமும், சத்திபதிதலால் கருவிகளின் கூட்ட நீக்கமும், குருவருள் பெறுதலால் தானுஞ் செய்தல் சாரணமாக உடம்பு நீக்கமும், ஞானயோகம் பெறுதலால் பிறப்பு இறப்பு நீக்கமும், மலம் அறுதலால் ஏக தேசத்தன்மை நீக்கமும், விருப்பு வெறுப்பு நீக்கத்தால் விடயாநுபவ நீக்கமும். சிவ ஞானப்பெருக்கால் விடய ஞான நீக்கமும் உண்டாம். விடய ஞானம் என்றதனால் விடய இச்சை செயல்களும், கருவி யென்றதனால் பாக காண்டமாகிய கலாதிகளும் நீங்கு மாறறிக.

சகலாவத்தைக்குக் கூறிய காரியம்பத்தும் நீங்குதற்கு ஏதுவாவன மாத்திரமே இச்செய்யுளிற் கூறப் புகுந்தாராதலின், சத்தி நிபாதத்திற்கு மூல

மாகிய மலபரிபாகமும், இரு வினையொப்புக்கு மூலமாகிய சிவ புண்ணிய முமென்னும் இது போன்றவற்றைக் கூறாது விட்டனர். அவையெல்லாம் பின்னர் அ-ஞ் சூத்திரத்திற் கூறப்படும். இரு வினை யொப்பு இது வென மேல் க-ம் சூ-ம். ௬௯-வது செய்யுளுரையிற் கூறியிருத்தல் காண்க.

இச் செய்யுளால் மேல் ௬௯-வது செய்யுளில் கூறிய மலங்களெல்லா மோவினபோது சுத்த முடையனும் என்றது வகுத்துக் கூறப்பட்டது. (௭0.)

மூன்றும் அதிகரணம் முடிந்தது.

நான்காஞ் சூத்திரம் முடிந்தது.

ஆகத் திருவிருத்தம் உ௱௩௰.

---

# ஐந்தாஞ் சூத்திரம்.

---

## பாச இலக்கணம்.

---

நான்காஞ் சூத்திரத்தால் அச்சூத்திரத்தை யடுத்துநின்ற மூன்றாஞ் சூத்திரத்திற் கூறிய பசுவுக்கு இலக்கணங் கூறினமையால், அம்முறைப்படி மூன்றாஞ் சூத்திரத்தை யடுத்துநின்ற இரண்டாஞ் சூத்திரத்திற் கூறப்பட்ட பாசத் திற்கு இலக்கணம் இச்சூத்திரத்தாற் கூறுகின்றார்.

பாசமாவது:— ஆணவம், கன்மம், மாயை, மாயாகாரியம், திரோ தானசத்தி என ஐவகைப்படும். அவற்றுள், திரோதானசத்தி என்பது மறைத்தலைச் செய்யுஞ்சிவசத்தி. இதனாலேயே ஏனைய நான்கு மலங்க ளுங் காரியப்படும். ஆதலால், இதனிலக்கணங் கூறவே எல்லாப் பாசங் களி னிலக்கணமுங் கூறியதாகு மென்பதுபற்றி, திரோதான சத்தியி னிலக்கணமட்டுமே இச்சூத்திரத்திற் கூறப்படுகின்றது. திரோதானசத்தி என்பது உயிருள் மறைந்து நின்று கன்மத்திற்கேற்ப அறிவிக்கும் சிவ சத்தி. பந்தமுறுத்துதலால் இச்சிவசத்தி பாசமெனப்பட்டது. பந்தநீக் கத்தில் இதுவே அருளாகும்.

ஆன்மாவானது தன்னைச் செலுத்தி உடனாய் நிற்கும் முதல்வனை அறியமாட்டாதெனச் சூத்திரப்பொருளைத் தொகுத்துக் கூறுகின்றது.

**பொறிபுலன் கரண மெல்லாம் புருடனா லறிந்தா னமாவை யறிதரா வவையே போல வான்மாக்க ளனைத்து மெங்குஞ் செறிதருஞ் சிவன்ற னாலே யறிந்திடுஞ் சிவனைக் காணு வறிதருஞ் சிவனே யெல்லா மறிந்தறி வித்து நிற்பன்.**

(கொ - கூ.) புருடனால் பொறிகரணமெல்லாம் புலன் அறிந்து ஆன்மாவை அறிதரா. அவையேபோல, எங்கும் செறிதரும் சிவன்றனாலே ஆன்மாக்கள் அனைத்தும் அறிந்திடும். சிவனைக்காணு, அறிதரும் சிவனே எல்லாம் அறிந்து அறிவித்து நிற்பன்.

(பொ - ரை.) மேலைச் சூத்திரத்துட் கூறிய ஆன்மாவினால், உடனின்று செலுத்தியறியும்படி செய்ய, இந்திரியம் அந்தக்கரணம் முதலியன தத்தம் விடயங்களிற் சென்று இஃது இன்னதென்று அளவிட்டு அறியும். அவ்வாறறிந்தும் அறிகின்ற தம்மையும், தம்மோடு உடனாய் மறைந்து நின்று செலுத்தும் அவ்வான்மாவையும் அவ்விந்திரிய அந்தக் கரணங்கள் அறியமாட்டா. அவ்வாறே எவ்விடத்தும் வியாபகமாகிய முதல்வனது சிற்சத்தியின் அம்சமாகிய திரோதான சத்தியானது உடனின்று வினைப்பயன்களையறிந்தநுபவிக்கும்படி செய்ய ஆன்மாக்களறிந்தநுபவிக்கும். அவ்வாறறிந்தநுபவித்தும் தம்மையுந் தம்மைச் செலுத்திநிற்குந் திருவருளாகிய திரோதானசத்தியினையும் ஆன்மாக்கள் அறியமாட்டாவாம். ஐம்பொறி முதலியன ஆன்மாவை அறியாவாயினும், ஆன்மா ஐம்பொறி முதலியவற்றை யறிந்து உடனிற்றல்போல, ஆன்மாக்கள் முதல்வனை யறியாவாயினும், பாசநீக்கத்தில் தன்னையறியும்படி செய்பவனாகிய அம்முதல்வன், அவ்வான்மாக்களை யறிந்தும் அவற்றிற்கு அறிவித்தும் அவற்றுடனிற்பன். (எ-று.)

சிவனே யெல்லாமறிந்தறிவித்து நிற்பனெனப் பொருட்கண் ஓதியதனை ஆன்மாவாகிய உவமையினும் ஏற்குமாறு சேர்த்துரைத்துக்கொள்க.

ஏற்குமாறு—சிவன் ஒருங்கே யறிந்து ஒருங்கே அறிவிப்பின் என்பதும், ஆன்மா ஒன்றொன்ருயறிந்து ஒன்றொன்ருயறிவிக்கும் என்பதுமாம். அறிந்தறிவித்து நிற்கும் திரோதான சத்தியினியல்பை உபசாரத்தாற் சிவன் மேலேற்றிச் சிவனே யெல்லாயறிந்தறிவித்துநிற்பன் என்ருர்.

இந்திரிய முதலான கருவிகள் சடமாதலால், எக்காலத்தும் ஆன்மாவை யறியமாட்டா. ஆன்மா சித்துப்பொருளாதலால் எக்காலத்தும் இறைவனை யறியமாட்டாதென்றல் பொருந்தாது. அன்றியும், இறைவனை யறிந்தின்புறுவதான முத்தி நிலையும இல்லையாய் முடியுமாதலால், அஞ்ஞான காலத்தில் ஆன்மாவானது இறைவனை யறியாது. அவ்வஞ்ஞானம் நீங்கிய காலத்தில் அறியும். அப்பொழுதறிதலும் இறைவன் அறிவிக்க அறியும் என்பதுணர்த்துதற்கு "அறிதருஞ்சிவ" னென்று கூறினுர். அறிதருஞ்சிவன் என்றதை அறிதலைத் தருஞ் சிவன் என விரித்துக்கொள்ளல் வேண்டும். அறி என்பது அறிதல் என்னும் பொருள்பட வந்த முதனிலைத் தொழிற் பெயர்.

இச்செய்யுள் முதனூல் ஐந்தாஞ் சூத்திரம்போல இரு கூற்றையுடையது. அவற்றுள்,

முதற்கூறு:—பொறி புலன் கரணமெல்லாம் புருடனுலறிந் தான்மாவை அறிதரா.

இரண்டாங்கூறு:—அவையேபோல ஆன்மாக்களனைத்து மெங்குஞ் செறிதருஞ் சிவன்றனுலே யறிந்திடுஞ் சிவனைக் காணு அறிதருஞ் சிவனே யெல்லாம் அறிந்தறிவித்து நிற்பன்.

இவற்றுள், முதற்கூறு உவமையாய் அதன்கணுசங்கையின்மையின் அதனை யுள்ளடக்கி நிற்கும் இரண்டாங்கூறு கூறத்தொடங்குகின்ருர். (க.)

——

# இரண்டாம் அதிகரணம்.

---

## அவையேபோல அறிந்தறிவித்து நிற்பன் என்பது.

ஆன்மாக்களைச் செலுத்துதற்குக் கன்மமேயமையும் முதல்வன் வேண்டாமென்பாரை மறுத்துரைக்கின்றது.

**இறைவனே யறிவிப் பானே லீண்டறி வெவர்க்கு மொக்குங்**
**குறைவதி கங்க டத்தங் கன்மமேற் கோமான் வேண்டா**
**முறைதரு செயற்குப் பாரு முளரிகட் கிரவியும்போ**
**லறைதரு தத்தங் கன்மத் தளவினுக் களிப்ப னாதி.**

(கோ—டு) முளரிகட்கு இரவியும் முறைதரு செயற்குப் பாரும் போல்.

**(பொ—ரை.)** ஆன்மாக்களுக்கு இறைவனே அறிவிப்பானெனில், இறைவன் நடுவு நிலைமையுடையவனாதலால், எல்லா ஆன்மாக்களுக்கும் ஒன்று போலறிவிக்கவேண்டும். நடுவு நிலைமையுடையவனாயினும் அவரவர் கன்மத்துக் கீடாக ஏற்றத்தாழ்வுகளாய் அறிவிப்பானெனின், அறிவிப்பதற்குக் கன்மமேயன்றி இறைவன் வேண்டாம். தாமரையினது விரிவிற்கு அத்தாமரையின்றொழிலே யன்றிச் சூரியனும் வேண்டப்படுதல் போலவும், உழவு முதலிய செயல்களின் பயனுக்கு அச்செயல்களேயன்றி நிலமும் வேண்டப் படுதல் போலவும், சொல்லுகின்ற அவரவர் கன்மம் பக்குவமாதலும் பயன்றருதலும் இறைவனை யின்றியமையாமையின் அக்கன்மமேயன்றி இறைவனும் வேண்டப்படும். ஆதலால், கன்மமே போது மென்றல் பொருந்தாது. (எ—று.)

குறைவதிகங்கள் கன்மத்தின் காரியமாகவும், தத்தங் கன்மம் எனக் காரணத்தைக் காரியமாக வுபசரித்தார். கன்மம் காரணம். குறைவதிகங்கள் காரியம். செயல் என்பது செயல்களின்பயனைக்குறித்தலின் ஆகுபெயர். முறைதரு செயலாவது, உழுதல், எருப்பெய்தல், வித்திடல், களைபறித்தல், நீர் கட்டுதல், காத்தல் என்றிம்முறையாற்றரப்படுஞ் செயலென்க. (உ.

கன்மத்தோடு கூடிய ஆன்மா அறிவுடைப்பொருளாதலின், அவ்வான்மாவே தன்னைச் செலுத்திக் கொள்ளும் இறைவன் வேண்டாமென்பாரை மறுத்துரைக்கின்றது.

**அறிந்திடு மான்மா வொன்றை யொன்றினா லறித லானு**
**மறிந்தவை மறத்த லானு மறிவிக்க வறித லானு**
**மறிந்திடுந் தன்னை யுந்தா னறியாமை யானுந் தானே**
**யறிந்திடு மறிவ னன்று மறிவிக்க வறிவ னன்றே.**

(பொ—ரை) மேற் கூறியவாறு கன்மத்தோடுங் கூடிய ஆன்மா அறிவுடைப் பொருளாதலின், அவ்வான்மாவே கன்மத்தின் பலனையறிந் தெடுத்துக் கொள்ளுமெனின், அறிந்து வரும் இவ்வான்மா அறிவுடைப் பொருளாயினும், ஒவ்வொரு விடயங்களை ஒவ்வொரு இந்திரியங்களாலறிதலேயன்றி, இந்திரியத்தின் துணையில்லாமல் தானே ஒரு விடயத்தையும் அறியாது. அவ்வாறு இந்திரியத்தைக் கொண்டு விடயத்தையறிதலே ஆன்மாவின் இயல் பென்பையாயின், முன் அறிந்த விடயத்தைப் பின்னொரு விடயத்தையறியுங்கால் மறவாதிருக்கவேண்டும். மறத்தல் காணப்படுகின்றது. அறிந்த விடயத்தைப் பின்னறிய வேண்டாமையால் மறக்கலாயிற் றென்பையாயின், மறந்து பிறி தொன்றை யறிந்து கொண்டிருக்குங்கால் மறந்த விடயத்தை மீண்டு ஒருவன் அறிவிக்க அதில் அறிவு செல்லுகின்றது. அவ்வாறாயினும் யாதானு மொன்றை யறிந்து கொண்டிருப்பதனால் அறிதலில் வேறுபாடில்லை யென்பையாயின், அறிகின்ற தன்னை யறியாமையினால் அறிதலில் வேறுபாடில்லை யென்பது எவ்வாறு கூடும்? ஆதலால், ஆன்மாவானது முதல்வன் போலத்தானே யறியும் சுதந்திர அறிவின்றி இறைவன் அறிவிக்க அறியுந்தன்மையுடையது. (எ—று.)

இச்செய்யுளால் ஆன்மசந்நிதியில் கரணங்களறியு மென்னும் சாங்கிய மதம், ஒன்றை யொன்றினா லான்மா வறிதலானும் என்றதனால் பரிகரித்து முதற்கூறுவலியுறுத்தப்பட்டது மாயிற்று. விடயத்தை இந்திரியத்தால் ஆன்மா அறியுமெனக் கூறியதனால், இந்திரியம் ஆன்மாவினால் விடயத்தை

யறிந்து தன்னையும் ஆன்மாவையும் அறியாதென்ற முதற் கூறுவலியுறுத்தியவாறு அறிக. இன்னின்ன விடயத்தை இன்னின்ன இந்திரியத்தால் அறியுமென்று வெளிப்படக்கூறுது ஒன்றையொன்றினு லெனப் பொதுப்படக் கூறியதும் ஐந்தையுங் கொண்டறிவது ஆன்மா வென்பது வலியுறுத்தற் பொருட்டு. (ரு.)

மாயேயமாகியதத்துவங்களே ஆன்மாவிற்கு அறிதலையுண்டுபண்ணும்; இறைவன் வேண்டா மென்பாரை மறுத்துரைக்கின்றது.

கருவியாற் பொருளாற் காட்டாற் காலத்தாற் கருமந்தன்னு
லுருவினு லளவா னூலா லொருவரா லுணர்த்த லாலு
மருவனு முண்மை தன்னி லறியாது நிற்ற லாலு
மொருவனே யெல்லாத் தாலு முணர்த்துவ னருளி னுலே.

(கொ—டு) உண்மை தன்னில் அருவனும் அறியாது நிற்றலானும், எல்லாத்தானும் அருளினுலே உணர்த்துவன் ஒருவனே.

(பொ—ரை) ஆன்மா அறிதலைச் செய்வதற்கு மாயாகாரியங்களாகிய தத்துவங்களே யமையும், இறைவன் வேண்டு மென்றல் கூடாதெனின், ஆன்மாவினுற் செலுத்தப்படு மான்மதத்துவமும், புறக்கருவிகளாகிய தாத்துவிகமும், அறிவு முதலியவற்றை விளக்குவனவாகிய கலை, வித்தை முதலிய தத்துவங்களும், கன்மபலனை வரையறை செய்யும் காலம், நியதி முதலிய தத்துவங்களும், தூல வுடம்பும், பிரத்தியட்சாதி பிரமாணங்களும், நால்கட்குக் காரணமாகிய நால்வகை வாக்குக்களும் பொருந்தும்படி ஒருவன் கூட்டி உணர்த்த உயிர் உணரும். அவைகளைக் கூட்டாத அநாதி கேவலத்தில் உயிர் மலத்துடன் கூடி அருவனுய் உணராது நிற்கும். அம்மாயா காரியங்கள் அறிதற்குத் துணையாயினும் சடமாதலின் தாமே ஆன்மாவுடன்கூடாது. அவையில்லாதகேவலத்தில் அறிவு நிகழாமையின் உயிர் அவற்றை யறிந்து எடுத்துக்கொள்ளாது. ஆதலின், அவையனைத்தையும் ஆன்மாவுடன் கூட்டி அருளாலறிவிப்பதற்கு ஒரு இறைவன் வேண்டப்படுமாதலால் இறைவனையின்றி மாயாகாரியங்களால் அறிதல்கூடாது.()

கருவி—உயிரால் செலுத்தப்படும் ஆன்ம தத்துவம். பொருள்—தாத்துவிகம். காட்டு—உயிரினறிவிச்சை செயல்களை விளக்குவனவாகிய கலை முதலியன. காலம்—கன்மத்தை முந்தாது பிந்தாது வரையறுத்துச்செலுத்துங் காலதத்துவம். கருமம்—கன்மத்தை ஏறாது குறையாது நிறுத்தும் நியதிதத்துவம். உரு—உடம்பு. அளவை—பிரமாணம். நூல்—நூல்கட்குக் காரணமாகிய நால்வகை வாக்கு. ஒரு விடயத்தை யறிதற்கண் இவற்று ளொன்றையின்றியும் அமையாமை கண்டுகொள்க. கருமம், அதனை நிறுத்தும் நியதிதத்துவத்தைக் குறித்தலானும், நூல், அதற்குக் காரணமாகிய வாக்கைக் குறித்தலானும் ஆகுபெயர். அவ்விரண்டினையும் இயற் பெயர்ப் பொருளாகவைத் துரைப்பாருமுளர். தன்னுண்மை என்பது உண்மை எனத் தலைக் குறைந்து நின்றது. தன்னுண்மையில் ஒன்று மிலனாதல்பற்றி அருவன் என்றார்.

"இறைவனே" என்ற செய்யுளால், அறிவித்தற்குக் கன்மமே அமையும் என்னும் ஆருகதர் மதமும், "அறிந்திடு மான்மா" என்ற செய்யுளால், உயிரே அமையுமென்னும் மீமாஞ்சககர் மதமும், இச்செய்யுளால் மாயையமே அமையுமென்னுஞ் சாங்கியர்மதமும் பரிகரித்து, பதிபசு பாசமென்னு மூன்றனுள், பசுவும் பாசமும் நீக்கப்படவே, பாரிசேட அளவையால் முதற்செய்யுளிற் கூறியவாறு அறிதருஞ் சிவனே யெல்லா மறிந் தறிவித்து நிற்றல் வலியுறுத்தப்பட்டது. (ச.)

இறைவன், பிறர் அறிவிக்க வேண்டாது தானே ஆன்மாக்களின் பொருட்டுச் சூக்குமம் தூலம் அதிசூக்குமமென்னும் மூவகையான ஐந்தொழிலைச் செய்வனெனக் கூறுகின்றது.

**கருவியும் பொருளுங் காட்டுங் காலமுங் கருமந் தானு**
**முருவமு மளவு நூலு மொருவரு முணர்த்த லின்றி**
**யருவனு யுலக மெல்லா மறிந்தவை யாக்கி வேறு**
**யொருவனே யுயிர்கட் கெல்லா முயிருமா யுணர்த்தி நிற்பன்.**

(கோ - ரு.) ஒருவனே அருவனாய் வேறாய் உலகமெல்லாம் அறிந்து அவை ஆக்கி உயிர்கட்கெல்லாம் உயிருமாய் உணர்த்தி நிற்பன்.

**(பொ - ரை.)** மேற்கூறியவாறு சித்துப் பொருளாகிய ஆன்மா தன்னின் வேறாகிய இறைவனால் தத்துவ முதலாகியவற்றைக் கூட்டி அறிவிக்க அறிதல்போல, சித்துப் பொருளாகிய

இறைவனும் அவ்வாறே வேறொருவனாலறிவிக்க அறிவனென்று கூறலாகாதோவெனின், அவ்வாறாயின் அவனுக்கு அறிவிக்க மற்றொருவனும் அவ்வாறே மேலுஞ்சென்று வரம்பின்றியோடுத லென்னுங் குற்றத்திற்கிடனாகும். ஆதலால் தத்துவ முதலியனவும், வேறு அறிவுடைப் பொருளும், அறிவிக்க வேண்டாது இறைவன் தானே முதல்வனாய் உயிர்களின் பொருட்டுக் கேவலாவத்தையில் அறிதல் வகையில் சூக்கும ஐந்தொழிலையும், சகலாவத்தையில் விடயத்தைத் தோற்றுவிக்கு முறையில் சிருட்டி முதலிய தூல ஐந்தொழிலையும், அச்சகலாவத்தையினுள்ளும் சாக்கிரத்தில் இன்பத்துன்பப் பலனை ஊட்டுவிக்கு முறையில் அதி சூக்கும ஐந்தொழிலையுஞ் செய்து நிற்பன். (எ - று)

உலகெல்லா மறிந்தென்றது கேவலத்தில் சூக்கும ஐந்தொழில் செய்தலைக் குறித்தது. ஆக்கி எனவே இனம்பற்றி ஏனை நான்கு தொழில்களும் உடன் கொள்ளப்படும். அவ்வைந்தும் தூல ஐந்தொழில். உணர்த்தி நிற்பன் என்றது சாக்கிராதி அவத்தைக்குரிய இலாடத்தானத்தே நின்று செய்யப்படுவனவாய் உயிர்கட்கு அறிவிப்பதாகிய இவ்விடத் தெடுத்துக் கொண்ட அதிசூக்கும ஐந்தொழிலைக் குறித்தது.

சூக்கும ஐந்தொழிலாவது:—சர்வ சங்காரத்தில் மல பரிபாக தாரதம்மியத்திற்குத் தக்கபடி அறிவிக்கத் தக்கவர்களை அறிவித்தல் அநுக்கிரகம். மறைக்கத் தக்கவர்களை மறைத்தல் திரோபவம். ஆன்மாக்களின் சஞ்சித கன்மங்களைப் பக்குவப்படுத்தல் சங்காரம். மாயா காரியங்களை வெளிப்படத் தகுந்தவைகளாகச் செய்தல் திதி. தோன்றுதற்குரிய சித்துப் பொருள் சடப் பொருள்களைப் பார்த்துக்கொண் டிருத்தல் சிருட்டி. இது உயிர்களின் பொருட்டு இறைவன்றன்மாட்டு நிகழ்வது.

தூல ஐந்தொழிலாவது:—தநுகரண புவன போகங்களைத் தோற்றுவித்தல் சிருட்டி. அவற்றை நிலைப்படுத்தல் திதி. அவற்றை அழித்தல் சங்காரம். அவற்றுள் அநுபவிக்க வேண்டாதனவற்றை மறைத்து அநுபவிக்க வேண்டியவற்றில் அழுத்துதல் திரோபவம். அநுபவிக்கவேண்டியவற்றைத் தோற்றுவித்தலும் முத்தி தருதலும் அநுக்கிரகம். இது உயிர்களின் பொருட்டு உயிரின் மாட்டும் உடல் உலகமாகிய பாசத்தின்மாட்டும் நிகழ்வது. திரோபவம் அநுக்கிரகமிரண்டும் உயிரின் மாட்டும் ஏனைய பாசத்தின்மாட்டும் நிகழும்.

அதிசூக்கும ஐந்தொழிலாவது:—ஆன்மாவிற்கு அறிவித்தல் சிருட்டி. அறிந்தவற்றுள் அழுத்துதல் திதி. முன்னறிந்தவற்றினின்றும் பிரித்தல் சங்காரம். ஒன்றனை யறியவேண்டுங்கால் பிறிதொன்றனை யறியவொட்டாது மறைத்தல் திரோபவம். அறிந்தவற்றை யநுபவிக்கச் செய்தல் அநுக்கிரகம். இது உயிரின்மாட்டு நிகழ்வது.

இம்மூவகையான ஐந்தொழில்களுள், சூக்கும ஐந்தொழில் அநாதி பெத்த சித்துருவின் பொருட்டு என முதற் சூத்திரத்தானும், தூல ஐந்தொழில் உயிர்கள் கன்மத்தானேயி னமர்ந்து செல்லத் தலைவனுயென இரண்டாஞ் சூத்திரத்தானும் சங்கை யுத்தரங்களோடு கூறிவிட்டமையால் இச்சூத்திரத்துள் அதிசூக்கும ஐந்தொழிற்களுண்டாம் சங்கை யுத்தரங்களை விரித்துக் கூறுகின்றார். அவ்விரு தொழில்களும் முதல்வன் றொழிலாதல் போல, இவ்வதிசூக்கும ஐந்தொழிலும் முதல்வன் றொழிலேயாமென் றுணர்த்தவேண்டி அவற்றையும் உடன் கூறினார். உயிருக்கு இறைவனறிவிப்பதுபோல இறைவனுக் கறிவிக்க ஒருவன் வேண்டுமெனில் அவ்வாறே மேலுஞ் சென்று வரம்பின்றியோடு மாதலின் அக்குற்றம் நிகழாதவாறு ஒருவரு முணர்த்தலின்றி யென்றார். (௫.)

உயிருக்கு இறைவன் அறிவித்தலால் அவ்விறைவன் உயிர் போலும் பந்தமடையான் எனக் கூறுகின்றது.

இறைவன்றன் சந்நிதிக்க ணுலகின்றன் சேட்டை யென்னு
மறைகளு மறந்தாய் மாயை மருவிடான் சிவன வன்க
ணுறைதரா தசேத னத்தா லுருவுடை யுயிர்கட் கெல்லா
நிறைபரன் சந்நி திக்க ணீடுணர் வுதிக்கு மன்றே.

(கோ - ௬.) எல்லாம் நிறைபரன் சந்நிதிக்கண் உருவுடை உயிர்கட்கு நீடு உணர்வு உதிக்கும். அன்றே. அசேதனத்தால் மாயைமருவிடான். இறைவன்றன் சந்நிதிக்கண் உலகின்றன் சேட்டை என்னும் மறைகளும் மறந்தாய். சிவனவன்கண் உறைதராது.

(பொ - ரை.) கருவி முதலியன விடயங்களை அறிதலால் வரும் பயன் அக்கருவிகளுக்கு அறிவித்து நிற்கும் உயிர்க்காயவாறு போல, உயிர் அறிதலால் வரும் பயன் அவ்வுயிருக்கு அறிவித்து நிற்கும் இறைவனுக்காதல்வேண்டும். வேண்டவே, இறைவனும் பந்த முறுவனெனப்பட்டு வழுவாம். ஆதலால், கருவி

முதலியவற்றிற்கு உயிர் அறிவிப்பதுபோல உயிர்க்கு இறைவனறிவிப்பனென்றல் பொருந்தாதெனின், பொருந்துமாறு கூறுதும். கருவி முதலியன உயிரின் சங்கற்பத்தால் உணரும். உயிர் இறைவன் சங்கற்பமின்றி எல்லாவற்றினும் நிறைந்துநின்ற அவன் சந்நிதி மாத்திரையால் உணரும். உயிர் வெவ்வேறு விதமாய் உணர்தற்கு வினைக்கீடான வுடம்பினை யுடையதாய் நிற்கும். இறைவன் அவ்வாறு உணர்தலும், வினையும் வினைப்பயனுகிய உடம்புடன் கூடுதலும் இன்றி நிற்பன். அன்றியும், உயிருக்குப் பிரபஞ்சம் சுட்டியறியப்படும். அகண்டாகாரமாய் நிற்கும் இறைவனுக்குச் சடமாகிய உலகம் சுட்டி யறியப்படமாட்டாது. ஆகவே சடமாகிய பிரபஞ்சத்தையும், சுதந்திர அறிவில்லாத உயிரையும் இறைவன் சந்நிதி கூட்டுவிக்குமென்ற ஆகமப் பிரமாணத்தையு மறந்து பிணங்குகின்ற அறிவில்லாதவனே! உயிருக்கும் இறைவனுக்குங்காட்டிய வேற்றுமையால் பிரபஞ்சத் தோற்றத்தையும், சங்கற்பத்தையும், உடம்பையுமுடைய உயிர்க்கே அறிதற்பயனன்றி அம்மூன்று மில்லாத இறைவனுக்கு அறிதற் பயனில்லை. (எ-று.)

இறைவனுக்குப் பிரபஞ்சத் தோற்றமும் உடம்பும் இல்லை என்றது ஒக்கும். சங்கற்பம் இன்றிச் சந்நிதி மாத்திரையால் உயிரும் உடலுங் கூடுமாயின், கேவலத்திலும் இறைவன் சந்நிதிக்குக் கேடில்லையாதலால், அவ்விடத்துக் கூடவேண்டுமன்றோ? கூடாமையானும், சிவனே யெல்லாமறிந்தறிவித்து நிற்பனென மேல் இச்சூத்திரம் முதற் செய்யுளிற் கூறுதலானும் சந்நிதி மாத்திரை யென்றல் எவ்வாறு பொருந்துமெனின், சந்நிதி என்றது நேரான எதிர்முகமாதலைக் குறித்ததன்று. இறைவனோடு பிரிப்பின்றி நிற்குந் திருவருளைக்குறித்ததாம். ஆகவே சந்நிதி மாத்திரையாலென்றது திருவருளால் என்றபடியாம். அத்திருவருளுக்குச் சங்கற்பமுண்டோ இல்லையோ? இல்லையெனின் சந்நிதி மாத்திரைக்கு மேற்கூறிய குற்றமுண்டாம். உண்டெனின் உயிர்போலப் பந்தத்தைப் பொருந்தும் ஆதலால் உண்மையாதெனின், திருவருளுக்குச் சங்கற்பமுண்டு. அச்சங்கற்பம் தன் பொருட்டன்று; உயிர்களின் பொருட்டாம். உயிர்களின் சங்கற்பம் இந்திரியத்தின் பொருட்டன்று; தன் பொருட்டேயாம். ஆதலால், உயிர் உணர்தற்பயன் உயிர்க்கா மாறுபோல இறைவன் உணர்தற்

பயன் இறைவனுக்காகாமையறிக. சந்நிதி யென்பதற்குத் திருவருட் சங்கற்பம் என்பதே முடிவான பொருளாமென்பதை இந்நூல் முதற் சூத்திரம் ௪௬வது செய்யுளில் "சிவனவன்றன் சந்நிதிதன்னினின்றே" என்பதற்கு "சிவசத்திசங்கற்ப ரூப சந்நிதியினின்றும்" எனவும், சிவஞானபோதச் சிற்றுரை ஐந்தாஞ்சூத்திரம் உம் அதிகரணத்து முதல் வெண்பா உரையில் "சிவசத்தி அவ்வக்காரியங்களின் உன்முகமாதலாகிய சங்கற்பமே ஈண்டுச் சந்நிதி எனப்படும்" எனவும் மாதவச் சிவஞானயோகிகள் அருளியவாற்றானறிக. திருவருட் சங்கற்பத்திற்கு எல்லாம் எதிர்முகமாதலின், அது சந்நிதியாதல் பொருந்துமாறு காண்க.

மறந்தாய் என்பது மறந்தவனே என்னும் பொருள் குறித்த விளியுருபேற்ற பெயர். மாயை என்பது மாயாகாரியமாகிய உடலையும், உணர்வு என்பது உணர்வின் பயனையுங் குறித்தலின் ஆகுபெயர். உயிர்கட்கு என்றவிடத்து இறைவனைப் பிரிக்கும் பிரி நிலை ஏகாரம் விரித்துரைக்க. உயிராலறியும் ஐம்பொறியின் பயன் உயிர்க்காதல் போலன்றி, இறைவனால் அறியும் அறிதற்பயன் உயிர்க்கே யாதற்கு ஏதுக் கூறவேண்டி உருவுடை உயிர் என உயிரை விசேடித்தார். உயிர்க்கு உருவுடைமையின் உருவருதற்கான கன்மத்திற்கேற்றவாறு உணர்தற் பயன் உயிர்க்கே யாயினமை காண்க. சந்நிதிக்கணீடுணர்வுதிக்குமென்றதும் இறைவனு லுணர்தற் பயன் உயிர்க்கே யாமென்பதற்கு ஏதுவாகும்! * "வினையாற் கண்டறிந்து நிற்குங்கா—ணண்ணுன் சிவனசத்தையின்று" என்றார் முதனூலாசிரியரும். அன்றே-அசை.

இச்செய்யுளால், உயிருக் கறிவித்தல்பற்றி இறைவனுக்குப் பந்தமின்மை கூறப்பட்டது. (௬.)

இறைவன் உயிர்க்கறிவித்தலால் விகார மெய்தானெனக் கூறுகின்றது.

உலகமே யுருவ மாக யோனிக ளுறுப்ப தாக
விலகுபே ரிச்சா ஞானக் கிரியையுட் கரண மாக
வலகிலா வுயிர்ப்பு லன்கட் கறிவினை யாக்கி யைந்து
நலமிகு தொழில்க ளோடு நாடக நடிப்ப னுதன்.

(கோ—௫.) நாதன் உலகமே உருவமாக யோனிகளுறுப்பதாக இலகு பேரிச்சா ஞானக் கிரியையுட் கரணமாக அலகு இலா உயிர்கட்குப் புலன் அறிவினை ஆக்கி நலம் மிகு தொழில்கள் ஐந்தோடும் நாடகம் நடிப்பன்.

* சிவஞானபோதம், ஐந்தாஞ் சூத்திரம் செ-௫.

(போ—ரை.) இறைவன் உயிர்க்கு அறிவிக்குங்கால் எவ்வாறு நின்று அறிவிப்பனெனின். ஆன்மா உடம்பு முதலியவற்றைக் கொண்டு நின்றுணருமாறு போல, இறைவனும் இருநூற்றிருபத்து நாலு புவனங்கள் திருமேனியாகவும், எண்பத்து நான்கு நூறுயிர குறி பேதங்கள் அவயவங்களாகவும், மிக்கவிளக்கமுடைய இச்சா ஞானக்கிரியைகள் உட்கரணமாகவும் கொண்டு எண்ணிறந்த உயிர்களிடத்து அறிவிற் கறிவாய் நின்றுணர்த்துவன். அவ்வாறுணர்த்துதலாகிய நலம் மிகுந்த அதி சூக்கும ஐந்தொழிலும் மேற்கூறிய திருமேனி முதலிய கருவிகளின் துணையைக் கொண்டன்றிச் சங்கற்ப மாத்திரையாகவே நாடகமாகச் செய்தருளுவன். (எ—று.)

உயிரானது தன்னின் வேறான பொருளைத் தொழிற் படுத்துங்கால் கருவிகரணங்களோடுகூடித் தொழிற்படுத்தும். அதனால் விகாரத்தையடையும். தன்னுடலைத் தொழிற்படுத்தற்குச் சங்கற்பமே போதும். அதனால் விகாரமெய்தாது. அது போல, இறைவனும் தனது திருமேனியாய் விளங்கும் உலகத்தைச் சங்கற்ப மாத்திரையால் தொழிற்படுத்துதல்பற்றி விகாரமெய்தானென்றறிந்து கொள்க. புலன் என்றது புலன்களையறியும் அறிவைக் குறித்தலின் ஆகுபெயர். சங்கற்ப மாத்திரையாற் செய்வன் என்பது தோன்ற நாடக நடிப்பன் என்றார். இச்செய்யுளிற் கூறப்பட்ட ஐந்தொழில் மத்தியாலவத்தையாகிய சாக்கிரத்தில் அறிவித்தற்கட்படும் அதி சூக்கும ஐந்தொழில் என்க.

திருமேனியாகவும் அவயவங்களாகவும் புவனத்தையுங் குறிபேதத்தையும் கூறியதனால் இறைவன் உயிர்க்கு உயிராய் நின்று உணர்த்துதல் மட்டுமன்றி அவ்வுயிராலுணரப்படும் பொருள்களினும் நிறைந்து நின்று அப்பொருள்களை விளங்கும்படி செய்கின்றானென்பதறிக. அவ்வாறு பொருள்களில் நிறைந்து நிற்கவில்லையாயின் பொருள்கள் விளங்கமாட்டாவாம். உயிர்க்கறிவித்தலால் பயனுமின்று. இவ்வாறு நின்று உணர்த்துவதும் சங்கற்பமாத்திரை என்றதனால் கரணத்தோடு கூடித் தொழிற் செய்யும் உயிர் விகாரமெய்துதல் போல் இறைவன் விகாரமெய்தானென்பது குறிப்பாலுணரக் கிடந்தது. விகாரம்—வேற்றுமைப்படுதல். (எ.)

இறைவன் உயிர்க்கு அறிவித்தற் கட்படும் அதி சூக்கும ஐந்தொழிற்குப்பயன் ஏகதேச அறிவும், வியாபக அறிவும் நிகழ்ந்து

அவற்றால் போக மோட்சங்களை உயிர் அடைதலாமெனக் கூறுகின்றது.

தெரிந்துகொண் டொரோ வொன்றாகச் சென்றைந்து புலனும் பற்றிப்
புரிந்திடு முணர்வி னோடும் போகமுங் கொடுத்தி யோனி
திரிந்திடு மதுவுஞ் செய்து செய்திகண் டுயிர்கட் கெல்லாம்
விரிந்திடு மறிவுங் காட்டி வீட்டையு மளிப்பன் மேலோன்.

(கொ—டு) மேலோன் உயிர்கட் கெல்லாம் ஐந்தும் பற்றிப் புலன் ஒரோவொன்றாகத் தெரிந்து கொண்டு சென்று உணர்வினோடும் புரிந்திடும் போகமுங் கொடுத்து, யோனிதிரிந்திடுமதுவுஞ் செய்து, செய்தி கண்டு விரிந்திடும் அறிவுங்காட்டி வீட்டையும் அளிப்பன்.

(பொ—ரை.) மேற்கூறிய அதி சூக்கும ஐந்தொழிலாகிய அறிவித்தல் நலமிகுந்த தொழிலாமாறு எவ்வாறெனின், ஆன்மாவிற்கு நலமாவது போக மோட்சமென இருதிறப்படும். இறைவன், அறிவித்தலாகிய தொழிலால் ஆன்மாவிற்கு ஐம் பொறிவழியாக விடயங்களை அறிவித்து, அவ்வாறு அறிவித்தலால் ஏகதேச அறிவை நிகழச் செய்து, உலக போகத்தைக்கூட்டி, அப்போகாநுபவத்தினால் பலபிறவிகளை எய்தும் படிக்கும் அதனால் வெறுப்புத் தோன்றும் படிக்குஞ் செய்து, பருவம் முதிர்ந்தவிடத்து வியாபக அறிவை விளக்கி அவ்வறிவுக்குப் பயனாகிய பரபோகமாகிய பேரின்பத்தைக் கொடுத்தருள்வன். ஆதலால், நலமிகுந்த தொழிலாயிற்று. (எ—று.)

ஏகதேச அறிவு நிகழ்ந்தன்றிச் சிறு போக நுகர்ச்சி செல்லாமையும், வியாபக அறிவுநிகழ்ந்தன்றிப் பர போகநுகர்ச்சி செல்லாமையும் உணர்த்த வேண்டி "புரிந்திடு முணர்வினோடு போகமுங்கொடுத்து" என்றும் "விரிந்திடு மறிவுங்காட்டி வீட்டையு மளிப்பன்" என்றுங்கூறினார்.

இச் செய்யுளால், தூல ஐந்தொழில்களுள் திரோதானத்தின் கண் அடங்குவதாகிய அதிசூக்கும ஐந்தொழிற்குப்பயன் போக மோட்சம் எனக் கூறப்பட்டது. (அ.)

அவ்வைந்தொழிலால் இறைவனுக்கு யாதொருபயனுமின்றெனவும், அருட் பெருக்கால் அவ்வாறு செய்தல் இயல்பே யாமெனவும் கூறுகின்றது.

அருளது சத்தி யாகு மரன்றனக் கருளை யின்றித்
தெருள் சிவ மில்லை யந்தச் சிவமின்றிச் சத்தி யில்லை
மருளினை யருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன் கண்கட்
கிருளினை யொளியா லோட்டு மிரவியைப் போலவீசன்.

(பொ-ரு.) அருளது அரன்றனக்குச் சத்தியாகும். அருளையின்றித் தெருள் சிவமில்லை. அந்தச் சிவமின்றிச் சத்தியில்லை. கண்கட்கு இருளினை ஒளியால் ஓட்டும் இரவியைப்போல ஈசன் மன்னுயிர்க்கு மருளினை அருளால் வாட்டி அளிப்பன்.

(போ—ரை.) மேற் கூறியவாறு ஆன்மாவின் பொருட்டு இறைவன் செய்யும் அறிவித்தலாகிய ஐந்தொழிலால் அவ்விறைவனுக்கு ஆகக்கடவது என்னையோவெனின், ஆன்மாக்கட்கு மேலைச்செய்யுளிற் கூறியவாறு போகங்கொடுத்து, அறிவு காட்டி, வீட்டையளிப்பதாகிய அக்கருணையும் இறைவனுக்கு இயற்கைக் குணமெனப்படுஞ் சத்தியாம். அவ்வருட் குணமாகிய சத்தியையின்றிச் சிவமில்லை அச்சிவத்தை விட்டுச் சத்தி நீங்குதலில்லை. ஆதலின், உலகத்துப் புற இருளினைக் கிரணத்தால் ஓட்டிக்கண்களுக்குப் பிரகாசத்தைச் செய்கின்ற ஆதித்தன் போல, அச்சத்தியானது அருட்குணமாக இறைவன் அவ்வருளால் உயிர்கட்குமயக்கத்தினை நீக்கி அநுக்கிரகஞ் செய்வன். ஆதித்தனுக்கு இருளை ஓட்டுவது இயற்கையாய், ஓட்டுவதனால் ஆகக்கடவதோர் பயனுமின்றுதல் போல, இறைவனுக்கு அருட்குணம் மேம்படுதல் இயற்கையாய், அதனாலாகக் கடவதோர் பயனில்லை. (எ—று.)

இச் செய்யுளால், அவ்வருள் இறைவனுக்கு அணிகலமாதல் கூறப்பட்டது. (௬௰)

இரண்டாம் அதிகாரம் முடிந்தது.

ஐந்தாஞ் சூத்திரம் முடிந்தது.

ஆகத்திரு விருத்தம் உ௱௬.

# ஆறாஞ் சூத்திரம்.



## பதி யிலக்கணம்.

*மேல் அடுத்துநின்ற இரண்டு சூத்திரங்களால் பசு பாசங்களுக்கு இலக்கணங் கூறினமையால், இலக்கணங்கூற வேண்டியதாய் எஞ்சிநின்ற பதிப்பொருளுக்கு இலக்கணம் இச்சூத்திரத் தாற் கூறுகின்றார்.*

சிவம் அறியப்படும் பொருளாகவும் அறியப்படாத பொருளாகவுமின்றிச் சித்துச் சத்தாய் நிற்குமெனச் சூத்திரப் பொருளைத் தொகுத்துக் கூறுகின்றது.

**அறிவுறும் பொருளோ வீச னறிவுறா தவனோ வென்னி**
**னறிபொரு ளசித்த சத்தா மறியாத தின்றா மெங்குஞ்**
**செறிசிவ மிரண்டு மின்றிச் சித்தொடு சத்தாய் நிற்கு**
**நெறிதரு சத்தின் முன்ன ரசத்தெலா நின்றி டாவே.**

(கோ - டு.) ஈசன் அறிவுறும் பொருளோ அறிவுறாதவனோ என்னின், அறிபொருள் அசித்து அசத்தாம். அறியாதது இன்றாம். நெறி தரு சத்தின் முன்னர் அசத்தெலாம் நின்றிடா. (ஆகலான்) எங்கும் செறி சிவம் இரண்டும் இன்றிச் சித்தொடு சத்தாய் நிற்கும்.

(போ - ரை.) மேலைச் சூத்திரத்துட் கூறியவாறு ஆன்மாக்கட்கு அறிவித்தலைச் செய்யும் சிவபிரான், மனத்தாற் கருதிக் கண்ணாலறியப்படும் பொருளோ? எவ்வகையானும் அறியப்படாத பொருளோ? எனின், கருதிக் கண்ணாலறியப்படும் பொருளாயின், அவ்வாறு அறியப்படும் உலகப் பொருள்போல அறிவில்லாததாய் அழிந்துபோவதுமாகும். அறியப்படாத பொருளென்று சொல்லில் சூனியமெனப்படும். அன்றியும், இறைவனை யறிதல் முத்தியென்றலும் வீணாகும். ஆதலால், கண்ணாலறியப்படாததாய் மனத்தாற்கருதி யறியப்படும் பொருளென்று கூறலாமோவெனின், நெறியாகிய சிவஞானத்தால்

விளங்கப்படும் சிவபிரான் முன்னர்ச் சடமாகிய மனமுதலிய கரணங்கள் முனைத்துநிற்கும் வலிமையில்லாதனவாய் நீங்குந்தன்மையுடையனவாதலின் அத்தகைய மனத்தால் அறியப்படும் என்றலும் பொருந்தாது. இவ்வாறாயின் உண்மைதான் யாதோவெனின், எவ்விடத்தும் வியாபகமாகிய சிவம், கருவி கரணங்களா லறியப்படாததாய், எவ்வாற்றாலும் அறியப்படாத தல்லாததாய்ச் சிவஞானத்தா லறியப்படுஞ் சித்துச் சத்தாய் நிற்கும். (எ-று.)

ஈசன் என்பது வினவுவோர் கூற்றும் சிவம் என்பது விடை கூறுவோர் கூற்றுமாய் நின்று வேறு வேறு முடிபு கொள்ளுதலால் திணைவழுவின்மை யுணர்க. ஈசன்—உயர்திணை. சிவம்—அஃறிணை.

அசத்தெனவே அசித்தாலு மடங்குமாயினும், அசத்தென்பது சூனியமன்றென விளங்குதற் பொருட்டு அசித்தும் வேறு கூறினர். சித்தெனவே சத்தாய் நிற்குமென்பதும் பெறப்படுமாயினும், எக்காலத்தும் ஒரு தன்மையான சித்தென்பது விளங்குதற்பொருட்டுச் சத்தென்பதும் வேறு கூறினர். இவ்வாறன்றிச் சிற்சத்து, சிற்சடசத்து, சடசத்து என்னும் சத்து மூன்றனுள் சடசத்தாய பாசத்தையும், சிற்சடசத்தாகிய உயிரையும் நீக்குதற்குச் சித்தொடு சத்தாய் நிற்குமென்றார் என்றுரைத்தலுமொன்று. நெறிதரு என்றவிடத்துத் தருதல்—விளங்குதல். நெறி—சிவஞானம். அவ்விடத்துச் சத்து என்றது சிவத்தைக் குறித்தது. கருவிகள் சிவத்தின் முன் முனைத்து நில்லாமையின் சிவம் கருவிகளால் அறியப்படும் பொருளாதலில்லை. சிவஞானத்தால் அறியப்படுதலின் அறியப்படாத பொருளாதலுமில்லை யாகலான் "இரண்டுமின்றி" என்றார். ஆகலான் என்பது சொல்லெச்சமாக வருவித்துரைக்க.

அழியும் பொருள் சடமாதல்போல் சடப்பொருள் அழியுமென்றல் கூடாது. கூடுமெனின், மலம் நித்தியமென்பதின்றாய் வழுவாம். ஆதலால், சடமாயும் பலவாயும் இருப்பின் அழியுமென்றும், சடமாயும் ஒன்றாயு மிருப்பின் அழியாதென்றும் அறிக.

சித்துச் சத்தென்ற இரண்டிலக்கணங் கூறுவானேன்? எனின், பாசஞானத்தா லறியப்படாதென்றமையால் அதனாலறியப்படும் சடம்போலன்றிச் சித்தாயும், பதிஞானத்தா லறியப்படுமென்றமையால் அதனாலறியப்படாத அசத்துப்போலன்றிச் சத்தாயும் விளங்கும் உண்மை யுணர்த்துதற்குச் சித்துச் சத்து என்றார். பதிஞானத்தின் முன் அசத்து முனைத்து

நில்லாமையின் அதனாலறியப்படாதாயிற்று. சத்துச் சித்தென்னாது, சித்துச் சத்தென்பானேனெனின், பாச நீக்கத்தில் முதற்கண் விளங்குவது சித்தும், அதிலழுந்துதலால் சத்தும் அநுபவமாகுமுறைபற்றி என்க. அவ்வாறாயின், சத்து வேறு சித்து வேறோவெனின், அன்று. அவ்விரண்டும் எது போலுமெனின், சூரியனும் ஒளியும்போலாம்; உலகப்பொருளை விட்டுச் சூரியனை நோக்குவார்க்கு முதற்கண் விளங்குவது ஒளியும், அவ்வொளியை ஊடுருவிச் சென்ற பின்னர் விளங்குவது சூரியனும்போல அறிக. சத்துச் சித்தென்று கூறும் இடமெல்லாம் பொருள் இருக்கும் முறைமைபற்றியாம். அனுபவமுறை இருக்கும் முறைகளின் வேறுபாடு எப்பொருளிடத்தும் உண்டு.

முதல்வனுக்குப் பொதுவியல்பு மேல் உ-ஞ் சூத்திரத்திற் கூறப்பட்டமையின், இது சிறப்பியல்பெனக் கொள்க. ஆகலினாற்றான் இச்சூத்திரத்தை உண்மை அதிகாரத்தைச் சாரவைத் தோதினார்.

இச்செய்யுள் சிவஞானபோதம் ஆறாம் சூத்திரத்திற் கொண்ட இரு கூற்றோடும் "அறியாததின்றாம்" என்றதனை ஒரு கூறாகக்கொண்டு முக்கூற்றினையுடையதாம். அவற்றுள்,

முதற்கூறு:—அறிபொருள் அசித் தசத்தாம்.

இரண்டாங்கூறு:—அறியாததின்றாம்.

மூன்றாங்கூறு:—அறிவுறும் பொருளோ ஈசன் அறிவுறாதவனோ என்னின், நெறிதரு சத்தின் முன்னரசத்தெலாம் நின்றிடா (ஆகலான்) எங்குஞ் செறி சிவம் இரண்டுமின்றி சித்தொடு சத்தாய் நிற்கும்.

முதனூலில், இரண்டாங் கூற்றின்கண் ஐயப்பாடு முதலியன நிகழாது எல்லாச் சமயத்தார்க்கும் ஒப்பமுடிந்தமையால், வேறெடுத் துரைக்காது விடுத்தனர். ஆயினும், மந்தவுணர்வுடையாருக்கு அதன்கண் ஐயம் நிகழாமைப் பொருட்டு இந்நூலாசிரியர் வேறு கூறாக எடுத்தோதிப் பரிகரித்தனர். (க)

---

# முதலதிகரணம்.

## அறிபொருள் அசித்தசத்தாம் என்பது.

வேறாகச் சுட்டி யறியப்படுதலால் அறிவின்மேல் வைத்து அறியப்படும் பொருளனைத்தும் அசத்தெனக் கூறுகின்றது.

ஆவதா யழிவ தாகி வருதலா லறிவு தானுந்
தாவலா லுலகு போகந் தனுகர ணாதி யாகி
மேவலான் மலங்களாகி விரவலான் வேறு மாகி
யோவலா லசத்தாஞ் சுட்டி யுணர்பொரு ளான வெல்லாம். ௨௫

(கோ-டு.) அறிவுதானும் ஆவதாய் அழிவதாகி வருதலால், தாவலால், தனுகரண உலகு போகம் ஆதியாகி மேவலால், மலங்களாகி விரவலால், வேறுமாகி ஓவலால், சுட்டி உணர்பொருளானவெல்லாம் அசத்தாம்.

(போ-ரை.) விடயத்தை வேறாக நின்று கருதியுணரும் சுட்டறிவு, ஒரு பொருள் பற்றித் தோன்றியும் பின்னொரு பொருளைப்பற்றுங்கால் முந்தின தோற்றம் கெட்டும் நிற்றலால், அவ்வறிவு தோற்ற நாச முடையதாம். அதனாலும், ஒன்றில் நிலை பெறாது ஓரிடம் விட்டு ஓரிடம் தாவுதலாலும், தனுகரண புவனபோக முதலியனவாய்ப் பல வேறு வகைப்பட அறிதலானும், மலத்தோடு விரவுதலானும், உண்மை ஞானம் வந்த விடத்து வேறுபட்டொழிதலானும், அச்சுட்டறிவு அசத்தேயாம். ஆதலால், அச்சுட்டறிவினால் சுட்டியறியப்பட்ட பொருளனைத்தும் அசத்தாவனவன்றி அவற்றுள் ஒரு பொருளும் சத்தாதல் செல்லாது. (எ-று.)

அசித்தா மென்பதூஉம் பாடம். அறிவுதானும் என்ற விடத்து உம்மை இழிவு சிறப்பு. வேறுமாகி என்றவிடத்து உம்மை மேற்கூறப்பட்ட ஆவதாயென்பது முதலியவற்றைத் தழுவியது.

இச்செய்யுளால், அறிபொருள்களினொருசாரனவேயன்றி அனைத்தும் அசத்தாதலில்லை யென்னும் தார்க்கிகரை நோக்கி அறிபொருளனைத்

தும் அசத்தென்பது அவற்றையறியும் அறிவியல்பு பற்றித் தெரித்துணர்த் தப்பட்டது. (உ.)

பொருளின் மேல் வைத்து அழிதற்றன்மை பற்றி அறியப் படும் பொருள் அசத்து எனக் கூறுகின்றது.

**மண்டணில் வாழ்வும் வானத் தரசயன் மாலார் வாழ்வு**
**மெண்டரு பூத பேத யோனிக ளியாவு மெல்லாங்**
**கண்டவிந் திரமா சாலங் கனக்கழு திரதங் காட்டி**
**யுண்டுபோ லின்றாம் பண்பி னுலகினை யசத்து மென்பர்.**

(கொ–டு.) கண்ட எல்லாம் எனவும், உண்டு போல் காட்டி எனவுங் கூட்டுக.

(பொ–ரை.) மேற்கூறியவாறு அறிவின்தன்மை பற்றிக் காணப்படும் பொருள் அசத்தாமாறு போல, பொருளின் தன்மைபற்றி ஆராயுமிடத்தும் அசத்தேயாம். எவ்வாறெனின், மண்ணுலகில் அரசர் வாழ்வும், விண்ணுலகில் இந்திரன், பிரமா, விட்டுணு முதலியோர் வாழ்வும், பூதபரிணாமமாகிய எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதங்கள் எவற்றினும் பொருந்திய வாழ்வும், ஆகிய காணப்பட்ட யாவும் தோன்றும் பொழுதே இல்லையாய் மாறுபடுகின்ற இந்திர ஜாலமும், கடை போதலின்றி இடையே அழியப்படுஞ் சொப்பனக் காட்சியும், கடும் வேனில் நீங்குங்காரணத்தால் அழியப்படுங் கானற் சலமும் போல நெடுங் காலம் நிலைபெறுவன போற்றோன்றி விரையக் கெட்டு மறைந்து போம். ஆதலால், அவ்வாறு கெட்டொழிந்து போம் தன்மை பற்றி உலகப் பொருளனைத்தும் அசத்தெனக் கூறுவர். (எ–று.)

அசத்தும் என்னும் உம்மை பொருட்டன்மையாற் சத்தென்பது பட நின்ற எதிர் மறை.

சற்காரிய வாதத்தில் உள்ளது போகாது, இல்லது தோன்றாது என்னும் முறைபற்றி எல்லாம் உள்பொருளேயன்றி அசத்தென்ப தொன்றில்லையென்று கூறவும், இவ்விடத்து அறியப்படும் பொருள் அசத்தென்று கூறுதல் முரணாதோ வென்னுஞ் சாங்கியரை நோக்கிக் காரணரூபமா யொடுங்கியிருத்தலையே அசத்தென்ப தொன்றில்லை என்பதே யன்றிக் காரியத்தி

-னழிவு இல்லை என்று சற்காரிய வாதங் கூறுவதின்று; ஆதலால் முரணுமை யறிகவென இந்திரசால முதலிய உவமையில் வைததுக்காட்டப்பட்டது.(௬)

முதலதிகாரணம் முடிந்தது.

---

# இரண்டாம் அதிகரணம்.

## அறியாததின்றும் என்பது.

அறியாத பொருள் உண்டெனக் கொள்வோ மென்பார்க்கு அப்பொருள் வினை செய்வானுல் அறியப்பட்டுக்காரியப்படாமை யால் உண்டென்றல் பொருந்தா தெனக் கூறுகின்றது.

உணராத பொருள்சத் தென்னி னொருபய னில்லை தானும்
புணராது நாமுஞ் சென்று பொருந்துவ தின்று மென்றுந்
தணவாத கரும மொன்றுந் தருவது மில்லை வானத்
திணரார்பூந் தொடையு மியாமைக் கெழுமயிர்க் கயிறும் போலும்.

(கொ - ৳.) உணராத பொருள் சத்தென்னின் தானும் புணராது, நாமும் சென்று பொருந்துவது என்றும் இன்றும். ஒரு பயன் இல்லை. வானத்து இணர் ஆர்பூந்தொடையும், யாமைக்கு எழுமயிர்க் கயிறும்போலும் தணவாத கருமம் ஒன்றுந்தருவதும் இல்லை.

(பொ - ரை.) அறியப்படும் பொருள்கள் தோன்றியழியக் காண்கின்றோம்; அதுபோல அறியப்படாத பொருட்குத் தோற்றக்கேடு முதலியன இல்லாமையால், அவ்வறியப்படாத பொருளைச் சத்தெனக் கொண்டாற்படும் இழுக்கென்னையோவெனின், அவ்வாறு கொண்டதனுல் அது நம்மைப் பொருந்தாது; நாமும் அதனைப் பொருந்துதல் ஒரு நாளும் இல்லை. ஆதலால் ஆகாயப்பூவும் யாமை மயிரும் உண்டென்றுகொள்வதனுல் பய னில்லாததுபோல அறியப்படாத பொருளால் பெறக்கடவதோர் பயனுமில்லையாம். ஆகாயத்தினும் யாமையினும் பூவும் மயிரும்

தோற்றமின்றி அதி சூக்குமமாயுளவென்., அவற்றால் ஆகற் பாலனவும் உளவென்றுங்கொள்ளக் கூடாதேயெனின், அறிந்து மாலையாகவும் சுயிருகவும் ஆக்கும்படியாக இல்லாமையால், அப் பொருளும் பயனும் உண்டென்று கூறுதல் பொருந்தாது.

(எ - று.)

அவ்வாறாயின், அறியப்படுவதும் அறியப்படாததுமென்னும் இவ்வி ரண்டும் இன்றி நிற்கும் பொருளை அநிர்வசனமெனக் கூறாது சித்தொடு சத்தாய் நிற்கும் என்றது எவ்வாறு கூடுமென்னும் மாயாவாதியை மறுத்தற் கெழுந்தது வருஞ்செய்யுள். (௪)

இரண்டாமதிகரணம் முடிந்தது.

---

# மூன்றும் அதிகரணம்.

---

## அறிவுறும் பொருளோ......சத்தாய் நிற்கும் என்பது.

அறியப்படுவதும் அறியப்படாததுமாகிய பரம்பொருள் அநிர்வசனமுமன்று மனம் வாக்குக்களுக்கு எட்டுவதும் அன்று எனக் கூறுகின்றது.

**தத்துவஞ் சத்த சத்துச் சதசத்து மன்றென் றுலெ**
**னுய்த்துணர்ந் துண்டோ வின்றோ வென்றவர்க் குண்டென்**
**வைத்திடுஞ் சத்தை யாகு மனத்தொடு வாக்கி றந்த [றோதில்**
**சித்துரு வதுவ சித்தா மனத்தினற் றேர்வ தெல்லாம்.**

(கோ - ௫.) மனத்தினுல் தேர்வதெல்லாம் அசித்தாம்.

(**பொ - ரை.**) மேற்கூறியவாறு அறியப்படுவதும் அறி யப்படாததுமல்லாத பரம்பொருளை, உள்ளதுமன்று, இல்லது மன்று, உள்ளதுமில்லதுமன்று, வேறுமன்று எனக்கூறும் அநிர் வசனமாகக்கொண்டால் உண்டா மிழுக்கென்னையோவெனின், நன்று சொன்னாய். அவ்வாறு ஆராய்ந்துணர்ந்து அநிர்வசன

மெனக் கூறப்படும் பொருள் உண்டோ இல்லையோ என வினவு மிடத்து, உண்டென்னையாயின் உள் பொருளாகவே முடியும். இல்லையென்னையாயின் இல்லாத சூனியப் பொருட்கோதிய குற் றமுண்டாம். அக்குற்றத்திற்கஞ்சி உண்டென்று ஒத்துக்கொள் வையாயின், பரம்பொருள் உள்பொருளாவதன்றி அநிர்வசன மன்றென்பதற்கு உன் வாய் மொழியே சான்றாகும். இனி, உள் பொருளாயின் என்னாலறியப்பட வேண்டுமென்னையாயின், அப் பரம்பொருள் மனம் வாக்குக் காயங்களாலாகிய பாசவுணர்வினைக் கடந்து நிற்கும் அறிவுடைப் பொருளாதலின் அம்மனவாக்குக் காயங்களைக்கொண்டு அறிதல் கூடாது. அவற்றைக்கொண்டறி யப்படுமாயின் அவற்றாலறியப்பட்டனவெல்லாம் சடமாய் அழி வெய்துமாறுபோல, பரம்பொருளும் சடமாய் அழிவெய்திவிடும். ஆதலால், பாச அறிவால் அறியப்படாதென்பதனை யறிவாயாக.

(எ - று.)

தேர்வது என்பது ஒருமை. எல்லாம்என்பது பன்மை. தேர்வதெல் லாம் என்பது* "உள்ளியதெல்லா முடனெய்தும்" என்றாற்போல ஒரு மைப் பன்மை மயக்கம். (௫)

சிவ பரம்பொருளை அப்பரம் பொருளின் அருளால் ஆன்மா பிரிப்பின்றி நின்று அறியுமெனக் கூறுகின்றது.

**அறிபொரு ளசித்தாய் வேறா மறிவுறுப் பொருள்சத் தென்னி**
**னறிபவ னறியானாகி லதுவின்று பயனு மில்லை**
**யறிபவ னருளி னாலே யநந்நிய மாகக் காண்ப**
**னறிபொரு ளறிவாய் வேறா யறிவரு ளுருவாய் நிற்கும்.**

(கோ - ௫.) அறிபவன் அநந்நியமாக அருளினாலே காண்பன்.

(போ - ரை.) மேற்கூறியவாற்றால் அறியப்படும் பொ ருள் சடமாயழிதலும், அறியப்படாத பொருள் உண்டென்றால் பயனின்றாதலும் பெறப்பட்டமையால், சிவபரம்பொருள் அறி யப்படுவதுமன்று அறியப்படாததுமன்று எனக்கூறின், அவ்

---

* திருக்குறள், வெகுளாமை ௩௦௯.

வாறு கூறுவது உள்ளதுமன்று, இல்லதுமன்று என்பதுபோல அநிர்வசனமாகாதோவெனின், மேற்கூறியவாறே அப்பொருள் உண்டோ இல்லையோ என வினவுமிடத்து உண்டென்பையாயின் அறியப்பட்ட பொருளாய்ச் சடமாய் அழிவெய்தும்; அறியப் படாத பொருட்குத் தோற்றக்கேடு முதலியன இல்லாமையால் இல்லாத பொருள் உண்டென்று கொள்வோமென்பையாயின் அப்பொருள் அறிதற்குரிய ஆன்மாவால் அறிதல்வேண்டும். அறி யுமாயின் இல் பொருளென்றல் கூடாது. அறிய முடியாதாயின் அவ்வாறுகொண்ட பொருளும் இல்லையாய் முடிந்து அதனாற் பெறக்கடவதோர் பயனுமில்லையாய் முடியும். ஆதலால், பரம் பொருள் அறியப்படுமென்று கூறுதலும், அறியப்படாதென்று கூறுதலுங் குற்றமாம். இவ்வாறாயின், உண்மையாதெனின், சிவம் அறியப்படுவதன்று என்பதற்குக் கருவி கரணங்களால் அறியப் படுவதன்று எனவும், அறியப்படாததன்று என்பதற்குச் சிவ ஞானத்தாலறியப்படாததன்று எனவுங்கொள்ளல்வேண்டும். இம் முறைப்படி பாசபசு ஞானங்களைக் கடந்துநின்று அறிதற்கு வல் லமையுடைய ஒருவன் அச்சிவப்பொருளை அப்பொருளோடு ஒன்றுபட்டுநின்று அப்பொருளின் அருளாலறிவன். ஒன்றாய் நின்றால் அறிதல் கூடாதே? அறிதல் கூடுமாயின் ஒன்றாய் நிற் றல் கூடாதே? எனின், அப்பொருளையறியும் அநுபவத்தில் அறிவு நிகழ்வதற்கு ஆன்மாவின் அறிவுடன் கலந்து ஒன்றாயும், அறியப்படுவதற்கு பொருட்டன்மைபற்றி ஆன்மாவின் வேறாயும், அறிதற்றொழில் நிகழ்தற்கு ஆன்மாவின் அறிவைச் செலுத்தி அவ்வறிவோடு உடனாயும், இவ்வாறு இறைவன் அத்துவிதமாய் நிற்பன். எதுபோலவெனின், கண் சூரியனையறியுங்கால் கண் ணொளியோடு சூரியன்கலந்து ஒன்றாயும், காணப்படுவதற்குச் சூரியன், கண்ணின் வேறாயும், காணுந்தொழில் நிகழ்ச்சிக்கு சூரி யன், கண்ணொளியைச் செலுத்தி உடனாயும் நிற்றல் போலவாம்.

(எ - று.)

சிவனருளினாலே சிவனை யறியு மென்பது பாரிசேடப் பிரமாணத்தா லுணர்த்த வேண்டி முதற் செய்யுளிற் கூறிய "அறிபொருளசித்தாம்"

என்பதனையும், நான்காவது செய்யுளிற் கூறிய "உணராதபொருள்சத் தென்னின்' 'என்பதனையும் அனுவதித்துக் கொண்டு கூறினர். கூறவே, அறிபொருளசித்தாயும் வேறாயு மிருத்தலாலும், அறியப்படாத பொருள் உண்டென்பதாற் பயனில்லை யாகலானும், இவ்விரண்டும் விலக்கப்பட்டு அவனருளால் அவனை யறிய வேண்டுமென்பது பாரிசேடப் பிரமாணமா மாறு காண்க.

கிழவனறிந்தான் கிழத்தியறிந்திலள் என்றவிடத்து அதனை யறிந்தான் அறிந்திலள் என்னும் பொருள்பட உரு பேற்ற சுட்டுப்பெயர் வருவிக்கப் படுமாறுபோல, அறிபவன் அநந்யமாக அருளினாலே காண்பன் என்றவிடத்து அச் சிவப் பொருளை என்னும் உருபேற்ற சுட்டுப்பெயர் வருவித்து ரைக்க.

அறிவருளுருவாய் நிற்கு மெனக் காரணத்தைக் காரியமாகவுபசரித் தார். உடனாய் நிற்றல் காரணம். அறிவை யருளும் உருவாய் நிற்றல் காரியம். அத்துவிதமாய் நிற்றலின், காண்பானுங் காட்சிப்பொருளும் அருளாலுபகரித்தலுமாதல் கூடுமென்பதுணர்த்த, அருளினாலே யநந்ய மாகக் காண்பனென்பதனுடன் அறிபொருள் அறிவாய் வேறாய் அறிவரு ளுருவாய் நிற்குமியல்புங் கூறினர்.

இவையிரண்டு செய்யுளானும் பரம்பொருள் அநிர்வசனமென்னும் மாயாவாதி மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து மூன்றாங்கூறு வலியுறுத் தப்பட்டது. (க)

யோகபாவனையால் இறைவனைக் காணக் கூடுமென்பாரை மறுத்து அவனருளால் காண வேண்டும் என்பதை வலியுறுத்து கின்றது.

**பாவிப்ப தென்னிற் பாவம் பாவகங் கடக்கிற் பாவம்**
**பாவிக்கு மதுநா னென்னிற் பாவகம் பாவங் கெட்டுப்**
**பாவிப்ப தென்னிற் பாவம் பாவனை யிறந்து நின்று**
**பாவிக்கப் படுவ தாகும் பரம்பர னருளி னாலே.**

(கோ - டு.) பாவிப்பதென்னின் பாவம். பாவகம் கடக்கின் பாவம். பாவம் கெட்டுப் பாவிப்பதென்னின் பாவம். பாவிக்கும் அது நானென் னின் பாவகம். பாவனை இறந்துநின்று பரம்பரன் அருளினாலே பாவிக்கப் படுவதாகும்.

**(பொ - ரை.)** இறைவனைத் தரிசிப்பதற்கு மேற்கூறிய வாறு அவனருளால் பிரிப்பின்றி நிற்றல் வேண்டாம். யோக

பாவனையினால் இறைவனைத் தரிசிக்கக் கூடுமென்பையாயின், அப் பாவனை கருவிகளோடு கூடினதாயின் சகலாவத்தையாம். கருவிகளை நீங்கி நின்றதாயின் சகலத்திற் றுறியாதீத மெனப்படுங் கேவலாவத்தையாம். இரண்டுமின்றி நின்று பாவிப்பதாயின், அது அநிர்வசனமெனப்பட்டு ஒன்றுமில்லாத பாழாய் முடியும். ஆதலால், அவ்வாறொன்றுமின்றிப் பாவனைக்கெய்தாத அப்பரம் பொருளைத் தன்னிடத்தில் வைத்து நானே அப்பரம் பெருளென அப்பொருள் எய்தியதாகப் பாவிப்பனென்பையாயின், அப்பாவனையானது கண்ணிற் சூரியனிருப்பதாகவும், நாக்கில் சர்க்கரையிருப்பதாகவும் பாவிப்பதால், ஒளியும் தித்திப்பும் பொருந்தாதவாறுபோலப் பயனில்லையாய் முடியும். ஆதலால், அப்பாவனையனைத்தும் நாடக மாத்திரையேயன்றிப் பரம்பொருளை யறிதற்குச் சாதனமாகாவாம். ஆதலின், மேற்கூறியவாறு பிரிப்பின்றி நின்று அவனருளால் அவனைக்காண்டலே அவனையறிதற்கேற்ற பாவனையாம். (எ - று.)

பாவம், பாவகம், நாடகம் என்பன ஒரு பொருட்சொற்கள். இவ்விடத்து அவத்தையைக்குறித்தது. அநிர்வசனமென்பது உறுதியாய்ச் சொல்லப்படாதது. எவ்வாறெனின், வசனம் சொல்வதற்குரியது. நிர்வசனம் நிர்ப்பந்தமென்பதுபோல உறுதியாய்ச் சொல்வதற்குரியது. அநிர்வசனம் உறுதியாய்ச் சொல்லப்படாதது என்க.

இச்செய்யுளால், பாதஞ்சலர் மதம்பற்றி யாசங்கித்துப்பரிகரித்து அவனருளாலே அவனைக் காணவேண்டுமென்பது வலியுறுத்தப்பட்டது. (எ)

மலமாகிய குற்றம் நீங்கிய உயிரி னறிவால் சிவனை யறியக் கூடுமென்னும் சிவசம வாதியை மறுத்துரைக்கின்றது.

**அந்நிய மிலாமை யானு மறிவினு ணிற்றலானு**
**முன்னிய வெல்லா முண்ணின் றுணர்த்துவ னாதலானு**
**மென்னறி யானென் றோது மிருஞ்செருக் கறுத்த லானுந்**
**தன்னறி வதனாற் காணுந் தகைமைய னல்ல னீசன்.**

(கோ - ரு.) ஈசன் அந்நியமிலாமையாலும் எனக்கூட்டுக.

(பேர் - ரை.) மேற்கூறியவாறு பாவனையான யோகத்தால் இறைவனையறிதல் கூடாதாயினும், மலம் நீங்கியவிடத்து

ஆன்ம அறிவு தடையின்றி விளங்குமாதலால், அவ்வறிவால் இறைவனை யறியக்கூடுமென்றாலே பொருந்தும் அவனருளா லறியவேண்டுமென்றல் பொருந்தாதெனின், அவ்வாறாயின், உயி ரறிவால் அறியப்படும் பொருள் உயிரின் வேறாயிருத்தல் வேண் டும். அச்சிவம், உயிரின் வேறல்லாமையால் ஒன்றாயும், அறிவித் தற்கு உயிரறிவினுள்ளீடாக நிற்றலால் வேறாயும், அறிந்தவற்றிற் செல்வதற்கு உயிரினறிவினுள்ளாக நின்று செலுத்துதலால் உட னாயும் நிற்கும். அவ்வாறு நிற்கும் அப்பரம்பொருளை, அறிவா னும், அறிபொருளும், அறிவும் எனப்பகுத்தறிய முடியாதாம். யான் அறிவேனென்றதனால் மலம் நீங்கியதுமில்லை. ஆதலால், அவ்விறைவன் உயிரறிவால் அறியப்படுவனென்றல் பொருந் தாது. (எ - று.)

உன்னியவெல்லா முண்ணின்றுணர்த்துவ னென்பதற்கு, மேல் ௬-வது செய்யுளில் அறிவருளுருவாய் நிற்கும் என்பதற்கு உரைத்தவா றுரைக்க. அஃதாவது, உன்னியவெல்லா முண்ணின்றுணர்த்துதல் காரி யம். உடனாய் நிற்றல் காரணம். காரணத்தைக் காரியமாக வுபசரித்த வாறும். செருக்காலுண்டாம் பகுத்துணர்வைச் செருக்கென உபசரித்தார்.

ஒன்றாய் என்றதனால் உயிர்தனித்து நில்லாதென்பதும், வேறாய் என் றதனால் தனித்து நில்லாவிடினும் இறைவனை உயிர் அறிதல் கூடுமென்ப தும், உடனாயென்றதனால் இறைவனை யறிதல்கொண்டு உயிருக்குச் சுதந் திரம் உண்டென்று கொள்ளலாகாதோவென்னும் ஐயத்தை நீக்கி அறியுங் காலும் உடனிருந்தறியுமென்பதும், ஆயின் உயிர் அறிந்தது என்பானேன் எனின், அறிதற்பயன் உயிர்க்காதலின் அது நோக்கியென்பதும் இச்செய் யுளால் கூறியவாறு உய்த்துணர்ந்து கொள்க. (அ)

பிரித்தறிய முடியாத நிலையில் ஒன்றாதலும், வேறாதலும், உடனாதலும் உள என்பதற்கு ஏதுக்கூறுகின்றது.

**ஒன்றெனு மதனை லொன்றென் றுரைப்பதுண் டாகை யாலே**
**நின்றனன் வேறாய்த் தன்னி னீங்கிடா நிலைமை யாலே**
**பின்றிய வுணர்வுக் கெட்டாப் பெருமைய னறிவி னுள்ளே**
**யென்றுநின் றிடுத லாலே யிவனவ னென்ன லாமே.**

(போ - ரை.) இறைவன் ஒன்றேயென்று வேதங்கள் கூற வும் மேற்கூறியவாறு உயிரோடு ஒன்றாய் நிற்றல், வேறாய்நிற்றல்,

உடனாய் நிற்றல் ஆகிய முத்திறமும், உயிரும் உளவாமென்றலை எதனாலறியக்கூடுமெனின், உயிருஞ்சிவமும் ஒன்றென்று சொல்லில், அவ்வாறு அறிவதொரு பொருளுண்டாதலால், அச்சிவம் அறிவானுக்கு வேறாய் நிற்றல் பெறப்படும். அதுகொண்டு வேறென்று சொல்லில், அவ்வாறு வேறாக அறிவதற்கு அறிவுக்கு அறிவு பிரிந்து தோன்றாமையால் வேறென்னு மறிவுக்கெட்டாது உடனாதல் பெறப்படும். அவ்வாறு அறியுங்கால் அவ்வறிவினுள்ளாக எக்காலத்தும் நீரினிடத்து ஒன்றாகக் கலந்திருக்கும் நிழல் போல, உயிரே சிவமெனும்படி கலந்துநிற்குமாதலால், ஒன்றாதல் பெறப்படும். ஆதலால், இவ்வாறு உயிரோடு பிரிப்பின்றி அத்துவிதமாய் நிற்கும் இறைவனைக் காணவேண்டின், கண்ணொளியோடு பிரிப்பின்றி நின்று கண்ணுக்கு வேறு விடயங்களைக் காணும்படி உபகரிக்கும் சூரியனைக் கண் காணவேண்டின், அதன் கிரணத்தாற் காண்டல்போல அவனருளாற் காண்டலே தக்கது.

(எ - று.)

நீரினிடத்து வெளியின்மையால் நிழல் உண்டென்பது எவ்வாறு அறியப்படுமெனின், தன்னுள் இயங்கும் உயிர்கட்கு நீர் இடங்கொடுத்தலால், நீரின்கண் வெளி உண்டென்பது பெறப்படும். வெளி உண்டாதலால் நிழல் உண்டென்பதும் பெறப்படும். அந்நிழல் வேறு நில்லாது நீரோடு கலந்து நிற்றலால் நீர்போலக் காணப்படாதாயிற்று. இது சிவஞானபோதச் சிற்றுரை எட்டாஞ்சூத்திரத்து இரண்டாமதிகரணத்து மூன்றாவது வெண்பாவுரையிற் கண்டது.

அத்துவிதம் என்னுஞ்சொல்லில் முன்னின்ற அகரம், அன்மை, இன்மை, மறுதலை என்னும் மூன்று பொருளையுணர்த்தும். உதாரணமாக அநசுவம் என்றவிடத்து அசுவமல்லாத புலி முதலியவற்றைக் குறியாது அசுவம் போன்றிருக்கும் கழுதையைக் குறித்தலால் அகரம் அன்மைப் பொருளில் வந்தது. "அமலம்" என்றவிடத்து மலமின்மையைக் குறித்தலால் அகரம் இன்மைப்பொருளில் வந்தது. "அநீதி" என்றவிடத்து நீதியின் மறுதலையைக் குறித்தலால் அகரம் மறுதலைப்பொருளில் வந்தது. இம்மூன்றனுள், இன்மைப்பொருள்கொண்டு இரண்டாவதாகிய பசுபாசப் பொருள்களில்லை, பிரமப்பொருள் ஒன்றே உள்ளது என்பர் ஏகான்மவாதிகள். ஒன்றென்றுணர்வது வேறுண்டாதலால் இவர் கருத்துப்பொருந்தாது.

மறுதலைப் பொருள்கொண்டு நீதியின் மறுதலைகொள்ளவே நீதியுங் கொள்ளக்கிடப்பதுபோல இரண்டன் மறுதலையாகிய ஒன்றுகொள்ளவே இரண்டுங்கொள்ளக்கிடந்து, ஒன்றும் இரண்டும் நீதியும் அநீதியும் வேறு வேறாதல்போல, ஒன்றாகிய கடவுளும் இரண்டாவதாகிய உயிரும் பந்தமும் வேறு வேறாக நிற்குமென்பர் மாத்துவர். வேறு வேறாயின் கடவுள் வியாபகத்திற்கு இழுக்கும், உயிருக்குத் தனித்துநிற்குஞ் சுதந்திரமும் உளவெனப்பட்டு நூலோடும் அநுபவத்தோடும் முரணுமாதலின் இவர் கருத்தும் பொருந்தாது.

மேற்கூறியவாறு இன்மைப்பொருளே கொண்டு கடவுள் வியாபகப் பொருளே யெனவும், உயிரும் பாசமும் கடவுளில் அடக்கமெனவும், ஆயினும் உயிரும், பாசமும் பலவாயினாற்போல, கடவுள் பல வல்ல ஒன்றே யென்பர் பாஞ்சராத்திரிகள். ஒன்றென்று கூறுவதற்கு வடமொழியில் ஏகம் என்னும் சொல் இருக்கவும் அதனைவிட்டு அத்துவிதமென்னுஞ் சொல்லால் உய்த்துணரவைக்க வேண்டாம் என மறுத்தவிடத்து, பிரமம் ஏகமென்று ஓரிடத்திலும், பிரமம் அத்துவிதமென்று பிறிதோரிடத்திலும் கூறுதலால், அத்துவிதம் என்பதும் ஏகம் என்பதும் ஒரு பொருட் சொற்களாமென்பர். ஏகமேவ அத்விதீயம் பிரமம் என ஓரிடத்திலேயே ஏகமெனவும், அத்துவிதமெனவும் கூறுதலால், ஏகமென்பதும் அத்துவிதமென்பதும் வேறு வேறு பொருளைக் குறித்ததாமென மறுத்தவிடத்து, அவ்வாறு கூறியது உறுதி பயக்கும் அடுக்குமொழியாமென்பர். அடுக்கு மொழியாயின், ஏகம் ஏகம் என்றாவது, அத்துவிதம் அத்துவிதம் என்றாவது இருக்கவேண்டுமேயன்றி இருவேறு மொழிகளாயிருத்தல் கூடாது. மற்றென்னையோ அவ்வாக்கியத்திற்குப் பொருளெனின், ஏகமாகிய பிரமமே பலவுயிர்களோடு கலந்து நிற்குமென்பதேயாம். ஆதலின், அத்துவிதம் என்னுஞ்சொல்லிற்குக் கடவுள் ஒன்று என்றுகொண்ட இவர் கருத்தும் பொருந்தாது.

இனி, அத்துவிதச்சொற்குப் பொருள்தான் என்னையோவெனின், அகரம் பொருட்பெயர்ச்சொல்லில் வரும்பொழுது தான் அன்மை, இன்மை, மறுதலை என்னும் முப்பொருள் பயக்கும். எண்ணுப் பெயர்ச்சொல்லில் வரும்பொழுது அன்மைப் பொருளொன்றேயன்றிப் பிறபொருள் பயவாது. உதாரணமாக, எண்ணுப்பெயர்மேல் ஏகத்தின் முன்னாகவும், துவிதத்தின் முன்னாகவும் அன்றி ஏனைய எண்ணுக்களுடன் அகரம் முன்னிற்பதில்லை. அவற்றுள், ஏகத்தின் முன்னாகநின்ற அகரம் அன்மைப் பொருள்பற்றி அநேகம் எனப் பொருள்தருமாறுபோல, துவிதத்தின் முன்னின்ற அகரமும் இரண்டன்மையைக் குறிக்குமென்பதே தேற்றம்.

இக்கருத்தேபற்றி அன்மைப்பொருள்கொண்டு அசுவம் போன்றிருந்தும் அசுவத்தன்மையில்லாதவாறுபோலக் கடவுளும் உயிர்களும் இரண்டு போன்றிருந்தும் இரண்டின்றன்மையாக வேறு பிரித்தறியவாராது, கண்ணொளியுஞ் சூரியனொளியும்போலக் கலந்து நிற்குமென்பர் சைவசித்தாந்திகள். இக்கருத்துப்பற்றியே "அத்துவிதமாவது—பேதப் பொருளிரண்டும் தம்முள் அபேத மாதற்குரிய சம்பந்த விசேடம்" என உரையாசிரியர் மாதவச் சிவஞானயோகிகள் சிவஞானபோதச் சிற்றுரை பதினோராஞ்சூத்திரத்து அருளியவாறும். கலந்துநிற்குங்கால் உண்டாம் வேறுபாடுகள் யாவும் உரைப்பாயிரத்தும், பிறயாவும் சிவஞானபோதமாபாடியம் ஆறுஞ் சூத்திரத்துங் காண்க.

பதி, பசு, பாசம் எனப்பொருள்கள் மூன்றாகவும், அத்துவிதமென இரண்டின்மேல் வைத்துக்கூறியதன் கருத்தென்னையெனின், பாசம், ஆணவம், கன்மம், மாயை என முத்திறப்பட்டு, அவற்றுள் ஆணவம் அநாதியே ஆன்மாவுடன் கலந்தும், கன்மமும், மாயையும் இறைவன் உடைமைப் பொருளாகவும் நிற்றலால், பதி பசு வென்னும் இரண்டு பொருளின்மேல் வைத்துக் கூறியவாறு மென்க.

இவை யிரண்டு செய்யுளானும் சிவசமவாதி மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து அவனருளாலே அவனைக் காணவேண்டுமென்பது வலியுறுத்தப்பட்டது. (௯)

மூன்றமதிகரணம் முடிந்தது.

## ஆறாஞ்சூத்திரம் முடிந்தது.

ஆகத் திருவிருத்தம் உ௬அ.

---

# சாதனவியல்.

---

## ஏழாஞ் சூத்திரம்.

---

### சாதிக்கும் அதிகாரி யியல்பு.

நாலாஞ் சூத்திரமுதல் மூன்று சூத்திரத்தானும் முறையே பசுவிலக்கணம், பாசவிலக்கணம், பதியிலக்கணம் கூறி முடித்தமையால், அவ்வாறு இலக்கணம் கேட்டவிடத்து அம்முப்பொருள்களுள் பதிப்பொருளை அடைவதற்கு உரிமையுடைய தெதுவெனவும், செய்யவேண்டுவதெதுவெனவும், செய்யுமுறை எவ்வாறெனவும் ஆசங்கை நிகழுமன்றே? அந் நிகழ்ச்சிபற்றிச் சாதனவியல் மூன்று சூத்திரத்தாற் கூறத்தொடங்குகின்றார்.

மேல் அடுத்துநின்ற ஆறாஞ்சூத்திரத்தில் பதி, பாசத்தை யறியாது, பாசம், பதியை யறியாது என வரைசெய்து கூறினமையால், அவ்விரண்டனையும் அறிதற்குரியது எது? என்னும் சந்தேகத்தை நிவிர்த்தித்தற் பொருட்டு ஏழாஞ் சூத்திரம் எழுந்தது. இச்சூத்திரத்தால், பதி பாச மிரண்டனையும் அறிதற்குரிமையுடையது பசு எனப் பாரிசேட அளவையில் வைத்துக் கூறுகின்றார்.

மேலைச்சூத்திரத்துள் பதியிலக்கணங் கூறியவிடத்து, ஆன்மாவால் பதி அறியப்படுமென்று கூறியிருக்கவும், இவ்விடத்தும் அறிதற்குரிமையுடையது ஆன்மாவென்று கூறுதல், கூறியது கூறலாகாதோவெனின், ஆகாது. எவ்வாறெனின், பதி அறியப்படும் பொருளோ அறியப்படாத பொருளோவென்னும் ஆசங்கைக்கு உத்தரமாக ஆன்மாவினால் அறியப்படும் பொருளென்று அவ்விடத்துப் பதிக்கு இலக்கணங் கூறினார். இவ்விடத்துப் பதியையடையும் முறைமையில் சாதனஞ்செய்து அடைதற்குரியது ஆன்மாவென அதிகாரி இயல்பு கூறுகின்றார். ஆதலின், கூறியது கூறலாகாமையறிக.

பாசத்தைப் பதி அறியாது பதியைப் பாச மறியாது எனக் கூறுகின்றது-

அனைத்துஞ்சத்தென்னினொன்றையறிந்திடாதசத்தாலென்னின்
முனைத்திடா தசத்துச் சத்தின் முன்னிரு ளிரவி முன்போ
லினைப்பதிங்கசத்தேயென்னிற்சத்தின்முன்னிலாமையானுந்
தனைக்கொடொன் றுணர்தலானுந் தானசத் துணராதன்றே.

(கோ - ட.) சத்து அனைத்தும் (அறிவது) என்னின், ஒன்றை அறிந்திடாது. அசத்தால் (அறிவது) என்னின், இரவி முன் இருள்போல் சத்தின் முன் அசத்து முனைத்திடாது. இங்கு அசத்தே நினைப்பது என்னின், சத்தின் முன்னிலாமையானும் தனைக்கொடு ஒன்று உணர்தலானும் அசத்துதான் உணராதன்றே.

(போ - ரை.) மேலைச் சூத்திரத்திற் சத்தும் அசத்தும் உணரா வென்றுணர்த்தியவிடத்து, அவ்விரண்டனையும் அறியும் பொருள் யாதென வினவில், சத்தாகிய சிவமே அசத்தாகிய பாசமனைத்தினையும் அறியுமெனச் சிவாத்துவித சைவர் கூறுவர். சத்தாகிய சிவம் வியாபக அறிவாதலால், எவற்றினையும் உடனாய் நின்று ஒருசேர அறிந்து நிற்பதன்றித் தனித்தனி பிரித்து ஒன்றையும் அறியாது என்று மறுக்க, அவ்வாறு சிவம் வியாபக அறிவாயினும், உயிரின் பொருட்டு அசத்தாகிய கருவி காரணங்களைக் கூடிநின்று பகுத்தறிதல் கூடும் என்பர். இரவி முன் இருள் போல் சிவ சந்நிதியில் அசத்தாகிய கருவி காரணங்கள் முனைத்து நில்லாமையால், சிவம், கருவி காரணங்களிடமாக நின்று பகுத்தறியுமென்பதுங் கூடாது என மறுத்தவிடத்து, விகாரமின்றி நிற்கும் ஆன்மாவின் சந்நிதியில் அசத்தாகிய கருவியே சிவ காரணமாய் நின்று சத்தாகிய சிவத்தை யறியுமெனச் சிவ சங்கிராந்தவாதிகள் கூறுவர். அவ்வாறாயின், மேற்கூறியவாறு அசத்தாகிய கருவிகள் சிவ சந்நிதியில் முனைத்து நில்லாமையானும், அக்கருவிதானும் உயிர் அறிவதற்குத் துணையாய் நிற்பதன்றி அதற்குத் தனக்கென அறிவின்மையானும், அக்கருவிகள் சிவகாரணமாய் நின்று சத்தாகிய சிவத்தை அறியுமென்பதுங் கூடாது. இவ்வாறு, சத்து அசத்தையும், அசத்துச் சத்தையும் அறியாதென்பது பெறப்படவே பாரிசேட அளவையால் இவ்விரு பொருளின் வேறாய் எஞ்சிநின்ற உயிர்ப் பொருளே இவ்விரண்டனையும் பகுத்தறியுமென்பது பெறப்பட்டது. (எ-று.)

அனைத்தும் என்றவிடத்து ஐ என்னும் இரண்டாம் வேற்றுமையுருபு விரித்து அனைத்தையும் என உரைக்க. சத்து அனைத்தும் என்னின் என்றவிடத்து அவாய் நிலையால் அறிவது என்பது வந்தது. அசத்தா லென்றவிடத்தும் அறிவது என்பதைக் கூட்டி உரைக்க. சத்தின் முன் அசத்து முனைத்திடாமையாவது, இஃது குடம், இஃது ஆடை என நம்மனோராற் சுட்டியறிப்படுமாறுபோல, முதல்வனாற் சுட்டியறியப்படாத தாய் வேறு நில்லாமை. எனவே, எல்லாப் பொருளோடுங் கலந்து நின்று ஒருசேர அறிவனென்பது பெறப்படும். இச்செய்யுள் முதனூல் ஏழாஞ் சூத்திரம்போல முக்கூற்றினையுடையது. அவற்றுள்,

முதற்கூறு:—அனைத்துஞ் சத்தென்னின் ... ... ... விரவி முன் பேல். இவ்விரண்டடியும் சத்து அசத்தை உணராதென்பது.

இரண்டாங்கூறு:—நினைப்பதிங்கசத்தே ... ... ... சார் [illegible]. இவ்விரண்டடியும் அசத்துச் சத்தை யுணராதென்பது.

மூன்றாங்கூறு:—பாரிசேட அளவையால் பதி பாச மிரண்டனையும் உயிரறியுமென்பது.

இம்முக்கூற்றினுள், முன்னையிரு கூற்றினும் விரிக்கக் கூடியனவாய சங்கை உத்தரங்களின்மையின், அவற்றை இம்முதற் செய்யுளானே உணர்த்தியதோடு நிறுத்தி, ஏனைய மூன்றாங்கூற்றை மூன்று செய்யுளினானே விரிக்கின்றார். அம்மூன்று செய்யுளுள், பாரிசேட அளவையாற் பெறப்பட்டு எஞ்சிநின்ற பொருள் உயிர் என்பது இனிது விளக்கி, அவ்வுயிரினியல்பு வரைசெய் துணர்த்துதற் கெழுந்தது வருஞ் செய்யுள். (க.)

# மூன்றாமதிகரணம்.



பதி பாச மிரண்டினையும் ஆன்மா அறியும் எனவும், அவ்விரண்டினையும் அறியுமுகத்தால் ஆன்மா தன்னையறியுமெனவும் கூறுகின்றது.

சத்தசத் தறிவ தான்மாத் தானசத்து மசத்து மன்று
நித்தனாய்ச் சதசத் தாகி நின்றிடு மிரண்டன் பாலு
மொத்துட னுதித்து நில்லா துதியாது நின்றி டாது
வைத்திடுந் தோற்ற நாற்ற மலரினில் வருதல் போலும். ௨௫௦

(கோ - ு.) சத்து அசத்து அறிவது ஆன்மா. உடன் ஒத்து நில்லாது உதியாது நின்றிடாது. மலரினில் நாற்றம வருதல்போலும். தான் சத்தும் அசத்தும் அன்று; இரண்டன்பாலும் உதித்து வைத்திடும் தோற்றம். சதசத்தாகி நித்தனுய் நின்றிடும்.

(பொ - ரை.) சத்தும் அசத்தும் பேற்கூறியவாறு ஒன்றனை ஒன்று அறிதற்குரிமை யில்லாமையால், அவ்விரண்டனையும் அறிவது ஆன்மாவேயாம். அவ்வான்மா தன்னை அறியுமோ அறியாதோவென வினவுமிடத்து, சத்தையும் அசத்தையும் இது சத்து, இது அசத்தெனத் தனித்தறிவதுபோல் ஆன்மா தன்னைத் தனித்தறியமாட்டாது. அவ்வாறறியப்படாமையால்சூனியமுமன்று. மலரினிடத்து வாசனையானது மலர்போல விளங்கித் தோன்றுமலும், சூனியமல்லாமலும், அம்மலரின்கண் அடங்கித் தோன்றுமாறுபோல, சத்து அசத்து என்னும் இரண்டின் வேறாகிய ஆன்மாவும், சத்தோடு கூடித் தன்னைச் சத்தாயும், அசத்தோடு கூடித் தன்னை அசத்தாயும் அறியப்படுவதாம். அவ்வாறறியப்படுவதால் ஆன்மா சதசத்தென்று சொல்லுதற்குரிமையுடைய நித்தப் பொருளாய் நிற்கும். (எ - று.)

இதனுல், சத்து அசத்தாகிய இரண்டினையு மறியுமுகத்தால் தன்னையறியுமெனத் தன்னையறியு முறை கூறியதுமாயிற்று. இன்னும், ஆன்மா யாதானு மொன்றைச் சார்ந்து நிற்பதன்றித் தனித்து நில்லாதென்பது மறிவித்தவாறுயிற்று. (உ.)

பதி அதிசூக்கும சித்தும் பசு தூலசித்துமாய் நிற்றலால் பசுவைப் பாசம் பற்றுமெனவும், அப்பற்றுதல் அநாதி யெனவும், அப்பற்றுதலே பதி பாசம் இரண்டனையும் அறிதற்குக் காரணமெனவும், பதி பசு பாசத்திற்கு உவமையும் கூறுகின்றது.

சுத்தமெய்ஞ் ஞான மேனிச் சோதிபா லசத்தஞ் ஞான
மொத்துறு குற்ற மெல்லா முற்றிடு முயிரின் கண்ணே
சத்துள போதே வேறுஞ் சதசத்து மசத்து மெல்லாம்
வைத்திடு மநாதி யாக வாரிநீர் லவணம் போலும்.

(கோ - ு.) மெய்ஞ்ஞான மேனிச் சுத்த சோதிபால் அசத்து அஞ்ஞானம் ஒத்துறு. உயிரின்கண்ணே குற்றமெல்லாம் உற்றிடும். சத்து

உளபோதே வேறும் சதசத்தும் அசத்தும் எல்லாம் அநாதியாக வைத்திடும். வாரி நீர் லவணம் போலும்.

(போ - ரை.) பதியும் பசுவும் சித்துப் பொருளாகவும் பதியின் முன் முனைத்து நில்லாத பாசம் பசுவினாலறியப்படுவ தாய் அப்பசுவின் முன் முனைத்து நிற்றற்குக் காரணம் என்னை யோவெனின், பதியும் பசுவும் சித்து என்னும் சாதி ஒற்றுமை யால் பொதுவகையாக ஒக்குமாயினும், அவற்றுள் உண்மை ஞானமே சொரூபமாகவுடைய பதி அதிசூக்கும சித்தாதலால் அப்பதி முன் அசத்தாகிய பாசம் முனைத்து நில்லாது. பசுவா கிய உயிர் தூல சித்தாதலின் அப்பசுமுன் பாசம் முனைத்து நிற் கும். உயிருக்கு இவ்வியல்பு எக்காலத்து உண்டாயிற்றெனின், சத்தாகிய சிவம் என்று உள்ளது? அன்றே சதசத்தாகிய உயிர்க ளும் உள்ளனவாய், அன்றே அவ்வுயிர்களை அசத்தாகிய பாசம் பற்றி நிற்கும். இவ்வாறு நிற்றல் எதுபோலுமெனின், நீருக்கு இடங்கொடுத்திருக்கும் ஆகாயமாகிய கடலும், நீரும், உப்பும் போலாம். (எ - று.)

சுத்தமெய்ஞ்ஞானமேனிச் சோதிபா லசத்தஞ்ஞான மொத்துறு என்ற இதனானே சத்து அசத்தை யறியாது; அசத்துச் சத்தையறியாது என்ற முன்னையிருகூறும் ஒருவாற்றால் வலியுறுத்தப்பட்டதுங் காண்க.

உயிர் தூலசித்து என்பது உயிர் என்னும் பெயரானும், உவமையா னும் பெறப்படும். உயிர் என்னும் பெயரினால் உயிர்த்தலைச் செய்வதென் னும் பொருள் குறித்து, அங்ஙனஞ்செய்வதற்குக் கருவிகளின் துணையை வேண்டிநிற்குமென்பது பெறப்படும். அதனாலும், உவமையாகக் கூறப் பட்ட நீர், ஆகாயத்தினும் தூலம் என்பதனாலும், உயிர் தூலசித்தென்பது பெறப்படுமாறு காண்க.

சிவம் அதிசூக்குமசித்தென்றும் உயிர் தூலசித்தென்றுங் கூறினமை யால் இடையே சூக்குமசித்தென ஒன்றிருக்கவேண்டுமென்பது பெறப் படும். படவே, உயிர் பாசத்தடையினின்றும் நீங்கிப் பதியையறிந்து அதுவாய்நிற்கும் நிலை சூக்குமசித்தெனப்படுமாறு காண்க.

ஆகாயமாகிய கடலும், நீரும், உப்பும் அநாதியேயாகவும், ஓரிடத்தி லிருப்பவும், அவற்றுள், உப்பானது இடமாகிய ஆகாயத்தைப்பற்றாது நீரைப்பற்றி நிற்கும். அவ்வாறு பற்றாமைக்கும் பற்றுதற்குங் காரணம் ஆகாயத்தின் சூக்குமமும், நீரின் தூலமுமேயாம். இதுபோலப் பதி, பசு,

பாச மூன்றும் அநாதியாய் ஓரிடத்திலிருப்பினும், பாசம் அதிசூக்குமமாகிய பதியைப்பற்றாது; தூலமாகிய பசுவைப்பற்றி நிற்கும். அவ்வாறு பற்று தற்குப் பசுவின் தூலத்தன்மையே காரணம். அப்பாசப்பற்றே பதியைப் பசு அறிதற்குங் காரணமாயிற்று. எவ்வாறெனின், பாசம்பற்றி நிற்றலால் துன்பமெய்திய உயிர் துன்பநீக்கத்தைவேண்டிப் பாசத்தினின்றும் நீங்கிப் பதியைப்பற்றி நின்று அப்பதியை அறியுமென்க. (௫)

சிவம் அதிசூக்கும சித்தாதற்கும் சீவன் தூலசூக்குமசித்தா தற்குங் காரணம் பற்றுந்தன்மை யின்மையும், பற்றுந்தன்மை யுண்மையுமாமெனக் கூறுகின்றது.

**அறிவிக்க வறிதலானு மழிவின்றி நிற்ற லானுங்**
**குறிபெற்ற சித்துஞ் சத்துங் கூறுவ துயிருக் கீச**
**னெறிநித்த முத்த சுத்த சித்தென நிற்ப னன்றே**
**பிறிவிப்பன் மலங்க ளெல்லாம் பின்னுயிர்க் கருளினாலே.**

(கோ - ௬.) அறிவிக்க அறிதலானும், (அறிந்தபின்) அழிவின்றி நிற்றலானும், உயிருக்குக்குறிபெற்ற சித்துஞ் சத்துங் கூறுவது. ஈசன் உயிர்க்கு மலங்களெல்லாம் பின் அருளினாலே பிறிவிப்பன். நெறிநித்த முத்த சுத்த சித் (துச்சத்) தென நிற்பன் அன்றே.

(பொ - ரை.) சிவம் அதிசூக்கும சித்தென்பதும், சீவன் தூலசூக்குமசித்தென்பதும் எதனா லறியப்படுகின்றனவெனின், உயிர் தன்னறிவு தொழிற்படவேண்டுமாயின் சகலத்தில் கருவி முதலிய துணையையும், சுத்தத்தில் திருவருட்டுணையையும் இன்றி முடியாமையால் தூலசூக்குமசித்து. அவ்வாறறிந்தபின் என்றும் அழிவின்றி நிற்றலால் தூலசூக்குமசத்துமாம். சிவம் தனக்கொரு துணைவேண்டாது தானே அறியும் முறைமையினையுடையதால் நித்த சுத்த அதிசூக்கும சித்து. உயிருக்கு மலத்தை அருளால் நீக்கித் தன்னுண்மையினை யறிவிக்கும் உயிர்த்துணையாதலுடை மையால் அதிசூக்கும சத்துமாம். (எ - று.)

தூலசித்தென்பது கருவித்துணைகொண்டறியுங்காரணத்தால்வந்தது. இது பிறவொளியைக் கொண்டறியுங் கண்ணொளிபோலாம். சூக்குமசித் தென்பது திருவருட்டுணை கொண்டறியுங் காரணத்தால் வந்தது. இது, உயிருணர்வைக் கொண்டறியுங் கண்ணொளி போலாம். அதிசூக்கும சித்தென்பது பிறபொருளின் துணைவேண்டாது தானே அறியுங்கார ணத்தால் வந்தது. இது தானேயறியும் சூரியனொளிபோலாம்.

மேலைச்செய்யுளில் பதி, பசு, பாசம் மூன்றிற்கும் கடல், நீர், உப்பை உவமை கூறியது, அம்முப்பொருள்களின் இருப்புக்கும், பாசம் பசுவைப் பற்றுதற்கும், பதியைப்பற்றாமைக்கும் எனவும், இவ்விடத்துக்கூறிய சூரிய ஞெளி கண்ணொளி உவமை அம்முப்பொருள்களின் இலக்கணமாகியவியா பகத்திற்கும், பாசம் பதியைப்பற்றாது பசுவைப்பற்றுதற்குக் காரணம் பற்றுந் தன்மை பசுவுக்கு உண்டெனவும், பதிக்கு இன்றெனவும் உணர்த்துதற்குமெனவும் அறிக. எவ்வாறெனின், கடல் நீர் உப்பு உவமை, பதி பசு பாசம் மூன்றும் அநாதியே ஓரிடத்து உள்ளனவென்பதும், பாசம் பதியைப் பற்றாது பசுவைப்பற்றுமென்பதும் உணர்த்தும். சூரியஞெளி பதிக்குப் பூரணவியாபக முண்டென்பதும், கண்ணொளி பசுவுக்கு ஏகதேச வியாபக முண்டென்பதும் உணர்த்திக் கண்ணொளியை மறைக்கும் இருளுக்குச் சமவியாபகம் காணப்படுதல்போல, பல உயிர்களோடுங் கலந்துநிற்கும் பாசத்திற்குச் சமவியாபகமுண்டென்பது முணர்த்தும். சமவியாபகமாவது, மறைக்கப்படும் பொருளின் சத்திக்குக் குறையாமலும் கூடாமலும் அதனளவாக நிற்றல். குறையின் ஒரு காலத்துத்தானே நீக்குதல்கூடும். கூடின் எக்காலத்தும் எவராலும் நீக்குதல் கூடாது. ஆதலின், நீக்கப்படும் பாசம் சமவியாபகமாய் நின்றது. இவ்வாறு இருப்புக்கும் இலக்கணத்திற்கும் கூறிய உவமை வேறுபாடு கண்டுகொள்க.

சித்தியல்பில் தானேயறிதலும், துணைகொண்டறிதலுமாகிய வேற்றுமை காணப்படுமாறுபோல, சத்தியல்பினும் வேற்றுமை காட்டவேண்டி அறிந்தபின் னழிவின்றி நிற்றலால் சத்துங்கூறுவதென்றார். எனவே, துணைகொண்டறிந்து அழிவின்றி நிற்றலும் துணைவேண்டாது அறிவித்து அழிவின்றி நிற்றலும் வேற்றுமையெனக் கூறியவாறும். அறிந்தபின் என்றது அறிவிக்க அறிதல் என்றதுகொண்டு வருவிக்கப்பட்டது.

இதனல், குருவாய்வந்து மலங்களை நீக்குமுறைமை கூறும் வருகின்ற சூத்திரத்துக்குத் தோற்றுவாய் செய்ததுமாயிற்று.

இவை மூன்று செய்யுளானும் முறையே உயிருக்குச் சத்து அசத்து இரண்டினையுமறியும் உரிமையுண்டென்பதும், அங்ஙனம் அறிதற்குக் காரணம் தூலசூக்குமசித்தாய் நிற்றலென்பதும், உயிரினிடத்துத் தூலசூக்குமசித்துத் தன்மை அறிவிக்க அறிதலால் உளதென்பதும் விளக்கிக் காட்டி மூன்றாங்கூற்றுப்பொருள் வலியுறுத்தப்பட்டது. (௪)

மூன்றாமதிகரணம் முடிந்தது.

ஏழாஞ் சூத்திரம் முடிந்தது.

ஆகத் திருவிருத்தம் ௨௫௨.

# எட்டாஞ் சூத்திரம்.



## சாதனமும் அது வரும் வழியும்.

மேலைச்சூத்திரத்தால் பதிப்பொருளை அடைவதற்கு உயிர் உரிமை யுடையது எனக் கூறியதனால், அவ்வுயிர் பதிப்பொருளை எவ்வாறு அடையுமென ஆசங்கை நிகழுமன்றே? அந்நிகழ்ச்சிபற்றிச் செய்யவேண்டுவது இதுவென்று கூறுதற்கு எட்டாஞ் சூத்திரம் எழுந்தது.

அடைதற்குரிய உரிமை தனக்கே யுண்டென்பதுணர்ந்த வுயிர்க்குப் பதியைஅடைதலாகிய அப்பேறு தனக்குவேண்டுமென்பதும் அப்பேறடைவதற்குச் சிறந்தசாதனம் இதுவென்பதும், அச்சாதனம் எவ்வாறு வருமென்பதும் அறிந்தாலன்றி, அப்பதியை அடைதற்குரிய சாதனஞ்செய்தற்கு மனஎழுச்சிகூடாது. ஆதலால், உயிர்க்கு மனஎழுச்சி உண்டாகும்பொருட்டுப் பதியையடைய வேண்டியதுகடமையென்றும், அதற்குச்சிறந்தசாதனம் ஞானமென்றும், அது ஞானசற்குருவால் வருமென்றும் மூவகையாகப் பிரித்துச் செய்யவேண்டுவதை இச்சூத்திரத்தாற் கூறுகின்றார்.

இறைவன் குருவாகிவந்து உணர்த்துவனெனச் சூத்திரப் பொருளைத் தொகுத்துக் கூறுகின்றது.

**மன்னவன்றன் மகன்வேட ரிடத்தே தங்கி**
**வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்பப்**
**பின்னவனு மென்மகனீ யென்றவரிற் பிரித்துப்**
**பெருமையொடுந் தானாக்கிப் பேணு மாபோற்**
**றுன்னியவைம் புலவேடர் சுழலிற் பட்டுத்**
**துணைவனையு மறியாது துயருறுந்தொல் லுயிரை**
**மன்னுமருட் குருவாகி வந்தவரி னீக்கி**
**மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்.**

**(போ - ரை.)** அரசகுமாரனாகிய ஒருவன், பிள்ளைமைப் பருவத்து மடமையால் வேடரிடத்துப் பொருந்தி அவ்வேடன் வசமாய் நின்று, தன் ஜாதிக்குரிய பெருந்தகைமையினை இழந்து இழிதொழில் செய்து வளர்ந்து தந்தையாகிய அரசனையும் தன்

னையும் அறியாது மயக்கத்தைப் பொருந்தி நிற்குங்கால், பின்பு தந்தையாகிய அவ்வரசன் வந்து மகனைப்பார்த்து, நீ வேடகுமார னல்லன்; என் மகனென்று அறிவுறுத்தி அவ்வேடரினின்றும் அவனை நீக்கி அரசகுமாரனுக்குரிய பெருந்தகைமையுடன் அரச னாகிய தானும்வண்ணஞ்செய்து போற்றுமாறுபோல, நிலைபெற்ற உயிர், தன்னிலையினின்று வேறுபட்டு, நெருங்கிய ஐம்பொறி யாகிய வேடருடைய சுழலிற்பட்டு அறிவினையிழந்து, தன்னை யறியாமையேயன்றித் தலைவனையுமறியாது வருந்துவதையறிந்து, அவ்வுயிர்செய்த கெடாத தவமுதிர்ச்சியால் இரங்கி, நித்த முத்த சுத்த சித்தெனப்படுந் தலைவனாகிய அவ்வீசன், குருவடிவங் கொண்டெழுந்தருளிவந்து, தன்னையுந் தலைவனையுமறியும் வண்ண முணர்த்தி, அவ்வைம்பொறியினின்று நீங்குதற்கு, அதனோடு கூடும்படிசெய்த மலவலியைக் கெடுத்து, அதனினின்றும் மீட்டிப் பழைய நிலையாகிய தன் வண்ணமாக்கி அவ்வுயிரை மலர்போலும் தன் திருவடிக்கீழ்வைத்து வாழ்விப்பன். (எ - று.)

இங்ஙனம் அறிவித்தல் ஈசனுக்குக் கடமை என்பதை விளக்கவேண்டி அரசகுமாரனுவா னொருவனுக்கு அவன் தந்தை செய்யும் உதவியையெடுத்துக் காட்டினார். தூலமாகிய நக்ஷத்திரத்தைக்காட்டி அதன் பின் அதன் பக் கத்தேயிருக்கும் சூக்குமமாகிய அருந்ததி நக்ஷத்திரத்தைக் காட்டுமுறை போல், படிமுறையில் வைத்துணர்த்தவேண்டுதல் மரபாகலின், மும்மலச் சுழலிற்பட்டு வருந்துதல் காட்சிக்கு விடயமாகாமையின், அதனையொழித் துக் காட்சிக்கு விடயமாவதாய் எளிதினறியப்படுவதாய ஐம்பொறிச் சுழ லிற்படுதலை இவ்விடத்துக் கூறினார். துணைவனையும் என்னும் உம்மை தன்னையேயன்றி என இறந்ததுதழுவிற்று. சிறப்பெனினுமாம். மன்னு மருள் என்பது இவ்விடத்து இறப்பில் தவத்தைக்குறித்தது. இறப்பில் தவமாவது—சரியை முதலிய சிவ புண்ணியங்கள். இவை, சாலோக முத லிய பயனைத்தந்து அம்மட்டில் நில்லாது மேற்செலுத்துமாதலின் இறப் பில் தவம் எனப்பட்டன. சோதிட்டோமம் முதலிய தவங்கள் தத்தம் பயனைத்தந்து அழிவெய்துமாகலின் அவை இறக்குந் தவமெனப்படும். மன்னுமருள் என்றவிடத்து மன்னுமருளால் என மூன்றும் வேற்றுமை யுருபு விரித்துரைக்க. அரசனாகிய உவமையில் "என் மகனீயென்று" எனக் கூறுதலால், பொருளாகிய சிவத்தினும் "உணர்த்தி" என்பது வரு

விக்கப்பட்டது. * "தவத்தினிலுணர்த்த" என்றார் முதனூலாசிரியரும்.

இச்செய்யுள் முதனூல் எட்டாஞ் சூத்திரம்போல நான்கு கூற்றை யுடையது. அவற்றுள்,

முதற்கூறு:—குருவாகி வந்துணர்த்தி.

இரண்டாங்கூறு:—மன்னுமருளா லுணர்த்தி.

மூன்றாங்கூறு :—மன்னவன்றன்.................................. பேணுமாபோல் துன்னிய ஐம்புலவேடர் சுழலிற்பட்டுத் துணைவனையும் அறியாது துயருறும் தொல்லுயிர்.

நான்காங்கூறு:—அவரினீக்கி மலமகற்றி தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்.

முதற்கூற்றிலும் இரண்டாங்கூற்றிலும் உணர்த்தி என்பது வருவிக்கப்பட்டது. (க)

---

# முதலதிகரணம்.

---

## குருவாகி வந்துணர்த்தி என்பது.

உணர்த்தும் முறையில் தீக்கையால் உணர்த்துவனாதலின், அத்தீக்கை சாதாரதீக்கை, நிராதாரதீக்கை என இருவகைப்படும் எனவும், சாதார தீக்கைக்குரியார் சகலரும், நிராதார தீக்கைக் குரியார் பிரளயாகலரும் விஞ்ஞானகலரும் எனவும் கூறுகின்றது.

உரைதருமிப் பசுவர்க்க முணரின் மூன்று
 மூயரும்விஞ் ஞானகலர் பிரளயா கலர்சகலர்
நிரையின்மல மலங்கன்ம மலங்கன்ம மாயை
 நிற்குமுத லிருவர்க்கு நிராதார மாகிக்
கரையிலருட் பரன்றுவிதா சத்திநிபா தத்தாற்
 கழிப்பன்மலஞ் சகலர்க்குக் கன்ம வொப்பிற்
றரையிலா சான்மூர்த்தி யாதார மாகித்
 தரித்தொழிப்பன் மலஞ்சதுர்த்தா சத்திநிபா தத்தால்.

* சிவஞானபோதம், எட்டாஞ்சூத்திரம், ஐம்புலவேடர்.

(கோ - டு.) உரைதரும் இப்பசு உணரின் உயரும் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் மூன்று வர்க்கமாம். நிரையின் மலம், மலம் கன்மம், மலம் கன்மம் மாயை நிற்கும். சகலர்க்கு கன்ம ஒப்பில் சதுர்த்தா சத்திநி பாதத்தால் தரையில் ஆசான்மூர்த்தி தரித்து ஆதாரமாகி மலம் ஒழிப்பன். முதல் இருவர்க்கும் துவிதாசத்திநி பாதத்தால் கரையிலருட்பான் நிராதார மாகி மலங்கழிப்பன்.

(போ - ரை.) பதியை அடைதற்கு உரிமையுடையன வென மேற்கூறிப்போந்த ஆன்மாக்கள் எண்ணிறந்தனவேயாம். ஆராயுமிடத்து அவ்வான்மாக்கள் உயர்ந்த விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என மூவகைப்படுவர். அவருள், விஞ்ஞானகலர் ஆணவமலம் ஒன்றுடையர். பிரளயாகலர் ஆணவமலம் கன்ம மலம் இரண்டுமுடையர். சகலர் ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலமும் உடையர். அவருள், மும்மலங்களுமுடைய சகல வர்க்கத்து உயிர்கள் இருவினையொப்பால், மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்னும் நால்வகைச் சத்திநிபாதமும் பொருந்துதற்குரியர். ஆதலால், அச்சகலவர்க்கத்து உயிர்களுக்கு இருவினை யொப்பு வந்தவிடத்துப் பொருந்திய சத்திநிபாதத்திற் கேற்ப உணர்த்தவேண்டுவது முறைமையாதலின், அவ்வாறுணர்த்துதற்கு இவ்வுலகின்கண் இறைவன் குருமூர்த்தியை ஆதாரமாகக்கொண்டு தோன்றிச் சாதார தீக்கை செய்து மலத்தை நீக்குவன். பிரளயா கலராகிய உயிர்கள் தீவிர தீவிரதா சத்திநிபாதத்தைப் பொருந்துதற்குரியராதலான், அவர்களுக்கு இறைவன் மான்மழு சதுர்ப்புஜங்களுடைய திருமேனியோடு தோன்றி உணர்த்துவதாகிய நிராதார தீக்கைசெய்து மலத்தை நீக்குவன். விஞ்ஞானகலராகிய உயிர்கள் தீவிரதரசத்திநிபாதத்தைப் பொருந்துதற்குரியராதலால், அவருக்கு அளவிடுதற்கரிய கருணை வடிவாகிய இறைவன் அவரறிவின் உள்ளீடாகநின்று உணர்த்துவதாகிய நிராதார தீக்கைசெய்து மலத்தை நீக்குவன். (எ - று)

விஞ்ஞானகலரென்பது செய்யுளாதலின் விஞ்ஞானகலரென நின்றது.

சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் என ஆன்மாக்களை வகுத்ததற்குக் காரணம் என்னையெனின், கலர் என்பது கலையையுடையவர் எனப்

பொருள்படும். படவே, கலை முதலிய தத்துவங்களோடு கூடிய ஆன்மாக்களைச் சகலரென்றும், கலை முதலிய தத்துவங்களைப் பிரளயத்தில் நீக்கப்பெறும் ஆன்மாக்களைப் பிரளயாகலரென்றும், கலை முதலிய தத்துவங்களை விஞ்ஞானத்தால் நீக்கப்பெறும் ஆன்மாக்களை விஞ்ஞானகலரென்றும் பிரித்தவாறும். பிரளயாகலரென்பதை பிரளய அகலர் என்றும், விஞ்ஞானகலரென்பதை விஞ்ஞான அகலர் என்றும் பிரித்து, பிரளயத்தில் கலையற்றவர்; விஞ்ஞானத்தால் கலையற்றவர் எனக் கொள்ளல்வேண்டும். அறுதல் துணிபாதலின், அற்றவரென இறந்தகாலத்தாற் கூறப்பட்டனர்.

இவ்வாறு வகுத்ததற்குத்தான் காரணம் என்னையெனின், விஞ்ஞானகலர்—அநாதி கேவலத்தில் ஆன்மாக்களெல்லாம் ஆணவமலத்தால் மறைப்புண்டு கிடக்கும். மலத்தின் சத்தி பலவாதலால், மறைப்பும் பலவேறு வகைப்படும். அங்ஙனம் மறைப்புண்டு கிடக்கும் ஆன்மாக்களுக்கு மலநோயைத் தீர்க்கச் சிவபெருமான் திருவுளங்கொண்டருள்வன். கொண்டருளுங்கால் கன்மமல மாயாமலங்களைக் கூட்டாமலே விஞ்ஞானத்தால் ஆணவமலத்தை நீக்குதற்குரிய மறைப்பினையுடைய ஆன்மாக்களுக்கு விஞ்ஞானத்தால்ஆணவமலத்தைநீக்குவன் .விஞ்ஞானமென்பதுவிசேடஞானம். அஃதாவது பாசஞானம் பசுஞானங்களினின்றும் மேம்பட்ட பதிஞானமாம். இப்பதி ஞானத்தை இறைவன் எவ்வாறு நின்று உணர்த்துவனென்னின், அறிவினுள் அறிவாய் நின்று உணர்த்துவனென்க. அவ்வாறு உணர்த்துவதற்குக் கலை முதலிய தத்துவங்களாலாக்கப்படும் சரீரமும் புவனமும் இன்றியமையாது வேண்டப்படும். படவே, சுத்த மாயா காரியங்களாகிய கலாதி தத்துவங்களா லாக்கப்பட்ட சரீரத்தைக் கொடுத்து, அசுத்த மாயைக்குமேல்வைகும்படி செய்வன். இவ்வாறு கலாதிதத்துவங்களைப்பெற்று விஞ்ஞானத்தால் அத்தத்துவங்களிற் கட்டுப்படாதிருத்தலின் விஞ்ஞானகலர் எனப் பெயராயிற்று. இத்தகைய ஆன்மாக்களுக்கு ஆணவமல பந்தமிருத்தலால், இவர் ஒரு மலமுடையரெனப்படுவர். இவ்விஞ்ஞானகலரும் பக்குவர் அபக்குவரென இருதிறப்படுவர். பக்குவர் அப்பொழுதே சிவசாயுச்சியத்தைப் பெறுவர். அபக்குவர் உத்தமர், மத்திமர், அதமரென முத்திறப்பட்டு, உத்தமர் அணு சதாசிவர் முதலியோராய்ச் சதாசிவ தத்துவத்திலும், மத்திமர் அட்டவித்தியேசுவரர் முதலியோராய் ஈசுவரதத்துவத்திலும், அதமர் மூன்றரைக்கோடி தேவர்களாய்ச் சுத்த வித்தியா தத்துவத்திலும் வசித்து அதிகாரமுடையராய்ப் பிரளயத்திலும் மத்தியிலும் முத்தியடைவர். இந்த விஞ்ஞானகலருக்கு எடுத்த பிறவியையன்றி வேறு

பிறவி கிடையாது. இவ்விடத்துக் கூறிய தேவர்கள் வேறு, சகல வருக் கத்துத் தேவர்கள் வேறு.

பிரளயாகலர்—கன்மமலத்தைக்கூட்டி ஆணவமலத்தை நீக்குதற் குரிய ஆன்மாக்களுக்கு அசுத்த மாயா காரியமாகிய கலாதி தத்துவங்க ளால் ஆக்கப்பட்ட சரீரத்தைக் கொடுத்து, அவ்வசுத்த மாயையின் மத்தி யில் வைகும்படிசெய்து, பிரளயத்தில் இறைவன் தடத்தத் திருமேனி கொண்டு முன்னின்று அருள்செய்வன். இவருக்குப் பிரளயத்தின் பின் பிறவியில்லாமையால் பிரளயாகலரெனப் பெயராயிற்று. விஞ்ஞானகல ரில் பிரளயத்தில் முத்தியடைபவருக்கும் இவருக்கும் வேற்றுமையென்னை யோ வெனின், விஞ்ஞானகலருக்குக் கன்மமலம் இல்லாமையால் பிரளயம் வரை ஒரு பிறவியேயன்றி மறுபிறவியில்லை. பிரளயாகலருக்குக் கன்ம மலம் உண்மையால் ஒரு பிரளயத்துள் சில பிறவிகளுள. இவையே வேற் றுமையாம். இவர், ஆணவம் கன்மம் என்னும் இருமலமுடையர்.

சகலர்—கன்மமலம், மாயாமலங்களைக்கூட்டி ஆணவமலத்தை நீக்கு தற்குரிய மறைப்பினையுடைய ஆன்மாக்களுக்கு அசுத்த மாயா காரியமாகிய கலாதி தத்துவங்களாலாக்கப்பட்ட சரீரத்தைக் கொடுத்து பிரகிருதி மாயையில் வைகும்படி செய்து பக்குவம் வந்தகாலத்து இறைவன் குரு மூர்த்தியாய்த் தோன்றிநின்று அருள் செய்வன். இவர், ஆணவம் கன்மம் இரண்டுடனே மாயாமலமுடையராதலின், மயக்கத்தினால் பிரளயம் வரை பல பிறவிகளை எடுத்து, பிரளயத்தில் கலாதிகளுடன் ஒடுங்கிக்கிடந்து புனருற்பவம் ஆகுங்கால் மீண்டுந்தோன்றி இவ்வாறே பிறப்பிறப்பிற்பட்டு உழல்வராதலின் சகலரெனப்பட்டார். தேவர் முதல் எறும்பீறுகவுள்ள உயிர்களனைத்தும் சகலரெனப்படும். சகலரினும் பிரளயாகலத் தன்மை, விஞ்ஞானகலத் தன்மை சித்தித்தல் கூடும். அதாவது, பிரகிருதி மாயா புவனப்பற்று ஞானத்தால் நீங்கப்பெற்றவர் சகலரில் பிரளயாகலராவர். இவருக்கு இறைவன் தடத்தத் திருமேனியைத் தரிசித்தல் கூடும். பிர கிருதி மாயா புவனம், அசுத்த மாயா புவனமாகிய இருபுவனங்களின் பற் றும் ஞானத்தால் நீங்கப்பெற்றவர் சகரில் விஞ்ஞானகலராவார். இவருக்கு இறைவன் அறிவுக்குள் அறிவாய் நின்று உணர்த்துவன். சகலரில் விஞ் ஞானகலத்துவம் வந்தால் மேற்பிறவி இல்லை. பிரளயா கலத்துவம் வந் தால் சில பிறவியுண்டு. மேற்கூறிய விஞ்ஞானகலர், பிரளயாகலர் அநாதி யாயுள்ளவர். சகலரில் விஞ்ஞானகலர் பிரளயாகலர் ஆதியாயுள்ளவர்.

சத்திநிபாதம் என்பது:—சத்தி பதிதலெனப் பொருள்படும். அதா வது, திருவருட் சத்தியின் விளக்கம் ஆன்ம அறிவின்கண் உண்டாதல்.

அது மந்ததரமாக உண்டாதலென்பது அதிக மந்தமாக என்றபடியாம். அதாவது, அருட்சத்தியின் விளக்கம் சிறிது உண்டாகி அதற்கேற்றவாறு சிறிதுமலவாசனை நீங்குதல். இதனை, மந்தரமுதலியனவாய் நான்கு வகையாகப் பிரித்ததன் கருத்து, மலவாசனையை நான்கு கூறாக்கியும், அவ்வாறே திருவருட் சத்தியை நான்கு கூறாக்கியும், ஒரு கூறு திருவருட்சத்தி தோன்ற ஒரு கூறு மலவாசனை நீங்குதலை மந்ததரசத்திநிபாதம் என்றும், இருகூறு திருவருட் சத்தி தோன்ற இருகூறு மல வாசனை நீங்குதலை மந்த சத்திநிபாதம் என்றும், மூன்றுகூறு திருவருட்சத்தி தோன்ற மூன்றுகூறு மலவாசனை நீங்குதலை தீவிர சத்திநிபாதம் என்றும், நான்குகூறு திருவருட்சத்தி தோன்ற மலவாசனை முற்றும் விடுபடுதலை தீவிரதர சத்திநிபாதம் என்றும் பிரித்துக் கூறியவாறும். இதனால் மல பரிபாகமும் நான்கு வகைப்படுமென்பதறிக. மல பரிபாகம் என்பது மலசத்தி தேய்தல்.

சகலவர்க்கத்து உயிர்கள் பிரகிருதி மாயா புவன வாசிகளாதலால், நால்வகைச் சத்திநிபாதத்தையும் பொருந்துதற்குரியர். பிரளயாகலர், விஞ்ஞானகலருக்குப் பிரகிருதி மாயா புவனமில்லாமையால் மந்தரம், மந்தம் என்னும் இருவகைச் சத்திநிபாதமில்லை.

இருவினை ஒப்பு என்பதை முதற்சூத்திரத்து ௬௭-வது செய்யளுரையிற் கூறியிருக்கின்றமையால் ஆண்டுக் காண்க.

சாதாரதீக்கை என்பது ஆதாரத்தோடு கூடி நின்று செய்யப்படுந் தீக்கை எனப்படும். அதாவது, இறைவன் குருமூர்த்தியை ஆதாரமாகக் கொண்டு நின்று செய்யும் தீக்கையாம்.

நிராதாரதீக்கை என்பது ஆதாரமின்றி நின்று செய்யும் தீக்கையாம். அது இருவகைப்படும். அவற்றுள் ஒன்று இறைவன் தடத்தத்திருமேனியோடு முன்னின்று செய்யுந் தீக்கை. மற்றொன்று சொரூபத் திருமேனியாகிய ஞானசொரூபியாய் அறிவினுள் நின்று உணர்த்துவதாகிய தீக்கை.

இனி, சாதாரம் நிராதாரம் என்னும் இவ்விரண்டு தீக்கையினுள். சகலவர்க்கத்து உயிர்கட்கு அநுக்கிரகஞ் செய்யு முறைமையாகிய இவ்விடத் தெடுத்துக்கொண்ட சாதார தீக்கையிலுண்டாம் பாகுபாடும், அப்பாகுபாடுகளினியல்பும் வகுத்துக் கூறுதற் கெழுந்தன வருஞ்செய்யுட்கள்.

(உ.)

சாதார தீக்கையாவது நோக்கம் முதலியனவாகப்பலவகைப் படுமெனவும், அவற்றுள் ஔத்திரி சிறந்தது எனவும், அவ்வௌத்திரி ஞானவதி கிரியாவதி என இருவகைப்படுமெனவும், அவ்விரண்டும் தனித்தனி நிர்ப்பீசம், சபீசமென இரண்டிரண்டாக நால்வகைப்படும் எனவும் கூறுகின்றது.

பலவிதமா சான்பாச மோசனந்தான் பண்ணும்
    படிநயனத் தருள்பரிசம் வாசகமா னதபு
மலகில்சாத் திரம்யோக மவுத்தி ராதி
    யநேகமுள வவற்றினவுத் திரியிரண்டு திறனு
மிலகுஞா னங்கிரியை யெனஞான மனத்தா
    லியற்றுவது கிரியையெழிற் குண்டமண்ட லாதி
நிலவுவித்துச் செய்தல்கிரி யாவதிதா னின்று
    நிர்ப்பீசஞ் சபீசமென விரண்டாகி நிகழும்.

(கோ - ரு.) அவற்றின் அவுத்திரி இலகு ஞானம் கிரியை என இரண்டு திறனும். எழில் குண்ட மண்டலம் ஆதி மனத்தால் கிரியை இயற்றுவது ஞானம். நிலவுவித்துச் செய்தல் கிரியாவதி. தான் இன்னும் நிர்ப்பீசம் சபீசம் என இரண்டாகி நிகழும்.

(பொ - ரை.) சகல வர்க்கத்து உயிர்களுக்கு மல பரிபாகம் மந்ததரம் முதலியனவாகப் பலவகைப்படுதலின், அவற்றிற்கேற்ப ஆசிரியன் அம்மலத்தைக் கெடும்படி செய்யும் சாதாரண தீக்கையும் இருவகைப்படும். அவற்றுள், திருவருள் நோக்கம், பரிசம், வாக்கு, பாவனை, நூல், யோகம் என ஆறும் ஒருவகை. அவ்வாறுடனே கூடிய ஔத்திரி சாம்பவம் மற்றொரு வகை. ஔத்திரி தீக்கைக்கு உரியரல்லாதார்க்கு அந்த ஆறு தீக்கை மட்டுஞ் செய்யப்படும். அவ்வௌத்திரியும் விளங்குகின்ற ஞானவதி, கிரியாவதி என இருதிறப்படும். அவற்றுள் அழகினையுடைய குண்டம் மண்டலம், அங்கி, நெய், சுருக்கு, சுருவம் முதலிய அனைத்தும் மனத்தாற் கற்பித்துக்கொண்டு விதிப்படி ஆகுதி முதலிய கிரியையை அகத்தே செய்வது ஞானவதியாம். அவையனைத்தும் புறத்தே அமைத்துக்கொண்டு அக்கிரியையைப் புறம்பே செய்வது கிரியாவதி எனப்படும். இவ்விருவகைப்பட்ட ஔத்திரி தீக்கையும் நிர்ப்பீசம், சபீசம் என இருதிறப்பட்டு ஞானத்தில் நிர்ப்பீசம், ஞானத்தில் சபீசம், கிரியையில் நிர்ப்பீசம், கிரியையில் சபீசம் என நால் வகைப்படும். (எ - று.)

ஓம சகிதம் செய்யப்படுவது ஔத்திரி யெனப்படும். [illegible]

நோக்கம்—சட்சு தீக்ஷை எனப்படும். அதாவது, கண்ணால் பார்த்தல். பார்வை அநுக்கிரகமென்றும் நிக்கிரகமென்றும் அவ்விரண்டுமின்றிய பொதுவான அழகென்றும் மூன்றுவகைப்படும். அவற்றுள், அநுக்கிரகமான பார்வையே சட்சுதீக்ஷையெனப்படும். அதாவது, ஆசிரியன் உண்மைப் பொருளிலே சித்தத்தை வைத்து அச்சித்த விருத்தியோடு கூட மாணக்கனுடைய பந்தம் நீங்கும்படி பார்த்தல்.

பரிசம்—பரிசதீக்ஷை எனப்படும். அதாவது, ஆசிரியன் தனது வலது கையில் சிவபெருமானைப் பாவனை செய்து பூசித்து அக்கையால் மாணக்கன் தலையைப் பரிசித்து, அதாவது, கையைத் தலைமேல் வைத்துப் பாசம் நீங்கும்படி செய்தல்.

வாக்கு—வாசகதீக்ஷை எனப்படும். அதாவது, மாணக்கனுடைய வருணத்திற்கும், ஆச்சிரமத்திற்கும் ஏற்றவாறு பஞ்சாக்கர மந்திரத்தை உபதேசித்தல்.

பாவனை—மானததீக்ஷை எனப்படும். அதாவது, ஆசிரியன் தன்னுடைய யோகாப்பியாசத்தால் மாணக்கனுடைய இருதயத்தில் பிரவேசித்து அம்மாணக்கன் அறிவில் சிவமாந்தன்மை விளங்கும்படி செய்தல்.

நூல்—சாஸ்திரதீக்ஷை எனப்படும். அதாவது, ஞான சாஸ்திரப் பொருள்களையெல்லாம் தொகுத்துப் பதி, பசு, பாசங்களுடைய இலக்கணங்களையும், சிவ சீவர்களுடைய ஐக்கியத்தையும் நூல்வழியாகப்போதித்தல்.

யோகம்—யோகதீக்ஷை எனப்படும். அதாவது, சிவயோகத்தை அப்பியாசம் பண்ணும்படி உபதேசித்தல்.

ஔத்திரி—ஔத்திரிதீக்ஷை எனப்படும். அதாவது, ஓமத்தோடு கூடிச் செய்யுந் தீக்ஷையாம்.

சாம்பவம்—சாம்பவதீக்ஷை எனப்படும். அதாவது, சத்தியோடு கூடிச் செய்யுந் தீக்ஷையாம.

ஞானவதி கிரியாவதி என்பன, ஞானவழி, கிரியாவழி எனப்படும். அதாவது ஞானமார்க்கம், கிரியாமார்க்கமாம்.

நிர்ப்பீசம்—பீசமில்லாதது எனப் பொருள்படும். அதாவது, செபிக்கக்கூடிய மந்திரத்திற்கு மூலமாகிய பீசாக்கரமின்றி மந்திரத்தை மட்டும் உபதேசிப்பது.

சபீசமாவது—பீசாக்கரத்தோடுகூட மந்திரத்தை உபதேசிப்பது,(௩)

நிரப்பீசதீக்ஷைக்கு அதிகாரி இவரெனவும், அத்தீக்கையின் இலக்கணம் இதுவெனவும், அது நிரதிகார தீக்கையெனச் சொல்

லப்பட்டுச் சமயம், விசேடம், நிருவாணமென மூன்ருய் விளங்கு மெனவும் கூறுகின்றது.

**பாலரொடு வாலீசர் விருத்தர்பனி மொழியார்**
**பலபோகத் தவர்வியாதிப் பட்டவர்க்குப் பண்ணுஞ்**
**சீலமது நிர்ப்பீசஞ் சமயா சாரந்**
**திகழ்சுத்தி சமயிபுத் திரர்க்கு நித்தத்**
**தேலுமதி காரத்தை யியற்றித் தானு**
**மெழினிரதி காரையென நின்றிரண்டாய் விளங்குஞ்**
**சாலநிகழ் தேகபா தத்தி ளேடு**
**சத்தியநிர் வாணமெனச் சாற்றுங் காலே.**

(கொ - டு.) நிர்ப்பீசம் பாலரொடு, வாலீசர், விருத்தர், பனி மொழியார், பலபோகத்தவர், வியாதிப்பட்டவர்க்கு திகழ் சமயாசாரஞ் சுத்தி, நித்தத்து எலும் அதிகாரத்தை இயற்றி, எழில் நிரதிகாரை என நின்று, அதுதானும் சமயி, புத்திரர்க்குப் பண்ணுஞ் சீலம், சாற்றுங்காலே, சால நிகழ் தேகபாதத்திளேடு சத்திய நிர்வாணமென இரண்டாய் விளங் கும்.

(பொ - ரை.) மேற்கூறிய நிர்ப்பீசம், சபீசம் என்னும் இரண்டனுள், நிர்ப்பீச தீக்கையாவது, மலபரிபாகம் உடைய ராயும், சமயாசாரங்களை அநுட்டிக்கும் ஆற்றலும், கர்மத்தை யநுட்டிக்கும் அறிவும் இல்லாதவருமாகிய பாலரும், அறிவில்லாத வரும், வயதில் முதிர்ந்தவரும், மாதரும், போகாநுபவம் மிகுதியு முடையவரும், நோயினையுடையவருமாகிய இவர் முதலாயினர்க் குச் செய்யப்படுவதாம். செய்யுங்கால், அவர் அநுபவிக்க வேண்டிய கன்மங்களை ஆகுதியினல் ஆசிரியன் சுத்திசெய்து, அநுட்டிக்கவேண்டிய சமயாசாரங்களையும் அவ்வாறே ஆகுதியி ளுல் சுத்திசெய்து கன்மங்களையும், சமயாசாரங்களையும் அநுப வத்திற்கு வாராமலும், செய்யவேண்டுவதில்லாமலும் நீக்கி, நித்திய கன்ம மாத்திரையில் இயன்றவாறு அநுட்டிக்கும் அதிகாரத்தைக் கொடுத்து, நைமித்திக கன்மத்தும், காமிககன்மத்தும் அதிகாரங் கொடாதிருக்கப்படும். நைமித்திகத்தும் காமிகத்தும் அதிகார

மில்லாமையினால் இத்தீக்கை நிரதிகாரம் எனவும் படும். இவ்வாறு செய்யப்படும் ஔத்திரி தீக்கையும் சமயம், விசேடம், நிருவாணமென மூன்றும். அவற்றுள், சமயம் சமயிக்கும், விசேடம் புத்திரர்க்கும் செய்யப்படும். நிர்வாண தீக்கையைச் சொல்லுமிடத்து, சத்தியோ நிருவாணம், அசத்தியோ நிருவாணமென விளங்கும். சத்தியோ நிருவாணமாவது, தீக்ஷை செய்த அப்பொழுதே முத்தியைத் தருவது. அசத்தியோ நிருவாணமாவது, பிராரத்த தேகம் ஒழிந்த பின்னர் முத்தியைத் தருவதாய் மிக்கு நிகழ்வது. இந்த நிருவாண தீக்ஷை மோட்ச விருப்பமுடையாருக்குச் செய்யப்படுவது. (எ - று.)

சமயாசார சுத்தியோடு செய்யப்படும் நிருவாண தீக்கையும், அந்த நிருவாணத்திற்கு அங்கமாயும், அதற்கு அங்கமாகாது தனியாயும் சமயாசார சுத்தியோடு செய்யப்படும் சமய, விசேடங்களும் நிர்ப்பீசமெனக் கொள்க.

நித்திய கன்மமாவது—நாள்தோறுஞ் செய்யவேண்டிய சந்தியா வந்தன முதலிய கிரியைகள்.

நைமித்திக கன்மமாவது—விசேட காலமாகிய கிரஹண முதலிய புண்ணிய தினங்களில் விசேடமாகச் செய்யும் செபம், ஆராதன முதலியன.

காமிகமாவது—சித்தி முதலிய பயனை வேண்டிச் செய்யும் விசேடக் கிரியை.

சமய தீக்ஷையாவது—சமயத்தில் பிரவேசிக்கச் செய்வதாகிய தீக்ஷையாம். ஆதலின், இவர் சமயி எனப்படுவர்.

விசேட தீக்ஷையாவது—சமயப் பிரவேசஞ் செய்தவனுக்குச் சிவபூசை முதலிய ஆராதனங்கள் செய்யும்படி செய்வதாம். ஆராதித்தலின் இவர் புத்திரரெனப்படுவர்.

நிருவாண தீக்ஷையாவது—பாச பந்தமனைத்தையும் அறவே நீக்கிச் சிவபிரான்திருவடியை யடையும்படி செய்வதாம்.

மந்ததர பக்குவமுடையார்க்குச் சமயதீக்ஷை ஒன்றுசெய்து, சரியையினையும், மந்தபக்குவமுடையார்க்குச் சமய விசேடம் இரண்டுஞ்செய்து கிரியையினையும், தீவிர பக்குவமுடையார்க்கு அவ்விரண்டு தீக்கையுஞ் செய்து யோகத்தினையும், தீவிரதர பக்குவமுடையார்க்கு நிருவாண தீக்கை

செய்து ஞானத்தினையும் அநுட்டிக்கும்படி செய்வர். சபீச தீக்ஷைக்கு மிவ்வாறே கொள்க. (ச)

சபீச தீக்ஷைக்கு அதிகாரி இவரெனவும், அத்தீக்கையின் இலக்கணமிது வெனவும், அது சாதிகார தீக்கை என்று சொல்லப் பட்டுச் சமயம் முதலிய நான்காய் விளங்குமெனவும், இத்தீக்கை யுடையார் சாதகர், ஆசாரியரென இருதிறப்படுவரெனவும், இத் தீக்கையும் உலகதருமிணி சிவதருமிணி என ஆச்சிரமபேதம்பற்றி இருதிறப்படுமெனவும் கூறுகின்றது.

ஓதியுணர்ந் தொழுக்கநெறி யிழுக்கா நல்ல
 வுத்தமர்க்குச் செய்வதுயர் பீசமிவர் தம்மை
நீதியினா னித்தியநை மித்திககா மியத்தி
 னிறுத்திநிரம் பதிகார நிகழ்த்துவதுஞ் செய்து
சாதகா சாரியரு மாக்கி வீடு
 தருவிக்கு முலோகசிவ தருமிணியென் றிரண்டா
மாதலினா லதிகாரை யாஞ்சமய விசேட
 நிருவாண மபிடேக மிவற்றடங்கு மன்றே. 157

(தொ-டு) உயர்பீசம் ஓதியுணர்ந்து ஒழுக்க நெறி இழுக்காநல்ல உத்தமர்க்கு நிறுத்திச் செய்து, இவர் தம்மை நீதியினால் நைமித்திக காமியத்தின் நிரம்பு அதிகாரம் நிகழ்த்துவதும் செய்து அதிகாரையாம் சாதகா சாரியரும் ஆக்கி வீடுதருவிக்கும் உலோக (தருமிணி) சிவதருமிணி யென்றி ரண்டாம். ஆதலினால், இவற்று சமயம், விசேடம், நிருவாணம், அபிடேகம் அடங்கும் அன்றே.

(போ - ரை.) இனி உயர்ந்த சபீசதீக்கையாவது, மலபரி பாகத்தோடு கூடக்கற்றறிந்து ஒழுக்க வழியில் வழுவாது நிற்கும் ஆற்றல் மிக்குடைய உத்தமத்திலுத்தமராயினார்க்குச் செய்யப் படுவதாம். செய்யுங்கால், அதிகாரியினுடைய பக்குவத்தை யறிந்து அநுட்டிக்க வேண்டிய சமயாசாரகன்மமாத்திரம் அநுட் டிக்கும்படி நிறுத்தி, உலக போகாநுபவத்திற்குரிய எனையகன் மங்களைச்சுத்தி செய்து அதாவது, அநுபவத்திற்கு வரவொட் டாமல் சிவாக்கினியால் கெடுத்து ஒழித்து, இவனை முறைமை

யில் நித்தியம், நைமித்திகம், காமிகம், என்னும் மூன்றினும் பேரதிகாரமுடையாராகச் செய்யப்படும். இவ்வாறு செய்தலால் இத்தீக்கைசாதிகார தீக்கை எனவும் பெயர் பெறும். இத்தீக்கைப் பேறுடையார் சாதகரும், ஆசாரியருமென இருதிறப்படுவர். அவ்வாறிருதிறப்படுதற்குக் காரணம் தீக்கையின் வேறுபாடேயாம். அவ்வேறுபாடாவது, இச்சபீச தீக்கை சமயம், விசேடம், நிருவாணம், அபிடேகமென நால்வகைப்பட்டு அவற்றுள் சமயம், விசேடம், நிருவாணம் மட்டுஞ் செய்யப் பெற்றவர் சாதகரும், அம்மூன்றுடன் அபிடேகமுஞ் செய்யப்பெற்றவர் ஆசாரியருமாவரென்பதேயாம். வீட்டினைத்தரும் இத்தீக்கையும், இல்லறமுடையாருக்குச் சிகையோடு கூடிச்செய்வதாகிய உலோக தருமிணி யென்றும், துறவறமுடையாருக்குச் சிகாச்சேதத்தோடு செய்வதாகிய சிவதருமிணி யென்றும் இருதிறப்படும். உலோக தருமிணியைப் பவுதிகமென்றும், சிவதருமிணியை நைட்டிகமென்றுங் கூறுவர். இவ்வாறுதலின் நிர்ப்பீசம், சபீசம் என்னும் இருவகைத் தீக்கையினுள் சமயம், விசேடம், நிருவாணம், அபிடேகம் என்னும் பேதமெல்லாம் அடங்கும் (எ - று)

சமயாசாரசுத்தியின்றிச் செய்யப்படும் நிருவாண தீக்கையும், அதற்கு அங்கமாய்ச் செய்யப்படுஞ் சமய விசேடங்களும் சபீச தீக்கையெனக் கொள்க. உத்தமத்திலுத்தமரென்று கூற வேண்டி நல்ல உத்தமர் என்றார். சிகை பிரமரந்திரத்தை மறைத்தலின் திரோதான ரூபமாகும்.

இவ்வாறு கூறிய வாற்றால் தீக்கை யென்பது, ஔத்திரி எனத் தொகையாலொன்றும், ஞானவதி, கிரியாவதி என வகையாலிரண்டும், ஞானவதி நிர்ப்பீசம், ஞானவதி சபீசம், கிரியாவதி நிர்ப்பீசம், கிரியாவதி சபீசம் என விரியால் நான்கு மாயாவாறு காண்க.

சமயா சாரகன்மமென்பது, சந்தியா வந்தன சிவபூசை முதலிய கருமங்கள்.

சாதிகார தீக்கையென்பது அதிகாரத்தோடு கூடின தீக்கை.

அபிடேகமென்பது, ஆசாரியனுதற்குரிய மந்திரக்கிரியைகளைக் கும்பத்திற் செய்து ஸ்நானஞ் செய்விப்பது.

பவுதிக தீக்கை என்பது, பவுதிகம் பூதத்தின் காரியமாதலால், பூத காரியமாகிய உலகத்தோடு கூடியிருக்கும்படி செய்யும் தீக்கை எனப்படும்.

நைட்டிக தீக்கை என்பது, நைட்டிகம் நிட்டையோடு கூடியது ஆதலால், நிட்டையோடு கூடியிருக்கும்படி செய்யும் தீக்கை எனப்படும்.

இவை மூன்று செய்யுளானும் குருவையதிட்டித்துச் செய்யும் சாதார தீக்கையானது நோக்க முதலியனவும் ஔத்திரியுமென இருவகைப்படு மெனவும், தனித்துச் செய்தலும் அங்கமாகச் செய்தலுமென நோக்க முதலியவற்றினியல்பும், ஔத்திரியின் பேதங்களாகிய சபீச நிர்ப்பீசங்களி னியல்புந் தொகுத்துக் கூறப்பட்டன. (௫)

தீக்கை செய்யும் ஆசிரியன் சிவம் எனவும், செய்யும் விதமா கிய அத்துவசுத்தி இவ்வாறெனவும் கூறுகின்றது.

அழிவிலாக் கிரியையினு னுதல்சத்தி மத்தா
னுதலத்து வாசுத்தி பண்ணிமல மகற்றி
யொழிவிலாச் சிவம்பிரகா சித்தற்கு ஞான
முதிப்பித்துற் பவந்துடைப்ப னரனொரு மூவர்க்கும்
வழுவிலா வழியாறு மந்திரங்கள் பதங்கள்
வன்னங்கள் புவனங்க டத்துவங்கள் கலைகள்
கழிவிலா துரைத்தமுறை யொன்றினொன்று வியாத்தி
கருதுகலை சத்தியின்கண் சத்திசிவன் கண்ணும்.

(கோ - ௬) அரன் ஒரு மூவர்க்கும் அழிவிலாச்சத்திமத்தானுதல் கிரியையினுனுதல் மந்திரங்கள், பதங்கள், வன்னங்கள், புவனங்கள், தத்து வங்கள், கலைகள் ஆறும் வழுவிலா வழி உரைத்தமுறை ஒன்றினொன்று கழிவிலாது வியாத்தி. கருதுகலை சத்தியின்கண். சத்தி சிவன் கண்ணும். அத்துவாசுத்தி பண்ணி மலமகற்றி ஒழிவிலாச்சிவம் பிரகாசித்தற்கு ஞானம் உதிப்பித்து உற்பவம் துடைப்பன்.

(பொ - ரை.) மேற்கூறியவாறு தீக்கையைச் சிவபெரு மானே குருமூர்த்தியை வாயிலாகக்கொண்டு நின்று செய்வன். தீக்கையைப் பெறும் மாணுக்கர் ஞானமார்க்கத்திற் குரியவரும், கிரியாமார்க்கத்திற் குரியவருமென இருதிறப்படுவர். அவ்விரு திறத்தவரும் உத்தமர், மத்திமர், அதமர் எனத்தனித்தனி முத்திறப்படுவர். அவருள், மேற் கூறியவாறு கற்றறிந்து ஒழுக்க நெறியில் நிற்பவர் உத்தமர். கற்றறிந்து ஒழுக்க நெறியில் நில்லாத வர் மத்திமர். கற்றறிதலும் ஒழுக்க நெறிநில்லாமையுமுடையா

அதமர். ஒழுக்க நெறிநில்லார் என்பதற்குச் சரியையாதி ஒழுக்கமில்லார் என்பது பொருளேயன்றி, இழுக்க நெறியுடையாரென்பது பொருளன்று. இத்தகைய பக்குவர்க்கு அவரவர் பக்குவத்திற்கேற்ப ஞானதீக்கை, கிரியா தீக்கை என்னும் இரண்டினுள் ஒன்றை ஆசிரியர் செய்வர். எவ்வாறு செய்வரெனின், மந்திரங்கள், பதங்கள், வன்னங்கள், புவனங்கள், தத்துவங்கள், கலைகள் என அறுவகைப்படுவதான குற்றமில்லாத ஆறத்துவாக்களையும் மந்திரம்பதத்திலும், பதம் வன்னத்திலும், வன்னம் புவனத்திலும், புவனம் தத்துவத்திலும், தத்துவம் கலையிலும் ஒடுங்க, நீக்கமின்றி ஒடுக்கி, அவற்றுள் முடிவாகக்கருதப்படும் கலையைத்திரோதானசத்தியினும், அத்திரோதான சத்தியைச் சிவத்தினும் அடங்குமாறு ஒடுக்குவர். அவ்வாறு ஒடுக்குவதனால் பிறவிக்கேதுவாகிய மலத்தைக்கெடுத்து எங்கணும் வியாபகமாகிய சிவம் பிரகாசித்தற்கேதுவாகிய ஞானத்தைக் கொடுத்துப்பிறவியை ஒழிப்பர். (எ - று.)

கிரியை என்பது கிரியாவதியைக்குறித்தலின் ஆகுபெயர். சத்தி என்பது ஞானத்தைக் குறித்தது.

மேல் ௯ - வது செய்யுளில் ஔத்திரி, ஞானங்கிரியை என இரண்டு திறனும் என்றெடுத்து, இச் செய்யுளில் அழிவிலாக்கிரியையினாதல் சத்திமத்தானாதல் என முடித்தமையின், இடையே கூறப்பட்டனவெல்லாம் ஞானவதி, கிரியாவதியாகிய இவ்விரண்டற்கும் பொதுவாமாறு காண்க.

மந்திர முதலிய அத்துவாக்களை வழி என்று கூறுவர். அவ்வழியும் உயிருக்கு இதம், அகிதம் என்னும் கன்மம் வருகின்ற வழி எனவும், உயிர் இறைவனை அடைதற்கு வழி எனவும் இருவகைப்படும். அவற்றுள் கன்மம் வரும்வழி என்பது எவ்வாறெனில்,

மந்திரங்களை உரத்துச் சொல்லல் மெல்லச்சொல்லல் உச்சரிப்பின் பேதம் ஆகிய இம்முறைமையில் எந்த மந்திரத்தை எவ்வாறு சொல்ல வேண்டுமோ அவ்வாறு சொல்லில் புண்ணியமும், மாறுபடச் சொல்லில் பாவமுமாம்.

பதங்களில் பிரிக்கக்கூடிய பதமாயின் பிரித்தும், பிரிக்கக்கூடாத பதமாயின் பிரியாமலும் இருப்பின் புண்ணியமும், இதற்கு மாறுபடின் பாவமுமாம்.

வன்னமென்பது அக்கரம். அவ்வக்கரங்களில் குறிலைக் குறிலாகவும், நெடிலை நெடிலாகவும், அளபெடையை அளபெடையாகவும் அந்தந்தத் தானங்களில் உச்சரிக்கில் புண்ணியமும், மாறுபடிற் பாவமுமாம்.

புவனங்களுக்குப் பதியாகிய தெய்வத்தைப் பூஜிக்கில் புண்ணியமும், பூஜியாது நிந்தை செய்யில் பாவமுமாம்.

தத்துவங்களாகிய ஞானேந்திரியம் கன்மேந்திரியம் அந்தக்கரணங்களினாலே பிறர்க்குச் செய்யும் இதம் புண்ணியம். அகிதம் பாவம். நல்வழியில் திரவியத்தைத்தேடிப் போகமநுபவிப்பது புண்ணியம். தீயவழியில் திரவியத்தைத் தேடிப் போகமநுபவிப்பது பாவம்.

பஞ்சகலைகளுக்கு அபிமானிகளான பஞ்ச சத்திகளுக்குப் பூஜை செய்யிற் புண்ணியம். பூஜை செய்யாதிருப்பது பாவம். இவ்வாறு மந்திர முதலிய ஆறின் வழியாலும் உயிர்க்குக் கன்மம் வருவதையறிக. பஞ்ச கலைகளுக்கு அபிமானிகளான பஞ்ச சத்திகளாவன:—நிவிர்த்தி கலைக்குக் கிரியா சத்தியும், பிரதிட்டா கலைக்கு ஞான சத்தியும், வித்தியா கலைக்கு இச்சா சத்தியும், சாந்தி கலைக்கு ஆதி சத்தியும், சாந்தியதீத கலைக்குப் பரா சத்தியும் அபிமானிகளாம்.

இனி, இந்த ஆறத்துவாக்களும் சொற்பிரபஞ்சம், பொருட்பிரபஞ்சமென இருவகைப்படும். அவற்றுள், மந்திரம், பதம், வன்னம் மூன்றும் சொற்பிரபஞ்சம். புவனம, தத்துவம், கலை மூன்றும் பொருட் பிரபஞ்சம். பிரபஞ்சமெல்லாம் சொல், பொருள் என்னும் இரண்டினுள் அடங்கும். அவறறுள் சொல்லாவது, எழுத்தும் அவ்வெழுத்தாலாகிய பதமும் பதத்தாலாகிய சொல் (மந்திரமும்) என விரியும். பொருள், உடலும் உலகமும் அவற்றை ஆக்கும் சத்தியுமென மூவகைப்படும். அவற்றுள் உடல், இந்திரியம், அந்தக்கரண முதலிய தத்துவ வடிவாயிருக்கும். புவனம் பஞ்சபூத வடிவாயிருக்கும். சத்தி கலைவடிவாயிருக்கும். இவ்வாறு பிரபஞ்ச வடிவாயிருக்கிற சொல்லும், பொருளுமாகிய ஆறத்துவாக்களும் ஆணவ கேவலத்துட்கிடந்து அறிவு விளங்காத ஆன்மாக்கட்கு அறிவு விளங்குதற்கு வழியாய்த் தோன்றி அதனால் அறிவு விளங்கும். அவ்வறிவு விளக்கம் ஏகதேசமென்பதை உணர்ந்த பின்னர், இவ்வத்துவாக்கள் ஆறினையும் ஒன்றினொன்று அடங்க ஒடுக்கும் முறையினால் இறைவனை அடைதற்கும் வழியாயிற்று.

ஒன்றினொன்று ஒடுங்குதற்குக் காரணம், மந்திரமென்னும் சொல் பதத்தையின்றி யில்லாமையால் மந்திரம் பதத்தில் ஒடுங்கும். பதம் எழுத்தையின்றி யில்லாமையால் பதம் எழுத்தில் ஒடுங்கும். இம்மூன்றும் சொல்

ஆதலால் சொல் பொருளைக்குறித்தன்றி நில்லாமையால் அச்சொல் பொருளி லொடுங்கும். அப்பொருள் புவனம், தத்துவம், கலை ஆதலால் அவற்றுள் வெளிப்படையாகக் காணப்படும் புவனத்தில் முதற்கண் சொல் ஒடுங்கும். புவனம் தத்துவத்தையின்றி இல்லாமையால் புவனம் தத்துவத்திலொடுங் கும். தத்துவம் கலையையின்றித் தோன்றாமையால் தத்துவம் கலையிலொ டுங்கும். அதாவது பேச்சை நிறுத்தி, உலகத்தை வெறுத்து உடலைத்தான ன்றென அறிந்து அருளால் தன்னையுந் தலைவனையும் அறியும் முறையாம்.

கலை நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என ஐவகைப்பட்டுச் சத்திகலை என்றும், சத்தி அதிட்டித கலை யென்றும் ஒவ் வொன்றும் இருவகைப்படும். அவற்றுள்,

சத்திகலையாவது சத்தியின் அம்சமெனப் பொருள்படும். அவ்வம்சம் உயிருக்குப் பிரபஞ்ச விடுதலையை உண்டுபண்ணுங்கால் நிவிர்த்திகலை யென்றும், விடுதலைசெய்த பிரபஞ்சத்தை மீளப்பற்றாது விடுதலையை நிலைப் படுத்துங்கால் பிரதிட்டா கலையென்றும், விடுதலையடைந்த உயிருக்கு உண் மைப் பொருளை உணர்த்துங்கால் வித்தியாகலை யென்றும், உண்மைப் பொருளை உணர்ந்த உயிர் அப்பொருளில் அடங்கியிருக்கச் செய்யுங்கால் சாந்திகலை யென்றும், அவ்வாறடங்கின உயிர் அடங்கியிருக்கின்றோம் என் னும் போதமிறந்து அதீதப்படச் செய்யுங்கால் சாந்தியதீதகலையென்றும் திருவருட் சத்தியே செயல் வேறு பாட்டால் இவ்வாறு ஐவகைப்படும். இச் செயல் சுத்தாவத்தையில் உயிரறிவின்கண் செய்வது.

இனிச் சத்தி அதிட்டித கலையாவது, பிறிதொன்றின் வாயிலாகத் தொழிற் செய்யும் சத்தியின் அம்சமாம். அதாவது, திருவருட் சத்தி பிர மாவை வாயிலாகக்கொண்டு கேவலத்திலிருந்த ஆன்மாக்கட்கு அக்கேவலத் தை நிவிர்த்தித்துப் பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்குங்கால் நிவிர்த்திகலை யென்றும், தோற்றிய பிரபஞ்சத்தை விட்டுணுவின் வாயிலாய் நின்று நிலைப்படுத்துங்கால் பிரதிட்டா கலையென்றும், வேறொரு புவனத்தை யறிவிக்கு நிமித்தம் நிலைப்படுத்திய புவனத்தை உருத்திரன் வாயிலாய் நின்று அழிக்குங்கால் வித்தியாகலை என்றும், புவனத்திற்றங்கிப் போகங்களை யநுபவிக்குங்கால் கன்மத்திற்கேற்ற போகங்களில் அமைந்து அநுபவிக்கும்படி மகேசன் வாயிலாகச் செய்யுங்கால் சாந்திகலை யென் றும், அநுபவிக்கவேண்டிய போகப் பொருள்களை அநுபவிக்கும்படி சதா சிவர் வாயிலாகக் கூட்டுவிக்குங்கால் சாந்தியதீதகலை யென்றும் ஐவகைப் படும். இச்செயல் உயிரின் சகலாவத்தையில் தநு, கரண, புவன, போகங் களிடத்துச் செய்வது.

திரோதான சத்தியென்பது, மறைத்தற் சத்தி. அது, மேற்கூறிய மகேசன் வாயிலாய் நின்று செய்யும் சாந்திகலையாகிய சத்திக்கும், இப்பஞ்ச கலைகட்கும் ஆதாரமாகிய சத்திக்கும் பெயராம். மகேசன் வாயிலாக நிகழும் திரோதான சத்தி உயிர்க்குப் போகத்திலே அமையும்படி செய்வதென மேற்கூறியாயிற்று. இனிப் பஞ்சகலைகட்கும் ஆதாரமாகிய திரோதான சத்தியாவது, ஞான சொரூபமாகிய சிவசத்தி பஞ்சகலைகளாக மாறுதற்குரிய அவசர பேதமாம். (ரு)

நிவிர்த்தி, பிரதிட்டை என்னும் இரண்டு கலைகளுள் ஒடுங்குவனவாகிய ஏனைய அத்துவாக்களின் தொகை யிவையெனக் கூறுகின்றது.

மந்திரங்கள் முதலைந்துங் கலையைந்தின் வியாத்தி
மருவுமந் திரமிரண்டு பதங்க ளாலே
முந்தநிலை யெழுத்தொன்று புவன நூற்றெட்
டவனிதத் துவமொன்று நிவிர்த்தியயன் றெய்வம்
வந்திடுமந் திரமிரண்டு பதங்கள் மூவேழ்
வன்னங்க ணாலாறு புரமைம்பத் தாறு
தந்திடுந்தத் துவங்களிரு பத்து மூன்று
தரும்பிரதிட் டாகலைமா லதிதெய்வந் தானும்.

(கோ - ௬) மந்திரங்கள் முதலைந்தும் கலையைந்தின் வியாத்தி. நிவிர்த்தி மந்திர மிரண்டு பதங்கள் நாலேழ் அந்த நிலை எழுத்து ஒன்று புவனம் நூற்றெட்டு அவனி தத்துவம் ஒன்று மருவும்; அயன் தெய்வம். பிரதிட்டாகலை வந்திடு மந்திரமிரண்டு பதங்கள் மூவேழ் வன்னங்கள் நாலாறு புரம் ஐம்பத்தாறு தந்திடுந் தத்துவங்கள் இருபத்து மூன்று தரும்; அதி தெய்வம் மால்தான் ஆம்.

(பொ - ரை) மேற் கூறிய அத்துவாக்களுள், மந்திரம், பதம், வன்னம் மூன்றுஞ் சுத்தமாயாகாரியமாதலால், சுத்தாத்துவாவெனப்படும். தத்துவம், சுத்தமாயை அசுத்தமாயா காரியமாதலால் மிச்சிராத்துவா வெனப்படும். புவனம், சுத்தமாயை அசுத்தமாயை, பிரகிருதி மாயாகாரியமாதலால் சுத்தாத்துவா மிச்சிராத்துவா அசுத்தாத்துவா வெனப்படும். படவே, சுத்தம் மிச்சிரம் அசுத்தம் என்னும் மூவகை அத்துவாக்களும் மந்

திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம் என ஐந்தாய் விரியும். இவ்வைந்தத்துவாக்களும் ஒன்றினொன்றாக மேற்கூறிய வாறு நிவிர்த்தி முதலிய பஞ்சகலைகளுள் எவ்வாறு ஒடுங்கு மெனின், நிவிர்த்திகலையில் சத்தியோசாதம், இதயமாகிய மந்திர மிரண்டும், ஓம் நமோநம என்னும் பதமுதலாக மகாதேவ என்னும் பதமீறாக இருபத்தெட்டுப்பதங்களும், முடிவான க்ஷ கார அக்கரம் ஒன்றும், காலாக்கினி ருத்திரபுவன முதல் வீரபத்திரர் பத்திரகாளி புவனமீறாகப் புவனம் நூற்றெட்டும், பிருதிவி தத்துவம் ஒன்றும் ஆகிய இவைகள் மேற்கூறிய முறையே ஒன்றினொன்றாக ஒடுங்கும். இந்த நிவிர்த்திகலைக்கு அதிதெய்வம் பிரமன். பிரதிட்டாகலையில் வாமதேவம், சிரசு ஆகிய மந்திர மிரண்டும், மகேசுவரமென்னும் பதமுதலாக அரூபின் என்னும் பதமீறாகப் பதங்களிருபத்தொன்றும், ள கார முதலாக டகார மீறாக எழுத்துக்கள் இருபத்துநான்கும், அமரேசாதி புவன முதல் ஸ்ரீ கண்ட புவன மீறாகப் புவனம் ஐம்பத்தாறும், அப்பு தத்துவமுதல் பிரகிருதியீறாகத் தத்துவங்களிருபத்துமூன்றும் ஒன்றினொன்றாக ஒடுங்கும். இப்பிரதிட்டாகலைக்கு அதிதெய்வம் விட்டுணு. (௭ - று) (௭)

வித்தை, சாந்தி என்னும் இரண்டுகலைகளுள் ஒடுங்குவன வாகிய ஏனை யத்துவாக்களின் தொகை இவையெனக் கூறுகின்றது.

**வித்தையின்மந் திரமிரண்டு பதநா லேந்து**
**விரவுமெழுத் தேழுபுர மிருபத் தேழு**
**தத்துவமு மோரேழு தங்குமதி தெய்வந்**
**தாவிலுருத் திரனாகுஞ் சாந்தி தன்னின்**
**வைத்தனமந் திரமிரண்டு பதங்கள்பதி னொன்று**
**வன்னமொரு மூன்றுபுரம் பதினெட் டாகு**
**முத்தமமாந் தத்துவமு மொருமூன் றாகு**
**முணரிலதி தேவதையு முயரீச னாமே.**

(போ - ரை) வித்தியாகலையில் அகோரம், சிகை என்னும் மந்திரமிரண்டும், வியாபின் என்னும் பதமுதலாக தியானகாராயா என்னும் பதமீறாகப் பதங்கள் இருபதும், ஞ காரமுதல் வ கார மீறாக அக்கரங்கள் ஏழும், வாமாதி புவனமுதல் அங்குட்ட ருத்தி ராந்தபுவன மீறாகப் புவனம் இருபத்தேழும், புருடதத்துவும் முதல் மாயை யீறாகத் தத்துவங்கள் ஏழும் ஒன்றிலொன்றாக ஒடுங்கும். இவ்வித்தியாகலைக்கு அதிதெய்வம் முடிவில்லாத உருத்திரனும். சாந்திகலையில் தற்புருடம், கவசமாகிய மந்திர மிரண்டும், நித்திய யோகினே என்னும் பதமுதல் வியோம வியாபினே என்னும் பதமீறாகப் பதங்கள் பதினொன்றும், க்க, ஙக, க, என்னும் எழுத்து மூன்றும், வாமை புவனமுதல் சாதாக் கிய புவனமீறாகப்புவனம் பதினெட்டும், சுத்தவித்தை, ஈசுவரம் சாதாக்கியம் ஆகிய தத்துவங்கள் மூன்றும் ஒன்றிலொன்றாக ஒடுங்கும். இச்சாந்தி கலைக்கு அதிதெய்வம் மகேசுவரன் (ஏ-று)அ.

சாந்தியதீதகலையில் ஒடுங்குவனவாகிய ஏனைய அத்துவாக் களின் தொகை இவையெனக் கூறுகின்றது.

சாந்தியா தீதகலை தன்னின்மந் திரங்க
 டாமூன்று பதமொன் றக் கரங்கள்பதி னாறு
வாய்ந்தபுர மூவைந்து தத்துவங்க ளிரண்டு
 மருவுமதி தேவதையு மன்னுசதா சிவரா
மேய்ந்தமுறை மந்திரங்கள் பதினொன்று பதங்க
 ளெண்பத்தொன் றக்கரங்க ளைம்பத்தொன் றாகு
மாய்ந்தபுர மிருநூற்றே டிருபத்து நாலா
 மறிதருதத் துவமுப்பத் தாறுகலை யைந்தே.

(போ - ரை) சாந்தியதீதகலையில் ஈசானம், அத்திரம், மூலமந்திரமாகிய மந்திரங்கள் மூன்றும், ஓம் என்னும் பதம் ஒன்றும், அகாரம் முதல் அ: வரை அக்கரங்கள் பதினாறும், நிவிர்த்தி முதல் சாந்திய தீத மீறாகப் புவனம் ஐந்தும், இந்திகை முதல் அநாசிருதை யீறாகப் புவனம் பத்தும் ஆகப்புவனம்

பதினைந்தும், சத்தி தத்துவம், சிவதத்துவங்களாகிய தத்துவம் இரண்டும் ஒன்றினென்றாக ஒடுங்கும். இச்சாந்தியதீதகலைக்கு அதிதெய்வம் சதாசிவதேவர். இவ்வாறு சத்தியோசாதம் முதலிய பதினொரு மந்திரங்களும், சிவாயநமோநம முதலிய எண்பத்தொரு பத மந்திரங்களும், க்ஷகாரம் முதலாகிய அக்கரம் ஐம்பத்தொன்றும், அனாசிருத புவனமுதல் புவனம் இருநூற்றிருபத்துநாலும், பிருதிவிமுதல் தத்துவம் முப்பத்தாறும், நிவிர்த்தி முதலிய கலை ஐந்தும் ஒடுங்கும் முறையில் வைத்துக்கண்டுகொள்க. (எ - று)

மருவுதல்—ஒடுங்குதல்.

மந்திர முதலிய ஆறுக்கும் கலையில் ஒடுக்கங் கூறியது, மந்திரம் பதத்திலும், பதம் வன்னத்திலும், வன்னம்புவனத்திலும், புவனம் தத்துவத்திலும், தத்துவம்கலையிலும் இவ்வாறு பரம்பரையில் ஒடுங்குதல் பற்றியே ஆதலின், மேல் ௬-வது செய்யுளில் ஒன்றினென்றொடுங்கும் என்பதனோடு முரணாமையறிக.

மந்திர முதலிய ஆறத்துவாக்களும் வியாபகமாம். இன்றேல் எல்லா ஆன்மாக்களோடும் பொருந்துதல் கூடாது. ஆயினும், ஒன்றினொன்று மேலான வியாபகமாம். அவ்வாறின்றேல் உயர்ந்த வியாபகமாகிய கலையில் மந்திர முதலியன அடங்குமாறில்லை. அவ்வாறாயின், மேல் ௬ - வது செய்யுளில் "மந்திரங்கள் முதலைந்துங் கலையைந்தின் வியாத்தி" என ஒன்றினொன்றொடுங்குமாறு கூறியதனோடு இவ்விடத்து எல்லாம் வியாபகமென்றல் முரணாதோவெனின், முரணாது. எவ்வாறெனில், வியாத்தியென்றது, மேற் கூறியவாறு ஒன்றினொன்றொடுங்குவதான வியாபகமாதலினாலென்க. இவ்வாறு கூறியதன் கருத்தென்னையெனின், ஏகதேச வியாபகமாகிய வியாப்பியத்திற்கு ஒடுக்கமும், அடக்கமாகிய வியாத்திக்குக் கேடுமே உரிமையாம். இது சூரியன் ஒளிமுன் வியாப்பியமாகிய கண்ணொளி ஒடுங்குதலும், வியாத்தியாகிய இருள் கெடுதலும் போலாம். ஆகலின், மேல் ௬ - வது செய்யுளில் வியாத்தி என்றதனால் கேடுசொல்லல் வேண்டும். இவ்விடத்து ஒடுங்குமென்றதனால் வியாப்பியம் சொல்லல் வேண்டும். இவ்வாறு சொல்லுங்கால் வியாத்தி என்றதனோடு வியாப்பியமென்றது முரணும். அவ்வாறு முரணாமல் வியாத்தி என்றது ஒன்றினொன்றொடுங்கும்வியாபகத்தையேகுறித்ததென்று கொள்ளுதற்பொருட்டு மருவுமென்றாரென்க.

பூரண வியாபகம், ஏகதேச விபாபகம், சம வியாபகமென வியாபகம் மூத்திறப்படும். அவற்றுள், ஏகதேச வியாபகத்தை வியாப்பியமென்றும், சம வியாபாகத்தை வியாத்தி என்றுங் கூறுவர்.

வியாப்பியம் பிறிதொன்றால் வியாபிக்கப்படுவது. வியாத்தி பிறிதொன்றினடங்கியிருப்பது. வியாபகம் பிறிதொன்றால் வியாபிக்கப்படுதலும், பிறிதொன்றின் அடங்குதலும் இன்றி உள்ளது. வியாபகத்திறகு உவமை சூரியன். வியாப்பியத்திற்கு உவமை கண்ணொளி. வியாத்திக்கு உவமை இருள். இவ்விருள் கண்ணளவில் மறைத்தலால் சம வியாபகமெனப்பட்டது. இவ்வாறே பதி, பசு. பாசம் மூன்றினிடத்துங் கண்டுகொள்க.

சாந்தியதீதகலை என்றிருக்க வேண்டுவது சாந்தியாதீதகலை எனஓசை நிரப்புதற்பொருட்டு நீண்டு நின்றது.

இவை மூன்று செய்யுளானும் தீக்கை செய்யுமிடத்து அத்துவாக்களாறும் ஒன்றினொன்றடங்கு முறைமையறிந்து ஒடுக்குமாறு வகுத்துக்கூறப்பட்டது. (௯)

கன்மங்கள் யாவும் அத்துவாவாகிய வழியால் வருதலின், அத்துவசுத்தியே சிறந்ததென்றும், இவ்வத்துவ சுத்தியால் ஆணவம், கன்மமாகிய ஏனைய மலங்களும் சுத்தியாமென்றுங் கூறுகின்றது.

மூன்றுதிறத் தணுக்கள்செயுங் கன்மங் கட்கு
முன்னிலையா மூவிரண்டா மத்து வாவி
ஹன்றமுறை யவையருத்தி யறுத்துமல முதிர்வித்
தரும்பருவ மடைதலுமே யாசா னாகித்
தோன்றிநுக ராதவகை முற்செய் கன்மத்
துகளறுத்தங் கத்துவாத் துடக்கறவே சோதித்
தேன்றவுடற் கன்மமனு புவத்தினா லறுத்திங்
கினிச்செய்கன்ம மூலமல ஞானத்தா லிடிப்பன்.

(கோ - ௫) அணுக்கள் மூன்று திறத்துச் செயுங்கன்மங்கட்கு முன்னிலையாம் மூவிரண்டாம் அத்துவாவின் ஆன்ற முறை அவையருத்தி அறுத்து மலம் முதிர்வித்து அரும்பருவமடைதலுமே ஆசானாகித்தோன்றி, அத்துவாத் துடக்கு அறவே சோதித்து, அங்கு நுகராதவகை முன் செய்

கன்மத்துகள் அறுத்து, உடல் என்ற கன்மம் அனுபவத்தினால் அறுத்து, ஞானத்தால் மூலமலம் இங்கு இனிச்செய்கன்மம் இடிப்பன்.

(போ - ரை.) மேற்கூறியவாறு இறைவன் குரு மூர்த்தியை ஆதாரமாய்க் கொண்டு நின்று செய்யும் தீக்கையில் ஆணவ மலம், கன்ம மலங்களைச்சுத்தி செய்யாதுமாயாமலமாகிய அத்துவ சுத்தியே செய்வனென அத்துவ சுத்தியைச் சிறந்தெடுத்துக் கூறியதென்னையெனின், ஆன்மாக்கள் மனம், வாக்குக், காய மென்னும் மூன்றினாலுஞ் செய்யப்படுங் கன்மங்களுக்கு முன்னிலையாய்ப்பற்றுக் கொடுத்து நிற்பது அத்துவாக்கள் ஆறுமேயாம். இவ்வத்துவாவாகிய வழியால் செய்த கன்மங்களைச் செய்த முறையானன்றி அக்கன்மங்கள் பக்குவமான முறையில் அநுபவிக்கும்படி இறைவன் செய்து பக்குவமான அந்தக்கன்மத்தை ஒழிப்பன். அவ்வாறு கன்மத்தை யநுபவிக்கச் செய்தலால் ஆணவமலத்தைத்தேயும்படி செய்து அவ்வாணவமலம் தேய்தலால் உண்டாகிற அருமையான பக்குவம்நோக்கி அவ்விறைவனே குருவடிவாய் எழுந்தருளிவந்து அத்துவசோதனை செய்து தன்னுடைய கிரியாசத்தி விருத்தியாகிய தீக்கையினால் மாணாக்கன் அநுபவிக்க வேண்டியதாய்ப் பக்குவப்படாமல் கட்டுப்பட்டிருக்கும் சஞ்சித கன்மத்தைச்சுத்தி செய்து அநுபவியாதபடி ஒழித்துப், பிராரத்த கன்மத்தை அநுபவிக்கும்படிசெய் தொழித்து, ஞான சத்தியினால் அநாதியாகிய ஆணவமலத்தையும், வாதனைபற்றி நிகழும் ஆகாமியமலத்தையும் ஒளிமுன் இருள்போல ஒழிப்பன். (எ - று)

ஆணவமலமும், ஆகாமியமலமும் ஞானசத்தியால் ஒழியற்பாலன; சஞ்சிதகன்மமும், அதற்குப்பற்றுக் கொடுத்து நிற்கும் மாயாகாரியமென்னும் மலமும் கிரியாசத்தியாலொழியற்பாலன. பிராரத்த கன்மம் அநுபவத்தாலொழியற்பாலது. இவ்வாறாதலின், கிரியாசத்தி விருத்தியாகிய தீக்கையால் சஞ்சித கன்மத்துக்குப்பற்றுக் கோடாகிய அத்துவாக்களின் சுத்தியைக் கூறவே, அதனால் ஞானம் பிறந்து, ஆணவமலமும், ஆகாமிய வினையும் கெடுமாதலின், கிரியாசத்திவிருத்தியால் சஞ்சிதமும் ஞானசத்தி விருத்தியால் ஆகாமியமும் ஆணவமுங் கெடுமென வகுத்துக்கூறின்

விரியுமென்றஞ்சி அத்துவசுத்தியின் மேல் வைத்து ஒரு முடிபாகக் கூறினார்.

இதனால் ஆணவமலம், கனமமலங்கள் அத்துவாக்களிடமாகத் தொழிற்பட வேண்டுதலின் அத்துவ சுத்தியால் அவ்விருமலங்களுஞ் சுத்தியெய்துமாகலால், அத்துவசுத்தியே சிறந்ததெடுத்துக் கூறியதென அறிக. சுத்தி என்பது இவ்விடத்தில் நீக்கம்.

கன்மாநுபவத்தினால் மல சத்தி எவ்வாறு கெடுமெனின், கன்மபலன்களை அநுபவிக்கும்படி செய்தலால் இளைப்புத் தோன்றும். தோன்றவே, அவ்விளைப்பாலாகிய துன்பத்தின் நிவிர்த்தியை நாடும். அவ்வாறு நாடும் ட்டம் மலசத்தியின் தேய்வைக் குறிக்குமாதலால், கன்மபலனை அநுப க்கும்படி செய்தல் மலசத்தி கெடுதற்கு உபாயமாயிற்று.

கன்மத்தை அருத்தியறுத்தலும், குருவாகத் தோன்றியறுத்தலும் கிய இரண்டும் இறைவனாகிய ஒரு பொருள் வினையாதற்குரிய இயைபு தான்ற, தோன்றியறுத்து என்பதனோடு அருத்தியறுத்து என்பதும் டன் கூறினார். ஆன்றமுறை—பக்குவமானமுறை.

மலமுதிர்தலாவது, அம்மலத்தின் சத்தி தேய்தற்குரிய தநு, கரண, புவன, போகங்களாகிய துணைக்காரணங்களெல்லாவற்றோடுங்கூடிக் கன்ம பலன்களை யநுபவித்தலால் வலிமை கெடுந்தன்மை யுடையதாதல்.

உயிர் பருவமடைதலாவது, அறிவிக்கும் பொருளை அறிவித்தவாறே அறியும் ஆற்றலுடையதாதல்.

அப்பக்குவம் எய்துதற்கருமை நோக்கி அரும்பருவமென்றார். அது, எய்துதற் கரிதென்பது வருஞ் செய்யுளிற் பெறப்படும்.

பருவமடைதலும் ஆசானாகித்தோன்றி என்றதனால், பருவமடையா தார்க்குத் தீக்கை செய்வதும், அடைந்தார்க்குத் தீக்கை செய்யாமையும் பழுதென்பது பெறப்படும்.

இச்செய்யுளால், அத்துவ சுத்தியானது சஞ்சித கன்மத்தை நீக்கி ஞானத்தை உதிக்கச்செய்து ஆணவத்தை நீக்கி ஆகாமியத்தையும் ஒழிக்கும் என அத்துவசுத்தியின் சிறப்புக் கூறப்பட்டது. (௧0)

முதலதிகாரணம் முடிந்தது

---

# இரண்டாம் அதிகரணம்.



## மன்னு மருளால் உணர்த்தி என்பது.

புறச்சமயநெறிமுதல் படிமுறையால் மேம்பட்டுச்சைவத்தை அடைந்தவர்க்கு அத்துவ சுத்தி எய்துதற்குரிய பருவமுண்டா மெனவும் அச்சைவமாகிய தவநெறியும் சரியை முதல் நால்வகைப் படுமெனவும் கூறுகின்றது.

**புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும்**
**புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம**
**வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து**
**மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ்**
**சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேத**
**சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத்**
**திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ்**
**செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்.**

(**போ - ரை.**) மேல் கன்ம நுகர்ச்சியால் அத்துவ சுத்தி எய்துதற்குரிய அரும் பருவம் உண்டாமெனக் கூறப்பட்டது. அவ்வரும் பருவம் எவ்வாறு உண்டாகுமெனின், உலோகாயதம், பௌத்தம், ஆருகதம், மீமாஞ்சகம, மாயாவாதம், பாஞ்சராத்திரம் என்னும் தூலமாகிய புறச்சமயங்களினின்று அவ்வாறொழுகியும், அவ்வொழுக்கத்தின் முதிர்ச்சியால் அப்புறச் சமயத்தினின்று நீங்கிச் சைவம், பாசுபதம, வாமம, பைரவம, மாவிரதம, காளாமுகம் என்னும சூக்குமமாகிய அகச்சமயங்கள் ஆறற்புகுந்து அந்நூல் வழியே ஒழுகியும், மனு முதலியவராற் சொன்ன தரும சாத்திரம் பதினெட்டின் வழியே சென்றொழுகியும், வேதத்திற் சொல்லப்பட்ட பிரமசரிய முதலான ஆச்சிரமம நான்கின் நெறிகளில் வழுவாதொழுகியும், அநுட்டித்தற்கரிதாகிய பஞ்சாக்

கினி முதலியவற்றினின்று அரிய தவங்களைச் செய்தும், கற்பதற்கரிதாகிய கலைஞானங்கள் பலவற்றைப் பயின்றும், இருக்கு முதலிய நான்கு வேதங்களை ஓதியும், சிறப்பினையுடைய பதினெண் புராணங்களை ஓதியுணர்ந்தும், வேதாந்தமாகிய உபநிடதப்பொருளை மிக ஆராய்ந்து தெளிந்தும், இவ்வாறு படிமுறையாகப் பல பிறவிகளினும் அப்பியாசம் பண்ணி அவைகள் முற்றுப்பெற்றால் சைவக் கூற்றின் முடிவாகிய சித்தாந்த சைவத்தை அடைவர். இவ்வாறு படிமுறையாலன்றி ஒருகாலத்து எல்லாம் பெறமுடியாது. முறையே ஒன்றன்பின் ஒன்றாகப் பயின்று முடிவில் அடையப்படுகின்ற இச்சித்தாந்த சைவத்தினும், சரியை, கிரியை, யோகங்களை முறையாய் அநுட்டித்து முற்றிய பின் ஞானத்தைப் பெற்று, அந்த ஞானத்தால் சிவபெருமான் திருவடிகளைச் சேர்வர். (எ-று.)

சைவத்திறம் என்பது சைவக்கூற்றின் முடிபாகிய சித்தாந்த சைவத்தை. சென்றால் என்பது சேறலருமை விளக்கி நின்றது.

இச்செய்யுளால், மேற்கூறியவாறு ஞானத்தைப் பெறுதற்குரிய பருவமடையும் முறை கூறுமுகத்தால், மன்னுமருள் என்பது, சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்குவகைப் படுமென்பதும், அச்சரியை யாதிகளுக்கு வாயில் புறச்சமயநெறி நிற்றல் முதலியன வென்பதும் வகுத்துக் கூறப்பட்டன. (௧௧)

புறச்சமய நெறிமுதல் பலவேறு வகைப்பட்ட நெறிகளின் பயனாகிய முத்திகளின் இலக்கணமும் சைவ முத்தியினிலக்கணமும் இவையெனக் கூறுகின்றது.

இம்மையே யீரெட்டாண் டெய்தியெழி லாரு
மேந்திழையார் முத்தியென்று மிருஞ்சுவர்க்க முத்தி
யம்மையே யென்று முத்தி யைந்து கந்த
மறக்கெடுகை யென்றுமட்ட குணமுத்தி யென்று
மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தி யென்றும்
விவேகமுத்தி யென்றுந்தன் மெய்வடிவாஞ் சிவத்தைச்
செம்மையே பெறுகைமுத்தி யென்றுஞ்செப் புவர்கள்
சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங் கியாமே. ௰௨

(கோ - ௫) அம்மையே இருஞ்சுவர்க்கம் முத்தியென்றும், ஐந்து கந்தம் அறக் கெடுகை முத்தியென்றும் எனவும், இங்கே யாம் செப்புவது சிவனடியைச் சேருமுத்தி எனவுங்கூட்டுக.

(போ - ரை) சித்தாந்த சைவமல்லாத ஏனைச் சமய நூலாருக்கும் முத்திகளுள. அம் முத்திகள் படி முறையால் நில முதல் நாதமீறாகிய முப்பத்தாறு தத்துவங்களில் ஒவ்வொன்றில் நிலை பெறுவனவாம். அவை வருமாறு:—உலோகாயதன், இவ்வுலகமே உள்ளது. பரலோகமாகிய சுவர்க்க நரகமென்பதொன்றில்லை. இவ்வுலகத்தின்கண் ஸ்நான, போசன முதலிய சௌக்கியமே சுவர்க்கம். இவைகளின்றித் தரித்திரத்தினாலும் வியாதியினாலும் துன்பப்படுதலே நரகம். அழகினையுடைய பதினாறு ஆண்டுள்ள ஆபரணங்களணிந்த பெண்களுடனே கூடி இன்புறுதலே முத்தி எனக்கூறுவன். மீமாம்ச நூலார், வேதோக்தமான யாகாதி கன்மானுஷ்டானங்களைச்செய்து இந்தத் தேகம் நீங்கிய பின் மறுமையில் திவ்வியதேகத்தைப் பெற்றுப் பெரிய போகத்தை உடைத்தாகிய சுவர்க்கலோக போகமநுபவித்தலே முத்தி என்பர். பௌத்தன், ரூபம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் ஆகிய ஐவகைக் கந்தங்களும் முற்றக்கெடுதலே முத்தி என்பன். சைனனாகிய ஆருகதன், அனந்தஞானம், அனந்த தெரிசனம், அனந்தவீரியம், அனந்தசுகம், நிர்நாமம், நிர்க்கோத்திரம், நிராயுஸ்யம், சகலசம்யதாபாவம் ஆகிய எண் குணமுமடைதலே முத்தி என்பன். வைசேடிகர், ஆத்மஞானத்தினாலே சுக துக்கங்களும் அவற்றிற்கேதுவாகிய ஞானமும் நீங்க, மேன்மையாகப் பாடாணம்போல ஓரறிவும் அற்றிருப்பதே முத்தி என்பர். சாங்கியர், பிரகிருதிபுருஷ விவேகத்தைப் பண்ணி ஆன்மாவாகிய தான் பிரகிருதி விகாரங்களுக்கு அன்னியமாக, யான் எனதென்பதற நிற்பதே முத்தி என்பர். மாயாவாதி, மாயை பிரமங்களை விசாரித்து மாயையை நீக்குவதே முத்தி என்பர். பாஞ்சராத்திரிகள், மகாவிஷ்ணுவின் கிருபையினால் இத்தேகத்தினின்றும் நீங்கிச் சத்திய சொரூபமாகிய சுத்தசித்து ரூபியாய் விட்டுணுவுக்குரிய திவ்விய தேகத்தைப்பெற்றுச் சகல போகங்களும் மகா

விஷ்ணுவைப் போலவே நித்தியமாயுடைத்தாயிருக்கை முத்தி என்பர். சிவசமவாதி முதலிய சைவர்கள், சிவாநுக்கிரகத்தினாலே ஆணவ முதலிய மும்மலங்களும் நீங்கச் சத்தியமும் சுத்தமுமாகிய ஆன்மாவினிடத்து ஞானக்கிரியைகள் பிரகாசிக்கப்பெற்று, அந்த ஞானக்கிரியைகளின் பிரகாசத்தால் சருவஞ்ஞத்துவாதி ஆறு குணங்களும விளங்கப்பெற்றுச் சிவசமமாயிருப்பதே முத்தி என்பர். இதுவும் சிவபிரானுடையை உண்மை நிலையை யறிந்து இன்புறாத நிலையாதலால் பத முத்தியேயாம். இவ்விடத்து வேதாகம நூலுண்மையின்படி யாம கூறும் முத்தியாவது எது வெனின், ஆன்மாவும், சிவமும் அநாதியே பிரிப்பற்றுள்ளன. அப்பிரிப்பில்லாமை தோன்றாதபடி அநாதியே ஆணவமலம் ஆன்மாவின் அறிவைத்தடுத்திருப்பதால், அந்த மலவுபாதியினால் அசத்தியமாகிய போகங்களைச் சத்தியமென மயங்கி நின்று, சிவாநுக்கிரகத்தினால் அம்மயக்கம நீங்கக் கண்ணினது காசம் நீங்கிய விடத்து அக்கண் காட்சியைப் பெற்றாற்போல, அம்மயக்கம் நீங்கியவிடத்து சிவனுடைய பிரிப்பில்லாமையை அநந்நியமாகநின்று கண்டு சிவானந்த பரவசத்தினாலே முப்பத்தாறு தத்துவங்களையுங்கடந்த சிவபெருமான் திருவடிகளை அடைதலேயாம். (எ - று)

திருவடி என்பது இறைவனுடைய சித்துத்தன்மை. இக்கருத்துப் பற்றியே "அடியெனுமதுவும் அருளெனுமதுவும் அறைந்திடில் நிர்க்குண நிறைவு" எனத்தாயுமானசுவாமிகள் அருளிச்செய்தனர்.

அடைதல் என்றதனால் வேறாகப்பிரிந்திருந்து அடைந்ததென்பது பொருளன்று. தன்னுடைய பிள்ளையானவன் வியாதியினாலே மிகவுந் துன்பபபட்டுக் குணமானபொழுது இந்தப்பிள்ளையை இப்பொழுதே பெற்றேனென் பதுபோல, யான் எனதென்னும் போதத்தினால் சிவனோடு பிரிப்பின்றிநிற்றல் விளங்காதிருந்து அப்போத அறுதியில் அச்சிவாநுபவம் விளங்கினதை அடைந்ததென்று சொல்லியதென அறிக.

விதேக முத்தி என்பதனை இரட்டுற மொழிதலினால் முன்னர்ச் சாங்கியரும, பின்னர் மாயாவாதியும் கொள்ளபபட்டனர். எந்நிழை என்ற விடத்து ஐயுருபு தொக்குநின்றது. ஆர்முத்தி என்பது ஆரும் முத்தி என விரிதலின் வினைத்தொகை. செம்மையே பெறுகை முத்தி யென்றும்

என்றவிடத்து உம்மையை எதிரது தழுவியதாக்கி இவ்விடத்துக் கூறாத சமய முத்திகளையும் இவற்றுடன் வைத்துக் கண்டுகொள்க. இம்முறையில் உரையில் பாஞ்சராத்திரமத முத்தி கூறப்பட்டது.

இச் செய்யுளால் புறச்சமய நெறிநிற்றல் முதலியவெல்லாம் சைவத் திறத்தடைதற்குப் படிமுறையால் வாயிலாமாறு அவற்றது பயன்கூறு முகத்தானே இனிது விளக்கப்பட்டது. அந்தந்தப் பயன்கள் அநுபவிக்கப்பட்டு மேற்சென்று சைவத்திறத்தடைந்து சிவபெருமான் திருவடியைக்கூடி அதன்மேல் அடைய வேண்டுவதொன்றின்மையால், அவையனைத்தும் சைவத்திறத்தடைதற்கு வாயிலாமாறு காண்க. (௧௨)

உண்மைச் சமயமும், அதனிலக்கணமும், உண்மை நூலும் இவையெனக் கூறுகின்றது.

ஓதுசம யங்கள்பொரு ளுணரு நூல்க
ளொன்றோடொன் றொவ்வாம லுளபலவு மிவற்றுள்
யாதுசம யம்பொருணூல் யாதிங் கென்னி
னிதுவாகு மதுவல்ல தெனும்பிணக்க தின்றி
நீதியினா லிவையெல்லா மோரிடத்தே காண
நின்றதியா தொருசமய மதுசமயம் பொருணூ
லாதலினா லிவையெல்லா மருமறையா கமத்தே
யடங்கியிடு மவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும்.

(போ - ரை) மேற் கூறியவாறு பல சமயங்களும் அச்சமயப் பொருள்களை அறிதற்கேதுவாகிய பல நூல்களும் மாறுபட்டனவாகக் காணப்படுதலால் அவற்றுள் முதன்மையான சமயம் யாது? அதன் இலக்கணம் யாது? அச்சமயப் பொருளை யுணர்த்தும் நூல் யாது? எனின், கண்ணில்லாதவர் பலர் கூடிக் கொண்டு யானையைக் கையாற்றடவித் தத்தமக்கெய்திய உறுப்புக்களினிலக்கணமே யானையினிலக்கணமெனச் சொல்லி முரண்பட்டவிடத்து, யானையினிலக்கணம் முழுதுங்கண்ட கண்ணுள்ளா னொருவன் ஏனையோர் கூறும் இலக்கணங்களெல்லாம் தான் கண்ட இலக்கணங்களிலடங்கிய ஒவ்வோரிலக்கணமென்றும் அவ்விலக்கணங்களும் கொள்ளத்தக்கனவே என்றும் அறிவன். அது

போல, இந்தச் சமயம் பொருந்தும்; அந்தச் சமயம் பொருந் தாது என்னும் பிணக்கின்றிப் படிமுறையால் இச்சமயமனைத்தும் அங்கமாகத் தன்னிடத்தே காணப்பட்டு நின்றது எச்சமயமோ, அச்சமயமே முதன்மையான சமயமாம். அச்சமய சாத்திரமே சாத்திரமாம். ஏனைச் சமயங்களோடு பிணக்கின்மையே அதனி லக்கணமாம். அச்சாத்திரம் எதுவெனின், எல்லாப் பொருளையுஞ் சொல்வதே சாத்திரம் என்பதன் பொருளாதலால், அவ்வாறு எல்லாப் பொருளையுஞ் சொல்லுவனவாகிய முற்றறிவுடைய முதல்வனருளிச்செய்த வேதாகமங்களே அச்சாத்திரமாம். அவ் வேதாகமங்களில் தத்தம் சிற்றறிவிற் கெட்டியவாறு கூறப்படும் எல்லாச் சமய நூற்பொருள்களும் அடங்கிக் காணப்படும். காணப் படினும் அவ்வேதாகமங்களால் சிறந்தெடுத்துக் கூறப்படும் சமயமே உண்மையான சமயமாம். அவ்வுண்மைச் சமயம் சிவ பிரானையே தெய்வமெனக் கொள்ளுதலானும், அச்சமய சாத் திரத்தைப் பூருவபக்ஷம் பண்ணுவதற்கு வேறு சாத்திரமில்லாமை யானும், அவ்வுண்மைச் சமயம் சித்தாந்த சைவமெனக் கூறப் படும். அவ்வேதாகமமிரண்டும் இறைவன்றிருவருளாற் செய்யப் பட்டமையின் அவனருளிலடங்கும். (எ - று.) (௧௫)

உண்மை நூல்களாகிய வேதாகமங்களே முதனூலெனவும், ஏனைய நூல்கள் எல்லாம் வழி நூல், சார்பு நூல்களாய் முத னூலிலடங்குமெனவும் கூறுகின்றது.

அருமறையா கமமுதனூ லனைத்துமுரைக் கையினு
 லளப்பரிதா மப்பொருளை யரனருளா லணுக்க
ளுருவர்கள்பின் றனித்தனியே தாமறிந்த வளவிற்
 றர்க்கமொடுத் தரங்களினுற் சமயஞ்சா தித்து
மிருதிபுரா ணங்கலைகண் மற்று மெல்லா
 மெய்ந்நூலின் வழிபுடையா மங்கம்வே தாங்கஞ்
சுருதிசிவா கமமொழியச் சொல்லுவதொன் றில்லை
 சொல்லுவார் தமக்கறையோ சொல்லொணுதே.

(கோ—௫.) முதல் நூல் அருமறையாகமம் அனைத்தும் உரைக்கையி னுல் அளப்பரிதாம். அப்பொருளை அணுக்கள் அரனருளால் பின் தனித்

தனியே தாமறிந்த அளவில் தர்க்கமொடு உத்தரங்களினால் சாதித்துச் சமயம் தருவர்கள். மிருதி, புராணம், கலைகள், மற்றுமெல்லா மெய்ந்நூலின் வழி (ஆம்) அங்கம், வேதாங்கம் புடையாம்.

(பொ—ரை) மேற்கூறிய நூலெனப்படுவன வெல்லாம் முதனூல், வழிநூல், சார்புநூல், பூர்வபக்கநூலெனப் பல வேறு வகைப்படும். அவற்றுள் முதனூலின் வழிநூலும், அவ்விரண்டின் சார்புநூலும், அம்மூன்றின் பூர்வபக்கநூலும் முறையே அடங்கும். ஆகவே, மேல்நூற் பொருளின் ஒவ்வொருபகுதியினையே எடுத்துக்கொண்டு கீழ்நூல்கள் கூறுதலின், அம்மேல் நூற் பொருளிருத்தல் நோக்கிக் கீழ்நூல்களும் மேன்மையுடையனவேயாம். வேறு வேறு கூறுவானேனெனின், முதனூலாகிய வேதாகமங்களில் அனைத்துங் கூறுகையால் அவ்வாறு கூறியுள்ள அளவிடுதற்கரிய உயர்ந்த பொருள்களை முழுவதும் உள்ளவாறுணரமாட்டாத உயிர்கள், முதல்வனருளால் அவ்வேதாகமங்களுள் சில பொருளைத் தத்தமறிவிற்கேற்பச் சமுத்திர கலச நயம் பற்றி எடுத்துக்கொண்டு சங்கை உத்தரங்களினால் சாதித்துத் தொகுத்தும் விரித்தும் சமயநூலாகச் செய்தனர். அவையெல்லாம் சைவமல்லாத ஏனைச்சமயநூல்களாதலின் அந்நூல்கள் பூருவபக்க நூலெனப்படும். மிருதி, புராணம், கலைகள், உபாகம முதலாயின வெல்லாம் அவ்வேதாகமப்பொருளை இனிது விளக்குதற் பொருட்டு அவற்றை உள்ளவாறுணர்ந்தோர் செய்த நூலாதலால் அந்நூல்கள் வழிநூலெனப்படும். காருடம், தக்ஷணம் முதலிய ஆகமாங்கங்களும், சிக்ஷை, கற்பசூத்திரம் முதலிய வேதாங்கங்களும், வேதாகமங்களை உள்ளவாறுணர்தற்குச்சார்பாகப்பக்கத்து நிகழ்தலின் சார்பு நூலெனப்படும். ஆதலால், வேதாகமங்களில் அடங்காத பொருளாக ஒன்றனை எடுத்துச் சொல்லும் நூலொன்றுமில்லை. உண்டென்று பிணங்கும் பேதையர்க்கு உத்தரஞ் சொல்லி அறிவுறுத்த இயலாது. (எ-று.)

சமுத்திர கலச நயம்—சமுத்திரத்திலுள்ள நீர்ப்பெருக்கில் கலசம் தன்னளவு கொள்ளுமாறு போல, வேதாகமங்களிலுள்ள பொருட்பெருக்கில் ஏனைச்சமயத்தார் தத்தமறிவிற் கெட்டியவாறு எடுத்துக்கொண்டு கூறு

தல். அவ்வாறெடுத்துக் கொண்டு கூறுதற்கும் அரனருளையின்றி முடியா தென்பதுணர்த்துதற்கு அரனருளால் என்றார். அவற்றை, அடுத்த செய்யுளில் "பிறநூல் திகழ் பூர்வம்" எனக்கூறுதலின், இச்செய்யுளில் பூருவபக்க நூலென வேறெடுத்துக் கொண்டு கூறாது விடுத்தனர். புடையாம் என்ற விடத்துள்ள ஆம் என்பதனை வழி என்ற விடத்துங் கூட்டுக. ஆகமாங்கம் என்பது அங்கம் எனத்தலைக்குறைந்தது. ஒன்றில்லை என்ற விடத்து ஒன்றும் இல்லை என்னும் பொருள்பட முற்றும்மை தொக்கு நின்றது. அறை என்பது உத்தரம்; அல்லது விடை.

மேலைச் செய்யுளில், எல்லாம் அருமறையாகமத்தே காணப்பட்டடங்கிடு மென்றதனை இச்செய்யுளால் பூருவபக்க நூலும் வழிநூலுஞ் சார்புநூலுமாக எல்லாம் அடங்குமென விளக்கினர். (கச.)

வேதம் பொது நூலெனவும், ஆகமம் சிறப்பு நூலெனவும், சித்தாந்த மெனவும் கூறுகின்றது.

வேத நூல் சைவ நூ லென்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்க
ளாதிநூ லநாதியம லன்றருநூ லிரண்டு
மாரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலா
நீதியினு லுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கு
நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள்வே தாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூ
றிகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த மாகும். ௰௫

(கோ - டு) வேதநூல், சைவநூல் என்று இரண்டு ஆதி நூல்கள் அநாதி அமலன் தருநூல். வேறு உரைக்கும் நூல் இவற்றின் விரிந்த நூல்கள். இரண்டுமே நூல். உலகர்க்கும் சத்தி நிபாதர்க்கும் நீதியினுல் ஆரணம் சைவம் நிகழ்த்தியது. நீள்மறையின் ஒழிபொருள் வேதாந்தத்தீது இல்பொருள் கொண்டு உரைக்கும் சைவநூல். பொது நூல் அருஞ் சிறப்புநூலாம். பிறநூல் திகழ் பூர்வம். சிவாகமங்கள் சித்தாந்த மாகும்.

(பொ - ரை) மேற்கூறிய நூல்களுள் வேதாகமங்களிரண்டும் எல்லாம் நூல்களுக்கும் முதனூலாகி அநாதிமுத்தனாகிய இறைவனாற்றரப்படு நூலாம். ஏனைய நூலெல்லாம் இவ்வேதாக

மங்களிரண்டினின்றும் விரிந்த நூல்களாதலின் இவ்வேதாக மங்களே நூலென்று உயர்த்துக் கூறப்படுவனவாம். முதல்வன் இருவேறுவகைப்பட நூல் செய்வானேனெனின், அவன் பெருங்கருணையாளனாதலின், நீதிநெறியில் நிற்கும் உலகோரும் ஞானநெறியில் நிற்கும் உயர்ந்தோரும் ஆகிய இருவரும் உய்தற் பொருட்டு வேதத்தையும், ஞானநெறியில் நிற்போர் மட்டும் உய்தற்பொருட்டு ஆகமத்தையும் அருளிச் செய்தனன். அன்றியும் வேதத்திற்கூறும் கருமகாண்டத்துள் சிவார்ச்சனை செய்க என்று கூறி, அதனைச் செய்யும் விதம் அவ்விடத்துக்கூறாமையால் அதனைக்கூறுதற்காகவும், ஞானகாண்டமாகிய உபநிடதம் பல கடவுட்கும் பாத்துவங் கூறுதலால், அப்பல கடவுளருள்ளும் சிவனொருவனுக்கே பாத்துவங்கூறுதற்காகவும் உபநிடதத்தின் சாரமாய் ஆகமத்தையருளிச் செய்தனன். இதனால், வேதம் சூத்திரமும் ஆகமம் அச்சூத்திரத்தின் விருத்தி உரையாகிய பாடியமும் போலாம். வேதம் உலகர்க்கும், ஞானதிகாரிக்கும் உரித்தாதலின் பொதுவும், ஆகமம் ஞானதிகாரிக்கே உரித்தாதலிற் சிறப்புமாம். அன்றியும், வேதம் பல கடவுளர்க்கும் பாத்துவங் கூறுதலால் பொது. ஆகமம் சிவபெருமானுக்கே பாத்துவங் கூறுதலால் சிறப்பு. இச்சிவாகமப் பொருட்கு வேறாய்வேதத்தின் பூருவபக்கப் பொருளைச் சொல்லும் நூல்களெல்லாம் மேற்கூறியவாறு பூருவபக்க நூலெனப்படும். வேதத்தின் முடிவான பொருளைச் சொல்லும் சிவாகமம் சித்தாந்தமெனப்படும். (எ - று)

இச்செய்யுளால் சிவாகமத்தின் சிறப்புக் கூறப்பட்டது. சிறப்பு— வேத வேதாந்தங்களின் சாரம். பிற நூல் திகழ்பூர்வம் என்றதற்கு, வேத வேதாந்தங்களின் பூர்வபக்கப் பொருள்களை சொல்லும் நூல்களைக்கொள்ளாது வேத வேதாந்தங்களைக் கொள்ளுதல், இரண்டும் ஆதி நூல்கள் அமலன்றருநூல் என்பது முதலியவாக்கியங்களோடு முரணுமாதலின் அது பொருந்தாது. இவை மூன்று செய்யுளானும் முதனூல், வழிநூல், சார்புநூல், பூருவபக்க நூல்களதியல்பு கூறுமுறையில், சைவத்திறத்தடைதற்கு ஏனைய சமயங்கள் படிமுறையில் வாயில் என்பது சாதிக்கப்பட்டது. (௧௫)

சித்தாந்த நெறியில் நிற்போர்க்கு அந்தச்சென்மத்திலேயே சிவபிரான் முத்தி தந்தருளுவனெனக் கூறுகின்றது.

சித்தாந்தத் தேசிவன்றன் றிருக்கடைக்கண் சேர்த்திச்
 செநநமொன்றி லேசீவன் முத்த ராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி
 மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பை யறுத்து
முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்ப னென்று
 மொழிந்திடவு முலகரெலா மூர்க்க ராகிப்
பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
 பெருங்குழியில் வீழ்ந்திடுவ ரிதுவென்ன பிராந்தி. ௨௬௪

(கோ - டு) செநநமொன்றிலே சிவன்றன் திருக்கடைக்கண் சேர்த்தி, (செநநமொன்றிலே) மலங்கழுவி, ஞானவாரிமடுத்து, ஆனந்தம் பொழிந்து, சீவன் முத்தராகவைத்து, ஆண்டுவரும் பிறப்பை அறுத்து, முத்தாந்தப்பாதமலர்க்கீழ் வைப்பன் என்று சித்தாந்தத்தே மொழிந்திடவும்.

(பொ - ரை) மேற்கூறிய சித்தாந்தமே முத்திக்கு நேர் வழியாம். சித்தாந்த நெறியில் நிற்கும் பக்குவான்மாக்களுக்கு எடுத்த செநநமொன்றிலேயே சிவபிரான் தமது காருண்யத்தால் குருமூர்த்தியாய் எழுந்தருளிவந்து திருக்கண் நோக்கம் முதலிய தீக்ஷை செய்து, மலத்தைப் போக்கி, ஞானசாகரத்தில் மூழ்குவித்து, சிவானந்தம்மேலிடச் செய்து சீவன் முத்தராக்கி, அப்பொழுதே மேல்வரும் பிறவியை ஒழித்து, முத்தி முடிவாகிய திருவடி மலர்க்கீழ் அடங்கி நிற்கச்செய்வன். இத்துணைப் பெருமை பொருந்திய சித்தாந்தநெறி வீடு பேற்றிற்கு நேர் வழி என உபமன்னியர் அகத்தியர் முதலிய உயர்ந்தோரெல்லாம் வாயுசங்கிதை, சிவகீதை முதலியவற்றுள் எடுத்தோதவும் உலகத்தார் அதனைத் தெளியமாட்டாது துரபிமானங் கொண்டு தத்தமக்கு வேண்டியவாறே பித்தமுடிபாகிய பெரும்பித்தாற் பிதற்றி, பிதற்றிய அப்பாவத்தால் பெரிய கொடு நரகத்தில் வீழ்வர். ஈதென்ன மயக்கம். (எ - று)

முத்தியந்தம் முத்தாந்தம் என மருவிற்று. ஔத்திரி ஆதி ஔத்திராதி என்றாற் போல். பித்தாந்தம்—பித்தமுடிபு, அதாவது பெரும் பித்து. (௧௬)

முற்றுணர்வு முதலிய குணங்களையுடைய சிவபிரானுக்கு ஒரு செனனத்தில் முத்தியைத்தருதல் கூடுமெனவும், அக்குணங்கள் சிவபிரானிடத்துளவென்பதற்கு ஏதுக்கள் இவையெனவும் கூறுகின்றது.

இறைவனு வான்ஞான மெல்லா மெல்லா
முதன்மையனுக் கிரகமெல்லா மியல்புடையா னியம்பு
மறைகளா கமங்களினு னறிவெல்லாந் தோற்று
மரபின்வழி வருவோர்க்கும் வாரா தோர்க்கு
முறைமையினு லின்பத்துன் பங்கொடுத்த லாலே
முதன்மையெலா மறிந்துமுயங் கிரண்டு போகத்
திறமதனுல் வினையறுக்குஞ் செய்தி யாலே
சேருமனுக் கிரகமெலாங் காணுதுநாஞ் சிவற்கே.

(கொ - டு) எல்லாஞான எல்லா முதன்மை எல்லா அநுக்கிரகம் சிவற்கே நாம் காணுதும் எனவும், இயல்புடையானிறைவனுவான் எனவுங் கூட்டுக.

(போ - ரை.) ஆன்மாக்களுக்கு எடுத்த ஒரு சென்மத்திலேயே முத்தியைத்தருதல் சிவபிரானுக்கு எவ்வாறு கூடுமெனின், முற்றுணர்வும், முடிவிலாற்றலும், பேரருளுமாகிய மூன்று குணங்களும் சிவபிரானிடத்திலேயே காண்கின்றோம். அம்மூன்றும் இயல்பாகவுடைய வல்லவனுதலால் கூடும். அம்மூன்று குணங்களும் உடையனுமென்பது எவ்வாற்றாற் பெறப்படுமெனின், வேதாகமங்களை அருளிச்செய்த ஏதுவினுல் முற்றுணர்வுடையனுதல் தெளியப்படும். எவ்வாறெனின், பலவேறுவகைப்பட்ட ஆன்மாக்களுக்கு வேண்டிய எல்லா விஷயங்களும் வேதாகமங்களில் காணப்படுகின்றன. அவ்வாறு சொல்வதற்கு முற்றுணர்வு இருந்தாலன்றி முடியாது. ஆதலால், முற்றுணர்வுடையனுதல் தெளியப்படும். அவ்வேதாகமவழி நடப்போர்க்குச் சுகத்

றைதயும், நடவாதோர்க்குத் துக்கத்தையும் தருதலாகிய ஏதுவி ஞல் முடிவிலாற்றலுண் டென்பது தெளியப்படும். அவ்வாறு பொருந்திய சுக துக்கங்களை அநுபவிக்கும்படி செய்து, அதனுல் அச்சுகதுக்கங்களுக்குக் காரணமாகிய இருவினைகளை நீக்குகின்ற ஏதுவால் பேரருளுடையனென்பது தெளியப்படும். எனவே, இம்மூன்று குணங்களும் இயல்பாகவுடைய அம்முதல்வன் மேலைச்செய்யுளிற் கூறியவாறு செநநமொன்றிலே திருக்கடைக் கண்சேர்த்தி, ஞானவாரிமடுத்து, ஆனந்தம் பொழிதற்கும், அச் செநநமொன்றிலேதானே மலங்கழுவிச் சீவன் முத்தராக வைத் தாண்டு வரும்பிறப்பையறுத்தற்கும், பாதமலர்க்கீழ் வைத்தற் கும் வல்லவனுவான். (எ - று.)

இறைவன் என்பது இறுக்கப்படுபவனுதலின், வல்லவன் என்னும் பொருள் குறித்தது. வல்லவனுயிருந்தாலன்றி இறுக்கபடுந் தகுதியுடையனு கான்.

இச்செய்யுளால், பல செனனங்களிலு மாகாதவற்றையெல்லாம் ஒரு செனனத்திலே ஆகும்வண்ணஞ் செய்யுமாறு யாங்ஙனமென்பார்க்கு, முற் றுணர்வு முதலிய குணங்களையுடையனுதலின், அங்ஙனஞ்செய்தல் கூடு மென்று கூறிச், சித்தாந்தம் எடுத்த செனனத்தில் முத்திதரும் என மேற் கூறியது வலியுறுத்தப்பட்டது.

இவையிரண்டு செய்யுளானும் சைவத்திறத்தடைதலால் எடுத்த பிறவி யில் முடிவான முத்தியடைதல் கூடுமென அதன் சிறப்புக் கூறப்பட் டது. (௧எ)

சைவநெறியாகிய முத்திநெறி சரியை முதலிய நான்கு பே தப்படும் எனவும், அவற்றின்பயன் பதமுத்தி, பரமுத்தி என இரு வகைப்படும் எனவும் கூறுகின்றது.

**சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திர மார்க்கந்**
**தாதமார்க் கம்மென்றுஞ் சங்கரனை யடையு**
**நன்மார்க்க நாலவைதா ஞான யோக**
**நற் கிரியா சரியையென நவிற்றுவதுஞ் செய்வர்**
**சன்மார்க்க முத்திகள்சா லோக்கியசா மீப்பிய**
**சாரூப்பிய சாயுச்சிய மென்றுசதுர் விதமா**
**முன்மார்க்க ஞானத்தா லெய்து முத்தி**
**முடிவென்பர் மூன்றினுக்கு முத்திபத மென்பர்.** ௨௰

(கோ - ரு) சங்கரனை அடையும் நன்மார்க்கம் தாதமார்க்கம், சற் புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்றும் நால். அவைதாம் நற் சரியை, கிரியா, யோக, ஞான மென நவிற்றுவதும் செய்வர். சன்மார்க்க முத்திகள் சாலோக்கிய, சாமீப்பிய, சாரூப்பிய, சாயுச்சியமென்று சதுர் விதமாம். மூன்றினுக்கு முத்திபதமென்பர். முன்ஞான மார்க்கத்தால் எய்து முத்திமுடிவென்பர்.

(பொ - ரை.) அவ்வாறு சிவபிரான் திருவடியை அடை தற்குரிய சைவ நெறியாகிய நன்னெறியும், தாதமார்க்கம், சற் புத்திர மார்க்கம், தோழ மார்க்கம், சன்மார்க்கமென நான்கு வகைப்படும். அவை முறையே சிவ சரியை, சிவ கிரியை, சிவ யோகம், சிவஞானம் என வழங்கப்படும். அந்த நன்மையாகிய மார்க்கத்திற்குப்பயன் முறையே சிவசாலோகம், சிவசாமீபம், சிவசாரூபம், சிவசாயுச்சியமென நான்கு வகைப்படும். அவற்றுள் சிவசரியை முதலிய மூன்றினாலும் அடைதற்குரிய சிவசாலோக முதலிய மூன்றனைப் பதமுத்தியாகிய அபரமுத்தி எனக்கூறுவர். முடிவான ஞான நெறியால் அடையும் சிவசாயுசசியத்தைப் பர முத்தி எனக் கூறுவர். (எ - று.)

சரியை முதலியவற்றின் விளக்கம் பின்னர்க் கூறப்படும்.

சாலோகம்—சிவபிரான் திருமேனி கொண்டெழுந்தருளியிருக்கும் உலகத்துள் எவ்விடத்தும் தடையின்றிச் சஞ்சரித்து அவ்வுலகபோகங்களை அநுபவித்து வாழ்தல்.

சாமீபம்—அவ்வுலக போகத்தை அநுபவித்தலோடு மைந்தர்க்குள தாகிய உரிமைபோலச் சிவபிரானுக்குச் சமீபமாக இருந்து அப்போகங்களை அநுபவித்து வாழ்தல்.

சாரூபம்—தோழர்க்குரிய உரிமைபோலச் சிவபிரான் கொண்டருளும் திருமேனிகளுள் ஒரு திருமேனியைப்பெற்று அத்திருமேனிக்குரிய ஆபரணமும், போகாநுபவமும் உடையராய் வாழ்தல்.

சாயுச்சியம்—சிவபிரான் திருவடியில் இரண்டறக் கலந்து நின்று நித்தியானந்தத்தை அநுபவித்து வாழ்தல்.

சாலோகமுதலியவற்றிற்குப் பொருள் இதுவே என்பது வருகின்ற செய்யுட்கள் நான்கானும் ஆசிரியர் தாமே மொழிபெயர்த்துரைக்கின்ற வாற்றூற் காண்க. (௧அ)

தாச நெறியாகிய சரியையினிலக்கணமும், அதன் பயனும் இவையெனக் கூறுகின்றது.

**தாதமார்க் கஞ்சாற்றிற் சங்கரன்றன் கோயிற்**
**றலமலகிட் டிலகுதிரு மெழுக்குஞ் சாத்திப்**
**போதுகளுங் கொய்துபூந் தார்மாலை கண்ணி**
**புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித்**
**தீதிறிரு விளக்கிட்கித் திருநந்த வனமுஞ்**
**செய்துதிரு வேடங்கண் டாலடியேன் செய்வ**
**தியாதுபணி யீரென்று பணிந்தவர்தம் பணியு**
**மியற்றுவதிச் சரியைசெய்வோ ரீசனுல கிருப்பர்.**

(கோ - ௫.) தாத மார்க்கம் சாற்றில், சங்கரன்றன் கோயிற்றலம் அலகு இட்டு, இலகுதிரு மெழுக்கும் சாத்தி, தீது இல் திருவிளக்கிட்டு, திருநந்தவனமுஞ்செய்து, போதுகளும் கொய்து, பூந்தார்மாலை கண்ணி புனிதற்குப் பல சமைத்து, புகழ்ந்துபாடி, திருவேடங்கண்டால் அடியேன் செய்வது யாது பணியீர் என்று பணிந்து அவர் தம் பணியும் இயற்றுவது. இச்சரியை செய்வோர் ஈசன் உலகு இருப்பர்.

(பொ - ரை) மேற் கூறிய தாத மார்க்க முதலிய அந்த நான்கனுள், தாத மார்க்கமாகிய சரியையாவது யாதெனின், சிவபிரான் திருமேனி கொண்டெழுந்தருளியிருக்கும் கோவிலில் அசுத்தத்தைப்போக்கி விளங்கும்படி திருமெழுக்கிட்டு, குற்றமில்லாத திருவிளக்கிட்டு, அழகிய நந்தனவனங்கள் வைத்துப் புஷ்பங்களெடுத்துப் பொலிவாகிய மலரால் இண்டை முதலிய மாலைகள் அமைத்துச் சிவபிரான் திருமேனியில் அழகுறும் வண்ணம் சாத்தி, சிவபெருமானுடைய மேலான கீர்த்தியினை வாயார வாழ்த்தி, சிவனடியாருடைய திருவேடத்தைக் கண்ணுற்ற பொழுதே அடியேனால் செய்யத்தக்க அடித்தொண்டு யாது? அதனையருள வேண்டுமென்று வணங்கி, அவரருளிச் செய்யும் பணிவிடையும் செய்வதாம். இச்சரியை இந்திரியத் தொழிலாகிய புறத்தொழில் மாத்திரையானே சிவபிரான் உருவத்திருமேனியைநோக்கி வழிபடுவதாதலால் இதனைய நுட்டித்தோர் சிவபிரானலோகமாகிய பத முத்தியைப் பெறுவர். (ப - று.)

மேலைச் செய்யுளிற் கூறிய சிவசாலோக மென்பதனை ஈசனுலகு என மொழிபெயர்த்துரைத்தவாறு காண்க. (கக)

புத்திர நெறியாகிய கிரியையினிலக்கணமும், அதன் பயனும் இவையெனக் கூறுகின்றது.

புத்திரமார்க் கம்புகலிற் புதியவிரைப் போது
புகையொளிமஞ் சனமமுது முதல்கொண் டைந்து
சுத்தி செய்தா சனமூர்த்தி மூர்த்தி மானுஞ்
சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த
பத்தியினு லருச்சித்துப் பரவிப் போற்றிப்
பரிவினெடு மெரியில்வரு காரியமும் பண்ணி
நித்தலுமிக் கிரியையினை யியற்று வோர்க
ணின்மலன்ற னருகிருப்பர் நினையுங் காலே.

(கொ - டு.) பரிவினெடும் பரவிப்போற்றி நித்தலும் எரியில் வரு காரியமும் பண்ணி நினையுங்காலே இக்கிரியையினை யியற்றுவோர்கள் நின்மலன்றன் அருகு இருப்பர்.

(பொ - ரை.) புத்திர நெறியாகிய கிரியையின் இலக்கணம் யாதெனின், புதிதாகிய வாசனையுடைய மலர்கள், தூபம், தீபம், திருமஞ்சனம், (ஜலம்) திருவமுது முதலிய பூஜைக்கு வேண்டிய யாவும் தேடி அமைத்துக்கொண்டு, பூதசுத்தி, ஆன்ம சுத்தி, திரவிய சுத்தி, மந்திர சுத்தி, லிங்க சுத்தி என்று சொல்லப் பட்ட ஐவகைச் சுத்திகள் செய்து, சிவாசனமூர்த்தி மூலமந்திரங் களினல் ஆசனமிட்டு, அவ்வாசனத்தில் மூர்த்தியை எழுந்தருளச் செய்து, அம்மூர்த்தியில் மூர்த்திமானகிய சிவபெருமானைப் பாவனை செய்து வெளிப்படுத்தி, நிர்மலமாகிய மெய்யன்பினு லருச்சனை செய்து, விருப்பத்தோடு துதித்து நமஸ்கார முதலிய வழிபாடியற்றி, நித்தியாக்கினி காரியமும் செய்து முடிப்பதாம். நினையுமிடத்து இக்கிரியை இந்திரியங்களும் மனமும் கூடித் தொழிற்படுவதாகிய புறத்தொழில் அகத்தொழிலென்னுமிரண் டானும சிவபிரானுடைய அருவுருவத்திருமேனியை வழிபடுவ தாதலின், இதனை அநுட்டித்தோர் சிவ சாமீபமாகிய பதமுத்தி யைப் பெறுவர். (எ - று.)

மேல் கஅ-வது செய்யுளிற் கூறிய சிவசாமீபம் என்பதனை நின்மலன்றன் அருகு என மொழி பெயர்த்துரைத்தவாறு காண்க. (உ௦)

தோழ நெறியாகிய யோகத்தினிலக்கணமும், அதன் பயனும் இவை எனக் கூறுகின்றது.

சகமார்க்கம் புலனொடுக்கித் தடுத்துவளி யிரண்டுஞ்
சலிப்பற்று முச்சதுர முதலாதா ரங்க
ளகமார்க்க மறிந்தவற்றி னரும்பொருள்க ளுணர்ந்தங்
கணைந்துபோய் மேலேறி யலர்மதிமண் டலத்தின்
முகமார்க்க வமுதுடல முட்டத் தேக்கி
முழுச்சோதி நினைந்திருத்தன் முதலாக வினைக
ளுகமார்க்க வட்டாங்க யோக முற்று
முழத்தலுழந் தவர்சிவன்ற னுருவத்தைப் பெறுவர்.

(கொ - ௫) சகமார்க்கம் உழத்தல், இரண்டும் தடுத்து வளி சலிப்பு அற்று, புலன் ஒடுக்கி, முச்சதுர முதல் ஆதாரங்கள் அகமார்க்கம் அறிந்து அவற்றி னரும்பொருள்களுணர்ந்து, அங்கு அணைந்துபோய் மேல் ஏறி, அலர்மதி மண்டலத்தின் முகமார்க்கம் அமுது உடலம் முட்டத்தேக்கி, முழுச்சோதி நினைந்திருத்தல் முதலாக வினைகள் உகமார்க்க அட்டாங்க யோகம் முற்றும் உழந்தவர் சிவன்றன் உருவத்தைப் பெறுவர்.

(பொ - ரை) தோழ மார்க்கமாகிய யோகநெறிப் பயிற்சியாவது யாதெனின், கீழ்நோக்கிச் செல்லும் வாயுவையும் மேல் நோக்கிச்செல்லும் வாயுவையும் அடக்கி, சுழுமுனை மார்க்கத்தில் பிராணவாயுவைச் செல்லும்படி நிறுத்தி, மனத்தை விடயங்களில் செல்லவொட்டாது திருப்பி, முக்கோணம், சதுரம் முதலிய அடையாளங்களையுடைய மூலாதாரம், சுவாதிட்டான முதலிய ஆறுதாரங்களிலுள்ள உயிர், மெய் என்னும் இருவகை அக்கரங்களின் கிரமத்தையுமுணர்ந்து, அவ்வாதாரங்களின் அரிய அதிதேவதைகளைத் தியானித்து, அவ்வாறுதாரங்களிலும் சிவனை வெளிப்படுத்துவதாக நிற்கும் அசபா சத்தி சிவசொரூபயாய் நிற்கும் முறையை நோக்கி, மூலாதாரமுதல் விநாயகர் முதலிய தேவதைகளைப் பொருந்தி, மேலாகிய பிரமாந்திரமளவும் அவ்வ சபை

யுடன் சென்றணைந்து அப்பிரமரந்திரத்தின் கண்ணதாகிய தாமரை முகையை மலரும்படி செய்து, அத்தாமரை மலரின் தாதுக்களின் நுனியிலுள்ள சந்திரமண்டலத்தை மூலாக்கினியினால் இளகப் பண்ணி, அம்மண்டல வழியாக ஒழுகும் அமிர்தத்தைத் தேகம் முழுதும் நிரப்பிப் பூரணப்பிரகாசத்தைத் தியானித்தல் முதலியனவாம். இது வினைகள் கெடுதற்கு வழியாகிய இயமம், நியமமுதலிய அட்டாங்க யோகமெனப்படும். இவ்வழிபாடு அகத்தொழில் மாத்திரையானே சிவபெருமானுடைய அருவத்திருமேனியிடத்து நிகழ்வதாதலின், இதனை முற்றும் அநுட்டித்தோர் சிவசாரூபமாகிய பத முத்தியைப் பெறுவர். (எ-று.)

மேல் கஅ-வது செய்யுளிற் கூறிய சிவசாரூபம் என்பதனைச் சிவன்ற னுருவம் என மொழி பெயர்த்துரைத்தவாறு காண்க. உழந்தவர் என்ற விடத்து இவ்வியோகம் என்பது வருவித்துரைக்க.

வாயுவை யடக்குதலாவது—வாயுவானது எப்பொழுதும் வெளியே வருதலும், உள்ளே போதலுமாக இயங்கிக் கொண்டிருக்கும். வெளியே வருதல் இரேசகம். உள்ளே போதல் பூரகம். வெளியே வருதலை மேல் நோக்கிச் செல்லும் வாயுவென்றும், நிசுவாசமென்றுங் கூறுவர். உள்ளே செல்லுதலை கீழ் நோக்கிச் செல்லும் வாயுவென்றும், உசுவாசமென்றுங் கூறுவர். இவ்வாயுவை இவ்வாறு செல்லவொட்டாது தடுத்து அடக்குதலாகிய கும்பகமாவது சுழுமுனை நாடியின வழியாகப் புருவநடுவில் மனதோடுகூட நிறுத்திப் பழகுதலாம்.

ஆறாதாரங்களாவன —மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்பனவாம். மூலாதாரம் குதத்துக்கு இரண்டங்குலத்திற்கு மேல் இலிங்கத்திற்கு இரண்டங்குலத்திற்குக் கீழுள்ள இடம். இவ்விடத்தில் முக்கோண வடிவமிருக்கும். அவ்வடிவத்தில் நான்கிதழ்களையுடைய செந்தாமரையும் வ ஶ ஷ ஸ. என நான்கு அக்கரங்களும் இருப்பனவாம். இவ்வாதாரத்தில் விளங்குந் தேவதை விநாயகர். சுவாதிட்டானத்திற்குத் தானம் லிங்கமூலம். வடிவு ஆறுகோணம். அக்கோணத்தில் அநேக காந்தியினையுடைய ஆறிதழ்த் தாமரையிருக்கும். அத்தாமரையில், ம்ப ப ம ய ர ல என்னும் ஆறு அக்கரங்களிருக்கும். இவ்வாதாரத்தில் விளங்குந் தேவதை பிரமதேவர். மணிபூரகத்திற்குத் தானம் நாபி. வடிவு மூன்று வட்டம். இரத்தினப் பிரபை போன்ற பத்து இதழ்களையுடைய தாமரை அவ்விடத்திருக்கும். அதில், ண்ட ட ண த தத த ந்த ந ப ப்ப எனப்பத்து அக

கரங்களிருக்கும். இவ்வாதாரத்தில் விளங்குந் தேவதை விஷ்ணு. அநாக தத்திற்குத் தானம் இருதய கமலம். வடிவ முக்கோணம். இதில் பொன் போன்ற நிறத்தினையுடைய பன்னிரண்டு இதழ்த்தாமரை மலரிருக்கும். அதில், க க்க க ங்க ச ச்ச ஜ ஜ்ஜ ஞ ஞ ட ட்ட எனப் பன்னிரண்டு அக்கரங்களிருக்கும். இவ்வாதாரத்தில் விளங்குந் தேவதை உருத்திரன். விசத்திக்குத் தானம் கண்டம். வடிவு அறுகோணம். இதில் வெண்மை நிறமுடைய பதினாறிதழ்த் தாமரையிருக்கும். அதில், அ ஆ இ ஈ உ ஊ ரு ரூ லு லூ எ ஐ ஒ ஔ அம் அ: எனப்பதினாறு அக்கரங்களிருக்கும். இவ்வாதாரத்தில் விளங்குந் தேவதை மகேசுவரன். ஆக்கினைக்குத்தானம புருவநடு. இதில் இரண்டிதழ்களையுடைய செந்தாமரையிருக்கும். இதில், ள க்ஷ என இரண்டு அக்கரங்களிருக்கும். இதில், விளங்கும் அதி தேவதை சதாசிவர். இவ்வாறாதாரங்களையும் ஆதனமாகக் கொண்டு அவற்றிற்கு மேலாகிய பிரமரந்திரததில் ஆயிரம் இதழ்களையுடைய தாமரை மலரின் மேல் பரமசிவன் எழுந்தருளியிருப்பர்.

அசபையாவது—நாதவடிவாயிருக்கின்ற குண்டலினி சத்தி சொரூபம்.

அட்டாங்க யோகமாவது—இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என எண்வகைப்படும். அவற்றுள்,

இயமமாவது—கொல்லாமை, உண்மை கூறல், களவு செய்யாமை, பிறர் பொருளை விரும்பாமை, இந்திரியங்களை விடயங்களிற் செல்லவொட்டாதடக்குதல் என்பனவாம்.

நியமமாவது—தவம், சுத்த முடைமை, தத்துவ நூலாராய்தல், பெற்றது கொண்டு மகிழ்தல், தெய்வம் வழிபடல் என்பனவாம்.

ஆதனமாவது—இருக்கும் முறைமையிற் பலவேறு வகைப்படும். அவற்றுள், சுகாதனம் ஒன்று. அதாவது, எவ்வாறிருந்தால் அநு சந்தானஞ் செய்வதற்குச் சுகமாயிருக்குமோ அவ்வாறிருத்தல்.

பிராணாயாமமாவது—பிராண வாயுவையடக்கல். அது மந்திர செபத்துடன் அடக்குதலும், மந்திர செபமின்றி அடக்குதலுமென இருவகைப்படும்.

பிரத்தியாகாரமாவது—மனத்தைப் புறத்துச் செல்லவொட்டாது அடக்குதல்.

தாரணையாவது—மனத்தை அகத்து ஓர் தானத்தில் நிறுத்துதல்.

தியானமாவது—மூர்த்தியின் சொரூபத்தை மனத்தால் பாவித்துச் சிந்தித்தல்.

சமாதியாவது—மூர்த்தியாகிய தோற்றமும், சிந்தித்தலாகிய தொழி லும், சிந்திக்கின்ற தானுங் ஆகிய பேதங்களின்றி மூர்த்தியுந் தானும் இரண்டறக்கலந்து நிற்றல்.

இவ்வெட்டும் தோழநெறியென்ற யோகத்துள் அடங்கும். எவ்வா றெனின், வாயுவை யடக்கல் பிராணாயாமம். புலனொடுக்குதலாகிய மன வடக்கம் பிரத்தியாகாரம். சுழுமுனை மார்க்கத்திற் செலுத்துதல் தாரணை. ஆதாரங்களையும், அதிதெய்வங்களையும் அறிதல் தியானம். பிரமரந்திரத் தில் பூரணப் பிரகாசத்தைத் தியானித்தல் சமாதியாம். இயமம், நியமம், ஆதனம் மூன்றும் உடையார்க்கே இவ்வரு சந்தானங் கூடுமாதலால் அவற் றைக் கூறுராயினர். (உக)

சன்மார்க்கமாகிய ஞானத்தினிலக்கணமும், அதன் பயனும் இவையெனக் கூறுகின்றது.

சன்மார்க்கஞ் சகலகலை புராண வேத
சாத்திரங்கள் சமயங்க டாம்பலவு முணர்ந்து
பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாக மேலாம்
பதிபசுபா சந்தெரித்துப் பரசிவனைக் காட்டு
நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான
ஞேயமொடு ஞாதிருவு நாடா வண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றி ஞானப்
பெருமையுடை யோர்சிவனைப் பெறுவர் காணே.

(போ - ரை.) சன்மார்க்கமாகிய நன்னெறியாவது யாதெ னில், எல்லாக் கலைஞானங்களும், புராணங்களும், வேத சிவாக மங்களிலுள்ள கரும காண்டங்களும், ஏனைச் சமய சாத்திரங் களும் ஆராய்ந்து, பல வழிப்படுகின்ற அவற்றின் பொருள்கள் யாவும் கீழெனக் கண்டுகழித்து, மேலாய பதி, பசு, பாசங்களின் தடத்த இலக்கணங்களையும், அவற்றுள் பசு பாசங்கள் நீங்கிய பதியின் சொரூப இலக்கணத்தையும் உணர்த்துவதாகிய ஞான சாத்திரங்களைத் தானாக ஓதியும், ஆசிரியனிடத்துக் கேட்டும், கேட்டவாறு சிந்தித்தும், சிந்தித்தலிற் காணப்படும் காண்பான் காட்சி, காணப்படும் பொருளாகிய சவிகற்ப ஞானத்தையுங்

கடந்து, அம்மூன்றுமின்றி அத்துவிதமாய் இயைந்த அகண்டாகார சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவபெருமான் மாட்டு நிருவிகற்ப ஞானத்தாற் செய்யும் வழிபாடாகும். இவ்வழிபாடு புறத்தொழில் அகத்தொழில் இரண்டுமின்றி அறிவுத்தொழில் மாத்திரையானே சிவபெருமானுடைய உருவம், அருவம், அருவுருவம் என்னும் மூன்று திருமேனிகட்கு மேலாகிய சொரூபத் திருமேனியிடத்து நிகழ்வதாம். இதனை அநுட்டித்தோர் சிவசாயுச்சியமாகிய பரமுத்தியைப் பெறுவர். (எ - று.)

மேல் ௧௮-வது செய்யுளிற் கூறிய சிவசாயுச்சியம் என்பதனை சிவனைப் பெறுவர் என மொழிபெயர்த்துரைத்தவாறு காண்க. சொரூபத் திருமேனியினிடத்துச் செய்யும் வழிபாடு வருகின்ற செய்யுளில் ஞான நூல்தனை யோதல் என்பது முதலாக வகுத்துக் கூறப்படும். இவ்விடத்து வேதம் என்றது வேதஞ் சிவாகம மென்னுமிரண்டினுமுள்ள கருமகாண்டத்தை. சிவாகமமும் வேதம் என வழங்கப்படும். கீழுள்ளவற்றைக் கீழெனக் கண்டு கழித்தாலன்றி மேலுள்ளன பயன்படாவென்று கூறவேண்டிக் "கீழாக" என்றார். கழித்து என்பது சொல்லெச்சமாக வருவித்துரைக்கப்படும். பதிபசு பாசந் தெரித்தலாவது, அம்மூன்று பொருளையும் தடத்த லக்கணத்தில் வைத்து வகுத்துணர்த்துதல். பரசிவனைக் காட்டலாவது, அம்மூன்றனுள் பதிப்பொருள் ஏனைப்பாச பசுக்களுக்கு மேலாதலினிது விளங்கச் சொரூப லக்கணத்தின் வைத்துணர்த்துதல். இவ்விடத்து ஞானம் என்றது ஞான சாத்திரத்தைக் குறித்தது. தெரித்துக்காட்டு ஞான நூலென்றதனால், ஞானகாண்ட மெல்லாம், தூல அருந்ததி நியாயம்பற்றித் தடத்த லக்கணத்தை முன்னர் விளக்கிக்காட்டி, பின்னர்ச் சொரூப லக்கணத்தை விளக்குமெனப்பட்டு இவ்வாறு இருபகுதியதாய் நிகழுமென்பதாயிற்று. நாடுதல்—சிந்தித்தல். நாடியெனவே, நாடுதற்கு வேண்டப்படும் ஓதல், கேட்டல்களும் உடன் கொள்ளப்படும். பின் மார்க்கச் சிவன் என்றவிடத்து மார்க்கம் இடைப்பிறவரலாதலின், பின் சிவன் என்பது பின்னிய சிவனெனப் பொருள் குறித்து வினைத்தொகையாயிற்று. பின்னுதல்—அத்துவிதமாய் இயைதல். நாடாவண்ணம் பின்னிய சிவன் என்றுரைக்க.

சன்மார்க்கம் என்பது சத்தியமுடைய நெறி எனப்படும். சரியை முதலிய அநுட்டானங்களும், அவற்றின் பயனாகிய சாலோகாதி பத முத்தியும், அநித்தமாகையால் அசத்தியம். அநித்தமென்பது மேலானதில்லை யெனபதைக் குறிக்கும். ஞானமும், அதனாற்பெறும் சிவசாயுச்சியமுட

மேலானதாலும், அதற்குமேலில்லாமையாலும் சத்தியம். ஆதலால், இந்த ஞான நெறிக்குச் சத்திய நெறி எனப் பெயராயிற்று.

சத்திய நெறியாகிய சன்மார்க்கத்தைச் சுருக்கிக் கூறுமிடத்து, எல்லாச் சாத்திரப் பொருள்களையும் உணர்ந்து, அப்பொருள்களெல்லாங் கீழெனக் கழித்து, ஞான சாத்திரப் பொருளை நாடி, சிவபிரான் திருவடியில் இரண்டறக் கலத்தல் என முடித்துக்கொள்க. மேல் இச்சரியை, இக்கிரியை என்றாற்போல இவ்விடத்தும் இஞ்ஞானப்பெருமை எனச் சுட்டு வருவித்துரைக்க.

இவை நான்கு செய்யுளானும், மேல் எடுத்துக்கொண்ட சரியை முதலிய நான்கிற்கும் இலக்கணங் கூறப்பட்டது. (௨௨)

ஞானத்தால் வழிபடுவதாகிய ஞான யாகமே முத்தியைத் தரும் எனவும் கன்ம முதலிய நான்கு யாகங்களும் போகத்தைத் தரும் எனவும் கூறுகின்றது.

**ஞானநூ றனையோத லோது வித்த**
**னற்பொருளைக் கேட்பித்த றான்கேட்ட னன்று**
**வீனமிலாப் பொருளதனைச் சிந்தித்த லைந்து**
**மிறைவனடி யடைவிக்கு மெழின்ஞான பூசை**
**யூனமிலாக் கன்மங்க டபஞ்செபங்க டியான**
**மொன்றுக்கொன் றுயருமிவை யூட்டுவது போக**
**மானவையான் மேலான ஞானத்தா லரனை**
**யருச்சிப்பர் வீடெய்த வறிந்தோ ரெல்லாம்**

(சொ - பு.) ஊனம் இலா கன்மங்கள் தபம் செபங்கள் தியானம் இவை ஒன்றுக்கு ஒன்று உயரும். போகம் ஊட்டுவது. ஆனவையான் ஞான நூல்தனை யோதல், ஓதுவித்தல், நற்பொருளைக் கேட்பித்தல், நன்றாத்தான் கேட்டல், ஈனம் இலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும் எழில்ஞான பூசை. இறைவன் அடி அடைவிக்கும். வீடு எய்த அறிந்தோர் எல்லாம் மேலான ஞானத்தால் அரனை அருச்சிப்பர்.

(பொ - ரை.) இறைவனை வழிபடுகின்ற முறை, சிவதருமோத்தரத்திற் கூறியவாறு கன்மயாகம், தவயாகம், செபயாகம், தியானயாகம், ஞானயாகம் என ஐவகைப்படும். யாகம் என்பது வழிபாடாம். அவற்றுள் குறைவில்லாத கன்மயாகமாவது விதி

ஐந்து நாழிகைக்குமுன் எழுந்திருந்து செய்யும் சிவ சிந்தனை முத லாகச் சிவபூஜை அக்கினி காரியம் ஈறாகிய செயல்களாம். தவயாக மாவது, சாந்திராயண விரத முதலியவற்றால் சரீரத்தை மெலி வித்தல். செபயாகமாவது, மந்திரங்களை வாசகம், உபாம்சு, மானதம் என்னும் முறையில் தத்தம் தகுதிக்கேற்றவாறு செபித் தல். தியான யாகமாவது, இருதய முதலிய தானங்களில் சதா சிவன் முதலிய மூர்த்திகளின் திருமேனிகளைப் பாவித்துத் தியா னிப்பது. இந்த நான்கு யாகங்களும் ஒன்றுக்கொன்று உயரும். உயர்தலாவது, பிரபஞ்சப் பற்றுநீக்கத்தைக் குறிப்பதாம். ஆயி னும் பற்று நீக்கம் அறவே உண்டாகாமையால் அவ்வழிபாடுகள் போகத்தையே கொடுக்கும். போகம் என்பது சாலோகாதி பத முத்தியாம். இனி ஞானயாகமாவது, ஞான சாத்திரத்தை முன் னொடு பின் மலைவற ஆசிரியனின்றிப் படித்தலும், தான் படித்த படி பக்குவமுடைய பிறர்க்குப் படிப்பித்தலும், அச்சாத்திரத் துள்ள நன்மையாகிய பொருள்களைத் தமது மதிநுட்பத்தால் ஆராய்ந்து பிறர்க்குச் சொல்லுதலும், இவ்வாறு சொல்லினும் இது ஆராய்ச்சி அறிவேயன்றி யநுபவ அறிவாகாமையால், அவ் வநுபவ அறிவு விளங்கும் பொருட்டு ஞானாசாரியனிடத்து அச் சாத்திரப் பொருளை உபதேச முறையிற் கேட்டலும், கேட்ட வாறே குறைவில்லாத அப்பொருளைத் தனித்திருந்து சிந்தித்த லும் என ஐவகைப்படும். இவ்வாறு ஐவகைப்பட்ட அழகிய ஞான யாகம் ஒன்றுமே முத்தியைத்தரும். முத்தியடைய விரும்பு வோர் யாவரும் மேம்பட்ட ஐவகையான இந்த ஞான யாகத்தினா லேயே சிவபிரானை வழிபடக்கடவர். (எ - று)

தெளிதற்கும், திட்டைக்கும் ஆசிரியன் உபதேசமே யன்றி நூல் வேண்டாமையான், நூலானாகற்பாலனவாகிய ஞான நூல் ஓதல். ஓதுவித் தல், கேட்பித்தல், கேட்டல், சிந்தித்தல் என்னும் ஐந்துமே ஞானயாக மெனப்பட்டது.

ஞானாசாரியனிடத்துக் கேட்குமுன்னர்ப் பிறர்க்குச் சொல்லுதல் கூறி யிருத்தலினால், சாத்திரப் பொருளைத் தன்னுடைய நுண்ணறிவால் அறிந்து சொல்லுதல் கூடும் எனவும், அநுபவ முண்டாதற்குரிய அநுசந்தானத்தை

ஆசிரியனிடத்து உபதேச முறையால் கேளாதவர் சொல்லாரெனவும் அறிக. உபதேசங்கேட்டு அநுபவம்வந்த பின்னர்ப் பிறர்க்கு உபதேச நெறியைச் சொல்லுங்கால் அச்செயல் நூற்கலப்பால் சிந்தனையுளடங்குமாதலின் அக் கேட்பித்தலை வேறு கூறாராயினர். அவ்வுபதேசத்தைச் சிந்தித்தலென்று கூறினமையினாலேயே, அநுபவம் வந்த பின்னர்ப் பிறர்க்கு உபதேசிக்கலா மென்பது பெறப்படும். அது சிந்தனையுளடங்குமாதலானன்றோ, வருஞ் செய்யுளில் கேட்டலுக்குப்பின் கேட்பித்தல் கூறாது சிந்தித்தலே கூறப் பட்டதென்க.

சாந்திராயணமாவது—அமாவாசை முதல் பௌர்ணமி வரை, உண்ணும் அன்னத்தைப் பதினைந்து பங்காக்கி நாளொன்றுக்கு ஒவ்வொரு பங்காகக் குறைத்துண்ணலும், பௌர்ணமி முதல் அமாவாசை வரை அவ்வாறே கூட்டி உண்ணலுமாம்.

வாசகமாவது—பிறர்க்குக் கேட்கும்படி செபித்தல்.

ரகசியமாவது—தன் செவிக்குக் கேட்கும்படி செபித்தல்.

மானதமாவது—அக்கரங்களை மனத்தால் பாவித்தல். முன்னைய இரு செபங்களிலும் எண்ணிக்கைகூடும். மானதத்தில் எண்ணிக்கை கூடாது. (உரு)

உண்மை ஞானம் நான்கு வகைப்படும் எனவும், ஞானத்திற்கு வராமல் ஓதல் முதலியவற்றினின்று சரீரம் நீங்கினவர் அடையும் கதி இதுவெனவும் கூறுகின்றது.

**கேட்டலுடன் சிந்தித்த றெளித னிட்டை**
**கிளத்தலென வீரிரண்டாங் கிளக்கின் ஞானம்**
**வீட்டையடைந் திடுவர்நிட்டை மேவி னோர்கண்**
**மேவாது தப்பினவர் மேலாய பதங்கட்**
**கீட்டியபுண் ணியநாத ராகி யின்ப**
**மினிதுநுகர்ந் தானருளா லிந்தப் பார்மே**
**னாட்டியநற் குலத்தினில்வந் தவதரித்துக் குருவான்**
**ஞானநிட்டை யடைந்தடைவர் நாதன் றாளே.**

(கோ - ரு.) கிளக்கில் ஞானம் கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டை கிளத்தலென ஈரிரண்டேயாம். நிட்டை மேவினோர்கள் வீட்டை அடைந்திடுவர் எனவும், நாதன் தாள் அடைவர் எனவுங் கூட்டுக.

(போ - ரை.) மேற்கூறிய ஞானயாகம் ஐந்தனுள் ஓதல், ஓதுவித்தல், கேட்பித்தலாகிய முன்னைய மூன்றும் ஆசிரியனை யின்றியும் நிகழ்வனவாதலின், ஆசிரியனால் அறிவுறுத்தும் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை என்னும் நான்குமே உண்மை ஞான மெனப்படும். இந்நான்கினும் முறையே பழகி நிட்டை பொருந்தினவர் வீட்டினையடைவர். இந்நான்கினுள்வாராது தீக்கையில் அத்துவ சுத்தி பண்ணப்பட்டு ஓதல், ஓதுவித்தல், கேட்பித்தலாகிய மூன்றினும் நின்று சரீரம் நீங்கியவர்கள் சிவலோகாதிபத முத்திகளைப்பெற்று ஆண்டுள்ள இன்பத்தினை நன்கு அநுபவித்து முதல்வன் ஆணையால் அங்கு நின்று நீங்கி இவ்வுலகத்தின்கண் உயர்ந்த குலத்திற் பிறந்து ஞானசாரியனை யடைந்து கேட்டல் முதலிய ஞான நெறியால் நிட்டையினைக்கூடி வீட்டினை அடைவர். இவ்வுலகத்திற்கு வராமல் சிவலோகத்தில் சிவபிரானே குருவாய் உபதேசிக்கக் கேட்டல் முதலிய ஞானத்தைப்பெற்று நிட்டையினால் வீட்டை அடையினுமடைவர். ஆதலின் இங்கு வருவரென்பது நியதமன்று. (எ - று.)

ஓதல், ஓதுவித்தல், கேட்பித்தல் முதலிய மூன்றினின்றார்க்கும் கேட்டல் முதலிய நான்கும் ஆசிரியனையின்றிக் கூடாவென்பதுணர்த்துதற் பொருட்டு "இந்தப் பார்மேனுட்டிய நற்குலத்தினில் வந்தவதரித்து என்றார். அவ்வளவே யன்றிப் பார்மேல் வருதல் நியதமன்றெனக்கொள்க. அடுத்துவருஞ் செய்யுளில் சரியை முதலியவற்றினின்றார் ஆண்டு "நாதனே முன்னிற்கின் நணுகுவர் நற்றாளே" எனக் கூறுதலானும் பார்மேல் வருதல் நியதமன்றென்பது துணியப்படும்.

இனி, மேவாது தப்பினவர் என்பதற்கு, கேட்டல் முதலிய மூன்றினின்று நிட்டை மேவாது தப்பினவர் என்றுரைப்பாருமுளர். கேட்டபின்னர்க் கேட்க வேண்டாமையானும், சிந்தித்த பின்னர் நூல்வேண்டாமையானும், "குருவால் ஞான நிட்டை யடைந்தடைவர்" என்று கூறவேண்டா. இவ்வாறு கூறுதலினால் கேட்டுச் சிந்தித்து தெளிந்து நிட்டையடைவரென்பது பெறப்படும். அன்றியும், கேட்டல் முதலியவற்றினின்று தப்பினவர் சுத்த தத்துவ புவனங்களில் அபரமுத்தராக வசித்து அங்கிருந்தவாறே பரமுத்தியை யடைவரே யன்றி இவ்வுலகத்து மீளுதலில்லை. ஆதலின், கேட்டல் முதலியவற்றினின்று தப்பினவரை, சரியை முதலியவற்

றினின்று தப்பினவரோடொப்பவைத்துரைத்தல் சிறிதும் ஏலாமையானும் மேலைச்செய்யுளில் கேட்டல் சிந்தித்தலை உள்ளடக்கிய ஐந்தும் இறைவனடி யடைவிக்கும் எனக்கூறி யதனோடு "மேலாய பதங்கட்கேட்டிய புண்ணிய நாதராகி யின்பமினிது நுகர்ந்து" என்றது மூறாணுதலானும் அவ்வுரை பொருந்தாமை யறிக.

மேலைச் செய்யுளில் ஐந்தும் இறைவனடி யடைவிக்கும் என்றதனால், ஐந்தில் ஒன்று குறையினும் இறைவனடி யடைவிக்காதெனப்பட்டு, ஓதல் முதலிய மூன்றினின்றவர் சரியை முதலிய மூன்றினின்றவரோடொப்பப் பத முத்தியைப் பெறுவரென்பது பொருந்துமாறு காண்க.

இவை யிரண்டு செய்யுளானும் ஞானமாவது, ஞானநூலோதல், ஓதுவித்தல், கேட்பித்தல், கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை என எழுவகைப்படுமென்பதும், அவற்றுள், ஓதல் முதலிய மூன்றும் உண்மை ஞானத்திற்கேதுவாகலின் பொதுவென்பதும், கேட்டல் முதலிய நான்கும் உண்மை ஞானமெனப்படுமாதலின் சிறப்பென்பதும், பொதுவிற்குரிய பயன் பத முத்தியும், சிறப்பிற்குரிய பயன் பரமுத்தியுமாம் என்பதும் உணர்த்தப்பட்டன. (உச)

தானம் முதலியன பசு புண்ணியமெனவும், சரியை முதலிய மூன்றும் பதி புண்ணியமெனவும், இம்மூன்றும் ஞானத்தைப் பயப்பித்து முத்தியைத் தருமெனவும் கூறுகின்றது.

**தானமியா கந்தீர்த்த மாச்சிரமந் தவங்கள்**
**சாந்திவிர தங்கன்ம யோகங்கள் சரித்தோ**
**ரீனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவின் மீள்வ**
**ரீசனியோ கக்கிரியா சரியையினி னின்றோ**
**ரூனமிலா முத்திபதம் பெற்றுலக மெல்லா**
**மொடுங்கும்போ தரன்முனிலா தொழியினுற்ப வித்து**
**ஞானநெறி யடைந்தடைவர் சிவனை யங்கு**
**நாதனே முன்னிற்கி னணுகுவர்நற் றாளே.**

(கொ - டு.) ஈசன் சரியை, கிரியா, யோகினின் நின்றோர் எனவும், ஞானநெறியடைந்தே சிவனையடைவரெனவும், அங்கு நாதன் முன்னிற்கின் நற்றாளே நணுகுவர் எனவுங் கூட்டுக.

(பொ - ரை.) வேதோக்தமான தருமநெறிகள் பல இருப்பினும், ஞானநெறியைச் சிறந்தெடுத்துக் கூறியது என்னையெ

ணின், தானம் கொடுத்தல், யாகஞ்செய்தல், புண்ணிய தீர்த்தங்க ளாடல், பிரமசரிய முதலிய தத்தம் நிலைகளிற்றவறாது நிற்றல் உண்டி சுருக்கல் முதலிய தபசுகள் செய்தல், பிராயச்சித்தங்கள் பண்ணல், விரதங்காத்தல், பிராணவாயுவை ரேசகாதி தொழில் களால் அடக்குவதாகிய கருமயோகஞ்செய்தல் ஆகிய இவை யெல்லாம் பசு புண்ணியம். இவற்றை யநுட்டித்தோர் துன்ப மின்றி இன்பமே மிகுந்திருக்கும் சுவர்க்க உலகத்தினைப்பொருந்தி அங்குள்ள போகங்களை யநுபவித்து விரைந்து மீளுவர். இவ் வாறு மேலேபோயும் மீளுதற்கேதுவாகிய அப்பசு புண்ணியம் போலல்லாத முதல்வன் விதித்த சரியை, கிரியை, யோகங்களா கிய சிவபுண்ணியங்களை விதி வழிநின்று அநுட்டித்தோர், உண் மைஞானத்தைப் பொருந்தாது ஓதல் முதலிய மூன்றினின்று தப்பினவரோடு ஒப்ப, சாலோகாதிபத முத்திகளில் நெடுங்காலந் தங்கி உலகமுழுதும் சங்காரப்படும்பொழுது போகத்தில் வைராக் கியம் பிறவாதிருப்பின் முதல்வன் குருமூர்த்தியாய்த் தோன்றி அநுக்கிரகஞ் செய்யமாட்டான்; அதனால் மீட்டும் செனனத்தை யடைந்து குருவருளால் ஞானநெறியைத் தலைப்பட்டு வீடடை வர். சாலோகாதிபத முத்தியில் இருந்தவாறே போகத்தில் வைராக்கியம் பிறக்குமாயின், அவ்விடத்திலேயே முதல்வன் குரு மூர்த்தியாய்த்தோன்றி அருள்செய்வன். அவ்வாறு அருள் செய் யப்பெறின், ஞானநெறியைக் கூடிச் செனனத்தை எடாமலே முத்தியிற்கலப்பர். ஆதலால், தான முதலியன போலன்றி எவ் வாற்றானும் சரியையாதிகள் சாலோகாதிபத முத்தியைத்தந்து முடிவான முத்தியையும் தரும். (எ-று.)

இச்செய்யுளால் சரியை முதலியவற்றிற்குப் பயன் மேற்கூறிய சாலோக முதலிய பதமுத்தி மாத்திரைதானோ என்னும் ஆசங்கையை நீக்கிப் பதமுத்தியைத் தந்து பரமுத்தியையுந்தரும் எனக் கூறப்பட்டது. (உ௯.)

தானமும் சாமானியருக்குக் கொடாமல் சிவஞானிகளுக்குக் கொடுக்கில் முத்திக்கேதுவாமெனக் கூறுகின்றது.

சிவஞானச் செய லுடையோர் கையிற் றானந்
 திலமளவே செய்திடினு நிலமலைபோற் றிகழ்ந்து
பவமாயக் கடலினழுந் தாதவகை யெடுத்துப்
 பரபோகந் துய்ப்பித்துப் பாசத்தை யறுக்கத்
தவமாரும் பிறப்பொன்றிற் சாரப் பண்ணிச்
 சரியைகிரி யாயோகந் தன்னினுஞ்சா ராமே
நவமாகுந் தத்துவஞா னத்தை நல்கி
 நாதனடிக் கமலங்க ணணுகுவிக்குந் தானே.

(கோ - ரு.) சிவஞானச்செயல் உடையோர் கையின் தானம் திலம் அளவே செய்திடினும் நிலம் மலைபோல் திகழ்ந்து, பரபோகந் துய்ப்பித்து, தவம் ஆரும்பிறப்பு ஒன்றின் சாரப்பண்ணி, சரியை கிரியா யோகம் தன்னிலுஞ்சாராமே பவமாயக்கடலின் அழுந்தாதவகை எடுத்து பாசத்தை அறுக்க நவமாகும் தத்துவஞானத்தை நல்கியே நாதன் அடிக்கமலங்கள் நணுகுவிக்கும் தான்.

(போ - ரை.) சரியையாதிகளை அநுட்டிக்கும் விதி வழியின்றிச் சிறுத்தொண்டர் முதலாயினார்போன்று பத்தி வழியில் நின்று சிவஞானச் செயலுடைய ஞானிகள் கையில் தானமாய்க் கொடுத்த பொருள் சிறிதேயாயினும், அத்தானம் பூமியைப் போலும், மலையைப்போலும் விரிவாகி ஓங்குதலால் பதி புண்ணிய மெனப்படும். அப்புண்ணியமானது, அத்தானத்தைச் செய்த பத்தர், மேற்கூறியவாறு பசு புண்ணியத்திற்குரிய சுவர்க்கலோகங்களையடையாது, பதி புண்ணியத்திற்குரிய சிவசாலோகாதி பதங்களைப்பொருந்தி, ஆண்டுளவாகிய இன்பங்களை யநுபவித்து பின்னர் இவ்வுலகத்தில் தவஞ்செய்தற்குரிய உயர்ந்த குலத்தில் ஒரு பிறவியையடைந்து, சரியை, கிரியை, யோகங்களை ஏனையோர்க்குப்போலக் காலநீட்டிப்பும் அருமையுமின்றிச்செய்து சனனமரணமாகியகடலின்கண் அழுந்தாதவண்ணம் பாசத்தினைநீக்குதற்குரிய புதுமையாகிய உண்மைஞான நெறியினைப் பொருந்தி, முதல்வனதுதிருவடியாகிய வீட்டினை அடையும்படி செய்யும். ()

“சரியை கிரியாயோகந் தன்னினுஞ் சாராமே, என்றது அவை ஏனையோர்க்குப்போலக் காலநீட்டிப்பும் அருமையுமின்றி எளிதிற்கைகூடி முற்

றுப்பெறும் என்பதுபற்றியேயன்றி, சரியை கிரியா யோகங்களை அனுட்டிக்கமாட்டாரென்பதன்று. அநுட்டிக்கமாட்டாரென்று கூறின், "சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" என மேல் கக-வது செய்யுளிற்கூறியதனோடு முரணுமாதலின், அதனோடு முரணாதவண்ணம் இங்கே கூறியவாறு கொள்க. நன்னினும் என்றவிடத்து உம்மை சரியை முதலியவற்றின் சிறப்பையுணர்த்திற்று.

இவை நான்கு செய்யுளானும் ஞானநூல்தனையோதல் முதலிய ஐவகை வேள்வி செய்தோர் பெறும்பயன் பதமுத்தி, பரமுத்தி என்பதும், சரியை முதலிய மூன்றை அநுட்டித்தோர் பெறும்பயன் பதமுத்தியும், அதன் வாயிலாகப் பரமுத்தியுமாமென்பதும், சிவஞானிகட்குச் செய்யுந் தானப்பெருமை கூறுமுகத்தால் பத்தி நெறியினின்றோர் பெறும்பயன் சாலோகாதி பதங்களையடைந்து, பின்னர்ப்பரமுத்தியடைதலென்பதும்எனக்கூறுமுறையில், எந்த நெறியில் நின்றோர்க்கும் முத்தியடைதற்கு ஞானநெறியாகிய சன்மார்க்கம் இன்றியமையாச் சிறப்பிற்றென்பது கூறப்பட்டது.

(உசு.)

*வீடு பேற்றிற்குச் சிறந்த சாதனம் ஞானமேயன்றிப் பிறிதில்லை எனக் கூறுகின்றது.*

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராண
 நல்லவா கமஞ்சொல்ல வல்லவா மென்னு
மூனத்தா ரென்கடவ ரஞ்ஞா னத்தா
 லுறுவதுதான் பந்தமுயர் மெய்ஞ்ஞா னந்தா
ஞனத்தா லதுபோவ தலர்கதிர்முன் னிருள்போ
 லஞ்ஞாநம் விடப்பந்த மறுமுத்தி யாகு
மீனத்தார் ஞானங்க ளல்லா ஞான
 மிறைவனடி ஞானமே ஞான மென்பர்.

(கோ - டு) ஞானத்தாலே வீடு என்று எனவும், அஞ்ஞானத்தால் பந்தம் உறுவது தான் எனவும், அது அலர் கதிர் முன் இருள்போல் உயர் மெய்ஞ்ஞானந்தான் ஆனத்தால் போவது எனவுங் கூட்டுக.

(போ - ரை) மேற்கூறியவாற்றால் ஞானமல்லாத பிறவெல்லாம் ஞானத்தை உண்டுபண்ணுதற்குச் சாதனமென்றும், ஞானம் ஒன்றே வீடு பேற்றிற்குச் சிறந்த சாதனமென்றும்,

நான்கு வேதங்களும், பதினெண்புராணங்களும், இருபத்தெட்டுச் சிவாகமங்களுமாகிய பிரமாண நூல்களெல்லாம் துணிந்து கூற வும், அவற்றோடு பிணங்கி வீடுபேற்றிற்குத் தீக்கையே அமையும் ஐவகை வேள்வியே அமையும், பத்திநெறியே அமையும் என்று பிதற்றுவாரை எவ்வாற்றானும் அறிவுறுத்தித் திருப்பமுடியாது. ஞானமல்லாதனவெல்லாம் அஞ்ஞானமாதலின், அவர்க்கு அவ் வஞ்ஞானப்பகுதிகளாற் பந்தமுறுதலேயன்றி வீடுபேறடைதல் கூடாது. அவ்வஞ்ஞானங்களெல்லாம் விரிந்த ஒளிமுன் இருள் போல ஞானந்தோன்றக் கெட்டொழியும். ஒழியவே, அவ்வஞ் ஞானத்தாலாகிய பந்தம் நீங்கும். அப் பந்தம் நீங்கவே முத்தி நிலை கூடும். ஆகலின், ஞானமே முத்திக்குச் சிறந்த சாதனம். இந்த ஞானமும் பசுஞானம், பாசஞானம், பதிஞானம் என மூக் திறப்படும். அவற்றுள், ஏனைச்சமயிகள் கூறும் ஞானங்களெல் லாம் பசுஞானம் பாசஞானங்களேயாம். இவ்விரண்டு ஞானங் களின் வேறாகிய முதல்வன் திருவடியை அடையச்செய்தலாகிய பதிஞானமே மேற்கூறிய உண்மை ஞானமாம். இவ்வாறு வேதா கமங்களை உணர்ந்தோர் கூறுவர். (எ-று)

வீடென்றே என்ற விடத்துள்ள ஏகாரம் ஞானத்தால் என்பதனோடு பொருந்தி, ஏனைய வீடுதராவெனப் பிரித்தமையானும், இறைவனடி ஞானமே என்றவிடத்துள்ள ஏகாரம் ஏனைய ஞானங்களைப் பிரித்தமையா னும் பிரிநிலைக்கண் வந்தன. நல்லவாகமஞ்சொல்ல என்றவிடத்து சொல்லவும் எனச் சிறப்பும்மை விரித்துரைக்க. உறுவதுதான் என்ற விடத்தும், மெய்ஞ்ஞானந்தான் என்றவிடத்தும் உள்ள தான் இரண்டும் அசை. ஆனத்தால் என்பது ஆனவதனாலெனப் பொருள் குறித்தலின், ஆன் என்பதனுள் அகரமும், அத்தால் என்பதனுள் அன் சாரியையும் தொக்கு நின்றன. * பெற்றத்தாற் பெற்ற பயன் என்றாற்போல, ஆன என்பதன் பொருளாகிய ஆதல் என்பது உண்டாதலைக் குறித்தது.

இதனானே, ஞானமல்லாத ஏனையவெல்லாம் வீடுபேற்றிற்குச் சிறந்த சாதனமல்லவாதல் இனிது விளக்கி, ஞானமின்றியமையாச் சிறப்பிற்றென் பது வலியுறுத்தப்பட்டது.

---

* திருக்குறள் சுற்றந்தழால். செ. ச.

தீக்கை முதலியன அஞ்ஞானமெனக் கூறியதனால், அவற்றை அநுட்டிக்க வேண்டாமென்பது கருத்தன்று. ஞானம் வருவதற்காக அவை யாவும் அநுட்டிக்கற் பாலனவேயாம். இன்றேல் "அழிவிலாக்கிரியையினானால் சத்திமத்தாலுதல் அத்துவாசுத்திபண்ணி மலமகற்றி, யொழிவிலாச் சிவம் பிரகாசித்தற்கு ஞானமுதிப்பித்துற்பவந்துடைப்பனாகன்" என மேற் கூறிய கூ-வது செய்யுளோடு முரணுமாறறிக. அவ்வாறாயின், இவ்விடத்து அவற்றை அஞ்ஞானமெனக் கூறுவானேனெனின், அவை ஞானமே எனப் பிணங்குவார்க்கு ஞானமல்ல வென்பதுணர்த்துதற் பொருட்டு அஞ்ஞானச் சொல் உபயோகிக்கப்பட்டதென்க.

ஐவகை வேள்வியினுள் ஞானயாகம் ஒன்று. அதுவும் ஓதல் முதலியவாய் ஐவகைப்பட்டு இறைவனடியடைவிக்கு மெனமேலே கூறி, இவ்விடத்தில் ஐவகைவேள்வி முத்தியைத் தாராதென விலக்கியது முரணாகாதோ வெனின், ஆகாது. என்னை. ஞானவேள்வி ஐந்தனுள் உண்மை ஞானம் நான்குங்கிடையா. கேட்டல் சிந்தித்தலென்னு மிரண்டு தானுள்ளன. அவ் விரண்டும் தெளிந்து நிட்டை கூடச் செய்து வீடு அடைவிக்கு மன்றிக் கேட்டுச் சிந்தித்த மாத்திரையில் வீடு கூடாமையின் விலக்கினாரென்க. எனவே, உண்மை ஞானம் நான்கனுள்ளுந் தெளிதலும் நிட்டையுமே உண்மைஞானமெனச் சிறப்பித்துக் கூறப்படுமென்றவாறாயிற்று. இது பற்றியே கேட்டல் முதலிய வற்றினின்று தப்பினவர்க்குப் பயன் அபர முத்தியென மேல் உச-வது செய்யுளுரையில் கூறப்பட்டவாறும்.

"கேட்டலுடன் சிந்தித்தல்" என்னுஞ் செய்யுள் முதல் இது வரையும் உண்மை ஞானத்தினியல்பு, கேட்டல் முதலியன எனவும் அதன் பயன் வீடு எனவும் பொது வகையாற் கூறி, இனி, அந்த உண்மை ஞானத்தினியல்பும், அதன் பயனும் இது வெனச் சிறப்பு வகையாற் கூறுகின்றார். (உஎ.)

கேட்டலாகிய ஞானத்தின் இயல்பும், அதன் கண் நிகழும் அநுபவமும் இவையெனக் கூறுகின்றது.

சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய
சுடர்தோன்றி யிடச்சோதி தோன்று மாபோ
லாரியனு மாசான்வந் தருளாற் றோன்ற
வடிஞான மான்மாவிற் றோன்றுந் தோன்றத்

தூரியனுஞ் சிவன்றானுந் தானுந் தோன்றுந்
தொல்லுலக மெல்லாந்தன் னுள்ளே தோன்று
நேரியனுய்ப் பரியனுமா யுயிர்க்குயிரா யெங்கு
நின்றநிலை யெல்லாமுன் னிகழ்ந்து தோன்றும்.

(கோ–டு) செய்ய சுடர் தோன்றி இட சூரிய காந்தக்கல்லின் இடத்தே சோதி (நிகழ்ந்து) தோன்றுமா போல் அருளான் ஆரியனும் ஆசான் வந்து தோன்ற ஆன்மாவின் அடிஞானம் (நிகழ்ந்து) தோன்றும். தோன்றத்தூரியனும் சிவன் (முன்னிகழ்ந்து) தோன்றும். (தன்னுள்ளே) தானும் (முன்னிகழ்ந்து)தோன்றும். தன்னுள்ளே தொல் உலக மெல்லாம்(முன்னிகழ்ந்து) தோன்றும். நேரியனும் உயிர்க்குயிராய் (நின்றநிலை) பரியனுமாய் எங்கும் நின்ற நிலை எல்லாம் முன்னிகழ்ந்து தோன்றும்.

**(பொ-ரை.)** மேற்கூறியவாறு உண்மை ஞானம் கேட்டல் முதலியனவாக நால்வகைப்படுமாகலான், அவற்றுள், கேட்டலும் அதன் கண் நிகழும் அநுபவமும் வருமாறு:—சூரிய சந்நிதிமாத்திரையானே சூரிய காந்தக்கல்லினிடத்து நெருப்பு விளங்கித் தோன்றுமாறுபோல, ஞான சாத்திரப் பொருளை உபதேச முறையால் சொல்லுந்தகுதியுடனே வந்து தோன்றும் ஞானுசிரியன் சந்நிதிமாத்திரையானே மாணுக்கனுக்குக் கேட்டலறிவு விளங்கித் தோன்றும். தோன்றவே முதல்வனுகிய பதியும், அப்பதியினுள்ளே பசுவும், அப்பசுவினுள்ளே பிரபஞ்சவடிவாயுள்ள பாசமும், பதி உயிர்க்குயிராய் அணுவோரண்டமாம்படி சிறிதாய் நின்ற நிலையும், எவற்றினும் வியாபகமாய் அண்டமோரணுவாம்படி பெரிதாய் எவ்விடத்தும் நின்றநிலையும், நிருவிகற்பமாய் விளங்கித் தோன்றும். (எ-று.)

அருளான் என்பது அருளொடு என்னும் பொருள் குறித்தலின், ஆன் உடனிகழ்ச்சிப் பொருட் கண் வந்தது. * "தூங்குகையானேங்கு நடைய" என்றாற்போல. இவ்விடத்து அருள் என்றது ஏற்புழிக் கோடல் என்னும் உத்தியால் ஞான சாத்திரப்பொருளை உபதேசித்தலையுணர்த்திற்று.

ஆசிரியன் நூற்பொருள் உரைக்கும் வழியால் அவ்வாசிரியனுடைய ஞானமே மாணுக்கனிடத்துச் சென்று தோன்றுவதே சந்நிதி மாத்திரை

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமையியல் சூ—௩௬.

யால் தோன்றும் ஞானம் என்பர். அது பொருந்தாது. எவ்வாறெனின், சடமாகிய கண்டப்பொருள் ஒன்றுடன் ஒன்று கூடும். சித்துப் பொருள் அவ்வாறு கூடாது. எதனாலெனின், சித்துப் பொருளாகிய உயிர் வியாபகப் பொருளாதலின், தானில்லாத இடமில்லையாதலால் கூடுமாறில்லை. சுவர்க்க முதலிய இடங்களில் போக்குவரத்தும், பலசரீரங்களைப் பற்றுதலும் உயிர்க்குண்டென்று கூறுங்கருத்தென்னையோவெனின், உயிர் வியாபகமாயினும் ஒன்றனைப்பற்றுங்கால் பிறிதொன்றினைப்பற்றாது. அதாவது. மண்ணுலகத்தைப் பற்றுங்கால் சுவர்க்க நரகங்களைப்பற்றாது. மண்ணுலகத்தும் ஓர் உடம்பைப்பற்றுங்கால் பிறிதோருடம்பைப் பற்றாது. ஓர் உடம்பைப் பற்றி நிற்குங்காலத்தும் ஒரு இந்திரியத்தைப் பற்றுங்கால் பிறிதொரு இந்திரியத்தைப்பற்றாது. ஆதலினாற்றான், உயிர் ஏகதேச வியாபகமெனப்பட்டது. போக்குவரத்துக்களாகிய இறப்புப் பிறப்பு என்பன ஒன்றை விடுதலும் பிறிதொன்றைப்பற்றுதலுமாகிய அவ்வளவேயாம். இத்தகைய உயிர் பிறிதோருயிரைக்கூடாது. கூடவேண்டுவது மின்று. இனி இறைவனாகிய சித்துப்பொருளோ எக்காலத்தும் உயிரோடு அத்துவிதமாய்க் கலந்திருக்கும். இருப்பினும் இறைவனைக் கூடுதலென்றது, பிறவற்றின் பற்றைவிட்டுக் கலந்திருத்தலை அறிதலேயாம். ஆதலால், சித்துப் பொருளுக்குக் கூடுதலில்லையென்பது சிவாகம நூற்றுணிபு. மலமாயாகன்மங்கள் வியாபகப் பொருளாயினும், ஆணவமலம் ஆன்ம அறிவைப்பற்றியும், மாயைகன்மங்கள் இறைவனுள் அடங்கியும் நிற்பனவாதலின், அவையும் ஒன்றுடன் கூடி நிற்பனவேயாம். ஆதலின், சடப்பொருளுக்குக் கூடுதலுண்டென்பது எவ்விடத்தும் பொருந்தும்.

இனி, சந்நிதி மாத்திரை யென்பதற்குப் பொருள்தான் என்னை யெனின், ஆசிரியன் கிருபையினால் மாணாக்கனுடைய அறிவு விளங்கித் தோன்றுதலாம். இக்கருத்துணர்த்துதற் பொருட்டே, ஆசான் வந்து தோன்ற ஆன்மாவிற்றோன்றும் என்றார். ஞாயிற்றின் சந்நிதி மாத்திரையானே சூரியசாந்தக்கல்லினிடத்தே நெருப்பு விளங்கித் தோன்றுதலை உவமையாகக் கூறியதும் ஆசிரியன் ஞானமே மாணாக்கனிடத்துச் சென்று பற்றுவது போலுமென்னும் ஆசங்கையை நீக்குதற் பொருட்டு. நேரியன்-சிறியன். பரியன்—பெரியன். ஆதலால், அணுவோரண்டமாம்படி உயிர்க்குயிராய் நிற்றலும், அண்டமோரணுவாம்படி எங்கும் நிற்றலும் பெறப்படுமாறு காண்க. முன்னிகழ்ந்து என்பது சிவன் முதலியவற்றோடுஞ் சென்று பொருந்தும். அது கொண்டு கூட்டிற் காட்டப்பட்டது. முன்னிகழுந் தோற்றமாவது: சவிகற்பத்துக்கு முன்னாக நிகழும் நிருவிகற்பத் தோற்றம். (உஅ.)

சிந்தித்தலாகிய ஞானத்தின் இயல்பும் அதன்கண் நிகழும் அநுபவமும் இவை எனக் கூறுகின்றது.

மிக்கதொரு பக்குவத்தின் மிகுசத்தி நிபாத
மேவுதலு ஞானம்விளைந் தோர்குருவி னருளாற்
புக்கநுட்டித் தேநிட்டை புரிந்துளோர்கள்
பூதலத்திற் புகழ்சீவன் முத்த ராகித்
தக்கபிரி யாப்பிரிய மின்றி யோட்டிற்
றபநியத்திற் சமபுத்தி பண்ணிச்சங் கரனோ
டொக்கவுறைந் திவரவனை யவனிவரை விடாதே
யுடந்தையாய்ச் சிவன்றோற்ற மொன்றுமே காண்பர்.

(கோ - ரு) பூதலத்தின் தக்கபிரியாப் பிரியம் இன்றி ஓட்டில் தபநியத்தில் சமபுத்திபண்ணி புகழ்சீவன் முத்தராகி அவன் இவரை இவர் அவனை விடாதே உடந்தையாய்ச் சங்கரனோடு ஒக்க உறைந்து சிவன் தோற்றம் ஒன்றுமே காண்பர்.

(பொ - ரை) பக்குவமுதிர்ச்சியால் தீவிரதரசத்திநிபாதம் பொருந்திய மாணுக்கருக்கு முற்கூறிய கேட்டலறிவு மந்தமாதன்றி முதிர்ந்து முறுகிவிளையும். அப்பொழுது அவர் தம் ஆசிரியராலாவது, தம்மோடொத்த ஒரு சாலை மாணுக்கருள் தம்மின் மூத்தாரொருவராலாவது, தான் கேட்டபொருளைச் சிந்திக்குமாறு அதன் முறையைச் சொல்லக்கேட்டு அப்பொருளின்கண் மனம் ஒருப்பட்டுச் சிந்தித்து நிட்டை கூடுதற்கண் ஆசை உடையராகப் பெறுவர். அவ்வாறு பெற்றால், இவ்வுலகின்கண் தக்க விருப்பு வெறுப்பின்றிச் சிந்தித்தற்றொழில் ஒன்றையே மேற்கொண்டு, ஓடும் செம்பொன்னும் ஒக்க நோக்குவதாய், மற்றொன்றினும் பற்றின்றிப் புகழத்தக்க சீவன் முத்தரோடு ஒத்துப்பேரறிவாகிய சிவமும் சிற்றறிவாகியதாமும், ஆதித்தனொளியும் கண்ணொளியும் போல் அத்துவிதமாய்க் கலந்து நிற்றலால், அந்நிலையில் தாமொரு பொருள் உண்டென்றறியப்படாது சிவத்தோற்றம் ஒன்றுமே காணப்பெறுவர். காணப்பெறுதலாகிய அதுசவிகற்பமென்றாவது, நிருவிகற்பமென்றாவது சொல்லமுடியாத இடைநிலையாயிருக்கும். (எ-று)

மிக்கதொருபக்குவத்தின் மிகு சத்திநிபாத மேவுதலும் ஞானம் விளைந்து என்றதனால், தீவிரதரசத்திநிபாதம் பொருந்தாதவிடத்து அக் கேட்டலறிவு முறுகுதலின்றி மந்தமாக நிகழுமென்பதாயிற்று. விளைந்த வழி என்றிருக்கவேண்டுவது விளைந்து எனத்திரிந்து நின்றது. ஒரு சாலை மாணாக்கராய்த் தம்மின் மூத்தாரையுந்தழுவுதற்கு ஓர்குரு எனப் பொதுப்படக் கூறினார். நிட்டை புரிந்துளோர்கள் என்ற விடத்து புரிதல்—விரும்புதல். சிவன் முத்தராகி என்றவிடதது ஆகி என்பது போல என்னும் உவமைப் பொருள் குறித்து நின்றது. * "ஆள்வாரிலி மாடாவேனோ" என்றாற்போல.

உடந்தையாய் உறைந்து காண்பர் என்றது "மழைபெய்து குள நிறைந்தது" என்றாற்போல உறைதலாற்காண்பர் எனக் காரண காரியப் பொருட்டாய் நின்றது. ஒன்றும் என்றவிடத்து உம்மை சிறப்பின்கண் வந்தது. அவ்விடத்துள்ள ஏகாரம் பிறவற்றைக் காணாரெனப் பிரித்தமையின் பிரிநிலை. ‡ "அடைபவர் சிவமேயாகுமதுவன்றித் தோன்றுமென்ற கடனதேது. என்பதும், இச்சிந்தித்தல் நிலையெனக்கொள்க. அதன் கருத்தாவது, சிவஞானம் பெற்றபின் அதனைச் சிந்திக்குமுறையில் தன்னையுந் தலைவனையுங் காண்பன் என்பதாம். (உக)

தெளிதலாகிய ஞானத்தின் இயல்பும், அதன்கண் நிகழும் அநுபவமும் இவையெனக் கூறுகின்றது.

**அறியாமை யறிவகற்றி யறிவி னுள்ளே**
**யறிவுதனை யருளினா லறியாதே யறிந்து**
**குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங்**
**கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயிற்**
**பிறியாத சிவன்றானே பிரிந்து தோன்றிப்**
**பிரபஞ்ச பேதமெல்லாந் தானாய்த் தோன்றி**
**நெறியாலே யிவையெல்லா மல்ல வாகி**
**நின்றென்றுந் தோன்றிடுவ னிராதார னாயே.**

---

* திருவாசகம், கோயின் மூத்ததிருப்பதிகம் செ-எ.

‡ "அடைபவர் சிவமேயாகு மதுவன்றித் தோன்று மென்ற, கட னதே தென்னின் முன்னங் கண்டிடார் தம்மை பின்னுந், தொடர் வரு மருளினாலுந் தோன்றுமா. காணா ராயி, னுடையவ ரடிசேர் ஞான முணர்தலின் றனைத லின்றே. சிவப்பிரகாசம், சூ-ம். ௧௦. செ-௩.

(கோ - ரு.) அருளினால் அறியாமை அறிவு அகற்றி அறிவினுள்ளே அறிவுதனை அறியாதே அறிந்து குறியாதேகுறித்து குழைந்து அந்தக் கரணங்களோடும் கூடாதே வாடதே இருப்பையாயின், பிறியாத சிவன்றானேபிரிந்து தோன்றி, பிரபஞ்ச பேதமெல்லாம் தானாய்த் தோன்றி,இவையெல்லாம் அல்லவாகி, நெறியாலே என்றும் நின்றே நிராதாரனாய்த் தோன்றிடுவன்.

(போ - ரை) மேற் கூறியவாறு ஞானாசிரியன் திருவருளால் ஒன்றனையும் அறியாமையாகிய கேவலமும், உலகத்தை யறிதலாகிய சகலமும் என்னும் இருவகைப் பாசங்களும் நீங்கி, முதல்வனை அறியும் முறையைத் தன்னறிவின் கண்ணே கேட்கு முறையிற் கேட்டுச் சிந்திக்கு முறையிற் சிந்தித்து அதன் பின்பு சிந்திக்கப்பட்ட பொருளினிடத்து அன்பு வைத்து, அந்தக் கரணங்களிற் சேராது அடங்கி நிற்கப்பெறுவாயானால், தம்மோடு பிரிதலில்லாத முதல்வனியல்பு, முன்னர்க் கேட்டபொழுது பொருட்டன்மை பற்றி வேறாய்த் தோன்றி, பின்னர்ச் சிந்தித்த பொழுது உலக பேதமனைத்தினும் கலப்புப்பற்றி ஒன்றாய்த் தோன்றினும், தெளிந்த இப்பொழுது அவ்விரு தன்மையுமின்றி நேரியனும் பரியனுமாய தோர் முறைமையால் உடனாய் நிற்றல் பற்றி ஒன்றினும் பற்றிலனாய் எக்காலத்தும் எப்பொருளிடத்தும் நிறைந்து தோன்றும். (எ - று.)

தெளியும் முறையும் அதன் பயனும் இனிது விளங்குதற் பொருட்டு மேற் கூறி முடித்த கேட்டல் சிந்தித்தல்களையும் "அறியாதே யறிந்து, குறியாதே குறித்து" என அநுவதித்து உடன் கூறினார். தெளிதலைக் கூறும் இவ்விடத்து "கூடாதேவாடாதே" என்றதனால், ஏனைக் கேட்டல் சிந்தித்தல்களில் ஒரோவிடத்துக் கூடுதலும், வாடுதலும் நிகழுமென்பதாயிற்று. ஆதலினாற்றான், அக்கேட்டல் சிந்தித்தல்களில் இவ்வாறு இனிது விளங்கப்பெறாதாயிற்று. வாடுதல்—அந்தக்கரணங்களோடு கூடாதவிடத்து அதீதத்தைக்கூடி அறிவற்றிருத்தல். வாடாமை என்பது அந்தக் கரணங்களோடு கூடாது சிவஞானத்தால் தலைவனையும், தன்னையும் அறிந்து நிற்றலைக்குறிக்கும். இருப்பையாயின் என்றதனால் அவ்வாறிருத்தல் அருமை என்பது பெறப்படும்.

இச்செய்யுளின் முன் இரண்டடியினையே "பாதிவிருத்தத்தாலிப்பார் விருத்தமாகவுண்மை சாதித்தார்" எனத் தாயுமான சுவாமிகளும், "ஆறாறு தத்துவமு மாணவமும் வல்வினையும், நீறாகமுத்தி நிலை நிற்போர்க்குப், பேறாக,பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியிற்சித்தியிலே,ஓர்விருத்தப்பாதி போதும்." எனச் சிவபோக சாரநூலுடையாரும் அருளிச் செய்வாராயினர். அன்றியும், தாயுமான சுவாமிகள் "மௌனகுரு" என்னுந்தலைப்பின் கீழ் இச்செய்யுளின் நான்கு அடிகளையும் தாமருளிச் செய்த பாதி விருத்தத் திலடக்கி, தமக்கு உபதேசஞ் செய்யப்பட்டது சிவஞான சித்தியே என்பதனைப் பிற்பாதியால் விளக்கியருளுவாராயினர். அச்செய்யுள்வரு மாறு:—* "ஐந்துவகையாகின்ற பூத முதலாதமு மடங்கவெளியாக வெளி செய், தறியாமை யறிவாதிபிரிவாக வறிவார்களறிவாக நின்ற நிலையிற், சிந் தையற நில்லென்று சும்மாவிருத்திமேற் சின்மயானந்த வெள்ளந், தேக்கித் திளைத்து நானதுவாயிருக்க நீசெய் சித்ரமிக நன்றுகாண், எந்தைவடவாற் பரமகுரு வாழ்க வாழவருளிய நந்திமரபு வாழ்க, வென்றடியர் மனமகிழ வேதாகமத்துணிபிரண்டில்லை யொன்றென்னவே, வந்த குருவே வீறு சிவஞானசித்திநெறி மௌனோபதேச குருவே, மந்த்ர குருவே யோகதந்த்ர குருவே மூலன் மரபில் வருமௌன குருவே" என்பதாம். இச்செய்யுளுக் கும் சித்தியார்ச் செய்யுளுக்கு முள்ள சம்பந்தத்தைச் சிறிது காட்டுதும்:—

| சித்தியார் | தாயுமானார் |
|---|---|
| " அருளினாலறியாமையறிவகற்றி " | " ஐந்துவகையாகின்ற...அறியாமை யறிவாதி பிரிவாக அறிவார்கள் " |
| " அறிவினுள்ளே யறிவுதனை யறியாதே யறிந்து " | " அறிவாகி நின்ற நிலையில் " |
| " குறியாதே குறித்தந்தக் கரணங்களோடுங்கூடாதே " | " சிந்தையற " |
| " வாடாதே " | " நில்லென்று " |
| " குழைந்திருப்பையாயில் " | " சும்மாவிருத்தி " |
| " பிறியாதசிவன்றானேபிரிந்து தோன்றிப்பிரபஞ்சபேதமெல்லாந் தானாய்த்தோன்றி " | " மேற்சின்மயானந்த வெள்ளந்தேக்கித்திளைத்து " |
| " யிவையெல்லாமல்லவாகி நெறியாலே நின்றென்றுந்தோன்றிடுவனிராதாரனாயே " | " நானதுவாயிருக்க............... " |

* தாயுமானசுவாமிகள் பாடல், மௌனகுரு, செ-உ.

இனி, "வடஆல்பரமகுருவாழ்க" எனவும், "நந்திமரபு வாழ்க" எனவும் கூறியதனால், தாயுமானசுவாமிகட்குச் சைவசந்தான மரபில் வந்த பெரியாரே ஆசிரியரென்பதூஉம், "சிவஞானசித்திநெறி மௌனோபதேச குரு" என்றதனால் இச்சிவஞானசித்தியாரிலுள்ள உண்மைப்பொருளினையே சநகாதிகட்குச் சிவபெருமான் தக்ஷிணாமூர்த்தியாக வீற்றிருந்து அருளியதுபோலச் சொல்லாமற் சொன்னாரென்பதூஉம் பெறப்படுமாறு காண்க. (௩௦.)

நிட்டையாகிய ஞானத்தின் இயல்பும் அதன்கண் நிகழும் அநுபவமும் இவையெனக் கூறுகின்றது.

**புண்ணியமே னோக்குவிக்கும் பாவங்கீழ் நூக்கும்**
**புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தி னாலே**
**நண்ணியஞா னத்தினா லிரண்டினையு மறுத்து**
**ஞாலமொடு கீழ்மேலு நண்ணானாகி**
**யெண்ணுமிக லோகத்தே முத்திபெறு மிவன்றா**
**னெங்கெழிலென் ஞாயிறெமக் கென்றுகுறை வின்றிக்**
**கண்ணுதற னிறைவதனிற் கலந்து காயங்**
**கழிந்தக்கா லெங்குமாய்க் கருதரன்போ னிற்பன்.**

(கோ-டு) கீழ் நூக்கும் பாவம். மேல் நோக்குவிக்கும் புண்ணியம். இரண்டினையும் புண்ணியனைப்பூசித்த புண்ணியத்தினாலே நண்ணிய ஞானத்தினால் அறுத்து, ஞாலமொடு கீழ்மேலும் நண்ணானாகி, இவன்றான் கண்ணுதல்தன் நிறைவதனிற் கலந்து, ஞாயிறு எங்கு எழிலென் எமக்கு என்று குறைவு இன்றி, எண்ணும் இகலோகத்தே முத்திபெறும். காயம் கழிந்தக்கால் எங்குமாய் கருது அரன்போல் நிற்பன்.

(பொ - ரை) வியாபகமாகிய உயிர் அவ்வியாபகத் தன்மையை இழந்து ஏகதேசப்பட்டு நரகத்திற் சென்று துன்பம் அநுபவித்தற்குக் காரணமாகிய பாவத்தையும், சுவர்க்கத்திற் சென்று இன்பம் அநுபவித்தற்குக் காரணமாகிய புண்ணியத்தையும் பொருந்தும். புண்ணிய பாவமாகிய அவ்விரண்டும் ஏகதேசத்தன்மையில் கட்டுப்படுத்தும் தளையேயாதலின், அவ்விரண்டினையும் சிவபிரானை அர்ச்சித்தலாகிய ஞானநூல் ஓதல் முதல்

சிந்தித்தலாகிய ஞானபூசையின் பயனாய் நிகழ்ந்த தெளிதல் என்னும் அரத்தால் அறுத்து, அவ்வாறு அறுத்தலினால் பாவ புண்ணியமின்மையின், பூமி நரக சுவர்க்கங்களில் போக்குவர வாகிய ஏகதேசப்படுதல் இல்லையாய் ஒழிந்து, அந்தொழியவே, காரணங்களின் வயத்தராகாமல் இறைவனது வியாபகத்திற் கலந்து, சூரியன் எவ்விடத்து உதயமாயினும் அதனால் தமக்காவ தோர் பயனில்லை என்று அறிந்தவராய், எவ்வாற்றானும் குறை வின்மையை அடைந்து, கருதுகின்ற இப்பொழுதே சீவன் முத்த ராகி உடம்பு நீங்கப்பெறுங்கால் பெருங்காயமிருந்தெடுத்த கலத் தில் அவ்வாசனை தங்கியிருப்பது போல், சீவன்முத்தராயிருந்த காலத்தும் இடையிடையே வந்து தாக்கிக்கொண்டிருந்த வாசனா மலம் நீங்கி, அழுக்கு நீங்கியவிடத்து ஆடையினது வெண்மை ஆடை முழுதும் விளங்கினாற்போல, உடம்பு நீங்கிய பாமுத்தி நிலையில் தமது வியாபகம் முழுவதும் அறிவு விளங்கப்பெற்று முதல்வனோடு ஒத்து நிற்பர். (எ-று)

எங்குமாய் என்றது சிவனோடு சமமாதற்குரிய பொதுத்தருமம். எனவே, சிவனோடு சமமாதற்குரிய சிறப்புத் தருமம் இல்லையென்றவாறா யிற்று. அச்சிறப்புத்தருமம்—பஞ்சகிருத்தியஞ் செய்தல். தெளிந்தார்க்குக் கண்ணுதல்த னிறைவதனிற் கலந்து நிற்றற்கண் தடையின்மை இனிது விளக்கவேண்டித் தடையாவன புண்ணிய பாவங்களென்பதும், அவை, புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தினாலே நண்ணிய ஞானத்தினால் அறுக்கப்பட்டுப் போயிற்றென்பதும் உடன்கூறினார். சிவபிரான்றிருவரு ளிற் கலந்தார்க்குப் பண்டை ஏகதேச வுணர்வு கெட்டுப்போதலின் உடம்பின்கண் நிகழும் இன்பத்துன்பத்திற்கேதுவாகிய உற்பாதம் முதலிய வற்றை நோக்கி வரப்படுங் கவலையின்மையின், "எங்கெழிலென்ஞாயி றெமக்கென்று குறைவின்றி" என்றார். இக்கருத்துப்பற்றியே, * "தனக் குவமையில்லாதான்றாள் சேர்ந்தார்க் கல்லான்—மனக்கவலை மாற்றலரிது" என எதிர் மறை முகத்தாற் கூறியவாறும். உற்பாதம்—கேட்டையறிவிக் கும் முற்குறி. (௩௧)

* திருக்குறள், கடவுள்வாழ்த்து. செ.எ.

ஞானநிட்டையுடையோர் எத்தொழிலைச் செய்யினும், இறைவன்றிருவடியை விட்டுப் பிரியாரெனக் கூறுகின்றது.

ஞாலமதின் ஞானநிட்டை யுடையோ ருக்கு
நன்மையொடு தீமையிலை நாடுவதொன் றில்லை
சீலமிலை தவமில்லை விரதமொடாச் சிரமச்
செயலில்லை தியானமிலை சித்தமல மில்லை
கோலமிலை புலனில்லை கரண மில்லை
குணமில்லை குறியில்லை குலமு மில்லை
பாலருட னுன்மத்தர் பிசாசர்குண மருவிப்
பாடலினோ டாடலிவை பயின்றிடினும் பயில்வர்.

(போ - ரை) மேற்கூறிய ஞானநிட்டையினை உடைய சீவன் முத்தருக்கு இவ்வுலகத்தின்கண் நல்வினை தீவினைகளாகிய இருவினைகளும் இல்லை. வினைகளைச்செய்தாராயினும் ஒரு பலனை நாடுவதுமில்லை. பலனைக்கருதாது வினைகளைச் செய்யுங்காலத்தும் சமயாசாரங்கள், தவம், விரதம், ஆச்சிரம தருமம், தியானபாவனைகள், சித்தசஞ்சலம், தான்நிற்குஞ்சமயத்திற்கேற்ற வேடங்களைத் தரித்தல், விடயங்களை விடுதல் பற்றுதல், அந்தக்கரணங்களை அடக்கல், சத்துவகுணத்தில் மேம்பட்டிருக்கவேண்டுமென்ற நியமம், ஒரு குறியின்கண்ணே மனத்தை நிறுத்துதல், குலாசார தருமத்தில் ஒழுகுதலாகிய இவையாவுமில்லை. இவ்வாறொன்று மின்றிப் பாலரைப்போல இவையெல்லாம் செய்யாதிருப்பினு மிருப்பர். ஒருக்கால் செய்யினும் பித்தர்போல் நியதியின்றி நேர்ந்தவாறு செய்வர். அவ்வாறு செய்யுங்காலத்தும் பேய் பிடிக்கப்பட்டவன்போல் தேகத்தில் தான் என்னும் போதம் அற்றுச் சிவமேதானாக நின்று செய்வர். இதுவன்றிப் பரமானந்த மேலீட்டால் பாடலாடல்களைச் செய்திடினும் செய்வர். (எ-று)

பாலர் சில தொழிலைச் செய்யினும் பயன் கருதாது செய்வர். ஆதலால் அவ்வுவமை மாயாமல நீக்கத்தையும், பித்தர் விருப்பு வெறுப்பின்றி ஒரு தொழிலைச் செய்வாராதலால், அவ்வுவமை கன்மமல நீக்கத்தையும், பேய்பிடியுண்டவன் தன்னைமறந்து தொழிற்செய்வனாதலால், அவ்வுவமை ஆணவமல நீக்கத்தையுங் குறித்தவாறறிக.

இவ்வாறன்றி மேலுணவ தேடாமைக்கும், வைதவரையும் வாழ்த்தின வரையும் பகுத்து நோக்காமைக்கும், பிறர் செய்யும் நன்மை தீமைகள் தம்மைத்தாக்காமைக்கும் முறையே பாலரும், உன்மத்தரும், பேய்பிடி யுண்டவரும் உவமையாவரென்று கூறுவர். இசசெய்புளினெடுத்துக் கொண்டது நன்மை முதலியன தானே தவிர்தலேயாம். அதனோடு பொருந்தாமையானும், * "பால ருன்மத்தர் பிசாசரிலெனவும்—உறங்கி னோன்கை வெறும்பாக்கெனவும்—தானே தவிராதாலல்" எனப் பிற விடத்தும் தவிர்தல் மாத்திரைக்கே அவற்றை எடுத்துக் கூறப்படுதலானும் அவ்வுரை பொருந்தாமை காண்க. பாடலினோடாடலிவைபயிறல் பரமா னந்த மேலீடு நோக்கி நிகழ்வதென்க. (௩௨).

இதுவுமது.

*தேசமிடங் காலந்திக் காசனங்க ளின்றிச்*
　*செய்வதொன்று போற்செய்யாச் செயலதனைச் செய்தங்*
*கூசல்படு மனமின்றி யுலாவ னிற்ற*
　*லுறக்கமுணர் வுண்டிபட் டினியிருத்தல் கிடத்தன்*
*மாசதனிற் றூய்மையினின் வறுமை வாழ்வின்*
　*வருத்தத்திற் றிருத்தத்தின் மைதுனத்திற் சினத்தி*
*னாசையினின் வெறுப்பினிவை யல்லாது மெல்லா*
　*மடைந்தாலும் ஞானிகடா மரனடியை யகலார்.*　　௨௬

(கோ - டு) ஞானிகள்தாம் தேசம், இடம், காலம், திக்கு, ஆசனங் களின்றி, ஒன்றுசெய்வதுபோல் செய்யாச் செயலதனைச் செய்து, உலாவல் நிற்றல், உறக்கம்உணர்வு, உண்டிபட்டினி, இருத்தல்கிடத்தல், மாசதனின் தூய்மையினின், வறுமை வாழ்வின், வருத்தத்தின் திருத்தத்தின், மை துனத்தின் சினத்தின், ஆசையினின் வெறுப்பின் இவையல்லாதும் எல் லாம் அடைந்தாலும் அங்கு ஊசல்படும். மனமின்றி அரன் அடியை அகலார்.

(போ - ரை) இன்னும் அச்சிவஞானிகள் ஓர்தேயம், ஓர் இடம், ஓர் காலம், ஓர்திக்கு, ஓர்ஆசனம் முதலிய நியமமின்றிச் செய்தற்கெளிய உலக காரியங்களை உலகர் செய்வது போல்,

---

* சங்கற்பநிராகரணம். செ-உ.

செய்தற்கரிய நிட்டை முதலியவற்றைச் செய்து, போக்குவரத்துக்கள், உறங்குதல் விழித்தல்கள், உண்ணுதல் உண்ணாமைகள், இருத்தல் கிடத்தல்கள், களங்கம் பரிசுத்தங்கள், வறுமை செல்வங்கள், துன்ப இன்பங்கள், புணர்ச்சி கோபங்கள், விருப்பு வெறுப்புக்களாகிய இவையாவுமின்றி, விகாரமுறுதற்கேதுவாகத் தம்முள் மாறுபட்ட பல தொழில்களைச் செய்தாராயினும், அவ்விடத்தே அவைபற்றிச் சிறிதும் விகாரப்படுதலின்றி முதல்வன் றிருவடியைவிட்டு நீங்கார். அவ்வாறு விகாரமான தொழில்களைச் செய்தும் முதல்வன்றிருவடியைவிட்டு நீங்காதிருத்தல் எது போலுமெனின், வாயுவானது வாசனையுடனே கூடியமிருதுவான தென்றலாகவும், இதற்குமாறான சூறுவளியாகவும் சரிக்கினும் ஆகாயத்தைவிட்டு நீங்காதது போலாம். (எ-று)

செய்யாச் செயல்—பிறர் செய்தற்கரிய செயல். அதனைச் செய்தற்கு வேறொரு நியதியும் வேண்டாவென்ப துணர்த்துதற் பொருட்டு, "தேசமிடங் காலங் திக்காசனங்களின்றி" என்றார். அடைந்தாலும் என்ற உம்மை விகாரஞ் செய்தலைக் குறித்த சிறப்பு. "உவர்தோன்றி வாழ்தொழில வாயினும் மயிலைமீன்'சுவையுப்பிற் சிவணுதாங்கு" என்றவிடத்து தொழில வாயினும் என்றாற்போல. இதன் கருத்தாவது:—"மீன்கள் கடலிற் றோன்றி வாழும் தொழில்களையுடையவாயினும் இனிய சுவையைத் தரும் உப்போடு கூடாதவாறு" என்பதாம். இது உம்மைக்கு மாத்திரமின்றித் தொழில் பல செய்தும் அதனால் பந்தமுறாமைக்கும் உவமையாகும்.

இதனால், பிராரத்த கன்மம் நானாபேதமாகையால் ஞானிகளுட் சிலர் கோபமுடையவராகியும், சிலர் சாந்தமுடையவராகியும், சிலர் வைராக்கியமுடையவராகியும், சிலர் ஆசையுடையவராகியும், சிலர் போகாநுபவமுடையவராகியும் இருப்பராதலின், சீவன் முத்தருடைய இலக்கணம் இவ்வாறுதானென்று வரையறுத்துக்கூற முடியாதென்பதறிக. (௫௫)

ஞானநிட்டையில் நிலைபெறாதார் அந்நிட்டையில் நிலைத்தற்குச் செய்யும் உபாயம் இதுவெனக் கூறுகின்றது.

**இந்நிலைதா னில்லையே லெல்லா மீச**
**னிடத்தினி னுமீசனெல்லா விடத்தினி னுநின்ற**

அந்நிலையை யறிந்தந்தக் கரணங்க ளடக்கி
யறிவதொரு குறிகுருவி னருளினா லறிந்து
மன்னுசிவன் றனையடைந்து நின்றவன்ற னாலே
மருவுபசு கரணங்கள் சிவகரண மாகத்
துன்னியசாக் கிரமதனிற் றுரியா தீதந்
தோன்றமுயல் சிவாநுபவஞ் சுவாநுபூ திகமாம்.

(கோ - ரு.) இந்நிலைதான் இல்லையேல் ஈசன் எல்லா இடத்தினி னும் எல்லாம் ஈசனிடத்தினும் நின்ற அந்நிலையை அறிந்து, அந்தக்கரணங் களடக்கி, குருவினருளினால் நின்று, அறிவது ஒருகுறி அறிந்து, அவன் றனாலேமன்னு சிவன்றனை அடைந்து, மருவுபசுகரணங்கள் சிவ கரண மாக, துன்னிய சாக்கிரமதனின் துரியாதீதம் தோன்ற முயல். சிவாநு பவம் சுவாநுபூதிகமாம்.

(போ - ரை.) மேற்கூறிய முறையானே அகம், புறம் என்னும் பேதமின்றி எவ்விடத்தும் ஏக நிலையாகக் கண்டு இறை வன் நிறைவில் அழுந்துவதாய நிட்டையினை மேவப்பெறாது பண்டைப் பழக்க வயத்தால் புறத்தே பிரபஞ்சம் காட்சிப்பட வருமாயின், அப்பிரபஞ்சத்தைக் காணும்பொழுதே இறைவன் அப்பிரபஞ்சத்திற்கு உள்ளும் புறமுமாய் நிற்கும் நிலைமையை உடையன் எனக் காணவேண்டும். அவ்வாறு காண்டல் கூடா தாயின், மனாதிகளடக்கிக் குருவருளால் அகத்தே திரும்பி ஒரு குறியின்கண்ணே அறிவை நிறுத்தி இறைவனை அறிந்து, அவ்வா றறிகின்ற முறையில் நிலைபெற்ற அவ்வியல்பினை அறிந்து, அங் ஙனம் அறியுங்கால் அறியும் பசு கரணங்களெல்லாம் சிவகரணமா கப் பேணி, இவ்வாறு கருவிகளோடு தொழிற்பட்டு நிற்பதாகிய சகல சாக்கிரத்திற்றானே கருவி ஒன்றனோடுங் கூடாத நின்மல துரியாதீத நிலை கைகூடும்படி முயலவேண்டும். முயன்றால் சிவாநுபவத்தைத் தமதாகக் கொண்டு அநுபவிக்கலாம். (எ-று.)

அந்நிலையை அறிந்து என்றது, அண்டத்தில் உள்ளும் புறம்புமாய் நிற்கும் நிலையை அறிதலையெனவும், அறிவதொருகுறி குருவினருளினா லறிந்து என்றது, அவ்வறிவிற் கேதுவாய்ப் பிண்டத்தில் ஒரு குறியின்

வைத்தறிதலை யெனவும் உணர்க. எல்லாப் பொருளும் இறைவனிடத்தி லிருக்குமென்றல் உள்ளாதலையும், இறைவன் எல்லாப் பொருளினிடத்தும் இருப்பனென்றல் புறமாதலையுங் குறித்தவாறும். சிவன் என்பது சிவனியல்பைக் குறித்தலின் ஆகுபெயர். அகரச் சுட்டு வருவித்து உள்ளும் புறமுமாய் நின்ற அவ்வியல்பு என உரைக்க. முயல் என்பது முயல்வாயாக என்னும் பொருள் குறித்த முன்னிலையேவல்.

சிவாநுபவம், சுவாநுபூதிகம் என்பது, சிவனது அநுபவம் தனது அநுபவம் என விரிதலின், அவ்விடத்து ஆறும்வேற்றுமை யுருபு தொக்கு நின்றது. அவ்வுருபு, சிவனை அநுபவிப்பது, தான் அநுபவிப்பது என்னும் பொருள் குறித்தலின், முறையே செயப்படு பொருளினும், வினை முதற் பொருளினும் வந்த காரகமாம். இது அமிழ்தவுண்டி, கடவுளருண்டி என்றவிடத்து அமிழ்தினதுவுண்டி கடவுளரதுவுண்டி என விரிந்து, ஆறுவது, அமிழ்தை யுண்ணுதல், கடவுளருண்ணுதல் எனப் பொருள் தருதல்போலாம். பயனும், அதனை யநுபவிக்குங் கருத்தாவும் தொழில் முதனிலையாதலின் காரகமாதல் காண்க. காரகம் தொழில்முதனிலை என்பது உ-ஞ் சூத்திரம், உஉ-வது செய்யுளுரையிலுங் கூறப்பட்டது.

சுவாநுபூதி என்பது சுவ அநுபூதி எனப் பிரித்துரைக்கப்படும். சுவ என்னும் வடமொழிக்கு தன் என்பது பொருள்.

இச்செய்யுளால் அந்த ஞானநிட்டை மேவப் பெறுதார்க்கு அந்நிட்டை பெறுதற்குரிய உபாயங் கூறப்பட்டது. உபாயம்—ஈசன் எல்லாவிடத்தும் நின்ற நிலையும், எல்லாம் ஈசனிடத்து நின்ற நிலையும் அறிதல் முதலாயின. (௩௪.)

ஞானநிட்டையில் முயலுபவரின் பெருமை இதுவெனக் கூறுகின்றது.

சாக்கிரத்தே யதீதத்தைப் புரிந்தவர்க ளுலகிற்
சருவசங்க நிவிர்த்திவந்த தபோதனர்க ளிவர்கள்
பாக்கியத்தைப் பகர்வதுவெ னிம்மையிலே யுயிரின்
பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவ ரன்றே
வாக்குமுடி கவித்தரசாண் டவர்களரி வையரோ
டனுபவித்தங் கிருந்திடினு மகப்பற்றற் றிருப்பர்

நோக்கியிது புரியாதோர் புறப்பற்றற் றாலு
நுழைவர்பிறப் பினின்வினைக ணுங்கி டாவே.

(கோ - டு.) அவர்கள் ஆக்குமுடி கவித்து அரசாண்டு எனவும், வினைகள் நுங்கிடாவே பிறப்பினின் நுழைவர் எனவுங் கூட்டுக.

(போ - ரை.) மேற்கூறியவாறு சாக்கிரத்தில் நின்று கொண்டே பசு கரணங்களெல்லாம் சிவகரணமாகக்கரணங் கடந்த துரியாதீதத்தைப் பயில்கின்றவர்கள் இவ்வுலகின்கண்ணே கருவிகளினின்றும் நீங்கி நிட்டை பொருந்தினவரோடொப்பச் சிறந்தவரே யாவர். இவர்கள் இந்நிலையை அடைவதற்கு முற் பிறவியிற் செய்த சிவ புண்ணியப் பேற்றை என்னென்று சொல்வது! இவ்வுலகத்தில் உயிர்ப்பற்று நீங்கிச் சிவத்தைப்பற்றி நிற்கையால் இவர்கள் சஞ்சரிக்கின்ற சிவமேயாவர். இத்தகையார் ஆக்கப்பட்ட முடியினை அணிந்து அரசு புரியினும், மகளிரோடு கூடி இன்புற்றிருந்திடினும் அகப்பற்று நீங்கினவரேயாவர். ஆதலின் உண்டு உடுத்துப் பூசி முடித்துச் செய்யுந் தொழிலொப்புமை பற்றி அவரை உலகத்தாரோடு வைத்தெண்ணக் கூடாது. ஆராய்ந்து இவ்வாறு அகப்பற்று நீங்காதோர் புறப்பற்று நீக்கமாகிய துறவு பூண்டாலும் வினைகள் கெடாது மேலும் வினை ஏறுதலால் பிறப்பினை அடைவர். (எ—று.)

பராவுதல்—சஞ்சரித்தல். உயிர்ப்பற்று—உயிர்க்குப் பற்றுக்கோடாகிய உடலை யானெனும் பற்று.

கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை என்னும் நான்கும் உண்மை ஞானமாகும். அவற்றுள், கேட்டலை இச்சூத்திரத்தும் சிந்தித்தலை கூ-ஞ் சூத்திரத்தும், தெளிதலை க0-ஞ் சூத்திரத்தும், நிட்டையை கக-ஞ் சூத்திரத்தும் முறையே விரித்துக் கூறுகின்றார். ஆயினும், நான்கும் ஞானமாதல்பற்றி இச்சூத்திரத்தில் சிந்தித்தல் முதலியவற்றையும் கேட்டலுடன் வைத்து ஒருவாற்றாற் றொகுத்தோதினார். இவ்விடத்துத் தொகுத்துக் கூறுதலும், பின்னர் விரித்துக் கூறுதலுமாகிய வேற்றுமையுள்ளதால் கூறியதுகூற லன்மை யுணர்க. (கூடு.)

இரண்டாம் அதிகரணம் முடிந்தது.

---

# மூன்றாம் அதிகரணம்.



துன்னிய ஐம்புலவேடர் சுழலிற்பட்டுத் துணைவனையு மறியாது துயருறுந் தொல்லுயிர்" என்பது.

சிவகரணமாய் நின்றவிடத்துச் சிவனைக் காணக் கூடுமன்றிக் கரணங் கடந்த விடத்துச் சிவனைக் காண்பனென்பது பொருந்தா தென்பாரை மறுத்துரைக்கின்றது.

கருவிகழிந் தாற்காணு ரொன்றுமெனிற் காணார்
காணுதார் கன்னிகைதான் காமரதங் காணாள்
மருவியிரு வரும்புணர வந்த வின்பம்
வாயினாற் பேசரிது மணந்தவர்தா முணர்வ
ருருவினுயிர் வடிவதுவு முணர்ந்திலர்காண் சிவனை
யுணராதா ருணர்வினு லுணர்வதுகற் பனைகா
ணருள்பெறினவ் விருவரையு மறிவிறந்தங் கறிவ
ரறியாரேற் பிறப்பும்விடா தாணவமு மறாதே.

(கோ - டு.) மருவி இருவரும் புணரவந்த இன்பம் வாயினாற்பேச அரிது. மணந்தவர் தாம் உணர்வர். காமரதம் கன்னிகைதான் காணாள். அருள்பெறின் அவ்விருவரையும் அறிவு இறந்து அங்கு அறிவர். காணாதார் காணார். அறியாரேல் உருவின் உயிர் வடிவதுவும் உணர்ந்திலர்காண். உணராதார் உணர்வினால் சிவனை உணர்வது கற்பனைகாண். கருவிகழிந்தால் ஒன்றுங் காணாரெனின், பிறப்பும் விடாது ஆணவமும் அறாதே.

(போ - ரை.) தலைமகனும் தலைமகளும் கூடி அநுபவித்த இன்பம் வாக்காற்சொல்ல முடியாதாயினும், அநுபவித்த அவர் அறிவர். அவ்வின்பத்தினைப் பக்குவமில்லாத கன்னிகை அறியாள். அதுபோல, அதிதீவிரதர பக்குவர்கள் திருவருளைப்பெற்று விஷய அறிவு இறந்து தம்மையுந் தலைவனையும் அறிந்து மேற் கூறியவாறு இன்புறுவர். அறியமாட்டாத அபக்குவர் அவ்வின்

பதியினை அறியார். அதனால், அவர்க்கு உணர்த்தும் வழியு மில்லை. எதனாலெனின், பல நிறங்களால் மயங்கித் தன்னொளி யிழந்த படிகம்போலக் கலையாதி மண்ணந்தமாகிய உருவால் மயங்கி ஆன்மசொரூபமாகிய தன்னை உணராமையாலென்க. அவ் வாறு பிரபஞ்சக்காட்சி, தன்னை யுணரவொட்டாது தடைசெய்யு மென்பதை உணராதார், பிரபஞ்சத்தை அறியும் கரணங்களைச் சிவகரணங்களாக மாற்றிச் சிவனையும் அறிவேமென்று கூறுவர். அக்கூற்று வெறும் பாவனையேயன்றிச் சிவனைக் கரணத்தாலறி தல் கூடாது. கரணங்கள் யாவுங் கடந்து அருளினால் சிவனை யறியப்பெறாராயின் கரணங்களாலுண்டாகிய பிரபஞ்சக்காட்சி நீங்காது; அக்காட்சி நீங்காத அதனால் பிறப்பிற்குக் காரணமா கிய ஆணவமலமும் அறாது. (எ—று.)

பசுகரணங்களைச் சிவகரணங்களாக மாற்றி அச் சிவகரணங்களாற் சிவனை யறிதல் கூடும் என்பவர் சிவசங்கிராந்தவாதிகள். சிவனருளா லன்றிச் சிவனையறிய முடியாதென அவர் மறுக்கப்பட்டார்.

அவ்வாறாயின், * "பாலை நெய்தல் பாடியதும் பாம்பொழியப்பாடிய தும், காலனை யன்றேவிக் கராக்கொண்ட, பாலன், மரணந் தவிர்த்தது வும் மற்றவர்க்கு நந்தம், கரணம் போலல்லாமை காண். என்பது முதலிய திருவாக்குக்களால் சிவகரணங்களாற் சிவனையறிதல் கூடுமென்பது பெறப் படவும், இவ்விடத்து அதனை மறுத்தது முரணாதோவெனின், சிவகரணங் களாலறியப்படுவது சிவனது தடத்த நிலையும், சிவனருளாலறியப்படுவது சிவனது சொரூப நிலையுமாதலின், இவ்விடத்தில் சொரூபநிலை சிவகரணங் களாலறியப்படாதென்றது பற்றி முரணாமைகாண்க. மேல் ௯௪-வது செய்யுளில், "பசு கரணங்களெல்லாம் சிவகரணமாக ஈசன் நின்ற நிலையை யறிந்து முயல்" என்றதனாலும் இக்கருத்து வலியுறுத்தப்படும்.

நாயகன்நாயகிகள் அநுபவித்த இன்பம் சொல்ல முடியாதென்பதும், கன்னிகை காமரதங்காணாள் என்பதும், சிவாநுபவத்தைச் சொல்லமுடியா தென்பதற்கும், அபக்குவர்களுக்கு அறிவிக்க முடியாதென்பதற்கும், எடுத் துக்காட்டுவமையாயின. இவ்விடத்து உரு என்றது கலையாதி மண்ணந்த மாகிய கருவிக்கூட்டத்தை. உருவின் என்றவிடத்து இன் என்னும் ஐந் தாம் வேற்றுமை உருபு எதுப் பொருளைக் குறித்தது. வடிவது என்ற

* திருக்களிற்றுப் படியார், செ-௪௨.

விடத்து அது பகுதிப்பொருள் விகுதி. சிவனை என்றவிடத்து சிவனையும் என்னும் பொருள்பட உயர்வு சிறப்பும்மை தொக்கு நின்றது.

உணர்ந்திலர்காண், கற்பனைகாண் என்ற விடத்துள்ள காண் இரண்டும் கட்டுரைக் கண்வந்த அசைநிலை. கருவிகழிந்தால் என்றவிடத்து ஆல் அசை. ஒன்றுங் காணுரென்பது சிவனையின்றிப் பிறிதொன்றனையுங் காணுரென்பதாம்.

இச்செய்யுளால் பசுகரணங்கள் சிவகரணமாகப் பெற்றவர் அதன் மேலுங் கரணங்கடந்த அதீதத்தைச் செய்தற்கு அறிவு செல்லுதல் எவ்வாறு கூடும் என்னும் சிவ சங்கிராந்த வாதிகளை சிவகரணத்தால் சிவனையறிவேனென்றல் கற்பனையென மறுக்கு முகத்தால் மூன்றுங்கூறு வலியுறுத்தப்பட்டது. (கூசு)

மூன்றும் அதிகரணம் முடிந்தது.

---

## நான்காம் அதிகரணம்.

### "அவரினீக்கி மலமகற்றித் தானுக்கி மலரடிக்கீழ் வைப்பன்." என்பது.

---

கரணங் கடத்தற்கு உபாயம் இதுவெனக் கூறுகின்றது.

**பன்னிறங்க ளவைகாட்டும் படிகம்போ லுள்ளம்**
**பலபுலன்க ணிறங்காட்டும் பரிசு பார்த்திட்**
**டிந்நிறங்க ளென்னிறமன் றென்று தன்ற**
**னெழினிறங்கண் டருளிஞ லிந்நிறத்தின் வேருய்ப்**
**பொய்ந்நிறவைம் புலநிறங்கள் பொய்யெனமெய் கண்டான்**
**பொருந்திடுவன் சிவத்திஞெடும் போதான் பின்னை**
**முன்னிறைநீர் சிறைமுறிய முடுகி யோடி**
**முந்நீர்சேர்ந் தந்நீராய்ப் பின்னீங்கா முறைபோல்.**

(கோ-டு.) தன்றன் எழில் நிறம் இந்நிறத்தின் வேருய் அருளிஞல் கண்டு பொய்நிற ஐம்புல நிறங்கள் பொய்யென மெய்கண்டான் சிவத்தி

ஞெடு பொருந்திடுவன். முன்னிறை சிறை நீர் முறிய முடுகி ஓடி முந்நீர் சேர்ந்து அந்நீராய்பின் நீங்கா முறைபோல் பின்னைப் போதான்.

(போ - ரை.) காணங்களில் நின்று ஆன்மா நீங்குமாறு எவ்வாறெனின், பளிங்கு, தன்னை அடுத்த பல நிறங்களினியல் பையே தன்னிடத்துக் காட்டி நிற்கும். இது அப்பளிங்கிற்குப் பொது வியல்பு. இதுபோல ஆன்மாவும் தன்ஞல் சாரப்பட்ட கருவிகளினியல்பே தன்னிடத்து விளங்க அதுவாய் நிற்கும். இது ஆன்மாவிற்குப் பொது வியல்பு. இப்பொது வியல்பினை முன்னர்ச் சிந்தித்தறிந்துகொண்டு பின்னர்ப் பல நிறங்களின் வேருகப் படிகத்திற்குச்சிறப்பான ஒளி உளதாயிஞற்போல, இப் பொது வியல்பைத் தன்னியல்பு அன்றென்றும், தன்னியல்பா கிய சிறப்பியல்பு இப்பொது வியல்பின் வேருய் உண்டென்றும் அருளால் அறிந்து பொதுவியல்பாகிய அக்கருவி ஞானம் நீங்கும் படி தன்னியல்பாகிய உண்மையை உணர்ந்தால் அத்தன்னியல் பில் விளங்கித் தோன்றும் சிவத்தைப் பொருந்துவன். அவ்வாறு பொருந்தினவன் தடைப்பட்ட நீர் தடை நீங்கியவிடத்து விரைந் தோடிக் கடலின்கட்சென்று அக்கடல் நீராய் அடங்கிப் பின் மீளாதவாறுபோல, அக்கருவிக் கூட்டத்தில் மீளச்சேரான். ( )

கருவிகள் பிரபஞ்சக் காட்சியைத் தந்து அதஞல் ஆணவ மலம் நீங்காதென மேலைச் செய்யுளில் கூறப்பட் டமையால், அக்கருவிகளினின் றும் நீங்கி அருள் பெறுதல் எவ்வாறு கூடுமென்று வருந்துவார்க்கு, ஆன் மாவின் பொதுவியல்பு சிறப்பியல்பை யுணர்தல் கருவிகளினின்று நீங்கு தற்கு உபாயம் என்று இச்செய்யுளாற் கூறினர்.

தடை நீங்கிய நீர் கடலில் சேர்வதற்குத் தடையொன்று மின்மை விளக்கவேண்டி, "முடுகியோடி" என்ருர். (ருஎ)

சிவத்தைப் பொருந்தினவன் காணங்களில் மீளவரினும் இழுக்கில்லை என்பாரை மறுத்துக் காணங்களோடு கூடில் சிவன் அறியப்படானென்றுகூறி "போதான்பின்னை" என மேலைச் செய் யுளிற் கூறியதை வலியுறுத்துகின்றது.

எங்குந்தா னென்னினு மெய்த வேண்டா
 வெங்குமில னென்னின்வே றிறையு மல்ல
னங்கஞ்சே ருயிர்போல்வ னென்னி னங்கத்
 தவயவங்கள் கண்போலக் காணு வான்மா
விங்குநா மியம்புந்தத் துவங்களின்வைத் தறிவ
 திறைஞானந் தந்துதா ளீதல்சுட ரிழந்த
துங்கவிழிச் சோதியுமுட் சோதியும் பெற்றுற்போற்
 சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே.

(கோ - ௫.) இங்கு ஆன்மா நாம் இயம்பும் தத்துவங்களின் வைத்து அறிவது.

(போ - ரை.) உயிருங் கரணங்களுமாகிய எல்லாஞ் சிவமேயாதலால் கருவிகளோடு கூடினதினால் இழுக்கில்லையெனின், எல்லாஞ் சிவமேயாயின் நாம் அவனையடைய வேண்டாம். எல்லாஞ் சிவமில்லையாயின் அவனது வியாபகத்திற்குக் குறையாய் முடியும். ஆதலால், இவ்விருவகையுமின்றி உடம்பின்கண் உயிர்போல எல்லாவற்றின் கண்ணும் இறைவன் கலந்து நிற்பன். உடம்பின்கண் உயிர் கலந்து நிற்பினும், கண்ணிந்திரியம் நீங்கிய ஏனைய செவி முதலிய நாலிந்திரியங்களும் தன்மாட்டு வந்த விடயங்களைமட்டும் அறியும். கண்ணிந்திரியம் தன்மாட்டு வாராத விடயங்களையும் சென்றறியும். எல்லா இந்திரியங்களோடும் உயிர் கலந்து நின்றும் இந்திரியங்களின் தொழிலில் வேற்றுமை காணப்படுதல் போல, எவற்றுடனும் இறைவன் கலந்து நிற்பினும் ஆன்மாவினிடத்து விளங்கித் தோன்றுதலும், கருவிகளிடத்து விளங்கித் தோன்றாமையுமாகிய வேற்றுமை அறிந்து கொள்ளப்படும். ஆதலின், விடயங்களைவிட்டுத் திருவடிகளைப் பெறவேண்டும். அங்ஙனம் பெறுதல், ஒளியிழந்த கண் ஒளியிழத்தற் கேதுவாகிய மாசு நீங்கியவிடத்துத் தன்னொளியையும், தனக்குள்ளாய் நின்று செலுத்தும் ஆன்ம ஒளியையும் பெற்றாற் போலும். அவ்வாறு கருவிக் கூட்டங்களினின்று நீங்கிய ஆன்மாவிற்குத் தானும்,

தன்னறிவிற்குள்ளாய் நிற்கும் இறைவனும் விளங்கித் தோன்று மாதலின், இறைவன் கருவிகளோடு கூடிய விடத்துத் தோன் றுன். (எ-று)

ஆன்ம ஒளியைக் கண் பெறுதலாவது, ஆன்மாவின் அறிவு கண் வழி யாக விளங்கப் பெறுதல்.

இறைவன் ஒப்ப நிற்பினும் ஏகதேசப் பொருள் ஏகதேசப் பொரு ளே; வியாபகப் பொருள் வியாபகப் பொருளே என்று கூறவேண்டி, இந்திரியங்களையும், ஆன்மாவையும் உவமையாக எடுத்துக்காட்டி அவ்வாறே ஆன்மாவினும் தத்துவத்தினும் வைத்தறிவது என்றார்.

நாம் என்னும் பிறரை உளப்படுத்திய தன்மை இவ்விடத்தில் இழித் தற் குறிப்புத்தோன்ற நீ என்னும் முன்னிலைக் கண் வந்தது. * "நாமரை யாமத் தென்னோ வந்து வைகி நயந்ததுவே" என்றாற் போல.

அறிவது என்பது அறிந்து கொள்ளப்படும் என்னும் வியங்கோள்ப் பொருள் குறித்தது. † "கொள்ளப்படாது மறப்பது" என்ற விடத்து மறப்பது என்றாற் போல.

இந்து என்பது போல என்னும் பொருள் குறித்தது. ஈதல் என்பது ஈயப்பெறுதலைக் குறித்தலின், ஆகுபெயர்.

ஒளி இழந்த என்றவிடத்து இழந்த என்பது, இழந்தன என்னும் பொருள்படும்படி, அன்சாரியை பெறாது அகர ஈறாய் நின்ற பலவறிசொல். அது, விழிகளை புணர்த்தி, பெற்றாற்போல் என்னும் பயனிலை கொண்டது. துங்கவிழிச்சோதி என்றது மாசு நீக்கத்தைக் குறித்தது. (௩அ)

சிவத்தைப் பொருந்தினவர் பழைய வாசனையால் கரணங் களைக்கூட நேரில் முன்னர் ஒன்பதாம் சூத்திரத்திற் கூறப்படும் உபாயத்தினால் வாசனையை நீக்கவேண்டுமெனக் கூறுகின்றது.

பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட் டெறியப்
படிம்பொழுது நீங்கியது விடும்பொழுதிற் பரக்கு
மாசுபடு மலமாயை யருங்கன்ம மனைத்து
மரனடியை யுணரும்போ தகலும்பின் னணுகு

* திருக்கோவையார், செ-கக௬௪.
† மேற்படி செ-அஎ.

நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கு
நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாகி
யாசையொடு மங்குமிங்கு மாகியல மருவோ
ரரும்பாச மறுக்கும்வகை யருளின்வழி யுரைப்பாம்.

(கோ - ௫.) நேசமொடும் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கும் நினைவுடையோர் நிலையதுவே யாகி நின்றிடுவர் எனவும், படுகுட்டத்தில் கல்லினை விட்டெறியப்படும் பொழுது நீங்கி அதுவிடும்பொழுதில் பரக்கும் பாசி எனவுங் கூட்டுக.

**(போ - ரை.)** சிவபெருமானிடத்து நீங்காத அன்போடு அச்சிவத்தைப்பொருந்தி, பொருந்தி நிற்கின்றோமென்ற நிலையினையுங் கடந்த அதீதத்தை அடைய விரும்புவோர் அச்சிவமாய் நிற்பர். ஓரோவிடத்துப் பாசி பொருந்திய தடாகத்தில் கல்லெறியும் போது பாசி நீங்கியும் கல்லெறியாத போது பாசி படர்ந்தும் காண்பதுபோல, சிவபெருமான் திருவடியை உணரும்போது மலமாயாகன்மங்கள் நீங்கியும், அத்திருவடியை உணராதபொழுது அச்சமயம் பார்த்து மலமாயா கன்மங்கள் வந்து தலைப்பட்டும் நிற்கும். அவ்வாறு மலமாயா கன்மங்கள் தலைப்பட்டு நிற்குமாயின், அந்நிலை பழைய வாசனைபற்றி நிகழ்வதாம். அவ்வாசனையால் சிவத்தினிடத்தும், கருவிகளிடத்தும் நிலைபெறாது சுழல்பவர், அவ்வாசனையைப் போக்கும் வண்ணம் முன்னர் ஒன்பதாம் சூத்திரத்திற் சொல்லப்படும் உபாயத்தைக் கடைப்பிடித்து, அநுட்டித்து அவ்வாசனையை நீக்கிக்கொள்ள வேண்டும். (௫-று)

இவை மூன்று செய்யுளானும், நாலாங் கூற்றுப் பொருள் வலியுறுத்தப்பட்டது.

இவ்வெட்டாஞ் சூத்திரத்துள், துயருறுந் தொல்லுயிரென்றதனால் துயர் நீங்குதற் பொருட்டுப் பதியையடைய வேண்டுவது கடமையென மூன்றாமதிகாரணத்தானும், அடைதற்குச் சிறந்த சாதனம் ஞானமென இரண்டாமதிகாரணத்தானும், ஞானங் குருவால் வருமென முதலதிகாரணத்தானுங் கூறி, ஞானத்தைக் கேட்ட அறிவிற்குப் பயன் சிவரூபமென நான்காமதிகாரணத்தாற் கூறியவாறு காண்க.

குருவால் ஞானந்தோன்றுமெனவும், ஞானத்தின் பாகுபாடும், ஞானத்தால் ஐம்புலவேடரினின்று நீங்குதல் கூடுமெனவும், அங்ஙனம் நீங்குதலால் சிவரூபங்காட்சிப்படுமெனவும் கூறவேண்டு மென்னும் முறைபற்றி அதிகரணம் அமைத்தனரென அறிந்து கொள்க. (௩௬)

நான்காமதிகாரணம் முடிந்தது.

எட்டாஞ் சூத்திரம் முடிந்தது.

ஆகத் திருவிருத்தம் உ௬௬.

---

# ஒன்பதாஞ் சூத்திரம்.

## சாதிக்குமுறை.

மேலைச் சூத்திரத்தால் (பதிப்பொருளை அடைவதே பேறு;) அப்பேற்றிற்குச் சிறந்த சாதனம் ஞானம்; அந்த ஞானம் ஞானசிரியனால் உண்டாமென்றுணர்ந்த பின்னர், ஞானத்தை அநுட்டிக்கும் முறை எவ்வாறென்னும் ஆசங்கை நிகழுமன்றே; அந்நிகழ்ச்சிபற்றி அநுட்டிக்கும் முறையைக் கூறுதற்கு ஒன்பதாஞ் சூத்திரம் எழுந்தது.

அநுட்டிக்கும் முறை தெரியாத விடத்து அநுட்டிக்க முடியாதாதலின், அநுட்டிக்கு முறையை வகுத்து இச்சூத்திரத்தாற் கூறுகின்றார். அநுட்டித்தல்—சிந்தித்தல்.

பதிஞானத்தாற் சிவனையடைதல் கூடுமெனவும், அப்பதி ஞானத்தில் நிலை பெறவொட்டாது செய்யும் வாசனையைக் கெடுக்கும உபாயங்கள் இவையெனவும் சூத்திரப்பொருளைத் தொகுத்துக் கூறுகின்றது.

பாசஞா னத்தா லும் பசுஞானத் தா லும்
பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத் தாலே
நேசமொடு முள்ளத்தே நாடிப் பாத
நீழற்கீழ் நில்லாதே நீங்கிப் போதி
னூனைதரு முலகமெலா மலகைத்தே ராமென்
றறிந்தகல வந்நிலையே யாகும் பின்னு
மோசைதரு மஞ்செழுத்தை விதிப்படியுச் சரிக்க
வுள்ளத்தே புகுந்தளிப்ப னூனமெலா மோட.

(கோ—டு) பதிஞானத்தாலே உள்ளத்தே நாடி நேச மொடும் பாத நீழற்கீழ் எனவும், பின்னும் ஊனமெலாமோட ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க உள்ளத்தே புகுந்து அளிப்பன் எனவுங் கூட்டுக.

(பொ—ரை) கருவிகளோடுகூடி அறிவதாகிய பாசஞானத் தாலும், நான் பிரமமென்னும் பசு ஞானத்தாலும், எய்துதற்கரிய பரசிவனை அடையமுடியாது. அவ்விருஞானங்களாலும் அடைய முடியாத பரம்பரனை அவனது திருவடிஞானமாகிய பதிஞானம் ஒன்றுனேதன்னறிவின் கண் வைத்தாராய்ந்து அன்புடன் அத் திருவடி நீழலின் கீழ் நீங்காதே தூங்கப்பெறவேண்டும. அங்ஙனம் நிற்கப்பெறுது பிரபஞ்சத்தை நாடவருமாயின், பற்றுச் செய்தற்கேதுவாகிய அப்பிரபஞ்சம் யாவும் கானற் சலத்தின் தன் மைபோல அசத்திய மெனக் கண்டு கழிப்பின் அந்நிலைகைகூடும். அங்ஙனம் பாசமுற்றும் நீங்கிய பின்னரும் பண்டைப் பயிற்சிவய த்தால் வாசனைபற்றிச் சலிப்பு உண்டாமாயின், சலியாதிருத்தற் பொருட்டு, பிரபஞ்ச நீக்கமும், சிவப்பேறுந் தருவதாகிய முத்தி பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்கவேண்டும். அங்ஙனம உச் சரிப்பின் முன் விளங்கித் தோன்றியவாறே உள்ளத்தின் கண் ஞானத்தை விளக்கிச் சிவமாகிய தன்னைத் தருவன். (எ-று.)

இவ்விடத்து ஊனம் என்றது வாதனு மலத்தை. நில்லாதே நீங்கிப் போதின் என்ற அநுவாதத்தால் நீங்காதே தூங்கப்பெறவேண்டுமென்பது விதிக்கப்பட்டதாயிற்று.

இச்செய்யுள் முதனூல் ஒன்பதாஞ் சூத்திரம் போல மூக்கூற்றையு டையது. அவற்றுள்,

முதற்கூறு:—பாச ஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம் பரனைப் பதி ஞானத்தாலே நேசமொடு முள்ளத்தே நாடிப்பாத நீழற்கீழ் (நிற்க.)

இரண்டாங்கூறு—நில்லாதே நீங்கிப் போதி ஞைசைதரு முலக மெலா மலகைத்தேரா மென்றறிந்தகல அந்நிலையே யாகும்.

மூன்றாங்கூறு—பின்னும் ஓசைதரு மஞ்செழுத்தை விதிபபடி யுச்சரிக்க உள்ளத்தே புகுந்தளிப்ப னானமெலா மோட. (க)

---

# முதலதிகரணம்.

## பாசஞானத்தாலும்......பாதநீழற்கீழ் (நிற்க-) என்பது.

பாசஞானம், பசுஞானம், பதிஞானங்களின் இலக்கணம் இவை எனக் கூறுகின்றது.

வேதசாத் திரமிருதி புராணகலை ஞானம்
விரும்பசபை வைகரியா தித்திறங்கண் மேலா
நாதமுடி வானவெல்லாம் பாச ஞானம்
நணுகியான் மாவிவைகீழ் நாட லாலே
காதலினா னன்பிரம மென்னு ஞானங்
கருதுபசு ஞானமிவ னுடலிற் கட்டுண்
டோதியுணர்ந் தொன்றொன்றா வுணர்ந்திடலாற் பசுவா
மொன்றாகச் சிவனியல்பி னுணர்ந்திடுவன் காணே.

(கோ-டு) பாச ஞானம், வைகரியாதித்திறங்கள் வேதம் சாத்திரம் மிருதி புராணம் கலைஞானம் விரும்பு அசபை மேலாம் நாதமுடிவான வெல்லாம். கருது பசு ஞானம், நணுகி(ய), ஆன்மா இவை கீழ்நாடலாலே காதலினால் நான் பிரமமென்னும் ஞானம். எனவும், சிவன் இயல்பின் ஒன்றாக உணர்ந்திடுவன் எனவுங் கூட்டுக.

(போ—ரை.) மேற்கூறிப் போந்த மூவகை ஞானங்களுள், பாசஞானமாவது:—வைகரி முதலிய வாக்கின் பகுதிய வாகிய வேத சாத்திர முதலிய கலைஞானங்களும், விரும்புகின்ற அசைபயுமாகிய சொற்பிரபஞ்சமும், நில முதல் நாத மீறாகிய பொருட்பிரபஞ்சமும் ஆகிய இரு வகைப் பிரபஞ்சங்களின் வாயிலாய் ஆன்மாவின் கண் நிகழும் ஏகதேசஞானமாம். கருதுகின்ற பசு ஞானமாவது—இப்பிரபஞ்சங்களைப் பொருந்திய ஆன்மா இவை யனைத்தும் தன் கீழடங்கிய தென்றறிந்து அவற்றினின்றும் நீங்கி மேம்பட்ட பொழுது அப்பிரபஞ்சமாகிய பாச நீக்கத்தால் அநாதியே பாசத்தினீங்கியிருக்கின்ற சிவனை யாம்பேமென்று செருக்கால் சடுதியில் மதிக்கவருவதோர் சிவசமவாத ஞானமாம். கருவிகளினீங்கிய இந்த ஞானத்தை யுடைய பசுவைச் சிவனொடு சமமென்றதனால் இழுக்கென்னையெனில், இவ்வான்மா தூல சூக்கும காரணதேகங்களாற் கட்டுப்பட்டும், நாலுணர்வால் உணர்த்த உணர்ந்தும், ஒவ்வோரிந்திரியங்களால் ஒவ்வொரு விடயங்களை யுணர்ந்தும், இவ்வாறுணர்வதாகிய பாசத்தடை சிவ ஞானத்தால் இடையே நீங்கப் பெறுதலின் அவ்வான்மா ஆதிமுத்தனெனப்படும். பதி, ஒருவனுணர்த்த உணர்தலின்றித் தானே முழுதும் ஒருசேர அறிந்து அநாதியே பாசத்தடை நீங்கிய பேரறிவனுதலின் அநாதி முத்தனெனப்படும். ஆதலால், ஆதி முத்தனுகிய பசுவை அநாதி முத்தனுகிய பதியோடு சமமென்றல் கூடாது. இவ்வேற்றுமையைத் தெளிவாய் அறிந்து அப்பதியினுள்ளடங்கி அப்பதி வாயிலாய் நிகழும் ஞானம் பதிஞானமாம். (எ—று.)

பசுத்துவமாகிய பாசம் நீங்கிய விடத்தும் நான் பிரமமென மதித்தல் பசுத்துவவாதனை பற்றியாதலால், அது பசு ஞானமெனப்பட்டது. நான் பிரமமென்னும் ஞானம் ஏகான்மவாதம் பற்றி நிகழும் ஞானமெனினுமாம்.

நாடி மேம்படுதலால், மேம்படுதலாகிய காரியத்தை நாடலால் என்னுங் காரணமாகவும், உணர்ந்து இடையே நீங்குதலால், இடையே நீங்குதலாகிய காரியத்தை உணர்ந்திடலால் என்னுங் காரணமாகவும், இயல்

பாக வுணர்ந்து அநாதிமுத்தனுதலால், அநாதிமுத்தனென்னுங் காரியத்தை உணர்ந்திடுவன் என்னுங்காரணமாகவும், தத்துவக் கூட்டத்தால் ஏகதேச ஞானம் நிகழ்தலின் ஏக தேசஞானமாகிய காரியத்தை நாதமுடிவான வெல்லாம் என்னும் காரணமாகவும் உபசரித்தார்.

நணுகியான்மா என்றவிடத்து நணுகிய என்னும் பெயரெச்சத்து அகரம் தொக்கு நின்றது. "தருவரிய அன்பு" என்பது "தருவரியன்பு" என நின்றாற் போல

பதி ஞானத்தின் இயல்பு எல்லாப் பொருளையும் ஒரு சேர அறிதலென்பது, ஒன்றாகச் சிவனியல்பி னுணர்ந்திடுவன் காணே யென்றதனால் பெறப்பட்டது.

எனவே, பாசஞானத்தினியல்பு ஏகதேசமாயறிதலும், பசு ஞானத்தினியல்பு செருக்குற்றறிதலும், பதிஞானத்தினியல்பு ஒரு சேர அறிதலுமென அறிந்து கொள்க.

வேத சாத்திரங்களெல்லாம் பாச ஞான மெனக்கழிப்பின் ஞான நூல்தனை ஓதல் ஓது வித்தல் முதலியன ஞான பூசை யென மேற்கூறிய தோடு முரணுதோவெனின், முரணுது. என்னை? அவ்வேத சாத்திரங்கள் பதி ஞானம் விளங்குதற்கு ஏது வாகப் பயன் படுதல் கூடும் ஆதலாலென்க. பசுஞானத்தைச் சடுதியில் மதிக்கவருவதோர் ஞானமென்றது, ஆன்மாத்தனித்து நில்லாமையை விளக்கி நின்றது. அதாவது, காரணங் கடந்த விடத்துப் பதியிலழுந்த வேண்டும். அங்ஙனம் அழுந்தாது சீவன் தனித்து நிற்க முடியாது. நின்றதாக எண்ணுதலே யன்றி நிற்கு மாறில்லை. அவ்வெண்ணமும் சடுதியில் மாறிக் கருவிகளோடு கூடுமென்றறிக. (உ.)

பாடாணவாதஞானமும், பேதவாதஞானமும் பசுஞானமே யெனவும், பதிஞானத்தாலன்றிப் பசுத்துவவாதனை நீங்காதெனவும் கூறுகின்றது.

**கரணங்கள் கெடவிருக்கை முத்தியா மென்னிற்**
**கதியாகுஞ் சிலைமுட்டை கருமரத்தி னுயிர்கண்**
**மரணங்கொண் டிடவுறங்க மயங்கிமூர்ச் சிக்க**
**வாயுத்தம் பனைபண்ண வல்விடத்தை யடையச்**

*சரணங்கள் புகுநிழல்போற் றனையடையுஞ் சமாதி*
*தவிராது மலமிதுவும் பசுஞான மாகு*
*மரணங்க ளெரித்தவன்ற னடியையறி விறந்தங்*
*கறிந்திடார் செறிந்ததுக ளகற்றி டாரே.*

(கோ - ௫.) கரணங்கள் கெட இருக்கை முத்தியாமென்னில், சினை முட்டை கருமரத்தின் உயிர்கள் (மருவக்) கதி ஆகும். சரணங்கள் புகு நிழல்போல் தனை அடையும் சமாதி (முத்தியாமென்னில்) மரணங்கொண்டிட உறங்க மயங்கி மூர்ச்சிக்க வாயுத்தம்பனை பண்ண வல்விடத்தை அடைய (கதி ஆகும்.) இதுவும் பசுஞானமாகும். அறிவு இறந்து அங்கு அரணங்கள் எரித்தவன்றன் அடியை அறிந்திடார். செறிந்ததுகள் அகற்றிடாரே. மலம் தவிராது.

(போ - ரை.) மேற் கூறியவாறு நான் சிவம் என நிகழும் ஞானம் முத்தியாகாதாயினும், கரணங்களெல்லாம் கெடும்படி அவற்றினின்றும் ஆன்மா நீங்கப்பெறுதல் முத்தியாமெனின், மீனிற்றோன்றிய சினையினும், முட்டையினும், கருப்பாசயத்தினும், மரத்தினும் உயிர்கள் பொருந்துங்கால் கரணமின்றி யிருத்தலின் அவையும் முத்தியாதல் வேண்டும். ஆகாமையின் இது பாடாணவாத ஞானமாம். பாடாணமென்பது கல். இனி, ஒருவனுடைய நிழல் உச்சிப்போதின் கண் தன்னடியில் வந்து ஒடுங்கினாற்போல, அறிவானது கரணங்களிற் செல்லாது ஆன்மாவாகிய தன்னிடத்து ஒடுங்கிநிற்பதே முத்தியெனின், பத்தாமவத்தையாகிய மரணம், உறக்கம், மயக்கம், மூர்ச்சை, நஞ்சம் ஆகிய இவை பொருந்திய விடத்தும், பிராணவாயு இயங்காது தம்பித்தவிடத்தும், அறிவானது கரணங்களிற் செல்லாது ஆன்மாவாகிய தன் மாட்டொடுங்கியிருத்தலால், அதுவும் முத்தியாதல் வேண்டும். ஆகாமையின் இது பேதவாத ஞானமாம். மேலைச்செய்யுளிற் கூறிய சிவசமவாத ஞானமும் இச்செய்யுளில் மேற்கூறிய பாடாணவாத ஞானமுமன்றி இப்பேதவாத ஞானமும் ஆகிய இவையெல்லாம் பசுஞானங்களாம். இந்த ஞானங்களால் சிவபிரானை அறிய முடியாதாதலால், முப்புரங்களையுமெரித்த சிவ

பிரானையும், ஆன்மாவாகிய தம்மையும், சிவஞானத்தால் அறியப் பெறுவீராக. அவ்வாறறிந்து உம்மைப் பந்தித்த மலத்தை நீக்கப்பெறுவீராக. மேற்கூறிய பசுஞானங்கட் கேதுவாகிய பசுத்துவவாதனையாகிய மலமே இச்சிவஞான முடையார்க்கன்றி நீங்காது. (எ-று)

இதுவும் என்ற உம்மை, சிவசமவாத ஞானம் பாடாணவாத ஞானமேயன்றி என இறந்தது தழுவிற்று. கதியாகும என்பது, சொல்லெச்சமாக வருவித்த மருவ என்பதோடும், அடைய என்பதோடும் தனித்தனி சென்றியையும். மருவ என்பதும் அடைய என்பதும் செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள். மருவ என்பது உயிர்கள் என்றவிடத்துச் சொல்லெச்சமாக வருவிக்கப்பட்டது. முத்தியாமெனின் என்பதனைத் தனையடையுஞ்சமாதி என்பதனோடுங் கூட்டுக. சூரியனைக் காணப்பெறாதார்க்கு இருள் நீங்காதவாறு போல, சிவசமவாதஞானம், பாடாணவாத ஞானம், பேதவாத ஞானமுடையார் சிவனையறியப் பெறாமையின் அவர்க்கு மலம் நீங்காதென்பதாயிற்று.

பத்தவத்தைகளாவன:—ஒரு மகளிரைப் பார்த்தலாலுண்டாம் ஆசை, மனப்பற்று, அழகை வர்ணிக்கும் மனோவியாபாரம், தூங்காமை, உடம்பிளைத்தல், பிற விஷயங்களிற் பற்றில்லாமை, மானமில்லாமை, பித்துக்கொள்ளுதல், மூர்ச்சை, மரணம் என்பன.

மேல் அ. ஞ சூத்திரம் கஉ-வது செய்யுளில் பரபக்கத்து முத்தியைக் கூறுமிடத்து கதியாகவேண்டும் மலந்தவிராது என்று கூறாமல், இவ்விடத்து அம்முத்தியைக்கூறி கதியாகவேண்டும் மலந்தவிராது என்றது, மேலைச்செய்யுளில் கருவிகளினின்று நீங்கிநிற்கும ஒப்புமைபற்றி உயிர் சிவசமமாதற் கிழுக்கென்னை? என்னும் ஆசங்கையை நீக்கி, ஒவ்வொரு இந்திரியங்களால் ஒவ்வொரு விடயங்களை யுணர்ந்து இடையே நீங்குதலால் அவ்வுயிர் ஆதி முத்தனெனவும், சிவன் ஒன்றாக இயல்பின் உணர்ந்திடுவனுதலால் அநாதி முத்தனெனவும் படுமாதலின், சிவசமமாகாதென்றாற்போலப், பாடாணவாத ஞானம, பேதவாத ஞானம் என்னும் இவை முத்தியாகாதோ வென்னும் ஆசங்கையை நீக்கி, மேலைச்செய்யுளிற் கூறிய சிவசமவாத ஞானம்போல மலந்தவிராமையின் பசுஞானமாதலை வலியுறுத்தற்பொருட்டு என்க. ஞானத்தின் வகையினைக் கூறுமிவ்விடத்துக் கூறினாரென்பது கருத்து. (கூ)

பதிஞானத்தாலன்றிப் பசுஞானம் பாசஞானங்களாற் சிவனை யறியக்கூடாமைக் கேது அவ்விரு ஞானங்களும் தானே பிரகாசித்தலும், பிறிதொன்றைப் பிரகாசப்படுத்தலும் இல்லாமை எனக் கூறுகின்றது.

சிவனையவன் றிருவடிஞா னத்தாற் சேரச்
 செப்புவது செயல்வாக்குச் சிந்தை யெல்லா
மவனையணு காவென்று மாத லானு
 மவனடியவ் வொளிஞான மாத லானு
மிவனுமியான் றுவக்குதிர மிறைச்சி மேதை
 யென்புமச்சை சுக்கிலமோ விந்திரியக் கொத்தோ
வவமகல வெனையறியே னெனுமைய மகல
 வடிகாட்டி யான்மாவைக் காட்ட லானும்.

(கோ - டு.) சித்தைவாக்குச் செயல் எல்லாம் அவனை என்றும் அணுகா ஆதலானும், இவனும் யான் துவக்கு உதிரம் இறைச்சி மேதை என்பு மச்சை சுக்கிலமோ இந்திரியக் கொத்தோ அவம் அகல எனை அறியேன் எனும் ஐயம் ஆதலானும், அவன் அடி ஞானம் அகல அவ்வொளி அடிகாட்டி ஆன்மாவைக் காட்டலானும், அவன் திருவடிஞானத்தால் சிவனைச் சேரச்செப்புவது.

(போ - ரை.) மேற்கூறிய பதிஞானம், பசுஞானம், பாசஞானமாகிய மூன்றனுள், மனவாக்குக் காயமுதலியன இறைவனை எக்காலத்தும் அணுகாமையால் அப்பொறிகள் வாயிலாய் ஏகதேசமாய் நிகழும் சுட்டுணர்வாகிய பாசஞானத்திற்குத் தானே பிரகாசித்தலும், பிறிதொன்றைப் பிரகாசப்படுத்துதலுமில்லை. ஆன்மாவும், தன்னைத், தோல் இரத்தம் முதலியனவோ என ஐயப்பட்டுக் குற்றங்கள் நீங்கும்படியாகத் தன் சொரூபத்தை உள்ளவாறறியாது நிற்றலால் அவ்வாறு நிற்கும் பசுஞானத்திற்கும் தானே பிரகாசித்தலும், பிறிதொன்றைப் பிரகாசப்படுத்துதலுமில்லை. ஆதலால், பாசஞானம் பசுஞானங்களால் பரசிவனை அறியமுடியாது. இறைவன் திருவடி ஞானமாகிய பதிஞானம்

மேற்கூறிய குற்றங்களின்றித் தானே பிரகாசித்தலும், தன்னை யுடைய ஆன்மாவையும் அவ்வான்மாவிற்குப் பிரகாசப்படுத்துதலு முடையதாய் நின்று எல்லாப் பொருளையும் இனிது விளக்குவதாம். அத்தன்மைத்தாகிய பதிஞானம் ஒன்றானே அப்பதிப்பொருளை அறிய வேண்டும் என மேற்கொண்டது. (எ-று)

ஆன்மா தன் சொரூபத்தை உள்ளவாறறியாமையாவது—கருவிகளின் வேறான சித்தெனவும், தனித்தற்கும் முதலன்றெனவும் உணராமையாம். (௪)

பசுஞானம், பாசஞானங்கட்குத் தானே பிரகாசித்தலும், பிறிதொன்றைப் பிரகாசப்படுத்துதலும் இல்லாமையை அநுபவத்தில் வைத்து விளக்குகின்றது.

**கண்டிடுங்கண் டனைக்காணா கரணங் காணா**
**கரணங்க டமைக்காணா வுயிருங் காணா**
**வுண்டியம ருயிர்தானுந் தனைக்காணா**
**துயிர்க்குயிரா மொருவனையுங் காணா தாகுங்**
**கண்டசிவன் றனைக்காட்டி யுயிருங் காட்டிக்**
**கண்ணாகிக் கரணங்கள் காணா மனிற்பன்**
**கொண்டரனை யுளத்திற்கண் டடிகூடிற் பாசங்**
**கூடாது கூடிடினுங் குறித்தடியி னிறுத்தே.** (௫)

(**கோ - ௫.**) தனைக்காட்டி உயிருங்காட்டிக் கண்ட சிவன் எனக் கூட்டுக.

(**போ - ரை.**) மேற்கூறிய பசுஞான பாசஞானங்கட்குத் தானே பிரகாசித்தலும், பிறிதொன்றைப் பிரகாசப்படுத்தலுமில்லை என்றல் எவ்வாறு கூடுமெனின், பிறிதொரு பொருளை அந்தக்கரணங்களால் அறிகின்ற கண்ணானது தன்னியல்பையுங் காணமாட்டாது; தனக்கு முதலாகிய அந்தக் கரணங்களையுங் காணமாட்டாது. கண்ணை விளக்குகின்ற அவ்வந்தக் கரணங்களும் வித்தியா தத்துவங்களும் தம்மியல்பையும், தம்மை விளக்குவதாய் தமக்கு

முதலாய் நிற்கும உயிரையுங் காணமாட்டாவாம். அவைபோல, இன்பதுன்பங்களை முதல்வன் உணர்த்த உணர்கின்ற ஆன்மாவும் தன்னியல்பையும், தனக்குயிராய் அறிவித்து நிற்கும் முதல்வனை யுங் காணமாட்டாது. ஆதலால் தற்சொரூபத்தையும் விளக்கி, ஆன்ம சொரூபத்தையும் விளங்கச் செய்து, இவ்வாறு விளக்கு வதற்கும, விளங்கச் செய்வதற்கும் தனக்கொரு துணையின்றி எல்லாவற்றையும் ஒரு சேர அறிந்து தானே பிரகாசித்தும், பிற வற்றைப் பிரகாசப் படுத்தியும நிற்பது சிவஞானமாம். ஆதலால், பாசஞான பசுஞானங்களாற் காணாது அச்சிவ ஞானத்தைத் துணையாகக்கொண்டு முதல்வனை அச்சிவ ஞானமாகிய அறிவிற் காணப்பெற்று அவன்றிருவடியைக் கூடப் பெற்றால் பாசம் நீங் கும. நீங்கிய அப்பாசம் மீண்டும் கூடவரின் சிவ பாவனையை விடாது செய்து அவன்றிருவடி ஞானத்தால் அச்சிவபிரானைச் சேரல் வேண்டும். (எ-று.)

இதனால் கருவிகளாலாகிய பாச ஞானமும், தன்னை உள்ளவாறறியாத பசு ஞானமாகிய ஆன்ம ஞானமும் தானே பிரகாசித்தல் அறவே இல்லையென வும், தனக்குள் அடங்கிய பொருளை விளக்குவதாயினும், தனக்கு மேற் பட்ட பொருளை விளக்காமையால் பிறிதொன்றைப் பிரகாசப் படுத்துதல் இல்லை யெனவுங் கூறியவாறறிக.

கரணங்காணா உயிருங்காணா என்றவிடத்து காணாது என்னும் பொருள்பட துவ்வீறு தொக்கு நின்றது. கண்டிடுதல் என்பது, இவ்வி டத்து அந்தக் கரணங்களால் கண் பிறபொருளைக் கண்டிடுதலைக்குறித்தது. உண்டியமர்தலென்பது சுகதுக்கங்களை யநுபவித்தல். அதுவும் முதல்வன் அறிவிக்க அறிதலைக் குறித்தது. இந்திரிய முதலியன, தமமையும் உயிரை யுங் காணுமையை உயிர்கள், தம்மையும் முதல்வனையுங் காணுமைக்கு உவ மையாக எடுத்துக்காட்டுதலின் இஃது எடுத்துக் காட்டுவமை.

மேலைசெய்யுளில் " அடிகாட்டி ஆன்மாவைக் காட்டலானும் " என்ற தைச் சிவஞானத்தால் பாசம் நீங்குமென்று கூறுதற்கு இவ்விடத்துக் காட்டிக் கண்ட சிவன், என அநுவாதஞ் செய்துகொண்டார். கண்ணுகி என்பது துணையாகி என்னும் பொருள் குறித்தது.

* "சொன்ன சிவன் கண்ணு" என்றாற் போல. கரணங்கள் காணுமல் என்றவிடத்து மூன்றாம் வேற்றுமை ஆல் உருபு விரித்து கரணங்களாற் காணுமல் எனவுரைக்க.

பாச ஞானத்தைக் கரணங்கள் எனவும், பசுஞானத்தை உயிர் எனவும் சிவஞானத்தைச் சிவன் எனவும் அந்தந்தப் பொருள்மேல் வைத்து உபசரித்தார். பதிஞானம் பிரபஞ்ச வைராக்கியத்தாலுண்டாமெனக்கூறும இரண்டாமதிகரணத்திற்குத் தோற்றுவாய் செய்யவேண்டி "பாசங் கூடாது; கூடிடினுங் குறித்தடியினிறத்தே" என்றார். (௫).

முதலதிகரணம் முடிந்தது.

---

# இரண்டாம் அதிகரணம்.

நில்லாதே நீங்கிப் போதின்... ........அந் நிலையே யாகும் என்பது.

பதிஞானம் பிரபஞ்ச வைராக்கியத்தாலுண்டாமெனக் கூறுகின்றது.

குறித்தடியி னின்றட்ட குணமெட்டுச் சித்தி
கோகநதன் முதல்வாழ்வு குலவுபத மெல்லாம்
வெறுத்துநெறி யறுவகையு மேலொடுகீ ழடங்க
வெறும்பொயென நினைத்திருக்க மேலொடுகீ ழில்லா
னிறுத்துவதோர் குணமில்லான் றன்னையொரு வர்க்கு
நினைப்பரியா னொன்றுமிலா னேர்படவந் துள்ளே
பொறுப்பரிய பேரன்பை யருளியதன் வழியே
புகுந்திடுவ னெங்குமிலாப் போகத்தைப் புரிந்தே. ௨௭௪

---

* சிவஞான போதம், ௩-ம் சூ-ம், உ-அ-ம், செ-க.

(கோ - ௫.) அடியில் குறித்து நின்று எனவும், அறுவகை நெறியும் எனவும், உள்ளேவந்து நேர்பட எனவும், எங்கும் இலாப் போகத்தைப் புரிந்தே புகுந்திடுவன் எனவுங் கூட்டுக.

**(பொ - ரை.)** மேற்கூறிய பதிஞானம் எதனால் வருமெனின், குருவருளால் ஒரு குறியின்கண் உறைத்து நின்றுகொண்டு பைசாச பதத்திற்குரிய அட்டமாசித்தியை நோக்க எண்மடங் கேற்றமாகிய அட்டசித்தியையுடைய பிரமபத முதலிய திப்பிய மகளிரும் அதிவிசித்திரமாகிய மாடமாளிகையு முதலிய போக் கியப் பொருட் சிறப்புக்களான் அழகுபெற்ற பதங்களையுடைய எவ்வகைப்பட்ட புவனங்களும், அப்புவனங்களிலுள்ள போக்கி யங்களும் முன்னரே அநுபவித்துக் கழித்தமையின் கக்கின சோ றெனக்கண்டு அருவருத்துவிட்டு சுவரினுடைய வடிவைக் காணுங் காலத்து அதிலெழுதியிருக்குஞ் சித்திரம் காணப்படாதது போல, அறுவகை அத்துவாவுட்பட்ட பிரபஞ்சம் யாவும் மாயையாகிய காரண ரூபத்திலொடுங்கியிருக்கும் போது காணப்படாமையின் முழுப்பொய்யெனக்கண்டு, அவ்வாறு கண்ட காட்சி சலியாதிருக் கப் பெற்றால், அப்பிரபஞ்சத்திற்கு வேறாகியும், மேல்கீழ் இல்லா தாகியும், குறித்தறிவதொரு குணமில்லாததாகியும், பிரபஞ்ச நாட்டமுள்ள ஒருவராலும் உணரப்படாததாயும், ஒரு பற்றுமில் லாததாயும் உள்ள ஞான சொரூபம் அவ்வறிவின்கண் விளங்கித் தோன்றும். தோன்றவே அந்த ஞானத்தினிடத்து வறியார்க்கு நிதி வாய்த்துழிப்போலப் பொறுத்தற்கரிய பெருங்காதல் அதிகப் படும். அதிகப்படவே சிவபிரான் அவ்வன்பின் வழியாகப் புகுந்து எவ்விடத்து மறிதற்கரிய பேரின்பமயமாய் உயிரின்கண் விளங்கித் தோன்றுவன். (எ-று.)

மிக்க அன்பின் வழியாகப், பேரின்ப மயமாய் இறைவன் விளங்கித் தோன்றுவன் என்னும் இக்கருத்துப்பற்றியே, * "இன்பிலினி தென்ற வின்றுண்டே லின்றுண்டா—மன்பினிலேயே யது." என்றார் புடை நூலாசிரியரும்.

---

* திருவருட்பயன், இன்புறு நிலை, செ-௰

இதன்கருத்து—"அன்பினது நிலையே தனக்கு நிலையாக உடையதாக லான், எல்லா இன்பங்களினும் இனிமை யுடைத்தென்று சிறப்பித்துச் சொல்லப்படும் பேரின்பமாவது அன்பு இப்பொழுது உண்டாயின் இப் பொழுதே யுள்ளதாம்" என்பது. † "ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே என்னுடை அன்பே" என்னும் ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் திருவாக்கும், அன்பினிடத்துச் சிவம் விளங்கித்தோன்று மென்னுங் கருத் தினை வலியுறுக்குமாறு காண்க.

கோகநதன் என்பது பிரம பதத்தைக் குறித்தலின் ஆகுபெயர். கோகநதன்—பிரமன். சித்திக் கோகநதன் என்றிருக்க வேண்டுவது சித்தி கோகநதன் என ஒற்றுமிகாது நின்றது வடநூன் முடிபு.

வாழ்வு குலவுபதம் என்பது, வாழ்வாலழகு பெற்ற பதமென்னும் பொருள் குறியாது, வாழ்வாகிய குணிக்குக் குணமாகிய திப்பியமகளிர் முதலிய பொருட் சிறப்புக்களாலழகுபெற்ற பதமென்னும் பொருள் குறித்தலின் ஒற்றுமை பற்றிக் குணம் குணியாக வுபசரிக்கப்பட்டது. பொருட் சிறப்புக்கள்—குணம். வாழ்வு—குணி. வாழ்வு வாழ்க்கை என் பன ஒரு பொருட் சொற்கள். அது குணியாதல், ‡ "வாழ்க்கை வழி யெஞ்சலெஞ்ஞான்றுமில்" என்பதனானுமறிக. (சு)

இரண்டாமதிகாரணம் முடிந்தது.

---

# மூன்றும் அதிகரணம்.

## ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க உள்ளத்தே புகுந்தளிப்ப னூனமெலாமோட என்பது.

பிரபஞ்ச வைராக்கியம் நிலைப்பதற்குச் சிவோகம் பாவனை செய்ய வேண்டுமெனக் கூறுகின்றது.

† திருவாசகம், கோயிற்றிருப்பதிகம், சு-க.
‡ திருக்குறள், இல்வாழ்க்கை. சு-ச.

கண்டவிவை யல்லேனென் றகன்று காணுக்
கழிபரமு நானல்லே னெனக்கருதிக் கசிந்த
தொண்டினொடு முளத்தவன்றா னின்றகலப் பாலே
சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்வே றின்றி
விண்டகலு மலங்களெல்லாங் கருடதியா னத்தால்
விடமொழியு மதுபோல விமலதையு மடையும்
பண்டைமறை களுமதுநா னேனென்று
பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே.

(கொ - ரு) கண்ட இவை நானல்லேனென்று, காணுக்கழிபரமும் நான் அல்லேன் என அகன்று, உளத்து அவன்றான் நின்ற கலப்பாலே கருதி கசிந்த தொண்டினொடும் சோகமெனப்பாவிக்க, கருடதியானத்தால் விடம் ஒழியுமது போல, வேறு இன்றித் தோன்றுவன். மலங்களெல் லாம் விண்டு அகலும். விமலதையும் அடையும்.

(போ - ரை.) உயிரானது தன்னை உடம்பென்றும், அவ் வுடம்பென்ற அறிவு நீங்கியவிடத்துப் பிரமமென்றும் இவ்வாறு விபரீதமாக உணரும். அவ்வாறுணராமல் சுட்டியறியப்பட்ட உடம்பு முதலியன தன்னின் வேறாதலால் தானன்று என்றும், சுட்டியறியப்படாது மேம்பட்டு நின்ற பதிப்பொருள் சுட்டியறி யாது ஆதலின் அதுவும் நானன்று என்றும், இவ்வாறாதலின் பாசத்திற்கும், பிரமத்திற்கும் தான்வேறென்றுங் கண்டு, தன் னின் வேறாக அப்பாசத்தை மேற் கூறியவாறு சிவஞானத்தால் நீக்க வேண்டும். நீக்கி ஏனைப்பதிப் பொருள் பொருட்டன்மை பற்றித் தன்னின் வேறாயினும், கண்ணொளியும் ஆதித்தனொளி யும் போலத் தான் வியாப்பியமாய் அடங்கியும், பதி வியாபகமாய் மேம்பட்டும் வேற்றுமையின்றி ஒற்றுமைப்பட நிற்றலையுணர்ந்து, அவ்வாறு நிற்கும் பதிப்பொருளிடத்துக் கலந்து நிற்றற்குரிய தனது கசிந்த தொண்டினையும், தன்னிடத்துப் பதிப்பொருள் கலந்திருத்தலையும் நோக்கி, முன்போல் முனைப்பின்றி அருள்

வழியில் நின்று சிவமே தானெனச் சிவோகம்பாவனை செய்ய வேண்டும். செய்யின் கருடபாவனை செய்யும் மாந்திரீகனுக்கு அக்கருடனாகிய அதி தெய்வம் பிரிப்பின்றித் தோன்றி விடத்தை நீக்கித் தெளிவு செய்யுமாறு போல, சிவபிரானும் அவ்வான்மாவிற் பிரிப்பின்றி அத்துவிதமாய்த் தோன்றி மலங்கள் முழுவதும் நீக்கிச் சுத்தமாகும்படி செய்வன். பழைய வேதாந்தமும் அது நான் ஆனேன் என்று பாவிக்கச் சொல்வது இச்சிவோகம்பாவனையையேயாம். (எ - று)

யாதானுமொன்றைப்பற்றி நிற்பதன்றித் தனித்து நிற்கமாட்டாத ஆன்மா பாசத்தை நீக்கியவிடத்துச் சிவோகமபாவனை செய்யவில்லையாயின் மீண்டும் பாசத்தைப்பற்றுமென்பது கருத்தென வறிக.

இச்சிவோகம்பாவனை இன்றியமையாச் சிறப்பினையுடையதென்பதுணர்த்த வேண்டி, சாதிக்குமுறை கூறும் இச்சூத்திரத்தில் "மலங்களெல்லாம் விண்டகலும் விமலனையுமடையும்" எனப்பயனும் உடன்கூறினர். கழிபரமும் என்ற உம்மை பாசமேயன்றி என இறந்தது தழுவிற்று. முன்னர்ப்பரம் என்றெடுத்து, பின்னர் அவன் எனச்சுட்டுதல் திணை மயக்கம். பரம்—அஃறிணை. அவன்—உயர்திணை.

தொண்டாவது, சார்ந்ததன் வண்ணமாமியல்புடையவுயிர் மேம்பட்ட பரமும் நானல்லேன் எனக்கருதியவிடத்துக் கருவிகளினின்று நீங்கின நிலையில் நான் பிரமம் என முனைத்து நின்றவாறு போல முனைத்தலின்றி அப்பரம் பொருளின் அருளில் அடங்கி அதன் வழியாய் நிற்றல்.

தொண்டு, உலகத்தொண்டு சிவத்தொண்டு என இருவகைப்படும். அவற்றுள், உலகத்தொண்டு தற்போத முனைத்து நின்று செய்யப்படுவது. அதனை நீக்குதற்குக் கசிந்ததொண்டு எனத் தொண்டை விசேடித்தார். கசிதல்—தற்போத முனைப்பில்லாமை. சிவமும், ஆன்மாவும் பொருட்டன்மையால் வேறாயவிடத்தும் ஆன்மா சிவனைத் தானெனப் பாவித்தற்குரிய இயைபு இருவரிடத்தும் உண்டென்பதை விளக்கவேண்டி "கசிந்த தொண்டினொடு முளைத்தவன்றானின்ற கலப்பாலே" என்றார். எனவே, இறைவன் உயிரோடுகலந்து நிற்றலும், உயிர் இறைவனோடு கசிந்து நிற்றலும், சிவோகம் எனப்பாவித்தற்குரிய இயைபென உணர்க. இதனால் சிவம் உயிரோடு கலந்து நிற்றல் என்று முளதாயினும் உயிரினிடத்துக் கசிந்து நிற்றல் நிகழவில்லையாயின், விளங்கப்படாதென்பதறிக. கரு—

பாவனையை எடுத்துக்காட்டியதும், சிவமும் உயிரும் வேறாகவும், உயிர் சிவனைப்பாவித்தலால் சிவனாகுமோ என்னும் ஐயம் நீக்குதற்கு. எனவே, கருடன் நான் எனப்பாவிக்கும் அத்துவிதபாவனைக்கு மந்திரத்தினது ஆற்றலும், அவ்வாற்றல்வழி நின்று பாவிக்கும் மாந்திரீகனது ஆற்றலும் ஒருதலையான் வேண்டப்பட்டு நிலைபெறுமாறு போல, சிவம் நான் எனப் பாவித்து நிற்கும் அத்துவிதபாவனைக்கு இறைவன் கலப்பும், உயிரின் கசிவும் ஒரு தலையான் வேண்டப்படுமென்பது பெறப்படும். அதனால் கசிவு செய்தற்குரிய ஆன்மாவினது ஞானக்கிரியைகளும், கலத்தற்குரிய இறைவனது ஞானக்கிரியைகளும் சிவோகம்பாவனையிற் கேடின்றி நிலை பெறுமென்பதும் அருத்தாபத்தியாலுணர்ந்து கொள்க. ஈண்டு அருத்தாபத்தியாமாறு:—இருவருடைய ஞானக்கிரியைகளும் நிலைபெற்றாலன்றித் தொண்டு செய்தலும், கலந்து நிற்றலும் கூடாமையின் நிலைபெறுதலுண்டென்றுணர்வது. இக்கருத்துப்பற்றியே * "உன்றன் குலமிரண்டென் குலமிரண்டும் குறுகிடாவண்ண மின்பமாயென்பாற் கூத்தையுங்கொண்ட தெப்படிதான்" என வியந்து கூறியதாமென்க. குலம்—ஞானக்கிரியை.

பதியும், ஆன்மாவும் இவ்வாறு பிரிப்பின்றி நிற்கும் அத்துவித நிலையையுணராது ஒரு பொருள் மற்றொரு பொருளாதல் எவ்விடத்துமில்லாமையால், அது நான் ஆனேன் என்னும் மகாவாக்கியத்திற்கு ஒன்று கெட்டுப்பிறிதொன்றாம் எனப்பரிணமவாதங் கூறுவர் ஒரு சாரார். இனி அம் மகாவாக்கியத்திற்கு அதுவென்றதும் நானென்றதும் விட்டுவிடாத இலக்கணையெனக் கொண்டு கேவலாத்துவிதம் கூறுவர் மற்றொருசாரார். விட்டுவிடாத இலக்கணையாவது, பிரமசாரியாய் மதுரையில் இருந்தவனே சந்நியாசியாய்க் காசியிலிருக்கின்றான் என்னுமிடத்து, ஆச்சிரமத்தையுட், இடத்தையும் தள்ளில் ஒருவனேயாதல் போல, ஜீவ உபாதி, ஈசுவர உபாதிகளைத்தள்ளினால் பிரமம் ஒன்றே எனக்கூறுதல். இவர் அத்துவிதச் சொல்லிற்கு இரண்டாவது பொருள் ஒன்றுமில்லையென்று கொண்டதால் கேவலாத்துவிதி எனப்பட்டார். ஒன்றுமில்லாத நிலை கேவலம். இனி அம்மகாவாக்கியத்திற்கு அது என்னும்பதி பல பேதப் படினும், அப்பேதமெல்லாம் ஆகுபெயரினால் ஒரு கடவுளையே குறிக்குமென்பர் பிறிதொரு சாரார். இவர் கடவுளின் வேறாகிய ஆன்மாவையும், பாசத்தையும் ஒப்புக்கொண்டு கடவுள் ஒன்றே என்பது அத்துவிதச்சொல்லின் பொருளெனக் கொண்டாராதலின் விசிட்டாத்துவிதி எனப்பட்டார். விசிட்டம்—விசேடண விசேடியத்தின் கூட்டம். விசே

* உலகுடைநாயனார், கழிநெடிலடியாசிரிய விருத்தம். செ—ச,

டணம் பசுபாசங்கள். விசேடியம் விட்டுணு. விசிட்டம் நாராயணன். நாரம் விசேடணம். அயனன் விசேடியம். நாராயணனென்பதுவிசேடண விசேடியங்களின் கூட்டமாதல் காண்க. இவ்வாறு கூறுவாரெல்லாம் வேதாந்தத்திற் கூறும் அது நான் ஆனேன் என்னும் மகாவாக்கியத்தையும, அவ்வாறுதற்குரிய சம்பந்தத்தைவிளக்கும் அத்துவிதச் சொல்லையும் பிரமாணமாகக் கொண்டுள்ளாராதலின், அவ்வாக்கியங்கட்கு அவர் கொண்ட பொருள்கள் உண்மையல்லவென்பதை உணர்த்துதற்குப் "பண்டை மறைகளுமது நானானேனென்று பாவிக்கச் சொல்லுவது இப்பாவகத்தைக் காணே" என்றருளிச் செய்தவாறறிக.

ஆகவே, வேதாந்தமும் சித்தாந்தமும் உண்மையாய் நோக்குவார்க்கு அது வென்னும் பதிப்பொருளொன்றும், நானென்னும் பசுப்பொருளொன்றும் ஆக இருபொருளுண்டென்பதும், ஆனேன் என்றமையால் ஆகவொட்டாது தடைசெயது நின்ற ஏனைப்பாசப் பொருள் பிரிக்கப்படுவது போல் அவ்விருபொருளும் பிரிக்கமுடியாதென்பதும், ஆதலால் பிரிக்கக்கூடிய பாசத்தைப்பிரித்துப் பிரிக்க முடியாத பதிப்பொருளைச், சார்ந்த பொருளின் தன்மையை யடைதற்குரிய ஆன்மா தானாகப்பாவிக்கில் பதியேயாகுமென்பதும் நன்கு விளங்கும்.

இவ்விடத்துக் கருடன் என்றது கருடனுக்கதி தெய்வமாகிய மந்திர சொரூபத்தை.

இச்செய்யுளால், அடுத்த செய்யுளிற் கூறப்படும் திருவைந்தெழுததை விதிப்படி உச்சரிப்பவர்க்கு வேண்டப்படுவதாகிய சிவோகம்பாவனை கூறப்பட்டது. (எ)

சிவோகம்பாவனை நிலைப்பதற்குப் பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்கவேண்டுமெனக் கூறுகின்றது.

**அஞ்செழுத்தா லான்மாவை யரனுடைய பரிசு**
**மரனுருவு மஞ்செழுத்தா லமைந்தமையு மறிந்திட்**
**டஞ்செழுத்தா லங்ககர நியாசம் பண்ணி**
**யான்மாவி னஞ்செழுத்தா லிதயத் தர்ச்சித்**
**தஞ்செழுத்தாற் குண்டலியி னனலை யோம்பி**
**யணைவரிய கோதண்ட மணைந்தருளின் வழிநின்**
**றஞ்செழுத்தை விதிப்படியுச் சரிக்கமதி யருக்க**
**னணையரவம் போற்றோன்று மான்மாவி லரனே.**

(கோ - ரு.) (ஆன்மா அரனுக்கு உடைமையாம் பரிசும்) ஆன்மாவை அரனுடைய பரிசும் அஞ்செழுத்தால் (அறிந்திட்டு), அரனுருவும் அஞ்செழுத்தால் அமைந்தமையும் அறிந்திட்டு, அங்ககரநியாசம் அஞ்செழுத்தாற்பண்ணி, இதயத்து ஆன்மாவின் அஞ்செழுத்தால் அர்ச்சித்து, குண்டலியின் அஞ்செழுத்தால் அனலை ஓம்பி எனவும், அரனே ஆன்மாவிற்றோன்றும் மதியருக்கன் அணையரவம் போல் எனவுங் கூட்டுக.

**(போ - ரை.)** மேற்கூறியவாறு பதியினிடத்துத் தான் கசிந்த தொண்டினொடும், பதி தன்னிடத்துக் கலந்தும் இருக்கின்றதனால், சிவோகமெனப் பாவிக்குமிடத்து அப்பாவனை நிலைத்தற்காகத் தானாகிய ஆன்மா அரனுக்கு உடைமையாந் தன்மையும், ஆன்மாவை அரன் உடையனுமாய் நிற்கின்ற தன்மையும் ஐந்தெழுத்து ஓதும் முறையில் வைத்தறிந்து அவன் திருமேனியும் ஐந்தெழுத்தா லமைந்திருப்பதை யுணர்ந்து, அடியானும், உடையானுமாய் நிற்கின்ற அம்முறையே அங்க நியாச, கரநியாசங்களும் அவ்வைந்தெழுத்தாற் செய்துகொண்டு இருதயத்தில் ஆன்மாவில் ஐந்தெழுத்தால் இறைவனைப் பூசித்து, உந்தியில் அவ்வைந்தெழுத்தால் ஓமஞ்செய்து, அணைதற்கரிய புருவநடுவைப் பொருந்தி இறைவன் திருமேனியைத் தியானித்து, அவனருள் வழியாக நின்று, அவ்வைந்தெழுத்தை மானதமாக உச்சரிக்க வேண்டும். இவ்வாறு சிவோகம்பாவனையும், ஐந்தெழுத்து மந்திரமும், அகத்தே செய்யும் பூசை, ஓமம், தியானம் என்னும் கிரியையும் ஆகிய இம்மூன்றனும் சலனமின்றி நின்றுகொண்டு அவ்வைந்தெழுத்தை உச்சரிக்கப் பெறுவார்க்குப் பசுபாசங்கள் போல, பாசஞான பசுஞானங்கட்கு விளங்கித் தோன்றாத அப்பதிப்பொருள், ஆன்மாவின் மாட்டு விளங்கித்தோன்றும். தோன்றுதல் எதுபோலுமெனின், நவக்கிரகங்களுள் ஏனைய கிரகங்கள் போலத் தனித்து விளங்காத இராகு கேதுக்கள் கிரகணகாலத்தில் ~~சூரியசந்திரா~~ சந்திரசூரியர் மாட்டுவிளங்கித் தோன்றுவது போலாம். (எ-று.)

ஆன்மாவை அரனுடைய பரிசும் என்றதிலுள்ள உம்மையால் ஆன்மா அரனுக்கு உடைமையாம் பரிசும் வருவிக்கப்பட்டது. அரனுருவும் என்ற

உம்மை உயர்வு சிறப்பு. அரனுருவ மஞ்செழுத்தாலமைந்தமையு மறிதல் இதயத்திலான்மாவில் அவ்வாறுகண்டு அருச்சித்தற் பொருட்டு. அஞ்செழுத்தால் அரனுருவம் அமைந்திருத்தலை உண்மை விளக்கத்திற் காண்க.

இனி, பரிசும், உருவும், அமைந்தமையும் என்னும் உம்மையை எண்ணும்மையாக்கி, அஞ்செழுத்தாலான்மாவை அரனுடைய பரிசும், அரனுருவும், அறிந்திட்டு எனப்பதச் சேதஞ்செய்து, ஆன்மாவையும், அரனுடைய பரிசாகிய திருவருளையும், சிவசொரூபத்தையும் அஞ்செழுத்தாலுணர்ந்து என்றும், அஞ்செழுத்தாலமைந்தமையும் அறிந்திட்டு என்பதற்கு, அமைந்த எனவும், மை எனவும் பிரித்து, மை என்பதற்கு மலம் எனப்பொருள் கொண்டு அமைந்தொழிந்த மலங்களையும் ஐந்தெழுத்தானுணர்ந்து என்றும், உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம் முதலியவற்றுள் ஓதியவாறுபற்றியுரைத்தலுமொன்று. அமைதல்—வேண்டாமை. * “கற்பனவுமினியமையும்” என்றாற்போல. இனியமையும் என்ற திருவாக்கிற்கு இனி வேண்டாம் என்பதே பொருளென்பது, “உற்றாரை யான் வேண்டேன், ஊர்வேண்டேன், பேர்வேண்டேன், கற்றாரை யான் வேண்டேன்” என முன்னர்க் கூறுதலாலும், “குற்றாலத்தமர்ந்துறையும் கூத்தாநின் குரைகழற்கே கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே” எனப் பின்னர்க் கூறுதலானும் துணியப்படும்.

இவ்விடத்து மலம் என்றது ஆணவதிரோதங்களை. இவை தீக்கையில் கழிந்தொழிந்தமைபற்றி ஐந்தெழுத்தாலறிந்து என வேறுவைத்தெண்ணப்பட்டன. அணைந்து தியானித்து என இருக்கவேண்டுவது அணைந்து எனநின்றது.

விதிப்படி உச்சரிக்கவில்லையாயின் பயன்படாதென்ப துணர்த்த வேண்டி முதற் செய்யுளிற் கூறியதுமன்றி இவ்விடத்தும் விதிப்படி என்றார்.

விதியாவது, ஐந்தெழுத்தின் பொருள் சிகரம் முதலாக முறையே, சிவம், அருள், ஆன்மா, திரோதை, மலம் என ஐவகைப்படும்; இவற்றுள் மலம் திரோதையை நீக்கி ஆன்மா அருளால் சிவனுடன் கலக்கு முறையை உணர்த்துவதாய ஐந்தெழுத்து முறையாம். அஃதாவது யகாரம் நடுநிற்க சிகரவகரங்கள் முறையே முன்னும் பின்னுமாய் நிற்றல். அது சிவோகம் பாவனையை உணர்த்துவதாம். அம்மந்திரத்தின் உச்சரிப்பு முறையைக் குருவினிடத்து உபதேச வாயிலாக அறிக.

---

* திருவாசகம், திருப்புலம்பல்: செ. ௩.

பசு விளங்கித் தோன்றுதலாவது:—யான் இதனை அறிந்தேன், அறிவின்றிலேன் என்றவிடத்து, அறிந்தேன் அறிவின்றிலேனெனத் தன்னைப் பசு ஞானத்தாலுணர்தல். பாசம் விளங்கித் தோன்றுதலாவது:—இதனை னைக்கருவி வாயிலாய் உணர்தல்.

இச்செய்யுளால் சிவோகம்பாவனைக்கு வேண்டப்படும் மந்திரம் பஞ்சாக்கரமென்பதும், வேண்டப்படுங்கிரியை அகத்தே பூஜை, ஓமம், தியான முதலியன செய்தல் என்பதும் கூறப்பட்டவாறு அறிக. (அ)

பஞ்சாக்கரத்தால் இதயத்தில் இறைவனைப் பூசிக்கு முறை இவ்வாறு என வகுத்துக் கூறுகின்றது.

நாட்டுமித யந்தானு நாபியினி லடியாய்
ஞாலமுத றத்துவத்தா லெண்விர னாளத்தாய்
மூட்டுமோ கினிசுத்த வித்தைமல ரெட்டாய்
முழுவிதழெட் டக்கரங்கண் முறைமையினி னுடைத் [தாய்க்
காட்டுகம லாசனமே லீசர்சதா சிவமுங்
கலாமூர்த்த மாமிவற்றின் கண்ணாகுஞ் சத்தி
வீட்டையருள் சிவன்மூர்த்தி மானுகிச் சத்தி
மேலாகி நிற்பனிந்த விளைவறிந்து போற்றே.

(கோ - ௬.) நாபியினில் ஞாலம் அடியாய் முதல் சத்துவத்தால் எண்விரல் நாளத்தாய் மூட்டு மோகினி சுத்தவித்தை மலரெட்டாய் முழு இதழ் எட்டு அக்கரங்கள் முறைமையினில் உடைத்தாய் ஈசர் சதாசிவமும் கலாமூர்த்தமாம். சத்தி இவற்றின் கண்ணாகும். நாட்டும இதய கமலந்தானும் காட்டு ஆசனம். மேல் சத்தி மேலாகி வீட்டையருள் சிவன் மூர்த்தி மானுகி நிற்பன். இந்த விளைவு அறிந்துபோற்றே.

(போ - ரை.) மேற்கூறியவற்றுள் இதயத்தில் இறைவனைப் பூசிக்குமுறை எவ்வாறெனின், உந்தியில் பிருதிவி தத்துவம் கிழங்காகவும், ஏனைய அப்பு முதலிய இருபத்துமூன்று தத்துவங்களும் அவ்வுந்தியினின்று தோன்றி எண் விரலளவாயுள்ள தண்டாகிய நாளவடிவாகவும், பொருந்திய அசுத்தமாயையின் காரியமாகிய வித்தியா தத்துவங்கள் ஏழும், சுத்த தத்துவத்தில்

சுத்த வித்தை ஒன்றும் ஆக எட்டுத் தத்துவங்களும் எட்டு இதழ் வடிவாகவும், சிதைவில்லாத அவ்விதழ் எட்டும் பிரணவ முதலிய எட்டு அக்கரங்களையுடையதாகவும், ஈசுவரம், சதாசிவம் என்னும் இரண்டு தத்துவமும் அறுபத்துநான்கு பேதப்படுமாதலால், அறுபத்துநான்கு கேசரமாகிய பூந்தாது வடிவமாகவும், சத்தி தத்துவம் அக்கேசரங்களுக்குள்ளாகிய கொட்டையென்னும் பொகுட்டு வடிவமாகவும், அச்சத்தி தத்துவமே அப்பொகுட்டிற் காணப்படும் ஐம்பத்தொரு அக்கரமாகிய பீசவடிவாகவும் உடைய நாட்டப்படும் இருதய கமலம, விளங்கப்பெற்ற ஆசனமாம். அவ்வாசனத்தின்மேல் சத்தியே வடிவாகவும், அவ்வடிவத்தில் வீடு தருகின்றவனாகிய சிவபிரான் வடிவத்தை உடையவனாகவும் நிற்பன். இம்முறையை அறிந்து பூசிப்பாயாக. இவ்வாறு செய்யும் பூசை அந்தரியாக பூசையெனப்படும். (சூ-று.)

சிவதத்துவஞ் சத்தித்தத்துவங்கட்குத் தம்முள் வேறுபாடு சிறிதாதல் பற்றிச் சிவதத்துவத்தை வேறெண்ணாது சத்தி தத்துவத்துளடக்கிக் கூறினார். சததிமேலாகி என்றதனால் சத்திமூர்த்தியென்பதூம பெறப் பட்டது. மூர்த்தி–வடிவம்.

மேல் இறைவன்வடிவம் ஐந்தெழுத்தெனக்கூறி, அதன்பின் ஆன்மாவில் அர்ச்சிக்க வேண்டுமென்று கூறி, இவ்விடத்துச் சத்திவடிவென்றதன் கருத்தென்னையெனின், இறைவனுக்கு ஐந்தெழுத்து தூலவடிவம்; ஆன்மா சூக்குமவடிவம்; சத்தி அதிசூக்குமவடிவம் என்பது அறிவித்தற்கு இவ்வாறு கூறினார். ஐந்தெழுத்து தூலவடிவமாவது எவ்வாறெனின், அவ்வைந்தெழுத்தும் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளையும் குறிக்கும். குறிக்கவே, பசு பாசங்களோடு கலந்திருக்கும் அந்நிலை இறைவனுக்குத் தூலம். அப்பசுபாசங்களுள் ஆன்மாவிற் கலந்து நிற்கும் இறைவன் நிலை சூக்குமம். சிற்சததியிற் கலந்து நிற்கும் இறைவன் நிலை அதிசூக்குமம். சத்தியினின்று பிரிந்து தோன்றுதல் இல்லையாதலால் அதற்குமேல் நிலையில்லை.

அண்டமோரணு வெனும்படி பெரிதாய்க் காரணங்களெல்லாங்கடந்து நின்ற அவ்விறைவனே, அணுவோரண்டமாம்படி சிறிதாய் ஆன்மாக்களுய் தற்பொருட்டு உடம்பினுள்ளும் அதிசூக்குமமாயிருக்கின்றான். அதனையறிந்து அகத்தே பூசை செய்யாதவழிப்புறப் பூசையாற் பயனில்லையென்ப

துணர்த்த வேண்டி "இந்தவிளை வறிந்து போற்றே" என்றார். பூசை கூறவே தன்னினமுடித்தல் என்னும் உத்தியால், ஓமித்தல் தியானித்தல் களினும் இவ்வாறே உணர்ந்து செய்யப்படுமெனக் கொள்க. (௯)

அந்தரியாக பூசைக்கு வேண்டிய பூசாதிரவியங்கள் சேகரிக்கும் முறை இதுவெனவும், இப்பூசை இன்றியமையாது வேண்டப்படுமெனவும் கூறுகின்றது.

அந்தரியா கந்தன்னை முத்திசா தனமா
வறைந்திடுவ ரதுதானு மான்மசுத்தி யாகுங்
கந்தமலர் புகையொளிமஞ் சனமமுது முதலாக்
கண்டனவெ லாமனத்தாற் கருதிக் கொண்டு
சிந்தைதனி லர்ச்சிக்கச் சிவனைஞா னத்தாற்
சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க
வந்திடுமவ் வொளிபோல மருவியர னுளத்தே
வரவரவந் திடுவன்பின் மலமான தறுமே.

(கோ - டு.) கந்தம், மலர், புகை, ஒளி, மஞ்சனம், அமுது முதலாக் கண்டன வெலாம் மனத்தால் கருதிக்கொண்டு சிந்தைதனில் சிவனை ஞானத்தால் அர்ச்சிக்கச் சிந்திக்கச் சிந்திக்க தர்ப்பணத்தை விளக்க வந்திடும் அவ்வொளிபோல, அரன் உளத்தே மருவி வர வர வந்திடுவன் பின் மலமானதறுமே. அதுதானும் ஆன்மசுத்தியாகும்- அந்தரியாகந்தன்னை முத்திசாதனமா அறைந்திடுவர்.

(போ - ரை.) மேற்கூறிய அந்தரியாக பூசை செய்புமிடத்து, சந்தனம், புட்பம், தூபம், தீபம், திருமஞ்சனம், திருவமுது முதலிய பூசாதிரவியங்களெல்லாம் மனத்தால்கற்பித்துக்கொண்டு, அபிஷேகம், அலங்காரம், தூபம், தீபம், ஆராதனை, நைவேத்தியம் முதலியனவும் மனத்தாற்செய்து ஆன்மாவினிடத்தில் சிவனை ஞானத்தால் அர்ச்சித்தலும், ஓமித்தலும், தியானித்தலும் செய்ய வேண்டும். அவ்வாறு செய்யச் செய்யக் கண்ணுடிக்குப் பொடியிட்டு விளக்க விளக்க ஒளிமேலிட்டு மாசுநீங்குமாறு போல, அச்சிவம் உள்ளத்தில் மேலிட்டு மேலிட்டு விளங்கித் தோன்றும். தோன்றவே, பின்னர் மலம்பற்றறக்கழியும். அங்ஙனம் கழிதல்

ஆன்மசுத்திக்கு ஏதுவாகும். ஆதலால் இப்பூசையை முத்திசாதன மாக அறிக என்பர். (எ-று.)

ஆன்ம சுத்திக்கேதுவாகும் என்பதனை ஆன்ம சுத்தியாகும் என ஒற்றுமைபபற்றிக் காரணத்தைக் காரியமாக உபசரித்தார். மல மறுதல் காரணம். ஆன்ம சுத்தி காரியம். அது தானும் என்றவிடத்து உம்மை சிறப்பு. கந்தமலர் புகையொளி மஞ்சன மமுது முதலாக் கண்டனவெலா மனத்தாற் கருதிக்கொண்டு சிந்தை தனிலர்ச்சிக்க என்ற அநுவாதத்தால், அவற்றை அங்ஙனங் கற்பித்துக்கொள்ள வேண்டுமென்பது பெறப்பட்டது. கருதிக்கொண்டு என்பது அநுவாதம்.

இந்த அந்தரியாக பூசையினையே, திருநாவுக்கரசு சுவாமிகள் "காயமே கோயிலாகக் கடிமனமடிமையாக, வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக, நேயமே நெய்யும் பாலா நிறையநீ ரமையவாட்டிப், பூசனை யீசனுர்க்குப் போற்றவிக் காட்டினோமே" எனவும், "உடம்பெனு மனை யகத்து உள்ளமே தகழியாக, மடம்படு முணர் நெய்யட்டி யுயிரெனுந்திரி மயக்கி, யிடம்படு ஞானத்தீயா லெரிகொள விருந்து நோக்கிற், கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே" எனவும் தமிழ் மறையிற கூறியருளிய வாறு மென்க. சிந்திக்கச் சிந்திக்க என்றவற்றுள் முன்னையது நினைதல் பின்னையது தியானித்தல்.

இவையிரண்டு செய்யுளானும் அந்தரியாக பூசை செய்யுமுறையும், அது சிவோகம் பாவனைக்கு ஒருதலையான் வேண்டப்படுமென்பதும் கூறப்பட்டன. (௧0)

சிவோகம் பாவனைக்குப் புறப்பூசையும் அங்கமெனவும். அப் பூசை செய்யும் முறைமை இவ்வாறெனவும் கூறுகின்றது.

புறம்பேயு மரன்கழல்கள் பூசிக்க வேண்டிற்
பூமரத்தின் கீழுதிர்ந்த போதுகளுங் கொண்டு
சிறந்தாருஞ் சீர்ச்சிவனை ஞானத்தா லங்குச்
சிந்திக்கும் படியிங்குச் சிந்தித்துப் போற்றி
யறம்பாவங் கட்குநா மென்கடவே மென்று
மாண்டவனைக் கண்டக்கா லகம்புறமென் றோதே
திறம்பாதே பணிசெய்து நிற்கை யன்றோ
சீரடியார் தம்முடைய செய்தி தானே.

(கோ-ரு.) சிறந்து ஆரும் சீர்ச்சிவனை ஞானத்தால் அங்குச் சிந்திக்கும்படி புறம்பேயும் இங்குச் சிந்தித்து, வேண்டின் பூமரத்தின் கீழ் உதிர்ந்த போதுகளுங் கொண்டு அரன்கழல்கள் போற்றிப் பூசிக்க; ஆண்டவனைக் கண்டக்கால் அறம் பாவங்கட்கு நாம் என் கடவே மென்றும், அகம் புறம் என்றதே திறம்பாதே பணிசெய்து நிற்கையன்றோ சீரடியார் தம்முடைய செய்திதானே.

(போ - ரை.) (மேற் கூறியவாறு சிவபெருமானை அகத்துப் பூசித்தலே யன்றிப் புறத்துப் பூசித்தலும் அவனை அடைவதற்கு அங்கமாதலின், அப்புறப் பூசையினையும் செய்க. செய்யுங்கால்,) சிறந்து விளங்கும் புகழினையுடைய அம்முதல்வனை ஞானத்தால் அகத்து ஆன்மாவில் பூசித்ததுபோல, புறத்தே ஒருவடிவத்தில் இறைவனைச் சிந்தித்துப், பூசாதிரவியங்கள் வேண்டுமாயின், (தான் வருந்துதலும், பிறரைவருத்துதலுமின்றி) மரத்தின் கீழுதிர்ந்த பூக்களும், யாறு குளம் முதலியவற்றுள் உளதாகிய நீரும், யாசகமின்றி வந்த அமுது முதலியனவுங் கொண்டு அம்முதல்வன்றிருவடிகளைப் பூசிக்கக்கடவர். பூசிக்குங் காலத்து அகத்தாவது, புறத்தாவது ஒரு குறியின்கண் இறைவனைக் காணப் பெறுங்கால் அகம், புறம் என்னும் வேற்றுமையால் இவ்வுலகத்தார் போலப் பூசித்தலும், புண்ணிய பாவங்கட்கு யாம் என் செயக் கடவேமெனச் சிந்தித்தலும், அதுவேறு, இதுவேறு என்னும் வேற்றுமையுமின்றி, எவ்விடத்துஞ் சிவனையே பார்க்குந் தன்மையராய் எச்செயலும் அவனருள் வழியே செய்து நிற்றல் மெய்யடியார் செய்தியாகும். (எ-று.)

புறம்பேயும் என்னும் உம்மை அகத்தேயமன்றி என இறந்தது தழுவிற்று. போதுகளும் என்னும் உம்மை, நீர் அமுது முதலியனவுமென எதிரது தழுவிற்று.

இச்செய்யுளால் புறப்பூசையும் சிவோகம் பாவனைக்கு அங்கமாதல் கூறப்பட்டது. (கக)

இப் புறப்பூசை, (அகப்பூசை இரண்டினுள்ளும்) அகப்பூசையே விசேடமெனக் கூறுகின்றது.

இந்தனத்தி னெரிபாலி னெய்பழத்தி னிரத
 மெள்ளின்க ணெண்ணெயும்போ லெங்குமுள னிறைவன்
வந்தனைசெய் தெவ்விடத்தும் வழிபடவே யருளு
 மலமறுப்போ ரான்மாவின் மலரடிஞா னத்தாற்
சிந்தனைசெய் தர்ச்சிக்கச் சிவனுளத்தே தோன்றித்
 தீயிரும்பைச் செய்வதுபோற் சீவன் றன்னைப்
பந்தனையை யறுத்துத்தா னாக்கித்தன் னுருவப்
 பரப்பெல்லாங் கொடுபோந்து பதிப்பனிவன் பாலே.

(கோ - டு.) இறைவன் எங்கும் உளன் எவ்விடத்தும் வந்தனை செய்து வழிபடவே அருளும் எனவும், சிவன் உளத்தே தோன்றிப் பந்தனையை அறுத்து எனவும், இவன் பாலே பதிப்பன் எனவுங் கூட்டுக.

(பொ - ரை.) இறைவன் உலகத்தார்க்கு விறகினிடத்துத் தீப்போலச் சிறிதுந் தோன்றாது மறைந்து உடனாயும், மந்ததர மல பாகமுடைய சரியையாளர்க்குப் பாலில் நெய்போல ஒருவாற் றாற்றோன்றியும் தோன்றாது மறைந்து உடனாயும், மந்தமல பாக முடைய கிரியையாளர்க்குப்பழத்தில் இரதம் போல உய்த்துணரு மிடத்துத் தோன்றுவதாய் உடனாயும், தீவிர மலபாகமுடைய யோகிகளுக்கும், தீவிர தர மலபாகமுடைய ஞானிகளுக்கும் எள் ளின்கண் எண்ணெய் போல விளங்கித் தோன்றினும் பிரித்தறி யப்படாது உடனாயும் நிற்பன். இவ்வாறு அகம் புறம் என்ற பிரி வின்றி இறைவன் எவ்விடத்துமுளனாதலால், மேற்கூறியவாறு அகத்தாதல் புறத்தாதல் எவ்விடத்து வழிபடினும் அநுக்கிரகிப்ப னென்பதே தேற்றம். அவ்வாறாயினும், பண்டைப் பயிற்சி வயத் தால் வாதனாமலம் வந்து தாக்கப் பெறுவோர் அம்மலத்தை நீக் கும் பொருட்டு, அம்மலத்திற் கிருப்பிடமாகிய ஆன்மாவினிடத் தில், பதிஞானத்தால் சிவனை மேற்கூறியவாறு வழிபடுதலாகிய அகப்பூசை, அம்மலம் நீங்குதற்குரிய இயைபு நோக்கி விசேட மாதலின் ஒருதலையான் வேண்டப்படும். அவ்வாறு அகப்பூசை செய்யின், சிவன் ஆன்மாவினிடத்து விளங்கித்தோன்றி வாசனை யைப் பற்றறத்துடைத்து இரும்பைத் தன் வண்ணமாக்குந் தீப்

போலச் சீவனைத் தன் வண்ணமாக்கித் தனது சர்வஞ்ஞத்துவாதி எண்குணங்களாகிய பேரானந்தப் பெருஞ் செல்வ முழுதும் இவனுடையதாகச் செய்தருளுவன். (எ-று.)

எங்குமுளனிறைவன் என்றது எவ்விடத்தும் வழிபடவேண்டிய யருளுதற்குரிய வியைபு விளக்குதற்கும், மலமறுப்போரென்றதும், தோன்றியறுத்தாக்கிப் பதிப்பனென்றதும், ஆன்மாவிற் சிந்தனை செய்தர்ச்சித்தற்குரிய விசேட வியைபு விளங்குதற்கும ஏதுவாய் நின்றன. எனவே, எங்குமுளனாதலின் எவ்விடத்தும் வழிபடுக; மலமறுப்போராதலானும், தோன்றியறுத்தாக்கிப் பதிப்பனாதலானும் ஆன்மாவிலர்ச்சிக்க என்றவாறாம்.

தன்னுருவப் பரப்பெல்லாமிவன்பாலே பதிதலாவது, தீ இரும்பைத் தன் வண்ணமாகச் செய்வதுபோல, இறைவனுக்குரிய முற்றுணர்வு முதலிய எண் குணங்களும் படிகம்போலச் சார்ந்ததின் வண்ணமாமியல்புடைய ஆன்மாவுக்குரிய குணமாம்படி அத்துவித விசேடபாவனை இவன்மாட்டு விளங்கித் தோன்றுதல். அதுவே சிவானந்தமேலிடுதல். அர்ச்சிக்க என்பது அர்ச்சிக்க வேண்டும் என்னும் பொருள் குறித்தலின் வியங்கோள். மலமறுப்போர் அர்ச்சிக்க எனவும், இவன் பாலே பதிப்பன் எனவும் முடிபு வேறாகலின் பால் வழுவின்மை யுணர்க. அர்ச்சிக்க என்பதனை எச்சமாகக் கொண்டு பாடமோதுவார் உயர்திணைப்பலர் பாலும் ஆண்பாலும் மயங்கி பால் வழுவாதலையும் நோக்கிற்றிலர்.

ஆன்மாவினிடத்து அர்ச்சிக்க மலம் அறுமென மேல் பத்தாவது செய்யுளில் சொல்லிவிட்டபடியால், இவ்விடத்துச் சொல்லவேண்டுவதின்று. ஆயினும் பாச நீக்கம், சிவப்பேறு என்னும் பயன் இரண்டனுள், ஆன்மாவிலர்ச்சித்தலால் பாச நீக்கம உடையாருக்கே, தானைக்கிச தன்னுருவப் பரப்பெல்லாங் கொடுபோந்து பதித்தலாகிய சிவப்பேறு உண்டாமென்பதறிவித்தற்காகக் கூறவேண்டாத அர்ச்சித்தல் பாச நீக்கத்தையும் இயைபுபற்றி இவ்விடத்துக் கூறினர். ஆதலின், இது வேண்டாதுகூறி வேண்டியது முடித்தலாம்

இச்செய்யுளால், புறப்பூசையினும், அகப்பூசையானது சிவன் ஆன்மாவினிடத்து விளங்கித் தோன்றிச் சிவானந்த மேலிடச் செய்தலாகிய விசேடமுடையதென அவ்வகப் பூசையின் பெருமை கூறப்பட்டது.

எண் குணங்களாவன:—தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல்,

பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என்பனவாம். இவற்றுள் தன் வயத்தனாதலை சுவதந்திரத்துவம் எனவும், தூயவுடம்பினனாதலை விசுத்ததேக மெனவும், இயற்கை யுணர்வினனாதலை நிராமயான்மா எனவும், முற்று முணர்தலை சர்வஞ்ஞத்துவ மெனவும், இயல்பாகவே பாசங்களினீங்குதலை அநாதிபோத மெனவும், பேரருளுடைமையை அலுப்த சத்தியெனவும், முடிவிலாற்றலுடைமையை அநந்தசத்தியெனவும், வரம்பிலின்பமுடைமையை திருப்தி எனவும் கூறுவர். இவ்வெண்குணங்களுடைய இறைவனைக் குணாதீதனென்று கூறுதல் எவ்வாறு பொருந்துமெனின், மாயையாகிய சடத்தின் குணமும், ஞானமாகிய சித்தின் குணமும் எனக் குணம் இருவகைப்படும். அவற்றுள் மாயையின் குணம், சாத்துவிகம், இராசதம், தாமதம் என முத்திறப்படும். இம்முக்குணங்களும் மாயாகாரியமாகிய தநுகரண புவன போகங்களிற் கட்டுப்பட்டிருக்கும் ஆன்மாவினிடத்து நிகழ்வனவாம். இம்முக்குணங்களுள், சாத்துவிகம், சாந்தத்தையும இன்பத்தையுந் தரும். இராசதம், பிரவிருத்தியையும் துன்பத்தையுந் தரும். தாமதம், மோகத்தையும் மூடத்தையுந் தரும். இவ்வாறு ஒன்றோடொன்று மாறுபடுகின்ற இம்முக்குணங்களும் பந்த ஏதுவாம். இறைவன் மாயாரகிதனாதலால் இமமுக்குணங்களையுங் கடந்தவனென்பது தோன்றக் குணாதீதனென்றது பொருந்தும். இவ்வாறன்றிக் குணாதீதனென்பதற்கு ஞானகுணமுமில்லாதவனென்பது பொருளன்று. ஞானகுணமில்லாதவனாயின் குணமில்லாத குணி இல்லை; ஆதலால் இறைவனும் இல்லையெனப்பட்டு நிரீச்சுரவாதமாகும். அன்றியும், ஒரு குணமுமில்லாதபொருள் வெறும் பாழெனப்பட்டு அப்பாழ் உயிர்களின் நன்மை தீமைகளை அறியுமென்றலும், அநுக்கிரகஞ் செய்யுமென்றலும் பொருந்தாதாய் முடியும். ஆதலால், ஞானகுணமுடையவனென்பதே தேற்றம்.

இனி அந்த ஞானகுணம் எட்டுவகைப்படுவானேனெனின், எட்டுத் தன்மை இறைவனுக்கு இன்றியமையாது வேண்டப்படுதலால் எட்டுவகைப் பட்டனவாம். எட்டுத் தன்மை வருமாறு:—உயிர்க்கு வினையின் பயனாகிய இன்பத்துன்பங்களை ஊட்டுவித்தற்கும், வினையொப்பு வந்தவர்க்கு முத்தி கொடுத்தற்கும், எண்ணியதை எண்ணியபடி இடையூறு புகுதாமல் முடிக்குந் தன்மையாகிய தன்வயமென்னுஞ் சுவதந்திரத்துவம் வேண்டப் படுவதாயிற்று. இவ்வாறு செய்யும் இறைவனுக்கு வடிவம் உருவமாயின் வியாபகமாய் எவற்றையும் அறிதல் கூடாது. ஆதலின், வியாபகமாய் எவற்றையும் அறியுந்தன்மையாகிய தூயவுடம்பென்னும் விசுத்ததேகம்

வேண்டப்படுவதாயிற்று, அதாவது சித்துருவென்ற படியாம். சித்துருவாயினும் ஆன்மாவாகிய சித்துப்போல் அறிவிக்க அறியுமாயின் சுவதந்திரமாகிய தன்வயத்துக்கிழுக்காதலின் தானே அறியுந்தன்மையாகிய இயற்கையுணர் வென்னும் நிராமயம் வேண்டப்படுவதாயிற்று. ஆமயம் என்பது துன்பம்; அது மலத்தைக் குறிக்கும். நிராமயம் என்பது மலமில்லாமை. மலமில்லாதிருப்பினும் மலம் நீங்கிய முத்தான்மாவைப்போல ஏகதேச அறிவுடையதாயின் பஞ்சகிருத்தியங் கூடாதாதலின் முற்று முணர்தலாகிய சர்வஞ்ஞத்துவம் வேண்டப்படுவதாயிற்று. சர்வஞ்ஞத்துவம் மலநீங்கிய முத்தான்மாவிடத்துக் காணப்படுதல் போலவாயின், இயற்கையுணர்வினனென்றல் பொருந்தாதாதலின், இயல்பாகவே பாசங்களினீங்குதலாகிய அநாதிபோதம் வேண்டப்படுவதாயிற்று. பாசமில்லாதிருப்பினும் அருளுடையனுயிருந்தாலன்றி அநுக்கிரகிக்க முடியாதாதலின் பேரருளுடைமை என்னும் அலுப்தசத்தி வேண்டப்படுவதாயிற்று. லுப்தம்—கொடாமை. அலுப்தசத்தி—கொடுக்குஞ் சத்தி. பேரருளுடைமை என்பது உயிர்கள் மாட்டுத் தோன்றும் அருள்போலன்றி எல்லா உயிர்க்கும் அஞ்ஞானப் பிணியை நீக்கும் அருளைக் குறித்தது. அருளுடையனுயினும் அளவிறந்த உயிர்களின் பொருட்டு அவரவர் கன்மத்துக்கேற்பப் பலவேறு தொழிற் செய்ய வேண்டுதலின் முடிவிலாற்றலென்னும் அநந்த சத்தி வேண்டப்படுவதாயிற்று. அநந்த சத்தி இருப்பினும் அதனுல் துன்பமில்லாமல் கொடுக்கக் கொடுக்கக் குறைபடாத பூரண இன்பமுடையவனுயிருந்தாலன்றி உயிர்களுக்கு ஆனந்த பூர்த்தி செய்தல் கூடாதாதலின் வரம்பிலின்பமென்னும் திருப்தி வேண்டப்படுவதாயிற்று.

இவ்வெண்குணங்களுள் இயற்கையுணர்வை இயல்பாகவே பாசங்களினீங்குதலினும், தூய உடம்பைப் பேரருளுடைமையினும் அடக்கி ஆறெனவுங் கூறுவர். இயல்பாகவே பாசநீக்கமிருப்பின் இயற்கையுணர்வுண்டாதலும், பேரருளுடைமை இருப்பின் ஞானத்திருமேனியிருத்தலுங் கூடுமாறு அறிக.

இனி இவ்வெண்குணங்களும் சத்து, சித்து, ஆனந்தம் என்னும் மூன்றனுள் அடங்கும். எவ்வாறெனின், எக்காலத்தும் ஒரு தன்மையாயிருக்கும் பொருள் சத்து. அதற்குத்தான் தன்வயமாந்தன்மை கூடும்.

ஆதலால், தன்வயம் சத்தி லடங்கும். வரம்பிலின்பம் ஆனந்தத்திலடங்கும். ஏனைய ஆறும் சித்திலடங்கும். இன்னும் விரிப்பிற் பெருகும். (கஉ)

மூன்றமதிகாரணம் முடிந்தது.

ஒன்பதாஞ் சூத்திரம் முடிந்தது.

ஆகத்திருவிருத்தம். ௩௦௩.

# பயனியல்.



## பத்தாஞ் சூத்திரம்.



### பாச நீக்கம்.

மேல் ஏழாஞ் சூத்திரம் முதல் மூன்று சூத்திரத்தால் சாதன இயல் கேட்டபின்னர் இச்சாதனத்தாலுண்டாம் பயன்யாதோ வெனவும், அப்பயனை உடையார் தன்மையாதோ வெனவும் ஆசங்கை நிகழுமன்றே. அந்நிகழ்ச்சிபற்றிப் பயன், பாச நீக்கமும் சிவப்பேறுமென இருதிறப்படுமாதலின் அவற்றை இரண்டு சூத்திரத்தானும், பயனை உடையார் தன்மையை ஒரு சூத்திரத்தானும் ஆக மூன்று சூத்திரத்தால் பயனியல் கூறத் தொடங்குகின்றார்.

மேல் அடுத்துநின்ற ஒன்பதாஞ் சூத்திரத்தால் சாதனஞ்செய்யுமுறை கூறினாராதலின், அவ்வாறு சாதித்தவருக்குண்டாம் பாசநீக்கத்தை வகுத்துக் கூறுதற்கெழுந்தது பத்தாஞ் சூத்திரம். மேலைச் சூத்திரத்திலேயே பாசநீக்கமும், சிவப்பேறுங் கூறியிருக்க ஈண்டுங் கூறுதல் எற்றுக்கெனின், அவ்விடத்துச் சாதனம் செய்யுமுறையைக் கூறுங்கால் ஏனைய செயலபோலன்று இச்செயலென்பது தோன்றப் பயனும் தொகுத்து உடன் கூறினர். இவ்விடத்து அப்பயனை வகுத்துக் கூறுதற்குத் தொடங்கினரென அறிக.

ஏகனாய் நிற்றல், இறைபணி நிற்றல் என்னும் இருநிறத் தானும் மும்மலங்களும் நீங்குமெனச் சூத்திரப் பொருளைத் தொகுத்துக் கூறுகின்றது.

இவனுலகி லிதமகிதஞ் செய்த வெல்லா
    மிதமகித மிவனுக்குச் செய்தார்பா லிசையு
மவனிவனாய் நின்றமுறை யேக னாகி
    யரன்பணியி னின்றிடவு மகலுங் குற்றஞ்
சிவனுமிவன் செய்தியெல்லா மென்செய்தி யென்றுஞ்
    செய்தவெனக் கிவனுக்குச் செய்த தென்றும்
பவமகல வுடனாகி நின்றுகொள்வன் பரிவாற்
    பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே.

(கொ - ரு.) அவன் இவனாய் நின்ற முறை ஏகனாகி அரன் பணியின் நின்றிடவும் சிவனும் இவன் செய்தி எல்லாம் என்செய்தி என்றும், (உடனாகி நின்று கொள்வன்). இவனுக்குச் செய்தது எனக்குச்செய்த தென்றும் பவம் அகல உடனாகி நின்றுகொள்வன். பரிவால் பாதகத்தைச் செய்திடினும் (புண்ணியத்தைச் செய்திடினும்) பணி ஆக்கிவிடுமே. உலகில் இவனுக்கு இதம் அகிதஞ்செய்தார்பால் இவன் செய்த இதம் அகிதம் எல்லாம் இசையும். குற்றம் அகலும்.

(போ - ரை) மேலைச்சூத்திரத்துக் கூறியவாறு பதிஞானத் தாற் காணப்படும் இறைவன் பெத்த நிலையில் உடனாய் நிற்பினும் வேறு காணப்படுமாறின்றி ஆன்மாவேயாய் ஒற்றுமைப்பட்டு ஆன்மாவின் வழிநிற்பன். அம்முறைபோல மேலைச்செய்யுளிற் கூறியவாறு அகத்து இறைவனை வழிபடுதலாலுண்டாம் இம் முத்திக் காலத்து அம்முதல்வனோடு ஆன்மா உடனின்றறியினும் ஆன்மாவாகிய தான் வேறு காணப்படாதவாறு அவ்விறைவனோடு ஒற்றுமைப்பட்டு நிற்கவும், அவன் அருள்வழியில் வழுவாது நிற்கவும் பெறவேண்டும். பெற்றால் அவ்விரண்டனுள் ஒற்றுமைப் பட்டு ஏகனாய் நிற்றலால் யான் எனதென்னுஞ் செருக்கறும்.

அச்செருக்கறுதலால் அவ்விறைவன் இவன் செய்யும் இதம், அகிதங்களெல்லாம் யான் செய்யும் இதம், அகிதங்களென உடனாய் நின்று என்றுகொள்வன். அருள்வழி நிற்றலாகிய அரன் பணியில் நிற்றலால் இந்திரியங்களின் வசமாய் நிற்கும் பரதந்திரம் ஒழியும். ஒழியவே, இவனுக்கு இன்பத்துன்பம் அநுபவிக்கும் + பிறர் செப்பும் இதம் அகிதங்களெல்லாம் அவ்விறைவன் தனக்கு அநுபவிக்குமாறு செய்தனவேயாமென இவன் பிறவி நீங்க உடனாய் நின்று என்று கொள்வன். இவ்வாறு ஏகனாய் நிற்றல், இறை பணி நிற்றல் என்னும் இருதிறத்தினுள் ஏகனாய் நிற்றலால் அன்புடன் இவன் செய்யும் இதம் அகிதங்கள் வினையாய் முடியாமல் இறைவன் பணியாய் முடியும். இறை பணி நிற்றலால் இவனுக்கு இதம் அகிதம் செய்தாரிடத்து அவ் விதமகிதங்கள் செய்த அவ்வளவினன்றி மிகுதிப்படுதற்கு இவன் செய்த இதம் அகிதங்கள் துணைக்காரணமாய்ப் பொருந்தும். இவ்வாறு வினையும், வினைப்பயனின் அநுபவமும், இவனைப் பந்தப்படுத்தாது ஒழியவே வினைசெய்தலாலாகிய ஆகாமியமும் வினைப்பயனை அநுபவித்தலாலாகிய பிராரத்துவமும் ஒழிந்தனவாம். அவ்விருவினைகளும் ஒழியவே ஏனைச்சஞ்சித வினையும், மாயையும், ஆணவமுமாகிய குற்றங்கள் மூன்றும் இவனைப் பந்திக்க மாட்டாவாய் விட்டுப்போம். (எ-று.)

நின்றிடவும் என்பதனை, ஏகனாகி இறைபணியில் என்ற இரண்டிடத்துங்கூட்டி, செய்தியென்றும் செய்ததென்றுமென்னுமெச்சங்களை, கொள்வனென்பதனோடுந்தனித்தனி கூட்டி, ஏகனாகி நின்றிடவும் சிவனுமிவன் செய்தியெல்லாமென் செய்தியென்றும் உடனாகி நின்றுகொள்வன் எனவும், இறைபணியில் நின்றிடவும் செய்ததெனக்கிவனுக்குச் செய்ததென்றும், பவமகல உடனாகி நின்று கொள்வன் எனவும் நிரனிறைப்பொருளாகக் கொள்க. உடனாகி நின்றுகொள்வன் என்பது மேலுங்கூட்டப்பட்டது. கொண்டு கூட்டுப்பார்க்க. அரன்பணியில் நின்றிடவும் என்ற உம்மை சிறப்பு. பாதகத்தைச்செய்திடினும் என்ற உம்மையால் புண்ணியத்தைச் செய்திடிற் பணியாக்கி விடுதல் கூறவேண்டாவாயிற்று. ஆதலால் அது வருவித்துரைக்கப்பட்டது.

இவன் செய்யும் இதம் அகிதங்கள் இவனுக்கு இதம் அகிதம் செய்தாரிடத்து அவ்விதமகிதங்கள் மிகுதியாதற்குத் துணைக்காரணமாய்ப் பொருந்தும் என்பது ஞானியினது ஆற்றலாற் பெறப்பட்டது. பின்னர் ச-வது செய்யுளில் "அவர்தாஞ் செய்வினை தன்னுனலமுடனே பிறர்செய்வினையூட்டி யொழிப்பானுய்." எனக்கூறுதலானும் இது துணியப்படும். அச்செய்யுளின் கருத்துணராது இவன்செய்த இதம் அகிதங்களே இவனுக்குச் செய்தாரிடத்துப் பொருந்தும் என்று சொல்லில், செய்த அவருடைய இதம் அகிதங்கள் எவ்வாருகுமென வினுவினுர்க்குவிடையின்மையும், 'அவரவர்வினையை அவரவரே அநுபவிக்கவேண்டுமென்றறியதிதப்புதலும்,' 'சிவஞானச்செயலுடையோர் கையிற்ருனந் திலமளவே செய்திடினும் அத்தானமே நிலமலைபோற் றிகழுமென்ருற்போல்வனவற்ருேடுமுரணுதலுமாகிய குற்றங்கள் உளவாமாறு காண்க.

உண்மையில் இவன் சிவமேயாதலால் உலகத்தார் பார்வைக்கு இவன் செய்தவையாகவும், அச்செயல் இதம் அகிதமாகவும் தோற்றப்படுவனவேயன்றி இவன் செய்ததில்லையென்றறிவிக்க வேண்டி "உலகில்" என்ருர். அவன் என்பதும் இவன் என்பதும் மகாவாக்கிய வழக்கு.

நின்றிடவும் என்பதனை மேற் கூறியவாறு ஈரிடத்துங் கூட்டி நிரனிறையாகக்கொண்டு கொள்வன் என்னும் பயனிலையோடு முடியாது, நின்றிடவும் அகலும் என முடிப்பாரு முளர். அவ்வாருயின், எனையன தம்முள் அடங்கிநின்று ஒருபொருள் மேல் வருவனவல்லவாய் முடிதலின் முதனூலோடொத்து ஒருபொருணுதலிய சூத்திரமாதற் கேலாமையறிக. இச்செய்யுள் முக்கூற்றையுடையது. அவற்றுள்,

முதற்கூறு:—அவனிவனுய் நின்ற முறை ஏகனுகி (நின்றிடவும்) சிவனும் இவன் செய்தி எல்லாம் என் செய்தி என்றும். (உடனுகி நின்று கொள்வன்)

இரண்டாங்கூறு:—அரன்பணியில் நின்றிடவும் இவனுக்குச்செய்தது எனக்குச் செய்ததென்றும் பவமகல உடனுகி நின்று கொள்வன். பரிவால் பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கிவிடுமே. உலகில் இவனுக்கு இதம் அகிதம் செய்தார்பால் இவன் செய்த இதம் அகிதமெல்லாம் இசையும்.

மூன்ருங்கூறு—குற்றம் அகலும்.

இவற்றுள் குற்றமகலும் என்பதை முதனூலில் வேறுகூருக வைத்தோதாது இருகூருகக் கூறினுர். இந்நூலில் அம்மூன்ருங் கூற்றைப் பதி

ஞொரான் சூத்திரத்தில் விரித்துக் கூறுகின்றாராதலின் இச்சூத்திரத்தில் இரண்டு கூறு கூறுகின்றார். (க)

---

# முதலதிகரணம்.

அவனிவனாய்........என்செய்தி என்றும் என்பது.

ஏகனாகி நின்றாலன்றி யான் எனதென்னும் செருக்கறாது வில்லை எனக் கூறுகின்றது.

யான்செய்தேன் பிறர்செய்தா ரென்னதியா னென்னு
மிக்கோணை ஞானவெரி யால்வெதுப்பி நிமிர்த்துத்
தான்செவ்வே நின்றிடவத் தத்துவன்றா னேரே
தனையளித்து முன்னிற்கும் வினையொழித்திட் டோடு
நான்செய்தே னெனுமவர்க்குத் தானங் கின்றி
நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங் கன்ம
முன்செய்யா ஞானந்தா னுதிப்பி னல்லா
லொருவருக்கும் யானெனதிங் கொழியா தன்றே. ௩௦௫

(கோ - டு.) யான் என்னது எனவும், அத்தத்துவன்றான் தனை அளித்து நேரே முன்னிற்கும் எனவும், போகத்தை நண்ணுவிக்கும் கன்மம் பண்ணுவிக்கும் எனவுங் கூட்டுக.

(பொ - ரை.) மேலைச் சூத்திரத் தோதியவாறு ஆன்மாவினிடத்து இறைவனை ஆராதிக்கு முறையில் காண்பானும், காட்சியும, காணப்படுபொருளுமாக நின்று அவ்விறைவனைத் தரிசித்தலே அமையும்; அதன் மேலும் ஏகனாய் நிற்க வேண்டுமென்று கூறுவானேனெனின், யான் செய்தேன், பிறர் செய்தார், யான், எனது என்னுஞ் செருக்கு விளைதற்கேதுவாகிய மலத்தினாலுண்டாம் அறிவின் கோணுதலை இறைவனோடு ஏகனாய் நிற்கும்

ஞானுக்கினியினுற் காய்ச்சித் தீர்த்து, தான் இறைவன் அருள் வழி நிற்க, அவ்விறைவன் தனது சொரூபத்தை ஆன்மாவிற்கு விளக்கி நேராக வெளிப்பட்டுத்தோன்றுவன். அவ்வாறு தோன்றுதலான் இவன் செய்யும் இதம் அகிதங்கள் இவனுக்கு வினையாகாமல் இறைபணியாகியும், அவ்விதமகிதங்களே, இவனுக்கு இதம் அகிதங்கள் செய்தவரிடத்து செய்த அவ்விதமகிதங்கள் செய்த அளவினன்றி மிகுதற்குத் துணைக்காரணமாகவும் ஆகும். மேற் கூறிய யான், எனதென்னுஞ் செருக்குடையாருக்கு முதல்வன் விளங்கித் தோன்றுதலின்றி அவர் செய்த கன்மத்நிற் கிடாகப் போகத்தைப் புசிப்பித்து அங்ஙனம் புசிப்பிக்கு முறையில் மேல் ஆகாமிய வினையும் ஏறச் செய்வன். ஆதலால், மாயா கருவிகளைப் பொருந்தி அறிகின்ற சிற்றறிவினின்றும் நீங்கி இறைவனோடு ஏகமாய் நிற்கும் ஞானம் பெற்ருலன்றி யாவருக்கும் யான் எனது என்னுஞ் செருக்கறுதலில்லை. (எ-று.)

ஞான எரியால் என்னது யான் என்னுமிக்கோணை வெதுப்பி நிமிர்தது என உடன் பாட்டாற்கூறி, வலியுறுத்தற்பொருட்டு ஞானந் தானுதிப்பினல்லான் யானென திங்கொழியாது என எதிர்மறையானுங் கூறினர். மலத்தைக் கோணையாகவுஞ் ஞானத்தை எரியாகவும் உருவகஞ் செய்ததும் மல நீக்கம் ஞானத்தையின்றி அமையாமை விளக்குதற் பொருட்டு. ஞானம் என்றது இவ்விடதது ஏற்புழிக்கோடலால் ஏகனுகி நிற்கும ஞானத்தைக்குறித்தது.

இதனுனே, ஏகனுய் நின்ருலன்றி, யானெனதென்னுஞ் செருக்கறுதல், தானுக்கித் தன்னுருவப் பரப்பெல்லாங் கொடுபோந்து பதித்தல் முதலியன நிகழ்ந்து முத்தியைக் கூடுதல் செல்லாதென முதற்கூறு வலியுறுத்தப்பட்டது,

காண்பானுங் காட்சியுங் காணப்படு பொருளுமாக இறைவனைத்தரிசிக்குங்கால் மாயாகருவிகள் நீங்கப்பெருதோவெனின், பெருது. மாயா கருவிகள் சிவ கருவிகளாக மாறித் தரிசித்தலேயன்றி நீங்கினதில்லை. சிவ கருவி என்பது—சிவத்தின் வழிச்செல்லுங்கருவியாம். நீங்காமைக்கு ஏதுவென்னையெனின், ஆணவமலம் நீங்கப்பெற்றும் அம்மலத்தின் வேரறுக்கப் படாமையேயாம். வேர் என்பது பற்றெனப்படும். மலம் அறியாமையைச்

செய்யும். பற்று செருக்கைச் செய்யும். அப்பற்றறுதி இறைவனைப்பற்றி ஏகனாய் நிற்றலினாலுண்டாம். இப்பற்றையே திருவானைக்காப் புராணத்தில் கச்சியப்ப முனிவர் "வன்மலவேர்" என்றருளினர். மலத்திற் கன்னியமாகப் பற்று என்பதொன்றுண்டென்பதை "அநாதியே மலத்தைப்பற்றுதல் உயிரின் வினையென," சிவஞான போதச் சிற்றுரை நான்காஞ் சூத்திரம் இரண்டாம் அதிகரணத் தினிறுதியில் மாதவச் சிவஞான யோகிகள் அருளியவாற்றானறிக. இக்கருத்துபபற்றியே* "பற்றற்றகண்ணே பிறப்பறுக்கும்" எனவும், "பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப் பற்றுக—பற்றுவிடற்கு" எனவும் அருளினார் தேவரும். (உ)

முதலதிகாரணம் முடிந்தது.

---

# இரண்டாமதிகரணம்.

அரன்பணியினின்றிடவும் ............... இசையும்.
என்பது.

இறைபணியில் நின்றாலன்றி இந்திரியங்களின் வழிப்பட்டுச் செல்லும் பாதந்திரம் நீங்காதெனக் கூறுகின்றது.

இந்திரிய மெனைப்பற்றி நின்றேயென் வசத்தி
னிசையாதே தன்வசத்தே யெனையீர்ப்ப திவற்றைத்
தந்தமன்ற நுணைவழி நின்றிடலா லென்றுந்
தானறிந்திட் டிவற்றினொடுந் தனையுடையான் றாள்கள்
வந்தனைசெய் திவற்றின்வலி யருளினால் வாட்டி
வாட்டமின்றி யிருந்திடவும் வருஞ்செயல்க ளுண்டேன்
முந்தனுடைச் செயலென்று முடித்தொழுக வினைகண்
மூளாவங் காவாகி மீளா னன்றே.

(போ - ரை.) ஏகனாய் நிற்றலே அமையும்; அதன்மேலும் இறைபணியில் நிற்கவேண்டு மென்பானேன் எனின், உலகத்தில்

---

* திருக்குறள் துறவு செ- கூ, கo.

தண்டத்தொழில் செய்யும் ஊர்க்காவல் செய்பவராயுள்ளார் பிழை செய்துள்ளாரைத் தம் எண்ணப்படி தண்டிக்கின்றனர். தண்டிப்பது தம்மை அவ்வாறு செய்யும்படி நியமித்திருக்கும் அரசனது ஆணைவழியேயாம். அவ்வரசன் ஆணையின்றி இவர் தாமாக ஒன்றும் செய்யமுடியாது. அவ்வுண்மையை யறிந்து அவ்வூர்க் காவலருக்கும் தமக்கும் இறைவனாகிய அவ்வரசனைச் சிநேகிக்கப்பெற்று அவன் கருத்தின்வழி நடக்க வல்லனாய விடத்து, அவர் அவ்வூர்க் காவலர்கீழ் அடங்குதலினின்றும் நீங்கி அக் காவலரையும் தம் ஆணைவழியில் அடங்கும்படி அரசனருளால் செய்துகொள்ள வல்ல சுதந்திரராவர். அதுபோல, வினைசெய்தமை பற்றி இறைவனாணையால் இந்திரியங்கள் என்னைக் கூடிநின்று எனக்குள் அடங்காமல் என்னைத் தம்முள்ளடக்கி நிற்குமென்றும், அவற்றை அவ்வாறு செய்விக்கும் இறைவனாணைவழி அவ்விந்திரியங்கள் நிற்றலால், அவற்றின் செயலை மாற்றுதற்குபாயம் யாமும் அவ்வாணைவழி நிற்றலென்றும் அறிந்து, அவ்விந்திரியங்களையும் தன்னையும் உடையானாகிய அவ்விறைவனைக் கூடப்பெறின், அவ்விறைவன்றிருவருளால் அவ்விந்திரியங்களைத் தன்னாணைவழி அடக்கி நிறுத்திக்கொள்ள வல்லவனாவன். அவ்வாறு நின்றவிடத்தும் பண்டைப்பயிற்சி பற்றிச் சிலசமயம் அவ்விந்திரியங்களின் குறும்பு நிகழுமாயின், இந்திரியங்கட்கும் எனக்கும் கூடுகிற சுதந்திர மில்லாமையால் இந்திரியங்களையும் என்னையும் கூட்டுவித்த முதல்வன் செயலே என்று இறைபணியில் நிற்கவேண்டும். அவ்வாறு நிற்பின், அவ்விந்திரிய வழியாய்ப் புகுந்து பந்தப்படுத்தக்கூடிய வினைகள் பந்திக்கமாட்டாவாய் மடங்கி ஒழியும். அவ்வாறு அடிமைத்திறத்து நின்றவன் மீண்டும் இந்திரியங்களின் வழிப்பட மாட்டான். (எ - று.)

இச்செய்யுள் இந்திரியங்களைப் பாடிகாவலராகவும், முதல்வனை அரசனாகவும், ஆன்மாவைப் பிழைசெய்தாராகவும் குறிப்பாக உருவகஞ்செய்யக் கிடந்தமையின் குறிப்புருவகம்.

இதனால், ஏகனாகி நிற்பினும் நான் செய்தேன் என்னும் தன்பணி

மடங்கினுலன்றி வினையில் கட்டுப்படுதற்கேதுவாய் இந்திரியங்களின் வழிப் பட்டுச் செல்லும் அடிமைத் தன்மை நீங்காமையின், அது நீங்குதற்காகத் தன் செயலை யொழித்தற் பொருட்டு எச்செயலும் சிவன் செயலெனக் காணும் இறைபணி நிற்றலும் ஒருதலையான் வேண்டப்படுமென்பதுணர்த் தியவாறு.

தானறிந்திட்டு என்றவிடத்து தான் அசை. ஈர்ப்பது என்பது ஈர்த்த லென்னுந் தொழில்மேல் நின்றது.

ஈர்த்தல்—இழுத்தல். அஃது அடக்குதலைக் குறித்தது. என்றும் என்னும் உம்மை அவ்வீர்த்தலை மாற்ற உபாயம் யாமும் அவ்வாணைவழி நிற்றலென்றும் அறிந்து என எதிரது தழுவிற்று. இவற்றினெடுந்தனை யுடையான் என்றது உடையானுதலின் முதல்வன் என்னும் பொருள் குறித்தலின் குறிப்பேதுவாய் நின்றபெயர். வந்தனைசெய்தல் என்பது இவ்விடத்து இறைபணியில் நிற்றலைக் குறித்தது. வருஞ்செயல்களுண் டேல் என்பது ஒருமைப் பன்மை மயக்கம். வருதல் ஒருமை. செயல்கள் பன்மை. வாட்டமின்றி யிருந்திடவும் வருஞ்செயல்களுண்டேல் முந்த னுடைச் செயலென்று முடித்தொழுகல், * "வேண்டத்தக்க தறிவோய் நீ வேண்டமுழுதுந் தருவோய் நீ, வேண்டுமயன்மாற் கரியோய் நீ, வேண்டி யென்னைப் பணிகொண்டாய், வேண்டி நீ யாதருள் செய்தா யானுமதுவே வேண்டினல்லால், வேண்டும் பரிசொன்றுண்டென்னி னதுவு முன்றன் விருப்பன்றே" என்ற திருவாக்கினுமறிக.

இறைபணி நிற்குங் காலத்தும் இந்திரியங்களின் குறும்பு நிகழுமாயின் அதுவும் இறைபணியெனக் கொள்ளின் அதன்மேலும் குறும்பு நிகழுமா யின் அவ்வாறே கொள்ள வேண்டுமென, மேலும் வரம்பின்றி ஓடுமாதலின் அக்குற்றம் நீங்கவேண்டி "ஆனாகி மீளான்" என்றுங் கூறினர். கூறவே, இறைபணி நிற்பார்க்கு நிகழும் இந்திரியங்களின் குறும்பு சிறிது காலம் நிகழினும், பின்னர் நிகழாது மடங்கி ஒழியும் என்பதே தேற்றமென் றறிக. (௬)

இறைபணி நிற்றல் இவ்வாறெனவும், இறைபணி நின்ருர் செயலை இறைவன் தன்செயலென என்று கொள்ளுதலும், பிறர் செயலை அவ்வாறென்று கொள்ளாது அவர் செயலாகப் பயனநு பவிக்கச் செய்தலும் பற்றி இறைவன் நடுவுநிலைக்குக் குறையா காது எனவும் கூறுகின்றது.

---

* திருவாசகம், குழைத்தபத்து. செ-எ.

சலமிலனாய் ஞானத்தாற் றனையடைந்தார் தம்மைத்
தானாக்கித் தலைவனவர் தாஞ்செய்வினை தன்னா
னலமுடனே பிறர்செய்வினை யூட்டி யொழிப்பானாய்
நணுகாமல் வினையவரை நாடிக் காப்ப
னுலகினிலென் செயலெல்லா முன்விதியே நீயே
யுண்ணின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்றா யென்று
நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலே யென்று
நினைவார்க்கு வினைகளெல்லா நீங்குந் தானே.

(கோ - ரு.) நீயே உள் நின்றும் (செய்கின்றாய்) உலகினில் நிலவுவதோர் செயல் எனக்கு இன்று. என் செயலெல்லாம் உன்விதியே என்றும், செய்வித்தும் செய்கின்றாய் உன் செயலே என்றும், நினைவார்க்கு வினைகளெல்லாம் நீங்குந்தானே. தலைவன் ஆய் ஞானத்தால் தனை அடைந்தார் தம்மை தானாக்கிக் காப்பன். நாடியும் அவரை நணுகாமல் வினை அவர் தாம் செய்வினை தன்னால் பிறர் செய்வினை நலமுடனே ஊட்டி ஒழிப்பானாய் சலம் இலன்.

(போ - ரை.) இறைபணி நிற்றல் எவ்வாறெனின், ஏகனாய் நின்ற நிலையில் நின்று நீங்கிச் சிலசமயம் தன்னால் புறத்துச் செயல் நிகழுமாயின், அப்பொழுது அவர் இறைவனை நோக்கி நீயே எனக்கு உள்நின்று செய்கின்றாயாதலின், உலகின்கண் எனக்கு விளங்குவதோர் செயலில்லை எனவும், என்னால் செய்யப்படும் இதம், அகிதங்களெல்லாம் நீ செய்யும் செயலே யெனவும், எனக்குப் பிறர் செய்யும் செயலெல்லாம் நீயே பிறரைக்கொண்டு செய்வித்தும் செய்கின்றாயாதலின் அவையும் நீ செய்யும் செயலேயன்றிப் பிறிதில்லை யெனவும், இவ்வாறு அவனருளையல்லது ஒன்றனையுங் கருதாராய் தம்மை இழந்துநிற்கப் பெறுதல். இறைபணியின் முறை இதுவேயாம். பணி என்பது செயல். இறைபணி என்பது எல்லாம் இறைவன் செயலாகக் காண்டல். இவ்வாறு நிற்கப் பெறுவாரிடத்து நான் செய்தேன் பிறர் செய்தாரென்று எண்ணுதலாகிய அஞ்ஞானமும், புண்ணிய பாவங்களாய்க் கட்டுப்படும் கன்மமும் பிரவேசிக்க மாட்டாவாய் ஒழிந்துவிடும்.

ஆதலால், சிவபெருமான் அத்தன்மையுடைய மெய்யுணர்வால் தன்னை அடைக்கலம் புகுந்தவரைத் தன்னைப் போலச் சுத்தனாகச் செய்து பாது காத்தலும், மந்திரவலியால் அடங்கி இரைநுகராப் பெற்று கிடக்கும் பாம்பு யாதேனும் ஓர் சமயம் வாய்த்தவிடத்து சும்மாகிடவாது தீண்டுமாறு போல, இறைபணி நிற்கும் அவரைச் சாரமாட்டாது ஒழிந்து கிடந்த ஆகாமிய வினை அவருக்கு இத மகிதங்களைப் பிறர்செய்த விடத்துச் செய்த அச் சம்பந்தம்பற்றி அவருடைய இதம் அகிதங்களுக்குத் துணையாய்ச் சென்று கூடு மாதலின், அவ்வாறு கூடும்படிசெய்து பிறர் செய்த அவற்றின் பலன்களை அவர் நல்வழிப்படுதற் பொருட்டு அதிகப்படுத்தி அவர்க்கு ஊட்டுதலுஞ் செய்வன். இங்ஙனம் முத்தர் செய்த வினையை அவருக்கு இறைபணியாக்கியும், பிறர் செய்த வினையை அவருக்கு வினையாக்கியும் செய்தல் இறைவனுக்குச் சலனமாகா தோவெனின், முத்தன் தன்னையே சார்ந்து நிற்றலினாலும், ஏனை யோர் அங்ஙனஞ் சாராது நிற்றலினாலும் அவரவர்க்குத்தக்கவாறு செய்தல் தகுதியாதலின் சலனமின்மை யறிக. (எ - று.)

பிறர்செய்த வினையை மிகுவித்து ஊட்டி ஒழித்தலே பிறரை வினை நணுகாமற் காப்பதெனக் கொள்க. பிறரை யங்ஙனம் ஊட்டுதலுங் கருணை யேயென்பதுணர்த்தவேண்டி ஊட்டி என்பதோடமையாது ஒழிப்பானு மென்றும், நலமுடனே என்றுங் கூறினர். எனவே, முத்தர் செய்யும் இதம் அகிதம் பிறர் செய்யும் இதத்தையும் அகிதத்தையும் மிகுவித்து அநுபவித் தொழியும்படி செய்யுமென்பதுணர்க.

இதனால் அரன்பணி நிற்கும் முத்தரைவினை நணுகாதெனக் கூறியது மன்றி, அரன்பணியில் நிற்றலாவது, உலகினிலென் செயலெல்லா முன் விதியே, நீயே யுண்ணின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்றாயென்றும், இலவு வதோர் செயலெனக்கின்றுன் செயலேயென்றும் நினைதலே என்பது என விளக்கிக் கூறிய தூஉமாயிற்று.

இறைபணியில் நிற்பவர் பாதகத்தைச் செய்திடினும் அதனைப் பணி யாக்கிவிட்டு, இவர் செய்யும் இதமகிதங்களை இவருக்கு இதமகிதஞ் செய் தார் பாலிசையச் செய்தல் இறைவனுக்கு நடுவுநிலைமையாகாதென்பாரை நோக்கி, தன் செயலை யொழித்து இறைவனிடத்து அடைக்கலம்புகுந்த

வரைவினை நணுகாமற் காத்தலும், அங்ஙனமின்றித்தானென முனைத்து நின்று செய்பவர்க்கு அம்முனைப்புத் தீர்தற்பொருட்டு மிகுவித்து ஊட்டி யொழித்தலும் முறைமையாமெனக் கூறியவாறும். (ச)

எல்லாம் சிவன் செயலென்றெண்ணும் இறைபணியில் நில்லாதார் செய்யும் கிரியா யோகங்களால் பிறப்பு அறாதெனக்கூறுகின்றது.

நாடுகளிற் புக்குழன்றுங் காடுகளிற் சரித்து
நாகமுழை புக்கிருந்துந் தாகமுத றவிர்த்து
நீடுபல காலங்க ணித்தரா யிருந்து
நின்மலஞா னத்தையில்லார் நிகழ்ந்திடுவர் பிறப்பி
லேடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே
யெறிவிழியின் படுகடைக்கே கிடந்துமிறை ஞானங்
கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்
குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே யிருப்பர்.

(கோ - டு) நின்மல ஞானத்தை இல்லார் நாடுகளில் புக்கு உழன்றும் எனவும், இறை ஞானம் கூடுமவர் ஏடுதரும் மலர்க்குழலார் முலைத் தலைக்கே இடைக்கே எறிபடுவிழியின் கடைக்கே கிடந்தும் எனவுங் கூட்டுக.

**(பொ - ரை)** மேற் கூறியவாறு இறைபணியாகிய நின்மல ஞானமில்லாதவர் புண்ணிய தேயங்களிற் சென்று புண்ணிய தீர்த்தங்களில் ஆடியும், புண்ணியதலத்தைத் தரிசித்தும், வனத்திற் சென்று கிழங்கு, பழம் முதலியவற்றைப் புசித்தும், மலையிலுள்ள குகையில் யோகத்திலிருந்தும், அந்த யோகப் பயிற்சி வலியினால் பசியினையும், நீர்வேட்கை முதலியவற்றையும் ஒழிந்தும், நெடுங்காலம் மாணமில்லாதிருந்தும், பிறப்பென்னுந் துன்பத்தினின்றும் நீங்கமாட்டார். அவ்விறை பணியில் நிற்போர் இதழ் பொருந்திய மாலையணிந்த கூந்தலையுடைய மங்கையர் கொங்கையிடம் தோயப்பெற்று இன்பம் அநுபவிக்கினும் பிறப்பினின்று நீங்கிப்பெறுதற் கரிய வீட்டினைப் பொருந்திச் சிவந்த குஞ்சித

பாதத்தின் கண் அடங்கி நிற்பர். ஆதலால், எத்துணை நன்மைகளும் இறைபணிக் கிணையாகா. எத்துணைத் தீமைகளும் இதன் பயனைக்கெடுக்க மாட்டாவாம். (எ-று.)

இதனானே, இறைபணியில் நிற்றலது ஆற்றல் கூறியவாறு. ஆற்றல்— எத்துணை நன்மைகளும் இறைபணிக்கியிணையாகாமையும், எத்துணைத் தீமைகளும் அதன் பயனைக் கெடுக்கமாட்டாமையுமாம்.

மேல் எட்டாஞ் சூத்திரம் ௯. வது செய்யுளில் மங்கையரோடு கூடி இன்பம் நுகரினும் எனக்கூறியது நிற்போரது பெருமையை உணர்த்துதற்கும், இவ்விடத்தும் அவ்வாறு கூறியது நிற்பவரது தொண்டாகிய இறைபணி நிற்றலின் பெருமை உணர்த்துதற்கு மாதலின் கூறியது கூறலென்னுங் குற்றமாகாமையறிக. (௫)

இறைபணியில் நின்றோர் இந்திரியங்களோடு கூடினும் பற்றற்றிருப்பரென்பதை உவமை முகத்தால் விளக்குகின்றது.

அங்கித்தம் பனைவல்லார்க் கனல்சுடா தாகு
மௌடதமந் திரமுடையார்க் கருவிடங்க ளேறா
வெங்கித்தைக் கன்மமெலாஞ் செய்தா லு ஞானிக்
கிருவினைகள் சென்றணையா முற்செய்வினை யிங்குத்
தங்கிப்போம் பாத்திரமுங் குலாலன்வினை தவிர்ந்த
சக்கரமுங் கந்தித்துச் சுழலு மாபோன்
மங்கிப்போய் வாதனையா லுழல்விக்கு மெல்லா
மலங்களும்பின் காயமொடு மாயு மன்றே.

(கோ - ௫.) ஞானிக்கு எங்கித்தை (நின்று) கன்ம மெலாம் செய்தாலும் இருவினைகள் சென்றணையா. முன் செய்வினை மங்கிப்போய் வாதனையால் உழல்விக்கும். இங்குத் தங்கிப்போம் பாத்திரமுங் கந்தித்து குலாலன்வினை தவிர்ந்த சக்கரமும் சுழலுமா போல் எல்லா மலங்களும் பின்காயமொடு மாயும் அன்றே.

(போ - ரை.) இந்திரியங்களோடு கூடி இன்பம் அநுபவித்த காலத்தும் அவ்வின்பமும், இந்திரியமும் தன்னைத் தாக்காமலும், அதனால் மேல்வினை ஏறாமலும் இறைவனைக் கூடி யிருப்ப

னென்றது என்னையெனின், சுடுதற்கேதுவாகிய அக்கினியை மந்திரத்தினால் தம்பனஞ் செய்ய வல்லவன் அவ்வாறு தம்பனஞ் செய்து அவ்வக்கினியில் மூழ்கிக்கிடப்பினும் அவனை அது சுடாத வாறு போலும், கொலை செய்தற்கேதுவாகிய விடங்களைத்தடுக்க வல்ல மந்திர மருந்துகளைப் பெற்றுடையான் அவற்றை உபயோ கப்படுத்திக் கொண்டு விடங்களை எல்லாம் நிறைய உண்ட போழ் தும் அவனை அவ்விடம் கொல்லாதவாறு போலும், விருப்பு, வெறுப்புக்கள் நிகழ்தற்கேது வாகிய இந்திரியங்களை மேற் கூறிய வாறு இறைபணியில் நின்று தன்னேவல் கேட்கும்படி அடக்க வல்ல ஞானிகள் எவ்விந்திரியங்களினின்று எத்தொழிலைச் செய் தாராயினும் அது பற்றி அவர் மாட்டு விருப்பு வெறுப்பு நிகழ்ந்து மேலைக்குவித்தாகிய சஞ்சிதமாதல் செல்லாது. எனைப் பிராரத்த வினையும் தனது செயலை நீத்த அவர் மாட்டுப் பொருந்தமாட்டா மல் அக்கினியினால் வெந்த ஆடை பார்வைக்கு வடிவம் போற்றோ ன்றினும், வடிவத்தின் தன்மையில்லாதது போலச் சத்தி கெட்டே போய் வாசனை மாத்திரையாய் நின்று சிறிது தாக்கும். அவ்வாறு தாக்குதலினால் மேல் ஆகாமியவினை ஏறுமாறில்லை. வாசனை மாத் திரையாய் நின்று பயனில்லாது போதல் எதுபோலுமெனின், காயமிருந்தொழிந்த பாத்திரத்தில் அவ்வாசனை கிடந்து வாசித் தும் ஒரு கறிக்கு உபயோகமில்லாதது போலவும், குயவனானவன் குடத்தை வனையுமளவும் சுழற்றிவிட்ட திகிரியானது வனைந்த பின்னரும் அச்சுழற்றுதலாகிய தன்வேகமுள்ள அளவுஞ்சுழன்று, மற்றொரு குடத்தினை வனைதற்கு உபயோகமாதலில்லாமை போல வுமாம். காயவாசனை பாத்திரத்தோடு ஒழிதல் போலவும், சுழ ற்சியானது வேகம் நின்றவுடன் ஒழிதல் போலவும், வாதனை மாத்திரைக்குத் துணையாய் நின்ற எனையமலவாசனைகளும் தேகம் உள்ள அளவும் இருந்து தேகம் நீங்குங் காலத்து அதனுடன் நீங்கும். (எ—று.)

எங்கு என்பது எங்கித்தை எனமருவிற்று. அவ்விடத்து நின்று என்பது சொல்லெச்சமாக வருவித்துரைக்க. கந்தித்து என்பது வினை

யெச்சப் பொருள்தராது செய்வெண் மாத்திரையாய் நின்று கந்தித்தும், சுழன்றும் என்னும் பொருள் குறித்தது. எச்சமாய் நின்று எச்சப்பொருள் தராது செய்வெண் மாத்திரையாய் நிற்றல் *"பயந்து காத்தழிக்கு மற்றைமூவர்" என்பதனுனுமறிக. மங்கி என்பதனோடமையாது போய் என்றது சத்தி கெட்டே போம் என்பதை வலியுறுத்தற்கு. உவமையாக எடுத்துக்காட்டிய காயவாசனையும், சக்கரச் சுழற்சியும் சத்தி கெட்டுப்போமென்பதை வலியுறுத்தற் பொருட்டேயாம். வாசனை தாக்காதிருத்தற்குக் கூறிய காயவுவமையும், திகிரி உவமையும் அவ்வாதனையின் வேற்றுமையை உணர்த்தி நின்றன. ஆதலால், மிகைபடக் கூறலாகிய குற்றமின்று. அவ் வேற்றுமை வருமாறு:—காயவாசனையானது தங்கியிருந்த பாத்திரம் உள்ள அளவும் அவ்வாசனை ஒரேவிதமாயிருத்தல் போல, இறைபணி நின்ற காலத்தும் தேகம் நீங்கும் வரையும் ஒரேவிதமாயிருக்கின்ற தீவிரவாதனையைக் குறிக்கும். திகிரி, முதற் கணத்திற் சுழலும சுழற்சி மறு கணத்திலில்லாது அவ்வாறே கணந்தோறும் குறைந்து குறைந்து விரைவில் நின்றுவிடுவது போல, பிராரத்த வாதனை சிறிது சிறிதாகக் குறைந்துவருகின்ற மந்தவாதனையைக் குறிக்கும். அங்கிவுவமை பறந்துவிடயந்தாக்காமைக்கும், விடவுவமை விடய அநுபவந்தாக்காமைக்குமாம்.

இச்செய்யுள், முதற் செய்யுளில் ஒருவாற்றால் வலியுறுத்தப்பட்ட "குற்றமலும்" என்ற மூன்றுங் கூற்றை வருஞ் சூத்திரத்தில் சிவப்பேறு கூறும் இயைபுபற்றி எடுத்துக் கொண்டு தடைவிடைகளாற் சாதித்தற்குத் தோற்றுவாய் ஆயிற்று. (சு)

இரண்டாமதிகரணம் முடிந்தது
பத்தாஞ்சூத்திரம் முடிந்தது.
ஆகந்திருவிருத்தம் ௩0௬.

---

# பதினொராஞ் சூத்திரம்.

## சிவப்பேறு.

மேல் பத்தாஞ் சூத்திரத்தால் ஏகனுகி நிற்றல், இறைபணி நிற்றல் என்னும் இரண்டினுலும் பாச நீக்கம் கூறிய பின்னர், அவ்வாறு பாச

---

* திருவாசகம், திருச்சதகம். செ—௩0.

நீக்கம் எய்திய ஆன்மாவிற்கு நிகழும் சிவாநுபவத்தில் அநுபவிக்கின்ற ஆன்மா, அநுபவம், அநுபவிக்கப்படும் பொருள் ஆகிய இம் மூன்றும் உண்டோ? இல்லையோ? என ஐயம் நிகழுமன்றே. அந்நிகழ்ச்சி பற்றி அம்மூன்றும் அத்துவிதமாய் உணடு எனச்சிவப்பேருகிய பயனை வகுத்துக் கூறுதற்கெழுந்தது பதினொராஞ் சூத்திரம். பத்தாஞ் சூத்திரத்தில் சிவப் பேறு தொகுத்துக்கூறி இச் சூத்திரத்தில் வகுத்துக் கூறுகின்றாரென்க.

சிவப்பேறு என்பதே முத்தி எனப்படும். முத்தி என்பது விடுதல். விடுதற்குச் செயப்படு பொருள் பாசமே யாயினும் சிவத்தைப்பற்றி நின்றே விட வேண்டுதலின், சிவப்பேறே தலைமையான முத்தியெனப்படுமாறு காண்க. அம்முத்தியும் பரமுத்தி, சீவன் முத்தி என இருதிறப்படும். பரமுத்தியாவது, பரனுகவே பேதமற நின்று பாசத்தை விடுதல். சீவன் முத்தியாவது, சீவனுகி நின்றும் சிவானுபவமேலீட்டால் பாசத்தை விடுதல். அதாவது, சீவத்தன்மையைச் செய்வதாகிய பாசத்தை இழந்து நிற்றல். இவ்விருவகை முத்தியினுள் பரமுத்தியை விதேக முத்தியென் றுங் கூறுவர். அப்பரமுத்திதான் முதற் கண் நிகழ்வது. அவ்வாருயின், "காயமொடுமாயு மன்றே" "காயமொழிந்தாற் சுத்தனுகி" என இந்நூலிற் கூறுதலானும், இக்கருத்துத் தோன்றக்கூறும் பிறநூல்களானும், உடம்பு நீங்கிய பின்னர்பபரமுத்தி உணடென்றுணரக் கிடக்கவும் அக்கருத்தொடு முரணுதோவெனின். முரணுது. என்னை? நீங்கிய உடம்பு ஆன்மாவிற் குத்தெரியாதவாறு போல உடம்பிருக்கும்பொழுதே அவ்வுடம்பைப்பற்றிய எண்ணம் சிறிதுமின்றிச்சாதனத்தில் உறைத்து நிற்கப்பெற்றால் உடம்பு தோன்ருது. அப்பொழுதே சிவம் தோன்றும். இந்நிலையே பரமுத்தி. ஆயினும், பிராரத்த கன்மததால் மீண்டும் உடம்பு தோன்றவரும். தோன் றுங்கால் முன்னர் நிகழ்ந்த சிவாநுபூதியைச் சிந்திக்கில் உடம்பு மறையும். இவ்வாறு உடம்பு தோன்றுதலும், மறைதலுமாகிய நிலை பிராரத்தம் உள்ள அளவும் நிகழும். ஆதலின், எக்காலத்தும் உடம்பு தோன்ருத பிராரதத தேக ஒழிவு பரமுததி எனப்படடது. அப்பரமுத்தியாகிய சிவாநுபவ நிலையே சாதனத்தில் உறைத்து நிற்றலால் முதற கண் விளங்குவதொன்ரு தலின், பரமுததி முதற் கண் நிகழும் என்பதும் பொருந்துமாறு காண்க. இதனை இச்சூத்திரத்து முதற் செய்யுளில் "அந்நிலைமை இந்நிலையிலடைநத முறையாலே" என்பதனுனுமறிக. ஆதலால், பரமுத்தியாகிய சிவப்பேறு இப்பதினொராஞ் சூததிரத்தாற் கூறுகின்ருர் என்க.

இச்சூத்திரத்தாற் பரமுத்தியே கூறுகின்ருரென்பதை இதனுட் கூறு வதாகிய "எவ்விடத்தும்" என்றற்ருெடக்கத்துச் செய்யுளை எடுத்துக் கொ

ண்டு பரமுத்தியில் உயிருக்கு விடயமாவது ஒன்றின்மையின் வழிநூலாசிரியர் எவ்விடத்து மென்றது அமையுமாறென்னை எனச்சிவஞானபோதச் சிற்றுரைபதினொராஞ் சூத்திரத்து முதலதிகரணத்தில் மாதவச் சிவஞான யோகிகள் அருளுமாற்றானுமறிக. அன்றியும் பன்னிரண்டாஞ் சூத்திரம் சீவன் முத்தனியல்பு கூறுகின்றது என்பதனாலேயே இச்சூத்திரத்திற் கூறுகின்ற முத்தி பர முத்தி என்பது தானே விளங்கும்.

இறைவன் அத்துவிதமாய் நின்றுபகரிக்கும் காட்டிக்காணுமுபகாரத்தைச் சிந்தித்து அன்பு செய்தலினால் மலங்கள் நீங்கிச் சிவாநுபவம் உண்டாமெனச் சூத்திரப் பொருளைத் தொகுத்துக் கூறுகின்றது.

**காயமொழிந் தாற்சுத்த னாகி யான்மாக்**
**காட்டக்கண் டிடுந்தன்மை யுடைய கண்ணுக்**
**கேயுமுயிர் காட்டிக்கண் டிடுமா போல**
**வீசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவ னித்தை**
**யாயுமறி வுடையனா யன்பு செய்ய**
**வந்நிலைமை யிந்நிலையி லடைந்தமுறை யாலே**
**மாயமெலா நீங்கியரன் மலரடிக்கீ ழிருப்பன்**
**மாறாத சிவாநுபவ மருவிக் கொண்டே.**

(கொ—ரு) காட்டக் கண்டிடுந்தன்மையுடைய கண்ணுக்கு எயும் உயிர்காட்டிக் கண்டிடுமாபோல, உயிர்க்கு ஈசன் காட்டிக் கண்டிடுவன். காயம் ஒழிந்தால் சுத்தனாகி ஆன்மா இத்தை ஆயும் அறிவுடையனாய் எனவும், மருவிக் கொண்டே இருப்பன் எனவுங் கூட்டுக.

(பொ—ரை) காட்டக் காணுந்தன்மையுடைய கண்ணுக்கு உருவத்தைக்காணும்படி காட்டியும் அதாவது அறிவித்தும், கண்ணோடு நின்று அவ்வுருவத்தைக்கண்டும், பொருந்திய உயிர் உபகரிப்பது போல, அவ்வுயிர்க்கு விடயத்தை அறியும்படி அறிவித்தும் உயிரோடு கூட நின்று விடயத்தை அறிந்தும் இறைவன் உபகரித்து வருவன். ஆதலான், எல்லாமலங்களும் பின் காயமொடு மாயுமென மேலைச்சூத்திரத்து இறுதியிற் கூறிய வாற்றான், காய மொழிந்த பின்னர் மும்மலங்களும் நீங்கப்பெற்றுச் சுத்தனா

தற்குரிய ஆன்மா, முதல்வன் அத்துவிதமாய் நின்று அறிவித்தும் அறிந்தும் வருகின்ற உபகாரமாகிய உரிமையை உறுதியாகப் பற்றி யறிந்து கொண்டு நிற்கப்பெற்றால், அவ்வாறுபகரிக்கும் உரிமையினையுடைய அம்முதல்வன்றிருவடிகளை அடையவேண்டுமென்னும் இச்சை இடையறாது நிகழும். அங்ஙனம் அறிவும் இச்சையும் பிறிதொன்றற் சேரலின்றி அத்துவித நிலை ஒன்றே பற்றி முதல்வன் திருவடிக்கண் ஒருங்கு நிகழவே, காயமொழிந்த பின் மலம் நீங்கிச் சுத்தனாய் நிற்கும் முறைமையை காயத்தோடு நிற்கும் பொழுதே கைகூடப் பெறும். அவ்வாறு பெறுதலால், வினைக்கிரியையினையும், எல்லா மலங்களையும் இம்மைக்கண்ணே நீத்தொழித்து இறைவனுடைய அறிவிச்சைகளோடு ஆன்மாவாகிய தன்னுடைய அறிவிச்சைகள் ஒற்றுமைப்பட்டு அவ்விறைவனது செங்கமல மலர்போலும் திருவடியைக்கூடி மாறுபடாத சிவாநுபூதியே சுவாநுபூதியாய்க் கொண்டு வாழ்வன். (எ—று)

காணுமுபகாரத்தில் அத்துவித நிலை இனிது விளங்கும். எவ்வாறெனின், உயிர் ஒன்றனைக் காண்பதற்கு அதனை இறைவனுங் காண்டலே காணுமுபகாரம். அவ்வாறு காணுதல் உயிரின் வேறாய் நின்றால் கூடாது. ஆதலால், ஒன்றாய் நிற்றல் பெறப்படும். ஒன்றாகவே நிற்பின் இவனுக்காக அவன் காணுதலென்பது சித்திக்காது. ஆதலால், வேறாய் நிற்றல் பெறப்படும். இவ்வாறு ஒன்றாகவேனும், அல்லது வேறாக வேனும் நிற்பினும் இவனுக்காக இவன் செல்லுமிடமெல்லாஞ் சென்றுகாண்பனென்பது சித்திக்காமையின் ஒன்றாதற்கும் வேறாதற்கும் பொதுவாக உடனாய் நிற்றல் பெறப்படும். இவ்வாறு ஒன்றாயும், வேறாயும், உடனாயும் நிற்கும் நிலையே அத்துவிதமெனப்படும். இதனை விளக்குவதாகிய காணுமுபகார மாத்திரையே இச்சூத்திரத்திற் கூறப்புகுந்த ஆசிரியர், அக்காணுமுபகாரமானது காட்டுமுபகாரத்தின் பின்னாக நிகழுமென்பது இனிது விளங்குதற் பொருட்டு மேல் நின்சூத்திரத்திற் கூறிப்போந்த காட்டுமுபகாரத்தையும் அநுவதித்து உடன் கூறினார். இச்சூத்திரத்திற்குக் காணுமுபகாரமாத்திரையே கூறுதல் கருத்தென்பது சிவஞானபோதமாகிய முதனூலில்* "உள்ளத்தைக் கண்டு காட்டல்" என்னுஞ் சூத்திரத்திற்கு "அவனுமவற்றது

* சிவஞானபோதம், ககம் சூ—ம்

விடயத்தை உணருமென்றது" எனக்காணு முபகாரமாத்திரையே எடுத்துக்கொண்டுரைத்த கண்ணழிப் புரையானு முணர்க. காட்டுமுபகார மாத்திரையேயன்றி, அதன் பின்னாக உடனின்று காணு முபகாரமும் உயிர்க்கு வேண்டப்படுமென்பது "எவ்விடத்தும்" என்னும் இச்சூத்திரம் எ-வது செய்யுளிற் காட்டப்படும்.

சுத்தனாகி என்பது சுத்தனாவோன் என்னும் பொருள் குறித்தலின் ஆகி என்பது பெயர். அந்நிலை என்பதற்கு மேல் அ-ஞ்சூத்திரம் உஉ-வது செய்யுளிற் கூறப்பட்ட ஞானஞேயமொடு ஞாதிருவுநாடாவண்ணம் சிவனுடனும் பெற்றி நிலையெனவும், மலம் நீங்கியிருக்கின்ற சிவன்போலும் நிலையெனவும் உரைப்பாரு முளர். அகரச்சுட்டு மேல் அடுக்க நின்றதனை யொழித்து வேறொன்றனைச் சுட்டுதல் செல்லாமை அவர் நோக்கிலர். இச்சூத்திரத்தில், மேலைச்சூத்திரத்திற் கூறாது விடுத்த குற்றமகலும் என்பதை விரித்துக் கூறுகின்றாராதலின் இச்செய்யுள் முக்கூற்றையுடையது. ஆயினும் முதனூல் முறைப்படி இச்சூத்திரத்தை இரண்டு கூறாக்கி, மேலைச் சூத்திரக்கூற்றை ஒரு கூறாகப் பிரித்தெண்ணாது முதற்செய்யுளுடன் தொகுத்து வைக்கப்பட்டிருக்கின்றது. அம்முக்கூற்றுள், மேலைச்சூத்திரத்தின் ஒழிபாகிய கூறு:—

காயமொழிந்தாற் சுத்தனாகி அந்நிலைமை இந்நிலையில் அடைந்த முறையாலே மாயமெலாம் நீங்கி.

இச்சூத்திரத்து முதற் கூறு:—ஆன்மா காட்டக் கண்டிடுந்தன்மையுடைய கண்ணுக்கு எயும் உயிர் காட்டிக் கண்டிடுமாபோல ஈசனுயிர்க்குக் காட்டிக் கண்டிடுவன்.

இரண்டாங்கூறு:—இத்தை ஆயும் அறிவுடையனாய் அன்பு செய்ய அரன்மலரடிக்கீழ் மாறாத சிவாநுபவம் மருவிக்கொண்டே இருப்பன். (க)

சிவாநுபவமுடைய முத்தருக்குச் சிவமேயன்றிப் பிற பொருள் தோன்றாதெனக் கூறுகின்றது.

**பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே**
**பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் பார்க்க**
**வருஞானம் பலஞான மஞ்ஞான விகற்பம்**
**வாச்சியவா சகஞானம் வயிந்தவத்தின் கலக்கந்**
**தருஞானம் போகஞா திருஞான ஞேயந்**
**தங்கியஞா னஞ்சங்கற் பனைஞான மாகுந்**

***திருஞான மிவையெல்லாங் கடந்தசிவ ஞான***
***மாதலாற் சீவன்முத்தர் சிவமேகண் டிருப்பர்.***

**(கோ - ௬)** கலக்கந்தரு வயிந்தவத்தின் ஞான மெனவும், போகத் தங்கிய ஞாதிருஞான ஞேயஞானம் சங்கற்பனை ஞானமாகும் எனவும், இவையெல்லாங் கடந்த சிவஞானம் திருஞானமெனவுங் கூட்டுக.

**(பொ - ரை)** மேற்கூறியவாறு அத்துவிதமாய் நின்று உபகரிக்கும் இறைவன் உரிமையை ஆயும் அறிவாகிய பரஞானத் தால் அச்சிவத்தை நோக்கி அன்பு செய்யப்பெற்றவர் அச்சிவம் ஒன்றனையே அறிந்து நிற்பரன்றிப் பிராரத்தவினை தாக்குதற் குரிய ஏனைப்பொருள்களை ஒரு சிறிதுங் காண்பாரல்லர். அப் பொருள்களைக் காணவரும் ஞானங்கள் கருவிகளோடு கூடி நின் றறியும் பிரத்தியட்சம், அநுமானம், ஆகமம் என்னும் சுட்டுணர் வின் பேதங்களாகிய அளவை ஞானங்களாம். குருவினிடத்துக் கேட்கும் சாத்திர ஞானமோவெனின், அது ஐயந்தருவதாய் நால் வகை வாக்கைப்பற்றி நிகழும் சுத்தமாயா காரியமாகிய சொல் லும் பொருளுமான ஞானமாம். அச்சாத்திரம் பலவேறு வகைப் பட விரிந்து கிடக்குமாதலால், இது சரியோ, அது சரியோ என்ற கலக்கமுண்டாகும். அக்கலக்கந் தீர்வதற்காக அப்பொருளை ஆராய்வதான சிந்தித்தல் ஞானமோவெனின், அது ஆராய்ச்சி ஞானமாம். சிந்தித்த பின்னர்த் தெளிவதாகிய சாதன ஞானமோ வெனின், அது காண்பானும் காட்சியும் காணப்படு பொருளு மாகிய பேதஞானமேயன்றி அநுபூதி ஞானமன்று. ஆதலால், இவையனைத்திற்கும் மேலாய் இவ்விடத்திற் கூறப்பட்ட நிட்டை யாகிய சிவஞானமொன்றே பதார்த்தங்களைப் பார்க்க வராத சிறப் புடைய ஞானமாம். இதனைப்பெற்ற சீவன் முத்தர் சிவ மொன்றே கண்டிருப்பரன்றி ஏனைப்பதார்த்தங்களை நோக்கிப் பிராரத்தவாதனையிற் படுவாரல்லர். (எ-று)

இச்செய்யுளில் முதற்கண் "பரமே பார்த்திருப்பர்" என்றதனையே முடிந்தது முடித்தலென்னும் உத்தியால் "சிவமே கண்டிருப்பர்" என இறுதிக்கண் கூறினாராகலின் கூறியது கூறலன்மை யுணர்க. பரமே

சிவமே என்றவிடத்து ஏகாரம் ஏனைப்பதார்த்தங்களைப் பிரித்தமையின் பிரிநிலை. இவ்விடத்து அஞ்ஞானமென்றது சுட்டுணர்வைக் குறித்தது. கலக்கம்—ஐயம். கேட்டலறிவானது பின்னர்ச் சிந்தித்துத் தெளியும்படி ஐயத்தை விளைத்தலால் அதனைக் கலக்கந்தரு ஞானமென்றார். போகத் தங்கிய ஞானம் என்றது அக்கலக்கந்தரு ஞானம் போம்படி காண்பானும் காட்சியும் காணப்படு பொருளுமாகத் தங்கிய பேத ஞானம் என்பதாம். பரமே பார்த்திருப்பரென்றதனால் பிராரத்தத்தின் வாதனை பற்றறக்கழியு மென்பது சாதிக்கப்பட்டது. (உ)

திவ்விய தேகத்தோடு இருத்தலே முத்தி என்பாரை மறுத்துச் சிவாநுபவம் உடையவர்க்கு மாயாமலம் பற்றறக் கழியு மெனக் கூறுகின்றது.

அநாதியுட லொன்றினைவிட் டொன்றுபற்றிக் கன்மா
லாயழிந்து வருதலா லந்த மில்லை
பிறாதியருள் பெற்றவர்க ணித்தவுரு வத்தைப்
பெற்றிருக்கை முத்தியெனிற் பெறும்பதமே யிதுவு
மிறைதுநிலை யிதுதானுங் காய முண்டே
லிருங்கன்ம மாயைமல மெல்லா முண்டா
மறுதிதரு முடலாதி காரியத்தா லநாதி
மலமறுக்கு மருந்தற்று வுடன்மாயுங் காணே. 31உ

(கோ - ரு.) உடல் அநாதி ஒன்றினைவிட்டு ஒன்று பற்றிக் கன்மால் ஆய்ப் பின் அழிந்து வருதலால் அந்தம் இல்லை. ஆதி அருள் பெற்றவர்கள் நித்த உருவத்தைப் பெற்றிருக்கை முத்தி யெனில், காயம் உண்டேல் மாயை இருங்கன்மம் மலம் எல்லாம் உண்டாம். இதுதானும் இறைது நிலை. இதுவும் பதமே பெறும். மறுதிதரும் உடல் காரியத்தால் ஆதி.

(போ - ரை.) ஆன்மாக்களுக்கு அநாதியே கன்மத்தினால் நீரோட்டம் போலத் தொடர்ச்சியாய்த் தேகம் உண்டாகியும் அழிந்தும் வரும். ஆதலால் யாதேனும் ஒரு தேகம் இல்லாத நிலை இல்லை. அவ்வாறு ஒரு நிலை உண்டென்று கூறுதல் பொருந்தாது. ஆதலின் முதல்வனருளைப் பெற்றவிடத்தும் தோன்றியழியும் உடம்புபோலின்றி நித்தியமங்கள திவ்விய சரீரத்தைப்பெற்

றிருத்தலே முத்தியென்று உருவசிவ சமவாதிகள் கூறுவர். அவ்வாறாயின் உடம்பு உளதாகவே அதற்குக் காரணமாகிய மாயையும், அதன்கண் நிகழும் சுகதுக்க அநுபவங்கட்கு ஏதுவாகிய மிக்க கன்மமும், அக்கன்மத்தைக் கூட்டுவிப்பதாகிய ஆணவமும் ஆகிய அனைத்தும் விட்டு நீங்குதலில்லை. ஆதலின், அந்நிலையும் துன்பம்பயக்கும் நிலையேயாம். அதனை முத்தியென்று நூல்களிற் கூறுவதற்குத் தாற்பரியம் பதமுத்தி யென்பதேயாம். அன்றியும் இவ்வுடம்பு மனமுதலிய சூக்கும சரீரத்தினின்றும் தோன்றுதலினால் ஆதியேயாம்; அநாதியன்று. அதுவும் ஆன்மாவை அநாதியேபற்றி இருக்கின்ற ஆணவ மலமாகிய நோயைத் தீர்த்தற்கு மருந்தாகத் தோற்றுவதாம். ஆதலால், ஆணவ மலம் நீங்கியவிடத்து உடம்பு நீங்குவதேயன்றி மலம் நீங்கி அருள் பெற்ற முத்தியிலும் உடம்பு உண்டென்றல் பொருந்தாது. (எ-று)

சிவசமவாதம் உருவ சிவசமவாதம், அருவசிவசமவாதம் என இரு திறப்படும். உருவ சிவசமவாதமாவது, சிவனுடைய தடத்தத் திருமேனியைப்போல், சரீரத்தைப்பெற்று அதனால் சிவனோடு சமமாவேனென்பது. அருவ சிவசமமாவது சிவனுடைய சொரூபத் திருமேனியைப்போல், மல நீங்கிய நிலையில் தனக்கும் எண்குணமுடைமையும் பஞ்ச கிருத்தியமுடைமையும் உளவெனக்கொண்டு சிவனோடு சமமாவேனென்பது.

கன்மமலமென்பது ஆன்மாவினாற் செய்யப்படும் நல்வினை தீவினைகள். இது அநாதி கேவலத்தினின்று சகலத்திற்கு வந்தது முதல் தொடர்ச்சியாய் நிகழும். சகலத்தில் முதற்கண் நிகழ்வதற்கும் ஓர் தொடர்ச்சி வேண்டப்படும். அதுவே மூலகன்மம் எனப்படும். அம்மூலகன்மமும் பலவேறு வகைப்பட நிகழ்ந்தாலன்றி அதுசம்பந்தமாகப் பின்னிகழும் கன்மம் பலவேறுவகைப்பட நிகழுமாறில்லை. அங்ஙனம் மூலகன்மம் பலவேறுவகைப்பட நிகழ்தற்கும் ஒருகாரணம வேண்டப்படும். அது ஆணவ மல மறைப்பின் பேதமேயாம். ஆகவே, கன்மத்தைக் கூட்டுவிப்பது ஆணவ மலமென்பதறிக. இந்த ஆணவமலம் இயல்பாகவே கூடியிருத்தலால் அநாதியெனப்பட்டு அதனாற் கூட்டப்படும் கன்மமும், அக்கன்மத்தாற் கூட்டப்படும் மாயையும் அநாதியாமாறு கண்டுகொள்க.

இச்செய்யுள், ஆணவமலம் நீங்கி முத்திபெற்ற பின்னரும் மாயாகாரியமாகிய உடம்பு உண்டென்னும் உருவ சிவசமவாதிகளை மறுத்து, ஆணவ

மலம் நீங்கிய பின்னர் அதுகாரணமாக உண்டாகும மாயாகாரியம் பற்றறக் கழியுமென்பது தடைவிடைகளாற் சாதிக்கப்பட்டது. (௩)

சிவாநுபவமுடையார்க்கு ஆணவமலம் பற்றறக் கழியும் என உவமை முகத்தால் கூறுகின்றது.

தெரிவரிய மெய்ஞ்ஞானஞ் சேர்ந்த வாறே
    சிவம்பிரகா சிக்குமிங்கே சீவன்முத்த னாகு
முரியமல மௌடதத்தாற் றடுப்புண்ட விடமு
    மொள்ளெரியி னொளிமுன்ன ரிருளுந் தேற்றின்
வருபரல்சேர் நீர்மருவு கலங்கலும்போ லாகி
    மாயாதே தன்சத்தி மாய்ந்து காயந்
திரியுமள வும்முளதாய்ப் பின்பு காயஞ்
    சேராத வகைதானுந் தேயு மன்றே.

(கோ - ௫.) உரியமலம் மாயாதே தன் சத்திமாய்ந்து காயம் திரியும் அளவும் உளதாய் பின்பு காயஞ் சேராத வகைதானுந் தேயுமன்றே. தேற்றின் வருபரல் சேர்நீர் மருவு கலங்கலும், ஒள் எரியின் ஒளிமுன்னர் இருளும், ஔடதத்தால் தடுப்புண்ட விடமும் போலாகி.

(பொ - ரை.) மேற்கூறிய தெரிதற்கரிய பரஞானத்தைப் பெற்றபொழுதே சிவம் பிரகாசிக்கும். அப்பொழுதே சீவன்முத்தனாவன். சீவன்முத்தியாவது, சிவம்பிரகாசிக்கப் பெற்றும் பிராரத்த தேகத்தோடு கூடிய நிலையாம். தேகத்தோடு கூடியிருப்பினும சகசமாகிய ஆணவமலம் தனது சத்திகெட்டு வாசனை மாத்திரையாய் உடம்பு உள்ள அளவும் நின்று உடம்பு நீங்குங்கால் பிறிதொரு பிறவிக்கேதுவின்றி அவ்வுடம்போடு பற்றறக்கழியும். மலமிருந்தும் அதன் செயலில்லாமற்போவது எவ்வாறெனின், தேற்றான்விரை சேரப்பெற்ற நீரில் அடங்கியிருக்கும் கலங்கல் யாதானும் ஒரு காரணத்தால் மேற்படினும் மீண்டும் அத்தேற்றான் விரை அடக்கிவிடும். அதுபோலப் பரஞானத்தால் அடங்கியிருக்கும் மலம் பண்டை வாசனையால் மேற்படினும் மீண்டும் அப்பரஞானம் அடக்கிவிடும். அடங்கியாவது மல மிருத்தலினுன்

பிறிதொரு பிறவியைத்தராது கழியுமென்றல் எவ்வாறு கூடு மெனின், மிகுந்த அக்கினிப்பிரகாசத்தின் முன்னர் இருளில்லா ததுபோல் தேகம் நீங்கிய பின்னர் எப்பொழுதும் சிவம் பிரகா சிக்கப்பெறுவாராதலின், அவரிடத்து மலம் பற்றறக் கழியும். கழியினும், அக்கினிப் பிரகாசம் இல்லாத விடத்து இருள் இருப் பது போல, ஏனைப் பெத்தரிடத்தில் மலமிருக்கும். அவ்வாறாயின் தேகத்தோடு கூடியிருக்கும்போதே சிவம் பிரகாசித்துவிட்டபடி யால் சீவன் முத்தி நிலையினும் மலம் அறவே யில்லையென்று சொல்லக்கூடாதோவெனின், கூடாது. எதனாலெனின், மருந்தி னாற்றடைப்பட்டிருக்கும் நஞ்சமானது மருந்தின் வலியின் குறை வை எதிர்பார்த்திருப்பதுபோல், சீவன் முத்தரிடத்துச் சிவபா வனையினின்றும் நழுவுதலை மலம் எதிர்பார்த்து அடங்கியிருக்கு மாதலினென்க. ஆதலால், சிவம் பிரகாசிக்கப்பெற்ற சீவன் முத்தி நிலையினும் எப்பொழுதும் சிவபாவனை செய்து தேகம் நீங்கப் பெற்றால் மலம் பற்றறக்கழியும். (எ-று.)

மெஞ்ஞானஞ் சேர்ந்தவிடத்து தேற்றின் வருபரல்சேர் நீர் மருவ கலங்கல்போலும், சிவம் பிரகாசித்தவிடத்து ஒள்ளெரியி னொளிமுன்னர் இருள்போலும், சீவன்முத்தனானவிடத்து ஔடதத்தாற் றடுப்புண்ட விடம் போலும் என எதிர் நிரனிறையாக வைத்துக் கண்டுகொள்க. விளக்கு முதலிய அற்ப எரியின் ஒளிகளை நீக்குதற்கு ஒள்ளெரி என விசேடித்தார். ஒள்ளெரி—மிக்க எரி. இச் செய்யுளால் ஞானம் பிரகா சிததோர், சிவம் பிரகாசித்தோர், சீவன் முத்தராகிய மூவரிடத்தும் மலம் பற்றறக் கழியுமுறைமை கூறப்பட்டது. (ச)

ஆணவமலம் அநாதி யாதலால் பற்றறக் கழியாதென்பாரை மறுத்துப் பற்றறக் கழியுமென்பது வலியுறுத்தப்படுகின்றது.

**ஆணவந்தா னநாதி யந்த மடையாதாகு**
**மடையினந்த வான்மாவு மழியுமெனிற் செம்பிற்**
**காணலுறுங் களிம்பிரத குளிகைபரி சிக்கக்**
**கழியுஞ்செம் புருநிற்கக் கண்டோ மன்றே**

*தாணுவின்றன் கழலிணையத் தவிருமலந் தவிர்ந்தாற்*
*றான்சுத்த னாயிருக்கை முத்தியரன் றானைப்*
*பூணவேண் டுவதொன்று மில்லையெனி னருக்கன்*
*புகுதவிருள் போமடியிற் பொருந்தமலம் போமே.*

(கோ—டு) இரத குளிகை பரிசிக்கச் செம்பில் காணலுறு களிம்பு கழியும் எனவும், மலம் தவிரும் எனவும், பொருந்தவே மலம் போம் எனவுங் கூட்டுக.

(போ - ரை.) முற்கூறிய ஆணவமலம் அநாதி நித்தமாதலால், முத்தியில் அது அழிவதில்லை. அழியுமாயின், அநாதி நித்தமாகிய ஆன்மாவும் அழியுமெனப்பட்டு இரு பொருளும் நித்தமென்பது இழுக்காய் முடியும். ஆதலின், முத்தி நிலையினும் சகசமாகிய ஆணவமலம் நீங்குமாறில்லை என்பர் பாடாணவாதசைவர். மலத்தோடு கூடி அறியாமையாய் அடங்கியிருத்தலின் பாடாணவாதி யெனப் பட்டார். பாடாணம் என்பது கல். அநாதியாகிய செம்பினிடத்து அநாதியாயுள்ள களிம்பு இரதகுளிகை பரிசித்த மாத்திரத்தில் நீங்கி அச்செம்பு பொன்னுருவாய் நிற்கக் காண்பது போல், இறைவன்றிருவடியாகிய மெய்ஞ்ஞானஞ் சார்ந்த மாத்திரையே உயிரோடு சகசமாய் நின்ற ஆணவமலம் நசிக்கும்; நசிக்கவே உயிர் ஆணவமலத்தின் வேறாய்ச் சிவமாய் நிற்றற்கு இழுக்கில்லையாதலின் அப்பாடாணவாத சைவர் மதம் பொருந்தாது. இனி மலம் நீங்கப் பெற்ற மாத்திரையே மெய்ஞ்ஞானம் சாரும். அதுவே முத்தி; மலம் நீங்கியபின் மேலும் திருவடியடைதல் வேண்டாமென்பர் பேதவாத சைவர். இவர் சிவனோடு கலவாமையின் பேதவாதி யெனப்பட்டார். இருள் நீங்கிச் சூரியனொளி பிரகாசித்த விடத்தும் சூரியனொளியோடு கண்ணொளி கலந்தால் இருள் நீங்கும். கலவாது இமைகளால் மூடப்பெற்றிருப்பின் கண்ணுக்கு இருள் நீங்காதவாறு போல, ஆன்மாவின் அறிவுக்கு மெய்ஞ்ஞானம் பிரகாசித்து ஆன்மா இறைவனுடன் கலந்தால் மலம் பற்றறக் கழியும். இன்றேல் ஆன்மாவினிடத்து

மலம் பற்றறக் கழியாது; ஆதலால், அப் பேதவாத சைவர் மதமும் பொருந்தாது. (எ. று.) (ரு.)

அநாதியான ஆணவமலம் கெடுமென்பதற்கு வேறு உவமை கூறி, கெடினும் ஏனைப் பெத்தரிடத்திருத்தலினால் நித்தத்திற் கிழுக்கில்லை எனக் கூறுகின்றது.

**நெல்லினுக்குத் தவிடுமிக ளநாதி யாயே**
**நெல்லைவிட்டு நீங்கும்வகை நின்றநிலை நிகழ்த்தீர்**
**சொல்லியிடிற் றுகளற்ற வரிசியின்பா லில்லை**
**தொக்கிருந்து மற்றொருநெற் றோன்றி டாவா**
**மெல்லவிவை விடுமறவே யிவைபோல வணுவை**
**மேவுமல முடல்கன்ம மநாதிவிட்டே நீங்கு**
**நல்லசிவ முத்தியின்கட் பெத்தான் மாவை**
**நணுகிநிற்கு மாதலா னாசமுமின் றாமே.**

(கோ—டு) நெல்லினுக்கு அநாதியாயே (முளை) தவிடு உமிகள் நெல்லை விட்டு நீங்கும் வகை நின்ற நிலை நிகழ்த்தீர்; தொக்கிருந்து மற்றொரு நெல் தோன்றிடாவாம். சொல்லியிடின் துகளற்ற அரிசியின் பால் இல்லை. மெல்ல இவை அறவே விடும். இவை போல அநாதி அணுவை மேவுமலம் உடல்கன்மம் நல்ல சிவமுத்தியின் கண் விட்டே நீங்கும்.

(போ—ரை) இரத குளிகை பரிசித்த செம்பிலும் களிம்பு தொக்கியிருக்கும். அதுபோலச் சிவம் பிரகாசித்த ஆன்மாவிடத்தும் மலந்தொக்கி நிற்கும். ஆதலால், அவ்வுவமையினால் மலம் அழிந்தும் ஆன்மா அழியாதென்று சாதித்தது பொருந்தாதெனின், அரிசியொடுஞ் சகசமாய் நின்ற முளை தவிடு உமிகள் அநாதியாயினும் அவ்வரிசியை விட்டுக் கெட்டொழிய அவ்வரிசி கேடின்றி நிலைபெறுதல் கண்டாம். இங்ஙனம் நீங்குமியல்பை யாராய்வீராக. முளையின் கேடு காணப்படவில்லையென்று சொல்லுமிடத்து, தவிடுமிகள் நீங்கிய அவ்வரிசியின் கண்ணும் முளையடங்கியிருக்குமேனும், வேறு நெல்லுத்

தோன்றுதற்குக் காரணமாதல் செல்லாமையால், தவிடுமிகளற்ற அவ்வரிசியின்கண் அம்முளையடங்கியிருக்குமென்று சொல்லுதற்கு ஓரியையின்றிச் சிலநாளில் மெல்ல மெல்ல நீங்கிவிடுமாதலின், அம் மூன்றும் இல்லை யென்பதே தேற்றம். அது போல, அநாதியே உயிர்களோடு சகசமாய் நின்ற மும்மலங்களும் நன்மையாகிய சிவமுத்தியில் விட்டொழியுமென்றே கொள்க. விட்டொழியினும் ஏனைப் பெத்தரிடத்து இருத்தலால் அம் மலங்கள் நித்தப் பொருளாதற்கும் இழுக்கில்லை. (எ—று.)

துகள்—தவிடுமிகள். மாயை, உடலெனவுபசரிக்கப் பட்டது.

உண்மை விளக்கமென்னும் நூல், ருக-வது செய்யுளில் "இத்தை விளைவித்தல் மலம்" எனக் கூறி முத்தியினும் மலம் உண்டென்று சாதித்திருக்கவும், முத்தியில் மலம் நீங்கு மென்றல் எவ்வாறு பொருந்துமெனின், துன்பத்தை விளைவிக்கும் மலம் இன்பத்தை விளைவிக்க மாட்டாது. இருள் ஒளியைச்செய்தலெக்காலத்து மில்லையாதலின், மல நீக்கமே இன்பத்தை விளைவிக்கும் என்பதை அவ்வாறு கூறினராகையால் மலம் நீங்குமென்றல் பொருந்தும் என்க. அச்செய்யுளில் இல்லையென்னும் உணர்விற்கு விடயமாய் மலம் நின்றவாறறிக. ஆயினும் இல்லையென்று கூறவேண்டிய மலத்தை உண்டென்று கருதும் வண்ணம் கூறியது பொருந்துமோ வெனின், சுருக்கிக் கூறவேண்டிய இடங்களில் அவ்வாறு கூறுதல் நூல் வழக்காதலின் பொருந்தும். இதனை "கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே யெடுப்பதூஉ மெல்லாம் மழை" என்னுந் திருக்குறளானு மறிக. மழை கெடுப்பதூஉம் என்பதற்கு மழையின்மை கெடுப்பதும் என்பது பொருளாதல் போல, மலம் இத்தை விளைவித்தல் என்பதற்கு மலமின்மை இத்தை விளைவித்தல் என்பது பொருளாதலறிக.

பெத்தான்மாவை நணுகி நிற்றலினால் மலம் நித்தமென்ற இதனானே சில ஆன்மாக்கள் நித்திய பெத்தராயிருப்பரோவெனின், அன்று. ஒவ்வொரு ஆன்மாக்களும் முத்தியடைதற்குரியனவேயாம். இதுபற்றிய சங்கையுத்தரங்களை இவ்விடத்து விரிப்பிற் பெருகும். "விண்டவர்கண் மூலமலம் வீற்றிவா மீளார், பண்டைமுறை நாடுடல் படைப்பு நிலையீறுங், கண்டனை பிழந்த வுயிர்சாரணனிடத்தே, யுண்டுலவிடாத கிழியுற்றபொருளோத்தே" என்னுஞ் சிவதருமோத்தரச் செய்யுளானும் "பிறந்த காண்

மேலும் பிறக்கு நாள் போலுங், துறந்தோர் துறப்போர் தொகை'' என்னும் திருவருட் பயனும், பிறவாற்றானும் உய்த்துணர்ந்து கொள்க.

சிவம் பிரகாசித்த விடத்தும் மலம் தொக்கி நிற்கும் என்பாரை மறுத்தற்கெழுந்த இச்செய்யுளில், மெய்ஞ்ஞானஞ் சேர்ந்த மாத்திரையே மலம் பற்றறக் கழியுமென்பாரையும் மறுக்கவேண்டி "மெல்ல இவை விடுமறவே" என்றுங் கூறினர். கூறவே, மெய்ஞ்ஞானத்தால் மலம் சிறிது சிறிதாக நீங்கப்பெற்று சிவம் பூரணமாய்ப் பிரகாசித்த விடத்து மலம் பற்றறக் கழியுமென்பது கண்டுகொள்க. செய்யுளில் முளைகூறவில்லையாயினும் தவிடு உமிக்குரிய இனம்பற்றியும், உவமேயப் பொருளாகிய மலம் மூன்றென்பது பற்றியும் முளையுமுடன் வைத்து உரைசெய்யப்பட்டது. இரத குளிகை பரிசித்த செம்பு சுத்தமான பொன் என்பது காட்சியளவைக் கெய்தாமையின் அதில் களிம்பு தொக்கிருக்கு மென்பார்க்குக் காட்சியளவையின் வைத்துத் தொக்கு நிற்றல் செல்லாதென்பதுணர்த்துதற் பொருட்டு இல்லை யென்னும் உணர்வாகிய அநுபலத்தியாலறியப்படும் நெல்லுவமையைக் கூறினார். முளை உமி தவிடு நீங்கினமை காட்சியளவையின் வைத்தறியப்படுதலின் தொக்கிருக்கு மென்றல் செல்லாமையறிக. இவ்வுவமையால் மலம் அநாதி யென்பதும், அது அழியுமென்பதும், அதனால் ஆன்மா அழியாதென்பதும் ஒருங்கே வலியுறுத்தப்பட்டன.

இவையைந்து செய்யுளும் மேலைச் சூத்திரத்தின் "அகலுங் குற்றம்" என்ற இறுதிக்கூற்றின் ஒழிபாய் சிவப்பேற்றோடு இயைபுபற்றி இவ்விடத்து வைக்கப்பட்டன. (௬)

---

# முதலதிகரணம்.



## ஆன்மா காட்டக் கண்டிடும்......கண்டிடுவன்என்பது.

அநாதி சம்பந்தமான ஆணவமலத்தினின்று முத்திக்காலத்து உயிர் நீங்குமாறுபோல, பெத்தமுத்தி இரண்டினும் இறைவனை விட்டு நீங்கி உயிர் தனித்து நிற்றல் இல்லையெனக் கூறுகின்றது.

எவவிடத்து மிறையடியை யின்றியமைந் தொன்றை
யறிந்தியற்றி யிடாவுயிர்க ளீசன் ருனுஞ்
செவ்விதினி னுளம்புகுந்து செய்தியெலா முணர்ந்து
சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்ப
னிவ்வுயிர்க டோற்றும்போ தவனையின்றித் தோற்ரு
விவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கு
மவவுயிர்போ னின்றிடுவ னாத லாஞு
மரனடியை யகன்றுநிற்ப தெங்கே யாமே. 316

(கோ-ரு.) எவ்விடத்தும் இறை அடியை இன்றி உயிர்கள் அமைந்து ஒன்றை யறிந்து இயற்றியிடா ஈசன்ருனும் அம்முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கும் அவ்வுயிர்போல் இவ்வுயிர்கள் தோற்றம் போது அவனையின்றித் தோற்ரு. இவற்றினுக்கு நின்றிடுவன். செவ்விதினின் உளம் புகுந்து செய்தி எலாம் உணர்ந்து சேட்டிப்பித்து எஙகுமாயச் செறிந்து நிற்பன். ஆதலால் நாம் அரனடியை அகன்று நிற்பது எங்கேயாமே.

(பொழி.) மேற்கூறியவாறு அநாதியான ஆணவமலத்தினின்று நீங்குவது போல, அநாதியாகிய இறைவனை விட்டும் உயிர் நீங்குமோவெனின், எக்காலத்தும் இறைவனைவிட்டு உயிர் நீஙகாது. எதனுலெனின், பெத்த முத்தி இரண்டினும் ஆன்மாககட்கு இறைவன் திருவடியையின்றி நின்று அறிவு செயல்கள் விளங்குதலும், விளங்கியபின் விடயத்திற் சென்று பற்றுதலுங் கூடாவாம். ஆகலான் அக்கரங்களை இயக்குதற் பொருட்டு அகரமாகிய நாதம் அவ்வக்கரங்களின் உடனிற்குமாறுபோல, ஆன்மாக்களுக்கு அறிவு செயல்கள் இறைவனையின்றி விளங்காமையின், அவை விளங்குதற் பொருட்டு இறைவன் அவ்வான்மாக்களோடு கலந்து நிற்பன். இது காட்டும் உபகாரம். அங்ஙனம் விளங்கிய அறிவு செயல்கள் விடயத்திற் சென்று பற்றுதற்பொருட்டு அவ்வுயிர்களை இறைவன் இடமாகக்கொண்டு உயிர்கள் செல்லும் வழி எல்லாம் இறைவன அறிந்து செலுத்தி விடயங்களினும் உடனுகக் கலந்து நிற்பன். இது காணும் உபகாரம். ஆதலால், ஆணவமலத்தினின்றும் நீங்கி முத்தியில் உயிர் வேறு நிற்பதுபோல,

இறைவனை விட்டு நீங்கித் தனித்து நிற்றல் பந்தமுத்தி இரண்டினு மில்லை. (எ-று.)

மலத்திற்கும் ஆன்மாவிற்குமுள்ள சம்பந்தம் அரிசிக்கும் உமிக்கும் போல அநாதி சையோக மாதலின், மலத்தினின்று ஆன்மா நீங்குமெண வும், இறைவனுக்கும் ஆன்மாவிற்குமுள்ள சம்பந்தம் குண குணிகட்குப் போல அநாதி தாதான்மிய மாதலின், இறைவனைவிட்டு ஆன்மா எக்காலத் தும் நீங்குமாறில்லை யெனவும் அறிந்துகொள்க. குணகுணி வுவமை பிரி க்க முடியாமைக்கு மாத்திரங் கொள்க.

இச்செய்யுளுள் உயிர்கள் இயற்றியிடாவெனவும் ஈசன்றானும் எங்கு மாய்ச் செறிந்து நிற்பனெனவும் கூறியது, ஆன்மாவினறிவு செயல்கள் விடயங்களை யநுபவிக்கு மியல்பிற்கும், அமைந்து அறிந்திடாவெனவும் தோற்றும் போதவனையின்றித் தோற்றாதெனவும் ஈசனவ்வுயிர்போனின் றிடுவனெனவுங் கூறியது, அவ்வறிவு செயல்கள் விளங்குதற் கட்படுமியல் பிற்கு மெனக் கொள்க. இடா என்பதை அறிந்து என்பதனோடுங் கூட் டுக. இவ்விருதிறத்துள், அறிவு செயல்கள் விளங்குதற்கு உயிரிற் கலந்து நின்று அவ்வறிவு செயல்களை விளக்கவேண்டுதலின் அங்ஙனம் விளக்குதல் காட்டுமுபகாரமெனவும், விடயங்களை யநுபவித்தற்கு உயிரை யதிட்டித் துக் கொண்டு சென்று விடயத்திற் கலந்து நிற்க வேண்டுதலின், அவ் வாறு நிற்றல் காணுமுபகாரமெனவு மறிந்து கொள்க.

உயிர் ஒன்றனை யநுபவித்தல் இறைவன் அவ்வநுபவிக்கப்படும் பொரு ளினிடத்தும் சென்று கலந்து நின்று செய்யும் காணுமுபகார மாத்திரத்தா லேயே கூடும். இவ்வாறன்றி, உயிரோடு கலந்து நின்று செய்யும் காட்டு முபகார மாத்திரையினுல் கூடாது. காட்டும உபகாரமே யன்றிக் காணு முபகாரமும் உயிர்க்கு வேண்டப்படு மென்பதைக் கண்ணொளியினிடத் துக் கலந்திருக்கின்ற விளக்கொளியில் வைத்தும் அறியலாம். அதாவது கண் ஒரு விடயத்தைக் காணவேண்டுமாயின், அக்கண்ணினிடத்திருக் கின்ற இருளை விளக்கொளி மாற்றுவதோடு பார்க்கப்படும் பொருளினிடத் தும் இருளை மாற்றல் வேண்டும். அவ்வாறின்றி, கண் விளக்கொளியோடு கூடினும் பொருள் இருளிலிருக்குமாயின் பொருளையறிய முடியாது. ஒளியோடுகூடிய பொருளை இருளோடுகூடிய கண்பார்க்கின்றதே எனின், அவ்விருளோடுகூடிய கண்ணொளி பொருளோடு கலந்திருக்கின்ற விளக் கொளியோடு சென்று கலந்து பொருளை யறிவதேயன்றிப பிறிதில்லையென அறிக. இதனுல் கண்ணொளிக்குக் காணுந்தன்மையும், செல்லுந் தன்மை

யும் உண்டென்பதும், அவற்றுள், கண்ணோடுகூடிய இருள் காணுந்தன்மையைத் தடுக்குமே யன்றிச் செல்லுந்தன்மையைத தடுக்காதாதலின், கண் இருளோடு கூடியிருப்பினும் ஒளியோடுகூடிய பொருளை அறிதல் கூடுமென்பதும் அறிக. காட்டுமுபகாரம் காணுமுபகாரம் என்னும் இவ்விரணடும் வேண்டப்படும் என்னும் இக்கருத்துப்பற்றியே * "அறிவானுந் தானே யறிவிப்பான்றானே" என்றபின் "அறிவாயறிகின்றான்றானே" என்றருளிச் செய்தனர் காரைக்காலம்மையார். இதனுள் முன்நின்ற அறிதல் காட்டுமுபகாரமாகிய அறிவித்தற் கெனவும், பின் நின்ற அறிவாயறிதல் காணுமுபகாரமாகிய அநுபவித்தற்கெனவும் அறிந்து கொள்க.

இச்செய்யுளால், அநாதியே உடனின்ற ஆணவமலத்தைவிட்டு உயிர் நீங்குமாறுபோல, இறைவனோடு கூடினும் அவ்விறைவனையும் ஒரு சமயத்தில் விட்டு உயிர் நீங்குமோ என்னும் ஐயத்தை நீக்குதற்கு, பெத்த முத்தியிரண்டினும் இறைவன் விட்டு நீங்கான் என்னும் ஏதுவால் அவ்விறைவனைவிட்டு நீங்குமாறில்லை என்பது சாதிக்கப்பட்டது. (எ)

முதலதிகரணம் முடிந்தது.

---

# இரண்டாமதிகரணம்.

## இத்தை ஆயும் அறிவுடையனாய்... இருப்பன் என்பது.

இறைவன் அத்துவிதமாய் நின்று காட்டிக்காணு முபகாரத்தைச் செய்யினும் அவ்வாறு செய்கின்றானென்பதை அறிவுடைய பக்குவரேயன்றி அபக்குவர் அறியார் எனக் கூறுகின்றது.

3/7

எங்குந்தா னிறைந்துசிவ னின்றா னாகி
 மெல்லாருங் காணவே வேண்டுந்தா னென்னி
 னிங்குந்தா னந்தகருக் கிரவியிரு ளாகு
 மீசனருட் கண்ணில்லார்க் கொளியாயே யிருளாம்

* அற்புதத்திருவந்தாதி. செ-உ௦.

பங்கந்தா னெழும்பதுமம் பக்குவத்தை யடையப்
பரிதியலர்த் திடுவதுபோல் பருவஞ்சே ருயிர்க்குத்
துங்கவரன் ஞானக்கண் கொடுத்தருளி னாலே
சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே.

(கோ - டு.) சிவன் எங்குந்தான் நிறைந்து நின்றானாகில் எனவும், இரவி அந்தகருக்கு இருளாகும் எனவும், ஈசன் ஒளியாயே அருட்கண் இல்லார்க்கு இருளாம் எனவும், ஞானக்கண் அரன் துங்க அருளினாலே கொடுத்து எனவுங் கூட்டுக.

(பொ - ரை.) மேற்கூறியவாறு முதல்வன் எங்கும் நிறைந்து நின்று உபகரித்து வரின், யாவரும் அவன் அறியவில்லை எனின், இவ்விடத்து ஆதித்தன் எங்கும் விளக்கமாயிருப்பினும் அந்தகருக்கு அறியவாராது இருளாயிருப்பது போல, முதல்வன் உபகாரம் விளக்கமாயிருப்பினும் அருட்கண்ணுடையார்க்கன்றி ஏனையோர்க்கறியவாராது. சேற்றிற்றோன்றிய தாமரை மலர்களுள் பக்குவமுடைய தாமரைமலரைமட்டும் ஆதித்தன் விரியச்செய்தல் போல, அவ்வருட் கண்ணும் பக்குவமுடையார்க்கன்றிக் கிடைக்கப்பெறாது. பக்குவமுடையார்க்கும் அவ்வருட் கண் முதல்வன் பெருங்கருணையினால் கொடுக்கப்பெற வேண்டுமேயன்றித் தானே பெறமுடியாது. ஆதலால் முதல்வனருளால் அவ்வருட் கண்ணைப் பெற்றுடையார்க்கே அவ்விறைவன் அறிவிற் கறிவாய் நின்று உபகரித்து வரும் காணுமுபகாரமாகிய அத்துவித நிலை இனிது விளங்கும். (எ—று.)

இச்செய்யுளால், முதற் செய்யுளிற் கூறியவாறு அத்துவிதமாய் நின்று உபகரித்துவரும் உபகாரத்தை யறிதற்குரிமை பக்குவமுடையார்க்கேஉண்டென்பது கூறப்பட்டது.

இறைவன் எங்கும் விளங்கிக்கொண்டிருக்கவும் எல்லாரும் ஏன் காணவில்லை என்னும் கேள்விக்குச் சூரியனையும் அந்தகனையும் உவமையாகக் கூறினர். பக்குவமுடையார் காண்பர் என்பதற்குச் சூரியனையுந் தாமரையையும் உவமையாகக்கூறினர். முன்னர்க்கூறியவுவமையைவிட்டு வேறுவமை கூறியதன் கருத்தென்னையெனின், கண்ணொளி விளக்கமுடையா

ரும், அஃதில்லாத அந்தகரும் ஓரிடத்து ஒருங்கிருத்தல் நியதமன்று. விரிதற்குரிய தாமரையும், விரிதற்குரிமையில்லாத தாமரையும் ஓரிடத்து ஒருங்கிருத்தல் நியதம். ஆதலின், இறைவன் சந்நிதியில் பக்குவரும் அபக்குவரும் ஒருங்கிருத்தலைக் காட்டுதற்கு வேறுவமை கூறினரென அறிந்து கொள்க. (அ)

முத்தி நிலையை வேறு வேறு கூறும் ஈசுவர அவிகாரவாதி, பரிணமவாதி, ஐக்கிய வாதிகளை மறுத்துரைக்கின்றது.

சென்றணையு நிழல்போலச் சிவனிற்ப னென்னிற்
　　சென்றணையு மவன்முதலி சிவத்தையணைந் தொன்றாய்
நின்றதுயிர் கெட்டென்னிற் கெட்டதணை வின்றா
　　நின்றதேற் கேடில்லை யணைந்துகெட்ட தென்னிற்
பொன்றினதேன் முத்தியினைப் பெற்றவரார் புகனீ
　　பொன்றுகையே முத்தியெனிற் புருடனித்த னன்றா
மொன்றியிடு நீரொடுநீர் சேர்ந்தாற்போ லென்னி
　　னொருபொருளா மதிபதியோ டுயிர்பொருளொன் றன்றே.

(கோ - டு.) உயிர்கெட்டு சிவத்தை அணைந்து ஒன்றாய் நின்ற தென்னின் எனவும், நீரொடு நீர் சேர்ந்தாற் போல் ஒன்றியிடும் என்னின் எனவுங்கூட்டுக.

(போ - ரை.) அருட்கண் இறைவன் கொடுக்கப் பெற்று அக்கண்ணிற்கு இறைவன் தோன்றுவானென்று கூறல்வேண்டாம். மரத்தின் நிழல் போல் முதல்வன் விகாரமின்றி நிற்ப அந்நிழலைச்சென்றணையும் வழிச் செல்வோரைப்போல் உயிர்களுக்குப் பருவம் வந்தவிடத்துத் தாமே ஞானக்கண்ணைப் பெற்று அம்முதல்வனைக் கூடுதல் அமையுமென ஈசுவர அவிகார வாதிகள் கூறுவர். இவ்வுவமையில் மரநிழலுக்கு வழிச்செல்வோரை அணையச் செய்யும் சுதந்திரமின்மையும், சென்றவருக்கு அணையுஞ் சுதந்திரமுண்மையுங் காணப்படுதல் போல, ஈசுவரனுக்குச் சுதந்திரமின்மையும், உயிருக்குச் சுதந்திர வுண்மையுங் காணப்படுதலின்

இது பொருந்தாது. இனி, பரிணாமவாதிகள் உயிர் கெட்டுக்கூடி முதல்வனடியில் ஒன்றாய்ப் போமென்பர். கெட்டபின் கூடுமாறின்று; கெடாது நின்று கூடுமெனின், கேடின்மையால் ஒன்றாதல் பெறப்படாது. கூடியபின் கெட்டதெனின், கெட்டவிடத்து முத்தியினைப் பெற்றவர் யாவரென்னும் வினாவிற்கு விடையின்று. கேடேமுத்தியெனின், உயிர்நித்தமாதல் செல்லாது. ஆதலால் அவர் கூற்றும் வழுவாம். இனி ஐக்கியவாதிகள் நீரிலே நீர் சேர்ந்தாற்போல, உயிர் முதல்வன்றிருவடியைச் சேர்ந்து ஒன்றுமென்பர். உவமானப்பொருள் சமமானாற்போல, முதல்வனும் உயிரும் தம்முள் சமப்பொருளாதல் செல்லாமையின் அதுவும் பொருந்தாது. (எ-று.) (கூ.)

சிவ சமவாதி கூறும் முத்தியை மறுத்துரைக்கின்றது.

செம்பிரத குளிகையினாற் களிம்பற்றுப் பொன்னாய்ச்
செம்பொனுடன் சேருமலஞ் சிதைந்தாற் சீவ
னம்பனுடன் கூடுமெனிற் பொன்போ லல்ல
னற்குளிகை போலவர னணுகுமலம் போக்கி
யம்பொனடிக் கீழ்வைப்ப னருங்களங்க மறுக்கு
மக்குளிகை தானும்பொன் னாகா தாகு
மும்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரிய
னுயிர்தானுஞ் சிவாநுபவ மொன்றினுக்கு முரித்தே.

(கொ-டு) நற்குளிகை போல அரன் பொன் போல் அல்லன். அருங்களங்கம் அறுக்கும் அக்குளிகை பொன்றானும் ஆகாது. உயிர்தானும் சிவாநுபவம் ஒன்றினுக்குமே உரித்து. உம்பர் பிரான் உற்பத்தியாதிகளுக்கு உரியனாகும். நணுகும் மலம் போக்கி அம்பொன் அடிக்கீழ் வைப்பன்.

(போ - ம.ர.) இனிச், சிவசமவாதிகள் செம்பினிடத்துக் களிம்புள்ள அளவும் பொன்னுடன் ஒத்து ஒன்றுதலில்லையாயினும், இரதகுளிகையினால் களிம்பு நீங்கியவிடத்துச் செம்பு பொன்னாகி ஏனைப்பொன்னுடன் ஒத்து ஒன்றுமாறுபோல, மலம் நீங்கிய

விடத்து உயிர் சிவனோடு ஒத்து ஒன்றாகுமென்பர். களிம்பை நீக்கும் ஆற்றல் பொன்னுக்கு இல்லாமையால் அவ்வாற்றலை யுடைய இரத குளிகையை முதல்வனோடு ஒப்பிடுவதன்றிப் பொன்னை முதல்வனோடு ஒப்பிடுதல் இவ்விடத்துப் பொருந்தாது. அன்றியும், களிம்புநீங்கிய பொன், குளிகையைப்போல் பிறிதொரு செம்பிலுள்ள களிம்பை நீக்காது. அதுபோல மலம் நீங்கிய உயிர் சிவாநுபவத்திற்கு உரித்தாதலன்றி ஐந்தொழிற்கு உரித்தாதல் செல்லாது. முதல்வனே ஐந்தொழில் செய்தற்கு உரிமையுடையவனாவன். அம்முதல்வன் உயிர்களிடத்துப்பொருந்திய மலத்தைநீக்கிப் பொன்போலுந் தனது திருவடிக்கீழ் வைப்பன். இதனால் பொன்னுக்கு ஒப்பாகத் திருவடியைக் கூறினதே யன்றி இறைவனைக் கூறியதன்று. திருவடிக்கீழ் வைப்பன் என்றதனால் அடக்கி வைப்பனெனப்பட்டு அவன் செய்யும் ஐந்தொழிலை உயிர் செய்யமுடியாதென்பதும் விளங்கும். ஆதலால், சிவசமவாதம் கூறும் அவர் மதமும் அடாது. (எ - று.)

சிவாநுபவம் ஒன்றினுக்கும் என்னும் உம்மை முற்றும்மை. சிவாநுபவம் ஒன்றினுக்குமுரித்தேயென்ற இதனானே, சிவாநுபவத்திற்கு முரித்தன்று என்னும் சுத்தசைவர் மதமும் மறுக்கப்பட்டது. (௧0)

இறைவனுக்கும் ஆன்மாவிற்கும் உள்ள அந்தரங்கபேதங்களை எடுத்துக்காட்டி ஆன்மா இறைவனோடு சமமாகாதென்பதை வலியுறுத்துகின்றது.

**சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்று மென்னிற்**
**சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித் தவன்றான்**
**பவங்கெடு புத்திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றிற்**
**படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து விவன்றா**
**னவன்றானே யறியுஞ்சித் தாதலினா லிரண்டு**
**மணைந்தாலு மொன்றாகா தநந்நியமா யிருக்கு**
**மிவன்றானும் புத்தியுஞ்சித் திவனுமோ புத்தி**
**யிதுவசித்தென் றிடலவனுக் கிவனுமசித் தாமே.**

௩0.

(கோ - ௫) (இவன்) அவற்றிற் படியுஞ் சித்து. அவன் தானே யறியுஞ்சித்து. இவன்றான் அறிவிக்கப்படும் சித்து. இரண்டும் அணைந் தாலும் அநந்நியமாயிருக்கும். ஒன்றாகாது ஆதலினால்.

(பொ - ரை) முதல்வனும் உயிரும் சித்துப்பொருளாத லால் ஒத்து ஒன்றுமென்பதே பொருந்தும். அவ்வாறன்றி உயிா சிவாநுபவம ஒன்றற்கே உரித்தென்று வேற்றுமைப்படுத் துக் கூறுதல் பொருந்தாதெனின், சிவன் அருளாகியசித்து. உயிர் அவ்வருளைச் சேரும் சித்து சிவன்பிறப்பினைக் கெடுத்துப் போக மோட்சம்தரும்சித்து. உயிர் பிறப்புமுதலிய அவைகளில் அழுந் தும் சித்து. சிவன் தானே அறியுஞ்சித்து. உயிர் அறிவிக்க அறியுஞ்சித்து. இவ்வாறு சித்து இரண்டிற்கும் வேற்றுமை யிருப்பது எதுபோலுமெனின், கண்ணொளியும் சூரியனொளியும் போலவாம். எவ்வாறெனின், அவ்விரு ஒளிகளும் ஒளியென் கின்ற பொதுமையால் சமமாயிருப்பினும், கண்ணொளியானது சூரியனொளியின் துணையையின்றி ஒரு பொருளையுங் காணமாட் டாது. சூரியனொளி பிறிதொரு துணைவேண்டாது தானே விளக்கும். இவ்வாறே சிவனுக்கும் உயிருக்கும் தம்முள் அந்த ரங்கமாகிய தருமத்தின் வேற்றுமை பெரிதும் உண்மையால், சிவ னோடு உயிர் கூடிய விடத்தும் அத்துவிதமாய் (கலந்து) நிற்றலே யன்றி ஒன்றாய்ப் போமாறில்லை. அன்றியும் உயிரும், புத்தி தத்துவமும் உணரும் ஒப்புமைபற்றிச் சித்தெனக் கூறப்படினும், புத்திதத்துவம் உயிராகாதது போலவுமறிக. அப்புத்தி தத்துவம் சடமும் உயிர் சித்துமாகிய வேற்றுமையுடைமையால், ஒன் றாகாமை ஒக்கும். முதல்வனும் உயிரும் சித்தாதலின் ஒன்றாகு மென்பதே பொருந்துமெனின், உயிரும் ஏனைத்தத்துவங்களை நோக்கச் சித்தேயாயினும், முதல்வனை நோக்கச் சடமேயாம். ஆதலால் ஒன்றுமாறில்லை. (எ-று)

முதல்வனையின்றித் தொழிற்படாமைபற்றி உயிர் சடமெனப்பட்ட தேயன்றிப் பொருள்பற்றியன்று.

முத்திநிலையில் நீரும் நீரும்போல உயிர் சிவனோடு எல்லாவகையானும் ஒத்து ஒன்றாய் நிற்குமென்பர் ஐக்கியவாதிகள். எல்லாவகையானும் ஒத்து முதல்வனைப்போல் பஞ்சகிருத்தியஞ் செய்துகொண்டு வேறாய் நிற்கு மென்பர் அருவசிவசமவாதிகள். இவையிரண்டு செய்யுளும் இவற்றிற்கு முற்செய்யுளிற் கூறப்பட்ட ஐக்கியவாதிகளை மறுத்ததோடு அருவசிவசம வாதிகளையும் அந்தரங்கமாகிய தருமத்தின் வேற்றுமைபற்றி மறுத்தவாறு காண்க. (கக)

ஈசுவர அவிகாரவாதி, பரிணாமவாதி, ஐக்கியவாதி, சிவசம வாதிகள் கூறும் ஆசங்கைகளை மறுத்து வேறு வேறுவமை எடுத் துக்காட்டிச் சித்தாந்தத்தை வலியுறுத்துகின்றது.

இரும்பைக்காந் தம்வலித்தாற் போலியைந்தங் குயிரை
யெரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத்தா னாக்கி
யரும்பித்திந் தனத்தையன லழிப்பதுபோன் மலத்தை
யறுத்தமல னப்பணைந்த வுப்பேபோ லணைந்து
விரும்பிப்பொன் னினைக்குளிகை யொளிப்பதுபோ லடக்கி
மேளித்துத் தானெல்லாம் வேதிப்பா னாகிக்
கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே. (கஉ)

(கோ - டு) காந்தம் இரும்பை வலித்தாற்போல், (அமலன்) அங்கு உயிரை இயைந்து, எரி இரும்பைச் செய்வதுபோல் அனல் இத்து அரும்பு இந்தனத்தை அழிப்பதுபோல் (அமலன்) இவனைத்தானாக்கி மலத்தை அறுத்து, அப்பு அணைந்த உப்பேபோல் விரும்பி அமலன் அணைந்து, குளிகை (மேளித்து) பொன்னினை ஒளிப்பதுபோல் தான் எல்லாம் மேளித்து வேதிப்பானாகி அடக்கி, கரும்பைத் தேனைப்பாலைக் கனியமு தைக்கண்டைக் கட்டியைக்கலந்தே ஒத்து (அமலன்) அந்த முத்தியினில் இருப்பன்.

(போ - றை) ஈசுவர அவிகாரவாதிகள், இறைவன் விகார மின்றி நிர் விகாரியாய் நிற்பன்; ஆதலால், மாமிழலுவமையை மறுத்தது செல்லாதென்பரெனின், காந்தமானது விகாரமின்றி நின்றே இரும்பை இழுப்பதும் கண்டாம். அது போல இறை

வனும் விகாரமின்றியே உயிரைத் தன்வழிப்படுத்தி நிற்பன் ஆதலின், மர நிழல் போலச்சிவன் இல்லையென்றது பற்றிச் சிவன் நிர்விகாரியாதற்கிழுக்கில்லை யென்க. பரிணாமவாதிகள் முத்தியில் இறைவனும் உயிரும் ஒன்றுமாதலால், கேடே முத்தியென்றதை மறுத்தது பொருந்தாதென்பரெனின், தீயானது இருமபைக் கெடுக்காமல் தன் வண்ணமாக்கி அவ்விருமபின்கண் உடன் றோன்றி நிற்கின்ற கறை மாத்திரம் கெடச்செய்யும. அதுபோல இறைவனும் உயிரைத் தன்வண்ணமாக்கி அவ்வுயிரின்கண் உடன் றோன்றி நின்ற மலமாத்திரம் கெடச்செய்வனாதலால், கெடுதல் முத்தியாகாது என்றதுபற்றி ஒன்றாதற்கிழுக்கில்லையென்க. ஐக்கிய வாதிகள் முத்தியில் உயிர் சிவனோடு சமமாதலால் நீரொடு நீர் சேர்ந்தாற்போலென்ற உவமையை மறுத்தது செல்லாதென்பரெனின், நீரொடு சேர்ந்த உப்பானது தன் சுவை முழுதும அந்நீர்க்காக்கித் தனனோடொப்பச் சமன் செய்து நிற்கும அதுபோல விரும்பி உயிரைச்சேர்ந்த இறைவனும தனக்குரிய எண் குணங்களையும் அவ்வுயிரின் கட்பதிப்பித்துத் தன்னோடு ஒப்பச் செய்து நிற்பன். ஆதலால், நீரொடு நீர் சேர்ந்தாற்போல் என்றதை மறுத்ததுபற்றிச் சிவசமமாதற்கிழுக்கில்லையென்க. சிவ சமவாதிகள் உப்புடன்கூடிய நீர் உப்பாதல்போல, சிவனுடன் சேர்ந்த உயிர் சிவமாகிச் சிவன் செய்யும் பஞ்சகிருத்தியங்களைச் செய்யுமாதலின், உயிர் பஞ்சகிருத்தியஞ் செய்யாதென்றது பொருந்ாதென்பரெனின், இரதகுளிகை செம்பையுருகவித் தன்னோடு கூட்டிப் பொன்னாகச் செய்தும் அகுளிகை தன்னிடத்துள்ள பொன்னியல்பை அப்பொன்னுக்குக காட்டாது தன்னுள் அடக்கி நிற்குமாறுபோல, இறைவன் உயிருககு எண்குணங்களெல்லாம் பதியச்செய்தும் பதிந்த அவ்வெண்குணங்களினியல்பு சிறிதுந்தோன்றாது அறிவிறந்து நிற்குமாறு தனது வியாபகத்துள்ளடக்கி நிற்குமாதலால், உம்பர்பிரான் ஒருவனே உற்பத்தியாதிகளுக்குரியனாதற் கிழுக்கில்லையென்க. சுத்தசைவர் அறிவிறந்து நிற்கும் முத்திநிலையில் அநுபவங்கூடாதாதலின், சிவாநு

பவத்திற்கு உரித்தென்றல் பொருந்தாதென்பரெனின், கருப்பஞ் சாறு, தேன், பால், கனி, இரதம், கற்கண்டு, சருக்கரை முதலிய சுவைப்பொருளெல்லாம் ஒன்றாகக் கலந்தவிடத்து உளதாகிய சுவை இத்தன்மைத்தெனப் பிரித்தரியவாராது. அதுபோல இறைவனும் பரமுத்தியில் உயிரோடு கலந்தவிடத்து இத்தன்மைத்தெனப் பிரித்தறிய முடியாத ஆனந்த சொரூபமாய் நிற்பனாதலால், அறிவிறந்து நிற்பன் என்பதுபற்றிச் சிவாநுபவத்திற் குரித்தாதற்கிழுக்கில்லையென்க. அறிவிறந்து நிற்றலென்பதற்குப் பிரித்தறியாது நிற்றலென்பது பொருளாம். (எ-று)

எட்டாஞ் சூத்திரத்தில் "மலரடிக்கீழ்வைப்பன்" என்றதை இச்செய்யுளில் நிர்விகாரியாய்த் தன்வண்ணமாகச் செய்து எனக் கூறினார். இது சிவரூபம். ஒன்பதாஞ்சூத்திரத்தில் "பாதநிழற்கீழ் நிற்க" என்றதை இச்செய்யுளில் தன்னேடொப்பச் செய்தெனக்கூறினார். இது சிவதரிசனம். பத்தாஞ்சூத்திரத்தில் "ஏகனாகி நின்றிட" என்றதை இச்செய்யுளில் உயிரினியல்பு சிறிதுந்தோன்றாது நிற்குமாறு அடக்கி நிற்குமெனக்கூறினார்; இது சிவயோகம். இப்பதினொராஞ் சூத்திரத்தில் "அரன்மலரடிக் கீழிருப்பன்" என்றதை இச்செய்யுளில் பிரித்தறியவாராது ஆனந்த சொரூபமாய் நிற்பனெனக் கூறினார்; இது சிவபோகம். இவ்வாறு நான்கு சூத்திரங்களுக்கும் பேதமுண்டென்பதை இச்செய்யுளிற் கூறியவாறுமாயிற்று. இன்னும் நிர் விகாரியாக்கல் நின்மலசாக்கிரம். தன்வண்ணமாகச்செய்தல் நின்மல சொப்பனம். தன்னேடொப்பச் செய்தல் நின்மல சுழுத்தி. அடங்கிநிற்கச்செய்தல் நின்மல துரியம். ஆனந்தசொரூபமாய் நிற்கச் செய்தல் நின்மல துரியாதீதம் எனவும் அறிக.

இச்செய்யுளால் மதங்கத்துட் கூறப்படும் எழுவகை முத்திகளை வகுத்துக் கூறியதென்றுரைப்பாருமுளர். அவை வருமாறு:—இரும்பைக் காந்தம் வலித்தாற்போல் என்றதனால் தனக்கொரு செயலின்றி இறைவன் செயல் வழிநிற்றலும், எரி இரும்பைச் செய்வதுபோல் என்றதனால் இரும்பு அக்கினிரூபமாய் நின்று சுடுதற்றொழில் செய்வதுபோல் ஐந்தொழில் செய்து நிற்றலும், அரும்பித்திர்தனத்தை யனலழிப்பதுபோலென்றதனால் பசு போதத்தைச் செய்யும் மலங்கெட்டு நிற்றலும், அப்பணைந்த உப்பேபோல் என்றதனால் சிவபோகாநுபவமாய் நிற்றலும், பொன்னினைக்குளிகை யொளிப்பதுபோலடக்கி என்றதனால் காண்பா

றும் காண்பதுவுமின்றிச் சிவபோகத்தை அநந்நியமாயநுபவித்து நிற்றலும், மளித்து என்றதனால் காட்சியிறந்துநின்ற ஆன்மா குற்றமற இறைவ ஞேடு கலந்து நிற்றலும், தானெல்லாம் வேதிப்பானுகி என்றதனால் அங்ஙனங் காட்சியிறந்து கலந்து ஆனந்தபரவசனுய் நிற்றலும் என எழுவகை முத்தியுங்கண்டு கொள்க. இம்முத்தி எழுக்கும் கரும்பு, பால், கனி, தேன், கண்டு, கட்டி, அமுது என்னும் எழும் முறையே உவமையாமாறு காண்க. இவ்வாறு கூறப்பட்ட முத்தி எழினும் பேதமுளவாமாறுபோல, உவமையினும் பேதமுண்டு. அவை வருமாறு:—கரும்பில் கடினமான கோது மிகுதியும் மதுரமான ரசம் குறைந்தும், பாலிலே நீர்ச்சத்து மிகுந்தும் பால்ச்சத்து குறைந்தும், கனியிலே சொட்டையும் தோலும் மிகுந்தும் சாறு குறைந்தும், தேனில் தித்திப்பும் புளிப்புமாகிய இருவகைரசமும், கண்டில் ரசமும் ரூபமும் ஒன்ருகிக் கடினமும், கட்டியில் மதுர ரசமாகிக் கடினமும், அமுதில் சுத்தமதுர ரசமும் வேற்றுமையாம்.

அரும்பித்து என்பது இத்தரும்பு என மாற்றி யுரைக்கப்படும். இத்து என்றவிடத்து இதனில் என்னும் பொருள்பட அன்சாரியையும், இல் உருபும் தொக்குநின்றன. இதனில் என்பது இரும்பினிடத்தில் என்றவாறும். அரும்புதல்—தோன்றுதல். அனலாலழிக்கப்படும் விறகோடொப்ப இரும்பினிடத்து நிற்பது கறையேயாதலின், அக்கறையை இந்தனமாக உருவகஞ் செய்தார். அமலன் அணைதல்—காரணம். தன்னேடொப்பச் செய்து நிற்றல்—காரியம். இக்காரியத்தை அணைந்து எனக் காரணமாக வுபசரித்தார். மேளித்தல்—கூட்டுதல். வேதிப்பானுகி என்றவிடத்துச் சிறப்பும்மை விரித்துரைக்க. கலந்தவிடத்து என்றிருக்கவேண்டுவது கலந்து எனத் திரிந்துநின்றது.

அரும்பித்திந்தனத்தை யனலழிப்பதுபோல் என்பதற்கு மேற் கூறியவாறு உரைசெய்து இந்தனம் என்பதை உருவகமாக்காது, இயற் பெயர்ப் பொருளாகக்கொண்டு விறகின்மேல் வைத்துரைப்பாருமுளர். விறகை அக்கினி அழிக்குங் காலத்து அவ்விறகு அறவேகெட்டுப்போம். அதனைக் கறையாக உருவகஞ் செய்யின், கறை கெட்டு இரும்பு அக்கினி மயமாயிருக்கும். ஆதலால், விறகாகக் கொள்ளுதல் உயிரோடு சம்பந்தமா தற்குரிய உவமையாகாது. அன்றியும், அரும்பித்து என்பதனை அக்கினிக்கு விசேடணமாக்கி அரும்பித்து என்பதற்கு விறகினிடத்து முன் மறைந்து நின்ற அக்கினி எனப்பொருள் கொண்டார். அவ்வாறு கொள்ளுதற்கு அரும்பித்து என ஒரு சொல்லில்லையாதலானும் அவ்வுரை பொருந்தா தெனவறிக. அன்றியும், "தீயிரும்பைச் செய்வதுபோற்சீவன் றன்னைப் பந்

தனையை யறுத்துத் தானாக்கி" என அறுத்தல் ஆக்குதலிரண்டும் இரும்பின் மேல்வைத்தே மேல் கூஞ் சூத்திரம கஉ-வ்து செய்யுளிற் கூறிய ஆசிரியர்க்கு இவ்விடத்தும் அதுவே கருத்தாத லுணர்ந்துகொள்க.

மேளித்துத் தானெல்லாம் வேதிப்பானாகி அடக்கி என்று கூட்டாது, செய்யுளிருந்தவாறே கொள்ளின், ஏனையவற்றிற்கெல்லாம் உவமை தனித்தனி எடுத்துக்காட்டி மேளித்துத் தானெல்லாம் வேதிப்பானாகி என்பதற்கு மட்டும் உவமை கூறாமை குன்றக்கூறலாய் முடியுமென்க. "எங்குந் தானிறைந்து சிவனின்றானாகில்" என்னுஞ் செய்யுள் முதல் இவை ஐந்து செய்யுளானும் முத்திநிலைபற்றிப் பிறர் கூறும் ஆசங்கைகளை மறுத்து முத்திநிலையினியல்பு இதுவெனச் சித்தாந்தங் கூறியவாறும். (கஉ)

இரண்டாம் அதிகரணம் முடிந்தது.

பதினொராஞ் சூத்திரம் முடிந்தது.

ஆகத் திருவிருத்தம் கஉக.

---

# பன்னிரண்டாம் சூத்திரம்.

## சீவன் முத்தரியல்பு.

மேல் பத்தாஞ் சூத்திரத்தால் பாசநீக்கமும் பதினொராம் சூத்திரத்தால் சிவப்பேறும் கூறினமையால் அப்பயனைப் பெற்ற முத்தர் உடம்புள்ள அளவும் எவ்வாறிருப்பர் என்னும் ஆசங்கை நிகழுமன்றே? அந்நிகழ்ச்சிபற்றிச் சீவன் முத்திநிலையில் நிகழும் இயல்பினை வகுத்துக் கூறுதற்கு எழுந்தது பன்னிரண்டாம் சூத்திரம். மேல் ஆசங்கையின்மையின் இச் சூத்திரத்தோடு நூல் முடிகின்றது.

சீவன் முத்தரியல்பு இவ்வாறெனச் சூத்திரப்பொருளைத் தொகுத்துக் கூறுகின்றது.

செங்கமலத் தாளிணைகள் சேர லொட்டாத்
 திரிமலங்க ளறுத்தீச னேசரொடுஞ் செறிந்திட்
டங்கவர்தந் திருவேட மாலயங்க ளெல்லா
 மரனெனவே தொழுதிறைஞ்சி யாடிப் பாடி
யெங்குமியா மொருவர்க்கு மெளியோ மல்லோம்
 யாவர்க்கு மேலாமோ மென்றிறுமாப் பெய்தித்
திங்கண்முடி யாரடியா ரடியோ மென்று
 திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே.

(போ - ரை.) மேற்கூறியவாறு சிவப்பேறெய்திய முத்தர்களுக்குக் கன்மத்துக்கீடான சரீரம் உள்ள அளவும் இறைவனது செந்தாமரை மலர்போலும் திருவடியை அடையவொட்டாது முன் அயர்த்தலைச் செய்து நின்றுபின் பற்றறக்கழிந்த மும்மலங்கள், விளக்கற்றம் பார்க்கும் இருள்போல் அறிவற்றம் பார்த்து நிற்பனவாம். ஆதலால், அம்முத்தர் அவற்றை அஞ்சி நிட்டையினாற் பரிகரித்தும், அங்ஙனம் நிட்டை சாதித்தற்குத் துணையாகிய சிவபிரானுடைய மெய்யன்பரோடு பழகியும், அப்பழக்கம் நிலைபெறும்படி அவரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் சிவனெனக்கண்டு வழிபாடியற்றி ஆனந்த மேலீட்டால் ஆடல் பாடல்களைச் செய்தும், இப்பேறு பெறமாட்டாதவர் சிறுமையை நோக்கி எவ்விடத்துமுள்ள ஒருவருக்கும் எளியாராதலின்றித் திருவடியைக் கூடப் பெற்றமையால் யாவர்க்கும் மேலானோமென்று ஆனந்தமெய்தியும், பிறையினை யணிந்த திருமுடியையுடைய சிவபிரான்றிருவடியைக் கூடப் பெற்றாரது பெருமையைநோக்கி அவர்க்கு அடிமையெனவாழுமியல்பினையும் உடையாராவர். இவர் சீவன் முத்தரெனப்படுவர். (எ-று.)

ஒட்டா என்னும் எதிர்மறைப் பெயரெச்சம் திரிமலங்கள் என்னும் ஏதுப்பெயர் கொண்டு முடிந்தது. அறிவற்றம் பார்த்துநிற்கும் திரிமலங்களாதலின் அவை அறுத்தற்கேதுவாய் ஏதுப்பெயராயின்மைகாண்க.

இச்செய்யுள் முதனூல் போல் முக்கூற்றை யுடையது. அவற்றுள்,

முதற்கூறு:—செங்கமலத்தாளிணைகள் சேரவொட்டாத் திரிமலங்க ளறுத்து.

இரண்டாங்கூறு:—ஈசனேசரொடும் செறிந்திட்டு.

மூன்றாங்கூறு:—அங்கவர்தம் திருவேடம் ஆலயங்களெல்லாம் அர னெனவே தொழுதிறைஞ்சி யாடிப்பாடி ................................ செய்திபுடையோரே.

இம்மூக்கூற்றுள், செங்கமலத்தாளிணைகள் சேரவொட்டாது அயர்த் தலைச் செய்விக்கும் திரிமலங்கள், நீங்கியும் அறிவற்றம் பார்த்து நிற்பன வாதலால் அவற்றை நீக்கவேண்டுமென, அறிவற்றம் பார்த்து நிற்றலைத் திரிமலங்களென்னும் உடம்பொடு புணர்த்தோதி வலியுறுத்தினமையின் முதற்கூறு வேறு கூறாது விடுத்தனர். (க)

---

# இரண்டாமதிகரணம்.

## ஈசனேசரொடும் செறிந்திட்டு என்பது.

சீவன்முத்தன் சிவனடியாரிடத்து அன்புடையனாகவும் ஏனைய அறிவில்லாரிடத்து வெறுப்புடையனாகவும் இருக்க வேண்டுமெனக் கூறுகின்றது.

ஈசனுக்கன் பில்லா ரடியவர்க்கன் பில்லா
ரெவ்வுயிர்க்கு மன்பில்லார் தமக்குமன் பில்லார்
பேசுவதென் னறிவில்லாப் பிணங்களைநா மிணங்கிற்
பிறப்பினிலு மிறப்பினிலும் பிணங்கிடுவர் விடுநீ
யாசையொடு மரனடியா ரடியாரை யடைந்திட்
டவர்கருமமுன்கரும மாகச் செய்து
கூசிமொழிந் தருண்ஞானக் குறியி னின்று
கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே.

(கோ - ၆.) நாம் பேசுவது என் நீ அரன் அடியார் அடியாரை அடைந்திட்டு அவர் கருமம் உன் கருமமாக அருள் ஞானக் குறியில் நின்று ஆசையொடுஞ் செய்து, அறிவில்லாப் பிணங்களை இணங்கில் பிறப்பினிலும் இறப்பினிலும் பிணங்கிடுவர் விடு. கூசி மொழிந்து கும்பிட்டுத் தட்ட மிட்டுக் கூத்தாடித் திரியே.

(போ - ரை) காமுகனுவானொருவன் ஒரு பெண்ணிடத்து அன்புடையனாகில், அவ்வன்புடைமை, அப் பெண்ணினுடைய சுற்றத்தைக் கண்டவிடத்து நிகழும் அன்பினளவாகத் தெளியப் படும். அதுபோல, ஈசனுக் கன்புடையனாகில், அவ்வன்புடைமை அவனடியவரைக் கண்டவிடத்து நிகழும் அன்பினளவாகத் தெளி யப்படும். ஆதலால், அடியவரிடத்து அன்பில்லாதார் ஈசனிடத்தும் அன்பில்லாதவரே யாவர். அவர் ஈசனுக் கன்புடையவர் போல் ஒழுகுதல் நாடக மாத்திரையேயன்றிப் பிறிதில்லை. அன்றியும், ஈசன் எவ்வுயிரிடத்தும் உளனாதலால் அத்தொடர்பு பற்றி ஈசனுக் கன்புடையார் எவ்வுயிர்க்கும் அன்புடையராதல் கூடும். ஈசனி டத்து அன்பில்லாதவிடத்து எவ்வுயிரிடத்தும் அன்பில்லாதவரே யாவர். இவ்வாறு சிவனடியாரிடத்தும் ஈசனிடத்தும் ஏனைய உயிர்களிடத்தும் அன்பில்லாதார் தம்முயிர்க்கும் நிலைத்த இன் பத்தைச் செய்து கொள்ளாதவராதலின், அவரைப் பற்றி நாம் என்ன சொல்வது! காமம் மிகுதியுடையவர்க்கு அத்தொடர்புடை யாருடைய இணக்கம் அக்காமப் பயிரை வளர்க்கும் நீராதல் பற்றி அவ் விணக்கத்தில் மிகுந்த உவகையுண்டாவது போல, மாறாத சிவானுபவ மருவிக் கொண்டு அரன்மலரடிக் கீழிருக்கப் பெற்ற நீ அவ்வநுபவத்தை வளர்க்குந் தன்மையராகிய அடியாரோடிண ங்கி அவர் பணியை உன் பணியாகவே அகங்கார முனைப்பின்றி உவகை மிகுதியுடன் செய்து, காமுகரல்லாதாரிணக்கம் காமப் பயிரைக் கெடுக்குங் களை யென்றெண்ணிக் காமுகர் வெறுப்பது போல, சிவாநுபவத்தைக் கெடுக்குந் தன்மையராகிய அறிவில் லாப் பிணம் போன்றவரோடு இணங்கில் பிறப் பிறப்பாகிய துன் பத்தை உண்டு பண்ணுவராதலின், அவ்விணக்கத்தின் கண் வெறுப்பு மிகுதியால் அதனை விட்டு நீங்கி, அடியாரது உயர்வும்,

உனது இழிவும் நோக்கி நாணி அடியாரிடத்துத் தாழ்ந்த மொழி கூறி உவகை மிகுதியால் கும்பிட்டுக் கை கொட்டிக் கூத்துமாடித் திரிவாயாக. (எ - று.)

அடியரென்பவர், சிவனடியாருக்கு அடியராவரென்பது தோன்ற அரனடியாரடியாரென்றார்.

சுவையின் பொருட்டு உண்ணப்படும் பால் பித்தத்தை நீக்கும் மருந்துமாதல் போல, இவ்வாறு செய்யும் அநுபவ நிலையானது, அநுபவமாய் ஆனந்தம் விளைத்தலேயன்றிச் சாதனமாய் அறிவற்றம் பார்த்து நிற்கும் மலம் அறுத்தலுஞ் செய்தலின் செய்கவென விதிமுகமாகக் கூறினார். முன் வருவனவற்றிற்கு மிதொக்கும். உயிர்களிடத்து அன்பில்லாதவர் தமக்கும் அன்பில்லாதவரென்ற இக் கருத்து *"அன்பிலாரெல்லாந் தமக்குரியர்" என்ற திருக்குறளோடு முரணுதோவெனின், தம் என்னுஞ் சொல்லுக்கு இவ்விடத்து உயிரும் குறளில் உடம்பும் ஆதலின் முரணுமையறிக.

அடியவர்க் கன்பில்லார் ஈசனுக் கன்பில்லார் எவ்வுயிர்க்கு மன்பில்லார் தமக்கு மன்பில்லார் என்ற இதன் எதிர்மறை முகத்தான், அடியவர்க் கன்புடையார் ஈசனுக்கன்புடையார், எவ்வுயிர்க்கு மன்புடையார், தமக்கு மன்புடையார் ஆவர் என, அடியவரிடத்து அன்புடையாரது பெருமையுங் கண்டுகொள்க. அடியவர் கருமம் தன் கருமமாகச் செய்தலும் தற்போத முனைத்து நின்று செய்யிற் குற்றமாமென்பதறிவிக்க வேண்டி அருணுனைக் குறியில் என்றார். கூசுதல் அவருயர்வும் தன்னிழிவும் நோக்கிநிகழ்வது. கும்பிடுதலும், தட்டமிடுதலுங், கூத்தாடுதலும் உவகை மிகுதியானிகழு மெய்ப்பாடு. மெய்ப்பாடு—குறிப்பை வெளிப்படுத்துந் தோற்றம். (உ)

இரண்டாமதிகரணம் முடிந்தது.

---

* திருக்குறள், அன்புடைமை. செ - உ.

# மூன்றாமதிகரணம்.

அங்கவர்தம் திருவேடம் ஆலயங்களெல்லாம்
அரனெனவே தொழுதிறைஞ்சி ஆடிப்பாடி...........
........................செய்தியுடையோரே. என்பது.

பாசப்பற்றுடையார் பற்றுவிடுதற்குச் சிவனடியாரைச் சிவ னெனவே துணிந்து வழிபடவேண்டுமெனக் கூறுகின்றது.

அறிவரியான் றனையறிப யாக்கை யாக்கி
யங்கங்கே யுயிர்க்குயிரா யறிவுகொடுத் தருளாற்
செறிதலினாற் றிருவேடஞ் சிவனுருவே யாகுஞ்
சிவோகம்பா விக்குமத்தாற் சிவனு மாவர்
குறியதனு லிதயத்தே யரனைக் கூடுங்
கொள்கையினு லரனுவர் குறியொடுதா மழியு
நெறியதனாற் சிவமேயாய் நின்றிடுவ ரென்று
நேசத்தாற் றொழுதிடுநீ பாசத்தார் விடவே.

(கோ - ௬.) பாசத்தார் விடவே நேசத்தால் நீ தொழுதிடு என்பதை முன்னாக வைத்துரைக்க.

(பொ - ரை) மேற் கூறியவாறு அறிவில்லாதாருடைய இணக்கத்தை விடுதற்பொருட்டு யாதுசெய்ய வேண்டுமெனின், சிவனடியாரைச் சிவனெனவே தேறி அன்புடன் வழிபடல் வேண்டும். சிவனடியார் சிவமாவது எவ்வாறெனின், சிந்தனைக்கு அதீதனாகிய பரம்பொருள், உலகத்திலுள்ளார்தன்னை அறிதற் பொருட்டுத் திருநீறு கண்டிகை முதலிய திருவேடமாகிய தனது வடிவத்தைத் தன் அன்பர்க்குக்கொடுத்து எவ்விடத்தும்உயிர்க்குயி ராய் நின்று அவ்வன்பர் அறிவினை விளக்கி, அருளினால் அவரோடு கலத்தலால் அத்திருவேடமுடைய மெய்யன்பர் சிவமேயாவர்.

சிவோகம் பாவனையானும் அவர் சிவமேயாவர். இருதயத்தானத்தில் ஒரு குறியின்கண் வைத்து முதல்வனைக்கூடும் செயலானும் அவர் சிவமேயாவர். அவ்வாறு கூடுங்காலத்து, குறியும் குறிக்கின்றதாமுமின்றி நின்ற தன்மையானும் சிவமேயாவர். (எ-று)

சிவனடியார் சிவமாதல் தெளிந்துகொள்ளுதற்கு வேடமுதலியவற்றுள் ஒன்றிருப்பினும் அமையும் என்பதறிவிகக வேண்டிச் சிவமாதலைத் திருவேடம், சிவோகம்பாவனை, இருதயத்தே அரனைக்கூடுங்கொள்கை, குறியொடு தாமழியும் நெறி ஆகிய ஒவ்வொன்றேனும் தனித்தனி கூட்டிக் கூறினார். திருவேடம் என்றவிடதது அகரச்சுட்டு வருவித்து அத்திருவேடமுடையரென் றெடுத்துக் கொண்டுரைக்க. பாசத்தார் என்பது பாசத்தாரது இணக்கத்தைக் குறித்தலின் ஆகுபெயர். (௯)

சிவாலயத்தைச் சிவனெனக்கண்டு வழிபடுமுறையை வகுத்துக் கூறுகின்றது.

திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவ னங்கே
யுருக்கோலி மந்திரத்தா லெனநினையு மவர்க்கு
முளனெங்கு மிலனிங்கு முளனென் பார்க்கும்
விருப்பாய வடிவாகி யிந்தனத்தி னெரிபோன்
மந்திரத்தில் வந்துதித்து மிகுஞ்சுரபிக் கெங்கு
முருக்காண வொண்ணாத பான்முலைப்பால் விம்மி
யொழுகுவது போல்வெளிப்பட் டருளுவனன் பர்க்கே.

(கோ-ரு.) திருக்கோயிலுள் இருக்தும் திருமேனி தன்னையே சிவனெனக் கண்டவர்க்கு சிவன் அங்கே உறைவன். மந்திரத்தால் உருக்கோலியென நினையுமவர்க்கும் உளன் எங்கும் இலன் இங்கும் உளன் என்பார்க்கும் இந்தனத்தின் எரிபோல் மந்திரத்தில் விருப்பாய வடிவாகி (அங்கே) வந்து உதித்தும், அன்பர்க்கே மிகும் உரு எங்குங்காண ஒண்ணாத பால் சுரபிக்கு முலைப்பால் விம்மி ஒழுகுவதுபோல் (அங்கே) வெளிப்பட்டருளுவன்.

(பொ-ரை.) மேற்கூறியவாறு சிவனடியாரை வழிபடுதலோடு சிவாலயத்தையும் சிவமெனக்கண்டு வழிபடவேண்டும்.

சிவாலய வழிபாடு நான்குவகைப்படும். அவை வருமாறு:—சிவாலயத்துள் எழுந்தருளியிருக்கும் சிவலிங்க முதலிய திருமேனிகளையே சிவம் வேறு இவ்வுருவம் வேறு என்னும் பேதமின்றிச் சிவம் எனக்கண்டு வழிபடுவர் சரியையாளர். இவர்க்குச் சிவபிரான் அத்திருமேனிகளில் வெளிப்படாது நின்று அருள் செய்வன். ஈசானாதி மந்திரங்களினால் அருவப் பொருளாகிய சிவபிரான் சிவலிங்க முதலிய திருவுருக்கொண்டான் எனக்கருதி மந்திரக்கிரியையால் வழிபடுவர் கிரியையாளர். இவர்க்கு விறகைக் கடைந்தவிடத்துத்தோன்றும் அக்கினிபோல வருந்தி முயலுதலாற் சிவபிரான் அத்திருமேனிகளில் வெளிப்பட்டுத் தோன்றி யருள் செய்வன். உள்ளம் எங்கணும் இல்லமாக வாழும் சிவபிரான் இத்திருமேனியிலும் வீற்றிருந்து பூசைகொண்டருளுவனெனக் கருதிச் சத்தி சம்பந்தமான மந்திரங்களால் சிவலிங்க முதலிய திருமேனிகளை வழிபடுவர் யோகிகள். இவர்க்குக கறந்தவிடத்துத் தோன்றும் பால்போல, இலகுவில் வெளிபபட்டுத் தோன்றி அருள் செய்வன். கிரியையாளர், யோகிகள் இருவர்க்கும் வெளிப்பட்டுத் தோன்றினும் அப்போதப்போது தோன்றுவதே யன்றி எப்போதுந் தோன்றுவதில்லை. அவர்போல் ஏகதேசமாய் வழிபடாமல் நீங்காத அன்பினால் சிவலிங்க முதலிய திருமேனிகளைச் சிவமேயெனக்கண்டு வழிபடுவர் ஞானிகள். இவர்க்கு மேமபட்ட பசுவின் வடிவமுழுதுங் காணப்படாத பால் தன் கன்றை நினைந்தமாத்திரையால் அதன் முலையில் விம்மி ஒழுகுவது போல், கருணை மிகுதியால் சிவபிரான் அவ்வன்பே தானாய் எப்போதும் அத்திருமேனிகளில் வெளிப்பட்டு நின்று அருள் செய்வன். ஆதலால், அவ்வுண்மையை யறிந்து அன்பின் வழியே வழிபடுக. (எ-று)

ஆதலான், அவ்வுண்மையையறிந்து அன்பின்வழியே வழிபடுக என்பது குறிபபெச்சம். அங்கே என்பது உதித்தும் என்பதனோடும், வெளிப்பட்டருளுவன் என்பதனோடும் சென்றியையும். உருக்கோலி என்பது உருக்கோலினன் என்னும் பொருள் குறித்தலின் பெயர். உளன்

என்பது உள்ளம் என்னும் பொருள் குறித்தது. இலன் என்பது இல்லை மாகவுடையன் என்னும் பொருள் குறித்துக் காலங்காட்டாமையின் இல் என்னும் இடப்பெயரடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று. இங்கும் என்பது இத்திருமேனியிலும் என்னும் பொருள் குறித்தலின் உம்மை உள்ளத்திலேயன்றி என இறந்தது தழுவிற்று. யோகிகட்குக் கறக்க வொழுகும் பால்போல் என்பது செய்யுளிலில்லையாயினும் அன்பர்க்கு விம்மியொழுகுவதுபோல் என்றதனாற் பெறப்பட்டது. அன்பர் என்றது இவ்விடத்து ஞானிகளைக் குறித்தது. * "அன்பரொடுமரீஇ" என்ற விடத்துப்போல. சரியையாளர் முதலிய நால்வரும் அன்புடையரேனும், முறையே, மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிரதரமென நால்வகை வேறுபாட்டுடன் அவ்வன்பு நிகழ்தலின், இடைவிடாது அன்பு நிகழ்தற்குரியார், தீவிரதர அன்புடையராகிய ஞானிகளேயாதலின், ஞானியே அன்பரெனச் சிறப்பித்துக் கூறப்படுவரென்பதறிக. "அயரா அன்பின்" என்றார் சிவஞானபோதம் பதினொராஞ் சூத்திரத்தில் ஸ்ரீ மெய்கண்டதேவரும் திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவனென வழிபடினும், திருவேடத்தை வழிபடுதல் அவ்வேடமுடையார் கருத்துச் சிவமாயிருத்தல் பற்றி எனவும், சிவாலயத்தை வழிபடுதல் வழிபடுபவர் கருத்துச் சிவமாயிருத்தல் பற்றியெனவும் அறிக.

இச்செய்யுளின் பொருளை,

"அருந்துணையை யடியார்த மல்லறீர்க்கு
மருமருந்தை யகன்ஞாலத் தகத்துட் டோன்றி
வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும்விட்டு
வான்புலன்களகத் தடக்கி மடவாரோடும்
பொருந்தணைமேல் வரும்பயனைப் போகமாற்றிப்
பொதநீக்கித் தனைநினைய வல்லோர்க் கென்றும்
பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே."

எனத் திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்த தேவாரமும் வலியுறுத்தும். அது வருமாறு:—அருந்துணையை, அருமருந்தை, பெருந்துணையை, பெரும்பற்றப் புலியூரானைப் பேசாதநாளெல்லாம் பிறவாநாளே என முடித்துக்கொள்க. துணை, சிறுதுணை பெருந்துணை என இருதிறப்

* சிவஞானபோதம் கஉ-ம் சூ-ம்

படும். இவை முறையே நீங்குந்துணை, நீங்காத்துணை எனவும் படும். துணையாவார், நீங்குமியல்பினர் நீங்காவியல்பினர் என இருதிறப்படுதலின், துணையும் அவ்வாறு இருதிறப்பட்டது. உலகத்தார் அனைவரும் நீங்கும் இயல்பினராதலின், அவரது துணை நீங்குந்துணை எனப்படும். ஆகலான் இத்துணையை ஞாலத்தகத்துட்டோன்றி வருந்துணை யென்றார். தோன்றி வருமென்றதனாலேயே நீங்குந் துணையாமாறு காண்க. முதல்வன் என்றும் நீங்காவியல்பினனாதலின், அவனது துணை நீங்காத்துணை யெனப் படும். அந்த நீங்காத்துணையாகிய பெருந்துணையும், மறைந்து துணையா தலும் வெளிப்பட்டுத் துணையாதலும் என இருதிறப்படும். அவற்றுள், மறைந்து துணையாதலை அருந்துணை யென்றும், வெளிப்பட்டுத்துணையா தலைப் பெருந்துணை என்றுங் கூறியருளினர். அடியாராவார், மந்திர முதலிய கிரியையால் வழிபடுவோரும், யோகத்தால் வழிபடுவோருமென இருதிறப்படுவர். இவ்விருவருக்கும் அவரவர் விரும்பியவாறு அப்போ தப்போது வெளிப்பட்டுத் தோன்றுதலை அருமருந்தாக உருவகஞ்செய் தனர். மருந்தாவது, தன்னியற்கை வடிவமாறி அவரவர் விரும்பிய செந் தூரம், சூரணம் முதலிய வடிவாய் அப்போதப் போது வெளிப்பட்டுத் தோன்றுவது. அதுவும், வருந்தி முயலுதலாலும் எளிதில் முயலுதலாலும் தோன்றுவதாகும். ஆதலின், அருமருந்து என்றார். இங்ஙனந்தோன் றுவன அனைத்தும் இறைவனுடைய அருவம், அருவுருவம், உருவம் என் னும் பொது நிலையேயாதலின், இந்நிலையினும் மேம்பட்ட சொரூபநிலை யினை யறியும் ஞானநெறி நிற்போர்க்குச் சிவம் வெளிப்பட்டுத் தோன்று தலை, பொது நீக்கித்தனை நினைய வல்லார்க்கென்றும் பெருந்துணை என்றார். நினைய என்றதனால், எக்காலத்தும் உடனாய் நிற்கவும் மலத்தின் சேட்டையால் மறத்தலால் வெளிப்பட்டுத் தோன்றவில்லை யென்பதும், வல்லார் என்றதனால் நினைத்தல் அஃதாவது உடனாய் நிற்றலையறிதல் சாமா னியருக்குக் கூடாதென்பதும் பெறப்பட்டன. இவர் வல்லாரென்பது மேற் கூறப்பட்ட விசேடணங்களாலும் அறியப்படும். அஃதாவது, மனை வி முதலியோரை விடுதல் உலகத்தரிதென்பது தோன்ற அகல் ஞாலத்தகத் துட்டோன்றி வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு எனவும், விட்டு நீங்கினும் மனம் வேறொன்றனைப் பற்றி நின்றாலன்றி விடுதல் நிலைபெறா தென்பது தோன்ற யோக நெறியினைப்பற்றி நிற்றலையுணர்த்துவாராய், வான்புலன்களகத்தடக்கி யெனவும், அங்ஙனமாயினும், அந்நிலையினின் றும் மீளின் முன் விட்டவற்றைப் பற்றுமாதலின், அங்ஙனம் பற்றுதல் கூடாதென்பது தோன்ற போகமாற்றி எனவும், மீளுதலில்லாத நிலையைப் பற்றினாலன்றி உலகப்பற்று அறவே ஒழியாதாதலின், அந்நிலையைப்பற்ற

வேண்டு மென்பது தோன்றப் பொது நீக்கித்தனை நினைய எனவுங் கூறிய வாற்றால் இங்ஙனம் அறிபவர் வல்லாராதல் காண்க. போக வென்பது பொருளின் நீக்கத்தையும், மாற்றி யென்பது பற்று நீக்கத்தையுங் குறித்த வாறும்.

இவ்வாறு, கிரியை, யோகமென்னும் இரண்டில் நிற்கும் அடியார்க்கு அருமருந்தாதலும், ஞானநெறிநிற்கும் வல்லார்க்குப் பெருந்துணையாதலும் பெறப்படவே, அருந்துணையாதல் சரியையினையுடையோர்க் கென்பது பெறப்படும். படவே, திருக்கோயிலுள்ளிருக்குந் திருமேனிதன்னைச் சிவ னெனவே காணுஞ் சரியையாளர்க்குச் சிவனங்கே உறைவன் என்பதனை, அருந்துணையென்பதும், மந்திரத்தால் உருக்கோலினுன் என நினையுங் கிரியையாளர்க்கும், உளனெங்கு மிலனிங்கும் உளனென்னும் யோகிகட் கும், இந்தனத்தினெரிபோலும் கறந்தவழித்தோன்றும் பால்போலுமென் பதனை, அடியார்தம் அல்லல் தீர்க்கும் அருமருந்தென்பதும், அன்பர்க்கு வெளிப்பட்டருளுவன் என்பதனை, பொது நீக்கித் தனைநினையவல்லார்க் கென்றும பெருந்துணை யென்பதும் வலியுறுத்துமாறு காண்க. இன்னும் விரிப்பிற்பெருகும். ஆதலின் அஃதறிந்தடக்கிக்கொள்க. (௪)

ஞானிக்கு நால்வகை வழிபாடும் கூடுமெனவும், ஏனையோர்க் குத் தன்னிலைமைக்கு மேம்பட்ட வழிபாடு கூடாதெனவும், ஞானியே யாவர்க்கும் குருவாவன் எனவும், சிவாலயமும் சிவ னடியாரும் அக்குருவின் வேறல்ல எனத்தேறி வழிபட வேண் டும் எனவும் கூறுகின்றது.

ஞானயோ கக்கிரியா சரியை நான்கு
நாதன்றன் பணிஞானி நாலினுக்கு முரிய
னானமிலா யோகமுதன் மூன்றினுக்கு முரியன்
யோகிகிரி யாவான்ற னெண்கிரியை யாதி
யானவிரண் டினுக்குரியன் சரியையினி னின்றோ
னச்சரியைக் கேயுரிய னாகலினால் யார்க்கு
மீனமிலா ஞானகுரு வேகுருவு மிவனே
யீசனிவன் றனென்று மிறைஞ்சி யேத்தே. 386

**(பொ-ரை)** மேலைச்செய்யுளிற் கூறியவாறு சிவாலயத்தை வழிபடுதல் அவரவர் கருத்துக் கேற்றவாறு உரித்தாயிருக்க, சரியையாளரைப்போல் ஞானியும் அச்சிவாலயத்தை வழிபடுவானோ வெனின், சரியைமுதல் நான்கும் இறைவனது உண்மைப்பணியாதலால் ஞானி நாலினுக்கும் உரியன். எதுபோலுமெனின், அகத்தொழில் செய்வார் புறத்தொழிற்கும் உரியராதல்போலாம். புறத்தொழில் செய்வோர் அகத்தொழிற்கு உரியரல்லாதது போல், யோகியானவன் குற்றமில்லாத யோகம கிரியை சரியை ஆகிய மூன்றிற்கும், கிரியாவான் பிரகாசம் பொருந்திய கிரியை சரியை ஆகியஇரண்டிற்கும், சரியாவான் அச்சரியை ஒன்றிற்கும் உரியனாவன். ஆதலினால், சரியை முதலிய அந்நால்வகைப் பாதத்தினிற்கும் மாணாக்கருக்கு உபதேசிக்கும் ஆசிரியரும அவ்வாறே யாவர். அதாவது, ஞானகுரு எல்லா மாணாக்கருக்குங் குருவாவரென்பதும், ஏனைய குரு தன்னின் மேம்பட்ட மாணாக்கருக்குக் குருவாகாரென்பதுமாம். ஆதலால் ஞானகுருவே மேலான குருவென்றும், மேற்கூறிய சிவாலயங்களும சிவனடியார்களும இக்குருவேயென்றுந் துணிந்து குருவினுபகாரத்தைக் கருதிச் சிவாலயம் சிவனடியாராகிய அவ்விரண்டினுய் வழிபடுக. (எ-று)

மேலைச் செய்யுளிற் கூறியவாறு திருமேனிதன்னைச் சிவனெனவே காணுதற்கும், மந்திரத்தாலுருக்கோலினனெனக் காணுதற்கும், உள்ளமெங்கும் இல்லமாகவுடையவன் இங்குமுளனெனக் காணுதற்கும், வெளிப்பட்டருளுதற்குரிய அன்பராதற்கும் உரியார், முறையே சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நெறியினிறபோரென்ப தறிவிக்கவேண்டி, அக்கருத்துக்களை உள்ளடக்கிநிற்கும் ஞானமுதலியவற்றை யுடையாரது இயல்பின்மேல் வைததுக்கூறினர். இயல்பாவது, நான்கிற்கும் ஞானி உரியன்; மூன்றிற்கு யோகி உரியன்; இரண்டிற்குக் கிரியாவான் உரியன்; ஒன்றற்கே சரியாவான் உரியன் என்பதாம். இதனால், நால்வகை வழிபாட்டிற்கு ஞானியும், மூன்று முதலியவைக்கு முறையே ஏனைய மூவரும் உரியரென்பது கூறப்பட்டவாறும். சிவலிங்க முதலிய சாபரங்களையும், சிவனடியாரையும், திருவேடத்தையும், சிவனெனவே தேறி வழிபடவேண்டுமென்பது

மேலே பெறப்பட்டிருத்தலால், சரியை முதலிய நான்கிற்கும் உரியரைக் கூறும் இவ்விடதது இறைஞ்சி எத்து என்பது கூறவேண்டுவதின்றாகவும், ஞானகுருவே குருவாதலின் இவனை வழிபடல் வேண்டும்; எடுத்துக் கொண்ட இத்தாபர சங்கமஙகளும இக்குருவடிவே எனத்தேறி வழிபடல் வேண்டுமெனக்கூறின் விரியுமாதலின், விரியாது ஒன்றற்குச் சொல்லப் பட்ட இலக்கணத்தை அதனைப் பெறுதற்குரிய மற்றொன்றுக்கும் மாட்டி விடுதலெனனும் மாட்டேற்றின் மேல்வைத்து ஞானகுருவினிடத்து வழி பாடு செய்யவேண்டுமென்ப துணர்ந்து கொள்ளுதற்பொருட்டு எடுத்துக் கொண்ட தாபர சங்கமங்களில் வைத்து, ஆகலினால் ஈசனிவனே யென்றி றைஞ்சி எததே என்பதனையும இவ்விடத்து உடன் கூறினார். குருவே சிவலிஙகமுந் திருவேடமும் அடியாருமென வழிபட வேண்டுமாயின், குருவை வழிபடவேண்டுமென்பது சொல்லாமலே பெறப்படுமென்பது கருத்து.

திருவேட மாலயங்களெல்லாம அரனெனவே தேறி ஞானி முதலிய நால்வரும் வழிபடுமுறையில் ஞானிக்கு நான்கு வழிபாட்டிலுமுரிமையுடை மையும், ஏனையோர்க்குத் தம்மிற் கீழ்ப்பட்டவற்றில் உரிமையுடைமையும், மேற்பட்டவற்றில் உரிமையின்மையும் விசேடமெனக் கூறியவாறுகாண்க.

ஈசனிவன் என்றவிடத்து இவன் என்பது ஈசனென்னும் பகுதிப் பொருளையே குறித்த விகுதி. இவ்விடத்து ஈசனென்றது திருக்கோயி லுள்ளிருக்குந திருமேனியை. ஈசன்றான் இவனேயென்றும் என்றவிடதது உம்மையை எதிரது தழுவியதாக்கித் திருவேடமுமிவனே யென்றிறைஞ் சியேத்தெனவும உரைத்துககொள்க. (௫)

ஞானகுருவின் அருளாலன்றிச் சிவபிரான்றிருவடியை அடைதல் கூடாதெனக கூறுகின்றது.

மந்திரத்தான் மருந்துகளால் வாய்த்தவியோ கத்தான்
மணியிரத குளிகையினான் மற்று மற்றுந்
தந்திரத்தே சொன்னமுறை செய்ய வேத
சகலகலை ஞானங்க டிரிகால ஞான
மந்தமிலா வணிமாதி ஞானங்க ளெல்லா
மடைந்திடுமா சானருளா லடிசேர் ஞானம்

வந்நிமற் றொன்றாலும் வாரா தாகு
மற்றவையு மவனருளான் மருவு மன்றே.

(பொ - ரை) மந்திரங்களாலும், மருந்துகளாலும், சிறந்த யோகத்தாலும், மணியாகிய இரத குளிகையினாலும், இன்னும் வேறு வேறு சாத்திரங்களிலே கூறியவாறு செய்தலாலும் வருகின்ற சித்தி ஞானங்களும், வேதாகம முதலிய கலைஞானங்களும், மூன்று காலங்களையும் அறியும் ஞானங்களும், அளவில்லாத அணிமா முதலிய அட்டசித்திஞானங்களும் ஆகிய அனைத்தும் ஞானாசிரியன் இல்லாமலும் கூடும். சிவபெருமான் திருவடியை அடையும் ஞானம் ஞானாசிரியன் திருவருளால் கூடுவதேயன்றி வேறெவற்றானுங் கூடாது. அகுருவருளால் மேற்கூறிய சித்தி முதலிய ஞானங்களுங் கூடும். ஆதலால், இக்குருவே ஈசன் என்று வழிபட்டுத் துதிக்க. (எ-று)

ஆதலால், இக்குருவே ஈசன் என்று வழிபட்டுத் துதிக்க என்பது குறிப்பெச்சம். ஞானகுருவே ஈசனெனத்தேறி வழிபடவேண்டுமென மேலைச்செய்யுளிற் கூறி, சிவஞானம் அக்குருவருளையின்றி அமையாதெனவும், அட்டசித்திகளும் அவனருளாலுண்டாகு மெனவும், அவ்வாறு வழிபடுதற்குரிய அக்குருவினது பெருமை இச்செய்யுளிற் கூறியவாறும். மற்றவையுமவனருளால் மருவும் என்றது, ஞானகுருவுக்குச் சித்தியை அருளுதல் கூடாதென்பதை நீக்குதற்பொருட்டு. ஞானி சித்தியை எதிர் பார்ப்பதில்லை. சித்திகள் ஞானியை எதிர்பார்க்கும். பார்க்கினும் இன்றியமையாக்காலத்தில் தற்போத முனைப்பின்றித் திருவருள் வயப்பட்டு நின்று உபயோகிப்பர். திருஞானசம்பந்தசுவாமிகள் முதலிய பெரியாரிடத்து நிகழ்ந்த சித்திகளனைத்தும் திருவருளை முன்னிட்டு நிகழ்ந்தவாறு காண்க. (௬)

ஞானகுருவை வழிபட்டார்க்கு உண்டாம் பயன் சிவமேயாதலெனக் கூறுகின்றது.

பரம்பிரம மிவனென்றும் பரசிவன்றா னென்றும்
பரஞான மிவனென்றும் பராபரன்றா னென்று

மரன்றருஞ்சீர் நிலையெல்லா மிவனே யென்று
மருட்குருவை வழிபடவே யவனிவன்றா னாயே
யிரங்கியவா ரணம்யாமை மீனண்டஞ் சினையை
யியல்பினொடும் பரிசித்து நினைந்தும் பார்த்தும்
பரிந்திவைதா மாக்குமா போற்சிவமே யாக்கும்
பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந் தானே.

(கோ - ரு) இரங்கிய வாரணம் யாமை மீன் இவை எனவும், சிவமே யாக்குந்தானே எனவுங் கூட்டுக.

(போ - ரை) சொரூப சிவமும், தடத்த சிவமும், பரஞானத்தையுடையாரும், சிவலிங்காதி மூர்த்தங்களும், சிவபக்தர் பொருட்டாக அப்போதப்போது வெளிப்பட்டருளி மறையும் மூர்த்தங்களும் ஆகிய எல்லாம் குருமூர்த்தமே எனத்தேறி ஞான குருவை வழிபடுக. அவ்வாறு வழிபடின், சிவபெருமான் இக்குருவை ஆவேசித்து நின்று கோழியானது தன் முட்டையைப் பரிசித்துக் காத்துச் சிசு உற்பத்தி செய்வதுபோல், மாணக்கன் சிரசில் கையை வைத்தலாகிய பரிச தீட்சை செய்தும், ஆமையானது தன் முட்டையைக் கருதிச் சிசு உற்பத்தி செய்வதுபோல், சிந்தித்தலாகிய பாவனை தீட்சை செய்தும், மீனானது பார்வையினால் சிசு உற்பத்தி செய்வதுபோல், பார்த்தலாகிய சட்சு தீட்சை செய்தும் சிவமாகச் செய்தருளுவன். (எ-று)

ஞானகுருவை வழிபட்டார்க்கு வரும்பயன் சிவமேயாதல் என இச் செய்யுளிற் கூறியவாறும். பரம் பிரமம் என்றது சொரூப சிவத்தை எனவும், பரசிவன் என்றது தடத்த சிவத்தை எனவும், பரஞானம் என்றது ஆகுபெயரான் அதனை உடையாரை எனவும், பராபரன் என்றது வினைத் தாபர மூர்த்தத்தை எனவும், அரன்றருஞ்சீர் நிலை என்றது அறுபத்து மூன்று நாயன்மார் முதலிய சிவபத்தர் பொருட்டாக ஆண்டாண்டு வெளிப்பட்டருளி மறையும் மூர்த்தங்கள் எல்லாவற்றினையும் எனவுங் கொள்க.

வழிபாடு கூறும் இவ்விடத்து, பரஞானத்தையுடையாரும், பராபரனுகிய தாபர சங்கமங்களும், குருவடிவே என வழிபட வேண்டுமென்பது கூறவேண்டுதலின், அவ்வாறு கூறுதலோடு சொரூப சிவம் தடத்த சிவ முதலியவற்றையும் குருவென வழிபடல் வேண்டுமென்பதும் உடன் கூறினர். (எ)

---

மூன்றமதிகாணம் முடிந்தது.

---

## பன்னிரண்டாஞ் சூத்திரம் முடிந்தது.

---

ஆகத்திருவிருத்தம் ௩உஅ.

---

## சிவஞானசித்தியார் சுபக்கம் உரையுடன் முற்றுப்பெற்றது.

---

### மெய்கண்டதேவன் திருவடிவாழ்க.

---

சிவஞானயோகிகள் திருவடி வாழ்க.

---

திருச்சிற்றம்பலம்.

---

# மாயாகாரியப்படம்.

## சுத்தமாயை.

சிவம். சத்தி. சாதாக்கியம். ஈசுவரம். சுத்தவித்தை. (சிவதத்துவம் ரு.)
சூக்குமை. பைசந்தி. மத்திமை. சூக்குமவைகரி. தூலவைகரி. (வாக்கு ரு.)
சாந்தியதீதை. சாந்தி. வித்தை. பிரதிட்டை, நிவிருத்தி. (கலை ரு.)
வாக்குக்கூறவே, அக்கரம், பதம், மந்திரமென் னுமிவையுமடங்கும்.

க-சூ. செ. ருஎ-ருஅ.

## அசுத்தமாயை.




பிரகிருதி மாயை. (இப்பிரகிருதி, கலையிலிருந்து தோன்றியது.)

குணம். (சாத்துவிகம், இராசதம், தாமதமென மூத்திறப்படும்)

புத்தி

அகங்காரம். (தைசதம், வைகாரிகம், பூதாதிகமென மூத்திறப்படும்)

தைசத அகங்காரம். — வைகாரிக அகங்காரம்.

மனம். (மெய், வாய், கண், மூக்கு, செவி) ஞானேந்திரியம் ரு. — வாக்கு, பாதம், பாணி, பாயு. உபத்தம், கன்மேந்திரியம் ரு.

சித்தம்

பூதாதி அகங்காரம்.

சத்தம். பரிசம். ரூபம். இரதம். கந்தம். [தன் மாத்திரை ரு.

ஆகாயம். வாயு. அக்கினி. அப்பு. பிருதிவி. (பூதம் ரு.)

மனத்தின் வியாபாரபேதம் சித்தமெனப்படுவதன்றிச் சித்தந் தனித் தத்துவமன்று. குணதத்துவம் உள்படப் பிரகிருதி மாயாதத்துவம் உச. குணதத்துவத்தைப் பிரகிருதியிலடக்கிச் சித்தத்தைச்சேர்த்து உச என்றலுமுண்டு. சித்தத்தை மனத்திலும், குணதத்துவத்தைப் பிரகிருதியிலு மடக்கிப் பிரகிருதியைச் சேர்த்து உச என்றே சித்தியாரில் கொள்ளப் பட்டது. உ-ம் சூ-ம்., செ. எஉ. இது ஆன்ம தத்துவமெனப்படும். ஆகத் தத்துவம் ஙசு.

| | கருத்தா. | செயல். | சூ. செ. | காண்டம். |
|---|---|---|---|---|
| சுத்தமாயை. | சிவன். | சவிகற்ப அறிவு. | க. உசு. | பிரேரகம். |
| அசுத்தமாயை. | அனந்தர். | மயக்கம். | உ. ருசு. | போகம். |
| பிரகிருதிமாயை. | ஸ்ரீகண்டர். | அஞ்ஞானம். | உ. ருஅ. | போக்கியம். |

சூ. உ, செ. எ.

# தாத்துவிகப்படம்.



பிருதிவியின் கூறு—எலும்பு, தசை, மயிர், தோல், நரம்பு. ௫

அப்புவின் கூறு —மூத்திரம், ரத்தம், சிலேட்டுமம், வியர்வை, சுக்கிலம். ௫

அக்கினியின் கூறு—இருதய உஷ்ணம், அன்னபானாதிகளைச் சீரணிக்கச் செய்கை, நயனத்தில் சூடு, தேகத்தில் சூடு, பைத்தியம். ௫

வாயுவின் கூறு —பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன். ௧௦

ஆகாயத்தின் கூறு—அத்தி, அலம்புடை, இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, குகுதை, சங்கினி, சிகுவை, புருடன். ௧௦

காமம், குரோதம், மதம், லோபம் மோகம். ௫

கன்மேந்திரியத்தின் றொழில் —வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் ௫

ஞானேந்திரியத்தின் விடயம் —சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம். ௫

வாக்கு —சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி. ௪

குணம் —சாத்துவிகம், இராசதம், தாமதம். ௩

அகங்காரம் —தைசதம், வைகாரிகம், பூதாதிகம். ௩

ஆக ௬௦

குறிப்பு :—எல்லாக் கட்டளைகளிலும் ஓடல், நடத்தல், கிடத்தல், இருத்தல், நிறுத்தலென்னும் ஐந்து சேர்த்து, சத்தமுதலிய ஐந்து நீக்கித் தொகை கூறப்பட்டிருத்தலால், அவ்வாறே முதற்பதிப்பினும் இப்பதிப்பினும் அச்சிட்டுள்ளேன். ஆயினும் சிவஞானபோதம் சைவபூஷணமுதலிய நூல்களில் சத்தாதிகளைப் புறக்கருவியாகக் கூறியிருத்தலானும், ஓடல் முதலியன கன்மேந்திரியத்துள் பாதத்தின்றொழிலாகிய கமனத்துளடங்குமாதலால் அவற்றை வேறு கூறவேண்டாமையானும், ஓடல் முதலியவற்றை நீக்கிச் சத்தாதிகளைச் சேர்த்து இங்கே தொகை கொள்ளப்பட்டவாறும்.

# அத்துவப்படம்.



## பெயருந் தொகையும்.

| மந்திரம். | பதம். | வன்னம். (எழுத்து) | புவனம். | தத்துவம். | கலை. ௬. |
|---|---|---|---|---|---|
| ௧௧. | ௮௧. | ௫௧. | ௨௨௪. | ௩௬. | ௫. |

### மந்திர முதலிய ஐந்துங்கலையிலொடுங்கு முறை.

| | மந்திரம். | பதம. | வன்னம். | புவனம் | தத்துவம். | அதிதெய்வம். |
|---|---|---|---|---|---|---|
| நிவிர்த்தி | ௨. | ௨௮. | ௧. | ௧௰௮. | ௧. | பிரமன். |
| பிரதிட்டை | ௨. | ௨௧. | ௨௪. | ௫௬. | ௨௩. | விட்டுணு. |
| வித்தை | ௨. | ௨௰. | ௭. | ௨௭. | ௭. | ருத்திரன். |
| சாந்தி | ௨. | ௧௧. | ௩. | ௧௮. | ௩. | மகேசுவரன். |
| சாந்தியதீதை | ௩. | ௧. | ௧௬. | ௧௫. | ௨. | சதாசிவர். |
| | ௧௧. | ௮௧. | ௫௧. | ௨௨௪. | ௩௬. | |

பஞ்சகலைகளும் சிற்சத்தியிலொடுங்கும். சிற் சத்தி சிவனிடத்தொடுங்கும்.



# பாட்டு முதற்குறிப் பகராதி.



**பாட்டு முதற்குறிப்பகராதி,**
முற்றுப்பெற்றது.



# விஷய அகராதி.



விஷயம். பக்கம்

விஷயம். பக்கம்.

# விஷய அகராதி.

# விஷய அகராதி.

# விஷய அகராதி.

விஷயம். பக்கம்.

விஷயம். பக்கம்.

# விஷய அகராதி.



---

# அருஞ்சொற் பொருளகராதி.

அ. பக்கம்.

அசேதனம்-செயப்படுபொருள் ௪௯
அதிட்டானம்-நிலைக்களம் ௧௨௫
அதிட்டித்தல்-வாயிலாகக்கோடல் ௧௧௧
அநு-தொடர்ச்சி ௨௨௬
அநிருவசனம்-உறுதியாய்ச் சொல்லப்படாதது ௫௧௬
அந்நுவயம்-உடம்பாடு ௨௬
அமைதல்-வேண்டாமை ௪௨௧
அயர்வு-இளைப்பு ௮௧
அரு-சூக்குமம் ௭௫-௭௬
அருமை-இன்மை ௨௬௪
அன்று-அறிந்தபோது ௧௧௯
அன்றுதல்-மாறுபடுதல் ௬௪

ஆ.

ஆகம்-உடம்பு ௧௧௪
ஆகி-போல ௫௮௫
ஆதாரம்-அதிகாணம் ௮௫-௧௨௧
ஆதிசத்தி-திரோதானசத்தி ௧௧௨
ஆப்தன்-உண்மையுரைப்போன் ௫௦
ஆறுசென்றவியர்-வழிச்சேறலாலுண்டாம் வியர்வை ௨௫
ஆற்றுதல்-ஊக்குதல் ௧௯௭

இ.

இரந்தரம்-வெளி ௧௯௯
இருமை-இரண்டு ௧௨௪
இலேசு-சிறுபான்மையான விதி ௮௦
இழவு-வறுமை ௧௫௭
இன்று-இப்பெத்தகாலத்து ௧௮௧

உ.

உந்துதல்-பொருந்துதல் ௨௮௬
உபதேசகலை-ஞானகாண்டம் ௫௦
உயிரவை-உயிரோடுங் கூடிய வுலகம் ௮௧
உய்த்திடும்-தோற்றுவிக்கும் ௩௨௬

ஊ

[illegible]து-[illegible]தறகு ௮௧

பக்கம்.

ஐயமில் பிராணவாயு-ஐயமில்லையாதற்கேது வாகிய பிராணவாயு ௬௭

ஓ.

ஓர்த்தல்-ஆராய்தல் ௯

க.

கதி-ஞானம் ௧௮௨
கண்-அறிவு ௮௦

கா.

காரகம்-தொழில் முதனிலை ௧௫௨
௧௯௨-௫௯௪

ச.

சபக்கம்-திருட்டாந்தத்திற்கிடம் ௨௫
சயித்துரு-உண்டுபண்ணுதல் ௨௦
சவிகற்பம்-விகற்பத்தோடு கூடியது ௧௯

சா.

சாக்காடு-இழிவு ௧௫௭
சாதி-ஒன்றுபோலுள்ள பல பொருட்குப் பொதுவாயதோர் தன்மை ௨௨
சாமுசித்தர்-முற்சென்மத்தில் சாதனம் முற்றுப்பெற்றவர் ௧௨
சார்ந்தபோது-சார்தற்கேதுவாகிய காலம் ௧௮௧
சால-அமைதற்பொருட்டு ௧௮௧

சி.

சித்தம்-சித்திக்கப்பட்டது ௧௯௧
சிவகாரணம்-சிவத்தின்வழிச் செல்லுங்காரணம் ௪௫௯

சீ.

சீர்-உவமஉருபு ௫௫
சீலம்-தன்மை ௭௯

சு.

[illegible]தகதுவம்-தனாலறியப்படுவது [illegible]

# மத அகராதி.



## சுத்த சைவம்.



## சௌராந்திகம்.



## தார்க்கிகம்.



## நையாயிகம்.



## பரிணாமவாதம்.



## பாஞ்சராத்திரம்.



## பாதஞ்சலம்.

---

# மேற்கோளகராதி.

# பிழை திருத்தம்.



| பக்கம். | வரி. | பிழை. | | திருத்தம். |
|---|---|---|---|---|
| ச | கரு | மூன்று வகைகளும் | ... | மூன்றுவமைகளும். |
| கச | ககூ | மருளாலாம் | ... | மருளொலாம். |
| கஎ | கரு | ஆகமும் | ... | ஆகமமும். |
| சக | உகூ | கூடிய | ... | கூடி. |
| ரு௰ | ரு | நாசம | ... | நாசம். |
| ருசா | கச | காலேசுவர வாதிகள் | ... | காலேசுவரவாதிகள் கொள்கைபற்றி. |
| சாசா | ௩ச | மூன்றின | ... | மூன்றின். |
| சாஎ | ௩ரு | புதிந் | ... | புந்தி. |
| சாஅ | உ | எற்புளி | ... | எற்புளி. |
| எஉ | கஅ | என்று | ... | என்னு. |
| எரு | கக | அபேதமாம் | ... | அபேதமாகும். |
| அஉ | கரு | என்றது | ... | என்பது. |
| அசா | ௩ச | உவமை | ... | உம்மை. |
| க[illegible] | உ | கொள்ளப்படும் | ... | கொள்ளப்படும். |
| | | | .. | -லிரு. |
| க௰க | ரு | உலகதி | ... | உலகம். |
| க௰க | சா | சுரும் | ... | சுருதி. |
| .. | ௩௰ | விளை | ... | விளைவு. |
| . | ௩[illegible] | சிவனைத்தவெ | ... | சிவனைத்தேவ. |
| ... | ௩உ | வுல் | ... | ரின். |
| [illegible]௰உ | உச | லதவ | ... | லதுவு. |
| க௰சா | உ௰ | நடன | ... | ஊன நடன. |
| . . | உரு | பாசநீங்கிய | ... | பாசத்தை நீக்கும். |
| [illegible]௰எ | கரு | வெதாகமம் | ... | வேதாகமம். |
| க௰அ | ரு | அசிந்தனன்றே | ... | அசிந்தன். |
| சகக | கஅ | உத்தியாக | ... | உத்தியோக. |
| க௩ச | எ | மேண்டுவென்றுகுமே | ... | வேண்டுமென்றுகுமே. |
| ... | உஉ | அமைக்சர் | ... | அமைச்சர். |
| க௩க | அ | ஒரு பொருளைத் | ... | ஒரு பொருளைச். |

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | | திருத்தம். |
|---|---|---|---|---|
| கசஉ | ரு | துண்ர் | ... | துணர். |
| கசச | கஉ | கூடும | ... | கூடும். |
| கசரு | அ | செயவது | ... | செய்வது. |
| கசஎ | உஎ | பலத்தை | ... | பலத்தை. |
| கசுச | கரு | மருந்தும் | ... | மருந்து. |
| கஎகூ | உஉ | வுடம்மை | ... | வுடம்பை. |
| கஅக | ௩ | கொள்ளான் | ... | கொள்ளாது. |
| கஅஉ | உஅ | கட்ப்படு | ... | கட்படு. |
| ககூக | அ | சித்தத்தெளியதாய் | ... | சித்தந்தெளியாதாய். |
| ககூஉ | கக | ரப்படும் | ... | றப்படும். |
| உ0க | கசு | விஞற் | ... | விதஞற். |
| உ0௩ | கரு | துரு | ... | திரு. |
| ,, | ... | சயித்துரு | ... | சயித்திரு. |
| உகஉ | உசு | திருமேணி | ... | திருமேனி. |
| ,, | உஎ | திவிமேனி | ... | திருமேனி. |
| உச0 | ௩ | அறியுந | ... | அறியுந். |
| உசஎ | கச | கருவியாக | ... | கருவிகளாக. |
| உசஉ | க௩ | இழுக்கப்படுதல் | ... | இழுத்தல். |
| உருஉ | கசு | முன்னுரும் | ... | முன்னிரும். |
| உருஉ | கஎ | முன்னித | ... | முன்னுத. |
| உஎக | அ | யிவை | ... | விவை. |
| உகூக | ரு | என்றதறகு | ... | என்றதற்கு. |
| ௩0ச | கக | விரித்திடும | ... | விரிந்திடும். |
| ௩0அ | சு | போலாம், | ... | போலாம். |
| ௩ருச | உச | மேன்மை | ... | மெய்மை. |
| ௩சுஉ | கஎ | அநுக்கிரகம | ... | அநுக்கிரகம். |
| ௩எக | உஅ | இடைப்பிறவா | ... | இடைப்பிறவா. |
| ௩அக | கச | ஞானம | ... | ஞானம். |
| ௩அச | கஅ | ன்றி | ... | வின்றி |
| சகஉ | கஎ | ஞானம் | ... | ஞானமும். |
| சஉசு | உஉ | வேற்றுமைய | ... | வேற்றுமைய. |
| ச௩௩ | ௩உ | துறைக்கப்பட்டது | ... | துரைக்கப்பட்டது. |
| சசுசு | க௩ | கண்ணொளியும் | ... | கண்ணொளியும். |
| சசுகூ | க | க-ம் அதி. | ... | உ-ம் அதி. |
| சஎஎ | உஎ | உதிக்தும | ... | உதித்தும். |
| சஎகூ | உ௩ | பற்றுவிட்டு | ... | பற்றும்விட்டு. |
| சஅ0 | உஉ | வெளிபட்டு | ... | வெளிப்பட்டு. |

உ

சிவமயம்.

# சிவஞானபோதச்

## சிற்றுரைவிளக்கம்.



இதனுள்

**ஸ்ரீமெய்கண்டதேவநாயனார் அருளிச்செய்த**

சிவஞானபோதமூலமும்

வார்த்திகப் பொழிப்புரையும்,

இவற்றிற்கு

திருக்கைலாய பரம்பரைத்

திருவாவடுதுறை ஆதீனத்து

**மாதவச் சிவஞானசுவாமிகள் அருளிச்செய்த**

சிற்றுரையும்,

அவ்வுரைக்கு

ஷை ஆதீன சைவப்பிரசாரகர்

தூத்துக்குடி

**பொ. முத்தையபிள்ளை எழுதிய**

விளக்கமும் உள்ளன.

---

இவை

ஷை பொ. முத்தையபிள்ளையால்

தேவகோட்டை

ஸ்ரீமாந். மெ. அரு. நா.

**இராமநாதன் செட்டியாரவர்கள்**

உதவிய பொருளைக்கொண்டு,

சென்னை

சைவவித்தியாநுபாலன யந்திரசாலையிலும்

ஸ்ரீநிகேதன அச்சுக்கூடத்திலும்

பதிப்பிக்கப்பெற்றன.

 1918 [விலை ரூ. ௩-௮-0

# பொருளடக்கம்.

சிவமயம்.

# முகவுரை.

---

கடல்சூழ்ந்த இந்நில உலகின்கண் வாழும் மனிதர்கள், கடவுள் உண்டென்பாரும் இல்லை என்பாருமாக இருந்திறத்தர். கடவுள் உண்டென்று சொல்கின்றவர்களும் கடவுளை நேரேகண்டு சொல்வதில்லை. அனுமானப் பிரமாணத்தால் அறிந்து சொல்லுகின்றனர். பிரத்தியட்சத்தில் அறியப்படாமையினால் கடவுள் இலக்கணத்தில் தத்தம் அறிவுக் கெட்டியவாறு பலதிறப்பட ஒவ்வொருவரும் கூறி மாறு படுகின்றனர். அதனால் சமயங்களும் அச்சமயங்களை விளக்கும் நூல்களும் பலவாயின. பிரத்தியட்சத்தால் அறியப்படாமை கொண்டே கடவுள் இல்லையென்பார் உளராகி இல்லையென்றுவது கடவுளைப்பற்றிப் பேசவந்தமையால் உண்டென்பவரோடு ஒப்ப அவரும் ஒருசமயியென எண்ணப்படுகின்றனர். அவருக்கும் நூல் உண்டு.

இவ்வாறு பலதிறப்பட்ட சமயங்களுள், மெய்ச்சமயம் எது பொய்ச்சமயம் எது என ஆராயப் புகின், ஒவ்வொரு சமயநூல்களும் தத்தம் சமயமே மெய்ச்சமயமெனவும் ஏனைய பொய்ச்சமயமெனவுங் கூறும். இனி உண்மை உணர்தல் எவ்வாறு கூடுமெனின்,

தம் எண்ணத்திற்கு மாறுபட்ட அனுபவம் நிகழக்காண்கின்றமையால், அதனைச் செய்யும்பொருள் ஒன்று தம்மின் வேறாய் இருக்கவேண்டும், அதுவே கடவுள் என்று கடவுள் இல்லை யென்பார் மதம் பொய் யென மறுத்துவிடலாம். கடவுள் உண்டென்று ஒப்புக்கொள்ளுஞ் சமயங்களுள், யாது மெய்ச்சமயமெனின்,

ஒருபொருள் தன்னை உள்ளவாறுணர்த்தச் சிறப்பாக ஒரு தன்மைஉடையதா யிருக்குமன்றிப் பலதன்மைகள் உடையதாயிராது. பொதுத்தன்மைகள் பலவாய் இருக்கலாம். அவை, தம்முள் ஒன்றோடொன்றும் சிறப்புத்தன்மையோடும் மாறுபடா.

உதாரணம்:—அக்கினிக்குச் சூடுஒன்றே சிறப்பானதன்மை. செம்மையும் தகதக என்னும் சத்தமும் பொதுத்தன்மைகள். அவை ஏனையபொருள்கட்கும் உளவாதலின் பொதுவெனப்பட்டன. அப்பொதுத்தன்மைகள், சிறப்புத்தன்மையான சூட்டோடு மாறுபடா. சூட்டிற்கு மாறுபட்டதன்மை தட்பம். அது தண்ணீருக்குச்சிறப்பு. சிறப்புத்தன்மை வேறொருபொருளில் இராது. இவ்வாறு ஒவ்வொரு பொருள்களினும் சிறப்புத்தன்மை பொதுத்தன்மையென இருதன்மைகள் உண்டு. அவற்றுள், பொதுத்தன்மைபற்றி அக்கினி செம்மையைஉடையது என்றாவது தகதகவென்னும் சத்தத்தைஉடையது என்றாவது ஒருவர்கூறின், ஏனையவற்றிற்கும் அவை பொதுவாதல்பற்றி மறுத்துவிடலாம். பொதுத்தன்மையை மாத்திரம் அறிந்தோர் சிறப்புத்தன்மையைக் கொள்ளார். அவ்விரண்டையும் அறிந்தோர் பொதுத்தன்மையை மறுக்கார்.

கடவுளுக்கும் சிறப்புத்தன்மை பொதுத்தன்மைகள் என இருதன்மைகள்உண்டு. ஏனைய பொருள்களுக்குரிய சிறப்புத்தன்மை பொதுத்தன்மைகள் வேறு; கடவுளுக்குரிய சிறப்புத்தன்மை பொதுத்தன்மைகள் வேறு. இதனை இந்நூல் கஎ, சஅ ம்பக்கங்களிற்காண்க. கடவுளின் சிறப்புத்தன்மையை அறிந்தனுபவிக்கும் ஆற்றலில்லாதார் உய்தற்பொருட்டு, அவர் கருணையால் அருவம், அருவுருவம், உருவம் என்னுந் திருமேனிகள் தோன்றின. இத்திருமேனிகள் வகையால் மூன்றாயினும், உயிர்களின்பக்குவத்திற்கேற்றவாறு பலதிறப்படும். இத் திருமேனிகளெல்லாம் கடவுளுக்குப் பொதுத்தன்மை யெனப்படும். இத்திருமேனிகளையும் அறிந்து வழிபடமாட்டாதார்க்கு ஆன்மாக்களிடமாக நின்றனுக்கிரகிப்பர். அதுவும் பொதுத்தன்மையேயாம். அறிவுத் திருமேனி யொன்றே கடவுளுக்குச் சிறப்புத்தன்மை. இதுபற்றியே, "வாலறிவன்" என்றார் திருக்குறளாசிரியரும். எண்குணம் சிறப்புத்தன்மை யென்றது, சித்துத்தன்மையின் வியாபாரபேதம் பற்றியேயன்றிப் பிறிதில்லை. பொதுத்தன்மையான திருமேனிகளுள், ஒவ்வொன்றே கொள்ளுவோர் ஒருவரோடொருவர் மாறுபடுவர். சிறப்புத்தன்மையைக் கொள்ளுவோர், பொதுத்தன்மைபற்றி ஒவ்வொன்றே கொள்வாரை மறுக்காது அதனையும் என்றுசொள்வர்.

ஆகவே, எந்தச் சமயமானது பிறசமயக்கொள்கைகளை இகழாது அவையெல்லாம் உயிர்களின் பக்குவத்திற்கேற்றவாறு இறைவன் கருணையினால் அமைந்துள்ளன ஆதலின் வேண்டப்படுவனவேயாம் என ஏன்றுகொண்டு அவற்றிற்கு வேறான சிறப்புத்தன்மையினையுங் கொண்டிருக்குமோ அந்தச்சமயமே மெய்ச்சமயமாம். அந்த மெய்ச்சமயந்தான் யாதெனின், சைவசமயமேயாம். அந்தச் சமயநூலே மெய்ந்நூலாகும். இக்கருத்துப்பற்றியே, "ஓதுசமயங்கள்பொருளுணருநூல்களொன்றோடொன்றொவ்வாமலுளபலவு மிவற்றுள்-யாதுசமயம்பொருணூல் யாதிங்கென்னி னிதுவாகுமதுவல்லதெனும்பிணக்கதின்றி-நீதியினா லிவையெல்லா மோரிடத்தே காண நின்றதியா தொருசமய மதுசமயம் பொருணூல்" என அருணந்திசிவாசாரியரும், "இராஜாங்கத்தமர்ந்தது வைதிகசைவம் அழகிதந்தோ" எனத் தாயுமானசுவாமிகளும் அருளிச்செய்வாராயினர்.

சைவம் என்பது, சிவாத்துவிதசைவம் சிவசமவாதசைவம் முதலியவற்றிற்கெல்லாம் பொதுவாயினும், சிறப்பாகச் சித்தாந்த சைவத்தையே குறிக்கும். இச்சித்தாந்த சைவத்தின் உண்மையை இனிதுவிளக்குவது சிவஞானபோதமே.

நந்திபெருமானுக்கு ஆகமங்களிற்கூறும் பொருள் வேற்றுமை பற்றி ஐயம் நிகழ்ந்தவிடத்து அவ்வையத்தை நீக்குதற்பொருட்டுச் சிவபெருமானால் உபதேசித்தருளப்பெற்றதும் சிவஞானபோதமே. ஆகமங்களிற்கூறும்பொருள் வேற்றுமையை ஏ-ஆம் பக்கங்களிற் காண்க.

சனகாதி நால்வருக்கும் வேதவேதாந்தங்களால் தீராதமலை வைத்தீர்த்தற்பொருட்டு உபதேசிக்க எழுந்தருளிவந்த தக்ஷிணாமூர்த்தி திருக்கரத்தில் தரிக்கப்பெற்றதும் சிவஞானபோதமே.

மாணிக்கவாசக சுவாமிகளுக்கு அனுக்கிரகஞ் செய்தற்பொருட்டுச் சிவபெருமான் மானுடச்சட்டை தரித்துக் கைலையினின்றும் எழுந்தருளிவந்து திருப்பெருந்துறையிற் குருந்தமரத்தின்கீழ் வீற்றிருந்தருளியபோது தமது திருக்கரத்தில் தாங்கப்பெற்றதும் சிவஞானபோதமே.

சிவஞானமென்பது ஆகமத்தால் நிகழும் ஞானத்தை உணர்த்தி, ஆகமங்களின் பொருளொற்றுமையை நிர்ணயித்து உணர்த்துங் காரணத்தால் சிவஞானபோதமெனப் பெயராயிற்று. இதனை ௯-ம் பக்கத்திற்காண்க.

மாணிக்கவாசக சுவாமிகள் "செங்கைமீது - பொருந்தமுறும் புத்தகமேதைபா" என்று சிவபிரானை வினவ, அப்பிரானார் "பொய்ம்மையிலாச் சிவஞானபோதம்" என்று விடையிறுக்கப்பெற்றதூஉம், "என்றலுமேசிவமேதுஞானமேதிங்கிலங்கியிடும்போதமேது" என்று வினவ, "நின்றசிவ மொன்றதனைத்தேர்தல் ஞானம் நிகழ்போதந் தேர்ந்ததனைத் தெளிதலாம்" என்று சிவபெருமான் அருளிச்செய்த பொருளோடு இங்கேகூறிய பொருள் முரணுமேதோஎனின், முரணாது. எவ்வாறெனிற்கூறுதும்:—

சிவமாகிய ஒருபொருளைத் தேர்ந்து தெளிதல் என்பதே சிவஞானபோதம் என்பதற்குச் சிவபிரான் அருளிச்செய்தபொருள். சிவம் என்பது உபலக்கணத்தால் சிவபிரானைவிட்டுத் தனித்து நில்லாத அடிமையும் உடைமையுமாகிய பசுபாசங்களையுந் தழுவும். தேர்தலாகிய ஞானம் ஆகமங்களினாலேதான் நிகழும். தெளிதல் என்றதனாலேயே தெளியாமைக்குரியமலேவ உண்டென்பது பெறப்படும். ஆகவே, பதிபசுபாசமென்னும் பொருள்களை ஆகமங்களினால் தேர்ந்து அத்தேர்ச்சியால் உண்டாகும் மலைவைத்தெளிவிப்பது சிவஞானபோதம் என்றவாறாயிற்று. எனவே, சிவஞானபோதம் என்பதற்கு ஆகமங்களின் பொருளொற்றுமை உணர்த்துதல் என்று இங்கே கூறியபொருளும், சிவம் முதலியபொருள்களைத் தேர்ந்து தெளிதல் என்று திருவாதவூரடிகள் புராணத்திற்கூறிய பொருளும் ஒன்றோடொன்று முரணாமைகாண்க.

இச் சிவஞானபோதம் ஆதியே வடமொழியில் உள்ளது. இதனைத் தமிழ்நாட்டார் உய்தற்பொருட்டு அவதரித்த ஸ்ரீமெய்கண்டதேவ நாயனார் தமிழில் மொழிபெயர்த்துச் சூத்திரத்திற்குக் கருத்துரையும், சூத்திரத்தைப் பதச்சேதஞ்செய்து மேற்கோள், ஏது, உதாரணங்களும் அருளிச்செய்தனர்.

வடமொழிச் சிவஞானபோதம் இரௌரவ ஆகமத்துள் ஓர் பகுதியாதலின், மங்கலம், அவையடக்கம், அதிற்கிடையா. மூலத்

தைத் தமிழில் மொழிபெயர்த்த ஆசிரியர் அவ்விரண்டிலுஞ் செய்தனர். மொழிபெயர்த்துக் கருத்துரை முதலிய உரையுஞ்செய்தவர் ஸ்ரீமெய்கண்டதேவரே யென்பது, நூலின் இறுதியில்உள்ள பாயிரத்தால் இனிதுபுலனாம். அப்பாயிரத்தில் மொழிபெயர்த்தாரென்பது எதனாற் பெறப்படுகின்றதெனின், நூல்உரைத்தான் என்றதனால் பெறப்படுகின்றதென்க. அதனால், தாமே புதுவதாய்ச் செய்தாரென்று கொள்ளக்கூடாதோ எனின், கூடாது. எதனாலெனின், "எந்தைசனற்குமரனேத்தித்தொழவியல்பாய் - நந்தியுரைத்தருளு ஞானநூல்" என்றதனாலென்க. இப்பாயிரம் செய்தவர் யாரோ எனின், ஸ்ரீமெய்கண்டதேவரேயாம். அது எதனாற்பெறுதுமெனின், நூலாசிரியரும் உரையாசிரியரும் இறுதியில் இன்னார்செய்த இன்ன நூல் முற்றுப்பெற்றது, இன்னநூலுக்கு இன்னார்செய்த உரை முற்றுபெற்றது எனத்தாமேசைச்சாத்திட்டுவைப்பது முற்காலத்து வழக்கம். அவ்வாறுசெய்து வைக்கவில்லையாயின், இன்னார்செய்தாரெனப் பிற்காலத்துள்ளார் அறிதல்அரிது. அவ்வாறே ஸ்ரீமெய்கண்டதேவ நாயனாரும் செய்யுளால் அருளிச் செய்திருக்கின்றாராதலானும், ஏனையோர் செய்த பாயிரம் நூலின்முகப்பிலிருப்பதேயன்றி இறுதியில் நூலுடன் சேர்ந்திருப்பதில்லை; இதுசேர்ந்திருத்தலானும், இறுதியில் இருப்பினும் பலபாயிரம் இருப்பின் எல்லாம் ஒருசேரத்தொகுத்து வைக்கப்பட்டிருக்குமேயன்றி நூலுக்கு முன்னும் பின்னுமாக வைப்பதில்லை யாதலானும், உரையாசிரியர், நூலின் இறுதிவெண்பாவின் உரையில் இப்பாயிரத்தை மேற்கோளாக எடுத்துக்காட்டுதலானும் பெறுதும்என்க.

மெய்கண்டதேவர் அருளிய கருத்துரை முதலியவற்றானும் நூற்பொருளை உள்ளவாறு உணர்ந்துகொள்ளுதல் அரிது ஆதலின், சிவஞானபோதப்பொருளைத் தெளிவாய் உணர்த்துதற்கென்றே அவதரித்த திருவருட்டோன்றலாகிய மாதவச் சிவஞானசுவாமிகள், சூத்திரத்திற்குப் பிண்டப்பொழிப்புரையும், மெய்கண்டதேவ நாயனார் அருளிய கருத்துரை முதலிய உரைக்குஉரையும் அருளிச் செய்தனர். இவ்வுரை சிவஞானபோதச் சிற்றுரையென வழங்குகின்றது. அம்மட்டோ பேருரையாகிய பாஷியமும் அருளிச்செய்தனர்.

வடமொழிச் சிவஞானபோதத்திற்கும் தமிழ்ச் சிவஞானபோதத்திற்கும் வேறு பலஉரைகளும் உள. அவற்றுள், தமிழ்ச் சிவஞானபோதத்திற்குப் பாண்டிப்பெருமாள் உரையொன்றும், வடமொழிச் சிவஞானபோதத்திற்கு ஏகான்மவாதபரமானபிற்காலத்து உரையொன்றும் அச்சில் வந்திருக்கின்றன. அச்சிற்குவாராத உரைகள்பல. அவ்வுரைகள் எல்லாம் திட்பநுட்பங்கள் செறிந்து விளங்காமையோடு பொருந்தாமையும் உடையன என்பது, சுவாமிகள் உரையில் மறுத்திருக்கின்றமைபற்றி அறியக்கிடக்கின்றது.

உரையாசிரியரென்பார், பஞ்சஇலக்கணம் தருக்கம் நியாயம் இலக்கியம் ஞானநூல் பிறமதக்கோட்பாடு முதலாயின நன்குதெரிந்தவராயிருத்தல் வேண்டும். அவ்வாறில்லாதவர் உரையாசிரியராய் வந்து உரைசெய்யினும், அவ்வுரை சிறக்காது. இதனை ஒருஉதாரணத்தில் வைத்துக்காட்டிதும் :—திருக்குறளுக்குப் பலவுரைகள் உள்ளன. அவ்வுரைகளுள், பரிமேலழகர்உரை யொன்றே இலக்கண முதலியஎல்லாம் நிறைந்திருக்கின்றமைபற்றிச் சிறந்துவிளங்குகின்றது. ஏனையஉரைகள் அவ்வாறு திட்பநுட்பச்செறிவில்லாதன என்பது, இப்பொழுது அறத்துப்பாலுக்கும் பொருட்பாலுக்கும் அச்சில்வந்திருக்கின்ற மணக்குடவர்செய்த உரையால் இனிதுவிளங்கும். பரிமேலழகர் உரையின் சிறப்புநோக்கியே சுவாமிகள் தம் உரையில் அவ்வுரையை மேற்கோளாக எடுத்தாண்டனர். இதனை ௬௦-ம் பக்கத்திற்காண்க. திருக்குறளுக்குப் பரிமேலழகர் உரைபோலவே, சிவஞானபோதத்திற்குச் சிவஞானசுவாமிகள் அருளிய உரை எல்லாநலன்களும் சிறந்து விளங்குகின்றது. இவ்வுரையொன்று இன்றேல், சைவசித்தாந்திகள் தம் சமயஉண்மையின் மேம்பாடும், பிறசமயங்களின் குறையும் வரையறுத்து உணரமாட்டாது மயங்குவரென்பது திண்ணம்.

இச் சிவஞானபோதம் பன்னிருசூத்திரங்களை உடையது. அவற்றுள், முன்னாறுசூத்திரம் முப்பொருள்களின் பொதுஇலக்கணங் கூறுதலின் பொதுஅதிகாரம் எனவும். பின்னாறுசூத்திரம் முப்பொருள்களின் சிறப்பிலக்கணங்கூறுதலின் சிறப்பதிகாரம் எனவும், பொது அதிகாரத்துள், முன்மூன்றுசூத்திரம் முப்பொருள்களின் உண்மைகூறுதலின் பிரமாணஇயல் எனவும், பின்மூன்றுசூத்திரம் அவற்றின் இலக்கணங்கூறுதலின் இலக்கணஇயல் எனவும், சிறப்

பதிசாரத்துள், முன்மூன்று சூத்திரம் அதிகாரியும் சாதனமும் சாதிக்கு முறையுங்கூறுதலின் சாதனஇயல் எனவும், பின்மூன்று சூத்திரம் பாசவிடுதி சிவப்பேறு அப்பேறுபெற்ற சீவன்முத்தர் இயல்பு கூறுதலின் பயன்இயல் எனவும் பெயர்பெறும். இவ்வாறு இரண்டு அதிகாரங்களையும், நான்கு இயல்களையும் உடைய இந் நூலுள்,

## முதற் சூத்திரம்

கண்ணாற்காணப்பட்ட உலகந்தோன்றி நின்று ஒடுங்குதலைக் கொண்டு, கண்ணாற்காணப்படாத கடவுள் உண்டென்று சாதிப்பது. இது மூன்றுஅதிகாணங்களை உடையது. அவற்றுள், முதலதிகரணம், உலகந்தோன்றி நின்று ஒடுங்காது நித்தமாய் உள்ளது எனக்கூறும் மீமாஞ்சகரையும் உலகாயதரையும் மறுத்து உலகம் முத்தொழில்உடையது எனவும், இரண்டாம் அதிகரணம், உலகம் இல்பொருளாதலின் முத்தொழிற்படுமாயினும் அதுதானே முத்தொழிற்படும்; அதுஇயல்பு; ஆதலின் அதுகொண்டு கருத்தாஉண்டென்றல்கூடாது என்னும் புத்தரையும், மாயையில்நின்று தானே தோன்றியொடுங்குமாதலின்கருத்தா வேண்டாமென்னும் சாங்கியரையும், கருத்தாஉண்டெனினும், அக்கருத்தாவிட்டுணு பிரமன் முதலியோரில் ஒருவராதல் கூடுமென்னும் பாஞ்சராத்திரி முதலியோரையும் மறுத்து, உலகம் உள்பொருள், ஒருகருத்தாவை உடையது, அக்கருத்தா சங்காரக்கடவுள்எனவும், மூன்றாம் அதிகரணம், சங்காரக்கடவுள் கருத்தாஎனினும், அக்கடவுளும் பலராதல்வேண்டுமன்றி ஒருகடவுளாதல் செல்லாதுஎன்னும் அநேகேசுரவாதி முதலியோரை மறுத்துச் சங்காரக்கடவுள் ஒன்றேயெனவும் சாதித்தன. இச்சூத்திரத்தில், உலகம்ஒடுங்கி மீளத்தோன்றுதற்கு ஆணவமலம் நீங்காமையே ஏதுவாதலின், ஆணவமலத்தின் உண்மையும், ஒடுங்கின அவத்தையில்உள்ள சூக்குமத்தன்மைபற்றி மாயை உண்மையும்பெறப்பட்டவாறு காண்க. இதனை ௪௧, ௭௪ம் பக்கங்களிற் காண்க.

## இரண்டாஞ் சூத்திரம்

உலகத்தை இறைவன் தோற்றுவிக்குங்காலத்து எவ்வாறு நின்று தோற்றுவிப்பன் என்னும ஆசங்கையை நீக்கும்முறையில்,

உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நின்று தனதுசத்தியால் அவ்வுயிர்களின் இருவினைகட்கேற்பப் புதுச் சிருட்டியைச் செய்வன் எனக்கூறி, உலகத்திற்கு முதற்காரணமாகிய மாயையும், துணைக்காரணங்களாகிய கன்மமும் திரோதானமாகிய திருவருளும் உண்டெனச் சாதிப்பது. முதற்சூத்திரத்தினாலேயே மாயாமலம் உண்டென்பது பெறப்படினும் அநுமானப்பிரமாணம்பற்றி இச்சூத்திரத்தும் மாயை உண்மை கூறப்படுகின்றது. இதனை அங்கும் பக்கத்திற் காண்க. இது நான்கு அதிகரணங்களை உடையது. அவற்றுள், முதலதிகரணம், உயிர்களும் முதல்வனும் அபேதம் என்னும் ஏகான்மவாதிகளையும், பேதம் என்னும் மாத்துவரையும், பேதாபேதம் என்னும் பாஞ்சராத்திரிகளையும் மறுத்து, மூன்றுமாய் நிற்பன், அவ்வாறு நிற்றலே அத்துவிதம், அத்துவிதம் என்பது இருபொருள்களின் அநன்னியம் எனவும், இரண்டாம் அதிகரணம், உலகத்தைத் தோற்றுவிப்பதற்கு மாயைகன்மங்கள் வேண்டப்படுமாயின் முதல்வன் சுதந்திரத்திற்குக் குறைவுண்டாகுமாதலால், முதல்வனே உலகமாய்த் தோன்றுவன் என்னும் பரிணாமவாதிகளை மறுத்து, மாயை கன்மங்கள் வேண்டப்படினும், அதுபற்றிச் சுதந்திரத்திற்கு இழுக்கில்லையெனவும், மூன்றாம் அதிகரணம், குடம் உடைந்தவிடத்துக் குடாகாயம் மகாகாயத்தோடு கூடுமாறுபோல, உடம்பு நீங்கியவிடத்து உயிர் பிரமத்தோடுகூடுமாதலால் உயிரின்பொருட்டுப் புதுச் சிருட்டி கூடாதென்னும் கிரீடாப்பிரமவாதிகளை மறுத்து, இறந்த உயிர் மீளப்பிறக்கும், குடாகாயமகாகாயவுவமை சூக்குமதேகநீக்கத்திற்கேயன்றித் தூலதேகநீக்கத்திற்கன்று எனவும், நான்காம் அதிகரணம், வினைப்பயனை உயிர்களுக்குக் கூட்டுவிக்கும் சத்தி, முதல்வனின்வேறு என்னும் மீமாஞ்சகரையும், முதல்வனே என்னும் நையாயிகரையும் மறுத்து, முதல்வன் சத்தியுடன் ஒன்றாதற்கும் இரண்டாதற்கும் பொதுவாய்ச் சூரியனும் அதனொளியும்போலப் பொருளால் ஒன்றாயும் தன்மையால் இரண்டாயும் நிற்பன் எனவும் சாதித்தன.

## மூன்றாஞ் சூத்திரம்

உலகந்தோன்றி நின்று ஒடுங்குதல் உயிரின்பொருட்டெனக் கூறும் முறையில் காணப்பட்ட உடம்பைக்கொண்டு காணப்படாத

உயிர் உண்டென்று சாதிப்பது. இது எழு அதிகரணங்களை உடையது. அவற்றுள், முதலதிகரணம், இது ஆன்மா அன்று இது ஆன்மா அன்று என ஒவ்வொன்றையுங்கண்டு கழித்தவிடத்து, ஒன்றுங் காணாமையால் சூனியமே ஆன்மா என்னும் சூனியான்மவாதிகளையும், இரண்டாம் அதிகரணம், உடம்பின்றி அறிவு நிகழாமையால் தூலஉடம்பே ஆன்மா என்னுந் தேகான்மவாதிகளையும், மூன்றாம் அதிகரணம், ஐம்பொறிகள் உடல்போற்சடமின்றி அறியுந்தன்மை உடைமையால் ஐம்பொறிகளே ஆன்மாஎன்னும் இந்திரியான்மவாதிகளையும், நான்காம் அதிகரணம், இந்திரியங்கள் ஒடுங்கின சொப்பனத்தில் அறிவு நிகழ்கின்றமையால் சூக்கும உடம்பே ஆன்மாஎன்னும் சூக்குமதேகான்மவாதிகளையும், ஐந்தாம் அதிகரணம், சுழுத்தி துரியங்களினும் பிராணவாயு இயங்கிக்கொண்டிருத்தலால் பிராணவாயுவே ஆன்மாஎன்னும் பிராணான்மவாதிகளையும், ஆறாம் அதிகரணம், பிரமம் அறிவுடைப்பொருளாதலின் பிரமமே ஆன்மாஎன்னும் விஞ்ஞானான்மவாதிகளையும், எழாம் அதிகரணம், உடம்பு இந்திரியம் முதலியவற்றுள் ஒன்றுகுறையினும் அறிவுநிகழாமையால், யாவுங்கூடிய சமுதாயமே ஆன்மாஎன்னும் சமுதாயான்மவாதிகளையும் மறுத்துச் (1) சூனியத்தை அறிதலினாலும், (2) உடம்பையெனதென வழங்கலாலும், (3) இந்திரியங்கள் ஒன்றறிந்ததை ஒன்று அறியாமையாலும், (4) சொப்பனத்திற் கண்டவற்றை நனவில்மயங்கி அறிதலாலும், (5) சுழுத்திதுரியங்களில் விடயங்களிடமாகவரும் இன்பத்துன்ப அனுபவம் இல்லாமையாலும், (6) உணர்த்த உணர்தலாலும், யாவுங்கூடிய சமுதாயம் உடம்பெனப்படுவதேயன்றி உயிரெனப்படாமையாலும், சூனிய முதலியவற்றின் வேறாய் உடம்பினுள் உயிர் உண்டென்று சாதித்தன.

## நான்காஞ் சூத்திரம்

மூன்றாஞ் சூத்திரத்தால் உண்டென்று சாதிக்கப்பட்ட உயிருக்கு இலக்கணங்கூறுவது. இது மூன்று அதிகரணங்களை உடையது. அவற்றுள், முதலதிகரணம், சூனியம் முதலியன ஆன்மா அன்றாயினும், "சிந்தையைச் சீவனென்றுஞ் சீவனைச் சிந்தையென்றும்" கூறுதலால், மன முதலிய கரணங்களே ஆன்மாஎன்னும் அந்தக்கரணான்மவாதிகளை மறுத்து, அங்ஙனங்கூறுதல் உபசாரமேயன்றி உண்மையன்று ஆதலின், அந்தக்கரணங்களின்வேறாய் உயிர்

உண்டு, அவற்றோடுகூடி ஐந்தவத்தைப்படுதலே உயிருக்குத் தடத்த இலக்கணம் எனவும், இரண்டாம் அதிகரணம், உயிர், அந்தக்கரணங்களின் வேறாயின் அவற்றோடுகூடி நிற்றற்குக்காரணம் என்னையென அவர்வினவ, சகசமலத்தோடு நிற்கையில் உணர்வு நிகழாமையே காரணமெனவும், மூன்றாம் அதிகரணம், அவ்வாறாயினும், அந்தக்கரணங்களைக் கூடினவிடத்து ஓரவத்தைப்படாமல் ஐந்தவத்தைப்படுதற்குக் காரணம் என்னையென அவர்வினவ, கருவிகள் கூடிப் பிரிதலேகாரணம் எனவும் சாதித்தன.

## ஐந்தாஞ் சூத்திரம்

உயிரால் இந்திரியம் விடயங்களை அறிவதுபோல, முதல்வனால் உயிர்விடயங்களை அறியும் என்றுகூறும் முறையில் பாசஇலக்கணங்கூறுவது. இது இரண்டு அதிகரணங்களை உடையது. அவற்றுள், முதலதிகரணம், புத்திதத்துவமே இந்திரியங்களால் விடயங்களை அறிந்து ஐந்தவத்தைப்படுமென்னும் சாங்கியரை மறுத்து உயிரே இந்திரியங்களால் விடயங்களையறிந்து ஐந்தவத்தைப் படுமெனவும், இரண்டாம் அதிகரணம், உயிர் முதல்வனால் அறியுமாயின் முதல்வனும் பிறிதொன்றால் அறியவேண்டுமாதலின், உயிர் தானே அறியும் என்னும் ஈசுரஅவிகாரவாதி முதலியோரையு மறுத்து உயிர் முதல்வனாலே அறியும் எனவும் சாதித்தன. கன்மத்திற்கேற்றவாறு உயிர்கட்கு அறிவித்தல் திரோதானசத்தியின் இலக்கணமும், கன்மத்திற்கேற்ப விபரீதவுணர்வைப் பயத்தல் ஆணவமலத்தின் இலக்கணமும், விருப்பு வெறுப்புக்களைச்செய்தல் கன்மமலத்தின் இலக்கணமும், மயக்கத்தைச் செய்தல் மாயையின் இலக்கணமும், கருவியாருயிருத்தல் மயாகாரியத்தின் இலக்கணமும் என, அறிவிக்க அறியும்முறையில் ஐவகைப் பாசஇலக்கணங் கூறியவாறு காண்க.

## ஆறாஞ் சூத்திரம்

முதற்சூத்திரத்தால் உண்டென்று சாதிக்கப்பட்ட பதியின் சொரூபம் சித்து சத்து எனப் பதிக்குச் சிறப்பு இலக்கணங்கூறுவது. இது இரண்டு அதிகரணங்களை உடையது. அவற்றுள், முதலதிகரணம், பிரபஞ்சம்போல முதல்வனும் அளவைகளால் அறியப்படும் பொருளென்னும் நையாயிகரையும், அளவைகளால் அறியப்படும் பொருளும் சத்தேயென்னும் சாங்கியரையும்மறுத்து,

அளவைகளால் அறியப்படும் பொருள் அசத்தெனவும், இரண்டாம் அதிகரணம், முதல்வன் இயல்பு அறியப்படும் என்றாவது அறியப் படாதென்றாவது கூற முடியாத அநிர்வசனம் என்னும் மாயா வாதிகளை மறுத்து, அவனருளால் அறியப்படும் சித்துச் சத்து என வும் சாதித்தன.

## ஏழாஞ் சூத்திரம்

மேல் ஆறுசூத்திரங்களாற்கூறி முடித்த முப்பொருள்களுள், பதிப்பொருளை அடைதற்குரிமையுடைய அதிகாரியின் இயல்பு கூறுவது. இது மூன்று அதிகரணங்களை உடையது. அவற் றுள், முதலதிகரணம், பிரபஞ்சம் இறைவனைச் சுட்டி அறியப்படும் என்னும் சிவாத்துவிதசைவரை மறுத்துச் சத்து அசத்தை அறியா தெனவும், இரண்டாம் அதிகரணம், மனம்முதலிய கரணங்கள் சிவ கரணமாய் நின்று சிவனை அறியும் என்னும் சிவசங்கிராந்தவாத சைவரைமறுத்து, கரணத்திற்கு உள்ளதுபோலத் தோன்றும் அறிவு அதன்கண் உண்மையில் இல்லாமையால் அசத்துச் சத்தை அறியாதெனவும், மூன்றாம் அதிகரணம், ஒன்றனைஒன்று அறியாத சத்து அசத்து இரண்டனையும் அறிவது சதசத்தாகிய உயிரெனவும் சாதித்தன. இது உயிரின் சிறப்பியல்பு உணர்த்தும் முறையில் அதிகாரியின் இயல்பு உணர்த்தியதாம். இதனை ௩௩-ம் பக்கத் திற் காண்க.

## எட்டாஞ் சூத்திரம்

பதிப்பொருளை அடைதற் குரிமையுடைய அதிகாரி செய்ய வேண்டிய சாதனமும், அதுவருவழியும், அதனாற் பெறப்படும் பயனும் இவையெனக் கூறுவது. இது நான்கு அதிகரணங்களை உடையது. அவற்றுள், முதலதிகரணம், பதிஞானமே சிறந்த சாதனம், அது சரியை கிரியை யோகங்களின் முற்றுதலானேவரும் எனவும், இரண்டாம் அதிகரணம், அந்த ஞானத்தை நம்மில் ஒரு வரே குருவாய்வந்து உணர்த்துவர் என்னும் சாங்கியர் நையாயி கரை மறுத்து, முதல்வனே குருவுமாய்வந்து உணர்த்துவன் என வும், மூன்றாம் அதிகரணம், ஐம்பொறிகளே பதிஞானத்தை விளக் கும் என்னும் சிவசங்கிராந்தவாத சைவரை மறுத்து, அவை பதி ஞானத்தை விளக்காஎனவும், நான்காம் அதிகரணம், கருவிகள் நீங் கினவிடத்து ஒருசெயலும் செய்யமுடியாது ஆதலால் அந்நிலையில்

மெய்ப்பொருளுக்கு உயிர் அடிமையாதல் இல்லையென்னும் பேதவாதசைவரை மறுத்து, அடிமையாதல் கூடும், அதுவே ஞானத்தின் பயன் எனவும் சாதித்தன.

## ஒன்பதாஞ் சூத்திரம்

முத்திக்குச் சாதனமாகிய பதிஞானத்தை அநுட்டிக்குமுறை கூறுவது. இது மூன்று அதிகரணங்களை உடையது. அவற்றுள், முதலதிகரணம், பசுஞானத்தால் முதல்வனை அறிதல்கூடும் என்னும் சிவசமவாதசைவரை மறுத்து, பசுஞானத்தால் அறியமுடியாது; பதிஞானத்தினாலேயே அறியவேண்டும் எனவும், இரண்டாம் அதிகரணம், பதிஞானத்தை அடைதற்கு உபாயம் பிரபஞ்சத்தை அசத்தென்று கண்டு கழித்தலே யெனவும், மூன்றாம் அதிகரணம், பதி ஞானத்தைப்பெற்றவிடத்தும் பழையவாசனை தாக்காதிருத்தற்பொருட்டு ஸ்ரீபஞ்சாக்கரத்தைச் செபிக்கவேண்டுமெனவும் சாதித்தன.

## பத்தாஞ் சூத்திரம்

ஞானசாதனத்தால் உண்டாம் பாசவீடும் சிவப்பேறும் என்னும்பயன் இரண்டனுள் பாசவீடு கூறுவது. எட்டாஞ்சூத்திரத்துள் பயனைத்தொகுத்துக் கூறி, இச் சூத்திரத்தும் அடுத்த சூத்திரத்தும் வகுத்துக் கூறுகின்றாராதலின் கூறியது கூறலின்மையறிக. இது இரண்டு அதிகரணங்களை உடையது. அவற்றுள், முதலதிகரணம், ஞானக்கண்ணால் பதியைக்காண்டலே முத்தியென்னும் சிவசமவாதசைவரை மறுத்து, சிவபெருமானோடு ஏகமாய் நிற்கவேண்டும் எனவும், இரண்டாம் அதிகரணம், உடம்பு நிற்கும் அளவும் வினைப்பயனையும் முயற்சியினையும் நீக்குதல் கூடாமையின், அவ்விரண்டும் ஏகனாய் நிற்றற்குத் தடையாகும்; அத்தடையைக் கடக்கமுடியாது என்னும் சுத்தசைவர் முதலாயினாரை மறுத்து, இறைபணியாகிய அருள்வழி நிற்கில் அத்தடையைக்கடத்தல் கூடுமெனவும் சாதித்தன.

## பதினொராஞ் சூத்திரம்

பாசம் நீங்கினும் பாசப்பற்று நீக்கத்தின்பொருட்டு இடையறாது சிவபெருமான் திருவடியைப் பற்றுதலாகிய சிவப்பேறு கூறுவது. இது இரண்டு அதிகரணங்களை உடையது. அவற்றுள், முதலதிகரணம், முதல்வன் உயிர்கட்கு அறிவிக்கும் உபகாரமேயன்றி

அறிதல் உபகாரம் செய்வதில்லை யென்பாரை மறுத்து, இரண்டு உபகாரமுஞ்செய்வன் எனவும், இரண்டாம் அதிகரணம், பரமுத்தியில் அறிவிச்சை செயல்களின்றொழிற்பாடு இல்லை யென்பாரை மறுத்து, பெத்தமுத்தி யிரண்டினும் அத்துவிதமாய் நின்று அறிவித்தும் அறிந்தும் வரும் பேருபகாரத்தை மறவாது பத்திசெய்தனி னாலேயே நிட்டைகூடுமாதலின், முத்தியில் அம்மூன்றிற்கும் தொழிற்பாடு உண்டெனவும் சாதித்தன.

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

சிவப்பேறுபெற்ற சிவஞானிகளாய் உடம்போடு கூடியிருக்கும் சீவன்முத்தரெனப்படுவாரது இயல்புகூறுவது. இது நான்கு அதிகரணங்களை உடையது. அவற்றுள், முதலதிகரணம், சீவன் முத்தர் முதலாவதாகச் செய்யவேண்டுவது மும்மலங்களையுங் களைதல்எனவும், இரண்டாம் அதிகரணம், இரண்டாவதாகச் செய்யவேண்டுவது களைந்தமலங்கள் மீளப்பற்றுதவண்ணம் சிவனடியாரோடு இணங்குதல் எனவும், மூன்றும் அதிகரணம், மூன்றுவதாகச் செய்யவேண்டுவது சிவனடியார் இணக்கம் நிலைபெறுதற்பொருட்டுத் திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவன்எனவே கண்டு வழிபடுதல் எனவும், நான்காம் அதிகரணம், மேற்கூறிய வாறு செய்தல் அவசியம் எனவும் சாதித்தன.

இவ்வாறு பன்னிரண்டு சூத்திரங்களினும் அமைந்துகிடக்கும் பொருள்களையொட்டி விரிந்துகிடக்கும் பொருள்கள்பல. அவற்றையெல்லாம் ஆண்டாண்டு இனிதுவிளக்கி அருளிய உரையாசிரியர் சிவஞானசுவாமிகளே. வேறு எந்தஉரையினும் இந்தநலங்கள் காண்டல் அரிது. இவ்வுரை திட்பநுட்பஞ்செறிந்த மதுரமான செஞ்சொற்களால் ஆக்கப்பட்டுள்ளது. இச்செஞ்சொல்நடையைக் கடுஞ்சொல்நடையெனக் கருதிப் பலர் இந்நூலாராய்ச்சியிற் பிரவேசியாதிருக்கின்றனர். யாவரும் படித்து உய்தற்பொருட்டு அருளிச்செய்த இவ்வுரை, யாவருக்கும் பயன்படுதற்பொருட்டுத் தற்காலத்திற்கேற்ற எளியநடையில் அவ்வுரைக்கு உரையாக விளக்கம் ஒன்று எழுதி முடித்தேன். இவ்விளக்கத்துள், சிற்றுரையிற் சுருக்கிக் காட்டிய பலவிஷயங்களை, என்சிற்றறிவிற் கெட்டியவாறு விரித்திருக்கின்றேன். என்னுடைய சொற்களினும் விஷயங்களினுங் காணும் பிழைகளைச் சித்தாந்த சைவசீலர்களாகிய சிவனடியார்கள்,என்னைத்

தமது அடிமையாகக்கொண்டு பொறுத்து நான் திருந்துதற் பொருட்டு அவற்றை எனக்குத் தெரிவிப்பராதலானும், ஏனையோர் நான் பிரார்த்திக்கினும் புறங்கூறுதலையே மேற்கொள்வராதலானும், பிழைகளைப் பொறுக்கவேண்டுமென்று பிரார்த்தித்தல்மிகை. "அற்றமறைக்கும் பெருமை சிறுமைதான் குற்றமே கூறிவிடும்" என்பது திருக்குறள்.

## செய்நன்றியறிதல்.

இதனைப் பரிசோதனைசெய்து அச்சிடவேண்டுமென்றெண்ணினேன். பரிசோதனை செய்பவர்மேலே உரையாசிரியருக்குக் கூறிய இலக்கணம்முற்றும் நிரம்பினவராய் இருத்தல்வேண்டும். இன்றேல் முற்றும் பரிசோதிக்தல் கூடாது. இதனையுன்னிப் பலநாள் வருந்தினேன். பின்னர், முதலாவதாக என்னோடு அளவளாவி இலக்கணவிஷயத்தில்மட்டும் பலபாகங்களைப் பரிசோதித்தவர்கள், என்னுடைய ஆப்தரும் தமிழ்க்கல்வியிலேயே தம்முடைய வாழ்நாளை அவகாசங்கிடைத்தபோதெல்லாம் உபயோகப்படுத்துகின்றவர்களுமாகிய வக்கீல் ஸ்ரீமாந், சோமசுந்தரபாரதி யவர்களே. அதன் பின்னர், இதனை அச்சிடுங்காலத்தில், இலக்கணம் முதலிய எல்லாவிஷயங்களையும் ஒருங்கே நன்குணர்ந்தவர்களும், சிவபெருமான் திருவடியில் இடையறாது கசிந்த சிந்தையையுடைய சிவனடியாரும், திராவிடமாபாடியத்தைச் செப்பமாக அச்சிட்டு உதவினவர்களும், கனவிலும் பிறர்கேடு எண்ணாத பரிசுத்தமனமுடையவர்களுமாகிய ஸ்ரீமத் சுவாமிநாதபண்டிதரவர்கள், இரவும் பகலும் என்னுடன் அளவளாவி எல்லாவிஷயங்களையும் பரிசோதனைசெய்து உதவினார்கள். நாங்கள் இருவரும் எவ்வாறு ஆராயினும் சொற்பிழைபொருட்பிழை நேரக்கூடுமென்றெண்ணி, இன்னும் ஒருவர் பரிசோதித்தல் நலமாகுமென்று கருதினேன். என்கருத்திற்கிணங்கிச் சைவசமய பரிபாலனத்திற்கென்றே தோன்றிச் சித்தாந்தசைவசீலராய்வாழும் சித்தாந்தசரபம், அஷ்டாவதானம் சிவஸ்ரீ கலியாணசுந்தர யதீந்திர சுவாமிகள், ஒவ்வொரு பாரத்தையும் நன்குபரிசோதித்து உதவினார்கள்.

இந்நூலுக்கு இம்மூவர்செய்த உதவிகள் இந்நூல் பெரியாரை உடையது என்பதை வலியுறுத்தும். இம்மூன்று பெரியார்செய்த நன்றியை நான் என்றும் மறவேன்.

## கவனிக்க வேண்டியவை.

அச்சிடுவதில் உண்டாஞ் சிரமத்தைப்பற்றி நான் எழுதுதல் மிகை. எத்தனைபேர் எத்துணைமுறைபார்க்கினும் பின்னும் பிழை இருத்தல்கூடும். ஆகலால் பிழைதிருத்தத்திற் கண்டவாறு திருத்திக்கொண்டு படித்தல்நலம். பிழைதிருத்தத்திலும் காணப்படாத பிழைகள் இருத்தல்கூடும். அவையெல்லாம் மெய்யன்பர்கள் பொறுப்பார்களாதலின் அதுபற்றியும் பிரார்த்தித்தல் மிகை.

சிற்றுரையை விளக்கி யெழுதியிருக்கின்றமையால் இதற்குச் சிவஞானபோதச் சிற்றுரைவிளக்கம் என்றும் பெயரிடப்பட்டது. இதனுள், ஸ்ரீமெய்கண்டதேவ நாயனார் அருளிய உரையாகிய கருத்துரை, மேற்கோள், ஏது, உதாரணங்களை அவ்வத்தலைப்பின் கீழும், சிவஞானசுவாமிகளருளிய உரையைச் சிற்றுரையென்னுந் தலைப்பின்கீழும், நான் எழுதியதை விளக்கமென்னுந் தலைப்பின்கீழும் அமைத்திருக்கின்றேன். சிவஞானசுவாமிகள் வெளிப்படையென்று அருளியதற்கு ஸ்ரீசுப்பிரமணிய தேசிகர் அருளிய உரையை அங்கங்கே அத்தலைப்பின்கீழ் அமைத்துள்ளேன். இவ்வுரையின் கீழ் வரும் சிவஞானசுவாமிகள் உரையைச் சிற்றுரையென்னுந் தலைப்பின்கீழாக அமைக்க எண்ணினேன். க௭௬-வது பக்கம்வரை அவ்வாறு செய்ய மறந்துவிட்டமையால், க௭௭-வது பக்கம்முதல் அவ்வாறு செய்திருக்கின்றேன். இரண்டாஞ்சூத்திரமுதல், சூத்திரத்திற்கு அவதாரிகையும், இறுதியில் தொகைப்பொருளும், மேற்கோள் முதலியவற்றிற்கு முதற்சூத்திரம் முதல் அவதாரிகையும் எழுதியிருக்கின்றேன்.

உரிமையுரை, நூல்வரலாறு, நூலாசிரியர் வரலாறு, உரையாசிரியர் வரலாறுகளும், வடமொழிச் சிவஞானபோதத்திற்குத் தமிழுரையும், நூலாசிரியர் அருளிய சூத்திரம் முதலியவற்றிற்குச்சொல் அட்டவணையும், இந்நூலில்வந்த மதங்கள், மேற்கோள்கள், அருஞ்சொற்கள், அரியவிஷயங்கள், இலக்கணம், தருக்கம், நியாயம், அலங்காரம், உத்தி, வழக்கச்சொற்களாகிய இவற்றின அட்டவணைகளும் இத்துடன் சேர்த்திருக்கின்றேன்.

உரிமையுரையால், ஸ்ரீமாந், மெ,அரு,நா, இராமநாதஞ் செட்டியார் அவர்கள் பெருமையும், நூல்வரலாற்றால், திருவாவடுதுறை ஆதீனத்து அருளுபதேசமகிமையும், நூலாசிரியர், உரையாசிரியர்

வரலாற்றால், அவ்வாசிரியர்களின் அற்புதச்செயல்களும், வடமொழிச் சிவஞானபோதத்தமிழுரையால், ஸ்ரீமெய்கண்டதேவநாயனார் தமிழில்மொழிபெயர்த்த அருமையும் முறைமையும, ஏகான்மவாதிகள் கூறும் உரையின்தப்பும், சொல் அட்டவணையால், என்னென்னசொற்கள் வந்திருக்கின்றன என்பதும், ஒருசொல் பலஇடங்களில் வந்திருந்தால் அதுவும், மதஅட்டவணையால், மதங்களின் கோட்பாடுகளும், மேற்கோள் அட்டவணையால் இன்னின்ன நூல்களிலுள்ள இன்னின்ன செய்யுட்கள வந்திருக்கின்றன என்பதும், இலக்கணம் முதலிய அட்டவணைகளால், இலக்கணம், தருக்கம், நியாயம், அலங்காரம், உத்தி முதலியவைகளும, அருஞ்சொற்பொருள் அட்டவணையால், சொல்இலக்கணம் தருக்கம் முதலியவைகளுள்வரும், அருமையான சொற்கள் தொடர்மொழிகளுக்குப் பொருளும், விஷய அட்டவணையால் அரியவிஷயங்களும், வடமொழி முதனூலை எடுத்தாண்டஇடங்களும், வடமொழி மதத்தை உபயோகப்படுத்தின இடங்களும், பிறஉரையை மறுத்த இடங்களும் இனிதுவிளங்கும்.

கடிதவிலை அதிகமான இக்காலத்தில் படிப்பவர்கட்கு உபகாரமாக இவ்வட்டவணைகளையுஞ் சேர்த்திருக்கின்றேன். அட்டவணைகள் அமைப்பதில் உண்டாம் சிரமம் இத்துணைத்தென அன்பர்கள் நன்கறிவார்கள்.

இவ்வரும் பெருங்காரியத்தைச் செய்துமுடிக்கும் ஆற்றலில்லாத சிற்றறிவுடைய சிறியேனைக் கருவியாகக்கொண்டு திருவருள் இக்காரியத்தைச் செய்து முடித்தமையால், இவ்விளக்கத்தில் நலங்காணில், அதனைத் திருவருளின்பாலும், குறைகாணில, அதனைச் சிறியேனுடைய சிற்றறிவின்பாலும் ஏற்றிப்,பெரியோர்கள் ஆதரிப்பார்களென்று நம்பிச் செய்வித்த திருவருளைச் சிந்திக்கின்றேன்.

வாழ்த்து.

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

முகவுரை முற்றிற்று.

பொ. மு

உ

சிவமயம்.

# உரிமையுரை.

---

பாண்டிவளநாட்டிலே, தேவலோகத்தினுஞ் சிறந்து விளங்கும் தேவகோட்டையின்கண், வைசியகுலத்தில், சிவபத்தி அடியார் பத்திகளினும், கல்விச்செல்வம் பொருட்செல்வங்களினுஞ் சிறந்து இன்சொல்லும், மலர்ந்தவதனமும், எளியார் வலியார் எவருக்கும் எப்பொழுதுந் தடையில்லாத செவ்வியும் உடையராய் வாழ்கின்ற ஸ்ரீமாந் மெ. அரு. நா. இராமநாதன்செட்டியாரவர்கள், சைவாபிமானம் மிக்குடையவர்கள்; பன்னிருதிருமுறையும் தினம் பாராயணஞ்செய்யும் பாக்கியம் உடையவர்கள்; இலக்கண இலக்கியங்களை முறையாக நன்குபயின்றவர்கள்; ஒழுக்கத்திற் சிறந்தவர்கள், என்னிடத்தில் அதிகவிசுவாசம் உடையவர்கள்.

இச்சிற்றுரை விளக்கம் எழுதி முற்றுப்பெற்றதும், இவர்களைத் தேவகோட்டையில் பார்க்கும்படி திருவருள் கூட்டுவித்தது. பார்த்தபொழுது விளக்கத்தை வைத்துக்கொண்டு சிவஞானபோதச்சிற்றுரையை ஆராய்ச்சிசெய்ய விரும்பினார்கள். அவ்வாறே அவர்கள் இல்லத்தில்வைத்து ஆராய்ச்சிசெய்யத் தொடங்கினோம்.

ஆராய்ச்சி செய்யுங்காலத்து, பன்னிருதிருமுறையின் பயிற்சி விசேடத்தால், அருமையான கருத்துக்கள் வரும்பொழுது, இது இன்னதிருமுறையில் இவ்வாறு அருளிச் செய்யப்பட்டுள்ளது; இது இன்னதிருமுறையில் இவ்வாறு அருளிச் செய்யப்பட்டுள்ளது என்று அவ்வருமைத் திருவாக்குக்களை எடுத்துக் காட்டுவார்கள். ஆராய்ச்சி தொடங்கிவிட்டால் பூர்த்தியாகும்வரை வியாபார சம்பந்தமான அவசரத் தந்தியைக்கூடப் பார்க்கமாட்டார்கள்.

இவ்வாறு அருமையாக ஆராய்ச்சிசெய்து பூர்த்தியானபின்னர், சிவஞானபோதத்தையும் பாராயணத்தில் வைத்துக்கொண்டு, விளக்கத்தை அச்சிடுதற்கு வேண்டும் பொருளையும் பூரணமாக உதவினார்கள். அப்பொருட்டொகை ஆயிரத்து முந்நூறு ரூபா.

இக்காலத்தில் டம்பநிமித்தமாகப் பசுபுண்ணியம் பாசபுண்ணியங்களைச் செய்யும் பிரபுக்களே மிகுதியும் உள்ளார். பதிபுண்ணியத்தைச் செய்யும் பிரபுக்கள் சிலரேயாவர்.

இப்பதிபுண்ணியமும், சிவாலயப் பிரதிட்டை, சிவாராதனை, சிவத்தியானம், சிவஞானம் என நான்கு வகைப்படும். இப்பெரியார், ஸ்ரீகாளத்திநாதர்கோயிற் றிருப்பணியாலும், அப்பெருமான் ஆராதனத்திற்கு வேண்டும் நியமனத்தாலும், கலங்காத சிந்தையாற் செய்யும் நலம்பெறு தியானத்தாலும், பன்னிருதிருமுறைப் பாராயணத்தாலும் பதிபுண்ணியம் நான்கும் ஒருங்குடையவர்களாதலின், இச்சிவஞானபோதச் சிற்றுரைவிளக்கம் வெளிவரச்செய்யும் பதிபுண்ணியத்தையும் பெற்றார்கள். இச்சிவஞானதான மகிமையும், அதனைச் செய்தோர் மகிமையும், அதனாலாகும் பெரும்பேறும் சிவதருமோத்தரம் என்னும் உபாகமத்தில் விரித்துக் கூறப்பட்டுள்ளன. ஈண்டு விரிப்பிற் பெருகும். ஆண்டுக் காண்க.

ஆராய்ச்சித்திறமும், அதிதீவிரதர அன்பும், நல்லொழுக்கமும், பதிபுண்ணியச்செயலும் ஒருங்குவாய்ந்த சிவஞானச்செல்வராகிய இப்பிரபு அவர்கள் என்றும் என்னுள்ளத்திலிருக்கும் பாக்கியத்தை யான் பெற்றேனாதலின், அப்பேறுகருதி இவ்விளக்கத்தை அவர்கட்கு உரிமையாக்குகின்றேன்.

பொ. மு.

உரிமை உரை முற்றிற்று.

உ

சிவமயம்.

# நூல் வரலாறு.

---

வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வ
ரோதுந் தமிழதனி னுள்ளுறுநெய்—போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் றிறம்.

அகண்டாகார சச்சிதானந்தப்பிழம்பாகிய சிவபெருமான் திருமேனி கொண்டு வேதாகமங்களை அருளிச் செய்யவில்லையாயின் ஆன்மாக்கள் உய்யுமா றில்லை. ஆதலின் ஆன்மாக்கள்மீதுவைத்த பெருங்கருணையினாலே சிவபெருமான் சகளீகரித்துச் சதாசிவமூர்த்தியாய் நின்று தற்புருடமுதலிய நான்கு முகங்களினால் இருக்கு முதலிய நான்கு வேதங்களையும் ஈசானமுகமாகிய உச்சிமுகத்தினால் காமிக முதலிய இருபத்தெட்டுச் சிவாகமங்களையும் பிரதம மகாசிருஷ்டி ஆரம்ப காலத்திலேயே தோற்றுவித் தருளினார்.

வேதம் என்னுஞ் சொல் அறிதற்கருவி எனப் பொருள்படும். படவே, பதி, பசு, பாசம் என்னு முப்பொருள்களையும் அறிதற்குக் கருவியாயுள்ளது என்பது கருத்து.

ஆகமம் என்பது பரமாப்தரினின்றும் வந்தது எனப்பொருள்படும். இன்னும், ஆ என்பது பாசம் எனவும், க என்பது பசுவெனவும், ம என்பது பதியெனவும் பொருள் படுதலால் ஆகமம் என்பதற்குத் திரிபதார்த்த இலக்கணத்தை உணர்த்தும் நூல் என்பதே சிறந்தபொருள் என்க. ஆ என்பது சிவஞானமும், க என்பது மோக்ஷமும், ம என்பது மலநாசமும் எனக்கொண்டு ஆன்மாக்களுக்கு மலத்தை நாசம்பண்ணிச் சிவஞானத்தை உதிப்பித்து மோக்ஷத்தைக் கொடுத்தல்பற்றி ஆகமம் எனப் பெயராயிற்று எனக் கூறுதலும் ஒன்று.

அவ்வேதாகமம் முறையே உலகர்க்கும், சத்திநிபாதர்க்கும் உரித்தாய பொதுநூலும் சிறப்புநூலுமாம். வேதம் கன்ம

காண்டம், ஞானகாண்டமென இரண்டு காண்டங்களை யுடையது. ஞானகாண்டம் வேதாந்தமெனவும், உபநிடதமெனவும் பெயர் பெறும். உபநிடதம் பல. அவற்றுள் சிலஉபநிடதம் அக்கினியையே பிரமம் எனவும், சில உபநிடதம் சந்திரனையே பிரமம் எனவும், இவ்வாறே பல உபநிடதங்களும் ஒவ்வொரு தெய்வத்தையும் பிரமமெனக்கூற, சுவேதாசுவதரம் முதலிய சில உபநிடதங்கள் சிவபெருமானையே பிரமமெனக் கூறும். இவ்வுபநிடதங்களெல்லாம் வேதாந்தம் எனவே வழங்குதலின், இவற்றுள் உண்மையான வேதாந்தம் யாதோவென்னும் ஐயம்நிகழாமையின் பொருட்டுச் சிவபரம்பொருளையே பிரமமெனக்கூறும் தெளிவான வேதாந்தப்பொருளைச் சிவாகமங்கள், தனித்தெடுத்துக்கூறும். ஆதலின், "சிவாகமங்கள் சித்தாந்தமாகும்" என அருணந்தி சிவாசாரியர் அருளிச் செய்வாராயினர். சிவாகமங்களிற்கூறப்படும் முடிவும், சுவேதாசுவதரம் முதலிய உபநிடதங்களிற் கூறப்படும் முடிவும் ஒன்றே. இக்கருத்துப்பற்றியே "யாம் வேதசிவாகமங்கட்குப் பேதம் காண்கின்றிலம், வேதமும் சிவாகமமாம்" என நீலகண்ட சிவாசாரியரும் "வேதமொடாகம மெய்யா மிறைவனூ - லோதும் பொதுவுஞ் சிறப்புமென்றுள்ளன - நாத னுரையிவை நாடிலிரண்டந்தம் - பேதம தென்னிற் பெரியோர்க் கபேதமே" எனத்திருமூல நாயனாரும், "வேதாகமத்துணி பிரண்டில்லை யொன்று" எனத் தாயுமானசுவாமிகளும் அருளிச் செய்வாராயினர்.

வேதத்தின் கன்மகாண்டத்தில் யாகாதி கன்மங்களை பெரும் பான்மையும் விரித்துக் கூறப்படும். அக்கன்மத்தின் பயன் சுவர்க்காதி போகங்களே ஆதலானும், பலகடவுளர்க்கும் பரத்துவங் கூறுதலானும் வேதம் உலகர்க்கே உரிய பொதுநூல் எனப்பட்டது.

சிவாகமம் தந்திரகலை, மந்திரகலை, உபதேசகலை என மூன்று கலைகளாகப் பிரிக்கப்பட்டு, தந்திரகலையில் சிவாலய நிர்மாணம், விக்கிரக அமைப்பு முதலியவற்றையும், மந்திரகலையில் பிரதிஷ்டை பூஜை முதலியவற்றையும், உபதேசகலையில் சிவபெருமானோடு இரண்டறக்கலத்தற் கேதுவாகிய ஞானமார்க்கத்தினையும் கூறும். இம் மூன்றுகலைகளும் சிவபெருமானைப் பற்றியே கூறுதலின் சிவாகமம் சத்திநிபாதர்க்கு உரிய சிறப்புநூல் எனப்பட்டது.

இக்காமிகாதி ஆகமங்களின் உபாகமங்கள் இருநூற்றேழு. இவ்வாகமங்களெல்லாம் வேதசாரமாயுள்ளன வென்பது மேற்கூறியவாற்றால் நன்கு புலப்படும். இவ்வாகமங்களேயன்றி வேதபாகியமான வாமாதியாகமங்களும் உள. அவ்வாகமங்கள்தான் தாந்திரீகம் என்று ஒதுக்கப்படுவன. இவ்வுண்மை அறியாத சிலர் வேதசாரமாயுள்ள காமிகாதி இருபத்தெட்டு ஆகமங்களையும் அவ்வாகமங்களின் உபாகமங்களையும் வேதபாகியமென்றும் தாந்திரீகம் என்றும் கூறுவர். இவர் தங்கருத்தை சாதித்தற்குச் சிவபுராணம், வாயுசங்கிதை, இருபத்தெட்டாம அத்தியாய வாக்கியத்தையும் எடுத்துக் காட்டுவர். அவ்வாக்கியத்தின்பொருளைக் கொள்ளும்முறையில் கொள்ளாமையினால் இவ்வாறு மயங்குகின்றனர். வாயுஸங்கிதை வாக்கியத்தின் பொருள் வருமாறு:—

"சைவாகமமும் சிரௌதம், அசிரௌதம் என இருவகையாகக் கருதப்படுகின்றது. சுருதிசாரமயமானது சிரௌதமாம். சுவதந்திரமானது அசிரௌதமாம். சித்தாந்தப் பெயரினதாகிய சுவதந்திரம் பூர்வம் பத்துவகையாகவும், மறுபடியும் பதினெண்வகையாகவும் காமிக முதலிய பெயர்களாற் சித்தித்துள்ளதாம். சுருதிசாரமயம் எதுவோ அது நூறுகோடி விஸ்தாரமுள்ளதாம்" என்பதே.

இங்கே சுவதந்திரம் என்பது வாமம் முதலியவற்றிற்கு வேதபாகியமாய்த் தனித்துநிற்றலைக் குறித்தும், காமிக முதலியவற்றிற்கு வேதம்போலப் பலகடவுளர்க்கும் பரத்துவங்கூறாது சிவபெருமான் ஒருவர்க்கே பரத்துவங் கூறுஞ் சித்தாந்தத்தைக் குறித்தும் வந்தவாறுகாண்க. பூர்வம் பத்து, மறுபடியும் பதினெட்டு என்றது பிரணவர் முதலிய சிவன் பதின்மருக்குப் பத்து ஆகமங்களும், மகாருத்திரர் முதலிய உருத்திரர் பதினெண்மருக்குப் பதினெட்டாகமங்களும் சிவபெருமான் அநுக்கிரகஞ்செய்த முறைமை பற்றியேயன்றிப் பிறிதில்லை.

இவ் விருபத்தெட்டு ஆகமங்களையும் சீகண்டருத்திரரிடத்து நந்திபெருமான் கேட்டருளினார். அவற்றைக் கேட்டருளிய நந்திபெருமான் சீகண்டருத்திரரை வணங்கிநின்று சிவாகமந்தோறும் சரியையாதி நாற்பாதப்பொருள்களும் சிறுபான்மை வெவ்வேறாகக் கூறப்படுகின்றனவே? அவற்றுள் உண்மையாவ தீதுவென்று அருளிச்செய்ய வேண்டுமென இரந்து விண்ணப்பஞ் செய்தனர். சீகண்ட

பரமேஸ்வரர் கருணை மீக்கூர்ந்து "அநந்ததேவர் எமக்கு அருளிச் செய்தவாறே கூறுகின்றோம், கேட்பாயாக" என்று அருளிச்செய்து "கற்பந்தோறும் படைப்பு வேறுபாடும், கேட்போர் கருத்து வேறுபாடும்பற்றி அவற்றிற்கேற்றவாறு சரியை முதலிய மூன்றுபாதப் பொருள்களும் ஆகமங்களில் வெவ்வேறாகக் கூறப்பட்டன. ஆதலான் அவற்றுள் எவ்வாகமத்தின் முறை யார் யார் தீக்கை பெற்றார் அவரவர் அவ்வாகமத்தின் முறை அனுட்டிக்க; எக்கோயில் எவ்வாகமத்தின் முறை பிரதிஷ்டை செய்யப்பட்டது; அக்கோயிற்கு அவ்வாகம முறையே பூசை, விழா முதலியன நடாத்துக; மாறிச்செய்யிற் குற்றமாம்; இனி ஞானபாதமாவது பொருட்டன்மை புணர்த்துவ தாதலின் அதுவேறு படுதல் பொருந்தாமையான் வேறுபடுவதுபோலத் தோன்றுவனவெல்லாம் தூலாருந்ததிநெறிபற்றிக் கூறப்பட்டன வன்றி மாறுகொளக் கூறப்பட்டனவல்லவென்பதை வகுத்துணர்த்துதற்பொருட்டு அவ்விருபத்தெட்டு ஆகமங்களுள் ஒன்றாகிய இரௌரவ ஆகமத்துட் பன்னிரு சூத்திரத்தாற் கூறப்பட்டது சிவஞானபோத மென்பதோர் படலம்; அது கேட்டார்க்கு எல்லா ஆகமப்பொருளும் வேறுபாடின்றி இனிதுவிளங்கு" மெனக்கூறி அச் சிவஞானபோதத்தை நந்தி பெருமானுக்கு அருளிச்செய்தனர். இதனைப் பாசவிமோசனப் படலம் என்றுங் கூறுவர். சிவஞானத்தாலன்றிப் பாசவிமோசனஞ் சித்தியாது. பாசவிமோசனத்தாலன்றிச் சிவஞானஞ் சித்தியாது. இவ்விரண்டும் இருள்நீக்கமும் ஒளிவிளக்கமும் போலாம். ஆதலின் பாசவிமோசனப்படலம் எனினும், சிவஞானபோதப்படலம் எனினும் இழுக்கில்லை.

நந்திபெருமானும் சிவஞான போதத்தைக் கேட்ட துணையானே எல்லா ஐயமும் நீங்கி மெய்ப்பொருள் தெளிந்து பின்னர் அதனைத் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த சனற்குமார முனிவர்க்கு அருளிச்செய்தனர். அவர் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த சத்திய ஞானதரிசனிகளுக்கு அருளிச் செய்தனர். அவர் தம் மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த பரஞ்சோதி முனிகட்கு அருளிச் செய்தனர். அவர், தமிழ்நாடு செய்த தவத்தானே முற்பிறப்பிலே சரியை, கிரியை, யோகங்களைச் செய்து முற்றுப் பெற்று ஞானநிலையில் முற்றுப்பெறாது அந்த ஞானத்தோடு சாமு

சித்தராய் அவதரித்து மெய்புணர்வின் முதிர்ந்தவராய்த் திருவெண்ணெய் நல்லூரில் நன்மாமனார் வீட்டில் வீற்றிருந்த ஸ்ரீமெய்கண்ட தேவர்பால் எழுந்தருளி வந்து சிவஞானபோதத்தைக் கொடுத்து "இதனை எண்டிசையோர் உணர்ந்து உய்தற்பொருட்டுத் தமிழில் மொழிபெயர்த்துச் செய்து பொழிப்புரைக்க" என்றருளிப் பொழிப்புரைக்குமாறும் சத்தியஞான தரிசனிகள்பால் தாம் கேட்டவாறே உபதேசித்தருளினர். ஸ்ரீமெய்கண்டதேவரும் அவ்வாறே மொழிபெயர்த்துக் கருத்துரை, மேற்கோள், ஏது, திருட்டாந்தமாகிய வார்த்திகப் பொழிப்புரையுஞ் செய்தருளித் தம் மாணாக்கர் பல்லோருள்ளும் சிறந்த அருணந்தி சிவாசாரியருக்கு அருளிச் செய்தனர். அவர் தம் மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த மறைஞானசம்பந்த சிவாசாரியருக்கு அருளிச்செய்தனர். அவர் தம் மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த உமாபதி சிவாசாரியருக்கு அருளிச் செய்தனர். உமாபதி சிவாசாரியர் அருணமச்சிவாய தேசிகருக்கும், அவர் சித்தர் சிவப்பிரகாச தேசிகருக்கும், அவர் நமச்சிவாயமூர்த்திகளுக்கும் உபதேசித்தனர். அவருக்குப் பின் திருவாவடுதுறை ஆதீனத்துக் குருமூர்த்திகள் ஒருவர்பின் ஒருவராக உபதேசிக்கப்பெற்று இந்நூல் வருகின்றது. மெய்கண்ட தேவர் முதலிய நால்வரும் சந்தானாசாரியர் எனப்படுவர். இந் நால்வருடைய சமாதிகளுள் உமாபதி சிவாசாரியர் சமாதிமட்டும் வீரசைவரிடமும், ஏனைய மூன்று சமாதிகளும் திருவாவடுதுறை ஆதீனத்தாரிடமும் இருக்கின்றன. வீரசைவரிடமிருக்கும் ஒரு சமாதியும் ஒருகாலத்தில் திருவாவடுதுறை ஆதீனத்தாரால் கொடுக்கப்பட்டதே யாகும். ஆதலால் இச் சிவஞானபோதத்திற் குரிமையுடைய பரம்பரை ஆதீனம் திருவாவடுதுறை ஆதீனமேயாம்.

நூல்வரலாறு முற்றிற்று.

---

சிவமயம்.

# நூலாசிரியர் வரலாறு.

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம் பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக், கண்டவிரு தயகமல முகைகளெல்லாங் கண்டிறப்பக் காசினிமேல் வந்தவருட் கதிரோன், விண்டமலர்ப் பொழில் புடைசூழ் வெண்ணெய் மேவு மெய்கண்ட தேவன் மிகு சைவ நாதன், புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும் பொற்பாத மெப்போதும் போற்றல் செய்வாம்.

பொன்னுடதனினுஞ் சிறந்த தென்னுடதனுள் நடுநாட்டிலே திருப் பெண்ணாகடத்திலே பாம்பரைச் சைவ வேளாள குலதிலகரும், சிவபத்தி அடியார் பத்திகளினும் கல்வி செல்வங்களினுஞ் சிறந்தவரும், அச்சுதர்களப்பாளர் என்னும் பெயருடையவருமாகிய ஒருவர் இருந்தார். அவர் நெடுங்காலம் பிள்ளைப் பேறின்மையால், அதற்குரிய அரிய விரதாதிகளை யெல்லாம், ஆதிசைவரும் சகலாகம பண்டிதருமாகிய தம்முடைய குலாசாரியர் உணர்த்த உணர்ந்து அநுட்டித்து வந்தனர். வந்தும் சித்திபெறாது வருந்தி, பின்னுஞ் சகலாகம பண்டிதரிடத்தில் விண்ணப்பஞ் செய்தனர். அதனை உணர்ந்த சகலாகம பண்டிதர் உற்றுநோக்கித் தமிழ்வேதமாகிய தேவாரத்தை விதிப்படி அருச்சித்து வணங்கி, அச்சுதர் களப்பாளரைக் கொண்டு அத்திருமுறையிலே கயிறு சாத்தும்படி அருளிச் செய்தனர். சாத்திய விடத்துத் திருஞானசம்பந்த சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருவெண்காட்டுப் பதிகத்துள்,

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே."

என்னும் திருப்பாசுரம் உதயமாயிற்று. அப்பாசுரத்தின் பொருளைச் சகலாகம பண்டிதர் உற்றுநோக்கி மிகமகிழ்வெய்தி அச்சுதர் களப்பாளரைத் திருவெண்காட்டில் வசிக்கும்படி கட்டளை செய்தருளினர்.

அச்சுதர்களப்பாளர் ஆசிரியரிடத்தே விடைபெற்றுக்கொண்டு தம்முடைய மனைவியாரோடு திருவெண்காடு என்னும் திருப்பதியை அடைந்து அங்கேயுள்ள சோம சூரிய அக்கினி என்னும் முச்சுடரின் திருநாமம்பெற்ற முக்குளத்தில் விதிப்படி முழுகிச் சுவேதாரணியரையும் பிரமவித்தியாநாயகியாரையும் தரிசித்து வழிபடுவாராயினர்.

அவ்வாறு வழிபடும் நாளிலே ஒருநாள் அச்சுதர்களப்பாளருக்குச் சொப்பனத்திலே சுவேதாரணியர் தோன்றி "உனக்கு இப்பிறவியிலே பிள்ளைப்பேறு அரிது. ஆயினும் சர்வாபீஷ்டமும் தரத்தக்கதாய் நமக்கு மிக்க பிரீதியுடையதாயுள்ள தேவாரத்தைப் பரமப் பிரமாணமாகக்கொண்டு நீ ஒழுகுகின்றமையால் அத்தேவாரத்தைப் பாடிச் சைவஸ்தாபனஞ் செய்த ஞானசம்பந்தன் என்றே சொல்லும்படி நமது திருவருளினாலே இன்னும் தமிழ்நாடு உய்யும் வண்ணம் அத்தேவாரத்தின் மெய்ப்பொருளை உள்ளடக்கிய சைவசித்தாந்த சாஸ்திரத்தை வெளிப்படுத்திச் சைவஸ்தாபனம் செய்யத் தக்கவனாக உன்னிடத்தில் ஒரு சற்புத்திரன் அவதரிப்பான்" என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினார். உடனே விழித்தெழுந்த அச்சுதர்களப்பாளர் பெருமகிழ்ச்சி கொண்டு மனைவியாருக்கு அச்சந்தோஷ சமாசாரத்தைத் தெரிவித்து, அவரோடு தாமும் பேரன்புடன் சுவேதாரணியரையும் பிரமவித்தியாநாயகியாரையும் வழிபட்டு வசித்தார். அவ்வாறு வசிக்கும் நாளிலே சுவேதாரணியருடைய பெருங்கருணையினாலே உலகமெல்லாம் உய்யும்படி அவர் மனைவியாரது அருமைத் திருவயிற்றிலே கருப்போற்பத்தியாகிய பெரும்பேறு உளதாயிற்று.

அச்சுதர்களப்பாளர் அதனையுணர்ந்து திருவருளைத் துதித்து உள்ளத்தின் மூளுகின்ற பெருமகிழ்ச்சியோடு சிவாகம விதிப்படி செய்யவேண்டும் சடங்குகளைப் பத்து மாசங்களினுஞ் சிறப்பாகச் செய்து பேரின்பத்தை நுகரும் நாளிலே, மிகமேலாகிய சுபதினத்திலே, பரசமயத்தருக்கு நீங்கவும், அத்துவிதத்தின் உண்மைப்பொருளை எல்லாரும் அறிந்து உய்யவும், வடமொழிச் சிவஞானபோதம் தென்மொழியிலும் வழங்கவும், சிவனடியார் எஞ்ஞான்றும் பேரானந்தம் பெற்றோங்கவும், பலவுலகங்களுள்ளும் பூலோகமும்

அப்பூலோகத்துள்ள எந்நாடுகளுள்ளும் தென்னாடுமே சிறக்கவும் ஒரு சற்புத்திரர் திருவவதாரஞ் செய்தார்.

அவதார மென்பது மேலிருந்து கீழிறங்குதல் எனப் பொருள் படும். அதாவது சிவபெருமான் திருவருள் ஒரு உயிரை அதிட்டிக்க அவ்வுயிர் பிறத்தலாம். அவ்வாறு பிறப்பது இன்றியமையாத காலங்களிற்றான் நேரும். ஸ்ரீமெய்கண்டதேவர் அவதாரத்துக்கு முன்னரே தேவார முதலிய திருமுறைகள் தோன்றிச் சைவசித்தாந்தப் பொருளை எல்லாரும் இனிது உணர்ந்து வாழ்ந்தனர். காலம் மாறிக்கொண்டே வருவதுபோல மனிதர்களுடைய எண்ணங்களும் அடிக்கடி மாறிக்கொண்டேவருமாதலால் சைவசித்தாந்தப் பொருளை எல்லாரும் நன்குணர்ந்து வருநாளில் அத்துவிதம் என்னுஞ் சொல்லுக்கு மாறுபட்ட பொருள்கள் கூறச் சிலர் தோன்றினர். தோன்றி அத்துவிதச் சொற்குப் பொருந்தா உரையைப் பலர்க்கும் புகட்டினர். அந்நாளில் அத்துவிதத்தின் உண்மைப்பொருளை இனிது விளக்கவேண்டுவது அவசியமாதலின் அதன்பொருட்டுச் சிவபெருமான் திருவருளினாலே இச்சற்புத்திரர் அவதாரஞ் செய்தார். இக்கருத்துப் பற்றியே "பொய்கண்டார் காணாப் புனிதமெனு மத்துவித மெய்கண்டநாதன்" என்றார் ஸ்ரீதாயுமான சுவாமிகளும்.

இச்சற்புத்திரர், உரிய பருவத்திலே அச்சுதர்களப்பாளருக்குச் சுவேதவனப் பெருமான் திருவருளாற் பிறந்தமையின் அவருக்குச் சுவேதவனப் பெருமாள் என்னுந் திருநாமஞ் சாத்தினர்.

அதன்பின்பு அச்சுதர்களப்பாளரும் அவர் மனைவியாரும் சுவேதாரணியரையும் பிரமவித்தியாநாயகியாரையும் வணங்கி விடைபெற்றுக்கொண்டு தமது அருமைத் திருக்குமாரரோடு தங்கள் ஜநநபூமியாகிய திருப்பெண்ணாகடத்தை அடைந்தார்கள். அச்சமாசாரத்தைக் கேள்வியுற்ற அந்நகரவாசிகள் எல்லாரும் அத்திருக்குமாரரை நாடோறும் வந்து தரிசித்துப் பெருமகிழ்ச்சி யடைவாராயினர். சுவேதவனப்பெருமாள் என்னும் பிள்ளைத் திருநாமமுடைய அவர் பிறைமதிபோல வளரும் நாளிலே திருவெண்ணெய் நல்லூரில் வசிக்கும் அவரது நன்மாமனார் மிக்க பிரியத்தோடும் அவரைத் தனது இல்லத்துக்கு எடுத்துக் கொண்டுபோய்ப் பேரன்

போடு வளர்க்க வளர்ந்து இரண்டு பிராயத்திற்றானே மெய்யுணர்வின் முற்றுப் பேறுடையராய் எழுந்தருளியிருந்தார்.

இருக்கும் நாளிலே பரஞ்சோதிமுனிவர் திருக்கைலாசமலையினின்றும் நீங்கித் திருவெண்ணெய் நல்லூரை யடைந்து, அம்மெய்யுணர் வுடையாரைச் சந்தித்து, சிவஞானபோதத்தை உபதேசித்து "இதனை ஈண்டுள்ளோர் உணர்ந்து உய்தற்பொருட்டு மொழிபெயர்த்துப் பொழிப்பும் உரைக்க" என்றருளிச், சத்தியஞானதரிசனிகள்பால் தாம் கேட்டவாறே பொழிப்புரைக்குமாறும் அருளிச்செய்து, பொய்ச்சமயங்களின் பொருள் இது இது என்று கண்டு கழித்து மெய்ச்சமயமாகிய சைவத்தின் உண்மை உணர்ந்து அதனை ஸ்தாபனஞ் செய்யுங் காரணத்திற்கும், தம்முடைய ஆசிரியர் சத்தியஞானதரிசனிகள் திருநாமத்திற்கும் இணங்க, அம்மெய்யுணர்வுடையார்க்கு மெய்கண்டதேவர் எனச் சிறப்புத் திருநாமஞ் சாத்தி நீங்கினர்.

பின்பு ஸ்ரீமெய்கண்டதேவர் அத் திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளி யிருக்கின்ற சுயம்பு மூர்த்தியாகிய பொல்லாப் பிள்ளையாருடைய சந்நிதியில் சிவஞானபோதத்தைச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடிச் சிவபிரான் திருவருளும் ஆசிரியர் பரஞ்சோதிமுனிவர் கருத்தும் நோக்கித் தமிழ்நாடு உய்யும் வண்ணம் வடமொழிச் சிவஞானபோதத்தைத் தமிழில் மொழிபெயர்த்து, வார்த்திகம் என்னும் பொழிப்புரையுஞ் செய்து, பல அற்புதங்களை விளக்கி, சைவஸ்தாபனஞ்செய்து, பலர்க்கும் சிவஞானபோத உபதேசம் செய்து வருவாராயினர்.

ஒருநாளிலே சகலாசமபண்டிதர் அவ்வரலாற்றைக் கேள்வியுற்று நம்முடைய மாணுக்கராகிய இவர் நம்மை வந்து பார்க்கவில்லையே என்று எண்ணி, ஆயினும் நாமே அவரைப் போய்ப் பார்ப்போம் என்று கருதி அவர் இருக்கும் இடஞ்செல்ல விரும்பி அக்கருத்தைத் திருவெண்ணெய் நல்லூர் வாசிகளாகிய தம் மாணுக்கர்கட்குத் தெரிவித்தனர்.

அதனைக்கேட்ட திருவெண்ணெய் நல்லூரார் தம் குலகுருவின் வரவுக்காக மிகமகிழ்வெய்தி நகரமெங்கும் அலங்கரித்தனர். ஆகமங்கள் ஏற்றிய சகடைகளுடனும் விருதுகளுடனும் சகலாகம பண்டிதர் திருவெண்ணெய் நல்லூரை நோக்கிச் சென்றனர். நகரை

அடுத்து வரும்பொழுது அங்குள்ளார் அனைவரும் எதிர்வந்து வணங்கிச் சிவாகமப்பொருளை உபதேசிப்பதற்காகத் திருவவதாரஞ் செய்தருளிய எம் குருநாத! தேவரீரது நல்வரவால் நாங்கள் உய்ந் தோம் உய்ந்தோம் என்று பலவாறு துதித்துத் திருவெண்ணெய் நல்லூருக்கு அழைத்துச் சென்றனர். சென்றதும் வீதிவலம்வந்து திருக்கோயிலை அடைந்து சுவாமிதரிசனஞ்செய்து திருமடம் போய்ச் சேர்ந்தனர். சேர்ந்த பின்னர் மாணாக்கர்கள் அனைவரும் வணங்கித் திருவமுது செய்வித்தனர். சிவபெருமான் திருவடிக் கமலத்திற் பதிந்த சிந்தையையுடைய ஸ்ரீமெய்கண்டதேவர் சகலா கம பண்டிதரை வந்து பார்க்கவில்லை.

சகலாகம பண்டிதர் ஸ்ரீமெய்கண்டதேவர் வாராமையை உணர்ந்து நாமே போய்ப் பார்ப்போமென்று எண்ணி அவர் இருக்குமிடஞ் சென்று உலாவிக்கொண்டு நின்றார். நிற்குங்கால் ஸ்ரீமெய் கண்டதேவர் தம் மாணாக்கருக்குச் சிவஞானபோதம் பாடஞ்சொல் லிக்கொண்டிருக்கின்றார். பாடத்தில் ஆணவமலத்தின் தன்மையைப்பற்றி ஆராய்த்தொடங்குஞ் சமயமாயிருந்தது. உலாவிக் கொண்டிருந்த சகலாகம பண்டிதர் ஸ்ரீமெய்கண்டதேவரை நோக்கி "ஆணவமலத்தின் இலக்கணம் என்னை?" என்று வினவினர். ஸ்ரீமெய்கண்டதேவர் சட்சுதீக்கையாகிய கிருபாநோக்கத்துடன் தம் முடைய சுட்டுவிரலால் சகலாகம பண்டிதரைச் சுட்டிக் காட்டினர். கையிலமர்ந்திருக்கும் ஐந்து விரல்களுள் பெருவிரல் பதியையும், சுட்டுவிரல் பசுவையும், ஏனைய மூன்று விரல்களும் முறையே ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களையும் உணர்த்துமாதலின், மும்மலங்களும் நீங்கிச் சிவபெருமான் திருவடியில் உயிர் அடங்கி நிற்கவேண்டும் என்பது தோன்ற மூன்று விரல்களைப் பிரித்துச் சுட்டுவிரலைப் பெருவிரலுள் அடக்கி, தக்ஷிணாமூர்த்தியாய் எழுந் தருளிய சிவபெருமான் சிந்முத்திரை செய்தருளினர். சிவபெருமான் திருவடியில் அடங்கி வாழ்பவர் சிவனடியார்க்கும் அடங்கி வாழ்வார். இவ்வுண்மைகளெல்லாம் ஸ்ரீமெய்கண்டதேவர் சுட்டிக் காட்டிய அவ்வளவிலே சகலாகம பண்டிதருக்குத் தோன்ற, அவர் நான்என்னும் முனைப்போடு வணங்காதிருக்கும்படி செய்வதே ஆணவமலத்தின் இலக்கணம் என உணர்ந்து ஸ்ரீமெய்கண்ட தேவரை வணங்கினர்.

வணங்கவே, ஸ்ரீமெய்கண்டதேவர் தம் குருமரபிற்கு முதற் குருவாகிய நந்திதேவர் திருநாமத்தையே இச்சகலாகம பண்டிதருக்குச் சூட்ட எண்ணி 'அருணந்தி' என தீட்சாநாமஞ் சூட்டிச் சிவஞானபோதத்தையும் உபதேசித்து மனவாசகங்கடந்தார் சிற்றம்பல நாடிகள் முதலான நாற்பத்தொன்பது மாணாக்கருள் அவர் முதல்மாணாக்கராக ஏற்றருளப்பெற்றனர்.

இவ்வாறு ஸ்ரீமெய்கண்டதேவர் பல அற்புதங்களைச் செய்து நெடுங்காலம் சிவயோகத்திலமர்ந்து திருவெண்ணெய் நல்லூராகிய அத்திருப்பதியிலே ஐப்பசிமாதச் சுவாதி நட்சத்திரத்திலே அகண்டாகார நித்த வியாபக சச்சிதாநந்தப் பிழம்பாகிய சிவபெருமான் திருவடியில் இரண்டறக்கலத்தலாகிய சுத்தாத்துவித முத்தியை அடைந்தனர்.

இவர் காலம் இற்றைக்கு ஏறக்குறைய ௬௱௫0 வருடங்களுக்கு முன்னென்ப.

நூலாசிரியர் வரலாறு முற்றிற்று.

---

## சந்தானகுரவர் நால்வர் திருநக்ஷத்திரம்.

சித்திரை யத்த முமாபதி யாவணித் திங்கடனி
லுத்திரஞ் சீர்கொண் மறைஞான சம்பந்த ரோதுகன்னிச்
சுத்தமெய்ப் பூர மருணந்தி யைப்பசிச் சோதிதனில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

---

சிவமயம்.

# உரையாசிரியர் வரலாறு.

---

தென்மொழியும் வடமொழியுந் தேர்ந்து பரம் பொருள்சிவ மென் றதனைச்சாரு, நன்மையெனும் வீடருளுந் துறைசைநமச் சிவாயகுரு நற்றாள் பேணி, வன்மலவே ரைக்கெடுத்துச் சிவஞான பாடியஞ்செய் தருளும் வள்ளல், சின்மயமாஞ் சிவஞான முனிவனிரு திருவடிகள் சிந்தை செய்வாம்.

பாண்டிவளநாட்டிலே, பொதியமலைச் சாரலின்கண், பாவநாச மென்னுந் திருப்பதியைச் சார்ந்த விக்கிரமசிங்கபுரத்தில், அகத்திய மகாமுனிவரிடத்தே ஏழுதலை முறையளவும் அருட்புலமை நிரம் பும் வண்ணம் வரம்பெற்ற பரம்பரைச் சைவவேளாளர் குலத்திலே, சிவபத்தி அடியார்பத்திகளிற் சிறந்தவரும் கல்வி செல்வம் என்னும் இரண்டும் ஒருங்குடையவரும் ஆகிய ஆனந்தக்கூத்தர் என்பவ ரொருவர் இருந்தார். அவர் மனைவியார் கற்பிலே தமக்கு உயர் வொப்பில்லாத மயிலம்மையாரென்று எவராலுஞ் சிறப்பித்துச் சொல்லப்படுபவர். அவரது திருவயிற்றிலே, ஏழாவது தலைமுறை யாகத் தமிழ்நாடு செய்த தவத்தானே, ஒரு சற்புத்திரர் திருவவதா ரஞ்செய்து முக்களாலிங்கர் என்னும் பிள்ளைத் திருநாமம் சாத்தப் பெற்று ஒழுக்கம் அன்பு அருள் முதலிய நற்குணங்களோடு வளரு வாராயினர்.

பின்பு முக்களாலிங்கர் ஐந்து பிராயத்திலே, பிதாவினால் வித்தி யாரம்பஞ் செய்விக்கப்பெற்றுப் பள்ளிக்கூடத்தில் அமர்ந்து கற்பா ராயினார். அங்ஙனம் கற்குங் காலத்திலே, திருவாவடுதுறை ஆதி னத்திலிருந்து சிவஸ்தலயாத்திரையாகப் புறப்பட்ட சிலமுனிவர் கள் விக்கிரமசிங்கபுரத்து வீதியிலே சென்றார்கள். பள்ளிக்கூடத் தினின்றும் வந்த முக்களாலிங்கர் அம்முனிவர்களைச் சந்தித்துத் தரிசித்து வணங்கி, "சுவாமிகாள்! அடியேன் வீட்டிற்கு எழுந்தரு ளித் திருவமுதுசெய்து, பின்பு சென்றருளல் வேண்டும்" என்று பிரார்த்திக்க, அம்முனிவர்கள் ஆண்டின் இளையரும் அறிவின்

முதியருமாகிய முக்களாலிங்கர் பிரார்த்தனைக்கு இரங்கி, விருப்பத்தோடு உடன்பட்டு அவருடன் அவரது வீட்டுக்குப் போயினர். அங்கே தமது புத்திரர் அருமைக் கருத்தையுணர்ந்து அருந்ததியினுஞ் சிறந்த மயிலம்மையார் அன்போடு உபசரிக்கத் திருவமுது செய்து சென்றருளினார்கள். முக்களாலிங்கர் தமது கருத்தின்படி அடியாரை உபசரித்த தாயாரைப்பற்றி "அருந்ததியென் னம்மையடியவர்கட்கென்றுந்-திருந்த வமுதளிக்குஞ் செல்வி-பொருந்தவே-யானந்தக் கூத்த ரகமகிழத் தொண்டுசெயு - மானந் தவாத மயில்" என்னுஞ் செய்யுளை இயற்றி அருளினார். அதன்பின்பு புறத்தே போயிருந்த ஆனந்தக்கூத்தர் வீட்டிற்கு வந்தபோது நிகழ்ந்த அரிய செயல்களைக் கேள்வியுற்றுப் பேரின்பக் கடலிலே முழுகினார்.

பின்னர் ஆனந்தக்கூத்தர், புத்திரராகிய முக்களாலிங்கரோடு ஆதீனமுனிவர்களிடத்தே போய் வணங்கியவழிச் சத்திநிபாதமுடைய புத்திரர், பிறவிப் பெருந்துன்பக் கடலினின்றுங் கரையேறக் கருதி, அம்முனிவர்களோடு தாம்செல்லவேண்டு மென்னுங் குறிப்பினைத் தந்தையாருக்கு உணர்த்த, அவர் புத்திரரைப் பிரியச் சிறிதும் மனமில்லாதிருந்தும் ஒருவாறிசைந்து அவரை அவர்களோடு விடுத்து வீட்டுக்குத் திரும்பினார்.

தந்தையார் நீங்கியபின்பு, முக்களாலிங்கர் ஆதீனத்து முனிவர்களோடு வழிக்கொண்டு மார்க்கங்களிலுள்ள சிவஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு, சோழநாட்டிலுள்ள திருவாவடுதுறையை அடைந்து, மடாலயத்தினுள்ளே புகுந்து, ஆதீன பரமகுருவாகிய நமச்சிவாயமூர்த்திகளைத் தரிசித்துத் திருவருணோக்கம் பெற்றுக்கொண்டு, அப்பொழுது சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்த, ஞானாசாரியராகிய பின்வேலப்பதேசிகரை ஒடுக்கத்திலே போய்த் தரிசித்துப் பேரன்போடு வணங்கினார்.

வணங்கிய முக்களாலிங்கர் ஞானதேசிகரிடத்தே சைவசந்நியாசமும் சிவதீக்ஷையும் சிவஞானயோகிகள் என்னுந் தீக்ஷாநாமமும் பெற்று மெய்கண்டசாத்திரம் பண்டார சாத்திரங்களைக் கேட்டருளினார். சிவஞான முனிவர் அகத்திய மகாமுனிவர் வரத்தால் அவதரித்தருளியவராதலின், எளிதிலே வடமொழிக்கடலும் தென்மொழிக்கடலும் முற்றொருங்குணர்ந்து மெய்யுணர்வின் முற்றுப் பேறுடையராய் அமர்ந்தருளினார். வேலப்பதேசிகர் சிவஞான

யோகிகளுக்கு மெய்யுபதேசஞ் செய்தருளிய ஞானாசாரியர் என்பது "எவ்வெவகோட் படுபொருளு மஞ்செழுத்தி னடக்கியவற் றியல்பு காட்டி-மெய்வகையஞ் சவத்தையினு நிற்குமுறை யோது முறை விளங்கத்தேற்றி - யவ்வெழுத்தி னுள்ளீடு மறிவித்துச் சிவ போகத் தழுத்தினாயேன் - செய்வினையுங் கைக்கொண்ட வேலப்ப தேசிகன்றாள் சென்னி சேர்ப்பாம்" எனக் காஞ்சிப் புராணத்துட் கூறியவாற்றால் இனிதுவிளங்கும்.

சிவஞானயோகிகள் ஜமதக்கினி முனிவருடைய புத்திரரும், அகத்திய மகாமுனிவருடைய முதன்மாணாக்கரும், இடைச்சங்கப் புலவர் ஐம்பத்தொன்பதின்மருள் ஒருவருமாகிய திருணதூமாக்கினி என்னுந் தொல்காப்பியமுனிவர் அருளிச்செய்த இலக்கண நூலாகிய தொல்காப்பியத்திற்கு உரையாசிரியராகிய இளம்பூரணர் செய்த உரையாகிய இளம்பூரணமும், சேனாவரையர் செய்த உரையாகிய சேனாவரையமும், நச்சினார்க்கினியர் செய்த உரையாகிய நச்சினார்க்கினியமும் எனப்படும் மூன்றுரைகளினுமுள்ள ஆசங்கைகளை நீக்கித் தெளிவிக்கும்பொருட்டு அத்தொல்காப்பியத்தின் பாயிரத்திற்கும், முதற்சூத்திரத்திற்கும் சூத்திர விருத்தியெனப் பெயரிய பாடியமும், வடமொழித் தருக்கசங்கிரக அன்னம்பட்டீயங்களின் மொழிபெயர்ப்பும், நன்னூலுக்குச் சங்கர நமச்சிவாயப் புலவர் செய்த புத்துரையாகிய விருத்தியுரைத் திருத்தமும் செய்தருளினார். இவை மூன்றும் திராவிடமாபாடியத்திற்கு அங்கங்கள் எனப்படும்.

பின்பு சர்வாத்ம சம்புசிவாசாரியர் அருளிச்செய்த கத்திய ரூபச் சித்தாந்தப் பிரகாசிகையின் மொழிபெயர்ப்பும், மெய்கண்ட தேவர் மொழி பெயர்த்தருளிய சிவஞானபோதத்திற்கு ஆசிரியர் அமைத்தருளிய மெய்ப்பொருள் விளங்கும்வண்ணம் திராவிடமகா பாடியமெனப் பெயரிய விருத்தியுரையும், இலகுவியாக்கியானமாகிய சிற்றுரையும், அருணந்தி சிவாசாரியார் அருளிச்செய்த சிவஞான சித்தியார் சுபக்கத்திற்குப் பொழிப்புரையும், காஞ்சிபுராணத்தின் முதற்காண்ட மொழிபெயர்ப்பும், சிவாக்கிய சோழமகாராஜா காலத்திலே கஞ்சனூரிலே அவதரித்தருளிய ஆசாரிய சரணராகிய அரதத்த சிவாசாரியர் வைணவமதத்தை நிராகரித்துச் சைவமத ஸ்தாபனஞ் செய்யும்பொருட்டு, நெருப்பிலே பழுக்கக் காய்ச்சிய

இருப்பு முக்காலியிலே எழுந்தருளியிருந்து, சிவபெருமானே பரம்பொருளென இருபத்திரண்டு ஏதுக்களாலே நாட்டியருளிய சுலோக பஞ்சகத்தின் மொழிபெயர்ப்பும், அப்பயதீக்ஷிதர் அருளிச்செய்த சிவதத்துவவிவேக மூலசுலோகங்களின் மொழிபெயர்ப்புஞ் செய்தருளினார்.

பின்பு பெரும்பாலும் உண்மை நாயன்மார் சரிதம் முதலியவற்றைத் தழுவிப் பூருவார்த்தமும் அதற்கு எடுத்துக்காட்டாகத் திருவள்ளுவநாயனார் திருக்குறள் உத்தரார்த்தமுமாகக்கொண்டு சோமேசர்மீது முதுமொழிவெண்பா, யமகரூபமான திருவேகம்பரந்தாதி, திருக்குரூபமான திருமுல்லைவாயிலந்தாதி, குளத்தூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி, கலைசைப்பதிற்றுப் பத்தந்தாதி, இளசைப்பதிற்றுப் பத்தந்தாதி, கச்சி ஆனந்தருத்திரேசர்பதிகம், திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு, செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ், அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், செப்பறைப்பதி அகிலாண்டேசுவரி பதிகம், மார்கழிமதித் திருவாதிரை புறச்சவத்திலே தேவாரம் முதலிய அருட்பாக்கள் ஐந்தும் திருக்காப்பிடப்பட்டுத் திருவெம்பாவை யென்னுந் திருவாசகத் திருப்பதிகம் ஒன்றுமே ஆன்மார்த்த பரார்த்த சிவபூஜாகாலங்களில் ஓதப்பெற்றுவருஞ் சம்பிரதாயத்தால் நித்த நியம மந்திரமாகத் திருத்தொண்டர் திருநாமத்தை ஓதியுய்ய வேண்டுவோர் கருத்துத் தடையுறாவண்ணம் திருத்தொண்டர் திருநாமக்கோவை, ஆதிபரமாசாரியராகிய நமச்சிவாய மூர்த்திகண்மீது மாலை முதலிய பிரபந்தங்களைச் செய்தருளினார்.

பின்பு மாபட்டவணை எனப் பெயர்பெற்ற திருவாவடுதுறை ஆதீன சாம்பிரதாயக் கட்டளையைத் தருமபுர ஆதீனத்தார் மறுத்தெழுதியதற்கு "மறுப்பின் மறுப்பு" என ஓர்கண்டனமும், காஞ்சீபுரத்தில் யாத்திரையாக வந்தருளிய திருவண்ணாமலை ஆதீனத்துப் பண்டாரச் சந்நிதிகள், சிவஞானசித்தியாரில் "என்னையீப் பவத்திற் சேராவகையெடுத்து" என்னுஞ் செய்யுளில் "எடுத்து" என்னுஞ் சொல்லுக்குப் பொருள் என்னை? என்று தம்மாதீனத்து ஞானப்பிரகாசமுனிவர் இயற்றிய சிவசமவாதவுரையின் உயர்வு தொனிக்கும் வண்ணம் சிவஞானயோகிகளிடத்தே வினவுவித்தபொழுது "எடுத்து" என்னுஞ் சொல்லுக்குச் "சிவசமவாதவுரை மறுப்பு" என ஓர்கண்டனமும், அதன்மேற் பிரதிகண்டனம் உண்டாயவழி மேன்

மறுத்த மறுப்பு, குதர்க்கவுரையாளரால் போழப்படாதவாறு "எடுத்து என்னுஞ் சொல்லுக்கிட்ட வயிரக்குப்பாயம்" என ஓர் கண்டனமும், சிவஞான சித்தியாருக்கு ஞானப்பிரகாசமுனிவர் இயற்றிய உரைமுற்றும் போலியுரை என விளக்க "சிவசமவாத வுரை மறுப்பு" என ஓர்கண்டனமுஞ் செய்தருளினார்.

பின்பு கம்பராமாயணகாவியம் ஒன்றுமே தமிழிற் சிறந்திருப்பதெனச் செருக்கோடு கூறிய காஞ்சீபுரத்து வைணவர்கள் வாயை அடைக்கக்கருதி அக்கம்பராமாயணத்து நாந்திச் செய்யுளாகிய "நாடியபொருள் கைகூடும்" என்னும்பாட்டு முற்றுங் குற்றமே எனச் சங்கைசெய்தவழி, அவ்வைணவர்கள் அச்சங்கைக்கு உத்தரஞ்சொல்ல இயலாமல் வருந்தித் தெரியாது பிதற்றினோம் எனச் சொல்லி வணங்கித் துதித்தவழி, சிவஞானயோகிகள் மகிழ்ந்து உத்தரங்கூறி, அவ்வைணவர்களை உவப்பித்தருளினார். அச்சங்கையுத்தரங்களை வரைந்த நூலுக்கு, "கம்பராமாயண முதற்செய்யுட் சங்கோத்தர விருத்தி" என்று பெயர் வழங்கி வருகின்றது.

பின்பு திருவாரூர் வைத்தியநாத நாவலர் இயற்றிய இலக்கண விளக்கத்தில், எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் முதலியவற்றிலுள்ள வழுக்களை வெளியிடக்கருதி இலக்கணவிளக்கச் சூறாவளியென ஒன்று செய்தருளினார்.

பின்பு சிவஞானசுவாமிகள், திருநாவுக்கரசு நாயனார் கடலினின்றுங் கரையேறிய திருப்பாதிரிப்புலியூரில் யாத்திரையாக எழுந்தருளியிருக்கும் காலத்திலே சிவாலயத்தின் கண்ணே, சில வித்துவான்களும் பிரபுக்களுங் கூடிய சபையில் ஒருபிரபு நூறுபொன்னைக் கிழியாகக் கட்டிவைத்து, "கரையேறவிட்டமுதல் வாவுன்னையன்றியுமோர் கதியுண்டாமோ" என்று ஈற்றடிஎடுத்துக் கொடுத்துச் "செய்யுளைப் பூர்த்திசெய்பவர் இப்பொற்கிழியை எடுத்துக் கொள்ளலாம்" என்றுசொன்னார். அந்நிகழ்ச்சியைச் சுவாமி தரிசனத்தின்பொருட்டுச் சிவாலயத்துக்கு எழுந்தருளிய சுவாமிகள் அறிந்து, ஒரு ஏழைப்பிராமணனை நோக்கி அப்பொற்கிழியை எடுத்துக்கொள்ளும்படி கட்டளையிட்டு, "வரையேற விட்டமுதஞ் சேந்தனிட வருந்தினைவல வினமென்று-முறையேற விட்டமுத லாகுமோ வென்னைசித்தென் றுரைக்கி லென்று - நரையேற விட்டமுதனளவனக் கொண்டுநறும் புலிசை மேவுங் - கரையேற விட்டமுதல்

வாவுன்னை யன்றியுமோர் கதியுண் டாமோ" என்று செய்யுளைப் பூர்த்திசெய்தருளினார்.

இங்ஙனம் உலகோபகாரமாகப் பலவுரைகளையும் பலநூல்களையும் பலகண்டனங்களையுஞ் செய்து பல நன்மாணாக்கர்களுக்குப் போதித்து, வடமொழியினுந் தென்மொழி சிறந்ததென்னும்படி அபிவிருத்திசெய்து, தவமே திருவுருக்கொண்டாற்போல விளங்கிச் சிவப்பேற்றிற்குக் காரணமாகிய நிட்டையில் வீற்றிருந்தருளிய திராவிடமகாபாடிய கர்த்தராகிய சிவஞானயோகிகள் திருவாவடுதுறையிலே சித்திரைமாசத்து ஆயிலிய நக்ஷத்திரத்திலே சிவபரிபூரணதசையை அடைந்தனர்.

இவர்காலம் இற்றைக்கு ௱௫0 வருடத்திற்கு முன்னென்ப.

சிவஞானசுவாமிகளுக்கு இலக்கணம் சிதம்பரநாதமுனிவர், கச்சியப்பமுனிவர், தொட்டிக்கலைச் சுப்பிரமணியமுனிவர், காஞ்சீபுரம் சரவணபத்தர், இராமநாதபுரம் சோமசுந்தரம்பிள்ளை முதலிய பன்னிரு மாணாக்கர் உளர்.

உரையாசிரியர் வரலாறு முற்றிற்று.

---

## சிவஞானசுவாமிகள் திருநக்ஷத்திரம்.

மன்னும் விசுவா வசுவருட மேடமதி
யுன்னிரவி நாட்பகலோ தாயிலியம்—பன்னுந்
திருவாள னெங்கோன் சிவஞான தேவன்
றிருமேனி நீங்கு தினம்.

---

# அதிகரணத் தொகை, வெண்பாத் தொகை.

சிவமயம்.

# வடமொழிச்
# சிவஞானபோதம்
## மூலமும் தமிழுரையும்.*

இந்நூல் நந்திபெருமானுக்குக் காமிக முதலிய இருபத்தெட்டு ஆகமங்களின் பொருளொருமை உணர்த்துதற்கு எழுந்ததாகலின் அவ்வாகமங்களின் சாரமாயுள்ளதாம். பன்னிரண்டு சூத்திரங்களையுடையது. இதிற் கூறப்படும் பொருள் பதி பசு பாசம் என்னும் திரிபதார்த்தங்களாம்.

𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍁𑌂𑌨𑌪𑍁𑌂𑌸𑌕𑌾𑌦𑌿𑌤𑍍𑌵𑌾𑌜𑍍𑌜𑌗𑌤𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 ।
𑌅𑌸𑍍𑌤𑌿𑌕𑌰𑍍𑌤𑌾𑌸𑌹𑍃𑌤𑍍𑌵𑍈𑌤𑌤𑍍𑌸𑍃𑌜𑌤𑍍𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑍁𑌰𑍍𑌹𑌰𑌃 ॥

ஸ்திரீபும்நபும்சகாதித் வாஜ்ஜகதஃ கார்யதர்சநாத் ।
அஸ்திகர்த்தாசகிருத்வைதத் சிருஜத்யஸ்மாத் பிரபுர்ஹரஃ ॥

(இ-ள்) 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍁𑌂𑌨𑌪𑍁𑌂𑌸𑌕𑌾𑌦𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 = பெண் ஆண் அலி என்னும் பகுப்பு முதலிய உண்மையால், 𑌕𑌾𑌰𑍍𑌯𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 = காரியத்தன்மை காணப்படலால் (அதாவது தோன்றி நின்று ஒடுங்குதல் காணப்படலால்,) 𑌜𑌗𑌤𑌃=உலகத்திற்கு, 𑌕𑌰𑍍𑌤𑌾=ஆக்கியோனொருவன், 𑌅𑌸𑍍𑌤𑌿=உளன், 𑌸𑌃= அவன், 𑌏𑌤𑌤𑍍 = இப்பிரபஞ்சத்தை, 𑌹𑍃𑌤𑍍𑌵𑌾=ஒடுக்கி, 𑌸𑍃𑌜𑌤𑌿=மீளப்படைக்கின்றான், 𑌅𑌸𑍍𑌮𑌾𑌤𑍍=இக்காரணத்தால், 𑌹𑌰𑌃 = சங்காரத்தைச் செய்யுங் கடவுளே, 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃=உலகத்தைத் தோற்றுவிக்கும் முதற்கடவுள் என்றவாறு.

* இவ்வுரை, உபமந்யு பக்தவிலாசத்தை மூவர்பதிகங்களுடன் அச்சிட்டவர்களாகிய பிரம்மஸ்ரீ, சுந்தரேசுவர சாஸ்திரிகளால் பரிசோதிக்கப்பெற்றது.

முதலிய என்றதனால், பல வேறுவகைத்தாய்ச் சடமாதலும், சுட்டியறியப்படுதலுங் கொள்ளப்படும். இதனை உடம்பொடு புணர்த்தலென்னும் உத்தியால் மெய்கண்டதேவர் பெறவைத்தனர்.

ஒடுங்கி மீளப்படைத்தல் எதன் பொருட்டு என்னும் வினு நிகழும் ஆதலின் அதுபற்றி ஆணவமலம் நீங்காமையால் என்பது சூத்திரத்தில் தொக்கு நின்றது. இதனை, தொகுத்துச் செய்தல், விரித்துச் செய்தல், தொகுத்தும் விரித்தும் செய்தல், மொழிபெயர்த்தல் எனனும் நால்வகை நூல் யாப்பினுள் விரித்தல் யாப்பின்படி "மலத்துளதாம்" என மெய்கண்ட தேவர் விரித்தருளினர்.

இச் சூத்திரம் காணப்பட்ட உலகத்தைக் கொண்டு காணப்படாத கடவுள் உண்டென்று அனுமானப் பிரமாணத்தால் சாதித்தது. இவ்வாறு சாதிக்கப்பட்ட காரணத் தன்மை நிமித்தகாரணத் தன்மையேயாம். எனவே, முதற்காரணம் துணைக்காரணங்கள் வேறுள என்பது இனிது விளங்கும். இவ்வுண்மை அறியாத தத்துவப்பிரகாசிகை உரையுடையார் நிமித்தகாரணமாயும், முதற்காரணமாயும் இறைவன் விளங்குகின்றான் என்பர். இவர் கூற்றுப் பொருந்தாமையை ௩௩-௩௪-வது பக்கங்களிற் காண்க. இக் காரணத் தன்மையைத் தடத்த லக்கணம் என்றும் அவர் கூறுவர். தடத்தமாவது இலக்கியத்தில் ஓர் காலத்திருப்பது. குயவனிடத்தில் குடத்திற்குக் காரணமாந்தன்மை என்றும உள்ளதாய், அதனைக் காரியப்படுத்துந் தன்மைமட்டும் ஒவ்வோர் காலத்திருத்தல்போல, முதல்வனிடத்தில் உலகத்தைக் காரியப்படுத்துந் தன்மைமட்டும ஒவ்வோர் காலத்திருப்பதாம் என்பதும், அது இரண்டாஞ் சூத்திரப்பொருளாம் என்பதும், காரணத்தன்மை என்றும் உள்ளதாம் எனபதும அவர் அறிந்திலர். அவ்வாறாயின், முன்றுசூத்திரமும் தடத்தலக்கணங் கூறுதலின பொது அதிகாரம் என்றதன் கருத்தென்னை யெனின், அநுபவ அறிவால் அறியப்படாது ஆராய்ச்சி அறிவால் அறியப்படுவதுபற்றியேயன்றிப் பிறிதில்லை யென்க.

அந்யஸ்ஸந்வ்யாப்திதோऽநந்ய꞉ கர்த்தா கர்மாநுஸாரத꞉ ।
கரோதி ஸம்ஸ்ருதிம் பும்ஸாம் ஆஜ்ஞயா ஸமவேதயா ॥

அந்ய꞉ சந் வியர்ப்திதோ நந்ய꞉ கர்த்தா கர்மாநு சாரத꞉ ।
கரோதி சம்சிருதிம் பும்ஸாம் மாஞ்ஞயா சமவேதயா ॥

(இ-ள்.) கர்த்தா = மேற்கூறிய மகாசங்காரக் கடவுளாகிய சிவபிரான், அந்யஸ்ஸந் = (பொருட்டன்மையால் உயிர்களுக்கு) வேறாயினும், வ்யாப்திதோऽநந்ய꞉ = வியாபித்திருத்தலால் (கண்ணொளியும் ஆன்மபோதமும் போல) உடனுமாய் (நின்று), ஸம

வெதயா=தன்னைவிட்டு நீங்காத, ஆஜ்ஞயா = ஆணையெனப்படுஞ் சிற்சக்தியைக்கொண்டு, புஂஸாஂ=ஆன்மாக்களுக்கு, கர்மாநுஸாரதஃ=அவற்றின் இருவினைகளுக்கீடாக, ஸஂஸ்ருதிஂ= இறத்தல் பிறத்தலை, கரோதி=செய்கின்றான் என்றவாறு.

உடனாய்நிற்றல் கூறவே, ஒன்றாய் நிற்றல் பெறப்பட்டவாறு காண்க.

இது பிரிப்பின்றி நிற்கும் சமவேத சத்தியாகிய திரோதானசத்தி உண்மையையும், இருவினை உண்மையையும் கூறுதலால் அத்திரோதான சத்தியால் செலுத்தப்படும் ஆணவமலமும், இருவினைக்குப் பற்றுக் கோடாகிய மாயையும், அவற்றின் காரியமுமாகிய ஐவகைப் பாசங்களின் உண்மையைக் கூறியவாறு காண்க.

இசூத்திரத்தில் வேறாயினும் என்பதற்கு உலகத்திற்கு வேறாயினும் என்று, த-பி உரையுடையார் கூறுவர். ஆன்மாக்களுக்கு இறத்தல் பிறத்தல்களைச் செய்கின்றான் என்று சூத்திரத்தில் இருப்பதால், அவ் வான்மாக்களோடு எவ்வாறு நின்று செயகினறான் என்னும் வினா நிகழும் என்பதும், அதுபற்றி, ஆன்மாக்களுக்கு வேறாயினும், வியாபித்திருத்தலால் அவற்றோடு கலந்து நிற்பன் எனக் கூறவேண்டுவது அவசியமாயிற்றென்பதும், உயிர்கள் இறைவனோடு கலந்து நிற்றலும், உலகம் இறைவனுள் அடங்கி நிற்றலும் முறைமை யாதலின், அநந்யம் என்னுஞ் சொல்லானே உயிர்களென்பது தானே பெறப்படுமென்பதும் அவா அறிந்திலர்.

இன்னும் அநந்யம் என்பதற்கு இறைவனைவிட வாஸ்தவத்தில் உலகம் என்பது ஒன்றுஇல்லை யென்றும, இருப்பதுபோலக் காண்பது கற்பிதமென்றும், இதற்கு மெய்கண்டதேவர் அருளிய திருவாக்கையும் அவர் எடுத்துக்காட்டுவர். அத்திருவாக்காவது "அத்துவிதம் என்ற சொல்லானே ஏகமென்னின் ஏகமென்று சுட்டுவதுண்மையின் அத்துவிதம் என்ற சொல்லே அந்நிய நாத்தியை உணர்த்து மாயிட்டு" என்பதே. இத்திருவாக்கில் 'ஏகமென்னின்' என்றதனால் அத்துவிதத்திற்கு ஏகமென்று கொள்ளுதல் பூர்வபக்கமென்பதும் 'அந்நியநாத்தி' (அதாவது அநந்யம்) சித்தாந்தம் என்பதும், 'ஏகமென்று சுட்டுதல் அச் சித்தாந்தத்தை வலியுறுத்தும் ஏதுவாம் என்பதும, சுட்டுதல் உயிரின் தன்மையென்பதும், ஒரு பொருளாயின் அநந்யம் என்பதற்குப் பொருளே யில்லையென்பதும ஆவர் அறிந்திலர்.

நேதி தோஉதோஜ்ஞாஊக்ஷோவாரதிவோயதஃ ।
ஸ்வாவேநிஸோமதோவோயேவோஜ்ஞக்வாஊஸ்ரு
ணாஂஸேநா ॥

நேதிதோ மமதோத்ரேகா தக்ஷாபரதி போததஃ ।
ஸ்வாபே நிர்போகதோ போதே போத்திருத்வாதஸ்தி
யணுஸ்தநௌ ॥

(இ-ள்.) நேதிதஃ=(ஆன்மா) இலது என்றலானும், மமேதா தேஹகாத் = (உடம்பை) எனது என (பிறிதின் கிழமைப்பொருள்பட வழங்கும்) மிகுதிப்பாட்டானும்; அக்ஷபோதத: =ஐம்பொறிகளைக்கொண்டு அறிதலானும்; உபரதிபோதத:=ஒடுக்கத்தை அறிதலானும் (அஃதாவது, கனவின்கண் நிகழ்ந்தவற்றை நனவின் கண்ணே மயங்கி அறிதலானும்): ஸ்வாபே நிர்போகத:=(சுழுத்தி துரியமாகிய) நித்திரையில் (பிராணவாயுவுக்கு) விடயங்களிடமாக வரும் இன்பதுன்ப நுகர்ச்சி இன்மையானும்; போதேபோத்ருத்வாத் = (குருமுகமாக) ஞானம் உண்டானபொழுது அறிதலானும்; தநௌ அணுஃ அஸ்தி = உடம்பின்கண்ணே ஆன்மா என்பது ஒன்றுண்டு (எ-று).

இது சூனியான்மவாதி, தேகான்மவாதி, இந்திரியான்மவாதி, சூக்கும தேகான்மவாதி, பிராணான்மவாதி, விஞ்ஞானான்மவாதி, சமூகான்மவாதி என்னும் எழுவரையும் மறுத்து இவற்றின்வேறாய் ஆன்மா எனப்படுவது ஒன்று உண்டு எனச் சாதித்தது.

போதே போத்திருத்வாத் என்பதற்கு ஜாக்கிரத்தில் அறியுந் தன்மை இருத்தலானும் என்று த-பி உரையுடையார் கூறுவர். நேதிதோ முதலிய மூன்றனும் ஜாக்கிரமும அதன் பின்னர் முறையே சொப்பனமும், சுழுத்தியும் கூறிய பின்னர் மீண்டும் ஜாக்கிரம் கூறவேண்டாமையின் அது உரையன்மை அறிக. போத சப்தத்திற்கு ஜாக்கிரமென்றும் ஞான மென்றும் பொருள் கூறுதல் முறைமையாதலானும், அம்முறைமை நோக்கி முன்னொடு பின் முரணுதவண்ணம் பொருள் கொள்ளவேண்டுவது பொருள்கோள் முறைமையாதலானும், இவ்வுண்மை உணர்ந்த ஸ்ரீமெய் கண்டதேவர் போதே போத்திருத்வாத் எனபதற்கு "உணர்த்த உணர்தலின்" என்று மொழிபெயர்த்தனர்.

இன்னும், அக்ஷாபரதிபோதத: என்பதற்கு "இந்திரியங்களின் ஒடுக்கமாகிய சொப்பனத்தை அறிதலால" என்றுகூறி இது இந்திரியான்மவாதியை மறுத்தது என்பர்த-பி உரையுடையார். இவ்வாறுகொள்ளின், சொப்பனத்தினை அறியும் சூக்குமதேகம் ஆன்மா என்பாரை மறுத்ததாகுமன்றி இந்திரியான்மவாதியை மறுத்ததாகாது. ஒவ்வொரு இந்திரியமும் தனக்குரிய ஒரு விடயத்தையேயன்றிப்பிறவிடயங்களை அறியாமையானும்,

ஐந்து விடயங்களையும் அறியும் அனுபவங் காணப்படுதலானும், இந்திரியம் ஆன்மா அன்று என மறுப்பதே முறைமை. ஆதலால் இந்திரியான்மவாதி சூக்குமதேகான்மவாதியாகிய இருவரையும் மறுப்பதற்கு, அக்ஷோபரதி போதத: என்பதை இருதொடராகப் பிரித்துப் பொருள் கொள்ளவேண்டுமாதலின் அது உரையன்மை அறிக. மெய்ப்பொருள் அறிந்த மெய்கண்டதேவநாயனார் இதனை "ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின்" என மொழிபெயர்த்து, "ஐம்புலன் அறிதலின், ஒடுக்கம் அறிதலின்" எனக்கண்ணழிவு செய்தனர்.

𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌾𑌦𑌨𑍍𑌯𑍋𑌽𑌪𑍍𑌯𑌨𑍍𑌵𑌿𑌤𑍋 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑍂𑌪𑌵𑌤𑍍 ।
𑌅𑌵𑌸𑍍𑌥𑌾𑌪𑌞𑍍𑌚𑌕𑌸𑍍𑌥𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌮𑌲𑌰𑍁𑌦𑍍𑌧𑌸𑍍𑌵𑌦𑍃𑌕𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌃 ॥

ஆத்மாந்த: கரணாதந்யோப் யந்விதோ மந்திரிபூபவத் ।
அவஸ்தா பஞ்சகஸ்தஸ்ஸ்யாந் மலருத்த ஸ்வதிருக்கிரிய: ॥

(இ-ள்) 𑌮𑌲𑌰𑍁𑌦𑍍𑌧𑌸𑍍𑌵𑌦𑍃𑌕𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾 = ஆணவமலத்தினால் மறைப்புண்ட தனது ஞானக்கிரியையுடைய ஆன்மா; 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌾𑌤𑍍 𑌅𑌨𑍍𑌯𑌃 𑌅𑌪𑌿=(மன முதலிய) அந்தக்கரணங்களுக்கு வேறாயினும்; 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑍂𑌪𑌵𑌤𑍍 = (நுண்ணுணர் வின்மையிற் சூழ்ச்சித் துணைவராகிய) அமைச்சரோடு (கூடி நின்று தந்தொழில் நடாத்தும்) அரசன் போல; 𑌅𑌨𑍍𑌵𑌿𑌤𑌃=(அவ் வந்தக்கரணங்களோடு) கூடினவனாகி; 𑌅𑌵𑌸𑍍𑌥𑌾𑌪𑌞𑍍𑌚𑌕𑌸𑍍𑌥𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍=(சாக்கிர முதலிய) ஐந்து அவஸ்தையில் நிற்பவனாவன், (எ-று.)

இது சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் ஐந்தவத்தையினை ஆன்மா உடையதாய் நிற்கும் என்று ஆன்மாவின் தடத்த இலக்கணம் கூறியவாறும்.

அவத்தை யென்னுஞ்சொல்லிற்குப் பொருள் நிலையென்பதாம். உயிரின்நிலை ஆணவத்தோடுகூடி நிற்றலும், கருவிகளோடுகூடி நிற்றலும், அருளோடுகூடி நிற்றலுமென மூவகையாம். அவை முறையே கேவலம் சகலம் சுத்தம் எனப்படும். அவற்றுள், கேவலம் இச்சூத்திரத்தும், சகலம் ஐந்தாஞ்சூத்திரத்தும், சுத்தம் ஆறாஞ்சூத்திரத்தும் கூறப்படும். இதனை ௨௫௮-௨௫௯ பக்கங்களிற் காண்க.

துரியம், துரியாதீதமென்பது பந்தத்தாலாகிய அவத்தையிலும் உள என்பதை அறியாது சாக்கிர முதலிய மூன்றவத்தைகளே பந்தத்தாலாகிய தென்றும் ஏனைய இரண்டும் பந்தநீக்கத்தில் உளவாம் என்றும் த-பி உரையுடையார் கூறுவர். சாக்கிர முதலிய மூன்றும் பந்தநீக்கத்திலும் நின்மல சாக்கிரம் முதலியனவாய் பெயர்பெறும் என்பதையும், தொகுத்துக் கூறிய

ஐந்தவத்தையினுள் மூன்று பந்தமாயும், இரண்டு முத்திஎதுவாயும் அமைதல் பொருந்தாது என்பதையும் அவர் அறிந்திலர். பந்தமாகிய துரியம் துரியாதீதங்களின் இலக்கணத்தை இந்நூல் ௨௫அ-வது பக்கத்திலும், சிவஞானசித்தியார் பொழிப்புரை ௧௬௬-வது பக்கத்திலுங் காண்க.

𑌵𑌿𑌦𑌨𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌾𑌣𑌿𑌪𑍁𑌂𑌸𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌨𑌸𑍍𑌵𑌯𑌂𑌸𑍋𑌽𑌪𑌿𑌶𑌮𑍍𑌭𑍁𑌨𑌾 ।
𑌤𑌦𑍍𑌵𑌿𑌕𑌾𑌰𑍀𑌶𑌿𑌵𑌶𑍍𑌚𑍇𑌨𑍍𑌨𑌕𑌾𑌨𑍍𑌤𑍋𑌽𑌯𑍋𑌵𑌤𑍍𑌸𑌤𑌂𑌨𑌯𑍇𑌤𑍍 ॥

விதந்தியக்ஷாணிபும்சார்த்தாந் நஸ்வயம் சோபிசம்புநா ।
தத்விகாரீ சிவச்சேந் நகாந்தோ யோவத்சதம்நயேத் ॥

(இ-ள்.) 𑌪𑍁𑌂𑌸𑌾 𑌅𑌕𑍍𑌷𑌾𑌣𑌿 𑌅𑌰𑍍𑌥𑌾𑌨𑍍 𑌵𑌿𑌦𑌨𑍍𑌤𑌿 = ஆன்மாவினாலே (செலுத்தப்பட்டு) மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் இந்திரியங்கள் விஷயங்களை அறிகின்றன; 𑌸𑍍𑌵𑌯𑌂𑌨𑌵𑌿𑌦𑌨𑍍𑌤𑌿 = தாமே அறியமாட்டா; (அதுபோல) 𑌸𑌃𑌅𑌪𑌿 𑌶𑌮𑍍𑌭𑍁𑌨𑌾𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 = ஆன்மாவும் சிவபெருமானாலே (செலுத்தப்பட்டு) அறியும்; 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌨𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 = (அது) தானே அறியமாட்டாது; 𑌤𑌤𑌃 = அதனால், 𑌶𑌿𑌵𑌃 𑌵𑌿𑌕𑌾𑌰𑍀 𑌇𑌤𑌿𑌚𑍇𑌤𑍍 = சிவன் விகாரியாவானோ எனின்; 𑌨 = ஆவதில்லை, 𑌸𑌃 = அவன், 𑌕𑌾𑌨𑍍𑌤𑌃 𑌅𑌯𑍋𑌵𑌤𑍍 = காந்தம் (விகாரமின்றி நின்று) இரும்பை (தன் சந்நிதிமாத்திரையின் வலித்துக்கொள்ளுமாறு) போல; 𑌤𑌂 𑌨𑌯𑍇𑌤𑍍 = அந்த ஆன்மாவைச் (சங்கற்ப மாத்திரையினால் விகாரமின்றி நின்று) செலுத்துவன் (எ-று.)

இது இந்திரியங்கள் உயிரால்விடயங்களை அறிவதுபோல உயிர் சிவனால் விடயங்களை அறியும் எனப் பாசஇலக்கணங் கூறியவாறும். இந்திரியங்களுக்குக் கருவியாயிருந்து அறியுந்தன்மையேயன்றிக் கருத்தாவாயிருந்து அறியுந்தன்மைஇல்லை என்பதும், உயிரைச் சிவபெருமான் செலுத்துதல் திரோதானசத்தியால் ஆதலின் அத்திரோதானசத்தி உயிர்களின் கன்மத்துக்கேற்றவாறு செலுத்தும் என்பதும் இங்கேகூறிய பாசஇலக்கணமாம்:

இதற்கு இந்திரிய வாயிலாகப் புருடன் அறிவதுபோலச் சீவன் வாயிலாகச் சிவனே அறிகின்றான் என்று த-பி உரையுடையார் கூறுவர். இந்திரியம் உயிரால் அறியும் என்று சூத்திரத்திற் கூறியிருக்கவும் அவ்விந்திரியம் உயிருக்குக் கருவியாய் நின்று அறியும் அநுபவத்தையொட்டிச் சீவன் வாயிலாகச் சிவன் அறிகின்றான் என்றனர் போலும். இங்கே உயிரால் இந்திரியங்கள் அறிதல்மட்டும் உவமையேயன்றி அறிதலின் பயன் இந்திரியத்திற்கா? உயிருக்கா? என்பது விஷயமன்று. ஆதலின் இதனை ஒருபுடை உவமையாகக் கொள்ளல்வேண்டும். இவ்வாறு கொள்ளாமல் முற்றுவமையாகக்கொள்ளின் இந்திரியங்களையின்றிச் சுதந்திரமாக அறி

யுந்தன்மை உயிருக்கில்லாதவாறு போலச் சீவனையின்றிச் சுதந்திரமாய் அறியுந்தன்மை சிவனுக்கில்லை எனப்பட்டுச் சிவன் சுவதந்திரன் என்ப தற்கு இழுக்காகும். ஆதலால் அவ்வுரை பொருந்தாமை காண்க.

𑌅𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚𑍇𑌤𑌨𑍋 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌜𑍍𑌜𑌡𑌿𑌮𑌾𑌭𑌵𑍇𑌤𑍍 ।
𑌶𑌂𑌭𑍋𑌃 𑌸𑍍𑌵𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑍇𑌕𑍇𑌣 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌵𑌿𑌦𑍁𑌰𑍍𑌬𑍁𑌧𑌾𑌃 ॥

அதிர்ச்யம் சேதநத்பாவோ திருச்யஞ் சேஜ்ஜடிமாபவேத் ।
சம்போ ஸ்தத்வ்யதிரேகேண ஞேயம் ரூபம் விதுர்புதா꞉ ॥

(இ-ள்.) 𑌶𑌂𑌭𑍋𑌃𑌰𑍂𑌪𑌂 = சிவனுடைய சொரூபமானது; 𑌅𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍=(ஒருவாற்றானும்)அறியப்படாததாயின்; 𑌤𑌸𑍍𑌯 𑌚𑍇𑌤𑌨𑌃 𑌭𑌵𑍇𑌤𑍍=அச்சம்புவிற்கு (முயற்கோடுபோல) இலதாம தன்மை உளதாம்; 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 = (கடமுதலியபோலச் சுட்டி) அறியப்படுவதாயின்; (𑌤𑌸𑍍𑌯) 𑌜𑌡𑌿𑌮𑌾𑌭𑌵𑍇𑌤𑍍=(யாது சுட்டி அறியப்படுவது அது சடமெனப் படுமாதலின்) அச்சம்புவிற்குச் சடத்தன்மை உளதாம் (ஆதலால்); 𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑍇𑌕𑍇𑌣=(அறியப்படாமையும் அறியப்படுகையுமாகிய) அவ்விரண்டிற்கும் வேறாய் (பதி ஞானத்தினால்); 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 (𑌇𑌤𑌿) 𑌵𑌿𑌦𑍁𑌰𑍍𑌬𑍁𑌧𑌾𑌃=அறியப்படுவது (என்று) ஞானிகள் அறிகின்றார்கள் (எ-று.)

இது சிவசொரூபம் பாசஞான பசுஞானங்களால் அறியப்படாது சிவ ஞானம் ஒன்றானே அறியப்படும் எனப் பதிக்கு இலக்கணங்கூறியவாறாம். இது சொரூபலக்கணம் எனப்படும்.

இச்சூத்திரத்திற்கு "துவம்பதலக்ஷியமான சித்தே தத்பதலக்ஷியமான சிவமென்பதறிவிக்கப்பட்டது" என்று த-பி உரையுடையார் கூறுவர். இவர்கூற்றுக்குச் சூத்திரத்தில் ஆதாரமில்லை. உள்ளபதத்திற்கு வேறு வேறுபொருள் கூறும் உரையாசிரியர்கள் உண்டு. பதம் இல்லாமலே பொருள்கூறும் உரையாசிரியரை இதுவரை கண்டிலம். அன்றியும் சிவத் தன்மையின்வேறாய் சிவனோடு அநந்யமாய் உள்ள உயிர்ப்பொருள் ஒன்று நித்தமாயின்றேல் இன்பஅனுபவமும் அனுபவிக்கப்படும்பொருளும் இல்லை யெனப்பட்டுச் சூனியமாய் முடியுமாதலின் அது உரையன்மைஅறிக.

𑌨𑌾𑌸𑌿𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑍌𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌨𑌵𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌤𑍇 𑌉𑌭𑍇 𑌮𑌿𑌥𑌃 ।
𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌶𑌿𑌵𑌯𑍋𑌰𑍍𑌵𑍇𑌤𑍍𑌤𑌾 𑌯𑌃 𑌸 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌤𑌯𑍋𑌃𑌪𑍃𑌥𑌕𑍍 ॥

நாசிச் சித்சந்நிதௌவேத்தி நவித்தஸ்தே உபே மிதஃ ।
பிரபஞ்ச சிவயோர் வேத்தாப꞉ ச ஆத்மா தயோ꞉ பிருதக் ॥

(இ-ள்.) சித்ஸந்நிதௌ அசித் ந வேத்தி = (சிவனாகிய) சித்தின் சன்னிதியில் (பிரபஞ்சமாகிய) அசித்து (சிவனை) அறியமாட்டாது (விளங்கித் தோன்றாது என்றபடி. ஆதலின்); தே உபே அபி ந வித꞉ = சிவம், பிரபஞ்சம் என்னும் இரண்டும் ஒன்றையொன்று அறியமாட்டா; ய꞉ ப்ரபஞ்சஶிவயோ꞉ வேத்தா = எவன் பிரபஞ்சத்தையும் சிவனையும் அறிகின்றானோ; ஸ꞉ = அவன்; தயோர்வ்யதிரிக்த ஆத்மா꞉ = அவ்விரண்டிற்கும் வேறாகிய ஆன்மாவாம் (எ-று.).

இது சத்தோடுசேர்ந்து சத்தாயும், அசத்தோடுசேர்ந்து அசத்தாயும் சத்து அசத்து இரண்டனையும் அறியும்பொருள் ஆன்மாஎன ஆன்மாவின் சொரூபலக்கணம் கூறியவாறும். இரண்டனையுஞ் சார்ந்து அதுஅதுவாய் நின்று அறியுந்தன்மை உடைமையால் ஆன்மா சதசத்தெனப்படும்.

இதற்கு "அஞ்ஞானதசையில் ஜீவத்துவத்தோடிருத்தலின் ஜீவன் உளன் என்று சத்ரூபனும், அஞ்ஞானம் நீங்கிய முத்தித்தசையில் ஜீவத்துவம் நீங்கிச் சிவமாதலின் ஜீவன் இலனென்று அசத்ரூபனாயுமிருத்தலால் சதசத்ரூபனும்" என்பர் த-பி உரையுடையார். இவர் "சார்ந்ததன் வண்ணமாந் தன்மையை யுடையது ஆன்மா" என்னும் உண்மையை உணர்ந்திருப்பரேல் அவ்வாறு கூறார். இன்னும் இதுபற்றிய சங்கை உத்தரங்களும் மற்றும் அவர்கூறும் கூற்றுக்களும் அவை பொருந்தாமையும் ௬௬அ-௬௬௯ வது பக்கங்களிற் காண்க.

ஸ்தித்வா ஸஹேந்த்ரியவ்யாதை꞉ த்வம் ந வேத்ஸீதி போதித꞉ ।
முக்த்வைதாந் குருணாநந்ய꞉ தந்ய꞉ ப்ராப்நோதி தத்பதம் ॥

ஸ்தித்வாச ஹேந்த்ரிய வியாதைஸ் த்வாம் நவேத்ஸீதிபோதித꞉ ।
முக்த்வைதாந் குருணாநந்யோ தந்ய꞉ ப்ராப்நோதி தத்பதம் ॥

(இ-ள்.) ஐந்த்ரியவ்யாதை꞉ ஸஹ ஸ்தித்வா = (நீ) ஐம்பொறிகளாகிய வேடரோடு கூடியிருந்து; த்வம் ந வேத்ஸி இதி = உன் பெருமை அறிந்தாயில்லை என்று; குருணா = ஞானாசாரியராலே; போதித꞉ = அறிவுறுத்தப்பட்டவனாகிய; தந்ய꞉ = (முன் செய்து கொள்ளப்பட்ட) புண்ணியமுடைய ஆன்மாவானவன்; ஏதாந் முக்த்வா = இவ்வைம்பொறிகளாகிய வேடரைவிட்டு; அநந்ய꞉ தத்பதம் ப்ராப்நோதி = அநந்யனாய்ச் சிவனுடைய திருவடியை அடைகின்றான் (எ-று.)

இது ஞானாசாரியனால் உபதேசிக்கப்படும் ஞானத்தால் சிவபெருமான் திருவடியை உயிர் அடையுமெனத் திருவடியடைதற்குச் சாதனங் கூறிய வாறாம்.

இதற்குக் "கடமுடைந்தவிடத்து கடாகாயம் மகாகாயமாமாறுபோல ஜீவனே சிவமாயிற்று" என்பதாதியாகப் பலபடக்கூறுவர் த-பி உரையுடையார். கடாகாய மகாகாய உவமை கட்டுப்பட்டிருத்தற்கும் கட்டுப்படாதிருத்தற்குமட்டுமே யன்றி ஒரு பொருளே இருதன்மைப்பட்டு நிற்பதற்கு அன்று. இதுபற்றிய சங்கை உத்தரங்களையெல்லாம் ௱௬௬.௱௬௭-வது பக்கங்களிற் காண்க.

சித்த்ருஶாத்மநி த்ருஷ்ட்வேஶம் த்யக்த்வா வ்ருத்திம் மரீசிகாம் ।
லப்த்வா ஶிவபதச்சாயாம் த்யாயேத் பஞ்சாக்ஷரீம் ஸுதீ: ॥

சித்திருசாத்ம நித்ருஷ்ட்வே சம்த்யக்துவாவ் ருத்திம்மரீசிகாம் ।
லப்த்வாசிவ பதச்சாயாம் த்யாயேத் பஞ்சாக்ஷரீம் சுதீ: ॥

(இ-ள்.) ஸுதீ: =நற்புத்திமானவன்; சித்த்ருஶாத்மநி ஈஶம் த்ருஷ்ட்வா=ஆன்மாவாகிய தன் அறிவின்கண்ணே முதல்வனை சிவஞானக்கண்ணினாலே கண்டு; மரீசிகாம் வ்ருத்திம் த்யக்த்வா = கானற்சலம்போலும் (நிலையில்லாத பிரபஞ்ச) வியாபாரத்தை விடுத்து; ஶிவபதச்சாயாம் லப்த்வா=சிவனது திருவடிநிழலை அடைந்து; பஞ்சாக்ஷரீம் த்யாயேத் = (அன்னிலை வழுவாவண்ணம்) முத்தி பஞ்சாக்ஷரத்தைத் தியானிக்கக் கடவன் (எ-று.)

இது சிவபெருமானைத் தன் அறிவின்கண்ணே தியானிக்கவேண்டுமெனச் சாதிக்குமுறை கூறியவாறாம்.

இதற்கு "ஆரோபிதமான தன்னிடத்தில் தனது அதிஷ்டான ஸ்வரூபமான சத்திய சிவத்தினை அறியவேண்டும்" என்று கூறுவார் த-பி உரையுடையார். இவ்வாறு கூறுதற்குச் சூத்திரத்தில் ஆதாரமில்லை. அன்றியும், ஆரோபிதமான தன்னிடத்தில் அறியப்படுவதும் ஆரோபிதமாகுமன்றி உண்மையாகுமா? ஆதலின் அது உரையன்மை அறிக. இன்னும் கானற்சல உவமை. உலகம் பொய்என்பதை உணர்த்திற்று என்பர். அவ்வுவமை நிலை பேறின்மை உணர்த்துதற்கேயன்றி வேறில்லை. இதனை ௬௦௫-வது பக்கத்திற்காண்க.

ஶிவேநைக்யம் ஸதத்ஸ்தஸ்ய நஸ்வவ்ருத்திக: ।
ஜ்ஞேயாத்ருஶம் ஸ்வத்ருஷ்டா ஹ்யவைதி ஸ்வாநுபூதிதோ ॥

சிவேனைக்யம் கத: சித்கஸ்தததீந: ஸ்வவிருத்திக: ।
மலமாயாத்ய சம்ஸ்பிஷ்டோ பவதிஸ்வாநுபூதிமாந் ॥

(இ-ள்) 𑌶𑌿𑌵𑍇𑌨 𑌐𑌕𑍍𑌯𑌂 𑌗𑌤𑌃 𑌚𑌿𑌤𑍍 = சிவனோடு ஒற்றுமைப்பட்டுச் சின்மாத்திரையாக நின்ற ஆன்மா; 𑌤𑌦𑌧𑍀𑌨𑌸𑍍𑌵𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌕𑌃 = அச்சிவன் வயத்ததாகிய தன் விருத்தியை யுடையனாய்; 𑌮𑌲𑌮𑌾𑌯𑌾𑌦𑍍𑌯𑌸𑌂𑌸𑍍𑌪𑍃𑌷𑍍𑌟𑌃 = மலம் மாயை முதலியவற்றால்பற்றப்படாதவனாய்; 𑌸𑍍𑌵𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌮𑌾𑌨𑍍 = சுவாநுபூதியாகிய சிவபோகமுடையனாவன் (எ-று.)

இது பாசவிடுதி, சிவப்பேறு என்னும் பயன் இரண்டனுள் பாசவிடுதியாகிய பயன்கூறியவாறும்.

இதற்கு "சீவன்முத்தன் இயல்பு கூறிற்று" எனக் கூறுவர் த-பி உரையுடையார். அது பன்னிரண்டாஞ் சூத்திரத்தில் கூறப்படுகின்றமையால் அவ்வுரை பொருந்தாமை காண்க.

இச் சூத்திரத்தில் ஒற்றுமைப்பட்டு நிற்கும் என்று கூறிய ஐக்கியத்திற்கு இருபொருளுண்மை உண்டென்றல் பொருந்தா உரையெனவும், இரண்டறக்கலத்தல் என்பதற்கு ஒன்றெனபதே பொருள் எனவும் கூறி மெய்கண்டதேவர் "ஏகனாகி" என்றும் "ஏகனாய்நிற்க" என்றும் அருளிய திருவாக்குக்களும் இருபொருள் உண்மையை மறுத்தனென்றும் அவர்கூறுவர். ஒரேபொருளாகவே யிருப்பின் ஐக்கியமென்ற சொல்லுக்குப் பொருளேயில்லை. மாறுபட்ட இருபொருளாகயிருப்பின் ஐக்கியமாதல்கூடாது. ஆகவே ஒருவாற்றால் ஒற்றுமையும் ஒருவாற்றால் வேற்றுமையும் உடைய இருபொருள்கள்தான் ஐக்கியத்திற்கு உரிமையுடையனவாம் ஆதலால் சித்து என்னுஞ் சாதிப்பொதுமையால் ஒற்றுமையும், பேரறிவு சிற்றறிவு என்னுந் தன்மையால் வேற்றுமையும் இறைவனுக்கும் உயிருக்கும் உடைமையால் அவ்விருபொருள்களும் ஐக்கியமாதல் கூடும். சார்ந்ததன்வண்ணமாந் தன்மையுடைய உயிர் இறைவனைச் சார்ந்தவிடத்து இறைவனேயாய் தன் தன்மை ஒரு சிறிதுந் தோன்றாதவாறு நிற்றலே "ஏகனாகி" என்றும் "ஏகனாய்நிற்க" எனறும் மெய்கண்டதேவர் அருளிய திருவாக்குகளுக்குப் பொருள் என்பது "தானென ஒன்றின்றியே தானதுவாய்" என அவர் அருளிய திருவாக்கே நன்கு விளக்கும். ஆதலின் அவ்வுரை பொருந்தாமை காண்க.

𑌦𑍃𑌶𑍋𑌰𑍍𑌦𑌰𑍍𑌶𑌯𑌿𑌤𑌾 𑌚𑌾𑌤𑍍𑌮𑌾 𑌤𑌸𑍍𑌯 𑌦𑌰𑍍𑌶𑌯𑌿𑌤𑌾 𑌶𑌿𑌵𑌃 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌪𑌰𑌾𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑍋𑌪𑌕𑌾𑌰𑌕𑍇 ॥

திருசோர் தர்சயிதா சாத்மாதஸ்ய தர்சயிதா சிவ: ।
தஸ்மாத் தஸ்மிந் பராம் பக்திம் குர்யாதாத்மோபகாரகே ॥

(இ-ள்.) த்ருசோ: தர்சயிதா ச த்ரஷ்டா=கண்களுக்கு (உருவத்தைக) காட்டுபவனும் (அவற்றோடு ஒற்றித்து நின்று) காண்பவனும் ஆன்மாவாம்; தஸ்ய தர்சயிதா ச சிவ: = (அதுபோல) அவ்வான்மாவுக்கு (விஷயத்தைக்) காட்டுபவனும், (அவ்வான்மாவோடு ஒற்றித்து நின்று) காண்பவனும் சிவனே, தஸ்மாத் = ஆகலின்; உபகாரகே தஸ்மிந் = ஆன்மாவுக்கு உபகரிப்பவனான அச்சிவனிடத்தில்; பராம் பக்திம் குர்யாத் = மேலான பக்தியைச் செய்யக்கடவன் (எ-று.

மேலான பக்தியாவது இடைவிடாத பக்தி. இதனை "அயரா அன்பு" என மெய்கண்டதேவர் மொழிபெயர்த்தனர். இது சிவப்பேறாகிய பயன் கூறியவாறும், பத்தாஞ்சூத்திரத்தில், "ஸ்வாநுபூதிமாந்" என்று கூறியதைப் பதினொராஞ்சூத்திரத்தில் "அரன்கழல்செலும்" என ஸ்ரீமெய்கண்டதேவர் மொழிபெயர்த்தருளினர். அவ்வாறு மொழிபெயர்த்ததற்குரியகாரணம் முதலியன, ருஉஅ ருஉகூ பக்கங்களிற்காண்க.

ஆன்மாவிற்குக் காணும் உபகாரத்தை இறைவன் செய்வன் என்றதனால் முத்தியிலும் அவ்வாறு செய்வன் எனப்பட்டு அங்கே காணப்படும் பொருள் தானாதலால், தன்னைப்பற்றுதல் என்னும் குற்றம்வாராதோ என்ற சங்கைக்குக் கண் கண்ணாடிக்குள்ளாகத் தன்னைக் காண்டலை எடுத்துக் காட்டிக் குற்றம் ஆகாதென உரையாசிரியர் அருளிச்செய்தனர். இவ்வுண்மை அறியாதார் விம்பப்பிரதிவிம்பவாதம் சிவஞானசுவாமிகளுக்கும் உடன்பாடென்பர். இதுபற்றிய சங்கை உத்தரங்களை ருருஉம் பக்கத்திற்காண்க. அன்றியும், விம்பப்பிரதிவிம்பவாதத்தில் விம்பம் சிவனும், பிரதிவிம்பம் சீவனும், பிரதிவிம்பத்திற்கு ஆதாரம் அந்தக்கரணமுமாம். இங்கே, விம்பமும் சிவன். பிரதிவிம்பமும் சிவன். பிரதிவிம்பத்திற்கு ஆதாரம் சீவன். இவ்வுண்மையினையும் உற்றுநோக்காது சொல்லளவிலே ஒற்றுமைகூறுவது எத்துணைப்பொருத்தமுடைத்தென்பதை அறிஞர் அறிவர்.

முக்தயே ப்ராப்ய ஸத்பக்தாந் தத்வேஷம் சிவாலயம் ।
ஏவம் வித்யாச்சிவஜ்ஞாநபோதே சைவார்த்தநிர்ணயம் ॥

முக்தியை பிராப்ய சதஸ்தேஷம் பஜேத்வேஷம் சிவாலயம் ।
ஏவம் வித்யாச்சிவஞ்ஞாநபோதே சைவார்த்தநிர்ணயம் ॥

(இ-ள்) முக்தயே ஸத்ப்ராப்ய = முத்தியின்பொருட்டுச் சீவன் முத்தர்களை அடைந்து, - தேஷாம் வேஷம் சிவாலயம் பஜேத்=அவர்களுடைய திருவேடத்தையும் சிவாலயத்தையும் வழி

படிக,-ஏவஂ = இவ்வாறே, - ஶிவஜ்ஞாநபோதே = சிவஞான போதமென்னும் இந்நூலில், - ஶைவாகமார்த்தநிர்ணயஂ விஜ்ஞாய = சைவாகமங்களின் பொருள் நிச்சயத்தை அறிக (எ-று.)

இது சீவன்முத்தர் இயல்பு கூறியவாறும்.

இதற்கு ஞானவாயிலாக முத்தியைப் பெறுவதற்கு முக்கிய சாதனங் கூறிற்றெனவும், சீவன்முத்தர் இயல்புகூறிற்றென்றல் அரைத்ததனை மறுபடியும் அரைத்தலாகிய பிஷ்டபேஷணநியாயமாவதோடு முற்சூத்தி ரங்களிலும் சுருதியாதிகளிலுங் கூறப்பட்டுள்ளவற்றிற்கு விரோதமெனவுங் கூறுவர் த-பி உரையுடையார். முக்கியசாதனம் என்பது முத்திக்கோ? ஞானத்திற்கோ? முத்திக்கெனின், ஞானம் முக்கிய சாதனம் அன்றாக வேண்டும். அன்றியும், ஞானவாயிலாக என்றதனோடும் முரணும், ஞானத் திற்கெனின், "அநேகஜன்மங்களாற் செய்துவந்த சரியாகிரியா யோகங்களால் இருவினையொப்பு மலபரிபாகம்வந்த சத்திநிபாதத்துத்தமன்" என எட்டாஞ்சூத்திரத்திற் கூறுதலினாலேயே,ஞானத்திற்குச் சாதனம்,சரியை கிரியை யோகங்களென்பதூஉம், அவை முன்னரே சித்தித்துள்ளன என் பதூஉம் பெறப்பட்டமையின் மீண்டுங் கூறுதல் பிஷ்டபேஷணநியாயமாம் ஆதலின் அவ்வுரை பொருந்தாமை காண்க.

அவ்வாறாயின், முத்தியின்பொருட்டு என்று கூறுவானேன் எனின், முத்தியின்பொருட்டென்பதற்கு அடைந்தமுத்தி நிலைத்தற்பொருட்டு என்பதேபொருள். முத்தி சித்தித்தற்பொருட்டு எனின், பத்தாம் சூத்தி ரத்தில் சுவாநுபூதிமான் என்றதனோடு முரணும், சுவானுபூதியரினும், உடம்புஉள்ளஅளவும் அதுநிலைத்தற்பொருட்டுச் சாதனஞ் செய்யவேண்டு மென்பதூஉம், இன்றேல் நிலையாதென்பதூஉம், "ஆறுனுந்தடைகளுண்டேல் அனுபவமுறைத்திடாதே" என்பது முதலியனவாய்க் கூறும் கைவல்யச் செய்யுளானும் அறியக்கிடக்கவும், அதனையும் நோக்காது பிஷ்டபேஷண நியாயமென்றது யாதுபற்றியோ. இவ்வுண்மையுணர்ந்த ஸ்ரீமெய்கண்ட தேவநாயனார், முத்தியின்பொருட்டென்றதை, "செம்மலர்நோன்றாள் சேர லொட்டா அம்மலங்கழீஇ" என மொழிபெயர்த்தனர்.

ஏவம்வித்யாச்சிவஞானபோதே சைவார்த்தநிர்ணயம் என்பதை மலைவு இல்லையாகச்செய்தவர் எனமங்கலவாழ்த்தில் ஸ்ரீமெய்கண்டதேவர் மொழி பெயர்த்தவாறு காண்க.

வடமொழிச் சிவஞானபோதம் மூலமும்

தமிழுரையும் முற்றிற்று,

---

சிவமயம்.

# சூர்ணிக்கொத்து.*

## முதற் சூத்திரம்.

க—சகம்பிறப்பு இருப்பு இறப்பு ஆகிய முத்தொழிலை உடையது.

உ—அது அரனாலே உடையது.

௩—மற்றிருவரும் முத்தொழிற் படுவர்கள்.

## இரண்டாஞ் சூத்திரம்.

க—அரன் உயிர்களின் இரண்டற நிற்பன்.

உ—உயிர்களுக்குக் கன்மபலனை அரனே கொடுப்பன்.

௩—உயிர்கள் அச்சுமாறியே பிறக்கும்.

ச—அரன் சருவவியாபகன்.

## மூன்றாஞ் சூத்திரம்.

க—இல்லை யென்கிற அறிவுடனே சொல்லுகையினாலே, அறிவுயிர்உண்டு.

உ—எனது உடல்என்று பொருட்பிறிதின் கிழமையாகச் சொல்லுகையினாலே, உடற்குவேறாய் உயிருண்டு.

௩—ஐந்தையும் ஒருவனே அறிதலின், ஒவ்வொன்றை மாத்திரம் அறிகிற ஐந்திற்கு வேறாய் உயிர்உண்டு.

ச—கனவுடலைவிட்டு நனவுடலிலே வருகையினாலே, அக்கனவுடற்கு வேறாய் உயிர்உண்டு.

ரு—நித்திரையினும் பிராணவாயுத்தொழில் பண்ணவும் சரீரத்துக்குப் புசிப்புந்தொழிலும் இல்லாதபடியினாலே, பிராணவாயுவுக்குவேறாய் உயிர்உண்டு.

---

* இது பொல்லாப்பிள்ளையார் அருளியதென்பர். சிவஞானசுவாமிகள் தம் உரையில்யாண்டும் எடுத்தாளவில்லை.

சு—மறந்து மறந்து நினைக்கிறபடியினாலே, மறவாமல் இருக்கிற அரனுக்கு வேறாய் உயிர்உண்டு.

எ—எல்லாத் தத்துவங்களுக்கும் வேறு வேறுபெயர் இருக்கையினாலே, அந்தந்தத் தத்துவங்களுக்கு வேறாய் உயிர்உண்டு.

## நான்காஞ் சூத்திரம்

க—அந்தக் காரணங்களுக்கு உயிர் உட்கூடினாலன்றித் தொழில் இல்லாதபடியினாலே, அந்தக்காரணங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.

உ—மலமறைப்பால் உயிருக்கு அறிவில்லை.

ங—உயிர் மூன்றவத்தைப்படும்.

## ஐந்தாஞ் சூத்திரம்

க—உயிராலே தத்துவங்களெல்லாந் தொழிற்படும்.

உ—அரனாலே உயிர்களெல்லாம் அறியும்.

## ஆறாஞ் சூத்திரம்.

க—உயிர் அறிவினாலே அறியப்பட்டவெல்லாம் அழியும்.

உ—அப்பிரமேயமாக அறியப்பட்டவனே அரன்.

## ஏழாஞ் சூத்திரம்

க—அரன்பாசத்தை அநுபவியான்.

உ—பாசம் அரனை அநுபவியாது.

ங—உயிர் *அவ்விரண்டனையும் அநுபவிக்கும்.

## எட்டாஞ் சூத்திரம்

க—உயிருக்கு நல்லறிவு தவத்தினாலேயேவரும்.

உ—உயிருக்குச் சற்குருவாய்வருவது அரனே.

ங—உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையாலே தன்னையும் அறியமாட்டாது.

ச—உயிர் பஞ்சேந்திரியங்களிலே பற்றற்றால் தன்னையும் அறியும்.

* அவ்வரனை அடையும்; அநுபவிக்கும் என்றும்பாடம்.

## ஒன்பதாஞ் சூத்திரம்

௧—உயிர் அரன் ஞானத்தினாலேயே அரனைக்காணும்.
௨ - உயிர் பாசத்திலே பற்றற்றால் அரன் வெளிப்படுவன்.
௩—பஞ்சாக்ஷர செபம்பண்ணினால், வாசனாமலம்போம்.

## பத்தாஞ் சூத்திரம்

௧—அரனுடன் ஒன்றாகில்.
௨—உன்றொழிலெல்லாம் அரன் பணியென்றுகொள்.

## பதினொராஞ் சூத்திரம்

௧—ஞானிக்கு வருகிற விடயங்களை அரனே அநுபவிப்பன்.
௨—அரனை மறவாமல் அன்பு இருந்தால் அவனிடத்திலே ஐக்கியமாய்ப்போவன்.

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

௧—மும்மலங்களையுங்களைக.
௨—சிவஞானிகளுடனே கூடுக.
௩—சிவஞானிகளையும் சிவலிங்கத்தையும் சிவனெனவே தேறி வழிபடுக.
௪—வழிபடாமையை ஒழிக.

ஆ. சூத்திரம் ௧௨-க்குச் சூர்ணிக்கொத்து ௩௧

முற்றிற்று.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானபோதச்

## சிற்றுரைவிளக்கம்.

மாதவச் சிவஞானயோகிகள் அருளிச்செய்த குருவணக்கம்.

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

கயிலாய பரம்பரையிற் சிவஞாந போதநெறி காட்டும் வெண்ணெய்ப், பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞாந பாநு வாகிக், குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி வாய தேவன், சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி தழைக மாதோ.

## சிறப்புப்பாயிரம்.

### சிற்றுரை.

*சைவாகமங்களினுளவாகிய நாற்பாதங்களுள் வைத்து ஞான பாதத்தோதிய பொருள்களை யாராயும் ஆராய்ச்சி இந்நூலின்கணெடுத்துக் கொள்ளப்பட்டது. இது கேட்டலுறுவார்க்கு இதனாற் போந்த பயன் யாதோவெனவும், இதுகேட்டற்குரியார் யாவரெனவும், இதனானுதலப்படும் பொருள் யாதெனவும், இதனைப் பயப்பிக்குங் கருவியாய் இதற்குமுன் ஒருதலையானுணர்தற்பால தியாதெனவும், இதனை வழங்குதற்கிட்ட பெயர் யாதெனவும், இஃதியாண்டு வழங்குவதெனவும், இதன் முதனூல் யாதெனவும், இந்நூல் செய்தார் யாவரெனவும் பலவாற்றுஞ்சங்கை நிகழுமன்றே; அவ்வாசங்கை நீங்கி மனவெழுச்சி சேறற்பொருட்டு இந்நூன்முகத்துரைக்கப்படுவதாகிய சிறப்புப்பாயிரம்.*

### விளக்கம்.

*சைவாகமங்களிற் கூறப்படும் சரியை, கிரியை, யோகம், ஞானமென்னும் நான்கு பாதங்களுள் ஞான பாதத்திற் கூறப்படும் பதி, பசு, பாச*

மென்னும் முப்பொருள்களை ஆராயும் ஆராய்ச்சி இந்நூலின்கண் எடுத்துக் கொள்ளப்பட்டது. இந்நூல் கேட்க விரும்புவார்க்கு இதனுட் கூறப்படும் பயன் யாது?, இதனைக்கேட்டற்குரிய அதிகாரி யாவர்?, இந்நூலிற்சொல்லப்படும் பொருள் யாது?, இந்நூலை அறிதற்குக் கருவியாய் இந்நூல் படிப்பதற்குமுன் படிக்கவேண்டும் நூல் யாது?, இந்நூற் பெயர்யாது?, இந்நூல் எவ்விடத்து வழங்குவது?, இந்நூற்கு முதனூல் யாது? இந்நூல் செய்தார் யாவர்? எனப் பல ஆசங்கைகள் நிகழுமன்றே; அவ்வாசங்கைகள் நீங்கினாலன்றி நூலிற் பிரவேசிப்பதற்கு மன எழுச்சி உண்டாகாது. மன எழுச்சி உண்டாதற்பொருட்டு அவ்வாசங்கைகளை இச்சிறப்புப்பாயிரத்தால் நீக்குகின்றார். ஆகவே, அவ்வாசங்கைகளை நீக்குவதான எட்டுறுப்புக்களையுடையது இச்சிறப்புப்பாயிரம் என்றவாறும்.

### நேரிசையாசிரியப்பா.

மலர்தலை யுலகின் மாயிரு டுமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகொண் ணிருடீர்ந்
தருந்துயர்க் குரம்பையி னான்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
வுயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவராடி புனைந்த தலைமை யோனே—எனவரும்.

## சிற்றுரை.

(இதன் பொருள்.) மலர் தலை உலகின் மா இருள் துமியப் பலர் புகழ் ஞாயிறு படரின் அல்லதைக் காண்டல் செல்லாக் கண் போல்—விரிந்த இடத்தையுடைய ஞாலத்தின்கண்ணே (துன்னிய) பெரிய புறவிருள் கெடும்படி பலசமயத்தாராலும் புகழப்படுகின்ற பரிதியங்கடவுள் (உதயகிரியினின்றும்) போந்தாலன்றிக் காட்சியெய்தமாட்டாத கண்ணொளிபோல,—அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி—பொறுத்தற்கரிய துயரங்களுக்கெல்லாம் (ஒரு நிலைக்களமாய்ச் சத்த தாதுக்களாற் பொத்திய) குரம்பையாகிய (காணப்பட்ட) உடம்பானே (காணப்படாத) ஆன்மாவையும் பரமான்மாவையும் அனுமானவளவையான் வைத்தாராய்ந்து

(அவற்றது தடத்தலக்கண மெனப்படும் பொதுவியல் புணர்ந்து),- கண் இருள் தீர்ந்து—(அவ்வுணர்ச்சியானே) கருதியுணரப்படும் அகவிருளாகிய ஆணவமலத்தினின்று நீங்கி,—ஈண்டிய பெரும் பெயர்க் கடவுளிற் கண்டு—(அது நீங்கியவழி எல்லா நூல்களும் தன்பொருளேயாகத்திரண்டு) கூடிய பெரும்பெய ரெனப்படும் ஒருவார்த்தையாகிய மகாவாக்கியத்தான் எடுத்தோதப்படும் முதற்கடவுளது திருவருளானே (அப்பொருள்களது சொரூபலக் கண மெனப்படுஞ் சிறப்பியல்பை) அநுபூதியிற் கண்டுணர்ந்து,— மயர்வு அற—(இம்முறையானே) மயக்கவாசனையற்றுச் சிவாநு பவம் பெறுதற்பொருட்டு,—நந்தி முனிகணத்து அளித்த— (ஸ்ரீகண்டதேவர்பாற் கேட்டருளிய) நந்தி பெருமான் சனற் குமாரமுனிவன் முதலிய முனிவர்கணங்கட்கு (முறையானே) அளித்தருளப்பட்ட,—உயர் சிவஞானபோதம்—(சரியைமுதலிய மூன்றுபாதப் பொருள்களை ஆராயு நூல்களின்) மேற்பட்ட சிவ ஞானபோதமென்னும் வடநூலை,—உரைத்தோன்—மொழிபெயர்த் துக்கூறி வார்த்திக மெனப்படும் பொழிப்புரை செய்தோன்,— பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்—பெண்ணையாற் று நீராலே சூழப்பட்ட திருவெண்ணெய்நல்லூரின் அவதரித்தரு ளிய சுவேதவனப்பெருமாளென்னும் பிள்ளைத்திருநாம முடை யான்,—பொய் கண்டு அகன்ற மெய்கண்டதேவன்—பொய்ச்சம யங்களின் பொருள் இதுவிதுவென்று கண்டு கழிப்பித்த காரணத் தாற் பெற்ற மெய்கண்டதேவ னென்னுஞ் சிறப்புத் திருநாமமுடை யான்,—பவம் நனி வன்பகை கடந்த தவர் அடி புனைந்த தலைமை யோனே—பிறவியாகிய மிக்க வலிய பகையினைவென்ற தவத்தோர் தனது திருவடியைப் புனைந்துகோடற் கேதுவாகிய தலைமைப்பாட் டினையுடையோன் என்க.

படரிற் காண்டல் செல்லுங் கண்ணெனற்பாலதனை எதிர் மறை முகத்தாற் கூறினார், இன்றியமையாமை விளக்குதற்கு. இப்பொருள்பற்றிக் கண்மேல்வைத்துக் கூறினாரேனும், உவ மேயப் பொருட்கேற்பக் காண்டல் சேறற்குப் படர்ந்த ஞாயிறு போலென்பது கருத்தாகக்கொள்க.

இருட்கேட்டிற்கும் நிருவிகற்பஞ் சவிகற்பமென்னும் இரு வகைக் காட்சிக்கும் ஞாயிறு இன்றியமையாச் சிறப்பிற்றாயவாறு போல, மலத்தீர்விற்கும் ஆராய்ச்சி அநுபூதியென்னும் இருவகை

யுணர்விற்கும் இன்றியமையாச் சிறப்பிற்றாயது இந்நூலென்பார், துமியப் படரினல்லதைக் காண்டல் செல்லாக் கண்போ றொடித் தீர்ந்து கண்டு மயர்வறவளித்த சிவஞானபோத மென்றார்.

தலைமைபற்றி அருந்துயர்க் குரம்பையி னென்றாரேனும், இனம்பற்றிக் கரணம் புவனமுதலியனவும் உடன் கொள்ளப்படும்.

அருந்துயர்க்குரம்பையி னுடப்படுவதாகிய பொதுவியல்பு முன்னாறு சூத்திரத்தானும், பெரும்பெயர்ப்பொருளிற் காணப் படுவதாகிய சிறப்பியல்பு பின்னாறு சூத்திரத்தானு மோதுப.

நாடியெனவே அநுமானவளவையா னென்பதூஉம், கண் டெனவே அநுபூதியிலென்பதூஉம் தாமே போதரும்.

பொதுவியல்பு அளவைமுகத்தானும் இலக்கணமுகத்தா னுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தல் என்னும் இருதிறத்தா னுணரப்படும்; சிறப்பியல்பு சாதனமுகத்தானும், பயன்முகத்தா னுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டையென்னு நான்கு திறத்தானுணரப்படும்.

இஃதென்சொல்லியவாறோவெனின்:—இவ்விருவகை யியல் பும் வேறுவேறு கூறும் ஆகமங்களின் பொருளொருமை உணர மாட்டாது ஒரோவொன்றே பற்றி ஐக்கவாதமுதற் பலதிறத்தான் வேறுபட்டுத் தம்முண் மாறுகொண்டு மயங்குவார்க்கு அங்ஙன மயங்காது அவற்றின் பொருளொருமை யுணர்த்துதற்கு எழுந் தது இந்நூல் என்றவாறாயிற்று. சிவஞானபோதமென்பதூஉம் இக்காரணத்தாற் பெற்ற பெயரென்பது வடமொழிச் சிவஞான போதத்திறுதிச் சூத்திரத்தோதியவாறுபற்றி யுணர்க.

சரியைமுதலிய மூன்றுபாதப்பொருளை ஆராயுநூல்களாவன:— சோமசம்புபத்ததி முதலாயின. அந்நூல்களின் மேற்பட்ட சிவ ஞானபோதமெனவே, அந்நூல்களுணர்ந்தபின்னர் இந்நூல் கேட்கற்பாற்றென்பது பெறப்பட்டது; படவே, முன்னர்த் தீக்கை யுற்றுச் சிவாகமங்களை யோதி அதன்பின்னர்ச் சரியாபாத முத லியவற்றை ஆராயுநூல்களை முறையே கேட்டு அவ்வாறொழுகி மனந்தூயராய் நித்தியாநித்தியவுணர்வு தோன்றிப் பிறவிக்கஞ்சி வீடுபேற்றின் அவாமிக்குடையராய் வந்த அதிகாரிகளுக்கு இந் நூலுணர்த்துகவென்பது போந்ததெனக் கொள்க.

உயர்வளூானபோதம் எனவே யாப்பும், கேட்போரும், நுதலியபொருளும், நூற்பெயரும்; நாடித் தீர்ந்து கண்டு மயர்வற வெனவே நுதலியபொருளின்வகையும், பயனும்; நந்தி முனி கணத்தளித்தவெனவே வழியும்; வெண்ணெய்ச் சுவேதவனன் மெய்கண்டதேவனெனவே ஆக்கியோன் பெயரும், தமிழ் வழங்கு நிலமே இந்நூல் வழங்கு நிலமென எல்லையும் போந்தவாறுணர்க. வடநூலார் யாப்பை ஆனந்தரியமென்றும், நுதலிய பொருளை விடயமென்றும், கேட்போரை அதிகாரிகளென்றும், பயனைப் பிரயோசனமென்றுங் கூறுப. யாப்புச் சம்பந்தமென்பாருமுளர்.

## விளக்கம்.

(இச்சிறப்புப்பாயிரத்தின் பொழிப்புரை.) விரிந்த இடத்தையுடைய உலகின்கண்ணே நெருங்கிய பெரிய புற இருள் கெடும்படி பலசமயத்தாரானும் புகழப்படுகின்ற சூரியபகவான் உதயகிரியினின்றும் வெளிப்பட்டுப் பிரகாசித்தாலன்றிக் காணுந் தொழிலைப் பெறமாட்டாத கண்ணொளிபோல, பொறுத்தற்கரிய துயரங்களுக்கெல்லாம் ஓர் இருப்பிடமாய் தோல், இரத்தம், இறைச்சி, நரம்பு, எலும்பு, மூளை, சுக்கிலமெனப்படும் ஏழு தாதுக்களாற் கட்டப்பட்ட சிறுகுடிலாகிய காணப்பட்ட உடம்பைக்கொண்டு காணப்படாத சீவான்மாவையும் பரமான்மாவையும் அனுமானப் பிரமாணத்தால் ஆராய்ந்து, அவ்விருபொருள்களின் தடத்த இலக்கணமெனப்படும் பொதுவியல்பு உணர்ந்து, அவ்வுணர்ச்சியாற் கருதியுணரப்படும் அகவிருளாகிய ஆணவமலத்தினின்றும் நீங்கி, அவ்வாணவமலம் நீங்கியவிடத்து, எல்லா நூல்களின் பொருளும் திரண்டுகூடிய பெரும்பெயரெனப்படும் ஒரு வார்த்தையாகிய மகாவாக்கியத்தால் எடுத்தோதப்படும் முதற்கடவுளின் திருவருளால், மேற்கூறிய சீவான்மா பரமான்மாவெனப்படும் இரு பொருள்களின் சொரூப இலக்கணமெனப்படுஞ் சிறப்பியல்பை அநுபவ அறிவாற் கண்டுணர்ந்து, இவ்வாறுணர்ந்த முறைமையினால், மயக்கவாசனையற்றுச் சிவாநுபவம் பெறுதற்பொருட்டு, சீகண்டதேவர்பாற் கேட்டருளிய நந்திபெருமானவர் சனற்குமார முனிவன்முதலிய முனிவர்கணங்கட்கு அளித்தருளப்பட்ட சரியைமுதலிய மூன்றுபாதப் பொருள்களை ஆராயும் நூல்களின் மேற்பட்ட சிவஞானபோதம் என்னும் வடநூலை மொழிபெயர்த்துக்கூறி வார்த்திகமெனபபடும் பொழிப்புரைசெய்தோன் பெண்ணையாற்று நீராலே சூழப்பட்ட திருவெண்ணெய்நல்லூரில் அவதரித்தருளிய சுவேதவனப் பெருமாளென்னும் பிள்ளைத்திருநாமம் உடையான்; பொய்ச்சமயங்களின் பொருள் இதுவிதுவென்று கண்டு கழிப்பித்த காரணத்தாற்பெற்ற மெய்கண்டதேவன் என்னுஞ் சிறப்புத்திருநாமம் உடையான்; பிறவியாகிய மிக்க வலிய பகையினை வென்ற தவததோர் தனது திருவடியைச் சிரமேற் சூட்டிக் கொள்ளுதற்கு ஏதுவாகிய மேம்பாட்டினையுடையோன் என்றவாறு.

(கருத்துரை.) கண்ணுக்கு இருட்கேடும் பொருட்காட்சியும் உதய கிரியினின்று வெளிப்படுஞ் சூரியனால் உண்டாவதுபோல, உயிருக்கு மலத் தீர்வுஞ் சிவப்பேறும் மெய்கண்டதேவன் அருளிச்செய்த சிவஞானபோத நூலால் உண்டாம் என்பதாம்.

சூரியன் தோன்றினாற் காணுந்தொழிலைச் செய்யுங்கண் ணென்று சொல்லவேண்டுவதைச் சூரியன் தோன்றவில்லையானால் கண் காணுந் தொழிலைச் செய்யாது என எதிர்மறை முகத்தாற் கூறியதன் கருத் தென்னையெனின், இன்றியமையாமையை விளக்குதற் பொருட்டு. இன்றியமையாமையாவது இல்லாமல் முடியாதென்பதாம். உடன்பாட்டுச் சொல்லைப் பார்க்கிலும் இன்றியமையாமையைக் குறிக்கும் எதிர்மறைச் சொல் வலியுடைத்து. உதாரணமாக:—தண்ணீர் வேண்டுமென்பது உடன்பாட்டுச்சொல், தண்ணீர் இல்லாமல் முடியாதென்பது எதிர்மறைச் சொல். வேண்டுமென்னுஞ் சொல்லைக்கேட்ட ஒருவன் சிறிதுகாலந் தாழ்த்துக் கொடுக்கவுங் கூடும், இல்லாமல் முடியாது என்னுஞ் சொல் லைக்கேட்டவன் அப்பொழுதே கொடுப்பன்; ஆதலின், எதிர்மறைச்சொல் வலியுடைத்தாத லறிக. இவ்வெதிர்மறைப் பொருள்பற்றிக் காண்டல் செல் லாக் கண்போல் எனக் கண்மேல் வைத்துக் கூறினாரேனும், மயக்கவாசனை யற்றுச் சிவாநுபவம் பெறுதற்பொருட்டு அருளிச்செய்யப்பட்ட சிவஞான போதமென்னும் உவமேயப் பொருட் கேற்ப, இருளைநீக்கிக் காணும் தொழிலைப் பொருந்துதற்குப் படர்ந்த ஞாயிறு போல் என்பது கருத்தாகக் கொள்க. புறவிருளை நீக்குதற்குரிய சூரியர் பன்னிருவருளராயினாற்போல அகவிருளை நீக்குதற்கருளிய இச் சிவஞானபோதசூத்திரங்களும் பன்னி ரண்டாயினவாறுகாண்க.

இருட்கேட்டிற்கும், பொருளைப் பிண்டமாய்க்காணும் நிருவிகற்பக் காட்சி, பெயர், சாதி முதலியவற்றூற் பகுத்துக் காணும் சவிகற்பக்காட்சி யாகிய இருவகைக் காட்சிக்கும் ஞாயிறு இன்றியமையாச் சிறப்பினை உடைத்தாயவாறுபோல, மல நீக்கத்துக்கும், அனுமானப் பிரமாணத்தால் சீவான்மா பரமான்மாக்களின் பொதுவியல்புகளை அறிவதாகிய ஆராய்ச்சி யறிவு, திருவருளால் அப்பொருள்களின் சிறப்பியல்புகளை அறிவதாகிய அனுபவ அறிவு ஆகிய இருவகை அறிவிற்கும் இன்றியமையாச் சிறப்பினை உடையது இந்நூல் என்பது உணர்த்துதற்கு, தமியப்படரின் அல்லதைக் காண்டல் செல்லாக் கண்போல் நாடித் தீர்ந்து கண்டு மயர்வற அளித்த சிவ ஞானபோதம் என்றூர்.

தலைமைபற்றி அருந்துயர்க் குரம்பை என உடம்பினைக் கூறினாரே னும், இனம்பற்றிக் கரண, புவன, போகங்களும் உடன்கொள்ளப்படும்.

உடம்பில்வைத்து அநுமானப் பிரமாணத்தால் நாடப்படுவதாகிய பதி, பசு, பாசங்களின் பொதுவியல்பு முன் ஆறு சூத்திரத்தானும், முதற்

கடவுளது திருவருளால் அநுபவத்திற் காணப்படுவதாகிய அம்முப்பொருள்களின் சிறப்பியல்பு பின் ஆறு சூத்திரத்தானும் கூறப்படுவனவாம். செய்யுளில் நாடி என்றதனுல் அநுமான அளவையான் அறியப்படுமென்பதூஉம், கண்டு என்றதனுல் திருவருளால் அநுபூதியில் அறியப்படுமென்பதூஉம் தாமே விளங்கும்.

பொதுவியல்பு பிரமாணவியல், இலக்கணவியல் என்னும் இரண்டியல்களாற் கூறப்பட்டுக் கேட்டல், சிந்தித்தல் என்னும் இருதிறத்தான் உணரப்படும். சிறப்பியல்பு சாதனவியல், பயனியல் என்னும் இரண்டியல்களாற் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டையென்னும் நான்கு திறத்தான் உணரப்படும். பொதுவியல்பு கேட்டுஞ் சிந்தித்தும் அறியப்படுமாறுபோல சிறப்பியல்பு கேட்டுஞ் சிந்தித்தும் அறியப்படமாட்டாது. அவ்விரண்டுடனே தெளிதலும் நிட்டைசாதித்தலும் இருப்பின் அறியப்படுவதாம். ஆதலின், பின் ஆறு சூத்திரப் பொருள்கள் சாதனமுடையார்க்கன்றி ஆராய்ச்சிமட்டும் உடையார்க்கு விளங்காவாம்.

இச்சிறப்புப்பாயிரத்தாற் சொல்லிய பொருள் என்னையோ எனின்:—பதி, பசு, பாசங்களின் பொதுவியல்பு சிறப்பியல்புகளை ஆகமங்களிற் கூறுமிடத்து, ஒரு ஆகமத்திற் பொருள்கள் ஏழென்றும், பிறிதொரு ஆகமத்திற் பொருள்கள் ஆறென்றும், இவ்வாறே ஐந்து, நான்கு, மூன்று எனச் சில ஆகமங்களினும் கூறுகின்றமையால், அவற்றின் பொருளொற்றுமை உணரமாட்டாதார் ஒவ்வொரு ஆகமப் பொருளையேபற்றி ஐக்கவாத முதல் பலவாதிகளாக வேறுபட்டுத் தம்முள் மாறுகொண்டு மயங்குவர். அவ்வாறு மயங்காமல், அவ்வாகமங்களின் பொருளொற்றுமை உணர்த்துதற்கு எழுந்தது இந்நூல் என்று கூறியவாறும். சிவஞானபோதமென்பதூஉம் இக்காரணத்தாற்பெற்ற பெயரென்பது வடமொழிச்சிவஞானபோதத்து இறுதிச் சூத்திரத்தில் இந்தப்பிரகாரம் சைவார்த்தநிர்ணயத்தைச் சிவஞானபோதத்தில் அறிகவென்று ஓதியவாறுபற்றி உணர்க. அதாவது:—பரஞானம், அபரஞானம் இரண்டும் சிவபிரானை உணர்த்துதலிற் சிவஞானம் எனப்படும். பரஞானம் அருளால் உண்டாவது; அபரஞானம் நூலால் உண்டாவது. பரஞானமெனினும் அநுபூதிஞானம் எனினும் ஒக்கும்; அபரஞானமெனினும் ஆராய்ச்சிஞானமெனினும் ஒக்கும். அவற்றுள் அபரஞானமாகிய சிவஞானமென்னும் ஆகமங்களின் பொருளொற்றுமையை நிர்ணயித்து இந்நூல் உணர்த்துதலாற் சிவஞானபோதம் என்றவாறாயிற்று. சிவஞானமென்பது ஆகமத்தையும், போதமென்பது உணர்த்துதலையும் குறித்தவாறறிக. ஆகமங்களிற் கூறும் பொருட் பேதங்கள் முப்பொருளில் அடக்கி இந்நூலிற் கூறப்படுகின்றன என வறிக. பொருள்கள் எழு என்பது சுவாயம்புவம். ஆறு என்பன பௌட்கரமுதலியன. ஐந்து என்பன பராக்கியை முதலியன. நான்கு என்பன சர்வஞானோத்தரமுதலியன. மூன்று என்

பன இரௌரவம், மிருகேந்திரமுதலியன. இது திராவிடமாபாடியத்திற் கண்டது. எழு:—சிவம், பதி, பசு, ஆணவம், கன்மம், சுத்தமாயை, அசுத்தமாயை என்பனவாம். ஆறு:—பதி முதலியனவாம். ஐந்து:—பதி, பசு, ஆணவம், கன்மம், மாயை என்பனவாம். நான்கு:—சிவம், பதி, பசு, பாசம் என்பனவாம். மூன்று:—பதி, பசு, பாசம் என்பனவாம்.

சரியைமுதலிய மூன்றுபாதப் பொருள்களை ஆராயும் நூல்களாவன:—சோமசம்புபத்ததி முதலாயின. உயர்சிவஞானபோத மென்றதனுல், அப்பத்ததிகளின் மேற்பட்டது சிவஞானபோதம் என்பது பெறப்படும். படவே, அந்நூல்கள் உணர்ந்தபின்னர் இந்நூல் கேட்கவேண்டுமென்பது பெறப்பட்டது. படவே, முன்னர்த் தீக்கையுற்றுச் சிவாகமங்களை ஓதி அதன்பின்னர்ச் சரியாபாதம், கிரியாபாதம், யோகபாதங்களை ஆராயும் பத்ததிகளை முறையேகேட்டு அவ்வாறொழுகி மனந்தூயராய் நித்த அநித்தப் பொருள்களின் உணர்வுதோன்றி அநித்தப்பொருள்களின் சம்பந்தமான பிறவிக்கு அஞ்சி நித்தப்பொருளின் சம்பந்தமான முத்தியைப் பெறுதற்கு விருப்பமிக்குடையராய்வந்த அதிகாரிகளுக்கு இச்சிவஞானபோதநூல் உணர்த்துக என்பது முடிபெனக் கொள்க.

இப்பாயிரத்தில் ஆக்கியோன் பெயர்முதலிய எட்டுறுப்புக்கள் வருமாறு:—மெய்கண்டதேவன் என்றதனுல் ஆக்கியோன் பெயரும், நந்தி முனிகணத்தளித்த என்றதனுல் வழியும், வெண்ணெய்ச்சுவேதவனன் என்றதனுல் தமிழ்வழங்கும் நிலமே இந்நூல் வழங்கும் நிலமென எல்லையும், சிவஞானபோத மென்றதனுல் நூற்பெயரும், அதனுலேயே ஆகமத்தின்பொருள் ஒருமை உணர்த்துதலாகிய நுதலிய பொருளும், உயர் சிவஞானபோதம் என்றதனுல் இந்நூல் கேட்டபின்னர் இது கேட்க வேண்டுமென்னும் யாப்பும், அதனுலேயே முன்னர்க் கேட்கவேண்டிய நூலைக்கேட்டு இந்நூல் கேட்டற்கு உரியார் எனக் கேட்போரும், நாடித் தீர்ந்து கண்டு மயர்வற என்றதனுல் நுதலிய பொருளின் பொதுவியல்பு சிறப்பியல்பு என்னும் வகைகளை யுணர்த்துவதோடு பயனும் கூறியவாறு அறிக. வடநூலார் யாப்பை ஆனந்தரியமென்றும், நுதலியபொருளை விடயமென்றும், கேட்போரை அதிகாரிகளென்றும், பயனைப் பிரயோசன மென்றுங் கூறுவர். யாப்பைச் சம்பந்த மென்பாரும் உளர். ஆனந்தரியமாவது இன்னது கேட்டபின்னர் இன்னது கேட்கவேண்டுமென்பதாம். சம்பந்தமென்பது தொடர்ச்சியைக் குறிக்கும். இவ்விடத்துச் சரியைமுதலிய மூன்றுபாத நூல்களின் மேம்பட்ட ஞானபாத நூலென்னும் பொருளை உணர்த்தும். யாப்பு என்பதும் சம்பந்தமென்பதும் பொதுவாக ஒரு பொருட் சொற்களேனும், சிறப்பாக நோக்குமிடத்து வேறுவேறு பொருள்கள் தருவனவாம். இவ்வுண்மையை உரையாசிரியர் மாதவச்சிவஞான யோகிகள் அருளிய தொல்காப்பியப்பாயிர விருத்தியுட்காண்க.

இப்பாயிரம் செய்தவர் அருணந்திசிவாசாரியரென்பது கன்ன பரம்பரை; அது யுத்திக்கும் பொருத்தமாதல்காண்க.

நூல் இறுதியிற் கூறிய பாயிரப்பொருளேயே இவ்விடத்துங் கூறியது குற்றமாகாதோவெனின், ஆகாது; எதனுலெனின், மிருகேந்திரத்து இறுதியிற் கூறிய பாயிரத்தை, நாராயணகண்ட ஆசிரியர் மாணுக்கர்க்கு முதற்கண் உணர்த்துதற்பொருட்டு, நூன்முகத்திற் கூறியவாறுபோல இந் நூலினுங் கூறப்பட்டதாகலானெனவறிக.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.



# மங்கலவாழ்த்து.



## சிற்றுரை.

காமிகமுதலிய ஶைவாகமங்களுண் ஞானபாதத்தினுளதாகிய ஆசங்கை நீக்கி அவற்றின் பொருளுண்மை பொதுவியல்பு சிறப்பியல்பென்று இருவேறுவகைப்படுத்துக் காட்டிப் போதித்தற்கு இரௌரவாகமத்தினெழுந்த சிவஞானபோத நூலினைத் தமிழுலகம் உய்தற்பொருட்டு மொழிபெயர்த்துச்செய்து பொழிப்புரைப் பானெடுத்துக்கொண்ட ஆசிரியர், சாக்கிரத்தே அதீதத்தைப் புரியுந் தமக்கு இடையூறு சிறிது மணுகாமை அறிந்தாராயினும், ஆன்ரோராசாரம் பாதுகாத்தற்பொருட்டும், மாணுக்கர்க் கறிவுறுத்தற் பொருட்டும் முதற்கண் இடையூறு நீக்குதற்குரிய விநாயகக்கடவுளை வாழ்த்துவதாகிய மங்கலவாழ்த்துக் கூறுகின்ருர்.

## விளக்கம்.

காமிகமுதலிய சைவாகமங்களுள் ஞானபாதத்தின் உள்ளதாகிய பொருள்பற்றிய ஆசங்கையை நீக்கி அவ்வாகமங்களின் பொருளுண்மையைப் பொதுவியல்பு சிறப்பியல்பென்று இருவேறுவகைப்படுத்திக்காட்டிப் போதித்தற்கு இரௌரவ ஆகமத்தின் எழுந்த சிவஞானபோத நூலினைத் தமிழுலகம் உய்தற்பொருட்டு மொழிபெயர்த்துச்செய்து பொழிப்புரையுஞ் செய்யப்புகுந்த ஆசிரியர், இடையூறு புகுதற்குரிய சாக்கிரத்திலேயே இடையூறு புகுந்த துரியாதீதநிலை கைவரப்பெற்றதனல் தமக்கு இடையூறு சிறிதும் அணுகாமை அறிந்தாராயினும், சாக்கிரத்தில் அதீதமாய் நிற்கும் பெரியோரனைவரும் இடையூறு நீக்குதற்குக் கடவுள் வணக்கம் கூறி

வந்துள்ளாராதலின், அவ்வான்றோராசாரம் பாதுகாத்தற்பொருட்டும், தாம் கடவுள் வணக்கங் கூறவில்லையாயின் தம் மாணாக்கரும் அவ்வாறே கொண்டு கடவுள் வணக்கத்தைக் கைவிடுவாராகலான் அது செய்யவேண்டு மென்பதை அவர்க்கறிவுறுத்தற்பொருட்டும் இடையூறு நீக்குதற்குரிய விநாயகக்கடவுளை வாழ்த்துவதாகிய மங்கலவாழ்த்து முதற்கட்கூறுகின்றார்.

வஞ்சித்துறை.

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

சிற்றுரை.

(இ-ள்.) கல்லால் நிழல்—(அருள்வடிவாகிய) கல்லானிழலின் கண்ணே (எழுந்தருளியிருந்து),—மலைவு இல்லார்—(நந்திபெருமானுக்கு இந்நூலான்) மலைவு தீர்த்தருளிய முதலாசிரியர்,—அருளிய—மேன்மேற் கருணைகூர்ந்தருளுதற்பொருட்டு,—பொல்லார் இணை மலர்—பொல்லாதபிள்ளையாருடைய ஞானசத்தி கிரியாசத்தி யென்னும் இரண்டு திருவடித்தாமரைகளை,—நல்லார்—கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர்,—புனைவரே—தம்முடைய ஞானசத்தி கிரியாசத்திகட்கு வியாபகமாகக்கொண்டு தாடலை போல் அடங்கிநிற்பரென்க.

நல்லார் புனைவரெனவே, ஏனையோர்க்கு அது கூடாதென்ற வாறாயிற்று.

மூவகை வாழ்த்துள் இது பொருளியல்புரைத்ததெனக் கொள்க.

அருளியவென்பது செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம்; அது புனைவர் என்னும் பிறவினைமுதல்வினைகொண்டது.

இல்லார் இல்லாகச் செய்தாரெனப் பண்படியிற் பிறந்த வினைப்பெயர்.

அருளிய பொல்லாரெனப் பெயரெச்ச முடிபாகவைத்துரைப் பினு மமையும்.

னையது இன்னது புனைவர் என மலரைச் சிறப்பித்துக் கூறியிருத்தலின், இரண்டாவது அதிகாரம் சிறப்பதிகாரமென்பதனையும், அவ்விருவினை முடிபுகளுள் முன்னையதில், கல், ஆல், நிழல் என்ற மூன்று சொற்களும் இடத்தின் உண்மை குறித்தலின், முதலதிகாரத்தில் முதல் மூன்று சூத்திரங்கள் பிரமாணவியலென்பதனையும், மலைவு, இல்லார், அருளிய என்ற பின் மூன்று சொற்களும் செயல் கூறுதலின், முதலதிகாரத்தில் பின் மூன்று சூத்திரங்கள் இலக்கணவியலென்பதனையும், இரண்டாவதுவினைமுடிபாகிய பின்னையதில், பொல்லார், இணை, மலர் என்ற மூன்று சொற்களும் திருவடிகூறுதலின், "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா—ரிறைவனடிசேரா தார்." என்ற திருக்குறளின்படி பிறவிக்கடலைக் கடத்தற்குத் திருவடிசாதனமாதலின், இரண்டாவது அதிகாரத்தில் முதல் மூன்று சூத்திரங்களும் சாதனவியலென்பதனையும், நல்லார், புனைவர், ஏ என்ற மூன்று சொற்களும், திருவடியடைதலாகிய பயன்கூறுதலின் இரண்டாவது அதிகாரத்தில் பின் மூன்று சூத்திரங்களும் பயனியலென்பதனையும் குறிக்கும். இன்னும் நான்காவது சொல்லாகிய மலைவு என்பது, முதலடியையும் இரண்டாவதடியையும் தொடர்ந்து நிற்றலின், பிரமாணவியலில் மூன்ருஞ் சூத்திரமும் இலக்கணவியலில் முதலாவதாயுள்ள நான்காஞ் சூத்திரமும் பொதுவாக ஒரு கருத்துடையன என்பதைக் குறிக்கும். ஆதலினுற்ருன் நான்காஞ் சூத்திரத்திற்கு, "இதுவுமது" எனக் கருத்துரை செய்யப்பட்டது. இவ்வாறு நூற்பொருளைத் தன்னகத்தடக்கிக்கூறல் மங்கலவாழ்த்துக்கு இலக்கணமென அறிக.

மங்கலவாழ்த்து முற்றிற்று.

---

# அவையடக்கம்.

நேரிசை வெண்பா.

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வா
ரெம்மை யுடைமை யெமையிகழார்—தம்மை
யுணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

## சிற்றுரை.

இஃது அவையடக்கங் கூறுமுகத்தானே ஈண்டெடுத்துக்கொண்ட சித்தாந்தசைவத்தினுயர்வும் ஏனைச் சமயத்தார்களிழிபுங் கூறுகின்றது.

(இ-ள்.) தம்மை உணர்ந்து தமை உடைய தன் உணர்வார்—(உடைப்பொருளாகிய) தம்மியல்பினை உணர்ந்து தம்மை உடையானாகிய தலைவனை யுணருஞ் சித்தாந்தசைவர்,—எம்மை உடைமை எமை இகழார்—(தமக்குடைப்பொருளாகிய) எம்மை யுடையராகலின் எம்மைக் (குற்றங்கணிக்கிக் குணங்கொண்டு கோதாட்டுவதன்றி) இகழ்தல் செய்யார்; (ஆகலான் எம்மாற் செய்யப்படு நூலையும் அவ்வாறு கைக்கொள்வர்).—தம்மை உணரார் உணரார்—அங்ஙனந் தம்மை யுணராதார் தம்மை யுடையானாகிய தலைவனையுமுணரார்—(ஆகலான்),—உடங்கு இயைந்து தம்மிற் புணராமை—(அவர்) ஒருங்கே குழீஇக்கொண்டு தம்மிற்றாமே சேராது முரணுதலால்,—புறன்கேளாம்—(அவர் எம்மையும் எம்மாற் செய்யப்படு நூலையும் இகழ்ந்துரைக்கும்) புறமொழியை (யாம்) பொருளாகக் கொள்ளாம் என்க.

ஆகலான் எம்மாற் செய்யப்படு நூலையும் அவ்வாறு கைக்கொள்வரென்பது குறிப்பெச்சம்.

தன்னை யென்னும் இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது. உடைமை, புணராமை என்புழி இன்னுருபு விரித்துரைக்க.

தம்மை யுணராரெனப் பொதுப்படக்கூறுதலானே, தாமொரு பொருளுண்டென்பதே உணராத உலகாயதரும், தம்மைக் குணிப் பொருளென்றுணராத புத்தர், சாங்கியர், மாயாவாதிகளும், தம்மை முதல்வனுக்கு உடைப்பொருளென்றுணராத ஏனைச் சமயத்தாரும் அடங்குவர். பாஞ்சராத்திரிகளும், சிவாத்துவித சைவர்களும் தம்மை உடைப்பொருளெனக் கொள்ளினும், அவருட்பாஞ்சராத்திரிகள் உடைப்பொருளாகிய தமக்கு அணுபரிமாணங் கோடலானும், உடையானுக்குப் பரிணாமங் கூறுதலானும், உடையானல்லாதானை உடையானெனை மயங்கிக் கோடலானும், சிவாத்துவித சைவர் உடையானது சிற்சத்திக்குப் பரிணாமங் கூறுதலானும், பிறவாற்றானும் அவருந் தம்மை உணராரே யென்பது.

புறன் புறச்சமயம்பற்றி இகழ்ந்துரைக்குமொழியும் புறங்கூற்றுமொழியு மென்பது இரட்டுற மொழிதலென்னும் உத்தியாற் கொள்க. புறங்கூற்று மொழியாவது முக்கூற்றுப் புறச்சமயங்களின் வேறான பாடாணவாதசைவர் முதலியோர் முன்னன்றிப் புறத்தே இகழ்ந்து கூறுமொழி என்க.

## விளக்கம்.

இவ்வெண்பாவானது அவையடக்கங் கூறு முறைமையில், இந்நூலில் எடுத்துக்கொண்ட சித்தாந்தசைவத்தின் உயர்வும் ஏனைச் சமயத்தார்களுடைய இழிபுங் கூறுகின்றது. உயர்வு—புறங் கூருமை; இழிபு புறங் கூறுதல்.

(பொ-ரை.) இறைவனுக்கு உடைமைப்பொருளாய் விளங்கும் உயிராகிய தம்மியல்பினை உணர்ந்து, தம்மை உடையானுகிய தலைவனை உணரும் சித்தாந்தசைவர்க்கு, நாம் உடைமைப்பொருளாதலின் தமக்கு உடைமைப்பொருளாகிய எம்மைக் குற்றங்கள் நீக்கி குணங்கொண்டு பாராட்டுவாரன்றி, அவர் இகழ்தல் செய்யார். ஆதலால், எம்மாற் செய்யப்படு நூலையும் அவ்வாறு கைக்கொள்வர். தம்மை உணராதார் தம்மை உடையானுகிய தலைவனையும் உணரார். ஆதலின், அவர் ஒருங்கே கூடிக்கொண்டு தம்மிற்ருமே சேராது முரணுவராதலால், அவ்வாறு முரணும் அவர் எம்மையும் எம்மாற் செய்யப்படும் நூலையும் இகழ்ந்துரைக்கும் புறமொழியை யாம் பொருளாகக்கொள்ளமாட்டேம் என்றவாறு.

(க-ரை.) சித்தாந்தசைவர் எம்மை இகழாராதலின், அவர் எம்மாற்செய்யப்படும் நூலையும் இகழ்தல் செய்யாது கைக்கொள்வர். சித்தாந்தசைவரல்லாதார் உண்மை உணராமையின் இகழ்ந்துரைப்பதைப் பொருளாகக் கொள்ளேம் என்பதாம்.

ஆகலான் எம்மாற் செய்யப்படும் நூலையும் அவ்வாறு கைக்கொள்வரென்பது செய்யுளில் இல்லையாயினும், அது எம்மை உடைமை எமையிகழார் என்றதனுல் குறிப்பாகக் கொள்ளக்கூடிய எச்சமாய் நின்றது.

தன் உணர்வார் என்பதில் ஐ உருபு தொக்குநின்றது. அவ்வுருபை விரித்து; தன்னை உணர்வார் எனப் பொருள்செய்யப்பட்டது. தன்னை என்பது இவ்விடத்தில் தலைவனை என அறிக.

எம்மை உடைமை என்றவிடத்தும், தம்மிற் புணராமை என்றவிடத்தும், இன்னுருபு விரித்து உடைமையின் புணராமையின் என உரைக்க.

தம்மியல்பை உணரார் என்ருவது, தாம் ஒரு பொருள் உண்டென்று உணரார் என்ருவது கூருமல், தம்மை உணரார் எனப் பொதுப்படக் கூறியதனுல், தாம் ஒருபொருள் உண்டென்பதே உணராத உலகாயதரும், தம்மைக்குணிப்பொருள் என்றுணராத புத்தர், சாங்கியர், மாயாவாதிகளும், தம்மை முதல்வனுக்கு உடைமைப் பொருளென்றுணராத ஏனைச் சமயத்தாரும் அடங்குவர். பாஞ்சராத்திரிகளும், சிவாத்துவிதசைவரும், தம்மை இறைவனுக்கு உடைமைப்பொருள் எனக் கொள்ளினும், அவருள் பாஞ்சராத்திரிகள் உடைமைப்பொருளாகிய தமக்கு, சார்ந்ததன் வண்ணமாம் வியாபகம் கொள்ளாது அணுபரிமாணங்கொள்ளுதலானும், உடையானுகிய

நாராயணனே பல அவதாரமாக மாறினன் என அவனுக்குப் பரிணாமங் கூறுதலானும், உடையானல்லாத நாராயணனை உடையானென மயங்கிக் கொள்ளுதலானும், தம்மை உணராதவரேயாவர். சிவாத்துவிதசைவர் உடையானாகிய இறைவனது சிற்சத்தியின் பேதமே பசு, பாசங்களா மெனச் சிற்சத்திக்குப் பரிணாமங் கூறுதலானும், பிறவாற்றானும் அவருந் தம்மை உணராதவரேயாவர்.

குணியாவது குணத்தையுடையது; உயிர்க்குக் குணம் அறிவிச்சை செயல்கள்; புத்தர் முதலியோர் குணமே உயிரென்பர்.

பாஞ்சராத்திரிகள் இறைவனுக்குப் பரிணாமங் கூறுவது எவ்வாறெனின், இருபத்தைந்தாந் தத்துவம் வாசுதேவனென்றும், அவனே பரம் பொருளென்றும், அவனிடத்தினின்றும், கண்ணன், அநிருத்தன், மகரத் துவசன், இரௌகிணேயன் என நால்வர் உலகங்களைப் படைத்தற்பொருட் டுத் தோன்றினரென்றும், இந்த நால்வகை வியூகங்களால் சடமுஞ் சித்து மாகிய எல்லாவுலகமும் படைக்கப்பட்டனவாதலால், எல்லாம் வாசுதேவன் பரிணாமமே என்றுங்கூறுவர்.

சிவாத்துவித சைவர் சிற்சத்திக்குப் பரிணாமங் கொள்ளுதல் எவ்வா றெனின், பசுபாசங்கள் தனித்த பொருளன்றென்றும், சிற்சத்தியின் பரி ணாமமேயென்றும், பதி பசு பாசங்கட்குத் தம்முள் வேற்றுமை, குண குணிகட்குளதாகிய வேற்றுமைபோல, உட்பேதமேயன்றிப் புறப்பேதம் இன்றெனவுங் கூறுவர்.

புறன் என்பது இரட்டுற மொழிதல் என்னும் உத்தியால் புறச்சமயத் தார் இகழ்ந்துரைக்கும் மொழியெனவும், புறங்கூற்றுமொழியெனவும் கொள்ளப்படும். புறங்கூற்றுமொழியாவது புறப்புறம், புறம், அகப்புறம் என்னும் முக்கூற்றுப் புறச்சமயங்களின் வேறான அகச்சமயிகளாகிய பாடாணவாதசைவர்முதலியோர் சித்தாந்தசைவர் முன்னன்றிப் புறத்தே இகழ்ந்து கூறும் மொழி என்க.

இரட்டுற மொழிதலாவது ஒரு சொல்லை இரண்டு பொருள்படக் கூறுதலாம். உதாரணம் உலகம்; அது இரட்டுறமொழிதலால் பிரபஞ்சத் தையும்உயிரையும் உணர்த்தும்.

அவையடக்கம் முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

(நூல்.)

# முதலாவது பொதுவதிகாரம்.

## பிரமாணவியல்.

### முதற் சூத்திரம்.

### சிற்றுரை.

ஈண்டு ஆசிரியர் முதனூலிற் கூறியவாறே சிவாகமங்களி னோதப்படும் ஞானபாதப்பொரு ளெல்லாவற்றையும் பொது உண்மையென்று இரண்டாகத் தொகுத்து, பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியலெென நால்வகைப்படுத்து, பிரமாணவியல் மூன்றுபாதத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கண் உலகிற்கு முதற்கடவுள் சிறப்புவகையா னுண்டென்னும் ஆகமப் பிரமாணத்தை வலியுறுத்துவதாய அநுமானப் பிரமாணங்கூறுகின்றார்.

### விளக்கம்.

ஆராய்ச்சி அறிவால் அறியப்படுவது பொதுவும், அனுபவ அறிவால் அறியப்படுவது உண்மையுமாம். சிவாகமங்களில் ஓதப்படும் ஞானபாதப் பொருளெல்லாவற்றையும் வடமொழிச் சிவஞானபோதத்திற் கூறியவாறே தமிழினும் பொது உண்மையென இரண்டதிகாரங்களாகக் கூறத் தொடங்கி முதற்கட் பொதுவதிகாரங் கூறுகின்றார்.

பொதுவியல்பைப்பற்றிக் கூறும் அதிகாரம் பொதுவதிகாரம்; சிறப்பியல்பைப்பற்றிக் கூறும் அதிகாரம் உண்மையதிகாரம். அளவைநூலார் கூறும் பொதுவியல்பு சிறப்பியல்பு வேறு. ஆகமத்திற்கூறும் பொதுவியல்பு சிறப்பியல்பு வேறு. சொல்லொற்றுமையால் இவ்விரண்டும் ஒன்றெனக் கொள்ளக்கூடாது. அளவைநூலார் கூறும் பொதுவியல்பாவது:—ஒன்றற்குச் சொல்லப்படும் இலக்கணம் பிறவற்றிலுமிருப்பது. சிறப்பியல்பாவது:— ஒன்றற்குச் சொல்லப்படும் இலக்கணம் அதனிடத்தில் மட்டும் இருப்பது. உதாரணமாக, மாமரம் என்ற பொழுது பலா முதலியவற்றினின்று வேறுபிரிக்கப்படினும் தேமா, புளிமா முதலியவற்றிற்கெல்லாம் பொதுவாய் நிற்றலின், மா என்பது பொதுவிலக்கணம். புளிமாமரம் என்ற

பொழுது தேமா முதலியவற்றிற் செல்லாது தனக்கே உரித்தாய் நிற்றலின் புளிமா என்பது சிறப்பிலக்கணம். ஆகமத்திற்கூறும் பொதுவியல்பாவது:— ஒரு பொருளின் தூலநிலையாம்; சிறப்பியல்பாவது:— ஒரு பொருளின் சூக்குமநிலையாம். தூலநிலையாவது:—பிறபொருளோடு சம்பந்தப்பட்டிருத்தல். சூக்குமநிலையாவது:—பிறபொருளோடு சம்பந்தப்படாது தனித்திருத்தல் - தூலநிலையென்றாலும் தடத்த இலக்கணம் என்றாலும் ஒருபொருளே; சூக்குமநிலையென்றாலும் சொரூப இலக்கணம் என்றாலும் ஒருபொருளே. இம்முறைப்படி, பதி பசு பாசங்களின் பொதுவியல்பைக்கூறும் மூன்று சூத்திரங்களும் பொதுவதிகாரம் எனவும், அம்முப்பொருள்களின் சிறப்பியல்பைக்கூறும் பின்னுறு சூத்திரங்களும் உண்மையதிகாரம் எனவும் வகுக்கப்பட்டன. பதிக்குப் பொதுவியல்பு உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்றல்; சிறப்பியல்பு சச்சிதானந்தமாய் நிற்றல். பசுவுக்குப் பொதுவியல்பு கருவி கரணங்களுடன்கூடி நிற்றல்; சிறப்பியல்பு கருவிகளினின்றும் நீங்கி உடனாய் நிற்கும் சிவமாய் நிறறல். பாசத்துக்குப் பொதுவியல்பு காரியரூபமாய் நிற்றல்; சிறபபியல்பு காரணரூபமாய் நிற்றல். பொதுவியல்பு பிரமாணத்தினாலும் இலக்கணத்தினாலும் அறியப்படுமாதலால் பிரமாணவியல், இலக்கணவியல் இரண்டும் பொதுவதிகாரம் எனப்பட்டன. சிறப்பியல்பு சாதனத்தினாலும் பயனினாலும் அறியப்படுமாதலால் சாதனவியல் பயனியல் இரண்டும் உண்மையதிகாரம் எனப்பட்டன. பொதுவியல்பு ஆராய்ச்சியறிவாலும் சிறபபியல்பு அநுபவவறிவாலும் அறிபப்படும் என்றபடியாம்.

ஆராய்ச்சியறிவால் அறிபப்படும் பொதுவியல்பை, பிரமாணவியல் இலக்கணவியலென இரண்டியல்களாக வகுத்துக்கூறத்தொடங்கி, அவற்றுள் பிரமாணவியலை பதி உண்மைக்குப பிரமாணம், பசு உண்மைக்குப் பிரமாணம், பாச உண்மைக்குப் பிரமாணம் என மூன்று சூத்திரங்களாக விரித்து, முதற்கண் காணபபடும் உலகத்திற்குக் கடவுள் உண்டென்றல் பொதுவும் அக்கடவுள் சிவம் என்றல் சிறப்புமாதலால் சிறப்புவகையால் முதற்கடவுளாகிய சிவபெருமான் உண்டென்று கூறும் ஆகமப்பிரமாணத்தை வலியுறுத்துவதாகிய அநுமானப பிரமாணம் இம்முதற் சூத்திரத்தாற் கூறுகின்றார்.

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்.

*கருத்துரை.*

என்பது சூத்திரம். என்னுதலிற்றோவெனின், சங்காரகாரணனுயுள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம் என்பதுணர்த்துதனுதலிற்று.

## சிற்றுரை.

இது சூத்திரக் கருத்துரைக்கின்றது.

(இ-ள்.) நிவிர்த்திகலைமுதலிய பஞ்சகலைகளுட்பட்ட ஐவகைச் சங்காரத்துள் இறுதிக்கண்ணதாகிய மாசங்காரத்தைச் செய்யும் வினைமுதலாயுள்ள முதல்வனையே தனக்கு முதற்கடவுளாக வுடைத்து அவனவளதுவென்று இவ்வாறு சுட்டி யுணரப்படுவ தாய உலகம் என வேதாகமங்களுட் கூறப்படுவதனை அனுமான வளவையா னுணர்த்துதலைக் கருதிற்று இச்சூத்திரம் என்க.

ஏகாரம், (1) இயைபின்மை நீக்குதற்கும், (2) பிறிதினியைபு நீக்கு தற்கும் பொதுவாய்நின்ற பிரிநிலை.

## விளக்கம்.

சூத்திரமும் கருத்துரையும் சூத்திரப்பொருளை வகுத்துக்கூறும் மேற் கோளும் ஏதுவும் திருட்டாந்தமும் ஆசிரியர்தாமே அருளிச்செய்தனர். அவற்றுள், கருத்துரையும் மேற்கோளும் ஏதுவும் வசனநடையாகவும், திருட்டாந்தம் வெண்பாவாகவும் அருளிச்செய்யப்பெற்றிருக்கின்றன. கருத் துரை முதலியன வசனநடையாக இருப்பினும் செய்யுள்போலவே ஆராய்ந் துணரக்கூடிய ஆழ்ந்தகருத்துடையன. ஆதலின், அவற்றிற்கும் செய்யுளுக் குப்போல உரையாசிரியரால் உரை கூறப்படுகின்றது.

இக்கருத்துரை சூத்திரக்கருத்து இதுவென்று சொல்லிற்று.

(இக்கருத்துரையின் பொருள்.) நிவிர்த்திகலை, பிரதிட்டாகலை, வித் தியாகலை, சாந்திகலை, சாந்தியதீதகலை யென்னும் ஐந்துகலைகளினும் தத்து வங்களும் புவனங்களும் உள. அவற்றுள், நிவிர்த்திகலையில் அடங்கிய தத்துவபுவனங்களைச் சங்கரிக்குங் கடவுள் பிரமன்; பிரதிட்டாகலையில் அடங்கிய தத்துவபுவனங்களைச் சங்கரிக்குங் கடவுள் விட்டுணு; வித்தியா கலையில் அடங்கிய தத்துவபுவனங்களைச் சங்கரிக்குங் கடவுள் உருத்திரன்; சாந்திகலையில் அடங்கிய தத்துவபுவனங்களைச் சங்கரிக்குங் கடவுள் அனந்த தேவர்; சாந்தியதீதகலையில் அடங்கிய தத்துவபுவனங்களைச் சங்கரிக்குங் கடவுள் சதாசிவர். இந்த ஐவரும் சிவபெருமான் ஆணையினால் சங்காரத் தொழிலைத் தத்தம் எல்லையளவும் நடாத்துவர். இந்த ஐவகைச் சங்காரத் துள் முடிபாகிய மகாசங்காரத்தைச்செய்யும் சதாசிவரை அதிட்டித்து நிற்கும் கருத்தாவாகிய பரமசிவனையே முதற்கடவுளாக அவன், அவள், அதுவென்று சுட்டியுணரப்படுவதாகிய உலகம் உடைத்து என வேதாகமங் களுட் கூறப்படுவதனை அனுமான அளவையால் உணர்த்துதல் இச்சூத் திரத்தின் கருத்து என்பதாம்.

சதாசிவரல்லாத ஏனை நால்வரும் சிவபெருமானால் நேரே அதிட்டிக்கப்படுதலின்றிச் சிவபெருமானால் அதிட்டிக்கப்படும் சதாசிவர் அனந்ததேவரையும், அவர் உருத்திரரையும், அவ்வுருத்திரர் விட்டுணுவையும், அவ்விட்டுணு பிரமனையும் அதிட்டித்து நடாத்துவர். இது இராஜாவானவன் இராஜப்பிரதிநிதியையும், அப்பிரதிநிதி தனக்கடுத்த உத்தியோகத்தினரையும் அவ்வாறே அவர் ஏனைய உத்தியோகத்தினரையும் முறையே செலுத்தி நடத்துதல் போலக்கொள்க. அதிட்டித்தலாவது நிலைக்களமாகக் கொண்டு செலுத்துதல்; வாயிலாகக்கொண்டு செலுத்துதலெனினுமாம்.

இக்கருத்துரையில் முதலையே என்றதிலுள்ள ஏகாரம், சிவபெருமானுக்கு எவற்றையுஞ் சங்கரிக்குஞ் சம்பந்தம் இல்லை யென்பதை நீக்குதற்கும், ஏனையோர்க்கு எவற்றையுஞ் சங்கரிக்கும் சம்பந்தம் உண்டென்பதை நீக்குதற்கும் பொதுவாய் நின்ற பிரிநிலை.

பஞ்சகலைகளும் சத்திகலையென்றும் சத்தி அதிட்டித்த கலையென்றும் இருவகைப்படும். அவற்றைச் சிவஞானசித்தியார் அ—ம். சூ—ம். கூ—வது செய்யுள் விசேடவுரையிற் கூறியிருக்கின்றமையால் அவ்விடத்துக்காண்க.

நூலாசிரியர் அருளியது.

(ப௪-௳) இதன் பொழிப்பு உரைத்துக் கோள்க.

## சிற்றுரை.

இஃது இவ்வுரைமுகத்துக் கேட்போரால் உரைவகைபற்றிச் செய்துகோடற்பாலதொன்றனை அறிவுறுத்துகின்றது.

(இ-ள்.) இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு முன்னர்க் கண்ணழித்துரைக்கும் பொழிப்புரைபற்றி உரைத்துக்கொள்க என்க.

எனவே, இங்ஙனம் இருவகைப்படும் பொழிப்புரையுட் கண்ணழித்துக் கடாவிடைகளானுரைக்கும் வார்த்திகமாய பொழிப்புரை மாத்திரையே யாமீண்டுரைக்கின்றாம்; பிண்டமாகக்கொண்டுரைப்பதாய பொழிப்புரை இதுபற்றி யுணர்ந்துகோடல் எளிதாகலின், அஃதியாமுரைக்கின்றிலம் என உரைமுகத்து மாணாக்கர்க்கு அறிவுறுத்தவாறாயிற்று.

இஃது, ஏனைச் சூத்திரங்களினும் உய்த்துக்கொண்டுணர்தற்பொருட்டு, முதற்கண் வைக்கப்பட்டது.

## விளக்கம்.

இதன் பொழிப்பு உரைத்துக்கொள்க என்னும் இவ்வாக்கியம் ஆசிரியர் திருவாய்மலர்ந்தருளியதாகும். இது என்ன சொல்லிற்றோ எனின், முன்னர்க்கூறப்படும் மேற்கோள், ஏது, திருட்டாந்தமாகிய உரைவகையினைக்கொண்டு, படிப்பவர்கள் சூத்திரத்திற்குப் பதப்பொருள் செய்து கொள்ளுமாறு அறிவுறுத்துகின்றது.

இவ்வாக்கியத்தின் பொருள். கண்ணழித்துரைக்கும் மேற்கோள் முதலிய உரைவகைபற்றிப் பிண்டப்பொழிப்புரை செய்துகொள்க என்றவாறு.

முன் என்பது இடம்பற்றியுங் காலம்பற்றியும் இருவகைப்படும். இடம்பற்றிவரும் முன் என்பது பின்னுள்ளதையுங் காலம்பற்றிவரும் முன் என்பது மேலுள்ளதையுங் குறிக்கும். ஆதலால் நூலில் முன் என்பதற்குப் பின்னென்பது பொருளாகக் கொள்க.

பிண்டப்பொழிப்பென்பது பிண்டமாகக் கொண்டுரைக்கும் பொழிப்புரை என்பதாம். கண்ணழித்துரை என்பது கணுக்களை அழித்துச்செய்யும் உரையாம். கணுக்கள் என்பது இவ்விடத்து ஒவ்வொரு பதத்தைக் குறிப்பதாகும். பதங்களைப் பிரித்து ஒவ்வொரு முடியையும் ஒவ்வொரு அதிகரணமாக வகுத்துக் கூறுகின்றார்; ஆதலின், அவ்வதிகரணம் கண்ணழித்துரை எனப்பட்டது.

இதன் பொழிப்பு உரைத்துக்கொள்க என்ற இதனால் பிண்டப்பொழிப்புரை, வார்த்திகப்பொழிப்புரை என்னும் இருவகைப்படும் பொழிப்புரைகளுள், கண்ணழித்துச் சங்கை உத்தரங்களால் உரைக்கும் வார்த்திகப்பொழிப்புரைமட்டும் யாம் இவ்விடத்து உரைக்கின்றோம்; பிண்டமாகக் கொண்டுரைக்கும் பொழிப்புரை இவ்வார்த்திகப்பொழிப்புரையைக்கொண்டு உணர்ந்துகொள்ளுதல் எளிதாகலின், அப்பிண்டப் பொழிப்புரையை யாம் உரைக்கின்றிலம் என இதனைப்படிக்கும் மாணாக்கர்கட்கு அறிவுறுத்தியவாறாயிற்று.

ஏனைச் சூத்திரங்களினும் இவ்வாறு உணர்ந்துகொள்ளுதற்பொருட்டு இதன் பொழிப்பு உரைத்துக்கொள்க என்னும் இவ்வாக்கியம் முதற்கண் வைக்கப்பட்டது.

## சிற்றுரை.

இவ்வாறு ஆசிரியர் ஆணைதந்தமையின், கண்ணழித்துரை பற்றிச் சூத்திரத்துக்குப் பதப்பொருள் கூறுதும்.

(அவன் அவள் அது எனும் அவை—புலவர்.) அவன் அவள் அது எனும் அவை—அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இவ்வாறு பகுத்துப் பலவாய்ச் சுட்டியுணரப்படுஞ் சொல்லும் பொருளுமாய இருகூற்றுப் பிரபஞ்சத்தொகுதி,—மூவினைமையின்—தோற்றம் நிலை இறுதி யென்னும் முத்தொழிலுடைமையால்,—தோற்றிய திதியே—ஒருவனாற் றோற்றப்பட்டதாய உள்பொருளேயாம்,—ஒடுங்கி—அது தோன்றுங்கால் தானொடுங்குதற்கு ஏதுவாய்நின்ற கடவுளினின்றும்,—மலத்துளதாம்—சகலமல நீங்காமையால், அது நீங்குதற்பொருட்டு மீளத்தோன்றுவதாம்,—அந்தம் ஆதி—இவ்வாறாகலின், சங்காரத் தொழிலைச் செய்யுங் கடவுளை உலகிற்கு முதற்கடவுள்; ஏனையோர் அன்னரல்லர் எனக்கூறுவர் அளவை நூலுணர்ந்தோர் என்க.

அவை—தொகுதி; சுட்டுப்பெயரெனக்கொள்ளின், உளவெனப்பிரித்துப் பயனிலையாக்கித், தாமென்பதனை அசைநிலையாக வைத்துரைத்து, ஆக்கச்சொல் வருவித்துக்கொள்க.

வினைமை வினையுடைமை.

தோன்றியவென்னாது தோற்றியவெனப் பிறவினைவாய்பாட்டாலோதுதலின், அதற்குரிய வினைமுதல் அவாய்நிலையான் வந்தது. தோற்றியவென்னும் பெயரெச்சந் திதியென்னுஞ் செயப்படுபொருட்பெயர்கொண்டது. திதியா யொருவனாற் றோற்றப்பட்டதென்பார் தோற்றிய திதி யென்றார். திதியென்றது ஈண்டு உள் பொருளென்னுந் துணையாய் நின்றது.

மூவினை யுடைமையான் உள் பொருளாதலும், அவ்விரண்டுமுடைமையான் நிமித்தகாரணனை யுடைத்தாதலுந் துணியப்படுமென்பார், மூவினைமையிற் றோற்றிய திதியே யென்றார்.

ஏகாரந் தேற்றம்; ஒடுங்கியென்பது பெயர். உருபுகள் தொக்கு நின்றன.

அந்தத்தைச் செய்யுங் கடவுளை அந்தமென்றது உபசாரம்.

காணப்பட்ட வுலகாற் காணப்படாத கடவுட்குண்மை கூற வேண்டுதலின், தோற்றிய திதியே யெனவும், ஒடுங்கியுளதாமெனவும், உலகின்மேல்வைத்துக் கூறினார்; கருத்துரையுட் கூறியதும் அது நோக்கி.

## விளக்கம்.

(சூத்திரத்தின் பொழிப்புரை.) அவன், அவள், அதுவென்று கூறும் சொல்லும் அச்சொல்லுக்குரிய பொருளாய் உரைக்கப்படும் பொருளுமாகச் சொற்பிரபஞ்சம், பொருட்பிரபஞ்சம் எனப் பிரபஞ்சம் இருதிறப்படும். அவ்விருகூற்றுப் பிரபஞ்சமும் தோற்றுதல், நிலைத்தல், ஒடுங்குதல் என்னும் முத்தொழிற்படக் காண்கின்றமையால் அறிவில்லாத சடமாகிய அப்பிரபஞ்சத்தைத் தொழிற்படுத்துதற்கு ஒரு கருத்தாவேண்டப்படும். படவே, அக்கருத்தாவினால் ஒடுக்கப்பட்ட பிரபஞ்சமே மீளத்தோற்றுவிக்கப்பெறுமெனப் பிரபஞ்சம் என்றும் உள் பொருளாதல் துணியப்படும். அவன் ஒடுக்கிய பிரபஞ்சத்தை ஆன்மாக்களின் மல நிவிர்த்தியின் பொருட்டு மீளத்தோற்றுவிப்பன்; ஆதலால், எவற்றையுந் தன்னுள் ஒடுக்கிவைத்திருக்குஞ் சுதந்தரமுடைய அக்கடவுளே மீளத்தோற்றுவித்தலுஞ் செய்யுமாதலின் சங்காரக் கடவுளே உலகிற்கு முதற் கடவுளாகும் அக்கடவுள் அல்லாத பிரம, விட்டுணு முதலிய ஏனையோர் தத்தம் எல்லையளவும் கடவுளாவரேயன்றி முதற்கடவுளாகமாட்டார். இவ்வாறு பிரமாண நூல் உணர்ந்தோர் கூறுவர் என்றவாறு.

அவனவளது வெனுமவை என்பதில் அவையென்பது, அவன், அவள் அதுவென்னும் மூன்றனைச்சுட்டாது, தொகுதியைக் குறித்து நின்றது; ஆகையால், அவையென்பதற்குப் பிரபஞ்சத்தொகுதி எனப் பதவுரை செய்யப்பட்டது. தொகுதியென்பது ஒருகூட்டம்; ஆகவே, அவன், அவள், அதுவெனும் கூட்டம் என்பதாம். இவ்வாறு கொள்ளாமல் அவை என்பதை அவனவளது வெனும் மூன்றைக் குறிக்கும் சுட்டுப் பெயரெனக் கொள்ளின் மலத்துளதாம் என ஒருமை வாக்கியங்கொண்டுமுடியாது. அவ்வாறு சுட்டுப்பெயராகக்கொள்ளுங்கால் மலத்து உள எனப் பிரித்து அவை என்பதை எழுவாயாகவும், உளவென்பதைப் பயனிலையாகவும் ஆக்கி, உளதாம் என்பதிலுள்ள தாம் என்பதனை அசை நிலையாக வைத்துரைத்து, ஆம் என்னும் ஆக்கச்சொல் வருவித்து அவை உளவாம் எனக்கொள்க.

மூவினைமை யென்பதில் வினைமை என்பது வினையுடைமை என்னும் பொருளைக் குறிக்கும். தோன்றிய என்று தன்வினைவாய்பாட்டாற் கூறாது, தோற்றியவெனப் பிறவினைவாய்பாட்டாற் கூறினமையின் அப்பிறவினைக்குரிய வினைமுதலாகிய கருத்தா என்பது அவாய்நிலையான் வந்தது. தன்வினை என்பது தானே தொழிற்படுதல்; பிறவினை என்பது பிறரால் தொழிற்படுதல். அவாய்நிலை என்பது ஒருபதம் தன் கருத்தை முடிப்பதற்குப் பிறிதொரு பதத்தை அவாவிநிற்றல். இவ்விடத்துத் தோற்றிய என்னும் பதம் ஒருவனால் என்னும் பிறிதொரு பதத்தை அவாவிநின்றவாறுகாண்க. தோற்றிய என்பதின் கடையிலுள்ள அகரம் பெய

ரெச்சமாதலால், அவ்வெச்சம் திதி என்னும் செயப்படுபொருட்பெயர் கொண்டது. தோன்றியதிதி என்று கூறாது தோற்றிய திதி என்றதனுல் திதி செயப்படுபொருளாயினமை யறிக. உள்பொருளாய் ஒருவனுல் தோற்றப்பட்டதென்று கூறவேண்டியே தோற்றிய திதி என்றார். திதி என்றது காத்தற்பொருளதாயினும் இவ்விடத்துக் காத்தற்குரிய உள்பொருளைக் குறித்து நின்றது.

அவன், அவள், அதுவெனும் பிரபஞ்சம் மூவினைமை உடைமையால் உள்பொருளாதலும், மூவினையினையும் உள்பொருளாதலையும் உடைமையினுல் உள்பொருள் முத்தொழிற்படுதற்கு ஒருகருத்தாவையின்றி முடியாதாதலின் நிமித்தகாரணனை உடைத்தாதலும் துணியப்படுமெனறு கூறவேண்டி மூவினைமையிற் ரோற்றிய திதியே என்றார். தோற்றிய திதி என்றதனுல் தானே தோன்றுமையினையும் உள்பொருளாதலையும், மூவினைமையின் என்றதனுல் வினைமுதலாகிய வேறெருரு கருத்தாவால் தோற்றப்பட்டதென்பதனையும் உணர்த்தியவாறும்.

தோற்றிய திதியே என்பதிலுள்ள ஏகாரம் என்றும் உள்பொருளே என்னும் பொருளைத்தருதலின் தேற்றம்.

ஒடுங்கி என்பது வினையெச்சமன்று; பிரபஞ்சம் ஒடுங்குதற்கு ஆதாரமாய்நின்ற கடவுளைக்குறித்தலின் பெயர். இது வீங்கி என்பது வீங்குதற்கு ஆதாரமாய் நின்றவனைக் குறிப்பதுபோலாம்.

ஒடுங்கி என்பதில் இன் உருபும், மலத்து என்பதில் ஆல் உருபும் தொக்குநின்றன. தொக்குநிற்றலாவது வெளிப்படாது அடங்கி நிற்றல். தொக்குநிற்கும் அவ்வுருபுகளை விரித்து ஒடுங்கியின் (அதாவது) கடவுளின் என்றும், மலத்தால் (அதாவது) மலம் நீங்காமையால் என்றும் பதவுரை செய்யப்பட்டது.

அந்தமில்லாத கடவுளை அந்தமென்று கூறியது ஏனையவற்றிற்கு அந்தத்தைச் செய்தல்பற்றி வந்த உபசாரம்.

இம்முதற்சூத்திரம் கடவுள் உண்டென்றுகூறுதற் கெழுந்தது. கடவுள் கண்ணினுலும் மனத்தினுலுங் காணக்கூடிய பொருளன்று. இவ்விரண்டினுலுங் காணக்கூடாத பொருள் உண்டென்று சாதிப்பது எவ்வாறெனின், பிரத்தியட்சத்தால் அறியக்கூடாத ஒன்றை நம்பப்படத்தக்கவன் வாக்கியத்தாலும் அனுமானத்தாலும் அறியலாம். உதாரணமாகக் குடங்காணப்பட்டுச் செய்த குலாலன் காணப்படாதபொழுது நம்பப்படத்தக்கவன் வாக்காலும், மண் சடப் பொருளாதலால் அம்மண் தானே குடமாகமாட்டாது, மண்ணைக் குடமாகச்செய்தவன் ஒருவன் இருக்கவேண்டுமென்னும் அனுமானத்தாலும் குலாலன் உண்டென்று அறியலாம்; அதுபோல, பிரபஞ்சங்

காணப்பட்டுக் கடவுள் காணப்படாவிடினும் ஆத்தவாக்காகிய ஆகமப் பிரமாணத்தாலும் அனுமானப்பிரமாணத்தாலும் உண்டென்று அறிதல் கூடும். அவ்விருபிரமாணங்களுள், ஆகமப் பிரமாணத்தைச் சமயவாதிகளனைவரும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள்; ஆதலின், யாவரும் ஒப்புக்கொள்ளும்படியான அனுமானப்பிரமாணத்தைக்கொண்டு கடவுள் உண்டென்று சாதிக்கிறார். எவ்வாறெனின், காணப்படும் பிரபஞ்சம் சடமாதலானும், தோற்றுதல், இருத்தல், ஒடுங்குதல் என்னும் முத்தொழிற்படுதலானும், அம்முத்தொழில்களுள் தோற்றுதல் இருத்தல் என்னும் இரு தொழில்களால் தூலமாய் வெளிப்பட்டும் ஒடுங்குதல் என்னுந்தொழிலால் சூக்குமமாய் அடங்கியும் என்றும் உள்பொருளாதலானும், அறிவில்லாத சடமாகிய பிரபஞ்சம் தானே சூக்குமரூபமாய் ஒடுங்கவும் தூலரூபமாய் வெளிப்படவும் முடியாதாதலானும், உள்பொருளாகிய பிரபஞ்சம் தான் ஒடுங்குதற்கு நிலைக்களமான கடவுளில் ஒடுங்கி அக்கடவுளால் மீளத்தோன்றும்; ஆதலால், காணப்பட்ட உலகத்தைக்கொண்டு காணப்படாத கடவுள் உண்டென்று கூறினாரென்க. இவ்வாறு உலகத்தைக்கொண்டு கடவுளுண்மை கூறவேண்டுதலினால் தோற்றிய திதியே என உலகத்தை முன்னரும் ஒடுங்கி உளதாம் எனக் கடவுளைப் பின்னரும் வைத்துக்கூறினார். கருத்துரையில் கடவுளை முதலாக உடைத்து இவ்வுலகம் எனக்கூறியதும் காணப்பட்ட உலகத்தைகொண்டு கடவுளை உணர்த்துதலை நோக்கியேயாம். இவ்வாறு கூறினாரேனும் உலகிற்கு முதல் கடவுள் என்பது கருத்தாகக்கொள்ள வேண்டும். உலகு கடவுளை முதலாக உடைத்து என்பதற்கும் உலகிற்கு முதல் கடவுள் என்பதற்கும் வேற்றுமை என்னையோவெனின், கூறுதும். உடைத்து என்றபொழுது உடைமைப்பொருளில் கடவுள் நின்றார். முதல் என்றபொழுது தலைமைப்பொருளில் கடவுள் நின்றார், இதுவே வேற்றுமையாம். உடைமை விசேடணம்; தலைமை விசேடியம். உதாரணமாக, செம்மையை உடையது தாமரை என்றவிடத்து, செம்மை விசேடணம்; தாமரை விசேடியம், செந்தாமரை என்றவிடத்து விசிட்டம். செம்மை தாமரையை உடையது என்பதுபோல, உலகம் கடவுளை உடைத்து என்று கூறுதல்; செம்மைக்குத் தாமரை முதல் என்றதுபோல உலகிற்கு கடவுள் முதல் என்று கூறுதல்; செம்மை தாமரையை உடையதெனக்கூறினும், செம்மைக்குத் தாமரை முதலென்பதே பொருளாம். விசேடணம் விசேடியத்திலிருக்குமன்றி விசேடியம் விசேடணத்திலிராது. ஆதலால், கடவுளை விசேடணமாகவும் உலகை விசேடியமாகவும் கூறினாரேனும் உலகை விசேடணமாகவும் கடவுளை விசேடியமாகவுங் கொள்ளல் வேண்டும்.

இக்கருத்துப்பற்றியே "ஆதிபகவன் முதற்றே உலகு என உலகின்மேல் வைத்துக் கூறினாரேனும் உலகிற்கு முதல் ஆதிபகவன் என்பது கருத்தாகக்கொள்க" எனத் திருக்குறளுக்கு உரைகண்ட பரிமேலழகரும் கூறுவாராயினர்.

## சிற்றுரை.

இச்சூத்திரத்துள் அவனவளது வெனுமவை மூவினைமையின் என்பது ஓரதிகரணம்; தோற்றிய திதியே யொடுங்கி யுளதாம் என்பது மூன்றதிகரணத்தை யுள்ளடக்கிநிற்பதோரதிகரணம்; அந்தமாதி யென்மனார் புலவர் என்பது ஓரதிகரணம்; ஆக முக்கூற்றது இச்சூத்திரமென்றுணர்க. இம்மூன்றும் முறையே ஒன்றற்கொன்றேதுவும் பயனுமாய் ஒருபொருண்மேல் வருதலின், ஒரு சூத்திரத்தாற் கூறினார். தன்னாற் கூறப்படும் பொருளும், அதன்கணையப்பாடும், அதற்குப் பிறர்கூறும் பக்கமும், அதனை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபும், இயைபுமென்னும் இவற்றது நிலைக்களம் ஈண்டதிகரணமெனப்படும்.

## விளக்கம்.

இச்சூத்திரத்துள் 'அவனவளதுவென்பது முதல், ஆக முக்கூற்றது இச்சூத்திர மென்றுணர்க' என்பதுவரை வெளிப்படை. இம்மூன்று கூற்றையும் மூன்று சூத்திரமாகக் கூறாது ஒரு சூத்திரமாகக்கூறியதன் கருத்தென்னையோவெனின், இம்மூன்றுகூறும் முறையே ஒன்றற்கொன்று ஏதுவும் பயனுமாய் ஒருபொருண்மேல் வருதலினால் ஒருசூத்திரத்தாற் கூறினார். அதாவது அவனவளது வெனுமவை மூவினைமையின் என்பது ஏது; தோற்றிய திதியே ஒடுங்கி உளதாம் என்பது பயன்; அப்பயன் தோற்றிய திதியே ஒடுங்கி உளதாம் ஆதலால் என ஏதுவாகி, அந்தமாதி யென்மனார் புலவர் என்பது பயனாக நின்றவாறறிக.

அதிகரணம் என்பதும் கூறு என்பதும் ஒரு பொருட்சொற்கள்; இவ்விடத்துத் தன்னாற்கூறப்படும்பொருளும் அப்பொருளின்கண் ஐயப்பாடும், அந்த ஐயப்பாட்டின்கண் பிறர்கூறும் பக்கமும், பிறர்பக்ஷமாகிய அதனை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத்துணிபும், அத்துணிபுக்கு எடுத்துக்காட்டும் இயைபும் என்னும் இவ்வைந்தினது நிலைக்களம் அதிகரணமாம். அவற்றுள் தன்னாற் கூறப்படும் பொருள் என்பது மேற்கோள்; ஐயப்பாடும் பிறர் கூறும் பக்கமும் மேற்கோளில் அடங்குவன. பிறர்பக்கத்தை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத்துணிபு ஏதுவாம்; இயைபு திருட்டாந்தமாம்; இவ்வாறு ஒவ்வொரு அதிகரணத்துள்ளும் ஐந்துறுப்புக்களும் அமைந்திருத்தல் அவ்வவ்விடங்களில் விளக்கப்படும்.

---

# முதலதிகரணம்.

*உலகம் முத்தொழில் உடையது எனக்கூறும்
மேற்கோள்.

ஈண்டு உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப் பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்தென்றது. (வா-3-அ)

## சிற்றுரை.

என்பது மேற்கோள் எ—னின், மூவினையுடைத்தோ அன்றோவென்னும் ஐயப்பாட்டின்கண் நித்தமாய்க்காணப்படும் பிரபஞ்சத்தை மூவினையுடைத்தென்றல் பொருந்தாது என மீமாஞ்சகரும் உலகாயதருங் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து,மேற்கோடனுதலிற்று.

(இ-ள்.) வெளிப்படை.

## சுப்பிரமணியதேசிகர்செய்த உரை.

இ—ள். ஈண்டு - இம்மூன்று அதிகாணங்களின்வைத்து இம்முதல் அதிகாணத்துள்,—ஒருவன் ஒருத்தி ஒன்றென்று உளதாய்ச் சுட்டப்பட்ட பிரபஞ்சம்—ஒருவனென்றும் ஒருத்தியென்றும் ஒன்றென்றும் இவ்வாறு அவயவப்பகுப்புடைத்தாயும் பலவேறு வகைத்தாய்ச் சடமாயும் முயற்கோடு முதலியனபோலத் திரிபையங்களானன்றி மெய்யாகச் சுட்டியறியப்பட்ட பிரபஞ்சம் இம்மூன்று ஏதுவானும்,—உற்பத்தி திதி நாசம் உடைத்தென்றது—தோன்றிநின்று அழிதலையுடைத்து என்க.

ஒருவனென்றும் ஒருத்தியென்றும் ஒன்றென்றும் இவ்வாறு அவயவப்பகுப்புடைத்தாயும், பலவேறு வகைத்தாய்ச் சடமாயுஞ், சுட்டியறியப்படுவதாயுமிருத்தலின், இம்மூன்றேதுவானும் பிரபஞ்சந் தோன்றி நின்றழியுமென்பது துணியப்படுமென்பார், உளதாயொருவ னொருத்தி யொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சமெனவுடம்பொடுபுணர்த்தோதினர்.

உளதாய்ச்சுட்டப்பட்ட வெனவிியையும். உளதாகச்சுட்டப்படுதல் முயற்கோடு முதலியனபோலத் திரிபையங்களானன்றி மெய்யாகச்சுட்டப்படுதல்.

---

* இதுமுதற் கூறப்படும் அவதாரிகைகளெல்லாம் விளக்கத்தைச் சார்ந்தன.

## விளக்கம்.

இம்மேற்கோள் சூத்திரத்தில் உள்ள அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின் என்ற முதற்கூற்றைப் பதச்சேதஞ்செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்னசொல்லிற்றோ எனின், மூவினையுடைமை என்பதில் பிரபஞ்சம் உற்பத்தி, திதி, நாசமென்னும் மூன்றுதொழிலையுடையதோ அன்றோ என்பது ஐயப்பாடு; இவ்வையப்பாட்டின்கண், நித்தமாய்க் காணப்படும் பிரபஞ்சத்தை முத்தொழிலுடையது என்று கூறுதல் பொருந்தாது என்பது பிறர்கூறும் பக்கம். இவ்வாறு கூறுபவர் மீமாஞ்சகரும் உலகாயதருமாம். இவர்கூற்றை ஆசிரியர்தாமே ஆசங்கித்துக்கொண்டு அக்கூற்றை மறுக்கும்முறையில் சூத்திரத்தின் முதற்கூற்றைப் பதச்சேதஞ்செய்து பிரபஞ்சம் முத்தொழிலுடையதெனக் கூறியவாறும்.

(இம்மேற்கோளின் பொருள்.) இச்சூத்திரத்திற்கூறப்படும் மூன்று அதிகாரணங்களுள், இம்முதல் அதிகாரணத்தில் ஒருவனென்றும் ஒருத்தியென்றும் ஒன்றென்றும் பகுக்கப்படுகின்ற அவயவப்பகுப்புடைத்தாயும், அப்பகுப்பு ஒவ்வொன்றும் வேறுவேறாதலின் பல்வேறு வகையாய்ச் சடமாயும், முயற்கொம்பு முதலியன சந்தேக விபரீதங்களாற் சுட்டியறியப்படுதல் போலன்றி உண்மையாய்ச் சுட்டி அறியப்படுவதாயும் இருத்தலால், இம்மூன்று ஏதுவானும் பிரபஞ்சம் தோன்றிநின்று அழியுந்தன்மையுடையது என்றவாறு.

அவயவப்பகுப்பு உடையதாயும் பல்வேறுவகைத்தாய்ச் சடமாயுஞ் சுட்டி அறியப்படுவதாயும் இருத்தலின், இம்மூன்றேதுக்களானும், பிரபஞ்சம் தோன்றிநின்று அழியுமென்பது துணியப்படுமெனக் கூறவேண்டி, உளதாய்ச் சுட்டப்பட்ட பிரபஞ்சம் எனக்கூறாது, ஒருவன் ஒருத்தி ஒன்று என்று உளதாய்ச் சுட்டப்பட்ட பிரபஞ்சம் என உடம்பொடுபுணர்த்தோதினர்.

உடம்பொடுபுணர்த்தலென்பது ஓர் உத்தி. அதாவது, ஒருவாக்கியத்தில் அதற்குரிய செம்பொருளேயன்றிக் குறிப்பாற் பிறிதொருபொருளைப் புணர்த்திவைத்தல். வாக்கியம் உடம்பும் பொருள் உயிருமாம். இவ்விடத்தில், ஒருவன் ஒருத்தி ஒன்று என்றவாக்கியமாகிய உடம்பொடு ஏதுப்பொருளைப் புணர்த்திக் கூறியிருத்தலால் உடம்பொடுபுணர்த்தலாயிற்று.

உளதாய் என்னும் வாக்கியத்தைச் சுட்டப்பட்ட என்னும் வாக்கியத்தின்மேல் வைத்து ஒருவன் ஒருத்தி ஒன்றென்று உளதாய்ச் சுட்டப்பட்ட எனக்கொண்டு கூட்டுக.

உளதாகச் சுட்டப்படுதலாவது முயற்கோடு, கயிற்றரவு, கிளிஞ்சில் வெள்ளி முதலியனபோலத் திரிபு ஐயங்களாலன்றி மெய்யாகச் சுட்டப் படுதல்.

திரிபு எனினும் விபரீதமெனினும் ஒக்கும். அதாவது ஒன்றை மற் ரென்றாக அறிதல். ஐயமாவது அதுவோ இதுவோ எனச் சந்தேகித் தல். முயலினிடத்துக் கோடு இல்லையாகவும் செவியைக்கண்டு கோடுள்ள தாகக் காண்டல் விபரீதம். கயிற்றினிடத்தில் பாம்பில்லையாகவும் மாலைப் பொழுதில் மயக்கத்தால் வளைந்திருத்தல் முதலியவற்றைக்கண்டு இது கயிறோ பாம்போ என வெண்ணுதல் சந்தேகம். இவ்வாறே கிளிஞ்சில் வெள்ளி முதலியவற்றினிடத்துங் காண்க. கயிற்றைப் பாம்பெனக் காண்டலும் விபரீதம். விபரீதமாய்க் காண்பதும் சந்தேகமாய்க் காண்ப தும் ஆராய்ந்தபொழுது இல்லையாய் முடியும். பிரபஞ்சம் அவ்வாறு விப ரீதமாதலும் சந்தேகமாதலுமின்றி உள்ளவாறுணரப்படுதலின் உளதாய்ச் சுட்டப்பட்ட பிரபஞ்சம் எனப்பட்டது. முயற்கோடு கயிற்றரவு முதலியன உண்மையிலில்லையாயினும் மயக்கத்தாற் காணப்பட்டுக் கண்டபொழுது துன்பமுற்றுப் பின் ஆராய்ந்தபொழுது முயலினிடத்துக் கோடும் கயிற்றி னிடத்துப் பாம்பும் இல்லையென்றறிந்து துன்பம் நீங்கி இன்புறுதல் போலக் கடவுளிடத்துப் பிரபஞ்சம் அறியாமையினாற் காணப்பட்டு அவ் வாறு காணப்படுதலினாற் றுன்பமுண்டாகும்; அறிந்த பின்னர்ப் பிரபஞ்சங் காணப்படாதொழியும்; ஒழியவே, துன்பம் நீங்கி இன்பம் அடைதல் கூடும் எனக் கொள்ளலாகாதோ எனின், ஆகாது; எதனாலெனின், கயிற்றினிடத்து மயக்கத்தினால் பாம்பைக்கண்டபொழுது அப்பாம்பின் வடிவங் கண்டவனைத் துன்பமடையச் செய்வதேயன்றி ஆராயாது நெருங் கினகாலத்தும் பாம்புத் தன்மையோடு தொழிற்படுமாறில்லை; பிரபஞ்சமோ தொழிற்பாட்டுக்கு அகப்படுகின்றது; ஆதலால் கயிற்றரவு முதலியன போலப் பிரபஞ்சத்தைக் கொள்ளுதல் கூடாது. கனவில் பாம்பு முதலியன தொழிற்படக்கண்டும் விழித்தபின் இல்லாமற்போவதுபோல அஞ்ஞான காலத்திற் றொழிற்படும் பிரபஞ்சம் ஞானகாலத்தில் இல்லாமற்போகு மென்று கொள்ளலாகாதோவெனின், ஆகாது; எதனாலெனின், சில கருவி கள் இல்லாதநிலை சொப்பனம்; எல்லாக்கருவிகளோடுங் கூடியநிலை சாக் கிரம்; சொப்பனத்திற் காண்பவற்றைச் சாக்கிரத்திற் காண்பதற்குத் திருட்டாந்தமாகக் கூறுதல் பொருந்தாது. கனவுமுதலிய உவமைகளை இந்நூலினும் பிறநூல்களினும் எடுத்தாண்டிருப்பதன் கருத்தென்னை யெனின், பிரபஞ்சம் மாறுதலடையும் முறையை யுணர்த்துதற்பொருட்டே யாம். இன்னும் இதுபற்றிய சங்கை உத்தரங்களெல்லாம் முன்னர் ஆறாஞ் சூத்திர முதலதிகரணத்து வெண்பாவினும் மற்றும் வருமிடங்களினுங் கூறப்படுமாதலின் அவ்விடங்களிற் காண்க.

பிரபஞ்சம் முத்தொழிற்படுமென்பதற்கு மூன்றேதுக் கூறுவானே னெனின், கூறுதும். அவயவப் பகுப்புடைத்தாயிருத்தலினால் பிரபஞ்சம் முத்தொழிலுடைத்து என்று கூறின் பிரபஞ்சம் என்னுஞ் சொல் உயிரை யும் உலகையுங் குறிக்குமாதலானும் உயிராகிய சேதனப்பிரபஞ்சம் வேறு வேறாதலானும் அச்சேதனப்பிரபஞ்சமுந் தோன்றி நின்றழியுமெனக் கொள்ளவரும்; அவ்வாறு கொள்ளின் சித்துப்பொருள் முத்தொழிற் படாமையால் உயிர் உற்பத்தி உடையதல்லவெனக்கூறும் நூல்களோடு முரணும்; ஆதலின் உயிரை நீக்குவதற்காக அவயவப்பகுப்புடைத் தென்றதோடு நில்லாது பல்வேறுவகைத்தாய்ச் சடமாயென்னும் இரண் டாவது ஏதுவும் சேர்க்கப்பட்டது. அவயவப்பகுப்புடைத்தாயும் பல்வேறு வகைத்தாய்ச் சடமாயும் உள்ள பிரபஞ்சந் தோன்றி நின்றழியுமென்று கூறின், ஆணவம் கன்மம் சுத்தமாயை அசுத்தமாயை என்னுங் காரணப் பிரபஞ்சமாகிய பாசமும் அவயவப்பகுப்புடைத்தாயும் பல்வேறுவகைத் தாய்ச் சடமாயுமிருத்தலின் அதுவுந்தோன்றி நின்றழியுமெனக் கொள்ள வரும்; அவ்வாறு கொள்ளின் ஆணவமுதலியன சுட்டியறியப்படாமையால் உற்பத்தி இல்லாதவை எனக்கூறும் நூல்களோடு முரணும். ஆதலின் ஆணவ முதலியவற்றையும் நீக்குவதற்காகப் பல்வேறுவகைத்தாய்ச் சடமா யென்றதோடமையாது சுட்டி அறியப்படுவதாயென்னும் மூன்றாவது ஏது வுஞ் சேர்க்கப்பட்டது. உயிரும் ஆணவமுதலியனவுஞ் சுட்டி அறியப்படா வாம்; ஆயினும், உயிர் அவயவப்பகுப்புடைத்தாயும் ஆணவமுதலிய காரண வசேதனப் பிரபஞ்சம் அவயவப்பகுப்புடைத்தாயும் பல்வேறுவகைத்தாய்ச் சடமாயும் இருக்கும். அவயவப்பகுப்புடைத்தாயும் பல்வேறுவகைத்தாய்ச் சடமாயும் சுட்டி அறியப்படுவதாயுமிருப்பது காரியமாகிய அசேதனப் பிர பஞ்சமே. இப்பிரபஞ்சத்தை யுணர்த்துதற்கு மூன்றேதுக்களும் வேண்டப் பட்டன. அவ்வாறாயின், சுட்டப்பட்ட பிரபஞ்சம் முத்தொழிலுடைத்து என்றாற்போதாதோ எனின், அவ்வாறு கூறின் உயிரினாற் காரியப்படும் பிரபஞ்சத்தையுங் குறிக்குமாதலால் அதனை விலக்குதற்கு ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் என்றார். அவயவப்பகுப்பு என்பது இவ்விடத்தில் ஒரு பொருளின் ஏகதேசமன்று, வேறு வேறாதலாம். வேறு வேறாதலும் பல்வேறுவகைத்தாதலும் வேறு. எவ்வாறெனின், அவன் என்பதும் அவள் என்பதும் அதுவென்பதும் வேறு வேறாதல்; அவற்றுள் ஒவ்வொன்றும் பலவாதல் பல்வேறு வகைத்தாதல், இவ்வாறு உயிரினி டத்து வேறு வேறாதல் மட்டும் உண்டு. ஆணவமுதலிய காரண அசே தனப் பிரபஞ்சத்தினிடத்து வேறு வேறாதலும், வேறு வேறுயுள்ள ஆண வம் கன்மம் மாயைகள் ஒவ்வொரு உயிரினிடத்தும் வேறு வேறாய்ப் பல்வகைத்தாதலும் சடமாதலும் உளவாம். பல்வகைத்தாதலென்றதனால் பொருள் பலவென்று கொள்ளக்கூடாது. செயல்பற்றிப் பலவகைத்தாத லென்று கொள்ளல்வேண்டும்.

மூன்று ஏதுக்களை உடைய இவ்வனுமானத்தில் ஆடைபோலும் என்னுந் திருட்டாந்தம் உரைத்துக்கொள்க. ஆகவே பிரபஞ்சம் முத்தொழிலுடைத்து; அவயவப்பகுப்புஞ் சடமுஞ் சுட்டியறியப்படுதலும் உடைமையால்; முத்தொழிற்படும் ஆடைபோலும் என அனுமானப் பிரமாணத்தை முடித்துக்கொள்க. ஆடையில், நூல்கள் அவயவம்; அவை ஒவ்வொன்றும் வேறு வேறுதல் பல்வேறுவகை; சடமாதலும் சுட்டியறியப்படுதலும் வெளிப்படை. இவ்வனுமானத்திற் கூறிய திருட்டாந்தமாகிய ஆடையும் பிரபஞ்சமாதலின், இம்மலை தீயுடைத்து; புகையுடைமையால், அடுக்களை போலெனக் கூறாது அம்மலைபோல் எனப்பக்கத்தையே திருட்டாந்தமாகக் கூறுதல்போன்ற தருக்கவழுவாகாதோ எனின், ஆகாது; எதனுலெனின் காரியப் பிரபஞ்சம் இறைவனுற் காரியப்படும் பிரபஞ்சமும் உயிராற் காரியப்படும் பிரபஞ்சமுமென இருவகைப்படும். அவற்றுள் இறைவனுற் காரியப்படும் பிரபஞ்சம் நிலம், நீர், தீ, காற்று, ஆகாயங்களும் இவற்றின் கூறுகிய உடல், மலை, மரம், கடல், இரும்பு, பொன் முதலாயினவுமாம். இப்பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் மாயையாம். உயிராற் காரியப்படும் பிரபஞ்சமாவது குடம், மாடம், மாளிகை, கோபுரம், ஆடை, ஏரி, கால், ஆபரணம் முதலியனவாம். இப்பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் இறைவனுலுண்டாகிய காரியப்பிரபஞ்சமாம். ஆகவே முத்தொழிலுடைத்து என்று கூறியது இறைவனுற் காரியப்படும் பிரபஞ்சமும், திருட்டாந்தமாகக்கூறிய ஆடை உயிராற் காரியப்படும் பிரபஞ்சமு மாதலால் தருக்கவழுவாகாமை யறிக. இதனுல் பிரபஞ்சம், சேதனம் அசேதனம் என இரண்டாய், அசேதனம், காரணம் காரியம் என இரண்டாய், காரியம், இறைவன்காரியம் உயிர்க்காரியம் என இரண்டாய் விரியுமாறு அறிக. இக்கருத்துப்பற்றியே சூத்திரத்தில் பிரபஞ்சம் மூவினைமையால் எனப்பொதுப்படக் கூறாது அவன் அவள் அது வெனச் சிறப்பாகப் பிரித்துக் கூறினுர். அவன் என்பது அவன் என்று சுட்டப்படும் உடலையும், அவள் என்பது அவள் என்று சுட்டப்படும் உடலையும், அதுவென்பது நிலம் நீர் முதலியவற்றையும் மிருகமுதலியவற்றின் உடல்களையுங் குறிக்கும். அதுவென்பது உயிரால் உண்டுபண்ணப்படும் பிரபஞ்சத்தையுங் குறியாதோவெனின், அவன் அவள் என்பன உயிர்களின் உயர்திணையைக் குறித்தவாறுபோல அது என்பது உயிருள்ளனவும் இல்லனவுமாய இறைவன் காரியமாகிய இழிந்த திணையையே குறிக்குமாதலினுல் உயிரின்காரியத்தைக் குறியாதெனவறிக.

இம்மேற்கோளுக்கு ஏது வேறுகூறியிருக்கவும், அதனின் வேறாய ஏதுவை மேற்கோளில் உடம்பொடுபுணர்த்திக்கூறிய தென்னையெனின், இங்கேகூறிய ஏது அநுமானப்பிரமாணத்தால் மேற்கோளைச் சாதித்தற்கும், பின்னர்க் கூறும் ஏது பிரத்தியட்சப்பிரமாணத்தால் மேற்கோளைச் சாதித்தற்குங்கூறியவாறென அறிக.

உலகம் முத்தொழிற்படும் என்பதற்குக்காட்டும்

ஏது.

## தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடத்தலின்.

## சிற்றுரை.

எ - து ஏது எ-னின், காட்சியளவைக்கு எய்தாதுரைப்பன வெல்லாம் பிரமாணமாகாவென உலகாயதர் கூறுங்கடாவை யாசங் கித்துக் காட்சியளவை பற்றியும் மேற்கோளைச்சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) உற்பத்தியும் நாசமுங் காணப்பட்ட திதியின் பக்கத் தே காணக்கிடத்தலின் உளதா யொருவ னொருத்தி யொன்றென் று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்து என மேற்கொண்டது என்க.

## விளக்கம்.

இந்த ஏது என்னசொல்லிற்றோவெனின், மேல் உடம்பொடுபுணர்த் தோதிய அனுமானப்பிரமாணத்தினல் பிரபஞ்சம் முத்தொழிலுடையது எனச்சாதிக்கவே முத்தொழிலுடைய தன்றெனக் கூறிய மீமாஞ்சகர், உலகாயதர் என்னுமிருவருள் மீமாஞ்சகர் அனுமானப்பிரமாணங் கொள் பவராதலால் ஏற்றுக்கொள்வர்; உலகாயதர் பிரத்தியட்சப் பிரமாணமொன் றே கொள்பவராதலின் அனுமானப்பிரமாணத்தால் பிரபஞ்சம் முத்தொ ழிற் படுமென்றல் பொருந்தாதென்பர். அவ்வுலகாயதர் கூற்றை ஆசிரியர் தாமே ஆசங்கித்துக்கொண்டு பிரத்தியட்சப் பிரமாணத்தினும், உலகம் முத்தொழிற்படுமென்னும் மேற்கோளைச் சாதித்தவாறும். ஆகவே இந்த ஏது மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

(இந்த ஏதுவின் பொருள்.) உற்பத்தியும் நாசமும் என்னு மிரண்டும் காணப்பட்ட இருப்பின்பக்கத்தே காணக்கிடத்தலின் உளதா யொருவ னொருத்தி யொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி, திதி, நாச முடைத்து என மேற்கோள் கூறியதென்க.

தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடத்தல் உண்மையாயின் உள் ளதாகிய கடவுளினிடத்தும் உயிரினிடத்தும் பாசங்களினிடத்துந் தோற்ற மும் ஈறும் உளவெனப்படுமோ எனின்; படாது, எதனலெனின், காரியப் பிரபஞ்சஞ் சுட்டியறியப்படுதல்போலக் கடவுள் முதலியன சுட்டியறியப் படாமையினலென்க.

பிரத்தியட்சமாய்க் காணப்படும் இருப்பினலேயே தோன்றுதலும் அழிதலும் எவ்வாறு காணப்படுமெனின், பிரத்தியட்சமாய்க் காணப்படுவ

தொன்று என்றும் நிலைத்திருப்பதில்லை. ஆதலால், அழிதலும் அழிந்த வாறே ஒழிந்துபோகக் காணுமையால் மீளத்தோன்றுதலுமாகிய இரண்டும் இருத்தல் ஒன்றேகொண்டு கொள்ளப்படும் என அறிக.

தோற்றமும் நாசமும் உள்ளதன்பாலே
காணப்படுமென்பதற்குக் காட்டும்

உதாரணம்.

பூதாதி யீறு முதலுந் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையி—ஞேதாரோ
வோன்றேன்றிற் றேன்றி யுளதா யிறக்கண்டு
மன்றேன்று முண்டேன்ன வாய்ந்து.

## சிற்றுரை.

என்பது உதாரணம் எ—னின், உள்ளதன்பால் அவ்விரண்டுங் கிடத்தல் யாங்ஙனம் என்னுங்கடாவை யாசங்கித்து ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) பேதாய்—காட்சி யளவைகளானும் அறியப்படாத மடவோனே,—பூதாதி—பூத முதற்காரணமாகவுடைய பிரபஞ்சத்திற்கு,—திதி ஈறும் முதலும் துணை ஆக ஆகும்—திதி நிகழ்வுழி, நாசமும் உற்பத்தியுந் தனக்குத் துணைக்காரணமாகக் கொண்டே நிகழாநிற்கும். (அற்றாயினும் ஒன்றுதோன்ற ஒன்று நிற்ப ஒன்று அழிவதன்றி ஒருங்கே தோன்றி ஒருங்கேநின்று ஒருங்கேயழியக் கண்டிலமாலெனின்),—ஒன்று ஒன்றின் பெற்றிமையின் தோன்றி உளதாய் இறக்கண்டும்—ஒவ்வொரு கால விசேடத்திற் சாதிபற்றி ஒருங்கேதோன்றி ஒருங்கேநின்று ஒருங்கே அழிவதனைக்கண்டுவைத்தும்,—என்றும் அன்று உண்டு என்ன ஆய்ந்து ஓதாரோ—என்றாயினும் அதற்குரியகாலம் வருமென்று உலகத்திற்கும் அங்ஙனமாதலுண்டென்று அக்காட்சிபற்றி ஆராய்ந்து சொல்லார்களோ உன்னைப்போலும் மடமையில்லாதோர் என்க.)

பூதாதி அன்மொழித்தொகை. பூதத்துக்குமேலுள்ளவாய தத்துவங்கள் உலகாயதருக்கு உடன்பாடன்மையின், பூதமுதலாய தத்துவங்களென வுரைத்தல் ஈண்டைக்கேலாமை அறிக.

பூதாதிக்கென நான்கனுருபு விரித்துரைக்க; அது பின்னருஞ் சென்றியையும். ஆகுமென்பது முற்றுவினை.

ஈண்டுப் பெற்றிமை என்பது சாதியை.

ஓகாரம் எதிர்மறை.

ஒன்றொன்றினென்பது "ஒன்றொன்றாப் பார்த்துணர்வதுள்ளமே" என்றாற்போல அடுக்குமொழி; அது காலவிசேடமாதல் "என்று மன்றெனப்" பின் வருதலாற்பெறும்.

ஒருங்கே என்பது சொல்லெச்சம்.

ஒன்றொன்றிற்றோன்றி யுளதாயிறுதலாவது "பயில்வித்தெல்லாங்—காரிடமதனிற்காட்டு மங்குராங்கழியும்வேனில்" என்பதனானறிக. சித்தி. சுப. ௬.௧-௫-'ஒ பெற்றியி

கண்டும் உம்மை சிறப்பு.

## விளக்கம்.

(உதாரணத்தின் கொண்டுகூட்டு.) பேதாய் பூதாதி திதி ஈறும் முதலும் துணை ஆக ஆகும். ஒன்று ஒன்றின் பெற்றிமையின் தோன்றி உளதாய் இறக்கண்டும் என்றும் அன்று உண்டு என்ன ஆய்ந்து ஓதாரோ.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், உள்ளதன்பால் தோற்றமும் ஈறுங்கிடத்தல் எவ்வாறென்னும் ஆசங்கையை ஆசிரியர் தாமே எடுத்துக்கொண்டு தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடக்குமென்றற்கு அநுபவங்காட்டி ஏதுவை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) பிரத்தியட்சத்தில் பிரபஞ்சந் தோன்றுதலும் அழிதலும் கண்டுவைத்தும் அந்தப்பிரத்தியட்சத்தானும் பிரபஞ்சம் முத்தொழிற்படுமென்றுணராத அறிவில்லாதவனே! பூதங்களில்நின்றும் தோன்றுவதாகிய பிரபஞ்சத்திற்கு இருத்தல் நிகழும்போதே, நாசமும் உற்பத்தியும் அதுதனக்குத் துணைக்காரணமாகக்கொண்டு நிகழும்; எவ்வாறெனின், இருக்கின்றதெனக் காணப்படுவதொன்று தோன்றினலன்றிக் காணப்படாது. தோன்றுவதொன்று தான் தோன்றுவதற்குமுன் தோன்றாது அழிந்திருக்கவேண்டும். ஆகவே அழிதலையுந் தோன்றுதலையுந் துணைக்காரணமாகக்கொண்டு இருத்தலானது காணப்படுதல் அறிக. அவ்வாறாயினும் ஒன்று தோன்றவும், ஒன்று நிற்பவும், ஒன்று அழியவும் காண்பதன்றி, எல்லாந்தோன்றவும் எல்லாம்நிற்கவும் எல்லாம் அழியவும் கண்டிலமாதலால், அழியும்போது இருக்கின்றதொன்று பின்தோன்றுதற்குக் காரணமாதல் அமையுமெனின், அவ்வாறு கூறுதல்பொருந்தாது. எதனை

லெனின், மழைக்காலமாகிய ஒருகாலவிசேடத்து ஒருசாதிப்பயிர்களும், செந்துக்களும் ஒருங்குதோன்றி வேனிற்காலத்தில் அவையாவும் அழிதல் பிரத்தியட்சமாதலால் அதுபோலப் பிரபஞ்சத்திற்கும் ஒருசேர அழிவதற் குரியகாலம் என்றாயினும் வருமென்று உன்னைப்போலும் அறியாமையில் லாதவர்கள் சொல்லார்களோ? சொல்லுவர் என்றவாறு.

(க-ரை.) பிரபஞ்சம் உள்ளதாய் நிகழுங்கால் நாசமும் உற்பத்தியுந் துணையாகக்கொண்டே நிகழும் என்பதாம்.

வெண்பாவில் பூதாதி என்பது பூதத்தை ஆதியாகவுடைய பிரபஞ்சத் தைக் குறித்தலின் அன்மொழித்தொகை; கூறப்பட்ட மொழிகட்குவேறாய மொழி தொகையாயிருத்தல் அன்மொழித்தொகை யெனப்படும். இவ்விட த்துப் பிரபஞ்சமென்பது வேறாயமொழி; அது பூதாதி என்பதில் தொகை யாயிருத்தலால் அன்மொழித்தொகையாயிற்று.

பூதாதி என்பதற்கு பூதத்தை ஆதியாகவுடையதெனக்கூறாது பூத முதலாக எனக்கொண்டு பூதமுதலாகிய தத்துவங்களை உடைய பிரபஞ்ச மெனக் கூறலாகாதோவெனின்; ஆகாது; எதனாலெனின், இவ்விடத்து உலகாயதர்பக்கம் ஆராயப்படுகின்றது; அவருக்குப் பூதத்துக்குமேலுள வாய தத்துவங்கள் உடன்பாடன்றாதலால் என அறிக.

பூதாதி என்பதில் நான்கனுருபுவிரித்துப் பூதாதிக்கு (அதாவது) பிர பஞ்சத்திற்கு என உரைசெய்யப்பட்டது. பிரபஞ்சஞ்சத்திற்கு என்பது பின்னர் உண்டு என்றதனோடுஞ்சென்று பொருந்தும்; ஆதலால் உலகத் திற்கும் அங்ஙனமாதலுண்டென்று உரைசெய்யப்பட்டது.

திதியாகும் என்பதிலுள்ள ஆகும் என்பது எச்சமன்று; வினைமுற்று.

பெற்றிமை என்பது பெற்றியை உடைமை எனப்பொருள்படுமாயி னும் இவ்விடத்துப்பெற்றியாகிய சாதியினையேகுறித்து நின்றது. சாதி யாவது ஒருகூட்டத்திற்குப் பொதுவாயுள்ளதன்மை; ஆதலால், பெற்றிமை யின் என்பதற்குச் சாதிபற்றியென வுரைசெய்யப்பட்டது.

ஒதாரோ என்றதிலுள்ள ஓகாரம் எதிர்மறைப்பொருளில் ஓதுவர் என்பதைக் குறித்துநின்றது.

ஒன்றொன்றினென்பது இந்நூல் கக-வது சூத்திரம் முதல் அதிகா ணத்து "ஒன்றொன்றாப் பார்த்துணர்வதுள்ளமே" என்றாற்போல அடுக்கு மொழி. ஒன்றொன்று என்பதற்கு ஒவ்வொரு காலவிசேடம் எனக்கூறியது, பின்னர் 'என்றும் அன்று உண்டு' என்பதில் அன்று என்பது அதற்குரிய காலம் என்னும் பொருள்பட நின்றமையால் என்க. அன்று இன்று என்

பன அக்காலம் இக்காலம் என வழங்குமாற்றால் அன்று என்பதற்குக்கூறிய பொருள்பொருந்துமாறு காண்க.

'தோன்றி உளதாயிற' என்பது ஒருங்கேதோன்றி ஒருங்கேநின்று ஒருங்கே அழிவது என்னும் பொருள்தோன்ற நின்றமையின் ஒருங்கே என்பது சொல்லெச்சம். பொருள் கொள்ளுதற்குரியசொல் எஞ்சிநிற்கு மாயின் சொல்லெச்சமெனப்படும்.

ஒன்றொன்றிற்றோன்றி யுளதாயிறுதலென்பதற்கு ஒவ்வொரு கால விசேடத்தில் ஒருங்கேதோன்றி ஒருங்கேநின்று ஒருங்கே அழியுமென்ப தைச் சிவஞானசித்தியார் முதற்சூத்திரம் ஒன்பதாவது செய்யுளில் "பயில் விதெல்லாங் காரிடமதனிற் காட்டுமெங்குரங்கழியும் வேனில்" என்பதனு னறிக.

உலகம் முற்றும் ஒருகாலத்து அழியுமென்பதை நிர்ணயித்தற்குரிய மூன்று பிரமாணங்களுள் பிரத்தியட்சம் சிறந்தமையால் இறக்கண்டும் என் றதிலுள்ள உம்மை சிறப்பு. காணல் - பிரத்தியட்சம்.

முதலதிகரணம் முற்றிற்று.



# இரண்டாம் அதிகரணம்.



உலகம் முத்தொழிற்படுமாயினும் கருத்தா வேண்டாம் என்பாரைமறுத்து உலகத்துக்குக் கருத்தாவேண்டப்படும் எனக்கூறும் மேற்கோள்.

(ப.ா.4) இனி இல்லதற்குத் தோற்றமின்மையின் உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் ஒடுங்கின சங்காரத்தி னல்லது உற்பத்தியில்லை என்றது.

## சிற்றுரை.

என விங்ஙனஞ் சொற்பல்காமைப்பொருட்டுத் துணிந்ததாக வைத்துரைத்தாராயினும், பொருளியைபிற் கேற்ப இதனை மூன் றதிகாரணமாகவைத்துரைப்பது ஆசிரியர் கருத்தெனக் கொள்க; அங்ஙனமாமாறு காட்டுதும்:—

## விளக்கம்.

முதலதிகாரணத்தால் பிரபஞ்சம் நித்தம் என்றும் முத்தொழிற்படா தென்றும் கூறிய மீமாஞ்சகரையும் உலகாயதரையும் அனுமானப்பிரமாணத்தினாலும், பிரத்தியக்ஷப்பிரமாணத்தினாலும் மறுக்கவே, பிரபஞ்சம் முத்தொழிற்படுமாயினும் அதுகொண்டு கருத்தா உண்டென்றல் பொருந்தா தென்பாரையும் கருத்தா உண்டெனினும் அக்கருத்தா சிவபெருமானே என்றல் பொருந்தாதென்பாரையும் இரண்டாம் அதிகாரணத்தால் மறுத்துரைக்கின்றார்.

இம் மேற்கோள் சூத்திரத்தில் தோற்றிய திதியே யொடுங்கியுளதாம் என்னுங்கூற்றைக் கண்ணழித்து மேற்கொண்டதாகும். திதி என்பதை இல்லதற்குத் தோற்றமின்மையின் என்றும், தோற்றிய என்பதை உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினை யின்மையின் என்றும், ஒடுங்கியுளதா மென்பதை ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை யென்றுங் கண்ணழிவு செய்தவாறு அறிக.

இவ்வாறு கண்ணழிவுசெய்த மேற்கோளில் இல்லதற்குத் தோற்றமின்மையின் என்பதும் உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினை யின்மையின் என்பதும் ஏதுவாகவும், ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை என்பது மேற்கோளாகவும் அமைந்து கிடந்தன. ஆகவே, இரண்டேதுவிற்குரிய இரண்டு மேற்கோளும், ஒரு மேற்கோளுக்குரிய ஏதுவும் விளங்கும்படி கூறுவதாயின் விரியும் என்றெண்ணி ஆசிரியர் சொற்சுருக்கமாக இவ்வாறு உரைத்தாரென அறிக. ஆதலால் இவ்விரண்டாம் அதிகாரணத்தை மூன்று அதிகாரணங்களாக வைத்துரைப்பதே ஆசிரியர் கருத்தெனக்கொள்ளல்வேண்டும். அவ்வாறாயின் மூன்று அதிகாரணங்களாகவே வகுத்துக்கூறாது ஒரு அதிகாரணமாகக் கூறிய கருத்தென்னையெனின், மூன்று அதிகாரணங்களும் கருத்தா உண்டென்று சாதித்தலையே மேற்கொண்டனவாதலின் வேறுவேறு கூறாது ஒரு அதிகாரணமாகக் கூறினாரென்க.

ஆசிரியர் கருத்தறிந்த உரையாசிரியர் இவ் விரண்டாம் அதிகாரணத்திலுள்ள இரண்டு ஏதுவிற்கு இரண்டு மேற்கோளும், ஒருமேற்கோளுக்கு ஒரு ஏதுவும் வருவித்து மூன்று அதிகாரணங்களாக இவ்வதிகாரணத்தை வகுத்துக் காட்டுகின்றார். அவைவருமாறு:—

உலகம் உள்பொருள் எனக்கூறும் முதலாவது

மேற்கோள்.

**(இனி உலகமுள்ளது என்றது.)**

## சிற்றுரை.

எ - து மே - ள் எ—னின், உலகம் இல்பொருளாய்த் தத்தஞ் சார்பிலே தோன்றி யழிதல் இயல்பென்றலே அமைவுடைமையின் அது மூவினை யுடைத்தாயினும் (தோற்றுவானொருவனை யுடைத்தாதல்) செல்லாது எனப் புத்தநூலார் சொல்லுங்கடாவை யாசங்கித்துத் திதியென்னுஞ் சூத்திரக் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ-ள்.) வெ—டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

(இ - ள்.) உலகம் - மேற்சாதிக்கப்பட்ட முத்தொழிலுக்குரிய பிரபஞ்சம்,—உள்ளதென்றது - உள்பொருளாம் என்க.

## விளக்கம்.

இது திதி என்னும் சூத்திரக் கூற்றைக் கண்ணழித்து ஆசிரியர் கொண்ட எதுவிற்கு உரையாசிரியர் கூறிய மேற்கோளாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோ வெனின், முதலதிகாரணத்தால் உலகந் தோன்றி நின்று அழியுமெனச் சாதிக்கவே, இல்பொருளாகிய உலகம் அவ்வாறு தோன்றி நின்று அழியினும் ஒன்றுநிற்கப் பிறிதொன்று அழியுமாதலின் நின்றதன் சார்பாக மற்றொன்று தோன்றும்; அவ்வாறே ஒன்றன்சார்பில் பிறிதொன்று தோன்றுதல் உலகத்துக்கு இயல்பாக அமையும்; ஆதலின் உலகம் முத்தொழிலை உடைத்தாயினும் ஒரு கருத்தாவை உடைத்தாதல் செல்லாது எனப் புத்தநூலார் சொல்லும் கூற்றை ஆசங்கித்துக்கொண்டு திதி என்னும் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்து உலகம் உள்பொருளெனக் கூறியவாறும்.

(இம்மேற்கோளின் பொருள்.) மேற்சாதிக்கப்பட்ட முத்தொழிலுக்குரிய பிரபஞ்சம் உள்பொருளாம் என்க.

உலகம் உள்பொருள் என்பதற்குக் காட்டும்

ஏது.

(இல்லதற்குத் தோற்றமின்மையின்.)

## சிற்றுரை.

எ—து ஏது எ—னின், உள்ளதாதல் யாங்ஙனம் என்னுங் கடாவை ஆசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) இல்பொருளாகிய முயற்கோட்டிற்கு முக்காலத்து முற்பத்தியின்மையின் ஈண்டுற்பத்தி காணப்படுதலான் உலகமுள்ளது எனமேற்கொண்டது(என்க.

## விளக்கம்.

இந்த ஏது என்ன சொல்லிற்றேவெனின், உலகம் உள்பொருளென்றல் எவ்வாறு கூடும் என்னும் வினவை யாசங்கித்துக்கொண்டு இல்லாத பொருள் தோற்றாதாதலின் தோற்றப்படும் உலகம் உள்பொருளேயென மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(இந்த ஏதுவின் பொருள்.) முயலினிடத்துக் கோடுமுக்காலத்தும் இல்லை; இல்பொருளாகிய அக்கோட்டிற்கு உற்பத்தியுமில்லை. உலகத்துக்கு உற்பத்திகாணப்படுதலான் உலகம் உள்ளது என மேற்கொண்டது என்க.

உலகம் உள்பொருளாயினும் அதனைத் தோற்றுவிப்பதற்கு ஒரு கருத்தாவேண்டாம் என்பாரைமறுத்து கருத்தாவேண்டுமெனக்கூறும்

இ ர ண் டா வ து
மேற்கோள்.

## (இனி உலகஞ் செய்வோனையுடைத்து என்றது.)

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், உள்பொருளெனப்பட்ட பிரபஞ்சம் தத்தமுதற்காரணத்தினின்றுந் தானே தோன்றியழியும், இதற்கொரு நிமித்தகாரணமாய் ஒருகருத்தாவேண்டாம் எனச் சாங்கியர்கூறுங் கடாவை ஆசங்கித்துத் தோற்றியவென்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ—ள். வெ—டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

(இ-ள்.) உலகம்—மேல் உள்பொருளெனச் சாதிக்கப்பட்ட பிரபஞ்சம்,—செய்வோனை யுடைத்தென்றது—தொழிற்படுத்தும் நிமித்தகாரணனாகிய முதற்கடவுளையுடைத்து என்க.

## விளக்கம்.

இது தோற்றிய என்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்து ஆசிரியர் கொண்ட ஏதுவிற்கு உரையாசிரியர் கூறிய மேற்கோளாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோவெனின், உள்பொருளெனச் சாதிக்கப்பட்ட உலகம் அதற்கு முதற்காரணமாகிய மாயையினின்றுந் தானே தோன்றியழியும்; ஆதலின் உலகத்தைத் தோற்றுவிப்பதற்கு ஒரு கருத்தாவேண்டாம் எனச் சாங்கியர்கூறும் கூற்றை ஆசங்கித்துக்கொண்டு தோற்றிய என்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துக் கருத்தா வேண்டு மென்று கூறியவாறும்.

(இம்மேற்கோளின் பொருள்.) மேலே அதிகரணத்தால் உள்பொரு ளெனச் சாதிக்கப்பட்ட பிரபஞ்சம் தானே தோன்றிநின்று அழியாது; ஆத லால் தொழிற்படுத்துதற்குரிய நிமித்தகாரணனாகிய முதற்கடவுளை உடை யது என்க.

உலகத்துக்குக் கருத்தாவேண்டும் என்பதற்குக் காட்டும்

ஏ து.

(உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின்)

## சிற்றுரை.

எ—து ஏது எ—னின், அதற்குப் பிரமாணமென்னை என் னுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) மண் முதலியவற்றி னுள்ளதாகிய கடமுதலிய பொ ருட்குக் குயவன் முதலிய செய்வோரையின்றி வனைதன்முதலிய செய்தொழில் நிகழாமையின் உலகம் இவ்வியல்பிற்றுகலான் இனி இவ்வுலகஞ் செய்வோனையுடைத்து எனமேற்கொண்டது என்க.

## விளக்கம்.

இந்த ஏது என்ன சொல்லிற்றோ எனின், உலகம் உள்பொருளாயி னும் அவ்வுலகந் தோற்றுதற்கு ஒருகருத்தாவேண்டுமென்பதற்குப் பிரமா ணம் என்னை யென்பார்க்குப் பிரத்தியட்சப்பிரமாணத்தாற் கருத்தா உண் டென்று காட்டி உலகஞ் செய்வோனையுடைத்து என்னும் மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(இந்த ஏதுவின் பொருள்.) மண்முதலியவற்றிற் சூக்குமமாயுள்ள கடமுதலிய பொருள்கள் தூலமாய் வெளிப்பட்டுத் தோன்றுதற்கு வனை தல்முதலிய தொழில்கள் நிகழவேண்டும்; குயவன்முதலிய செய்வோ ரையின்றி வனைதல்முதலிய செய்தொழில்கள் தாமே நிகழாவாம். அது போல, மாயையில் அடங்கிக்கிடந்த உலகமுந் தானேதோன்றாது; ஒரு கருத்தாவாற்றோன்றும் இயல்பை உடையது; ஆதலால், இனி இவ்வுலகஞ் செய்வோனையுடைத்து என மேற்கோள் கூறியவாறும் என்க.

உலகத்துக்குக் கருத்தா உண்டாயினும் அக்கருத்தா பிரமன்
முதலியோராதல் அமையுமென்பாரை மறுத்துச் சிவனே
கருத்தா எனக்கூறும் மூன்றாவது
மேற்கோள்.

**இனி ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை என்றது.**

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், இத்துணையுங் கூறியவாற்றான் உலகத்தைத் தோற்றுவிப்பான் உண்டெனப்பட்டகருத்தா திதி கருத்தா சிருட்டிகருத்தா முதலியோரில் ஒருவனேயாதலமையும் எனப் பாஞ்சராத்திரி முதலியோர்கூறுங் கடாவையாசங்கித்து ஒடுங்கியுளதாமென்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ-ள்.) உலகம் தானொடுங்குதற்கு நிலைக்களமான சங்கார கருத்தாவினின்றன்றி உளதாகாது என்க.

ஒடுங்கினவென்னும் பெயரெச்சஞ் சங்காரமென்னும் இடப் பெயரோடு முடிந்தது. சங்காரம் ஆகுபெயர்.

அல்லதில்லை என்று எதிர்மறை முகத்தாற்கூறியது, ஏனைக் கடவுளரின் உளதாகாமை யாப்புறுத்தற்பொருட்டு.

இதனுள் ஒடுங்கின என்பதனாற் போந்தகுறிப்பேதுவைப் புலப்படக் காணுமாறு.

## விளக்கம்.

இம்மேற்கோள் ஒடுங்கியுளதாம் என்னுஞ் சூத்திரக்கூற்றைப் பதச் சேதஞ்செய்து உரைத்தவாறும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோவெனின், இதுகாறுங் கூறிய வாற்றால் உலகத்தைத் தோற்றுவிப்பதற்கு ஒருகருத்தா வேண்டப்படுமெனக் கொள்ளினும், அக்கருத்தா திதிகருத்தாவாகிய விட்டுணு, சிருட்டி கருத்தாவாகிய பிரமன் முதலியோரில் ஒருவனே யாதலமையுமெனப் பாஞ்சராத்திரிமதம், இரணியகருப்பமதம் உடையார் கூறுவாராதலின் அவர் கூற்றை ஆசங்கித்துக்கொண்டு சங்காரகருத்தாவே முதற்கடவுள் எனச் சாதித்தவாறும்.

(இம்மேற்கோளின்பொருள்.) உலகமானது, தோன்றுதற்கு முன்னர் தாஞெடுங்குதற் கிடமாயிருந்த சங்காரகருத்தாவினல் அன்றி உளதாகாது என்க.

இம்மேற்கோளில் ஒடுங்கின என்பது பெயரெச்சம்; அவ்வெச்சம் சங்காரமென்னும் இடப்பெயர்கொண்டு முடிந்தது. சங்காரம் என்பது சங்காரத்தைச்செய்யுங் கருத்தாவைக் குறித்தலின் ஆகுபெயர். அக்கருத்தாவை, ஒடுங்குதற்கு இடமாதல்பற்றி இடப்பெயர் என்ருர்.

சங்காரத்தினல்லது உற்பத்தி இல்லை என்று எதிர்மறை முகத்தாற் கூறிய கருத்தென்னையெனின், ஏனைக்கடவுளரிடத்து நின்றும் உலகம் உற்பத்தியாகாமையை வலியுறுத்துதற்பொருட்டு என அறிக. அவ்வாருயின் ஒவ்வொரு கடவுளரிடத்தும் உலகத்துக்கு உற்பத்திகூறும் நூல்களோடு முரணுதோ எனின், முரணுது. என்னை? அக்கடவுளர்தாமே தோற்றுவிக்காது தமக்குமேற்பட்ட கடவுளின் ஆணையாற்ருேற்றுவிப்பராதலால் என்க. ஆகவே, எக்கடவுளர் எச்செயலைச்செய்யினும் அச்செயலெல்லாம் சங்காரக்கடவுளின் ஆணையினுலேயே நிகழுமாதலின் அச்சங்காரக் கடவுளையின்றி ஏனைக்கடவுளருக்குத் தனித்த செயலின்மையறிக.

இந்த மேற்கோளில் ஒடுங்கின என்றதனுல் ஒடுங்குதல் உண்டென்பது பெறப்படும். படவே, சங்காரகருத்தாவின் ஒடுங்குதலால் ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை என்ருகிச் சங்காரகருத்தாவின் ஒடுங்குதலால் என்னும் ஏது குறிப்பாக அடங்கிக்கிடந்ததாகும். அக்குறிப்பேதுவை வெளிப்பட அறியுமாறு உரையாசிரியர் கூறுகின்ருர்.

உலகத்துக்குக் கருத்தா சங்காரகாரணஞகிய
சிவனே என்பதற்குக் காட்டும்

ஏது.

**ஆண்டு ஒடுங்குதலின்.**

## சிற்றுரை.

எ—து ஏது எனி—ன், அதற்குப் பிரமாணமென்னை என்னுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) யாது யாண்டொடுங்கும் அஃததனினுற்பத்தியாம் மண்ணிற்குடம்போலும் என்னும் அவினுபாவத்தாற் பிரபஞ்சஞ் சங்காரகாரணன்மாட் டொடுங்குதலின் மீளத்தோன்றுங்கால் ஆண்டுநின்றுந் தோன்றுதலே பொருத்தமுடைமையின் அவ்வாறு மேற்கொண்டது என்க.

இவ்வாறு, மூன்றதிகாரணப்பொருளும் இதன்கட்போந்தவாறும் இவ்வாறுரையாக்காற் பொருளியைபு படாமையும நுண்ணுணர்வாற் கண்டுகொள்க.

## விளக்கம்.

இந்த ஏது என்ன சொல்விற்றோவெனின், சஙகாரக்கடவுளே முதற்கடவுளென்பதற்குப் பிரமாணம் என்னை என்னும் வினவை ஆசங்கித்துக்கொண்டு எல்லாஞ் சங்காரக்கடவுளிடத்து ஒடுங்குதலினால் அக்கடவுளே முதற்கடவுளென மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(இந்த ஏதுவின் பொருள்) ஏது ஏதனில் ஒடுங்கும். ஒடுங்கின அது, ஒடுங்குதற்கு ஆதாரமான அதனில் நின்று மீளத்தோன்றும்; ஏதுபோலவெனின், குடம் உடையுங்கால் குடத்தன்மை மண்ணினிடத்தொடுங்கிக் குடம் மீளத்தோன்றுமிடத்து அம்மண்ணினிடத்தில் நின்றுந் தோன்றுவது போலாம். அவ்வாறேவிட்டுநீங்காமையாகிய அவினாபாவத்தால் உலகம் ஒடுங்குங்கால் தூலமாய்க்காணப்படுவதுகெட்டுச் சூக்குமமாகிய அதன்றன்மை சங்காரக்கடவுளிடத்து ஒடுங்கி, மீளத்தோன்றுங்கால் அக்கடவுளினிடத்து நின்றுந்தோன்றும் என்பதாம்.

இவ்விடத்து மண்கருத்தாவிற்கு உவமையாய் நின்றது; மேல், உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினை இன்மையின் என்ற ஏதுவில் மண் மாயைக்கு உவமையாய் நின்றது. இவ்வாறுநின்றதனால் மூரணின்று; ஏதனாலெனின், மேல், கருத்தா உண்டென்பதற்கும் இவ்விடத்து அக்கருத்தா சங்காரக்கடவுளே என்பதற்கும் உவமையாகநின்று கருத்தா உண்டென்பதற்கு மண்தானே குடமாகத்தோன்றாமையினையும், அக்கருத்தா சங்காரக்கடவுளே என்பதற்குக் குடம் ஒடுங்குதற்கும் தோற்றுதற்கும் மண் ஆதாரமாதலையும் விளக்கினமையின் என்க.

அவினாபாவமென்பது விட்டுநீங்காமையாம். உதாரணம், குடம் மண்ணைவிட்டு நீங்காமை. அதுபோலப் பிரபஞ்சம் சங்காரக்கடவுளையின்றித் தனித்து நில்லாதென அறிக. குடமும் அதற்கு ஆதாரமான மண்ணும் ஒருங்கு காணப்படுமாறுபோல உலகமும் அதற்கு ஆதாரமாகிய கடவுளும் ஒருங்கு காணப்படவில்லையே எனின், குடம் முனைத்துத் தோன்றுங்கால் மண் தோன்றாது; மண் முனைத்துத்தோன்றுங்கால் குடம் தோன்றாது. அவ்வாறே பாசபசுஞானங்களால் உலகம் முனைத்துத்தோன்றுங்கால் கடவுள் தோன்றாது; பதிஞானத்தால் கடவுள் முனைத்துத்தோன்றுங்கால் உலகம் தோன்றாது. இக்கருத்துப்பற்றியே "மரத்தை மறைத்தது மாமதயானை, மரத்தின்மறைந்தது மாமதயானை, பரத்தைமறைத்தது பார்முதற்பூதம், பரத்தின்மறைந்தது பார்முதற்பூதம்" எனத் திருமூலநாயனாரும் திருவாய் மலர்ந்தருளினா

அவினுபாவத்துக்கு மேற்கூறிய உவமையேயன்றி அக்கினியையும் அவ்வக்கினியை விட்டு நீங்காத புகையினையுங் கூறலாம். அடுக்களையுட் புகைகாணப்படுங்கால் அப்புகைக்கு இன்றியமையாத அக்கினி காணப்பட மாட்டாது. ஆயினும் புகையைக்கொண்டு அக்கினி உண்டென்று நிச்சயித்தல் கூடும்; அதுபோல, உலகம் காணப்பட்டுக் கடவுள் காணப்படாவிடினும் உலகந் தோன்றுதலைக்கொண்டே அதற்கு இன்றியமையாத கடவுள் உண்டென்று அறிந்துகொள்ளுதல் கூடும். இது, கடவுள் உண்டென்னுமளவிற்கே கூறும் அனுமானப்பிரமாணமாகும். சங்காரக்கடவுளே முதலென்று பிரத்தியட்சப் பிரமாணத்தைக்கொண்டு சாதிக்கவேண்டி அவினுபாவத்தையுடைய மண்ணுங் குடமும் உவமானமாகக் கூறப்பட்டதென அறிக.

இவ்விரண்டாம் அதிகரணத்தில் இவ்வாறு மூன்று அதிகரணப் பொருளும் கிடந்தவாறு காண்க. இவ்வதிகரணத்தை இவ்வாறு மூன்று அதிகரணமாகவைத்து உரைக்கவில்லையாயின் இல்லதற்குத் தோற்றமின்மையின் என்ற ஏதுவும், உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் என்ற ஏதுவும், ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை என்னும் மேற்கோளைச் சாதிக்கமாட்டாமையின் பொருள்பொருந்துமாறின்மையை நுண்ணுணர்வாற் கண்டுகொள்க.

இவ்வதிகரணத்தால் இதுகாறுங்கூறிய பொருள் உலகம் உள்ளது, அது செய்வோனை யுடைத்து, அச்செய்வோன் சங்காரக்கடவுள் என்பனவாம். அம்மூன்றற்கும் முறையே உதாரணங் கூறுகின்றார்.

உலகம் உள்ளதென்பதற்குக் காட்டும்

உதாரணம்.

இலயித்த தன்னிலில யித்ததாம லத்தா
லிலயித்த வாறுளதா வேண்டும். —

## சிற்றுரை.

எ—று உ—ம் எ—னின், உலகம் உள்ளதாயின் உள்ளதற்கு உண்டாகவேண்டுவதில்லை யாகலாற் சற்காரியவாதம் அடாது எனப் புத்தர் கூறுங்கடாவை யாசங்கித்து இல்லதற்குத் தோற்றமின்மையினென்ற வேதுவை வலியுறுத்தனுதலிற்று.

(இ-ள்.) இலயித்தது இலயித்த தன்னில் ஆம்—(உள்ளதாயினுஞ் சங்காரகாலத்தின்) ஒடுங்கிய தாகலான் (அவ்வொடுங்கிய உலகம்) தானொடுங்குதற்கு நிலைக்களமான சங்காரகருத்தாவி

னின்றும் படைப்புக்காலத்தின் மீளவுளதாம், (அற்றேல் ஒடுங்கியது ஒடுங்கியவாறே ஒழியாது மீளவுண்டாகவேண்டாம்: வேண்டுமாயின், முன்னொடுங்காது நிலைபெறவேயமையும்; அவ்வாறன்றி ஒடுங்கி மீளவுளதாவது எற்றுக்கெனின்),—மலத்தால்—உள்ளதாகிய உலகம் கருமமலம் பரிபாகமாதற் பொருட்டு ஒடுங்கி ஆணவமலம் பரிபாகமாதற்பொருட்டு மீளவுமுண்டாம். (அற்றேல் முன்னின்ற பிரபஞ்சம் நாசமாக வேறுதோன்றுமென்னுமல் அதுவே ஒடுங்கிநின்று மீளவுளதாமென்றற்குப் பிரமாணம் என்னையெனின்),—இலயித்தவாறு உளது ஆ வேண்டும்—எஃதெவ்வாறு நின்றொடுங்கிற்று அஃதவ்வொடுங்கியவாறே உளதாதல் (எல்லாரானும்) விரும்பப்படும் என்க.

எனவே அந்நியமமில்லையாயின் நெற்கமுகாய் நீளாது நெல்லாய் நீளுதற்கு ஏதுவென்னையென்னுந் தருக்கமே அதனையறிவுறுத்து மென்றவாறாயிற்று. சற்காரியவாதத்தினியல்பு "தந்து முதல் காரகம்" என்னும் ஞானாமிர்தத்தினுங் காண்க. (15)

இதனானே, இல்லது முள்ளதுமல்லாத பொருடோன்றுமென்னுஞ் சூனியவாதிகளும், இல்லது முள்ளதுமாய பொருடோன்றுமென்னும் அநேகாந்தவாதிகளும் மறுக்கப்பட்டவாறறிக.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) இலயித்தது இலயித்ததன்னில் ஆம். மலத்தால். இலயித்தவாறு உளது ஆ வேண்டும்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், உலகம் உள்பொருளாயின் உள்பொருட்கு உண்டாகவேண்டுவதில்லையாதலால் ஒடுங்கிய உலகம் மீளத் தோன்றுமென்னுஞ் சற்காரியவாதம் பொருந்தாதெனப் புத்தர் கூறுவாராதலின், அவர்கூற்றை ஆசிரியர்தாமே எடுத்துக்கொண்டு உலகம் உள்ளதெனக்கூறி, இல்லதற்குத் தோற்றமின்மையின் என்ற ஏதுவை வலியுறுத்தியவாறும்.

(பொ—ரை.) உலகம் உள்ளதாயினும் என்றும் ஒரு தன்மையாயின்றிச சங்காரகாலத்தில் சங்காரகருத்தாவில் ஒடுங்கிப் படைபபுக்காலத்தில் மீளச் சங்காரகருத்தாவினின்றும் தோன்றுவதாம். அவ்வாறு உலகததிற்கு ஒடுஙகுதலுந்தோன்றுதலும் உண்டென்று கொள்வதாயின் ஒடுங்கிய உலகம் ஒடுஙகியவாறே யொழியாது மீள உண்டாகவேண்டாம; மீள உண்டாகவேணடுமாயின், முன் ஒடுங்காது நிலைபெற்றிருக்கலாம். அவ்வாறின்றி ஒடுஙகி மீள

உளதாதல் எதற்காக எனின், உள்ளதாகிய உலகம் உயிர்களின் கருமமலம் பரிபாகமாதற்பொருட்டு ஒடுங்கி ஆணவமலம் பரிபாகமாதற்பொருட்டு மீளத்தோன்றும். அவ்வாறாயினும் முன் காணப்பட்ட உலகம் சங்காரகாலத்தில் நாசமாக மீளப்படைப்புக்காலத்தில் வேறு உலகந்தோன்றுமென்று சொல்லாமல், முன்னின்ற உலகமே ஒடுங்கி மீளத்தோன்றுமென்று சொல்வதற்குப் பிரமாணம் என்னையெனின், எந்தப்பொருள் எதனிடத்தில் எவ்வாறொடுங்கிற்றோ அந்தப்பொருள் அதனிடத்தினின்றும் அவ்வாறு உளதாமென்பது எல்லாராலும் விரும்பப்படுமோகலின் அந்தத் தருக்கமே பிரமாணமென்றவாறு.

(க-ரை.) உயிர்களின் மும்மலங்களும் பரிபாகமாதற்பொருட்டு உலகம் ஒடுங்கித்தோன்றி நிற்கும் என்பதாம்.

ஒடுங்கியவாறே உளதாம் என்னும் தருக்கங் கூறியதனால் அந்த நியமமில்லையாயின் நெல்லினிடத்துக்கமுகும், கமுகினிடத்தில் நெல்லுந் தோன்றுதல்வேண்டும்; அவ்வாறின்றி நெல்லினிடத்து நெல்லும் கமுகினிடத்துக் கமுகுந்தோன்றுதற்கு ஏது நெல்லின்தோற்றமே நெல்லினிடத்தும், கமுகின்தோற்றமே கமுகினிடத்தும் ஒடுங்கியிருத்தலாம்; ஆதலின் இந்தத் தருக்கமே சங்காரக் கடவுளிடத்து ஒடுங்கிய உலகம் மீளச்சங்காரக் கடவுளில் நின்றுந் தோன்றுமென்பதை அறிவுறுத்துமென்றவாறாயிற்று. ஆகவே உலகமானது தோன்றுதல் ஒடுங்குதல் என்னும் வேறுபாடுடன் என்றும் உள்பொருளாயினமை அறிக.

உள்ளது காரியப்படுமென்று சொல்லுதல் சற்காரியவாதம் என்பதன் பொருளாம். இச்சற்காரியவாதமே சைவசித்தாந்தமாம். இச்சற்காரியவாதத்தினியல்பு "தந்து முதல்காரகம்" என்னும் ஞானாமிர்த அகவலினுங் காண்க.

உலகம் ஒடுங்குவதனால் கருமமலம் பரிபாகமாதல் எவ்வாறெனின், கருமமலமென்பது நல்வினை தீவினை யென்னு மிருவினையாம். இவைகள் பரிபாகமாதலாவது இவற்றின் காரியமாகிய இன்பதுன்பங்களிற் சமபுத்தி தோன்றுதலாம். அச்சமபுத்தி, இன்பமுந் துன்பமும் நெடுங்காலம் அனுபவித்து அவ்வனுபவத்தால் அவ்விரண்டினுங் கைப்புத் தோன்றுதலாலுண்டாம். இன்பத்துன்ப அனுபவத்திற்குக் காரணமாகிய இருவினைகள் பலனுக்கு வருங்காலத்து அவ்வனுபவத்திற் கேற்றவாறு உடல்முதலியவற்றை மாற்றிக்கொடுக்கவேண்டியது இறைவன் கடமையாதலால் அவ்வாறு மாற்றுங்கால் உண்டாகிய ஒடுக்கம் பக்குவமாயிருக்கும் கன்மபலனை அனுபவித்துத் தொலைப்பதற்கு ஏதுவாதலால் ஒடுக்கம் கன்மமல பரிபாகத்தின் பொருட்டாயிற்று.

தோன்றுதலினால் ஆணவமலம் பரிபாகமாதல் எவ்வாறெனின், ஆணவமலமானது அறியாமையைச் செய்வதாம். அவ்வாறு செய்யுஞ் சத்தி கெடுதல் ஆணவமலபரிபாகமாம். அறியாமையாவது அனாதிகேவலத்தில் அறிவிச்செயல்கள் தொழிற்படாது தடுக்கப்படுதல்; சிருட்டியால் அத்தடை நீங்குதல் ஆணவமலபரிபாகமாம்; ஆதலால், தோற்றம் ஆணவமலபரிபாகத்தின் பொருட்டாயிற்று.

ஒடுக்கமுந் தோற்றமும் முறையே கருமமலமும் ஆணவமலமும் பரிபாகமாதற்பொருட் டென்றதனால் நிலைத்தல் மாயாமலம் பரிபாகமாதற் பொருட்டு எனக் கொள்ளல் வேண்டும். நிலைத்தலினால் மாயாமலம் பரிபாகமாதல் எவ்வாறெனின், மாயை என்பது மயக்கத்தைச் செய்வதாம்; மயக்கமாவது ஒன்றைப் பிறிதொன்றாக உணரும் விபரீத உணர்ச்சியாம்; அதாவது நித்தமல்லாத உலகத்தை நித்தமென உணர்தலாம். இவ்விபரீத வுணர்ச்சியின்கேடு மாயாமலபரிபாக மெனப்படும். இது நித்தமென்றெண்ணப்படும் உலகம் அநித்தமாதலை அனுபவத்திற் காண்டலால் உண்டாம்; அவ்வாறு அனுபவத்திற் காண்பதற்குச் சிறிதுகாலமேனும் உலகம் நிலைத்திருக்கவேண்டு மாதலின் நிலைத்தல் மாயாமலபரிபாகத்தின்பொருட்டாயிற்று.

இவ்வாறு ஆணவமலபரிபாகத்தின்பொருட்டு உலகந்தோன்றி மாயாமலபரிபாகத்தின்பொருட்டு நிலைத்துக் கன்மமல பரிபாகத்தின் பொருட்டு ஒடுங்குமாறு அறிக.

உலகம் உள்பொருளெனக் கூறிய இவ்வுதாரணத்தானே இல்லதும் உள்ளதுமல்லாத உலகந்தோன்றுமென்னுஞ் சூனியவாதிமதமும், இல்லதும் உள்ளதுமாய உலகந்தோன்றுமென்னும் அநேகாந்தவாதி மதமும் மறுக்கப்பட்டவாறறிக. அநேக அந்தத்தையுடையது அநேகாந்தம்; அந்தமென்பது முடிபு; அதாவது, உடம்பெடுத்தற்குமுன் சீவன் உண்டோ? இல்லையோ? என்று வினவியபோது, உண்டாம்! இல்லையாம்! உண்டுமில்லையுமாம்! என்றன் முதலிய அனேக முடிபாக விடையிறுத்தல். சூனியவாதி - நால்வகைப் பௌத்தரில் மாத்தியமிகன். அனேகாந்தவாதி - ஆருகதன்.

உலகம் உள்பொருளென்று சாதித்த இதனானே உள்பொருளாகிய உலகம் ஒடுங்கித்தோன்றுதல் ஒருகருத்தாவினாலாகும் என்பதற்குக் காட்டவேண்டிய உதாரணத்தை இதனை அடுத்துக் கூறவேண்டியதாயினும் இவ்வெண்பாத்தொடரை முடித்துக்கொண்டு அதனை யடுத்துக் கூறுகின்றார்

உலகம் ஒடுங்குதற்கு ஆதாரமாகிய சங்காரக் கடவுளே உலகத்திற்கு முதற்கடவுள் என்பதற்குக்காட்டும் உதாரணம்.

இலயித்த
தத்திதியி லென்னி னழியா தவையழிவ
தத்திதியு மாதியுமா மங்கு.

## சிற்றுரை.

எ—து உ—ம் எனின், இனிச் சற்காரியவாதத்தின் அவ்வக் காரியங்கள் தத்த முதற்காரணத் தொடுங்குமெனவே கோடலின் உலகிற்கு முதற்காரணமாகிய மூலப்பகுதி வாசுதேவனுருவாக லான் உலகம் அவன்மாட் டொடுங்குமென்றலே அமைவுடைத் தன்றி முதற்காரணத்தின் வேறாய் நிமித்தகாரணமெனக் கொண்ட சங்காரகருத்தாவின்மாட் டொடுங்குமென்றல் பொருந்தாதெனப் பாஞ்சராத்திரிகள் கூறுங் கடாவை யாசங்கித்து ஒடுங்கின சங்கா ரத்தின் எனவும் இலயித்ததன்னில் எனவும் கூறிப்போந்த குறிப் பேதுவை வலியுறுத்துத னுதலிற்று.

(இ—ள்.) இலயித்தது அத்திதியில் என்னின்—உலகமொடுங்கியது அந்தமூலப்பகுதிவடிவாய திதிகருத்தாவின்க ணென்பையாயின்,— அவை அழியாது—(நீ அங்ஙனங் கொள்ளினும் மூலப்பகுதிக்கு மேலுள்ள புவனங்கள் அதனால் வியாபிக்கப்படாமையிற் கீழுள்ள ஏகதேசமாத்திரையே ஆண்டொடுங்குவதன்றி) மாயாகாரியத் தொகுதிமுழுவதும் ஆண்டொடுங்காது. (அற்றேல் மாயாகாரியத் தொகுதிமுழுவதும் யாண்டொடுங்குவதெனின்),— அத்திதியும் ஆதியும் ஆம் அங்கு அழிவது—அந்தத்திதிக் கடவுளும் படைப்புக் கடவுளும் தோன்றுதற்குக் காரணமாகிய அச்சங்காரக்கடவுளிடத் தே (அவ்விருவரோடுங்கூட) அழிவதாம் (அத்தொகுதி) என்க.

இவ்வெண்பாவினைச் "செய்யுட்களோசை சிதையுங்காலீர ளபு—மையப்பா டின்றி யமையுமா—மைதீரொற்—றின் றியுஞ் செய்யுட் கெடினொற்றை யுண்டாக்கு—குன்றுமே லொற்றளபுங் கொள்." என்பதுபோல இரண்டதிகரணப் பொருள்படுமாறு இரு தொடராக வைத்துரையாக்காற் பொருளியைபுபடாமை யறிக.

இலயித்தவென்னும் பெயரெச்சம் தன் னென்னும் இடப் பெயரோடு முடிந்தது.

இலயித்தகென்றது ஏதுப்பொருண்மையுணாநின்றபெயர். இலயித்ததெனச் சற்காரியவாதங்கூறவே இலயித்தவவத்தையின் அவ்வக்காரியசத்திசமூகமாய்ச் சூக்குமமாய் நிற்பதொன்றுண்டு, அதுவே முதற்காரணமெனப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாகிய மாயையுண்மையும் பெறப்பட்டது.

ஆ வென்பது முதனிலைத்தொழிற்பெயர். வேண்டுமெனச் செயப்படுபொருளைச் செய்ததுபோலக் கூறினர்.

அவை தொகுதி; அஃறிணைப்பன்மைப்பெயரென்பார்க்கு அழியாது அழிவதென்னும் ஒருமைகளோடியையாமையும் உத்தர மாகாமையு முணர்க.

திதியும் ஆதியும் ஆகுபெயர்; ஆமங்கு பெயரெச்சமுடிபு.

இரணியகருப்பமதத்தையும் மறுத்தற்பொருட்டுப் படைப் புக் கடவுளையும் உடன்கூறினர்.

நிமித்தகாரணனாகிய முதல்வன் உலகிற்கு முதற்காரணனல்ல னாயினும் முதற்காரணமாகிய மாயைக்கு ஆதாரமாய் நிற்றலின், உலகம் ஆண்டொடுங்கி ஆண்டுநின்று தோன்றுதல் அமையுமென் பது வருகின்ற வெண்பாவிற் பெறப்படும்.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) இலயித்தது அத்திதியில் என்னின் அவை அழி யாது; அத்திதியும் ஆதியும் ஆம் அங்கு அழிவது.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோவெனின், இனி உள்ளது காரி யப்படுமென்னுஞ் சற்காரியவாதங்கூறும் மதத்தில் காரியம் ஒடுங்குங்கால் அதன் முதற்காரணத்தில் ஒடுங்குமெனவே கொள்ளுதலின், உலகம் ஒடுங் குங்கால் அவ்வுலகத்திற்கு முதற்காரணமாகிய மூலப்பகுதி வாசுதேவனுரு வாகலான், அவ்வாசுதேவனிடத்து உலகம் ஒடுங்குமென்றலே பொருந்தும்; அவ்வாறின்றி அவ்வாசுதேவனின் வேறாய நிமித்தகாரணமெனக் கொண்ட சங்காரகருத்தாவினிடத்தில் ஒடுங்குமென்றல் பொருந்ாதெனப் பாஞ்ச ராத்திரிகள் கூறுவராதலின், அவர்கூற்றை ஆசங்கித்தெடுத்துக்கொண்டு சங்காரகருத்தாவினிடத்து ஒடுங்குமெனக்கூறி ஒடுங்கின சங்காரத்தின் என்றமேற்கோளிலுள்ள ஒடுங்குதலினல் என்னுங் குறிப்பேதுவையும் இலயித்ததன்னில் என்று மேற்காட்டிய உதாரணத்திலுள்ள இலயித்தலி னல் என்னுங்குறிப்பேதுவையும் வலியுறுத்தியவாறும்.

ஒரு காரியத்திற்கு முதற்காரணம், துணைக்காரணம், நிமித்தகாரணமென மூன்றுகாரணம் வேண்டப்படும்; காரணமாவது காரியத்திற்குமுன் இன்றியமையாததாய் இருப்பது; காரியமாவது செய்யப்படுவது. உதாரணம் குடம். அதற்கு இன்றியமையாததாய் முன்னிருப்பன மண், தண்டு சக்கரங்கள், குலாலன் என்னு மூன்றுமாம்; அம்மூன்றனுள் மண் முதற்காரணம்; தண்டு சக்கரங்கள் துணைக்காரணம்; குலாலன் நிமித்தகாரணம். இவ்வாறே உலகிற்கு முதற்காரணம் மாயை; துணைக்காரணம் இறைவன் சத்தியும் உயிர்களின் கன்மமும்; நிமித்தகாரணம் இறைவன் என அறிக. இவ்வாறாகவும் பாஞ்சராத்திரிகள் மூலப்பகுதி முதற்காரணம் என்றதன் கருத்தென்னையெனின், மாயையினின்று காலமுதலிய வித்தியாதத்துவம் ஏழுந்தோன்றி, அந்த ஏழனுள் கலாதத்துவத்தினின்று மூலப்பகுதிதோன்றி, அந்த மூலப்பகுதியினின்று ஆன்மதத்துவம் இருபத்துநான்குந்தோன்றும்; தத்துவம் இருபத்துநான்கே எனக்கொண்ட பாஞ்சராத்திரிகள் மூலப்பகுதியை முதற்காரணமாகக் கொண்டனர். ஆன்மதத்துவத்திற்குமேற்பட்ட வித்தியாதத்துவம் சிவதத்துவங்களையுங்கூட்டித் தத்துவம் முப்பத்தாறெனக்கொண்ட சைவசித்தாந்திகள் அவ்விருதத்துவங்களுக்கும் ஆதாரமாகிய மாயையை முதற்காரணமெனக் கொண்டனர். மூலப்பகுதி வாசுதேவனுருவென்பது பாஞ்சராத்திரிகள் மதம்; ஆதலால் வாசுதேவனில் உலகம் ஒடுங்குமென அவர் கூறுவர்.

(பொ-ரை.) எது எதனிடத்தில் ஒடுங்கும் அது அதனிடத்தினின்றும் தோன்றுமென்னும் நியாயப்படி உலகம் மூலப்பகுதிவடிவாகிய திதி கருத்தாவினிடத்து ஒடுங்குமாதலால் திதி கருத்தாவாகிய விட்டுணுவே முதற்கடவுளென்பர் பாஞ்சராத்திரிகள். அவ்வாறாயினும் மூலப்பகுதிக்கு மேலுள்ள வித்தியாதத்துவம் சிவதத்துவங்களிலுள்ள உலகங்கள் அம்மூலப்பகுதியினால் வியாபிக்கப்படாமையின் கீழுள்ள உலகங்களே அம்மூலப்பகுதியினொடுங்குவதன்றி மாயாகாரியமாகிய உலகமுழுவதும் அம்மூலப்பகுதியில் ஒடுங்குதலில்லை. உலகம் முழுதும் எவ்விடத்து ஒடுங்குமெனின், மேற்கூறிய திதிக்கடவுளும் படைப்புக்கடவுளுந் தோன்றுதற்குக் காரணமாகிய அச்சங்காரக்கடவுளிடத்தே அவ்விருவரோடுங்கூட ஒடுங்கும் என்றவாறு.

(க-ரை.) உலகம் முழுவதும் பிரமவிட்டுணுக்களுடன் சங்காரக் கடவுளிடத் தொடுங்குதலின் சங்காரக்கடவுளே முதற்கடவுளென்பதாம்.

இவ்வெண்பாவினைத் தொல்காப்பியம் எழுத்ததிகாரத்து நூன்மரபு கூ-வது சூத்திரவுரையில் மாபுராணச்செய்யுளென நச்சினார்க்கினியர் எடுத்துக்கூறிய "செய்யுட்களோசை" என்ற செய்யுளின்படி இரண்டதிகரணப் பொருள்படுமாறு இருதொடராக வைத்து உரையாக்கால் உலகம் உள்ளது எனச் சாதித்த முதலாவது தொடரும், சங்காரக்கடவுளே முதற்கடவுளெ

னச் சாதித்த இரண்டாவது தொடரும் ஒரு தொடராகநின்று பொருள் பொருந்தாமை அறிக.

இவ்வெண்பாவின் முதலாவது தொடரினுள்ள இலயித்த என்னும் பெயரெச்சம் தன் என்னும் இடப்பெயரோடு முடிந்தது. தன் என்பது ஒடுங்குதற்கு இடமாகிய தலைவனைக்குறித்தலால் இடப்பெயர்.

இலயித்தது என்றது இலயித்ததாகலான் என்னும் ஏதுப்பொருள் உணரநின்ற பெயர்ச்சொல். ஆதலால் இலயித்தது என்பதற்கு ஒடுங்கிய தாகலான் என உரை செய்யப்பட்டது. இலயித்ததெனக் கூறவே நாச மாகாமல் ஒடுங்கியதென்றாகி, ஒடுங்கியது மீளத்தோன்றுமென்னுஞ் சற் காரியவாதங் கூறியதாகும். ஆகவே ஒடுங்கிய அவத்தையில் ஒடுங்கப்படும் காரியத்தின் சத்திக்கூட்டமாய்ச் சூக்குமமாய் நிற்பதொன்றுண்டு. அவ் வாறு நிற்பதுவே பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாகிய மாயையாம். கருத் தா உண்மைகூறிய இவ்வெண்பாவால் மாயை உண்மையும் பெறப்பட்டது.

முதலாவது தொடரில் உளதாவேண்டும் என்பதிலுள்ள ஆ வென்பது ஆதல் என்னும் பொருளில் நின்றமையால் முதனிலைத்தொழிற்பெயர். ஆதல் என்பதில் ஆ முதனிலை; தல் தொழிலைக்குறிக்கும் விகுதி; தல் விகுதியின்றி ஆ வென்னும் முதனிலை விகுதிப்பொருளைக்குறித்து நிற் றலின் முதனிலைத் தொழிற்பெயராயிற்று. அத்தொடரிலுள்ள வேண்டு மென்பது வேண்டப்படும் என்னும் பொருளில் நின்றது. வேண்டப்படு மென்றிருப்பின் உலகம் செயப்படுபொருளாகும்; வேண்டுமென்றிருப்பின் உலகமே வேண்டுதலைச் செய்வதாகி உலகம் கருத்தாவாகும்; அவ்வாறு கூறுதல் பொருந்தாதாகலின் செயப்படுபொருளைக்குறிக்கும் வேண்டப்படு மென்பதைச் செய்ததுபோல வேண்டுமெனக்கூறினர்; "செயப்படு பொரு ளைச் செய்ததுபோலத் - தொழிற்படக்கிளத்தலும் வழக்கியன் மரபே." என்பதிலக்கணமாதலின். (தொல்காப்பியம் வினையியல் சூத்திரம். சக.)

இரண்டாவது தொடரிலுள்ள அவை என்பது பிரபஞ்சத் தொகுதியைக் குறித்துநின்றது. அவ்வாறன்றி அவை என்பதை அஃறிணைப் பன்மைப் பெயரெனக் கொள்ளின், அழியாது அழிவது என்னும் ஒருமைகளோடு பொருந்தாது. அன்றியும் உலகம் ஒடுங்கியது திதிகருத்தாவின்கண் என்ப தற்கு அவை ஒடுங்குமென்பது உத்தரமாகாமையும் அறிக.

இரண்டாவது தொடரிலுள்ள அத்திதியும் ஆதியும் என்பதில் திதி என்பது திதியைச்செய்யும் விட்டுணுவையும், ஆதி என்பது ஆதியைச் செய்யும் பிரமாவையுங் குறித்தலின் அவ்விரண்டும் ஆகுபெயர். ஆதி என்பது தோன்றுதல். அதன் பின்னுள்ள ஆம் அங்கு என்பதில் ஆம் என்பது தோன்றுதற்குக் காரணமாகிய எனப் பெயரெச்சமுடிபாகநின்று

அங்கு என்பதனால் உணர்த்தப்படும் சங்காரக்கடவுளென்னும் பெயர் கொண்டுமுடிந்தது; ஆதலின் ஆமங்கு என்பது பெயரெச்சமுடிபாம்.

பாஞ்சராத்திரமதத்தை மறுப்பதோடு இரணியகருப்பமதத்தையும் மறுத்தற்பொருட்டுப் படைப்புக்கடவுளையும் உடன்கூறினார்.

இவ்வாறு சங்காரக் கடவுளிடத்தே உலகம் ஒடுங்குமெனக் கூறிய விடத்து அக்கடவுள் நிமித்தகாரணமாய் நிற்பதன்றி முதற்காரணமாய் நிற்ற லில்லை; ஆதலால் முதற்காரணமாகிய மாயையினிடத்து உலகம் ஒடுங்கு மன்றி நிமித்தகாரணமாகிய முதல்வனிடத்து உலகம் ஒடுங்குமென்றல் எவ் வாறு பொருந்துமென ஆசங்கைநிகழுமன்றே; அந்நிகழ்ச்சிபற்றி முதல்வன் உலகுக்கு முதற்காரணம் அல்லனாயினும் முதற்காரணமாகிய மாயைக்கு ஆதாரமாய் நிற்றலின் ஆதாரமாய் நிற்கும் அம்முதல்வனிடத்து உலகம் ஒடுங்கித் தோன்றுமென்றது பொருந்துமென்பதை அடுத்துவரும் வெண்பா வினால் கூறுகின்றார்.

உலகம் ஒருகருத்தாவை உடையது என்பதற்குக் காட்டும்

உதாரணம்.

வித்துண்டா மூல முளைத்தவா தாரகமா
மத்தன்றா ணிற்ற லவர்வினையால்—வித்தகமாம்
வேட்டுவனா மப்புழுப்போல் வேண்டுருவைத் தான்கொடுத்துக்
கூட்டானே மண்போற் குளிர்ந்து.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், உலகந் தனக்கு முதற்காரணமாகிய மாயையி னொடுங்குவதன்றி நிமித்தகாரணன் ஒருவனுண்டெனக் கொள்ளினும் அவன்மாட்டொடுங்குமென்றல் பொருந்தாமை யின், யாது யாண்டொடுங்கும் அஃததனினுற்பத்தியாம் என்னும் அவிநாபாவத்தான் மாயையினொடுங்கிய உலகத்தை மாயையே தோற்றுவிக்கும்; இதற்கோரிறைவன் வேண்டா எனச் சாங்கிய நூலார் மதம்பற்றி நிகழுங் கடாவையாசங்கித்து உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் என்னுமேதுவை வலி யுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) மண்போல் குளிர்ந்து வித்து உண்டாம் மூலம் முளைத் தவா தாரகம் ஆம் அத்தன் தாள் நிற்றல் அவர் வினையால் வித்த கம் ஆம்—(மாயையும் உலகமும் வித்தும் அங்குரமும் போலுமாக

வின் வித்துக்கு ஆதாரமாகிய) நிலங்குளிர்ந்தவழி (அதன்கண்) வித்துளதாக (அதனினின்றும்) அங்குரந்தோன்றியவாறுபோல (மேலே வெண்பாவின் இலயித்தது என்றதனுற் பெறப்பட்ட மாயை) தனக்காதாரமாய் நின்று தோற்றுவிக்கும் இறைவனது சத்தியின்கணுள்ளதாய் நிற்றலால் (அச்சத்திசங்கற்பித்தவழி) அவரவர்வினைக்கீடாக (அவ்வக்காரியங்களை அவ்வவ்வியல்பிற் பிறழாமற் பயக்குஞ்) சதுர்ப்பாடுடைத்தாம்; (அல்லுழி உடைத்தன்று;) நிலங்குளிர்ந்தவழி அதன் கட்கிடந்தன்றி வித்து முளையைத் தோற்றுதவாறுபோலும்; (ஆகலான் மாயையினொடுங்கித் தோன்றிய உலகம் அதற்காதாரமாய் நின்ற இறைவன் சத்தியினொடுங்கித் தோன்றியதேயாம்) என்க.

ஆகலானென்பதுமுதல் குறிப்பெச்சம். இது கிழங்கினின் றுந் தோன்றிய தாமரையைப் பங்கயமென்பதனானுமறிக. வழிநூலாசிரியர் "உயிரவை யொடுங்கிப் பின்னு முதிப்பதெ னரன்பால்." எ-ம், "உலகவ னுருவிற்றோன்றி யொடுங்கிடும்" எ-ம் ஓதியதூஉம், உலகவனுருவிற்றோன்றி யொடுங்குமாறு வாதுளாகமத்தில் வகுத்தோதியதூஉம் இவ்வியல்பு நோக்கியென்க. இஃ தறியாதார் இன்னோரன்னவற்றைத் தத்தமக்கு வேண்டியவாறே யுரைப்ப.

உவமவினை பொருளினும் பொருளடை உவமையினுஞ் சென்றியையும்.

உண்டாகவெனச் சற்காரியத்தை வலியுறுத்துதல், வித்தில்வழி நிலத்தினின்றும் அங்குரந்தோன்றுதவாறுபோல மாயையில்வழிப் பிரமத்தினின்றும் உலகந்தோன்றுமெனப் பரிணமவாதிகளையும், மாயை அநிர்வசனமென்னும் மாயாவாதிகளையும், வித்துநிலனும்போலென்றதனான் மாயை முதல்வனின் வேறு பொருளன்றென்னுஞ் சிவாத்துவிதசைவர் பாஞ்சராத்திரிகளையும் மறுத்தவாறாயிற்று.

முதல்வன் பலவேறுவகைப்படச் சங்கற்பித்தவாறென்னை என்னுங் கடாவை யாசங்கித்து, அவர்வினையாலென்றார்.

வித்தகம் விசித்திரமென் றுரைப்பினு மமையும்.

அற்றேல், தன்வயத்தானன்றி வினைவயத்தாற் றோற்றுவிப்பான் இறைவனாகானெனின்,

## விளக்கம்.

(கொண்டுகூட்டு) மண்போல் குளிர்ந்து வித்து உண்டா மூலம் முளைத் தவா தாரகம் ஆம் அத்தன் தாள் நிற்றல் அவர்வினையால் வித்தகம் ஆம்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ வெனின், உலகத்திற்கு நிமித் தகாரணன் உண்டெனக் கொள்ளினும் அவ்வுலகந் தனக்கு முதற்காரண மாகிய மாயையின் ஒடுங்குவதன்றி நிமித்தகாரணனிடத்து ஒடுங்குமென் றல் பொருந்தாது; ஆதலால், எது எதனிடத்தி லொடுங்கும் அது அத னிடத்தில் நின்றும் உற்பத்தியாம் என்னும் அவிநாபாவம் மேல் ஆண்டு ஒடுங்குதலின் என்ற ஏதுவில் சித்தாந்தபட்சமாகச் சாதிக்கப்பட்டவாறு மாயையினொடுங்கிய உலகத்தை மாயையே மீளத் தோற்றுவிக்குமாதலால் இதற்கோர் இறைவன் வேண்டாமெனச் சாங்கியநூலார் கூறுவர். அவர் கூற்றை ஆசிரியர் ஆசங்கித்துக்கொண்டு மாயையினொடுங்கிய உலகம் மீள மாயையினின்று தோற்றுதற்கு ஓர் இறைவன் வேண்டுமெனக்கூறி உள்ள தற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் என்னும் ஏதுவை வலி யுறுத்தியவாறும்.

(இவ்வெண்பாவின் முதற்றொடரின் பொழிப்புரை.) மாயைபோல் வித்தும், உலகம்போல் முளையுமாகலின், வித்துக்கு ஆதாரமாகிய நிலங் குளிர்ந்தவிடத்து அந்நிலத்தின்கணுள்ள வித்தினின்றும் முளைதோன்றுமாறு போல, மேலைவெண்பாவில் இலயித்தது என்றதனால் பெறப்பட்டமாயை தனக்காதாரமாகிய இறைவனது சத்தியின்கணுள்ளதாய்நின்று, நிலங் குளிர்வதுபோல், சத்திசங்கற்பித்தவிடத்து அவரவர்வினைக்கீடாக அவ்வக்காரியங்களைப் பிறழாமல் தோற்றுவிக்குஞ் சாமர்த்தியத்தை உடையதாம். சத்திசங்கற்பியாதவிடத்துக் காரியங்களைத் தோற்றுவிக்குஞ் சாமர்த்தியம் மாயைக்குக் கிடையாது. அது எதுபோலவெனின், நிலங் குளிராதவிடத்து வித்து முளையைத்தோற்றுவிக்காதவாறுபோலும். ஆத லின் மாயையினொடுங்கித் தோன்றிய உலகம் மாயைக்காதாரமாய் நின்ற இறைவன் சத்தியில் ஒடுங்கித் தோன்றியதேயாம் என்றவாறு.

(க - ரை.) நிலங்குளிர்ந்தவிடத்து வித்தினின்று முளைதோன்றுமாறு போல, இறைவன் சத்திசங்கற்பித்தவிடத்து மாயையினின்று உலகந்தோன் றும் என்பதாம்.

இவ்வெண்பாவில் வேட்டுவனும் என்பதுமுதல் கூட்டானே என்பது வரையிலுள்ள தொடர் சுதந்தரத்திற்கு இழுக்கில்லை என்ற பிறிதொரு விஷயத்தைக் குறித்தலால் இவ்வுரையிற் கண்ட குறிப்புக்களைக் கூறிவிட்டு அடுத்து அத்தொடருக்கு உரைகூறுகின்றார்.

இவ்வுரையில் ஆகலான் என்பதுமுதல் தோன்றியதேயாம் என்பது வரை ஆதாரம் என்பதுபற்றிக் குறிப்பாகக் கொள்ளுமாறு எஞ்சிக்

கிடத்தலாற் குறிப்பெச்சம். மாயையினின்று தோன்றிய உலகத்தைச் சத்தியினின்றுந் தோன்றியதாகக் கூறும் இது கிழங்கினின்றுந் தோன்றிய தாமரையைச் சேற்றில் நின்றுந் தோன்றியதெனப் பொருள்கொள்ளும்படி பங்கயமென்பதனுமறிக. பங்கம் சேறு; ஜம் தோன்றுதல். பங்கஜ மென்னும் வடமொழி தமிழில் பங்கயம் என்றாயிற்று. சத்தியிற்றோன்றிய தெனவே சத்தி இறைவனிற் பிரிப்பின்றிநிற்குமாதலின் இறைவனிற் றோன்றியதெனக் கொள்ளப்படும். அவ்வாறு இறைவனிற் றோன்றும் என்னுங் கருத்துப்பற்றியே வழிநூலாசிரியர், சிவஞானசித்தியார் முதற்சூத்திரம் ௩௨-வது செய்யுளில் "உயிரவை யொடுங்கிப் பின்னு முதிப்பதெ னரன்பால்" எனவும், அச்சூத்திரம் ௪௮-வது செய்யுளில் "உலகவனுருவிற்றோன்றி யொடுங்கிடும்" எனவுங்கூறினர். வாதுளாகமத்தில் உலகம் அவனுருவிற்றோன்றி யொடுங்கிடுமாறு வகுத்தோதியதூஉம் இக்கருத்துப்பற்றியென அறிக. இக்கருத்தறியாதார் இவைபோன்றவற்றைக்கொண்டு மாயையென்பதொன்றில்லை யெனவும், இறைவனே முதற்காரணமாகவும் நிற்பனெனவுந் தத்தமக்கு வேண்டியவாறே உரைப்பர்.

உலகம் சடப்பொருளாதலால் இச்சடப்பொருளாகிய காரியத்துக்கு முதற்காரணமும் சடமாயிருத்தல் வேண்டுமேயன்றிச் சித்தாயிருத்தல் கூடாது. கடவுளோ சித்துப்பொருள் சித்தினிடத்திலிருந்து சடந்தோன்றுமாயின் நெல்லினிடத்திலிருந்து கமுகு தோன்றல்வேண்டும். அவ்வாறு தோன்றுதல் இன்மையின் உலகத்துக்கு முதற்காரணம் கடவுளென்றல் பொருந்தாது.

சித்தில்நின்று சடமுஞ் சடத்தில்நின்று சித்துந் தோன்றுமென்றல் பொருந்துமெனவும் அதற்கு உதாரணங்கள் உண்டு எனவும் அவர் கூறுவர். அக்கூற்றுவருமாறு:—சிலந்தியாகிய சித்திலிருந்து நூலாகிய சடம் தோன்றுவதும் மனிதனாகிய சித்திலிருந்து உரோமம் நகம் முதலிய சடம் தோன்றுவதும் கோமயமாகிய சடத்திலிருந்து தேள் புழுமுதலிய சித்துத்தோன்றுவதும் பிரத்தியக்ஷமாதலின் கடவுளாகிய சித்துப்பொருளிலிருந்து உலகமாகிய சடப்பொருள் தோன்றுமென்பர். இவர் நுணுகி ஆராயாக் குறையினால் இவ்வாறு கூறுவதேயன்றிப் பிறிதில்லை. எவ்வாறெனின், சிலந்தியின் உடலாகிய சடத்திலிருந்து நூலாகிய சடம் தோன்றிற்றேயன்றி உயிரினிடத்திலிருந்து தோன்றவில்லை. இவ்வாறே மனிதனாகிய உடலினிடத்தினின்று நகமுதலியன தோன்றினவேயன்றி உயிரினிடத்தினின்று தோன்றவில்லை. இனிக்கோமயமாகிய சடத்திலிருந்து தேள் முதலியவற்றின் உடம்பாகிய சடம் தோன்றிற்றேயன்றி உயிர் தோன்றவில்லை; ஆயினும் சடப்பொருளாகிய சிலந்தியுடலினிடத்தும் மனிதவுடலினிடத்தும் முறையே நூலும் நகம்முதலியனவும் தோன்றுதற்கு அவ்வுடலோடு உயிர் இருத்தல்வேண்டும். இன்றேல் அவை தோன்றுமாறில்லை, ஆகவே உயிர் நிமித்தகாரணமும் உடல் முதற்காரணமுமாகும். இவ்வாறே இறைவன் நிமித்தகாரண

மும் இறைவனையின்றித் தனித்துநில்லாத மாயை முதற்காரணமுமாய் நிற்க இறைவன் சிற்சத்தியின் வியாபாரபேதத்தால் முதற்காரணமாகிய மாயையினின்று உலகம் தோன்றுமென்க.

இதன்மேல் தம் கருத்தை நிரப்புதற்கு வழியில்லாதுபோகவே, கடவுட்பொருளோடு உவமித்துச் சொல்லக்கூடியபொருள் வேறுகிடையா தெனவும், கிடைப்பின் இரண்டும் கடவுள் எனவேபடுமெனவும், அதுமிகை யென்னுங் குற்றமாமெனவும், ஆதலால் உவமானத்தில்வைத்து ஆராய்தல் தகுதியன்றெனவும், நூற்பிரமாணமேகொள்ளத்தக்கதெனவும் அதன்படி கடவுளே முதற்காரணமெனவுங் கூறப்புகின்,

நூற்பிரமாணத்தை மதவாதிகள் அனைவரும் ஏற்றுக்கொள்வதில்லை. ஆதலால் எவரும் ஏன்றுகொள்ளுதற்குரிய பிரமாணம் அநுமானமேயாம்; அநுமானமாவது ஏது திருட்டாந்தங்களோடு கூடியது. ஏதுமட்டும் இருந்து திருட்டாந்தம் இல்லையாயின் அவ்வநுமானம் முடிவுபெறுதலின்மையென னும் ஏதுப்போலியுட்படும். ஆதலால் திருட்டாந்தம் கூறியே அநுமானத் தைச் சாதிக்கவேண்டும். இவ்வாறுகூறும் அநுமானப்பிரமாணமும் சாத் திரப்பிரமாணத்தோடு ஒரு சிறிதும் முரணாது. முரணுமாயின் பிரமாண மாகமாட்டாது. ஆயின் ஒன்றுபோதாதோவெனின், மேற்கூறியவாறு சாத்திரத்தை ஏன்றுகொள்ளாதார்க்கும் அறிவுறுத்துதற்பொருட்டு இரு பிரமாணங்களும் வேண்டப்படுவனேயாம். ஆதலால் கடவுளைப்பற்றிக் கூறுவதற்குத் திருட்டாந்தம் கிடையாதென்றுகூறும் இவர்கூற்றுப் பயன் படாமையறிக. ஆகவே உலகத்துக்கு முதற்காரணம் மாயையேயாம். முதற் காரணம் நிமித்தகாரணம் உண்டென்பதற்கு மேற்கூறிய சிலந்தி மனுடன் முதலிய திருட்டாந்தத்தைக் கூறாமல் சைவசித்தாந்தநூல்களில் மண்ணை யும் குயவனையும் கூறியகருத்தென்னையெனின், இரண்டும் ஒன்றேயென மயங்காதிருத்தற்பொருட்டன்றிப் பிறிதில்லையென்க.

இவ்வெண்பாவில் நிலமும், வித்தும், முளையும் உவமானம். இறைவனு டைய சத்தியும், மாயையும், உலகமும் உவமேயப்பொருள். உவமானத்தில் நிலங்குளிர்ந்தவிடத்து வித்தினின்றும் முளை தோன்றுமெனப்பட்டது. குளிர்தலாகிய உவமான வினைபோல் சத்திக்குச் செய்யுளில் வினைகூற வில்லை. சத்தியைத் தாள் என்று கூறிவிடுத்தனர்; உவமானத்திற் கூறிய வினை சத்திக்கும்பொருந்துமாதலால் அவ்வாறு வருவித்து சத்திசங்கற்பித்த வழி என உரைசெய்யப்பட்டது. நிலத்தின்வினை குளிர்தலும், சத்தியின் வினை சங்கற்பித்தலுமென அறிக. உவமேயப்பொருளில் இறைவன் சத் திக்கு அடையாக தாரகமாம் எனக்கூறப்பட்டுள்ளது; அதுபோல உவமா னத்தில் நிலம் ஆதாரமென்று கூறப்படவில்லை; உவமேயத்திற் கூறிய

ஆதாரமென்னும் அடை உவமானத்திலும் பொருந்துமாதலால் வித்துக்கு ஆதாரமாகிய நிலமென உரைசெய்யப்பட்டது

வித்து உண்டாக என்பது உண்டா என ஈறுகுறைந்து நின்றது; அது உள்ளது காரியப்படுமென்னுஞ் சற்காரியவாதத்தை வலியுறுத்துதலாம்.

இச்சற்காரியவாதத்தை வலியுறுத்துதலால் இறைவன் வேண்டாமென்னுஞ் சாங்கியநூலாரை மறுத்ததோடு பரிணாமவாதிகளையும் மாயாவாதிகளையும் பாஞ்சராத்திரிகளையும் மறுத்தவாறாயிற்று. எவ்வாறெனின்,

பரிணாமவாதிகள் மாயையில்லையென்றும் பிரமமே உலகமாகத்தோன்றுமென்றுங்கூறுவர்; நிலத்தினின்றும் வித்தில்லாமல் முளை தோன்றுமாயின் பிரமத்தினின்றும் மாயையில்லாமல் உலகந்தோன்றுமென்றல் கூடும்; அவ்வாறின்றி நிலத்தில் வித்துக்கிடந்து அதினின்று முளைதோன்றுமாறுபோல பிரமத்தில் மாயை அடங்கியிருந்து அம்மாயையினின்று உலகந் தோன்றுமென்று கூறிய இதனால் பரிணாமவாதிகள் மறுக்கப்பட்டார்கள்.

இனி, மாயாவாதிகள் மாயையை அநிர்வசனமென்பர். அநிர்வசனமென்பது உறுதியாய்ச் சொல்லக்கூடாதது என்பதாம். எவ்வாறெனின், வசனம்—சொல்வது; நிர்வசனம்—நிர்ப்பந்தமென்பதுபோல உறுதியாய்ச் சொல்வது; அநிர்வசனம் உறுதியாய்ச் சொல்லக்கூடாததென அறிக. இவ்வெண்பாவினால் மாயை உள்பொருளென்று உறுதியாகக்கூறினமையால் அது அநிர்வசனமென்னு மாயாவாதிகள் மறுக்கப்பட்டார்கள்.

இனி, பாஞ்சராத்திரிகள் மாயை இறைவனின் வேறில்லை யென்பர். வித்து நிலத்தின் வேறாதல்போல மாயை முதல்வனின் வேறென்று கூறியதனால் அவர்கள் மறுக்கப்பட்டார்கள். பாஞ்சராத்திரிகள்போலவே மாயை முதல்வனின் வேறன்றெனக்கூறும் சிவாத்துவிதசைவரும் அதனான் மறுக்கப்பட்டவாறு அறிக.

முதல்வன் சங்கற்பித்தவிடத்து மாயையினின்று உலகந் தோன்றுமென்றதனால் பலவேறுவகையான உலகம் தோன்றுதற்கு முதல்வன் பலவேறு வகைப்படச் சங்கற்பித்தல்வேண்டும்; அவ்வாறு பலவேறுவகைப்படச் சங்கற்பித்தற்கு ஏது என்னையென்னும் வினா நிகழுமாதலின், அவ்வினாவை ஆசங்கித்துக்கொண்டு அவரவர் வினைக்கீடாகச் சங்கற்பித்தவாறுமென்பது தோன்றச் செய்யுளில் அவர் வினையாலென்றார்.

வித்தகம் என்பதற்குச் சதுர்ப்பாடு (அதாவது சாமர்த்தியம்) என்று உரைசெய்யப்பட்டது. விசித்திரம் என்று உரைசெய்யினும் அமையும்.

இவ்வாறு உயிர்களின் வினைவயத்தால் மாயையினின்றும் உலகை இறைவன் தோற்றுவிப்பன் என்று கூறவே இறைவனுக்குத் தன்வயத்த

னென்னும் இலக்கணம் இல்லையாய் வினையாகிய பிறவயத்தன் எ[illegible] சித்தித்துப் பிறவயத்தன் இறைவனுகான் என்பது பெறப்படும்; ஆத[illegible]ல், வினைவயத்தனுயினுந் தன்வயத்திற்கு இழுக்கில்லை என்பதை வெ[illegible]ண்ப வின் மற்றொரு தொடரால் எடுத்து விளக்குகின்றார். தன்வய[illegible]ட்து சுதந்தரமுடைமை; அதாவது தானுகவே யாவுஞ்செய்தல். பி[illegible]மை பது தானுக ஒன்றுஞ்செய்தலின்றிப் பிறர்வழியில் நின்றுசெய்த[illegible]

வெண்பாவின் பின்தொடர்.

## சிற்றுரை.

வேட்டுவன் ஆம் அப்புழுப்போல் வேண்டு உருவைத்தான் கொடுத்துக் கூட்டானே—வேட்டுவனுதலை விரும்பும் புழுவிற்கு வேட்டுவன் விரும்பிய வடிவினைக் கொடுக்குமாறுபோல, இறை வனும் (அவரவர்) வேண்டுமுருவினைக்கொடுத்து (அவ்வினைக்குத் தக்க பயன்களையும்) கூட்டுவன் (ஆகலான் அதுகொண்டு சுதந் தரத்திற்கிழுக்கென்னை) என்க.

ஆகலான் அதுகொண்டு சுதந்தரத்திற்கிழுக்கென்னை யென் பது குறிப்பெச்சம்.

15 ீ போல் அசை. குளிர்ந்தவழியென்பது குளிர்ந்தெனத்திரிந்து ன்றது.

நிற்றலினென்னும் ஐந்தாவது விகாரத்தாற்றெக்கது. ஏகாரம் எதிர்மறை.

## விளக்கம்.

(இரண்டாவது தொடரின் பொ-ரை.) வேட்டைவாளி (குளவிகளி லொருசாதி) யாதலைவிரும்பும் புழுவுக்கு அது விரும்பிய அவ்வடிவினைப்புழு வை எடுத்துவைத்திருக்கும் அக்குளவிகொடுக்குமாறுபோல, அவரவர் விரும் பியவண்ணம் விரும்புதலாகிய வினைக்குத்தக்க வடிவினையும் பயன்களையும் மாயையினின்று இறைவன் தோற்றுவித்துக் கூட்டுவனுதலால் அதுகொண் டு சுதந்தரத்திற்கு இழுக்கில்லை என்றவாறு.

(க-ரை.) உயிர்களின் வினைக்கீடாக உலகத்தை இறைவன் தோற்று வித்தலால் சுதந்திரத்திற்குக் குறைவில்லை யென்பதாம்.

கூட்டுதலாகிய சுதந்திரம் இறைவனுக்கிருத்தலால் சுதந்திரமுடைய னென்பது பெறப்படும். இக்கருத்துப்பற்றியே "வேண்டுவார் வேண்டு வதே ஈவான் கண்டாய்" எனத் திருநாவுக்கரசுசுவாமிகள் திருமறைக்காட் டுத் தேவாரத்தில் அருளிச்செய்வாராயினர்.

உ—வது தொடரிலுள்ள உரையில் ஆகலான் என்பது முதல் இழுக்கென்னே என்பது வரைவேண்டுருவைக் கொடுத்தலென்பதனுல் குறிப்பாக எஞ்சி நின்றமையால் குறிப்பெச்சம்.

அப்புழுப்போல் என்பதிலுள்ள போல் என்பது உவம உருபன்று; அசையாம்.

முதலாவது தொடரில் மண்போல் குளிர்ந்தவழி என நிற்கற்பாலது குளிர்ந்து எனத் திரிந்து நின்றது. அத்தொடரில் அத்தன்றாள்நிற்றல் என்பதில் ஐந்தாவதாகிய இன் உருபு விகாரத்தாற்றொக்குநின்றது. அவ்வுருபு ஏதுப்பொருளின் நின்றமையால் நிற்றலால் என உரைசெய்யப்பட்டது.

இரண்டாவதுதொடரில் கூட்டானே என்பதிலுள்ள ஏகாரம் கூட்டுவன் என்னும் பொருளின் நின்றமையால் எதிர்மறை.

இவ்வாறு முதல்வன் உலகைத்தோற்றுவித்து நிலைப்பித்து ஒடுக்குவன் என்பது இவ்வெண்பாவாலும் மேலைவெண்பா முதலியவற்றாலும் பெறப்படவே அத்தொழில் செய்வதனுல் இறைவன் விகாரமெய்தாளே என்னுஞ் சங்கையை அடுத்தவெண்பாவால் நீக்குகின்றார்.

இறைவன் முத்தொழில்செய்தும் வேற்றுமையடையான்
என்பதற்குக் காட்டும்

உதாரணம்.

நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்திற்
றாக்காது நின்றுளத்திற் கண்டிறைவ—னாக்காதே
கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக்
கண்டவனி ல்ற்றின்றாங் கட்டே.

சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின். மேலையுதாரணத்திற் கூறியவாற்றான் உலகிற்கு முதற்கடவுள் உண்டெனக் கொள்ளினும், அவன் படைப்புமுதலியன தொழில் செய்வானாயின் விகாரமெய்தி அதனிற் பந்தமுறுவானென்னு மவர்மதம்பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்து ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ—ள்.) இறைவன்—முதல்வன்,—காலத்தில் தாக்காது நின்று—(இறப்பு நிகழ்வு எதிர்வு முதலியனவாய் வேறுபட்டு எல்லாத் தொழிலுஞ் செய்துந் தனக்கு விகாரமின்றி நிற்கும்) காலம்போல விகாரப்படாதுநின்று,—ஆக்காதே கண்டு—(பிரபஞ்சத்தைக்) காரணத்

தாற்படையாது சங்கற்பமாத்திரத்தானே படைத்து,—நோக்காது நோக்கி நொடித்து—(அவ்வாறே) காவாது காத்து (அழியா) தழித்தலால்,—~~அன்றே~~ இன்று ஆம் கட்டு—(இவ்வமலனுக்குப்) பந்தமின்றுதல்,—உளத்தில் ~~கனவு கண்ட~~ கண்ட நனவு, உணர்வில் நீண்ரக்கண்டவனில் இற்று—(கற்றநூற் சொல்லும் பொருளும்) உள்ளதறிற் றேன்றுங்கால் உள்ளம் அவற்றிற் றொடக்குண்ணுதவாறுபோலும், கனவின்கட் கண்டவற்றைப் புறத்து விடயங்களையறிந்து வந்த நனவுணர்வின்கண்ணே விளங்கவறிந்தவன் அப்பொழுது அவற்றிற் றொடக்குண்ணுதவாறுபோலு மித்தன்மைத்து ~~என்க~~ று.

எனவே, இஃதிவ்வாறுகவென் றெண்ணுதலாகிய சங்கற்பமாத்திரையாற் செய்வதூஉம், கரணத்தாற் செய்வதூஉமென வினைமுதல் இருவகைப்படுமென்பதூஉம், கரணத்தானன்றிச் செய்யமாட்டாத குயவன் முதலியோர் சங்கற்பமாத்திரையாற் செய்யு முதல்வனுக்கு வினைமுதலாதற் பொதுமைபற்றி ஒருபுடையுவமையாதலன்றி, முற்றுவமையாதல் செல்லாமையானும், சங்கற்பமாத்திரையாற் செய்யுஞ் செய்திக்குக் கட்டுண்டன் முதலிய குற்றங்கள் பகைப்பொருளாகலானும், அவையாண்டுளவாதற்கோரியைபின்றெனபதூஉம் கூறி ஏதுவைவலியுறுத்தவாறு காண்க.

ஆக்குதல் படைத்தல்; காண்டலும் அது. நோக்குதல் காத்தல். நொடித்தல் அழித்தல்; அது, "நொடித்தான்மலை" என்பதனுனுமறிக.

ஆக்காது நோக்காது என்றமையால் நொடியாதென்பது வருவித்துரைக்கப்பட்டது. நொடித்தலானென்பது நொடித்தெனத் திரிந்தது.

அன்றே அசை; அநாதியே யெனினுமமையும்.

இல் மூன்றும் உவம வுருபுகள்.

உளத்திலென்பதற்குச் சங்கற்பத்தாலென் றுரைப்பினுமமையும்.

இன்றுங்கட்டு என்பது "அருங்கேடன்" என்பதுபோல நின்றது.

## பிரமாணவியல்முதற்சூத்திரம். உ-ம் அதி. சூக

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) இறைவன் காலத்தில் தாக்காது நின்று ஆக்காதே கண்டு நோக்காது நோக்கி நொடித்து அன்றே இன்று ஆம் கட்டு. உளத்தில் கனவுகண்ட கண்டநனவு உணர்வில் உணரக்கண்டவனில் இற்று.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றேவெனின், இலயித்த என்னும் இரண்டாவதுதொடராகிய மேலை யுதாரணத்திற் கூறியவாற்றால், உலகிற்கு முதற்கடவுள் உண்டெனக்கொள்ளினும், அம்முதற்கடவுளாகிய சங்காரக்கடவுள் படைப்புமுதலியதொழில் செய்வாராயின் நிருவிகாரியாகாது வேற்றுமைப்பட்டு அத்தொழிலிற்கட்டுப்படுவர், தொழில் செய்யாரெனக்கொள்ளின் கருத்தாவாதல்கூடாது, என்பாரை மறுத்துத் தொழில் செய்வர், அதனால் விகாரமெய்தார், எனக்கூறி, உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் என்ற ஏதுவை வலியுறுத்தியவாறாம்.

(பொ - ரை.) காலமானது இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம், நாள், நாழிகை முதலியனவாய் வேறுபட்டு எல்லாத்தொழிலுஞ்செய்தும் தனக்கு விகாரமின்றிநிற்கும். அதுபோல, முதல்வன் விகாரப்படாது நின்று பிரபஞ்சத்தைக் கரணத்தாற்படையாது சங்கற்பமாத்திரத்தானே படைத்து, அவ்வாறே கரணத்தாற்காவாது சங்கற்பமாத்திரத்தாற் காத்து, கரணத்தாலழியாது சங்கற்பமாத்திரத்தால் அழிப்பன். சங்கற்பத்தைத் தடுக்கும் மலமின்மையிற் சங்கற்பமாத்திரத்தாற் செய்தலால் இந்த அமலனுக்குப் பந்தமின்றாம். பந்தமின்றாதல் எதுபோலுமெனின், ஒருவன் கற்றநூலின்கண்ணுள்ள சொல்லும் அச்சொல்லுக்குரிய பொருளும் மனத்திற்றோன்றுங்கால் அம்மனம் அச்சொல்லினிடத்தும் பொருளினிடத்தும் கட்டுப்படாதவாறுபோலும், கனவின்கண் கண்டவை நனவின்கண் வந்தபொழுது கனவிற்கண்டவாறு விளங்க அறியினும் அறிந்தவன் அப்பொழுது அவற்றிற் கட்டுப்படாதவாறுபோலுமாம் என்றவாறு.

(க-ரை.) இறப்புமுதலிய வேறுபாட்டால் காலம் வேற்றுமையடையாதவாறுபோல, படைப்புமுதலிய வேற்றுமையால் இறைவன் வேற்றுமையடையான், சங்கற்பமாத்திரத்தாற் செய்தலால் பந்தமும் அடையான் என்பதாம்.

இதிற்கூறிய உதாரணம் இரண்டும் சங்கற்பமாத்திரையாற் செய்து பந்தமின்றாதலை வலியுறுத்தியது எவ்வாறெனின், நூலைப்படிக்குங்கால் நரகம், சுவர்க்கம், பூமிமுதலிய சொற்களும் அவற்றிற்குரிய பொருள்களும் உள்ளத்திற்றோன்றினும் அவ்வுள்ளம் நரகமுதலியவற்றைப் பொருந்துதலில்லை. அவ்வாறே கனவில் யானை கரடிமுதலியவற்றைக்கண்ட ஒருவன் நனவில் அவ்வாறு கண்டதாக உணருங்காலத்து உணர்ந்த அவ்வுள்ளம்

யானைமுதலியவற்றால் வருந்துவதில்லை. ஆயின் கனவுகாணுங்காலத்துத் துன்பம் உண்டோ இல்லையோவெனின், உண்டு; உண்டாவதற்குக் காரணம் சூக்குமதேகத்திற்கு அநுபவமாகின்றமையால் என அறிக. நனவின் கண்வந்தபொழுது கனவைநினைத்தல் சங்கற்பம். ஆதலினாற்றான் கனவை நினைக்கும் நனவை உவமைகூறியது. கனவிலும் கண்முதலிய கரணங்கள் சூக்குமமாய் உண்டு. ஆகவே கண்முதலிய கரணங்களோடு காண்பதற்கும் அக்கரணமின்றி உள்ளத்தாற் காண்பதற்கும் வேற்றுமை உண்டென்பது நன்குவிளங்குமாறுகாண்க. ஆதலால் இவ்வுவமைகள் சங்கற்பமாத்திரத்தாற் செய்யும் முதல்வனுக்குப் பந்தமின்றாதலை வலியுறுத்தின.

இவ்வாறு கூறியதனால் சங்கற்பமாத்திரையாற்செய்யுங் கருத்தாவும் கரணத்தாற்செய்யுங் கருத்தாவுமெனக் கருத்தா இருவகைப்படுமென்பதாயிற்று. சங்கற்பமாத்திரையாற் செய்யுங்கருத்தா முதல்வன்; அவன் இது இவ்வாறாகுக என்றெண்ணுதல்மாத்திரையானே எல்லாம் செய்வன். கரணத்தாற்செய்யுங்கருத்தா குயவன் முதலியோர்; இவர்க்கு மண்ணினின்று குடத்தைத் தோற்றுவிப்பதற்குக் கைகால்முதலிய கரணங்களையின்றிமுடியாது. ஆகவே கருத்தாவென்னும் பொதுமையால் முதல்வனுக்குக் குயவனை உவமையாகக்கூறினும், கருத்தாத்தன்மையாகிய ஒருபுடை உவமையாதலன்றிச் செய்யுமுறையும் ஒத்தலாகிய முற்றுவமையாதல் செல்லாது; ஆதலானும், கட்டுண்டல் முதலிய குற்றங்களுளவாயின் எண்ணியவாறு செய்ய இயலாதாதலின் சங்கற்பமாத்திரையாற் செய்யுஞ் செய்திக்குக் கட்டுண்டல்முதலிய குற்றங்கள் பகைப்பொருளாகலானும், அக்குற்றங்கள் சங்கற்பமாத்திரையாற் செய்யுமிடத்துளவாதற்குச் சம்பந்தமின்றென்பது கற்றநூற்பொருள் கனவு என்னும் உவமையில் வைத்து விளக்கியதனானும், விகாரமும்பந்தமுமெய்தாது செய்வோனாகிய கருத்தா உண்டென்றுகூறி, உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினை இன்மையின் என்ற ஏதுவை வலியுறுத்தியவாறுகாண்க.

செய்யுளில் ஆக்காதே என்பது ஆக்குதல் என்பதற்கு எதிர்மறை. ஆக்குதல் என்பது படைத்தலெனப்படும். ஆக்காதே என்பதை அடுத்து நின்ற கண்ட என்பதும் படைத்தலைக்குறிக்கும். ஆதலால், ஆக்காதே கண்டு என்பதற்குப் படையாது படைத்து என உரைசெய்யப்பட்டது. நோக்காது நோக்கி என்றதில் நோக்குதல் காத்தலாம். ஆதலால், காவாது காத்து என உரை செய்யப்பட்டது. நோக்கி என்பதன் பின்னுள்ள நொடித்தல் என்பது அழித்தலைக்குறித்து நின்றது. நொடித்தல் அழித்தலைக் குறிக்குமென்பதை "நொடித்தான்மலை" என்ற சுந்தரமூர்த்திசுவாமிகள் அருளிய தேவாரப்பதிகத்தானுமறிக. நொடித்தான் என்பது மகாசங்காரஞ் செய்தவன் என்பதையும், திரிபுரசங்காரஞ் செய்தவன் என்பதையும் குறிக்கும். குறிக்கவே

சங்காரக்கடவுள் என்பது பெறப்படும்; படவே, 'நொடித்தான்மலை'' என்பது சங்காரக்கடவுள் வீற்றிருக்குங் கைலைமலையாம்.

ஆக்காது ஆக்கி நோக்காது நோக்கி என்று கூறினமையால், அவ்வாறே நொடித்து என்பதற்குமுன் நொடியாது என்பது இன்றேனும் உரையிற் கோடல் என்னும் உத்தியால் வருவித்துரைக்கப்பட்டது. நொடித்தலால் என்று இருக்கவேண்டுவது நொடித்து எனத் திரிந்துநின்றது. நொடித்தன்றே என்பதிலுள்ள அன்றே என்பதை அசையாக வைத்து அதற்கு உரை செய்யவில்லை அன்றே என்பதற்கு அனாதியே என்று கூறினும் அமையும். அவ்வாறு கூறுங்கால் அனாதியே பந்தமின்றாம் என உரைக்க.

காலத்தின் என்பதிலுள்ள இன்னுருபும், உள்ளத்தின் என்பதிலுள்ள இன்னுருபும் கண்டவனின் என்பதிலுள்ள இன்னுருபும் முறையே காலம் போல், உள்ளம்போல், கண்டவன்போல் என்னும் பொருளில் நின்றமையால் அம்மூன்றும் உவம உருபுகள்.

உளத்தில் என்பதற்கு உள்ளமாகிய மனம் என்று உரைசெய்யப்பட்டது; மனத்தின் தொழிலாகிய சங்கற்பத்தால் என்றுரைப்பினும் பொருந்தும்.

இன்றாங்கட்டு என்பது பந்தமின்றாதலைக் குறித்தது; இது எதுபோலவெனின், திருக்குறள் தீவினையச்சம் பத்தாவது செய்யுளில் "அருங்கேட" னென்பதுபோலாம். குறளில் அருமை இன்மைப்பொருளில் நின்றது; கேடில்லை என்று சொல்லவேண்டுவதை இல்லைக்கேடு என்று குறளிற் கூறியது போலக் கட்டு இன்று என்று சொல்லவேண்டுவதை இன்றாங் கட்டு என இந்நூலிற் கூறினர்.

இவ்விரண்டாம் அதிகரணத்தில் உலகம் உள்ளது, கருத்தா உண்டு, சங்காரக்கடவுளே கருத்தா என்பன தன்னாற் கூறப்படும் மேற்கோள். உலகம் உள்ளதோ இல்லதோ என்பதும், கருத்தா உண்டோ இல்லையோ என்பதும், சங்காரக்கடவுள் கருத்தாவோ அன்றோ என்பதும் ஐயப்பாடுகள். உலகம் இல்பொருளென்பதும், கருத்தா இல்லை யென்பதும், சங்காரக்கடவுள் கருத்தா அன்று என்பதும் பிறர்கூறும் பக்கம். மூன்றேதுக்களும் பிறர்பக்கத்தை மறுத்துரைக்குஞ் சித்தாந்தம். முதலாவது வெண்பாவிலுள்ள இருதொடரும், இரண்டாவது வெண்பாவும் ஏதுவை வலியுறுத்தும் உதாரணம். மூன்றாவது வெண்பா இயைபுபற்றி ஏதுவை வலியுறுத்தும் உதாரணமாயிற்று. இவ்வாறு இவ்வதிகரணப்பொருளை அறிந்துகொள்க.

இரண்டாம் அதிகரணம் முற்றிற்று.



# மூன்றும் அதிகரணம்.



சங்காரக்கடவுள் ஒன்றே ~~முதல்~~ எனக்கூறும்

மேற்கோள்.

இனிச் சங்காரமே முதலென்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், 'ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை' எனவே சங்காரகருத்தா உலகிற்கு முதற்கடவுளென்பது போந்ததாயினும் தேர் முதலாயின பலர்கூடிச் செய்யக்காண்டலின் அவற்றினும் அதிவிசித்திரமான உலகத்திற்கு மற்று மத்தன்மையராய முதற்கடவுளர் (உண்டெ)னக்கோடும் என்னும் அநேகேசுரவாதிகண் முதலியோர்மதம்பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்து 'அந்தமாதி' என்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

(இ—ள்) சங்காரகருத்தா ஒருவனே உலகிற்கு முதற்கடவுளென்றது.

சங்காரம் ஆகுபெயர். ஏனையோர் முதல்வராகாரெனப் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

## விளக்கம்.

சங்காரக்கடவுளே கடவுளென இரண்டாமதிகரணத்தாற் சாதித்தவிடத்து அச்சங்காரக்கடவுளும் ஒன்றோ பலவோ என்னும் ஐயம் நிகழாமைப்பொருட்டு மூன்றும் அதிகரணங்கூறுகின்றார்.

இது சூத்திரத்தில் உள்ள 'அந்தமாதி' என்னுங்கூற்றைக் கண்ணழித்து மேற்கொண்டவாறும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோவெனின், இரண்டாமதிகரணத்தில் ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை எனக் கூறியதனுல் உலகிற்கு முதற்கடவுள் சங்காரகருத்தாவெனச் சித்தித்தது; ஆயினும் தேர் முதலாயின பலர்கூடிச் செய்யக்காண்டல்போல, அத்தேர் முதலியவற்றினும் அதிவிசித்திரமான உலகத்திற்கு எவற்றையும் ஒடுக்குந்தன்மையையுடைய சங்காரக்கடவுளர் பலர் உண்டெனக் கொள்வேமென்று

அநேகேச்சுரவாதிகள் முதலியோர் கூறுவர்; பல ஈசுவரர் உண்டென்றமை யால் அநேகேச்சுரவாதிகள் எனப்பட்டார். இவர்கூற்றை ஆசிரியர் ஆசங் கித்துக்கொண்டு 'அந்தமாதி' என்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித் துச் சங்காரக்கடவுள் ஒன்றே எனக்கூறியவாறும்.

(இம்மேற்கோளின் பொருள்.) ஒரு சங்காரகருத்தாவே உலகிற்கு முதற்கடவுள் என்றவாறு.

மேற்கோளில் சங்காரமென்றது சங்காரத்தைச்செய்யுங் கருத்தாவைக் குறித்தலால் ஆகுபெயர். சங்காரமே என்றதிலுள்ள ஏகாரம் பிரம விட் டுணு முதலிய ஏனையோர் முதல்வராகாரெனப் பிரித்தமையின் பிரிநிலைக் கண் வந்தது.

சங்காரகருத்தா ஒருவனே என்பதற்குக்காட்டும்

ஏது.

சுட்டுணர்வாகிய பிரபஞ்சஞ் சுட்டுணர்வின்றிநின்ற சங்கா ரத்தின்வழியல்லது சுதந்திரமின்றி நிற்றலான்.

## சிற்றுரை.

எ-து ஏது-எ-ளின், அதற்குப் பிரமாணமென்னையென்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) ஒன்றொன்றாய்ச் சுட்டியறிவதாகிய உருவும் அருவு மென்றிருவேறுவகைப்பட்ட பிரபஞ்சம் அவ்வாறு சுட்டியறித லின்றி எவ்வுலகும் ஒன்றாயறிந்துநின்ற சங்காரகருத்தாவின் வழிப் பாதந்திரமாய் நிற்பதல்லது தனக்கெனச் சுதந்திரமுடைத் தாய் நிற்பதன்றாகலாற் சங்காரகாரணனொருவனே உலகிற்கு முதற்கடவுளன்றி ஏனையோர் முதற்கடவுளரல்லர் என மேற் கொண்டது என்க.

பிரபஞ்சத்திற்குச் சுதந்திரமின்மையுஞ் சங்காரகாரணனுக் குச் சுதந்திரமுண்மையும் ஏதுமுகத்தாற் காட்டுவார் சுட்டுணர் வாகிய பிரபஞ்சமெனவும், சுட்டுணர்வின்றிநின்ற சங்காரமென வும், ஈரிடத்தும் உடம்பொடுபுணர்த்தோதினர். சுட்டுணர் வுடையதனைச் சுட்டுணர்வென்றது உபசாரம். ஈண்டுப் பிரபஞ்ச மென்றது சேதனப்பிரபஞ்சத்தை; பிரிநிலையேகாரத்தான் விலக் குதற்குரியது அதுவேயாகலின்.

தேர் முதலாயின பலராற் செய்யப்படினும் அப்பலரும் ஒரு வனைவல்வழிநின்றே செய்பவாகலானும், வேதத்துட் காரண வாக்கியங்களிற் சுட்டுணர்வினராகிய நாராயணன், இரணியகருப் பன், இந்திரன், அங்கி, சூரியன் முதலியோரைக் காரணமென்றது குயவன்போல அவாந்தரகாரணமாதல்பற்றியே யாகலின் அவை யெல்லாம் ஆகுபெயராற் சங்காரகாரணனாகிய முதற்கடவுளையே யுணர்த்திநிற்குமாகலானும், செய்துஞ் செய்வித்தும் எல்லாத் தொழிற்கும் வினைமுதலாய்நிற்கு முதற்கடவுள் சங்காரகருத்தா வொருவனே யென்பது கருத்து.

## விளக்கம்.

இந்த ஏது என்ன சொல்லிற்றோவெனின், சங்காரகருத்தா ஒருவனே என்பதற்குப் பிரமாணம் என்னையென்பாரை நோக்கிப் பிரமாணங்கூறி மேற்கோளைச் சாதித்தவாறாம்.

(இந்த ஏதுவின் பொருள்.) ஒன்றொன்றாய்ச் சுட்டியறிவதாகிய உருவும் அருவும் என்று இருவேறுவகைப்பட்ட சேதனப்பிரபஞ்சமாகிய உயிர் அவ் வாறு சுட்டியறிதலின்றி எவ்வுலகும் ஒன்றாயறிந்துநின்ற சங்காரகருத்தா வின் வசப்பட்டுப் பரதந்திரமாய் நிற்பதல்லது தனக்கெனச் சுதந்திரமுடைத் தாய் நிற்பதன்று. ஆதலாற் சங்காரகாரண னொருவனே உலகிற்கு முதற் கடவுளன்றி ஏனையோர் முதற்கடவுளரல்லர் என மேற்கோள் கூறியது என்க.

சடப்பிரபஞ்சம் சுட்டியறியப்படுவதாதலின் சுட்டுணர்வாகிய பிரபஞ் சம் உயிரெனக்கொள்க. உயிர் உருவும் அருவுமென்றிருவேறுவகைப்படு மெனக்கூறியதன் கருத்தென்னையெனின், உயிர் அருவமேயாயினும் சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் என மூவகைப்படும். இவ்வாறு மூவகைப்படுதற்குக் காரணமுதலியன சிவஞானசித்தியார் எட்டாஞ்சூத் திரம் உ-வது செய்யுள் உரையில் விளக்கப்பட்டிருக்கின்றமையால் அவ் விடத்துக்காண்க. அம்மூவகை உயிருள் விஞ்ஞானகலரும் பிரளயாகலரும் சகலரில் பிரமவிட்டுணுமுதலிய தேவரும் சூக்குமசரீரமுடையவர். சகல ரில் தேவர் நீங்கிய ஏனையோர் தூலசரீரமுடையவர். சூக்குமசரீரம் வெளிப்படத்தோன்றாமையால் அருவமெனப்படும். சூக்குமசரீரமென்பது முப்பத்தாறு தத்துவங்களையன்று; சுத்தமாயை அசுத்தமாயைகளின் காரிய மான சரீரமும் பிரகிருதிமாயையின் காரியமான பூதசாரசரீரமுமாம். தூலசரீரம் வெளிப்பட்டுத்தோன்றுதலால் உருவமெனப்படும். ஆகவே தூலசரீரத்தோடுகூடிய உயிரை உருவுயிரென்றும் சூக்குமசரீரத்தோடு கூடிய உயிரை அருவுயிரென்றும் இருவேறுவகைப்படுத்திக் கூறினா ரென்க

சேதனப்பிரபஞ்சமாகிய உயிருக்குச் சுதந்திரமில்லையென்பதைச் சுட்டுணர்வுடைமையால் என்னும் ஏதுவால் வலியுறுத்தவேண்டிச் சுட்டுணர்வாகிய பிரபஞ்சமெனவும், சங்காரகாரணனுக்குச் சுதந்திரமுண்டென்பதைச் சுட்டுணர்வின்மையால் என்னும் ஏதுவால் வலியுறுத்தற்குச் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரமெனவும் கூறினர். பிரபஞ்சம் சங்காரமென்னும் ஈரிடத்தும் விசேடணமாய்நின்ற சுட்டுணர்வு சுட்டுணர்வின்மை என்னும் இரு வாக்கியங்களோடு ஏதுப்பொருள்களைப் புணர்த்திக்கூறியது உடம்பொடு புணர்த்தல். அது மேலுங் காட்டினும். சுட்டுணர்வுடைய பிரபஞ்சம் என்று கூறவேண்டியதைச் சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் என்றது உபசாரம். இவ்விடத்துப் பிரபஞ்சமென்றதற்குச் சேதனப பிரபஞ்சமாகிய உயிரே பொருளென்பது எதனாற் பெறுதுமெனின், மேற்கோளில் சஙகாரமே என்றதில் உயிரைப் பிரித்துநின்ற பிரிநிலை ஏகாரத்தால் பெறுதும் என அறிக.

சுட்டுணர்வாகிய ஏது சுதந்திரமின்மையினையும், சுட்டுணர்வில்லாமையாகிய ஏது சுதந்திரமுண்மையினையும் எவ்வாறு குறிக்குமெனின், சுட்டியுணருங்கால் சுட்டப்படும்பொருளின் வேறாய்நின்றே உணரவேண்டும். அவ்வாறுணருங்கால் ஒன்றைச் சுட்டும்பொழுது பிறிதொன்றைச் சுட்ட முடியாது. பிறிதொன்றினைச் சுட்டவேண்டின் முன் சுட்டப்பட்டதை விடவேண்டும். தனக்கே சுதந்திரமிருப்பின் விடவேண்டுவதை முன் அறியவேண்டாம்; பின் அறியவேண்டுவதை முன் அறியாதிருக்கவேண்டாம்; ஆகவே விடுதல்அறிதலாகிய சுட்டுணர்வினால் சுதந்திரமில்லை யென்பது நன்கு விளங்கும். சுட்டுணர்வின்றி அறியுங்கால் எவற்றுடனுங் கலந்துநின்றே அறியவேண்டும். அவ்வாறு அறியுங்காலத்து ஒன்றொன்றாய் அறிதலின்றி ஒருசேர அறிவதாகும். கலந்துநின்று ஒருசேர அறியுமிடத்து அறியவேண்டுவதும் அறியப்படாததும் இல்லாமையால் அவ்விரண்டுமுடைய பரதந்திரம் ஒழியும். ஒழியவே, சுதந்திரமுண்மை உண்டென்பது விளங்குமாறு அறிக.

தேர் முதலாயின பலர்கூடிச் செய்யப்படினும் அப்பலரும் ஒருவன் ஏவல்வழிநின்றே செய்வர். அதுபோல உலகம் உயிர்வருக்கத்துப் பல கடவுளராற் செய்யப்படினும் அவர் சங்காரகாரணனாகிய ஒருவனேவல்வழி நின்றே செய்வரென அறிக. வேதத்தில் உலகத்துக்குக் காரணங்கூறும் வாக்கியங்களில் சுட்டுணர்வுடைய நாராயணன் இரணியகருப்பன் இந்திரன் அங்கி சூரியன் முதலியோரைக் காரணமென்று கூறியதன் கருத்தென்னையெனின், மண்ணினின்றுங் குடந்தோன்றுதற்குக் குயவன் காரணமென்றதுபோல அவாந்தரகாரணமாம். அதாவது இடைப்பட்ட காரணமென்றபடியாம். ஆகவே முதன்மையான காரணமென்றும், இடைப்பட்ட காரணமென்றுங் காரணம் இருவகைப்படுமாறு அறிக. அவற்றுள் முதன்மை

யான காரணம் ஏவுதற்கருத்தா; இடைப்பட்ட காரணம் இயற்றுதற்கருத்தா. குடத்திற்குக் குயவன் இயற்றுதற்கருத்தா; இறைவன் ஏவுதற்கருத்தா. இதுபோல உலகத்திற்குப் பிரமன் முதலியோர் இயற்றுதற்கருத்தர்; சங்கார காரணன் ஏவுதற்கருத்தா என அறிக.

அன்றியும் பிரமன் முதலியோரைக் காரணமெனக்கூறிய வாக்கியங்களெல்லாம் ஆகுபெயரால் சங்காரகாரணனாகிய முதற்கடவுளையே உணர்த்தி நிற்கும். இது எதுபோலுமெனின், அரசன் ஆணைவழிநிற்கும் அதிகாரிகளை அரசனெனக்கூறியதுபோலும்; அதிகாரிகளுக்கு அரசனையின்றிச் செயலில்லாதவாறுபோலப் பிரமன் முதலியோருக்கும் சங்காரக்கடவுளையின்றிச் செயலில்லை. ஆகவே, இயற்றுதற்கருத்தாவாய்நின்று செய்தும் ஏவுதற்கருத்தாவாய்நின்று செய்வித்தும் எல்லாத்தொழிற்கும் வினைமுதலாய்நிற்கும் முதற்கடவுள் சங்காரகருத்தா ஒருவனே என்பது வேதத்தில் பிரமன் முதலியோர் காரணமெனக்கூறும் வாக்கியங்களின் கருத்தாதலறிக.

சங்காரகருத்தா ஒருவனே என்பதற்குக்காட்டும்
உதாரணம்.

ஒன்றலா வொன்று ளுளதாகி நின்றவா
றென்றலா வொன்றிலவை யீருத—லொன்றலா
வீறே முதலதனி னீறலா வொன்றுபல
வாறே தொழும்பாகு மங்கு.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், அங்ஙனமாயினும் சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் பலவாயினாற்போலச் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரமும் பலவுளவெனக்கோடும், ஒன்றே யென்றற்குப் பிரமாணம் என்னை? என்னுங் கடாவை யாசங்கித்து ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) அவை—சேதனப்பிரபஞ்சத்தொகுதி,—ஒன்று அலா ஒன்றுள்—(உருவும் அருவுமென்னும் அவ்விருகூற்றுப் பிரபஞ்சத்துள்) ஒன்றல்லாத ஒப்பற்ற பரம்பொருளாலே,—உளது ஆகி நின்றவாறு—சிருட்டிப்பட்டுத் திதிப்பட்டவாறே,—ஒன்று அலா ஒன்றில் ஈறுதல்—அந்தப் பரம்பொருளின்கண்ணே சங்காரப்படுதலால்,—ஒன்று அலா ஈறே முதல்—அச்சங்காரக்கடவுளொருவனே (உலகிற்கு) முதற்கடவுள். (அற்றேல், இவ்வாறு முத்தொழிற்படுஞ் சேதனப்பிரபஞ்சம் வீடுபெற்றவழிச் சுட்டுணர்வின்

றிச் சிவசமமாமென வேதத்தும் ஆகமத்தும் ஓதுதலின் அவ்வழி அவையும் முதற்கடவுளாமென்றற்கு இழுக்கென்னையெனின்), — அதனின் ஈறு அலா ஒன்று—அப்பரம்பொருள்போல் அழிவின்றி நித்தமாய சேதனப்பிரபஞ்சம்,—அங்கு—வீடு பேற்றின்கண்ணும்,—பலவாறே தொழும்பு ஆகும்—பலவாற்றானும் (பரமபொருளுக்கு) அடிமையாம் என்க.

இது "சொற்பொருட்பின்வருநிலை."

காரியப்பிரபஞ்சஞ் சடமாகலானும், சேதனப்பிரபஞ்சம் அவிச்சையாற் கட்டுற்றுச் சுட்டுணர்விற்றாய் நிற்றலானும், இவற்றைத் தொழிற்படுத்தற்கு இவற்றின் வேறாய் ஒரு முதற்கடவுளுண்டென்பது பெற்றாம். பெறவே, பிரபஞ்சம் விசித்திரகாரியமாய்க் காணப்படுதலின் இவ்வாறு நடாத்தும் முதற்கடவுள் முற்றுணர்வும் அளவிலாற்றலும் பேரருளும் சுதந்திரமும் முதலிய நிரதிசய குணங்களுடையனென்பதூஉம் பெறப்பட்டது; படவே, இத்தன்மையனாகிய முதற்கடவுளொருவனே அமையுமாகலின் வேறு மத்தன்மையருண்டெனக்கொள்ளின் மிகையென்னுங் குற்றமாம்: அல்லதூஉம், இலக்கணத்துள் ஒருவாற்றானும் வேற்றுமையில்வழி இலக்கியம் பலவாதல் செல்லாதென்னுங் கருத்தால், ஒன்றலாவொன்று என வரையறுத்தோதினார்.

ஈறே முதலென்றது முடிந்தது முடித்தல். ஈறு ஆகுபெயர்.

இறந்தது தழீஇய வெச்சவும்மை விகாரத்தாற் றொக்கது.

பலவாறுவன, இருணீங்கியவழியுங் கண்ணுக்குக் காட்சி ஞாயிற்றையின்றி யமையாதவாறுபோல, மலநீங்கிய முத்திநிலையினும் ஆன்மாவுக்கு அறிவு வியஞ்சகமாய் உடனின்றறிவிக்குமுதல்வனையின்றி யமையாதவாறும், கண் படிகம் ஆகாயம் போலச் சார்ந்ததன்வண்ணமாயன்றி முதல்வன்போலத் தனித்துநிற்கு மியல்பில்லாதவாறும், முதல்வன்போல் ஐந்தொழிற்கும் வினைமுதலாமுரிமையின்றிச் சிவானுபவ மொன்றினுக்கே யுரித்தாயவாறும், சமவியாபகமாயினும் முதல்வனைநோக்கத் தூலவறிவாகலான் விளக்கொளியுட் கண்ணொளிபோல முதல்வனின் வியாப்பியமாயன்றி நில்லாதவாறும் முதலாயின. அற்றேல், முத்திநிலையின் ஆன்மாச் சிவசமமாமென்னுஞ் சுருதிக்குப் பொருளென்னை

யெனின், அஃது உண்மை யதிகாரத்துட் பெறப்படும். இதனானே சிவசமவாதி சங்கிராந்தவாதி உற்பத்திவாதி ஆவேசவாதி மதங்களும் மறுக்கப்பட்டன.

பதியுண்மைக்குப் பிரமாணங்கூறுவார் மலத்துளதாம் எனப் புனருற்பத்திக்கேதுக் கூறுமுகத்தான் மலத்துண்மைக்குப் பிரமாணமும் உடன்கூறினார். அதனை ஈண்டு வேறோரதிகரணமாக வைத்துரையாராயினார்; அதிகரணத்திற்குரிய ஐயப்பாடு முதலியன வெல்லாஞ் சகசமலத்துணராதென அதனிலக்கணங்கூறும்வழிப் பெறப்படுதலால் ஈண்டு மிகைபடவேறோதல் வேண்டாமையின்.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) அவை ஒன்று அலா ஒன்றால் உளது ஆகி நின்றவாறு ஒன்று அலா ஒன்றில் ஈறுதல் ஒன்று அலா ஈறே முதல் அதனின் ஈறு அலா ஒன்று அங்கு பலவாறே தொழும்பு ஆகும்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், சங்காரகருத்தாவே முதற்கடவுளாயினுஞ் சுட்டுணர்வாகிய உயிர் பலவாயினாற்போலச் சுட்டுணர்வின்றிநின்ற சங்காரகருத்தாவும் பலவுளவெனக் கொள்ளுதலே பொருந்தும்; அவ்வாறின்றிச் சங்காரகருத்தா ஒருவனே என்பதற்குப் பிரமாணம் என்னை? என்பார்க்குப் பிரமாணமுகத்தால் சங்காரகருத்தா ஒருவனே எனக்கூறிச் சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வின்றிநின்ற சங்காரத்தின்வழியல்லது சுதந்திரம் இன்றி நிற்றலால் என்னும் ஏதுவை வலியுறுத்தியவாறாம்.

(பொ - ரை.) உருவும் அருவுமென்னும் இருகூற்றுச் சேதனப் பிரபஞ்சத்தொகுதியாகிய உயிர், அவ்விருகூற்றுப் பிரபஞ்சத்துள் ஒன்றல்லாத ஒப்பற்ற பரம்பொருளாலே சிருட்டிப்பட்டுத் திதிப்பட்டு அவ்வாறே அந்தப் பரம்பொருளின்கண்ணே சங்காரப்படும். ஆதலால், அச்சங்காரக் கடவுள் ஒருவனே உலகிற்கு முதற்கடவுளாம். அவ்வாறாயினும் இவ்வாறு மூத்தொழிற்படும் சேதனப்பிரபஞ்சமாகிய உயிர் வீடுபெற்றவிடத்துச் சுட்டுணர்வின்றிச் சிவசமமாய்நிற்குமென வேதத்தும் ஆகமத்தும் ஓதுதலின் முத்திபெற்ற உயிர் முதற்கடவுளா மெனப்பட்டு முதற்கடவுளர் பலரென்பதற்கு இழுக்கென்னையெனின், அப்பரம்பொருள்போல் அழிவின்றி நித்தமாயுள்ள உயிர் வீடுபெற்றவிடத்தும் பலவாற்றானும் பரம்பொருளுக்கு அடிமையாம்; ஆதலால், முதற்கடவுள் ஒன்றே என்றவாறு.

(க - ரை.) உயிர் பரம்பொருளால் மூத்தொழிற்படுதலானும் மூத்தொழிற்படாது முத்திபெற்றகாலத்தும் அடிமையாதலானும் அப்பரம்பொருளாகிய சங்காரக்கடவுள் ஒன்றே என்பதாம்.

நித்தமான உயிரை முத்தொழிற்படுமெனக் கூறியதன்கருத்தென்னை யெனின், தனுகரணமுதலியவற்றைப் பொருந்துதலையும் அவற்றில் நிலைத்துநிற்றலையும் அவற்றில்நின்று மாறுதலையும் உயிர் பொருந்துதலால் முத்தொழிற்படுமெனக் கூறியவாறும்.

முத்திபெற்ற ஆன்மாச் சிவசமமென்ற வேதாகமத்தின் கருத்தென்னை யெனின், சிவம் முத்தொழிற்படாதவாறுபோல முத்திபெற்ற ஆன்மா முத்தொழிற்படாமைபற்றியேயாமென்க. இவ்வளவேயன்றிச் சிவம் செய்யும் பஞ்சகிருத்தியங்களையும் முத்திபெற்ற ஆன்மாச்செய்யுமென்பது சிவசமமென்பதன் கருத்தன்று. இவ்வுண்மையினை வழிநூலாசிரியர் சிவஞான சித்தியார் பதினொராஞ் சூத்திரத்துப் பத்தாவது செய்யுளில் "உம்பர் பிரா னுற்பத்தி யாதிகளுக் குரிய னுயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு முரித்தே" என அருளியவாற்றானுமறிக.

இவ்வெண்பாவில் 'ஒன்று அலா ஒன்று' என முன்னர்வந்த சொல்லும் பொருளுமே பின்னரும் வருதலால் இது "சொற்பொருட்பின்வருநிலை" என்னும் அலங்காரமாம்.

உலகமாகிய காரியப்பிரபஞ்சஞ் சடமாகலானும், உயிராகிய சேதனப் பிரபஞ்சம் அறியாமையைச் செய்யும் மலத்தாற் கட்டுப்பட்டுச் சுட்டுணர்வுடையதாய் நிற்றலானும், உலகமும் உயிருமாகிய இவற்றுள் உலகை அசைப்பித்தற்கும் உயிருக்கு அறிவித்தற்கும் இவ்விரண்டின் வேறாய் ஒரு முதற்கடவுள் வேண்டுமென்பது பெற்றாம். பெறவே, பிரபஞ்சம் விசித்திரகாரியமாய்க் காணப்படுதலின் விசித்திரமாய் நடாத்தும் முதற்கடவுள் முற்றுணர்வும், அளவிலாற்றலும், பேரருளும், சுதந்திரமு முதலிய நிரதிசய குணங்களுடையவனென்பதும் பெறப்படும். படவே, இத்தன்மையனாகிய முதற்கடவுள் ஒருவனேயாதலமையுமாதலின் வேறு மத்தன்மையுடைய கடவுளர் பலருண்டெனக் கொள்ளின் மிகையென்னுங் குற்றமாம். அன்றியும், இலக்கணத்துள் ஒருவாற்றானும் வேற்றுமையில்லாதவிடத்து அவ்விலக்கணத்தையுடைய இலக்கியம் ஒன்றாதலேயன்றிப் பலவாதல் செல்லாது. பலவாயின் இலக்கணத்தில் வேற்றுமையிருக்கவேண்டும். இக்கருத்துப்பற்றியே சங்கரிக்கும் இலக்கணத்தையுடைய கருத்தா ஒருவனே உலகத்திற்கு முதல்வனன்றி அவ்விலக்கணமில்லாத பலர்முதல்வராதல் செல்லாதென்பது தோன்ற, ஒன்று அலா ஒன்று என வரையறுத்தோதினார். முற்றுணர்தல் முதலிய எண்குணங்கள் முதல்வனுக்கு இன்றியமையாமை சிவஞானசித்தியார் ஒன்பதாஞ்சூத்திரம் பன்னிரண்டாவது செய்யுள் உரையில் விளக்கப்பட்டிருக்கின்றமையால் அவ்விடத்துக் காண்க.

நிரதிசயகுண மென்பது மாறுதலையடையாத உறுதியான அதிசய குணமாம். நிர் உறுதிப்பொருளைத் தருமென்பதனை நிர்ப்பந்தமென்பதனு

னுமறிக. அதிசயமென்பது புதிதாய்க்காணப்படுவது. சங்காரக்கடவுளி டத்து இயல்பாகவே அமைந்திருக்கும் முற்றுணர்வுமுதலிய குணங்கள் மனி தர் தேவர்முதலிய எவரிடத்தும் இல்லாமையானும் அவனிடத்துமாறுமை யானும் நிரதிசயமெனப்பட்டன.

வெண்பாவில் ஈறே முதலென்றது சங்காரமே முதலென்னும் மேற் கோளை முடித்துக்காட்டினமையின் முடிந்தது முடித்தலாம். ஈறு என்பது ஈறு செய்யுங் கடவுளைக்குறித்து நிற்றலால் ஆகுபெயர்.

வெண்பாவினிறுதியிலுள்ள அங்கு என்பதில் உம்மை தொக்குநின் றது. அவ்வும்மை விரித்து வீடு பேற்றின்கண்ணும் என உரை செய் யப்பட்டது. அவ்வும்மை பெத்தத்தின்கண்ணேயுமன்றி என்னும் பொருள் கொள்ளுமாறு பெத்தத்தையும் தழுவி நின்றமையின் இறந்ததுதழீஇய எச்ச உம்மையாம்.

முத்திபெற்றவிடத்தும் பலவாற்றானும் அடிமை என்பதில் பலவாறு வன யாவையெனின், இருள் நீங்கியவிடத்துங் கண்ணுக்குக் காணுந் தொழில் ஞாயிற்றையின்றி அமையாது; ஞாயிற்றின் ஒளி விளங்கினாலன்றி இருள் நீங்காதாதலின் இருள் நீக்கத்தில் ஞாயிற்றின் ஒளி உண்டென்பது துணிபாகவும் இருள் நீங்கியவிடத்தும் ஞாயிற்றையின்றி யமையாது என்ற தன் கருத்தென்னையெனின், இருள்நீங்கியவிடத்து நீங்கிய அதனானே கண்ணுக்குக் காணுந்தொழில் உண்டாவதில்லை; ஒளியோடுகூடித்தா னுண் டாகவேண்டும்; இக்கருத்துத்தோன்ற அவ்வாறு கூறப்பட்டது. இவ்வாறே உயிருக்கு மலம் நீங்கிய முத்திநிலையினும் இன்பநுகர்ச்சி, துணையாய் உட னின்று அறிவிக்கும் முதல்வனையின்றி உண்டாகாது. கண்ணும், படிகமும், ஆகாயமுஞ் சார்ந்ததன் வண்ணமாய்நிற்கும் இயல்புடையன; அதாவது கண் இருளோடுகூடி இருளாயும் ஒளியோடுகூடி ஒளியாயு மிருக்கும்; படிகம் பற்றப்படும் நிறங்களின் தன்மையதாயிருக்கும்; ஆகாயம் ஒவ்வொருபொருளோடுங் கலந்து அதுவதுவாயிருக்கும். இவ்வா றே ஆன்மாவும் எதனை எதனைச் சார்ந்ததோ அதன் அதன் வண்ணமாய் நிற்கும். ஆதலால் முத்திநிலையினும் முதல்வனைச்சார்ந்து முதல்வனாய் நிற் பதன்றித் தனித்துநிற்பதில்லை. அன்றியும் முதல்வன்போல ஐந்தொழிற் குங் கருத்தாவாதலின்றிச் சிவாநுபவம் ஒன்றற்கே கருத்தாவாகும். ஐந் தொழில் செய்யாது முதல்வனோடு கலந்து நிற்குங்கால் முதல்வனுக்குரிய வியாபகம்போல் சமவியாபகமாய் நிற்பினும் முதல்வனறிவைநோக்க ஆன்ம அறிவு துணைகொண்டறியுந் தூலவறிவாதலின் விளக்கொளியுடன் கலந் திருக்குங் கண்ணொளிபோல ஆன்மா வியாப்பியமாம். விளக்கொளியுங் கண்ணொளியுங் கலந்து நிற்பினும் விளக்கொளி விளங்குமிடமெல்லாம் கண்ணொளி ஒருசேரக் கலந்திருப்பதில்லை; எவ்வாறெனின், விளக்கொளி

முற்பக்கமும் பிற்பக்கமும் விளங்குங்காலத்துக் கண்ணொளி முற்பக்கத் தொளியோடு கூடுங்காற் பிற்பக்கத்தொளியோடு கூடுவதில்லை; அவ்வா றே பிற்பக்கத்துமாம். முற்பக்கத்துங் கண்ணொளி செல்லுமளவன்றி அதற்குமேற் கூடுவதில்லை; செல்லுமளவினும் ஒருபாகமேயன்றி எல்லாப் பாகத்திலுங் கூடுவதில்லை. ஆதலால் விளக்கொளி வியாபகமும் கண்ணொ ளி வியாப்பியமுமாம். வியாப்பியமென்பது அடங்கியிருத்தல். இவ்வாறே முத்திநிலையினும் முதல்வன் வியாபகமும் ஆன்மா வியாப்பியமுமாம். எத னாலெனின், முதல்வனிடத்துள்ள இன்பத்தை அனுபவித்து அவ்வின்ப மயமாய் நிற்றலேயன்றி உயிர்களையும் இறைவன் செயல்களையும் ஆன்மா அறிவதில்லை யாதலால் என்க. "பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்", ஆதலின் ஈண்டு ஏனையவற் றை அறியாமை குற்றமின்மையு முணர்க. ஆகவே முத்திநிலையிலும் ஆன்மா விற்கு அறிவின்விளக்கம் முதல்வனையின்றி யமையாமையும் முதல்வன் போலத் தனித்து நில்லாமையும் ஐந்தொழில் செய்யாமையும் வியாப்பிய மாய் நிற்றலும் முதலாயினவே பலவாறுமென அறிக.

முத்திநிலையில் ஆன்மா சிவசமமென்னுஞ் சுருதிக்குப் பொருள் ஒரு வாறு இங்கே கூறப்பட்டிருப்பினும் மலம் நீங்கி முத்தொழிற்படாமையி னால் சிவசமம் என உண்மையதிகாரம் அம்-சூத்திரத்துள் விரித்துக் கூறப் படும்.

இவ்வெண்பாவினால் அநேகேசுரவாதிமதமேயன்றிச் சிவசமவாதி, சங்கி ராந்தவாதி, உற்பத்திவாதி, ஆவேசவாதி மதங்களும் மறுக்கப்பட்டன. எவ் வாறெனின், ஐந்தொழில்செய்ய இயலாதென்றமையாற் சிவசமவாதி மதம் மறுக்கப்பட்டது. பலவாற்றானும் அடிமையாமென்றதனால் சங்கிராந்த வாதி மதம் மறுக்கப்பட்டது; முடிவில் ஒன்றாய்ப்போதல் என்பது சங்கி ராந்தவாதிமதம். பரம்பொருள்போல் அழிவின்றி நித்தமாய ஆன்மா என்ற தனால் ஆன்மாவிற்கு உற்பத்திகூறும் உற்பத்திவாதி மதம் மறுக்கப்பட்டது. அடிமையென்றதனாலேயே ஆவேசவாதிமதமும் மறுக்கப்பட்டது; ஆவே சம் என்பது தானென்பதொன்றின்றி ஆவேசிக்கப்பட்ட பொருளாய் நிற் றல்; ஒருபேயால் ஆவேசிக்கப்பட்டவனை நீயாரென்று வினவில் அப்பே யின் பெயரைத் தன் பெயராகச் சொல்வன்; இவ்வாறே சிவனால் ஆவேசிக் கப்பட்டுச் சிவமாய் நிற்குமென்பது ஆவேசவாதிமதம்; இது அடிமையென் றதனால் மறுக்கப்பட்டவாறு அறிக. சித்தாந்தத்தில் சிவனோடு சார்ந்த விடத்து ஆன்மா சிவமாய் நிற்குமென்று கூறுவதையே இவ்விடத்து ஆவேச வாதிமதமாய்வைத்து மறுத்ததென்னையெனின், சித்தாந்தத்தில் சிவமாய் நிற்றலென்பதற்குப் பொருள் தனக்கென ஒரு செயலின்றிச் சிவன் அருள் வழி நிற்றலேயாம். ஆவேசவாதிமதத்தில் அவ்வாறு அருள்வழி நிற்ற லின்றிச் சிவன் ஆவேசித்தலால் தனக்கு எல்லாஞ் செய்தல் கூடுமென்பது

பொருளாம்; இதில் நானென்னும் போதம் நிகழ்தலின் மறுக்கப்பட்டது. சிவனோடு சமமாதலின் எல்லாஞ் செய்வேனென்பது சிவசமவாதிமதம். சிவம் ஆவேசித்தலால் எல்லாஞ் செய்வேனென்பது ஆவேசவாதிமதம்.

பதியுண்மைக்குப் பிரமாணங் கூறுதற்கெழுந்த இச்சூத்திரத்தில் ஒடுங்கிய உலகம் மீளத்தோன்றுதற்கு ஏது மலம் என்பது தோன்ற மலத்துளதாமென மலத்தின் உண்மைக்குப் பிரமாணமும் உடன்கூறினார். அம்மலத்தை இச்சூத்திரத்தில் வேறொரு அதிகரணமாகவைத் துரையாது விட்டனர்; எதனாலெனின், மலத்தைப்பற்றிய அதிகரணத்திற்குரிய ஐயப்பாடு முதலியன எல்லாம் சகசமலத்துணராதெனு நான்காஞ் சூத்திரத்தில் மலத்தின் இலக்கணங் கூறுமிடத்துப் பெறப்படுதலால் இவ்விடத்திற் கூறுவது மிகையாதலினாலென்க.

இவ்வதிகரணத்தில் சங்காரக்கடவுள் ஒன்றே என்பது தன்னாற் கூறப்படும் மேற்கோள். ஒன்றோ பலவோ என்பது ஐயப்பாடு, பல வென்பது பிறர்கூறும் பக்கம். ஒன்றே என்பதற்குக்காட்டிய ஏது மறுத்துரைக்குஞ் சித்தாந்தத்துணிபு. உதாரணம் இயைபு. இவ்வாறு அதிகரணப்பொருள் காண்க.

## சிற்றுரை.

இச்சூத்திரத்ததிகரணங்களாற் போந்ததொகைப் பொருளாவது:—தோற்றக்கேடுகளதுண்மை காட்சிமுதலிய அளவைகளான் அறியவாராமையிற் பிரபஞ்சம் நித்தப்பொருளேயாம். அன்றித் தோன்றியழியுமெனக் கொள்ளினும், இல்பொருள் தத்தஞ்சார் பிற்றோன்றிநின்றழிதல் இயற்கையெனவமையும்; செயற்கையென்றற்கு ஓரேதுவின்மையின். மற்றுள்பொருளாயின், அதுவே யமையும் இறைவன்வேண்டா; இரண்டுள்பொருள் கோடல்மிகையாகலின். வேண்டுமாயினும், மாயோன்முதலிய கடவுளரில் ஒருவனே யமையும், அவனையொழித்துச் சங்காரகருத்தா முதற்கடவுளென்றற்குப் பிரமாண மென்னை? பிரமாணமுண்டாயினும், அதிவிசித்திரமாய பிரபஞ்சம் ஒருவனாற்செய்தல் கூடாமையின், மற்றும் அவ்வியல்பினராய முதற்கடவுளர் உளராதல்வேண்டுமென உலகாயதர் மீமாஞ்சகர் புத்தர் சமணர் சாங்கியர் பாஞ்சராத்திரிகள் அநேகேசுரவாதிகள் மதம்பற்றிப் பூருவபக்கநிகழ்ந்தவழி அவரை மறுத்துச் சித்தாந்தஞ்செய்து முதற்கடவுளதுண்மை பொதுவகையானுஞ் சிறப்புவகையானுங் கருதலளவையின் வைத்துணர்த்தியவாறென உணர்க. இவ்வாறு சூத்திரந்தோறும் உணர்ந்துரைத்துக்கொள்க.

## விளக்கம்.

இம்முதற் சூத்திரத்தானும் அதிகரணங்களானுங் கூறிய தொகைப் பொருள்:—உள்பொருளாகிய உலகந்தோன்றிநின்றொடுங்குந்தன்மை யுடைமையால் அவ்வாறு முத்தொழில் செய்யுங்கருத்தா ஒன்றுண்டு; அக் கருத்தா சங்காரகாரணன்; அச்சங்காரகருத்தாவில் உலகம் ஒடுங்கித் தோன்றலால் அவனே முதற்கடவுள் எனச் சூத்திரத்தாற் கூறவே, உல கத்தின் தோற்றக்கேடுகள் பிரத்தியட்சமுதலிய பிரமாணங்களால் அறிய வாராமையால் உலகம் நித்தப்பொருளேயாமென உலகாயதரும் மீமாஞ்சக ருங் கூற, முதலதிகரணத்தால் அவரை மறுத்து உலகம் முத்தொழிலுடைய தெனச் சாதிக்கப்பட்டது. படவே, உலகந் தோன்றி அழியுமெனக்கொள் ளினும் உள்பொருளாகமாட்டாது; இல்பொருளாய்த் தத்தஞ் சார்பிற் றோன்றி யழியும்; அவ்வாறு தோன்றியழிதல் இயற்கையேயன்றிச் செயற் கை யென்பதற்கு ஓரேதுவு மின்று; ஆதலின் கருத்தா வுண்டென்றல் பொருந்தாதெனப் புத்தரும், சமணருங் கூற, இரண்டாமதிகரணத்துளடங் கிய முதலதிகரணத்தால் அவரை மறுத்து உலகம் உள்பொருளேயெனச் சாதிக்கப்பட்டது. படவே, உள்பொருளாயினும் முதற்காரணமான மாயை யில் ஒடுங்கித் தோன்றுமாதலின் இதற்கோரிறைவன் வேண்டாம்; வேண் டின் மாயையொன்று, இறைவனொன்று என இரண்டு உள்பொருள் உண் டென்றாகி மிகை யென்னுங் குற்றமாமெனச் சாங்கியர்கூற, இரண்டாமதி கரணத்துளடங்கிய இரண்டாமதிகரணத்தால் அவரை மறுத்து மாயைசட மாதலின் தானேதோன்றி ஒடுங்காது, கடவுள் வேண்டுமெனச் சாதிக்கப் பட்டது. படவே, கடவுள் உண்டெனக்கொள்ளினும் அக்கடவுள் விட் டுணு முதலியோரேயாகும், அன்றிச் சங்காரக்கடவுளே முதற்கடவுளென் பதற்குப் பிரமாணம் என்னையெனப் பாஞ்சராத்திரிகள்கூற, இரண்டாமதி கரணத்துளடங்கிய மூன்றாமதிகரணத்தால் அவரை மறுத்துப் பிரமாணங் காட்டிச் சங்காரக்கடவுளே முதற்கடவுளெனச் சாதிக்கப்பட்டது. படவே, அதிவிசித்திரமான உலகத்தை ஒருவன் செய்தல் கூடாமையின் சங்கரிக் குந்தன்மையுடைய முதற்கடவுளர் பலர் உளராதல்வேண்டுமென அநே கேசுரவாதிகள்கூற, சூத்திரத்து மூன்றாமதிகரணத்தால் அவரை மறுத்துச் சங்காரக்கடவுள் ஒருவனேயெனச் சாதித்தவாறும். இவ்வாறு சாதித்தன வெல்லாம் அனுமானப்பிரமாணத்தினாலேயாம். இவ்வாறு சூத்திரந்தோ றும் தொகைப்பொருள் உரைத்துக்கொள்ளுமாறு உரையாசிரியர் ஆணை செய்தனர் என்க.

மூன்றும் அதிகரணம் முற்றிற்று.

முதற்சூத்திரம் முற்றிற்று.



## இரண்டாஞ்சூத்திரம்.

### பாசவுண்மை.

*முதற்சூத்திரத்தால் உலகத்தைக்கொண்டு கடவுள் உண்டெனக் கூறி அவ்வுலகத்தோற்றத்திற்கு முதற்காரணமாகிய மாயையும் துணைக்காரண மாகிய சத்திவழியாய் வருங் கன்மமும் அனுமானப் பிரமாணத்தால் உண் டென இரண்டாஞ்சூத்திரத்தாற் கூறுகின்றார்.*

அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே.

*கருத்துரை.*

எ-து சூ-ம் எ-னின், புனருற்பவம் வருமாறுணர்த்துதனுதலிற்று.

### சிற்றுரை.

*எ—து க—ரை எ—னின், சூத்திரக்கருத்துணர்த்துத னுதலிற்று.*

*(இ—ள்.) உலகம் ஒடுங்கியினின்றும் மீளவுளதாமாற்றை வகுத்துணர்த்துமுகத்தானே துணைக்காரண முதலியன இல்வழி இறைவன் உலகிற்கு நிமித்தகாரணனாதல் சாலுமாறு யாங்ஙனம் என்னுங் கடாவை யாசங்கித்து அவற்றதுண்மைக்குப் பிரமாண முணர்த்துதனுதலிற்று இச்சூத்திரம் எ—று.*

*சூத்திரவியைபும் இதனானே விளங்கும்.*

*ஒடுங்கியுளதாமென்றவழி ஒடுங்கியினின்றும் மீளவுளதாவது எவ்வாறென்று அவாய்நிற்றலின், அவ்வவாய்நிலைபற்றிப் புன ருற்பவமே ஈண்டுக் கூறப்பட்டது.*

### விளக்கம்.

*இக்கருத்துரை என்னசொல்லிற்றோவெனின், சூத்திரக்கருத்து இது வென்றுசொல்லிற்று.*

*(இக்கருத்துரையின்பொருள்.) ஒடுங்கிய உலகம் சங்காரகாரணனாகிய முதற்கடவுளினின்றும் மீளத் தோன்றும் முறைமையினை இச்சூத்திரத் தால் வகுத்துணர்த்தி அவ்வாறு உணர்த்தும்முறையில் உலகந்தோன்று தற்கு முதற்காரணமாகிய மாயையுந் துணைக்காரணமாகிய சத்தியால் வருங் கன்மமும் இல்லாதவிடத்து இறைவன் உலகிற்கு நிமித்தகாரணனு*

தல் எவ்வாறு பொருந்தும் என்னும் வினாவை ஆசங்கித்துக்கொண்டு அதற்கு விடையாக முதற்காரணம் துணைக்காரணங்களினது உண்மைக்குப் பிரமாணங் கூறுதல் இச்சூத்திரத்தின் கருத்து என்க.

கன்மத்தைச் சத்தியால்வருந் துணைக்காரணமென்றது என்னையெனின், கன்மஞ் சடமாதலால் சத்தியாலன்றித் தானே தொழிற்படமாட்டாது; ஆதலால், சத்தியால்வருந் துணைக்காரண மெனப்பட்டது. படவே, சத்தி ஒரு துணைக்காரணமும் அதனால்வரும் கன்மம் மற்றொரு துணைக்காரணமுமாம். முதல்துணைநிமித்தம் என்னும் காரணமூன்றனுள் முதலும் நிமித்தமும் ஒவ்வொன்றாயும், துணை பலவாயுமிருக்கும். உதாரணம்:—மண் முதற்காரணம்; அது ஒன்றே. குயவன் நிமித்தகாரணன்; அவனும் ஒருவனே. தண்டசக்கரமுதலியன துணைக்காரணங்கள்; அவைபலவாதலறிக. இவ்வாறே உலகத்திற்கு மாயை முதற்காரணம்; திருவருட்சத்தியும் கன்மமும் துணைக்காரணங்கள்; இறைவன் நிமித்தகாரணமாம். நிமித்தமென்றதன் பொருளென்னையெனின், யாதானும் ஒன்றன்பொருட்டு என்பதேயாம். குயவன் குடத்தைத் தன்பொருட்டுச் செய்தானோ பிறர்பொருட்டு செய்தானோ என ஆராயுமிடத்துப் பிறர்பொருட்டுச் செய்தானென்பது விளங்கும். குடத்தினால்வரும் பொருள்மட்டுந் தனக்கு உபயோகமாகுமன்றிக் குடம் தனக்கு உபயோகமாதலில்லை. அவ்வாறே உலகத்தை இறைவன் தன்பொருட்டுத் தோற்றுவித்தானோ உயிர்களின்பொருட்டுத் தோற்றுவித்தானோ என ஆராயுமிடத்துத் தன்பொருட்டுத் தோற்றுவித்தான் என்று கூறில் பலவேறுவகையாய்த் தோற்றுவித்தற்குரிய கன்மமுந் தானே செய்தானெனப்பட்டு விகாரமுடையவனாவன்; இறைவன் நிர்விகாரியாதலால் அவன் வினைசெய்தலில்லை; அதனால் உலகத்தை அவன் தன்பொருட்டுத் தோற்றுவித்தானென்றல் பொருந்தாது; ஆகவே, உயிர்களின்பொருட்டுத் தோற்றுவித்தானென்பது பெறப்படும்.

முதற்சூத்திரத்தில் உலகம் சங்காரகாரணனிடத்தில்நின்று தோன்றுதலால் உலகத்திற்குச் சங்காரகாரணனே முதற்கடவுளென்றுகூறி இச்சூத்திரத்தில் அவ்வுலகம் சங்காரகாரணனிடத்தில்நின்றுந் தோன்றுமுறையைக் கூறுதலினால் சூத்திர இயைபு பெறப்பட்டது. அன்றியும் முதற்சூத்திரத்தில் நிமித்தகாரணத்தின் உண்மைகூறி இச்சூத்திரத்தில் முதற்காரணம் துணைக்காரணங்களின் உண்மைகூறுதலினாலும் சூத்திர இயைபு பெறப்பட்டவாறுகாண்க.

முதற்சூத்திரத்தில் ஒடுங்கியுளதாம் என்றவிடத்து ஒடுங்கியாகிய சங்காரகாரணனில்நின்றும் மீள உளதாதல் எவ்வாறு என்னும் அவா ஒடுங்கியுளதாமென்னும் அச்சொல்லில் நிலைத்திருக்கின்றது. அந்த அவாய் நிலை பற்றி மீள உண்டாவதாகிய புதுச்சிருட்டியே இச்சூத்திரத்தில் கூறப்பட்டது.

## சிற்றுரை.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. (மேலைச் சூத்திரத்து எடுத்துக்கொண்ட சங்காரகாரணனாகிய முதல்வன் கலப்பினால் உடலின் உயிர்போல்) அவ்வுயிர்களேயாய், (பொருட்டன்மையாற் கண்ணின் அருக்கன்போல் அவற்றின்) வேறுமாய், (உயிர்க்கு உயிராதற் றன்மையாற் கண்ணொளியின் ஆன்மபோதம்போல் உடனுமாய் நின்று,) ஆணையென்னும் பரியாயப் பெயருடைய தனது சிற்சத்தியான் (வரும்) இருவினைகளான் (அவை) இறத்தல் பிறத்தல்களைப் புரியும்வண்ணம் (அவ்வாணையிற்) பிரிப்பின்றிச் சமவேதமாய் நிற்பன் எ–று.

அவையே தானேயா மென்பதனை இரட்டுறமொழிந்து கொண்டுரைக்க. இக்கருத்தேபற்றி 'உலகெலா மாகி வேறாயுடனு மாய்' என்றார் வழிநூலாசிரியரும்.

மேலைச் சூத்திரத்தின் 'அந்தமாதி' என்புழி விகாரத்தாற் றொக்க பிரிநிலையேகாரத்தான் விலக்கப்பட்டுநின்றசேதனப்பிர பஞ்சத்தை ஈண்டு அவையெனச் சுட்டிக்கூறினார்.

'ஒடுங்கியுளதாம்' என்றதற்கேற்ப ஈண்டும் போக்கினை முற் கூறினார்.

புரிதல் எப்பொழுதும் மேற்கோடல்.

ஆணையினென்பது சிங்கநோக்காய் இருவினையென்பதனோ டும் நீக்கமின்றியென்பதனோடும் இயைந்து பொருடந்து நின்றது; ஆண்டு இன்னுருபு முன்னர் ஏதுப்பொருட்கண்ணும், பின்னர் நீக்கப் பொருட்கண்ணுமாய் நின்றது. இன்னென்பது சாரியை யெனக்கொண்டு ஈரிடத்தும் ஏற்குமுருபுகள் விரித்துரைத்தலு மொன்று.

அன்றே அசை; அநாதியே இவ்வாறு நிற்குமெனினு மமை யும். ஆய்ப் புரிய நிற்கு மெனவே, அச்செயல்களெல்லாம் முதல் வன் காரணத்தானன்றிச் சங்கற்பமாத்திரத்தாற் செய்வனென்பது பெறப்பட்டது.

இதனானே மேல் 'அந்தம்' என்று உத்தேசமாயெடுத்துக் கொண்ட முதல்வனுக்கு இலக்கணங் கூறியவாறுமாயிற்று, இது தடத்தலக்கணமெனப்படும் பொதுவியல்பு.

ஆணையி னிருவினையினெனவே, தனது சிற்சத்தி துணைக் காரணம், இருவினையும் அதன்வழித்தாய துணைக்காரணம், இரு வினையினெனவே அதற்குப் பற்றுக்கோடுண்டென்பதூஉம், பெற்று மாகலின், அது முதற்காரணமென்பதூஉம், இருவினையிற் போக்கு வரவு புரியவெனவே ஒடுங்கியின் மீளவுளதாங்கால் இருவினைகட் கேற்பப் பலவேறு வகைப்பட்டு விரியுமென்பதூஉம் போந்தவாறு காண்க.

## விளக்கம்.

(இச்சூத்திரத்தின் பொழிப்புரை) முதற்சூத்திரத்தில் எடுத்துக் கொண்ட சங்காரகாரணனாகிய முதல்வன் உயிர்களின்பொருட்டு உலகத் தைத் தோற்றுவிக்குங்கால் அவ்வுயிர்களோடு ஒன்றாய்நிற்பனோ? வேறாய் நிற்பனோ? உடனாய்நிற்பனோ? எனின், உடல் இருத்தற்கு உடலினிடத்து உயிர் கலந்துநின்று அவ்வுடலேயாய் நிற்பதுபோல, உயிர்கள் நிலைத்தற்கு உயிர்களிடத்து இறைவன் கலந்துநிற்றலின் அவ்வுயிர்களேயாய், அதாவது ஒன்றாய்க், கண்ணுக்குக் காணுந்தொழில் நிகழ்தற்குத் துணையாய்நிற்கும் சூரியன் கண்ணினின்றும் வேறாதல்போல் உயிர்கட்கு அறிதற்றொழில் நிகழ்தற்குத்துணையாய்நின்று அறிவித்தலின் இறைவன் அவ்வுயிர்களின் வேறுமாய், கண்ணொளி பொருளைக் காணுதற்கு ஆன்மபோதம் உட னின்று கண்ணொளியோடுகூடப் பொருளிற் செல்லுமாறுபோல உயிர்கள் இன்பதுன்பங்களை அனுபவிப்பதற்கு அவ்வின்பதுன்பங்கட்குமுன்னிலையா கிய விடயங்களில் உயிரோடுகூட இறைவன் செல்லுதலின் உயிர்களோடு உடனுமாய் இவ்வாறு உயிர்களோடு இறைவன் ஒன்றாயும் வேறாயும் உட னாயும்நின்று ஆணையென்னுந் தனது சிற்சத்தியினாற் செலுத்தப்பட்டு வரும் இருவினைகளால் அவ்வுயிர்கள் இறத்தல் பிறத்தல்களை மேற்கொள் ளும்வண்ணம் அவ்வாணையாகிய சிற்சத்தியில் பிரிப்பின்றிச் சமவேதமா கிய திரோதான சத்தியே வடிவாய் நிற்பன் என்றவாறு.

சமவேதமாவது சமவாயசம்பந்தத்தானிருப்பது. சமவாயமாவது ஒற் றுமைச்சம்பந்தம். உதாரணம்:—அக்கினிக்கும் சூட்டிற்குமுள்ள சம்பந்தம் சமவாயம். ஆயினும், அக்கினியிற் சமவாயசம்பந்தத்தாற் சூடு இருக்குமே யன்றிச் சூட்டிற் சமவாய சம்பந்தத்தால் அக்கினியிராது. குணத்திற்குக் குணி ஆதாரமாகுமன்றிக் குணிக்குக் குணம் ஆதாரமாகாது. ஆதலால் அக் கினியிற் சூடு சமவேதமெனப்படும். அவ்வாறே, இறைவனுக்குஞ் சிற்சத் திக்குமுள்ளசம்பந்தம் சமவாயம். ஆயினும், இறைவனிற் சமவாயசம்பந் தத்தாற் சிற்சத்தியிருக்குமன்றிச் சிற்சத்தியிற் சமவாயசம்பந்தத்தால் இறை வனிரான். ஆதலால் இறைவனிற் சிற்சத்தி சமவேதமெனப்படும். இவ் வாறாகவும் ஆணையில் நீக்கமின்றிநிற்கும் எனச் சூத்திரத்திற்கூறிய கருத்

தென்னையெனின், இறைவன் ஒன்றினுந்தோய்வின்றிச் சொயம்பிரகாச மாய்நிற்குந் தன்னுண்மையிற் சிவமெனவும், உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்குந்தன்மையிற் சத்தியெனவும், ஐந்தொழில் செய்யுந் தன்மையிற் பதியெனவும் பெயர்பெற்று நிற்பன். இவ்விடத்துச் சத்தியென்றது திரோதானசத்தியை. இத்திரோதானசத்தியும் சிற்சத்தியின் கூறாதலின் இறைவனிற்சமவாய சம்பந்தத்தானிருக்கும் சமவேதமாம். ஆகவே உயிர்களோடு இறைவன் கலந்து நிற்கும்நிலையில் தன்னோடு சமவாயசம்பந்தத்தாலிருக்கும் சமவேதமாகிய திரோதானசத்திவடிவாய்ச் சிற்சத்தியிற் பிரிப்பின்றி நிற்பனாதலால் அவ்வாறுகூறினாரென்க. இவ்வுண்மையையறிந்த உரையாசிரியர் ஆணையிற் பிரிப்பின்றிச் சமவேதமாய் நிற்பன் என உரை செய்தனர். உயிர்களின்பொருட்டு இறைவன் திரோதான சத்திவடிவாகச் சிற்சத்தியிற் பிரிப்பின்றி வெளிப்படாது நிற்பன் என்னும் இவ்வுண்மையை யாவரும் உணர்ந்துகொள்ளுதற்பொருட்டே ஆலயங்களில் அம்பிகை வடிவமாகத் திருமேனிகொண்டருளியிருக்கின்றனர்.

இறைவன் உயிர்களோடுகலந்துநிற்குந் தன்மையிற் சத்தியெனப்பெயர் பெறுவனென்பதைச் சிவஞானசித்தியார் உ - வது ரு - ம் க - வது செய்யுளில் "உலகெலா மாகி வேறா யுடனுமா யொளியாய்" என வழிநூலாசிரியர் அருளியவாற்றானும், அதற்கு உரையாசிரியர் அருளியவாற்றானும் அறிக. ஒளியென்பது சத்தி.

சூத்திரத்தில் அவையேதானேயாய் என்பதனை இரட்டுறமொழிந்து கொண்டு அவையேயாய், தானேயாய், அவையேதானேயாய் என உரைக்க. இவற்றுள் அவையேயாய் என்பது உயிர்களோடு இறைவன் ஒன்றாய் நிற்றலையும், தானேயாய் என்பது இறைவன் உயிர்களின் வேறாய்நிற்றலையும், அவையே தானேயாய் என்பது உயிர்களோடு இறைவன் உடனாய் நிற்றலையும், உணர்த்தியவாறறிக. இக்கருத்தேபற்றிவழிநூலாசிரியர் சிவஞானசித்தியார் இரண்டாஞ் சூத்திரத்து முதற்செய்யுளில் 'உலகெலா மாகி வேறா யுடனுமாய்' என்றருளிச் செய்தனர். 'ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணாண்குண மூன்றாய், மாறாமறை நான்காய்வரு பூதம்மவை யைந்தாய், யாறார்சுவை யேழோசையொ டெட்டுத்திசை தானாய், வேறு யுட னானிடம் வீழிம் மிழலையே." என அருளிய திருஞானசம்பந்தசுவாமிகள் தேவாரமும் இதனை வலியுறுத்துதல் காண்க.

முதற்சூத்திரத்தில் 'அந்தமாதி' என்றவிடத்துப் பிரிநிலை யேகாரம் விகாரத்தாற் றொக்குநின்றது. அந்த ஏகாரத்தை விரித்துச் சங்காரமே முதல் என்று நூலாசிரியர் மேற்கோள் செய்தனர். உரையாசிரியரும் கடவுளே முதல் எனக்கூறினர். அப்பிரிநிலை ஏகாரத்தால் முதல் அன்று எனப் பிரிக்கப்பட்டு நின்றது உயிராகிய சேதனப்பிரபஞ்சமேயாம்; அந்தச் சேதனப்பிரபஞ்சத்தை இச்சூத்திரத்தில் அவை எனச் சுட்டிக்கூறினார்; உயிர்கள் பலவாதலின் அவையெனப் பன்மையாற் சுட்டினர்.

அச்சூத்திரத்தில் உளதாய் ஒடுங்குமெனக் கூறாது ஒடுங்கி உளதாமெனக் கூறினார்; உளதாய் ஒடுங்குமெனக் கூறின் அனாதிசிருட்டியைக் கூறியதாகும்; புதுச் சிருட்டியே கூறப்படும் என்பதற்கு ஒடுங்கி என்பதை முன்னரும் உளதாம் என்பதைப் பின்னரும் வைத்தார். அதற்கேற்ப இச்சூத்திரத்தும் போக்கு வரவு எனப் போக்கினை முன்னரும் வரவினைப் பின்னருமாகக் கூறினார்.

சூத்திரத்தில் போக்கு வரவு புரிய என்பதிலுள்ள புரிய என்பது வினையெச்சம். அந்த எச்சம் நிற்கும் என்னும் முற்றுவினை கொண்டு முடிந்தது. புரிதல் என்பதன்பொருள் எப்பொழுதும் மேற்கொள்ளுதலாம்.

புரிய என்பதன் பின்னுள்ள ஆணையின் என்பது முன்னும் பின்னும் பார்க்கும் சிங்கநோக்குப்போல் நின்று முன்னுள்ள இருவினையிற் போக்கு வரவு புரிய என்பதனோடும் பின்னுள்ள நீக்கமின்றி நிற்குமன்றே என்பதனோடும் பொருந்தி ஆணையின் இருவினையிற் போக்குவரவுபுரிய ஆணையின் நீக்கமின்றி நிற்குமன்றே எனப்பொருள்தந்து நின்றது.

ஆணை அவ்வாறு நிற்கும் முறையில் ஆணையின் என்றதிலுள்ள இன்னுருபு இருவினையென்பதனோடு கூடுங்கால் ஏதுப்பொருளை உணர்த்தும் ஆல் உருபாகவும், நீக்கமின்றியென்பதனோடு கூடுங்கால் நீக்கப்பொருளை உணர்த்தும் இன்னுருபாகவும் நின்றது. ஆதலால் ஆணையால் வரும் இருவினையென்றும் ஆணையின் நீக்கமின்றியென்றும் உரைசெய்யப்பட்டது. இவ்வாறன்றி அந்த இன் என்பதைச் சாரியையாகக்கொண்டு பொருள் கூறாதுவிடுத்து ஆணையென்பது இருவினையோடு கூடுங்கால் ஆல் உருபையும், நீக்கமின்றி யென்பதனோடுகூடுங்கால் இன்னுருபையும் விரித்துப் பொருள்கூறுதலும் ஒருமுறையாம்.

சூத்திரத்து இறுதியிலுள்ள நிற்கும் அன்றே என்பதில் அன்றே என்பதை அசையாகக்கொண்டு பொருள்கூறாது விடுத்தனர். இவ்வாறன்றி நிற்கும் அன்றே என்பதற்கு அனாதியே உயிர்களோடு இறைவன் இவ்வாறு நிற்பன் என்றுகூறினும் பொருந்தும்.

அவையே தானேயாய்ப் போக்கு வரவு புரிய நீக்கமின்றி நிற்குமெனக் கூறியதனாலேயே போக்கு வரவு புரிதலாகிய அச்செயல்களெல்லாம் முதல்வன் கரணத்தானன்றிச் சங்கற்பமாத்திரத்தாற் செய்வனென்பது பெறப்பட்டது. எதனாலெனின், கரணத்தாற் செய்வதாயின் செய்யப்படுகின்ற பொருளின் வேறாகவும் அப்பொருளைக்கொள்வோரின் வேறாகவும் நின்று செய்யவேண்டும்; இதனைக் குடத்தினும் குடத்தினைக் கொள்வோரினும் வேறாகநின்று குடத்தைச்செய்யுங் குலாலனில்வைத்து அறிக. இறைவன் செயப்படுபொருளாகிய போக்குவரவோடும் அப்போக்குவரவைக்கொள்ளுட்

உயிரோடும் பிரிப்பின்றி நிற்றலால் காணத்தாற் செய்யவேண்டாதாயிற்று; உடலோடு பிரிப்பின்றி நிற்கும் உயிர் உடலின் வேருன பிறிதொன்றை அசைப்பதற்கு உடலாகிய காணம்வேண்டும்; உடலை அசைப்பதற்குக் காணமின்றிச் சங்கற்பமாத்திரம் போதும்; அதுபோல, உயிர்களோடு பிரிப்பின்றிநிற்கும் இறைவனுக்கு அவ்வுயிர்களுக்கு வேண்டுவன செய்தற்குச் சங்கற்பமாத்திரமே போதுமென்க. இக்கருத்தேபற்றி "உலகமே யுருவமாக யோனிக ளுறுப்ப தாக, இலகுபே ரிச்சா ஞானக் கிரியையுட் காணமாக, வலகிலா வுயிர்ப்பு லன்கட் கறிவினை யாக்கி யைந்து, நலமிகு தொழில்க ளோடு நாடக நடிப்ப னுதன்." என்ருர் வழிநூலாசிரியரும். (சிவஞானசித்தியார் உ - ம். சூ - ம். செ - எ.)

இச்சூத்திரத்தால் புதுச்சிருட்டிமுறையும் பாசவுண்மையுங் கூறியதோடு மேலைச்சூத்திரத்தில் அந்தமென்று உத்தேசமாய் எடுத்துக்கொண்ட முதல்வனுக்கு இலக்கணங்கூறியவாறுமாயிற்று. ஒருபொருளைச்சொல்வதற்கு உத்தேசம், இலக்கணம், பரீக்ஷை என்னும் மூன்றும் வேண்டப்படும். அவற்றுள் உத்தேசமாவது சொல்லப்படும் பொருளைப் பெயர் மாத்திரையால் எடுத்துரைத்தல்; இலக்கணம் அப்பொருளின் சிறப்பியல்பை எடுத்துரைத்தல்; பரீக்ஷை அவ்வியல்பு அப்பொருளுக்குண்டோ இல்லையோவென ஆராய்தல்; உத்தேசத்திற்குச் சொல்லுவோன் இச்சையே காரணம். இச்சையும் சம்பந்தம்பற்றிநிகழும். மேலைச்சூத்திரத்தில் இறைவன் முதல் என்று கூறுதற்கு அந்தம் ஆதி என்றுகூறினுர்; இறைவனைக் குறிக்கும் சொற்கள் பல இருப்பவும் அந்தமென்று கூறவானேன் எனின், ஒடுக்கிவைத்திருக்கும் சம்பந்தம்பற்றி உத்தேசமாய் எடுத்துக்கொள்ளப்பட்டதென்க. அவ்வாறு அந்தமென்று கூறிய இறைவனுக்கு உயிர்களுடன் ஒன்ருயும், வேருயும், உடனுயும் நிற்றலும், அவ்வுயிர்கள் போக்குவரவுபுரியச் சத்தியுடன் பிரிப்பின்றிநிற்றலும் இலக்கணமாயிற்று. இவ்விலக்கணம் தடத்தலக்கணமெனப்படும் பொதுவியல்பு. இவ்வியல்புடைய நிலையில் இறைவன் பஞ்சகிருத்திய கர்த்தாவாய் விளங்கும் பதி எனப்படுவன். சொரூபலக்கணமெனப்படுஞ் சிறப்பியல்பு முன்னர் ஆருஞ்சூத்திரத்திற் கூறப்படும். அவ்வியல்புடைய நிலையிற்ருன் சிவம் எனப்படுவன். இறைவனுக்குச் சிறப்பியல்பாவது சச்சிதானந்தமாய் நிற்றல்.

சூத்திரத்தில் ஆணையின் இருவினையின் போக்குவரவுபுரிய என்று கூறியதனுல் ஆணையாகிய தனது சிற்சத்தி ஒரு துணைக்காரணம்; அச்சத்தி வழியாய்த் தொழிற்படும் இருவினை மற்றொரு துணைக்காரணம் என்பதூஉம், இருவினையின் என்றதனுல் அவ்வினையின் தூலத்தன்மை செய்தபொழுதே கெட்டுப்போதலின் சூக்குமத்தன்மை இருத்தற்குப் பற்றுக்கோடாக ஒன்றிருக்கவேண்டும், அதுவே முதற்காரணமாகிய மாயை என்பதூஉம் விளங்கும். இவ்வாறு முதற்காரணமாகிய மாயையும், துணைக்காரணமாகிய சத்

யும், இருவினையும் உளவென இச்சூத்திரத்தாற் பெறப்பட்டவாறு அறிக. ஆணவமலத்துண்மை மேலைச்சூத்திரத்தில் உலகம் மீளத்தோற்றுதற்குக் காரணங்கூறு மியைபுபற்றிப்பெறப்பட்டது. அச்சூத்திரத்து இரண்டாம் அதிகரணத்து 'இலயித்த' என்ற வெண்பாவில் 'இலயித்தது' எனச் சற்காரியவாதங் கூறியதனால் மாயை உண்மையும் பெறப்பட்டிருக்க, இவ்விடத்தும் வேறு கூறுவானேன் எனின், மேல் ஒடுங்கியிருக்கும் அவத்தைபற்றிக் கூறப்பட்டது; இவ்விடத்தில் வினையிருத்தற்கும் வினையின்பயனைகப் போக்குவரவுபுரியத் தனுகரணபுவனபோகங்கள் தோற்றுதற்கும் மாயை வேண்டப்படுமென அநுமானம்பற்றிக் கூறப்பட்டதென்க. இருவினையிற் போக்குவரவுபுரிய என்றதனால், சங்காரகாரணனிடத்தொடுங்கிய உலகம் மீளத் தோன்றுங்கால் இருவினைகளுக்கேற்பப் பலவேறு வகைப்பட்டு விரியுமென்பதூஉம் விளங்கியவாறுகாண்க.

## சிற்றுரை.

இதனுள் அவையே தானேயாய் என்பதோரதிகரணம்; ஆணையினிருவினையின் என்பதோரதிகரணம்; போக்குவரவுபுரிய என்பதோரதிகரணம்; ஆணையினீக்கமின்றி நிற்குமன்றே என்பதோரதிகரணம், ஆக நாற்கூற்றது இச்சூத்திரமெனக்கொள்க.

## விளக்கம்.

வெளிப்படை.

# முதலதிகரணம்.



இறைவன் உயிர்களோடு பிரிப்பின்றி அத்துவிதமாய்
நிற்பன் எனக்கூறும்
மேற்கோள்.

ஈண்டு இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன்றானேயாய் நிற்கும் என்றது. (ப.ா.7-அ)

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், மேன் முதற்கடவுளல்லவென விலக்கப்பட்டுநின்ற சேதனப்பிரபஞ்சமும் முதல்வனும் பொன்னும் பணியும்போல் அபேதமோ? இருளும் வெளியும்போற் பேதமோ? சொல்லும்பொருளும்போற் பேதாபேதமோ? என்னுமை

யப்பாட்டின்கண் அம்மூன்றனுள் ஒரோவொன்றேபற்றி அவ்வம் மதத்தார் கூறும் கடாவையாசங்கித்துச் சூத்திரத்தின் முதற் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ - ள். வெ—டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

(இ - ள்.) ஈண்டு—இவ்வதிகரண நான்கனுள்வைத்து இம் முதலதிகரணத்துள்,—முதல்வன்—கடவுள்,—இவ்வான்மாக்கள் பலவுமாய்—கலப்பினால் இவ்வுயிர்களேயாய்,—தானேயாய்—பொருட்டன்மையால் அவற்றின் வேறுமாய்,—இவ்வான்மாக்கள் பலவும் தானேயாய்—உடனாய் நிற்றலின் இவ்வுயிர்கள் பலவுந்தானேயாய்,—நிற்குமென்றது—நிற்பன் எ—று.

ஈண்டும் இரட்டுறமொழிந்து கொள்க.

இதனானே, ஒருவிடயத்தைக் காணுங்கால் ஆன்மபோதம் கண்ணொளியெனத் தானெனவேறின்றி உடனாய்நின்று காணுமாறுபோல, முதல்வன் புனருற்பவஞ் செய்யுங்கால் உயிர்களோடு உடனாய்நின்று செய்வனென்பதூஉம் பெறப்பட்டது.

## விளக்கம்.

இது சூத்திரத்திலுள்ள அவையே தானேயா யென்பதனைப் பதச்சேதஞ்செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்னசொல்லிற்றோவெனின், முதற்சூத்திரத்தில் அந்தமே என்றதிலுள்ள பிரிநிலை ஏகாரத்தால் விலக்கப்பட்டு முதற்கடவுளல்லவெனநின்ற சேதனப்பிரபஞ்சமாகிய உயிரும் முதல்வனும், பொன்னும் ஆபரணமும்போல் அபேதமோ? இருளும் வெளியும்போற் பேதமோ? சொல்லும் பொருளும்போற் பேதாபேதமோ? என்பன ஐயப்பாடு. இவ்வையப்பாட்டின்கண் அபேதமே யென்பதும், பேதமேயென்பதும், பேதாபேதமே யென்பதும் பிறர்கூறும்பக்கம். அபேதங்கூறுவோர் ஏகான்மவாதிகள்; பேதங்கூறுவோர் மாத்துவர்; பேதாபேதங்கூறுவோர் பாஞ்சராத்திரிகள். இவ்வாறு ஒவ்வொரு சார்புபற்றி ஒவ்வொன்றேகொண்டு வாதிப்பார் கொள்கையை ஆசிரியர் தாமே ஆசங்கித்துக்கொண்டு அக்கொள்கையை மறுக்கும்முறையில் சூத்திரத்தின் முதற்கூற்றைப் பதச்சேதஞ்செய்து உயிர்களோடு, அபேதம் பேதம் பேதாபேதம் என்னும் மூன்றுமாய் இறைவன் நிற்பனெனக் கூறியவாறும்.

(இம்மேற்கோளின் பொருள்.) இவ்வதிகரணம் நான்கனுள்ளும் இம் முதலதிகரணத்துள் இறைவன் உயிர்களோடு கலந்துநிற்குந்தன்மையினால்

இவ்வுயிர்களேயாய், பொருளின்தன்மையால் இவ்வுயிர்களின் வேறுமாய், உயிர்களோடு உடனாய்நிற்குந்தன்மையால் இவ்வுயிர்கள் பலவுந் தானேயாய் நிற்பன் எ—று.

இவ்வதிகரணத்தையும் இரட்டுறமொழிந்துகொண்டு உரைத்து இவ்வான்மாக்கள் பலவுமாய் என்றும், தானேயாய் என்றும், ஆன்மாக்கள் பலவுந் தானேயாயென்றும் உரைசெய்யப்பட்டது.

இறைவன் இவ்வாறு மூன்றுவிதமாய் நிற்றல் எதற்காகவெனின், உயிர்களுக்குவேண்டுவன நிலைத்தல், அறிதல், செல்லுதல் என்னும் மூன்றுமேயாம். ஏனையயாவும் இம்மூன்றனுள் அடங்கும். அவற்றுள், ஒன்றாய் நிற்றலால் நிலைக்கவும், வேறாய்நின்று அறிவித்தலால் அறியவும், உடனாய் நின்று செலுத்துதலால் செல்லவும் செய்யவேண்டுதலின் இம்மூவகை உபகாரமும் உயிர்கட்குச் செய்யவேண்டி மூவிதமாய் நிற்றல் வேண்டப்படுவதாயிற்று.

அபேதம் முதலியவற்றுள் ஒவ்வொன்றே கொள்ளுவதனாலுண்டாகுங் குற்றம் யாதோவெனின், அபேதம் ஒன்றேகொள்ளின் உயிர் நிலைத்தற்கு மட்டும் இறைவன் உபகாரம் வேண்டுமெனப்பட்டு அறிதற்கும் செல்லுதற்கும் உயிர்கள் தாமே சுதந்திரமுடையன எனக்கொள்ளவரும். வருங்கால் நூலோடு பொருந்தாததுமன்றி அறிவித்தாலன்றி அறியமாட்டாத அனுபவத்தோடும் முரணும். சில உயிர்கள் தாமே எண்ணுதலால் எவற்றையும் அறியக்காண்கின்றோமேயெனின், அவ்வுயிர்களிடத்து அறிவுக்கறிவாய் இறைவன் உண்ணின்றுணர்த்த வுணர்வதேயன்றிப் பிறிதில்லையாதலின் அவ்விடத்தும் அறிவிக்க அறிதலுக்கு இழுக்கில்லை. இனி, பேதம் ஒன்றேகொள்ளின் அறிவித்தற்குமட்டும் இறைவன் உபகாரம் வேண்டுமெனப்பட்டு நிலைத்தற்கும் செல்லுதற்கும் உயிர்கள் சுதந்திரமுடையவெனக்கொள்ளவரும். வருங்கால் அவை தனித்திருக்குமெனின், இறைவன் வியாபகத்திற் கிழுக்காகும்; அவை தாமே செல்லுமெனின் அறியவேண்டுவதை அறியினும் அறிந்தவற்றிற் செல்லுதல் இயலாத அனுபவத்தோடு முரணும். இவ்வாறே பேதாபேதம் ஒன்றே கொள்ளின் செலுத்துதல் ஒன்றே இறைவன் உபகாரமெனப்பட்டு நிலைத்தல் அறிதல் இரண்டற்கும் உயிர்கள் சுதந்திரமுடையவெனக் கொள்ளவரும். வருங்கால் மேற்கூறியவாறு குற்றமாம். ஆதலின் மூன்றும் வேண்டப்படுவனவாயின.

பேதாபேதமாவது ஒருவாற்றாற் பேதமும் ஒருவாற்றால் அபேதமுமாம். பேதாபேதத்திற்கும் அபேதத்திற்கும் வேற்றுமை என்னையெனின், பேதாபேதத்தில் உடன் செல்லுமுறையில் உயிரின் வேறாதலும், கலந்துநிற்கும் முறையில் ஒன்றாதலும் உளவாம். அபேதத்தில் கலந்திருத்தலேயன்றி உயிருடன் செல்வதில்லை. இதுவே வேற்றுமையாம்.

இம்மேற்கோளினால் இறைவன் உயிர்களோடு ஒன்றாயும், வேறாயும், உடனாயும் நிற்பன் என்றதனோடு இறைவன் புதுச்சிருட்டி செய்யுங்கால் உயிர்களோடு உடனாய்நின்று செய்வன் என்பதூஉம் பெறப்பட்டது. எவ்வாறெனின், உயிரின் அறிவானது கண்ணொளியோடு கூடி ஒருவிடயத்தை அறியும்; அறியுங்கால் தான்வேறு கண்ணொளிவேறு எனப்பிரிப்பின்றி நின்று அறியும். அதுபோல, முதல்வன் புதுச்சிருட்டியைச் செய்யுங்கால் உயிர்களுடன் கலந்து உயிர்வேறு தான்வேறெனப் பிரிப்பின்றிநின்று செய்வன் என்க.

இறைவன் உயிர்களோடு பிரிப்பின்றி நிற்பன் என்பதற்குக் காட்டும்

ஏது.

அத்துவிதமென்ற சொல்லானே ஏகமென்னில் ஏகமென்று சுட்டுவேதுண்மையின் அத்துவிதமென்ற சொல்லே அந்நியநாத்தியை யுணர்த்துமாயிட்டே. (வா- 7- ½)

## சிற்றுரை.

எ—து ஏது எ—னின், முதல்வன் அவ்வாறு மூவகையுமாய் நிற்பனென்றற்குப் பிரமாணமென்னை என்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ—ள்.) (அத்துவிதமென்கிறசொல்லின் நகரம் இன்மை அன்மை மறுதலை என்னு*முப்பொருளுணர்த்துமன்றே, அவற்றுள் இன்மைப்பொருள்பற்றி) அத்துவிதமென்கிற மொழிமாத்திரையானே ஒருபொருளென்றல் பொருத்தமுடைத்தெனின்,—தானே தன்னையொன்றெனக் கருதல்வேண்டாமையின் அவ்வாறு கருதும் பொருள் வேறுண்டென்பது பெறப்படுதலானும், (எண்ணுப்பெயர்மேல்வந்த நகரம் அன்மைப்பொருண்மாத்திரையே யுணர்த்திப் பொதுமையி னிற்பதன்றி ஏனைச்சொற்களின்மேல்வந்த நகரம் போல இன்மை மறுதலைப்பொருள்களை யுணர்த்துதல் வழக்கின்கணின்மையின்) அத்துவிதமென்கின்ற மொழிதானே (பிறிதுகாரணம் வேண்டாது) வேறன்மையை யுணர்த்தி நிற்குமாகலானும் ஈண்டிவ்வான்மாக்கள் பலவும் முதல்வன் றானேயாய் நிற்குமென மேற்கொண்டது எ—று.

ஆகலானென்பதற்கு ஆயிட்டென்பது அக்கால வழக்குப் போலும்; அற்றாகலினன்றே, "நீயோ செய்யாய் நின்மல னாயிட்டு" என்றார் வழிநூலாசிரியரும், இனி "மழைபெய்து குளநிறைந்தது"

என்புழிப்போல ஆயிடலானென்பது ஆயிட்டெனத் திரிந்துநின்ற தென்றலு மொன்று.

எண்ணும்மை விரித்துரைக்க.

வேறின்றி உடனாதல் பெறப்படவே, பொருண்மையாற் பேதமென்பதூஉம் கலப்பினால்அபேதமென்பதூஉந் தாமேபோதருமென்பது கருத்து.

## விளக்கம்.

இந்த ஏது என்ன சொல்லிற்றோவெனின், இறைவன் உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்பன் என்று மேற்கூறியதற்குப் பிரமாணம் என்னை என்னும் வினாவை ஆசங்கித்துப் பிரமாணங்கூறி மேற்கோளை வலியுறுத்தியவாறாம்.

(இந்த ஏதுவின்பொருள்.) அத்துவிதமென்றசொல்லின்முன் நின்ற நகரம், இன்மை அன்மை மறுதலை யென்னும் முப்பொருளுணர்த்து மாதலால், அவற்றுள் இன்மைப்பொருள்பற்றி அத்துவிதமென்ற மொழிமாத்திரையானே பொருள் ஒன்றே என்றல் பொருத்தமாகுமெனின், ஒன்றாகிய தானே தன்னை யொன்றெனக் கருதல்வேண்டாமையின், அவ்வாறு ஒன்றெனக்கருதும் பொருள் வேறுண்டென்பது பெறப்படுமாதலின் ஒன்றென்றல் பொருந்தாது; அன்றியும், எண்ணுப்பெயர்மேல் வந்த நகரம் அன்மைப்பொருண்மாத்திரையே யுணர்த்தி ஏனையவற்றில் இன்மை அன்மை மறுதலை என்னும் முப்பொருள்களைத்தரும் பொதுமையில் நிற்பதன்றி, ஏனைச் சொற்களின்மேல்வந்த நகரம்போல இன்மை மறுதலைப் பொருள்களை யுணர்த்தல் வழக்கின்கண் இல்லை. ஆகவே, ஒன்றெனக் கருதுதலானும், எண்ணுப்பெயர்மேல்வந்த நகரம் இன்மைப்பொருளுணர்த்தாமையானும் அத்துவிதம் என்ற மொழிதானே பிறிதுகாரணம் வேண்டாது உயிர்களோடு பிரிப்பின்றிநிற்றலை புணர்த்திநிற்குமாதலால், ஈண்டிவ்வான்மாக்கள் பலவும் முதல்வன்றானேயாய் நிற்குமென மேற்கோள் கூறியது என்றவாறு.

பிரிப்பின்றி நிற்றலினாலேயே கலப்பால் ஒன்றாதலும், பொருளால் வேறாதலும், உயிர்க்குயிராதற் றன்மையால் உடனாதலும் பெறப்படும்.

அத்துவிதம் என்றசொல் பிரிப்பின்றிநிற்றலை எவ்வாறுணர்த்துமெனின், கூறுதும்:— நத்துவிதம் என்ற வடமொழிச் சொல்லிலுள்ள நகரமெய்கெட்டு அதன்மேல்நின்ற அகரமுதலாகநின்று தமிழில் அத்துவிதமென வழங்கிவருவதாயிற்று.

அத்துவிதம் என்னுஞ் சொல்லில் முன்னின்ற அகரம் அன்மை இன்மை மறுதலை யென்னும் மூன்றுபொருளை உணர்த்தும். உதாரணமாக

அப்பிராமணன் என்றவிடத்து பிராமணனல்லாத க்ஷத்திரிய வைசிய சூத்திரரைக் குறியாது, பிராமணனுயிருந்தும் பிராமணத் தன்மையில்லா மையைக் குறித்தலால் அகரம் அன்மைப்பொருளில் வந்தது. அமலம் என்றவிடத்து மலம் இன்மையைக் குறித்தலால் அகரம் இன்மைப்பொரு ளில் வந்தது. அநீதி என்றவிடத்து நீதியின் மறுதலையைக் குறித்த லால் அகரம் மறுதலைப் பொருளில் வந்தது. இம்மூன்றனுள்,

இன்மைப்பொருள்கொண்டு இரண்டாவதாகிய பசு பாசப்பொருள்க ளில்லை, பிரமப்பொருள் ஒன்றே உள்ளது என்பார் ஏகான்மவாதிகள். ஒன்றென்றுணர்வது வேறுண்டாதலால் இவர் கருத்துப் பொருந்தாது.

மறுதலைப்பொருள்கொண்டு நீதியின் மறுதலை கொள்ளவே நீதியும் கொள்ளக்கிடப்பதுபோல இரண்டன் மறுதலையாகிய ஒன்றுகொள்ளவே இரண்டுங்கொள்ளக்கிடந்து நீதியும், அநீதியும் வேறுவேறாதல் போல, ஒன்றாகிய கடவுளும் இரண்டாவதாகிய உயிரும்வேறு வேறாய் நிற்குமென் பர் மாத்துவர். வேறு வேறாயின் கடவுள் வியாபகத்துக்கு இழுக்கும் உயி ருக்குத் தனித்து நிற்கும் சுதந்திரமும் உளவெனப்பட்டு நூலோடும் அனு பவத்தோடும் முரணுமாதலின் இவர் கருத்தும் பொருந்தாது.

மேற்கூறிய இன்மைப்பொருளே கொண்டு கடவுள் வியாபகப்பொ ருளேயெனவும், உயிரும் பாசமும் கடவுளில் அடக்கமெனவும், ஆயினும் உயிரும் பாசமும் பலவாயினாற்போல கடவுள் பலவல்ல ஒன்றே எனவுங் கூறுவர் பாஞ்சராத்திரிகள். ஒன்றென்று கூறுவதற்கு வடமொழியில் ஏக மென்னும் சொல்லிருக்கவும் அதனை விட்டு அத்துவிதமென்னும் சொல் லால் உய்த்துணர வைக்கவேண்டாம் என மறுத்தவிடத்து, பிரமம் ஏகமெ ன்று ஓரிடத்திலும் பிரமம் அத்துவிதமென்று பிறிதோரிடத்திலுங் கூறுத லால் அத்துவிதமென்பதும் ஏகமென்பதும் ஒரு பொருட்சொற்களாமென் பர். ஏகமேவ அத்துவிதீயம் பிரமம் என ஓரிடத்திலேயே ஏகமெனவும் அத் விதமெனவுங் கூறுதலால் ஏகமென்பதும் அத்துவிதமென்பதும் வேறுவேறு பொருளைக் குறித்ததாமென மறுத்த விடத்து, அவ்வாறு கூறியது உறுதி பயக்கும் அடுக்கு மொழியாமென்பர். அடுக்குமொழியாயின் ஏகம் ஏகம் என் றுவது அத்துவிதம் அத்துவிதம் என்றுவது இருக்கவேண்டுமேயன்றி இரு வேறு மொழிகளாயிருத்தல்கூடாது. மற்றென்னையோ? அவ்வாக்கியத் திற்குப் பொருளெனின், ஏகமாகிய பிரமம் பலவுயிர்களோடுங் கலந்து நிற்குமென்பதேயாம். ஆதலின் அத்துவிதமென்னும் சொல்லிற்குக் கடவுள் ஒன்றென்று கொண்ட இவர் கருத்தும் பொருந்தாது.

இனி அத்துவிதச் சொற்குப்பொருள் என்னையோ? வெனின், அகரம் பொருட்பெயர்ச்சொல்லில் வரும்பொழுதுதான் அன்மை இன்மை மறு தலை என்னும் முப்பொருள் பயக்கும பொதுமையில் நிற்கும். எண்ணுப்

பெயர்ச்சொல்லில் வரும்பொழுது அன்மைப்பொருள் ஒன்றேயன்றிப் பிற பொருள் பயவாது. உதாரணமாக எண்ணுப்பெயர்மேல் ஏகத்தின் முன்னுகவும் துவிதத்தின் முன்னுகவும் அன்றி ஏனைய எண்ணுக்களுடன் அகரம் முன்னிற்பதில்லை. அவற்றுள் ஏகத்தின் முன்னுக நின்ற அகரம் அன்மைப் பொருள்பற்றி அநேகமெனப் பொருள் தருமாறுபோல துவிதத்தின் முன்னின்ற அகரமும் இரண்டன்மையைக் குறிக்கும் என்பதே தேற்றம்.

இக்கருத்தேபற்றி அன்மைப்பொருள்கொண்டு பிராமணனுக விருந்தும் பிராமணத்தன்மை யில்லாதவாறுபோல, கடவுளும் உயிர்களும் பொருட்டன்மையால் இரண்டாயினும் இரண்டின் றன்மையாக வேறு பிரித்தறிய வாரது கண்ணொளியும் ஆன்மபோதமும்போலக் கலந்து நிற்குமென்பர் சைவசித்தாந்திகள்.

ஆகவே, அத்துவிதமென்ற சொல்லால் கடவுளும் உயிரும் பிரிப்பின்றி நிற்குமென்பது பெறப்பட்டு அதனுல் ஒன்ருய்நிற்றல் முதலிய மூன்றும் பெறப்பட்டவாறு காண்க.

ஏதுவின் இறுதியில் ஆகலானென்று கூறவேண்டியதற்கு ஆயிட்டு என்று கூறியது அக்காலத்து வழக்குப்பற்றிப்போலும்; அவ்வாறு அக்காலத்து வழக்குண்டென்பதுபற்றியே வழிநூலாசிரியர் "இருபாவிருபது" என்னும் நூலில் "நீயோ செய்யாய் நின்மல னுயிட்டு" என்ருர். இவ்வாறன்றி மழைபெய்தலால் குளம் நிறைந்தது என்று சொல்லவேண்டுவதை மழைபெய்து குளம்நிறைந்தது என்று சொல்வதுபோல ஆயிடலான் என்று கூறவேண்டுவதை ஆயிட்டு எனத்திரித்துக் கூறினுரென்றலு மொன்று.

ஏதுவில் ஏகமென்று சுட்டுவதுண்மையின் என்றவிடத்தும், அந்நிய நாத்தியை யுணர்த்துமாயிட்டு என்றவிடத்தும் எண்ணும்மை விரித்துரைக்க. அவ்வாறு விரித்து ஏகமென்று சுட்டுவதுண்மையானும் அந்நிய நாத்தியை யுணர்த்துமாகலானும் என உரை செய்யப்பட்டது.

அந்நிய நாத்தியை யுணர்த்து மென்றதனுல் பிரிப்பின்றி உடனுதல் ஒன்றே பெறப்படுமாயினும், பிரிக்கமுடியாத பொருளின் தன்மைபற்றி வேறென்பதூஉம், பிரிக்கமுடியாத கலப்பின் தன்மைபற்றி ஒன்றென்பதூஉம் தாமே விளங்குமென்பது கருத்தாதலின் அவ்வாறு கூறினுர்.

இந்த ஏது அபேதம் முதலிய மூன்றனுள் ஒவ்வொன்றே கூறும் பிறர் பக்கத்தை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று. இத்துணிபாற் பெறப்பட்ட ஒன்ருதல், வேருதல், உடனுதல் மூன்றற்கும் உதாரணம் முன்னர்க் கூறுகின்ருர்.

உயிர்களோடு இறைவன் ஒன்றாய்நிற்றற்குக் காட்டும்
உதாரணம்.

கட்டு முறுப்புங் கரணமுங் கொண்டுள்ள
மிட்டதொரு பேரழைக்க வென்னென்றுங்—கோட்டி
யவனுளமா கில்லா னுளமவனு மாட்டா
தவனுளமா யல்லனுமா மங்கு.

சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், ஒருபொருள் மூவகையியல்பை யுடைத்தாதல் யாங்ஙனம் என்னுங்கடாவை யாசங்கித்து அவற்றுள் அவையேயாதலை உவமைமுகத்தான் வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) உள்ளம் கட்டும் உறுப்பும் காணமுங் கொண்டு— உயிர் (நரம்பு முதலியவற்றாற்) பிணிக்கப்படும் உடம்பினையும் ஐம்பொறிமுதலிய கருவிகளையுங் கைக்கொண்டுநின்று,—இட்டது ஒருபேர் அழைக்க என் என்றுங்கு—சாத்தா கொற்றா என உடம்பிற் கிட்டபெயராற் பிறாழைத்தவழித் தான் என்னையென வந்து நிற்றல் காண்டுமன்றே, (இருவர் கைகோத்து நின்றுழியும் அவருள் அழைக்கப்பட்டோனேயன்றி ஏனோன் என்னையென்றல் உலகத்தின்மையின் அவ்வாறன்றி உடம்பின் பெயரான் அழைத்த வழி உயிர் என்னென்றற்குக் காரணம் பிறிதோராற்றாற் பெறப்படாமையின் அருத்தாபத்தியளவையானே அவ்வுயிர் உடம்பெனத் தானென வேற்றுமையின்றி அபேதமாய்நிற்றல் பெற்றாம்.) அதுபோல,—ஒட்டி—(முதல்வன் உயிர்களின் அபேதமாய்) ஒட்டி நிற்போனும்,—அங்கு அவன் உளம் ஆகில்லான் உளம் அவனு மாட்டாது அவன் உளம் ஆய் அல்லனும் ஆம்—(அவ்வாறொட்டிய வழியும் உயிர் உயிரே, உடம்பு உடம்பே, உயிர் உடம்பாயொழியாது; உடம்பு உயிராகமாட்டாது; அவ்வாறாயினும் உயிர் உடம்பாயும் அதனின் வேறாயுநிற்கும்; உடம்பு அங்ஙனநில்லாது;) அது போல (முதல்வன் முதல்வனே, உயிர் உயிரே,) முதல்வன் உயிராயொழியான்; உயிர் முதல்வனாகமாட்டாது; (அவ்வாறாயினும்) முதல்வன் உயிராயும் அதனின் வேறாயுநிற்பன்; (உயிர் அங்ஙன நில்லாது) எ—று.

அவனுளமாகில்லா னுளமவனுமாட்டா தவனுளமா யல்லனு மாமங்கு என்றது ஒன்றும் ஒன்றன்மைக்கு அநுபவங்காட்டிய வாறு.

உறுப்பு ஆகுபெயர். எவனென்பது என்னென மரீஇயிற்று. ஒட்டியென்பது பெயர்; வினையெச்சமாகக் கொள்ளிற் சிறப்பும்மை விரித்துரைக்க.

ஒட்டுதல் பொருந்துதல். அங்கு அதுபோல.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) உள்ளம் கட்டும் உறுப்பும் காரணமுங் கொண்டு இட்டது ஒருபேர் அழைக்க என் என்றுங்கு ஒட்டி அங்கு அவன் உளம் ஆகில்லான் உளம் அவனுமாட்டாது அவன் உளம் ஆய் அல்லனும் ஆம்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், ஒருபொருள் ஒன்று யும், வேறும், உடனும் இவ்வாறு மூவகை இயல்புடைத்தாய் நிற்கு மென்றற்குத் திருட்டாந்தம் யாதோ என்னும் வினவை ஆசங்கித்துக் கொண்டு அம்மூவகை இயல்பினுள் ஒன்றேயாதற்கு உவமைகூறிச் சூத் திரத்திலுள்ள அவையேயாதலை வலியுறுத்தியவாறும்.

(பொ - ரை.) உயிரானது நரம்பு முதலியவற்றாற் கட்டப்பட்டிருக்கும் உடம்பினையும் மெய் வாய் கண் மூக்குச் செவி வாக்குப் பாதம் கை முதலிய கருவிகளையும் பற்றிநிற்கும். அவ்வாறு நிற்குங்கால் உடம்பிற்குப் பெய ரிடப்படும். அப்பெயர் உடம்பைக்கண்டு இட்டதேயன்றி உயிரைக்கண்டு இட்டதன்று. அவ்வாறு உடம்பிற்கிட்டபெயரால் சாத்தா கொற்றா எனப் பிறர் அழைத்தவிடத்து அவ்வுடம்போடுகூடிய உயிர் என்னையென்று கேட்கும்; ஏனைய உடம்போடுகூடிய உயிர் என்னையென்று கேட்பதில்லை. அவ்வுயிருக்கு அழைத்தது கேளாமையால் என்னையென்று கேட்கவில்லை என்றல் பொருந்தாது. எதனாலெனின், சாத்தன் கொற்றனாகிய இரு வரும் கைகோத்து நின்றவிடத்தும் சாத்தனையழைத்தபொழுது கொற்றன் என்னையென்று கேட்பதில்லை; இவ்வாறே சாத்தனுமாதலினாலென்க. இவ்வாறு உடலுக்கிட்டபெயரால் அழைக்கும்பொழுது உயிர் என்னை என் றற்குக் காரணம் என்னையென்பதைவிட வேறு தோன்றாமையின், அருத் தாபத்திப் பிரமாணத்தால் அழைக்கப்பட்ட உடம்போடுகூடிய உயிர், அவ் வுடம்புவேறு தான்வேறு என்ற வேற்றுமையின்றிக் கலந்துநிற்றலேயாம் என்க. அவ்வாறே முதல்வனும் உயிர்களுடன் கலந்துநிற்பன்; மேற்கூறிய வாறு உடம்போடு உயிர்கலந்து நிற்பினும் உடம்பு உடம்பே; உயிர் உயிரே; உயிர் உடம்பாகமாட்டாது; உடம்பு உயிராகமாட்டாது. ஆயினும் உயிர்

உடலை நான் என்பதனால் உடம்பாயும், என்னுடல் என்பதனால் உடம்பின் வேறாயும் நிற்கும்; உடம்பு உயிராகவும் நில்லாது, உயிர் பிரிந்தவுடன் உடம்பென்னும் பெயரைமாற்றிப் பிணமென்னும் பெயரிட்டுச் சுடுகாட்டிடப்படுதலே யன்றித் தனித்தும் நில்லாமையறிக. அவ்வாறே முதல்வன் முதல்வனே; உயிர் உயிரே; முதல்வன் உயிராகமாட்டான்; உயிர் முதல்வனாகமாட்டாது. அவ்வாறாயினும், முதல்வன் உயிரோடுகலந்து நின்று உயிர் செல்லவேண்டுவதற்காக உயிருடன் தானுஞ் செல்லுதலால் உயிராயும், உயிருக்கறிவித்தலால் உயிரின் வேறாயும் நிற்பன். உயிர் முதல்வனாகவும் நில்லாது; முதல்வனின் வேறாகத் தனித்தும் நில்லாது. முத்தியில் உயிர் முதல்வனாய் நிற்றலில்லையோவெனின், அவ்விடத்துங் கலந்து நிற்றலேயன்றி தனித்து முதல்வன்போல் நிற்றலில்லை. ஆதலால் உயிர் முதல்வனாய் நில்லாது என்பதனோடு முத்திநிலை முரணாது (எ - று.)

(க - ரை.) உடம்போடு உயிர் அபேதமாய்க்கலந்துநிற்றல்போல உயிரோடு இறைவன் அபேதமாய்க் கலந்துநிற்பன் என்பதாம்.

அருத்தாபத்திப் பிரமாணமாவது:— பொருட்குறிப்புடையது; உதாரணம். பகலுண்ணான் பருத்திருக்கின்றான் என்றவிடத்து, பருத்திருத்தல் உண்ணாது சம்பவியாது என்னுங் குறிப்பைக்கொண்டு இரவிலுண்பானென்று கொள்ளுதலாம். இவ்வாறே உயிர் உடம்பல்லாததாயிருந்தும் உடம்பிற்கிட்டபெயரால் அழைக்க அது என்னை யென்றமையால் என்னை என்றல் கலந்துநின்றாலன்றிச் சம்பவியாதாதலால் கலந்துநிற்குமெனக் கொள்ளுதல் அருத்தாபத்தியாயிற்று.

செய்யுளில் அவன் உளமாகில்லான் உளம் அவனாயாட்டாது அவன் உளமாய் அல்லனுமாம் அங்கு என்றது, இறைவன் உயிர்களோடு ஒன்றாக நிற்பினும் அவன் ஒருபொருள் உயிர் ஒருபொருள் என்பதற்கு அநுபவங் காட்டியவாறு.

உறுப்பு என்றது உறுப்பினையுடைய உடம்பினைக்குறித்து நிற்றலால் ஆகுபெயர். என்னென்றாங்கு என்பதிலுள்ள என்னென்பது எவனென நிற்கவேண்டும்; அவ்வாறு நிற்பின் வெண்பாத் தளைதட்டுமாதலின் எவனென்பது என்னென மரீஇயிற்று. ஒட்டியென்பது ஒட்டிநிற்போனாகிய முதல்வனைக்குறித்தலால் பெயர்; இதனை "விடையேறி" "மதிசூடி" என்பனவாதிய சமயகுரவர் திருவாக்குகளானுமறிக. ஒட்டி என்பதை வினையெச்சமாகக்கொள்ளின் சிறப்பும்மை விரித்து ஒட்டி நிற்பினும் என்றுரைக்க. உரைக்குங்கால் ஒட்டியென்னும் வினையெச்சம் அவனுளமாகில்லான் என்னும் முற்றுவினைகொண்டுமுடியும்.

ஒட்டுதல் என்பது பொருந்துதலாம். செய்யுளினிறுதியிலுள்ள அங்கு என்பது அதுபோல என்னும் பொருளில் நின்றது.

உயிர்களோடு இறைவன் வேறாய் நிற்றற்குக்காட்டும்
உதாரணம்.

ஒன்றென்ற தோன்றேகா ணொன்றே பதிபசுவா
மொன்றென்ற நீபாசத் தோடுளகா—ணொன்றின்று
லக்கரங்க ளின்று மகர வுயிரின்றே
லிக்கிரமத் தென்னு மிருக்கு.

சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், வேதத்துள் அத்துவிதமென்றதூஉ மன்றி ஏகமெனவுமோதுதலின் அதற்கு மறுதலையாய் உயிர்களோ டொட்டி நிற்பனெனப் பேதப்படக்கூறுவதென்னை என்னுங் கடாவை யாசங்கித்து அச்சொற்குத் தாற்பரியங் கூறுமுகத்தால் தானேயாதலை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) இருக்கு ஒன்று என்றது ஒன்றேகாண்—வேதம் ஒன்றென்றதற்குப் பொருள் ஒன்றென்பதேயாம்; வேறு பொருள் படாது,—ஒன்றே பதி—(அதற்குத் தாற்பரியம்) பதிப்பொருளொன்றே; இரண்டில்லையென்பதாம்,—ஒன்று என்ற நீ பசு ஆம் காண்—இஃதறியாது ஒன்றென்று சொல்லுகின்ற நீ அப் பதிப் பொருளின் வேறாய பசுவென்றறிவாயாக. (பதியுஞ்சேதனமாக யானுஞ்சேதனமாக என்னைப் பசுவென்றதென்னையெனின்),—பாசத்தோடு உளை—நீ மலத்தோடு கட்டுற்று நின்றாயாகலிற்பசுவெனப்பட்டனை; (அற்றேல், இவ்வாறு வேற்றுமைகூறிற் பிரமமில்லையாயின் ஒருபொருளு மில்லையென்னும் வேதத்திற்குத் தாற்பரியமென்னையெனின்),—அகரவுயிர் இன்றேல் அக்கரங்கள் இன்று ஆம் இக்கிரமத்து ஒன்று இன்று என்னும்—அகரவுயிரில்லையாயின் அக்கரங்களில்லையாமென்னும் இம்முறைபற்றி (வேதம் பிரமப் பொருள் இல்லையாயின்) ஒரு பொருளுமில்லையென்றோதும் அத்தனை எ-று.

ஒன்றின்று லக்கரங்களின்று மகாவுயிரின்றே லிக்கிரமத்தென் னும் என்றது வேறாகியும் வேறன்மைக்கு அநுபவங்காட்டியவாறு.

இக்கிரமத்தாலென உருபு விரித்துரைக்க. இன்றென்னு மொருமை அப்பண்பின்மேனின்றது. காணென்பதனை மேலே கூட்டுக. ஆல் அசை.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) இருக்கு ஒன்று என்றது ஒன்றேகாண் ஒன்றே பதி ஒன்று என்ற நீ பசு ஆம் காண் பாசத்தோடு உளை அகரவுயிர் இன்றேல் அக்கரங்கள் இன்று ஆம் இக்கிரமத்து ஒன்று இன்று என்னும்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோவெனின், வேதத்துள் பிரமம் அத்துவிதமென்று கூறியதூஉமன்றி, பிரமம் ஏகமெனவும் ஓதுதலின் அவ்வாறு ஏகமென்றதற்கு மறுதலையாக மேலை உதாரணத்தில் இறைவன் உயிர்களோடு ஒட்டி நிற்பனென இறைவன் எனவும் உயிரெனவும் வேறு படக்கூறுதல் எதற்காக என்னும் வினவை ஆசிரியர்தாமே எடுத்துக் கொண்டு ஏகமென்னும் அச்சொல்லிற்கு அபிப்பிராயங்கூறி அவ்வாறு கூறுமுறையில் முதல்வனும் உயிரும் பொருளால் இரண்டேயென்பதை விளக்கிச் சூத்திரத்திலுள்ள தானேயாதலை வலியுறுத்தியவாறும்.

(பொ—ரை.) வேதத்தில் ஒன்று என்பதற்குப் பொருள் ஒன்றென்பதேயாம்; வேறு பொருள்படாது. பொருள் ஒன்று என்பதற்கு அபிப்பிராயம் பதிப்பொருள் ஒன்றே; அது இரண்டில்லையென்பதாம். இவ்வாறு இரண்டுபதிப்பொருளில்லை ஒருபதிப்பொருள்தான் உண்டென்பதே ஒன்றென்பதன் கருத்தென அறியாது பதிக்குவேறான பொருளில்லையென்றல் பொருந்தாது. எதனாலெனின், ஒன்றாயிருப்பின் அதுதன்னை ஒன்றெனக்கருதவேண்டாம். கருதுமாயின் கருதும்பொருள் கருதப்படும்பொருளின் வேறாகவேயிருக்கவேண்டும்; ஆதலால் ஒன்றென்று கருதுகின்ற நீ அப்பதிப்பொருளின் வேறாகிய பசுவென்று அறிவாயாக. பதியும் அறிவுடையபொருள்; யானும் அறிவுடையபொருள்; அவ்வாறாகவும் என்னைப்பசுவென்றதற்குக் காரணம் என்னையெனின், நீ மலத்தோடு கூடி நின்றாயாதலின் பசுவென்று சொல்லப்பட்டாய். பதிப்பொருள் மலத்தோடு கூடாது நிற்றலோடு மலத்தோடுகூடிய உன்னை அம்மலத்தினின்றும் விடுவிக்குங் கருணையும் ஆற்றலுமுடையதாய் நின்றது. இவ்வாறு பதிக்கும் பசுவுக்கும் வேற்றுமை உண்டென்றுகூறின், பிரமமில்லையாயின் ஒருபொருளுமில்லை என்னும் வேதத்தினோடு முரணாதோவெனின், முரணாது. அவ்வேதவாக்கியத்திற்கு அபிப்பிராயம் பிரமத்தைத் தவிர இரண்டாவது பொருளில்லை என்பதன்று; வேறு என்னையோ அபிப்பிராயமெனின், அகரவுயிர் இல்லையாயின் அக்கரங்களில்லை என்பதுபோலப் பிரமப்பொருளில்லையாயின் ஒருபொருளும் இல்லை என்பதேயாம். இவ்வளவேயன்றி இரண்டாவது பொருளில்லையென்றல் பொருந்தாது என்றவாறு.

(க—ரை.) வேதத்தில் ஒன்றென்று கூறியதற்குப் பொருள் பதிப்பொருள் ஒன்றென்பதேயன்றிப் பசுவாகிய இரண்டாவது பொருளில்லை என்றல் பொருந்தாதென்பதாம்.

அகாரமாவது பரசரீரத்தினின்று சுத்தமாயா விருத்தியாய்த்தோன்றும் நாதத்தின் விருத்தியாய் உந்தியினின்று எழும் உதானன் என்னுங் காற்றானது எழுப்ப எழுந்து கண்டத்தைப்பொருந்தி முயற்சி விகாரமின்றி இயல்பானே செவிக்குக்கேட்கப்படும் ஒலிவடிவினது. அவ்வொலியினாலேயே ஏனைய ஒலிவடிவாய அக்கரங்களெல்லாமியங்கும்; அவ்வொலியின்றேல் ஏனைய அக்கரங்கள் இயங்கா. இவ்வாறே பிரமப்பொருள் இருத்தலினாலேயே எல்லாப்பொருள்களும் இயங்குகின்றன; இன்றேல் இயங்கா; பிரமப்பொருளின்றேல் ஒருபொருளுமில்லையென்பதன்பொருள் இவ்வளவேயாம்.

செய்யுளில் ஒன்றின்றால் அக்கரங்களின்றும் அகரவுயிரின்றேல் இக்கிரமத்தென்னும் என்றது, அகரமும் ஏனைய அக்கரங்களும் வேறாயினும் அகரமாகிய ஒலியைவிட ஏனைய அக்கரங்கள் தனித்துநில்லாதவாறுபோலப் பதிப்பொருளும் பசுப்பொருளும் வேறாயினும் பதிப்பொருளைவிடப் பசுப்பொருள் தனித்து நில்லாமைக்கு அனுபவங்காட்டியவாறு.

இக்கிரமத்து என்றவிடத்து ஆலுருபுவிரித்துரைக்க. அவ்வாறு விரித்து இம்முறைபற்றி என உரைசெய்யப்பட்டது. அக்கரங்கள் இன்று என்பதிலுள்ள இன்று என்னும் ஒருமை அக்கரங்கள் என்னும் பன்மையோடு முடியாது; ஆதலால் இன்று என்பது ஒருமையைக்குறியாது இன்மையாகிய பண்பைக்குறித்து நின்றது.

பாசத்தோடுளைகாண் என்றதிலுள்ள காண் என்பது பசுவாம் என்பதனோடு கூட்டிப் பசுவாம் காண் எனப்பட்டது.

இன்றால் என்பதிலுள்ள ஆல் என்பது அசை.

உயிர்களோடு இறைவன் உடனாய் நிற்றற்குக்காட்டும்

உதாரணம்.

பண்ணையு மோசையும் போலப் பழமதுவு
மெண்ணுஞ் சுவையும்போ லெங்குமா—மண்ணரு
ளத்துவித மாத லருமறைக ளோன்றேன்ற
தத்துவித மேன்றறையு மாங்கு.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், வேதம் ஏகமாய பிரமத்தை ஏகமென்றொழியாது பிரமம் அத்துவிதமெனவும் ஓரோரிடங்களின் ஓதுதலின், அத்துவிதம் இருபொருட்கண்ணதென்பார்க்கு ஏகமாய

பிரமத்தை அத்துவிதமென்றல் பொருந்ாதாய் முடியும் என்னுங் கடாவையாசங்கித்து அதனை நீக்குமுகத்தானே அவையே தானே யாதலை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்.) பண்ணையும் ஓசையும்போலப் பழமதுவும் எண்ணும் சுவையும்போல் எங்கும் ஆம் அண்ணல் தாள் அத்துவிதம் ஆதல்—பண்ணும் (அதனின் வேறன்றுயெண்ணப்படும்) இசையும் போலவும், பழமும் (அதனின்வேறன்று) யெண்ணப்படுஞ்சுவையும்போலவும் யாங்கணும் வியாபகமாய முதல்வன் றிருவருள் (உயிர்களின் வேற்றுமையின்றி நிற்பதாகலான்,—அருமறைகள் ஒன்று என்னாது அத்துவிதம் என்று ஆங்கு அறையும்—வேதங்கள் ஏகமென்னாது (பிரமம்) அத்துவிதம் என்று அவ்விடங்களிற் கூறும் எ-று.

ஆண்டுப் பிரமம் அத்துவிதமென்றது பிரமம் உயிர்களின் வேற்றுமையின்றிநிற்கு மென்னும் பொருட்டாகலான், அஃது ஏகமென்பதோடு முரணுமாறில்லை என்பதாம்.

பண்ணை யென்னும் ஐகாரம் பகுதிப்பொருள் விகுதி. பண் பாலைப்பண் முதலாயின.

எங்குமா மண்ணலுளென விசேடித்தது, குணகுணிகள்போல் உடனாயும், அவ்வாறுடனாகாமைக்கு அநுபவங்காட்டியவாறு. வியாப்பிய வியாபகமாத லொப்புமைமாத்திரையேபற்றிக் குணகுணிகளை உவமை கூறினரென்பது.

## விளக்கம்.

வெண்பாவின் இறுதியிலுள்ள என்றறையும் ஆங்கு என்பதை என்று ஆங்கு அறையுமெனக் கூட்டுக.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோவெனின், ஏகம் என்றதன்பொருள் பிரமம் ஏகம் என்பதேயாயின் வேதம் ஏகமாய பிரமத்தை ஏகமென்று கூறியமட்டில் நில்லாமல் பிரமம் அத்துவிதமெனவும் சில விடங்களிற் கூறுதலால் அத்துவிதமென்னுஞ்சொல் இருபொருளின் கலப்பைக்குறிக்கும் என்று சொல்லுதல்பொருந்தாது. எதனாலெனின், ஏகமென்று கூறியதனோடு முரணாமல் அத்துவிதமென்றதற்கும் பொருள்கொள்ளின் அத்துவிதமென்றதும் ஒன்றென்றே முடியும். இவ்வாறன்றி அத்துவிதமென்றது இருபொருளின் கலப்பைக்குறிக்குமென்றும் ஏகமென்றது ஒன்றைக்

குறிக்குமென்றுங் கொள்ளில், ஏகமென்றுகூறிய பிரமத்தைப் பிறிதோ ரிடத்து அத்துவிதமென்று கூறுதல் பொருந்தாதாய் முடியும்; இவ்வாறு கூறுவோர் கூற்றை ஆசிரியர் தாமே எடுத்துக்கொண்டு ஏகமென்றதும் அத்துவிதம் என்றதும் முரணுதெனக்கூறிச் சூத்திரத்துள்ள அவையே தானேயாதலை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) பண்ணும் அதனோடு பிரிப்பின்றி நிற்கும் ஓசையும் போலவும், பழமும் அதனோடு பிரிப்பின்றிநிற்குஞ் சுவையும்போலவும் எவ்விடத்தும் வியாபகமாய முதல்வன்றிருவருள் உயிர்களோடு பிரிப்பின்றி நிற்கும். அவ்வாறுநிற்குமுறைபற்றி வேதங்கள் பிரமம் ஏகமென்றதோடு நில்லாது அத்துவிதம் என்றும் சில விடங்களிற்கூறும் என்பதாம்.

(க-ரை.) உயிர்களோடு முதல்வன்றிருவருள் பிரிப்பின்றி நிற்பதை யுணர்த்துதற்கு வேதங்களில் அத்துவிதம் என்று கூறியது என்பதாம்.

வேதங்கள் சிலவிடங்களில் பிரமம் அத்துவிதமென்று கூறியது உயிர்களோடு பிரமம் வேற்றுமையின்றி நிற்குமென்பதை யுணர்த்துதற்பொருட்டே யாம்; சிலவிடங்களில் பிரமம் ஏகமென்று கூறியது இரண்டு பிரமப்பொருள் கிடையாது, ஒரு பிரமமே யுள்ளது என்பதை யுணர்த்துதற்பொருட்டே யாம். ஆதலின் ஏகமென்றதனோடு அத்துவிதமென்றது முரணுதவாறு அறிக.

பண்ணை என்பதிலுள்ள ஐகாரம் பண்ணென்னும் பகுதிப்பொருளையே யுணர்த்தி நின்றமையால் பகுதிப்பொருள் விகுதி. ஆதலால் பண்ணையுமென் பதற்குப் பண்ணுமென உரைசெய்யப்பட்டது. அவ்வாறுயின் பண்ணும் ஓசையும்போல எனவே கூறியிருக்கலாமே எனின், வெண்பாத் தளைதட்டு மாதலின் பண்ணையுமெனக் கூறினரென்க. பண் பாலைப்பண், குறிஞ்சிப் பண் முதலாயின.

எங்குமாம் அண்ணல்தாள் என அண்ணல்தாளுக்கு எங்குமாமென் னும் விசேடணங்கூறினர். அவ்வாறு கூறியது குணமுங்குணியும்போல் உயிருமுதல்வனும் பிரிக்கமுடியாமல் உடனாய் நிற்பினும் உயிர்செல்லுமிட மெல்லாம் இறைவனுஞ் செல்வானெனப்பட்டு உயிரைப்போல இறைவ னும் ஏகதேசமாதல் கூடுமாதலின் அவ்வாறு ஏகதேசமாகாமைக்கு அனு பவங்காட்டியவாறு; அதாவது எங்கும் வியாபகமாயிருத்தலால் அங்கங்கே உயிர்களோடு உடனாய் நிற்கின்றானென்றபடியாம்.

குணமுங் குணியும்போல் என்றதனால் இறைவன் குணியும் உயிர் குணமுமாமென்று கொள்ளலாகாது. குணி வியாபகமாயும் குணம் அக் குணியினுள் வியாப்பியமாயும் அதாவது அடங்கியும் இருக்கும். இவ்வாறே

இறைவன் எங்கும் வியாபகமாயும் உயிர் அவ்விறைவன் வியாபகத்துள் அடங்கி வியாப்பியமாயுமிருக்கும். இவ்வாறு வியாபக வியாப்பியமாய் நிற்கும் முறைமையை யுணர்த்துதற்கே குணகுணியுவமை கூறப்பட்டது என அறிக.

உயிர்களோடு இறைவன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும்
நிற்பன் என்பதற்குக் காட்டும்
உதாரணம்.

அரக்கோடு சேர்த்தி யணைத்தவக் கற்போ
லுருக்கி யுடங்கியைந்து நின்று—பிரிப்பின்றித்
தானே யுலகாந் தமியே னுளம்புகுதல்
யானே யுலகென்ப னின்று.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், இங்ஙனம் வெவ்வேறுவமை யெடுத்துக்காட்டின் அநேகாந்தவாதமாமென்னுங் கடாவை யாசங்கித்து அஃதாகாமை உவமை முகத்தான்விளக்கி மூன்றனையும் ஒருங்கே வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) உருக்கி அரக்கொடு சேர்த்தி அணைத்த அக்கற் போல் உடங்கு இயைந்து நின்று பிரிப்பு இன்றித் தானே உலகு ஆம்—அரக்கையுருக்கி அதனோடு சேர்த்து அணைத்த கற்பொடி அவ்வரக்கினோடொன்றாய் ஒருங்கியைந்து நீக்கமின்றி நின்றாற் போல, (முதல்வன் உயிர்களின் ஒருங்குகூடி நின்று) நீக்கமின்றி (உடனாகலால்) தானேயாம், உலகேயாம், (தானே உலகேயாம், அற்றேல் வாமதேவமுனிவன் முதலியோர் யானே யுலகெல்லா மாயினேன் எனக் கூறுதலானும், சர்வஞ்ஞானோத்தரத்தில் ~~யானேயெல்லாமாயினேன் எனக் கூறுதலானும்,~~ யானேயெல்லாமாய் அல்லனுமாய் உடனுமாய் நின்றேன் என்று உயிர்கண்மேல் வைத்தோதுதலானும், உயிர்களும் இவ்விலக்கணத்தனவாவான் செல்லும்போலுமெனின்),—தமியேன் உளம் புகுதல்யானே உலகு என்பன் இன்று—(அம்முதல்வன் பாசக்கூட்டத்தினீங்கித்) தனியாய் நின்ற என்னகத்துச் (சோகம்பாவனையாற் புகுந்து வேற்றுமையின்றித் தோன்றலான்) யானே யுலகெல்லாமென்பேனாயினேன் இம்முத்திக்காலத்து. (ஆகலின், அதுபற்றிஉயிர்களும் அவ்வாறுவான் சேறலின்று) எ—று.

அதுபற்றி உயிர்களும் அவ்வாறுவான் சேறலின்றென்பது குறிப்பெச்சம்.

இவ்வொற்றுமைபற்றியன்றே அருச்சுனற்குக் கீதைநூல் செவியறிவுறுத்த [1]கண்ணன் யானே யுலகெல்லாமாயினேனென்ற தூஉம், [2]முதல்வனது விச்சுவரூபத்தைத் தான்காட்டியதூஉம், [3]ஏனையவற்றைக் கைவிட்டு என்னையே வழிபடுகவென்றதூஉம், [4]அதனை உறுதியாகக்கொண்ட அருச்சுனன் அவன் கூறிய கருத்து நோக்கிச் சாங்காறுஞ் சிவபூசை செய்ததூஉம், கண்ணன்மே விட்ட போதுகள் முதல்வன்றிருமுடிமேற் கண்டதூஉமென்க. [5]கண்ணன் உபமன்னியமுனிபாற் சிவதீக்கையுற்றுத் தன்னையுந் தலைவனையுமுணர்ந்தோனாகலிற் சிவோகம்பாவனையைத் தலைப்பட் டோனுதலறிக.

கலப்பாய் நிற்றலான் உலகேயாமென்பார் உடங்கியைந்து எனவும், பொருட்டன்மையால் வேறு நிற்றலால் தானேயாமென் பார் நின்று எனவும், உயிர்க்குயிராய் நிற்றலால் தானே யுலகா மென்பார் பிரிப்பின்றி எனவுங் கூறினார்.

ஈண்டும் இரட்டுறமொழிந்து கொண்டுரைக்க.

இன்றியென்னுஞ் செய்த னெச்சக்குறிப்பு "மழைபெய்து குளநிறைந்தது" என்புழிப்போலக் காரணகாரியப் பொருட்டாய் நின்றது.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) உருக்கி அரக்கொடுசேர்த்தி அணைத்த அக்கற் போல் உடங்கு இயைந்து நின்று பிரிபபு இன்றித் தானே உலகு ஆம் தமி யேன் உளம்புகுதல் யானே உலகு என்பன் இன்று.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றேவெனின், இவ்வாறு ஒன்றாய் நிற்றல், வேறாய்நிற்றல், உடனாய்நிற்றலாகிய மூன்றற்கும் வேறு வேறுவ மை எடுத்துக்காட்டினால் அநேக முடிபுகளையுடையதென்னுங் குற்றமாமே என்னும் வினாவை ஆசங்கித்துக்கொண்டு அது குற்றமாகாதென வேறு ஓர் உவமையினால் அம்மூன்றனையும் ஒருசேர விளக்கி வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) அரக்கை உருக்கி உருக்கப்பட்ட அவ்வரக்கினோடு கற் பொடியைச் சேர்த்துக்கூட்டினால் அக்கற்பொடியானது அவ்வரக்கினோடு ஒன்றாய்க்கூடி நீக்கமின்றி நிற்கும் அதுபோல, முதல்வனும் உயிர்களோடு

கூடி நீக்கமின்றி உடனாய்நிற்பன். கூடி யென்றதனால் ஒன்றாதலும், நிற்பன் என்றதனால் வேறாதலும், நீக்கமின்றி என்றதனால் உடனாதலும் பெறப்படும். உவமையிலும் இவ்வாறே காண்க. அவ்வாறாயின் வாமதேவ முனிவன் முதலியோர் யானே உலகெல்லாமாயினேனெனக் கூறுதலானும், சர்வஞ்ஞானோத்தரத்தில் சுவாநுபூதியைப்பற்றிக் கூறுமிடத்து "யானே யெல்லாமாய் அல்லனுமாய் உடனுமாய் நிற்பேன்" என்று உயிர் கண்மேல்வைத்து ஓதுதலானும், உயிர்களும் முதல்வன்போல் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கும் இலக்கணமுடையன என்று கொள்ளவருமே யெனின், வாராது; எதனாலெனின், பாசக்கூட்டத்தினின்றும் நீங்கித் தனியாய் நின்ற உயிரினகத்து அம்முதல்வன் சிவோகம்பாவனையாற் புகுந்து உயிர்வேறு தான்வேறெனப் பிரிப்பின்றி அவ்வுயிரேயாய் நிற்றலால், தன்னகத்தில் முதல்வன் நிற்குமுரிமைபற்றி அம்முத்திக்காலத்து யானே உலகெல்லாமாயினேன் எனப்பட்டது. ஆதலால் அம்முத்திநிலைபற்றி உயிர்களும் முதல்வன்போலும் இலக்கணமுடையனவெனக் கூறமுடியாது. (எ - று.)

(௧ - ரை.) உருக்கிய அரக்கினோடு சேர்த்த கற்பொடி பிரிக்க முடியாமையால் ஒன்றாயும், பிரிக்கமுடியாதாயினும் கற்பொடி எனத் தெரிதலால் வேறாயும், அரக்குமுழுதுங் கற்பொடி தெரிதலால் உடனாயும் நிற்குமாறு போல, முதல்வன் உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்பன் என்பதாம்.

அதுபற்றி உயிர்களும் அவ்வாறாவான் சேறலின்று என்பது செய்யுளில் இல்லையாயினும் சிவோகம்பாவனையால் உலகெல்லாமாயினேன் என்றதனால் குறிப்பாகக்கொள்ளுமாறு எஞ்சி நிற்றலால் குறிப்பெச்சம்.

சிவோகம்பாவனையால் முதல்வன் புகுந்து என்றதனால் முன்னர் முதல்வன் பிரிந்து நின்று பின்னர்ப்புகுந்ததன்று. அநாதியே உயிரோடு முதல்வன் பிரிப்பின்றி நிற்பன்; நிற்பினும், ஆணவமலமும் அநாதியே கூடிநிற்றலால் முதல்வன் விளங்கித்தோன்றுதலில்லை. ஆணவமலம் நீங்கியவிடத்து முதல்வன் உயிருக்கு விளங்கித்தோன்றுவன்; விளங்கித்தோன்றுதலையே புகுந்துஎனக் கூறப்பட்டது.

பாசக்கூட்டத்தின் நீங்கித் தனியாய்நின்ற என்னகத்து என்றதனால், உயிர் தனித்துநிற்றல் கூடுமெனப் பெறப்படுமே. பெறப்படின், உயிர் யாதானும் ஒன்றைச்சார்ந்தன்றித் தனித்து நில்லாது என்னும் நூல்களோடு முரணுமே எனின், தனித்து என்பதற்குப் பாசக்கூட்டத்தில் நீங்கியிருத்தலாகிய அவ்வளவேயன்றிப் பிறிதில்லையாதலால் முரணாதென்க. அவ்வாறு நீங்கிய உயிர் சிவோகம்பாவனையைப்பற்றி நின்றவாறும் அறிக.

அர்ச்சுனனுக்குக் கீதைநூல் உபதேசித்த கண்ணன் சிவோகம்பாவனை யினால் சிவமாய்நின்ற ஒற்றுமைபற்றியே யானே உலகெல்லாமாயினேன் என்றதூஉம், எல்லாமாய் நின்ற முதல்வனது விச்சுவரூபத்தைத் தான் காட்டியதூஉம், ஏனையவற்றைக் கைவிட்டு என்னையே வழிபடுக என்றதூஉ மாம். அவ்வாறு உபதேசித்த கண்ணன்மொழியை உறுதியாகக்கொண்ட அர்ச்சுனன் அவன் கூறிய கருத்து நோக்கிச் சாங்காறுஞ் சிவபூசைசெய்த னன். கண்ணன் என்னையே வழிபடுகவெனக்கூற அர்ச்சுனன் சிவனை வழிபட்டது கண்ணன் கருத்தோடு முரணுதோவெனின், முரணாது; எதனு லெனின், கண்ணன் சிவோகம்பாவனையில் நின்றுகொண்டு என்னையே வழி படுக என்று கூறினதேயன்றித் தானாகநின்று கூறவில்லையாதலினால் அக் கருத்தறிந்த அர்ச்சுனன் சிவனை வழிபட்டது கண்ணன் கருத்தோடு முரணு மாறில்லை. இன்னும் இவ்வுண்மை அர்ச்சுனன் கண்ணன்மேலிட்ட புட் பங்கள் சிவபெருமான்றிருமுடிமேற் கண்டதனுலும் நன்கு புலப்படும். சிவோகம்பாவனை செய்தற்குச் சிவதீட்சை பெறவேண்டும். அவ்வாறே கண்ணன் உபமன்னிய முனிவர்பால் சிவதீட்சையுற்றுத் தன்னையுந் தலை வனையும் உணர்ந்தோனுதலால் சிவோகம்பாவனையைச் செய்தோனுதலறிக.

உயிர்களோடு முதல்வன் கலந்துநிற்றலால் உலகேயாம் என்று கூற வேண்டி உடங்கியைந்து எனவும், கலந்து நிற்பினும் பொருட்டன்மையால் வேறு நிற்றலால் தானேயாம் என்று கூறவேண்டி நின்று எனவும், வேறு யினும் உயிர்க்குயிராய் உடன் நிற்றலால் தானே உலகாமெனக் கூறவேண் டிப் பிரிப்பின்றி எனவுஞ் செய்யுளிற் கூறினர்.

இச்செய்யுளிடத்துந் தானே உலகாமென்பதை இரட்டுறமொழிந்து தானேயாம், உலகேயாம், தானே உலகேயாம் என உரை செய்யப்பட்டது.

பிரிப்பின்றி என்றதிலுள்ள இன்றி என்பது செய்து என்னும் எச்சக் குறிப்பு. அது, மழை பெய்தலால் குளம் நிறைந்தது என்று கூறவேண் டியதை மழை பெய்து குளம் நிறைந்தது என்றாற்போலப் பிரிப்பின் மையால் தானே உலகாம் எனக்காரணகாரியப்பொருளில் நின்றது. இன்றி யென்ற அது முக்காலத்தையுங் குறிப்பாக உணர்த்தலால் எச்சக்குறிப்பு.

## சிற்றுரை.

இவ்வதிகரணத்தானே பேதமென்றும் அபேதமென்றும் பேதாபேதமென்றும் பிணங்குஞ் சமயிகளையெல்லாம் மறுத்து அம்மூவகை யியல்புந் தன்கட்டோன்ற நிற்கும் அத்துவிதத்துண் மை ஏதுக்களானும் உவமைகளானும் உணர்த்தியவாறு. புடைநூலா சிரியரும் இவ்வதிகரணப் பொருளைபற்றி "புறச்சமயத்தவர்க கிருளாய்***தெரிக்கலுற்றாம்." என வகுத்தோதினர்.

## விளக்கம்.

இவ்வதிகரணத்தினுல் முதல்வனும் உயிரும் பேதமென்றும், அபேதமென்றும், பேதாபேதமென்றும் பிணங்குஞ் சமயிகளையெல்லாம் மறுத்து அம்மூவகை இயல்பும் விளங்குதற்குரிய அத்துவிதத்தின் உண்மையை ஏதுக்களானும் உவமைகளானும் உணர்த்தியவாறும். உணர்த்துமுறையில் பேதம், அபேதம், பேதாபேதம் என்னும் மூன்றனுள் ஒவ்வொன்றே கூறுவாரை மறுத்ததோடு அம்மூன்றையும் ஒப்புக்கொள்ளுங்கால் அவற்றிற்குப் பிறர்கூறிய உவமைகளையும் மறுத்து வேறு உவமைகொண்டனர். அவ்வாறுகொண்டதன் கருத்தென்னையெனின், கூறுதும்.

அபேதத்திற்குக் கூறிய பொற்பணி உவமையில் பொன்னே ஆபரணமானதுபோல் பிரமமே உயிராயிற்றென்று கொள்ளவரும்; கொள்ளின் ஆபரணமாய்த்தோன்றுங்காலத்தும் பொன்னின்தன்மை விளங்குதல்போல உயிராகத்தோன்றுங்காலத்தும் பிரமத்தின்தன்மை விளங்கவேண்டும்; பிரமத்தின்தன்மையோ நினைப்பு மறப்புச் சுக துக்க முதலியவற்றிற் கட்டுப்படாதது. உயிரோ அவற்றிற் கட்டுப்பட்டிருப்பதை அனுபவத்திற் காண்கின்றேம். ஆதலால், அவ்வுவமையை ஒப்புக்கொள்ளுமிடத்துப் பொருள் ஒன்றே எனப்பட்டு ஒருபொருளாகிய பிரமமே சுகதுக்கமுதலியவிகாரத்தைப் பொருந்துமெனக் கொள்ளவருமாதலின் அபேதம் என்பதற்கு அவ்வுவமையைக்கொள்ளாது உயிரையும் உடலையும் உவமையாகக்கொண்டனர். இவ்வுவமையில் உயிர்போல இறைவன், உடல்போல உயிர், இவ்விரண்டும் பிரிக்கமுடியாமற் கலந்துநிற்றலால் ஒன்றுதற்கு உவமையாயிற்று. இவ்வுவமையிலுள்ள விசேடங்களெல்லாம் இவ்வதிகரணத்து முதலாவது வெண்பா உரையில் விளக்கப்பட்டிருக்கின்றன. உபநிடதத்தில் பொற்பணி உவமையைக் கூறியதன் கருத்தென்னையெனின், பொன்னென்னுஞ் சொல்லுக்குப் பொருளொன்று, ஆபரணமென்னுஞ் சொல்லுக்குப் பொருளொன்று, ஆபரணம் பொன்னையின்றித் தனித்துநில்லாது, இவ்வாறே இறைவனையின்றி உயிர் தனித்து நில்லாமைக்குக் கூறியவாறும்.

பேதத்திற்குரிய இருளும் வெளியும் என்ற உவமையில் பொருளிரண்டே என்பது ஒப்புக் கொள்ளப்படினும், அப்பொருளின் தன்மைகளோடு முரணும். எவ்வாறெனின், வெளி என்பது இவ்விடத்திற் சூரியனொளியைக்குறிக்கும்; குறிக்கவே சூரியனொளி பிரகாசிக்குங்கால் இருள்தோன்றாது; இருள் தோன்றுங்கால் சூரியனொளி பிரகாசிக்காது. ஆகவே, ஒன்றன் உபகாரம் பிறிதொன்றற்கு வேண்டப்படுவதின்றாய் முடியும். அதுபோல, இறைவனும் உயிரும் இரண்டே எனக்கொண்டு உயிர்தோன்றுங்கால் இறைவன் தோன்றாமலும் இறைவன் தோன்றுங்கால் உயிர்தோன்றாமலும் நிற்குமெனக் கொள்ளவரும். அவ்வாறு கொள்ளுங்கால் உயிருக்கு இறை

வன் உபகாரம் வேண்டப்படுவதில்லையாய்த் தனித்து இயங்குதல் உண்டெனப்படும். ஆதலால், பேதத்திற்குக்கூறிய இருள் ஒளி உவமையைக்கொள்ளாது அகரத்தையும் ஏனைய அக்கரங்களையும் உவமையாகக்கொண்டனர். இவ்வுவமையில் முதல்வனையின்றி உயிருக்கு இயங்குதலில்லை என்பது விளங்கும். இது இவ்வதிகரணத்து இரண்டாவது வெண்பாவில் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றது.

பேதாபேதத்திற்குக் கூறிய சொல்லும் பொருளும் என்ற உவமையில் பொருளிரண்டேயாயினும் சொல்லும் பொருளும் கலந்து நிற்றலில்லை. எவ்வாறெனின், சொல் வாக்கிலிருப்பது, பொருள் அவ்வாக்கின் வேறாயிருப்பது. அதுபோல, உயிரிருக்கும் இடமொன்றும் பிரமம் இருக்கும் இடம் ஒன்றுமாயில்லாமல் எங்கும் உயிரும் பிரமமும் கலந்திருப்பதால் சொல்லும் பொருளும் என்ற உவமையைக் கொள்ளாது பண்ணும் ஓசையுமென்ற உவமையைக்கொண்டனர். பண்ணென்பது இசைவிகற்பம்; இசைவிட ஓசைவேறன்று. ஓசை இசையுமன்று. அதுபோல முதல்வனைவிட உயிர்வேறன்று. உயிர் முதல்வனுமன்று. இவ்வுவமைபோலவே பழமும் சுவையுமாம். இவ்விரண்டு உவமைகளும் இவ்வதிகரணத்து மூன்றாவது வெண்பாவில் விளக்கப்பட்டிருக்கின்றன. இவ்வாறு பேதமுதலிய மூன்றற்கும் பிறர்கூறிய உவமைகளை மறுத்து வேறு வேறுவமை கூறிய இக்கருத்துப்பற்றியே புடை நூலாசிரியர் சிவப்பிரகாசம் என்னும் நூலில்,

"புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப் புகலளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப், பிறப்பிலதா யிருள்வெளிபோற் பேதமுஞ்சொற் பொருள்போற் பேதாபே தமுமின்றிப் பெருநூல் சொன்ன, வறத்திறனல் விளைவதா யுடலுயிர்கண் ணருக்க னறிவொளிபோற் பிறிவரு மத் துவித மாகுஞ், சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றாம்."

என அவ்வுவமைகளை மறுத்து மூன்றற்கும் வேறு உவமை கூறினார். அந்நூலில் சித்தாந்தபட்சமாக அபேதத்திற்கு உடலையும் உயிரையும் பேதத்திற்குக் கண்ணையும் சூரியனையும், பேதாபேதத்திற்கு உயிரறிவையுங் கண்ணொளியையுங் கூறினார். அகரத்தையின்றி ஏனைய அக்கரங்கள் தொழிற்படாதவாறுபோலச் சூரியனையின்றிக் கண் தொழிற்படாமையினாலும், ஓசையும் பண்ணும் பிரிப்பின்றி நிற்றல்போல உயிரின் அறிவும் கண்ணொளியும் பிரிப்பின்றி நிற்றலானும், பேதத்திற்கும் பேதாபேதத்திற்கும் சிவப்பிரகாசத்திற் கூறிய உவமைகள் இந்நூலிற்கூறிய உவமைகளோடு முரணாதவாறு அறிக.

முதல் அதிகரணம் முற்றிற்று.



# இரண்டாம் அதிகரணம்.



உயிர்களுக்கு வினைப்பயனை இறைவன் கூட்டுவென் எனக்கூறும்
மேற்கோள்.

இனி இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வனாணையின் வரும் என்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், முதல்வன் அவ்வாறு உயிர்களோடியைந்து நின்று புனருற்பவஞ் செய்யுங்கால் உலகத்துக்குப்போல் அவனுக்குத் துணைக்காரணமுதலியன வேண்டப்படுமோ படாவோ என்னும் ஐயப்பாட்டின்கண் முதல்வனது சுதந்திரத்திற்கும் அளவிலாற்றற்கும் இழுக்காய் முடியுமாகலின், அவனுக்கு அவை வேண்டப்படா எனப் பரிணாமவாதிகள் கூறுங் கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ—ள்) வெ—டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

(இ - ள்.) இவ்வான்மாக்களுக்கு—முதல்வன் இவ்வாறு மூவகையுமாய் நிற்றற்குரிமையுடைய உயிர்களுக்கு,—இருவினை—முற்பிறவிகளின் ஈட்டப்பட்டு மாயையிற் கட்டுப்பட்டுக்கிடந்த புண்ணிய பாவங்கள்,—முதல்வன் ஆணையின்—இறைவனுடைய சிற்சத்தியால்,—வருமென்றது—வரும். எ—று.

ஈண்டு இருவினையென்றது முற்பிறவிகளினீட்டப்பட்டு மாயையிற் கட்டுப்பட்டுக்கிடந்த புண்ணியபாவங்களை யென்க' எனவே, மாயையினுண்மையும் பெறப்பட்டது. இவை வேண்டப்படுதல்பற்றி முதல்வன் சுதந்திரத்திற்கு இழுக்கில்லையென்பார் முதல்வனாணையின் வரும் என்றார்.

## விளக்கம்.

முதலதிகரணத்தால் உயிர்களோடு முதல்வன் ஒன்றாயும், வேறாயும், உடனாயும் நிற்பனெனக்கூறி, அவ்வாறு நின்று உயிர்களுக்கு வினைப்பயனாகத் தனுகரணபுவனபோகங்களைக் கூட்டுமுறையை இரண்டாம் அதிகரணத்தாற் கூறுகின்றார்.

இது சூத்திரத்திலுள்ள ஆணையின் இருவினையின் என்பதைப் பதச்சேதஞ்செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோவெனின், முதல்வன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் உயிர்களோடு பொருந்திநின்று புதுச்சிருட்டியைச் செய்யுங்கால் உயிர் ஒன்றைச்செய்வதாயின் செய்யப்படுகின்றபொருளுக்கு முதற்காரணமுந் துணைக்காரணமும் வேண்டப்படுவனபோல, முதல்வனுக்கும் முதற்காரணம்,துணைக்காரணங்கள் வேண்டப்படுமோ, படாவோ என்பது ஐயப்பாடு. இவ்வையப்பாட்டின்கண் முதற்காரணம் துணைக்காரணம் வேண்டப்படுமாயின் எல்லாம் வல்லவன் என்னும் சுதந்திரத்திற்கும் அளவிலாற்றற்கும் இழுக்காய் முடியுமாகலின், முதல்வனுக்குப் புதுச்சிருட்டி செய்யுங்கால் முதற்காரணம் துணைக்காரணம் வேண்டப்படாவென்பது பிறர்கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் பரிணாமவாதிகள். இவர் கூற்றை ஆசங்கித்துக்கொண்டு சூத்திரத்தின் இரண்டாங்கூற்றைப் பதச்சேதஞ்செய்து முதற்காரணம் துணைக்காரணம் வேண்டப்படுமெனக் கூறியவாறும்.

பரிணாமமாவது ஒன்று பிறிதொன்றாதல். அதாவது பால் தயிராதலாம். இவ்வாறே பிரமமே உலகமாயிற்று என்று கூறுபவர் பரிணாமவாதிகள்.

(இம்மேற்கோளின் பொருள்.) மேலை அதிகரணத்திற் கூறியவாறு முதல்வன் மூவகையுமாய் நிற்றற்கு உரிமையுடைய உயிர்களுக்கு முற்பிறவிகளிற் சம்பாதிக்கப்பட்டு மாயையிற் கட்டுப்பட்டுக்கிடந்த புண்ணியபாவங்களின் பலன்களாகிய சுகதுக்கங்கள் இறைவனுடைய சிற்சத்தியால் வரும் என்றவாறு.

நல்லசெயல்தீயசெயலாகிய இரண்டும் இருவினையெனப்படுமாயினும், இந்த மேற்கோளில் இருவினையென்றது அச்செயல்களையன்று; முற்பிறவிகள்தோறும் செய்யப்பட்ட அம்முயற்சிகள் செய்தபொழுதே அழிந்து, அழியினும் சூக்குமரூபமாக வெளிப்படத்தோன்றாமல் மாயையிற் கட்டுப்பட்டிருக்கும்; கட்டுப்பட்டிருக்குங்கால் புண்ணியபாவமென்று பெயர்பெறும்; இதுவே சஞ்சிதமாம்; இப்புண்ணியபாவங்களே இம்மேற்கோளில் இருவினையெனப்பட்டது. சூத்திரத்துள் இருவினை யென்றதற்கும் இவ்வாறே கொள்க.

மாயையிற் கட்டுப்பட்டிருக்கும் என்றதனுல் மாயை உண்டென்பதும் பெறப்பட்டது. வினையானது மாயையிற் கட்டுப்பட்டிருக்குமென்று கூருமல் செய்த உயிரினிடத்தாவது கூட்டும் இறைவனிடத்தாவது கட்டுப்பட்டிருக்குமெனவும், மாயையென்பது ஒன்றில்லை எனவும் கொண்டால் என்னையெனின், கட்டுப்பட்டிருக்குமிடம் கட்டுப்பட்டிருப்பதன் பலனைத் தோற்றுவிக்கும் உரிமையும் ஆற்றலும் உடையனவாயிருத்தல்வேண்டும். உயிரினிடத்துக் கட்டுப்பட்டிருக்குமெனின் தனுகரணபுவனபோகமெல்லாம் உயிரினிடத்திலிருந்து தோற்றுமென்று சொல்லவேண்டும். இவ்வாறு சொல்லுதல் இந்திரசாலம்போலச் சொல்மாத்திரையேயன்றி உண்மையன்று. உண்மையாயினும் தனுமுதலிய காரியமாகிய சடத்திற்கு முதற்காரணமாகிய உயிரும் சடமெனப்படல்வேண்டும். ஆதலால் வினை கட்டுப்பட்டிருத்தற்குரிய இடம் உயிரென்றல் பொருந்தாது. இக்கருத்துப்பற்றியே வழிநூலாசிரியர் சிவஞானசித்தியார் உ-ம் சூ-ம். உ0-வது செய்யுளில் "இருஞ்சுவர்க்கம், பொய்யர்வாழ் நரகம் பூமி புந்தியிற்கிடந்துபோந்த, தையனே யழகி துன்சொ லிந்திர சால மாய்த்தே" என்றருளினுர். இனி இறைவனிடத்து வினை கட்டுப்பட்டிருக்குமெனின், வினையின் காரியமாகிய சடத்தோற்றத்திற்கு இறைவன் முதற்காரணமெனப்பட்டுச் சடமாதல் வேண்டும்; ஆதலால் அதுவும் பொருந்தாது. அவ்வாருயின் வாதுளாகமத்தில் முதல்வனுடைய ஒவ்வொரு உறுப்புக்களில்நின்று உலகந் தோன்றுமெனவும், இக்கருத்தேபற்றி வழிநூலாசிரியர் சிவஞானசித்தியார் முதற்சூத்திரம் ௬அ-வது செய்யுளில் "உலகவ னுருவிற் றோன்றி யொடுங்கிடும்" எனவுங் கூறியவைகளோடு முரணுதோவெனின், முரணுது; எதனுலெனின், மாயையினின்றுந் தோன்றிய உலகை மாயைக் காதாரமாகிய இறைவனினின்றுந் தோன்றியதாகக் கூறியதனுலென்க. இன்னும் இதன் விரிவை மேல் ௫௫-ம் பக்கத்திற் காண்க. இவ்வாறு வினை கட்டுப்பட்டிருத்தற்கு ஆதாரம் உயிரும் இறைவனும் இல்லையெனல் பெறப்படவே, மாயையே வினை கட்டுப்பட்டிருத்தற்கு ஆதாரமென்பது பெறப்படும். உதாரணமாக, வித்தானது விதைத்தவனிடத்துக் கட்டுப்பட்டுப் பலன்றருவதில்லை; தண்ணீரினிடத்துங் கட்டுப்பட்டுப் பலன்றருவதில்லை; மண்ணினிடத்திற் கட்டுப்பட்டுக்கிடந்து தண்ணீர் கூடினவிடத்துப் பலன்றரும். மண் மாயைக்கும், வித்து வினைக்கும், தண்ணீர் சிற்சத்திக்கும் உவமைகளாம். பலன்றரும்வரை அழியாமற் காத்தற்பொருட்டு விதைத்தவனும் பற்றுக்கோடாவன். இவ்வாறே செய்தவினையும் செய்தவன் புத்தி தத்துவமும் மாயையும் பற்றுக்கோடாயிருக்கும். விதைத்தவன் பற்றுக்கோடாயிருத்தல் அநுபவித்தற்பொருட்டேயன்றித் தோற்றுவித்தற்பொருட்டல்லாததுபோலச் செய்தவன் பற்றுக்கோடாயிருத்தல் அநுபவித்தற்பொருட்டேயன்றிப் பலனைத்தோற்றுவித்தற்பொருட் டன்று. வித்துப்பலனுக்கு வரும்வரை வித்தையிட்டவன் வேண்டுவன செய்தல்போல வினைசெய்த

வன் மேலுமேலும் அவ்வினையைச் செய்வன்; அவ்வாறு செய்தலேத்தான் பக்குவமாதலென்று கூறப்படும். ஒருவினை மேலுமேலுஞ் செய்யப்பட்டு இனிமேற் செய்யவேண்டியதில்லையென்றபொழுது அனுபவத்திற்கு வரும்; இது ஒரு வீடுகட்ட ஆரம்பித்துக் கட்டிமுடிந்தவுடன் அனுபவிப்பதுபோலக் கொள்க. வினை அவ்வாறு பிறவிதோறும் மேலுமேலுஞ் செய்யுங்காலத்து முன்செய்தோமென்ற தொடர்ச்சியறிவு நிகழாவிடினும் வாசனைமாத்திரையான தொடர்ச்சிநிகழ்தல்கூடும். இவ்வாறு மாயை உண்டென்று பெறப்பட்டவாறு அறிக.

இவ்வாறு உலகத்தைத் தோற்றுவிப்பதற்கு முதற்காரணமாகிய மாயையும் துணைக்காரணமாகிய வினையும் வேண்டப்படுதல்பற்றி இவ்விரண்டுமின்றி முதல்வனுக்கு உலகத்தைத் தோற்றுவிக்கும் ஆற்றலில்லை யெனப்பட்டு முதல்வன் சுதந்திரத்திற்குக் குறைவுண்டாகாதோ என்னும் ஐயத்தை நீக்குதற்பொருட்டு முதல்வன் ஆணையின்வரும் என்று மேற்கோளிற் கூறினர். முதல்வன் ஆணையின்றி வினைப்பயன்தானே வருமாயின் சுதந்திரத்திற்குக் குறைவுண்டாகும்; எவற்றையுந் தன் ஆணையாற் செய்வித்தல் சுதந்திரத்திற்கு மேம்பாடாவதன்றிக் குறையாகாது.

உயிர்களுக்கு வினைப்பயன் இறைவனாணையால்வரும்
என்பதற்குக் காட்டும்

ஏ து.

ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவலிட்டாங்கு அவை அவனதாக்கினையாகலான்.

சிற்றுரை.

எ—து ஏ-து எ—னின், ஆணையே யமையும், இருவினை யெற்றுக்கு என்னுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) ஒரு பட்டணத்தைப்புரக்கும் வேந்தன் பாடிகாவற்றொழிலைக் (களைகணுவா னொருவன்மாட்டு) வைத்தாற்போல (எல்லாவறிவுமுதன்மை யநுக்கிரகங்களுடைய அம்முதல்வன் புனருற்பவத்தைச் செய்வதாகிய) தனதாணையை அவ்விருவினைகண் மாட்டு வைத்து நடாத்துதலே முறையாகலான், இனி யிவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வனாணையின்வரும் என மேற்கொண்டது எ—று.

முதல்வன் செய்யுஞ் செய்தியெல்லாம் உலகத்தோடொப்ப நிகழ்வனவாகலின் ஈண்டைக்கு அரசன் செய்தி உவமையாயிற்று.

பாடிகாவலாவது களைகணுவா னொருவனைக்கொண்டு வேந்தன் செய்விப்பதொரு தண்டத்தொழில் விசேடம். அது "கோடிகாவனைக் கூறுதநாளெலாம்—பாடிகாவலிற் பட்டுக்கழியுமே" என்னுந் திருப்பாட்டானு மறிக. இஃதறியாதார் தத்தமக்கு வேண்டியவாறெல்லா முரைப்ப.

## விளக்கம்.

இந்த ஏது என்னசொல்லிற்றோ வெனின், இருவினை முதல்வன் ஆணையால் வருமென்று மேற்கோளிற்கூறப்பட்டதை மறுத்துப் புதுச் சிருட்டியைச் செய்வதற்கு ஆணையாகிய சத்தியேபோதும், இருவினை வேண்டுவது எதற்காக என்பார் வினாவை ஆசங்கித்துக்கொண்டு இருவினை வேண்டுமெனக் கூறி மேற்கோளைச் சாதித்தவாறும்.

(இந்த ஏதுவின்பொருள்.) ஒருபட்டணத்தைக்காக்கும் அரசன் பாசறையிற் காவல்வைக்குந் தண்டத்தொழிலை, உரியவனாகிய ஒரு அதிகாரி மாட்டுவைத்துச் செய்வதுபோல, முதல்வன் புதுச்சிருட்டியைச் செய்யுந் தனது சத்தியை இருவினையின் இடமாகவைத்து நடாத்துவனாதலால் இனி இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வன் ஆணையின் வரும் என மேற்கோள் கூறியது எ-று.

முதல்வன் செய்யுஞ் செய்தியெல்லாம் உலகத்தோடொப்ப நிகழ்வனவாம். எவ்வாறெனின், அரசன்போல முதல்வன். மந்திரிமுதலியோர் போலச் சிருட்டிமுதலிய தொழிலைச்செய்யும் அதிகாரத் தெய்வங்கள். குடிகள்போல ஏனைய உயிர்கள். சட்டம்போல வேதாகமங்கள். குற்றவாளிகளிருக்கும் காராக்கிருகம் (மறியற்கூடம்) போல நரகலோகம். மந்திரிமுதலியோர் பதவிபோலத் தேவலோகம். குடிகள் பதவிபோல மண்ணுலகம். இவ்வாறே பிறவுங்காண்க. ஆதலால் இவ்விடத்து அரசன்செய்தி உவமையாயிற்று.

பாடிகாவல் என்பது ஒருதண்டத்தொழில் விசேடம். அதாவது, பாசறையிற் காவல்வைத்தலாம். இதனைக் "கோடிகாவனைக் கூறுதநாளெலாம் பாடிகாவலிற் பட்டுக்கழியுமே" என்னுந் திருநாவுக்கரசுசுவாமிகள் திருப்பாட்டானும் அறிக. இத்திருப்பாட்டில் பாடிகாவலென்றது பாசறை போன்ற உடம்பிற் கட்டுப்பட்டிருத்தலைக் குறித்தபடியாம். பாடிகாவலென்பது அரசன் செய்விப்பதொரு தண்டத்தொழில் விசேடமென்றறியாதார் தத்தமக்கு வேண்டியவாறெல்லாம் உரைப்பர்.

இந்த ஏது முதற்காரணந் துணைக்காரணங்கள் வேண்டாமென்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத்துணிபாயிற்று.

வினை உண்டென்பதற்குக் காட்டும்

உதாரணம்.

உள்ளதே தோற்ற வுயிரணையு மவ்வுடலி
னுள்ளதா முற்செய்வினை யுள்ளடைவே—வள்ளலவன்
செய்பவர் செய்திப் பயன்விளைக்குஞ் செய்யேபோற்
செய்வன் செயலணையா சென்று.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின். வினை உண்டென்பதற்கும் அதுவே உயிர்க்குப் பயனாய் வருமென்றதற்கும் மேல் வினையேறுமாற்றிற் கும் அது முதல்வனையின்றி யமையாமைக்கும் பிரமாணமென்னை யென்னுங்கடாவை யாசங்கித்து ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ—ள்.) உள்ளதே தோற்ற - (இல்லது தோன்றாதென்பது மேற்கூறிப் போந்தமையான்) முன் உள்ளதாய புண்ணியபாவ மென்னும் இருகூற்றுச் சஞ்சிதவினையே (தன்பயனாகிய இன்பத் துன்பங்களையும் அவை நுகர்தற்குரிய நிலைக்களமாகிய உடம்பி னையுந்) தோற்றுவிப்ப,—உயிர் அவ்வுடலின் அணையும் – (அவ்வின் பத்துன்ப நுகர்ச்சி சடத்துக்குக் கூடாமையிற்) சித்தாகிய உயி ரே அவ்வுடம்பிற் பொருந்தி அவற்றையநுபவிக்கும். (முன்வினை யை ஈண்டநுபவித்தொழிந்தால் மேலைக்கு வினையுண்டாமாறி யாங்ஙனமெனின்),—முன்செய்வினை உள் அடைவே உள்ளதாம்— முன்செய்தவினை அநுபவித்தற்கேதுவான முறைமையிலே மே லைக்கு வினையுளதாம். (அற்றேல், அவ்வினையே பயனாகவருமென வமையும், முதல்வன் எற்றுக்கெனின்),— செய்பவர் செய்திப் பயன்விளைக்குஞ் செய்யேபோல்—உழவர் செய்யுந் தொழிற்குத் தக்கபயனை விளைநிலம் விளைவிப்பதன்றி அத்தொழிற்றானே விளை விக்கமாட்டாததுபோல,—வள்ளலவன் செய்வன்—(உணவும் வித் துமாய்த் தொன்றுதொட்டுவரும்அவ்வினைகளை) வள்ளலாகியமுதல் வனே அவ்வுயிர்கட்குக்கூட்டுவன்,—செயல் சென்று அணையா— (அவ்வாறன்றி) வினை (தானே உயிர்கட்குப் பயனாய்) வந்துபொரு ந்தமாட்டாது எ—று.

வள்ளலென்றார், தற்பயன்குறியாது "வேண்டுவார் வேண்

அருளுடைமைநோக்கி.

உள்ளடைவு உள்ளுதற்கேதுவாகிய அடைவென விரியும். ஏகாரம் ஏழாவதன் பொருட்கண் வந்தது. உள்ளுதல் ஈண்டநுபவித்தல். அதற்கேதுவாகிய முறைமையாவன அநுபவித்தற்குத் துணைக்காரணமாகிய விருப்பு வெறுப்புக்கள். அவற்றின்கணுண்டாமாறு முன்னர்க்காட்டுதும்.

மேல் முதல்வனுக்கு வினைவேண்டப்படுமென்பதற்கு அரசனை யுவமைகூறினார்; ஈண்டு வினை முதல்வனையின்றி யமையாதென்பது உணர்த்துதற்கு உழவு தொழிலை யுவமை கூறினாரெனக் கொள்க.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) உள்ளதே தோற்ற உயிர் அவ்வுடலின் அணையும் முன்செய்வினை உள் அடைவே உள்ளதாம் செய்பவர் செய்திப் பயன்விளைக்கும் செய்யே போல் வள்ளலவன் செய்வன் செயல் சென்று அணையா.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோவெனின், இருவினை உண்டென்பதற்கும், அவ்வினையே உயிருக்குப்பயனாய் வருமென்றற்கும், மேல் வினை உண்டாகு முறைமைக்கும், அந்த இருவினை முதல்வனையின்றித் தானே பயன்றராமைக்கும் பிரமாணம் யாதோவென்னும் வினாவை ஆசங்கித்துக்கொண்டு இருவினை உண்டென்றும் அவ்வினை முதல்வனாணையால் வருமென்றும் கூறி இருவினை முதல்வன் ஆணையின் வருமென்ற ஏதுவை வலியுறுத்தியவாறும்.

(பொ - ரை.) இல்லது தோன்றாதென முதற்சூத்திரம் இரண்டாம் அதிகரணத்து மேற்கோளிற் சாதித்திருக்கின்றமையால், முன்னுள்ளதாகிய புண்ணியபாவமென்னுஞ் சஞ்சிதவினையே அதன் பயனாகிய இன்பத்துன்பங்களையும் அவ்வின்பத்துன்பங்களை அநுபவித்தற்குரிய உயிர் தங்கும் உடம்பினையுந் தோற்றுவிக்கும். அவ்வாறு தோற்றுவிக்குங்கால் அவ்வின்பத்துன்பங்களைச் சடமாகிய உடம்பு அநுபவித்தல் கூடாமையால் சித்தாகிய உயிரே அவ்வுடம்பைப்பொருந்தி அநுபவிக்கும். இவ்வாறு முன் வினைப்பயனை இப்பொழுது அநுபவித்தொழிந்தால் மேல்வினையுண்டாவது எவ்வாறெனின், முன்செய்த வினையின்பயனை அநுபவித்தற்கேதுவான முறைமையில் விருப்பு வெறுப்புக்கள் உளவாமாதலால் அவ்விருப்பு வெறுப்புக்களால் மேலைக்குவினையுளதாம். அவ்வாறாயின் அவ்வினையே பயனாக வருமென்றல் போதும் முதல்வன் வேண்டுமென்றல் எதற்காகவெனின், உழவர்செய்யுந் தொழிற்குத்தக்க பயனை விளைநிலம் விளைவிப்பதன்றி அத்தொழில் தானே விளைவிக்கமாட்டாது. அதுபோல, முன்வினையின் அநுபவமும் பின்வினைக்குவித்துமாகித் தொன்றுதொட்டுவரும் அவ்வினைப்பயன்

களை வள்ளலாகிய முதல்வனே அவ்வுயிர்கட்குக் கூட்டுவன். அவ்வாறன்றி வினை தானே உயிர்கட்குப் பயனாய்வந்து பொருந்தமாட்டாது. எ - று.

(க - ரை.) உழவர் செய்யுந் தொழிற்கு விளைநிலம் பயன்கொடுப்பது போல உயிர்கட்கு வினைப்பயனை இறைவன் தருவன் என்பதாம்.

இறைவன் தன்பயன் குறியாது "வேண்டுவார் வேண்டியதே யீவான் கண்டாய்" என்னுந் திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்பாட்டின்படி அவரவர் வேண்டியவாறே கொடுக்கும் அருளுடைமைநோக்கிச் செய்யுளில் அவனை வள்ளல் என்றார். வேண்டுவார் வேண்டுவனவெல்லாந் தடையின்றிக்கொடுப்பது வள்ளலின் தன்மை.

உள்ளடைவு என்பது உள்ளுதற் கேதுவாகிய அடைவு என விரியும். உள்ளடைவே என்பதிலுள்ள ஏகாரம் அடைவின்கண் என்னும் ஏழாம் வேற்றுமைப் பொருளில்வந்தது. அப்பொருள்பற்றி முறைமையிலே என உரை செய்யப்பட்டது. உள்ளுதல் என்பது கருதுதலைக்குறிக்குமேனும் இவ்விடத்து அநுபவித்தலைக் குறித்து நின்றது. அநுபவித்தற்கேதுவாகிய முறைமையாவன எவையோவெனின், அதற்குத் துணைக்காரணமாகிய விருப்பு வெறுப்புக்களாம். முன்வினைப்பயனை அநுபவித்தற்குத் துணைக்காரணமாகிய விருப்பு வெறுப்புக்களின்கண் மேல்வினை உண்டாகுமென்பது முன்னர்க்காட்டப்படும். அதாவது பன்னிரண்டாஞ் சூத்திரத்து முதல் அதிகரணத்துப் புண்ணியபாவம் பொருந்தும் என்ற வெண்பா உரையின் கீழ், "விருப்பு வெறுப்புக்களால் ஏகதேசக்காட்சியும், அதனால் விபரீதவுணர்வும் மேம்பட்டுப் பிறவிக்கு வித்தாம்" எனக்கூறியதேயாம். விபரீதவுணர்வு பிறவிக்குவித்தாம் என்னும் இக்கருத்தே பற்றிச் சிவஞான சித்தியார் உ-வது சூ-ம். கஉ-வது "மேலைக்கு வித்துமாகி" என்ற செய்யுளில் நான்செய்தேன் என்னுங் கருத்துவகையால் மேல் ஆகாமியம் உண்டாமென வழிநூலாசிரியர் அருளிச்செய்தனர்.

மேல் ஏதுவில் முதல்வனுக்கு அரசனையும் வினைக்கு அதிகாரியையும் உவமையாகக் கூறினார். இவ்வுதாரணத்தில் முதல்வனுக்கு விளைநிலத்தையும், வினைக்கு உழவு தொழிலையும் உவமையாகக்கூறினார். இவ்வாறு வேறுவேறு உவமை கூறியதன்கருத்தென்னையெனின், முதல்வன் பலவேறு வகைப்படச் சிருட்டிமுதலிய தொழிலைச் செய்வதற்கு வினைவேண்டப்படுமென்பதற்காக அரசனுக்கு மந்திரிமுதலியோர் வேண்டப்படுவதை உவமையாகவும், வினை பலனைத் தருவதற்கு முதல்வன் வேண்டப்படுமென்பதற்காக உழவுதொழிற்கு விளைநிலம் வேண்டப்படுவதை உவமையாகவும் கூறியவாறும்.

வினைப்பயனை உயிர் அறிந்தெடுத்துக் கொள்ளாதென்பதற்குக்காட்டும் உதாரணம்.

அவ்வினையைச் செய்வதனி லவ்வினைஞர் தாஞ்சென்றங்
கவ்வினையைக் காந்த பசாசம்போ—லவ்வினையைப்
பேராம லூட்டும் பிரானி னுகராரே
லார்தா மறிந்தணைப்பா ராங்கு.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், இருவினைசடமாகலிற் சென்றணைய மாட்டாவாயினும் உயிர்கள் சேதனமாகலின் அவையே அவற்றது பயனையறிந்து எடுத்துக்கொண்டு நுகரும் வள்ளல் எற்றுக்கு என்னுங் கடாவையாசங்கித்து அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ—ள்.) காந்த பசாசம்போல்—(ஒருவனெடுத்து நேரொக்கப் பிடித்தவழி) இரும்பினை (வலித்துக்கொள்ளுங்) காந்தம்போல,—அவ்வினையைப் போராமல் ஊட்டும் பிரானின்—அவ்வினைப்பயன்களைப் பிறழாமல் நுகர்விக்கும் முதல்வனால்,—அவ்வினைஞர்தாம்—அவ்வினைகளைச் செய்யும் ஆன்மாக்கடாம்,—அவ்வினையைச் செய்வதனில் சென்று அங்கு அவ்வினையை நுகராரேல் ஆர் தாம் அறிந்து அணைப்பார்—அவற்றைச் செய்தற்குரிய நிலைக்களமாகிய உடம்பின்கட் பொருந்தி (அவற்றதுபயனை அநுபவிப்பர்) அவ்வாறநுபவியாராயின் வேறே எவர்தாம் அவற்றையறிந்து கூட்டுவார்,—ஆங்கு—(அறிவுஞ் சுதந்திரமுமின்றி மலத்தின் மறைப்புண்டு கிடக்கும்) அப்பெத்தக்காலத்து எ-று.

ஒருவருமில்லை யென்பதாம்.

ஆன்மாக்களுக்குத் தமக்கென அறிவின்மையானும், வினை சடமாகலானும், மாயை தாரகமாமத்தன்றுணிற்றல் எனப் போந்தமையானும், முதல்வனே அறிந்தணைப்பனெனப் பாரிசேடவளவை கூறுவார், பிரானினுகராரே லார்தா மறிந்தணைப்பாரென்றார்.

இது சொற்பொருட் பின்வருநிலை.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) காந்த பசாசம்போல் அவ்வினையைப் பேராமல் ஊட்டும் பிரானின் அவ்வினைஞர் தாம் அவ்வினையைச் செய்வதனில் சென்று அங்கு அவ்வினையை நுகராரேல் ஆர்தாம் அறிந்து அணைப்பார் ஆங்கு.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோவெனின், இருவினை அறிவில்லாத சடமாதலால் அவ்வினையானது செய்த உயிரைச் சென்று பொருந்தமாட்டாதாயினும் உயிர்கள் அறிவுடைப் பொருளாதலால் அவ்வுயிர்களே தாம் செய்த வினைகளின் பயனை அறிந்து எடுத்துக்கொண்டு அநுபவிக்குமாதலின் வினைப்பயனைக் கூட்டுவதற்கு வள்ளல்வேண்டும் என்பது எதற்காக என்னும் வினாவை ஆசங்கித்துக்கொண்டு வள்ளல்வேண்டுமெனக் கூறி மேலை வெண்பாவிற் கூறியதை வலியுறுத்தியவாறும்.

(பொ - ரை.) இரும்பை இழுத்துக்கொள்ளுஞ் சத்தி காந்தத்தினிடத்தில் இருப்பினும் இரும்பு நேராக இல்லையாயின் இரும்பிருக்கும் இடஞ் சென்று காந்தம் இழுப்பதில்லை. ஒருவன் காந்தத்தின் நேராக இரும்பைக் கூட்டினவிடத்து இழுத்துக்கொள்ளும். அதுபோல, வினைப்பயனை அனுபவிக்குஞ்சத்தி ஆன்மாவிடத்திலிருப்பினும் வினையை எடுத்துக்கொள்ளும் பேறறிவு ஆன்மாவிற்குக்கிடையாது. இறைவன் அவரவர்செய்த வினையை அவரவருக்குப் பிறழாமற்கூட்டும்பொழுது அவ்வினைப்பயன்களை அநுபவித்தற்குரிய உடம்பினை உயிர்கள் பொருந்தி அனுபவிக்கும். இறைவன் கூட்டவில்லையாயின் சிற்றறிவுடைய உயிருக்கு வினைப்பயனை வேறு யாவர் கூட்டுவர். எ—று.

(க - ரை.) இரும்பைக்காந்தத்தின் நேராக ஒருவன் கூட்டினால் அக்காந்தம் இழுக்குமாறுபோல வினைப்பயனை உயிர்கட்கு இறைவன் கூட்டினால் அவ்வுயிர் அனுபவிக்கும் என்பதாம்.

ஆர்தாம் அறிந்து அணைப்பார் என்றதனால் முற்றறிவுடைய இறைவனையின்றிச் சிற்றறிவுடைய உயிருக்கு வினைப்பயனைக் கூட்டுவார் ஒருவருமில்லை யென்றபடியாம்.

ஆன்மாக்களுக்கு இறைவன் அறிவித்தாலன்றித் தாமே அறியுஞ் சுதந்திர அறிவில்லையாதலால் வினைப்பயனைத்தாமே யறிந்து எடுத்துக்கொள்ளமாட்டா; வினை சடமாதலால் செய்த உயிரைத் தானே வந்துகூடமாட்டாது. வினைப்பயனைத் தோற்றுவிக்கும் மாயை தனக்கு ஆதாரமாகிய இறைவனது சத்தியில் நிற்குமென்பது "தாரகமாம், அத்தன்று ணிற்றல்" என்பதனாற் பெறப்பட்டது. (க - ம் சூ - ம் உ - அதி. வெ - உ.) இவ்வாறு பதி பசு பாசம் என்ற மூன்றனுள் பசுவாகிய உயிருக்கும் பாசமாகிய மாயை வினைக

னுக்கும் வினைப்பயனைக்கூட்டும் உரிமையில்லை என்றல் பெறப்படவே எஞ்சிய இறைவனுக்கே அவ்வுரிமை உண்டெனப் பாரிசேட அளவையாற் கூறவெண்ணி, 'பிரானி னுகராரேல், யார்தா மறிந்தணைப்பார்' எனக் கூறினர்.

பாரிசேட அளவையாவது, மூவரில் இருவர் திருடவில்லையெனின், மற்றவன் திருடினனெனக்கொள்ளுதல். இவ்விடத்தில் பதி பசு பாசம் என்ற மூன்றனுள், பசு பாசங்களுக்கு வினைப்பயனைக் கூட்டமுடியாதென விலக்கவே, பதிக்குக் கூட்டமுடியுமென்றல் பாரிசேடமாயிற்று. அவ் வினையை என முன்னர்வந்தசொல்லும் பொருளுமே பின்னரும் வருதலால் இது சொற்பொருட் பின்வருநிலை என்னும் அலங்காரமாம்.

(வினைப்பயனை இறைவன் கூட்டுவனென்பதற்குக் காட்டும்)
உதாரணம்.

நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வா
ளலர்சோகஞ் செய்கமலத் தாம்.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், அவ்வினை ஆதியோ? அநாதியோ? ஆதியெனின் முன்பில்லது இடையே தோன்றுமென்பது சற்காரியவாதத்துக் கேலாது, அநாதியெனின் ஒருவர் கூட்டவேண்டுவதில்லையென்னுங் கடாவை யாசங்கித்து அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்.) நெல்லிற்கு உமியும் நிகழ் செம்பினில் களிம்பும் சொல்லின் புதிது அன்று தொன்மையே—நெல்லின்க ணுமியும் செம்பின்கட் களிம்பும் எக்காலத்துளவாயினவென்று ஆராய்ந்து சொல்லுங்கால் அந்நெல்லுஞ் செம்பும் உளவாயினவன்றே உள்ளனவன்றி இடையே வந்தனவல்ல; அதுபோல,—வல்லி மல கன்மம் அன்று உளவாம்—மாயை மலம் கன்மமென்னு மும்மலங்களும் அநாதியே யுள்ளனவாம்,—கமலத்து அலர் சோகம் பொன்வாள் செய் வள்ளலால் ஆம்—(முன்னே யுள்ளதாய) தாமரைப்பூ அலர்தலும் கூம்புதலும் ஞாயிற்றினாற் செய்யப்படுமாறுபோல (அவை தத்தங்காரியங்களைச் செய்தல்) முதல்வனாலே யாம்.

இஃதெடுத்துக் காட்டுவமை.

புதிதன்றென்பதனைத் தனித்தனி கூட்டுக.

தொன்மையினுள்ளவற்றைத் தொன்மை என்றுபசரித்தார்.

ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

மாயை இறைவனுக்குப் பரிக்கிரகசத்தி யாகலின் வல்லி யென்றார்.

வினைக்குத்தொன்மை கூறுவார் இனம்பற்றி மாயைமலங்களுக்குந் தொன்மை கூறினார்.

மூலமலத்தின் காரியம் மோகம் மத முதலாயின. இருவினையின் காரியம் இன்பத்துன்ப முதலாயின. மாயையின்காரியம் தநுகரணமுதலாயின. வள்ளலாலாமெனவே திரோதானசத்தியது உண்மையும் பெற்றாம். அது பாகம் வருவித்தற்பொருட்டு மலத்தின் வழிநின்று மோகமுதலியவற்றைத் தொழிற்படுத்துவதாகிய சிவசங்கற்பத்திற் கேதுவாதல்பற்றி மலமென்றுபசரித்துக் கூறப்படும். இவ்வாறு மலகன்மம் மாயை திரோதானம் மாயாகாரியமென்னும் ஐவகைப்பாசமுங்கண்டு கொள்க.

இவற்றுண் மாயை சுத்தமாயை அசுத்தமாயையென்றிருவகைப்படும். இவ்விரண்டனுட் சுத்தமாயையின்காரியமே அசுத்தமாயை யென்பாரும், சுத்தமாயைபோல அசுத்தமாயையும் அநாதியேயாமென்பாரும், ஒன்றுதானே ஊர்த்துவமாயை அதோமாயையென்றிருவகைப்படுமென்பாரும் எனப் பலதிறத்தர் ஆசிரியர். இனி முதல்வனது கிரியாசத்தியே சுத்தமாயை யெனப்படுமென்பாருமுளர். அது முதல்வனுக்குத் தாதான்மியசத்தியாகலிற் பரிக்கிரகசத்தியாகிய சுத்தமாயையாதல் யாண்டையதென்றொழிக. சுத்தமாயையினின்றும் பஞ்சகலைகளும் நால்வகை வாக்குஞ் சிவதத்துவமைந்துஞ் சுத்தகாலமுதற் சுத்தநிலமீறாகிய முப்பத்தொன்றுந் தோன்றும். அசுத்தமாயையினின்றும் அசுத்தகால முதல் அசுத்தநிலமீறாகிய முப்பத்தொரு தத்துவங்களுந் தோன்றும். இந்தத் தத்துவங்களெல்லாம் பொதுவுஞ் சிறப்பும் பொதுச்சிறப்புமெனத் தனித்தனி மூவகைப்பட்டு உயிர்கடோறும் வெவ்வேறுளவாம்.

கன்மமும் "நாசோற்பத்தி பண்ணிவருமாதலா லநாதி" என்பதுபற்றிப் பிரபஞ்சம்போலப் பிரவாகாநாதி யென்பாரும், "ஏக

ணநேக னிருள்கரும மாயையிரண்—டாகவிவை யாறுதியில்" எ—ம், "ஆணவ முதலன் றதுபோற் கருமமும்." எ—ம், ஒப்பவோதுதல் பற்றி மூவகை வினைக்கும் முதற்காரணமாய மூலகன்மமொன்று அநாதிநித்தமா யுண்டென்பாருமென்று இருதிறத்தாராசிரியரென்க. இவ்வினை யீட்டப்படுங்கால், மந்திரமுதலிய அத்துவாக்களிடமாக மனம் வாக்குக் காயமென்னும் மூன்றானீட்டப்பட்டு, தூலகன்மமாய் ஆகாமியமெனப் பெயர்பெற்று, பின்னர்ப் பக்குவமாங்காறுஞ் சூக்குமகன்மமாய்ப் புத்திதத்துவம் பற்றுக்கோடாக மாயையிற் கிடந்து, சாதி ஆயுள் போகமென்னும் மூன்றற்கு மேதுவாய் முறையே சனகந் தாரகம் போக்கியம் என்னு மூவகைத்தாய், அபூருவம் சஞ்சிதம் புண்ணியபாவ மென்னும் பரியாயப் பெயர்பெற்று, பின்னர்ப் பயன்படுங்கால்' ஆதிதைவிகம் ஆத்தியான்மிகம் ஆதிபௌதிகம் என்னு முத்திறத்தாற் பலதிறப்பட்டு, பிராரத்தமெனப் பெயர்பெறும். ஆதிபௌதிகமாவது சடவாயிலாக வருவது. ஆத்தியான்மிகமாவது சடத்தோடுகூடிய சேதனம் வாயிலாகவருவது. ஆதிதைவிகமாவது ஒருவாயிலானன்றித் தெய்வந்தானே காரணமாகவருவது. இன்னும் இவ்வினைகள் உலகம் வைதிகம் அத்தியான்மிகம் அதிமார்க்கம் மாந்திரம் என்று ஐவகைப்பட்டு ஒன்றற்கொன்று ஏற்றமுடைத்தாய், முறையே நிவிர்த்திமுதலிய பஞ்சகலைகளினடங்கி, அசுத்தம் மிச்சிரம் சுத்தமெனப்படும் போகங்களைப்பயப்பிக்குமென்றறிக.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு) நெல்லிற்கு உமியும் நிகழ் செம்பினில் களிம்பும் சொல்லின் புதிது அன்று தொன்மையே வல்லி மலகன்மம் அன்று உளவாம் கமலத்து அலர் சோகம் பொன்வாள் செய் வள்ளலால் ஆம்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், மேற்கூறிய இருவினையானது ஆதியோ? அநாதியோ? அவ்விரண்டினுள் ஆதியென்று கூறின் முன்பு இல்லாதது பின்னர்த்தோன்று மெனப்பட்டு உள்ளது தோன்றும் என்னும் சற்காரியவாதத்திற்குப் பொருந்தாது; அநாதி யென்று கூறின் அநாதியாயுள்ள அதனை ஒருவர் கூட்டவேண்டுவதில்லை என்னும் வினாவை ஆசங்கித்துக்கொண்டு, வினை அநாதியெனவும், ஆயினும் இறைவனே கூட்டவேண்டுமெனவுங் கூறி இறைவன் வேண்டுமென்று மேலை வெண்பாவிற் கூறியதை வலியுறுத்தியவாறும்.

(பொ - ரை.) நெல்லினிடத்து உமியும் செம்பினிடத்துக் களிம்பும்எக்காலத்து உளவாயின என்று ஆராயுங்கால் அந்த நெல்லுஞ் செம்பும் உள்ள அன்றே உள்ளனவன்றி இடையே வந்தனவல்ல. அதுபோல மாயை ஆணவம் கன்மம் என்னும் மும்மலங்களும் ஆன்மாவுள்ள அன்றே உள்ளன

வன்றி இடையே வந்தனவல்ல; ஆயினும் அம்மும்மலங்களும் தத்தங்காரியங்களைத் தாமேசெய்யா. இறைவனாலேயே செய்யும். அவ்வாறு செய்தல் எதுபோலவெனின், முன்னே உள்ளதாய தாமரைப்பூவானது சூரியனால் முன்விரியாததுவிரிதலும், முன்விரிந்ததுவாடுதலும் போலவாம். (எ-று.)

(க - ரை.) மும்மலங்களும் அநாதியேயுள்ளன; அவை முதல்வனால் தத்தங்காரியங்களைச் செய்யும் என்பதாம்.

இச்செய்யுளிற்கூறிய நெல்லுமியுஞ் செம்பிற்களிம்பும் எடுத்துக்காட்டுவமை எனப்படும். எடுத்துக்காட்டுவமையாவது உவமேயப் பொருளுக்குக் கூறுந்தருமத்தை உவமையினும் எடுத்துக்காட்டுதலாம். இவ்விடத்தில் அநாதித்தன்மை உவமானம் உவமேயம் இரண்டிடத்துங் காட்டப்பட்டது.

புதிதன்று என்பதை நெல்லினிடத்து உமி புதிதன்று, செம்பினிடத்துக் களிம்பு புதிதன்று, எனத் தனித்தனி கூட்டுக. இவ்வாறு கூட்டவில்லையாயின் உமியும் களிம்புமாகிய பன்மை அன்று என்னும் ஒருமை வினைகொண்டு முடியாது.

தொன்மையின் உள்ளன என்று கூறவேண்டிய உமியையுங் களிம்பையும் தொன்மை யென்று உபசரித்துக் கூறினார்.

தொன்மையே என்றதிலுள்ள ஏகாரம் இடையேவந்தன வல்லவென இடையைப் பிரித்தமையின் பிரிநிலைக்கண் வந்தது.

மாயை இறைவனுக்குப் பரிக்கிரக சத்தியாதலின் அம்மாயையை வல்லி யென்று பெண்பாலாகக்கூறினார். பரிக்கிரக சத்தியென்பது வைப்புச் சத்தியாம். அதாவது வேண்டும்போது உபகாரப்படுவதாய்த் தன்னுள் அடங்கியிருக்குஞ் சத்தியாம். மாயையோ சடசத்தி; சித்துப்பொருளாகிய இறைவனிடத்துச் சடசத்தியிருத்தல் எவ்வாறு பொருந்து மெனின், சித்துப் பொருளாகிய உயிரினிடத்துச் சடசத்தியாகிய மந்திரசத்தி அடங்கியிருத்தல்போல இறைவனிடத்து மாயை அடங்கி யிருத்தல் கூடுமென்க.

வினையைப் பற்றிய சங்கைக்குச் சமாதானங் கூறு முறையில் பாசமென்னும் இனம்பற்றி மாயை ஆணவங்களுக்குந் தொன்மை கூறினார்.

ஆணவமலத்தின் காரியம், மோகம் மதம் இராகம் கவலை தாபம் வாட்டம் விசித்திரம் என எழுவகைப்படும். அவற்றுள்,

மோகம் :—குருவினாலும் நூலினாலுந் தீயன வென்றறிந்தவற்றில் நீங்காமல் நிற்கும் மயக்கம்.

மதம் :—தன்னைப்போல ஒருவரு மில்லை யெனமதித்தல்.

இராகம் :—கிடையாத பொருளினிடத்து ஆசைப்படுதல்.

கவலை :—கிட்டியபொருள் பிரிந்தபொழுது வருந்துதல்.

தாபம் :—சுற்றத்தைவிட்டுப் பிரிந்ததற்கும் பிரிவதற்கும் ஆற்ருமை.

வாட்டம் :—அவ்வாற்ருமையால் மலர்ச்சியின்றி வாடுதல்.

விசித்திரம்,—எச்செயலும் வினையின்வழியாய் நிகழ்வதென்றெண்ணுது தான்செய்ததாகவும் பிறர்செய்ததாகவும் எண்ணுதல்

இருவினையின்காரியம்.—இன்பத்துன்பங்கள்

மாயையின்காரியம்:—தநு கரணம் புவனம் போகம் என்பனவாம். தநுவாவது தூல உடம்பு கரணமாவது இந்திரிய அந்தக்கரணமுதலிய சூக்குமவுடம்பு. புவனமாவது உலகம். போகமாவது உலகத்திலுள்ள அநுபவப்பொருள்கள்.

ஆணவமுதலிய பாசம் அநாதியேயாயினும் அப்பாசத்தின் காரியம் உள்ளலால் ஆம் என்று செய்யுளிற் கூறியதனுலேயே, திரோதானசத்தி உண்டென்பதும் பெறப்பட்டது. எவ்வாறெனின், திரோதானமென்பது மறைத்தல்; உயிர்களுக்குப பக்குவம் வரும்பொருட்டு அனுபவிக்கவேண்டிய வினைப்பயன்களைக் கூட்டுவித்து அனுபவிக்கச்செய்யும் இறைவனுடைய சத்தியானது அனுபவிக்கவேண்டிய விடயங்களிலுள்ள குணதோஷங்களை அவ்வுயிர்களுக்குத் தெரியவொட்டாமல் மறைக்கும். அதுவே திரோதானசத்தியெனப்படும். குணதோஷங்களை மறைக்கவில்லையாயின் அனுபவங்கூடாது. அனுபவங்கூடாதாயின் மும்மலங்களைக் காரியப்படுத்தியும் பயனின்ரும். ஆதலால், மும்மலங்களைக் காரியப்படுத்துவன் என்றதனுலேயே திரோதானசத்தி யுண்டென்பது பெறப்பட்டவாறு அறிக. இத்திரோதானசத்தி உயிர்களுக்குப் பக்குவம் வருவித்தற்பொருட்டு ஆணவமலத்தின்வழியாய்நின்று மோகமுதலியவற்றைச் செய்விக்கும் சிவசங்கற்பத்திற்கேதுவாம். திரோதானசத்தியின்றேல் மோகமுதலியவற்றை ஆணவமலத்தில்நின்றுங் காரியபபடுத்த முடியாது ஆதலால் மலத்தின்காரியத்திற் கேதுவாயிருக்குந் திரோதானசத்தி மலமென்று உபசரித்துக் கூறப்படும். ஆகவே, ஆணவம் கன்மம் மாயை திரோதானம் மாயாகாரியம் என்னும் ஐவகைப் பாசமும் உண்டென்பதை இவ்வுதாரணச் செய்யுளாற்கண்டுகொள்க. இருவினையும் அதன் காரியமும், ஆணவமலமும் அதன் காரியமும் வேறுவைத்து எண்ணப்படாமல் மாயையும் அதன் காரியமும் மட்டும் இரண்டுமலமாக வேறுவைத்தெண்ணப்பட்டதன் கருத்தென்னையெனின், ஆணவமும் கன்மமும் தத்தங் காரியத்தின் வேருய் நின்று தொழில்செய்வதில்லை. மாயையோ தன்காரியமாகிய தநுகரணுதிகளைத் தோற்றுவித்து அவற்றின் வேருய்நின்று மயக்கத்தையுஞ் செய்தலின் இருமலமாக எண்ணப்பட்டவாரும்.

இப்பஞ்ச மலங்களையும் மும்மலங்களுள் அடக்கிக் கூறுமிடத்து மாயாகாரியத்தை மாயையினும் திரோதானசத்தியை ஆணவமலத்தினும் அடக்கி, ஆணவம் கன்மம் மாயை யென மூன்ருகக் கூறுவர்.

இம் மும்மலத்துள், மாயையானது சுத்தமாயை அசுத்தமாயை யென் றிருவகைப்படும். இவ்விருமாயையினுள் அசுத்தமாயையைச் சுத்தமாயை யின் காரியமென்று சில ஆசிரியர் கூறுவர். சுத்தமாயைபோல அசுத்த மாயையும் அநாதியேயாமென்று சில ஆசிரியர் கூறுவர். மாயை ஒன்றே யெனவும் அதனுடைய மேற்பாகம் சுத்தமாயை யெனவும் கீழ்ப்பாகம் அசுத்தமாயை யெனவும் வேறு சில ஆசிரியர் கூறுவர். இவ்வாறு பலதிறப் படக் கூறினும் மாயை ஒரு பொருளென்பதில் ஒருவரும் மாறுபடவில்லை. இனி மற்றொருசாரார், முதல்வனது கிரியாசத்தியே சுத்தமாயை யெனப் படுமென்பர். அது பொருந்தாது. எதனுலெனின், கிரியாசத்தியானது முதல்வனுக்குத் தாதாத்மியசத்தியாம். தாதாத்மியமாவது ஒற்றுமையாய்க் கலந்து நிற்றல். மாயையோ பரிக்கிரகம் எனப்படும் அடங்கியிருக்கும் வைப்புச்சத்தியாம். ஆகவே அடங்கியிருப்பதாகிய சத்தியை ஒற்றுமைப் படக் கலந்திருக்குஞ் சத்தியென்று கூறுதல் பொருந்தாதவாறு அறிக.

சுத்தமாயையினின்றும், நிவிர்த்தி பிரதிட்டை வித்தை சாந்தி சாந்திய தீதை என்னும் ஐந்துகலைகளும், சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி என்னும் நான்கு வாக்குக்களும், சுத்தவித்தை ஈசுவரம் சாதாக்கியம் சத்தி சிவம் என்னுஞ் சிவதத்துவம் ஐந்தும், சுத்தகாலமுதல் சுத்தநிலம் முடி பாகத் தத்துவ முப்பத் தொன்றுந் தோன்றும்.

அசுத்தமாயையினின்று அசுத்தகாலமுதல் அசுத்தநிலம் முடிபாக முப்பத்தொருதத்துவங்களுந் தோன்றும்.

முப்பத்தொரு தத்துவங்களாவன:—காலம் நியதி கலை வித்தை அராகம் புருடன் மாயை என்னும் வித்தியாதத்துவம் ஏழும், ஞானேந்திரிய மைந்து கன்மேந்திரியமைந்து பூதம் ஐந்து தன்மாத்திரை ஐந்து அந்தக் கரணம் நான்கு என்னும் ஆன்மதத்துவம் இருபத்து நான்குமாம். இத்தத் துவங்களின் பெயரும் தொழிலும் இவை ஆன்மாவிற்கு வேண்டப்படு மென்பதுமுதலிய யாவுந் தசகாரியவிளக்கத்து இலக்கண இயலில் தத்துவ ரூபங் கூறுமிடத்துக் கூறியிருக்கின்றமையால் அவ்விடத்துக் காண்க.

சுத்ததத்துவம் முப்பத்தொன்றும் சுத்தமாயாபுவனவாசிகளாகிய விஞ் ஞானகலர் பிரளயாகலர் என்னும் இருவகை உயிர்கட்கும், அசுத்த தத்து வம் முப்பத்தொன்றும் அசுத்தமாயாபுவனவாசிகளாகிய சகலவருக்கத் துயிர்கட்கும் பொருந்துவனவாம். சிவதத்துவத்தில் சுத்தம் அசுத்தம் என்னும்பேதங்கிடையாது. அது சுத்தமாயையின் காரியமேயாம். அசுத்த

மாயாபுவன பிரகிருதி மாயாபுவனவாசிகளுக்கும் சிவதத்துவம் சுத்தமாயா காரியமேயாம். ஏனைத்தத்துவங்கள் சுத்தம் அசுத்தமெனை இருவகைப்படு தற்கும், சிவதத்துவம் அவ்வாறுகாமைக்குங் காரணம் என்னை யெனின், ஏனைத்தத்துவங்களைத் தோற்றுவித்துத் தொழிற்படுத்துங் கடவுளர் அனந்தேசுவரரும் சீகண்டபரமேசுவரருமாம். சிவதத்துவத்தைத் தோற்றுவித்துத் தொழிற்படுத்துங்கடவுள் சிவபெருமானேயாம். ஏனைக் கடவுளர்போலச் சிவபெருமான் வேறுபடாமையால் அவராற் காரியப்படுஞ் சிவதத்துவமும் வேறுபடாதாயிற்று.

இம் முப்பத்தாறு தத்துவங்களும், புறத்தில் தனித்தனி புவனவடிவாயும் அகத்தில் சூக்குமதேகவடிவாயு மிருக்கும். அம்முப்பத்தாறனுள், பஞ்சபூதத்தின் காரியமே தூலதேகமாகத் தோன்றும். புவனத்தில் பிருதிவி தத்துவ புவனமட்டும் தூலமாய்க்காணப்படும். ஏனைய புவனங்கள் சூக்குமமாயுள்ளன. இந்தத்தத்துவங்களெல்லாம் பொது வெனவும், சிறப்பெனவும், பொதுச் சிறப்பெனவும் தனித்தனி மூவகைப்பட்டு உயிர்கள்தோறும் வேறுவேறாக விளங்கும். எவ்வாறெனின், புவனவடிவாகிய தத்துவங்கள் எல்லாருக்கும் பயன் தருதலால் பொதுவெனப்படும். சூக்குமதேகவடிவாகிய தத்துவங்கள் தனக்குமட்டும் போகம் அனுபவிப்பதற்குக் கருவியாதலால் சிறப்பெனப்படும். தூலதேகவடிவாகிய தத்துவங்கள் தனக்குப் போகமனுபவிப்பதற்கும் மனைவி முதலியோர் சந்தனம் பூமாலை போல அனுபவிக்கவும் படுதலால் பொதுச்சிறப்பெனப்படும்.

கன்மமும், சிவப்பிரகாச மென்னும் நூலில் " நாசோற்பத்தி பண்ணி வரு மாதலா லனுதி" எனக்கூறியிருத்தல்பற்றிப் பிரபஞ்சம்போலப் பிரவாக அநாதியெனச் சில ஆசிரியர் கூறுவர். பிரவாக அநாதியாவது இடையறு தொழுகும் நீரோட்டத்தில் முன்வந்தநீரிது பின்வந்தநீரிது எனப்பிரித்தறியப் படாதவாறுபோல முன் செய்த கன்மமிது பின்செய்த கன்மமிது எனப் பிரித்தறிய வாராது பண்டைக்காலந்தொட்டு அவ்வாறுவருதல். இனி, திருவருட்பயனென்னும் நூலில் " ஏகன் அநேகன் இருள் கருமம் மாயை இரண்டு ஆக இவை யாறு ஆதியில்" எனவும், " ஆணவ முதலன் றதுபோற் கருமமும்" என வேறுநூலிலும், ஆணவத்தோ டொப்பக் கன்மமும் அநாதி யெனவே கூறுதலால், ஆகாமியம் சஞ்சிதம் பிராரத்தம் என்னும் மூவகை வினைக்கும் முதற்காரணமாகிய மூலகன்மம் ஒன்று அநாதிநித்தமாயுண்டென்று கூறுவர் சில ஆசிரியர்.

மூலகன்மமாவது :—அநாதியே கூடியுள்ள ஆணவமல சேட்டையால் உண்டாகும் விருப்பு வெறுப்புக்கள். இதனை " செம்புறு களிம்பென வநாதிமல மூழ்கியிருள் சேருமலர் விழியென்னவே, தெளிவற்ற கேவலத் தசைவற் றிருந்துமல சேட்டையாற் குழவிகுருடர், தம்பிணியி

ஞானுற்ற பால்கோலே நோக்கவவை தமையளிப் பாரென்னநான், சார்கன்ம மாயையை விரும்பநீ தந்திடச் சகலனுப்" என உரையாசிரியர் "செப் பறைஅகிலாண்டேசுவரிப்பதிக"த்தில் அருளியவாற்ருனும் அறிக. இன் னும் இதுபற்றிய சங்கை உத்தரங்களெல்லாம் சிவஞான சித்தியார் உ-ம் சூ-ம் ௬௬-வது செய்யுளில் "கன்மமூ மூலங்காட்டி" என்றதற்குக் கூறிய உரையிற்காண்க.

ஆகாமியகன்மமாவது, மந்திரம் பதம் வன்னம் தத்துவம் புவனம் கலை யென்னும் ஆறு அத்துவாக்களிடமாக, மனம் வாக்குக் காய மென்னும் மூன்றினுலும் செய்யப்படும் நல்வினை தீவினை என்னும் இருவினைகளாம். இவ்வாகாமியம் தூலகன்மம் எனப் பெயர்பெறும்.

சஞ்சிதகன்மமாவது அவ்வாறு செய்யப்பட்ட இருவினைகள் பக்குவ மடையும்வரை புத்திதத்துவம் பற்றுக்கோடாக மாயையிற் கட்டுப்பட்டுக் கிடப்பதாம். அவ்வாறுகிடக்குங்கால் சூக்குமகன்மமெனப் பெயர் பெறும். இன்னும் இச்சஞ்சிதகன்மம், அபூர்வம் புண்ணிய பாவம் என் னும் பரியாயப் பெயரையும் பெறும். கட்டுப்பட்டிருக்குங் கன்மத்திற்கு முற்பிற்பாடு கூறமுடியாமையால் அபூர்வ மெனவும், இன்பதுன்பங் களைத் தருவதற்குக் காரணமாயிருத்தலால் புண்ணிய பாவமெனவும் பெயர் பெற்றவாறு அறிக. இவ்வாறு கட்டுப்பட்டிருக்குஞ் சஞ்சித கன்மமானது, உயர்ந்தசாதி தாழ்ந்தசாதி என்னுஞ் சாதிகளிற் சனிப்ப தற்கும், ஆயுட்பெருக்கம் ஆயுட் சுருக்கமுடைய சரீரத்தைத் தாரகமாய்ப் பொருந்துதற்கும், இன்பதுன்பங்களை அனுபவிப்பதற்கும் ஏதுவா யிருக்கும்.

பிராரத்தகன்மமாவது, கட்டுப்பட்டிருந்த சஞ்சிதகன்மம் இன்ப துன்பமாகிய பயனைத்தர அனுபவிப்பதாம். அனுபவிக்குங்கால், ஆதி தைவிகம் ஆத்தியான்மிகம் ஆதிபௌதிக மென முத்திறப்படும். ஆதி பௌதிகமாவது, மின்னல் இடி காற்று மழை தீ முதலிய பூதமுன்னிலை யாகவரும் இன்பத் துன்பங்கள். ஆத்தியான்மிகமாவது, மனுடர் மிருகம் முதலிய ஆன்மாக்கள் முன்னிலையாகவரும் இன்பத்துன்பங்கள். ஆதி தைவிகமாவது சனனம் மரணம் நரை திரை வியாதி முதலியவாய் உயிர்கள் முன்னிலையின்றித் தெய்வமுன்னிலையாக வருவதாம்.

இன்னும் இவ்விருவினைகளுள் நல்வினை, உலகவினை வைதிகவினை அத் தியான்மிகவினை அதிமார்க்கவினை மாந்திரவினை யென்று ஐவகைப்படும். அவற்றுள் உலகவினையாவது, கிணறு தண்ணீர்ப்பந்தல் முதலியன அமைத் தல். வைதிகவினையாவது வேள்வி முதலியன செய்தல். அத்தியான் மிகவினையாவது சிவபூசை முதலியன செய்தல். அதிமார்க்கவினையாவது யோகஞ் செய்தல். மாந்திரவினையாவது மந்திரஞ்செபித்தல் ஞானநூல் ஓதல் முதலியன. இவ்வைந்து வினைகளும் ஒன்றற் கொன்று ஏற்ற

முடையனவாம். அவற்றுள், உலகவினை நிவிர்த்தி கலையினும் வைதிகவினை பிரதிட்டாகலையினும், அத்தியான்மிகவினை வித்தியாகலையினும், அதிமார்க் கவினை சாந்திகலையினும், மாந்திரவினை சாந்தியதீதகலையினும் அடங்கு வனவாம். உலகவினையும் வைதிகவினையும் அசுத்தபோகங்களைத்தரும். அத்தியான்மிகவினையும் அதிமார்க்கவினையும் சுத்தமும்அசுத்தமுங்கலந்த போகங்களைத்தரும். மாந்திரவினை சுத்தபோகங்களைத் தரும். இந்நல்வினை கட்கு மாறுபட்டவை தீவினையின் ஐவகைப் பேதமென்றுணர்க.

இரண்டாம் அதிகரணம் முற்றிற்று.

---

# மூன்றாம் அதிகரணம்.

உயிர்கள் மாறிப்பிறக்குமென்று கூறும்.

## மேற்கோள்.

இனி இவ்வான்மாக்கள் மாறிப்பிறந்து வருமென்றது.

## சிற்றுரை.

எ—து மே-ள் எ-னின், புனருற்பவம் சடத்துக்கன்றிச் சித் துக்கு முளதாயினன்றே முற்செய்வினையே ஈண்டைக்கு வரு மென மேற் கூறியதமையும். அஃதுண்டோ? இல்லையோ? என்னு மையப்பாட்டின்கட் குடமுடைந்தவழிக் குடாகாயம் ஆகாயத் தோடு கூடுமாறுபோல உடம்பு நீங்கியவழி உயிர் பிரமத்தோடு கூடுமென்னுஞ் சுருதிபற்றி இறந்தவுயிர் மீளப் பிறப்பதில்லை யெனக் கிரீடாப்பிரமவாதிகள் கூறுங் கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் மூன்றுங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற் கோடனுதலிற்று.

இ-ள். வெ-டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

இ-ள். இவ்வான்மாக்கள்—இருவினைப் பயன்களை நுகர்தற் குரிய உயிர்கள்,—மாறிப்பிறந்து வருமென்றது—இறந்து மீளப் பிறந்து இவ்வாறே வரும் எ—று.

வருதல் தொன்றுதொட் டவ்வாறுதல்.

மாறுதல் ஈண்டிறத்தலென்பது 'போக்குவரவு புரிய' என்னு மூலத்தானும், ஏதுவுதாரணங்களோடு உளதாகிய இயைபானு

முணர்க. இஃதுணராது அச்சுவேறுபடுதலென்றுரைப்பாருமுளர். அஃதீண்டைக்கியாது மியையாமை யுணர்க.

## விளக்கம்.

உயிர்களுக்கு வினைப்பயனாகிய இன்பதுன்பங்களை அனுபவிப்பதற் குரிய தனு கரண புவன போகங்களை இறைவன் கூட்டுவனென இரண் டாம் அதிகரணத்தாற் கூறி, அவ்வாறு கூட்டுங்கால் உயிர்கள் மாறிப் பிறக்குமென மூன்றும் அதிகரணத்தாற் கூறுகின்றார்.

இது சூத்திரத்திலுள்ள போக்குவரவு புரிய என்பதைப் பதச்சேதஞ் செய்து மேற்கொண்டதாகும்.

இம் மேற்கோள் என்னசொல்லிற்றோ வெனின், புதிதாகத் தோன் றுந் தன்மை தனு கரண புவன போகமாகிய சடத்திற்குக் கூடும். சித்தா கிய உயிருக்குக் கூடாதே, உயிருக்கும் புதிதாகத்தோன்றுந்தன்மை உண் டென்றாலன்றோ முற்சென்மத்திற் செய்தவினையே இந்தச் சென்மத்தில் வருமென மேலையதிகரணத்திற் கூறியது பொருந்தும்; ஆதலால், உயிருக் குப் புதிதாகத் தோன்றுதல் உண்டோ இல்லையோ என்பது ஐயப்பாடு. இவ்வையப்பாட்டின்கண் குடமுடைந்த விடத்து குடத்தில் அடங்கியி ருக்கும் குடாகாயம் மகாகாயத்தோடு கூடுமாறுபோல உடம்புநீங்கிய விடத்து உயிர் பிரமத்தோடு கூடுமென்று சுருதி கூறுதலால் இறந்தவுயிர் மீளப் பிறப்பதில்லை என்பது பிறர்கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் கிரீடாப்பிரம வாதிகள். இவர்கூற்றை ஆசங்கித்துக்கொண்டு சூத்திரத்தின் மூன்றுங் கூற்றைப்பதச்சேதஞ்செய்து இறந்த உயிர் மீளப்பிறக்குமெனக் கூறியவாறும்.

(இம்மேற்கோளின் பொருள்.) இருவினைப்பயன்களை அனுபவித்தற் குரிய உயிர்கள் இறந்து மீளப்பிறந்து இவ்வாறே வரும். (எ - று.)

வரும் என்று கூறியதனால் அநாதிதொட்டு இவ்வாறு இறந்து பிறந்து வருமென்பது பெறப்படும். எதனாலெனின், வருதல் உள்ளதற்கேயன்றி இல்லதற்குக் கூடாதாதலின் என்க. ஆகவே, என்றும் உள்ள உயிருக்கு மாறிப்பிறத்தல் என்றும் உள்ளதாகும். முத்தியடையுங்கால் மாறிப்பிறத் தல் நீங்கும்.

மாறுதல் என்றது இம்மேற்கோளில் இறத்தலைக்குறித்து நின்றது. அவ்வாறு குறிக்குமென்பதைச் சூத்திரத்தில் போக்குவரவுபுரிய என்றதில் போக்கு இறத்தலைக்குறித்து நின்றதனாலும், இவ்வதிகரணத்து ஏதுவில் ஈறுமெனவும், உதாரணத்தில் கெட்டு எனவும், கூறுவனவற்றோடு பொருந் தும்வழியானும் உணர்க. இவ்வாறு உயிர் இறந்து பிறக்குமென்பதை உணராது மாறு மென்பதற்கு உடல் மாறுமென்றுரைப்பாருமுளர். அவ்வா

ருயின் இறந்த உடலே மீளப்பிறந்து முன்னுடலிற்செய்த வினைப்பயனை அனுபவிக்கவேண்டும். அவ்வாறில்லாமையால் உடல்மாறுமென்றல் வினைக் கீடாய் மாறுமெனக்கூறும் இவ்விடத்துபபொருந்தாது. உடலைவிட்டு உயிர் மாறுமென்றே கொள்க.

உயிர் மாறிப்பிறக்குமென்பதற்குக் காட்டும்

ஏது.

தோற்றமுமீறும் உள்ளதற்கல்லது உளதாதலின்மையான்

சிற்றுரை.

எ-து ஏ-து எ-னின், அதற்குப் பிரமாணமென்னையென்னுங் கடாவையாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) உற்பத்தியும் நாசமுந் (தொடர்ச்சியாயுள்ள) பொருட்கன்றி ஏனைப்பொருட்கு உற்பத்திகூடாமையான் இனி இவ்வான்மாக்களை மாறிப்பிறந்துவருமென மேறகொண்டது எ-று.

தோற்றமும் ஈறுமென்னு மும்மைகளை எதிரதுதழீஇயின வாகக் கோடலிற் றொடர்ச்சியாயென்பது போந்தவாறு அறிக. உளதாதல் ஈண்டுத் தோன்றுதல்.

இனி இவ்வாறன்றிக் குடாகாய வுவமையைபற்றி இருவினையான்வரும் புனருற்பவம் உயிரின்பொருட்டுச் சிவத்துக்கேயாமெனச் சிவாத்துவிதிகள்கூறுங் கடாவை யாசங்கித்தும் மூலப்பகுதியிற்றோன்றும் புத்தி தத்துவத்துக்கே அதுவெனச் சாங்கியர் கூறுங்கடாவை யாசங்கித்தும் மேற்கோடனுதலிற்று இவ்வதிகாரமெனக்கொண்டு தோற்றமும் ஈறும் அவ்வுரிமை உள்ளதற்கேயன்றி ஏனையவற்றிற்கு உளதாதலின்மையான் இவ்வான்மாக்களை மாறிப்பிறந்து வருமென மேற்கொண்டதென்றுரைப்பினுமாம். இப்பொருட்கு உரிமையென்பது அவாய்நிலையான்வந்தது.

உளதாதலென்னும் ஒருமை தோற்ற வீறுகளோடு தனித்தனி சென்றியையும்.

ஆன்மாக்களை யென்னும் பிரிநிலை யேகாரம் விகாரத்தாற் றொக்கது.

இனி மாயாவாதி முதலியோர் மதத்தை மறுத்தற்பொருட்டு மேற்கொண்டதென்பாருமுளர். அத்துவிதமென்ற சொல்லானே அவரைமறுத்து ஆன்மாக்களைப் பெறுவித்தமையின், ஈண்டவர் மதம்பற்றிக் கடாநிகழ்தற்கோரிமையின்மை யுணர்க.

## விளக்கம்.

இந்த ஏது என்ன சொல்லிற்றேவெனின், மேற்கோளிற்கூறியவாறு உயிர் மாறிப்பிறக்குமென்பதற்குப் பிரமாணம் என்னையென்னும் வினவை ஆசங்கித்துக்கொண்டு பிரமாணங்கூறி மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(இந்த ஏதுவின் பொருள்.) உற்பத்தி நாசமாகிய இரண்டும் தொடர்ச்சியாகவுடைய பொருட்குமட்டுந் தோன்றுதல்கூடும். அத்தொடர்ச்சியில்லாத பொருட்குத் தோன்றுதல் கூடாது. ஆதலால் இனி இவ்வான்மாக்களே மாறிப்பிறந்துவருமென மேற்கோள் கூறியது. (எ - று.)

தனுகரணபுவனபோகங்கள் தோன்றியழியக் காண்கின்றமையால் தொடர்ச்சியில்லாத பொருட்குத் தோற்றக்கேடில்லை என்றது எவ்வாறு பொருந்துமெனின், தனுகரணமுதலியன தோன்றுதலும் அழிதலும் உயிர்களின் வினைகாரணமாக அன்றி அத்தனுகரண முதலியவற்றின் வினைகாரணமாகவன்று. அவை அறிவில்லாத சடமாதலின் வினைசெய்தல் கூடாது. அறிவுடைய உயிரே வினைசெய்தற்குரிமை உடையது. ஆதலால், அவ்வுயிரின்பொருட்டுத் தோன்றி அழியுந் தனுகரணமுதலியவற்றிற்குத் தனிமையாய்த் தோன்றியழிதல் இல்லாமையால் தொடர்ச்சியாயுள்ள உயிருக்கே தோன்றியழிதல் உண்டென்று கூறியதாம். தொடர்ச்சியாயுள்ள உயிரென்றதனாலேயே உயிர் தோன்றியழிதல் இல்லையென்பதூஉம், வினைக்கீடாக உடலை எடுத்தலும் அவ்வுடலினின்று பிரிதலுமே தோன்றியழிதலென்பதூஉந் தானே விளங்கும்.

ஏதுவில் தோற்றமும் என்றதிலுள்ள உம்மை ஈறுமென்பதையும், ஈறுமென்றதிலுள்ள உம்மை பின்வருந் தோற்றத்தையுந் தழுவிநின்றமையால் அவ்வும்மைகள் எதிரதுதழுவினவாம். ஆகவே தோற்றமுங்கேடும் ஒன்றன்பின்னொன்றாய் என்றுந் தொடருமென்பதாம். ஆதலால் உள்ளதற்கு என்றதற்குத் தொடர்ச்சியாயுள்ள பொருட்கு என உரை செய்யப்பட்டது.

உளதாதல் என்றது தோன்றுதலைக்குறித்து நின்றது. ஆதலால் உற்பத்தி கூடாமையாலென உரை செய்யப்பட்டது.

இனி இந்த ஏதுவிற்கு இவ்வாறு பொருள்கூறுவதுமன்றி வேறும் ஒரு பொருள் கூறுதல் கூடும். அதாவது குடாகாய வுவமையேகொண்டு குடத்தில் அடங்கியிருக்கும் குடாகாயம் மகாகாயத்தின் வேறாகாதவாறுபோல் உடலிற் கட்டுப்பட்டிருக்கும் உயிர் சிவத்தின் வேறாகாமையால் உயிரின் பொருட்டு உண்டாகும் தோற்றக்கேடுகள் சிவத்திற்கே யாமெனச் சிவாத்துவிதிகள் கூறுவர். அவர் கூற்றை ஆசங்கித்துக்கொண்டு, தோற்றமும் ஈறும் அவ்வுரிமையுள்ளதற்கேயன்றி ஏனையவற்றிற் குளதாதலின்மையால் இவ்வான்மாக்களே மாறிப்பிறந்துவருமென மேற்கொண்டதென்று கூறுதலாம்.

இன்னுமொரு பொருள்வருமாறு:—மூலப்பிரகிருதியிற்றோன்றும் புத்தி தத்துவத்திற்கே தோன்றியழிதல் கூடுமன்றி, உயிருக்குக் கூடாதென்னுஞ் சாங்கியர் கூற்றை ஆசங்கித்து மேற்கோள் கூறியதாகக்கொண்டு அந்த மேற்கோளைச் சாதிக்கும் ஏதுவென்று கூறுதலுமொன்று. இவ்வாறு கூறுமிடத்தும் ஏதுவிற்குப்பொருள் சிவாத்துவிதிக்குக் கூறியதுபோலக்கொள்க. இவ்வாறு சிவாத்துவிதியையும் சாங்கியரையும் மறுத்து மேற்கோளைச் சாதித்ததாக ஏதுவிற்குக் கொண்டபொருளில் உரிமையென்பது அவாய் நிலையால் வந்தது. அதாவது உள்ளது என்றவிடத்து என்ன உள்ளது என்னும் வினா நிகழுமாதலின், உரிமையென்னுஞ் சொல்லை அவாவி நின்றவாறு காண்க. ஆகவே இந்த ஏது கிரீடாப்பிரமவாதிகள் சிவாத்துவிதிகள் சாங்கியர் என்னு மூவரையும் மறுத்தவாறும். குடாகாய மகாகாய உவமை உபநிடதத்திற் கூறியிருக்கவும் அதனைக்கொண்டாரை மறுத்ததன் கருத்தென்னையெனின், அது இவ்வதிகரணத்து இரண்டாவது வெண்பாவிற் கூறப்படுமாதலால் அவ்விடத்துக் காண்க.

ஏதுவில் உளதாதல் என்னும் ஒருமையைத் தோற்றமும் ஈறும் என்பவற்றோடு தனித்தனிகூட்டித் தோற்றமும் உளதாதலின்மையால் ஈறும் உளதாதலின்மையால் எனக்கொள்ளல்வேண்டும். அவ்வாறு கொள்ளாக்கால் தோற்றமும் ஈறுமாகிய பன்மை உளதாதலென்னும் ஒருமைகொண்டுமுடியாது.

மேற்கோளில் ஆன்மாக்கள் மாறிப்பிறந்துவருமெனக்கூறி ஏதுவிற்குக் கூறிய அநுவாதத்தில் ஆன்மாக்களே மாறிப்பிறந்து வருமெனப்பிரிநிலை ஏகாரத்தை விரித்துத் தனுகரணமுதலியவற்றையும் சிவத்தையும் பிரித்தனர்.

இனி இந்த ஏது மாயாவாதி முதலியோர் மதத்தை மறுத்தற்பொருட்டு மேற்கோள்கூறி அதனை மேற்கொண்டதாகக் கூறுவாருமுளர். இச்சூத்திரத்து முதலதிகரணத்து ஏதுவில் அத்துவிதம் என்ற சொல்லானே மாயாவாதியை மறுத்துச் சிவத்தின்வேறாக ஆன்மா உண்டென்று சாதித்தமையால் இவ்விடத்து அவர் மதம்பற்றிச் சங்கை நிகழ்தற்கு ஒரு சம்பந்தமும் இல்லையென்றறிக. இந்த ஏது உயிர்மாறிப் பிறவாதென்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத்துணிபாயிற்று.

உயிர்மாறிப் பிறந்துவருமென்பதற்குக் காட்டும்

உதாரணம்.

கண்ட நனவைக் கனவுணர்விற் றான்மறந்து
விண்படர்ந்தத் தூடு வினையினாற்—கண்செவிகெட்
டுள்ளதே தோற்ற வுளமணுவாய்ச் சென்றுமனந்
தள்ள விழுங்கருவிற் றான்.

சிற்றுரை.

எ—து உ-ம் எ—னின், புனருற்பவமாங்காற்படும் இயல்புக ளுணர்த்தி அதனை வலியுறுத்தனுதலிற்று.

கண்செவிகெட்டு உள்ளதே தோற்ற உளம் அத்தூடுவிண் படர்ந்து கண்டநனவைக் கனவு உணர்வின்மறந்து மனம் தள்ள வினையினால் அணுவாய்ச்சென்று கருவில் விழும் எனக் கொண்டு கூட்டுக.

(இ - ள்.) கண் செவிகெட்டு உள்ளதே தோற்ற—கண்செவி முதலிய உறுப்புக்களையுடைய இவ்வுடம்பு கெட்டவழித் (தனக்குக் கேடின்றிப் படைப்புக்காலந் தொடங்கிச் சங்கார காலமளவும்) நிலை பெற்றுள்ளதாகிய சூக்குமதேகம் (பூதசாரவுடம்புமுதலியன வாய்க்) காரியப்பட,—உளம் அத்தூடு விண்படர்ந்து—உயிரானது அப்பூதசார முதலிய உடம்பின்கட் (பொருந்தித்) துறக்க நிரயங் களிற் சென்றனுபவித்து, (பின்னர்),—கண்ட நனவைக் கனவு உணர்வின் மறந்து—நனவின்கட் கண்டவற்றைக் கனாக்காணுங் காலத்து (மறந்து) அறிவு வேறுபட்டாற்போல, (முன்னைக்கண் செவிகெட்டவாறும் உள்ளதேதோற்ற அத்தூடு விண்படர்ந்த வாறும் ஆண்டநுபவித்தவாறுமாகிய இன்னோரன்னவற்றை) மறந்து (அறிவு வேறுபட்டு)—மனந்தள்ள வினையினால் அணு வாய்ச்சென்று கருவில்விழும்—(முன்னுடம்பு இறக்குங்கால் அடுத் தவினை காட்டுங்கதி நிமித்தம்பற்றி உயிர் அவாவுமாறு) மனஞ் செலுத்துதலான் (அக்கதிக்கட் சேறற் கேதுவாய் எஞ்சிநின்ற) புண்ணிய பாவசேடத்தாற் சூக்குமதேகமாத்திரையாய்ச் சென்று (அம்மனந் தள்ளிய கதிக்கு அமைந்த) அக்கருவின்கட்படும் எ-று.

இன் உவம உருபு. தான் அசை. மறத்தற்குச் செயப்படு பொருள் அவாய்நிலையான் வந்தது.

விண்படர்ந்தென்னும் உபலக்கணத்தால் நிரயம்படர்ந் தென் பதூஉம் பெறுதும். படர்ந்தெனக் காரியத்தைக் காரணமாக உப சரித்தார்.

அத்தூடென்புழி அன்சாரியை விகாரத்தாற் றொக்கது. பொ ருந்தி யென்பது சொல்லெச்சம். வினை ஆகுபெயர்.

உடம்பு நீங்கிப்போங்கால் முதற்கட் கெடுவன கண்ணுஞ் செவியுமாகலின், அச்சிறப்பு நோக்கிக் கண் செவி கெட்டென்

றுபசரித்தார். கெட்டவழி யென்பது கெட்டெனத் திரிந்து நின்றது.

ஐம்பெரும் பூதத்தின் காரியமெனப்பட்ட தூலவுடம்பு சூக்குமவுடம்பின் காரிய மாமாறென்னையென்னும் ஐயநீக்குதற்கு உள்ளதே தோற்ற வென்றார்.

ஏகாரந் தேற்றம்.

ஆகாயமுதலிய தூல பூதங்கள் சத்தமுதலிய சூக்குமபூதங் களின் காரியமாதலின், அதுபற்றியே தன்மாத்திரைமயமாகிய சூக்குமவுடம்பிற் றோன்றுவதாய தூலவுடம்பு ஐம்பெரும்பூதமய மெனப்பட்டதன்றிப் பிறிதில்லையென்பது, "பூதனு சரீரம்போனாற் புரியட்ட ரூபந்தானே யாதனு சரீரமாகி" எ - ம், "சூக்கும வடிவே தென்னிற் றூலகாரணமதாகும்" எ-ம், "தூலமா முருவி னுக்குச் சூக்கும முதல்" எ - ம், "மாறியிவ் வுருவ மெல்லாம் வருவதெங் கேநின் றென்னிற்—கூறிய சூக்குமத்தாம்" எ - ம், "விதிப்படி சூக்குமத்தே யுருவரும்" எ-ம், "மனுதி தருமுடல்" எ - ம், வழிநூலாசிரியரும் இவ்வாறே கூறியவாறு காண்க. இஃ தறியாதார் தத்தமக்கு வேண்டியவாறே யுரைப்ப. அது தோன் றுங்கால் "கால முற்றுநீக்கிட மாம்பின் வேரோர் நீண்மா நிகழ்த்து" மாறுபோலச் சூக்குமவுடம்புகெடாது நிற்பத் தூலவுடம்பு "வேறொரு குறியா மாரம் வீரசங் கிலியுமா" தல்போல விளைக்கீடாக அச்சு வேறுபட்டு "மதிக்கெழு கலைகள் போல வருவது போவதாம்" என்பதூஉம் வழிநூலாசிரியர் கூறியவாற்றானறிக.

அணு சூக்குமவுடம்பு.

தள்ள தள்ளுதலானென்க.

அக்கருவிலெனச் சுட்டுவருவிக்க.

தான் அசை.

உள்ளதே தோற்றவென்றதனால் உடற்றிரிவும், விண்படர்ந் தென்றதனால் இடத்திரிவும், கண்ட நனவைக் கனவுணர்விற் றன் மறந் தென்றதனால் அறிவுத்திரிவும் பெறப்பட்டன.

உள்ளதே தோற்ற வென்றதனால் புதிதுபுதிதாய்த் தோன்று தல்பற்றிச் சற்காரியவாதத்திற்கு இழுக்கின்மையும், அத்தூடு விண்படர்ந்தெனவும் அணுவாய்ச் சென்று கருவில் விழுமென வுங் கூறியதனால் போக்குவரவுபற்றி வியாபகத்துக்கு இழுக்

கின்மையும், வினைச்சேடத்தாலென்றதனால் துறக்க நிரயங்களின் அநுபவித்தொழிந்தமைபற்றிப் புனருற்பவகாரணத்திற்கு இழுக் கின்மையும், மனந்தள்ள வென்றதனால் அஃதெஞ்சுதற் கேதுவுங் காட்டியவாறு.

வேதத்துட் கூறப்படும் பஞ்சாக்கினிவித்தையின் இயல் புணர்த்துவார் கண் செவி கெட்டவழி விண்படர்ந்து மறந்தனு வாய்ச் சென்று கருவில் விழுமென்றார். பஞ்சாக்கினிவித்தையி னியல்பு நீலகண்டபாடியத்துட் காண்க.

மறந்து விண்படர்ந்தெனக் கூட்டி யுரைப்பாருமுளர். துறக்க நிரயங்களிற் படர்ந்து அநுபவிப்புழி அறிவு திரியாமை புராணங்க ளுட்காண்க.

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோ வெனின், புதுச்சிருட்டி உண் டாகுங்கால் நிகழும் இயல்புகளை உணர்த்தி ஆன்மாக்கள் மாறிப் பிறக்கு மென்பதை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) கண் செவி முதலிய உறுப்புக்களையுடைய இத்தூல உடம்பு கெட்டவிடத்து படைப்புக்காலந்தொடங்கி மகாசங்காரகாலமளவும் நிலைபெற்றிருக்கும் சூக்குமதேகம் தேவலோகத்திற்குரிய பூதசாரவுடம் பாகவும், நரகலோகத்திற்குரிய யாதனாஉடம்பாகவும், மண்ணுலகத்திற்குரிய வேறு பூதவுடம்பாகவும் வினைக்கேற்றவாறு காரியப்பட்டுத் தோன்றும். மகாசங்காரமென்பது இவ்விடத்துச் சூக்குமதேகமும் அழிகின்ற முத்திக் காலத்தைக்குறிக்கும். உயிரானது சூக்குமதேகத்தினின்றுங் காரியப்படுவ தாகிய அப்பூதசார சரீரத்தையும் யாதனாசரீரத்தையும் பொருந்திச் சுவர்க்க நரகங்களிற் சென்று இன்பதுன்பங்களை அநுபவிக்கும். அநுபவித்தபின் னர் நனவின்கண்ணே கண்டவற்றைக் கனாக்காணுங்காலத்து மறந்து அறிவு வேறுபட்டாற்போலச் சுவர்க்க நரகங்களுக்குச் செல்வதற்குமுன்னுள்ள உடல் கெட்டதையும், அவ்வுடல் கெட்டவிடத்தும் நிலைத்திருந்த சூக்கும தேகமே பூதசாரமுதலிய சரீரங்களாய்த் தோற்ற அச்சரீரங்களைப்பற்றிச் சுவர்க்கமுதலியவற்றிற் சென்றதையும், அவ்விடங்களில் அநுபவித்தவற்றை யும் மறந்து அறிவு வேறுபட்டு முன்னுடம்பு இறக்கும்பொழுது பக்குவப்பட் டிருக்கும் வினை காட்டுங் கதியை ஆன்மா விரும்பும்படி மனஞ்செலுத்துத லால் தேவகதி மக்கட்கதி விலங்கின்கதி நரகர்கதி என்னும் நான்கனுள் ஒன் றிலே செல்லுதற்கேதுவாய்ச் சுவர்க்கநரகங்களில் அனுபவித்து எஞ்சிநின்ற

புண்ணிய பாவ சேடத்தால் சூக்குமதேகமாத்திரையாய் இம்மண்ணுலகத்தில் அம்மனந் தள்ளியகதிக்கு ஏற்ற கருவிற் சென்று தங்கும் எ-று.

(க-ரை.) கேவலத்தில்நின்று நீங்கி முத்தியடையும்வரையும் உள்ள சூக்குமதேகத்திலிருந்து வினைக்கீடாகத் தோன்றியழியும் உடம்புகளில் உயிர் பொருந்துதலால் மாறிப்பிறக்கும் என்பதாம்.

கனவு உணர்வின் என்பதிலுள்ள இன் உவம உருபாக நிற்றலால் கனுக்காணுங்காலத்து அறிவு வேறுபட்டாற்போல என உரை செய்யப் பட்டது. அதற்கடுத்து நின்ற தானென்பது அசை; மறந்து என்பது எதனை மறந்து என்னுங் கேள்விக்கு இடமாகநின்றது. அந்த அவாய்நிலை பற்றி மறத்தற்குச் செயப்படுபொருள் வருவித்து முன்னைக் கண் செவி கெட்டவாறும், உள்ளதே தோற்ற அத்தூடுவிண்படர்ந்தவாறும், ஆண் டநுபவித்தவாறுமாகிய இன்னோரன்னவற்றைமறந்து என்று உரை செய் யப்பட்டது.

விண்படர்ந்து என்று கூறிய உபலக்கணத்தால் நிரயம் படர்ந் தென்பதூஉம் கொள்ளப்படும். உபலக்கணமாவது ஒன்று தனக்கினமான பிறவற்றையும் தெரிவித்து நிற்பது. உதாரணம், வெற்றிலை தின்றானென்ற விடத்துப் பாக்கு முதலியனவும் தின்றானெனக் கொள்ளுதல்போல்வன வாம்.

படர்ந்து என்பது சென்று அநுபவித்து என்னும் பொருள்மேல் நின்றது. படர்ந்து என்பதற்குப் பொருள் செல்லுதலேயாம். செல்லு தலினுற்றான் அநுபவங் கூடும். செல்லுதல் காரணம், அநுபவம் காரியம். அநுபவமாகிய காரியத்தைச் செல்லுதலைக்குறிக்கும் படர்ந்து என்னுங் காரணமாக உபசரித்தார்.

அத்தூடு என்றவிடத்து அன்சாரியை விகாரத்தாற் றொக்குநின் றது. ஆதலால் அதனூடு என்னும் பொருள்பட உடம்பின்கண் என உரை செய்யப்பட்டது. உடம்பின்கண் என்பதில் பொருந்தியென்னுஞ் சொல் எஞ்சி நின்றமையால், பொருந்தி யென்பது சொல்லெச்சமாய் வருவிக்கப் பட்டது.

வினையினு லென்பது வினைச்சேடத்தைக் குறித்துநிற்றலால் ஆகு பெயர்.

உடம்பு நீங்கிப் போகுங்கால் முதலாவது கண்ணும் செவியுமே கெடு வனவாம். அச்சிறப்பு நோக்கி உடம்பு கெடுதலைக் கண்செவிகெட்டு என்று உபசரித்தார். கெட்டவழியெனக் கூறவேண்டுவதைச் செய்யுளாதலால் கெ ட்டு எனத்திரித்துக் கூறினர்.

ஐந்து பெரும்பூதத்தின் காரியமெனப்பட்ட தூலவுடம்புசூக்கும உடம் பின் காரியமாம் என்ற தென்னை எனின், பிருதிவி அப்புத் தேயு வாயு

ஆகாயமென்னும் ஐம்பூதங்களும், சத்தம் பரிசம் ரூபம் இரதம் கந்தம் என்னும் ஐந்து தன்மாத்திரைகளின் காரியமாம். தன்மாத்திரைகள் சூக்குமபூதமெனவும், பிருதிவிமுதலிய பூதங்கள் தூல பூதமெனவுங் கூறப்படும். ஐந்து பூதமென்று கூறாது ஐம்பெரும் பூதமென்று உரையாசிரியர் கூறியது தூல பூதத்தை உணர்த்துதற்கு என அறிக. இந்தத்தூல பூதம் அகத்துச் சரீரரூபமாகவும், புறத்து உலகரூபமாகவும் விளங்கும். உலகரூபமாய் விளங்குகின்ற பூதத்தின்காரியங்கள் உலகத்திற் காணப்படும் பொருள்கள். சரீரரூபமாய்க் காணப்படுந் தூலபூதமைந்தும் சூக்குமசரீர தத்துவத்துள்வைத் தெண்ணப்படும். அத்தூலபூதத்தின் காரியமாய்க் காணப்படும் பொருள் பூதசாரசரீரமும் யாதனாசரீரமுந் தூலசரீரமுமாம். அன்னத்தின் காரியமான வீரியம் தூலசரீரத்திற்குத் துணைக்காரணமாவதன்றிப் பிறிதில்லை. ஆகவே தூலபூத மெனப்படுவது சூக்குமதேகம் எனப்பட்டுத் தூலபூதத்தின் காரியமாகிய உடம்பைச் சூக்குமதேகத்தின் காரியமெனக் கூறினாராதலின், பூதத்தின்காரியம் சூக்குமத்தின் காரியமாதல் கூடுமோ என்னும் சந்தேகத்திற் கிடமில்லை. இச்சந்தேகத்தை நீக்குதற்கு உள்ளதே தோற்ற வென்றார். என்றதனால் சூக்குமஉடம்பு கேவலத்தினின்றும் நீங்கி முத்தியடையும் வரை யென்றும் ஓர் உடம்பாய் உள்ளதாக அச்சூக்கும உடம்பின் ஓர் பகுதியாகிய ஐந்து தூல பூதத்தின் காரியமாகிய பூதசார உடம்பு யாதனா உடம்பு தூலஉடம்புகள் தோன்றி மறையும் என்றபடியாம்.

உள்ளதே என்றதிலுள்ள ஏகாரம் சூக்கும உடம்பின் உண்மையை உறுதிப்படுத்தினமையின் தேற்றம்.

ஆகாயமுதலிய தூலபூதங்கள் சத்தமுதலிய சூக்குமபூதங்களின்காரியமாதலால், தன்மாத்திரைமயமாகிய சூக்கும உடம்பிற் றோன்றுவதாகிய தூல உடம்பு தூலபூதத்திற் றோன்றிய தெனப்பட்டது. இதனை, சிவஞான சித்தியார் ௨-ம் சூ-ம். ௩௬-வது செய்யுளில் "பூதனா சரீரம் போனால் புரியட்டரூபந் தானே, யாதனா சரீர மாகி" எனவும், ஷை ௭-ம் சூ-ம் ௪0-வது செய்யுளில் " சூக்கும வடிவே தென்னிற் றூலகா ரணம தாகும்" எனவும், ஷை ௨-ம் சூ-ம் ௫0-வது செய்யுளில் "தூலமா முருவி னுக்குச் சூக்கும முதல்" எனவும், ௭௭-வது செய்யுளில் " மாறிய உருவ மெல்லாம் வருவதெங் கேநின் றென்னிற், கூறிய சூக்கு மத்தாம்" எனவும், ௭௧-வது செய்யுளில் " விதிப்படி சூக்கு மத்தே யுருவரும்" எனவும், ஷை ௧௧-ம் சூ-ம் ௩-வது செய்யுளில் " மனுதி தருமுடல்" எனவும் வழி நூலாசிரியர் கூறியவாற்றானுமறிக. இவ்வுண்மை அறியாதார் தத்தமக்குவேண்டியவாறே உரைப்பர்.

சூக்கும உடம்பினின்றுந் தூல வுடம்பு தோன்றுங்கால் எவ்வாறு தோன்று மென்பதையும் வழிநூலாசிரியரே நன்கு விளக்கி யிருக்கின்றார். எவ்வாறெனின், " கால முற்று - நீக்கிட மரம்பின் வேரோர் நீண்மர

நிகழ்த்து மாபோல்'' எனச் சித்தியார் உ-ம் சூ-ம் சஅ-வது செய்யுளிற் கூறினர். அதன்கருத்து, காலத்தினால் மரமுழுதுங் கெட்டாலும் மரவேரி லிருந்து பின்னும் மரம் உண்டாகு மென்பதாம். அதுபோல, தூலதே கம் கெட்டாலும் சூக்குமதேகத்தின் கூறாகிய பஞ்சபூதத்தினின்று வேறு தூல தேகம் தோன்று மென்றபடியாம். அவ்வாறு ஒரு சூக்கும உடம்பி லிருந்து பல தூல வுடம்பு தோன்றுதலை ஷை உ-ம் சூ-ம் சஎ-வது செய்யு ளில் ''வெறொரு குறியா மாரம் வீரசங் கிலியு மாகும்'' என உவமை முகத்தால் விளக்கினர். அதாவது செய்பவனுடைய ஆற்றலால் பொன் ஒன்றே ஆரம் வீரசங்கிலி முதலிய வெவ்வேறு ஆபரணங்களாய்த் தோன்றுமாறுபோல, ஒரு சூக்கும தேகத்திலுள்ள பஞ்சபூதமே வினையி னது வல்லபத்தால் பல தூலவுடம்புகளாக வேறுபட்டுத் தோன்றுமென்ற படியாம். இவ்வாறு கூறியதனால் பொன் முழுதும் ஆபரணமாகமாறியது போல் சூக்குமதேகமுழுதும் தூலதேகமாய் மாறுமோ எனச் சந்தேக மடையாமற்பொருட்டு ஷை உ-ம் சூ-ம் சகூ-வது செய்யுளில் ''மதிக்கெழு கலைகள் போல வருவது போவ தாமே'' எனக் கூறினர். இதன் கருத்து, சந்திரனிடத்து ஒருகலை என்றும் மாறாதிருக்க, மற்றக்கலைகள் அந்த ஒரு கலையினிடத்துத் தோன்றி மறைதல் போல ஒரு சூக்குமஉடம்பு கெடாதிருக்க அதனிடத்துப் பல தூல வுடம்பு தோன்றி மறையும் என்றபடியாம்.

அணு வென்றது சூக்கும வுடம்பைக்குறித்து நின்றது.

மனந்தள்ள வென்றது தள்ளுதலாலென்னும் பொருளைக் குறித்து நிற்றலால் மனம் செலுத்துதலால் என உரை செய்யப்பட்டது.

கருவில் என்றவிடத்து அகரச்சுட்டு வருவித்து அக்கருவில் என் றுரைக்கப் பட்டது.

கருவில் என்றதன் பின்னுள்ள தான் என்பது அசை.

உள்ளதே தோற்ற என்றதனால் தூலவுடல் வேறுபடு மென்பதும், விண்படர்ந் தென்றதனால் சுவர்க்க நரக முதலியனவாய் இடம் வேறுபடு மென்பதும், கண்ட நனவைக் கனவுணர் விற்றான் மறந்து என்றதனால் உடலுக்கும் இடத்திற்கும் ஏற்றவாறு அறிவு வேறுபடு மென்பதும் பெறப் பட்டன.

உள்ளதே தோற்ற என்றதனால் தூலவுடல் புதிது புதிதாய்த்தோன்று மென்பது பெறப்படினும் அவ்வாறு தோன்றுதற்குச் சூக்குமதேகம் உள்ளதாயிருத்தல்பற்றி இல்லது தோன்றுதலில்லை யாதலால் உள்ளது தோன்றும் என்னுஞ் சற்காரிய வாதத்திற்கு இழுக்கில்லை.

அத்தூடு விண்படர்ந் தெனவும் அணுவாய்ச் சென்று கருவில் விழு மெனவுங் கூறியதனால் உயிருக்குப் போக்குவரத்து உண்டென்பது பெறப்

படும். அவ்வாருயினும் பூதசாரமுதலிய உடம்பின்கண் பொருந்துதற்கும் சூக்குமதேகமாய்ச் சென்று கருவில் விழுதற்கும் வியாபகமா யிருந்தாலன்றி முடியாது. எதனுலெனின், ஏகதேசமான ஓர் இடத்திலிருப்பின் கண்டமாகவே யிருக்கும். அவ்வாறிருப்பது தேவலோக முதலிய எல்லா வுலகத்திற்குஞ் செல்லுதல் கூடாது; கருவில் நுழைதலுங்கூடாது; வியாபகமாயிருப்பின் எங்குஞ் செல்லுதல் கூடும். ஆயினும் இறைவன் வியாபகத்தைப் போல் உயிரின் வியாபகம் பூரணமன்று. தேவ உலகத்தைப்பற்றுங்கால் மண்ணுலகத்தைப் பற்ற முடியாது. மண்ணுலகத்தைப் பற்றுங்கால் தேவவுலகத்தைப் பற்ற முடியாது. இவ்வாறு பற்றுதல் போக்குவரத்தைக் குறிப்பினும் சார்ந்ததன் வண்ணமாம் வியாபகத்திற்கு இழுக்கில்லை,

வினைச்சேடத்தாலென்றதனுல், சுவர்க்க நரகங்களில் இன்பதுன்பங்களை அனுபவித்து ஒழிந்தபின்னர்ப் பிறவிக்குக்காரணம் உண்டென்பதற்கு இழுக்கில்லை. அதாவது இன்பத்து மிகுதியையும், துன்பத்து மிகுதியையும் சுவர்க்கத்தினும் நரகத்தினும் அநுபவித்து இன்பமுந் துன்பமுங் கலந்து அநுபவிக்கவேண்டியதாய் எஞ்சியிருக்கிற வினையின் காரணத்தால் அவ்விரண்டற்குந் தானமாகிய மண்ணுலகத்திற் பிறவி உண்டென்பதாம்.

மனந்தள்ள என்றதனுல் தள்ளுதல் வினையின்சேடம் உண்டென்பதற்கு ஏதுவாயிற்று.

வேதத்துட் கூறப்படும் பஞ்சாக்கினி வித்தையினியல்பையும் உணர்த்தவேண்டிக் கண் செவி கெட்டவழி விண்படர்ந்து மறந்து அணுவாய்ச் சென்று கருவில் விழுமென்ருர். எவ்வாறெனின், வேள்வி செய்த உயிர் இவ்வுடம்பு நீங்கிய விடத்து வேள்வியின் பயனுகச் சுவர்க்கத்தை யடைந்து இன்பத்தின் மிகுதியை அநுபவித்துப் பின்னர் அவ்வினையின் சேடத்தால் பூமியில் வந்து பிறந்து அப்பிறப்பும் நீங்கியபின்னர் மேகமண்டலத்தை யடைந்து அவ்விடத்தினின்றும் வரும் மழையினேடு கூடி நிலத்தினை யடைந்து நெல் முதலிய பொருள்களிற் கலந்து தந்தைவயிற்றில் உணவாய்ச் சென்று சுக்கிலமாய்ப்பரிணமித்துத் தாய்வயிற்றிற் சென்று கருவிற்பதிந்து தூலதேகத்தோடு நிலத்திற் ரேன்றும். ஆகவே சுவர்க்கம், மேகமண்டலம், நிலம், தந்தை, தாய் என்னும் ஐந்திடத்தையும் அக்கினியாகவும், அவற்றிற் பொருந்திய ஆன்மாவை ஆகுதியாகவும் தியானிப்பது ஒரு சாதகமாகலின் இது பஞ்சாக்கினி வித்தை யெனப்படும். இவ்வாறு திராவிடமாபாடியத்துட் கூறப்பட்டது. நீலகண்ட பாடியத்தும் கூறப்பட்டிருத்தல் காண்க.

மறந்து என்பதை விண்படர்ந்து என்பதனேடு கூட்டி மறந்து விண்படர்ந்து என உரைப்பாரும் உளர். அவ்வாறு கூறுங்கால் தூலவுடம்பு

கெட்டவிடத்து உயிரானது அத்தூலவுடம்பை மறந்து அப்பூதசாரவுடம்பு முதலியவற்றைப் பொருந்தும் என்று கூறல் வேண்டும்.

சுவர்க்க நரகங்களில் இன்பதுன்பங்களை அநுபவித்துத் தொலைந்த பின்னர் மண்ணுலகத்திற் பிறக்கும்பொழுது அறிவுவேறுபடும் எனக் கூறிய தனால், சுவர்க்கநரகங்களிற் சென்று அநுபவிக்கும் காலத்து அறிவு வேறு படாதென்பது பெறப்படும். இதனை, மண்ணுலகத்தில் இன்ன நல்வினை செய்ததால் இந்த இன்பத்தை அநுபவிக்க நேர்ந்தது. இன்னதீவினை செய் ததால் இந்தத் துன்பத்தை அநுபவிக்க நேர்ந்தது என்று எண்ணுவதாகக் கூறும் புராண சரித்திரங்களால் உணர்க.

உயிர் மாறிப்பிறத்தல் இல்லையென்பதற்குக்காட்டும் குடாகாய உவமைக்குப்
பொருள்கூறி மாறிப்பிறக்கும் என்பதை வலியுறுத்தும்
உதாரணம்.

அரவுதன் றோலுரிவு மக்கனவும் வேறு
பரகாயம் போய்வருமப் பண்பும்—பரவிற்
குடாகாய வாகாயக் கூத்தாட்டா மென்ப
தடாதுள்ளம் போமா றது.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், உயிருக்குப் புனருற்பவ மாகாமைக்கு வாதிகளான் எடுத்துக்காட்டப்படுங் குடாகாய வாகாயவுவமைக் குப் பொருள்கூறி மேலதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) அரவு தன் தோல் உரிவும் அக்கனவும் பரகாயம் போய்வரும் அப்பண்பும் பரவில் வேறு—(கண் செவி கெட்டவழி உள்ளதே தோற்ற அத்தூடு விண்படர்தற்குப்) பாம்புதோலுரித் துப் புதிதொருதோல் போர்த்துச்சேறலும், புருடன் நனவுடம் பினீங்கிக் கனவுடலிற் சேறலும், யோகிகள் தம்முடம்பு நீங்கிப் பரகாயத்திற் சென்று மீடலுமாகிய இவ்வுவமைகள் மிக்குவழங்கு தற்கண் இவற்றிற்கு மாறுக,—குடாகாய ஆகாயக் கூத்தாட்டு ஆம் என்பது அடாது—குடவாகாயங் (குடமுடைந்தவழி) ஆகாயத்தோடு கூடுமாறுபோல்வதோர் கூத்தாட்டாமென்று நீ கூறுதல் பொருந் தாது,—உள்ளம்போம் ஆறு அது—சூக்குமவுடம்பு விட்டுப்போ மாற்றிற்கே அவ்வுவமையாகலான் எ—று.

எனவே, உடல்விட்டுப் போமாற்றிற்கு இவ்விருவகை யுவ மைகளும் ஆகமங்களிற் கூறுதலின், அவை தம்முண் முரணுத

வாறு, அரவுதன்றோலுரிவு முதலியன தூலவுடல்விட்டுப் போமாற் றிற்கும், குடாகாயவுவமை சூக்குமவுடம்பு விட்டுப்போமாற்றிற்கு மெனக் கோடல் பொருத்தமுடைமையின் அவ்வேறுபாடுணராது குடாகாய வுவமையுந் தூலவுடம்புவிட்டுப் போமாற்றிற்கே போலுமென மலைபற்கவென மேலதனை வலியுறுத்தவாறுகாண்க.

மேலை வெண்பாவில் 'கண்ட நனவைக் கனவுணர்விற்றான் மறந்து' என்றது அறிவு வேறுபடு முறைமைக்கு எடுத்துக்காட்டிய தெனவும் ஈண்டு அக்கனவும் என்றது அதனையே உடல் வேறுபடுமுறைமைக்கு எடுத்துக் காட்டியதெனவும் தெரிந்துகொள்க.

பரவு முதனிலைத் தொழிற்பெயர். இல்லுருபு தொழி னிகழ்ச்சிக்கண் வந்த ஏழாவது.

பரவுதல் எல்லார்க்கும் புலனுமாறு மிக்குநிகழ்தல்.

ஈண்டு உள்ள மென்றது சூக்குமவுடம்பை.

போமாற்றிற்கென்னும் நான்காவது விகாரத்தாற்றொக்கது; ''ஐந்தவித்தானாற்றல்' என்புழிப்போல.

குளம் ஆம்பல் ''குளாம்பலென மரீஇயினாற்போலக் குடம் ஆகாயங் குடாகாயமென மரீஇயிற்று.

ஆகாயக் கூத்தாட்டென்பது உவமத்தொகை. இதனை உம்மைத் தொகையாகக்கொண்டு குடாகாயவாகாயமுங் கூத்தாட்டும் போலென்றுரைப்பாரு முளர்.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) அரவுதன் தோல் உரிவும் அக்கனவும் பரகாயம் போய்வரும் அப்பண்பும் பரவில் வேறு குடாகாய ஆகாயக் கூத்தாட்டு ஆம் என்பது அடாது உள்ளம் போம் ஆறு அது.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், உயிருக்கு உடம்பு நீங்கிய பின்னர்ப் பிறப்பில்லை யென்பதற்கு வாதிகளால் குடாகாய மகாகாய உவமை எடுத்துக் காட்டப்படுமாதலால் அவ்வுவமைக்குப் பொருள்கூறி உயிர் மாறிப்பிறக்குமென மேற்கூறியதனை வலியுறுத்தியவாறாம்.

(பொ - ரை.) தூலவுடம்பு கெட்டவிடத்துச் சூக்குமவுடம்பினின் றுந் தேவலோகமுதலியவற்றிற் குரிய உடம்புகள் தோன்ற அவற்றை

உயிர் பற்றும். அவ்வாறு பற்றுதற்குப் பாம்பு முன்னுள்ளதோலை யுரித்துப் புதிதொருதோலைப் போர்த்துச் செல்லுதலும், புருடன் நனவுடலை நீங்கிக் கனவுடலைப்பொருந்துதலும், யோகிகள் தம்முடம்பைவிட்டு வேறு உடம்பிற்சென்று மீளுதலும் உவமைகளாம். இவ்வுவமைகள் மிக்கு வழங்கவும் இவற்றைவிட்டுக் குடாகாயம் குடமுடைந்த விடத்து மகாகாயத்தோடு கூடுவதுபோல, தூலவுடம்பு நீங்கியவிடத்து உயிர் பிரமத்தோடு கூடுவதோர் கூத்தாட்டாமென்று நீ கூறுதல் பொருந்தாது. அக்குடாகாயவுவமை சூக்குமவுடம்பை விட்டுப்போதற்கே கூறியதாம். எ - று.

(க - ரை) தூலவுடம்பு கெட்டவிடத்து உயிர் பிறிதொரு தூலவுடம்பைப் பற்றுதற்குப் பாம்பும் புருடனும் யோகிகளும் உவமைகளாகும். சூக்கும உடம்பு நீங்கி உயிர் முத்தியடைதற்குக் குடாகாய மகாகாயம் உவமையாகும் என்பதாம்.

உடலைவிட்டு உயிர்போவதற்குப் பாம்பு முதலிய உவமைகளும், குடாகாய உவமையும் ஆகமங்களிற் கூறப்படுமாதலால், அவ்வுவமைகளுள் ஒன்றோடொன்று யாறுபடாதவண்ணம் பாம்பு தோலுரித்தல் முதலிய உவமைகள் தூலவுடலைவிட்டுப போவதற்கும், குடாகாய உவமை சூக்கும வுடம்பை விட்டுபபோவதற்கும் எனக் கொள்ளல்வேண்டும். இவ்வேறுபாடுணராது குடாகாய உவமையும் தூலவுடம்பைவிட்டுப் போவதற்கே கூறியதுபோலுமென மலைபவேண்டாம். இவ்வாறு இவ்வுதாரணத்தினல் உயிருக்கு மாறிப்பிறத்தல் உண்டென்பது வலியுறுத்தியவாறு காண்க.

இன்னும் இவ்வுவமையினல் மகாகாயமே குடத்தில் அடங்கியபொழுது குடாகாயமெனப்பட்டாற்போல, பிரமமே உடம்பிற் கட்டுப்பட்டபொழுது சீவனுயிற்றென்பர் ஏகான்மவாதிகள். அவ்வாருயின் குடத்தைச் செய்வதற்கு ஆகாயத்தின் வேருய்க் குலாலன் உளனுதல்போல, உடம்பைச் செய்வதற்குப் பிரமத்தின் வேருய் ஒரு பொருளிருக்கவேண்டும். உவமையெல்லாம் ஏகதேசமேயன்றி முற்றுவமையாகாது ஆதலின், பிரமமே உடம்பைச்செய்து அதிற் கட்டுப்பட்டுச் சீவனுயிற்றென்பரேல், எதற்காகச்செய்து கட்டுப்பட்டதென வினவில் என்சொல்வர். இலீலையென்பரேல், உடம்பு நீங்கிப் பிரமமான பின்னரும் இலீலையினல் உடம்பைச் செய்யவும் அதிற் கட்டுப்படவும் கூடுமாதலின் சாதனஞ்செய்தல் பயனற்ற வீண்செயலாகும். இவ்வாருயின்,

"கடத்திருக்கு மாகாயம் போலச்சீ வான்மா கருதுமகா காயம்போற் பரமான்மா விருக்குங், கடத்திருக்கு மாகாயங் கடமுடைந்தான் முன்னர்க் கருதுமகா காயமா நிறைந்துநின்ருற் போலத், திடத்தினுறு பிரகிருதி சம்பந்த மாய தேகவுபா திகண்முழுது நீங்கியபோ தந்தக், சடத்தமர்சீ வான்மாவே பரமான்மா வாகுஞ் சர்வஞ்ஞ ஞமெம்மாற் சொலப்பட்ட திதுவே"

எனச் சருவஞானோத்தரத்திற்கூறிய கருத்தென்னையெனின், கூறுதும்:—கடாகாயமும் மகாகாயமும் ஆகாயமென்னுஞ் சாதிப்பொதுமையால் ஒன்றாயவாறுபோலச் சீவான்மாவும் பரமான்மாவும் சித்தென்னுஞ் சாதிப் பொதுமையால் ஒன்றென்பதூஉம், ஆயினும் மகாகாயம் பற்றின்றியும் குடாகாயம் குடத்தைப்பற்றியும் நிற்குமாறுபோல, பரமான்மா ஒன்றினுந் தோய்வின்றிச் சொயம்பிரகாசமாயும் சீவான்மாயாதானும் ஒன்றைப்பற்றி அதன்மயமாயும் நிற்குமென்பதூஉம், கடமுடைந்த பின்னர்க் கடாகாயம் மகாகாயமாய் ஒன்றுபட்டு நிற்குமாறுபோல, சூக்கும உடம்பு நீங்கிய பின்னர் வேறு பற்றுக்கோடில்லாமையின் பரமான்மாவோடு ஒன்றுபட்டு நிற்குமென்பதூஉம் அச்செய்யுளின் கருத்தாம். இவ்வுண்மையறியாதார் சருவஞானோத்தரமும் தமது ஏகான்மவாதநூலென மயங்கி யிடர்ப்படுவர். லீலையாற் செய்வனென ஆகமங்களிற் கூறியதன் கருத்தென்னை எனின், காரணத்தால் வருந்திச்செய்யாது சங்கற்பமாத்திரத்தால் எளிதிற் செய்வனென்பதுபற்றியே யன்றிப் பிறிதில்லை என்பதாம்.

மேலை வெண்பாவில் கண்ட நனவைக் கனவுணவிற்றான் மறந்து எனக்கூறியது, உயிரின் அறிவு வேறுபடு முறைமைக்கு எடுத்துக்காட்டியதாம். இவ்வெண்பாவில் அக்கனவும் என்று அதனையே கூறியது உடல் வேறுபடு முறைமைக்கு எடுத்துக்காட்டியதாம். இவ்வாறு ஈரிடத்தும் ஓர் உவமை காட்டப்பட்டிருப்பினும் வெவ்வேறு பொருளைக்குறித்து நின்றவாறு காண்க.

பரவில் என்பதிலுள்ள பரவு என்பது தல்விகுதியின்றியும் பரவுதல் என்னும் பொருளைக்குறித்து நிற்றலால் முதனிலைத்தொழிற்பெயர். பரவுதல் எல்லார்க்குந் தெரியும்வண்ணம் மிகுந்து நிகழ்தல்.

பரவில் என்றதிலுள்ள இல்லுருபு தொழில் நிகழ்ச்சியைக் குறித்த ஏழாம் வேற்றுமையாதலால் வழங்குதற்கண்ணென உரை செய்யப்பட்டது.

உள்ளமென்றது இச்செய்யுளில் சூக்கும உடம்பைக்குறித்து நின்றது,

போமாறு என்றதில் நான்காம்வேற்றுமைஉருபு தொக்கு நின்றது; ஆதலால் போமாற்றிற்கு என உரை செய்யப்பட்டது. இது திருக்குறள் நீத்தார்பெருமை ௫-வது செய்யுளில் ''ஐந்தவித்தா னாற்றல்'' என்றவிடத்து ஐந்தவித்தானாற்றலுக்கு என்பதுபோலவாம்.

குளம்ஆம்பல் குளாம்பல் என மருவி வழங்குவதுபோல குடம் ஆகாயம் குடாகாய மென மருவிநின்றது. ஆகவே குடாகாயமென்பதுதமிழ் நூல் முடிபென்றவாறாம். 'குடாகாயம் வடநூல் முடிபென்றுகோடலு மொன்று' என உம்மைகொடுத்துத் திராவிடமாபாடியத்தில் உரையாசிரியர் கூறியவாறும் அறிக.

குடாகாய ஆகாயக்கூத்தாட்டென்பது குடாகாயம் ஆகாயம் போல்வதோர் கூத்தாட்டென்னும் பொருளைக்குறித்து உவமவுருபு தொகையாய் நிற்றலால் உவமத்தொகை. இவ்வாறன்றிக் குடாகாய ஆகாயக் கூத்தாட்டென்பதை உம்மைத் தொகையாகக்கொண்டு குடாகாய ஆகாயமும் கூத்தாட்டும் போலென்றுரைப்பாரும் உளர். கூத்தாட்டாவது ஒருவன் பல வேடங்கட்டி ஆடும் நடனமாம்.

மூன்றும் அதிகரணம் முற்றிற்று.



# நான்காம் அதிகரணம்.



இறைவன் தனது சத்தியில் பிரிப்பின்றி நிற்பனெனக் கூறும்

மேற்கோள்.

இனி நீக்கமின்றி நிற்குமன்றே யென்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், அங்ஙனம் புனருற்பவ மாதற்கேதுவாய் இருவினைகளைச்செலுத்தி நிற்பதெனப் போந்த ஆணையெனப்படுஞ் சத்தியாவது முதல்வனின் வேறோ அன்றோவென்னும் ஐயப்பாட்டின்கட் பொருட்குச்சத்தி வேறென்னு மீமாஞ்சகர் முதலியோர் மதமும், அன்றென்னும் நையாயிகர்முதலியோர் மதமும் பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் இறுதிக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ-ள்.) முதல்வன் தனதாணையாகிய சிற்சத்தியோடு சமவேதமாய் நிற்பன் எ-று.

அந்நியயோக வியவச்சேதம் அயோக வியவச்சேதம் என்றற்றொடக்கத்து வடசொற்கள் பிறிதினியைபு நீக்குதல் இயைபின்மை நீக்குதல் என்றற்றொடக்கத்தனவாக மொழிபெயர்த்து வழங்கப்படுமாறுபோலச் சமவாயமென்னும் வடமொழி தமிழின்கண் நீக்கமின்றி நிற்றலென மொழிபெயர்த்து வழங்கப்படுமென்றுணர்க. வடமொழி இரண்டாஞ் சூத்திரத்திறுதியின் ஆணை முதல்வனோடு சமவேதமாய் நிற்குமென ஆணைமேல் வைத்தோதியதனை ஈண்டு

முதல்வன்மேல் வைத்தோதினார். கண்ணழிப்புழி இருவினை முதல்வ னாணையின்வருமெனக் கூறிப்போந்த ஆணை, ஈண்டுக் கூறுமைமேயே இனிது விளங்குமென்னுங் கருத்தாற் சொற்பல்காமைப்பொருட்டு அதனை யொழித்தெடுத்துக் கொள்ளப்பட்டது. இப்பொருள் காணமாட்டாதார் சருவவியாபியாய் நிற்றலாலென்னும் ஏதுவின் பொருளை மேற்கோளுக்கும் பொருளாகக் கொண்டுரைப்ப. அது கூறியது கூறலாதலுமன்றி மொழிபெயர்த்தல் யாப்பிற் கேலா மையுமறிக. ஈண்டுச் சமவாயமென்றது தாதான்மிய சம்பந்தத்தை. அஃதாவது பொருளான் ஒன்றேயாயும் ஒருவாற்றாற் பேதமாதற்கு உரிமை யுடைமை.

## விளக்கம்.

உயிர் மாறிப்பிறக்குமென மூன்றும் அதிகரணத்தாற்கூறி அவ்வாறு மாறிப் பிறத்தலை வினைக்கீடாக உயிருக்குக் கூட்டுஞ்சத்தி இறைவனின் வேறன்றென நான்காம் அதிகரணத்தாற் கூறுகின்றார்.

இது சூத்திரத்திலுள்ள ஆணையினீக்கமின்றி நிற்குமன்றே என்பதைப் பதச்சேதஞ்செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோவெனின், மேலை அதிகரணத் திற் கூறியவாறு உயிர்கள் பிறப்பிறப்பை யடைவதற்கு ஏதுவாயுள்ள இரு வினைகள் சடமாதலின் அவ்வினைகளை உயிர்களுக்கு ஆணையெனப்படுஞ் சத் தியே கூட்டுவிக்குமென இச்சூத்திரத்து இரண்டாம் அதிகரணத்தாற் கூறப்பட்டது. அச்சத்தியாவது முதல்வனைவிட வேறோ, முதல்வன் றானோ என்பது ஐயப்பாடு. இவ்வையப்பாட்டின்கண் முதல்வனைவிடச் சத்திவேறென்று கூறுவதும், சத்தி முதல்வனே என்று கூறுவதும் பிறர் பக்கம். வேறென்று கூறுவோர் மீமாஞ்சகர் முதலியோர். வேறன்றெனக் கூறுவோர் நையாயிகர் முதலியோர். இவ்விருவர் கூற்றையும் ஆசங்கித்துக் கொண்டு சூத்திரத்தின் நான்காம் கூற்றைப் பதச்சேதஞ்செய்து முதல்வ னுக்குச் சத்திவேறுமன்று முதல்வனுமன்று எனக் கூறியவாறும்.

(இம்மேற்கோளின் பொருள்.) முதல்வன் தனதாணையாகிய சிற்சத்தி யோடு பிரிப்பின்றிச் சமவேதமாகிய திரோதானசத்திவடிவாய் நிற்பன் எ—று.

சமவேதத்தின் பொருள் சூத்திரவுரையிற் கூறப்பட்டிருக்கின்றது.

நீக்கமின்றி நிற்கும் என்னும் தமிழ்மொழிக்குச் சமவேதமாய் நிற்பன் என வடமொழியால் உரைசெய்த கருத்தென்னையெனின், சமவேதமாவது சமவாய சம்பந்தத்தாலிருப்பது சமவாயமென்னும் வடமொழி தமிழில் நீக்க

மின்றி நிற்றலென மொழிபெயர்த்து வழங்கப்படும். படவே, நீக்கமின்றி நிற்றல் சமவாயமும், நீக்கமின்றி நிற்பது சமவேதமுமாம். ஆகவே, சமவேதமென்றவிடத்து நீக்கமின்றி நிற்பதையும் சமவாயசம்பந்தத்திலிருப்பதென்பதையும் உணர்த்தும். நீக்கமின்றி நிற்குமென்பது சமவாய சம்பந்தத்தாலிருப்பதென்றுணர்த்தாது. ஆதலால், முதல்வனுடனும் சிற்சத்தியுடனும் சமவாயசம்பந்தத்தாலிருக்கும் சமவேதமாகிய திரோதானசத்தி வடிவாய் முதல்வன் சிற்சத்தியிற் பிரிப்பின்றிநிற்பன் என்பதுணர்த்துதற்கு அவ்வாறு கூறினரென்க.

வடமொழிச் சிவஞானபோதம் இரண்டாஞ் சூத்திரத்து முடிவில் ஆணை முதல்வனோடு சமவேதமாய் நிற்குமென ஆணைமேல் வைத்தோதியதனை இந்நூலில் முதல்வன் ஆணையோடு சமவேதமாய் நிற்பனென முதல்வன்மேல் வைத்தோதினர். இவ்வாறு ஓதியது முரணுகாது. எதனுலெனின், சத்தி இறைவனிற் சமவேதமாதலின் அம்முறைபற்றி வடநூலிற் கூறினர். உயிர்களோடு கலந்து நிற்கும் இறைவன் நிலை திரோதானசத்தியெனப்படும் என்ற முறைபற்றி இந்நூலில் இறைவன் சிற்சத்தியிற் சமவேதமாய் நிற்பன் எனக் கூறினராதலின் என்க.

மேற்கோளில், ஆணையில் நீக்கமின்றி யென்று கூறவில்லை. சூத்திரத்தின் இரண்டாங்கூற்றைப் பதச்சேதஞ்செய்து கூறிய இரண்டாம் அதிகரணத்தில் இருவினை முதல்வன் ஆணையின்வருமெனக் கூறியிருக்கின்றமையால், இவ்வதிகரணத்துக் கூருமலே அமையுமென்னுங் கருத்தானும், சொல்லை அதிகப்படுத்தாமல் சுருக்கிக் கூறவேண்டுவதாகிய அழகு பற்றியும், ஆணையென்னுஞ் சொல்லைக் கூருது நீக்கமின்றி நிற்குமன்றே என்று எடுத்துக்கொள்ளப்பட்டது. நீக்கமின்றி என்பதற்கு ஆணையில் நீக்கமின்றி என இவ்வாறு பொருள் கொள்ளமாட்டாதார், சருவவியாபியாய் நிற்குமென்று பொருள் கூறுவர். அவ்வாறு கூறின், இவ்வதிகரணத்துட்கூறப்படும் ஏதுவின் பொருளே மேற்கோளுக்கும் பொருளாகிக் கூறியது கூறலென்னுங் குற்றமாகும். அன்றியும் வடமொழிச் சிவஞானபோதத்து இரண்டாஞ் சூத்திரத்திறுதியில் ஆணை முதல்வனோடு சமவேதமாய் நிற்குமெனக்கூறியதை மொழிபெயர்த்துக்கூறும் விதிக்கும் பொருந்தாதவாறு அறிக.

சைவசித்தாந்தத்தில், சமவாயமென்றது தாதான்மியசம்பந்தத்தையாம். தாதான்மியசம்பந்தமாவது குணத்திற்கும் குணிக்கு முண்டான ஒற்றுமைச் சம்பந்தமெனவும், இரண்டு பொருள்களுக்குள்ள ஒற்றுமைச் சம்பந்தமெனவும் இருவகைப்படும். அவற்றுள், குணகுணிகளுக்குள்ள ஒற்றுமை தாதான்மியமென்றும், இருபொருள்களுக்குள்ள ஒற்றுமை அத்துவிதமென்றும் கூறப்படும். இவ்விடத்துக்கூறிய தாதான்மியம் குணகுணிகளுக்

குள்ள தாதான்மியமாம். சிவம் குணி; சத்தி குணம். சிவமுஞ் சீவனுங் கலந்திருக்கும் தாதான்மியம் அத்துவிதமெனப்படும்.

சத்தியில் நீக்கமின்றி நிற்பன் என்பதற்குக் காட்டும்

ஏ து.

அவன் ஏகாநேக மிரண்டுமின்றிச் சருவவியாபியாய் நிற்றலான்.

## சிற்றுரை.

எ—து ஏது எ—னின், அதற்குப் பிரமாணமென்னை யென்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) அம்முதல்வன் ஒன்றே வேறே யென்னும் இரு தன்மையுமின்றி அவ்விரண்டிற்கும் பொதுவாய் எங்கணும் வியாபியாய் நிற்றலான் இனி ஆணையினீக்கமின்றி நிற்குமன்றே யென மேற்கொண்டது எ-று.

அவிநாபாவ முணர்த்துவார் 'ஏகாநேக மிரண்டுமின்றி' யென மேற்கோளிற் போந்தபொருளை அநுவதித்துச் சருவவியாபியாய் நிற்றலானென ஏதுக்கூறினார். சருவவியாபியாய் நிற்றல் அவையே தானேயாயென்னும் அதிகாரணத்தாற் சாதிக்கப்பட்டமையின் அதனை ஈண்டேதுவாக வைத்து ஆணையினீக்கமின்றி நிற்குமென்னு மேற்கோளைச் சாதித்தவாறு.

## விளக்கம்.

இந்த ஏது என்ன சொல்லிற்றோவெனின், முதல்வன் தனது ஆணையாகிய சத்தியோடு நீக்கமின்றி நிற்பன் என்பதற்குப் பிரமாணம் என்னையென்னும் வினாவை ஆசங்கித்துப் பிரமாணங்கூறி நீக்கமின்றி நிற்பன் என்பதை வலியுறுத்தியவாறும்.

(இந்த ஏதுவின் பொருள்.) அம்முதல்வன், தானும் சத்தியும் ஒன்றேயென்றாவது வேறேயென்றாவது எண்ணுதற்கின்றி, அவ்விரண்டற்கும் பொதுவாய் எவ்விடத்தும் வியாபியாய் நிற்றலான், இனி ஆணையினீக்கமின்றி நிற்குமன்றே என மேற்கோள் கூறியது. எ—று.

எவ்விடத்தும் வியாபித்தல் சத்தியின் காரியமாதலால், சத்தியில் நீக்கமின்றி நிற்பன் என்பது கருத்து.

மேற்கோளிலுள்ள நீக்கமின்றி என்றதன் பொருளையே தரக்கூடிய ஏகாநேகம் இரண்டு மின்றி என்ற வாக்கியத்தையும் இந்த

ஏதுவிற் கூறினர். அது கூறியது கூறலென்னுங் குற்றமாகாது. எதற்காக அவ்வாறு கூறினரெனின், சர்வ வியாபியாய் நிற்றலால் என்று மட்டுங் கூறிவிட்டால் நீக்கமின்றி நிற்றல்வேறு சர்வவியாபியாய் நிற்றல் வேறு என எண்ணவரும், அவ்வாறு எண்ணுமல் நீக்கமின்றி நிற்றலை விட்டு நீங்காதிருப்பது சருவ வியாபகம் என்பதை யுணர்த்தவேண்டி மேற்கோளிற் கூறிய பொருளை அநுவதித்துச் சருவ வியாபியாய் நிற்றலானெனக் கூறினர். அநுவாதமாவது முன் கூறியதைப் பின்னும் பிறிதொன்று கூறுவதற்காகக் கூறுதல்.

சருவ வியாபியாய் நிற்றல் எவ்வாறு பெறப்படு மெனின், அவையே தானேயாய் என்னும் இச்சூத்திரத்து முதலதிகரணத்தால் அது சாதிக்கப்பட்டது. ஆதலால் அவ்வாறு நிற்றலை இவ்வதிகரணத்தில் ஏதுவாக வைத்து ஆணையினீக்கமின்றி நிற்கு மென்னும் மேற்கோளைச் சாதித்தவாறும்.

இந்த ஏது முதல்வனைவிடச் சத்திவேறெனவும், முதல்வனே யெனவுங் கூறும் பிறர் பக்கத்தை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

நீக்கமின்றி நிற்றலை விட்டு நீங்காதிருப்பது சருவவியாபகம் என்பதற்குக்காட்டும் உதாரணம்.

எங்குமுள னென்றளவை யோன்றன் றிரண்டேன்னி
லெங்கு முளனன் றேவற்றேவனு—மங்க
ணவையவ னன்றில்லைப் போன்ஞேளிபோ லீச
னவையுடைமை யாளாநா மங்கு.

## சிற்றுரை.

எ—து, உ—ம். எ—னின் ஏதுவும் மேற்கோளுந் தம்முள் அவிநாபாவமாமாறு யாங்ஙன மென்னுங் கடாவை யாசங்கித்து அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ—ள்.) எங்கும் உளன் என்ற அளவை ஒன்று அன்று-யாங்கணும் அவையே தானே யென (மேற்கூறிய) அளவையானே (முதல்வன்) ஒரு பொருளாதல் கூடாது. (ஒன்றுயிற் கங்கைக் கரையினின்ற ஒரு மானுடனே காவிரிக்கரையினும் ஒருங்கு நிற்க மாட்டான். அதுபோல, ஒரு பொருள் ஓரிடத்துளதாதலன்றியாங் கணும் வியாபித்து நிற்கமாட்டா தென்பதாம்),— இரண்டு என்னில் எங்கும் உளன் அன்று—அற்றேல், முதல்வன் இருபொருளாய் நிற்குமெனக்கோடுமெனின, யாங்கணும் அவையே தானேயா

யுளனாதல் கூடாது. (தன்மாட்டே வேற்றுமை யுடையானுக்குப் பிற பொருள்களின்கண் வேற்றுமையின்றி வியாபித்து நிற்றல் சாலாதென்பதாம். அற்றேல், இவ்விரண்டோடு முரணுதலின் எங்குமுளனல்ல னெனக்கோடுமெனின்),—எவற்று எவனும் அங்கண் அவை அவன் அன்று இல்லை—எவ்விடங்களினுள்ள எத்திறப் பொருளுமாகிய அவ்விடத்து அவைகளெல்லாம் ("அகரவுயிரின்றேல் அக்கரங்களில்லை"யாமாறுபோல) அம்முதல்வனையின்றியமையாவாகலான் (எங்குமுளனல்ல னென்றல் பொருந்தாது. ஆகலான் எங்குமுளனல்லன் என்றல் பொருந்தாதென்பது குறிப்பெச்சம். அற்றேல், வேறு விடுக்குமாறென்னையெனின்),—ஈசன் பொன் ஒளிபோல்—எங்குமுளனாகிய முதல்வன் ஞாயிறும் ஒளியும்போல (ஒன்றுதற்கும் இரண்டாதற்கும் பொதுவாய்த் தாதான்மியத்தாற் சிவமுஞ் சத்தியுமென்றியைந்து நிற்கும். அற்றேல், பசுபாசங்களும் வியாபகமெனக்கோடலின் அவையும் இம்முறை பற்றி ஏகானேக மிரண்டுமின்றி முதல்வன்போலத் தத்தஞ் சத்திகளோடு தாதான்மியமாய் நிற்குமென்பது பெறப்படுதலான் முதல்வனோடு சமமாவான் செல்லுமெனின்),—அவை உடைமை (ஆம்) நாம் ஆள் ஆம் அங்கு—(அவ்வாறாயினும் முதல்வனது வியாபகத்தை நோக்கி வியாப்பியமாகலின்) அப்பாசங்கள் உடைமையாம்; பசுக்களாகிய நாம், அடிமையாவேம் அம்முதல்வன் மாட்டு எ-று.

அன்றெனப் பாடமோதுவாருமுளர்.

பாசங்கள் உடைமையாமாறும் பசுக்கள் அடிமையாமாறும் 'தாரகமா மத்தன்று ணிற்றல்' எ—ம், 'அதனி னீறலா வொன்று பல வாறே தொழும்பா கும்' எ—ம், மேற் பெறப்பட்டமையின், அவற்றை ஈண்டெடுத்துக்காட்டி ஆசங்கை நீக்கியவாறு.

என்றவென்னும் பெயரெச்சத்தகரம் விகாரத்தாற் றொக்கது. "புகழ்புரிந்தில்" என்புழிப்போல. அளவையானென ஆனுருபு விரித்துரைக்க.

ஒன்றன்று உளனன்று என்புழி ஒன்று உளனென்னுந் தருமிவாசகங்கள் ஆகுபெயரால் அத்தருமங்களின்மே னின்றனவாகலான் உளனென்பதும் அஃறிணை யொருமையோடு முடிந்தது.

அன்மை கூடாமைப்பொருட்டு.

எவற்றெவனுமென்பது ஏழாம் வேற்றுமைத்தொகை. அஃறிணைக்கண்வரும் எவனென்னும் வினாவினைக் குறிப்புச்சொல் ஈண்டுப் பெயர்த்தன்மைப்பட்டு எவனுமென எஞ்சாப் பொருண்மையுணர்த்தி நின்றது.

அன்றி யென்னும் வினையெச்சம் செய்யுளாகலின் அன்றெனத் திரிந்தது.

இன்மை ஈண்டு அமையாமைப்பொருட்டு.

பொன் ஆகுபெயர். ஒளி

ஆம் என்பது உடைமையோடு மியையும்.

பொன்னொளிபோ லீசனென்பது தொகையுவமமாகலிற் பொதுவியல்பு விரித்துரைக்கப்பட்டது.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) எங்கும் உளன் என்ற அளவை ஒன்று அன்று என்னில் எங்கும் உளன் அன்று எவற்று எவனும் அங்கண் அவை அவன் அன்று இல்லை ஈசன் பொன் ஒளிபோல் அவை உடைமை (ஆம்) நாம் ஆள் ஆம் அங்கு.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், எவ்விடத்தும் நீக்கமின்றி வியாபியாய் நிற்றலால் என்னும் ஏதுவும், சத்தியில் நீக்கமின்றி நிற்குமென்ற மேற்கோளும் தம்முள் விட்டுநீங்காமையாதல் எவ்வாறு கூடுமென்னும் வினாவை ஆசங்கித்து இம்மேற்கோளும் ஏதுவும் விட்டுநீங்காமையையுடையன என்பதை வலியுறுத்தியவாறும்.

(பொ - ரை.) எவ்விடத்தும் வியாபியாய் நிற்பனென மேற்கூறிய ஏதுவினால் முதல்வன் ஒருபொருளாதல் கூடாது. ஒரு பொருளாயின் கங்கைக்கரையில் நின்ற ஒரு மனுடனே காவிரிக்கரையினும் ஒரேசமயத்தில் நிற்கமாட்டான்: அதுபோல முதல்வன் ஒருபொருளாயின் ஓரிடத்திருத்தலேயன்றி எவ்விடத்தும் வியாபித்து நிற்கமாட்டான். ஆதலால் முதல்வன் இருபொருளாய் நிற்பனெனக் கொள்வோமெனின், அவ்வாறுகொண்டால் எவ்விடத்தும் வியாபித்துநிற்றல்கூடாது. ஏதனாலெனின், தன்னிடத்தே இருபொருளாய் நிற்கும் வேற்றுமையுள்ளபொழுது பிறபொருளோடு வேற்றுமையின்றி வியாபித்துநிற்றல் எவ்வாறுகூடும்? கூடாதென்றபடியாம். இவ்வாறு ஒரு பொருளாதலும் இருபொருளாதலும் ஒன்றோடொன்று முரணுதலால் முதல்வன் ஒருபொருளெனவும் எவ்விடத்தும் வியாபியல்லன் எனவுங் கொள்வேமென்னில், அதுவும் பொருந்தாது. ஏதனாலெனின்,

எவ்விடங்களினுமுள்ள எல்லாப்பொருள்களும் அகரவுயிரில்லையாயின் அக் கரங்களில்லாதவாறுபோல அம்முதல்வன் இல்லையாயின் இருக்கமாட்டா வாதலால் எவ்விடத்தும் வியாபியல்லன் என்றல் பொருந்தாது. ஆதலால் முடிபுதான் என்னையெனின், சூரியனும் அதன் ஒளியும் ஒன்றென்றுவது இரண்டென்றுவது பிரித்தறியவாராது வியாபித்துநிற்குமாறுபோல, முதல் வனும், சிவம் சத்தியென ஒன்றாதற்கும் இரண்டாதற்கும் பொதுவான தா தான்மியசம்பந்தத்தைப் பொருந்திச் சருவவியாபியாய் நிற்பன். அவ்வாறு யின், பசுபாசங்களும் வியாபகமெனக் கூறுதலால் அவையும் இம்முறை போலத் தத்தம் சத்திகளோடு தாதான்மியமாய் நிற்குமென்பது பெறப்படு மாதலின், முதல்வனோடு சமமென்று கூறலாமோவெனின், கூறலாகாது; எதனாலெனின், பசுபாசங்கள் வியாபகமாயினும் முதல்வனது வியாபகத் தைநோக்க வியாப்பியமாம். ஆதலால் அறிவில்லாத பாசங்கள் முதல்வ னுக்கு உடைமையும் சிற்றறிவுள்ள பசுக்களாகிய நாம் முதல்வனுக்கு அடி மையுமாவேம் எ - று.

(க - ரை.) முதல்வன் ஒருபொருளென்றும் இருபொருளென்றும் பிரித்தறியவாராது சிவம் சத்தியென்னும் இருதன்மையாய் எவற்றினும் வியாபித்து நிற்பன் என்பதாம்.

இச்சூத்திரத்து முதல் அதிகரணத்தில் முதல்வன் ஒருவனே எனக் கூறியிருக்கவும், இவ்விடத்தில் ஒருபொருளென்றல் கூடாதென்றுகூறிய கருத்தென்னையெனின், பல முதல்வர் அல்லர் ஒருவனேயென மேலே கூறப்பட்டது. இவ்விடத்தில் அம்முதல்வன் ஒரு தன்மையாயிருப்பனோ, இருதன்மையா யிருப்பனோ என்னுஞ் சந்தேகத்தை நீக்குதற்பொருட்டு ஒருதன்மையான பொருள் ஓரிடத்திற்றான் இருக்கமுடியுமாதலானும், இரு தன்மையானபொருள் இரண்டாகித் தம்முள் வேற்றுமை உடையதாயிருக்கு மாதலானும், அவ்விரண்டுமின்றிப் பொருளால் ஒன்றாயும் தன்மையால் இர ண்டாயும் சூரியனும் அதனொளியும்போல நிற்பன் எனக் கூறியவாறாம்.

செய்யுளின் இறுதியில் அங்கு என்றிருப்பதை அன்று எனப் பாட மோதுவாருமுளர். அவ்வாறு ஓதுங்கால், அன்றியே பாசங்கள் உடைமை யும் பசுக்கள் அடிமையும் என்பது பொருளாகக்கொள்க.

பாசங்கள் உடைமை என்பது முதற்சூத்திரத்து உ-ம் அதிகரணத்து உ-வது வெண்பாவில் 'தாரகமாம் அத்தன்று ணிற்றல்' எனக்கூறியதனாலும், பசுக் கள் அடிமையாமென்பது அச்சூத்திரத்து ௩-ம் அதிகரணத்து முதல் வெண் பாவில் 'அதனின் ஈறலா ஒன்றுபல வாறே தொழும்பாகும்' எனக் கூறிய தனாலும் பெறப்பட்டமையால் அவற்றை இவ்விடத்து எடுத்துககாட்டி அவை வியாபகமாயினும் முதல்வனை நோகக வியாப்பியமாதலின் சமமாகா வென ஆசங்கை நீக்கியவாறும்.

எங்கு முளனென்றளவை என்றதில் பெயரெச்சத்தைக்குறிக்கும் அகரம்தொக்குநின்றது. ஆதலால் என்ற அளவை எனப்பிரித்து உரை செய்யப்பட்டது. இதனைத் திருக்குறள் வாழ்க்கைத்துணைநலம் என்னும் அதிகாரத்தில் "புகழ்புரிந்தில்" என்புழிப்போலக் கொள்க. புகழ்புரிந்த இல் என்பது புகழ்புரிந்தில் என நின்றது.

அளவை என்பதில் ஆன் உருபு விரித்து அளவையானென உரை செய்யப்பட்டது.

ஒன்றன்று உளன் அன்று என்றவிடத்து, ஒன்று உளன் என்னும் தருமிவாசகங்கள் ஆகுபெயரால் ஒன்றுதல் உளனுதல் என்னும் அத்தருமங்களின்மேல் நின்றன. ஆதலால் உளனென்பது அன்று என்னும் அஃறிணை ஒருமையோடு முடிந்தது, தருமியென்பது தருமத்தை யுடையதாம். தருமம் குணம்; தருமி குணி. இவ்வாறு உளன் என்பதை உளனுதல் எனக் கொள்ளாக்கால் உளன் என்னும் உயர்திணை அன்று என்னும் அஃறிணை கொண்டு முடியாது.

ஒன்றன்று உளனன்று என்பதிலுள்ள அன்மை அவ்வாறிருக்க முடியாது என்னும் பொருளைக்குறித்து நின்றது. அவ்வளவேயன்றி ஒன்றல்லன் உளனல்லன் என்னும் பொருளைக்குறித்து நிற்கவில்லை

எவற்றெவனும் என்பதில் ஏழாம்வேற்றுமை உருபு தொக்கு நிற்றலால், எவற்று என்பதற்கு எவ்விடங்களினுள்ள என உரை செய்யப்பட்டது. இடம் ஏழாம் வேற்றுமை யுருபு.

எவன் என்பது அஃறிணையைக் குறித்து வினவுகின்ற வினைக்குறிப்புச்சொல். அதாவது, என் என்பது வினு; என்னுயிற்று ஆகின்றது ஆகும் எனக்காலங்காட்டாமையால் வினைக்குறிப்பு. இது அஃறிணைக்கண்வரும் என்பதைத் திருக்குறள் அறன்வலியுறுத்தல் என்னும் அதிகாரத்து முதலாவது செய்யுளில் "ஆக்கம் எவனோ" என்றவிடத்து எவன் என்னுஞ்சொல் ஆக்கமாகிய அஃறிணைக்கண் வந்தவாறு காண்க. இச்செய்யுளில் எவனென்னும் வினக்குறிப்புவினைச்சொல் பெயர்த்தன்மைப்பட்டு உம்மைபெற்று எவனும் என நின்று அவ்வும்மையால் பெயர்ச்சொல்லிற்குரிய எல்லாப் பொருளையும் உணர்த்திநின்றது. ஆதலால் எவனுமென்பதற்கு எத்திறப்பொருளுமென உரை செய்யப்பட்டது.

அவனன்றி யென்னும் வினையெச்சம் அவன் அன்று எனத்திரிந்து நின்றது. இது, திருக்குறள் வான்சிறப்பு செ. ரு-ல் "விண்ணின்று பொய்ப்பின்" என்றாற்போல.

அதற்கடுத்து நின்ற இல்லை யென்பது இவ்விடத்து அவனையின்றி இருத்தல் அமையாமையைக் குறித்து நின்றது.

பொன்னென்பது பொன்போன்ற ஞாயிற்றைக் குறித்தலால் ஆகு பெயர். ஆளாம் என்பதிலுள்ள ஆம், உடைமை என்பதனோடும் பொருந் தும். ஆதலால் ஆளாம் உடைமையாம் என உரை செய்யபபட்டது

பொன் ஒளிபோல் ஈசன் என்ற உவமானம் உவமேயம் இரண்டி னும், அவ்விரண்டற்கும் பொதுத்தன்மமாகிய பிரிக்க முடியாமை தொக்கு நின்றது. இவ்வாறு தொக்கு நிற்றல் தொகை உவமம் என்னும் அலங் காரம். அத்தொகையை விரித்து ஒன்றாதற்கும் இரண்டாதற்கும பொது வாய்த் தாதான்மியமாய் நிற்குமென உரை செய்யப்பட்டது.

## சிற்றுரை.

இவ்வதிகாரணத்தாற்போந்த தொகைப்பொருள், முதல்வன் வியாபகனாதலின் வியாபகப்பொருட்கு ஒன்றாய் நிற்றல் கூடாது; அது கூடாமைபற்றி இரண்டாய் நிற்பனெனின், வியாபகனாதல் கூடாது; வியாபியல்லனெனின், பசுபாசங்கள் அவனையின்றி யமை தல்கூடாது; ஆகலான், முதல்வனொருவனே ஞாயிறும் ஒளியும் போலச் சிவமுஞ் சத்தியுமெனத் தாதான்மியத்தால் இருதிறப் பட்டுச் சருவவியாபியாய்ப் பொதுமையினிற்பனெனச் சமவேத மாய் நிற்குமாறு தெளிவிக்கு முகத்தானே தாதான்மியசத்தியுண் மைக்குப் பிரமாணங் கூறியவாறு மென்றுணர்க. அஃதாமாறு தன்னை விளக்குவதூஉம் விடயங்களை விளக்குவதூஉந் தானேயாகிய ஞாயிறொன்றுதானே விடயங்களை விளக்குழிக் கதிரெனவுந் தன்னை விளக்குழிக் கதிரோனெனவுந் தாதான்மியத்தால் இரு திறப்பட்டியைந்துநிற்றல்போல, புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரையாய்த் தன்னியல்பினிற்பதூஉம், புறப்பொருளை நோக்கிநின்றுணர்த்துவதூஉமாகிய இருதன்மையையுடைய பேரறி வாய சைதன்னிய மொன்றே அங்ஙனம் புறப்பொருளை நோக்கி நிற்கு நிலையிற் சத்தியெனவும், புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரையாய் நிற்குநிலையிற் சிவமெனவுந் தாதான்மியத்தால் இருதிறப்பட்டியைந்துநிற்கு மென்றுணர்க.

இனி, தீயின் சத்தியொன்றுதானே சுடுதல் அடுதல் முதலிய தொழில்வேறுபாட்டால்சுடுஞ்சத்தி அடுஞ்சத்தியென்றற்றொடக் கத்துப் பலவேறுவகைப்படுமாறுபோல, சிவசத்தியொன்றேகாரிய வேறுபாட்டால் பரை ஆதி இச்சை ஞானம் கிரியையென்று ஐவ கைச்சத்திகளாயும். முறையே ஐந்தும் நான்கும் எட்டும் பதின்

மூன்றும் எட்டுமாகிய கூறுபாடுடைய ஈசானிமுதலிய ஐவகைச் சத்திகளாயும், ஆரணி சனனி முதலிய மூவகைச் சத்திகளாயும், நிவிர்த்தி பிரதிட்டை முதலிய ஐவகைச் சத்திகளாயும், வாமை சேட்டை முதலிய அட்டசத்திகளாயும், பராவாகீசுவரி அபராவாகீசுவரி மனோன்மணி மகேசை உமை திரு வாணி யென எழுவகைச் சிவபேதங்கட்கும் முறையே எழுவகைச் சத்திகளாயும், அத்தியான்மிகமெனப்படும் உன்மனை சமனை முதலிய கலைகளாயும், இன்னும் பல வேறு வகைப்பட்டு நிற்கும். அவ்வச் சத்திகளோடு புணர்ந்த சிவமும் அவ்வாறே பலவகைப் பெயர்பெற்று நிற்கும். அவ்வச் சத்திகட்கு இடமாய விந்துவும் அங்ஙனம் பலவேறு வகையான் விருத்திப்பட்டு அப்பெயர் பெறும். இவற்றினியல் பெல்லாம் ஆகமங்களுட் காண்க.

## விளக்கம்.

இவ்வதிகரணத்தாற் கூறிய தொகைப் பொருளாவது :—முதல்வன் வியாபகனாதலின் வியாபகப் பொருட்கு ஒரு தன்மையாய் நிற்றல் கூடாது; அது கூடாமை பற்றி இருதன்மையாய் நிற்பன் என்று கூறில் வியாபகனாதல் கூடாது; வியாபியல்லன் என்று கூறில் பசுபாசங்கள் அவனையின்றி இருத்தல் கூடாது; ஆதலால் முதல்வன் ஒருவனே சூரியனும் அதனொளியும்போல, சிவமுஞ் சத்தியுமெனத் தாதான்மியமாகிய ஒற்றுமையால் இருதிறப்பட்டு, சருவ வியாபியாய் ஒருதன்மை இருதன்மை என்னும் இரண்டற்கும் பொதுமையில் நிற்பன். அவ்வாறு சமவேதமாகிய சத்திசொரூபமாய் நிற்கும் முறைமையை அறிவிக்கும் முறையினாலேயே தாதான்மிய சத்தி உண்டென்பதற்குப் பிரமாணங் கூறியவாறு மாயிற்று என்றுணர்க.

தாதான்மிய சத்தி உண்டென்பது எவ்வாறு பெறப்பட்டதெனின், சூரியனாகிய தன்னை விளக்குவதும் விடயங்களை விளக்குவதும் சூரியனேயாம். அவ்வொரு சூரியனே விடயங்களை விளக்குமிடத்து ஒளியெனவும் தன்னை விளக்குமிடத்துச் சூரியனெனவும் தாதான்மியமாய் இருதிறப்பட்டு நிற்பன். அதுபோலப் புறப்பொருளை நோக்காது அறிவுமாத்திரையாய்த் தன்னியல்பில் நிற்பதுவும், புறப்பொருளாகிய பசுக்களை நோக்கி நின்று அறிவிப்பதுவுமாகிய இருதன்மையையுடைய பேரறிவாகிய சைதன்னிய மொன்றே மேற்கூறியவாறு புறப்பொருளை நோக்கி நிற்கு நிலையிற் சத்தியெனவும் புறப்பொருளை நோக்காது அறிவுமாத்திரையாய் நிற்கு நிலையிற் சிவமெனவும் இருதிறப்பட்டு நிற்குமாதலால் பிரிக்க முடியாமற் கலந்திருக்குந் தாதான்மிய சத்தி உண்டென்பது பெறப்பட்டவாறு காண்க.

இச் சிவசத்தி ஒன்றே விருத்தி பேதத்தாற் பலதிறப்படும். எவ்வா றெனின், தீயின் சத்தி ஒன்றுதானே சுடுதல் பாகம் பண்ணுதல் முதலிய தொழில் வேறுபட்டால், சுடுஞ்சத்தி பாகம் பண்ணுஞ்சத்தி முதலிய பல வேறு வகைப்படு மாறுபோல, சிவசத்திஒன்றே தொழில் வேறுபாட்டால் பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானச்சத்தி, கிரியாசத்தியென ஐவகைச் சத்திகளாயும்; ஈசானி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தியென்னும் ஐவகைச் சத்திகளாயும்; அவற்றுள், ஈசானியின் கூறுகிய சசுனி, அங்கதை, இட்டை மரீசி, சுவாலினியென்னும் ஐந்து சத்திகளாயும்; பூரணியின் கூறுகிய சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவிர்த்தியென்னும் நான்கு சத்திகளாயும்; ஆர்த்தியின் கூறுகிய தமை, மோகை, சயை, நிட்டை. மிருத்தியு, மாயை, பயை, சரை, யென்னும் எட்டுச் சத்திகளாயும்; வாமையின் கூறுகிய இரசை, இரட்சை, இரதி, பாலி, காமை, சம்மியமினி, கிரியை, புத்தி, காரி, தாத்திரி, பிராமணி, மோகினி, பவையென்னும் பதின் மூன்று சத்திகளாயும்; மூர்த்தி யின் கூறுகிய சித்தி, இருத்தி, தியதி, இலக்குமி, மேதை, காந்தி, சுவதை, திருதி என்னும் எட்டுச்சத்திகளாயும்; ஆரணி, செனனி, இரோதயத்திரி யென்னும் மூவகைச் சத்திகளாயும்; நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை, யென்னும் ஐவகைச் சத்திகளாயும்; வாமை, சேட்டை, இரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூத தமனி, என்னும் எட்டுச் சத்திகளாயும்; நாதம், விந்து, சதாசிவம், மகேசு வரன், உருத்திரன், விட்டுணு, பிரமன் என்னுஞ் சிவபேதம் ஏழற்கும், முறையே பரவாகீசுவரி, அபரவாகீசுவரி, மனோன்மணி, மகேசை, உமை, இலக்குமி, சரஸ்வதி என்னும் எழுவகைச் சத்திகளாயும்; அத்தியான்மிக மெனப்படும் உன்மனை, சமனை, வியாபினி, சத்தி, நாதாந்தம், நாதம், நிரோ தி, அர்த்தசந்திரம், விந்து, மகாரம், உகாரம், அகாரம் என்னும் பன்னிரண்டு கலைகளாயும்; இன்னும் பலவேறுவகைப்பட்டும் நிற்கும். அவ்வச்சத்திக ளோடுகூடிய சிவமும் அவ்வாறே பலவகைப் பெயர் பெற்று நிற்கும். அவ் வச்சத்திகட்கு இடமாகிய சுத்தமாயையும் அங்ஙனம் பலவேறு வகையால் விருத்திப்பட்டு அப்பெயர்பெறும். இவற்றின் இயல்பெல்லாம் ஆகமங்களுட் காண்க.

இச்சூத்திரத்தினாலும் அதிகரணங்களினாலும் கூறிய தொகைப்பொ ருள்:— முதற் சூத்திரத்தில் எடுத்துக்கொண்ட முதல்வன், உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நின்று, உயிர்கள் செய்த இருவினையினாலும், அவ்வினையை உயிருக்குக்கூட்டும் தனது சத்தியினாலும் அவ்வுயிர்கள் இற த்தல் பிறத்தல்களைப் பொருந்தும்வண்ணஞ் செய்வன் எனவிச்சூத்திரத்தாற் கூறப்பட்டது. படவே, முதல்வனும் உயிரும் ஒன்றேயென ஏகான்ம வாதிகளும், வேறெனமாத்துவரும், ஒன்றும்வேறுமானபொதுவெனப் பாஞ்சராத்திரிகளுங் கூற, முதலதிகரணத்தால் அவரை மறுத்து முதல்

வனும் உயிரும் ஒன்றும் வேறும் ஒன்றும்வேறுமானஉடனும் ஆகிய மூன்று தன்மையுமாய் நிற்கும் எனச் சாதிக்கப்பட்டது. படவே, அவ்வாறு நின்று உயிர்களுக்குப் புதுச்சிருட்டியைச் செய்யுங்கால் அம்முதல்வனுக்கு இருவினை மாயை முதலிய துணைக்காரணங்கள் வேண்டப்படா; படுமாயின் முதல்வனுடைய சுதந்திரத்திற்கும் அளவிலாற்றற்கும் இழுக்காய் முடியு மெனப் பரிணமவாதிகள்கூற, இரண்டாம் அதிகரணத்தால் அவரைமறுத்து வினையும் மாயையும் துணைக்காரணமாக வேண்டப்படுமென்பதும், அது கொண்டு முதல்வன் சுதந்திரத்திற்கிழுக்கில்லை யென்பதும், வினை சடமாத லால் உயிரைத் தானே வந்து கூடமாட்டாதென்பதும், உயிர் சிற்றறிவுடைய தால் தானே எடுக்காதென்பதும், முதல்வனே தனது சத்தியாற் கூட்டுவ னென்பதும் வினையும் மாயையும் ஆணவமும் அநாதிப்பொருளாய் முதல்வ னாற் காரியப்படுமென்பதும் சாதிக்கப்பட்டன. படவே, குடமுடைந்தவிடத் துக் குடாகாயம் ஆகாயத்தோடு கூடுமாறுபோல உடம்பு நீங்கியவிடத்து உயிர் பிரமத்தோடு கூடுமாதலால் உயிரின் பொருட்டுப் புதுச்சிருட்டி யுண் டென்றல் பொருந்தாதெனக்கிரீடாப்பிரமவாதிகள் கூற, மூன்றும் அதி கரணத்தால் அவரை மறுத்து இறந்த வுயிர் மீளப் பிறக்குமென்பதும் அவ் வாறு பிறக்கு மென்பதற்குப் பாம்பும் கனவும் யோகிகளும் உவமைகளா மென்பதும், குடாகாய உவமை சூக்குமதேகத்தை விட்டவிடத்து இறைவ னோடு ஒன்றுபட்டு நிற்பதற்கே கூறப்படுவதன்றித் தூல வுடலைவிட்டுப் போவதற்குக் கூறப்படுவதில்லை யென்பதும் சாதிக்கப்பட்டன. படவே, துணைக்காரணமாய் நின்று வினையைக் கூட்டுவிக்குமென மேற்கூறிய சத்தி யானது முதல்வனின் வேறெண மீமாஞ்சகரும், முதல்வனின் வேறன்று முதல்வனே யென நையாயிகரும் கூற, நான்காம் அதிகரணத்தால் அவரை மறுத்து முதல்வனுஞ் சத்தியும் பொருளால் ஒன்றாயும், தன்மையா லிரண் டாயும் நிற்றல் கூடுமெனச் சாதித்தவாறும்.

நான்காம் அதிகரணம் முற்றிற்று.

## இரண்டாஞ்சூத்திரம் முற்றிற்று.

---

## மூ ன் று ம் சூ த் தி ர ம்.

### பசு உண்மை.

உலகத் தோற்றத்திற்குத் துணைக்காரணமாகிய வினைமுதலியன உண்டென்று மேலைச்சூத்திரத்தாற் கூறி, மூன்றுஞ்சூத்திரத்தில் உலகப் பயனை அனுபவிக்கும் உயிர் உண்டென்று அநுமானப்பிரமாணத்தாற் கூறுகின்றார்.

உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி
லுண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா.

கருத்துரை.

எ-து சூ-ம் எ-னின் ஆன்மப் பிரகாசமுணர்த்துதனுதலிற்று.

## சிற்றுரை.

எ-து க-ரை எ-னின். சூத்திரக் கருத்துணர்த்துத னுதலிற்று.

(இ-ள்) மேல் அவையே தானே யென்றெடுத்துக்கொள்ளப் பட்ட உயிர் சூனியமுதலியவற்றுள் ஒன்றாகற்பாற்றென அவ்வம் மதம்பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்து உயிர் அவற்றிற்கு வேறாயுண்டென்பது கருதலளவையான் விளக்கி மேலைச்சூத்திரத் தின் உயிர்கண்மேல் வைத்தோதிய முதல்வனதிலக்கணத்தை வலி யுறுத்துதல் மூன்றாம்சூத்திரத்தின் கருத்து எ-று.

முதன்மையுடைமைபற்றி உலகிற்கு நிமித்தகாரணமாகிய பதிப்பொருளுண்டென்பது முதற் சூத்திரத்துட்கூறி, காரணமா தற்பொதுமையான் இயைபுடைமைநோக்கித் துணைக்காரணமுதற் காரணங்களது உண்மையும் அவற்றான் உலகங் காரியப்படுமாறும் இரண்டாஞ் சூத்திரத்துட் கூறி, அவற்றானாய பயன் கோடற்குரிய பசுக்களதுண்மைக்குப் பிரமாணம் ஈண்டுக்கூறுகின்றாரென் றுணர்க. இதனானே சூத்திர வியைபும் இனிது விளங்கும்.

## விளக்கம்.

இக்கருத்துரை என்ன சொல்லிற்றோவெனின், சூத்திரக்கருத்து இது வென்று சொல்லிற்று.

(இக்கருத்துரையின் பொருள்) இரண்டாஞ் சூத்திரத்தில் அவையே தானே என்று கூறியதனுள் அவையே என்பது உயிரைக் குறித்தலால் அவ் வுயிர் சூனிய முதலியவற்றுள் ஒன்றாகு மெனச் சூனியவாதி முதலியோர் கூறுவர். அவரவர் மதம்பற்றி அவ்வாறு கூறுதற்கு நிகழும் வினவை ஆசங்கித்துக்கொண்டு உயிர் சூனிய முதலியவற்றிற்கு வேறாய் உண்டென் பதை அநுமானப் பிரமாணத்தால் விளக்கி இரண்டாஞ் சூத்திரத்தில் உயிர்கண்மேல் வைத்தோதிய முதல்வனது இலக்கணத்தை வலியுறுத்து தல் இம் மூன்றாஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.

இரண்டாஞ் சூத்திரத்திற் கூறிய முதல்வனது இலக்கணம் உயிர்களு டன் ஒன்றாயும், வேறாயும், உடனாயும் நிற்றலேயாம். அச்சூத்திரத்தில் உயிரை அவையேயெனக் கூறினும், அது முதற் சூத்திரத்தில் அந்தமே என்றதிலுள்ள பிரிநிலை ஏகாரத்தாற் பெறப்பட்டதே யன்றி அநுமானத்

தாற் பெறப்பட்டதன்று; உயிர் உண்டென்பது அநுமானத்தாற் பெறப் பட்டாலன்றி அதன்மேல் வைத்துக் கூறும் முதல்வனது இலக்கணம் வலி யுடைத்தாகாது. ஆதலால், அநுமானப் பிரமாணத்தால் உயிர் உண்டென்று கூறும் இச்சூத்திரம் இரண்டாஞ் சூத்திரத்திற் கூறிய முதல்வனது இலக் கணத்தை வலியுறுத்தியவாறும்.

பதி பசு பாச மென்னு மூன்று பொருள்களுள் தலைமையா யிருத்தல் பற்றி உலகிற்கு நிமித்தகாரணமாகிய பதிப்பொருள் உண்டென்பது முதற் சூத்திரத்தாற்கூறி, காரணம் என்னும் பொதுமையால் நிமித்தகார ணத்தோடு சம்பந்தமுடைய துணைக்காரணமாகிய வினை முதற்காரணமாகிய மாயை என்னும் பாசங்களின் உண்மையும் அவற்றால் உலகந்தோன்றும் முறைமையும் இரண்டாஞ் சூத்திரத்தாற் கூறி, அப்பாசங்களினாலும் அவற் றின் காரியத்தினாலும் உண்டாகும் பயனைப் பொருந்துதற் குரிய பசுக்கள் உண்டென்பதற்குப் பிரமாணம் இம்மூன்றாஞ் சூத்திரத்தால் கூறுகின்றார். மேலைச் சூத்திரத்தில் உலகந்தோன்று முறைகூறி இச் சூத்திரத்தில் அவ் வுலகப்பயனை அனுபவிக்கும் உயிர் உண்டென்று கூறுதலால் சூத்திர இயைபு பெறப்பட்டது.

## சிற்றுரை.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு.

இலதென்றல் முதலிய அறுவகை யேதுக்களானும் மாயா வியந்திரதனுவென்னும் பெயரடையாற் பெறப்படும் குறிப்பேது வானும் இவற்றின் வேறாய் இவ்வுடம்பினுள் உயிரெனப்படுவ தொன்றுண்டு எ-று.

இது பூட்டுவிற் பொருள்கோள்.

உளதென்றது சாதியொருமை. அறிதலினென்றது ஐம்புல னோடுஞ் சென்றியையும்.

தனுவினுளான்மா வுளதென்றாரேனும், காணப்பட்ட உடம் பாற் காணப்படாத உயிருக்குண்மை கூறவேண்டுதலின் இவ் வுடம்பு சூனியமுதலியவற்றின் வேறாய ஆன்மாவையுடைத்தென உடம்பின்மேல் வைத்தோதுதல் ஆசிரியர் கருத்து. அற்றாகலி னன்றே பதியுண்மை உலகின்மேல் வைத்தோதியதூஉமென்பது.

ஈண்டு மேற்கோள் ஒன்றாயினும் எழுவகைமதங்களை வேறு வேறு மறுக்கு மேதுக்கள் ஏழாகலான் ஆன்மாவுளதென்னு மேற் கோள் அவற்றோடு தனித்தனி சென்றியைதலின் ஏழதிகரணத்த

தாயிற்று இச்சூத்திரமென்றுணர்க. இதனுட் கூறிய வேதுவே யேதுவும் மேற்கோளும் ஆகலான் ஏனைச் சூத்திரங்களுட்போல வேறேதுக் கூறவேண்டாமையின், இவை யேதுவாமாறும் இவற்றுன் மேற்கோளைச் சாதிக்குமாறும் இனிது விளக்கி வலியுறுத்துதன் மாத்திரையே ஈண்டுரைக்கப்படுவதெனக் கொள்க.

## விளக்கம்.

(இச்சூத்திரத்தின் பொழிப்புரை.) இலது என்றலினும், எனது உடல் என்றலினும், ஐம்புலன்களை அறிதலினும், ஐம்புலன்களும் ஒடுங்கின சொப்பனத்தை அறிதலினும், சுழுத்தியில் இன்பத்துன்ப அனுபவமும் உடம்பு சேட்டித்தலும் இல்லாமையானும், அறிவிக்க அறிதலானும், மாயாகாரியமாகிய உடல் முதலியவற்றிற்குக் குறிப்பேதுவால் வேறு வேறு பெயரிருத்தலானும், சூனியம், உடல், ஐம்புலன், சொப்பனம், சுழுத்தி, பிரமம், சமுதாயம் ஆகிய இவற்றின் வேருய் உடம்பினுள் உயிருண்டு எ-று.

முதற்சூத்திரத்தில் அந்தம் என்றதிலே தொக்கு நின்ற பிரிநிலை ஏகாரத்தினுலும் இரண்டாஞ் சூத்திரத்தில் அவையே என்றதனுலும் உயிர் உண்டென்பது பெறப்பட்டிருக்கவும், இச்சூத்திரத்தினுலும் உயிர் உண்டென்றுகூறுதல் கூறியதுகூற லாகாதோவெனின், ஆகாது. எதனுலெனின், அச்சூத்திரங்களில் நூற்பிரமாணத்தால் உயிர் உண்டென்றுகூறினுர்; முப்பொருளும் அநுமானத்தால் உண்டெனச் சாதிப்பது இந்நூற் கருத்தாதலால் இச்சூத்திரத்தில் அநுமானப் பிரமாணத்தால் உயிர் உண்டெனச் சாதிக்கின்றுர்; ஆதலின் என்க.

குறிப்பேதுவாவது ஏதுவைக் குறிப்பாக வுடையதாம். தநு என்பதற்கு அடையாக நின்ற மாயா வியந்திரம் என்பது குறிப்பேதுவை உடையதாகும். எவ்வாறெனின், மாயாகாரியங்களுக்கு வேறு வேறு பெயரிருத்தலால் உயிர்வேறு என்பது பொருள். இப்பொருளில் வேறு வேறு பெயரிருத்தலால் என்பது ஏது. அந்த ஏது விரியாமல் குறிப்பாக நின்றபடியால் குறிப்பேது எனபபட்டது. இந்த ஏதுவினுல் உயிர் உண்டென்று சித்திப்பது எவ்வாறெனின், உடம்பு முதலிய வற்றிற்கு வேறு வேறு பெயரிருத்தலால் ஆன்மா உடம்பு முதலியவற்றின் வேறு என்பது நன்கு விளங்கக்கிடத்தலான் என்க. இந்தக் குறிப்பேதுவினுல் அனைத்துங் கூடிய சமுதாயமே ஆன்மா வென்பாரை மறுத்தவாறும்.

இச்சூத்திரம் பூட்டுவிற் பொருள் கோள். அதாவது வில்லின் நுனியும் அடியும் நாணினுல் சம்பந்தமா யிருத்தல்போல, ஆன்மா வென்னும இறுதியும் உளது என்னுமுதலும் சம்பநதபபட்டு ஆன்மா வுளது என்னும பொருளைத் தந்து நிற்றலாம்

உளது என்றது ஆன்மாக்கள் பலவற்றையும் ஆன்மா வென்னுஞ் சாதியால் குறித்து நின்ற ஒருமை.

அறிதலின் என்றது ஐம்புலனோடும் சென்று பொருந்தி ஐம்புலனறிதலின் ஒடுக்கமறிதலின் எனப்படும்.

தனுவினுள் ஆன்மா உளது என்று கூறினாராயினும், இவ்வுடம்பு, சூனியமுதலியவற்றின் வேறாகிய ஆன்மாவை உடையது என உடம்பின் மேல் வைத்தோதுதல் ஆசிரியர் கருத்தாம். எதனாலெனின், உயிர் கண்ணாற் காணப்படும் பொருளன்று. அவ்வாறு காணப்படாத பொருள் உண்டென்று சாதிக்கவேண்டுமாயின் அநுமானப் பிரமாணத்தினாலேயே சாதிக்கவேண்டும். அநுமானப் பிரமாணமாவது காரியத்தைக்கொண்டு காரணம் உண்டென நிச்சயிப்பது. ஆதலால் காணப்படுகின்ற உடம்பின் போக்குவரத்தாகிய காரியத்தைக்கொண்டு இக்காரியங்களின் நிகழ்ச்சிக்குக் காரணம் உடல் என்றல் கூடாது; ஆதலின், காரணமாகிய உயிரை இவ்வுடம்பு உடையதாயிருக்கவேண்டும் என நிச்சயிக்கப்படுமாதலாலெனக. இவ்வாறு உடம்பின்மேல் வைத்து உயிர் உண்டென்று சாதிப்பதே ஆசிரியர் கருத்தென்பதை முதற் சூத்திரத்தில் உலகின்மேல் வைத்துப் பதி உண்டென்று கூறியவாற்றாலறிக.

இச்சூத்திரத்தில் ஆன்மாவுளது என்பதே மேற்கோள். அம்மேற்கோள் ஒன்றாயினும் ஆன்மாவைப்பற்றி வேறு வேறு கூறும் எழுவகை மதங்களை மறுக்கு முறையில் ஏதுக்கள் ஏழாயின. ஆதலால் ஆன்மா வுளது என்னும் மேற்கோள் அந்த ஏழு ஏதுக்களோடும் தனித்தனி சென்று பொருந்தி இச்சூத்திரம் ஏழு அதிகரணத்தை உடையதாயிற்று.

ஒவ்வொரு அதிகரணத்திற்கும் மேற்கோள் வேறு வேறு இல்லாமையால் ஏதுவே மேற்கோளாகவும் ஏதுவாகவும் அமைந்திருக்கின்றது. ஆகவே ஏனைய சூத்திரங்களில் மேற்கோளைச் சாதிக்கும் ஏது வேறு கூறினாற்போல வேறு ஏதுக் கூறவேண்டாதவாறாயிற்று. ஆதலால் இச்சூத்திரத்து மேற்கோளில் அடங்கியிருக்கும் ஏதுவே ஏதுவாம் என்பதையும் அந்த ஏதுவால் மேற்கோளைச் சாதிக்கும் முறைமையினையும் இனிது விளக்கி வலியுறுத்துவதாகிய பொழிப்புரைமாத்திரையே ஆறும் அதிகரணம்வரை நூலாசிரியரால் மேற்கோளுக்கடுக்க உரைக்கப்படுவதாகும். அதாவது மேற்கோள்கூறி அதற்கடுக்க அதன் பொழிப்புரை கூறப்படுமென்பதாம். பொழிப்புரைக்குப் பின்னர் ஏனைச்சூத்திரங்களிற்போல உதாரணங் கூறப்படும்.

# முதலதிகரணம்.

சூனியம் ஆன்மா அன்றெனக்கூறும்
மேற்கோள்.

ஈண்டு இலதென்றலின் ஆன்மா வுளதென்றது.

## சிற்றுரை.

எ-து மே-ள் எ-னின், சூனியான்மவாதி தேகான்மவாதி இந்திரியான்மவாதி, அந்தக்கரணான்மவாதி, சூக்குமதேகான்ம வாதி, பிராணான்மவாதி, விஞ்ஞானான்மவாதி, சமுகான்மவாதி என்னு மெண்மருள் அந்தக்கரணான்மவாதிகள் ஆன்மாவின திலக்கணங் கூறும்வழி, அநுவாதமுகத்தான் மறுக்கப்படுதலின் அவரை யொழித்து ஒழிந்த எழுவர் மதங்களையும் முறையே மறுத்து உயிருண்மை சாதிப்பான் றொடங்கி அவற்றுள் இது சூனியமே யான்மாவென மாத்துமிகர் கூறுங் கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ-ள். வெ-டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

இ—ள். ஈண்டு—இவ்வே முதிகரணத்துள் வைத்து இம் முதலதிகரணத்துள்,—இல தென்றலின்—இஃதான்மாவன்று இஃதான்மாவன்றென்று சொல்லும் பொருளுண்மையான்,—ஆன்மாவுளதென்றது—இதனின் வேறுபுயி ரெனப்படுவ தொன்றுண்டு எ-று.

ஆன்மாவில தென்றலி னென வருவித்துரைக்க.

## விளக்கம்.

இது சூத்திரத்தில் உள்ள இல தென்றலின் என்ற ஏதுவையும் ஆன்மா உளது என்னுந் துணி பொருளையும் சேர்த்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோ வெனின், சூனியமே ஆன்மா வெனவும், தேகமே ஆன்மா வெனவும், இந்திரியமே ஆன்மாவெனவும், அந்தக்கரணமே ஆன்மாவெனவும், சூக்கும தேகமே ஆன்மா வெனவும், பிராணனே ஆன்மாவெனவும், விஞ்ஞானமே ஆன்மாவெனவும், யாவுங்

கூடிய சமுதாயமே ஆன்மா வெனவும் கூறும் இவ் வெட்டு வாதிகளுள், அந் தக்கரணமே ஆன்மா வென்னும் வாதிகளை ஆன்மாவின் இலக்கணங் கூறு வதாகிய நான்காஞ் சூத்திரத்தில் அநுவாத முகத்தால் மறுக்கப்படும். ஆகவே அந்தக்கரணம் ஆன்மா என்னும் வாதி நீங்கிய ஏனைய எழுவர் மதங்களையும் முறையே இச் சூத்திரத்தில் மறுத்து உயிர் உண்டென்று சாதிக்கத் தொட ங்கி அவ்வேழு மதவாதிகளுள் இம்முதலதிகரணத்தில் சூனியமே ஆன்மா வென்னும் மாத்துமிகர் கூறும் வினவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற் கூற்றைப்பதச் சேதஞ் செய்து சூனியத்தின் வேறாய் ஆன்மா உண்டெனக் கூறியவாறும்.

(இம்மேற்கோளின் பொருள்.) இது ஆன்மா அன்று இது ஆன்மா அன்று என உணரும்பொருள் ஒன்று உண்டாமாதலால், அன்றென்றுஅறி யப்படுவனவற்றின் வேறாய் அவ்வாறு அறியும் ஆன்மா ஒன்றுண்டு எ-று.

ஆன்மா என்னுஞ் சொல் வருவித்து ஆன்மா இலதென்றலின் என உரைக்க. உரையும் அவ்வாறு செய்யப்பட்டது.

இம் மேற்கோளின் பொருளை விளக்குவதாகிய நூலாசிரியர்

பொழிப்புரை.

எவற்றினையும் அன்றன் றெனவிட்டு ஆன்மா இலதேன்று நிற்பது உளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.

## சிற்றுரை.

எ—து பொ—ரை எ--னின், ஆன்மா இல தென்றலைபற்றி அஃதுண் டெனக்கோடல் முயற்கோடு இல்லை யென்னு மேது வால் அஃதுண் டெனச் சாதித்தலோ டொக்கும் என்னுங் கடா வை யாசங்கித்து அதன்றுற்பரிய முணர்த்துதனுதலிற்று.

(இ—ள்.) ஆன்மா இல தென்னுஞ் சூனியான்ம வாதிகளும் இல்லையென வாளா கூறுதலமையாமையின் உடல்பொறி விடய மனத்தினையும் முறையானே இஃதான்மா வன்று இஃதான்மா வன்றென ஒரோ வொன்றாகக் கழித்து இவ்வாறாகலின் ஆன்மா வென்பது சூனிய மென்று அங்ஙனங் கூறுப்வாகலான் அவற்றை ஒரோ வொன்றாகவிட்டு அங்ஙனங் கூறிக் கொண்டு நிற்பதோ ரறிவுண்மையின் அவ்வறிவே மேல் அவையே தானேயா மென்ப பதனுள் ஆகம வளவையாற் சாதித்துப் போந்த ஆன்மா வென்ற வாறும். ஈண்டில தென்றலின் ஆன்மா வுளதென மேற்கொண் டது எ-று.

அங்ஙன மறியு மறிவுஞ் சூனியமே யெனின், அஃது என்னை யீன்றாண் மலடி என்பதனோ டொக்கு மென் றொழிக வென்பது கருத்து.

இன்மை ஈண்டுச் சூனியப்பொருட்டு. சூனியமாவது உள்ளது மன்று இல்லது மன்று இரண்டுமாவது மன்று வேறு மன்றெனப் படும் பாழ்.

ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

## விளக்கம்.

இப்பொழிப்புரை என்ன சொல்லிற்றோ வெனின், ஆன்மா இல்லை என்றதே கொண்டு ஆன்மா வுண்டெனக் கொள்ளுதல் முயலுக்குக்கோடு இல்லை என்றது கொண்டு கோடு உண்டெனச் சாதித்தலோடு ஒக்கும் என் பார் வினவை ஆசங்கித்துக் கொண்டு இல தென்றலின் தாத்பரியங் கூறி ஆன்மா வுளதெனச் சாதித்த வாறும்.

(இப்பொழிப் புரையின் பொருள்.) சூனியமே ஆன்மா வென்று கூறும் சூனிய ஆன்மவாதிகளும் முயலுக்குக் கொம்பு இல்லை என்பது போல் சும்மா சொல்லவில்லை. அதாவது முயலினிடத்துக் கொம்பில்லை யென்பது கண்டு சொல்லப்படுவதாம். அதுபோல ஆன்மா இல்லை என் பது கண்டு அது இல்லை யென்று சொல்லாமல் உடல் பொறி முதலிய வற்றை ஆராய்ந்து இஃது ஆன்மா வன்று இஃது ஆன்மா வன்று என ஒவ் வொன்றாகக்கழித்து இனி இவற்றின் வேறாய் ஒன்றுங் காணப்படாமை யால் சூனியமே ஆன்மா வென்பர். ஒவ்வொன்றாகவிட்டு நீங்கியும் நீங்கிய பின்னர் ஒன்றுங் காணவில்லை என்று அறியும் அறிவு ஒன்றுண்டு. அவ்வறிவே இரண்டாஞ் சூத்திரத்துள் அவையே யென்பதனாற் சாதித்த ஆன்மாவாகும். ஆதலால் ஈண்டு இல தென்றலின் ஆன்மா உளதென மேற்கோள் கூறியது எ-று.

அவ்வாறு ஒன்றுங் காணவில்லையென அறியும் அறிவும் சூனியமே என்று கூறின், அவ்வாறு கூறுதல் என்னை ஈன்றவள் மலடி என்பதனோடு ஒக்கும். ஆதலால் அது பொருந்தாது. இவ்வதிகரணத்தில் இலது என்று கூறியது சூனியத்தைக் குறித்து நின்றது.

சூனியமாவது உள்ளது மன்று, இல்லது மன்று, உள்ளது மில்லது மன்று, உள்ளதும் இல்லது மாகிய அவற்றின் வேறு மன்று எனப்படும் வெறும்பாழ் என்பதாம்.

அதுவே என்றதிலுள்ள ஏகாரம் சூனியத்தைப் பிரித்தமையின் பிரிநிலை.

சூனியத்தின் வேறாய் ஆன்மா உண்டென்பதற்குக் காட்டும்
உதாரணம்.

அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்செழுத்தாய்
நின்றேன் றுளததுவே நீயனைத்து—நின்றின்று
தர்ப்பணம்போற் காட்டலாற் சார்மாயை நீயல்லை
தற்பரமு மல்லை தனி.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், அவ்வறிவை உடல்பொறி விடய முத லியவற்றின் வேறாகப் பிரித்துக்காணுமாறும அதுவே உயிராமா றுந் தெரித்துணர்த்தி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

(இ—ள்.) அனைத்தும் நின்று—உடல் பொறி விடய முதலிய அனைத்தினும் அதுவது தானாகநின்று,—அன்று அன்று என விட் டு—(முறையானே இது நானன்று இதுநானன்றென ஒரோவொன் றாகக் கண்டு நீக்கியவழி,—அஞ்செழுத்தாய் ஒன்று நின்றுளது— (அவ்விடத்து) அகாமுதலிய சூக்கும பஞ்சாக்கர ரூபமாயறிந்து வந்ததோரறிவு நிலைபெற்றுளதன்றே.—அதுவே நீ—(அதுவுநா னன்றெனக் கழிப்பின் அங்ஙனங்கழித்த உணர்வு வேறுண்டெ னப்பட்டு மேலும் வரம்பின்றி யோடுமாகலிற் சூக்குமபஞ்சாக்கர ரூபமாய் நின்றறிந்துவந்த) அவ்வறிவுதானே நீயென்பதறிவாயாக. (அற்றேல், மாயேயமும் சிவமுமுள வென்பது மேலைச்சூத்திரங் களாற் சாதிக்கப்பட்டமையின் அவையே அவ்வறிவினையு மறிந்து நீக்குமெனவமையுமாகலான் வரம்பின்றியோடுமாறில்லையா லெனின்,)—சார்மாயை—நின்னாற் சாரப்பட்ட மாயை,—அனைத் தும் நின்று இன்று தர்ப்பணம்போல் காட்டலான் நீ அல்லை—நில முதலிய காரியமனைத்துமாய் நின்னொடு விரவி நின்று இப்பெத்த காலத்துக் கண்ணுக்குக் கண்ணாடிபோல் உனக்கறிவை விளக்கி நிற்றன் மாத்திரையே யன்றி அறிவதன்றாகலான் நீ அம்மாயை யல்லை, தற்பரமும் அல்லை—(மாயையான் விளங்கி யறியும் நீ)அதற் கு அதீதமாகிய சிவமுமல்லை,—தனி—அவற்றின் வேறு எ—று.

விட்டவழி யென்பது விட்டெனத்திரிந்து நின்றது.

அவ்வறிவாவது இது வென்றுணர்த்துவார் அன்றன்றென நின்றனைத்தும் விட்டவழியென ஏதுப்பொருளை அநுவதித்து அஞ்செழுத்தா யொன்று நின்றுளதென அடையாளங்கூறினார். அஞ்செழுத்தாய் நின்றறியுமாறு வருகின்ற சூத்திரத்துட் பெறப் படும இதற்குப் பிறரெல்லாங் கூறியது கூறலென்னும் வழுப் படமேலு மோரினை பின்றி யுரைத்தார்.

அனைத்து நின்றென்புழி முன்னர்க் கண்ணுரும்பும் பின்னர் ஆக்கச்சொல்லுந் தந்துரைக்க. ஏகாரந் தேற்றம். தற்பரமென்றது குறிப்பேதுவாய் நின்றபெயர்.

அனேத்து நின்றின்று தர்ப்பணம்போற் காட்டலால் சார் மாயை நீயல்லை தற்பரமுமல்லை தனியென்றதனேனை வருகின்ற அதிகாணங்களுக்கெல்லாந் தோற்றுவாய் செய்தவாறுமாயிற்று.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) அனேத்தும் நின்று அன்று அன்று எனவிட்டு அஞ்செழுத்தாய் ஒன்று நின்றுளது அதுவே நீ சார்மாயை அனேத்தும் நின்று இன்று தர்ப்பணம்போல் காட்டலால் நீயல்லை தற்பரமு மல்லை தனி.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், சூனியமென்று உணரும் அறிவை உடல்பொறி விடயமுதலியவற்றின் வேறாகப் பிரித்துக் காணும் முறையினேயும் அவ்வறிவே உயிரெனப்படும் என்பதனேயும் விளக்கிக் காட்டிச் சூனியத்தின் வேறாய் ஆன்மா உண்டென மேற்கூறியதனை வலியுறுத்தியவாறும்.

(பொ - ரை.) உடல்பொறி விடயம் முதலியவற்றோடு கூடி அதுஅது தானாக நின்று பின்னர் அவற்றை இது நானன்று இது நானன்றென ஒவ்வொன்றாகக்கண்டு நீக்கியவிடத்து அவ்வாறு நீக்கியதாயும் அகாமுதலிய சூக்கும பஞ்சாக்கரரூபமாய் நின்று அறிந்துவந்ததாயுமுள்ள ஓர் அறிவு நிலைபெற்றிருக்கும். அவ்வறிவே ஆன்மாவாகிய நீ. அவ்வறிவும் நான் அன்றென நீக்கின் அவ்வாறு நீக்கும் அறிவு வேறுண்டெனப்பட்டு மேலும் அவ்வாறே வரம்பின்றி ஓடும். ஆதலால் சூக்கும பஞ்சாக்கரரூபமாய் நின்று உடல்பொறி முதலியவற்றை அறிந்து வந்த அவ்வறிவுதானே நீயென அறிவாயாக. மாயாகாரியமும் சிவமும் உளவென மேல் இரண்டு சூத்திரங்களால் சாதிக்கப்பட்டமையால் அம்மாயாகாரியமும் சிவமுமே பஞ்சாக்கரரூபமாய் நின்ற அவ்வறிவினேயும் அறிந்து நீக்குமென்றல் கூடுமாதலால் வரம்பின்றி ஓடுமாறில்லை என்றுசொல்வாயாயின் அது பொருந்தாது. எதனுலெனின், உன்னால் பொருந்தப்பட்ட மாயையானது நிலமுதலிய காரியங்களாய் நின்னொடு விரவிநின்று கண்ணுக்குத் துணையாய்நின்று விளக்குங் கண்ணுடிபோல் இந்த அஞ்ஞானகாலத்தில் உனக்கு அறிவை விளக்கி நிற்றல் மாத்திரையேயன்றி அம்மாயை தானே ஒன்றையும் அறிவதில்லை. ஆதலால் நீ மாயையன்று, மாயாகாரியத்தால் அறிவு விளங்கப்பெற்று அறியுந் தன்மையுடைய நீ அவ்வறிவுக்கு அதீதமாகிய சிவமும் அன்று ஆதலாலென்க. ஆகவே மாயை சிவமென்னும் இரண்டின் வேறுவாய். எ-று.

(க-ரை) உடல் முதலியவற்றை நான் அன்றென அறிந்து நீக்கியவிடத்து அவ்வாறு அறிந்து நீக்கிய அறிவே நீ. அவ்வறிவு மாயையுமன்று சிவமுமன்று என்பதாம்.

சூக்கும பஞ்சாக்கரமாவது, அகரம், உகரம், மகரம், நாதம், விந்து என்பன. அனைத்தும் விட்டவழி என்றிருக்கவேண்டுவது விட்டு எனத்திரிந்து நின்றது. ஆதலால் நீக்கியவழி என உரை செய்யப்பட்டது.

நீக்கியவிடத்து விளங்கும் அவ்வறிவு இது வென்று உணர்த்தவேண்டி அன்று அன்று என நின்று அனைத்தும் விட்டவழியென, இலதென்றலின் என்ற எதுப்பொருளை அநுவதித்து அஞ்செழுத்தாய் ஒன்றுநின்றுளதென அடையாளங் கூறினர். அதாவது இலதென்றலின் என்ற ஏதுவை மீட்டுங் கூறவேண்டாமாயினும் இன்னசெயலுடைய அறிவென்றுணர்த்த வேண்டி உடல்பொறி முதலியவற்றை நீக்கிநின்ற அறிவு என ஏதுவை அநுவதித்ததாம். அவ்வறிவிற்கு அஞ்செழுத்தை அடையாளமாகக் கூறினர். அஞ்செழுத்தாய் ஆன்மாநின்று அறியும் முறைமையை வருகின்ற நான்காஞ் சூத்திரத்திற் கூறபபடுமாதலால் அவ்விடத்துக் காண்க.

அன்று அன்று என நின்று அனைத்தும்விட்டு என்பதற்குப் பிறவெல்லாம் மேற்கோளுக்குப் போலவே கூறியது கூறலென்னும் வழுப்படவும் மேலுங் கூறியதற்குச் சம்பந்தமின்றியும் உரைத்தார்.

அனைத்தும் நின்று என்றது இருமுறைவந்திருக்கின்றது. அவற்றுள், முதலாவது அனைத்தும் நின்று என்றதனோடு கண்ணுருபும், இரண்டாவது அனைத்தும் நின்று என்றதனோடு ஆக்கச்சொல்லும் கூட்டி உரைக்க. ஆதலால் கண்ணுருபு கூட்டி அனைத்தினும் எனவும் ஆக்கச்சொற்கூட்டி அனைத்துமாய் எனவும் உரை செய்யப்பட்டது.

அதுவே நீ என்றதிலுள்ள ஏகாரம் ஐயமறுத்தலின் தேற்றம்.

தற்பரமென்றது ஆன்மாவாகிய தனக்கு அதீதமாய் நிற்றலால் அதீதமாகிய சிவம் என்னும் பொருளில் நிற்றலின் குறிப்பேதுவாய் நின்ற பெயர். தன் - ஆன்மா. பரம் - அதீதம். ஆதலால் தற்பரமுமல்லை யென்பதற்கு அதீதமாகிய சிவமுமல்லை என உரை செய்யப்பட்டது.

அனைத்தும் நின்று இன்று தர்ப்பணம்போற் காட்டலால் சார்மாயை நீயல்லை யென்றதனுல் உ, ங, ச, ரு அதிகாரணங்கட்கும், தற்பரமும் அல்லை என்றதனுல் கூ-ம். அதிகரணத்திற்கும், தனி என்றதனுல் எ-ம். அதிகரணத்திற்கும் தோற்றுவாய் செய்தவாறுமாயிற்று.

இவ்வதிகரணத்தில் ஆன்மாச் சூனியத்தின் வேறென்பது தன்றுற் கூறப்படும்பொருள். சூனியமோ வேறோ என்பது ஐயப்பாடு. சூனியமே என்பது பிறர்பக்கம். இவ்வாறு கூறுவோர் மாத்துமிகர். இவரை மறுத்துச் சூனியத்தின் வேறாய் ஆன்மா உண்டெனச் சாதித்தவாறும்.

முதலதிகரணம் முற்றிற்று.



# இரண்டாம் அதிகரணம்.



உடம்பு ஆன்மா அன்றெனக் கூறும்
மேற்கோள்.

இனி எனதுடலென்றலின் ஆன்மா வுளதென்றது.

## சிற்றுரை.

எ-து மே-ள் எ-னின், அவ்வறிவு உடம்பின்கணன்றி நிகழக் காணாமையானும் நானுணுகினேன் பருத்தேனென உடம்பினையே நானென்று வழங்கக் காண்டலானும் உடம்பே யான்மா வெனத் தேகான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட ணுதலிற்று.

இ—ள். வெ—டை.

### சுப்பிரமணியதேசிகர் உரை.

இ—ள். எனதுட லென்றலின்—நான் பருத்தேன் சிறுத்தேன் கரியேன் மனிதன் பார்ப்பானென உடம்பின் குண விசேடங்களை உபசாரத்தால் உயிருக்கேற்றி வழங்கினும் யான் உடம்பு யான் கை யான் காலென உடம்பை அவ்வாறு வழங்குவாரின்றி என தென வேற்றுமைப்படவே யாவரும் வழங்கக்காண்டலின், அத னால்,—ஆன்மா வுளதென்றது—இவ்வுடம்பின் வேறாய் உயிரெனப் படுவதொன்றுண்டு எ—று.

நான் பருத்தேன் சிறுத்தேன் கரியேன் மனிதன் பார்ப்பா னென உடம்பின் குணவிசேடங்களை உபசாரத்தால் உயிருக் கேற்றி வழங்கினும் யானுடம்பு யான்கை யான்கால் எனவுடம்பை அவ்வாறு வழங்குவாரின்றி எனதென வேற்றுமைப்படவே யாவ ரும் வழங்கக்காண்டலின் அதுவே உயிர் வேறுண்டென்பதனை அறிவுறுக்குமென அவன் வழங்குமுறையே பற்றி அவனை மறுத்த வாறு.

## விளக்கம்.

இது சூத்திரத்திலுள்ள எனதுட லென்றலின் என்ற ஏதுவையும் ஆன்மாவுளது என்னுந் துணிபொருளையுஞ் சேர்த்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றேவெனின், 'மேற்கூறியவாறு சூனியத்தை அறியும் அறிவு உடம்பினிடத்து நிகழ்கின்றதேயன்றி உடம்பைவிட்டு நிகழக்காணவில்லை; அன்றியும் நான் நுணுகினேன், நான் பருத்தேன் என உடம்பினையே நானென்று சொல்லக் காண்கின்றோம். ஆதலால் உடம்பே ஆன்மாவெனத் தேகான்மவாதிகள் கூறுவர். இவர் கூற்றை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து உடம்பின் வேறாய் ஆன்மா உளதெனக் கூறியவாறும்.

(இம்மேற்கோளின் பொருள்.) நான் பருத்தேன் நான் சிறுத்தேன் நான் கரியேன் நான் மனிதன் நான் பார்ப்பான் எனப் பருத்தல் முதலிய உடம்பின் குண விசேடங்கள் உபசாரத்தால் உயிருக்கேற்றி வழங்கப்பட்டு வருகின்றன. வரினும் யான் உடம்பு யான்கை யான்கால் என வழங்கப்படுதலில்லை. என் உடம்பு என வேற்றுமைப்படவே யாவரும் வழங்கக்காண்டலின், அவ்வாறு வழங்கும் அதனால் இவ்வுடம்பின் வேறாய் உயிரெனப்படுவது ஒன்றுண்டு எ-று.

என் உடம்பு என வேற்றுமைப்படக் கூறும் அதுவே உடம்பின் வேறாய் உயிர் உண்டென்பதனை அறிவுறுத்துமென அவன் கூறும் சொல்லைக் கொண்டே அவனை மறுத்தவாறு காண்க.

இம்மேற்கோளின் பொருளை விளக்குவதாகிய நூலாசிரியர்

பொழிப்புரை.

என்பதி என்மனை யென்றாற்போல என்கை என்காலென நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது.

## சிற்றுரை.

எ-து பொ-ரை எ—னின், எனதுடலென்பது பிறிதின்கிழமைப்பொருள் படாது தலைமாத்திரையாய் நிற்கு மிராகுவை இராகுவினது தலை யென்று வழங்குமாறுபோல அபேதம் பற்றியே வழங்கப்படுமென அமையு மென்னுங்கடாவை யாசங்கித்து அதன்றாற்பரிய முணர்த்துத னுதலிற்று.

(இ-ள்.) இராகுவினது தலையென்றாற் போல்வன சிறு பான்மை வழக்க மாகலின் ஆண்டொற்றுமைப் பொருள் கோடலமையும். ஈண்டவ்வாறன்றி என்பதி என் மனைவி என் பொருளென்று வழங்குமாறுபோல என்கை என்கால் என்கண் என்செவி என் பொறி என் பிராணன் என்னறிவெனப் பல வாற்றானும் பெரும்பாலும் உலகத்து வழங்கக் காண்டலின் இவ்வழக்க மிகுதிப்பாடு

பிறிதின்கிழமைப்பொருட்கணன்றி வாராமையான் அங்ஙனங் கூறிக்கொண்டு நிற்கும் பொருள் வேறொன்றுண்டென்பது பெறப் படுதலின் அதுவே மேலுரையளவைபற்றிச் சாதித்த ஆன்மா வென்ற வாறும். எனதுட லென்றலின் ஆன்மா வுளதென மேற் கொண்ட தென்க.

## விளக்கம்.

இப் பொழிப்புரை என்ன சொல்லிற்றோ வெனின், என்னுடல் என் பதனுல் உடலின் வேருய் ஒருபொருளுண் டென்றல் பொருந்தாது. உட லின்றித் தலைமட்டும் தனித்து நிற்கும் இராகுவை இராகுவினுடைய தலை யென்று வழங்கப்படுகின்றது. ஒற்றுமையினுல் உடல் இருப்பதுபோல அவ்வாறு வழங்கப்படினும் இராகுவிற்கு உடல்கிடையாது. அதுபோலப் பிறிதின்கிழமைப்பொருள்பட என்னுடல் என்று வழங்கப்படுவதும் ஒற்று மைபற்றியேயாம். அதுகொண்டு உடலின்வேருய் என் என்னுஞ் சொல் லுக்குப் பொருள் ஒன்றுண்டு, அது ஆன்மாவென்றல் பொருந்தாதென்பார் கூற்றை ஆசங்கித்துக்கொண்டு எனதுடலென்றலின் தாத்பரியம் இது வெனக் கூறியவாறும்.

(இப்பொழிப்புரையின் பொருள்.) இராகுவினதுதலை என்றதுபோ ன்ற உவமை சிறுபான்மை வழங்கப்படும். ஆதலால் அது பொருந்தாது. என்வீடு என்மனைவி என்றாற்போலப் பெரும்பாலும் தன்னின் வேருன பொருளையே எனதென்னுஞ் சொல்லால் வழங்கக்காண்டலால், என்னுடல் என்கை என்கால் என்பிராணன் என்றது கொண்டு அவற்றின் வேருய் ஒன்றுண்டு. அதுவே இரண்டாஞ்சூத்திரத்தில் ஆகமப் பிரமாணம்பற்றி அவையே எனக் கூறிய ஆன்மாவாகும். ஆதலால், எனதுடல் என்றலின் ஆன்மா உளது என மேற்கோள் கூறியது எ—று.

உடலின்வேருய் ஆன்மா உண்டென்பதற்குக் காட்டும்
உதாரணம்.

எனதென்ற மாட்டி னெனதலா தென்று
துனதலா துன்கைகால் யாக்கை—யெனதென்று
மென்னறிவ தென்று முரைத்துநீ நிற்றிகா
ணுன்னிலவை வேரு முணர்.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், பதி மனைவிமுதலிய பொருள்கள் தம் மின் வேருதல் கண்டு பிறிதின்கிழமைப்பொருள்பட எனதென் றாற்போலன்றிக் கை கான்முதலியவற்றைத் தற்கிழமைப்பொருள்

பட எனதென்று கூறிநிற்றலின், அவ்விருவேறு மொழியுந் தம்மு ளொக்குமாறென்னை யென்னுங் கடாவை யாசங்கித்து அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்.) எனது அலாது என்னுது எனது என்றமாட்டின்—(நீ உலகாயதநூல் கேட்கு முன்னெல்லாம் பதி மனைவி முதலிய புறப்பொருளையே உயிரெனக்கொண்டு மயங்கி நின்றாயன்றே, அக் காலத்து அவற்றை) எனதன்றென வேறுகாணுது தனித்தனி எனதென்றே தற்கிழமைப்பொருளாகக் கூறிக்கொண்டு நின்றாற் போல,—உனது அலாது உன் கை கால் யாக்கை எனது என்றும் என் அறிவது என்றும் உரைத்து நீ நிற்றிகாண்—உனதன்றாகிய உன் கை கால் யாக்கைகளைத் தனித்தனி எனதென்றும் அங்ஙன மறிந்த பாசவறிவை என்னறிவதென்றும் தற்கிழமைப்பொருளா கக் கூறிக்கொண்டு நீயொருபொருள் வேறுநிற்கின்றாய் காண்,— உன்னில்—(உலகாயத நூல் ஆராய்ந்த பின்னர்ப் பதிமனைவி முத லிய பொருள்கள் உனக்கு வேறுதல் கண்டாற் போலக் கைகால் முதலியவற்றினியல்புகளையும் ஏதுக்கண் முதலியவற்றான்) ஆரா ய்ந்து பார்த்தியாயின்,—அவை வேறும் உணர்—அக்கைகால் முதலியன உனக்கு அன்னியமாம் அதனை யறிவாயாக எ-று.

இன் உவமவுருபு.

உனதலா தென்பதனைக் கை கால் யாக்கைகளோடு தனித்தனி கூட்டுக.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) எனது அலாது என்னுது எனது என்ற மாட்டின் உனது அலாது உன் கை கால் யாக்கை எனது என்றும் என் அறிவது என்றும் உரைத்து நீ நிற்றிகாண் உன்னில் அவை வேறும் உணர்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோவெனின், வீடு முதலிய பொருள்கள் தம்மின்வேறாய் இருத்தலைக் கண்டு என் வீடு என் மனைவி என்று கூறப்படும். அவ்வாறு தம்மின் வேறல்லாத கைகால் முதலிய வற்றை என் கை என் காலெனக் கூறுவதுமட்டு மன்றி, நான் கொடுத் தேன் நான் அடித்தேன் நான் நடந்தேன் என அவற்றின் தொழில்கள் தன் தொழில்களாக ஒற்றுமைப்பொருள் படவுங் கூறப்படுகின்றன. வீடு இடிந்தால் நான் இடிந்தேனென்றாவது மனைவி மாண்டால் நான் மாண் டேனென்றாவது கூறுவதில்லை. ஆதலால் வீடு முதலியவற்றை என

தென்று கூறுதலும் கைகால் முதலியவற்றை என தென்று கூறுதலுமாகிய இவ்விருவகை மொழிகளும் தம்முள் ஒத்தல் எவ்வாறு கூடும் என்னும் வினுவை ஆசங்கித்துக்கொண்டு ஒக்குமெனக் கூறி உடலின்வேருய் ஆன்மாவுண்டென்பதை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) கண்ணாற் காணப்படும் உலகமும் உடலுமே யன்றி இவ் விரண்டின்வேருய்க் கடவுளும் உயிரும் இல்லையெனவும், அவ்விரண்டனுள் உடலே உயிரெனவும், அவ்வுடலாகிய உயிருக்கு உலகம் அநுபவிக்கப்படும் பொருளெனவும் கூறுவர் உலகாயதர். இவர் கொள்கை உலகாயதர் கொள்கை யெனவும் இவ்வாறு கூறும் நூல் உலகாயத நூலெனவுங் கூறப் படும். இவ்வுலகாயதநூலை அறிவதற்கு முன்னர் உலகப் பொருள்களாகிய வீடுமுதலிய பொருள்களையும் உயிரெனவே எண்ணி வீடுகெட்டால் நீ கெட்டதுபோலவும், மனைவி மாண்டால் நீ மாண்டதுபோலவும் இவ் வாறே உனக்கு வேருன பொருள்கள் எவற்றையும் உயிரெனக்கொண்டு மயங்கி நின்ருயல்லவா? அக்காலத்தில் வீடுமுதலியன உயிரன்றெனவும், அவை உயிருக்கு வேறெனவும் காணுமல் ஒவ்வொன்றையுந் தனித்தனி உயிரென்றே கொண்டு அப்பொருள்களின் வேருக நீ நின்ருற்போல, உண்மை ஞானத்தை அறியாத இக்காலத்தில் நீ யல்லாததாகிய உன்னுடைய கைகால் முதலியவற்றை நீ யென்றும் அவ்வாறு அறிந்த பாச அறிவை உன்னறிவென்றும் கொண்டு அவற்றின் வேருய் நீ நிற்கின்ருய். உலகாயதநூலை ஆராய்ந்த பின்னர் உடலே உயிரெனவும் வீடுமுதலிய பொருள்கள் உனக்கு வேறெனவுங் கண்டாற்போல, வேருயிருத்தலால் என் கை என் கால் எனப்படுகின்றன என்னும் ஏதுவானும்; வேருயிருக்கும் வீடு முதலியவற்றை என்வீடு எனக்கூறுவதுபோன்ற திருட்டாந்தத்தானும் அவற்றின் இயல்புகளை ஆராய்ந்து பார்ப்பாயாயின் அக் கை கால் முதலியன உனக்கு அன்னியமாம் என்பதனை அறிவாய். எ-று.

(க-ரை.) உன்னின் வேருன புறப்பொருள்போலவே கைகால் முதலியனவும் உன்னின் வேரும் என்பதாம்.

தன்ேேெடு ஒற்றுமைப்பட்ட பொருளைத் தற்கிழமை எனவும், தன்னின் வேறுபட்ட பொருளைப் பிறிதின்கிழமை எனவும் கூறுதல் முறை. தன் என்பதற்கு உடலைப் பொருளாகக்கொள்ளின் கைகால் முதலியன தற்கிழமையாகும்; தன் என்பதற்கு உயிரைப் பொருளாகக்கொள்ளின் கைகால் முதலியன பிறிதின் கிழமையாகும் என அறிக.

மாட்டின் என்றதிலுள்ள இன் உவமவுருபாதலால் நின்ருற்போல எனவுரை செய்யப்பட்டது.

உனதலாது என்பது ஒருமையாதலால், கைகால் யாக்கைகளோடு தனித்தனி கூட்டி, உனதன்ருகிய கை உனதன்ருகிய கால் உனதன்ருகிய யாக்கை என வுரைக்க.

இவ்வதிகரணத்தில் உடம்பின் வேறாய் ஆன்மா உண்டென்பது தன்னுற் கூறப்படும் பொருள். உண்டோ இல்லையோ என்பது ஐயப்பாடு. இல்லை யென்பது பிறர்பக்கம். இவ்வாறு கூறுவோர் தேகான்மவாதிகள். இவரை மறுத்து உடம்பின் வேறாய் ஆன்மா உண்டெனச் சாதித்த வாறும்.

இரண்டாம் அதிகரணம் முற்றிற்று.



# மூன்றும் அதிகரணம்.



இந்திரியம் ஆன்மா அன்றெனக்கூறும்

மேற்கோள்.

இனி ஐம்புலனறிதலின் ஆன்மா வுளதென்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், ஐம்பொறிகள் ஐம்புலன்களை யறியுமென்றல் எல்லார்க்குமொப்ப முடிந்தமையின் அவை உடல்போற் சடமன்மை பெறப்படுதலானும், அவற்றை எனதென்னும் வழக்கம் பெரும்பான்மையன்முகலானும், அவையே உயிராதலமையுமென இந்திரியான்மவாதிகள் கூறுங் கடாவை யாசங்கித்து மூன்றுங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ-ள். வெ-டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

(இ-ள்.) ஐம்புலன் அறிதலின்—ஐம்புலன்களையும் அறிதலான்,—ஆன்மா வுளதென்றது—இவ்விந்திரியங்களின் வேறாய் உயிரெனப்படுவதொன்றுண்டு. எ-று.

## விளக்கம்.

இது சூத்திரத்திலுள்ள ஐம்புலனறிதலின் என்ற ஏதுவையும் ஆன்மா வுளது என்னுந் துணி பொருளையுஞ் சேர்த்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோவெனின், சூனியத்தை அறியும் அறிவு உண்டென்றதனுல் அவ்வறிவு சூனியமன்றென்றும் கைகால் முதலியவற்றைத் தன்னின் வேருக அறிதலால் அவ்வறிவு உடல் அன்றென்றும் கூறியனபொருந்தும். சத்தம் பரிசம் ரூபம் இரதம் கந்தம் என்

னும் ஐந்து விடயங்களையும் செவி முதலிய ஐந்து இந்திரியங்களே அறிகின்றன. ஆதலால் அவ்விந்திரியங்கள் உடல்போலச் சடமல்லவென்பது பெறப்படும். அன்றியும் செவிமுதலியவற்றின் தொழில்களை என் செவி கேட்டது என் கண் கண்டது எனச் சிறுபான்மை வழங்கப்படினும், நான் கேட்டேன் நான் கண்டேன் என்று வழங்குவதே பெருவழக்கு. ஆதலால் அவ்விந்திரியங்களே உயிரெனக்கூறுதல் பொருந்துமென இந்திரியான்மவாதிகள் கூறுவர். இவர் கூற்றை ஆசங்கித்துச் சூத்திரத்தின் மூன்றாங் கூற்றைப் பதச்சேதஞ்செய்து இந்திரியங்களின் வேறாய் ஆன்மா உண்டெனச் சாதித்தவாறாம்.

(இம்மேற்கோளின்பொருள்.) ஐந்து விடயங்களையும் அறிகின்ற அநுபவங் காணப்படுதலால் ஒவ்வொரு விடயங்களையே அறியும் இந்திரியங்களின்வேறாய் உயிரெனப் படுவதொன்றுண்டு எ-று.

மேற்கோளின் பொருளை விளக்குவதாகிய நூலாசிரியர்

பொழிப்புரை.

ஐம்புலனாகிய சத்தப் பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்த தோன்றறியாமையின் இவ்வைந்தினும் ஐம்பயனுமறிவ துளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.

## சிற்றுரை.

எ—து பொ—ரை எ—னின், ஐம்புலனறிதலின் ஆன்மா ஐம்பொறியின் வேறெனச் சாதித்தற் கேதுவாமாறு யாங்ஙனமெனுங்கடாவை யாசங்கித்து அதன்றாற்பரியமுணர்த்து தனுதலிற்று

இ—ள். வெ—டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

(இ-ள்.) ஐம்புலனாகிய சத்தப் பரிச ரூப ரச கந்தங்களை—ஐந்து விடயங்களாகிய ஓசை ஊறு ஒளி சுவை நாற்றங்களை,—இந்திரியங்கள்—சுரோத்திர முதலிய இந்திரியங்களுள்,—ஒன்று—ஒரு விடயத்தை,—அறிந்தது—அறிந்த இந்திரியம்,—ஒன்று—மற்றொரு விடயத்தை,—அறியாமையின்—அறியாதாதலான்,—இவ்வைந்தினும்—இவ்வைந்திந்திரியங்களாலும்,—ஐம்பயனும்—ஐம்புலன்களையும்,—அறிவதுளதாகலின்—அறியும் பொருளுண்டாதலான், அதுவே—அவ்வாறறியும் பொருளே,—அவ்வான்மாவா மென்றது—மேலுரையளவைபற்றிச்சாதித்த ஆன்மா வென்றவாறாம். ஐம்புலனறிதலின் ஆன்மா வுளதென மேற்கொண்டது எ-று.

## விளக்கம்.

இப்பொழிப்புரை என்ன சொல்லிற்றோ வெனின், ஐந்து விடயங்களையும் அறிதலினால் இந்திரியத்தின் வேறாய் ஆன்மா உண்டெனச் சாதித்தல் எவ்வாறு கூடு மென்னும் வினாவை ஆசங்கித்துக்கொண்டு ஐம்புலனறிதலின் தாத்பரியம் உணர்த்தி ஆன்மா இந்திரியத்தின் வேறெனச் சாதித்தவாறாம்.

(இப்பொழிப்புரையின் பொருள்.) ஐம்புலனாகிய சத்தப் பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்தது ஒன்று அறியாது. அதாவது செவி சத்தத்தை அறியுமே யன்றி ரூபமுதலியவற்றை அறியாது. கண் ரூபத்தை அறியுமே யன்றிச் சத்தமுதலியவற்றை அறியாது. இவ்வாறே ஒவ்வொரு இந்திரியமும் தனக்குரிய ஒவ்வொரு விடயத்தை அறிவதே யன்றி எல்லா விடயங்களையும் அறிவதில்லை. சத்தத்தை அறிந்தேன் ரூபத்தை அறிந்தேன் பரிசத்தை அறிந்தேன் ரசத்தை அறிந்தேன் நாற்றத்தை அறிந்தேன் என ஐந்தினையும் அறிந்த அனுபவம் காணப்படுகின்றமையால் ஐந்து இந்திரியங்களையுந் துணையாகக் கொண்டு ஐந்து பயனையு மறிவது ஒன்றுண்டு. அவ்வாறு அறிவதுவே இரண்டாஞ் சூத்திரத்தில் ஆகம அளவையாற் பெறப்பட்ட ஆன்மா எ - று.

ஐந்து இந்திரியங்களின் வேறாய் ஆன்மா உண்டென்பதற்குக்காட்டும்

### உதாரணம்.

ஒன்றறிந்த தோன்றறியா தாகி யுடன்மன்னி
யன்றும் புலனாயவ் வஞ்செழுத்தை—யொன்றறித
லுள்ளதே யாகி லதுநீ தனித்தனிகண்
டேள்ளலவை யொன்றல்லை யோர்.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியாதென்ற தொக்கும் ஐந்து மைந்துயிரெனக் கோடலின் அதனானெமக்காவதோ ரிழுக்கில்லை. இனி இவ் வைந்தையுங் கொண்டு ஐம்புலனையும் ஒருபொருளே யறியுமெனின் அதற்குப் பிரமாணங் கண்டிலம். 'குடத்தைக்கண்ட யானே அதனைத் தீண்டினேன்' னென மறித்துணர்வு நிகழ்தல் ஐந்து மோருடம்பின்கண்ணே நிலைபெறுமொற்றுமைபற்றி யமையுமெனக் கோடுமென்னுங் கடாவை யாசங்கித்து அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) உடல் மன்னி ஒன்று அறிந்தது ஒன்று அறியாதாகி—உடம்பின்கண்ணே நிலைபெற்று ஒருவிடயத்தை யறிந்த இந்திரியம் மற்றொரு விடயத்தை அறியாதாய்,—அன்றும் புலன் ஆய் அவ் வஞ்செழுத்தை—அங்ஙனந் தம்முண் மாறுபடுஞ் சத்தமுதலிய புலன்களைச் (சூக்குமபஞ்சாக்கரத்தாற் செலுத்தப்பட்டு) ஆராய்ந் தறிகின்ற அவ்வைம்பொறிகளின் தொழிற்பாட்டை,—அறிதல் ஒன்று உள்ளதேயாகில்—கண் உருவத்தையறிவது செவி ஓசை யை யறிவதென்று இவ்வாறுணர்தலை யுடையதோர் பொருள் (இல்லதோ உள்ளதோவென வினாயினார்க்கு இல்லதெனின் அவ் வறிவு நிகழாதாதல்வேண்டுமாகலின்) உள்ளதேயாமெனின்,—அதுநீ—அவ்வாறுணர்வதியாது அதுவே நீயாகிய வான்மா (அவ் வாறுணர்வனவும் அவ்விந்திரியங்களே யென்றுற்படு மிழுக்கென் னையெனின்),—அவை தனித்தனி கண்டு உள்ளல்—அவ்விந்திரி யங்கள் தத்தம் விடயங்களை வேறுவேறு கண்டறிதன்மாத்திரை யே யன்றி இத் தொழிற்பாட்டையுடையேம் யாமெனவும் அறிய மாட்டாவாகலான்,—ஒன்று அல்லை ஓர்—அவ்வைந்தின் றொழிற் பாட்டையுமறிந்து அவற்றின் வரும் பயன்கொள்வதாய நீ யவற் றின் வேறாவை அதனை யாராய்ந்தறிவாயாக எ—று.

ஆகி யென்னுஞ் சிறப்புவினை ஆயென்னும் பொதுவினையோடு முடிந்தது; ''இவனு மிவளுஞ் சிற்றிலிழைத்துஞ் சிறுபறையறைந் தும் விளையாடுப'' என்றாற்போல. ஆயென்பது வினைத்தொகை. அவ்வஞ்செழுத்தென்க. அஞ்செழுத்தாற் செலுத்தப்பட்ட பொறியை ஆகுபெயரான் அஞ்செழுத்தென்றார். அஃதிருமடி யாகுபெயராய் ஐம்பொறியின் றொழிற்பாட்டை யுணர்த்திநின்றது.

உள்ளல் உள்ளலா னென்க.

இம்மூன்றதிகாரணங்களாலுஞ் சாக்கிரத்தினிகழு மியல்புபற்றி ஆன்மாவினுண்மை சாதிக்கப்பட்டது.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) உடல் மன்னி ஒன்று அறிந்தது ஒன்று அறியாதாகி அன்றும் புலன் ஆய் அவ்வஞ்செழுத்தை அறிதல் ஒன்று உள்ளதே ஆகில் அது நீ அவை தனித் தனி கண்டு உள்ளல் ஒன்று அல்லை ஓர்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோ வெனின், இந்திரியங்கள் ஒன்று அறிந்ததைப் பிறிதொன்று அறியா தென்றது பொருந்தும்; ஐந்து இந்திரியங்

களும் ஐந்து உயிரெனக் கொள்ளுதலால் எமக்கு இழுக்கொன்று மில்லை; அன்றியும் இவ்வைந்து இந்திரியங்களையுங்கொண்டு ஐந்து விடயங் களையும் ஒரு பொருளே அறியுமென்று கூறின் அவ்வாறு கூறுதற்குப் பிரமாணங் காணவில்லை. "குடத்தைக் கண்டயானே அதனைத் தீண்டி னே" னென்றதனால் காண்டல் தீண்டுதலாகிய இரண்டி னிடத்தும் யானென்னும் உணர்வு தொடர்ச்சியாய் நிகழ்தல்பற்றி இந்திரியங்களின் துணையைக்கொண்டு அறியும் ஆன்மா அவற்றின்வேறாய் உண்டெனின், ஐந்து இந்திரியங்களும் ஒருடம்பின்கண்ணே நிலைபெற்றிருக்கும் ஒற்றுமை பற்றி இந்திரியங்களே அவ்வாறுணருமாதலின், அது கொண்டு இந்திரியங் களின் வேறாய் உயிரென ஒன்றுண்டு என்றல் பொருந்தாது என்னும் வினாவை ஆசங்கித்து இந்திரியங்களின் வேறாய் உயிர் உண்டென்பதனை வலியுறுத்திய வாறும்.

(பொ-ரை.) உடம்பின்கண்ணே நிலைபெற்று ஒரு விடயத்தை அறிந்த இந்திரியம் மற்றொரு விடயத்தை அறியாததாகும். அவ்வாறு தம்முள் வேறுபடுகின்ற சத்தமுதலிய விடயங்களையும் ஒவ்வொரு இந்திரியங்கள் தாமாகவே அறிவதில்லை, சூக்குமபஞ்சாக்கரஞ் செலுத்த அவ்விந்திரி யங்கள் விடயங்களிற் சென்று அறியும்; அறியுங்கால் அறிகின்ற அவ்விந்தி ரியங்களின் தொழிற்பாட்டைக் கண் உருவத்தை யறிவது செவி ஓசையை யறிவது என இவ்வாறு உணர்வு நிகழக் காண்கின்றமையால், அவ்வாறு உணரும் பொருள் இல்லதோ உள்ளதோ என வினவு மிடத்து இல்ல தென்று கூறின் அவ்வறிவு நிகழ்தல் கூடாது; ஆதலால் உள்ளதே யாமென்று கூறின் அவ்வாறுணர்வதாகிய அதுவே நீயாகிய ஆன்மா. கண் உருவத்தை அறிவது, செவி ஓசையை அறிவது என்று உணர்வனவும் அவ்விந்திரியங் களே என்று சொன்னால் என்ன குற்றமெனின், அவ்விந்திரியங்கள் தத்தம் விடயங்களை வேறு வேறு கண்டறிதல் மாத்திரையேயன்றி யாம்அறிந்தே மென்று அறியமாட்டா; விடயங்களால் வரும் பயனையுங் கொள்ளமாட்டா; இவை குற்றமாம். ஆதலால், அவ்வைந்து இந்திரியங்களையுங்கொண்டு ஐந்து விடயங்களை அறிந்தேனென் றுணர்ந்து அவ்விடயங்களால் வரும் பயனைக் கொள்பவனாகிய நீ அவ்விந்திரியங்களின் வேறுமென்பதனை ஆராய்ந்தறி வாயாக எ-று.

(க-ரை.) இந்திரியங்களுள் ஒரு இந்திரியம் அறிந்த விடயத்தைப் பிறி தொரு இந்திரியம் அறியாமையானும் ஒருவிடயத்தைத்தானும் அறிவதே யன்றி அறிந்தேனென அறியாமையானும் அதன்பயனைக் கொள்ளாமை யானும் ஐந்திந்திரியங்களையுங்கொண்டு ஐந்து விடயங்களையும் அறிந்து பயன் கொள்ளும் ஆன்மாவாகிய நீ அவ் விந்திரியங்களின் வேறு என்பதாம்.

அன்றும் என்பதற்கு மாறுபடு மென்பது பொருளாம். இதனை "அன் றினார் புரமூன்றும் பொடியாய் வேவ" என்னுந் தேவாரத்தானு முணர்க.

அறியாதாகி என்பதில் உள்ள ஆகி என்னும் சிறப்புவினை புலன் ஆய் என்பதிலுள்ள ஆய் என்னும் பொதுவினையோடு முடிந்தது. ஒன்றறிந்தது ஒன்றறியாதாகி என்றதனுல் அவ்வாறு அறியாமை ஒவ்வொரு இந்திரியத்திற்கும் தனித்தனி உளதாதலின் ஆகியென்பது சிறப்பு வினையாயிற்று. புலனை ஆயுந்தன்மை இந்திரியங்களுக்கெல்லாம் பொதுவாதலால் ஆய்தல் பொதுவினை யாயிற்று. இவ்வாறு சிறப்புவினை பொதுவினையோடு முடிதலை 'இவனும் இவளும் சிற்றில் இழைத்தும் சிறுபறை யறைந்தும் விளையாடுப' என்றாற்போலக் கொள்க. சிற்றில் இழைத்தலென்பது சிறு வீடு கட்டுதலாம். இது மகளிருக்குரிய சிறப்புவினை. சிறு பறை யறைதல் என்பது சிறுகொட்டு அடித்தலாம். இது புருடருக்குரிய சிறப்புவினை. விளையாடுதலென்பது இருவருக்கு முரிய பொதுவினை. ஆய் என்பதில் வினைதொக்கு நின்றமையால் அதனை விரித்து ஆராய்ந் தறிகின்ற என்று உரை செய்யப்பட்டது.

அவ்வஞ் செழுத்தென்றதிலுள்ள அகரச்சுட்டு முதலதிகாரணத்து வெண்பாவிற்கூறிய சூக்குமபஞ்சாக்கரத்தைச் சுட்டிற்று.

அஞ்செழுத் தென்றது அஞ்செழுத்தாற் செலுத்தப்பட்ட ஐந்து இந்திரியங்களை ஆகுபெயராற் குறித்து அவ்வாகுபெயர் இருமடி யாகுபெயராய் ஐம்பொறிகளின் றொழிற்பாட்டை உணர்த்தி நின்றது. ஆதலால் அவ்வஞ்செழுத்தை என்பதற்கு அவ்வைம்பொறிகளின் றொழிற்பாட்டையென உரை செய்யப்பட்டது. இருமடியாகுபெயராவது ஒரு சொல்லின் ஆகு பெயர் பிறிதொரு ஆகுபெயர்ப்பொருளை உணர்த்திநிற்றலாம். உதாரணம் கார் வந்தது என்று கூறுமிடத்துக் கார் என்னுஞ் சொல் கரிய நிறமுடைய மேகத்தையும், அம்மேகம் மழையைப்பெய்யுங்காலத்தையுங் குறித்து மழைக்காலம் வந்தது என்பது போல்வனவாம்.

உள்ளலானென்பது உள்ளல் என நின்றது. அல் எதிர் மறைப்பொருளில் நின்றது; ஆதலால் உள்ளல் என்பதற்கு அறியமாட்டா வாகலான் என உரை செய்யப்பட்டது.

இவ்வதிகாரணத்தில் இந்திரியத்தின் வேருய் ஆன்மா உண்டென்பது தன்றுற்கூறப்படும்பொருள். உண்டோ இல்லையோ வென்பது ஐயப்பாடு. இல்லை யென்பது பிறர் பக்கம். இவ்வாறு கூறுவோர் இந்திரியான்மவாதிகள். இவரைமறுத்து இந்திரியத்தின் வேருய் ஆன்மா உண்டெனச்சாதித்தவாறும்.

இம்மூன்றதிகாரணங்களினுலும் சாக்கிரத்தில் நிகழு மியல்பு பற்றிச் சூனியம் ஆன்மாவன்று, உடல் ஆன்மா வன்று, இந்திரியம் ஆன்மா வன்று எனக் கூறி இவற்றின் வேருய் ஆன்மா உண்டெனச் சாதிக்கப்பட்டது.

மூன்றும் அதிகாரணம் முற்றிற்று.

---

# நான்காம் அதிகரணம்.

சூக்குமதேகம் ஆன்மா அன்றெனக் கூறும்
மேற்கோள்.

## இனி ஒடுக்கமறிதலின் ஆன்மா வுளதென்றது.

### சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், "நேசவிந் திரியங் கட்கு நிகழறி விதனூற் காண்டும்" என நீவிருங் கோடலின் அவ்விந்திரியங்களின் வேறாய் அங்ஙன மறிவது புரியட்டகவுடம்பேயா மெனவமையும், அது புறத்து நிகழா தாயினும் அகத்தே நின்று இந்திரியங்களைப் புறத்திற் செலுத்தி யறியுமெனக் கோடுமெனச் சூக்கும தேகான்மவாதிகள் கூறுங் கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தி னாலாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ—ள்.) ஐம்பொறிகளு மொடுங்கின சொப்பனத்தானத்தின் நிகழ்ந்தவற்றை யறிதலின் ஆன்மா வேறுண்டு எ-று.

ஒடுக்கம் ஆகுபெயர்.

### விளக்கம்.

இது சூத்திரத்திலுள்ள ஒடுக்கமறிதலின் என்ற ஏதுவையும் ஆன்மா வுளது என்னுந் துணிபொருளையுஞ் சேர்த்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றேவெனின், "நேசவிந் திரியங் கட்கு நிகழறி விதனூற் காண்டும்" எனச் சிவஞானசித்தியார் உ-ம் சூ-ம். கூ-வது செய்யுளிற் கூறியபடி, சத்தாதி தன்மாத்திரைகளால் இந்திரியங்களுக்கு அறிதற்றொழில் நிகழுமென நீவிருங் கொள்ளுதலால், இந்திரியங்களின் வேறாய் அறிந்தேன் என அறிவது சூக்குமதேகமாகிய புரியட்டகவுடம்பேயா மென்பது பெறப்படும்; அச்சூக்குமதேகம் வெளியிற் காணப்படாதாயினும் உள்ளே நின்று இந்திரியங்களை வெளியிற் செலுத்தி அறியுமெனக் கொள்வேமென்பார் சூக்குமதேகான்மவாதிகள். இவர் கூற்றை ஆசங்கித்துச் சூத்திரத்தின் நான்காங்கூற்றைப் பதச்சேதஞ்செய்து சூக்கும தேகத்தின் வேறாய் ஆன்மா உண்டெனக் கூறியவாறும்.

(இம்மேற்கோளின் பொருள்.) ஐம்பொறிகளும் புறத்தில் தொழிற்படாது ஒடுங்கின சொப்பனத்தானத்தில் நிகழ்ந்த சொப்பனங்களை அறிதலின் அவற்றை யறியும் ஆன்மா வேறு உண்டு. எ—று.

ஒடுக்கம் என்பது ஒடுக்கத்தின் நிகழ்ந்தவற்றைக் குறித்து நிற்றலால் ஆகுபெயர்.

புரியட்டக உடம்பாவது, சத்தம் பரிசம் ரூபம் இரதம் கந்தமென்னும் தன்மாத்திரை யைந்தும் மனம் புத்தி அகங்காரம் மூன்றும் ஆக எட்டுமாம்.

இம்மேற்கோளின் பொருளை விளக்குவதாகிய நூலாசிரியர்
பொழிப்புரை.

நனவின்கட் கனவுகண்டா மேன்றுங் கண்டில மேன்றும் நிற்பதுளதாகலின் அதுவே யவ்வான்மாவாமேன்றது.

## சிற்றுரை.

எ—து பொ-ரை எ—னின், சொப்பனத்தி னிகழ்ந்தவற்றை யறிவதுஞ் சூக்குமதேகமே யாகலின் இது சித்தசாதன மாமா லென்னுங் கடாவை யாசங்கித்து அதன் குற்றமரிய முணர்த்துத னுதலிற்று.

இ - ள். வெ - டை.

சுப்பிரமணியதேசிகர் உரை.

இ - ள். கனவு—சொப்பனத்தினை,—கண்டா மென்றும்—காணப்பெற்றே மென்றும்,—கண்டிலமென்றும்—காணப்பெற்றிலே மென்றும்,— நனவின்கண்— சாக்கிரத்தின்கண்,— நிற்பதுளதாகலின்—மயங்கியறியும் பொருளுண்டாதலான்,—அதுவே—அவ்வாறு மயங்கியறியும் பொருளே,—அவ்வான்மாவாமென்றது—மேலுரையளவைபற்றிச் சாதித்த ஆன்மாவென்றவாறும். ஒடுக்க மறிதலின் ஆன்மா வுளதெனமேற்கொண்டது எ-று.

இஃதென்சொல்லியவாறோவெனின், ஒடுக்கமறிதலின் என்றது ஒடுக்கத்தினிகழ்ந்தவற்றை நனவின்கண் மயங்கியறிதலென்னும் பொருட்டாதலாற் சித்தசாதனமாதல் யாண்டையதென விடுத்தவாறென்பது. கனவுகண்ட சூக்குமவுடம்பே நனவின்கண் அதனை யறியுமாயிற் கண்டபடி யறியாது மயங்கியறிதல் கூடாமை யின் உயிர்க்காயின் அதுபோல் ஒருதன்மைத்தாகலின்றி அகத்துச்சேறலும் புறத்துச்சேறலும் வேறுபாடுடைமையான் அது பற்றி மயங்கி யறிதல் கூடுமாகலின் அங்ஙனமறியு முயிர்வேறுண் டென்பது கண்டுகொள்க.

## விளக்கம்.

இப்பொழிப்புரை என்ன சொல்லிற்றேவெனின், சொப்பனத் தானத்தில் நிகழ்ந்தவற்றை அறிவதும் சூக்குமதேகமேயாகலின், அவ்வாறு சித்திக்கப்பட்டதை மேற்கோளாகக் கூறியது சித்தசாதனமாகிய குற்றமாம் என்னும் வினவை ஆசங்கித்து ஒடுக்கமறிதலின் என்றதன் தாற்பரியம் கூறியவாறும்.

(இப்பொழிப்புரையின் பொருள்.) சொப்பனத்தினைக் காணப்பெற்றே மென்னும் காணப்பெற்றிலே மென்றும் சாக்கிரத்தின்கண் மயங்கியறியும் பொருளுண்டாதலான் அவ்வாறு மயங்கியறியும் பொருளே இரண்டாஞ் சூத்திரத்தில் உரையளவைபற்றிச் சாதித்த ஆன்மா என்றவாறும். ஆதலால் ஒடுக்கமறிதலின் ஆன்மா வுளதென மேற்கொண்டது. எ-று.

இப்பொழிப்புரையினால் கூறி முடித்தது யாதோவெனின், ஒடுக்க மறிதலின் என்றது ஒடுக்கத்தின் நிகழ்ந்தவற்றை நனவின்கண் மயங்கி யறிதலென்னும் பொருளைக் குறித்தலால் சித்தசாதன மென்னுங் குற்றமாதல் இல்லையென விடைகூறிய வாறும். சொப்பனத்தில் நிகழ்ந்தவற்றைச் சொப்பனத் தானத்தில் உயிருக்குக் கருவியாய் நின்று அறிவது சூக்கும உடம்பேயாம். சாக்கிரத்தின் கண் சொப்பனத்தில் நிகழ்ந்தவற்றைக் கண்டவாறே யறியாமல் மயங்கியறிதல் சூக்கும உடம் பன்று. இவ்விடத்துச் சாக்கிரத்தில் மயங்கி அறிதலையே கூறினபடியால் சித்த சாதனமன்று. சொப்பனத்தைக் கண்ட சூக்கும உடம்பே நனவின்கண்ணும் அச்சொப்பனத்தை அறியு மென்றல் பொருந்தாது. எதனாலெனின், அச்சூக்கும உடம்பே நனவின் கண்ணும் அறியுமாயின் அவ்விடத்துக் கண்டபடியறியாமல் மயங்கி யறிதல் வேண்டாம். நனவின்கண் சொப்பனத்தை மயங்கியறிதல் காணப் படுதலால் அவ்வாறு மயங்கி அறிதல் உயிரென்றே கூறல் வேண்டும். உயிர் சூக்கும உடம்பு போல் என்றும் ஒரு தன்மையாயிருப்பதில்லை. சிலதத்து வங்களை விட்டு அகத்துச் செல்லுதலும், விட்ட அத்தத்துவங்களோடு கூடிப்புறத்துச் செல்லுதலும் ஆகிய வேறுபாடு உயிருக்குண்டு. அவ்வேறு பாடு பற்றிக் கனவின்கண் கண்டவற்றை நனவின்கண் வேறு சில தத்து வங்களோடு கூடுதலால் உயிர் மயங்கி யறிதல் கூடும். ஆதலால் அவ்வாறு மயங்கியறியும் உயிர் சூக்கும உடம்பின் வேறாயுண்டென்பது கண்டு கொள்க.

சூக்குமதேகத்தின் வேறாய் ஆன்மா உண்டென்பதற்குக் காட்டும் உதாரணம்.

அவ்வுடலி னின்றுயிர்ப்ப வைம்பொறிக டாங்கிடப்பச்
செவ்விதி னவ்வுடலிற் சென்றடங்கி —யவ்வுடலின்
வேறேன்று கொண்டு விளையாடி மீண்டதனை
மாறலுட னீயல்லை மற்று.

## சிற்றுரை.

எ-து உ-ம் எ-னின், கனவின்கட் செல்லுமாறும் ஆண்டு நிகழுமாறும் மீளவருமாறு முணர்த்தி அதனை வலியுறுத்துதனு தலிற்று.

(இ-ள்.) அவ்வுடலின் நின்று உயிர்ப்ப ஐம்பொறிகள் கிடப்ப—(மேல் உயிரன்றெனக் கூறிப்போந்த) தூல வுடம்பினின்று உயிர்ப்பனவாய ஐம்பொறிகள் ஆண்டே உயிர்ப் பொழிந்து கிடப்ப,—அடங்கி அவ்வுடலில் செவ்வி தின் சென்று—(அவையங்ஙனங் கிடந்தவழிப்) புறத்து நிகழுந்தொழிற் பாடெல்லா மடங்கி அவ்வுடம்பினுள்ளால் வருத்தமின்றிச் சென்று,—அவ்வுடலின் வேறு ஒன்று கொண்டு விளையாடி—அத்தூல வுடம்புபோல அதனின் வேறாயதோருடம்பை யெடுத்துக் கொண்டு வேறோராற்றாற் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று விளையாடி,—மீண்டு அதனை மாறல்—மீளவதனை மாறி மேற்சேறலான்,—நீ உடல் அல்லை—நீ அச்சூக்குமதேகமல்லை அதனின் வேறானை எ-று.

உயிர்ப்ப வென்றது அன் பெறாத அகர வீற்றுப் பலவறி சொல். உயிர்த்தல் தொழிற்படுதல்.

தாமும் மற்றும் அசை. திரு-௨ வமவு ௩௪.

மீண்டு மீள.

மாறல் மாறலானென்க.

இவ்வதிகாணத்தாற் சொப்பனத்தி னிகழுமியல்புபற்றி உயிருண்மை சாதிக்கப்பட்டது.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) அவ்வுடலின் நின்று உயிர்ப்ப ஐம்பொறிகள் கிடப்ப அடங்கி அவ்வுடலில் செவ்விதின் சென்று அவ்வுடலின் வேறு ஒன்று கொண்டு விளையாடி மீண்டு அதனை மாறல் நீ உடல் அல்லை.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோ வெனின், உயிர் கனவினிடத்துச் செல்லு முறைமையினையும், அக்கனவினிடத்து நிகழ்வதனையும், மீளச் சாக்கிரத்திற்கு வரும் முறைமையினையும் உணர்த்திச் சூக்கும தேகத்தின் வேறாய் ஆன்மா வுண்டென்பதை வலியுறுத்தியவாறாம்.

(பொ-ரை.) மூன்றும் அதிகரணத்தால் உயிரன்றெனச் சாதிக்கப் பட்ட ஐம் பொறிகள் தூல வுடம்பினின்று தொழிற்பட்டுப் பின்னர் அத்

தூல வுடம்பினிடத்தே தொழிற்படாமற் கிடக்க, அவ்வாறு கிடக்குங்கால் புறத்து நிகழும் தொழிற் பாடெல்லாம் அடங்க நீ அத்தூல உடம்பி னுள்ளாக வருத்தமின்றிச் சென்று அத்தூல வுடம்புபோல அதனின் வேறாய சூக்கும உடம்பை எடுத்துக் கொண்டு தூலவுடம்பில் நின்று தொழிற் செய்வது போலல்லாமல் அதிவேகமாய்க் கண்டு கேட்டு உண்டு விளையாடி மீள அச் சூக்கும உடம்பினின்று மாறி தூல உடம்பைச் சேர்கின்றாய்; ஆதலால், தூல வுடம்பைக்கொண்டு புறத்து நிகழ்கின்றவற்றை அறிகின்றவாறு போலச் சூக்கும வுடம்பைக்கொண்டு அகத்து நிகழ்கின்றவற்றை அறியும் நீ அச்சூக்கும தேகமல்லை; அதனின் வேறாவை எ-று.

(க - ரை.) தூல தேகத்தைக்கொண்டு புறத்து விடயங்களையும், சூக்கும தேகத்தைக் கொண்டு அகத்து விடயங்களையும் அறிகின்ற நீ தூல தேகத்தின் வேறாதல் போலச் சூக்கும தேகத்தினும் வேறாவை என்பதாம்.

உயிர்ப்ப என்றது அன் பெறாத அகர ஈற்றுப் பலஅறிசொல்; ஆதலால், உயிர்ப்பன என்று உரை செய்யப்பட்டது; உயிர்ப்பன என்பது பகுதி முதலியனவாகப் பிரிக்கப்படுங்கால், உயிர் ப் ப் அன் அ எனப்பிரிக்கப்படும்.

தாம் கிடப்ப என்றதிலுள்ள தாமும், இறுதியில் உள்ள மற்றும் அசை. மீண்டு என்பது மீள என்னும் எச்சத்திரிபு.

மாறலால் என்பது ஈறுகுறைந்து மாறல் என நின்றது; ஆதலால், மாறி மேற் சேறலால் என உரை செய்யப்பட்டது.

இவ்வதிகரணத்தில் சூக்குமதேகத்தின் வேறாய் ஆன்மா உண்டென்பது தன்றாற்கூறப்படும் பொருள். உண்டோ இல்லையோவென்பது ஐயப்பாடு. இல்லையென்பது பிறர்பக்கம். இவ்வாறு கூறுவோர் சூக்குமதேகான்மவாதிகள். இவரைமறுத்துச் சூக்குமதேகத்தின் வேறாய் ஆன்மா உண்டெனச் சாதித்தவாறாம்.

இவ்வதிகரணத்தால் சொப்பனத்தில் நிகழும் இயல்புபற்றி உயிருண்டென்று சாதிக்கப்பட்டது.

நான்காம் அதிகரணம் முற்றிற்று.

---

# ஐந்தாம் அதிகரணம்.

பிராணவாயு ஆன்மா அன்றெனக் கூறும்
மேற்கோள்.

இனிக் கண்படில் உண்டிவினை யின்மையின் ஆன்மா வுள தென்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், சொப்பனத்தானமாத்திரையினன்றித் தொழிற்படாத சூக்குமதேகம்போலன்றிச் சுழுத்தி துரியங்களினுந் தொழிற்படுவதாய பிராணவாயுவே அடங்குதல் விடுதல் செய்தறிவதாகிய ஆன்மா வாத லமையுமெனப் பிராணான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தி னைந்தாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ - ள். வெ - டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

இ — ள். கண்படில்—துயிலிடத்து,—உண்டி—விடயங்களிடமாகவரும் இன்பத்துன்ப நுகர்ச்சியும்,—வினை—உடம்புசேட்டித்தலும்,—இன்மையின்—இல்லாமையால்,—ஆன்மா வுளதென்றது—இப்பிராணவாயுவின் வேறாய் ஆன்மாவுண்டு எ-று.

## சிற்றுரை.

உண்டிவினை உம்மைத்தொகை. அஃது "உண்டியும் வினையுமின்றிக் கிடந்து" எனவழிநூலாசிரியர் கூறியவாற்றானுமுணர்க

## விளக்கம்.

இது சூத்திரத்திலுள்ள கண்படில் உண்டிவினை யின்மையின் என்ற ஏதுவையும், ஆன்மா வுளது என்ற துணிபொருளையும் சேர்த்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோவெனின், சூக்குமதேகம் சொப்பனத்தானத்தில்மட்டுந் தொழிற்படும்; சுழுத்தி துரியங்களில் தொழிற்படாது. ஆதலால், சூக்குமதேகம் உயிரன்றென்பது பொருந்தும். சொப்பனம் சுழுத்தி துரியங்களினும் பிராணவாயு இயங்கிக்கொண்டிருக்கும், அப்பிராணவாயுவே ஐம்புலன்களை அடக்கிக்கொண்டு சொப்பனத்தானத்தினின்றும், அவ்வைம்பொறிகளை வெளிப்படுத்திக்கொண்டு சாக்கிரத்தானத்

திற்கு வந்தும் அறியும் ஆன்மாவாகும் என்றல் பொருந்துமெனப் பிராணான்ம வாதிகள் கூறுவர். இவர் கூற்றை ஆசங்கித்துச் சூத்திரத்தின் ஐந்தாங் கூற்றைப் பதச்சேதஞ்செய்து பிராணவாயுவின் வேறாய் ஆன்மா உண்டெனக் கூறியவாறும்.

(இம்மேற்கோளின் பொருள்.) சுழுத்தியாகிய நித்திரையில் பிராண வாயு இயங்கிக் கொண்டிருப்பினும் விடயங்களின் வழியாய்வரும் இன்பத் துன்ப அநுபவமும் உடம்பு தொழிற்படுதலும் இல்லை; ஆதலால், இன்பத் துன்ப அனுபவத்தையும் உடம்பின் றொழிற்பாட்டையும் உடைய ஆன்மா இப்பிராணவாயுவின் வேறாய் உண்டு எ-று.

உண்டிவினை யென்றது உண்டியும் வினையும் என விரிதலால் உம்மைத்தொகை. இதனைச் சிவஞானசித்தியார் சு-ம் சூ-ம் ௩0-வது செய்யுளில் "உண்டியும் வினையு மின்றிக் கிடந்து" என வழிநூலாசிரியர் உம்மையை விரித்துக் கூறியவாற்றானும் உணர்க.

மேற்கோளின் பொருளை விளக்குவதாகிய நூலாசிரியர்

பொழிப்புரை.

ஒடுங்கினவிடத்து இன்பத்துன்பஞ் சீவனம் பிரகிருதிக்கின் மையின் ஒடுங்காதவிடத்து இன்பத்துன்பஞ் சீவியாநிற்பதுள தாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.

சிற்றுரை.

எ—து பொ—ரை எ—னின், கண்படை கொண்டவழி உண்டி வினை யில்லையென்றது உடற்கோ பிராணவாயுக்கோவென வினாயி னார்க்கு உடம்பு உயிரன்மையான் அதற்கவை யில்லாமைபற்றி ஈண்டைக்காவதோ ரிழுக்கில்லை. இனிப் பிராணவாயுவுக்கெனின், அது துயின்றெழுந்தபின்னர்ச் சுகமாகத் துயின்றேனென் றறிதல் பிறிதோராற்றாற் பெறப்படாமைதன்னும் அருத்தாபத்தியான் ஆண் டும் இன்பநுகர்ச்சி யுண்டென்பது பெற்றாம். விழித்துழிப்போல உறங்குழியும் பிராணவாயு வியங்குதலான் வினையுண்மையுங் கண் டாமாகலின் அதற்கு அவை யாண்டில்லை யென்றல் மாறுகோள் போலு மென்னுங் கடாவை யாசங்கித்து அதன்றுற்பரிய முணர்த் துதனுதலிற்று.

(இ - ள்) ஈண்டு உண்டியென்றது விடயங்களினிடமாகவரும் இன்பத்துன்ப நுகர்ச்சியை; வினையென்றது உடம்பு சேட்டித்

தலே. ஆகலின், இவ்விரண்டும் பிராணவாயுவையொழிந் தொழிந்த கருவிகளெல்லா மொடுங்கிய துயிலிடத்து அஃதியங்காநிற்பவும் உடம்பின்கண்ணே நிகழ்தலின்மையின் அவை யொடுங்காத நனவினிடத்து அவையிரண்டும் அதன்கணிகழ்த லுண்மையின் அவ்வின்மை யுண்மைகட் கேதுவாகக் கருவிகளை யொடுக்கியும் ஒடுக்காதும் நிற்பதியாது அதுவே அவ்வான்மா வென்றவாறும். கண்படில் உண்டிவினையின்மையின் ஆன்மா வுளதென மேற்கொண்டது எ-று.

பிராணவாயுவையொழிந் தொழிந்த கருவிகளென்பது ஆற்றலான் வந்தது.

இன்பத்துன்ப நுகர்ச்சியை இன்பத்துன்ப மென்றுபசரித்தார்.

சீவனம் சீவித்தல்; சேட்டித்த லென்றதாம்.

செவ்வெண்டொகை விகாரத்தாற் றொக்கது.

சீவியாநிற்ப தென்பது சீவியாநிற்ற லென்னுந் தொழிற் பெயர்மாத்திரையாய் நின்றது. "உறங்குவதுபோலும்" என் புழிப்போல.

உளதென்றது தனித்தனி சென்றியையும்.

துயின்றுழியும் விழித்துழியுந் திரிபின்றி ஒரு தன்மைத்தாதல்பற்றி உடம்பு பிரகிருதியெனப்பட்டது. பிரகிருதிக்கென்றது உருபுமயக்கம்.

இரண்டுகாலத்து மொப்ப இயங்குதல்பற்றிப் பிராணவாயுவைப் பிரகிருதி யெனக்கொண்டு அதற்கு அவை யின்மையினென் றுரைப்பாரும், பிரகிருதி விகாரமாகிய சித்தத்திற்கு அவை யின்மையினென வுரைத்துச் சுழுத்தியின்கண்ணுந் தொழிற்படுவதாய சித்தமே உயிரென்னுஞ் சித்தான்மவாதிகளை மறுத்தற்கெழுந்தது இவ்வதிகரணமென் றுரைப்பாரு முளர்.

## விளக்கம்.

இப்பொழிப்புரை என்ன சொல்லிற்றேவெனின், நித்திரை கொண்டவிடத்து உண்டியும் வினையும் இல்லையென்றது உடலுக்கோ பிராணவாயுவுக்கோ என வினவில், உடம்பு உயிரல்லாதபடியால் அவ்வுடம்பிற்கு உண்டிவினை யில்லாமைபற்றி இவ்விடத்திலுண்டாகும் குறையொ

ன்றுமில்லை; பிராணவாயுவிற்கு உண்டிவினை இல்லையென்று கூறில், நித்திரைவிட்டெழுந்த பின்னர் சுகமாக நித்திரை பண்ணினேன் என்றறிதலால், அவ்வாறு அறிதல் நித்திரையிற் சுகானுபவமில்லாமல் உண்டாகாதென்னும் அருத்தாபத்திப்பிரமாணத்தால் நித்திரையிலும் சுகானுபவம் உண்டென்பது பெறப்பட்டது. விழித்திருக்கும் சாக்கிரத்திற்போல உறங்கும்பொழுதும் பிராணவாயு இயங்குதலால் வினையுண்டென்பதும் கண்டாம். ஆதலால், பிராணவாயுவிற்கு நித்திரையில் அனுபவமும் தொழிலும் இல்லையென்றல் பொருந்தாது என்பார் வினாவை ஆசங்கித்து உண்டிவினை யின்மையின் என்றதன் தாற்பரியங் கூறியவாறும்.

(இப்பொழிப்புரையின் பொருள்.) உண்டியென்றது சுழுத்தியில் உண்டாகும் சுகத்தையன்று, விடயங்களிடமாகவரும் இன்பத்துன்ப அனுபவத்தை; வினையென்றது பிராணவாயுவின் இயக்கத்தையன்று, உடம்பு தொழிற்படுதலை. பிராணவாயு நீங்கிய ஏனைய கருவிகள் ஒடுங்கிய சுழுத்தியில் பிராணவாயு இயங்கவும் இவ்விரண்டும் உடம்பின்கண் நிகழாமலும் ஏனைய கருவிகள் ஒடுங்காத சாக்கிரத்தில் அவ்விரண்டும் நிகழவும் காண்கின்றமையால் சாக்கிரத்திலும் சுழுத்தியிலும் வேறுபாடின்றி இயங்கிக் கொண்டிருக்கும் பிராணவாயுவின் வேறாய் உண்டிவினைகளின் இன்மைக் கேதுவாய்ச் சுழுத்தியில் கருவிகளை ஒடுக்கியும் அவ்விரண்டின் உண்மைக் கேதுவாய்ச் சாக்கிரத்தில் கருவிகளை ஒடுக்காமலும் நிற்பது எதுவோ அதுவே உயிர். எ-று.

சாக்கிரத்திலும் சுழுத்தியிலும் பிராணவாயு ஒடுங்காமல் ஒரு தன்மையாய் நிற்பதால், ஒடுங்கினவிடத்து என்பதற்கு ஆற்றலால் அப்பிராணவாயுவை யொழித்து ஒழிந்த கருவிகளென கூறப்பட்டது. ஆற்றல் ஈரிடத்தும் ஒடுங்காவலிமை. இன்பத்துன்ப நுகர்ச்சியை என்று கூறவேண்டியதை இன்பத் துன்பமென்று உபசரித்தார்.

சீவனமென்பது சீவித்தல். அதாவது தொழிற்படுதலாம்.

இன்பத்துன்பம் சீவனம் என்பன எண்ணைக்குறிக்கும் உம்மை பெறாமல் நிற்றலால் செவ்வெண் எனப்படும். உம்மை பெற்றுவருமாயின் செவ்வெண்ணாகமாட்டாது. செவ்வெண் இறுதியில் தொகை பெற்றே வரவேண்டும். இவவிடத்து அத்தொகை தொக்குநின்றது. அத்தொகையை விரித்து இவ்விரண்டும் என உரைசெய்யப்பட்டது.

சீவியாநிற்பதென்பதில் நிற்பது ஈண்டு வினைமுற்றாகாது நிற்றல் என்னுந்தொழிற்பெயர்மாத்திரையாய்நின்றது. இது ''உறங்குவதுபோலும்'' எனத் திருக்குறள் நிலையாமை யென்னும் அதிகாரத்திற் கூறியவாறு போலும். குறளில் உறங்குவதுபோலு மென்பது உறங்குதல்போலு மென்னுந் தொழிற்பெயர் மாத்திரையாய் நின்றது.

உளது என்றது இன்பத்துன்பம் உளது சீவியாநிற்பதுளது என அவ் விரண்டினிடத்தும் தனித்தனி சென்று பொருந்தும். இவ்வாறு கொள் ளாக்கால் அவ்விரண்டும் என்றபன்மை உளது என்னும் ஒருமை கொண்டு முடியாது.

நித்திரைசெய்யும் பொழுதும் விழித்துக்கொண் டிருக்கும்பொழுதும் வேறுபாடின்றி ஒருதன்மையாகவே தூலவுடம்பு இருக்கும். ஆதலால் அத்தூல வுடம்பைப் பிரகிருதி யென்று கூறினர். பிரகிருதி—இயல்பா யிருத்தல்.

பிரகிருதியின்கண் இன்மையின் என்று கூறவேண்டியதை பிரகிரு திக் கின்மையின் என்றது உருபுமயக்கம். அதாவது ஏழாம்வேற்றுமைஉருபு நிற்கவேண்டிய இடத்தில் நான்காம்வேற்றுமை உருபு நின்றபடியால் உருபு மயக்கமாயிற்று.

இனி, சாக்கிரம் சுழுத்தி யென்னும் இரண்டு காலத்தும் பிராணவாயு ஒருதன்மையாக இயங்குதலால் பிரகிருதியென்பது பிராணவாயுவேயா மெனக் கொண்டு அப்பிராணவாயுவிற்குச் சுழுத்தியில் இன்பத் துன்பமும் சீவனமும் இல்லாமையினுல் பிராணவாயு ஆன்மாவன்று என்றுரைப்பாரும் உளர்.

இன்னும் இவ்வதிகரணம் சித்தமே ஆன்மா வென்னும் வாதிகளைமறுத் தற்கு எழுந்ததாமென்றுங் கூறுவர். எவ்வாறெனின், பிரகிருதிக் கின்மை யின் என்றதற்குப் பிரகிருதி விகாரமாகிய சித்தத்திற்கு இன்பத் துன்ப மும் சீவனமும் இன்மையின் என வுரைத்துச் சுழுத்தியின்கண்ணும் தொழிற்படுவதாகிய சித்தத்திற்குச் சுழுத்தியில் அவ்விரண்டும் இன்மை யால் சித்தம் உயிராகமாட்டாது என்பதாம்.

இவ்வாறு பிரகிருதி என்பதற்குப் பிராணவாயுவையும் சித்தத்தையும் கொள்ளுதல் பொருந்து மேனும் தூல வுடலென்று கொள்வதே சிறப்பாம். எதனுலெனின், துரியத்திற் சித்தமில்லை; துரியாதீதத்திற் பிராணவாயு வில்லை; தூல வுடம்பு துரியாதீதம்வரையும் ஒரு தன்மையாயிருக்கும் ஆத லால் என்க.

பிராணவாயுவின் வேருய் ஆன்மா வுண்டென்பதற்குக் காட்டும் உதாரணம்.

கண்டறியு மிவ்வுடலே காட்டோடுங்கக் காணுதே
யுண்டி வினையின்றி யுயிர்த்தலாற்—கண்டறியு
முள்ளம்வே றுண்டா யோடுங்கா துடனண்ணி
லுள்ளதா முண்டிவினை யூன்.

## சிற்றுரை.

எ-து உ-ம் எ-னின், துயிலிடத்துக் கருவிகளெல்லா மொடுங்குதலின் இன்பத்துன்ப நுகர்ச்சியுஞ் சேட்டையும் பிரகிருதிக்கில்லை யாயின வாகலான் அதுபற்றிப் பிராணவாயுவை யான்மாவென்றற் கிழுக்கென்னை யென்னுங் கடாவை யாசங்கித்து அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) கண்டு அறியும் இவ்வுடலே—கண்டறிதற்கு நிலைக்களமான இவ்வுடம்பின்கண்ணே,—காட்டுக் காணாதே ஒடுங்க—காட்டாய கருவிகள் தொழிற்படாதே யொடுங்கவும்,—உண்டிவினை இன்றி—அவை யொடுங்கியவழி உண்டியும் வினையும் பிரகிருதிக்கில்லையாகவும்,—உயிர்த்தலான்—பிராணவாயு நிலைபெற்று இயங்குதலான்,—கண்டு அறியும் உள்ளம் வேறு உண்டு—கண்டறியுமுரிமையையுடைய உயிர் பிராணவாயுவின் வேறுயுண்டு,—ஒடுங்காது உடல் நண்ணில் ஊன் உண்டி வினை உள்ளதாம்—அவ்வுயிரொடுங்காது அவ்வுடலின்கணெய்திற்றாயின் அவ்வுடம்பு கருவிகளின் றொழிற்பாட்டானாய உண்டியும் வினையு முடைத்தாம்,—ஆய்—அதனை யாராய்ந் தறிவாயாக எ-று.

இது அருத்தாபத்தியளவை.

கண்டறிதல் ஒருபொருட்பன்மொழி.

இன்றி யென்னும் வினைக்குறிப்புச் செயவெனெச்சத்திரிபு. சிறப்பும்மைகள் தொக்கன. அவை "அறிந்திடா துடலுறக்கத் தறி
3-4 வின்மை காணமின்மை—யறிந்திடு முதலியாகி னதுநிற்கக் காணம் போகாது" என்னும் பொருள் விளைத்து நின்றன.

ஊன் ஆகுபெயர். (க 3 [illegible])

உயிர் வேறுண்டென்றதனை வலியுறுத்துவார் உடம்பாட்டு முகத்தானு மோதினர்.

இவ்வதிகாணத்தானே சுழுத்தி துரியங்களி னிகழு மியல்பு பற்றி உயிருண்மை சாதிக்கப்பட்டது. இதுகாறுஞ் சார்மாயை நீயல்லை யென்றதனை வலியுறுத்தியவாறு.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) கண்டு அறியும் இவ்வுடலே காட்டு காணாதே ஒடுங்க உண்டிவினை இன்றி உயிர்த்தலான் கண்டு அறியும் உள்ளம் வேறு உண்டு ஒடுங்காது உடல் நண்ணில் ஊன் உண்டிவினை உள்ளதாம். ஆம் ·

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோ வெனின், சுழுத்தியினிடத்துக் கருவிகளெல்லாம் ஒடுங்குதலால் இன்பத்துன்ப அநுபவமும் தொழிலும் உடலுக்கில்லையாயின. ஆதலால், அவ்விரண்டும் இல்லாமைபற்றிப் பிராண வாயுவை ஆன்மா வன்று எனக் கூறுதல் பொருந்தாது என்னும் வினாவை ஆசங்கித்துப் பொருந்துமெனக்கூறிப் பிராணவாயு ஆன்மா அன்று என்ப தனை வலியுறுத்தியவாறாம்.

(பெ - ரை.) விடயங்களைக் கண்டறிதற்கு ஆதாரமான இவ்வுடம்பின் கண்ணே அறிதற்குத் துணையாகிய கருவிகள் தொழில்செய்யாமல் ஒடுங்க வும், அக்கருவிகள் ஒடுங்கிய சுழுத்தியில் இன்பத்துன்ப அநுபவமும் போக்குவரத்தாகிய தொழிலும் உடலுக்கில்லையாகவும், பிராணவாயு நிலை பெற்று இயங்கிக் கொண்டிருக்கும். அப்பிராணவாயுவே உயிராயின் அது நிலைபெற்றிருக்கவும் இன்பத் துன்ப அநுபவமும் செயலும் உடம்பிற்கு இல்லாமல் போகவேண்டாம். ஆதலால் விடயங்களைக் கண்டறியும் உரிமை யையுடைய உயிர் பிராணவாயுவின் வேறாய் உண்டு. அவ்வுயிர் ஒடுங்காமல் அத்தூலவுடலின்கண் பொருந்துமாயின் அவ்வுடம்புங் கருவிகளும் தொழிற் பட்டு அதனால் இன்பத்துன்ப அநுபவமும் தொழிலும் உடையதாகும். அதனை ஆராய்ந்தறிவாயாக எ-று.

(க - ரை) சுழுத்தியிலும் சாக்கிரத்திலும் பிராணவாயு ஒருதன்மை யாய் நிலைபெற்றிருந்தும் சுழுத்தியில் இன்பத்துன்ப அநுபவமும் உடலின் தொழிலும் இல்லாமையால் உயிர் பிராணவாயுவின் வேறு என்பதாம்.

இவ்வுதாரணம் அருத்தாபத்திப்பிரமாணமாம். எவ்வாறெனின், சுழுத்தியில் பிராணவாயு இயங்கிக்கொண்டிருந்தும் இன்பத்துன்ப அநுப வமும் செயலும் நிகழாமையால், அவ்விரண்டும் நிகழ்தற்கு உரிமையுடைய உயிர் ஏனைய கருவிகளை ஒடுக்கிக்கொண்டு இருந்தாலன்றி அவ்விரண்டும் நிகழாமை சம்பவியாது என்னும் குறிப்பால் உயிர் வேறுண்டு என்பதாம்.

கண்டறியும் என்றதில் காணுதலும் அறிதலும் ஆகிய இரு மொழி யும் ஒருபொருளையே குறித்து நிற்றலால் ஒருபொருட்பன்மொழி.

உண்டிவினையின்றி என்றதிலுள்ள இன்றி என்னும் வினைக்குறிப்பு, செயவென்னும் எச்சத்தின் திரிபு. எவ்வாறெனின், இன்றியென்பது இல்லையாகி என்னும் எச்சப் பொருளைத்தருகின்ற செய்து என்னும் வாய் பாட்டு வினைக்குறிப்புச்சொல். அது செய என்னும் வாய்பாட்டு எச்சப்

பொருளில் இல்லையாக என்னும் எச்சப் பொருளைக்குறித்து நிற்றலால் செயவென்னும் எச்சத்தின் திரிபாயினமை அறிக. காலங்காட்டாமையின் வினைக்குறிப்பு.

ஒடுங்க என்றவிடத்தும் இன்றி என்றவிடத்தும் சிறப்பும்மைகள் தொக்குநின்றன. அவற்றை விரித்து ஒடுங்கவும் இல்லையாகவுமென உரை செய்யப்பட்டது.

அவ்வும்மைகள் "அறிந்திடா துடலுறக்கத் தறிவின்மை கரணமின்மை—யறிந்திடு முதலியாகி னதுநிற்கக் கரணம் போகாது" என்னும் சிவ ஞானசித்தியார் ௬-ம் சூ-ம் ௪-வது செய்யுளின் பொருளை விளைத்து நின்றன. அதாவது பிராணவாயுவே அறியுங்கருத்தாவாயின் அது நிற்கக் கருவிகள் ஒடுங்காது என்பதாம்.

ஊன் என்பது ஊனையுடைய உடம்பைக்குறித்துநிற்றலால் ஆகு பெயர்.

உயிர் வேறுண்டென்பதனை வலியுறுத்த எண்ணிக் கருவிகள் ஒடுங்கியவிடத்து உண்டி வினையில்லாமையைக் கூறியதோடு நில்லாது கருவிகள் ஒடுங்காதவிடத்து உண்டிவினை உண்மையை உடம்பாட்டு முகத்தானும் ஓதினர். முன்னர் எதிர்மறையைக் கூறிப் பின்னர் அதற்கு எதிர்மறையாகிய உடம்பாடு கூறினமையால் எதிர்மறையே வலியுறுத்துமென்றதனோடு முரணுமை அறிக.

இவ்வதிகரணத்தால் சுழுத்தி துரியங்களில் நிகழும் இயல்புபற்றி உயிருண்மை சாதிக்கப்பட்டது.

இவ்வதிகரணத்தில் பிராணவாயுவின் வேறாய் ஆன்மா உண்டென்பது தன்னாற் கூறப்படும் பொருள். உண்டோ இல்லையோ என்பது ஐயப்பாடு. இல்லையென்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் பிராணான்ம வாதிகள். இவரைமறுத்துப் பிராணவாயுவின் வேறாய் ஆன்மா உண்டெனச் சாதித்தவாறும்.

இரண்டாம் அதிகரண முதல் இவ்வைந்தாம் அதிகரணம்வரையும் மாயாகாரியங்கள் உயிரல்லவென்றமையால் முதலதிகரணத்து வெண்பாவிற் கூறிய சார்மாயை நீயல்லை என்றது வலியுறுத்தப்பட்டது.

ஐந்தாம் அதிகரணம் முற்றிற்று.

---

# ஆறும் அதிகரணம்.

பிரமம் ஆன்மா அன்றெனக்கூறும்

மேற்கோள்.

இனி உணர்த்த வுணர்தலின் ஆன்மாவுளது என்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், பிரமப்பொருள் மேற் கூறிப்போந்த சடப்பொருள்கள்போலன்றிச் சித்தாகலான் அதுவே உயிராதலமையுமென விஞ்ஞானான்மவாதிகள் கூறுங் கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தினாறுங் கூற்றைக்கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

(இ-ள்.) தொழிற்படுங் கருவிக ளொன்றுமின்றிக் கேவலமாய் அதீதாவத்தையினின்றுழி அறியுமாறின்றிப் பின்னர்க் கலைமுதலிய கருவிகளால் அறிவிக்க வறிந்து வருதலுண்மையின் எக்காலத்துந் திரிபின்றி யறிந்தாங்கறிந்துநிற்குஞ் சித்தாகிய பிரமத்திற்கு இது தகாமையான் அங்ஙன முணருமான்மா வேறுண்டு எ - று.

உணர்த்த வுணர்தலெனவே முன்னுணராது கிடத்தல் பெற்றாம்.

## விளக்கம்.

இது சூத்திரத்திலுள்ள உணர்த்த உணர்தலின் என்ற ஏதுவையும் ஆன்மாவுளது என்னுந் துணி பொருளையும் சேர்த்துமேற் கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோ வெனின், பிரமப்பொருள் மேலை அதிகரணங்களிற் கூறிய சடப்பொருள்போலன்றிச் சித்துப்பொருளாதலால் அப்பிரமமே உயிரென்று கூறுதல் பொருந்துமென விஞ்ஞான ஆன்மவாதிகள் கூறுவர். இவர் கூற்றை ஆசங்கித்துச் சூத்திரத்தின் ஆறுங் கூற்றைப் பதச் சேதஞ் செய்து பிரமத்தின் வேறாய் ஆன்மா உளதெனக் கூறியவாறாம்.

(இம்மேற்கோளின் பொருள்.) கருவிகளில்லாத துரியாதீத மாகிய கேவலத்தில் அறியாமலும் சகலத்தில் கலை முதலிய கருவிகளைக்கொண்டு அறிவதுமாய் நிற்கும் உயிர் என்றும் ஒரு தன்மையாய்த் தானே அறியும பிரமமாகாது ஆதலின் உயிர் வேறு உண்டு எ—று.

உணர்த்த உணர்தல் என்றுகூறியதனாலேயே கருவிகளோடு கூடுதற்கு முன் உணராது கிடத்தல் பெறப்படும்; ஆதலால், துரியாதீத அவத்தையில் நிற்குங்கால் அறியுமாறின்றி என உரை செய்யப்பட்டது.

இம்மேற்கோளின்பொருளை விளக்குவதாகிய நூலாசிரியர்

பொழிப்புரை.

அவனறிந்தாங் கறிவனேன்றறிவிக்க வறிந்து உபதேசியாய் நிற்பதுளதாகலின் அதுவே யவ்வான்மாவா மென்றது.

## சிற்றுரை.

எ—து பொ—ரை எ—னின், அறிந்தாங் கறிவதாகிய பிரமப் பொருள் அவிச்சைக்காலத்துக் கருவிகளோடுங் கூடியன்றி யறி யாதெனக் கோடுமாகலின் அதுபற்றி உயிர் வேறுண்டென்றல் பொருந்தாதென்னுங் கடாவை யாசங்கித்து 'அவ்வளவி னவன் மகிழுக' வென்னு நியாயத்தால் வேறு மதன் றூற்பரிய முணர்த்து தனுதலிற்று.

(இ-ள்.) கருவிகளோடு கூடியவழியுந் தன்னியல் புணருமா றில்லாத ஆன்மாவைப்போல அம்முதல்வன் மறந்துமறந் தறித லின்றி அறிந்தவாறே அறிந்துநிற்கும் பேரறிவுடையனென வேதாகமங்களா னறிவிக்க வறிந்து குரவனறிவுறுக்கு முபதேச மொழியைப் பெற்றுடையதாய்நிற்பதொன்றுளதாகலின் அதுவே மேலுரையளவையாற் சாதித்துப் போந்தஆன்மா வென்றவாறும். உணர்த்த வுணர்தலின் ஆன்மாவுளதெனமேற்கொண்டது எ-று.

அறிந்தாங் கென்பது அப்பொருட்டாதல் "எண்ணியவெண் ணியாங் கெய்துப" என்பதனானு மறிக. இதற்குப் பிறவாறு முரைப்ப. அவையெல்லாம் பொருந்தாமை யோர்ந்துணர்க.

## விளக்கம்.

இப்பொழிப்புரை என்ன சொல்லிற்றோ வெனின், அறிந்தவாறே அறிவதாகிய பிரமப்பொருள் அஞ்ஞானத்தோடு கூடியகாலத்தில் கலைமுத லிய தத்துவங்களைத் துணையாகக்கொண்டு வேறுவேறாய் அறியும். தத்துவங் களைக்கொண்டு அறிதலினாலேயே பிரமத்தின்வேறாய் உயிருண்டென்று கூறுதல் பொருந்ாது என்பார்வினாவை ஆசங்கித்து "அவ்வளவின் அவன் மகிழுக" என்னும் நியாயத்தால் உணர்த்த வுணர்தலின் என்றதன் தாற்பரி யம் வேறுவகையாகவுங் கூறியவாறும்

(இப்பொழிப் புரையின் பொருள்.) உணர்த்த உணர்தலென்றதற்குக் கருவிகளோடு கூடியபொழுது அறிதலென்று மேற் கூறப்பட்டது. அவ் வாக்கியத்திற்கு வேறும் ஒரு பொருள் வருமாறு :—கருவிகளோடு கூடிய விடத்தும் விடயங்களை அறிவதே யன்றித் தன்னையும் முதல்வனையும் அறி வதில்லை. முதல்வன் பேரறிவுடைய னெனவும் தான் அடிமையெனவும் வேதாகமங்களால் அறிவிக்க அறிந்து அறிந்தவாறே அனுபவமுண்டாகும் பொருட்டு ஆசிரியன் உபதேச மொழியைப் பெறுவதாய் நிற்பது காணப் படுதலால் அதுமுதல்வ னாகமாட்டாது. அவ்வாறு நிற்பதும் முதல்வனே யெனின், அறியாமையிற் கட்டுப்பட்டுத் தன்னை யறியாது பின்னர் அறி விக்க அறியுந்தன்மையுடைய பொருளுக்கு முதன்மை எவ்வாறு சித்திக்கும், அன்றியும், அறியாமையை எதற்காகப் பொருந்திற்று; அநாதியே பொருந் திற்றெனின், அவ்வாறாயினும் முதன்மை சித்திக்காது. இடைப்பட்ட காலத் தில் விளையாட்டாகப் பொருந்திற் றெனின், நீங்கினபின்னரும் பொருந்து மாதலால் நீங்குதற்கு முயலவேண்டுவதில்லை. ஆதலால் அறிவிக்க அறியுந் தன்மை யுடைய அதுவே இரண்டாஞ் சூத்திரத்தில் ஆகமப்பிரமாணத்தால் அவையே யெனக்கூறிய உயிராம் எ-று.

பொழிப்புரையில் அறிந்தாங்கு என்பதற்கு அறிந்தவாறே எனப் பொருள் கூறப்பட்டது. இதனைத் திருக்குறள் வினைத் திட்பம் என்னும் அதிகாரத்தில் "எண்ணிய வெண்ணியாங் கெய்துப" என்பதனானும் அறிக. குறளில் எண்ணியாங்கு என்பதற்கு எண்ணியவாறே என்பது பொருள். அறிந்தாங்கு என்பதற்கு வேறுவிதங்களாகவுங் கூறுவர், அவை யெல்லாம் பொருந்தாமை யோர்ந்துணர்க.

பிரமத்தின் வேறாய் ஆன்மா உண்டென்பதற்குக் காட்டும்
உதாரணம்.

அறிந்து மறிவதே யாயு மறியா
தறிந்ததையும் விட்டங் கடங்கி—யறிந்த
தேதுவறிவு மன்றாகு மேய்கண்டா னென்றி
னதுவதுதா னென்னு மகம்.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின். கருவிகளோடு கூடியவழியும் அவிச்சை நீங்காமையின் விடயங்கண் மாத்திரையே யறியுமன்றித் தன்னியல் பறியுமாறில்லை. அஃதுபதேசத்தாலறியற்பாலதேயா மாகலான் அதுபற்றி இழுக்கென்னை யென்னுங் கடாவை யாசங்கித்து அத னையும் மேற்கூறிய நியாயத்தா னுடம்பட்டு இன்னுமொரு தாற்

பரிய முறைக்கு முகத்தானே விடயங்களை யறிவுழியும்படும் வேறுபாடு கூறி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

அவனறிந்தாங் கறியுமாறும் உயிர் மறந்துமறந் தறியுமாறும் தெரித்துணர்த்தி வலியுறுத்துதனுதலிற்று எனினுமமையும்.

(இ - ள்.) அறிந்தும் அறிவது ஆயும் அறியாதும்—(கருவிகளெல்லாவற்றோடுங் கூடிச் சாக்கிரத்தானத்தி னின்று விடயங்களை யறியுமிடத்தும் ஒருங்கேயறியமாட்டாது) ஒன்றனையேயறிந்தும் ஒன்றனை யறியப் புகுவதாயு முன்னறிந்த தொன்றனை அறியாதொழிந்தும்,—அறிந்ததையும் விட்டு அங்கு அடங்கி—(இங்ஙனமொரோ வொன்றாக) அறியப் பட்ட விடயத்தையும் (இடையீடின்றி அறியமாட்டாது) விட்டு விட்டாங்கே ஐந்தவத்தைப் பட்டடங்கி,—அறிந்தது எது—(மீள வறிந்து வருதல்கண் கூடாகக் காணப்படுதலான்) அங்ஙன மறிந்துவந்த பொருள் யாது அது (சடமென்றென்பது மேற் காட்டப்பட்டது முன்னரும் காட்டப்படும்),—அறிவும் அன்று—(ஒன்றாக இயல்பாக வுணர்தலே பேரறிவாகலின்) அதுவுமன்றும்,—மெய் கண்டான் ஒன்றின்—இனி மெய்யாகிய சித்தாந்த நெறியினை யுணர்ந்தோன் வேறென்னையோ வெனமன மொருங்கியாராயு மாயின்,—அது அதுதான் என்னும் அகம் ஆகும்—(காட்டு மொளிக்கு வேறாய கண்ணொளிபோல அவ்வறிவிற்கு வேறாய்) அதுவதுவே தானெனச் சார்ந்ததன் வண்ணமாய் நின்றறியு மியல்பையுடைய உயிராம் எ-று.

அறிந்தும் அறிவதே யாயும் என்னும் உம்மைகள் எண்ணின்கண் வந்தன. அறியாது மென்னு மெண் ணும்மை விகாரத்தாற் றொக்கது. அறிந்ததையு மென்னு மும்மை இழிவு சிறப்பு. அறிவு மென்னு மும்மை இறந்ததுதழீஇயது. ஏகாரம் அசைநிலை.

அங்கு உணர்த்து முறைமைத் தானமாகிய இலாடத்தினென்றவாறு.

அறிந்ததையும் விட்டங் கடங்கி யறியுமாறு வருகின்ற சூத்திரத்திறுதியினும், அதுவது தானெனச் சார்ந்ததன் வண்ணமாமாறு உண்மை யதிகாரத்தும் பெறப்படும்.

அறிந்து மறிவதே யாயு மறியா தறிந்ததையும் விட்டங் கடங்கி யறிந்த தெது என்பதற்கு ஓதியதனை ஓதியபொழுதே

யுணர்ந்தும் பலகாலோதி யுணர்வதாயும் பலகாலோதியு முணர்த லின்றியும் உணர்ந்ததனையும் பின்னர் மறந்தொழிந்தும் இவ்வா றோதி யுணர்ந்ததியாதென் றுரைத்தலு மொன்று. இப்பொருட்கு அடங்கி யென்புழியும் எண்ணும்மை விரித்துரைக்க.

இங்ஙனம் மூவகைப் படுத்துரைப்பவே, உணர்த்த வுணர்த லென்னு மேதுவான் முறையே அதீதத்தின்க ணிகழு மியல்பு பற் றியும் சுத்தத்தின்க ணிகழு மியல்பு பற்றியும் உணர்த்து முறை மைக்க ணிகழு மியல்பு பற்றியும் உயிருண்மை சாதிக்கப்பட்டது. இது 'தற்பரமு மல்லே' யென்றதனை வலியுறுத்தியவாறு காண்க.

விஞ்ஞானமே ஆன்மா வென்னும் புத்தரின் யோகாசாரன் மதத்தை மறுத்தற் கெழுந்தது இவ்வதிகரண மெனக் கொண்டு அதற்கியைய வுரைப்பாரு முளர்.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) அறிந்தும் அறிவது ஆயும் அறியாது அறிந்ததை யும் விட்டு அங்கு அடங்கி அறிந்தது எது அறிவும் அன்று மெய்கண்டான் ஒன்றின் அது அது தான் என்னும் அகம் ஆகும்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோ வெனின், பிரமப்பொருள் கரு விகளோடு கூடிய விடத்தும் அஞ்ஞானம் நீங்காமையால் விடயங்களை மட் டும் அறிந்து தன்னை அறியாமல் பின்னர் உபதேசத்தால் தன்னை அறியும் ஆதலால், தன்னை யறியாமை குற்றமாகாது என்னும் வினவை ஆசங்கித்து மேற்கூறிய "அவ்வளவினவன் மகிழுக" என்னு நியாயத்தால் தன்னை யறியாமையோடு கூட உணர்த்த வுணர்த லென்றதற்கு இன்னும் ஒரு தாற் பரியங் கூறு முறையில் விடயங்களை அறியுங்காலத்தும் உண்டாம் வேறு பாடு கூறிப் பிரமத்தின் வேறாய் ஆன்மா உண்டென வலியுறுத்தியவாறாம்.

இவ்வாறன்றி அவனறிந்தவாறே அறியும் முறைமையினையும் உயிர் மறந்து மறந்தறியும் முறைமையினையும் விளககிக்காட்டிப் பிரமத்தின் வேறாய் உயிர் உண்டென வலியுறுத்திற்று இவ்வுதாரணம் என்று கூறினும் பொருந்தும்.

(பொ-ரை.) கருவிகளெல்லாவற்றோடுங் கூடிச் சாக்கிரத்தானமாகிய புருவ நடுவில் நின்று விடயங்களை அறியுமிடத்தும் எல்லா விடயங்களையும் ஒரு சேர அறியமாட்டாது; ஒன்றனையே அறியும். அறியுங்கால் பிறிதொன் றனை அறியச் செல்லும்; செல்லுங்கால் முன்னறிந்து வந்ததை அறியா தொழியும். இவ்வாறு ஒவ்வொன்றாக அறியப்பட்ட விடயத்தையும் விடாம லறிவதில்லை. விட்டுவிட்டு அறியும். அதாவது, சாக்கிரம் சொப்பனம்

சுழுத்தி துரியம் துரியாதீதமென்னும் ஐந்தவத்தைப்பட்டு ஒரு அவத்தை யில் அறிந்ததைப் பிறிதொரு அவத்தையில் அறியாது அடங்கி, மீளத் துரி யாதீதத்தில் நின்று முறையே வெளிவந்து அறியும். இவ்வாறு அறியு மென்பது பிரத்தியட்சமாதலால் அவ்வாறு அறிந்துவந்த பொருள் யாதோ அது சடமன் றென்பது மேல் இரண்டாம் அதிகாரணத்தொடங்கிக் காட்டப் பட்டது. இன்னும் வருகின்ற ஏழாமதிகாரணத்துங் காட்டப்படும். பேரறி வாகிய பிரமப்பொருளே அவ்வாறு அறியுமென்று கூறில், அப்பொருள் எல்லாவற்றையும் ஒரு சேரத்தானுக அறியுந் தன்மையுடையது. ஆதலால் அதுவும் அன்றும். இனி மெய்யாகிய சித்தாந்த நெறியினே உணர்ந்தோன் அவ்வாறு அறியும் பொருள் வெறென்னேயோ என மனம்ஒடுக்கி ஆராயு மாயின், ஒரு பொருளைக் கண் காணுங்கால் சூரியன் ஒளிகாட்டக் காணும். அவ்வாறு காண்பது காட்டுகின்ற சூரியனொளிக்குவேருய கண்ணொளியே யாம். அதுபோலப் பேரறிவாகிய பிரமப் பொருளிற்கு வேருய்ச் சார்ந்த பொருளின்வண்ணமாய் நின்று அறியும் இயல்புடைய உயிரே அப்பொரு ளாம் என்பது நன்கு விளங்கும். எ—று.

(க - ரை.) கருவிகளோடு கூடி விடயங்களை அறியுங்காலத்தும் ஒன்ற னையே அறிந்தும், அதனையும் விட்டு விட் டறிந்தும் வருதல் பிரத்தியட்ச மாதலால் அவ்வாறு அறியும் பொருள் சடமுமன்று; கருவிகளோடு கூடாது தானுக ஒருசேர அறியும் பிரமப்பொருளுமன்று, ஆதலின் பிரமத்தின் வேருய் உயிர் உண்டு என்பதாம்.

அறிந்தும் அறிவதேயாயும் என்றதிலுள்ள உம்மைகள் அறிந்ததையும் அறிவதையும் எண்ணக்கிடத்தலின் எண்ணின்கண் வந்தன. அறியாது என்றதில் எண்ணும்மை விகாரத்தாற் ருெக்கது. ஆதலால் அறியாதொ ழிந்தும் என உரை செய்யப்பட்டது. அறிந்ததையும் என்றதிலுள்ள உம்மை ஒரோவொன்ருக அறியும் விடயத்தின் இழிவைக்குறித்து நிற்ற லால் இழிவு சிறப்பு. அறிவும் அன்று என்பதிலுள்ள உம்மை சடமுமன்று என மேற்கூறியதைத் தழுவி நிற்றலால் இறந்தது தழுவியது. அறிவதே என்றதிலுள்ள ஏகாரம் அசை.

விட்டு விட்டு அங்கு அடங்கி என்றதிலுள்ள அங்கு என்பது சாக் கிரத்தில் உணர்த்து முறைமைத் தானமாகிய இலாடத்தைக் குறித்து நின் றது. உரையில் சாக்கிராதி ஐந்தவத்தை யென்றது சாக்கிரத்தில் நிகழும் ஐந்தவத்தையினையேயாம்.

அறிந்ததையும் விட்டு அங்கடங்கி அறியு முறைமை, வருகின்ற நான் காஞ் சூத்திரத்து இறுதியினும், அதுவதுதானெனச் சார்ந்ததன்வண்ண மாம் முறைமை உண்மையதிகாரம் ஏழாஞ் சூத்திரத்தினும் பெறப்படும். ஆதலால் இவ்விடத்து அவற்றை விரிக்கவில்லை.

அறிந்தும் அறிவதேயாயும் அறியாதும் அறிந்ததையும் விட்டு அங் கடங்கி அறிந்ததெது என்பதற்கு, விடயங்களின்மேல் வைத்து மேற்கூறிய வாறன்றி வேறும் ஒரு பொருள் கூறப்படும். அதாவது ஓதியதனை ஓதிய பொழுதே உணர்ந்தும் பலகால் ஓதி உணர்வதாயும் பலகால் ஓதியும் உணர் தலின்றியும் உணர்ந்ததனையும் பின்னர் மறந்தொழிந்தும் இவ்வாறு ஓதி யுணர்ந்தது யாது என்பதாம். இப்பொருள் கொள்ளின் அடங்கி யென் னுமிடத்தும் எண்ணும்மை விரித்து அடங்கியு மென்றுரைக்க.

இவ்வாறு உணர்த்த உணர்தலின் என்றதற்குக் கலைமுதலிய கருவிக ளால் அறிவிக்க அறிதலென்றும், கருவிகளோடு கூடியவழியும் பிரமப் பொருளை வேதாகமங்களினாலும் ஆசிரியனாலும் அறிவிக்க அறிதலென்றும், கருவிகளோடு கூடியறியும் சாக்கிரத்தின்கண்ணும் விடயத்தை ஒவ்வொன் றாகவும் விட்டுவிட்டும் அறிதலென்றும் மூவகையாக உரை கூறப்பட்டது; படவே, கலைமுதலிய கருவிகளால் அறியும் என்பதனால் அக்கருவிகளோடு கூடாத துரியாதீத நிலையில் அறிவு நிகழாமைபற்றியும், பிரமப்பொருளை உணர்த்த உணர்தலென்பதனால் உயிர் பிரமப்பொருளை அடைதற்கு முயலு கின்ற சுத்தாவத்தையில் உணர்வுநிகழும் இயல்புபற்றியும், சாக்கிரத்திலும் ஒவ்வொன்றாக விட்டு விட்டு அறியும் என்பதனால் உணர்த்து முறைமை யினும் ஒவ்வொன்றாகஉணர்த்த உணர்வு நிகழும் இயல்புபற்றியும், இத்தன் மைகளில்லாத பிரமத்தின் வேறாய் உயிருண்டென்று சாதிக்கப்பட்டது.

இவ்வதிகரணம் பிரமம் ஆன்மாவன்று என்றமையால் முதலதிகர ணத்து வெண்பாவில் தற்பரமுமல்லை என்றது வலியுறுத்தியவாறு காண்க.

இவ்வதிகரணம் விஞ்ஞானமே ஆன்மாவென்னும் புத்தரின் யோகா சாரமதத்தை மறுத்தற்கு எழுந்ததாகக் கொண்டு அம்மதத்திற் கேற்றவாறு உரைப்பாரும் உளர்.

இனி, பிரமமே ஆன்மாவென்னும் ஏகான்மவாதிகள் உணர்த்த உணர் தலின் என்ற ஏது அஞ்ஞானமே ஆன்மாவென்பாரை மறுத்தற்கு எழுந்த தென்பர். அவ்வாறாயின், உணர்தலின் என்றலே போதும் என்பதும், உணர்த்த உணர்தலென்றது மிகையென்பதும், அஞ்ஞானத்திற்கு அறி யுந்தன்மை யின்மையால் அக்கூற்றுப்பொருந்தாதென்பதும் அவர் அறிந்தி லர். ஆதலின் அது பொருந்தாது.

இவ்வதிகரணத்தில் பிரமத்தின் வேறாய் ஆன்மா உண்டென்பது தன் றாற் கூறப்படும் பொருள். உண்டோ இல்லையோ என்பது ஐயப்பாடு. இல்லை யென்பது பிறர்பக்கம். இவ்வாறு கூறுவோர் விஞ்ஞான ஆன்மவாதிகள். இவரை மறுத்துப் பிரமத்தின் வேறாய் ஆன்மா வுண்டெனச் சாதித்தவாறும்.

ஆறாம் அதிகரணம் முற்றிற்று.



# ஏழாம் அதிகரணம்.

சமுதாயத்தின் வேறாய் உயிருண்டெனக் கூறும்
மேற்கோள்.

இனி மாயாவியந்திர தனுவினுள் ஆன்மா வுளதென்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், உடம்பு முதலியவற்றுள் ஒரோவொன்றே ஆன்மாவாதல் இன்றென்றதொக்கும், அவற்றுள் ஒன்று குறைந்த வழியும் அறிவு நிகழாமையானும் எல்லாங்கூடிய வழி அது நிகழ்தலானும் அனைத்துங்கூடிய சமுதாயமே உயிராதலமையுமெனச் சமுகான்மவாதிகளாகிய சௌத்திராந்திகர் வைபாடிகர் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்திலிறுதிக் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ—ள்.) மாயாகாரியங்களான் யாக்கப்பட்டியன்ற சூத்திரப்பாவைபோலு முடம்பின்கண்ணே அவற்றிற்கு வேறாய் ஆன்மா வுண்டு எ-று.

எனவே அவையெல்லாம் மாயையின் காரியங்களாய் நிலைபெறுதனவாகலின் நிலைபேறுடைய உயிராகா வென்றவாறாயிற்று.

(கருவி)
மாயை ஆகுபெயர். இகரம் விரித்தல் விகாரம்.

## விளக்கம்.

இது சூத்திரத்திலுள்ள இறுதிக்கூற்றை மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றேவெனின், உடம்பு இந்திரியம் சூக்குமதேகம் பிராணவாயு ஆகிய இவற்றுள் ஒவ்வொன்றே ஆன்மா வென்றல் பொருந்தாதென்று கூறியது பொருந்தும், அவற்றுள் ஒன்று குறைந்தவிடத்தும் அறிவு நிகழாமையானும், அவையெல்லாங் கூடியவிடத்து அறிவு நிகழ்தலானும், அவையனைத்துங் கூடிய சமுதாயமே உயிரென்றல் பொருந்துமெனச் சமுகான்மவாதிகளாகிய சவுத்திராந்திகர் வைபாடிகர் கூறுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இறுதிக்கூற்றைப் பதச்சேதஞ்செய்து சமுதாயத்தின் வேறாய் உயிருண்டெனக் கூறியவாறாம்.

இவ்வதிகரணத்தில் சமுதாயத்தின் வேறாய் ஆன்மா உண்டோ இல்லையோ என்பது ஐயப்பாடு. இல்லை யென்பது பிறர்பக்கம். இவ்வாறு கூறுவோர் சவுத்திராந்திகரும் வைபாடிகரும் என அறிக.

(இம்மேற்கோளின் பொருள்.) மாயையின் காரியங்களாகிய தத்துவங்களாற் கட்டப்பட்டுப் பொருந்திய சூத்திரப்பாவைபோன்ற உடம்பின்கண்ணே அத்தத்துவங்களின் வேறாய் ஆன்மா உண்டு. எ-று.

இவ்வாறு கூறியதனால் உடம்பு ஐம்பொறி முதலியன எல்லாம் மாயையின் காரியங்களாய் நிலைபேறின்றித் தோன்றி யழிவனவாம். ஆதலால் அவை நிலைபேறுடையதாய்த் தோன்றியழியாததாயுள்ள உயிராகா என்றவாறாயிற்று.

மாயை யென்பது மாயையின் காரியங்களைக்குறித்து நிற்றலால் ஆகுபெயர்.

மாயா வென்பதும் யந்திரமென்பதும் வடமொழியாதலால், மாயாயந்திரமெனவே கூறலாம். விரித்தல் விகாரத்தால் இகரத்தை விரித்து மாயா இயந்திரம் என்றார், "ரவ்விற் கம்முத லாமுக் குறிலும், லவ்விற் கிம்முத லிரண்டும் யவ்விற், கிய்யு மொழிமுத லாகிமுன் வருமே" என்பது இலக்கணமாதலின்.

சமுதாயத்தின் வேறாய் உயிர் உண்டென்பதற்குக் காட்டும்

ஏது.

அவைதாம் வெவ்வேறு பெயர்பெற்று நிற்றலான்.

## சிற்றுரை.

எ—து ஏது எ—னின், சித்தமுஞ் சித்தப்பகுதியுமாகிய அகச் சமுதாயமைந்தும் மாயாகாரியமென்பது எம்மனோர்க்கு உடம்பாடன்மையின் அதுபற்றி ஆன்மா வேறுண்டெனச் சாதித்தலமையுமாறென்னை யென்னுங் கடாவை யாசங்கித்து 'அவ்வளவி னவன் மகிழுக' வென்னு நியாயம்பற்றி வேறுமோராற்றாற் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) நீ ஐந்து கந்தமெனக்கொண்ட மாயாகாரியங்கள் ஆன்மாவெனப் பெயர் பெறுமாறின்றி வேறுவேறு பெயர்பெற்று நிற்பனவாகலான் மாயா வியந்திரதனுவினுள் ஆன்மா வுளதென மற்கொண்டது. எ-று.

வேறு வேறு என்பது வெவ்வேறெனமரீஇயிற்று,

## விளக்கம்.

இந்த ஏது மாயா இயந்திரதனுவென்றதில் குறிப்பாய் நின்றமையால் விரித்துரைக்கப்பட்டது.

இந்த ஏது என்ன சொல்லிற்றோவெனின், சித்தமும் சித்தப்பகுதியு மாகிய அகச்சமுதாயம் ஐந்தும் மாயாகாரியம் என்பது எம்மனோர்க்கு உடம் பாடில்லாமையால், சமுதாயமென்றதுகொண்டு அதற்கு வேறாய் ஆன்மா வுண்டென்றல் பொருந்தாதென்று மேற்கூறிய சௌத்திராந்திகர் முதலி யோர் கூறும் வினவை ஆசங்கித்து 'அவ்வளவினவன் மகிழுக' என்னும் நியாயத்தால் சமுதாயத்திற்கு மாயாகாரியமென மேற்கூறிய பொருளே யன்றி வேறும் ஓர் பொருள்கூறி ஆன்மா வேறுண்டெனச் சாதித்தவாறும்.

(இந்த ஏதுவின் பொருள்.) சித்தமும் சித்தப்பகுதியுமாகிய ஐந்து கந்த மும் மாயாகாரியங்களேயாகும். அல்லவாயினும் அவை ஆன்மாவெனப் பெயர் பெறுமாறின்றி வேறு வேறு பெயர்பெற்று நிற்பனவாகலான் அவை ஆன்மா வல்ல. ஆதலால், மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா வுளதென மேற்கோள் கூறியது. எ - று.

ஐந்துகந்தங்களாவன:— உருவம் வேதனை ஞானம் குறி வாதனை என் பனவாம்.

ஏதுவில் வேறு வேறு என்றிருக்க வேண்டுவது வெவ்வேறென மருவி நின்றது.

இந்த ஏது சமுதாயத்தின் வேறாய் ஆன்மா இல்லை யென்பாரை மறுத் துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

சமுதாயம் ஆன்மா வல்ல வென்பதற்குக் காட்டும்
உதாரணம்.

கலையாதி மண்ணந்தங் காணிலவை மாயை
நிலையாவாந் தீபமே போல—வலையாமன்
ஞானத்தை முன்னுணர்ந்து நாடி லதுதனுவாந்
தானத்தின் வேறாகுந் தான்.

## சிற்றுரை.

ஏ—து உ—ம் எ—னின், அவை தனித்தனி வெவ்வேறு பெயர் பெறினுந் தொக்க சமுதாயத்தின்கண் ஆன்மா வெனப் பெயர் பெறு மெனக் கோடுமாகலின் அதுபற்றி யிழுக்கென்னை யென் னுங் கடாவை யாசங்கித்து அவை வெவ்வேறுபெயர் பெறும்வ யும் அவர் கூறியவாறு பெயர் பெறாது வேறு பெயர் பெறுமா

அவை மாயாகாரியங்களே யாமாறும், அவை தொக்க சமுதாயத்தினும் ஆன்மாவெனப் பெயர் பெறாது வேறு பெயர் பெறு மாறு முணர்த்தி அதனை வலியுறுத்துத லுதலிற்று.

(இ-ள்.) காணில் கலை ஆதி மண் அந்தம் (ஆம்)—(அங்ஙனஞ் சமுதாயமாதற் குரியவை யாவை யென்று) அளவைகளா னறியப் புகிற் கலைமுத னில மீறாகிய தத்துவங்களேயாம்,—அவை மாயை நிலையாவாம்—அவையனைத்தும் மாயையின் காரியங்க ளாகலின் நிலையுதலின்றிச் சிலகால நின்றழிவனவாம்,—ஞானத்தை அலையாமல் முன் உணர்ந்து நாடில்—(அவை தொக்க சமுதாயத்தின் விளங்கித் தோன்றுவதாய) ஞானத்தினியல்பை அசையாமற்(கருத்தைவொருக்கி) முன்னுணர்ந்து (பின் அச்சமுதாயத்தை) யாதென் றாராயின்,—அது தீபமேபோலத் தனுவாம்—அச்சமுதாயங் (கண்ணுக்கு) விளக்குப்போல (உயிர்க்குத் தூல சூக்கும பரங்களாகிய) உடம்பாம்,—தான் அத்தின்வேறு ஆகும்—(ஆதலாற் கண் விளக்கின் வேறாயினாற் போல) உயிர் அவ்வுடம்பின் வேறாம் எ-று.

ஆமென்பது மேலுஞ் சென்றியையும்.
(குறிப்பு)
மாயை ஆகுபெயர்.

தானென்பது முன்னைய தெழுவாய்; பின்னையது அசை.

அதனி னென்பது அத்தினென மரீஇயிற்று, "இத்தைமெய் யெனக் கருதி" என்புழிட
இந்நூ-சூ. 1, செய். 1.
இதனானே தனி யென்றதனை வலியுறுத்தவாறு.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) காணில் கலை ஆதி மண் அந்தம் (ஆம்) அவை மாயை நிலையாவாம் ஞானத்தை அலையாமல் முன் உணர்ந்து நாடில் அது தீபமே போலத் தனுவாம் தான் அத்தின் வேறு ஆகும்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், அகச்சமுதாயமாகிய பஞ்சகந்தங்கள் தனித்தனி வெவ்வேறு பெயர் பெறினும் அவை யாவுங் கூடிய சமுதாயத்தின்கண் ஆன்மாவெனப் பெயர் பெறுமென்று கொள்வேமாதலான், தனித்தனி வெவ்வேறு பெயர்பெறுதல் பற்றி இழுக்கில்லை யெனக்கூறுவார். அதனை ஆசங்கித்து அவை வெவ்வேறு பெயர்பெறுமிடத்தும் அவர்கூறியவாறு உருவமுதலியபெயர் பெறாது வேறுபெயர் பெறுமென் பதையும், அவை மாயாகாரியங்களே யென்பதையும், அவையாவுங் கூடிய

சமுதாயத்தினும் ஆன்மா வெனப் பெயர் பெறாது வேறுபெயர் பெறுமென் பதையும் உணர்த்திச் சமுதாயத்தின் வேறாய் ஆன்மா உண்டென்பதை வலியுறுத்திய வாறும்.

(பொ-ரை.) மேற் கூறியவாறு சமுதாய மாதற்கு உரியவை யாவை யென்று பிரமாணங்களால் அறியுமிடத்துக் கலாதத்துவமுதல் பிருதிவிதத்து வம் முடிவாகிய தத்துவங்களேயாம். அவை யனைத்தும் மாயையின் காரியங்க ளாதலால் நிலைத்திருப்பதின்றிச் சிலகாலம் நின்று அழிவனவாம். அவை யாவுங் கூடிய சமுதாயத்தில் விளங்கித் தோன்றுவதாய ஞானத்தின் இயல் பை மனதை ஒடுக்கி அசையாமல் முன் உணரின் அது கருவி ஞானமேயாம். பின் அக் கூட்டத்தை யாதென்று ஆராயின் அக்கூட்டம், கண்ணுக்குவிளக் குக் கருவியாதல்போல உயிருக்குத் தூல சூக்கும காரணமென்னும் உடம் பாகிய கருவியாம். ஆதலால் கண் விளக்கின் வேறாயினாற்போல உயிர் அவ் வுடம்பின் வேறாம் எ-று.

(க-ரை.) சமுதாயம் உடம்பெனப் பெயர் பெறுதலே யன்றி ஆன்மா வெனப் பெயர்பெறுதலில்லை யாதலானும் அவ்வுடம்பு உயிருக்கு அறிதற் றொழில் நிகழ்தற்குக் கருவியாதலானும் சமுதாயத்தின் வேறாய் ஆன்மா உண்டு என்பதாம்.

நிலையாவாம் என்றதிலுள்ள ஆம் என்பது அந்தம் என்பதனோடுஞ் சென்று பொருந்தும். ஆதலால் அந்தம் ஆம் என உரை செய்யப்பட்டது.

மாயை யென்பது மாயையின் காரியங்களைக் குறித்தலால் ஆகுபெயர்.

தான் அத்தின் வேறாகுந்தான் என்பதில் முன்னுள்ளதான் உயிரைக் குறித்து நின்ற எழுவாய்; பின்னுள்ளதான் அசை. அதனின் என்பது அத் தின் என மருவி நின்றது. இதனை "இத்தை மெய்யெனக் கருதி" யென் னுந் திருவாசகச் செய்யுளானும் அறிக. திருவாசகத்தில் இதனை யென்பது இத்தையென மருவி நின்றது.

இவ்வதிகரணம் சமுதாயம் ஆன்மா வல்ல வென்றமையால் முதலதி கரணத்து வெண்பாவில் தனியென்றது வலியுறுத்தப்பட்டது.

இம் மூன்றாஞ் சூத்திரத்தினும் அதிகரணங்களினும் கூறியதொ கைப் பொருள் :—மேல் இரண்டாஞ் சூத்திரத்தில் அவையே என்று ஆக மப் பிரமாணத்தால் எடுத்துக் கொண்ட உயிரானது அநுமானப் பிரமாணத் தால் சூனியம் உடல் இந்திரியம் சூக்குமதேகம் பிராணன் பிரமம் சமுதா யம் என்னும் இவற்றின் வேறு எனச் சூத்திரத்தாற் கூறப்பட்டது. படவே, உடல் முதலியவற்றை இதுவன்று இதுவன்று என்று நீக்கியவிடத்து அவற் றின் வேறாய் ஒன்றுங் காணாமையால் சூனியமேஆன்மாவென்று சூனியான் மவாதிகள் கூற, முதலதிகரணத்தால் அவரை மறுத்துச் சூனியம் என்று அறியும் அறிவு ஒன்றுண்டாதலால் அவ்வறிவே ஆன்மாவெனச் சாதிக்கப்

பட்டது. படவே, அவ்வறிவு உடம்பின் வேருய் நிகழாமையால் உடம்பே ஆன்மாவெனத் தேகான்மவாதிகள் கூற, இரண்டாம் அதிகரணத்தால் அவரை மறுத்து என் உடல் எனக்கூறும் அநுபவத்தால் உடம்பின்வேருய் என் என்னுஞ் சொல்லிற்குரிய பொருளாகிய ஆன்மா உண்டெனச் சாதிக்கப்பட்டது. படவே, ஐம்பொறிகள் உடல்போற் சடமின்றி அறியுந் தன்மையுடையன ஆதலானும், அந்த ஐம்பொறிகளை எனதென்றுகூறுதல் பெரும்பான்மையன்முகலானும், அவ்வைம் பொறிகளே உயிரென இந்திரியான்மவாதிகள் கூற, மூன்றும் அதிகரணத்தால் அவரைமறுத்து ஐம்பொறிகளும் ஒன்று அறிந்ததைப் பிறி தொன்று அறியாமையானும், ஒன்றையும் அறிவதேயன்றி அறிந்தேனென்று உணராமையானும், ஐந்து இந்திரியங்களையுங் கொண்டு ஐந்து விடயங்களையும் அறிந்து அறிந்தேன் என உணர்வது இந்திரியங்களின்வேருன உயிரெனச்சாதிக்கப்பட்டது. படவே, இந்திரியங்கள் ஒடுங்கின சொப்பனத்தானத்தில்அறிவு நிகழ்தலால் சூக்கும உடம்பே உயிரெனச்சூக்குமதேகான்மவாதிகள் கூற, நான்காம் அதிகரணத்தால் அவரைமறுத்து அச்சூக்குமதேகம் சாக்கிரத்தின்கண்ணும் இருத்தலால் சொப்பனத்திற் கண்டவற்றைச் சாக்கிரத்தில் மயங்கி யறியவேண்டாம்; மயங்கி யறிதல் காணப்படுகின்றமையால் சில கருவிகளைவிட்டுச் சூக்குமதேகமாய் நின்று அறிந்ததை, விட்ட கருவிகளோடு மீட்டுங் கூடிச் சாக்கிரத்தில்வந்து மயங்கி யறிவது ஒன்றிருத்தலால் அது சூக்குமதேகத்தின் வேருன உயிரெனச் சாதிக்கப்பட்டது. படவே, சொப்பனமு மில்லாத சுழுத்தி துரியங்களினும் பிராணவாயு இயங்கிக்கொண்டிருத்தலானும், சுழுத்தியில் சுகானுபவம் இருத்தலானும், பிராணவாயுவே உயிரெனப் பிராணன்மவாதிகள் கூற, ஐந்தாம் அதிகரணத்தால் அவரை மறுத்துச் சாக்கிரத்தில் இருந்ததுபோலவே சுழுத்தி துரியங்களினும் பிராணவாயு இயங்கிக்கொண்டிருந்தும் சாக்கிரத்திற்போலச் சுழுத்தி துரியங்களில் இன்பத்துன்ப அனுபவமும் உடம்பு தொழிற்படுதலும் இல்லாமையால், கருவிகளை ஒடுக்கிய பொழுது அனுபவமுந் தொழிலும் இலவாதலும் ஒடுக்கிய கருவிகளோடு மீளக் கூடும்போது அவை உளவாதலும் உண்டாமாதலால் அவ்வாறு நிற்பது பிராணவாயுவின் வேருன உயிரெனச் சாதிக்கப்பட்டது. படவே, பிரமப் பொருள் உடல்முதலியனபோலச் சடமாதலின்றி அறிவுடைய பொருளாதலால் பிரமமே உயிரென்றல் பொருந்துமென விஞ்ஞானன்மவாதிகள் கூற, ஆறுமதிகரணத்தால் அவரை மறுத்துக் கருவிகளோடு கூடி அறிவதாலும், அவ்வாறு அறியுங்காலத்தும் தன்னியல்பை வேதாகமங்களினுலும் ஆசிரியன் உபதேசத்தினுலும் அறிவதாலும், கருவிகளோடு கூடிய சாக்கிரத்தினின்று அறியுமிடத்தும் ஒருசேர அறிவதின்றி ஒன்றனையே அறிவதாலும், அவ்வொன்றனையும் விட்டு விட்டு அறிவதாலும், கருவிகளோடு கூடாமல் எவற்றையும் ஒருசேர அறிந்தவாறே அறியும் பிரமத்தின்வேருய் உயிர் உண்டெனச் சாதிக்கப்பட்டது. படவே, உடம்பு முதலியவற்றுள் ஒன்று

குறையினும் அறிவு நிகழாமையால் அனைத்துங் கூடிய சமுதாயமே உயிரெனச் சமுகான்மவாதிகள் கூற, ஏழாம் அதிகரணத்தால் அவரை மறுத்து அச்சமுதாயத்திற்குத் தனித்தனி பெயரிருத்தலானும், அனைத்துங் கூடிய கூட்டத்திற்கு ஆன்மாவென்னும் பெயரில்லாமல் உடம்பென்னும் பெயரிருத்தலானும், அது உயிருக்குக் கருவியாதலானும், சமுதாயத்தின் வேறாய் ஆன்மா உண்டெனச் சாதித்தவாறும்.

## சிற்றுரை.

இவ்வாறு மூன்று சூத்திரத்தானும் சைவாகமங்களுட் கூறப்படும் பதிமுதலிய பொருள்களது உண்மை அநுமான வளவையான் வலியுறுத்தப்பட்டது. ஆகம வளவையே யமையுமாகலின் அனுமானவளவை மிகையாம் போலுமெனின், ஆகாது; மந்தவுணர்வுடைய மாணுக்கர்க்கு வேற்றுச் சமயநூல்களை நோக்கிய வழிச் சைவாகமப் பொருளின் மலைவு நிகழாமைப்பொருட்டும் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை யென்னு நான்கு வகையானன்றி ஆகமங்களைக் கேட்ட துணையானே அநுபவங் கூடாமையிற் சிந்தனை செய்து வன்மை மென்மைகளை உணர்ந்து தெளிந்து கோடற்பொருட்டும் கருதலளவையும் வேண்டப்படு மாகலா னென்க.

## விளக்கம்.

இவ்வாறு முதற் சூத்திரந்தொடங்கி மூன்று சூத்திரத்தானும் சைவாகமங்களிற் கூறப்படும் பதி பசு பாசமென்னும் முப்பொருள்கள் உண்டென்பது அனுமானப் பிரமாணத்தாற் சாதிக்கப்பட்டது. ஆகமப்பிரமாணமே போதுமானதாகவும் அனுமானப் பிரமாணம் மிகை யென்னுங் குற்றமாகாதோ எனின், ஆகாது; ஏனெனின், மந்த அறிவுடைய மாணுக்கருக்கு ஆகமப் பிரமாணங்கூறினும் வேற்றுச் சமய நூல்களைப் பார்க்கும்பொழுது சைவாகமப் பொருளில் மலைவு உண்டாகும். அம்மலைவு உண்டாகாமையின் பொருட்டும், கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை யென்னும் நான்கு வகையாலன்றி ஆகமங்களைக் கேட்ட மாத்திரையிலேயே அனுபவம் சித்திக்காது ஆதலால், கேட்டபின்னர் அநுமானத்தால் சிந்தனைசெய்து வன்மை மென்மைகளை யுணர்ந்து தெளிந்து கொள்ளுதற்பொருட்டும் அனுமானப் பிரமாணமும் வேண்டப்படும். ஆதலால் மிகையாகாதென்க. இதனால் அனுமானப பிரமாணம் புறச்சமயிகள் பொருட்டேயன்றிச் சைவசமயிகளுக்குஞ் சிந்தித்தற் பொருட்டு வேண்டப்படு மென்பதாயிற்று.

ஏழாம்அதிகரணம்முற்றிற்று.

மூன்றாம் சூத்திரம் முற்றிற்று.

பிரமாணவியல் முற்றிற்று.

---

# இலக்கண இயல்.

## நான்காஞ் சூத்திரம்.

### பசு இலக்கணம்.

*மூன்றுஞ் சூத்திரத்தால் உண்டென்று சாதிக்கப்பட்ட உயிருக்கு இலக்கணம் இந்நான்காஞ் சூத்திரத்தாற் கூறுகின்றார்.*

அந்தக் கரண மவற்றிஞேன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.

*கருத்துரை.*

**எ-து சூ-ம் எ-னின், இதுவுமது.**

### சிற்றுரை.

*எ—து க—ரை எ—னின், சூத்திரக்கருத் துணர்த்துதனுதலிற்று.*

*(இ—ள்.) பிரமாணம் இலக்கணமிரண்டானும் பொருளுண்மை பெறற்பாற்றென்னு முறைமைபற்றி மேற் பிரமாணத்தாற் பெறுவிக்கப்பட்ட பதி பாச பசுக்களுக் கிலக்கணம் எதிர் நிரனிறையாக வைத்துக் கூறுவான்றொடங்கி அவற்றுள் இது மேலடுக்க நின்ற ஆன்மாவினிலக்கணங் கூறுதனுதலிற்று. எ - று.*

*சொற்பல்காமைப் பொருட்டும் ஒத்து வேறுயவழியும் இயைபுடைமை யுணர்ந்துகோடற்பொருட்டும் ஈண்டு இதுவுமதுவென மாட்டெறிந்துரைத்த ஆசிரியர், இங்ஙன முரைத்துக்கோடற் கேற்பவன்றே ஆண்டு ஆன்மாவினதுண்மை யுணர்த்துதனுதலிற்றெனச் சிறந்தெடுத்தோதாது பொதுப்பட ஆன்மப் பிரகாசமுணர்த்துத னுதலிற்றென்றதூஉமென்க. இவ்வாறன்றி மேலைச் சூத்திரத்தின் ஆன்மாவினதுண்மை கூறுமுகத்தாற் றெருகுத்தோதிய அஞ்சவத்தை ஈண்டிலக்கணங் கூறுமுகத்தான் விரித்தோதப்படுதலின் இதுவுமதுவென்றது மேலைச் சூத்திரப்பொருளோடு மாட்டெறிந்ததென்றுரைப்பினுமாம். இதனானுஞ் சூத்திர வியைபு இனிது விளங்கும்.*

## விளக்கம்.

இக்கருத்துரை என்ன சொல்லிற்றேயெனின், சூத்திரத்தின் கருத்து இதுவென்று சொல்லிற்று.

(இக்கருத்துரையின்பொருள்.) கண்ணுக்குக் காணப்படாதபொருள் உண்டென்று நிச்சயிப்பதற்கு அநுமானப் பிரமாணமும் இலக்கணமும் சாதனமாகும். எவ்வாறெனின், மலையிலுள்ள அக்கினி கண்ணுக்குக் காணப்படாதிருப்பினும் அதன் புகையைக்கொண்டு அக்கினி உண்டென்று நிச்சயிக்கலாம். இது அநுமானப் பிரமாணம். கண்ணுக்குக் காணப்படாமல் பக்கத்தில் மறைந்திருக்கும் புகையில்லாத அக்கினியை வெப்பத்தால் உண்டென்று நிச்சயிக்கலாம்; வெப்பம் அக்கினிக்கு இலக்கணம். ஆகவே, அநுமானப் பிரமாணத்தினாலும் இலக்கணத்தினாலும் கண்ணுக்குக் காணப்படாத பொருளை உண்டென்று நிச்சயிக்கலாமென்பது பெறப்பட்டது. இம்முறைமைபற்றி மேல் மூன்று சூத்திரங்களால் அநுமானப் பிரமாணத்தால் உண்டென்று சாதிக்கப்பட்ட பதி பாசம் பசு என்னும் முப்பொருளும் இலக்கணத்தினாலும் உண்டென்று சாதிக்கத் தொடங்கி இறுதியை முதலாகக்கொண்டு முறையே மேற்செல்லும் எதிர்நிரனிறைப்படி மேல் அடுக்க நின்ற மூன்றாஞ் சூத்திரத்தால் உண்டென்று சாதிக்கப்பட்ட ஆன்மாவின் இலக்கணங் கூறுதல் இச்சூத்திரத்தின் கருத்து எ - று.

கருத்துரையை விரித்துக்கூறின் விரியுமென் றெண்ணியும், மூன்றாஞ் சூத்திரம் பிரமாண இயலாகவும் இச்சூத்திரம் இலக்கண இயலாகவும் இருப்பினும் மூன்றாஞ் சூத்திரத்திற்கும் நான்காஞ் சூத்திரத்திற்கும் ஆன்மா உண்டெனச்சாதிக்குஞ் சம்பந்தம் உடைமை உணர்ந்துகொள்ளுதற் பொருட்டும், இச் சூத்திரத்திற்குக் கருத்துரை இதுவும் அதுவென மேலைச் சூத்திரத்தோடுமாட்டெறிந்து உரைத்தார். மாட்டெறிதல் ஒருத்தி. இவ்வாறு உரைத்த ஆசிரியர் இக்கருத்துரை செய்து கொள்ளுதற்கேற்ப மூன்றாஞ் சூத்திரத்துக்குக் கருத்துரை கூறுங்கால் ஆன்மாவினது உண்மை உணர்த்துதல் நுதலிற்று எனச் சிறந்தெடுத்தோதாது, பிரமாண இயலுக்கும் இலக்கண இயலுக்கும் பொதுப்பட ஆன்மப்பிரகாசம் உணர்த்துதல் நுதலிற்று எனக்கூறினர்.

இவ்வாறன்றி மூன்றாஞ் சூத்திரத்தில் ஆன்மாவினது உண்மை கூறு முகத்தால் முதன் மூன்றதிகரணங்களாலும் சாக்கிரமும், நான்காமதிகரணத்தால் சொப்பனமும், ஐந்தாம் அதிகரணத்தால் சுழுத்தி துரியம் துரியாதீதங்களும் தொகுத்தோதப்பட்டமையால், அவ்வாறு தொகுத்தோதிய அஞ்சவத்தை இச் சூத்திரத்தில் இலக்கணங் கூறுமுறையில் விரித்தோதப்படுதலின் இதுவும் அதுவென்று மேலைச் சூத்திரப்பொருளோடு மாட்டிச் சொன்னதென்றுரைப்பினும் பொருந்தும்.

ஆன்மாவின் உண்மையை மூன்றாஞ் சூத்திரத்தாற் கூறி அதனிலக்கணம் இச்சூத்திரத்திற் கூறுதலினாலும், அஞ்சவத்தையை மூன்றாஞ் சூத்திரத்தில் தொகுத்துக்கூறி இச்சூத்திரத்தில் அதனை விரித்துக் கூறுதலினாலும் சூத்திர இயைபு பெறப்பட்டது.

## சிற்றுரை.

இச்சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு.

ஆன்மா—ஆன்மா,—அந்தக்கரண மவற்றின்—அந்தக்கரணங்களாகிய மனம் புத்தி அகங்காரஞ் சித்தமென்னு நான்கனுள்,—ஒன்றன்று (ஆயினும்)—ஒன்றன்றாயினும் (நுண்ணுணர்வின்மையிற் சூழ்ச்சித்துணைவராகிய),—அமைச்சர சேய்ப்பநின்று—அமைச்சரோடுகூடிநின்று (தன்றொழில்நடாத்தும்) அரசன்போல,—சகசமலத்துணராது—சகசமலத்தினான் உணர்வின்றிக் (கஞ்சுகம்போலுங்கலாதிகளாற் பொதுவகையான் உணர்வு நிகழினுஞ் சிறப்புவகையான் நிகழுமாறு அவற்றாற் பெறப்படாமையிற் சிறப்புவகையானுணருமாறு தனக்குச் சூழ்ச்சித்துணையாகிய),—அவை சந்தித்தது—அவ்வந்தக் கரணங்களோடு கூடிநின்று,—அஞ்சவத்தைத்தே—சாக்கிர முதலிய ஐந்தவத்தை யுடைத்தாம். எ - று.

எனவே, அங்ஙனநின்று அஞ்சவத்தைப்படுதல் ஆன்மாவுக்கிலக்கண மென்றவாறாயிற்று. இஃது உயிருக்குத் தடத்தலக்கணமெனப்படும் பொது வியல்பு.

ஒன்றன்றாயினும் சகசமலத்துணராது அமைச்சர சேய்ப்ப அவற்றோடு சந்தித்தது நின்று அஞ்சவத்தைத்தாமென வினையயும்.

உணராது சந்தித்ததென்பது காரணகாரியப்பொருட்டாய் நின்றது. சந்தித்தது வினையெச்சமுற்று.

இவ்வாறன்றி ஆன்மா அவற்றினொன்றன்றாயினும் சகசமலத்துணராமையால் அவற்றோடு சந்தித்தது. சந்தித்தவழி அவையுந் தானும் அமைச்சரசேய்ப்ப நிற்றலான் அஞ்சவத்தைத்தாயிற்று என அதிகாரணம் பகுத்துக் கோடற்கேற்ப வேறு வேறு வினைமுடிபு செய்துரைத்தலு மொன்று.

வடமொழிச் சூத்திரத் தோதுதலின் ஈண்டும் ஆயினுமென வருவித்து ஒரு தொடராக வைத்துரைக்க. அந்தக்கரண மவற்றி

ஞென்றன்றுயினு மெனவே, அவற்றிஞென்றன்றுதலும் அநுவாத முகத்தால் ஈண்டைபெற்றும். இஃதுணராதார் அந்தக்கரண மவற்றிஞென்றன் றென்றதனை வேறு தொடராகவைத் துரைப்ப. அங்ஙன முரைப்பின், முன்வருவனவற்றை அவாய்நின்று ஒரு பொருண்மேல் வாராமையின் ஒரு சூத்திரமாதற்கேலாமை யறிக.

அவை சந்தித்ததென்புழி ஒடுவுருபு விகாரத்தாற் றொக்கது. இரண்டாவது விரிப்பினு மமையும்.

ஆன்மாவென்பது மேலைச் சூத்திரத்தினின்றும் வருவித் துரைக்கற்பாலதாகவும், ஈண்டு வேறோதியது ஒத்து வேறுதல் பற்றி யென்றுணர்க.

ஆன்மா வென்னுஞ் சொற்குப்பொருள் வியாபகமென்ப தூஉம் சித்தசித்தென்பதூஉமாம்.

மலத்து மலத்தாலென விரிக்க.

அமைச்சரசு அமைச்சரோடு கூடிய அரசென உருபும் பொருளும் உடன் றொக்கன.

காரணப் பொருட்டாய நின்றென்னும் வினையெச்சம் அஞ்ச வத்தைத்தென்னும் வினைக்குறிப்புமுற்றோடு முடிந்தது.

## விளக்கம்.

(இச்சூத்திரத்தின் பொழிப்புரை.) ஆன்மாவானது அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, அகங்காரம், சித்தமென்னும் நான்கனுள் ஒன்றன்று ஆயினும் அரசன் தனக்கு நுணுகிய அறிவில்லாமையினுல் ஆலோசனைத் துணைவராகிய அமைச்சரோடு கூடிநின்று தன்னுடைய அரசகாரியத்தை நடாத்துமாறுபோல, அனுதியே இயல்பாகக் கூடியிருக்கும் ஆணவமலத்திஞல் அறிவின்றிக் கிடக்கும் ஆன்மாவிற்குச் சட்டைபோன்ற கலைமுதலிய தத்துவங்களிஞல் பொதுவகையான் உணர்வு நிகழினும் சிறப்புவகையான் உணர்வு நிகழாமையால் அது நிகழுதற்கு ஆலோசனைத் துணையாகிய அவ்வந்தக்கரணங்களோடு கூடிநின்று சாக்கிரமுதலிய ஐந்தவத்தையைப் பொருந்தும் எ-று.

பொதுவகையால் உணர்வு நிகழ்தலாவது, அறியாமையில் நின்று நீங்கி அறிவு சிறிது விளங்கப்பெற்றுப் பகுத்தறிவின்றி நிற்கும் நிலை. சிறப்புவகையால் உணர்வு நிகழ்தலாவது பகுத்தறிவோடு கூடி நிற்கும்நிலை. உதாரணம்:—நித்திரையில்நின்று நீங்கி விழிக்கும்போதுள்ள அறிவு பொது அறிவு. தொழில் செய்யும் பொழுதுள்ள அறிவு சிறப்பறிவு.

ஆன்மா ஐந்தவத்தையைப் பொருந்து மெனக் கூறியதனால் அந்தக்கரணங்களோடு கூடிநின்று அஞ்சவத்தைப்படுதல் ஆன்மாவுக் கிலக்கணம் என்றவாறாயிற்று. இஃது உயிர்க்குத் தடத்த லக்கண மெனப்படும் பொதுவியல்பு.

ஆன்மா அந்தக்கரணங்களில் ஒன்றன்றாயினும் சகசமலத்து உணராது அமைச்சும் அரசும் ஒப்ப அவ்வந்தக் கரணங்களோடு சந்தித்துநின்று அஞ்சவத்தைப்படுமெனச் சூத்திரத்து வாக்கியங்களைப் பொருத்திக்கொள்க.

உணராது சந்தித்த தென்பதில் உணராமை காரணம்; சந்தித்தல் காரியம். ஆகவே சகசமலத்தோடு கூடி உணராமையினால் அந்தக் கரணங்களோடு சந்தித்தது என்பதாம்.

சந்தித்தது என்பது சந்தித்து என்னும்பொருளைக் குறித்து நிற்றலால் வினையெச்சம்; அந்த எச்சம் அஞ்சவத்தைத்தே என்னும் வினைகொண்டு முடிந்தது. சந்தித்தது என்பது வினைமுற்று. ஆகவே, சந்தித்தது என்பது பொருளால் வினையெச்சமாயும் சொல்லால் முற்றாயும் நிற்றலால் வினையெச்சமுற்று. ஆதலால் சந்தித்தது என்பதற்குக் கூடிநின்று என உரை செய்யப்பட்டது.

சந்தித்தது என்பதற்கு இவ்வாறன்றி ஆன்மா அந்தக்கரணங்களில் ஒன்றன்றாயினும் சகசமலத்தோடுகூடி உணராமையின் அவ்வந்தக்கரணங்களோடு சந்தித்தது என ஒருவினை முடிபாயும், சந்தித்தவிடத்து அவ்வந்தக் கரணங்களுந் தானும் அமைச்சரும் அரசனும்போல் நிற்றலால் அஞ்சவத்தைப்பட்டது என மற்றொருவினை முடிபாயும் இரண்டு முடிபுசெய்து கூறுதலும் ஒன்று. இவ்வாறு இரண்டு முடிபாகவைத்துச் சந்தித்தது என்பது இரண்டாம் அதிகரணமாகவும் அஞ்சவத்தைத்தே என்பது மூன்றாம் அதிகரணமாகவும் வகுத்தவாறு அறிக.

இச்சூத்திரத்தில் ஆயினும் என்பது இல்லையாயினும் வடமொழிச் சிவஞானபோதத்திற் கூறுதலால் இச்சூத்திரத்தும் வருவித்து அந்தக்கரணம் அவற்றினொன்று அன்றுஆயினும் என ஒரு தொடராகவைத் துரைக்க. அவ்வாறே உரை செய்யப்பட்டது. அந்தக்கரணங்களாகிய அவற்றின் ஒன்று அன்றாயினும் என்றதனாலேயே ஆன்மா அவற்றின் ஒன்று அன்றாதலும் அநுவாதமுகத்தால் இவ்விடத்திலேயே பெறப்பட்டது. அநுவாதமாவது முன்னர்ப் பெறப்பட்டதொன்றை வேறொன்று விதித்தற்பொருட்டுப் பின்னரும் எடுத்துக்கூறல். ஒன்று அன்றென்பது முன் பெறப்படாதவிடத்து ஒன்று அன்று ஆயினும் எனக் கூறமுடியாது. ஆதலால் ஒன்றன்றாயினும் என்றதனாலேயே ஒன்று அன்று என்பது முன் பெறப்பட்டமை காண்க. இவ்வாறு பொருள் கொள்ளாதார் அந்தக்கரணம் அவற்றின் ஒன்றன்று என்பதை வேறு தொடராகவைத்து ஆன்மாவின் உண்மை கூறியதென உரைப்பர். அதாவது ஆன்மா அவற்றின் வேறென்பதைச் சாதிக்கவந்ததாய்க்

கூறுவர். அவ்வாறு உரைப்பின் அவை சந்தித்தது, அமைச்சரசேய்ப்ப என முன்வருவனவற்றை அவாய்நின்று இலக்கணமாகிய ஒருபொருண் மேல் வாராமையின் ஒரு சூத்திரமாதற் கேலாமை யறிக. ஆதலால் அந்தக் கரணங்களுள் ஒன்றன்று, ஒன்றன்றாயினும் அவற்றைச் சந்தித்தது, சந்தித்து அஞ்சவத்தைப்பட்டது என ஒரு முடிபாகவைத்து இலக்கணங் கூறியதாகக்கொள்வதே பொருத்தம்.

அவை சந்தித்தது என்றவிடத்து ஒடு உருபு விகாரத்தாற் றொக்கு நிற்றலால் அவ்வுருபை விரித்து அவ்வந்தக் கரணங்களோடு என உரை செய்யப்பட்டது. இரண்டாவதாகிய ஐ உருபை விரித்து அவ்வந்தக்கரணங்களைச் சந்தித்தது எனக் கூறினும் பொருந்தும்.

ஆன்மா வென்பது மூன்றாஞ் சூத்திரத்தில்நின்றும் வருவித்து உரைக்கலாமாயினும் மூன்றாஞ் சூத்திரம் பிரமாண இயலும் இச்சூத்திரம் இலக்கண இயலு மாதலால் அவ்வேற்றுமைபற்றி இச்சூத்திரத்திலும் ஆன்மா வென்றோதப்பட்ட தென அறிக.

ஆன்மா என்னுஞ் சொற்குப்பொருள் வியாபகமென்பதூஉம், சித்தொடு கூடில் சித்தாயும் அசித்தொடு கூடில் அசித்தாயும் நிற்றற்கு உரிமையுடைமையால் சித்தசித்தென்பதூஉமாம்.

சகசமலத்து என்றவிடத்து ஆல் உருபு விரித்துச் சகசமலத்தினால் என உரைசெய்யப்பட்டது.

அமைச்சரசு என்றவிடத்து ஒடு உருபும் கூடிஎன்னும் பொருளும் உடன் றொக்குநின்றன. அவற்றை விரித்து அமைச்சரோடு கூடிநடாத்தும் அரசன் என உரைசெய்யப்பட்டது.

அமைச்சரசேய்ப்ப நின்று என்பதிலுள்ள நின்று என்பது நிற்றலா லென்னும் பொருளைக் குறித்தலால் காரணம். அது வினையெச்சமாய் அஞ்சவத்தைத்தே என்னும் வினைக்குறிப்புமுற்றோடு முடிந்தது. அஞ்சவத்தைத்தே என்பது காலங்காட்டாமையின் வினைக்குறிப்பு முற்றாயினமைஅறிக.

## சிற்றுரை.

இதனுள் அந்தக்கரண மவற்றி னொன்றன்றென்றது ஓரதிகரணம்; ஒன்றன்றாயினும் சகச மலத்துணராது அமைச்சர சேய்ப்ப அவை சந்தித்தது என்றது ஓரதிகரணம்; அமைச்சர சேய்ப்ப நின்று அஞ்சவத்தைத்தே யென்றது ஓரதிகரணம்; ஆக மூன்றதிகரணத்தது இச்சூத்திர மென்றுணர்க.

## விளக்கம்.

வெளிப்படை.

# முதலதிகரணம்.

அந்தக் கரணம் ஆன்மா அன்றெனக்கூறும்

மேற்கோள்.

ஈண்டு இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களா யுள்ள மனோபுத்தி யகங்கார சித்தங்களில் ஒன்றன்று என்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், ஏனைய வெல்லாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்பன வாகலான் உயிராகா; ஆயினும் மன முதலிய அந்தக்கரணங்கள் "சிந்தையைச் சீவனென்றுஞ் சீவனைச் சிந்தையென்றும்" இங்ஙன முயிரென்னும் பெயரானும் வழங்கப்படுத லுண்மையானும், இந்திரிய முதலியவற்றை அவ்வாறு கூறுமையின் அஃதாகு பெயரென்றற் கேலாமையானும், அவையே தனித்தனி ஆன்மாவாமென்றல் அமைவுடைத்தெனை அந்தக்கரணான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற் கூற்றைக்கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இதுமேலைச் சூத்திரத்துள் ஓதற்பாலதேயாயினும் ஈண்டிலக்கணங் கூறும் வழியும் அவற்றோடு சந்தித்து அமைச்சரசேய்ப்ப நிற்பதெனை அவத்தைக் கேதுவாக எடுத்தோதவேண்டுதலின் ஈரிடத்து மெடுத்தோதுதல் "சில்வகை யெழுத்தின் செய்யுட் டாகிச்—சொல்லுங் காலையுரை யகத்தடக்கி—நுண்மையொடு புணர்ந்த வொண்மைத் தாகி" என்னு மிலக்கணத்ததாய சூத்திரத்துக் கேலாமையான் அதுபற்றி விதிமுகத்தா னன்றி அநுவாத முகத்தான் ஈண்டுணர்த்தப் பட்டது.

இ—ள். வெ—டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

இ—ள். ஈண்டு—இம் மூன்றதிகரணத்துள்வைத்து இம்முதலதிகரணத்து,—இவ்வான்மா வாவது—மேற் கூறிப்போந்த உயிரா

வது,—அந்தக்கரணங்களாயுள்ள மனோ புத்தி யகங்கார சித்தங்களில்—புறவந்தக் கரணங்களாகிய மனம் புத்தி அகங்காரம் சித்தங்களாகிய இவற்றின்,—ஒன்று அன்றென்றது—வேறும் எ-று.

## சிற்றுரை.

ஈண்டு அந்தக்கரண மென்றது உள்ளந்தக் கரணமாகிய கலாதிகளினுஞ் செல்லாமைப் பொருட்டு மனோபுத்தி யகங்கார சித்தங்களிலெனக் கிளந்தெடுத்துரைத்தார். கலாதிகளுண்டெனக் கொண்டோரின் உயிர்வேறுண்டெனக் கொள்ளாதார் இன்மையின் ஆண்டாசங்கை நிகழாமையானும், அமைச்சரோடு உவமிக்கப்பட்டு அவத்தைக் கேதுவாவன அம்மனமாதியே யன்றிக் கஞ்சுகத்தோடு உவமிக்கப்பட்டு அதீதத்தினு நீங்காது உடனிற்பன வாய கலாதிகளன்மையானும், அவற்றை ஈண்டெடுத்தோத வேண்டாமையின் மனமுதலிய புறவந்தக் கரணங்களே ஈண்டுக்கூற நின்றன வென்பது கருத்து.

## விளக்கம்.

இது சூத்திரத்திலுள்ள அந்தக்கரணம் அவற்றின் ஒன்று அன்று என்பதைப் பதச் சேதஞ் செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோ வெனின், ஆன்மா அல்லாத இந்திரிய முதலிய வெல்லாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்பன வாகலான் அவை உயிராகா; ஆயினும் சிவஞான சித்தியார் ச-ம் சூ—ம் உஅ·வது செய்யுளில் "சிந்தையைச் சீவனென்றும் சீவனைச் சிந்தை யென்றும்" கூறியிருக்கின்றமையால் மனமுதலிய அந்தக்கரணங்கள் அவ்வாறு உயிரென்னும் பெயரானும் வழங்கப்படுதலினாலும், இந்திரிய முதலியவற்றையும் அவ்வாறு உயிரென்றுவழங்கப்படாமையால் அந்தக்கரணங்களை உயிரென்று கூறியது ஆகுபெயரினால் என்று கூறுதற்கேலாமையானும், அவ்வந்தக் கரணங்களே தனித்தனி ஆன்மாவாமென்று கூறுதல் பொருத்த முடைத்தென அந்தக்கரணான்ம வாதிகள் கூழுவர். அவர் கூற்றை ஆசங்கித்துக் கொண்டு சூத்திரத்தின் முதற்கூற்றைப் பதச்சேதஞ் செய்து அந்தக்கரணங்கள்ஆன்மாவன்று எனக் கூறியவாறும்.

இவ்வதிகரணத்தில் அந்தக்கரணங்கள் ஆன்மாவோ அன்றோ வென்பது ஐயப்பாடு. இவ்வையப்பாட்டின் கண் அந்தக் கரணங்கள் ஆன்மா வென்பது பிறர்பக்கம். இவ்வாறு கூறுவோர் அந்தக் கரணான்மவாதிகள் என அறிக.

இவ்வதிகாரணம் மேல் மூன்றுஞ் சூத்திரத்துட் கூறவேண்டுவதேயாயி னும் இச் சூத்திரத்தில் அவ்வந்தக்கரணங்களோடு சந்தித்து அமைச்சும் அரசும்போல நிற்பதால் அஞ்சவத்தையை உடையதாய் நிற்றல் இலக்கண மெனக் கூறவேண்டுதலினல் இரண்டு சூத்திரத்தினிடத்தும் எடுத்தோது தல் தொல்காப்பியம் பொருளதிகாரம் மரபியல் க00-வது சூத்திரத்தில் ''சில்வகை எழுத்தின் ***வொண்மைத்தாகி'' என்று கூறிய விதிக்கு ஏலா மையால் அதுபற்றி அந்தக்கரணங்கள் ஆன்மா அல்ல என்பது விதிமுகத் தால் மேலைச் சூத்திரத்திற் கூறுமல் இலக்கணங்கூறும் இச்சூத்திரத்தில் அநுவாதமுகத்தாற் கூறப்பட்டது.

(இம்மேற்கோளின் பொருள்.) இம்மூன் றதிகரணத்துள்வைத்து இம் முதலதிகரணத்து மூன்றுஞ் சூத்திரத்திற் கூறிப்போந்த உயிராவது புற அந்தக்கரணங்களாகிய மனம் புத்தி அகங்காரம் சித்தங்களாகிய இவற்றின் வேறும். எ - று.

இவ்வதிகரணத்தில் அந்தக்கரண மென்றது புற அந்தக்கரணமென உணரும் பொருட்டும், உள்ளந்தக்கரணமாகிய கலைமுதலிய தத்துவங்களிற் சேராதிருக்கும் பொருட்டும், மனோபுத்தி அகங்கார சித்தங்கள் எனத் தெரித்தெடுத்துரைத்தார். அந்தக்கரண மென்பது அகத்தேயிருக்குங் கருவியாம். அது உள்ளந்தக்கரணம் புறவந்தக்கரணமென இருவகைப் படும். அவற்றுள் உள்ளந்தக்கரணமாவது கலை, வித்தை, அராகம், புருடன் முதலிய வித்தியா தத்துவங்கள். புறவந்தக்கரணமாவது மனம், புத்தி, அகங்காரம், சித்தங்கள். இந்திரியத்தை நோக்க மனம் முதலியன அகத்தி லிருப்பதால் அந்தக்கரண மெனவும், கலைமுதலிய தத்துவங்களுக்குப் புறத் தே யிருப்பதால் புறவந்தக்கரண மெனவும் மனமுதலியவற்றிற்குப் பெய ராயிற்று. கலைமுதலிய தத்துவங்கள் மனமுதலிய அந்தக் கரணங்களுக் கும் உள்ளாயிருப்பதால் உள்ளந்தக்கரண மெனப்பட்டது. கலாதி தத்து வங்கள் உண்டெனக் கொண்டவர்களும் அத்தத்துவங்களின் வேறாய் உயிர் உண்டெனக் கொள்ளாதாரில்லை. ஆதலால் உள்ளந்தக்கரணத்தைப்பற்றி ஆசங்கை நிகழாமையானும், அமைச்சரைப்போல நின்று அவத்தைக் கேது வாயிருப்பன அம்மனமுதலிய தத்துவங்களேயன்றிச் சட்டையைப்போல் துரியாதீத அவத்தையினும் நீங்காது ஆன்மாவுடன் நிற்பனவாகிய கலாதி தத்துவங்கள் அல்லாமையானும், அக்கலாதி தத்துவங்களை இச்சூத்திரத்தில் எடுத்தோத வேண்டாமையால் மனமுதலிய புறவந்தக்கரணங்களே இவ் விடத்துக்கூற நின்றனவென்பது கருத்து.

மனம் முதலிய அந்தக்கரணங்கள் சுழுத்திவரையுந்தான் தொழிற்படும். துரியந் துரியாதீதங்களில் மனமுதலிய அந்தக்கரணங்கள் தொழிற்பட மாட்டா. தொழிற்படாமையே அவ்விரண்டு அவத்தைக்கும் ஏதுவாயிற்று. துரியாதீதத்தில் புருடதத்துவம் இருத்தலால் கலாதிகளும் உண்டெனஅறிக.

அந்தக்கரணங்கள் ஆன்மாவல்ல வென்பதற்குக் காட்டும்

ஏது.

அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.

## சிற்றுரை.

எ—து ஏது எ—னின், "மனமும் புத்தி யகங்காரஞ்சித்த நான்கு—மருவி யான்மாவே யென்னவரும்" என நீயிருங்கோடலின் உயிர் அவற்று ளொன்றுதலமையு மென்றுறப்படு மிழுக்கென்னையென்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) அவ்வந்தக்கரணங்கடாம் தம்மிற் கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாய் நின்றே தம்மைநோக்கி அசித்தாய் நிற்றலால் தன்னை நோக்கியுஞ் சித்தாய் நிற்கும் இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோபுத்தி யகங்காரசித்தங்களில் ஒன்றன்றென மேற்கொண்டது எ—று.

எனவே, உயிரான் அதிட்டிக்கப்பட்டு ஐம்பொறிகளறிந்த விடயங்களுள் ஒன்றனை இஃதியாதாகற்பாற்றெனச் சித்தஞ்சிந்தித்தறியும்; யான் சிந்தித்தே னென்றறியமாட்டாது. மனம் அதனை இஃதின்னதாகற்பாற்றெனவும் அஃதாமோ அன்றோ எனவும் இவ்வாறு சங்கற்பவிகற்பஞ் செய்தறியும்; யான் சங்கற்பவிகற்பஞ் செய்தேனென்றறியமாட்டாது. அகங்காரம் அதனை இன்னதெனத் துணிவேன் யானென்று ஒருப்பட்டெழுந்தறியும்; யானொருப்பட்டெழுந்தேனென் றறியமாட்டாது. புத்தி அதனை இன்னதிதுவென நிச்சயித்தறியும். யானிச்சயித்தேனென் றறியமாட்டாது. ஆகலான் அவ்வாறின்றி அவற்றோடு கூடி யான் சிந்தித்தேன் பற்றினேன் எழுந்திருந்தேன் நிச்சயித்தேனென்றும் அதன்பின் அதுவதுவாய்ப் பரிணமித்துச் சுகதுக்கமோகரூபமாய்த் தன்மாட்டு வந்த புத்திதத்துவத்தின் பரிணாமங்களைக் கலாதிகளோடு கூடிநின்று இது சுகம் இது துக்கம் இது மோகமென்றறிந்தும் யான்சுகிதனேன் யான்றுக்கித்தேன் யான்மோகித்தேன் என்றறிந்தும் இங்ஙனம் பிறவற்றை நோக்கியும் தன்னை நோக்கியுஞ் சித்தாகிய ஆன்மாத் தம்மை நோக்கிச் சித்தாகாத அந்தக்கரணங்களின் ஒன்றுமாறியாண்டையதென மறுத்தவாறாயிற்று.

"இவன்றானும் புத்தியுஞ்சித் திவனுமோ புத்தி" என வழி நூலாசிரியர் கூறியதும் இவ்வியல்பு நோக்கி.

ஈண்டுப் பிரகாசம் அப்பிரகாசம் என்பன சித்து அசித்தென்னும் பொருளவாம்.

ஏனையோரை நோக்கி அரசனுக்கு அணுக்கராதற் சிறப்புப் பற்றி அமைச்சரை அரசரென்று உபசரித்துக் கூறப்படுமாறு போலப் புறக்கருவிகளை நோக்கி ஆன்மாவுக்கு அணுக்கமாய் நிற்றற் சிறப்புப்பற்றி 'மனம் புத்தி யகங்காரஞ் சித்த நான்கு மருவி யான்மாவே யென்ன' உபசரித்துக் கூறப்படு மந்தனை யென்றொழிக. சூழ்ச்சித் துணையாதல்பற்றி அந்தக்கரணங்கள் அமைச்சரை யொக்குமெனவே, ஏனைக்கருவிகள் ஏனைப்பரிசனங்களை ஒக்குமென்பது பெற்றாம். அது ஞானமிர்தத்திற் காண்க.

மேலைச் சூத்திரத்திலோதிய ஏதுக்களே ஈண்டைக்கு மமையுமாயினும், சிறந்தமைபற்றி வேறேதுக் கூறினார்.

## விளக்கம்.

இந்த ஏது என்ன சொல்லிற்றோவெனின், சிவஞானசித்தியார் ச-வது சூ-ம் உ-வது செய்யுளின்படி, "மனமும் புத்தி யகங்காரஞ் சித்த நான்கு—மருவி யான்மாவே யென்ன" சைவசித்தாந்திகளாகிய உம்மவரும் கொள்ளுதலால் உயிர் அந்தக்கரணங்களுள் ஒன்றாதலே பொருத்தம் என்றால் உண்டாகும் குற்றம் என்னையென்னும் வினவை ஆசங்கித்து அதற்குச் சமாதானங்கூறி அந்தக்கரணங்கள் ஆன்மாவல்ல வென்னும் மேற்கோளை வலியுறுத்தியவாறாம்.

(இந்த ஏதுவின் பொருள்.) அவ்வந்தக்கரணங்கள் தாம், தம்மிற்கீழுள்ள இந்திரியங்களை நோக்கி அவ்விந்திரியங்கள் தம்மைக் கொண்டே யறிதலால் சித்தாயும், தம்மைத்தாம் அறியாமையால் தம்மை நோக்கி அசித்தாயும் நிற்றலால், தன்னை நோக்கியுஞ் சித்தாய் நிற்கும் இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோபுத்தி யகங்கார சித்தங்களில் ஒன்று அன்றென மேற்கொண்டது எ - று.

கண்ணினால் ஒரு பொருள் காணப்படுங்கால் ஆன்மா மனத்தோடுகூட மனம் கண்ணோடு கூட கண் எதிர்ப்பட்ட பொருளைக் காணும்; இவ்வாறே செவிமுதலிய ஒவ்வொரு இந்திரியங்களுமாம். ஆகவே இந்திரியங்களால் விடயங்கள் அறியப்படும்பொழுது உயிர் அந்தக்கரணங்களைச் செலுத்த அவ்வந்தக்கரணங்கள் இந்திரியத்தின் வழியாக விடயத்தை அறியும் என்ற

படியாம். இவ்வாறு கூறியதனுல் இந்திரியங்கள், விடயங்களை அறிவதற்கு வாயிலாக இருந்தனவேயன்றி அவ்விந்திரியங்கள் தாமே யறியவில்லையென்ற வாருயிற்று. இதனை மனம் ஒன்றைக்கருதிக்கொண் டிருக்கும் பொழுது கண்விழித்துக் கொண்டிருந்தும் முன்னிருக்கும் பொருளைக் காணமாட்டா மையின்வைத்து அறிக. ஏனைய இந்திரியங்களும் இவ்வாறேயாம். அந்தக்கர ணங்களோ இந்திரியங்களை வாயிலாகக் கொண்டு விடயங்களை அறியும். அறியுங்கால் சித்தம் ஒரு பொருளைப் பிண்டமாக யாதோ ஒன்று தோன்று கின்றதெனச் சிந்தித்து அறியும். அறியினும அச்சித்தம் தான் சிந்தித்தே னென்று அறியமாட்டாது. அதன் பின்னர்ப் பிண்டமாக அறியப்பட்ட அப்பொருளை மனம் இது கட்டைதான் எனச்சங்கற்பித்தும், கட்டையோ அன்ருே என விகற்பித்தும் அறியும். அம்மனம் தான்சங்கற்ப விகற்பஞ் செய்தேனென்று அறியமாட்டாது. அதன் பின்னர் இன்னதென்று நிச்ச யிக்கப்படாத அப்பொருளை அகங்காரம் இன்னதென நிச்சயிப்பேனென்று ஒரு வழிப்பட்டு அகங்கரித்து அறியும். அவ்வகங்காரம் தான் அகங்கரித்தே னென்று அறியமாட்டாது. அதன் பின்னர் அப்பொருளைப் புத்தி இன்னது தான் என நிச்சயித்தறியும். அப்புத்தி தான் நிச்சயித்தேனென்று அறியமாட் டாது. ஆகவே ஆன்மாவானது விடயங்களை உணர்வதற்கு இந்திரியங்கள் வாயிலாக இருந்தாற்போல அந்தக்கரணங்கள் கருவியாயிருந்தனவென அறிக. ஆதலால் இந்திரியங்களை நோக்க அந்தக்கரணங்கள் அறிவுடைப் பொருள்க ளாயினும் அந்தக்கரணங்களாகிய தம்மை நோக்க ஆன்மாவிற்குக் கருவியாத லின் அவை அறிவில்லாத பொருளா மென்பது பெறப்பட்டவாறு காண்க.

ஆன்மா, தன்னை நோக்கியுஞ் சித்தாய்நிற்கு மென்றதனுல் கீழுள்ள வற்றை நோக்கியுஞ்சித்தாய் நிற்கு மென்பது பெறப்படும். எவ்வாறெனின், அந்தக்கரணங்களோடு ஆன்மாக் கூடாதபொழுது அவ்வந்தக் கரணங்கள் சிந்தித்தல் முதலிய தொழில்களைச் செய்வதில்லை. ஆதலால் பிறவற்றை நோக்கி ஆன்மாச் சித்தாதல் பெறப்பட்டது. இனி அவ்வந்தக்கரணங்கள் தாம் சிந்தித்தேம் சங்கற்பித்தேம் என்று அறியாதிருந்தாற்போலன்றி ஆன்மா அந்தக்கரணங்ளோடு கூடி யான் சிந்தித்தேன் யான் பற்றினேன் யான் அகங்கரித்தேன் யான் நிச்சயித்தேனென்று அறியும்; அறிந்தபின் நிச்சயித்த புத்தி சாந்தரூபமான சாத்துவிககுணத்தோடு கூடியிருப்பின் அறியபபட்டபொருள் சுகரூபமாய் ஆன்மாவுக்குத்தோன்றும்; அப்புத்தி பிரவிருத்திரூபமான இராசதகுணத்தோடு கூடியிருப்பின் அறியப்பட்ட பொருள் துக்கரூபமாய் ஆன்மாவுக்குத் தோன்றும்; அப்புத்தி மோகரூப மான தமோகுணத்தோடு கூடியிருப்பின் அறியப்பட்டபொருள் மோகரூப மாய் ஆன்மாவுக்குத் தோன்றும். இவ்வாறு குணத்துக்கேற்ப மாறுபட்டுத் தோன்றுவனவாகிய விடயங்களைக் கலைமுதலிய தத்துவங்களுடன் ஆன்மாக் கூடி நின்று இது சுகம் இது துக்கம் இது மோகமென்றறியும். இவ்வாறு ஆன்மா அறிவதற்குத் துணையாயிருந்த கலாதி தத்துவங்களும் தாம் கருவி

களாயிருப்பனவன்றிக் கருத்தாக்களாயிருந்து தனித்தனியே யான் சுகித்தேன்யான் துக்கித்தேன் யான் மோகித்தேனென அறிவதில்லை. ஆன்மாவே அக்கலாதி தத்துவங்களோடு கூடி யான் சுகித்தேன் யான் துக்கித்தேன் யான் மோகித்தேன் என அறியும். ஆகவே கருவிகளைச் செலுத்துதலினால் பிறவற்றை நோக்கிச் சித்தாயும் கருவிகளால் யான் அறிந்தேன் என்று உணர்வதால் தன்னைநோக்கிச் சித்தாயும் ஆன்மா நிற்கும். இவ்வாறு நிற்கும் ஆன்மா, பிறவற்றை நோக்கிச் சித்தாயும் தம்மை நோக்கிச் சித்தாகாமலும் நிற்கும் அந்தக்கரணங்களுள் ஒன்றென்று கூறுதல் எவ்வாறு பொருந்துமென இந்த ஏதுவினால் மறுத்தவாறு அறிக.

சித்தியாரில், "நான்கும் ஆன்மாவே யெனவரும்" என்றதன் கருத்தென்னையெனின், நான்கும் ஆன்மாவோடு ஒன்றுபட்டு நிற்றலால் கருத்தாவென்று சொல்லும்படி நிகழும் என்பதாம். ஆயினுங் கருத்தாவன்று, அன்றென்பது "கருவியாமனமும்" என்று அச்செய்யுளிற் கூறியதனாலேயே விளங்கும். இது அரசனோடு நெருங்கியிருக்கும் மந்திரியை அரசனென்று உபசரித்துக் கூறுதல்போலாம். இக்கருத்துப்பற்றியே, பதினொராஞ் சூத்திரம் பதினொராவது செய்யுளில் 'இவன்றானும் புத்தியுஞ்சித் திவனுமோ புத்தி' என அவ்வாசிரியரே அருளிச் செய்தனர். இதன் கருத்துப் புத்தியும் உயிரும் அறிதல் பற்றிச் சித்துப்பொருளெனக் கூறப்படினும் புத்தி உயிராதல் இல்லை என்பதாம்.

இந்த ஏதுவிற்கூறிய பிரகாசம் என்பது சித்து என்பதையும், அப்பிரகாசமென்பது அசித்து என்பதையும் பொருளாகக்கொண்டு நின்றன. ஆதலால் சித்தாய் நின்றே அசித்தாய் நிற்றலால் என உரை செய்யப்பட்டது.

அந்தக்கரணங்களைச் சித்தென்று கூறுவதெல்லாம் ஏனையோரைவிட மந்திரி அரசனோடு நெருங்கியிருக்கும் உரிமையுடையவனாதலால் அச்சிறப்புப்பற்றி அவனை அரசனென்று உபசரித்துக் கூறப்படுமாறுபோல, புறக்கருவிகளைவிட அகக்கருவிகளாகிய மனம் முதலியன ஆன்மாவோடு நெருங்கியிருக்கும் உரிமையுடையன வாதலால் அச்சிறப்புப்பற்றி மனம் புத்தி அகங்காரம் சித்தம் நான்கும் மருவி ஆன்மாவே யென்ன உபசரித்துக் கூறப்படும். அவ்வளவேயன்றி உண்மையிற் சித்தல்லவென அறிக. இன்னும் இதனுண்மை மேற்கூறியவாறு கருவியாமென்று கூறியதனாலேயே விளங்குவதன்றி, மருவி என்றதனானும் இனிது விளங்கும். மருவி என்றதனால் ஆன்மாவோடு மருவியென்றும், மருவாதவிடத்து ஆன்மாவாதலில்லை என்றும் விளங்குமன்றோ: இன்னும் அச்செய்யுளில் ஆன்மாவே யாகுமென்று கூறாமல் ஆன்மாவே யென்னவரும் என்று கூறியதனாலேயும் ஆன்மாவல்ல என்பதூஉம், உபசாரமாக ஆன்மாவெனக் கூறப்படுமென்பதூஉம் தானே விளங்கும்.

ஆன்மாவாகிய அரசனுக்கு அந்தக்கரணங்கள் ஆலோசனைத் துணையாகிய மந்திரிபோல நிற்கும் என்றதனாலேயே ஏனைக்கருவிகள் ஏனைப்பரிசனங்களைப்போலநிற்கும் என்பதும் பெறப்படும். இவ்வாறு ஞானாமிர்தம் என்னும் நூலிற் கூறப்பட்டிருக்கின்றது. அதாவது அந்தக்கரணங்கள் மந்திரியாம்; ஞானேந்திரியங்கள் ஐந்தும், வாயில்காப்பவர் ஒற்றிநின்றறிபவர் தூதர் அத்தாணிகர் புரோகிதராகும்; கன்மேந்திரியங்களைந்தும், யானைப்படை குதிரைப்படை தேர்ப்படை காலாட்படை சேனாதிபதிகளாம்; சத்தாதி வசனாதி விடயங்கள்பத்தும் ஏவலாட்களாம்; பிராணவாயுமுதலியவாயுக்கள் உறுதிமொழி கூறுஞ் சுற்றமாம்.

மூன்றாஞ் சூத்திரத்தில் வெவ்வேறு பெயர் பெற்று நிற்றலால் எனவும், உண்டிவினையின்மையின் எனவும், ஒடுக்கமறிதலின் எனவும், ஐம்புலன் அறிதலின் எனவும், எனதுடலென்றலின் எனவும் கூறிய ஏதுக்களே இவ்வதிகரணத்திற்கும் அமையுமாயினும் இந்திரியமுதலியவற்றைவிட அந்தக்கரணங்கள் சிறந்தமைபற்றிப் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலால் என வேறு ஏதுக்கூறினர்.

இந்த ஏது அந்தக்கரணங்கள் ஆன்மா வென்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

அந்தக்கரணங்கள் ஆன்மாவல்ல என்பதற்குக் காட்டும்

உதாரணம்.

மனமாதி யாலுணர்தன் மன்னு புலன்கண்
மனமாதி மன்புலனி னல்லன்—மனமே
லுதித்தோன்றை யுள்ள முணர்த லதனி
னுதிக்குங் கடற்றிரையை யொத்து.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், அவ்வந்தக்கரணங்கள் தம்மிற்கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாமாறும் தம்மின் மேலுள்ளவற்றை நோக்கியும் தம்மை நோக்கியும் அசித்தாமாறுந் தெரித்துணர்த்தி ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) மனம் ஆதியால் உணர்தல் மன்னுபுலன்கள்—மனமுதலிய அந்தக்கரணங்களா லுணரப்படுவன (ஐம்பொறிகளாற் றரப்பட்டுப் புறத்தே) நிலைபெற்றவிடயங்களாம்,—உள்ளம் உணர்தல் மனம்மேல் உதித்த ஒன்றை—ஆன்மா வுணர்வது மனத்துக்கு

மேலெனப்படும் புத்தியிற்றோன்றிய தொன்றனையாம்,—கடற்றி ரையை ஒத்து உதிக்கும்—(அவ்விருவே றுணர்வுங்) கடலிடை யெழுந்து கரைசாருந் திரைபோலப் (பரம்பரையின் ஆன்மாவின் மாட்டு வந்து) தோன்றும்,—அதனின் மனம் ஆதி புலனின் அல் லன்—அதனானே மனமுதலியன அவ்விடயங்களின் வேறாயினாற் போல ஆன்மாவும் அம்மன முதலியவற்றின் வேறாம் எ - று.

உதிக்குமென்னும் பயனிலைக்கு உணர்தலிரண்டும் எழுவாய்.

செவ்வெண்டொகை விகாரத்தாற் றொக்கது.

மன் அசை.

புலனின் இன் உவமவுருபு.

அல்லனென ஆடூஉவறிசொல்லாற் கூறியது வடமொழி மதம் பற்றி.

உதித்தவென்னும் பெயரெச்சவீறு விகாரத்தாற் றொக்கது.

புத்தியிற்றோன்றிய தொன்றாவது சுகதுக்கமோகரூபவிடயம்.

பரம்பரையிற் றோன்றுதலாவது முன்னர் வாயிற்காட்சி யுணர்வுதோன்றி அதன்பின் மானதக்காட்சி யுணர்வுதோன்றி அதன்பின்னர்த் தன்வேதனைக்காட்சி யுணர்வு உயிரின்கண்வந்து தோன்றுதல்.

இதனானே அந்தக்கரணங் கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தா மாறும் மேலுள்ளவற்றை நோக்கி அசித்தாமாறும் உயிர் அவ்வா றன்றி யாண்டுஞ் சித்தாமாறுங் கண்டுகொள்க.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) மனம் ஆதியால் உணர்தல் மன்னு புலன்கள் உள் ளம் உணர்தல் மனம்மேல் உதித்த ஒன்றை கடற்றிரையை ஒத்து உதிக் கும் அதனின் மனம் ஆதி புலனின் அல்லன்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், மேற்கூறியவாறு அவ்வந்தக்கரணங்கள் தம்மிற்கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாயும் தம்மை நோக்கியும் தம்மின்மேலுள்ளவற்றை நோக்கியும் அசித்தாயும் நிற்கும் என் பதை விளக்கிக்காட்டி அவ்வாறு நிற்குமென்று கூறிய ஏதுவை வலியுறுத் தியவாறாம்.

(பொ-ரை.) சத்த முதலிய புறத்து விடயங்களைச் செவிமுதலிய இந்திரியங்களும் இந்திரியங்கள் வாயிலாக அந்தக்கரணங்களும் உணரும். அவ்வந்தக்கரணங்களுள் மனத்துக்கு மேலாகிய புத்தியிற்றோன்றிய சுகதுக்காதிகளை ஆன்மா அறியும். இந்திரியங்களின் அறிவும் அந்தக்கரணங்களின் அறிவும் ஆகிய இருவேறு அறிவும் ஒன்றன்பின் ஒன்றாக ஆன்மாவை வந்து பொருந்துதல், கடலின்கண் உண்டாகிக் கரையைப் பொருந்தும் அலைபோலாம். ஆதலால் விடயங்களை இந்திரியங்களால் உணரும் மனமுதலியன அவ்விந்திரியங்களின் வேறாயினாற்போல அந்தக்கரணங்களால் அவ்விடயங்களிலுள்ள சுகதுக்காதிகளை உணரும் ஆன்மா அவ்வந்தக்கரணங்களின் வேறாம் எ-று.

(க—ரை.) இந்திரியத்தின் வழியாக விடயத்தை உணரும் அந்தக்கரணம் இந்திரியத்தினும் விடயத்தினும் வேறாயினாற்போல அந்தக்கரணத்தின் வழியாக விடயத்தாலுண்டாம் சுகதுக்காதிகளை உணரும் ஆன்மா அவ்வந்தக்கரணங்களின் வேறு என்பதாம்.

உதிக்கும் என்றது பயனிலை. அந்தப்பயனிலைக்கு மனமாதியா லுணர்தல், உள்ளம் உணர்தல் ஆகிய இரண்டும் எழுவாய். ஆதலால்அவ்விருவேறுணர்வும் உதிக்குமென உரை செய்யப்பட்டது.

அவ்விடத்தில் செவ்வெண்ணினாற் பெறக்கூடிய இரண்டென்னுந் தொகை விகாரத்தாற் றொக்கு நின்றது. அதனை விரித்து இருவேறுணர்வு என உரை செய்யப்பட்டது. மன்புலன் என்றதிலுள்ள மன்என்பது அசை.

புலனின் என்றதிலுள்ள இன் உவமஉருபு. ஆதலால் விடயங்களின் வேறாயினாற்போல என உரை செய்யப்பட்டது.

புலனின் அல்லன் என ஆண்பாலைக் குறிக்கும் அன் விகுதி புணர்த்திக்கூறியது வடமொழி மதம் பற்றியென அறிக. அதாவது அல்லன் என்னும் பயனிலைக்கு எழுவாய் ஆன்மா. தமிழ் வழக்கின்படி ஆன்மா அன்றெனக் கூறவேண்டும். வடமொழியில் ஆன்மாவை உயர்திணை ஆண்பாலாகக் கூறும் வழக்க முண்டு. அவ்வழக்கின்படி செய்யுள் கூறப்பட்டது. தமிழ் வழக்கின்படி அஃறிணை யாகவைத்து மனமுதலியவற்றின் வேறு என உரை செய்யப்பட்டது

உதித்தொன்றை யென்றதில் பெயரெச்சத்தைக் குறிக்கும் அகரம் தொகையாயிருந்தது. அதனை விரித்து உதித்த ஒன்றை யென உரைக்கப்பட்டது.

புத்தியிற் றோன்றிய தொன்றனை ஆன்மா உணரும் என உரையிற் கூறப்பட்டது. அது எதுவெனில், சுகதுக்க மோகமாய்க் காணப்படும் விடயங்கள். அவ்விடயங்கள் மூவகையாய்த் தோன்றுதற்குக் காரணம் சாத்து

விகமுதலிய குணவேறுபா டென்பது மேல் ஏதுவிற்குக் கூறிய உரையிற் பெறப்பட்டமையின் அவ்விடத்துக் காண்க.

அலைபோல் உணர்வு ஒன்றன்பின் ஒன்றாக ஆன்மாவில் வந்துதோன் றுதல் எவ்வாறெனின், முதலாவது இந்திரியத்தாற் காணும் உணர்வுதோன் றும். அதாவது விடயத்தைப் பிண்டமாக அறிதல். அதன்பின் மனத்தாற் காணும் உணர்வுதோன்றும். அதாவது பிண்டமாகக் கண்ட விடயத்தைப் பகுத்து இன்னதெனக் காண்டல். அதன்பின் தன்வேதனையாற் காணும் உணர்வு தோன்றும். அதாவது பகுத்துக்கண்ட விடயத்தைச் சுகதுக்கமோக ரூபமாய்க் காண்டல். விடயம் கடலுக்கும், இந்திரியஉணர்வு மானதவுணர்வு தன்வேதனையுணர்வு மூன்றும் அலைக்கும், ஆன்மா கரைக்கும் உவமைகளா கும். ஆகவே, விடயமாகிய கடலில் இந்திரிய உணர்வாகிய அலை மானத உணர்வாகிய அலையைத்தள்ள மானத உணர்வாகிய அலை தன்வேதனை உணர்வாகிய அலையைத்தள்ள தன்வேதனை உணர்வாகிய அலை ஆன்மா வாகிய கரையைச் சாருமென அறிக. தன் என்பது ஆன்மாவையும், வேதனை யென்பது சுகதுக்க மோகங்களையுங் குறித்து தன்வேதனை யெனப்பட்டது. அது நிச்சயத்தினாலேயே உண்டாதலால் தன்வேதனைக் காட்சியை வேறு கூறாது புத்தியிற் றோன்றியதொன்றனை ஆன்மா அறியுமென்றனர்.

இவ்வுதாரணத்தினால் அந்தக்கரணம் தனக்குக் கீழுள்ள இந்திரியத்தை நோக்கிச் சித்தாயும், தனக்கு மேலுள்ள கலாதிகளையும் ஆன்மாவையும் நோக்கி அசித்தாயும் நிற்கும் எனவும், உயிர் அவ்வாறன்றி இந்திரியம் அந் தக்கரணம் கலாதிமுதலியவற்றை நோக்கியும் தன்னைநோக்கியும் சித்தாகவே நிற்கு மெனவுங் கூறியவாறு கண்டுகொள்க.

அந்தக்கரணங்கள் ஒவ்வொன்றின் இயல்பை விளக்கிக்காட்டும் உதாரணம்.

சிந்தித்தாய்ச் சித்தந் தெளியாதா யாங்காரம்
புந்தியா யாய்ந்து மனமாகிப்—பந்தித்து
வெவ்வேறு தானே துணிந்துள்ள மிவ்வேறு
மவ்வேறும் போதுபோ லாங்கு.

## சிற்றுரை.

எ - து உ - ம் எ—னின், மேற் பொதுவகையாற் கூறிப்போந்த அந்தக்கரணங்களினியல்பு சிறப்புவகையாற் கூறுமுகத்தான் மான தக்காட்சியுள்ளுங் கடற்றிரைபோலப் பரம்பரையின் வெவ்வேறு யுணர்வுநிகழுமா றுணர்த்தி உயிர் வேறுதலை வலியுறுத்துதனுத லிற்று.

(இ-ள்.) உள்ளம்—புருடதத்துவமென நின்றவுயிர்,—ஆங்கு—வாயிற் காட்சியாற் கண்ட விடயங்களி னொன்றனை மனமாதியா னுணரும் மானதக்காட்சியின்கண்ணும் ஒருபெற்றித்தாதலின்றி,—சித்தம் ஆய்ச் சிந்தித்து—சித்தமாய் (நின்று இஃதியாதாகற் பாற்றெனச்) சிந்தித்தும்,—மனம் ஆகிப் பந்தித்து—(அதன்பின்) மனமாய் (நின்று இஃதின்னதாகற்பாற்றெனப்) பற்றியும்,—ஆங்காரம் ஆய்த் தெளியாது—(அதன்பின்) அகங்காரமாய் (நின்று இஃதாமோ அன்றோ இதனை இன்னதெனத் தெளிவேன் யானெனத்) தெளிவு பிறவா தெழுந்தும்,—புந்தி ஆய் ஆய்ந்து—(அதன்பின்னர்ப்) புத்தியாய் (நின்று இஃதின்னதெனத்) தெளிந்தும்,—வெவ்வேறே துணிந்து இவ்வேறாம்—(இங்ஙனம்) வெவ்வேறாகவே யுணர்தலான் (அவ்வாறுணரும் புருடன்) இவ்வந்தக்கரணங்களின் வேறாம்,—போது அவ்வேறாம் போல்—(ஞாயிறுமுதலியவற்றோடு கூடி நின்று நாழிகை நாள் பக்கந் திங்கள் யாண்டு முதலியன வாய்ப்படும் பாகுபாடு செய்யுங்) காலதத்துவம் அஞ்ஞாயிறு முதலியவற்றின் வேறாயினாற்போல் எ-று.

ஆய்தல் ஈண்டு நிச்சயித்தற் பொருட்டு.

துணிதலென்பது அறிதலென்னும் பொருண்மாத்திரையாய் நின்றது.

தான் அசை. ஏகாரந் தேற்றம்.

இவ் அவ் என்பன வகர வீற்றஃறிணைப் பன்மைச் சுட்டுப் பெயர்.

வேறாம்போது போலெனவே, ஆண்டு நீக்கப்பொருள் ஞாயிறு முதலியன வென்பது தானே விளங்கு மென்பது நோக்கி அவ்வெனச் சுட்டி யொழிந்தார். சாரியையும் உருபும் உடன்றொக்கன.

சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. ஆங்கும் வெவ்வேறு தானே துணிந்தெனவே மானதக் காட்சியும் இங்ஙன நால்வேறு வகைத்தாய் ஒன்றற்கொன்று முறையே ஏதுவும் பயனுமாய்க்கடற் றிரைபோலப் பரம்பரையிற் றோன்று மென்ற வாறாயிற்று.

செய்யுளாகலின் முறை பிறழவைத்தார்.

## இலக்கணவியல் நான்காஞ்சூத்திரம். க-ம் அதி. உகள

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) உள்ளம் ஆங்கு சித்தம் ஆய்ச் சிந்தித்து மனம் ஆகிப் பந்தித்து ஆங்காரம் ஆய்த் தெளியாது புந்தி ஆய் ஆய்ந்து வெவ்வேறே துணிந்து இவ்வேறாம் போது அவ்வேறாம்போல்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோ வெனின், மேலை வெண்பாவில் இந்திரியங்களை வாயிலாகக் கொண்டு அந்தக்கரணங்கள் அறியுமென அந்தக் கரணங்களி னியல்பு பொதுவகையாற்கூறினார். இவ்வெண்பாவில் அவ் வந்தக்கரணங்கள் ஒவ்வொன்றும் எவ்வாறுணரு மென்பதைச் சிறப்புவகை யாற் கூறி அவ்வாறு கூறு முறையில் அவ்வந்தக்கரணங்களின் உணர்வும் கடலின்கண் உண்டாம் அலைபோல ஒன்றன்பின் ஒன்றாய் வேறு வேறு விதமாய் நிகழும் முறைமையினை உணர்த்தி உயிர் அவ்வந்தக்கரணங்களின் வேறாதலை வலியுறுத்திற்று.

(பொ-ரை.) கலாதி தத்துவங்களின் உள்ளீடாய் நின்ற காரணத்தால் உள்ள மென்று கூறப்பட்ட புருடதத்துவமாகிய உயிர் இந்திரியங்களின் உணர்வாற் கண்ட விடயங்களில் ஒன்றனை மனமுதலிய அந்தக்கரணங்க ளால் உணரும் மானத உணர்வும் ஒன்றுபோலின்றி வேறு வேறு விதமாய் நிகழும். எவ்வாறெனின், சித்தமாய்நின்று ஒருபொருளைப் பிண்டமாக இஃது யாதோ ஒன்று தோன்றுகின்றதெனச் சிந்தித்து அறியும். அதன் பின்னர் மனமாய் நின்று பிண்டமாக அறியப்பட்ட அப்பொருளை இஃது இன்ன தாகுமெனவும், அவ்வாறாகுமோ ஆகாதோ எனவும் பற்றி அறியும். அதன் பின் அகங்காரமாய் நின்று அதனை இன்னதெனத் துணிவேன் என அகங் கரித்தறியும். அதன்பின் புத்தியாய் நின்று அதனை இன்னதென நிச்சயித் தறியும். இவ்வாறு கடலின்கண் உண்டாம்அலை ஒன்றன்பின் ஒன்றாய்த் தோன்றுமாறுபோல அந்தக்கரணங்களாலுண்டாம் உணர்வும் ஒன்றன்பின் ஒன்றாய் வேறு வேறாகத் தோன்றும். அவற்றையெல்லாம் உயிர் அறியும். அந்தக்கரணங்களுள் சித்தம் மனத்தின் றொழிலைச் செய்யவுமாட்டாது அறியவுமாட்டாது. மனம் சித்தத்தின் றொழிலைச் செய்யவுமாட்டாது அறி யவுமாட்டாது. இவ்வாறே பிறவுமாம். உயிர் அந்நான்கின்றொழிலையும் அறிதலால் அவ்வந்தக்கரணங்களின் வேறாம். அந்தக்கரணங்களோடு கூடி நின்றும் உயிர்வேறாதல் எதுபோல வெனின், காலதத்துவமானது, சூரியன் சந்திரன் நக்ஷத்திரங்களோடு கூடி நின்று நாழிகை, நாள், பக்கம், மாதம், வருட முதலியனவாகப் பாகுபட்டு வேறுபடினும் அச்சூரியன் முதலிய வற்றின் அக்கால தத்துவம் வேறாயினாற் போலாம் எ-று.

(க-ரை.) காலதத்துவம் சூரியன் முதலியவற்றின் வேறாயினாற்போல உயிர் மன முதலியவற்றின் வேறு என்பதாம்

புந்தியாய் ஆய்ந்து என்றதிலுள்ள ஆய்தல் ஆராய்தல் முதலியவற்றை உணர்த்துமேனும் இவ்விடத்து நிச்சயித்தலை உணர்த்தி நின்றது.

துணிந்து எனக் கூறியதிலுள்ள துணிதல் என்பது நிச்சயித்தல் முதலியவற்றை உணர்த்துமேனும் இவ்விடத்து அறிதலென்னும் பொருளை மட்டுங் குறித்து நின்றது.

வெவ்வேறு தானே யென்பதிலுள்ள தான் என்பதுஅசை. அதிலுள்ள ஏகாரம் வெவ்வேறென உறுதிப்படுத்தலின் தேற்றம்.

இவ்வேறு அவ்வேறு என்பதிலுள்ள இவ் அவ் என்பன வகர ஈற்று அஃறிணைப் பன்மைச்சுட்டுப்பெயர். அதாவது இவற்றின் அவற்றின் எனப் பன்மையைச் சுட்டிய பெயராய் நின்றன. ஆதலால் இவ்வந்தக் கரணங்களின் வேறு அஞ்ஞாயிறு முதலிய வற்றின் வேறு என உரைசெய் யப்பட்டது.

வேறும் போது போலெனக் கூறியதனாலேயே வேறாகிய நீக்கப் பொருள் அவ்விடத்து ஞாயிறுமுதலியன வென்பது தானே விளங்குமென் பது நோக்கி அவ்வெனச் சுட்டிவிட்டனர். அதாவது அந்தக்கரணங்களைக் கூறிப் பின்னர் இவ்வென்று சுட்டுப்பெயர் வந்ததுபோல அவ்வென்னும் சுட்டுப்பெயருக்குரிய ஞாயிறு முதலியன மேலே கூறப்படவில்லை. கூறா திருக்கவும் போது அவ்வேறும் என்றதனால் காலம்வேறுதல் சூரியன்முதலி யவற்றின் என்பது சொல்லாமலே விளங்குமாதலால் நீக்கப் பொருளாகிய சூரியன் முதலியவற்றைக் கூறாமலே அவ்வென்று சுட்டிவிட்டனர் என் பதாம்.

அவ்வேறும்போல் என்றதிலுள்ள வேறும்போல் என்பதில் இன்சாரி யையும் ஆல் உருபும் உடன் றொக்கு நின்றன. அவற்றை விரித்து வேறாயி னாற்போல என உரை செய்யப்பட்டது.

ஆங்கு என்பதில் சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கு நின்றது. அதனை விரித்து மானதக் காட்சியின்கண்ணும் என உரைசெய்யப்பட்டது. ஆங் கும் வெவ்வேறு தானே துணிந்து என்றதனாலேயே மானதக் காட்சியும் இவ் வாறு சிந்தித்துப் பந்தித்துத் தெளியாது ஆய்ந்து என நால்வேறுவகையாய் ஒன்றற் கொன்று முறையே ஏதுவும் பயனுமாய்க் கடற்றிரைபோலப் பரம் பரையிற் றோன்றுமென்றவாறாயிற்று. ஏதுவும் பயனுமாதல் எவ்வா றெனின், சிந்தித்தலினால் பந்தித்தல் உண்டாயினமையால் சிந்தித்தல் ஏது வும் பந்தித்தல் பயனுமாம். பந்தித்தலினால் தெளியாமை உண்டாயினமை யால் பந்தித்தல் ஏதுவும் தெளியாமை பயனுமாம். இவ்வாறே பிறவுமாம். சித்தத்தின் காட்சியால் மனத்தின்காட்சியும், மனத்தின் காட்சியால் அகங் காரத்தின் காட்சியும், அகங்காரத்தின் காட்சியால் புத்தியின் காட்சியும்

ஒன்றன்பின் ஒன்றாய் வேறுவேறாய்த் தோன்றுதலால் கடலின்கண் அலைபோலத் தோன்றியவாறு அறிக.

சித்தம், மனம், அகங்காரம், புத்தி என முறையாய் வைக்கவேண்டுமாயினும் செய்யுளாதலின் சித்தம், அகங்காரம், புத்தி, மனம் என முறை பிறழ வைத்தார்.

அந்தக்கரணங்களைச் செலுத்தும் அக்கரங்கள் இவையெனக் காட்டும் உதாரணம்.

அகார வுகார மகங்காரம் புத்தி
மகார மனஞ்சித்தம் விந்துப்—பகாதிவற்றை
நாத முளவடிவா நாடிற் பிரணவமாம்
போதங் கடற்றிரையே போன்று.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், அம்மானதக் காட்சியினிகழுஞ் சவிகற்ப வுணர்விற் கேதுவாய் அவற்றை யுடனின்று செலுத்தும் அக்கரங்களிவை யென்பதும் அவற்றானுணர்வு மாறி மாறித் தோன்றுமாறு முணர்த்துதனுதலிற்று.

இ-ள். வெ-டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

இ—ள். அகாரம் அகங்காரம்—அகரம் அகங்காரத்தினையும்,—உகாரம் புத்தி—உகரம் புத்தியினையும்,—மகாரம் மனம்—மகரம் மனத்தினையும்,—விந்து சித்தம்—விந்து சித்தத்தினையும்,—நாதம் உளவடிவு—நாதம் உயிரினையும் (செலுத்துதல் பற்றி),—கடற்றிரையேபோன்று—சமுத்திரத்தின்கட் புதிது புதிதாய்த் திரைதோன்றியும் ஒடுங்கியும் வருமாறுபோல,—போதம்—(மாசகலத்தின்கட் சுணந்தோறும்) உணர்வு,—ஆம்—உதித்தும் ஒடுங்கியும் வரும்,—பகாது இவற்றை நாடில்—பகுக்காது இவ்வக்கரங்களை ஆராயின்,—பிரணவமாம்—பிரணவமாகும் எ-று.

## சிற்றுரை.

“ மன்னுமகார மனஞ்செலுத்தும்புத்தியினை—யுன்னுமுகாரமுபகரிக்கு—முன்னுகு—மாங்காரந் தன்னை யகாரஞ் செலுத்தியிடு—நீங்காத சித்தம் விந்து நேர்” என்பவாகலானும் ஈண்டோதிய

முறையே முறையெனவும், "அவ்வுட னுவ்வு மவ்வு மனம் புத்தி யகங்கா ரங்கள்" என வழி நூலாசிரியரோதியது எதிர் நிரனிறைப் பொருளெனவுங் கொள்க. "அவ்வுட னுவ்வு மவ்வு மனம் புத்தி யகங்கா ரங்கள்" என்றதே முறையெனக்கொண்டு அதற்கியையக் கொண்டு கூட்டியுரைப்பாருமுளர்.

பகாதிவற்றை நாடிற் பிரணவமா மெனவும், போன்றுமென வுங் கூட்டுக.

அந்தக்கரணங்களைச் செலுத்தும் அக்கரங்களைக் கூறுவார் ஒப்புமை பற்றிப் புருடனைச் செலுத்தும் அக்கரமும் உடன் கூறினார்.

உடனின்று செலுத்துதல் பற்றி அபேதமாக வைத்தோதப் பட்டன.

1-24. "நிகழ்ந்திடும் வாக்கு நான்கு நிவிர்த்தாதி கலையைப் பற்றி" அகரமுதலிய பஞ்சகலைவடிவாய் நின்று இவற்றை வேறு வேறு செலுத்துதல் பற்றிக் கணந்தோறும் நினைப்பு மறப்புமாகிய சகல கேவலங்கள் அதிநுட்பமாய்க் கறங்கோலைபோல மாறி மாறி நிகழு மெனவும் மாசகலத்தின்கட் கணந்தோறும் அங்ஙன முணர்வுதித் தும் ஒடுங்கியும் வருதல் சமுத்திரத்தின்கட் புதிது புதிதாய்த் திரை தோன்றியும் ஒடுங்கியும் வருமாறுபோலு மெனவு முணர்க. கடற்றிரை யுவமை மேற் பரம்பரையாய் உணர்வு வருதற் கெடுத் துக் காட்டினார்; ஈண்டுப் புதிது புதிதாய் வருதற் கெடுத்துக் காட் டினார். ஆதலாற் புனருத்தி யின்மை யுணர்க.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு) அகாரம் அகங்காரம் உகாரம் புத்தி மகாரம் மனம் விந்து சித்தம் நாதம் உளவடிவு கடற்றிரையே போன்றுபோதம் ஆம் பகாது இவற்றை நாடில் பிரணவமாம்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றேவெனின், மேலைச்செய்யுளிற் கூறியவாறு அந்தக்கரணங்களின் உணர்வாகிய மானதக்காட்சியில் நிகழும் சவிகற்ப உணர்வு சடமாகிய அந்தக்கரணங்களால் எவ்வாறு நிகழுமென் னும் ஐயம் நிகழுமன்றே. அந்த ஐயத்தை நீக்கவேண்டி மனமுதலிய அந் தக்கரணங்களுக்கு விகற்பத்தோடுகூடிய சவிகற்ப உணர்வு நிகழ்தற்கு ஏது வாய் அம்மனமுதலியவற்றை உடன்நின்று செலுத்தும் அக்கரங்களிவை யென்றும் அவ்வக்கரங்களால் உணர்வு மாறிமாறித்தோன்றும் முறை இவ் வாறென்றும் கூறியவாறும்.

(பொ - ரை.) அகரம் அகங்காரத்தினையும், உகரம் புத்தியினையும், மகரம் மனத்தினையும், விந்து சித்தத்தினையும், நாதம் உயிரினையும் செலுத்தும். அவ்வாறு செலுத்துதலினால் மகாசகலமாகிய மத்தியாலவத்தையின்கண் கணந்தோறும் மனமுதலியவற்றின் உணர்வு புதிது புதிதாய் உதித்தும் ஒடுங்கியும் வரும். அவ்வாறு வருதல் எதுபோலவெனின், சமுத்திரத்தின்கண் அலை புதிது புதிதாய்த்தோன்றியும் ஒடுங்கியும் வருமாறுபோலாம். அந்த அகரமுதலிய அக்கரங்களைப் பகுக்காது ஆராயின் பிரணவமாகும். எ—று.

(க - ரை.) அகரமுதலிய ஐந்து அக்கரங்களும் உயிர்முதலிய ஐந்தினையுஞ் செலுத்தும். அவ்வக்கரங்களின் கூட்டம் பிரணவமாகும் என்பதாம்.

சகலம், சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னும் ஐந்தவத்தையை உடையதாய் கீழாலவத்தை மேலாலவத்தை மத்தியாலவத்தையென மூவகைப்படுமாயினும், அவற்றுள், எல்லாக்கருவிகளுந் தொழிற்படும் அவத்தை மத்தியாலவத்தையாதலால் மகாசகலமென்பது மத்தியாலவத்தையென அறிக.

துகளறுபோதத்தில் உள்ள "மன்னுமகாரம்" என்ற செய்யுளின்படி இச்செய்யுளுக்குக் கூறிய உரையின் முறையே முறையாம். சிவஞான சித்தியார் ௪-ம் சூ-ம் ௩-வது செய்யுளில் "அவ்வுட னுவ்வு மவ்வு மனம்புத்தி யகங்காரங்கள்" எனக்கூறியது எதிர் நிரனிறைப்பொருள்பற்றி யெனக் கொள்க. அவ்வாறு கொள்ளின் அகரம் அகங்காரத்தையும், உகரம் புத்தியினையும், மகரம் மனத்தினையும் செலுத்துமென மேற்கூறிய பொருளே சித்தித்தல் காண்க. இவ்வாறன்றிச் சித்தியார் வாக்கை முறையாகவைத்து அகரம் மனத்தினையும், உகரம் புத்தியினையும், மகரம் அகங்காரத்தினையும் செலுத்துமெனக்கொண்டு அதற்கேற்றவாறு இவ்வெண்பாவைக் கொண்டு கூட்டி யுரைப்பாருமுளர்.

பகாதிலுற்றை நாடிற் பிரணவமாம் எனவும், உளவடிவாம் என்பதிலுள்ள ஆம் என்பதைப் போதம் என்பதனோடுகூட்டிக் கடற்றிரையே போன்று போதம் ஆம் எனவுங் கூட்டுக.

அந்தக்கரணங்களைச் செலுத்தும் அக்கரங்களையே இச்செய்யுளிற் கூறவேண்டியதாயினும் அந்தக்கரணங்களோடு உயிர் உடனிற்கும் ஒப்புமைபற்றியும், பிரணவத்தைக் குறிக்கும் அக்கரங்களின் ஒப்புமைபற்றியும் புருடனைச்செலுத்தும் அக்கரமும் உடன் கூறினார்.

அந்தக்கரணங்களோடும் புருடனோடும் அக்கரங்கள் உடனின்று செலுத்துதல்பற்றி அக்கரங்கள் செலுத்துமெனக்கூறாது அகாரம் அகங்காரம், உகாரம் புத்தி, மகாரம் மனம், விந்து சித்தம், நாதம் உளம் என அக்கரங்களே அந்தக்கரணங்கள் என்னும்படி அபேதமாகக் கூறப்பட்டன.

சித்தியார் க-ம் சூ-ம் உ௪-வது செய்யுளிற் கூறியபடி "நிகழ்ந்திடும் வாக்கு நான்கும் நிவிர்த்தாதி கலையைப் பற்றி" அகரமுதலிய பஞ்சகலைவடி

வாய் நின்று அந்தக்கரணங்களை வேறு வேறு செலுத்துதலால் கணந்தோறும் நினைப்பாகிய சகலமும் மறப்பாகிய கேவலமும் அதிநுட்பமாய்க் காற்றிற்சுழலும் ஓலைபோல் மாறிமாறி நிகழுமெனவும், மகாசகலமாகிய சாக்கிரத்தின்கண் கணந்தோறும் அங்ஙனம் உணர்வு உதித்தும் ஒடுங்கியும் வருதல் சமுத்திரத்தின்கண் புதிதுபுதிதாய் அலைதோன்றியும் ஒடுங்கியும் வருமாறு போலுமெனவும் உணர்க.

வாக்கு நான்காவன:— சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்பனவாம். அவற்றுள் சூக்குமைவாக்கு ஒலிமாத்திரையாய் நாபித்தானத்திலிருக்கும்; பைசந்திவாக்கு அக்கரங்களின் நிருவிகற்பத்தோடுகூடிய ஒலியாய் உந்தித்தானத்திலிருக்கும்; மத்திமைவாக்கு அக்கரங்களின் பாகுபட்டோடுகூடிய ஒலியாய் இருதயத்தானத்திலிருக்கும்; வைகரியானது தூலம் சூக்குமம் என்று இருதிறப்பட்டு அவற்றுள் சூக்குமவைகரி அக்கரங்களிளுலாகிய சொல்வடிவான ஒலியாய்த் தன் செவிக்குமட்டுங் கேட்கப்படுவதாய்க் கண்டத்தானத்திலிருக்கும்; தூலவைகரி சொல்வடிவான ஒலியாய்த் தனக்கும் பிறர்க்குங் கேட்கப்படுவதாய் வாயிலிருக்கும்.

வாக்கு நான்கும் நிவிர்த்தாதி கலையைப்பற்றி நிற்றல் எவ்வாறெனின், தூலவைகரி நிவிர்த்திகலையினையும், சூக்குமவைகரி பிரதிட்டாகலையினையும், மத்திமை வித்தியாகலையினையும், பைசந்தி சாந்திகலையினையும், சூக்குமை சாந்தியதீதகலையினையும் பற்றிநிற்கும். இதனால் நிவிர்த்திகலை வாய் என்னுந்தானத்திலிருந்து பிறருக்குத் தெரியவொட்டாத சொல்லின் தடையை நிவிர்த்தித்துப் பிறருக்குத் தெரியும்படி சொல்லச் செய்யுமெனவும், பிரதிட்டாகலை கண்டத்தானத்திலிருந்து சொல்லைத் தனக்குக் கேட்கும்படி நிலைக்கச் செய்யுமெனவும், வித்தியாகலை இருதயத்தானத்திலிருந்து சொல்லிற்குரிய எழுத்துக்களைப்பிரித்து அறிவிக்குமெனவும், சாந்திகலை உந்தித்தானத்திலிருந்து எழுத்துக்களை அடக்கித் தோற்றுவிக்குமெனவும், சாந்தியதீதகலை நாபித்தானத்திலிருந்து எழுத்துக்களின் தோற்றத்திற்கு அதீதமான ஒலியைத் தோற்றுவிக்குமெனவும் அறிக.

அகரமுதலிய பஞ்சகலைகளாவன:—அகரம் உகரம் மகரம் விந்து நாதம் என்னும் ஐந்துமாம். இவற்றுள் தூலவைகரி நிவிர்த்திகலையைப்பற்றி அகரவடிவாயும், சூக்குமவைகரி பிரதிட்டாகலையைப்பற்றி உகரவடிவாயும், மத்திமை வித்தியாகலையைப்பற்றி மகரவடிவாயும், பைசந்தி சாந்திகலையைப் பற்றி விந்துவடிவாயும், சூக்குமை சாந்தியதீதகலையைப்பற்றி நாதவடிவாயும் நிற்கும்.

அக்கரங்கள் அந்தக்கரணங்களைச் செலுத்துமுறையாவது :—பிறர்க்குக் கேட்கும்படி சொல்லுதலாகிய தூலவைகரி வாயைத்திறத்தலினுலுண்டாகுமாதலால் வாயைத்திறத்தலாகிய அங்காத்தலால் தோன்றுதல் அகரமாகிப்

பிறருக்குத் தெரிவிப்பேன் என்றவிருத்தி அகங்காரமாகி அகரம் அகங்கார த்தைச் செலுத்திற்றெனவும், பிறர்க்குச் சொல்லுஞ் சொல்லைத் தன்னுள் நிச்சயித்தலாகிய சூக்குமவைகரி கண்டத்தானத்தில் அடங்கி வாயைச் சிறிது அசைத்தலினுலுண்டாகுமாதலால் சிறிது அசைத்தல் உகரமாகி நிச்சயித்த விருத்தி புத்தியாகி உகரம் புத்தியைச் செலுத்திற்று எனவும், சொல்லிற்குரிய அக்கரங்களைப் பகுத்துக்காட்டும் மத்திமை இருதயத்தில் மவுனமாய் இருத்தலால் மவுனம் மகரமாகிப் பகுத்தவிருத்தி மனமாகி மகாரம் மனதைச் செலுத்திற்றெனவும், அக்கரங்களை நிருவிகற்பமாய்க் காட்டும் பைசந்தி உந்தியில் ஒருகுறிவடிவாயிருத்தலால் குறி விந்துவாகி நிருவிகற்ப விருத்தி சித்தமாகி விந்து சித்தத்தைச் செலுத்திற்றெனவும், ஒலிமாத்திரையாய் நிற்குஞ்சூக்குமை நாபியில் ஒலிவடிவாயிருத்தலால் ஒலி நாதமாகி உயிர்த்தலாகிய விருத்தி புருடனுகி நாதம் புருடனைச் செலுத்திற்றெனவும் அறிக. ஆகவே, சூக்குமைமுதலியஒலி நிவிர்த்திமுதலிய பஞ்சகலைகளின் பற்றுக்கோட்டால் அகரமுதலிய அக்கரங்களின் வடிவாய் அகங்காரமுதலிய அந்தக்கரணங்களைத் தொழிற்படுத்துமென அறிக.

கடல் அலை உவமை மனமாதியால் என்னும் வெண்பாவில் ஒன்றன் பின் ஒன்றுய் உணர்வு தோன்றுதற்கும், இவ்விடத்துப் புதிது புதிதாய் உணர்வு தோன்றுதற்கும் எடுத்துக் காட்டினுர். ஆதலின் கூறியது கூறலின்மையறிக.

அக்கரங்களின் அதிதெய்வம் இவை யென்பதற்குக் காட்டும்.

உதாரணம்.

எண்ணில வோங்காரத் தீசர் சதாசிவமா
நண்ணிய விந்துவோடு நாதத்துக்—கண்ணிற்
பகரயன்மா லோடு பரமனதி தெய்வ
மகரவுக ரம்மகரத் தாம்.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், அவ்வக்கரங்களுஞ் சடமாகலின் அவற்றையதிட்டிக்கும் அதி தெய்வங்கள் இவை யென்பதுணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) எண்ணிலவோங்காரத்து நண்ணிய விந்துவொடுநாதத் ததிதெய்வங் கண்ணில் ஈசரொடு கூடிய சதா சிவமாம் அகரவுகர மகரத் ததிதெய்வங் கண்ணிற் பகரயன் மாலோடு பரமனும் எ-று.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

இ-ள். எண்ணிலவு—மானதக்காட்சியின்கண் நிலவிய,—ஓங்காரத்து—பிரணவத்தின்கண்ணே,—நண்ணிய—பொருந்திய,—நாதத்து—நாதத்திற்கும்,— விந்துவொடு— விந்துவிற்கும்,—அதிதெய்வம்—அதிதேவதையை,—கண்ணில்—கருதுமிடத்து,—சதாசிவம்—சதாசிவமும்,— ஈ ச ர ா ம்—மகேசனுமாம்,— மகர உகர அகரத்து—மகர உகர அகரங்கட்கு,—(அதிதெய்வம் கண்ணில்)—அதிதேவதையைக் கருதுமிடத்து,— பரமன் மாலோடு பகர் அயனும்—முறையே சுத்தவித்தையின் வைகுவோராகிய உருத்திரனும் மாலும் சொல்லப்படும் அயனுமாம் எ-று.

## சிற்றுரை.

எண்ணில வோங்காரம் எண்ணத்தின்கண் நிலவிய ஓங்காரமென வினைத்தொகை. எண்ணம் ஈண்டு மானதக்காட்சி.

ஒடு எண்ணின்கண் வந்தது.

ஈண்டு அயன் மால் பரமனென்றது சுத்தவித்தையின் வைகுவோரை. பரமன் உருத்திரன். அகரவுகரம் மகரத்தா மென்புழி மகரம் இசைப் பொருட்டாய் ஒற்றில்வழி யொற்றாய் வந்தது.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) எண்ணிலவு ஓங்காரத்து நண்ணிய நாதத்து விந்துவொடு அதிதெய்வங் கண்ணில் சதாசிவம் ஈசராம் மகர உகர அகரத்து(அதிதெய்வங் கண்ணில்) பரமன் மாலோடு பகர் அயனும்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோ வெனின், அந்தக் கரணங்களைச் செலுத்தும் அகர முதலிய அக்கரங்களுஞ் சடமாகலின் அவ்வக்கரங்கள் அந்தக்கரணங்களைச் செலுத்து மென்றல் எவ்வாறு பொருந்தும் என்னும் ஐயத்தை நீக்குதற்கு அக்கரங்களை வாயிலாகக் கொண்டு நிற்கும் அதிதெய்வங்கள் இவையெனக் கூறிய வாறாம்.

(பொ-ரை.) மனத்தால் அறியப்படுவதாய் அகத்து விளங்கிய பிரணவத்தின்கண்பொருந்திய அக்கரங்களுக்கு அதிதேவதையைக் கருதுமிடத்து, நாதத்திற்குச் சதாசிவமும், விந்துவிற்கு மகேசனும், மகரத்திற்கு உருத்திரனும், உகரத்திற்கு விட்டுணுவும், அகரத்திற்குப் பிரமனுமாகும் எ-று.

(க-ரை.) அகரமுதலிய அக்கரங்கட்குப் பிரமன் முதலியோர் அதிதெய்வங்கள் என்பதாம்.

நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்னும் ஐந்து கலைகளும் முறையே பிரமா, விட்டுணு, உருத்திரர், மகேசுவரர், சதாசிவர் முதலிய ஐவரையும் அதிட்டித்துநின்று சிருட்டி முதலிய ஐந்து தொழில்களையும் செய்யும் என்று கூறுதற் கேற்ப மேலைச் செய்யுளின் உரையில் நிவிர்த்தி முதலிய கலைகள் முறையே அகர முதலிய அக்கரங்களின் வடிவாய் விளங்குமெனவும், இச்செய்யுளில் அகரமுதலிய அக்கரங்களுக்கு முறையே பிரமன் முதலியோர் அதிதெய்வமெனவுங் கூறியவாறு அறிக. ஆகவே அக்கர மென்பது ஒலியின் பேதமே எனவும், ஒலியே வாக்கு எனவும், வாக்காகிய அவ்வொலி நிவிர்த்தி முதலியபஞ்சகலைகளும் பிரமன் முதலிய ஐந்து தெய்வங்களும் இயக்க ஐந்துவகையாக இயங்கி மனம் முதலிய அந்தக்கரணங்களையும் புருடனையும் விடயங்களிற் செலுத்து மெனவுங் கூறியவாறுமாயிற்று.

எண்ணிலவு ஓங்கார மென்பதில் நிலவு ஓங்காரம் என்பது வினைத்தொகை. அத்தொகையை விரித்துஎண்ணத்தின்கண் நிலவிய ஓங்காரமென உரை செய்யப்பட்டது. எண்ணம் என்பது கருததலைக் குறிக்கு மேனும் இவ்விடத்தில் அந்தக்கரணங்களின் பொதுமையான மானதக்காட்சியை உணர்த்தி நின்றது.

விந்துவொடு என்றதிலுள்ள ஒடுவும், மாலோடு என்றதிலுள்ள ஓடும் எண்ணின்கண்வந்தன. அதாவது விந்துவும் மாலும் என்று எண்ணியவாறும்.

இச்செய்யுளில் அயன் மால் பரமன் என்றது சுத்தவித்தையின் வைகும் பிரம விட்டுணு உருத்திரரை. பரமன் என்றது உருத்திரனைக் குறித்து நின்றது. பிரம விட்டுணு உருத்திரராகிய மூவரும் சுத்தமாயாகாரியமாகிய சுத்தவித்தையின்கண் வைகுவோரும், அசுத்தமாயாதத்துவத்தின் வைகுவோரும் என இருதிறப்படுவர். வாக்குச் சுத்தமாயையின் காரியமானதால் வாக்கை இயக்குந் தேவதைகளும் சுத்தமாயாகாரியமாகிய சுத்தவித்தையின் வைகுவோர் என அறிக.

அகர உகரம் மகரத்தாம் என்றதில் உகரத்தோடு மகர ஒற்றுப் பொருந்தியிருக்கின்றது. மகர ஒற்று இன்றியே அகர வுகர மகரத்தாம் என்றிருக்கலாம். அவ்வாறிருப்பின் ஓசை குறையும் வெண்பாத் தளையுந்தட்டும். ஆதலால் ஒற்று வேண்டாதிருக்கவும் இசைப்பொருட்டாய்மகர ஒற்று வந்து உகரம் மகரத்தாம் என நின்றது.

முதலதிகரணம் முற்றிற்று.



# இரண்டாம் அதிகரணம்.

ஆன்மா அந்தக்கரணங்களைக் கூடுதற்கு ஏது ஆணவமலத்தால்

அறிவு இழந்தமை எனக்கூறும்

மேற்கோள்.

இனி இவ்வான்மாச் சகசமலத்தி னு ணர்வின் றென்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், ஆன்மா அந்தக்கரணங்களி னொன் றன்றாயின் அவற்றோடு சந்தித்து நிற்றற்கேது வென்னையென அவர் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ—ள். வெ—டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

(இ-ள்) இவ்வான்மா— அந்தக்கரணங்களின் ஒன்றன்றாகச் சாதிக்கப்பட்ட ஆன்மா,—சகசமலத்தினால்— முதல்வனைப்போல அந்தக்கரண முதலியவற்றின் வேறாய சேதனப்பொருளாயினுஞ் செம்பிற் களிம்புபோல வேறு காரணமின்றி மூலமலந்தன்னோடுடனாய் நிற்றலின்,—உணர்வு இன்றென்றது—தன்னியல்பான் உணருமாறின்றிக் கருவிகளைக் கூடிநின்று உணர்வதாயிற்று. எ-று.

## சிற்றுரை.

ஆகந்துகமலங்களி னீக்குதற்குச் சகசமலமென விசேடிக்கப் பட்டது. படவே, உயிர் முதல்வனைப்போல் அந்தக்கரண முதலியவற்றின் வேறாய சேதனப்பொருளாயினுஞ் செம்பிற் களிம்புபோல வேறு காரணமின்றி மூலமலந் தன்னோடு உடனாய் நிற்றலிற் றன்னியல்பானுணருமாறின்றிக் கருவிகளைக் கூடிநின்றுணர்வதாயிற்றெனக் விடுத்தவாறாயிற்று. இதனானே மலத்துளதாமென மேற் பிரமாணத்தாற் பெறுவிக்கப்பட்ட மூலமலத்திற்கு ஈண்டிலக்கணங் கூறினாரென்பது பெறுதும். அறியாமையைச் செய்தலாகிய கேவலத்தினிகழுமியல்பே மலத்திற்குத் தன்னியல்பு; கருவிகளோடு கூடி அவத்தை யுறுவதாகிய விபரீதவுணர்வைச் செய்யுஞ் சகலத்தினிகழுமியல்பே பொதுவியல்பாகலான், மலத்திற்கு இருவகையிலக்கணமும் ஈண்டே பெறப்பட்டன.

## விளக்கம்.

இது சூத்திரத்திலுள்ள சகசமலத்துணராது அமைச்சரசேய்ப அவை சந்தித்தது என்பதைப் பதச்சேதஞ்செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றேவெனின், மேலே அதிகரணத்திற் கூறியவாறு ஆன்மா அந்தக்கரணங்களுள் ஒன்றல்லாயின் அவ்வந்தக் கரணங்களோடு ஆன்மாச் சந்தித்து நிற்றற்கு ஏதுவென்னையென அவ்வந்தக் கரணான்மவாதிகள் கூறும் வினவை ஆசங்கித்துக்கொண்டு சூத்திரத்தின் இரண்டாங்கூற்றைப் பதச்சேதஞ்செய்து சகசமலமாகிய ஆணவமலம் ஏதுவெனக் கூறியவாறும்.

இவ்வதிகரணத்தில் ஆன்மாவின் உணர்வு சகசமலத்தால் தடுக்கப் படுமோ படாதோ என்பது ஐயப்பாடு. படாதென்பது பிறர்பக்கம். இவ் வாறு கூறுவோர் அந்தக்கரண ஆன்மவாதிகள் என அறிக.

(இம்மேற்கோளின் பொருள்.) அந்தக்கரணங்களில் ஒன்று அன்றெனச் சாதிக்கப்பட்ட ஆன்மா முதல்வனைப்போல் அந்தக்கரண முதலியவற்றின் வேறாய அறிவுடைப்பொருளாயினும், செம்பினிடத்துக் களிம்பு அநாதியே உடனாய் நிற்றல்போல வேறு காரணமின்றி ஆணவமலம் அநாதியே தன்னோடு உடனாய் நிற்றலின் தன்னியல்பால் உணருமாறின்றிக் கருவிகளைக் கூடிநின்று உணர்வதாயிற்று எ-று.

மேற்கோளில் மலத்தினால் என்று கூறாது சகசமலத்தினாலென்று கூறியது எதற்காகவெனின், ஆணவம் கன்மம் மாயை என்னும் மலங்கள் மூன்றனுள், கன்மமும் மாயையும் ஆன்மாவை இடையே வந்து கூடினவாம். ஆணவம் அநாதியே கூடிநின்றது; இடையே வந்து கூடின மாயை கன்மங்களினால் ஆன்மாவிற்கு உணர்வு உண்டாவதேயன்றி உணர்வு தடைப்படுவதில்லை; ஆதலால் உணர்வைத் தடைசெய்யும் மலம், இடையே வந்து பொருந்திய மாயை கன்மங்களன்று என நீக்குதற்குச் சகசமலமெனக் கூறினார். ஆணவமலத்தினாலென்று கூறலாமே யெனின், இடையே வந்து கூடினதும் அநாதியே கூடினதுமான வேற்றுமையை விளக்குதற் பொருட்டுச் சகசமலம் எனக் கூறியதென்க.

மாயை கன்மங்கள் இடையே வந்து கூடினவாயின் அநாதியன்றெனக் கொள்ளவருமே. வரின், 'ஆதியென்றாகி ஆதியாகிய மாயை கன்மங்கள் எப்பொழுது தோன்றின என்னுங் கேள்விக்கிடனாகும். அன்றியும் ஆணவ மலத்தின் நீக்கத்தின்பொருட்டுக் கன்மத்துக்கேற்றவாறு மாயையில் இறைவன் செய்யும் பஞ்சகிருத்தியமும் அநாதியன்றெனக் கொள்ளவரும். ஆதலால் இன்னகாலத்திற் றோன்றின வென்பதின்றி ஆணவமலமும் உயிருங் கூடினவன்றே உள்ளனவாகி அநாதியேயாம். ஆயினும் ஆணவம்

போல மாயை கன்மங்கள் உயிரோடு கலந்து நிற்பதின்றி இறைவனுக்கு உடைமைப் பொருளாய் இறைவனுக்குள் அடங்கியிருந்து ஆணவமல நிவிர்த்தியின்பொருட்டு இறைவன் கூட்ட உயிரைக்கூடும். ஆதலால் இறைவனுள் அடங்கியிருத்தல்பற்றி அநாதி யென்பதற்கும் உயிருக்கு இறைவனால் கூட்டுதல்பற்றி இடையே வந்து கூடின (ஆகந்துகம்) என்பதற்கும் இழுக்கில்லை. மும்மலங்களும் அநாதியே யென்பதனை இந்நூல்உ-ம் சூ-ம் உ-ம் அதிகரணத்தில் நெல்லிற்குமியும் என்ற வெண்பாவில் "வல்லிமல கன்மம் அன்றுளவாம்" என்றும், திருவருட்பயன் என்னும் நூலில் "ஏகன் அநேக னிருள்கரும மாயையிரண் டாகவிவை யாறு தி யில்" என்றுங் கூறுவனவற்றால் அறிக.

மாயை கன்மங்கள் இறைவனுக்கு உடைமைப்பொருளா மென்பதை இந்நூல் உ-ம் சூ-ம் ச-ம் அதிகரணத்து எங்குமுளன் என்ற வெண்பாவில் " அவையுடைமை " என்பதனாலும், க-ம் சூ-ம் உ-ம் அதிகரணத்து விதத துண்டா மென்ற வெண்பாவில் "தாரகமா மத்தன்றுணிற்றல்" என்பதனாலும் அறிக. அவ்விரண்டும் இறைவனுக்கு உடைமையாயிருத்தல் எதுபோலுமெனின், அரசனுக்குள் அடங்கியிருக்கும் மந்திரிமுதலிய உத்தியோக சத்திகளும், அவற்றைத் தொழிற்படுத்தும் சட்டமும் போலுமென்றுணர்க. உத்தியோகசத்தி மாயைக்கும், அதனைத் தொழிற்படுத்துஞ் சட்டம் கன்மத்திற்கும் உவமைகளாம். யாதானும் ஒரு உத்தியோகத்தை அரசனால் தரப் பெற்றுச் சட்டப்படி நடத்துங்காலத்தும அரசன் ஆணைக்குள் அடங்கியே நடத்தவேண்டுதல்போல மாயையின் காரியமாகிய தனுகரணபுவனபோகங்களும், அவற்றிற்கு விதிக்கப்பட்ட கன்மத்தின் காரியமாகிய இன்பத்துன்பங்களும் இறைவன் ஆணையின்வண்ணமே வருதலால் மாயை கன்மங்கள் மட்டுமன்று அவற்றின் காரியங்களும் இறைவனுக்கு உடைமையாயினவாறு அறிக.

உடைமை என்பதன் பொருள் உடையதாந்தன்மை என்பதாம். எனவே உடையானுக்கு உரிமைப் பொருளாயிருத்தல் உடைமையென்றவாறும். உரிமைபொருள் அறிவுடையதும் அறிவில்லாததும் என இருதிறப்படும். அவற்றுள் அறிவுடைப் பொருளாகிய உடைமை அடிமை யென்றும், அறிவில்லாத பொருளாகிய உடைமை உடைமை யென்றும் பகுத்துக் கூறப்படும்.

மேற்கோளில் மலமென்று பொதுவாய்க் கூறாமல் சகசமல மென்று விசேடித்துக் கூறியதனால் உயிர் முதல்வனைப்போல் அந்தக்கரணமுதலியவற்றின் வேறாய அறிவுடைய பொருளாயினுஞ் செம்பிற்குக் களிம்பு அநாதியாயவாறுபோல வேறு காரணமின்றி அநாதியே மூலமலந் தன்னோடு உடனாய் நிற்றலால் தன்னியல்பால் உணருமாறின்றிக் கருவிகளைக் கூடி நின்று உணர்வதாயிற்று என அந்தக்கரணங்களோடு ஆன்மாச் சந்தித்து நிற்

றற்கு எது வென்னை யென்னுங் கேள்விக்கு உத்தரங் கூறியவாறாயிற்று. ஆதலால் சகசமலத்தினால் என்பதற்கு அவ்வாறு உரை செய்யப்பட்டது.

முதல்வனும் உயிரும் அந்தக்கரணங்களின்வேறான சித்துப்பொருளே யாயினும் முதல்வனுக்கு அநாதியே மலமில்லாமையினால் அந்தக் கரணங்க ளோடு கூடாமல் அறிவு நிகழு மெனவும், உயிருக்கு அநாதியே மலம் இருத் தலினால் கருவிகளோடு கூடிய விடத்து அறிவு நிகழும் எனவும் அதுவுஞ் சிற்றறிவெனவும் அறிக.

உயிரோடு கூடியிருக்கின்ற ஆணமலம் உயிரைப் பந்திப்பதுபோல இறைவனோடு கூடியிருக்கின்ற மாயாமலம் கன்மமலங்கள் இறைவனைப் பந்திக்காவோ வெனின், பந்திக்கா. எதனாலெனின், தன்னின் மேம்பட்ட ஒன்றை அதனிற்றாழ்ந்த தொன்று வெல்ல முடியாது. தன்னிற் றாழ்ந்த தொன்றைத் தான் வெல்லுதல் கூடும். மேம்பட்ட ஒன்றை வெல்லுங்கா லத்து நாளடைவில் அதனின் மேம்பட்டே வெற்றியடைதல் கூடும். அங்ஙு னமும் மேம்படுதல் இவற்றிற் கொன்று மில்லை யாதலின் அதுபற்றிய ஆசங்கையில்லை. இன்னும் மாயை கன்மங்கள் இறைவனிடத்து அடங்கி யிருந்தும் அவ்விறைவனைப் பந்திக்கமாட்டாமையைப் பாம்பினிடத்து அடங்கியிருக்கின்ற விடம் அப்பாம்பைக் கொல்லாமையின் வைத்துணர்ந்து கொள்க. உடைமைப் பொரு ளென்றதனாலும் இக்கருத்து இனிது விளங் கும்.

ஆணவமலம் உயிரினிடத்து அடங்கியிருக்குமாயின் உயிரைப் பந்திக்க மாட்டாது, மேம்பட்டிருக்குமாயின் எக்காலத்தும் மேம்பட்டிருக்கு மென் றாகித் திருவருளோடு கூடிய காலத்தும் உயிரால் நீக்கமுடியாது~~போலு மெனின்~~, அங்ஙனமன்று; பந்தித்தலினாலும், திருவருளால் நீக்கப் பெறுதலி னாலும், அடங்கியதுமின்றி மேம்பட்டது மின்றிச் சமமாய் உயிரின் அறிவு அளவில் கலந்துநிற்குமாகலான் அதுபற்றி விளைவின்றென்பது அறிக.

பிரமாண இயல் முதற் சூத்திரத்தில் மலத்துளதாமென ஆணவமலம் உண்டென்று கூறி அவ்வாணவமலத்திற்கு இம்மேற்கோளினால் இலக்க ணங் கூறியவாறாயிற்று.

ஆணவமலத்தின் இலக்கணம், சிறப்புப் பொதுவென இருவகைப்படும். அவற்றுள் சிறப்பிலக்கணம், கேவலத்தில் உயிருக்கு அறியாமையைச் செய் வது. பொதுவிலக்கணம், சகலத்தில் கருவிகளோடு கூடினவிடத்து விபரீத வுணர்வைச் செய்வது. சிறப்பியல் பெனினும் தன்னியல் பெனினும் ஒக் கும். கேவலத்தில் கருவிகளின்றித் தனித்து நின்று அறியாமையைச் செய் தலால் அது சிறப்பியல் பெனவும், சகலத்தில் கருவிகளோடு கூடி விபரீத உணர்வைச் செய்தலால் அது பொதுவியல் பெனவுங் கூறியவாறு அறிக.

விபரீத வுணர்வாவது ஒன்றைப் பிறிதொன்றாக அறிதல். கருவிக ளோடு கூடிச் சாக்கிரமுதலிய அவத்தை நிகழுங்காலத்துத் தானல்லாத கரு

விகளைத் தானாகக்கொண்டு கண் கண்டதை நான் கண்டேனெனவும், காது கேட்டதை நான் கேட்டேன் எனவும் அறிதல்போல்வன விபரீதம்.

இம்மேற்கோளினாலேயே ஆணவமலத்திற்குப் பொதுச் சிறப்பு என்னும் இருவகை இலக்கணமும் பெறப்பட்ட வாறுகாண்க.

ஆணவமலத்தினால் ஆன்மாவிற்கு உணர்வில்லை யாதற்குக் காட்டும்

ஏது.

அதுதான் ஞானதிரோதகமாய் மறைத்துக்கோடு நிற்றலான்.

## சிற்றுரை.

எ—து ஏது எ—னின். சகசமலத்தினால் உணர்வின்றி யொழியிற் பின்கருவிகளோடு கூடியவழி அறிவுண்டாமா றியாங்ஙனமெனச் சற்காரிய வாதம் பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) அச் சகசமல மாவது ஞானத்திற்குத் திரோதகமாய் அதனை யில்லையென்னும்படி மறைத்துக்கொண்டு நிற்றலான் இனி இவ்வான்மாச் சகசமலத்தினால் உணர்வின்றெனை மேற்கொண்டது எ-று.

மலத்தின திலக்கணம் வடமொழி வழக்குப்பற்றிக் கூறுவார் ஞானதிரோதகமாயெனவும், அதனைத் தமிழ்மொழியான் விளக்குவார் மறைத்துக்கொடு நிற்றலா னெனவுங் கூறினாராகலான், அது கூறியது கூறலன்மை யுணர்க. திரோதக மென்னும் வடமொழி மறைத்தலைச் செய்வ தென்னும் பொருட்டாய் வினைமுதன் மேனின்ற வினைப்பெயர்.

இதனானே ஞானாபாவமே அஞ்ஞான மென்பார் மதமும் மறுக்கப்பட்டது; அபாவம் ஒரு காரியத்தைச் செய்ய மாட்டாமையின்.

## விளக்கம்.

இந்த ஏது என்ன சொல்லிற்றோ வெனின, சகசமலத்தினால் ஆன்மாவிற்கு உணர்வு இல்லையாய்ப் போகுமாயின் இல்லாத உணர்வு பின் கருவிகளோடு கூடியவிடத்து எவ்வாறுண்டாகும்; முன்னில்லாமல் பின் உண்டாமாயின் உள்ளது தோன்றும் இல்லது தோன்றா தென்னும் சற்காரிய வாதத்திற்கு இழுக்காகுமே என்னும் வினாவை ஆசங்கித்துக்கொண்டு உத்தரங் கூறிச் சகசமலத்தினால் உணர்வின்று என்னும் மேற்கோளை வலியுறுத்திய வாறாம்.

(இந்தஏதுவின் பொருள்.) அவ்வாணவமலமாவது ஞானத்தின் றொழில் நிகழவொட்டாது செய்வதாய் அந்த ஞானத்தை இல்லை யென்னும்படி மறைத்துக்கொண்டு நிற்றலால், இனி இவ்வான்மாச் சகசமலத்தினால் உணர் வின்றென மேற்கோள் கூறியது எ-று.

இல்லை யென்று எண்ணும்படி மறைத்தலினால் அறிவு நிகழாமையே யன்றி அறிவு இல்லாமற் போகவில்லை யென்பதூஉம், நிகழாதிருந்த அறிவு பின் கருவிகளோடு கூடி நிகழ்ந்தது என்பதூஉம், ஆதலால் சற்காரியவாதத்திற்கு முரணில்லை யென்பதூஉங் காண்க.

திரோதகம் மறைப்பு என்பன ஒரு பொருட் சொற்கள். ஆயினும் திரோதகம் வடமொழி. மறைப்புத் தமிழ் மொழி. வடமொழி வழக்குபபற்றி மலத்திற்கு இலக்கணங் கூறவேண்டி ஞானதிரோதகமா யெனவும், திரோதக மென்ற அதனைத் தமிழ்மொழியாலும் விளக்கவேண்டி மறைத்துக்கொடு நிற்றலான் எனவுங் கூறினர். ஆதலால் கூறியது கூற லென்னுங் குற்றமாகாமை அறிக.

அன்றியும் திரோதகம் என்னும்வடமொழி, மறைத்தலைச் செய்வதென்னும் பொருளைக் குறிக்கும்; குறிக்கவே, திரோதகமென்பது வினைமுதன் மேனின்ற வினைபபெயர். எவ்வாறெனின், செய்வது என்றதனால் வினைமுதலைக் குறிக்கும்; மறைத்தல் என்றதனால் வினைப்பெயரைக் குறிக்கும். ஆகலான் என்க. வினைபபெயர்என்பது தொழிற்பெயர்.

இந்த ஏதுவினால் சற்காரியவாதம்பற்றி நிகழும் வினாவிற்கு விடைகூறினது மன்றி ஞானம் இன்மையே அஞ்ஞான மென்பார் மதமும் மறுக்கப்பட்டது. அதாவது ஒளியில்லாமையைத்தான் இருளென்று கூறுவதேயன்றி இருளென்னும் ஒரு பொருளில்லை யென்றும் அதுபோல ஞானமில்லாமைதான் அஞ்ஞானமன்றி அஞ்ஞானமென ஒருபொருளில்லை யென்பார் ஒரு சாரார்; அவர்கொள்கையும் இந்த ஏதுவினால் மறுக்கப்பட்டது. எவ்வாறெனின், இல்லாமை ஒரு தொழிலைச் செய்யமாட்டாது ஆதலால்என்க. அதாவதுமறைத்தற் றொழிலைச் செய்கின்றமையால் ஞானமில்லாமையே மறைத்தற்றொழிலைச் செய்யுமென்றல் கூடாது என்ற படியாம். ஒளியின்மை மறைத்தற் றொழிலைச் செய்யாதென்பது ஒக்கும். இருளின்மை விளக்குதற் றொழிலைச் செய்யாதோ எனின், செய்யாது; ஒளியே விளக்குதற் றொழிலைச் செய்யும். ஒளியும் இருளும் தனித்தனிப் பொருளாயின் ஒளியில்லாத காலத்து இருளும்; இருளில்லாத காலத்து ஒளியும் தொழில் செய்வதன கருத் தென்னை யெனின், அவ்விரண்டும் முற்றிலும் மாறுபட்ட செயலையுடைய பொருள்களாதலால் ஒன்று தொழிற் படுங்கால் மற்றொன்று தொழிற் படாமல்அடங்கியிருந்து தொழிற்பட்டதடங்கியபோது அடங்கி

யது தொழிற்படுவதாயிற்று. இவ்வாறே ஞான அஞ்ஞானங்களிடத்துங் கண்டுகொள்க. அஞ்ஞான மில்லாமையே பேரின்பத்தை விளைவித்தது என்றுகூறும் வாக்கியத்திற்கு அஞ்ஞான மில்லாமை ஏதுவாக ஞானமே இன்பத்தை விளைவித்தது என்பது பொருளாதலால் அதுபற்றிய ஆசங்கையில்லை.

இந்த ஏது ஆன்மாவின் உணர்வு சகசமலத்தால் தடுக்கப்படாதென்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

மாயாமலமே மறைத்தற் றொழிலைச் செய்யு மென்பாரை மறுத்து
ஆணவமலமேமறைக்கும் என்பதற்குக் காட்டும்
உதாரணம்.

மாயா தனுவிளக்கா மற்றுள்ளங் காணுதே
லாயாதா மொன்றை யதுவதுவாய்—வீயாத
வன்னிதனைத் தன்னுண் மறைத்தோன்றுங் காட்டம்போற்
றன்னைமல மன்றணைத ரன்.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், ஆகந்துகமலமே ஞானதிரோகமாதலையும் வேறுமோர் மலமுண்டென்றல் மிகைபோலுமென ஐக்கவாதசைவர் முதலியோர்மதம்பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்து ஆகந்துகமலத்தானுஞ் சகசமலத்தானுஞ் செயப்படுங் காரியங்கட்குத் தம்முள் வேற்றுமை பெரிதாமாறுணர்த்து முகத்தான் ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்.) உள்ளம் மாயா தனுவிளக்கு ஆக் காணுதேல் ஒன்றை ஆயாது — உயிர் (ஆகந்துகமலமெனப்படும்) மாயா காரியமாகிய உடம்பு தனக்குக் காட்டாகக்கொண்டு காணுதாயின் ஒருவிடயத்தையு மறிவதில்லையாம்,—மற்று மலம் தன்னை அன்று அணைதல் — சகசமலம் உயிரை அநாதியே பற்றி நிற்றல்,—அது அது ஆய் வீயாதவன்னிதனைத் தன்னுள் மறைத்து ஒன்று ஆம் காட்டம்போல்—(காட்ட முதலியவற்றுள்) அதுவதுவேயாய் நின்றுந் தனக்குக் கேடில்லாத வன்னியைத் தனக்குண் மறைத்து வைத்து ஒன்றேயாய் நிற்குங்காட்டம்போலும். எ—று.

எனவே, காட்டாய் நின்று விடயங்களை யறியும்வண்ணம் உயிர்க்கறிவை விளக்குதல் மாயையின் செய்தி; அவ்வறிவைத்

தடை செய்துகொண்டு நிற்றல் மலத்தின் செய்தி; இவ்விரண்டும் இங்ஙனம் ஒளியுமிருளும்போல் இகலி நிற்பனவாகலான் அத்தன்மைத்தாய மாயை இத்தன்மைத்தாய மலமாதல் யாண்டையதென மறுத்தவாறாயிற்று.

மற்றென்பது மலமன்றணைத லென்பதனொடியைந்து வினைமாற்றின்கண் வந்தது.

முற்றும்மை சிறப்பும்மைகள் தொக்கன.

ஆமுந் தானுங் கட்டுரைக்கண் வந்த அசை.

வன்னி அது அதுவாதல் காட்டத்துண் மறைந்துழிக் காட்டமேயாயுஞ் சூரியகாந்தத்துண் மறைந்துழி அதுவேயாயும் இவ்வாறே அவ்வவற்றின் மறைந்துழித் தானென்பதொன்றில்லையென்னும்படி நிற்றல். அங்ஙனமாகியும் வியாமை, கடைதன் முதலிய தொழிற்பாடு நிகழ்ந்த வழித் தோன்றுதலாற் பெற்றாம். தன்னுண் மறைத்தல் வன்னியென்பதொன்றில்லை யென்னும்படி பொதிந்துகொண்டு தானே யாதல். ஒன்றாங்காட்டம் ஒன்றேபோல் அத்துவிதமாங் காட்ட மென்றவாறு. இவ்வாறு உவமைக்கோதிய அடையுந் தொழிலும் இயைபும் பொருட்கண்ணுங் கூறிக்கொள்க.

மாயை கன்மங்கள்போல ஆதியன்றெனக் காலத்தானும் வேற்றுமை கூறுவார் அன்றணைத லென்றார்.

இங்ஙனங் கூறிப்போந்த மலமாவது ஞானாபாவமென்பாரும், பிராந்திஞான மென்பாரும், தமோகுணமென்பாரும், பஞ்சக்கிலேசத்துள் ஒன்றாகிய அவிச்சையென்பாரும், மாயை கன்மங்களென்பாரும், சிவசத்தியென்பாரும், உயிர்க்குண மென்பாருமாய் அவ்வச்சமயநூல்பற்றி மயங்குவாரு முளர். அம்மலத்திற்குப் பற்றுக்கோடாகிய சூனிய முதலியவற்றின் வேறெனப்பட்ட ஆன்மாவும் இயற்கையாற்[1] சடமென்பாரும், அறிவுமாத்திரையேயெனக் [2]குணிப்பொருளன்றென்பாரும், [3]சுதந்திர வறிவுடைத்தென்பாரும், [4]அவ்வவ்வுடம்பளவிற்றென்பாரும், [5]அணுவளவிற்றென்பாரும், [6]உருவென்பாரும், [7]அருவென்பாரும், [8]உருவருவென்பாருமாய் இன்னும் பலதிறப்படக்கூறி மயங்குவாருமுளர். அவையெல்லாம் பொருந்தாமை ஆகமங்களுட் காண்க. ஈண்டுரைப்பிற் பெருகும்.

இச்சகசமலம் ஞானநிரோதகமாய், திரவியமாய், அறியாமைக் குணத்ததாய், செம்பிற் களிம்புபோல உயிரின் குற்றமாய், அநாதிபந்தமாய்ச், சடமுமாய்ப் பலவுமாயின் அழிவெய்துமாகலின் அநாதிபந்தமாதல் பெறப்படாமையின் ஒன்றேயாய், விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலரென்னும் உயிர்ப்பாகுபாட்டிற் கேதுவாய், உயிர்கடோறுந் தனித்தனி வெவ்வேறாய் மறைத்து நின்று தத்தங்கால வெல்லையி னீங்குவனவாகிய சத்திகள் பலபலவுடைத்தாய், உயிர்கண் மூன்றவத்தைகளும் படுதற்கு மூலகாரணமாய், நித்தமாய், வியாபகமாய், வியாபகவுயிர் அணுத்தன்மைப்படுமாறு செய்தலின் ஆணவமென்னும் பெயர்த்தாய், பசுத்துவம் பசுநீகாரம் மிருத்தியு மூர்ச்சை மலம் அஞ்சனம் அவித்தை ஆவிருதியென்றற் றொடக்கத்துக் காரணக்குறிகளு முடைத்தாய் நிற்பதெனவும், படலம் படர்ந்தகண் ஞாயிற்றின் சந்நிதியினிற்பினும் படலத்தான் அவ்வொளியை யிழந்து இருளினழுந்துமாறுபோல முதல்வன் சந்நிதியினிற்பினுஞ் சோபான முறையின் அறிவிக்க அறியுந்தன்மைத்தாய உயிர் அநாதியே யறிவித்தால் அறியமாட்டாமையின் அம்மாட்டாமையான் அவ்வறிவை இழந்து அறியாமையாய் அழுந்துதலின் அஃதவ்வுயிர்க்குப் பந்தமாயிற்றெனவு முணர்க. அநாதியே மலத்தினீங்குதல் முதல்வன் வினையாய் அநாதிமுத்தத் தன்மையென எண் குணங்களுள் வைத்தெண்ணப்படுவதென்பது சிவாகமங்களுக்கெல்லாம் ஒப்பமுடிந்தாற்போல அநாதியே மலத்தைப் பற்றுதல் உயிரின் வினையாய் உயிர்க்குற்றங்களுள் வைத்தெண்ணப்படுவ தென்பதூஉம் அவற்றிற்கெல்லாம் ஒப்பமுடிந்தது. ஈண்டுப்படுங் கடாவிடைகளெல்லாம் ஈரிடத்துமொக்கும்.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) உள்ளம் மாயா தனுவிளக்கு ஆக் காணுதேல் ஒன்றை ஆயாது மற்று மலந்தன்னை அன்று அணைதல் அது அது ஆய் வீயாத வன்னி தனைத் தன்னுள் மறைத்து ஒன்று ஆம் காட்டம்போல்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோவெனின், இடையேவந்து கூடிய ஆகந்துக மாகிய மாயாமலமே ஞானத்தை மறைக்கு மென்றல் கூடும்; அதனின் வேறாகச் சகசமலமென ஓர் மலம் உண்டென்றல் மிகை யென்னுங் குற்றமாம் என ஐக்கவாத சைவர் முதலியோர் கூறுவர்; அவர் கூற்றை ஆசங்கித்துக் கொண்டு ஆகந்துக மலமாகிய மாயையினானும் சகசமலமாகிய ஆணவத்தினானும் செய்யப்படுங் காரியங்கட்குத் தம்முள்வேற்றுமை பெரி

தாம் என்பதை உணர்த்தி அதனால் சகசமலமே ஞானத்தை மறைக்கும என்னும் ஏதுவை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) உயிர் மாயாகாரியமாகிய உடம்பை விளக்காகக் கொண்டு விடயங்களைக் காணும்; உடம்பாகிய விளக்கு இல்லையாயின் ஒருவிடயத்தையும் அறிவதில்லை. விளக்கு இல்லையாயின் என்றதனால் இல்லாத காலமும் உண்டென்பது பெறப்படும். உடம்பு இல்லாத காலத்து அறிவு நிகழவொட்டாமற் செய்வது ஆணவமலம். சகசமலமாகிய அவ்வாணவ மலம் உயிரை அநாதியேபற்றிநிற்கும்; அவ்வாறுபற்றிநிற்றல் எதுபோலுமெனின், விறகு கல் இரும்பு முதலியவற்றில் கடைதற்கு முன் அக்கினி அதுவதுவேயாய்க் கேடின்றி நின்றும் கேடில்லாத அவ்வக்கினியை விறகு முதலியன தமக்குள் மறைத்துவைத்து அவ்வக்கினியோடு ஒன்றேயாய் நிற்பது போலும் எ-று.

(க - ரை.) மாயை விளக்குப் போலும், ஆணவம் இருள்போலும், அவ்வாணவம் உயிரை அநாதியே கூடிநிற்றல் அக்கினியை விறகு அநாதியே கூடி நிற்றல் போலுமாம் என்பதாம்.

இவ்வெண்பாவில் மாயை விளக்குப்போலும் எனவும், சகசமலம் உயிரை அநாதியே பற்றி நிற்றல் அக்கினியை விறகு பற்றி நிற்றல் போலும் எனவும அத்துணையே கூறப்பட்டிருக்கின்றன. இவ்வாறு கூறியதனால் ஆணவமலம் இருள் போலெனவும் அவ்விருளினாலுண்டாகிய அறியாமையை நீக்குதற்கு மாயாகாரிய மாகிய விளக்கு உயிரைக் கூடிற்று எனவும் குறிபபாகக் கொளளக் கிடத்தலினால் அவற்றை விரித்துப் பொழிப்புரையுங் கருத்துரையுஞ் செய்யப்பட்டன.

இதனால் விளக்காய் நின்று விடயங்களை அறியும்வண்ணம் உயிருக்கு அறிவை விளக்குதல் மாயையின் செய்தி; விடயங்களை அறிய வொட்டாமல் அவ்வறிவைத் தடைசெய்துகொண்டு நிற்றல் ஆணவமலத்தின் செய்தி; மாயையும் ஆணவமுமாகிய இவ்விரண்டும் இவ்வாறு ஒளியும் இருளும்போல் மாறுபட்டு நிற்பனவாகலான் ஒளி போன்றதாகிய மாயை இருள்போன்றதாகிய ஆணவமாவது எவ்வாறு கூடுமெனக் கூறி மாயையின் வேறாய் ஆணவமலம் உண்டென்றல் மிகை என்பாரை மறுத்தவாறுமாயிற்று

செய்யுளில் மற்றுஎன்பது மலம் அன்றணைதல் என்பதனோடு பொருந்தி மற்றுமலம் அன்றணைதல் என வினை மாற்றின்கண் வந்தது; அதாவது ஆகந்துகமாகிய மாயையின் காரியமாகிய தனு அறிவைவிளக்கும்; அதற்கு மாறாகச் சகசமலம் அறிவைத் தடைசெய்யும் என்னும் பொருள்படப்பது

ஆயாதாம் ஒன்றை என்றதில் முற்றும்மையும், அதுவதுவாய்என்றதில் சிறப்பும்மையுந் தொக்கு நின்றன. அவற்றை விரித்து ஒரு விடயத்தையும் எனவும், அதுவதுவேயாய் நின்றும் எனவும் உரைசெய்யப்பட்டது.

ஆயாதாம் என்றதிலுள்ள ஆம் என்பதும் அணைதல் தான் என்பதிலுள்ள தான் என்பதும் உறுதி மொழிக்கண்வந்த அசை.

அக்கினி அதுவதுவாதல் எவ்வாறெனின், விறகினுள் மறைந்து நின்றவிடத்து விறகேயாயும் சூரிய காந்தத்துள் மறைந்துநின்றவிடத்துச் சூரிய காந்தமேயாயும், இவ்வாறே பிறவற்றுள் மறைந்தவிடத்தும் அக்கினியென்பது ஒன்றில்லை என்னும்படி நிற்றலாம். அவ்வாறாயின் அக்கினி உண்டென்பதை எவ்வாறு அறிகின்றோமெனின், கடைதல்முதலிய தொழிற்பாடு நிகழ்ந்தவிடத்துத் தோன்றுதலினால் அறிகின்றோம். விறகு, தன்னுள் அக்கினியை மறைத்தல் எவ்வாறெனின், அக்கினி விறகினுள்ளிருந்தும் இருப்பதாகத்தெரிய வொட்டாது இல்லையென்று சொல்லும்படி அவ்வக்கினியைப் பொதிந்துகொண்டு விறகேயாய் நிற்றலாம். செய்யுளில் ஒன்றாங்காட்டம் என்றது அக்கினியும் விறகுமாகிய இரண்டும் இருந்தும் இரண்டாகப் பிரித்தறியவாராது ஒன்றேபோல் அத்துவிதமாயிருக்குங் காட்டமென்றவாறு. இவ்வாறு உவமைக்கோதிய அடையுந்தொழிலும் இயைபும் பொருட்கண்ணுங் கூறிக்கொள்க. அடையாவது அதுவதுவாய் வீயாத என்பது. தொழிலாவது மறைத்தலும் கடைதலும். இயைபாவது ஒன்றேபோல் அத்துவிதமாதல் இம்மூன்றனையும்பொருளின்கண் எவ்வாறு கொள்வதெனின், பொருளாவது ஆணவமலமும் உயிருமாம். விறகுபோல ஆணவமலம்; அக்கினிபோல உயிர். விறகுமுதலியவற்றில் அதுவதுவாய் நின்று கேடில்லாதிருக்கும் அக்கினிபோல ஆணவமலத்தில் அதுவாய் நின்று கேடில்லாதிருப்பது உயிர். அக்கினியிருந்தும் அது இருப்பதாகத்தெரியவொட்டாமல் விறகு மறைத்து வைத்தல்போல உயிர் இருந்தும் அது இருப்பதாகத் தெரியவொட்டாமல் ஆணவமலம் மறைத்து நிற்கும். அக்கினியிருக்கின்றதென்பது கடைந்தபின் வெளிப்படுதலால் தெரிவதுபோல உயிர் இருக்கின்றதென்பது கருவிகளோடு கூடினவிடத்து அறிதலினால் தெரியப்படும். விறகும் அக்கினியும் பொருளால் இரண்டேயாயினும் ஒன்றேயென்னும்படி அத்துவிதமாதல்போல ஆணவமும் உயிரும் பொருளால் இரண்டேயாயினும் ஒன்றேயென்னும்படி அத்துவிதமாய் நிற்கும். கடைதலினால் அக்கினி வெளிப்பட்டுத் தோன்றி விறகைக்கெடுப்பதுபோலக் கருவிகளோடுகூடிச் சகலாவத்தை சுத்தாவத்தைகளை அடைந்து ஆணவமலத்தைக் கெடுக்கும். அக்கினிதனித்து நிற்பதின்றி யாதானும் ஒன்றைப் பற்றி அதுவதுவாய் நிற்பதுபோல உயிர் தனித்து நிற்பதின்றி யாதானும் ஒன்றைப்பற்றி அதுவாய் நிற்கும். இக்கருத்துப்பற்றியே உயிரை "வசித்திடவரும் வியாபி" எனச் சிவஞான சித்தியாரில் வழிநூலாசிரியர்

கூறுவாராயினர். ஒன்றாய் அத்துவிதமாய் நிற்றலைத் தாயுமான சுவாமிகள் ''ஆணவத்தோடத்துவிதமானதுபோல்'' எனக்கூறியதனாலும் அறிக. இவ்வாறு பொருளின்கண் கூறிக்கொள்க. பொருள் என்பது உவமேயம்.

மாயை கன்மங்கள்போல ஆதியன்றெனக் காலத்தானும் வேற்றுமை கூறவேண்டி அன்றணைதலென்றார். காலத்தானும் என்றதிலுள்ள உம்மை இடத்தானும் என்றதைத்தழுவும். அதாவது மாயை கன்மங்கள் இறைவனுக்கு உடைமைப் பொருளாதலால் அவற்றிற்கு இடம் இறைவன். ஆணவமலத்திற்கு இடம் உயிர். ஆகவே இடத்தால் ஆணவமலத்திற்கும் மாயை கன்மங்களுக்கும் வேற்றுமை உண்டென்பது பெறப்படும். இனி ஆணவமலம் அன்றணைதல் என்றதனால் மாயை கன்மங்கள் உயிரை அநாதியே கூடவில்லையென்றும், இடையே கூடினவென்றும்ஆகிக் காலத்தானும் வேற்றுமை உண்டென்பது பெறப்படும். இவ்வாறு இருக்கும் இடத்தானும் பற்றுங் காலத்தானும் மாயை கன்மங்களுக்கும் ஆணவமலத்திற்கும் வேற்றுமை உண்டென்பது காட்டவேண்டி மலம் அன்றணைதல் என்றாரென அறிக. இன்னும் விளக்குதற் றொழிலாலும் மறைக்குந்தொழிலாலும் வேற்றுமை உண்டெனவும் அவ்வும்மையாலறிக.

இவ்வாறு உயிர் போலத் தனிப்பொருளாய் அவ்வுயிரை அநாதியே கூடி நிற்குமென்று கூறி முடித்த ஆணவமலத்தைப் பிறர் வேறுவேறுவிதமாய்க் கூறுவர். அவை வருமாறு:—ஞானமில்லாமையே அதுவென ஒருசாராரும், மயக்கஞானமே அதுவென ஒருசாராரும் தமோகுணமே ஆணவமலமென ஒருசாராரும், அவிச்சை அகங்காரம் அவா ஆசை கோபம் என்னும் பஞ்சக்கிலேசத்துள் ஒன்றாகிய அவிச்சையே ஆணவமல மெனச் சாங்கியரும், மாயைகன்மங்களே ஆணவமலமென ஐக்கவாதி பாசுபதிமுதலியோரும், சிவசத்தியே ஆணவமலமென ஒருசாராரும் உயிரின் குணமே ஆணவமலமெனப் பாடாணவாதிகளும். அவரவர் சமயநூல்பற்றி மயங்கிக் கூறுவர். அவ்வாணவ மலத்திற்குப் பற்றுக் கோடாயும் சூனிய முதலியவற்றின் வேறாயுமுள்ள ஆன்மாவையும் இயற்கையினால் சடமென வைசேடிகரும், அறிவுமாத்திரையான குணமேயன்றிக் குணிப்பொருள் அன்றெனச்சாங்கியரும், சுதந்திர அறிவுடையது எனப் பாட்டாச்சாரியரும், எந்த எந்த உடம்பைப்பற்றிற்றோ அந்தவந்த உடம்பளவாய் வியாபித்து நிற்பது எனச்சமணரும், அணு அளவுடையதெனப் பாஞ்சராத்திரிகளும், உருவமெனப் பௌராணிகரும், அருவம் எனப் பாதஞ்சலரும், அருவுருவம் எனக் கவுளரும் இன்னும் பலதிறப்படக் கூறி மயங்குவர். அவர் கூறுவனவெல்லாம் பொருந்தாமை ஆகமங்களுட் காண்க. சிவஞானசித்தியார் ௪-ம் சூ-ம் க-ம் அதிகரணத்தில் ஆன்மாவைப் பற்றியும், ஷை நூல் உ-ம் சூ-ம் ௪-ம் அதிகரணத்து ஒழிபில் ஆணவமலத்தைப்பற்றியுங் கூறியிருத்தலால் அவ்விடங்களினுங் காண்க. இவ்விடத்துக் கூறிற் பெருகும்.

இந்தச் சகசமலமாகிய ஆணவமலம் உயிரின் அறிவை மறைப்பதாய், தனிப்பொருளாய், அறியாமையே குணமாக உடையதாய், செம்பிற்குக் களிம்பு குற்றமாவதுபோல உயிருக்குக் குற்றமாய், உயிருக்கு அநாதி பந்தமாய், அறிவில்லாத சடமுமாய்ப் பலவுமாயிருப்பின் நாசமடையுமாதலின் ஒன்றேயாய், விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் உயிர்ப்பாகுபாட்டிற்கேதுவாய், உயிர்கள்தோறும் தனித்தனி வேறு வேறு விதமாய் மறைத்துநின்று நீங்கவேண்டிய காலத்தில் நீங்குவனவாகிய சத்திகள் பலப் பலவுடைத்தாய், உயிர்கள் கேவலம் சகலம் சுத்தம் என்னும் மூன்றவத்தைகளேயும் அடைதற்கு மூலகாரணமாய், நித்தமாய், வியாபகமாய், வியாபகத் தன்மையுடைய உயிர் அணுத்தன்மையைப் பொருந்தும் வண்ணம் செய்தலினல் ஆணவம் என்னும் பெயருடையதாய், பசுத்துவம் பசுநீகாரம் மிருத்தியு மூர்ச்சை மலம் அஞ்சனம் அவித்தை ஆவிருதி யென்பன முதலான காரணக்குறிகளும் உடையதாய் நிற்பதென அறிக.

பசுத்துவம்—உயிருக்குப் பசுத்துவத்தைச் செய்தல். பசுநீகாரம்—பசுவின் அறிவை மூடல். மிருத்தியு—உயிரைச் சீவிக்கவொட்டாது செய்தல். மூர்ச்சை—மயங்கிக்கிடக்கச்செய்தல். மலம்—அசுத்தமாக்கல். அஞ்சனம்—இருள்போல நிற்றல். அவித்தை—அறியாமையைச் செய்தல். ஆவிருதி—மறைத்தல்.

இன்னும் படலமாகிய மாசுபடர்ந்தகண் சூரியன் சந்நிதியில் நிற்பினும் படலத்தால் சூரியன் ஒளியை யிழந்து இருளின் அழுந்துமாறுபோல இவ்வாணவமலத்தால் பந்திக்கப்பட்ட உயிர் முதல்வன் சந்நிதியில் அநாதியே நிற்பினும் படிமுறையாக அறிவிக்க அறியுந் தன்மையுடையதாய் அநாதியே அறிவித்தால் அறியமாட்டாததாய் அவ்வாறு அறியமாட்டாமையினுல் முதல்வனுனுண்டாம் அறிவை யிழந்து ஆணவ மலத்தினுலுண்டாம் அறியாமையாய் அழுந்துதலின் அவ்வாணவமலம் உயிருக்குப் பந்தமாயிற்றெனவும் அறிக.

அநாதியே மலத்தின் நீங்குதல் முதல்வனுக்கு இயல்பாயினும் அது முதல்வன் வினையாய் அநாதி முத்தத்தன்மையென எண்குணங்களுள் வைத்தெண்ணப்படுவது சிவாகமங்களுக்கெல்லாம் ஒப்பமுடிந்தாற்போல, அநாதியே மலத்தைப் பற்றுதல் உயிர்க்கு இயல்பாயினும் அது வினையாய் அது உயிர்க்குற்றங்களுள் வைத்தெண்ணப்படுவ தென்பதூஉம் அச்சிவாகமங்களுக்கெல்லாம் ஒப்பமுடிந்தது. உயிரினிடத்துள்ளபற்றுந் தன்மையைத் தான் திருவானைக்காப்புராணத்தில் "வன்மலவேர்" எனக் கூறப்பட்டது. இவ்விடத்து உண்டாம் சங்கை உத்தரங்களெல்லாம் ஈரிடத்தும் ஒக்கும்.

மேற்கூறியபடி சடமாயும் பலவாயுமிருப்பின் அழிவதற்கும், சடமாயும் ஒன்ருயுமிருப்பின் அழியாமைக்குங் காரணம் என்னையெனின், பலவாயிருப்பின் ஏகதேசப்பட்டு இடத்தால் அளவுக்குட்பட்டிருக்கும்.

ஒன்றாயிருப்பின் வியாபகமாயிருக்கும். இடத்தின் அளவுக்குட்பட்டதொன்று காலத்தின் அளவுக்கும் உட்படும். எவ்வாறெனின், ஒரு இடத்திலிருப்பது பிறிதோரிடத்தில் இல்லாமைக்குக் காரணம் வேண்டப்படும். படவே, அந்தக்காரணம் கன்மமென்றாகி அக்கன்மம் செய்யப்படுவதாய்ச் செய்தபொழுதே அழியப்பட்டுப் பின் பக்குவமானபொழுது பலன்றருமாதலால் இடத்தின் அளவுக்குட்பட்டது காலத்துக்குட்படுமாறும் அறிக. இவ்விரண்டுக்கும் உட்பட்டதொன்று தோன்றி யழியும். உட்படாதது வியாபகமாதலால் தோன்றுதலுமில்லை, அழிதலுமில்லை.

நாசமடையுமாயின் அநாதிபந்தமாதல் பெறப்படாதென்பது எவ்வாறெனின், மேற்கூறியபடி நாசமடைவதொன்று ஒருகாலத்திற் றோன்றியதாகவே யிருக்குமாதலால் அநாதிபந்தமாதல் செல்லாமை யறிக. அநாதியென்பது ஆதியில்லாதது. ஆதியென்பது காலத்தால் வரையறுக்கப்படுவது. ஆகவே அநாதியென்பது காலத்தால் வரையறுக்கப்படாதது என்றவாறும்.

உயிரின் பாகு பாட்டிற்கு ஆணவமலம் காரணமாவது எவ்வாறெனின், ஆணவமலத்தின் சத்தி பலவாதலால் அசுத்த மாயாகாரியம், பிரகிருதிமாயா காரியங்களைக் கூட்டாமல் சுத்த மாயாகாரியத்தைக் கூட்டி ஆணவமலத்தை நீக்குதற்குரிய மறைப்பினையுடைய உயிரை விஞ்ஞான கலரென்றும், சுத்த மாயாகாரியம் அசுத்த மாயாகாரியம் இரண்டனையுங் கூட்டி ஆணவமலத்தை நீக்குதற்குரிய மறைப்பினை யுடைய உயிரைப்பிரளயாகலரென்றும், மூன்று மாயாகாரியங்களையுங் கூட்டி ஆணவமலத்தை நீக்குதற்குரிய மறைப்பினை யுடைய உயிரைச் சகல ரென்றும் பிரித்தவாறும். சுத்த மயாகாரியம் மயக்கத்தையும் விருப்பு வெறுப்பையும் உண்டுபண்ணாது விசேட அறிவை உண்டுபண்ணுதலினாலும் ஆணவமலம் இருத்தலினாலும் அவ்வுயிரை ஒரு மல முடைய விஞ்ஞானகலரென்றும், அசுத்த மாயாகாரியம் அராகமுதலிய தத்துவங்களாய் விருப்பு வெறுப்பை உண்டுபண்ணு மாதலானும் ஆணவ மலம் இருத்தலினாலும் அவ்வுயிரை ஆணவம் கன்மமென்னும் இருமல முடைய பிரளயாகல ரென்றும், பிரகிருதி மாயாகாரியம் போகம் அனுபவித்தற்குத் துணையாதலானும் போகமெல்லாம் மாயாகாரிய மாதலானும் அவ்வுயிரை ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலமுடைய சகல ரென்றும் பிரித்தமையறிக. விஞ்ஞான கலருக்கு விஞ்ஞானத்தால் மலம் அறுதலும், பிரளயாகலருக்குப் பிரளயத்தில் மலம் அறுதலும் நிச்சயமானதால் அந்த நிச்சயம் பற்றி விஞ்ஞானத்தால் கலையற்றவர், பிரளயத்தில் கலையற்றவர் என்று இறந்தகாலத்தாற் கூறப்படும். ஏனைய வெல்லாம் சிவஞான சித்தியார் எட்டாஞ் சூத்திரம் இரண்டாவது செய்யுளின் விசேட வுரையிற் கூறியிருத்தலால் அவ்விடத்துக் காண்க. விஞ்ஞான கலருக்கு மாயை கன்மங்களும், பிரளயாகலருக்கு மாயையும் இல்லையாயின் அங்குள்ள போக அனுபவங் கூடாதே

யெனின், மாயையென்பது கருத்துவகையால் பிரகிருதிமாயையைக் குறிக்கு மாதலால் அவ்விருவருக்கும் மாயையில்லையென்றும், விஞ்ஞானகலருக் போகானுபவம் ஆணவமலபரிபாகத்தினாலேயே யாதலின் அவருக்குக்கன்ம மில்லையென்றுங் கூறியவாறும். ஆகலின் போகானுபவங் கூடுமென்க.

அநாதியே அறிவித்தால் உயிர் அறியாமை எதுபோல வெனின், தந்தையொருவன் மகனுக்குப் பிறந்த அன்றே தன் உரிமையைக் கொடுப்பின் ஏற்று வகிக்கமுடியாமைபோல உயிரும் முதல்வனும் அநாதியே அத்துவிதமாய்க் கலந்து நிற்பினும் அநாதியே முதல்வன் அறிவித்தால் உயிர் அறியாது. தந்தை சிற்றறிவும் சிறு தொழிலும் உடையனாதலால் மகனுக்கு அறிவிக்கமுடியாதென்பது பொருந்தும் இறைவன் முற்றறிவும் எல்லாவல்லபமும் உடையனாதலால் உயிருக்கு அநாதியே அறிவிக்க முடியாதென்பது எவ்வாறு பொருந்துமெனின், இயற்கைக்கு விரோதமாகச் செய்தல் வல்லபத்துக்கு இலக்கண மன்று; முட்டின்றிச் செய்தலே வல்லபத்திற்கு இலக்கணமாம். மலத்தின் சத்தி சிறிது சிறிதாகக் குறையின் அதற்கேற்ப அறிவு சிறிது சிறிதாக வளரும் இயற்கையை அறிதலின் முற்றறிவிற்குக் குறைவில்லை. அதற்கு வேண்டுவன யாவுந் தடையின்றிச் செய்தலால் வல்லபத்திற்குங் குறைவில்லை. ஆதலால் அநாதியே அறிவிக்காமை பொருந்துமென்க.

எண் குணங்களாவன:—தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களி னீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பில் இன்ப முடைமை என்பனவாம். இவ்வெண்குணங்களும் இறைவனுக்கு இன்றியமையாது வேண்டப்படு மென்பது சிவஞான சித்தியார் ஒன்பதாஞ் சூத்திரம் கஉ-வது செய்யுள் விசேடவுரையிற் கூறியிருத்தலால் அவ்விடத்துக்காண்க. இவ்வெட்டுங் குணமாயிருக்கவும் இயல்பாகவே பாசங்களி னீங்குதலாகிய அநாதியே மலத்தினீங்குதலை முதல்வன்வினை யென்று கூறியது என்னையெனின், குணம் வினையை உடையது ஆதலால் குணம் வினையென்று கூறப்படும். உதாரணமாக அக்கினியின்குணம் சூடு. சூடு சுடுதற்றொழிலையுடையது. ஆதலால் சூட்டை யுடையது அக்கினி என்றும், சுடுதற்றொழிலுடையது அக்கினி யென்றும் வழங்கி வருகின்றன. சுடுதற் றொழிலுடையது அக்கினி யென்றவிடத்து சுடுதல் அக்கினியின் வினையாயிற்று. ஆனால் அவ்வினை அக்கினி உள்ளவன்றே அநாதியாய் அவ்வக்கினியினிடத்திலுள்ளது. இவ்வாறே அநாதியே மல மில்லாமையாகிய அநாதி முத்தத்தன்மை இறைவனுக்குக் குணம். மலமில்லாமையாகிய குணம் மலத்தில் நீங்குதலாகிய தொழிலை யுடையது. ஆதலால் மலத்தில் நீங்குதலை யுடையவன் இறைவன் என்ற விடத்து நீங்குதல் முதல்வன் வினை யாயிற்று. இவ்வினை அநாதியே யுள்ளது. இவ்வாறே அநாதியே மலத்தைப் பற்றுதல் உயிரின்வினை எனப்படும். உயிருக்குமலங் குணமன்று

மலம் தனிப்பொருளென்பது மேலுங் காட்டப்பட்டது. அவ்வாருயின் குணத்தையே வினைபோலக் கூறிய முதல்வன் இலக்கணத்தோடு எவ்வாறு பொருந்து மெனின், உயிருக்குக் குணம் அறிவு. குற்றம் பற்றுந்தன்மை. இது, செம்பிற்குக் குணம் பிரகாசமும் குற்றம் களிம்பைப் பற்றுதலும் போலாம். இது அநாதிசெயற்கை. குற்றம் என்பது குணத்திற்கு எதிர்மறை யாதலால் இறைவனுடைய எண்குணங்களுக்கு எதிர்மறையான எட்டும் உயிரின் குற்றமென அறிக. அவற்றுள் பற்றுதலாகிய அக்குற்றம் பற்று தற்றொழிலை யுடையது. ஆதலால் பற்றுந் தன்மையுடையதுஉயிர் பற்றுதற் றொழிலையுடையது உயிர் என வழங்கப்படும். இவ்வுண்மையைக் குறளில் "பற்றற்றான்" என முதல்வனைக் கூறியதனாலும் அறிக. இனிப்பற்றுதல் என்றதனால் பற்றப்படும் பொருள் உண்டென்பது தானே பெறப்படும். பொருளின்றேல் பற்றுதற் றொழிலுமில்லை. ஆகவே பற்றுதற் றொழிலா கிய குற்றமும் பற்றப்படும் பொருளாகிய மலமும் அநாதியே உள்ளனவாய் அநாதியே மலத்தைப் பற்றுதல் உயிரின் வினையாய் உயிரின் குற்றங்களுள் ஒன்றாகவைத் தெண்ணப்படுவதாயிற்று. இது இயல்பாகவே பாசங்களில் நீங்குதலாகிய இறைவன் குணத்திற்கு எதிர்மறையானகுற்றம். குறளில் 'பற்றற்றான்' என்றதும் இயல்பாகவே பாசங்களில் நீங்கி நிற்றலைக் குறித் தவாறென அறிக. ஏனைக் குற்றங்களாவன:—சுதந்தரமில்லாமை, தூயஉடம் பில்லாமை, இயற்கையுணர்வில்லாமை, முற்றும்உணர்தலில்லாமை, பேரரு ளில்லாமை, முடிவிலாற்றலில்லாமை, வரம்பிலின்பமில்லாமை என்பன வாம்.

இரண்டாம் அதிகரணம் முற்றிற்று

---

# மூன்றாம் அதிகரணம்.

உயிர் அந்தக்கரணங்களோடு கூடினவிடத்து ஐந்தவத்தைப் படும் எனககூறும்

மேற்கோள்.

இனி இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரி யந் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்தினுய் நிற்கு மென்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், இருளினகப்பட்டகண் விளக்கொடு கூடிய வழி விடயங்களைக் காண்டலேயன்றி வெவ்வேறவத்தைப் படுமாறில்லை. அதுபோல மலத்திலகப்பட்ட உயிர் கருவிகளோடு சந்தித்தவழி ஒருதன்மைத்தா யறிதலேயல்ல அமைவுடைத்து. அவ்வா

றன்றி மேலைச் சூத்திரத்தோதிய முறையான் ஐம்புலனறிந்தும் ஒடுக்கமறிந்தும் உண்டிவினையின்றிக் கிடந்தும் உணர்த்த உணர்ந்தும் இங்ஙனம் வெவ்வேறு அவத்தைப்படுமாறியாங்ஙனமெனை அவர் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் இறுதிக்கூற்றைக் கண்ணழித்துரைத்துமேற்கோடனுதலிற்று.

இ—ள். வெ—டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

இ—ள். இவ்வான்மா—அந்தக்கரணங்களோடு கூடிய ஆன்மா,-சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதமாயுள்ள—சகசமலத்துணராது அமைச்சரசேய்ப்ப நிற்றலாற் படை கொடுபவனி போதும் வேந்தன் கடைதொறும் விட்டுவிட்டுக் காவலுமிட் டந்தப்புரத்திற் செல்லுமாறுபோலச் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதமாயுள்ள,—பஞ்சாவத்திதனாய் நிற்குமென்றது—அஞ்சவத்தை யுடையவனாய் நிற்பன் எ-று.

## சிற்றுரை.

அவத்தை யெனப்படுவன பலவுளவாகலின் அவற்றுள் ஈண்டு ஐந்தவத்தை யெனப்பட்டவை யாவை யென்னும் ஐயநீக்குதற்குக் கிளந்தெடுத்துரைத்தார்.

அவத்திதன் என்னும் வடமொழி ஆடூஉவறிசொல்லாற்கூறியது அம்மதம் பற்றி.

அமைச் சரசேய்ப்ப நிற்றலாலென்பதூஉம் ஈண்டு வருவித்துரைத்துக் கொள்க. கொள்ளவே "படைகொடு பவனிபோதும்" வேந்தன் "கடைதொறும் விட்டுவிட்டுக் காவலு மிட்டு" அந்தப்புரத்திற் செல்லுமாறுபோல ஆன்மா அங்ஙனம் அஞ்சவத்தைப் படுதல் அமைவுடைத்தெனை விடுத்தவாறாயிற்று.

## விளக்கம்.

இது சூத்திரத்திலுள்ள அமைச்சர சேய்ப்பநின்றஞ்சவத் தைத்தே என்பதைப் பதச் சேதஞ் செய்து மேற் கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்னசொல்லிற்றே வெனின், இருளில் அகப்பட்ட கண் விளக்கோடு கூடியவிடத்து விடயங்களைக்காண்டலாகிய ஒன்றேயன்றி வேறு வேறு அவத்தைப்படுவதில்லை அதுபோல ஆணவமலத்தில் அகப

பட்ட உயிர் கருவிகளோடு கூடியவிடத்து ஒரு தன்மையாய் அறிதலே பொருத்தமாகும். அவ்வாறன்றி மூன்றாஞ் சூத்திரத்தில் ஓதியவாறு ஐம் புலன் அறிந்தும், ஒடுக்கம் அறிந்தும், உண்டிவினையின்றிக் கிடந்தும், உணர்த்த வுணர்ந்தும், இவ்வாறு வேறு வேறு அவத்தைப் படுமென்றல் எவ்வாறு பொருந்துமென அவ்வந்தக்கரணான்மவாதிகள் கூறும் வினாவை ஆசங்கித்துக்கொண்டு சூத்திரத்தின் மூன்றாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து ஐந்தவத்தை அடையுமெனக் கூறியவாறும்.

இவ்வதிகரணத்தில் ஆன்மாக் கருவிகளோடு கூடிய விடத்து ஐந்தவத் தைப்படுமோ படாதோ என்பது ஐயப்பாடு. படாதென்பது பிறர் கூறும் பக்கம் என அறிக.

(இம்மேற்கோளின் பொருள்.) அந்தக்கரணங்களோடு கூடிய ஆன்மாச் சகசமலத்தினால் அறிவு தொழிற்படாதிருந்தமையால் அவ்வந்தக்கரணங்க ளூந் தானும் மந்திரியும் அரசனும்போல நிற்றலால், மந்திரி முதலிய படை களுடன் உலாப்போன அரசன் தன் மாளிகைக்குட் செல்லுங்கால் வாயில்தோறும் நிறுத்தவேண்டியவர்களை நிறுத்திக் காவலும் வைத்து அந் தப்புரத்திற் செல்லுமாறுபோல, தத்துவங்களைக் கூடிப் பிரியும் முறையில் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதமாயுள்ள அஞ்சவத்தை யுடையவனாய் நிற்பன் எ-று.

பஞ்சாவத்தையை உடையவனாய் நிற்கும் என்று கூறினாற் போதிய தாயிருக்கவும் சாக்கிர முதலாகப் பெயரை எடுத்துக் கூறியதன் கருத் தென்னை யெனின், அவத்தையென வழங்குவது சாக்கிர முதலியவற்றிற்கு மட்டு மன்றிக் கேவலம், சகலம், சுத்தம் முதலிய வற்றிற்கும் வழங்கி வரு கின்றமையால் எந்த அவத்தையோ என்னும் ஐயம் உண்டாகாத வண்ணம் சாக்கிர முதலிய பெயரை எடுத்துக் காட்டிக் கூறினார்.

அவத்திதன் என ஆண்பால் விகுதி சேர்த்துக் கூறியது வடமொழி மதம்பற்றி. தமிழ் மொழி மதம்பற்றியாயின் அவத்தையுற்று நிற்கும் என்று முடியவேண்டும். வடமொழியில் ஆன்மாவை உயர்திணை ஆண்பாலாகக்கூறு தல் வழக்கு.

இரண்டாம் அதிகரணத்திற்குரிய அமைச்சரசேய்ப்ப நிற்றலால் என் பதையும் இவ்வதிகரணத்தில் வருவித்துரைக்க. எதற்காக வெனின், ஐந் தவத்தை யடைதற்குக் காரணம் அமைச்சர சேய்ப்ப நிற்றலாதலால் என்க. உரையும் அவ்வாறு செய்யப்பட்டது.

அரச உவமானத்தை உரைத்துக் கொண்டதனால், சிவஞான சித்தியார் ச-ம் சூ-ம் ௩உ-வது செய்யுளில் "படைகொடு பவனி போதும் பார்மன்னன் புகும்போ தில்லிற், கடைதொறும் விட்டு விட்டுக் காவலு மிட்டுப் பின்னர், ***அந்தப்புரத்தினில் தனியே, அடைதரும்" எனக்கூறியபடி அமைச்சர்,

பரிசனங்களோடு உலாப் போந்த அரசன் மீள அரண்மனையுட் புகுங்கால் எந்த எந்த வாயிலில் எவரெவரை நிறுத்தவேண்டுமோ அவ்வவரை நிறுத்திப் பிறர் பிரவேசியாவண்ணம் காவலும் வைத்து அந்தப்புரத்திற்குத் தனியே செல்லுமாறுபோல, ஆன்மாவாகிய அரசனும் அமைச்சர்போன்ற அந்தக்கரணங்களையும் இந்திரிய முதலிய பரிசனங்களையும் துணையாகக்கொண்டு விடயங்களாகியவீதியில் உலாவி மீளுங்காலத்து ஒவ்வொருதத்துவங்களை ஒவ்வொருதானத்தில் நிறுத்திப் பிராணனைக் காவலாகவைத்து உள்ளேசெல்லும் முறையில் தத்துவங்களின் கூடுதல் குறைதலுக் கேற்ப ஐந்தவத்தை யடைதல் பொருந்து மென்று பொருந்தாதென்பார்க்கு விடை கூறியவாறாயிற்று.

ஆன்மா வேறு வேறவத்தை யடைதற்குக் காட்டும்

ஏது.

அதுதான் மலசொரூபத்தின் மறைந்து அரூப சொரூபியாய் நிற்றலான்.

சிற்றுரை.

எ—து ஏது எ—னின், அரசன்போல் உயிர் அங்ஙனம் அஞ்சவத்தைப்படுமாயின் வியாபகத்திற் கிழுக்காய் முடியும்போலு மென்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) அவ்வுயிர் தான் மலவடிவின் மறைப்புண்டவழி அருவுடம்பாகிய தத்துவ சொரூபியாய் நிற்றலான் அத்தத்துவங்கள் தொழிற்படுமவத்தை வேறுபாடு பற்றி இனி இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந்துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனாய் நிற்குமென மேற்கொண்டது. எ—று.

"சிவஞானியாபி யவத்தைதயி லிழிந்து திரும்புதல் குற்றமாங் கருவி, சேருதல் பிரித லில்லையா முறையிற் செயப்படுங் கருவியே தெரியுந்—தாவிலா வறிவு தங்கின விடமே தகுமுயிர்க் கிருப்பிடம்" என்றதூஉம் இப்பொருள்பற்றியெனக.

தத்துவ வன்னரூபனாதல் வீடு பெற்றுழியும் உண்டுபோலுமென்று ஆசங்கை நிகழாமைப் பொருட்டு, மல சொரூபத்தின் மறைந்தென மேற்கூறிப் போந்ததனை வழிமொழிந்துகொண்டு அரூப சொரூபியாய் நிற்றலானென்று ஏதுக் கூறினார்.

மறைந்தவழி யென்றது மறைந்தெனத் திரிந்து நின்றது.

## விளக்கம்.

இந்த ஏது என்ன சொல்லிற்றோவெனின், மேற்கூறியவாறு அரசன் போல் உயிர் அஞ்சவத்தைப்படுமாயின் அரசன் ஒவ்வொரு வாயிலாக விட்டுச் செல்லுங்காலத்து விட்ட இடங்களில் இல்லாதது போல உயிரும் விட்டதானங்களில் இல்லை யென்றாகி உயிரின் வியாபகத்திற்குக் குறையுண்டாகுமே என்னும் வினாவை ஆசங்கித்துக்கொண்டு குறையாகாது என விடைகூறி ஐந்தவத்தை யடையுமென்னும் மேற்கோளை வலியுறுத்திற்று.

(இந்த ஏதுவின் பொருள்.) அவ்வுயிர்தான் மலவடிவின் மறைப்புண்டவிடத்து அருவுடம்பாகிய தத்துவ சொரூபியாய் நிற்றலான் அத்தத்துவங்கள் தொழிற்படும் அவத்தை வேறுபாடுபெற்றி இனி இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனாய் நிற்குமென மேற்கோள் கூறியது. எ - று.

தத்துவங்களெல்லாம் சூக்குமதேகமும் காரணதேகமுமாயிருக்கும். தாத்துவிகம் தூலதேகமாயிருக்கும். சூக்குமதேகம் அருவுடம்பு; தூலதேகம் உருவுடம்பு. ஆதலால் அரூபசொரூபியாய் என்றதற்கு அருவுடம்பாகிய தத்துவ சொரூபியாய் என உரை செய்யப்பட்டது.

தத்துவ சொரூபியாய் நிற்றலால் உயிர் அஞ்சவத்தையடையும்; அடையினும் வியாபகத்திற்கு இழுக்கில்லை யென்னும் இக்கருத்துப்பற்றியே "சீவனேவியாபி *** அறிவு தங்கினவிடமே தகுமுயிர்க் கிருப்பிடம்" என உலகுடைநாயனார் கூறியதூஉம் என்க. அச்செய்யுளின் கருத்து, சீவன் வியாபியாயின் அவத்தையிற் போக்குவரவு புரிதல் குற்றமாம் எனின், குற்றமாகாதென விளக்கினதாம். எவ்வாறெனின், கருவியோடு கூடுதலாகிய சாக்கிரமும், கருவியைப் பிரிதலாகிய சொப்பனம் சுழுத்தி துரியங்களும், கருவியில்லாத துரியாதீதமுமாகிய அவத்தைகள் கருவிகள் கூடிப் பிரிந்து இல்லையாகின்ற முறைமையில் உண்டாவனவாம். அந்த அந்த அவத்தையில் நிற்குங் கருவிகளோடு கூடியும், பிறிதொன்றைக் கூடாமலும் இருக்கின்ற அறிவு இருக்கின்ற இடமே உயிர் இருக்கின்ற இடமாதலால் கருவிகளோடு வியாபித்தல் உண்டென்றாகி வியாபகத்திற்குக் குறைவில்லை யென்றவாறாயிற்று. உயிர் வியாபகப் பொருளாயினும் இறைவன் போல் சருவவியாபகமின்றிச் சார்ந்த பொருள் அளவில் வியாபித்து நிற்குமாதலால் அவ்வுண்மையை விளக்குதற்குத் தாவிலா அறிவு என்றும், குணத்தின் நிறைவே குணியென்பதை விளக்குதற்கு அறிவு தங்கினவிடமே உயிர்க்கிருப்பிடம் என்றுங் கூறினார். தாவுதல் - எங்கும் வியாபித்தல்.

ஆகவே இந்த ஏதுவினால் ஒவ்வொரு அவத்தையோடும் பொருந்துதலினால் வியாபகமாதலும் ஒரு அவத்தையைப் பொருந்தும் பொழுது பிறி

தொரு அவத்தையைப் பொருந்தாமையினால் ஏகதேச வியாபகமாதலும் உயிருக்கு உண்டெனப்பட்டு வியாபகத்திற்குக் குறைவில்லாமையை விளக்கியவாறு அறிக.

அரூப சொரூபியாய் நிற்றலால் என்றலே ஐந்தவத்தைப்படுமென்பதை விளக்குதற்குப் போதியதாயிருக்கவும் மல சொரூபத்தின் மறைந்து என்று இரண்டாம் அதிகரணத்திற் கூறி முடித்ததையுங் கூறுவானேனெனின், அவ்வாறு கூறின் அரூப சொரூபமாகிய தத்துவ சொரூபியாய் நிற்றல் என்றும் உளதெனப்பட்டு முத்திபெற்ற விடத்தும் தத்துவ வடிவம் உண்டோ? உண்டாயின் விடுதலையைக்குறிக்கும் முத்திக்குப்பொருள் எவ்வாறு சித்திக்கும்? என்னும் ஐயம் நிகழுமன்றே. அந்த ஐயம் நிகழாத வண்ணம் மல சொருபத்தினால் மறைந்தவிடத்துத் தத்துவ வடிவமுண்டு. மலம் நீங்கிய விடத்துத் தத்துவவடிவம் இல்லையென உணர்த்தும் பொருட்டு மலசொரூபத்தின் மறைந்து என மேற்கூறி முடித்ததனை அநுவதித்துக்கொண்டு அரூப சொரூபியாய் நிற்றலால் எனக் கூறினார்.

மல சொரூபத்தில் மறைந்தவழி என்றிருக்கவேண்டுவது மறைந்து எனத்திரிந்து நின்றது.

இந்த அதிகரணத்து மேற்கோள் ஐந்தவத்தையுடையதாய் உயிர் நிற்குமென்று கூறியிருத்தலால் அவ்வாறு அவத்தைப்படுதற்கு ஏதுவென்னையென்னும் வினாவிற்கு விடையாக இந்த ஏதுவிற்குப் பொருள்கூறாமல் உயிரின் வியாபகத்திற்குக் குறைவில்லை யெனப்பொருள் கூறியதன் கருத்தென்னையெனின், ஐந்தவத்தைப்படுதற்கு ஏது மலசொரூபத்தின் மறைந்து நிற்றலேயாம். அது இரண்டாம் அதிகரணத்திற் கூறி முடித்தாய் விட்டது. இவ்விடத்துங் கூறில் கூறியது கூறலென்னுங் குற்றத்திற்கு இடனாம். அன்றியும் அவத்தைப்படுதற்குக் கூறிய ஏதுவாயிருப்பின் மல சொரூபத்தின் மறைந்து நிற்றலால் என்றுமட்டுங் கூறியிருக்கவேண்டும். அரூப சொரூபியாய் நிற்றலாலெனக் கூறியிருக்கவேண்டாம். இனி உண்மைதான் யாதெனின், கூறுதும். ஒவ்வொரு அதிகரணமும் ஒன்றற்கொன்று ஏதுவும் பயனுமாய் ஒருபொருள் பற்றிவருமென்று முதற்சூத்திரத்திற் கூறப்பட்டிருக்கின்றது. அவ்விதி ஒவ்வொரு சூத்திரத்திற்கும் உரியது. அவ்வாறே இச்சூத்திரத்திலும் ஆன்மா அந்தக்கரணங்களில் ஒன்றன்று என்னும் முதலதிகரணம் ஏதுவாய் அதனால் சகசமலத்தால் உணர்வில்லையாதல் என்னும் இரண்டாம் அதிகரணம் பயனாயிற்று. சகசமலத்தால் உணர்வில்லையாதல் என்னும் இரண்டாம் அதிகரணம் ஏதுவாய் அதனால் ஐந்தவத்தைப்படுதலாகிய மூன்றும் அதிகரணம் பயனாயிற்று. இம்முறைமைக்சேற்ப இம்மூன்றும் அதிகரணத்து மேற்கோளுக்கு அவத்தைப்படுதலைப் பொருளாகக் கொள்ளாமல் வேறு வேறு அவத்தைப்படுதலைப் பொருளாகக் கொள்ளல்வேண்டும். அவ்வாறு கொள்ளுங்கால் வேறு

வேறு அவத்தைப்படுதற்கு தத்துவ சொரூபமாகிய அரூப சொரூபியாய் நிற்றல் ஏதுவாகி வேறு வேறு அவத்தைப்படுதலினால் வியாபகத்திற்குக் குறைவுண்டாகாதோ என்னும் ஐயத்தை நீக்கும். ஆதலால் அவ்வாறு பொருள் கூறப்பட்டதென அறிக.

இந்த ஏது உயிர் ஐந்தவத்தைப் படாதென்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

உயிர் ஐந்தவத்தைப்படும் என்பதற்குக்காட்டும்

உதாரணம்.

ஒன்றணையா மூலத் துயிரணையு நாபியினிற்
சென்றணையுஞ் சித்த மிதயத்தின்—மன்றவே
யையைந்தா நன்னுதலிற் கண்டத்தின் வாக்காதி
மெய்யாதி விட்டகன்று வேறு.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், தத்துவங்கள் தொழிற்படுதற்கண் நிகழும் அவத்தை வேறுபாடு தெரித்துணர்த்தி அஃதேதுவாதலை வலியுறுத்துதனுதலிற்று.

நன்னுதலில் வாக்காதி மெய்யாதி மன்ற வே ஐயையைந்தாம் கண்டத்தின் (வாக்காதி மெய்யாதி)விட்டு அகன்று வேறு (ஐயைந்தாம்) இதயத்திற் சித்தஞ் சென்றணையும் நாபியினில் உயிர் அணையும் அணையா மூலத்து ஒன்று என வினையும்.

(இ-ள்.) சாக்கிரத்தானமெனப்படும் இலாடத்திற் புறவிந்திரியம் பத்தினையுந் தேற்றமாகப் பொருந்திய இருபத்தைந்து கருவி தொழிற்படும்; சொப்பனத் தானமெனப்படுங் கண்டத்தின் அப் பத்தினையும்விட்டு நீங்கி வேறாய இருபத்தைந்து கருவி தொழிற்படும்; சுழுத்தித்தானமெனப்படும் இருதயத்தின் அவற்றுள் இருபத்திரண்டு கருவிகளைவிட்டு நீங்கி முன்னர்க் கூறப்படும் இரண்டு கருவிகளோடுகூடிய சித்தந்தொழிற்படும்; துரியத்தான மெனப்படும் உந்தியிற் சித்தத்தையும் விட்டு நீங்கி முன்னர்க் கூறப்படும் புருடதத்துவத்தோடு பிராணவாயு கூடித் தொழிற்படும். இக்கருவிகளொன்றும் அணையாத அதீதத்தான மெனப்படும் மூலாதாரத்தில் புருடனொன்றே நிலைபெறும் எ—று.

எனவே, இலாடத்தானமுதலிய ஐந்தினு நிற்குங் கருவிகள் முறையே முப்பத்தைந்தும் இருபத்தைந்தும் மூன்றும் இரண்டும் ஒன்று மென்பது போந்தவாறுணர்க.

மன்ற வென்பது தேற்றப் பொருட்டாகிய இடைச்சொல். எய்தல் பொருந்துதல்; வினைத்தொகை.

வாக்காதி மெய்யாதியை யென இரண்டாவது விரித்துரைக்க. அஃதீரிடத்துஞ் சென்றியையும்.

வருகின்ற சூத்திரத்தின் மெய் வாய் கண்மூக்கு எனச் செய்யுட்கேற்ப மெய்யை முற்கூறுதலின் அம்முறைபற்றி ஈண்டுச் செவியாதி யென்னாது மெய்யாதி யென்றார். அவற்றோடு கூடிய இருபத்தைந்தாவன அவ்விந்திரியம் பத்துக்கும் விடயமாகிய வசனாதி சத்தாதி பத்தும் அவற்றினுக்கு உட்கருவியாகிய அந்தக்கரணங்க ணான்கும் அவற்றோடுகூடி அவத்தையுறுவதாகிய புருடனொன்றும், அஃதவத்தையுறுதற்குரிய மதுகைக்கேதுவாய் அகங்காரத்தாற் செலுத்தப்படும் பிராணாதி வாயுக்கள் பத்துமென இவை. ஈண்டுச் சத்தாதியென்றது வசனாதிபோலும் விடயங்களை யெனக்கொள்க. எனவே பூதங்களின் கூறாய் அவற்றுடனின்று தோராழிக்குத் தேருறுப்புப்போல இந்திரியங்களின் றொழிற்பாட்டுக்கு மதுகையை விளைத்து நிற்பனவாய புறக்கருவி யறுபதில் ஈண்டுக் கூறிப்போந்த விடயங்கள் பத்தும் வாயுக்கள் பத்தும் ஒழித்தொழிந்த புறக்கருவிகள் நாற்பதும் அவற்றையுடைய பூதங்களைந்தும் அவற்றிற்கு வலியாயுடனிற்பனவாய சூக்குமபூதமெனப்படுந் தன்மாத்திரைகளைந்து மென்னும் ஐம்பது கருவிகளுங் கீழ்நோக்கிய சாக்கிரத் தானத்தில் தமது சத்திமடங்கி வினைக்கீடாகத் தொழிற்படாதொழியுமெனவும், அவை யொழிந்தவழி அவத்தைக் கேதுவாய் நின்ற வினைப்பொறி முதலிய முப்பதது நான்கும் அவற்றோடு கூடிய புருடதத்துவமும் இருவகைப் பூதங்களானும் புறக்கருவிகளானுந் தரப்படும் மதுகையின்மையின் ஆண்டுப் பொறிகளின் றொழிற்பாடு மெத்தென நிகழுமெனவுங் கொள்க. கலாதிகளுஞ் சுத்ததத்துவமும் அவத்தைக் கேதுவாகாமையான் உடனெண்ணாராயினர். வினையவும் விரிந்த நூல்களுட் கூறியவாறுபற்றி உணர்ந்துகொள்க.

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், தத்துவங்கள் கூடிப் பிரிந்து தொழிற்படுதலால் உண்டாகும் அவத்தை வேறுபாட்டை விளக்கிக் காட்டி வேறு வேறு அவத்தையடைதற்குத் தத்துவ சொரூபியாய் நிற்றல் ஏதுவாதலை வலியுறுத்தியவாறாம்.

பொழிப்புரை உரை ஆசிரியர் கூறினமையின் கருத்துமட்டுங் கூறுதும்.

(க-ரை.) சாக்கிரம் முதலாகக்கூறும் ஐந்தவத்தைக்கும் உரிய இலாட முதலான தானங்களில் நிற்குங் கருவிகள் முறையே முப்பத்தைந்தும் இருபத்தைந்தும் மூன்றும் இரண்டும் ஒன்றுமாம் என்பதாம்.

பொழிப்புரையில் புறவிந்திரியம்பத்தென்றது ஞானேந்திரியம் ஐந்துங் கன்மேந்திரியம் ஐந்துமாம். அந்தக்கரணங்களை அக இந்திரியமென்று கூறும் வழக்குப்பற்றி இவற்றைப் புறவிந்திரியம் என்றபடியாம். இதனை "வாயாதி சோத்தி ராதி புறத்துவாழ் கருவி யாகு—மோயாத மனாதி காயத் துணருமுட் கருவி யாகும்" எனச் சிவஞானசித்தியார் ௨-ம் சூ-ம் ௬௩-வது செய்யுளில் வழிநூலாசிரியர் கூறுமாற்றானும் அறிக.

சாக்கிரத்தானமாகிய இலாடத்தில் நிற்குங்கருவி ஞானேந்திரியம் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து, சத்தாதி விடயம் ஐந்து, வசனாதி ஐந்து, அந்தக்கரணம் நான்கு, புருடன் ஒன்று, பிராணவாயு பத்து ஆக முப்பத்தைந்துமாம்.

சொப்பனத்தானமாகிய கண்டத்தில் நிற்குங்கருவி சத்தாதிவிடயம் ஐந்து, வசனாதி ஐந்து, அந்தக்கரணம் நான்கு, புருடன் ஒன்று, பிராணாதி வாயு பத்து ஆக இருபத்தைந்துமாம்.

சுழுத்தித் தானமாகிய இருதயத்தில் நிற்குங் கருவி பிராணன், சித்தம், புருடன் என்னும் மூன்றுமாம்.

துரியத்தானமாகிய நாபியில் நிற்குங் கருவி பிராணன் புருடன் என்னும் இரண்டுமாம்.

துரியாதீதத் தானமாகிய மூலாதாரத்தில் நிற்குங் கருவி புருடன் ஒன்றேயாம்.

அவத்தைகளில் கருவி நிற்கும் முறையை, "சாக்கிரமா நுதலினிவிந் திரியம் பத்துஞ் சத்தாதி வசனாதி வாயு பத்து, நீக்கமிலந் தக்கரணம் புருடனோடுநின்றதுமுப் பானைந்து நிலவுங் கண்டத், தாக்கியசொப் பனமதனில் வாயுப் பத்து மடுத்தனசத் தாதிவச னாதி யாக, நோக்குகர ணம்புருட னுட னேகூட னுவல்வரிரு பத்தைந்தா நுணர்ணி யோரே." "சுழுத்தியிதயந்தன

னிற்பிராணன் சித்தஞ்சொல்லரிய புருடனுடன் மூன்ற தாகும்--வழுத்தியநா பியிற்றுரியம் பிராண னோடு மன்னுபுருடனுங்கூட வயங்கா நிற்கு—மழுத்திடு மூலந்தன்னிற் றுரியாதீத மதனிடையே புருடனென் றியமரு ஞானம்-பழுத் திடுபக் குவாறிவ ரவத்தை யைந்திற் பாங்குபெறக் கருவிநிற்கும் பரிசு தானே.'' என்னுந் தாயுமான சுவாமிகள் திருவாக்காலும் அறிக.

செய்யுளில் மன்ற வென்றது தேற்றப்பொருளைக் குறித்த இடைச் சொல். ''மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்'' என்பது தொல்காப்பி யம் சொல்லதிகாரம் இடையியல் சூ-ம் கஎ.

ஏய் ஐயைந்து என்பது ஏய்ந்த இருபத்தைந்து என்னும் பொருளைக் குறித்து நிற்றலால் வினைத்தொகை. ஆதலால் மன்றவேய் ஐயைந்து என்ற தற்குத் தேற்றமாகப் பொருந்திய இருபத்தைந்து என உரை செய்யப் பட் டது

வாக்காதி மெய்யாதி என்றவிடத்து இறுதியில் இரண்டாம்வேற்றுமை ஐ உருபை விரித்துரைக்க. வாக்காதி மெய்யாதி என்பன கண்டத்தின் என்றதனோடும் சென்று பொருந்தும். ஆதலால் புறவிந்திரியம் பத்தினையும் என முன்னரும் அப்பத்தினையும் எனப் பின்னரும் உரை செய்யப்பட்டது.

வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் என்னும் கன்மேந்திரியங்களுள் வாக்கு முதன்மை. செவி, மெய், கண், நா, நாசி என்னும் ஞானேந்திரியங் களுள் செவி முதன்மை. ஆதலால் வாக்காதிஎன்று கூறியதற்கேற்பச் செவி யாதி யென்று கூறல் வேண்டும். அவ்வாறின்றி மெய்யாதி எனக் கூறினார். கூறியதன் கருத்தென்னை யெனின், அடுத்த ஐந்தாஞ் சூத்திரத்தில் செய் யுள் மோனைக்கேற்ப மெய்வாய் கண் மூக்கு என மெய்யை முதலாவது கூறி யிருத்தலால் அம் முறைபற்றி இச் செய்யுளில் செவியாதி என்னாது மெய யாதி எனக் கூறினார் என்க. வாக்காதி செவியாதி எனவே கூற வேண்டு மென்பதை ''வாக்கொடு பாதம் பாணி பாயுவோ டுபத்த மைந்து'' எனவும் ''நற்செவி துவக்குக் கண்ணு நாசி'' எனவும் சிவஞான சித்தியார் உ-ம் சூ-ம் சுஉ, சுக—வது செய்யுட்களில் வழி நூலாசிரியர் கூறு மாற்றாலறிக.

அந்தப் பத்து இந்திரியங்களோடு கூடிய இருபத்தைந்தும் இவை யென் பது மேற்கூறப்பட்டிருத்தல் காண்க.

இவ்விடத்தில் சத்தாதி யென்றது வசனாதி போன்ற விடயங்களை யெனக் கொள்க. எனவே, சத்தாதி தன்மாத்திரை வேறு சத்தாதி விடயம் வேறு என்பதாம். பெயர் ஒற்றுமையால் இரண்டும் ஒன்றேயென எண்ணக் கூடாது. தன்மாத்திரை பூதங்களின் தோற்றத்திற்குக் காரணமாயுள்ளது. விடயம் பூதங்களின் குணமாயுள்ளது. இத்தன்மாத்திரை அசுப்பூதம் எனவும், சூக்குமபூத மெனவுங் கூறப்படும். பூதங்களின் தோற்றத்திற்குக் காரணம் தன்மாத்திரை யென்பதை ''சாற்றிய பஞ்சதன்மாத் திரைகளிற்

சத்த முன்றாத் தோற்றும் வான் வளிதீ நீர்மண்'' எனச் சிவஞான சித்தியார் ௨-ம் சூ-ம் ௬௫-வது செய்யுளில் வழி நூலாசிரியர் கூறு மாற்றாலறிக.

சாக்கிரத்தில் முப்பத்தைந்து கருவி தொழிற்படு மென்றதனால் பூதங் களின் கூறாயும், அப்பூதங்களோடு உடனின்று தேரின் உருளைக்குவலியைச் செய்கின்ற அச்சாணிபோல இந்திரியங்களின் தொழிற்பாட்டிற்கு வலியை உண்டுபண்ணிநிற்பனவாயுமுள்ள புறக்கருவி அறுபதில் இவ்விடத்து முப் பத்தைந்து என்றதனுட் கூறிய விடயங்கள் பத்தும் வாயுக்கள் பத்தும் ஆக இருபதும் நீங்கிய ஏனைய புறக்கருவிகள் நாற்பதும் அப்புறக்கருவிகளை யுடைய பூதங்கள் ஐந்தும் அப்பூதங்களுக்கு வலிமையாய் அவற்றுடன் நிற் பனவாய சூக்குமபூதமெனப்படும் தன்மாத்திரைகள் ஐந்தும் ஆக ஐம்பது கருவிகளும் கீழ் நோக்கிய சாக்கிரத்தானத்தில் தமது சத்தி மடங்கி வினைக் கீடாகத் தொழிற்படா தொழியும் என அறிக.

அந்த ஐம்பது கருவிகளும் தொழில் செய்யாமற் கிடந்த விடத்து மேற் கூறியவாறு அவத்தைக் கேதுவாய்நின்ற ஏனைய ஞானேந்திரிய முத லிய முப்பத்துநான்கு கருவிகளும் அவற்றோடு கூடிய புருடதத்துவமும் ஆகமுப்பத்தைந்தும் தூல சூக்குமம் என்னும் இருவகைப் பூதங்களாலும் புறக்கருவிகள் நாற்பத்துநான்கும் தரப்படுகின்ற வலிமை இல்லாமையால் இலாடத்தானமாகிய கீழ் நோக்கிய சாக்கிரத்தில் இந்திரியங்களின்தொழிற் பாடு மெதுவாக நிகழுமெனக் கொள்க.

ஐம்பது கருவியில்லாமல் முப்பத்தைந்துகருவி தொழிற்படுமென்றத னல் மொத்தம் கருவி எண்பத்தைந்து என்றாகித்தொண்ணூற்றாறு கருவியி னுள் பதினொரு கருவியை விலக்கிய வாறும். அப்பதினொன்றாவன:—வித்தி யாதத்துவம் ஏழனுள் புருடன் நீங்கிய கலாதிதத்தும் ஆறும் சிவதத்துவம் ஐந்துமாம். அப்பதினொன்றும் அவத்தைக் கேதுவாகாமையான் அவத்தைக் குரிய எண்பத்தைந்தனோடு வைத்து எண்ணாராயினர். அப் பதினொன்றும் அவத்தைக் கேதுவாகாதது என்னை யெனின், கலாதிகளுடன் கூடின உயிரே புருடதத்துவமாதலாலும் அவத்தைக் கேதுவாயிருப்பது புருடதத் துவமும், புருடதத்துவமாவதற்கு ஏதுவாயிருப்பது கலாதிகளாதலாலும் கலாதிதத்துவம் அவத்தைக் கேதுவாதலில்லை. சிவதத்துவம் கலாதிதத்துவங் களோடுகூடிய புருடன் தொழிற்படுதற்கு ஏதுவாயிருப்பதேயன்றித் தொழி லுக்கு ஏதுவாயிருப்பதில்லை யாதலால் சிவதத்துவமும் அவத்தைக்கேதுவாத லில்லை யென அறிக.

கீழ்நோக்கிய சாக்கிரத்தானத்தில் முப்பத்தைந்து கருவிதொழிற்படும் என்றதனால் எல்லாக்கருவியுந் தொழிற்படும் சாக்கிரம் ஒன்றுண் டென்பது பெறப்படும். படவே கீழ்நோக்கிய சாக்கிரம், மேல்நோக்கிய சாக்கிரம், இவ்விரண்டும் நோக்காதசாக்கிரம் எனச்சாக்கிரம் முத்திறப்படும். அவற்றுள்,

கீழ்நோக்கிய சாக்கிரமாவது சொப்பனமுதலிய அவத்தைக்குரியது. அதாவது புறத்தொழிலை விட்டு நித்திரைக்குச் செல்ல வெண்ணிப் படுத்திருக்குங் காலத்து நித்திரைவருதற்கு முன் உளதாகிய சாக்கிரம். இச் சாக்கிரத்தில் தொழிற்பாட்டிற்குரியனவாய் மேற்கூறிய ஐம்பது கருவிக ளும் தமது சத்தி மடங்கிக் கிடக்க நித்திரை வரும்வரையும் முப்பத்தைந்து கருவிகளுந் தொழிற்படும். பதினும் ஞானேந்திரிய கன்மேந்திரியங்களின் தொழில் புறத்துவிடயங்களை அனுபவிக்குங்காலத்து நிகழ்வதுபோலன்றி மெதுவாய் நிகழும். ஏனைய இருபத்தைந்து கருவிகளின் தொழிலில் வேற் மையில்லையாது. இந்தச் சாக்கிரம் இலாடத்தானத்திலிருந்து கண்டமுதலா கக் கீழ்நோக்குதற் குரியதாய் நிற்றலால் கீழ்நோக்கிய சாக்கிர மெனப்பட் டது. இச்சாக்கிர முதலியவற்றைக் கீழாலவத்தை யென்பர்.

மேல்நோக்கிய சாக்கிரமாவது இருதயம், கண்டம், நாக்கின் அடி, இலாடம் பிரமரந்திரம் என்னும் ஐந்தனுள் இருதயத்தானத்தில் யோக சாதனமாய் மேல் நோக்குதற்குரியதாய் நிகழ்வது. இவ்வைந்தனையும் மே லாலவத்தை யென்பர்.

இரண்டும் நோக்காத சாக்கிரமாவது புறத்துவிடயங்களை அனுபவித் தற்குரியதாய் இலாடத்தில் நிகழ்வது. இதில் எல்லாக்கருவியுந் தொழிற்படும். கீழ்நோக்கிய சாக்கிரத்திற்கும் இச்சாக்கிரத்திற்குந் தானம் ஒன்றே. இதிலும் ஐந்தவத்தையுண்டு. இவற்றை மத்தியாலவத்தை யென் பர். அரசன் அத்தாணி மண்டபத்தைப் பிரதானமாகவைத்துக்கொண்டே உலாப்போதலும் பின் அம்மண்டபத்திற்கு வந்தே உட்புகுதலும்போல உயிர் இலாடத்தானத்தில் நின்றே விடயங்களிற் செல்லுதலும் அத்தானத் தில் நின்றே உள்ளே புகுதலுஞ் செய்யுமாதலால் கீழாலவத்தை மத்தியா லவத்தை இரண்டிக்குந் தானம் ஒன்றாயிற்று. சாக்கிரத்தும் ஐந்தவத்தை யுண்டு என்பதை இலாடத்தே என்னும் வெண்பாவாலும் சிவஞான சித்தி யார் ௬௰ம் சூ௰ம். ௯௬-வது செய்யுளில் "இருவகைச் சாக்கிராதி" எனவும், ௯௫-வதுசெய்யுளில் "அறிதரு முதலவத்தை யடைதரு மிடத்தே யைந்துஞ் செறிதரும்" எனவுங் கூறப்பட்டிருத்தலினாலும் அவற்றின் உரையாலும் அறிந்துகொள்க

புறக்கருவி அறுபது இவை என்பதும் அவை பூதங்களின் காரிய மென்பதும் சித்தியார் ௨௰ம். சூ௰ம். ௬௫-வது செய்யுளிற் கூறியிருத்தலால் அவ்விடத்துக்காண்க

நித்திரைக்குச் செல்லுங்காலத்து நிகழுஞ் சாக்கிரமே கீழ் நோக்கிய சாக்கிர மென்பதைச் சிவஞானசித்தியாரில் படைகொடு பவனிபோது மென்ற செய்யுளில் 'இல்லிற்புகும்போது' என்று கூறியதனாலும் அறிக.

*சாக்கிரமுதலிய ஐந்தும் சாக்கிரத்தானத்திலும் நிகழும் என விளக்கி உயிர் வேறு வேறு அவத்தைப்படுமென்பதை உறுதிப்படுத்தும் உதாரணம்.*

இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ள
மிலாடத்தே யைந்தவத்தை யெய்து—மிலாடத்தே
யவ்வவ விந்திரியத் தத்துறைகள் கண்டதுவே
யவ்வவற்றி னீங்கலது வாங்கு.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், அங்ஙனம் அதீதத்தை யெய்திய புருடன் மீளப் பிரேரகவவத்தையாகிய உணர்த்துமுறைமைச் சாக்கிரத்தைத் தலைப்படுமாறு அநுவாதமுகத்தான் விளக்கி அவ்விடத்தினும் முறைமையிற் செலுத்தும் பிரேரகக் கருவிகளை ந்தின்றொழிற்பாடுபற்றி ஐந்தவத்தை நிகழுமென்பதூஉம் அவை இவையென்பதூஉஞ் சுத்தாவத்தையும் இவைபோலுண்டென்பதூஉங் கூறி அதனை வலியுறுத்துத லுதலிற்று.

(இ-ள்.) இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம்—(இலாடத்தானத்தினீங்கி ஆண்டாண் டவத்தைப்பட்டுக் கீழ்ப்போந்து மூலாதாரத்தினெய்தியபின் மறித்தும் அவ்வாறே ஆண்டாண் டவத்தைப்பட்டு மேற்சென்று) இலாடத்தானத்தின் (உணர்த்துமுறைமைச்) சாக்கிரத்தைத் தலைப்பட்ட புருடன்,—இலாடத்தே ஐந்து அவத்தை எய்தும்—ஆண்டுஞ் சாக்கிரச் சாக்கிரமுதலிய ஐந்தவத்தையுறும்,—இலாடத்தே அவ்வவவிந்திரியத்து அத்துறைகள் கண்டு—(அவையாவன) அவ்விலாடத்தானத்தின்கண்ணே அவ்வப் பொறிகளான் அவ்வவ்விடயங்களை யுணர்ந்து,— அதுவே— அப்போதப்போதே,— அவ்வவற்றின் நீங்கல்—அவ்வவ் விடயங்களினீங்குதலாம்,—அது ஆங்கு—(இனி முன்னர்க்கூறப்படுஞ் சுத்தாவத்தையும்) இவைபோல ஐவகைப்படும் எ-று.

மேற்செல்வுழி ஆண்டாண்டுப்படுமவத்தைகளுங் கீழ்ச்செல்வுழிப்போலன்றி விசேடமின்மையின் வகுத்தோதாது இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ளமென அநுவாதமுகத்தாற் கூறியொழிந்தார்.

இழியுங்காலும் ஏறுங்காலுங் கண்டத்தானத்திற் கனுக்காண்டலுண்டென்பது முறையே ஞானாமிர்தத்தினும் போற்றிப் பஃறொடையினுங் காண்க.

அவ்வவவிந்திரியம் ஆண்டாண்டு விட்யித்தற்குரிய இந்திரியம்.

அவ்வவ்விடயம் ஆண்டாண்டுப் புலனாதற்குரிய விடயம்.

கண்டு நீங்கலெனை வியையும்.

அது அவ்வக்காலம். ஈண்டும் அடுக்கிக் கூறிக்கொள்க.

கண்ணுருபு தொகுத்து ஏகாரம் விரித்தார்.

கண்டதெனை ஒரு மொழியாக வைத்துரைப்பாருமுளர். குற்றிய லுகரத்தின்முன் உடம்படுமெய்பெறுதற்கு ஒத்திலாமையானும் பொருட்சிறப்பின்மையானும் அஃதுரையன்மையறிக.

அப்போதப்போதே நீங்கலாவது விடயங்களைக் கண்டகண்ட பொழுதே அவற்றை அயர்த்துவிடுதல். "ஒன்றன்பாலும் வருபயன் மாறி மாறி வந்திடும்" என வழிநூலாசிரியர் கூறியதும் இவ்வியல்பு நோக்கி யென்க. "காரணந் தன்னிற் செயறொறுங் கண்டு கொண்ணீ" ;"உந்திடுங் காரணந் தன்னிற் செயறொறு முணர்ந்து கொள்ளே" என்பனவுமது. இந்நுட்பமுணர்ந்து கோடற்குத் தூலாருந்ததி நியாயம்பற்றிக் கைப்பொருளை வீழ்த்தித் தெளிதன்முதலிய தூலத்துள் வைத்துக்காட்டுப.

இனி அரூப சொரூபியாய் நிற்புழிப்படும் ஐந்தவத்தையி னியல்புகூறுதற் கெடுத்துக்கொண்ட இவ்வதிகரணத்தின் அதனோடியைபில்லாத சுத்தத்தின்கட்படும் ஐந்தவத்தை கூறுதற்கு ஓரியைபில்லையாயினும் அவத்தையெனப்படுவன ஈண்டோதியன மாத்திரையே போலுமென மயங்கைமைப்பொருட்டு வேறுமைந் தவத்தையுள அவை முன்னர்க்கூறப்படுமென்னுந் துணையே கூறுவார் அதுவாங்கு என்றொழிந்தார். இக்கருத்தேபற்றி "பிறிவிலா ஞானத் தோரும் பிறப்பற வருளா லாங்கே—குறியொடு மைந்தவத்தை கூடுவர் வீடு கூட" என்றொழிந்தார் வழிநூலாசிரியரும்.

இவ்விரண்டு வெண்பாக்களானுங் கூறிப்போந்த முத்திறத் தைந்தவத்தைகட்கு முறையே மூலமாய கேவலஞ் சகலஞ் சுத்த மென்ற மூன்றனுள்வைத்துத் தன்னுண்மையெனப்படுங் கேவலத் தினியல்பு சகசமலத்துணரா தென்பதனானே பெற்றாம். ஏனைச் சகலத்தினியல்பு வருகின்ற சூத்திரத்தினுஞ் சுத்தத்தினியல்பு அப்பாலைச் சூத்திரத்தினும் பெறுதும்.

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோ வெனின், மேலே உத[illegible]த்திற் கூறியவாறு கீழாலவத்தையில் துரியாதீதத்தைப் பொருந்திய புருடன் அந்த அவத்தையினின்றும் நீங்கி எல்லாக் கருவிகளுந் தொழிற்படுகின்ற உணர்த்துமுறைமைச் சாக்கிரத்தைக் கூடும் முறையை அநுவாத முகத்தால் விளககி, அந்த உணர்த்துமுறைமைச் சாக்கிரத்தினும் முறைப்படி செலுத்துங் கருவிகளாகிய சிவதத்துவம் ஐந்தின் றொழிற்பாடுபற்றி ஐந்தவத்தை நிகழுமெனவும், அந்த அவத்தைகள் இவை யெனவும், அவைகள் போலச் சுத்தத்திலும் ஐந்தவத்தை உண்டெனவுங் கூறி ஐந்தவத்தைப்படு மென்பதை வலியுறுத்தியவாறும்.

அநுவாத முகத்தால் விளக்கியதும் உணர்த்து முறைமைச் சாக்கிர மென்பதும் உரையின் கீழ் விளக்கப்படும்.

(பொ-ரை.) இலாடத்தானத்தில் நின்றும் நீங்கிக் கண்டம் இருதயம் நாபி மூலாதாரமாகிய தானங்களில் அவத்தைப்பட்டுக் கீழ்நோக்கிச்சென்ற பின் மீண்டும் மூலாதாரத்தில் நின்றும் நீங்கி மேல் நோக்கி ஒவ்வொரு தானத்தினும் அந்த அந்தத் தானத்திற்குரிய அவத்தையை அடைந்து இலாடத்தானத்தில் உணர்த்துமுறைமையினை உடைய சாக்கிரத்தைக் கூடிய உயிர் அவ்வுணர்த்தும் முறைமைச் சாக்கிரத்தும், சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதமாகிய ஐந்தவத்தையை அடையும். அந்த அவத்தைகளாவன:—உணர்த்தும் முறைமைச் சாக்கிரமாகிய அந்த இலாடத் தானத்தில் அந்த அந்த இந்திரியங்களினால் அந்தந்த விடயங்களை உணர்ந்து உணர்ந்த அப்பொழுது அப்பொழுதே அந்த அந்த விடயங்களில் நின்று நீங்குதலாம். இனி முன்னர்க்கூறப்படும் சுத்தாவத்தையினும் இவ்வாறே சாக்கிரம் முதலாக ஐந்தவத்தைப்படும் எ-று.

(க-ரை.) உயிர் இலாடத்தானமாகிய புருவநடுவில் நின்றும் நீங்கிக் கீழ் நோக்கி மூலாதாரத்தை யடைந்தவாறே மேல்நோக்கி இலாடத்தையடைந்து விடயங்களை அனுபவிக்குங்காலத்து அவ்விடத்தினும் ஐந்தவத்தைப்படும். இவ்வாறே சுத்தத்தினும் ஐந்தவத்தைப்படும் என்பதாம்.

அனுவாதமுகத்தால் விளக்கியது எவ்வாறெனின், மூலாதாரத்தில் நின்றும் நீங்கி மேற்செல்லுங்கால் ஒவ்வொரு தானங்களிற்படும் அவத்தைகளும் கீழ்ச்செல்லுங்காலத்துப்பட்டதுபோலன்றி விசேடமில்லை. அந்தந்தத் தானத்தில் மீண்டும் அந்தந்த அவத்தையை அடைந்தே மேற்செல்லும். ஆதலால் அந்தஅவத்தைகளைச் செய்யுளில் வகுத்தோதாது இலாடத் தேசாக்கிரத்தை யெய்திய வுள்ளம் எனக்கூறினமையால் கீழுள்ள ஏனைய அவத்தைகளை அனுவாதத்தாற் கூறிய வாறாயிற்று. அதாவது நாபியில்

துரியமும் இயத்தில் சுழுத்தியும் கண்டத்தில் சொப்பனமும் அடைந்து இலாடத்தில் வந்து சாக்கிரத்தை யடையும் என்று கூறியபடியாம்.

உணர்த்தும் முறைமைச் சாக்கிரமென்றதன் கருத்தென்னையெனின், கீழ் நோக்கிச் செல்லுங்காலத்தும் இலாடத்தில் சாக்கிர அவத்தை நிகழும். மேல்நோக்கி மீளுங்காலத்தும் இலாடத்தில் சாக்கிர அவத்தை நிகழும். ஆயினும் கீழ்நோக்கியசாக்கிரம் விடயங்களை உணர்த்தாது. மேல்நோக்கி மீளுங் காலத்து உண்டாம் சாக்கிரம் விடயங்களை உணர்த்தும். ஆதலால் இதனை உணர்த்தும் முறைமைச் சாக்கிர மென்றும் பிரேரக அவத்தை யென்றும் உரையாசிரியர் கூறினர். பிரேரகமென்பது செலுத்துதல். இதனால் கீழ்நோக்கியசாக்கிரம் நித்திரைக்குச் செல்லுங்காலத்தில் நிகழும் எனவும் மீளுங்காலத்து உண்டாம் சாக்கிரம் நித்திரை நீங்கியபொழுது நிகழுமென வும் பெறப்பட்டு இவ்விரண்டு சாக்கிரத்திற்குந் தானம் ஒன்றேயென மேற் கூறியது வலியுறுத்தப்பட்டவாறு காண்க.

கீழ்ச்சென்ற உயிர் விடய அனுபவத்தின் பொருட்டு மேல்வந்து இலா டத்தில் சாக்கிரத்தை யடைதலால் இச்சாக்கிரத்தையே மேல்நோக்கியசாக் கிர மென்று கூறலாகாதோவெனின், ஆகாது; எனெனின், சாக்கிர முத லிய அவத்தைகள் முறையேமேல் நோக்குங்காலத்து நிகழாமையினாலென்க. ஆகவே, மேல் நோக்கியசாக்கிரம் என்பது மேற்கூறியபடி இருதயத்தில் யோக முறையில் நிகழ்வதேயாம். இதனைச் சித்தியார் சு-ம் சூ-ம் நிசு-வது "இருவகைச் சாக்கி ராதி" யென்ற செய்யுளில் "யோகிற் றருவது" என்றத னால் அறிக.

கீழ்நோக்கி 'இறங்குங் காலத்துக் கண்டத்தானத்தில் கனாக் காண்ட லுண்'டென்பதை ஞானாமிர்தம் ஒன்பதாவது அகவலிலும், மேல் நோக்கி ஏறுங்காலத்துக் கண்டத்தானத்தில் கனாக்காண்ட லுண்டென்பதைப் போற்றிப் பஃறொடை நிஉ-வது அடியினும் காண்க

அவ்வவ இந்திரிய மென்றது அந்தந்த இடத்தில் விடயங்களை அறி யக்கூடிய இந்திரியத்தை.

அத்துறைகள் என்றது அவ்வவ்விடயத்தைக் குறித்து நின்றது. அவ் வவ்விடய மென்றது அந்தந்த இந்திரியங்களால் அறிதற்குரிய விடயம்.

அத்துறைகள் கண்டு என்பது அவ்வவற்றினீங்கல் என்பதனோடு கூடி முடிதலால் கண்டு நீங்கலென இயையும்.

கண்டதுவே என்பதிலுள்ள அது என்பது அவ்வக்காலத்தைக்குறித்து நின்றது. உரையும் அவ்வாறு செய்யப்பட்டது. அது என்பது அக்காலம் என்பதையே குறிக்குமாயினும் அவ்வவ இந்திரியம் அவ்வவ்விடயம் என மேல் அடுக்கிக் கூறியதற்கேற்ப அது என்றதற்கு அவ்வக்காலம் என அடுக்கிக் கூறப்பட்டது.

அதுவே என்பது அவ்வக்காலத்தைக் குறித்து அப்போதப்போதே எனினும் அப்போதப்போதின்கண்ணே யென்பது பொருள். அப்பொருளைத்தரும் கண்ணுருபை விரியாது தொகுத்து ஏகாரத்தை விரித்தார்.

கண்டது என்பதை கண்டு அதுவெனப்பிரியாது ஒருமொழியாகவைத்துரைப்பாரும் உளர். கண்டது என்பதின் இறுதியிலுள்ள உகரம் குற்றியலுகரம். உயிர் முன் உயிர்வரின் உடம்படுமெய் பெறுமென்பதுவிதி. குற்றியலுகரத்தின்முன் உயிர்வரின் உடம்படுமெய் பெறுமென்பதற்கு விதிகிடையாது. "உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும்" என்பது விதி. இச்செய்யுளில் கண்டது என்பதன் முன் ஏகார உயிர்வந்து உடம்படுமெய் பெற்றுக் கண்டதுவே என வந்திருக்கின்றமையால் அவ்வுரை பொருந்தாது; கண்டதே என்றிருப்பின் ஒருமொழியாகக் கூறலாம். அன்றியும் அத்துறைகள் கண்டு அதுவே அவ்வவற்றினீங்கல் என்பதுபோல அத்துறைகள் கண்டதுவே அவ்வவற்றி னீங்கல்என்பது பொருளினாலும் சிறப்பில்லை. ஆதலாலும் கண்டது என ஒருமொழியாகக்கொண்டு கூறும் உரை பொருந்தாது என அறிக.

அப்போதப்போதே நீங்கலாவது விடயங்களைக் கண்ட கண்ட பொழுதே அயர்த்துவிடுதல். இக்கருத்துப்பற்றியே "ஒன்றின்பாலும் வருபயன் மாறி மாறி வந்திடும்" எனச் சிவஞானசித்தியார் ௨-ம் சூ-ம் ௬௪-வது செய்யுளில் வழிநூலாசிரியர் கூறினர். இன்னும் அந்நூல் ௪-ம் சூ-ம் ௩௫-வது செய்யுளில் "கரணந் தன்னிற் செயறொறுங் கண்டு கொண்ணீ" எனவும், ௬௬-வது செய்யுளில் "உந்திடுங் கரணந் தன்னிற் செயறொறு முணர்ந்து கொள்ளே" எனவும் கூறியன இக்கருத்துப்பற்றியேயாம்.

கண்ட கண்டபொழுதே அயர்த்துவிடுதலினால் சாக்கிர முதலான ஐந்தவத்தை நிகழும் என்னும் இந்நுட்பத்தை அறிந்துகொள்ளுதற்குத் தூலாருந்ததி நியாயம் பற்றிக் கைப்பொருளை வீழ்த்தித் தெளிதல் முதலிய தூலத்துள் வைத்துக்காட்டுவர்.

தூலாருந்ததி நியாயமாவது:— தூலமாகிய பெரிய நட்சத்திரத்தைக் காட்டிச் சூக்குமமாகிய அருந்ததி நட்சத்திரத்தைக் காட்டல். இவ்வாறே கைப்பொருளை வீழ்த்தித் தெளிதலாகிய தூலத்தில் ஐந்தவத்தை உண்டென்பது காட்டிச் சாக்கிரத்தில் சாக்கிரமுதலிய ஐந்தவத்தையுண்டென்று உணர்த்துதல் தூலாருந்ததி நியாயமென அறிக.

கைப்பொருளை வீழ்த்தித் தெளிதலில் ஐந்தவத்தை நிகழ்வது எவ்வாறெனின், தன்கையிலிருந்த ஒரு பொருள் தன்னை யறியாது விழுப பின்னர் அது விழுந்ததென உணர்ந்து பிராணவாயு இயக்கமின்றி மூர்ச்சித்தல் துரியாதீதம். அம்மூர்ச்சை தெளிந்து சற்றே பிராணவாயு இயங்குதல் துரியம. எவ்விடத்து விழுந்ததோ எனஎண்ணுதல் சுழுத்தி. விழுந்தவிடம் இதுவோ

அதுவோ என எண்ணுதல் சொப்பனம். விழுந்த இடத்தை நிச்சயித்தலும் கண்டெடுத்தலும் சாக்கிரம். இவ்வாறே சுகதுக்கங்களைக் கேட்ட மாத்திரையால் திடுக்கிட்டுப் பிராணவாயு சீவியாமல் மூர்ச்சித்து மயங்கி நிற்றல் துரியாதீதம். சுகதுக்கந் தோன்றாது பெருமூச் செறிந்து நிற்றல் துரியம். சுகதுக்கத்தில் மூழ்கி நிற்றல் சுழுத்தி. சுகதுக்கம் வந்தவரலாற்றை நாடி மனோ வியாபாரஞ் செய்து நிற்றல் சொப்பனம். சுகதுக்கங்களை அனுபவித்தல் சாக்கிரம். இதனை, "விரும்பு மரும்பொருளை வீழ்த்து மயங்க—லிரிந்தவனிலன் பெறுகை—வருந்தறிவு—தோன்று தலையம் விழுந்த விடந் தோன்றுதலென்—றூன்ற வைந்துஞ் சாக்கிரத்தி னும்" என்னும் அபியுத்தர் வாக்கானும் உணர்க.

இவ்வதிகாரணம் தத்துவ சொரூபியாய் நிற்றலினால் உண்டாம் ஐந்தவத்தையின் இயல்பு கூறுதற் கெழுந்தது. அவ்வாறெழுந்த இவ்வதிகாரணத்தில் சுத்தத்தின்கண் ஐந்தவத்தை உண்டென்று கூறுதற்கு இயைபில்லை. எதனாலெனின், இவ்விடத்துக் கூறப்படும் ஐந்தவத்தை தத்துவங்களினால் உண்டாவது. சுத்தத்தின்கண் நிகழும் ஐந்தவதைதை தத்துவங்களின் நீக்கத்தால் உண்டாவது. அவ்வாறாகவும் தத்துவங்களால் உண்டாகும் அதனோடு இயைபில்லாத சுத்தாவத்தையை இவ்வதிகாரணத்திற்கூறியதன் கருத்தென்னையெனின், அவத்தையெனப்படுவன இவ்விடத்துக் கூறியன மாத்திரையேயன்றி வேறில்லை போலுமென மயங்காதிருத்தற் பொருட்டு வேறும் ஐந்தவத்தை யுள அவை முன்னர்க் கூறப்படும் என்னும் அவ்வளவே கூறவெண்ணி அது வாங்கு எனச் செய்யுளிற் கூறிச் சென்றார் என அறிக. இச்செய்யுளின் கருத்துப்பற்றியே சித்தியார் ௮-ம் சூ-ம் ௩௫-வது செய்யுளில் "பிறிவிலா ஞானதசோரும் பிறப்பற வருளா லாங்கே, குறியொடுமைந்தவத்தை கூடுவர் வீடு கூட" என வழிநூலாசிரியருங் கூறிவிட்டனர்.

இவ்வதிகரணத்துள்ள இரண்டு வெண்பாக்களாலும் கீழ்நோக்கிய ஐந்தவத்தை, மேல்நோக்கிய ஐந்தவத்தை, மத்தியில் நிகழும் ஐந்தவத்தையென அவத்தைகளைக கூறி முடித்தார். அவற்றுள் மேல் நோக்கிய ஐந்தவத்தை சகலத்திற் சுத்தம், மத்தியில் நிகழும் ஐந்தவத்தை சகலத்திற் சகலம், கீழ்நோக்கிய ஐந்தவத்தை சகலத்திற் கேவலம் எனப்படும். படவே, மூலமாகிய கேவலம், சகலம், சுத்தமென மூன்று அவத்தை வேறுண்டென்பது விளங்கும். அம் மூன்றனுள் உயிர் கருவிகளோடு கூடாமல் தனித்து நிற்பதாகிய தன்னுண்மை யெனப்படுங் கேவலத்தின் இயல்பு இச்சூத்திரத்தில் சகசமலத் துணராது எனக் கூறியதனால் பெறப்பட்டது. ஏனைச் சகலத்தின் இயல்பு வருகின்ற ஐந்தாம் சூத்திரத்தாலும், சுத்தத்தின் இயல்பு ஆறுஞ் சூத்திரத்தாலுங் கூறப்படும்.

இச்சூத்திரத்திலேயே கேவலமும் சகலமும் கூறிவிட்டதாகக் கொள்ளலாகாதோ வெனின், ஆகாது; எதனாலெனின், கேவலமென்பது கருவிகளோடு கூடாதநிலை. சகலம் என்பது கருவிகளோடு கூடிய நிலை. கருவிக

ளோடு கூடுங்காலத்து ஐந்தவத்தை நிகழும். கருவிகளோடு கூடாத நிலையில் ஆணவமலத்தோடு கூடியிருக்கும். அதனைச் சகசமலத்துணராது எனக்கூறி அவ்வுணராமையினால் அடையும் ஐந்தவத்தையை மட்டும் இச் சூத்திரத்திற் கூறினதேயன்றி உணரும் முறை கூறவில்லை. உணரும் முறைதான்சகலம். அது "தாம்தம் உணர்வின் றமியருள்" என வருகின்ற சூத்திரத்திற்றான் கூறப் படுகின்றது. ஆதலால் இச்சூத்திரத்தில் கேவலத்தினியல்பும், அடுத்த சூத்திரத்தில் சகலத்தினியல்புங் கூறப்பட்டனவென அறிக.

சுத்தம் என்றது அசுத்தமாகிய கருவிகளில்லாமை. அது ஆறாஞ் சூத்திரத்தில் "உணருரு வசத்து" என்றதனாற் கூறப்படுகின்றது.

இந் நான்காஞ் சூத்திரத்தினாலும் அதிகரணங்களினாலுங் கூறிமுடித்த தொகைப்பொருள்:- மூன்றாஞ் சூத்திரத்தில் உண்டென்று சாதிக்கப்பட்ட உயிர், அந்தக்கரணங்களில் ஒன் றன் று; ஆயினும்சகசமலத்தோடுகூடலால் உண்டாம் அறியாமையை நீக்குதற் பொருட்டு அந்தக்கரணங்களைக் கூடிற்று; கூடின விடத்து ஐந்தவத்தையை யடைந்தது. இவ்வாறு ஐந்தவத்தையடைதலே உயிருக்குப் பொதுவிலக்கணம் எனச் சூத்திரத்தாற் கூறப்பட்டது. படவே, அந்தக்கரணம் நீங்கிய ஏனைய வெல்லாம் உயிரல்ல வென்பது ஒக்கும். சிந்தையைச் சீவனென்றும் சீவனைச் சிந்தை யென்றும் கூறுதலால் அந்தக்கரணமே உயிரென அந்தக்கரணான்மவாதிகள் கூற, முதலதிகரணத்தால் அவரைமறுத்து இந்திரியங்களை நோக்க அந்தக்கரணம் அறிவுடையதாயினும்உயிரை நோக்கவும் அவ்வந்தக்கரணமாகிய தன்னை நோக்கவும் அறிவுடையதாகாமல் உயிருக்குக் கருவியாயிருத்தலால் அந்தக்கரணம் உயிரன்றெனச் சாதிக்கப்பட்டது; படவே, உயிர் அந்தக்கரணங்களில் ஒன்று அன்றாயின் அவற்றொடுகூடுதற்கு ஏது என்னை யென்று அவ்வந்தக்கரணான்மவாதிகள் வினவ, இரண்டாம் அதிகரணத்தால் சகசமலத்தோடு கூடி உணர்வு நிகழாதிருந்தமையால் உணர்வு நிகழ்தற்பொருட்டு அந்தக்கரணங்களைக் கூடிற்று என விடை கூறப்பட்டது; படவே, அந்தக் கரணங்களைக் கூடின விடத்து இருள் நீங்கப்பெற்றகண், பொருளை ஒரேவிதமாயறிதல் போல ஒருவிதமாய் அவத்தைப்படாமல் வேறு வேறு விதமாய் அவத்தைப் படுமென்றல் பொருந்தாதெனை அவ்வந்தக்கரணான்மவாதிகள் கூற, மூன்றாம் அதிகரணத்தால் அவரை மறுத்துக் கருவிகள் கூடிப் பிரிந்து இல்லையாகின்ற முறையில் சாக்கிரமுதலாக வேறு வேறு அவத்தை நிகழுமெனச் சாதிக்கப்பட்டது.

மூன்றம் அதிகரணம் முற்றிற்று.

நான்காம் சூத்திரம் முற்றிற்று.

## ஐந்தாஞ் சூத்திரம்.

### பாச இலக்கணம்.

*இரண்டாஞ் சூத்திரத்தால் உண்டென்று சாதிக்கப்பட்ட பாசத்திற்கு இலக்கணம் இவ்வைந்தாஞ் சூத்திரத்தாற் கூறுகின்றார்.*

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்வின் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.

*கருத்துரை.*

**எ-து சூ-ம் எ-னின், இவ்வான்மாக்களிடத்துத் தமது முதலுபகார முணர்த்துத னுதலிற்று.**

### சிற்றுரை.

*எ-து க-ரை எ-னின், சூத்திரக்கருத்துணர்த்துத னுதலிற்று.*

*(இ-ள்.) ஐந்தவத்தைப்படும் வழிக் கருவியும் உயிரும் அமைச்சும் அரசுமேய்ப்பநிற்பின் அவையே யமையுமாகலான் முதல்வனால் ஆண்டைக்காகற்பாலதொரு பயனில்லைபோலு மென்னுங் கடாவை யாசங்கித்து ஆண்டும் இன்றியமையாது வேண்டப்படுவதாய முதல்வனுடைய உதவியை அறிவிக்குமுகத்தானே இரண்டாஞ் சூத்திரத்தினோதிய துணைக்காரண முதற்காரணங்களி திலக்கண முணர்த்துதல் இவ்வஞ்சாஞ் சூத்திரத்தின் கருத்து. எ-று.*

*இதனானே சூத்திரவியையும் இனிது விளங்கும்.*

*மாயை கன்மங்கள் திரோதானசத்திக்குக் கருவியாய் அதனுளடங்குதலிற் றமது முதலுபகாரமெனப்படுந் திரோதானசத்தியதிலக்கணங் கூறவே அவற்றதிலக்கணமுங் கூறியவாறுதலறிக.*

### விளக்கம்.

*இக்கருத்துரை என்ன சொல்லிற்றோவெனின், சூத்திரக்கருத்து இதுவென்று சொல்லிற்று.*

*(இக்கருத்துரையின் பொருள்.) நான்காஞ் சூத்திரத்திற் கூறியவாறு உயிர் ஐந்தவத்தையடையுமிடத்து அந்தக்கரணமும் தானும் அமைச்சரும்*

அரசனும்போல நிற்பின், அவத்தையடைதற்கு அந்தக்கரணங்களே போதுமாதலால் அவ்விடத்து முதல்வனால் ஆகவேண்டியபயன் ஒன்றுமில்லையோ என்னும் ஐயம் நிகழுமன்றே? அந்நிகழ்ச்சிபற்றி ஐந்தவத்தைப்படுமிடத்தும் முதல்வனுடைய உபகாரம் இல்லாமல் முடியாதென அவ்வுபகாரத்தை அறிவிக்கின்ற முறையில் இரண்டாஞ்சூத்திரத்திற்கூறப்பட்ட துணைக்காரணமாகிய சிற்சத்திவழியாய்வருங் கன்மம் முதற்காரணமாகிய மாயைகளின் இலக்கணங்கூறுதல் இவ்வைந்தாஞ்சூத்திரத்தின் கருத்து எ—று.

நான்காஞ்சூத்திரத்தில் உயிர் ஐந்தவத்தைப்படுமெனக்கூறி இச்சூத்திரத்தில் ஐந்தவத்தைப்படுமிடத்தும் முதல்வனுடைய உபகாரம் வேண்டப்படுமெனக் கூறுதலால் சூத்திர இயைபு பெறப்பட்டது.

இச்சூத்திரத்தில் பாசத்தைக் குறித்த வாக்கியம் யாதெனின், அருள் என்பதேயாம். அவ்வருள் திரோதான சத்தியைக்குறித்துநிற்கும் என்பது சூத்திரத்துரையின் விளக்கப்படும். திரோதானசத்தியென்பது மறைத்தலைச் செய்யுஞ்சத்தி. இதனை கக௮-ம் பக்கத்திற்காண்க. அது தன் மறைத்தற்றொழிலைச் செய்வதற்கு மாயை கன்மங்கள் கருவியாய் வேண்டப்படும். படவே, அத்திரோதான சத்தியினுள் மாயை கன்மங்கள் அடங்குமென்றாகித் திரோதான சத்தியின் இலக்கணங் கூறியதனால் மாயை கன்மங்களின் இலக்கணமுங் கூறியவாறாயிற்று. இத்திரோதான சத்தியே ஆதி சத்தியாம்.

ஆணவமலத்தின் இலக்கணம், பாச இலக்கணங்கூறும் இச்சூத்திரத்திற் கூறவேண்டுவதாயினும் மாயை கன்மங்கள்போல இடையே வந்து கூடாமல் உயிருடன் சகசமாய்க் கூடியுள்ளதாதலால் அந்தச் சம்பந்தம்பற்றி உயிரின் இலக்கணங் கூறிய நான்காஞ் சூத்திரத்து இரண்டாம் அதிகரணத்திற் கூறப்பட்டது.

## சிற்றுரை.

இச்சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு.

விளம்பிய வுள்ளத்து மெய் வாய் கண் மூக்கு—மேலைச் சூத்திரங்களின் அங்ஙனங் கூறிப்போந்த உயிரானே மெய்வாய் கண் மூக்குச் (செவி) யென்பன,—அளந்தறிந்து—(தத்தம் விடயங்களை இஃதின்னதென்று) அளவிட்டறிந்தும் (அங்ஙனமறியுந் தம்மையுந் தம்மையதிட்டித்து நின்று செலுத்தும் அவ்வுயிரையும்),—அறியா—அறியமாட்டா:—ஆங்கவைபோல—அவ்விந்திரியங்கள்போல்,—தாம்—உயிர்களும்,—தம்முணர்வின்—தமதறிவிற்கு வியஞ்சகமாகிய,—தமி—முதல்வனது,—அருள்—சிற்சத்தியான்,—(அளந்தறிந்

தறியா)—மேற்கூறிப்போந்த (இருவகை யஞ்சவத்தையினின்று வினைப்பயன்களை யறிந்து அநுபவிக்குந் தம்மையுந் தம்மைச்செலுத்தி நிற்குந் திருவருளையும் அறியமாட்டா,)— அவையே—உயிர்கள் (அவ்வாறுணர்தல்),—காந்தங் கண்டபசாசத்து—காந்தத்தைக் கண்ட இரும்பு அதன் சந்நிதிமாத்திரையின் வலித்துக்கொள்ளப் படுமாறுபோலக் (காணத்தானன்றிச் சங்கற்பத்தான் அதிட்டிக்கு முதல்வன் சந்நிதிமாத்திரையினும்; ஆகலான், அதுபற்றி முதல்வன் விகாரியாதலின்று) எ—று.

ஆகலான் அதுபற்றி முதல்வன் விகாரியாதலின் றென்பது குறிப்பெச்சம்.

செவி யென்பது சொல்லெச்சம்.

"ஐம்பொறிகளைக் கூறியது உபலக்கணமாகவின் ஏனைக்கருவிகளும் அவ்வாறுதல் கொள்ளப்படும். அற்றாகலினன்றே" "பொறி புலன் கரண மெல்லாம் புருடனு லறிந்து" என்றார் வழிநூலாசிரியரும்.

விடயங்களை யறிவுழி முதல்வன் உடனின்று செலுத்துவனாயின், அவ்விடயங்களோடொப்ப முதல்வனையும் அறிதல் வேண்டுமென்பாரை நோக்கி, அளந்தறிந்தென் றொழியாது அறியாவென்றார்.

ஆங்கவை ஒருசொன்னீர்மைத்து. தம்முணர்வின் றமியென்றது தமது முதலென்னும் பொருள்பட வந்த ஆறும் வேற்றுமைத் தொகை.

ஈண்டு அருளென்றது ஏற்புழிக் கோடலால் திரோதான சத்தியின்மேனின்றது. அருளாலெனவிரித்து அளந்தறிந்தறியாவென, உவமைக்கோதிய வினையைப் பொருளினுங் கூட்டியுரைக்க.

## விளக்கம்.

(இச்சூத்திரத்தின் பொழிப்புரை.) மூன்றாஞ் சூத்திரம் நான்காஞ் சூத்திரங்களினால் கருவிகளின் வேறாயும் கருவிகளோடு கூடி அவத்தைப் படுமெனவுங் கூறி முடிக்கப்பெற்ற உயிரினால், மெய் வாய் கண் மூக்குச் செவி யென்று கூறப்படும் இந்திரியங்கள் தத்தமக்குரிய விடயங்களை இது இன்னது என்று அளவிட்டறியும். அறிந்தும் விடயங்களை யறியுந் தம்மையும் தம்மை இடமாகக்கொண்டு நின்று விடயங்களில் தம்மைச் செலுத்து

கின்ற அவ்வுயிரையும் அறியமாட்டாவாம். அவ்வாறு அறியமாட்டாத அவ் விந்திரியங்கள்போல,உயிர்களுந் தமது அறிவிற்குத் துணையாகிய முதல்வனு டைய சிற்சத்தியால் மேலைச்சூத்திரத்திற் கூறி முடித்தவாறு கீழாலவத் தையிற்படும் அஞ்சவத்தை புருவநடுவிற்படும் அஞ்சவத்தைகளில் நின்று வினைப்பயன்களை யறிந்து அனுபவிக்கும்; அநுபவிப்பினும் அனுபவிக்குந் தம்மையும் தம்மை விடயங்களிற் செலுத்துகின்ற திருவருளையும் அறியமாட் டாவாம். இந்திரியங்களைச் செலுத்தும் உயிர் அவ்விந்திரியங்களால் அறியப்ப டும் விடயங்களால் வேற்றுமைப்படுமாறுபோல, உயிரைச்செலுத்தும் முதல் வன்றிருவருளும் அவ்வுயிரால் அறியப்படும் விடயங்களால் வேற்றுமைப்படு மோவெனின், படாது. எதனாலெனின், இரும்பு காந்தத்தின் சந்நிதிமாத்தி ரையில் இழுத்துக்கொள்ளப்படுமாறுபோல, கரணத்தாலன்றிச் சங்கற்பமாத் திரத்தால் உயிரை அதிட்டித்து நிற்கும் முதல்வன்சந்நிதிமாத்திரையால் அவ்வுயிர்கள் செலுத்தப்படுதலினாலென்க எ-று.

அதிட்டித்தலென்பது கர்த்தா ஒன்றினிடமாக நிற்றல். அது சரீரத் தோடு கூடி நிற்றலும் சங்கற்பமாத்திரையாக நிற்றலும் என இருவகைப் படும். சரீரத்தோடு கூடி நிற்பின் அதிட்டிக்கப்பட்ட பொருள் அசையுங் காலத்துத் தானும் அசையவரும். சங்கற்பமாத்திரையாக நிற்பின் அப்பொ ருள் அசையினும்தான் அசைவதில்லை இதனை ஒருதாரணத்தால் விளக்குதும். ஓரரசன் ஒருகாரியத்தைத் தான் நேரேசெய்யின் விகாரியாவான்; மந்திரி முதலாயினாரைச் சங்கற்பமாத்திரையால் அதிட்டித்து அவரைக்கொண்டு செய்விப்பானாயின் அவர் அடையும் விகாரத்தைத் தான் அடையான். இவ் வாறே உயிர்களிடத்து முதல்வன் சங்கற்பமாத்திரையில் கர்த்தாவாயிருக் கின்றான். ஆதலால் உயிர்கள் அடையும் வேறுபாடு முதல்வனை யடையாது. தக்க செல்வாக்கு உடையவன் தான் சங்கற்பமாத்திரையில் கர்த்தாவாக இருந்துசெலுத்துதல் கூடும். தக்க செல்வாக்கில்லாதவனுக்கு அது கூடாது. முதல்வன் அளவில்லாத ஆற்றலுடைய வியாபகனாதலால் சங்கற்பமாத்தி ரையால் எவற்றையும் செலுத்துதல் கூடுமென்பதாயிற்று. இரண்டாஞ் சூத் திரத்தில் சங்கற்பமாத்திரையாற் செய்வதற்கு உடலையும் உயிரையுந் திருட் டாந்தங்கூறி இவ்விடத்தில் அச்செயலாற் கட்டுப்படாமைக்கு அரசனையும் மந்திரியையுந் திருட்டாந்தங் கூறியதென அறிக.

ஆகலான் அதுபற்றி முதல்வன் விகாரியாதல் இன்று என்பது சூத்தி ரத்தில் இல்லை. காந்தங் கண்டபசாசத்து என்றதனால் காந்தம்போல முதல் வன் விகாரியாத லில்லை என்பது குறிப்பாகக் கொள்ளும்படிஎஞ்சிநின்றது.

செவியென்பது சூத்திரத்தில் இல்லை. மெய் வாய் கண் மூக்குக்கு இன மாகிய அவ்வொருசொல் எஞ்சிநின்றமையால் அது சொல்லெச்சமாய் வரு விக்கப்பட்டது

மெய் வாய் கண் மூக்குச் செவியெனக்கூறியது உபலக்கணமாதலால் ஏனைக் கருவிகளும் அவ்வாறே உயிரினால் தத்தம் விடயங்களை அறிந்தும் தம்மையும் உயிரையும் அறியமாட்டாவென்று கொள்ளப்படும். இக்கருத்துப் பற்றியல்லவா, "பொறி புலன் கரண மெல்லாம் புருடனை லறிந்தான் மாவை—யறிதரா" எனச் சிவஞான சித்தியார் ௫-ம் சூ-ம் க-வது பாட்டில் வழிநூலாசிரியர் கூறுவாராயினர்.

உயிர் விடயங்களை அறியுமிடத்து முதல்வன் உயிருடன் நின்று விடயங்களை அறியும்படி செய்வனாயின் அறியும்படி செய்கின்ற அதனால் விடயமும் முதல்வனும் உயிருக்கு வேறாதல் பெறப்படும். படவே, விடயங்களை அறிவதுபோல் முதல்வனையுமறிதல் வேண்டுமென்று கொள்ளவரும்; அவ்வாறு கொள்ளக்கூடாதென்பதை உணர்த்தவேண்டி அளந்தறிந்து என்பதோடு நில்லாமல் அறியா வென்றுகூறினார். ஆகவே அறிவிக்கும் உபகாரமுணர்த்தும் இச்சூத்திரத்தில் முதல்வனையும் அறியவேண்டும் என்பாரை மறுத்தற்பொருட்டு அறியா என்பதும் உடன் கூறினார் என்க.

ஆங்கவை யென்பது ஆங்கு அவையென்னும் இரண்டு சொற்கள் சேர்ந்த தொடர்மொழியன்று. ஒரு மொழியேயாம். ஆதலால் அவ்விந்திரியங்கள் என உரைசெய்யப்பட்டது.

தம்முணர்வின்றமியென்றது தமது அறிவிற்குத் துணையாகிய முதல் என்னும் பொருள்பட நின்றமையால் ஆறும் வேற்றுமைத்தொகை. அவ்வுருபை விரித்துத் தமது என உரைசெய்யப்பட்டது.

அருட்சத்தி என்பது, பராசத்தி திரோதானசத்தி இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்தி என ஐவகைப்படும். அவற்றுள், பராசத்தியாவது பொதுவாக உயிர்களுக்குக் கிருபை செய்யவேண்டுமென நிற்பது. திரோதான சத்தியாவது மலம் பக்குவமாதற்பொருட்டுப் பஞ்சகிருத்தியஞ் செய்யவேண்டுமென நிற்பது. இந்நிலை கன்மத்திற்கேற்றவாறு உயிர்களைச் செலுத்தவும் போகங்களைத் தோற்றுவிக்கவும் எண்ணியது என்றாகி அவற்றிற்கு வேண்டுவனவற்றைச் சிறப்பாக அறியாமலும் அறிவிக்காமலும் நிற்றலால் திரோதானமென்றவாறாயிற்று. இச்சாசத்தியாவது சிறப்பாக உயிர்களுக்குக் கிருபை செய்யவேண்டுமெனநிற்பது. அதாவது பக்குவமான உயிரை அறிந்து கிருபைசெய்ய எண்ணுவது. ஞானசத்தியாவது செய்யவேண்டுவனவற்றை யறிவது. கிரியாசத்தியாவது செய்யவேண்டுவனவற்றைச் செய்வது. இவ்வைந்து சத்திகளும் இறைவனுக்குப் பிரிப்பில்லாத சத்திகளேயாம். அவற்றுள் பராசத்தி ஒன்றே சொரூபம். ஏனைய எல்லாம் அப்பராசத்தியின் வியாபார பேதமான தடத்தம். இது எதுபோல எனின், சுடுதற்சத்தி ஒன்றே அக்கினியினிடத்தில் சொரூபமாயிருந்து அச்சத்தியின் வியாபார பேதத்தால் நீறுசெய்தல், பாகஞ்செய்தல், சுவறச்செய்தல் முதலியன தடத்தமாயினாற் போலாம்.

ஆகவே, இவ்வைந்து சத்தியும் அருட்சத்தியென்றே கொள்ளப்படு மாதலால் இச்சூத்திரத்தில் அருளென்றது வினைப்பயன்களை அநுபவிக்கச் செய்யுமென்பதற்கேற்ப ஏற்புழிக்கோடல் என்னும் உத்தியால் திரோதான சத்தியைக் குறித்துநின்றது.

அருளென்பதை அருளால் எனவிரித்து உவமையாகிய இந்திரியத்திற்கு ஓதிய அளந்தறிந்தறியா என்னும் வினையைப் பொருளாகிய உயிர்களினுங் கூட்டி உரைக்க. அவ்வாறே அருளென்பதற்குச் சிற்சத்தியால் எனவும் அருளென்பதன்பின் அளந்தறிந்தறியா என்பதை வருவித்தும் உரை செய்யப்பட்டது.

## சிற்றுரை.

இதனுள், விளம்பியவுள்ளத்து மெய் வாய் கண் மூக்கு அளந்தறிந்தறியாவென்றது ஓரதிகரணம்; ஆங்கவைபோலத் தாந்தமுணர்வின்றமியருள் காந்தங்கண்ட பசாசத்தவையே யென்றது ஓரதிகரணம்; ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரம் என்றுணர்க.

## விளக்கம்.

வெ - டை.

# முதலதிகரணம்.

கருவிகளே விடயங்களை அறியுமென்பாரை மறுத்து
ஆன்மாவால் கருவிகள் அறியுமெனக்கூறும்

## மேற்கோள்.

ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவா லுணருமேன்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், தாமரையிலையி னீர்போற் புருடன் பற்றற்றுநிற்பப் புருடன் சந்நிதியிற் புத்திதத்துவமே ஐம்பொறி வழியான் விடயங்களை அறியுமெனவமையும், அவ்வாறன்றிக் கருவிகளோடு கூடிப் புருடனே அவத்தைப்படுமென மேற்கூறிய தமையுமாறென்னையெனச் சாங்கிய நூலார் மதம்பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக கண்ணழிததுரைத்து மேற்கோடனுதலிற்று.

இ—ள். வெ—டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

இ-ள். ஈண்டு—இவ்விரண்டதிகரணங்களுள் வைத்து இம் முதலதிகரணத்து,-ஐயுணர்வுகள்-உணர்விற்கேதுவாகிய ஐம்பொறிகள்,—ஆன்மாவால் உணருமென்றது—உயிரால் விடயங்களை அறியும் எ-று.

## சிற்றுரை.

உணர்விற் கேதுவாகிய பொறிகளை உணர்வென்றுபசரித்தார்.

## விளக்கம்.

இம்மேற்கோள் சூத்திரத்தில்உள்ளவிளம்பிய வுள்ளத்து மெய் வாய் கண்மூக்களந்தறிந்தறியா என்பதைப் பதச்சேதஞ்செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றேவெனின், நீரானது தாமரையிலையோடு கூடினகாலத்து அந்த இலையில் பற்றின்றி நிற்குமாறுபோல, உயிரும் இந்திரியங்களோடு கூடினும் அந்த இந்திரியங்களில் பற்றின்றி நிற்கும். நிற்க, உயிரின் சந்நிதியில் புத்தி தத்துவமே ஐம்பொறிவழியாக விடயங்களை அறியுமென்றல் பொருந்தும். அவ்வாறன்றி அந்தக்கரணங்களாகிய கருவிகளோடுகூடி உயிரே ஐந்தவத்தைப்படுமென நான்காஞ் சூத்திரத்திற் கூறியது எவ்வாறு பொருந்துமெனச் சாங்கியநூலார் கூறுவர். அவர் கூற்றை ஆசங்கித்துக்கொண்டு சூத்திரத்தின் முதற்கூற்றைப் பதச்சேதஞ்செய்து உயிர் சும்மா இருப்ப அதன் சந்நிதியில் புத்தி தத்துவம் இந்திரியங்களால் விடயங்களை யறியுமென்றல் பொருந்தாதெனவும் உயிரே புத்தியைக் கருவியாகக்கொண்டு இந்திரியங்களின் வழியாக விடயங்களை அறியுமெனவுங் கூறியவாறும்.

இவ்வதிகரணத்தில் விடயங்களை இந்திரியங்கள் உயிரால் உணருமோ, புத்தி தத்துவத்தால் உணருமோ என்பது ஐயப்பாடு. புத்தி தத்துவத்தால் உணருமென்பது பிறர்கூறும் பக்கம் என அறிக.

(இம்மேற்கோளின் பொருள்.) இச்சூத்திரத்திலுள்ள இரண்டதிகரணங்களுள் இம்முதலதிகரணத்தில் உயிரின் உணர்வு நிகழ்தற்கு ஏதுவாகிய ஐம்பொறிகள் உயிரால் விடயங்களை அறியும் எ-று.

உயிர் அறிவுடைப் பொருளாயினும் தனித்து நின்று ஒன்றனையும் அறியாது; யாதானும் ஒன்றனைப்பற்றி நின்றே அறியும். இது எதுபோல எனின், கண் ஒளி யுடைபொருளாயினும் தானே காணுமாறின்றிச் சூரியன் முதலிய பிற வொளிகளின் துணையைக்கொணடே காணுமாறு போலாம்

ஆகவே விடயங்களை உயிர் இந்திரியங்களால் அறிதலின் அவை ஏது வாகும். ஏதுவாகிய இந்திரியங்களை இம்மேற்கோளில் ஐயுணர்வுகள் என்றது உபசாரம். இது அரசசத்தி தொழிற்படுதற்கு ஏதுவாகிய அதிகாரியை அரசன் என உபசரித்துக் கூறுவதுபோல என அறிக.

இந்திரியங்கள் ஆன்மாவால் விடயங்களைக் காணும் என்பதற்குக் காட்டும்

ஏது.

அவற்றினுன் ஆன்மா வோற்றித்துக் காணினல்லது அவை யோன்றையும் விடயியாவாகலான்.

## சிற்றுரை.

ஏ—து ஏ—து எ—னின், அதற்குப் பிரமாணமென்னை யென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) அவ்வைம்பொறிகளோடும் உயிர் ஒற்றுமைப்பட்டு நின்று அறிந்தாலன்றி அவை ஒரு விடயத்தையும் விடயிக்கமாட்டாவாகலான் ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவானுணருமென மேற்கொண்டது எ-று.

ஆன் உடனிகழ்ச்சிப்பொருட்கண் வந்தது.

உம்மை இழிவு சிறப்பு; முற்றுமாம்.

எதிர்மறை முகத்தாற் கூறினுர், இன்றியமையாமை விளக்குதற்கு.

## விளக்கம்.

இந்த ஏது என்ன சொல்லிற்றுவெனின், மேற்கோளில் இந்திரியங்கள் உயிரினுல் விடயங்களை உணருமென்று கூறியதற்குப் பிரமாணம் யாதென்பர் சாங்கியர். அவரை நோக்கிப் பிரமாணங்காட்டி மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(இந்த ஏதுவின் பொருள்.) மெய் வாய் கண் மூக்குச் செவியெனச் சூத்திரத்திற் கூறிய அந்த ஐம்பொறிகளோடும் உயிர் ஒற்றுமைப்பட்டு நின்று அறிந்தால் அல்லது அவ்விந்திரியங்கள் ஒரு விடயத்தையும் அறியமாட்டாவாம். ஆதலால் இவ்வதிகரணத்தில் ஐயுணர்வுகள் ஆன்மாவா லுணருமென மேற்கோள் கூறியது எ-று.

அவற்றினுன் என்பதிலுள்ள ஆன் உருபு கருவிப்பொருளில் வந்ததன்று; உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. ஆதலால் அவ்வைம்பொறிகளோடும் என உரைசெய்யப்பட்டது. உடனிகழ்ச்சியாவது ஒன்று நிகழுங்

காலத்துப் பிறிதொன்றும் உடனாக நிகழ்தல். உதாரணமாக, தூங்குகையான் ஓங்குநடைய என்றவிடத்து நடத்தலாகிய காலின் தொழில் கைக்கும் யானைக்கும் ஒருங்குளதாதலறிக. தூங்குகையென்பது துதிக்கை.

ஒன்றையும் என்றதிலுள்ள உம்மை ஒன்றையாவது என்னும் பொருளைக் குறித்து இழிவு சிறப்பும், எல்லாப்பொருளையுங் குறித்து முற்றுமாம்.

காணினல்லது என எதிர்மறைமுகத்தாற் கூறியது, ஆன்மாவையின்றி இந்திரியங்களுக்கு விடயங்களை யறிய முடியாது என்பதை விளக்குதற் பொருட்டு.

இந்த ஏது புத்திதத்துவத்தால் இந்திரியங்கள் விடயங்களை உணருமென்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

இந்திரியங்கள் ஆன்மாவால் விடயங்களைக்காணும் என்பதற்குக் காட்டும் உதாரணம்.

ஐம்போறியை யாண்டங் கரசா யுளநிற்ப
வைம்போறிக ளுள்ள மறியாவா—மைம்போறியிற்
காணுதேற் காணுது காணுமுளங் காணுதேற்
காணுகண் கேளா சேவி.

## சிற்றுரை.

ஏ—து உ—ம் எ—னின், உயிர் அங்ஙனம் ஒற்றுமைப்பட்டு நின்று செலுத்துதலும் அவை உயிரையின்றி யமையாமையும் எற்றாற் பெறாதுமென்பாரை நோக்கி ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ—ள்.) அரசு ஆய்—அரசன் அத்தாணிமண்டபத்தின்வைகித் தன்கீழ்க் கருமஞ் செய்வாரை அவரவர்க்குரிய காரியங்களிற் செலுத்தி ஆளுமாறுபோல,—உளம் ஐம்பொறியை ஆண்டு அங்கு நிறப—உயிர் ஐம்பொறிகளை (அவ்வவற்றிற் குரிய விடயங்களிற் செலுத்தி) யாண்டு இலாடத் தானத்தி னிற்றலான்,—ஐம் பொறிகள்உள்ளம் அறியாவாம்—(அரசனுமேலவைப்பட்டோர் ஏவிய கரும மாத்திரையி னன்றி அதிகத்திற் செல்லமாட்டாமை போல) அவ்வைம்பொறிகள் உயிரை அறிய மாட்டாவாயின (அற்றேல் ஐம்பொறிகள் உயிரானன்றியறிதல் அமையாதாயினும் உயிர் ஐம்பொறிகளானன்றியும் அறிதலமையும் போலுமெனின்),—ஐம்பொறியில் காணுதேல் காணுது காணும் உளம் காணுதேல் காணு கண் கேளா செவி—(ஒரு கருமஞ் செய்தற்கண் அரசனும் அமைச்சர்

முதலாயினுரும் தம்முள் இன்றி யமையாதவாறுபோல) ஒன்றனை விடயித்தற்கண் உயிரும் ஐம்பொறிகளுந் தம்முள் இன்றியமை யா எ-று.

அன்னவாதல் உயிர் ஐம்பொறியி னீங்கிச் சொப்பனத்தானத் தினெய்திய வழிக் கண்டு கொள்க.

நிற்ப வென்னுஞ் செயவெனெச்சம் "மழை பெய்யக் குள நிறைந்தது" என்புழிப்போல நிற்றலானெனக் காரணப்பொருட் டாய் நின்றது. இவ்வாறுரையாக்கால் இஃதேதுவின் பொருள் வலி யுறுப்பதாய உதாரணமாதற் கேலாமை யறிக.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) அரசு ஆய் உளம் ஐம்பொறியை ஆண்டு அங்கு நிற்ப ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம். (மற்றவை மாறுதலில்லை.)

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றே வெனின், மேற்கூறியவாறு உயிர் இந்திரியங்களோடு ஒற்றுமைப்பட்டுநின்று அவ்விந்திரியங்களை விட யங்களிற்செலுத்துதலும், அவ்விந்திரியங்கள் உயிரையின்றி விடயங்களை யறிய முடியாமையும் எதனுல் விளங்குகின்றன என்பர் அச்சாங்கியர். அவரைநோக்கி விளங்கும் முறை கூறி, அஃதற்றினுன் ஆன்மா ஒற்றித்துக் காணினல்லது அவையொன்றையுங் விடயியா வாகலான் என்னும் ஏதுவை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) அரசன் வீற்றிருப்பதற்குரிய மண்டபத்தில் அரசன் இருந்து தன் ஆணையின்கீழ் அடங்கி அதிகாரஞ் செய்பவரை அவரவர்க் குரிய அதிகாரங்களை நடாத்தும்படி செய்து உலகத்தை ஆளும் முறைமை போல, உயிர் சாக்கிரத்தில் இருத்தற்குரிய இலாடத்தானமாகிய புருவ நடுவில் நின்று ஐந்து இந்திரியங்களும் அந்த அந்த இந்திரியங்களுக்குரிய விடயங்களை அறியும்படி செய்யும். அரசனுல் ஏவப்பட்ட அதிகாரிகள் அர சன் ஏவிய கருமத்தைமட்டும் செய்தலேயன்றி அதிகமாய்ச்செய்ய முடியாத வாறுபோல, உயிரினுல் ஏவப்பட்ட அந்த ஐம்பொறிகள் ஏவியவாறு விட யங்களை யறிதலேயன்றி உயிரை அறியமாட்டாவாயின. அவ்வாறுயின் ஐம் பொறிகள் உயிரையின்றி விடயங்களை அறிய முடியாதாயினும் உயிர் ஐம் பொறிகளின்றியும் விடயங்களை அறிதல் கூடுமோ எனின், கூடாது. எது போலஎனின், அரசரையின்றி அமைச்சர் ஒரு காரியத்தையுஞ் செய்யமுடி யாமையும், அமைச்சரையின்றி அரசர் ஒரு காரியத்தையும் செய்ய முடியா மையும்போலாம். ஆகவே, உயிரையின்றி ஐம்பொறிகள் விடயங்களை அறிய மாட்டா ஐம்பொறியை யின்றி உயிர் விடயங்களை அறியமாட்டாது எ-று.

(க-ரை.) அரசனும் அமைச்சர் முதலாயினரும்போல, உயிரும் இந்திரியங்களுமாதலால் உயிரையின்றி இந்திரியங்கள் விடயங்களை அறியமுடியா என்பதாம்.

நான்காஞ் சூத்திரத்தில் அந்தக்கரணங்களை அமைச்சர் போலெனக் கூறி இவ்விடத்தில் ஐம்பொறிகளை அமைச்சரென்று கூறியது முரணுகாது. எதனுலெனின், அந்தக்கரணங்களும் இந்திரியங்களுங் கருவியாமென்பதில் வேற்றுமை யின்மையாதலினு லெனக.

ஐம்பொறிகளை யின்றி உயிர் விடயங்களை அறியமாட்டா தென்பதை ஐம்பொறிகளில்லாத சொப்பனத்தானத்தை உயிர் அடைந்த பொழுது அவ்விடத்தில் உயிர்இருந்தும் விடயங்களை யறியாமையில் வைத்துக் கண்டு கொள்க.

நிற்ப என்பது செய என்னும் வாய்பாட்டு வினை எச்சமாயினும் நிற்றலால் என்னும காரணப் பொருளைக் குறித்து நின்றது. எதுபோல எனின், "மழை பெய்யக் குளம் நிறைந்தது" என்றவிடத்து பெய்ய என்பது பெய்தலால் என்னும் பொருளைக் குறித்து நின்றவாறுபோலாம். இவ்வாறன்றி நிற்ப என்பதை வினையெச்ச மாகக்கொண்டு இலாடத் தானத்தில் உயிர் நிற்ப என்னும் எச்சம்ஐம்பொறிகள் அறியாவாயின என்னும்வினைகொண்டு முடிந்ததாகக் கொள்ளின், உயிரின் சந்நிதியில் இந்திரியங்கள் தொழிற் செய்யும் என்ருகி, அதனை மறுத்துரைத்த மேற்கோளைச் சாதித்த எதுவில் ஆன்மாக்காணினல்லது இந்திரியங்கள் அறியா என்றதை வலியுறுத்தும் உதாரணமாகாது, ஆதலால் அவ்வுரை பொருந்தாது.

அரசு ஆய் என்பதிலுள்ள ஆய் என்பது போல என்னும் பொருளைக் குறித்து நின்றது. இது "ஆள்வாரிலி மாடாவேனே" என்பதில் மாடாவேனே என்பதுமாடு போல்வனே என்னும் பொருள் குறித்து நின்றவாறு போலாம்.

முதலதிகரணம் முற்றிற்று.



# இரண்டாம் அதிகரணம்.

உயிர் முதல்வன் உபகாரமின்றி அறியும் என்பாரை மறுத்து
முதல்வனாலேயே அறியுமெனக் கூறும்
மேற்கோள்.

இனி இதுவுந் தமது முதலாலே யுணருமென்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், கருவி சடமாகலிற் சித்தாகிய உயிரா னன்றி அமையாவாயினுஞ் சித்தாகிய உயிர் முதல்வனது உபகா ரத்தை அவாய்நிற்பதன்று. அவாவுமாயின் முதல்வனும் அவ்வாறே பிறிதொன்ற னுபகாரத்தை அவாவு மெனப்பட்டு மேலும் வரம் பின்றியோடும் என ஈசுர அவிகாரவாதி முதலியோர் கூறுங் கடா வையாசங்கித்துச் சூத்திரத்தின் பிற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ - ள். வெ - டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

(இ—ள்.) இதுவும்—இவ்வான்மாக்களும்,—தமது முதலாலே— இறைவனாலே,—உணரு மென்றது—அறிவிக்க அறியும் எ-று.

## சிற்றுரை.

தமது முதலென்பது யானெம்மூர் புகுவன் நீநும்மூர்புகுவை யென்புழிப்போல வேறுமுடிபு கோடலிற்பால் வழுவன்மை யுணர்க.

உம்மை இறந்ததுதழீஇய வெச்சம்.

இம்முறைமை தமக்கொரு முதலுடைய வற்றிற்கே யன்றி ஏனைப்பொருட் கின்மையின்வரம்பின்றி யோடுமாறில்லை யென்பார், தமது முதலென்று உடம்பொடு புணர்த்தோதினார். தம் முணர் வின்றமி யென்றது மது.

தத்துவங்களு முயிருந் தமக்கொரு முதலுடையன வாதலும் முதல்வனுக்கு அஃதின்மையும் மேற்கூறிப்போந்த சூத்திரங்களாற் பெறப்பட்டன வென்பது கருத்து.

## விளக்கம்.

இம்மேற்கோள் சூத்திரத்தில் உள்ள ஆங்கவைபோலத் தாந்தம் உணர் வின் றமியருள் காந்தங் கண்ட பாசத் தவையே என்பதைப் பதச்சேதஞ் செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோவெனின், அந்தக்கரணங்கள் சடமாதலால் சித்தாகிய உயிரையின்றி விடயங்களை அறியாவாயினும், உயிர் அறிவுடைப் பொருளாதலால் முதல்வனுடைய உபகாரத்தை விரும்பு மென்று சூத்திரத்திற் கூறியது பொருந்தாது. உயிர் முதல்வன் உபகா ரத்தை விரும்புமாயின் சித்துப்பொருளாகிய அம்முதல்வனும் அவ்வாறே பிறிதொன்ற னுபகாரத்தை விரும்புவன் எனக் கொள்ளவரும். வரவே, மேலும் அவ்வாறே எல்லையின்றி யோடுவதாகிய குற்றத்திற் கிடனாகும் என ஈசுர அவிகாரவாதி முதலியோர் கூறுவர். அவர் கூற்றை ஆசங்கித் துக்கொண்டு சூத்திரத்தின் இரண்டாங்கூற்றைப் பதச்சேதஞ்செய்து உயிர் முதல்வன் உபகாரத்தையின்றி யறியாதெனவும் அதனால் வரம்பின்றி ஓடுத லாகிய குற்றம் உண்டாகாதெனவுங் கூறியவாறும்.

இவ்வதிகரணத்தில் உயிர்கள் முதல்வனால் உணருமோ தாமே உணரு மோ என்பது ஐயப்பாடு. தாமே உணருமென்பது பிறர்கூறும் பக்கம் என அறிக.

(இம்மேற்கோளின் பொருள்.) இவ்வான்மாவும் இறைவனாலே அறி விக்க அறியும் எ-று.

இது வென்பது ஒன்றன்பால். தமது என்பது பலவின்பால். ஆதலால் இதுவும் தமது எனக்கூறியது பால் வழுவாகாதோ எனின், ஆகாது. எத னாலெனின், இதுவென்பதும் தமது என்பதும் ஒரு முடிபல்ல; வேறுவேறு முடிபாய் நின்றன. எவ்வாறெனின், இது வென்றது அறியும் என்றது கொண்டு முடிந்தது. தமது என்றது முதல் என்றது கொண்டு முடிந்தது. இவ்வாறு முடிதல் எதுபோல எனின், "யான் எம்மூர் புகுவன் நீநும்மூர் புகுவை" என்ற விடத்து, யான் என்பது புகுவன் என்பதுகொண்டும், எம் என்பது ஊர் என்பதுகொண்டும், நீ என்பது புகுவை என்பதுகொண்டும், நும் என்பது ஊர் என்பதுகொண்டும் முடிந்தவாறுபோலாம். ஆதலால் பால் வழுவில்லை யென்றறிக.

இதுவும் என்றதிலுள்ள உம்மை முதலதிகரணத்திற் கூறிய இந்திரி யங்களை யன்றி இவ்வான்மாவும் என்னும் பொருளைத் தந்து நிற்றலால் இறந்தததழுவிய எச்சமாயிற்று.

முதலாலே உணரும் என்றலே போதியதா யிருக்கவும் தமது என் னும் அடைசேர்த்துக் கூறிய கருத்தென்னையெனின், அறிவிக்க அறித

லாகிய இம்முறைமை தமக்கொரு முதலையுடைய பொருட்கே யன்றித் தானே முதலாயிருக்கும் பொருளுக்குக் கிடையாது. ஆதலால் வரம்பின்றி யோடுதலாகிய குற்றமில்லை யென்பதை உணர்த்தவேண்டித் தமக்கொரு முதல்வனையுடையது என்னும் பொருளைத் தமது என்னும் வாக்கியத்திற் புணர்த்தித் தமது முதலாலே உணருமெனக் கூறினர். இது உடம்பொடு புணர்த்தல்; சூத்திரத்தில் தமியென்னது தம்முணர்வின் தமி என்றதும் அறிவிக்க அறியுந்தன்மை தமக்கொரு முதலையுடைய பொருட்கேயன்றி ஏனைப் பொருட்கில்லை யென்பதைத் தம்முணர்வின் என்பதனால் விளக்கிய உடம்பொடு புணர்த்தலென அறிக.

தத்துவங்கள் உயிரை முதலாக உடையன என்பது மூன்றாஞ் சூத்திரத்தானும், உயிர்இறைவனை முதலாக உடையதுஎன்பது ஆணையிற்போக்கு வரவு புரிய என்னும் இரண்டாஞ் சூத்திரத்தானும் முதல்வனுக்கு வேறு முதல் இல்லை யென்பது அந்தம் ஆதி யென்னும் முதற் சூத்திரத்தானும் பெறப்பட்டமையின் இவ்விடத்து அவற்றை விரித்துக் கூறவில்லை. ஆயினும் அச்சூத்திரங்களினால் இவ்விடத்தும் கூறினதாகவே கருத்து. இக்கருத்துக் கொள்ளவில்லையாயின் வரம்பின்றியோடு மாறில்லை யெனவிடை கூறியதாக மாட்டாது. ஆகவே தமது என்னும் வாக்கியத்தால் அப்பொருள் கொண்டு விடை கூறியவாறு அறிக.

உயிர் முதல்வனாலேயே உணரும் என்பதற்குக் காட்டும்

ஏது.

இவ்வான்மாத் தன்னாலே யுணருமிந்திரியங்களைப் போலத் தானுந்தன்னை யுணராது நிற்றலான்.

## சிற்றுரை.

ஏ—து ஏது எ—னின், உயிர் ஐம்பொறியிற் சடமன்மையால் அவற்றை யெடுத்துக் காட்டி மேற்கோடல் ஈண்டைக் கமையா தென்பாரை நோக்கி அதனைச் சாதித்தனுதலிற்று.

இ—ள். வெ—டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

(இ—ள்.) இவ்வான்மா—இவ்வுயிர்கள்,—தன்னாலே உணரும்—தம்மாலே விடயிக்கும்,—இந்திரியங்களைப் போல—பொறிகளைப் போல,—தானும்—சடமும் சேதனமுமாய வேறுபாடு பற்றித் தம்முளொவ்வாவாயினும் இவ்வுயிர்களும்,—தன்னை—தம்மையும்,—(தன்னை—தம்முடைய முதல்வனையும்),—உணராது நிற்றலான்—அறி

யாதுநிற்குமாகலான் இதுவும் தமது முதலாலேயுணருமெனமேற் கொண்டது எ-று.

## சிற்றுரை.

சடமுஞ் சேதனமுமாய வேறுபாடுபெற்றித் தம்முள் ஒவ்வா வாயினும் தம்மையுந் தமது முதலையும் அறியமாட்டாமைக்கண் ஐம்பொறியும் உயிரும் தம்முள் ஒக்குமாகலின், அதுபற்றி அங்ஙன மேற்கோட லமையு மென்பது கருத்து.

## விளக்கம்.

இந்த ஏது என்ன சொல்லிற்றோ எனின், உயிர் ஐம்பொறிபோலச் சடமல்லாமையால் உயிரையின்றி யறியமாட்டாத ஐம்பொறிகளை எடுத்துக் காட்டி, உயிரும் முதலாலே உணருமென மேற்கோள் கூறியது பொருந் தாது என்பாரை நோக்கிப் பொருந்துமெனக்காட்டி மேற்கோளை வலி யுறுத்தியவாறும்.

(இந்த ஏதுவின் பொருள்.) இந்திரியங்கள் சடமும் உயிர் சித்துமா கிய வேறுபாடுபெற்றி இந்திரியங்களைப்போல் உயிரைக் கூறமுடியாதாயினும் உயிர்களால் விடயங்களை அறியும் இந்திரியங்கள் தம்மையும் உயிரையும் அறியாதவாறுபோல, முதல்வனால் விடயங்களை அறியும் உயிரும் தன்னையும் முதல்வனையும் அறியாது நிற்குமாகலால் அறியாது நிற்கும் அவ்வொப் புமைபற்றி இதுவுந் தமது முதலாலே உணருமென மேற்கோள் கூறியது பொருந்தும் எ-று.

தன்னை என்பதை இரட்டுற மொழிந்துகொண்டு தன்னையும் தமது முதல்வனையும் என உரை செய்யப்பட்டது.

இந்த ஏது உயிர்தானே உணருமென்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந் தத் துணிபாயிற்று.

உயிர் முதல்வனாலேயே உணரும் என்பதை வலியுறுத்தும்
உதாரணம்.

மன்னுசிவன் சந்நிதியின் மற்றுலகஞ் சேட்டித்த
தென்னு மறையி னியன்மறந்தாய்—சொன்னசிவன்
கண்ணா வுளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்கா
ணெண்ணுன் சிவனசத்தை யின்று.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், தன்னாலுணரும் இந்திரியங்களை ஈண் டைக்கு உவமை கூறின் அவ்விந்திரியங்கட்கு வரும் பயன் அவந்

றினு லொற்றித்துக் காணும் உயிர்க்காயவாறுபோல உயிர்க்கு வரும் இன்பத்துன்பப் பயனும் உயிரா னொற்றித்துக்காணும் முதல்வனுக் காதல்வேண்டுமென்பாரை நோக்கி அங்ஙனமாகாமை கூறி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ—ள். மன்னு சிவன் சந்நிதியின் உலகஞ் சேட்டித்தது என்னும் மறையின் இயல் மறந்தாய்—(ஈண்டுக்கூறிய கருதலளவையே யன்றி) நிலைபெற்ற முதல்வனது சந்நிதியிற் பிரபஞ்சம் செயற்படுகின்ற தென்றோதும் வேதப்பொருளையும் அறியாது பிணங்குகின்ற பேதாய்,—உளம் சொன்ன சிவன் கண்ணு வினையால் கண்டு அறிந்து நிற்குங்காண்—உயிராவது (தமக்கெனவோர் காரணமின்றித் தன் பொருட்டே அறிவனவாய அவ்விந்திரியங்கள்போலன்றி அவ்வேதத்துள்) எடுத்தோதப்படும் முதல்வன் தனக்குக் காட்டாகிநிற்பத் தான் செய்த வினைக்கீடாக ஒன்றனை யறிந்து நிற்கும்; (அவ்வேறுபாடு) அறிவாயாக,—இன்று (ஆகலாற்) சிவன் அசத்தை எண்ணான்—(அங்ஙனங் காட்டாகி நிற்பினும் தனது சந்நிதியின் அசத்தெல்லாஞ்) சூனியமாகலான் மங்கல வடிவினனாய முதல்வன் (அவ்வுயிர்போல்) அவற்றை அநுபவியான் எ—று.

இதனுட் சிவனென்றது மன்னுசிவ னென்புழிப் பேரின்பத்திற்குக் காரணமென்னும் பொருட்டாய்த் தனது சந்நிதிக்கண் உலகத்தைச் சேட்டிப்பித்தற்குரிய இயைபுணர நின்றது. சொன்ன சிவனென்புழி முற்றுணர்வினனென்னும் பொருட்டாய்க் காட்டாதற்குரிய இயைபுணர நின்றது. எண்ணான் சிவனென்புழித் தூய தன்மையனென்னும் பொருட்டாய் அசத்தை யெண்ணாமைக்குரிய இயைபுணர நின்றது. ஆகலாற் கூறியது கூறலன்மையுணர்க. அஃது அம்முப்பொருளுடைத்தென்பது சோமசம்பு பத்ததி வியாக்கியான முதலிவற்றுட் காண்க. சிவதத்துவ விவேகத்துள் மூவகைப்படுத்தோதிய பொருளும் இவையே யாமாறு கண்டு கொள்க.

மற்று— அசை.

ஈண்டு உலகமென்றது உயிர்களை.

மறையினியலும் பொருளை மறையினியலென்றுபசரித்தார்.

இறந்ததுதழீஇய எச்ச உம்மை விகாரத்தாற் றொக்கது.

மறந்தா யென்பது விளியுருபேற்றபெயர்

ஈண்டுச் சந்நிதி என்றது அவிகாரவாதிகள் கூறும் அபிமுக மாத்திரை யன்றென்பார் சொன்னசிவன் கண்ணுவென்றூர். சிவ சத்தி அவ்வலக் காரியங்களின் உன்முகமாதலாகிய சங்கற்பமே ஈண்டுச் சந்நிதி யெனப்படுமென்பதாம்.

காந்தங்கண்ட பசாசத் தவைமே யென்றது ஒருபுடை யுவ மையாதல்பற்றியே பிறிதன்றென்பது கருத்து.

வினையாலென்றது ஐம்பொறிபோலன்றி உணர்தற்பயன் உயிர்க்கேயாதற்கேதுக் காட்டியவாறு.

கண்டறிதல் ஒருபொருட் பன்மொழி.

எண்ணல் ஈண்டனுபவித்தன் மேற்று.

இன்றென்பது சாதியொருமை.

அவனெதிர் என்பது அவாய்நிலையாய் வந்து.

ஆகலானென்பது சொல்லெச்சம். இன்றுதல் யாவையுஞ் சூனி யஞ் சத்தெதிர் என்புழிப் பெறப்படும். இக்கருத்தே பற்றி "மா யைமருவிடான் சிவனவன்கண்—ணுறைதரா தசேதனத்தால்" என்றூர் வழிநூலாசிரியரும். "உன்னுதரத் தேகிடந்த கீடமுறு வதெல்லா—முன்னுடைய தென்னுய்நீ யுற்றனையோ—மன்னுயிர் க—ளவ்வகையே காணிங் கழிவதுவு மாவதுவுஞ்—செவ்வகையே நின்றசிவன் பால்" என்றதும் இவ்வியல்பு நோக்கி.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) மன்னு சிவன் சந்நிதியின் உலகம் சேட்டித்தது என்னும் மறையின் இயல் மறந்தாய் உளம் சொன்னசிவன் கண்ணு வினை யால் கண்டு அறிந்து நிற்குங்காண் இன்று (ஆகலாற்) சிவன் அசத்தை எண்ணுன்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோ வெனின், உயிரினல் அறியும் இந்திரியங்களை உயிர் முதல்வனுல் அறியுமென்பதற்கு உவமையாகக்கூறின், இந்திரியங்கள் அறிதலால் உண்டாம்பயன் அந்த இந்திரியங்களோடு உட னின்று அறியும் உயிர்க்கேயன்றி இந்திரியங்களுக் கில்லாத வாறுபோல, முதல்வனுல் உயிர் அறிதலால் உண்டாம் இன்பத்துன்பப் பயனும் உயிரோடு உடனின்று அறியும அம்முதல்வனுக்கே யன்றி உயிருக்கில்லை யாதல் வேண்டும் என்பர் ஈசுர அவிகாரவாதிகள். அவரை நோக்கி இந்திரியங்கள் அறியும் பயன் உயிருக்கு ஆனவாறுபோல உயிர் அறியும் பயன் முதல்வனுக்கு

ஆகாது எனக்கூறி இந்திரியங்கள் உயிரால் உணர்தல்போல் உயிர் முதல் வனுல் உணருமென மேற் கூறியதை வலியுறுத்திய வாறும்.

(பொ-ரை.) உயிர் முதல்வனுல் அறியும் என்பதற்கு இவ்வதிகரணத்தில் இந்திரியங்கள் உயிரால் அறிவதை எடுத்துக்காட்டிய அநுமானப்பிரமாண மேயன்றி நிலைபெற்ற முதல்வனுடைய சந்நிதியில் உயிர்கள் தத்தந் தொழி லைச் செய்யும் எனக் கூறுவதாகிய ஆகமப் பிரமாணத்தையும் அறியாது பிணங்குகின்ற பேதாய்! இந்திரியங்கள் தமக்கெனவோர் காரண மின்றி உயிரின் பொருட்டே அறியும், அவ்வாறன்றி வேதத்துள் எடுத்துக் கூறப் படும் முதல்வன் உயிருக்குத் துணையாகி நிற்ப உயிர்தான் செய்தவினைக் கீடாக ஒன்றனையறிந்து நிற்கும்; இந்திரியங்கள உயிரின்பொருட்டு அறி தலும் உயிர்தன்பொருட்டு அறிதலுமாகிய அவ்வேறுபாடு அறிவாயாக. முதல்வன் துணையாகநிற்பதால் முதல்வனும் உயிர்போல இன்பத்துன்பங் களை அனுபவிப்பானே எனின், துணையாகநிற்பினும் தன் சந்நிதியில் அசத்தாகிய உலகமெல்லாஞ் சூனியமாதலால் அசத்தென்னும் அமங்கல மில்லாத மங்கலவடிவினனாகிய அம்முதல்வன் அசத்தாகிய அமங்கலத்தைச் சுட்டி அறிந்து அநுபவிக்கும் உயிர்போல அநுபவியான் எ-று.

(க-ரை.) உயிரின் பொருட்டு இந்திரியங்கள் அறிதலால் அறிதற்பயன் உயிர்க்காயிற்று. அவ்வாறு முதல்வன் பொருட்டாக உயிர் அறியாமல் தன்பொருட்டு அறிதலால் அறிதற்பயனை முதல்வன் அநுபவியான் என் பதாம்.

இவ்வுதாரணத்தில் மன்னு சிவன் சொன்னசிவன் எண்ணுன் சிவன் எனக் கூறியது ஒருசிவனையேயாம். அவ்வாறு ஒரு சிவனையே மும்முறை கூறியதால் கூறியது கூறலென்னுங் குற்றமாகாதோ எனின், ஆகாது. எதனுலெனின்,

மன்னுசிவன் என்றவிடத்து நிலைபெற்ற சிவன் என்பதுபொருள். எனவே, நிலைபெறுது இறந்து பிறத்தலால் இன்பமும் துன்பமும் அடையும் உயிர்கள்போலன்றி என்றும் இன்பவடிவினன் என்றுகி அவனை யடைதலி னுலேயே எவர்க்கும் நிலைத்த இன்பம் உண்டாகு மாதலால் பேரின்பத் திற்குக் காரணம் என்னும் பொருளென்பதூஉம், நிலைபேறின்றிய உலகங் கள் தொழிற்படுதற்கு நிலைபேறுடைய பொருளின் துணை வேண்டுதல் பற்றி நிலை பெற்றிருக்கும் தனது சந்நிதியில் நிலைபேறிலதாய உலகம் தொழிற் படுமாறு செய்தற்குரிய சம்பந்தம் உண்டென்பதூஉம் உணர நிற்றலானும்,

சொன்னசிவன் என்றவிடத்து வேதத்துட் புகழ்ந்து சொன்ன சிவன் என்பது பொருள். எனவே, தன்னின் மேம்பட்ட தொன்றைப் புகழ்தலே யன்றித் தன்னேடொத்ததையாவது கீழ்ப்பட்டதையாவது புகழ்தல் எவ்வி டத்துமில்லை. மேம்பட்டதாவது தன்னையும் அடக்கிநிற்றலாம் வேதத்தைச்

செய்தவன் முதல்வன் ஆதலால் வேதம்முதல்வனுள் அடங்குவதென்றாகும். ஆகவே விதிவிலக்குகளையும் அவற்றின் பயன்களையும் வரையறுத்துக்கூறும் வேதத்தைச் செய்வதற்குரிய முற்றுணர்வினன் என்னும் பொருளென்பதூஉம், சிற்றறிவுடைய உயிர்ஒன்றை யறிதற்கு முற்றுணர்வுடைய பொருளின் துணைவேண்டுமாதலால் உயிருக்குத் துணையாய் நிற்றற்குரிய சம்பந்தம் உண்டென்பதூஉம் உணர நிற்றலானும்,

எண்ணான் சிவன் என்றவிடத்து அசத்தாகிய உலகத்தை எண்ணான் என்பது பொருள். எனவே, அசத்தெல்லாம் மாயையின் காரியம். அவை சிவ சந்நிதியில் முனைத்துத் தோன்றுவாம். தோன்றுமைக்குக் காரணம் முனைத்துத் தோன்றுதலால் பக்குவப்படவேண்டிய ஆணவமல மில்லாமையும் அவ்வாணவமல மில்லாமையால் எவற்றையும் வேறாய்நின்று சுட்டிய றிதலின்றி உடனாய் நின்று ஒருசேர அறிதலுமேயாம். ஆணவமலம் அசுத்தம் எனப்படும். படவே, ஆணவமலமில்லாத தூய (பரிசுத்தத்) தன்மையன் என்னும் பொருளென்பதூஉம், அசத்துமுனைத்துத் தோன்றுமையால் அவ்வசத்தை எண்ணுமைக்குரிய சம்பந்தம் உண்டென்பதூஉம் உணர நிற்றலானும் என்க.

இவ்வாறு சிவன் என்பது பேரின்பகாரணன், முற்றுணர்வினன், தூயதன்மையன் என்னும் முப்பொருளுடையதென்பதைச் சோம சம்பு பத்ததிவியாக்கியான முதலியவற்றுட் காண்க. சிவ தத்துவ விவேகத்துள் பாயிரத்தில் சிவபெருமானுக்கு வணக்கம் மூவகைப்படுத்தோதிய பொருளும் இவையேயாமாறு கண்டுகொள்க. அவை வருமாறு:-

"உலகெலாந்தன தொருசிறு கூற்றினு ளமைய, வலகி லாற்றலானிறைந்தவ னெனவரு ளூரலோர், குலவி யேத்துவோ னெவனவ னுமையொரு கூற்றி, னலர்க றைக்களச் சிவபிரா னடியிணை போற்றி." இது முற்றுணர்வினன் என்னும் பொருளது.

"செவியுற வாங்கி மோகத் திண்படை சிலையிற் பூட்டுங், கவிகைவேண் மடியச் சற்றே கறுத்தியோ குறையும் பெம்மான், குவிதழை நிறையப் பூத்த கோழிணர்ப் பதுமச் செங்கே, ழுவிர்தரு விழித்தீக் கென்றன் வினையிலக் காகு மாலோ." இது இருவினையின்கேடே பேரின்பமாதலால் பேரின்பகாரணன் என்னும் பொருளது.

"திருமாலிந் திரன்பிரம னுபமனியன் றபனனந்தி செவ்வேளாதி, தருமமுது குரவருக்குந் தனதருளா லாசிரியத் தலைமை நல்கி, வருமெவர்க்கு முதற்குருவாய் மெய்ஞ்ஞான முததிரைக்கைம் மலரும் வாய்ந்த, வுருவழகுங் குறுநகையுங் காட்டியரு டருஞ்சிவனை யுளத்தில் வைப்பாம்." இது அநாதியே மலமில்லாமையினால் முதற்குரு வாதலின், தூயதன்மையன் என்னும் பொருளது.

இவ்வெண்பாவில் உலகம் என்றது உயிர்களை, மற்று அசை.

மறையினியலும் பொருளை மறந்தாய் என்று கூறவேண்டியதை மறையினியல் மறந்தாயென்றுபசரித்தார்.

மறைனியல் என்றதில் உம்மை விரித்து வேதபபொருளையும் என உரை செய்யப்பட்டது. அவ்வும்மை மேற்கூறிய அநுமானப பிரமாணத்தைத் தழுவி நிற்றலால் இறந்தது தழீஇய எச்சம்.

மறந்தாய் என்பது மறத்தலையுடையானைக் குறித்து நின்ற விளிஉருபு ஏற்ற பெயர். விளியாவது முன்னிலைப்படுத்தி அழைத்தல்.

இவ்வுதாரணத்தில் சந்நிதி என்றது அவிகாரவாதிகள் கூறும் நேர்முகமாத்திரை யன்றெனக்கூற வேண்டிச் சொன்ன என்னும் அடைகொடுத்துச் சொன்ன சிவன் கண்ணுவென்ருர். சொன்ன என்னும் அடையினுல் வேதத்தைச் சொன்னவன் என்ருகிச் சும்மா இருக்கும் சிவன் சந்நிதி என்பாரை மறுத்தவாருயிற்று. சந்நிதி என்பதன் பொருள்தான் என்னை யெனின், சிவனுடைய வல்லபமாகிய சிவசத்தி உயிர்களின் பொருட்டுச் செய்ய வேண்டுவதாகிய அவ்வக்காரியங்களின் நோக்குதலாகிய சங்கற்பமே யாம்.

சந்நிதி யென்பதற்குச் சத்தி சங்கற்பமே பொருளாயின் இச்சூத்திரத்திற் கூறிய காந்தங் கண்ட பசாசத்தவையே என்னும் உவமையால் காந்தத்திற்குச் சங்கற்பம் இன்ருகவும் காந்தத்தின் நேர்முகமாத்திரையால் இரும்பு அசைதல்போல என்பதனேடு முரணுமே யெனின், முரணுது. எவ்வாறெனின், சந்நிதி மாத்திரையிற் ருெழிற்படுதற்கு மட்டும் உவமையேயன்றிச் சங்கற்பமாதற்கு உவமையன்று; அன்றியும் முதல்வன் எங்கும் வியாபகனுதலால் எங்கும் எக்காலமும் அவன் சந்நிதியேயாகும். ஆதலால் முதல்வன் சந்நிதியை அடைந்தபொழுது என்பதற்கு முதல்வன் சத்தியின் சங்கற்பமாகிய திருவருள்நோக்கத்தையடைந்த பொழுதென்பதே பொருளாகும் என்க. எங்கும் அவன் சந்நிதியேயென்னும் இக்கருத்துப் பற்றியே திருநாவுக்கரசு சுவாமிகள், "காண்பார்யார் கண்ணுதலாய்காட்டாக்காலே" என அருளிச் செய்தார்.

உயிர் முதல்வனுல் அறியுமென்று கூருது வினைக்கீடாக முதல்வனுல் அறியும் என்று கூறிய கருத்து என்னை எனின, ஐம்பொறிகள் உயிரால் அறிதல்போல, உயிர் முதல்வனுல் அறிந்தாலும் ஐம் பொறிகள் சடமாதலால் வினைசெய்தலில்லை. ஆதலால் பொறிகள் வினைக்கீடாக அறிவதில்லை; உயிர் சித்தாதலால் தன் வினைக்கீடாக அறிகின்றது. ஆகவே உணர்தற் பயன் ஐம்பொறிகளுக்கு இல்லையாகவும் உயிருக்கு உண்டென்பதற்கு ஏதுக் காட்டவேண்டி வினைக்கீடாக அறியும் என்ருரென்க.

கண்டறிந்து என்பதில் காணுதலும் அறிதலும் ஒருபொருளைக்குறித்த சொல்லாதலால் அவ்விரண்டும் ஒரு பொருட் பன்மொழி.

எண்ணான் சிவன் என்றதில் எண்ணுதல் இவ்விடத்தில் அநுபவத்தைக் குறித்து நின்றது. ஆதலால் எண்ணான் என்பதற்கு அநுபவியான் என உரைசெய்யப்பட்டது.

அசத்தெல்லாம் என்னும் பன்மை இன்று என்னும் ஒருமைகொள்ளாதேயெனின், அது எல்லாம் என்னுஞ் சாதியை அடக்கிய ஒருமையாதலால் கொள்ளும் என்க.

இன்று என்பது அவனெதிர் என்னும் சொல்லை அவாவி நின்றமையால், அச்சொல் அவாய் நிலையால்வந்தது. அவனெதிர் என்பதற்குத் தனது சந்நிதி என உரைசெய்யப்பட்டது.

இன்று என்பதில் ஆகலால் என்னுஞ்சொல் எச்சமாய் நிற்றலால் அது வருவித் துரைசெய்யப்பட்டது.

இன்றாதல் எவ்விடத்துப் பெறுதுமெனின், வருகின்ற ஏழாம் சூத்திரத்தில் யாவையுஞ் சூனியம் சத்தெதிர் என்றவிடத்துப் பெறுதும். இக் கருத்தேபற்றிச் சிவஞானசித்தியார், ரு-ம் சூ-ம் கூ-வது செய்யுளில் "மாயை மருவிடான் சிவன் அவன்கண்-உரை தராது அசேதனத்தால்" என்றார் வழி நூலாசிரியரும். இவ்வியல்பு நோக்கியே திருக்களிற்றுப் படியாசிரியரும் அஎ-வது செய்யுளில் "உன்னுடைய உதரத்திற் கிடந்த கீடம் உறுவ தெல்லாம் நீ பொருந்தாதவாறு போல உயிர்கள் பொருந்துவதெல்லாம் சிவன் பொருந்தான்" எனக் கூறியருளினர்.

ரு.

உயிர் முதல்வனோடு நின்று உணரும் முறைமையை விளக்கி
மேற்கோளை வலியுறுத்தும்

உதாரணம்.

வெய்யோ ணொளியி லொடுங்கி விளங்காது
வெய்யோனை யாகாத மீன்போல—மெய்யவனிற்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனைக்
கண்டோய் மன்னுதலைக் காண்.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், உயிர்அங்ஙன முணர்த்த வுணருங்கால் முதல்வனின் வேறுநின் றுணருமோ ஒன்றாய்நின் றுணருமோ வென்பாரை நோக்கி அவ்விரண்டியல்பு மின்றிநின் றுணருமா றுணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) வெய்யோன் ஒளியில் ஒடுங்கி—ஞாயிற்றி னொளியி னடங்கி,—விளங்காது—(அதனின்வேறாய்) விளங்கித் தோன்றுதலின்றி,—வெய்யோன் ஆகாதமீன்போல—அதுவா யொழிதலுமில்லாத நாண்மீன்கள் (அஞ்ஞாயிற்றானே ஒளியுடைய வாமாறு) போல,—கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும்ஐம்புலனை மெய் அவனில் கண்டு—கண்டும் கேட்டும்உண்டும் உயிர்த்துந் தீண்டியும் அறியப்படும் ஐவகை விடயங்களையும் (உயிர்) மெய்ப்பொருளாகிய முதல்வனால் உணர்ந்து,—உடனாய் மன்னுதலைக் காண்—(வேறாதலும் ஒன்றாதலுமின்றி அவ்விரண்டற்கும் பொதுவாய் அடங்கி) உடனாய்நிலைபெறுதலை அறிவாயாக எ-று.

உவமையடை பொருளினும், பொருள்வினை உவமையினுஞ் சென்றியையும்.

ஐ சாரியை.

நாண்மீன் முதலியவற்றின் ஒளியெல்லாம் ஞாயிற்றனுடைய ஒளியே என்பது வேதநூற் றுணிபாகலான் அஃதீண்டைக் குவமையாயிற்று.

உயிரென்னும் எழுவாய் மேலைவெண்பாவினின்றும் வருவித்துரைக்கப்பட்டது.

## விளக்கம்.

இவ்வெண்பாவில் ஐம்புலனை மெய்யவனில் கண்டு எனக் கூட்டுக.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோ எனின், மேற்கூறியவாறு முதல்வன் உணர்த்த உயிர் உணருங்கால் அவ்வுயிர் முதல்வனின் வேறாய் நின்றுணருமோ முதல்வனோடு ஒன்றாய் நின்றுணருமோ என்னும் ஐயம் நிகழுமன்றே? அந்த ஐயத்தை நிவிர்த்தித்தற்பொருட்டு ஒன்றும் வேறுமாகிய அவ்விரண்டியல்பும் இன்றி நின்றுணரும் முறைமையை உணர்த்தி முதல்வன் உணர்த்த உயிர் உணரும் என்பதை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) நட்சத்திரங்கள் ஒளியுடையனவாய் விளங்கித் தோன்றுங்கால் சூரியன் ஒளியின் வேறாய் விளங்கித் தோன்றாமலும் சூரியனே ஆகாமலும் அச்சூரியன் ஒளியில் அடங்கி விளங்கித் தோன்றுமாறுபோல, உயிர் கண்டும் கேட்டும் உண்டும் முகந்தும் தீண்டியும் அறியப்படும் ஐவகை விடயங்களை மெய்ப்பொருளாகிய முதல்வனால் உணர்ந்து, உணருங்கால் முதல்வனின் வேறாதலும் ஒன்றாதலுமின்றி அவ்விரண்டிற்கும் பொதுவாய் முதல்வனில் அடங்கி அம்முதல்வனோடு உடனாய் நிலைபெற்றிருக்கும் என்பதை அறிவாயாக எ-று.

(க-ரை.) நட்சத்திரங்கள் சூரியன் ஒளியோடு ஒன்றுதலும் வேறுத லும் இன்றி அடங்கிநின்று பிரகாசிக்குமாறுபோல, உயிர் முதல்வனோடு ஒன்றுதலும் வேறுதலுமின்றி அடங்கி உடனாய் நின்று அறியுமென்பதாம்.

இவ்வுதாரணத்தில் சூரியனைப்போல முதல்வனையும் நட்சத்திரத்தைப் போல உயிரையும் கூறி உவமையாகிய நட்சத்திரத்திற்கு அடங்கி விளங் காது ஆகாது என்னும் அடைகொடுத்து உவமேயப் பொருளாகிய உயிருக்கு அவ்வடை கொடாமையால் உவமைக்கோதிய அவ்வடை பொரு ளாகிய உயிருக்கும் சென்று பொருந்தும். உணர்ந்து என்னும் வினைஉயிருக் குக்கூறி அவ்வாறே நட்சத்திரம் விளங்கும் என்றுகூறாமையால் பொருளா கிய உயிருக்கோதிய வினை உவமையாகிய நட்சத்திரத்திற்கும் சென்று பொருந்தும். ஆதலால் அவ்வாறே உரையில் வருவித்து உரைக்கப்பட்டமை அறிக.

வெய்யோனை என்பதில் உள்ள ஐகாரம் சாரியை. இந்தச் சாரியை இல்லாதவிடத்து வெண்பாத் தளைதட்டுமாதலால் சேர்க்கப்பட்டது.

அனுமானப் பிரமாணங் கூறும் இவ்விடத்தில் பிரத்தியட்சமாக அறி யப்படுவதையே உவமையாகக் கூறவேண்டுவது. ஆயினும் நட்சத்திரம் சந்தி ரன் முதலியவற்றிற்கு இயற்கைஒளி கிடையாது என்பதும் அவற்றின் ஒளியெல்லாம் சூரியன்ஒளியால் உண்டாகிய ஒளியேயாம் என்பதும் வேத நூற்றுணிபாதலான் அத்துணிபுபற்றி அந்நட்சத்திரம் இவ்விடத்து உவமை யாயிற்று.

இவ்வெண்பாவில் அறியும் என்னும் பயனிலைக்குரிய உயிர் என்னும் எழுவாய் இல்லையாயினும் மேலைவெண்பாவில் நின்றும் வருவிக்கப்பட்டது. மேலை வெண்பாவில் உளம் என்றது உயிரை.

உயிர்க்கு உணர்த்தும் வேறுபாட்டால் முதல்வன் விகாரியாகான் என்பதற்குக் காட்டும்

உதாரணம்.

அருளுண்டா மீசற் கதுசத்தி யன்றே
யருளு மவனன்றி யில்லை—யருளின்
றவனன்றே யில்லை யருட்கண்ணார் கண்ணுக்
கிரவிபோ னிற்குமர னேய்ந்து.

## சிற்றுரை.

எ—து உ--ம் எ—னின், அங்ஙனமாயினும் உயிர்கட்குப் பல வேறுவகைப்பட வுணர்வு நிகழ்தலின் அஃதுணர்த்துதல் வேறு பாட்டானுய தெனல் வேண்டும். வேண்டவே, நிருவிகாரி யென்

னுஞ் சுருதியோடு முரணி முதல்வன் விகாரியாவான் செல்லு மென்பாரை நோக்கி விகாரியாகாமை யுணர்த்தி அதனை வலியுறுத் துதனுதலிற்று.

(இ-ள்.) அருள் ஈசற்கு அன்றே உண்டாம்—(உயிர்கட்குப் பசுத்துவத்தை நீக்கிச் சிவத்துவத்தை விளக்குதற்கணுளதாகிய) இரக்கம் முதல்வனுக்கு அநாதியேயுள்ளது,—அது சத்தி—அவ்வி ரக்கம் (வேறு பொருளன்று முதல்வனுக்கு உளதாகிய) சத்தியே யாம்;—அருளும் அவன் அன்றி யில்லை அவன் அருளின்று இல்லை—(இரக்கமும் அவனும் குணமும் குணியுமாகலின்) அவ்வருளும் முதல்வனை யின்றி யமையாது முதல்வனும் அதனையின்றி யமையா னய்,—அருட் கண்ணார் கண்ணுக்கு இரவிபோல் ஏய்ந்து நிற்கும் அரன்—ஞானக்கண்ணுடையா ருணர்விற்கு ஞாயிறு (தன்னொளி யோடு தாதான்மியமாயியைந்து நிற்குமாறு)போல (அவ்வருளோடு தாதான்மியமா) யியைந்து நிற்பன் முதல்வன்; (ஆகலாற்றன்வயத் தனாகிய அம்முதல்வன் விகாரமின்றி நின்றே தனது சத்தி சங்கற் பமாத்திரையான் அனைத்துஞ் செய்தல் கூடும்) எ-று.

ஆகலாற் றன்வயத்தனாகிய அம்முதல்வன் விகாரமின்றி நின் றேதனது சத்திசங்கற்பமாத்திரையான் அனைத்துஞ் செய்தல்கூடு மென்பது குறிப்பெச்சம்.

உம்மை எதிரது தழீஇயது.

இன்றி யென்னும் வினையெச்சக் குறிப்பினிகரஞ் செய்யுளாக லின் உகரமாய்த் திரிந்தது.

அன்றே அசை. 78

இவ்வியல்பு சித்தாந்த நெறியுணர்ந்தாற்கன்றி விளங்காதென் பார் அருட்கண்ணார் கண்ணுக்கென்றார்.

சத்தியதுண்மையும் அதனியல்பும் நீக்கமின்றி நிற்குமன்றே யென்பதனுள் வகுத்துரைத்தமையின் ஆண்டுக் காண்க.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) அருள் ஈசற்கு அன்றே உண்டாம் அது சத்தி அரு ளும் அவன் அன்றி இல்லை அவன் அருள் இன்று இல்லை அருட்கண்ணார் கண்ணுக்கு இரவிபோல் ஏய்ந்துநிற்கும் அரன்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றேவெனின், மேற் கூறியவாறு முதல்வனோடு உடனாய் நின்று முதல்வன் அறிவிக்க உயிர் அறியுமாயினும் உயிர்கட்குப்பல வேறுவகைப்பட அறிவுநிகழக் காண்கின்றமையால், அவ் வாறு நிகழ்தல் முதல்வன் உணர்த்தும் வேறுபாட்டால் ஆயின வென்று கூறவேண்டும்; கூறவே முதல்வன் நிர்விகாரியென்னுஞ் சுருதியோடு மாறு பட்டு விகாரிஎனக் கூறவரும் என்பார் ஈசுரஅவிகாரவாதிகள். அவரை நோக்கி விகாரியாகான் என்பதை அறிவித்து உயிர் முதல்வன் அறிவிக்க அறியும் என்பதனை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) உயிர்கட்கு அனாதியே கூடியிருந்த ஆணவமலத்தின் தடையால் உண்டாகிய பசுத்தன்மையை நீக்கிப் பிரிப்பின்றி நிற்கும் சிவ மாந்தன்மையை விளக்கவேண்டுமென்ற இரக்கம் முதல்வனுக்கு அநாதியே யுள்ளது. அந்த இரக்கம் முதல்வனைவிட வேறு பொருளன்று. முதல்வனுக் குளதாகிய சத்தி (வல்லமை) யேயாம்; இரக்கம் குணமும் முதல்வன் குணி யுமாதலால் அந்த இரக்கமும் முதல்வனை யின்றித் தனித்து நில்லாது; முதல் வனும் அந்தஇரக்கத்தையின்றித் தனித்து நில்லாதவனாகின்றான். இவ்வாறு நிற்றல் எதுபோல எனின், சூரியன் தன் ஒளியோடு பிரிப்பின்றி நிற்றல் போலாம். மாசில்லாதகண்ணுக்கு ஒளியோடு பிரிப்பின்றி நிற்கும் சூரியன் விளங்கித் தோன்றுமாறுபோல, ஆணவமல மில்லாத அருட்கண்ணை யுடை யார் கண்ணுக்கு அருளோடு பிரிப்பின்றி நிற்கும் முதல்வன் விளங்கித் தோன்றுவன். ஆதலால் தன்வயத்தனாகிய அம்முதல்வன் விகாரமின்றி நின் றே தனது சத்திசங்கற்பமாத்திரையினால் அனைத்துஞ் செய்தல்கூடும் எ-று.

(க-ரை.) சூரியன் ஒளியோடு பிரிப்பின்றி நின்று கண்ணுக்குப் பல வேறு வகைப்படக் காணுந்தொழில் நிகழும்படி செய்தாலும் விகாரத்தை அடையாதவாறுபோல, முதல்வன் அருளோடு பிரிப்பின்றி நின்று உயிருக் குப் பலவேறு வகைப்பட அறிவுநிகழும்படி செய்யினும் விகாரத்தை அடை யான் என்பதாம்.

ஆகலாற் றன்வயத்தனாகிய அம்முதல்வன் விகாரமின்றிநின்றே தனது சத்தி சங்கற்ப மாத்திரையான் அனைத்தும் செய்தல் கூடுமென்பது செய்யு ளில் இல்லை ஆயினும் இரவிபோல் எய்ந்து நிற்கும் அரன் என்றதனால் குறிப்பாக எஞ்சிநின்றமையால் குறிப்பெச்சமாக உரையிற் கொள்ளப்பட் டது. எவ்வாறெனின், கண்ணுக்கு ஒளி விளங்குவதற்குச் சூரியன் ஒளியின் துணை வேண்டுவதுபோலச் சூரியனுக்கு ஒளி விளங்குவதற்குப் பிறிதொன் றின் துணைவேண்டாம். அதுபோல உயிர் அறிவதற்கு முதல்வன் அறிவிக்க வேண்டுவதுபோல முதல்வன் அறிதற்குப் பிறிதொன்று அறிவிக்க வேண் டாமையால் தன்வயத்தனாகிய முதல்வன் எனவும், கண் வேறு வேறு வித மாய் அறிந்து விகாரப்படுவதுபோலச் சூரியன் விகாரப்படான். அதுபோல, உயிர் வேறுவேறு விதமாய் அறிந்து விகாரப்படினும் அறிவிக்கும் முதல்

வன் விகாரப்படான் ஆதலால் விகாரமின்றி நின்றே எனவும், சூரியன் விகாரமின்றி நிற்பினும் சூரியன் ஒளியின் துணையால் கண் வேறு வேறு விதமாய் அறிதல்போல, முதல்வன் விகாரமின்றி நிற்பினும் அவன் அருள் அறிவித்தலால் உயிர் வேறு வேறுவிதமாய் அறியுமாதலால் தனது சத்தி சங்கற்பமாத்திரையான் அனைத்துஞ் செய்தல் கூடு மெனவும் வருவித்து உரைக்கப்பட்டவாறும்.

அருளும் என்றதில் உள்ள உம்மை அவனும் அருளையின்றி இல்லை யென்று முன்னர்க்கூறும் பொருளைத் தழுவி நிற்றலால் எதிரதுதழுவியது. அவன் என்றதில் உம்மை வருவிக்கப்பட்டது.

அருளின்றியென வினையெச்சக் குறிப்பாகக் கூறவேண்டியதைச் செய்யுளாதலின் இகரத்தை உகரமாய்த் திரித்துஅருளின்று எனக்கூறினார்; ''அன்றி யின்றியென் வினையெஞ் சிகரந்—தொடர்பினு ளுகர மாய்வரி னியல்பே.'' என்பது இலக்கணமாகலான்.

இன்றி என்பது காலங்காட்டாமையின் வினையெச்சக் குறிப்பு. அவ் வெச்சம் இல்லையென்னுங் குறிப்புவினை கொண்டுமுடிந்தது.

அவன் அன்றே என்பதிலுள்ள அன்றே என்பது அசை. அருளும் முதல்வனும் பிரிப்பின்றி நிற்கும் இயல்பு சித்தாந்தநெறி உணர்ந்தார்க்கன்றி ஏனையோருக்கு விளங்காது. எவ்வாறெனின், சித்தாந்தமல்லாத பிற நெறி யில் நிற்போரெல்லாம் அவ்வருளைப் பெற்றுடையாரையே தெய்வமாகக் கொண்டுவழிபடுபவர். அத்தெய்வங்கள் எல்லாம் உயிர் வருக்கமாதலின் உற் பத்தி நாசங்களை யுடையனவாகும். ஆண் தன்மையும்பெண் தன்மையும் ஆன இருதன்மைகளை யுடைய ஒரு வடிவம் என்றும் உற்பத்தியாதலில்லை. ஆத லால் சித்தாந்தமல்லாத பிற நெறியில் நிற்பார்வணங்குந் தெய்வங்களெல் லாம் சத்திவேறு கடவுள்வேறு ஆக இருவடிவங்களாகவே காணப் படுகின் றன. சித்தாந்த சைவர்கள் வணங்குந்தெய்வம் அதிகாரமூர்த்திகளாகப் பல இருப்பினும் தலைமையான மகாலிங்கம் சத்தியுஞ் சிவமுமான ஒருவடிவமாக வேஇருக்கின்றது. பீடம் சத்தி. லிங்கம் சிவம். இதுவன்றி அதிகார மூர்த்தி களுள்ளும் பாதி உமையும் பாதிசிவமுமான ஒரு வடிவம் இருக்கின்றது. இதனை அர்த்தநாரீசுவர வடிவமென்பர். ஆகவே சத்தியும் சிவமும் பிரியாது கலந்து நிற்கும் நிலையை அறிதற் குரியார் சித்தாந்த சைவரேயாவரென்பது நன்கு விளங்குமாறுகாண்க.

சித்தாந்த சைவர் அறிவதும், சூரியனையும் ஒளியையும் அவ்வொளியி னால் அறிவது போலச் சிவசத்தியினாலேயே அச்சத்தியையும் அதனோடு பிரிப்பின்றி நிற்கும் சிவனையும் அறிவர். இக்கருத்துப்பற்றியே, ''அவனரு ளாலே அவன்றாள் வணங்கி'' என அருளிச் செய்தனர் மணிவாசகப்பெரு மான். ஆதலால் சிவமும் சத்தியும் பிரிப்பின்றி நிற்கும்நிலை சித்தாந்த

சைவருக்கே விளங்குமெனவும் ஏனையோருக்கு விளங்காதெனவும் கூறவேண்டிச் செய்யுளில் அருட் கண்ணார் கண்ணுக்கு என்றார்.

சத்தி உண்டெனவும் அதன் இயல்பும் இரண்டாஞ் சூத்திரம் நான்காம் அதிகரணத்தில் "நீக்கமின்றி நிற்குமன்றே" என்னும் மேற்கோளில் வகுத்துக் கூறினமையால் இவ்விடத்துக் கூறவில்லை. ஆதலால் அவ்விடத்துக் காண்க.

இந்த ஐந்தாஞ் சூத்திரத்தினாலும் அதிகரணங்களினாலும் கூறி முடித்த தொகைப்பொருள்: -நான்காஞ் சூத்திரத்திற் கூறியவாறு உயிர் அந்தக்கரணங்களுடனே கூடி ஐந்தவத்தைப்படுமாயின் ஐந்தவத்தைப் படுவதற்கு முதல்வன் உபகாரம் வேண்டாம் என்பாரைமறுத்து இந்திரியங்கள் உயிரால் விடயங்களை யறிந்தும் அவ்விந்திரியங்கள் தம்மையும் உயிரையும் அறியாதவாறுபோல, உயிர் முதல்வனுடைய திரோதான சத்தியால் ஐந்தவத்தைப் பட்டும் அவ்வுயிர் தன்னையும் முதல்வனையும் அறியாதெனவும், முதல்வனால் அவ்வாறு அறிதல் காந்தத்தின்முன் இரும்பு தொழிற்படுதல்போலு மாதலின் அதுபற்றி முதல்வன் விகாரியாதல் இல்லை யெனவும், சூத்திரத்தாற் கூறப்பட்டன. படவே, தாமரை யிலையிலுள்ள நீர்போலப் புருடன் பற்றின்றிநிற்க அப்புருடன் சந்நிதியில் புத்திதத்துவமே ஐந்தவத்தைப் படுமன்றிப் புருடன் ஐந்தவத்தைப் படுவனென மேலைச்சூத்திரத்திற் கூறியது பொருந்தாதெனச் சாங்கியர் கூற, முதலதிகரணத்தால் அவரைமறுத்து இந்திரியங்கள் விடயங்களை யுணர்தல் ஆன்மாவினாலேயேயன்றிப் புத்திதத்துவத்தினாலன்றெனக் கூறப்பட்டது. படவே, புத்திதத்துவம் சடமாதலால் இந்திரியங்கள் அப்புத்தியைக்கொண்டு விடயங்களை அறியமுடியாதென்பதும் உயிரைக் கொண்டே அறியும் என்பதும் ஒக்கும். அதுபோலச் சித்தாகிய உயிரும் முதல்வனைக்கொண்டு அறியும் என்பது பொருந்தாது. பொருந்துமாயின் உயிராகிய சித்துக்கு முதல்வன் வேண்டுவதுபோல முதல்வனாகிய சித்துக்கும் பிறிதொன்று வேண்டுமெனப்பட்டு மேலும்அவ்வாறே வரம்பின்றி ஓடுமென ஈசுவர அவிகாரவாதிகள் கூற, இரண்டாம் அதிகரணத்தால் அவரைமறுத்துத் தமக்கு ஒருமுதலுடைய பொருளுக்குப் பிறபொருளின் துணை வேண்டுமேயன்றித் தமக்குஒருமுதலில்லாத பொருளுக்குப் பிறபொருளின் துணை வேண்டாமாதலாலும், உயிர் தமக்கு முதலையுடையது என்பது மேல் இரண்டாஞ் சூத்திரத்தாலும் முதல்வன் தனக்குவேறு முதல் இல்லாதவன் என்பது முதற் சூத்திரத்தாலும்பெறப் பட்டமையாலும், உயிர்முதல்வனால் அறியும்; அதனால் வரம்பின்றி ஓடுதலாகிய குற்றமில்லை; உயிர் அறியுங் காலத்து முதல்வனோடு உடனாய் அடங்கிநின்று அறியும்; அறியும் வேறுபாட்டால் முதல்வன் விகாரப்படான் எனச்சாதிக்கப்பட்டது.

இரண்டாம் அதிகரணம் முற்றிற்று.

ஐந்தாஞ் சூத்திரம் முற்றிற்று.

---

# ஆ று ஞ் சூ த் தி ர ம்.

## பதி இலக்கணம்.

*முதற சூத்திரத்தால் உண்டென்று சாதிக்கப்பட்ட பதிக்கு இலக்கணம் இவ்வாறுஞ் சூத்திரத்தாற் கூறுகின்றார்.*

உணருரு வசத்தேனி னுணரா தின்மையி
னிருதிற னல்லது சிவசத் தாமென
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே

*கருத்துரை.*

**எ-து சூ-ம் எ-னின், சத்தும் அசத்தும் வரைசெய் துணர்த்துத னுதலிற்று.**

## சிற்றுரை.

*எ-து க-ரை எ-னின், சூத்திரக் கருத்துணர்த்துத னுதலிற்று.*

*(இ-ள்.) மேலைந்து சூத்திரத்தானுங் கூறிப்போந்த பொருள்களுள் யாது சத்து யாது அசத்தென்னும் ஐயநீக்குதற்குச் சத்தினியல்பும் அசத்தினியல்பும் இவையென அவ்விரண்டும் இலக்கணத்தாற் றம்முண் மயங்காதவாறு வரைந்துவைத் துணர்த்தி உண்மையதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யு முகத்தானே இலக்கணவோத்துட் கூறுதற்கு எஞ்சிநின்ற பதிப்பொருளதிலக்கணங் கூறுதல் இவ்வாறுஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.*

*இதனானே சூத்திர வியைபும் இனிதுவிளங்கும்.*

## விளக்கம்.

*இககருத்துரை என்ன சொல்லிற்றோவெனின், சூத்திரக்கருத்துஇது வென்று சொல்லிற்று.*

*(இக்கருத்துரையின் பொருள்.) மேல் ஐந்து சூத்திரங்களினாலும் கூறிமுடித்த பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களுள், என்றும் ஒரு தன்மையாயுள்ள சத்துப்பொருள் யாது அவ்வாறன்றி மாறுபடுந் தன்மையுள்ள அசத்துப்பொருள் யாது என்னும் ஐயம் நிகழுமன்றே? அந்தஐயத்தை நீக்குதற்குச் சத்தும் அசத்துமாகிய அவ்விரண்டும் இலக்கணத்தால் தம்முள் மயஙகாதவண்ணம் வரையறுத்துச் சத்தின் இலக்கணம் இது அசத்தின் இலககணம இது என உணர்த்தி, அவ்வாறு உணர்த்துதலால் உண்மையதிகாரத*

திற்குத் தோற்றுவாய் செய்து, அவ்வாறுதோற்றுவாய் செய்யும் முறையில் இலக்கண இயலுட் கூறவேண்டியதாக எஞ்சி நின்றபதிப்பொருளுக்கு இலக்கணங் கூறுதல் இவ்வாறுஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.

உண்மையதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்தது எவ்வாறெனின், வருகின்ற ஏழாஞ் சூத்திரமுதல் ஆறுசூத்திரமும் முப்பொருள்களின் சிறப்பிலக்கணங் கூறும் உண்மை அதிகாரம். இவ்வாறுஞ் சூத்திரத்திற் கூறும் பதி இலக்கணமும் சிறப்பிலக்கணமாகும். ஆதலால் இச்சூத்திரம் தோற்றுவாயாயிற்று.

பொது அதிகாரத்துள் அடங்கிய இவ்வாறுஞ் சூத்திரத்தில் சிறப்பதிகாரத்திற் கூறவேண்டிய சிறப்பிலக்கணங் கூறுவது எவ்வாறு பொருந்தும் எனின், கூறுதும். திருக்குறள் வாழ்க்கைத் துணைநலம் என்னும் அதிகாரத்தின் இறுதியில் "அதன் நன்கலம் நன்மக்கட்பேறு" என்று கூறிப் புதல்வரைப் பெறுதல் என்னும்அடுத்த அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்தார். நன்மக்கள் என மக்களின் சிறப்பைக் கூறினரேனும் நன்மக்களின் செயலைக்கூறவில்லை. அதனை அடுத்த அதிகாரத்திற்றான் கூறினர். அவ்வாறே இந்நூலில் பொது அதிகாரத்து இறுதியில் பதியின் சித்துச்சத்தாகிய சிறப்பிலக்கணங்கூறிச் சிறப்பிலக்கணங் கூறும்அடுத்த அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்தார். பதியின் சிறப்பிலக்கணம் சித்துச் சத்தெனக் கூறினரேனும் சித்துச் சத்தாய்நின்று செய்யும் செயல் கூறவில்லை. இரண்டாஞ் சூத்திரத்தில் உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கும் பொது இயல்பும், அவ்வாறு நின்று உயிர்கள் இறத்தல்பிறத்தல்களை அடையும்வண்ணம் பஞ்ச கிருத்தியஞ் செய்வன் எனச் செயலுங்கூறினர். இவ்வாறுஞ்சூத்திரத்தில் சித்துச்சத்தாய் நின்று செய்யுஞ் செயல் கூறாமையினால் சிறப்பிலக்கணம் முற்றுங்கூறியதாயில்லை. ஆதலால் தோற்றுவாயாயிற்று. சித்துச் சத்தாய் நின்று உயிர்களுக்குச் செய்யும் உபகாரத்தை எட்டாஞ்சூத்திரத்திலும் பதினொராஞ் சூத்திரத்திலுங் கூறுகின்றார். அவ்வுபகாரம் யாதெனில், முறையே சாதனகாலத்தில் ஞானகுருவை ஆவேசித்து நின்று அநுக்கிரகித்தலும், முத்திக்காலத்தில் அத்துவிதமாய் நின்றுசிவானந்தத்தை அநுபவிக்கச் செய்தலுமாம். ஆதலால் இவ்வாறுஞ்சூத்திரத்தில் பதிக்குச் சிறப்பிலக்கணங் கூறியது பொருந்துமென அறிக.

ஐந்தாஞ் சூத்திரத்தால் பாச இலக்கணங் கூறி இச்சூததிரத்தில் எஞ்சிநின்றபதி இலக்கணங் கூறுதலால் சூத்திர இயைபு பெறப்பட்டது. அன்றியும் ஐந்தாஞ் சூத்திரத்திற் கூறப்பட்ட முதல்வன் அறியப்படும் பொருளோ அறியப்படாத பொருளோஎன்னும் ஐயத்தை இச்சூத்திரத்தால் நீக்குதலினாலும் சூத்திர இயைபு பெறபபட்டவாறு காண்க

## சிற்றுரை.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு.

உணருரு வெனின்—(தம்முணர்வின் றம்யாகிய முதற்பொருள்) அளவைகளானறியப்படும் இயல்பிற்றெனின்,—அசத்து—(அங்ஙன மறியப்படும் பிரபஞ்சம்போல் அழிபொருளாகிய) அசத்தாம்,—உணராது (எனின்)—(எவ்வாற்றானும்) அறியப்படாதஇயல்பிற்றெனின்,—இன்மையின்—(அங்ஙனமறியப்படாத முயற்கோடு போலச்) சூனியப் பொருளாம்: ஆகலான்,—இருதிற னல்லது—இவ்விரு பகுதியுமன்றி (ஒருவாற்றானறியப் படாமையும் ஒருவாற்றானறியப் படுதலுமாகிய),—இரண்டுவகையின் சிவசத்தாமென—இரண்டு வகையானும் சிவசத்தாமென—இசைக்கு மன்னுலகே—கூறுவர் மெய்யுணர்வினிலை பெற்றுயர்ந்தோர் எ-று.

உணருரு வெனின் அசத்தென மாறுக. எனினென்பது முன்னருஞ் சென்றியைந்தது.

முற்றும்மைகள் தொக்கன.

அல்லதென்பது வினையெச்சக் குறிப்பு முற்று. அன்றியாமென இயையும்.

ஒரு வாற்றானறியப்படாமை பாசஞான பசுஞானங்களான் அறியப்படாமை. ஒருவாற்று னறியப்படுதல் சிவஞான மொன்றானே அறியப்படுதல். பாசஞான பசுஞானங்களான் அறியப்படாமையிற் சிவமாதலும், பதிஞானத்தா னறியப்படுதலிற் சத்தாதலும் பெறப்படு மென்பார், "இரண்டு வகையிற் சிவசத்தாமென விசைக்கும்" என்றார். சிவசத் தென்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூன்முடிபு. சடமாகிய சத்தினீக்குதற்குச் சிவ சிவசத்து என்றார். சிவசத்தென்பது சித்துச்சத்தென்னும் பொருட்டு.

எழுவாய் மேலைச் சூத்திரத்தி னின்றும் வருவித்துரைக்கப்பட்டது.

இருதிறனுமன்றி இரண்டுவகையானுஞ் சித்தாதலுஞ் சத்தாதலு முடையனாய் நிற்றல் முதல்வனுக் கிலக்கண மென இலக்கணமும் இதனுட் போந்தவாறுணர்க.

முதல்வனுக்குப் பொதுவியல்பு மேற் புனருற்பவ முணர்த்து முகத்தாற் கூறிப்போந்தமையின் இது சொரூப லக்கண மெனப் படுஞ் சிறப்பிலக்கண மெனக் கொள்க

அற்றாகலினன்றே இதனை இலக்கணவோத்துண் முதற்கட் கூறாது உண்மையைச் சாரவைத்து இறுதிக்கட் கூறியதூஉமென்க. இன்னும் முதல்வனுக்குளவாகிய சிறப்பியல்புக் குணங்களெல்லாம் இவ்விரண்டனுளடங்கும். அஃதறிந் தடக்கிக்கொள்க. "தன்னுலே தனையறிந்தாற்—றன்னையுந் தானே காணும்" எ-ம், உன்னரிய திருவருளை யொழியமல முளதென் றுணர்வரிதா மத னுண்மை தெரிவரிதா முனக்கே எ-ம், "மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை—யாயவா ருயிரின் மேவு மருளெனி லொளியாய் நிற்கும்" எ-ம், ஓதியவாற்றால் ஏனைப் பசுபாசங்களுஞ் சிறப்பியல்பு பற்றியுணர்தல் சிவஞானத்தானன்றி அமையாதாயி னும் "தீபமெனத் தெரிந்தாங்—கொருவியான் மாவி னுண்மை புணர்ந்தவர் தமையுணர்ந்தோர்—தருமிது பசுஞானம்" எ-ம், "இவைகீழ் நாட லாலே—காதலின் ஞன்பிரம மென்னு ஞானங் கருதுபசு ஞானம்" எ-ம், பொதுவியல்புபற்றி யோதுதலானும், யானிதனையறிந்தேன் அறிகின்றிலே னென்றறியும் பாச உணர் விற்கு அவற்றது பொதுவியல்பு விடயமாதல் கண்கூடாகப் பெறப்படுதலானும், அவை ஒருவாற்றா னுணருருவாதலுமுடைமை யிற் சிவசத்தாவான் செல்லாமையறிக. சற்காரியவாதங் கூறுஞ் சைவசித்தாந்தத்தில் அசத்தென்பது சத்துக்கு மறுதலை யன்மை யான் அப்பசுபாசங்கள் அங்ஙனமறியப்படும் பொதுவியல்புபற்றி அசத்தெனப்படுமாயினும் சிறப்பியல்புபற்றி அசத்தாதல் செல் லாமையிற் சிறப்பியல்பு நோக்கும்வழி அவை சத்தாதற் கிழுக்கின் மையு மறிக. இங்ஙனஞ் செவ்வனே யிறுக்க அறியாதார் அபா வத்தினியல்பாவது பாவத்திற்கு மறுதலைப் பொருள் போலுமென நையாயிகர் முதலியோர் மதம்பற்றி மயங்கி எல்லாப் பொருளுஞ் சத்தென்னுஞ் சித்தாந்தத்தோடு முரணுமைப் பொருட்டு ஈண்டுச் சத்து அசத்தெனப்பட்டன சித்து அசித்தென்னும் பொருளவா மெனவும், சுத்தம் அசுத்தமென்னும் பொருளவா மெனவும் உரைத்திடர்ப்படுவர். காரியப் பிரபஞ்சம் ஏனைப்பசுபாசங்கள் போலன்றி இருவகை யியல்பானுங் காட்சிப் புலனுய் இத்துணைப் பொழுது நிற்குமென நம்மனோரால் அறியவாராது நிலைபெறுவது

போலத் தோன்றி விரையக்கெட்டு மறைந்துபோதற் சிறப்புடைமைபற்றி அதுவே ஈண்டு 'உணருருவசத்து' என்று எடுத்துக் கொள்ளப்பட்டது. அசத்தெனவே அசித்தென்பதுந் தானே போதரும்.

## விளக்கம்.

(இச்சூத்திரத்தின் பொழிப்புரை.) ஐந்தாஞ்சூத்திரத்திற் கூறிய தம் முணர்வின்றமியாகிய முதற்பொருள் பிரமாணங்களால் அறியப்படுமோ படாதோ என்னும் ஐயம் நிகழுமன்றே? பிரமாணங்களால் அறியப்படுந் தன்மையுடையது எனின், அதனால் அறியப்படும் பிரபஞ்சம் அழியப்படுவதுபோல் அழிபொருளாகிய அசத்தாகும். இனி எவ்வாற்றானும் அறியப் படாத தன்மையுடையது எனின், அவ்வாறு அறியப்படாத முயற்கோடு சூனியமாதல் போலச் சூனியமாகும். ஆதலால் அறியப்படுதல் அறியப் படாமையாகிய இவ்விரு பகுதியுமன்றி ஒருவகையால் அறியப்படாமையும் ஒருவகையால் அறியப்படுதலுமாகிய இருவகை இயல்பினை உடைய சிவ சத்து முதற்பொருளாகுமென உண்மையறிவில் நிலைபெற்ற உயர்ந்தோர் கூறுவர் எ—று.

உணருரு அசத்தெனின் என்பதை உணருருவெனின் அசத்து என மாறுக. எனின் என்பது உணருருவென்பதனோடு சேர்ந்ததுமன்றி உணராதென்பதனோடுஞ் சென்று பொருந்தும். ஆதலால் அறியப்படாத இயல்பிற்றெனின் என்று உரை செய்யப்பட்டது.

இருதிறன் இரண்டுவகை என்றவைகளில் முற்றும்மைகள் விகாரத் தால் தொக்குநின்றன. அவற்றை விரித்து இருபகுதியும் எனவும் இரண்டு வகையானும் எனவும் உரை செய்யப்பட்டது. இனைத்தென அறிந்த பொரு ளின்மேல் வந்த உம்மையாதலால் முற்றும்மையாயிற்று.

இருதிறன் அல்லது என்பதில் உள்ள அல்லது என்னுங்குறிப்பு வினை முற்று அன்றியெனக் குறிப்பு வினையெச்சப்பொருளில் வந்தமையால் வினை யெச்சக்குறிப்பு முற்று.

அன்றியென்னும் அவ்வினையெச்சம் சிவசத்தாம் என்பதிலுள்ள ஆம் என்னும் வினைகொண்டு முடிந்தது.

சிவசத்தாகிய முதல்வன் ஒருவாற்றான் அறியப்படாமையாவது, பாச ஞானத்தாலும் பசுஞானத்தாலும் அறியப்படாமை. ஒருவாற்றானறியப் படுதலாவது, சிவஞான மொன்றானே அறியப்படுதல். பாசஞானம், பசு ஞானம், பதிஞானம் என்னும் மூவகை ஞானங்களினியல்பு முன்னர் ஒன்ப தாஞ் சூத்திரத்துட் கூறப்படும். பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும்

அறியப்படுவது சடப்பொருளே யாதலால் அவ்விரண்டினாலும் அறியப் படாதபொருள் சிவமாதலும், பதிஞானத்தால் அறியப்படும் பொருள் ஏனைய பாசஞான பசுஞானங்களால் அறியப்படும் பொருள்போல் அநித்த மாகாமையால் சத்தாதலும் பெறப்படுமெனக் கூறவேண்டி இரண்டு வகை யிற் சிவசத்தாமென இசைக்குமென்றார். இன்னும் பாசஞான பசுஞானங் களால் அறியப்படாத என்றதனால் அறியப்படாமைபற்றிச் சூனியமோ என்னும் ஐயம் நிகழாமைப் பொருட்டுச் சிவமெனவும், பதிஞானத்தால் அறியப்படும் என்றதனால் அறியப்படுதல்பற்றி அழிகின்ற பொருளாமோ என்னும் ஐயம் நிகழாமைப் பொருட்டுச் சத்து எனவுங் கூறவேண்டி இரண்டுவகையிற் சிவசத்தாமென இசைக்குமென்றார் என்றலும் ஒன்று. சிவசத்து என்பது சிவமாகிய சத்தென்னும் பொருளைக்குறித்து நிற்றலால் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. சிவமென்னும் பெயர்ச்சொல்லும் சத்து என்னும் பெயர்ச்சொல்லும் ஒட்டி (சேர்ந்து) ஆகிய என்னும் பண் புச்சொல் தொக்கு நிற்றலால் இருபெயரொட்டுப் பண்புத் தொகை யாயிற்று. இது தமிழ் இலக்கணப்படி சிவச்சத்து என்றிருத்தல் வேண்டும். அவ்வாறன்றி சிவசத்து என்றது வடநூல் முடிபு. வடமொழியில் ஒற்று இரட்டிக்காது. சிவசத்து என்பது சிவமாகிய சத்து என்னும் பொருளைக் குறிபபதாயின் சத்து என்றே கூறினால் போதாதோ எனின், போதாது. எதனாலெனின், பதி பசு பாசம் என்னும் மூன்றும் நித்தப்பொருள்களாத லின் மூன்றும் சத்தேயாம். அம்மூன்றனுள் பதியும் பசுவும் சித்துப் பொருள். பாசம் சடபொருள். பசு தனித்து நிற்பதில்லை. பாசத்தை யேனும் பதியையேனும் சார்ந்தே நிற்கும். ஆகவே, பாசம் சடசத்தென வும் பதி சிவசத்தெனவும் பசு சிற்சடசத்தெனவும் பெயர் பெறும். பெறி னும் மூன்று சத்தும் சடசத்து சிவசத்து என்னும் இரண்டனுள் அடங்கும். அவ்விரண்டனுள், சடசத்தில் நின்றும் நீக்குதற்குச் சிவசத் தென்று கூறி னர். சிவஎன்னும் சொல்லில் சிகரம் எவற்றையுந் தன்னுளடக்கிக் கடந்து நிற்றலையும் வகரம் எவற்றுடனுங் கலந்து நிற்றலையுங் குறிக்கும். குறிக்கவே கடந்தும் கலந்தும் நிற்பதுவியாபகம் எனப்படும். வியாபகம் சடமாகிய ஆகா யத்திற்கும் மலத்திற்கும் இருத்தலால் அந்த வியாபகத்தைப் போலன்றி அறி வுடைய தாதலின் சிவம் என்பது சித்து என்னும் பொருளைக் குறிக்கும். குறிக்கவே, சிவசத்து என்பது சித்துச் சத்து என்பதாம். உயிரும் சித்துச் சத்தெனப படுமாயினும் தனித்து நிற்கமாட்டாத குறையுடையது; ஆதலின், அதற்குச் சிறபபாகச் செல்லாது. செல்லாதாகவே, குறையே துன்பத்திற் கேதுவாதலின் குறையில்லாத இச்சித்துச் சத்தே இன்பப் பொருளாகும். ஆகவே, பாசத்திற்குச் சத்துத்தன்மை மட்டும் உண்டெனவும், பசுவுக்குச் சித்துச் சத்துத்தன்மை பொதுவாக உண்டெனவும், பதிக்குச் சித்துச் சத்து ஆனந்தம் மூன்றும் சிறப்பாக உண்டெனவும் உணர்ந்துகொள்க.

தம்முணர்வின்றமியாகிய முதல்வன் என்னும் எழுவாய் மேலைச் சூத் திரத்தில் நின்றும் வருவிக்கப்பட்டது.

இச்சூத்திரத்தில் சத்தின் இலக்கணமும் அசத்தின் இலக்கணமுங் கூறியதோடு அறியப்படுதல் இன்றி என்றதனால் பாசஞான பசுஞானங் கட்கு அறியப்படான் எனப்பட்டுச் சித்தாதலும், அறியப்படாமை இன்றி என்றதனால் பதிஞானத்திற்கு அறியப்படுவான் எனப்பட்டுச் சத்தாதலும் உடையனாய் நிற்றல் முதல்வனுக்கு இலக்கணமென முதல்வன் இலக்கண முங்கூறி முடித்தவாறு அறிக.

முதல்வனுக்குப் பொதுவிலக்கணம் மேல் இரண்டாஞ் சூத்திரத்தில் புதுச்சிருட்டி கூறு முகத்தாற்கூறி முடித்தமையால் இச்சூத்திரத்திற்கூறிய இலக்கணம் சிறப்பிலக்கணம் எனக்கொள்க. உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்றல் பொதுவிலக்கணமும் சித்துச் சத்தாய் நிற்றல் சிறப்பிலக்கணமுமாம். இது சிறப்பிலக்கண மாதலால் இச்சூத்திரத்தை இலக்கண வியலுள் முதலாவதாகக் கூறாமல் சிறப்பிலக்கணம் கூறும் உண்மைஅதிகாரத்தைச் சாரவைத்து இலக்கணவியலுள் இறுதிக்கண் கூறியதாமென்க. இன்னும் முதல்வனுக் குளவாகிய சிறப்பியல்புக் குணங்களெல்லாம் சித்துச் சத்து என்னும் இவ்விரண்டனுள் அடங்கும். அஃதறிந்தடக்கிக்கொள்க.

முதல்வனுக்குரிய சிறப்பியல்புக் குணங்களாவன:—தன் வயத்தனாதல் முதலிய எட்டுமாம். இவ்வெண் குணங்களும் சத்துச்சித்து ஆனந்தம் என்னும் மூன்றனுள் அடங்குமேனும் ஆனந்தமும் சித்தை யின்றி யில்லாமையால் எல்லாக் குணங்களும் சத்து சித்து என்னும் இரண்டனுள் அடங்கும். எவ்வாறெனின், எக்காலத்தும் ஒரு தன்மையாயிருக்கும் சத்துக்குத்தான் தன்வயமாந்தன்மை கூடும். ஆதலால் தன்வயம் சத்தில் அடங்கிற்று. தூய வுடம்பே சித்தெனப்படும். அந்தச்சித்தின் பேதமே இயற்கையா யுணர்தல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களி னீங்குதல், பேரருள், முடிவிலாற்றல், வரம்பிலின்பம் என ஆறுவகையாயினவாம். ஆதலால் ஏழு சித்தில் அடங்கும். "ஈறிலாப் பதங்கள்யாவையுங் கடந்த இன்பமே" என்னும் மணிவாசகப்பெருமான் திருவாசகத்தால் இன்பம் சித்திலடங்கு மென்பதை யறிக. இத்திருவாக்கில் கடந்த என்பது பாசஞான பசுஞானங்களைக் கடந்த சித்தென்றாகி கடந்த இன்பமே என்றதனால் சித்தாகிய இன்பமே என்றருளியவாறாம்.

முதல்வன் சிவஞானத்தால் அறியப்படுவன் எனின், பசுபாசங்கள் சிவஞானத்தால் அறியப்படா திருத்தல்வேண்டும். சிவப்பிரகாசம் அ-ம் சூ-ம் உ-வது செய்யுளில் பதிஞானத்தால் பதியைத் தரிசித்தால் உயிராகிய தன்னையுங் காணும் என்பதனால் பசுவும், ஷை நூல் உ-ம் சூத்திரம் கஅ-வது செய்யுளில் திருவருளைக்கொண் டன்றி ஆணவமலம் உண்டென்று அறிதல் கூடாது எனவும், ஷை நூல் எ-ம்சூத்திரம் உ-வது செய்யுளில் இருவித மாயையும் இருவினையும் உயிர் அருளைக்கூடிய விடத்து ஒளியாய் நிற்கும்

எனவும் ஓதியவாற்றால் பாசமும் சிவஞானத்தால் சிறப்பியல்புபற்றி உணர்தல் கூடுமென்பது பெறப்படுதலால், முதல்வன்போல் பசு பாசங்களும் சித்துச்சத்தாதல் கூடுமோஎனின், கூடாது; எவ்வாறெனின், சிவஞான சித்தியார் சு-ம் சூ-ம் உ-வதுசெய்யுளில் கண்ணுக்கு விளக்குத் துணையாவது போல ஆன்மாவிற்குக் கருவி துணையெனத்தெரிந்து கருவியை நீக்கி ஆன்மாவை உணர்தலும், கூ-ம் சூ-ம் உ-வது செய்யுளில் கருவிகள் தன்கீழ் அடங்கியன வென்றறிந்து அவற்றை நீக்கின விடத்துத் தன்னைப்பிரமமென்று உணர்தலும் பசுஞான மென்பது பெறப்படுதலாலும், அவ்வாறு உணரப்பட்ட பாசத்தின் இயல்பும் பசுவின் இயல்பும் பொதுவியல்பே யாதலாலும், பசுவும் பாசமும் சிறப்பியல்பு பற்றிச் சிவஞானத்தால் உணரப்படுவதோடு பொது வியல்புபற்றிப் பசுஞானத்தாலும் உணரப்படு மென்றவாறாயிற்று. அன்றியும் யான் இதனையறிந்தேன் அறிகின்றிலேன் என்றவிடத்து அறிதலும் அறியாமையும் கருவிகளின் வாயிலாக நிகழ்வனவாகும்; கருவிகள்பாசமாதலால் அவைவாயிலாக நிகழும் ஞானம் பாசஞானம். இதனை என்றதனால் பாசத்தையும், அறிந்தேன் அறிகின்றிலேன் என்றதனால் பசுவையும் பொது வியல்புபற்றிப் பாசஞானத்தால் அறிதல் கூடுமென்பது பெறப்பட்டது. படவே, சிவஞானத்தால் பசுபாசங்களின் சிறப்பியல்பும் பசுஞான பாசஞானங்களால் அவற்றின் பொது வியல்பும் உணரப்படு மென்றாகிச் சிவஞான மொன்றாலன்றிப் பசுபாச ஞானங்களால் உணரப்படாத முதல்வன்போல் சித்துச்சத்தாதல் கூடாமையறிக. பசு பாசங்களின் பொதுவியல்பு சிறப்பியல்பு கஅ-பக்கத்திற் காண்க.

பொதுவியல்புபற்றிப் பசுஞான பாசஞானங்களால் பசுவும் பாசமும் உணரப்படுமாயின், அவை ஒருவாற்றான் உணருருவெனப்பட்டு, உணருருவெனின் அசத்து என்று சூத்திரத்திற் கூறியவாறு பசுபாசங்களும் அசத்தாகாதோ எனின், ஆகாது; என்னையெனின், உள்ளது காரியப்படும் என்று கூறும் சைவசித்தாந்தத்தில் அசத்தென்பது சத்துக்கு மறுதலையான இன்மையன்று. ஆகவே, அப்பசுபசுபாசங்கள் பசுஞான பாசஞானங்களால் அறியப்படும் பொதுவியல்புபற்றி அசத்தெனப்படுமாயினும், சிவஞானத்தால் அறியப்படும் சிறப்பியல்புபற்றி அசத்தாதல் செல்லாமையால் என்க. எனவே, சிறப்பியல்புபற்றி அவை சத்தாதற்கு இழுக்கின்மை அறிக. சத்து என்பது முக்காலத்தும் ஒரு தன்மையாயுள்ளது; அசத்து என்பது மூக்காலத்தும் ஒரு தன்மையாயில்லாதது. இவ்வளவே சத்து அசத்து என்பதற்குச் சைவசித்தாந்தத்திற் கூறப்படும் பொருள். அசத்திற்குப் பொருள் இதுவே என்பதை "யான் இப்பொழுது அசத்தனாயிருக்கின்றேன்" எனக்கூறும் உலகவசனத்தாலும் அறிக.

பாசஞான பசுஞானங்களால் அறியப்படும் பசுபாசங்களும் ஒருவாற்றான் உணருரு வெனப்படுதலால் அசத்தாகாதோ என்னுங் கேள்விக்குப்

பொதுவியல்புபற்றி அசத்தாயினும் சிறப்பியல்புபற்றிச் சத்தாதற்கு இழுக்கில்லையென விடைகூற அறியாதார், அபாவத்தின் தன்மையாவது பாவத்திற்கு மறுதலைப்பொருள் என்னும் நையாயிகர் முதலியோர் மதம்பற்றி மயங்கிச் சைவசித்தாந்தச் சார்புடையார் போன்று எல்லாப்பொருளுஞ் சத்தென்னுஞ் சித்தாந்தத்தோடு முரணுதிருக்கும்பொருட்டு இச்சூத்திரத்தில் ... அசத்து எனக்கூறியதற்குப் பொருள் சித்து அசித்து எனவும், சுத்தம் அசுத்தம் எனவும் கூறி யிடர்ப்படுவர். பாவம் என்பது உண்மை. அபாவம் என்பது இன்மை. இவ்வாறு கொள்வோர் நையாயிகர். அவர் கருத்தின்படி சத்து அசத்திற்குப் பொருள்கூறின் சத்து உள்ளது அசத்து இல்லாதது என்றாகிச் சித்தாந்தத்தோடு முரணுமாதலால் சத்து அசத்து என்பதைச் சித்து அசித்து எனவும் சுத்தம் அசுத்தம் எனவும் மாற்றிக்கொண்டு சித்து அறிவுடையது அசித்து அறிவில்லாதது எனவும், சுத்தம் சுசியாயிருப்பது அசுத்தம் சுசியில்லாதிருப்பது எனவும் கூறுவர். ஒரு வாக்கியத்தைப் பிறிதொரு வாக்கியமாகமாற்றிப் பொருளுரைத்தல் பொருந்தாதாகும்.

அசத்து என்பதற்கு மேற்கூறியதே பொருளாயின் இச்சூத்திரத்தில் உணருருவெனின் அசத்து என்பதற்கு அழிபொருளாகிய அசத்தாம் என உரைத்ததன் கருத்தென்னையெனின், பசுபாசங்கள் பொதுவியல்பால் அசத்தும் சிறப்பியல்பால் சத்துமாதல்போல அன்றிக் காரியப்பிரபஞ்சம் பொதுவியல்பு சிறப்பியல்பு இரண்டானும் கண்ணுல் காண்பதற்கு விடயமாய் இத்துணைப்பொழுது நிற்குமென நம்மனோரால் அறியமுடியாது நிலைபெறுவதுபோலத் தோன்றி விரைவிற் கெட்டு மறைந்துபோகுஞ் சிறப்புடையது ஆதலால், அந்தக் காரியப்பிரபஞ்சமே இச்சூத்திரத்தில் உணருரு அசத்து என்றெடுத்துக் கொள்ளப்பட்டது என்றறிக. அசத்தென்று கூறியதனுலேயே அறிவில்லாத சடமென்பதுந் தானே விளங்கும். ஆதலின் அசித்து என யாற்றவேண்டாமை யறிக.

காரியப்பிரபஞ்சம் பொதுவியல்பு சிறப்பியல்பு இரண்டானும் கண்ணுற் காண்பதற்கு விடயமாவது எவ்வாறெனின், ஒருவனை மனிதன் எனக் காணுதல் பொதுவியல்பு. பிராமணன் முதலிய சாதியைக்காணுதல் சிறப்பியல்பு. இவ்வாறே எல்லாப் பொருளிடத்துங் காண்க.

## சிற்றுரை.

இதனுள், உணருருவசத்தெனி (னுணராதின்மையி) ன்னை றது ஓரதிகரணம்; இருதிறனல்லது சிவசத் தா(மென) இரண்டு வகையி(னிசைக்குமன் னுலகெ)ன்றது ஓரதிகரணம். ஆக இரண்டதிகரணத்தது இச் சூத்திரமென்றுணர்க.

## விளக்கம்.

வெ—டை.

# முதலதிகரணம்.



சுட்டறிவினால் அறியப்படும் பொருள் அசத்தெனக்கூறும்

மேற்கோள்.

ஈண்டு அறிவினா லறியப்பட்ட சுட்டு அசத்தென்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், மேலைச் சூத்திரத்தின் அளந்தறிந் தறியா வென்றதனை உடம்படாது பிரபஞ்சம்போல முதல்வனும் அளவைகளான் அளந்தறி பொருளேயாமென நையாயிகர் முதலியோர் கூறுங் கடாவையும், எல்லாப் பொருளுஞ் சத்தாகலின் அளந்தறி பொருளுஞ் சத்தேயாமெனச் சாங்கியர்கூறுங் கடாவை வையு மாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ—ள்.) சுட்டறிவினால் அறியப்பட்ட சுட்டுப்பொருளெல் லாம் அசத்து எ—று.

சுட்டு ஆகுபெயர்.

சிவஞானத்தா லறியப்படுதலை நீக்குதற்கு அறிவினாலென விசேடித்தார்.

ஈண்டு அறிவென்றது ஒன்றை முந்தி அதுவதுவாகச் சுட் டிக் காணும் (அளவை) அறிவினையென்பது "அறிவினாலறிந்த யாவும் அசத்தாதலறிதி" என்ற புடைநூலாசிரியர் மீள அங்ஙனந் தெரித்தோதியவாறு பற்றி யுணர்ந்துகொள்க.

## விளக்கம்.

இது சூத்திரத்திலுள்ள உணருருவசத்தெனின் உணராதின்மையின் என்ற முதற்கூற்றைப் பதச்சேதஞ்செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோவெனின், ஐந்தாஞ் சூத்திரத்தில் தம்மையும் தம்மை விடயங்களிற் செலுத்தி நிற்கும் முதல்வனையும் உயிர்கள் அறியமாட்டா வென்று கூறியதனை உடம்படாது பிரபஞ்சம் அறியப்படுவதுபோல முதல்வனும் அறியப்படும் பொருளேயாமென நையாயிகர்

முதலியோரும், அங்ஙனமாயின் பிரபஞ்சம்போல முதல்வன் அசத்தாவனே வென்னும் ஐயம் நிகழாதவண்ணம் எல்லாப் பொருளுஞ் சத்தாதலால் சுட்டி அறியப்படும் பொருளுஞ் சத்தேயாமெனச் சாங்கியருங் கூறுவர். அவ்விருவர் கூற்றையும் ஆசங்கித்துக்கொண்டு சூத்திரத்தின் முதற்கூற்றைப் ப[illegible]ச்சேதஞ்செய்து சுட்டறிவினல் முதல்வன் அறியப்படான் என்பதைச் [illegible]ப்பாக உணரவைத்து அச்சுட்டறிவினல் அறியப்பட்ட பொருள் அசத்து [illegible]ங் கூறியவாறும்.

இ[illegible]திகரணத்தில் முதல்வன் சுட்டி அறியப்படும் பொருளோ சுட்டி அறியப்ப[illegible] பொருளோ என்பதும், சுட்டறிவினல் அறியப்படும் பொருள் சத்[illegible]சத்தோ என்பதும் ஐயப்பாடுகள். முதல்வன் சுட்டி அறியப்படும் பொ[illegible]ளென்பதும், சுட்டறிவினல் அறியப்படும்பொருள் சத்தென்பதும பிறர்பக்கம். இவ்வாறு கூறுவோர் நையாயிகரும் சாங்கியரும் என அறிக.

(இம்மேற்கோளின் பொருள்.) இம்முதலதிகரணத்தில் மனத்தால் கருதி அறிவதாகிய சுட்டறிவினல் அறியப்பட்ட சுட்டுப்பொருளெல்லாம் அசத்து எ-று.

சுட்டு என்பது சுட்டுப்பொருளைக் குறித்தமையால் ஆகுபெயர்.

அறியப்பட்ட என்றதனுலேயே அறிவினல் அறியப்பட்ட என்பது தானே விளங்குவதாயிருக்கவும், அறிவினலென்று விசேடித்தது எதற்காக எனின், சி[illegible]ானத்தாலும் அறிதல் கூடுமாதலால் அதனை நீக்குதற்கு அறிவி[illegible] விசேடித்தார். அறிவென்றது சுட்டியறியும் அறிவைக [illegible]லென [illegible]னின், சிவஞானத்தைச் சிவஞானம், பதிஞானம், ப[illegible] குறிக்கும். எதனுலெ[illegible]ய்யுணர்வு, தத்துவஞானம், அநுபவஅறிவு என்று ஞானம், ஞானம், மெ[illegible] கூறுதலில்லை. கருவிகளோடு கூடியறியும் கூறுதலேயன்றி அறிவு என்று [illegible]ப்படும் ஆதலாலென்க. இக்கருத்துப் அறிவைத்தான் அறிவென்று கூ[illegible] மெய்ப்பொருளை அறிதலை, துறவற பற்றியே, கருவிகளில் நீங்கிநின்று [illegible]என்றும், கருவிகளோடுகூடி வியலுள் ஞானப்பகுதியில் மெய்யுணர்த[illegible] ஆசியற்பகுதியில் அறி நின்று உலகப்பொருளை அறிதலை, பொருட்பாலுள் வுடைமையென்றும் திருக்குறளாசிரியர் வகுத்தருளியதுங் காண்க.

இவ்வாறன்றிச் சுட்டு அசத்து என்றதனுல் சுட்டறிவினல் என்று பொருள்கொள்ளக் கூடாதோ எனின், கூடாது. எதனுலெனின், சிவஞானத்தால் முதல்வன் அறியப்படுங் காலத்து முதற்கண் சுட்டியறியப்பட்டுப் பின்னர்ச் சுட்டிறந்தறியப்படுவன். இதனை "உணர்ந்தார்க் குணர்வரியோன் தில்லைச்சிற்றம்பலத்தொருத்தன்" என்ற திருக்கோவையாரு[illegible] [illegible] ஆகவே சுட்டுப்பொருளா[illegible] அசத்தாதல சிவஞானத்தால் [illegible]

தற்குங் கூடுமாதலால் அறிவு என்றதுகொண்டே சுட்டறிவென்று உரைக்க வேண்டுமென்க.

அறிவினால் என்றது மேற்கூறியவாறு ஒன்றை முந்தி அதுவது வாகச் சுட்டிக்காணும் கருவிகளோடு கூடிய அளவையறிவினை யென்பது சிவப்பிரகாசம் ௩-ம் சூத்திரம் ௬-வது செய்யுளில் "அறிவினால் அறிந்தயாவும் அசத்தாதல் அறிதி" என்ற புடைநூலாசிரியர், அறிவினால் அறிந்த என்றதற்குப் பொருளை விளக்க எண்ணி மீள அச்செய்யுளிலேயே "அறிவுதானொன்றை முந்தியதுவதுவாகக்காணும்" என்று ஓதியவாறு பற்றியும் உணர்ந்துகொள்க.

சுட்டியறியப்படும் பொருள் அசத்தென்பதற்குக் காட்டு

ஏ து.

அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.

சிற்றுரை.

ஏ—து ஏது எ—னின், உள்ளதென்னு முணர்விற்கு விடயமாய் உபலத்தியைப் பயப்பிக்கும் பிரபஞ்சத்தை இல்லையென்னு முணர்விற்கு விடயமாய் அநுபலத்தியைப் பயப்பிக்கும் இல்பொருளோடொப்ப அசத்தென்றல் அமையுமாறியாங்ஙனமெனவும், சத்தாகிய பிரபஞ்சத்தைச் சுட்டப்படுதன்மாத்திரையான் அசத்தென்றல் சற்காரியவாதத்திற்கிழுக்காம்போலு மெனவும், முறையே அவ்விருவர் மதம்பற்றிக் கூறுவாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) அச்சுட்டுப் பொருள்கடாம் [illegible] பாட்டான் உள்ளதென்னும் உணர்வி[illegible] இராசதகுண மிகுதிப் யைப் பயப்பித்துநின்றதானே [illegible]ற்கு விடயமாய் உபலத்தி இல்லையென்னு முணர்விற்கு [illegible] தாமதகுணமிகுதிப்பாட்டான் பித்து நிற்றலின் 'ஈண்டு [illegible] விடயமாய் அநுபலத்தியைப் பயப் மேற்கொண்டது எ—று. [illegible]அறிவிஞலறியப்பட்ட சுட்டு அசத்'தென

ஈண்டுப் பிரகாசம் அப்பிரகாசமென்பன உபலத்தி அநுபலத்தியென்னும் பொருளவாய் அவை நிகழ்தற் கிடனாகிய பொருள் மேனின்றன.

இது நையாயிகரை நோக்கி மேற்கோளைச் சாதித்தவாறு. இனி, இதனை இரட்டுறமொழிந்து கொண்டு அவைதாங் காரியவவத்தையிற்றாலமாய் விளங்கி நின்றே காட்சிப்புலனாய்ச் சடிதியின் மறை

ந்து சூக்குமமாய்க் காரணவவத்தையின் விளங்காது நிற்கும் இவ் வேற்றுமை யுடைமையான், அங்ஙனம்புலனாகாத காரணப்பொருள் களை நோக்கிக் காரியப் பிரபஞ்சம் அசத்தாதல் சாலுமாகலின் 'ஈண் டறிவினு லறியப்பட்ட சுட்டு அசத்து'என மேற்கொண்ட தென்ற வாறு எனவும் உரைத்துக்கொள்க.

## விளக்கம்.

இந்தஏது என்ன சொல்லிற்றோ வெனின், சுட்டியறியப்படும் பொரு ளாகிய பிரபஞ்சம் உள்ள தென்று உணரும் உணர்விற்கு உணரப்படும் பொருளாயிருந்து உள்ளதென்று உணரும் அறிவை உண்டுபண்ணும். அப்பி ரபஞ்சத்தை இல்லையென்னும் உணர்விற்கு விடயமாய் இல்லை யென்றுண ரும் அறிவை உண்டுபண்ணும் இல்பொருளோடு ஒப்ப அசத்தென்று மேற் கோளில் கூறியது எவ்வாறு பொருந்துமென நையாயிகர் மதம்பற்றியும், சத்தாய் உள்ள பிரபஞ்சத்தைச் சுட்டிஅறியப்படுதென்மாத்திரையால் அசத் தென்று கூறினுல் உள்ளது காரியப்படும் என்னுஞ் சற்காரியவாதத்தில் பிர பஞ்சமும் சத்தேயாம் என்பதற்கு இழுக்காமெனச் சாங்கியர்மதம் பற்றியும் நிகழும் வினவை ஆசங்கித்துக்கொண்டு முறையே அவ்விருவரையு மறுத்து மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(இந்த ஏதுவின்பொருள்.) மேற்கோளிற் கூறிய அச்சுட்டுப் பொருள்க ளாகிய பிரபஞ்சம் இராசதகுண மேம்பாட்டால் சிருட்டித் தொழிலைச் செய்யும் பிரமாவினல் சிருட்டிக்கப்பட்டபொழுது உள்ள தென்று உண ரும் உணர்விற்கு விடயமாய்க் காணப்பட்டு உள்ளதென்று உணரும் உணர் வை (உபலத்தியை) உண்டுபண்ணும்; அப்பிரபஞ்சந்தானே தாமதகுண மேம்பட்டால் அழிக்குந் தொழிலைச் செய்யும் உருத்திரனுல் அழிக்கப்பட்ட பொழுது இல்லையென்று உணரும் உணர்விற்கு விடயமாய்க் காணப்படா மல் இல்லையென்று அறியும் அறிவை (அநுபலத்தியை) உண்டு பண்ணும்; ஆகவே, உள்ளதென்று உணரும் பிரபஞ்சம் இல்லை யென்று உணரவும் படு மாதலால் ஈண்டு அறிவினு லறியப்பட்ட சுட்டு அசத்து எனமேற்கோளிற் கூறியவாறும் எ—று.

பிரமா விட்டுணு உருத்திரர் என்னும் மூவரும் இராசதம் சாத்துவிகம் தாமதம் என்னும் முக்குணம் உடையவர். இவ்விடத்தில் உருத்திரர் என் றது மகாருத்திரராகிய பரமசிவனையன்று; குணிருத்திரரை என்க. திருவாச கம் சென்னிப்பத்தில் "மூவராலும் அறியொணு முதலாய ஆனந்தமூர்த்தி யான்" என்று மணிவாசகப்பெருமான் அருளிச்செய்தமையானும் மகா ருத்திரர் வேறு குணிருத்திரர் வேறு என்பது நன்கு விளங்கும். முக்குணங் களுள் சாத்துவிகம் சாந்தத்தையும், ராசதம் பிரவிருத்தியையும், தாமதம்

அறிவின் அழிவையுஞ் செய்யும். இம் முக்குணங்களுள் ஒரு குணம் மேற்பட்டபொழுது மற்றையிரண்டு குணங்களும் அடங்கியிருக்கும். ஆதலால், பிரவிருத்தியாகிய சிருட்டியைச் செய்யுங்கால் இராசதகுணம்மேற்பட்டிருத்தல்பற்றிப் பிரமாவை இராசதகுணமூர்த்தி யென்றும், சாந்தமாகிய காத்தலைச் செய்யுங்கால் சாத்துவிககுணம் மேற்பட்டிருத்தல்பற்றி விட்டுணுவைச் சாத்துவிககுணமூர்த்தி யென்றும், அழித்தலைச் செய்யுங்கால் தாமதகுணம் மேற்பட்டிருத்தல்பற்றி உருத்திரரைத் தாமதகுணமூர்த்தி யென்றும் நூல்கள் கூறும். நையாயிகருக்கு மூர்த்திபேதம் இல்லையாதலால் காணப்படும் நிலையை இராசதகுண மிகுதிப்பாட்டால் எனவும், காணப்படாத நிலையைத் தாமதகுண மிகுதிப்பாட்டால் எனவும், உரையாசிரியர் கூறியவாறென அறிக.

இந்த ஏதுவில் பிரகாசம் என்றது உண்டு என்று உணரும் உணர்வினையும், அப்பிகாசம் என்றது இல்லையென்று உணரும் உணர்வினையும் குறித்து, உண்டு இல்லை என்னும் உணர்வு தொழிற்படுதற்கு முன்னிலையாகிய விடயத்தின்மேல் நின்றன. ஆதலால் பிரகாசமாயென்பதற்கு உண்டு என்னும் உணர்விற்கு விடயமாயென்றும், அப்பிரகாசமா யென்பதற்கு இல்லை என்னும் உணர்விற்கு விடயமா யென்றும் உரை செய்யப்பட்டது.

ஏதுவிற்குக் கூறிய இந்த உரை உள்பொருளாகிய பிரபஞ்சத்தை இல்பொருளோடொப்ப அசத்தென்றல் எவ்வாறு பொருந்தும் என்னும் முதற் சங்கைக்குரிய நையாயிகரை நோக்கிச் சமாதானங்கூறி மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

இனி உள்ளதாகிய பிரபஞ்சத்தைச் சுட்டப்படுதல் மாத்திரையால் அசத்தென்றல் பொருந்தாதென்னும் சாங்கியர் கூறும் இரண்டாவது சங்கைக்கு இந்த ஏதுவை இரட்டுறமொழிந்துகொண்டு கூறும் பொருள் வருமாறு:—

அச்சுட்டுப் பொருள்கள் தாம் காரியப்பொருளாய் விளங்கும் அவத்தையில் தூலமாய் விளங்கி நின்றே காணப்படும் பொருளாயிருந்து, அவ்வாறே என்றும் இராமல் சடுதியில் மறைந்து சூக்குமமாய்க் காரணப்பொருளாய் விளங்கும் அவத்தையில் விளங்காதாகும். இவ்வாறு விளங்குதல் விளங்காமை ஆகிய வேற்றுமை உடைமையால் காரண அவத்தையில் சுட்டப்படாமை நோக்கிக் காரிய அவத்தையில் சுட்டப்படும் பிரபஞ்சம் அசத்தாதல் கூடும்; ஆதலின், ஈண்டு அறிவினு லறியப்பட்ட சுட்டு அசத்து என மேற்கோள் கூறியதாக. உரைத்துக் கொள்க.

இந்த இரண்டாவது உரைக்குப் பிரகாசம் என்பதற்கு விளக்கமும் அப்பிரகாசம் என்பதற்கு விளக்கம் இல்லாமையும் பொருளாம்.

காரிய அவத்தை காரண அவத்தைகள் எதுபோலவெனின், கடம் தோன்றும் அவத்தை காரியஅவத்தை; கடம்தோன்றாமல் மண்ணில் ஒடுங்கி

மண்மாத்திரம் தோன்றும் அவத்தை காரண அவத்தை. இவ்வாறே பிரபஞ்சம்தோன்றும் அவத்தை காரியஅவத்தை; பிரபஞ்சம் தோன்றாமல் மாயையிலொடுங்கி மாயை மாத்திரம் தோன்றும் அவத்தை காரண அவத்தை. காரியம் சுட்டப்படுவதாய் நிலையில்லாத அசத்தாகும். காரணம் சுட்டப்படாததாய் நிலையுடைய சத்தாகும். காரணத்தையின்றிக் காரியம் இல்லாமையால் எல்லாப்பொருளும் சத்தென்று சைவசித்தாந்தம் கூறும்; இவ்வளவேயன்றிக் காரியப் பொருள்கள் அசத் தென்பதைச் சைவசித்தாந்தம் மறுக்காது.

இந்த ஏது பிரபஞ்சம் அழியப்படுதல் பற்றி அசத்தாகு மாதலால் அதுபோல முதல்வன் சுட்டியறியப்படான் என நையாயிகரையும், காரணத்தில் சுட்டி யறியப்படாமையும், காரியத்தில் சுட்டியறியப்படுதலுமாகிய வேற்றுமைபற்றிச் சுட்டறிவினால் அறியப்பட்ட பொருள் அசத்தெனச் சாங்கியரையும் மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

சுட்டியறியப்படும் பொருள்கள் அசத்தென நையாயிகருக்குக் காட்டும் உதாரணம்.

அசத்தறியாய் கேணீ யறிவறிந்த வெல்லா
மசத்தாகு மெய்கண்டா னாயின்—

சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், ஒருசாரன அங்ஙனமாயினும் உபலத்திப் பட்டனவெல்லாம் அவ்வாறு அசத்தாமென்றற்குப் பிரமாணமென்னை என்னு நையாயிகரைநோக்கி ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ—ள்.) அசத்து அறியாய் நீ கேள்—அசத்தினியல்பை யறியாத மடவோனே (யாமிறுக்கு மிறையை) நீ (மனம்பற்றிக்) கேட்பாயாக,—மெய் கண்டான் ஆயின் அறிவுஅறிந்த எல்லாம் அசத்து ஆகும்—சத்தினியல்பை அறிந்தோன் ஆராய்ந்தானாயின் அறிவினாலறியப்பட்டன வெல்லாம் அசத்தேயாம் எ-று.

அறியாய் என்பது விளியுருபேற்ற பெயர்.

அசத்தினியல்பை அறிந்தாயாயின் இவ்வாறு பிணங்குவாயில்லை யென்பார் அசத்தறியாய் என்றும், "ஏந்தை தாட்பால்வணங்கித் தலைநின்று கேட்க" என்பார் கேணீ என்றும், உபலத்திக்குபமானவை எல்லாம் அநுபத்திக்கு விடயமாதல் ஒருதலையென்

பார் அறிவறிந்த வெல்லாம் அசத்தாகு மென்றும், சத்தினியல் புணர்ந்தார்க் கன்றி அசத்தினியல் புணர வாராதென்பார் மெய்கண் டானென்றும், ஆய்தற் கருமை நோக்கி ஆயினென்றுங் கூறினார்.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) அசத்து அறியாய் நீ கேள் மெய்கண்டான் ஆயின் அறிவு அறிந்த எல்லாம் அசத்து ஆகும்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோ வெனின், சுட்டுப் பொருள் களுள் சில பொருள்கள் மேற் கூறியவாறு அசத்தாயினும் உள்ளதெனக் காணப்படும் பொருள்களெல்லாம் அவ்வாறு அசத்தா மென்று கூறுதற்குப் பிரமாணம் என்னை என்பர் நையாயிகர். அவரை நோக்கிச் சுட்டுப் பொருள் கள்யாவும் அசத்தே எனக்கூறி அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாச மாய் நிற்றலால் என்னும் ஏதுவை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) அசத்தினியல்பு இது வென்று அறியும் அறிவில்லாத வனே! யாம்கூறும் சமாதானத்தை நீ மனம்பற்றிக் கேட்பாயாக. சத்தினி யல்பை அறிந்தோன் ஆராய்ந்தானாயின் சுட்டறிவினாலறியப்பட்டன வெல் லாம் அசத்தேயாம் எ-று.

அசத்தறியாய் என்றதில் அறியாய் என்றது அறியாதவனே என அழைக்கப்படும் வினையாலணையும் பெயராய் நின்றமையால் விளியுருபேற்ற பெயர். ஆய் என்பது விளியுருபு.

இச் செய்யுளிலுள்ள பதசாரம் வருமாறு:—அசத்தின் இயல்பை அறிந்தாயாயின் சுட்டியறியப்படும் பொருள்களுள் சிலபொருள்கள் அழியும் சில பொருள்கள் அழியாவென்று பிணங்கமாட்டாய்; அசத்தி னியல்பை அறியாமையினாற்றான் இவ்வாறு பிணங்குகின்றாய் யென்பதை உணர்த்த வேண்டி அசத்தறியாய் என்றும், அவ்வுண்மையை அறிய விரும்புகின்ற வன் திருஞானசம்பந்த சுவாமிகள் "ஆட்பா லவர்க் கருளும்" என்ற திருப் பாசுரத்தில் அருளியவண்ணம் எந்தையாகிய சிவபெருமான் திருவருளே தாரகமாக நின்று அறியவேண்டும் என்பதை உணர்த்தவேண்டிக் கேள் நீ என்றும், அவ்வாறு அறியின் உள்ளதென்று உணரும் உணர்விற்கு விடய மானவை யெல்லாம் இல்லையென்று உணரும் உணர்விற்கு விடயமாகும்; ஆதலால் காணப்படுவன வெல்லாம் அழிதல் துணிபெனக் கூறவேண்டி அறிவறிந்தவெல்லாம் அசத்தாகும் என்றும், சத்தினியல்பு உணர்ந்தவர்க் குத்தான் அசத்தின் இயல்பு உணரமுடியும் சத்தின் இயல்பு உணராதார்க்கு அசத்தின் இயல்பு உணரமுடியாதெனக் கூறவேண்டி மெய்கண்டான் என்றும், சத்தின் அசத்தின் இயல்பு ஆராய்தல் அருமையெனக் கூ வேண்டி ஆயின் என்றுங் கூறியவாறு காண்க.

சுட்டியறியப்படும் பொருள்கள் அசத்தெனச் சாங்கியருக்குக் காட்டும் உதாரணம்.

—அசத்தலாய்

நீரி லெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரு
மோரினவை யின்றாமா றொப்பு.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், இரட்டுற மொழிந்து கொண்டு சாங்கியனை நோக்கி உரைத்த பொருளை வலியுறுத்துதனுதலிற்று.

(இ—ள்.) அசத்து அலாய்—அசற்காரிய வாதியல்லாத அறிவுடையோனே,—அவை இன்று ஆம் ஆறு ஒப்பு ஓரின்—அங்ஙனம் தோன்றிமறைவனவாய பிரபஞ்சம் அசத்தாமாற்றிற்கு உவமையாராயின்,—நிகழ் நீரிலெழுத்தும் கனவும் பேய்த்தேரும்—நிகழாநின்ற நீர்மேலெழுத்தும் கனவிற் காட்சியும் பேய்த்தேருமாம் எ—று.

எனவே, அப்போதுள்ளனவாய நீர்மேலெழுத்து முதலியனவற்றை அங்ஙனே சடுதியின் மறைந்துபோதற் சிறப்புப்பற்றி அசத்தெனல் எல்லார்க்கும் ஒப்பமுடிந்தமையின், அவ்வியல்புடைய பிரபஞ்சத்தையும் அவைபோல் அசத்தென்றல் அமையு மென்றவாறாயிற்று.

அசற்காரிய வாதியை அசத்தென் றுபசரித்தார்.

நீரிலெழுத்து முதலியன பொய்யென்பாரை மறுத்தற்கு நிகழென்றடை கொடுத்தார். அஃது யாண்டுஞ் சென்றியையும்.

குவ்வுருபு விகாரத்தாற் றொக்கது.

இன்றென்னும் ஒருமை அப்பண்பின்மே னின்றது.

நீரிலெழுத்துத் தோன்றிய பொழுதே மறைந்து போதற்கும், கனப்பொருள் முடிவு பெறுதலின்றி இடையே மறைந்து போதற்கும், அருஞ்சுரத்தின் முதுவேனிலின் நண்பகற் கடுமை பற்றித் தோற்றி ஞாயிற்றின்கிரணம் முகிற்படலத்தின் மறைந்த வழித் தானுமறைந்து போவதாகிய பேய்த்தேர் ஒருகாரணங் காட்டி மறைந்து போதற்கும் உவமையாயின. இவ்வெண்பாவை 'இலயித்த தன்னில்' என்பதுபோல இங்ஙனம் இருதொடராக வைத்துரைத்து மேற்கோளேதுக்களையும் இரட்டுற மொழிந்துகொண்டு

இரண்டதிகரணப் பொருள் கோடல் ஆசிரியர் கருத்தென்பது, வழிநூலாசிரியர் "அசத்தாஞ் சுட்டி உணர்பொரு ளான வெல்லாம்" எ-ம், "உலகினை யசத்து மென்பர்" எ-ம், வேறு கூறிய வாற்றானுமுணர்க. இஃதறியாது இவ்வெண்பாவை ஒருதொடராக வைத்துரைப்பார்க்கு அசத்தறியாய் அசத்தலாய் என்றதனால் ஒருபயன் படாமையும், ஆயின் ஓரின் என்று இருகாற் கூறுதலும் அசத்தாகும் இன்றாமென்று இருகாற் கூறுதலும் கூறியது கூற லென்னும் வழுவாதலுமறிக

இனி, ஒருவாற்றானு முணரப்படாத பொருள் சூனியமென்பது எல்லாச் சமயத்தார்க்கும் ஒப்ப முடிந்தமையின் ஆண்டதிகரணத்திற்குரிய ஐயப்பாடு முதலியன நிகழாமையான் அதனை வேறெடுத் துரைத்து மேற்கொள்ள வேண்டா வாயினும், மந்தவுணர்வுடையார்க்கு அதன்கண் ஐயநிகழாமைப் பொருட்டு வழிநூலாசிரியர் "உணராத பொருள் சத்தென்னி லொருபய னில்லை" போதும்" என விடுத்தொழிந்தா ரென்றுணர்க.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) அசத்து அலாய் அவை இன்றாம் ஆறு ஒப்பு ஓரின் நிகழ் நீரிலெழுத்தும் கனவும் பேய்த்தேரும்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ வெனின், ஈண்டு அறிவினாலறியப்பட்ட சுட்டு அசத்து என்னும் மேற்கோளையும், அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய்நிற்றலால் என்னும் ஏதுவையும் இரட்டுறமொழிந்துகொண்டு எல்லாப்பொருளும் சத்தென்னும்சாங்கியரை நோக்கிக்காரியப் பிரபஞ்சம் அசத்தென்று உரைத்தபொருளை வலியுறுத்திய வாறாம்.

(பொ-ரை.) அசற்காரிய வாதியல்லாத சற்காரிய வாதியாகிய அறிவுடையோனே! ஏதுவில் இரண்டாவது பொருளாய்க் கூறியபடி தோன்றி மறைவதாய பிரபஞ்சம் அசத்தாம் என்பதற்கு உவமை ஆராயுமிடத்தில், நிகழாநின்ற நீர்மே லெழுத்தும் கனவிற் கண்டதும் கானல்நீருமாம் எ-று.

அசத்தென்பதற்கு இவை உவமையென்று கூறியதனால் நீரின்கண் எழுதும் போதும், கனுக்காணும் போதும், கானலுள்ளபோதும் உள்ளனவாய, எழுத்து முதலியனவற்றை அப்பொழுதே சடுதியில் மறைந்துபோகும் உண்மைபற்றி அசத்தென்றல் எல்லார்க்கும் ஒபபமுடிந்தமையால், அவ்வாறு சடுதியில் மறைந்துபோகும் இயல்புடைய பிரபஞ்சத்தையும் அவ்வுவமைப் பொருள்கள்போல அசதென்றல் கூடுமென்றவா றாயிற்று

அசற்காரியவாதி யல்லாதாய் என்று கூறவேண்டியதை அசத்தலாய் என்று உபசரித்தார்.

நீரிலெழுத்துக் கனுக்காட்சி கானல் நீர் ஆகிய இவை பொய் யென்பாரை மறுத்தற்கு நிகழ் என்னும் அடைகொடுத்து நிகழ்கனவு என்றார். நிகழ் என்னும் அந்த அடை, கானல் நீரினும் சென்று பொருந்தும். ஆதலால் நிகழ் நீரிலெழுத்து, நிகழ்கனவின் காட்சி, நிகழ் கானல் நீர் என உரைத்துக் கொள்க.

இன்றாம் ஆறு என்பதில் குவ்வுருபு தொகை. அதனை விரித்து அசத்தாமாற்றிற்கு என உரைசெய்யப்பட்டது. அவையென்னும் பன்மை இன்று என்னும் ஒருமைகொண்டு முடியாது. இன்று என்னும் ஒருமை இன்மைப் பண்பாகிய அசத்தின்மேல் நின்றது. ஆதலால் அவை இன்றாம் என்பதற்கு பிரபஞ்சம் அசத்தாமென உரைசெய்யப்பட்டது.

பிரபஞ்சம் அசத்தென்பதற்கு மூன்று உவமை கூறியதன் கருத்தென்னையெனின், நீரின்கண் எழுதும் எழுத்து எழுதும்போதே அழிதல்போல பிரபஞ்சம் தோன்றும் பொழுதே மறைந்துபோகு மென்பதற்கு உவமையாயிற்று. நிலைத்திருப்பினும் கனவின்கண் காண்பவை விழித்தலினாலே அல்லது சுழுத்தி வருதலினாலே முடிவு பெறுதலின்றி இடையே மறைந்து போதல்போல, பிரபஞ்சம் என்றும் நிலைத் திருத்தல் போலத் தோன்றி இடையே மறைந்து போகுமென்பதற்கு உவமையாயிற்று. இடையே மறைதலும் ஒருகாரணங் காட்டி மறையும் என்பதற்குக் கானல் நீர் உவமையாயிற்று. எவ்வாறெனின், கொடுமையான பாலைநிலத்தில் முதுவேனிற் காலமாகிய சித்திரை வைகாசிமாதங்களில் நடுப்பகலில் கிரணத்தின் கடுமையினால் கானல் தோன்றும்; அந்த நடுப்பகலிலேயே சூரியகிரணம் மேகக் கூட்டத்துள் மறைந்தவிடத்து அந்தக்கானலும் மறைந்துபோகும்; மேகத்துள் மறைந்த காரணத்தால் கானல் மறைந்துபோதல்போல, பிரபஞ்சமும் நோய் முதலிய யாதானுமொரு காரணங்காட்டி மறையும் என்க. ஆதலால் மூன்று உவமைகள் கூறப்பட்டன.

இவ்வெண்பாவை இந்நூல் முதற்சூத்திரத்து "இலயித்த தன்னில்" என்னும் வெண்பாவைப்போல் இரு தொடராகவைத்து மேற்கோள் ஏதுக்களையும் இரட்டுறமொழிந்துகொண்டு நையாயிகர் சாங்கியர்என்னும் இருவரையும் மறுக்கும் இரண்டதிகரணப் பொருள் கொள்ளுதலே நூலாசிரியர் கருத்தாம். இதுவே ஆசிரியர் கருத்தென்பதை வழிநூலாசிரியர் சிவஞான சித்தியார் சு-ம் சூ-ம் உ-வது செய்யுளில் "சுட்டி யுணர்பொருளானவெல்லாம் அசத்தாம்" எனவும், ௩-வது செய்யுளில் "உலகினையசத்துமென்பர்" எனவும் கூறிச் சுட்டி உணரப்படுவன வெல்லாம் அசத்து என்று நையாயிகரையும், உலகம் நிலைபேறின்றி அழிதலால் அசத்து எனச் சாங்கியரையும் மறுத்தவாற்றானும் அறிக

இவ்வுண்மை அறியாமல் இவ்வெண்பாவை ஒரு தொடராக வைத்து உரைத்தால் அசத்தறியா யென்று அழைத்துவிட்டு அசத்தலாய் என்று பின்னர்க் கூறியதால் ஒரு பயனுமில்லை. இரு தொடராக வைத்தால் அசத்தறியாய் என்றது அசற்காரிய வாதியையும், அசத்தலாய் என்றது அசற்காரிய வாதியல்லாதானையுங் குறிக்கும். அன்றியும், முதலாவது தொடரில் ஆயின் என்றும் இரண்டாவது தொடரில் ஓரின் என்றும் ஒரேபொருளைத்தரும் சொல்லைக்கூறி யிருத்தலாலும், அவ்வாறே முதற்றொடரில் அசத்தாகு மென்றும் இரண்டாவது தொடரில் இன்றாகு மென்றும் கூறியிருத்தலாலும், இவ்வாறு இருகாற் கூறுதல் கூறியதுகூறல் என்னுங் குற்றமாகும்; இரு தொடராக உரைக்கின் அக்குற்றமில்லை.

இதுவரையும் உணருருவெனின் அசத்து என்பதற்குரிய அதிகரணப் பொருள் கூறப்பட்டது.

இனி உணராதெனின் இன்மை என்பதன் பொருள் ஒருவாற்றானும் உணரப்படாதபொருள் சூனியம் என்பதேயாம். அது எல்லாச் சமயத்தார்க்குஞ் சம்மதமாதலால் அதுபற்றிய ஆசங்கையில்லை. ஆசங்கை யின்மையால் பிறர் கூறும் பக்கமும் மறுத்துரைக்குஞ் சித்தாந்தமுமில்லை. ஆதலால் இந்நூலில் உணராதெனின் இன்மை என்றதனை வேறு ஓரதிகரணமாக வைத்தேனும், அல்லது இந்த அதிகரணத்திற் புகுத்தியேனும் உரைக்கவில்லை. ஆயினும் மந்த உணர்வுடையார்க்கு உணராதபொருள் சூனியமோ அன்றோ வென்னும் ஐயம் நிகழுமாகலின் அவர்க்கு அவ்வையம் நிகழா திருத்தற் பொருட்டு வழிநூலாசிரியர் சிவஞானசித்தியார் ௬-ம் சூ-ம் ௫-வது செய்யுளில் "உணராத பொருள் சத்தென்னில் ஒருபயனில்லைபோலும்" என விடைகூறி முடித்தாரென்றுணர்க.

முதலதிகரணம் முற்றிற்று.



## இரண்டாம் அதிகரணம்.



முதல்வன்இயல்பு வாக்கு மனாதீத கோசரமெனக் கூறும்
மேற்கோள்.

இனி இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்குமனாதீதகோசரமாய் நின்றவதுவே சத்தாயுள்ள சிவமென்றுணரற் பாற்று.

### சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், மேல் உணர் பொருளியல்பும் உணராத பொருளியல்புங் கூறுமுகத்தான் அசத்தி னியல்பை வரை

செய் துணர்த்தியவழி இரண்டும் இவ்வாறுகலான் இவற்றின் வேறாய முதல்வனதியல்பாவது மாயாவாதி கூறும் அநிர்வசனம் போலுமென்னுங் கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் பிற் கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ—ள். வெ—டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

(இ—ள்.) இவ்விரண்டு தன்மையுமின்றி—உணருருவாந் தன்மையும் உணராதாந் தன்மையுமின்றி,—வாக்கு—பாசஞானத்திற்கும்,—மனம்—பசுஞானத்திற்கும்,— அதீதம்—அவ் விரண்டன் விருத்திகளைக் கடந்து அதீதமாய் நின்று,—கோசரமாய்—ஒற்றுமைப்பட்டு நின்றுணரும் அநுபவஞான மாத்திரைக்கே விளங்கிக் கோசரிப்பதாய்,—நின்ற—நிற்கின்ற,—அதுவே—அவ்வாறு நிற்கின்ற பொருள் இதுவென அளவைகளானறிய வாராமைபற்றி அதுவேயென மகாவாக்கியத்தாற் கூறப்படும் பதிப்பொருளே,—சத்தாயுள்ள சிவமென்று—சத்தாகிய சிவமாமென்று,—உணரற் பாற்று—உணரும்பான்மையுடைத்து எ-று.

## சிற்றுரை.

வாக்கெனப்படு நாதமுடிவான பாசஞானத்தை வாக்கென்றும், அவற்றின் வேறாய பசுஞானத்தை மனமென்றும் உபசார வழக்காற் கூறினார்.

வாக்கு மனாதீத கோசரமாய் நின்றவென்றது அவ்விரண்டின் விருத்திகளைக் கடந்துஅதீதமாயும், ஒற்றுமைப்பட்டு நின்றுணரும் அநுபவ ஞானமாத்திரைக்கே விளங்கிக் கோசரிப்பதாயும் நின்ற வென்றவாறு.

அவ்வாறு நின்றபொருள் இதுவென அளவைகளான் அறிய வாராமைபற்றி அதுவேயென மகாவாக்கியத்திற் கூறியதனை அநுவதித்துச் சத்தாகிய சிவமாதலைச் செவியறிவுறுத்தார்.

வாக்கு மனாதீதம்என்றது தமிழ்நூல் முடிபு: மாம் அடி மாஅடி என மரீஇயினாற்போல, மனம் அதீதம் மனாதீதமென மரீஇயிற்று ஈத கோசரமென்பது வடநூல் முடிபு.

வாக்குமனாதீதப் பொருளாகலின் உணருருவாந் தன்மையும், கோசரப் பொருளாகலின் உணராதாந் தன்மையும் இல்லை யென்பது பெறப்படுதலின் இவ்விரண்டுதன்மையுமின்றி என்றார். உணரற்பாற்று என்றார் உணர்தல் அருமைநோக்கி.

## விளக்கம்.

இது சூத்திரத்திலுள்ள இருதிறனல்லது சிவசத்தாமென இரண்டுவகையின் இசைக்குமன்னுலகே என்னும் இரண்டாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள என்ன சொல்லிற்றோ வெனின், முதலதிகாரணத்தால் உணரப்படும் பொருளினியல்பு அசத்தெனவும், உணரப்படாதபொருளினியல்பு சூனியமெனவுங் கூறு முறையில் அசத்தினியல்பு இது வென வரையறுத்து உணர்த்தினமையின், உணரபபடும்பொருளும் உணரப்படாத பொருளும் ஆகிய இரண்டும் முறையே அசத்தும் சூனியமுமாதலால் அவ்விரணடின் வேறாகிய முதல்வனதியல்பு உணரபபடு மென்றாவது உணரப் படாதென்றாவது உறுதியாய்ச் சொல்லக்கூடாத அநிர்வசனம்போலும் என்பர் மாயாவாதிகள். அவர் கூற்றை யாசங்கித்துக்கொண்டு சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து முதல்வன் சிவஞானத்தாலறியப்படும் சித்துச் சத்தாவன் எனக்கூறிபவாறும்.

இவ்வதிகரணத்தில் முதல்வன் இயல்பு உறுதியாய்ச் சொல்லப்படுவதோ உறுதியாய்ச் சொல்லப்படாத அநிருவசனமோ என்பது ஐயப்பாடு. அநிருவசனம் என்பது பிறர்பக்கம் என அறிக.

(இம்மேற்கோளின் பொருள்.) உணரப்படும் பொருள் போல் அசத்தாந் தன்மையும், உணரப்படாதபொருள்போல் சூனியமாந் தன்மையுமின்றி முதல்வனின் வேறாய் நின்றுணரும் பாசஞானத்திற்கும் பசு ஞானத்திற்கும் எட்டாததாய், அவ்விரண்டு ஞானங்களின் விருத்தியைக் கடந்துநின்று முதல்வனோ டொற்றுமைப்பட்டு நின்றுணரும் அநுபவஞான மாத்திரைக்கே எட்டுவதாய் நிற்கின்ற அம்முதற் பொருள் இது வென்று பிரமாணங்களானறியப் படாமைபற்றி அதுவேயென மகாவாக்கியத்தாற் கூறப்படும். அப்பதிப் பொருள் சத்தாகிய சிவமே என்று உணருந் தன்மையுடையது எ-று.

பாசஞான பசுஞானங் களுக்கு எட்டாததாய்ப் பதிஞானத்திற்கு எட்டுவதாய் உள்ளபதிப பொருள் அநிர்வசனமன்று சிவமே என்பதாம்.

அதுவே என்பதிலுள்ள ஏகாரத்தைச் சிவம் என்பதனோடுகூட்டி அது சிவமேயென உரைக்கப்பட்டது

வாக்கு என்பது நாதத்தையும் அது உபலக்கணத்தால் பிருதிவி முத லிய ஏனைய தத்துவங்களையுங் குறிக்கும். தத்துவங்களின் வாயிலாக ஆன் மாவிற்கு நிகழும் ஞானம் பாசஞானம் எனப்படும். ஆதலால் வாக்கு என் பதற்குப் பாசஞானமென உரைசெய்யப்பட்டது. பிருதிவிமுதல்நாதம்வரை யுள்ளன வெல்லாம் பாசஞானம் என்பதைச் சிவஞான சித்தியார் கூ-ம் சூ-ம் உ-வது செய்யுளில் "நாதமுடிவான வெல்லாம் பாசஞானம்" என வழிநூ லாசிரியர் அருளுமாற்றானும் அறிக.

இனி மனமென்பது தத்துவங்களுள் ஒன்றாயினும் ஆன்மாவிற்குநெருங் கிய துணையாய் அரசனுக்கு மந்திரியைப்போல விளங்கும். யாதானுமொன் றைப்பற்றி நின்றறியும் ஆன்மா தத்துவங்களை நீக்கினவிடத்துப் பதியைச் சாராமல் தத்துவங்களைக் கடந்து நிற்றலால் நானே முதல்வன் என உணரும். உணரும் காலத்து உணர்வதற்குக்கருவியாய் நிற்பது மனமேயாம். ஆயினும் மனம் கருவியாகக் காணப்படாமல் சூக்குமமாய் அடங்கி ஆன்மா வாகவே நிற்கும். அந்நிலையும் ஒருகணப் பொழுதில் மாறிவிடும். மாறும் பொழுது எல்லாத்தத்துவங்களுடனுங் கூடும். மனமும் ஆன்மாவும் வேற் றுமை யின்றி நிற்குமென்பதைச் சித்தியார் ச-ம் சூ-ம் உஅ-வது செய்யுளில் "சிந்தையைச் சீவனென்றும் சீவனைச்சிந்தை யென்றும்" கூறுமாற்றானறிக. ஆகவே மனதைக் கருவியாகக் கொண்டு யானே முதல்வனென உணர்தல் பசுஞானம் ஆதலால் மனம் என்பதற்குப் பசுஞானமென உரைசெய்யப்பட் டது. தத்துவங்களைக் கடந்து நிற்றலால் தன்னை முதல்வனென ஆன்மா உணரு மென்பதையும் அவ்வாறு உணர்தல் பசுஞானம் என்பதையும் "இவைகீழ் நாடலாலே காதலினால் நான்பிரமம் என்னும்ஞானம் கருதுபசு ஞானம்" எனச் சித்தியார் கூ-ம் சூ-ம் உ-வது செய்யுளிற் கூறிய வாற்றா னறிக.

இவ்வாறு தத்துவங்களெல்லாவற்றையுங் குறிப்பதற்குத் தலைமை பற்றி வாக்கு என்றும், சீவனைக் குறிப்பதற்கு ஒற்றுமைபற்றி மனமென்றும் உபசார வழக்காற் கூறினார்.

வாக்கு மனாதீத கோசரமாய் என்றதில் அதீதம் எட்டாமையினையும் கோசரம் எட்டுதலையுங் குறித்து முன்னொடு பின் முரணாதோ எனின், முரா ணாது. எதனாலெனின், வாக்கு மனம் என்னும் இரண்டன் விருத்திகளைக் கடந்து என்பதற்கு வாக்கு மனாதீதஎன்றும், அவ்விரண்டின் வேறாய் ஒற் றுமைப்பட்டு நின்றுணரும் அநுபவஞான மாத்திரைக்கே விளங்கி எட்டும் என்பதற்குக் கோசர மென்றும் கூறியதனாலென்க.

அவ்வாறு பாசஞான பசுஞானங்களுக்கு எட்டாததாயும் பதிஞானத் திற்கு எட்டுவதாயும் நின்ற பொருள் இது வெனப் பிரத்தியட்சம் அனுமா னம் ஆகமம் என்னும் பிரமாணங்களினால் அறிய முடியாதாகும். அறியப்

படுவதொன்றை இது வெனச் சுட்டிக்கூறலும் அறியப்படாத தொன்றை அதுவெனச் சுட்டிக் கூறலும் உலகவழக்கு. இதுவெனச் சுட்டுங்கால் பொருள் சிறப்புவகையாய் விளங்கும். அது வெனச் சுட்டுங்கால் பொருள் பாகுபாடு தோன்றாமல் பொதுவகையாய் விளங்கும். அவ்வாறு பாசஞான பசுஞானங்களால் அறியப்படாமையினால் இல் பொருளின்றி உள்பொருளாயினும் பதிஞானத்தாலன்றிச் சிறப்பாக அறியப்படாமையின் அப்பதிப் பொருளை அது எனப் பொதுப்பட மகாவாக்கியங் கூறும். அம்மகாவாக்கியத்தை அநுவதித்து, அதுவென்று பொதுவாகக் கூறியபொருள் சத்தாகிய சிவமே என்று சிறப்பாக உணர்ந்துகொள்ளும் வண்ணம் அதுவே சிவம் என அறிவுறுத்தினர்.

வாக்குமனாதீதம் என்றது தமிழ்நூல்முடிபு, வடநூல் முடிபாயின் வாங்மனோதீதம் என்றிருத்தல் வேண்டும். தமிழ்நூலின்படி மரம் அடி என்பது மராடி எனமரிஇயினாற்போல மனம்அதீதம் என்பது மனாதீதமென மருவி நின்றது.

அதீதகோசர மென்பது வடநூல் முடிபு. தமிழ்நூல் முடிபாயின் அதீதக்கோசரம் என்றிருத்தல் வேண்டும்.

வாக்கு மனாதீதப் பொருளாதலின் உணரப்படும் பொருளாதலில்லை; கோசரப் பொருளாதலின் உணரப்படாத பொருளாதலில்லை; ஆதலால் இவ்விரண்டு வகையும் இன்றி என்றுகூறினர்.

இச்சிவப்பொருள் சொல்லளவையின் அறியவாரா தென்பதும்; உணர்வால் அறிதலும் அருமை யென்பதும் உணர்த்தவேண்டிச் சொல்லற் பாற்றென்றும் உணர்க என்றுங் கூறாது உணரற்பாற்றென்றார்.

முதல்வன் இயல்பு வாக்கு மனாதீத கோசரம் என்பதற்குக் காட்டும்

ஏது.

பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்கவேண்டுவ தின்மையானும் அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசமின்மையானும்.

## சிற்றுரை.

எ-து ஏது எ-னின், இவ்விரண்டு வகையும் இல்லாதபொருள் அநிர் வசனமாய் நிற்பதென்னாது வாக்குமனாதீத கோசரமாய்நிற்பதென்றற்குப் பிரமாண மென்னை யென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) வாக்கு மனங்களாலோதி யுணரப்படுவதாய நிருவசனப் பொருட்கு முன்னர்க் கூறப்படும் சாதனங்களினின்று அறியற் பாலதாக வேண்டாமையானும் ஒருவாற்றானும் அறியப்படாத

அநிர்வசனப் பொருட்குச் சாதனத்தினின்றும் அறியப்படுமாறின்மையானும் 'இனி இவ் விரண்டுதன்மையு மின்றி வாக்கு மனாதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென் றுணரற்பாற்' றென மேற்கொண்டது எ-று.

பிரகாசம் அப்பிரகாச மென்பன உபசாரவழக்கு.

## விளக்கம்.

இந்த ஏது என்ன சொல்லிற்றேவெனின், உணரப்படுதலும் உணரப்படாமையும் ஆகிய இவ்விரண்டு வகையும் இல்லாதபொருள் உறுதியாய் இத்தன்மையுடையது என்று சொல்லக்கூடாத அநிருவசனமாய் நிற்பது என்று கூறுமல் வாக்குமனாதீத கோசரமாய் நிற்பது என்று மேற்கோளிற் கூறியதற்குப் பிரமாணம் என்னையென்பர் அம்மாயாவாதிகள். அவரை நோக்கிப் பிரமாணம் கூறி மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(இந்த ஏதுவின் பொருள்.) உறுதியாய் இத்தன்மையுடையதென்று வாக்கால் ஓதப்படுவதாயும் மனத்தால் உணரப்படுவதாயுமுள்ள பொருளுக்கு முன்னர்ச் சாதன இயலிற் கூறப்படும் சாதனங்களைக்கொண்டு அறியப்படுதல் வேண்டாம். இத்தன்மைத்தென்று அறியப்படாத பொருள் உறுதியாய்ச் சொல்லக்கூடாத அநிர்வசனப் பொருளாதலால் அப்பொருளுக்குச் சாதன இயலிற் கூறப்படுஞ் சாதனத்தைக்கொண்டு அறியப்படுந் தன்மையில்லை. ஆதலால் 'இனி இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்குமனாதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவம் என்று உணரற்பாற்'றென மேற்கோள் கூறியது எ-று.

கண்ட பொருளுக்குச் சாதனத்தாற் காட்டவேண்டுவது இன்மையானும், காணப்படாத பொருள் சாதனத்தாற் காணப்படுமாறு இன்மையானும், காணப்படுதல் காணப்படாமையாகிய இவ்விரண்டு தன்மையு மின்றி நின்ற அது சத்தாயுள்ள சிவமே என்று உணரற்பாற்று என்பதாம்.

விளங்கித்தோன்றும் பொருளைப் பிரகாசம் எனவும், விளங்கித்தோன்றாத சூனியத்தை அப்பிரகாசம் எனவும் உபசார வழக்காற் கூறினர்

இந்த ஏது முதல்வன் இயல்பு அநிருவசனம் என்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று

முதல்வன் சிவஞானத்திற்குக் கோசரப்படும் பொருள் என்பதற்குக் காட்டும உதாரணம்.

எண்ணிய சத்தன் றசத்தன்று மென்றலேன்
கண்ணி யுளதென்றன் மெய்கண்டா—னெண்ணி
யறிய விரண்டா மசத்தாதல் சத்தா
மறிவறியா மெய்சிவன்றா ளாம்.

## சிற்றுரை.

எ—து உ-ம் எ-னின், (பரமார்த்தமாகிய) பரப்பிரமப்பொருள் அவிச்சைவயத்தான் ஞாதாவெனவும் ஞேயமெனவும் பகுக்கப்பட்டு முன்னர்க் கூறப்படுஞ் சாதனங்களினின் றறியவும்படும். அவிச்சை நீங்கியவழி அப்பகுப்பின்மையாற் சத்தென்றுதல் அசத்தென்றுதல் ஒருவாற்றானும் ஞேயமாமாறின்றிக் கேவல ஞானமாத்திரையேயாய் நிற்பதொன்றாகலான் அது கோசரமா மென்றல் பொருந்தாதென்பாரை நோக்கி அதனை வலியுறுத்துத லுதலிற்று.

(இ-ள்.) எண்ணிய சத்து அன்று அசத்து அன்று என்றால் உளது என்றல் என் கண்ணி—(பரமார்த்தமாகிய பரப்பிரமப்பொருள் விவகாரத்திற்) கருதப்பட்ட சத்துமன்று அசத்துமன்றென்னின், அங்ஙனம் ஒரு பொருள் உண்டென்றல் யாது பிரமாணங் கருதியோ (அதனைக் கூறுவாயாக. பிரமாணமுண்டெனின் அதற்கு அது பிரமேயமெனப்பட்டு ஞேயமாவான் செல்லுமென்றஞ்சிப் பிரமாணமில்லை யென்பையாயின்),—மெய்கண்டான் எண்ணி அறிய இரண்டு அசத்து ஆம்—சத்தினியல்பை யுணர்ந்தோன் ஆராய்ந்தறியிற் (காட்சி முதலிய பிரமாணங்கட்கு விடயமாவதூஉம் ஒருவாற்றானும் பிரமாணமல்லாத சூனியமுமாகிய) இரண்டும் (மேற்கூறியவாற்றான்) அசத்தேயாம்,—ஆதல் சத்து ஆம் அறிவு அறியா மெய் சிவன் தாள் ஆம்—ஆதலாற் (சாந்தோக்கிய முதலியவற்றுட்) சத்தென்றோதப்படும் சுட்டறிவினாலறியப்படாத மெய்ப்பொருள் (சைவ உபநிடதங்களினுஞ் சைவாகமங்களினும் அந்நியமின்றி நின்றுணரும் அநுபவமாத்திரையிற் கோசரிப்பதென்றோதப்படுப) சிவனருளாவதன்றி நீ கூறுஞ் சூனியமன்று எ-று.

ஆம் அசை (அசத்தின்றே)

அறிய வென்னும் செயவெனெச்சம், "மழைபெய்யக் குள நிறையும்" என்புழிப்போலச் செய்யின் என்னும் எச்சப்பொருட் டாய் நின்றது.

முற்றும்மை விகாரத்தாற் றொக்கது.

அசத்தாமென மாறுக.

சத்தாகிய மெய்யென விரையும். "அடியளந்தான்றாஅயது" என்றாற்போல அறிவறியா மெய்யென்றது வாளா பெயராய் நின்றது.

சிவன்றாளெனச் சிவசத்தியின்மேல் வைத்து உயர்த்துக் கூறியது உபசாரவழக்கு "இறைவனார் கமலபாதம்" என்பதுமது.

இதனாற்போந்த பொருள் சத்துமன்றி அசத்துமன்றி ஒரு பொருள் உண்டெனின் அதற்குப் பிரமாணமென்னை? பிரமாணாதீதமாகிய சூனியமெனிற் சூனியமும் அழி பொருளுமாகிய இரண்டும் அசத்தேயென்பது மேற்காட்டினமையாற் பிரமப்பொருள் அசத்தெனப்பட்டுச் சத்தென்னுஞ் சுருதிகளோடு முரணுமாகலின் அவற்றுட் சத்தென்றோதப்படும் பரப்பிரமப்பொருளாவது உண்மை ஞானத்திற் கோசரிப்பதென யாங்கூறுஞ் சிவமேயன்றி நீ கூறுஞ் சூனியமன்றென மாயாவாதியை மறுத்துக் கோசரமென்றதனை வலியுறுத்தியவாறு மென்க.

எண்ணியறிய விரண்டாம் அசத்தென்பதற்குப் பிறரெல்லாம் வருகின்ற வெண்பாவிற் கூறும் பொருள்படக் கூறியதுகூறலாதல் மேலும் ஓரியை பின்றியுரைப்ப.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) எண்ணிய சத்து அன்று அசத்து அன்று என்றால் உளது என்றல் என்கண்ணி மெய்கண்டான் எண்ணிஅறிய இரண்டு அசத்து ஆம் ஆதல் சத்துஆம் அறிவு அறியாமெய் சிவன்தாள்ஆம்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், பரமார்த்தமாகிய பரப்பிரமப்பொருள் அஞ்ஞானத்தோடு கூடியதால் அறிபவனாகிய சீவனெனவும் அறியப்படுவதாகிய பிரமப்பொருளெனவும் பகுக்கப்படும். பகுக்கப்பட்ட அப்பொருள்களுள் சீவனாகிய பொருள், முன்னர் ஏழாம் சூத்திரம் முதல் மூன்று சூத்திரங்களினாற் கூறப்படும் சாதனங்களினின்று சாதித்துப

பிரமப்பொருளை யறியவுங்கூடும், அறியுங்கால் அஞ்ஞானம் நீக்க, பிரமம் சீவன் என்ற பகுபபு நீங்கிவிடும். அப்பகுப்பில்லாமையினால் அந்நிலையில் பிரமப்பொருள் சத்தென்றாவது அசத்தென்றாவது ஒருவாற்றானும் அறியப் படுமாறின்றி அநிருவசனமாய்த் தனித்தஞானமாத்திரையேயாய்நிற்கும்.ஆதலால் சாதனங்களினாலறியப்படுதல் கொண்டு பிரமப்பொருள் கோசரமாமென ஏதுவிற் கூறியது பொருந்தாதென்பர் அம்மாயாவாதிகள். அவரை நோக்கி மறுத்துப் பிரமப்பொருள் கோசரமாமென்பதனை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) விவகாரத்திற்றான் சத்து அசத்து எனத்தோன்றுவன அன்றி முத்திநிலையில் பரமார்த்தமாகிய பரப்பிரமபபொருள் சத்தும் அன்று அசத்தும் அன்று எனின், அவ்விரண்டுமின்றிய ஒரு பொருள் உண்டென்று கூறுதல் எந்தப் பிரமாணத்தைக்கொண்டு என வினவுமிடத்து, பிரமாணம் உண்டென்று கூறின் அந்தப பிரமாணத்தினால் அளக்கப்படும் பொருளாய் அறியப்படுவதாகும். படவே, அசத்தென்று கூறவரும். அதற்கு அஞ்சிச் சத்தும் அன்று அசத்தும் அன்று என்பதற்குப் பிரமாணம் இல்லையென்று கூறுவையாயின், பிரமாணங்களாலறியப்படாதது சூனியமாய் அசத்தேயாகும். இவ்வாறு பிரத்தியட்ச முதலிய பிரமாணங்களால் அறியப்படுவதும் பிரமாணங்களாலறியப்படாததுமாகிய இரண்டும் மேலையதிகரணத்திற் கூறியவாற்றான் உண்மையின் இயல்பை உணர்ந்தவன் ஆராய்ந்தறியுமிடத்து அசத்தேயாம். ஆதலால் சாந்தோக்கிய முதலிய உபநிடதங்களுள் சத்தென்று கூறப்படுவதாயும், சுட்டறிவாகிய பிரமாணங்களினாலறியப்படாததாயும் உள்ள மெய்ப்பொருள், சைவ உபநிடதங்களினும் சைவாகமங்களினும் அந்நியமின்றி நின்றுணரும் அநுபவஞானத்திற்கு எட்டுவதென்று கூறப்படும் சிவனருளாவதேயன்றி நீ கூறுஞ் சூனியமன்று எ-று.

(க—ரை.) ஒருவாற்றானும் அறியப்படாத பொருள் உண்டென்றல் பொருந்தாது. ஆதலின், பிரமப்பொருள் அநுபவஅறிவிற்கு அறியப்படும் என்பதாம்.

அசத்தன்றாம் என்பதிலுள்ள ஆம் அசை.

அறியவென்பது செய என்னும் வாய்பாட்டு எச்சம். "மழைபெய்யக் குளம் நிறையும்" என்றவிடத்து பெய்ய என்பது பெய்யின் என்பதைக் குறித்து நின்றாற்போல அறிய என்பது செய்யின் என்னும் வாய்பாட்டு எச்[illegible]) அறியின் என்பதைக் குறித்து நின்றது. அறியின் என்னும் எச்சம் [illegible]த்தாம் என்பது கொண்டு முடிந்தது.

இரண்டு என்பதில் முற்றும்மை விகாரத்தாற் றொக்குநின்றது. அதனைவிரித்து இரண்டும் என உரைசெய்யப்பட்டது.

இரண்டாமசத்து என்பதில் உள்ள ஆம் அசத்து என்பதை அசத்தாம் எனமாறுக.

சத்தாம் அறிவறியா மெய்யென்பதில் மெய்யென்பது சத்தாம் என்பத ணேடு கூடிச் சத்தாம் ~~அறிவறியா~~ மெய்யெனப் பொருந்தும். சத்தும் மெய்யும் ஒரு பொருட்சொல்லாதலால் கூறியது கூறலாகாதோவெனின், ஆகாது. எதனுலெனின், மெய் என்பது பொருளை உணர்த்தி நிற்றலான் என்க.

அறிவறியா மெய்யென்பது திருக்குறள் மடியின்மை ௧0-வது பாட்டில் அடியளந்தான் என்பது போல வாளா பெயராய் நின்றது. அதாவது அடியளந்தான் என்பது விட்டுணு என்னும் பெயராக நின்றதே யன்றி அடியினுல் அளந்த என்னுந் தொழிலை யுணர்த்தி நிற்கவில்லை. தொழிலை யுணர்த்தி நின்றதாயின் அக்குறளிலேயே தாயது எனப் பின்னர்க் கூற வேண்டாம். அவ்வாறே அறிவறியாமெய் யென்பது மெய்ப்பொருளை உணர்த்தும் பெயராய் நின்றதேயன்றிச் சுட்டறிவினுலறியப் படாமையை உணர்த்தி நிற்கவில்லை. எதனுலெனின், இரண்டும் அசத்தாம் என மேலே கூறியது கொண்டே மெய்ப்பொருள் சுட்டறிவினுலறியப்படாமையைக் கூறிவிட்டபடியால் மீண்டுங் கூறில் கூறியதுகூறலென்னுங் குற்றமாகுமாதலால் என்க.

சிவன் அருளைச் சிவன்தாளெனக் கூறினர். அருளைத் தாள் என்றது உபசாரம். சிவஞானசித்தியார் பாயிரத்தில் ''இறைவனர் கமலபாதம்''என்றதும் இறைவனர் திருவருள் என்பதுபற்றிய உபசாரம்.

இவ்வெண்பாவினுற் கூறி முடித்த பொருள், பிரமப்பொருள் சத்துமன்று அசத்துமன்று என்று கூறின் அவ்வாறு ஒருபொருள் உண்டென்பதற்குப் பிரமாணம் யாதென வினவுமிடத்து, பிரமாணத்தால் அளக்கப்படாத சூனியமே என்றுகூறின், சூனியமும் அழிகின்ற பொருளுமாகிய இரண்டும் அசத்தே யென்பது முதலதிகரணத்தாற் சாதித்தமையால், பிரமப் பொருள் அசத்தென்ருகிச் சத்தென்னும் சுருதிகளோடு முரணும். ஆதலால் சுருதிகளில் சத்தென்று ஓதப்படும் பரப்பிரமப்பொருள் சிவஞானமாகிய உண்மை ஞானத்திற்கு எட்டப்படுமென யாம் கூறும் சிவமேயன்றி நீ கூறுஞ் சூனியமன்றென மாயாவாதியை மறுத்துக் கோசரம் என மேற்கோளிற் கூறியதனை வலியுறுத்திய வாறும்.

எண்ணியறிய இரண்டு அசத்தாம் என்பதில் இரண்டு என்பதற்குப் பிறரெல்லாம் அடுத்துவரும் வெண்பாவிற் கூறும்பொருள்பட வேறு என்று கூறுவர். அவ்வாறு கூறின் அறியில் வேறு என இரண்டிடத்தும் கூறுவதால் கூறியதுகூறலென்னும் குற்றமாதலோடு, பிரமாணம் இல்லையாயினென்பதனேடு அறியின் வேறு என்பது பொருந்தாமையும் அறிக.

முதல்வன் வாக்குமனாதீதப் பொருள் என்பதற்குக் காட்டும்
உதாரணம்.

உணர்ப வசத்தாத லொன்றுணரா தொன்றை
யுணருநீ தானுணரா யாயி—னுணருமுனிற்
றனிரண்டா மெய்கண்டான் றன்னா லுணர்தலாற்
றனிரண்டாய்க் காணான் றமி.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், பிரகாசித்த பொருளையும் வேறொராற் றான் அறிதுமென வேட்கை சென்றுழி அவ்வாற்றாற் புலுவதாய்ப் பிரகாசிக்க வேண்டுதலிற் பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்கவேண்டுவ தில்லை யென்றல் யாண்டுஞ் செல்லாமையின் வாக்கு மனாதீத மென்றல் பொருந்தா தென்பாரை நோக்கி அதனை வலியுறுத்துத லுதலிற்று.

(இ—ள்.) உணர்ப அசத்து—நின்னாலறிவனவாய கருவிகளெல் லாம் மேற் கூறியவாற்றான் அசத்தாம், (அசத்தெனவே அசித்தா தலும் பெறப்படும்),—ஆதல் ஒன்று ஒன்றை உணராது — ஆகலான் அவற்றுள் ஒரு கருவியும் ஒன்றாகிய முதற்பொருளை அறியமாட் டாது,—உணரும் நீதான் உணராய்—அவற்றானறிந்து வருகின்ற நீதானும் அதனையறியமாட்டாய்,—ஆயின்—நீயேஆய்ந் தறிவாயா யின்,—உணரும் உனின் இரண்டு ஆம் — (அவ்வா றுணரப்படும் பொருள்கள்போல்) உணர்கின்ற நின்னின் வேறாம்,—மெய்கண் டான் தன்னால் உணர்தலால் இரண்டாய்க் காணான் தமி—உயிர்க்கு அறிவு விளங்கும் உண்மை அறிந்தோன் தன்னறிவு அச்சிவனரு ளின் அடங்கி அதுவாய் நின்றுஅதனானே அதனையறியு மாதலான் ஏனைப் பொருள்களை அறியுமாறுபோல வேறாய் நின்றறிவானல்லன் அத்தனி முதற்பொருளை எ—று.

உணர்பவென்பது அகரவீற்றஃறிணைப் பன்மைப் பெயர்ச் சொல்.

ஒன்றுமென்னும் முற்றும்மை விகாரத்தாற் றொக்கது.

உனினென்னும் இன்னுருபு நீக்கப்பொருட்கண் வந்தது. ஒற்றிரட்டாமை புறநடையாற் கொள்க.

தான் அசை.

இதனாற் போந்தது சத்தாகிய சிவம் பாசஞானத்தா னாதல் பசுஞானத்தானாதல் அறியப்படாது, அறியப்படிற் குடமுதலா யினபோல உயிரின்வேறாய் அவிச்சையான்வருஞ் சுகதுக்கங்களைப் பயப்பதன்றி அவிச்சையி னீங்கிய நிரதிசயவின்பத்தினைப் பய வாதாகலான் அவ்வுண்மை உணர்ந்தோன் ஏனையபோல அசத்தாத லின்றித் தனியாய் நின்ற அம் முதற்பொருளை அதனானொற்றித்து நின்றே காண்பனென நையாயிகர் முதலியோரை மறுத்து வாக்கு மனாதீதமாய் நின்றேகோசரமாமென வலியுறுத்தியவாறுமென்க.

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், முன் பிரத்தியட்சத் தால் அறிந்தபொருளையும் பின் அநுமானத்தால் அறியவேண்டுமென விருப் பம் நிகழ்ந்த விடத்து அவ்வழியாலும் புதிதாய் அப்பொருள் அறியப்படும். இதனை தருக்கசங்கிரக உரை அனுமானப் பிரமாணத்தில் "பெறுதியுள்ள வழியும் அனுமிப்பேன் என்னும் வேட்கையான் அனுமிதியுணர்வு நிகழக் காண்டலின்" என்பதனானும் அறிக. ஆதலால் அறிந்த பொருளை அறிய வேண்டுவதில்லை யென்னும் பொருள்பட ஏதுவில் பிரகாசத்தினுக்குப் பிர காசிக்க வேண்டுவதில்லையெனக் கூறியது எவ்விடத்துஞ் செல்லாமையால் மேற்கோளில் வாக்குமனா தீதமென்று கூறியது பொருந்தாதென்பர் நையா யிகர். அவரை நோக்கி மறுத்து வாக்கு மனாதீத மென்றதனை வலியுறுத்திய வாறும்.

(பொ-ரை.) நின்னுடைய ஏவலால் விடயங்களை அறிவனவாய கருவிக ளெல்லாம் நான்காஞ்சூத்திரத்திற் கூறியவாறு அசத்தாம். அசத்தென்றதனா லேயே அறிவில்லாதவை என்பதும் பெறப்படும். ஆதலால் அவற்றுள் ஒரு கருவியும் ஒன்றாகிய முதற் பொருளை அறியமாட்டாது. அக்கருவிகளால் விடயங்களை அறிந்து வருகின்ற நீதானும் அம்முதற்பொருளை அறியமாட் டாய். நீயே ஆய்ந்து அறிவையாயின் கருவிகளால் அறியப்படும் பொருள் அறிகின்ற உனக்கு வேறாதல்போல, முதற்பொருளும் உனக்குவேறாம். பொருளின்றன்மையால் முதல்வன் வேறு உயிர்வேறு ஆயினும் முதல்வன் உயிர்க்குயிராய் நின்று அறிவிப்பனாதலால் உயிர்க்கு அறிவுவிளங்கும் உண் மையை அறிந்தோன் தன்னறிவு அச்சிவனருளிலடங்கி அவ்வருளாய் நின்று அவ்வருளினாலே அச்சிவத்தை அறிவன். ஆதலால் ஏனைப் பொருள்களை வேறாய் நின்று அறியுமாறுபோல அத்தனி முதற்பொருளை வேறாய் நின்று அறியமாட்டான் எ-று.

(க-ரை.) வாக்கினாலும் மனத்தினாலும் அறியப்படும்பொருள் அசத் தாதலால் முதற்பொருள் அவ்விரண்டிற்கும் அதீதமாய் நின்றே அதனரு ளால் அறியப்படும் என்பதாம்.

உணர்ப என்றது கூறுப காட்டுப என்றாற்போல உணர்வர் என்னும் உயர்திணைப் பன்மையைக் குறித்து நிற்கவில்லை. உணர்வன என்னும் அஃ

றிணைப் பன்மையைக் குறித்துநின்றது. உணர்ப என்றதன் இறுதியில் பகர ஒற்றின்மேல் அகரம் ஏறி நின்றமையால் உணர்ப என்பது அகரத்தைஇறுதியாக உடையஅஃறிணைப் பன்மைப பெயர்ச்சொல்லாயிற்று. இதுசென்ற என்பது சென்றன என்பதைக் குறித்தல் போலாம்.

ஒன்றுணராது என்றதில் எஞ்சாப் பொருளைக் குறிக்கும் முற்றும்மை விகாரத்தாற் றொக்குநின்றது. அந்தஉம்மைவிரித்து ஒருகருவியும் உணராது என உரைசெய்யப்பட்டது.

உணரும் உனின் என்றதிலுள்ள இன்னுருபு உன் என்பதை நீக்குதலால் நீக்கப்பொருட்கண் வந்தது. உன்னின் என்று னகரவொற்று இரட்டிக்காமை விதியல்லவாயினும் புற நடையாற் கொள்க. விதிக்குப் புறமாய் நடத்தலினாலும் விதிக்குப்புறமாய் அடுத்தலினாலும் புறநடை எனப் பட்டது.

உணரும் உனின் என்பதன் பின்னுள்ள தான் என்பதும் உணர்தலால் என்பதின் பின்னுள்ள தான் என்பதும் அசை.

இவ்வுதாரணத்தாற் கூறிமுடித்த பொருள். அறிந்த பொருளைப் பின்னர் வேறு வழியாய் அறிதலுங் கூடுமாதலால் பாசஞானத்தினாலும் பசுஞானத்தினாலும் அறிந்த முதற் பொருளையே பின்னர்ச் சாதன இயலிற் கூறியபடி பதிஞானத்தாலறியுமல்லது வேறில்லை. ஆதலால், பாசஞான பசுஞானங்கட்கு எட்டாதது என்றல் பொருந்தாது என்ற நையாயிகரை மறுத்துச் சத்தாகிய சிவம் பாசஞானத்தினாலாவது பசுஞானத்தினாலாவது அறியப்படாது; அறியப்படின் அவ்விரண்டு ஞானங்களினாலறியப்படும் குடம் முதலாயின உயிரின் வேறாதல்போல முதற் பொருளும் உயிரின் வேறாம்; வேறாமவை அஞ்ஞானத்தாலுண்டாகும் சுகதுக்கங்களை உண்டு பண்ணுவதன்றி அஞ்ஞானத்தினின்றும் நீங்கிய நிலைத்த அற்புத இன்பத்தை உண்டு பண்ணாது. ஆதலால் அவ்வுண்மை உணர்ந்தோன் ஒன்றையொன்று பற்றி நிற்கும் ஏனை உலகப்பொருள்கள்போல அசத்தாதலின்றி ஒன்றையும் பற்றாது தனியாய்நின்ற அம்முதற்பொருளைப் பதிஞானத்தால் அப்பொருளோடு கலந்து நின்று காண்பன் எனக்கூறி வாக்குமனாதீதமாய் நின்றே பதிஞானத்திற்குக் கோசரமாம் என்பதனை வலியுறுத்தியவாறும்.

முதல்வன் பாவனைக்கு எட்டப்படான் என்பதற்குக் காட்டும்

உதாரணம்.

பாவகமேற் றனசத்தாம் பாவநா தீதமேனிற்
பாவகமா மன்றேன்னிற் பாழதுவாம்—பாவகத்தைப்
பாவித்த றனேன்னிற் பாவகமாந் தன்னருளாற்
பாவிப் பதுபரமில் பாழ்.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், தானே கோசரமானாலன்றித் தன்னா லறிதல் கூடாமையிற் றன்னாலே தனையுணருமென்பது தன்னைப் பற்றுதலென்னும் வழுவாமாகலின் அவ்வாறன்றி வாக்கு மனாதீதப்பொருள் யோகநூலிற் கூறும் தியானபாவனைகளிற் கோசரமா மென்றலே அமைவுடைத்தெனை யோகமதம்பற்றிக் கூறுவாரை நோக்கித் தன்னாலன்றிக் கோசர மாகாமையை வலியுறுத் துதனுதலிற்று.

(இ-ள்.) பாவகமேல் தான் அசத்து ஆம்—(நீ கூறும் பாவனை ஏனைப்பாவகங்கள்போல மனமுதலியவற்றோடு கூடி நின்று பாவிக்கும்) பாவகமெனின், (அறிவினாலறியப்பட்ட சுட்டாதலான்) அப்பொருள் அசத்தாம்,—பாவநாதீதமெனின் பாவகம் ஆம்—கருவிகளை நீங்கி நின்று பாவிப்பதாகலின் அப்பாவனையைக் கடந்ததெனிற் கருவிகணீங்கியவழி ஒன்றுமறியுமாறின்றிக் கேவலமாமாகலான் அது பாவகமாத்திரையேயன்றிப் பயன்படுமாறில்லை,—அன்று என்னின் அது பாழ் ஆம்—இவ்விருதிறனுமன்றி அநிருவசனமாகப் பாவிக்கப்படுவதெனின் அது சூனியப்பொருளாம்,—பாவகத்தைப் பாவித்தல் என்னின் பாவகம் ஆம்—அவ்வாறன்றிப் பாவனைக்கெய்தாத பொருளை எய்தியதாக வைத்துப் பாவகஞ் செய்தலெனின்அதுபோலிப்பாவனை(யாதலாற்பாவநாதீதம்போலப் பாவனை மாத்திரையேயன்றிப் பயன்படுமாறில்லை. அற்றேல், ஒருவாற்றானும் பாவனைக் கெய்தாத பொருள் பாழாமெனின்),—தன் அருளால்பாவிப்பது பரம்—(அப்பாவகங்களை யொழித்துத்)தனது திருவருளாற் பாவிக்கப்படுவதாம் பரம்பொருள்,—பாழ் இல்—(ஆகலான் நீ கூறும் பாவனைக் கெய்தாமைபற்றிப்) பாழாதலில்லை எ-று.

தான் அசை.

பாவகத்தைப் பாவித்தலென்பது "கறைமிட றணியலும் அணிந்தன்று" என்றதுபோலக் கொள்க.

மேலை வெண்பாவில் தன்னென்றது தனது சத்தியே யாதலால் தன்னைப் பற்றுதலென்னுங் குற்றமாதல் யாண்டையதெனை விடுப்பார் தன்னருளாற் பாவிப்பதென்றார். தன்னருளை யறியுமாறும் அதனாற் பாவிக்குமாறும் ஒன்பதாஞ் சூத்திரத்துட் கூறப்படும்.

யோக நூலார் கூறும் பாவனையாவது இந்நான்கனுள் ஒன்றாகற்பாலதன்றி வேறின்மையின் நான்கினையுங்கூறி மறுத்தார்.

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், மேலை வெண்பாவில் தன்னாலுணர்தலால் என்றதனால் முதல்வன்தன்னால் தான் அறியப்பட்டாலன்றி உயிர் தான் அம்முதல்வனை அறிதல்கூடாமையால் தன்னாலேதனையுணருமென்னும் அக்கூற்றுத் தன்னைப்பற்றுதலென்னுங் குற்றத்திற்கிடனும். ஆதலால் அவனாலே அவனை யுணருமென்பதின்றிப் பாசஞான பசுஞானங்களுக்கு எட்டாத முதற்பொருள் யோகநூலிற் கூறும் தியான பாவனைகளுக்கு எட்டுமென்று கூறுதலே பொருத்தமென்று யோகமதம் பற்றிப் பாதஞ்சலர் கூறுவர். அவரை நோக்கி மறுத்து முதல்வன் தன்னாலன்றி எட்டான் என மேலை வெண்பாவிற் கூறியதை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) தியானபாவனை யென்று நீ கூறும் பாவனை உலகப் பொருள்களைப் பாவிக்கும் ஏனைப்பாவகங்கள்போல மனமுதலிய கருவிகளோடு கூடிநின்று பாவிக்கும் பாவகமெனின், அக்கருவிகளாலறியும் அறிவு சுட்டறிவும் அச்சுட்டறிவினாலறியப்பட்ட பொருள் சுட்டுப்பொருளுமாதலான் அப்பாவனையாலறியும் பொருள் அசத்தாம். அப்பாவனை கருவிகளை நீங்கி நின்று பாவிப்பதாதலின் கருவிகளோடு கூடிச்செய்யும் பாவனையைக் கடந்ததென்று சொல்லில், கருவிகள் நீங்கியவிடத்து ஒன்றும் அறியுமாறின்றித் துரியாதீதமாகிய கேவல அவத்தையுண்டாமாதலால் பாவிப்பதென்ற அது பாவகமாத்திரையே யன்றிப் பயன்படுமாறில்லை. கருவிகளோடு கூடுதல் கூடாமையாகிய இவ்விரு திறனுமின்றி வரையறுத்துச் சொல்லக்கூடாத விதமாய்ப் பாவிக்கப்படுவதெனின், அவ்வாறு பாவிக்கப் படுவது சூனியப்பொருளாம். அவ்வாறாயின் பாவனைக்கெய்தாத பொருளை எய்தியதாகவைத்துப் பாவகம் செய்தலெனின், அவ்வாறு பாவிப்பது போலிப்பாவனை யாதலால் பாவனாதீதம்போலப் பாவனை மாத்திரையேயன்றிப் பயன்படுமாறில்லை. இவ்விடத்துக்கூறிய நான்கு உபாயங்களினாலும் முதற்பொருள் பாவிக்கப்படாதது என்றதனால் ஒருவாற்றானும் பாவனைக்கெய்தாதது பாழாகுமென்று கூறின், மேற்கூறிய பாவகங்களை யொழித்து முதலவனது திருவருளால் அம் முதற்பொருள் பாவிக்கப்படுவதாகுமாதலால் நீ கூறியபாவனைக் கெட்டாமைபற்றி முதற்பொருள் பாழாதலில்லை எ-று.

(க-ரை.) முதற்பொருள் கருவிகளோடு கூடிச்செய்யும் பாவனைக்கு அதீதமாய்த் திருவருளாற் பாவிக்கப்படுவது ஆதலால் பாழாதலில்லை என்பதாம்.

பாவித்தல் தான் எனபதிலுள்ள தான் என்பது அசை

பாவகத்தைப் பாவித்தல் என்பதில் பாவகமென்பதும் பாவித்தல் என்பதும் ஒரு பொருட் சொற்களே ஆயினும் பாவகம் என்பது பாவித்தலையும், பாவித்தலென்பது அப்பாவித்தலைச் செய்தலையுங் குறித்து நின்றது. எது போல எனின், புறநாநூறு என்னும் நூலில் கடவுள் வாழ்த்தில் "கறைமிடறணியலும் அணிந்தன்று" என்றவிடத்து அணியலும் என்பது அழகு செய்தலையும் என்பதையும் அணிந்தன்று என்பது செய்தது என்பதையுங் குறித்து நின்றவாறுபோலாம். ஆகலால், பாவகத்தைப் பாவித்தல் என்பதற்குப் பாவகஞ்செய்தல் என உரை செய்யப்பட்டது.

மேலை வெண்பாவில் தன்னுணர்தலால் என்று கூறியதால் தன்னைப் பற்றுதலென்னுங் குற்றமாகாதா எனக் கேட்டதற்கு அவ்வெண்பாவில் தன் என்பதற்குத் தனது சத்தி என்பதே பொருளாய் அவனருளால் அவனையறிதலென்பது கருத்தாதலால் தன்னைப் பற்றுதலென்னுங் குற்றமில்லையென்று விடை கூறவேண்டி இவ்வெண்பாவில் தன்னருளால் பாவிப்பதென்றார்.

அவனருளால் பாவிப்பதற்கு அவனருளை யறியவேண்டும். அவனருளை யறியுமாறும் அவ்வருளால் முதல்வனைப் பாவிக்குமாறும் ஒன்பதாம் சூத்திரத்து முதலதிகாணத்துட் கூறப்படுமாதலால் அவ்விடத்துக் காண்க.

பாவனை நான்கு வகைப்படும். அவையாவன:—கருவிகளோடு கூடி நின்று பாவித்தல், கருவிகளை நீங்கி நின்று பாவித்தல், இவ்விருதிறனுமின்றிப் பாவித்தல், எட்டாதபொருளை எட்டியதாகப் பாவித்தல் என்பனவாம். யோகநூலார் கூறும்பாவனை இந்நான்கனுள் ஒன்றாகற்பாலதன்றி வேறல்லாமையால் இவ்வெண்பாவில் அந் நான்குபாவனையுங்கூறி மறுத்தார். இவ்வெண்பாப்பொருளையே சித்தியார் கூ-ம் சூ-ம் எ-வது செய்யுளில் வழிநூலாசிரியரும், சிவப்பிரகாசம் ௪0-ம் சூ-ம் எ-வது செய்யுளில் புடைநூலாசிரியரும் அருளிச்செய்தனர்.

முதல்வன் அவனருளாலன்றிக் காணப்படான் என்பதற்குக் காட்டும்

உதாரணம்.

அறிய விரண்டல்லானுங்கறிவு தன்னு ..................... நாலு மிருது.
லறியப் படானறிவி னுள்ளா—னறிவுக்குக்
காட்டாகி நின்றானைக் கண்ணறியா மெய்யென்னக்
காட்டா தறிவறிந்து கண்டு.

சிற்றுரை.

எ—து: உ—ம் எ—னின், மேற் கூறிப்போந்த பாவனைகட் கெய்தாத பொருளைத் தன்னருளாற் பாவித்தல் வேண்டமாற் ................

துவம் நீங்கிய காலத்துச் சிவனைப்போல முற்றுமுணர்தல் முதலிய எண்குணங்களு முடையதென்று ஆகமங்களுட் கூறுதலின் ஆண்டான்மஞானம் சிவஞானத்தோ டொப்பதன்றிப் பசுஞானம் எனப் படாமையான் அவ்வறிவான் அறியப்படும் கோசரப் பொருளென்றலே அமைவுடைத் தென்னுஞ் சிவசமவாதிகளை நோக்கித்தன்னருளாலன்றிக் கோசரமாகாமையை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) அறிய இரண்டு அல்லன்—(சிவாகமங்களின் அத்துவிதங் கூறுதலின் உயிர்) தன்னறிவானறிதற்குத் தன்னின்வேறல்லனாகலானும்,—அறிவின் உள்ளான் (ஆங்கு) அறிவுதன்னால் அறியப் படான்—(சமமாதலின்றித் தூல சூக்கும முறையாற்)றன் னறிவுக்குள்ளுமாய் நிற்றலின் (அவ்விடத்துத்) தன்னறிவினாலறிய வாரானாகலானும்,—அறிவுக்குக் காட்டு ஆகி நின்றானை—தன்னறிவுக்கு வியஞ்சகமாய் நின்றறிவிக்கும் உயிர்க்கு முயிராய முதல்வனை,—அறிவுகண்டு அறிந்து காட்டாது—ஆன்மஞானமானது தான் கண்டறிந்து (தனகுணியாகிய உயிர்க்குக் கோசரமாமாறு) காட்டமாட்டாது,—மெய்யறியாக்கண்ணென்ன—(தன்னின் வேறின்றித் தனக்குணிற்றலிற் றன்னாற் காணப்படாது தனக்குக் காட்டாகி நின்ற) உயிரை அறியமாட்டாத கண்ணொளிபோல் எ-று.

காட்டு முதனிலைத் தொழிற்பெயர்.

அறிவுக்குக் காட்டாகி நின்றானென்னும் பெயரடையானும் ஓரேதுக் கூறியவாறு.

கண்டறிதல் "குளிர்ந்தாழ்ந்தகண்" என்றாற்போல ஒருபொருட்பன்மொழியாய்ச் சிறப்பின்கண் வந்தது. மெய்யறியாக் கண்ணென்ன என இயைத்துரைக்க. கண் முதலியவற்றை நோக்கி உயிர் சத்துச் சித்தாமென்றவதனை மெய்யென்றார். கண் ஆகுபெயர்.

கண்ணறியா மெய்யென்பதற்குக் கண்ணையறியாத உடம்பு போலென்று உரைப்பாருமுளர். உடம்பிற்கு அறியுந்தன்மையின்மையானும், உடம்பிற்குக் கண் காட்டாதலும் இன்மையானும் அஃதின் றிவண்மையாகா லொவ்வாமையின் அது போலியுரை யென்றொழிக.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) அறிய இரண்டு அல்லன் அறிவினுள்ளான் ஆங்கு அறிவு தன்னால் அறியப்படான் அறிவுக்குக் காட்டு ஆகி நின்றனை அறிவு கண்டு அறிந்து காட்டாது மெய்யறியாக் கண் என்ன.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், உயிர் பசுத்துவமாகிய ஆணவமலத்தில் நின்றும் நீங்கியகாலத்துச் சிவனை யடைதலால் சிவனைப் போல முற்றுணர்தல்முதலிய எண்குணங்களும் உடையதென ஆகமங்களுட் கூறப்படுதலின், ஆணவமலம் நீங்கிய அவ்விடத்து ஆன்மஞானம் சிவஞானத் தோடொப்பதன்றிப் பசுஞான மெனப்படாமையால், முதற்பொருள் அந்த ஆன்மஞானத்தாலறியப்படும் கோசரப் பொருளென்றலே பொருத்தமன்றி அவனருளாற் பாவிக்கப்படுவதென மேலை வெண்பாவிற் கூறியது பொருந் தாதென்பர் சிவசமவாதிகள். அவரை நோக்கிமறுத்து அவனருளாலன்றி அம்முதல்வன் அறியப்படானென மேற்கூறியதை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) சிவாகமங்களில் உயிரும் முதல்வனும் அத்துவிதம் என்று கூறுதலால் உயிர் தன்னறிவால் முதல்வனை யறிதற்கு முதல்வன் உயிரின் வேறல்லன். அத்துவிதமாய்க் கலந்திருத்தலால் உயிரும் முதல்வனும் சம மோஎனின், சமமாதலில்லை. வேறு எவ்வாறு நிற்குமெனின், உயிர் தூல மாய் வெளிப்பட்டு நிற்கும். முதல்வன் சூக்குமமாய் வெளிப்படாமல் உயி ரின் அறிவுக்குள்ளாகநிற்பன். ஆதலால் மலம் நீங்கியவிடத்தும் உயிரின் அறிவால் முதல்வன் அறியவாரான். இவ்வாறு வேறல்லாமையானும், தூல சூக்கும முறையானும், உயிரின் அறிவிற்குத் துணையாய் நின்று அறிவிக் கின்ற உயிர்க் குயிராகிய முதல்வனை ஆன்மஞானமானது தான்கண்டறிந்து அந்த ஞானத்தைக் குணமாகவுடைய குணிப்பொருளாகிய ஆன்மாவிற்கு எட் டும் வண்ணம் காட்டமாட்டாது. எதுபோல எனின், உயிரானது கண் ணொளியின் வேறின்றி அதற்குள்ளாக நின்று அது பொருளை யறிதற்குத் துணையாய் நிற்கின்றது; அவ்வாறுநிற்கின்ற உயிரைக் கண்ணொளி காண மாட்டாத வாறு போலாம் எ-று.

(க-ரை.) உயிரின்வேறான பொருளை உயிரின் அறிவு அறிதல் கூடும். முதல்வன் உயிரோடு கலந்து நிற்றலால் கண்ணொளியோடு கலந்து நிற் கின்ற உயிரைக் கண்ணொளியறியாதவாறுபோல அம் முதல்வனை உயிரின் அறிவு அறியாது என்பதாம்.

கண்ணொளி கண்ணின் வேறான பொருளையெல்லாம் அறியும். கண் ணின் உள்ளாய் நிற்கும் உயிரை அறியாது. கண்ணொளியும் உயிரும்

கலந்து நிற்கின்ற நிலை அத்துவிதம். கண்ணொளி முற்பட்டு விளங்குவதால் தூலம். உயிர் உட்பட்டு விளங்குவதால் சூக்குமம். அன்றியும் கண்ணொளி தானே அறியும் தன்மையில்லாமையால் தூலம். கண்ணொளியை நோக்க உயிர்தானே அறியுந்தன்மை யுடைமையால் சூக்குமம். இவ்வாறே உயிர் தானே அறியும் தன்மை இல்லாமையால் தூலம். முதல்வன் தானே அறியும் தன்மை உடைமையால் சூக்குமம். தூலமாயிருப்பதொன்று அதனினுந் தூலமான பொருளை யறியுமேயன்றிச் சூக்குமமான பொருளை யறியாது. ஆதலால் ஆன்மஞானத்தால் முதல்வனை யறியமுடியாதெனக்கூறி அவனருளால் அவனை யறியவேண்டுமென மேற்கூறியதை வலியுறுத்திய வாறு அறிக.

காட்டாகி நின்றானை என்பதிலுள்ள காட்டு என்பது காட்டுதல் என்னும் பொருளைக்குறித்து தல்விகுதியில்லாது நிற்றலால் முதல் நிலைத் தொழிற் பெயர். காட்டுதல் என்பது வியஞ்சகம்.

அறிவுக்குக் காட்டாகி நின்றான் எனக் கூறியதனால் நின்றான் என்னும் வினையாலணையும் பெயருக்கு அறிவுக்குக் காட்டாகி யென்பது அடை. அவ்வடையாலும் ஓர் ஏதுக் கூறியவாறாம். அதாவது தானே அறியுந்தன்மை யின்மையால் அறிவுக்குக் காட்டாகி நின்றானை என்பதாம்.

இந்த ஏதுவை உரையில் விரிக்கவில்லையாயினும் விரித்துக்கொள்க. ஆகவே, வேறல்லனாதலானும், உள்ளாய் நிற்றலினாலும், தானே அறியுமாறில்லாமையானும், உயிர் அறிவால் தனித்து முதல்வனை யறிதல்கூடா தென்பதாம்.

அறிந்து கண்டு என்பது கண்டறிதல் எனக் கூட்டப்பட்டது. கண்டு என்றதும் அறிதல் என்றதும் ஒரு பொருளைத்தரும் சொற்கள். இது நாலடியார் தூய் தன்மையில் "குழிந்தாழ்ந்தகண்" என்றவிடத்து ஆழ்ந்த என்னும் பொருளைத்தரும் குழிந்து என்னும் சொல் மீமிசையாய் நின்றது போலாம். ஆகவே, கண்டறிதல் என்பது காணுதல் என்னும் ஒரு பொருளைக் குறிக்கும் பன்மொழியாய்ச் சிறப்பின்கண் வந்தது.

கண்ணறியா மெய்யென்ன என்பதை மெய்யறியாக்கண் என்ன என உரைக்கப்பட்டது. மெய்யென்பது இவ்விடத்தில் உயிரைக் குறித்து நின்றது. ஏதனாலெனின், கண் முதலிய இந்திரியங்களை நோக்க அவ்விந்திரியங்கள்போல் தோன்றி யழியுந்தன்மை இல்லாமையால் உயிர் சத்தாம். அவ்விந்திரியங்கள்போல் அறிவில்லாத சடமல்லாமையால் உயிர் சித்தாம். ஆதலால் சத்துச்சித்தாகிய உயிரினை மெய்யென்று கூறப்படுமாதலாலென்க. மெய்ப்பொருளாகிய உயிர்க்கு இடமாதல்பற்றி உடம்மை மெய்யென்பது உபசாரம்.

கண் என்பது கண்ணொளியைக் குறித்து நிற்றலால் ஆகுபெயர்.

கண் அறியா மெய் என்ன என்பதற்குக் கண்ணை யறியாத உடம்புபோ லென்று கூறுவாருமுளர். உடம்பிற்கு அறியுந்தன்மை இல்லாமையானும், உடம்பிற்குக் கண் துணையாய் நின்று காட்டுதலில்லாமையானும் அவ்வுரை உயிரையும் முதல்வனையுங் குறித்தற்கு உவமை யாகாமையால் பொருந்தாது.

ஆன்ம ஞானத்தால் அறியப்படாத முதல்வன் அவனருளாலும் அறியப்படுமா றில்லையென்பாரை மறுத்து அவனருளால் அறியப்படுமென்பதை வலியுறுத்தும்

உதாரணம்.

அதுவென்னு மோன்றன் றதுவன்றி வேறே
யதுவென் றறியறிவு முண்டே—யதுவென்
றறிய விரண்டல்ல ளுங்கறிவு ணிற்ற
லறியுமறி வேசிவமு மாம்.

## சிற்றுரை.

எ—று உ-ம் எ—னின், அத்தன்மையனாகிய முதல்வனைத் தலைப்பட்ட உயிர் அம்முதல்வனோடு ஒன்றாய்ப் போவதேயாக வின் ஆண்டங்ஙனமறிவதூஉம் அறியப்படுவதூஉமாதல் யாங்ஙன மென்னும் சிவாத்துவித சைவர் சுத்த சைவரை நோக்கி ஒன்றாய வழியும் அறிவதும் அறியப்படுவது முண்டென்பதுணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) அது என்னும் ஒன்று அன்று—(சத்தாகிய சிவம் ஞேயப்பொருளாய் விசிட்டமாய் நிற்பதென்பது உமக்கும் ஒக்குமா கலான் அச்சிவம் இன்னதென்றறியவாராது அநிருவசனமாய்நிற்ப தொரு நிருவிசேடப்பொருளெனக் கொண்ட மாயாவாதத்தைப் போல) அதுவென்று அநிருவசனமாய்க் கூறப்படுவதொரு சூனிய மன்று, (ஆகலான்),—அது அன்றி வேறு அது என்று அறி அறி வும் ஆங்கு உண்டே—அந்த ஞேயமாத்திரையே யன்றி அதனின் வேறாக வாக்கு மனாதீதமாய் நிற்பதொரு பொருளென்றறிகின்ற ஞாதாவும் ஆண்டுள்ளதேயாம், (அற்றேல், ஒன்றுதல் பெறப்படா தாலெனின்),—அது என்று அறிய இரண்டு அல்லன் அறிவுள் நிற் றல் அறியும் அறிவு சிவமும் ஆம்—(உலகத்துப் பொருள்போல்) அதுவென்று சுட்டியறியுமாறு முதல்வன் தன்னின் வேறல்லனாய் (அப்பணைந்த உப்புப்போலத்) தன்னறிவின்கண் விரவி வேற்றுமை தோற்றாது நிற்றலான் அறிவிறந்தறிகின்ற அவ்வுயிர் சிவமே யாம் எ-று.

உம்மை சிவமாயும் சிவமாகாமை விளக்கி நின்றது.

அதுவென்னு மொன்றன்றாகலானென ஏதுப் பொருள்படக் கொண்டுரைக்க.

அறிவுமென்ற உம்மை இறந்ததுதழீஇயது.

அல்லனென்பது முற்றெச்சம். வேறு முடிபுகோடலிற்பால் வழுவாசாமை யுணர்க.

உண்டே என்னும் ஏகாரம் தேற்றம்; ஏனையிரண்டும் அசை நிலை. நிற்றல் நிறறலானென்றவாறு.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) அது என்னும் ஒன்று அன்று அது அன்றி வேறு அது என்று அறி அறிவும் ஆங்கு உண்டே அது என்று அறிய இரண்டு அல்லன் அறிவுள் நிற்றல் அறியும் அறிவு சிவமும் ஆம்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், ஆன்மஞானத்தாலறியப்படாத தன்மையனாகிய முதல்வனைக் கூடப்பெற்ற உயிர் அம்முதல்வனோடு ஒன்றாய்ப் போவதேயாகும். ஆதலால் அம்முத்தி நிலையில் அவனருளால் உயிர் அறியும் என்பதும் முதல்வன் அறியப்படுவன் என்பதும் கூடுமென்று இவ்வதிகரணத்து இரண்டாவது வெண்பாவிற் கூறியது எவ்வாறு பொருந்துமெனச் சிவாத்துவித சைவர் சுத்த சைவர் கூறுவர். அவரை நோக்கி மறுத்து முதல்வனுடன்கூடி உயிர் ஒன்றானவிடத்தும் உயிர் அறிவதும் முதல்வன் அறியபபடுதலும் உண்டென்பது உணர்த்தி அவனருளாலறியப்படுவன் என்பதனை வலியுறுத்தியவாறாம்.

(பொ-ரை.) சத்தாகிய சிவம் அறியப்படும் பொருளாய், பசுபாசங்களாகிய விசேடணத்தை யுடையதாய், விசிட்டமாய், (அதாவதுபசுபதியாய்) நிற்பது என்பது சிவாத்துவித சைவர் சுத்தசைவர் ஆகிய உமக்குமொக்கும். ஆதலால் அச்சிவம் இன்ன தன்மை உடையதென்று உறுதியாய்க் கூற முடியாத அநிர்வசனமாய் நிற்பதாகிய ஒரு சாதாரணப்பொருள் எனக்கொண்ட மாயாவாதத்தைப்போல, அது வென்று உறுதியாகச் சொல்லக் கூடாததொரு சூனியமன்று. ஆதலால் அருளாலறியப்படும் அச்சிவப்பொருள் மாத்திரமே அன்றி, அப்பொருளின் வேறாக வாக்குமனாதீதமாய்நிற்பது அம்முதற்பொருளென்று அறிகின்ற உயிரும் அம்முத்திநிலையில் உள்ளதேயாம். அவ்வாறு முதல்வனும் உயிரும் முத்தியில் உண்டென்றால் ஒன்றாதல் பெறப்படாதே யெனின், பெறப்படும்; எவ்வாறெனின், உலகத்துப்பொருள் அது வென்று சுட்டியறியப்படுமாறு உயிரின் வேறாய் நிற்பதுபோல முதல்வன் உயிரின் வேறல்லனாய் தண்ணீரைச்சார்ந்த உப்பு அத்தண்ணீராகக்

கலந்து விளங்குவதுபோல, முதல்வனைச் சார்ந்த உயிரின் அறிவின்கண் முதல்வன் கலந்து வேற்றுமை தோன்றாது நிற்றலால், சுட்டியறியும் அறிவிறந்து அவனருளாலறிகின்ற அவ்வுயிர் சிவமேயாதலின் ஒன்றாதல் பெறப்படும் எ-று.

(க-ரை.) முத்தி நிலையில் உயிர் முதல்வனோடு கலந்து முதல்வனாய் நின்று அவனருளால் அவனையறியும் என்பதாம்.

முதல்வனாய் நின்று அவனருளால் முதல்வனை யறிதல் எதுபோல எனின், சூரியனை யறியவிரும்பியகண் சூரியனொளியை ஊடுருவிச் சென்று அச்சூரியனாகவே நின்று அதனொளியால் அதனை அறிவதுபோலாம்.

இவ்வுண்மை யறியாதஏகான்ம வாதிகள், துவம்பதலட்சியார்த்தமாகிய சித்தே தற்பதலட்சியார்த்தமாகிய சிவம் என்பர். வாச்சியார்த்தம் தடத்தமும் லட்சியார்த்தம் சொரூபமுமாம். தடத்தநிலையில் உயிரும் சிவமும் அந்நியமாயிருக்கும். சொரூபநிலையில் அவ்விரண்டும் அநந்நியமாயிருக்கும். அது பற்றி உயிர் சிவமென்று ஆகமங்கள் கூறும். இவ்வளவேயன்றி உயிரில்லையென்பது கருத்தன்று. இன்றேல், இன்ப அநுபவமும் இல்லையாய் முடியும். அதுவேஎமது கொள்கையென்பரேல், அநுபவிப்பவனும் அநுபவமும் இல்லையாகவே அநுபவிக்கப்படும் பொருளும் இல்லையெனப்பட்டுச் சூனியவாதமாம். ஆதலால் முத்தியில் உயிர் இல்லையென்ற அவர்கருத்துப் பொருந்தாது.

சிவமுமாம் என்றதிலுள்ள உம்மை எதிர்மறையாய்க் கலப்பினால் உயிர சிவமாய் நின்றும் பொருளின் தன்மையால் சிவமாகாமையை விளக்கி நின்றது.

அது வென்னும் ஒன்றன்று என்பதனோடு ஆகலான் என்னுஞ் சொல்லைச் சேர்த்து ஏதுப் பொருள்படக் கொண்டு உரை செய்யப்பட்டது.

அறி அறிவும் என்றதிலுள்ள உம்மை அது என்று மேலே கூறிய முதல்வனையுந் தழுவி முதல்வனே யன்றி உயிரும் உண்டென்று விளக்கி நின்றமையால் இறந்தது தழுவியது.

இரண்டல்லன் என்பது வாக்கியத்தால் முற்றாயும் அல்லனாய் என்னும் பொருளில் எச்சமாயும் நிற்றலால் முற்றெச்சம். அந்த எச்சம் நிற்றலால் என்பது கொண்டு முடிந்தது.

அது என்று அறிய இரண்டு அல்லன் என்றதில் அது என்பது அஃறிணை ஒன்றன்பால் அல்லன் என்பது உயர்திணை ஆண்பால். ஆகலால் பால் வழுவாகாதோ வெனின், ஆகாது; எதனாலெனின், அது என்பது உலகத்துப பொருளையும் அல்லன் என்பது முதல்வனையுங் குறித்து வேறு முடிபு கொண்டு நிற்றலால் என்க

உண்டே என்பதிலுள்ள ஏகாரம உயிர் உணடென்று உறுதிசெய்தமை யின் தேற்றம வேறே என்றதிலுள்ள ஏகாரமும் அறிவே என்றதிலுள்ள ஏகாரமும் அசைநிலை

அறிவுள நிற்றலெனபது நிற்றலால் என்னும் பொருள் குறிதது நின்றது.

## சிற்றுரை.

இவ்வெண்பாக்களைந்தும முறையே வாக்கு மனாதீத மென றல் பொருந்தும் கோசரமாமென்றல பொருந்தா தென்னும் மாயா வாதிகளையும், கோசரமாமென்றல் பொருநதும வாக்கு மனாதீத மென்றல் பொருந்தா தென்னும் நையாயிகர் முதலியோரையும், பாவனைக்குக் கோசரமா மென்னும் பாதஞ் சலரையும, ஆன்மஞா னத்திறகே கோசரமா மென்னும சமவாத சைவரையும, முத்தி யிற் சிவமேயன்றி உயிரென வேறின்மையின் உயிர்க்குக் கோசர மாமாறியாண்டைய தென்னுஞ் சிவாத்துவித சைவர் முதலியோ ரையும் மறுத்து வாக்கு மனாதீதகோசரமாய் நிற்கும் இயல்பு வலி யுறுத்தி ஒருபொருள் மேல் வந்தவாறு காண்க.

இவ்வாறு நாலாஞ் சூத்திர முதலிய மூன்றினும் மேற்பிரமா ணத்தாற் கூறிப் போந்த பசுபாசபதிகட்கு இலக்கணங் கூறுமுகத் தான் முறையே கேவலஞ் சகலஞ் சுத்தமென்னும் மூன்றவததை யுங் காட்டப்பட்டன. இம்மூனறனுட் கேவலம மருட்கேவலமும், சகல கேவலமும், பிரளய கேவலமும், விஞ்ஞான கேவலமும், அருட்கேவலமுமென ஐவகைப்படும். அவற்றுள், மருட் கேவல மாவது அனாதி கேவலம். சகல கேவலமாவது சங்கரித்த பின்னர்ப் புனருற்பவததிற் கேதுவாய்ப் படுங்கேவலம் ஆண்டுச் சூக்கும ஐந தொழிலுண்டென மிருகேநதிரத்துட் கூறுதலின் அனாதிகேவலத் தோடு இதனிடைவேற்றுமையாமாறு கண்டு கொள்க. பிரளய கேவலமாவது மாயையோடு இயைபின்றி ஆண்டுப்படுங் கேவலம். விஞ்ஞான கேவலமாவது மாயைகன்மங்க ளென்னும இரண்டனோ டும் இயைபின்றி ஆண்டுப்படுங்கேவலம. அருட்கேவலமாவது தத்துவசுத்திப் பின்னர்ப்படுங் கேவலம், அது துகளறு போதத திற் காண்க இனிச் சகலமுஞ் சகலததிற்கேவலம, சகலத்திறசக லம் சகலத்திற்சுத்தமென மூவகைப்பட்டு ஒரோவொன்று ஐநது வகைப்படும. அவற்றுட் சகலத்திறகேவல மைநதும் "ஒன் றணையாமூலத்து" மென்றதனுட்காண்க சகலததிறசகல மைநதுட

"இலாடத்தேசாக்கிரத்தை" என்றதனுட் காண்க. சகலத்திற் சுத்தமைந்தும் "யோகிற்றருவதோர் சமாதி" என வழிநூலாசிரியர் தொகுத்தோதியது சித்தாந்த சாராவலி யோகபாதத்தின் வகுத்துக் கூறுதலான் ஆண்டுக்காண்க. இனிச் சுத்தமும் சீவன் முத்தி அதிகாரமுத்தி போகமுத்தி இலயமுத்தி பரமுத்தி என்றைவகைப் பட்டுச் சாக்கிரமுதலிய பெயர்பெறும்; அவற்றை முன்னர் வகுத்தோதுப.

## விளக்கம்.

இவ்விரண்டாம் அதிகரணத்திற் கூறிய வெண்பாக்கள் ஐந்தில் முதல் வெண்பாவால் முதல்வன் பாச பசு ஞானங்கட்கு எட்டப்படான் என்றல் பொருந்தும் பதி ஞானத்திற்கு எட்டுவன் என்றல் பொருந்தாது என்னும் மாயாவாதிகளையும், இரண்டாவது வெண்பாவால் முதல்வன் பதி ஞானத்திற்கு எட்டப்படுவன் என்றல் பொருந்தும் பாசஞான பசுஞானங்கட்கு எட்டப்படான் என்றல் பொருந்தா தென்னும் நையாயிகர் முதலியோரையும், மூன்றாவது வெண்பாவால் முதல்வன் பதிஞானத்திற்கு எட்டப்படுவன் என்று கூற வேண்டாம் பாவனைக்கு எட்டப்படுவன் என்னும் பாதஞ்சலரையும், நான்காவது வெண்பாவால் முதல்வன் ஆன்மஞானத்திற்கே எட்டப் படுவன் என்னும் சிவசமவாத சைவரையும், ஐந்தாவது வெண்பாவால் முத்தியிற் சிவமேயன்றி உயிரென வேறின்மையின் உயிர்க்கு முதல்வன் அறியப்படுவ னென்றல் எவ்வாறு கூடும் என்னும் சிவாத்துவிதசைவர் முதலியோரையும் மறுத்து மேற்கோளிற் கூறியவாறு முதல்வன்வாக்கு மனாதீத கோசரமாய் நிற்கும் இயல்பினை வலியுறுத்தி ஐந்து வெண்பாக்களும் ஒருபொருள்மேல் வந்தவாறு காண்க.

இவ்வாறு நாலாஞ்சூத்திரம்முதல் மூன்று சூத்திரங்களினாலும் பிரமாண இயல் முதற்சூத்திரமுதல் மூன்று சூத்திரங்களினால் உண்டென்று கூறி முடித்த பசுபாச பதிகட்கு இலக்கணங் கூறும் முறையில், நான்காஞ் சூத்திரத்தால் சகசமலத் துணராது கிடக்குங் கேவல அவத்தையும், ஐந்தாஞ் சூத்திரத்தால் கருவிகளோடுகூடி விடயங்களை யறியுஞ்சகல அவத்தையும், இவ்வாறுஞ் சூத்திரத்தால் பாசஞான பசுஞானங்களைக் கடந்து பதிஞானத்தாற் சிவனையறியுஞ் சுத்தாவத்தையுங் காட்டப்பட்டன.

கேவல சகல சுத்தமென்ற இம் மூன்றனுள், கேவலம் மருட்கேவலமும் சகலகேவலமும் பிரளயகேவலமும் விஞ்ஞானகேவலமும் அருட்கேவலமுமென ஐவகைப்படும், அவற்றுள்:—

மருட்கேவலமாவது, அறிவை மறைத்து மயக்கத்தைச் செய்யும் ஆணவ மலத்தோடு அணுதியே கூடி அறிவின்றிக் கிடக்கும் அணுதி கேவலம்.

சகல கேவலமாவது, அநாதிகேவலத்தில் நின்றும் நீங்கிச் சரீரம்பெற்றுச் சங்கரிக்கப்பட்ட பின்னர், புதுச்சிருட்டிக்கு ஏதுவாய் ஒடுங்கியிருக்கும் பொழுது அவ்விடத்தில் மும்மலங்களோடுங் கூடிப்படும் சகலருக்குரிய கேவலம். அவ்வாறு ஒடுங்கியிருக்கும் காலத்துச் சூக்கும ஐந்தொழில் உண்டென மிருகேந்திரம் என்னும் உபாகமத்தில் ௪-வது பிரகரணம் ௧௫-வது சுலோகத்துட் கூறுதலால், சூக்கும ஐந்தொழிலும் இல்லாத ஆணவமலம் ஒன்றோடு கூடிய அநாதிகேவலத்திற்கும் சூக்கும ஐந்தொழிற்படுவதோடு மும்மலங்களுடன் கூடிய இந்தச் சகலகேவலத்திற்கும் வேற்றுமை உண்டென்பது கண்டுகொள்க.

சூக்கும ஐந்தொழிலாவது, சர்வசங்காரத்தில் மலபரிபாக தாரதம்மியத்திற்குத் தக்கபடி அறிவிக்கத்தக்கவர்களை அறிவித்தல் அநுக்கிரகம். மறைக்கத்தக்கவர்களை மறைத்தல் திரோபவம். ஆன்மாக்களின் சஞ்சிதகன்மங்களைப் பக்குவப்படுத்தல் சங்காரம். மாயாகாரியங்களை வெளிப்படத்தகுந்தவைகளாகச்செய்தல் திதி. தோன்றுதற்குரிய சித்துப்பொருள் சடப்பொருள்களைப் பார்த்துக்கொண்டிருத்தல் சிருட்டி.

பிரளய கேவலமாவது, அநாதிகேவலத்தினின்றும் நீங்கிச் சரீரம் பெற்றுச் சங்கரிக்கப்பட்ட பின்னர் புதுச்சிருட்டிக்கேதுவாய் ஒடுங்கியிருக்கும்பொழுது அவ்விடத்தில் மாயையோடு பொருந்தாது ஆணவங் கன்மம் என்னும் இரண்டனோடுங்கூடிப்படும் பிரளயாகலருக்குரிய கேவலம்.

விஞ்ஞான கேவலமாவது, அநாதிகேவலத்தினின்று நீங்கிச் சரீரம் பெற்றுச்சங்கரிக்கப்பட்ட பின்னர்ப் புதுச்சிருட்டிக்கேதுவாய் ஒடுங்கியிருக்கும்பொழுது அவ்விடத்தில் மாயை கன்மங்களென்னும் இரண்டனோடும் பொருந்தாது ஆணவத்தோடு கூடிப்படும் விஞ்ஞானகலருக்குரிய கேவலம்.

ஆணவமலத்தோடு கூடிய அநாதி கேவலத்திற்கும் ஆணவமலத்தோடு கூடிய விஞ்ஞான கேவலத்திற்கும் வேற்றுமை யென்னையெனின், அநாதி கேவலத்தினின்று சகலராய்த் தோன்றுதலும் விஞ்ஞான கேவலத்தினின்று விஞ்ஞானகலராய்த் தோன்றுதலும் வேற்றுமையாம் என்க. அநாதியே விஞ்ஞானகலராதல் அநாதி கேவலத்துள் நின்று தானே உண்டாதல் வேண்டும்; ஆகலான் அவ்விரண்டற்கும் வேற்றுமையின்றுபோலுமெனின், அங்ஙனமன்று; ஆணவமல மறைப்பின் வேறுபாட்டால் அநாதியே விஞ்ஞானகலருக்குரிய கேவலம் அநாதியே பிரளயாகலருக் குரிய கேவலம் அநாதியே சகலருக்குரிய கேவலமென மூன்று உண்டெனப்பட்டு அம்மூன்றும் தோன்றுதற்கு உரியது அநாதிமருட்கேவலம். இவ்விடத்துக்கூறிய விஞ்ஞானகேவலம், சகலராய் நின்று பக்குவப்பட்டுச் சங்கரிக்கப்பட்டவர்க்குப் பின்னர் உண்டாகும்கேவலம். ஆதலால் அநாதியே ஆணவமல மறைப்பின் வேற்றுமையால் உண்டாகும் விஞ்ஞானகேவலத்திற்கும், இடையே

மாயாமலகன்மமலங்கள் நீங்கப்பெற்றதா லுண்டாகும் விஞ்ஞானகேவலத்திற்கும் வேற்றுமையுளதாமாறறிக. அனாதிவிஞ்ஞானகேவலர் சிருட்டியாற் பக்குவப்படாதவர். ஆதிவிஞ்ஞானகேவலர் சிருட்டியாற் பக்குவப்பட்டவர்.

அருட் கேவலமாவது தத்துவங்களெல்லாம் நீங்கிய பின்னர் அருளோடுகூடிப்படுங்கேவலம். இந்நிலையில் பாசஞான பசுஞானங்களின்றி அருளாய் நிற்றலால் அருட்கேவலமெனப்பட்டது. அருளாலுண்டாகுங் கேவலம் அருட்கேவலம். இதனைத்துகளறுபோதத்தில் "பகலிழந்தவான்போற் பாவுமல நீயா—இகலறவே நின்று யிழந்தா—யகலறிவு—வாடாத முத்தியினில் வாய்ந்தவருட்கேவலநீ—நாடாத கேவலமுன்னாள்" என்றதனாலறிக. இச்செய்யுளின் கருத்து, சூரியன் நீங்கிய ஆகாயம் இருளோடு கூடி இருளாயே யிருந்தவாறுபோல (அருணீங்கிய நீ) ஆணவமலத்தோடு கூடி அதுவாயேயிருந்தாய். அம்மலம் நீங்க இப்பொழுது அருளோடு கூடி அருளாயே யிருக்கின்றாய். இந்நிலை தன்செயலற்றிருத்தலின் அருட்கேவல மெனப்படும். இது எதுபோல எனின், முன்னர் அறிவு தொழிற்படாத கேவலம் போலாம் எ-று. இக்கருத்துப்பற்றியே, "ஆணவத்தோ டத்துவித மானது போல் மெய்ஞ்ஞானத் தாணுவினோ டத்துவிதஞ் சாருநா ளெந்நாளோ" என்றனர் தாயுமானசுவாமிகளும்.

இனிச் சகலமும் சகலத்திற் கேவலம் சகலத்திற் சகலம் சகலத்திற் சுத்தமென மூவகைப்பட்டு, ஒவ்வொன்றும் சாக்கிரஞ் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதமென ஐவகைப்படும். அவற்றுள், சகலத்திற் கேவலமாவது இந்நூல் நான்காஞ் சூத்திரத்தில் "ஒன்றணையா மூலத்து" என்ற வெண்பாவிற் கூறியவாறு புருவநடுமுதல் மூலாதாரம்வரை கீழ்நோக்கிச் செல்லும் அவத்தை ஐந்துமாம்.

சகலத்திற் சகலமாவது இந்நூல் நான்காஞ்சூத்திரத்தில் "இலாடத்தே சாக்கிரத்தை" என்ற வெண்பாவிற் கூறியவாறு சாக்கிரத்தானமாகிய புருவ நடுவிலடையும் அவத்தை ஐந்துமாம்.

சகலத்திற் சுத்தமாவது சிவஞானசித்தியார் ௪-ம் சூ-ம் ௯௪-வது செய்யுளில் "யோகிற்றருவதோர் சமாதி" எனக் கூறியவாற்றானும், சித்தாந்த சாராவலியிற் கூறியவாற்றானும், இருதயம் கண்டம் நாக்கின்அடி புருவ நடு பிரமரந்திரம் என்னும் ஐந்துதானங்களிறபடும் அவத்தை ஐந்துமாம்.

இனிச் சுத்தமும் சீவன்முத்தி அதிகாரமுத்தி போகமுத்தி லயமுத்தி பரமுத்தி என ஐவகைப்பட்டு முறையே நின்மலசாக்கிரம் நின்மலசொப்பனம் நின்மலசுழுத்தி நின்மலதுரியம் நின்மலதுரியாதீத மெனப் பெயர் பெறும். அவற்றை முன்னர் ஏழாஞ் சூத்திரம் முதல் வகுத்தோதுவர். எவ்வாறெனின்:—

சீவன் முத்தியாவது சீவத்தன்மை விடுபடுதல். இது ஏழாஞ் சூத்திரத்தில் அதிகாரம் உண்டெடன்பதனுல் ஆரம்பிக்கப்பட்டுப் பன்னிரண்டாஞ் சூத்திரத்தில் முற்றுப் பெறுகின்றது.

அதிகாரமுத்தியாவது அதிகாரசிவத்தை அடைந்து உடற்பற்றை விடுதல். சகலவர்க்கத் தான்மாக்களுக்கு அதிகாரசிவம் குருவேயாகும். இது எட்டாஞ் சூத்திரத்தில்"தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்டு" என்பதனுற் கூறப்படுகின்றது.

போகமுத்தியாவது போகசிவத்தை அடைந்து உலகப்பற்றை விடுதல். சகலவர்க்கத்தான்மாக்களுக்குப் போகசிவம் பதியேயாகும். அப்பதியைப் பதிஞானத்தாலடைந்து உலகத்துள்ள போகத்தை விடுதலே போகமுத்தியாம். இது ஒன்பதாஞ்சூத்திரத்தில் "பதியை—ஞானக் கண்ணினிற் சிந்தை நாடிப்***பாச மொருவ" என்பதனுற் கூறப்படுகின்றது.

லயமுத்தியாவது லய சிவத்தையடைந்து மலமாயா கன்மங்களை விடுதல். சகலவர்க்கத் தான்மாக்களுக்கு லயசிவம் தற்போதம் அடங்கின விடத்தில் ஏகனய்ப் பிரகாசிப்பதேயாம். இது பத்தாஞ் சூத்திரத்தில் "ஏகனுகி இறைபணி நிற்கில் மலமாயை தன்னெடு வல்வினையின்றே" என்பதனுற் கூறப்படுகின்றது.

பரமுத்தியாவது பரசிவத்தை அடைந்து பாசப்பற்றை விடுதல். இது பதினேராஞ் சூத்திரத்தில் "அயரா அன்பின் அரன்கழல் செலுமே" என்பதனுற் கூறப்படுகின்றது. பத்தாஞ் சூத்திரத்திற்கும் பதினேராஞ் சூத்திரத்திற்கும் வேறுபாடு என்னையெனின், பாசநீக்கம்வேறு பாசப்பற்று நீக்கம் வேறு. பற்று ஆன்மாவினிடத்தில் என்றும் உள்ளது. அப்பற்று பாசம்நீங்கினுலும் இருக்கும். அப்பற்ருல் மீண்டும் விட்டபாசத்தைப்பற்ருத வண்ணம் இறைவன்றிருவடியை இடையருது பற்றவேண்டும் என்பது தோன்ற "அயரா அன்பின் அரன்கழல் செலுமே" என்ருர். ஆகவே பத்தாஞ் சூத்திரம் பாசநீக்கமும், பதினேராஞ் சூத்திரம் பாசப்பற்று நீக்கமுமாகிய வேறுபாடு உடையன என்பது கண்டுகொள்க. பாசப்பற்று நீக்கத்தில் சிவனைப்பற்றி நிற்றலின், அது சிவப்பேறு எனப்படும்.

இவ்வாறுஞ் சூத்திரத்தினுலும் அதிகரணங்களினுலும் கூறி முடித்த தொகைப்பொருள்:—ஐந்தாஞ் சூத்திரத்திற் கூறப்பட்ட தமது அறிவிற்குத் துணையாகிய முதற்பொருள் அளவைகளால் அறியப்படும் பொருளோ அறியப்படாத பொருளோ என்னும் ஐயம்நிகழாதவண்ணம் அறியப்படும்பொருளாயின் அசத்தாம்; அறியப்படாத பொருளாயின் சூனியமாம்; ஆதலால் அறியப்படுதல் அறியப்படாமையாகிய இருபகுதியுமின்றிப் பாசபசுஞானங்களால் அறியப்படாமையும் பதிஞானத்தால் அறியப்படுவது மாகிய சித்துச் சத்தாமெனச் சூத்திரத்தால் முதல்வனுக்கு இலக்கணம் கூறப்பட்டது. பட

வே, பிரபஞ்சம்போல முதற்பொருளும் அளவைகளா லறியப்படுமென நையாயிகரும், எல்லாப்பொருளுஞ் சத்தேயாதலால் அளவைகளாலறியப்படும் பொருளுஞ் சத்தேயாமெனச் சாங்கியருங்கூற, முதலதிகரணத்தால் அவரை மறுத்து அளவைகளால் சுட்டியறியப்படும் சுட்டுப்பொருள் யாவும் அசத்தெனக் கூறப்பட்டது. படவே, முதல்வன் இயல்பு அறியப்படுவதென்றாவது அறியப்படாதது என்றாவது கூறமுடியாத அநிர்வசனம் என்று மாயாவாதிகூற, இரண்டாம் அதிகரணத்து மேற்கோள் ஏதுக்களால் அவரை மறுத்துச் சிவம் வாக்குமனதீத கோசரம் என்று கூறப்பட்டது. படவே, அதீத மென்றல் பொருந்தும் கோசரமென்றல் பொருந்தாதென அம்மாயாவாதி கூற, முதல் வெண்பாவால் அவரைமறுத்து உண்மை ஞானத்திற்குக் கோசரமெனக் கூறப்பட்டது. படவே, கோசரமென்றல்பொருந்தும் அதீதமென்றல் பொருந்தாதென நையாயிகர்கூற, இரண்டாவது வெண்பாவால் அவரைமறுத்து வாக்குமனதீதமாய் நின்றே கோசரமாமெனக் கூறப்பட்டது. படவே, பாவனைக்குக் கோசரமெனப் பாதஞ்சலர் கூற, மூன்றாவது வெண்பாவால் அவரை மறுத்துக் கருவிகளோடு கூடிய பாவனைக்குக் கோசரமாகாதெனவும் திருவருளோடு கூடிய பாவனைக்குக் கோசரமாமெனவுங் கூறப்பட்டது. படவே, ஆன்மஞானத்திற்குக் கோசரமாமெனச் சிவசமவாதிகள் கூற, நான்காவது வெண்பாவால் அவரை மறுத்து முதல்வனும் ஆன்மாவும் அத்துவிதமாய் நிற்றலால் அவன் அருளாலன்றி ஆன்மஞானத்திற்குக் கோசரமாகான் எனக் கூறப்பட்டது. படவே, முத்தியில் உயிர் முதல்வனோடு ஒன்றாய்ப்போதலேயன்றி வேறு நில்லாமையால் அவனருளாலறிவதென்பதும் கூடாதெனச் சிவாத்துவிதசைவர் முதலியோர் கூற, ஐந்தாவது வெண்பாவால் அவரை மறுத்து முத்தியிலும் உயிருண்டு அவ்வுயிர் சிவனோடு கலந்து நிற்றலால் சிவனேயாய் நின்று அவனருளால் அவனை யறிதல் கூடுமெனக் கூறப்பட்டது.

இரண்டாம் அதிகரணம் முற்றிற்று.

ஆறுஞ்சூத்திரம் முற்றிற்று.



## இலக்கணவியல் முற்றிற்று.

## முதலாவது பொதுவதிகாரம் முற்றிற்று.



# இரண்டாவது உண்மை அதிகாரம்.

## சாதனவியல்.

## ஏழாஞ் சூத்திரம்.

மேல் ஆறு சூத்திரங்களினாலுங் கூறிமுடித்த முப்பொருள்களுள், பயன் பெறுதற்பொருட்டுச் சாதித்தற்குரிய அதிகாரியின் இயல்பும், சாதனமும், சாதிக்கும் முறையும் ஆகிய மூன்றும் சாதன இயலில் மூன்று சூத்திரங்களாற் கூறத் தொடங்கிச் சாதித்தற்குரிய அதிகாரியின் இயல்பு முதற்கண் இந்த ஏழாஞ் சூத்திரத்தாற் கூறுகின்றார்.

யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா.

### கருத்துரை.

எ-து சூ-ம் எ-னின் மேலதற்கோர் புறனடை யுணர்த்துதனுதலிற்று.

### சிற்றுரை.

எ—து க—ரை எ—னின், சூத்திரக் கருத்துணர்த்துத னுதலிற்று,

(இ-ள்) நூலாருந்ததிநியாயம்பற்றி மேலே ஆறுசூத்திரங்களினுஞ் சிவாகமங்களிற் கூறப்படும் முப்பொருள்களது பொதுவியல்பு பிரமாண முகத்தானும் இலக்கணமுகத்தானும் ஆராய்ச்சிசெய்துணர்த்திய ஆசிரியர், அம்முப்பொருள்களது சிறப்பியல்பெனப்படும் உண்மை சாதனமுகத்தானும் பயன்முகத்தானும் ஆராய்ச்சிசெய் துணர்த்துவான் புகுந்து முதற்கண் மூன்று சூத்திரங்களான் அவற்றையறிந்து அதனுடைய பயன்பெறுதற் கேதுவாகிய சாதனங்கூறிய தொடங்கினார். அவற்றுள் இச்சூத்திரம் உணருருவசத்தெனவும், இருதிறனல்லது சிவசத்தெனவும் மேலைச் சூத்திரத்தான் வரைசெய் துணர்த்தியவழி அங்ஙன மறியும் பொருள் அவ்விரண்டனுள் ஒன்றோ வேறோ என்னும் ஐயப்பாட்டின்கண் அவ்விரண்டனுள் ஒன்றாகற்பால தென்பார்மதம்பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்துச் சூத்திரத்துக்குப் புறனாகவெடுத்து ஓரொழிபாகிய சதசத்தினியல்பு வரைசெய்துணர்த்து முகத்

தானை சாதித்துப் பயன் பெறுதற்குரிய அதிகாரியினியல்பாவது இதுவென்பதுணர்த்துதனுதலிற்று எ-று.

அதிகாரமும் ஒத்தும் வேறுபவழியும் இயைபுணர்ந்துகோடற் பொருட்டுக் கருத்துரை அவ்வாறு செய்தாரென்பது. இப்புற னடையை வடநூலார் வாக்கியசேடமென்ப. இதனுட் கூறப் படும் மூன்றதிகரணமும் மூன்று புறனடைபோலுமென மலையா மைப்பொருட்டு ஓர் புறனடை என்றார். முன்னையவிரண்டும் இறுதி அதிகரணத்தைச் சாதித்தற் கேதுவாய் ஒரு பொருண் மேல் வந்தனவேயாம் என்பது கருத்து.

ஒன்றனை யறிந்தவழி அதனுடைய பயன்பெறுதற்குரிய முயற்சி செய்யலுறுவார்க்கு அதனைச் சாதிக்குமாற்றல் தமக்குண்டென்ப தூஉம், சாதித்ததனால் வரும்பயன் இது வென்பதூஉம், அதனைப் பயப்பித்தற்குரிய சாதனமாவது இது வென்பதூஉம், அது வரு வாயு முணர்ந்தாலன்றி அதன்கண் மனவெழுச்சி செல்லாமையின் ஈண்டோதப்படும் சாதனஞ்செய்து பயன்பெறுதற்குரிமையுடைய அதிகாரியினியல் புணர்த்துவதாய இச்சூத்திரம் முதற்கண் வைக் கப்பட்டது.

## விளக்கம்.

இக்கருத்துரை என்ன சொல்லிற்றோவெனின், சூத்திரக்கருத்து இதுவென்று சொல்லிற்று.

(இக்கருத்துரையின் பொருள்.) வானத்திலுள்ள துலமான நட்சத்திரத் தைக் காட்டிச் சூக்குமமான அருந்ததி நட்சத்திரத்தைக்காட்டுவதுபோல, மேல் ஆறுசூத்திரங்களினாலும் பிரமாணம் இலக்கணம் என்னும் இரண்டின் வழியாய்ச் சிவாகமங்களிற் கூறப்படும் முப்பொருள்களினது பொதுவியல்பு எனப்படும் தூலத்தை ஆராய்ச்சி செய்துணர்த்திய ஆசிரியர் அம் முப் பொருள்களது சிறப்பியல்பு எனப்படும் சூக்குமமாகிய உண்மையைச் சாத னம் பயன் என்னும் இரண்டின் வழியானும் ஆராய்ச்சிசெய் துணர்த்த எண்ணி, முதற்கண் மூன்று சூத்திரங்களினால் அம் முப்பொருள்களை அறி ந்து அவற்றுள் பதிபொருளாலுண்டாம் பயன்பெறுதற்கு ஏதுவாகிய சாதனஇயல்கூறத்தொடங்கினார். அம்மூன்று சூத்திரங்களுள் இந்த ஏழாஞ் சூத்திரம் என்னசொல்லிற்றோ வெனின், ஆறாஞ்சூத்திரத்தில் உணரு அசத்தெனவும் இருதிறனல்லது சிவசத்தெனவும் வைத்துணர்த்திய விடத்து, அவ்வாறு அசத்தெனவும் சிவசத்தெனவும் அறியும்பொருள் அசத் துச் சிவசத்து என்னும் அவ்விரண்டனுள் ஒன்றோ வேறோ என்னும்

ஐயம் நிகழுமன்றே? அவ்வையப்பாட்டின்கண் அவ்விரண்டனுள் ஒன்றே அறியுமென்பார் மதம்பற்றி நிகழும் வினவை ஆசங்கித்து அவ்வாறாஞ் சூத்திரத்துக்குப் புறனாக எடுத்து அசத்துச் சிவசத்து என்னும் இரண்டனை யும் அறிவது அவ்விரண்டின் வேறான உயிராகிய சதசத்து என அதனியல்பு வரைசெய்து உணர்த்தி, அவ்வாறுணர்த்து முறைமையில் சாதித்துப் பயன் பெறுதற்குரிய அதிகாரியினியல்பு இதுவென உணர்த்துதல் இவ் வேழாஞ்சூத்திரத்தின் கருத்து எ—று.

உயிரினியல்பு உணர்த்தும் முறையில் அதிகாரியினியல்பு உணர்த்து தல் எவ்வாறெனின், சத்தைச்சார்ந்து சத்தையும் அசத்தைச்சார்ந்து அசத் தையும் அறிதல் உயிரினியல்பு. ஆதலால் உயிர் சதசத் தெனப்பட்டது. இதனால் சத்தை அடைதற்கு அதிகாரம் உடையது உயிரெனப்பட்டு அதி காரி இயல்பு உணர்த்தியவாறு அறிக. சத்தை அடைதற்குரிய உரிமை தனக்கு உண்டென்னும் அறிவுடைமையே சாதன வகையில் உயிருக்குச் சிறப்பிலக்கணம்.

ஆறாஞ்சூத்திரம் பொதுவதிகாரம்; இவ்வேழாஞ் சூத்திரம் உண்மை அதிகாரம். ஆறாஞ்சூத்திரம் இலக்கணஇயல்; இந்த ஏழாஞ்சூத்திரம் சாதன இயல். இவ்வாறு அதிகாரத்தாலும் இயலாலும் இருசூத்திரங்களும் வேறாய விடத்தும் இரண்டற்கு முள்ள சம்பந்தம் உணர்ந்து கொள்ளுதற் பொருட்டு இவ்வேழாஞ்சூத்திரத்திற்கு, மேலதற்கோர்புறநடை உணர்த்துதனுதலிற்று எனக் கருத்துரை செய்தார்.

சம்பந்தமாவது சத்து அசத்தை அறியாது அசத்துச் சத்தை அறியாது என ஆறாஞ்சூத்திரமும், அவ்வாறாயின் அவ்விரண்டனையும் அறிவதுயாது என்னுஞ் சந்தேகத்தினை நீக்கி உயிரே அவ்விரண்டினையும் அறியும் என ஏழாஞ் சூத்திரமும் கூறுதலாம்.

இவ்வாறு கூறும் புறனடையை வடநூலார் வாக்கிய சேட மென்பர். அதாவது முற்கூறியதன் சேடம்.

கருத்துரையில் மேலதற்குப் புறனடை யுணர்த்துதனுதலிற்று என்றா லேபோதியதாகவும், ஓர்புறனடையுணர்த்துதனுதலிற்று என்று கூறிய தன்கருத்தென்னையெனின், இச்சூத்திரத்துட்கூறப்படும் மூன்றதிகரணமும் மூன்றுபுறனடைபோலு மெனமலையாமைப் பொருட்டு என்க. முன்னைய இரண்டதிகரணமும் மூன்றாம் அதிகரணத்தைச் சாதித்தற்கு ஏதுவாய் ஒரு பொருள்மேல் வந்தனவேயாம் என்பது கருத்து. எவ்வாறெனின், சத்தினி டத்து அசத்துப் பிரகாசியாது; அசத்தினுக்கு உணர்வின்று; ஆதலால், இருதிறனறிவுளது இரண்டலா ஆன்மா என்றவாறாம்.

ஒன்றனை யறிந்தவிடத்து அறியப்பட்ட அதனலுண்டாம் பயனைப பெற எண்ணி அதற்கான முயற்சி செய்ய விரும்புவோர்க்கு அம்முயற்சியைச் செய்யும் தகுதி தமக்கு உண்டெண்பதூஉம், செய்ததனல் வரும்பயன் இதுஎன்பதூஉம், பயன் பெறுதற்குரிய முயற்சியாவது இது வென்பதூஉம், அம்முயற்சி வரும்வழியும் உணர்ந்தாலன்றி அப்பயனைப் பெறவேண்டுமென்ற மனவெழுச்சி உண்டாகாது ஆதலால், சாதனஞ் செய்து பயன் பெறுதற்கு உரிமையுடைய அதிகாரியி னியல்பு உணர்த்துவதாகிய இச்சூத்திரம் இவ்வியலில் முதற்கண் வைக்கப்பட்டது.

## சிற்றுரை.

இதன்பிண்டப் பொழிப்பு.

சத்தெதிர்—(மேலைச் சூத்திரத்திற் கூறிப்போந்த இரண்டனுள், வாக்குமனதீதமாகிய) சிவசத்தின் சந்நிதியின்,—யாவையும்—(உணருருவாகிய) அசத்தெல்லாம்,— சூனியமாகலின்— பாழாகலின்,—சத்தே—சத்தாகிய சிவம்,—அறியாது—(அசத்தாகியபிரபஞ்சத்தை) அறிதல் செய்யாது,—அசத்து—அசத்தாகிய பிரபஞ்சம்,—இலது (ஆதலின்)—அறிவில்லாத சடமாதலிற் (சத்தாகிய சிவத்தை,—அறியாது—அறிதல் செய்யாது: (ஆதலாற் பாரிசேடஅளவையான்,— இருதிறன் அறிவுளது—இருதிறன் அறிவுளதொன்றுண்டெண்பது பெறப்படுதலின் (அதுவே) சத்தாதற் றன்மையும் அசத்தாதற் றன்மையுமாகிய,—இரண்டலா—இரண்டுமன்றிச் சதசத்தாயுள்ள,—ஆன்மா—உயிராம் எ—று.

இரண்டனுள் ஒன்றனைப் பிரிக்கின்றமையிற் சத்தே என்னும் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. அசத்திலதாகலி னென்றுரைக்க. அசத்துச் சத்தை யறியாமைக்கும் சத்தெதிர் சூனியமாதலே ஏதுவாதலமையு மாயினும், அசத்தெனப்பட்ட கருவிகண் முத்திநிலையிற் சிவகரணமாய் ஆன்ம சந்நிதியை யொட்டி முதல்வன் சந்நிதியினிற்கப்பெறு மென்பாரை நோக்கி வேறு மோரேதுக் கூறினர்: இக்கருத்தேபற்றி, "சத்தின்மு னிலாமை யானும் தனைக்கொடொன் றுணர்த லானும்" எனவிரண்டேதுவும் உடன் கூறினர் வழிநூலாசிரியரும். ஏற்புழிக்கோடலான் அறிதலென்றது ஈண்டனுபவ வறிவின்மேற்று. இனைத்தென வறிந்தபொருட்கு வினைப்படுதொகுதிக்கண் வேண்டப்படு முற்றும்மை விகாரத்தாற் றொக்கது.

## விளக்கம்.

(இச்சூத்திரத்தின் பொழிப்புரை.) மேலைச் சூத்திரத்திற் கூறிமுடித்த சிவசத்து அசத்து என்னும் இரண்டனுள், வாக்கு மனாதீதமாகிய சிவசத்தின் சந்நிதியில் பாசஞான பசுஞானங்களால் உணரப்படும் பொருளாகிய அசத்தெல்லாம் பாழாதலால், சத்தாகியசிவம் அசத்தாகிய பிரபஞ்சத்தை அறிதல் செய்யாது; அசத்தாகிய பிரபஞ்சம் அறிவில்லாத சடமாதலால் சத்தாகிய சிவத்தை அறிதல் செய்யாது; ஆதலால், பாரிசேட அளவையால் சத்து அசத்து ஆகிய இரண்டனையும் அறியும் அறிவை உடையது ஒன்று உண்டென்பது பெறப்படுதலின், அந்த அறிவுடைப் பொருளே சத்தாதற் றன்மையும் அசத்தாதற் றன்மையுமாகிய இரண்டுமின்றி அவ்விரண்டனையும் அறியும் உரிமையால் சதசத்தாயுள்ள உயிராம் எ-று.

சிவமும் பிரபஞ்சமும் ஆகிய இரண்டும் ஒன்றனையொன்று அறியாதெனவிலக்கவே மேல் ஆறு சூத்திரங்களாற் கூறி முடித்த முப்பொருள்களுள் எஞ்சிய உயிர்ப்பொருளே அவ்விரண்டனையும் அறியும் என்று கூறுதல் பாரிசேட அளவையாகும். சத்து அசத்து ஆகிய இரண்டனையும் அறியும் உரிமைபற்றி உயிர் சதசத்தெனப்பட்டதேயன்றிச் சத்தும் அசத்தும் ஆகிய மாறுபட்ட இரண்டு தன்மையை உடையது என்பதன்று. ஆயின் உயிருக்குத் தனித்த இலக்கணம் யாதெனின், சார்ந்தபொருளின் தன்மையாய் நிற்றலேயாம். சாரப்படும்பொருள் சத்து அசத்து என்னும் இரண்டுமேயாம் ஆதலால், சத்தொடு கூடிச் சத்தாயும் அசத்தொடுகூடி அசத்தாயும் நிற்றல் பற்றிச் சதசத்தெனபபட்டமை அறிக.

இவ்வுண்மையறியாத ஏகான்மவாதிகள், "அஞ்ஞான தசையில் ஜீவத்துவத்தோடிருத்தலின் ஜீவனுளனென்று சத்ரூபனும், அஞ்ஞானம் நீங்கிய முத்தி தசையில் ஜீவத்துவம் நீங்கிச் சிவமாதலின் ஜீவனிலனென்று அசத்ரூபனுமிருத்தலால் சதசத்ரூபன்"மென்பர். ஜீவத்துவத்திற் கேதுவான மலம் நீங்கிச் சிவத்துவத்திற் கேதுவான சிவத்தை யுணர்ந்து அதுவாய் நிற்றலால் முத்தியில் உயிர் சிவமாயிற்று என்ற உண்மை உணர்ந்திருப்பரேல் அவ்வாறு கூறார். சிவமே கருவிகளோடுகூடிச் சீவனாயிற்று; கருவிகள் நீங்கியவிடத்துச் சிவமாயிருந்தது என்பரேல், "பிரபஞ்சம் சிவமிரண்டனையும் உணர்பவன் எவனோ" எனக்கூறிய சூத்திரக்கருத்தோடு முரணும். அன்றியும் கருவிகளை எதற்காகக் கூடிற்று; இனி நீங்கினும் முன்னர்க் கூடியவாறே கூடுமே; கூடுமாயின் நீங்குதற்காகச் செய்யுஞ் செயல்பயனிலதாயன்றோ முடியும் என்பனவாதிய கேள்விகட்கு என் சொல்வர். இனி முத்தியில் உயிரில்லையாயின் ௩உஎ-ம் பக்கத்திற் கூறியவாறு சூனியவாதமுமாம்.

இன்னும் "சூரியனைச் சார்தற்கும் சூரியனால் விளக்கக்கூடாத விஷயங்களை விளக்குதற்கும் யோக்கியமான சூரியச் சாயையினைப்போலச் சிவத்

தினைச்சார்தற்கும் சிவத்தினாற் சுட்டியறியப்படாத விஷயங்களைபறிதற்கும் யோக்கியமான சுட்டுணர்வாகிய ஜீவனைச் சிற்பிரதிபிம்பனென்றும் சிற் சாயையென்றுஞ் சுருதியாதிகள் கூறுகின்றன'' என்று வாளாகூறுவர். சூரி யனைச்சார்வது கண்ணொளியேயன்றிச் சூரியச்சாயையன்று என்பதும், விளக்குதல் அறிவித்தற்கு உவமையாகுமேயன்றி அறிதற்கு உவமையாகாது என்பதும், சூரியச்சாயைபோலப் பிரமத்தின்சாயையே ஜீவனாயின் ''அவ்வாத்மா ஜடசித்துக்களின் வேறாம்'' என்று கூறிய சூத்திரக்கருத் தோடு முரணுமென்பதும் நோக்காது கூறும் அக்கூற்றுப் பொருந்தாதென விடுக்க.

சத்து அசத்து என்னும் இரண்டனுள் சூத்திரத்தில் சத்தே என்பதி லுள்ள ஏகாரம் அசத்தைப் பிரிக்கின்றமையின் பிரிநிலைக்கண் வந்தது.

அசத்திலது என்றவாக்கியத்துடன் ஆகலின் என்னும் சொல் வரு வித்து அசத்திலதாகலின் என்றுரைக்க. அசத்து இலதாகலின் என்பதற்கு அசத்து இல்லையாகலான் என உரைசெய்யாது அசத்துக்கு அறிவில்லையா கலான் என உரைசெய்த கருத்தென்னையெனின், ஆசிரியருக்கதுவே கருத் தாகலின் அவ்வாறு உரைசெய்யப்பட்டதென்க. அதுவே ஆசிரியர் கருத் தென்பதை இரண்டாம் அதிகரணத்து மேற்கோளில் 'அசத்தினுக்கு உணர் வின்று' எனக் கூறியவாற்றானறிக.

சத்து அசத்தை அறியாதென்பதற்கேயன்றி அசத்துச் சத்தையறி தல் செய்யாது என்பதற்கும் சத்தெதிர்யாவையும் சூனியமென்றலே ஏது வாதல் கூடும். அதாவது சத்தின்முன் அசத்தெல்லாம் சூனியமாதலால் சத்து அசத்தை அறியாது அசத்துச் சத்தை அறியாது என்று முடித்துக் கொள்ளலாம். இவ்வாறு பொருள்கொள்ளக் கிடக்கவும் அசத்திலதாகலின் என்று வேறுமோரேதுக் கூறிய கருத்தென்னையெனின், அசத்தெனப்பட்ட கருவிகள் முத்திநிலையில் சிவகரணமாய் ஆன்மசந்நிதியிற் கலந்துமுதல்வன் சந்நிதியில் நிற்கப்பெறு மென்பாரை நோக்கி, அவ்விடத்தும் ஆன்மாவிற்குச் சிவகரணமாய் நிற்றலேயன்றிச் சிவனை அக்கரணம் அறிவதில்லை யென்பதை அறிவித்தற்கு இலதாகலின் என்ற வேறு மோரேதுவுங் கூறினர். இக் கருத்தேபற்றிச் சிவஞானசித்தியார் ஏழாஞ்சூத்திரம் ௧-வது செய்யுளில் ''சத்தின்முன் இலாமை யானும் தனைக்கொடு ஒன்று உணர்தலானும்'' என இரண்டேதுவும் உடன் கூறினர் வழிநூலாசிரியரும். தனைக்கொடு ஒன்று உணர்தல் என்றதனாலேயே தான் உணர்தலில்லை யென்பது பெறப் பட்டவாறுகாண்க.

சத்தே அறியாது என்றவிடத்தும் இருதிறன் அறிவுளது என்றவிடத் தும் அறிதல் என்றது சாதன இயலுக்கேற்ப ஏற்புழிக்கோடல் என்னும் உத்தியால் அநுபவ அறிவைக்குறித்து நின்றது. ஆகவே, சத்து அறியாது என்பதற்கு, ஒருசேரஅறியும் என்பதனோடும் உயிர்க்கு அறிவித்தற்பொ

ருட்டு அறியும் என்பதனோடும் உயிரின் அநுபவத்தின் பொருட்டு அறியும் என்பதனோடும் முரணுதவாறு தன் அநுபவத்தின் பொருட்டு அறியாது என்று கொள்க. இனி உயிரின் அறிவு பலவேறு வகைப்படுமாயினும் அவையெல்லாம் ஆராய்ச்சி அறிவு அநுபவ அறிவு என்னும் இருவகையினுள் அடங்கும். அவற்றுள், ஆராய்ச்சி அறிவாவதுஒருபொருளைக் கருவிகளாலறிவது. அநுபவ அறிவாவது ஒருபொருளை நேரே அறிவது. ஆகவே, இருதிறன் அறிவுளது என்றதற்குச் சத்து அசத்து இரண்டனையும் அநுபவமாக அறியும் அறிவுடையது என்றுகொள்க.

"இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு வினைப்படு தொகுதியின் உம்மைவேண்டும்" என்பது தொல்காப்பியம் சொல்லதிகாரம் கிளவியாக்கம் சூத்திரம் ௩௩. இதன் கருத்து, உம்மைச்சொல்லும் முதற்சொல்லும் தொழிலைப்பொருந்தி வருங்கால் முற்றும்மை வேண்டுமென்பதாம். அவ்வாறே இச்சூத்திரத்தில் இரண்டலாவென்றவிடத்தில் இரண்டு என்பது அல்லாததாய் என்னும் வினையைப் பொருந்தியிருப்பதால் முற்றும்மை வேண்டும். அவ்வும்மை தொக்குநின்றது. அதனை விரித்து இரண்டுமின்றிச் சதசத்தாயுள்ள என உரைசெய்யப் பட்டது.

## சிற்றுரை.

இதனுள் யாவையுஞ் சூனியஞ்சத்தெதிராகலிற் சத்தேயறியாதென்றது ஓரதிகரணம்; அசத்திலதறியாதென்றது ஓரதிகரணம்; இருதிறன் அறிவுளதிரண்டலா ஆன்மாவென்றது ஓரதிகரணம்; ஆக மூன்றதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

## விளக்கம்.

வெ - டை.

---

# முதலதிகரணம்.

பிரபஞ்சம் சிவனைலறியப் படாதெனக் கூறும்
மேற்கோள்.

ஈண்டுச் சத்தினிடத்து அசத்துப் பிரகாசியாதென்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின். "தந்நிடுஞ் சிவனவன்றன் சந்நிதி தன்னினின்றே"எ-ம். "கூடுமொளிவளர் குடிலைமாயைமேவி"எ-ம், "காரகமாமக்தன்று ணிற்றல்"எ-ம், "விமலனுக்கோர் சத்தியாய்"

எ-ம். "உலகமே யுருவ மாக"எ-ம், "அத்துவா மூர்த்தி யாகி"எ-ம், "இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி***நின்றவாறே"எ-ம், கூறப்படும் இயல்புடைய பிரபஞ்சத்தைச் சத்தெதிர் சூனியமென்றல் அவ சித்தாந்தமாய் முடியும் போலு மெனவும், "மண்டிய வுணர்வு யிர்க்காய் மன்னிநின் றறியும்" எனவுங் கூறும் சிவாத்துவிதசைவர் மதம்பற்றி நிகழுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற் கூற்றிற் போந்த ஏதுவைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

(இ-ள்.) சுட்டுணர்வின்றி நின்றறியும் சிவசத்தின் முன்னர்ச் சுட்டி யறியப்படும் அசத்தாய பிரபஞ்சம் விளங்கித்தோன்றாது எ-று.

ஈண்டுச் சூனியம் என்றது விளங்காமைப் பொருட்டென்பார் பிரகாசியாதென்றார். இக்கருத்தேபற்றி "முனைத்திடா தசத்துச் சத்தின் முன்" என்றார் வழிநூலாசிரியரும். முனைத்திடாமை யாவது இதுகுடம் இஃது ஆடையென நம்மனோராற் சுட்டியறியப் படுமாறுபோல முதல்வனாற்சுட்டி யறியப்படுவதாய் வேறு நில்லாமையாம். ஆகவே, ஈண்டுச் சத்தெதிர் யாவையுஞ் சூனியமென்றது கொண்டு அவசித்தாந்தமாதல் யாண்டையதென மறுத்துச் சத்தறியாவென்றதனை வலியுறுத்தியவாறு காண்க.

## விளக்கம்.

இம்மேற்கோள் சூத்திரத்திலுள்ள யாவையுஞ் சூனியம் சத்தெதிராகவிற் சத்தேயறியாது என்பதைப் பதச் சேதஞ்செய்து மேற் கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்னசொல்லிற்றோ வெனின், "சிவசத்தியின் சங்கற்பமாகிய சந்நிதியினாலேயே மாயைதன்காரியங்களைத் தோற்றுவிக்கும்" எனச் சித்தியார் க-ம் சூ-ம் ௩௬-வது செய்யுளினும், "சிவபெருமான் சுத்தமாயையினைப் பொருந்தி"எனச்சிவப்பிரகாசம் க-ம் சூ-ம் உ-வது செய்யுளினும், "மாயைதனக் காதாரமாகிய சிவசத்தியில் நிற்கும்" என இந்நூல் க-ம் சூ-ம் உ-வது அதிகரணத்து உ-வது வெண்பாவினும், "மாயை இறைவனுக்கோர் சத்தி" எனச்சித்தியார் உ-ம் சூ-ம் ௫௩-வது செய்யுளினும் கூறுதலால் பிரபஞ்சத்திற்கு முதற் காரணமாகிய மாயை முதல்வனுக்குப் பரிக்கிரக சத்தியென்பதும் அவன் திருவருளிலிருக்குமென்பதும் பெறப்பட்டன. "உலகமே உருவ மாக" எனச்சித்தியார் ௫-ம் சூ-ம் எ-வது செய்யுளினும், "அத்துவா மூர்த்தி யாகி" எனச் சித்தியார் க-ம் சூ-ம் ௫௬-வது செய்யுளினும், இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி***நின்றவாறே எனத் திருநாவுக்கரசு சுவாமிகள் திருத்தாண்டகத்தினும் கூறுதலால், பிரபஞ்சம் முதல்வனுக்குத்

திருமேனி என்பது பெறப்பட்டது. இவ்வாறு முதல்வனுக்குப் பிரபஞ்சம் திருமேனியாகவும் மாயை சத்தியாகவும் விளங்குமென்றதற்கு மாறாக இவ் விடத்தில் சத்தெதிர்யாவையுஞ் சூனியமென்று கூறல் அவசித்தாந்தமாய் முடியும். அன்றியும் சிவப்பிரகாசம் ௫-ம் சூ-ம் ௯-வது செய்யுளில் பூர்வபக் கக்கருத்தாக "மண்டிய உணர்வு யிர்க்காய் மன்னிநின் றறியும்"என்றதனால் உயிருக்காக இறைவன் அவ்வுயிரோடுபொருந்தி உலகத்தை அறிவன் எனப் பட்டு உலகம் இறைவன்முன் சூனியமென்றல் பொருந்தாதாகும். இவ்வாறு கூறுவோர் சிவாத்துவித சைவர். அவர்கூற்றை ஆசங்கித்துக்கொண்டு சூத் திரத்தின் முதற் கூற்றிற் கூறிய ஏதுவைப் பதச்சேதஞ்செய்து சத்தெதிர் யாவையுஞ் சூனிய மாதலின் சத்து அசத்தை அறியாது என்பதை வலியுறுத் தியவாறும்.

இவ்வதிகரணத்தில் பிரபஞ்சம் சிவனால் அறியப்படுமோ படாதோ என்பது ஐயப்பாடு. அறியப்படும் என்பது பிறர்பக்கம் என அறிக.

அவசித்தாந்தமாவது சித்தாந்தமல்லாதவற்றைக்கூறிச் சித்தாந்தமென் றல்.

ஏதுவை மேற்கோளாகக் கூறல் குற்றமாகாதோ வெனின், வேறு ஏதுக் கூறப்படுமாயின் குற்றமாகாது. அதாவது இம்மலை தீயுடைத்து, புகை உடைமையால் என்ற அனுமானத்தில் புகை ஏது. இந்த ஏதுவை மேற்கோ ளாகக்கொண்டு புகையுடைத்துத் தீயுடைமையால் என்பது குற்றம்; எதனு லெனின், தீயுள்ள இரும்பினிடத்துப் புகை யில்லாமையாலென்க. இனி இம்மலை புகையுடைத்து, வன்னியோடு ஈரவிறகின் கூட்டத்தால் என்று கூறின் குற்றமாகாது. இவ்வாறே உயிர் சத்தையும் அசத்தையும் அறியும் என்பதற்குச் சத்தெதிர் யாவையும் சூனியமென்றது ஏதுவாயிற்று. இந்த ஏதுவையே இவ்வதிகரணத்தில் மேற்கோளாகக் கொண்டுமெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலால் என்னும் வேறு ஏதுக் கூறுவதால் குற்ற மாகாமை யறிக.

(இம்மேற்கோளின் பொருள்.) ஒவ்வொன்முகச் சுட்டியறிதலின்றி எவற்றுடனுங் கலந்து நின்று ஒரு சேர அறியும் சிவசத்தின் முன்னர்ச் சுட்டி யறிபப்படும் அசத்தாகிய பிரபஞ்சம் விளங்கித் தோன்றுது எ-று.

இச்சூத்திரத்தில் சூனிய மென்றது இல்லாமையைக் குறிக்கவில்லை. விளங்காமையைக் குறித்து நின்றது. அவ்வாறு குறித்து நின்றதென் பதை அறிவிக்கவேண்டியே சூத்திரத்தில் சூனியம் என்று கூறிய தைப் பதச்சேதஞ்செய்து பிரகாசியாது என இம்மேற்கோளிற் கூறினர். இக்கருத்தே பற்றிச் சிவஞான சித்தியார் ௭-ம் சூ-ம் ௪-வது செய்யுளில் "முனைத்திடாது அசத்துச் சத்தின்முன் இருள் இரவிமுன்போல்" என் ருர் வழிநூலாசிரியரும். முனைத்திடாமை யாவது இது குடம் இது ஆடை யென நம்மனோரால் சுட்டியறியப் படுமாறு குடமும் ஆடையும் நம்மில்வேறு

தல் போலப் பிரபஞ்சம் முதல்வனால் சுட்டியறியப்படுமோறு வேறு நில்லா மையாம். ஆகவே, இச்சூத்திரத்தில் சத்தெதிர் யாவையும் சூனியமென்றது வேறுநில்லாமை பற்றியேயன்றிப் பொருளில்லாமை பற்றியன்று ஆகலால், பிரபஞ்சம் திருமேனி யென்றும் மாயைதிருவருளில் நிற்குமென்றும் சத்தி என்றும் கூறியவற்றோடு மாறுபட்டு அவசித்தாந்த மாதலில்லை யென மறுத் துச் சத்தெதிர் யாவையும் சூனியமாதலால் உலகத்தைச் சத்தாகிய சிவம் அறியாது எனச்சூத்திரத்திற் கூறியதனை வலியுறுத்தியவாறு காண்க.

பிரபஞ்சம் சிவனாலறியப் படாமைக்குக் காட்டும்

ஏது.

மெய்யினிடத்துப் போய் அப்பிரகாசமாய் நிற்றலான்.

## சிற்றுரை.

எ—று ஏது எ—னின், முற்றுணர்வுடைய சிவத்துக்கு அசத் தைவிடயிப்பதாய சுட்டுணர்வும் உண்டென்றற்படும் இழுக்கென்னை யென்பாரை நோக்கிமேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) தன்னியல்பாகிய இயற்கை யுணர்வின் முன்னர்ப் பொது வியல்பாகிய செயற்கைச் சுட்டுணர்வு பிரகாசித்து நில்லா மையான் ஈண்டுச் சத்தினிடத்து அசத்துப்பிரகாசியா தெனமேற் கொண்டது எ-று. (பா்்)

பிரகாசித்து நிற்றலின்மையாவது இயற்கை யுணர்வோடொ ப்பஒருங்குநில்லாமை. எக்காலத்தும் நிலைபெறுவதாய தன்னியல்பே மெய்யெனவும் இடையே தோன்றிமறைவதாய பொது வியல்பே பொய்யெனவும் கூறப்படுவன வாகலான் அவை ஈண்டைக் கேற்புடைய அறிவின் மேனின்றன. இஃதறியாதா ருரைப்பன வெல்லாம் மேற்கோளைச் சாதித்தற்குரிய ஏதுவாதல் செல்லாது கூறியதுகூறலாய் முடியுமென் றொழிக.

## விளக்கம்.

இந்த ஏது என்னசொல்லிற்றோ வெனின், எல்லாப் பொருளோடுங் கலந்து நின்று எல்லாப்பொருளையும் ஒருசேர அறியும் முற்றுணர் வுடைய சிவத்திற்கு அசத்தாகிய பிரபஞ்சத்தைச் சுட்டியறிவதாகிய சுட்டுணர்வும் உண்டு; அதனாற் பிரபஞ்சம் சுட்டியறியவும் படும் என்று கூறினால் உண் டாகும் குற்றமென்னை யென்பர் சிவாத்துவிதசைவர். அவரைநோக்கி முதல் வனுக்குச் சுட்டுணர்வு இல்லை: அதனால் பிரபஞ்சம் அவனாற் சுட்டியறியப்

படமாட்டாது எனக்கூறிச் சத்தினிடத்து அசத்துப பிரகாசியாது என்னும் மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(இந்த ஏதுவின்பொருள்.) முதல்வனுக்கு இயல்பாகவே உள்ள சிறப்புக் குணங்களுள் ஒன்றாகிய இயற்கை யுணர்வின் முன்னர்க் கருவிகளோடு கூடுதலா லுண்டாகும் பொதுவியல்பாகிய செயற்கைச் சுட்டுணர்வு பிரகாசித்து நில்லாமையால், ஈண்டுச் சத்தினிடத்து அசத்துப் பிரகாசியாதென மேற்கோள் கூறியது எ-று.

செயற்கைச் சுட்டுணர்வு பிரகாசித்து நில்லாமையாவது, இயற்கை யுணர்வோடு ஒப்ப ஒன்றாய் நில்லாமை. இயற்கை யுணர்வென்பது கருவிகளின் துணையின்றித் தானாக அறியும் அறிவு. செயற்கை யுணர்வென்பது கருவிகளின் துணையால் அறியும் அறிவு. இந்தச்செயற்கை உணர்வானது இயற்கையா யுணரமுடியாத பொருளுக்கே வேண்டப்படும். இயற்கை யுணர்வுடைய பொருளுக்குச் செயற்கை யுணர்வு வேண்டப்படமாட்டாது. இயற்கை யுணர்வு எக்காலத்தும் நிலைபெற்றிருக்கும் தன்னியல்பாகும். செயற்கை யுணர்வு சேர்ந்தபொழுது உண்டாவதாலும் சுதந்தரமாயில்லாமையாலும் தோன்றிமறைவதான பொது இயல்பாம். ஆகவே, நிலைபெற்ற தன்னியல்பு மெய்யெனவும் தோன்றிமறைவதான பொதுவியல்பு பொய்யெனவும்படும். பொய்யென்பது நிலையாமையைக் குறித்து நின்றது. இந்த ஏதுவில் மெய் பொய்யென்பன, இந்த அதிகரணத்திற்கேற்ப மெய்யறிவு பொய்யறிவு என்னும் பொருளைக் குறித்து நின்றன. நிற்கவே, மெய்யறிவின் முன்னர் அதனோடொப்பப் பொய்யறிவும் விளங்கி நிற்கமாட்டாது ஆகலால் மெய்ப்பொருளின் முன்னர் பொய்ப்பொருள் பிரகாசிக்க மாட்டாதென்று முடித்துக் கொள்ளல்வேண்டும். இவ்வாறன்றி மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலால் என்றதற்கு மெய்ப்பொருளிடத்துப் பொய்ப்பொருள் அப்பிரகாசமாய் நிற்றலால் என்று உரைகூறின், மேற்கோளைச் சாதிக்கும் ஏதுவாகாமல் மேற்கோளையே ஏதுவாகக்கூறியதாய்க் கூறியதுகூறலென்னுங் குற்றமாகும். ஆதலால் அவ்வுரை பொருந்தாது.

இந்த ஏது, பிரபஞ்சம் சிவனால் அறியப்படும் என்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

பிரபஞ்சம் சிவனாலறியப்படாமைக்கும் அதுகொண்டு சிவனுக்கு
இழுக்கில்லை யென்பதற்கும் காட்டும்
உதாரணம்.

அன்னியமில் லாமை யரற்கோன் றுணர்வின்று
மன்னியமில் லானசத்தைக் காண்குவனே—லன்னியமாக்
காணு னவன்முன் கதிர்முன் னிருள்போல
மாணு வசத்தின்மை மற்று.

சாதனவியல்எழாஞ்சூத்திரம். க-ம் அதி. ௩௪௫

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், சுட்டுணர்வின்மையான் முதல்வன் அசத்தை அறியானெனின் முற்றுணர்வுடைமைக் கிழுக்காமென் பாரை நோக்கி இழுக்கின்மை கூறி ஏதுவை வலியுறுத்துதனுத லிற்று.

(இ-ள்.) அன்னியம் இல்லாமை அரற்கு உரைப்பு ஒன்று ~~உணர்வு~~ இன்று ஆம்—(தன்னுள் வியாப்பியமான பசு பாசங்களோடு) வேற்றுமை யின்றி உடனுய் நிற்றலையுடைய முதல்வனுக்குச் சுட்டியறியக் கிடப்பதொன்றில்லை (ஆகலான்),—அன்னியம் இல்லான் அசத்தைக் காண்குவனேல் அன்னியமாக் காணுன்—அத்தன்மைய ணுகிய முதல்வன் அசத்தை அறியலுறுவனுயின் (அறிந்தாங்கறிவ னன்றி நம்மனோர்போல) வேறுகச்சுட்டி அறிவானல்லன்,—கதிர் முன் இருள்போல அவன்முன் மாணு அசத்து இன்மை—ஞாயிற் றின்முன் இருட்டுப்போல அம்முதல்வன் எதிர் நன்மையில்லாத பிரபஞ்சம் விளங்கி நில்லாதாகலான் எ-று.

எனவே, அசத்தைவிடயிப்பதாகிய ஏகதேச உணர்வு முற் றுணர்வைத் தடுப்பதாகலான் அஃதில்லாமை முற்றுணர்விற்கு மேம்பாடாவதன்றி இழுக்காகாதென ஐயமகற்றி ஏதுவை வலி யுறுத்தவாறு காண்க.

மாணுமை வியாபக உணர்விற்கு விடயமாகாமை. இன்மை ஈண்டு விளங்காமை குறித்து நின்றது. மற்று அசை. மற்றுக் காண்குவனேலென மேலே கூட்டி. வினைமாற்றின்கண் வந்ததெனி னும் அமையும். உணர்வுங் கதிரும் ஆகுபெயர். கதிர்முன்னிருள் ஈண்டு முனையாமை மாத்திரைக்கு ஒரு புடை உவமையாயிற்றென் பது வழிநூலாசிரியர் "முனைத்திடா தசத்துச் சத்தின் முன்னிருளிரவிமுன்போல்" என்றவாற்றுனறிக.

## விளக்கம்.

இவ்வெண்பாவில் அவன்முன் மாணு அசத்து இன்மை எனக்கூட்டுக.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றேவெனின், எதுவின்படி முதல் வனுக்குச் சுட்டியறியும் அறிவு இல்லாமையால் அம்முதல்வன் அசத்தாகிய பிரபஞ்சத்தை அறியான் என்று கூறின், முற்றுணர்வு உடையவன் முதல் வன் என்பதற்குக் குற்றமாகுமென்பர் சிவாத்துவித சைவர். அவரைநோக்

கிப் பிரபஞ்சத்தைச் சுட்டியறியாததுகொண்டு முற்றுணர்விற்குக் குற்ற மில்லை யெனக்கூறி மெய்யினிடத்துப் பொய் அபபிரகாசமாய் நிற்றலான் என்னும் ஏதுவை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை) தன்னுள் அடங்கியிருப்பதான பசுபாசங்களோடு வேற்று மையின்றி உடனாய் நிற்றலையுடைய முதல்வனுக்குச் சுட்டியறியும்படி வேறாய்க் கிடப்பதொன்றில்லை. ஆதலால் எல்லாப் பொருளோடுங்கலந்து உடனாய் நிற்குந் தன்மையனாகிய அம்முதல்வன் அசத்தாகிய பிரபஞ்சத்தை அறியவேண்டின் உடனாய் நின்று எல்லாப்பொருளையும் ஒருசேர அறிவ னேயன்றி நம்மனோரோபோல வேறாய் நின்று ஒவ்வொன்றாய்ச் சுட்டி யறிய மாட்டான். ஏதனாலெனின், சூரியன் முன் இருள் முளைத்துத் தோன்றாத வாறுபோல அம்முதல்வன் சந்நிதியில் நன்மையில்லாத பிரபஞ்சம் விளங்கி நில்லாது ஆதலால் எ-று.

(க-ரை) சூரியன்முன் இருள் விளங்கித் தோன்றாதவாறுபோல முதல் வன் சந்நிதியில் பிரபஞ்சம் விளங்கித் தோன்றாது ஆதலால் பிரபஞ்சத்தை முதல்வன் சுட்டி யறியான் என்பதாம்.

இவ்வாறு கூறியதனால் சுட்டியறியும் ஏகதேச அறிவு ஒருசேர அறி யும் முற்றுணர்வைத் தடுப்பது ஆதலால், அச்சுட்டுணர்வு இல்லாமை முற் றுணர்விற்கு மேம்பாடாவதன்றிக் குறைபாகாது என மேல் நிகழ்ந்த ஐயத் தை அகற்றி ஏதுவை வலியுறுத்தியவாறு அறிக.

யாணு என்றது மாணுமை யென்க. மாணுமையாவது மாட்சி இல்லா மை. அது இவ்விடத்தில் உலகம் வியாபக உணர்வாகிய பேரறிவிற்கு அறிபபபடும் மாட்சி இல்லாமையைக் குறித்து நின்றது. ஆதலால் மாணு அசத்து என்பதற்கு நன்மையில்லாத பிரபஞ்சமென உரைசெய்யப் பட்டது

இறைவனால் பிரபஞ்சம் அறியப்படாதாயின் பிரபஞ்சத்திற்கு இறை வன் உபகாரம் வேண்டுவதில்லையோ வெனின், அது நிலைத்தற்கு இறைவ னுடைய ஆணையின் உபகாரம் வேண்டப்படும். படினும் தனக்குள் அடங் கிய பிரபஞ்சத்தைச் சுட்டி அறியாது ஒருசேரஅறிவன். இது எதுபோல வெனின், ஒரு அரசன் தன் ஆணைக்குள்ளிருக்கும் பூமியைப் பிரித்து அறி யாது ஒருசேர அறிவதுபோலென்க. இன்னும் அரசன் குடிகளோடு கலந்து நின்று தொழில்செய்தலேயன்றிக் குடிகள் பூமியோடுகலந்துநின்று தொழில் செய்வதுபோல பூமியோடு கலந்து நின்றுதொழில் செய்வதில்லை. அவ்வா றே இறைவன் உயிர்களோடு கலந்து நின்று பிரபஞ்சத்தை அறிவித்தல் அறிதலாகிய தொழில்களைச் செய்தலேயன்றி அதனோடு கலந்து அறிதற் றொழிலைச் செய்வதில்லை. அரசன் பூமியோடு கலந்துதொழில் செய்யா திருப்பினும் பூமி அரசன் உடைமையாறுமாபோல, இறைவன் பிரபஞ்

சத்தைச் சுட்டி அறியா திருப்பினும் பிரபஞ்சம் இறைவன் உடைமையேயாம். ஆகவே பிரபஞ்சத்தை இறைவன்சுட்டி அறியான்என்பதற்கு இறைவன் பிரபஞ்சத்துடன் கூடித் தொழில் செய்வதில்லை யென்பது பொருளே யன்றிப் பிரபஞ்சம் நிலைத்தற்கு இறைவன் உபகாரம் வேண்டப் படுவதில்லை யென்பது பொருளன்றென அறிக.

மாணு அசத்து என்றதன்பின்ஞக நின்றஇன்மை இவ்விடத்து விளங்காமையைக் குறித்து நின்றது.

இறுதியில் நின்ற மற்றுஎன்பது அசை.

மற்று என்பதை அசையாக்காமல் காண்குவனேல் என்னும் மேலேயுள்ள வாக்கியத்தின் மேலாகவைத்து மற்றுக் காண்குவனெனக் கூட்டி வினைமாற்றின்கண் வந்ததென்று கூறினும் பொருந்தும். வினைமாற்ருவது, உணர்வின்ரும் என்பதற்கு மாருகக் காண்குவன் என்னும் பொருள் பயப்பது.

உணர்வு என்பது உணர்வால் உணரப்படுவதையும் கதிர் என்பது கதிரையுடைய சூரியனையுங் குறித்து நிற்றலால் உணர்வுங்கதிரும் ஆகுபெயர். கதிர்முன் இருள்போல அவன் முன் அசத்து இன்மை என்பது செய்யுள். இதற்குச் சூரியன்முன் இருள் இல்லாததுபோல முதல்வன் சந்நிதியில்பிரபஞ்சம் இல்லாமையால் என்று உரைசெய்யாமல், பிரபஞ்சம் விளங்கி நில்லாதாகலான் என உரைசெய்வானே னெனின், கதிர்முன் இருள் என்ற உவமை இவ்விடத்தில் முனையாமை மாத்திரையைக் குறித்த ஒருபுடை உவமையே யன்றி முனையாமையையும் இன்மையையும் குறித்த முற்றுவமையன்று. முற்றுவமையன்றென்பதை வழிநூலாசிரியர் சித்தியார் எ-ம்சூ-ம் க-வது செய்யுளில் "முனைத்திடா தசத்துச் சத்தின் முன்னிரு ளிரவி முன்போல்" என்ற வாற்ருனறிக. இந்நூலில் இன்மை என்பதற்குப்பொருள் முனைத்திடாமையே யென்றும், அதற்குமட்டுமே இருள் உவமை என்றும் அறிவித்தற்கே வழிநூலாசிரியர் அவ்வாறு கூறியருளினுரென அறிக.

இனிச் சூரியன் மறைந்தபொழுது இருள்வேறிடத்தில் நின்று வாராமையால் சூரியன்முன் இருள் இருந்தும் முனைத்துத் தோன்றவில்லை யென முற்றுவமையாகக் கொண்டு அவ்வாறே முதல்வன் சந்நிதியில் பிரபஞ்சம் இருந்தும் முனைத்துத் தோன்றவில்லை யென்று கொண்டால் என்னையெனின், சூரியன் மறைந்தபொழுது விளங்குவதால் சூரியன் உள்ளபொழுதும் இருள் உண்டென்று அனுமானமாக அறிவதேயன்றிச் சூரியன் உள்ளபொழுதே பிரத்தியட்சமாக இருள் உண்டென்று அறியப்படுவதில்லை. பிரபஞ்சம் முதல்வன் எங்கும் பிரகாசமாய் விளங்கிக்கொண் டிருப்பவும் பிரத்தியக்ஷமாய் உண்டென்று காணப்படுகின்றது. அனுமானமாய்க் காணப்

படுவதற்குப் பிரத்தியக்ஷ உவமையாகலாமேயன்றிப் பிரத்தியக்ஷமாய்க் காணப்படுவதற்கு அனுமானம் உவமையாகாது. ஆதலால் கதிர்முன் இருள் என்பதை முற்றுவமையாகக் கொள்ளாமல் ஒரு புடைஉவமையாகக் கொள் ளுதலே பொருத்தமென அறிக.

முதலதிகரணம் முற்றிற்று.

---

# இரண்டாம் அதிகரணம்.



அசத்தாகிய சராசரத்திற்கு அறிவில்லை யெனக்கூறுய

மேற்கோள்.

இனி அசத்தினுக்கு உணர்வின்று என்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், சத்து அசத்தை அறியாதாயினும் அசத்தெனப்பட்ட தனுகரண புவனபோகங்களுள் ஒன்றாய கரணம் விளக்குப்போல் விகாரமின்றி நிற்கும் ஆன்ம சந்நிதியிற் பெத்த நிலைக்கண் அசத்தாய விடயங்களை அறிந்தாற்போல முத்தி நிலையிற் சிவகரணமாய் நின்று சிவத்தை அறியுமென்றலும் கண்ணாடியினிழல்போல ஆன்மசந்நிதியின் அதன்கண் அறிவுண்டாமென்றலும் அமை வுடைத்துப்போலுமெனச் சிவசங்கிராந்தவாதி மதம்பற்றி நிகழுங் கடாவையாசங்கித்துச் சூத்திரத்தின் இரண் டாங்கூற்றிற் போந்த ஏதுவைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

(இ-ள்.) வெ-டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

(இ-ள்.) அசத்தினுக்கு—தத்துவப் பிரபஞ்சத்திற்கு,—உணர்வு—அறிவானது,—இன்றென்றது—இல்லை எ—று.

## சிற்றுரை.

சூத்திரத்தின் இலதென்றது அறிவிலதென்னும் பொருட்டென்பார் உணர்வின்றென உரைத்தார். ஈண்டு அசத்தென்றது தத்துவப்பிரபஞ்சத்தை; ஏனைப் பிரபஞ்சத்திற்கு அறிவின்மை சாதிக்க வேண்டாமையின்.

சாதனவியல்புழாஞ்சூத்திரம். உ-ம் அதி. ௩.௪௬

## விளக்கம்.

இம்மேற்கோள் அசத்திலதறியா என்றசூத்திரக்கூற்றைப் பதச்சேதஞ் செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றேவெனின், முதல் அதிகரணத் திற் கூறியவாறு சத்தாகிய சிவம் அசத்தாகிய பிரபஞ்சத்தை அறியாதாயி னும், அசத்தென்று கூறப்படும் தனுகரணபுவன போகங்களுள் ஒன்றாகிய கரணம், ஏனைய தனு புவன போகங்கள்போல் சடமல்லாமையால், விளக் கின் சந்நிதியில் கண்ணொளி பொருளை அறிவதுபோல, பெத்தநிலையில் விகாரமில்லாது நிற்கும் ஆன்ம சந்நிதியில் நின்று அசத்தாகிய விடயங்களை அறியும். அதுபோல முத்திநிலையிலும் அக்கரணமே சிவகரணமாய் ஆன்ம ...ல் நின்று சிவத்தை அறியும். ஆன்ம சந்நிதியில் சடமாகிய கரணத் ...வு உண்டாதல் எதுபோலுமெனின், கண்ணாடியின் சந்நிதியில் ...ப பிரகாசம் உண்டாவதுபோலும். இவ்வாறு கூறுவோர் ...திகள். அவர் கூற்றை ஆசங்கித்துக்கொண்டு சூத்திரத் ...ாகிய ஏதுவைப் பதச்சேதஞ் செய்து கரணத்திற்கு ...த வலியுறுத்தியவாறும்.

...ல் கரணத்திற்கு அறிவு உண்டோ இல்லையோ என் ...டு என்பது பிறர்பக்கம் என அறிக.

...ன் பொருள்.) அசத்தாகிய தத்துவப் பிரபஞ்சத்திற்கு

...என்று கூறியதற்குப் பொருள் அசத்து ...அறிவு இல்லையென்று கொள்ளல் ...துக்கூற்றைப் பதச்சேதஞ் ...ளார்வின்றென உரைத்

## சிற்றுரை.

ஏ-து ஏது எ-னின், பதிஞான பசுஞானங்களோடொப்பப் பாசஞானம் ஒன்றெனவைத் தெண்ணப்படு முரிமையுடையவதனை அறிவுடைத்தன்றென்றல் பொருந்தாதென்பாரை நோக்கி மேற் கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) அவ்வறிவாவது தூலமாய் நோக்கும்வழி அவ்வசத் திற்கு உள்ளதுபோலத் தோன்றினும் ஐயந் திரிபின்றி மாசறு காட்சியான் ஆராயும் வழி அதன்கண் இல்லதாகலான் 'இனி அசத் தினுக்கு உணர்வின்'றென மேற்கொண்டது எ-று.

எனவே, பாசம் வாயிலாக உயிரின்கண் ணிக
பாசஞானமென்று உபசரித்துக் கூறப்படுமதனைட்
தாகிய ஞானமெனக் காண்டல் நிரூபியாத வழிப்
பிறிதில்லை யென்றவாறாயிற்று.

## விளக்கம்.

இந்த ஏது என்ன சொல்லிற்றோவெனின்,
பாசஞானம் எனவழங்கும் முறைப்படி பதிஞான
பப் பாசஞானமும் ஒன்றெனவைத்து எண்ண
யால், அப்பாசத்தை அறிவுடையதன்று எனக்
சிவசங்கிராந்தவாதிகள். அவரை நோக்கி
கூறி மேற்கோளை வலியுறுத்தியவு

(இந்த ஏதுவின்

## விளக்கம்.

இம்மேற்கோள் அசத்திலதறியா என்ற சூத்திரக்கூற்றைப பதச்சேதஞ் செய்து மேற்கொண்டதாகும்

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோவெனின், முதல் அதிகரணத்திற் கூறியவாறு சத்தாகிய சிவம் அசத்தாகிய பிரபஞ்சத்தை அறியாதாயினும், அசத்தென்று கூறப்படும் தனுகரணபுவன போகங்களுள் ஒன்றாகிய கரணம், ஏனைய தனு புவன போகங்கள்போல் சடமல்லாமையால், விளக்கின் சந்நிதியில் கண்ணொளி பொருளை அறிவதுபோல, பெத்தநிலையில் விகாரமில்லாது நிற்கும் ஆன்ம சந்நிதியில் நின்று அசத்தாகிய விடயங்களை அறியும். அதுபோல முத்திநிலையிலும் அக்கரணமே சிவகரணமாய் ஆன்ம சந்நிதியில் நின்று சிவத்தை அறியும். ஆன்ம சந்நிதியில் சடமாகிய கரணத்திற்கு அறிவு உண்டாதல் எதுபோலுமெனின், கண்ணாடியின் சந்நிதியில் அதன் நிழலுக்குப பிரகாசம் உண்டாவதுபோலும். இவ்வாறு கூறுவோர் சிவசங்கிராந்தவாதிகள். அவர் கூற்றை ஆசங்கித்தகொண்டு சூத்திரத்தின் இரண்டாங்கூறாகிய ஏதுவைப பதச்சேதஞ் செய்து கரணத்திற்கு உணர்வின்று என்பதை வலியுறுத்தியவாறாம்.

இவ்வதிகரணத்தில் கரணத்திற்கு அறிவு உண்டோ இல்லையோ என்பது ஐயப்பாடு. உண்டு என்பது பிறர்பக்கம் என அறிக.

(இம்மேற்கோளின் பொருள்.) அசத்தாகிய தத்துவப் பிரபஞ்சத்திற்கு அறிவு இல்லை எ-று.

சூத்திரத்தில் அசத்தில்லை என்று கூறியதற்குப் பொருள் அசத்து இல்லையெனக் கொள்ளாமல் அசத்திற்கு அறிவு இல்லையென்று கொள்ளல் வேண்டுமென்பதை அறிவித்தற்பொருட்டு அக்கூற்றைப் பதச்சேதஞ் செய்து உரைத்த இம்மேற்கோளில் அசத்தினுக்கு உணர்வின்றென உரைத்தார். கண்ணாடியின் ஒளி நிழல்போலத் தோன்றினதேயன்றி ஒளியின் வேறாய் நிழலென வொன்றின்மையின் உயிரின் சந்நிதியில் கரணம் அறியும் என்பதற்குக் கூறிய அவ்வுவமை பொருந்தாமை யறிக.

இச்சூத்திரத்தில் அசத்தென்றது தனுகரணபுவன போகங்களையாயினும் இவ்வதிகரணத்தில் அசத்தென்றது கரணமாகிய தததுவப் பிரபஞ்சத்தையேயாம். சூத்திரத்துக்கு மாறாக ஒன்றைமட்டும் இவ்விடத்துக் கூறலாமோவெனின், கரணம் நீங்கிய ஏனைப்பிரபஞ்சத்திற்கு அறிவில்லையென்பது சாதிக்கவேண்டாமையின் சாதிக்கவேண்டிய ஒன்றைக் கூறலாம் என்க.

கரணதநிற்கு அறிவில்லை யென்பதற்குக் காட்டும்

ஏ து.

அதுதா னிரூபிக்கில் இன்றாகலான்.

## சிற்றுரை.

ஏ—து ஏது ஏ—னின், பதிஞான பசுஞானங்களோடொப்பப் பாசஞானம் ஒன்றெனவைத் தெண்ணப்படு முரிமையுடையவதனை அறிவுடைத்தன்றென்றல் பொருந்தாதென்பாரை நோக்கி மேற் கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) அவ்வறிவாவது தூலமாய் நோக்கும்வழி அவ்வசத் திற்கு உள்ளதுபோலத் தோன்றினும் ஐயந் திரிபின்றி மாசறு காட்சியான் ஆராயும் வழி அதன்கண் இல்லதாகலான் 'இனி அசத் தினுக்கு உணர்வின்'றென மேற்கொண்டது எ-று.

எனவே, பாசம் வாயிலாக உயிரின்கண் ணிகழு ஞானமே பாசஞானமென்று உபசரித்துக் கூறப்படுமதனைப் பாசத்திற்குள தாகிய ஞானமெனக் காண்டல் நிரூபியாத வழிப்படும் மடமையே பிறிதில்லை யென்றவாறாயிற்று.

## விளக்கம்.

இந்த ஏது என்ன சொல்லிற்றோவெனின், பதிஞானம் பசுஞானம் பாசஞானம் எனவழங்கும் முறைப்படி பதிஞான பசுஞானங்களோடு ஒப் பப் பாசஞானமும் ஒன்றெனவைத்து எண்ணப்படும் உரிமையுடைமை யால், அப்பாசத்தை அறிவுடையதன்று எனக் கூறுதல் பொருந்தாதென்பர் சிவசங்கிராந்தவாதிகள். அவரை நோக்கிப் பாசத்திற்கு அறிவில்லையெனக் கூறி மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(இந்த ஏதுவின் பொருள்) அப்பாச அறிவு என்பது பிண்டமான மேற்பார்வையால் நோக்குமிடத்து அசத்தாகிய அக்கருவிகட்கு உள்ளது போலத் தோன்றினும், சந்தேக விபரீதமின்றிக் குற்றமற்ற காட்சியால் ஆராயமிடத்து அக்கருவிகளின்கண் அறிவு இல்லையென்பது விளங்கும். ஆதலால் இனி அசத்தினுக்கு உணர்வின்றென மேற்கோள் கூறியது எ-று.

காட்சியாவது நிருவிகற்பக்காட்சி, ஐயக்காட்சி, விபரீதக்காட்சி, சவி கற்பக்காட்சி யென நான்குவகைப்படும். அவற்றுள் ஒரு பொருளைப் பிண்டமாகக் காண்டல் நிருவிகற்பக்காட்சி. அதுவோ இதுவோ என ஐயுற்றுக் காண்டல் ஐயக்காட்சி. ஒன்றைப் பிறிதொன்றாகக் காண்டல் விபரீதக்காட்சி. உள்ளவாறு விளங்கக்காண்டல் சவிகற்பக்காட்சி. சவிகற்ப மென்பது விகற்பத்தோடு கூடியது. விகற்பம் பொருளின் உண்மைத் தன்மை. இச்சவிகற்பக்காட்சியே குற்றமற்ற காட்சியாம். இக்குற்றமற்ற காட்சியாலாராயுமிடத்துக் கருவிகட்கு அறிவில்லையென்று கூறியதனால்

கருவிகளாகிய இந்திரியம் அந்தக்கரணங்களின் வழியால் உயிரினிடத்து உண்டாகின்ற ஞானத்தைக் கண்கண்டது மனம் நினைத்தது என அக்கருவிகளின் மேலேற்றிப் பாசஞானமென உபசரித்துக் கூறப்படும் அவ்வளவேயன்றிப் பாசத்திற்கு உளதாகிய ஞானமெனக் காண்டல், ஆராயாத விடத்து உண்டாகும் அறியாமையேயன்றிப் பிறிதில்லையென்று கூறியவாறாயிற்று.

கண் ஒரு பொருளைக் காணுங்கால் காணுந்தொழில் நிகழ்கின்றது என மட்டுங் காண்டல் நிருவிகற்பக்காட்சி. கண் கண்டதோ உயிர் கண்டதோ எனக் காண்டல் ஐயக்காட்சி. கண்ணே கண்டதெனக் காண்டல் விபரீதக்காட்சி. கண்ணின் வழியாய் உயிர் கண்டதெனக் காண்டல் குற்றமற்ற சவிகற்பக் காட்சி. இவ்வாறே ஒவ்வொன்றினிடத்துங் கண்டுகொள்க.

இந்த ஏது, கரணத்திற்கு அறிவு உண்டு என்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

கரணத்திற்கு அறிவில்லை யென்பதற்குக் காட்டும்

உதாரணம்.

பேய்த்தேர்நீ ரென்றுவரும் பேதைக்கு மற்றணைந்த
பேய்த்தே ரசத்தாகும் பெற்றிமையின்—வாய்த்ததனைக்
கண்டுணர்வா ரில்வழியிற் காணு மசத்தின்மை
கண்டுணர்வா ரில்லதேனக் காண்.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், அதனை உவமை முகத்தான் வலியுறுத்துதனுதலிற்று.

(இ—ள்.) பேய்த்தேர் நீர் என்றுவரும் பேதைக்கு மற்று அணைந்த பேய்த்தேர் அசத்து ஆகும் பெற்றிமையின்—(பாலைநிலத்தின்கட் காணப்படுவதாய) பேய்த்தேரை நீரென்று கருதி (அதனையுண்ண) வருகின்ற (நீர்வேட்கையுடைய) மடவோனுக்கு (அதனையடுத்தவழித்) தன்னாலணையப்பட்ட அப்பேய்த்தேர் (நீராதலின்றிப்) பொய்யாந் தன்மைபோல,—வாய்த்து—(குரவன் அறிவுறுக்கும் உபதேசமொழி)கிடைப்பது,—அதனைக்கண்டு உணர்வார் இல்வழியின் அசத்து இன்மைகாணும்—அவ்வசத்தி னியல்பை ஆராய்ந்தறிவாரின்றி அறியமாட்டாதார் உள்வழிஅவர்க்கு (அதன் கண்ணறிவுள்ளதாய் மதிக்கப்படுஞ்) சத்தாந்தன்மையே காணப்படும்,—கண்டு உணர்வார் இல்லது எனக் காண்—(அவ்வுபதேச

மொழி கிடைத்து அதனியல்பை) யாராய்ந்தறிய வல்லார்க்கு (அவ் வசத்து) அறிவில்லதே யாமென்று அறிவாயாக எ-று.

மற்று வினைமாற்று. மை பகுதிப்பொருள் விகுதி. இன் உவம உருபு. வாய்த்தென்பது வாய்ப்பவென்பதன் றிரிபு. வாய்த்தல் நேர் படுதல். ஆண்டைக் கேற்புடைய வினைமுதல் அவாய் நிலையான் வந்தது. அசத்தின்மையாவது சத்தாந்தன்மை. நான்கனுருபு விகாரத்தாற்றொக்கது. அறிவென்பது அதிகாரத்தான் வந்தது.

## விளக்கம்.

(இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ எனின், அசத்தினுக்கு உணர் வின்று என மேற்கோளிற் கூறியதனை உவமையினால் வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) தண்ணீரும் மரஞ்செடி முதலியனவும் இல்லாத பாலைநிலத்தின் கண்ணே காணப்படுகின்ற பேய்த்தேரென்று கூறப்படுவதாகிய கானலை நீரென்று எண்ணி அந்நீரை உண்ணவருகின்ற நீர் விருப்பமுடைய அறிவில் லாதவனுக்கு, தண்ணீரென்று கருதி அக்கானலையடுத்தவிடத்துத் தன்னா லணையப்பட்ட அக்கானல் தண்ணீராதலின்றிப் பொய்யாகுந் தன்மைபோல, ஆசிரியன் உபதேசிக்கும்படியான உபதேசமொழி கிடைத்து அவ்வசத்தின் தன்மையை ஆராய்ந்தறிவாரில்லாதவிடத்து உண்மையினை யறியுந்தன்மை இல்லாத அவர்க்கு அசத்தாகிய கருவியினிடத்து அறிவுள்ளதாய் மதிக்கப் படுஞ் சத்தாந்தன்மையே காணப்படும். அவ்வுபதேசமொழி கிடைத்து அசத்தின் தன்மையை ஆராய்ந்தறியவல்லார்க்கு அவ்வசத்தாகிய கருவி அறிவில்லாததேயாகும் என அறிவாயாக எ-று.

(க-ரை.) அறியாதவனுக்குக் கானலானது நீராய்த் தோன்றினும் நெருங் கிப்பார்த்தவிடத்து நீரென்பது இல்லாதவாறுபோல, ஆராய்ந்தறியாதவிட த்துக் கருவி அறிவுடையதுபோலத் தோன்றினும் அறிந்தவிடத்து அக் கருவி அறிவில்லாததேயாம் என்பதாம்.

மற்று என்பது நீரென்று தோன்றி அதற்கு மாறாக நீரில்லையென்று தோன்றும் என்றபொருள் பயப்பதால் வினைமாற்றின்கண் வந்தது.

பெற்றிமையின் என்பதிலுள்ள மையென்பது பெற்றியென்னும் பகு திப்பொருளையே குறித்து நிற்றலால் பகுதிப்பொருள் விகுதி.

பெற்றிமையின் என்பதிலுள்ள இன் என்பது போல என்னும் உவமை குறித்து நிற்றலால் உவமஉருபு. வாய்த்து என்றது இறந்தகாலச்சொல். கண்டுணர்வார் என முன்வருகின்றதற் கேற்ப வாய்ப்ப என எதிர்காலச் சொல்லாற் கூறவேண்டுவதை எதுகைநயம்பற்றி வாய்த்து எனத் திரித்துக் கூறினர். வாய்த்தலாவது உபதேசமொழி நேர்படுதல். யார் உபதேசமொழி

என்னும் அவாநிகழுமாதலின், அந்த அவாய் நிலையால் அவ்வுபதேசத்தைச் செய்யும் குரவன் என்பது வருவித்து, குரவன் அறிவுறுக்கும் உபதேச மொழிகிடைத்து என உரைசெய்யப்பட்டது.

அசத்தின்மை என்பது அசத்து இல்லையென்னும் பொருளைக் குறிக்காது அறிவுள்ளதாய்க் காணப்படுஞ் சத்தாந் தன்மையைக் குறித்து நின்றது.

கண்டுணர்வார் என்பதில் நான்காம் வேற்றுமை உருபு தொக்கு நின்றது. அதனைவிரித்து ஆராய்ந்தறியவல்லார்க்கு என உரைசெய்யப்பட்டது.

இல்லதெனக் காண் என்பது இவ்வதிகாரம் உண்மை அதிகாரமானதால் அறிவு இல்லை யென்னுங் கருத்தில் நின்றது. பொருளில்லையென்னுங் கருத்தில் நிற்கவில்லை. ஆதலால் அறிவு என்பது அதிகாரத்தால் வருவித்து அறிவில்லதேயாமென உரை செய்யப்பட்டது. அசத்ிலது என்னும் சூத்திரக்கருத்தைப் பதச்சேதஞ்செய்து மேற்கோள் கூறுங்கால் அசத்தினுக்கு உணர்வு இன்று எனக்கூறியதும் உண்மை அதிகாரம்பற்றியேயாம். பதிபசுபாசமென்னும் முப்பொருளும் சிறப்பாக உண்டென்று கூறுவதே உண்மையதிகாரமென நூலாரம்பத்திற் கூறியிருக்கின்றமை அறிக.

இரண்டாம் அதிகரணம் முற்றிற்று.



# மூன்றும் அதிகரணம்.



சத்து அசத்து இரண்டனையும் அறியும் பொருள் உயிரெனக்கூறும் மேற்கோள்.

இனி இருதிற னறிவுள திரண்டலா வான்மாவென்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், சிவசத்தின் தன்மையே உயிர்க்குத் தன்மை யாவதன்றி வேறில்லையாகலிற் சத்தே அசத்தை அறியுமென்னுஞ் சிவாத்துவித சைவரையும், உயிர்க்குத் தன்மையென்ப தொன்றின்மையின் அசத்தே சத்தை அறியுமென்னுஞ் சிவசங்கிராந்தவாத சைவரையும் மறுத்துச் சத்துமசத்துந் தம்முள் அறியுமாறில்லையென மேற்சாதித்தவழி இரண்டும் இவ்வாறாயின் இவற்றை அறியும் பொருள் வேறென்னை யென்பாரை நோக்கிப் பாரிசேட அளவையான் அவ்விரண்டின் வேறாய் உயிர்க்குத் தன்மை உண்டென்பது விளக்கிச் சதசத்தினியல்பை வரை செய்துணர்த்துதனுதலிற்று.

இ-ள். வெ-டை.

### சுப்பிரமணியதேசிகர் உரை.

இ-ள். இருதிறன்—சத்து அசத்தென்னும் இரண்டினியல்பை,—அறிவுளது—அறியும் பொருள்,—இரண்டலா—சத்தும் அசத்தும் அல்லாத,—ஆன்மா—சதசத்தாகிய உயிராம் எ-று.

### சிற்றுரை.

ஈண்டு இரண்டலாவான்மா இருதிறனறிவுளதென்றது சத்தெதிர் நில்லாத அசத்தும் சத்துந் தம்முள் ஒன்றுறொன்றறியப் படாமையான் இருதிறனறிவுளது இரண்டலாவான்மாவேயாம்; தம்முள் ஒன்றுறொன்று அநுபவிக்கப்படாத ஞாயிற்றையும் விடயத்தையும் அநுபவிக்கும் கண்போலுமென அனுமானங் கூறிக் காண்க. அவை உயிரானும் அறியப்படாதவழிப் பயப்பாடின்றிச் சூனியமாய் முடியுமாகலான் உயிரறிதற் றன்மைத்து என்பது தெற்றெென உணர்க.

### விளக்கம்.

இம்மேற்கோள் இருதிறனறிவுளதிரண்டலாவான்மா என்னுஞ் சூத்திரத்தின் மூன்றாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்யாமல் மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோ எனின், முதலதிகரணத்தால் ''மண்டிய உணர்வுயிர்க்காய் மன்னி நின்றறியும்'' என்றபடி சிவமாகிய சத்தின் தன்மையே உயிர்க்குத் தன்மையாவதன்றி உயிர்க்குத் தனித்தன்மை இல்லையாதலால் சத்தாகிய சிவமே அசத்தாகிய பிரபஞ்சத்தை அறியும் எனக்கூறும் சிவாத்துவித சைவரை மறுத்துச் சத்து அசத்தை அறியாதெனவும், இரண்டாம் அதிகரணத்தால் ஆன்ம சந்நிதியில் கரணம் அறிதற்றொழிலைச் செய்யுமாதலின் உயிருக்குத் தன்மையொன்றில்லை ஆதலால் அசத்தாகிய கரணமே சத்தாகிய சிவத்தை அறியும் என்னும் சிவசங்கிராந்தவாத சைவரை மறுத்து அசத்துச் சத்தை அறியாதெனவுங் கூறியவிடத்து, இவ்வாறு சத்து அசத்தையும் அசத்துச் சத்தையும் அறியாதாயின் இவ்விரண்டனையும் அறியும் பொருள்வேறென்னை யென்பாரை நோக்கிப் பாரிசேட அளவையால் சத்து அசத்துச் சதசத்து என்னும மூன்றனுள், சத்து அசத்து என்னும் இரண்டனையும் விலக்கவே, அவ்விரண்டின் வேறாய்ச் சதசத்தாகிய உயிரே அவ்விரண்டனையும் அறியும் எனவும், அவ்விரண்டின் தன்மையின் வேறாய் உயிர்க்குத் தனித்தன்மை உண்டெனவும் விளக்கிச் சூத்திரத்தின் மூன்றாங் கூற்றைப் பதச்சேதஞ்செய்யாது எடுத்துக்கொண்டு சதசத்தாகிய உயிரின் இயல்பை வரைசெய்து உணர்த்தியவாறாம். சூத்திரக்

கூற்றைப் பதச்சேதஞ் செய்யாமல் மேற்கோள் கூறியதன் கருத்தென்னை யெனின், பின்னர்ப் பொழிப்புரை ஆசிரியர் தாமே அருளிச்செய்கின்றா ராதலின் என்க.

இவ்வதிகரணத்தில் சத்து அசத்து இரண்டனையும் அறியும் பொருள் அவ்விரண்டின் வேறாய் உண்டோ இல்லையோ என்பது ஐயப்பாடு. இல்லை யென்பது பிறர்பக்கம் என அறிக.

(இம்மேற்கோளின் பொருள்.) சத்து அசத்து என்னும் இரண்டின் இயல்பை அறியும் அறிவுடைய பொருள் சத்தும் அசத்தும் அல்லாத சதசத்தாகிய உயிராம் எ-று.

இவ்வதிகரணத்திற் கூறிய மேற்கோளுக்கு முன்னைய இரண்டதிகர ணத்தின் மேற்கோளும் ஏதுவாதலால் இவ்விடத்தில் வேறு ஏதுக்கூறாமல் மேற்கோளுக்குப் பொழிப்புரையும் அப்பொழிப்புரையை விளக்குந் திருட் டாந்தமும் நூலாசிரியர் அருளிச்செய்கின்றார். ஆதலால் ஏனைய அதிகர ணங்கள்போல் இவ்வதிகரணத்திற்கும் ஏது திருட்டாந்தமாகிய அனுமா னத்தை முன்னைய இரண்டதிகரணங்களைக்கொண்டு கூறி முடித்துக் கொள்க. எவ்வாறெனின், இரண்டலாவான்மா இருதிறனறிவுளது என் பது மேற்கோள். சத்தெதிர் நில்லாத அசத்தும் சத்தும் தம்முள் ஒன்றா னொன்று அறியப்படாமையால் என்பது ஏது. சூரியனைப் பொருள்கள் அநுபவியா; பொருள்களைச் சூரியன் அநுபவியான்; இவ்வாறு ஒன்றா னொன்று அநுபவிக்கப்படாத சூரியனையும் பொருள்களையும் அநுபவிக்குங் கண்போலென்பது திருட்டாந்தம். ஆதலால் இருதிறனறிவுளது இரண் டலா ஆன்மாவேயாம். இவ்வாறு அனுமானத்தை முடித்துக்கொள்க.

இருதிறனறிவுளது இரண்டலா ஆன்மாவென்னும் சூத்திரக்கூற்றை அனுமானத்திற்கு எடுத்துக்கொள்ளுங்கால் இரண்டலாவான்மா இருதிற னறிவுளது என்று மாறிக் கூறுவானேனெனின், பக்கத்தை முன்னரும் துணிபொருளைப் பின்னருங்கூறுதல் முறைமையாதலால் ஆன்மாவாகிய பக்கத்தை முன்னரும் இருதிறனறிவுளது என்னுந் துணிபொருளைப் பின் னருங் கூறியதென அறிக. ஆகவே இவ்வனுமானத்தில் ஆன்மா பக்கம். கண் சபக்கம். ஆன்மாவின் இருதிறனறிவு துணிபொருள். சத்தும் அசத் தும் ஒன்றையொன்று அறியாமை ஏது. கண்ணொளி திருட்டாந்தம் என அறிக. பக்கம் என்பது துணிபொருளிருக்கும் இடம். சபக்கம் என்பது திருட்டாந்தம் இருக்கும் இடம்.

சத்து அசத்தாகிய அவ்விரண்டும் உயிரானும் அறியப்படாதவிடத்துப் பயன்படும் பொருளாயில்லாமல் சூனியமாய் முடியும். ஆதலால் அவ்விரண் டும் உயிரால் அறியுந் தன்மையை உடையன என்பதைத் தெளிவாயறிக.

உயிரின் தன்மை வேறு வேறு கூறுவாரை மறுத்து
இம்மேற்கோளுக்கு நூலாசிரியர் அருளிய
பொழிப்புரை.

இவ்விரண்டினையும் அறிவதாய் உபதேசியாய் நின்ற அவ்வறிவு இரண்டன்பாலுமுளதாய் உள்ளவதுவே அவ்வான்மாவாமென்றது.

சிற்றுரை.

எ-து பொ-ரை எ-னின், இருதிறனறிவென்னுந் தொகைச்சொல் விரியுங் காற்படும் பொருள்வேறுபாடு விளக்கு முகத்தான் உயிருக்குத் தன்னியல்பு வேறு வேறு கூறுஞ் சமயங்களெல்லாம் மறுக்கப்படுமா றுணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) இவ்விரண்டினையும் அறிவதாய்—மேற்கூறிப்போந்த சத்தையும் அசத்தையும் அறியுந் தன்மைத்தாய்,—உபதேசியாய்—அறிவிக்க அறியுந் தன்மைத்தாய்,—அவ்விரண்டன்பாலும் நின்ற அறிவு உளதாய்—அவ்விரண்டின்கண்ணும் நிலைபெற்ற அநுபவ அறிவு உள்ளதாய்,—உள்ள அதுவே அவ்வான்மாவாமென்றது—இவ்வாறுள்ள பொருள்யாது அதுவே சத்தும் அசத்துமல்லாத சதசத்தாகிய உயிரென்றவாறும். இருதிறனறிவுளதிரண்டலா வான்மாவென மேற்கொண்டது எ-று.

ஆய் என்னும் வினையெச்சம் மூன்றும் உள்ளவென்னும் பெயரெச்ச வினைக்குறிப்போடு முடிந்தன.

இருதிறனறிவென்னுந் தொகைச்சொல் ஈண்டு மூன்று பொருளின் மயங்கிற்றென்னுங் கருத்தான் இவ்வாறு மொழிந்தார். அவற்றுள் இருதிறனையு மறியுமறிவென்னும் இரண்டாம் வேற்றுமைத் தொகைப்பொருள்பற்றி இவ்விரண்டினையுமறிவதாய் எனவும், இருதிறனால் விளங்கிய வறிவென்னும் மூன்றும் வேற்றுமைத் தொகைப்பொருள்பற்றி உபதேசியாய் எனவும், இருதிறனினுமுள்ள வறிவென்னும் ஏழாம் வேற்றுமைத் தொகைப்பொருள் பற்றி நின்றவறிவு இரண்டன்பாலு முளதாய் எனவும் உரைக்கப்பட்டன.

இவ்விரண்டினையு மறிவதாயுள்ளவது வென்பதனால் இரண்டும் இவ்வாறாயின் இவற்றை அறியும்பொருள் வேறென்னையென்னுங் கடாவுக்கு விடைகூறி அவ்விருவர் மதங்களையும் அவற்றோடு ஒருதன்மையவான சமயங்களையும் மறுத்தவாறு.

உபதேசியாயுள்ளவது என்றதனால் உயிர் அறிவிக்க வேண்டாது தானே அறியும் இயல்பிற்றென்னும் சமவாத சைவர் ஈசுர அவிகாரவாதசைவர் ஐக்கியவாதசைவர் மதங்களையும் அவற்றோ டொருதன்மையவான சமயங்களையும் மறுத்தவாறு.

இரண்டன்பாலுமுளதாயுள்ள வது வென்பதனால் ஆன்மாவி னறிவு சத்தோடு கூடுமாறில்லையென்னும் பாடாணவாதசைவர், பேதவாதசைவர் மதங்களையும், சத்தோடுகூடியவழி ஒன்றாய்ப் போதலேயன்றி அதன்பாலுளதாமாறில்லை யென்னுஞ் சுத்தசைவர் மதத்தையும், அவற்றோ டொருதன்மையவான சமயங்களையும் மறுத்தவாறு.

இவ்விரண்டனையு மறிவதா யெனவே அவ்வறியுந் தன்மை இவ்விரண்டின்தன்மைபோலன்றி "இருளொளியலாக்கண்" டன்மை போல வேறாயதோர் தன்மை யென்பதூஉம், உபதேசியாய் எனவே அஃதாகாயத்தின் குணமாய ஓசையினியல்புபோலத் தன்னை விளக்குவதாகிய வியஞ்சகமுள்வழி விளங்குவதோர் தன்மை யென்பதூஉம், இரண்டன்பாலு முளதாயெனவே அத்தன்மை படிகம்போலச் சார்ந்ததன் வண்ணமாய் அழுந்துந் தன்மை யென் பதூஉம் பெறப்பட்டன.

## விளக்கம்.

இப்பொழிப்புரை, இருதிறனறிவுளதிரண்டலாவான்மா என்னும்மேற் கோளுக்கு நூலாசிரியர் அருளியதாகும். இதனை ஏனைய அதிகாரணங்களோ டொப்ப ஏதுவென்று கூறாமல் பொழிப்புரை யென்பானேன் எனின். ஏதுவிற்கு உரிய ஆனுருபு இறுதியில் விரியாமல் என்றது என முடிந்திருத் தலால் என்க. மேற்கோளிலுண்டாகும் ஐயத்தை நீக்குதற்கு ஏதுக் கூறுதல் போல இம்மேற்கோளிலுள்ள ஐயத்தை நீக்குதற்கு இப்பொழிப்புரை அருளினார்.

இப்பொழிப்புரை என்ன சொல்லிற்றோவெனின், மேற்கோளிலுள்ள இருதிறனறிவு என்பது வேற்றுமை உருபு அடங்கியிருக்கும் தொகைச் சொல்; ஆதலால் அவ்வுருபு விரியுங்கால் உண்டாகும் பொருள்வேறுபாடு கூறி அவ்வாறு கூறும் முறையில் உயிர்க்குச் சிறப்பிலக்கணம் வேறு வேறு கூறும் சமயங்களை யெல்லாம் மறுக்கும் முறைமை கூறியவாறாம்.

(இப்பொழிப்புரையின் பொருள்.) மேல் இரண்டதிகாரணங்களாற் கூறி முடித்த சத்தாகிய சிவத்தையும் அசத்தாகிய பிரபஞ்சத்தையும் அறி யுந் தன்மையுடையதாய், அவ்வாறு அறிவதும் தானே அறிதலின்றி அறி விக்க அறியுந் தன்மையுடையதாய், சத்து அசத்து ஆகிய அவ்விரண்டின்

கண்ணும் அதுவதுவாய் நின்றழுந்தும் நிலைபெற்ற அநுபவ அறிவு உடைய தாய் உள்ள பொருள்யாது? அதுவே சத்தும் அசத்தும் அல்லாத சதசத்தா கிய உயிராம். ஆதலின் இருதிறனறிவுளதிரண்டலாவான்மா என மேற் கோள் கூறப்பட்டது. எ—று.

அறிவதாய் உபதேசியாய் உளதாய் என்ற மூன்று வாக்கியங்களிலு முள்ள ஆய் என்னும் வினையெச்சம் மூன்றும், உள்ள என்னும் பெயரெச்ச வினைக்குறிப்போடு முடிந்தன. உள்ள என்னும் பெயரெச்சம் அதுவென் னும் சுட்டுப் பெயர்கொண்டு முடிந்தது. காலங்காட்டாமையின் உள்ள என்பது வினைக்குறிப்பு.

இவ்வாறு மூன்று வினையெச்சமாகக் கூறிய கருத்தென்னையெனின், இருதிறன் அறிவு என்னுந் தொகைச்சொல் இவ்வதிகரணத்தில் மூன்று உருபுகள் விரிந்து பொருள் தரும் வகையில் நின்றது என்னுங் கருத்தால் என்க.

அம்மூன்று உருபுகளுள் இரண்டாம் வேற்றுமை ஐயுருபைவிரித்து இருதிறனையும் அறியும் அறிவு என்னும் பொருள்பற்றி இவ்விரண்டினை யும் அறியும் அறிவதாய் எனவும், மூன்றும் வேற்றுமை ஆலுருபை விரித்து இருதிறனுல் விளங்கிய அறிவென்னும் பொருள்பற்றி உபதேசியாய் என வும், ஏழாம் வேற்றுமை இல் உருபைவிரித்து இருதிறனிலுமுள்ள அறி வென்னும் பொருள்பற்றி நின்ற அவ்வறிவு இரண்டன்பாலும் உளதா யெனவும் உரைக்கப்பட்டன.

இவ்வாறு உருபுகளைவிரித்துப் பொருள் கூறியதால் உயிர்க்குச் சிறப் பிலக்கணம் வேறு வேறு கூறுவாரை மறுத்தவாறுமயிற்று. எவ்வாறெனின்,

இரண்டாம் வேற்றுமை உருபைவிரித்து இவ்விரண்டனையும் அறிவ தாயுள்ள அது என்பதனுல், சத்து அசத்தை அறியாது அசத்துச் சத்தை அறியாது இரண்டும் இவ்வாறு ஒன்றனையொன்று அறியாதாயின் இவ் விரண்டினையும் அறியும் பொருள் வேறென்னையென்னும் வினவிற்கு உயிரே அறியுமென விடைகூறி, உயிருக்காகச் சத்து அசத்தை அறியும் எனவும் உயிரின் சந்நிதியில் அசத்துச் சத்தை அறியுமெனவுங் கூறும் அவ் விருவர் மதங்களையும் அவ்விருமதங்களோடு ஒருதன்மையவான சமயங்க ளையும் மறுத்தவாறும்.

மூன்றும் வேற்றுமை உருபைவிரித்து உபதேசியாயுள்ள அது என்ற தனுல், உயிர் அறிவிக்க அறியுந்தன்மை இன்றித் தானே அறியுந்தன்மை யுடையதென்னும் சிவசமவாதசைவர் ஈசுரஅவிகார வாதசைவர் ஐக்கியவாத சைவர் மதங்களையும் அம்மதங்களோடு ஒருதன்மையவான சமயங்களையும் மறுத்தவாறும்.

ஏழாம் வேற்றுமை உருபைவிரித்து இரண்டன்பாலு முளதாயுள்ள அது என்றதனால் முத்தியினும் மலம் நீங்காது ஆதலால் ஆன்மாவின் அறிவு சிவத்தோடு கூடாமல் முத்தியில் மலத்தில் அடங்கிக் கற்போற் கிடக்கும் என்னும் பாடாணவாதசைவர் மதத்தையும், மலம் நீங்குதலே முத்தியன்றிச் சிவபெருமான் திருவடியை அடைய வேண்டுவதில்லையென்னும் பேதவாதசைவர் மதத்தையும், சத்தாகிய சிவபெருமானோடு கூடிய விடத்து உயிர் ஒன்றாய்ப்போதலேயன்றிச் சிவத்தின்பால்நின்று சிவானந்தத்தை அநுபவிக்குமாறில்லை என்னும் சுத்தசைவர் மதத்தையும் அம்மதங்களோடு ஒருதன்மையவான சமயங்களையும் மறுத்தவாறும்.

இவ்வாறு மறுத்ததனால் ஆன்மாவின் சிறப்பிலக்கணமும் உணர்த்தியவாறும். எவ்வாறெனின், இவ்விரண்டினையும் அறிவதாய் என்று கூறியதனால் ஆன்மாவின் அறிவு சத்துப்போல் ஒருசேர அறியுந்தன்மையும் அசத்துப்போல் அறியாத தன்மையுமின்றி, இருளின்றன்மையும் ஒளியின் றன்மையுமல்லாத கண்ணின் தன்மைபோல ஏகதேசமாய் அறியும் வேறாயதோர் தன்மையது என்பதூஉம், உபதேசியாய் என்றதனால் அந்த ஏகதேச அறிவும் ஆகாயத்தின் குணமாகிய ஓசை துணையுள்ள விடத்து விளங்குவதுபோலப் பெத்தத்தில் கருவியையும் முத்தியில் திருவருளையும் துணையாகக்கொண்டு விளங்குந் தன்மையது என்பதூஉம், இரண்டன்பாலும் உளதாயென்றதனால் துணையைக்கொண்டு விளங்கும் ஏகதேச அறிவும் சார்ந்த பொருளின் வண்ணமாய் விளங்கும் படிகம்போல அசத்தொடு சார்ந்தவிடத்து அசத்தாயும் சத்தொடு சார்ந்தவிடத்துச் சத்தாயும் இவ்வாறு சார்ந்ததன் வண்ணமாய் அழுந்துந்தன்மையது என்பதூஉம் பெறப்பட்டன.

இப்பொழிப்புரை சத்து அசத்து இரண்டனையும் அறியும் பொருள் வேறில்லையென்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

சத்து அசத்து இரண்டினையும் அறிவது ஆன்மா என்பதற்கும் அவ்விரண்டினையும் அறியும் முறையில் தன்னை அறியு மென்பதற்கும் காட்டும் உதாரணம்.

அருவுருவந் தானறித லாயிழையா யான்மா
வருவுருவ மன்றாகு முண்மை—யருவுருவாய்த்
தோன்றியுட னில்லாது தோன்றாது நில்லாது
தோன்றன் மலர்மணம்போற் றேர்க்கு.

## சிற்றுரை.

எ—து உ—ம் ம—னின், அம்மூன்றனுள் முன்னையதனை வலியுறுத்தி இரண்டலாமையை விளக்குதனுதலிற்று.

(இ-ள்.) ஆய் இழை ஆய் ஆன்மா அருவுருவம் அறிதல் அருவுருவம் அன்று ஆகும்—நுணுகிய நூல்களை ஆராய்வதாகிய உயிரே சத்து அசத்து என்னும் இரண்டினையும் அறிவதாகலான் அஃதவ்விரண்டுமின்றி அவற்றின் வேறாம். (அற்றேல், அவ்விரண்டனையும் அறியும் உயிர்க்குத் தன்னுண்மை யறியப்படுமோ படாதோ வெனக் கடாயினார்க்குப் படுமெனிற்றன்னோடுளப்பட மூன்றனையும் அறிவதென்றாது அவ்விரண்டனையுமறிவதாய் என்றல் பொருந்தாது; படாதெனின் அறியப்படாத பொருள் சூனியமெனப்பட்டு வழுவாமாலெனின்).—உண்மை அருவுருவாய்த் தோன்றி உடனில்லாது தோன்றாது நில்லாது மலர்மணம்போல் தொக்குத் தோன்றல்—அவ்வான்மாவின் உண்மைத் தன்மை அவ்விரண்டும் போல விளங்கித் தோன்றி அவற்றோடொப்ப நிற்பதுமன்றாய் விளங்காது சூனியமாய் நிற்பதுமன்றாய் மலரின்கண் வாசம் (அவ்விருவகையுமின்றி அதன்கண் ணடங்கித் தோன்றுமாறு) போலச் (சத்திலும் அசத்திலும் சார்ந்ததன்வண்ணமாய்) அடங்கித்தோன்றுவதோரியல்பாம்; (ஆகலான், அஃதவைபோலத் தனித்தறியப்படுவதொன்றன்றி அவ்விரண்டினையும் மறியுமுகத்தான் அறியப்படுவதாம்.) எ-று.

ஆகலான் அஃதவைபோலத் தனித்தறியப்படுவதொன்றன்றி அவ்விரண்டினையு மறியுமுகத்தான் அறியப்படுவதா மென்பது குறிப்பெச்சம்.

சுட்டுணர்விற்கு விடயமாகாமைபற்றிச் சத்தை அருவென்றும் அதற்கு விடயமாதல்பற்றி அசத்தை உருவென்றும் கூறினார்; உணருருவசத்தென்புழி உருவென்றதும் அது நோக்கி. செவ்வெண்டொகை விகாரத்தாற் றொக்கது. தான் அசை. அறிதலானன்றாகுமென வியையும். இழை நூலாகலான் ஈண்டுச் சாத்திரத்தை உணர்த்திற்று. ஆய்தல் நுணுகுதல். "ஓய்தலாய்தல் நிழத்தல் சாஅ—யாவையி னன்கு முள்ளத நுணுக்கம்." என்றார் தொல்காப்பியனாரும். ஆயிழையா யெனப் பொருளினுணுக்கம் நூன்மேலேற்றப்பட்டது. இரண்டாவது விரித்துரைக்க.

உயிர்க்கு அறியுந்தன்மை யுண்டாகலானன்றே வேதாகம முதலிய நூலகளுளவாயினவென அதனை வலியுறுத்துவார் ஆயிழையாயான்மாவென அதனை உடம்பொடு புணர்த்தோதினார். இக்கருத்தேபற்றி, "பலகலை யுலகி னிலவுத லானும" என்றார் புடை

நூலாசிரியரும். இவ்வாறன்றி ஆயிழையாயென மகடூஉ முன்னிலை யாக்குவார்க்கு இவ்வுதாரணம் மேலதனை வலியுறுத்துதற் கெழுந்ததன்றாய்க் கூறியது கூறலென்னும் வழுவாய் முடியுமென் றொழிக.

தேற்றேகாரம் விகாரத்தாற் றொக்கது. அருவுருவா யென்புழி ஆக்கச்சொல் உவமைப்பொருள்குறித்து நின்றது; "ஆள்வாரிலி மாடாவேனோ" என்றாற்போல. தொக்குத் தோன்றன் மலர் மணம்போலெனக் கூட்டுக.

## விளக்கம்.

கொண்டுகூட்டு. ஆய் இழை ஆய் ஆன்மா அருவுருவம் அறிதல் அருவுருவம் அன்று ஆகும் உண்மை அருவுருவாய்த் தோன்றி உடனில்லாது தோன்றாது நில்லாது மலர்மணம்போல் தொக்குத் தோன்றல்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோவெனின், மேற்கூறிய பொழிபுரையில் இரண்டினையும் அறிவதாய் உபதேசியாய் இரண்டன்பாலுமுளதாய் எனக்கூறிய மூன்றனுள் இரண்டினையும் அறிவதாய் என்பதனை வலியுறுத்தி உயிர் சத்துமன்று அசத்துமன்றென விளக்கியவாறாம்.

(பொ-ரை.) நுணுகிய நூல்களை ஆராய்வதாகிய உயிரே சத்து அசத்து என்னும் இரண்டினையும் அறிவதாம். ஆதலால் அவ்வுயிர் அவ்விரண்டுமன்றி அவ்விரண்டின்வேறாம். அவ்வாறாயின் அவ்விரண்டினையும் அறியும் உயிர்க்குத் தன்னுண்மை அறியப்படுமோ படாதோ என வினவினார்க்கு அறியப்படுமென விடைகூறின், தன்னோடுகூட மூன்றனையும் அறிவதென்று கூறாமல் இரண்டினையு மறிவதாயென்று கூறியது பொருந்தாது; அறியப்படாது என விடைகூறின், அறியப்படாதபொருள் சூனியமெனப் பட்டுக் குற்றமாம். இனி முடிபுதான் யாதெனின், அவ்வான்மாவின் உண்மைத் தன்மையானது சத்து அசத்தாகிய அவ்விரண்டும்போல விளங்கித் தோன்றி அவ்விரண்டனோடு சமமாய்நிற்பது மன்று விளங்காது சூனியமாய் நிற்பதுமன்று: சத்தைச்சார்ந்தபொழுது சத்தாயும் அசத்தைச் சார்ந்தபொழுது அசத்தாயும் இவ்வாறு சார்ந்தபொருளின் வண்ணமாய் அடங்கித் தோன்றுவதோரியல்பாம். எதுபோல எனின், மலரின்கண் உள்ளவாசம் அம்மலர்போல விளங்கித்தோன்றுதலுமன்று; விளங்காது சூனியமாய் நிற்பதுமன்று; இவ்விருவகையுமன்றி அம்மலரின்கண் அடங்கித்தோன்றுவது போலாம். ஆதலால் அவ்வுயிர் சத்தும் அசத்தும்போலத் தனித்தறியப்படுவதன்றி அவ்விரண்டனையும் அறியும்வழியால் அறியப்படுவதாம் எ—று.

(க-ரை.) உயிர் சத்து அசத்து இரண்டனையும் அறிந்து அவ்விரண்டினையும் அறியும்வழியால் தன்னையும் அறியும் என்பதாம

ஆதலால் அவ்வுயிர் சத்தும் அசத்தும்போலத் தனித்தறியப்படுவதன்றி அவ்விரண்டனையு மறியும்வழியால் அறியப்படுவதாம் என்பது செய்யுளி லில்லை. மலர்மணம்போல் என்ற உவமையால் மலரின்கண் உள்ளமணம், மலர்போலத் தனித்தறியப்படாவிடினும், மலரை அறியும்வழியால் அறியப் படுமாறுபோலக் குறிப்பாகக் கொள்ளும்படி எஞ்சிநின்றமையால் குறிப் பெச்சம். அதாவது அசத்தாகிய பிரபஞ்சத்தையும் சத்தாகிய சிவத்தையும் அறிகின்றதால் அறிகின்ற தான் ஒன்று உண்டென்றும், அறியப்பட்ட அவ் விரண்டின் வேறென்றும் அறிதலாம்.

அருவுருவந் தானறிதல் என்பதில் அருவென்பது சத்தையும் உருவென் பது அசத்தையுங் குறித்துநின்றன. சத்துச் சுட்டியறியும் அறிவிற்குப் பொருளாக அறியப்படாமையால் அதனை அருவென்றும், அசத்துச் சுட் டியறியும் அறிவிற்குப் பொருளாக அறியப்படுவதால் அவ்வசத்தை உரு வென்றும் கூறினாரென அறிக. ஆறுஞ்சூத்திரத்தில் உணருரு அசத்து என்றவிடத்து உருவென்றதும் சுட்டியுணரப்படுதல் நோக்கியேயாம்.

எண்ணும்மைபெறாது அரு உரு என்ற செவ்வெண்ணால் பெறப்பட்ட இரண்டென்னுந் தொகை விகாரத்தாற் றொக்குநின்றது. அதனை விரித்து இரண்டினையும் என உரைசெய்யப்பட்டது.

அருவுருவந்தான் என்பதிலுள்ள தான் என்பது அசை.

அருவுருவந்தானறிதல் என்றதனோடு ஆல் உருபை விரித்து அருவுரு வந்தானறிதலால் அருவுருவமன்றாகும் எனமுடியும்.

ஆயிழையாய் என்பதிலுள்ள இழை, நூலெனப்பட்டு இவ்விடத்தில் சாத்திரத்தைக் குறித்து நின்றது. இவ்வாறு புத்திசேனன், திங்கட்பெயரி னோன் எனச் சிந்தாமணியுட் கூறப்பட்டவாறறிக.

ஆய்தல் என்பது தல் விகுதி குறைந்து ஆய் என நின்றது. ஆய்தல் நுணுகுதல். ஆதலால் இழை என்பதன் மேல்நின்ற ஆய் என்பது நுணுகிய என்றும், அடுக்கநின்ற ஆய் என்பது ஆராய்வது என்றும் உரை செய்யப்பட்டன. ஆய்தல் என்பதன்பொருள் நுணுகுதல் என்பதை தொல் காப்பியம் சொல்லதிகாரம் உரியியல் சூத்திரம் கூஉ ''ஓய்தலாய்தனிழத் தல் சாஅ—யாவயினுன்குமுள்ள தனுணுக்கம்'' எனக் கூறுமாற்றானறிக.

நுணுகுதலாயிருப்பது பொருளாகுமன்றி நூலாகாது. அவ்வாறாகவும் நுணுகியநூல் என்னும் பொருள்பட ஆயிழை என்று கூறிய கருத்தென்னை யெனின், பொருளினுணுக்கம் அதனையுடைய நூல் மேலேற்றிக் கூறப் பட்டது என்க. இது இவன் நுணுகியவன் என்றபொழுது நுணுகிய அறிவை உடையவன் என்று கொள்ளுவதுபோலாம்.

இழை என்பதில் இரண்டாம் வேற்றுமை ஐயுருபு தொக்குநின்றது. அதனை விரித்து நூல்களை யென உரைசெய்யப்பட்டது.

ஆன்மாவை, ஆயிழையாய் ஆன்மாவெனக் கூறுவானேன் எனின், வேதாகம முதலிய நூல்கள் முற்றறிவுடைய இறைவனுக்கு வேண்டாம். அறிவில்லாத சடப்பொருளுக்கு அறியுந்தன்மை இன்மையால் அதற்கும் வேண்டாம். இனிப் பாரிசேட அளவையால் முப்பொருள்களுள் எஞ்சிய உயிருக்கே அவை வேண்டப்படும். படவே, வேதாகமங்களின் வழியாக அறியப்படும் பொருள் சத்து அசத்து என்னும் இரண்டுமேயாம். ஆகவே, உயிர்க்கு இரண்டினையும் அறியுந்தன்மை உண்டென்பதை வேதாகமங்களை அறியுந்தன்மை உண்டென்பதனால் வலியுறுத்த எண்ணி ஆயிழையாய் என்னும் வாக்கியத்தில் இரண்டனையும் அறியும் என்னும் அப்பொருளைப் புணர்த்திக் கூறினர் என்க. இது உடம்பொடு புணர்த்தல். இக்கருத்தே பற்றிச் சங்கற்ப நிராகரணத்துள் நிமித்தகாரணபரிணாமவாதிமத நிராகரணத்தில் உயிர்க்கு இரண்டனையும் அறியுந்தன்மை உண்டென்று உணர்த்துவதற்காக "பலகலையுலகினிலவுதலாலும்" என்றார் புடைநூலாசிரியரும்.

இனி ஆயிழையாய் என்பதற்கு இவ்வாறன்றிப் பெண்ணே என முன்னிலைப்பொருள் கொள்ளின், இவ்வுதாரணம் மேற்கூறிய இரண்டினையுமறிவதாய் என்பதனை வலியுறுத்துதற்கு எழுந்ததன்றாகும். எவ்வாறெனின், நூல்களையறியும் என்றதனாலேயே அறியுந்தன்மை உயிருக்கு உண்டென்றாகி நூலை அறிவதுபோல அதன் வழியாகச் சத்து அசத்து இரண்டினையும் அறியும் என்பதை வலியுறுத்தும். பெண்ணே என முன்னிலையாக்கின் அப்பொருள் தாராது; அன்றியும் பொழிப்புரையில் இரண்டினையும் அறிவதாய் என்றுகூறி இவ்வுதாரணத்தும் அருவுருவந் தானறிதலால் அருவுருவமன்றாகும் என்று கூறின், மேற்கூறியதனையே கூறியதாயிற்றன்றி அதற்கு உதாரணம் கூறியதாகாது. மலர்மண உவமை தன்னை யறிதற்கேயன்றி இரண்டினையு மறிதற்கன்று. நூல்களை அறிதல் தான் இரண்டினையும் அறிதற்கு உவமையாகும். ஆதலால் பெண்ணே யென்னும் அவ்வுரை பொருந்தாது. ஆன்மா வென்பதில் ஏகாரம் தொக்குநின்றது. அதனை விரித்து உயிரே என உரைசெய்யப்பட்டது. அந்த ஏகாரம், இரண்டனையும் அறிவது உயிரோ வேறோ என்னும் ஐயத்தை நீக்கலின் தேற்றம்.

அருவுருவாய் என்றவிடத்து ஆய் என்னும் ஆக்கச்சொல் உவமைப் பொருள் குறித்து நின்றது. இது திருவாசகம் மூத்ததிருப்பதிகத்தில் "ஆள்வாரிலி மாடாவேனோ" என்றவிடத்து ஆவேனோ என்பது போல் வேனோ என உவமை குறித்து நின்றாற்போலாம். ஆதலால் அருவுருவாய் என்பதற்கு அவ்விரண்டும் போல என உரை செய்யப்பட்டது.

தோன்றல் மலர் மணம்போற் றெக்கு என்பதைத் தொக்குத் தோன்றல் மலர் மணம் போல் எனக் கூட்டுக.

சத்து அசத்து இரண்டினாலும் அறிவது ஆன்மா என்பதற்குக் காட்டும் உதாரணம்.

மயக்கம துற்று மருந்திற் றெளிந்தும்
பெயர்த்துணர்நீ சத்தாகாய் பேசி—லசத்துமலை
நீயறிந்து செய்வினைக ணீயன்றி வேறசத்துத்
தானறிந்து துய்யாமை தான்.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், அங்ஙனம் அறியும் உயிர் சிவசத்தோ டொப்பச் சித்தாகுமென்பாரை நோக்கி உபதேசியாய் என்றதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ—ள்) மயக்கமது உற்றும் மருந்தின் தெளிந்தும்— (நின்னறிவை விளக்குதற்குரிய வியஞ்சகமில்வழி ஒருவிடயத்தை இன்னதென் றறியமாட்டாது) மயக்கத்தையுற்றும் (பசிநோய்க்கு அன்னம்போல) அம்மயக்கநோய்க்கு மருந்தாய வியஞ்சகமுள்வழி அம்மயக்கநீங்கி (அதனை இன்னதென்று) நிச்சயித்தும்,—பெயர்த்து உணர்நீ பேசில் சத்து ஆகாய்—இங்ஙனம் மாறிமாறி உணர்ந்து வருகின்ற நீ சொல்லுமிடத்துச் சிவசத்தோடொப்ப அறியுஞ் சத்தியுடையாயல்லை. (அற்றேல், அசத்தனேவன் போலுமெனின்),—நீ அறிந்து செய்வினைகள் நீ அன்றி (வேறு) அசத்து தான் அறிந்து துய்யாமை அசத்தும் அலை—(வியஞ்சகமுள்வழியும்) நீமுன்னறிந்து செய்தவினைகளை இப்பொழுது நீயேயறிந்தனுபவிக்க வல்லையன்றி நின்னின்வேறாய் அசத்தாகிய பாசம் அறிந்தனுபவிக்க மாட்டாமையான் (அதனோடொப்ப) அசத்தனுவாயுமல்லை,—வேறு—(சத்ததுணமுடைய ஆகாயம்போல வியஞ்சகமுள்வழி அறியுமாற்றலுடைமையும் அஃதில்வழி அவ்வாற்ற லின்மையுமாகிய இரண்டுமுடைய நீ அவ்விரண்டற்கும்) வேறாய்ச் சிதசித்தாந்தன்மையுடையை எ-று.

மருந்திற் றெளிந்தெனவே மயங்குதல் அஃதில்வழி என்பது பெற்றாம். வியஞ்சகமில்வழித் தலைப்படுவதூஉம் அஃதுள் வழி நீங்கி நிற்பதூஉமாகிய மயக்கம் உண்டி இல்வழித் தலைப்படுவதூஉம் அஃதுள்வழி நீங்கி நிற்பதூஉமாகிய இயல்புடைய பசியோடொத்தலின் அதனைப் பசிநோயாகவும், தீர்த்தலொப்புமைபற்றி வியஞ்சகத்தைப் பசிதீர்க்கு மருந்தாகவும் உருவகஞ்செய்தார். இஃது

ஏகதேசஉருவகம். மருந்தெனப் பொதுப்பட உருவகஞ்செய்தாராயினும் மறித்து மறித்து வேண்டப்படுமாறு ஈண்டைக்கேற்புடையது பசிநோய் தீர்க்குமருந்தேயாகலின் அவ்வாறு உரைக்கப்பட்டது. அது பகுதிப்பொருள் விகுதி. உம்மை எண்ணின்கண் வந்தது. அசத்தாமென்னு மும்மை இறந்தது தழீஇயிற்று. தானென்பது முன்னையது எழுவாயுருபுபட நின்றது. பின்னையது அசைநிலை. துவ்வாமை துய்யாமை என மரீஇயிற்று.

சத்தியுடைய பொருள் சத்தம், அஃதில்பொருள் அசத்தமாகலின், அவ்வட மொழிகள் ஈண்டு மும்முக் கெட்டுக் குற்றியலுகரவீறாய் நின்றன; "நாகணையான்" "பெற்றான் துயர்த்தபெருமான்" "பேதுசெய்து" "வாதுசெயத் திருவுள்ளமே" என்புழிப்போல.

அசித்துமலே யென்பது பாடமாயின், மேற்சத்தாகாய் என்றதனை இசையெச்சமாகக்கொண்டு சத்தாந்தன்மையே யுடையாயல்லே; அதன்மேலுஞ் சித்தாமா றியாங்ஙன மென்றுரைத்து இயைத்துக்கொள்க. இவ்வாறன்றி ஈண்டுச் சத்தாகாய் அசத்துமலே என்பவற்றை மேல்அருவுருவுமன்றாகு மென்றதன் பொருள்படக்கொண் டுரைப்பாருமுளர். அவர் ஆண்டே அமைந்து கிடந்த பொருளை மறித்துங் கூறவேண்டாமையும் பெயர்த்துணர் நீ எனவும் அறிந்துதுய்யாமை யெனவும் அறிவுடைமை அறிவின்மை பற்றிக் கூறும் பொருள் அவையாதல் செல்லாமையும் நோக்கிலர்.

## விளக்கம்.

கொண்டுகூட்டு, மயக்கமது உற்றும் மருந்தின் தெளிந்தும் பெயர்த்து உணர்நீ பேசில் சத்து ஆகாய் நீ அறிந்து செய்வினைகள் நீ அன்றி வேறு அசத்து தான் அறிந்து துய்யாமை அசத்தும் அலே வேறு.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், சத்து அசத்து இரண்டினையும் அதுவதுவாய் நின்று அறியுமுறையில் தன்னையும் அறிகின்ற உயிர், அறியுந் தன்மையால் சிவசத்தாகிய இறைவனோடு சமமான அறிவுடைப் பொருளென்பாரை நோக்கி அறிவுடைப் பொருளாயினும் இறைவன்போலத் தானாக அறியுந் தன்மை உயிருக்கில்லையெனக்கூறிப் பொழிப்புரையில் உபதேசியாய் என்று கூறியதனை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) உன்னுடைய அறிவை விளக்குதற்குரிய துணையில்லாத விடத்து ஒரு பொருளை இன்னதென்று அறியமாட்டாமல் மயக்கத்தைப் பொருந்துவாய். பசிநோய் தீர்தற்கு அன்னம் மருந்தாதல்போல அம்

மயக்கநோய் தீர்தற்குக் கருவியாகிய துணை மருந்தாகும். துணையுள்ளவிடத்து அம்மயக்கம் நீங்கி அப்பொருளை இன்னதென்று நிச்சயிப்பாய். இவ்வாறு துணையில்லாத விடத்து மயங்கியும் துணையுள்ளவிடத்து மயங்காமல் நிச்சயித்தும் மாறிமாறி அறிந்து வருகின்ற நீ, சொல்லுமிடத்து என்றும் ஒரு படித்தாய்த் துணையின்றி இயல்பாக அறியும் இறைவன்போல அறியுஞ் சத்தியை உடையாயல்லை. அவ்வாறாயின், யான் அசத்தனோவேனோ எனின், துணையுள்ளவிடத்தும் நீ முன்னறிந்து செய்த வினைகள் பலனுக்கு வருங்கால் அவ்வினைப்பயன்களை இப்பொழுது நீயே அறிந்து அநுபவிக்கும் வல்லமை உடையாய்; அன்றி நின்னின் வேறாயுள்ள அறிவில்லாத பாசம் அறிந்தனுபவிக்க மாட்டாது. ஆதலால், நீ அசத்தனுமாகாய். ஆகவே, ஆகாயத்திலுள்ள குணமாகிய ஓசை துணையுள்ள விடத்து விளங்கித் துணையில்லாதவிடத்து விளங்காதவாறுபோல, உன்னிடத்திலுள்ள குணமாகிய அறியுந்தன்மை துணையுள்ளவிடத்து அறியும் ஆற்றல் இருப்பதாகவும் துணையில்லாதவிடத்து அறியும் ஆற்றல் இல்லாததாகவும் காணப்படுமாதலால், அறிதல் அறியாமையாகிய இரண்டும் உடையநீ துணையின்றி அறியுஞ் சத்தும் துணையுள்ளவிடத்தும் அறியாத அசத்தும் ஆகிய அவ்விரண்டற்கும் வேறாய்ச் சித்து அசித்து என்னும் இரண்டு தன்மையையுடைய பொருளாவாய் எ-று.

(க-ரை.) கருவிகளோடு கூடியவிடத்து மயங்காமலும் கூடாதவிடத்து மயங்கியும் அறிகின்ற நீ என்றும் ஒருபடித்தாய் அறியும் இறைவன்போலச் சத்துமன்றி என்றும் அறியமாட்டாத பாசம்போல அசத்துமன்றி அறிவு அறியாமை என்னும் இரண்டு தன்மையுமுடைய பொருளாவாய் என்பதாம்.

இவ்வுதாரணம் துணையைக்கொண்டே உயிர் அறியும் எனக் கூறினமையால் உபதேசியாய் என்பதனை வலியுறுத்தியவாறு அறிக.

செய்யுளில் மருந்திற்றெளிந்து எனக் கூறியதனால் அம்மருந்து இல்லாதவிடத்து மயங்குதலுண்டென்பது பெறப்பட்டது. ஆதலால் மயக்கமற்று என்பது துணையில்லாதவிடத்து மயக்கத்தை உற்று என உரை செய்யப்பட்டது. துணையில்லாத விடத்துக் கூடுவதூஉம் துணையுள்ள விடத்து நீங்கி நிற்பதூஉமாகிய மயக்கம் உண்டியில்லாத விடத்துக்கூடுவதூஉம் உண்டியுள்ள விடத்து நீங்குவதூஉமாகிய இயல்புடைய பசியோடு ஒத்தலின் அம்மயக்கத்தைப் பசிநோயாகவும், உண்டி பசியைத் தீர்ப்பது போல் வியஞ்சகம் மயக்கத்தைத் தீர்க்கும் ஒப்புமைபற்றித் அதனைப் பசிநோய் தீர்க்கும் மருந்தாகவும் உருவகஞ் செய்தார்; இவ்வுருவகத்தில் மயக்கத்தை நோயென்று உருவகஞ்செய்யாது வியஞ்சகத்தை மட்டும் மருந்தென்று உருவகஞ்செய்தமையால் இது ஏகதேச உருவகம். உருவகமாவது உவமானத்தை உவமேயமாகக் கூறுதல். இச்செய்யுளில் மருந்துபோல் வியஞ்சகம் என்று கூறாது வியஞ்சகத்தையே மருந்தாகக் கூறியதால் உருவக

மாயிற்று. வியஞ்சகம் துணை. இன்னமருந்தென்று விளக்கமாய் உருவகஞ் செய்யாமல் பொதுப்பட மருந்தென்றுமட்டும் உருவகஞ் செய்திருக்கப் பசி நோய்க்கு மருந்தாகிய அன்னம்போல் என்று உரைசெய்த கருத்தென்னை யெனின், கருவியாகிய துணையில்லாத விடத்து மயங்கியும் துணையுள்ள விடத்து மயங்காமலும் இவ்வாறு மாறிமாறி உயிர் அறிவு அறியாமை என்னும் இரண்டனோடு பொருந்துமெனககூறும் இவ்விடத்திற்கு ஏற்புடையது பசிநோய் தீர்க்கும் மருந்தேயாகலின், அவ்வாறு உரைசெய்யப்பட்டதுஎன்க. அன்றியும் வாதபித்தசிலேட்டும சம்பந்தமான சுரம் முதலிய நோயெல்லாம் அபத்தியத்தினாலும் சன்மத்தினாலும் வருதலேயன்றி மருந்தில்லாமையினால் வருதலில்லை. பசிநோயானது உண்டியாகிய மருந்தில்லாமையால்வரும். சுரம் முதலிய நோய்கள் மருந்தினால் தீர்ந்து ஒழியின் பின்னர் மருந்து வேண்டுவதில்லை. பசிநோய்உண்டியாகிய மருந்தால் தீரினும் அம்மட்டில் அமையாது மீட்டும் உண்டாதலின் உண்டியும் மீட்டு வேண்டப்படும். ஆதலால் கருவிகளோடுகூடிய சாக்கிரத்தில் மயக்கமின்றியும் கருவிகளோடு கூடாத கேவலமாகிய துரியாதீதத்தில் மயக்கமடைந்தும் மீண்டுங் கருவிகளோடுகூடி மயக்கமின்றியும் இவ்வாறு மாறிமாறி வருதற்குப் பசிநோய் உவமையே பொருத்தமாதலறிக.

மயக்கமது என்பதிலுள்ள அது என்னும் விகுதி மயக்கம் என்னும் பகுதிப் பொருளையே குறித்து நிற்றலால் பகுதிப்பொருள் விகுதி.

மயக்கமதுற்றும் என்றதில் உள்ள உம்மை உற்றும் தெளிந்தும் என்ற எண்ணின்கண் வந்தது.

அசத்தும் அலை என்றதிலுள்ள உம்மை சத்தாகாய் என்று மேற்கூறிய தனைத்தழுவி நிற்றலால் இறந்தது தழுவியது.

தானறிந்து துய்யாமைதான் என்றதில் முன்னுள்ள தான் என்பது அசத்தாகிய எழுவாயைக் குறித்த உருபாய்நின்றது. பின்னுள்ள தானென்பது அசை.

துவ்வாமை என்று கூறற்பாலது துய்யாமை எனமருவிநின்றது.

சத்தாகாய் என்பதற்குச் சத்தியை யுடையாயல்லை என உரை செய்த கருத்தென்னை யெனின், சத்தியையுடைய பொருள் சத்தம், சத்தியில்லாத பொருள் அசத்தம், ஆதலால் சத்தம் அசத்தம் என்னும் அவ்வடமொழிகள் தமிழில் அம் கெட்டு, குற்றியலுகர ஈறாய் சத்து அசத்து என நின்றமையால் அவ்வாறு உரைசெய்யப்பட்டது. சத்தம் அசத்தம் என்பன சத்து அசத்துஎனவருதல் எதுபோலஎனின், நாகம் அணையான் என்பது நாகணையான் எனவும், பெற்றம் ஒன்றுயர்த்த பெருமான் என்பது பெற்றொன்றுயர்த்த பெருமான் எனவும், பேதமசெய்து என்பது பேதுசெய்து எனவும், திருஞானசம்பந்தசுவாமிகள் தேவாரத்தில் வாதம் செய்யத் திருவுள்ளமே என்பது வாது செய்யத்திருவுள்ளமே எனவும் வருமாறு போலாம

அசத்தும் அலலென்பது அசித்தும் அலலென்று பாடமாயின், மேற்சத்தாகாய் என்றதற்குச் சத்தாந்தன்மையே உடையாயல்லை யென்று பொருள் கூறிச் சத்தாகாய் என்றதனை இசையெச்சமாகக்கொண்டு அதன்மேலும் சித்தாமாறு யாங்ஙனமென்று உரைத்துச் சித்துமன்று அசித்துமன்று என உரைத்துக் கொள்க. கொள்ளவே, சித்துஅசித்தல்லை என்பதாம். இசையெச்சமாவது ஒழிந்தசொற்கொண்டு பொருளுணரநிற்பது. இவ்விடத்தில் சத்தாகாய் என்றது சித்தாகாய் என்னும் ஒழிந்தசொற்கொண்டு பொருளுணர நின்றது. இவ்வாறன்றிச் சத்தாகாய் அசத்துமலை என்பவற்றை மேலைச் செய்யுளில் அருவுருவம் அன்றாகும் என்றதன் பொருள்படக்கொண்டு சத்துமல்லை அசத்துமல்லை யென்றுரைப்பாரு முளர். அவர் அச்செய்யுளிலேயே அமைந்துகிடந்த பொருளை மீட்டுங்கூற வேண்டாமென்பதை அறிந்திலர். அன்றியும் பெயர்த்துணர்நீ எனவும் அறிந்து துய்யாமை எனவும் இச்செய்யுளிலுள்ள வாக்கியங்கள் அறிவுடைமை அறிவின்மைபற்றிக் கூறுதலால் அப்பொருளுக் கேற்பச் சிவசத்துப்போல் அறிதலும் அசத்துப்போல் அறிவில்லாமையும் என்று கொள்ளாமல் சத்துமல்லை அசத்துமல்லை என்று கூறுதல் பொருந்தாமையும் நோக்கிலர்.

சத்து அசத்து இரண்டன்பாலும் அதுவதுவாய் நின்று ஆன்மா
அறியும் என்பதறகுக் காட்டும்
உதாரணம்.

மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்தாத
லஞ்ஞான முள்ள மணைதல்காண்—மெய்ஞ்ஞானந்
தானே யுளதன்றே தண்கடனீ ருப்புப்போற்
றானே யுளமுளவாத் தான்.

## சிற்றுரை.

எ-து உ-ம் எ-னின், அம்மயக்கம் அவ்வுயிரோடியைபுடைய முதல்வனுக்கு முண்டுபோலுமெனவும் அதுதான் உயிர்க்கு எக்காலத்து வந்ததெனவும் நிகழுங் கடாவை விடுக்கு முகத்தான் இரண்டன்பாலு முளதாமாறு வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) அஞ்ஞானம்—மேற்கூறிப்போந்த மயக்கமாவது,—மெய்ஞ்ஞானம் தன்னில் அசத்து ஆதல் விளையாது—(ஒருபெற்றித்தாய அறிவெனப்படுஞ்) சிவத்தினெதிர் (கதிர்முன் னிருள்போல,) நிலையுதலிலதாகலின் ஆண்டுளதாதலின்றி,—மெய்ஞ்ஞானந்தானே உளது அன்றே—அச்சிவம் ஒன்றுள்ளது அன்றே,—தான் எய் உளம் உளவா—தான் பொருந்துதற்குரிமையுடைய உயிர்கள் உள்

ளனவாக,—உள்ளம் அணைதல்—அவ்வுயிர்களைப்பற்றி நிற்றல்,—தண்கடல் நீர் உப்புப்போல்காண்—தண்ணிய கடலின்கண் உளதாதலின்றி அக்கடலிடத்துளதாகிய நீரைப்பற்றிநிற்கும் உப்புப்போலென்றறிவாயாக எ-று.

விளையாதென்னும் வினையெச்சமறை அணைதலென்னுந் தொழிற் பெயரோடுமுடிந்தது. தானே என்பது கட்டுரைக்கண் வந்தது. தானே யுளமுளவாத்தா னென்புழித் தானென்பது முன்னையது எழுவாய் பின்னையது அசைநிலை. எயுளமென்னும் வினைத்தொகை "அறிவறிந்த மக்கட்பேறு" போல நின்றது. எய்தற்குரிமையாவது மேற்காட்டினும். தண்கடனீருப்புப்போலென்றதனால் முப்பொருள்களும் வியாபக வியாப்பியங்களாய் நிற்குமாறும் பெறப்பட்டது. இரண்டன்கண்ணும் உயிர்க்கு இயைபுடைமை கூறவே, இரண்டன்பாலு முளதாதலை வலியுறுத்தவாறுகாண்க.

ஈண்டிருதிறனையுமறியு மறிவுளதெனவே இருதிறனாகிய சத்து அசத்து எனப்பட்டனவெல்லாம் பிரமேயம்; அவற்றை அறியும் சதசத்தாகிய உயிர் பிரமாதா; அவ்வுயிரினறிவாகிய சிற்சத்தி பிரமாணம்; அவ்வறிவு நிகழ்ச்சி பிரமிதி என்பதூஉம், இருதிறனால் விளங்கும் அறிவுளதெனவே அவ்விரண்டனுள் அசத்தானறிவு விளங்கும்வழித் தனக்கு வேறாய்நின்று விளக்குவனவாய காட்சியனுமான முறையெனப்படும் அசத்தாகிய பாசஞான மூன்றும் சத்தானறிவு விளங்கும்வழி அந்நியமின்றித் தனக்காதாரமாய் உடனின்று விளக்குஞ் சிவஞானமுந் தனக்கு வியஞ்சகங்களாகலான் அதுபற்றி அவையும் பிரமாணமென்று உபசரித்துக் கூறப்படுமென்பதூஉம், இருதிறனினும் அறிவுளதெனவே ஈரிடத்துங் கேடின்றி அசத்தான் விளங்கி அசத்தை அறிவுழி அசத்தின்பாலும் சத்தான் விளங்கிச் சத்தை யறிவுழிச் சத்தின்பாலும் அதுவதுவாயழுந்து மென்பதூஉம் பெறுதும். இவ்வாறன்றி வியஞ்சகங்களையே பிரமாணமென்னும் தார்க்கிகர் முதலியோர் மதங்கள் பொருந்தாமையும், அவ்வியஞ்சகங்களா னிகழும் பிரமிதி வேறுபாடும் அவற்றதியல்புகளும் ஈண்டுவிரிப்பிற் பெருகும்; பௌட்கரம் முதலிய சிவாகமங்களுட் கண்டுகொள்க.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) அஞ்ஞானம் மெய்ஞ்ஞானந் தன்னில் அசத்து ஆதல் விளையாது மெஞ்ஞானந்தானே உளது அன்றே தான்எய் உளம் உளவா உள்ளம் அணைதல் தண்கடல்நீர் உப்புப்போல் காண்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோவெனின், மேலை வெண்பாவில் உயிருக்கு உண்டென்றுகூறிய அம்மயக்கம் அவ்வுயிரோடு சம்பந்தமுடைய முதல்வனுக்கு உண்டாகாதோ எனவும், அம்மயக்கந்தான் உயிர்க்கு எக்காலத்து வந்ததெனவும் ஆசங்கை நிகழுமன்றே? அதற்கு உத்தரமாக இறைவனுக்கு மயக்கமில்லையெனவும், உயிருக்கு அம்மயக்கம் அநாதி யெனவும் கூறு முறையில், பொழிப்புரையில் உயிர் இரண்டன்பாலு முளதாய் என்று கூறியதனை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) மேலை வெண்பாவில் உயிக்குஉண்டென்று கூறிய மயக்கமானது, வேறுவேறாகவும் விட்டுவிட்டும் அறியாது எவற்றையும் ஒருதன்மையாகவும் நீங்காமலும் அறிகின்ற அறிவுருவாகிய இறைவன் சந்நிதியில் நிற்பதில்லை. எதுபோல எனின், சூரியன்முன் இருள்நில்லாதவாறு போலாம். ஆதலால், அம்மயக்கம் அவ்விறைவனிடத்து உளதாகாமல் வாலறிவனாகிய அவ்விறைவன் உள்ள அன்றே உள்ளனவாய் அம்மயக்கம் பொருந்துதற்கு உரிமையுடையனவாய் உள்ள உயிர்களைப் பற்றி நிற்கும். இவ்வாறு இறைவனைப் பற்றாமல் உயிரைப்பற்றிநிற்றல் எதுபோல எனின், குளிர்ச்சி பொருந்திய நீர்க்கு இடங்கொடுத்திருக்கும் ஆகாயத்தின்கண் (அதாவது கடலின்கண்) உப்புஉளதாகாமல் அக்கடலினிடத்து உளதாகிய நீரை அவ்வுப்புப்பற்றி நிற்பதுபோலும் என்று அறிவாயாக எ-று.

(க-ரை.) உப்பானது நீர்க்கு இடங்கொடுத்திருக்கும் ஆகாயத்தைப் பற்றாது நீரைப்பற்றி நிற்பதுபோல, அஞ்ஞானமாகிய மயக்கம் மெஞ்ஞானமே வடிவாகிய இறைவனைப் பற்றாது உயிரை அநாதியே பற்றிநிற்கும் என்பதாம்.

விளையாது என்பது விளையும் என்பதன் எதிர்மறைச் சொல்லாய் வினையெச்சமாய் நின்றது. அவ்வெச்சம் அணைதலென்னுந் தொழிற் பெயரோடு முடிந்தது.

மெஞ்ஞானந்தானே என்பதிலுள்ள தானே என்பது மெஞ்ஞானமே என்னும் உறுதிமொழிக்கண் வந்தது. தான் ஏய்உளம் உளவாத்தான் என்றவிடத்து முதலாவதாயுள்ள தான் என்பது அஞ்ஞானமாகிய எழுவாயைக் குறித்து நின்றது; பின்னுள்ளதான் என்பது அசை.

ஏய் உளம் என்னும் முக்காலத்துக்குரிய வினைத்தொகை ஏயும் உளம் என எதிர்காலத்தால் விரிக்கப்பட்டு ஏய்தற்கு உரிமையுடைய உளம் என்னும் பொருளில் நின்றது. இது, திருக்குறள் புதல்வரைப் பெறுதல் அதிகாரத்தில் "அறிவறிந்த மக்கட்பேறு" என்பது, அறியவேண்டுவன அறிதற்குரிய மக்கள் என்னும் பொருள் குறித்தவாறுபோலாம். ஏய்தல் பொருந்துதல். அஞ்ஞானம் உயிரைப் பொருந்துதற்கு உரிமையாவது உயிரினிடத்துள்ள பற்றுந்தன்மையேயாம் என்பது ௪-ம் சூத்திரத்து உ-ம் அதிகரணத்து இறுதியிற் காட்டப்பட்டிருக்கின்றது.

தண்கடல் நீர் உப்புப்போல் என்றதனால் கடல் போலப் பதிபூரண வியாபகமாயும், நீர்போலப் பசு ஏகதேசவியாபகம் என்னும் வியாப்பியமாயும், உப்புப்போலப் பாசம் நீரளவில் வியாபகமான வியாத்தியாயும் நிற்குமாறும் பெறப்பட்டது. கடல்என்பது நீர்தங்கும் இடமாகிய வெளியாம். இவ்வுண்மை யறியாதார் தத்தமக்கு வேண்டியவாறே உரைத்து இடர்ப்படுவர்.

நீருக்குக் கட்லாகிய ஆகாயத்தினிடத்தும் உப்பினிடத்தும் சம்பந்தம் உளதாமாறுபோல, மெஞ்ஞானந்தானே உளதன்றே தான் எய் உளம் உளவாக என்றதனால், உயிருக்குப் பதியினிடத்தும் பாசத்தினிடத்தும் சம்பந்தமுளதாதல் பெறப்பட்டது. படவே, சத்து அசத்தாகிய இரண்டன்பாலும் உயிர் உளதாதலே இவ்வெண்பாவால் வலியுறுத்தியவாறு அறிக.

இவ்வதிகரணத்தில் சத்து அசத்தாகிய இருதிறனையும் அறியும் அறிவு உயிர்க்கு உளதென்று கூறியதனால், இருதிறனாகிய சத்து அசத்து எனப் பட்டனவெல்லாம் அறியப்படும் பொருள் எனவும், அவ்விருபொருள்களையும் அறியும் உயிர் சத்தொடுகூடிச் சத்தாயும் அசத்தொடுகூடி அசத்தாயும் நின்று அறிவதால் சதசத்தாகிய அவ்வுயிர் அறியும்பொருள் எனவும், அவ்வுயிரின் அறிவாகிய ஞானசத்தியே அறிதற்குக் கருவியெனவும், அவ்வறிவின் வியாபாரமே அறிதல் எனவும் விளங்குமாறு அறிக.

இனிச்சத்து அசத்தாகிய இருதிறனால் விளங்கும் அறிவு உயிர்க்குஉளதென்று கூறியதனால் சத்து அசத்தாகிய அவ்விரண்டனுள் அசத்தாலறிவு விளங்குமிடத்து வேறாய் நின்று விளக்குவனவாகிய பிரத்தியட்சம் அனுமானம் ஆகமம் எனப்படும் பாசஞானம் மூன்றும் ஆன்ம அறிவிற்குத்துணைகளாம். சத்தாலறிவு விளங்குமிடத்து வேறின்றித் தனக்கு ஆதாரமாய்த் தன்னோடு உடனின்று விளக்கும் சிவஞானம் ஆன்ம அறிவிற்குத்துணையாம். ஆகவே, பிரத்தியட்சம் அனுமானம் ஆகமம் என்னும் பாசஞானத்தைத் துணையாகக் கொண்டு பாசத்தையும் சிவஞானத்தைத் துணையாகக்கொண்டு சிவத்தையும் உயிர் அறியுமென்பதூஉம், பாசஞானம் உயிர்க்கு வேறாயும் சிவஞானம் உயிரோடு உடனாயும் நிற்குமென்பதூஉம், இவ்வாறு பாசஞானமும் சிவஞானமும் உயிர்க்கு அறிவு விளங்குதற்குத் துணையாதலால் அது பற்றிப் பாசஞான சிவஞானங்களும் கருவிகளென்று உபசரித்துக் கூறப்படு மென்பதூஉம் விளங்குமாறு அறிக.

இனிச் சத்து அசத்தாகிய இருதிறனிலுமுள்ள அறிவு உயிர்க்கு உளதென்று கூறியதனால், சத்து அசத்தாகிய இரண்டனையும் அறிகின்றது பற்றித் தான் உண்டென்று அறியும் உயிர் இரண்டிடத்துங் கேடின்றி, அசத்தால் விளங்கி அசத்தை அறியுமிடத்து அசத்தின்பாலும் சத்தால் விளங்கிச் சத்தை அறியுமிடத்துச் சத்தின்பாலும் அதுவதுவாய் அழுந்து மென்பது விளங்குமாறு அறிக.

இவ்வாறன்றிப் பிரத்தியட்ச முதலிய துணைகளையே பிரமாணமாகக் (அதாவது கருவியாக) கொள்வர் தார்க்கிகர் முதலியோர். கருவியாயிருப்பது என்றுங் கருவியாயிருக்கவேண்டுமேயன்றி அறியப்படும் பொருளாதல் கூடாது. பிரத்தியட்சம் முதலிய மூன்றும் இது பிரத்தியட்சம் இது அனுமானம் இது ஆகமம் என அறியவும் படுதலின் அவை உபசாரத்தாற் கருவியெனப்படுமேயன்றி உண்மையிற் கருவியாகாது. ஆன்ம அறிவு என்றுங் கருவியாயிருக்குமேயன்றி அறியப்படும் பொருளாதலில்லை. ஆகவே, பொருள்களை விளக்குங் கருவி உண்மையில் ஆன்ம அறிவேயாம். அவ்வான்ம அறிவிற்குத் துணையாதல்பற்றிப் பிரத்தியட்சம் முதலியனவும் உபசாரத்தாற் கருவியெனப்படும். ஆதலால் தார்க்கிகர் முதலியோர் மதங்கள் பொருந்தாமையும், பிரத்தியட்சம் முதலிய அந்தத் துணைகளால் நிகழும் அறிதல் வேறுபாடும், அத்துணைகளினியல்புகளும் இவ்விடத்து விரிக்கிற் பெருகும்; பௌட்கரம் முதலிய சிவாகமங்களுட் கண்டுகொள்க.

இவ்வேழாஞ் சூத்திரத்தினாலும் அதிகரணங்களினாலுங் கூறிமுடித்த தொகைப்பொருள்:—ஆறாஞ் சூத்திரத்தில் உணருரு அசத்தெனவும் இருதிறனல்லது சிவசத்தெனவும் வரைசெய்துணர்த்தியவிடத்து அவ்வாறு அசத்தெனவும் சிவசத்தெனவும் அறியும் பொருள் அவ்விரண்டனுள் ஒன்றோ அவ்விரண்டின் வேறோ என்னும் ஐயம் நிகழாதவண்ணம் சத்தாகிய சிவத்தின் முன்னர் அசத்தாகிய பிரபஞ்சம் முனைத்துத் தோன்றாது ஆதலால், அசத்தைச் சத்து அறியாது என்பதும், அசத்தாகிய பிரபஞ்சம் அறிவில்லாத சடமாதலால் அசத்துச் சத்தை அறியாதென்பதும், ஆதலால் சத்து அசத்து என்னும் அவ்விரண்டின் வேறாகிய உயிரே அவ்விரண்டினையும் அறியும் என்பதும் சூத்திரத்தாற் கூறப்பட்டன. படவே, இறைவனுக்குத் திருமேனியாகக் கூறப்படும் பிரபஞ்சத்தை இறைவன் முன்னர் முனைத்து நில்லாது என்றல் பொருந்தாதெனவும், உயிரின்பொருட்டுப் பிரபஞ்சத்தை இறைவன் அறிவன் எனவும் சிவாத்துவிதசைவர் கூற, முதலதிகரணத்தால் அவரை மறுத்துத் தானாகவே அறியும் இயற்கையுணர்வின் முன்னர்ச் செயற்கைச் சுட்டுணர்வு விளங்கித் தோன்றாது ஆதலால், இறைவன் முன்னர்ப் பிரபஞ்சம் விளங்கித் தோன்றாதென்பதும், பிரபஞ்சத்தை அறியாமை முதல்வன் முற்றறிவிற்குக் குறையாகாதென்பதும், அறியவேண்டுமாயினும் உடன்நின்று அறிவன் என்பதும் கூறப்பட்டன. படவே, சத்து அசத்தை அறியாதாயினும் அசத்தாகிய கரணம் ஆன்மாவின் சந்நிதியில் விளக்கின் சந்நிதியில் கண்போல் நின்று பெத்தத்தில் அசத்தை அறிதல்போல முத்தியிற் சிவகரணமாய்நின்று சிவத்தை அறியுமாதலால் அசத்துச் சத்தை அறியாதென்றல் பொருந்தாதெனச் சிவசங்கிராந்தவாதி கூற, இரண்டாம் அதிகரணத்தால் அவரைமறுத்துக் கரணத்தின்கண் உள்ளதுபோலத் தோன்றும் அறிவு ஆராயுமிடத்து அதன்கண் இல்லாமையால் தத்துவப் பிரபஞ்சத்திற்கு அறிவில்லை யென்பதும், அவ்வசத்துக்கு அறிவு உண்டென்று கூறுதல் கான

வில் நீருண்டென்று கூறுதல்போலென்பதும், ஆதலால் அசத்துச் சத்தை அறியாதென்பதுங் கூறப்பட்டன. படவே, இவ்வாறு சத்தும் அசத்தும் தம்முள் ஒன்றனையொன்று அறியுமாறில்லையாயின் அவ்விரண்டனையும் அறியும் பொருள்தான் யாதென்பாரை நோக்கி மூன்றும் அதிகரணத்தால் அவ்விரண்டினையும் அறிவதாயும் அவ்விரண்டினாலும் அறிவதாயும் அவ்விரண்டின்கண்ணும் அதுவதுவாய் நின்று அறிவதாயும் உள்ளது அவ்விரண்டுமல்லாத உயிரே எனவும், அவ்வுயிர் இரண்டனையும் அறியும் என்பதற்கு நூலை அறிதலையும், இரண்டினாலும் அறியும் என்பதற்குக் கருவியினால் விடயத்தை அறிதலையும், இரண்டன் கண்ணும் அதுவாய் நின்றறியுமென்பதற்கு நீரானது அனுதியே உப்பையும் ஆகாயத்தையும் பற்றி நிற்றல் போல் இறைவன் உள்ள அன்றே உயிரும் உள்ளதாய் அவ்வுயிரைப்பற்றி நிற்கும் அஞ்ஞானமும் உண்டு என்பதையும் எடுத்துக்கூறி வலியுறுத்திய வாறும்.

மூன்றும் அதிகாணம் முற்றிற்று.

ஏழாஞ்சூத்திரம் முற்றிற்று.

---

## எட்டாஞ்சூத்திரம்.

ஏழாஞ் சூத்திரத்தால் அதிகாரியினியல்பு கூறி, அவ்வதிகாரி செய்யவேண்டிய சாதனமும், அந்தச்சாதனம் வரும் வழியும், சாதித்ததனாற் பெறப்படும் பயனும் இவையென இவ்வெட்டாஞ் சூத்திரத்தாற் கூறுகின்றார்.

ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே.

கருத்துரை.

எ-து சூ-ம் எ-னின், ஞானத்தினை யுணரு முறைமையினை யுணர்த்துத னுதலிற்று.

சிற்றுரை.

எ—து க—ரை எ—னின், சூத்திரக் கருத்துணர்த்துத னுதலிற்று.

(இ—ள்.) அவ்வான்மாவின் அறிவாவது மேலிருந்திற னென்றதனுள் அசத்தான் விளங்கி அசத்தின் பாலுளதாய் அசத்தினையறிந்து நின்றவாறும் சத்தான் விளங்கிச் சத்தின்பாலுளதாய்ச் சத்

தினையறிந்து நிற்குமாறும் தரிசிக்குமுறைமையினை யுணர்த்துமுகத்தாற் சாதித்தற்குரிய அதிகாரம் தனக்குண்டென மேலைச்சூத்திரத்தானறிந்த ஆன்மாவுக்குச் சாதித்தனாற் பெறப்படும் பயனும் அதற்குச் சிறந்த சாதனமாவதும் அதுவருவாயும் இவை யென்ப துணர்த்துதல் இவ்வெட்டாஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.

இதனானே சூத்திரவியைபும் இனிது விளங்கும்.

## விளக்கம்.

கருத்துரை என்னசொல்லிற்றோ வெனின் சூத்திரக் கருத்து இது வென்று சொல்லிற்று.

(இக்கருத்துரையின் பொருள்.) சத்தொடுகூடிச் சத்தையும் அசத்தொடு கூடி அசத்தையும் அறியும் உரிமையால் சத்தும் அசத்தும் அல்லாமல் சதசத்தாய் விளங்குமென்று மேலைச் சூத்திரத்திற் கூறிய ஆன்மாவின் அறிவாவது, அச்சூத்திரத்தில் இருதிறன் என்று கூறிய சத்து அசத்தென்னும் இரண்டனுள், மூன்றாம் வேற்றுமைப்பொருள் பற்றி அசத்தால் விளங்கி, ஏழாம் வேற்றுமைப்பொருள் பற்றி அசத்தின் பாலுளதாய், இரண்டாம் வேற்றுமைப் பொருள் பற்றி அசத்தினை அறிந்துநின்றவாறும், அவ்வாறே அம்மூன்று வேற்றுமைப் பொருள்பற்றிச் சத்தால் விளங்கிச் சத்தின் பாலுளதாய்ச் சத்தினையறிந்து நிற்குமாறும் தரிசிக்கும் முறைமையினை அறிவித்து, அவ்வாறு அறிவிக்கும் முறையில், ஏழாஞ்சூத்திரத்தால் சாதித்தற் குரிய அதிகாரம் தனக்குண்டென அறிந்த ஆன்மாவிற்குச் சாதித்தனாலுண்டாம் பயனும் அப்பயனுக்குச் சிறந்தசாதனமும் அச்சாதனம் வரும் வழியும் இவையென அறிவித்தல் இவ்வெட்டாஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.

ஏழாஞ் சூத்திரத்தில் சாதித்தற்குரிய அதிகாரம் ஆன்மாவிற்கு உண்டெனக்கூறி இச்சூத்திரத்தில் சாதித்தனாற் பெறப்படும்பயனும் சாதனமும் அச்சாதனம் வரும்வழியுங் கூறுகின்றமையால் சூத்திர இயைபு பெறப்பட்டது.

## சிற்றுரை.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு.

தவத்தினில்—(உயிர்) தான்முன்னே செய்துகொள்ளப்பட்ட புண்ணிய விசேடத்தால்,—தம்முதல்—தனக்கு அந்தரியாமியாய் இதுகாறும் உள்நின்று உணர்த்திவந்த பரம்பொருளே (இப்பொழுது),—குருவுமாய்—குருவடிவமுங் கொண்டெழுந்தருளி வந்து சிவதீக்கை செய்து (மன்னவகுமாரனுகியநீ),—ஐம்புல—ஐம்பொறிகளாகிய,—வேடரின்—வேடருட்பட்டு,—வளர்ந்து—வளர்ந்து,—

அயர்ந்தனையென—நின்பெருந்தகைமையை யறியாது மயங்கி இடர்ப்பட்டாய் நின் பெருந்தகைமையாவது,—உணர்த்த—இவ்வியல்பிற்றென்றறிவுறுப்ப,—விட்டு—அறிந்தமாத்திரையே அவ்வேடரைவிட்டு நீங்கி,—அந்நியமின்மையின்—அன்னியமின்றி அநந்நியமாந் தன்மையின் நிலைபெற்று,—அரன்கழல் செலுமே—அம்முதல்வன் திருவடிகளை யணையும் எ—று.

உயிரென்பது மேலைச்சூத்திரத்தி னின்றும் வருவித்துரைக்கப்பட்டது. தவத்தினிற் குருவுமாய் வளர்ந்தயர்ந்தனை யென உணர்த்தவிட்டுச் செல்லுமென இயையும். புலன் ஆகுபெயர். வளர்ந்தயர்ந்தனை யென்பது "ஈந்து புகழ்பெற்றான்"என்புழிப் போலக் காரண காரியப்பொருட்டாய் நின்றது. தம்முதலென்றது வேறு முடிபாகலிற் பால்வழூவின்மை யுணர்க. குருவுமென்ற உம்மை உயிர்க்குயிராய் உண்ணின் றுணர்த்தியதூஉமன்றியென இறந்தது தழீஇயிற்று; சிறப்புமாம். அந்நியமின்மை அத்துவிதம். அஃதாவது சேறலைப் பயப்பித்ததாய் ஆண்டுளதாகிய வினைபு. அரனென்றது சுட்டுப்பெயர்படநின்றது.

வெண்கொற்றக் குடையும் நவமணிமுடியுஞ் சிங்காதனமும் மன்னவர்க்கே உரிய சிறப்படையாளமாம்; அதுபோலப் பிரபஞ்சமெல்லாவற்றிற்கும் மூலகாரணமா மியல்பாகிய ஒருபெரு வெண்கொற்றக் குடையும், எவற்றையும் ஒருங்கே ஓரியல்பானறியும் பேரறிவாகிய ஒருபெருஞ்சுடர் முடியும், அங்கங்கே உயிர்க்குயிராய் நின்று எவற்றினையுஞ் செலுத்து மியல்பாகிய ஒரு பெருஞ் சிங்காதனமும், பிறரொருவற் கின்றித் தனக்கே உரிமையாகச் சிறந்மைபற்றிப் பசுக்களுக்குப் பாசங்களை யரித்தலான் அரனென்னுந் திருப்பெயருடைய முதல்வனை மன்னவனாகவும், அம்முதல்வனது பேரானந்தப் பெருஞ்செல்வ முழுதுந் தனதேயாகக் கொண்டநுபவிக்குஞ் சுதந்தரமுடைமையுஞ் சித்தெனப்படுஞ் சாதியொருமையும்பற்றி ஆன்மாவை மன்னவகுமாரனாகவும், அவ்வான்மாவை அறிவுப் பெருஞ்செல்வமுழுதையும் ஆறலைத்துக்கொண்டு சிறுமையுறுத்துதலும் விதிவிலக்கை யிழப்பித்து இழிதொழிலி னிற்பித்தலுமாகிய இயல்புபற்றி ஐம்பொறிகளை வேடராகவும் உருவகஞ் செய்தார். இஃதேகதேச உருவகம். ஐம்புல வேடரினயர்ந்தனை வளர்ந்தெனவெனவே ஐம்புல வேடரின் வளர்ந்தயர்தலும் அது வாதமுகத்தாற்பெற்றாம்.

## விளக்கம்.

(இச்சூத்திரத்தின் பொழிப்புரை.) உயிரானது தான் முன் சென்மங்களிற் செய்யப்பட்ட புண்ணிய விசேடத்தின் பலனாக இதுவரையும் தனக்கு அந்தரியாமியாய் உள்நின்று சரியை கிரியா யோக மார்க்கங்களை உணர்த்தி வந்த பரம்பொருளே, இப்பொழுது ஞானமார்க்கத்தை அநுக்கிரகித்தருளும்பொருட்டுக் குருவடிவங் கொண்டெழுந்தருளிவந்து சிவதீக்கைசெய்து, தன்னைப்பார்த்து அரசகுமாரனாகிய நீ ஐம்பொறிகளாகிய வேடருக்குட்பட்டு வளர்ந்து நின்பெருமைகளை அறியாது மயங்கித்துன்பப் பட்டாய்; நின்பெருந் தன்மையாவது இத்தன்மைத்து என்று அறிவிக்கவும், அவ்வுண்மையை அறிந்து அறிந்த அப்பொழுதே அவ்வேடரைவிட்டு நீங்கி முதல்வனாகிய அரசனோடு அந்நியமின்றி அநன்னியமாய்ப் பிரிக்க முடியாத தன்மையில் நிலைபெற்று அம்முதல்வன் றிருவடிகளை யணையும் எ-று.

உயிர் என்னும் எழுவாய் இச்சூத்திரத்திலில்லை; மேலைச் சூத்திரத்தில் நின்றும் வருவித்துரைக்கப்பட்டது.

தவத்தினில் தம்முதல் குருவுமாய் ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்ந்தனையென உணர்த்த விட்டு அரன் கழல்செலுமே எனச் சூத்திரத்தை இயைத்துக் கொள்க.

ஐம்புலமென்றது ஐம்புலனையுமறிகின்ற ஐம்பொறியைக் குறித்து நிற்றலால் ஆகுபெயர்.

ஐம்புலமாவது, சத்தம் பரிசம் ரூபம் இரதம் கந்தமென்னும் ஐந்து விடயங்களுமாம். ஐம்பொறியாவது, காது உடல் கண் வாய் நாசி யென்னும் ஐந்து இந்திரியங்களுமாம்.

ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்ந்தனை யென்பது வளர்ந்தமையால் அயர்ந்தனை யெனப்பட்டு, வளர்தல் காரணமும் அயர்தல் காரியமுமாய் நின்றது. இது "ஈந்துபுகழ் பெற்றான்" என்று கூறுமிடத்து ஈந்தமையால் புகழ்பெற்றான் என்று கொள்ளுமாறு போலாம்.

தம்முதல் என்றவிடத்துத் தம் என்பது பலர்பால். வளர்ந்து அயர்ந்தனை என்றது முன்னிலை ஒருமை. பலர்பாலும் ஒருமைப்பாலுங் கூடி வழுவாகாதோ எனின், ஆகாது. எதனாலெனின், எல்லா உயிர்க்கும் பொதுவாக முதல் என்பது தோன்றத் தம்முதல் என்பது ஒரு முடிபும், வளர்ந்து அயர்ந்தனை என்பது முன்னிலையைக் குறித்த மற்றொரு முடிபும் ஆக வெவ்வேறு முடிபாதலால் என்க.

குருவுமாய் என்றதிலுள்ள உம்மை இதுவரையும் உயிர்க்குயிராய் உள்நின்று உணர்த்தினதைத் தழுவி நிற்றலால் இறந்தது தழுவியது. இன்னும்

அவ்வும்மை முதல்வன் வடிவுகொள்ளுதற்குரிய கருணையின் பெருமையை விளக்கலால் சிறப்புமாம். உள் நின்று உணர்த்தியது என்றதனால் விஞ்ஞானகலருக்கு உணர்த்துவதுபோலன்று; சரியை கிரியா யோகங்களை உணர்த்துங் குருவினால் அறிவிக்கப்படுவதை அறிந்துகொள்ளும்படி உள் நின்றுபகரித்தலே உள் நின்றுணர்த்தியது எனக் கூறப்பட்டது.

அன்னியமின்மை என்பது பிரிக்கமுடியாத அத்துவிதம். அதாவது, ஐம்பொறிகளை விட்ட இடத்து அரன் திருவடிகளை அடைதற்கு ஏதுவாய் நின்ற பிரிக்கமுடியாத சம்பந்த விசேடமாம். திருவடியோடு உயிர் என்றும் பிரிப்பின்றி நிற்றலால் ஐம்பொறிகளை விட்டவிடத்துத் திருவடியையடையும் என்றபடியாம். அடைதலென்றதனால் பிரிந்து நின்று அடைந்ததென்பது பொருளன்று. உயிரானது அரன் திருவடியோடு பிரிப்பின்றி என்றும் நிற்பினும், அவ்வாறு நிற்கின்றேமென்பதை ஐம்பொறியின் கூட்டத்தால் மறக்கும்; பின்னர் ஆசிரியன் உபதேசத்தால் ஐம்பொறியின் கூட்டம் நீங்கினவிடத்துத் திருவடியோடு பிரிப்பின்றி நிற்றலை அறியும்; அவ்வாறு அறிதலே திருவடியை அடைதலென்பதற்குப் பொருளாம். திருவடியென்பது திருவருளாகிய சிற்சத்தியேயாம்.

முதல் குருவாய் வந்து உணர்த்த அரன்கழல்செலும் என்றதனால், முதல் வேறு அரன் வேறு அன்று. அரன் என்பது தம்முதலைக் குறித்த சுட்டுப்பெயராய் நின்றது.

முதல்வனை மன்னவனாகவும் ஆன்மாவை மன்னவ குமாரனாகவும் ஐம்பொறிகளை வேடராகவும் உருவகஞ்செய்த கருத்தென்னையெனின், வெண்கொற்றக் குடையும் நவமணி முடியும் சிங்காதனமும் மன்னவர்க்கே உரிய சிறப்படையாளமாம். சிறப்படையாளமென்றதனால் ஏனையோர்க்கு உரித்தன்று. அவ்வடையாளங்களுள், குடை எவர்க்கும் மேலாய் யாவரையுந் தனக்குள்ளடக்குந் திறத்தையும், மணிமுடி எவற்றையும் அறியுந் திறத்தையும், சிங்காதனம் எவற்றையும் நடத்துந்திறத்தையும் குறிக்கும். அதுபோல, பிரபஞ்சம் எல்லாவற்றிற்கும் மூலகாரணமாம் இயல்பாகிய ஒருபெரு வெண் கொற்றக்குடையும், எவற்றையும் ஒருசேர ஓரியல்பாலறியும் பேரறிவாகிய ஒரு பெருஞ்சுடர்முடியும், உயிராகிய சிங்கத்தை ஆதனமாகக் கொண்டு அங்கங்கே உயிர்க்குயிராய் நின்று எல்லா உயிரையும் நடாத்தும் இயல்பாகிய ஒருபெருஞ் சிங்காதனமும் ஆகிய இம்மூன்றடையாளங்களும் பிறரொருவற்கு மின்றித் தனக்கே உரிமையாகச் சிறந்தமைபற்றிப் பசுக்களுக்குப் பாசங்களை அரித்தலால் அரன் என்னுந்திருப் பெயருடைய முதல்வனை மன்னவனாகவும், மன்னவன் செல்வம் முழுதும்தன்னதாக அநுபவிக்குஞ் சுதந்திரமும் அரசத்தன்மையாகிய சாதியும் மன்னவகுமாரனுக்கு உண்டாமாறுபோல, உயிருக்கு அம்முதல்வனது பேரானந்தப் பெருஞ் செல்வம் முழுதும் தன்னதாகக் கொண்டநுபவிக்கும் சுதந்திரமும் முதல்வன் சித்துத்

தன்மை யுடையனாதல் போல சித்துத்தன்மையாயிருக்குஞ் சாதியொற்றுமையும் இருத்தல்பற்றி உயிரை மன்னவ குமாரனாகவும், இறைவனை அடைதற்கு வழியாகிய தனுகரண புவனபோகங்களில் உயிர் செல்லுங்கால் ஐம்பொறிகளாகிய வேடர் அவ்வுயிர் அடைதற்குரிய அறிவுப்பெருஞ் செல்வ முழுதையும் வழிப்பறி செய்துகொண்டு அவ்வுயிரைச் சிரமப்படுத்துதலும் விதிவிலக்கைக்கடந்து இழிந்த செயல்களில் பிரவேசிக்கும்படி செய்தலும் ஆகிய இயல்புபற்றி அவ்வைம்பொறிகளை வேடராகவும் உருவகஞ்செய்தார். சூத்திரத்தில் ஐம்பொறிகளைமட்டும் வேடராக உருவகஞ்செய்து முதல்வனை மன்னவனாகவும் ஆன்மாவை மன்னவகுமாரனாகவும் உருவகஞ் செய்யாமையால் இவ்வுருவகம் ஏகதேச உருவகம்.

மன்னவகுமாரன் மன்னவனுக்குரிய செல்வங்களை அநுபவிக்குஞ் சுதந்திரமும் மன்னவசாதியும் உடையனாயினும் மன்னவன் ஏவல் வழி நின்றே அநுபவிப்பன். அதுபோல, உயிரும் முதல்வன் அருள்வழி நின்றே சிவானந்தத்தை அநுபவிக்கு மென்றறிக.

ஐம்புலவேடரின் அயர்ந்து வளர்ந்தாலன்றி வளர்ந்தனையெனக் கூற முடியாது. ஆகவே, வளர்ந்தனையென்ற அநுவாதத்தால் ஐம்புலவேடரின் அயர்ந்து வளர்தல் பெறப்பட்டது.

## சிற்றுரை.

இதனுள், தவத்தினிலுணர்த்த வென்றது ஓரதிகாரணம்; தம் முதல் குருவுமாயென்றது ஓரதிகாரணம்; ஐம்புலவேடரினயர்ந்தனை வளர்ந்தெனவென்றது ஓரதிகாரணம்; விட்டன்னிய மின்மையினான்கழல் செலுமே என்றது ஓரதிகாரணம்; ஆக நான்கு அதிகாரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

## விளக்கம்.

வெ - டை.

---

# முதலதிகரணம்.

தவத்தால் ஞானமுண்டாமெனக் கூறும்

மேற்கோள்.

ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய்தவத்தான் ஞானம் நிகழுமென்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், மேற்கூறிப்போந்த சாதகராற் செய்யப்படுஞ் சாதனமும் அதுவருவாயும் வேறுவேறாகக் கூறுஞ் சமயத்தாரை நோக்கிச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ—ள். வெ—டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

(இ—ள்.) ஈண்டு—இந்நான்கதிகரணங்களுள் வைத்து இம்முதலதிகரணத்து,—இவ்வான்மாக்களுக்கு—மேற்கூறிப்போந்த வியல்புடைய ஆன்மாக்களுக்கு,—முற்செய்தவத்தான்—படிமுறையானன்றி இவ்வொருபிறவியிற் செய்ததவத்தான் அமையாது முற்பிறவிகளிலே செய்துவந்த தவமாகிய சரியைகிரியாயோக விசேடத்தால்,—ஞானம்—சூரவணுணர்த்தியவாறு சிவஞானங் கண்ணுகக் கொண்டறிவதாகிய சாதன அறிவானது,—நிகழுமென்றது—ஐயந்திரிபின்றி விளங்கும் எ-று.

## சிற்றுரை.

மேற்கூறிப்போந்த இயல்புடைய ஆன்மாக்களுக்கென்பார் இவ்வான்மாக்களுக்கென்றார். படிமுறையானன்றி இவ்வொரு பிறவியிற் செய்த தவந்தானே அமையா தென்பதுணர்த்துதற்கு முற்செய்தவமென விசேடித்தார். ஈண்டு ஞானமென்றது சூரவணுணர்த்தியவாறு சிவஞானங் கண்ணுகக்கொண்டு அறிவதாகிய சாதனவறிவின்மேற்று. நிகழ்தல் ஐயந்திரிபின்றி விளங்குதல்.

## விளக்கம்.

இம்மேற்கோள் சூத்திரத்திலுள்ள தவத்தினில் உணர்த்த என்னும் முதற்கூற்றைப் பதச்சேதஞ்செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோவெனின், எழாஞ் சூத்திரத்தாற் கூறிமுடித்த அதிகாரியினாற் செய்யப்படுஞ் சாதனமும், அச்சாதனம் வரும் வழியும், ஒவ்வொரு சமயத்தாரும் வேறு வேறாகக் கூறுவாராதலால், அவ்வாறு கூறுவாரை நோக்கிச் சூத்திரத்தின் முதற்கூற்றைப் பதச்சேதஞ் செய்து ஞானமேசிறந்த சாதனமென்றும் அது முற்செய் தவத்தால் வருமென்றுங் கூறியவாறாம்.

இவ்வதிகரணத்தில் முத்திக்குச்சாதனம் சரியையாதிகளோ ஞானமோ என்பது ஐயப்பாடு. சரியையாதிகள் என்பது பிறர்பக்கம்.

(இம்மேற்கோளின் பொருள்.) இச்சூத்திரத்திற் கூறப்படும் நான்கதிகரணங்களுள் இம்முதலதிகரணத்தில், எழாஞ் சூத்திரத்திற் கூறிமுடித்தபடி சத்து அசத்து இரண்டினையும் அறியும் இயல்புடைய ஆன்மாக்களுக்கு, இவ்வொரு பிறவியிற்செய்த தவத்தாலாகாது முற்பிறவிகளிலே ஒன்றன்பின் ஒன்றாகிய படிமுறையாற் செய்துவந்த தவமாகிய சரியைகிரியா யோக விசேடத்தால், குரவன் உணர்த்தியவண்ணம் சிவஞானங் கண்ணாகக் கொண்டு அறிவதாகிய சாதன அறிவானது ஐயந்திரிபின்றி விளங்கும் எ-று.

எழாஞ் சூத்திரத்திற் கூறிமுடித்த இயல்புடைய ஆன்மாக்களென்று கூறவேண்டி இவ்வான்மாக்களுக்கு என்றார். மேலைச்சூத்திரத்திலுள்ளதை அகரச்சுட்டாலன்றி இகரச்சுட்டால் சுட்டலாமோவெனில்; இரு சூத்திரமும் சாதனவியலானதால் சுட்டலாமென்க.

சரியை முற்றியபின் கிரியையும், கிரியை முற்றியபின் யோகமும், இவ்வாறு ஒன்றன்பின் ஒன்றாய் முற்பிறவிகளிற் செய்துவந்த தவத்தால் ஞானம் நிகழுமன்றி, இவ்வொரு பிறவியிற் செய்ததவத்தால் ஞானம் நிகழாதென்பதை அறிவிக்கவேண்டித் தவத்தால் என்றுகூறாமல் முற்செய் என்னும் விசேடணத்தைத் தவத்தோடு கூட்டி முற்செய் தவத்தாலெனத் தவத்தை விசேடித்தார்.

இம்மேற்கோளில் ஞானமென்றது அநுபவஞானத்தையன்று; ஆசிரியன் அறிவித்தவண்ணம் சிவஞானங் கண்ணாகக்கொண்டு அறிவதாகிய சாதன அறிவையேயாம். சரியை கிரியை யோகம் ஞானம் என்ற சாதனம் நான்கனுள் ஒன்றாகிய ஞானம் சாதனஞானம். அந்த ஞானத்தாலுண்டாவது அநுபவஞானம். ஞானம் நிகழுமென்றதில் நிகழ்தலாவது அந்தச் சாதன அறிவு ஆசிரியன் அறிவித்தவாறே சந்தேகமின்றியும் மாறுபாடின்றியும் விளங்குதல்.

தவத்தால் ஞானம் நிகழுமென்பதற்குக் காட்டும்

ஏது.

மேற் சரியை கிரியாயோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கோடாவாகலான்.

## சிற்றுரை.

எ—து ஏ—து எ—னின், தவங்களை சாதனமாதலமையும் ஞானமெற்றுக்கென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ—ள் வெ—டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

(இ-ள்.) மேல்—முற்பிறவிகளில்,—சரியை கிரியா யோகங்களைச் செய்துழி—சரியை கிரியா யோகங்களாகிய தவங்களைச் செய்து

முற்றுப்பெற்றவிடத்து அத்தவங்கடாம்,—நன்னெறியாகிய—வீடு பேறெய்தற்குச் சன்மார்க்கமாகிய,—ஞானத்தை—மேற்கூறிய ஞானத்தை,—காட்டியல்லது— பயப்பித்தன்றி,—மோக்ஷத்தை—முத்தியை,—கொடாவாகலான்—கொடுப்பனவல்லவாகலான்,'ஈண்டிவ்வான்மாக்களுக்கு முற்செய்தவத்தான் ஞானம் நிகழு'மென மேற்கொண்டது எ-று.

## சிற்றுரை.

ஈண்டுத்தவமெனப்பட்டன பிறவல்லவென்பார் சரியை கிரியா யோகங்களையெனக் கிளந்துரைத்தார். கிரியாயோகங்களென்னும் உம்மைத்தொகை வடநூன்முடிபு. கிரியா யோகமிரண்டற்கும் தீக்கை ஒன்றென்பது தோன்ற அவ்விரண்டனையுந் தொகுத்தோதிச் சரியையைத்தமிழுக்குரிய வீற்றுன் வேறு வைத்தார். ஆளுடையபிள்ளையார் முதலாயினார்க்குத் தவமின்றியும் ஞானம் நிகழ்ந்தவாறென்னை யென்னுங் கடாவை விடுத்தற்கு மேற்செய்துழியென ஈண்டும் வலியுறுத்தார். மேலாகிய உண்மைச்சரியை கிரியா யோகங்களை எனினும் அமையும். காட்டிக்கொடுக்குமெனற்பாலதனை எதிர்மறைமுகத்தாற் கூறினார், ஞானத்தை இன்றியமையாமை யுணர்த்துதற்கு. சரியை கிரியாயோகங்களைச் செய்துழி என்றது உபலக்கணமாகலின் தீக்கை பெற்றுழி அதுவும் ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடாதெனக் கொள்க. அவையெல்லாம் ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடாமையை வலியுறுத்துவார் நன்னெறியாகியவென ஞானத்தை விசேடித்தார். நன்மையெனப்படுவன வெல்லாவற்றினுஞ் சிறந்த நன்மையாவது வீடுபேறென்பது. அதனைத் தலைப்படுதற்கேதுவாய்ச் சிறந்த நெறியாகலின் ஞானம் நன்னெறியெனப்பட்டது. வீட்டிற்கு நெறியென அவ்வச்சமயத்தாராற் கூறப்படுவன வனைத்துந் தன்கண்ணே வந்து கூட நின்ற பெருநெறியாகலானும் அது நன்னெறி யெனப்பட்டது. நன்னெறி சன்மார்க்கமென்பன ஒரு பொருட்கிளவி.

## விளக்கம்.

இந்த ஏது என்ன சொல்லிற்றேவெனின், சரியை கிரியை யோகங்களாகிய தவங்களே முத்திக்குச் சாதனமென்றல் பொருந்தும்; அவ்வாறாகவும் மேற்கோளில் முத்திக்குச் சாதனமாக ஞானம் நிகழுமென்று கூறியது

எதற்கு என்பாரை நோக்கி ஞானத்தையின்றி முத்தி சித்தியாதெனக் கூறி முற்செய் தவத்தால் ஞானம் நிகழுமென்னும் மேற்கோளை வலியுறுத்திய வாறும்.

(இந்த ஏதுவின் பொருள்.) முற்பிறவிகளில் சரியை கிரியாயோகங்களாகிய தவங்களைச்செய்து முற்றுப்பெற்றவிடத்து, அத்தவங்கள் தாம் முத்திக்கு நேர்நெறியாகிய சன்மார்க்கமென்னும் ஞானத்தை யுண்டுபண்ணி அந்த ஞானங் காரணமாக முத்தியைத் தருமேயன்றி, அத்தவங்களே நேராக முத்தியைத் தாராவாம். ஆதலால் ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தால் ஞானம் நிகழுமென மேற்கோள் கூறியது எ-று.

சூத்திரத்தினும் மேற்கோளினும் தவம் என்பது, உண்டி சுருங்குதல் முதலியவற்றால் சரீரத்தை வாட்டுதல் துன்பத்தைச் சகித்தல் முதலிய பிறதவங்களல்லவென அறிவிக்கவேண்டி ஏதுவில் சரியை கிரியா யோகங்களை என்று பெயர் சொல்லிச் சிறப்பித்துக் கூறினார்.

கிரியாயோகம் என்பது ஞானயோகங் கிரியா யோகமென்ற இருவகையுள் ஒன்றன்று. கிரியையும் யோகமுமென்னும் பொருளில் வடமொழிப்படி கிரியாயோகம் என நின்றது. அப்பொருளைத் தரும் உம்மை வடநூல் முடிபுப்படி தொக்கு நின்றது. சரியைக்குச் சமயதீக்கையும் கிரியையோகம் இரண்டற்கும் விசேடதீக்கையும் உரித்தாதலின், அவ்வுரிமைப்படி கிரியை யோகம் இரண்டனையும் வடமொழிப்படி கிரியாயோகமென ஒரு தொடராகக்கூறி, சரியாவென்னும் வடமொழியைத் தமிழுக்குரிய ஐகாரத்தை இறுதியில்வைத்துச் சரியையென வேறு வைத்தார்.

தவத்தால் ஞானம் நிகழுமாயின் திருஞானசம்பந்த சுவாமிகள் முதலியோருக்குத் தவமின்றியும் ஞானம் நிகழ்ந்தவாறு என்னை யென்னும் ஆசங்கை நிகழுமன்றே? அதற்கு உத்தரமாக முற்பிறவியில் தவஞ்செய்துள்ளார் என்பது தோன்ற முற்செய் தவத்தால் என்று மேற்கோளினும், மேல்சரியை கிரியா யோகங்களைச் செய்துழி என ஏதுவிலுங்கூறித் தவத்தினாலேயே ஞானம் நிகழுமென்பதை வலியுறுத்தினார்.

சரியை கிரியாயோகம் என்பன, உபாயச்சரியை கிரியாயோகம் உண்மைச் சரியை கிரியாயோக மென இருதிறப்படுமாதலின் ஏதுவில் மேல் என்பதற்கு மேலாகிய உண்மைச்சரியை கிரியாயோகம் என்று கூறினும் பொருந்தும். அவ்வாறாயினும் மேற்கோளில் முற்செய் தவமென்றிருத்தலால் முற்பிறவியிற் செய்துள்ளாரென்று கூறியதற்கு இழுக்கில்லை.

உபாயமாவது உலகப்பொருளை நோக்கிச் செய்வது.

உண்மையாவது முத்திகாரணமாகச் செய்வது

ஞானத்தையின்றி மோக்ஷம் சித்தியாது என வலியுறுத்தவேண்டி ஞானத்தைக் காட்டி மோக்ஷத்தைக் கொடுக்கும் என்று உடன்பாட்டு முகத் தாற் கூருது ஞானத்தைக் காட்டி அல்லது மோக்ஷத்தைக் கொடா என எதிர்மறை முகத்தாற் கூறினர். சரியை கிரியாயோகங்களைச் செய்துழி என்று ஏதுவிற் கூறியது உபலக்கண மாதலால் சரியை கிரியாயோகங்கள் மட்டுமன்று தீக்ஷைபெற்றுழியும் அதுவும் ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடாதெனக் கொள்க. சரியை முதலிய அவையெல்லாம் ஞானத்தைக் காட்ட அந்தஞானம் மோக்ஷத்தைக் கொடுக்குமன்றிச் சரியை முதலியவையே நேரேமோக்ஷத்தைக் கொடாவென்பதை வலியுறுத்தவேண் டிச் சரியை கிரியாயோகங்களை விசேடணமின்றிக் கூறி ஞானத்தை நன் னெறியாகிய என்னும் விசேடணத்துடன் கூறினர். நன்னெறி யென்பது நன்மைக்கு ஏதுவாகிய நெறியென விரியும். நன்மைபலவேறு வகைப்படும். அவற்றுளெல்லாம் மேலான நன்மையாவது முத்தியேயாம். அந்தமுத்தியைச் சேருதற்கு ஞானமே ஏதுவாயும் மேலான நெறியாயும் கருதப்படும். ஆத லால் ஞானம் நன்னெறி யெனப்பட்டது. முத்திக்கு நெறியாக ஒவ்வொரு சமயத்தாராலும் கூறப்படுவன அனைத்தும் ஞானத்தின்கண்ணே வந்து கூடும். சரியை கிரியாயோகங்களில் ஏனைய சமயிகள் மாறுபடுவர். ஞானத் தை எல்லாச் சமயிகளும் ஒப்புக்கொள்ளுவர். ஆகவே எல்லாச் சமயத்தாரும் கூறும் வீட்டு நெறியும் ஞானமாகிய தன்கண்ணே வந்து கூட நின்றபெரு நெறி ஆதலானும் அந்தஞானம் நன்னெறி யெனப்பட்டது. நன்னெறி யென்பதும் சன்மார்க்கமென்பதும் ஒரு பொருட்சொற்கள். சன்மார்க்க மென்பது சத்தியமார்க்கமாம். சத்தியமார்க்க மென்பது ஞானத்திற்கு மேற் பட்ட மார்க்கம் இல்லாமையைக் குறித்து நின்றது; நிற்கவே, நன்னெறியா கிய ஞானம் என்றதனல் மேலான நெறியாகிய ஞானம் என்ருகிச் சரியை கிரியாயோகங்கள் கீழான நெறியென்பதும் அந்நெறிகள் மேலானநெறி யைக் காட்டாமல் முத்தியையடையச்செய்யா என்பதும் தானே விளங்கும். உதாரணமாக, இரதவீதிகள்போல ஞானம்; புறவீதிகள்போலச் சரியையாதி. கள்; முத்திபோல ஆலயம். ஆலயத்திற்குச் செல்லும் ஒருவன் புறவீதிக ளில் எந்தவீதி வழியாகச் செல்லினும் இரத வீதிக்குட்சென்று ஆலயத்துட் செல்லக் கூடுமேயன்றி இரதவீதிக்குட்செல்லாது ஆலயத்துட் செல்லமுடி யாது; அதுபோலச் சரியை கிரியாயோகங்களைச் செய்து ஞானத்திற் சென்று அதன்வழியாய் முத்தியை யடையவேண்டுமென அறிக.

ஞானமும் உபாயம் உண்மை என்று இருவகைப்படும். ஆகவே, சரியை கிரியையோகம் ஞானம் என்னும் நான்கும் முத்திகாரணமாகச் செய்யும்உண் மைச் சிவ புண்ணிய மெனவும், உலகப்பொருள் காரணமாகச் செய்யும் உபாயச் சிவபுண்ணிய மெனவும் இருதிறப்பட்டு அவ்விருதிறத்தாலும் ஒவ் வொன்றும் நான்கு நான்காகச் சிவ புண்ணியம் எட்டுவகைப்படு மென்ற

வாறுயிற்று. அந்த எட்டும் சரியையிற் சரியை கிரியையோகம் ஞானம், கிரியையிற் சரியை கிரியை யோகம் ஞானம், யோகத்திற் சரியை கிரியை யோகம் ஞானம், ஞானத்திற் சரியை கிரியை யோகம் ஞானமென ஒவ்வொன்றும் நான்கு நான்காக முப்பத்திரண்டாய் விரியும், அவற்றுள்,

சரியையிற் சரியையாவது:—திருக்கோவில் அலகிடல் மெழுகல் முதலியன. அலகிடலாவது குப்பையை அப்புறப்படுத்தல்.

சரியையிற் கிரியையாவது:—பரிவார மூர்த்திகளில் ஒரு மூர்த்தியை வழிபடுதல்.

சரியையில் யோகமாவது:—நெஞ்சின்கண் சிவபெருமான் உருவத் திருமேனியைத் தியானஞ் செய்தல்.

சரியையில் ஞானமாவது:—அத்தியான பாவனையின் உறைப்பினுல் ஓர் அநுபவ உணர்வு நிகழ்தல்.

கிரியையிற் சரியையாவது:—சிவபூசைக்கு வேண்டப்படுவன வெல்லாஞ் சேகரித்தல்.

கிரியையிற் கிரியையாவது:—பூதசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தியாகிய ஐவகைச் சுத்தியுஞ் செய்து சிவலிங்கவடிவிற் செய்யும் பூசனை: பூதசுத்தி என்பது பூசிப்பவனுகிய தன்னைச் சுத்தி செய்தல் பூதம்—ஆன்மா; அதனை "பூதம்யாவையினுள்ளலர் போதென" என்பதனுனுமுணர்க. (பெரியபுராணம் திருமலைச் சருக்கம் செ ௩௩.)

கிரியையில் யோகமாவது:—அகத்தே பூசை, ஓமம், தியானம் என்ற மூன்றற்கும் முறையே இருதயம், நாபி, புருவநடு என்னும் மூவிடங்களை வகுத்துக் கொண்டு செய்யும் அந்தரியாக பூசை.

கிரியையில் ஞானமாவது:—அவ்வந்தரியாக பூசையின் உறைப்பால் ஓர் அநுபவ உணர்வு நிகழ்தல்.

யோகத்திற் சரியையாவது:—இயம், நியமம், ஆதனம், பிராணுயாமம் என்னும் நான்கினையும் பழகுதல்.

யோகத்திற் கிரியையாவது:—பிரத்தியாகாரம் தாரணை என்னும் இரண்டனையும் பழகுதல்.

யோகத்தில் யோகமாவது:—தியானஞ் செய்தல்.

யோகத்தில் ஞானமாவது:—சமாதி கூடுதல்.

இந்த அட்டாங்க யோகங்களின் இலக்கணங்களைச் சிவஞான சித்தியார் அ-ம் சூ-ம் உக-வது செய்யுள் உரையிற் கூறியிருக்கின்றமையால் அவ்விடத்துக் காண்க.

இந்தயோகமும் சாலம்பம், நிராலம்பம், எனஇருவகைப்படும். அவற்றுள்,—சாலம்பயோகமாவது—சிவலிங்காதி வடிவத்தைப் பற்றிச் செய்வது. நிராலம்ப யோகமாவது—அகண்டாகார சோதியைப் பற்றிச்செய்வது. சாலம்பமென்பது ஆலம்பத்தோடு கூடியது. ஆலம்பமாவது ஆதாரம்; ஆகவே, சாலம்பம் ஆதாரத்தோடு கூடிய தெனவும், நிராலம்பம் ஆதாரமில்லாத தெனவும் அறிக.

ஞானத்திற் சரியையாவது:—ஞானசாத்திரப் பொருளைக் குருவினிடத்துக் கேட்டல்.

ஞானத்திற் கிரியையாவது:—அப்பொருளை எது திருட்டாந்தங்களுடன் சிந்தித்தல்.

ஞானத்தில் யோகமாவது:—அப்பொருளை ஐயவிபரீதமின்றித் தெளிதல்.

ஞானத்தில் ஞானமாவது:—சிவபெருமானோடு அபேதமாய்க் கலந்து நிட்டை கூடுதல்.

இவற்றுள் ஞானத்தில் ஞானம் நீங்கிய உண்மைச் சிவபுண்ணியத்துக்குப் பயன் சாலோக சாமீப சாரூபமென்னும் பதமுத்தியும், ஞானத்தில் ஞானத்துக்குப் பயன் சாயுச்சியமாகிய பரமுத்தியுமாம். உபாயச்சிவபுண்ணியத்திற்குப் பயன் இப்புவனமுதல் சுத்தமாயாபுவனம் வரையுள்ள புவனங்களில் போகங்கள் அநுபவித்தல்.

சாலோகமாவது:—புவனபதிகளின் உலகங்களை யடைந்து ஒருவர் மனையில் பணிசெய்யும் அகத்தொண்டர்க்கு உள்ள உரிமைபோல அவ்வுலகத்துள் எவ்விடத்துந் தடையின்றிச் சஞ்சரித்து அங்குள்ள போகங்களை அநுபவித்து வாழ்தல்.

சாமீபமாவது:—புத்திரர்க் குளதாகிய உரிமைபோல அப்புவன பதிகளுக்கு நெருங்கினவரா யிருந்து அவர்போகங்களை யநுபவித்து வாழ்தல்.

சாரூபமாவது:—தோழற்குரிய உரிமைபோல அப்புவன பதிகளோடொத்த வடிவமும் ஒத்த ஆபரணமும் ஒத்த போகஅநுபவமும் பெற்று வாழ்தல்.

சாயுச்சியமாவது:—சரியையில் ஞானமுதல் யோகத்தில் ஞானம் ஈறாகிய ஞானங்கட்குப் பயனாகிய சாயுச்சியமும், ஞானத்தில் ஞானத்திற்குப் பயனாகிய சாயுச்சியமு மென இருதிறப்படும். அவற்றுள், சரியைமுதல் யோகம் ஈறாகிய மூன்றிலு முள்ள ஞானத்திற்குப் பயனாகிய சாயுச்சியமாவது புவனபதிகளால் அதிட்டிக்கப்பட்டு அப்புவனபதிகள் செய்யும் அதிகாரங்களை அவர்போலவே செய்துகொண்டு வாழ்தல். முடிபாகிய ஞானத

திற்குப்பயனெனப்படும் சாயுச்சியமாவது சிவபெருமான் திருவடியில் இரண்டறக் கலந்து சிவானந்தத்தை அநுபவித்தல்.

இந்த ஏது பரமுத்திக்குச் சாதனம் சரியையாதிகள் என்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

சரியையாதிகளால் ஞானம் நிகழுமென்பதற்குக் காட்டும்
உதாரணம்.

தவஞ்செய்தா ரென்றுந் தவலோகஞ் சார்ந்து
பவஞ்செய்து பற்றறுப்பா ராகத்—தவஞ்செய்த
நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றூர்சூழ் சொல்லுமாங் கண்டு.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், மேற்சரியைகிரியா யோகங்களைச் செய்தார் அவற்றான் ஞானத்தைக்காணும் முறைமை எவ்வாறென்பாரை நோக்கி அஃதாமாறுணர்த்தி ஏதுவைவலியுறுத்துதனுதலிற்று.

(இ—ள்.) தவஞ்செய்தார்—சரியை முதலியவற்றைச் செய்தோர்கள்,—தவலோகம் என்றும் சார்ந்து—(அவ்வத் தவப்பயன்களைப் பயப்பிக்குஞ்) சாலோகாதிபதங்களை ஒரு தலையாகநண்ணி (ஆண்டுளவாகிய இன்பங்களை அநுபவித்து),—பற்றுப் பவஞ்செய்து அறுப்பார் ஆக—(முன்னுடம் பிறக்கு நாள் அடுத்தவினை காட்டுங் கதி நிமித்தம்பற்றி எழுந்த அவாவினை (மீள நிலத்தின் கட்) பிறந்தநுபவித்து நீக்கிக் கோடற் பொருட்டு,—தவஞ்செய்த நற் சார்பில் வந்து உதித்து ஞானத்தை நண்ணுதலை—(மீளத்) தவஞ் செய்தற்குரிய உயர்ந்த குலத்தின்கண்வந்து தோன்றித் (தவக்குறையான் அவ்விடயப் பற்று முறுகாவண்ணம் அறுத்துத்) தத்துவ ஞானத்தைத் தலைப்படுவாராதலை,—கற்றூர் சூழ் கண்டு சொல்லும்—வீட்டு நூல்களைக் கற்றூரது சூழ்ச்சி அந்நூற்கருத்துணர்ந்து சொல்லும் எ-று.

தவந்தாஞகப் பிறிதொன்று தாஞக இவ்வுலகத்து உடம்பொடு நின்றீட்டிய வினையெல்லாம் அவ்வுலகத்திற் செலுத்தித் தத்தம் போகங்களைப் பயந்தே விடுமாகலான் அவற்றை ஒரு ஞான்றும் பிறழமாட்டாரென்பார் என்றுந் தவலோகஞ் சார்ந்தென்றூர். ஆகவென்னும் செயவெனெச்சம் “ உண்ணவந்தான் ”

என்புழிப் போலத் தற்பொருட்டாய் நின்றது. பற்றறுதற் பொருட்டு வந்துதித்தெனவே ஆண்டுப்பற்றுச் செல்லாதவழி அவ்வுலகத்து நின்றாங்கே ஞானத்தை நண்ணுவரென்பதூஉம் பெறுதும். கற்றாரது சொல்லுதற் றொழில் சூழ்ச்சிமேலேற்றப் பட்டது. ஆம் அசை. நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலென்ற அருத்தாபத்தியான் இழிகுலத்தோர் தத்துவஞானத்திற் குரியரல்லரென்பது பெறப்பட்டது.

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோ வெனின், ஏதுவிற் கூறியபடி முற்பிறவிகளில் சரியை கிரியா யோகங்களைச் செய்தவர் அவற்றால் ஞானத்தை அடையும் முறைமை எவ்வாறு என்பாரை நோக்கி அவற்றால் ஞானத்தை அடையும் முறைமையினை யுணர்த்தி ஏதுவை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) சரியை கிரியா யோகமாகிய தவங்களைச் செய்தவர் சரியையின் பலனை அநுபவிப்பதற்குச் சாலோகபதத்தையும், கிரியையின் பலனை அநுபவிப்பதற்குச் சாமீபபதத்தையும், யோகத்தின் பலனை அநுபவிப்பதற்குச் சாரூபபதத்தையும் உறுதியாய்ப் பொருந்தி, அப்பதங்களில் உளவாகிய இன்பங்களை அநுபவித்து, அநுபவிக்கவேண்டிய காலம் கழிந்தபின் அப்பதங்களைவிட்டுப் பிரிந்து, முன் மண்ணுலகத்தைவிட்டு உடம்பு இறக்கும் சமயம் சுவர்க்க நரக அநுபவத்திற்குப் பின் இம் மண்ணுலகத்தைப் பொருந்துதற் குரியதாய்த் தான்செய்த வினையினால் தன்மனத்தின்கண் பற்றி எழுந்த அவாவினை, மீண்டும் இம்மண்ணுலகத்தின்கண் பிறந்து அநுபவித்து நீக்கிக்கொள்ளுதற்பொருட்டு, இவ்வுலகத்தில் தவஞ்செய்தற்குரிய உயர்ந்தகுலத்தில் வந்துபிறந்து தவக்குறையை நிறைவேற்றுவதால் முன்வினையாலுண்டாகிய விடயப்பற்று வளராவண்ணம் அறுத்துத் தத்துவஞானத்தை அடைவர். இவ்வாறு தத்துவஞானத்தை அடைவர் என்று வீட்டுநூல்களைக் கற்றவருடைய நுண்ணறிவு அந்நூற்கருத்துணர்ந்து சொல்லும்எ-று.

(க-ரை.) சரியை முதலியவற்றைச் செய்தவர்கள் இறக்குங்கால் மனைவிமுதலியோரிடத்துப் பற்றுவைப்பின் சரியையாதியின் பயனாகச் சாலோகாதி பதங்களை அடைந்து அவ்விடத்துள வாகிய இன்பங்களை அநுபவித்துப் பின்னர் முன் பற்றுவைத்த வினைப்பயன்களை அநுபவித்தற் பொருட்டுப் பூமியில் உயர்ந்த குலத்திற் பிறந்து வினைப்பயனை அநுபவிக்கும்பொழுதே முன்செய்த சரியை யாதியைச் செய்து அவற்றால் ஆசையை அறுத்து உண்மை ஞானத்தைப் பொருந்துவர். முன்னிறக்கும் பொழுது இவ்வுலகப் பற்று இல்லாதிருப்பின் சாலோகாதி பதங்களிலிருந்தவாறே ஞானத்தைப் பொருந்துவர் என்பதாம்.

சாலோகாதி பதங்களை அடைவதற்குமுன் செய்யுஞ் சாரியையாதிகள் கடவுட் பற்றுக் கேதுவாய் நிற்கும்; நிற்பினும் கடவுள் உண்மையை அறியாமையினால் சாலோகாதி பதங்களைப் பொருந்தும்படி செய்யும்; அப்பதங்களை அடைந்தபின்னர்த் திரும்பப்பூமியிற் பிறந்து செய்யுஞ் சரியையாதிகள் விடயப்பற்று அறுதற் கேதுவாய் நிற்கும். அதனால் விடயப்பற்று நீங்கி உண்மை ஞானம் உண்டாகும். முன்னர்ச் செய்யுங்கால் ஒவ்வொன்றையும் காலநீட்டிப்புடன் அரிதிற்செய்வன், பின்னர்ச் செய்யுங்கால் ஞானநாட்டத்தால் காலநீட்டிப்பும் அருமையுமின்றிச் செய்வன். இது எதுபோலவெனின், ஒருமாணுக்கன் ஒருபாடத்தைத் தொடங்கும் பொழுது அப்பாடத்தை நீண்டநாள் அரிதிற் படித்து வ ா ப் ப ண் ணி ச் சில நாட்கழிந்து பின்னர் அப்பாடத்தைத் தொடங்கும்பொழுது எளிதில் விரைந்து படிப்பதுபோல என அறிக.

தவவினையாயினும் தவமல்லாத பிறவினையாயினும் இவ்வுலகத்தில் உடம்பொடு கூடி நின்று செய்தவினைகளெல்லாம் அவ்வினைப்பயனை அநுபவிப்பதற்குரிய அந்த உலகத்திற் செலுத்தி அந்தவினைக்கு உரிய போகங்களை அநுபவிக்கும்படி செய்தேவிடுமாதலால் அவ்வாறு அநுபவிப்பனவற்றை வினை செய்தவர் எக்காலத்தும் அநுபவிக்காமல் தப்பித்துக் கொள்ள மாட்டாரென்று கூறவேண்டிச் செய்யுளில் என்றுந் தவலோகஞ் சார்ந்து என்றார்.

பற்றறுப்பாராக என்பதில் ஆக என்பது செய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். அந்த எச்சம் உண்ணவந்தான் என்ற விடத்து உண்ணுதற்பொருட்டு வந்தான் என்று கொள்வதுபோலப் பற்றறுத்தற்பொருட்டு என்னும் பொருளில் நின்று நற் சார்பில் வந்துதித்து என்னும் வினைகொண்டு முடிந்தது.

பற்றறுத்தற் பொருட்டு வந்துதித்து என்றதனால் முன் உடம்பு இறக்குங்கால் மண்ணுலகத்து விடயங்களிற் பற்றுச்செல்ல வில்லையாயின் அவ்வுலகத்தில்நின்றவாறே இவ்வுலகத்துக்கு வாராமல் ஞானத்தை அடைவரென்பதும் அறிக.

கற்றவருடைய சொல்லுதற் றொழிலைக்கற்றவர் அறிவின்மேலேற்றிச் சூழ்சொல்லுமெனக் கூறப்பட்டது.

சொல்லுமாம் என்றதிலுள்ள ஆம் என்பது அசை.

இழிகுலத்தோர் தத்துவஞானத்திற்கு உரியரல்லரென்று பெறப்பட்டாலன்றி நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதல் என்பது சம்பவியாது ஆதலால் இழிகுலத்தோர் தத்துவ ஞானத்திற்கு உரியரல்லரென்பது பெறப்பட்டது. இவ்வாறு அறிவது அருத்தாபத்திப் பிரமாணம்.

இழிகுலத்தோர் ஞானத்திற்கு உரியரல்லராயின், திருநாளைப்போவார் நாயனார் முதலியோருக்கு ஞானம் உதித்தவாறு என்னையெனின், கூறு

தும், ஞானத்திற்கு முதற்காரணம் சரியை கிரியை யோகங்களின் முற்றுத லும், துணைக்காரணம் நற்குலமுமாம். நற்குலத்து உதித்தும் சரியையா திகளை அநுட்டிக்கவில்லை யாயின் ஞானத்திற்கு உரியராகார். தாழ்ந்தகுல த்தினராயினும் சரியையாதிகளை அநுட்டிப்பரேல் ஞானத்திற்கு உரியரா வர். நற்குலத்தோருள் முற்சென்மத் தொடர்புடையார் மட்டுமன்று தொடர் பில்லாரும் ஆரம்பமாகச் சரியையாதிகளை அநுட்டிப்பர். தாழ்ந்த குலத்தின ருள் முற்சென்மத்தொடர்புடையார் மட்டும் அநுட்டிப்பரேயன்றித் தொட ர்பிலார் ஆரம்பமாக அநுட்டியார். இவ்வுண்மையினைத் தீக்கை முதலியன உயர்ந்த குலத்தினருக்கே விதித்திருக்கின்றமைபற்றியும் அறிக. அம்முறை பற்றித் தாழ்ந்தகுலத்தோர் தத்துவ ஞானத்திற்கு உரியரல்லரென்று கூறிய வாறும்.

சரியை முதலியதவத்தாலன்றி வேள்விமுதலிய தவத்தால் ஞானம்
உண்டாகா தென்பதற்குக் காட்டும்
உதாரணம்.

பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கு
மிசைத்து வருவினையி லின்ப—மிசைத்த
விருவினை யொப்பி லிறப்பி றவத்தான்
மருவுவனு ஞானத்தை வந்து.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், சரியை முதலியதவங்களே தத்துவ ஞானத்தைக் காட்டுமெனை யாப்புறத் தோதிய தென்னை வேதத் துட் கூறிய வேள்விமுதலாயினவும் தத்துவஞானத்தைக் காட்டு மென்றல் அமையுமெனப் பாட்டாசாரியன் மதம்பற்றிக் கூறுவாரை நோக்கி ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ—ள்.) இசைத்து வருவினையில் இன்பம்—(ஒருநல்வினை செய்வான் றொடங்கி அறநூலை யாய்வாரது உணர்வின்கண் விட யமாய் வரும் பொழுதே தம்மாற் பெறப்படுங் காமியப்பயன்களை உடன்) கூறிக்கொண்டே வருகின்றன வாயவேள்வி முதலியஅறங் களின் பயனாகிய இன்பம்,—பசித்து உண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்—முன்னர்ப் பசித்துண்டு பின்னும் பசிப்பானுக்கு அவ்வு ண்டியான் வருமின்பத்தை யொக்கும் ஆகலான்,—இசைத்த இரு வினை இறப்பு இல் தவத்தான் ஒப்பில்—(ஒருவனுக்கு ஞானத்தைத் தடுத்துப் பந்தமுறுத்துதற்கட் பொன்விலங்கும் இருப்பு விலங் கும்போலத் தம்முட்) சமப்படுத்துணரப் படுவனவாகிய அறம்பாவ

மீண்டும் (தம்மைப்போல் அநுபவமாத்திரையாற் கெடுதலின்றி) மேன் மேன் முறுகிவளர்வனவாய சரியைமுதலிய தவங்களானே நேராக ஒத்தால்,—வந்து ஞானத்தை மருவுவன்—அத்தவ முதிர்ச்சியுடைமையான் முன்னர்க்கூறப்படு ஞானகுருவைத் தேடிவந்து ஞானத்தைத் தலைப்படுவன் எ-று.

வேள்வி முதலாயின வெல்லாம் அழிதன்மாலையவாய காமியங்களைப் பயப்பனவன்றித் தத்துவஞானத்தைப் பயவா வென்றற்கு அவற்றை விதித்த நூல்களே சான் றென்பார் இசைத்து வருவினை யென்றும், அவை ஞானத்தைப் பயவாமை மாத்திரையேயன்றித் தீவினைபோல அது நிகழவொட்டாது தடைசெய்து நிற்றலுமுடைமையின் அவற்றது கழிவே ஈண்டைக்குக் காரணமாவ தென்பார் இசைத்த இருவினை யொப்பிலென்றுங் கூறினர். ஒப்பிலென்னும் வினையெச்சம் மருவுவன் என்னும் பிறவினை முதல் வினை கொண்டது. தேற்றேகாரம் விகாரத்தாற் றொக்கது. ஆம் அசை. வருதல் இடவழுவமைதி. பசிப்பானென்றது ஆகுபெயர். இசைத்து வருவினையென நாலின் றொழில் வினைமேலேற்றப்பட்டது. மிசைத்த இருவினை யொப்பிலெனப்பாடமோதி, இருவினைகளுண் மிக்க விருவினையாகிய பிரமக்கொலை பரிமேத வேள்வி போல்வன தம்முள் ஒருங்கேபயன் றருவனவாய் ஒத்தகாலத் தென்றுரைப்பாருமுளர். அஃது ஈண்டைக்குப் பயன் படாமையும் சித்தாந்தத்திற் கேலாமையு மறிக.

இசைத்து வருவினையி லின்பம் பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கு மெனவே, இறப்பிறவத்தான் மருவப்படு ஞானம் பசித்துண்டு பின்னும் பசித்தலில்லாத கடவுளர்க்கு அமிழ்த வுண்டியானுய பயனை யொக்குமென்பதூஉம் பெறப்பட்டது. படவே, அவ்வமிழ்த உண்டி நரை திரை மூப்பின்றி நிலைபெறுதலாகிய பெரும்பயனைத் தருதல்மாத்திரையேயன்றிப் பசிதீர்தலாகிய அவாந்தரப் பயனையுந் தருமாறுபோல இறப்பிறவமும் தத்துவ ஞானத்தைப் பயத்தன் மாத்திரையேயன்றித் தத்தம் பத முத்தியாகிய அவாந்தரப்பயனைப் பயத்தலும் அமைவுடைத்தாமாறு கண்டு கொள்க.

## விளக்கம்.

கொண்டுகூட்டு. இசைத்து வருவினையில் இன்பம் பசித்து உண்டு பின்னும் பசிப்பானையொக்கும் இசைத்த இருவினை இறப்பு இல் தவத்தால் ஒப்பில்வந்து ஞானத்தை மருவுவன்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றேவெனின், மேலை வெண்பாவில் சரியைமுதலிய தவங்களே உண்மை ஞானத்தையுண்டுபண்ணுமென வற்புறுத்திக்கூறியது யாதுகாரணத்தால்? வேதத்துட்கூறிய வேள்விமுதலாயினவுந் தவங்களேயாதலின் அந்த வேள்விமுதலியவையே உண்மைஞானத்தை உண்டுபண்ணுமென்றல் பொருந்தும் என்பர் பாட்டாசாரியம் என்னும் மதத்தினர்; அம் மதம்பற்றிக் கூறுவாரைநோக்கிச் சரியையாதிகளே ஞானததைத்தருமன்றி வேள்விமுதலியன ஞானத்தைத் தாராவெனக்கூறி ஏதுவை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) ஒருநல்வினை செய்யத் தொடங்கி அறநூலை ஆராயுங்கால் ஆராய்வானுடைய அறிவின்கண்ணே அந்நூலில் வேள்விமுதலிய தவங்கள் அறமெனத் தோன்றும் பொழுதே அவற்றால் உண்டாகும் சுவர்க்கமுதலிய காமியப்பயனையும் உடன் கூறிக்கொண்டே வருவனவாய்க் காணப்படும். அவ்வாறு கூறப்படுவனவாய வேள்வி முதலிய அறங்களின் பயனாகிய இன்பம் எதனையொக்கு மெனின், முன்னர்ப்பசியாலுண்டு அவ்வுணவு சீரணமாகப் பின்னும் பசியை யுடையவனுக்குப் பசியை நீக்கும் அவ்வுண்டியால் வரும் இன்பத்தை யொக்கும். ஆதலால், சுவர்க்கமுதலிய காமிய இன்பத்தைத்தரும் அறமும் நரகமுதலிய துன்பத்தைத்தரும் பாவமும் ஒருவனுக்கு ஞானத்தைப் பிரகாசிக்க வொட்டாமற் செய்துபந்தத்தில் அழுத்துதலில் பொன் விலங்கும் இருப்புவிலங்கும் போல் வனவாம். இவ்வாறு விலங்குபோலச் சமப்படுத்தி உணரப்படுவனவாகிய அறம்பாவமிரண்டும் தத்தம்பலனைத் தந்தமாத்திரையிற் கெடும். சரியை முதலிய தவங்களோதத்தம்பயனைத் தந்தமாத்திரையிற் கெடாது ஞானத்தைத் தந்து மோக்ஷத்தைத்தரும். ஆதலால் மேன்மேல் முறுகிவளர்வனவாய சரியைமுதலிய தவங்களால் மேற் கூறிய அறம்பாவமிரண்டும் நேராகஒத்தால் அச்சரியை முதலிய தவத்தின் முதிர்ச்சியால் முன் இரண்டா மதிகரணத்திற் கூறப்படும் ஞான குருவைத் தேடியடைந்து ஞானத்தை அடைவன் எ-று.

(க-ரை.) பசியைநீக்கும் உணவினாலுண்டாகிய இன்பம் நிலைத்தலின்றி மீளப் பசி உண்டாகுங்கால் கெடுதல்போல, வேள்விமுதலிய தவத்தாலுண்டாகிய சுவர்க்க இன்பம் நிலைத்தலின்றி மீளப்பூமியிலோ நரகத்திலோ வருங்கால் கெடும். ஆதலால் கெடுதலில்லாத சரியைமுதலிய தவங்களால் இருவினையொப்புவந்தால் ஞானகுருவை யடைந்து ஞானத்தைக் கூடுவன் என்பதாம்.

வேள்விமுதலிய தவங்களெல்லாம் அழியுந்தன்மையினை யுடையகாமியபபயன்களைத் தருவனவன்றித் தத்துவ ஞானத்தைத் தரமாட்டா என்பதற்கு அவ்வேள்வி முதலியவற்றை விதித்த நூல்களே சாட்சியென்று கூறவேண்டிச் செய்யுளில் இசைத்து வருவினை யென்றும், அவ்வேள்வி முதலியன ஞானத்தை உண்டுபண்ணுமைமட்டு மன்று தீவினைபோல

ஞானத்தை விளங்கவொட்டாது தடைசெய்து நிற்றலும் உடையனவாம் ஆதலால் ஞானத்தைத் தடைசெய்தற்குரிய வேள்விமுதலிய நல்வினையும் ஏனைய தீவினையும் நீங்குதலே ஞானத்திற்குக் காரணம் என்று கூறவேண்டிச் செய்யுளில் இசைத்த இருவினையொப்பிலென்றும் கூறினார். ஆதலால் இசைத்து வருவினை என்றதற்குக் காமியப்பயன்களை உடன் கூறிக்கொண்டே வரும் வேள்வியென்றும், இசைத்த இருவினையொப்பிலென்றதற்குச் சமப்படுத்துணரப்படுவனவாகிய அறம்பாவ மிரண்டும் ஒத்தால் என்றும் உரைசெய்யப்பட்டது.

நல்வினை தீவினை இரண்டும் பசு நல்வினை பசுத் தீவினை, பதி நல்வினை பதித் தீவினையென ஒவ்வொன்றும் இருதிறப்படும். அவற்றுள், பசு நல்வினையாவது பசுவை நோக்கிச்செய்யும் நல்வினையென்றும் பசுத்தன்மை கெடாத நல்வினையென்றும், பசுத் தீவினையாவது பசுவைநோக்கிச் செய்யும் தீவினையென்றும் பசுத்துவங்கெடாத தீவினையென்றும், பதி நல்வினையாவது பதியை நோக்கிச் செய்யும் நல்வினையென்றும் பதியின் தன்மையை அடையச் செய்யும் நல்வினையென்றும், பதித் தீவினையாவது பதியை நோக்கிச் செய்யுந் தீவினையென்றும் பதியின் தன்மையைக் கெடுக்குந் தீவினையென்றும் விரியும்.

பசுவைநோக்கிச் செய்யும் நல்வினையாவது—பிறவுயிர்களுக்கு நன்மை செய்தல்.

பசுத்தன்மைகெடாத நல்வினையாவது—சுவர்க்காதி பயனை விரும்பி நன்மைசெய்தல்.

பசுவைநோக்கிச் செய்யுந் தீவினையாவது—பிறவுயிர்களுக்குத்துன்பஞ் செய்தல்

பசுத்தன்மைகெடாத தீவினையாவது—காமாதி துர்க்குணங்களை உடையனாதல்.

பதியைநோக்கிச் செய்யும் நல்வினையாவது—சிவாலயத்திற்கும் சிவனடியார்க்கும் தேசிகருக்கும் வேண்டுந் திருப்பணி செய்தல்; இது சரியையிலடங்கும்.

பதியின்தன்மையை அடையச் செய்யும் நல்வினையாவது—ஞானகுருவை வழிபட்டு ஞானசாதனங்களைக் கேட்டு அவற்றை யநுட்டித்தல்; இது கிரியை யோகம் ஞானங்களிலடங்கும்.

பதியைநோக்கிச் செய்யுந் தீவினையாவது—சிவதிரவியம், அடியார் திரவியம், குருத்திரவியங்களை அபகரித்தல், அம்மூவிடத்தும் வேண்டாதன செய்தல்.

பதியின் தன்மையைக் கெடுக்குந் தீவினையாவது—பதியுந்தானும் அநன்னியமென்பதை விளங்கவொட்டாது உடம்பைத் தானென்றும் பிறபொருளைத் தன்னுடைமை என்றும் கருதுதல்.

இவ்வாறு நல்வினை தீவினை இரண்டும் பசுவைப் பற்றியும் பதியைப் பற்றியும் நிகழுமெனக் கூறிய முறைப்படி பாசத்தைப் பற்றியும் நிகழுமென்று கொள்ளல் வேண்டும். அவற்றுள்,

பாசநல்வினையாவது—மனைவிமக்கள் முதலியோர்க்கு நன்மை செய்தல்.

பாசத்தீவினையாவது—மனைவிமக்கள் முதலியோர்க்குத் தீமை செய்தல்.

இனி இருவினையொப்பும் பசு இருவினையொப்புப் பதி இருவினையொப்பு என இருவகைப்படும். அவற்றுள், பசு இருவினையொப்பாவது பிராமணக் கொலையும் அசுவமேத யாகமும் ஒருகாலத்தில் பலன் தரவருமாயின் நரகம் சுவர்க்கமாகிய மாறுபட்ட இரண்டு இடத்திலுள்ள பலன்களையும் ஒருகாலத்தி லநுபவிக்கச் செய்ய முடியாதாதலின், அவ்விரண்டனையும் திருவருட் சத்தி விலக்கிவிடுமாதலால், அவ்வாறு விலக்கப்படுவதுவே இருவினை யொப்பென்பர் ஒருசாரார். ஒத்தஇருவினைகள் விலக்கப்படினும் ஏனைய இருவினைகள் விலக்கப்படாமையின் அது இருவினை யொப்பாகாது. எல்லா நல்வினையும் எல்லாத்தீவினையும் அநுபவித் தொழிதலே இருவினை யொப்பென்பர் மற்றொரு சாரார். அது கூடுமாறில்லை. கூடினும் கன்மமலமும் அக்கன்மத்துக்குப் பற்றுக்கோடாயுள்ள மாயாமலமும் நீங்குதலேயன்றி ஆணவமலம் நீங்குமாறில்லை. ஆதலால் எல்லா இருவினைகளும் நீங்கப் பெறினும் ஒருமலமுடைய விஞ்ஞான கலராதலேயன்றி மலபரிபாகமுடையராதலில்லை. அதனால் அதுவும் இருவினை யொப்பாகாது. இனி இருவினை யொப்புத்தா னென்னையோ எனின், மலபரிபாகக் குறியும் சத்திநிபாதக்குறியும் ஆன்மஅறிவின் கண்ணே விளங்குவதுபோல நல்வினை தீவினை யென்னும் இருவினைகளும் பொன் விலங்கும் இருப்பு விலங்கும் போலப்பிறப்பு இறப்புக்களிற்கட்டுப்படுத்துந் தன்மையில் சமமுடையனவாகுமென ஆன்ம அறிவின் கண் விளங்கி அவ்விருவினைகளையும் ஒப்பநாடி உவர்த்து விடுதலேயாம். இதனால் பிறவுயிர்க்குத் தீமை செய்யக்கூடாதது போல நன்மையுஞ் செய்யவேண்டா மென்பது கருத்தன்று. நரகத்துன்பத்துக்கு அஞ்சித்தீமைசெய்யக் கூடாது என்று எண்ணுவதுபோல, பிறப்புத் துன்பத்திற்கஞ்சிச்சுவர்க்க இன்பத்தைக் கருதி நன்மைசெய்யக் கூடாதென்பது கருத்து. பிறவுயிர்களுக்குச் செய்யவேண்டிய நன்மையைப்பயன் கருதாது தன்கடமையென்று செய்யவேண்டு மென்பதாம்.

இந்த இருவினையொப்பு எவ்வாறு வருமெனின், இச்சை அறிவு செயல்களைக் குணமாக வுடைய உயிர்யாதானுமொன்றை இச்சித்து அந்தஇச்சை நிறைவேறும் உபாயத்தை அறிந்து அவ்வுபாயத்தைச் செய்தலே இயல்பாம். ஆதலால் சுவர்க்காதிபலனை இச்சித்து வேள்வி முதலியவற்றைச் செய்த

லில் விருப்பம் நீங்கவேண்டுமாயின் சிவபெருமான் திருவடி அடைதலில் விருப்பமுடையவனாய் அத்திருவடியை அடையச் செய்தற்குரிய உபாயம் சரியை முதலிய தவங்களென அறிந்து அத்தவங்களாகிய சிவபுண்ணியத்தைச் செய்யவேண்டும். செய்தலால் இருவினை யொப்பு உண்டாம்.

பதி இருவினை யொப்பாவது, பதித்தீவினை விரும்பப் படாதவாறு போல, பதி நல்வினையும் பசுபோதங்கெடாத சாலோகாதி பதங்கருதி விரும்பப் படாது நீங்கல்.

மலபரிபாகமாவது—மலசத்தி தேய்தல். அதாவது ஆணவமல காரியமான மோக முதலாகக் கூறப்படும் கெட்ட குணங்கள் ஆன்ம அறிவை விட்டு நீங்குதல்.

சத்திநிபாதமாவது—திருவருட் சத்தி பதிதல். அதாவது சிவபெருமான் திருவடியை அடையவேண்டுமென்ற நாட்டத்தால் ஆன்ம அறிவின்கண் சிவசத்திபதிதல். சத்திநிபாத மென்னுஞ் சொல்லுக்குப் பொருள் சத்தியினது வீழ்ச்சியாகும். ஒரு சபையினிடத்தில் ஒரு கல்வந்து வீழ்ந்தால் அக்கல் அங்குள்ளாரை அச்சபையில் நின்றும் அஞ்சி ஓடச்செய்யுமாறுபோல, ஒரு ஆன்மாவிற்குத் திருவடியடைய வேண்டும் என்னும் சத்திநிபாதம் நிகழ்ந்தால் அச்சத்திநிபாதம் அவ்வான்மா மனைவிமக்கள் முதலிய உலகப் பொருளினின்றும் அஞ்சியோடிச் சற்குருவைத் தேடும்படிசெய்யும். இச்சத்திநிபாதமும் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரமென நான்குவகைப் படும். அவற்றுள், மந்ததரசத்திநிபாத மாவது உலகப்பற்று நான்கிலொரு கூறு விட்டுத்திருவருட்சத்தி ஒருகூறு பதிதல். மந்தசத்திநிபாதமாவது உலகப்பற்று இரண்டு கூறுவிட்டுத் திருவருட்சத்தி இரண்டு கூறுபதிதல். தீவிரசத்திநிபாதமாவது உலகப்பற்று மூன்று கூறுவிட்டுத் திருவருட் சத்தி மூன்று கூறுபதிதல். தீவிரதரசத்திநிபாதமாவது உலகப்பற்று அறவே விட்டுத் திருவருட் சத்தி முற்றும்பதிதல். இதனால் மலபரிபாகமும் நால்வகைப்டு மென்றவாறாயிற்று. கூறு பங்கு.

வேள்விமுதலிய பசுநல்வினைகள் சுவர்க்கமுதலிய காமியப்பயனைத் தருமென்பதற்கு அவ்வறத்தைக் கூறும் நூல்களே சாக்ஷியென்று மேலே கூறியதை "சுவர்க்கம் வேண்டியோன் சோதிட்டோமத்தான்வேட்க" என்னுஞ் சுருதியானும், "தானம் யாகம் தீர்த்தம் ஆச்சிரமம் தவங்கள் சாந்தி விரதம் கன்மயோகங்கள் சரித்தோர்—ஈனமிலாச் சுவர்க்கம் பெற்று இமைப்பளவின் மீள்வர்." என்ற சிவஞான சித்தித்திருவாக்கானும் அறிக.

செய்யுளில் இருவினை யொப்பிலென்று கூறியதில் ஒப்பிலென்பது செய்யின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம். அந்த எச்சம் வினைமுதலாகிய கருத்தாவினையாலும் பிறகருத்தாவினையாலும் முடியும். உதாரணம், மழைபெய்யிற் புகழ் பெறும், மழைபெய்யிற்குளம் நிறையும் என்பனவாம்.

இவ்விடத்தில் ஒத்தலாகிய வினைக்கு வினைமுதல் இருவினையாதலால் அது கொண்டு முடிதற்கு இயைபில்லை. ஆதலால் தவமுதிர்ச்சியுடையான் என்னும் பிறகருத்தாவின் வினையாகிய மருவுவன் என்பதுகொண்டு முடிந்தது.

இறப்பில் தவத்தால் என்றதில் தேற்றத்தைத் தரும் ஏகாரம்தொக்கு நின்றது. அதனை விரித்துத் தவத்தானே என்று உரைசெய்யப்பட்டது.

மருவுவன் ஆம் என்பதிலுள்ள ஆம் என்பது அசை.

சென்று மருவுவன் எனப்படர்க்கையிற் கூறவேண்டியதை வந்துமருவுவன் என முன்னிலையாகக் கூறியதால் வருதலை இடவழுவமைதியாற் கொள்க. வருதல் முன்னிலைச்சொல் என்பதை தொல்காபியங் கிளவியாக்கம் சூத்திரம் ௨௦-ல் "தருசொல் வருசொல் லாயிரு கிளவியுந் தன்மை முன்னிலை யாயீ ரிடத்த" என்பதனாலறிக.

பசிப்பானை யொக்குமென்பதில் பசிப்பானை என்றது பசிப்பானுக்கு அவ்வுண்டியால் வரும் இன்பத்தைக் குறித்து நிற்றலால் ஆகுபெயர்.

இசைத்துவருதல் நூலின்றொழில். அத்தொழிலை அறமாகிய வினை மேலேற்றி இசைத்து வருவினை யெனக்கூறப்பட்டது.

இசைத்த இருவினை யொப்பிலென்பதை மிசைத்த இருவினையொப்பி லெனப் பாடமாகக்கொண்டு இருவினைகளுள் மிக்க இருவினையாகிய பிராமணக்கொலை அசுவமேதயாகம் போல்வன தம்முள் ஒருகாலத்துப் பயன் றருவனவாய் ஒத்த காலத்து என்றுரைப்பாரு முளர். மேலானபுண்ணிய பாவங்கள் ஒருகாலத்திற் பயன்தருமாறு ஒத்தல் பக்குவமாகும் முறைமையில் உண்டாவதேயன்றி இறப்பில் தவமாகிய சரியையாதியால் உண்டாவதில்லை. ஆதலால் அவ்வுரை இவ்விடத்துப் பயன்படாது. அன்றியும் மேல் இருவினை யொப்பிற் கூறியபடி சித்தாந்தத்துக்கு அப்பொருள் பொருந்தாதெனவும் அறிக.

காமியப்பயனை உடன் கூறிக்கொண்டே வருகின்றனவாய வேள்வி முதலிய தவங்களால் வரும் இன்பம் பசித்துண்டு பின்னும் பசிப்பவனுக் குண்டாகிய இன்பத்தை யொக்கு மென்றதனால் இறப்பில் தவமாகிய சரியையாதியாலுண்டாகும் ஞானம் தேவருக்குப் பசியாலுண்டு பின்னும் பசித்தலில்லாத அமிழ்த உண்டியாலுய பயனை யொக்குமென்பதூஉம் பெறப்பட்டது. படவே, அவ்வமிழ்த உண்டி நரைதிரை மூப்பின்றி நிலைபெறுதலாகிய பெரும்பயனைத் தருதலேயன்றிப் பசிதீர்தலாகிய இடைப்பட்ட பயனையுந் தருமாறுபோல, இறப்பில் தவமாகிய சரியையாதிகளும் உண்மை ஞானமாகிய மேலானபயனைத் தருதலேயன்றிச் சாலோகாதி பதமுத்தியாகிய இடைப்பட்ட பயனைத் தருதலும் பொருத்தமாகுமாறு கண்டுகொள்க.

ஏனைய உணவுகள் பசியைநீக்குதலோடு நின்றுவிடும். அமிழ்தமாகிய உணவு பசியை நீக்கிப் பின்னர் நரைமுதலியவற்றையும் நீக்கும். அவ்வாறே வேள்வி முதலியன சுவர்க்காதிபலனைத் தந்துநின்றுவிடும்; சரியையாதிகள் சாலோகாதிபலனைத் தந்து பின்னர் ஞானத்தையும் தரும். ஆதலாற்சரியை யாதிகளை இறப்பில் தவமென்றார். என்றதனால் வேள்விமுதலியன இறக்குந்தவ மென்றவாறாயிற்று. இக்கருத்துப் பற்றியே சிவஞான சித்தியார் அ-ம் சூ-ம் ௨௰-வது செய்யுளில்.

"ஞானமியா கந்தீர்த்த மாச்சிரமந் தவங்கள்
சாந்திவிர தங்கன்ம யோகங்கள் சரித்தோ
ரீனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவின் மீள்வ
ரீசனியோ கக்கிரியா சரியையினி னின்றோ
ரூனமிலா முத்திபதம் பெற்றுலக மெல்லா
மொடுங்கும்போ தரன்முனிலா தொழியினுற் பவித்து
ஞானநெறி யடைந்தடைவர் சிவனை யங்கு
நாதனே முன்னிற்கி னணுகுவர்நற் றாளே."

என வழிநூலாசிரியர் அருளிச்செய்வாராயினர்.

முதலதிகரணம் முற்றிற்று.

---

# இரண்டாம் அதிகரணம்.

கடவுளே குருவுமாய் வருவரெனக் கூறும்
மேற்கோள்.

**இனி இவ்வான்மாக்களுக்குத் தமது முதற்றனே குருவுமாய் உணர்த்துமென்றது.**

எ-து மே-ள் எ-னின், மேற்கூறியவாற்றான் நிகழுஞானத்தை யுணர்த்துவார் கலைஞானங்களை யுணர்த்துவார்போல நம்மனோரில் ஒருவராதலமையுமெனச் சாங்கியர் நையாயிசர் முதலியோர் மதம் பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ-ள்) மேற்கூறியவாற்றான் சரியைமுதலிய மூன்றும் முற்றிய பின்னர் இம்முற்றுதலானே மலபரிபாகஞ் சத்திநிபாதம்

நிகழ்ந்து தத்துவஞானத்தின் அவாவுதலையுடைய உயிர்கட்கு இது காறுந் தமக்கு முதலாய் உண்ணின்றுணர்த்திவந்த பரம்பொருளே அப்பருவமறிந்து குருமூர்த்தமா யெழுந்தருளிவந்து அதனை அறிவுறுக்கும் எ-று.

எனவே. ஏனையோர்க்கு அது கூடாதென்றவாறாயிற்று. இக் கருத்தேபற்றி, "அகத்துறு நோய்க் குள்ளின ரன்றி யதனைச்— சகத்தவருங் காணபரோ தான்." என்றார்புடை நூலாசிரியரும்; ஏகாரம். தேற்றம்.

## விளக்கம்.

இம்மேற்கோள் சூத்திரத்திலுள்ள தம் முதல் குருவுமா யென்னும் இரண்டாங்கூற்றைப் பதச்சேதஞ் செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்னசொல்லிற்றோ எனின், முதலதிகரணத்திற் கூறியவாறு சரியை முதலிய தவங்களால் நிகழக்கூடிய ஞானம் ஓர் ஆசிரியன் உணர்த்த நிகழுமேயன்றித் தானே நிகழாது. அவ்வாசிரியன் ஏனைய நூற்பொருள்களை யுணர்த்தும் பசுத்துவமுடைய நம்மனோரில் ஒருவராதல் கூடுமெனச் சாங்கியர் நையாயிகர் முதலியோர் கூறுவர். அவரைநோக்கிச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைப் பதச்சேதஞ்செய்து பசுத்துவமுடைய நம்மனோர்க்குப் பதியின் தன்மையை விளக்கமுடியாது ஆதலின் கடவுளே குருவுமாய் வருவரெனக் கூறியவாறும்.

இவ்வதிகரணத்தில் ஞானகுருக் கடவுளோ நம்மிலொருவரோ என்பது ஐயப்பாடு. நம்மிலொருவரென்பது பிறர்பக்கம் என அறிக.

(இம்மேற்கோளின் பொருள்.) முதலதிகரணத்திற்கூறியவாறு சரியை கிரியை யோகமாகிய மூன்றும் முறையாய் அநுட்டித்து முற்றுப்பெற்ற பின் அம் மூன்றும் முற்றுதலால் மலபரிபாகமும் சத்திநிபாதமும் தோன்றி உண்மை ஞானத்தை அடைய விரும்புகின்ற உயிர்கட்கு அப்பருவத்தை யறிந்து இதுவரையும் தமக்கு உள்நின்று உணர்த்திவந்த முதலாகிய பரம் பொருளே குருவடிவுமாய் எழுந்தருளிவந்து விரும்பிய உண்மை ஞானத் உணர்த்துவர். எ-று.

கடவுள் குருவுமாய்வந்து ஞானத்தை யுணர்த்துவரென்றதனால் கடவுளல்லாத ஏனைய உயிர்கள் குருவாய்வந்து ஞானத்தை யுணர்த்துமாறில்லையென்றவாறாயிற்று.

உயிரின் பக்குவத்தை உயிர்க்குயிராகிய கடவுள் அறிந்து உணர்த்துவ ரன்றி ஏனையோர் குருவாக வந்து ஞானத்தை உணர்த்த முடியாதென்னும் இககருத்தேபற்றித் திருவருட்பயன் என்னும் நூலில் அருளுரு நிலையென்

னும் அதிகாரத்தில் "அகத்துறு நோய்க்கு உள்ளினரன்றி யதனைச்—சகத்தவ ருங் காண்பரோ தான்." என்றார் புடைநூலாசிரியரும். இதன் கருத்து, அகத்தின்கண் பொருந்திய நோயை அகத்திலுள்ளாரன்றி ஏனையோர் அறியார் என்பதாம்.

முதல் தானே என்பதிலுள்ள ஏகாரம், கடவுள்தான் குருவுமாய்வருவர் என்னும் உறுதியைத் தந்துநிற்றலால் தேற்றம்.

குருவினாலேயே ஞானம் நிகழுமாயின் தவத்தால் ஞானம் நிகழும் என்று மேலையதிகரணத்திற் கூறியதோடு முரணாதோ எனின், முரணாது. எதனாலெனின், தவம் இல்லையாயின் குருவருதலுமில்லை; வந்து உணர்த்தினும் ஞானம் நிகழ்தலுமில்லையாதலால் என்க. எனவே, ஞானம் நிகழ்தற்குச் சரியையாதிகள் முதற்காரணமும் குருத் துணைக்காரணமுமாம் என அறிந்துகொள்க. துணைக்காரணம் பலவாதல் கூடுமாதலின், மேல் நற்குலம் துணைக்காரணம் என்றதனோடு முரணாமையறிக.

கடவுளே குருவுமாய் வருவரென்பதற்குக் காட்டும்

ஏது.

அவன் அந்நியமின்றிச் சைதன்னிய சோரூபியாய் நிற்றலான்.

## சிற்றுரை.

ஏ-து ஏ-து எ-னின், மாயா வுருவன் மாயாவுருவினையேயான் ஏயுமெனின் எம்மனோரிலொருவனும் முடியும்; ஆகலின் தமது முதல் குருமூர்த்தி ஆதாரமாகத் தரித்து நின்றுணர்த்து மென்றலை அமைவுடைத்தெனப் பொதுவகையான் அதிட்டானபக்கங் கூறுவாரை நோக்கிச் சிறப்புவகையான் ஆவேச பக்கமாமாறுணர்த்தி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று. மாயாவொருவன் மாயா உருவினை ஏயான் எனவும் பாடபேதம் உண்டு

(இ-ள்.) அம்முதல்வன் பாலினெய்போல மறைந்து வேறாய் நிற்றலின்றிச் சுத்தான்மசைதன்னியமே தனக்குச் சொரூபமாகக்கொண்டு தயிரினெய்போல ஆண்டுவிளங்கி நிற்றலான் 'இவ்வான்மாக்களுக்குத் தமது முதருமே குருவுமாய் உணர்த்து'மென மேற் கொண்டது எ-று.

பாலினெய்போல வேறாய் மறைந்து நின்று செலுத்தப் படுவனவற்றினும் பொதுவாய்ச் செல்வதாகிய அதிட்டான பக்கங்

கொள்வார்க்கு ஏனைச்சமய குரவருங் குரவராவான் சேரவின் அதிட்டிணடைக் கமைவுடைத்தன் றென்பதாம். சைதன்னிய மென்றூர் மாசுதீர்ந்த தென்பதுணர்த்துதற்கு.

## விளக்கம்.

இந்த ஏது என்ன சொல்லிற்றூவெனின், சங்கற்பநிராகரணம் சைவவாதி மறுப்பிற் கூறியவாறு அழியாத திருமேனியை உடைய முதல்வன் மாயையின் காரியமாகிய அழிகின்ற வடிவத்தைப் பொருந்தமாட்டான்; பொருந்துவன் எனின், எம்மனோர்போன்றவனும் முடியும்; ஆதலால் கடவுளே குருமூர்த்தியாயும் வருவரென்றல் பொருந்தாது; கடவுள் குருமூர்த்தியை ஆதாரமாகக்கொண்டு நின்று உணர்த்துவரென்றலே பொருந்துமென்பர் ஒருசாரார். அவர் கடவுள் எங்குந் தங்கிநின்று எவற்றையுஞ் செலுத்துவதாகிய பொதுவான அதிட்டானத்தைக் குருவினிடத்துங் கொள்ளுவர். அவரை மறுத்துக் கடவுள் குருவினிடத்து நிற்றல் எங்குந் தங்கிநிற்கும் பொதுவான அதிட்டானமன்றிப் பேய்பிடியுண்டவனிடத்து அப்பேய் விளங்கித்தோன்றும் ஆவேசம் போலச் சிறப்பான அதிட்டானமாய்க் கடவுளே குருவின் ஆன்மாவை ஆவேசித்து நிற்பரென்ற உண்மையை உணர்த்தித் தமது முதல் தானே குருவுமாய் உணர்த்தும் என்ற மேற்கோளை வலியுறுத்தியவாறும். மாயா வொருவன் என்ற பாடபேதப்படிக்கும் அழியாத் திருமேனி யுடையவன் என்பதில் வேற்றுமை இல்லை.

(இந்த ஏதுவின் பொருள்.) தமது முதலாகிய அம்முதல்வன் பாலினிடத்து நெய் விளங்கித் தோன்றுமல் அப்பாலின் வேறாய் மறைந்து நிற்றல் போலக் குருவினிடத்து வேறாய் மறைந்து நிற்றலின்றித் தயிரினிடத்து நெய் அத்தயிராகவே விளங்கித் தோன்றுதல்போல, குருவாகிய சுத்தான்ம சைதன்னியமே தனக்குச் சொரூபமாகக் கொண்டு அவ்வான்மாவினிடத்து விளங்கி நிற்றலால் 'இவ்வான்மாக்களுக்குத் தமது முதல்தானே குருவுமாய் உணர்த்தும்' என மேற்கோள் கூறியது எ-று.

சில ஆகமங்களில் கடவுள் குருமூர்த்தியை ஆதாரமாகக் கொணடு நின்று உணர்த்துவர் என்று கூறுவதால் குருவாய் நின்று உணர்த்துதல் அதிட்டான பக்கமேயன்றி ஆவேச பக்கமென்றல் பொருந்தாது எனின், கூறுதும்:—

அதிட்டானம், பொதுச் சிறப்பு என இருதிறப்படும். அவற்றுள், ஞானகுருவல்லாத ஏனைய உயிர்களினிடத்து மறைந்து வேறாய் நிற்றல் பொதுவான அதிட்டானம். ஞானகுருவினிடத்து அவர்தமககு விளங்கி ஒன்றாயும், பொருளின் தன்மையால் வேறாயும் நிற்றல் சிறப்பான அதிட்டானம். இவ்விருவகை அதிட்டானத்திற்கும் பாலில் நெய் வேறாக மறைந்

திருத்தலே உவமையாம். இவ்வாறு பாலில் நெய்போல வேருய் மறைந்து நின்று செலுத்தப்படும் இருவகை யதிட்டானத்தினுள்ளும், ஞான குருவினிடத்து நிற்கும் அதிட்டானம் அவர்க்கு விளங்கி நிற்றலால் சிறப்பான அதிட்டான மெனப்படும். குருமூர்த்தியை அதிட்டித்து நிற்குமென்ற ஆகமத்தின்படி ஞான குருவினிடத்து நிற்கும் அதிட்டானத்தைப பொதுவான அதிட்டான மென்று கொள்ளின், ஏனைச் சமயவிசேடங்கட் கதிகாரிகளான குருக்களிடத்தும் பொதுவான அதிட்டானம் இருப்பதால் அக்குருக்களும் ஞாஞசிரியராதல் கூடும். ஆதலால் அந்த ஆகம வாக்கியங்கொண்டு பொதுவான அதிட்டானங் கொள்ளுதல் சரியை கிரியாயோகங்கள் முற்றிய ஆன்மாக்களுக்கு வருங் குருவைபற்றிக் கூறுகின்ற இவ்விடத்திற்குப் பொருந்தாதென்க.

இனி மேலே இச்சிறப்பான அதிட்டானத்தையே ஆவேசபக்கமாகவும் அதற்குப் பேய்பிடியுண்டதை உவமையாகவும் கூறிய கருத் தென்னையெனின், முதல்வன் உயிர்களோடு கலந்து நிற்கும் நிலே ஒன்ருய் நிற்றல் வேருய்நிற்றல் உடனுய் நிற்றலென மூத்திறப்படும். இவ்வாறு நிற்றல் பெத்தமுத்தி இரண்டினும் உண்டு. ஆயினும் பெத்தத்தில் உயிர்கள் உணராமையும் முத்தியில் உயிர்கள் உணர்தலுமே வேற்றுமையாம். முத்தராகிய ஞானகுருவினிடத்து ஒன்ருய் நிற்றல் பற்றி ஆவேச பக்கமாகவும் வேருய் நிற்றல்பற்றி அதிட்டான பக்கமாகவும் ஆகமங்கள் கூறுமாதலால், ஒன்ருய்நிற்குங் கலப்புப்பற்றித் தமது முதல்தானே குருவுமாய் வருவரென மேலே ஆவேச பக்கங் கூறியவாறென்க. அதிட்டான பக்கங்கூறும் ஆகமங்களுக்குச் சிறப்பான அதிட்டானமே பொருளென்றும் சிறப்பானஅதிட்டானமும் ஆவேசமும் சொல்லளவில் வேருயினும் உண்மையில் வேறன்று என்றும் கூறியபடியாம்.

ஏதுவில் ஆன்மசொரூபியாய் நிற்றல் என்று கூருமல் சைதன்னிய சொரூபியாய் நிற்றலால் என்று கூறிய கருத்தென்னையெனின், ஞானகுருவாகிய அவ்வான்மா மும்மலங்களாகிய மாசுநீங்கப் பெற்றது என்பதை உணர்த்துதற் பொருட்டு என்க.

குருவின் வடிவம் மாயாகாரிய மாயினும் குருவாகிய ஆன்மாமாசுநீங்கிச் சைதன்ய சொரூபமாய் விளங்கலால் அவ்வான்மாவையே திருமேனியாகக்கொண்டு கடவுள் குருவாய் வருமென்பதாம். அவ்வாருயினும் குருவின் ஆன்மாவைக் கடவுள் வடிவாகக் கொண்டதனுல் குருவின்வடிவாகிய மாயாகாரிய வடிவத்தையும் கடவுள் கொண்டதான குற்றம் வாராதோ எனின், சிவப்பிரகாசம் எ-ம் சூ-ம் உ—வது செய்யுளில் " மாயைமா மாயை மாயா வருமிருவினையின் வாய்மை—யாயவா ருயிரின் மேவு மருளொளி லொளியாய் நிற்கும் " எனக்கூறியபடி முதல்வனுக்குத் திருமேனியாகிய ஆன்மசைதன்னியம் முதல்வனேச் சார்ந்து அம்முதல்வன் தன்மையை அடைந்த

விடத்து அவ்வுயிர் தங்கும் இடமாகிய அவ்வுடம்பும் முதல்வன் அருள்மய மேயா மென்பது அறியக் கிடத்தலின் மாயாவடிவத்தைப் பொருந்திய குற் றம் வாராதெனஅறிக.

இந்த ஏது ஞானகுரு நம்மில் ஒருவரென்பாரை மறுத்துரைக்குஞ் சித் தாந்தத் துணிபாயிற்று.

முதல்வன் குருவுமாய்த்தோன்றி
உணர்த்தும் முறைமையைவிளக்கிக் காட்டும்
உதாரணம்.

மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்
கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய்—மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்.

## சிற்றுரை.

எ—து உ-ம் எ—னின், ஒரோரிடங்களிற் குருவாய்வந் துணர் த்துதலின்றியும் ஞானம் நிகழுமா றென்னை யென்பாரை நோக்கி அதனை வரைசெய்துணர்த்தி வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) விஞ்ஞானகலர்க்குத் தானே மெய்ஞ்ஞானம் விளை யும்—(அம்முதல்வன் மூவகையான்மாக்களுள்) விஞ்ஞானகலரா யினார்க்குத் தன்மையினின்றவாறே தத்துவஞானத்தை விளை விப்பன்,—அன்றிப் பிரளயாகலருக்குத் தான் குருவாய் முன் உணர்த்தும்—அவ்வாறன்றிப் பிரளயாகலராயினார்க்கு நாற்றோ ளும் முக்கண்ணுங் கறைமிடறு முதலிய உறுப்பிற்றாய் முத்தொ ழில் நடாத்தி நின்ற தன்னியற்கை வடிவே குருவடிவாகக் காட்டி முன்னாக நின்று தத்துவஞானத்தை உபதேசித் துணர்த்துவன்,— அஞ்ஞான அச்சகலர்க்கு அக்குருவாய்ப் பின் மெய்ஞ்ஞானம் உணர்த்தும்—அவிச்சையையுடைய சகலராயினார்க்கு அவர்வடிவு போலும் வடிவுடைய குருவாகி அவ்வடிவின் பின்னாக மறைந்து நின்று தத்துவஞானத்தை யுணர்த்துவன்,—முன்—அவ்வேறு பாட்டை அறிவாயாக எ-று.

முன்னென்றதனை முன்னைப் பொருளென் றுரைத்து எழு வாயாகக் கோடலு மொன்று. விளையும் என்பது "அரசனெடுத்த வாலயம்" என்புழிப்போல விவ்விகுதி தொக்குநின்றது. இவ் வாறன்றி எளிதி னடப்படுதனோக்கி "அரிசி தானே அட்டது"

என்றாற்போல எளிதின் விளைவிக்கப்படுதனோக்கி மெய்ஞ்ஞானந் தானே விளையுமென்றாரெனினும் அமையும். "உண்ணின் றுறுத்த ருளி" என்றார் புடைநூலாசிரியரும். ஈண்டு அஞ்ஞானம் என்றது அவிச்சையை என்பது சகலர்க்கே அடையாய் ஓதியவாற்றானறிக. அச்சகலரென்றது தவஞ்செய்தாரென மேலெடுத்துக் கொள்ளப் பட்ட சகலரென்றவாறு. அக்குருவென்றது மேற்கோளிற் கூறிப் போந்த குருவென்றவாறு. தானே விளையும் முன்னுணர்த்தும் பின்னுணர்த்தும் எனவே, விஞ்ஞானகலர்க்குத் தன்மையினும் பிரளயாகலர்க்கு முன்னிலையினும் சகலர்க்குப் படர்க்கையினும் நின்றுணர்த்துமென வரைசெய்தவாறு காண்க. இவற்றுண் முன்னைய விரண்டும் நிராதார மெனவும் பின்னையது சாதார மெனவுங் கூறப்படும்.

## விளக்கம்.

கொண்டு கூட்டு. விஞ்ஞான கலர்க்குத்தானே மெய்ஞ்ஞானம் விளையும் அன்றிப பிரளயாகலருக்குத் தான் குருவாய் முன் உணர்த்தும் அஞ்ஞான அச்சகலர்கரு அக்குருவாய் பின் மெய்ஞ்ஞானம் உணர்த்தும் முன்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ வெனின், மேற்கோளிற் கூறிய வாறு ஞானம் குருவால் நிகழுமென்பது உண்மையாயின் சிலருக்குக் குரு வந்து உபதேசிக்காமலும் ஞானம் உண்டாகின்றதே, அதன் உண்மை என்னை என்பர் ஒரு சாரார். அவரைநோக்கிக் குருவாய்வந் துணர்த்து முறைமையினை வரையறுத்துக்கூறி முதல் தானே குருவுமாய் வரும்என்னும் மேற்கோளைவலியுறுத்திய வாறும்.

(பொ-ரை.) மேற்கோளிற் கூறப்பட்ட அம்முதல்வன் குருவாய் வந்து உணர்த்து மிடத்து, விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என்னும் மூவகை யான்மக்களுள், விஞ்ஞானகலராயினோர்க்கு அறிவிற்குள் அறிவாய் தன்மையில் நின்றவாறே தத்துவஞானத்தைத் தோற்றுவிப்பன். பிரளயா கலராயினோர்கருத் தன்மையில் நின்று உணர்த்தாது நான்குதோளும் மூன்று கண்ணும் காளகண்டமும் முதலிய உறுபபுக்களுடன் முத்தொழில் நடாத் தினின்ற தன் இயற்கை வடிவமே குருவடிவமாகக் காட்டி முன்னிலையாக நின்று தத்துவ ஞானத்தை உபதேசித் துணர்த்துவன் .அவிச்சையையுடைய சகலராயினோர்க்கு அச்சகலர் வடிவுபோலும் வடிவுடைய குருவடிவில் மறைந்துநின்று .தத்துவஞானத்தை உணர்த்துவன். இவ்வாறு முதல்வன் குருவுமாய் வந்து உணர்த்தும அவ்வேறு பாட்டை அறிவயாக எ-று.

(க-ரை.) இறைவன் விஞ்ஞானகலராகிய உயிர்களுக்கு அறிவுக்குள் அறிவாய் நின்றும், பிரளயாகலராகிய உயிர்களுக்கு உருவத்திருமேனி

கொண்டும், சகலராகிய உயிர்களுக்கு அவ்வுயிர்கள் தங்கியிருக்கும் வடிவு போன்ற குருவடிவங் கொண்டும் ஞானத்தை உணர்த்துவன். ஆதலால் எவ்விடத்துங் குருவின்றி ஞானம் நிகழுமாறில்லை என்பதாம்.

இறுதியில் நின்ற முன் என்பதற்கு அறிவாயாக என்று பொருள் கூறப்பட்டது. அவ்வாறன்றி முன்னைப் பொருளாகிய முதல்வன் என்று உரைத்து எழுவாயாகக் கொள்ளுதலும் ஒன்று. அவ்வாறு கொள்ளுங்கால் அம்முதல்வன் என்று உரையில் வருவிக்காமல் முன்னைப் பொருள் விளை விக்கும் முன்னுணர்த்தும் பின்னுணர்த்தும் என்று முடித்துக்கொள்க.

மெய்ஞ்ஞானந் தானே விளையும் என்பதில் விளைவிக்கு மென்ற பொருளையுடைய விவ்விகுதி தொக்கு நின்றது. இது "அரசன் எடுத்த ஆல யம்"என்றவிடத்து அரசன் எடுப்பித்த ஆலயம் என்றுகொள்வதுபோலாம். எடுத்தல் என்பது கட்டுதல்; இது தன்வினை. எடுப்பித்தலென்பது கட்டுவித் தல்; இது பிறவினை.

தானேவிளையும் என்பதற்குத் தன்மையில் நின்றவாறே விளைவிப்பன் என்று கூறிய இப்பொருளேயன்றி, எளிதாகப் பாகப்படுதலை நோக்கி அரிசி தானே பாகமாயிற்று என்றாற்போல, விஞ்ஞானகலர்க்கு உருவத்திருமேனி கொள்ளாமலும் குருவடிவின் மறையாமலும்உள்நின்றவாறே மெய்ஞ்ஞானம் விளைவிக்கப்படுதல் நோக்கித் தானே விளையும் என்று கூறினர் எனினும் பொருந்தும். இக்கருத்துப்பற்றியே போற்றிப் பஃறொடை வரி கூக-ல் "உண்ணின் றறுத்தருளி"என்றார்புடைநூலாசிரியரும்.

அஞ்ஞான மென்றது ஆணவத்தைக் குறிக்குமாயினும் இச்செய்யுளில் சகலர்க்கே அடையாகக் கூறியதனால் அவிச்சையைக் குறித்ததென அறிக. அவிச்சையாவது மாயாமலத்தின் காரியமான மயக்கம். ஆகவே, இவ்விடத் துஅஞ்ஞானம் என்றது மாயாமலம் என்றபடியாம்.

அஞ்ஞான அச்சகல ரென்றதில் அகரச்சுட்டு முதலதிகாரணத்து முதல் வெண்பாவில் தவஞ்செய்தா ரென்று கூறப்பட்ட சகலரைச் சுட் டியவாறாம்.

அக்குருவென்றதில் அகரச்சுட்டு இவ்வதிகரணத்து மேற்கோளிற் கூறிய குருவைச் சுட்டியவாறாம்.

தானே விளையும் முன்னுணர்த்தும் பின்னுணர்த்தும் என்றதனால் குருவின்றியும் ஞானம் நிகழுமென்பாரை மறுத்து, விஞ்ஞானகலர்க்குத் தன்மையினும் பிரளயாகலர்க்கு முன்னிலையினும் சகலர்க்குப் படர்க்கையி னும் நின்று உணர்த்துமென வரையறுத்தவாறு அறிக. இவ்வாறு உணர்த் தும் வேறுபாடு மூன்றனுள், விஞ்ஞானகலர்க்குக் கொள்ளும் அறிவுத்திரு மேனியும் பிரளயாகலருக்குக் கொள்ளும் உருவத் திருமேனியும் முதல்வ

னுக்குச் சுதந்திரமாதலால் அவ்விரண்டும் நிராதார மெனப்படும். சகலர்க்கு அவர் வடிவுபோன்ற வடிவத்தை ஆதாரமாகக் கொண்டு நிற்றலால் அது சாதார மெனப்படும். நிராதாரமாய் நின்றுணர்த்துவதை நிராதார தீக்கை எனவும், சாதாரமாய் நின்றுணர்த்துவதைச் சாதார தீக்கை எனவுங் கூறப் படும். நிராதாரமென்பதுஆதாரமில்லாதது. சாதாரமென்பது ஆதாரத்தோடு கூடியது. தீக்ஷையின் முறைகளும் பாகுபாடுகளும் விஞ்ஞானகலர் முதலாக உயிர்களை வகுத்ததன் காரணமும் சிவஞான சித்தியார் எட்டாஞ் சூத்திரம் உ முதல் ௬ வரையுள்ள செய்யுட்களின் விசேட உரையில் விளக்கியிருக்கின்றாம். அவ்விடத்துக் காண்க.

முதல்வன் மூன்றுவகையாய் நின்று உணர்த்து
தற்குக் காரணங் காட்டும்
உதாரணம்.

அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்
செறியுமா முன்பின் குறைக—ணெறியிற்
குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடென்
குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு.

சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், விஞ்ஞானகலர் முதலிய மூவர்க்கும் ஓரியல்பா னுணர்த்தாது அவ்வாறு தன்மையினும் முன்னிலையினும் பின்னிலையினுமா யுணர்த்துதல் எற்றுக் கென்பாரை நோக்கிக் காரணங் கூறி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) உளங்கள் நெறியின் அறிவிக்க அன்றி அறியா— உயிர்களெல்லாந் தமக்குரிய படிவழியின் வைத்து முதல்வனறிவிக்க அறியும் இயல்பின வன்றி ஒன்றுபோல அறிவிக்க வறியுமியல்பினவல்ல ஆகலான்,—குறைவு இல் சகன் சூழ் கொள்பவர்க்கு— அவ்வறிவாற் குறைபாடில்லாத சகக்கடவுளது உபதேச மொழியைக்கொண் டுணருமியல்பினராகிய பிரளயாகலர் சகலர்க்கு,— குறைகள் முன்பின் செறியுமாம்—அவ்வறிவித்தா லறிதலாகிய குறைகள் முன்னிலையினும் பின்னிலையினு நிகழ்வனவாம்,—குறை உடைய சொல் கொள்ளார் கொள்பவத்தின் வீடு (ஆம்) என்— குறைவில் சகனாலாகிய குறையினையுடைய உபதேசமொழிகொண் டுணர வேண்டாத விஞ்ஞானகலர்க்கு முதல்வனாற் கொள்ளப் பட்ட தன்னுண்மை மாத்திரையின் வீடுபயக்கு முணர்வுண்டென் றறிவாயாக எ-று.

குறை இன்றியமையா[redacted]ப்பொருள்; அது "வினைக்குறை தீர்ந்தாரிற் றீர்ந்தன்றுலகு" என்பதனுட் பரிமேலழக ருரையானு முணர்க. பவம், சம்பவம், உண்மை என்பன ஒருபொருட் கிளவி. வீடுபயக்கு முணர்வை வீடென்றும், சூழ்ச்சி பயக்கு முபதேச மொழியைச் சூழென்றுங் காரண காரியமாக உபசரிக்கப்பட்டன. கொள்பவர் கொள்ளா ரென்பனவும் அவை. கொள்ளார்க் கென்னு நான்கனுருபு விகாரத்தாற் றொக்கது. 135 "ஐந்தவித்தானாற்றல்" என்புழிப் போல. ஆம் வீடெனவுமியையும். வீடாமெனப் பாட மோதுவாரு முளர்.

மேலைவெண்பாவின் முன்னுணர்த்தும் பின்னுணர்த்துங் காணைவிளையுமெனக் கூறியவற்றை ஈண்டு நெறியினறிவிக்கவன்றி யறியா வாகலான் அது முன்செறியும் பின் செறியும் பவத்தினு மெனக்காரணங் காட்டி வலியுறுத்தினர். இதற்குப் பிறவெல்லாம் தத்தமக்குவெண்டியவாறே மேலைவெண்பாவோடு இயைபற உரைத்தார். அல்லதூஉம் அறிவிக்கவன்றி அறியாமை உபதேசி யாயென ஆன்மாவின் றன்னியல்பு கூறும் வழிப் பெறப்பட்டதாத லின், அதனை ஈண்டும் புனருத்தியாகக் கூறவேண்டாமையின் மேலது வலியுறுத்துதற் கேற்புடைய அறிவிக்க அறிதற்கட்படும் விசேட மாத்திரையே ஈண்டெடுத் தோதினா ரென்றுணர்க. படி வழியின் வைத்தறிவிக்க வன்றி அறியாமை "பந்தமும் பிரிவுந் தெரிபொருட் பனுவற் படிவழி சென்றுசென் றேறி" என்பத னானும் அறிக.

## விளக்கம்.

கொண்டு கூட்டு. உளங்கள் நெறியின் அறிவிக்க வன்றி அறியா குறைவு இல் சகன் சூழ் கொள்பவர்க்கு குறைகள் முன்பின் செறியுமாம் குறை உடைய சொல் கொள்ளார் கொள் பவத்தின் வீடு (ஆம்) என்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ வெனின், விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் ஆகிய மூவர்க்கும் கடவுள் குருவுமாய் வந்து உணர்த்துமிடத்து ஒன்றுபோல் உணர்த்தாது மேலை வெண்பாவிற் கூறியவாறு விஞ்ஞானகலர்க்குத் தன்மையினும் பிரளயாகலர்க்கு முன்னிலையினும் சகலர்க்குப் பின்னிலையாகிய படர்க்கையினும் நின்று உணர்த்துதற்கு என்னகாரணம் என்பாரை நோக்கிப்படிமுறையானன்றி அறியமாட்டாமையே காரணமெனக்கூறி முதல் குருவுமாய் உணர்த்து மென்ற மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) உயிர்களெல்லாந் தமக்குரிய பக்குவமுறையில்வைத்து முதல்வ னறிவிக்க அறியுந் தன்மையையுடையன: அவ்வாறன்றி எல்லா உயிர்களும் ஒன்றுபோல் அறிவித்தால் அறியுந்தன்மையை உடையனவல்ல, ஆதலால், அறிவித்தாலறியக் கூடிய குறைபாடு உடையஅறிவின்றித் தானேயறியும் இயல்புடைய உலககருத்தாவாகிய உருவத் திருமேனிஉடைய கடவுளாலும் குருமூர்த்தியாலும் உபதேசமொழியைக்கொண்டு உணருந் தன்மையாகிய குறையுடைய பிரளயாகலருக்கும் சகலருக்கும் அவ்வுபதேச மொழிகள் முன்னிலையினும் பின்னிலையினும் நிகழ்வனவாம். உருவத்திருமேனியுடைய கடவுளாலும் குருவாலும் உபதேசிக்கப்பட்டு அறியவேண்டிய குறையில்லாத விஞ்ஞானகலருக்கு முதல்வன் உண்மைத் திருமேனியாகிய அறிவுருவால் வீட்டைத் தருதற்குரிய அறிவு உண்டாமென்று அறிவாயாக எ-று.

(க-ரை.) உயிர்கள் அவரவர்க்குரிய பக்குவத்திற் கேற்றவாறு அறிவித்தாலறியுந் தன்மையுடையன ஆதலால் விஞ்ஞானகலர்க்கு அறிவுக்குள் அறிவாய் உள் நின்றும், பிரளயாகலருக்கு உருவத் திருமேனி கொண்டு முன்னின்றும், சகலருக்கு அச்சகலர் வடிவுபோன்ற வடிவில் மறைந்து பின்னின்றும் இறைவன் உபதேசிப்பன் என்பதாம்.

முன்பின் குறைகள் என்றவிடத்தும் குறையுடைய சொல் என்றவிடத்தும் குறைவில்சகன் என்றவிடத்தும் குறை யென்பதுஅறிவித்தாலன்றி அறிவு நிகழாத இன்றியமையாமையை குறித்து நின்றது. இவ்வாறு ஒன்றை இன்றியமையாமை குறையாகும் என்பதைத் திருக்குறள் ஆள்வினை யுடைமை அதிகாரத்தில் உ-வது பாட்டில் "வினைக்குறை தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு" என்பதற்குப் பரிமேலழகர் வினையாகிய குறையைச் செய்யாது விட்டவரை உலகம் விட்டது என உரைகூறி, குறை இன்றியமையாமைப் பொருள் என்று விளக்கிய வாற்றானும் அறிக. அதாவது இன்றியமையாத முயற்சி யென்னுங் குறையை விட்டவரை உலகம் விட்டது என்பதாம்.

பவம், சம்பவம், உண்மை என்பன ஒரு பொருளைத் தரும் சொல்லாதலால் கொள்பவத்தின் என்பதற்குக் கொள்ளப்பட்ட உண்மை மாத்திரையில் என்று உரை செய்யப்பட்டது. இவ்விடத்து உண்மை என்றது அறிவுக்குள் அறிவாய் நின்று அறிவிக்கும் நிராதாரமாகிய சொரூப நிலையினை.

கொள்பவத்தின் வீடு என்றதில் வீடு என்பது வீட்டைத் தருமுணர்வையும், சூழ் கொள்பவர்க்கு என்றதில் சூழ் என்பது சூழ்ச்சியைத் தரும் உபதேச மொழியையும் குறித்து நிற்றலால் உணர்வாகிய காரணம் வீடாகிய காரியமாகவும், உபதேசமாகிய காரணம் சூழ்ச்சியாகிய காரியமாகவும் உபசரிக்கப்பட்டன; சூழ்ச்சி என்பது நுண்ணறிவு. சூழ் கொள்பவர் என்றவிடத்துக் கொள்பவர் என்பதும், சொற்கொள்ளார் என்றவிடத்துக் கொள்

ளார் என்பதும், அவ்வாறே காரணங் காரியமாக உபசரிக்கப்பட்டன. எவ்வாறெனின், பிரளயாகலத்தன்மை சகலத்தன்மை காரணம்; உபதேசங் கொள்ளுதல் காரியம். விஞ்ஞானகலத்தன்மை காரணம்; உபதேசங் கொள்ளாமை காரியம். ஆதலால் பிரளயா கலர் சகலராகிய காரணம் கொள் பவ ரென்னுங் காரியமாகவும், விஞ்ஞானகலராகிய காரணம் கொள்ளா ரென்னுங் காரியமாகவும் உபசரிக்கப்பட்டமை அறிக.

சொற் கொள்ளாரென்றதில் கொள்ளா ரென்பது கொள்ளார்க்கு என்னும் பொருளில் நிற்றலால் அதில் நான்காம் வேற்றுமையுருபு தொகையா யிருந்தது. இது திருக்குறள் நீத்தார்பெருமையில் "ஐந்தவித்தா னாற்றல்" என்றவிடத்து ஆற்றலுக்கு என்னும்பொருளில் நான்காம் வேற்றுமையுருபு தொகையா யிருக்கின்றதுபோலாம.

ஆம் என்னும் சொல் வருவித்து வீடு ஆம் என உரைக்கப்பட்டது. ஆம் வீடு எனவும் பொருந்தும். வீடென் என்பதையே வீடாம் என்று பாடமோது வாருமுளர்.

மேலே வெண்பாவில் தானே விளையும் முன்னுணர்த்தும் பின்னுணர்த்துமெனக் கூறி, இவ்வெண்பாவிலும் பவத்தின் ஆம் முன் செறியும் பின் செறியும் என்றமையால் கூறியது கூறலாகிய குற்றமாகாதோ எனின், ஆகாது; எவ்வாறெனின், மேலே வெண்பாவில் உணர்த்து முறைமை மூவகைப் படுமெனக் கூறி, அவ்வாறு மூவகையாக உணர்த்துதற்குக் காரணம் என்னை என்னும் ஐயத்தை நீக்குதற்கு, நெறியின் அறிவிக்க அன்றி அறியா ஆகலான் என்னுங் காரணங்காட்டி, ஆதலால் அறிவிக்க அறியும் உயிர்களின் அறிவு பவத்தின் ஆம் முன் செறியும் பின் செறியும் என வலியுறுத்தியவாறெனை அறிக.

இவ்வாறன்றி இவ்வெண்பாவிற்குப் பிறர் வேறு விதமாக உரை கூறுவர். அதுவருமாறு— உளங்கள் அறிவிக்க அன்றி அறியா—ஆன்மாக்கள் அறிவித்தாலன்றி அறியா ஆகலான்,—நெறியில் முன்பின் குறைகள் செறியுமாம்—அவ்வான்மாக்களுக்கு அறிவிக்க எழுந்த நூல்களுள் சித்தாந்தமல்லாத ஏனைய நூலகளெல்லாம் அவ்வச்சமய நெறியை முன் கூறியபடி பின் கூறாது மாறுபடுங் குறைகள் நிறைந்திருப்பன ஆதலால்,—குறையுடைய சொற்கொள்ளார்—அக்குறைபாடுடைய நூல்களைக் கொள்ளாது,—குறைவில் சதன் சூழ் கொள்பவர்க்கு—குறைபாடில்லாத முதல்வனது சித்தாந்த நூல்களைக் கொள்பவர்க்கு,—கொள்பவத்தின் வீடு ஆம்—கொண்ட பிறவியிற்றானே வீடுபேறும் என்பதாம். இவ்வுரை மேலே வெண்பாவோடு சம்பந்த மில்லை. ஆதலால் பொருந்தாது. அன்றியும் அறிவிக்க அன்றி அறியாமை ஆன்மாவின் தன்னியல்பு கூறிய ஏழாஞ் சூத்திரம் மூன்றும் அதிகரணத்தில் உபதேசியாய் என்றதனாலேயே பெறப்பட்டது. அதனை இவ்விடத்தும் கூறியது கூறலாகக் கூறவேண்டாமையால், மேலே வெண்பாவில்

தானே விளையும் முன்னுணர்த்தும் பின்னுணர்த்தும் என்று கூறியதனை வலியுறுத்துதற் கேற்றவாறு அவ்வாறு உணர்த்துதற்குக் காரணம் உணருதலின்கண் உண்டாம் வேறுபாடு எனவும் அவ்வேறுபாடுபெற்றிப பவத்தின் ஆம் முன்செறியும்பின் செறியும் எனவும்உணர்வின் விசேட மாத்திரையே இவ்வெண்பாவிற் கூறினா ரென்றுணர்க.

உயிர்கள் தமக்குரிய பக்குவமுறையில்வைத்து அறிவித்தா லன்றி அறியா என்பதைக் கருவூர்த்தேவர் திருவிசைப்பாவில் திருவிடைமருதூர்ப் பதிகம் ௬-வது செய்யுளில் "பந்தமும் பிரிவும் தெரி பொருட்பனுவற் படிவழி சென்று சென்றேறி" என்பதனானும் அறிக.

இவ்வெண்பாவில் குறைவில் சகன் என்றது கனிச்சீராகலின் சீர் சிதையுமாதலால் லகர ஒற்றை நீக்கிக் காய்ச்சீராக்கிக் கொள்க. இது எது போல எனின், "சங்கறுப்ப தெங்கள்குலம்" என்றது போலாம்.

சகலர்க்குக் கடவுள் குருவாய் வருதலில்லை என்பாரை மறுத்து வருமென்பதற்குக் காட்டும்
உதாரணம்.

இல்லா முலைப்பாலுங் கண்ணீரு மேந்திழைபா
னல்லா யுளவாமா னீர்னிழல்போ—லில்லா
வருவாகி நின்றானை யாரறிவார் தானே
யுருவாகித் தோன்றானே லுற்று.

சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், அம்முத்திறத்துள் ஈண்டைக் கெடுத்துக்கொண்ட அஞ்ஞான வச்சகலர்க்கு அக்குருவாதல் உபசாரமேயன்றி ஏனையபோலுண்மையாதல் செல்லா தென்பாரை நோக்கி உண்மையாதலை உவமை முகத்தான் வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) நல்லாய்—அறிவால் நன்மையுடைய மாணாக்கனே,—ஏந்து இழைபால் முலைப்பாலுங் கண்ணீரும் இல்லா உளஆம்—ஏந்திய விழைகளை யுடையாட்குக் (குழவி மாட்டுளதாகிய அருவாகிய அன்பினைப் பிறரறியுமாறு வெளிப்படுத்தும் அவ்வன்பினுருவாகிய) முலைப்பாலுங் கண்ணீரும் (அவள் மாட்டுக் குழவியைக்காணுமுன்) இல்லாவாய்ப் பின்னுளவாம் (அதுபோல);—நீர் நிழல்போல் இல்லா அரு ஆகி நின்றானை ஆர் அறிவார் தானே உருவாகி உற்றுத் தோன்றானேல்,—நீரின்கண் நிழல் போல் (உயிர்கண்மாட்டுப்) புலப்படுத லில்லாது அருவமாய் நின்றமுதல்வனை யார்தாமறிவார்

விடத்து அவ்வுயிர் தங்கும் இடமாகிய அவ்வுடம்பும் முதல்வன் அருள்மய மேயா மென்பது அறியக் கிடத்தலின் மாயாவடிவத்தைப் பொருந்திய குற்றம் வாராதெனை அறிக.

இந்த ஏது ஞானகுரு நம்மில் ஒருவரென்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

முதல்வன் குருவுமாய்த்தோன்றி
உணர்த்தும் முறைமையைவிளக்கிக் காட்டும்
உதாரணம்.

மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்
கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய்—மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்.

சிற்றுரை.

ஏ—து உ--ம் எ—னின், ஒவ்வோரிடங்களிற் குருவாய்வந் துணர்த்துதலின்றியும் ஞானம் நிகழுமா றென்னை யென்பாரை நோக்கி அதனை வரைசெய்துணர்த்தி வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) விஞ்ஞானகலர்க்குத் தானே மெய்ஞ்ஞானம் விளையும்—(அம்முதல்வன் மூவகையான்மாக்களுள்) விஞ்ஞானகலாயினோர்க்குத் தன்மையினின்றவாறே தத்துவஞானத்தை விளைவிப்பன்,—அன்றிப் பிரளயாகலருக்குத் தான் குருவாய் முன் உணர்த்தும்—அவ்வாறன்றிப் பிரளயாகலராயினோர்க்கு நாற்றோளும் முக்கண்ணுங் கறைமிடறு முதலிய உறுப்பிற்றாய் முத்தொழில் நடாத்தி நின்ற தன்னியற்கை வடிவே குருவடிவாகக் காட்டி முன்னாக நின்று தத்துவஞானத்தை உபதேசித் துணர்த்துவன்,—அஞ்ஞான அச்சகலர்க்கு அக்குருவாய்ப் பின் மெய்ஞ்ஞானம் உணர்த்தும்—அவிச்சையையுடைய சகலராயினோர்க்கு அவர்வடிவு போலும் வடிவுடைய குருவாகி அவ்வடிவின் பின்னாக மறைந்து நின்று தத்துவஞானத்தை யுணர்த்துவன்,—முன்—அவ்வேறுபாட்டை அறிவாயாக எ-று.

முன்னென்றதனை முன்னைப் பொருளென் றுரைத்து எழுவாயாகக் கோடலு மொன்று. விளையும் என்பது "அரசனெடுத்த வாலயம்" என்புழிப்போல விவ்விகுதி தொக்குநின்றது. இவ்வாறன்றி எளிதி னடப்படுதனோக்கி "அரிசி தானே அட்டது"

என்றாற்போல எளிதின் விளைவிக்கப்படுத லைாக்கி மெய்ஞ்ஞானந் தானே விளையு மென்றாரெனினும் அமையும். "உண்ணின் றறுத்த ருளி" என்றார் புடைநூலாசிரியரும். ஈண்டு அஞ்ஞானம் என்றது அவிச்சையை என்பது சகலர்க்கே அடையாய் ஓதியவாற்றானறிக. அச்சகலரென்றது தவஞ்செய்தாரென மேலெடுத்துக் கொள்ளப் பட்ட சகலரென்றவாறு. அக்குருவென்றது மேற்கோளிற் கூறிப் போந்த குருவென்றவாறு. தானே விளையும் முன்னுணர்த்தும் பின்னுணர்த்தும் எனவே, விஞ்ஞானகலர்க்குத் தன்மையினும் பிரளயாகலர்க்கு முன்னிலையினும் சகலர்க்குப் படர்க்கையினும் நின்றுணர்த்துமென வரைசெய்தவாறு காண்க. இவற்றுண் முன்னைய விரண்டும் நிராதார மெனவும் பின்னையது சாதார மெனவுங் கூறப்படும்.

## விளக்கம்.

கொண்டு கூட்டு. விஞ்ஞான கலர்க்குத்தானே மெய்ஞ்ஞானம் விளையும் அன்றிப் பிரளயாகலருக்குத் தான் குருவாய் முன் உணர்த்தும் அஞ்ஞான அச்சகலர்க்கு அக்குருவாய் பின் மெய்ஞ்ஞானம் உணர்த்தும் முன்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ வெனின், மேற்கோளிற் கூறிய வாறு ஞானம் குருவால் நிகழுமென்பது உண்மையாயின் சிலருக்குக் குரு வந்து உபதேசிக்காமலும் ஞானம் உண்டாகின்றதே, அதன் உண்மை என் னையென்பர் ஒரு சாரார். அவரைநோக்கிக் குருவாய்வந்துணர்த்து முறைமை யினை வரையறுத்துக்கூறி முதல் தானே குருவுமாய் வரும்என்னும் மேற் கோளைவலியுறுத்திய வாறும்.

(பொ-ரை.) மேற்கோளிற் கூறப்பட்ட அம்முதல்வன் குருவாய் வந்து உணர்த்து மிடத்து, விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என்னும் மூவகை யான்மக்களுள், விஞ்ஞானகலராயினார்க்கு அறிவிற்குள் அறிவாய் தன்மையில் நின்றவாறே தத்துவஞானத்தைத் தோற்று விப்பன். பிரளயா கலராயினார்கருத் தன்மையில் நின்று உணர்த்தாது நான்குதோளும் மூன்று கண்ணும் காளகண்டமும் முதலிய உறுப்புக்களுடன் முத்தொழில் நடாத் திநின்ற தன் இயற்கை வடிவமே குருவடிவமாகக் காட்டி முன்னிலையாக நின்று தத்துவ ஞானத்தை உபதேசித் துணர்த்துவன். அவிச்சையையுடைய சகலராயினார்க்கு அச்சகலர் வடிவுபோலும் வடிவுடைய குருவடிவில் மறை ந்துநின்று தத்துவஞானத்தை உணர்த்துவன். இவ்வாறு முதல்வன் குரு வுமாய் வந்து உணர்த்தும அவ்வேறு பாட்டை அறிவயாக எ-று.

(க-ரை.) இறைவன் விஞ்ஞானகலராகிய உயிர்களுக்கு அறிவுக்குள் அறிவாய் நின்றும், பிரளயாகலராகிய உயிர்களுக்கு உருவத்திருமேனி

கொண்டும், சகலராகிய உயிர்களுக்கு அவ்வுயிர்கள் தங்கியிருக்கும் வடிவு போன்ற குருவடிவங் கொண்டும் ஞானத்தை உணர்த்துவன். ஆதலால் எவ்விடத்துங் குருவின்றி ஞானம் நிகழுமாறில்லை என்பதாம்.

இறுதியில் நின்ற முன் என்பதற்கு அறிவாயாக என்று பொருள் கூறப்பட்டது. அவ்வாறன்றி முன்னைப் பொருளாகிய முதல்வன் என்று உரைத்து எழுவாயாகக் கொள்ளுதலும் ஒன்று. அவ்வாறு கொள்ளுங்கால் அம்முதல்வன் என்று உரையில் வருவிக்காமல் முன்னைப் பொருள் விளை விக்கும் முன்னுணர்த்தும் பின்னுணர்த்தும் என்று முடித்துக்கொள்க.

மெய்ஞ்ஞானந் தானே விளையும் என்பதில் விளைவிக்கு மென்ற பொருளையுடைய விவ்விகுதி தொக்கு நின்றது. இது "அரசன் எடுத்த ஆல யம்"என்றவிடத்து அரசன் எடுப்பித்த ஆலயம் என்றுகொள்வதுபோலாம். எடுத்தல் என்பது கட்டுதல்; இது தன்வினை. எடுப்பித்தலென்பது கட்டுவித் தல்; இது பிறவினை.

தானேவிளையும் என்பதற்குத் தன்மையில் நின்றவாறே விளைவிப்பன் என்று கூறிய இப்பொருளேயன்றி, எளிதாகப் பாகப்படுதலை நோக்கி அரிசி தானே பாகமாயிற்று என்றாற்போல, விஞ்ஞானகலர்க்கு உருவத்திருமேனி கொள்ளாமலும் குருவடிவின் மறையாமலும்உள்நின்றவாறே மெய்ஞ்ஞானம் விளைவிக்கப்படுதல் நோக்கித் தானே விளையும் என்று கூறினர் எனினும் பொருந்தும். இக்கருத்துப்பற்றியே போற்றிப் பஃறொடை வரி கூக-ல் "உண்ணின் றறுத்தருளி"என்றார்புடைநூலாசிரியரும்.

அஞ்ஞான மென்றது ஆணவத்தைக் குறிக்குமாயினும் இச்செய்யுளில் சகலர்க்கே அடையாகக் கூறியதனால் அவிச்சையைக் குறித்ததெனஅறிக. அவிச்சையாவது மாயாமலத்தின் காரியமான மயக்கம். ஆகவே, இவ்விடத் துஅஞ்ஞானம் என்றது மாயாமலம் என்றபடியாம்.

அஞ்ஞான அச்சகல ரென்றதில் அகரச்சுட்டு முதலதிகரணத்து முதல் வெண்பாவில் தவஞ்செய்தா ரென்று கூறப்பட்ட சகலரைச் சுட் டியவாறாம்.

அக்குருவென்றதில் அகரச்சுட்டு இவ்வதிகரணத்து மேற்கோளிற் கூறிய குருவைச் சுட்டியவாறாம்.

தானே விளையும் முன்னுணர்த்தும் பின்னுணர்த்தும் என்றதனால் குருவின்றியும் ஞானம் நிகழுமென்பாரை மறுத்து, விஞ்ஞானகலர்க்குத் தன்மையினும் பிரளயாகலர்க்கு முன்னிலையினும் சகலர்க்குப் படர்க்கையி னும் நின்று உணர்த்துமென வரையறுத்தவாறு அறிக. இவ்வாறு உணர்த் தும் வேறுபாடு மூன்றனுள், விஞ்ஞானகலர்க்குக் கொள்ளும் அறிவுத்திரு மேனியும் பிரளயாகலருக்குக் கொள்ளும் உருவத் திருமேனியும் முதல்வ

னுக்குச் சுதந்திரமாதலால் அவ்விரண்டும் நிராதார மெனப்படும். சகலர்க்கு அவர் வடிவுபோன்ற வடிவத்தை ஆதாரமாகக் கொண்டு நிற்றலால் அது சாதார மெனப்படும். நிராதாரமாய் நின்றுணர்த்துவதை நிராதார தீக்கை எனவும், சாதாரமாய் நின்றுணர்த்துவதைச் சாதார தீக்கை எனவுங் கூறப்படும். நிராதாரமென்பது ஆதாரமில்லாதது. சாதாரமென்பது ஆதாரத்தோடு கூடியது. தீக்ஷையின் முறைகளும் பாகுபாடுகளும் விஞ்ஞானகலர் முதலாக உயிர்களை வகுத்ததன் காரணமும் சிவஞான சித்தியார் எட்டாஞ் சூத்திரம் உ முதல் ௬ வரையுள்ள செய்யுட்களின் விசேட உரையில் விளக்கியிருக்கின்றோம். அவ்விடத்துக் காண்க.

முதல்வன் மூன்றுவகையாய் நின்று உணர்த்து
தற்குக் காரணங் காட்டும்
உதாரணம்.

அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்
செறியுமா முன்பின் குறைக—ணெறியிற்
குறையுடைய சொற்கோள்ளார் கோள்பவத்தின் வீடேன்
குறைவில்சகன் சூழ்கோள் பவர்க்கு.

சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், விஞ்ஞானகலர் முதலிய மூவர்க்கும் ஓரியல்பா னுணர்த்தாது அவ்வாறு தன்மையினும் முன்னிலையினும் பின்னிலையினுமா யுணர்த்துதல் எற்றுக் கென்பாரை நோக்கிக் காரணங் கூறி அதனை வலியுறுத்து நுதலிற்று.

(இ-ள்.) உளங்கள் நெறியின் அறிவிக்க அன்றி அறியா—உயிர்களெல்லாந் தமக்குரிய படிவழியின் வைத்து முதல்வனறிவிக்க அறியும் இயல்பின வன்றி ஒன்றுபோல் அறிவிக்க வறியுமியல்பினவல்ல ஆகலான்,—குறைவு இல் சகன் சூழ் கொள்பவர்க்கு—அவ்வறிவாற் குறைபாடில்லாத சகக்கடவுளது உபதேச மொழியைக்கொண் டுணரு மியல்பினராகிய பிரளயாகலர் சகலர்க்கு,—குறைகள் முன்பின் செறியுமாம்—அவ்வறிவித்தா லறிதலாகிய குறைகள் முன்னிலையினும் பின்னிலையினு நிகழ்வனவாம்,—குறை உடைய சொல் கொள்ளார் கொள்பவத்தின் வீடு (ஆம்) என்—குறைவில் சகனுலாகிய குறையினையுடைய உபதேசமொழிகொண் டுணர வேண்டாத விஞ்ஞானகலர்க்கு முதல்வனுற் கொள்ளப்பட்ட தன்னுண்மை மாத்திரையின் வீடுபயக்கு முணர்வுண்டென்றறிவாயாக எ-று

குறை இன்றியமையாமைப்பொருள்; அது "வினைக்குறை தீர்ந்தாரிற் றீர்ந்தன்றுலகு" என்பதனுட் பரிமேலழக ருரையானு முணர்க. பவம், சம்பவம், உண்மை என்பன ஒருபொருட் கிளவி. வீடுபயக்கு முணர்வை வீடென்றும், சூழ்ச்சி பயக்கு முபதேச மொழியைச் சூழென்றுங் காரண காரியமாக உபசரிக்கப்பட்டன. கொள்பவர் கொள்ளா ரென்பனவும் அவை. கொள்ளார்க் கென்னு நான்கனுருபு விகாரத்தாற் றொக்கது. "ஐந்தவித்தானாற்றல்" என்புழிப் போல. ஆம் வீடெனவுமியையும். வீடாமெனப் பாட மோதுவாரு முளர்.

மேலைவெண்பாவின் முன்னுணர்த்தும் பின்னுணர்த்துந் தானேவினையுமெனக் கூறியவற்றை ஈண்டு நெறியினறிவிக்கவன்றி யறியா வாகலான் அது முன்செறியும் பின் செறியும் பவத்தினு மெனக்காரணங் காட்டி வலியுறுத்தினார். இதற்குப் பிறரெல்லாம் தத்தமக்குவேண்டியவாறே மேலைவெண்பாவோடு இயைபற உரைத்தார். அல்லதூஉம் அறிவிக்கவன்றி அறியாமை உபதேசி யாயென ஆன்மாவின் றன்னியல்பு கூறும் வழிப் பெறப்பட்டதாத லின், அதனை ஈண்டும் புனருத்தியாகக் கூறவேண்டாமையின் மேலது வலியுறுத்துதற் கேற்புடைய அறிவிக்க அறிதற்கட்படும் விசேட மாத்திரையே ஈண்டெடுத் தோதினா ரென்றுணர்க. படி வழியின் வைத்தறிவிக்க வன்றி அறியாமை "பந்தமும் பிரிவுந் தெரிபொருட் பனுவற் படிவழி சென்றுசென் றேறி" என்பத னானும் அறிக.

## விளக்கம்.

கொண்டு கூட்டு. உளங்கள் நெறியின் அறிவிக்க வன்றி அறியா குறைவு இல் சகன் சூழ் கொள்பவர்க்கு குறைகள் முன்பின் செறியுமாம் குறை உடைய சொல் கொள்ளார் கொள் பவத்தின் வீடு (ஆம்) என்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ வெனின், விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் ஆகிய மூவர்க்கும் கடவுள் குருவுமாய் வந்து உணர்த்து மிடத்து ஒன்றுபோல் உணர்த்தாது மேலை வெண்பாவிற் கூறியவாறு விஞ்ஞானகலர்க்குத் தன்மையினும் பிரளயாகலர்க்கு முன்னிலையினும் சகலர்க்குப பின்னிலையாகிய படர்க்கையினும் நின்று உணர்த்துதற்கு என்னகாரணம் என்பாரை நோக்கிப்படிமுறையானன்றி அறியமாட்டாமையே காரணமெனக்கூறி முதல் குருவுமாய் உணர்த்து மென்ற மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை) உயிர்களெல்லாந் தமக்குரிய பக்குவமுறையில்வைத்து முதல்வனறிவிக்க அறியுந் தன்மையையுடையன; அவ்வாறன்றி எல்லா உயிர்களும் ஒன்றுபோல் அறிவித்தால் அறியுந்தன்மையை உடையனவல்ல, ஆதலால், அறிவித்தாலறியக் கூடிய குறைபாடு உடையஅறிவின்றித் தானேயறியும் இயல்புடைய உலககருத்தாவாகிய உருவத் திருமேனிஉடைய கடவுளாலும் குருமூர்த்தியாலும் உபதேசமொழியைக்கொண்டு உணருந் தன்மையாகிய குறையுடைய பிரளயாகலருக்கும் சகலருக்கும் அவ்வுபதேச மொழிகள் முன்னிலையினும் பின்னிலையினும் நிகழ்வனவாம் உருவத்திரு மேனியுடைய கடவுளாலும் குருவாலும் உபதேசிக்கப்பட்டு அறியவேண்டிய குறையிலலாத விஞ்ஞானகலருக்கு முதல்வன் உண்மைத் திருமேனியாகிய அறிவுருவால் வீட்டைத் தருதற்குரிய அறிவு உண்டாமென்று அறிவாயாக எ-று

(க-ரை) உயிர்கள் அவரவர்க்குரிய பக்குவத்திற் கேற்றவாறு அறிவித்தாலறியுந் தன்மையுடையன ஆதலால் விஞ்ஞானகலர்க்கு அறிவுக்குள் அறிவாய் உள் நின்றும், பிரளயாகலருக்கு உருவத் திருமேனி கொண்டு முன்னின்றும், சகலருக்கு அச்சகலர் வடிவுபோன்ற வடிவில் மறைந்து பின்னின்றும் இறைவன் உபதேசிப்பன் என்பதாம்.

முன்பின் குறைகள் என்றவிடத்தும் குறையுடைய சொல் என்றவிடத்தும் குறைவில்சகன் என்றவிடத்தும் குறை யென்பது அறிவித்தாலன்றி அறிவு நிகழாத இன்றியமையாமையை குறித்து நின்றது இவ்வாறு ஒன்றை இன்றியமையாமை குறைபாகும் எனபதைத் திருக்குறள் ஆள்வினை யுடைமை அதிகாரத்தில் உ-வது பாட்டில் "வினைக்குறை தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு" என்பதற்குப் பரிமேலழகர் வினையாகிய குறையைச் செய்யாது விட்டவரை உலகம் விட்டது என உரைகூறி, குறை இன்றியமையாமைப் பொருள் என்று விளக்கிய வாற்றானும் அறிக அதாவது இன்றியமையாத முயற்சி யென்னுங் குறையை விட்டவரை உலகம் விட்டது என்பதாம்

பவம், சமபவம், உண்மை என்பன ஒரு பொருளைத் தரும் சொல்லாதலால் கொளபவத்தின் எனபதற்குக் கொள்ளப்பட்ட உண்மை மாத்திரையில் என்று உரை செய்யப்பட்டது இவ்விடத்து உண்மை என்றது அறிவுக்குள் அறிவாய் நின்று அறிவிக்கும் நிராதாரமாகிய சொரூப நிலையினை

கொளபவத்தின் வீடு என்றதில் வீடு என்பது வீட்டைத் தருமுணர்வையும், சூழ் கொளபவர்க்கு என்றதில் சூழ் எனபது சூழ்ச்சியைத் தரும் உபதேச மொழியையும் குறித்து நிற்றலால் உணர்வாகிய காரணம் வீடாகிய காரியமாகவும், உபதேசமாகிய காரணம் சூழ்ச்சியாகிய காரியமாகவும் உபசரிக்கப்படடன, சூழ்ச்சி என்பது நுண்ணறிவு சூழ் கொள்பவர் என்ற விடத்துக் கொள்பவர் என்பதும், சொற்கொள்ளார் என்றவிடத்துக் கொள்

ளார் என்பதும், அவ்வாறே காரணங் காரியமாக உபசரிக்கப்பட்டன. எவ்வாறெனின், பிரளயாகலத்தன்மை சகலத்தன்மை காரணம்; உபதேசங் கொள்ளுதல் காரியம். விஞ்ஞானகலத்தன்மை காரணம்; உபதேசங் கொள்ளாமை காரியம். ஆதலால் பிரளயா கலர் சகலராகிய காரணம் கொள்பவ ரென்னுங் காரியமாகவும், விஞ்ஞானகலராகிய காரணம் கொள்ளா ரென்னுங் காரியமாகவும் உபசரிக்கப்பட்டமை அறிக.

சொற் கொள்ளாரென்றதில் கொள்ளா ரென்பது கொள்ளார்க்கு என்னும் பொருளில் நிற்றலால் அதில் நான்காம் வேற்றுமையுருபு தொகையாயிருந்தது. இது திருக்குறள் நீத்தார்பெருமையில் "ஐந்தவித்தா னாற்றல்" என்றவிடத்து ஆற்றலுக்கு என்னும்பொருளில் நான்காம் வேற்றுமையுருபு தொகையா யிருக்கின்றதுபோலாம்.

ஆம் என்னும் சொல் வருவித்து வீடு ஆம் என உரைக்கப்பட்டது. ஆம் வீடு எனவும் பொருந்தும். வீடென்என்பதையே வீடாம் என்று பாடமோதுவாருமுளர்.

மேலை வெண்பாவில் தானே விளையும் முன்னுணர்த்தும் பின்னுணர்த்துமெனக் கூறி, இவ்வெண்பாவிலும் பவத்தின் ஆம் முன் செறியும் பின் செறியும் என்றமையால் கூறியது கூறலாகிய குற்றமாகாதோ எனின், ஆகாது; எவ்வாறெனின், மேலை வெண்பாவில் உணர்த்து முறைமை மூவகைப் படுமெனக் கூறி, அவ்வாறு மூவகையாக உணர்த்துதற்குக் காரணம் என்னை என்னும் ஐயத்தை நீக்குதற்கு, நெறியின் அறிவிக்க அன்றி அறியா ஆகலான் என்னுங் காரணங்காட்டி, ஆதலால் அறிவிக்க அறியும் உயிர்களின் அறிவு பவத்தின் ஆம் முன் செறியும் பின் செறியும் என வலியுறுத்தியவாறென அறிக.

இவ்வாறன்றி இவ்வெண்பாவிற்குப் பிறர் வேறு விதமாக உரை கூறுவர். அதுவருமாறு— உளங்கள் அறிவிக்க அன்றி அறியா—ஆன்மாக்கள் அறிவித்தாலன்றி அறியா ஆகலான்,—நெறியில் முன்பின் குறைகள் செறியுமாம்—அவ்வான்மாக்களுக்கு அறிவிக்க எழுந்த நூல்களுள் சித்தாந்தமல்லாத ஏனைய நூலகளெல்லாம் அவ்வச்சமய நெறியை முன் கூறியபடி பின் கூறாது மாறுபடுங் குறைகள் நிறைந்திருப்பன ஆதலால்,—குறையுடைய சொற்கொள்ளார்—அக்குறைபாடுடைய நூல்களைக் கொள்ளாது,—குறைவில் சகன் சூழ் கொள்பவர்க்கு—குறைபாடில்லாத முதல்வனது சித்தாந்த நூல்களைக் கொள்பவர்க்கு,—கொள்பவத்தின் வீடு ஆம்—கொண்ட பிறவியிற்றானே வீடுபேறும் என்பதாம். இவ்வுரை மேலை வெண்பாவோடு சம்பந்த மில்லை. ஆதலால் பொருந்தாது. அன்றியும் அறிவிக்க அன்றி அறியாமை ஆன்மாவின் தன்னியல்பு கூறிய ஏழாஞ் சூத்திரம் மூன்றும் அதிகரணத்தில் உபதேசியாய் என்றதனாலேயே பெறப்பட்டது. அதனை இவ்விடத்தும் கூறியது கூறலாகக் கூறவேண்டாமையால், மேலை வெண்பாவில்

தானே விளையும் முன்னுணர்த்தும் பின்னுணர்த்தும் என்று கூறியதனை வலியுறுத்துதற் கேற்றவாறு அவ்வாறு உணர்த்துதற்குக் காரணம் உணருதலின்கண் உண்டாம் வேறுபாடு எனவும் அவ்வேறுபாடுபற்றிய பவத்தின் ஆம் முன்செறியும்பின் செறியும் எனவும்உணர்வின் விசேட மாத்திரையே இவ்வெண்பாவிற் கூறினு ரென்றுணர்க.

உயிர்கள் தமக்குரிய பக்குவமுறையில்வைத்து அறிவித்தா லன்றி அறியா என்பதைக் கருவூர்த்தேவர் திருவிசைப்பாவில் திருவிடைமருதூர்ப் பதிகம் ஙு-வது செய்யுளில் "பந்தமும் பிரிவுந் தெரி பொருட்பனுவற் படிவழி சென்று சென்றேறி" என்பதனுனும் அறிக.

இவ்வெண்பாவில் குறைவில் சகன் என்றது கனிச்சீராகலின் சீர் சிதையுமாதலால் லகர ஒற்றை நீக்கிக் காய்ச்சீராக்கிக் கொள்க. இது எது போல எனின், "சங்கறுப்ப தெங்கள்குலம்" என்றது போலாம்.

சகலர்க்குக் கடவுள் குருவாய் வருதலில்லை என்பாரை மறுத்து வருமென்பதற்குக் காட்டும்

உதாரணம்.

இல்லா முலைப்பாலுங் கண்ணீரு மேந்திழைபா
னல்லா யுளவாமா னீர்னிழல்போ—லில்லா
வருவாகி நின்றானை யாரறிவார் தானே
யுருவாகித் தோன்றானே லுற்று.

சிற்றுரை.

எ—து உ-ம் எ—னின், அம்முத்திறத்துள் ஈண்டைக் கெடுத்துக்கொண்ட அஞ்ஞான வச்சகலர்க்கு அக்குருவாதல் உபசாரமே யன்றி ஏனையபோ லுண்மையாதல் செல்லா தென்பாரை நோக்கி உண்மையாதலை உவமை முகத்தான் வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) நல்லாய்—அறிவால் நன்மையுடைய மாணாக்கனே,—ஏந்து இழைபால் முலைப்பாலுங் கண்ணீரும் இல்லா உளவாம்—ஏந்திய விழைகளை யுடையாட்குக் (குழவி மாட்டுளதாகிய அருவாகிய அன்பினைப் பிறரறியுமாறு வெளிப்படுத்தும் அவ்வன்பினுருவாகிய) முலைப்பாலுங் கண்ணீரும் (அவள் மாட்டுக் குழவியைக்காணுமுன்) இல்லாவாய்ப் பின்னுளவாம் (அதுபோல);—நீர் நிழல்போல் இல்லா அரு ஆகி நின்றானை ஆர் அறிவார் தானே உருவாகி உற்றுத் தோன்றானேல்,—நீரின்கண் நிழல் போல் (உயிர்கண்மாட்டுப்) புலப்படுத லில்லாது அருவமாய் நின்றமுதல்வனை யார்தாமறிவார்

அவனே குருவடிவாய் வந்து தோன்றிநின்று உணர்த்தானு யின் எ—று.

ஒருவரு மில்லை யென்பதாம். இஃதெடுத்துக்காட்டுவமை. இன்றி யமையாமை யுணர்த்துவார் தோன்றுனே லாரறிவாரென எதிர்மறைமுகத்தாற் கூறினர். பொருளுக் கோதியதனை உவமை யினுங் கூட்டி ஏற்குமாறுரைக்க.

முலைப்பாலுங் கண்ணீரும் அன்பை விளக்குமென்பது "சுரந்த திருமுலைக்கே துய்ய சிவஞானஞ்—சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச்,—சுரந்த—தனமுடையா டென்பாண்டி மாதேவி தாழ்ந்த—மனமுடையா ளன்பிருந்த வாறு"என்பதனுனும், "அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்—புன்கணீர் பூச றரும்" என் பதனுனும் அறிக. அவ்விரண்டும் அன்பின்வடிவே பிறவல்லவென் பது அன்புநிகழ்தற்குரிய காரணமுள்வழி வெளிப்பட்டு அஃதில் வழிவெளிப்படாத ஒற்றுமைநோக்கிக் கண்டுகொள்க. இவ்வொற் றுமை உணர்த்துவார் இல்லாவாயுளவாம் என்றார்.

இல்லா வென்பது முற்றெச்சக் குறிப்பு. ஆல் அசை. நீர், அகத்தியங்கும் உயிர்கட்கு இடங்கொடுத்தல் உண்மையான் நீரின் கண் வெளியுண்டென்பதூஉம், உண்டாகவே, ஆண்டு நீருக்கு நிழ லுண் டென்பதூஉம் பெறப்பட்டன. அந்நிழல், வேறுநில்லாது நீரோடு விரவிநிற்றலின் நீர்போற் புலப்படாதாயிற்று. அதுபோ லச் சிவசைதன்னியமும் யானென்னும் உணர்விற்கு விடயமாய்ப் புலப்படும் ஆன்ம சைதன்னியத்தோடு விரவிப் புலப்படாது நிற்ப தொன்றென்பார் நீர்நிழல்போ லில்லாவருவாகி நின்றனை என்றார்.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு) நல்லாய் ஏந்து இழைபால் முலைப்பாலும் கண்ணீ ரும் இல்லா உளஆம் நீர் நிழல்போல் இல்லா அரு ஆகி நின்றனை ஆரறி வார் தானே உருவாகி உற்றுத் தோன்றுனேல்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோ வெனின், முதல்வன, தன்மை யினும் முன்னிலையினும் பின்னிலையாகிய படர்க்கையினும் நின்று உணர் த்துவன் என்று மேற்கூறிய அம்மூன்று வகையுள், இவ்விடத்தில் எடுத்துக் கொண்ட மாயாமலத்தை யுடைய சகலவர்க்கத்து உயிர்களுக்குக் குருவாய் வருதல் முதல்வன் என்பது உபசாரமேயன்றி விஞ்ஞானகலர் பிரளயா கலர்க்கு முதல்வனே குருவாய் வருதல் போல உண்மை யன்று; எதனுலெ

னின், அறிவுக்குள் அறிவாயும தனக்கே உரிய திருமேனி கொண்டும் வருதலேயன்றி மாயாகாரியமாகிய சரீரத்துடன் கூடி வரமாட்டா னாதலின் என்க. ஆகவே மாயாகாரியத்தோடு கூடி, முதல்வன அருளைபபெற்று, உபதேசிககும ஆற்றலுடன் விளங்கும உயிரை முதல்வன குருவாய வந்தா னெனக கூறுதல உபசாரமேயாகும என இவ்வாறு கூறுவாரை நோககிச் சகலருககு வருஙகுருவும் முதல்வனே என்று மேற்கூறியது உணமையே என்பதை உவமைமுகத்தாற கூறி வலியுறுத்தியவாறும

(பொ-ரை.) அறிவால நன்மையுடைய மாணுக்கனே! தாஙகிய ஆபரணங்களையுடைய பெண ஒருததிககுத தனகுழநதையினிடத்து வைததுள்ள அன்பு பிறருககு வெளிபபடையாய்த தெரியா திருபபினும அவ்வன்பின உருவாய் அவளிடத துணடாகும முலைபபாலுங கணணீரும அவ்வனபைப பிறரறியுமாறு வெளிபபடுததும. அவ்வாறு வெளிபபடுத்தும் அம முலைப பாலுங கணணீரும குழநதையைக காணுமுன் இல்லாதனவாய்க கணடபின் னா உளவாகும். அதுபோல, நீரின்கணணே உள்ள நிழல் வெளிபபட்டு வேறுநிலலாது அநநீருடன் கலநது நிற்றல்போல உயிாகளிடத்து வெளிப பட்டு வேறு நில்லாது கலநது அருவமாய நின்றமுதல்வன், உயிாகளிடத் திற் பககுவங கணடபொழுது வெளிபபட்டுக குருவாயத தோன்றுவன்; பககுவங காணுமுன் தோன்ற மாட்டான்; அவனே குருவடிவாய் வநது தோன்றி நின்று உணாத்தாணுயின் அம்முதல்வனை யாாதாம அறிவாா எ-று.

(க-ரை) தாயினிடததது வெளிபபட்டு விளஙகாத அன்பினை அவ்வன் பினுருவாகிய கணணீரினுலும முலைபபாலினுலும உண்டென்று பிறா அறியுமாறுபோல, உயிாகளிடததது வெளிபபட்டு விளஙகாத முதலவனை அம முதல்வன குருவாய்த திருமேனி கொணடு வந்து உணர்ததுதலால் உண டென்று அறியககூடும் எனபதாம.

குருவாய வநது உணாததாணுயின் யாாதாம அறிவாா எனறதனுல் அவ் வாறு உணாத்தாணுயின ஒருவரு மறிவாரில்லை என்பதாம்.

இச்செய்யுளில் உவமேயமாகிய முதல்வனுககு வெளிபபட்டு விளங காத தனமையையும குருவடிவாகத தோன்றுவதையும கூறி, உவமையாகிய அனபிற்கும வெளிபபட்டு விளஙகாத தனமையையும அது முலைப பால கண ணீா வடிவாகத தோனறுவதையும எடுததுககாட்டினமையால, இது எடுத துககாட்டு உவமை எனனும அலஙகாரம

முதலவனை அறியவேணடுமாயின அவன குருவடிவாயத தோனற வேண்டும. இலலையாயின அறிய முடியாது எனபதை வற்புறுததவேணடித தோனறுனேல் யாாறிவாா என எதிாமறை முகததாற் கூறினுா

முதல்வனுக்குச் சொல்லிய நீர் நிழல்போல் என்றதனை உவமையாகிய அன்பிற்குங் கூட்டி ஏற்குமாறு உரைக்க. ஏற்குமாறு உரைக்க என்றதனால் முற்றும் முதல்வனுக்குக் கூறியதுபோல் கூற வேண்டுமென்பது கருத்து. அதாவது—நீரின்கண் நிழல் அந்நீரின் வேறாய் வெளிப்பட்டுத் தோன்றாமல் அந்நீருடன் கலந்து நிற்றல்போல முதல்வன் உயிரின் வேறாய்த் தோன்றாமல் அவ்வுயிருடன் கலந்து நிற்பன். அவ்வாறே அன்பும் தாயின் வேறாய்த் தோன்றாமல் அத்தாயுடன் கலந்து நிற்கும். நீரினிடத்து நிழல் எப்பொழுது மிருப்பது போல உயிரினிடத்து முதல்வன் எப்பொழுதும இருப்பன். அவ்வாறே தாயினிடத்து அன்பு எப்பொழுதும் இருக்குமென்பதாம்.

தனத்திலுண்டாகும் பாலும் கண்ணிலுண்டாகும் நீரும் உள்ளத்தின்கணுள்ள அன்பை விளக்குமென்பதைத் திருக்களிற்றுப் படியார் ருசு-வது செய்யுளில் "அம்மையினுடைய திருமுலைப்பால் உண்டார் திருஞானசம்பந்தப்பிள்ளையார் என்றுசொல்லக்கேட்ட பாண்டிமாதேவியாருக்குத் தனத்திலிருந்து பால்சுரந்து தாம்; என்னே பாண்டிமாதேவியின் அன்பிருந்தவாறு" என்று கூறி யிருத்தலானும், திருக்குறள் அன்புடைமை அதிகாரம் க-வது பாட்டில், "அன்பைப் பிறரறிய வொட்டாது அடைத்து வைத்திருக்குந் தாழுளதோ? அன்புடைய வரிடத்துண்டாகும் கண்ணீரே அவ்வன்பை யாவருமறியும்படி தூற்றும்" என்று கூறியிருத்தலானு மறிக.

முலைப்பாலும் கண்ணீரும் அன்பின் வடிவேயன்றி வேறல்லவென்பதை அன்பு வெளிப்படுதற்குக் காரணமாகிய குழந்தையைக் கண்டவிடத்துத் தோன்றிக் குழந்தையைக் காணாதவிடத்துத் தோன்றாத ஒற்றுமை நோக்கிக் கண்டுகொள்க.

குழந்தையாகிய காரணத்தைக் காணாதவிடத்து வெளிப்பட்டுத் தோன்றாத காரியமாகிய அன்பு அக்காரணத்தைக் கண்டவிடத்துக் கண்ணீரும் பாலுமாக வெளிப்பட்டுத் தோன்றுதலால் அவை மூன்றுந் தம்முளொற்றுமை யுடையனவென்பதறிக.

இவ்வொற்றுமையையுணர்த்தவேண்டியே அன்பு இல்லையாயின் முலைப்பாலுங் கண்ணீரும் இல்லாவாய், அன்பு உளதாயின் அவ்விரண்டு முளவாம் எனச் செய்யுளிற் கூறாது முலைப்பாலுங் கண்ணீரும் இல்லாவாய் உளவாம்என்றார்.

முன்னுள்ள இல்லாஎன்பது இல்லாதன என்னும் பொருளைக்குறித்து முற்றாயும், இல்லாதன ஆகி என்னும் பொருளைக் குறித்து உளவாம் என்பது கொண்டு முடியவேண்டிய எச்சமாயும், வினைக் குறிப்பாயும் நிற்றலால், முற்றெச்சக் குறிப்பு. பின்னுள்ள இல்லா என்பது அருவாகி நின்றான் என்பது கொண்டு முடியவேண்டிய எச்சமாய் நின்றது.

உ-ளவாம் ஆல் என்பதிலுள்ள ஆல் அசை.

ஒரு பொருளின் நிழல் அப்பொருளின் வேறாகக் காணப்படுவதாகும். நீரினிடத்துள்ள நிழல் அந்நீரின் வேறாய்க் காணப்படுவதில்லை. ஆதலால் நீருக்கு நிழலுண்டென்றல் எவ்வாறு கூடுமெனின், நீரானது தன்னுள்ளே சஞ்சரித்துக்கொண்டிருக்கும் உயிர்கட்கு இடங்கொடுப்பதாய்க் காணப்படுகின்றது. அதனால் இடங் கொடுக்கும்படியான வெளி உண்டென்று கருதப்படும். வெளி உண்டாகவே, அவ்வெளியில் நீரின் நிழல் உண்டு என அறிக. அந்நிழல் ஏனைப்பொருள்களின் நிழல் வேறு நிற்பதுபோல் நீரின வேறாய் நிற்பதின்றி அந்நீரோடு கலந்து நிற்றலால் நீர்வெளிப்பட்டு விளங்குவதுபோல் அதன் நிழல் வெளிப்பட்டு விளங்காதாயிற்று.

அவ்வாறே சிவசைதன்னியமும், யான்என்னும் அறிவிற்குப் பொருளாகிய ஆன்மசைதன்னியத்தோடு கலந்து நிற்பதாகும் என்பதை உணர்த்த வேண்டி வேறு உவமை கூறாது நீர் நிழல்போல் இல்லா அருவாகி நின்றானை என்றார்.

இரண்டாம் அதிகாரணம் முற்றிற்று.



# மூன்றும் அதிகரணம்.



ஐம்பொறிகள் தத்துவஞானத்தை விளக்காது மறைக்குமெனக் கூறும்

மேற்கோள்.

இனி இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மையுணரா வென்றது.

## சிற்றுரை.

என்-து மே-ள் எ-ளின், விடய ஞானத்தை விளக்கும் ஐம்பொறிகளே தத்துவ ஞானத்தை விளக்குதற்கு மறைக்கும். தம்முதல் குருவுமாதல்வேண்டாமெனச் சிவசங்கிராந்தவாதசைவர் மதம் பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் மூன்றாங் கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடலுதலிற்று. இவ்வாறுரையாக்கால் இனியென்பதனு னுணர்த்தப்படுமேலையதிகாரணத்தோடுளதாகிய இயைபு பெறப்படாமை அறிக.

இ-ள் வெ-டை.

சுப்பிரமணியதேசிகர் உரை.

(இ-ள்.) இவ்வான்மாக்கள்—உணர்த்த உணருமியல்பினையுடைய உயிர்கள்,— ஐயுணர்வுகளால—ஐம்பொறிகளால்,—மயங்கி— மயக்கமுற்று.— தம்மை— தமதுசொரூபத்தை,— உணராவென்றது—அறியா எ-று.

## சிற்றுரை.

உணர்வு ஆகுபெயர்.

## விளக்கம்.

இம்மேற்கோள் சூச்திரத்திலுள்ள ஐம்புலவேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனை என்னும் மூன்றாங் கூற்றைப் பதச்சேதஞ்செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்னசொல்லிற்றோ வெனின், உலகப்பொருள்களை அறியும் அறிவை மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் ஐம்பொறிகளே பசுகரணங்களாய் நின்று விளக்குவதால் அந்த ஐம்பொறிகளே சிவகரணமாய் நின்று தத்துவ ஞானத்தையும் விளக்குதற்குக் கூடும். ஆதலால் தத்துவ ஞானத்தை விளக்குதற்கு இரண்டாம் அதிகரணத்தின்படி தமது முதல்வன் குருவுமாய் வருதல் வேண்டாம் என்பர் சிவசங்கிராந்தவாதிகள். அவர் கூற்றை ஆசங்கித்துக்கொண்டு சூத்திரத்தின் மூன்றாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து ஐம்பொறிகள் தத்துவஞானத்தை விளக்காதெனக் கூறிய வாறாம்.

இவ்வாறு இம்மேற்கோளை ஐம்பொறிகளே தத்துவஞானத்தை விளக்கக்கூடும் குருவேண்டாம் என்ற சங்கைக்கு உத்தரமாக்காமல் குருவாய் வந்து உணர்த்தினும் ஐம்பொறிகளால் மயங்கியவிடத்து உணருமோ என்னுஞ் சங்கைக்கு உத்தரமாகக் கூறின், இனி என்னுஞ் சொல்லால் மேலையதிகரணத்தோடு சம்பந்தம் பெறப்படாமையால் அவ்வாறு கூறுதல் பொருந்தாது. முன் சொல்லியதனோடு சம்பந்தமுடைய பிறிதொன்றைச் சொல்லுங்கால் இனி என்று ஆரம்பஞ் செய்யபபடும். மேலையதிகரணத்தில் குருவாய்வந்து ஞானத்தை உணர்த்தும் எனக்கூறி யிருப்பதால் இதில் குருவாய் வந்து உணர்த்தவேண்டாம் ஐம்பொறிகளே விளக்கும் என்றசங்கை சம்பந்தமுடையதாம். அவ்வாறின்றி இந்தியங்களால் மயங்கியவிடத்து உணருமோ என்பது உயிரின்றன்மையைக் குறித்த வேறு விஷயமாய் முன்னர் உதாரணத்துள் அடங்குதலின் இவ்விடத்துச் சம்பந்தமாகாமை யறிக.

இவ்வதிகரணத்தில் ஐம்பொறிகள் தத்துவ ஞானத்தை மறைக்குமோ விளக்குமோ என்பது ஐயப்பாடு விளக்குமென்பது பிறர்பக்கம் என அறிக

(இம்மேற்கோளின் பொருள்.) தானே அறியும் இயல்பின்றிப் பிறி தொன்று அறிவிக்க அறியும் இயல்பினையுடைய உயிர்கள் ஐம்பொறிகளால் மயக்கத்தை அடைந்து அதனால் தமது சொரூபத்தை அறியா எ-று.

மேற்கோளில் ஐயுணர்வு என்றது ஐயுணர்வைச் செய்யும் ஐம்பொறி களுக்காதலால் ஆகுபெயர்.

ஐம்பொறிகள் தத்துவஞானத்தை விளக்காது
மறைக்கும் என்பதற்குக் காட்டும்

ஏது.

**அவைதாம் பளிங்கிலிட்ட வன்னம்போற் காட்டிற்றைக் காட்டி நிற்றலான்.**

## சிற்றுரை.

எ—து ஏது எ—னின், அறிவை விளக்குங் கருவியான்மயக்கம் நிகழுமாறு யாங்ஙன மென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

(இ-ள்.) படிகத்தின் வைத்த பலவேறு வகைப்பட்ட நிறங்கள் அப்படிக ஒளியைக் கீழ்ப்படுத்துத்தத் தம்மியல்பினையே விளக்கி நிற்குமாறுபோல, அவ்வைம்பொறிகடாம் ஆன்ம சொரூபத்தைக் கீழ்ப்படுத்துத் தம்மாற் காட்டப்பட்ட தத்தம்விடயமாத்திரையே அவ்வான்மாவுக்குக் காட்டி நிற்பன வாகலான் 'இனி இவ்வான்மாக் கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மையுணரா' வெனமேற் கொண் டது எ—று.

விடயங்களுள்ளும் அவ்வவ்விடய மாத்திரையே அவ்வவ் விந் திரியங் காட்டவல்லு மென்பார் காட்டிற்றை என ஒன்றறிசொல் லாற் கூறினார்.

## விளக்கம்.

இந்த ஏது என்னசொல்லிற்றோ வெனின், ஐம்பொறிகள் ஆன்மா விற்கு அறிவை விளக்குங் கருவியாய் இருக்கவும், அந்த ஐம்பொறிகளால் மயக்கம் நிகழுமென்று மேற்கோள் கூறியது எவ்வாறு கூடு மென்பாரை நோக்கி, ஐம்பொறிகள் அறிவை விளக்குமாயினும், அவ்விளக்கம் விடய விளக்கமேயன்றி ஆன்மாவின் உண்மை விளக்கம் அன்று எனவும், அவ்விட யவிளக்கமும் ஒவ்வொரு இந்திரியத்தால் ஒவ்வொரு விடயம் விளங்குமென வுங் கூறி ஐம்பொறிகளால் மயங்கித் தம்மை யுணராவென்னும் மேற்கோளை வலியுறுத்திய வாறும்

(இந்த ஏதுவின் பொருள்.) படிகத்தினிடத்துப்பதிந்த பலவேறுவகைப் பட்ட நிறங்கள் அப்படிக ஒளியைக்கீழ்ப்படுத்தித் தத்தம் நிறங்களையே காட்டி நிற்குமாறுபோல, ஆன்மாவினிடத்துக் கருவியாய் இருக்கும் ஐம்பொறிகள் அவ்வான்மசொரூபத்தைக் கீழ்ப்படுத்தி எந்த எந்த இந்திரியம் எந்த எந்த விடயத்தை விளக்கக்கூடுமோ அந்த அந்த இந்திரியம் அந்த அந்த விடயத்தையே அவ்வான்மாவுக்குக் காட்டி நிற்பனவாம். ஆதலால் இனி இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மையுணராவென மேற்கோள் கூறியது எ-று.

விடயங்களுள்ளும் எல்லாவிடயங்களையும் எல்லா இந்திரியங்களும் காட்டமாட்டா. ஒவ்வொரு இந்திரியமும் அதற்குரிய ஒவ்வொரு விடயத்தையே காட்டும். அதாவது கண் உருவத்தையே காட்டும்; ஓசை முதலியவற்றைக் காட்டாது. இவ்வாறே பிற இந்திரியங்களுமாம். ஆதலால் ஒரு இந்திரியம் ஒரு விடயத்தையே காட்டுமென்பதை அறிவிக்கவேண்டி ஏதுவில் காட்டிற்றை என ஒருமை வாசகத்தாற் கூறினர். கூறவே ஒன்று அறிந்தது ஒன்று அறியாதாயும் ஆன்மாவின் இயல்பை மயக்கி விடயக் காட்சிக்கே ஏதுவாயும் உள்ள ஐம்பொறிகளால் ஆன்மாவினியல்பு விளங்குமாறில்லை யாதலால் ஆன்மசொரூபத்தை யுணர்த்துதற்குக் குருவேண்டுமென மேலையதிகரணத்தை வலியுறுத்தியவாறு அறிக.

இந்த ஏது, ஐம்பொறிகள் தத்துவஞானத்தை விளக்கும் என்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

ஐம்பொறிகளோடு கூடியவிடத்தும் ஞானத்தை யடைதற்கு உபாயங்கூறி
ஐம்பொறிகள் தத்துவஞானத்தை விளக்காது மறைக்கும்
என்பதை வலியுறுத்தும்
உதாரணம்.

பன்னிறங் காட்டும் படிகம்போ லிந்திரியந்
தன்னிறமே காட்டுந் தகைநினைந்து—பன்னிறத்துப் [டான்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்
மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு.

சிற்றுரை.

எ-து உ-ம் எ-னின், அங்ஙனங் காட்டிற்றையே காட்டிநிற்குமாயின் அவ்விந்திரியங்கள் உள்வழித் தம்முதல் குருவுமா யுணர்த்தினும் உணர்தல் செல்லாதுபோலுமென்பாரை நோக்கி உணர்தற்குபாயங் கூறி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) பல் நிறம் காட்டும் படிகம் போல் இந்திரியம் தன் னிறமே காட்டும் தகைநினைந்து—(தன்னூற் சாரப்பட்ட) பன்னிறங் களினியல்பே தன் மாட்டுக் காட்டி நிற்கும் (பொது வியல்புடைய) படிகம்போலத் (தன்னூற் சாரப்பட்ட) இந்திரியங்களி னியல்பை யே (சார்ந்ததன் வண்ணமாய்த்) தன்மாட்டு விளக்கி நிற்குந்தனது பொதுவியல்பை (முன்னர்ச்) சிந்தித்தறிந்து கொண்டு (பின்பு),—பல்நிறத்துப் பொய்ப்புலனை வேறு உணர்ந்து—(அந்நிறங்கள் படி கத்துக்கு வேறென் றறியுமாறுபோலப், பலவகை இயல்புடைய பொதுவியல்பைச் செய்யும் பொறிகளைத் (தன்னின்) வேறெனத் தெளிந்து,—பொய் பொய்பா மெய் கண்டான்—(அவற்றானாய) அப்பொதுவியல்பு பொய்யா யொழியுமாறு (தனது)சிறப்பியல்பை உணர்ந்தானாயின்,—வேறு மெய்ப் பொருட்குத் தைவமும் ஆம்—(அவ்வசத்தாகிய பொறிகளுக்கு) வேறாகிய (சிவசத்தின தியல்பு தன்மாட்டு விளங்கச்செய்யு மாகலின்) அச்சிவசத்துக் சடிமை யாம் எ—று.

ஈண்டுப் பொய் மெய்யெனப்பட்டன அப்பொருளவாதல் மேலே காட்டினும். தைவமென்பது தேவனதுடைமை யென்னும் பொருட்டாய வடமொழிப் பகுபதம். இதனானே கருவிகளுள் வழிக் காட்டிற்றைக் காட்டி நிற்றலின் அறிதல் செல்லாது, அவை நீங்கியவழிக் கேவலமாய் முடியுமாதலிற் றன்னுண்மை யறியுமாறு யாங்ஙன மென்னுங் கடாவை யாசங்கித்து அவையுள்வழியே தன்னுண்மை யறிதற் குபாயங் கூறி இதுபற்றி அவை காட்டிற் றைக் காட்டி நிற்றற் கிழுக்கில்லை யென வலியுறுத்த வாறுமென்க. மெய்ப் பொருட்குத் தைவமாமென்றதனால் வருகின்ற அதிகரண த்திற்குத் தோற்றுவாய் செய்தவாறு.

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ வெனின், ஏதுவிற் கூறியவாறு ஐம்பொறிகள் தத்தம் விடயத்தையே ஆன்மாக்களுக்குக் காட்டி நிற்குமா யின், அவ்விந்திரியங்கள் உள்ள விடத்து முதலதிகரணத்திற் கூறியவாறு தமது முதல் குருவாய் வந்துணர்த்தினும் தன்னுண்மை உணர்தல் கூடாது போலும் என்பாரை நோக்கி, அவ்விந்திரியங்கள் உள்ளவிடத்தும் தன்னுண் மையுணர்தற்கு உபாயங் கூறி ஏதுவை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை) பளிங்குக கல்லினிடத்துப் பொருந்திய பலநிறங்களின் தன்மையையே அபபளிங்குக்கல் தன்னிடத்துக் காட்டிநிற்கும். நிறங்களின்

தன்மை பளிங்கினிடத்தில் விளங்குவது பளிங்குககுப் பொதுவியல்பு. இப்பொதுவியல்புடைய படிகம்போல ஆன்மாவினிடத்துப் பொருந்திய இந்திரியங்களின் தன்மையையே அவ்வான்மா தன்னிடத்தில் விளக்கிநிற்கும். இவ்வாறு சார்ந்த இந்திரியத்தின் வண்ணமாய் நிற்றல் ஆன்மாவுக்குப் பொதுவியல்பு. இப்பொதுவியல்பை முன்னர்ச்சிந்தித்து அறிந்துகொண்டு பின்னர்ப் பளிங்கினிடத்திற் றோன்றிய அந்நிறங்கள் பளிங்குக்கு வேறென்று அறியுமாறுபோல, பலவேறுவகையான தன்மையுடைய அப்பொதுவியல்பை யுண்டுபண்ணும் இந்திரியங்களை அவ்வான்மாத் தன்னின்வேறெனத் தெளிந்து அந்த இந்திரியங்களினு லுண்டாகிய அப்பொது இயல்பு பொய்யா யொழியுமாறு தனது சிறப்பியல்பை உணர்ந்தானாயின், அவ்வுணர்ச்சி, பொதுவியல்பை யுண்டு பண்ணும் அசத்தாகிய அந்த இந்திரியங்களுக்குவேறாகிய சிவசத்தினியல்பு தன்னிடத்து விளங்கச் செய்யும். அவ்வாறு விளங்குதலால் ஆன்மா அச்சிவமாகிய சத்துக்கு அடிமையாம் எ-று.

(க-ரை.) படிகத்திற் காணப்படும் நிறங்களின் தன்மையைப் படிகத்திற்கு வேறென்று அறிவதுபோல, ஆன்மாவிற் காணப்படும் இந்திரியங்களின் தன்மையை ஆன்மாவுக்கு வேறென்று அறியின், அவ்வான்மாவினிடத்துச் சிவமாந்தன்மை விளங்கப் பெற்று அதனால் அவ்வான்மா சிவத்துக்கு அடிமையாகும் என்பதாம்

சிவமாந்தன்மை விளங்கப்பெற்ற சிறப்பியல்பை அடிமையென்று கூறிய கருத்தென்னையெனின், அடிமையாவது அடியவனுந்தன்மை. அதாவது தனக்கென ஒருசெயலுமின்றிக் கருத்தாவின் அருள்வழி அடங்கிநிற்றல். ஆன்மாவானது கருவிகளைக் கழித்தபின்னர்க் கழிக்கப்படாமல் என்றும் உடனாய் நிற்கும் சிவத்துடன் கலந்து நிற்குங்காலத்தும், சிவம் வியாபகமாயும், தான் அச்சிவத்துள் வியாப்பியமாய் அடங்கியும் நின்று சிவனருளளால் சிவானந்தத்தை அனுபவிக்குமாதலால் அச்சிறப்பியல்பை அடிமைத்திறமென்று கூறியதென அறிக. இதனைத் திருக்குறள் மெய்யுணர்தல் அதிகாரத்தில் "சார்புணர்ந்து சார்புகெட" என்ற திருக்குறளில் சார்புணர்ந்து என்பது சிவம் என்றும் உடனாய்நிற்கும் என்பதனையும், சார்புகெட என்பது கருவி முதலியன செயற்கையால் வந்தனவென்பதனையும் வலியுறுத்திச் சார்புணர்ந்து என்ற அதனால் சாரப்படும்பொருளாகிய சிவத்துக்குச் சாரும்பொருளாகிய உயிர் அடிமை என்பதனையும் வலியுறுத்துதலானும் அறிக.

இவ் வுண்மையறியாத ஏகான்மவாதிகள், "பதியாகி யுறைபவனை மாயையெனும் பாசத்தாற் பசுக்களாகி" என்னும் இலிங்கபுராண முதலியவற்றை எடுத்துக்காட்டிச் சிவனே மாயையோடுகூடிச் சீவனாயிற்று; மாயை நீங்கியபின் சிவமாயிருந்தது; இவ்வளவே யன்றி முத்தியினும் சிவத்துக்கு

உயிர் அடிமையென்றல் பொருந்தாதென்பர். இவர்கொள்கையை மேல் ஆண்டாண்டு எடுத்துக்கூறி மறுத்திருக்கின்றமையால் அவற்றை மீட்டுங் கூறாது இலிங்கபுராணக் கருத்தைமட்டும் விளக்குதும். அதுவருமாறு:— பதியாகி யென்றதனால் ஆகி யென்னும் ஆக்கம் பதித்தன்மை முன்னில்லா மையைக் குறித்துநின்றது. குறிக்கவே, பதியைச் சார்ந்ததனால் பதியாகி யென்பது விளங்கும். அவ்வாறாயின் இந்நூலில் 'அவனே தானேயாய்' என்றவிடத்தும், 'அவனே தானே யாகிய' என்றவிடத்தும் ஆகி யென்பது ஆக்கங் குறித்ததோ எனின், அன்று. மற்றென்னையோ எனின், நின்ற இயல்பு குறித்தவாறாமென்க. எதனாலெனின், ஆகிய அந்நெறி என்பதனும், ஆய்நிற்கும் என்பதனானும் என்க. அவ்வாறே பதியாகி என்ற தற்குங் கொள்ளலாகாதோ எனின், ஆகாது. எதனாலெனின், உறைபவனே என வருங்காலத்தாற் கூறுதலாலென்க. அன்றியும், நிறைபவனே என்றாவது ஒளிர்பவனே என்றாவது கூறாது உறைபவனே என்றதனால் பதியானவிடத்தும் அடிமையென்பது இனிது விளங்கக் கிடந்தது. இவ்வா றன்றி இன்னும் ஒருபொருளுங் கூறலாம். அதுவருமாறு:—அநாதி பெத் தத்தும் உயிர் பதியோடு பிரிப்பின்றி நிற்றலை உணர்த்தவேண்டிப் பதி யாகி யுறைபவன் என்றும், அவ்வாறு பிரிப்பின்றி நின்றும், சார்ந்ததன் வண்ணமாந் தன்மையினையுடைய உயிர்கள் பதியின் தன்மையைப்பெற்று இன்புறாது பசுக்களாய்த் துன்புறுதற்குக் காரணம் உணர்த்தவேண்டி மா யையெனும் பாசத்தாற் பசுக்களாகி யென்றுங் கூறினார் என்பதாம். உறை பவன்என ஒருமை வாசகத்தானும் பசுக்களெனப் பன்மை வாசகத்தானுங் கூறிய கருத்தென்னையெனின், கருவிகளோடு கூடிய பெத்தத்தில் உயிர் கள் வேறுவேறாய் விளங்குமாறுபோல, முத்தியில் வேறுவேறாய் விளங்கு மாறில்லை யாதலானும், அநாதிபெத்தத்தும் அவ்வாறேயாதலானும் என்க. ஆகவே, சித்தாந்த சாத்திரங்களும் திருமுறைகளும் ஏனைய புராணங் களும் ஏகான்மவாதத்தைக் கண்டித்து ஓதுகுமென்பது நன்கு தெளிந்து கொள்க.

இவ்வெண்பாவில் பொய் யென்பது பொதுவியல்பையும் மெய்யென் பது சிறப்பியல்பையுங்குறித்து நின்றன. பொய்மெய்யென்பதற்கு இவ வாறு பொருள் கூறலாமென்பது மேல் ஏழாஞ் சூத்திரத்து முதலதிகரண த்து ஏதுவில் காட்டப்பட்டிருக்கின்றது.

சைவமென்பது வடமொழிப் பகுபதம். இது தேவனது உடைமை என்னும் பொருளில் சிவத்துக்கு அடிமை என்றதைக் குறித்துநின்றது. அடிமையும் உடைமையும் என உடைமை இருவகைப்படும். அவற்றுள் அடிமை உயிரையும் உடைமை பாசத்தினையுங் குறிக்கு மாயினும் இவ் விடத்தில் உயிரை உடைமைப்பொருளில் தேவனது உடைமை யென்றது பொதுவாக இரண்டும் உடைமை யென்பது பற்றியென்க

இவ்வெண்பாவினால் கருவிகள் உள்ளவிடத்து அக்கருவிகள் விடயத்தைக் காட்டி நிற்றலின் குருவாய் வந்துணர்த்தினும் உண்மை ஞானத்தை அறிய முடியாது; கருவிகள் நீங்கியவிடத்துக் கேவல அவத்தை வந்து கூடும்; ஆதலால் தன்னுண்மையாகிய உண்மை ஞானத்தை அறிவதெவ்வாறு என்னும் சங்கைக்கு அக்கருவிகள் உள்ளவிடத்தே அவற்றின் இயல்பைப் பொதுவியல் பென்று கண்டொழிக்கும் உபாயத்தால் சிறப்பியல்பாகிய உண்மையை அறியலாமென்று அறிதற்கு உபாயங்கூறி இவ்வுபாயத்தால் அவ்விந்திரியங்கள் காட்டிற்றைக் காட்டி நிற்றற்கு இழுக்கில்லையென ஏதுவை வற்புறுத்தியவாறு அறிக.

மெய்ப்பொருட்குத் தைவமாம் என்று கூறிய இதனால் முதல்வனது சீபாதத்தை அணையுமென்ற நான்காம் அதிகரணத்துக்குத் தோற்றுவாய் செய்தவாறாயிற்று.

மூன்றும் அதிகரணம் முற்றிற்று.

---

# நான்காம் அதிகரணம்.

கருவிகள் நீங்கினவிடத்து உயிர் முதல்வன் திருவடியை
அடையுமெனக் கூறும்
மேற்கோள்.

இனி இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே தமதுமுதல் சீபாதத்தை யணையுமேன்றது.

## சிற்றுரை.

எ-து மே-ள் எ-னின், பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய் பொய்யா மெய்கண்டார்க்கு அதுவே அமையும்; கருவிகள் நீங்கிய வழிச் செய்யக் கடவதொரு முயற்சி கூடாமையின் ஆண்டுமெய்ப் பொருட்குத் தைவமாதல் பெறப்படாதெனப் பேதவாத சைவர் முதலியோர் கூறுங் கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் நான்காங்கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோட ளுதலிற்று.

இ-ள். வெ-டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

(இ-ள்.) இவ்வான்மா—ஐயுணர்வுகளான் மயங்கித் தன்னையுணராதெனப்பட்ட ஆன்மா,—தன்னை—சித்தாய் வியாபகமாகிய தன்னியல்பை,—இந்திரியத்தின்—சடமாய் ஏகதேசமாகிய இந்திரியத்

தின்,—வேறுவான் காணவே—வேறாக உணரும் வியாபக உணர்விற்கு இந்திரியத்தான் ஆகக்கடவ தொன்றின்மையின் சற்குரவனால் அவ்வாறுணரவே,—தமது முதல் போதத்தை—பிறிது காரணம் வேண்டாது தனக்காதாரமாகிய முதல்வனது திருவடியிணே,—அணையும் என்றது—தலைப்படும் எ-று.

## சிற்றுரை.

இந்திரியத்தின் வேறுபவழிக் கேவலத்தை யணைதலும் உண்மையின் அதனை நீக்குதற் பொருட்டு வேறாக வென்றொழியாது வேறுவான் காணவென்றார். காண்டலே அதற்கமையுமென்றலின் ஏகாரம் தோற்றத்தின்கண் வந்தது.

## விளக்கம்.

இம்மேற்கோள் 'விட்டன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே' என்ற சூத்திரத்தின் நான்காங் கூற்றைப் பதச்சேதஞ்செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்னசொல்லிற்றோ வெனின், மூன்றும் அதிகரணத்து வெண்பாவிற் கூறியபடி பொதுவியல்பை உண்டுபண்ணும் இந்திரியங்களைத் தன்னின் வேறெனை அறிந்து அவ்விந்திரியங்களினு லுண்டாகிய பொதுவியல்பு பொய்யாய் ஒழியுமாறு தனது சிறப்பியல்பாகிய மெய்யைக் கண்டவர்க்கு அவ்வாறு காண்டலே போதும்; இந்திரியங்களாகிய கருவிகள் நீங்கின விடத்து ஒரு செயலும் செய்யமுடியாது. ஆதலால் இந்திரியங்களை வேறெனை அறிந்து தனது சிறப்பியல்பை அறிந்த விடத்தில் செயலில்லாத அந்த நிலையில் மெய்ப்பொருளுக்கு அடிமையாதல் கூடாது என்பர் பேதவாத சைவர் முதலியோர். அவர் கூற்றை ஆசங்கித்துச் சூத்திரத்தின் நான்காங்கூற்றைப் பதச்சேதஞ் செய்து இந்திரியங்களைத் தன்னின்வேறெனக்கண்டு நீக்கிய விடத்துமெய்ப் பொருளுக்கு அடிமையாதல் கூடும் எனக் கூறியவாறும்.

இவ்வதிகரணத்தில், இந்திரியங்களில் நின்றும் நீங்கினவிடத்து முதல்வனுக்கு அடிமையாதல் உண்டோஇல்லையோஎன்பது ஐயப்பாடு. இல்லையென்பது பிறர்பக்கம் என அறிக.

(இம் மேற்கோளின் பொருள்.) ஐந்துவித உணர்வைச் செய்யும் இந்திரியங்களால் மயங்கித் தன்னை யுணராதெனை மூன்றும் அதிகரணத்துக் கூறப்பட்ட ஆன்மா, அறிவாயும் வியாபகமாயும் உள்ள தனதுசிறப்பியல்பை, அறிவில்லாததும் ஏகதேசமாயுமுள்ள இந்திரியத்திற்கு வேறெனை உணரின், அவ்வியாபக உணர்விற்கு, வேறெனக் கழித்த இந்திரியத்தால் ஆகக் கூடி

யது ஒன்றுமில்லை. ஆதலால் சற்குருவால் தன்னை இந்திரியங்களின் வேறென உணரவே வேறுகாரணம் வேண்டாது வேறென உணர்ந்த அக்காரணத்தினாலேயே தனக்கு ஆதாரமாகிய முதல்வனது திருவடியை அணையும் எ—று.

இந்திரியத்தின் வேறாகவே முதல்வனது சீபாதத்தை யணையுமென்று கூறியிருந்தாலே போதியதாகவும், வேறாவான் காணவே யென்று கூறியதென்னை யெனின், இந்திரியத்தின் வேறான விடத்துத் தன்னைக்காணுதலில்லாத துரியாதீதமாகிய கேவல அவத்தை வந்து பொருந்து மாதலால், அதனை நீக்குதற் பொருட்டு இந்திரியத்தின் வேறாகத் தன்னைக் காண்டலென்னும் பொருள்தரற்கென்றுணர்க. வேறாகத் தன்னைக்காணும் நிலையில் ஒன்றுங் காணுததுரியாதீதம் பொருந்துமாறில்லை எனஅறிக.

காணவே என்றதிலுள்ள ஏகாரம் தன்னை வேறாகக் காண்டலே காரணமாய் யாதானு மொன்றைப்பற்றி நிற்றலே இயல்பாக உடைய உயிர் முதல்வனது திருவடியை யணையுமென்ற உறுதியைக் குறித்து நிற்றலால் தேற்றம்.

கருவிகள் நீங்கினவிடத்து முதல்வன் திருவடியை உயிர் அணையும் என்பதற்குக் காட்டும்

ஏது.

## ஊசல் கயிறற்றாற் றாய்தரையேயாந் துணையான்.

## சிற்றுரை.

எ—து ஏதுஎ-னின், அவ்வாறு காண்டலே சீபாதத்தை அணைதற்குச்சாலு மென்பது யாங்ஙன மென்பாரை நோக்கிஉவமையின் வைத்துக் காட்டி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) ஒருவன் ஏறியிருந்தாடுதற்கு ஆதாரமான ஊசல் கயிறற்றதாயின் அவனுக்கு உற்றுழி உதவுந்தாய் போல ஆண்டுத்தாரகமாவது நிலனே யன்றிப் பிறிதில்லை யென்னு மொப்புமையான் 'இனி இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேறாவான் காணவே தமது முதல் சீபாதத்தை யணையு'மென மேற்கொண்டது எ-று.

வியாபகப் பொருட்குக் காட்சி விசேடமே நீக்கமாகலின் அறுதல் அதற்கு உவமையாயிற்று.

## விளக்கம்.

இந்தஏது என்ன சொல்லிற்றோ எனின், மேற்கூறியவாறு தன்னை இந்திரியத்தின் வேறாகக் காண்டலே முதல்வனது திருவடியை அடைதற்குப்போதும் என்பது எவ்வாறு என்பர் பேதவாதசைவர். அவரை நோக்கி உவமையினால் வேறாகக்காண்டலே போதுமெனக் காட்டி மேற்கோளை வலியுறுத்திய வாறாம்.

(இந்த ஏதுவின் பொருள்.) ஒருவன் ஏறியிருந்து ஆடுதற்கு ஆதாரமான ஊசல் கயிறு அற்றபொழுது தன்பமுற்ற விடத்துத் தாங்குந் தாய்போல ஊசலில் இருந்தவனுக்குத் தாரகமாவது தரையேயன்றிப் பிறிதில்லை. அது போல, இந்திரியத்தின் வேறாகத் தன்னைக்காணவே, கண்ட அவ்வான்மாவுக்குத் தாரகமாவது முதல்வன்திருவடியே யன்றிப் பிறிதில்லையாதலால், 'இனி இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே தமது முதல் சீபாதத்தை யணையும்' என மேற்கோள் கூறியது எ-று.

ஆன்மா வியாபகப் பொருளாதலால் ஒருபொருளையும் நீக்கமுடியாது. இந்திரியங்களின் பற்று அறுதலாகிய அதனால் தன்னை வேறென்று காணும் காட்சியின் விசேடமே இந்திரியத்தின் நீக்கமாகும். ஆதலால் ஊசல் கயிறறுதல் இந்திரியத்தை வேறாகக்காணும் பற்று அறுதலுக்கு உவமையாயிற்று.

இந்த ஏது இந்திரியங்களில் நின்று நீங்கின விடத்து முதல்வனுக்கு அடிமையாதல் இல்லையென்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணி பாயிற்று.

கருவிகள் நீங்கினவிடத்து முதல்வன் திருவடியை உயிர் அடையுமென்பதற்கும் கருவிகளிடத்து மீண்டு வாராது என்பதற்குங் காட்டும்
உதாரணம்.

சிறைசெய்ய நின்ற செழும்புனலி னுள்ளஞ்
சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து—சிறைவிட்
டலைகடலிற் சென்றடங்கு மாறுபோன் மீளா
துலைவிலரன் பாதத்தை யுற்று.

## சிற்றுரை.

எ-ஙி உ-ம் எ-னின், கருவிகணீங்கினவழி வேறுநில்லாது சிவத்தைத் தலைப்படுமாயின் அவ்வுயிர்க்குங், கருவிகணீங்கிக் கேவலத்தைத் தலைப்பட்ட உயிர்க்குப் போல மீட்சியுண்டு போலுமென்பாரை நோக்கி அஃதின்றாமாறுகூறி மேலதனை வலியுறுத்துத லுதலிற்று.

(இ-ள்.) சிறை செய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்—(ஒருவன் அணையை உயர்த்துக் கட்டித்) தடைசெய்ய (ஆண்டுத் தடையுண்டு) தேங்கிநின்ற ஆற்றுநீர்போலக் (கருவிகளாலுபாசஞானந் தனது வியாபகத்தைத் தடைசெய்ய அதன்கண் ஏகதேசமா யடங்கித் தடையுண்டு நின்ற) உயிர்,—சிறைவிட்டு அலைகடலின்சென்று அடங்கும் ஆறுபோல்—அவ்வணை முறிந்து தடைதீர்ந்தவழி (இடையீடின்றிக்) கடலின்கண் (முடுகிச்) சென்று (அந்நீரேயாய்) அதனுளடங்கி மறித்துவாராத ஆற்றுநீர்போல,—சிறைசெய் புலன் உணர்வில் தீர்ந்து—(கருவிகளாலுப) பாசஞானத் தடையினின்று நீங்கியவழி,—உலைவுஇல் அரன்பாதத்தை உற்று மீளாது—தனக்குக் கேடில்லாத சிவபிரானது திருவடியைத் தலைக்கூடி (அத்திருவடி நிறைவேயாய் அதன்க ணடங்கிப் பின்பு) மீளுதல் செய்யாது. எ-று

சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம் என்றது தொகை உவமம். இன் உவம உருபு. தேக்கத்தின் மிகுதி உணர்த்துவார் செழும்புனலென்றார். மல சத்திக்குக் கேடுண்மையின் அதனைத் தலைப்பட்ட உயிர்க்குக் கருவிகளின் மீட்சிகூடும்; சிவசத்திக்கு அஃதின்மையின் அதனைத் தலைப்பட்ட உயிர் அவ்வாறு மீளுதற்கு ஏதுவின்மையாற் உலைவிலரன் பாதமென விசேடித்தார். அடங்குமென்னும் உவமவினை பொருளினும், மீளாதென்னும் பொருள்வினை உவமையினுஞ் சென்றியைந்தன.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம் சிறைவிட்டு அலைகடலின் சென்று அடங்கும் ஆறுபோல் சிறைசெய் புலன் உணர்வில்தீர்ந்து உலைவு இல் அரன் பாதத்தை உற்று மீளாது.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோவெனின், ஏதுவிற்கூறியவாறு கருவிகள் நீங்கினவிடத்து உயிர் அக்கருவிகளின் வேறாய்த்தனித்து நில்லாது சிவத்தைப்பொருந்துமாயின், கருவிகள் நீங்கினவிடத்துத் துரியாதீதமாகிய கேவலத்தைப்பொருந்திய உயிர்க்குப பின்னும் கருவிகளோடு கூடுதலாகிய சாக்கிரம வருதல்போல, கருவிகள் நீங்கிச் சிவத்தைப் பொருந்திய அவ்வுயிர்க்குப் பின்னுங் கருவிகளோடு கூடுதலாகிய மீளுதல் உண்டு என்பர் பேதவாதசைவர். அவரைநோக்கி உவமை முகத்தால் மீளுதலில்லையெனக் கூறி மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) ஒருவன், ஆற்றினிடத்து அணையை உயர்த்திக் கட்டி நீரைத்தடைசெய்ய அவ்வணையிற் றடைப்பட்டுத் தேங்கிநின்ற அவ்வாற்று

நீர்போல, கருவிகளினுலுண்டாகிய பாசஞானம், உயிராகிய தனது வியா பகத்தைத் தடைசெய்ய அப்பாச ஞானத்தின்கண் ஏகதேசமாய் அடங்கித் தடைப்பட்டு நின்ற அவ்வுயிர், ஆற்றுநீரைத் தடைசெய்த அந்த அணை முறிந்து தடைதீர்ந்தவிடத்து அவ்வாற்றுநீர் யாதொரு தடையின்றிக் கடலினிடத்து வேகமாய்ச் சென்று அக்கடல்நீரேயாய்க் கடலுள் அடங்கி மீண்டு வாராதவாறுபோல, கருவிகளாலுண்டாகிய பாசஞானத் தடையி னின்றும் உயிர்நீங்கியவிடத்து அவ்வுயிர் கேடில்லாத சிவபிரானது திரு வடியைப் பொருந்தி அத்திருவடி நிறைவேயாய் அச்சிவபிரான்கண் அட ங்கிப்பின்பு கருவிகளிடத்து மீளுதல் செய்யாது எ-று.

(க-ரை.) அணைமுறிந்து கடல்நீரோடு சேர்ந்த ஆற்றுநீர் அக்கடல் நீரேயாய் அக்கடலின்கண் அடங்கித்திரும்ப ஆற்றுக்குவாராதவாறுபோல, கருவிகளாகிய தடையில் நின்று நீங்கிச் சிவபெருமான் திருவடி அடைந்த உயிர் அத்திருவடி நிறைவேயாய் அச்சிவபெருமான்கண் அடங்கித் திரும் பக் கருவிகளைவந்து பொருந்தாது என்பதாம்.

சிறை செய்யநின்ற செழும்புனலின் உள்ளம் என்றதில், புனலுக் கும் உள்ளத்துக்கும் பொதுத் தர்மமாகிய தடைப்படுதல் தொக்குநிற்றலால் தொகையுவமம் என்னும் அலங்காரம். அதனைவிரித்து தடைப்பட்டுநின்ற ஆற்றுநீர்போலத் தடைப்பட்டுநின்ற உயிர் என உரைசெய்யப்பட்டது.

செழும்புனலின் என்றதிலுள்ள இன், போல என்னும் பொருளில் நிற்றலால் உவமஉருபு.

தடையினுல் தேக்கத்தின் மிகுதியை உணர்த்தவேண்டிச் செழும்புன லென்முர்.

அலைகடலிற்சென்று அடங்குமாறுபோல அரன்பாதத்தை யுற்று மீளாது என்றலே போதியதாகவும், உலைவில் என்னும் விசேடணத்தை அரன்பாதத்துக்கேற்றி உலைவில் அரன்பாதமென விசேடித்த கருத்தென் னையெனின், கருவிகளில் நின்றும் நீங்கிக் கேவலத்தைப் பொருந்திய உயிர் மீண்டுங் கருவிகளைக்கூடுதல் தினமும் அநுபவமாகக் கண்டுவரவும், அதற்கு மாருக ஆற்றுநீர் உவமையால் கருவிகளிடத்து மீளாது என்றல் பொருந் தாது; பொருளின்கண் வந்த சங்கையை உவமைகூறித் தீர்க்கலாம்; உவ மையின்கண் வந்த சங்கையைப் பிறிதொரு உவமைகூறி மறுத்தல் தருக்க வழுவாம். ஆதலால், உவமையின்கண் வந்த மீளுமென்னும் சங்கையை நீக்கி மீளாதென்பதற்கு ஏதுக் காட்டவேண்டிப் பொருளினிடத் துள்ள உலைவில் என்னும் விசேடணத்தைக் கூறி விசேடித்தார். விசேடிக்கவே, உலைவில்லாமையால் என்று ஏதுவை விரித்துக்கொண்டு, மலசத்திக்குக் கேடு உண்டு: ஆதலால் அம்மலசத்தியோடுகூடிக் கேவலத்தைப் பொருந் திய உயிர் மலசத்தியின் கேட்டினுல் திரும்பக் கருவிகளின் மீளும்; சிவசத்

திக்குக் கேடின்மையால் அச்சிவசத்தியைக் கூடிய உயிர் அவ்வாறு கருவி களின் மீளுவதற்கு ஓர் சம்பந்தமில்லை யென்பது பெறப்படும். இவ்வாறு அறிவிக்கவேண்டி உலைவில் அரன்பாதமென விசேடித்தாரென்க.

திருவருளேயே திருவடியென உபசரித்துக் கூறப்படுமாதலின் திருவடி நிறைவேயாய் என உரைசெய்யப்பட்டது. இக்கருத்தேபற்றி "அடியெனு மதுவும் அருளெனுமதுவும் அறிந்திடில் நிர்க்குண நிறைவு" என்றார் தாயு மானசுவாமிகளும்.

நீராகிய உவமைக்குக்கூறிய அடங்கும் என்னும் வினை உயிராகிய பொருளில் அரன்பாதத்தை உற்று என்பதனோடு பொருந்தித் திருவடி யைக்கூடி அதன்கண் அடங்கி எனவும், உயிராகிய பொருளுக்குக் கூறிய மீளாது என்னும் வினை உவமையாகிய ஆற்றுநீரில் அடங்கும் என்பதனோடு கூடி அடங்கி மறித்து வாராது எனவும் பொருள்தந்து நின்றன.

திருவடியை அடைந்த உயிர் கருவிகளிடத்து மீளுதல்
குற்றமெனக்கூறி மீளாதென்பதை வலியுறுத்தும்
உதாரணம்.

எவ்வுருவுந் தானேன்னி னெய்துவா ரில்லைதா
ளிவ்வுருவின் வேறே லிறையல்ல—னெவ்வுருவுங்
கண்போ லவயவங்கள் காணுவக் கண்ணில்லார்
கண்பேறே காணக் கழல்.

சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின். மீளாதென்று விடுத்தல் வேண்டாம், எல்லாஞ் சிவமாகக்கண்டார்க்கு மீண்டாலென் மீளாக்காலென் னென்னும் சிவாத்துவித சைவரை நோக்கி அது விடையாதற்கே லாமை கூறி மறித்தும் மீளாமையை வலியுறுத்துத னுதலிற்று.

(இ—ள்.) எவ்வுருவுந் தான் என்னின் தாள் எய்துவார் இல்லை— உயிருணர்வேயன்றிப் புலனுணர்வுஞ் சிவமேயாமாயின் (விசேட மின்மையாற் புலன்வழியொழுகுஞ் சகல நிலையைக் கைவிட்டுத் திருவடியைத் தலைக்கூட வேண்டாமையின் ஒருவரும்) அதனை யெய்துவாரில்லையாய் (முடிந்து "பாசத்தைப் பசுக்கள்விட்டுப் பதி யினையடைய முத்தி" என்னும் வேதாகமங்கள் போலியாய்) முடி யும்,—இவ்வுருவின் வேறேல் இறையல்லன்—(அதுபற்றி) முதல்வன் புலனுணர்வோடியையின்றி அதனின் வேறாய் நிற்பன் என்னின் (அப்புலனுணர்விற்கு அவனுலாகற்பாலதொன்றின்மையின்) அவன்

ஆண்டைக்கிறைவனல்லன் எனப்பட்டு முதன்மைக்கிழுக்காய் முடியும் (மற்றென்னையோ அதனியல்பென்னின்),—எவ்வுருவும்—உயிருணர்வுபோலப் புலனுணர்வுங் கலப்பினாற் சிவமேயாமாயினும் இரண்டுந் தம்முள் ஒப்பனவல்ல,—அவயவங்கள் கண்போல் காணு—(உயிர் ஐம்பொறிகளினும் ஒப்பநிற்பினும்) அவற்றுள் மெய்வாய் மூக்குச் செவி நான்குங் கண்ணிந்திரியம் ஒளியான் அவ்வான்ம போதத்தோடு விரவிச் செய்மைக் கண்ணதாகிய விடயத்தையும் வியாபித்தறியுமாறுபோல வியாபித்தறியமாட்டாவாய்த் தம்மாட்டு வந்த விடயங்களை நின்றாங்கு நின்றியைந் தறிதற்றன்மையவே யாம்,—அக்கழல் அக்கண் இல்லார் கண்பேறே காண்—அக்கண்ணினது வெற்றிப்பாட்டைக் கண்ணொளி இழந்தாரது கண்பேற்றின் கட் கண்டறிவாயாக எ—று.

கண்ணும் அவயவங்களும் ஆகுபெயர். கண்பேறே யெனவழாவது தொகுத்து ஏகாரம் விரித்தார். கழலணிவார்க்குளதாகிய வெற்றிப்பாட்டைக் கழலென்றுபசரித்தார். கழல் காலணி மணிவடம். ஈண்டு வெற்றியாவது ஏனை நான்கிந்திரியங்களையும் நோக்கி மேம்படுதல். 'கண்போ லவயவங்கள் காணு வக்கண்ணில்லார் கண்பேறே காணக் கழ'லென்பது முதல்வன் இரண்டினும் ஒப்ப விரவிநிற்பினும் உயிருணர்வுபோலப் புலனுணர்வு வியாபக விளக்கமாதலின்றி ஏகதேச விளக்கமாம்; உயிருணர்விற்குளதாகிய அம்மேம்பாடு அவ்வியாபக உணர்வை இழந்த பசுத்துவமுடையார் மாட்டறியப் படாதாயினும் அவரது பசுத்துவம் நீங்கிய சிவப்பேற்றின் கண் அறியப்படுமென்பது தோன்ற நின்றமையின் இஃதொட்டென்னு மலங்காரம். சிவமாய வழியும் புலனுணர்வு ஏகதேச விளக்கமாவதன்றி உயிருணர்வுபோல வியாபக விளக்கமாதலில் லெனவே, அதன்கண் மீளுதலிழுக் கென்பது பெறப்பட்டது. இதற்குப் பிறவெல்லாம் இயைபின்றி யுரைத்தார்.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு) எல்வுருவுந் தான் என்னின் தாள் எய்துவார் இல்லை இவ்வுருவின் வேறேல் இறையல்லன் எவ்வுருவும் அவயவங்கள் கண்போல் காணு அக்கழல் அக்கண் இல்லார் கண்பேறே காண்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ எனின், சிவபிரான் திருவடியை அடைந்து எல்லாஞ் சிவமாய்க்கண்டவர்க்குக் கருவிகளைப் பொருந்தினதால் என்னகுற்றம் உண்டாகும்; பொருந்தாமையால் என்ன குணம் உண்

டாகும்; இரண்டும் இல்லை; ஆதலால் மேலைவெண்பாவின்படி கருவிகளில் திரும்பாது என்று விடைகூற வேண்டாம் என்பர் சிவாத்துவித சைவர்; அவரைநோக்கிக் கருவிகளைக் கூடுதல் கூடாமையாகிய இரண்டினாலும் குற்றக்குணம் இரண்டுமில்லையென்றது பொருந்தாதெனக் கூறிக் கருவிகளிற் றிரும்பாதென்று மேலைவெண்பாவிற் கூறியதனை மீண்டும் வலியுறுத்திய வாறும்.

(பொ-ரை.) திருவடி அடைதலால் உயிரின் அறிவு சிவமாதலேயன்றி விடயங்களை அறியும் கருவிகளின் அறிவும் சிவமேயாமாயின் கருவிகளாலாய பாசஞானத்தைவிடத் திருவடி அடையும் பதிஞானத்திற்கு விசேடமில்லை. ஆதலால் கருவிகளின் வழிச் செல்லும் சகலநிலையைக் கைவிட்டுத் திருவடியை அடையவேண்டாம். ஆகவே ஒருவரும் திருவடியை அடைவாரில்லையாய் முடிந்து சிவஞான சித்தியார் பரபக்கம் பாஞ்சராத்திரி மதமறுதலைச் செய்யுள் உரு-ல் "பாசத்தைப் பசுக்கள் விட்டுப் பதியினையடையமுத்தி" என்று கூறியதும் இக்கருத்துப்பட வேதாகமங்களிற் கூறியனவும் போலியாய் முடியும். ஆதலால் முதல்வன் கருவிகளின் அறிவோடு பொருந்தாமல் அக்கருவிகளின் வேறாய் நிற்பன் எனின், அக்கருவிகளின் அறிவிற்கு முதல்வனால் ஆகவேண்டிய உபகாரம் ஒன்றுமில்லை யெனப்பட்டு அக்கருவிகளுக்கு இறைவன் அல்லன் என்றாகி முதல்வனுடைய முதன்மைக் கிழுக்காய் முடியும்; இவ்வாறாயின் கருவிகளின் இயல்பு தானென்னையோ எனின், முதல்வனுடைய கலப்பினால் உயிருணர்வு சிவமாதல் போலக் கருவிகளின் உணர்வும் சிவமேயாயினும் இரண்டுந் தம்முள் ஒப்பனவல்ல; வேறு எவ்வாறெனின், மெய்வாய் கண்மூக்குச் செவியென்னும் ஐம்பொறியினும் உயிர் ஒப்பக்கலந்து நிற்பினும் அவற்றுள் கண் நீங்கிய ஏனைய நான்கும் தம்மிடத்து வந்தவிடயத்தை யறிதலே யன்றித் தூரத்திலுள்ள தத்தம் விடயத்தை உயிரினறிவோடு கலந்து சென்று அறியா. கண்மட்டும் ஒளியுடைய பொருளாதலால் உயிரின் அறிவோடு கலந்து சென்று தூரத்திலுள்ளவிடயத்தை வியாபித்து அறியும். இவ்வாறே முதல்வன் கலப்புப்பெற்ற கருவிகளும் உயிர்போல வியாபித் தறியமாட்டாதனவாய் தத்தம் விடயங்களை ஏகதேசமாய் அறியுந் தன்மையுடையனவேயாம். ஏனைய இந்திரியங்களினின்றும் கண்ணிந்திரியத்திற்கு விடயங்களைச் சென்று அறியும் மேம்பாடு உண்டென்பதை மாசுமிகுதியால் கண்ணொளி இழந்தவரிடத்துக்காண முடியாது. அவ்வொளி இழந்தவர் மாசுநீங்கிக் கண் பெற்றவிடத்துத் தூரத்திலுள்ள பொருளை அறிவதனாலறிந்துகொள்க எ-று.

(க-ரை.) இந்திரியங்களைந்துடனும் உயிர் வியாபித்திருப்பினும் கண்மட்டுஞ் சென்று அறிதலும் ஏனைய நான்கும் இருந்தவிடத்து வந்ததை அறிதலுமாகிய வேற்றுமை காணப்படுமாறு போல, பசுபாசங்களிடத்தில் சிவம் வியாபித்து இருப்பினும் பசுவுக்கு வியாபித் தறிதலும் பாசத்திற்கு ஏகதேச

மாயறிதலுமாகிய வேற்றுமை காணப்படும். ஆதலால் திருவடியை யடைந்து வியாபக அறிவாய் விளங்கும் உயிர் பின்னர்க் கருவிகளோடு கூடி ஏகதேச மாய் அறிதல் குற்றமாகும் என்பதாம்,

கண்போல் அவயவங்கள் என்றவிடத்துக் கண்ணும் அவயவங்களும் உறுப்புகளைக் குறியாமல் உறுப்புக்களுக்கு உள்ளீடாயுள்ள இந்திரியங்களைக் குறித்து நிற்றலால் ஆகுபெயர்.

கண்பேறே என்றவிடத்து ஏழாம் வேற்றுமைக் கண் உருபு தொகை யாக வைத்து ஏகாரத்தை விரித்தார். ஆதலால் கண் பேற்றின் கண் என உரை செய்யப்பட்டது.

காணக்கழல் என்பது காண் அக்கழல் எனப்பிரியும். கழல் என்பது காலிலணிந் திருக்கும் வெற்றியைக் குறித்த மணிவடம். ஆதலால் கழல் என்பது மணிவடத்தைக் காலிலணிந் திருப்பவர்க்கு உளதாகிய வெற்றிப் பாட்டைக் குறித்து அக்கழல் என்ற சுட்டால் மேற்கூறிய கண்ணின் வெற் றிப் பாட்டைக் குறித்து நின்றது.

கண்ணுக்கு வெற்றியாவது ஏனைய நான்கு இந்திரியங்களினு மேம்படு தல்; அதாவது சென்று அறிதல்.

'கண்போல் அவயவங்கள் காணு அக்கண்ணில்லார் கண்பேறே காண் அக்கழல்' என்றதனால் அவ்வுவமைபோல முதல்வன் பசுபாசம் இரண்டினும் ஒப்பக்கலந்து நிற்பினும் உயிருணர்வு வியாபகமாதல்போலப் பாசஉணர்வு வியாபக மாதலின்றி ஏகதேச விளக்கமாம்; உயிருணர்வு வியாபக மாதலாகிய மேம்பாட்டைப் பாசத்தால் வியாபக உணர்வை இழந்த உயிரினிடத்து அறி யமுடியாதாயினும் பாசம்நீங்கிச் சிவப்பேறடைந்த உயிரினிடத்து அம்மேம் பாடு அறியப்படும் என்பதாம். இவ்வாறு கருதப்பட்ட பொருளைக் கூறாது அப்பொருளை வெளிப்படுத்தற்கு உரிய உவமானத்தைக் கூறி அவ்வுவமான த்தை யொட்டி உவமேயத்தை அறியும்படி வைத்தல் ஒட்டென்னும் அலங் காரம். இவ்வலங்காரத்தைப் பிறிது மொழிதலென்னும் அலங்காரமாகவும் கூறுவர்.

இவ்வுதாரணத்தால் உயிருங்கருவிகளும் சிவனால் வியாபிக்கப் பட்டுச் சிவமேயாயினும், கருவிகளினறிவு ஏகதேச விளக்கமாவதன்றி உயிரினறிவு போல வியாபக விளக்கமாதலில்லை; ஆதலால் கருவிகளின் மீளுதல் குற்ற மென்பது பெறப்பட்டது. ''எங்குந் தான் என்னின் எய்தவேண்டா'' என் றுகூறிய சிவஞான சித்தியார் அ-ம் சூ-ம் அ-வது செய்யுளுக்கும் இவ்வாறே உரைத்துக் கொள்க. இவ்வாறன்றிச் சிவன் வியாபியாயிருக்கவும் உயிர் அவ னைக் கூடினதென்றது கண்ணினிடத்துள்ள ஒளியானது மாசுபடர்தலால் தடைப் பட்டு மாசுநீங்குதலால் விளங்கியது போலு மெனவும், சிவன் பாச பசுஞானங்களால் அறியப்படாது பதிஞானத்தாலறியப்படுதல் உயிர் எல்லா

இந்திரியங்களினும் வியாபித் திருப்பினும் காணுந்தன்மை ஏனைய இந்திரியங்களுக்கின்றிக் கண்ணுக்கே இருப்பதுபோலு மெனவும் இவ் வெண்பாவிற்கு உரை கூறுவர். அவ்வுரை மேலை வெண்பாவோடு சம்பந்த மில்லாமையறிக.

திருவடியை அடைந்த உயிர் பழையவாசனையால் கருவிகளிடத்து
மீளுமாயின் அம்மீட்சியை நீக்குதற் குபாயங் கூறி
மீளாதென்பதை வலியுறுத்தும்
உதாரணம்.

ஐம்பொறியி னல்லையெனு மந்த தரசிவனை
யைம்பொறியை விட்டங் கணைசகல—னைம்பொறியி
னீங்கானீர்ப் பாசிபோ னீங்குமல கன்மம்வரி
னீங்கானை நீங்கு நினைந்து.

## சிற்றுரை.

ஏ-து உ-ம் எ-னின், சிறைவிட்டவழி அலைகடலிற் சென்றடங்குதலேயன்றி "ஆற்றுலலைகடற்கேபாய்ந்தநீர் அவ்வாற்றுண் மறித்" தலுமுண்மையின் அதுபோல அரன்பாதத்தை யுற்ற உயிருக்கு ஒரோவழி மீட்சியுமுண் டென்பது பெறப்படுதலான் அவ்வழி மீளாமை செல்லாதென்பாரை நோக்கி அம்மீட்சிக்குக்காரணமிது வென்பதூஉம், அதனை நீக்குதற் குபாயமுங் கூறி வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) ஐம்பொறியின் அல்லையெனும் அந்ததர—ஐம்பொறிகள்போல ஏகதேசவிளக்கமுடையாயல்லையென் றறிவுறுக்கப்படுஞ் சித்தாந்த மகாவாக்கியத்தைப் பெற்றுடைய மாணவகனே!—அங்கு ஐம்பொறியை விட்டுச் சிவனை அணை சகலன் ஐம்பொறியி னீங்கான்—(சிறைவிட் டலைகடலிற் சென்றடங்கு மாறுபோலென) மேற்கூறியவாறே ஐம்பொறிகளானுய புலனுணர்விற் றீர்ந்து சிவன்றிருவடியை யுற்றசகலன் அவ்வைம்பொறிகளான் மீளுவதனை நீங்குவானல்லன்,—நீர்ப்பாசிபோல் நீங்குமல கன்மம் வரின் நீங்கானை நினைந்து நீங்கும்—(கல்லெறியும் வழி நீங்கிய) நீர்ப்பாசி (அது விடும்வழிப் பரக்குமாறு) போல அவ்வணைதலின்க ணீங்கிய மலகன்ம மாயைகள் (வாதனைவயத்தானிகழு மயர்ச்சிபற்றி) வந்து கூடுமாயின் (அதுபற்றிப் பொறிவழி மீளாமல் அவ்வழியும் தன்னைவிட்டு) நீங்காத முதல்வனை (முன்னர்க் கூறப்படு முபாயங்களினின்று) சிந்தித்து (அவற்றை) நீக்கிக் கொள்ளும் எ-று.

வரின் என்றதனால் வருதல் ஒருதலையன்று; வாசனையுள் வழி யென்பது பெற்றாம். நீங்கி என்பது பாடமாயின், நீங்கினவாகிய மலகன்ம மெனப் பெயராக வைத்துரைக்க. சித்தாந்தத்தை அந்த மென்றது தலைக்குறை. தாம் அதன் கண்ணதாய்ச் சிறந்த ஒரு வார்த்தை. அங்கு மேற்கூறியபடி. ஐம்பொறியை விட்டணைதற் குரியான் இவனென்ப துணர்ந்துவார் சகலனென்றார். நீங்குமென் னும் மகரந் சந்தி நோக்கிக் கெட்டது. நீங்கெனவே பாடங் கொண்டு அணை என வேறுபிரித்து முன்னிலை யேவலாக்கி அதற் கேற்ப நீங்காய் எனப் பாடந்திரித் துரைப்பாருமுளர்.

மேற்கூறிய மீளாமையை வலியுறுத்துவார் 'ஐம்பொறியினல் லையெனு மந்த தர சிவனை ஐம்பொறியை விட்டங் கணை சகல—னைம் பொறியி னீங்கா'னென்றும், ஒரோவழி உளதாமாயின், அதற்குக் காரணம் இஃதென்பார் 'நீர்ப்பாசிபோல் நீங்கு மலகன்மம் வரின்' என்றும், அஃது நீக்குதற்குபாயங் கூறுவார் 'நீங்கானை நினைந்து நீங்கு'மென்றுங் கூறினார். மலகன்மமெனவே, இனம்பற்றி மாயை யுங் கொள்ளப்பட்டது. "மங்கலமென்ப மனைமாட்சி மற்றத— னன்கல னன்மக்கட் பேறு" என்றாற்போல நீங்கானைநீங்கு நினைந் தென்றதனால் வருகின்ற சூத்திரத்திற்குத் தோற்றுவாய் செய்த தூஉமாயிற்று.

இம் மூன்றுதாரணங்களும் முறையே திருவடி ஞானத்தைப் பெற்றஉயிர் புலனுணர்வின் மீட்சியில்லை யெனவும், மீட்சியிழுக்கா மெனவும், ஒரோவழிப் பயிற்சிவயத்தான் மீளவருமாயின் மீளாத வாறு செய்து கொள்ளற்பாற்று எனவுங் கூறித் தாய் தனையேயா மென்னும் ஏகாரப்பொருளை வலியுறுத்தி ஒருபொருண் மேல்வந்த வாறுகாண்க.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) ஐம்பொறியின் அல்லையெனும் அந்ததர அங்கு ஐம் பொறியை விட்டுச் சிவனை அணை சகலன் ஐம்பொறியின் நீங்கான் நீர்ப் பாசிபோல் நீங்குமலகன்மம்வரின் நீங்கானை நினைந்து நீங்கும்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றெனின், இவ்வதிகரணத்து முதல்வெண்பாவிற் கூறியபடி தடை நீங்கியவிடத்து ஆற்று நீரானது அலையை உடைய கடலிற் சென்று அக்கடலில் அடங்குமாயினும், திருக் களிற்றுப்படியார் ௧௧-வது செய்யுளிற் கூறியபடி ஆற்றின் வழியாக அலையை உடைய கடலிற்பாய்ந்த நீரானது அந்த ஆற்றின்வழியாக மீளு

தல் கூடும் ஆதலின் கடலிற் சென்ற நீர அக்கடலிலடங்குதலேயன்றி மீளுதலுமுண்டென்பது பெறப்படுதலால் அவ்வாறே அரன்திருவடியை அடைந்த உயிருக்கு அத்திருவடியிலடங்குதலேயன்றி ஒரு சமயத்தில் இந்திரியத்தின் மீளுதலும் உண்டென்பது பெறப்படும். ஆதலால் எப்பொழுதும் மீளாதென்று கூறுதல் பொருந்தாது என்பர் சிவாத்துவித சைவர். அவரைநோக்கி அவ்வாறு மீளுதற்குக் காரணம் பழையவாசனையென்றும், அவ்வாசனையை நீக்குதற்கு உபாயம் திருவடியைச் சிந்தித்தலே என்றுங்கூறி மீளாமையை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) நீ வியாபக அறிவை உடைய பொருளன்றி ஐம்பொறிகள்போல ஏகதேச அறிவையுடைய பொருளாகமாட்டாய் என்று உபதேசிக்கப்படுவதாகிய சித்தாந்த மகாவாக்கியத்தைப் பெற்றிருக்கும் மாணாக்கனே! சிறைவிட்டு அலைகடலிற் சென்றடங்குமாறுபோல் என மேல் இவ்வதிகரணத்து முதல்வெண்பாவிற் கூறியபடியே ஐம்பொறிகளாலுண்டாகிய உலகப்பொருளை அறியும் அறிவைவிட்டுச் சிவபெருமான் திருவடியையடைந்த சகலவர்க்கத்திலுள்ளவன், மீண்டும் ஐம்பொறிகளையடைந்து சிவபெருமான் திருவடியை நீங்கமாட்டான். சிவஞானசித்தியார் அ-ம் சூ-ம் ௩௬-வது செய்யுளிற் கூறியபடி கல் எறியும்பொழுது நீரினிடத்துள்ளபாசி நீங்கிக் கல்லெறியாதபொழுது அப்பாசி பரக்குமாறுபோலத், திருவடியையடைதலால் நீங்கிய ஆணவங் கன்மம் மாயைகள் பழைய வாசனையால் திருவடியை மறந்தவிடத்து வந்து பொருந்துமாயின் அவ்வாசனை பற்றி அம்மலகன்ம மாயைகள் விருத்தியாதற்குரிய இந்திரியங்களைப் பொருந்தாமல் அவ்வாசனைவந்து தாக்கியவிடத்தும் தன்னைவிட்டு நீங்காத முதல்வனை முன்னர் கூ-ம் சூத்திரத்திற் கூறப்படும் பஞ்சாக்கர ஜெபமுதலிய உபாயத்தாற் சிந்தித்து நீக்கிக்கொள்ளுவன் எ-று.

(க-ரை.) கடல் நீரையடைந்த ஆற்றுநீர் மீண்டும் ஆற்றுக்குத் திரும்புங்கால் கடல் நீராகவே திருப்பி மீண்டும் அக்கடலிற் சென்று அடங்குமாறுபோலச் சிவபிரான் திருவடியை அடைந்த உயிர் பழைய வாசனையால் மீண்டுங் கருவிகளைக் கூடவரின் திருவடியை மறவாத உபாயத்தால் அக்கருவிகளை விட்டு மீண்டும் திருவடியை யடைந்து அத்திருவடியில் அடங்கும் என்பதாம்.

வரின் என்றதனுல் கடல் நீரையடைந்த ஆற்றுநீர் மீண்டும் சிறிதுதூரம் ஆற்றுக்குவந்து கடலிற்சென்றடங்குமாறுபோலச் சிவன் திருவடியை அடைந்த உயிர்கருவிகளிடத்துத் திரும்புதல் உறுதியன்று; வாசனை இருப்பின் திரும்பும்; வாசனை இல்லையாயின் திரும்பாது என்பது பெறப்படும்.

நீங்குமல கன்மம் என்றதை நீங்கிமல கன்மமென்று பாடங்கொள்வதும் உண்டு. அவ்வாறு கொண்டால் நீங்கி என்பதை வினையாகவும் வினை

யெச்சமாகவுங் கொள்ளாமல் தூங்கிவீங்கிளென்பன பெயராய் வருவனபோல மலகன்மத்தின் பெயராகக்கொண்டு, நீங்கிமல கன்மமென்றவிடத்து நீங்கி என்பதும் மலகன்மம் என்பதும் பெயராய் நின்று ஒரு பொருளை யுணர்த்துதலால் இருபெயரொட்டுப் பண்புத் தொகையாக்கிச் சாரைப்பாம்பு என்ற இருபெய ரொட்டுப்பண்புத் தொகை, சாரையாகிய பாம்பு என்று விரியுமாறுபோல நீங்கினவாகிய மலகன்மமென விரித்துரைக்க.

அந்ததரஎன்றதில் அந்தம் என்றது சித்தாந்தத்தைக் குறித்துச் சித்தம் என்ற முதல் குறைந்து நிற்றலால் தலைக்குறை. சித்தாந்தம் என்றது சித்தம் அந்தம் என்று பிரிக்கப்படும். படவே, முடிந்த முடிபு என்பது பொருள்.

தரம் என்றது அச்சித்தாந்தத்தின்கணுள்ள சிறந்த ஒருவார்த்தையாகிய மகாவாக்கியம். தரஎன்றது அம்மகா வாக்கியத்தைப் பெற்ற மாணுக்கனை முன்னிலைப் படுத்தி அழைத்ததாகும்.

ஐம்பொறியை விட்டங்கு என்றவிடத்து அங்கு என்பது மேல் இவ்வதிகரணத்து முதல் வெண்பாவிற் கூறியபடி என்ற பொருளில் நின்றது.

ஐம்பொறியை விட்டங்கணை சகலன் என்றது விஞ்ஞானுகலர் பிரளயாகலர் ஆகிய இருவர்க்கும் மாயை கிடையாதாகையால் மாயாகாரிய மாகிய இந்திரியங்களுங் கிடையா; சகலருக்கே மாயையும் மாயாகாரியங்களு முளவாம்; ஆதலால் ஐம்பொறியை விட்டுத் திருவடியை அடைதற் குரியார் சகலரே என்பது உணர்த்தவேண்டியேயாம். ஆதலால் அணை உயிர் என்று பொதுப்படக் கூருமல் அணைசகலன் என்று சிறப்பாக எடுத்துக் கூறினுர்.

நீங்கும் நினைந்து என்பது சந்திநோக்கி மகர ஒற்றுக் கெட்டு நீங்கு நினைந்து எனநின்றது. இவ்வாறன்றி நீங்கு என்றே படமாகக் கொண்டு நீங்கு என்பதையும் மேற்கூறிய அணைஎன்பதையும் முன்னிலை ஏவலாக்கி, அணைசகலன் ஐம்பொறியி னீங்கான் என்பதை ஒருதொடராகக் கொள்ளாமல் அணை என்பதை வேறுபிரித்துச் சகலன் ஐம்பொறியினீங்கான் என்பதைச் சகலன் ஐம்பொறியி னீங்காய் எனப்பாடத்தை வேறுபடுத்தி, ஐம்பொறியைவிட்டுத் திருவடியைக் கூடு; கூடிய சகலனுகிய நீ மீண்டு ஐம்பொறிகளால் திருவடியை நீங்காய்; நீங்கும்படியாக ஐம்பொறிகள் வரின் நீங்கானை நினைந்து ஐம்பொறியில் நீங்கு என்று உரைப்பாரு முளர்.

மேல் முதல்வெண்பாவில் திருவடியை அடைந்த உயிர் கருவிகளிடத்துமீளா தென்று கூறியதை வலியுறுத்தவேண்டி இவ்வெண்பாவில் ஐம்பொறியின் அல்லை யெனும் அந்ததர சிவனை ஐம்பொறியை விட்டு அங்கு அணைசகலன் ஐம்பொறியின் நீங்கான் என்று கூறி, கடலிற் சென்ற நீர் மீளுதல்போல ஒரு சமயம் கருவிகளில் மீளுமாயின் அம்மீட்சிக்குக் காரணம்

பழையவாசனை என்பது உணர்த்தவேண்டி நீர்ப்பாசிபோல் நீங்குமலகன்மம் வரின் என்றும், அக்காரணத்தை நீக்குதற்கு உபாயந் திருவடியைச் சிந்தித்தல் என்பது கூறவேண்டி நீங்கானே நினைந்து நீங்குமென்றும் கூறினர். மலகன்மமென்று கூறியதனால் பாசத்தின் இனம்பற்றி மாயையுங்கொள்ளப்பட்டது.

திருக்குறள் வாழ்க்கைத் துணைநலம், ௬0-வது பாட்டில் "நன்கலன் நன்மக்கட்பேறு" என்று மனைவியாகிய துணையின் மாண்பிற்கு அணிகலன் கூறிப் புதல்வரைப் பெறுதலென்னும் அடுத்த அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்ததுபோல, இச்சூத்திரத்து இறுதியாகிய இவ்வெண்பாவிலும் நீங்கானே நினைந்து நீங்கும் என்றதனால் நீங்காதவனாகிய முதல்வனை நினைந்து பாசத்தில் நின்றும் நீங்கும் முறையைத் தொகுத்துக் கூறியதாஉமன்றி அதனை வகுத்துக் கூறும் ௯-ம் சூத்திரத்திற்குத் தோற்றுவாய் செய்தவாறுமாயிற்று.

இவ்வதிகரணத்திற் கூறிய மூன்று உதாரணங்களும் ஒருபொருள் மேல் வந்தனவாம். எவ்வாறெனின், முதல் உதாரணத்தால் திருவடி ஞானத்தைப் பெற்ற உயிர் கருவிகளாலாகிய பாசஞானத்தில் மீளுதலில்லையெனவும், இரண்டாவது உதாரணத்தால் பாசஞானத்தின் மீளுதல் குற்றமாமெனவும், மூன்றாவது உதாரணத்தால் ஏகதேசத்தில் பழைய வாசனையால் பாசஞானத்தின் மீளவருமாயின் மீளாதவாறு செய்து கொள்ளவேண்டுமெனவுங் கூறித் தாய் தரையேயாம் என்ற ஏதுவில் தரையே என்பதிலுள்ள தேற்றேகாரத்தால் ஊசல் கயிறு அற்றால் தன்மாட்டிருந்தார்க்குத் தாரகமாதலின்றி தரையே தாரகமாயினாற்போல பாசஞானத்தினின்றும் நீங்கிய உயிருக்குத் தாரகம் பதியின் திருவடியே என்னும்பொருளை வலியுறுத்தி இந்திரியத்தின் வேறாவான் காணவே தமது முதல் சீபாதத்தை யணையும் என்ற மேற்கோளாகிய ஒரு பொருள் மேல் வந்தவாறு காண்க.

இச்சூத்திரத்தாலும் அதிகரணங்களாலும் கூறிமுடித்த தொகைப் பொருள்:—ஏழாஞ் சூத்திரத்தில் சத்து அசத்தாகிய இரண்டையும் சார்ந்து அவ்விரண்டையும் அறியும் அறிவை உடையது ஆன்மாவென்று கூறிமுடித்தமையின் அவ்விரண்டையும் அறியும் முறை எவ்வாறு என்ற வினாவிற்கு, ஐம்புலனாகிய வேடரைச்சார்ந்து தன்னையும் தலைவனையும் அறியாது மயங்குதல் அசத்தைச்சார்ந்து அறிதலென்பதும், தலைவனே குருவாய் வந்து உபதேசிக்க அவ்வுபதேசத்தால் ஐம்புலனைவிட்டு அம்முதல்வன் திருவடியை அடைதல் சத்தைச்சார்ந்து அறிதலென்பதும் சூத்திரத்தாற் கூறப்பட்டன; படவே, அவ்வுபதேச அறிவு எதனாலுண்டாகுமென்பாருக்கு முதலதிகரணத்தால் சரியை கிரியை யோகங்களாகிய தவங்களே அவ்வுபதேச அறிவை உண்டுபண்ணுமென்பதும், வேள்வி முதலாயின சுவர்க்காதி பதங்களைத்தந்து கெடுமென்பதும் கூறப்பட்டன. படவே அவ்வுபதேசத்

தைச் செய்யும் குரு நம்மிலொருவரேயன்றி முதல்வன் அல்லன் எனச் சாங்கியர் நையாயிகர் முதலியோர் கூற, இரண்டாம் அதிகரணத்தால் அவரை மறுத்து முதல்வனே குருவாய் வந்துணர்த்துவன் என்பதும், அவ்வாறு உணர்த்துதலும் எல்லா உயிர்களுக்கும் ஒருதன்மைத்தன்றி விஞ்ஞான கலருக்கு அறிவுக்குளறிவாய் நின்றும் பிரளயாகலருக்கு உருவத்திருமேனி கொண்டும் சகலருக்கு அச்சகலர்வடிவுபோன்ற குருவடிவங்கொண்டும் உணர்த்துவன் என்பதும், அவ்வாறு உணர்த்துதற்கு மலசத்தியின் மறைப்பு வேறுபாட்டால் ஒருமலமும் இருமலமும் மும்மலமும் உடைமையே காரணமென்பதும், சகலனுக்கு முதல்வனே குருவாய் வருதல் உபசாரமன்று உண்மையே யென்பதும் கூறப்பட்டன. படவே, உலகப்பொருளை விளக்கும் ஐம்பொறிகளே முதல்வனையறியும் உணர்வையும் விளக்கும், அவ்வுணர்வை விளக்குதற்குக் குருவேண்டாம் எனச் சிவசங்கிராந்தவாதசைவர் கூற, மூன்றும் அதிகரணத்தால் அவரைமறுத்து ஐம்பொறிகள் மயக்கத்தைச் செய்யுமேயன்றி முதல்வனை யறியுமுணர்வை விளக்காவென்பதும், அவ்வைம்பொறிகள் நீங்கினவிடத்துக் கேவல அவத்தை கூடுமாதலால் அப்பொறிகள் உள்ளவிடத்தே அப்பொறியுணர்வைப் பொய்யாகக் காண வேண்டுமென்பதுங் கூறப்பட்டன. படவே, பொறியுணர்வைப் பொய்யாகக் காண்டலேபோதும் அதன்மேல் செய்யவேண்டிய தொன்றுமில்லை யெனப் பேதவாதசைவர் முதலியோர் கூற, நான்காம் அதிகரணத்தால் அவரை மறுத்துப் பொறியுணர்வைப் பொய்யென்று கண்டவிடத்து முதல்வன் திருவடியை அடையுமென்பதும், மீண்டும் அப்பொறியைப் பொருந்தாது என்பதும், பொருந்துதல் குற்றமாமென்பதும், பழையவாசனையால் பொறிகள் பொருந்தவருமாயின் அம்முதல்வன் திருவடியை நினைந்து அவற்றைவிட்டு நீங்கவேண்டுமென்பதுங் கூறப்பட்டன.

**நான்காம் அதிகரணம் முற்றிற்று.**

எட்டாஞ் சூத்திரம் முற்றிற்று.



## ஒன்பதாஞ்சூத்திரம்.

*எட்டாஞ் சூத்திரத்தால் சாதனஅறிவு குருவால் வருமெனக் கூறி அச்சாதனத்தை யனுட்டிக்குமுறை இவ்வொன்பதாஞ் சூத்திரத்தாற் கூறுகின்றார்*

ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
யுராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே.

கருத்துரை.

**எ-து சூ-ம் எ-னின். ஆன்மசுத்தி பண்ணுமாறுணர்த்துதனுதலிற்று.**

## சிற்றுரை.

எ—து க—ரை எ—னின், சூத்திரக்கருத்துணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) தம்முதல் குருவுமாய் உணர்த்தக்கேட்டு அதனைச் சிந்தனைசெய் துணருமாறுணர்த்து முகத்தான் ஐம்புலவேடரின் வளர்ந்த வாலாமை நீக்கி உயிர் தன்னைத் தூய்மைப்படுத்துமா றுணர்த்துதல் இவ்வொன்பதாஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.

சூத்திர இயைபும் இதனானே இனிது விளங்கும்.

சிவப்பிரகாசத்துத் தான்பணியை நீத்தலென் றோதப்படும் ஆன்மசுத்தியாவது இறைபணி நிற்கவென வருகின்ற சூத்திரத் திற் பெறற்பாலதாகலானும், அழுக்கு நீக்கமே அறுவைக்குச் சுத்தியாமாறுபோலப் பாச க்ஷயமே உயிர்க்குச் சுத்தியாவதன்றி வேறன்மையானும், பாச க்ஷயம் பண்ணுமுன்னர்ச் சுத்தியாதல் கூடாமையானும், வருகின்ற சூத்திரத்தின் கருத்தாய் நின்ற ஆன்ம சுத்திபண்ணுமாற்றைப் பதியைநாடி எனவுந் தண்ணிழலாம்பதி யெனவுஞ் சிவதரிசனம் பண்ணுமாறே உணர்த்துதற் கெழுந்த இச்சூத்திரத்தின் கருத்தாக வைத்துரைத்த தென்னையோவென மலையற்க; சிவதரிசனத்தினிகழ்வது ஆன்மசுத்தியென்னும் உட னிகழ்ச்சி யுணர்த்துதற்கும் தம்முள் வேறுபாடு சிறுபான்மை யுடையனவாய இவ்விருசூத்திரமும் ஒருபொருள் மேலனவென் பதுணர்த்துதற்கும் இவ்வாறுரைத்தாராதலின். அஃதங்ஙனமாக 'ஆன்மாத்தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே தமது முதல் சீபாதத்தையணையு' மென்றலின், அக்காட்சியே அதற் கமையும் சுத்தி யெற்றுக்கெனின், அஃதொக்கும்; நிருவிகற்பமா ய்க் காண்டலும், இரட்டுறக் காண்டலும், தெளியக் காண்டலு மெனக் காட்சி மூவகைப்படும். இம் மூன்றும் அதிபரிபக்குவ முடையார்க்குக் கேட்டமாத்திரையே ஒருங்கு நிகழுமாயினும் ஏனையோர்க்குக் கேட்டல் சிந்தித்தல் தெளிதலென்னுஞ் சோபான முறையினன்றி நிகழாமையின், அவரைநோக்கிச் சிவரூபத்தி னிகழும் ஆன்மதரிசனத்தின் பின்னாகச் சிவதரிசனத்தி னிகழும் ஆன்மசுத்தியும் ஒருதலையான் வேண்டப்படுமென்றுணர்ந்துகொள்

ளுக. "நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கு நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாகி—யாசையொடு மங்குமிங்குமாகியல மருமேவாரும்பாச மறுக்கும்வகை யருளின்வழி யுரைப்பாம்." என வழிநூலாசிரியரும் இக்கருத்தேபற்றி ஓதினார்.

## விளக்கம்.

இக்கருத்துரை என்னசொல்லிற்றோவெனின், சூத்திரக்கருத்து இதுவென்று சொல்லிற்று.

(இக்கருத்துரையின் பொருள்.) எட்டாஞ்சூத்திரத்திற் கூறியவாறு தமது முதல் குருவுமாய்வந்து உபதேசிக்கக் கேட்ட உயிர், அவ்வுபதேசத்தைச் சிந்திக்கு முறைகூறிச் சிந்தித்தலினால் ஐம்புலமாகிய வேடருடன் கூடி வளர்ந்த அசுத்தத்தை நீக்கித் தன்னைப்பரிசுத்தபடுத்து முறையையுணர்த்துதல் இவ்வொன்பதாஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.

மேலைச்சூத்திரத்தில் குருவால் ஞானம் நிகழும் எனக் கேட்டல்கூறி இச்சூத்திரத்தில் அந்த ஞானத்தைச் சிந்திக்கு முறைகூறுகின்றதனால் சூத்திரத்தின் சம்பந்தம் விளங்கியவாறு அறிக.

சிவப்பிரகாசம் அ-ம் சூ-ம் க-வது செய்யுளில் ஆன்மசுத்தியாவது "தான்பணியை நீத்தல்" என்று கூறப்பட்டிருக்கின்றது. அவ்வான்மசுத்தி இந்நூலில் பத்தாஞ் சூத்திரத்தில் "இறைபணி நிற்க" என்று கூறுவதனால் பெறப்படுகின்றது. அன்றியும், ஆடைக்கு அழுக்கு நீக்கமே சுத்தியாமாறுபோல உயிர்க்குப் பாசநீக்கமே சுத்தியாவதன்றி வேறன்று ஆதலானும், பாசநீக்கத்தைச் செய்யும் முன்னர் ஆன்மசுத்தி உண்டாகாது ஆகலானும், வருகின்ற கo-ம் சூத்திரத்திற்குப் பாசக்ஷயம் பண்ணுமாறுணர்த்துதல் கருத்துரையாகக் கூறியிருப்பதாலும், பாசக்ஷயத்திலுண்டாகின்ற ஆன்மசுத்தி வருகின்ற கo-ம் சூத்திரத்தின் கருத்தாகவே முடிகின்றது. இச்சூத்திரத்தில் பதியைநாடி எனவும், தண்ணிழலாம் பதியெனவுங் கூறியன சிவதரிசனம் பண்ணுமுறைமையை உணர்த்தியதாம். சிவதரிசனம் பண்ணுமுறையை உணர்த்திய இச்சூத்திரத்திற்குப் பத்தாஞ்சூத்திரத்திற் கூறப்படும் ஆன்மசுத்தியைக் கருத்துரையாகக் கூறியது எவ்வாறு பொருந்துமென மலையவேண்டாம்; சிவதரிசனத்தில் உடனாக நிகழ்வது ஆன்ம சுத்தியாதலால் அவ்வுடனிகழ்ச்சியை உணர்த்துவதற்கும், பதியை நாடுக வெனக்கூறும் இச்சூத்திரத்திற்கும் ஏகனாய் நிற்க இறைபணி நிற்க எனக்கூறும் பத்தாஞ்சூத்திரத்திற்கும் தம்முள் சிறுபான்மை வேறுபாடு இருப்பினும் இச்சூத்திரத்தில் பாசம் ஒருவ என்றும் பத்தாஞ் சூத்திரத்தில் மலமாயை தன்னொடு வல்வினையின்றே யென்றும் கூறுதலால் பாசநீக்கமாகிய ஒரு பொருளில் இரு சூத்திரமும் ஒற்றுமையுடையன என்பது

உணர்த்துதற்கும், இச்சூத்திரத்திற்கு ஆன்மசுத்தியைக் கருத்துரையாகவும் பத்தாஞ்சூத்திரத்திற்குப் பாசநீக்கத்தைக் கருத்துரையாகவும் கூறினுமென அறிக.

பத்தாஞ்சூத்திரக் கருத்தை இச்சூத்திரத்தின் கருத்தாகக் கூறியதைப் பற்றி எடுத்துக் காட்டிய சமாதானம் அவ்வாருகட்டும்; எட்டாஞ் சூத்திரம் நான்காம் அதிகரணத்து மேற்கோளில் "ஆன்மாத் தன்னை இந்திரியத்தின் வேருவான் காணவே தமது முதல் சீபாதத்தை யணையும்" என்று கூறப் பட்டிருத்தலால், இந்திரியத்தின் வேருகத் தன்னைக்காண்டலாகிய அக்கா ட்சியே உயிருக்குச் சுத்தியாகும்; அதன்மேலும் இச்சூத்திரத்திற் கூறப் படும் ஆன்ம சுத்தி எதற்காகவேண்டு மெனின், இந்திரியத்தின் வேருகக் காண்டலே போதும்; ஆயினும் பகுத்துணர் வின்றி நிருவிகற்பமாய்க் காண்டலும், அதுவோ இதுவோ எனச்சந்தேகமாய்க்காண்டலும், பகுத் துணர்வோடு தெளியக் காண்டலுமெனக் காட்சி மூவகைப்படும். ஒன்றை மற்றொன்ருகக் காணும் விபரீதக் காட்சியும் ஒன்ருகவைத்துக் காட்சி நான் கெனவுங் கூறப்படும். விபரீதத்தினும் நிருவிகற்பத்தினும் உண்மை வெளி ப்படாமையால் விபரீதத்தை நிருவிகற்பத்தினுள் அடக்கி மேற்கூறியவாறு காட்சி மூன்றெனக் கூறினுங் குற்றமில்லை. இந்திரியத்தின் வேருகத் தன் னைக்காணும் முறையில் அதிதீவிரதர பக்குவமுடையாருக்கு அம் மூவகைக் காட்சியும் ஆசிரியன் உபதேசத்தைக் கேட்டமாத்திரத்தே நிகழும். அதா வது விரைவாய் மூன்றுகாட்சியும் ஒன்றன்பின் ஒன்ருய் நிகழு மென்றபடி யாம். மந்ததரம், மந்தம், தீவிரம் ஆகியபக்குவ முடைய ஏனையோருக்கு உப தேசத்தைக் கேட்டமாத்திரத்தே அம்மூன்று காட்சியும் நிகழாவாம். அவ ருக்குக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்னும் படிமுறையான சாதனத் தால் நிகழும். எவ்வாறெனின், கேட்டலினல் நிருவிகற்பக் காட்சியும், சிந் தித்தலினல் சந்தேகக் காட்சியும், தெளிதலினல் தெளிவுக்காட்சியும் நிகழும் என அறிக. ஆதலால் அதிதீவிரதரபக்குவருக்கு எட்டாஞ் சூத்திரத்திற் கூறியதேபோதுமாயினும், அதிதீவிரதர மல்லாத ஏனைய பக்குவ முடையா ருக்கு எட்டாஞ் சூத்திரத்திற் கூறியவாறு சிவரூபத்தில் நிகழும் ஆன்மதரி சனமும் அதன் பின்னுக இச்சூத்திரத்திற் கூறியவாறு சிவதரிசனத்தில் நிக ழும் ஆன்ம சுத்தியும் உறுதியாய் வேண்டப்படுமாதலின் எட்டாஞ் சூத்திரத் தின் பின்னுக இவ்வொன்பதாஞ் சூத்திரம் கூறப்பட்டது. அதிதீவிரதர முடையாருக்குக் கேட்டலொன்றே மூவகைக் காட்சியையும் தரும்; ஏனை யோருக்குக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் மூன்றும் முறையே மூவகைக் காட்சியையும் தரும் என்னும் இக்கருத்தே பற்றிச் சிவஞான சித்தியார் அ-ம் சூ-ம் ௩-வது "பாசிபடு குட்டம்" என்ற செய்யுளில் 'சிவபெருமானி டத்து நீங்காத அன்புடையவர் அச்சிவமாயே நிற்பர்; பழைய வாசனையால் சிவத்தினிடத்துங் கருவிகளினிடத்தும் நிலைபெருமல் அலைபவர்க்கு அவ் வாசனையை நீக்கும் உபாயத்தை முன்னர் கூ-ம் சூத்திரத்திற் கூறுவாம்' என் றுவழிநூலாசிரியர் அருளுவாராயினர்.

தத்துவங்களின் வேறெனத் தன்னைக்கண்டும் தன் உண்மை நிலையை அறியாமைநிருவிகற்பக் காட்சி. தன் உண்மை நிலை அருளோடு பிரிப்பின்றி நிற்றலென அறிந்தும் அவ்வருளி லடங்காமல் அருளினுங் கருவியினும் மாறிமாறிப் போக்குவரத்தாய் நிற்றல் ஐயக்காட்சி. அருளில் அடங்கி அடிமையாய் நிற்றல் தெளிவுக்காட்சி. இம்மூவகைக் காட்சியும் தத்துவரூபம் முதல் சிவயோகம் ஈறாகிய பத்துக்காரியங்களும் அக்காரியங்களின் உடனிகழ்ச்சியும் அவைபற்றிய ஏனையவும் தசகாரிய விளக்கம் என்னும் நூலில் விரிவாகக் கூறியிருக்கின்றாம். ஆதலால் அவ்விடத்துக் காண்க.

## சிற்றுரை.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு.

ஊனக்கண்—குறையுணர்வாகிய பசுவறிவானும்,— பாசம்—பாசவறிவானும்,— உணரா—உணரப்படாத,— பதியை,—முதல்வனை,—ஞானக்கண்ணினில்—அவனது திருவடி ஞானத்தால்,—சிந்தை—தன்னறிவின்கண்ணே,—நாடி—ஆராய்ந்தறிக. ((அத்திருவடி ஞானத்தான்))—பாசம்—நிலமுதனாதமீறாகிய பாசக்கூட்டம்,—உராத்துனை—நின்றுழிநில்லாது பரந்து திரிதற்கண் அதிவேகமுடைய,— தேர்த்தென— பேய்த்தேரினியல்பிற்றாய்க் கழிவதென்றறிந்து,— ஒருவ— நீங்கவே,— பதி—அப்பதி ஞானம் (பிறவித்துயராகிய வெப்பத்துக்கு),—தண்ணிழலாம்—குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்கும்: (அவ்வாறு) பாசத்தை யொருவி ஞானத்தைப் பெற்று ஞேயத்தைக் கண்டகாட்சி சலியாமைப்பொருட்டு அப்பொருள்பயக்கும்),—அஞ்செழுத்தே—திருவஞ்செழுத்து,—விதி—அவ்விதிப்படி யறிந்து,—எண்ணும்—கணிக்கப்படும் எ-று.

ஊனமென்பது அப்பொருட்டாதல் "ஊனமேற் கிரியை வித்தை" என்பதனானறிக. "நன்று மண்ணிது நாடாய் கூறி" என்றாற் போல நாடி என்பது இகரவீற்று முன்னிலை ஏவல். உராத்துனை ஏழாம் வேற்றுமைத்தொகை. உராவென்பது முதனிலைத் தொழிற் பெயர்; "பறவாக்குழவி" "பாயாவேங்கை" என்றாற்போல, ஒருவரானுரப் படாத வேகத்தையுடைய தேரெனச் செயப்படு பொருட்கண் வந்த பெயரெச்ச மறையாகக் கொண்டுரைத்து, "திருத்தார் நன்றென்றேன் றியேன்" என்றாற்போல உராவென்பது குறுக்கல் விகாரமென்பாரு முளர். பின்வந்தபதி ஆகுபெயர்;

## விளக்கம்.

(இச்சூத்திரத்தின் பொழிப்புரை.) துணையின்றி அறிய முடியாத குறையினையுடைய பசுஅறிவானும் துணையாகியகருவிகரணங்களினால் உண்டாகிய ஏகதேசமாகிய பாச அறிவானும் பதியை அறியமுடியாது. அவ்விரு அறிவாலும் அறியப்படாத முதல்வனை அம்முதல்வனுடைய திருவடி ஞானத்தால் உயிராகிய தன்னறிவின் கண்ணே ஆராய்ந்தறிக. அவன் திருவடிஞானத்தால் அவனை யறிக என்னும் இக்கருத்தேபற்றி "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என அருளிச் செய்தார் மணிவாசகப் பெருமான். அடியென்பதும் அருளென்பதும் ஒரு பொருளென்பது மேலே காட்டினும். அத்திருவடி ஞானத்தால் முதல்வனையறிவதோடு, நிலமுதல் நாதமீறாகிய பாசக்கூட்டத்தைக் கானல்நீர் போலத் தோன்றிப் பொய்யாய்க்கழியுமாறு போலக் கழிவதென்று அறிந்து அப்பாசக்கூட்டத்தினின்றும் நீங்கவே, அத்திருவடி ஞானமாகிய பதிஞானம் பிறவித்துயராகிய வெப்பத்துக்குக் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்கும். அவ்வாறு பாசத்தில் நின்றும் நீங்கித் திருவடிஞானத்தைப் பெற்று அத்திருவடிஞானத்தால் முதல்வனைக் கண்டகாட்சி சலியாது நிலைத்தற்பொருட்டுப் பாசத்தில் நீங்கி முதல்வனை யடைதலாகிய பொருளைத்தருகின்ற திரு அஞ்செழுத்தை அறிந்து அப்பஞ்சாக்கரம் விதிப்படி செபிக்கப்படும் எ-று.

ஊனம் என்றது குறையென்னும் பொருளைக்குறித்து நிற்றலால் ஊனக்கண் என்பதற்கு குறையுணர்வு என உரைசெய்யப் பட்டது. ஊனம் என்பது குறையென்னும் பொருளில் வருமென்பதைச் சிவஞானசித்தியார் க-வது சூத்திரம் சுடு-வது செய்யுளில் "ஊனமேற் கிரியை வித்தை" என்பதனால் அறிக. கிரியை ஊனமேல் என்பதற்கு கிரியை குறைந்து என்பது பொருள்.

சிந்தை நாடிஎன்றவிடத்தில் நாடிஎன்றது வினையெச்சமாகாது நாடுக என்னும் பொருளில் இகரத்தை இறுதியாக உடைய முன்னிலை ஏவலாய் நின்றது. இதனை அகநானூறில் "நன்று மன்னிது நீ நாடாய் கூறி" என்றவிடத்து, கூறி என்பது கூறுகஎன்னும் பொருளில் நின்றவாறு பற்றி அறிக.

உராத்துனை என்றதில் உரா என்பது உலாவல் என்னுங் கருத்தில் பரந்து திரிதலையும், துனை என்பது "கதழ்வுந் துனைவும் விரைவின்பொருள" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தின்படி வேகத்தையும் உணர்த்தி, கண் என்னும் ஏழாம் வேற்றுமை உருபுவிரிந்து பரந்து திரிதற்கண் அதிவேகமுடைய என்னும் பொருளில் நிற்றலால் உராத்துனையென்பது ஏழாம் வேற்றுமைத் தொகைச்சொல்.

உலாவல் என்னும் பொருளைத் தருகின்ற உராவல் என்னுஞ் சொல்லில் அல்விகுதி குறைந்து உரா என்னும் பகுதி மாத்திரம் நின்று உலாவல் என்னும் பொருளைத்தந்து பெயர்ச்சொல்லாய் நிற்றலால் உராவென்பது முதல்நிலைத்தொழிற் பெயர்ச்சொல். உலாவலும் திரிதலும் ஒருபொருள்.

உராத்துனைத்தேர் என்பதற்குப் பரந்துதிரிதற்கண் வேகமுடைய தேர் என்று கூறிய இப்பொருளேயன்றி ஒருவரால் ஊரப்படாத வேகமுடைய தேர் என்று கூறுவாருமுளர். அவ்வாறு கூறும் முறையில், ஊர் பகுதி. ஆ எதிர்மறை விகுதி. ஊரா என்னும் எதிர்மறை எச்சமாய் நின்று செயப்படுபொருளாகிய தேரைக் கொண்டுமுடியும். எவ்வாறெனின், பறவாக் குளவி பாயாவேங்கை என்றவிடத்து அவ்விரண்டினுமுள்ள எதிர்மறையானது எச்சமாய் நின்று குளவியாகிய மலைப்பச்சையினையும் வேங்கை மரத்தினையுங் கொண்டுமுடிந்தாற் போலாம். தேர் ஊரப்படும் பொருளாய் இருக்கின்றமையால் செயப்படுபொருளாயிற்று. ஊர் என்னும் பகுதி உர் எனக் குறுகிநிற்றலால் குறுக்கல் விகாரம். இது "திருத்தார் நன்றென் றேன்றியேன்" என்றவிடத்துத் தீயேன் என்பது தியேன் எனக் குறுகி நின்றவாறு போலாம் என்பர்.

தண்ணிழலாம்பதி என்றவிடத்துப் பதி என்றது பதிஞானத்தைக் குறித்து நிற்றலால் ஆகுபெயர்.

## சிற்றுரை.

இதனுள், ஊனக்கண்பாசம் உணராப்பதியை ஞானக்கண்ணினிற் சிந்தை நாடிஎன்றது ஓரதிகரணம்; உராத்துனைத் தேர்த்தெனப் பாசமொருவத் தண்ணிழலாம் பதி என்றது ஓரதிகரணம்; விதி எண்ணுமஞ் செழுத்தே என்றது ஓரதிகரணம்; ஆக மூன்றதிகாரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

## விளக்கம்.

இ—ள். வெ—டை.

---

## முதலதிகரணம்.



பதிஞானத்தால் பதியைக் காணவேண்டுமெனக் கூறும் மேற்கோள்.

ஈண்டு அம்முதலை ஞானக்கண்ணாலே காண்கவென்றது.

## சிற்றுரை.

எ-து மே-ள் எ-னின், மேலைச் சூத்திரத்து ஓதியவாற்றான் முதல்வன் பாசவறிவால் நாடப்படுவனல்லனாயினும் பசுவறிவால் நாடப்படுவனென்றற்கு இழுக்கென்னை யெனச் சிவசமவாதசைவர் மதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ-ள். வெ-டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

இ-ள். ஈண்டு—இம்மூன்றதிகரணங்களுள் வைத்த இம்முதலதிகரணத்து,—அம்முதலை—பாசஞான பசுஞானங்களா லுணரப் படாத முதல்வனை,—ஞானக்கண்ணாலே—சிவஞானத்தினாலே,—காண்க—அறிக எ-று.

## சிற்றுரை

## விளக்கம்

இம்மேற்கோள் சூத்திரத்திலுள்ள ஊனக்கண்பாசம் உணராப்பதியை ஞானக் கண்ணினிற் சிந்தைநாடி என்னும் முதற்கூற்றைப் பதச்சேதஞ் செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்னசொல்லிற்றோ வெனின், எட்டாஞ் சூத்திரத்தில் ஐம்புலவேடரின் வளர்ந்து அயர்ந்தனை எனக்கூறியதனால் பாசஞானத்தால் முதல்வன் அறியப்படமாட்டான் ஆயினும், பதிஞானத்தால் அம்முதல்வனை ஆராய்ந்து அறிக என்று இச்சூத்திரத்திற் கூறவானேன்? பசுஞானத்தால் அறியப்படுவன் என்று கூறினால் வருங்குற்றம் என்னை யென்பர் சிவசமவாத சைவர். அவர் கூற்றை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைப் பதச்சேதஞ் செய்து பசுஞானத்தால் முதல்வனை அறிய முடியாதெனவும் பதிஞானத்தினாலேயே அறிய முடியுமெனவுங் கூறியவாறும்.

இவ்வதிகரணத்தில் முதல்வன் பசுஞானத்தாற் காணப்படுவனோ பதிஞானத்தாற் காணப்படுவனோ என்பது ஐயபபாடு. பசுஞானத்தாற் காணபபடுவன் என்பது பிறர்பக்கம் என அறிக.

(இம்மேற்கோளின் பொருள்.) இச்சூத்திரத்திற் கூறப்படும் மூன்றதிகரணங்களுள் இம்முதலதிகரணத்தில் பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் அறியப்படாத முதல்வனைப் பதிஞானத்தினாலே அறிக எ-று.

ஞானக்கண்ணாலே என்றதிலுள்ள ஏகாரம் பதிஞானத்தாலன்றிக் காணமுடியாது என்பதை உறுதிப் படுத்தினமையால் தேற்றம்

பதிஞானத்தாலேதான் முதல்வன் அறியப்படுவன்
என்பதற்குக் காட்டும்

ஏ து.

அவன்வாக்கு மனாதீத கோசரமாய் நிற்றலான்.

## சிற்றுரை.

ஏ-து ஏது எ-ன்னின், ஏனை ஞானங்களா னறியப்படாது சிவ ஞானத்தா னறியப்படு மென்றற்குப் பிரமாணம் என்னை யென்பாரைநோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) வாக்குமனாதீத கோசரமாய் நின்ற அதுவே என்புழி உரைத்தாம்.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

இ—ள். வாக்கு—நாதமுடிவான பாசஞானமும்,—மனம்—பசு ஞானமுமாகிய,—அதீதம்—அவ்விரண்டன் விருத்திகளைக் கடந்து அதீதமாய் நின்று,—கோசரமாய் நிற்றலான்—ஒற்றுமைப் பட்டுணரும் பதிஞான மாத்திரைக்கே விளங்கிக்கோசரிப்ப தாகலான் 'ஈண்டம் முதலை ஞானக்கண்ணாலே காண்க' என்றது வென மேற் கொண்டது எ-று.

## சிற்றுரை.

ஆண்டுப் பொதுவகையாற் பெறப்பட்டதனை ஈண்டேதுவாக வைத்து வாக்குமனாதீதமாயுங் கோசரமாதல் பிறிதொன்றாற்பெறப்படாதென்னும் அருத்தாபத்தியான் ஞானக்கண்ணாலே காணப் படுமென்பது தானேபோதருமென மேற்கோளைச் சாதித்தார்.

## விளக்கம்.

இந்தஏது என்னசொல்லிற்றோ எனின், முதல்வன் பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் அறியப்படாமல் பதிஞானத்தால் அறியப் படுவன் என்பதற்குப பிரமாணம் என்னையென்பாரை நோக்கிப் பிரமாணங் கூறி ஞானக் கண்ணாலே காண்க என்ற மேற்கோளை வலியுறுத்திய வாறும்

## இந்த ஏதுவிற்கு உரையாசிரியர் கூறிய உரை.

இந்நூல் ஆறாஞ்சூத்திரம் இரண்டாம் அதிகரணத்து மேற்கோளில் வாக்குமனாதீத கோசரமாய் நின்ற அதுவே என்றவிடத்துக் கூறியிருக்கின் றமையால் அப்பொருளையே இவ்விடத்துங் கொள்க என்பதாம்.

## இதற்குச் சுப்பிரமணியதேசிகர் கூறிய உரை.

முதல்வன், பிருதிவிமுதல் நாததத்துவ முடிவான பாசத்தாலுண்டாகும் ஞானத்தின் விருத்தியையும், தற்போத முனைப்பாகிய பசுஞானத்தின் விருத்தியையுங் கடந்து அதீதமாய் நின்று, அம்முதல்வனோடு பிரிப்பின்றி நின்றுணரும் பதிஞான மாத்திரைக்கே விளங்கி யறியப்படுவன் ஆதலால், 'ஈண்டு அம்முதலை ஞானக்கண்ணாலே காண்க' என மேற்கோள் கூறியது எ—று.

இந்நூல் ஆறாஞ்சூத்திரம் இரண்டாவது அதிகரணத்தில் வாக்குமனாதீத கோசரமாய் நிற்றலை மேற்கோளாகக் கூறி இவ்விடத்தில் அம்மேற்கோளை ஏதுவாகக் கூறிய கருத்தென்னை யெனின், ஆறாஞ்சூத்திரத்தில் வாக்கிற்கும் மனதிற்கும் எட்டமாட்டான்: எட்டாமையால் சூனியமுமன்று எட்டுவன் எனப் பொதுவாகக் கூறினாரே யன்றிப் பதிஞானத்திற்கு எட்டுவன் எனச் சிறப்பாகக் கூறவில்லை. அவ்வாறு பொதுவாகக் கூறியதனை இவ்விடத்தில் ஏதுவாக வைத்து வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாமலிருந்தும் எட்டுதல் ஞானக்கண்ணிற்கன்றிப் பிறிதொன்றாற் பெறப்படாது என்னும் அருத்தாபத்திப் பிரமாணத்தால் ஞானக்கண்ணாலே காணப்படுவன் என்னுஞ் சிறப்புத்தானே சித்திக்குமென மேற்கோளை வலியுறுத்தினாரென அறிக.

மேற்கோள் ஏதுவாய்வருதல் குற்றமாகாதோஎனின், ஒருமேற்கோள் ஏதுவாய் நின்று பிறிதொரு மேற்கோளைச் சாதிக்குமாயின் குற்றமாகாது. உதாரணமாக—இவன் பிராமணன், பிராமணத் தன்மையால் என்று கூறி, இவன் யாகஞ் செய்பவன், பிராமணனாதலால் என்றவிடத்து மேற்கோள் ஏதுவாய் வந்தவாறு அறிக.

பாசஞானமாவது—பாசமாகிய கருவிகளால் ஆன்மாவினிடத்தில் நிகழும் ஞானம்.

பசுஞானமாவது—தற்போதமுனைப்பால் ஆன்மாவினிடத்து நிகழும் ஞானம்.

பதி ஞானமாவது— பதியின் அருளால் ஆன்மாவினிடத்து நிகழும் ஞானம்.

இந்த ஏது, முதல்வன் பசுஞானத்தாற் காணப்படுவன் என்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

பதிஞானத்தாலேதான் முதல்வன் காணப்படுவன்
என்பதற்குக் காட்டும்

உதாரணம்.

நாடியோ வென்போ நரம்புசீக் கோழையோ
தேடி யெனையறியேன் றேர்ந்தவகை—நாடியரன்
றன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணா
ரென்னா மெனவறிவா ரின்று.

## சிற்றுரை.

ஏ-து உ-ம் எ-னின், கோசமாதல் பிறிதொன்றாற் பெறப்படாதென்றதென்னை? பசுத்துவம் நீங்கியவழிச் சுட்டிறந்தறிவதாகிய உயிருணர்வு திருவடிஞானத்தோ டொப்பதாகலின், அதன்கட் கோசமாதல் அமைவுடைத்துப் போலுமென்பாரை நோக்கி அவ்வுணர்வு விளங்குமாறுணர்த்து முகத்தான் அவரை மறுத்து ஏதுப்பொருளை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ தேடி. எனை அறியேன் தேர்ந்தவகை நாடி—நாடிமுதலியவற்றுள் (யான்யார்) என்னைத் தேடியும் அறிகின்றிலே (னென்று) இவ்வாறு தேர்கின்ற தேர்ச்சி அறிவின் கண்ணே, (இதனைத் தெளிவிப்பதோரறிவு வேறுண்டென) ஆராய்ந்து நோக்கி,—அரன்தன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணார்—(அவ்வாறு நாடுங்கால் விளங்கித் தோன்றுவதாய) முதல்வனது திருவடிஞானத்தால் முதல்வனையு முணர்ந்து (முதல்வனின் வியாபபியமாய் நின்று அங்ஙனமறியும் பொருளாகிய) தம்மையு முணர்தலைச் செய்யாதார்,—என் என அறிவார் இன்று—மற்றெவ் வியல்பினரென்று தம்மை அறிய வல்லுநர் இம் முத்திக்காலத்து எ-று.

நாடிஎன்றது இடைபிங்கலை முதலியவற்றை. நரம்பெனவே அடங்குமேனும் தலைமைபற்றி வேறுகூறினார். சீ புண்ணீர். கோழை ஐ. ஓகாரம் தெரிநிலை. என்றென்பது சொல்லெச்சம். வகை ஆகுபெயர். ஒற்றுமைபற்றி அரனது ஞானத்தை அரனென் றுபசரித்தார். உம்மை எதிரது தழீஇயிற்று. எவனென்னும் வினாவினைக் குறிப்புப் பெயர் ஈண்டாகு பெயராய் என்னெனமரீஇயிற்று. ஆம் அசை. நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ வென்ற உபலக்

கணத்தால் ஏனைத்தத்துவ தாத்துவிகங்களினும் அவ்வாறு தெரிதல் கொள்ளப்படும். இது தம்மையறியுமா றுணர்த்து முகத்தானே தலைவனை யறிந்தபின் அறியப்படுவதாகிய தம்மறிவு கொண்டு தலைவனை யறியுமாறு யாண்டைய தெனமறுத்து வலியுறுத்த வாறு காண்க.

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றேயெனின், பதிஞானத்திற்குப் பதி எட்டுமேயன்றிப பிறிதொன்றுக்கும் எட்டாது என்று கூறுவானேன், சுட்டியறிவதாகிய பசுத்தன்மை நீங்கியவிடத்துச் சுட்டிறந்தறிவதாகிய ஆன்ம அறிவு பதிஞானத்தோடு ஒப்பதாகும். ஆதலால், அந்த ஆன்ம அறிவினிடத்துப் பதி விளங்கித் தோன்றுமென்றலே பொருத்தமென்பர் அச்சிவசமவாத சைவர். அவரைநோக்கிச் சுட்டிறந்தறியும் அறிவு பதிஞானத்தாலன்றி உண்டாகாதெனக்கூறிப் பதிஞானத்தாலன்றி அறியமுடியாதென்னும் ஏதுப்பொருளை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை) காணப்படும் சரீரத்துள் யான் யார்? நாடியோ நரம்போ சீயோ கோழையோ இந்திரியங்களோ அந்தக்கரணங்களோ என்று என்னைத் தேடுங்காலத்துத் தேடியும் அறிகின்றிலேன். இவ்வாறு அறிகின்றிலே னென்று தேர்கின்ற தேர்ச்சியறிவின்கண்ணே யான் என்பதனை அறிவிப்பதோர் அறிவுபொருள் அத்தேர்ச்சியறிவின் வேறாய் உண்டென ஆராய்ந்து நோக்கின், அவ்வாறு நோக்குங்கால் முதல்வனது திருவருள் விளங்கித் தோன்றும். அத்திருவருளாகிய திருவடிஞானத்தால் முதல்வனையும் அறிந்து முதல்வனை விட்டு நீங்காமல் நின்று அம்முதல்வனை அறியும் பொருளாகிய தம்மையும் அறியும் இவ்வாறு முதல்வனுடைய அருளால் முதல்வனையும் முதல்வனை விட்டு நீங்காத தம்மையும் அறிதலைச் செய்யாதார் கருவி கரணங்களெல்லாம் விடுபட்ட முத்திக்காலத்தில் தனித்து நில்லாத தம்மை வேறு எத்தன்மையுடையராக அறியவல்லார் எ-று.

(க-ரை.) முதல்வன் அருளால் அம்முதல்வனையும் தன்னையும் அறிய வேண்டிய உயிர், அவ்வாறு அறிதலைச் செய்யாமல் தன்னறிவால் முதல்வனை யறிதல் எங்ஙனங் கூடும் என்பதாம்.

நாடி என்றது இடைபிங்கலை சுழுமுனைகளை. நரம்பு என்று கூறியதனுலேயே நாடியும் அடங்குமேனும் நாடி தலைமையாதல்பற்றி நரம்பின் வேறாக நாடியையுங் கூறினார். சீ என்பது புண்ணீர்; அதாவது இரத்தம். கோழை யென்றது ஐ; அதாவது சிலேட்டுமம்.

நாடியோ என்போ சேழையோ என்றவற்றிலுள்ள ஓகாரம் நாடி முதலிய அவற்றை ஆராய்கின்ற தெரிநிலையைக் குறித்து நின்றது

தேடி எனையறியேன் என்றவிடத்து என்று என்பது சொல்லெச்சமாய் வருவித்து உரை செய்யப்பட்டது

சேர்ந்தவகை என்றவிடத்து வகை என்பது வருக்கின்ற அறிவைக் குறித்து நிற்றலால் ஆகுபெயர்.

அரன் திருவடி ஞானத்தாலே என்று கூறவேண்டுவதை ஞானத்திற்கும் அரனுக்கும் உள்ள ஒற்றுமைபற்றி அரன் றன்னாலே என்று உபசரித்துக் கூறினார்.

தன்னையுங் கண்டு என்ற விடத்துள்ள உம்மை அடுத்து வருகின்ற தமையும் என்பதைத் தழுவி நிற்றலால் எதிரது தழுவியது. தன்னையென்பது தலைவனை தமை என்பது உயிரை.

எவன் என்னும் வினாவினைக் குறிப்புப் பெயர்ச்சொல் இவ்விடத்தில் ஆகுபெயராய் எவ்வியல்பினரென்னும் பொருளைக்குறித்து என் என மருவி நின்றது.

என் ஆம் என்றதிலுள்ள ஆம் என்பது அசை.

நாடியோ என்போ நரம்பு சீக் கோழையோ என்ற உபலக்கணத்தால் ஏனைய அந்தக்கரண முதலிய சூக்குமசரீர தத்துவங்களினும் பிராணவாயு சத்தாதி விடயங்கள் முதலிய தூலசரீர தத்துவங்களினும் இவற்றுள் யான் யார் என்று தெரிதல் கொள்ளப்படும்.

இவ்வெண்பா, நாடி முதலியவற்றுள் யான் யாரென்று தம்மையறியுமாறுணர்த்தி அவ்வாறுணர்த்து முறையில் ஒவ்வொன்றாய் ஆராய்ந்து கழித்தவிடத்துத் தலைவன் அருள் விளங்கித்தோன்ற அவ்வருளால் தலைவனையறிந்து பின் தம்மை யறிவர் எனக் கூறினமையால், தலைவனையறிந்தபின் அறியப்படுவதாகிய தம்முடைய அறிவைக்கொண்டு தலைவனையறிதல் எவ்வாறு கூடுமென ஆன்ம அறிவிற்குப் பதி விளங்கித் தோன்றுமென்ற சிவசமவாதசைவரை மறுத்துப் பதிஞானத்திற்குப் பதிவிளங்கித் தோன்றுமென்ற ஏதுவின்பொருளை வலியுறுத்தியவாறு அறிக.

பதிஞானத்தாலன்றி ஆன்ம அறிவிற்குப் பதியைக்காணுந் தன்மை இல்லையென்பதற்குக் காட்டும்

உதாரணம்.

காட்டிய கண்ணே தனைக்காணா கண்ணுக்குக்
காட்டாய வுள்ளத்தைக் கண்காணா—காட்டிய
வுள்ளந் தனைக்காணா துள்ளத்தின் கண்ணாய
கள்வன்றா னுள்ளத்திற் காண்.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், எதிர்முகத்து ஒரு பொருளைக் கண்ட கண்ணை மறித்து நோக்கியவழி வெரிந் புறத்துப் பொருளையுங் காணவல்லதும்; அதுபோல அங்ஙனந் தேர்ந்தறிதலைச் செய்த உயிரே தெளிந்தறிதலையுஞ் செய்யவல்லதுமெனை அமையுமென்பாரை நோக்கி அதனது மாட்டாமையை விளக்கி அரன் றன்னாலே காண்டலை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) காட்டிய கண் தனைக்காணா—(உயிராற்) காட்டப் பட்டு ஒரு விடயத்தைக் காண்கின்ற கண்ணானது தன்னியல்பைக் காணமாட்டாது,—கண்ணுக்குக் காட்டு ஆய உள்ளத்தைக் கண் காணா—தனக்கு (அவ்விடயத்தைக்) காண்பித்து முதலாய் நிற்கும் உயிரையும் அது காணமாட்டாது,—காட்டிய உள்ளம் தனைக்காணாது—(அதுபோல முதல்வனால் மறைந்து நின்) றுணர்த்தப்பட்டு ஒன் றனைத்தேர்ந்துணர்கின்ற உயிர் (அவ்வாறே) தன்னியல்பையும் அறியமாட்டாது; (தன்னையுணர்த்தி நிற்கும் முதல்வனையு மறிய மாட்டாது),—உள்ளத்தின் கண் ஆய கள்வன்தான்—அத்தேர்ச்சி யறிவின் கண்ணும் உடனாய் நிற்குங் கள்வன் அம்முதல்வனாக லானே,—உள்ளத்திற்காண்—(அவனை) அவ்வறிவின்கண் வைத்து நாடித்தெளிவாயாக எ-று.

இது சொற்பொருட் பின்வருநிலை. ஏகாரம் அசைநிலை. "முறைகாக்கு முட்டாச்செயின்" என்றாற்போல காணுமென்னும் துவ்வீறு விகாரத்தாற் றொக்கது. பின் வந்த உள்ளம் ஈண்டுத் தேர்ச்சி யறிவின் மேற்று. உள்ளத்தின் கண்ணுமென்னுஞ் சிறப் பும்மை விகாரத்தாற் றொக்கது. தோன்றாது நிற்றல்பற்றிக் கள்வ னென்றார். கள்வனென்றது கண்ணுக்கு உயிர்மறைந்து நின்றே காட்டுவதாகலான் அது தன்னையும் உயிரையும் அறியமாட்டாதா யிற்று; அதுபோல முதல்வன் இதுகாறும் மறைந்து நின்றே யுணர்த்துதலின் உயிர் தன்னையு முதல்வனையும் அறியமாட்டாதா யிற்று என்பது படநின்ற குறிப்பு மொழி. உள்ளத்திற் காண வல்லார்க்கு அக்கள்ளந் தீர்தலின் தம்மையும் முதல்வனையுங் காண் டல் கூடுமென்பதாம். "கள்ளரோ டில்ல முடையார் கலந்திடின்—வெள்ள வெளியாமென் றுந்தீபற" என்றதும் இக்கருத்து நோக்கி. கண்ணுக்குக் காட்டாய உள்ளத்தைக் கண்காணாவென உவமைக்

கோதியவாறு பொருளினும் வருவித்துரைத்துக் கொள்க. இஃ தெடுத்துக் காட்டுவமை."

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றேவெனின், கண்ணனது எதிர் முகமாக நோக்கும்போது எதிர்முகத்துள்ள பொருளைக் காணும். அப் பொழுது முதுகுப்புறத்திலுள்ள பொருளைக் காணமாட்டாது. அக்கண் ணே திரும்பிப்பார்க்குமிடத்தில் முதுகுப்புறத்துள்ள பொருளையும் காணக் கூடும். அதுபோல, நாடி முதலியவற்றுள் யான்யார் என்று தேர்ந்து அறிந்த உயிரே தம்மையுந் தலைவனையும் இவ்வியல்பினரென்று தெளிந்து அறியவுங் கூடும். ஆதலால் பதிஞானத்தால் அன்றித் தன்னையுந் தலை வனையுந் தெளிந்தறிதல் கூடாதென்று மேலை வெண்பாவிற் கூறியது பொருந்தாதென்பர் சிவசமவாதசைவர். அவரை நோக்கித் தன்னையுந் தலை வனையும் தானே அறியமாட்டாத உயிரின் தன்மையை விளக்கி அரன் திரு வடிஞானத்தாலே தன்னையும் தலைவனையும் காணவேண்டுமென்று மேலை வெண்பாவிற் கூறியதை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) கண்ணனது ஒருபொருளைக் காணுங்கால் தானே காண மாட்டாது. உயிரால் காட்டப்பட்டுக் காணும். அவ்வாறு பொருளைக் காண் கின்ற கண்ணானது அக்கண்ணினியல்பை அறியமாட்டாது. அம்மட்டோ பொருளைக் காண்பித்துக் கண்ணைக் கருவியாகக்கொண்டு கருத்தாவாய் நிற் கும் உயிரையும் காணமாட்டாது. அதுபோல, நாடி முதலியவற்றுள் யான் யார் என்று தேர்ந்தறிகின்ற உயிர், தானே அவ்வாறு தேர்ந்தறியமாட்டாது. முதல்வன் மறைந்து நின்று அறிவிக்க அறியும். அவ்வாறு முதல்வனால் அறிகின்ற உயிர், கண்போலவே தன்னியல்பையும் அறியமாட்டாது; தனக்கு அறிவித்து நிற்கும் முதல்வனையும் அறியமாட்டாது. அவ்வாறாயி னும் கண் சடமாதலால் எக்காலத்தும் அறியமாட்டாது. உயிர் கண்போலச் சடமன்றி அறிவுப் பொருளாதலால் யான் யார் என்று தேர்கின்ற அத் தேர்ச்சி அறிவினிடத்தும் முதல்வன் உடனாய்நின்று அவ்வாறு தேரும்படி செய்து மறைந்து கள்வனாய் நிற்றலாலே அம்முதல்வனை அவன் அருளால் உன்னிடத்திலுண்டாகுந் தெளிந்த அறிவால் நாடித்தெளிவாயாக எ-று.

(க-ரை.) எதிர்முகமாகக் காணப்படும் பொருளும் முதுகுப்புறமாகக் காணப்படும் பொருளும் புறப்பொருளாதலால் கண் காணும். அக்கண்ணே உள்ளே இருக்கின்ற கண்ணொளியையும் உயிரையும் காணமாட்டாது. அதுபோல உயிரானது தன்னையும் முதல்வனையும் அறியமாட்டாது. ஆயி னும் கண்போல் உயிர் சடமன்றி அறிவுப் பொருளாதலால் அவன் அரு ளால் தன்னையும் தலைவனையும் அறிதல் கூடும் என்பதாம்.

காட்டிய என முன்னர் வந்த சொல்லும் பொருளுமே பின்னரும் வருதலால் இது சொற்பொருட் பின்வருநிலை யென்னும் அலங்காரம்.

காட்டிய கண்ணே என்றதிலுள்ள ஏகாரம் அசைநிலை.

தனைக்காணு என்றவிடத்தும் கண்காணு என்றவிடத்தும் காணுது என ஒருமைப்பொருளை உணர்த்தும் துகரம் இறுதியில் தொக்குநின்றது. இவ்வாறு துகரம் இறுதியிற்றொக்குவருமென்பதைத் திருக்குறள் செங்கோன்மை எ-வது பாட்டில் "முறைகாக்கு முட்டாச் செயின்" என்றவிடத்து முட்டாது செயின் என்பது முட்டாச் செயின் என நின்றவாறு பற்றி அறிக.

காட்டாய உள்ளம் காட்டிய உள்ளம் என்றவற்றின் பின்னுக உள்ளத்தின் கண் என்றவிடத்து உளளம் என்றது இச்செய்யுளில் நாடி முதலியவற்றுள் யான் யார் என்று தேர்கின்ற தேர்ச்சியறிவைக் குறித்து நின்றது.

உள்ளத்தின்கண் என்ற அவ்விடத்துச் சிறப்பும்மை விகாரத்தாற்றொக்குநிற்றலால் அதனை விரித்துத் தேர்ச்சியறிவின்கண்ணும் என உரை செய்யப்பட்டது.

முதல்வன் அத்தேர்ச்சி யறிவின்கண்ணும் கலந்து நின்றும் உயிருக்குத் தோன்றுமையால் அம்முதல்வனைக் கள்வன் என்றுர். எனவே உயிரானது கணணுக்குத் தோன்றுமல் மறைந்துநின்று அக்கண்ணுக்குப் பொருளைக் காட்டுதலால் அக்கண், தன்னையும் உயிரையும் அறியமாட்டாதாயிற்று; அதுபோல முதல்வன், இதுவரையும் உயிருக்குத் தோன்றுமல் மறைந்து நின்றே அவ்வுயிருக்கு அறிவித்தலின் அவ்வுயிர், தன்னையும் முதல்வனையும் அறியமாட்டாதாயிற்று என்று பொருள்கொள்ளும்படியாகக் கள்வன் என்றசொல் நின்றமையால் கள்வன் என்றது குறிப்புமொழி என அறிக. குறிப்பு மொழியாவது:— குறிப்பினுல் பொருளுணர்த்தும் மொழியாம். ஆயினும் கண்ணுக்கு உள்நோக்குந் தன்மை இல்லை. உயிருக்கு உள் நோக்குந் தன்மை இருத்தலால் உள்நோக்கி அறியவல்லார்க்கு, தோன்றுது மறைந்து நிற்கும் கள்ளம் தீர்ந்து தம்மையும் முதல்வனையும காண்டல் கூடுமென்பதாம். இக்கருத்துப்பற்றியே திருவுந்தியார் ஆசிரியரும் உ௩ - வது செய்யுளில், கள்வன் வீட்டுக்குடையவனை வசியம்பண்ணித் தன்வசமாக்கிக்கொண்டால் எல்லாப்பொருளும் அறியப்படுமாறுபோல், இறைவன் உயிரைப் பக்குவப்படுத்தித் தன்னருள்வழி நிற்கச்செய்து சஞ்சிதவினைகளைச் சோதித்துத் திருவடி தருவன் என அருளினர்.

இவ்வெண்பாவில் கண் உவமை. உயிர் உவமேயம். கண்ணுக்குக் காட்டாய உள்ளத்தைக் கண்காணுதெனக் கண்ணுகிய உவமைக்கோதிய அதனை, உயிராகிய பொருளினும் காட்டிய உள்ளந்தனைக் காணு என்றத

னெ

ஞேடுகூட்டித் தேர்ந்தறிகின்ற உயிர் தன்னேயுங் காணுது காட்டாய முதல் வனேயுங் காணுது என உரைத்துக்கொள்க. அவ்வாறே உரை செய்யப் பட்டது.

இச்செய்யுளில் காட்டக்கண்டு கண்ட தன்னேயும் காட்டிய முதலேயும் உணராத தன்மையை உவமேயமாகிய உயிரினிடத்தும் உவமையாகிய கண்ணினிடத்தும் எடுத்துக்காட்டி இருத்தலால் இது எடுத்துக்காட்டு உவமை யென்னும் அலங்காரம்.

முதலதிகரணம் முற்றிற்று.

---

# இரண்டாம் அதிகரணம்.

பதிஞானத்தைப் பெறுதற்குபாயம் இதுவெனக்கூறும்

மேற்கோள்.

இனி அசத்தாயுள்ள வன்னபேதங்களே அசத்தென்றுகாண உளதாய் நிற்பது ஞானசோரூபமென் றுணரற்பாற்று.

## சிற்றுரை.

எ-து மே-ள் எ-னின், அம்முதலே ஞானக்கண்ணுலே காண்க வென்றுணர்த்தியவழி அந்த ஞானக்கண்ணேப் பெறுமாறு யாங்ஙனமென நிகழும் அவாய் நிலேயை நீக்குதற்பொருட்டு மேலதற்கோர் புறனடையாய் எழுந்த இச்சூத்திரத்தின் இரண் டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ-ள். வெ-டை.

சுப்பிரமணியதேசிகர் உரை.

இ-ள். அசத்தாயுள்ள—நிலேயுதலுடைய தற்சொரூபத்தைக் காட்டாது மறைத்து நிற்கு நிலேயுதலிலவாயுள்ள,—வன்னபேதங் களே—பிரபஞ்சங்களே,—அசத்தென்று—இவை நிலேயுதலுடைய வல்லவென்று,—காண—விவேகித்தறியின்,—உளதாய் நிற்பது— அங்ஙனம் நிராலம்பமாய் விளங்கித்தோன்றுவது,—ஞானசொரூப மென்றுணரற்பாற்று— பதிஞானத்தி னியல்பென் றறியற்பால தாம் எ-று.

## சிற்றுரை.

பாசமொருவத் தண்ணிழலாம்பதி என்புழிப் பாசமென்றது காரியப்பிரபஞ்சத்தை என்பார் அசத்தாயுள்ளவென்றும், சொற்பல்காமைப் பொருட்டு ஏதுப்பொருளை உருவகமுகத்தான் உடம்பொடுபுணர்த்துக் காட்டுவார் பிரபஞ்சத்தை யென்றது வன்ன பேதங்களை யென்றும், வியாபகப்பொருளுக்கு ஒருவுதலாவது உணர்ச்சி விசேடமேயாமென்பார் அசத்தென்றொழிய வென்றது காணவென்றும், தண்ணிழலாய் நிற்றல் புதிதன்றென்பார் உளதாய் நிற்பதென்றும், பதி என்றது ஆகுபெயராற் பதிஞானத்தின்மேனின்றதென்பார் ஞானசொரூபம் என்றும், இஃது அநுபவத்தினன்றிச் சொல்லளவையின் அறியவாராதென்பார் உணரற்பாற்றென்று முரைத்தார். இஃதேகதேச உருவகம்.

## விளக்கம்.

இம்மேற்கோள் சூத்திரத்திலுள்ள உராத்துனைத் தேர்த்தெனப் பாசமொருவத் தண்ணிழலாம் பதி என்ற இரண்டாங்கூற்றைப் பதச்சேதஞ்செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்னசொல்லிற்றோ எனின், முதலதிகாரணத்து மேற்கோளில் அம்முதலை ஞானக் கண்ணாலே காண்க என்று உணர்த்தியவிடத்து அந்த ஞானக்கண்ணைப் பெறுமுறை எவ்வாறு என்னும் அவாநிகழுமாதலால் அந்த அவாய் நிலையை நிரப்புதற்பொருட்டு, முதலதிகாணத்துக்கு ஓர் புறனடையாக இச்சூத்திரத்துக்கூறிய இரண்டாங் கூற்றைப் பதச்சேதஞ்செய்து பிரபஞ்சத்தை அசத்தென்று அறிதலால் ஞானக்கண்ணைப் பெறலாம் எனக் கூறியவாறும்.

ஏனைய மேற்கோள்களெல்லாம் முன்னைய மேற்கோளிலுண்டாகிய சந்தேகத்தை நீக்குதற்பொருட்டு எழுந்ததாகக்கூறி, இம்மேற்கோள் மட்டும் மேற்கூறிய மேற்கோளிலுள்ள அவாய் நிலையாகிய குறையை நிரப்புதற்பொருட்டு எழுந்ததாகக் கூறிய கருத்தென்னையெனின், கூறுதும். ஞானக்கண்ணாலே காண்க என்றவிடத்துப் பசுஞான பாசஞானங்களினால் என் காணக்கூடாது என்னுஞ் சங்கை நிகழலாம். அச்சங்கை அம்முதலதிகாணத்து ஏதுவினால் தீர்க்கப்பட்டது. ஆயினும் ஞானக்கண் பெறும் முறை அவ்வதிகாணத்திற் கூறாமையால் அம்மட்டில் அவ்வதிகாணம் முற்றுப்பெறவில்லை. முற்றுப்பெறாமல் நின்ற அக்குறையை இம்மேற்கோளினால் நீக்கி நிரப்பினாராதலின் அவ்வாறு கூறப்பட்டது என்க.

இவ்வதிகரணத்தில் அசத்தை அசத்தென்று கண்டவிடத்து ஞான சொரூபம் தோன்றுமோ தோன்றாதோ என்பது ஐயப்பாடு. தோன்றா தென்பது பிறர்பக்கம். தோன்றுமென்பது சித்தாந்தத் துணிபு.

(இம்மேற்கோளின் பொருள்) நிலைத்திருக்கின்ற பதிஞானமாகிய தன்னுடைய சொரூபத்தைக் காட்டாமல் மறைத்து நிற்கின்ற நிலையில் லாத பிரபஞ்சங்களை இவை நிலைத்திருக்கும் பொருளல்லவென்று விவே கித்து அறியின் அவ்வாறு அறிந்தவிடத்து ஒன்றினும் பற்றில்லாததாய் விளங்கித் தோன்றுவது பதிஞானத்தின் இயல்பு என அறிந்து கொள்க எ-று.

உராத்துனைத் தேர்த்தெனப் பாசமொருவத் தண்ணிழலாம்பதி என்ற இரண்டாங் கூற்றுக்கு அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று காண உளதாய் நிற்பது ஞான சொருபமென்று உணர்தற்பாற்று எனக் கண் ணழிவுசெய்த கருத்தென்னையெனின், உராத்துனைத் தேர்த்தென என்பது திருட்டாந்தமாயினமையால் அதனை வன்னபேதங்கள் என்றதில் அடக்கி னர். பாசமொருவத் தண்ணிழலாம்பதி என்றதைப் பதச்சேதஞ் செய்து கூறுமிடத்துப் பாசமென்றது சாரணபிரபஞ்சமாகிய ஆணவ கன்ம மாயைகளையும் குறிக்குமாதலின் அப்பாசங்கள் தோன்றியழியப்படாமை யால் சத்தாகுமாதலால், இச்சூத்திரத்திற் பாசமென்றது தோன்றியழியும் தனுகரணபுவனபோகம் என்னும் காரியப்பிரபஞ்சமென்பதை அறிவிக்க வேண்டி மேற்கோளில் அசத்தாயுள்ள என்று கூறினர் அவ்வாறாயினும் அசத்தாயுள்ள பிரபஞ்சங்களையென்று கூறாமல் அசத்தாயுள்ள வன்ன பேதங்களையென்று கூறியதென்னையெனின், படிகத்தில் வன்னபேதங்கள் அசத்தாதலால் என ஏதுவை விரித்தது அவ்வன்னபேதம் போன்ற பிரபஞ் சங்கள் அசத்து என்று கூறின் விரியுமாதலின் விரியாதிருத்தற்பொருட்டு ஏதுப்பொருளைத் தரும் வன்னபேதங்களைப் பிரபஞ்சத்துக்கு உருவகமாக்கி அவ்வாறு ஆக்குமுகத்தால் ஏதுப்பொருளை வன்னபேதம் என்னும் உடம் பொடுபுணர்த்தி காட்டவேண்டி அசத்தாயுள்ள பிரபஞ்சங்களை யென்னாது அசத்தாயுள்ள வன்னபேதங்களை யென்று கூறினர். கூறவே, வன்ன பேதம் என்பது உருவகத்தால் பிரபஞ்சத்தையும் உடம்பொடுபுணர்த்தலால் ஏதுப்பொருளையுங் குறித்து நின்றவாறு அறிக. அதன்மேல் ஒருவ என் னுஞ் சூத்திரக்கூற்றுக்கு அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று நீங்க என்று கூறாமல் காண என்று கூறியதென்னையெனின், நீங்கும் பொருள் ஆன்மாவாதலானும், ஆன்மா வியாபகப் பொருளாதலானும், வியாபகப்பொருளுக்கு நீங்குதலாவது அறிதலேயன்றி வேறில்லாமையா லும், இப்பிரபஞ்சங்கள் நாமுமல்ல நம்முடையனவுமல்ல என அறியும் அறிவின் விசேடமேயன்றிப பொருளைவிட்டு ஆன்மா நீங்குதலில்லை என்பதை யறிவிக்கவேண்டி அசத்து என்று காண எனக்கூறினர். அதன் மேல் தண்ணிழலாம் என்ற சூத்திரக்கூற்றுக்கு உளதாய் நிற்பது என்று

கூறியதென்னையெனின், ஆன்மாவோடு என்றும் பிரிப்பின்றி நிற்கும் சிவஞானம் என்றுந் தண்ணிழலாகவே யிருக்கும்; இருப்பினும் பிரபஞ்சத்தைத் தானாகவும் தன்னுடையதாகவும் எண்ணினமையால் குளிர்ந்த நிழலாய் விளங்கும் அச் சிவஞானம் விளங்கித் தோன்றுவதில்லை; பிரபஞ்சம் தானுமன்று தன்னுடையதுமன்று என்று அறியவே அச்சிவஞானம் விளங்கித் தோன்றும்; ஆதலால், தண்ணிழலாய் நிற்றல் புதிதன்று என்று முள்ளது என்பதை அறிவிக்கவேண்டி உளதாய் நிற்பது எனக்கூறினர். அதன் மேல் பதி என்ற சூத்திரக் கூற்றிற்கு ஞான சொருப மென்று கூறியதென்னையெனின், பதி என்றது ஆகுபெயரினால் பதிஞானத்தைக் குறித்து நின்றதென்பதை அறிவிக்கவேண்டி ஞானசொருபம் என்றார். அதன்மேல் சிவஞானம் தண்ணிழலாய் விளங்கித் தோன்றுதலை அநுபவ அறிவால் அறியலாமேயன்றி ஆராய்ச்சியறிவால் இத்தன்மைத்தென்று அறியமுடியாதென்பதை அறிவிக்கவேண்டி உணரற்பாற்று என்று கூறினார். இவ்வாறு ஏதுப்பொருளை மேற்கோளுடன் சேர்த்துக் கூறினமையால் இவ்வதிகரணத்தில் வேறு ஏது ஆசிரியர் கூறவில்லையென அறிக.

பிரபஞ்சத்தை வன்னமாக உருவகஞ்செய்து ஞானசொருபத்தைப் படிகமாக உருவகஞ் செய்யாமையால் இம்மேற்கோள் ஏகதேச உருவகம்.

## சிற்றுரை.

**இதனுட் பெறப்படுமேதுப்பொருளை ஏனையவற்றுட்போல மேற்கோளின் வேறு வைத்துக் காணுமாறு:—**

இனி அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்று காண உளதாய் நிற்பது ஞானசொருபமென்றது வேற்றியல்பாகிய வன்னபேதங்களை வேற்றியல்பென்று கண்டு கழிப்பின் உளதாய் நிற்பது படிக சொருபமாந் துணையான் எனவரும்.

(இ—ள்.) படிகசொருபத்தைக்காட்டாது மறைத்து நின்ற வேற்று நிறங்களை இவை நிலையுதலிலவாகிய வேற்று நிறங்களெனக் கண்டுநிற்பின் அவ்வழி நிலையுதலுடைத்தாய் விளங்கிநிற்பது பளிங்கினது சொருபமாமென்னும் ஒப்புமையான் நிலையுதலுடைய தற்சொருபத்தைக்காட்டாது மறைத்து நிற்கும் நிலையுதலிலவாயுள்ள பிரபஞ்சத்தை இவை நிலையுதலுடையன வல்லவென்று விவேகித்தறியின் அங்ஙன நிராலம்பமயமாய் விளங்கித்தோன்றுவது ஞானசொருபமென மேற்கொண்டது எ-று.

வன்னபேதமாவது சித்திரமெனக்கொண்டு சுவர்மேல்வைத்து உரைத்தலுமொன்று. அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்

தென்று காண்டலாவது ஆசிரியன் அறிவுறுத்த உபதேசப்பொரு ளின் உறைத்துநின்று "அட்டகுண மெட்டுச்சித்தி கோகனதன் முதல் வாழ்வு குலவுபத மெல்லாம்—வெறுத்துநெறி யறுவகையு மேலொடு கீழ் அடங்க" காரணரூபத்தி னில்லாமையால் வெறும் பொய்யென நினைந்திருத்தல்.

## விளக்கம்.

இவ்வதிகரணத்தில் ஏது மேற்கோளுடன் கூறப்பட்டிருக்கின்றமை யால் அந்த ஏதுப்பொருளை ஏனைய அதிகரணங்களிற் கூறியவாறுபோல மேற்கோளின் வேறாகவைத்துக் காணவேண்டின் கீழ்க்கண்டபடி மேற் கோளும் ஏதுவும் வேறு வேறாகக் கூறவேண்டும்.

மேற்கோள்.

**இனி அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்றுகாண உளதாய் நிற்பது ஞானசொரூபமென்றது.**

ஏது.

**வேற்றியல்பாகிய வன்னபேதங்களை வேற்றியல்பென்று கண்டு கழிப்பின் உளதாய் நிற்பது படிகசொரூபமாந் துணையான்.**

இவ்வாறு பிரிக்கப்பட்டபடி மேற்கோளின் பொருள் மேலே கூறி விட்டமையால் ஏதுவின் பொருள்கூறுதும். படிகத்தின் முன்வைக் கப்பட்ட நீலம் செம்மை முதலிய பொருள்களின் நிறங்கள் படிகத்திற் பதிந்தபொழுது அந்நிறங்கள் படிக ஒளியின் சொரூபத்தைத் தெரிய வொட்டாமல் மறைத்து நிற்கும். அந்நிறங்களைப் படிக ஒளியின் வேறான நிலையில்லாதவைகள் எனக்காணின் அவ்வாறு காணுமிடத்து நிலையுடைய தாய் விளங்கி நிற்பது படிக ஒளியின் சொரூபமாம். இந்த ஒற்றுமையால், நிலைத்திருக்கின்ற சிவஞானமாகிய தன் சொரூபத்தைக் காட்டாமல் மறைத்து நிற்கும் நிலையில்லாத பிரபஞ்சத்தை நிலையுடையது அன்று என்று விவேகித்து அறியின் அவ்விடத்து நிராலம்பமயமாய் விளங்கித் தோன்று வது ஞான சொரூபமென மேற்கோள் கூறியது எ—று.

ஆலம்பம் என்பது ஆதாரம். நிராலம்பமென்பது ஆதாரமில்லாதது. ஆதாரமுடையது பற்றுக்கோடுடையதாயிருக்கும். ஆதாரமில்லாதது பற் றுக்கோடில்லாததாயிருக்கும். பற்றுக்கோடில்லாத பொருள் கடவுள் ஒரு வரே. ஆகவே நிராலம்ப மயமாய் விளங்கித் தோன்றுவது ஞானசொரூபம் என்றதற்குக் கடவுள் மயமாய் விளங்கித் தோன்றுவது ஞானசொரூபமென் றுகொள்க.

வன்னபேத மென்பதற்கு நிறங்கள் என்று கொள்ளாமல் சித்திரம் எனக்கொண்டு சுவர்மேல் ஏற்றிச் சித்திரவடிவம் நிலையில்லாதது எனக் கண்டவிடத்து நிலையுடையதாய்த் தோன்றுவது சுவரின் வடிவம் என்று உரைத்தலுங்கூடும்.

அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்றுகாணும் முறை எவ்வாறெனின், ஆசிரியன் உபதேசித்த உபதேசப்பொருளின் உறைத்துநின்று சிவஞானசித்தியார் கூ-ம் சூ-ம கூ-வது செய்யுளிற் கூறியபடி பைசாச பதத்திற்குரிய அட்டமாசித்தியை நோக்க எண்மடங்கு ஏற்றமாகிய அட்டசித்தியை உடைய பிரமபதம் முதலிய எல்லாப்புவனங்களும் அப்புவனங்களிலுள்ள அநுபவப் பொருள்களும் கக்கினசோறுபோலக் கண்டு அருவருத்துவிடல் என அறிக.

அசத்தை அசத்தென்று கண்டவிடத்துத் தோன்றும்
பதிஞானத்தின இயல்புகூறி மேற்கோளை வலியுறுத்தும்
உதாரணம்.

நிர்க்குணனுய் நின்மலனுய் நித்தியா னந்தனுய்த்
தற்பரமாய் நின்ற தனிமுதல்வ—னற்புதம்போ
லானு வறிவா யளவிறந்து தோன்றுனே
வானே முதல்களையின் வந்து.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின். அசத்தை அசத்தென்று கண்டொருவியவழித் தோன்றுவது சூனியமேயன்றிப் பிறிதில்லைப்போலுமென்பாரை நோக்கி ஞான சொரூபத்தினியல்புகூறி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ—ள்.) நிர்க்குணன் ஆய்— (அசுத்தப்பிரபஞ்சம்போல) முக்குணரூபமா யளவிட்டறியப்படுவானு மல்லனுய்,— நின்மலன் ஆய்—(முக்குணங்களைக் கடந்த மிச்சிரப் பிரபஞ்சம் போல) மலகன்ம காரியரூபமா யறியப்படுவானுமல்லனுய்,— நித்தியானந்தன் ஆய்—(மலகன்மங்களையுங் கடந்த சுத்தப்பிரபஞ்சம்போல) அநித்தியானந்த ரூபனுய் அயறியப்படுவானு மல்லனுய்,—தற்பரம் ஆய்—(இம்மூன்றனோடும் கூடிப் பொதுவியல்புபற்றி அவ்வாறுணரப்படு முயிர்போலன்றி அதற்குமேலாய்,—நின்ற தனிமுதல்வன்—இவ்வாறு நிற்றலான் (ஒன்றனியல்புபற்றி அறியப்படாத) தனிமுதலாகிய இறைவன்,— வான்முதல் களையின்— ஆகாசம் முதலிய அசத்தை அசத்தென்று கண்டொருவியவழி,—அளவு

இறந்து அற்புதம்போல் வந்து—பயின்றறிந்துவருந் தனது சுட்டறிவினளவினைக் கடத்தலான் (இன்னதென்றறியவாராத) சூனியப் பொருள்போலத்தோன்றி,—ஆறு அறிவுஆய்த் தோன்றூனே—(பின்னர்ச்சுட்டிறந்தறியுந்) தன்னறிவின்கணீங்காது நிலைபெறுவதாய்ச் ("சோதிக்குட் சோதியாய்" விளங்கித்) தோன்றுன் கொல்லோ எ—று.

தற்பரம் தனக்குப்பரமென விரியும். தன்னென்றது உயிரை. அற்புதம் ஈண்டுச் சூனியத்தின்மேற்று. முதற்கட் சூனியமாய்த் தோன்றினுஞ் சூனிய மன்றென்பார் அற்புதம்போல் வந்தென்றூர். ஆறுமை நீங்காமை. ஓகாரம் எதிர்மறை. ஏகாரம் அசைநிலை. வானே முதலெனவே தோற்றமுறைபற்றி வான்முதலாகிய பூதங்களும், ஒடுக்கமுறைபற்றி வான்முதலாகிய ஏனைத் தத்துவங்களுமடங்கும். நிர்க்குணனும் நின்மலனும் நித்தியானந்தனுய்த் தற்பரமாயென்புழி ஆக்கச் சொல் உண்மை குறித்து நின்றது வடமொழிமதம். அறிவாயென்புழி ஆக்கம் வேறுபாடு குறித்துநின்றது. ஒற்றுமைபற்றி முதல்வனது ஞானத்தை முதல்வனென் றுபசரித்தார்.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு) வானே முதல் களையின் அளவு இறந்து அற்புதம்போல் வந்து ஆறு அறிவு ஆய்த் தோன்றூனே.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றூவெனின், மேற்கோளிற் கூறியவாறு அசத்தாகிய பிரபஞ்சத்தை அசத்தென்று அறிந்து நீக்கியவிடத்து வெறும் பாழாகிய சூனியம் தோன்றுமேயன்றி ஞான சொரூபந் தோன்றுமாறில்லை யென்பர் மாயாவாதிகள். அவரை நோக்கி ஞானசொரூபத்தின் தன்மை இவ்வாறெனக் கூறி அசத்தென்றுகாண உளதாய் நிற்பது ஞான சொரூபமென்னும் மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) முதல்வன், பிரகிருதி மாயாகாரியமாகிய சாத்துவிகம் இராசதம் தாமதம் என்னும் முக்குணரூபமாய் அளந்தறியப்படும் அசுத்தப் பிரபஞ்சம்போல் அறியபபடாதவனுமாய், மாயாகாரியங்களாகிய முக்குணங்களையுங் கடந்த ஆணவமல காரியமாகிய மோக முதலியனவாகவும் கன்மமல காரியமாகிய சுகதுக்காதி ரூபமாகவும் அளந்தறியப்படும் சுத்தாசுத்தப் பிரபஞ்சம்போல் அறியப்படாதவனுமாய், மலகன்மங்களையுங் கடந்த சிவதத்துவரூபமாய் அளந்தறியப்படும் சுத்தப்பிரபஞ்சம்போல் அநித்தியமாகிய ஆனந்தரூபனுய் அறியப்படாதவனுமாய், சுத்தம் சுத்தாசுத்தம் அசுத்தமென்னும் இம்மூன்று பிரபஞ்சங்களோடும் உயிர் கூடி அவ்வாறு கூடி நிற்றலாகிய

பொது வியல்பினுல் குணரூபனுகிய சகலராகவும், மலகன்மங்களோடு கலந்து நிற்கும் பிரளயாகலராகவும், மாயை கன்மங்களில்லாது ஆணவ மலத்தோடுகூடிய விஞ்ஞானகலராகவும் அறியப்படுமொது போல் அறியப் படாது அவ்வுயிர்கட்கு மேலாய் நிற்பன். இவ்வாறு பிரபஞ்சங்களையும் உயிர்களையுங் கடந்து நிற்றலால் பிரபஞ்சங்களின் இயல்புபற்றியாவது உயிர்களின் இயல்புபற்றியாவது அறியப்படாது தனித்து நிற்கும் அம் முதல்வன், ஆகாசம் முதலிய பிரபஞ்சங்களை அசத்தென்று கண்டு அவற் றில் நின்றும் நீங்கியவிடத்து அப்பிரபஞ்சங்களோடு பழகி யறிந்துவந்த உயிராகிய தனது சுட்டறிவைக் கடந்து நிற்றலால், இன்னதென்று சொல்ல முடியாத சூனியப்பொருள்போல முன்னர்த்தோன்றிப் பின்னர்ச்சுட்டிறந் தறியும் தன்னறிவினிடத்தில் நீங்காது நிலைபெறுவதாய்ச் சோதிக்குட் சோதியாய் விளங்கித் தோன்றமாட்டானே? தோன்றுவன் எ-று.

(க-ரை.) பிரபஞ்சங்களையும் உயிர்களையுங் கடந்து தனித்துநிற்கும் முதல்வன், பிரபஞ்சங்களை அசத்தென்று கண்டு அப்பிரபஞ்சங்களில் நின் றும் நீங்கிய உயிரின் அறிவாகிய சோதிக்குள் சோதி சொரூபமாய்த் தோன் றுவன் என்பதாம்.

நிர்க்குணன் என்றதற்கு மாயாகாரியமாகிய சாத்துவிகம் இராசதம் தாமதம் என்னும் மூன்றுகுணமும் இல்லாதவனென்பதே பொருளன்றி ஒருகுணமும் இல்லாதவன் என்பது பொருளன்று. ஒருகுணமும் இல் லாதவனுயின் தன்வயத்தன் முதலிய எண்குணங்களுடையான் இறைவன் என்பதனோடு முரணும். அன்றியும், குணமில்லாத குணியும் இல்லை யெனப்பட்டுச் சூனியவாதமாய் முடியும்; இதனைச் சிவஞானசித்தியார் கூ-ம் சூ-ம் கஉ-வது செய்யுள் விசேட உரையில் விரிவாகக் கூறியிருக்கின்ற மையால் அவ்விடத்துக் காண்க.

பிரபஞ்சங்களினின்றும் நீங்கியவிடத்து முதல்வன் முதலாவது சூனியம்போற் றோன்றிப் பின்னர்ச் சோதிக்குள் சோதியாய்த்தோன் றுவன் என்ற கருத்து என்னையெனின், பிரபஞ்சங்களோடு பழகிய அறிவைக் கடந்தவிடத்துத் தோன்றும் முதல்வன், இதுவரையும் அறிந்து வந்த பொருள்கள் ஒன்றனோடும் உவமித்துக்கூற முடியாது விளங்குவன் ஆதலின், இன்னதென்று அறியமுடியாத சூனியமோ என்று முதலாவது எண்ணக்கூடும்; சூனியமாயின் இன்பந்தருதல் இல்லை; இன்பந்தருதலால் சூனியமன்று; அறிவு ரூபமான சோதியென்று பின்னர் அறியக்கூடுமாத லால் அவ்வாறு கூறினரென அறிக.

தற்பரமென்றது தனக்குப் பரமென விரியும். தன் என்றது உயிரை. ஆதலால் தற்பரமென்றதற்கு உயிர்க்கு மேலாய் என உரைசெய்யப்பட்டது.

அற்புதம் என்றது இதுவரையுங் காணப்படாத அதிசயத்தைக் குறிக்கு மாயினும் இச்செய்யுளில் சூனியத்தைக் குறித்து நின்றது.

முதலாவது சூனியமாய்த்தோன்றினும் சூனியமன்று என்பதை அறிவிக்கவேண்டி அற்புதம்போல் வந்து என்றார். வருதல் சூனியத்துக்கு இல்லை. பொருளாயிருந்தால்மட்டும் வருதல்கூடும். வருதலென்பது தோன்றுதல். அவ்வாறே உரையுஞ் செய்யப்பட்டது. ஆனா அறிவாய் என்றவிடத்து ஆனா என்பது நீங்காத என்னும் பொருளில் நின்றது.

தோன்றானே என்பதிலுள்ள ஓகாரம் எதிர்மறையாய் நின்று தோன்றுவன் என்னும் உடன்பாட்டுப் பொருளைத் தந்துநின்றது.

வானே என்றதிலுள்ள ஏகாரம் அசைநிலை. வானே முதல் என்றதனால் ஆகாயம் முதலாகத் தோன்றும் முறைபற்றிக் கீழுள்ள ஐந்து பூதங்களும், ஆகாயம் முதலாக ஒடுங்கும் முறைபற்றிப் பூதங்களுக்கு மேற்பட்ட முப்பத்தொரு தத்துவங்களும் அடங்கும்.

நிர்க்குணன் ஆய் நின்மலன் ஆய் நித்தியானந்தன் ஆய் தற்பரம் ஆய் என்றவிடத்து ஆய் என்னும் ஆக்கச்சொல் அத்தன்மை முன்னின்றி இப்பொழுது உண்டானதென்பதைக் குறிக்காமல் எப்பொழுதும் உள்ளதென்பதைக்குறித்து நின்றது. ஆய் என்பதற்கு உள்ளது எனப் பொருள்கொள்ளுதல் வடமொழி மதம்.

ஆனா அறிவாய் என்றவிடத்து ஆய் என்னும் ஆக்கம் அற்புதமாகிய சூனியத்தின் வேறு என்பதைக்குறித்து நின்றது.

பிரபஞ்சம் நீங்கியவிடத்துத் தோன்றுவது சூனியமேயன்றி ஞானமில்லை என்பாரை மறுத்து ஞானமே தோன்றுமெனக் கூறாமல் முதல்வன் தோன்றானே என்று கூறினது என்னை எனின், முதல்வன் குணியும் ஞானம் குணமுமாதலால் குணத்துக்கும் குணிக்கும் வேற்றுமை இல்லாமை பற்றி முதல்வனுடைய ஞானந்தோன்றுமென்று கூறவேண்டியதை முதல்வன் தோன்றுவனென்று உபசரித்துக்கூறினாரென அறிக.

அசத்தை அசத்தென்று கண்டவிடத்துத் தோன்றுவது பதிஞானமே
யன்றிப் பிறிதில்லையென்பதற்குக் காட்டும்
உதாரணம்.

சுட்டி யுணர்வதனைச் சுட்டி யசத்தென்னச்
சட்ட வினியுளது சத்தேகாண்—சுட்டி
யுணர்ந்தநீ சத்தல்லை யுண்மையைத் தைவம்
புணர்ந்ததனாற் போய்விட்டுப் போம்.

## சிற்றுரை.

எ—து உ—ம் எனின், வானே முதல்களைந்தவழி அங்ஙனந் தோன்றுவதும் வேறொன்றெனக்கோடும் ஞானசொரூபமென்றற்

குப் பிரமாணமென்னை யென்பாரை நோக்கி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) சுட்டியுணர்வதனைச் சுட்டி அசத்துஎன்ன— (ஏகதேச உணர்வாற்) சுட்டியுணரப்படுவதாய பிரபஞ்சத்தை (மேற்கூறியவாறே ஓரோர் ஒன்றாகச்) சுட்டி அசத்தென்று கண்டுகழித்துக் கொண்டு சென்றவழி,—இனிச் சட்ட வுளது சத்தேகாண்—முடிவின்கட் செம்மையே கோசரமாவது (யாது அஃது அவ்வசத்தின் வேறாகிய) சத்தேயாம் அதனை அறிவாயாக. (அற்றேல், அசத்தின் வேறாய் அங்ஙனந் தோன்றுஞ் சத்தாவது உயிரேயாமென அமையுமெனின்),—சுட்டி உணர்ந்த நீ சத்து அல்லை—(இதுகாறும் அசத்தோடு கூடிச்) சுட்டியறிந்துவந்த நீ (அசத்தின்வேறாய் அங்ஙனந் தோன்றுஞ்) சத்தாவாய் அல்லை. (அற்றேல் இச்சுட்டுணர்வு எனக்கு நீங்குவ தின்று போலுமெனின்),—தைவம்(ஆய்) உண்மையைப் புணர்ந்து—(அசத்தின் வயப்பட்டு நின்று சுட்டியறிந்து வந்தநீ அதனை யொழிந்து அங்ஙனந்தோன்றிய) சத்தின் வயத்தினையாய் அதனைப் புணர்ந்தால்,—அதனால் பொய்விட்டுப் போம்—அப்புணர்ச்சியானே சுட்டுணர்வாகிய அப்பொதுவியல்பு நின்னை விட்டு நீங்கும் எ-று.

என்னவென்றது உபசாரவழக்கு. சட்ட வென்பது செப்பமுணர்த்தி நிற்பதோர் ரகர வீற்றிடைச்சொல்; அது சட்டமென இழிவழக்கின் மகரவீறாய் மரீஇயிற்று. அசத்தைப் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. உண்மை சத்தென்பன ஒருபொருட் கிளவி. தைவமாயென ஆக்கச்சொல் வருவித்துரைக்க. புணர்ந்தா லென்பது புணர்ந்தெனத் திரிந்தது. உண்மைக்குத் தைவமாதல் புணரினென உருபுமயக்கமாகக் கொண்டுரைப்பினுமமையும். பற்றறக் கழிந்தொழியு மென்பார் விடுமென்னாது விட்டுப் போமென்றார். "[illegible]"

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ வெனின், மேலை வெண்பாவிற் கூறியபடி ஆகாயம் முதலாயதத்துவங்களை நீக்கியவிடத்து அற்புதம் போல் தோன்றுவதும் ஞான சொரூபமன்று; வேறுயாதானும் ஒன்று எனக்கொள்வதன்றி ஞான சொரூப மென்பதற்குப் பிரமாணம்யாது என்பாரை நோக்கிப பிரமாணங்கூறி அசத்தென்றுகாண உளதாய் நிற்பது ஞானசொரூபம் என்னும் மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) ஒன்றையறியும் பொழுது பிறிதொன்றனை யறியமுடியாத ஏகதேச அறிவால் கருதியறியப்படுவதாய பிரபஞ்சத்தை மேலே வெண்பாவிற் கூறியவாறு ஒவ்வொரு தத்துவமாக அறிந்து அசத்தென்று கண்டு நீக்கிக் கொண்டு சென்றவிடத்து முடிவில் நிறைந்தபொருளாக அறியப்படுவது எதுவோ அது தத்துவங்களாகிய அந்த அசத்தின்வேறான சத்தேயாம் என அறிவாயாக. அசத்தினை நீக்கியவிடத்து அந்தஅசத்தின்வேறாய் நிறைந்தபொருளாய்த் தோன்றுவது சத்தென்பது பொருந்தும்; அந்தச்சத்து முதல்வன் அன்று; உயிரேயாம் என்றால் உண்டாகுங் குற்றமென்னையெனின், இதுவரையும் அசத்தொடு கூடி நிலைத்தலின்றி ஒவ்வொரு பொருளாகச் சுட்டி அறிந்துவந்த உயிராகிய நீ, அவ்வசத்தின் வேறாய் எக்காலத்தும் ஒருதன்மையாய் நிலைத்த அறிவாய் விளங்கும் சத்தாகாய். அவ்வாறாயின் ஒவ்வொன்றாய்ச் சுட்டியறியும் ஏகதேச அறிவு எனக்கு நீங்காமல் எக்காலத்தும் நான் அசத்தொடுகூடி அசத்தனாகவே இருப்பனோ எனின், அசத்தொடு கூடி நின்று அவ்வசத்தைச் சுட்டியறிந்து வந்த நீ அவ்வசத்தை நீக்கியவிடத்து நிறைவான பொருளாய்த் தோன்றும் சத்தின் அடங்கி அந்தச்சத்தினைக் கூடின் அக்கூடுதலானே சுட்டியுணருவதாகிய அப்பொதுவியல்பு உன்னை விட்டு நீங்கும். ஆதலால் நீ அசத்துமாகாய் எ-று.

(க-ரை.) அசத்தை அசத்தென்று கண்டு நீக்கியவிடத்து நிறைந்த பொருளாய்த் தோன்றுவது சத்தேயாயினும் அச்சத்துச் சிவமன்று உயிரேயாம் என்று சொன்னால் என்னகுற்றமென்பாரை மறுத்துச் சுட்டியறியும் பொருளாகிய உயிர் சுட்டிறந்து அறியும் நிறைபொருளாகிய சிவமாகாது ஆதலால் அசத்து நீங்கிய விடத்துத் தோன்றுவது சிவமேயென்பதாம்.

அசத்தென்ன என்றவிடத்து என்ன என்றது கண்டுகழித்து நீக்குதலைக் குறித்த உபசாரவழக்கு; இது எதுபோலஎனின், துன்பம் என்ன இன்பம் தோன்றும் என்றால் துன்பம் என்ற சொல்லளவில் இன்பம் தோன்றாது எனவும், துன்பம் என்று நீக்கியவிடத்து இன்பம் தோன்றுமெனவும் கொள்ளுதல் போலாம்.

சட்ட என்பது அகரத்தை இறுதியில் உடையதாய் செம்மையை உணர்த்திநிற்கும் இடைச்சொல். ஆதலால் சட்ட என்பதற்குச் செம்மை என உரை செய்யபபட்டது. இதனைச் "சட்டநேர்படவந்திலாத" என்னுந் திருவாசகத்தானும் உணர்க. சட்ட என்னும் இச்சொல் உலகவழக்கில் மகர ஒற்றை இறுதியாகக்கொண்டு சட்டம் என இழிவழக்காக மருவிவழங்கி வருகின்றது.

சத்தேகாண் என்பதிலுள்ள ஏகாரம் அசத்தன்று என அசத்தைப் பிரித்தமையால் பிரிநிலை.

சத்தேகாண் என்று மேலே கூறி உண்மையைப் புணர்ந்து என்று கீழே கூறியதால் சத்துவேறு உண்மைவேறு அன்று. உண்மை என்பதும்

சத்து என்பதும் ஒரு பொருட்சொற்கள். அவற்றுள் முன்னையது தமிழ் மொழி. பின்னையது வடமொழி. ஆதலால் உண்மையைத்தைவம் புணர்ந்து என்பதற்கு அங்ஙனம் தோன்றிய சத்தின் வயத்தினையாய் அதனைப் புணர்ந்தால் என உரைசெய்யப்பட்டது.

தைவம் என்றஇடத்து ஆய் என்னும் ஆக்கச் சொல் வருவித்துத் தைவம் ஆய் என உரைக்கப்பட்டது. தைவம் என்பது சிவத்தின் அடிமை என்பதாம். இது எட்டாஞ்சூத்திரம் மூன்றும் அதிகாரணத்தில் தைவமாம் என்றவிடத்தும் கூறப்பட்டிருத்தல் காண்க.

தைவமாய்ப் புணர்ந்தால் என்று இருக்கவேண்டுவது புணர்ந்து எனத் திரிந்து நின்றது.

உண்மையை என்பதில் உள்ள இரண்டாம் வேற்றுமை ஐ உருபை மயக்க விதியின்படி நான்காம் வேற்றுமைக் குவ்வுருபாகக் கொண்டு உண்மைக்குத் தைவமாய்ப் புணர்ந்தால் என்று கூறினும் பொருந்தும்.

பொய்விடும் என்றுவது பொய்போம் என்றுவது கூறினாலே போதியதாகவும் விட்டுப்போம் எனஒரு பொருளைத்தரும் இருமொழிகளைக் கூறிய கருத் தென்னையெனின், ஒருபொருளை விடினும் அப்பொருளின் பற்று அறாதிருத்தல் கூடும்; பற்று அறாமையால் விட்டபொருளை மீளக் கூடவும் நேரும்; ஆதலால், வேண்டாத பொருளாயின் அப்பொருளை விடுதலோடு அப்பொருளின் பற்றும் ஒழியவேண்டும் என்பதை அறிவிக்க வேண்டி விடும் என்றதோடு நில்லாது விட்டுப்போம் என்று கூறினார். விட்டு என்றதிலுள்ள விடுதல் பற்று நீக்கத்தையும், போம் என்றதிலுள்ள போதல்பொருளின் நீக்கத்தையும் குறித்தவாறு அறிக. இக்கருத்தேபற்றித் திருநாவுக்கரசுசுவாமிகள் "அருந்துணையை" என்ற திருத்தாண்டகத்தில் "பொருந்தனைமேல் வரும்பயனைப் போகமாற்றி" என அருளிச்செய்தார். இப்பாசுரத்தில் போக என்பதற்கும் மாற்றிஎன்பதற்கும் மேற்கூறிய முறைப்படியே பொருளின் நீக்கத்தையும் பற்று நீக்கத்தையும் கொள்க.

அசத்தை அசத்தென்று கண்டு நீக்கிச் சத்தாகிய சிவத்தை

அடைதற்கு உபாயங் கூறும்

உதாரணம்.

கண்டதை யன்றன் றேனவிட்டுக் கண்டசத்தா
யண்டனை யான்மாவி லாய்ந்துணரப்—பண்டணைந்த
வூனத்தைத் தான்விடுமோ றுத்தமனி ஞெண்கருட
சானத்திற் றீர்விடம்போற் றுன்.

## சிற்றுரை.

எ-து உ-ம் எ-னின், அசத்தை அசத்தென்று கண்டொழியு மாறும் ஒழிந்தவழி உண்மையைத் தைவம் புணருமாறும் புணர்ந்த வழி அதனாற் பொய்விட்டுப் போமாறும் யாங்ஙன மென்பாரை நோக்கி அவற்றைத் தெரித்துணர்த்தி அதனை வலியுறுத்துத லுதலிற்று.

(இ-ள்.) கண்டதை அன்று அன்று எனக்கண்டு அசத்து ஆய் விட்டு—சுட்டியுணரப்பட்ட பிரபஞ்சத்தை இது சத்தன்று இது சத்தன்றென ஓரோ ஒன்றாகவைத்து நோக்கி யசத்தென்றொழித்து,—ஆன்மாவில் அண்டனையாய்ந்து—(அவ்வாறு கண்டொழிந்த) தன்னறிவின்கண்ணே (சுட்டுணர்வின்றி நின்ற) கடவுளையாராய்ந்து,— உணர—சோக மெனப்பாவிப்பனாயின்,—உத்தமனின் பண்டு அணைந்த ஊனத்தைத் தான்விடுமாறு—(அப்பாவகத்தான் அத்துவிதமாய் விளங்கித்தோன்று) முதல்வனால் அனாதியாய்க் கூடி நின்ற பொது வியல்பைத் தான்விட்டு நீங்குமாறு,—ஒண்கருடசானத்தின் தீர்விடம்போல்—ஒள்ளிய கருடதியானத்தில் (விளங்கித் தோன்றும் மந்திரதைவிக கருடனால் அப்பாவகன்) விடத்தைத் தீர்த்துக் கொள்ளுமாறு போலாம் எ-று.

தான் என்பது முன்னையது எழுவாய், பின்னையது அசை. சானம் பாகதச் சிதைவு.

கருடதியானமாவது யாதெனிற் கூறுதும்; ஆதிபௌதிகம், ஆதிதைவிகம், ஆத்தியான்மிகம் எனக் கருடன் மூவகைப்படும். பொருடோறும் இவ்வாறு கண்டுகொள்க. அவற்றுள், உலகத்திற் காணப்படும் கருடன் ஆதிபௌதிக கருடன்; அதற்கு அதிதெய்வ மாகிய மந்திரம் ஆதிதைவிக கருடன்; அம்மந்திரம் இடமாக நின்று மாந்திரிகனுக்குப் பயன் கொடுப்பதாகிய சிவசத்தி ஆத்தியான்மிக கருடன் எனப்படும். அம்மூன்றனுள் ஈண்டுக் கருடனென்றது கருடனுக்கு அதிதெய்வமாய் மாந்திரிகன் உள்ளத்தின் அதுபோல் வைத்துத் தியானஞ்செய்து கணிக்கப்படும் மந்திர ரூப மாகிய ஆதிதைவிக கருடனே. அதனைப் பாவித்தலாவது நாடோறும் பயின்று வந்த பயிற்சி விசேடத்தால் அம்மந்திர ரூபமே தானாக அநன்னியபாவனை செய்து தன்னறிவு அதன் வயத்ததாம் படி உறைத்து நிற்றல். அவ்வாறு நின்று அம்மந்திரக்கண் கொண்டு

பார்ப்பவே அம்ந்தவ்விட வேகத்தை மாற்றுதல் ஒரு தலையாகலின் அப்பாவனை ஈண்டைக்குவமையாயிற்று. புள்ளு விலங்கு மரம் முதலியவற்றிற்கெல்லாம் அதிதெய்வமந்திர முளவென்பதூஉம், மந்திரங்களைக் கணிப்போன் படிகம்போல மந்திர சொரூபியாவ னென்பதூஉம் சருவஞானோத்தர முதலியவற்றுட் காண்க. இத ஞானே கருடபாவனை அசத்திய மென்பார்மதம்போலியாயவாறு முணர்க. அல்லதூஉம், பாவனைபோலியாயவழி அது பயன்றருமா றியாண்டைய தென்றொழிக.

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், மேலே வெண்பாவிற் கூறியவாறு அசத்தாகிய பிரபஞ்சத்தை அசத்தென்று கண்டு நீக்கும் முறை எவ்வாறு? பிரபஞ்சம் நீங்கிய இடத்துச் சத்தாகிய சிவத்தினை அதற்கு அடிமையாய் அடங்கிக் கூடுவது எவ்வாறு? அச்சிவத்துடன் கூடியவிடத் துப் பொய்யாகிய பிரபஞ்சம் விட்டுப்போதல் எவ்வாறு? என்பாரை நோக்கி அம்மூன்றனையும் விளக்கிக்காட்டி மேற்கோளை வலியுறுத்தியவாறும்

(பொ-ரை.) கருதி அறியப்படுகின்ற பிரபஞ்சத்தை ஒவ்வொரு பொருளாக நோக்கி இது நிலையுடையதன்று இது நிலையுடையதன்று என எல்லாப் பொருளையும் நீக்கின இடத்து அவ்வாறு நீக்கிய தன்னறிவின் கண்ணே வியாபக அறிவாய் விளங்குஞ் சிவத்தை ஆராய்ந்து அச்சிவம் நான் எனப் பாவிக்கவேண்டும்; அவ்வாறு சிவோகம்பாவனை செய்வானாயின் அப்பாவனையால் பாவனாதீதமாகிய முதல்வன் பாவிப்பவனுடைய அறிவில் பிரிப்பின்றி விளங்கித் தோன்றுவன்; அவ்வாறு தோன்றும் முதல்வனால் உயிருடன் அனாதியாய்க்கூடி நின்ற பொதுவியல்பாகிய ஆணவமலப்பற்றை விட்டு அவ்வுயிர் நீங்கும்; அவ்வாறு நீங்குதல் எதுபோல எனின், பாம்பின் விடத்தால் துன்புறுகின்ற ஒருவன் பிரகாசம் பொருந்திய கருடதியானம் செய்து அத்தியானத்தால் தியானிப்பவன் மனதில் தெய்வத்தன்மையுடைய மந்திர கருடன் தோன்ற அம்மந்திர கருடனால் விடத்தை நீக்கிக்கொள்ளு மாறுபோலாம் எ-று.

(க-ரை.) பிரபஞ்சத்தில் உள்ள ஒவ்வொரு பொருளின் நிலையாமையை அறிந்து அப்பிரபஞ்சம் அனைத்தையும் நீக்கிச் சிவம் நான் எனப் பாவிக்கில் அப்பாவனையால் தன்னறிவினிடத்தில் அச்சிவம் விளங்கித் தோன்ற அத னால் அநாதியாய்க்கூடி நின்ற ஆணவமலப்பற்று விட்டு நீங்கும் என்பதாம்.

ஊனத்தைத் தான் விடுமாறு என்றவிடத்துத் தான் என்பது உயிரைக் குறித்து நிற்றலால் எழுவாய். இறுதியிலுள்ள தான் என்பது அசை.

சானம் என்றது தியானம் என்ற வடமொழிச் சொல்லின் சிதைவு. இது கைத்த என்பது கைச்ச என வழங்குமாறுபோல் தகரம் சகரமாய்த் திரிந்ததாம். கருடதியானமாவது உலகத்திற் காணப்படுங் கருடனைத் தியானிப்பதன்று. வேறு என்னையெனின், கூறுதும்; ஆதிபௌதிக கருடன், ஆதிதைவிக கருடன், ஆத்தியான்மிக கருடன் எனக்கருடன் மூவகைப்படும். ஒவ்வொரு பொருளினும் இவ்வாறே பௌதிகம், தைவிகம், ஆன்மிகம் என மூன்றும் கண்டுகொள்க. அதாவது ஒவ்வொரு உயிருக்கும் உடல் ஒன்று மந்திரம் ஒன்று அம்மந்திரத்தில் நிற்கும் தெய்வத்தன்மையொன்று ஆகமும்மூன்றுண்டு. அம்மூன்றனுள் உடல் பூதகாரியமாகலால் பௌதிகமெனவும், மந்திரம் தெய்வசம்பந்த முடைமையால் தைவிகமெனவும், தெய்வத்தன்மை சிவசத்தியின் காரியமானதால் ஆன்மிகமெனவும் கூறப்படும். ஆதலால் உலகத்திற் காணப்படும் கருடனாகிய பறவை ஆதிபௌதிக கருடன்; அக்கருடனுடைய உயிரில் அந்தரியாமியாய் இருக்கும் தெய்வசம்பந்தத்தைக் குறிக்கின்ற மந்திரம் ஆதிதைவிக கருடன்: அம்மந்திரத்தின் இடமாக நின்று மாந்திரிகனுக்குப் பயன் கொடுப்பதாகிய சிவசத்தி ஆத்தியான்மிக கருடன் எனப்படும். அம்மூன்று கருடனுள் இச்செய்யுளில் கருடன் என்றது தைவிகமாகிய கருட மந்திரத்தை என அறிக. அம்மந்திரத்தைச் சுத்தமனத்தால் பாவித்தலே கருடபாவனை. பாவிப்பது எவ்வாறெனின், நாள்தோறும் பழகிவந்த பழக்க விசேடத்தால் அம்மந்திரரூபமே தானாக மந்திரம் எனவும் தான் எனவும் பேதமின்றித் தன்னறிவு அம்மந்திரத்தின் வசமாய் உறைத்து நிற்றலாம். அவ்வாறு உறைத்து நின்று அம்மந்திரக் கண்ணால் நோக்கவே, அந்நோக்கம் அவ்விடவேகத்தை மாற்றுதல் துணிபாம். ஆதலால் அக்கருடபாவனை இவ்விடத்துக்கூறிய சிவோகம் பாவனைக்கு உவமையாயிற்று. பறவை, மிருகம், மரம் முதலியவற்றிற் கெல்லாம் மந்திரமும் அதிதெய்வமும் உண்டென்பதூஉம், மந்திரங்களைக் கணிப்பவன் சார்ந்தபொருளின் வண்ணமாகும் படிகம்போல் மந்திர சொரூபியாவன் என்பதூஉம் சருவஞானோத்தர முதலிய ஆகமங்களுட் காண்க.

இவ்வெண்பாவினால் சிவோகம்பாவனையால் பிரபஞ்சம் விட்டுப்போம் எனக் கூறியதூஉமன்றிக் கருடபாவனை அசத்திய மென்பார் மதம் பொருந்தாதெனவுங் கூறியவாறு அறிக. அன்றியும் பாவனை பொய்யாகும்போது அப்பாவனை விடம் நீங்குதலாகிய பயன்றருதல் எவ்வாறு கூடுமெனப் பொய்யென்று கூறும் கூற்றை மறுக்க.

இரண்டாம் அதிகரணம் முற்றிற்று.



# மூன்றும் அதிகரணம்.

பதிஞானத்தைப் பெற்றவிடத்தும் பழையவாசனை தாக்காதிருத்தற்பொருட்டுப் பஞ்சாக்கரஜெபம் செய்யவேண்டுமெனக் கூறும்

மேற்கோள்.

இனி இவ்விடத்து ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க வென்றது.

சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், ஆன்மாவைச் சுத்திபண்ணுதற்குப் பாசமொருவியவழித் தண்ணிழலாய்ப் பிரகாசித்த ஞான சொரூபமொன்றே அமையுமாகலின் இவ்விடத்தில் இனிச் செய்யக்கடவதொன்றில்லை யென்பாரை நோக்கிச் சூத்திரத்தின் மூன்றுங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடணுதலிற்று.

(இ-ள்.) மேற்பாச மொருவி ஆண்டுத் தண்ணிழலாய்ப் பிரகாசித்த ஞானக்கண்ணாற் பதியைச் சிந்தைநாடிய பின்னர் அவ்விடத்துத் திருவஞ்செழுத்தையும் விதிப்படி கணிக்கவென மேற்கொண்டது எ-று.

இறந்தது தழீஇய வெச்ச உம்மை விகாரத்தாற் றொக்கது. அற்றாகலினன்றே "பின்னுமோசை தருமஞ்செழுத்தை விதிப்படியுச்சரிக்க" என்றார் வழிநூலாசிரியரு மென்க. ஈண்டு ஸ்ரீபஞ்சாக்கரம் என்றது முத்தி பஞ்சாக்கரத்தை. திருவஞ்செழுத்தாற் சாதிக்கப்படும் பொருளும் அதுவேயாகலான் வேறுவகுத்துக்கூறவேண்டாமையின், விதிப்படியென மாட்டெறிந் தொழிந்தார்.

இவ்வாறுசிரியர் மாட்டெறிந்ததூஉமுணராதார் சாதித்து நிற்குமுறை வேறே, ஓதுமுறைவேறே எனச் சித்தாந்த வழக்கொடு முரணிக்கூறுவர். நிற்குமுறைமையும் ஓதுமுறைமையுந் தம்முளியைபில்வழி அஃது அதற்குச் சாதனமாமாறு யாண்டையதென்றொழிக. மானதம் மந்தம் உரையெனக் கணிக்குமாறு மூவகைப்படும். அவற்றுட் சுத்தமானத மெனப்படும் அறிவாற் கணித்தலே ஈண்டு உச்சரித்தலென்பார் சூத்திரத்துள் உச்சரிக்க வென்னாது எண்ணுகவென்றார். வடமொழிச் சூத்திரத்துத் தியானிக்க வென்றதும் அது. இன்னும் இதன்கட்படு மியல்பெல்

லாம், உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், கொடிப் பாட்டு, நெஞ்சுவிடுதூது முதலியவற்றுட் காண்க. ஈண்டு விரிப் பிற் பெருகும்.

## விளக்கம்.

இம்மேற்கோள் சூத்திரத்துள்ள விதி எண்ணுமஞ்செழுத்தே என்ற மூன்றாங் கூற்றைப் பதச்சேதஞ்செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோவெனின், இச்சூத்திரத்திற்குச் செய்த கருத்துரையின்படி ஆன்மாவைச் சுத்தி பண்ணுதற்கு இரண்டாம் அதிகரணத்திற் கூறியவாறு பாசத்தை நீக்கியவிடத்துக் குளிர்ந்த நிழலாய் விளங்கித்தோன்றும் ஞானசொரூபமொன்றே போதுமாதலால் ஞானம் பிர காசித்து விட்டால் அதன்மேல் ஆன்மசுத்தியின் பொருட்டுச் செய்யவேண்டு வது ஒன்றுமில்லையென்பாரை நோக்கிச் சூத்திரத்தின் மூன்றாங்கூற்றைப் பதச்சேதஞ்செய்து ஞானம்பிரகாசித்தாலும் அதன்மேல் பஞ்சாக்கர மந்தி ரத்தையும் உச்சரிக்கவேண்டுமெனக் கூறியவாறாம்.

இவ்வதிகரணத்தில் ஞானம் பிரகாசித்த பின்னர்ச் செய்யவேண்டுவ துண்டோ இல்லையோ என்பது ஐயப்பாடு. இல்லையென்பது பிறர்பக்கம் என அறிக.

(இம்மேற்கோளின் பொருள்.) மேல் இரண்டாம் அதிகரணத்திற் கூறியவாறு பிரபஞ்சமாகிய பாசத்தை நீக்கி, நீக்கினவிடத்துக் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டுத் தோன்றும் ஞானக்கண்ணால், உயிராகிய தன்னறி வின் கண்ணே சிவபெருமானை யாராய்ந்து அறிந்த பின்னர், ஞானக்கண் ணால் பதியை அறிந்த அவ்விடத்தும் வாசனைமலம் நீங்குதற்பொருட்டுத் திரு அஞ்செழுத்தையும் விதிப்படி கணிக்கவேண்டும் எ—று.

ஞானம் பிரகாசித்த விடத்தும் பஞ்சாக்கரத்தை உச்சரிக்க என இரண் டாம் அதிகரணப்பொருளைத் தழுவி நிற்கும் இறந்தது தழுவிய உம்மை இம்மேற்கோளில் பஞ்சாக்கரத்தை என்றவிடத்துத் தொக்கு நின்றது. அந்த உம்மை விரித்துத் திரு அஞ்செழுத்தையும் என உரை செய்யப்பட் டது. அந்த உம்மை இறந்தது தழுவியதோடு உச்சரிக்க என்பது கொண்டு முடியவேண்டிய எச்சமாய் நிற்றலால் இறந்தது தழுவிய எச்ச உம்மையாம். இவ்வாறு இம்மேற்கோளில் இறந்தது தழுவிய எச்ச உம்மை விரித்து உரைக்கவேண்டுமென்பது பற்றியே, சிவஞானசித்தியார் கூ-ம் சூ-ம் க-வது செய்யுளில் "பின்னுமோசைதரு மஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க" என்றவிடத்துப் பின்னும் என உம்மையை விரித்தார் வழிநூலாசிரியரும்.

பஞ்சாக்கரமாவது தூலபஞ்சாக்கரம் சூக்குமபஞ்சாக்கரம் அதிசூக்கும பஞ்சாக்கரமென மூத்திறப்படும்; அவற்றுள், தூலபஞ்சாக்கரம் நகரத்தை

முதலாக உடையது. சூக்குமபஞ்சாக்கரம் சிகரத்தை முதலாக உடையது. அதிசூக்குமபஞ்சாக்கரம் நகரமகரங்களிரண்டுமின்றி ஏனைய மூன்றெழுத்தும் முன்னும் பின்னுமாய் மாறுதலால் ஐந்து எழுத்து ஆகிச் சிகரத்தை முதலாக உடையது. அதிசூக்குமபஞ்சாக்கரம் காரணபஞ்சாக்கரமெனவும், முத்திபஞ்சாக்கர மெனவும் கூறப்படும். இம்மூவகைப் பஞ்சாக்கரத்துள் இம்மேற்கோளில் 'ஸ்ரீபஞ்சாக்கரத்தை' என்று கூறியது முத்திபஞ்சாக்கரத்தை என அறிக.

இம் முத்திபஞ்சாக்கரத்தை உச்சரிக்கு முறையை வகுத்துக் கூறாமல் விதிப்படி உச்சரிக்க என்றுகூறிய கருத்தென்னையெனின், பாசத்தை நீக்கி ஞானக்கண்ணாற் சிவனை நாடுவதே முத்தி பஞ்சாக்கரத்தின் பொருளாதலால் அவ்வாறு நிற்றலே இரண்டாம் அதிகரணத்திற் கூறிவிட்டமையின், நிற்கும் அந்த முறையே ஓது முறையும் என அறிவிக்கவேண்டி இவ்விடத்தில் வகுத்துக் கூறாமல் விதிப்படி என இரண்டாம் அதிகரணப் பொருளையே இவ்வதிகரணத்திற்கும் மாட்டிவிட்டன ரென அறிக.

இவ்வாறு ஆசிரியர் இரண்டாம் அதிகரணத்திற் கூறிய விதியை மூன்றாம் அதிகரணத்திற்கு மாட்டி விட்டதையும், முத்தி பஞ்சாக்கரத்தின் பொருளையும் உணராதார், இரண்டாம் அதிகரணத்திற் கூறிய சாதித்து நிற்குமுறை வேறெனவும், இவ்வதிகரணத்திற் கூறிய ஓது முறை வேறெனவும் சித்தாந்த வழக்கத்திற்கு மாறுபட்டுக் கூறுவர். சித்தாந்தத்தில் நிற்கு முறையும் ஓதுமுறையும் ஒன்றற் கொன்று சம்பந்தமுடைய தாகவே இருக்கும். சம்பந்தம் இல்லாதவிடத்து நிற்கு முறைமை நிலைப்பதற்கு ஓதுமுறைமை சாதனமாவது எவ்வாறு கூடுமென வேறென்பாரை மறுத்து விடுக. நிற்கு முறையாவது, உயிர் பாசத்தை நீக்கி ஞானக்கண்ணால் பதியை நாடுதல். ஓது முறையாவது, பாசஎழுத்தை நீக்கி அருளெழுத் தொடும்பதி எழுத்தொடும் உயிரெழுத்து நிற்றல். இதனைத் திருவருட்பயன் ஐந்தெழுத்தருள் நிலை ஒன்பதாவது பாட்டில் "ஆசினவா நாப்ப ணடையா தருளிஞல் வாசியிடை நிற்கைவழக்கு" என்று புடைநூலாசிரியர் அருளிய வாற்றாலறிக. இன்னும் இதன் உண்மையெல்லாம் ஞான குருவினிடத்துக் கேட்க.

சூத்திரத்துள் உச்சரிக்க என்று கூறாது எண்ணுக என்று கூறிய கருத் தென்னையெனின், மந்திரங்களை உச்சரித்தல் மானதம், மந்தம், உரையென மூவகைப்படும். அவற்றுள் மானதமாவது மனத்தாற் பாவித்தல். மந்தமாவது சூக்கும வைகரிவாக்கால் தன் செவிக்குமட்டும் கேட்கும்படி உச்சரித்தல். உரையாவது தூலவைகரிவாக்கால் தனக்கும் பிறருக்கும் கேட்கும்படி உச்சரித்தல். இம்மூன்றனுள், தூலவைகரி வாக்கால் உச்சரிக்குங் காலத்து மனங்கலவா திருத்தலும் கூடும். இக்கருத்துப் பற்றியே "நான் மறக்கினுஞ் சொல்லும் நா நமச்சிவாயவே" என்றருளிச் செய்தார் சுந்தரமூர்த்திசுவாமிகளும். சூக்கும வைகரிவாக்கால் உச்சரிக்குங்காலத்து மனமும்

கலந்தே உச்சரிக்கப்படும். மானதமாய்ப் பாவிக்குங்காலத்து வாக்கின் கலப்பின்றிமனம் தனித்து அறிவுரூபமாய் நின்று பாவிக்கப்படும். வாக்கின் கலப்பில்லாமையால் இப்பாவனை சுத்தமானதம் எனப்படும். இந்தச் சுத்தமானதமாகிய அறிவாற் கணித்தலே இவ்வதிகரணத்தில் உச்சரித்தல் என்பதன் பொருளென அறிவிக்கவேண்டிச் சூத்திரத்துள் உச்சரிக்க என்று கூறாமல் எண்ணுக என்றார். எண்ணுதல் மனத்தின்றொழில். வடமொழிச் சிவஞானபோதம் ஒன்பதாம் சூத்திரத்தில் தியானிக்க என்று கூறியதும் சுத்தமானதமெனப்படும் அறிவாற் கணித்தலேயேயாம். இன்னும் இம்முத்திபஞ்சாக்கரத்தின்கண் உண்டாம் இயல்பெல்லாம் உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், கொடிப்பாட்டு, நெஞ்சுவிடுதூது முதலிய நூல்களுட் காண்க. இவ்விடத்துவிரிக்கிற் பெருகும்.

பதிஞானத்தைப் பெற்றவிடத்தும் வாசனையை நீக்குதற்பொருட்டுப் பஞ்சாக்கர ஜெபம் செய்யவேண்டு மென்பதற்குக் காட்டும்

ஏ து.

இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்புதின்ற புழுப்போல் நோக்கிற்றை நோக்கி நிற்குமாகலின் அது நீக்குதற்கெனக் கோள்க.

## சிற்றுரை.

எ-து ஏது எ-னின், அந்தரங்க வழிபாடாகலின் அசிந்திதனாய் நின்றபதியைச் சிந்திதனாகக் கண்டு வழிபடு மாற்றைச் சாரவைத்தோதற் பாலதாகிய இதனைச் சித்த சாதனமாய் ஈண்டு விதித்தல் எற்றுக் கென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) வேம்புதின்ற புழு அதனை யொருவிக் கரும்பைத்தலைப்பட்டு அதன் சுவை தெரிந்துழியும் பயிற்சிவயத்தான் நோக்கிற்றை நோக்கி நிற்குமாறுபோல அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று கண்ட உயிர்களுக்கு அதனான் ஞானசொரூபம் விளங்கி ஞேயங்காட்சிப் பட்டவிடத்தும் அவை பயிற்சிவயத்தாற் பண்டைச் சிற்றுணர்வை நோக்கிநிற்கு மாகலின் அவ்வாதனை நீக்குதற் பொருட்டு ஈண்டைக்கு வேண்டப்படுதலான் இனி ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி இவ்விடத்து உச்சரிக்கவென மேற்கொண்டதெனக் கொள்க எ-று.

இவ்விடத் தென்றதனால் அணைந்தோர் தன்மையைச் சாரவைத்து மேற்கோடற்குரிய ஸ்ரீபஞ்சாக்கரத்தை என வருவித்

துரைத்துக்கொள்க. எனக்கொள்கவென்று உடம்படுப் பித்ததும் அதுபற்றி. இக்கருத்து நோக்கியன்றே புடைநூலாசிரியர் அஞ்செழுத்தருணிலையை ஆன்மலாபத்தின் பின்னாக அணைந்தோர் தன்மையைச் சாரவைத் தோதியதூஉம் என்க. "வாளோக்கி வாழும்" "கோனோக்கி வாழும்" என்றாற்போல ஈண்டு நோக்கென்றது மன வெழுச்சி விசேடத்தை. பிரகாசித்த வழி என்பது பிரகாசித்தெனத் திரிந்தது. ஈண்டு ஞானமென்றது அசத்தை அசத்தென்று கண்ட வழி விளங்குவதெனப்பட்ட ஞான சொரூபத்தை; அஞ்ஞான மென்றது அதற்கு மறுதலையாகிய சுட்டுணர்வை யென உணர்க. அது நீக்குதற் கெனக்கொள்க வெனவே, சித்தசாதன மன்றென்பதும் பெறப்பட்டது.

## விளக்கம்.

இந்த ஏது என்னசொல்லிற்றோ எனின், மேற்கோளிற் கூறியவாறு முத்திபஞ்சாக்கரத்தை அறிவாற்கணித்தல் அந்தரங்க வழிபாடாகும். முன்னர்ப் பன்னிரண்டாஞ் சூத்திரத்தில் அதன் கருத்துரையின்படி சிந்தைக் கெட்டாத சிவனைச் சிந்தைக்கு எட்டியவனாகக் கண்டு வழிபடும் அந்தரங்க வழிபாடே கூறப்படுதலின் அப்பன்னிரண்டாஞ் சூத்திரத்துடன் சேர்த்துக் கூறவேண்டிய இவ்வழிபாட்டை வேறுபிரித்துக் கூறியது முன்னர்ச் சித்திக்கும் பொருளையே சாதிப்பதாகிய சித்தசாதன மென்னுங் குற்றமாம். ஆதலால் ஒரு சூத்திரப் பொருளாகிய இவ்வழிபாட்டை வேறு பிரித்துக் கூறியது எதன்பொருட்டு என்பாரை நோக்கி வாசனாமலம் நீக்குதற்பொருட்டு எனக்கூறி மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(இந்த ஏதுவின் பொருள்.) வேம்புதின்ற புழு அவ்வேம்பை நீக்கிக் கரும்பைக் கூடி அக்கரும்பின் சுவையை அறிந்து அநுபவித்த விடத்தும், நீண்ட நாட்பழகிய பழக்கவசத்தால் அப்புழு முன்னர் அனுபவித்த வேம்பின் சுவையை நோக்கி அவ்வேம்பினிடத்து மீளுமாறுபோல, இரண்டாமதிகரணத்திற் கூறியவாறு அசத்தாயுள்ள பிரபஞ்ச பேதங்களை அசத்தென்று கண்டு நீக்கிய உயிர்களுக்கு அசத்தை நீக்கிய அதனால் ஞான சொரூபம் விளங்கி முதலதிகரணத்திற் கூறியவாறு அந்தஞானக் கண்ணுக்குப் பதி விளங்கித் தோன்றியவிடத்தும்; அவ்வுயிர்கள் பழக்கவசத்தால் பழைய சிற்றுணர்வாகிய பிரபஞ்ச உணர்வை நோக்கி நிற்கும். ஆதலால் அப்பழக்க வாசனையை நீக்குதற்பொருட்டு இவ்விடத்து இவ்வழிபாடு வேண்டப் படுதலின் இனி ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க என மேற்கோள் கூறியதெனக் கொள்க எ-று.

மேற்கோளில் ஸ்ரீபஞ்சாக்கரத்தை உச்சரிக்க என்று கூறியிருந்தாலே போதும். இவ்விடத்து என்று கூறியது எதற்காக வெனின், இவ்விடத்து என்றதனால் பஞ்சாக்கரத்தை உச்சரிக்கவேண்டும் இடம் வேறு உண்டென அறியக் கிடக்கும். அதாவது சிவனை அணைந்த சீவன் முத்தர் பிராரத்தவினையின் பயனை அநுபவிக்குங் காலத்து அவ்வினைப்பயன் தாக்காதிருத்தற் பொருட்டு முத்திபஞ்சாக்கரம் உச்சரிக்கப் படுவதாகும் ஆதலால் இப் பஞ்சாக்கர தியானம் அணைந்தோர் தன்மையைச் சாரவைத்து ஓதப்படல் வேண்டும்; அதனைச் சிவோகம்பாவனை கூறும் இவ்விடத்து சிவோகம் பாவனை நிலைத்தற் பொட்டுக் கூறினாராதலின் இவ்விடத்து என்றார். ஆதலால் மேற்கோளுக்குக் கூறிய உரையில் அணைந்தோர் தன்மையைச் சாரவைத்து ஓதவேண்டிய ஸ்ரீபஞ்சாக் கரத்தைச் சிவோகம்பாவனை கூறும் இவ்விடத்து உச்சரிக்க எனவருவித்து உரைத்துக்கொள்க. ஏதுவில் நீக்குதற்பொருட்டு என்றாலே போதியதாகவும் எனக் கொள்க என்பதைச் சேர்த்துக் கூறியதும், அணைந்தோர் தன்மையை அடுக்க ஓதவேண்டுமென்பதை அறிவித்தற் பொருட்டேயாம். பிறிதொரு பொருளைத் தன்னுள் அடக்கி நிற்கும் எனக்கொள்க என்னும் உடம்பை அடுப்பித்து கூறியிருத்தலால் இது உடம்படுப்பித்தலாம். அதாவது சிவாநுபவம் நிலைத்தற் பொருட்டு அணைந்தோர் தன்மையை அடுக்கக்கூற வேண்டியதைச் சிவோகம்பாவனை நிலைத்தற் பொருட்டு இவ்விடத்துக் கூறினா ரென்றபடியாம். இப்பஞ்சாக்கரதியானம் சாதனம் நிலைத்தற்கும் அநுபவம் நிலைத்தற்கும் வேண்டப்படும் பொதுவான உபாய மென்னுங் கருத்துப்பற்றியே உமாபதி சிவாசாரியர் திருவருட்பயன் என்னும் நூலில் ஆன்மலாபமான உயிர் விளக்கமும் ஆன்மலாபத்தின் பயனாகிய இன்புறுநிலையும் கூறியபின்னர் ஐந்தெழுத் தருணிலை கூறி அதன்பின்னர் அணைந்தோர் தன்மை கூறினாரென அறிக.

நோக்கிற்றை நோக்கிநிற்கு மென்றதில் நோக்கு என்பது இவ்விடத்தில் கண்ணால் பார்க்கப்படும் பார்வையைக் குறிக்காமல் மன எழுச்சி விசேடமாகிய எண்ணத்தைக் குறித்து நின்றது. நோக்குதல் மன எழுச்சியைக் குறிக்கும் என்பதைத் திருக்குறளில் செங்கோன்மை அதிகாரத்தில் உ-வது செய்யுளில் "வானோக்கி வாழும் உலகெல்லா மன்னவன்—கோனோக்கி வாழுங் குடி" என்று கூறியவாற்றானும் அறிக. கோனோக்கிவாழும் வானோக்கிவாழும் என்பதற்கு மழை உளதாதலாலுண்டாகிய மனவெழுச்சி விசேடத்தாலும் செங்கோல் உளதாதலாலுண்டாகிய மனவெழுச்சி விசேடத்தாலும் வாழும் என்பதுபொருள்.

ஞானம் பிரகாசித்தவழியும் யென்றிருக்க வேண்டுவது ஞானம் பிரகாசித்தும் எனத் திரிந்து நின்றது.

இந்தஏதுவில் ஞானம் என்றது இரண்டாம் அதிகரணத்துக் கூறியவாறு அசத்தாகிய பிரபஞ்சத்தை அசத்தென்று கண்டவிடத்து விளங்குவ

தாகிய ஞானசொரூபத்தை எனவும், அஞ்ஞானத்தை என்றது அந்தஞான த்துக்கு மறுதலையாகிய சுட்டுணர்வை எனவுங்கொள்க. சுட்டுணர்வாவது இது இன்னது இது இன்னது என்று ஒவ்வொரு பொருளாகச் சுட்டியறியும் அறிவு சுட்டுதல் கருதுதல்.

அகண்டாகாரமாய் ஒன்றுயறியும் ஞானத்தை விட்டுச் சுட்டி யறியும் அஞ்ஞானத்தைக் கூடவரின் அந்த அஞ்ஞானத்தை நீக்குதற் பொருட்டுப் பஞ்சாக்கர தியானமாகிய அந்தரங்கவழிபாடு கொள்க என்றதனால் சித்திப் பதைச் சாதிப்பதாகிய சித்தசாதன மன்றெனமேல் நிகழ்ந்த ஆசங்கையை நீக்கியவாறு அறிக. இதனால், மேலேசித்தித்ததைச் சாதிப்பதும் பின்னர்ச் சித்திக்கபபடுவதைச் சாதிபபதும் சித்தசாதனமாகுமென உணர்ந்துகொள்க.

இந்தவது, ஞானம் பிரகாசித்த பின்னர்ச்செய்ய வேண்டுவ தொன்றும் இல்லை யென்பாரைமறுத்து வாசனு மலம் நீங்குதற்பொருட்டுப் பஞ்சாக்க ரதை உச்சரிக்கவேண்டுமெனக் கூறும் சித்தாந்தத் துணிபாயிற்று.

வாசனையை நீக்குதற்குப் பஞ்சாக்கரத்தை உச்சரித்தல்
சாதனமாகும் என்பதற்குக்காட்டும்
உதாரணம்.

அஞ்சேழுத்தா லுள்ள மரனுடைமை கண்டரனை
யஞ்சேழுத்தா லர்ச்சித் திதயத்தி—லஞ்சேழுத்தாற்
குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கி
லண்டனுஞ் சேடனு மங்கு.

## சிற்றுரை.

எ-து உ-ம் எ-னின், இஃதவ்வாசனையை நீக்குதற்குச் சாதன மாமாறியாங்ஙன மென்பாரை நோக்கி அஃதாமாறு கூறி ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) உள்ளம் அரன் உடைமை அஞ்செழுத்தால் கண்டு—உயிர் சிவனுக்குடைமை யாதலை அஞ்செழுத்தை உச்சரிக்குமுறையில் வைத்து நோக்கி,—இதயத்தில் அரனை அஞ்செழுத்தால் அர்ச்சித்து—(தன்னுடம்பகத்தே இதயம் உந்தி புருவநடு வென்னுமூன்றனையும் முறையே பூசைத்தானம் ஓமத்தானம் தியானத்தானமாகக் கருதிக்கொண்டு புறம்பே ஞானபூசை செய்யும்முறைப்படி) இதயபங்கயத்தில் (அவ்வஞ்செழுத்தா லமைந்ததிருமேனியில்) அம்முதல்வனைக் (கொல்லாமை ஐம்பொறியடக்கல் பொறைஅருள் அறிவு வாய்மை தவம் அன்பு என்னும் அட்ட புட்பங்கொண்டு) அம்மனுவா லர்ச்சனைசெய்து,—அஞ்செழுததால் குண்டலியின்

ஓமஞ்செய்து—அத்திருமந்திரத்தானே குண்டலித்தானமான உந்தியில் (ஞானவனலை எழுப்பி அதன்கண் விந்துத்தானத்தமிழ்தமாகிய நெய்யைச் சுழுமுனைநாடி இடைநாடியாகிய சுருக்குச் சுருவங்களா) லோமித்து,—கோதண்டம் சாணிக்கில்—விந்துத்தானமாகிய புருவநடுவிற் (சிகர யகர வகரங்கண் மூன்றும் முறையே தற்பதப் பொருளும் துவம்பதப் பொருளும் அசிபதப் பொருளுமா முறைமை நோக்கி அதனாற்) சிவோகம்பாவனை செய்வனாயின்,—அங்கு அண்டன் ஆம்சேடன் ஆம்—அப்பாவனைக்கண் அம்முதல்வன் விளங்கித் தோன்றுவன் (அப்பாவகன் அவனுக்குச் சேட சேடியபாவகத்தால்) அடிமையாவன் எ-று.

ஓமித்தலும் தியானித்தலும் பூசைக்கங்கமெனை அறிக. ஞானசொரூபம் விளங்கிய வழியும் பயிற்சிவயத்தான் ஏகதேசப்பட்டுப் புறத்திற் செல்ல நோக்குவதாய தன்னறிவை அங்ஙனமாகாதவாறு மடக்கி அகத்தே ஒருகுறியின்கணிறுத்தி நிட்டைகூடும்படி அஞ்செழுத்தோது முறையில் வைத்துக்கண்டு சிந்திக்கச் சிந்திக்க அஃது அந்நோக்கத்தைப் பற்றறக் கெடுத்து ஞானசொரூபத்தை இனிது விளக்கிப் பூரண நிலையிற் கொண்டு செலுத்துமாதலின் இஃது ஈண்டைக்குச் சிறந்த சாதனமாயிற்றென்பது.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) உள்ளம் அரன் உடைமை அஞ்செழுத்தால் கண்டு இதயத்தில் அரனை அஞ்செழுத்தால் அர்ச்சித்து அஞ்செழுத்தால் குண்டலியின் ஓமம் செய்து கோதண்டம் சாணிக்கில் அங்கு அண்டன் ஆம் சேடன் ஆம்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோஎனின், இவ்வதிகரணத்து மேற்கோளிற் கூறிய பஞ்சாக்கர தியானம், ஞானசொரூபம் விளங்கியவிடத்தும் பிரபஞ்சத்தை நோக்கச்செய்யும் பழக்கவாசனையை நீக்குதற்கு எவ்வாறு சாதனமாகுமென்பாரை நோக்கிச் சாதனமாகும் முறைமை கூறி ஏதுவை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) உயிர் சிவனுக்கு உடைமைப் பொருளாதலை முத்திபஞ்சாக்கரத்தை உச்சரிக்கும் முறைமையில் வைத்து அறிந்து புறம்பே ஞானபூசை செய்வதற்குப் பூசைத்தானம் ஓமத்தானம் தியானத்தானம் வகுத்துக்கொண்டு பஞ்சாக்கரத்தினாலேயே அர்ச்சனை முதலியன செய்தல் போல, உடம்பினுள்ளே இதயத்தைப் பூசைத்தானமாகவும் உந்தியை ஓமத் தானமாகவும் புருவநடுவைத் தியானத்தானமாகவும் கருதிக்கொண்டு, பூசைத்தான

மாகிய இதயதாமரையில் மேற்கூறிய முத்தி பஞ்சாக்கரத்தையே திருமேனியாக உடைய சிவபெருமான் வீற்றிருப்பதாகப் பாவித்து அச்சிவபெருமானை யர்ச்சிப்பதற்குப் புறத்தில் அட்டபுட்பங்களிருத்தல்போலக் கொல்லாமை, ஐம்பொறி யடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்னும் அட்டபுட்பங்கொண்டு அம்முத்திபஞ்சாக்கரத்தால் அர்ச்சித்து, அதன்பின் அம் முத்திபஞ்சாக்கரத் தானே குண்டலினி சத்திவசிக் குந்தானமாகிய உந்தியில் ஞானமாகிய அக்கினியை எழுப்பி விந்துத் தானமாகிய புருவநடுவின்கண் அவ்வக்கினியாலுண்டாகும் அமிழ்தமாகிய நெய்யைச் சுழுமுனை நாடி இடைநாடியாகிய சுருக்குச் சுருவங்களால் அவ்வக்கினியின்கண் பெய்து ஓமம் செய்து, அதன்பின் விந்துத்தானமாகிய புருவநடுவில் சிகர யகர வகரங்கள்மூன்றும் முறையே தற்பதப் பொருளும் துவம்பதப்பொருளும் அசிபதப் பொருளுமான முறையை அறிந்து அம்முறைமையால் சிவம் நான்என்று சிவோகம்பாவனை செய்வனாயின், அப்பாவனையில் பாவிக்கப்படும் அம்முதல்வன் விளங்கித் தோன்றுவன். தோன்றவே அப்பாவனை செய்தவன், முதல்வனை விட்டுத்தனித்து நில்லாத சேட பாவனையாலும் தன்னைச் சேடமாக உடைய சேடியம் முதல்வன் என்றபாவனையாலும் அம்முதல்வனுக்கு அடிமையாவன் எ-று.

(க-ரை.) புறத்தே ஞான பூசைசெய்யும் முறைப்படி அகத்தே இதயம் உந்தி புருவநடு என்னும் மூன்றுதானங்களையும் முறையே பூசைத்தானம் ஓமத்தானம் தியானத்தானங்களாக வகுத்துக்கொண்டு பூசித்து ஓமித்துத் தியானிப்பனாயின் சிவனுக்கு அடிமையாவன் என்பதாம்.

சேடம் என்பது மிச்சப்பொருளைக் குறிக்கும். மிச்சம் என்பது யாதானும் ஒன்றன் மிச்சமாயிருக்குமே யன்றித் தனித்திருப்பதில்லை. தனித்திருப்பின் சேடம் என்று சொல்லப்பட மாட்டாது. ஆதலால் உயிர் சிவனையின்றித் தனித்து நில்லாமையை விளக்குதற்குச் செய்யுளில் சேடன் என்று கூறினார். எல்லா உயிரும் தனித்து நில்லாமையால் சிவனுக்குச் சேடமேயாயினும் அவ்வுயிர்கள் தம்மைச் சேடமென அறிவதில்லை. சிவோகம்பாவனை செய்கின்றவன் தன்னைச் சேடம் எனவும் முதல்வனைச் சேடியம் எனவும் அறிகின்றான்.

சுருக்குச் சுருவம் என்பன நெய்யைப் பெய்யும் துடுப்புகள். ஓமமும் தியானமும் பூசைக்கு அங்கமெனவும் பூசை அங்கியெனவும் அறிக. கோதண்டம் என்றவிடத்து ஏழாம்வேற்றுமைக் கண் உருபுவிரித்துப் புருவநடுவில் என்றும், அண்டனும் என்றவிடத்து நான்காம் வேற்றுமை குவ்வுருபு விரித்து முதல்வனுக்கு எனவும் உரைசெய்யப்பட்டது.

சாந்தோக்கிய உபநிடதத்திலுள்ள தத்துவமசி மகா வாக்கியம் தற்பதம் துவம்பதம் அசிபதம் என மூன்று பதங்களை உடையது. அம்மூன்றனுள்

தற்பதம் இறைவன் தடத்தநிலையாகிய பதித் தன்மையினையும், துவம்பதம் உயிரின் தடத்தநிலைபாகிய பசுத்தன்மையினையும், அசிபதம் அவ்விருபொருள்களின் சொரூபநிலையாகிய ஐக்கியத்தையுங்குறிக்கும். "இதனை, வேதாந்த தொம்பத மேவும் பசுவென்ப—நாதாந்த பாசம் விடநின்ற நன்பதி—போதாந்த தற்பதம போயிரண் டைக்கியஞ்—சாதா ரணஞ்சிவ சாயுச்சிய மாமே" என்னுந் திரு மந்திரத்தானும் உணர்க. அவ்வாறாயின்," தொம்பதந் தற்பதஞ் சொல் லுமசிபத—நம்பிய முத்தரி யத்துமே னுடவே—யும்பத முபபத மாகு முயிர்பரன்—செம்பொரு ளான சிவமென லாமே." என்னுந் திருமந்திரத்தால் அசிபதம் சிவம் ஒன்றையே குறிக்கவும் அதற்குமாறாக இருபொருள்களின் சலப்பைக் குறிக்குமென்றல் முரணாதோ எனின், முரணாது. எதனாலெனின், "சிவமாதல் வேதாந்த சித்தாந்த மாகும்" என்னும் திருமந்திரத்தின்படி முத்தியில் உயிர்சிவனைச் சார்ந்து சிவமாதலால் என்க. இதனை "விரவு நீர் பாலாதல் வேதாந்தத் துண்மையே" என்ற திரு மந்திரமும் வலியுறுத்தும். இவ்வுண்மையறியாத ஏகான்மவாதிகள் நீரேதனித்து பாலாகும் என்றும் அதுபோல உயிரே தனித்துச் சிவமாகும் என்றும் கூறுவர். ஒன்றுமற்றொன்றாதல் உலகத்திற் கண்டிலமாதலானும், உவமேயத்தைத் தெளிவிப்பதற்குக் கூறும் உவமானத்தில்ஐயம் நிகழின் அது உவமானமாகாமையானும் அவர் கூற்றுப்பொருந்தாதெனவிடுக்க. இம்மகாவாக்கியம் போலவே, சிகரம் பதியையும் யகரம் பசுவையும் வகரம் அவ்விரண்டின் ஐக்கிய நிலையாகிய அருளையும் குறிக்கும். ஆகலால் இம் முத்திபஞ்சாக்கரம் சித்தாந்த மகாவாக்கியமென அறிக.

அசத்தை அசத்தென்று கண்டு ஞான சொரூபம் விளங்கித்தோன்றி எங்குந் தானாக நிட்டைகூடிய விடத்தும் பழையபழக்கவசத்தால் புறத்தே பிரபஞ்சத்திற் சென்று சுட்டியுணரு மாதலின், அவ்வாறுணரும் தன்னறிவைப் புறத்திற் செல்லவொட்டாது மடக்கி அகத்தே ஒருகுறியின்கண் நிறுத்தி நிட்டை கூடும்படி முத்திபஞ்சாக்கரத்தை உச்சரிக்கும் முறையில் வைத்துக் கண்டு சிந்திக்கச் சிந்திக்க அச்சிந்தனை அப்புற நோக்கத்தைப் பற்றறக்கெடுத்து ஞான சொரூபத்தைச் செவ்வையாக விளக்கிப் பூரணநிலையிற் கொண்டுபோய்விடு மாதலால் இம்முத்திபஞ்சாக்கர தியானம் பழைய பழக்க வாசனையை நீக்குதற்குச் சிறந்தசாதனமாயிற்றென ஆசங்கை நீக்கிடவாறு அறிக.

இதயத்திற் பூசித்தலால் இறைவனைக் காண்டல் கூடுமென்பதற்கு உவமை கூறி வாசனையை நீக்குதற்பொருட்டு முத்திபஞ்சாக்கரம் உச்சரிக்க வேண்டு மென்பதை வலியுறுத்தும்

உதாரணம்.

இந்துவிற் பானுவி லிராகுவைக் கண்டாங்குச்
சிந்தையிற் காணிற் சிவன்கண்ணு—முந்தவே
காட்டாக்கிற் றேன்றிக் கனல்சே ரிரும்பென்ன
வாட்டாளு மோதஞ் செழுத்து

## சிற்றுரை.

எ-து உ-ம் எ-னின், அங்ஙனம் ஒருகுறியின்கண் வைத்தன்றி முதல்வனைக் காண்டல் செல்லாதவாறும், அவ்வாறு கண்டவழி முதல்வன் தன்மாட்டு விளங்கித் தோன்றுமாறும், தோன்றிய வழித்தான் அம்முதல்வனுக் கடிமையாமாறும், உவமையில் வைத்துணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்.) இராகுவை இந்துவில் பானுவில் கண்டாங்கு—(அந்தரத்தியங்கு நவக்கோள்களுள் ஏனையபோலக் காணப்படாத) இராகுகேதுக்களை (உபாகத்திற்) சந்திராதித்தர் மாட்டுக் கண்டாற்போல,—சிந்தையில்காணில்—(முப்பொருள்களுள் யானிதனை யறிந்தேன் அறிகின்றிலேன் என்னும் உணர்விற்கு விடயமாகிய பசுபாசங்களைபோலொப்ப வேறுணரப்படாத முதல்வனைத்) தன் னிதய பங்கயத்தின்) அஞ்செழுத்தின் முறையின் வைத்துக்) காணுமாயின்,—உந்தவே காட்டாக்கின் சிவன் தோன்றிக் கண் ஆம்—(கோலைநட்டுக் கயிற்றினாற் சுற்றிக்) கடையவே காட்டத்தினின்று அங்கி தோன்றுமாறுபோல அம்முதல்வன் ஆண்டுத்தோன்றி அறிவுக்கறிவாய் விளங்கிநிற்பன்,—தான் கனல்சேர் இரும்பு என்ன ஆள் ஆம்—(அப்பொழுது தானும் எரிசேர்ந்த இரும்பு போலத் (தனது சுதந்திரத்தைவிட்டு அம்முதல்வனுக்கு) அடிமையாம்,—அஞ்செழுத்து ஓது—(ஆகலான்) அத்திருவஞ்செழுத்தை (விதிப்படி) யோதுவாயாக எ-று.

கேது சாயாக்கிரகமாகலின் வேறு கூறாராயினார். கண் அறிவு. தோன்றியாமெனவியையும். உந்துதல் ஈண்டுக் கடைதல்மேற்று. காட்டாக்கி வடமொழிச் சிதைவு. இகரம் விகாரத்தாற் றொக்கது. இன் உவமஉருபு. ஈண்டும் ஓதஞ்செழுத் தென்றது வலியுறுத்தவாறு.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) இராகுவை இந்துவில் பானுவில் கண்டாங்குச் சிந்தையில் காணில் உந்தவே காட்டாக்கின் சிவன்தோன்றிக் கண் ஆம் தான் கனல் சேர் இரும்பு என்ன ஆள் ஆம் அஞ்செழுத்து ஓது.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோவெனின், மேலே வெண்பாவிற் கூறியவாறு இதயத்தானமாகிய ஒரு குறியின்கண் முதல்வனைத் திருவஞ்செழுத்தாற் பாவித்தாலன்றிக் காணமுடியாதென்பதையும், அவ்வாறு

பாவித்துக் கண்டவிடத்து முதல்வன் தன்னிடத்தில் விளங்கித்தோன்றும் முறைமை இவ்வாறென்பதையும், முதல்வன் தோன்றியவிடத்துத் தான் அம்முதல்வனுக்கு அடிமையாம் என்பதையும், உவமையில் வைத்தறிவித்து வாசனையை நீக்குதற்கு முத்திபஞ்சாக்கரத்தை அறிவாற் கணித்தல் சாதனமாகுமென்று கூறிய ஏதுவை வலியுறுத்தியவாறும்.

(பொ—ரை.) வானத்தில் உலாவிக்கொண்டிருக்கும் ஆதித்தன் முதலாகிய ஒன்பது கிரகங்களுள் இராகு கேதுக்கள் நீங்கிய ஏனைய ஏழுகிரகங்களும் நேரே அறியப்படும். இராகு கேதுக்கள்மட்டும் அவ்வாறு அறியப் படமாட்டா. நேரே அறியப்படாத இராகு கேதுக்களைக் கிரகணகாலத்தில் சந்திரனிடத்தும் சூரியனிடத்தும் காண்டல்கூடும். அதுபோல, பதி பசுபாசமென்னும் முப்பொருள்களுள் யான் இதனை அறிந்தேன் அறிகின்றிலேன் என்றவிடத்து யான் அறிந்தேன் அறிகின்றிலேன் என்னும் உணர்விற்குப்பொருள் ஆன்மாவும் இதனை என்னும் உணர்விற்குப்பொருள் பாசமும் ஆதலால் ஆன்மாவின் அறிவிற்கு ஆன்மாவும் பாசமும் வேறாகக் காணப்படும். முதல்வன் பசுபாசங்களைக் கடந்து நிற்பன் ஆதலால் ஆன்ம அறிவிற்கு வேறு காணப்படமாட்டான். வேறு காணப்படாத அம்முதல்வனைத் தன் இதய தாமரையில் முத்திபஞ்சாக்கரத்தைத் தியானிக்குமுறையில்வைத்துக் காணுமாயின் அவ்வாறு காணும் அறிவில் வெளிப்பட்டுத் தோன்றி அறிவுக்கறிவாய் விளங்கி நிற்பன். இதயதாமரையில் வெளிப்பட்டுத் தோன்றுதல் ஏதுபோல எனின், விறகினிடத்துக் கோலைநட்டுக் கயிற்றினுற் சுற்றிக் கடையவே அவ்விறகில் நின்று அக்கினிதோன்றுமாறுபோலாம். அவ்வாறு முதல்வனைக் கண்டபொழுது அக்கினியைச்சேர்ந்த இரும்பு அக்கினியின் தன்மையாய்க் கறையுங் கடினமுமின்றி விளங்குமாறுபோல முதல்வனைக் கண்டதானும்மலமும் பசுபோதமும்விட்டு அம்முதல்வனுக்கு அடிமையாம். ஆதலால் அத்திருவஞ்செழுத்தை விதிப்படி உச்சரிப்பாயாக எ—று.

(க—ரை.) நேரே அறியப்படாத இராகு கேதுக்கள் கிரகணகாலத்தில் சந்திர சூரியரிடத்தில் விளங்கித் தோன்றுமாறுபோல, முதல்வன் சாதன காலத்தில் இதயபங்கயத்தில் விளங்கித்தோன்றுவன். அவ்வாறு தோன்றுதல் விறகினிடத்துக் கோலைநட்டுக் கடைந்தவிடத்து அக்கினிதோன்றுமாறுபோலாம். அக்கினியைச்சேர்ந்த இரும்பு அக்கினியாமாறுபோல முதல்வனைச் சார்ந்த ஆன்மாவும் சிவமாய் அம்முதல்வனுக்கு அடிமையாம் என்பதாம்.

பசுயாதானுமொன்றைச்சார்ந்து அதன்வண்ணமாய் அறியப்படுமென்று ஏழாஞ்சூத்திரத்திற் கூறியதனேடு நேரே அறியப்படுமென்று இவ்விடத்துக் கூறியது முரணுதோ எனின், முரணுது. எவ்வாறெனின், யான் இதனை அறிந்தேன் அறிகின்றிலேன் என்றவிடத்துப் பசுவும் பாசமும் அறியப்படுமென்றதனுல் இது என்னும் பாசத்தின் வாயிலாக அதனை உணர்ந்த தன்னை அறிதலேயன்றித் தனித்தறியவில்லையாதலால் என்க.

விறகினிடத்துக் கோலை நட்டுக் கடைந்தவிடத்து அக்கினிதோன்று வதுபோல இதயபங்கயத்தினிடத்து முத்திபஞ்சாக்கரத்தாற்றியானித்த விடத்து முதல்வன் தோன்றுவன் என்னும் இக்கருத்தேபற்றி "விறகிற்றீ யினன் பாலிற்படு நெய்போல்—மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்— உறவு கோல் நட்டு உணர்வுகயிற்றினால்—முறுகவாங்கிக் கடையமுன் னிற் குமே" எனத் திருநாவுக்கரசு சுவாமிகள் அருளியவாறும். இப்பாசுரத்தில் விறகிற்றீயினன் என்றதும் பாலில் நெய்போல் என்றதும் முறையேபாசத் தினிடத்தும் பசுவினிடத்தும் நிற்கும் முதல்வன் தடத்தநிலையை உணர்த்து தற் கெனவும், மாமணிச்சோதியான் என்றது முதல்வன் சொரூப நிலையை உணர்த்துதற் கெனவும் அறிக. இந்நூலில் இவ்வெண்பாவில் விறகுபோல் இதயம். கோல்போல் பஞ்சாக்கரம். கடைதல்போல் தியானம் என அறிக. மற்றைய உவமைக்குப் பால்போல் ஆன்மா. ஏனைய இரண்டற்கும் ஒக்கும். இச்சூத்திரம் இரண்டாம் அதிகரணத்து மூன்றுவது வெண்பாவில் ஆன் மாவிலாய்ந்துணர என்றதுஇங்கே சிந்திக்கற்பாலது.

கேதுவும் இராகுவும் சாயையேயன்றித் தனித்த கிரகமன்று; ஆத லால் கிரகணகாலத்தில் தோன்றும் இராகு கேதுக்கள் என்று இரண்டை யுங் கூறாமல் இராகுவை மட்டுங்கூறிக் கேதுவை வேறு கூறாராயினர்.

சிவன் கண்ணும் என்றவிடத்துக் கண் என்றது அறிவைக் குறித்து நின்றது. ஆதலால் அறிவுக் கறிவாய் விளங்கிநிற்பன் என உரை செய்யப் பட்டது.

மூன்றுவது அடியிலுள்ள தோன்றி என்பது இரண்டாவது அடியிலு ள்ள கண் ஆம் என்பதன் மேலாகக் கூடித்தோன்றிக் கண் ஆம் எனப்பொ ருந்தும். அவ்வாறே உரைசெய்யப்பட்டது.

உந்தவே என்றதில் உந்துதல் செலுத்துதலைக் குறிக்குமாயினும் இச் செயுளில் கடைதலைக் குறித்து நின்றது.

காஷ்டாக்னி என்று இருக்கவேண்டியது காஷ்டமும் அக்னியும் வட மொழி யாதலால் காட்டாக்கியென வடமொழிச் சிதைவாக நின்றது. காட் டாக்கின் என்றவிடத்து காட்டாக்கி இன்என்றே கொள்ள வேண்டுவதால் இகரம் விகாரத்தாற் றொக்குநின்றது. அந்த இன் உவமையைக் குறித்த உருபாம். ஆதலால் காட்டத்து அங்கிபோல என உரைசெய்யப்பட்டது.

மேலை வெண்பாவிலும் அஞ்செழுத்தால் வழிபடும் முறைகூறி இவ் வெண்பாவிலும் ஓது அஞ்செழுத்து என்று மீளவுங் கூறியது வலியுறுத்து தற்காக என அறிக.

இதயதாமரையின் இயல்புகூறிப் பஞ்சாக்கர தியானம் வாசனையை நீக்கும் என்பதை வலியுறுத்தும்

உதாரணம்.

மண்முத லுளமலர் வித்தை கலாரூப
மெண்ணிய வீசர் சாதாசிவமு—நண்ணிற்
கலையுருவா நாதமாஞ் சத்தியதன் கண்ணு
நிலையதிலா மச்சிவன்றா ணேர்.

சிற்றுரை.

எ—து உ—ம் எ--னின், தத்துவ முப்பத்தாறுக்கும் மேற்பட்ட முதல்வனை இதயபங்கயத்திற் கண்டர்ச்சிக்குமாறு யாங்ஙனமென்பாரை நோக்கி அவ்விதய பங்கயத்தினியல்புணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) நண்ணில்—(அவ்விதயபங்கயத்தினியல்பை அறியப்)புகின்,—மண்முதல் நாளம்—நில முதலிய இருபத்து நான்கு தத்துவமும் (உந்தியினின்றுந் தோன்றி எண் விரலளவைத்தாபுள்ள) நாளவடிவாம்,—வித்தைமலர்—வித்தியா தத்துவங்களேழுஞ் சுத்தவித்தையுமென்னும் எட்டுத் தத்துவமும் எட்டிதழ் வடிவாம்,—எண்ணிய ஈசர் சதாசிவமும் கலாரூபம்—(அத்தத்துவங்களுக்கு மேலாகக்) கருதப்பட்ட ஈசுரன் சதாசிவமென்னும் இரண்டு தத்துவமும் அறுபத்துநான்கெனப்படுங் கேசர வடிவாம்,—சத்தி கலை உருவாம்—சத்திதத்துவம் அக்கேசரங்களுக்குள்ளாகிய பொகுட்டு வடிவாம்,—நாதம் அதன் கண்ணும்—சிவ தத்துவம் அப்பொகுட்டிற் காணப்படும் ஐம்பத்தொரு வீசவடிவாம்,—அதில் அச்சிவன் தாள்நிலையாம்—(ஆகலான்) அவ்வியல்பிற்றாகிய இதய பங்கயத்தின் (முப்பத்தாறு தத்துவமும் ஆசனமாக உடைய) அச்சிவனது சத்திநிலை பெறும்,—நேர்—(அதனையறிந்து திருவஞ்செழுத்தால்) அர்ச்சிப்பாயாக எ-று.

இதனானே "அண்டபிண்ட மவை சமமாதலால்" புறத்துக் காணப்படும் முப்பத்தாறு தத்துவமும் அகத்தினிற் சூக்குமமாய் உண்டென்பது காட்டி முதல்வனுக்கு இந்நிலையே அந்நிலை யெனத் தெளிவித்தவாறு. வித்தை என்பது இரட்டுற மொழிதலான் அவ்வாறுரைக்கப்பட்டது. சிவஞான சித்தியில் "மட்டு மோகினி சுத்

தவித்தை மலரெட்டாய்'' என்புழி யோகினி என்றதூஉம் ஆகு பெயரான் அதன்காரிய மாயகலாதிகளின் மேனின்றது.

இவ்வாறன்றி நிலமுதலிய முப்பத்தொரு தத்துவ மெனப்ப டும் எட்டுக் கொத்தும் எண் விரனுளவடிவும். அசுத்த மாயாதத் துவம் நாளத்துக்கும் மலருக்கும் நடுக்கண்ட மாகிய கிரந்திவடிவும் அதற்குமேற் சுத்தவித்தையின் வாமை முதலிய வெட்டும் எட்டி தழ் வடிவுமா மென்றுரைப்பாரும், முப்பத்தொன்றுக்குமேல் அசு த்த மாயை கிரந்தியின் அதச்சதனம் சுத்தமாயை ஊர்த்துவச்ச தனம் அதற்குமேல் ஈசுரதத்துவத்தில் அனந்தன் முதலிய வெட் டும் எட்டிதழ் வடிவம் சதாசிவ தத்துவமொன்றுங் கேசரவடிவ மெனக் கொண்டு அதற்கியையக்கொண்டு கூட்டி யுரைப்பாரும், கலாரூபமென்றது பஞ்சகலைகளை எனவும் அஃதியாண்டுங் கூட்டி யுரைக்கப் படுமெனவுங் கொண்டு, மண்முதனாள மலரென்பதற்கு மண்ணாகிய நிவிர்த்திகலாரூபம்நாளமும், மண்ணை முதலாகவுடைய ஏனை இருபத்துமூன்று தத்துவமாகிய பிரதிட்டாகலாரூபம் மலரு மாமெனவும், வித்தை எண்ணிய வீசர் சதாசிவமுங் கலையுருவமா மென்பதற்கு வித்தியா தத்துவமாகிய வித்தியாகலாரூபங் கலை யெனப்படுங் கேசரமும் சுத்தவித்தையோடு கூட்டி எண்ணப்பட்ட ஈசுரதத்துவஞ் சதாசிவ தத்துவமாகிய சாந்திகலாரூபங் கலைக்குள் ளுரு வெனப்படும் பொகுட்டுமா மெனவும், நாதமாஞ் சத்தியதன் கண்ணும் என்பதற்குச் சிவதத்துவம் சத்திதத்துவமாகிய சாந்தி யதீதகலாரூபம் பொகுட்டின் கண்ணாகிய வீசமாமெனவும் உரைப் பாரு முளர். இவை யெல்லாம்அவ்வவ்வாகம பேதம்பற்றிக் கொள் ளப்படும்.

கலை அறுபத்து நான்காகலான், அறுபத்து நான்காகிய கேச ரங்களுக்குத் தொகைபற்றிக் கூறப்படும் ஆகுபெயராயிற்று. ஈசர் ஆகுபெயர். கலையுரு கலைக்குள்ளுருவென உள்ளுருபு விரித்துரை க்க. அதில் என்புழி அன்சாரியை விகாரத்தாற் றொக்கது. இதுநாள முதலாக மேனோக்கித் தோன்றும் உலகத்துக்கமலம் போலாது கண் முதலாகக் கீழ் நோக்கித் தோன்றியதோர் திப்பிய கமல மெனக் கொள்க. சிவன்று எதினிலையாமெனவே சிவன் சத்திக்கு மேலாய் நிற்பனென்பதூஉம் பெறப்படும்.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) நண்ணில் மண்முதல் நாளம் வித்தைமலர் எண்ணிய ஈசர் சதாசிவமும் கலாரூபம் சத்தி கலையுருவாம் நாதம் அதன் கண்ணும் அதில் அச்சிவன்தாள் நிலையாம் நேர்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ வெனின், தத்துவம் முப்பத்தாறுக்கும் அப்பாற் பட்ட முதல்வனைத் தத்துவத்தின் காரியமாகிய தாத்துவிகம் எனப்படும் இதயத்தில் வைத்து எவ்வாறு பூசித்தல் கூடும் என்பாரை நோக்கி இதயத்தில் முப்பத்தாறு தத்துவங்களும் தாமரை ரூபமாய் விளங்குமாதலால் முதல்வனை அவ்விதய கமலத்தின் மேல்தத்துவாதீதராகக் கண்டு பூசித்தல் கூடுமென்றுகூறிப் பஞ்சாக்கரதியானம் வாசனையை நீக்கும் என்ற ஏதுவை வலியுறுத்தியவாறாம்.

(பொ-ரை) மேலை வெண்பாவிற் கூறிய இதயதாமரையின் இயல்பு எவ்வாறெனை அறியுமிடத்தில், பூதம் ஐந்து தன்மாத்திரை ஐந்து ஞானேந்திரியம் ஐந்து கன்மேந்திரியம் ஐந்து அந்தக்கரணம் நான்கு ஆக இருபத்து நான்கு தத்துவமும் உந்தியில் நின்றுந் தோன்றிய எட்டுவிரல் அகல அளவு நீள மாயுள்ள தண்டுவடிவாம். வித்தியா தத்துவம் ஏழும் சிவதத்துவத்தில் சுத்தவித்தை ஒன்றும் ஆக எட்டுத் தத்துவமும் அத்தண்டின்மேலுள்ள எட்டு இதழ் வடிவாம். கருதப்பட்ட ஈசுரம் சதாசிவம் என்னும் இரண்டு தத்துவமும் அவ்விதழுக்கு உள்ளாகிய அறுபத்து நான்கு பூந்தாது வடிவாம். சத்தி தத்துவம் அப்பூந்தாதுவிற் குள்ளாகிய கொட்டை வடிவாம். சிவதத்துவம் அக் கொட்டையிற் காணப்படும் ஐம்பத்தொரு வீசவடிவாம். ஆதலால் அத்தன்மையாகிய இதய தாமரையில் முப்பத்தாறு தத்துவங்களையும் ஆசனமாகக் கொண்டு அவ்வாசனத்தில் சிவசத்தி நிலைபெற்று வீற்றிருக்கும். அவ்வாறு வீற்றிருத்தலை யறிந்து முத்தி பஞ்சாக்கரத்தால் இதயத்தில் அச்சத்திமானாகிய சிவபெருமானை அர்ச்சிப்பாயாக எ-று.

(க-ரை.) உந்தியில் நின்று மேல் எட்டுவிரல் அகல அளவு நீளத்திலுள்ள இதயத்தானத்தில் முப்பத்தாறு தத்துவங்களை ஆசனமாகக் கொண்டு சிவசத்தி வீற்றிருக்குமாதலால் அவ்விதயத்தில் அச்சத்தியை யுடைய சிவபெருமானை அர்ச்சிபபாயாக என்பதாம்.

கோயிற் புராணம் பதஞ்சலிச்சருக்கத்து எ௰-வது செய்யுளில் "அண்டபிண்டமவை வசமமாதலரல்" எனக்கூறியபடி அண்டத்தில் உள்ளனவெல்லாம் பிண்டத்துள்ளும் உண்டு. ஆதலால் அண்டவடிவாகிய முப்பத்தாறு தத்துவங்களும் பிண்டத்துள் இதயத்தில் சூக்குமமாயும் தாமரை ரூபமாயும் விளங்கும் என்பதை அறிவித்து, முதல்வனுக்கு அண்டத்தில் முப்பத்தாறு தத்துவத்திற்கு மேற்பட்ட அந்நிலையே இதய கமலத்தின் மேலாகக்கண்டு பூசிக்கப்படும் இந்நிலையென இவ்வெண்பாவினால் தெளிவித்தவாறுஅறிக.

செய்யுளில் வித்தை என்றதற்கு இரட்டுறமொழிதல் என்னும் உத்தியால் வித்தியாதத்துவம் ஏழும் சுத்தவித்தையும் என்னும் எட்டு எனஉரை செய்யப்பட்டது. வித்தை என்றதற்கு இவ்வாறு கூறவேண்டு மென்னுங் கருத்துப்பற்றியே சிவஞானசித்தியார் ௬-ம் சூ-ம் ௬-வது செய்யுளில் "மூட்டுமோகினி சுத்தவித்தை மல ரெட்டாய்" என வழிநூலாசிரியர் அருளிச் செய்தனர். சித்தியாரில் மோகினி என்றது அசுத்தமாயையை உணர்த்தி ஆகுபெயராய் அவ்வசுத்த மாயையின் காரியமாகிய கலாதித்தத்துவம் ஏழினையுங்குறித்து நின்றது.

இவ்வெண்பாவிற்கு இவ்வாறன்றி வேறுவேறு விதமாக உரைப்பாருமுளர். அவைவருமாறு:—ஆன்மதத்துவம் இருபத்து நான்கு வித்தியாதத்துவம் ஏழு ஆக முப்பத்தொன்றையும், பூதம் தன்மாத்திரை ஞானேந்திரியம் கன்மேந்திரியம் அந்தக்கரணம் குணம் பிரகிருதி கலாதி என எட்டுக் கொத்தாகக்கொண்டு அந்த எட்டுக்கொத்தும் எண் விரலளவாயுள்ள தண்டு வடிவாகவும், அசுத்தமாயை மலருக்கும் தண்டுக்கும் நடுக்கண்டமாகிய முடிச்சு வடிவமாகவும், அம்முடிச்சுக்குமேல் சுத்தவித்தையின் வசிக்கும் வாமைமுதலிய எட்டுச் சத்திகளும் எட்டுஇதழ்வடிவாகவும் உரைப்பர்சிலர். வேறுசிலர் மேற்கூறிய வாறு முப்பத்தொரு தத்துவத்தையுந்தண்டாகக்கொண்டு அசுத்தமாயையை முடிச்சிலுள்ள கீழ் இதழாகவும் சுத்தமாயையை மேலிதழாகவும் அம்மேலிதழுக்கு மேல்ஈசுரதத்துவத்தில் வசிக்கும் அனந்தர் முதலிய எட்டு மூர்த்தியும் எட்டு இதழ் வடிவாகவும் சதாசிவதத்துவம் பூந்தாதுவடிவமாகவுங் கொண்டு அதற்கேற்றவாறு செய்யுளைக்கொண்டு கூட்டி உரைப்பர். இன்னுஞ் சிலர் செய்யுளில் கலாரூபம் என்றது நிவிர்த்திமுதலிய பஞ்சகலைகளை யெனவும் அக்கலாரூபம் மண், வித்தை முதலிய எல்லாவற்றோடுங் கூட்டி உரைக்கப்படுமெனவுங்கொண்டு மண்முதல் நாளமலர் என்பதற்கு மண்ணாகிய நிவிர்த்தி கலாரூபம் தண்டு எனவும் அதேவாக்கியத்தை இரட்டுற மொழிந்துகொண்டு மண்ணை முதலாக உடைய ஏனை ஆன்மதத்துவம் இருபத்துமூன்றும் பிரதிட்டாகலா ரூபமாகிய மலரெனவும், வித்தை எண்ணிய ஈசர் சதாசிவமும் கலையுருவமாம் என்பதற்கு வித்தியாதத்துவமாகிய வித்தியாகலாரூப மென்னும் கலை யெனப்படுகின்ற பூந்தாது எனவும், அப்பூந்தாதுவிற்குள் சுத்தவித்தை ஈசுரன் சதாசிவம் என்னும் மூன்றுதத்துவமும் சாந்திகலா ரூபமாகிய கலையெனப்படுங் கொட்டை எனவுங், நாதமாம் சத்தி அதன் கண்ணும் என்பதற்கு அக்கொட்டையின் கண் சிவதத்துவம் சத்திதத்துவமாகிய சாந்தியதீத கலாரூபமென்னும் கலையெனப்படும் வீசமா மெனவும் உரைப்பர். இவ்வாறு உரைப்பவை யெல்லாம் அந்த அந்த ஆகமபேதம்பற்றிக் கொள்ளப்படும்.

எண்ணிய ஈசர் சதாசிவமுங் கலாரூபம் என்பதற்கு ஈசுரம் சதாசிவம் என்னும் இரண்டுதத்துவமும் அறுபத்து நான்கு பூந்தாது எனஉரை செய்த

கருத்தென்னை யெனின், கலை அறுபத்துநான்காதலால் அறுபத்து நான்காகிய பூந்தாதை யுணர்த்துவதற்குக் கலாரூபம் என்பது கலையின் தொகைபற்றிக் கூறப்படும் ஆகுபெயராய் நிற்றலால் என்க.

ஈசர் என்றது ஈசுரர்வசிக்கும் தத்துவத்தைக் குறித்தலால் ஆகுபெயர்.

கலையுரு என்றவிடத்து உள் என்னும் உருபுவிரித்துக் கலைக்குள்ளுருவென உரைசெய்யப் பட்டது.

நிலையதில் என்றதில் உள்ள அதில் என்பது, அது இல் என்னும்இரு மொழிகள் சேர்ந்த தொடர்மொழி. இம்மொழியில் அன்சாரியை சேர்ந்து அதனில் எனவருதல் இலக்கணவழக்கு. அவ்வாறன்றி அதில் எனவருதல் இலக்கண வழக்கன்று. இச்செய்யுளில் அன்சாரியை தொக்கு நிற்ப அதில் எனவந்தது. ஆதலால் அதிலென்றவிடத்து அன்சாரியை தொக்குநின்றது என்றார் உரையாசிரியர்.

இதயத்தில் தோன்றும் இத்தாமரை தண்டு முதலாக மேல்நோக்கித் தோன்றும் உலகத்துத் தாமரைபோலன்றி ஞானேந்திரிய முதலாக இருதயத்தில் கீழ்நோக்கித் தோன்றும் தெய்வீகத் தாமரைஎனக் கொள்க. அதாவது தாத்துவீகமாகிய இடத்தில் தத்துவமாகிய தாமரைக்குள்ளீடாய் சிவம் விளங்கு மாதலால் கீழ்நோக்கிய தாமரை என்றபடியாம்.

சிவன் தாள் அதில் நிலையாம் என்று கூறியதனுல் அச்சத்திக்கு மேலாய்ச்சிவன் விளங்குவன் என்பதூஉம் பெறப்படு மாதலால் இதயத்தில் சிவபெருமானை அர்ச்சிக்க என்றது பொருந்துமாறு அறிக.

இவ்வொன்பதாஞ் சூத்திரத்தாலும் அதிகரணங்களாலுங் கூறி முடித்த தொகைப்பொருள்:—எட்டாஞ் சூத்திரத்திற் கூறியவாறு முதல்வனே குருவாய்வந்து உபதேசித்ததைச் சிந்திக்கு முறையில் ஆன்மாவைச் சுத்திசெய்யுமுறை கூறத்தொடங்கிப பாசஞான பசுஞானங்களினுல் முதல்வன் அறியப்படான் ஆதலால் அவன் திருவடி ஞானத்தாலே அவனை அறியவேண்டுமென்பதும், பிரபஞ்சத்தைக் கானல் நீர்போல நிலையில்லாதது எனக்கண்டு கழித்தால் அத்திருவடி ஞானம் விளங்கித் தோன்றுமென்பதும்,அத்திருவடி ஞானத்தால் முதல்வனைக் கண்டவிடத்தும் பழக்க வாசனையால் மீண்டும் பிரபஞ்சத்தைப பற்றுதிருத்தற்பொருட்டு முத்திபஞ்சாக்கரத்தை அறிவாற் கணிக்கவேண்டுமென்பதும் சூத்திரத்தாற் கூறப்பட்டன. படவே, எட்டாஞ் சூத்திரத்திற் கூறியவாறு பாசஞானத்தால் முதல்வன் அறியப்படானுயினும் பசுஞானத்தால் அறியப்படுவன் என்றுல் என்ன குற்றம் எனச் சிவசமவாத சைவர் கூற, முதல் அதிகரணத்தால் அவரை மறுத்துத் திருவடிஞானத்தாலே முதல்வனை அறியவேண்டுமென்பதும், பசுத்துவமாகிய சீவபோதம் நீங்கியவிடத்தும் அவனருளாலன்றித் தன்னை அறியமுடியாது ஆதலால்

ஆன்ம அறிவிற்குப் பதிஞானமின்றித் தனித்து முதல்வனைக்காணுந் தன்மை இல்லை யென்பதுங் கூறப்பட்டன. படவே, அத்திருவடி ஞானத்தைப் பெறுதற்கு என்ன செய்யவேண்டும் என்னும் ஐயத்தை நீக்குதற்பொருட்டு இரண்டாம் அதிகரணத்தால் நிலையில்லாத பிரபஞ்சத்தை நிலையில்லாதது எனக்காணின் திருவடி ஞானம் விளங்கித் தோன்றுமென்பதும், பிரபஞ்சம்முற்றும் நீங்கியவிடத்துச் சூனியம்போலத் தோன்றினும் அத்தோற்றம் சூனியமன்று ஞானசொரூபமே யென்பதும், பிரபஞ்சம் நீங்கியவிடத்துத் தோன்றுவது உயிரன்றென்பதும், பிரபஞ்சம் நீங்குதற்குச் சிவோகம்பாவனை செய்யவேண்டு மென்பதும் கூறப்பட்டன. படவே, ஆன்மாவைச் சுத்திசெய்வதற்குப் பிரபஞ்சத்தை நீக்கி ஞானக்கண்ணைப் பெறுதலே போதும் அதன்மேலும் ஆன்மசுத்திக்காகச் செய்யவேண்டுவதொன்றுமில்லை என்பாரை நோக்கி மூன்றும் அதிகரணத்தால் ஞானக்கண்ணைப் பெற்றவிடத்தும் பழக்கவாசனையால் விட்ட பிரபஞ்சத்தை மீளப் பற்றுதிருத்தற்பொருட்டு முத்திபஞ்சாக்கரத்தை அறிவால் தியானிக்கவேண்டு மென்பதும், அப்பஞ்சாக்கரத்தால் இதயத்தில் முதல்வனையர்ச்சித்தலால் பழக்கவாசனை நீங்குமென்பதும், இதயத்தில் தியானித்தலால் முதல்வனைக் காண்டல், சந்திர சூரியனிடத்தில் கிரகணகாலத்தில் இராகுகேதுக்களைக் காண்டல்போ லென்பதும், அண்டத்திற் காணப்படும் முப்பத்தாறு தத்துவங்களையும் பிண்டத்துள் இதயத்தில் தாமரையாகக்கொண்டு அத்தாமரையின் மேல் சிவபரம் பொருள் வீற்றிருக்குமென்பதுங் கூறப்பட்டன.

மூன்றும் அதிகாணம் முற்றிற்று.

ஒன்பதாஞ்சூத்திரம் முற்றிற்று.

சாதனஇயல் முற்றிற்று.

---

## பயனியல்.



### பத்தாஞ்சூத்திரம்.

ஒனபதாஞ் சூத்திரத்தால் சாதனஞ்செய்யு முறைகூறி இனி அச்சாதனத்தால் உண்டாகும் பயன், பாசத்தை விடுதலும் சிவனை யடைதலும் சிவனை யடைந்தபின்னர்த் தேகம் இருக்குமளவும் பிராரத்துவவாசனை தாக்காதிருத்தலும் ஆதலால், அம்மூன்றனையும் மூன்று சூத்திரத்தால் பயனியலெனவைத்துக் கூறத் தொடங்கி, முதலாவது இப்பத்தாஞ் சூத்திரத்தால் பாச நீக்கமாகிய பயனை வகுத்துக் கூறுகின்றார்.

அவனே தானே யாகிய வந்நெறி
யேக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

கருத்துரை.

எ-து சூ-ம் எ-னின் பாசக்ஷயம் பண்ணுமாறுணர்த்துதனுதலிற்று

## சிற்றுரை.

எ-து க-ரை எ-னின். சூத்திரக்கருத் துணர்த்துத னுத லிற்று.

(இ-ள்.)மேல் ஏழாஞ்சூத்திரமுதலிய மூன்றானும் முறையே சாதிக்கும் பொருளதியல்புஞ் சாதித்துப் பெறப்படும் பொருள தியல்புஞ் சாதிக்குமாறும் உணர்த்தி, இனி அச் சாதனத்தானாய பயனியல்பு வகுத்துக் கூறுவானெடுத்துக்கொண்டார். அப்பயனா வது பாசவீடும் சிவப்பேறுமென இருவகைப்படும். அவ்விரண் டனுட் சுட்டுணர்வினாலாகிய ஏகதேச நோக்கத்தைத் திருவஞ் செழுத்தின துச்சரிப்பாற் பற்றறத்துடைத்தவழிப் பெறப்படுவ தாகிய மேலைச்சூத்திரத்தி னெடுத்துக்கொண்ட ஆன்மசுத்திப்பய னாகிய பாசவிடுதியைச் செய்துகொள்ளுமாறு மேற்சிந்தனை செய் தபொருளைத் தெளியுமாறுணர்த்து முகத்தானுணர்த்துதல் இப் பத்தாஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.

இதனானே சூத்திர இயைபும் இனிது விளங்கும்.

## விளக்கம்.

இக்கருத்துரை என்னசொல்லிற்றோ எனின், சூத்திரக்கருத்து இது வென்று சொல்லிற்று.

(இக்கருத்துரையின்பொருள்.) மேல் ஏழாஞ் சூத்திரத்தால் சாதிக்கும் அதிகாரி ஆன்மாவெனக் கூறி, எட்டாஞ்சூத்திரத்தால் அவ்வதிகாரி செய் யவேண்டிய சாதனம் பிரபஞ்ச நீக்கமும் பதிஞானஉணர்ச்சியுமெனவும்அச் சாதனம் முதல்வனே குருவாய்வந்துணர்த்த வருமெனவும்அச்சாதனத்தாலு ண்டாம் பயன் பாசத்தைவிட்டு முதல்வன் திருவடி யடைதலெனவுங் கூறி, ஒன்பதாஞ் சூத்திரத்தால் சாதிக்குமுறையை வகுத்துக் கூறினமையால், இனி அச்சாதனத்தாலுண்டாம் பயன் பாசத்தைவிட்டு முதல்வன் திருவடி யை அடைதலென. மேல் எட்டாஞ் சூத்திரத்துத் தொகுத்துக் கூறியதை மூன்று சூத்திரத்தால் வகுத்துக்கூறத் தொடங்கினர். பாசத்தைவிடுதலும் சிவனை அடைதலும் என்னும்பயன் இரண்டனுள் பாசநீக்கம், சுட்டியறி யும்அறிவினால் அறியப்படும் பிரபஞ்சப் பற்றை மேல் ஒன்பதாஞ் சூத்திரத் துக் கூறியவாறு முத்திபஞ்சாக்கர உச்சரிப்பாற் கெடுத்தவிடத்து உண்டா கும் ஆன்மசுத்தியின் பயனாதலால், அப்பாசநீக்கத்தைச் செய்துகொள்ளும்

வண்ணம் இச் சூத்திரத்திற் கூறுவதோடு மேல் ஒன்பதாஞ் சூத்திரத்தில் சிந்தனைகூறிய முறைப்படி தெளிதல் கூறுதல் இப்பத்தாஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.

ஒன்பதாஞ் சூத்திரத்தில் சிந்தனைசெய்யும் முறைகூறி இச்சூத்திரத்தில் தெளியும் முறைகூறுவதனாலும், ஒன்பதாஞ் சூத்திரத்தில் ஆன்மசுத்தி கூறி இச்சூத்திரத்தில் ஆன்மசுத்தியின் பயனாகிய பாசநீக்கம் கூறுவதனாலும் சூத்திர இயைபு பெறப்பட்டது.

## சிற்றுரை.

இச் சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு.

அவனே—(ஞானக்கண்ணாற் காணப்பட்ட) அம் முதல்வன் (தானுடனாய் நின்றறியவும் வேறு காணப்படுமாறின்றி யானே யறிந்தேனெனும்படி உயிர்)— தானேயாகிய— தானேயாய் ஒற்றுமைப்பட்டு உயிர்வழிநின்ற,—அந்நெறி— அப் பெத்தநிலை போல் (ஈண்டு உயிர் அம்முதல்வனோடுடனாய் நின்றறியினுந் தானென வேறு காணப்படுமாறின்றி),— ஏகனாகி—அவனோ டொற்றுமைப் பட்டு,— இறைபணிநிற்க— அவ்விறைபணியின் வழுவாது நிற் பின்,—மலமாயை தன்னொடு—மலமாயையென்னும் இரண்டனோடு,— வல்வினை— வலிய கன்மமலமும்,— இன்றே— இல்லையா யொழியும் எ—று.

அவனே தானே யென்னும் ஏகாரமிரண்டனுள் முன்னையது பிரிநிலைக்கண்ணும் பின்னையது தேற்றத்தின்கண்ணும் வந்தன. நெறி உவம உருபு. மலமாயையொடு கூடியவினை யென்றாராகலின் இன்றே யென்றார். உவமைக்கோதியது பொருளினும், பொருளுக் கோதியது உவமையினுஞ் சென்றியைந்தன.

ஈண்டொற்றுமைப்படுதலாவது, குடமுடைந்தவழிக் குடாகாயமும் ஆகாயமும்போல ஒருபொருளா யொற்றுமைப்படுதலோ, அன்றிக் குற்றியை மகனென்பதுபோலத் திரிபுக்காட்சியா னொற்றுமைப்படுதலோ, அன்றி மண்ணே குடமென்பதுபோல ஒன்று திரிந்தொன்றா யொற்றுமைப்படுதலோ, அன்றி வெள்ளையுந் தாமரையும்போலக் குணகுணித்தன்மையா னொற்றுமைப்படுதலோ, அன்றித்தீயும் இரும்பும்போல ஒன்றினொன்று விரவுதலா னொற்றுமைப்படுதலோ, அன்றிப்பாலும் நீரும்போல பிரிக்கப்படாத சையோகத்தா னொற்றுமைப்படுதலோ, அன்றிக் கருடனும் மாந்

திரிகனும் போலப் பாவனைமாத்திரையா னொற்றுமைப்படுதலோ, அன்றிக் காய்ந்தவிரும்பினீர்போல ஒன்றினொன்றி லயமா யொற் றுமைப்படுதலோ, அன்றிப்பேயும் பேய்பிடியுண்டவனும்போல ஆவேசத்தா னொற்றுமைப்படுதலோ, அன்றி இந்தனத்தினெரி போல விளங்காமையா னொற்றுமைப்படுதலோ, அன்றி ஞாயிற்றி னொளியின் விளக்கொளிபோலச் சத்திகெட்டு நிற்றலானொற்று மைப்படுதலோ, அன்றித் தலைவனும் தலைவியும்போல இன்ப நுகர்ச்சிமாத்திரையா னொற்றுமைப்படுதலோ, அன்றி நட்டாரிரு வர்போல நட்பு மிகுதியா னொற்றுமைப்படுதலோ, அன்றி ஆவும் ஆமாவும்போல ஒப்புமைமாத்திரையா னொற்றுமைப் படுதலோ என்று அவ்வச் சமயவாதிகண் மதம்பற்றி நிகழும் இன்னோரன்ன ஐயப்பாடுகளை யெல்லாம் நீக்குதற்பொருட்டுஅவனேதானே யாகிய வந்நெறி என உவமை எடுத்துக் காட்டியோதினார். ஈண்டுக் கூறிய ஒற்றுமைக்கட்படுமியைபாவ தென்னையெனின் அது வரு கின்ற சூத்திரத்திற்பெறப்படும்.

## விளக்கம்.

(இச்சூத்திரத்தின் பொழிப்புரை.) மேல் ஒன்பதாஞ் சூத்திரத்துக் கூறிய வாறு ஞானக்கண்ணால் காணப்படும் அம்முதல்வன் பெத்த நிலையில் உயிரோடு உடனாய்நின்று உயிர் அறியும் வண்ணம் தான் அறிந்தும் அவ்வுயி ருக்கு முதல்வன் இருக்கின்றானென வேறு காணப்படாமல் உயிர் தானே அறிந்ததாக எண்ணும்படி அவ்வுயிரோடு ஒற்றுமைப்பட்டு நின்றவாறுபோல முத்திநிலையில் உயிர் அம்முதல்வனோடு உடனாய்நின்று இன்பத்தையநுப வித்தாலும் அநுபவிக்கின்ற தான் உண்டெனவேறு காணப்படாமல் அம் முதல்வனோடு ஒற்றுமைப்பட்டு அம்முதல்வனேயாய் அவன் அருள்வழியா கிய இறைபணியில் வழுவாது நிற்பின், ஆணவமலம் மாயாமலம் என்னும் இரண்டனோடு வலியகன்மமலமும் இல்லையா யொழியும் எ-று.

அவனே என்பதிலுள்ள ஏகாரம், உயிர் முதல்வனையின்றி அறியாதென உயிரைப்பிரித்தமையின் பிரிநிலை.

தானே என்பதிலுள்ள ஏகாரம், அவ்வாறு முதல்வன் உயிருடன் நின் றும் நிற்கின்றதாய்ச் சிறிதும்தோன்றாது உயிராகவே நிற்றலைக்குறித்தலின் தேற்றம்.

அந்நெறி என்றதிலுள்ள நெறி என்றது, போல என்னும் பொருளில் நிற்றலால் உவம உருபு

மும்மலங்களாகிய பன்மையை இன்றே என்னும் ஒருமைகொண்டு எவ்வாறு முடித்தாரெனின், ஆணவமலத்தினையும் மாயையினையும் வேறு பிரியாது அவ்விரண்டனோடுங்கூடிய வினையெனக்கொண்டு ஒருமை எழுவாயாக்கி முடித்தார் என்க. இவ்வாறு பொய்யாமொழிப் புலவரும் "சிறப்பொடு பூசனை செல்லாது" எனத்திருக்குறளுண் முடித்துப் போதலுங் காண்க.

மலமாயை தம்மொடு என்றுகூறாமல் தன்னொடு என்ற கருத்து என்னையெனின், தன் என்னும் ஒருமை தனித்தனி மலத்தோடும் மாயையோடுங் கூடி மலந்தன்னோடு மாயை தன்னோடு எனக்கொள்ளுமாறு அவ்வாறு கூறினார்.

இச்சூத்திரத்தில் பெத்தநிலை உவமையும் முத்திநிலை உவமேயமுமாம் அவற்றுள், பெதத்நிலையாகிய உவமைக்குக்கூறிய அவனேதானே யாகிய என்பது உவமேயமாகிய ஏகனாகி இறைபணிநிற்க என்பதனோடுங்கூடி அவனேதானேயாய் ஏகனாகி இறைபணி நிற்க எனவும், உவமேயத் திற்கோதிய ஏகனாய் என்பது உவமைக்கோதிய அவ்னேதானேயாகிய என்பதனோடுங் கூடி அவனே தானேயாய் ஏகனாகிய அந்நெறியெனவும் பொருள் தந்து நின்றன.

ஏகனாகி ஒற்றுமைப் படுதலை எல்லாச் சமயவாதிகளும் ஒப்புக்கொண்டு அவ்வொற்றுமைக்குரிய சம்பந்தத்தை வேறு வேறு கூறுவர், அவர் கூற்றுக்களாவன:—குடம் உடைந்தவிடத்துக் குடத்தில் வளைபட்ட குடாகாயமும் மகா காயமும் ஒரு பொருளாதல் போலப் பாச நீக்கத்தில் உயிருஞ் சிவமும் ஒரு பொருளாய் ஒற்றுமைப்படுத லெனவும், கட்டையைக் கள்வன் என்று விபரீதக் காட்சியால் காணுங்காலத்துக் கட்டையே கள்வனாகத் தோன்றிப் பின் தெளிந்தவிடத்துக் கள்வன் இல்லையாய்க் கட்டையே உளதாயினாற் போலஅஞ்ஞான காலத்தில் சிவமேஉயிராய்த் தோன்றிப் பின் ஞானகாலத்தில்உயிரென்பதில்லையாய்ச் சிவமேஉளதாய் ஒற்றுமைப்படுத லெனவும்,மண்ணேவேற்றுமைப் பட்டுக் குடமாயினாற்போலச் சிவமேபாச சம்பந்தத்தால் வேற்றுமைப் பட்டு உயிராகிப்பாச சம்பந்தத்தை நீக்கிய விடத்துச் சிவமாய் ஒற்றுமைப் படுதலெனவும், வெண்தாமரை என்றவிடத்து வெள்ளையாகிய குணமும் தாமரையாகிய பொருளும் பிரிக்க முடியாதவாறு போலச்சிவமே பொருளாய் உயிர் அப்பொருளின் குணமாய் விளங்கி யொற்றுமைப் படுத லெனவும், தீயுடன் இரும்புகலந்த விடத்து இரும்பின் தன்மை கெட்டு அவ்விரும்பு தீயேயாய்க் காணப்படுமாறு போலச் சிவத்துடன் உயிர் கலந்த விடத்து உயிர்த்தன்மை கெட்டு அவ்வுயிர் சிவமேயாய் ஒற்றுமைப் படுதலெனவும், பாலுடன் நீர் கலந்தவிடத்துப் பால்வேறுநீர்வேறாகப் பிரிக்கமுடியாதவாறுபோலச் சிவத்துடன் உயிர் கலந்த விடத்துச் சிவம் வேறு உயிர்வேறு எனப பிரிக்க முடியாத சையோகத்தா லொற்றுமைப்படுதலெனவும், கருட

மந்திரத்தாற் பாவிக்கப்படுகின்ற தைவிகக்கருடனும் பாவிக்கும் மாந்திரிகனும் ஒன்றுமாறுபோல உயிர், சிவம் நானெனப் பாவிக்கும் பாவகமாத்திரையாலொற்றுமைப் படுதலெனவும், அக்கினியினால் காய்ந்த இரும்பினிடத்து நீர் சுவறி ஒற்றுமைப் படுதல் போலச் சிவத்தினிடத்து உயிர் கெட்டு ஒற்றுமைப் படுதலெனவும், பேய்பிடி யுண்டவன் அப்பேயாய் நிற்றல் போல உயிரினிடத்துச் சிவம் ஆவேசித்து நிற்றலால் உயிர் சிவமேயாய் ஒற்றுமைப் படுதலெனவும், விறகினிடத்து அக்கினி இருந்தும் விளங்காமையா லொற்றுமைப்பட்டு நிற்றல்போல முத்தியில் சிவனும் சீவனும் இருந்தும் சீவன் விளங்கித் தோன்றாமையா லொற்றுமைப் படுதலெனவும், சூரியன் ஒளி முன்னிருக்கும் விளக்கின் ஒளிக்கு விளக்குந் தன்மை கெட்டமையால் சூரியனொளியும் விளக் கொளியும் ஒற்றுமைப் படுதல்போலச் சிவசத்தியின் முன்னர் உயிரின் சத்திக்குச் செயலில்லாமையால் சிவமும் உயிரும் ஒற்றுமைப் படுதலெனவும், நாயகனும் நாயகியும் இன்ப அநுபவ அளவில் ஒற்றுமைப் படுதல்போல சிவானந்த அநுபவ அளவில் சிவனும் உயிரும் ஒற்றுமைப் படுதலெனவும், நண்பர் இருவர் நட்பின் மிகுதியாலொற்றுமைப் படுதல்போலச் சிவனிடத்து உயிர்வைத்திருக்கும் அன்பினாலும் உயிரினிடத்துச் சிவம் வைத்திருக்கும் அருளினாலும் உயிரும் சிவமும் ஒற்றுமைப் படுதலெனவும், ஊர்களிலுள்ள பசுவும் காட்டுப் பசுவும் பசுத்தன்மையின் தோற்றத்தால் ஒற்றுமைப் படுதல்போல உயிர் பாசத்தை நீக்கியவிடத்துப் பாசம் நீங்கியிருக்கும் ஒற்றுமையால் உயிருஞ் சிவமும் ஒற்றுமைப் படுதலெனவுங் கூறுதலாம். இச்சூத்திரத்திற் கூறிய ஒற்றுமை மேற்கூறிய கூற்றுக்களில் ஒன்றும் அன்றென்பதை அறிவித்தற்கு அவ்வுவமைகளொன்றுங் கூறாமல் அவனே தானேயாகிய அந்நெறியெனப் பெத்தநிலையில் முதல்வன் உயிரோடு கலந்திருத்தலை உவமையாக எடுத்துக் காட்டினார். பெத்தநிலையில் முதல்வன் உயிராய் ஒற்றுமைப்பட்டு நிற்றலும் முத்தி நிலையில் உயிர் சிவமாய் ஒற்றுமைப்பட்டு நிற்றலும் என்ன சம்பந்தம் எனின் அத்துவிதசம்பந்தமேயாம். உயிருஞ் சிவமும் ஒற்றுமைப் பட்டு நிற்குஞ் சம்பந்தம் அத்துவித சம்பந்தமேயென இச்சூத்திரத்தில் உவமை கூறி விளக்கவில்லையாயினும் வருகின்ற பதினொராஞ் சூத்திரத்திற் கண்ணொளியையும் உயிரையும் அவ்வத்துவித சம்பந்தத்திற்கு உவமையாகக் கூறி அது விளக்கப்படும். அதனாலறிக.

கருடபாவனை தீ இரும்பு முதலிய சில உவமைகள் இந்நூலில் மேலே கூறப்பட்டிருக்கவும் அவ்வுவமைகளையும் இச்சூத்திரத்தில் விலக்கிய கருத்தென்னை யெனின், சாதனஞ் செய்யுங்காலத்தும் சாதனத்தைச் செய்து சிவானந்தத்தை அநுபவிக்குங் காலத்தும் உயிர்வேறு சிவன்வேறு என்னும் வேற்றுமையின்றி நிற்றற்கு அவ்வுவமைகள் இந்நூலிலே ~~முன்னாக~~ மேலே கூறப்பட்டன. முத்திகாலத்தில் உயிர் தானென்னும் முனைப்பின்றி நிற்றற்குவேற்றுமையின்றி நிற்றற்குக் கூறிய அவ்வுவமைகளை இச்சூத்திரத்தில் விலக்கி

அவனே தானே யாகிய பெத்தநிலையை உவமையாகக் கூறினரென்க. எனவே, வேற்றுமையும் முனைப்பும் அற்று நிற்றலே சித்தாந்த முத்தி இலக்கணம் என அறிக.

## சிற்றுரை.

இதனுள், அவனேதானேயாகிய அந்நெறி ஏகனாகி யென்றது ஓர் அதிகாரணம்; இறைபணி நிற்க மலமாயைதன்னொடு வல்வினையின்றே என்றது ஓர் அதிகாரணம்; ஆக இரண்டதிகாரணத்தது இச்சூத்திரம் என்று உணர்க.

## விளக்கம்.

வெ—டை.

---

# முதலதிகரணம்.

சிவனிடத்து ஏகனாகி நிற்கவேண்டுமெனக் கூறும்

மேற்கோள்.

ஈண்டுப் பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத் தேகனாகி நிற்கவேன்றது.

## சிற்றுரை.

எ-து மே-ள் எ-னின், ஞானம் பிரகாசித்து முதற்பொருளைக் காண்டல் மாத்திரையே வீடுபேற்றிற் கமையுமெனச் சிவசமவாத சைவர் முதலியோர் மதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ—ள். வெ—டை.

### சுப்பிரமணியதேசிகர் உரை.

இ—ள். ஈண்டு—இவ்விரண்டதி காரணங்களுள் வைத்து இம் முதலதிகாரணத்து,—பரமேசுரன்—ஞானக்கண்ணாற் காணப் பட்ட அம்முதல்வன்,—இவ்வான்மாவாய்—பெத்தநிலையில் உடனாய் நின் றறியவும் வேறு காணப்படுமாறின்றி யானே யறிந்தே னென்னும் படி உயிர் தானேயாய்,—நின்ற முறைமையான்—ஒற்றுமைப்பட்டு

உயிரின் வழிநின்ற முறைமைபோல,—அவனிடத்து ஏகனாகி—ஈண்டுயிர் அம்முதல்வனோடு உடனாய் நின்றறியினும் தானென வேறு காணப்படு மாறின்றி அவனோடொற்றுமைப் பட்டு,—நிற்க வென்றது—நிற்க எ-று.

## விளக்கம்.

இம்மேற்கோள் சூத்திரத்திலுள்ள அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனாகி என்ற முதற்கூற்றைப் பதச்சேதஞ் செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்னசொல்லிற்றோ எனின், மேல் ஒன்பதாஞ் சூத்திரத்திற் கூறியவாறு பிரபஞ்சத்தைஅசத்தென்று கண்டவிடத்துத் தோன்றும் ஞானக்கண்ணால் பதியைக்காண்டலே முத்தியாகும் எனச் சிவசமவாத சைவர் முதலியோர் கூறுவர். அவர் கூற்றைபாசங்கித்துக் கொண்டு சூத்திரத்தின் முதற்கூற்றைப் பதச்சேதஞ் செய்து பதியைக் காண்டல் முத்தியாகாது பதியோடு ஒற்றுமைபபட்டு நிற்றலே முத்தியெனக் கூறியவாறாம்.

இவ்வதிகாரணத்தில் ஞானம் பிரகாசித்த பின்னர் முதல்வனுடன் ஏகனாய் நிற்கவேண்டுமோ வேண்டாமோ என்பது ஐயப்பாடு. வேண்டாம் என்பது பிறர்பக்கம் என அறிக.

(இம்மேற்கோளின் பொருள்) இச் சூத்திரத்திற் கூறப்படும் இரண்டதிகாரணங்களுள் இம்முதலதிகாரணத்தில் மேல் ஒன்பதாஞ் சூத்திரத்திற் கூறியவாறு ஞானக் கண்ணாற் காணப்பட்ட அம்முதல்வன் பெத்த நிலையில் உயிரோடு உடனாய் நின்று அறியவும் அம்முதல்வன் உயிரின் வேறாய்க் காணப்படாமல் உயிர் தானே அறிந்தேன் என்று எண்ணும்படி அவ்வுயிரேயாய் ஒற்றுமைப் பட்டு உயிரின் பின்னாக நின்றவாறுபோல, இம்முத்திநிலையில் அம்முதல்வனோடு உடனாய் நின்று உயிர் அறியினும் அவ்வுயிர் முதல்வனின் வேறாகக காணப்படாமல் அம் முதல்வனோடு ஒற்றுமைப் பட்டு நிற்க எ-று.

சிவனிடத்து ஏகனாய் நிற்கவேண்டு மென்பதற்குக் காட்டும்

ஏது.

அவ்வாறு நிற்கவே யான் எனதென்னுஞ் செருக்கற்று அவனது சீபாதத்தை யணையுமாகலான்.

## சிற்றுரை.

எ-து ஏது எ-னின், அஃதெற்றுக் கென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) அங்ஙன மொற்றுமைப்பட்டு நின்றுழேலை யானும் என தும் எனப்பகுத்துக் நிற்கும் மயக்க வுணர்விற் கேதுவாய மலநீங்கி அம் முதல்வனது திருவடியாகிய சிவானந்தத்தைப் பெறுமாக லான் அச்செருக் கறுதிக்குக் காரணமாதல் பற்றி 'ஈண்டுப் பரமே சுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத்து ஏக னாகி நிற்க' வென மேற் கொண்டது எ-று.

அவ்வாறு நில்லாதவழி மலமறாது, அஃதறாதவழிச் சீபாதத் தையணைதல் பெறப்படா தென்பார் நிற்கவே யெனத் தேற்றே காரத்தாற் கூறினார். யானெனப்படுவது ஞாதிரு எனதெனப்படு வன ஞான ஞேயங்கள். ஆறுவது பண்பின் கிழமையும் உணர்ச்சிக் கிழமையும் பற்றிவந்தது. ஒருமை தனித்தனி சென்றியையும். செருக்கு ஆகுபெயர். அற்றணையு மென்றது "மழைபெய்து குளம் நிறையும்" என்றாற்போலக் காரணகாரியப் பொருள்பற்றி வந்த செயவெனெச்சத் திரிபு.

## விளக்கம்.

இந்த ஏது என்னசொல்லிற்றோ எனின், சிவனைக்காண்டலே யன்றி அவனிடத்து ஏகனாகி நிற்கவேண்டியது எதன்பொருட்டு என்பாரை நோக்கி யான் எனது என்னுஞ் செருக்கு அறுதற்பொருட்டு எனக்கூறி ஏகனாகிநிற்க என்ற மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(இந்த ஏதுவின் பொருள்.) மேற்கோளிற் கூறியவாறு சிவனிடத்து ஏகனாகி நின்றால்தான் உயிரை யான் எனவும் சிவப்பொருளை எனதெனவும் பகுத்துக்காணும் மயக்க உணர்விற்கு ஏதுவாகிய ஆணவமலம் நீங்கி அச்சிவபெருமானுடைய திருவடியாகிய சிவானந்தத்தைப் பெறும். ஆதலால் அம்மயக்க உணர்விற் கேதுவாகிய மலம் நீங்குதற்குக் காரணமாதல் பற்றி இம்மேற்கோளில் பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்றமுறைபோல் இவ்வான்மா அப்பரமேசுரனிடத்து ஏகனாகி நிற்க எனக் கூறியது எ-று.

ஏகனாய் நில்லாதவிடத்து ஆணவமலம் அறாது என்பதும் ஆணவ மலம் அறாதவிடத்துச் சிவபெருமான் திருவடியடைதல் கூடாது என்ப தும் அறிவிக்கவேண்டி ஏதுவில் நிற்கவே எனத் தேற்றேகாரத்தாற் கூறினார்.

யான் எனப்படுவது அறியும் பொருளாகிய உயிர். எனது எனப்படு வன அவ்வுயிரினுடைய அறிவும், அவ்வறிவால் அறியப்படும் பொருள்களு மாம்.

எனது என்றது என் அது எனப்பிரிக்கப்படும். அது என்பது ஆறும் வேற்றுமை உருபு. அவ்வுருபு உரிமையை உணர்த்தும். உரிமை பலவேறு வகைப்படும். ஆதலால் இந்த ஏதுவில் எனது என்றதிலுள்ள அது என்னும் உருபு குண உரிமைபற்றி அறிவையும், உணர்ச்சி உரிமைபற்றி உணரபபடும் பொருளேயுங் குறித்து நின்றது.

அது என்னும் ஒருமை அறிவும் பொருளுமாகிய பன்மையைக் குறிக்காது. ஆதலால் அறிவுடனும் பொருளுடனும் தனித்தனி கூடிப் பொருந்தும். பொருந்துங்கால் எனது என்பதற்கு என்னுடைய அறிவு எனவும் என்னுடைய பொருள் எனவும் உரைத்துக்கொள்ளல்வேண்டும்.

செருக்கு என்றது செருக்குக்கு ஏதுவாகிய மலத்தைக்குறித்து நிற்றலால் ஆகுபெயர். செருக்கென்பது மயக்கம். செருக்கு அற்றுச் சீபாதத்தையணேயும் என்றது செருக்கு அறுதலால் சீபாதத்தையணேயும் என்னும் பொருளேக் குறித்துநிற்றலால் காரணகாரியப் பொருள்பற்றிவந்தது. செருக்கு அறுதல் காரணம்; சீபாதத்தை அணேதல் காரியம். இவ்வாறு கூறுதல் எதுபோல எனின், மழைபெய்தலால் குளம் நிறையும் எனக்கூறவேண்டியதை மழைபெய்து குளம் நிறையும் என்று கூறுதல்போலாம்.

இனி, அற்று என்பது செய என்னும் வாய்பாட்டு விணேயெச்சத்தின் திரிபு. அதாவது செருக்கு அற என்பது செருக்கு அற்று எனத் திரிந்ததாம். அற என்னும் விணேயெச்சம் அணேயும் என்னும் விணே கொண்டு முடிந்தது. ஆதலால் அற்று அணேயும் என்றது காரணகாரியப் பொருள் பற்றி வந்தசெய என்னும் வாய்பாட்டின் விணேயெச்சத்திரிபு ஆயினமை யறிக.

இந்த ஏது, சிவனிடத்து ஏகனுகி நிற்கவேண்டாம் என்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத்துணிபாயிற்று.

சிவனிடத்து ஏகனுய் நின்ருற்ருன் மலம் அறும் என்பதற்குக்காட்டும்

உதாரணம்.

நானவனேன் றெண்ணினற்கு நாடுமுள முண்டாத
ருனேனவோன் றின்றியே தானதுவாய்—நானேனவோன்
றில்லேன்று தானே யெனுமவரைத் தன்னடிவைத்
தில்லேன்று தாஞ மிறை.

## சிற்றுரை.

எ—து உ-ம் எ—னின் அங்ஙனம் பகுத்து நின்றணரு முணர்வை மயக்க உணர்வென்ற தென்னை என்பாரை நோக்கி ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ—ள்.) நான் அவன் என்று எண்ணினற்கும் நாடும் உளம் உண்டாதல் தான் என ஒன்று இன்றியே தான் அது ஆய்—யானென்றும் அவனென்றும் ஞாதிரு ஞேயங்களைப் பகுத்துணர்ந்து நிற்பார்க்கும் (யானே என நிற்பார்க்குப் போல) அவ்வாறெண்ணுகின்ற உயிருணர்வு பூனைத்துத் தோன்றுமாகலான், (அவ்வழித) தானென்றொருமுதல் காணப்படுமாறின்றித் தான் அவ்வுணர்வேயாய்,—நான் என ஒன்று இல் என்று தானே யெனும் அவனைத் தன் அடி இல் என்று வைத்துத் தான் ஆம இறை—இனியானென்றொரு முதல் காணபபடுமாறில்லை யென்றுணர்நது முழுவதுந் தானே யெனக் காணுந் தெளிவுடையானைத் தனது திருவடிவியாபகத்துள் அடங்கி நிற்கச் செய்து அவ்வாறே யாவன் முதல்வன் எ-று.

ஆய் ஆம் என இயையும். ஆயாம் என்புழிச்செய்தெனெச்சம் "நள்ளார்க்கு நஞ்சொத்து நட்டார்க் கமிழ்தொக்குமிவன்" என்றாற்போலத் தன்வினையாதலுணர நின்றது. எண்ணினற்குமென இறநதது தழீஇய வெச்சவுமமை சந்திநோக்கி மகரங்கெட்டு நின்றது. நாடுமுள முண்டாய வழித்தானிலனாதலும் அஃதில்வழித் தானுளனாதலும் யாங்ஙனம் பெறுதுமெனிற் காட்டுதும்:—தூலவொளியாகிய கண்ணொளியுஞ் சூக்குமவொளியாகிய விளக்கொளியும் அத்துவிதமாய்க் கலநது நிறகும் நிலை உற்றுநோக்கவல்லார்க்குப் பிரித்தறிய வாராமையிற் கண்ணொளியாக் காணுங்கால் காணுந்தன்மையே முனைத்துத் தோன்றுமாகலின் அவ்வழி விளக்கொளியிருந்தும் இல்லைத்தானே, அன்றி விளக்கொளியாக் காணுங்காற் காட்டுந்தன்மையே முனைத்துத் தோன்றுமாகலின் அவ்வழிக் கண்ணொளியிருந்தும இல்லைத்தானே, இனிக் கண்ணொளியும் விளக்கொளியுமெனப் பகுத்துக் காணப் புகினும் காணுந் தன்மையே முற்பட்டுத் தோன்றுதலின் அவ்வழி விளக்கொளி திரிவுபுலனாக் காட்சிப்படுவதல்லது

தெளிவுபுலனுக் காட்சிப் படுமாறில்லை. அதுபோலத் தூலவறிவாகிய உயிருஞ் சூக்கும வறிவாகிய சிவமும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கு நிலையும் பிரித்தறியவாராமையின் ஆண்டும் இவ்வாறே கண்டு கொள்க.

இக்கருத்துப் பற்றியன்றே "கண்ணொளிவிளக்கின் சோதி கலந்திடுங் கருத்தொன்றன்றே" எ-ம் "காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவு நீத்துண்மை—காண்பார்கண்ணன் முத்தி காணார்கள்—காண்பானும்—காட்டுவதுங் காண்பதுவுந் தண்கடந்தைச் சம்பந்தன்—வாட்டு நெறிவாராதவர்." எ-ம் கூறினார் புடைநூலாசிரியரும். அற்றேல், இவ்விரண்டனுள் யாது திரிவு காட்சி யாது தெளிவு காட்சி எனின், கண்ணொளியோடு கூடிய வழியும் இது விளக்கொளி இது ஞாயிற்றொளி இது திங்களொளியென அவ்வப்பெற்றியவேயாய்க் காணப்படும் விளக்கொளி முதலியவற்றின் காட்சி தெளிவுக் காட்சி யெனவும், அவ் வொளிகளோடு கூடியவழி அவ்வாறொருபெற்றித்தாய்க் காணப்படாத கண்ணொளியை வேறுகாண்டல்திரிவு காட்சி யெனவும், கண்கூடாக விளங்கக்கிடத்தலின் இவ்வாறே பொருளினும் வைத்துணர்ந்து கொள்க. இவ்வாறன்றி, விளக்கொளி முன்னர்க் கண்ணொளி சத்திமடங்கிப் போதலின் அது விளக்கொளியைப்போலக் காட்சிப்புலனுகா தாயிற்றென்னுமோஎனின்; என்னும்: என்னை? கணணொளி சத்திமடங்கிற்றாயின் விளக்கொளி காட்சிப்புலனுதல் பிறிதொன்றாற் பெறப்படாமையின். அற்றேல், மின்மினித் துணையாயினும்தானேவிளங்கும் இயல்பில்லாத கண்ணுக்கு ஒளிக்குணம் உண்டென்பதற்குப் பிரமாணமென்னையெனின்:—அறியாது கடாயினுய்: ஆகாயத்தின் கண்ணதாகிய சத்தகுணம் வியஞ்சகத்தானன்றித் தினைத்துணையானுந் தானென விளங்குமாறின்மையின் அதுபற்றி எதிரொலிவடிவாய அவ்வோசையை ஆகாயத்தின் குணம் அன்று வியஞ்சகப் பொருளின் குணமென்பார்யாரும் இல்லை. அதுபோலக் கண்ணின் கண்ணதாகிய ஒளியும் வியஞ்சகமுள்வழி விளங்கி அல்லுழி விளங்காமைமாத்திரையே பிறிதில்லையாகலான் அதனைக்கண்ணின்குணமன்றென்றல் அறிவிலாதார் கூற்றேயாமெனவும், அக்கண்ணொளியாவது தன்னைவிளக்குதற்குரிய வியஞ்சகப்பொருள் ஏகதேசமாயின் ஏகதேசமாய்விளங்கியும், அது வியாபகமாயின் வியாபகமாய் விளங்கியும் நிற்பதோரியல்பிற்றெனவும் உணர்க. அஃதங்ஙனமாக

“கண்ணொளி விளக்கின் சோதிகலந்திடும்” என்றற்குப் பிரமாணம் என்னை: ஒருவிடயத்தில் வீழ்ந்த பஃகண்ணொளிகட்குத் தம்முள் இயைபில்லாதவாறுபோல ஒருவயிற்பட்ட கண்ணொளி விளக்கொளிகட்குத் தம்முள் இயைபில்லையென்றலே பொருத்தமுடைத்துப்போலுமெனின்,— அஃதறியாதார் கூற்றேயாமென்றொழிக. என்னை? ஒருவிடயத்தின் வீழ்ந்த கண்ணொளிகள் தம்முள் ஒன்றனையொன்று காணமாறுமில்லை காட்டுமாறுமில்லையாகலான் அவை தம்முட் கலத்தற்கு ஓரியைபின்றென்பது ஒக்கும். அவ்வாறன்றிக் கண் விளக்கினைக் காண்டலும் விளக்குக் கண்ணுக்குக் காட்டலுமாகிய இயைபுண்மையானும், இவ்வியைபு தம்முட் பெறப்படாத கண்ணொளி முதலாயின ஈண்டைக் குவமையாதல் செல்லாமையானும், இந்திரியங்கள் தத்தம் விடயத்தோ டியைந்தன்றிச் சந்நிதி மாத்திரையான் அவற்றையறிதல் செல்லாதென்பது ஆகமங்களுக்கெல்லாந் துணிபாகலானும், அத்தன்மையவாய கண்ணொளி விளக்கொளிகட்குத் தம்முட் கலப்பில்லையென்றல் காண்டல்விரோதமாகலின். இவ்வாறு உவமைக் கோதியனவெல்லாம் பொருட் கண்ணுமாமாறுணர்ந்து உய்த்துரைத்துக்கொள்க. அற்றேல், ஈண்டெடுத்துக்காட்டியகண்கள் தம்முள் ஒன்றனையொன்று காணுமாறின்மைபோல உயிர்களுந்தம்முள் ஒன்றனையொன்று அறியுமாறில்லைபோலுமெனின்; அறியாது கூறினாய்: கண்கள் தம்முள் ஒன்றனொன்று காணப்படுமாறில்லையென்றது, விளக்கும் விடயமும் காணப்படுமாறுபோல வேறியைந்து தனிப்பொருளாய்க் காணப்படுமாறில்லையென்ற துணையேயன்றிப் பிறிதின்மையின், விளக்கொளியைக் கண்காணுங் கால் அதுவதுவாய்நின்று காணும் பெற்றித்தாய்த் தன்னையும் அவ்விளக்கொளி வண்ணமாய்க் காண்டலுண்டென்பது கண்கூடாக அறியக்கிடத்தலின், ஏனைக்கண்களையும் அவ்வாறு காண்டலமையுமாகலான் அதுபோலத் தம்முட் டனித்தியைபில்லாத உயிர்களுஞ் சிவத்தோடியைந்துநின்று தம்மையும் பிறவுயிர்களையும் இவ்வாறுணர்தல் அமைவுடைமையானென்பது. “நாடியான்—றன்னாலே தன்னையுங்கண்டு தமைக்காணாரென்னாமென வறிவார்” எ-ம், “தன்னாலே தனையறிந்தாற்—றன்னையுந் தானே காணும் தானதுவாகி நின்றே” எ-ம், “அதிலறிவடங்கி—மன்னிட வியாபியாய வான்பயன் றோன்றும்” எ-ம், “என்னையுங்கண்டேன் பிறரையுங்கண்டேனின்னிலையனைத்தையுங்

கண்டேனென்னை— நின்னைக்காணுமாந்தர் தம்மையுங் காணாத் தன்மையோரோ" எ—ம், பிறாண்டும் இவ்வாறோதும் அநுபவமுடைய தேசிகர் திருவாக்குக்களானும் இவ்வுண்மையுணர்ந்து கொள்க.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) தன்னடிவைத்தில் லென்று என்பதைத்தன் அடி இல் என்றுவைத்துக் கூட்டுக.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோவெனின், உயிரையானென்றும் முதல்வனை எனது முதல்வனென்றும் கூறுதல் முறைமையாதலால் யான் எனவும் எனது எனவும் பகுத்து நின்று உணருமுணர்வை மயக்க உணர்வென்று ஏதுவிற் கூறியது எவ்வாறு பொருந்தும் என்பாரை நோக்கிப் பொருந்து முறைமை கூறி ஏதுவை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) முதல்வன் இல்லை; யானேஉளன் என எண்ணுவார்க்கு அவ்வாறு எண்ணுதல் அறியாமையால் முற்பட்டுத் தோன்றும் உயிருணர்வாதல்போல, யான் என்றும் அவன் என்றும் தன்னையும் கடவுட்பொருளையும் பகுத்தறிந்து நிற்பவர்க்கும் அவ்வாறெண்ணுதல் உயிரின் தற்போதத்தால் முற்பட்டுத் தோன்றுவதேயாம். ஆதலால் அவ்வாறு உயிரினறிவு முற்பட்டுத் தோன்றுங்காலத்து முதல்வன், தான் இருக்கின்றதாகக் காணப்படாமல் தற்போதத்தால் முற்பட்டுத் தோன்றும் அவ்வுயிரின் உணர்வேயாய் நிற்பன். இனியானென்று ஒருபொருள் தனித்துக் காணப்படுமாறில்லையென அறிந்து எல்லாப் பொருளும் முதல்வனேயெனக் காணும் தெளிந்த அறிவுடையாரை அம்முதல்வன் தனது திருவடி வியாபகத்துள் அடங்கி நிற்கும்படி செய்து எல்லாப்பொருளுமாய் நிற்பன் ஏ-று.

(க-ரை) முதல்வன் இல்லை யானே உளன் என்னும் அறிவு மயக்கத்தாலுண்டாவதுபோல, தனித்து நில்லாததன்னையும் தன்னின் வேறுநில்லாத முதல்வனையும் பகுத்துக் காணும் அறிவும் மயக்கத்தா லுண்டானமையால் யான் எனது என்று பகுத்து உணரும் உணர்வு மயக்க உணர்வென்று ஏதுவிற் கூறியது பொருந்தும் என்பதாம்.

தானதுவாய்த் தானும் என்னும் இரண்டுவாக்கியங்களும் இறை என்னும் எழுவாயோடு கூடி இறைதானதுவாய் தானும் எனப்பொருந்தும். தானதுவாய்த் தானும் என்ற வாக்கியங்களின் இறுதியிலுள்ள சொற்கள் ஆய் ஆம் என்பன. அவ்விரண்டனுள், ஆய்என்பது வினைச்சொல்லாய் எச்சமாய்நின்றது. அது செய்து என்னும் வாய்ப்பாட்டுவினையெச்சம்; அவ்வெச்சம், ஆம் என்னும் வினைகொண்டு முடிந்தது. செய்து என்னும் வாய்பாடு ஆய் என்று எவ்வாறு வருமெனின், தொல்காப்பியம் வினையியல் ருக-ம் சூத்திரத்துக்குச் சேனாவரையர் உரையில் செய்து என்பதின் இறுதியிலுள்ள

உகரம், இயல்பாயும் இகரமாய்த் திரிந்தும் முதல் எழுத்து நெடிலாயின் அவ்வுகரங் கெட்டு யகரமாயும் வரும்எனவும், இயல்பாய் வருதற்கு நக்கு முதலியவற்றையும், இகரமாய்த் திரிந்து வருதற்கு எஞ்சிமுதலியவற்றை யும், நெட்டெழுத்து முதலாயின் யகரம் வரும் என்பதற்கு ஆய்முதலியவற் றையும் எடுத்துக்காட்டியிருக்கின்றமையால் ஆய் என்பது செய்து என்னும் வாய்பாடாதல் அறிக. இனி வினையெல்லாம் மூன்றுகாலத்தை யுங் கருத்தாவையும் காட்டும். உதாரணம், செய்துவந்தான், செய்துவரு கின்றான், செய்துவருவான் என்பனவாம். முதல்வன் உள்ள அன்றே அம் முதல்வனிடத்து இயல்பாயுள்ள ஆய் ஆம் என்னும் அவ்வினை காலத்தைக் காட்டாது முதல்வன்தன் வினையாதலை மட்டும் உணர்த்திநின்றது; அதா வது ஒருவனிடத்து இயல்பாயுள்ள இரண்டுவினையைக் கூறும்பொழுது ஒருவினையை இறந்தகாலத்தானும் மற்றொரு வினையை எதிர் காலத்தானுங் கூறுதல் வழக்கு. அவ்வாறு கூறுதலால் காலத்தைக் கொள்வாரில்லை. எதுபோல எனின், "நள்ளார்க்கு நஞ்சொத்து நட்டார்க்கு அமிழ்தொக்கு மிவன்" என்றவிடத்து ஒத்து என்பது இறந்த காலத்தையும் ஒக்கும் என் பது எதிர் காலத்தையுங் காட்டாமல் ஒருவன்தன் வினை என்பதைமட்டும் உணர்த்தி நின்றவாறுபோல என அறிக. நள்ளார் சிநேகமல்லாதவர், நட் டார் சிநேக முள்ளவர்.

நான் அவன் என்று எண்ணினற்கு என்றவிடத்து எண்ணினற்கும் என இறந்தது தழீஇய எச்ச உம்மையின் மகர ஒற்றுச் சந்தி விதியின்படி நகரம் முன் வந்தமையாற் கெட்டு நின்றது. அவ்வும்மை யானே என நிற் பார்க்கன்றி நான் அவன் என்று எண்ணினற்கும் என இறந்தது தழுவிய எச்சமாய் நின்று நாடும் உளம் உண்டாதல் என்பது கொண்டு முடிந்தது.

உயிரின் அறிவு முனைத்துத் தோன்றியவிடத்து முதல்வன் இல்லை யாதலும் உயிரின் அறிவு முனைத்துத் தோன்றாதவிடத்து முதல்வன் விளங் கித் தோன்றலும் எவ்வாறு தெரிந்தது எனின், காட்டுவாம்:—ஒரு துணை யைக்கொண்டு பிரகாசிக்கும் தூல ஒளியாகிய கண்ணொளியும் தானே பிர காசிக்கும் சூக்கும ஒளியாகிய விளக்கொளியும் அத்துவிதமாய்க் கலந்து நிற் கும் நிலையை ஆராய்ந்து அறியப்புகின் அவ்விருஒளிகளும் வேறு வேறு பிரித்தறிய வாராவாம். பிரித்தறிய வாராமையால் காணுந்தன்மை கண்ணுக் கேயன்றி விளக்குக்கு இல்லாமையின் கண்ணொளி தானுளது எனக் காணு மிடத்துக் காணுந்தன்மையே முற்பட்டுத் தோன்றும். அவ்வாறு காணு மிடத்து விளக்கொளி யிருந்தும் இல்லையாயிற்று. அன்றி விளக்கொளி இல்லாத காலத்துக் கண்ணொளி பொருளைக் காணாமையால் விளக்கொளி தானுளது எனக்காணுமிடத்து விளக்கொளியின் காட்டுந் தன்மையே முற் பட்டுத் தோன்றும். அவ்விடத்துக் கண்ணொளி இருந்தும் இல்லையாயிற்று.

இனிக்காணுந் தன்மையால் கண்ணொளியுளது காட்டுந் தன்மையால் விளக்கொளியுளது என அவ்விரு வொளிகளையும் பகுத்துக் காண எண்ணினும் அவ்வாறு காணுதலாகிய கண்ணொளியின் தன்மைதான் முற்பட்டுத் தோன்றுமாதலால் அவ்விடத்துக் காட்டுந்தன்மையுடைய விளக்கொளியை மயக்க அறிவால் உளதென்று காண்டலேயன்றித் தெளிந்த அறிவால் உளதென்று காண்டலில்லை. அதுபோலப் பெத்தத்தில் கருவி கரணங்களையும் முத்தியில் அருளையுந் துணையாகக் கொண்டு அறியுந் தூல அறிவையுடைய உயிரும் உயிருக்கு அறிவித்தற்குத் துணைவேண்டாது தானே யறியும் சூக்கும அறிவையுடைய சிவமும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலையும் வேறு வேறு பிரித்தறியவாராமையால் அறிவுடைப்பொருளாகிய உயிர்தானுளது எனக்காணுமிடத்து உயிரின் அறிவே முற்பட்டுத் தோன்றும். அவ்விடத்து அறிவிக்கும் அறிவையுடைய சிவம் இருந்தும் இல்லையாயிற்று. உயிராகிய யான் எக்காலத்தும் இருந்தும் நனவிற்கண்டதைக் கனவிலறிய முடியவில்லை. கனவிற் கண்டதை நனவில் அறியமுடியவில்லை. நனவிலும் பின்னர் வருவதை முன்னர் அறிய முடியவில்லை. முன்னர் அறிந்ததையும் மறவாது அறிய முடியவில்லை. இவ்வாறு ஒரு சேர அறியுந்தன்மை எனக்கில்லாமையால் அறிவிக்கும் பொருளாகிய சிவந் தான் உளது எனக்காணுமிடத்துச் சிவமே முற்பட்டுத் தோன்றும். அவ்விடத்து உயிரிருந்தும் இல்லையாயிற்று. இனி அறியுந் தன்மையால் உயிர் உளது அறிவிக்குந்தன்மையால் சிவம் உளது என இருபொருளையும் பகுத்து அறிய எண்ணினும் அவ்வாறு அறியுந் தன்மையாகிய உயிரின்தன்மைதான் முற்பட்டுத் தோன்றுமாதலால் அவ்விடத்து அறிவிக்குந் தன்மையுடைய சிவத்தைமயக்க அறிவால் அறிதலேயன்றித் தெளிந்த அறிவால் அறிதல் இல்லையெனக் கண்டுகொள்க. ஆதலால் தான் ஒரு முதல் என்ற எண்ணம் எதுவரை யிருக்கிறதோ அதுவரை சிவம் விளங்குவதில்லை என அறிக.

யானே உளன் வேறு தலைவன் இல்லையென்று எண்ணுகின்றவர்களுக்கும் யானும் இருக்கின்றேன் எனது தலைவனும் இருக்கின்றான் என்று எண்ணுகின்றவர்களுக்கும் சிவம் வெளிப்பட்டு விளங்குவதில்லை யென்னும் இக்கருத்துப்பற்றி யல்லவா சிவப்பிரகாசம் ௩-ம் சூ-ம் எ-வது செய்யுளில் கண்ணொளியும் விளக்கொளியும் கலந்து நிற்கும், நிற்பினும் பொருள் ஒன்றன்று. அதுபோல முதல்வனுடைய அருளில் உயிர்கலந்து நிற்க வேண்டுமெனவும், வினா வெண்பா கக-வது செய்யுளில் காண்பவன் காட்டுபவன் காணப்படுபொருள் என்னும் மூன்றனையுங் கொண்டவிடத்தும் முத்தியில்லை விட்ட விடத்தும் முத்தியில்லை. ஆதலால் காண்பவனையும் காணப்படு பொருளையும் காட்டுபவன் அருள்வழியாகக் கொள்வதே முத்தி எனவும் புடைநூலாசிரியர் அருளிச்செய்வாராயினர்.

அவ்வாருயின் கண்ணொளியை வேருகக்காண்டலும் விளக்கொளி யோடுகலந்து அவ்விளக்கொளியாகக் காண்டலும் ஆகிய காட்சி இரண்டனுள் மயக்கக்காட்சியாது தெளிவுக்காட்சி யாது என ஆராயுமிடத்துக் கண்ணொளி யானது எந்த எந்த ஒளியோடு கூடினும் அந்த அந்த ஒளிவடிவாய்க் காணப் படும் தன்மை யுடையதே யன்றித் தனித்துக்காணப்படுவ தில்லையாதலால் அவ்வாறு தனித்துக் காணப்படாத கண்ணொளியை வேருகத் தனித்துக் காண்டல் மயக்கக்காட்சி எனவும், விளக்கொளி சூரியனொளி சந்திரனொளி கள் கண்ணொளியோடு கூடியவிடத்தும் கண்ணொளியாகக் காணப்படாமல் அந்தஅந்த ஒளிகளாகவே காணப்படுமாதலால் அவ்வாறு தனித்துக்காணப் படும் விளக்கொளி முதலியனவாகக் கண்ணொளியைக் காணுங் காட்சி தெளிவுக்காட்சி எனவும் பிரத்தியட்சமாய் அறியப்படும். இவ்வாறே உயி ரைத் தனித்துக்காண்டலும் சிவமேயாய்க் காண்டலு மென்னும் காட்சி இரண்டனுள், மயக்கக்காட்சியாது தெளிவுக்காட்சியாது என ஆராயுமிடத்து உயிரானது யாதானு மொன்றைச்சார்ந்து அதன் வடிவாய் நிற்பதன்றித் தனித்து நிற்பதில்லையாதலால் தனித்து நில்லாத உயிரைத் தனித்து நிற்ப தாய்க் காண்டல் மயக்கக் காட்சி யெனவும், சிவம் உயிரோடு கூடியவிடத் துஞ் சிவமாய் விளங்குவதன்றி உயிராய் விளங்காமையால் அச்சிவமாக உயிரைக்காண்டல் தெளிவுக்காட்சி எனவும் அறிந்துகொள்க.

இவ்வாறு கண்ணொளியை விளக்கொளியாகக் காணுது விளக்கொளி யின் முன்னர்க்கண்ணொளியின் சத்தி மடங்கிப்போதலால் விளக்கொளி யைப் போல அக்கண்ணொளி தெளிவாய் அறியப்படாதாயிற்று என்று சொல்வேமோ எனின், சொல்லமாட்டேம். எதனுலெனின், கண்ணொளியின் சத்தி மடங்கிப்போயிற்றுயின் விளக்கொளியை யறிந்தது எது? விளக் கொளியை அறிந்தமையால் அவ்விளக்கொளியின் முன்னர்க்கண்ணொளி யின் சத்தி மடங்கிப் போயிற்று என்றல் பொருந்தாமையாலென்க.

அவ்வாருயின் கண்ணொளிக்கு மின்மினி அளவுங்கூடத்தானே விளங் குந்தன்மை யில்லாமையால் கண்ணுக்கு ஒளி யுண் டென்பதற்குப் பிரமாணம் என்னை எனின், ஆகாயத்திலுள்ள சத்தகுணம், முரசுகடி முதலியவற்றுள் யாதானும் ஒரு துணையினு லன்றிச் சிறிதும் விளங்கா மையால் துணையினுல் தோன்றும் எதிரொலி வடிவாகிய சத்தத்தை ஆகா யத்தின் குணமன்று முரசு முதலியவற்றின் குணமென்பார் யாருமில்லை. அதுபோலக்கண்ணின் குணமாகிய ஒளியும் விளக்கொளி முதலிய துணை யுள்ளவிடத்துவிளங்குதலும்அத்துணையில்லாத விடத்து விளங்காதிருத்தலும் ஆகிய அவ்வளவேயன்றிப் பிறிதில்லாமையால் கண்ணுக்கு ஒளி யில்லையெ ன்றுகூறுதல்பொருந்தாது. அக்கண்ணொளியானது துணையொளி சிறிதாயிற் சிறிதாயும் பெரிதாயிற் பெரிதாயும் விளங்குந்தன்மை யுடையது. இவ் வாறே தனித்து அறியுந்தன்மை உயிரின் அறிவுக்கில்லாமையால் உயி

ருக்கு அறிவு இல்லை என்றல் பொருந்தாதெனவும் அவ்வுயிரினறிவு சிற்றறிவை யுண்டு பண்ணும் தனுகரண புவன போகங்களுடன் கூடில் சிறிதாயும், பேரறிவை யுண்டுபண்ணும் திருவருளோடு கூடில்பெரிதாயும் விளங்கு மெனவும் அறிக.

அவ்வாறுகண்ணுக்கு ஒளியுண்டென்றேவைத்துக்கொள்வோம். சிவப்பிரகாசத்திற் கூறியபடி கண்ணொளியும் விளக்கொளியும் கலந்து நிற்கும் என்றற்குப் பிரமாணம் யாது? ஒருபொருளில் பல கண்ணொளிகள் வீழ்ந்து பார்த்தபோது வீழ்ந்த அக்கண்ணொளிகள் ஒன்றுட னொன்று கலப்பதில்லை. அதுபோல ஒரு இடத்தின்கண் பொருந்திய கண்ணொளிக்கும் விளக்கொளிக்கும் தம்முட்கலத்தலில்லை யென்றலே பொருத்தம் எனின், அவ்வாறு கூறுதல் பொருத்தமாகாது. எதனுலெனின், ஒரு பொருளில் வீழ்ந்த பல கண்ணொளிகளுள் ஒருகண்ணொளி பிறிதொரு கண்ணொளியைக்காணுதலுமில்லை; பிறிதொரு கண்ணொளிக்குக் காட்டுதலு மில்லை. ஆதலால் கண்ணொளிகள் ஒன்றுட னொன்று கூடுதலில்லை யென்றல் பொருந்தும். அவ்வாறன்றி விளக்கொளியைக் கண்ணொளி காண்டலும் கண்ணொளிக்கு விளக்கொளிகாட்டும் உபகாரத்தைச் செய்தலும் ஆகியசம்பந்தம் இருத்தலானும் இவ்வாறு காணுதலுங் காட்டுதலு மில்லாத கண்ணொளிகளை விளக்கொளி கண்ணொளிகட்கு உவமை கூறுதல் பொருந்தாமையானும் கண்ணொளி விளக்கொளிகட்குத் தம்முட்கலப் பில்லை யென்றல் பொருத்த மாகாமையா லென்க. அன்றியும் கண்முதலிய இந்திரியங்கள் அந்த அந்த இந்திரியங்களுக்குள்ள விஷயங்களை அவ்விடயங்களோடு கலந்து அறிதலேயன்றிக் கலவாமல் விடயங்கள் முன்னே நின்ற அளவில் அறிவதில்லை. முன்னேநின்ற அளவில் அறியுமாயின் முன்னின்ற எல்லாப்பொருளையும் அறிதல்வேண்டும். முன்னின்ற பொருள்கள் பலவற்றுள் ஒன்றனை யறியுங்கால் பிறிதொன்றனை யறிவதில்லை. ஆதலால் இந்திரியங்கள் தத்தம் விடயங்களோடு கூடியே அறியுமென்பது ஆகமங்களுக்கெல்லாம் சம்மத மாகலானும் இந்திரியமாகிய கண்ணொளிக்கும் விடயமாகிய விளக்கொளிக்கும் தம்முட் கலப்பில்லை யென்றல் பிரத்தியட்ச விரோதமாக லானும இது விளக்கொளியென்று கண்ணொளி காணும் அனுபவம் காணப்படுதலானும் அவ்விரு ஒளிகட்குக் கலப்பில்லை என்றல் பொருந்தாதென அறிக.

இவ்வாறு ஒரு உயிரும் பிறிதொரு உயிரும் கலப்பதில்லை. அதுபோல உயிருஞ்சிவமும் கலத்தலில்லையெனின்,உயிருக்கெல்லாம் அறியுந்தன்மையேயன்றி உள்ளீடாய் நின்று அறிவிக்குந்தன்மையில்லை. சிவத்துக்கு உள்ளீடாய் நின்று அறிவிக்கும் தன்மையுண்டு. அன்றியும் உயிர் தனித்து நிற்கும் பொருளுமல்லை. ஆதலால் புறத்தே நின்று ஒரு உயிருக்குப் பிறிதொரு உயிர் அறிவிக்குமேயன்றி உள்ளீடாய் நின்று அறிவிக்கும் தன்மை இல்லாமையானும் தனித்து நில்லாமையானும் உயிரும் உயிரும் கலவாதிருத்

தல் கூடும். உயிருக்கு அறியுந் தன்மை இருத்தலானும் சிவத்துக்கு உள்ளீடாய் நின்று அறிவிக்குந்தன்மை இருத்தலானும் சிவம்தனிப்பொருளாய்க் காணப்படுமாதலானும் உயிருஞ் சிவமுங் கலத்தல் கூடுமாதலால் கலவாதென்றல் பொருந்தாது.

இவையனைத்தும் பொருந்தும் இவ்விடத்து உவமையாக எடுத்துக்காட்டிய கண்ணொளிகள் தம்முள் ஒன்றனை யொன்று காணாசவாறுபோல உயிர்களுந் தம்முள் ஒன்றனையொன்று அறியுமாறில்லையோ எனின், கூறுதும்:— கண்ணொளிகள் ஒன்றனையொன்று காணுமாறில்லை யெனக்கூறியது விளக்கொளியையும் ஏனையபொருள்களையும் வேறாகத் தனித்துக் காண்பது போல ஒரு கண்ணொளியானது பிறிதொரு கண்ணொளியை வேறாய்த் தனித்துக் காண்பதில்லை யென்ற அவ்வளவேயன்றிப் பிறிதில்லை. விளக்கொளியைக் கண் காணுங்கால் அவ்விளக்கொளியே தானாய்க்கலந்து நின்று காணுந் தன்மையைக்கொண்டு கண்ணொளியாகிய தன்னையும் அவ்விளக்கொளி வண்ணமாய்க் காணுதல் கூடும் என்பது பிரத்தியட்சமாக அறியக் கிடத்தலால், ஏனைக் கண்ணொளிகளையும் அக் கண்ணொளிகள் காணும் பொருள் வண்ணமாக அறிதல் கூடும். அதாவது தான் ஒரு பொருளைக் காணுதலால் தன் கண்ணில் ஒளியுண்டென்றும் அவ்வாறே பிறரிடத்தும் பொருளைக் காணுந்தன்மை இருத்தல்கண்டு அவர்கண்ணில் ஒளி உண்டென்றும் அறிதலாம். அதுபோலத் தனித்து நில்லாத உயிர்களும் சிவத்தோடு கலந்து நின்று தம்மையும் பிற உயிர்களையும் அச்சிவமாக உணர்தல் கூடும். இக்கருத்துப்பற்றியே இந்நூல் கூ-ம் சூ-ம் க-ம் அதிகரணத்து முதல் வெண்பாவில் "நாடியரன்—றன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணொன்னுமென அறிவார்" எனவும், சிவப்பிரகாசம் அ-ம் சூ-ம் உ-வது செய்யுளில் "தன்னாலே தனையறிந்தால்—தன்னையுந் தானே காணும் தான் அதுவாகிநின்றே" எனவும், மேற்படிநூல் கூ-ம் சூ-ம் ௩-வது செய்யுளில் "அதிலறிவடங்கி மன்னிட வியாபியாய வான்பயன் தோன்றும்" எனவும், பட்டினத்துப் பிள்ளையார் அருளிச்செய்த திருவிடை மருதூர் மும்மணிக்கோவை க௩-வது செய்யுளில் "என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன் நின்னிலை யனைத்தையுங் கண்டேன் என்னே நின்னைக்காணு மாந்தர் தம்மையுங் காணுந்தன்மையோரே" எனவும்கூறினர். வேறிடத்தும் இவ்வாறு கூறும் அநுபவமுடைய தேசிகர் திருவாக்குக்களானுஞ் சிவத்துடன் கூடிச் சிவமாய் நின்று தன்னையும் பிறரையும் அறிதல் கூடுமென்ற இவ்வுண்மையை உணர்ந்து கொள்க.

முதலதிகரணம் முற்றிற்று.

---

# இரண்டாம் அதிகரணம்.

இறைபணி நிற்கவேண்டுமெனக் கூறும்

மேற்கோள்.

## இனி(இறைபணி)வழுவாது நிற்கவென்றது.

## சிற்றுரை.

எ–து மே–ள் எ-னின் உடம்பு நிற்குங்காறும் அது கொண்ட வினைப்பயனும் அதனையநுபவித்தற்குத் துணைக்காரணமாய் உடனிற்கும் முயற்சியும் ஒருவாற்றானும் நீக்கலாகாமையின் அவை அவ்வழி ஏகனாகி நிற்றற்குத் தடையாதலைக் கடக்குமாறில்லை போலுமெனச்சுத்த சைவரீறாயினோர் மதம்பற்றி நிகழுங்கடாவையாசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ–ள் வெ-டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

இ–ள். இறைபணி—அம்முதல்வ னருள்வழி, —வழுவாது நிற்கவென்றது—சலியாம னிலைநிற்க எ–று.

## சிற்றுரை.

நிற்றலாவது சலியாது நிலைபெறுத லென்பார் வழுவாது நிற்க வென்றார். ஈண் டிறைபணியென்றது யாதெனின் அஃது ஆசிரியர் தாமே முன்னர்த் தெரித்துரைக்கின்றமையின் இனிது விளங்கும்.

## விளக்கம்.

இம்மேற்கோள் இறைபணி நிற்கமலமாயை தன்னொடு வல்வினையின்றே என்னும் சூத்திரத்தில் உள்ள இரண்டாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்துமேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோ எனின், உடம்பு நிற்கும் அளவும் அவ்வுடம்புக்கு நியமிக்கப்பட்ட வினைப்பயனும், சித்தியார் ௨-ம் சூ-ம் ௧௧-வது செய்யுளில் "பிற்செயா தநுபவிப்பதின்று" என்றபடி முயற்சி

யின்றி அநுபவம் நிகழாமையின் அவ்வினைப்பயனை யநுபவிப்பதற்குத் துணைக் காரணமாய் அப்பயனோடு கூடஉடனிற்கும் முயற்சியும், எவ்வழி யானும் நீக்குதல் கூடாமையால் அவ்விரண்டும் மேலையதிகாரணத்திற்கூறிய வாறு ஏகனாய் நிற்றற்குத் தடையாகும். அத்தடையைக் கடக்கமுடியாது என்பார் சுத்தசைவரும் அவருக்குக் கீழ்ப்பட்டவரும். அவர் கூற்றை ஆசங் கித்துக்கொண்டு சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து இறைபணியாகிய அருள்வழி நிற்கில் முன் வினைப்பயனையும் முயற்சியை யும் நீக்குதல் கூடுமெனக் கூறியவாறும்.

இவ்வதிகரணத்தில், சிவனிடத்து ஏகனாய் நிற்கவொட்டாது தடை செய்யும் பிராரத்தவினையினையும்முயற்சியினையும் நீக்கக் கூடுமோ கூடாதோ என்பது ஐயப்பாடு. கூடாது என்பது பிறர்பக்கம்.

(இம்மேற்கோளின் பொருள்.) ஏகனாய் நிற்கும் அம்முதல்வன் அருள் வழியிற் சலியாமல் நிலைத்து நிற்க எ-று.

சூத்திரத்தில் நிற்க என்று கூறியிருப்பினும் நிற்றலாவது சலியாது நிலைபெறுத லென்பதை யறிவிக்கவேண்டி மேற்கோளில் வழுவாது நிற்க வென்று கூறினார்.

இம்மேற்கோளில் இறைபணி என்றது யாது எனின், அவன் அருள் வழிநிற்றலாம். அது, ஆசிரியர்தாமே முன்னர் ஏதுவில் அவனருளால் அல் லது ஒன்றையுஞ் செய்யானாகவே என விளக்கிக் கூறுவதனால் இனிது விளங்கும்.

இறைபணி நிற்கவேண்டு மென்பதற்குக் காட்டும்

ஏ து.

அவன் அருளாலல்லது ஒன்றையுஞ் செய்யானாகவே அஞ் ஞானகன்மம் பிரவேசியா வாகலான்.

## சிற்றுரை.

எ-து ஏது எ-னின், ஏகனாகி நிற்றலேயமையும், இறைபணி நிற்றலெற்றுக் கென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தனுத லிற்று.

(இ-ள்.) தன் செய்திக்கு முதல்வன் செய்தியை இன்றியமை யாத ஆன்மா செய்வனவெல்லாம் அவனருளின் வழிநின்று செய் யுமாயின் மாயையுங் கன்மமும் ஏகனாகி நிற்றற்குத் தடையாய் வந்துதாக்கா ஆகலான், அவைதாக்காமைப் பொருட்டுச் செய்யப் படும் உபாயமாதல்பற்றி 'இனி இறைபணி வழுவாது நிற்க'வென மேற்கொண்டது எ-று.

சிந்தா. சூ 10. செய் 4.

அஞ்ஞான கன்மம் உம்மைத்தொகை. மலமின்றுதல் மேற் பெறப் பட்டமையின் ஈண்டஞ்ஞானம் என்றது மாயையின் காரிய மாகிய மயக்கத்தை என்பது பெற்றும். உடம்புநசிக்கும் அளவும் அவை மாய்வன வன்மையின் அறுமென்னுது பிரவேசியா வென்றார்.

## விளக்கம்.

இந்தஏது என்னசொல்லிற்றே எனின், முதலதிகரணத்திற் கூறிய வாறு ஏகனுகி நிற்றலேபோதும் இறை பணி நிற்றல் எதற்காக வேண்டு மென்பாரை நோக்கி, ஏகனுகிநிற்றலால் ஆணவமல மறுதலும் இறைபணி நிற்றலால் மாயாமலம் கன்மமலம் அறுதலும் பயனுதலால், ஏகனுய் நின்று ஆணவமலத்தை நீக்கினுலும் உடம்பு காரணமாக வரும் மாயாமலங் கன்ம லம் நீங்குதற்காக இறைபணி நிற்கவேண்டு மெனக் கூறிமேற்கோளை வலி யுறுத்தியவாறும்.

(இந்த ஏதுவின்பொருள்.) உயிராகிய தான்யாதானு மொன்று செய்ய வேண்டுமாயின் முதல்வன் உடனுய் நின்று செய்யவேண்டும். அவ்வாறு முதல்வன் செயலையின்றித் தனித்துத்தனக்கொரு செயலில்லாத தன்மை யுடைய உயிர்செய்வன எல்லாம் அம்முதல்வன் அருள்வழி நின்று நான்செய் கின்றே னென்னும் முனைப்பின்றிச் செய்யுமாயின் மாயாகாரியமாகிய மயக் கத்தாலுண்டாகும் முயற்சியும் அம்முயற்சி வாயிலாக வரும் கன்மமலத்தின் காரியமாகிய இன்பதுன்பப்பயன்களும் ஏகனுகி நிற்றற்குத் தடையாக வந்து தாக்கமாட்டா. ஆதலால், மாயாமல காரியமும் கன்மமலகாரியமுமாகிய அவ் விரண்டுந் தாக்காதிருத்தற் காகச்செய்யவேண்டும் உபாயம் இறைபணி நிற் றல் என்பதுபற்றி 'இனி இறைபணி வழுவாது நிற்க'என மேற்கோள் கூறி யவாறும் எ-று.

ஏதுவில் அஞ்ஞான கன்மம்.என்றதில் பிரவேசியா யென்ற பன்மை முடிவுக்கேற்ப அஞ்ஞானமும் கன்மமும் என்றபொருளைக் குறித்து உம்மை தொக்கு நின்றது.

அஞ்ஞானம் என்றது ஆணவமலத்தைக் குறிக்குமாயினும் மேல் முத லதிகரணத்தால் ஆணவமலம் இன்றுதல் பெறப்பட்டமையின் இந்த ஏது வில் அஞ்ஞானம் என்றது மாயையின் காரியமாகிய மயக்கம் என்பது பெற ப்பட்டது. உடம்பு நசிக்கும் அளவும் முயற்சியும் பயனும் கெடமாட்டா. ஆயினும் தாக்குதலில்லை. ஆதலால் அஞ்ஞானகன்மம் அறுமென்று கூறுது பிரவேசியா என்றார்.

இந்த ஏது பிராரத்த வினையினையும் முயற்சியினையும் நீக்க முடியா தென்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

இறைபணி நிற்றலால் அஞ்ஞான கன்மம் பிரவேசியா
என்பதற்குக் காட்டும்
உதாரணம்.

நாமல்ல விந்திரிய நம்வழியி னல்லவழி
நாமல்ல நாமு மரனுடைமை—யாமென்னி
லெத்தனுவி னின்று மிறைபணியார்க் கில்லைவினை
முற்செய்வினை யுந்தருவான் முன்

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், உடம்பொடு நிற்பார் நுகர்தற்குவேண்டப்படும் பிராரத்த வினையும் அதுபற்றியேறும் ஆகாமிய வினையும் ஒருதலையா னுண்மையின் இறைபணி நிற்றல்பற்றி அவை பிரவேசியா வென்றல் அமைவுடைத்தன்றுபோலு மென்பாரை நோக்கி ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) இந்திரியம் நாம் அல்ல—வினைகளை நுகர்தற்கும் ஈட்டுதற்குங் கருவியாகிய இந்திரியங்கள் (மாயேயமாவன வன்றி) யாமாவன வல்ல,—நம்வழியின் அல்ல—(அவை தொழிற் படுதலும் முதல்வன் வயத்தானன்றி) நம்வயத்தானல்ல,— வழிநாம் அல்ல (நம்வழியின் அல்ல)—(வினை நிகழ்ச்சிக்கு) வாயிலாகிய விடயாதிகளும் (அவ்விந்திரியங்கள்போல மாயேயமாவன வன்றி யாமாவனவல்ல. அவை சேட்டித்தலும் முதல்வன் வயத்தானன்றி நம்வயத்தானல்ல,— நாமும் அரன் உடைமை— (அவற்றோடியைந்துநின்று வினைகளை ஈட்டுதற்கும் நுகர்தற்கும் வினை முதலாகிய யாமும் (ஞானச் செய்திகளை முதல்வன் விளக்கிய வழி விளங்கி அல்லுழி விளங்குமாறின்மையான்) அம்முதல்வன் வயத்தராவேமல்லது சுதந்திரராவே மல்லேம்,—ஆம் என்னில்—என்றிங்ஙனம் பசுபாசங்களதியல்பை உள்ளவாறுணர்ந்து செய்வன வெல்லாம் அவன் அருளின்வழி நின்று செய்யுஞ் செயலாகக்கண்டு கொண்டிருப்பாராயின்,— இறைபணியார்க்கு எத்தனுவின் நின்றும்வினை இல்லை—இவ்வடிமைத் திறமுடையார் எவ்வுடம்பினின்று எவ்வினைகளைச் செய்யினும் அவர்க்கு அவைபந்த மாதலில்லை,—முன்செய்வினையுந் தருவான் முன்—(அவ்வாகாமிய வினையை அவிஞுபாவ

மாய் உடன் கொண்டு வருவதாகிய) பிராரத்த வினையுந் தன்னைக் கூட்டுவிக்கு முதல்வன் சந்நிதியின் (உடனூழாய்க்கழியும்) எ-று.

நம்வழியி னல்லவென்பது வழி என்பதனோடுங்கூட்டியுரைத்துக்கொள்ளப்படும். "மகனன்று குற்றி" என்றாற்போல அன்மைச்சொற் றழுவப்படும் பொருண்மேனின்றது; "அன்மைக்கிளவி வேறிடத்தான" என்பதோத்தாகலின். நின்றும் உம்மை சிறப்பு. ஏனையும்மைகள் இறந்தது தழீஇயின. சஞ்சிதவினை தீக்கைசெய்த மாத்திரையே எரிசேர்ந்த வித்துப்போலக் கெட்டொழிதலின் ஈண்டு கூறற்செய்வினை என்றது ஏற்புழிக் கோடலாற் பிராரத்த வினைமேற்றாயிற்று. தருதல் இடவழுவமைதி. கழியுமென்பது சொல்லெச்சம். உடனூழாய் என்பது அவாய் நிலையான் வந்தது.

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோவெனின், உடம்பொடு கூடிநிற்பவர்க்கு அவ்வுடம்பு நிலைத்தற்பொருட்டு மாயாகாரியமாகிய போகங்களையநுபவிப்பதற்குப் பிராரத்தவினை வேண்டப்படும். ஆதலால் உடம்புநிற்குமளவும் மாயாகாரியங்களைக்கூட்டும் பிராரத்தவினையும் அவ்வினைப்பயனை அநுபவிப்பதற்காகச் செய்யப்படும் ஆகாமியவினையும் உளவாதல் துணிபாம். அவ்வாறாகவும் இறைபணி நிற்றலால் பிராரத்தவினையும் ஆகாமியவினையும் பிரவேசியா என்று ஏதுவிற்கூறியது பொருத்தமன்று என்பாரை நோக்கிப் பொருத்தமாகும் முறைமைகூறி ஏதுவை வலியுறுத்திய வாறாம்.

(பொ—ரை.) பிராரத்தவினைப்பயன்களை அநுபவிப்பதற்கும் அவ்வினைப்பயன்களை அனுவிப்பதற்காகச் செய்யும் முயற்சியால் மேலும் வினையைச் சம்பாதிப்பதற்கும் இந்திரியங்களையின்றி முடியாவாம். கருவியாகிய அவ்விந்திரியங்கள் மாயையின் காரியமாவனவன்றி அநுபவிக்கும் யாமல்ல. அவ்விந்திரியங்கள் சடமாதலால் அவை முதல்வனருளால் தொழில்செய்யுமேயன்றி நம்மால் தொழில்செய்யா. பார்க்கவேண்டுமென்ற விருப்பம் இருந்தும் கண்குருடாகவும் இவ்வாறே பிறவற்றினும் வைத்து இந்திரியங்கள் நம்மால் தொழில்செய்யா என்பதை அறிந்துகொள்க. அவ்விந்திரியங்கள் தொழில்செய்தற்கு, முன்னிலையாயுள்ள உலகப்பொருள்கள் வேண்டும். அப்பொருள்களும் அவ்விந்திரியங்கள் போல மாயாகாரியமாவனவன்றி யாமல்ல. அவ்வுலகப் பொருள்களும் முதல்வன் அருளால் விளங்குமன்றி நம்மால் விளங்கா. அவ்விந்திரியங்களோடும் உலகப்பொருள்களோடுங் கூடி நின்று வினைப்பயன்களையநுபவிப்பதற்கும் மேல்வினையைச் சம்பாதிப்பதற்கும் உரிமையுடைய யாமும் முதல்வன் அறியும்படி செய்தாலன்றி

அறியமுடியாமையும் அவன்செய்யும்படி செய்தாலன்றிச் செய்யமுடியாமையும் உடையராய்க் காணப்படுகின்றே மாதலால், அவன் அருள்வழி நிற்குந் தன்மையுடையேமன்றித் தனித்து நிற்குந் தன்மையுடையவரல்லேம். இவ்வாறு உயிரின் இயல்பையும் பாசங்களினியல்பையும் உள்ளவாறு அறிந்து நாம் செய்யும் செயல்கள் எல்லாம் அவன் அருள் செய்யும்படி செய்தலாற் செய்கின்றேமெனக் கண்டுகொண்டிருப்பாராயின் அவ்வாறு நிற்பது அடிமைத்திறமாதலால் இவ்வடிமைத் திறமுடையார் எவ்வுடம்பில் நின்று எம்முயற்சிகளைச் செய்யினும் அம்முயற்சிகள் அவரைக் கட்டுப்படுத்துதலில்லை. அம் முயற்சியாகிய ஆகாமியவினையை விட்டுநீங்காமல் அம்முயற்சியை உடன்கொண்டு வருவதாகிய பிராரத்தவினைப்பயனும் தம்மைக் கட்டுப்படுத்தாமல் அவ் வினைப்பயனைக் கூடும்படி செய்த முதல்வன் அருளால் உடம்பின் அநுபவமாய்க் கழியும் எ—று.

(க-ரை.) தனுகரண புவன போகங்கள் மாயாகாரியமாய் முதல்வன் அருளினாலே தோன்றுதலானும், உயிருக்கு அம்முதல்வன் அருளையின்றிச் செயலில்லாமையானும், அவ்வுண்மையை அறிந்து இறைவன் அருள்வழி நிற்பின், பிராரத்தவினையின் பயனாய்வரும் மாயாகாரியமாகிய போகங்களும் அப்போக அனுபவத்தின் வழியாகத் தன்னிடத்து நிகழும் முயற்சியாகிய ஆகாமிய வினையும் உயிராகிய தன்னைத் தாக்காமலொழியும். ஒழியவே வினைப்பயன்களாகிய சுகதுக்கங்கள் உயிரின் அனுபவமாகாமல் உடலின் அநுபவமாய்க் கழியும் என்பதாம்.

உடல் சடமாதலால் அதற்கு அநுபவங் கூடாது. உடலோடு கூடிய உயிருக்குத்தான் அநுபவங்கூடும். அவ்வாறாகவும் பிராரத்த வினையின் பயன் உடலின் அநுபவமாய்க் கழியுமென்றல் எவ்வாறு பொருந்துமெனின், பொருந்துமாறு காட்டுதும்:—உடல் தனித்தும் அநுபவியாது; உயிர்தனித்தும் அநுபவியாது; இரண்டுங் கூடினவிடத்துத்தான் அநுபவம் நிகழும். அவ்விரண்டனுள், உடல் தானே உயிரைக்கூடாது; உயிர் தானே உடலை எடுத்துக்கொள்ளாது; ஆகவே, இறைவன் அருள்கூட்ட உடலுடன் உயிர் கூடும். அவ்வாறு கூடிநின்ற உயிர் தன்செயலை இறைவன் அருட்செயலாக அறிந்தபொழுது அச்செயலாலுண்டாகும் பயன் யான்செய்தேன் என்னும் முனைப்பில்லாமையால் தன்னைத் தாக்குதல் இல்லை. உயிரைச் செய்யும்படி செய்து அது செய்வதற்காகத் தான் செய்தலேயன்றித் தானாகவே செய்யாமையால் அப்பயன் இறைவனையுந் தாக்காது. இவ்வாறு உயிரையும் இறைவனையும் தாககாதாகவே இறைவன் முன்னிலையில் உடலையே தாக்கும். இது எதுபோல எனின், அரசன் ஆணைவழி நிற்கும் அதிகாரியொருவன் செய்த செயலின் பயன் அவ்வதிகாரியையும் அரசனையுந் தாக்காது அரசன் முன்னிலையில் அவ்வதிகாரத்தைத் தாக்குதல் போலாம்.

நம்வழியின் அல்ல என்பது வழிநாமல்ல என்பதன் பின்னுகவுங் கூட்டி உரைசெய்யப்பட்டது.

நம்வழியின் அல்ல, வழிநாமல்ல என்பவற்றிலுள்ள அல்ல என்னும் அஃறிணையைக்குறிக்கும் அன்மைச்சொல், நம் நாம் என்னும் உயர்திணையைத் தழுவாமல் அல்ல என்று கருதப்படும் அஃறிணைப் பொருளாகிய இந்திரியங்களின் மேல்நின்றது. இது எதுபோல எனின், "மகன் அன்று குற்றி" என்றவிடத்து அன்று என்பது மகனைத்தழுவாமல் குற்றியைத்தழுவியவாறுபோலாம். இதனைத் தொல்காப்பியம் கிளவி ஆக்கம் உடு—வது சூத்திரத்தில் "அன்மைக்கிளவி வேறிடத்தான" என்பதனானும் அறிக. இதன் கருத்து அன்மைச்சொல் ஐயத்தின்வேறாய்த்துணிந்த பொருளிடத்தாகும் என்பதாம்.

எத்தனுவில் நின்றும் என்றதிலுள்ள உம்மை கட்டுப்படுத்துதற்குரிய உடம்பில் நின்றும் என்னும் பொருளைக் குறித்தமையால் சிறப்பு

நாமும் என்றதிலுள்ள உம்மை இந்திரியம், வழிஎன்று மேலேகூறிய மாயாகாரியங்களையன்றி நாமும் என்னும் பொருளைக் குறித்தமையானும், முற்செய்வினையும் என்றதிலுள்ள உம்மை, இல்லைவினையென்று மேலே கூறியதன் பொருளாகிய ஆகாமிய வினையேயன்றிப் பிராரத்த வினையும் என்னும் பொருளைக குறித்தமையானும், அந்த உம்மைகள் இரண்டும் இறந்ததழுவின.

முற்செய் வினையாவது சஞ்சிதமும் பிராரத்தமுமாம். ஆயினும் மேல் எட்டாஞ்சூத்திரத்திற் கூறியவாறு முதல்வன் குருவாய் வந்து தீக்கைசெய்த அளவிலே அக்கினியைச் சேர்ந்தவித்து மேல் முளையாதவாறு கெட்டொழிதல்போலச் சஞ்சிதவினை பயனுக்கு வாராமல் கெட்டொழியுமாதலால், இச்செய்யுளில் முற்செய்வினை யென்றது எற்புழிக்கோடல் என்னும் உத்தியால் பிராரத்த வினையைக் குறித்து நின்றது. குருவாய் வந்துணர்த்தியெனத் தீக்கை செய்வதைப்பற்றி இந்நூலில் தொகுத்துக் கூறியிருப்பதைச் சிவஞான சித்தியார் எட்டாஞ்சூத்திரத்தில் வழிநூலாசிரியர் வகுத்துக் கூறியவாற்றான் அறிக.

முற்செய்வினை என்றது கனிச்சீராதலால் யகர ஒற்றை நீக்கி வெண்பாத் தளைதட்டாதவாறுகொள்க.

தருவான் என்னும் முன்னிலை, கூட்டுவிக்கும் என்னும் படர்க்கைப் பொருளின் நின்றமையால் இடவழுவமைதி.

தருவான்முன் என்றது கழியும் என்னும் சொல்லையின்றி முடிவுபெருமையால் கழியும் என்றது சொல்லெச்சமாய் வருவிக்கப்பட்டது. அவ்வாறு வருவிக்கப்பட்ட கழியும் என்னும் சொல் எவ்வாறு கழியும் என்பதை

அவாவிநிற்றலால் அந்த அவாய் நிலைபற்றி உடலூழாய் என்றது வருவிக்கப்பட்டது.

முத்தருக்கு வினைப்பயனைத் தாக்கவொட்டாது
உடலூழாய்க் கழியும்படி செய்தல்
இறைவன் கடமையெனக்கூறி ஏதுவை வலியுறுத்தும்

உதாரணம்.

சார்ந்தாரைக் காத்த றலைவர் கடனாதல்
சார்ந்தாரைக் காத்துஞ் சலமிலனாய்ச்—சார்ந்தடியார்
தாந்தானாச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்த
லாய்ந்தார்முன் செய்வினையு மாங்கு.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ-னின். இறைபணியார்க்கு உளவாகிய முற்செய்வினை ஏனையோர்க்குப் போலன்றித் தருவான்முன்னாயொழியுமாயின் அங்ஙனம் இருவேறு வகைப்படச் செய்யு முதல்வன் நடுவு நிலைமையின்றிக் கோட்டமுடையனெனப்பட்டு வழுவாம் போலுமென்பாரை நோக்கி வழுவன்மை கூறி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) சார்ந்தாரைக்காத்தல் தலைவர் கடன் ஆதல் சார்ந்தாரைக் காத்தும்—(தம்மாட்டு அடைக்கலமெனச்) சார்ந்தாரை (அவர்க்குவருமேதத்தை நீக்கிக் களைகணாய்நின்று) காப்பது தலைமைக்குண முடையராயினார்க்குக் கடைமையாகலான் (முதல்வன் ஏனையோரை யொழித்துத்) தன்னைச்சார்ந்தாரை அங்ஙனம்பாதுகாப்பானாகியும்,— சலம் இலன் ஆய்—(அது பற்றிக்) கோட்டமுடையனல்லனாய்,—சார்ந்து அடியார் தானாய்ச் செய்து பிறர்தங்கள்வினை கொடுத்தல்—தன்னைச்சார்ந்து தன்னடித் தொழில் செய்வார் தன்போல் ஆகாமியவினைத் தொடக்கிலராகச் செய்து பிறர்க்குவரு மாகாமிய வினையை (அவர்க்குக்) கொடுப்பானாகலான்,— ஆய்ந்து ஆர் முன்செய்வினையும் ஆங்கு—(அவ்விருதிறத்தோர் மாட்டும்) (நுணுகிவந்து கூடுவதாய பிராரத்தவினையும் அவ்வாறே செய்வோர் செய்திக்குத் தக்கபயனாய் இருவேறு வகைப்படச் செய்வன்) எ—று.

இறைபணியார்க்கில்லைவினை முற்செய்வினையுந் தருவான்முன்னென்றதுபற்றி ஏனையோர்க்கு நியதி செய்தாட்டி இறைபணி

யார்க்கு வினையின்றாகச்செய்தல் இறைவனுக்கு நடுவு நிலைமையன் றென்பாரைநோக்கி, அதனையுடன்பட்டே அமைதிகூறுவாராய்ச் சார்ந்தாரைக் காத்த றலைவர் கடனெனப் பழமொழி எடுத்துக் காட்டி இஃதவ்வாறு நடுவன்மையுமன்றென வலியுறுத்துவார் சார்ந்தடியார் தாந்தாஞ்செய்து பிறர் தங்கள்வினை தான்கொடுத்த லென வேறுவமை எடுத்துக்காட்டினார். சார்ந்தடியார் தாந்தாஞ் செய்து பிறர் தங்கள் வினை தான்கொடுத்த லுண்டென்பதூஉம், அதுகோட்டமின்று நடுவுநிலைமையே யாமென்பதூஉம் ஏனைச் சமயத்தார்க்கும் ஒப்பமுடிந்தமையின், அஃதீண்டைக்குவமையா யிற்று. உம்மைசிறப்பின்கண்வந்தது. சலம் வஞ்சனை; அஃது ஈண்டுக் கோட்டத்தின்மேனின்றது. சார்ந்தென்னும்வினையெச்சம் அடியாரென்னும் வினைக்குறிப்பு முற்றுப் பெயர்கொண்டது. சார்ந்தவென்னும் பெயரெச்சத் தகரம் திரிந்து முடிந்ததெனினு மமையும். தாமும் பின்வந்த தானும் அசை. ஆதல் கொடுத்தலென் புழி ஆனுருபு விரித்துரைக்க; தாஞ்செய்தென்புழி ஆக்கம்உவம உருபின் பொருள்குறித்து நின்றது. பிராரத்தவினை அதி சூக்கும மாய்வருவதாகலின் அதனியல்பறிதல் அரிதென்பார் ஆய்ந்தார் முன்செய்வினையு மென்றார். உம்மை இறந்தது தழீஇயிற்று. ஆர் வினைத்தொகை. ஆய்தல் அப்பொருட்டாதல் மேற்காட்டினாம்.

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோவெனின், மேலைவெண்பாவிற் கூறியவாறு இறைபணியில் நிற்பவர்க்கு உளவாகிய முன்வினைப்பயன்களை அவரநுபவியாதபடி அவ்வினையைக் கூட்டுவிக்கும் முதல்வன் தன்முன்னிலையில் உடல் அநுபவிக்கும்படி செய்வன் என்றதனால் இறைபணி நில்லாத ஏனையோருக்கு அவர் முன்செய்த வினைப்பயன்களை அவரநுபவிக் கும்படி செய்வன் என்பது பெறப்படும். அவ்வாறு இருவேறுவகைப்படச் செய்வனாயின் முதல்வன் நடுவு நிலைமையின்றி ஒருபக்கஞ் சாரும் அநீதி யுடையவன் எனப்படுவன். படவே எல்லா உயிர்களிடத்தும் இரக்கம் உடையவன் முதல்வன் என்பதற்குக் குறைவுண்டாகும். இவ்வாறு கூறு வாரை நோக்கி அவ்வாறு செய்தல் குற்றமாகாது எனக்கூறி ஏதுவை வலியுறுத்தியவாறாம்.

(பொ-ரை.) ஒருவன் தன்னிடத்து அடைக்கலம் புகுந்தால் புகுந்த அவர்க்கு வருந் துன்பங்களை நீக்கி ஆதரவாய் நின்று அவரைக் காப்பது உயர்ந்தகுண முடையாருக்குக் கடமையாம். ஆதலால் முதல்வனுந் தன் னைச்சார்ந்து அடிமைத் திறம் உடையராய் நில்லாதாரை விலக்கி அவ்வாறு

நிற்பவர்க்கு வரும் துன்பங்களை நீக்கி ஆதரவாய் நின்று அவரைக் காப பன். அவ்வாறு சாராதாரை விலக்கிச் சார்ந்தாரைக் காத்தல்பற்றி ஒரு பக்கஞ்சாரும் அநீதியில்லாதவனுகி அவ்வாறு செய்தலால் தனக்கு விருப்பு வெறுபபு ஆகிய ஆகாமிய வினைச்சம்பந்தம இல்லாதவாறுபோலத் தன்னைச் சார்ந்து தன் அடித்தொண்டு செய்வாரைத் தன்போல் ஆகாமிய வினைச்சம் பந்தம் இல்லாதவராகச் செய்து தன்னைச்சாராத பிறர்க்குவரும் ஆகாமிய வினையை அவர்க்குக் கொடுப்பன் ஆதலால், ஆகாமியவினையை விலக்கியுங் கூட்டியும் செய்யுமாறு போலத் தன்னைச்சார்ந்த அடியாருக்குச் சூக்கும மாய்வரும் பிராரத்தவினையை அவரநுபவியாதபடி விலக்கியும் தன்னைச் சாராதாருக்குச் சூக்குமமாய்வரும் பிராரத்த வினையை அவரநுபவிக்கும்படி கூட்டியும் இருவேறுவகைப்படச் செய்வன் எ-று.

(க-ரை.) அடைக்கலம் புகுந்தவரைக் காத்தல் உத்தமர் கடமையாத லால் முதல்வன் தன்னைச் சார்ந்தவருக்கு ஆகாமிய வினையை இல்லாதவாறு செய்து, அதுபோல் பிராரத்த வினையும் அநுபவியாதவாறு செய்தும், தன் னைச் சாராதவருக்கு ஆகாமிய வினையைக் கூடுமாறு செய்து, அதுபோல் பிராரத்த வினையையும கூடுமாறு செய்தும், அவ்வாறு செய்தல்பற்றி நடுவு நிலைமை இல்லாதவனுகமாட்டான் என்பதாம்.

மேலை வெணபாவில் இறைபணியார்க்கில்லை வினை முற்செய்வினையும் தருவான் முன் என்றதுபற்றி இறைபணியில் நில்லாத ஏனையோர்க்கு அவர் செய்தவினையின் பயனைப் பக்குவ முறைப்படி அவரநுபவிக்கச் செய்து இறைபணியில் நிற்பவர்க்கு அவர் செய்த வினைப்பயனை அவரநுப வியாதவாறு விலக்குதல் இறைவனுக்கு நடுவு நிலைமையன்றென்பாரை நோக்கி அவ்வாறு செய்தலை உடன்பட்டே சமாதானங் கூறுங் கருத்துடைய ராய்ச் சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன் என்னும் பழமொழி எடுத்துக் காட்டி அவ்வாறு செய்தல் கடமையென அறிவித்து, ஆயினும் அப்பழ மொழியானது சார்ந்தவர் குற்றமுடையரேனும் காத்தல் கடன் என்னும் பொருளைத் தருமாதலால் நடுவு நிலைமையாகுமா என்பதற்குச் சமாதான மாகாதே என்னும் சந்தேகத்தை நீக்கி நடுவு நிலைமைதான் என்பதை வலி யுறுத்தவேண்டிச் சார்ந்தடியார் தாந்தாஞ் செய்து பிறர் தங்கள் வினைதான் கொடுத்தல் என ஆகாமியவினையை விலக்குவதையுங் கூட்டுவதையும் வேறு உவமையாக வைத்து எடுத்துக்காட்டி, அதுபோலப் பிராரத்த வினையினை யும் இருவேறு வகைப்படச் செய்வன் எனக்கூறினர். சார்ந்த அடியார்க் குத் தன்னைப்போல ஆகாமியவினையைக் கெடுத்துச் சாராத பிறருக்கு ஆகாமியவினையைக் கொடுத்தல் இறைவனிடத்திலுண்டென்பதூஉம், அவ் வாறு செய்தல் அநீதியன்று நடுவு நிலைமையேயாமென்பதூஉம், எல்லாச் சமயத்தார்க்கும் ஒப்ப முடிந்தமையின், அவ்வாகாமிய வினையானது பிரா

ரத்த வினையைப்பற்றிக் கூறும் இவ்விடத்துக்கு உவமையாயிற்று. இதனை "தன்னை யடைந்தார் வினை தீர்ப்பதன்றோ தலையாயவர் தங்கட னாவது தான்" எனவும், "சலமிலன் சங்கரன்சார்ந்தவர்க்கலால்—நலமிலன்" எனவும், வருந்தேவாரங்களானும் உணர்க.

சார்ந்தாரைக்காத்தும் என்றதிலுள்ள உம்மை காத்தலால் உண்டாகிய சலம் இன்மையான சிறப்பைக் குறித்து நிற்றலால் சிறப்பின்கண் வந்தது.

சலம் இலனாய் என்றவிடத்துச் சலம் என்றது வஞ்சனையாதலால் அவ்வஞ்சனை இவ்விடத்து அநீதியின்மேல் நின்றது.

சார்ந்தடியார் என்றது சார்ந்து அடியார் எனப் பிரியும். சார்ந்து என்றதன் இறுதியிலுள்ள உகரம் சந்தி விதிப்படி கெட்டது. சார்ந்து அடியாரென்ற அவற்றுள், சார்ந்து என்பது வினையெச்சம். அந்த எச்சம் அடியாரென்னும் பெயர்கொண்டுமுடிந்திருக்கின்றது. அவ்வாறு முடிந்த கருத்தென்னையெனின், அடியாரென்றது அடிமைத்தொழில் செய்தவர் செய்கின்றவர் செய்வோர் என்னும் பொருளில் நின்றமையால் வினைக்குறிப்பாயும் முற்றாயும், அடியார் என்ற சொல்லால் பெயராயும் நிற்றலால், அடியாரென்ற அது வினைக்குறிப்பு முற்றுப்பெயராயிற்று. வினைக்குறிப்பு முற்று இருந்தமையால் சார்ந்து என்னும் வினையெச்சம் அடியாரென்றது கொண்டு முடிந்தது. இவ்வாறன்றிச் சார்ந்த அடியார் என்று கொண்டு சார்ந்த என்னும் பெயரெச்சம் அடியாரென்னும் பெயர்கொண்டு முடிந்ததாகக் கூறினும் பொருந்தும். அவ்வாறு கூறுங்கால் சார்ந்த என்றதன் இறுதியிலுள்ள பெயரெச்சத்து அகரம் உகரமாய்த் திரிந்து முன்னர் அகரம்வந்தமையால் அவ்வுகரங் கெட்டதென்று கொள்ளல் வேண்டும்.

தாந்தாறு என்றதிலுள்ள தாம் என்பதும் தான் கொடுத்தல் என்றதிலுள்ள தான் என்பதும் அசை.

கடனாதல் என்றவிடத்தும், தான்கொடுத்தல் என்றவிடத்தும் ஆனுருபு விரித்துக் கடனாதலால் தான் கொடுத்தலால் என உரைக்கப்பட்டன.

தானச்செய்து என்றது தானாகச்செய்து என விரியும். தானாக என்றதில் ஆக என்பதுபோல என்னும் உவமப்பொருள் குறித்து நின்றது. ஆதலால் தானாக என்றதற்குத் தன்போல் என உரை செய்யப்பட்டது.

ஆகாமிய வினையாகிய முயற்சி தூலமாய் அறியப்படுதல்போலப் பிராரத்தவினை வந்து கூடுதல் தூலமாய் அறியப்படமாட்டாது. அதி சூக்குமமாய் வந்து கூடும். ஆதலால் அவ்வினையின் இயல்பு அறிதல் அரிதென்பதை அறிவிக்கவேண்டி ஆய்ந்துஆர் முன்செய் வினையும் என்றார்.

முன் செய் வினையும் என்றதிலுள்ள உம்மை மேற்கூறிய ஆகாமிய வினையேயன்றிப் பிராரத்த வினையும் என்னும் பொருளைக் குறித்தமையால் இறந்தது தழுவியது.

ஆய்ந்தார் முன் செய்வினையும் என்றதிலுள்ள ஆர் என்பது ஆரும் என விரித்து; கூடுவதாய என பொருள் கொள்ளப்பட்டமையால் ஆர் வினை என்பது வினைத்தொகை. முன் செய் என்றது இடைப்பிறவரல்.

ஆய் என்பது ஆய்தலென்னும் பொருளைக்குறித்து நுணுகியென்பதை உணர்த்திநின்றது. ஆய்தல் என்பது நுணுகுதல் என்னும் பொருளைத் தரும் என்பது மேல் ஏழாஞ் சூத்திரம் மூன்றும் அதிகரணத்து முதல் வெண்பாவில் ஆயிழையாய் என்றவிடத்துக் காட்டப்பட்டிருக்கின்றது.

முத்தருக்குப் பிராரத்த வினைப்பயன் தாக்குமாதலால் அதுபற்றி
ஆகாமியம் ஏறும் என்பாரை மறுத்து
பிராரத்தவினை தாக்கினும்
ஆகாமியம் ஏறாது எனக்கூறி மேலை வெண்பாவை வலியுறுத்தும்

உதாரணம்.

இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபான்
முன்செய் வினைமாயை மூண்டிடினும்—பின்செய்வினை
மாயையுட னில்லாது மற்றவன்றன் மெய்ப்பொருளே
யாயவத னுலுணரு மச்சு

சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், இறைபணி நிற்பார்க்குப் பிராரத்தவினை தாக்குதலுண்டென்பதற்குத் "தினைத்துணை யேனும் பொறேன்றுய ராக்கையின் றிண்வலையே" என்றற் றொடக்கத்தான் அவர் கூறுந் திருவாக்குகளே சான்றாகலின், அஃதவர்க்குச் செய்வோர் செய்திப்பயனு யொழியுமென்றல் அமையாமையின் அஃதுண்டாகவே அதுபற்றி நிகழும் ஆகாமியமும் பிறவிக்குவித்தாய் நிலைபெறுதலுண்டுபோலு மென்பாரை நோக்கி ஆண்டுப் பிராரத்த வினை தாக்குதற் கேதுக் கூறி அதுபற்றிச் செய்வோர் செய்திப் பயனு யொழிதற்கு இழுக்கில்லை யெனவலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) இங்குளி வாங்கும் கலம்போல—(தன்பால் வைத்தெடுக்கப்பட்டொழிந்த) பெருங்காயத்தினின்றும் (அதன்வாசத்தை) வாங்கிக்கொள்ளும் பாசனத்தின்கண் (அவ்வாசம்மங்கிப்போய் மெலிதாய்க் கந்திக்குமாறு) போல,—ஞானிபால் முன்செய்வினை

மாயை மூண்டிடினும்— இறைபணி நிற்குந் தத்துவ ஞானிக்குப் (பயிற்சிவயத்தான் ஓரோவழி நாடு மூள மூண்டாதலும் உண்மை யின் அதுபற்றிப்) பிராரத்தவினையும் அதற்கு வாயிலாகிய உடம்பு முதலிய மாயேயமும் (மங்கிப்போய் வாசனைமாத்திரையாய் மெலி தாய் வந்து) மூளுமாயினும்,—பின்செய்வினை மாயையுடன் நில் லாது—(அம் மூட்சிபற்றி ஒரு தலையாணிகழ்வ தாகிய) ஆகாமிய வினை (மேலைக்கு வித்தாய் நிலைபெற்று முறுகுதலின்றித் தனக்கு வாயிலாகிய) மாயேயத் தோடு கெட்டொழியும்,—அவன்தான் மெய்ப் பொருளை ஆபவதனால்மற்று அச்சுஉணரும்—(இறைபணி நிற்கும்) அவன் சத்தாயுள்ள சிவம்பயாய வாற்றல் (ஓரோவழி அவ்வாசனைபற்றிப் பிறழுவரினும் பிறழவொட்டாத) அவ்வச்சினை யேநோக்கி நிற்பனாகலான் எ-று.

ஒளி இருளைத் தூக்குமாறுபோல அவ்வுணர்வு அவ்வாகாமி யத்தைத் தூக்குமென்பதாம். 'தொல்லையில் வருதல் போலத் தோன்றிரு வினைய துண்டே—லல்லொளி புரையுஞானத் தழலுற வழிந்து போமே' எனப் புடைநூலாசிரிய ரோதியதூஉம் அது. உளி ஐந்தாம் வேற்றுமை யுருபுபட நின்றது. ''மந்திர விதியின் மரபுளி வழாஅ—வந்தணர் வேள்வி'' என்றாற்போல. முற்றுகரக் கேடு இலேசாற் கொள்க. வாங்குதற்குச் செயப்படு பொருள் அவாய் நிலையான் வந்தது. மூண்டிடினும் எனவே, மூளுதலொரு தலையன் றென்பது பெற்றாம். மாயை ஆகுபெயர். மற்று வினைமா ற்றின்கண் வந்தது. தானென்பது அநுவதித்தற்கண் வந்த இடைச்சொல். பிறழவிடாமை பற்றி மெய்ப்பொருளை அச்சாக உருவகஞ் செய்தார்.

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ எனின், இறைபணி நிற்கும் முத்தர்க்குப் பிராரத்தவினை தாக்குதலுண்டு என்பதற்குத் திருவாசகம் நீத் தல் விண்ணப்பம் ௩௬-வது செய்யுளில் ''தினைத்துணை யேனும் பொறேன் றுய ராக்கையின் றிண்வலையே'' என்றது முதலாகக் கூறும் மாணிக்கவாசக சுவாமிகள் திருவாக்குக்களே சாட்சியாகும். இத்திருவாக்கின் கருத்து உடம்பாகிய வலிய வலையினால் வருந்துயரைச் சிறிதும் தாங்கமுடியாது என் பதாம். முத்தராகிய மாணிக்கவாசகரே இவ்வாறு கூறுவாராயின் மேலே வெண்பாவிற் கூறியவாறு சார்ந்தாருக்குப் பிராரத்த வினைப்பயனைக் கெடுத் தும் சாராதாருக்கு அவ்வினைப்பயனைக் கொடுத்தும் அவ்வாறு முதல்வன்

இருவேறு வகைப்படச் செய்வன் என்றது எவ்வாறு பொருந்தும்? பொருந்தாமையால் முத்தருக்குப் பிராரத்தவினை உண்டு என்றாகிப் பிராத்தவினையின்பயனை அநுபவிக்கு முறையில் நிகழும் முயற்சியாகிய ஆகாமிய வினையும் மேற்பிறவியை யுண்டுபண்ணுதற்கு வித்தாக நிலைபெறுதலுண்டு என்பாரை நோக்கி, இறைபணியில் நின்றவிடத்தும் பிராரத்தவினை தாக்குதற்குப் பழக்கவாசனையே எது வெனக்கூறி, அப்பழக்கவாசனை பற்றி அடிமைத்திறமாகிய இறைபணி நிற்றலின் பயனாய் ஆகாமியவினை ஏறாது ஒழிதற்குக் குறைவில்லை யெனமேலைவெண்பாவின் கருத்தை வலியுறுத்திய வாறும்.

(பொ-ரை.) மண்பாண்டத்தில் பெருங்காயத்தைவைத்து எடுத்துவிட்டாலும் அப்பெருங்காயத்தின் வாசத்தை மண்பாண்டம் விடுவதில்லை. பெருங்காயம் இருந்த பழக்கத்தாலுண்டாகும் அவ்வாசம் பெருங்காயம் இருந்த பொழுது வீசுவதுபோல் வீசாமல் மங்கிப்போய் மெலிதாகவீசும். அதுபோல இறைபணியில் நிற்கும் தத்துவஞானிக்கு உடம்போடு கூடி இருந்த பழக்கவாசனையால் அவ்வுடம்புதானல்லவென நீங்கியவிடத்தும் ஒவ்வொரு சமயங்களில் உடம்பைத் தான் என எண்ணும் எண்ணமுண்டாகும். உண்டாகவே, அதுபற்றி அவ்வுடம்பிற்குரிய பிராரத்தவினையின் அநுபவமும் அவ்வநுபவத்துக்கு வழியாகிய தனுகரணபுவன போகமென்னும் மாயாகாரியங்களும் மங்கிப்போய் மெலிதாய் வந்துதாக்கும். தாக்கினும் அத்தாக்குதலுக்கு அவசியம் வேண்டப்படுவதாகிய முயற்சி யென்னும் ஆகாமிய வினை மேலும் பிறவியைத்தருதற்கு வித்தாய் நிலை பெற்றுவளராமல் அம் முயற்சிக்கு வாயிலாகிய உடலோடு கெட்டொழியும். முயற்சியைச் செய்தும் அம்முயற்சி ஆகாமியமாய் ஏறுமைக்குக் காரணமென்னை யெனின், இறை பணிநிற்கும் முத்தன் மெய்ப்பொருளாகிய சிவமேயாய் நிற்பனாதலால் ஏகதேசத்தில் பழக்கவாசனைபற்றிச் சிவமாந்தன்மையில் நின்றுபிறழவரினும் பிறழவொட்டாது செய்யுஞ்சிவமாகிய அவ்வச்சினையே நோக்கி நிற்பனன்றி உடம்பை நோக்கிநிற்கமாட்டானாகலான் உடம்புபற்றிவரும் ஆகாமியவினை ஏறுதலில்லை எ-று.

(க-ரை.) பெருங்காயம் இருந்த பாண்டத்தில் பெருங்காய மில்லாத பொழுதும் வாசனை மெலிதாக வீசுவதுபோல இறைபணி நிற்கும் முத்தர்க்கு அஞ்ஞான மில்லாதொழிந்தும் பழக்கவசத்தால் உடம்புமுதலியனமெலிதாய் வந்து கூடும். கூடினும் சிவனையே நாடிநிற்றலால் அவ்வுடம்பு முதலியவற்றாலுண்டாகும் முயற்சியாகிய ஆகாமியவினை மேல்வினையாக ஏறாமல் உடம்பு உள்ள அளவும் அம் முயற்சியும் நிகழ்ந்து உடம்புகெடும்போது அம் முயற்சியும் இல்லையாய் ஒழியும் என்பதாம்.

இறைபணி நிற்கும் முத்தருக்கு ஆகாமியவினையை மேல்வினையாக ஏறாமற் கெடுத்தல் எதுபோல எனின், சூரியன் முதலியவற்றின் ஒளி இரு

ளைக் கெடுக்குமாறுபோலாம். எனவே சிவனையே நாடும் அவ்வுணர்வு, வாசனை பற்றி நிகழும் முயற்சியாகிய அவ்வாகாமிய வினையை மேல்வினையாக ஏற வொட்டாமற் கெடுக்கும் என்பதாம். இக்கருத்துப்பற்றியே சிவப்பிரகாசம் க0-ம் சூ-ம் க0-வது செய்யுளில் முன்வந்த வாறுபோலப் பிராரத்தமும் ஆகாமியமும் வரினும் விளக்கின்முன் இருள்போல ஞானக்கினி முன்னர் அவ்விரண்டும் அழிந்துபோம் எனப்புடை நூலாசிரியர் அருளிச்செய்தனர்.

இங்குளி என்பதில் இங்கு என்பது பெருங்காயம். உளி என்பதுஐந் தாம்வேற்றுமை இன் உருபாகநின்றது. ஆதலால் இங்குளி என்பதற்குப் பெருங்காயத்தின் என உரைசெய்யப்பட்டது. உளிஎன்பது இன் உருபாக வருமென்பதைத் திருமுருகாற்றுப்படைத் திருச்சீரலைவாய் அகவலில் பதினெட்டாவது அடியில் "மந்திர விதியின் மரபுளி" என்றவிடத்து மரபுளி என்றது மரபின் என்னும் பொருளில் நின்றவாறுபற்றி அறிக.

இங்குளி என்பதில் இங்கு என்றதுவடமொழி. தமிழ்மொழியாயின் இங்கு என்றதிலுள்ள உகரம் குற்றியலுகரமாகும். வடமொழியில் குற்றிய லுகரம் இல்லாமையால் அது முற்றுகரமேயாம். அம்முற்றுகரம் உளி என்றசொல் முன் வந்தமையாற் கெட்டது. இவ்வாறு கெடுதல் இலேசாற் கொள்ளப்படும். "உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும் * * * முற்றுமற் றொரோவழி" என்ற விதியால் முற்றுகரம் சில இடத்திற் கெடுமென்பது பெறப்படுதலால் அந்த இலேசினால் இங்குளி என்ற இவ்விடத்தில் முற்று கரக்கேடு கொள்க. இலேசு ஏகதேசம்.

இங்குளி வாங்கும் என்றதில் இதனைவாங்கும் என்று கூறாமையால் வாங்குதலாகிய செயலுக்குச் செயப்படுபொருளாகிய வாசனை அவாய் நிலையால் வருவிக்கப்பட்டது.

மூண்டிடினும் என்றதனால் மூளுதல் உறுதியாயுண்டென்று சொல்லக் கூடாதென்பது விளங்கும். விளங்கவே வாசனையுள்ள விடத்துத் தாக்கும் வாசனை இல்லாதவிடத்துத் தாக்காது என்பதாம்.

மாயை என்ற இரண்டிடத்தும் மாயையின் காரியத்தைக் குறித்து நிற் றலால் மாயை ஆகுபெயர்.

மற்றவன்றான் என்பதிலுள்ள மற்று என்றது பிறழவரினும் பிறழ வொட்டாது செய்யும் என்னும்பொருள் தந்து நிற்றலால் வினை மாற்றின் கண் வந்தது.

மற்றவன்றான் என்பதிலுள்ள தான் என்பது மேற்கூறிய இறைபணி நிற்றலை யநுவதித்து இறைபணி நிற்கும் அவன் எனக்கூறுதற்காக நின்ற இடைச் சொல்.

சக்கரத்தைப் பிறழவொட்டாது நிலைத்திருக்கும்படி செய்யும் அச்சுப் போல வினைவயத்தால் ஞானியைப் பிறழவொட்டாது நிலைத்திருக்கச் செய்வது மெய்ப்பொருளாதலால் அம்மெய்ப்பொருளை அச்சாக உருவகஞ்செய்தார். மெய்ப்பொருளை அச்சாக உருவகஞ்செய்து தன்னைச் சக்கரமாக உருவகஞ் செய்யாமையால் இஃது ஏகதேசஉருவகம்.

பின்செய்வினை என்றது கனிச்சீராதலால் யகர ஒற்றை நீக்கி வெண்பாத்தளை தட்டாதவாறு காய்ச்சீராகக் கொள்க.

முத்தருக்குப் பிராரத்தவினை தாக்கினும் அவர் மெய்ப்பொருளையே நோக்கி நிற்றலுக்கு உவமைகூறி மேலை வெண்பாவை வலியுறுத்தும்

உதாரணம்.

நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்
பண்ணமர மாச்செலுத்தும் பாகரினு—மெண்ணி
யரனடி யோர்பவ ரைம்புனலிற் சென்று
மவர்திற னீங்கா ரதற்கு.

சிற்றுரை.

எ—து உ—ம் எ-னின், முன்செய்வினை மாயை மூண்டவழியும் அந்நிலையிற் பிறழவொட்டாது அவ்வச்சினையே யுணர்ந்து நிற்றல் யாங்ஙனமென்பாரை நோக்கி உவமை முகத்தான் அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) நண் அனல் வேவாத நற்றவர் தம்மினும் பண் அமர மாச்செலுத்தும் பாகரினும்—(அங்கித் தம்பனத்தால்) நண்ணனல் வேவாமைக்கேதுவாகிய நற்றவமுடையார் (அவ்வனலுட் கிடப்பினுந் தந்திறலினீங்காதவாறு) போலவும் பண்ணுதலமைப் பரிமா வூர்தற்குரிய பாகநூல் கற்றுவல்லார் (அப்பரிமாவின் வேகத்துட் படினுந் தந்திறலினீங்காதவாறு) போலவும்,—எண்ணி அரன் அடி ஓர்பவர்—(ஐம்புலன்களில் அகப்படாமைக்கு உபாயம் யாதென்) றெண்ணி முதல்வன் திருவடியாகிய அச்சையுணரவல்லார்,— ஐம்புலனில் சென்றும் அதற்கு அவர் திறல் நீங்கார்— (முன்செய்வினைமாயை மூட்டிபற்றி) ஐவகைப்பட்ட விடயங்களிற் சென்றாராயினும் அதனால் அவர் தந்திறலிற் றீர்ந்து பந்தத் தொடக்குறுவாரல்லர் எ-று.

பொருள்வினை உவமையினுஞ் சென்றியைந்தது. நண்ணனல் கீழ்நீர்போல முன்பின்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத்தொகை. நள்ளனல் நண்ணனலென மரீஇயிற்று; "நீணுலகெலாம்" என்றாற் போல. தம்மால் நண்ணப்படும் அனலென்றுரைப்பினு மமையும். பண்ணுதல் கற்பித்தல். இன்னிரண்டும் உவம உருபுகள். உம்மை எண்ணும்மை. சென்றுமென்னு மும்மைசிறப்பு. அதற்கென்பது உருபுமயக்கம்.

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ வெனின், மேலைவெண்பாவிற் கூறியவாறு இறைபணியில் நிற்பவர்க்கு முன்செய்த பிராரத்தவினையும் அதன்பயனாக வரும் மாயாகாரியங்களாகிய தனுகரண புவன போகங்களும் வந்துதாக்கினவிடத்தும் அதனால் இறைபணியில் நின்றும் பிறழாமல், பிறழவொட்டாது காக்கும் மெய்ப்பொருளாகிய அச்சினையே அவர் உணர்ந்து நிற்றல் எவ்வாறு கூடுமென்பாரை நோக்கி உவமையில் வைத்துக் கூடுமெனக் கூறி மேலை வெண்பாவின் கருத்தை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) அக்கினியின் நடுவே இருந்தும் அவ்வக்கினியினால் சுடப் பெறாமல் இருக்கும்படி செய்வது அக்கினியின் சூட்டைத் தடுக்கும் சித்தி யாகிய அங்கித்தம்பனம். அவ்வங்கித்தம்பனமாகிய நற்றவமுடையார் அக் கினியினுள்ளே கிடப்பினும் தன்னுடைய வலிமையினின்றும் நீங்கார். அதுபோலவும், நடக்குங் கதியின்படி விரைவாக நடக்கக்கூடிய குதிரையை அவ்வாறு நடக்கும்படி செலுத்தி அக்குதிரையின்மேலேறிச் செல்லுங்கால் நடத்தும் முறைமைபைக்கூறும் பாகநூல் கற்றுத் தேர்ச்சியடைந்தவர் அக் குதிரையின் வேகமான நடையினால் தன்தைரியத்தை விடார். அதுபோ லவும், ஐம்புலன்களில் தான் கட்டுப்படாதிருத்தற்கு உபாயம் யாதென்று ஆராய்ந்து முதல்வன் திருவடியை யுணர்தலே உபாயம் என்று எண்ணித் திருவடியாகிய அச்சை உணரவல்லவராகிய இறைபணியில் நிற்பவர் பிராரத்தவினையின் பயனாக மாயாகாரியங்கள் வந்து தாக்குதலால் சத்தமுத லாகிய ஐவகை விடயங்களில் பிரவேசித்தாராயினும் அந்தப்பிரவேசத்தால் அவர் முத்தியாகிய தம் வெற்றிப்பாட்டில் நின்றும் நீங்கிக்கட்டுப்பட்டுத் தொடக்குறமாட்டார் எ-று.

(க-ரை.) அங்கித்தம்பனமாகிய சித்தியை உடையவர் அக்கினியிற் குளிப்பினும் அவ்வக்கினியாற் சுடப்பெறாதவாறுபோலவும், பாகநூல் கற் றுத்தேர்ச்சி பெற்றவர் குதிரையில் ஏறிச் செல்லுங்கால் அக்குதிரையின் வேகமான நடையினால் மனங்கலங்காதவாறுபோலவும், ஐம்புலன்களின் நின்றும் அனாதியே நீங்கிநிற்குந் தன்மையினால் "பொறிவாயில் ஐந்த வித்தான்" எனக் கூறப்படும் இறைவன் திருவடியை உணர்ந்தவர் பிரா

ரத்தவினையால் ஐம்புலன்களைக் கூடினுந் திருவடியில் நின்றும் நீங்கி அவ்வைம்புலன்களிற் கட்டுப்படார் என்பதாம்.

இவ்வெண்பாவில் அரன் அடி ஓர்பவர் உவமேயம். நற்றவரும் பாகரும் உவமை. உவமேயத்துக்குக் கூறிய அவர் திறல் நீங்காரென்னும் வினை, நற்றவர் பாகர் என்னும் உவமையினும் சென்று பொருந்துமாதலால் அவ்வாறு உரைசெய்யப்பட்டது. அனல் நண் என்பது நண் அனல் என நின்றது. இது எதுபோல எனின், நீர்க் கீழ் என்பது கீழ்நீர் என வருமாறு போலாம். இவ்வாறு முன்னே இருக்கவேண்டிய பதம் பின்னாகத் தொக்கு நிற்றல் முன்பின்னாகத் தொக்க நிலை என்று கூறப்படும். நண்ணனல் என்றது அவ்வாறு தொக்கு நின்று அனலினது நண் என்னும் பொருளைக் குறித்துநிற்றலால் முன்பின்னாகத் தொக்க ஆறாம்வேற்றுமைத் தொகை. நள் அனலென்றிருக்கவேண்டுவது செய்யுளின் எதுகைநோக்கி நண்ணனல் என மருவி நின்றது. இது எதுபோல எனின், திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம் கோயில் திருக்குறுந்தொகையில் நீளுலகெலாம் என்றிருக்க வேண்டுவது "நீணுலகெலாம்" என நின்றாற்போலாம். நள் என்பது நடு. இவ்வாறன்றி நண்ணனல் என இருந்தவாறேகொண்டு தம்மால் நண்ணப்படும் அனல் என்று உரைப்பினும் பொருந்தும். நண்ணப்படுதல் - பொருந்தப்படுதல்.

பண்ணமர என்றவிடத்து பண் என்றது பண்ணுதலைக் குறித்தது. பண்ணுதல் என்றது கதிகளைஉடைய குதிரையை வேகமாய் நடக்கும்படி செலுத்துதல்.

நற்றவர் தம்மினும் பாகரினும் என்றவிடத்துள்ள இன் உருபு இரண்டும் போல என்னும் பொருளைக் குறித்தமையால் உவம உருபுகள். அவ்விரண்டிடத்தும்நின்ற உம்மை எண்ணைக்குறித்து நிற்றலால் எண்ணும்மை. ஐம்புலனிற் சென்றும் என்றதிலுள்ள உம்மை செல்லக்கூடாத இழிந்த இடத்திற் சென்றாலும் என்னும் பொருள்குறித்து நிற்றலால் இழிவு சிறப்பு

அதற்கு என்பது அதனால் என்னும் பொருளில் நின்று மூன்றாம் வேற்றுமை ஆல் உருபு நான்காம் வேற்றுமைக் குவ்வுருபாக மயங்கினமையால் உருபு மயக்கம்.

முத்தரைப் பிராரத்தவினை தாக்குங்கால் அவர் மெய்ப்பொருளில் நிலைத்திருப்பரென்றது பொருந்ாதென்பாரை மறுத்துப் பொருந்துமெனக் கூறி மேலை வெண்பாவை வலியுறுத்தும்

உதாரணம்.

சதசத்தா மெய்கண்டான் சத்தருளிற் காணி
னிதமித்தல் பாசத்தி லின்றிக்—கதமிக்
கேரிகதிரின் முன்னிருள்போ லேலா வசத்தி
னருகணையார் சத்தணைவா ராங்கு.

## சிற்றுரை.

ஏ—து உ—ம் எ—னின், சார்ந்ததன் வண்ணமாய்ச் சதசத்தெனப்படு மியல்புடையார் அரனடியோரினும் ஐம்புலனிற் சென்றுழி அவற்றிற் றொடக்குண்ணுது திறலுடையாராதல் யாங்ஙனமெனபாரை நோக்கிச் சார்ச்சிக்கட்படும் விசேடங்கூறி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) சதசத்து ஆம் மெய்கண்டான் சத்து அருளின் காணின்—(தன்ஞற் சாரப்படுவனவாகிய சத்தினும் அசத்தினும் அதுவதுவாதல்பற்றிச்) சதசத்தென்னுந் தன்னுண்மையையுணர்ந்தோன் சத்தாகிய முதல்வன் றிருவருளாலல்லது ஒன்றையுங் காணுய் அவ்வருளின் வழிநின்று காணுமாயின்,— பாசத்தில் இதமித்தல் இன்றி—(அவ்வழிப்)பாசமாகிய அசத்தின் இதஞ்செய்தலின்மையால்,—சத்து அணைவார் கதம்மிக்கு எரிகதிரின் முன் இருள்போல் ஆங்கு ஏலா அசத்தின் அருகு அணையார்—சத்தாகிய முதல்வனைத் தலைப்பட்டு நிற்பார் சீற்றமிக் கெரியாநின்ற சுடரின் முன்னர் அந்தகாரம் போலச் சத்தெதிர் தனது சத்தியேற்கமாட்டாத அசத்தாய ஐம்புலனின் மாட்டெய்தி நிற்பாரல்லர் எ-று.

வேறு முடிபாகலின் ஒருமைப்பன்மை மயக்கமின்மையுணர்க. அருளி னென்னும் இன்னுருபு ஏதுப்பொருட் கண் வந்தது. இதமித்தல் பெயரடியிற் பிறந்த வினைப்பெயர். இதஞ்செய்தல் பற்றுச் செய்தல். இன்றி யென்னுஞ் செய்தெ னெச்சக்குறிப்புக் காரணப் பொருட்டாய் நின்றது. இன்மைக்கேதுக் கூறுவார் கதமிக்கெரிகதிரின் முன்னிருள்போ லேலாவசத்தென்றூர். கதமிக் கெரிகதிரென்றது ஒப்புமை பற்றிய உபசாரவழக்கு. "எல்லையில்லவனெரிதுள்ளி ஞலென வெகுண்டான்" என்பதனுனும் ஒப்புமையாதலுணர்க. இதனுற் போந்தது, சத்தும் அசத்துந் தம்முட்சமமல்ல வாகலான் அரனடியோர்பவர் ஐம்புலனிற் சென்றுலும் அதுபற்றி 'அவர்திற னீங்கா' ரென மேலது வலியுறுத்த வாறுமென்க. ஏகனுகி நிற்றலான் மலமின்றுதலும் இறைபணி நிற்றலான் மாயை வினைக ளிலவாதலும் பெறப்பட்டமையின், மலமாயை தன்னெடு வல்வினை யின்றே யென்பதனை வேறோரதிகரணமாக வைத்தோதாராயினர்.

பயனியல் பத்தாஞ்சூத்திரம்.உ-ம் அதி. ௫௨௪

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) சதசத்து ஆம் மெய்கண்டான் சத்து அருளின் காணின் பாசத்தில் இதமித்தல் இன்றிச் சத்து அணைவார் கதம் மிக்கு எரி கதிரின் முன் இருள்போல் ஆங்கு ஏலா அசத்தின் அருகு அணையார்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோ வெனின், உயிரானது சத்தைச் சார்ந்த விடத்துச் சத்தாயும் அசத்தைச் சார்ந்தவிடத்து அசத்தாயும் நிற் றற்கு உரிமை யுடையது ஆதலால் சதசத்தெனப்படுந்தன்மையினையுடைய அவ் வுயிர் இறைவன் திருவடியைப் புணரினும் அத்திருவடியை விட்டு ஐம்புலனிற் சென்ற விடத்து அவ்வைம்புலனும் நிற்றல் இயல்பு. அவ்வாறு கவும் ஐம்புலனிற் சென்றவிடத்தும் அவ்வைம்புலனிற் கட்டுப்படாமல் இறைவன் திருவடியையே நினைந்திருப்பர் என்று மேலை வெண்பாவிற் கூறியது எவ்வாறு பொருந்து மென்பாரை நோக்கித் திருவடியைச் சார்த லின்கண் உண்டாகும் விசேடத்தால் ஐம்புலனிற் கட்டுப்படாமை கூடு மெனக் கூறி மேலை வெண்பாவின் கருத்தைவலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) சத்தைச் சார்ந்தவிடத்துச் சத்தாயும் அசத்தைச் சார்ந்த விடத்து அசத்தாயும் நிற்றல்பற்றிச் சதசத்தெனப்படுந் தன்மை தனக்கு உண்டென்று அறிந்தவன் சத்தாகிய முதல்வன் திருவருளை அடைந்து அத் திருவருளாலன்றி ஒன்றையுங் காணுதவனாகி அவ்வருளின் ஏவல்வழியில் நின்று ஐம்புலனைக் காணில் அவ்வாறு காணுமிடத்துப் பாசமாகிய அவ் வைம்புலன்களும் அப்புலன்களுக்குரிய இன்பத்தைச் செய்வதில்லை. இன் பத்தைச் செய்யாமைக்கு ஏது சத்தின்முன் அசத்து முனைத்து நில்லாமை யேயாம். முனைத்து நில்லாமை எதுபோல எனின், மிக ஓங்கி எரிகின்ற சுடரின் முன்னர் அந்தகாரமாகிய இருள்முனைத்து நில்லாதவாறுபோலாம். ஐம்புலன்களும் இன்பத்தைச் செய்யாமையால் சத்தாகிய முதல்வனைக் கூடின முத்தர் சத்தின் முன்னர் முனைத்து நிற்கும் வலிமையில்லாத அசத் தாகிய அவ்வைம்புலனிற் கட்டுப்படார் எ-று.

(க-ரை.) முதல்வன் திருவருளைப் பெற்று அவ்வருள்வழி நிற்பவர் முதல்வன்முன் முனைத்து நிற்கமாட்டாத ஐம்புலன்களைக் கூடினும் அப் புலன்கள் இன்பஞ் செய்யாமையால் அப்புலன்களிற் கட்டுப்படார் என் பதாம்.

மெய்கண்டான் என்றது ஒருமை. அருகணையார் என்றது பன்மை. ஒருமையும் பன்மையும் மயங்கிநிற்றல் கூடாதே எனின், மெய்கண்டான் அருளிற் காணின் என்பது ஒருமுடிபும் சத்தணைவார் அசத்தின் அருகணை யார் என்பது வேறொரு முடிபும் ஆதலால் ஒருமைப்பன்மை மயக்கம் இல் லாமை யறிக.

அருளிற் காணின் என்றவிடத்து அருளின் என்றதிலுள்ள இன்னுருபு அருளாலென்னும் பொருளைக் குறித்தமையால் ஏதுப்பொருளின்கண் நின்றது.

இதஞ்செய்த லென்றிருக்கவேண்டுவது இதமித்தல் என நின்றது. இதமித்தல் என்றது இதம் என்னும் பெயரடியாகப் பிறந்ததொழிற் பெயர். இதம் செய்தல் என்பது இன்பமுண்டாகும்படி பற்றிச் செய்தல். ஆதலால் இதமித்தல் இன்றி என்பதற்கு இன்பஞ்செய்தல் இல்லையென உரைசெய்யப் பட்டது.

இதமித்தல் பாசத்தில் இன்றி என்றவிடத்து இன்றி என்றது சத்து அணைவார் என்றதுகொண்டு முடியவேண்டிய எச்சமாய் நிற்றலால் செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சக் குறிப்பு. அது, கட்டுப் படாமைக்குக் காரணமாய் இன்மையால் என நிற்றலால் செய்து என்னும் எச்சக்குறிப்பாய்க் காரணப் பொருளில் நின்றது என அறிக.

இன்பஞ் செய்தலில்லை என்பதற்கு ஏதுக்கூறவேண்டிக் கதமிக்கு எரிகதிரின் முன் இருள்போல் ஏலா அசத்தென்று சத்தின் முன்னர் அசத்து முனைத்து நில்லாமையை ஏதுவாகக் கூறினர்.

கதமிக்கு எரிகதிர் என்றதில் கதம் என்றது கோபம். அக்கினிக்குக் கோபம் உண்டென்று கூறிய கருத்தென்னை யெனின், கோபம் வந்தபொழுது மனந்துடிக்கின்றவாறுபோல அக்கினி சுடர்விட்டுத்துடித்துமேலோங்குதலைக் குறித்து நிற்றலால் கதமிக்கு எரிகதிர் என்றது கோபத்தின் ஒப்புமைபற்றிய உபசாரவழக்கு. அக்கினிக்கும் கோபத்திற்கும் ஒப்புமை உண்டென்பது திருக்குறள் வெகுளாமை கூ-வது பாட்டில் "சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி" என்பதனானும், பெரியபுராணம் அமர்நீதி நாயனார் சரிதம் உகூ-வது செய்யுளில் "எல்லையில்லவன் எரிதுள்ளினலென வெகுண்டான்" என்பதனானும் அறிக. துள்ளுதல் என்பது துடித்தல். சேர்ந்தாரைக் கொல்லி என்பது நெருப்பு.

இவ்வெண்பாவினால் கூறி முடித்த பொருளாவது, பேரறிவாகிய சத்தும் சடமாகிய அசத்தும் சமம் அல்ல ஆதலால் சத்தாகிய அரன் அடியை அறிந்தவர் அசத்தாகிய ஐம்புலனிற் சென்றாலும் சென்றதுபற்றி அரனடியைவிட்டு ஐம்புலனிற் கட்டுப்படார் எனக்கூறி மேலை வெண்பாவில் "அவர் திறல் நீங்கார்" என்றுகூறியதை வலியுறுத்திய வாறும்.

இச்சூத்திரம் ஏகனாகி நிற்றல் ஓரதிகரணமும் இறைபணி நிற்றல் ஓர் அதிகரணமும் மல மாயை. கன்மம் இல்லையாதல் ஓர் அதிகரணமுமாக மூன்றதிகரணங்களாக வகுக்கப்பட வேண்டுவதாயினும், ஏகனாகி நிற்றலால் மலம் இன்றாதலும் இறைபணி நிற்றலால் மாயையும் வினையும் இலவாதலும் பெறப்பட்டமையின், மலமாயை தன்னொடு வல்வினை யின்றே என்பதனை வேறு ஓரதிகரணமாக வைத்து இவ்விடத்து ஓதாராயினர். ஆயினும் அதன்கண் சந்தேகம் உண்டாகாமைப் பொருட்டுப் பன்னிரண்டாஞ் சூத்தி

ரத்து முதலதிகரணத்தில் சம்பந்தம்பற்றி வேறுவைத்துக் கூறுகின்றாராத லின் அதிகரணத்திற் குரிய ஐயப்பாடு முதலியன எல்லாம் அவ்விடத்துக் காண்க.

இச்சூத்திரத்தினாலும் அதிகரணங்களினாலுங் கூறி முடித்ததொகைப் பொருள்:—எழாஞ் சூத்திர முதல் மூன்று சூத்திரங்களினாலும் சாதன இயல் கூறி முடித்து இப்பத்தாஞ் சூத்திரம் முதல் மூன்று சூத்திரங்களி னால் பயனியல் கூறத்தொடங்கிப் பாசநீக்கமும் சிவப்பேறும் என்னும் பயன் இரண்டனுள் பாசநீக்கம் ஆன்மசுத்தியின் பயன் ஆதலால் ஒன்பதாஞ் சூத்திரத்தில் ஆன்ம சுத்தி கூறினமையின் அதன் பயனாகிய பாசநீக்கத்தில் ஆணவங் கன்மம் மாயை என்னும் பாசம் மூன்றனுள் முதல்வனுடன் ஏகனாய் நிற்றலால் ஆணவமல நீக்கமும் அவன் அருள்வழியாகிய இறைபணி நிற்ற லால் மாயை கன்மங்களின் நீக்கமும் உண்டாகுமென இப்பத்தாஞ் சூத்தி ரத்தாற் கூறினார். கூறவே, ஒன்பதாஞ் சூத்திரத்திற் கூறியவாறு ஞானக் கண்ணால் முதல்வனைக் கண்டு ஆன்மசுத்தி பெற்றதேபோதும் அதன்மேற் செய்யவேண்டுவது ஒன்றுமில்லை யெனச் சிவசமவாத சைவர் கூற, முதல திகரணத்தால் அவரைமறுத்து முதல்வனைக் கண்டவிடத்தும் கண்டோம் என்னும் போதம் அறாமையால் அப்போதமாகிய யான் என தென்னும் மயக்கம் அறுதற் பொருட்டு முதல்வனிடத்து ஏகனாகி நிற்கவேண்டுமெனக் கூறினார். கூறவே, உடம்பு உள்ள அளவும் பிராரத்தவினையும் அது பற்றி உண்டாகும் முயற்சியாகிய ஆகாமிய வினையும் நீங்கா ஆதலால் ஏகனாகிநிற் றல் எவ்வாறு கூடுமெனச் சுத்தசைவரும் அவருக்குக் கீழ்ப்பட்டவருங் கூற இரண்டாம் அதிகரணத்தால் அவரைமறுத்து இறைவன் திருவருளை இன் றித்தனக்குச் செயலில்லையென அறிந்து எச்செயலும் அவன் செயலாகவே காணும் இறைபணியில் நிற்பவர்க்குப் பிராரத்தவினை உயிரைத் தாக்காமல் முதல்வன் சந்நிதியில் உடலுழாகவும் ஆகாமியவினை வறுத்த வித்துப்போல் மேற்பிறவியை உண்டுபண்ணாமலும் கழியும் என்றும், இறைபணியில் நிற் பவர்க்கு அவ்வாறு வினையை ஒழித்து ஏனையோருக்கு வினையைக் கூட்டு வித்தலால் இறைவன் நடுவுநிலைமைக்குக் குறைவில்லை யென்றும், இறை பணியில் நிற்பவர்க்கும் ஏகதேசத்தில் பிராரத்தவினை தாக்குதல் பழக்கவாச னைபற்றியே ஆதலின் உண்மையுணரும் ஞானத்தால் அப்பழக்க வாசனை பற்றி ஆகாமியவினை ஏறுமாறில்லை யென்றும், அந்தஞானம் பழக்கவாசனை யால் பிறழாது என்றும், பிறழாமைக்கு ஏது சத்தின் முன் அசத்து முனை த்து நின்று இன்பஞ் செய்யாமையே என்றும் கூறினார்.

**இரண்டாம் அதிகரணம் முற்றிற்று.**

## பத்தாஞ்சூத்திரம் முற்றிற்று.

---

# பதினோராஞ் சூத்திரம்.

பத்தாஞ் சூத்திரத்தால் பயன் இரண்டனுள் பாசநீக்கமாகிய பயன்கூறி பாசப்பற்று நீக்கத்தின் பொருட்டு இடையறாது சிவபெருமான் திருவடியைப் பற்றுதலாகிய ஏனைச் சிவப்பேறு என்னும் பயனை இப்பதினொராஞ் சூத்திரத்தாற் கூறுகின்றார்.

காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலி
னயரா வன்பி னரன்கழல் செலுமே.

கருத்துரை.

எ-து சூ-ம் எ-னின், பரமேசுரனது சீபாதங்களை யணையுமா றுணர்த்துதனுதலிற்று.

## சிற்றுரை.

எ-து க-ரை எ-னின், சூத்திரக்கருத் துணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) அங்ஙனம் ஏகனாகி யிறைபணி நிற்பார்க்கு அறிவிச்சைசெயல்கள் விடயித்தற் குரியதோரியையு ஆண்டுப் பெறப்படாமையின் விடயமாவ தொன்றில்லைபோலும் என்னும் வாதிகளை நோக்கி விடயித்தலில்வழி ஆண்டுப் புத்தர் கூறும் ஆலயவிஞ்ஞானம் போலச் சூனியமா மெனப்பட்டுக் குணஞ் சூனியமாகவே குணியுஞ் சூனியமாய் முடியுமாகலான் அஃதேலாமையின் ஆண்டவை இயைபுபற்றி விடயிக்குமாறுணர்த்து முகத்தானே பயனிரண்டனுள் முடிவா யெஞ்சிநின்ற சிவப்பேறு கூடுதலாய நிட்டையிலியல் புணர்த்துதல் இப்பதினொராஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.

இதனானே சூத்திர வியைபும் இனிது விளங்கும்.

அற்றேல், ஏகனாகி இறைபணி நின்றார்க்கு இனிச் செய்யக் கடவதொன் றின்மையானும், இருணீக்கமும் ஒளி விளக்கமும் உடனிகழ்ச்சியாயவாறு போலப் பசுத்துவ நீக்கமுஞ் சிவத்துவ விளக்கமும் இடையீடின்றி உடனிகழ்வன வாகலின் வேறோத வேண்டாமையானும், முதனூலுட் சுவானுபூதியாகிய சிவப்பேற்றைப் பத்தாஞ் சூத்திரத்துட் பாசநீக்கத்தோடு ஒருங்குவைத்தே

யோதலானும் அதனை யீண்டு வேறுவைத்தோதல் அமையாது போலுமெனின்;—அறியாது கடாயினாய். ஏகனாகி யிறைபணிநிற் பது துரியநிலைக்கண்ணதாகிய அருணிலையே யாகலின் ஆண்டு மலநீங்கிய துணையானே சுகப்பிரபை மாத்திரையே விளங்குவ தன்றி அதீதநிலைக்கண்ணதாகிய சிவத்துவ விளக்கமெனப்படும் பரம சுகம் விளங்காமையின் அதுவிளங்குதல் அவனருளாலல்லதொன் றையுஞ் செய்யாமை மாத்திரையால் அமையாமையின் அதற்கு வேறு மாண்டுச் செய்யக்கடவதுண் டென்பது தானே போதரு தலானும், இருணீக்கத்தின் ஒளி விளக்கம்போலப் பசுத்துவ நீக் கத்தின் அருள் விளக்கமாத்திரையேயன்றி ஆனந்த விளக்கமும் உடனிகழாமையானும், அவ்விரண்டற்கும் வேறுபாடு முன்னர்க் காட்டப்படு மாகலானும், முதனூலிற் பாசக்ஷபம் பண்ணுமா றுணர்த்திய வழிப்பாச நீக்கமாத்திரையே முத்தியெனக் கொண்ட வாதிகளை மறுத்தற் பொருட்டுப் பாசநீக்கம் பெற்றோன் சுவானு பூதியுடையவனாவ னெனப்பதினொராஞ் சூத்திரஞ் செய்தற்குத் தோற்றுவாயாக் துணையே பத்தாஞ் சூத்திரத்திற் செய்து வைத் துச் சுவானுபூதி நிகழ்ச்சிக்கண் ஓதற்பாலன வெல்லாம் பதினொ ராஞ் சூத்திரத்துட் கூறுதலின் ஒன்பதாஞ் சூத்திரத்தின் எடுத் துக் கொண்ட ஆன்ம சுத்திபண்ணுமாறு பத்தாஞ் சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப் பெற்றாற்போலப் பத்தாஞ் சூத்திரத்தின் எடுத்துக்கொண்ட சுவாநுபூதி நிலை பதினொராஞ் சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப் பெறுதலான் அதன்கண் மலையாமைப் பொருட்டு ஆசிரியர் சுவாநுபூதி மானாவனென்பதனையும் அரன் கழல் செலுமெனப் பதினொராஞ் சூத்திரத்தானே ஒருங்கு வைத்தோதினா ராகலின் அது மாறன்மையானும், அவ்வாறன்றி மொழி பெயர்த்தல் யாப்பால் நூல்செய்துரைப்பான் புகுந்த ஆசி ரியர் வேறுபடச் செய்துரையா ராகலானு மென்பது. இதனானே, முதனூலிற் சுவாநுபூதிமானென வாளாகூறியதனைப் பதினொ ராஞ் சூத்திரத்துப் பத்திசெய்க வென்றதன் பின்னாகக் கொண்டு கூட்டிவைத் துரைத்தலே அதன் கருத்தென்பதூஉம் பெறப் பட் டது. அற்றாகலினன்றே, பத்தாஞ் சூத்திரம் பாசக்ஷயம் பண்ணு மாறுணர்த்திற் றெனவும் பதினொராஞ் சூத்திரம் பரமசிவனது சீபாதங்களை யணையுமாறுணர்த்திற் றெனவுங் கருத்துரை செய்த தூஉ மென்க. இஃதறியாதார் தத்தமக்கு வேண்டிய வாறே யுரைப்ப.

## விளக்கம்.

இக்கருத்துரை என்னசொல்லிற்றோவெனின், சூத்திரக்கருத்து இது வென்று சொல்லிற்று.

(இக்கருத்துரையின் பொருள்.) மேல் பத்தாஞ் சூத்திரத்திற் கூறிய வாறு அகத்திற் சிவனோடு ஒற்றுமைப்பட்டு ஏகனாகி நிற்றலும் புறத்துப் பிராரத்தவினை தாக்குமிடத்து அவ்வினைதாக்காத வண்ணம் இறைபணி நிற்றலும் செய்வார்க்குத் தனக்கெனச் செயலில்லாமையால் தன்னுடைய அறிவால் அறிதலும் இச்சையால் விரும்புதலும் செயலால் செய்தலும் இல்லையாய்முடியும். முடியவே தன்னுடைய அறிவு இச்சை செயல்கள் தொழிற்படுவதற்கு முன்னிலையான பொருளும் இல்லையாய் முடியும் என்று கூறும் வாதிகளைநோக்கி அறிவு இச்சை செயல்களின் தொழில் இல்லாதவிடத்து அம் முத்திநிலை புத்தர்கூறும் ஆலயவிஞ்ஞானம்போலச் சூனியம் எனப்படும். குணம் சூனியமெனப்படவே உயிராகிய குணியுஞ் சூனியமாய் முடியும். முத்தியில் குணியாகிய உயிர் இல்லையென்றல் ஏலாது. ஆதலால் முத்தியில் முதல்வனுடன் உயிர் கலந்து நிற்குஞ் சம்பந்தத்தால் முதல்வன் அருளுடன் உயிரின் அறிவிச்சை செயல் மூன்றும் கலந்து நின்று தொழிற்படுமெனக்கூறும் முறையில், பாசநீக்கமும் சிவப்பேறும் என்னும் பயன் இரண்டனுள் மேலைச்சூத்திரத்தில் பாசநீக்கம் கூறினமையின் கூறவேண்டியதாய் எஞ்சி நின்ற சிவபெருமான் திருவடியைக் கூடுதலாகிய சிவப்பேறு என்னும் நிட்டையினியல்புகூறுதல் இப்பதினொராஞ் சூத்திரத்தின் கருத்து எ—று.

மேலைச் சூத்திரத்தில் பாசநீக்கமும் தெளிதலும் கூறி இச்சூத்திரத்தில் சிவப்பேறும் நிட்டையுங் கூறுதலால் சூ த் தி ர த் தி ன் சம்பந்தம் பெறப் பட்டது.

சிவபெருமான் திருவடியைக்கூடுதல் இச்சூத்திரத்தின் கருத்தாயின், மேலைச் சூத்திரத்திற் கூறியவாறு ஏகனாகி இறைபணி நின்றவர் சிவபெருமான் திருவடியை அடைந்தவரேயாவ ராதலால் அவர்க்கு மேற்செய்ய வேண்டியது ஒன்றும் இல்லாமையானும், இருள் நீங்கும் பொழுதே ஒளி விளங்குமாறுபோல மேலைச் சூத்திரத்திற் கூறியவாறு பாசம் நீங்கிய பொழுதே சிவபெருமான் திருவருள் தடையின்றி விளங்குமாதலால் சிவபெருமான் திருவடி யடைதலைப்பற்றி வேறு கூறவேண்டாமையானும், இச் சூத்திரம் வேண்டுவதில்லை. அன்றியும், முதல்நூலாகிய வடமொழிச் சிவஞான போதத்தில் சுவாநுபூதியாகிய சிவபெருமான் திருவடி அடைதலைப் பத்தாஞ் சூத்திரத்துள் பாசநீக்கத்துடன் ஒன்றாகவைத்தே கூறுதலானும் அதனை இச்சூத்திரத்தில் வேறாகவைத்துக் கூறுதல் பொருந்தாது எனின் கூறுதும்:—

ஏகனாகி இறைபணி நிற்பது நின்மல துரியநிலையாகிய அருள்விளக்க மேயாம். அத்துரியநிலையில் பாசம் நீங்கிய உதவியால் சிவபெருமான் திருவடியாகிய சுகத்தின் ஒளிமட்டும் விளங்குவதன்றிச் சுகம் விளங்குவதில்லை. சிவபெருமான் திருவடியைக் கூடி இன்புறுதலாகிய அப்பரமசுகம் நின்மலதுரியாதீத நிலையின்கண்ணே தான் விளங்கும். ஆதலால் பரமசுகவிளக்கம் மேலைச் சூத்திரத்து இரண்டாமதிகரணத்து ஏதுவிற் கூறியவாறு அவனருளால் அல்லது ஒன்றையும் செய்யாமையாகிய இறைபணிநிற்றல் மாத்திரையானே விளங்காது என்பது பெறப்பட்டது. படவே, அப்பரமசுகம் விளங்குதற்பொருட்டு இறைபணி நின்றதன்மேலும் செய்யவேண்டியது உண்டென்பது தானே விளங்கும். அச்செயல் திருவடி அடைதலேயாம். ஆதலால் திருவடி அடைதலைக் கூறும் இச்சூத்திரம் வேண்டும் என்க.

திருவடி சுகம் தரும் என்பதை ''மாசில்வீணையும் மாலைமதியமும்—வீசுதென்றலும் வீங்கிளவேனிலும்—மூசுவண்டறைப் பொய்கையும் போன்றதே— ஈசனெந்தை இணையடி நீழலே.'' என்னுந் திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாக்கானும் அறிக. இப்பாசுரத்தால் நீற்றறையில் வைக்கப்பெற்ற சுவாமிகளுக்குத் திருவடியைக் கூடிய நிட்டையினால் அந் நீற்றறை, தடாகமும் இளவேனிற்காலத்துத் தென்றலும் சந்திரனும் வீணையும் போன்று மிகக்குளிர்ந்தமை பெறப்பட்டவாறு அறிக.

அன்றியும், இருள் நீங்கியவுடன் கண்ணுக்குப் பொருளின் விளக்கம் மட்டும் உண்டாகுமேயன்றிப் பொருளின் அநுபவம் உண்டாகி இன்புறுதலில்லை. அநுபவமுண்டாகி இன்புறுதற்குப் பொருளைக் கண்பற்றல் வேண்டும். இருள் நீக்கமே பற்று முயற்சியை யுண்டுபண்ணாது. உண்டு பண்ணுமாயின் இருளில்லாத விடத்துள்ள பொருளை அவ்விடத்துள்ள எல்லாக் கண்களும் பற்றல்வேண்டும். அவ்வாறு பற்றுவதில்லை. ஆதலால் இருள் நீக்கம் வேறு; பற்றும் முயற்சி வேறு. பற்றுமுயற்சிக்கு இருள் நீக்கம் உதவியாகும். அவ்வுதவியைக்கொண்டு பற்றும் முயற்சியைச் செய்தே பொருளாலாகிய இன்பத்தைக் கண் அநுபவிக்கவேண்டும். அவ்வாறே மேலைச் சூத்திரத்திற் கூறியவாறு பாசநீக்கத்தினால் அருள்விளக்கம் உண்டாதலேயன்றி ஆனந்தவிளக்கம் உண்டாதலில்லை. அருள் விளக்கமாவது முதல்வனையின்றித் தான் தனித்து நிற்பதில்லை யெனவும் முதல்வன் செயலையின்றித் தனக்குச் செயலில்லை யெனவுங் காண்டல். அவ்வாறு காணுங்கால் அறிவுஞ் செயலுந் தொழிற்படும். இச்சை தொழிற்படுவதில்லை. ஆனந்த விளக்கமாவது முதல்வன் உடனாய் நின்று அறிவித்தலேயன்றித் தனக்காக அறிந்தும் வரும்பேருபகாரத்தை நினைந்து அவனிடத்து அன்புமிகுதிப்பட அவ்வன்புமிகுதியால் அவனோடு கலந்து அழுந்துதல். அவ்வாறு அழுந்துங்கால் அறிவு இச்சை செயல்

மூன்றுந் தொழிற்படும். இவ்வாறு அருள் விளக்கத்தில் அறிவுசெயல் இரண்டுந் தொழிற்படுதலும் ஆனந்த விளக்கத்தில் அறிவு இச்சை செயல் மூன்றுந் தொழிற்படுதலுமே அவ்விரண்டற்கும் வேறுபாடெனவும், ஆனந்த விளக்கத்திற்கு அருள்விளக்கம் உதவியாமெனவும், அவ்வுதவியைக் கொண்டு முதல்வனைப் பற்றியே ஆனந்த விளக்கம் உண்டாகுமெனவும் இச்சூத்திரத்து இரண்டாம் அதிகரணத்திற் கூறப்படும். இதனானும் இச் சூத்திரம் வேண்டுமென்க.

ஆயினும் முதல்நூலாகிய வடமொழிச் சிவஞானபோதத்தில் பத்தாஞ் சூத்திரத்திலேயே சுவாநுபூதி கூறியிருக்க அதற்குமாறாக இத்தமிழ்நூலில் பதினொராஞ் சூத்திரத்தில் சுவாநுபூதியைக் கூறுதல் எவ்வாறு பொருந்து மெனின், முதல்நூல் பத்தாஞ் சூத்திரத்தில் பாசநீக்கம் பண்ணுமாறுணர்த்திப் பாசநீக்கமாத்திரையே முத்தியெனக்கொண்ட வாதிகளை மறுத்தற் பொருட்டுப் பாசநீக்கம் பெற்றோன் பாசப்பற்று நீக்கத்தின் பொருட்டு திருவடி அடைதலாகிய சுவாநுபூதி உடையவனுவனெனத் திருவடி அடைதலைக்கூறும் பதினொராஞ்சூத்திரத்திற்கு ஆரம்பஞ் செய்துகொண்ட அவ் வளவே பத்தாஞ்சூத்திரத்திற் கூறப்பட்டுள்ளது. சுவாநுபூதி உண்டாவதற் குச் செய்யவேண்டுவன எல்லாம் பதினொராஞ் சூத்திரத்திலேயே அம் முதனூலிற் கூறப்பட்டிருக்கின்றன. ஒன்பதாஞ் சூத்திரத்தி லெடுத்துக் கொண்ட ஆன்மசுத்திசெய்யும் முறைமை பத்தாஞ் சூத்திரத்திற் சென்று பாசநீக்கங் கூறுதலால் முற்றுப்பெற்றாற்போலப் பத்தாஞ் சூத்திரத்தி லெடுத்துக்கொண்ட சுவாநுபூதிநிலை பதினொராஞ் சூத்திரத்திற் சென்று திருவடி அடைதல் கூறுதலால் முற்றுப் பெறுகின்றது. அவ்வாறு ஒரு சூத்திரப்பொருள் அடுத்த சூத்திரத்திற் சென்று முற்றுப்பெறுமோ என மலையாதிருத்தற்பொருட்டு முதல்நூல் பத்தாஞ் சூத்திரத்தில் சுவாநுபூதி மானுவன் என்பதனை ஆசிரியர் இந்நூல் பதினொராஞ் சூத்திரத்தில் அரன் கழல்செலும் என மொழிபெயர்த்துச் சுவாநுபூதி உண்டாவதற்கு முதனூல் பதினொராஞ் சூத்திரத்திற்கூறிய பத்திசெய்க என்றதனோடு உடன் வைத்து அயரா அன்பினரன்கழல் செலுமென ஓதினார். ஆதலால் மாறாகாமை யிற் பொருந்தும் என்க.

அன்றியும் நூல்செய்தற்குரிய விதி தொகுத்துச்செய்தல், விரித்துச் செய்தல், தொகுத்தும் விரித்தும் செய்தல், மொழிபெயர்த்துச் செய்தல் என நான்குவகைப்படும். இதனை "தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்ப்— பெனத்தகு நூல் யாப் பீரிரண் டென்ப." என்னும் நன்னூல் சிறப்புப்பாயிரம் நான்காவது சூத்திரத்தால் அறிக. அந்நால்வகை விதியினுள் மொழிபெயர்த்த லென்னும் விதியின்படி நூல் செய்து உரைக் கப்புகுந்த ஆசிரியர் முதல் நூலாகிய வடமொழிச் சிவஞான போதத்தோடு மாறுபட உரையார் என அறிக. மொழிபெயர்த்துச் செய்தார் என்ற இத னானே முதல்நூலாகிய வடமொழிச் சிவஞானபோதம் பத்தாஞ்சூத்திரத்தில்

சுவாநுபூதி மான் எனச் சும்மா கூறியதனைப் பதினொராஞ் சூத்திரத்தில் பத்தி செய்க என்றதன் பின்னாகக்கொண்டு கூட்டிவைத்துரைத்தலே வடமொழிப் பத்தாஞ் சூத்திரத்தில் சுவாநுபூதி மான் எனக் கூறியதன்கருத்தென்பதூஉம் பெறப்பட்டது. ஆதலினாற்றான், வடமொழிப் பத்தாஞ் சூத்திரத்தில் சுவாநுபூதிமான் எனவும் பதினொராஞ் சூத்திரத்தில் பத்தி செய்க எனவுங் கூறியிருப்பனவற்றை மொழிபெயர்க்குங்கால் பத்தி செய்க என்றதை அன்பின் எனவும் சுவாநுபூதிமான் என்றதை அரன் கழல் செலும் எனவும், இந்நூல் பதினொராஞ் சூத்திரத்தில் ஒன்றாக வைத்திருக்கின்றனர் என்க. பத்தியினாலன்றிச் சுவாநுபூதி உண்டாக மாட்டாது ஆகலின் அவ்வாறு சேர்த்து மொழிபெயர்த்தாரென அறிக. சுவானுபூதி நிலை பத்தாஞ் சூத்திரத்தில் உண்டாகவில்லை யென்பதுபற்றியே பத்தாஞ் சூத்திரத்திற்குப் பாசக்ஷயம் பண்ணுமாறுணர்த்திற் றெனவும், பதினொராஞ் சூத்திரத்திற்குப் பரமசிவனது சீபாதங்களை அணையுமா றுணர்த்திற் றெனவும் கருத்துரை செய்தார்.

இவ்வாறு கருத்துரை செய்திருக்கவும் இச்சூத்திரம் சீவன்முத்திநிலை கூறியதாகச் சிலர் கூறுவர். பன்னிரண்டாஞ் சூத்திரம் சீவன் முத்திநிலை கூறுதலால் அவர் கருத்துப் பொருந்தாது.

## சிற்றுரை.

இச்சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு.

காணுங்கண்ணுக்கு—காட்டக்காணுந்தன்மையுடைய கண்,—(காண)—உருவத்தைக் காணும்படி,—காட்டி—அதனோடொருங்கியைந்து நின்றுகாட்டி,—(காணும்)—அவ்வுருவத்தைக் காண்கின்ற,—உளம் போல்—ஆன்மாப் போல,—(காணும்)—அறிவிக்க அறியு மியல்புடைய,—உள்ளத்தை—அவ்வான்மா விடயத்தை,—காண—அறியும்படி,—காட்டி—முதல்வன் அதனோடொருங்கியைந்து நின்று அறிவித்து,—காண்டலின்—அறிந்து வருதலான்,—அயரா அன்பின்—அவ்வத்துவித நிலையை மறவாது கடைப்பிடித்துச் செய்யும் அன்பானே,—அரன்கழல்—அம்முதல்வன் றிருவடியாகிய சிவானந்தாநுபூதியை,—செலுமே—தலைப்படும் எ-று.

காணுமென்னும் உவமை யடை பொருளினும், கண்டென்னும் பொருள்வினை உவமையினுஞ் சென்றியைந்தன. காண வென்பதனை ஈரிடத்துங் கூட்டுக. "வியர்த்து வெகுளார் விழுமியோர்" என்பதுபோலக் கண்டு காட்ட லென்பது மாறிவைத்துரைக்கப்பட்டது. இக்கருத்து நோக்கியன்றே, இதனை விரித்

துக் கூறுவான் புகுந்த வழிநூலாசிரியர் "காட்டிக் கண்டிடுமா போலக் காட்டிக் கண்டிடுவன்" என்றதூஉமெனக. அயராமைக்குச் செயப்படுபொருள் அதனை யென்றெடுத்துக் கொள்க. அயராஅன்பென்றது அயராமையானாகிய அன்பென "ஆறு சென்ற வியர்" போலநின்றது. அது "இத்தையாயு மறிவுடையனுயன்பு செய்ய"என வழிநூலாசிரியர் கூறியதனானு முணர்க. உள்ளத்தை என்பது உருபுமயக்கம். அறிவிச்சை செயல்களின் நிகழ்ச்சியாகிய அயராமையும் அன்பும் செலவும் முறையே காரணகாரியங்களாய் அவ்வொரு பொருள்மேல் ஒருங்கு நிகழு மென்பார் அயராஅன்பின் அரன்கழல் செலுமே என்றார்.

இஃதென் சொல்லியவாறோ வெனின்:— உயிரை இன்றியமையாத கண் உருவத்தைக் காணுங்கால் உயிரினதுணர்வு கண்ணொளி யெனத்தானென வேற்றுமையின்றி உடனாய் விரவிநின்று கண்ணுக்குக் காட்டியவதனைக் கண் கண்ட தென்றுங் கண்ணை யதிட்டித்து நின்ற உயிர் கண்டதென்றும் பகுத்தறிய வாராது இரண்டன் காட்சியும் ஒன்றனை யொன்றுவிடாது அத்துவிதமாகி ஒருங்கே நிகழுமாறுபோல, முதல்வனை இன்றியமையாத உயிர் ஒரு விடயத்தை அறியுங்கால் அம்முதல்வனது சிற்சத்தி ஆன்ம சிற்சத்தியெனத் தானென வேறின்றி உடனாய் விரவிநிற்ப முதல்வனும் அவ்வாறு விரவி நின்று ஆன்மாவிற்கு அறிவித்த தொன்றனை அவ்வான்மா அறிந்த தென்றும், அதனையதிட்டித்து நின்ற தான் அறிந்தானென்றும் பகுத்தறிய வாராது இருவகை யறிவும் ஒன்றனையொன்று விடாது அத்துவிதமாய் ஒருங்கே நிகழுமாறு செய்துவரும் இவ்வுபகாரம் பெத்தமுத்தி இரண்டினும் ஒருபெற்றித்தா யுண்மையின், ஏகனாகி இறைபணி நிற்கும் உயிர் முதல்வன் அங்ஙனம் அத்துவிதமாய் உபகரித்து நிற்கும் உரிமையை நோக்குமாயின் நோக்குந்தோறும் நோக்குந்தோறும் அப்பொருட்கட் செல்லு மிச்சை அடங்காது மீதூரு மாகலின் அவ்வழி அவ்விச்சையேதானாக விளங்கித் தோன்றும் பேரானந்தத்தை அநுபவிக்கப்படுமென அறிவிச்சை செயல்கள் மூன்றுங் கண்டு வியக்குமாறுணர்த்தி அதீதநிலை இயல்பு கூறியவாறோ மெனக. அத்துவிதமாவது பேதப்பொரு ளிரண்டும் தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்த விசேடம். இக்கருத்தே பற்றி "அறிவொளி போற் பிறிவரு மத்துவிதம்" என்றார் புடைநூலாசிரியரும். "அங்

கியும் ஒன்றிற் றங்கிநின்றல்லது தன்றொழி னடத்தா தாகலின்," அதுபோல முதல்வனும் உயிரை யதிட்டித்து நின்று எத்தொழி லுஞ் செய்வனென் றுணர்க. உயிர் ஒன்றனை யறிதல் முதல்வன் உடனின் றறிதலேயின்றி அறிவித்தல் மாத்திரையான் அமையா தென்பது "தொண்டனே னினையுமா நினைவே" "விரும்புமா விரும்பே" "தொடருமா தொடரே" "நுகருமா நுகரே" என் றிவ்வாறு முத்திநிலை பற்றியோதிய திருவாக்குக் களானுமறிக. இவ்வியல்பு நோக்கியன்றே "அறிவானுந் தானே யறிவிப்பான் றானே" என்றோதிய அம்மை "அறிவாயறிகின்றான் றானே" எனவுமோதியதூஉ மென்க. முன்னறிதல் அறிவித்தற் பொருட்டெனவும் பின்னறிவாயறிதல் விடயத்தில் அழுந்துவித்தற் பொருட் டெனவுங் கொள்க. இதனை ஈண்டு வைத்தார் அத்துவித நிலை இனிது விளங்குதற்கு.

இவ்வாறன்றிக் காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற் காணவுள்ளத்தைக் கண்டு காட்டலென்பதற்குக் காட்டும் உபகார முணர்த்தன் மாத்திரையே கருத்தென்றுரைப்பாரு முளர். இதனைக் கண்ணழித் துரைப்புழி அவனும் அவற்றது விடயத்தை யுணருமெனக் காணும் உபகாரமாத்திரையே எடுத்துக்கொண்டு ரைத்த ஆசிரியர் கருத்தன்றாகலானும், காணுமுபகாரங் காட்டு முபகாரத்தின் பின்னர்த்தாய் நிகழுமென்பது உணர்ந்து கோடற் பொருட்டு அதுவும் உடன் கூறப்பட்டதன்றி வேறின்மையா னும், அவ்வாறன்றென்பார்க்கு ஐந்தாஞ் சூத்திரத்துட் பெறப் பட்டதனை ஈண்டுக் கூறுதல் புனருத்தியாய் முடியு மாகலானும், அவருரைப்பன வெல்லாம் போலியுரையென் றொழிக. அற்றேல், முதனூலிற் பதினொராஞ்சூத்திரத்துட் காட்டுவானென்பதுமாத் திரையேயன்றிக் காண்பானென்பதுகூறிற்றில்லைபா லெனின்;— அறியாது வினாயினாய்: ஆண்டுக்காட்டுவானு மென்ற உம்மை காண் பானுமா மென எதிரது தழீஇ நிற்றலின், கூறாமை யாண்டைய தென்றொழிக. அவ்வும்மைக்குப் பொருள் காண மாட்டாதார் பாடம் வேறாக ஓதுப.

## விளக்கம்.

(இச்சூத்திரத்தின் பொழிப்புரை.) கண்ணானது உருவத்தைக் காண வேண்டுமாயின் உயிர் காட்டினாலன்றிக் காணமாட்டாது. உயிர் காட்டக் காணும் தன்மையுடைய அக்கண் உருவத்தைக் காண்பதற்கும் அக்கண்

ணோடு உயிர்கலந்து நின்று காணவேண்டும். அவ்வாறு கண்ணுக்கு உருவத்தைக் காணும்படி காட்டியும் அக்கண்ணோடு கலந்து நின்று அவ்வுருவத்தைக் கண்டும் வருகின்ற உயிர்போல, அறிவிக்க அறியுந்தன்மை யுடைய உயிருக்குப் பொருளையறியும்படி முதல்வன் அவ்வுயிரோடு கலந்து நின்று அறிவித்தும் அறிந்தும் வருவன். ஆதலால் கலந்து நிற்கும் அவ்வத்துவித நிலையை மறவாது உறுதியாகப்பற்றி அன்பு செய்யவேண்டும். அவ்வன்பினாலேயே அம்முதல்வன் திருவடியாகிய சிவானந்த அநுபூதியை உயிர் கூடும் எ—று.

இச்சூத்திரத்தில், கண் உவமை. உயிர் உவமேயம். உவமையாகிய கண்ணுக்குக் கூறிய காணும் என்னும் அடை, உள்ளத்தை என்னும் உயிருடன் கூட்டிக்காணும் உள்ளத்தை எனவும், உயிராகிய உவமேயத்திற்குக் கூறிய கண்டு என்னுந் தொழில், உவமையாகிய கண்ணுக்குக், காட்டிஎன்பதன் பின்னாகக் கூட்டிக் காட்டிக்காணு மெனவும் உரைக்கப்பட்டன. கண்ணுடன் சேர்க்கப்பட்ட காண என்பது காட்டி என்பதன் முன்னும் பின்னும் கூட்டப்பட்டது.

இவ்வாறு சூத்திரத்தை விரித்துக் கூறுமிடத்து—காணுங் கண்ணுக்குக் காணக்காட்டிக் காணும் உளம்போல், காணும் உள்ளத்தைக் காணக் காட்டிக் காண்டலின் அயரா அன்பின் அரன் கழல் செலுமேஎன விரியும். சூத்திரதில் காட்டும் என்பது காட்டி என்னும் பொருளில் நின்றது.

காட்டிக் கண்டு என்றிருக்க வேண்டியதைக் கண்டு காட்டி என மாற்றிவைத் துரைக்கபபட்டது. இது எதுபோல எனின், நாலடியார் சினமின்மை ௪-வது செய்யுளில் வெகுளார் வியர்த்து விழுமியோ ரென்றிருக்கவேண்டியதை "வியர்த்து வெகுளார்" என்று கூறியதுபோலாம்.

இவ்வாறு மாற்றிவைக்கப்பட்ட தென்னுங் கருத்துப்பற்றியே இந்நூலை விரித்துக் கூறப்புகுந்த வழிநூலாசிரியர் சிவஞான சித்தியார் ௧௧—ம் சூ-ம் ௧-வது செய்யுளில் "காட்டிக் கண்டிடுமாபோலக் காட்டிக் கண்டிடுவன்" என ஓதினர்.

அயரா அன்பின் என்றவிடத்து எதனை அயராமை என்னும் வினை நிகழுமாதலின் அயராமைக்குச் செயப்படு பொருளாகிய அத்துவித நிலையை வருவித்து அவ்வத்துவித நிலையை மறவாது என உரை செய்யப்பட்டது.

அயரா அன்பென்றது அயராமையாலாகிய அன்பென விரியும். விரியவே, அயராமை காரணம். அன்பு காரியம். காரணகாரியமாயுள்ள இவ்விரு சொற்களும் ஒரு தொடராய் நின்றது. எதுபோல எனின், "ஆறுசென்ற வியர்" என்பதுபோலாம். ஆறு என்பது வழி, வியர் என்பது வெயர்வை. ஆகவே, ஆறு சென்றவியர் என்பதற்கு வழி நடத்தலாலுண்டாகிய வெயர்

வையென்பது பொருளாம். இப்பொருளில் வழி நடத்தல் காரணமும் வெயர்வை காரியமுமாதல் அறிக. அயராமை காரணமும் அன்பு காரியமுமாம் என்பதனை வழிநூலாசிரியர் சிவஞான சித்தியார் கக-ம் சூ-ம் க-வது செய்யுளில் "இத்தை ஆயும் அறிவுடையனுப் அன்பு செய்ய" என்றதனுனும் அறிக. ஆயும் அறிவுடைமை என்பது அயராமையைக் குறித்தது. அது காரணம். அன்புசெய்தல் காரியம்.

உள்ளத்திற்கு என்று நான்காம் வேற்றுமை யுருபேற்று நிற்கவேண்டியது; உள்ளத்தையென இரண்டாம் வேற்றுமை உருபேற்று நின்றது. இவ்வாறு நிற்றல் உருபுமயக்கம்.

அறிவின் தொழிலாகிய அயராமையும் இச்சையின் தொழிலாகிய அன்பும் செயலின் தொழிலாகிய அரன்கழல் செல்லுதலும் முறையே காரண காரியங்களாம். எவ்வாறெனின், அயராமை காரணம் அன்புகாரியம். அவ்வன்பு காரணம் அரன்கழல் செல்லுதல் காரியம். ஆகவே, அயராமையால் அன்பும் அன்பால் அரன்கழல் செல்லுதலும் நிகழும் என்றவாருயிற்று. இவ்வாறு அரன்கழல் செல்லுதலாகிய அவ்வொருபொருளின் மேல் அறிவு இச்சை செயல் என்னும் மூன்றின் தொழில்களும் உடனுய் நிகழும் என்று கூறவேண்டி அயரா அன்பின் அரன் கழல் செலுமே என்ருர்.

இச்சூத்திரம் என்னசொல்லிற்ருே எனின்:—கண்ணனது உயிரினுடைய அறிவின் கலப்பின்றி உருவத்தைக் காணமாட்டாது; உயிரின் அறிவும் கண்ணொளியுங் கலந்து உருவத்தைக் காணுங்கால் உயிரின் அறிவு தன்னறிவென்றும் கண்ணொளி என்றும் பிரிப்பின்றி நிற்கும்; நிற்க உயிரால் கண்கண்ட அவ்வுருவத்தைக் கண் கண்டதென்றும் கண்ணை இடமாகக் கொண்டு நின்றஉயிர் கண்டதென்றும் பிரித்தறிய வாராது கண்ணினுடைய காணுதற் ருெழிலும் உயிரினுடைய காணுதற் ருெழிலும் ஒன்றனை யொன்று விடாது அத்துவிதமாகி இரண்டும் ஒன்ருகவே நிகழும். அதுபோல, முதல்வனை யின்றித் தனித்து நில்லாதஉயிர் ஒரு பொருளை அறியுங்கால் முதல்வனுடைய சிற்சத்தியானது உயிரின் அறிவோடு கலந்து முதல்வனுகிய தன்னறிவென்றும் உயிரின் அறிவென்றும் பிரிப்பின்றி உடனுய் நிற்ப முதல்வனும் உயிருடன் அவ்வாறு கலந்து நின்று உயிருக்கு அறிவித்த ஒரு பொருளை அவ்வான்மா அறிந்ததென்றும் அவ்வான்மாவை இடமாகக் கொண்டு நின்ற தான் அறிந்ததென்றும் பிரித்தறிய வாராது உயிரின் அறிவும் முதல்வன் அறிவும் ஒன்றனை யொன்று விடாது அத்துவிதமாகி இரண்டும் ஒன்ருகவே நிகழும். இவ்வாறு கலந்து நின்று காட்டியுங் கண்டும் செய்துவரும் இவ்வுபகாரம் பெத்த முத்தி இரண்டினும் ஒரு தன்மையாய் நிகழும். ஆதலால் மேலைச் சூத்திரத்திற் கூறியவாறு ஏகனுகி இறைபணி நிற்கும் உயிர், முதல்வன் அத்துவிதமாய்க் கலந்து நின்று

காட்டியுங் கண்டும் உபகரித்து வரும் உரிமையை நோக்குமாயின், நோக்குந்தோறும் நோக்குந்தோறும் அம்முதல்வ னிடத்துச் செல்லும் இச்சை அடங்காது அதிகப்படும். படவே அவ்விச்சையே பேரின்பமாக விளங்கித்தோன்றும். அவ்வாறு விளங்கித் தோன்றும் பேரானந்தத்தை உயிர் அநுபவித்தல் கூடும். கூடவே, அத்துவிதமாய் நிற்கும் உரிமையை நோக்குதலால் அறிவின் தொழிலும் இச்சை அதிகப்படலால் இச்சையின் ளெழிலும் பேரானந்தத்தை அநுபவித்தலால் செயலாகிய கிரியாசத்தியின் தொழிலும் நிகழுமென்பது பெறப்படும். படவே, அறிவு இச்சை செயல்கள் மூன்றும் முத்திநிலையில் தொழிற்படாதென்ற வாதிகளுக்குத் தொழிற்படுமென்றுகூறி, தொழிற்படினும் தொழிற் பட்டதாகப் பிரித்தறிய முடியாத நின்மல துரியாதீத நிலையின் இயல்பு கூறியவாறும்.

அத்துவிதமாவது பேதப்பொருள் இரண்டும் தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்தவிசேடம். சம்பந்தமாவது சையோகம், சையுத்த சமவாயம், சையுத்தசமவேத சமவாயம், சமவாயம், சமவேதசமவாயம், விசேடண விசேடியத்தன்மை என அறுவகைப்படும். அவற்றுள், கண்ணினால் குடத்தைக் காணுமிடத்துக் கண்ணிற்குங் குடத்திற்கும் உள்ள சம்பந்தம் சையோகம். கண்ணினால் குட உருவத்தைக் காணுமிடத்துச் சையோகமான குடம் சையுத்தமாய், அக்குடத்துக்கும் குட உருவத்துக்கும் சமவாயசம்பந்த மாதலால் சையுத்த சமவாயம். கண்ணினால் குட உருவத்தின் தன்மையாகிய சாதியைக் காணுமிடத்துக் குடம் சையுத்தமும், அக்குடத்தின் உருவம் சமவாயத்தில் உள்ள சமவேதமும், உருவத்திற்கும் உருவத் தன்மைக்கும் சமவாயமும் ஆதலால் சையுத்த சமவேத சமவாயம். செவிக்கும் சத்தத்துக்கும் உளதாய சம்பந்தம் சமவாயம். ஓசைத்தன்மையைச் செவி உணருங்கால் ஓசை சமவாயத்திலுள்ள சமவேதமும், ஓசைத் தன்மைக்கும் ஓசைக்குஞ் சமவாயமும் ஆதலால் சமவேத சமவாயம். ஒரு இடத்தில் ஒருபொருள் இல்லையென்று அறியுமிடத்து இடத்தை முன்னரும் இன்மையைப் பின்னருமாகவும், இன்மையை முன்னரும் இடத்தைப் பின்னருமாகவும் கூறப்படும். உதாரணம், வீட்டில் குடமில்லை குடமில்லது இவ்வீடு என்பனவாம். முன்னே உள்ளது விசேடணமும் பின்னே உள்ளது விசேடியமுமாம். இரண்டிடத்துங் காணப்படுவது வீடுதான். ஆதலால் வீட்டில் குடமில்லையென்றவிடத்து வீடுவிசேடணமும் குடமின்மை விசேடியமுமாகி விசேடணத்தன்மைச் சம்பந்தமும், குடமில்லது வீடு என்ற விடத்து வீடு விசேடியமும் குடமின்மை விசேடணமுமாகி விசேடியத்தன்மைச் சம்பந்தமுமாம். இவ்வாறுகூறுவர் நையாயிகர். இச்சம்பந்தம் ஆறும் இந்திரியத்திற்கும் விடயத்திற்கும் உள்ள சம்பந்தமேயன்றிப் பிறிதில்லை. ஆதலால் இச்சம்பந்தங்கள் உயிருக்குஞ் சிவனுக்கும் உள்ள இருபொருள்களின் சம்பந்தத்திற்குப் பொருந்தாவாம்.

இனிப் பொருள்களின் சம்பந்தம் ஐக்கியம், தாதான்மியம், சமவாயம், சையோகம், சொரூபம் என ஐவகைப்படும். அவற்றுள் ஆற்று நீருங் கடல் நீரும் சேர்ந்தாற்போல்வன ஐக்கியம். குணத்திற்கும் குணிக்கும் உளதாய சம்பந்தம் சமவாயம். விரலும் விரலும் சேர்ந்தாற்போல்வன சையோகம். அக்கினிக்குச் சொரூபம் செம்மை சூரியனுக்குஞ் சொரூபம் செம்மை. ஆதலால் அக்கினியுஞ் சூரியனும் சொரூபத்தால் சம்பந்தம் உடையன என்பது போல்வன சொரூபமெனப்படும். இவற்றுள், சிவசீவர்களின் சம்பந்தத்தை ஐக்கியம் என்று கூறலாமோ எனின், ஐக்கியத்தில் ஒருபொருளே யாதலால் ஒன்று என்றே கூறி இருக்கலாம்; அத்துவிதம் என்று உய்த்துணரவைக்கவேண்டாம்: அன்றியும் ஒருபொருளாயின் அநுபவிக்கும் ஆன்மா முத்தியில் இல்லையென்றாகி முத்தியே இல்லையெனப்படும்: ஆதலால் ஐக்கிய மென்றல் பொருந்தாது. தாதான்மியத்தின் வேறாக நையாயிகர் கூறும் சமவாயம் என்பதில்லாமையால், சமவாயமே தாதான்மிய மெனப்படும். ஆதலால் குணத்திற்கும் குணிக்கும் உள்ள சமவாய சம்பந்தமே அச்சம்பந்தமென்று கூறலாமோ எனின், முதல்வனைப்போல ஆன்மாவுங் குணிப்பொருளேயன்றி ஆன்மா முதல்வனுடைய குணமன்று. ஆதலால் அதுவும் பொருந்ாது. விரலும் விரலுஞ் சேர்ந்தாற்போலுள்ள சையோக சம்பந்தமே அச் சம்பந்தம் என்று கூறலாமோ எனின், கூறுபட்ட பொருள்களுக்கே யன்றி வியாபகப் பொருள்கட்குச் சையோகம் இல்லை. அன்றியும் ஒருபக்கங்கூடியும் மற்றொருபக்கங் கூடாத சையோகம் வியாபகப் பொருட்குக்கூடாது: ஆதலால் அதுவும் பொருந்தாது. ஆன்மாவும் சித்சொரூபம் சிவமும் சித்சொரூபம் ஆதலால் சொரூபசம்பந்தமே அத்துவித சம்பந்தமென்று கூறலாமோ எனின், அது நீயாகின்றாய் என்னும் மகாவாக்கியப் பொருளில் ஆகின்றாய் என்னுங் கலத்தலைச் சொரூப சம்பந்தம் வலியுறுத்தாது: அன்றியும் சொரூபத்தினால் சம்பந்தமிருந்ததுகொண்டு சிவானந்தத்தை அநுபவித்தலுங் கூடாது: கலந்துநின்றாலே சிவானந்தத்தை அநுபவித்தல் கூடும்: ஆதலால் அதுவும் பொருந்தாது.

இனிச் சிவன் சீவனென்னும் இருபொருள்களின் சம்பந்தத்தை எந்தச் சம்பந்தமாகக் கூறலாமெனின், ஒருபொருள் குணமென்றுங் குணியென்றும் இருதன்மைப் பட்டுநிற்றலும் இருபொருள் பிரிக்கமுடியாத கலப்பினால் ஒருதன்மைப்பட்டு நிற்றலும் எனத் தாதான்மியம் இருவகைப்படும். உதாரணம்—அக்கினி பொருளால் ஒன்றேயாயினும் அக்கினியென்றும் சூடு என்றும் இருதன்மைப்பட்டு நிற்றலும், கண்ணொளியும் ஆன்மாவின் அறிவும் பொருளால் இரண்டேயாயினும் பிரிக்க முடியாமையால் ஒருதன்மைப்பட்டு நிற்றலுமாம். அவ்விருவகைத் தாதான்மியத்துள் குணகுணியின் சம்பந்தம் தாதான்மியமெனவும் இருபொருள்களின் சம்பந்தம் அத்துவிதமெனவும் வழங்கப்படும். ஆதலால் முற்றறிவும் முற்றுத்தொழிலுமுடைய சிவமும், சிற்றறிவும் சிறுதொழிலுமுடைய ஆன்மாவும், வேறு

வேறு அறிவுந் தொழிலுமுடைய பேதப்பொருள்களாய்ப் பிரிக்கமுடியாது கலந்துநிற்றல்பற்றிப் பேதப்பொருள்கள் இரண்டும் தம்முள் அபேதமாதற் குரிய சம்பந்தவிசேடம் அத்துவிதம் என அறிக. இதுவே ஆசிரியர் கருத் தென்பது இந்நூல் இரண்டாஞ் சூத்திரம் முதலதிகாரணத்து ஏதுவில் ''அத்துவிதமென்ற சொல்லே அந்நிய நாத்தியை யுணாத்துமாயிட்டு'' என் றதனலறிக. இக்கருத்தேபற்றிச் சிவப்பிரகாசம் பாயிரம் எ-வது செய்யுளில் ''அறிவொளிபோற் பிரிவரும் அத்துவிதம்'' என்றார் புடைநூலாசிரி யரும்.

இனி அத்துவிதமென்னுஞ் சொல்லில் முன்னின்ற அகரம் அன்மை இன்மை மறுதலையென்னும் மூன்றுபொருளையும் உணர்த்துமேனும் எண் ணுப்பெயர் மேல்வந்த அகரம் இன்மைப்பொருளையேனும் மறுதலைப் பொருளையேனும் உணர்த்துதல் வழக்கின்கண் இல்லாமையால் அன்மைப் பொருளையே உணர்த்தும். இதனை இந்நூல் இரண்டாஞ்சூத்திரம் முதலதி காரணத்தும் சிவஞானசித்தியார் ஆறாஞ்சூத்திரம் ஒன்பதாவது செய்யுளின் விசேட உரையிலும் விரித்துக் கூறியிருக்கின்றாம். ஆதலின் அவ்விடங் களிற் காண்க.

அக்கினியானது சூக்குமமாக எங்கும் இருப்பினும் அது தன் தொழி லைச் செய்யவேண்டின் விறகுமுதலிய யாதானும் ஒன்றில் தங்கிநின்றல் லது சுடுதல்முதலிய தன்தொழிலை நடத்தாது. அதுபோல, முதல்வனும் எங்கும் வியாபகமாக இருப்பினும் தொழில்செய்யுமிடத்து உயிரினிடமாக நின்றே எத்தொழிலையும் செய்வனென்று உணர்க. உயிர் ஒன்றனை யறிய வேண்டுமாயின் முதல்வன் உடனின்று அறிந்தாலன்றி அவன் அறிவித்தல் மாத்திரையானே அறிய முடியாது. ஆகவே, முதல்வன் றொழிலுக்கு உயிரும் உயிரின் றொழிலுக்கு முதல்வனும் வேண்டப்பட்டு இருபொரு ளும் பிரிக்கமுடியாத அத்துவிதமாய் நிற்குமென்பது பெறப்படும். அறிவித் தல் காட்டும் உபகாரம். அறிதல் காணும் உபகாரம். காட்டும் உபகாரத்தால் இன்னது செய்யலாமென்று தோன்றும். காணும் உபகாரத்தால் அவ்வாறு செய்தல்கூடும். முதல்வனுடைய காணும் உபகாரத்தையின்றி உயிர் ஒன்ற னையும் காணமுடியாதென்பதைத் திருமாளிகைத் தேவர் திருவிசைப்பா கோயில் பதிகம் கக, க0, கூ, எ-வது செய்யுட்களில் ''தொண்டனேன் நினையுமா நினையே'' ''விரும்புமா விரும்பே'' ''தொடருமா தொடரே'' ''நுகருமா நுகரே'' என்று இவ்வாறு முத்திநிலைபற்றி ஓதிய திருவாக்குக் களாலும் அறிக. இவ்வத்துவித இயல்புநோக்கியல்லவா காரைக்கால் அம் மையார் அற்புதத் திருவந்தாதி உ0-வது செய்யுளில் ''அறிவானும் தானே அறிவிப்பான்தானே''என்று ஓதிப் பின்னர்''அறிவாய் அறிகின்றான்றானே'' யெனவும் ஓதினர். அச்செய்யுளில் முதலாவது அறிவான் என்று கூறியது உயிருக்கு அறிவித்தற்பொருட்டு அறிவிக்கவேண்டியதைத் தனித்து அறிதல்.

பின்னர் அறிவாய் அறிகின்றான் என்றது அறிவித்தபொருளில் உயிர் அழுந்தி அனுபவிக்கும்படி செய்தற்பொருட்டு உயிர்அறிவோடு கூடி நின்று அறிதல் எனக்கொள்க. இவ்விரண்டனுள் தானாய் நிற்கும் நிலை பற்றிச் செய்யுங் காட்டும்உபகாரம் முன்னையதெனவும் உயிரோடுகூடி அது வாய்நிற்கு நிலைபற்றிச் செய்யும் காணும்உபகாரம் பின்னையதெனவும் அறிக. அத்துவிதநிலை இனிது விளங்குவதற்காகவே காணும் உபகாரத்தை முத்திநிலை கூறும் இச் சூத்திரத்தில் வைத்தார். அதாவது பெத்தத்தினும் அத்துவிதமாய் நிற்பினும் விளங்காது முத்திநிலையில் நன்குவிளங்கும் என்பதாம்.

இச்சூத்திரத்திற்கு இவ்வாறு காணும் உபகாரம் உணர்த்துதல் என்று கூறாமல் 'காணுங் கண்ணுக்குக்காட்டும் உளம் போல் காண உள்ளத்தைக் காட்டிக் காண்டல்' என்பதற்குக் காட்டும் உபகாரம் மட்டுந்தான் கருத்தென்று உரைப்பாருமுளர்; அவ்வாறு கூறுதல் ஆசிரியர் கருத்தன்று. எதனாலெனின், சூத்திரத்தைப் பதச்சேதஞ் செய்து முதலதிகாரணத்து மேற்கோளில் 'அவனும் அவற்றது விடயத்தை உணரும்' எனக் காணும் உபகாரம் மட்டுமே எடுத்துக்கொண்டு உரைத்திருத்தலினால் என்க. அவ்வாறாயின், சூத்திரத்தில் கண்டு என்றுமட்டும் கூறாமல் காட்டிக்காண்டல் எனக் காட்டும் உபகாரத்தையும் சேர்த்துக் கூறிய கருத்தென்னை யெனின், காட்டும் உபகாரம் முன்னர் நிகழ்ந்து அதன் பின்னர்க் காணும் உபகாரம் நிகழுமென்பதை அறிந்துகொள்ளுதற் பொருட்டுக் காட்டும் உபகாரமும் உடன் கூறப்பட்டதன்றி வேறன்று. இவ்வாறு கொள்ளவில்லை யானால் ஐந்தாஞ் சூத்திரத்திற் கூறப்பட்ட காட்டும் உபகாரத்தை இவ்விடத்துங் கூறுதல் கூறியது கூறலாய் முடியும். ஆதலால் இச்சூத்திரத்திற்குக் காட்டும் உபகாரம் உணர்த்துதல் கருத்தென்றல் பொருந்தாது; அவ்வாறாயினும், வடமொழிச் சிவஞானபோதம் பதினோராஞ் சூத்திரத்தில் காட்டும் உபகார மாத்திரையேயன்றிக் காணும் உபகாரம் கூறவில்லையே எனின், அந்நூலில் காட்டுவானும் என்றதிலுள்ள உம்மை காண்பானும் என எதிரது தழுவி நிற்றலால் காணும் உபகாரங் கூறவில்லை யென்றல் எவ்வாறு பொருந்தும். அவ்வும்மைக்குப் பொருள்காண.மாட்டாதார் பாடம் வேறாக ஓதுவர்.

## சிற்றுரை.

இதனுள், காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல் காண உள்ளத்தைக் காட்டிக் காண்டல் என்றது ஓரதிகாரணம்; அதனை அயரா அன்பின் அரன்கழல் செலுமே என்றது ஓர் அதிகாரணம்; ஆக இரண்டதிகாரணத்தது இச்சூத்திர மென்றுணர்க.

## விளக்கம்.

வெ — டை.

# முதல் அதிகரணம்.

முதல்வன் உயிருடன் அத்துவிதமாய் நின்று
காணும் உபகாரத்தைச்
செய்வன் எனக்கூறும்
மேற்கோள்.

ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை யுணருமென்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், முதல்வன் உயிர்க்குக் காட்டும் உபகாரமாத்திரையே யுள்ள தென்னும் வாதிகளை நோக்கி அத்துவித நிலை உணர்த்துதற்கு எடுத்துக்கொண்ட சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ—ள்.) முதல்வனும் உயிர்களா லுணரப்படும் விடயத்தை உடனின் றுணருவன் எ—று.

உம்மை உயிர்களுணர்தலே யன்றியென இறந்தது தழீஇயிற்று. இஃதறியாதார் ஈண்டுணருமென்றது அறிவித்தற் கேதுவாயறியு மென்றுரைப்பாரு முளர். அவ்வா றுரைப்பிற் சித்தசாதனமா மாகலானும், ஈண்டைக்கியைபின்மையானும், அது போலி என்றொழிக. அவையே தானேயாய் எனவும் தாந்தமுணர்வின் றமியருளெனவும் மேற்பொதுவகையாற் கூறிப்போந்த அத்துவிதத்தை ஈண்டுக் காணும் உபகாரத்தின் வைத்துணர்த்தி இனிது விளக்கியவாறு.

## விளக்கம்.

இம்மேற்கோள் காணுங் காண்ணுக்குக் காட்டும் உளம்போல் காண உள்ளத்தைக் காட்டிக் காண்டல் என்னுஞ் சூத்திரத்தின் முதற் கூற்றைப் பதச்சேதஞ் செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்னசொல்லிற்றோ எனின், முதல்வனிடத்தில் உயிர்க்கு அறிவித்தலாகிய காட்டும் உபகாரம் மட்டுந்தான் உள்ளது; அன்றி உயிரின் பொருட்டு அறிதலாகிய காணும் உபகாரம் இல்லையென்னும்வாதிகளை நோக்கி அத்துவித நிலையை அறிவித்தற் பொருட்டு எடுத்துக்கொண்டசூத்திரத்தின் முதற்கூற்றைப் பதச்சேதஞ் செய்துகாணும் உபகாரமும் உண்டென்று கூறியவாறாம்.

இவ்வதிகரணத்தில், முதல்வனிடத்திற் காணும் உபகாரம் உண்டோ இல்லையோ என்பது ஐயப்பாடு. இல்லையென்பது பிறர்பக்கம்.

(இம்மேற்கோளின் பொருள்.) இவ்விரண் டதிகரணங்களுள் இம் முதலதிகரணத்து முதல்வனும் உயிர்களாலுணரப்பட்ட விடயத்தை அவ் வுயிர்களோடு உடனின்று உணருவன் எ—று.

விடயமாவது பெத்தத்தில் உலகப்பொருளும் முத்தியில் சிவமுமாம்.

அவனும் என்றதிலுள்ள உம்மை உயிர்கள் உணர்தலேயன்றி முதல் வனும் உணர்வன் என்னும் பொருளைக் குறித்தமையால் இறந்தது தழு விற்று.

அவ்வும்மையினால் உயிர் உணரும் விடயத்தை உயிரோடு உடனின்று இறைவன் உணர்தல் பெறப்படுவதை அறியாதார் இவ்விடத்தில் உணரும் என்றதற்கு உயிர்க்கு அறிவித்தற் பொருட்டு அறிவிக்க வேண்டுவதை அறியும் என்று உரைப்பர். அவ்வாறு உரைப்பின் அறிவித்தற் பொருட்டு அறிதல் மேல் ஐந்தாஞ் சூத்திரத்துட் கூறப்பட்டிருத்தலால் முன் சித்தித் ததைப் பின்னருஞ் சாதிப்பதாகிய சித்தசாதன மென்னுங் குற்றமாம். அன்றியும் அத்துவித நிலை கூறும் இவ்விடத்திற்கு வேறாய் நிற்றல் பற்றி அறிவதாகிய காட்டும் உபகாரத்தைக் கூறுதல் பொருத்தமும் அன்று; உட னாய் நின்று அறிவதாகிய காணும் உபகாரம் கூறுதலே பொருத்தமாகும். ஆதலால் காட்டும் உபகாரங் கூறுதல்என்ற அவ்வுரை பொருந்தாது.

அத்துவிதநிலை இரண்டாஞ் சூத்திரத்தில் அவையே தானேயாய் எனவும், ஐந்தாஞ் சூத்திரத்தில் தாம் தம் உணர்வின் தமி அருள் எனவும் கூறப்பட்டிருப்பினும், உயிரோடு கலந்து நிற்றலை அநுபவத்தில் வைத்து விளக்காமையால் அவ்விரு சூத்திரங்களினும் அத்துவித நிலை பொதுவாகக் கூறப் பட்டதாகும். அவ்வாறு பொதுவாகக் கூறிய அத்துவிதத்தை இச்சூத் திரத்தில் காணும் உபகாரத்தின் வைத்துச் சிறப்பாக உணர்த்தி இஃது விளக்கியவாறு அறிக.

முதல்வன் காணும் உபகாரத்தைச் செய்வன்
என்பதற்குக் காட்டும்

ஏ து.

இவ்வான்மாக்கள் அவனையின்றி யமைந்து ஒன்றையும் விடயியாவாகலான்.

சிற்றுரை.

எ-து ஏது எ-னின், கண் சடமாகலானும் காண்டற்பயன் உயிர்க்கே யாகலானும் கண் காண்புழி உயிரும் உடனின்று காண்

டல் பெறப்படும். கண்போல் உயிர் சடமன்மையானும் உணர்தற் பயன் உயிர்க்கே யாகலானும் அதனை எடுத்துக்காட்டி அவனும் அவற்றது விடயத்தை யுணருமென்றல் அமையா தென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ—ள்.) விளக்கொளி கண்ணொளியோடு கலந்து கண்ணொளியோடு கூட உருவத்தினுங் கலந்தாலன்றி அந்தவ் வுருவத்தைக் காண்டலின் றியவாறுபோல, அறிவிக்க அறியும் இயல்பின வாய உயிர்களும் முதல்வன துணர்வு தம்மோடு விரவிநின்று தம்மோடு கூடச்சென்று விடயத்தினும் விரவி நின்றால் அறிவு விளங்கி அதனை அறியும் இயல்பினவன்றித் தனித்தமையவுமாட்டா தனித் தொன்றனை விடயிக்கவு மாட்டாவாகலான், அறிவு விளங்குதன் மாத்திரைக்கே யன்றி விடயத்தைப் பற்றுதற்கண்ணும் முதல்வன் உடனின்றறிதல் ஒருதலையான் வேண்டப் படுதலான் ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை யுணருமென மேற் கொண்டது எ—று.

அவனையின்றி யமையாமையிற் காட்டு முபகாரம் விளங்கி னாற்போல அவனையின்றி யொன்றையும் விடயியாமையிற் காணு முபகாரம் இனிது விளங்குமென்பார் அவனையின்றி யமைந்தொன் றையும் விடயியா வாகலானென்றார். அமைந்து விடயியா வென்ற தனைக் "கந்தித்துச் சுழலும்" என்றாற்போலக் கொள்க. உம்மை முற்றும்மை.

//.ா. விடயியா என்றது பெயரடியிற் பிறந்த எதிர்மறைவினை. "எவ் விடத்து மிறையடியை யின்றியமைந் தொன்றை யறிந்தியற்றி யிடா வுயிர்க ளீசன் றானுஞ்—செவ்வி தினி னுளம்புகுந்து செய்தியெலா முணர்ந்து சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்ப—னிவ் வுயிர்க டோற்றும்போ தவனையின்றித் தோற்றா விவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கு—மவ்வுயிர்போ னின்றிடவே னுத லானு மானடியை யகன்றுநிற்ப தெங்கே யாமே" என வழிநூ சிரியர் இதனை விரித்தோதியவாறுமுணர்க. எவ்விடத்து மென்றது பெத்தமுத்தி இரண்டினு மென்பதாம். இதனுள், இறையடி யையின்றி யமைந்தொன்றை யறிந்தியற்றி யிடாவுயிர்கள் என வும், ஈசன்றா னெங்குமாய்ச் செறிந்து நிற்பன் எனவுங் கூறியது விடயத்தின் கட்படு நிகழ்ச்சிக் கெனவும், இவ்வுயிர்கடோற்றும் போதவனையின்றித் தோற்றா எனவும், அவ்வுயிர்போ னின்றிடு

வன் எனவுங்கூறியது உயிரின்கட்படு நிகழ்ச்சிக் கெனவுங்கொள்க. அவ்வாறு கொள்ளாக்கால் இருகாற் கூறுதல் புனருத்தியாய் முடியுமென்றொழிக. இனி விளக்கொளி கலத்தல் ஈரிடத்தும் வேண்டப்படு மென்பதூஉம், ''விளக்கொளி கலந்தவற்றை'' எ-ம், விளக்கின்சோதி கலந்திடும்'' எ-ம், புடைநூலாசிரியர் எடுத்தோதிய வாற்றானுணர்க. அஃதங்ஙனமாக, பரமுத்தியில் உயிர்க்கு விடயமாவது ஒன்றின்மையின் வழிநூலாசிரியர் எவ்விடத்து மென்றது அமையுமா றென்னையெனின்;—அறியாது கூறினாய்; ''சுத்தவநுபோகத்தைத் துய்த்தலனு'' எ-ம், ''ஒன்றி நின்றுணரு முண்மை'' எ-ம், பிறாண்டும் இவ்வாறே யோதுபவாகலின், பரமுத்தியில் உயிர் சிவானந்தாநுபூதியை விடயித்தலுண் டெனவும், அது முதல்வனையின்றி யாகாமையின் அவனும் ஆண்டவ் வநுபூதியை உடனின்றறிவ னெனவும் உணர்க.

## விளக்கம்.

இந்த எது என்னசொல்லிற்றோ எனின், கண் உருவத்தைக் காண்பதற்கு உயிர் அவ்வுருவத்தைக் காணவேண்டுதல் போல உயிர் விடயத்தை அறிவதற்கு முதல்வனும் அவ்விடயத்தை அறிவன் என்று கூறின், கண் அறிவில்லாத சடமாதலானும் கண்டதனாலுண்டாம் பயன் உயிர்க்கேயன்றிக் கண்ணுக்கு இன்மையானும் கண்காணுமிடத்து உயிரும் உடனின்று காண்டல் பெறப்படும். உயிர் கண்போல் சடமன்றி அறிவுடைப் பொருளாதலானும் அறிதலின் பயன் முதல்வனுக்கின்றி உயிர்க்கே யாகலானும் கண்ணுக்காக உயிர் காண்பதனை உவமையாக எடுத்துக்காட்டி அவனும் அவற்றது விடயத்தை உணரும் என்று மேற்கோள் கூறியது பொருந்தா தென்பாரை நோக்கிப் பொருந்து மென்று கூறி மேற்கோளை வலியுறுத்திய வாறாம்.

(இந்த எதுவின் பொருள்.) விளக்கொளியானது கண்ணொளியோடு கலந்து உருவத்தினுங் கலந்தால் மட்டும் கண் உருவத்தைக் காணும். அவ்வாறு கலவாத விடத்துக் கண் உருவத்தைக் காணமாட்டாது. அதுபோல முதல்வன் அறிவித்தால் அறியுந்தன்மை யுடைய உயிர்களும் முதல்வனுடைய அறிவு உயிராகிய தம்மறிவோடு கலந்து பொருளினுங் கலந்து நின்றால் மட்டும் உயிரின் அறிவுவிளங்கிப் பொருளை அறியும். முதல்வனறிவு உயிரினறிவோடும் பொருளோடுங் கலவாதவிடத்து உயிர்கள் தனித்து ஒன்றை அறியவுமாட்டா தனித்து நின்று ஒருபொருளை அநுபவிக்க மாட்டா. ஆகவே உயிர்கட்கு அறிவு விளங்குதற்கு மட்டுமன்று பொருளைப் பற்றுதற்கும் முதல்வன் உயிருடன் நின்று அறியவேண்டு மென்பது

துணியப்படும். ஆதலால் 'ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை உண ரும்' எனமேற்கோள் கூறியது எ-று.

விளக்கொளியானது கண்ணொளியோடும் உருவத்தோடுங் கலந்தாலன் றிக் கண் உருவத்தைக் காணமாட்டாது என்பது உறுதியாயின், இருளோடு கூடிய கண் ஒளியோடுகூடிய உருவத்தைக்காணும் அநுபவத்தோடு மூா ணுமே யெனின், மூாணாது, எதனாலெனின், கண்ணொளிக்குச் செல்லுந் தன்மை உண்டு ஆதலால் உருவத்தோடு கலந்துள்ள ஒளியுடன் இருளோடு கூடிய கண்ணின் ஒளி சென்று கலந்து உருவத்தை அறியுமாதலால் என்க.

கண்ணொளியும் உயிரின் அறிவும் போல் உயிரும் முதல்வனுங்கலந்து நிற்குமென்றல் பொருந்தாதென்ற வினாவிற்கு அவ்வுவமையில் வைத்து விடைகூறாமல் கண்ணொளியையும் விளக்கொளியையும் உவமை எடுத்துக் காட்டி விடைகூறியது எவ்வாறு பொருந்துமெனின், கண்ணொளி உயி ரோடுகூடி உயிரின்பொருட்டு அறியுமாதலால் உயிர் முதல்வனுடன் கூடி உயிராகிய தன்பொருட்டு அறிதற்கு உவமையாகாதென்றல் பொருந்துமா யினும், அவ்வுவமையைக் கலந்துநின்று காண்பதற்குமட்டுங் கொண்டு அநு பவிப்பதற்கு வேறு உவமை எடுத்துக் காட்டினாரென அறிக. கண்ணொளி யும் விளக்கொளியும் கலந்தவிடத்துக் காணப்பட்டபொருளைக் கண்ணொளி அநுபவிப்பதேயன்றி விளக்கொளி அநுபவிப்பதில்லை. ஆகவே கண்ணொ ளிக்குக் கருவியாய் இருக்குந்தன்மையும் கருத்தாவாய் இருக்குந்தன்மையும் உண்டு என்றவாறாயிற்று. அவ் விருதன்மைகளுள் உயிருடன்கலந்து கருவி யாய் இருக்குந்தன்மைபற்றிப் பொருந்தாதென்று வினாவியதற்கு விளக் கொளியுடன் கூடிக் கருத்தாவாய் இருக்குந்தன்மைபற்றிப் பொருந்து மெனக் காட்டியவாறாம். கருவியாய் இருக்குந்தன்மையில் தனித்துச் செய லில்லை யென்பதனையும் கருத்தாவாய் இருக்குந்தன்மையில் தனக்கு அநு பவம் உண்டென்பதனையும் உணர்த்தினமையறிக.

முதல்வனும் உயிர்கள் அறியும் பொருளை உடனின்று அறிவன் என்ற மேற்கோளை வலியுறுத்துதற்கு இவ்வான்மாக்கள் அவனையின்றி ஒன்றை யும் விடயியா ஆகலான் என்று ஏதுக்கூறினாலே போதும்; அவ்வாறாகவும், அவனையின்றி அமைந்து ஒன்றையும் விடயியாவாகலான் என அமைதலைச் சேர்த்துக் கூறிய கருத்தென்னையெனின், அமைதலாவது இன்னது செய் யவேண்டுமென்று அறிவு விளங்குதல். அவ்வறிவு விளங்குதலும் அவனை யின்றி முடியாதாயின் அறிவிக்கும் காட்டும் உபகாரம் முதல்வனிடத்தில் உண்டென விளங்கிற்று. அதுபோல அவனையின்றி ஒன்றையும் அநுபவி யாமையினால் முதல்வனிடத்தில் காணும் உபகாரமும் உண்டென்பது இனிது விளங்கும். இவ்விரண்டு உபகாரத்துள் காட்டும் உபகாரம் மேல் ஐந்தாஞ் சூத்திரத்தால் சாதிக்கப்பட்டுள்ளது. அதனை உவமையாகக் கொண்டு அது

போலக் காணும் உபகாரமும் முதல்வனிடத்தில் உண்டென்பது நன்கு விளங்குமென்று கூறவேண்டி அமைதலைச் சேர்த்து அவனையின்றி அமைந்தொன்றையும் விடயியாவாகலான் எனக் கூறினார்

அமைந்து விடயியா என்றவிடத்து அமைந்து என்பது வினையெச்சமாயினும் அது வினையெச்சப்பொருளில் நில்லாது அமைந்து விடயியா எனச் செவ்வெண்ணாக நின்றது. ஆதலால் அமைந்து விடயியா என்பதற்கு அமைதலுமில்லை விடயித்தலுமில்லை என உரைசெய்யப்பட்டது. இதனைச் சிவஞானசித்தியார் ௯0-ம் சூ-ம் ௬-வது செய்யுளில் சுந்தித்துஞ் சுழல்வித்தும் எனக் கூறவேண்டியதைக் ''கந்தித்துச் சுழலும்'' எனக் கூறியதுபோலக் கொள்க.

ஒன்றையும் என்றதிலுள்ள உம்மை எஞ்சாமையை உணர்த்தினமையால் முற்றும்மை.

விடயியா என்றது விடயம் என்னும் பெயரும் விடயித்தலாகிய வினையின் எதிர்மறையும் கூடி நிற்றலால் பெயரடியிற் பிறந்த எதிர்மறை வினைச்சொல். அவனால் அமைந்து காணுமென்று உடன்பாட்டுச் சொல்லாற் கூறாமல் அவனையின்றி அமையவுமாட்டா காணவுமாட்டா என எதிர்மறைச் சொல்லாற் கூறிய கருத்தென்னையெனின், எதிர்மறையை ஏதுவாய்க் கொண்டுகாட்டும் உபகாரமும் காணும் உபகாரமும் இறைவனிடத்தில் உண்டென நாட்டுதற்கு அவ்வாறு கூறினார். உயிருக்கு அறிவுவிளங்குதலும் பொருளைப் பற்றுதலும் முதல்வனையின்றி நிகழாமை ஏது. இந்த ஏதுவால் முதல்வனிடத்தில் இரண்டு உபகாரங்களும் உண்டு என்பது மேற்கோள். கண்ணொளி விளக்கொளிபோல என்பது உவமை.

இந்த எதிர்மறையை ஏதுவாகவைத்து இரண்டு உபகாரங்களும் முதல்வனிடத்தில் உண்டு என்பதை விரித்துச் சிவஞானசித்தியார் கக-ம் சூ-ம் எ—வது செய்யுளில் வழிநூலாசிரியர் அருளினர்.

அச்செய்யுளில் எவ்விடத்தும் என்றது பெத்த முத்தி இரண்டினும் என்பதாம். இறையடியையின்றி அமைந்து ஒன்றையறிந்து இயற்றியிடா உயிர்கள் எனவும், ஈசன்றான் எங்குமாய்ச் செறிந்து நிற்பன் எனவும் கூறியது பொருளின்கண் முதல்வன் கலந்து நிற்றலை யுணர்த்துதற்கு எனவும், இவ்வுயிர்கள் தோற்றம்போது அவனையின்றித் தோற்றா எனவும், அவ்வுயிர்போல் நின்றிடுவன் எனவுங் கூறியது உயிரின்கண் கலந்துநிற்றலை உணர்த்துதற்கு எனவும் அறிக. இவ்வாறு கொள்ளாக்கால் முன்கூறியதையே பின்னுங்கூறியதாய் முடியும். உயிருடன் கலந்து நிற்றலால் அறிவு இச்சை செயல்களை விளங்கச்செய்யுங் காட்டும் உபகாரமும் பொருளுடன் கலந்துநிற்றலால் அறிவு இச்சை செயல்களைப் பொருளுடன் கலக்குமாறு செய்யுங்காணும் உபகாரமும் முதல்வனிடத்தில் உண்டு என்பதை அறிக.

இனி உயிருக்கு உவமையாக எடுத்துக்காட்டிய கண்ணொளியிடத்தும் உருவத்தினிடத்தும் விளக்கொளி கலத்தல்வேண்டுமென்பதைச் சிவப்பிரகாசம் ௩௨-ம் சூ-ம் ௭-வது செய்யுளில் ''விளக்கொளி கலந்தவற்றை'' என உருவத்திற் கலத்தலையும், ''கண்ணொளி விளக்கின்சோதி கலந்திடும்'' எனக் கண்ணொளியோடு கலத்தலையும் புடைநூலாசிரியர் பிரித்துக் கூறிய வாற்றாலறிக.

முதல்வனிடத்தில் இரண்டு உபகாரங்களும் உண்டு எனினும், அவ்வுபகாரங்கள் பெத்தநிலையில் மட்டும் உண்டென்று கொள்ளலாமேயன்றிப் பரமுத்தியில் உயிர்க்கு அறியப்படுவதாக ஒன்றும் இல்லாமையால் அங்கும் உண்டென்பது தோன்ற வழிநூலாசிரியர் எவ்விடத்துமென்றது எவ்வாறு பொருந்தும் எனின், உண்மைவிளக்கம் ருO—வது செய்யுளில் "சுத்த அநுபோகத்தைத் துய்த்தல் அணு" எனவும், சிவப்பிரகாசம் ௯O-ம் சூ-ம் அ-வது செய்யுளில் ''ஒன்றிநின் றுணரு முண்மை''எனவும், இவ்வாறே பிற இடங்களினும் ஆசிரியர்கள் கூறுவர் ஆதலால் பரமுத்தியில் சிவானந்தத்தை உயிர் அநுபவித்தலுண்டெனவும் அவ்வநுபவம் முதல்வனையின்றி உயிருக்குக் கூடாமையால் முதல்வனும் முத்தியில் அவ்வநுபூதியை உயிரோடு உடனின்று அறிவதாகிய காணும் உபகாரத்தைச் செய்வன் எனவும் அறிக. காட்டும் உபகாரம் அநுபவத்திற்கு முன்னர் நிகழக்கூடியது ஆதலால் அநுபவத்தில் காணும் உபகாரம் ஒன்றுமே நிகழும் என்பதாம்.

இந்த ௭து முதல்வனிடத்தில் காணும் உபகாரம் இல்லை யென்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

முதல்வன் காணும் உபகாரத்தைச் செய்வன் என்பதற்குக் காட்டும்

**உதாரணம்.**

ஐந்தையு மோக்க வுணரா தவற்றுணர்வ
தைந்தும்போ னின்றுணரு மாகலா—னைந்தினையு
மோன்றேன்றுப் பார்த்துணர்வ துள்ளமே யெவ்வுலகு
மோன்றேன்றுப் பார்க்கு முணர்ந்து.

## சிற்றுரை.

௭· து உ-ம் ௭-ணின். அவனும் அவற்றது விடயத்தை யுடனின்றுணருமாயின் அவற்றோடு அவனிடை யறிதற்கட்படும் வேற்றுமை இல்லைபோலு மென்பாரைநோக்கி வேற்றுமையுங்காட்டி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) உள்ளமே— ஆன்மாவாவது,— அவற்று ஐந்தும் போல்நின்று உணர்வது உணரும் ஆகலான்— சுவை யொளியூ றோசை நாற்றமென்னு மைந்தினும் ஐம்பொறிபோல் அதுவது வாய்ச் செறிந்துநின்று உணர்தற்பாலதனை உணருந்தன்மைத் தாகலான்,—ஐந்தையும் ஒக்க உணராது ஐந்தினையும் ஒன்றுஒன்று ஆப் பார்த்து உணர்வது—அவ்வைம்புலன்களையும் ஒருங்கே யுணர மாட்டாது அவ்வைந்தினையும் ஒரோ வொன்று யறிந் தனுபவிப்ப தாம்,— ஒன்று எவ்வுலகும் ஒன்று உணர்ந்துபார்க்கும்— (அது போலச் சார்ந்ததன் வண்ணமாய்ப் பலதிறப்படுதலின்றி) என்றும் ஒருபெற்றித்தாகிய சிவம் (எல்லாஉயிர்களுடைய) எல்லாவிடயங் களையும் (பொதுவகையான்) ஒருங்கேயுணர்ந்து (அவ்வுயிர்களுட னின்று சிறப்புவகையானு) மறியும் எ-று.

இது சொற்பொருட் பின்வருநிலை. சிவத்தைப் பிரித்தமை யின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. ஒன்றென்பது குறிப்பேது வாய் நின்றபெயர்.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) உள்ளமே அவற்று ஐந்தும்போல் நின்று உணர் வது உணரும் ஆகலான் ஐந்தையும் ஒக்க உணராது ஐந்தினையும் ஒன்று ஒன்று ஆப் பார்த்து உணர்வது ஒன்று எவ்வுலகும் ஒன்று உணர்ந்து பார்க்கும்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ வெனின், மேற்கோளிற் கூறி யவாறு முதல்வனும் உயிர்கள் உணரும் பொருளை அவ்வுயிர்களோடு உடன் நின்று உணருவனுயின், உயிர்கள் அறிவதற்கும் முதல்வன் அறிவதற்கும் வேற்றுமை யில்லையே; வேற்றுமை யில்லாதபோது அவ்வறிவால் உயிர் பந்தமடைதல்போல முதல்வனும் பந்தம் அடைவன் எனப்பட்டுக் குற்ற மாம். ஆதலால் உடன் நின்று உணருவன்என்றது பொருந்தாது என்பாரை நோக்கி உடன்நின்று அறியினும் உயிர் அறிவதற்கும் முதல்வன் அறிவதற் கும் வேற்றுமை உண்டு எனக்காட்டி அவனும் அவற்றது விடயத்தை உண ருமென்ற மேற்கோளை வலியுறுத்திய வாறும்.

(பொ-ரை.) மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐந்து இந்திரி யங்களும் தத்தம் விடயங்களை உணருமிடத்து அந்த அந்த இந்திரியம் அந்த அந்த விடயத்தை அது வதுவாக நின்றுணர்ந்து பிறிதொரு விட யத்தை உணராதவாறுபோல, ஆன்மாவானது இரதம் உருவம் பரிசம் சத்தம் கந்தம் என்னும் ஐந்து விடயங்களை உணருமிடத்து அந்த அந்த

விடயங்களாய் நிறைந்து நின்று உணரக்கூடிய ஒரு விடயத்தையே உணருந்தன்மையுடையது. ஆதலால் அவ்வைந்து விடயங்களையும் ஒரேசமயத்தில் உணராமல் ஒவ்வொரு விடயங்களாய் உணர்ந்து அநுபவிப்பதாகும். அவ்வாறு அநுபவிப்பதனால் சார்ந்தபொருளின் தன்மையே தன்தன்மையாகவுடைய அவ்வான்மா சாரப்படும் பொருள் பலவாதல் பற்றிப் பலதன்மையை அடையும். அவ்வான்மாவோடு உடன் நின்று அறியும் சிவம் அவ்வுயிர்போலப் பல திறப்படுதலின்றி எக்காலத்தும் ஒரு தன்மையாய் எல்லா உயிர்களுடைய எல்லா விடயங்களையும் அவ்வுயிர்களுடன் கலந்து நிற்குந் தன்மை பற்றிப் பொதுவகையாலுணர்ந்து உடனாய் நிற்குந் தன்மைபற்றி அவ்விடயங்களைச் சிறப்பாகவும் அறியும் எ-று.

(க-ரை.) உயிருஞ் சிவமும் உடனாய் நின்று விடயங்களை அறியினும் உயிர் தன்னாற் சாரப்பட்ட ஒவ்வொரு விடயத்தையே பற்றிப் பலவேறு வகைப்பட அறிதலும் சிவம் எல்லா உயிராலுஞ் சாரப்பட்ட எல்லா விடயங்களையும் ஒரு தன்மையாக அறிதலும் வேற்றுமையாம். ஆதலால் உயிர் போலச் சிவம் பந்தம் அடையாது. பந்தம் அடையாதாகவே அவனும்அவற்றது விடயத்தை உணரும் என்றது பொருந்தும் என்பதாம்.

இச்செய்யுளில் ஐந்து என முன்னர் வந்த சொல்லும் பொருளும் பின்னரும் வருதலால் இது சொற்பொருட் பின்வரு நிலை யென்னும் அலங்காரம்.

உள்ளமே என்றதிலுள்ள ஏகாரம் ஒன்று ஒன்றாகப் பார்த்து உணர்வதாந் தன்மை சிவத்துக்கு இல்லை யெனப்பிரித்தமையின் பிரிநிலைக்கண் வந்தது.

இறுதியிலுள்ள ஒன்றுஎன்பது ஒருதன்மையா யிருத்தலால் பந்தமடையாது என்னும் ஏதுப்பொருளைக் குறிப்பாக உணர்த்தி ஒரு பொருளாகிய சிவத்தின் பெயராய் நிற்றலால் குறிப்பேதுவாய் நின்றபெயர்.

முத்தியிலும் முதல்வன் உடனின்று உணருவன் எனக்
காணும் உபகாரத்தை வலியுறுத்தும்
உதாரணம்.

ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினா—னேகமா
யுள்ளத்தின் கண்ணானா னுள்குவா ருள்கிற்றை
யுள்ளத்தாற் காணானோ வுற்று.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், ஆன்மா ஐம்பொறியை விடயிப்பதுபோல முதல்வனை விடயிப்புழியும் முதல்வன் அவ்வாறுடனின்று

தன்னைத்தான் விடயிப்பனெனின்ஆன்மாச்சிரயமென்னுங்குற்றமா மாகலின் அது பெறப்படாமையான் அவனும் அவற்றது விடயத்தை யுணருமென்றல் யாண்டுஞ் செல்லாதென்பாரை நோக்கி ஆண்டும் அவ்வா றுணர்தலுண்டென்பதுணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) ஒன்று ஏகம் ஆய் நின்று இணை அடிகள் உணரவே தான் போகம் ஆய் விளைந்த பொற்பினன்—(முதல்வனைச் சார்ந்தவழி அவ்வண்ணமேயாய்) ஒருபெற்றிப்பட்ட ஆன்மா அவனோடொற்றுமைப்பட்டு நின்று அவனதடியிணைகளை யுணரவே தான் (அவ்வான்மாவுக்குப்) பரபோகமாய் மேன்மேல் விளைகின்ற பொலிவினையுடைய னாகலானும்,—உள்ளத்தின்கண் ஏகம் ஆய் ஆனன்—(அங்ஙன முணருங்கால்) அவ்வான்ம ஞானத்தினிடத்து ஏகமாய் விட்டுநீங்காதவ னாகலானும்,— உள்குவார் உள்கிற்றை உள்ளத்தான் உற்றுக் காணானோ—கருதுவார் கருதியபொருளாகிய தன்னை அவரறிவோடு கூடி நின்றறியான் கொல்லோ எ-று.

போகமாய்த்தான் விளைந்த பொற்பினன், ஏகமாயுள்ளத்தின் கண்ணானன் என்னும் பெயரடைகள் ஏதுப்பொருளவாய் நின்றன. யாண்டுஞ் சேறலுணர்த்துதற்கு உள்குவாருள்கிற்றை என்றார்; "வேண்டுவார் வேண்டியதே யீவான்" என்றாற்போல. ஆனுருபு உடனிகழ்ச்சிப் பொருட்கண் வந்தது. ஓகாரம் எதிர்மறை. ஆன்மாக்கள் முதல்வனை விடயிக்குங்கால் அவற்றது விடயமாகிய அவன் தன்னாலும் உடனின் றுணரப்படுவன், உள்குவாருள்கிய பொருளாகலின். மேலை வெண்பாவிற் கூறிப்போந்த ஐம்புலன் போலவென்று அனுமானவளவை காட்டுவார் உள்குவா ருள்கிற்றை யுள்ளத்தானுற்றுக் காணானோ வென்றும், உள்குவாருள்கிற்றுதல் ஈரிடத்து மொக்குமென்பார் "ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்—போகமாய்த் தான்விளைந்த பொற்பினன்" என விடயித்தற்கட் படுமியல்பும், ஏகமாயுள்ளத்தின்கண் ணானென அறிவு விளங்குதற்கட்படு மியல்பும் எடுத்தோதினார்.

பரபோகமாயென்னாது போகமாயென்றதும் ஒப்புமையிணங்குதற்பொருட்டு. சேற்றுநில மிதித்துச் சென்றானுக்கு வன்னிலம் போலப் பரபோகவிளைவு செயற்கைப் பொருளாய் நிற்றலின், ஆக்கமுங் காரணமும் அடுத்துவந்தது. இணையடிகளுணருந் தோ

றும் போகம் மேன்மேல் விளைதல் "புணர்ந்தாற் புணருந் தொறும் பெரும் போகம்பின் னும்புதிதாய்—மணந்தாழ் புரிகுழ லாளல்குல் போல வளர்கின்றதே." என அப்பொருண்மேல் வைத்தோதிய திருவாக்கானுமறிக. தெளிவுபற்றி விளைந்தவென இறந்தகாலத் தாற் கூறினார்.

கண் கண்ணாடியினின்றுந் தன்னை விடயித்தாற்போல முதல்வன் ஆன்மாவுடனின்று தன்னைவிடயித்தல் பொருத்தமுடைமையின், ஆன்மாச்சிரய மென்னுங் குற்றம் இன்னோரன்னவற்றிற் கெய்தாதென்றுணர்க. கண்ணாடிக்குள்ளாகத் தோன்றுவதுபோலும் எதிர்விம்பமாவது விம்பமேயன்றி வேறன்றென்பது சிவாகம நூற்றுணிபென்க.

இதனுள் அவனும் அவற்றதுவிடயத்தை யுணருமென உணர்வேபற்றி ஓதினாரேனும் "எத்திற ஞான முள்ள தத்திற மிச்சை செய்தி" என்பவாகலின் அவற்றிற்கும் இஃதொக்கும். ஒக்கவே பெத்த முத்தி இரண்டினும் ஆன்மா விடயிக்கப்படும் விடயங்களை முதல்வன் உடனின்று விடயிப்பனென்பதூஉம், பெத்தத்தின் அவனிவனாய் நின்றுவிடயித்தலின் விடயங்கள் அவனுக்கன்றி இவனுக்காயின. முத்தியின் இவனவனாய்நின்று விடயித்தலின் அவனெழிந்த விடயங்களெல்லாம் இவனுக்கின்றி அவனுக்காயின வென்பதூஉம் இனிது விளங்கும். இம்முறைமை நோக்கியன்றே உலகத்துள் ஒன்றனை ஈவாரும் ஏற்பாருஞ் சிவார்ப்பணமெனக் கருதாதவழிக் குற்றமென்று ஆகமங்களோதியதூஉம், "யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே—மாதொரு பாக னார்தாம் வருவர்" என்றதூஉம், அவ்வுண்மை அறிந்தவழி" எத்தனுவினின்று மிறைபணியார்க் கில்லைவினை—முற்செய்வினை யுந்தருவான் முன்" எ-ம். பெற்ற சிற்றின்பமே பேரின்பமாய் எ-ம், "உடம்புடைய யோகிகடா முற்றசிற் றின்ப—மடங்கத்தம் பேரின்பத் தாக்கி" எ-ம், காணுங் கரணங்க ளெல்லாம்பே ரின்பமெனப்—பேணு மடியார்" எ-ம், எல்லாஞ் சிவமா யிருந்ததே" எ-ம், இவ்வாறோதியதூஉமென்க.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) ஒன்று ஏகம் ஆய் நின்று இணையடிகள் உணரவே தான் போகம் ஆய் விளைந்த பொற்பினான் உள்ளத்தின்கண் ஏகமாய் ஆனான் உன்குவார் உள்கிற்றை உள்ளத்தான் உற்றுக் காணானே.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ வெனின், ஆன்மாவானது பெத்தத்தில் உலகப்பொருள்களை அறியுமிடத்து மேலேவெண்பாவிற் கூறிய வாறு முதல்வன் உடனின்று அறிவன் என்றல் பொருந்தும், முத்தியில் முதல்வனை அறியுங்காலத்தும் அவ்வாறே அம்முதல்வன் உடன் நின்று அறிவனாயின் தன்னைத்தான் பற்றுதலென்னுங் குற்றமாம். இக்குற்றமே ஆன்மாச் சிரயம் எனப்படும். ஆதலால் முத்தியில் முதல்வன் உடன் நின்று அறிவன் என்றல் பொருந்தாததாகி மேற்கோளிற் கூறியவாறு அவனும் அவற்றது விடயத்தை உணரும் என்றல் எவ்விடத்தும் செல்லமாட்டாது என்று கூறுவாரைநோக்கி முத்தியிலும் முதல்வன் உடன்நின்று உணர்தல் உண்டென்பதுகாட்டி மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) ஆன்மாவானது முத்திநிலையில் முதல்வனைச் சார்ந்தவிடத்து அம் முதல்வன் தன்மையே தன் தன்மையாயும் முதல்வன் பல வேறுவகைப்படாது ஒரு தன்மையாயவாறுபோல ஒரு தன்மையாயும் அவனோடொற்றுமைப்பட்டுநின்று அவன் திருவடிகளை உணரும். உணரவே அவ்வாறு உணரும் ஆன்மாவுக்கு முதல்வன் பரபோகமாய் மேலு மேலும் புதிது புதிதாய்த்தோன்றி வளரும் அழகினையுடையவனாவன். அவ்வாறு முதல்வனையுணருங்கால் உணருகின்ற அவ்வான்மாவினுடைய அறிவில் அம்முதல்வன் ஒன்றுபட்டு அவ்வறிவைவிட்டு நீங்கான். இவ்வாறு பரபோகமாய்த்தோன்றுதல் வேறாய்நிற்குந் தன்மைபற்றியெனவும் அறிவில் ஒன்றுபட்டு நிற்றல் ஒன்றாய்நிற்குந் தன்மைபற்றி எனவும் அறிக. ஆதலால் உடனாய்நிற்குந் தன்மைபற்றிக் கருதுவார் கருதியவாறு விளங்கித்தோன்றும் பொருளாகிய முதல்வன் தன்னை அவ்வாறு கருதுகின்றவருடைய அறிவோடு கூடிநின்று அறியமாட்டானோ? அறிவான் எ-று.

(க-ரை.) முதல்வன் உயிருடன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்பன் ஆதலால் முத்தியில் ஒன்றாய் நிற்றல்பற்றி உயிரின் அறிவோடு கலந்து நின்று வேறாய் நிற்றல்பற்றிச் சிவபோகமாய் விளங்கித்தோன்றி உடனாய் நிற்றல்பற்றி அச்சிவபோகத்தை உயிரின் அறிவோடு உடன்நின்று அறிவன் ஆதலால் அவனும் அவற்றதுவிடயத்தை யுணருமென்றல் எவ்விடத்துஞ் செல்லும் என்பதாம்.

போகமாய்த்தான் விளைந்தபொற்பினான் என்பதிலும், ஏகமாய் உள்ளத்தின்கண் ஆனான் என்பதிலும் உள்ள போகமாய் ஏகமாய் என்பன, பொற்பினான் கண் ஆனான் என்னும் பெயருக்கு அடைமொழிகளாய் நின்று போகமாயும் ஏகமாயும் நிற்றலால் அப்போகத்தை ஏகமாய் நின்று அறிவான் என உணர்த்தினமையின், போகமாயினான் ஏகமாயினான் என்பன பெயர் அடைகளாகவும் ஏதுப்பொருள்களாகவும் நின்றன.

உடன்நின்று உணர்தல் எவ்விடத்துஞ் செல்லும் என்பதை அறிவித் தற்கு உள்குவார் உள்கிற்றை என்றார். உள்குவார் உள்கிற்றை என்று பொதுப்படக் கூறியதனால் பெத்தத்தில் கருதப்படும் உலகப்பொருள் களையும் முத்தியிற் கருதப்படும் சிவப்பொருளையும் அச்சிவம் உடன் நின்று அறியும் என்றவாறாயிற்று. பெத்தமுத்தி இரண்டினுங் முதல்வன் உடன் நின்று அறிவன் என்னும் இக்கருத்துப்பற்றியே திருநாவுக்கரசுசுவாமிகள் திருமறைக்காட்டுத் திருத்தாண்டகத்தில் "வேண்டுவார் வேண்டியதே ஈவான்" என்றும், பொதுவில் "உள்குவார் உள்கிற் றெல்லாம் உடனி ருந் தறிதி" என்றும் அருளினர். உள்ளத்தாற் காணுமே உற்று என்றதைப் பிரித்துக் கூட்டுமிடத்து உள்ளத்தான் உற்றுக்காணுமே எனக்கூட்டுக. அவ் வாறே பிரித்து உரைசெய்யப்பட்டது. உள்ளத்தான் என்றதிலுள்ள ஆன் உருபு உயிர் அறியும்பொழுது இறைவனும் உடன்நின்று அறிவன் என்னும் உடன் நிகழ்ச்சிப்பொருளில் நின்றது. ஆதலால் உள்ளத்தான் என்பதற்கு அறிவோடு என உரைசெய்யப்பட்டது. காணுமே என்றதிலுள்ள ஓகாரம் எதிர்மறையாய் நின்று காண்பன் என உடன்பாட்டுப்பொருளை உணர்த் திற்று.

முதல்வன் கருதுவார் கருதிய பொருளாய் விளங்குவனாதலால் முத்தி யில் ஆன்மாக்கள் முதல்வனை அறியுங்கால் அவ்விடத்து அவ்வான்மாக்க ளுக்கு அறியப்படும் பொருளாகிய அம்முதல்வன், தன்னையும் ஆன்மாக்கள் உடன்நின்று உணரப்படுவன். ஆதலால் காண்பன் என்றதுகொண்டு காணப்படும் பொருள் முதல்வனின் வேறன்று என அறிக.

மேலைவெண்பாவில் ஐம்பொறிபோல் ஆன்மா அதுவதுவாய் நின்று உணரும் எனக் கூறப்பட்டது. அந்த ஐம்பொறியும் உயிரின்பொருட்டு உணருமாதலால் அவ்வைம்பொறியை உவமானமாகவைத்துக்கொண்டு அனு மானப் பிரமாணங்கூற எண்ணி இவ்வெண்பாவில் மேற்கோளும் ஏதுவுங் கூறினார். எவ்வாறெனின், உள்குவார் உள்கிற்றை உள்ளத்தான் உற்றுக் காணுமே என்றது மேற்கோள். ஒன்று ஏகமாய்நின்றே இணையடிகள் உணரப் போகமாய்த் தான்விளைந்தபொற்பினான் ஏகமாய் உள்ளத்தின்கண் ஆனான் என்பன ஏது. ஐந்து விடயங்களையும் அவ்வைம்பொறிகள் உயிரறி வோடு கூடிநின்று உயிரின்பொருட்டு உணர்தல்போல என்பது திருட் டாந்தம் என அறிக. ஆகவே இந்திரியங்கள் தத்தம் போகமாகிய விடயங் களை உயிரின் அநுபவத்தின்பொருட்டு அவ்வுயிருடன் நின்று உணர்தல் போல முதல்வன் பரபோகமாய்விளங்குந் தன்னை உயிரின் அநுபவத்தின் பொருட்டு உயிருடன்நின்று உணர்வன் என்க.

இன்னும் முதல்வன் கருதுவார் கருதியவாறு ஆதல் பெத்தமுத்தி இரண் டினும் ஒக்குமென்று கூறவேண்டி ஏகமாய்நின்றே இணையடிகள் ஒன்று ணரப் போகமாய்த் தான்விளைந்த பொற்பினான் என அறியப்படுதலின்கண்

உண்டாகின்ற இயல்பும், ஏகமாய் உள்ளத்தின்கண் ஆனுன் என அறிவு விளங்குதலின்கண் உண்டாகின்ற இயல்பும் இவ்வெண்பாவால் கூறினுரெனவும் அறிக. அதாவது போகமாகவும் போகத்தை அறிகின்றவனுக வும் இறைவன் விளங்குகின்ருன் என்றபடியாம்.

முத்திநிலைகூறும் இச்சூத்திரத்தில் பரபோகமா யென்றுகூருமல் போகமாயென்று பொதுப்படக் கூறியதும் பெத்தத்தில் விடயபோகமாகவும் முத்தியில் சிவபோகமாகவும் விளங்குகின்ருன் என அறிந்துகொள்ளுதற் பொருட்டேயாம். பெத்தத்தில் போகமாய் விளங்குகின்ருன் என்றது போகத்தினிடத்தும் அவன் நின்று கூட்டுவித்தாலன்றி ஆன்மாக்கள் அநுபவிக்கமுடியாதென்ற கருத்துப்பற்றியேயாம். இவ்வளவேயன்றிஇறைவனே வேறுபட்டுப் போகமாய்த் தோன்றுகின்ருன் என்ற கருத்துப்பற்றியன்று.

இறைவன் பரபோகமாய் நிற்றல் புதிதன்று என்றுமுள்ளதே. மேல் புதிது புதிதாய்த் தோன்றுவன் என்றது உயிருக்கு அநுபவமாகும் முறை பற்றியேயன்றிப் பிறிதில்லை. அவ்வாருயின் போகப்பொற்பினுன் என்று கூருமல் புதிதாய் ஆனது என்று கருதும்படி ஆய் என்னும் ஆக்கச்சொல் சேர்த்துப் போகமாய் என்று கூறியகருத் தென்னையெனின், நிலம் வலிதாய் இருத்தல் இயற்கையேயாயினும் சேற்றுநிலம் மிதித்துச்சென்ற ஒருவனுக்கு வலிய நிலத்தை மிதிக்கும்போது நிலத்தின் வலிமை முன்னின்ற சேற்றுநிலத்தை நோக்கச் செயற்கையேயாம். அதுபோல, இறைவன் பரபோகமாய் என்றும் நிற்பினும் உலகபோகத்தில் நின்ற உயிருக்கு அவ்வுலக போகத்தைவிட்டு இறைவனை உணரும்பொழுது அப்பரபோகந்தோன்றினமையால் தோன்றிய அப்பரபோகம் செயற்கைப் பொருளாயிற்று. தொல்காப்பியம் கிளவிஆக்கம் உ0-வது சூத்திரத்தில் “செயற்கைப்பொருளை ஆக்கமொடுகூறல்” எனவும், உக-ல் “ஆக்கந் தானே காரண முதற்றே” எனவுங் கூறியவாறு செயற்கைப்பொருளைக் கூறுமிடத்துக் காரணத்தை முன்னும் ஆக்கத்தைப் பின்னுமாகவைத்துக் கூறல்வேண்டும். அவ்வாறே செயற்கைப் பொருளாகிய பரபோகத்துக்கு உணரப் போகமாய் என உணர்தலாகிய காரணத்தை முன்னும் ஆய் என்னும் ஆக்கத்தைப் பின்னும் வைத்துக் கூறினுரென அறிக.

அவ்வாருயின் தொல்காப்பியம் கிளவிஆக்கம் ககூ-வது சூத்திரத்தில் சேற்றுநிலம் மிதித்துச் சென்றவன் வன்னில மிதித்தவிடத்து நிலம் வலிதாயிற்று என்று கூறின் ஆயிற்று என்னும் ஆக்கம் மென்னிலம் வன்னிலம் என்ற வேறுபாட்டைக் குறித்ததேயன்றி ஆக்கங்குறித்த தன்று என உரையாசிரியர் சேனுவரையர் கூறிய கருத்தென்னை யெனின், வன்மை நிலத்திற்கு இயற்கையாதலின் அவ்வாறு கூறினர். சேற்று நிலத்தைநோக்கச் செயற்கைப் பொருளென்று கொண்டால் மேற்கூறிய விதிப்படிதான் கூறல் வேண்டும்.

இணையடிகள் உணருந்தோறும் பரபோகம் மேலு மேலும் விளையும் என்பதைத் திருச்சிற்றம்பலக் கோவையார் கூ-வது செய்யுளில் "புணர்ந் தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய்—மணந்தாழ் புரிகுழ லாள் அல்குல்போல வளர்கின்றதே" எனப் பரபோகத்தின் மேல்வைத்து ஓதிய திருவாக்கானும் அறிக.

போகமாய்த் தான்விளையும் பொற்பினன் என எதிர்காலத்தால் கூற வேண்டியதை விளைதலின் தெளிவுபற்றி விளைந்த என இறந்தகாலத்தாற் கூறினர். இது திருக்குறள் புதல்வரைப் பெறுதல் க-வது செய்யுளில் அறிவறியும் மக்கள் என்று கூறவேண்டியதைத் துணிவுபற்றி "அறிவறிந்த மக்கள்" எனக் கூறியதுபோலாம்.

கண், கண்ணாடியில் நின்றும் தன்னைக் கண்டாற்போல, முதல்வன், ஆன்மாவுடன் நின்று தன்னைக் காண்டல் பொருத்தமாதலால் இவை போன்றவற்றிற் கெல்லாம் தன்னைப் பற்றுதலென்னுங் குற்றம் இல்லை யென மேல் எழுந்த ஆசங்கையை நீக்கியவாறு அறிக. கண்ணாடிக்குள் ளாகத் தோன்றுங் கண், பிரதிவிம்பமாதலால் அது ஆன்மாவிற் குள்ளாகத் தோன்றும் வியாபக சிவத்திற்கு எவ்வாறு உவமையாகு மெனின், கண் தன்னிடத்துள்ள குணதோஷங்களை அறிவதற்காகக் கண்ணாடியைப்பார்ப் பதேயன்றிப் பிரதி விம்பத்தைப் பார்ப்பதற் கன்று, ஆதலால் கண்ணாடிக் குள்ளாகப் பிரதிவிம்பம்போலத் தோன்றும் கண் விம்பமே யென்பது சிவா கம நூற்றுணிபாதலால் உவமையாகும் என்க.

முதல்வன், தன்னை உயிருடன் நின்று அறிவன் என்னும் இக்கருத்தே பற்றிச் சில ஆகமங்களும் உபநிடதங்களும் முதல்வனும் தன் ஆனந் தத்தை அநுபவிப்பன் என்று கூறும். அவ்விடத்து அநுபவிப்பன் என்ப தற்கு அறிவன் என்பதே கருத்து. அக்கருத்தறியாத ஏகான்மவாதிகள் முதல்வனே தன் ஆனந்தத்தை அநுபவிப்பன் உயிரென்ப தொன்றில்லை யென்பர். அழுந்தி அறிதலே அநுபவித்தல் என்னும் சொற்குப்பொரு ளாகலின் அவ்வியல்பு ஆன்மாவிற்கே யன்றி முதல்வனுக்கு இல்லை யாக லானும், ஆனந்த ரூபமே முதல்வனாகலின் தானே தன்னைப் புதிதாக அநுபவித்தல்வேண்டாமையானும், முதல்வன் செய்யுஞ் செயலெல்லாம் தன்பொருட்டன்றி ஆன்மாவின் பொருட்டே யாதலானும் அவர் கருத்துப் பொருந்தாதென்க.

இவ்வதிகரணத்துள் அவனும் அவற்றது விடயத்தை உணரும் என முதல்வனுடைய அறிவு ஒன்றேபற்றிக் கூறினாரேனும் சிவஞானசித்தி யார் க-ம் சூ-ம் கூஉ-வது செய்யுளில் "எத்திறம் ஞானம் உள்ளது அத்திறம் இச்சை செய்தி" என வழிநூலாசிரியர் கூறியவாறு இச்சை செய்திகட்கும் அது ஒக்கும் ஒக்கவே, பெத்தமுத்தி இரண்டினும் ஆன்மா அறியும்பொ ருளை முதல்வன் உடன் நின்று அறிவன் எனவும் இச்சிக்கும் பொருளை

உடன் நின்று இச்சிப்பான் எனவும் செய்யுஞ் செயலை உடன் நின்று செய்வன் எனவும் அறிக.

அவ்வாறாயின் நன்மை தருதற்கு ஏதுவாக ஆன்மாவின் அறிவு இச்சை செயல்கள் நிகழுங்காலத்து முதல்வனுடைய அறிவு இச்சை செயல்களும் உடன் நிகழ்தல் பொருந்தும். தீமைதருதற்கு ஏதுவாக ஆன்மாவின் அறிவிச்சை செயல்கள் நிகழுங்காலத்து அதிற் செல்லவொட்டாது தடுக்காமல் அதற்கும் உதவிபுரிதல்முதல்வன் கருணைக்கும் ஆற்றலுக்கும் குறையாகாதா எனின், கூறுதும்:— அறிவு இச்சை செயல்கள்மூன்றும் ஆன்மாவின் குணம். குணமாவது இயற்கையாய்ப் பொருள் உள்ளபொழுதே உள்ளதாகும். ஆன்மாவின் குணமாகிய அம்மூன்றும் ஆன்மா உள்ளபொழுதே உள்ளனவாயினும் யாதானுமொரு துணையைக் கொண்டே நிகழுந் தன்மையும் அப்பொழுதே உள்ளது. இது எதுபோல எனின், கண்ணினிடத்து இயல்பாயுள்ள ஒளி சூரியன் முதலியவற்றின் ஒளியின் துணையைக் கொண்டு விளங்குமாறுபோலாம். இனி உயிரினிடத்துள்ள அம் மூன்றும் நிகழ்வதற்கு வேண்டப்படுந் துணையும் புறத்துணை அகத்துணையென இருவகைப்படும். அவற்றுள், புறத்துணையாவது தூலசூக்கும உடம்புமுதலாயின. அகத்துணையாவது முதல்வனுடைய அறிவிச்சை செயல்கள். புறத்துணையாகிய தனுகரணாதிகள் சடமாதலால் தானே உயிரைவந்து கூடமாட்டா. உயிர் அறிவுடைப் பொருளாயினும் அவ்வறிவுக்குத் தானே விளங்குந் தன்மை இல்லாமையால் உயிர் தானும் தனு கரணாதிகளை எடுத்துக் கொள்ளமாட்டாது. ஆதலால் இறைவன் தான் உயிருக்குத் தனுகரணாதிகளைத் தரல் வேண்டும். அந்த இறைவனும் தன்விருப்பப்படி தருவன் எனின் எல்லா உயிர்களுக்கும் ஒரேதன்மையான தனுகரணாதிகளைத் தரல் வேண்டும். அவ்வாறின்றி உயிர்தோறும் வேறு வேறு தனுகரணாதிகள் காணப்படுகின்றமையால் அவ்வாறு தருதற்குக்காரணம் இருத்தல் வேண்டும். அக்காரணம் உயிர்களினிடத்துக் குணமாகவுள்ள இச்சையின் வியாபாரபேதமாகிய விருப்பு வெறுப்பேயாம். அவ்விருப்பு வெறுப்பும் அகத்துத் தன்னைப்பற்றி நிகழ்தலும் புறத்துத்தனுகரணாதிகளைப் பற்றி நிகழ்தலும் என இருவகைப்படும். அகத்து நிகழ்தல் மூலகன்மம் எனவும் புறத்து நிகழ்தல் இருவினையாகிய ஆகாமிய மெனவுங் கூறப்படும். சிவஞான சித்தியாரில் ''கன்மமு மூலங் காட்டி'' என்றதும் அகத்துநிகழும் விருப்பு வெறுப்பையேயாம். அவ்விருப்பு வெறுப்பாவது துன்பத்திற் காற்றாது இன்பத்தை விரும்புதலே யன்றித் துன்ப இன்பங்களைப் பகுத்தறிந்து வெறுத்தலும் விரும்புதலுஞ் செய்தலில்லை. இந்நிலையில் தனுகரணாதிகள் கிடையா. இந்நிலை தான்துன்பத்தைச் செய்யும் ஆணவமலத்துடன் கூடிய கேவல மெனப்படும். இக்கேவலநிலையில் மலத்தின் சேட்டைக்கு ஆற்றாது உயிர் வருந்தும் பொழுதும் இறைவன் உடன் நிற்கின்றான். நின்றும் மலத்தை நீக்கித் திருவடியை அப்பொழுதே கொடுக்கவில்லை. அவ்வாறு கொடுக்கா

மைக்குக்காரணம் மலத்தை நீக்கினும் உயிரினிடத்துள்ள பற்றுஅருது. பற்று அருதவிடத்து நீக்கிய மலத்தை மீளப்பற்றக் கூடும் என்பதே யாம். அப்பற்று முற்றும் நீங்கவேண்டு மாயின் இறைவனை இடைவிடாது பற்றல்வேண்டும். அவ்வாறு இறைவனைப் பற்றுந்தன்மை கேவலத்தில் உயிருக்கு இல்லாமையால் அவ்விடத்தில் மலத்தை இறைவன் நீக்கவில்லை. இறைவனைப் பற்றுந் தன்மையையும் அப்பொழுதே உயிருக்கு அவ்விறைவன்கொடுக்கக் கூடாதோ எனின், இயல்பாகவே மலத்தைப் பற்ருதிருக்கச்செய்யக் கூடாதோ என்று வினவில் என்னவிடை தரக்கூடுமோ அதே விடையை இதற்குங் கொள்க. ஆகவே மலத்தைப்பற்றுதல் இயற்கையாயினவாறுபோல இறைவனைப் பற்றுதலும் மலப்பற்று அற்ற பொழுது உண்டாதல் இயற்கை யென அறிக. மலப்பற்று அறுதற்கு இறைவன் தனுகரணாதிகளைத் தந்தது மன்றி அத்தனுகரணாதிகளைக் கொண்டு செய்ய வேண்டுவன இவை செய்யவேண்டாதன இவை யென அறிந்து கொள்ளுதற் பொருட்டு வேதாகமங்களையுந் தந்தருளினன். இவ்வாறு தனுகரணாதிகளையும் வேதாகமங்களையும் புறத்துணையாக இறைவன் தந்து அவற்றைப் பொருந்தி அறிவிச்சை செயல்கள் தொழிற் படுதற்கு அவற்றுடன் பிரிப்பின்றி அகத்துணையாகவும் இருக்கின்ருன். துணையை உபயோகப் படுத்துந் தகுதி உயிருக்குச் சொந்தமாதலின் தீயநெறியில் உபயோகப் படுத்தின் அது உயிரின் குற்றமேயன்றி இறைவன் கருணையின் குற்றமாகாது என அறிக. எதுபோலவெனின், பிதா கத்தி, யெழுத்தாணி செய்வித்துப் பிள்ளையிடம் கத்தியால் சட்டத்தை வார்ந்துகொள். எழுத்தாணியால் எழுது என்று சொல்லி அதனை அவனிடங்கொடுத்தபோது அவன் அவ்விரண்டுஞ் செய்யாது கழுத்திற்குத்திக்கொண்டால் அக்குற்றம் பிதாவைச்சாராது அப்பிள்ளையைச் சார்தல்போலாம். உயிரின் குற்றமாகலின்ருன் தீய நெறிக்குத் தண்டத்தைத் தந்து தண்டத்துக் காற்ருது வருந்துங்கால் நன்னெறி காட்டித் திருவடியைத் தருகின்ருன். இவ்வாறு செய்தலால் இறைவன் ஆற்றலுக்குக் குறைவில்லாமையும் அறிக. செய்யவேண்டியதைச் செய்து முடிப்பது தான் ஆற்றலாகுமன்றிச் செய்யவேண்டாததைச் செய்து முடிப்பது ஆற்றலாக மாட்டாது. துணையை உபயோகப் படுத்துந்தகுதி உயிருக்கு சுதந்திரம் என்னும் இக்கருத்துப் பற்றியே திருக்குறள் கடவுள் வாழ்த்தில் "தனக் குவமை யில்லாதான் ருள் சேர்ந்தாற் கல்லால்—மனக்கவலை மாற்ற லரிது" என்று அருளினர் ஆசிரியர் தேவரும். சேர்ந்தார் என உயிரின் தன்வினையாகக் கூறியது இங்கே கவனிக்கத் தக்கது.

உயிருக்குத் துணையின்றி அறியுந் தன்மையில்லை யாயினும் துணையை உபயோகப படுத்துஞ் சுதந்திரம் உண்டென்பது துணையைக் கொண்டு காணுந் தன்மை கண்ணுக்குச் சுதந்திரமா யிருத்தல்போலாம். இக்கருத்துப்பற்றியே, திருவாசகம் உயிருண்ணிப் பத்து ௧0-வது செய்யுளில்

“நான்பாவிய ஞனுனே நல்காயென லாமே” எனவும், திருமந்திரத்தில், “நெறியைப் படைத்தா னெருஞ்சில் படைத்தா— னெறியில் வழுவி னெருஞ்சின்முட்பாயு— நெறியில் வழுவா தியங்க வல்லார்க்கு—நெறியி னெருஞ்சின் முட்பாய கிலாவே” எனவும் ஆசிரியர்கள் அருளிச் செய்வாரா யினர். இன்னும் இதனை ஒரு அரசன் ஆணையைப் பெற்று அதிகாரத்தை நடாத்தும் ஒருவன் சட்டத்திற்கு வழுவாது செய்யின் நன்மை பெறுதலி னும் வழுவின் தண்டம் பெறுதலினும் வைத்தும் அறிந்து கொள்க.

இவ்வாறு பெத்தமுத்தி இரண்டினும் உயிருடன் இறைவன் கலந்து நின்று உயிரின் அறிவிச்சைசெயல்கள் தொழிற்படுவதற்கு தன்னுடைய அறிவிச்சை செயல்களைத் தொழிற்படுத்துவன் என்றது பொருந்தும். அவ்வாறாயின் பெத்தத்தில் வினைப்பயன்களை உயிர் அநுபவிக்கவும் முத்தியில் “முற்செய்வினையுந் தருவரன்முன்” என மேற்பத்தாஞ் சூத் திரம் இரண்டாவது அதிகரணத்து முதல்வெண்பாவிற் கூறியபடி வினைப்பயன்களை இறைவன் என்று கொள்வானென்றல் எவ்வாறு பொருந் துமெனின், பெத்தத்தில் இறைவன் உயிராகநின்று அறிகின்றான். முத்தி யில் உயிர் இறைவனாகநின்று அறிகின்றது. ஆதலால் இறைவன் உயிராக நின்ற பெத்தத்தில் வினைப்பயன்கள் உயிருக்காயின. உயிர் இறைவனாக நின்ற முத்தியில் முதல்வனை அநுபவிக்கும் சிவாநுபவம் நீங்கிய வினைப் பயன்கள் இறைவனுக்காயின என அறிக.

இறைவனே தானாய்நின்றால் தான்செய்யும்வினை தன்னைக் கட்டுப் படுத்தாது என்னும் இம்முறைமைநோக்கி அல்லவா உலகத்துள் ஒன்றனை ஈவாருங் ஏற்பாரும் சிவார்ப்பணமெனக் கருதாமல் தான் கொடுத்ததாகவும் தனக்குத் தந்ததாகவும் கருதியவிடத்துக் குற்றம் உண்டாகுமென ஆகமங் கள் ஓதியதூஉம் என்க.

இன்னுஞ் சிவஞானசித்தியார் உ-ம் சூ-ம் உரு-வது செய்யுளில் “யாதொரு தெய்வங்கொண்டீர் அத்தெய்வ மாகி யாங்கே—மாதொரு பாக னார்தாம் வருவர்” என்ற உண்மையை அறிந்தவிடத்து எல்லாஞ் சிவமாகவே தோன்றுமாதலால் அவ்வாறு சிவாநுபவம் வரப்பெற்றவருக்கு வினைப் பயன் தாக்குதலின்றி எல்லாஞ் சிவானந்தமாகவே விளங்கும் என்னுங் கருத்துப் பற்றி இந்நூல் க0—ஆம் சூத்திரம் இரண்டாவது அதிகரணத்தில் “எத்தனுவில் நின்றும் இறைபணியார்க் கில்லைவினை—முற்செய்வினை யுந் தருவான் முன்” எனவும், திருவுந்தியார் ௩௩-வது செய்யுளில் “பெற்ற சிற் றின்பமே பேரின்பமாய்” எனவும், திருக்களிற்றுப்படியார் உசு-வது செய்யுளில் “உடம்புடைய யோகிகள்தாம் உற்றசிற் றின்பம்—அடங்கத் தம் பேரின்பத் தாக்கி” எனவும், திருவாசகம் பண்டாய நான்மறைப்பதிகம் சு-வது செய்யுளில் “காணுங் கரணங்க ளெல்லாம் பேரின்பமெனப்— பேணு மடியார்” எனவும், “எல்லாஞ் சிவமா யிருந்ததே” எனவும் அநுபவ முடைய தேசிகர்கள் அருளினரென அறிக.

முதலதிகரணம் முற்றிற்று

# இரண்டாம் அதிகரணம்.

*அத்துவித நிலையை மறவாது பத்திசெய்தலால் முதல்வன் திருவடியைக் கூடுதலாகிய நிட்டைகூடுமெனக் கூறும்*

*மேற்கோள்.*

இனிப் பத்தியினான் மறவாதேத்த அவனது சீபாதத்தை யணையுமென்றது.

## சிற்றுரை.

*எ—து மே—ள் எ—னின், ஏகனாகி நின்றார்க்கு அவ்வியைபுபற்றி அறிவிச்சை செயல்கண் மூன்றும் ஆண்டுவிடயிக்குமாறு யாங்ஙன மென்பாரை நோக்கி நிட்டையினியல்புணர்த்துதற் கெடுத்துக் கொண்ட இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.*

*இ—ள். சூத்திரத்துரைத்தவாறு பற்றி உரைத்துக்கொள்க.*

## சுப்பிரமணியதேசிகர் உரை.

*இ—ள். மறவாது—அவ்வத்துவித நிலையை மறவாது கடைப் பிடித்துச் செய்யும்,—பத்தியினான்—அன்பானே,—ஏத்த—முதல் வனருள்வழி நின்றால்,—அவனது சீபாதத்தை— அவன்றிருவடி யாகிய சிவானந்தாநுபூதியை,—அணையும்—தலைப்படும் எ-று.*

## சிற்றுரை.

*“இத்தையாயும் அறிவுடையனாய் அன்புசெய்ய”என வழிநூ லாசிரியரும் ஓதுதலின் ஈண்டு மறவாது பத்தியினாலேத்தவெனச் சூத்திரப்பொருட்கேற்ப மாறிவைத்துரைத்துக்கொள்க. ஏத்த வென்றது உபசார வழக்கு. அன்பு பத்தி காதலென்றாற்போல்வன இச்சைமீதூர்தற் பொருளவாகலான், அது பரமுத்தியினு முண் டென்பதுணராதார் பத்தியாவது சீவன் முத்திநிலைக்கே செய்யப் படுவதொரு சாதனம்போலுமென மயங்கித் தத்தமக்கு வேண்டிய வாறே உரைப்ப. பரமுத்தியின்கண் இச்சைநிகழாத வழிச் சிவ*

போகம் அநுபவமாதல் செல்லாமையானும், சிவன்முத்திநிலைக்கே கூறுவதொன்றாயிற் "செம்மலர் நோன்றாள்" என்னுஞ் சூத்திரத்து ஒருங்குவைத்து ஓதவமையும் சூத்திரம் வேறு செய்யவேண்டாமை யானும், அவ்வுரை போலியென்றொழிக.

## விளக்கம்.

இம்மேற்கோள் அதனை அயரா அன்பின் அரன் கழல் செலுமே என்ற சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து மேற் கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்னசொல்லிற்றோ எனின், மேலையதிகரணத்திற் கூறியவாறு முதல்வனோடு பிரிப்பின்றி ஏகமாய் நின்றவர்க்கு ஏகமாய் நிற்கும் அந்தநிலையில் முதல்வன் உபகாரத்தை அறிதலும் அன்பு செய்தலும் திருவடியைக் கூடுதலும் ஆகிய தொழில்கள் எவ்வாறு நிகழும்? நிகழாதாயின், மேலையதிகரணத்து இறுதி வெண்பாவில் ஏகமாய் நின்றே இணையடிகளொன்றுணரப் போகமாய்த் தான்விளைந்த பொற்பினான் என்றது எவ்வாறு பொருந்து மென்பாரை நோக்கி நிட்டையின் இயல்பு இதுவென்று கூறுதற்கு எடுத்துக்கொண்ட சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து அறிவு இச்சை செயல்களின் தொழிற் பாட்டினாலேயே ஏகனாகி நிற்கும் நிட்டை கூடு மெனக் கூறியவாறாம்.

இவ்வதிகரணத்தில், ஏகனாய் நிற்கும் நிலையில் அறிவு இச்சை செயல்களின் தொழிற்பாடு உண்டோ இல்லையோ என்பது ஐப்பாடு. இல்லையென்பது பிறர்பக்கம்.

இம்மேற்கோளுக்கு உரையாசிரியர் செய்த உரையாவது, சூத்திரத்தில் அயரா அன்பின் அரன்கழல் செலுமே என்றதற்கு உரைத்தவாறு இம்மேற்கோளுக்கும் உரைத்துக் கொள்க என்பதாம்.

இதற்குச் சுப்பிரமணிய தேசிகர் செய்த உரையாவது, உயிரோடு கலந்து நின்று அறிவித்தும் அறிந்தும் வருகின்ற முதல்வனுடைய அத்துவித நிலையை மறவாது உறுதியாகப் பற்றிச்செய்யும் அன்பினால் முதல்வனையின்றித் தனக்குத் தனிச்செயலில்லையென அறிந்து எல்லாம் முதல்வன் செயலேயென அவன் அருள்வழி நின்றால் அம்முதல்வன் திருவடியாகிய சிவானந்த அநுபூதியைக் கூடும் என்பதாம்.

பத்தியினால் மறவாது ஏத்த என மேற்கோள் கூறியிருப்பினும், சூத்திரத்தில் அயரா அன்பின் என இருத்தலினாலும், சிவஞான சித்தியார் ௧௧-ம் சூ-ம் ௧-வது செய்யுளில் "இத்தை ஆயும் அறிவுடையனாய் அன்பு

செய்ய” என வழிநூலாசிரியர் ஓதுதலினாலும் சூத்திரப் பொருளுக்கேற்ப மறவாது பத்தியினால் ஏத்த என மாற்றிவைத்து உரைத்துக்கொள்க. அவ்வாறே உரைசெய்யப்பட்டது.

அவன் அருள்வழி நிற்றலை ஏத்த என்று கூறியது உபசார வழக்கு. ஏத்துதல் அடிமையின் தொழில். அடிமைக்குத் தனக்கெனச் செயல் கிடையாது. ஆகவே, ஏத்த என்றதனால் அருள்வழி நிற்றல் பெறப்படுமாறு அறிக.

அன்பு பத்திகாதல் என்னுஞ் சொற்கள்இச்சையின் மிகுதிப்பாட்டைக் குறிக்கும். குறிக்கவே, முதல்வனோடு இரண்டறக் கலந்து நிற்கும் பரமுத்தியினும் பத்தி உண்டென்பது பெறப்படும். இவ்வுண்மை அறியாதார் பத்தியாவது சீவன் முத்திநிலைக்கே உரியதொரு சாதன மெனவும் பரமுத்தி நிலைக்குப் பத்தி சாதனமாகா தெனவும் ஆதலால் இச்சூத்திரம் சீவன் முத்திநிலையே கூறிற்று எனவும் கூறுவர். பரமுத்தியின்கண் இச்சை நிகழாதவிடத்துச் சிவபோகம் அநுபவமாதல் இல்லை. இச்சையோ பத்தியின்றி நிகழாது. ஆதலால் பரமுத்தியில் பத்தி உண்டென்பது நன்குவிளங்கும். அன்றியும் சீவன் முத்திநிலைக்கே கூறுவதொன்றாயின் செம்மலர் நோன்றாள் எனக்கூறும் பன்னிரண்டாஞ் சூத்திரம் சீவன் முத்திநிலையே கூறுதலால் அச்சூத்திரத்தில் சேர்த்து வைத்து ஓதியிருக்கலாம். அவ்வாறின்றி இச்சூத்திரத்தை வேறு வைக்கவேண்டாம். ஆதலால் பத்தி யென்பது பரமுத்தியில் இல்லை யென்றல் பொருந்தாது எனவும், பரமுத்தி சீவன் முத்தி இரண்டற்கும் வேண்டப்படுவ தெனவும், இப்பதினொராஞ் சூத்திரம் பரமுத்தி நிலையே கூறிற்று எனவும் அறிந்துகொள்க. இரண்டறக் கலத்தலாகிய பரமுத்தியினும் பத்தி உண்டென்பதை “ஈறிலாப்பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே என்னுடை அன்பே” என்னுந் திருவாசகமும் வலியுறுத்தும்; எவ்வாறெனின், பரமுத்தியாவது பாசத்தை அறவே விட்டுப் பரமாய் நிற்றல். பரம்பொருளோ தத்துவங் கடந்த இன்பப் பொருளாகும். அதனை ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே என்றும், அப்பொருள் தத்துவங் கடந்து நிற்கினும் உயிரைக்கடந்து நிற்பதில்லை; ஆயினும் தன்னோடு பிரிப்பின்றி நிற்கும் அப்பரம்பொருளை அன்பினாலன்றி உயிர் அறிவதில்லை. ஆதலால் அறியும் அநுபவத்தில் அன்பும் பிரிப்பின்றி உண்டென்பது அறிவித்தற்கு என்னுடை அன்பே என்றும் அருளியவாறும்.

பத்திசெய்தலால் திருவடி அடைதல் கூடுமென்பதற்குக் காட்டும்

ஏது.

அவன் அந்நியமின்றிச் செய்வோர் செய்திப்பயன் விளைத்து நிற்றலான்.

## சிற்றுரை.

ஏ—து ஏ—து எ—னின், பத்தியினுன் மறவாதேத்தினும் அவனது சீபாதத்தை அணைதல் பரமுத்தியினன்றி முடியாதென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) அம்முதல்வன் வேறு நில்லாது செய்வோர் செய்வனவற்றை அறிந்து அவ்வச் செய்திக்குத் தக்கபயனை மிகச்செய்யலாயின் அவ்வப்பொழுதே விளைவித்தும் அல்லுழிக் காலாந்தரத்தில் விளைவித்தும் உடனாய் நிற்பனுதலான் இனிப்பத்தியினுன் மறவாதேத்தவே அம் முதல்வனது சீபாதத்தை அணையுமென மேற்கொண்டது எ—று.

## விளக்கம்.

இந்த ஏது என்னசொல்லிற்றோ வெனின், பரமுத்தியில் முதல்வனது திருவடியாகிய சிவானந்தத்தை அடைதல் கூடுமென்றிப் பத்தியினுல் மறவாது ஏத்துதலால் அது கூடாது என்பாரை நோக்கிக் கூடுமென மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(இந்த ஏதுவின் பொருள்.) முதலதிகரணத்திற் கூறியவாறு உயிர்களால் உணரப்படும் பொருள்களை உடன் நின்று உணரும் முதல்வன் உயிரின் வேறு நில்லாது உயிர் செய்வனவற்றை யறிந்து அச்செயல்கள் இடையீடின்றி நிகழுமாயின் செய்த அப்பொழுதே பயனைக் கூட்டுவித்தும் விட்டுவிட்டு நிகழுமாயின் பிற்காலத்திற் பயனைக் கூட்டுவித்தும் உயிர்களோடு உடனாய் நிற்பன். ஆதலால் 'இனிப்பத்தியினுல் மறவாது ஏத்தவே அமமுதல்வனது சீபாதத்தை அணையும்' என மேற்கோள் கூறியது எ-று.

அப்பொழுதே பயன்தருவன் என்பதை "குற்றொருவரைக் கூறைகொண்டு கொலைகள் சூழ்ந்த களவெலாம்—செற்றொருவரைச் செய்த தீமைகள் இம்மை யேவருந் திண்ணமே" என்னும் தேவாரத்தானும் அறிக.

மறவாமை என்பது இடையீடின்மையைக் குறிக்கும். அதுவே பரமுத்தியுமாம். ஆதலால் பத்தியினுல் மறவாது ஏத்தவே திருவடி அடைதல் கூடுமெனக் கூறி மேல் நிகழ்ந்த ஆசங்கையை நீக்கியவாறு அறிக.

பரமுத்தியாவது உடம்பு நீங்கியபின் உண்டாகு மென்பர் சிலர்; அது பொருந்தா தெனவும், சாதனம் முற்றுப்பெற்ற பொழுதே உண்டாமெனவும், உடம்பு நீங்கியபின்னர் முன் உண்டான பரமுத்தி நிலைத்தலேயன்றி

உண்டாவதில்லை யெனவும் சிவஞான சித்தியார் பதினோராஞ் சூத்திர ஆரம்பத்தில் விரித்துக் கூறியிருக்கின்றமையால் அவ்விடத்துக் காண்க.

இந்த ஏது, ஏகனாய் நிற்கும் நிலையில் அறிவு இச்சை செயல்களின் தொழிற்பாடு இல்லை யென்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

மறவாது பத்திசெய்தலால் அப்பொழுதே திருவடி அடைதல் கூடுமென்பதற்குக் காட்டும்

உதாரணம்.

அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணார்க்
கிருட்கண்ணே பாசத்தார்க் கீச—னருட்கண்ணாற்
பாசத்தை நீக்கும் பகலலர்த்துந் தாமரைபோ
னேசத்திற் றன்னுணர்ந்தார் நேர்.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், அரன் கழல் சேறல் உடம்பினீங்கிய பின்னன்றி உடம்புடைய வழியுங் கூடுமாயின் அது ஞாயிற்றி னொளிபோல மருங்குள்ளார்க்குப் புலனாதல்வேண்டு மென்பாரை நோக்கி அது கூடாமையும் கூடுமாறும் உவமை முகத்தானுணர்த்தி ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

(இ—ள். அருக்கன் நேர் நிற்பினுங் காணார்க்கு அல் இருளே— ஞாயிறு (எல்லார்க்கும்) ஒப்பநிற்பினும் அது காட்சி உடையார் கண்ணுக்கன்றி அஃதில்லாதார் கண்ணுக்கு இரவின் கண்ணதாகிய இருளேயாம் (அதுபோல),— ஈசன் பாசத்தார்க்கு இருட் கண்ணே— முதல்வன் (எங்கணும் ஒப்பநிற்பினும்) மலநீங்கிய முத்தர்க்கன்றி அஃதுடையார்க்கு அவன் அம்மலத்தின்கண்ணே யாவன். (சீவன் முத்தரும் ஏனையோர்போல் உடலுடைமையிற் பாசத்தாராகலின் வேற்றுமையின்றாலெனின்),—பகல் (நீக்கி) அலர்த்துந் தாமரைபோல்—(ஏனைத் தாமரைகளோடொப்ப ஒருங்கு நிற்பினும் பக்குவமுடைய) தாமரையைக் (கூம்புதலை) நீக்கி அலர்த்து ஞாயிறுபோல,— நேசத்தில் தன் உணர்ந்தார் நேர் அருட்கண்ணால் பாசத்தை நீக்கி (அலர்த்தும்)— ஏனையோர்போல் உடம்போடு நிற்பினும் பருவம் உடையாராய்ப் பத்தியினாற் றன்னை மறவாதுணர்வார்க்கு முதல்வன் தனது திருவருட் பார்வையால்

பாசத்தை நீக்கி (அறிவை)யலர்த்தும் (ஆகலான் உடம்புள் வழியும் அவர் பாசத்தாரல்லர்) எ—று.

ஆகலான் உடம்புள் வழியும் அவர் பாசத்தா ரல்லரென்பது குறிப்பெச்சம். ஏகாரம் தேற்றம். திணிந்த இருளென்பார் அல் இருள் என்றார். மலத்திற்குக் கண்ணுவது அறியாமை. காணாரும் பகலும் ஆகுபெயர். அருக்கன் எடுத்துக்காட்டுவமை. தன்னை யென்னும் இரண்டன் உருபு விகாரத்தாற் றொக்கது.

ஏழாம்வேற்றுமைப் பொருட்கண்வரு நேரென்பது உருபு மயக்கமாய் நான்காவதுணர்த்திற்று. நீக்குதலும் அலர்த்துதலும் ஏனையிடத்துஞ் சென்றியைதலின், ஈரிடத்துஞ் செயப்படு பொருளேற்பன வருவிக்கப்பட்டன.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) அருக்கன் நேர் நிற்பினும் காணார்க்கு அல் இருளே ஈசன் பாசத்தார்க்கு இருட் கண்ணே பகல் (நீக்கி) அலர்த்துந் தாமரை போல் நேசத்தில் தன் உணர்ந்தார் நேர் அருட்கண்ணால் பாசத்தை நீக்கி (அலர்த்தும்.)

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ வெனின், உடம்பு நீங்கியபின் முதல்வன் திருவடியை அடைதல் கூடுமன்றி உடம்பு உள்ளபொழுதே அடைதல்கூடாது; உடம்பு உள்ளபொழுதும் முதல்வன்திருவடி அடைதல் கூடுமாயின் ஒருவனுக்குத் தோன்றும் சூரியனுடைய ஒளியானது பக்கத்தில் இருப்பவருக்கும் விளங்கித் தோன்றுவதுபோல உடம்புடைய ஏனையோர்க்கும் அந்நிலை விளங்கித்தோன்றல் வேண்டுமென்பாரை நோக்கி அந்நிலை ஏனையோர்க்கு விளங்கித் தோன்றாதெனவும், அயராமை என்னும் அறிவின் தொழிற்பாட்டால் உடம்பு உள்ளபொழுதே திருவடி அடைதல் கூடுமெனவும், சூரியனொளியாகிய உவமையில் வைத்தே காட்டிச் செய்வோர் செய்திக்குத் தக்க பயனைத் தருவனென்று கூறிய ஏதுவை வலியுறுத்தியவாறும்.

(பொ—ரை.) மாசினால் ஒளி மழுங்கிய கண்ணுக்கும் மாசு இன்மையால் ஒளி மழுங்காத கண்ணுக்கும் சூரியன் சமமாய் நின்றாலும் அச்சூரியன், ஒளிமழுங்காத கண்ணுக்கு விளங்கித்தோன்றுவதுபோல ஒளிமழுங்கிய கண்ணுக்குத் தோன்றுவதில்லை. அம்மட்டோ ஒளிமழுங்கிய கண்ணுக்கு இரவின்கண்ணுள்ள இருளாகவே தோன்றுவன்; அதுபோல உடம்புடைய எல்லாரிடத்தும் சமமாக முதல்வன் கலந்துநிற்பினும் அம்முதல்வன், மலம் நீங்கிய முத்தர்க்கு விளங்கித்தோன்றி மலம் உடைய பெத்தர்க்கு

அம்மலத்தாலுண்டாகும் அறியாமையாகவே தோன்றுவன். அவ்வாறுயி னும் மலம் உடைய பெத்தருக்கும் மலம் நீங்கிய சீவன்முத்தர்க்கும் உடம்பு காணப்படுகின்ற ஒற்றுமையினால் சீவன்முத்தரும் ஏனைய பெத்தரைப் போலப் பாசம் உடையாரென்றே சொல்லல்வேண்டுமென்றி வேற்றுமை சொல்லக்கூடாது எனின், மலரும் பக்குவமில்லாத தாமரைகளும் மலரும் பக்குவமுடைய தாமரைகளும் சமமாய் ஓரிடத்து நிற்பினும் சூரியன் பக்குவ முடைய தாமரையைமட்டும் கூம்புதலைநீக்கி விரியச்செய்து பக்குவமில்லாத தாமரைகளை விரியச்செய்யான். அதுபோல முத்தரும் பெத்தரும் உடம் போடு கூடிநிற்பினும் பத்தியினால் இடையீடின்றி முதல்வனை அறியும் பக்குவமுடைய முத்தருக்கு அம்முதல்வன் தனது திருவருட்பார்வையால் பாசத்தைநீக்கி அறிவை வியாபகமாய் விளங்கச் செய்து பக்குவமில்லாத பெத்தருக்குப் பாசநீக்கத்தையும் அறிவுவிளக்கத்தையுஞ் செய்யான். ஆத லால் பெத்தரைப்போல் முத்தருக்கு உடம்பு உள்ளவிடத்தும் அம்முத்தர் பாசம் உடையவராகார் எ-று.

(க—ரை.) சூரியன் ஒளியுடைய கண்ணுக்கு ஒளியாயும் ஒளிமழுங்கிய கண்ணுக்கு இருளாயும் தோன்றுமாறுபோல, முதல்வன் முத்தருக்கு அறிவுருபமாயும் பெத்தருக்கு அறியாமை ரூபமாயும் தோன்றுவன் ஆதலின், உடலுடைமைபற்றிப் பெத்தரைப்போல முத்தர் பாசமுடையராகார் என்பதாம்.

பாசத்தை நீக்கி அறிவை அலர்த்தும் என்றதனால், ஆகலான் உடம்பு உள்வழியும் அவர் பாசத்தாரல்லர் என்னும் பொருள்குறிப்பாக எஞ்சி நின்றது.

அல்லிருளே என்றதிலுள்ள ஏகாரம் இருளென்பதிற் சந்தேகம் இல் லாமையை உணர்த்திநிற்றலின் தேற்றம்.

ஒளி மழுங்கிய கண்ணுக்குச் சூரியன் இருளாய்த் தோன்றுதல், பகற் காலத்து ஒளிவீசப்பெறாத இடத்தும் மேகத்தால் சூரியன் மறைபட்ட காலத்தும் நிகழும் இருள்போலன்றி இரவின்கண் உள்ள நெருங்கிய இரு ளென அறிவிக்கவேண்டி அல் இருள் என்றார்.

இருட்கண்ணே யாவன் என்பது மலத்தின் கண்ணே யாவன் என்ப தாம். இவ்விடத்தில் கண என்பது அறியாமையைக் குறித்து நின்றது.

காணார் என்பது காணுந்தொழிலில்லாத கண்ணைக்குறித்து நிற்றலால் ஆகுபெயர்.

பகல் என்பது பகற்காலத்தைச் செய்யும் சூரியனைக்குறித்து நிற்றலால் ஆகுபெயர்.

அருக்கனிடத்தும் முதல்வனிடத்தும் ஒப்பநிற்குந்தன்மையும் விளங்குதல் விளங்காமையும் எடுத்துக்காட்டுதலால் அருக்கன் எடுத்துக்காட்டு உவமை.

தன்னுணர்ந்தார் என்றதிலுள்ள தன் என்றதில் தன்னை என்னும் பொருளில் ஐ உருபு தொக்குநின்றது.

தன்னுணர்ந்தார் நேர் என்றதிலுள்ள நேர் என்பது ஏழாம் வேற்றுமைப் பொருளைத்தரும், எவ்வாறெனின், என்னேர் உரைத்தான் என்றவிடத்து என் இடத்திற் சொன்னான் என்று பொருள்படுதல்போல என்க. இனி வேற்றுமை மயக்க விதியின்படி ஏழாம்வேற்றுமை உருபு நான்காம் வேற்றுமைப் பொருளைத்தரும். ஆதலால் தன் உணர்ந்தார் நேர் என்பது தன்னை உணர்ந்தார்க்கு என்னும் பொருளை உணர்த்திற்று.

பாசத்தை நீக்கும் என்றதிலுள்ள நீக்குதல் தாமரையோடுங் கூடி நீக்குதற்குச் செயப்படுபொருளாகிய கூம்புதலையும், பகல் அலர்த்தும் என்றதிலுள்ள அலர்த்துதல் பாசத்தை நீக்கி என்பதனோடுங்கூடி அலர்த்துதற்குச் செயப்படுபொருளாகிய அறிவையும் இன்றிமுடியாமையால் அவ்விரண்டிடத்தும் கூம்புதலும் அறிவும் வருவிக்கப்பட்டன.

பாசத்தை நீக்கி அறிவை விளங்கச்செய்யும் முறைமைகூறிப் பத்தியினால் அப்பொழுதே திருவடி அடைதல் கூடுமென்பதை வலியுறுத்தும்

உதாரணம்.

மன்னு மிருளை மதிதுரந்த வாறன்பின்
மன்னு மரனே மலந்துரந்து—தன்னின்
வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்
சலிப்பில் விகாரியலன் றான்.

## சிற்றுரை.

எ-து உ-ம் எ-னின், நேசத்திற் றன்னுணருஞ் சீவன் முத்தர்க்குப் பாசத்தைநீக்கி அறிவை அலர்த்துதல் பரமுத்தியினன்றி இல்லையென முரணிக்கூறும் வாதிகளைநோக்கிப் பாசத்தை நீக்கி அறிவையலர்த்தும் முறைமை இவ்வாறென்றுணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) அன்பின் மன்னும் அரனே மன்னும் இருளை மதி துரந்தவாறு மலந்துரந்து—(உயிரைத்தானாக்கிக்கோடற்கண்ணுளதாகிய) இச்சைமிகுதியான் (அவ்வுயிரோடும் அநாதியே) நிலைபெறுமுதல்வன் (கண்ணின்க) ணிலைபெறும் இருளைப் பிறைமதி

(நாடோறுஞ் சிறிது சிறிதாகநீக்கி) யோட்டுமாறுபோல் (அவ்வுயிரின்கண்ண தாகிய மலசத்தியை அவ்வப்பருவந்தோறுஞ் சிறிது சிறிதாகச் சோபானமுறையினீக்கிப் பற்றறத்) துரந்து,—காந்தம் இரும்பைத் தன்னின் வலித்து வசம்செய்வான் செய்தல் சலிப்பு இல்—காந்தக்கல் இரும்பைத் தன்க ணீர்த்துத் தன்வசமாகச் செய்தல்போல (மலம் அங்ஙனந் துரக்கப்படுந்தோறும் அம்முறையே அச்சத்தி பதிவித்து உயிரைத் தன்கண் வலித்துக்கொண்டு தன் வசமாகச் செய்துவருஞ்) செய்கையின் (அவனுக்கு ஒருஞான்றுஞ்) சலிப்பில்லை,—விகாரி அலன்தான்—(அங்ஙனஞ் சலியாது செய்துவருதல்பற்றி) விகாரியாவானு மல்லன். (காந்தம்போலத் தனது சந்நிதிமாத்திரையிற்செய்யும்) அம்முதல்வன் எ—று.

மதியென்றது ஏற்புழிக்கோடலான் ஈண்டு வளர்பக்கத்துத் திங்களின் மேற்றாயிற்று. "அந்த வருளுனக்கிங் காதார மாயல்லி—னிந்து வெனவெறித் திட்டு" என்றதும் அது. மலந்துரத்தல் உயிரின் செயலாலுவதன்றென்பது படநின்றமையின் ஏகாரம் பிரிநிலைக்கண்வந்தது. வான் பான் பாக்குக்கள் தொழிற்பெயர் விகுதியுமாமென்பது "காப்பாக்கறிந்து" என்பதனானுணர்க. உவம உருபு விரித்துரைக்க. சலித்தல் வேசறுதல். செய்தற்கண்ணென ஏழனுருபு விரித்துரைக்க. மதிதுரந்தவாறு மலந்துரந்தென்ற விதனானே மலம் நீங்குவது பின்னென்பார் மதம் மறுக்கப்பட்டவாறு காண்க. சோபானமுறையி னீக்குதலானன்றே, சத்திநிபாதஞ் சிவபுண்ணிய முதலாயின நால்வேறுவகைப்பட்டதூஉம், அவற்றுள்ளும் ஒரோ ஒன்று நன் நான்காய்ப் பதினாறுவகைப்பட்டதூஉம், அவற்றுள்ளும் ஒரோ வொன்று பலவேறுவகைப்பட்டு விரிந்ததூஉமென்க.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) அன்பின் மன்னும் அரனே மன்னும் இருளைமதி துரந்தவாறு மலந்துரந்து காந்தம் இரும்பைத் தன்னின் வலித்து வசஞ்செய்வான் செய்தல் சலிப்பு இல் விகாரியலன் தான்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ வெனின், மேலைவெண்பாவிற் கூறியவாறு நேசத்தினால் தன்னை உணருஞ் சீவன்முத்தருக்குப் பாசத்தை நீக்கி அறிவை விளங்கச்செய்தல் பரமுத்தியில் அன்றி இல்லை: ஆதலால் திருவடி அடைதலும் பரமுத்தியினன்றி இல்லையென முரணிக்கூறுவாரை நோக்கி, அன்புசெய்தலாகிய இச்சையின்றொழிலுக் கேற்பப் பாசத்தை

நீக்கி அறிவை விளங்கச்செய்தல் கூடுமெனக்கூறி இடையீடின்றி அன்பு செய்தலால் உடம்பு உள்ளபொழுதே திருவடி அடைதல் கூடும் என்று மேற்கூறியதை வலியுறுத்திய வாறும்.

(பொ—ரை.) முதல்வன், தன்னைப்போல் உயிரை ஆக்கிக்கொள்ள வேண்டுமென்ற கருணை மிகுதியினால் அனாதியே மலத்துடன்கூடிய உயிரோடு அம்முதல்வனும் அநாதியே நிலைபெற்று விளங்குகின்றான். கண்ணின்கண் நிலைபெற்றிருக்கும் இருளை வளர்பக்கத்துச் சந்திரன் நாள்தோறுஞ் சிறிது சிறிதாக நீக்கிப பூரணையில் அறவே ஓட்டுமாறுபோல, அவ்வுயிரினிடத்துள்ள மலசத்தியைக் கருணாநிதியாகிய அம்முதல்வன் உயிரினிடத்துண்டாகும் பக்குவத்திற்கேற்ப அவ்வப் பருவந்தோறும் சிறிது சிறிதாகப் படிமுறையில் நீக்கி முதிர்ந்தபக்குவத்தில் அறவே நீக்குவன். காந்தக்கல் தனது சந்நிதிமாத்திரையினால் இரும்பைத் தன்னிடத்து இழுத்துத் தன் வசமாகச்செய்துவருஞ் செய்கையில் காந்தத்திற்குச் சலிபபு இல்லாதவாறுபோலக் கருணையாகிய சத்தியினால் மலத்தைச் சிறிதுசிறிதாக நீக்கி நீங்குந்தோறும் நீங்குந்தோறும் நீக்குகின்ற தனது திருவருட்சத்தியைச் சிறிது சிறிதாகப் பதித்து மலம் அறவே நீங்கியபொழுது தனது சத்தி முழுதும் பதியச்செய்து உயிரைத் தன்கண் இழுத்துத் தன் வசமாகச் செய்துவருஞ் செய்கையினால் முதல்வனுக்கு ஒருபொழுதும் சலிப்பில்லை. அவ்வாறு சலிப்பின்றிச் செய்தலால் முதல்வன் வேறுபடவும்மாட்டான் எ—று.

(க—ரை.) வளர்பக்கத்துச் சந்திரன் ஒவ்வொருகலையால் இருளைச் சிறிது சிறிதாக நீக்கிப் பூரணையில் அறவே நிக்குமாறுபோல முதல்வனும் தனது சத்தியால் உயிரின் மலத்தைச் சிறிது சிறிதாக நீக்கி முடிவில் அறவே நீக்கித் தன் வண்ணமாகச் செய்துகொள்வன் என்பதாம்.

விகாரமாவது வேறுபடுந்தன்மையாம். காந்தம் இருமபை இழுத்துக் கொள்வதால் இருமபின் தன்மையாகவேனும் காந்தத்தன்மை இரும்புத் தன்மையாகிய இருதன்மையாகவேனும் வேறுபடுதல் இல்லை. அதுபோல முதல்வன் உயிரை இழுத்துக்கொள்வதால் உயிரின் தன்மையாகவேனும் உயிரின் தன்மை முதல்வன்தன்மையாகிய இருதன்மையாகவேனும் வேறுபடுதலில்லையென அறிக.

இரும்பு காந்தத்தின் வேறாய்நிற்றலால் காந்தம் இரும்பை இழுத்தல் கூடும். உயிரும் முதல்வனும் எக்காலத்தும் பிரிப்பின்றிநிற்கவும் உயிரை முதல்வன் இழுத்துக்கொள்வன் என்றல் எவ்வாறு பொருந்துமெனின், பிரிப்பின்றிநிற்றலை அறியாதிருந்த அறியாமையைநீக்கி அறியச்செய்தலே இழுத்துக்கொள்ளுதல் என்பதற்குப் பொருளென அறிக. இது எதுபோல எனின், மனதைத் தன்வசமாக இழுத்துக்கொண்டான் என்ற விடத்து மனம் பறத்துச்செல்லுதலைநீக்கித் தன் ஆணைவழி நிற்கச்செய்தலைக் குறிக்கு

மாறுபோலாம். ஆணைவழிநிற்றல் அடங்கி நிற்றலாகுமாதலால் இரும்பு அடங்கிநிற்கும் காந்தம் உவமையாயினமையும் அறிக.

செய்யுளில் மதியென்று பொதுப்படக் கூறியிருப்பினும் இருளைத் துரந்தவாறு என்பதற்கேற்ப எற்புழிக்கோடலென்னும் உத்தியால் வளர் பக்கத்துச் சந்திரனைக் குறித்தது. துகளறுபோதம் ௩௩-வது செய்யுளில் "அந்த அருள் உனக்கு இங்கு ஆதாரமாய் அல்லின்—இந்து வெனஎரித் திட்டு" என்றவிடத்து அல்லின் இந்து என்றதும் வளர்பக்கத்துச் சந்திரனையேயாம்.

மன்னும் அரனே என்றதிலுள்ள ஏகாரம் மலத்தைநீக்குதல் உயிரின் செயலினாலாவதன்று திருவருட் செயலினாலேயே ஆவதாகும் என்று கருதும் வண்ணம் உயிரின் செயலைப் பிரித்தமையின் பிரிநிலைக்கண் வந்தது.

வான் பான் பாக்கு என்னுஞ்சொற்கள் வினையெச்ச வாய்பாடுகளாகும். அச்சொற்கள் சிறுபான்மை தொழிற்பெயர் விகுதியாகவும் வரும். இதனை நன்னூல் வினையியல் உ௪-வது சூத்திரவுரையுட்காண்க. இச்செய்யுளில் வசஞ்செய்வான் என்றவிடத்து வான் என்றது தொழிற்பெயர் விகுதியாய் வசஞ்செய்தலென்னும் பொருளைக்குறித்து நின்றது. வான்தொழிற் பெயர் விகுதியாய் வருமென்பதை நீ வருவான் என் என்றவிடத்து நீ வருதல் என் என்று பொருள்கொள்ளுமாற்றானும் அறிக. பாக்கு என்பதைத் திருக்குறள் காதற் சிறப்புரைத்தல் எ—வது செய்யுளில் "கரப்பாக்கறிந்து" எனவும், ஷை நூல் ஒழுக்கமுடைமை ௬-வது செய்யுளில் "படுபாக்கறிந்து" எனவும் வருவனவற்றிற்குக் கரத்தல் அறிந்து எனவும் படுதல் அறிந்து எனவும் பொருள்கொள்ளுமாற்றால் அறிக.

வசஞ்செய்வான் என்றவிடத்து உவம உருபுவிரித்து வசஞ்செய்வான் போல என்றுரைக்க. சலிப்பில் என்றவிடத்துச் சலித்தல் என்பது இளைத் தலைக்குறித்து நின்றது.

செய்தல் என்றவிடத்து ஏழாம் வேற்றுமைக் கண் உருபு விரித்துச் செய்தற் கண் என உரைக்க.

மதி துரந்தவாறு மலந்துரந்து என்ற இத்திருட்டாந்தத்தானே மலம் சிறிது சிறிதாக நீங்கி முடிவில் அறவே நீங்குமென்றாகி மலம் நீங்குதல் உடம்பு நீங்கியபின் பரமுத்தியில் என்பார் மதம் மறுக்கப்பட்டவாறு காண்க.

பக்குவத்துக்கேற்பப் படிமுறையில் மலத்தை நீக்குவன் என்றதனால் படிமுறையாகிய சத்திநிபாதமும் சிவபுண்ணியமும் நால்வேறுவகைப் பட்டு அவை ஒவ்வொன்றும் நான்கு நான்காகப் பதினாறுவகைப்பட்டு அப் பதினாறும் ஒவ்வொன்றும் பல வேறுவகைப்பட்டு விரிந்தனவாமென அறிக.

அவற்றின் விரிவை மேல் எட்டாஞ்சூத்திரத்துட் கூறினும்; அவ்விடத்துக் காண்க.

மலம் அநாதியாயினும் நீக்கப்படுமெனக் கூறி மலம்நீங்குமென
மேற்கூறியதை வலியுறுத்தும்

உதாரணம்.

நசித்தொன்றி னுள்ள நசித்தலா லொன்று
நசித்திலதே லொன்றுவ தில்லை—நசித்துமல
மப்பணைந்த வுப்பி னுளமணைந்து சேடமாங்
கப்பின்று மீசன் கழல்.

சிற்றுரை.

எ-து உ-ம் எ-னின், உயிருக்குக் குணம்போல அநாதியாயுள்ள சகச மலம் அவ்வுயிரின் வேறாய்த்தூக்கற்பால தன்றாகலின் மலந் தூரந்தென்றது அமையாதென்னும் பாடாணவாத சைவரைநோக்கி அருத்தாபத்தி அளவையான் அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ—ள்.) நசித்து ஒன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்று நசித்திலதேல் ஒன்று ஆவது இல்லை—(அரன்கழல் செல்லுங்கால் அதனை ஆன்மா கெட்டொன்றுமோ கெடாதொன்றுமோ வெனக் கடாயினார்க்குக்) கெட்டொன்றுமெனின், ஆன்மா கெட்டுப்போகலான் ஒன்றமாட்டாது. கெடாதொன்றுமெனிற் (கெடாதவழி இருபொருளாய் நிற்றலின்) ஒன்றுமாறில்லை. (ஆகலான் அருத்தாபத்தியளவையானே),—அப்பு அணைந்த உப்பின் மலம் நசித்து உளம் ஈசன்கழல் அணைந்து சேடம் ஆம்—உப்புத் தனது கண்டிப்புநீங்கி நீரினொன்றுமாறுபோலத் தனது சகசமலங் கெட்டொழிய ஆன்மா அரன்கழலையொன்றி (அவ்வரன்கழற்குச்) சேடமாம்,—கப்பு இன்று ஆம்—(அங்ஙனஞ் சேடமாகிய ஆன்மாவுக்கு மீளக்) கவர்ச்சியில்லை எ—று.

ஒன்றுதென்னும் துவ்விகுதி விகாரத்தாற் றொக்கது. பின் வந்த நசித்து என்பது செயவனெச்சத்திரிவு. யாதொன்று யாதொன்றன் பொருட்டேயாய்த் தனக்கெனச் சுதந்திரமின்றி நிற்கும் அஃததற்குச் சேடமென்பதறிக. "அவையுடைமை யாளாநாமங்கு" என ஓதுதலின், ஏனைப் பசுபாசங்கள் முதல்வனுக்குப் பொதுவகையாற் சேடமாயினும் இதுபோலச் சிறப்புவகையாற் சேடமாதலின்மையின் இதனை வேறெடுத்தோதினார். முத்திநிலை

கூறி முடிந்தமையின் இறுதிக்கட்கப்பின்றுமென அவினுவிருத்தி யுங்கூறினுர்.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) நசித்து ஒன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்று நசித்திலதேல் ஒன்று ஆவது இல்லை அப்பு அணைந்த உப்பின் மலம் நசித்து உளம் ஈசன் கழல் அணைந்து சேடம் ஆம் கப்பு இன்று ஆம்.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றேவெனின், உயிரின்குணம் உயிர் உள்ளபொழுதே உள்ளதாய் உயிர் உள்ள அளவுங்கெடாதவாறுபோல மலமும் உயிர் உள்ளபொழுதே உள்ளதாய் அப்பொழுதே உயிரோடு கூடியிருப்பதாம் ஆதலின், குணம் உயிரைவிட்டு நீங்காதவாறுபோல இயல்பாகவே கூடி இருக்கும் அம்மலம் உயிரின்வேருய் நீக்கப்படமாட்டாது. ஆதலால் மேலைவெண்பாவில் மலம் நீக்கப்படுமெனக் கூறியது பொருந்தாதென்பர் பாடாண வாதசைவர். அவரைநோக்கி உயிர் உள்ள அன்றே முதல்வனும் அவ்வுயிரோடு பிரிப்பின்றி நிற்கவும் அப்பொழுது முதல்வனை அறியாமையும் பின்னர் அம்முதல்வனை அறிதலும் உனக்கும் உடன்பாடாதலின், பின்னர் அறிதல் மலநீக்கத்தினலன்றிச் சம்பவியாது ஆதலால் இந்த அருத்தாபத்திப் பிரமாணத்தைக்கொண்டு மலம் அனுதியாயினும் ஆன்மாவின் கிரியாசத்தியால் நீங்குமெனக்கூறி மேலை வெண்பாவில் பாசம் நீங்குமெனக் கூறியதை வலியுறுத்தியவாறும்.

(பொ-ரை.) அரன் திருவடியை ஆன்மாக்கூடி ஒன்றுருங் காலத்தில் ஆன்மாக்கெட்டு ஒன்றுருமோ கெடாது ஒன்றுருமோ எனக் கேட்டவிடத்துக் கெட்டுக்கூடி ஒன்றுருமென்று கூறின், ஆன்மாக் கெட்டபொழுது கூடும்பொருளே இல்லையாதலின் ஒன்றுதலுமில்லை; கெடாது கூடி ஒன்றுருமென்றுகூறின் கெடாதவிடத்து அரனும் ஆன்மாவும் வேறு வேறு பொருளாய் நிற்றலின் ஒன்றுவதில்லை. ஆகவே மல நீக்கத்தாலன்றித் திருவடியைக்கூடி ஒன்றுதல் சம்பவியாது என்னும் அருத்தாபத்திப் பிரமாணத்தால் உப்புத் தன்னிடத்துள்ள கண்டிப்பாகிய தூலத்தன்மை நீங்கியவிடத்து நீரோடுகூடி ஒன்றுமாறுபோல ஆன்மாவும் தன்னுடன் இயல்பாகவேகூடி இருந்த ஆணவமலங் கெட்டொழிந்தவிடத்து அரன் திருவடியைக் கூடி ஒன்றுகி அவ்வரன்திருவடிக்கு அடிமையாம். அவ்வாறு அடிமையாகிய ஆன்மாவிற்குத் தனக்கெனச் சுதந்திரமான செயலில்லாமையானும் மலரகிதனுகிய அரன் மலத்தைக் கூட்டாருதலானும் அவ்வான்மா மீள மலத்தைப் பற்றுதலில்லை எ-று.

(க-ரை.) மல நீக்கத்தாலன்றி இறைவன் திருவடி அடைதல் சம்பவியாமையால் திருவடியடைதல்பற்றி மலம் அனுதியாயினும் நீங்கும் என்பதாம்.

முத்தருக்கு மலம் நீங்கினும் ஏனைப்பெத்தரிடத்து மலம் இருத்தலால் அநாதிக்கு இழுக்கில்லை. இக் கருத்துப்பற்றியே சிவஞானசித்தியார் ககம் ரூ-ம், கூ-வது செய்யுளில் "நெல்லினுக்குத் தவிடுமிகள் அநாதியாயே நெல்லைவிட்டு நீங்கும்வகை நின்றநிலை நிகழ்த்தீர்—சொல்லியிடிற்றுகளற்ற அரிசியின்பால் இல்லைத் தொக்கிருந்து மற்றொருநெற் றோன்றிடாவாம்—மெல்லையிவை விடும் அறவே இவைபோல அணுவை மேவுமலம் உடல் கன்மம் அநாதிவிட்டே நீங்கும்—நல்லசிவ முத்தியின்கண் பெத்தான்மாவை நணுகிநிற்கும் ஆதலால் நாசமும் இன் றாமே." என வழிநூலாசிரியர் அருளிச்செய்வாராயினர். இன்னும் இதுபற்றிய ஆசங்கைகட்கெல்லாஞ் சமாதானம் சித்தியார் உரையினும் தசகாரிய விளக்கத்தினும் கூறியிருக்கின்றமையால் அவ்விடங்களிற் காண்க.

நசித்தலால் ஒன்றாது என இருக்கவேண்டியது செய்யுள் விகாரத்தால் ஒன்றா என நிற்றலால் அவ்விடத்தில் துகரவிகுதி தொக்கு நின்றது.

தனிச்சீரிலுள்ள நசித்து என்பது நசிக்க என்னும்பொருளில் நின்றது. நசிக்க என்பது செய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். அந்த எச்சம் செய்து என்னும் வாய்பாட்டு எச்சமாகத்திரிந்து நசித்து என நின்றது.

ஒரு பொருளைப்பற்றித் தனக்கெனச் சுதந்திரமின்றி நிற்பது சேடமாகும். இது மேல் ஒன்பதாஞ் சூத்திரத்து மூன்றாம் அதிகரணத்து முதல் வெண்பாவிலுங் கூறப்பட்டுள்ளது. சேடம் எனினும் அடிமையெனினும் ஒக்கும். அதாவது, ஆன்மா முதல்வன் திருவடி அடைதற்பொருட்டாகத் தனக்கெனச் சுதந்திரமின்றி அவன் அருள்வழிநின்று திருவடியையடைந்து சிவானந்தத்தை அநுபவித்தலால் அவ்வான்மா அம்முதல்வனுக்கு அடிமை என்பதாம். இந்நூல் இரண்டாஞ் சூத்திரம் நாலாவது அதிகரணத்து முதல் வெண்பாவில் "அவை உடைமை ஆளாம் நாம் அங்கு" என ஓதுதலால் திருவடியை அடையாத ஏனைய உயிர்களும் பாசங்களும் முதல்வனுக்கு அடிமையாதல் பெறப்படவும், திருவடியடைந்த உயிரை அடிமை என்றதனால் உண்டாகிய சிறப்பு என்னையெனின், அடிமை, பொதுவெனவும் சிறப்பெனவும் இருதிறப்படும். அவற்றுள், பொதுவான அடிமை முதல்வனை அறிவதில்லை. அறியாமையால் முதல்வன் அருள்வழிநிற்கும் பாசத்துக்கும் அடிமையாகிப் பிறந்து இறந்து உழலும். சிறப்பான அடிமை முதல்வனை அறிந்து முதல்வனுக்கே அடிமையாய்ப் பாசத்திற்கு அடிமையாதலில்லை. அதனாற் பிறந்திறந்து உழலுதலுமில்லை. இனி முதல்வனும் பொதுவான அடிமையைப் பொதுவாகவும் சிறப்பான அடிமையைச் சிறப்பாகவும் அறிகின்றான். இது எதுபோல எனின், ஒரு அரசனுக்குக் குடிகள் எல்லாம் அடிமையேயாயினும், குடிகளை அரசன் நேரே அறியாதபொழுது பொதுவாய் அறிந்ததாகவும் நேரே அறிந்தபொழுது சிறப்பாய் அறிந்ததாகவும் கொள்ளப்படுமாறுபோலாம். இக்கருத்தேபற்றித் திருநாவுக்கரசு

சுவாமிகளும் "என்னை ஏதும் அறிந்திலன் எம்பிரான்—தன்னை நானும் முன் ஏதும் அறிந்திலன்—என்னைத் தன்னடியானென்று அறிந்தபின்—தன்னை நானும் பிரானென்று அறிந்தேனே." என அருளிச்செய்வாராயினர். இப் பாசுரத்தில் சிறப்பாக அறியாமையையும் அறிதலையுமே கூறியவாறும். ஆதலால் மேல் இரண்டாஞ் சூத்திரத்தால் பொதுவாக அடிமையென்பது பெறப்பட்டதாயினும் சிறப்பாகப் பெறப்படாமையால் சிறப்பாக அடிமை யாதலை வேறாக எடுத்து இச்சூத்திரத்திற் கூறினாரென அறிக.

அவ்வாறாயினும், மேல் ஒன்பதாஞ் சூத்திரத்து மூன்றும் அதிகாணத்து முதல் வெண்பாவிலேயே சேடனும் எனச் சிறபபான அடிமையைப்பற்றிக் கூறியிருக்கவும் இவ்விடத்துங் கூறிய தென்னையெனின், பொதுவான அடிமையும் பொதுவெனவும் சிறப்பெனவும் இருதிறப்படும். அவற்றுள், பாசத்தோடுகூடிய உயிர்கள் பொதுவான அடிமை. பாசம் நீங்குதற்காகச் சாதனஞ்செய்யும் உயிர்கள் சிறப்பான அடிமை. அவ்வுயிர்கள் பாசத்தோடுகூடிய ஏனைய உயிர்களைநோக்கச் சிறப்பாயினும் பாசம் அறவே நீங்கிச் சிவபெருமான்றிருவடியில் இரண்டறக் கலத்தல் இல்லை. ஆதலால் மேல் ஒன்பதாஞ் சூத்திரத்தில் சாதனஞ்செய்யும் முறைபற்றி அடிமைத்திறங்கூறி இச்சூத்திரத்தில் அநுபவ நிலைபற்றி அடிமைத்திறங் கூறினாரென அறிக.

இவ்வெண்பாவுடனே முத்திநிலைகூறி முடிந்தமையால் மலம் நீங்குமென்று கூறியதோடு மீளப்பற்றுதல் இல்லையெனப் பற்றாமைக்கு ஏதுவாகிய திருவடியைவிட்டு நீங்காமையையும் உடன் கூறினார்.

கேவல சகலசுத்தம் என்னும் மூன்றுநிலையை ஆன்மா அடைதலால்
சார்ந்ததன்வண்ணமாம் தன் தன்மையினின்றும் வேறுபடாதெனக் கூறி
மலம்நீக்கப்படும் என்று மேற்கூறியதை வலியுறுத்தும்

உதாரணம்.

பொன்வாண்முன் கோண்மூவிற் புக்கோடுங்கிப் போயகலத்
தன்வாளே யெங்குமாந் தன்மைபோன்—முன்வாண்
மலத்தின் மறைந்துள்ள மற்றுலகை யுண்ணு
மலத்திரித்துச் செல்லும் வரத்து.

சிற்றுரை.

எ-து உ-ம் எ-ன்ன், நான்காஞ் சூத்திர முதல் இதுவரையிற் கூறிப் போந்த கேவல சகல சுத்தமென்னும் முத்திறத்தவத்தைகளினும் ஆன்மாத் தன்னியல்பிற்றுக் கேடின்றியே நிற்குமென்பது உவமையின் வைத்துக்காட்டி மேலதனை வலியுறுத்துதனுதலிற்று

(இ-ள்.) பொன் வாள் முன் கொண் மூவில் புக்கு—ஞாயிறு காலைப்போதில் முகிற்படலத்துண் மறைந்து,—ஒடுங்கி—(அம்மு கிற்படலம் ஒருபுடைநீங்கிய வழித்தன்னொளி ஏகதேசமாய்) ஒடுங் கித்தோன்றி,—போய் அகல எங்கும் தன்வாளே ஆம் தன்மை போல்—(அம்முகிற்படலம் பெருங் காற்றானடியுண்டு முழுவதும்) விட்டொழிந்த வழி எங்கணும் தன்னொளியேயாய்த் தோன்றும் பெற்றிபோல,—உள்ளம் முன் வாள் மலத்துள் மறைந்து—ஆன்மா அநாதியே தன்னறிவு மலத்துண் மறைப்புண்டு (கேவலப் பட்டு),—மற்று (ஒடுங்கி) உலகையுண்ணும்—பின்பு (கருவிகளோடு கூடி ஏகதேசமாய் அறிவுவிளங்கி) ஐம்புலன்களை விடயிக்கும்,—(மற்று) மலத்து இரித்து (எங்குமாம் வாள்) வரத்துச்செல்லும்—பின்பு அம்மலத்தை (முதல்வனருளாற்) பற்றறக்களைந்து (வியாபகமாய் அறிவு) விளங்கி அவனது சீபாதத்தையணைந்து சுத்தப் படும் எ-று.

தன்மை என்றார் கொண் மூவிற் புக்குழியும் கேடின்மையின். ஏகாரம் தேற்றத்தின் கண் வந்தது. பின் வந்த வாள் ஆகுபெயர். வினைமாற்றின் கண்வந்த மற்றென்னுமிடைச்சொல் மலத் திரித் தென்பதனோடு மியைந்தது. சாரியை யுள்வழித் தன்னுருபு நிலையாதுவந்தது இலேசாற்கொள்க. உவமைவினைகள் பொருளினுஞ் சென்றியைந்தன. அறிவுமறைந்தும் ஒடுங்கியும் மறைப்பு நீங்கியே எங்குமாய் நிகழ்தல் மாத்திரைக்கே பொன்வா ளுவமையென் பார், உலகையுண்ணும் வரத்துச்செல்லுமென வேற்றுமையும் உடன் கூறினார். மலம் நசித்தலாவது தனது மறைத்தற்சத்தி மடங்கிக் கீழ்ப்படுதல் மாத்திரையே பிறிதன்றென்பதூஉம் உவமையாற் பெறுதும்.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) பொன் வாள் முன் கொண்மூவில் புக்கு ஒடுங்கிப் போய் அகல எங்கும் தன் வாளே ஆம் தன்மைபோல் உள்ளம் முன் வாள் மலத்துள் மறைந்து மற்று (ஒடுங்கி) உலகை உண்ணும் (மற்று) மலத்து இரித்து (எங்குமாம் வாள்) வரத்துச்செல்லும்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற் றென்றெனின், மேல் நான்காஞ் சூத்திரத்தால் மலத்துடன் கூடியுள்ள கேவல அவத்தையும், ஐந்தாஞ் சூத்திரத்தால் கருவிகளோடு கூடியுள்ள சகல அவத்தையும், ஆறாஞ் சூத்திரமுதல் இச் சூத்திரம்வரைகருவிகளையும் மலத்தையும் நீக்குஞ் சுத்த அவத்தையும்

கூறி முடித்தமையால், இவ்வாறு வேறு வேறு அவத்தையை ஆன்மா அடைவதனால் ஆன்மாவுக்குத் தனித்தன்மை ஒன்று இல்லையெனப்படும். படவே தனித்தன்மையில்லாத ஒருபொருள் உண்டென்றல் பொருந்தாது ஆதலால் அநாதியே மலத்துடன் கூடியுள்ள தன்மைதான் ஆன்மாவுக்குத் தனித்தன்மை யெனக்கொண்டு மலம் நீக்கப்படமாட்டாது என்பாரை நோக்கி வேறு வேறு அவத்தையை ஆன்மா அடைந்தாலும் சார்ந்ததன் வண்ணமாகுந் தன் தன்மையில் நின்றும் வேறுபடுதலின்றியே நிற்குமென உவமையின் வைத்துக்காட்டி மலம் நீக்கப்படுமென்று மேற் கூறியதனை வலியுறுத்தியவாறும்.

(பொ—ரை.) சூரியன் காலைப்போதில் மேகக்கூட்டத்துள் மறைந்து ஒளி விளங்காமல் அம்மேகக்கூட்டம் சிறிது நீங்கிய விடத்து அச்சூரிய னொளி சிறிது விளங்கித்தோன்றிப் பெருங்காற்றால் அம் மேகக்கூட்டம் அடியுண்டு முழுவதும் விட்டொழிந்த விடத்து அச்சூரியனொளி எங்குமாய் விளங்கித் தோன்றுமாறுபோலச், சார்ந்த தன்வண்ணமாந் தன்மையுடைய ஆன்மா அநாதியே தன்னறிவு மலத்தைச்சார்ந்து அறிதற்றொழிலின்றிக் கேவலப்பட்டு, பின்பு மல நீக்கத்தின்பொருட்டு முதல்வன் அருள், கருவி களைக்கூட்ட அக்கருவிகளோடுகூடிச் சிறிது அறிவு விளங்கப்பெற்று உல கப்பொருளையறிந்து, பின்பு அம்மலத்தை முதல்வனருளால் அறவேநீக்கிப் பூரணமாய் அறிவு விளங்கப்பெற்று அம்முதல்வனது திருவடியைக்கூடிச் சுத்தப்படும் எ-று.

(க-ரை) சூரியன் மேகத்துடன் கூடினபொழுதும் மேகஞ் சிறிது நீங்கியபொழுதும் மேகம் அறவே நீங்கியபொழுதும் தன் தன்மையிற் கெடாதவாறுபோல ஆன்மாவும் கேவல சகல சுத்தமென்னும் மூன்று அவத் தையைக் கூடியபொழுதும் சார்ந்ததன் வண்ணமாகுந் தன் தன்மையில் நின்றும் வேறுபடாது. ஆதலால் அநாதியே கூடியுள்ள மலத்தின் நின்றும் நீங்கிச் சுத்தப்படும் என்பதாம்.

ஒரு பொருளின் தன்மை அப்பொருள் கெட்டாற்றான் கெடும். ஆத லால் சூரியன் ஒளியானது மேகத்துள் மறைந்தவிடத்தும் சூரியன் கெடா மையால் எங்குமாய் விளங்குந் தன்மையுங்கெடாது அடங்கியிருந்ததென் பதை உணர்த்துதற்கு எங்குமானதுபோல் என்று கூறாது எங்குமாந் தன் மைபோல் என்று கூறினார்.

தன்வாளே என்றதிலுள்ள ஏகாரம் ஒடுங்கியும் ஏகதேசமாயும் உள்ள ஒளியையின்றி எங்குமான ஒளி வேறன்று என்பதை உணர்த்துதலின் தேற்றம்.

முன் வாள் என்றதிலுள்ள வாள் பிரகாசத்தையுடைய அறிவைக்குறித் தலால் ஆகுபெயர்.

உண்டெனப்பட்டு வழுவாய். இது மேகம் சூரியனைவிட்டு நீங்கி மறைத்தற் சத்தி மடங்கினும் மேகமண்டலத்தில் பொருள்கெடாது இருத்தலின் வைத்தும் பெறப்படுமாறு அறிக.

இச் சூத்திரத்தினாலும் அதிகாரணங்களினாலும் கூறி முடித்த தொகைப்பொருள் :—பாச நீக்கமுஞ் சிவப்பேறும் என்னும் பயன் இரண்டனுள் மேல் பத்தாஞ் சூத்திரத்திற் பாச நீக்கங்கூறிப் பாசம் நீங்கப்பெற்றதனால் ஆன்மாவானது தன்னோடு முதல்வன் அததுவிதமாய் நின்று காட்டியுங் கண்டும் வரும் உபகாரத்தை இடைவிடாத அன்பால் அணைந்து அவன் திருவடியாகிய சிவானந்தத்தையடைதலே சிவப்பேறு என்று பதினோராஞ் சூத்திரத்தாற் கூறப்பட்டது. படவே, முதல்வன் உயிர்களுக்கு அறிவித்தலாகிய காட்டும் உபகாரம் மட்டுமே செய்வன் அன்றி அறிதலாகிய காணும் உபகாரமும் செய்வான் என்றல் பொருந்தாதென்று ஒரு சாரார்கூற, முதலதிகாரணத்தால் அவரை மறுத்து அத்துவிதநிலையை இனிது விளக்கிக் காணும் உபகாரத்தையும் செய்வன் என்பதும், முத்தியிலும் காணும் உபகாரத்தைச் செய்தலினால் தன்னைப் பற்றுதலென்னும் குற்றமில்லையென்பதும் கூறப்பட்டன. படவே, பாசம் நீங்கி ஏகனாய் நிற்கும் போது மறவாமையும் அன்புசெய்தலும் திருவடி அடைதலும் எவ்வாறு கூடுமென்று ஒரு சாரார்கூற, இரண்டாம் அதிகாரணத்தால் அவரை மறுத்து அம்மூன்றும் உடைமையே ஏகனாய்நிற்கும் நிட்டையென்பதும், அந்நிட்டையாகிய திருவடி அடைதல் அயரா அன்பால் அப்பொழுதே கூடுமென்பதும், பாசம்நீங்கித் திருவடி அடைதல் உடம்பு உள்ளபொழுதே கூடும் என்பதும், பாசம் அநாதியாயினும் நீங்குமென்பதும், பாசம் நீங்குதலினாலும் திருவடியை அடைதலினாலும் சார்ந்ததன் வண்ணமாகும் ஆன்மாவின் சிறப்புத் தன்மைக்குக் கேடில்லையென்பதும் கூறப்பட்டன.

இரண்டாம் அதிகாரணம் முற்றிற்று.

பதினோராஞ்சூத்திரம் முற்றிற்று.

---

## பன்னிரண்டாஞ் சூத்திரம்.

பதினோராஞ் சூத்திரத்தால் சிவப்பேறு கூறி, அப்பேறு பெற்ற ஞானிகள் உடம்போடு கூடியிருக்கும் அளவும் எவ்வாறு இருப்பர் என்பதை, இப்பன்னிரண்டாஞ் சூத்திரத்தாற் கூறி மேல் ஆசங்கை இன்மையின் நூலை முடிக்கின்றார்.

செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே.

மற்றுலகையுண்ணும் என்றதிலுள்ள மற்று என்பது மலத்துள் மறைந்து கிடந்ததற்கு மாறாகக் கருவிகளோடு கூடி உலகை உண்ணும் என்ற பொருள்பயத்தலின் வினைமாற்றின் கண் வந்தது. அவ்வாறே உலகை உண்ணும் என்றதற்கு மாறாக மலத்து இரித்துச் செல்லும் என்னும் பொருள் தருதற்கு மேற்கூறிய மற்று என்பது மலத்து இரித்து என்பதனோடும் பொருந்திற்று.

மலத்தை இரித்து என்றிருக்கவேண்டுவது மலத்து இரித்து என நின்றது [illegible]லத்து என்றதில் அத்து என்பது சாரியை. சாரியை உள்வழித் தத்[illegible]னுருபு நிலையாமை தொல்காப்பியம் எழுத்ததிகாரம் தொகை மரபு கடு-வது சூத்திரத்தில் "மெய்பெற" என்ற இலேசாற்கொள்ளும் விதியாதலின், மலத்து என்றதில் அத்துச் சாரியை உள்ளதாகலால் மலத்தின் தன்னுருபா[illegible] ஐகாரங்கெட்டது. ஆதலால் மலத்து என்பதற்கு மலத்தை யென உரை செய்யப்பட்டது.

ஒடுங்கி எனவும் எங்குமாம் எனவும் சூரியனாகிய உவமைக்கு ஓதிய வினைகள் பொருளாகிய ஆன்மாவிலுஞ் சென்று பொருந்தின. ஆதலால் கேவலப்பட்டு எனவும் வியாபகமாய் எனவும் உரை செய்யப்பட்டது. சூரியன் ஒளியானது மேகஞ் சிறிது நீங்கியவிடத்துச் சிறிது பிரகாசித்தலும் முற்றும் நீங்கியவிடத்து எங்குமாய்ப் பிரகாசித்தலுமேயன்றிப் பிறிதொன்றை அடைவதில்லை. ஆதலால் அவ்வுவமையைக்கொண்டு ஆன்மா உலகத்தை அறியுமென்றும் முதல்வனது திருவடியை அடையுமென்றும் கூற முடியாதேயென்னும் ஆசங்கையை நீக்குதற்பொருட்டு, ஆன்மாவின் அறிவு மறைந்தும் ஏகதேசமாய் விரிந்தும் மறைப்புநீங்கி எங்குமாய் விளங்குதல் மட்டுக்குமே சூரியன் உவமையாகுமன்றி முற்றுவமையன்றென்று உணர்த்த வேண்டி, உலகையுண்ணும் எனச் சகலத்தில் ஆன்மாவின் வேற்றுமையும், வாத்துச்செல்லும் அதாவது விளங்கிச்செல்லும் எனச் சுத்தத்தின் ஆன்மாவின் வேற்றுமையும் ஒடுங்கி என்பதனோடும் எங்குமாயென்பதனோடும் உடன் கூறினர். அதாவது உவமைக்கோதிய விசேடத்தின் வேறாகிய விசேடங்களை உவமேயத்திலெடுத்துக்கூறினர் என்றபடியாம்.

மலம் நசித்தல் என்றது மலத்தினுடைய மறைத்தற்சத்தி மடங்கிக் கீழ்ப்படுதன்மாத்திரையேயன்றிப் பொருள் கெடுதலில்லை. எதனாலெனின், மலத்தோடுகூடிய ஆன்மாக்களும் இறைவனோடு அத்துவிதமாய்க் கலந்து நிற்கின்றன; நிற்பினும் உயிரைப்பற்றி நிற்கும் அம் மலசத்தி இறைவனைப் பற்றுதலில்லை; இறைவனைப்பற்றாது சத்தி மடங்கி உயிர்களைப்பற்றிப் பொருள் கெடாதவாறுபோல, இறைவனோடு இரண்டறக் கலந்து நிற்கும் முத்தர்களைப் பற்றாது சத்திமடங்கி ஏனைப் பெத்தர்களைப் பற்றிப் பொருள்கெடாது நிற்குமாதலால் என்க. இவ்வாறன்றி முத்தரிடத்தும் மலம் சத்திகெட்டுப் பொருள் இருக்குமெனின், மேலைவெண்பாவில் மலம் நசித்து என்றதனோடு முரணுவதன்றியும் குணம் இல்லாத குணியும்

கருத்துரை.

எ-து சூ-ம் எ-னின், அசிந்திதனாய் நின்ற பதியைச் சிந்திதனாகக் கண்டு வழிபடுமா றுணர்த்துதனுதலிற்று.

## சிற்றுரை.

எ-து ச-ரை எ-னின், சூத்திரக்கருத் துணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) அயரா அன்பின் அரன் கழல் சென்ற முத்தர்க்குச் சீவன் முத்திநிலைக்கண் அவ்வறிவு இச்சை செயல்கள் ஒரோ வழிப்புறத்துச் செல்லுங்கால் அவை செல்லுமிடம் இவையென் பது உணர்த்து முகத்தான் வாக்குமனாதீதமாய்ப் பத்தியினான் மறவா தேத்தநின்ற முதல்வனை வாக்குமனக் கோசர மாம்படி தெளியக்கண்டு வழிபடுமா றுணர்த்துதல் இப் பன்னிரண்டாஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.

சூத்திர இயைபும் இனிது விளங்கும்.

## விளக்கம்.

கருத்துரை என்னசொல்லிற்றோ வெனின், சூத்திரத்தின் கருத்து இது வென்று சொல்லிற்று.

(இககருத்துரையின் பொருள்.) பதினொராஞ் சூத்திரத்திற் கூறிய வாறு இடைவிடாத அன்பினால் அரன் திருவடியடைந்து நிட்டை கூடிய முத்தர்க்குப் பிராரத்த அனுபவத்தின் பொருட்டு நிட்டை கலைந்து பிரபஞ் சத்தை நோக்க நேரும். நேருங்கால் சீவன் முத்திநிலை யெனப்படும். அச் சீவன்முத்திநிலையில், திருவடியடைந் திருக்கும் நிட்டையில் தொழிற் பட்ட அறிவிச்சை செயல்களாகிய மூன்றும் ஒவ்வொரு சமயத்தில் புறத் திற் செலலும். செல்லுங்கால் அவ்வறிவிச்சை செயல்கள் இன்ன இன்ன இடத்திற் செல்லு மென்பதை உணர்த்தி, அவ்வாறு உணர்த்து முறை மையில் வாககிற்கும் மனத்திற்கும் எட்டாதுஅன்பிற்கு எட்டுவதாய்மேலைச் சூத்திரத்திற் கூறியவாறு அவ்வன்பினால் மறவாது வழிபடுதற் குரியவனாய் நின்ற முதல்வனை வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டும்படி சிவாலயத்தி னிடத்தும், சிவனடியாரிடத்தும், திருவேடத்தி னிடத்துந் தெளிவாய்க் கண்டு வழிபடும் முறையினை உணர்த்துதல், இப்பன்னிரண்டாஞ் சூத்திரத் தின் கருத்து எ-று.

மேலைச் சூத்திரத்துல் முத்திநிலை கூறி முடிந்தமையால் அம்முத்தர், மேற் செய்யவேண்டுவ தொன்றும் இல்லையென்பாரை மறுத்து, அவர்க் குச் செயல் உண்டு என்பது விளக்கிச் செய்ய வேண்டுவன இவையென

இச்சூத்திரத்திற் கூறுதலினாலும், மேலைச் சூத்திரத்தில் பாமுத்தி கூறி இச்சூத்திரத்தில் சீவன் முத்தி கூறுதலினாலும் சூத்திரத்தின் சம்பந்தம் பெறப்பட்டது.

## சிற்றுரை.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு.

(அயராவன்பினரான் கழலணைந்த சீவன் முத்தனாவான்) செங்கமல மலர்போல (விரிந்து விளங்கிய முதல்வனது) நோன்றாளை அணைய வொட்டாது (அயர்த்தலைச் செய்விக்கும்) அவ்வியல்பினையுடைய மும்மல வழுக்கை (ஞான நீரால்) கழுவி (அங்ஙனம் அயராவன்பு செய்யு) மெய்ஞ்ஞானிகளோடு கலந்து கூடி மலமயக்க நீங்குதலான் அன்புமிக்குடைய அவரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் முதல்வனெனவே (கண்டு) வழிபட்டு வாழும் எ-று.

எழுவாய் மேலைச் சூத்திரத்தினின்றும் வருவிக்கப் பட்டது. சீவன் முத்தனென்பது ஏற்புழிக் கோடலாற் பெறுதும். நோன்றாள் வினைத்தொகை. நோன்றல் பொறுத்தல் "எடுத்துச் சுமப்பானை" என்றார் புடைநூலாசிரியரும். கழீஇ என்பது குறிப்புருவகம். மாலற நேய மலிந்தவரென்றது அம்மலங்கழீஇ யன்பரொடு மரீஇயினாரென்னும் பொருடந்து சுட்டுப் பெயர் மாத்திரையாய் நின்றது. நேயமலிதல் கூறவே, வழிபாடும் பெறப்படும். தான் அசை.

அம்மலங்கழீஇ என்றதனால் அறிவு வியாபரிக்கு மிடமும் அன்பரொடு மரீஇ என்றதனால் இச்சை வியாபரிக்கு மிடமும், தொழுமென்றதனாற் செயல் வியாபரிக்கு மிடமும் பெறப்பட்டன. படவே, சீவன் முத்தர்க்கு அறிவிச்சை செயல்கள் ஏனைவிடயங்களிற் செல்லா வென்பதூஉம் பெறப்பட்டது. இம்மூன்றும் பிரிப்பின்றி ஓரிடத்தொருங்கு நிகழ்வன வாகலின், விடயவேற்றுமையின்மையு முணர்க.

தொழுக வென்னாது தொழுமென்றமையின், இஃதனைந்தோரது தன்மை யென்பது பெற்றாம். அற்றாகலினன்றே இதனைச் சாதன வோத்தின் வையாது ஈண்டுவைத்தா ரென்பது. இனித்தொழு மென்பதனை இரட்டுற மொழிந்து கொண்டு விதிப்பொருள்பட நின்ற முன்னிலையேவலாக்கியு முரைத்துக்கொள்க. என்னை? செல்வப்பெருக் குடையார்க்கு உணவாகிய ஆன்பால்

உடம்பு நோயின்றி வளரச்செய்யும் மருந்து மாதல்போல, இவ் வழிபாடு மலவாசனை சிறிதுந் தாக்குதலின்றிச் சிவானந்தம்மேன் மேல் வளரச் செய்யுஞ் சாதனமாதலு முடைமையின். கண்ண ழித்துரை பற்றி விதியாகவைத்துரைத்தலும் அதுபற்றி.

## விளக்கம்.

(இச்சூத்திரத்தின் பொழிப்புரை.) மேற்பதினொராஞ் சூத்திரத்திற் கூறியவாறு அயரா அன்பின் அரன் கழலணைந்த முத்தன் வினைப்பயனை அனுபவிக்கப் புறத்துச் செல்லுங்கால், சீவன் முத்தனெனப் படுவன். அச்சீவன் முத்தன் புறத்துச் செல்லுங்கால் செங்கமல மலர்போல விரிந்து விளங்கிய முதல்வனுடைய பொறுக்குந் திருவடியை அணையவொட்டாது அத்திருவடியை மறக்கும்படி மும்மலங்களுஞ் செய்விக்கும். ஆதலால், அவ்வாறு மறக்கும்படி செய்விப்பதை இயல்பாகவுடைய அம்மும்மலங்கள் என்னும் அழுக்கை ஞானம் என்னும் நீரினாற் கழுவி, அவ்வாறுகழுவுத லால் மேலைச் சூத்திரத்திற் கூறியவாறு அயரா அன்புசெய்யும் மெய்ஞ் ஞானிகளோடு கலந்து கூடி, மலத்தினாலுண்டாகும் மயக்கம் நீங்குதலால் இடைவிடாத அன்பினையுடைய அம்மெய்ஞ்ஞானிகளுடைய திருவேட மாகிய விபூதி உருத்திராக்கங்களையும் சிவாலயத்தையும் முதல்வன் எனவே கண்டு வழிபட்டு வாழ்வன் எ-று.

சீவன் முத்தன் என்னும் எழுவாய் மேலைச் சூத்திரத்தில் நின்றும் வருவிக்கப்பட்டது. மேலைச் சூத்திரத்தில் அரன்கழல் செலுமே எனக் கூறப்பட்டதேயன்றிச் சீவன் முத்தன் எனக் கூறப்படவில்லையே யெனின், அரன்கழ லணைந்த நிலை பரமுத்தியேயாயினும் அந்நிலை நின்றார் புறத்துச் செல்லுங்கால் நிற்கும் முறைகூறும் இச்சூத்திரத்திற் கேற்ப ஏற்புழிக்கோடல் என்னும் உத்தியால் சீவன் முத்தன் எனவருவிக்கப்பட்ட தென அறிக.

நோன்றாள் என்பது நோன்ற நோற்கின்ற நோற்குந்தாள் எனவிரியுமா கலின் வினைத்தொகை. நோன்றல் என்பது பொறுத்தல். அதாவதுஅடியார் களைத் தாங்குந் திருவடி யென்பதாம். இக்கருத்துப் பற்றியே திருவருட் பயன் என்னும் நூலில் உயிர் விளக்கம் ௫-வது செய்யுளில் "எடுத்துச் சுமப்பானை" என்றார் புடைநூலாசிரியரும். இதனையே சிவஞான சித்தியார் ௧௦-வது சூத்திரம் ௧-வது செய்யுளில் "சிவனும் இவன்செய்தி யெலாம் என்செய்தி யென்றும் இவனுக்குச் செய்தது எனக்குச் செய்தது என்றும் பவமகல வுடனாகி நின்றறுகொள்வன்" என வழிநூலாசிரியரும் அருளிச்செய்வா ராயினர்.

கழீஇ என்றது மலத்தை அழுக்காகவும் ஞானத்தை நீராகவும் குறிப்பால் உருவகஞ்செய்யும்படி நின்ற குறிப்புருவகம்.

மாலற நேய மலிந்தவர் என்றது, மலங்கழுவி அன்பரொடு மருவியவரினின்றும் வேறனவரன்று; அவரையே குறித்த சுட்டுப் பெயர் மாத்திரையாய் நின்றது. ஆதலால் அவரது திருவேடத்தை என உரைசெய்யப்பட்டது.

நேயமலிந்தவர் என்றதனால், அம்மெய்ஞ்ஞானிகள் கடவுளிடத்து அன்பு செய்தலேயன்றிக் கடவுளை வழிபடுதல் இல்லையோ எனின்? நேய மலிதலி னாலேயே வழிபாடும் உண்டென்பது தானே பெறப்படும் என்க.

ஆலயந்தானும் என்றதிலுள்ள தான் என்பது அசை.

இச் சூத்திரத்தால் சீவன் முத்தருடைய அறிவு இச்சை செயல்கள் மூன்றுஞ் செல்லும் இடம் இவை யெனக்கூறியவாறாகும். எவ்வாறெனின்; அம்மலங் கழீஇ என்றதனால் மலத்தை நீக்குதலிலேயே அறிவு தொழிற்படு மெனவும், அன்பரொடு மரீஇ என்றதனால் அன்பர் கூட்டத்திலேயே இச்சை தொழிற்படு மெனவும், தொழு மென்றதனால் திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவனென வழிபடுதலிலேயே செயல் நிகழு மெனவும் மூவிடமும் பெறப்பட்டமையறிக. படவே, சீவன் முத்தர்க்கு இம்மூவிடங்களை யின்றி ஏனைய விடயங்களில் அறிவு இச்சை செயல்கள் செல்லாவென்பதூஉம் பெறப்பட்டது. அறிவு இச்சை செயல்கள் மூன்றுந் தொழிற்படும் இடம் மூன்றாதலால் மேலைச் சூத்திரத்திற் கூறியவாறு, ஒரு பொருளைப் பற்றிய முத்தன் வேறுவேறு பொருளைப் பற்றிய வேறு வேறு செயலை உடையவன் ஆவனோ எனின், ஆகான். எதனாலெனின், மல நீக்கத்தால் அன்பர் கூட்டத்திற் பற்றும்; அப்பற்றால் அவரையும், அவர் வேடத்தையும், ஆலயத்தையும் வழிபடுந் தொழிலும் பிரிப்பின்றி உடனிகழ்ச்சியாய் நிகழ்வனவாம் ஆதலினாலும் மலநீக்கமும் அன்பரும் திருவேடமும் சிவாலயமும் அரனையே குறித்தலினாலும் என்க.

தொழுக என்று விதிவாக்கியமாய்க் கூறாமல் தொழும் என்று இயல்பாயுள்ள இலக்கணவாக்கியமாய்க் கூறினமையின், இச் சூத்திரம் திருவடியடைந்த சீவன் முத்தரது தன்மையைக் கூறிற்று என்பது பெறப்பட்டது. ஆதலினாற்றான் கருத்துரைக்குப் பொருள் கூறுங்கால் சீவன் முத்தி நிலையில் எனக் கூறப்பட்டது. சீவன் முத்தர்தன்மை கூறும் சூத்திர மாதலினாற்றான் இதனைச் சாதன இயலில் வையாது பயனியலாகிய இவ்விடத்தில் வைத்தாரென அறிக.

இனித்தொழும் என்றதனை இரட்டுற மொழிந்துகொண்டு தொழுவன் என்று முன்கூறிய பொருளேயன்றி தொழுக என முன்னிலை ஏவ

லாக்கியும் உரைத்துக் கொள்க. தொழும் என்பது தொழுவன் என்னும் பொருள்படப் படர்க்கை வாக்கியமாய்க் கூறுங்கால் செய்புமென்னு முற்று யும், தொழுக என முன்னிலையேவல் வாக்கியமாய்க் கூறுங்கால் உம் விகுதிப்பொருள் படவும் கொள்க. தொழும் என்ற இச்சொல்லை இவ்வாறு இலக்கண வாக்கியமாகவும், விதிவாக்கியமாகவுங் கொள்வானேன் எனின், பசுவின் பாலானது செல்வப்பெருக்கம் உடையார்க்கு உணவாயும் உடம்பு நோயின்றி வளரச்செய்யும் மருந்தாயும் இருத்தல்போலச் சீவன் முத்தரிடத்துநிகழும் இவ்வழிபாடு சிவானந்த அனுபவத்தை மேன்மேல் வளரச் செய்யும் அநுபவமாயும், மலவாசனை யாகிய நோயைத் தீர்க்குஞ் சாதனமாகிய மருந்தாயும் இருத்தலால், அநுபவ வளர்ச்சிபற்றி இலக்கணமாகவும் மல நோய் தீர்த்தல்பற்றி விதியாகவுங் கொள்ளல் வேண்டும் என அறிக. இக் கருத்துப் பற்றியே நூலாசிரியர் கருத்துரையில் வழிபடுமாறு என இலக்கணமாகவும் மேற்கோளில் மலங்களைக் களைக சிவபத்தர்களோடு இணங்குக திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் வழிபடுக எனவிதியாகவும் கூறிப் புறனடை அதிகாரணத்தால் அவ்விதியை வலியுறுத்தினர்.

## சிற்றுரை.

இதனுள் செம்மலர் நோன்றாள் சேரலொட்டா அம்மலங் கழீஇ என்றது ஓரதிகாரணம்; அன்பரொடு மரீஇ யென்றது ஓரதிகாரணம்; மாலற நேய மலிந்தவர்வேடமும் ஆலயந்தானும் அரனெனத் தொழுமே என்றது ஓரதிகாரணம்; ஆக மூன்றதிகாரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

## விளக்கம்.

வெ—டை.



# முதலதிகரணம்.



சீவன் முத்தர் முதலாவது செய்ய வேண்டுவது மும்மலங்களைக் களைதல் எனக்கூறும்

### மேற்கோள்.

ஈண்டு ஆணவமாயை கான்மியமென்னு மலங்களைக் களைக வேன்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், சீவன்முத்தர்க்கு ஒருதலையான் முன்னர்ச் செய்யக்கடவ திதுவெனச் சூத்திரததின் முதற்கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ—ள் வெ - டை.

## சுப்பிரமணியதேசிகர்உரை.

இ—ள். ஈண்டு—இம் மூன்றதிகாணத்துள் வைத்து இம்முதலதிகாணத்து,—ஆணவமாயை கான்மிய மென்னுமலங்களை—ஆணவம் மாயை கான்மியம் என்று கூறப்படும் மும்மலங்களை,—களைக என்றது—நீக்குக எ—று.

## சிற்றுரை.

கன்மமலமே தன்மூலத்தை நோக்கிக் கான்மிய மெனவும்படும். காமியமெனப் பாடமோதி, ஆகாமியங் காமிய மெனத்தலைக்குறை யென்றுரைப்பாருமுளர்.

## விளக்கம்.

இம்மேற்கோள் செம்மலர் நோன்றாள் சேரலொட்டா அம்மலங்கழீஇ என்ற சூத்திரத்தின் முதற்கூற்றைப் பதச்சேதஞ் செய்து மேற்கொண்டதாகும்.

இம் மேற்கோள் என்ன சொல்லிற்றோ வெனின், சீவன்முத்தருடைய அறிவு புறத்துச் செல்லுங்கால் எவ்வாறு தொழிற்பட வேண்டுமென்பாரை நோக்கிச் சூத்திரத்தின் முதற்கூற்றைப் பதச்சேதஞ்செய்து உறுதியாக முதலாவது செய்யவேண்டுவது மலங்களைக் களைதல் எனக் கூறியவாறாம்.

இவ்வதிகாணத்தில், சீவன் முத்தர் மலங்கள் தாக்காதிருத்தற்பொருட்டு அவற்றைக்களைய வேண்டுமோ வேண்டாமோ என்பது ஐயப்பாடு. வேண்டாம் என்பது பிறர்பக்கம்.

(இம்மேற்கோளின் பொருள்.) இச்சூத்திரத்திற் கூறப்படும் மூன்று அதிகாணங்களுள் இம்முதலதிகாணத்தில் ஆணவம்மாயை கான்மியம் என்னும் மும்மலங்களை நீக்குக எ-று.

கான்மியம் என்பது கன்ம மலத்திற்கே மூலகன்மத்தின் சம்பந்தம் நோக்கி வந்தபெயர். கன்ம மலமாவது நல்வினை தீவினை என்னும் இருவி

னைகள். இவ்விருவினைகளும் கேவலத்தில் நின்றும் நீங்கி உடம்பு பெற்ற பின்னர் நிகழ்வனவாம். உடம்பால் இருவினையும் இருவினையால் உடம்பும் மாறி மாறி வரும். கேவலத்தில் நின்றும் நீங்கி உடம்பு பெறுதற்குங் கன்மம்வேண்டும். இன்றேல் பல வேறு வகைப்படச் சிருட்டி நிகழ்தல் கூடாது. அந்தக் கன்மந்தான் மூல கன்மமெனப்படும். அம்மூல கன்மமாவது ஆன்மாவின் இச்சாசத்தியின் காரியமாகிய விருப்பு வெறுப்பேயாம். அந்த விருப்பு வெறுப்பாகிய மூலகன்மம் உண்டென்று காட்டி அம்மூல கன்மத்தின் சம்பந்தமாய் நிகழும் இருவினைகளும் கான்மியமெனப்படும் என்னும் இக்கருத்துப்பற்றியே, சிவஞான சித்தியார் உ-ம் சூ—ம் ௯கூ-வது செய்யுளில் தனமமோடதன்மமாகி * * * கன்மமும் மூலங்காட்டிக் காமிய மலமாய் நிற்கும்” என்றார் வழிநூலாசிரியரும்.

இனி இம்மேற்கோளில் கான்மியமென்றிருப்பதை காமியமென்று பாடங் கொண்டு சிவஞானசித்தியார் அ-ம் சூ-ம் க0-வது செய்யுளில் “இனிச் செய்கன்மம் மூலமலம் ஞானத்தால் இடிப்பன்” என வழிநூலாசிரியர் கூறியவாறு ஆணவம் மாயைகளோடு களையக்கூடியதாய் நின்றது ஆகாமியவினையே யாதலால், ஆகாமியம் என்பதிலுள்ள தலையெழுத்தைக் குறைத்து காமியமென நின்றதென்று உரைப்பாரு முளர்.

சீவன்முத்தர் மும்மலங்களை க் களையவேண்டும் என்பதற்குக் காட்டும்

ஏது.

அவைதாம் ஞானத்தை யுணர்த்தாது அஞ்ஞானத்தை யுணர்த்துமாகலான்.

சிற்[redacted]ரை.

எ—து ஏ-து எ-னின், “[redacted]மாயை தன்னொடு வல்வினையின் றே” எனப் பாச நீக்கம் [redacted]ப் பெறப்பட்டமையின், மெய் யுணர்ந்து நிட்டைகூடியபின் [redacted]வை களையக் கிடத்தல் யாங்ஙன மென்பாரை நோக்கிச் சூத்திரத்தின் உடம்பொடு புணர்த்தோதிய பொருளைத் தெரித்துணர்த்தி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

(இ-ள்.) அம்மலங்கண் மூன்றும் மெய்யுணர்ந்து நிட்டை கூடினார் மாட்டும் யாதானு மோராற்றா னுழைந்து தம் மெய்யுணர் வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்கு வித்தாகிய பண்டை விபரீதவுணர் வை மேற் படுத்துவனவாம். ஆகலான் அஃதவர்க் காகாமையின் 'ஈண்டு ஆவணமாயை கான்மிய மென்னு மலங்களைக் களைக' வென மேற்கொண்டது எ-று.

உணர்த்துதல் உணர்விற் கேதுவாதல். ஈண்டு அஞ்ஞான மென்றது விபரீதவுணர்வை.

## விளக்கம்.

இந்த ஏது என்னசொல்லிற்ரோ வெனின், மேல் பத்தாஞ் சூத்திரத் திலேயே "மலம் மாயை தன்னொடு வல்வினை யின்றே" எனப் பாச நீக் கம் பெறப்பட்டமையின், அவ்வாறு பாசம் நீங்கிப் பதினொராஞ் சூத்திரத் திற் கூறியவாறு அரன் உபகாரமாகிய மெய்யுணர்ந்து அவன் திருவடி யடைதலாகிய நிட்டை கூடியபின் ஆணவம் மாயை கன்மம் என்னு மும் மலங்களும் களையும் வண்ணம் நிற்கும் என்றல் எவ்வாறு பொருந்தும் என் பாரைநோக்கிச் சூத்திரத்தில் "செம்மலர் நோன்றாள் சேரலொட்டா அம் மலம்" என்றவிடத்து உடம்பொடு புணர்த்தோதிய அயர்த்தலைச் செய்விக் கும் என்னும் பொருளை விளக்கிக்காட்டி மும்மலங்களைக் களைக என்று கூறிய மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

அம்மலம் என்ற வாக்கியத்தில் அயர்த்தலைச் செய்விக்கும் என்னும் பொருளைப் புணர்த்திக் கூறினமையின் உடம்பொடு புணர்த்தலாகும். இவ்வாறுகொள்ள வில்லையாஞல் அநாதியே திருவடியைச் சேரவொட் டாது தடுத்தலைக் குறிக்கும். அத்தடை பத்தாஞ் சூத்திரத்தாலேயே ஒழிந் தமையின் அது பொருந்தாது.

(இந்த ஏதுவின்பொருள்.) பத்தாஞ்சூத்திரத்தில் இல்லை எனக்கூறிய ஆணவம் மாயை கன்மம் என்னும் அம்மலங்கள் மூன்றும் பதினொராஞ் சூத்திரத்திற் கூறியவாறு மெய்யுணர்ந்து நிட்டை கூடினாரிடத்தும் யாதா னும் ஒரு வழியால் நுழைந்து த[illegible]யுணர்வைக் கீழ்ப்படுத்திப் பிறவிக்கு வித்தாகிய பழைய விபரீதவுணர்[illegible]மற்படுத்துவனவாகும். அது மெய் யுணர்ந்து நிட்டைகூடினார்க்கு ஆ[illegible]ின் இவ்வதிகரணத்தில் ஆணவ மாயை கான்மியம் என்னும் மலங்[illegible]ளைக என மேற்கோள் கூறிய தாம் எ-று.

விபரீத வுணர்வாவது தானல்லா[illegible] உடம்பைத் தான் எனவும் தனதல் லாத பொருள்களைத் தனதெனவும் எண்ணுதல்.

அஞ்ஞானமாகிய விபரீத வுணர்விற்கு மும்மலங்களும் ஏதுவாய் நிற் கும். எவ்வாறெனின், ஆணவம் உண்மையை அறியவொட்டாமல் மறைக் கும். மாயை மயக்கத்தை உண்டுபண்ணும். கன்மம் விருப்பு வெறுப்பை உண்டுபண்ணும். ஆகவே அறியாமையோடு கூடிய மயக்கத்தால் உண்டா கும் ஆசையால் உடம்பில் யான் என்னும் புத்தியும் பொருள்களில் என தென்னும் புத்தியும் நிகழும். இவ்வாறு விபரீதமாகிய அஞ்ஞான உணர் விற்கு ஏதுவாயுள்ள மும்மலங்களை, இந்த ஏதுவில் அஞ்ஞானத்தை உணர் த்துமெனக் கூறினர். ஆதலால் உணர்த்து மாகலான் என்றதற்கு உணர் விற்கு ஏதுவாகலான் எனக்கொள்க. ஞானத்தை உணர்த்தாது என்றதற் கும் இவ்வாறே ஞானத்தை யுணர்த்துதற்கு ஏதுவாகாது எனக்கொள்க.

இந்த ஏதுவில் அஞ்ஞானம் என்றது ஆணவ மலத்தைக் குறியாது. ஏதனுலெனின், அவைதாம் என்றதில் ஆணவமலமும் அடங்கி விட்டத ஞல் என்க. ஆகவே, அஞ்ஞானம் என்றது விபரீத உணர்வைக் குறித்தது என அறிக.

இந்த ஏது, சீவன்முத்தர் மலங்களைக் களையவேண்டாம் என்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

சீவன் முத்தர் மும்மலங்களைக் களையவேண்டும் என்பதற்குக் காட்டும்

உதாரணம்.

புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமு
மண்முதன் மாயைகாண் மாயையுங்—கண்ணிய
வஞ்ஞானங் காட்டுமிவ் வாணவமு மிம்மூன்று
மெய்ஞ்ஞானிக் காகா விடு.

## சிற்றுரை.

எ-து உ-ம் எ-னின், அவை அஞ்ஞானத்திற் கேதுவாய் வந்து நுழையுமாறும் அஃது அவர்க்காகாமையுந் தெரித்துணர்த்தி ஏதுவை வலியுறுத்தற்கு உதாரணங் கூறுகலிற்று.

(இ-ள்.) புண்ணிய பாவம் பொருந்தும் இக் கான்மியமும்—புண்ணிய பாவப்பயனும் புண்ணிய பாவ காரணமாயும் பொருந்துகின்ற இக் கன்ம மலமும்,—மண்முதல் மாயை காண் (இம்) மாயையும்—நிலமுதல் மோகினியீருகக் காணப்படுகின்ற இம்மாயா மலமும்,—கண்ணிய அஞ்ஞானங் காட்டும் இவ்வாணவமும்—சுட்டியறிவதாகிய விபரீத வுணர்வைப்பயக்கும் இவ்வாணவ மலமும்,—இம்மூன்றும் மெய்ஞ்ஞானிக்கு ஆகாவிடு—இம்மலங் கண் மூன்றும் மெய்யுணர்வுடைய உனக்காகாமையான் (அவற்றை) விடுத்தொழிவாயாக எ-று.

எல்லாமலங்களும் பற்றறத் துடைத்து மெய்புணர்ந்து நிட்டை கூடினூர்க்கு உடம்பு நிற்குமளவும் பிராரத்தவினை அவ்வுடம்பைப் பற்றி நிற்றலான அஃது அவர்க்கு ஒரோவழி வாசனைவயத்தான் இங்குளிவாங்குங் கலம்போல வந்து தாக்கும்; அவ்வழிப் "பிற்செயாதநுபவிப்பதின்று" ஆகலின் அது சார்பாக விருப்பு வெறுப்புக்கள் உளவாம்; அவை உளவாகவே, பாமே பார்த்திருப்பார்க்கு நிலமுதலிய ஏகதேசப்பொருள் காட்சிப்படும்;

படலே, அவற்றைச் சுட்டியறிவதாகிய விபரீத வுணர்வு மேற்பட்டு மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்குவித்தாம் ; இவ்வாறிம்மூன்றும் அறிவற்றம் பார்த்து இம்முறையானே வந்து தலைப்படுமெனக் காட்டிக் கூறுவார் கன்மமாயை யாணவமென் றிம்முறையின் வைத்து அவ்வக்காரிய நிகழ்ச்சிகளை எடுத்தோதிச் சுட்டிக்கூறினார். இகரச் சுட்டு இடையினும் வந்தியையும். புண்ணிய பாவ மென்றது உபசாரம். முன்வந்த மாயை முப்பத்தொராமெண்ணு முறைமைக்கணின்ற தத்துவத்தை யுணர்த்தி விடாத வாகு பெயராய்த் தன்னை யிருகவுடைய ஏனைத் தத்துவங்களையுந் தழீஇயிற்று. கண் மாயை செயப்படு பொருளோடு முடிந்த வினைத்தொகை.

இவை சிவபோகப் பெருவாழ்வை யிழப்பித்தலின் மெய்ஞ்ஞானிக் காகாவாயின. மேன் மேன் முறுகுவனவாய இவற்றைத் தோன்றும் பொழுதே துடைபாக்கால் "களைகு நர் கைகொல்லுங் காழ்த்த விடத்து" என்னு முறைமைத்தாய் முடியுமென்பது பற்றி விடுஎன ஈண்டும் வலியுறுத்தப்பட்டது. விடுதலாவது, அவை அம்முறையா னிகழ்ந்தவழி இவ்வஞ்ஞானம் ஏகதேசக் காட்சியானுய தெனவும், அக்காட்சி விருப்பு வெறுப்புக்களது தோற்றத்தா னுயதெனவும், அத் தோற்றமும் பிராரத்த வினை நுகர்ச்சிக்கட்சென்ற தற்போதத்தா லாயதெனவும் அறிந்து, அங்ஙனஞ் செல்வதாகிய தற்போதம் முளையாதவாறு பரிகரித்துச் சிவஞானத்துளடங்கிச் "சிவாநுபவஞ் சுவாநுபூதி" யாம்படி ஞானநிலையில் உறைத்து நிற்றல். மாயை கன்மங்கள் அஞ்ஞானங் காட்டுதல் ஆணவ மலச்சார்பானுய செயற்கையென்ப துணர்த்துதற்கு, மூன்றற்கும் பொதுவாக ஏதுவெட்கூறிப் போந்த வதனை ஈண்டாணவ மாத்திரைக்கே சிறந்தெடுத்தோதினர்.

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோவெனின், ஏதுவிற்கூறிய ஆணவ மாயை கான்மியம் என்னு மும்மலங்களும் விபரீத உணர்வை உண்டு பண்ணுதற்கு ஏதுவாய் வந்து நுழையும் முறையினையும், அவ்வாறு வந்து நுழைதல் சீவன் முத்தர்க்கு ஆகாதென்பதனையும் விளக்கிக்காட்டி அம்மூன்றும் அஞ்ஞானத்தை யுணர்த்தும் என்ற ஏதுவை வலியுறுத்தியவாறும்.

(பெர்-ரை.) புண்ணியத்தின் பயனுகிய இன்பமாயும் பாவத்தின் பயனுகிய துன்பமாயும் புண்ணியத்திற்குக் காரணமாகிய நல்வினையாயும் பாவத்

திற்குக் காரணமாகிய தீவினையாயும் பொருந்துகின்றது விருப்பு வெறுப்பாகிய கன்ம மலமாதலால் இக்கன்ம மலமும், பிருதிவிமுதலாகிய ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும் காலமுதல் அசுத்தமாயை வரையுள்ள வித்தியாதத்துவம் ஏழும் ஆகத் தத்துவம் முப்பத்தொன்றாகக் காணப்படுகின்றது மாயா மலமாதலால் இம்மாயா மலமும், இத்தத்துவங்களாலாகிய தனு கரண புவன போகங்களைச் சுட்டி அறிவதாகிய விபரீத உணர்வை உண்டு பண்ணுவது ஆணவ மல மாதலால் இவ்வாணவ மலமும் ஆகிய இம்மலங்கள் மூன்றும் மெய்யுணர்வையுடைய உனக்காகாமையால் அம் மும்மலங்களைவிட்டு நீங்குவாயாக எ-று.

(க—ரை.) பிராரத்தவினை காரணமாக விருப்பு வெறுப்பாகிய கன்ம மலமும் கன்மமலங் காரணமாகத் தத்துவத் தோற்றமாகிய மாயா மலமும், அம் மாயாமலங் காரணமாக விபரீத உணர்வை உண்டுபண்ணும் ஆணவ மலமும் வந்து நுழையுமாதலால் அம் மும்மலங்களையும் விட்டு நீங்குக என்பதாம்.

பத்தாஞ் சூத்திரத்திற் கூறியவாறு எல்லா மலங்களும் பற்றற நீக்கிப் பதினொராஞ் சூத்திரத்திற்கூறியவாறு இறைவன் அத்துவிதமாய் நின்று உபகரித்துவரும் உண்மையுணர்ந்து அவ்விறைவன் திருவடியடைதலாகிய நிட்டைகூடின முத்தர்க்கு ஆகாமிய சஞ்சிதவினைகள் கெட்டொழியுமேயன்றிப் பிராரத்தவினை கெடுவதில்லை. ஆதலால் பிராரத்தவினை உள்ளளவும் உடம்பும் அவ்வுடம்புள்ள அளவும் பிராரத்தவினையும் நிற்கும். அப் பிராரத்த வினையானது மெய்யுணர்ந்து நிட்டைகூடிய முத்தரைப் பற்றுவதில்லையாயினும் அம்முத்தருக்கு ஒவ்வொரு சமயத்தில் உடம்போடு கூடியிருக்கும் பழக்கவாசனையால் வந்து தாக்கும். மலம் நீங்கியும் வாசனையால் பிராரத்தவினை தாக்குதல் எதுபோல வெனின், பெருங்காயம் வைத்துள்ள பாண்டத்தில் பெருங்காயம் இல்லாதபொழுதும் வாசனை தங்கியிருந்து அப் பாண்டத்தைத் தாக்குதல்போலாம்; அவ்வாறு பிராரத்தவினை தாக்கும் பொழுது அவ்வினைப்பயனை அனுபவிக்குங்கால் சிவஞான சித்தியார் உ-ம் சூ-ம் கக-வது செய்யுளிற் கூறியவாறு "பிற்செயா தநுபவிப்பதின்று" ஆதலால் செயல்வழியாகவே அனுபவம் நிகழும். அச் செயலும் விருப்பு வெறுப்புக்களின் வழியாக நிகழும். ஆகவே அனுபவங் காரணமாக உண்டாஞ் செயலின்வழியாக விருப்பு வெறுப்புக்கள் உண்டாகவே, பரமே பார்த்திருக்கும் அம்முத்தர்க்குப் பிரபஞ்சப்பொருள்கள் அறியப்படும். படவே, அப்பிரபஞ்சப் பொருள்களைச் சுட்டியறிவதாகிய விபரீத உணர்வு மேற்பட்டு மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்திப் பிறவிக்கு வித்தாம்: இவ்வாறு விருப்பு வெறுப்புக்களைச் செய்யுங் கன்ம மலமும், பிரபஞ்சப் பொருளைத் தோற்றச்செய்யும் மாயா மலமும், விபரீத உணர்வு மேம்படச்செய்யும் ஆணவ மலமும் ஆகிய மூன்றும் திருவடியைக்கூடிய அறிவு பிராரத்தவினை

காரணமாக அத்திருவடியை மறக்கும் சமயம்பார்த்துவந்து கூடும். முன்னர்க்கன்மமலமும் அக்கன்மமலங் காரணமாக மாயாமலமும் அம்மாயாமலங் காரணமாக ஆணவமலமும் வந்துகூடும் என்பதை அறிவிக்கவேண்டிச் செய்யுளில் மேற்கோளிற் கூறியவாறு ஆணவம் மாயை கன்மமென்று கூறுமல் கன்மம் மாயை ஆணவம் என்று இம்முறையில் வைத்துக்கூறினர். அவ்வாறு கூறுங்காலத்தும் கன்மத்தின் காரியமாகிய விருப்பு வெறுப்புக்களையும் மாயையின் காரியமாகிய பிரபஞ்சத்தையும் ஆணவத்தின் காரியமாகிய விபரீத உணர்வையும் எடுத்துக்கூறி இக்காரியங்களையுடைய கன்மம் மாயை ஆணவம் எனச் சுட்டிக் கூறினர்.

கன்மத்திற்கும் ஆணவத்திற்கும் இகரச் சுட்டிருத்தலால் அந்த இகரச் சுட்டு நடுநின்ற மாயையோடும் வந்து பொருந்தும். ஆதலால் இம்மாயை என உரை செய்யப்பட்டது.

புண்ணிய பாவத்தின் பயனுகிய இன்ப துன்பங்களையும் புண்ணிய பாவத்தின் காரணமாகிய நல்வினை தீவினைகளையும் புண்ணிய பாவமென்றது உபசாரம்.

இன்ப துன்ப அனுபவமும நல்வினை தீவினையாகிய செயலும் விருப்பு வெறுப்பைப் பொருந்தியே நிகழுமாதலின் புண்ணியபாவம் பொருந்தும் இக்கான்மிய மெனக் கூறினர். ஆதலினுற்றுன் உரையாசிரியர் "பிற்செயா தநுபவிப்பதின்று ஆகலின் அது சார்பாக விருப்பு வெறுப்புக்கள் உளவாம்" எனக்கூறினர்.

மாயை காண் மாயை என்றவிடத்து முதலாவதாகக் கூறிய மாயையானது, வித்தியா தத்துவத்துள் ஒன்றுகிய முப்பத்தொராவது தத்துவத்தை உணர்த்தி விடாத ஆகுபெயராய் அம்மாயா தத்துவத்துக்குக் கீழ்ப்பட்ட ஏனைய வித்தியா தத்துவங்கள் ஆறினையும் மண்முதல் என்றதனுல் மண்முதலாகிய ஆன்மதத்துவங்களையுந் தழுவிற்று.

விடாத ஆகுபெயராவது புளியைத் தின்றுன் என்றவிடத்து புளியாகிய சுவையை விடாது அதனையுடைய காயை அல்லது கனியை உணர்த்துதல். இச்செய்யுளில் மாயை என்றது அதனை விடாது அதன்கீழ்ப் பட்ட ஆறுதத்துவங்களை உணர்த்தினமையால் விடாத ஆகுபெயராயிற்று.

காண்மாயை என்றது காணப்படுகின்ற மாயை என்னும் பொருளைக் குறித்து நிற்றலால் செயப்படு பொருளாகிய மாயையோடு முடிந்த வினைத்தொகை. மாயை தானே காரியப்படாமல் ஒருகருத்தாவால் காரியப் படவேண்டுதலின் செயபபடு பொருளாயிற்று.

இம்மும்மலங்களும் சிவானந்தமாகிய சிவபோகப் பெருவாழ்வை இழக்கும்படி செய்யுமாதலால் மெய்ஞ்ஞானிக்கு ஆகாவாயின.

அக்கினியானது ஒரு இடத்தின் ஏகதேசத்தைப் பற்றினும் அப்பொழுதே அதனைக் கெடுக்காத விடத்து அது இடம் முற்றுங் கெடுக்குமாறுபோல மேன்மேல் முறுகி வளருந் தன்மையினையுடைய இம்மும்மலங்களைத் தோன்றும்பொழுதே துடைக்கவில்லை யாயின் சிவஞானத்தை முற்றுங்கெடுக்கும். அன்றியும் தோன்றும் பொழுதே துடைக்காமல் முறுகி வளர்ந்த பின்னர்த் துடைக்க எண்ணில் அம்மலங்கள் துடைக்குந் தன்னைக் கெடுக்கும். எது போலஎனின், முள்மரத்தை இளம்பருவத்திற் களையாமல் முதிர்ந்த பருவத்திற் களையத்தொடங்கின் களைவார் கையினை அம்முள்மரங்களைவது போலாம். இவ்வுவமையினையே திருக்குறள் பகைத்திறந் தெரிதல் கூ-வது செய்யுளில் "இளைதாக முண்மரங் கொல்க களையுநர் கைகொல்லுங் காழ்த்த விடத்து" என்றார் தேவரும். இவ்வாறு முறுகினால் துடைக்க முடியாது என்பது பற்றியே களைகஎன்று மேற்கோளிற் கூறியதை விடு என இவ்வுதாரணத்தில் மீண்டுங் கூறி வலியுறுத்தப் பட்டது.

விடுதலாவது அம்மும்மலங்களுள் மேற்கூறிய வாறு பிராரத்தங் காரணமாகக் கன்மமுங் கன்மங்காரணமாக மாயையும் மாயைகாரணமாக ஆணவமும் வந்துகூடித் தொழிற்பட்ட விடத்து, ஆணவமலத்தானாகிய விபரீத உணர்வை நோக்கி, இவ்விபரீதமாகிய அஞ்ஞானம் மாயாகாரியம் என்னும் பிரபஞ்ச உணர்வாகிய ஏகதேசக் காட்சியால் உண்டாயிற்று எனவும், அந்த ஏகதேசக் காட்சி விருப்பு வெறுப்புக்களின் தோற்றத்தினால் உண்டாயிற்றெனவும், அந்த விருப்புவெறுப்புக்களின் தோற்றமும் பிராரத்த வினை அனுபவித்தற் பொருட்டுச் சென்ற தற்போதத்தால் உண்டாயிற்றெனவும் அறிந்து, பிராரத்த அனுபவத்தை நோக்கிச் செல்வதாகிய தற்போதம் முளையாதவாறு கெடுத்து நான் என எழுகின்ற அத்தற்போதமின்றித் தான் சிவஞானத்துள் அடங்கிச் சிவஞான சித்தியார் அ-ம் சூ-ம் ௩௯-வது செய்யுளிற் கூறியவாறு சிவானுபவம் சுவாநுபூதியாம்படி ஞான நிலையில் உறைத்து நிற்றலேயாம்.

ஆணவம் மாயை கன்மம் என்னும் மூன்றும் ஞானத்தை உணர்த்தாது அஞ்ஞானத்தை உணர்த்து மென ஏதுவிற் கூறினாரேனும், மாயை கன்மங்கள் அஞ்ஞானத்தை உணர்த்துதல் ஆணவமலத்தோடு கூடிய செயற்கையென்பது அறிவித்தற்கு, அம் மூன்றற்கும் பொதுவாக ஏதுவிற் கூறிய அஞ்ஞானத்தை இவ்வுதாரணத்தில் அஞ்ஞானங் காட்டும் இவ்வாணவமும் என ஆணவ மாத்திரைக்கே சிறப்பாக எடுத்துக் கூறினார்.

முதலதிகரணம் முற்றிற்று.



# இரண்டாம் அதிகரணம்.



சீவன்முத்தர் இரண்டாவது செய்யவேண்டுவது களைந்த மலங்கள்
மீளப் பற்றாத வண்ணம் சிவனடியாரோடு
இணங்கவேண்டும் எனக்கூறும்
மேற்கோள்.

இனிச் சிவபத்தர்களோ டிணங்குக வேன்றது.

## சிற்றுரை.

எ—து மே—ள் எ—னின், அம்மலங் கழிஇயினார்க்கு அதனை நிலைபெறுத்துவதாய் அதன் பின்னர்ச் செய்யக்கடவதிது எனச் சூத்திரத்தின் இரண்டாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ—ள். வெ—டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

இ—ள். சிவபத்தர்களோடு— அத்துவித நிலையைக் கடைப்பிடித்துச் செய்யும் அன்பானே முதல்வன் அருள்வழி நின்றசீவன் முத்தர்களோடு,—இணங்குகவென்றது—நட்புச் செய்க எ—று.

## சிற்றுரை.

ஈண்டுச் சிவபத்தரென்றது பத்தியினான் மறவாதேத்தி முதல்வனது சீபாதத்தை யணைந்த சீவன்முத்தர் மேற்று. இணங்குதல் நட்புச்செய்தல். சிவபத்தர்களோ டிணங்குக எனவே, எதிர்மறை முகத்தான் ஏனையரோடிணங்கற்க வென்பதூஉம் பெறப்பட்டது.

## விளக்கம்.

இம்மேற்கோள் அன்பரொடு மரீஇ என்ற சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து மேற்கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோ வெனின், முதல் அதிகரணத்திற் கூறியவாறு மும்மலங்களைந்த சீவன் முத்தர்க்குக் களைந்த மலங்கள் மீளப் பற்றாதிருத்தற் பொருட்டுச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைப் பதச் சேதஞ் செய்து பின்னர்ச் செய்யவேண்டுவது சிவபத்தர்களோடிணங்குதல் எனக்கூறியவாறும்.

இவ்வதிகரணத்தில், சீவன் முத்தர் சிவபத்தர்களோடுதான் இணங்க வேண்டுமோ. அல்லாதாரோடு இணங்கக் கூடாதோ என்பது ஐயப்பாடு. அல்லாதாரோடும் இணங்கலாமென்பது பிறர்பக்கம்.

(இம்மேற்கோளின் பொருள்.) பதினொராஞ் சூத்திரத்திற் கூறியவாறு இறைவன் அத்துவிதமாய் நின்று உபகரித்து வருவதை உணர்ந்து மறவாது செய்யும் அன்பினால் அவ்விறைவன் அருளையின்றித் தனக்குச் செயலில்லை யென அவன் அருள்வழி நின்ற சீவன் முத்தர்களோடு நட்புச் செய்க எ-று.

இம்மேற்கோளில் சிவபத்தர் என்றது, மேல் பதினொராஞ் சூத்திரத்து இரண்டாவது அதிகரணத்திற் கூறியவாறு பத்தியினால் மறவாது ஏத்தி முதல்வனது சீபாதத்தை யணைந்த சீவன் முத்தரைக் குறித்தது. இணங்குதலாவது அவரோடு சிநேகஞ் செய்தல்.

சிவபத்தர்களோடு இணங்குக என்று கூறியது உடம்பாட்டுச்சொல். இதன் எதிர்மறையால் சிவபத்தரல்லாத ஏனையரோடிணங்கக் கூடா தென்பதூஉம் பெறப்பட்டது என அறிக.

சீவன்முத்தர் சிவபத்தர்களோடு இணங்கவேண்டும்
என்பதற்குக்காட்டும்

ஏது.

## அல்லாதார் அஞ்ஞானத்தை யுணர்த்துவராகலான்.

## சிற்றுரை.

எ—து ஏ—து எ—னின், உறவும் பகையுமொழித்த மெய்ஞ் ஞானிகள் சிலர்மாட்டு நட்பும் சிலர்மாட்டு நட்பின்மையுமுடையராதல் சால்பன் றென்பாரைநோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ—ள் வெ-டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

(இ-ள்) அல்லாதார்—பத்தியினான் மறவாதேத்தி முதல்வனது சீபாதத்தை யணையாத பாசத்தார்—அஞ்ஞானத்தை—சுட்டியுணர்வதாகிய விபரீத வுணர்வை,—உணர்த்துவ ராகலான்—அறிவிப்பாராகலான், இனிச் சிவபத்தர்களோ டிணங்குகவென மேற் கொண்டது எ-று.

## சிற்றுரை.

அல்லாதார் அஞ்ஞானத்தை யுணர்த்து மாறு:— "தெய்வ மென்பதோர் சித்தமுண் டாகி—முனிவி லாததோர் பொருளது கருதலு—மாறு கோடி மாயா சத்திகள்—வேறு வேறுதம் மாயைக டொடங்கின—வாத்த மானு ரயலவர் கூடி—நாத்திகம் பேசி நாத் தழும் பேறினர்—சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்—பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்—விரத மேபர மாகவே தியருஞ்—சரத மாகவே சாத்திரங் காட்டினர்—சமய வாதிக டத்த மதங்க ளே—யமைவ தாக வரற்றி மலைந்தனர்" என்றற் றொடக்கத்துத் திருவாக்குகளானறிக. மும்மலங்கள் அஞ்ஞானத்தை யுணர்த்து தல் இலக்குவாய்த்துழி ஏதுவாதன் மாத்திரையே; சிவபத்தரல் லாதார் அவ்வாறன்றி இலக்குவாயாத வழியும் வாய்க்குமாறு செய் துகொண்டு பலவகை யுபாயங்களானுந் தம்மோடொப்ப விபரீத உணர்வைச் செலுத்தியே விடுவாராகலான் அம்மலங்களினுங் கொடி யவராகிய இவரை அவற்றினுமஞ்சி விட்டொழிதலே அறிவுடை மைக்குச் சாலுமென்பதாம்.

## விளக்கம்.

இந்த ஏது என்னசொல்லிற்றோ வெனின், உறவும்பகையும் ஒழித்து எல்லா வுயிரையும் ஒப்ப நோக்கும் மெய்ஞ்ஞானிகள் மேற்கோளிற் கூறிய வாறு சிவபத்தர்களோடு சிநேகமும், சிவபத்த ரல்லாதாரோடு சிநேகமில் லாமையும் உடையராதல் பொருத்தமன்று என்பாரை நோக்கிச் சிவபத்த ரல்லாதார் செய்யுங் குறையை எடுத்துக்காட்டிச் சிவபத்தர்களோ டிணங் குக என்று கூறியமேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(இந்த ஏதுவின் பொருள்.) பதினொராஞ் சூத்திரத்து இரண்டாம் அதிகரணத்திற் கூறியவாறு பத்தியினால் மறவாது எத்தி முதல்வனது சீபாதத்தை யணையாத அஞ்ஞானிகள், எல்லாம் சிவமாய்ப் பார்க்கும் ஞா னத்தைக் கெடுத்து ஒவ்வொன்றையும் இது இது எனச்சுட்டி உணர்வதா கிய விபரீத உணர்வை உண்டுபண்ணுவர்; ஆதலால் இனிச் சிவபத்தர்க ளோடு இணங்குக எனமேற்கோள் கூறியது எ-று.

சிவபத்தர் அல்லாத அஞ்ஞானிகள் அஞ்ஞானமாகிய விபரீத உணர் வை எவ்வாறு உணர்த்துவர் எனின், திருவாசகம் போற்றித்திரு அகவலில் தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி— * * * சமயவாதிகள் தத்தம் மதங் களே அமைவதாக அரற்றி மலைந்தனர் என்றது முதலாகக் கூறும் திருவாக்கு களால் தெய்வத்தைப்பற்றி ஆராயப் புகுந்தவிடத்து தெய்வம் இல்லை என்

பார் சிலரும், தெய்வம் இல்லை விரதமே தெய்வம் என்பார் சிலரும், ஒவ்வொரு மதங்களைப் பற்றிக்கொண்டு அந்த அந்த மதங்களே மேலானசென்பார் சிலருமாக இவ்வாறு விபரீத உணர்வை உண்டுபண்ணுவர் என அறிக.

சிவபத்தரல்லாத அஞ்ஞானிகள் மும்மலங்களினும் மிகக் கொடியராவர். எதனுலெனின், தற்போதம் உண்டாகும் சமயம் வாய்த்தபொழுதுதான் மும்மலங்களும் அஞ்ஞானத்தை யுணர்த்துதற்கு ஏதுவாகும்; தற்போதம் உண்டாகாத சமயத்தும் சிவபத்தரல்லாத அஞ்ஞானிகள் தற்போதம் உண்டாகும்படி செய்து கொணடு பலவகை உபாயங்களினுலுந் தம்மைப்போல விபரீத உணர் வுடையராக அவ்விபரீத உணர்வைப் புகுத்தியேவிடுவர் ஆதலால் என்க. எனவே, அம்மலங்களினுங் கொடியராகிய இவரை அம்மலங்களை விட அதிகமாக அஞ்சி விட்டொழிதலே அறிவுடைய மெஞ்ஞானிகளுக்குப் பொருத்தமாகும் என ஆசங்கை நீக்கியவாறும்.

இந்தஎது, சீவன்முத்தர் சிவபத்தரல்லாதாரோடும் இணங்கலா மென்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

சீவன்முத்தர் சிவபத்தர்களோடு இணங்கவேண்டும்
என்பதற்குக் காட்டும்
உதாரணம்.

மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ்
சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை—யறப்பித்துப்
பத்த ரினத்தாய்ப் பரனுணர்வி னுலுணரு
மெய்த்தவரை மேவா வினை.

## சிற்றுரை.

எ—து உ—ம் எ—னின், அஞ்ஞானத்தை யுணர்த்துமவரோடு இணங்காமை மாத்திரையே யமையும்; சிவபத்தர்களோடிணங்குதல் எற்றுக்கென்பாரை நோக்கி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்) தம்மை மறப்பித்து மலங்களின் வீழ்க்குஞ் சிறப்பு இல்லார் தம்திறத்துச் சேர்வை அற—(முதல்வன் காட்டியுங் கண்டும் உபகரித்து நிற்கும் அத்துவிதநிலையை மறவாது கடைப்பிடிக்குந்) தமது ஞானக்கண்ணை யிழப்பித்துத் (தீயநெறிக்கட் கொண்டு சென்று) மலங்களாகிய பிறவிக்குழியில் வீழ்வித்துத் துயருறுத்துவாராகிய அன்பிலார் கூற்றிலே (தொன்று தொட்டுப் பயின்று வந்த) சேர்ச்சியறும்படி,—பத்தர் இனத்துப் பித்து ஆய்ப் பரன் உணர்வினுல் உணரும் மெய்த்தவரை — (அம்மறவியை மாற்றி

ஞானக்கண்ணை யுதவிப் பிறவிக்குழியினின்று மெடுத்து நன்னெறிக்கட்செலுத்தி வாழ்விக்குஞ்) சிவபத்தராகு கூற்றிலே பேரன்புடையராய் (அவ்வன்பு சார்பாக விளங்குஞ்) சிவஞானக் கண்ணால் அந்நிலை கடைப்பிடித் துணரப்பெற்ற மெய்த்தவராயினாரை,—வினை மேவா—(எல்லா வருத்தங்கட்கும் மூலமாய் வந்து சிறப்பில்லார்தந் திறத்துச் சேர்வையைப் பயப்பிக்கும்) பிராரத்த வினைகள் வாதியா எ-று.

மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ் சிறப்பில்லாரென மேற்சொல்லிய பொருளையே அநுவதித்து விரித்தோதினார்; அதனெதிர்மறை முகத்தாற் சிவபத்தரது பெருந்தகைமை யுணர்ந்து கோடற் பயனோக்கி. மலம் ஆகுபெயர். வீழ்க்குமென்றது உருவகங் குறித்துநிற்றலின், அவ்வாறுரைக்கப்பட்டது. எல்லாவற்றினும் அன்பு சிறந்தமையின் அதனைச் சிறப்பென்றார். பித்துப்போறலின் அன்பு பித்தெனப்பட்டது. ஏனைத்தவங்களெல்லாம் மெய்யாதலின்றி மல நடையாய்ப்போதலின், பானுணர்வினாலுணருந் தவமொன்றே மெய்த்தவமெனப்பட்டது. வினை பால் பகாவஃறிணைப் பெயர்.

சிவபத்தர்மாட் டன்புடையராய் மனஞ் சொற் செய்கைகளான் அவர் வழிநிற்பார்க்கு உலகிய லுணர்வுமாறிச் சிவாநுபூதியுணர்வே மேம்பட்டு நிகழும்; அது நிகழவே, பௌதிக உடம்பைப் பற்றிவரும் பிராரத்தவினைகள் அவர்க்கு நுகர்ச்சியாதல் செல்லாமையின் வாதிக்கமாட்டா; மாட்டாதொழியவே, அவை பற்றுக்கோடாக நிகழுஞ் சிறப்பிலார்தந் திறத்துச் சேர்வை பற்றறக் கெடுமென்பார் "சேர்வை--மறப்பித்துப்—பத்தரினத்தாய்ப் பானுணர்வினாலுணரு—மெய்த்தவரை மேவா வினை" என்றார். எனவே, வீட்டுணர்வை நிலைபெறுத்துஞ் சிவபத்தர்களோ டிணங்கினாலன்றி வினை பற்றுக்கோடாகத் தொன்றுதொட்டுப் பயின்று வந்த சிறப்பில்லாரிணக்கம் அறுமையின், அவ்விணக்கம் ஒருதலையான் வேண்டுமென வலியுறுத்தவாறாயிற்று.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) தம்மை மறப்பித்து மலங்களின் வீழ்க்கும் சிறப்பு இல்லார் தம் திறத்துச் சேர்வை அறப் பத்தர் இனத்துப்பித்து ஆய்ப்பான் உணர்வினால் உணரும் மெய்த்தவரை வினைமேவா.

இவ்வுதாரணம் என்ன சொல்லிற்றோவெனின், சிவபத்தரல்லாத அஞ்ஞானிகள் அஞ்ஞானத்தை யுணர்த்துவராதலால் அவ்வஞ்ஞானிகளுடன் இணங்காமைமட்டுமே போதும்; சிவபத்தரோடு இணங்குதல் எதற்கு என்பாரைநோக்கிப் பிராரத்த வினைப்பயனை அநுபவிப்பதற்காக நிட்டையில் நின்று நீங்கி வெளியேவருங்கால் யாதானு மொன்றனைப் பற்றாமலிருக்க முடியாது; அப்பொழுது சிவபத்தர்களோடு இணங்கவில்லையாயின் சிவபத்தரல்லாதாரோடு இணங்க நேரும்; அல்லாதாரோடு இணங்காதிருத்தற் பொருட்டுச் சிவபத்தரோடு இணங்குதல் அவசியம் எனக்கூறி மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(பொ—ரை.) பதினொராஞ் சூத்திரத்திற் கூறியவாறு, காட்டியுங் கண்டும் உபகரித்து அத்துவிதமாய் நிற்கும் முதல்வன் நிலையை மறவாது பற்றி நிற்கும் சீவன் முத்தரானவர், தமது ஞானக்கண்ணை மறைப்பித்துத் தீயநெறியின்கண் கொண்டுசென்று அத்தீயநெறியால் மலங்களினால் உண்டாகும் பிறவிக்குழியில் விழும்படிசெய்து துன்பத்தை உண்டு பண்ணுபவராகிய சிவபத்தரல்லாதார் கொள்கையில் பண்டைக் காலந்தொட்டுப் பழகிவந்த சேர்க்கை அறும்படி, ஞானக்கண்ணை மறைத்த அம்மறவியைமாற்றி ஞானக்கண்ணை யுதவிப் பிறவிக்குழியில் நின்றும் எடுத்து நன்னெறியின்கண் செலுத்தி வாழ்விக்குஞ் சிவபத்தரது கொள்கையிலே பேரன்புடையராதல் வேண்டும்; அவ்வன்பு சார்பாகவிளங்குஞ் சிவஞானக் கண்ணால் அவ்வத்துவித நிலையை உறுதியாகப்பற்றி உண்மை உணர்ந்த மெய்த்தவராயினாரை, எல்லாத் துன்பங்கட்கும் மூலமாயும் சிவபத்தரல்லாதார் சேர்க்கையை உண்டுபண்ணக் கூடியதாயும் உள்ள பிராரத்த வினைகள் தாக்கமாட்டாவாம் எ-று.

(க-ரை.) சிவபத்த ரல்லாதாரோடு சேராதிருத்தற் பொருட்டுச் சிவபத்தரோடு சிநேகஞ்செய்யவேண்டும். சிநேகஞ் செய்தால், செய்யும் அவரைப் பிராரத்தவினை சிவபத்தரல்லாதாரோடு சேரும்படி செய்யக்கூடியதாயினும் செய்யாது என்பதாம்.

அல்லாதார் அஞ்ஞானத்தை யுணர்த்துவர் என ஏதுவிற்கூறிய பொருளையே இவ்வுதாரணத்தில் அவர் உறவை நீக்கவேண்டும் எனக் கூறுதற் பொருட்டு அநுவாதமாக எடுத்துக்கொண்டு "மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ் சிறப்பிலார்" என விரித்தோதினார். அவ்விரியின் எதிர்மறை முகத்தால் அம்மறவியை மாற்றி ஞானக்கண்ணையுதவிப் பிறவிக்குழியில் நின்றும் எடுத்து நன்னெறிக்கட் செலுத்தி வாழ்விக்குஞ் சிறப்புடையார் சிவபத்தர் எனச் சிவபத்தரது பெருந்தகைமை யுணர்ந்துகொள்ளும் பயன் கருதி அவ்வாறு விரித்துக்கூறினார் என்க.

மலம் என்றது மலங்களினாலாகிய பிறவிக்குழியை உணர்த்தநின்றதலால் ஆகுபெயர்.

வீழ்க்கும் என்றது உருவகங்குறித்து நிற்றலால் அவ் வுருவகத்துக் கேற்ப மலங்களினாலாகிய பிறவியைக் குழியாக உருவகஞ்செய்து உரைக் கப்பட்டது.

சிறப்பிலார் என்றதிலுள்ள சிறப்பு என்பது எல்லாவற்றினுஞ் சிறந்தது அன்பு ஆதலின் அந்த அன்பைக்குறித்துச் சிவனிடத்து அன்பில்லார் என்னும் பொருளில் நின்றது. திருக்குறள் அறன்வலியுறுத்தல் க-வது செய்யுளில் ''சிறப்பு ஈனும்'' எனவும், ஷை நூல் மெய்யுணர்தல், அ-வது செய்யுளில் ''சிறப்பு என்னும் செம்பொருள்'' எனவும் வீட்டையே சிறப்பு எனக் கூறியிருக்கவும், இவ்விடத்து அன்பைச் சிறப்பென்றல் அத் திருக்குறளின் கருத்தோடு முரணுதோவெனின், முரணாது; எவ்வாறெனின், அன்பு என்பது மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என நான்கு வகைப்படும். அவற்றுள், மந்ததர அன்பாவது உலகப்பற்று முக்கால் பாகமும் கடவுட்பற்று காற்பாகமும் ஆதல். மந்த அன்பாவது உலகப்பற்றுப் பாதியும் கடவுட்பற்றுப் பாதியுமாதல். தீவிர அன்பாவது உலகப்பற்றுக் காற்பாகமும் கடவுட்பற்று முக்காற்பாகமும் ஆதல். தீவிரதர அன்பாவது உலகப்பற்று அறவேயின்றி முழுதுங் கடவுட்பற்றே யாதல். இத்தீவிரதர அன்பையே இச் செய்யுளில் சிறப்பு என்றார். இத்தீவிர தர அன்புதான் இந்நூல் பதினொராஞ் சூத்திரத்தில் அயரா அன்பு எனப்பட்டது. அயரா அன்புடையார் சிவானந்தாநுபவமாகிய வீட்டையுடையராதலின் 'அயரா அன்பின் அரன் கழல் செலுமே' என அப்பதினொராஞ் சூத்திரத்திற்கூறினார். இந்நிலையில் அன்புசெய்யும் உயிரும், அன்பும், அன்பு செய்யப்படும் சிவமும், உள்ளனவேனும் பிரிப்பின்றி அத்துவிதமாய்க் கலந்து நிற்கும். இக் கருத்தேபற்றி ''அன்பு சிவம் இரண்டென்பர் அறிவிலார்—அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார். அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்—அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே'' எனத் திருமூலநாயனாரும், ''இன்பமே என்னுடை அன்பே'' என மணிவாசகப் பெருமானும் அருளிச்செய்வாராயினர். ஆகவே அன்பு செய்யப்படும் பொருள்பற்றித் திருக்குறளில் வீட்டைச் சிறப்பு என்றும், அப்பொருளில் நின்றும் பிரிக்கமுடியாத அன்பு பற்றி இந்நூலில் அன்பைச் சிறப்பு என்றுங் கூறினமையால் முரணில்லாமை அறிக. பதினொராஞ் சூத்திரத்தில் இச்சையே பேரானந்தமாய் விளங்கித் தோன்றும் என்றதும் இக்கருத்துப் பற்றியேயாம்.

பித்து என்றது அன்பைக்குறித்து நின்றது. தீவிரதர அன்புடையார் பித்துக் கொண்டவன்போலத் தன்னை மறந்திருத்தலின் அன்பைப் பித்து எனக் கூறினார்.

தவம், மெய்த்தவம் பொய்த்தவம் என இருவகைப்படும். மெய்த்தவம் சரியை, கிரியை, யோகங்கள். பொய்த்தவம் யாகம் விரத முதலாயின. இவற்றின் விரிவை எட்டாஞ் சூத்திரத்துட் காண்க. இனி மெய்த்தவம் எனப்படும் சரியை யாதிகளும் மலத்துடன் கூடிநின்று செய்யப்படுவனவே யன்றி மலம் அறவே நீங்கிச் செய்யப்படுவன அல்ல. ஆயினும் யாகாதியை நோக்க மெய்த்தவம் எனப்பட்டன. பரன் உணர்வால் உணரும் சிவஞானம் மலம் அறவே நிங்கிய செயலாதலாலும் மேற்செய்யவேண்டிய தில்லாத முடிந்த நிலை யாதலாலும் அச் சிவஞானம் ஒன்றே மெய்த்தவம் எனப்படு மாதலால் அதனை யுடையாரை மெய்த்தவர் என இச்செய்யுளிற் கூறினர்.

இறுதியிலுள்ள வினையென்னும் ஒருமை மேவா என்ற பன்மை கொண்டு எவ்வாறு முடிந்தது எனின், வினை என்பது அஃறிணைப்பெயர்ச் சொல். "தெரிநிலையுடைய அஃறிணை யியற்பெயர் ஒருமையும் பன்மையும் வினையொடு வரினே" என்பது தொல்காப்பியம் சொல்லதிகாரம். அதன்படி அஃறிணைப் பெயர்ச்சொல் ஒருமையாய் நின்று வினையோடு பொருந்தியவிடத்து அவ்வினை ஒருமையாயின் ஒருமையாயும் பன்மையாயின் பன்மையாயும் கருதப்படும். உதாரணம் யானைவந்தது யானைவந்தன என்பது போல்வன. ஆகவே வினை யென்னும் ஒருமையானது ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவான பால் பகா அஃறிணைப் பெயராய்நின்று மேவா என்னும் பன்மை வினைகொண்டு முடிந்தது. ஆதலால் வினையென்பதற்கு வினைகள் என உரைசெய்யப்பட்டது.

சிவபத்தரோடு இணங்குதலால் சிவபத்த ரல்லாதாரைச் சேரும்படி செய்யும் பிராரத்தவினை தாக்காதிருப்பது எவ்வாறெனின், சிவபத்தரிடத்து அன்புடையராய் மனம் வாக்குக்காயங்களை அச் சிவபத்தரிடத்திற் செலுத்துவோர்க்கு உலக அனுபவ உணர்வுமாறிச் சிவாநுபூதி யுணர்வு மேம்பட்டு நிகழும்; நிகழவே பூதகாரியமாகிய உடம்பைப் பற்றிவரும் பிராரத்த வினைகளின் அனுபவம் அச்சிவானுபவ உணர் வுடையாருக்கு அனுபவ மாதலில்லை; இல்லையாகவே அப் பிராரத்தவினைகள் சிவாநுபவ உணர்வுடையாரைப் பற்றமாட்டா; பற்றாது ஒழியவே அப் பிராரத்தவினைகள் காரணமாக உண்டாகும் சிவபத்தரல்லாத சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை அறக்கெடும் என்க. இவ்வாறு சிவபத்தர் இணக்கத்தால் அல்லாதார் இணக்கத்துக்குரிய பிராரத்தவினை தாக்காமையை அறிவிக்கவேண்டிச் செய்யுளில் "சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை யறப்பித்துப் பத்தர் இனத்தாய்ப் பரன் உணர்வினுல் உணரும் மெய்த்தவரை மேவாவினை" என்றார்.

இவ்வாறு கூறியதனுல் வீட்டுணர்வாகிய சிவாநுபவ உணர்வை நிலைபெறச் செய்யும் சிவபத்தர்களோடு இணங்கினுலன்றிப் பிராரத்த வினை

காரணமாகப் பண்டைக்காலந் தொட்டுப் பழகிவந்த சிவபத்தர் அல்லாத சிறப்பில்லாருடைய இணக்கம் அருமையால், அச் சிவபத்தருடைய இணக்கம் அவசியம் வேண்டும் என மேற்கோளை வலியுறுத்தினமை அறிக.

இரண்டாம் அதிகரணம் முற்றிற்று.

---

# மூன்றும் அதிகரணம்.

சீவன் முத்தர் மூன்றாவதாகச் செய்யவேண்டுவது சிவபத்தர் இணக்கம் நிலை பெறுதற் பொருட்டுத் திருவேடத்தையும், சிவாலயத்தையும் சிவனெனக் கண்டு வழிபடுதல் எனக் கூறும்
மேற்கோள்.

இனிப் பத்தரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் பரமேசுரனேனக் கண்டு வழிபடுகே வென்றது.

## சிற்றுரை.

எ-து மே-ள் எ-னின், அன்பரொடு மரீஇயினார்க்கு அம்மருவுதலை நிலை பெறுத்துவதாய் அதன்பின்னர்ச் செய்பக்கடவதிது வெனச் சூத்திரத்தின் மூன்றாங் கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடணுதலிற்று.

இ—ள் வெ—டை.

## சுப்பிரமணியதேசிகர் உரை.

இ-ள். பத்தரது திருவேடத்தையும்—அயரா அன்பினரன் கழலேத்து மெய்யன்பரது திருவேடங்களையும்,—சிவாலயத்தையும்—சிவாலயங்களையும்,—பரமேசுர னெனக் கண்டு—முதல்வனெனவே ஐயுறவின்றித் தெளிந்து,—வழிபடுக வென்றது—வழிபாடு செய்க எ-று.

## சிற்றுரை.

காண்டல் ஐயுறவின்றித் தெளிதல். காமக்கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடைசாந்தணிகலன் முதலாயின காமுகரை வசீகரித்து இன்பஞ் செய்யுமாறுபோல மெய்யுணர் வுடையாரைக் காட்சி மாத்திரையின் வசீகரித்து இன்பஞ்செய்தல் பற்றித் திரு

வேடத்தையுஞ் சிவாலயத்தையு மென் றுபசரித்தார். அது "சேலும் கயலுந் திளைக்குங் கண்ணாரிளங் கொங்கையிற் செங்கு ங்குமம்—போலும் பொடியணி மார்பிலங்கு மென்று புண்ணியர் போற்றிசைப்ப" என்னுந் திருவாசகத்தா னறிக. திருவேடத்தி னியல்பு "தூய வெண்ணீறு துதைந்த பொன் மேனியுந் தாழ் வடமு—நாயகன் சேவடி தைவரு சிந்தையு நைந்துருகிப்—பாய் வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச் செஞ்சொன்—மேய செவ்வாயு முடையார் புகுந்தனர் வீதியுளே." "சிந்தையிடை யறாவன்புந் திருமேனி தன்னிலசைவுங்—கந்தை மிகையாங் கருத் துங் கையுழவாரப் படையும்—வந்திழி கண்ணீர் மழையும் வடி விற் பொலிதிருநீறு—மந்தமிலாத திருவேடத் தரசு மெதிர் வந் தணைய." "கண்டகவு ணிபக் கன்றுங் கருத்திற் பரவு மெய்க்கா தற்—றொண்டர் திருவேட நேரே தோன்றிய தென்று தொழு தே" என்றற் றொடக்கத்துத் திருவாக்குக் களானுமறிக.

## விளக்கம்.

இம்மேற்கோள் மாலற நேய மலிந்தவர் வேடமும் ஆலயந் தானும் அரன் எனத் தொழுமே என்ற சூத்திரக் கூற்றைப் பதச்சேதஞ் செய்து மேற் கொண்டதாகும்.

இம்மேற்கோள் என்ன சொல்லிற்றோ வெனின், இரண்டாம் அதி காரணத்திற் கூறியவாறு சிவபதத்தாகளோடு இணங்கினவர் அவ்விணக்கத் தை நிலைபெறச் செய்தற் பொருட்டுச் சூத்திரத்தின் மூன்றாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து அவ்விணக்கத்தின் பின்னர்த் திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவன் எனக் கண்டு வழிபடவேண்டுமெனக் கூறிய வாறும்.

இவ்வதிகரணத்தில், சீவன் முத்தர்க்கு எல்லாம் சிவமாகத் தோன் றும் ஆதலால் திருவேடத்தையும் சிவாலயத்தையும் வழிபட வேண்டும் என்று பிரித்துக் கூறியது பொருந்துமோ பொருந்தாதோ என்பது ஐயப் பாடு பொருந்தாதென்பது பிறபக்கம்.

(இம்மேற்கோளின் பொருள்.) பதினொராஞ் சூத்திரத்திற் கூறிய வாறு அயரா அன்பின் அரன் கழல் ஏத்தும் மெய்யன்பர்து திருவேடங் களையும் சிவாலயங்களையும் சிவன் எனவே சந்தேகமின்றித் தெளிந்து வழி பாடு செய்க எ-று

பரமேசுரன் எனக்கண்டு என்பதில் காண்டலாவது பரமேசுரனோ அல்லவோ என்னும் சந்தேகமின்றிப் பரமேசுரன் எனவே தெளிதல்

# ௲௱௮ சிவஞானபோதச்சிற்றுரைவிளக்கம்.

சிவபத்தரையும் சிவாலயத்தில் திருமேனி கொண் டெழுந்தருளியிருக்கும் மூர்த்திகளையும் சிவன் எனக் கண்டு வழிபடுக என்று கூறாமல் சிவபத்தருடைய திருவேடத்தையும் சிவாலயத்தையும் மட்டும் சிவனெனக் கண்டு வழிபடுக எனக்கூறிய கருத்தென்னை யெனின், காமக்கிழத்தியராகிய விலைமகளிர் வடிவிற் காணப்படும் ஆடை, சாந்து, ஆபரணமுதலாயின காட்சி மாத்திரையில் காமுகரை வசப்படுத்தி அக்காமுகர்க்கு இன்பஞ் செய்யுமாறு போலச், சிவபத்தர் அணிந்திருக்குந் திருவேடமும் சிவபெருமான் எழுந்தருளியிருக்குஞ் சிவாலயமும் காட்சிமாத்திரையில் மெய்யுணர் வுடையாரை வசப்படுத்தி அவர்க்கு இன்பஞ் செய்தல பற்றித் திருவேடத்தையும் சிவாலயத்தையும் என அவ்விரண்டனையும் உபசரித்தார். இதனால் சிவபத்தரையும் சிவபெருமான் விளங்குமிடமாகக் கொண்டருளியிருக்குந் திருவுருவங்களையும் சிவனெனவே கண்டு வழிபடுவ ரென்பது கருத்து.

விலைமகளிர் வடிவிற் காணப்படும் ஆடைமுதலியன போலச் சிவனடியாரிடத்துக் காணப்படும் திருவேடம் என்பதனைத் திருப்பல்லாண்டு அ-வது செய்யுள் "சேலுங் கயலுந் திளைக்குங் கண்ணார்" என்னுந் திருவாக்கானும் அறிக.

திருவேடம் சிவனடியார்க்கு இன்பஞ் செய்யு மென்பதனைப் பெரிய புராணத்தில்திருநாவுக்கரசு நாயனார் புராணம் கசO-வது செய்யுளில் கல்லைத் தெப்பமாகக் கொண்டு கரையேறித் திருவதிகைக்குச் செல்லுங்காலத்து வீதியுள் நாவுக்கரசர் புகுந்தாரென்று சொல்லவந்த சேக்கிழார் சுவாமிகள் வெண்ணீறும் தாழ்வடமும் அணிந்திருப்பதை முதலாவதாகச் சிறப்பித்துக் கூறியதனானும், திருஞான சம்பந்த மூர்த்திநாயனார் புராணம் உகூகூ-உஎO-வது செய்யுட்களில் சீகாழிப் பதிக்குத் திருநாவுக்கரசு சுவாமிகள் எழுந்தருளிய காலத்துத் திருஞானசம்பந்தசுவாமிகளுக்கு அப்பர் சுவாமிகள் திருவேடத்தைத் தரிசிக்க விருப்ப மிருந்து அவ்விருப்பத்தின்படி தொண்டர் திருவேடம் நேரே தோன்றிய தென்று தொழுததாகக் கூறிய வாற்றானும் அறிந்து கொள்க.

சிவாலயம் சிவனடியார்க்கு இன்பஞ் செய்யும் என்பதனைச் சிவாலயத்தின் கோபுரத்தைத் தூரத்தே கண்டமாத்திரத்தே பணிந்தா ரென்ற சரிதங்களாலும் அறிக.

திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவன் எனக் கண்டு
வழிபடல் வேண்டும் என்பதற்குக் காட்டும்

ஏ து.

அவன் மற்றிவ்விடங்களிற் பிரகாசமாய் நின்றே அல்லாத விடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்.

## சிற்றுரை.

எ-து எது எ-னின், மெய்யுணர் வுடையார்க்குப் பகுப்பின்றி எங்கணும் பரமேசுரனெனக் காண்டலே பொருத்த முடைமை யானும், நின்ற திருத்தாண்டக முதலியவற்றுள் அவ்வாறோதுத லானும், திருவுருத்திரத்துட் பகுப்பின்றி உயிர்ப்பொருள், உயி ரில் பொருள் எல்லாவற்றையுந் தனித்தனி எடுத்தோதி வழி பாடு கூறுதலானும் ஈண்டிவற்றை மாத்திரையே விதந்து கொண் டோதிய தென்னை யென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித் தனுதலிற்று.

(இ-ள்.) அம்முதல்வன் யாங்கணும் வியாபகமாய் நிற்பினும் இவ்விரண்டிடத்து மாத்திரையே தயிரினெய்போல விளங்குநிலை பெற்று அல்லுழியெல்லாம் பாலினெய்போல வெளிப் படாது நிற்றலான் 'இனிப்பத்தாது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுர னெனக்கண்டு வழிபடுக'வென மேற்கொண்டது எ-று.

மற்று உரையசை. எப்பொருட் கண்ணு மிறைவன் கலந்துள னென்பது தெளிந்து கோடற் பொருட்டுத் திருஉருத்திரத்தின் அவ்வாறோதப் பட்டதெனக் கொள்க.

## விளக்கம்.

இந்த ஏது என்னசொல்லிற்றோ வெனின், மும்மலங்களைந்து முதல் வன் திருவடியடைந்த மெய்யுணர் வுடைய சீவன் முத்தர்க்குப் பரமேசுர னைச் சிலவற்றைப் பிரித்துக் காண்டலின்றி எவ்விடத்தும் பரமேசுரன் எனக் காண்டலே பொருத்தமாகும்; அன்றியும் திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச் செய்த நின்ற திருத்தாண்டகம் முதலிய பொதுத் திருப்பதிகத் தும் ஏனைத் திருத்தாண்டகத்தும் "இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி யிய மானனா யெரியுங் காற்றுமாகி- அருநிலைய திங்களாய் ஞாயிறாகி யாகாசமா யட்ட மூர்த்தியாகிப்—பெருநலமுங் குற்றமும் பெண்ணு மாணும் பிறரு ருவுந் தம்முருவுந் தாமேயாகி—நெருநலையா யின்றாகி நாளையாகி நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே" என்பது முதலாகக் கூறுந் திருவாக்குகள் எல் லாம் பரமேசுரன் என ஓதுதலானும், திருவுருத்திரத்துள் ஓர் அறிவுயிர் முதல் ஐயறி வுயிர்வரையிலுள்ள உயிர்ப் பொருளையும் உயிரில்லாத பொரு ளையும் தனித்தனி எடுத்தோதி அப்பொருள்கள் எல்லாவற்றையும் பரமே சுரன் எனக்கண்டு வழிபடுமாறு வழிபாடு கூறுதலானும், இவ்வதிகாரணத்து மேற்கோளில் திருவேடத்தையும் சிவாலயத்தையும் மட்டும் பிரித்து எடுத

துக்கொண்டு கூறிய கருத்து என்னை யென்பாரை நோக்கி எல்லா இடங்களினும் பரமேசுரன் நிற்பினும் இவ்விரண்டிடங்களில் மட்டும் விளங்கித் தோன்றுவன் எனக்கூறி மேற்கோளை வலியுறுத்திய வாறும்.

(இந்த ஏதுவின் பொருள்.) பதினோராஞ் சூத்திரத்திற் கூறியவாறு அத்துவிதமாய்க் கலந்துநிற்கும் முதல்வன் எவ்விடத்தும் நிறைந்து நிற்பினும் திருவேடம் சிவாலயம் என்னும் இரண்டிடத்து மட்டும் தயிரினிடத்து விளங்கித் தோன்றும் நெய்போல விளங்கித் தோன்றி ஏனைய இடங்களி னெல்லாம் பாலினிடத்து வெளிப்படாது நிற்கும் நெய்போல மறைந்து நிற்றலால் இனிப் பத்தராது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுரன் எனக்கண்டு வழிபடுக என மேற்கோள் கூறியது எ-று.

மற்றிவ்விடங் களில் என்றதில் உள்ள மற்று என்பது உரையினிடத்தும் பொருள்பயவாது அசையாகவந்தது. அது "மற்றென்கிளவி வினைமாற் றசைநிலை" என்னுந் தொல்காப்பிய இடையியல் கசு-ம் சூத்திர உரையில் "கட்டுரையிடையும் மற்றோ என அசைநிலையாய் வரும்" எனச் சேனாவரையர் கூறுமாற்றா னுணர்க.

திருவுருத்திரத்தில் எவ்விடத்தும் வழிபடுக என்றதனோடு இவ்விரண் டிடத்தும் வழிபடுக என இவ்விடத்துக் கூறியது முரணாதோஎனின், முரணாது. எதனாலெனின், எப்பொருள்களினிடத்தும் இறைவன் கலந்து நிற்கின்றான் என்பதை அறிந்துகொள்ளுதற் பொருட்டுத் திருவுருத்திரத்துள் எவ்விடத்தும் வழிபடுக எனவும் சிறப்பாக விளங்கித் தோன்றும் இடம் இதுஎன அறிந்து கொள்ளுதற் பொருட்டு இவ்வதிகரணத்தில் இவ்விரண் டிடங்களினும் வழிபடுக எனவும் கூறுதலால் என்க.

இந்த ஏது சீவன்முத்தர் திருவேடத்தையும் சிவாலயத்தையும் வழிபடவேண்டு மென்று பிரித்துக் கூறியது பொருந்தா தென்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

திருவேடத்தினிடத்து முதல்வன் பிரகாசமாய் நிற்கின்றான்
என்பதற்குக் காட்டும்

உதாரணம்.

தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்
தன்னுணரத் தன்னு ளிருத்தலாற்—றன்னுணரு
நேசத்தர் தம்பா னிகழுந் ததிநெய்போற்
பாசத்தார்க் கின்றாம் பதி.

## சிற்றுரை.

எ-து உ-ம் எ-னின், திருவேடத்தின் இறைவன் பிரகாசமாய் நிற்குமாறு யாங்ஙனம் என்பாரை நோக்கி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) பதி—அசிந்திதனாய் நின்ற பரம் பொருளே,—தன் உணரவேண்டி—(உலகத்துள்ளார்) தன்னை யறிதற்பொருட்டு,—தனது உருவைத் தான் கொடுத்து—(திருநீறு கண்டிகைமுதலிய திருவேடமாகிய) தனது திருவடிவத்தைத் தன்னன்பர்க்குக் கொடுத்தலானும்,—தன் உணர—(அவ்வன்பர்) தன்னைச் சிவோகம் பாவனையால் அறியச் செய்தலானும்,—தன்னுள் இருத்தலால்—(அங்ஙனம் ஒரு குறியின்கணின் றுணருமவரைத்) தனது வியாபகத்துள்ளாக இருத்துதலானும்,—தன் உணரும் நேசத்தர் தம்பால் ததிநெய்போல் நிகழும்—(குறியு மிறந்து நின்று) தன்னையுள்ளவாறுணருமவர் மாட்டுத் தயிரின் கண்ணதாகிய நெய்போல் விளங்கித்தோன்றும்,—பாசத்தார்க்கு இன்று ஆம்—(அவ்வியல் பில்லாத) பாசக்கட்டுடையார் மாட்டுப் (பாலின்கண்ண தாகிய நெய்போல) விளங்காது நிற்கும் எ-று.

செய்தென்பது சொல்லெச்சம். இருத்தல் அல்லீற்றுப் பிறவினைத் தொழிற்பெயர். கொடுத்துச் செய்திருத்தலானிகழுமெனவியையும். தன்னுணரு நேசத்தரெனப் பெயரடையானும் ஓரதுக்கூறப்பட்டது. தன்னை யென்னும் இரண்டனுருபு விகாரத்தாற்றொக்கது. உணர்தலே மூவிடத்தோதுதலின் இஃதங்ஙனம் வேறுவேறுரைக்கப்பட்டது. பாசத்தார்க்கென்பது உருபு மயக்கம். இன்மை ஈண்டு விளங்காமை குறித்துநின்றது.

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ எனின், ஏதுவிற் கூறியவாறு திருவேடம் சிவாலயம் என்னும் இரண்டனுள், திருவேடத்தில் இறைவன் விளங்கித் தோன்றுமுறை எவ்வாறென்பாரை நோக்கி விளங்கித்தோன்றுமுறை கூறி ஏதுவை வலியுறுத்திய வாறும்.

(பொ-ரை.) சிந்தனைக்கு எட்டாது நின்ற பரம்பொருள், எட்டாது நின்றதுகொண்டு உலகத்தாருக்கு ஒரு பயனும் இன்மையால் உலகத்துள்ளார் தன்னையறிந்து பயன்பெறுதற்பொருட்டுத் திருநீறுகண்டிகை முதலிய திருவேடமாகிய தனது திருவடிவத்தைத் தன்னுடைய அன்பர்க்குக்

கொடுத்து அவர்களிடமாக நின்று தன்னை அறியும்படி செய்தலானும், அவ்வன்பர் சிவோகம் பாவனையில் தன்னை அறியும்படி செய்தலானும், அவ்வாறு சிவோகம்பாவனையாகிய ஒரு குறியின்கண் நின்று உணர்கின்ற அன்பரை உணர்கின்றோம் என்னும் போதம் இறந்து தனது வியாபகத்துள் அடங்கி நிற்கும்படி செய்தலானும், ஒரு குறியும் இன்றி நின்று தன்னை உள்ளவாறுணர்கின்ற அவ்வன்பரிடத்தில் அவ்விறைவன் தயிரினிடத்து நெய் விளங்கித் தோன்றுவதுபோல விளங்கித்தோன்றுவன்; குறியிறந்து நின்று உள்ளவாறு உணரும் இயல்பில்லாத பாசக்கட்டு உடையாரிடத்தில் பாலின்கண் நெய்விளங்கித் தோன்றாதவாறுபோல விளங்காது நிற்பன் எ-று.

(க-ரை.) இறைவன், சிவோகம் பாவனை முதலிய குறிகளின்றி அறிவுக்குள் அறிவாய் நின்ற உண்மையை அறிந்த சிவபத்தர்களிடத்துத் தயிரின் நெய்போல விளங்கித்தோன்றிச் சிவோகம் பாவனை முதலியன செய்யமுடியாத உலகத்தார் தன்னை அறிந்துகொள்ளுதற் பொருட்டு அச் சிவபத்தருக்குத் திருநீறு கண்டிகை முதலிய தனது வடிவமாகிய திருவேடத்தைக் கொடுத்தலால் உள்ளவாறுணரும் சிவபத்தரிடத்தில் இறைவன் விளங்கித் தோன்றுதல்போல அவர் அணிந்திருக்கும் தனது வடிவமாகிய திருவேடத்தினிடத்தும் விளங்கித் தோன்றுவன் என்பதாம்.

தன் உணர என்ற இடத்துச் செய்து என்பது சொல் லெச்சமாய்நின்றது. ஆதலால் தன் உணர என்றதற்குத் தன்னைச் சிவோகம் பாவனையால் அறியச் செய்தலானும் என உரைசெய்யப்பட்டது.

தன்னுள் இருத்தலால் என்ற இடத்து இருத்தல் என்றது "நிலம் விண்டிறந்த நாகம்" என்றவிடத்து விள்ளல்போல இருத்துதல் என்னும் பொருள் குறித்து நிற்றலால் அல் இறுதியாகவுடைய பிறவினைத் தொழிற்பெயர்.

தனது உருவைத் தான்கொடுத்துத் தன் உணரச்செய்து தன்னுள் இருத்தலால் ததி நெய்போல் தம்பால் நிகழும்என முடித்துக்கொள்க.

நேசத்தர் என்னும் பெயருக்குத் தன் உணரும் என்ற அடைகொடுத்துத் தன் உணரும் நேசத்தர் எனக் கூறினர்; அந்த அடையானும் தன்னை உணர்தலால் என ஓர் ஏதுக்கூறப்பட்டது.

தன் உணர என்ற இரண்டிடத்தும் தன் உணரும் என்ற இடத்தும் தன் என்பது தன்னையென்னும் பொருள்குறித்து நிற்றலால் அவ்விடங்களில் இரண்டாம் வேற்றுமை ஐ உருபு தொக்கு நின்றது.

தன் உணர என்றது மூவிடத்து வந்திருக்கின்றது. ஆதலால் உலகத்துள்ளார் தன்னை யறிதற்பொருட்டு எனவும், அவ்வன்பர் சிவோகம் பாவ

னையால் அறியச்செய்துளனவும், குறியும் இறந்து நின்று உள்ளவாறுணரும் நேசத்தர் எனவும் உணர்தல் அவ்வாறுவேறுவேறு உரைக்கப்பட்டது.

பாசத்தார் இடத்து என்று இருக்கவேண்டிய ஏழாம்வேற்றுமை உருபு பாசத்தார்க்கு என நான்காம் வேற்றுமை உருபாய் மயங்கி நின்றது.

பாசத்தார்க்கு இன்றும் என்றதிலுள்ள இன்று என்பது இவ்வுதாரணத்தில் விளங்காமையைக் குறித்து நின்றது.

சிவாலயத்தினிடத்து முதல்வன் பிரகாசமாய் நிற்கின்றான்
என்பதற்குக் காட்டும்

உதாரணம்.

கண்டதோரு மந்திரத்தாற் காட்டத்தி லங்கிவே
றுண்டல்போ னின்றங் குளதாமாற்—கண்டவுருத்
தானதுவா யன்றானன் றானதுவாய்த் தோன்றானே
தானதுவாய்க் காணுந் தவர்க்கு.

சிற்றுரை.

எ-ம் உ-ம் எ-னின், சங்கமவடிவிற்குக் கூறிப்போந்த இயல்பில்லாத தாவரவடிவின் மந்திர சாந்நித்திய முள்வழியன்றிப் பிரகாசமாய் நிற்றல் பெறப்படாதென்பாரை நோக்கிச் சிவாலயத்தினிடத்தும் இறைவன் பிரகாசமாய் நிற்றலை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) காட்டத்தில் அங்கி வேறு உண்டல்போல்—விறகிற்றீ (கடைகோலாற் கடைந்துழி) வேறாய்விளங்கும் (அல்லுழி விளங்குவதன்றாதற்) போல,—கண்ட உருத் தான் அது ஆய் அன்று ஆனான்—(உயிர்கட்குப் புத்தி முத்தி யளித்தற்பொருட்டுக்) காணப்பட்ட தாவர வடிவின்கட் (கலப்பினால்) அதுவே தானாய் (அதுவன்றி) வேறு பொருளுமா மியல்புடைய முதல்வன்,—கண்டது ஒரு மந்திரத்தால் நின்று அங்கு உளது ஆம்—(அதுவே தானாகக் காணாதார்க்குத்) தம்மாலறியப் பட்டதொரு மந்திர சாந்நித்திய மில்வழி அவ்வடிவின்கண் விளங்காது நின்று அஃதுள்வழி விளங்கித்தோன்றும் பொருளாம்,—அது தான் ஆய்க் காணுந்தவர்க்கு அது தான் ஆய்த் தோன்றானே — (அவ்வாறன்றி) அவ்வடிவே அவனாகக் காணப்பெறும் உண்மைத் தவ

முடையாருக்கு அப் பெற்றியனேயாய் விளங்கித் தோன்றுன் கொல்லோ எ-று.

காணுதார்க் கென்பது சொல்லெச்சம். மந்திரத்தால் என்னும் பொருளடைக்கேற்ப உவமையினும் வருவித் துரைக்கப்பட்டது. உண்டாதல் ஈண்டுவிளங்குதன் மேற்று. ஆல் அசை. ஆனுனென்பது பெயர். ஓகாரம் எதிர்மறை. பொருண்மை பற்றி உளதெனவும் அன்றெனவுங் கூறினுர். தானதுவா யன்றுனுனென்னும் பெயரடையான் அவரவர் பாவனைக் கேற்ப விளங்குதற் கேதுக் கூறியது. தானதுவாயன்றுதல் சங்கம வடிவிற்கு மொக்குமேனும், தாவரவடிவின்கண் நிகழுங்கடாவை இதனுனன்றி நீக்கலாகாமையின் ஈண்டுக்கூறினுர். இஃதீரிடத்து மொக்கு மென்பது முன்னர்ப் பெறப்படும்.

## விளக்கம்.

(கொண்டுகூட்டு.) காட்டத்தின் அங்கி வேறு உண்டல்போல் கண்ட உருத் தான் அது ஆய் அன்று ஆனுன் கண்டது ஒரு மந்திரத்தான் நின்று அங்கு உளது ஆம் அது தான் ஆய்க்காணும் தவர்க்கு அதுதான் ஆய்த் தோன்றுனே.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றே எனின், மேலே வெண்பாவிற் கூறியவாறு சிவபத்தரது திருவேடமானது சிவபெருமானை உலகத்தார் அறிதற்பொருட்டுச் சிவபெருமானுலேயே கொடுக்கப்பட்டதனுல் அத்திருவேடத்திற் சிவபெருமான் விளங்கித் தோன்றுவன் என்றல் பொருந்தும்; அத்திருவேடத்தை அணிந்திருக்கும் சிவபத்தர் சிவபெருமானை உள்ளவாறுணரும் இயல்புடையரா யிருத்தல்போலச் சிவாலயத்திலுள்ள சிவலிங்காதி மூர்த்தங்கள் தாவர வடிவமாதலால் அம்மூர்த்திகளுக்கு அவ்வாறுணரும் இயல்பில்லை; அத்தாவர வடிவில் மந்திரங் கிரியை பாவனைகளால் பிறர் செயலுக் கேற்றவாறு சிவபெருமான் விளங்கித் தோன்றுதலேயன்றி மந்திரமுதலிய கிரியைகளில்லாத விடத்து விளங்கித்தோன்றுன். ஆதலால் அம்மூர்த்திகளை உடைய சிவாலயத்தையும் பரமேசுரன் எனக்கண்டு வழிபடுக என மேற்கோளிற்கூறியது எவ்வாறு பொருந்து மென்பாரை நோக்கிச் சிவாலயத்தினிடத்தும் சிவபெருமான் விளங்கித் தோன்றி நிற்கின்றுன் எனக்கூறிப் பிரகாசமாய் நிற்கின்றுன் என்ற ஏதுவை வலியுறுத்தியவாறும்,

(பொ—ரை.) விறகினிடத்தில் தீ எப்பொழுதும் உண்டு ; ஆயினும் கடைகோலினுல் கடைந்தவிடத்து அந்தத் தீ யானது விறகில் நின்றும் வேருய் விளங்கித் தோன்றும் ; கடையாதவிடத்து விளங்கித் தோன்றுவ

தில்லை ; தோன்றாததுகொண்டு விறகில் தீயில்லையென அறிவுடையார் எண்ணூர். அதுபோல உயிர்களுக்குப் போகமோட்சங்களைக் கொடுத்தற் பொருட்டுக் காணப்பட்ட தாவர வடிவின்கண் முதல்வன் கலப்பினால் அவ்வடிவமே தானாயும் பொருளின் தன்மையால் அவ்வடிவத்தின் வேறாயும் நிற்கும் இயல்புடையன். இவ்விரு நிலைகளுள் அவ்வடிவத்தையே சிவபெருமானாகக் காணாதார்க்கு அவர் தம்மால் அறியப்பட்டதாகிய ஒரு மந்திரக் கிரியைஉள்ள விடத்து அவ்வடிவத்தில் விளங்கித் தோன்றி மந்திரக்கிரியை யில்லாத விடத்து விளங்காது நிற்பன்; மந்திரத்தால் காணுந் தன்மையின்றி அவ்வடிவமே சிவபெருமானாகக் காணும் உண்மைத் தவமுடையார்க்கு அவ் வடிவமே தானாக விளங்கித் தோன்றமாட்டானோ? தோன்றுவன் எ—று.

(க-ரை.) உலகத்தார்க்கு உபகாரமாக இறைவனால் அமைந்துள்ள தீயானது விறகினிடத்திற் கடையாத விடத்தும் அவ்விறகே தானாயிருப்ப தாய் அறிவுடையார்க்கு விளங்குவதுபோல உயிர்கள் உலக இன்பம், வீட்டின்பங்களை அடைதற்பொருட்டு இறைவன்கொண்ட தாவர வடிவில் மந்திரக் கிரியை யில்லாதவிடத்தும் அத்தாவர வடிவமே தானாக உண்மைத் தவமுடைய சிவபத்தர்க்கு அவ்விறைவன் விளங்கித் தோன்றுவன் என் பதாம்.

தான் அதுவாய்க் காணுந்தவர்க்கு என்றதனால் காணாதார்க்கு என்னுஞ் சொல் எஞ்சிநின்றது. ஆதலால் கண்டதொரு மந்திரத்தால் என்றவிடத் துக் காணாதார்க்கு என்பது வருவித் துரைக்கப்பட்டது.

தாவர வடிவாகிய உவமேயத்தில் மந்திரத்தான் உளதாம் என்று உள தாதற்கு மந்திரத்தை அடைகொடுத்துக் கூறியதற்கேற்பக், காட்டமாகிய உவமையினும் கடைகோலாற் கடைதல் வருவித்துக் கடைந்தவிடத்து வே றாய்விளங்குமெனை உரைக்கப்பட்டது.

உண்டல்போல் என்றவிடத்து உண்டாதல் என்பது இச்செய்யுளில் விளங்குதலைக் குறித்து நின்றது.

உளதாம் ஆல் என்றவிடத்து ஆல் என்பது அசை.

தானதுவாய் அன்றானன் என்றவிடத்து ஆனன் என்பது அவ்வியல் புடைய முதல்வனைக்குறித்த பெயராய் நின்றது. வீங்கினன் வந்தான் என்ற விடத்து வீங்கினன் என்பது பெயராய்நின்றவாறு போலாம்.

தோன்றானோ என்றவிடத்துள்ள ஓகாரம் எதிர்மறையாய் தோன்று வன் என்பதைக் குறித்து நின்றது.

உளது அன்றுஎன்பன வினைபற்றிக் கூறப்பட்டன அல்ல; தன்மை பற்றிக் கூறப்பட்டன; தன்மை—இயல்பு; இங்கே எவ்வியல் பெனின்,

அதுவே தானாதலும் அதுவன்றி வேறு பொருளாதலும், விளங்காது நிற்ற லும் விளங்கித் தோன்றுதலும் ஆகிய இயல்பென்க. ஆதலால் பொருளு மாம் இயல்புடைய முதல்வன் என உரை செய்யப்பட்டது.

ஆனன் என்னும் பெயருக்குத் தானதுவாய் அன்று என்னும் அடை கொடுத்துத் தானதுவாயன்றானன் எனக் கூறினர். அந்த அடையினால் கலப்பினால் அதுவாயும் பொருட்டன்மையால் அன்றாயும் விளங்குவன் என அவரவர் பாவனைக் கேற்பவிளங்குதற்கு ஏதுக் கூறியவாறு அறிக.

முதல்வன் அதுவாதலும் அன்றாதலும் மூர்த்தமாகிய தாவரவடிவிற்கு மட்டு மன்று; உயிராகிய சங்கமவடிவிற்கும் ஒக்கும். ஆயினும் சங்கமமாகிய சிவபத்தரைப்பற்றிக் கூறிய மேலவெண்பாவிற் கூறாமல் இவ்வெண்பா விற் கூறியது என்னையெனின், சிவபத்தரிடத்து இறைவன் பிரகாச மாய் நிற்றல் எவ்வாறு கூடும் என்ற ஆசங்கைக்குச் சிவனை உள்ளவாறுஉணர் தலினால் கூடும்என்று சமாதானங் கூறவேண்டுதலின் என்க. தாவர வடிவின் கண் இறைவன் பிரகாசமாய் நிற்றல் எவ்வாறுகூடும் என்னும ஆசங்கையை அதுவாய் நிற்றல் பற்றிக்கூடும் என்பதனாலன்றி நீக்கலாகாமையின் தானது வாய் அன்றாதலை இச்செய்யுளிற் கூறினரென அறிக. தாவர சங்கமமாகிய ஈரிடத்தும் அதுவாதலும் அன்றாதலும் ஒக்கும் என்பது முன்னர்க் கூறப் படும் ஒழிபு அதிகரணத்தாற் பெறப்படும்.

மேலை வெண்பாவில் சிவபத்தரிடத்து இறைவன் விளங்கித்தோன்று வன் என்பதற்குத் தயிரினிடத்து நெய் விளங்கித் தோன்றுவதை உவமை கூறினர்; கூறவே ஏனைய உயிர்களிடத்துப் பாலின் நெய்போல மறைந்து நிற்பன் என்பது பெறப்பட்டது. இவ்வெண்பாவில் சிவலிங்காதி மூர்த்தங் களில் மறைந்து நிற்பன் என்பதற்கு விறகினிடத்துத் தீமறைந்து நிற் பதை உவமைகூறினர். இவ்வாறு தாவரத்தினிடத்தும் சங்கமத்தினிடத் தும் விளங்குவன் என்னும் இக்கருத்தேபற்றி "விறகிற்றீயினன் பாலிற்படு நெய்போல்-மறைய நின்றுளன் மாமணிச்சோதியான்" என்றருளிச்செய் தனர் அப்பர் சுவாமிகளும். இப்பாசுரத்தின் கருத்து ஒன்பதாஞ் சூத்திரத்து மூன்றாம் அதிகரணத்து இரண்டாவது வெண்பாவிற் கூறியிருக்கின்றமை யால் அவ்விடத்துக் காண்க. அங்கே இதயத்தில் விளங்கித் தோன்றுதற்கு விகிற்றீ உவமை கூறப்பட்டது.

மூன்றும் அதிகரணம் முற்றிற்று.



# நான்காவது ஒழிபு அதிகரணம்.



இந்த அதிகரணம் சூத்திரத்திலுள்ள மூன்று அதிகரணப் பொருள்களின் சம்பந்தமான சங்கைக்குச் சமாதானமாக அவ்வதிகரணங்களின் சேடமாகலின் ஒழிபு ஆயிற்று.

திருவேடத்தினிடத்தும் சிவாலயத்தினிடத்தும் வழிபாடு செய்யவேண்டு மென்ற விதியை வலியுறுத்தும்

மேற்கோள்.

## இனி இவ்விடங்களின் வழிபடுக வென்றது.

### சிற்றுரை.

எ-து மே-ள் எ—னின், மேற்கூறிப்போந்த மூன்றுஞ் சீவன் முத்தருக்குத் தாமே யுளவா மிலக்கணமாகலின் அநுவாத மாக வைத்துணர்த்தற் பாலன வாகிய இவற்றைக் களைக இணங்குக வழிபடுக வென விதியாக வைத்தோதிய தென்றுக் கென்பாரை நோக்கி அதனை அவற்ற தொழிபாகக் கொண்டு சாதித்தற்கு மேற் கோடனுதலிற்று.

இ—ள். வெ—டை.

### சுப்பிரமணியதேசிகர் உரை.

இ-ள். இவ்விடங்களின்—மேற்கூறிய திருவேடங்கள் சிவாலயங்களிடத்தே—வழிபடுக வென்றது—வழிபாடு செய்க எ—று.

### சிற்றுரை.

இவ்விடங்க ளென்றது மேற்கூறிய இரண்டினையும். வழிபடுக வென்னும் எடுத்தலோசையான் அநுவதித் துணர்த்துவதே யமையு மென்பாரை நோக்கி விதித்தலை வலியுறுத்தவாறு. இனம் பற்றிக் களைதல் இணங்குதல் கட்கும் இஃதொக்கும்.

### விளக்கம்.

இம்மேற்கோள் என்னசொல்லிற்றோ வெனின், மேற்கூறிய மூன்று அதிகரணங்களாலும் கூறி முடித்த மலங்களைக் களைதல் சிவபத்தரோடு

இணங்குதல் திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவன் எனக் கண்டு வழிபடுதல் ஆகிய மூன்றும் சீவன் முத்தருக்கு இயல்பாகவே உளவாகிய இலக்கணமாகும். ஆதலால் களைதற்கும் இணங்குதற்கும் வழிபடுதற்கும் காரணங் கூறுதற் பொருட்டுக் களைவர் இணங்குவர் வழிபடுவர் என அநுவாதமாக வைத்துக் கூறப்பட வேண்டிய அம் மூன்றனையும் அவ்வாறு கூறாது களைக, இணங்குக, வழிபடுக, என விதியாகவைத்து ஓதியகருத்து என்னை யென்பாரை நோக்கி அம் மூன்றதிகரணங்களின் சேடமாகக் கொண்டு விதியாகக் கூறியதை வலியுறுத்தற் பொருட்டு மேற்கூறியவாறு விதியாகவே கூறி வலியுறுத்திய வாறும்.

இவ்வதிகரணத்தில், சீவன் முத்தர்க்கு இயல்பாயுள்ள வழிபாடு முதலியவற்றை விதியாக வைத்துக் கூறியது பொருந்துமோ பொருந்தாதோ என்பது ஐயப்பாடு. பொருந்சா தென்பது பிறர்பக்கம்.

(இம்மேற்கோளின் பொருள்.) மூன்றும் அதிகரணத்திற் கூறியவாறு சிவபத்தரது திருவேடங்க ளிடத்தும் சிவாலயங்க ளிடத்தும் வழிபாடு செய்க எ—று.

இவ்விடங்க ளென்றது மூன்றும் அதிகரணத்திற் கூறிய திருவேடம், சிவாலயம் இரண்டனையும். வழிபடுவர் என அநுவாதமாகக் கூறுதலே பொருத்தம் என்பாரை நோக்கி வழிபடுக என்னும் உரத்துக் கூறும் எடுத்தல் ஓசையால் அவ்வாறு கூறுதல் பொருந்தாது எனவும் விதியாகக் கூறுதலே பொருத்த மெனவும் விதித்தலை வலியுறுத்தியவாறும். மூன்று மதிகாரணத்திலும் இவ்வதிகரணத்திலும் வழிபடுக என்றே கூறி யிருத்தலால் கூறியது கூறலாகாதோ எனின், ஆகாது. எதனாலெனின், படுத்தலோசை எடுத்தலோசை யென்னும் ஓசை வேறுபாட்டால் என்க. படுத்தலோசை விதியையும் எடுத்தலோசை அவ்விதியை வலியுறுத்துதலையுந் தருமாதலால் மூன்றுவது அதிகரணத்தில் வழிபடுக என்றது படுத்த லோசையாய் நின்று விதியையும், இவ்வதிகரணத்தில் வழிபடுக என்றது எடுத்தலோசையாய் நின்று அவ்விதியை வலியுறுத்துதலையும் உணர்த்தினமையால் கூறியது கூறலாகாமை யறிக. படுத்தலோசையாவது மெல்லக் கூறுதல். எடுத்தலோசையாவது உரத்துக் கூறுதல். செய் என்னும் சொல்லை முதலாவது மெல்லக் கூறுங்கால் விகுதியாகும்; மறுத்தவிடத்து உரத்துக் கூறுங்கால் செய்யவேண்டும் என்பதை வலியுறுத்தியதாகும்.

வழிபடுக என்று மூன்றுமதிகாரணப் பொருளை வலியுறுத்தினமையால் இனம்பற்றி முதலதிகரணம் இரண்டா மதிகரணங்களிற் கூறிய களைதல் இணங்குதல்கட்கும் இவ்வாறு எடுத்தலோசையால் வலியுறுத்துதல் பொருந்தும்.

வழிபாடு செய்யவேண்டும் என்றவிதியை வலியுறுத்திய
மேற்கோளைவலியுறுத்துதற்குக் காட்டும்

ஏ து.

நரம்பு நாடி முதலானவற்றைத் தானதுவாய் வரும்புருடன் அவையாகாவாறு அப்புருடனு மாகலான்.

## சிற்றுரை.

எ-து ஏது எ-னின், எய்தியதனை விதித்தல் பயனுடைத்தன்று போலுமென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

(இ-ள்.) நரம்புமுதலிய தாதுக்களின்கண் வேற்றுமையின்றி அதுவது தானாய் வருகின்ற உயிர், நாடியோ என்போ நரம்பு சீக்கோழையோ வென்று இங்ஙனம் பைம்மறியாப் பார்ப்பார்க்கு அந்நரம்பு நாடி முதலியவை யாகாது அவற்றின் வேறுமாயினாற் போல உயிர்க்குயிராகிய அம்முதல்வனும் உயிர்ப் பொருள் உயிரில் பொருளெல்லா வற்றினுங் கலப்பான் அதுவது தானாகியும் பொருண்மையான் அல்லனாகியும் நிற்பனாசலான் அதுவது தானாய்க் காணுங் காட்சிபற்றி யெய்திய வழிபாடு, அல்லனாய் நிற்றலைக் காணுங்கா லெய்தாதாகலின் அவ்வழிபு மெய்துவிக்க வேண்டுதலான் இனி இவ்விடங்களின் வழிபடுக வென விதித்தோதியது எ-று.

அவையாகாவாறு அப்புருடனு மெனவே அவ்விடத் தெய்துவித்தல் ஒருதலையான் வேண்டு மென்பது தாற்பரிய மாயிற்று. மேற்கோளின் இவ்விடங்களை யென்னாது இவ்விடங்களி னென வேற்றுமைப் படுத்தோதியதூஉம் இஃதுணர்ந்து கோடற்பொருட்டு. இதனானே எய்தாத தெய்து விப்பதூஉம், எய்தியதிகந்து படாமறகாப்பதூஉம், எய்தியதனை யொரு மருங்கு மறுப்பதூஉம், என்னும் விதிமூன்றனுள், இஃதெய்திய திகந்து படாமற் காத்த தென்பது போந்தவா றுணர்க. வாறு உவம உருபுபட நின்றது. முதலானவற்றை யென்பது உருபு மயக்கம்.

## விளக்கம்.

இந்தஏது என்ன சொல்லிற்றோ எனின, சீவன முத்தருககு இயலபாகவுள்ள வழிபாடு முதலியவற்றை மீண்டும் செய்யவேணடு மென விதித்

தல் பயனற்ற தாகும் என்பாரை நோக்கிப் பயன் உண்டெனக் கூறி மேற்கோளை வலியுறுத்தியவாறும்.

(இந்த எதுவின் பொருள்.) உயிரானது நரம்பு நாடி என்பு தோல் முதலிய தூல சரீரதத்துவங்களில் கலந்து நிற்றல் பற்றி ஒவ்வொரு தத்துவமுந் தானாய் நிற்கும். அவ்வாறு நிற்கும் உயிர், நாடியோ என்போ நரம்போ சீயோ கோழையோ என்று இவ்வாறு பைம்மறித்துப் பார்த்தாற்போன்று உள்நோக்காகப் பார்ப்பவர்க்கு அந்நரம்பு நாடி முதலியவையாகாமல் அத்தத்துவங்களின் வேறு மாகும். அதுபோல உயிர்க்குயிராகிய முதல்வனும் உயிருடைய பொருள் உயிரில்லாத பொருள் ஆகிய எல்லாவற்றினும் கலந்து நிற்குந் தன்மை பற்றி அப்பொருள்கள் தானாயும், பொருளின் தன்மை பற்றி அவ்வுயிர்ப் பொருள் உயிரில்லாத பொருள்களின் வேறாயும் நிற்பன். கலப்பினால் சடசித்துக்கள் தானாய் நிற்கும் உண்மையை அறிந்த அறிவுபற்றித் திருவேடத்தினிடத்தும் சிவாலயத்தினிடத்தும் சீவன் முத்தருக்கு உண்டாகிய வழிபாடு, பொருளின் தன்மையால் அவையல்லனாகி அவற்றின் வேறாய் நிற்றலை அறியுமிடத்து உண்டாகாது. ஆதலால் வேறாய் நிற்றலை அறியுமிடத்தும் வழிபாடு செய்விக்க வேண்டுதலின் இனி இவ்விடங்களின் வழிபடுக எனவிதியாக வைத்து மேற்கோள் கூறியது எ-று.

மறி யென்பது மறித்தல் என்னும் பொருள்பட நின்றமுதல் நிலைத் தொழிற் பெயர். ஆகவே பைம்மறி என்பது பையைத் திருப்பிப் பார்த்தல். உள்ளே அசுத்தமாய் வெளியே பளபளப்பாயுள்ள பையை வெளியே பார்க்கும்போது இச்சை உண்டாகும். ஆயினும் திருப்பி உள்ளே பார்க்கும் போது இச்சை யுண்டாகாது வெறுப்பு உண்டாகும். அவ்வாறே உடம்பை மேல் நோக்காகப் பார்க்கு மிடத்து இச்சையால் அவ்வுடம்பினிடத்து நானென்னும் புத்தியும் உள்நோக்கி அசுத்தமாகிய தத்துவங்களைப் பார்க்குமிடத்து வெறுப்பால் உடம்பு நான் அல்லன் என்னும் புத்தியும் ஒருவனுக்கு உண்டாகும். இக்கருத்துப் பற்றியே நாலடியார் தூய்தன்மை உ-வது செய்யுளில், "தோற் போர்வை மேலுந் தொளைபலவாய்ப் பொய்ம் மறைக்கும்—மீப்போர்வை மாட்சித் துடம்பானால்—மீப்போர்வை—பொய்ம்மறையாக் காமம் புகலாது மற்றதனைப்—பைம்மறியாப் பார்க்கப் படும்" என்றனர்.

அவையாகாவாறு அப்புருடனும் என்றதனால் ஆகாது வேறு நிற்றலைக் காணுங் காலத்தும் வழிபாடு செய்யவேண்டுமென விதித்தல் உறுதியாய் வேண்டு மென்பதுதாற்பரியமாதலால் அவ்வாறு உரைசெய்யப் பட்டது. தாற்பரியமாவது அவ்வப் பொருளுணர்ச்சி பற்றிச் சொல்ல விரும்பியகருத்து. மேற்கோளில் இவ்விடங்களை என்று கூறாமல் இவ் விடங்களின் என ஐயவற்றினின்றும் வேறுபடுத்திக் கூறியதூஉம் இவ்விடங்களில்

வழிபாடு உறுதியாய் வேண்டு மென்பது உணர்ந்து கொள்ளுதற் பொருட்டு. இவ்விடங்களை வழிபடுக என்று கூறின் ஏனைய வற்றிற் போலப் பொதுவாகுமே யன்றிச் சிறப்பான விதி யாகாது.

விதித்தல் வேண்டுமென்ற இதனானே, முன் பொருந்தாத தொன்றைப் பொருந்தவேண்டு மென்று விதிப்பதூஉம், முன்பொருந்திய தொன்று நீங்காமல் காக்கவேண்டு மென்று விதிப்பதூஉம், பொருந்தியதில் ஒரு பாகத்தை விலக்கவேண்டு மென்று விதிப்பதூஉம் என்னும் விதி மூன்றனுள் இயல்பாகவே வழிபடுதலையுடைய சீவன் முத்தருக்கு விதித்த இவ்விதி, முன் பொருந்தியது நீங்காமல் காக்கும்பயனை உடையதெனு ஆசங்கை நீக்கியவாறு உணர்க.

பொருந்தியதில் ஒருபாகத்தை விலக்கும் விதியாவது, எல்லாரிடத்தும் பணிதல் வேண்டு மென முன்னர் விதித்து இவ்விதிமனைவி மக்கள் இளையான் சத்துரு இவர்களிடத்திற் செல்லாதென விலக்குவது போல்வன.

அவையாகாவாறு என்றதில் வாறு என்பதுபோல என்னும் உவம உருபாய் நின்றது. அப் புருடன் என்பது முதல்வனைக் குறித்து நின்றது. முதலாவது நின்றபுருடன் உயிரைக் குறித்து நின்றது.

முதலான வற்றை யென்பது முதலானவற்றின்கண் என்னும் பொருள் குறித்து நிற்றலால் உருபுமயக்கம்.

இந்த ஏது, சீவன் முத்தர்க்கு இயல்பாயுள்ள வழிபாடு முதலியவற்றை விதியாகவைத்துக் கூறுதல் பொருந்தா தென்பாரை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபாயிற்று.

திருவேடத்தி னிடத்தும் சிவாலயத்தினிடத்தும்
வழிபாடுசெய்யவேண்டுமென்பதற்குக்காட்டும்
உதாரணம்.

அதுவிது வென்ற ததுவல்லான் கண்டார்க்
கதுவிது வென்றதையு மல்லான்—போதுவதனி
லத்துவித மாத லகண்டமுந் தைவமே
யத்துவிதி யன்பிற் றேமு.

## சிற்றுரை.

எ-து உ—ம் எ-னின், முதல்வனுக்கு அவ்வியல்பு எல்லாப் பொருட்கண்ணு முண்மையின் அவற்றுள் இவ்விடங்களின்

மாத்திரையே வழிபாடு விதித்த தென்னை யென்பாரை நோக்கி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்) கண்டார்க்கு—(முதல்வன் உயிர்ப்பொருள் உயிரில் பொருளெல்லாவற்றினும் நிற்கும் நிலைமை) யறியப் பெற்றோர்க்கு,—அது இது என்றது (அல்லான்)—(கண் அருக்கன் போல்) அதுவும் இதுவுமெனப் பக்கிசைத் தோதப் பட்ட பேதநிலைமையனுமல்லனாய்,—அது (என்றது) அல்லான்—(உடலுயிர் போல்) அதுவே யென்றோதப்பட்ட அபேத நிலைமையனு மல்லனாய்,—அது இது என்றதையும் அல்லான்—(குணகுணிபோல்) அதுவாகிய இது வென்று பக்கிசையாமலோதப்பட்ட பேதா பேத நிலைமையனு மல்லனாய்,—பொது வதனில் அத்துவிதம் ஆதல் அகண்டமுந் தைவமே—(அறி வொளிபோல்) அம் மூன்றற்கும் பொதுமையான் அத்துவித நிலைமையனாதலான் எல்லாப் பொருளும் அவன் வடிவேயாமாயினும்,—அத்துவிதி அன்பின் தொழு—(அவற்றுள்ளும்) அன்பு விளையுமிடத்தின் வழிபடு வாயாக அவ்வத்துவித சித்தாந்தத்தைப் பெற்றுடையோய் எ-று.

அதுவிது வென்றது முன்னையது உம்மைத் தொகை; பின்னையது இருபெய ரொட்டுப் பண்புத் தொகை. அல்லா னென்பதனை மேலுங் கூட்டி, என்றதென்பதனை அது வென்றதனோடுங் கூட்டி யுரைக்க. அல்லானென்பது முற்றெச்சக் குறிப்பு. என்றதை ஐயீற்றுடைக் குற்றுகரம். உம்மை இறந்தது தழீஇயிற்று. பொதுவதென்னு மது பகுதிப் பொருள் விகுதி. தைவமென்னுஞ் சொல்லியல்பு மேலே யுரைத்தாம். ஏகாரந் தேற்றம். ஆயினுமென்பது சொல்லெச்சம். அன்பு ஆகுபெயர். ஏழாவது விரித்துரைக்க.

"திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி"யி னன்றி "எங்கு முருக்காண வொண்ணாத பான் முலைப்பால் விம்மி யொழுகுவது போல் வெளிப்பட் டருளுவ" தாகி அடிப்பட்டு வருமன்பு விளையாமையின் ஆண்டுச் செய்யும் வழிபாடே அத்துவிதஞானத்தை நிலை பெறுத்தற் பயத்த தென்பார் "அத்துவிதமாத லகண்டமுந் தைவமே" என அநுவதித்து "அத்துவிதி யன்பிற் றொழு" வென்றார். அத்துவிதி என்னும் அண்மைவிளி பயனுணர நின்ற குறிப்புப் பெயர். இதனானே, விதிக்குப் பயன் கூறியதூஉ மாயிற்று. இனி, அது இது வென்பன அருவுருவாகிய திருமேனி யெனக்

கொண்டு அதற்கியைய வுரைப்பாரு முளர். அவர், அன்பி னென்றதனை ஏதுப்பொருட்கண் வரும் ஐந்தனுருபேற்ற இயற்பெயராக வைத்துரைப்ப

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) கண்டார்க்கு அது இது என்றது (அல்லான்) அது (என்றது) அல்லான் அது இது என்றதையும் அல்லான் பொதுவதனில் அத்துவிதம் ஆதல் அகண்டமும் சைவமே அத்துவிதி அன்பின் தொழு.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ எனின், ஏதுவிற் கூறியவாறு முதல்வனுக்குக் கலப்பால் அதுவது தானாகியும் பொருட்டன்மையால் வேறாயும் நிற்றல் எல்லாப் பொருளிடத்தும் இருக்கவும், அபபொருள்களுள், திருவேடம் சிவாலயங்கள் என்னு மிவ்விடங்களில் மட்டும் வழிபாடு செய்ய வேண்டுமென விதித்த கருத்து என்னை என்பாரைநோக்கி, அன்பு விளையுமிடம் இவையே யாதலால் இவ்விடங்களில் வழிபாடு விதித்ததெனக் கூறி மேற்கோளை வலியுறுத்தியவாறாம்.

(பொ—ரை.) முதல்வன் உயிருடைய பொருள் உயிரில்லாதபொருள் எல்லாவற்றினும் கலந்து நிற்பினும் நிற்கும் நிலைமை பேதமோ அபேதமோ பேதாபேதமோ என ஆராய்ந்து அறிந்தவர்க்கு, பொருளை அறியுமிடத்தில் கண்ணும் சூரியனும் கலந்து நிற்பினும், கண் வேறு சூரியன் வேறு காணப்படுமாறுபோல அதுவும் இதுவும் எனப்பிரித்து ஓதப்படும் பேத நிலைமையுடையவனும் அல்லனாய், உடலும் உயிரும் பிரிக்க முடியாத வாறுபோல எல்லாம் முதல்வனே என்று சொல்லப்படும் அபேத நிலைமையுடையவனும் அல்லனாய், குணமும் குணியும் ஒருவாறு பேதமும் ஒருவாறு அபேதமுமாதல்போல முதல்வனாகிய இப்பொருள் என்று பிரிக்கமுடியாமை பற்றிக் கூறப்படும் பேதாபேத நிலைமையுடையவனும் அல்லனாய், உயிரின் அறிவும் கண்ணொளியும் கலப்பால் அபேதமாயும் பொருளின் தன்மையால் பேதமாயும் உடனாகச்செல்லுந் தன்மையால் பேதா பேதமாயும் நிற்கு மாறுபோல, பேதம் அபேதம் பேதா பேதம் ஆகிய மூன்றற்கும் பொதுவாய் அம் மூன்றுமாகிய அத்துவித நிலைமையுடையவனாய் நிற்பன். ஆதலால் எல்லாப் பொருளும் அவன்வடிவே யாம். ஆயினும், அப்பொருள்கள் எல்லாவற்றினுள்ளும் கண்டமாத்திரத்தே அன்பு உண்டாகும் இடம் எதுவோ அவ்விடத்தில் அவ்வத்துவித சித்தாந்தத்தைப் பெற்றுடைய நீ வழிபடுவாயாக எ-று.

(க-ரை.) முதல்வன் எல்லாப் பொருள்களிடத்தும் பிரிக்கமுடியாமற் கலந்துநிற்பினும் ஒவ்வொரு பொருள்களும் வேறு வேறு பெயராய்த் தோன்றித் திருவேடமும் சிவாலயமும் மட்டுங் கடவுட்பெயரால் தோன்றிக் கண்

டமாத்திரத்தே கடவுளிடத்து அன்பை உண்டுபண்ணும்; ஆதலால் இவ்விடங்களில் வழிபடுவாயாக என்பதாம்.

அது இது எனச் செய்யுளில் இருமுறை கூறப்பட்டுள்ளன. அவற்றுள் முதலாவதாக நின்ற அது இது என்றது அதுவும் இதுவும் என்னும் பொருள்குறித்து நிற்றலால் அவ்விடத்தில் உம்மை தொக்கு நின்றது. இரண்டாவதாக நின்ற அது இது என்றது அதுவாகிய இது என்னும் பொருள் குறித்து நிற்றலால் அவ்விடத்தில் இருபெயரொட்டுப் பண்பு தொக்கு நின்றது.

அது அல்லான் என்றதிலுள்ள அல்லான் என்பதனை மேலேயுள்ள அது இது என்றது என்பதனோடுங் கூட்டி அது இது என்றது அல்லான் எனவும், அது இது என்றது என்பதிலுள்ள என்றது என்பதை அது அல்லான் என்பதில் அது என்றதனோடுங்கூட்டி அது என்றது அல்லான் எனவும் உரைசெய்யப்பட்டது.

அல்லான் என்ற குறிப்புவினைமுற்றுக் குறிப்புவினையெச்சமாய் நின்றது. அந்த எச்சம் அத்துவிதமாதல் என்பது கொண்டு முடிந்தது.

என்றதை என்பது என்றது என்னும் பொருள்குறித்தலால் ஐகாரத்தை யிறுதியில் உடைய குற்றுகரம். அதாவது என்றது என்பது குற்றியலுகரம். அவ்வுகரம் கெட்டு ஐகாரமாய் நின்றதென்க.

என்றதையும் என்றதிலுள்ள உம்மை அது இது என்றதும் அல்லான் என மேற்கூறியதைத் தழுவிநிற்றலால் இறந்தது தழுவிற்று.

பொதுவதனில் என்பது பொதுவினில் என்னும் பொருள் குறித்தமையால் அது என்பது பொது என்னும் பகுதிப் பொருளையே குறித்த பகுதிப் பொருள் விகுதி.

தைவம் என்னுஞ் சொல்லின்பொருள் தேவனது உடைமை என மேல் ஒன்பதாஞ் சூத்திரம் இரண்டாவது அதிகரணத்து இரண்டாவது வெண்பாவில் உரைத்திருக்கின்றது. இவ்விடத்தில் அதனையே அவன் வடிவு என உரைசெய்யப்பட்டது. வடிவம் உடைமையாதலின் வேற்றுமையின்மையறிக.

அகண்டமுந் தைவமே என்பதிலுள்ள ஏகாரம் அவன் வடிவம் என்பதில் சந்தேகமில்லாமையைக் குறித்தலால் தேற்றம்.

தைவமே என்றவிடத்து ஆயினும் என்பது சொல்லெச்சமாய் வருவித்து அவன் வடிவமேயாமாயினும் என உரை செய்யப்பட்டது.

அன்பிற்றொழு என்பதிலுள்ள அன்பு என்பது அன்புவிளையும் இடத்தைக் குறித்தலால் ஆகுபெயர். அந்த ஆகுபெயர்ப் பொருளில் ஏழாவது உருபை விரித்து அன்புவிளையும் இடத்தின் கண் என உரைக்க.

அத்துவிதமாதல் இரண்டாஞ் சூத்திரத்து முதலதிகரணத்து மூன்றுவது வெண்பாவினும் தைவம் என்பது ஒன்பதாஞ் சூத்திரம் இரண்டாவது

அதிகரணத்தும் கூறப்பட்டுள்ளன. அவற்றை மீண்டும் இவ்விடத்திற் கூறிய கருத்தென்னையெனின், சிவஞானசித்தியார் ௧௨-ம் சூ-ம் ௪-வது செய்யுளிற் கூறியபடி பசுவின் உடல்முழுதும் நிரம்பியிருந்துங் காணப்படாத பால், கன்றை நினைந்தமாத்திரத்தில் மடியின் கண்ணே விம்மியொழுகு மாறுபோல, எங்கும் நிறைந்திருக்கின்ற இறைவன், அன்பர்களின் பொருட்டுத் திருக்கோயிலுள்ளிருக்கும் திருமேனியில் வெளிப்பட்டருளுவன் ஆதலால் அத்திருமேனியினிடத்துத்தான் உயிர்கட்கு அன்பு விளையும். அவ்விடத்தன்றி அன்பு விளையாது. ஆதலால் சிவாலயத்திற் செய்யும் வழிபாடே தனக்கு அநுபவமான அத்துவித ஞானத்தை நிலைக்கச்செய்யும் பயனை உடையது என அறிவிக்கவேண்டி அத்துவிதமாதல் அகண்டமுந் தைவமே என மேற்கூறியவற்றை அநுவதித்து அத்துவிதியன்பிற்றொழு என்றார்.

அத்துவிதி என்றது சமீபத்தில் உள்ளவனை அழைக்கும் அழைப்பாக நின்று குறிப்பால் அத்துவித சித்தாந்தமாகிய பயனைப் பெற்றுடையாய் என்னும் பொருளில் நிற்றலால் பயன் உணரநின்ற குறிப்புப் பெயர்.

இவ் வெண்பாவினுல் இவ்விடங்களில் வழிபடுக என்றதற்குக் கருத்து அன்பு விளையும் இடம் ஆதலால் எனக் கூறியதோடு விதிக்குப்பயன் அத்துவித சித்தாந்தமான அநுபவத்தை நிலைக்கச் செய்தல் எனக் கூறியதூஉமாயிற்று.

இவ்வெண்பாவிற்கு இவ்வாறன்றி அது இது என்பவற்றுள் முன்னையதற்கு அது இது என்று சுட்டப்படும் உடம்பாகிய உருவெனவும் பின்னையதற்கு அது இது என்று சுட்டும் உயிரெனவும் பொதுவசனில் என்றதற்கு அருவும் உருவும் இன்றி அவ்விரண்டற்கும் பொதுவான அருவுருவாகிய சிவலிங்கத் திருமேனியெனவும் உரைப்பாரும் உளர். அவர் ,அன்பின் என்றதிலுள்ள இன் உருபாகிய ஐந்தாம் வேற்றுமை உருபை ஏதுப்பொருள் உருபாகக்கொண்டு அன்பால் என இயற்பெயராக உரைப்பர். மேலே அன்பு ஆகுபெயராக உரைக்கப் பட்டது.

ஞானமே போதும் வழிபாடு வேண்டாமென்பாரை மறுத்து ஞானம் நிலைத்தற்கு வழிபாடு செய்யவேண்டும் எனக் கூறி மேற்கோளை வலியுறுத்தும்

உதாரணம்.

வினையா லசத்து விளைதலான் ஞானம்
வினைதீரி னன்றி விளையா—வினைதீர
ஞானத்தை நாடித் தொழவே யதுநிகழு
மானத்தா லன்பிற் றொழு.

## சிற்றுரை.

எ-து உ-ம் எ-னின், அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று கண்டொருவவே ஞான சொரூபமுளதாய் அத்துவிதத்தை யுணர்த்துமாகலான் அதன்பொருட்டு வழிபாடு வேறு விதித்தல் எற்றுக் கென்பாரை நோக்கி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) வினையால் அசத்து விளைதலான் வினைதீரின் அன்றி ஞானம் விளையா—(உடம்பின் கண்ணதாகிய) பிராரத்த வாசனை (உயிர்க்குத் தாக்குவதாயுள்ள துணையும்) அதனால் (வரும் விருப்பு வெறுப்புக்களும் அவைபற்றிக் காட்சிப்படும் மண் முதன்மாயைகளும் அவைபற்றி நிகழும் விபரீத வுணர்வுமாகிய) அசத்துக்கள் (ஒருவியவழியும் வந்துகூடி) மேம்படுவன வாகலான் (அவ்வளவிற்கெல்லாம் மூலமாகிய) பிராரத்தவாசனை பற்றறக் கழிந்தாலன்றி (அவ்வசத்தைக் கீழ்ப்படுத்து) மெய்யுணர்வு மேம்படுதல் கூடாதாகலின்,—வினைதீர ஞானத்தை நாடித்தொழவே அது நிகழும்—அவ்வாசனை பற்றறக் கழிதற்பொருட்டு அம் மெய்யுணர்வுடையாரை நாடி வழிபடவே (அவ்வினை நீங்கி) மெய்யுணர்வு மேம்பட்டு நிகழும்,—ஆனத்தால் அன்பின்தொழு—ஆகலான் அன்பினுல் அவரை வழிபடுவாயாக எ-று.

அசத்தை யொருவியவழி உளதாகிய ஞானசொரூபம் நிலைபெறுதல் அவ்வசத்தினது விளைவிற்கு வேராகிய வினைத்தீர்வின் கண்ணதாகலான், அவ்வினை வேரறுத்து மெய்யுணர்வை நிலைபெறுத்துதற்பொருட்டு அதனை அங்ஙன நிலைபெறுத்தினுர் மாட்டுச்செய்யும் வழிபாடு ஒருதலையான் வேண்டப்படுமென்பதாம். அற்றேல், அதன்பொருட்டு ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்சரிக்க வென்ற வதுவே அதற்கமையுமெனின், அஃதொக்கும்; அவ்வுச்சரிப்பும் இவ் வழிபாட்டையின்றி யமையாதென்க. அற்றாகலினன்றே, ஆண்டஞ்செழுத்தா லெனவும், மண் முதனுளமெனவும் அகத்துவழிபாட்டை உடன் கூறியதூஉமென்பது. விளையாதென்னுந் துவ்விகுதி விகாரத்தாற் றொக்கது. பின் வந்த ஞானம் ஆகுபெயர். ஆனதனு லென்பது ஆனத்தாலென மரீஇயிற்று.

## பயனியல்பன்னிரண்டாஞ்சூத்திரம்.௪-ம் அதி. சூ௧௨

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ எனின், ஒன்பதாஞ் சூத்திரம் இரண்டாவது அதிகரணத்திற் கூறியவாறு நிலைத்தலில்லாத பிரபஞ்ச பேதங்களை நிலையில்லாத அசத்து எனக் கண்டு அப் பிரபஞ்சங்களில் நின்றும் நீங்கவே சிவஞானத்தின் சொரூபம் தோன்றும்; தோன்றவே அந்தச் சிவ ஞானம் அத்துவிதஞானத்தை உணர்த்தும். ஆதலால் அத்துவித ஞானத்தை நிலைக்கச் செய்தற்பொருட்டுச் சாதனமாய்ப்பழகிய ஞானமே போதியதாகவும் அதனின் வேறாகச் சிவாலயத்தையும், சிவனடியாரையும் வழிபட வேண்டுமென்று மேலை வெண்பாவில் விதித்தது எதற்காக என்பாரை நோக்கி இவ் வழிபாட்டினாலன்றி ஞானம் நிலைபெறாது எனக்கூறி வழிபாடு செய்யவேண்டுமென்ற மேற்கோளை வலியுறுத்திய வாறும்.

(பொ-ரை.) பிராரத்த வினை காரணமாக உடம்பு நிற்குமாதலால் அவ்வுடம்பைப் பற்றி நிற்கும் பிராரத்த வினையாலுண்டாகும் வாசனையானது உயிரைத்தாக்கும் வரையும் அவ் வாசனையால் விருப்பு வெறுப்புக்கள் உளவாம். அவ் விருப்பு வெறுப்புக்களால் மண் முதல் மாயைவரையுள்ள தத்துவப் பொருள்களின் தோற்றம் உண்டாம். அப்பொருள்களின் தோற்றத்தால் எல்லாம் சிவ சொரூபமாய்ப் பார்க்கும் மெய்யுணர்வு மறைந்து உலகமாய்ப் பார்க்கும் விபரீதவுணர்வு நிகழும். நிகழவே ஞானத்தால் பிரபஞ்சத்தை அசத்தென்று கண்டு நீங்கியவிடத்தும் பிராரத்த வாசனையால் விருப்பு வெறுப்புக்களும் பிரபஞ்சத் தோற்றமும் விபரீதவுணர்வும் வந்துகூடி மேம்படுவன வாகும். விருப்பு வெறுப்புமுதலிய அவ்வளவிற்கெல்லாம் மூலமாகிய பிராரத்தவாசனை பற்றறக் கழிந்தாலன்றி அப்பிரபஞ்சத்தைத் தோற்றவொட்டாமற் கீழ்ப்படுத்தி எல்லாம் சிவமாய்ப்பார்க்கும் மெய்யுணர்வு மேம்படுதல் கூடாது. ஆதலால் உடம்பு தோற்றும்வரை அப்பிராரத்த வாசனை பற்றறக் கழிதற்பொருட்டு அவ்வாசனை பற்றறக்கழிந்த மெய்யுணர்வுடையாரைத் தேடி அவரை வழிபட்டால் அவ்வழிபாட்டினால் பிராரத்தவாசனை நீங்கி எல்லாம் சிவமாய்ப் பார்க்கும் மெய்யுணர்வு மேம்பட்டுத் தோன்றும். ஆதலால் அம்மெய்யுணர்வுடைய சிவனடியாரை அன்பினால் வழிபடுவாயாக எ-று.

(க—ரை.) ஞானத்தால் மெய்யுணர்வு உண்டான விடத்தும் பிராரத்த வாசனையால் அம்மெய்யுணர்வு கீழ்ப்படு மாதலால் பிராரத்தவாசனை பற்றறக் கழிதற்பொருட்டு மெய்யுணர்வுடைய சிவனடியாரை வழிபடவேண்டும் என்பதாம்.

அசத்தாகிய பிரபஞ்சத்தை அசத்தெனக் கண்டும் சிவனடியாரை வழிபடுவானேன் எனின், அப்பிரபஞ்சத்தில் நின்றும் நீங்கிய விடத்து உளதாகிய ஞானசொரூபம் மீண்டும் அப்பிரபஞ்சத்தைப் பற்றாது நிலைபெற

வேண்டும். அவ்வாறு நிலைபெறுதற்குப் பிரபஞ்சத்தைப் பற்றச் செய்யும் மூலமாகிய பிராரத்தவினை தாக்காதிருத்தல் வேண்டும். ஆகவே அப்பிரா ரத்த வினையாகிய வேரை யறுத்து மெய்யுணர்வை நிலைபெறச் செய்தற் பொருட்டு அத்தன்மை யுடைய சிவனடியாரிடத்து வழிபாடு செய்யின் சார்ந்த பொருளின் தன்மையடைதற் குரிய உயிருக்குப் பிராரத்த வினை நீங்கி மெய்யுணர்வு நிலைபெறும். ஆதலால் பிராரத்தவினை கழிதற் பொரு ட்டுச் சிவனடியாரிடத்து அவசியம் வழிபாடு செய்ய வேண்டும் என்க.

அவ்வாருயின், பிராரத்த வாசனை தாக்கா திருத்தற் பொருட்டு ஒன்ப தாஞ் சூத்திரத்து மூன்ரும் அதிகரணத்து மேற்கோளில் ஸ்ரீபஞ்சாக்கரத் தை விதிப்படி உச்சரிக்க என்று கூறியிருத்தலால் அதுவே பிராரத்த வினை யைப் பற்றறக் கழியச்செய்யு மாதலின் பஞ்சாக்கர உச்சரிப்பே போதும் சிவனடியார் வழிபாடு வேண்டாம் எனின், அது பொருந்தும். ஆயினும் அப்பஞ்சாக்கரத்தை உச்சரிப்பதற்கும் பிராரத்தவினை தாக்கா திருத்தல் வேண்டும். தாக்குமாயின் உச்சரிக்க முடியாது. ஆதலால் பிராரத்தவினை தாக் காதிருத்தற் பொருட்டு ஒன்பதாஞ் சூத்திரத்திற் கூறியவாறு பஞ்சாக்கர உச்சரிப்பும் இவ்விடத்திற் கூறியவாறு சிவனடியாரை வழிபடுதலும் அவ சியம் வேண்டும் என்க. இக்கருத்துப் பற்றியே ஒவ்வொன் பதாஞ் சூத்திரத்தில் பஞ்சாக்கரத்தை உச்சரிக்க என்று கூறியதோடு அமையாது உதாரண வெண்பாவில் அஞ்செழுத்தால் உள்ளம் அரன் உடைமை என் றும், மண் முதல் நாளம் என்றும், அகத்து வழிபாட்டையும் உடன் கூறி ஞர். கூறவே, பஞ்சாக்கர உச்சரிப்பு, வழிபாட்டையின்றி முடியாதென் றுணர்க. ஆகவே, வழிபாடு, அகத்துவழிபாடு புறத்து வழிபாடு என இருதி றப்பட்டு, அகத்து வழிபாடு ஒன்பதாஞ் சூத்திரத்திலும் புறத்து வழிபாடு இச்சூத்திரத்திலுங் கூறினுர் என அறிக.

அவ்வாருயின் பஞ்சாக்கரத்தைப் பற்றிய அதிகரணத்தை இச்சூத்தி ரத்தின் வையாது ஒன்பாஞ் சூத்திரத்தில் வைத்த கருத் தென்னை யெனின், பாசஞான பசுஞானங்களை நீக்கிப் பதிஞானத்தை யடைய வேண்டும் என்று கூறியதற் கேற்பப் பாச எழுத்தை நீக்கிப் பதி எழுத் தை உச்சரிக்க வேண்டும் என்ற இயைபுபற்றி அவ்விடத்திற் கூறினதே யன்றி வேறில்லை என்க. ஆகவே பிராரத்தவினை தாக்கா திருத்தற் பொரு ட்டுப் பஞ்சாக்கர உச்சரிப்பும் அகத்து வழிபாடும் புறத்து வழிபாடும் அவ சியம் வேண்டும் என்பதாம்.

ஞானம் என்ற ஒருமை, விளையா என்ற பன்மை கொண்டு முடியாது ஆதலால் விளையா என்ற இடத்தில் விளையாது என்னும் ஒருமைப் பொரு ளைத் தரும் துகர விகுதி தொக்கு நின்றது என்க.

ஞானத்தை நாடி என்ற இடத்தில் ஞானம் என்றது ஞானத்தை உடையாரைக் குறித்தலால் ஆகுபெயர்.

ஆனதனுல் என்று இருக்க வேண்டியது ஆனத்தால் என மருவி நின்றது.

வழிபாடு செய்யவில்லையாயின் உண்டாங் குற்றம்
இதுவெனக் கூறி மேற்கோளை வலியுறுத்தும்
உதாரணம்.

தன்னை யறிவித்துத் தான்றனுச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது—முன்னவனே
தானேதா ஞச்செய்துந் தைவமென்றுந் தைவமே
மானே தொழுகை வலி.

## சிற்றுரை.

எ-து உ-ம் எ-னின். அங்ஙனம் பயன்பற்றி விதிக்கப் படும வழிபாடு வேள்வி முதலியன போலப் பயன்வேண்டாமையானு தல் பின்னர்ச் செய்து பெறுது மென்றுதல் ஓரோவழி ஒழியவும் படுங்கொல்லோ வென்பாரை நோக்கி அது செய்யாவழிப்படுங் குற்றமும் செய்தல் கடமை யாமாறும் உணர்த்தி விதித்தலை வலி யுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) தன்னை யறிவித்துத் தான் தான் ஆச் செய்தானைப் பின்னை மறத்தல் பிழை அலது—தன்னுண்மையை (அறிய மாட் டாது குருடாய்க் கிடந்த உயிர்க்குப் பலவாற்றுனும் அதனைத்) தெரித் துணர்த்தி (எத்தனையு மெளிய அவ்வுயிரை எத்தனையுமரிய) தானும் வண்ணம் செய்தளித்த பெரியதோருதவியை அதன் பின்னர் மறக்குமாயின் (அஃது இதற்குமுன் அறியாமையான் மறந்த குற்றம் போலத்) தீர் திறனுடைய தோர் குற்றமன் றாகலா னும்,—முன்னவன் தானே தானுச் செய்தும் தைவம் என்றுந் தை வமே மான்தொழுகையே வலி—முதல்வன் அங்ஙனம் தான்றனேயா கச் செய்தாலும் (இதுகாறுந் தனக்குச் சுதந்திர மின்றி முதல்வனது உபகாரத்தை யின்றி யமையாதாய்) அடிமை யாகிய உயிர் எக்காலத்தும் அவ்வாறடிமையேயா மாகலானும் (தான்று னுச் செய்தளித்த) அப்பெரியோனை வழிபடுதலே (அவ்வுயிர்க்கு) வலியாவது எ—று.

தமதுமுதற்னே குருவாகலிற் றன் றனுச் செய்தானை யென் றும், முன்னைமறந்த குற்றம் அறியாது நிகழ்ந்த தாகலிற் கழுவப் படும்; இஃததுபோற் கழுவப்படுவ தன்றென்பார் பின்னைமறத் தல் பிழையலதென்றுங் கூறினர். பின்னை மறத்தலென்பதனுல்

முன்னே மறத்தல் பெறப்பட்டது. "எந்நன்றி கொன்றார்க்கு முய் வுண்டா முய்வில்லை—செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்னுங் கருத்து நோக்கிக் கூறியதூஉமாம்.

அலது மெனப் பாடமோதி இது பிழையாதலன்றியு மென் றுரைப்பாரு முளர். ஏகாரம் முன்னையது அசைநிலை; பின்னையன தேற்றம். செய்தாலென்பது செய்தெனத் திரிந்தது. உம்மை சிற ப்பின்கண் வந்தது. தான்றானுச் செய்தல் எதனை யெதனைப் பற் றினும் அதுவது வாமுயிர் தன்னையறிந்தவழி எண் குணங்களா னிறைந்து தன் வண்ணமாகச் செய்தல். அங்ஙனஞ் செய்த வழி யும் "உயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கே யுரித்து" என் பார் தைவ மென்றுந் தைவமே என்றார். தைவமென்னுஞ் சொல் லியல்பு மேலே யுரைத்தாம். மானே யென்னும் இரண்ட னுருபு விகாரத்தாற் றொக்கது. மானென்பது வடசொற்றிரிபு. சுட்டு வரு விக்க. வலிதருவதனை வலியென் றுபசரித்தார்.

இவ்வுதாரணங்கண் மூன்றானும், வழிபாட்டிற்கும் இடத்து நிகழ் பொருண் மாத்திரையே யன்றி இட விசேடமும் பெறல் வேண்டு மென அதனை வலியுறுத்து முகத்தானே, முறையே சிவ லிங்கத்தையுஞ் சிவபத்தர்வேடத்தையுஞ் சிவதேசிகர்களையும் அறிந்து வழிபடுமாறு கூறப்பட்டது.

## விளக்கம்.

இவ்வுதாரணம் என்னசொல்லிற்றோ வெனின், மேலை வெண்பாவிற் கூறியவாறு ஞானம் நிலைத்தலாகிய பயன் பொருட்டு வழிபாடு விதிக் கப்பட்டதாயின், சுவர்க்கமுதலிய பயனைக் குறித்து விதிக்கப்பட்ட வேள்வி முதலியன்போல இவ்வழிபாடும் ஒருபயன் குறித்ததாகும். ஆகவே சுவர் க்க முதலிய பயன் வேண்டாமையினாலாவது, வேண்டுமாயினும் பின்னர் ச்செய்து பெற்றுக் கொள்வோம் என்றாவது வேள்வி முதலியவற்றைச் செய்யாதிருத்தல் கூடுமாதலின் அதுபோல இவ்வழிபாடும் ஒரு சமயத் தில் செய்யாதிருத்தலுங் கூடுமோ என்பாரை நோக்கி இவ்வழிபாடு எப் பொழுதுஞ் செய்யவேண்டு மெனவும், செய்யாத சமயத்தில் உண்டாங் குற்றம் இது வெனவும், செய்யவேண்டுவது கடமையா மெனவும் உணர்த்தி மேற்கோளை வலியுறுத்திய வாறும்.

(பொ-ரை.) உயிரோடு பிரிப்பின்றி நிற்கும் இறைவன் உண்மையை அறியமாட்டாத ஆணவமலமாகிய இருளால் அறிவு மறைக்கப்பட்டுக் குரு டாய்க் கிடந்த உயிர்க்குப் பலவகையான சாதனங்களை யுணர்த்துதலால் அறியாமையாகிய குருட்டை நீக்கி இறைவனை அறியும் படிக்கும், சிற்றறி வும் சிறுதொழிலும் உடைய அவ்வுயிரை முற்றறிவும் முற்றுத்தொழிலும்

உடைய இறைவன் தன்மையைப் பொருந்தும் படிக்கும் செய்து காப்பாற்றிய குருவினுடைய பெரியதோர் உதவியை, முற்றறிவும் முற்றுத்தொழிலும் பெற்ற பின்னர் மறக்குமாயின் அம்மறத்தல் இதற்குமுன் அறியாமையால் மறந்த குற்றம் தீர்க்கப் பட்டவாறுபோல அறிந்த பின் செய்த இக்குற்றம் தீரும் தன்மை உடைய தன்று. அன்றியும், இறைவன், குரு மூர்த்தியாய் வந்து மேற்கூறிய வாறு உயிரைத் தானாகும் வண்ணஞ் செய்தாலும் இதுவரையும் தனக்குச் சுதந்திரமின்றி முதல்வனுடைய உபகாரத்தை யின்றி ஒருசெயலும் செய்ய முடியாததாய் அடிமையா யிருந்த உயிர் எக்காலத்தும் அவ்வாறு அடிமையேயாம். ஆகவே நன்றியை மறந்த குற்றம் தீர்க்க முடியாமையானும், எக்காலத்தும் அடிமையே யாதலானும் இறைவன் தன்மையை அடையச் செய்த அப்பெரியோனை வழிபடுதலே இறைவன் தன்மையைப் பெற்ற அவ்வுயிர்க்குப் பெருமையைத் தருவதாகும் எ-று.

(க-ரை.) இறைவன் தன்மையை அடைந்தபின்னர் அவ்வாறு அடையச்செய்த பெரியாரை வழிபடவில்லையாயின் செய்ந்நன்றி கொன்றவனாகு மாதலானும், உயிர் எக்காலத்தும் அடிமையே யாதலால் வழிபடுதல் கடமையாதலானும் பெரியாரை எக்காலத்தும் வழிபடல் வேண்டும் என்பதாம்.

எட்டாஞ் சூத்திரத்து இரண்டாம் அதிகரணத்து மேற்கோளிற் கூறியவாறு தமது முதல்வன்தானே குருவாதலால் இச்செய்யுளில் இறைவனைச் செய்தானையென்று கூறவேண்டியதைத் "தான் தானச் செய்தானை" யென்றும், ஞானம் தோன்றுதற்குமுன் வழிபடாது மறந்த குற்றம் அறியாது நிகழ்ந்தது ஆதலால் அக்குற்றம் நீக்கப்படும்; ஞானந்தோன்றிய பின்னர் வழி படாத குற்றம் அதுபோல நீக்கப்படமாட்டாது என்று கூறவேண்டி "பின்னைமறத்தல் பிழை அலது" என்றுங் கூறினார். முன்னை மறத்தல் என்பது செய்யுளில் இல்லையாயினும் பின்னை மறத்தல் என்பதனால் பெறப்பட்டது.

இவ்வுதாரணம் பெரியாரை வழிபடவில்லையாயின் நன்றிமறந்த குற்றத்திற் குள்ளாகவேண்டும் எனவும் வழிபடுதல் கடமை எனவுங் கூறியதோடு, திருக்குறள் செய்ந்நன்றியறிதல், ௧0-வது செய்யுளில் "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாம் உய்வில்லை செய்ந்நன்றி கொன்றமகற்கு" என்ற கருத்துநோக்கி வழிபாடு செய்யவில்லையாயின் உய்வில்லையெனவுங் கூறியதாகும். உய்தலாவது ஈடேறுதல்.

பிழையலது என்பதை பிழையலதும் எனப் பாடங் கொண்டு இக்குற்றம் பிழையாதலன்றியும் என்று உரைப்பாரு முளர்.

முன்னவனே என்பதில் உள்ள ஏகாரம் அசை நிலை.

தானே என்பதில் உள்ள ஏகாரம் தானோ அன்றோ என்னும் ஐயத்தை நீக்குதலானும, தைவமே என்பதில் உள்ள ஏகாரம் அடிமையோ அன்

ரோ என்னும் ஐயத்தை நீக்குதலானும். மானே என்பதிலுள்ள ஏகாரந் தொழுகை என்பதனோடு கூடி வழிபடவேண்டுமோ வேண்டாமோ என்னும் ஐயத்தை நீக்குதலானும் அம்மூன்று ஏகாரங்களும் தேற்றம்.

தானுச் செய்தாலும் என்றிருக்க வேண்டியது தானுச்செய்தும் எனத் திரிந்து நின்றது.

தானுச் செய்தும் என்றதில் உள்ள உம்மை சிறுமையில் நின்றும் நீக்கிப் பெருமையுடைய தானுகச்செய்து என்ற சிறப்பைக் குறித்தலால் சிறப்பும்மையாகும்.

தான் தானுச்செய்தல் என்றதற்கு முதல்வன் உயிரைத் தானுகச் செய்தான் என்றது பொருளே யன்றி இறைவன் இறைவனுகச் செய்தல் என்பது பொருளன்று. அப் பொருள் கொள்ளின் உயிரென்பது எக்காலத்துமில்லாதிருக்கவேண்டும். முன்னர் உள்ளதாயின் பின்னர்க்கெடாது. உள்ள பொருள் தூல சூக்குமமான வேற்றுமை யடையுமேயன்றிக் கெடுதலில்லை. ஆதலால், எதனை எதனைப்பற்றினும் அது அதுவாய் நிற்கும் தன்மையுடைய உயிர் இறைவனுகிய தன்னை யறிந்தவிடத்து தனக்குரிய எண் குணங்களும் உயிரினிடத்து நிறைந்து தன் வண்ணமாகச் செய்தலே தான் தானுச்செய்தல் என்பதன் பொருளாம். உயிர்க்கு ஏனையவற்றைப் பற்றி அப்பொருள்களாய் நிற்கும் நிலை தூலம். இறைவனைப் பற்றி அவ்விறைவனுய் நிற்கும் நிலை சூக்குமம். இறைவனைப் பற்றி நிற்றலும் அவன் அருளாலன்றி முடியாது. அவன் அருளால் அவனைப் பற்றி நின்று அவனுக்குரிய எண் குணங்களும் தன்னிடத்தில் விளங்கப் பெற்றாலும், அவனைப்போல் ஏனைய உயிர்களை மலத்தில் நின்றும் நீக்குதற்குரிய பஞ்ச கிருத்தியங்களைச் செய்யமுடியாது. அவ்வாறாயின், எண் குணங்களும் தன்னிடத்தில் பதிந்ததற்குப் பயன் என்னையெனின், எண் குணங்களையுடைய இறைவன் இன்பவடிவினனாய்ப் பிறப்பு இறப்பென்னுந் துன்பமில்லா திருத்தல்போல எண்குணங்கள் பதியப்பெற்ற உயிரும் இன்பவடிவினதாய்ப் பிறப்பு இறப்பு என்னுந் துன்பம் இல்லாதிருக்கும். இன்பவடிவாதலாலும் பிறப்பிறப்பு இல்லாதிருத்தலாலுமாவது எண் குணங்களையடைந்த உயிர் இறைவனுடன் சமமாகாதோ எனின், ஆகாது. எதனாலெனின், இன்பவடிவாதலும், பிறப்பு இறப்பு இல்லாதிருத்தலும் இறைவனுக்கு இயற்கை. உயிருக்குச் செயற்கை. அதவாது இறைவன் அநாதியே முத்தன். உயிர் இடையில் முத்திபெற்றது. ஆயினும் முத்திபெற்ற பின்னர் எண் குணங்கள் சமமாக நிறைந்திருக்கவும், இறைவனிடத்துள்ள எண் குணங்கள் பஞ்ச கிருத்தியத்தைச் செய்தற்கும் உயிரினிடத்துள்ள எண் குணங்கள் பஞ்ச கிருத்தியத்தைச் செய்யாதிருத்தற்கும் காரணம் என்னையோ எனின், மேற் கூறியவாறு இயற்கை செயற்கையே காரணமாகும். இயற்கை செயற்கையினு லிவ்வாறு வேற்றுமையுண்டாகு

மோ எனின், உண்டாகும். எதுபோல எனின், படிகமானது மாணிக்கத்தைச் சார்ந்தபொழுது மாணிக்கமாகவே விளங்கும். விளங்கினும் படிகத்திற் காணப்படும் மாணிக்கத்தின் தன்மை ஏனைய மாணிக்கத்தைப்போலப் பிறர்க்கு உபகாரப் படாததுபோலாம். அன்றியும் உயிர் எக்காலத்தும் அடிமையே யாதலால் முத்திபெற்ற காலத்தும் அடிமைத் தன்மை நீங்காமையால் இறைவனைப்போல் பஞ்சகிருத்தியஞ் செய்யுமாறில்லை. எக்காலத்தும் அடிமையாயிருத்தல் எதுபோல எனின், குருடன் ஒருவனிடத்தில் கண்ணொளியுடைய பசாசு ஆவேசமாயின் அப்பசாசுக்குரிய எல்லா ஆற்றல்களும் இக் குருடனிடத்தில் விளங்கித் தோன்றும்; தோன்றினும் குருடு நீங்காதவாறுபோலாம். இக்கருத்துப் பற்றியே சிவஞானசித்தியார் பதினொராஞ் சூத்திரம் ௧௦-வது செய்யுளில் "உயிர்தானும் சிவாநுபவம் ஒன்றினுக்கே உரித்து" என்றார் வழிநூலாசிரியரும். இவ்வுதாரண வெண்பாவினும் இக்கருத்தை விளக்குதற் பொருட்டே "சைவம் என்றுந் தைவமே" என்றார். சைவம் என்னுஞ் சொல்லின்பொருள் தேவனது உடைமை என்பது எட்டாஞ்சூத்திரத்து மூன்றாமதிகரணத்தில் உரைத்திருத்தல் பற்றி அறிக.

மானே என்பதில் உள்ள ஏகாரம் தொழுகை என்பதனோடு கூடினமையால் மான் என நின்ற அவ்விடத்தில் இரண்டாம் வேற்றுமை ஐ உருபு தொக்கு நின்றது அவ்வுருபை விரித்தால் மானை என்றாகும். வடமொழியிலுள்ள மஹான் என்பது மான் எனத்திரிந்து நிற்றலால் மானை என்றது மஹானைக்குறிக்கும். குறிக்கவே அம்மஹான் யாரென்னும் ஐயத்தை நீக்கி முதலாவது அடியிற் கூறியவாறு தான் தானுச் செய்த மஹான் என அறிவித்தற்பொருட்டு அகரச் சுட்டு வருவித்துக்கொள்க. ஆகவே மானை என்பதற்கு அம்மஹானை என்பது பொருளாம். ஆதலால் மான் என்றதற்கு அப்பெரியோனை என்று உரை செய்யப்பட்டது.

தொழுகை வலியைத்தரும் என்று கூறவேண்டியதைத் தொழுகை வலி என்று உபசரித்தார்.

இவ்வதிகரணத்திற்கூறிய இவ்வுதாரண வெண்பாக்கள் மூன்றினாலும் எல்லா இடங்களினும் எல்லா உயிர்களினும் சிவம் இருப்பினும் பசுவின் உடல்முழுதும் நிறைந்திருக்கும் பாலைக் கறப்பதற்கு மடியாகிய இடவிசேடம் வேண்டுமாறுபோல, அச் சிவம் விளங்கித்தோன்றும் இடவிசேடமும் வழிபாட்டிற்குப் பெறல்வேண்டும் எனக்கூறி, இவ்விடங்களின் வழிபடுக எனக்கூறிய மேற்கோளை வலியுறுத்தியதுடன் அவ்வாறு வலியுறுத்தும் முறைமையில், முதலாவது வெண்பாவால் அன்பு விளையுமிடமாகிய சிவலிங்கத்தையும், இரண்டாவது வெண்பாவால் அன்பே உருவாகிய சிவனடியாரையும் அவர் திருவேடத்தையும், மூன்றாவது வெண்பாவால் அன்

பே சிவமாகிய சிவாநுபவத்தை உண்டுபண்ணிய சிவதேசிகர்களையும் அறிந்து வழிபடல்வேண்டுமெனக் கூறப்பட்டது. சூத்திரக்கருத்து இத்துடன் முடிந்தது.

இந்நூலுக் கதிகாரி இவர் எனக்கூறுஞ் செய்யுள்.

சிவமென்னு மந்ததர சிந்தைநேர் நோக்கப்
பவமின்றாங் கண்வா சகத்திற்—சிவமுண்டா
மொன்று மிரண்டு மலத்தார்க்கிங் கொண்குருவா
லின்றிந்நூன் மும்மை மலர்க்கு.

## சிற்றுரை.

எ-து செ-ள். இங்ஙனம் சிவாகமத்துண் ஞானபாதப் பொருளெல்லாவற்றையும் பொது உண்மையென் றிருவகைப் படுத்துப் பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியலென நான்கியலாக வைத்துப் போதிப்பதாகிய இச்சிவஞான போதநூலைக் கோடற்குரிய அதிகாரிகளாவா ரிவரென்பதுணர்த்துதற் கெழுந்தது.

(இ-ள்.) சிவம் என்னும் அந்ததர—(தான்றானுச் செய்தவாற்றாற் சீவ னென்னுமியல்பி னீங்கிச்) சிவமென்றோதப்படும் வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்தத்தை யுடைய மாணவகனே!—ஒன்றும் இரண்டும் மலத்தார்க்கு—ஒன்று மிரண்டுமாய மலங்களையுடைய விஞ்ஞானாகலர்க்கும் பிரளயாகலர்க்கும்,—சிந்தை நேர் நோக்கக் கண் வாசகத்தின் பவம் இன்று ஆம் சிவம் உண்டாம்—(முறையே) அறிவின்கணின்று அருட்பார்வையா னோக்குதலானும் (தேவகுருவாய் முன்னின்று செய்யுந்) திருநோக்கம் (பரிசம்) வாக்கெனப் படுந் தீக்கையானும் பிறவிக்கேதுவாய பசுத்துவ நீங்கிச் சிவத்துவம் விளங்கு மாகலான்,—மும்மை மலர்க்கு இங்கு ஒண் குருவால் இன்று இந்நூல்—(அவரின் வேறாகிய) மும்மலம் உடையவர்க்கே (உரித்து) இவ்வுலகத் தனுபவ முடைய தேசிகராற் (போதிக்கப் படும) இச்சிவஞான போதநூல் எ-று.

அந்தம் வேதாந்தம், அந்ததரம் சித்தாந்த மாகலின், அதனைப் பெற்றாரது பெருமை கூறுவார் சிவமென்னு மந்ததர வென்றார். என்னுமென்புழிப் படுசொற்றொக்கு நின்றது. சிந்தை—அறிவு. கண்ணுருபு விரித்துரைக்க. நேர் நோக்குதல் முன்னை மருட்பார்வையை மாற்றி அருட்பார்வையா னோக்குதல். நோக்க நோக்குதலாமெனக. கண்வாசகங்களைக் கூறவே இனம்பற்றிப் பரிசமும் உடன் கொள்ளப்படும். பவம் ஆகுபெயர். இந்நூல் அநுபவமுடைய தேசிகனாலன்றி விளங்கா தென்பார் ஒண்குருவாலென்றார்.

போதிக்கப்படுமென்பது அவாய் நிலையான் வந்தது. இன்றிந் நூலென்பது இந்நூ லென்னும் பொருட்டு. இக்காலத் துரைக் கப்படு நூலெனினு மமையும். அது 'தானுரைத்தா னின்று' என வருகின்ற வெண்பாவாற் கூறிய வாற்றானு மறிக. மும்மை யென்றது ஈண்டெண்ணின்மேனின்றது, "தெரிமாண் டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்" என்புழிப் போல.

## விளக்கம்.

(கொண்டு கூட்டு.) சிவம் என்னும் அந்ததா ஒன்றும் இரண்டும் மலத் தார்க்குச் சிந்தை நேர் நோக்கக் கண் வாசகத்தின் பவம் இன்று ஆம் சிவம் உண்டாம் மும்மை மலர்க்கு இங்கு ஒண்குருவால் இன்று இந்நூல்.

இச்செய்யுள் எதற்காக எழுந்ததெனின், முதற் சூத்திரம் முதல் இச் சூத்திரத்து மேலே வெண்பாவரையும் சிவாகமத்துள் கூறப்படும் ஞானபா தப் பொருள் எல்லாவற்றையும் பொது அதிகாரம், உண்மை அதிகாரம் என்று இருவகைப்படுத்திப் பொது அதிகாரத்தைப் பிரமாண இயல் இலக் கண இயல் எனவும், உண்மை அதிகாரத்தைச் சாதன இயல் பயன் இயல் எனவும் ஆக நான்கு இயல்களாக வைத்துப் போதிப்பதாகிய இச்சிவஞான போதநூலைக் கொள்ளுதற்குரிய அதிகாரிகள் இத்தன்மையுடையார் என அறிவித்தற்கு எழுந்ததாகும்.

(பொ-ரை.) மேலே வெண்பாவிற் கூறியவாறு இறைவன்தானாகச் செய்த அதனால் சீவன் என்னுந் தன்மையில் நின்றும் நீங்கிச் சிவமென்று ஓதப்படும் வேதாந்தத்தின் தெளிவாகிய சித்தாந்தத்தையுடைய மாணவ கனே! ஆணவ மலம் ஒன்றேயுடைய விஞ்ஞானகலர்க்கு அவர் அறிவின் கண்நின்று அருட்பார்வையால் நோக்குதலானும், ஆணவம் கன்மம் என்னும் இரு மலங்களையுடைய பிரளயாகலர்க்கு மான் மழுச் சதுர்ப்புஜங்களை யுடைய தேவகுரு வாய் அப்பிரளயாகலர் முன்நின்று செய்யுந் திருநோக் கம் பரிசம் வாக்கு எனப்படுந் தீக்கையானும், பிறவிக்கு ஏதுவாகிய பசுத் தன்மை நீங்கிச் சிவமாந் தன்மை விளங்கும். ஆதலால் அவ்விருவர்க்கும இந்நூல் வேண்டுவதின்று. அவ்விருவரின் வேறாகிய ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களை யுடைய சகலருக்கே இவ்வுலகத்தில் அநு பவமுடைய தேசிகரால் உபதேசிக்கப்படும் இச்சிவஞான போதநூல் உரித்து எ-று.

(க-ரை.) வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்த அநுபூதியைப் பெற்ற மாணவகனே! இச்சிவஞான போதம் என்னும் நூல் விஞ்ஞான

கலர் பிரளயாகலர்க்கு வேண்டுவதின்று ஆதலால், சகலருக்கே உரியதாகும் என்பதாம்

நோக்கம் முதலிய தீக்கையின் முறைகளைச் சிவஞான சித்தியார் அ-ம் சூ-ம் கூ-வது செய்யுளின் உரையிற் கூறியிருக்கின்றமையால் அவ்விடத்திற் காண்க.

இச்செய்யுளில் சிவம் என்னும் அந்ததர என்று மாணவகனை அழைத்த கருத்து என்னை யெனின், அந்தம் என்பது வேதாந்தத்தையும், அந்தரம் என்பது வேதாந்தத்தின் தெளிவாகிய சித்தாந்தத்தையுங் குறிக்கும். சிவஞான சித்தியார் அ-ம் சூ-ம் கசு-வது செய்யுளில் "சித்தாந்தத்தே சிவன் தன் திருக்கடைக் கண்சேர்த்தி" என்றபடி சித்தாந்தமே சிவாநுபூதியைத் தருமாதலால் இச் சிவாநுபூதியைப் பெற்ற மாணுக்கன் பெருமை கூறச் எண்ணிச் சிவமென்னும் அந்ததர என்றார்.

சித்தாந்தத்தை யுடைய மாணவகனே என்னுமல் வேதாந்தத் தெளிவாம் சித்தாந்தத்தை யுடைய மாணவகனே என்ற கருத் தென்னை யெனின், சித்தாந்த மானது வேதாந்தத்தின் வேறன்று என்பதற்கு அவ்வாறு கூறினார். வேறன்றாயின் வேதாந்தமே போதியதாகவும் சித்தாந்தமுங் கூறியது மிகையாகாதோ எனின், ஆகாது. எதனாலெனின், வேதாந்த மென்பது வேதத்தின் அந்தமாகிய உபநிடதங்களாம். ஏகான்மவாதமும் மாயாவாதமும் இடுகுறிப் பெயரால் வேதாந்தம் எனவழங்கப்படும். படினும் அவை வேதாந்தமாக மாட்டா. இனி, உபநிடதங்களும் பலவாம். அவற்றுள், சில உபநிடதம் நாராயணனையே பிரமம் எனவும், சில உபநிடதம் பிரமாவை யேபிரமம் எனவும், சில உபநிடதம் அக்கினியையே பிரமம் எனவும், இவ்வாறே ஒவ்வொரு தெய்வத்தையும் பிரமமெனப் பல உபநிடதங்களுங் கூறவும், சுவேதா சுவதரம் முதலிய சில உபநிடதங்கள் மட்டும் சிவனையே பிரமம் எனக் கூறும். அரசன் ஆணையைத் தாங்கியுள்ள ஒவ்வொரு அதிகாரிகளையும் அரசன் என உபசரித்துக் கூறும் அவ்வளவே போலச் சிவனுடைய ஆணையைப் பெற்றுள்ள ஒவ்வொரு தேவர்களையும் பிரமம் என உபசரித்து உபநிடதங்கள் கூறினும் அதிகாரிகள் உண்மையில் அரசராகாதவாறுபோல ஏனைய தேவர்கள் உண்மையில் பிரமமாக மாட்டார்கள். அங்ஙனமாயின் அவ்வாறு கூறுவானேன் எனின், தனக்குமேல் முதலில்லை என்று எண்ணுகின்றவர்க்கு ஒவ்வொரு படித்தரமாய் முதல் உண்டென்று காட்டுவதற்கு ஆகுபெயர்ப் பொருளில் அவ்வாறு கூறப்பட்டது. படினும் அவ் வுபநிடதங்களுக் கெல்லாம் சிவம் பிரமம் என்பதிலே தான் கருத்து.

இவ்வாறு ஏனையதேவர்களை ஆகுபெயரால் பிரமம் எனக்கூறும் உபநிடதங்களும், தெளிவாய்ச் சிவபரம் பொருளையே பிரமம் எனக்கூறும் உபநிடதங்களும் வேதாந்தம் என்றே வழங்கப்படுதலால் இவ்வுபநிடதங்களுள் எது மெய் எது பொய் என்னும் ஐயம் உண்டாகும் அல்லவா? அந்த ஐயத்தை நீக்குதற் பொருட்டுச் சிவபரம் பொருளையே பிரமம் எனக்கூறும் தெளிந்த பொருளையுடைய வேதாந்தத்தைத் தனித்து எடுத்து இதுவே முடிந்த பொருளெனக் கூறியது சிவாகமங்களாகிய சித்தாந்தமாதலின் மிகையாகா தென்க. ஆதலால் சித்தாந்தத்தையுடைய மாணவகனை வேதாந்தத் தெளிவாம் சித்தாந்தத்தை யுடைய மாணவகன் என அழைக்கப் பட்டது. இதனல், சித்தாந்தம்போல முப்பொருள் உண்மைகொள்வதேவேதாந்தம் எனவும் முப்பொருள் உண்மைகொள்ளாதது ஏகான்ம வாதம் அல்லது மாயாவாதம் எனவும் அறிக.

'சிவம் என்னும்' என்ற இடத்தில் படு என்னுஞ் சொல்தொக்கு நின்றது. அதனைவிரித்துச் சிவம் என்று ஓதப்படும் என உரை செய்யப் பட்டது.

சிந்தை யென்பது அறிவைக் குறித்துநின்றது. சிந்தை என்ற இடத்தில் கண் உருபு தொக்கு நின்றது. அவ்வுருபை விரித்து அறிவின் கண் என உரைசெய்யப்பட்டது.

நேர் நோக்க என்பது நேர் நோக்குதலால் என்னும் பொருளைக் குறித்து நின்றது. நேர் நோக்குதலாவது விஞ்ஞானகலரிடத்தில் முன்னுள்ள மருட்பார்வையை மாற்றி அருட்பார்வையால் இறைவன் நோக்குதலாம்.

பிரளயாகலர்க்குரிய கண் வாசகங்களாகிய சட்சுதீட்சை வாசகதீட்சைகளைச் செய்யுளிற் கூறியதனல் இனம்பற்றிப் பரிசதீட்சையும் உடன் கொள்ளப்படும்.

பவம் என்பது பவத்திற்கேதுவாகிய பசுத்துவத்தைக் குறித்தலால் ஆகுபெயர். பவம்—பிறத்தல்.

இந்நூல் அநுபவமுடைய தேசிகராலன்றி விளங்காதென்று கூற வேண்டி ஒண் குருவால் என்றார்.

ஒண் குருவால் இந்நூல் என்னும் சொல் முடிவு பெறுதற்குப் பிறிதொருசொல்லை அவாவி நிற்றலால் அந்த அவாய் நிலைபற்றிப் போதிக்கப் படும் என்பது வருவிக்கப்பட்டது.

இன்று இந்நூல் என்பது இந்நூல் என்னும் பொருளையே குறித்து நின்றது. இக்காலத்து உரைக்கப்படும் இந்நூல் என்று கூறினும் பொருந்தும். இன்று என்பதற்கு இக்காலத்து எனப் பொருள் கொள்ளலாமென்பதை இதனையடுக்க வரும் வெண்பாவில் "தான் உரைத்தான் இன்று" என்பதனானும் அறிக.

மும்மை மலர்க்கு என்றவிடத்து மும்மை என்பது மூன்று தன்மையைக் குறிக்குமேனும் இச்செய்யுளில் மூன்று என்னும் எண்ணைக் குறித்து நின்றது. எதுபோல எனின், "தெரிமாண்டமிழ் மும்மைத்தென்னம் பொருப்பன்" என்றவிடத்து மும்மையென்பது மூன்று என்னும் பொருளைக் குறித்து நின்றவாறு போலாம்.

இச் சூத்திரத்தினாலும் அதிகரணங்களினாலும் கூறிமுடித்த தொகைப் பொருள்:—பதினொராஞ் சூத்திரத்தால் அயரா அன்பின் அரன்கழல் செல்லுமென முத்திநிலைகூறி முடித்து அம்முத்தர் உடம்பொடுகூடிச் சீவன் முத்தராய் வாழுங்காலத்து அவருடைய அறிவு இச்சை செயல்கள் புறத்துச்செல்லுங்கால் மலத்தை நீக்குதலில் அறிவும், அன்பரொடு கூடுதலில் இச்சையும், திருவேடத்தையும் சிவாலயத்தையும் வழிபடுதலில் செயலும் செல்லுமென இச்சூத்திரத்தாற் கூறினர். கூறவே, அவற்றுள் முதலாவது செய்ய வேண்டியது இதுவென்பதை யறிவித்தற்கு முதலதிகரணத்தால் விபரீதவுணர்வைச் செய்யும் மும்மலங்களையுங் களைதலே முதலாவது செய்யவேண்டுமெனக் கூறினர். கூறவே, மலநீக்கத்தை நிலைபெறச் செய்வதற்கு இரண்டாவதாகச் செய்யவேண்டியது இது என்பதையறிவித்தற்கு இரண்டா மதிகரணத்தால் மலம் நீங்கப்பெற்ற முத்தர்களோடு இணங்கவேண்டுமெனக் கூறினர். கூறவே முத்தர்களோடு இணங்கிய இணக்கத்தை நிலைபெறச் செய்வதற்கு மூன்றாவதாகச் செய்யவேண்டியது இதுவென அறிவித்தற்கு மூன்றாமதிகரணத்தால் சிவபெருமான் வெளிப்பட்டு விளங்கும் திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவன் எனவே கண்டு வழிபடவேண்டுமெனக் கூறினர்; கூறவே மேற்கூறிய மூன்றும் சீவன்முத்தர்க்கு இயல்பாயுள்ளனவாகவும் செய்யவேண்டுமென விதியாகக்கூறியது எதற்காக என்பாரை மறுத்து ஒழிபு அதிகரணத்தால் சிவபெருமான் எல்லாப் பொருளிடத்துங் கலப்பால் அதுவாயும் பொருளின் தன்மையால் வேறாயும் நிற்பன் ஆதலால் வேறாய்நிற்குந் தன்மைபற்றித் திருவேடத்தினிடத்தும் சிவாலயத்தி னிடத்தும் வழிபாடு நிகழாது ஆதலின் வேறாய் நிற்குந் தன்மைபற்றியும் வழிபாடுசெய்ய வேண்டுமெனவும், அவ்வாறே

மலங்களைக் களைதலும் சிவபத்தர்களோடு இணங்குதலும் செய்யவேண்டுமெனவும், இவற்றால் அத்துவித நிலை இனிது விளங்குமெனவும், ஞானத்தினாலேயே அத்துவித நிலை விளங்கினும் ஞானம் நிலைபெறுதற்கு இச்செயல்கள் அவசியம் வேண்டுமெனவும், இவைசெய்தல் கடமையெனவும், செய்யாதவிடத்து நன்றி மறத்தலாகிய குற்றமுண்டாமெனவும் கூறி விதியை வற்புறுத்தி இந்நூலுக்கு அதிகாரி சகல வருக்கத்து உயிர்களே யெனவும், இந்நூற்பொருளை உபதேசித்தற் குரியோர் அநுபவமுடைய தேசிகரே எனவுங் கூறினார்,

நான்காவது ஒழிபு அதிகரணம் முற்றிற்று.

பன்னிரண்டாஞ்சூத்திரம் முற்றிற்று.

## பயன் இயல் முற்றிற்று.

## இரண்டாவது உண்மையதிகாரம் முற்றிற்று.

### பாயிரம்.

எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பாய்
நந்தி யுரைத்தருளு ஞானநூல்—சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் றாரணியோர் தாமுணர
வேதுதிருட் டாந்தத்தா லின்று.

### பழைய உரை.

எ—து செ-ள். இந்நூ லாசிரியன் றிருவருட் சிறப்புணர்த்துதற் கெழுந்தது.

(இ—ள்.) எந்தை சனற்குமரன்—எந்தையாகிய சனற்குமார முனிவன் முதலிய முனிவர் கணங்கள்,—ஏத்தித்தொழ—துதித்து வணங்க,—நந்தி—(சீகண்டதேவர்பாற் கேட்டருளிய) நந்திபெருமான்,—இயல்பாய்—தான் கேட்ட முறையே,—உரைத்தருளும்—உபதேசித்தருளிய,—ஞானநூல்—சிவஞான போதமாகிய வடநூலை, — சிந்தைசெய்து—(பரஞ்சோதிமுனிவர்பாற் கேட்டவாறே) சிந்தித்து. — தாரணியோர் தாமுணர—தமிழ் நாட்டார் அறிந்துய்தற் பொருட்டு,—ஏது திருட்டாந்தத்தால்—(மேற்

கோளோடு கூடிய) ஏது திருட்டாந்தங்களுடன்,—இன்று—இக் காலத்தே,—மெய்கண்டான் றானுரைத்தான்—மொழி பெயர்த்துக் கூறி வார்த்திகப் பொழிப்புரை செய்தருளினான் மெய்கண்ட தேவன் எ-று.

## விளக்கம்.

(பொ-ரை.) நந்தி பெருமானை எமது தந்தையாகிய சனற்குமார முனிவர் ஞானபாதப் பொருளை உபதேசித் தருளும் வண்ணம் துதித்து வணங்க, ஸ்ரீகண்ட பரமேசுரன் பால் சிவஞானபோத நூலைக் கேட்டருளிய அந்நந்தி பெருமான், அப்பரமேசுவரனிடத்தில் தான் கேட்டவாறே தனக்கு உபதேசித் தருளிய அச்சிவஞான போதமாகிய வடமொழியிலுள்ள நூலைச் சனற்குமார முனிவர்க்கு உபதேசிக்க அச்சனற்குமார முனிவர் சத்தியஞானதரிசனி களுக்கும் சத்தியஞானதரிசனிகள் பரஞ்சோதி முனிவருக்கும் பரஞ்சோதிமுனிவர் மெய்கண்ட தேவருக்கும் உபதேசிக்க, மெய்கண்டதேவநாயனார் அப்பரஞ்சோதி முனிவரிடங் கேட்டவாறே சிந்தித்துத் தமிழ்நாட்டார் அந்நூற்பொருளை யறிந்து கதியடைதற் பொருட்டுக் கருத்துரை மேற்கோள் ஏதுதிருட்டாந்தங் களுடன் அவ் வடமொழிச் சிவஞான போதத்தைத் தமிழில்மொழி பெயர்த்து இக்காலத்து அருளிச் செய்தார் என்றவாறு.

*எந்தந்தை என்பது எந்தை என மரீஇயிற்று. தொழ என்பது உரைத்தருளும் என்னும் பிறகருத்தாவின் வினைகொண்டது. ஆய்நந்தி வினைத்தொகை. ஆய்தல் ஈண்டுக் கேட்டுச் சிந்தித்துத் தெளிதலை உணர்த்திற்று. தான் தாம் என்பன கட்டுரைச் சுவைக்கண் வந்த அசைகள். ஆல் ஒடுருபின் பொருட்டு.

மகவெனப் பல்லுயிர்களையும் பேணும் மகானாய் நாமெல்லாம் நல்வழி பெற்றுய்யும்பொருட்டு ஞானபாதப் பொருளை நிலைபெறுத்தி வைத்தலாற் றந்தையை நிகர்ப்பார் என்பது போதர 'எந்தை' என்றும், குருபத்தியினும் பக்குவமுதிர்ச்சியினுஞ் சிறந்தவர் என்பது போதர 'ஏத்தித்தொழ' என்றும் கூறினார்.

தாரணி என்றது ஈண்டுத் தமிழ்வழங்கும் நிலத்தை; என்னை? அந்நிலத்தாரே தமிழ்நூல் உணர்தற்குரியராகலின். ஏத்தி என்றும், தொழ என்றும், வாக்கின் றொழிலும் காயத்தின் றொழிலும் கூறவே இனம்பற்றி மனத்தின் றொழிலாகிய அன்பு செய்தலும் பெறப்பட்டது.

---

* இதுதொடங்கி முடிகிறவரை **ஆக்கியோர் அநுமதி பெற்றுத்** திராவிடமா பாடியத்திருந் தெடுத்துச் சேர்க்கப்பட்டது.

சிந்தைசெய்தல் என்பது பரஞ்சோதிமுனிவர்பால் தாம் கேட்ட பொருளை மொழிபெயர்த்துக் கூறுதற்கண் வழுவாது மனத்திலே நினைத்தமைத்தலை உணர்த்திற்று. அல்லதூஉம் நாதனாருள் பெறும் நந்தியந்தேவர் சனற்குமார முனிவர்க்கும், சனற்குமாரமுனிவர் சத்தியஞானதரிசனிகளுக்கும், சத்தியஞானதரிசனிகள் பரஞ்சோதிமுனிவர்க்கும், பரஞ்சோதிமுனிவர் தமக்கும் உபதேசித்த முறையைக் கடைப்பிடித்துத் தாமும் அவ்வாறே பின்னையோர்க்கும் பிரயோசனமாமாறுரைக்கத் திருவுளங் கொண்டு என்றலுமாம். அல்லதூஉம் "யான்பெற்ற வின்பம் பெறுகவிவ் வையகம்" என்று கருணைமீக் கூர்ந்து என்றலுமாம். அல்லதூஉம் அநித்தியம் பற்றி விரைந்து செயற்பாலதெனச் சிந்தித்து என்றலுமாம்.

'தாரணியோர் தாமுணர' எனவே, தேவர்முனிவர் முதலியோர் உணருமாறு இந்நூல் முன்னர்த் தேவபாடையிலே உரைக்கப்பட்டிருந்தது என்பதூஉம், இப்போது தமிழ்ப்பாடையிலே உரைக்கப்பட்டது என்பதூஉம், 'ஏது திருட்டாந்தத்தால்' எனவே, பூவுலகோர் இனிதுணருமாறு ஏதுக்களையும் உதாரணங்களையுந் விசேடமாகத் தாமே செய்து சேர்த்துக் கூறினர் என்பதூஉம் பெறப்படும். ஏது திருட்டாந்தங்கள் என்றது வார்த்திகம் எனப்படும் உரைச்செய்யுளினும் வெண்பாவாகிய பாச்செய்யுளினும் அமைந்தவைகளை. ஏது திருட்டாந்தத்தால் எனவே இனம்பற்றிக் கருத்துரையும் மேற்கோளும் கொள்ளப்பட்டன.

இனி, எந்தைபால் இயல்பு ஆய் நந்தி எனக் கொண்டுகூட்டி எமது பரம பிதாவாகிய சீகண்டதேவர்மாட்டுச் சிவாகமப்பொருள்கள் ஒன்றோடொன்று முரணுவனவாக மலைந்து அப்பொருட்டன்மையை வினாவிய நந்திபெருமான் எனினும் அமையும். இப்பொருட்கு ஏழாவது வருவிக்க. ஆய்தல் ஈண்டு வினாவுதல்.

எனவே அம்மலைவு தீர்தற்பொருட்டுச் சீகண்டதேவரால் நந்திபெருமானுக்குச் சிவஞானபோதம் உபதேசிக்கப்பட்டதென்பது தானே போதரும்.

'எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பாய் நந்தியுரைத்தருளு ஞானநூல்' என்பதனாற் சிவஞானபோதநூல் உபதேசிக்கப்பட்டு வந்த வரலாறும் அதன் பெருமையும் கூறப்பட்டவாறறிக.

'மெய்கண்டான்' எனவே ஆக்கியோன் பெயரும், 'நந்தியுரைத்தருளும்' எனவே வழியும், 'தாரணியோர்' எனவே தமிழ்வழங்கும் நிலமே இந்

நூல் வழங்கும் நிலம் என எல்லையும், 'ஞானநூல்' எனவே நூற்பெயரும் நுதலிய பொருளும் பயனும், 'ஏதுதிருட்டாந்தத்தால்' எனவே இலக்கிய இலக்கணங்கற்றுத் தருக்கநூல் பயின்று வல்ல பக்குவரே இந்நூல் கேட்டற்குரியராவரெனக் கேட்போரும் யாப்பும் போந்தவாறுணர்க.

பாயிரம் முற்றிற்று.

---

## சிவஞானபோதச்சிற்றுரைவிளக்கம்

முற்றுப் பெற்றது.

மெய்கண்டதேவநாயனார் திருவடிவாழ்க.

சிவஞானமுனிவர் திருவடிவாழ்க.

சிவமயம்.

# செய்யுள் முதற்குறிப்பு அட்டவணை.

சிவமயம்.

# மெய்கண்டதேவ நாயனார் அருளிய சூத்திரம், கருத்துரை, மேற்கோள், ஏது, திருட்டாந் தங்களில் உள்ள சொற்களின்

# அட்டவணை.

## ஆ

## தா



## தி



## தீ



## து

---

# இந்நூலில் வந்துள்ள மதங்களின்
# அட்டவணை.

## 12 கவுளர்.



## 13 கிரீடாபிரமவாதி.



## 14 சமுகான்மவாதி. (சவுத்திராந்திகர்)



## 15 சமணர்.



## 16 சாங்கியர்.

உள்ளது காரியப்படும் என்னும் சற்காரியவாதத்தில் பிரபஞ்ச மும் சத்தேயாதலின், சத்தாயுள்ள பிரபஞ்சத்தைச் சுட்டி அறியப் படுதல் மாத்திரையால் அசத்தென்றல் இழுக்கு 299,300,301,304

ஞானசிரியன் ஏனைய நூற்பொருள்களை உணர்த்தும் பசுத்துவ முடைய நம்மனோரில் ஒருவனாதல் கூடும் 397

## 11 சிவசங்கிராந்தவாதசைவர்.

முத்தியில் உயிர் சிவத்துடன் ஒன்றாய்ப் போதலேயன்றி அடி மையாதலில்லை 73

விளக்கின் சந்நிதியில் கண்ணொளி பொருளை யறிவதுபோல, பெத்த நிலையில் ஆன்ம சந்நிதியில் கரணங்கள் விடயங்களை அறியும், அதுபோல முத்தி நிலையிலும் அக்கரணமே சிவகரணமாய் ஆன்ம சந்நிதியில் நின்று சிவத்தைஅறியும். கண்ணாடியின் சந்நிதியில் அதன் நிழலுக்குப் பிரகாசம் உண்டாவதுபோல ஆன்ம சந்நிதியில் சடமா கிய கரணத்துக்கு அறிவு உண்டாகும் 349

பாசஞானமெனை வழங்குதலால் அப்பாசத்தை அறிவுடைய தன்று என்றல் பொருந்தாது 350

ஐம்பொறிகளே சிவகரணமாய்நின்று தத்துவஞானத்தை விளக் கும் ஆதலின், முதல்வன் குருவுமாய் வருதல் வேண்டாம் 413

## 12 சிவாத்துவிதசைவர்.

பசுபாசங்கள் தனித்த பொருளன்று; சிற்சத்தியின் பரிணாமமே; பதிபசு பாசங்களுக்குத் தம்முள் வேற்றுமை, குணகுணிகட்குளதா கிய வேற்றுமைபோல உட்பேதமேயன்றிப் புறப்பேதம் இன்று 16

குடாகாயம் மகாகாயத்தின் வேறாகாதவாறுபோல் உடலிற் கட் டுப்பட்டிருக்கும் உயிர்சிவத்தின் வேறாகாமையால் உயிரின்பொருட்டு உண்டாகும் தோற்றக்கேடுகள் சிவத்திற்கேயாம் 125

முதல்வனைக் கூடப்பெற்ற உயிர் அம்முதல்வனோடு ஒன்றாகு மாதலால் முத்திநிலையில் அவன் அருளால் உயிர் அறியும் என்பதும் முதல்வன் அறியப்படுவன் என்பதும் கூடாது 326

உயிர்க்காக இறைவன் அவ்வுயிரோடுபொருந்தி உலகத்தை அறி வன் ஆதலால், இறைவன் முன் உலகம் சூனியம் என்றல பொருந் தாது 342

முற்றுணர்வுடைய சிவத்திற்குப் பிரபஞ்சத்தைச் சுட்டி அறிவ தாகிய சுட்டுணர்வும்உண்டு; அதனால் இறைவனால் பிரபஞ்சம் சுட்டி அறியவும்படும் 343

பிரபஞ்சத்தை முதல்வன் சுட்டி அறியானாயின் முற்றுணர்வு உடையவன் முதல்வன் என்றல் பொருந்தாது 345

எல்லாம் சிவமாய்க் கண்டவர்க்குக் கருவிகளைப பொருந்தின

### 19 சிவசமவாதசைவர்.



### 20 சித்தான்மவாதி.



### 21 சுத்தசைவர்.



### 22 சூனிய ஆன்மவாதி. (மாத்துமிகர்)

---

# மேற்கோள் விளக்க அட்டவணை.

சர்வஞானோத்தரம்.



சாந்தோக்கியம்.



சிவஞான சித்தியார்.

---

## முன்னோர்மொழி அட்டவணை.

# வழக்குச்சொற்கள் அட்டவணை.



# அலங்கார அட்டவணை.

உவமை.

## இலக்கண அட்டவணை.

## தருக்க அட்டவணை.



## நியாய அட்டவணை.



## உத்தி அட்டவணை.



---

# அருஞ்சொற்பொருள் அட்டவணை.

### அ

ஊ



எ

---

# அரியவிஷயங்களின் அட்டவணை.

## அ



## ஆ



## இ



## உ

---

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 9 | 27 | உய்தற | உய்தற் |
| 24 | 13 | தோற்றுமை | தோன்றுமை |
| 30 | 8 | உயிர் | உயிர்கள் |
| 42 | 3 | கருத்தா | கருத்தா- |
| 44 | 10 | அவனு | அவினு |
| 47 | 5 | அறிவிச் | அறிவிச்சை |
| 59 | 31 | காலத்தில் | காலத்தின் |
| 60 | 5 | உளத்தில் | உளத்தின் |
| ,, | 6 | கண்டவனில் | கண்டவனின் |
| ,, | 29 | இல் | இன் |
| 63 | 11 | காலத்தில் | காலத்தின் |
| ,, | ,, | இல்லுருபும் | இன்னுருபும் |
| ,, | ,, | உள்ளத்தில் | உள்ளத்தின் |
| ,, | 12 | இல்லுருபும் | இன்னுருபும் |
| ,, | ,, | கண்டவனில் | கண்டவனின் |
| ,, | ,, | இல்லுருபும் | இன்னுருபும் |
| 64 | 3 | ஒன்றேமுதல் | ஒன்றே |
| 79 | 27 | சத்தியே | சத்தி |
| 98 | 25,26 | யானே எல்லாமாயினேன் எனக்கூறுதலானும் | ... ... ... ... |
| 103 | 15 | இசையைவிட | இசைவிகற்பத்தைவிட |
| ,, | ,, | இசையுமன்று | இசைவிகற்பமுமன்று |
| 105 | 19 | கொண்டு | கொண்டு |
| 108 | 28 | காவல் | காவலில் |
| 110 | 28 | அனுபவிக்கும், | அனுபவிக்கும் |
| 144 | 21 | ஏதுவம் | ஏதுவும் |
| 150 | 16 | முன்றாம் | மூன்றாம் |
| 162 | 22 | தாகலின | தாகலின் |
| 183 | 5 | உள்ளதாம் | உள்ளதாம்ஆய் |
| 210 | 28 | சிஞ்சித்தேம் | சிந்தித்தேம் |
| 213 | 5 | புலனில் | புலனின் |
| 227 | 6 | ஒன்றல்லவாயின் | ஒன்றன்றாயின் |
| 229 | 23,24 | போலுமெனின் | ஆதலின் |
| 253 | 27 | கூறப்படுஞ்சுத்தாவத்தையு | கூறப்படுஞ் |
| 254 | 31 | சுத்தத்னியல்பு | சுத்தத்தினியல்பு |
| 255 | 1 | 2-ம் அதி | 3-ம் அதி |
| 256 | 30 | விடம் | விடயம் |

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 280 | 23 | உணைம் | உணைரும் |
| 288 | 33 | சினின்று | நினற ✓ |
| 315 | 3 | சத்-ாம் அறிவறியாமெய் | சத்தாகியமெய் |
| 318 | 10 | தால | லால் |
| 323 | 20 | நீங்கியவிடத்து | நீஙகியவிடத்தும் |
| 326 | 15 | உயிா | உயிர் |
| 332 | 17 | நிர்கில் | நிற்க |
| 340 | 11 | உறுப்புச்சொல்லும் | ஆவ்வளவென்றறிந்த உறுப் |
| 350 | 14 | பிறித்தில்லை | பிறிதில்லை (புச்சொல்லும |
| 354 | 4 | இகுதிரன் | இருதிறன் |
| 355 | 32 | பசகம் | பககம் |
| 358 | 12 | இவவதி | இவ்வதி |
| 363 | 13 | அறியுநதன்மை | இரண்டனையும் அறியுந்தன் |
| 365 | 17 | அருவருவு | அருவுருவ (மை |
| 372 | 9 | விளக்குங | அளக்குங் |
| 376 | 7 | குடி | குரு |
| 401 | 10 | மெயய | மெய் |
| 414 | 14 | ெ,ன்பாரை | டென்பாரை |
| 414 | 26 | சிவனருளளால் | சிவனருளால் |
| 420 | 32 | அதிகரணத்தத் | அதிகரணத்துக் |
| 426 | 26 | மாதலில் | மாதலிலலை |
| 488 | 37 | முன்னர் | மேலே |
| 528 | 11 | கூறுறல் | கூறுதல் |
| 535 | 23 | அச் | அத் |
| 535 | 36 | சூணை | குணை |
| 580 | 18 | குத்திர | சூத்திர |
| 583 | 27 | துடைத்நு | துடைத்து |
| 587 | 1 | 2-ம் அதி | 1-ம் அதி |
| 594 | 18 | தீவிர | தீவிர |
| 604 | 31 | சிவாயவ | சிவாலய |
| 615 | 5 | மடி வின் | மடியின் |
| 626 | 2 | வேண்வ | வேண்டுவ |